உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீஞானசம்பந்தகுரவே நம:

# ஸ்ரீகந்தபுராணவசனம்.

இஃது.

ஸ்ரீமுருகக்கடவுள்திருவருள்பெற்றுக்
காஞ்சியின்கண்குமரகோட்டத்திலெழுந்தருளியிருந்த
ஆதிசைவமூர்த்தியாகிய

## ஸ்ரீகச்சியப்பசிவாசாரியசுவாமிகள்

அருளிச்செய்தபாடலின்படிவசனமாகச்செய்து
முன்னரச்சிட்டிருக்கும்பிரதியில்
காண்டங்கள்முன்பின்னுகமாறியிருந்ததை



ஞ்வளா.

## சுப்பராயநாயகரவர்களைக்கொண்டு

திருத்துவித்தும்.

காஞ்சீபுரம்

ஸ்ரீமாந், கோனேரியப்பமுதலியாரவர்கள்செய்தருளிய
ஏழாவது
உபதேசகாண்டத்தில் [illegible]ங்களுக்கு
வசனமெழுதுவித்தும்.

## வே. முனிசாமிபிள்ளையவர்களால்

புரசப்பாக்கம்
ஏழுமலைப்பிள்ளையவர்களது
விவேகவிளக்கஅச்சுக்கூடத்தில்
பதிப்பிக்கப்பட்டது.

1884

உ

சிவமயம்.

# அறிவிப்பு.

---

இதனாலியாவருக்குந் தெரிவிப்பதியாதெனில், இதற்குமுன்ன ரச்சிட்ட வசனப்பிரதிகளில்,ஸ்ரீகச்சியப்பசிவாசாரிய சுவாமிகளருளிச்செய்தமூலத்தின்படி காண்டங்களமைக்கப்படாமல்,முன்பின்னாகமாறியிருந்தமையால் அவைகளைமாற்றி யொழுங்குபெறச் செய்ததோடு ஷை. வசனத்தில் மொழிபெயர்க்கப்படாமல், ஆங்காங்குநழுகிப்போயிருந்த பகுதிகளுக்கு முளையெழுதிச்சேர்த்து வெளியிடலாயிற்று.

அன்றியும் இப்புராணத்தைவாசிக்கு மொவ்வொருவரும் அவசியமாகத் தெரிந்து கொள்ளவேண்டுவதாகிய, ஸ்ரீகாஞ்சீபுரம் ஸ்ரீமாந், கோனேரியப்பமுதலியாரவர்கள் செய்தருளிய ஏழாவது, உபதேசகாண்டத்தில், சூராதிகளொடுக்கப்படலம், அசமுகிவரலாற்றுப்படலம், மாயைவரலாற்றுப்படலம், சிவமுனிவர்முதலியோர்வரலாற்றுப்படலம், ஆகிய இந்நான்குபடலங்களுக்கும், மூலத்திற்கிணங்க வசனமாகச்செய்வித்து அச்சிட்டிருக்கின்றேன்.

இங்ஙனம்.

சுபானு௵. புூ. ஏழுமலைப்பிள்ளை.

உ

வேலுமயிலுந்துணை.

# காண்ட அட்டவணை.



## படலவகராதி

படலவகராதி

முற்றிற்று.



உ

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

ஸ்ரீவல்லிதேவஸேனாஸமேதஸ்ரீஸ்கந்தாயநமஃ.

கச்சியப்ப சிவாசாரியசுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய

# ஸ்ரீகந்தபுராணவசனம்.



## விநாயகர்காப்பு.

திகடசக்கரச்செம்முகமைந்துளான்
சகடசக்கரத்தாமரைநாயக
னகடசக்கரவின்மணியாவுறை
விகடசக்கரன்மெய்ப்பதம்போற்றுவாம்

உச்சியின்மகுடமின்னவொளிர்தருநுதலினோடை
வச்சிரமருப்பினொற்றைமணிகொள்கிம்புரிவயங்க
மெய்ச்செவிக்கவரியூங்கவேழமாமுகங்கொண்டுற்ற
கச்சியின்விகடசக்ரகணபதிக்கன்புசெய்வாம்.

## சுப்பிரமணியர்காப்பு.

மூவிருமுகங்கள்போற்றிமுகம்பொழிகருணைபோற்றி
யேவருந்துதிக்கநின்றவீராறுதோள்போற்றிகாஞ்சி
மாவடிவைகுஞ்செவ்வேண்மலரடிபோற்றியன்னான்
சேவலுமயிலும்போற்றிதிருக்கைவேல்போற்றிபோற்றி.

## நூற்பயன்.

இந்திரராகிப்பார்மேலின்பமுற்றினிதுமேவிச்
சிந்தையினினைந்தமுற்றிச்சிவகதியதனிற்சேர்வ
ரந்தமிலவுணர்தங்களடல்கெடமுனிந்தசெவ்வேற்
கந்தவேள்புராணந்தன்னைக்காதலித்தோதுவோரே.

## வாழ்த்து.

வான்முகில்வழாதுபெய்கமலிவளஞ்சுரக்கமன்னன்
கோன்முறையரசுசெய்ககுறைவிலாதுயிர்கள்வாழ்க
நான்மறையறங்களோங்கநற்றவம்வேள்விமல்க
மேன்மைகொள்சைவநீதிவிளங்குகவுலகமெல்லாம்.

## கடவுள்வாழ்த்து.

### சிவபெருமான்றுதி.

திருவந்ததொல்லைப்புவனத்தொடுதேவர்போற்றிப்
பெருவந்தனைசெய்தறிதற்கரும்பெற்றியெய்தி
வருவந்தனையுமுருவத்தையுமன்றிநின்ற
வொருவன்றனதுபதந்தன்னையுளத்துள்வைப்பாம். (௧)

ஊனாகியூனுளுயிராயுயிர்தோறுமாகி
வானாதியானபொருளாய்மதியாகிவெய்யோன்
றானாகியாண்பெண்ணுருவாகிச்சராசரங்க
ளானான்சிவன்மற்றவனீள்கழற்கன்புசெய்வாம். (௨)

### வேறு.

பிறப்பதுமிறப்பதும்பெயருஞ்செய்கையு
மறப்பதுநினைப்பதும்வடிவுமய... வயந்
துறப்பதுமின்மையும்பிறவுஞ்சூழ்க...ாச்
சிறப்புடையானடிசென்னிசேர்த்துவ...ாம். (௩)

பூமலர்மிசைவருபுனிதனாதியோர்
தாமுணர்வரியதோர்தலைமையெய்தியே
மாமறைமுதற்கொருவடிவமாகியோன
காமருசெய்யபூங்கழல்கள்போற்றுவாம். (௪)

பங்கயன்முகுந்தனும்பரென்றுன்னியே
தங்களிலிருவருஞ்சமர்செய்தூறுழி
யங்கவர்வெருவரவங்கியாயெழு
புங்கவன்மலரடிபோற்றிசெய்குவாம். (௫)

காண்பவன்முதலியதிறமுங்காட்டுவான்
மாண்புடையோனுமாய்வலிகொள்வா... ...ருடர்

பூண்பதினருய்கலசுபுணர்க்கும்புங்கவன்
சேண்பொலிதிருநடச்செயலையேத்துவாம். (சா)

சிவசத்தி.

செறிதருயிர்தொறுந்திகழ்ந்துமன்னிய
மறுவறுமரனிடமரபின்மேவியே
யறுவகைநெறிகளுட்பிறவுமாக்கிய
விறைவிதன்மலரடியிறைஞ்சியேத்துவாம். (எ)

விநாயகக்கடவுள்.

மண்ணுலகத்தினிற்பிறவிமாசற
வெண்ணியபொருளெலாமெளிதின்முற்றுறக்
கண்ணுதலுடையதோர்களிற்றுமாமுகப்
பண்ணவன்மலரடிபணிந்துபோற்றுவாம். (அ)

வைரவக்கடவுள்.

பாமனைமதித்திடாப்பங்கயாசன
னொருதலைகிள்ளியேயொழிதவானவர்
குருதியுமகந்தையுங்கொண்டுதண்டமுன்
புரிதருவடுகனைப்போற்றிசெய்குவாம். (கூ)

வெஞ்சினப்பரியழன்மீதுபோர்த்திடு
மஞ்சனப்புகையெனவாலமாமெனச்
செஞ்சுடர்ப்படிவமேற்செறித்தமாமணிக்
கஞ்சுகக்கடவுள்பொற்கழல்களேத்துவாம். (க0)

வீரபத்திரக்கடவுள்.

அடைந்தவியுண்டிடுமமரர்யாவரு
முடைந்திடவெருவியேமுனிவர்வேதிய
ருடைந்திடமாமகமொடியத்தக்கனைத்
தடிந்திடுசேவகன்சரணம்போற்றுவாம். (கக)

சுப்பிரமணியக்கடவுள்.

இருப்பரங்குறைத்திடுமெஃகவேலுடைப்
பொருப்பரங்குணர்வுறப்புதல்விதன்மிசை
விருப்பாங்கமரிடை * விளங்கக்காட்டிய
திருப்பரங்குன்றமர்சேயைப்போற்றுவாம். (கஉ)

சூரலைவாயிடைத்தொலைத்துமார்புகீண்
டாலைவாயிடுமெஃகமேந்தியே
வேரலைவாய்தருவெள்ளிவெற்பொரீஇச்
சீரலைவாய்வருசேயைப்போற்றுவாம். (கங)

காவினன்குடிலுறுகாமர்பொன்னகர்
மேவினன்குடிவரவிளியச்சூர்முதல்
பூவினன்குடிலையம்பொருட்குமாலுற
வாவினன்குடிவருமமலற்போற்றுவாம் (கச)

நீரகத்தேதனைநினையுமன்பினோர்
பேரகத்தலமரும்பிறவிநீத்திடுந்
தாரகத்துருவமாந்தலைமையெய்திய
வேரகத்தறுமுகனடிகளேத்துவாம். (கரு)

ஒன்றுதோருடலையொருவியாவிமெய்
துன்றுதோருடலத்தொடங்கியவகை
மன்றுதோருடியவள்ளல்காமுறக்
குன்ற[illegible]ருடியகுமரற்போற்றுவாம். (கசா)

* ஆங்கல்-அழிதல்.

எழுமுதிராப்புனத்திறைவிமுன்புதன்
கிழமுதிரிளநலங்கிடைப்பமுன்னவன்
மழமுதிர்களிறெனவருதல்வேண்டிய
பழமுதிர்சோலையம்பகவற்போற்றுவாம். (கஎ)

ஈறுசேர்பொழுதினுமிறுதியின்றியே
மாறிலாதிருந்திடும்வளங்கொள்காஞ்சியிற்
கூறுசீர்புனைதருகுமரகோட்டம்வா
ழாறுமாமுகப்பிரானடிகளைப்போற்றுவாம். (கஅ)

திருநந்திதேவர்.

ஐயிருபுராணநூலமலற்கோதியுஞ்
செய்யபன்மறைகளுந்தெரிந்துமாயையான்
மெய்யறுளுள்புகல்வியாதனீட்டிய
கையடுநந்திதன்கழல்கள்போற்றுவாம். (ககூ)

திருஞானசம்பந்தமூர்த்திசுவாமிகள்.

பண்டைவல்வினையினுற்பாயுடுத்தழல்
குண்டரைவென்றுமனகூடல்வைகியே
வெண்டிருநீற்றொளிவிளங்கச்செய்திடு
தண்டமிழ்விரகன்மெய்த்தாள்கள்போற்றுவாம். (உ0)

திருநாவுக்கரசுசுவாமிகள்.

பொய்யுறுநூல்சிலபுகலுந்தீயமண்
கையர்கள்பிணித்துமுன்கடலகத்திடு
வெய்யகற்றுணியாய்மிதப்பமேற்படு
துய்யசொல்லரசர்தாடொழுதுபோற்றுவாம். (உக)

சுந்தரமூர்த்திசுவாமிகள்.

வறந்திடுபொய்கைமுன்னிரம்பமறவ
னுறைந்திடுமுதலைவந்துதிப்பவன்னதா
லிறந்திடுமகன்வளர்ந்தெய்தப்பாடலொன்
றறைந்திடுசுந்தரனடிகள்போற்றுவாம். (உஉ)

மாணிக்கவாசகசுவாமிகள்.

கந்தமொடுயிர்படுங்கணபங்கமெனச்
சிந்தைகொள்சாக்கியர்தியங்கமூகராய்
முந்தொருமூகையைமொழிவித்தென்மதபால்
வந்திடுமடிகளைவணக்கஞ்செய்குவாம். (உங)

திருத்தொண்டர்கள்.

அண்டருநான்முகத்தயனும்யாவருங்
கண்டிடவரியதோர்காட்சிக்கண்ணவா
யெண்டகுசிவனடியெய்திவாழ்திருத்
தொண்டர்தம்பதமலர்தொழுதுபோற்றுவாம். (உச)

சரசுவதி.

தாவருமுலகெலாந்தந்தநான்முகத்
தேவுதன்றுணைவியாய்ச்செறிந்தபல்லுயிர்
நாவுதொறிருந்திடுநலங்கொள்வாணிதன
பூவடிமுடிமிசைப்புனைந்துபோற்றுவாம். (உரு)

## இதன் பொருள்.

சிறப்புப் பொருந்திய பத்துத் திருக்கரங்களையும்
ஈசானம்-தற்புருடம்-அகோரம்-வாமம் சத்தியோசாதம்
என்கின்ற செவ்வியஐந்து திருமுகங்களையுமுடைய சிவ
பெருமான் திரிபுரசங்காரஞ்செய்யும்பொருட்டுத் தேவ
ர்களால் நியமிக்கப்பட்ட இரதத்திற்குச் சக்கரமாகப்
பொருந்திய தாமரை நாயகனாகிய சூரியன் இவரது விசு
வரூபத்தின் வயிற்றின்கண் தரித்திருக்கின்ற சர்ப்பக்கச்
சின்சிரோரத்தினத்தை நிகர்த்து விளங்கவும் சிரத்தின்க
ணிரத்தினமகுடமின்னவும் நெற்றியினிடத்து முகபடா
மொளியைத்தாவவும்வச்சிரவுருவினதாகியஒற்றை மரு
ப்பின் வயிரப்பூ ணிலங்கவுங் கர்னசாமரை யசையவும்,
இப்பூவுலகின்க ணுதித்த ஆன்மகோடிக ளனைத்து மஞ்
ஞானநீங்கிப் பேரின்பத்தையெய்தி நினைந்தகருமங்களெ
ளிதின்முற்றுப்பெறவு மூன்றுகண்கள் விளங்கும்யானை
முகத்தைப்பெற்றுத் திருக்காஞ்சிப் பதியி னெழுந்தரு
ளிய விகடசக்கரவிநாயகரை வழிபட்டு, அரியயன்முதலி
யதேவரு மிலக்குமி விலாசம் பொருந்திய வுலகத்தின்க
ணிராநின்றமேன்மக்களுந் துதித்து வந்தனைசெய்தற்கரு
மையனவாகிய பெருமையினையடைந்து அருவத்தினையு
முருவத்தினையுங் கடந்து மேனின்ற வொப்பற்ற சதாசி
வத்தினையுஞ் சடமாயு மவற்றினுலவுகின்ற ஆன்மாவாயு
முயிர்கடோறும் பரமான்மா வாயும் ஆகாய முதலிய
பஞ்சபூதங்களாகியு முலகத்தைவிளக்குஞ் சூரிய சந்திர
ராயும் ஆண்பெண்ணலியாகியுஞ் சராசரமாகியும் நிறை
வெய்திய பரமசிவத்தையும் பிறப்புமிறப்பும் நாமமுஞ்
செய்கையு மறத்தலுநினைத்தலுமே வுருவமாகவெடுத்த
பிராணிகளிற் பருவமமைந்தவர் துறவறவில்லறங்களின்
பயன்களை மேவச்செய்தும் - மற்றவைகளினும் பரிபூர
ணமாய் நிறைவெய்திச் சர்வசங்காரஞ்செய்தருளிய அர
னையுந் தாமரைப்பீடத்தினனான பிரமனாகிய தேவருண
ர்தற்கரியதலைமையைப்பெற்றுவேதமுதல்வனாய்ச் சுயம்
பிரகாசமாய்விளங்குகின்றஈஸ்வரனையும்விண்டுவும்பிதா
மகனும் யாம்பரமென்றகங்கொண்டு சமர்செய்தகாலையி
லவர்கடுடுக்கிடமத்தியி லக்கினிமலையாக வெழுந்தருளி
யகர்த்தனையுங்,காண்பான்-காண்பவை-காட்சியாகிய சத்து
ச்சித்தானந்தத்தைத் தமதடியருக்கு வருவிக்கும் பெரு
மையினையுடையவராயும் மீட்டுமவரைப் பிறவித்துன்ப
த்தழுந்தாவகைசெய்து ஞாதுருஞேயத்தை ஆசிரியனுபரு
ளுந்தேவதேவன் பஞ்சகிருத்தியங்களை நடாத்து முறை
மையானடிக்கும் பாத கமலங்களையும், அக்கடவுள் திரு
வாய்மலர்ந்தருளிய வேதசிரத்தின்கட் டோன்றும் பிர
ணவவாச்சியத்தினுற் சங்கையறக் கேசவனுநான்முகனு
மறிகிலரென்னி னப்பிரணவசொரூபியினைப் புகழ்தற்கி
யாளெளியனென் றுந்திரிபுவனங்களினும் வதிகின்றசரா
சரங்களின்பரமான்மாவாய்ப்பொருந்திய பரசிவத்தின்க
ட்சிற்சத்தியாக நிறைந்தறுவகைச் சமயங்கண் முதலிய
வற்றை யுலகினிலைபெறச்செய்தெவற்றினுமே னின்றுய
ர்ந்த ஞானசத்தியினையுந் தன்னைப் பரமாகக்கருதிச் சிவ
பிரானைமதியாத உந்திகமலவாசியாகிய பிரமனதுநடுச்சி
ரத்தைக்கிள்ளி முகுந்தன் மற்றதேவர் முனிவராதியர்கு
ருதியையு மரணவமாதியமலங்களின் றுவக்கறத்தண்ட
முன்னியற்றிய வயிரவப்பிரானையும், வெவ்விய வடவன
லைச்சூழு மேக படலத்தைப் போன்றும் புகைச் சமூக
ங்களை யகற்றும் ஆலகாலத்தையொக்கும்வருகின்றகயா
சுரனது சருமத்தை யுரித்துப்போர்த்தகிருத்திவாசப்பி
ரானையுந் தக்கனதுவேள்வியின் வந்தடைந் தவிர்ப்பாக
ங்கொள்கின்ற தேவர்யாவரு முடைந்திட வெருவிய முனிக்
கணங்க ளந்தணர்குழாங்க ளுதைத்தோடவோட்டி யம்மகத்
தையழித்ததற்குத் தலைவனாய தக்கன் றலையினையரிந்து
மீட்டும் ஆட்டுத்தலை யளித்த வீரபத்திரேஸ்வரனையும்
அரத்தினைத்தேய்க்குங் கூரிய வேலைத்தாங்கியவேடர்தா
ம்வள்ளிநாயகிபேரில்வைத்த கருணையைத் தெளிய அவ
ளை சமர்த்தலையின்மடித்தெழுப்பிக்காட்டித் திருப்பர
ங்குன்றத்தின் வீற்றிருந்துஞ் சூரபன்மன் முதலிய வசு
ரரைத்தொலைத்து மார்புகளைக்கீண்டீரல்களைவாய்களின்
வழிகளிற் றுருங்கச்செய்த வெற்றிவேலை யேந்தி மூங்கி
லழகாய் வளர்ந்தோங்கியவெள்ளியங்குன்றினைநீங்கித் தி
ருச்செந்திற் பதியி னெழுந் தருளியும், பொன்னுலகத்
தைநீங்கிப் பூவுலகின்கட்டோன்றிய வுத்தியான வனங்க
ளினிருக்குஞ் சிறுகுடிசைகளின் வதிந்தவிந்திரன் மீட்
டுந்தன்பதியிற்சேர்ந் தரசுநடாத்தவுஞ் சூரன்முதலியவ
சுரர்முடியெய்தவும் பதுமமேலவன் குடிலையினது பொ
ருட்காசங்கைநீங்கி மெய்ஞ்ஞானபோதத்தையடையவுந்
திருவாவினன்குடியென்னும் பழனியில்வதிந்தும் நின்ம
லமனதாற் றம்மை நினைக்குமன்பின ரிப்பூவுலகமுதலிய
வற்றின்கட்டோன்றிய பிறவிச்சுழலைநீக்கிய தாரகப் பிர
மசொரூபமாய்த்தலைமையெய்துந்திருவேரகமென்னுஞ்
சாமிமலையி னெழுந்தருளியுஞ் சர்வசங்காரத்தின் ஆன்
மாக்களைச் சரீரத்தினின்றும்பிரித்துமீட்டு மச்சரீரத்திற்
பிரவேசிக்கச் சிருட்டியாதிகளைச் செய்யும்பொருட் டம்
பலங்கடோறு நடனஞ்செய்கின்ற சபாநாயகருந் விருப்
புற மலைகடோறுந் திருவிளையாடலியற்றியுங்கினைப்புன
ப்பரணிற் காவல்கொண்டிருந்த வள்ளிநாயகிகாணமுதி
ர்ந்தகிழவனாய்வந்து களவுப்புணர்ச்சியை விரும்பித் தா
கசாந்திக்குச் சுனைநீர்காட்டென் றவளுடன் றுடர்ந்தவளி
ன்பநலத்தைப் பெறும்பொருட்டுந் தன்முன்னவனை மு
ம்மதங்களைப்பொழிகின்ற களிமுக வரவழைத்துப் பழ
முதிர்சோலையென்னும் அழகர் கோயிலின் வீற்றிருந்து
ம்பிரமன் விண்டுமுதலிய தேவர்களாலும் வெல்லுதற்க
ரிய விஜயத்தைப்பெற்றுத் திருமூர்த்திக ளதிகாரங்களை
யும்வேதவொழுக்கமுதலியவைகளையு மாற்றிந் தேவேந்
திரனாகிய விண்ணவனா யரிபசிறையினிட்ட சூரன்முத
லானவரைத்தொலைக்கப்பரஞ்சுடராயவதரித்தருளியும்-
அரியயனறியவொணாத் தமது வீரசக்தியி னெழுந்தபிரள
யத்திற்றிரிபுவனங்களு மழியும்போதுஞ் சலனமில்லாத
காஞ்சித்தலத்திற் சிறந்தோங்கிய குமர கோட்டத்தினு
மெழுந்தருளும் பெருமையினையுடைய தேவதேவனான
சரவணபவனையும் பரமசிவமே பரப்பிரமமெனப் பதி
னெண்புராணங்களாற் கூறியும் வேதாகமங்களினுட்பங்
களைத் தெளிந்தும் மாயையென்னுங் கடலத்தன்னறிவை
மறைக்க வதன்வயப்பட்டு நாரணனைப்பரமென் றசத்தி
யம்பேசி வியாசன் நீட்டிய கரத்தைத் தம்பித்த வீரன்
டாஞ்சம்புவாகிய நந்திதேவனையும் பூர்வஜென்மசம்பந்த
த்தினுற் பாவையுயிர்த்தெழவு மென்னுமிரஞ்சமண விரு
டியரை முந்திறவாதிலும்வென்று விபூதி உருத்திராக்க
பஞ்சாக் கரத்தை யுணர்த்தும் வேத வேதாந்த வாகம
தருமநூலியாகங்கள் மற்றவைகளையும் மதுரை யென்று

ஞ்சிவபுரமுதலாய விடங்களின் விர்த்திக்கச்செய்புந் தமி
ழ்விரகராகிய,திருஞானசம்பந்தப்பிள்ளையாரையும்மோ
கனநால் சிலவற்றைக்கூறுகின்றசமணர் வஞ்சனையிற்
கற்றூணிற்பிணித்துக் கடலில்விட வதுவே தோணியாக
மிதக்கப் பஞ்சாக்கரப்பதிகமோதிப் பிறவிக் கடலையுங்
கரைகண்ட திருநாவுக்கரசரென்னுந் ஞான திபத்தினை
யும், அவனூசியினொரு பிராமணப் பிள்ளையை முதலைவி
ழுங்க வதைநினைத்துத் துன்புறுந்தாய்தந்தையர் களிக்க
வறந்தகயநிறைவெய்தியிறந்த முதலை மீட்டுமுமிழ் தந்த
ப்பிள்ளையை வப்பது ஙைவெய்தக் கங்கச் சிவனுதனைப்பா
டிய சுந்தரமூர்த்திநாயனையும்,பகையென்றும் நிச்சயிக்கின்
றபவத்தர்முகராய்த் தியங்கவும், மூகையாயிருந்தவிராஜ
புத்திரிமழலைமொழி கூறவுமருளி யப்புகாலேயினுஞ்சிவபி
ரானைப்பருச்சித்து நிர்மலஞானத்தையடைந்த சைவசித்
தாந்தப் பிரபலராகிய வாதவூரடிகளையும், பிரம ஞாதிய
தேவர் காண்டற்கரியனவாகிய பரமசிவத்தின் பாததாம
ரைநிழலின்கண் சிவானுபவச்செல்வத்தைப்பெற்றுவிற்
றிருக்குந்திருத்தண்டியாதியாகிய திருத்தொண்டத்தொ
கையினையும், இப்பூவுலகமுதலியவற்றை விதிக்கும் பிர
மன்றேவியாய்ப் பல்லுயிர்களுளினு மிருக்கு நன்கினைப்
பெற்ற கலைமகளையும் வணங்கலும் வாழ்த்தலு மிடைவி
டாது நினைத்தலுமாகிய மூவகை வந்தனங்களு மிந்நூல்
முடிவெய்தற் பொருட்டுச் (சுருங்கச் சொல்லல் விளங்க
வைத்தலென்னுமழகாற்) கூறப்பட்டன.

## அவையடக்கம்.

இப்புராணத்தை, யான் கூறத்தொடங்கிய தெதுதன்
மைத்தெனின் ஒருபாலன் அரிவருக்கமெழுதியறிவதன்
முன் சிறந்ததிருமுறையை வலாயக் கருதியதைப்போல
வும் ஐவித இலக்கணங்களையுணர்ந்து நவரசவலங்காரமா
ய்ச் செய்யுள்புனைய வல்லபுலவருக்குமுன் யான்சொல்
லத்தொடங்குவது உலகத்தினை விளக்குஞ்சூரியப்பிரகா
சத்தின் மழுங்கிநிற்குந்தாரகாகணங்க டாங்களும், புவி
யைவிளக்கவெண்ணுந்தனையொத்தும், வேதமுதலியவறுபத்
து நான்கு கலைகளையும் விரிக்காநின்ற வாதராயணமுனி
வர்கூறிய வடமொழியி னின்று மியான்றமிழில் மொழி
பெயர்க்கினதுமெல்லியசொல்லாயினும் வெளிற்றுரையா
யினும் வியர்த்தமாகிய புன்சொல்லாயினு மிக்காவியத்
தலைவன் பெரும்புகழோடு கலந்திருத்தலை வதைக்கருதி
க்கவிவாணரிகழாரென்றுங் கங்கையுமனறும் பிறையுந்
சிரமாலையு மென்பணிகளுஞ் சமமாகச் சடையிற்றாங்கி
ய பரமனது மைந்தனுதல ௭ச்கடவுளாகிய குமாரதேவ
ருமொனதுவழுவினையுடைய பாடலினையுந் தரிப்பாரென்
றவரைக்குறித் திக்கதையின்கண் மருவிய செய்யுளைவரு
த்தனவென்றும் பிரயோசன மில்லனவாகவும் வெள்ளு
ரையாகவு முற்றுப்பெறயான்கூறிய காவியத்திற் கலைஞ
ரல்லாதார் குற்றஞ்சொல்வர்.குற்றத்தினையே தெரிகின்ற
வர் இயலிசை நாடகமென்னு முத்தமிழ் இலக்கணங்க
ளைமுழுதுமுணர்ந் தோதிய அகத்தியர்பாலியவோர்குற்
றங் கூறத்துணிவர். இகைல்விகளைக் கற்றேறிய வெண்
செய்யுள் வழுவாயினு முழுது மொருங்குணர்ந்த பெரி
யோர் வழுவமைதிசெய்திப் புராணத்தைப் பிரயோசன
ப்படுத்துமென்றுஞ் சந்திரன் றேய்தன்முதலிய பலகு
ணைகளைப்பெறினு முலகவாசிகள் மேம்பாடாகப் போற்
றுவதைப்போற்றியேனும்புனைகின்ற வெளிற்றுரைசிற
ப்பில்லனவாயினுஞ் சண்முகதேவர் சரித்திரமென் றறி
ஞ ரங்கிகரித்துக்கொள்வரென்னுந் துணிபுகொண்டிந்நூ
லைக்கூறலாயிற்று

## நூல் வரலாறு

ஆதியிற் சிவபிரா னந்திதேவருக்கருள வவராற்சனற்
குமாரர் போதிக்கப்பெற்று வியாசருக்கோதியபடிக்கவர்
சூதருக்கு விளக்கிய பதினென்புராணந் தொகைக்குட்
பரமசிவனையன்றிமற்றையதேவசரித்திரங்களிலவர்செய்
கைகளை மேம்பாடாகச்சொல்வது அக்கடவுளரது குறை
வுநிரவு முபசாரமாகவு மொழிந்தது சந்திரசேகரனாகிய
தேவதேவனைப் புகழும்புராணங்களிற் சிலவேனும் வழு
வின்றி யாவுமேன்மையாகவே விளங்கும் இதற்குக்காண்
டங்கள் அட்டகங்கள்-அத்தியாயங்கள்- வருக்கங்கள் பத
ங்கள்- கிரமங்கள்- சடைகள்-சாகைகள்.ஆரணங்க ளிவை
களாற் கூறுகின்ற வேதங்களு முபநிடதங்கண் முப்பத்
திரண்டுமே சான்றாம். அவையனைத்துஞ் சத்தியம் அறி
திவரப்பக்குவர் கூர்த்தபுத்தியினுலவற்றை நாடியறிந்து
கொள்வர். பார்ப்பதிபாகனான பரமேஸ்வரனைப் பரத்து
வமாகத்தாபித்த பலபுராணங்களிற் கூறிய வேலைத்தாங்
கிய சுப்பிரமணியதேவர் சிறப்புகளை விரிக்கின்ற காந்தபு
ராண மொன்றுண்டு அதிற்சிலவற்றை யானறிந்த வளவி
ற் கூறுகேன். கலாபமஞ்ஞையினை யேறிநடாத்துங்குரு
பரன் சரித்திரத்தின் வாராத கதைவுலகத்திற் கிடையா
து.அதைப்பூரணமாகவகுப்பதற்குச்சூதரல்லதெவ்போ
லிகளாற் கூடுவதோ. ஆயினுங் காந்தமென்னும் பெருங்
கடலிற் பரமசிவத்தினழல்விழியிற் சுப்பிரமணிய தேவ
ரவதரித்ததுஞ் சூரபன்மனாதியான விராக்கதப் பெரும்
புறக்கடலினைத்தொலைத்தது முதலியவற்றைத்துவக்குமி
டத்துக் குற்றமற்ற கற்பங்களனேகங்கழிந்தன. அவற்று
ளிக்கதையும் பலபேதமாக விரிந்ததாயினும் அப்பேத
ங்களின் விரித்தோதுகின்ற உண்மையினை யானெடுத்து
ரைக்கின்றனன். சூதபுராணிகர் வடமொழியிற்கூறியவிக்
கதையினைத் தமிழின்மொழிபெயர்த்த காரணமென்னை
யெனின்,இனிய தமிழையுணர்ந்த வாசிரியர் செவிவழியி
னமுதச்சுவையாகக் கேட்டுக்களிக்கும் பிரயோசனத்தை
க்கருதியென்பனவாம் தோற்றமொடுக்கமில்லாத சுப்பிர
மணியக்கடவுளினது கதையின் பெயரியாதெனிற் பஞ்
சேந்திரியங்களையடக்கி நல்வழியிற் செல்லு மேலையோர்
கந்தபுராணமென் றுரைப்பர் இதனை நான்குவர்ண வரு
க்கமாக வருகின்ற வெண்பா-ஆசிரியப்பா-கலிப்பா- வஞ்
சிப்பா வென்னு மவற்றினினமாகிய வெளிவிருத்தம்,ஆ
சிரியவிருத்தம்,கலிவிருத்தம்-வஞ்சிவிருத்தமென்னும்பி
ரிவினையுடைய விருத்தங்களினுனுந் துறைகளாகிய வெ
ண்டுறை-ஆசிரியத்துறை- கலித்துறை வஞ்சித்துறைமுத
லியவற்றானுஞ் சூரபன்மனாதிய பெருங்கடலை வாட்டிய
சுப்பிரமணிய தேவர் கதைகளைச் சொல்லத்தொடங்கி
னேன். தமிழ் வரம்பினெல்லைபெனச்செப்பியமுதன்மை
பெற்ற காஞ்சிமாநகரத்தின் முற்றொருங்குணர்ந்த மேலை
யர்கசியப்பசிவாசாரியரது கதையினை வடமொழியினின்றும்
மொழிபெயர்த்துக் கூறுகவென யான்செப்பியது கொடி-

யசுர்க்கிளைகளைக்களைகின்ற வெற்றிவேலைத்தாங்கியகுமா
ரதேவர்கதையினைநற்றமிழ்ப்பாடல்களினுற்றேவர்போற்
றப் பார்ப்பதிபாகனுன ஏகம்ப ரெழுந்தருளிய காஞ்சி
ஆலயத்தின் அரங்கேற்றியது

செய்யுள்.

வேதவேதாந்த மாகமத்தரும நூலதாம்விரிந்திடுபுரா
ணம், போதமார்முனிவ ரிசைத்திடுபுராண மிருதிகள்
சங்கிதைப்பொருந்து, நாதமார்சடங்கஞ் சிப்பிகள்பிறவு
நன்குணர்கச்சிமாமுனிவ, னேதமில்சகாத்தமேமெனுநூ
றிற் காந்தத்தைத்தமிழினுலிசைத்தான்

## இஃது சிறப்புப் பாயிரம்.

என்னைநன்னூல்,, ஆக்கியோன்பெயரே வழியேயெ
ல்லை நூற்பெயரியாப்பேநுதலியபொருளே கேட்போர்ப
யனேடாயெண்பொருளும் வாய்ப்பக் காட்டல் பாயிரத்
தியல்பே,, இதுவுமது,, காலங்களனே காரணமென்றிம்,
மூவகையேற்றி மொழிநருமுளரே,, என்பதனுற், கச்சிய
ப்ப குருக்களெனவே ஆக்கியோன்பெயருஞ், சூதர்சொ
ல்லிய வடநூலின்வழியே யான்கூறிய தெனவே, வழியு
ந்தமிழ்வரம்பிற் கெல்லை காஞ்சியெனவே எல்லையுங், கந்
தர்புராணமெனவே நூற்பெயருந் தொகை விரிவிருத்த
த்தொகைகளெனவே யாப்புங் கந்தரது புகழெனவே
நுதலிய பொருளுங் காஞ்சியின் முற்றுணர்ந்தோர்
கள்கூறுகவெனவே கேட்போருஞ்சரிதை, கிரியை,யோ
கஞானபாதங்களினுன் வருமுத்தியெனவே பயனும்அப்
பெரியோர்கள் கேட்டதெனவே காலமும், ஏகம்பர்ஆல
யத்தினரங்கேற்றியதெனவே களனும் பெரியோர்கூறிய
வாய்மையாற்சொல்லி முடித்ததா மென்னுங் காரணமு
மாகிய பதினெருவகைச் சிறப்புகளும் சைவ சித்தாந்த
வேதாந்த குணரத்தின ஞானதீபகமாகிய புலவர் பெரு
மான் கச்சியப்ப குருக்கள் புகழ்போல விளங்கின பத்த
முகுகளு முப்பத்திரண்டு தந்திரயுத்திகண் முதலியனவு
மிந்நூலினமைந்து கிடத்தலாங்காங்குணர்க.

ஆசிரியர் தொல்காப்பியர் தமிழிற்கெல்லை கூறியது
வடவேங்கடந்தென்குமரியா யிடை,, யெனத்திருவாய்ம
லர்ந்திருப்பப் புலவர் பெருமான் பவணந்தியார்,,குணக
டல்குமரி குடகம்வேங்கட,,மென வேற்றுமைநயம்பற்றி
க்கூறிய தென்னையெனப் பலவாற்ரு னுசங்கை நிகழும்
அவ்வாசங்கை நீங்கி மனவெழுச்சி சொற்பொருட்டு வி
டைகூறுகின்ருந் தருக்க நூலனட்டவளவைகளினருத்
தாபத்திப் பிரமாணத்தாற் கூறியதென்றறிக. இந்நூலா
சிரியர் திரிபுவனவளனுஞ் ஞானச்சிறப்புகளு மொருங்
கெய்துவது காஞ்சியாதலன் அஃதே தமிழிற் கெல்லை
யென்ருர்.

## ஆற்றுப்படலம்.

செக்கரஞ்சடைமுடிச் சிவனுக்கன்பராயத்
தக்கவாறிஞர்க டவத்திற்செல்வராய்த்
தொக்கவர்யாருமவாழ் தொண்டைநாட்டினின்
மிக்கதோரணியிய லதுவிளம்புகேன.

செவ்வானம்போலும் அழகிய சடைமுடியையுடைய
பரமசிவத்துக்கன்பராகும் பேற்றினைப்பெற்றவரும் பே
ரறிவைவாய்ந்த மகத்துக்களும் ஐம்புலன்களை வென்ற
தபோநிதிகளும் அருட்செல்வம் பொருட் செல்வங்களை
ப்பெற்ற புண்ணியவான்க ளாதியாக்வாழ்ந்திருக்குந்தொ
ண்டைநாட்டினிறைந்தவளச்சிறப்புகளைச் சொல்லுவோ
ம்.அஃதென்னையெனின்,திருமாற்பள்ளிகொள்ளுந்திருப்
பாற்கடலைப்போலத் தேவராஜனூர்திகளாகிய மேகங்கள
னைத்தும் வெண்மையாகச்சென் றளவுபடாத கடலிற்ப
டிந்தச்சலத்தையருந்தி யார்ப்பரித்தவ்வுவர்க்கடல் வண்
ணமாகக் கறுத்து மீளு மேகங்கள் தடித்திடித்து வருவ
தெத்தன்மைத்தெனின் சூரியனே என்னுற் றழைத்துவ
ரும் பூமண்டலத்தினை நீஎப்போதுங் காய்ந்து வாட்டுகி
ன்றனை ஆதலாற் போருக்கு வருவாயென் றதிகோபங்
கொண் டதினுன் வியர்த்தத்தைப் போலப் பனித்தும்
வெண்பற்கள் விளங்கக்கடித்ததையொத்து மின்னி யிடி
த்துஞ் சுந்தரமிகுத்த வயிரவக்கடவுள் மதயானையினு
ரியைப்போர்த்த காட்சிபாகச் சூற்கொண்டமேகங் கண
ந்திவனையைச் சூழ்ந்தச்சாரல் களினேங்கிய மூங்கில்கள்
வெடித்த கணுக்களினின்று திருமுத்தினங்களைப்போன்
றுதிவலைகளைப் பெருக்கியாழினது தந்திகளையொத்துத்
தாரைகளையொழுக்கி வருட ருதுக்களிற்கார்கால மாகிய
விரண்டுமாதவனையிற் கடல்வானின் கட்டோன்றிப்பொ
ழிந்ததன்மையவா யிடைவிடாமல் வருடிக்குமேகங்களி
ந்திரதனுசு விளங்கின்றது பூர்வத்தின் வேடுவக்குலத்
தவதரித்துத் திண்ணனென்னு நாமம்படைத்த கண்ண
ப்பநாயனுர் திருக்காளத்தி மலையினெழுந்தருளிய சிவக்
கொழுந்தைத்தனது மாணிக்கக்கலசமொத்த வாயினின்
றுகுக்குஞ் சுவர்ணமுகிப் புனலிற் றிருமஞ்சன மாட்டி
யதைப் போன்றுங்கல்லென்னும் பேரொலியுடன்மழை
பொழியப் பெருத்த வெள்ளத்தினுற் காட்டழல்நிமைப்
போதி லவிந்தகாட்சி சவுரியவான்கள் கோபித்தெதிர்த்
தகாலத்துலகின்கண் கொஞ்சம் வலியையுடையா ரெதிரி
னிற்கப்பயந்தொளிப்பதைப் போன்றும் புயல்கள்கடல்
நீரையுண் டதினுவர்ப்பைமாற்றி மதுரமாயுலகங்கடமை
ச்கப்பெய்வது தம்மையடைந்தவன் கொடியவினைகளைப்
போக்கி நன்னெறியிற்செலுத்தி ரட்சிக்கவல்லஞானசிரி
யனை நிகர்த்ததாய்ப் பஞ்சேந்திரியச்சேட்டை முதலியப
ற்றுகளைக்கழிந்த தவச்சிரேட்டரானவசிட்டரிருக்கையெ
னப் புலவராற் றுதிக்கு மகிமையினை யுடைய நந்திவ
னையினை மேகங்கள்வளைந்து பொழிந்த குளிர்ந்தவெள்ள
மானது காய்ந்து சாடியினின்றும் பொங்கிவழிந்தபாலை
ப்போலத் திசைகடோறுங் கலித்தோடி முற்காலத்தின்
மநுநீதிப்படிக்கரசாளுஞ் சிலத்தினனுன பகீரதனரியத
வங்களைச்செய்த காரணத்தினுற் பரமன்றமதுசடையின்
மூலமாய்க் கங்கையை யிமைய வனையினிடத்து விடப்
பெருகியதைப்போல விறங்கிய வருவி வெள்ளமானது
பாலியாறென்னும் பெயர்பெற்றுப் புவியிற்சென்றதுவா
லறிவையுடைய வசிட்டராசிரமத்தினிருக்குங்காமதேநு
விநினியபாலொருகாலம் பெருகியோடிய பவித்திரமா
னபாலியின் புனிதத்தை விரிப்பதற் கென்போல்களாற்
கூடுவதோ பின்பந்நதிப்பெருக்கானது தனுர்பாணிகளா
ய்த் திரியும்வேடனாப் பெண்டுபிள்ளைகளுடன் வாரிச்சி
தருகூடல்களை யலைத்தெறிந்து பரிமளமிகுந்த சந்தனமகி
ழிவைது விருட்சங்களை வேருடன் கல்லிப்போகுந் தன்
மைபூர்வத்திற் கொடியசூரனுற் றேவனைச் சிறைசாய்த்

துச்சென்றதையொத்துங் காக்கைகள் சூழ்ந்துவர மதத்
தைப்பெருக்கியுலவும் யானைகளை வாரிவருவது மேகங்க
ள்மேற்றிசைக்கடல் நீரையுண் டமையாதனவாய்க் கீழ்த்
திசைச்சாகரத்தை நோக்கிப்போவதைப்போல மேலிட்
டுமலைச்சார்பாகிய குறிஞ்சித்திணையிற்பரவிப் புலி கரடி
மான்களாதிய மிருகங்களையும் பட்சி சாலங்களையு மலைத்
துமீறினதாய் இலுப்பை யிலவ மரங்களினது கிளைகளை
முறித்தும் வழிபறித் தலைக்கும் வில்லியர் சிற்றூரையுங்
கலக்கிப்பாலையிற்பாய்ந்து காலைவெம்பகல்மாலை சிசிரவை
கறைமுதலிய காலங்களி னிடைவிடாமற் செந்தழல்வடி
வாய்ச் சமுத்திரத்தையுஞ் சுவறச்செய்யும்வெம்மையை
ப்போக்கி அதன்வடிவந் தோற்றுமற் குளிர்ச்சியாக்கும்
வெள்ளத்தின்பெருமையை யாவராற்சொல்லப்படும். அ
ந்நிலத்தைக்கடந்து காட்டிடங்களாகிய முல்லைத்திணையி
ற்பெருகியவ்விடங்களினிருக்குங் கொன்றைவில்வங்குரு
ந்தம் வெட்சியாதியதருக்களைச்சாடிப் பசுநிரைகளை யலை
த்துப் பெருகும்பாலிநதி பூர்வத்திற் காமதேனுவி னிட
த்துண்டாகிய சம்பந்தத்தினுற் பசுவர்க்கங்களுக்கிரங்கி
மெல்லநீந்திக் கரைகளிற்சேரவொதுக்கியும் பலா-கமுகு
கூந்தற்பனை பூஞ்சோலை முதலானவைகளைக்களைந்துபக்
கங்களின் வீசிச்செல்லும் பெருக்கான தளவற்ற திரைக்
கரங்களைப் பெற்றிருப்பதினு லச்செய்கை யதற்கரியன
வோபின்பு சோற்றைப்போல்வெளுத்த மடல்களைவிரிக்
குந்தாழையையுங் கலைகளையெழுதுவதற்குப்பாத்திரமா
னவோலைக ணீண்ட பனையையுங் களைந்துசென்றுதிரை
கள்பெருத்த சாகரத்திற்சேர்த்தகாலத் தவைகளலைவது
அனந்தன்றலைகளைத் தூக்குந் தறுவாயினுடல் நெளிவ
தைப்போற்காட்டும் இதுவன்றியும் வில்வங்-கொன்றை-
குரவு-சண்பகம்-பாடலம்-புன்னை யிவைகளையலைகளின்
மீதேந்திச் செல்வதினு லெமதுகர்த்தனை சிவபிரானையு
மொத்ததாய்க் கொலைத்தொழிலை யுடைய மறவரிருக்கு
மிடங்களிற்பாய்ந்து வில்-சரம்-வேல்-தண்டம் திகிரி சங்
கமிவைகளைக்கொண்டு பெருகுந்தன்மையினு லதியினு
லகங்களையுண்ட மாலையொத்துந் தேனைச்சொரியுங் கம
லங்களின்மீது பாய்வதினுலும் நாலுமுகத்தினு முழங்கி
ப்பெருகி மான்மனாயினங்களையு மலைத்து வருவதினுலு
ஞ்சிருட்டிகர்த்தனை நான்முகனை நிகர்த்துஞ் சுரிமுகச்
சங்கினங்களை வானத்திற்றூற்றும் நட்சத்திர வீதியை
நெருங்க அலைகளினுல்வீசியும் பல்லுயிர்களை யழித்து
மளித்தும்வருவதினுலுந் திரிசங்குவை விண்குடி யேற்
றிய விசுவாமித்திரனைப்போன்றும் யானைக்கோடுகள்பா
ய்ந்ததினுல் கூடுகள்சிதைவுண்டு பெருகுந் தேன்களை ய
லைத்துவருவதினுல் வெளுத்துப் பாயுங் கங்கை கறுத்த
சலப்பெருக்கையுடைய யமுனையைக் கலந்த தோற்றமா
கவுஞ் சங்குகள்சத்திக்கத் திரைகளினுலெறிவது - சூரிய
னையுன்சரீர மெப்போதும் வெம்மையடைந்து குளிர்ங்
தகிரணங்களைப்பெறும லழன்று திரிவாய் ஆதலால் சற்
றிப்பால் நீத்தத்தினுடிப் போவையாயினக் கொடுமைத
ணிந்து சகலரும் புகழவிருப்பாய். வா வா வென்றழை
ப்பதற்கொத்தும் வேதாகம புராணங்களை வரையறக்கற்
றுந் தேவதேவன் காளகண்டமூர்த்தியென்றுணராதபே
தையருணர்வையொத்துக் கலங்கிப் போனவரை முதலி
யகுலகிரிகளுந் திசைகளுந் தெய்வ லோகமுந் துலங்கப்
பெருகும் பாலியாறனது முற்காலத்திற் பார்ப்பதி தவ
நிலையைச்சோதிக்கச் சிவபிரான் றிருவுளங்கொண்டதறு
வாயிற் சத்தநதிகளுடன் வந்தகம்பையையொத்தும் பூர்
வத்திற் பிட்டுவாணிச்சி யம்மன் பத்திக்கிரங்கி யுதிர்ந்த
பிட்டினிடத் திச்சைகொண்டு மதுரையாலயத்தி னெழு
ந்தருளிய சொக்கநாயகர் கங்கையொலித்து விளங்குந்
தமதுசடாமகுடத்தின் மண்சுமந்து கரையடைத்த வை
கையாற்றில் முத்தமிழ் விரகரான திருஞானசம்பந்தமூ
ர்த்திகள் சமணர்வாதி னிட்ட வேட்டைப்போல மச்சவ
கைகளெதிர்ந்துபாயவுஞ் சிறுமைப்பால தனைத்தும் பெ
ருமைப்பாலினடுங்கு மென்பதுபோலப் பவளமானது
மரகதரத்தினத்தின்கண் விளங்குவதற் கொப்பாய்ப் பா
சிலைமத்தியிற் பூத்திருக்குஞ் செந்தாமரைப் புட்பங்கள்
பெருத்ததடாகங்கள் சிறந்த பாலாற்றின் வெள்ளத்தினு
ற்சிதைந்தழியவும் விளைவானதோங்கிய வயல்கள் சூழ்ந்
தமருதநிலத்தின்வந்தவ்விடத்திலிராநின்றபொய்கைகளி
னலர்ந்திருக்குங் கமலங்களை யதன்கொடியிலைவேருடன்
பறித்துப்போவது ஒருவன்றன் பகைவனைச் சமர்த்தலை
யின்வெல்ல வன்மையில்லாதவனுய்க் காலங்கருதிச் சத்
துருவுக்கிராநின்ற பலங்களை யுபாயத்தினுற் களைந் தவ
னைப்பற்றிச் செல்வதற்கொத்துங் கழி கடல்சூழ்ந்தநெய்
தற்றிணையிற் பாய்ந்துகழியர் உப்பமைப்போர்களான்வா
ரிவாரிக்குவித்த மச்சராசிகளையும் உப்பின் குவைகளையு
மலைத்துக்கொண்டு செல்வது திரைகள் பெருத்த கடலா
னது மேகவினங்களுடன் கலந்து வானத்திற்சென்றுரா
ய்ந்து பூமியினிறங்கிச்சோதித்துத் தன்வளங்களைக் கொ
ண்டுபோவதற்கொக்கும்

இவ்விதச்சிறப்புகளைப் பெற்றுப்பெருகிய பாலிநதிசீ
வராசிக ளந்தத்திற் றத்தம்வினைப்பயனுக் கடுத்தகதிகளி
ற்சேருவதைப்போலவும் வங்கிசபரம்பரையையொத்தும்
விருட்சசாகைகளை நிகர்த்தும்பலகால்களிற்பாய்ந்து பவ
ளமொத்தவிதழும்பொற்கலசத்தைநிகர்த்தகொங்கைகளை
யுஞ் சேலினும் பிறழ்வதொத்துக்கறுத்துச் சுழலும்விழி
களையும் பிறையினைப்பழித்தநுதலினையுங் கிள்ளைக்கிணை
யான மதுரவாக்கையும் பரவையைப் போலப் பரந்துவி
ளங்குமல்குலையு மயிலையொத்த சாயலையும் அன்னத்தை
யிகழுநடையையுங் கருமணலைநிகர்த்து நுண்ணிய தாய்க்
கறுத்துப்புட்பங்களைச்சொருகி விளங்குமளகபாரத்தை
யும்பெற்றுடவரைமையல் பூட்டித்தனித்தனியே பொரு
ளைக்கிரகித்தும் நிலைபெறுதகணிகையர்மனதையொத்து
ப்பலதிசையினும் பரந்தவெள்ளத்தைச் சற்பங்கள்புற்றி
னுழைவதைப் போலக் கால்வாய்களின்மூலமாய்வரிகளி
ற்பாயமந்திர மொழியினுற் பாம்பினங்களைத் தடைசெய்
பவரை யொத்துப் புறம்பிற் பொசியவொட்டாமற்றலைத்
தலையணைகள்போட்டுத்தடுக்கும் பள்ளத்திரள்களிப்பினு
ர்க்குமோதைகடையுக வொலிக்கிணையாகச் சத்திக்கவும்
அக்காலத்தினறையு முரசினுர்ப்பு மூதிடுகொம்பினதுமு
ழக்கும்பம்பையினோசையு மருதநிலப்பறைகளி னதிர்ச்
சியுமுழவர் ஆரவாரங்களும் அலைகள்பெருத்துப்பாயும்
வெள்ளத்தைச் சிறைசெய்யுங்கம்பலையு மேகமாயொலிப்
பதைத் தேவர்கேட்டு விண்ணகத்துண்டாகிய வதிர்ச்சிக்
குமாறுக மண்ணகத்தினுமுண்டாயதோ வெனமருளவு
ம்மதயானைகள் பிரிந்தகாலத்தின் மீட்டுந்தம்மினத்தைத்
தேடிக்கூடுவதைப் போலப் புறத்திற்பெருகியநீர்த்தடா
கங்களினுங் குளங்களினு மடுக்களினும் வயல்களி னுஞ்

சேர்ந்துகளிப்பு நீங்காதமாதருக் கொப்பாக வலைந்திரு
க்கும். இவ்விதச்சிறப்பையுடைய பாலயின்பெருக்கான
துங்கரத்தினிடங்களினும் புறத்தினும்பெருத்திருப்பது
பூமண்டலத்தைச்சூழ்ந்தசமுத்திரத்தைப்போன்றது ஏ
ரிகள்முதலிய விடங்களிற்பாய்ந் ததிகரித்தசலமானதுஐ
ம்புலன்களைவென்ற மகத்துக்கள்நன்னெறிகளைப் போதி
த்தாலும் விவேகசூனியரானபதிபதர் தங்களிட்டப்படிக்
குடைப்பதைப்போலக் கருங்கடலைநோக்கியோடியது.அப்
பெருக்கிற் சலசரங்களுலவுவது வாள்வேல் வில்கணைசங்
குநாள்கோள் சற்பமுதலானவைகளையொத்துவிளங்கும்
ஏரிகளாதியானவைக ணிறைந்து மேலிட்ட சலத்தைப்
போக்கும்ஆண்டிறம் பெற்றமள்ளர் தமதிருப்புக்குமேல்
வருந்திரவியங்களைத் தானம்வழங்குமிடைவள்ளலையொ
த்துலவுவார்கள்.

## நாட்டுப்படலம்.

அவ்வியல்பெற்றிடுமாற்றன்மள்ளர்கள்
மைவருகடலுடைமங்கைதன்னிடை
மெய்வளங்கொள்வகைதவேண்டிடங்கிலச்
செவ்விசனூடிபோயினையசெய்குவார்.

இவ்விதச்செய்கைகளையுடைய வலிபெற்றபள்ளர்தி
ரண்டுகடல்சூழ்ந்த பூமியின்வளங்களைப்பெறநினைந்தந்நி
லங்களின் பருவங்களைக் கருதிப்பருத்தமுசுப்பினையுஞ்சி
வந்தகண்களையும்பெற்றபலநிறவிடபங்களையுநீண்டகொ
ம்புகளையுடையகடாக்களையும் ஏர்களிற் பூட்டிக் கோல்க
ளைக்காட்டித் தூண்டியணியணியாக வுழுதுவருவதுபூமி
தேவிக்குநவரத்தினமாலை தரித்ததைப்போன்றும்காற்றி
னுமனத்தினும் வேகமுடையனவாயு முழுநர் குறிப்பின்
வண்ணஞ்செல்லுங் காளைகள்கால்களைப்பெயர்த்து வைக்
குந்தோறுந் திரண்டெழுந்த சேற்கெண்டைகள்பட்சிசா
லங்கள்மருண்டோட விண்ணிற்பாய்ந்துமீண்டுசளசளெ
னவிழுமிதுவல்லாமற் பொளபொளென நிலம்பெயரச்ச
ல்வளைந்துவருகையி னவ்வயல்களினிருக்குஞ் சங்கினங்
கள்வெருவிப் பெட்டைநண்டுகள் சூற்கொண்டுகிடக்கும்
வளைகளிற்புகுவது அறிஞராயினர்விலைமாதரைவிரும்பி
ச்சேர்ந்ததை யொத்துங்கற்றூணைப்போன்ற புயங்களையு
டையஉழவர் பொன்விளையத்தக்க புலத்தினுஞ் சிறந்தவ
யல்களிற் செலுத்துங்கலப்பைக் கொழுவிற்பட்டுப்பளப
ளெனத் தெறித்தெழுஞ் செம்மணிகள்வேள்விக் குண்ட
த்திற்றோன்று முத்தழலொளியைப் போன்றுவிளங்க
வும்இவ்விதமாயுழுது கலக்கிச் சேடைசெய்து பதமான
தருணத்திற் பள்ளரெங்குந்திரண்டுசிலர் நாற்றங்கால் வி
தைத்துஞ்சிலர் விதைப்புலத்தினேடுஞ்சலத்தை யிறைத்
து நீக்கியும்பலர்குதிரையின் பிடரிமயிரைப் பின்னிவிட்
டதைப்போலத் தனித்தனியாக விருந்தநாற்றைப்பிடுங்
கிமுடிச்சுசெய்து வைத்ததை மீட்டுங்கலைந்து வரிசையி
னெழுங்குபெற நடவுசெய்துவரும் தமதுமனதுக்கினிய
மங்கையர் வருந்துவதற் கிரங்கிக்கலங்கிநைந்தும் இவ்வி
தமாகவயல்கடோறு நடவுசெய்தபின்பு சோலைகளிற்சே
ர்ந்துமதுரமானகள்ளை வள்ளங்களி னிறைத்துத்தங்கடெ
ரிவைய ரழகைநோக்குங் கண்ணாடியினையொத் திருப்ப
தெனப்பார்த்துக் களித்துக்குடித்தந்த வெறியினர் சிலர்
வாடியுஞ் சிலர்தெய்வங்களைப் பணிந்தாடியுஞ் சிலர்மயக்
கமேலிட்டுத்தம்மினூடியுஞ்சிலர்பெருமூச்செறிந்துவாடி
யுஞ்சிலர்குரவைபாடியுஞ்சிலர்வெறிகொண்டு வானத்திற்
சஞ்சரிக்கும் பறவைகளும்வண்டினங்களுந்தமதுசுற்றங்
களுஞ் சூழவிந்திர தேவதையைத் தொழுது மதுவையு
ண்ணல்வாமதந்திரியர் அப்பூசைக்குரியவருடன்வேற்று
மையின்றிக்கலந்து கள்ளைக்குடிக்குந் தன்மையைக் காட்
டவுஞ்சிலர்மயக்கமேலிட்டு நாணமற் றுடைசோரவாயி
னீக்கள் மொய்க்க விழுந்துபுரண்டுஞ்சிலர் தேவியரைநி
னைந்துவிரகத்திக் கொளுத்தவோடியுஞ் சிலருணர்வற்று
வாயில்நுரைதள்ளமறிந்து பிதற்றியுமிவ்வாறலைந்தபடியா
றகள்ளினுங் களிப்பைச்செய்வதுலகத்தினொன் றுமில்லை.
இஃதன்றியும் வரைப்புகளினுந்தடாகங்கள் படிகளினும்
மரச்செறிவுகளினுங் கால்களிடறிப்போகுந்தன்மை மே
லானவொழுக்கங்களைப்போதிக்குமாசிரியரில்லாமற்காமு
கராய்க்களித்துத்திரிகின்றவருக்கு நற்கதிகிட்டாதுசனன
வாதையிற் பட்டலைவதற்கொக்கும் இவ்வாறுபலபலகளி
யாடல்களைச்செய்தபின் றெளிவெய்திப்பழையகியாபகம்
வந்தவுடன் கற்கம்பங்களைப்போலத் திரண்டோங்கிய பு
யங்களையுடைய கணவரேவலின்படிக்கவர்களுடன் கலந்
தெங்குஞ்சூழ்ந்து மதுரமானமழலைச்சொற்களைப்பெற்ற
பள்ளப்பெண்கள் சுவாசம்விடுந்தோறுமவர்களுண்டகள்
ளின்மணம்பரவி வெளுத்தகுமுதமலர்களு மந்நாற்றத்
தைவீசத்தக்கதாய்ச் சினேகவாஞ்சையுள்ளவர்களைமூர்க்
கர் சத்ராதிகளைப்போலக் கலந்தொறுத்தலை நினைந்துத
ருணத்திற் கண்டித்துப் போடுவதை யொத்துத் தழைத்
தோங்கி வருநெற்பயிருக்கு விருத்துவமாயடர்ந் திருக்கு
ங்களைகளைக்களைந்தெரிந்தும்பயிர்களைக்கலைத்தும் நாட்டி
யுங்காலங்களிற் சலங்கட்டியும் போக்கியுமிருகங்கள்முத
லியவைகளா லிடையூறில்லாமற் காத்துலகத்தின் மக்க
ளைவளர்க்குந்தாய்க் கொப்பாகச் சாலிகளைப்போற்றிவரு
கையிற் பிரகாசிக்கும்வயிரக்கணைகளை மின்னலைவிளக்கு
மம்பின்கூடுகளின் வரிசைக்கிரமமாயடுக்கி யிருப்பதை
ப்போலப்பொன்மயமாகிய இளங்கதிர்வாங்கியும்பசியமூ
ங்கிற்குழையினுச்சியின் வச்சிரத்தினு லாயவேலையொழு
ங்குபடச் சேர்த்தகாலத் தொளிவீசுவதைநிகர்த்து நெற்
கதிர்கள் விரிவுகொண்டசைந்தும் பலபணைமருங்களையு
டைய நரகங்க ளுயிர்த்த குட்டி கடலைகளை நீட்டியதைப்
போன்றுபசுங்கதிர்க ணிமிர்ந்துங்கள்ளமனதைப் பெற்ற
வேசியர்மகிணர் வந்தகாலத்துப் பொய்யுபசாரங் களைச்
செய்வதற் கொப்பாகப் பயனில்லாதநெற்களைக் காட்டிய
இளங்கதிர்கண்முகவகவெழுச்சிபெறச் சந்தோடத்துட
ன்கணவனைக்கண்டு வணங்குங்குலமடைந்தையர்மெய்ப்
பக்தியைப்போல விளைந்துசாய்ந்ததைப்பள்ளர்கண்டந்நி
லத்தேவதையாகிய தேவேந்திரனுக்குப் பொங்கற்பூசனை
களைநடாத்தித்திரண்டு நெல்விளைவையறுத் தணியிட்டு
ப்பின்புசுமைகள் கட்டிக்கொண்டுபோயுயர்ந்தநிலங்களிற்
பூமிதேவியுடல்வருந்தவுஞ்சேடனெளிந்து வாடவும்பொ
ன்மலையைப்போல வானத்தையளாவிய பலபோர்களையி
ட்டுப் பின்பவைகளைத்தள்ளி எருதுகள் கடாக்களைப் பு
ணைகட்டியடித்துப் பலதரந்திரும்பும் போதெல்லாம்பர
மசிவத்தையுந் தமதிட்டதேவதையையும்போற்றிநெற்கு
வைமல்குவதாகவாழ்த்தி வைக்கோலைப்போக்கிப்பதரை
த்தூற்றி ஒப்படி செய்தெங்கு நென்மலைகளாகக் குவித்த

போதுகுடிகள் நின்றுதொழிலாளிகளைக்கொண்டளவிட்
டுத்தானங்கள் வழங்கிஅரசனுக்குரிய வாறிலொருபகுதி
யைக்கொடுத்துத் தொழிலாளர்முதலானவர்களுக்குக்கட்
டளைப்படிக்குவழங்கி யடிமைப்பள்ளருக்கு வேண்டியம
ட்டும் வெறுக்கத்தந்து புகழ்வோர்களுக்குக்கற்பகத்தரு
க்களைப்போல வளித்துநின்றநெற்குவைகளையுங்கொல்லை
களின்விளைந்துவந்த நவதானியங்களையுஞ் சகடங்களின்
மூலமாகப் புகழ்தற்கரியவளங்களைப் பெற்றிருக்கின்றம
னைகளிற் சேர்த்துக்குடும்பத்துக்கு வேண்டியதை வைத்
துமற்றதைப் பொன்விளைவை யரிந்துகுவித்ததைப்போ
லக்களஞ்சிய முதலான விடங்களி னிரப்பிக்கொண்டுபங்
துவருக்கஞ்சினேகிதர் அதிதிகள்கிடைத்தவரைமுகமலர்
ந்துபசரித்தவர்க ளுடனுண்டு களித்துந்தன தான்னியபு
த்திரமித்திர சம்பத்துக்களிற் குறைவில்லாதிருப்பார்க
ள். பலபிரயோசனங்களுக்கு முதலியாகின்ற பயறு-துவ
ரை-உளுந்து- முதலானபுஞ்செய்ப்பயிர்செய்து வரும்வி
சாலமாகியகொல்லைகளின் மத்தியிற்சிலகழனிகளின் நஞ்
செய்ப்பயிராகிய நெல்விளைவது பலர் திரண்டிருக்குஞ்ச
பையினிடத்திற் றிண்ணியகுலத்தினவதரித்த சீரியரொ
ருபுறத்திற் சேர்ந்தொதுங்கி யிருப்பதைப்போல விளங்
கும். இதுவல்லாமல் உலகின்கண்மாந்தர்பிறப்பதும்வள
ர்வது மூப்புவந்திறப்பதுந் சாதாரணமா யிருப்பதை
யொத்தந்நாட்டின் வித்துக்களை விதைப்பதும் நடுவது
மதைப்பரிபக்குவப் படுத்துவதும் விளைந்தபின்பறுத்து
ப்படுத்துத் தானியங்களைக் குவிப்பது மிடைவிடாமல்
நடந்துவரும்.

இஃதன்றியும்பேரி மிருதங்க மாதியானமங்கலவாத்தி
யங்கள் முழங்கதேவாதிதேவனான பரமசிவனுக்கு நடா
த்துமுச்சவங்களி னெல்லும் கலியாணந்தேவ பூசைகளா
தியான சுபகரங்களைச் செய்யும்போது முழக்கு மருதநி
லப்பறையினும் புஞ்சிறுர்கள் களித்துச் சிறுதேர்ப
ந்து முதலானவைகளின் விளையாட்டிற் பெருத்த வோ
சையுங் கடைசியர் வாய்மலர்ந்தொலிக்கும் வள்ளைப்பாட்
டினரவாரமும் உழுநர்கம்பலையுமெத்தேசகாலமும் பெ
ருத்தும்வானத்தையளாவித்தழைத்துத் தேன்களையிறை
த்துக்குளிர்ந்த நிழலைப்பரப்புஞ் சோலைகளுந் தாமரை-
அல்லிநீலோற்பல மலர்களிறைந்தலர்ந்திருக்கும் பொய்
கைகளுங் கழனிகளுங் காமனுக்காயுதச் சாலைகளைநிகர்த்
துங்கரும்புகளைத் துண்டித்தாலைகளினிட்டாட்டுவதுநல்
லொழுக்கங்களுக்குப் பிசகாய்நடந்த பாதகரிறந்த காலத்
தினிமபடாள் தண்டிப்பதைநிகர்த்தும்ஆலையிற்சிதைப்ப
ட்ட கன்னலினின்றுஞ் சாறொழுகுதல்லோபிகளைக்கடிந்
தவருக்குந்தருவதை யொத்தும்அச்சாற்றைப் பதலைகளி
னிரப்பியது கருப்பஞ்சாற்றினது சமுத்திரம்போலவும
தைக்காச்சும் போது பெருகிய புகைப்படல மேகத்தை
யொத்தும் விளங்கும் அவ்விடங்களிற் றழைத்தோங்கி
யிருக்கும் புட்பச் சோலைகளிற் சுரும்பினங்க டொலி
ப்பது இசைப்பாட்டினைப் போன்றுங் குயிலினங்கூவு
தல்பாடலையொத்தும் மஞ்ஞைகள் சிறகையடித்தாடுவது
பறைமுழக்கமாகவும் வஞ்சிக்கொடி யசைவது நிருத்த
நாடகமொத்துந் தருக்க ளசைவது யில் வேடிக்கைக்கு
மெச்சிச் சிரக்கம்பஞ் செய்வதை நிகர்த்தும் நாரைக
டொலிப்பது புகழ்வதைப் போன்றும் விளங்கும்
பொன்றகட்டை போத்த தளிர்களையும் முத்தின் கொ
த்துப்போன்ற புட்பங்களையும் வாய்ந்தமாவின் சினைகளி
னின்ற குயிலினங்கள்கூவுதல் தம்மிடத்திருக்கும் வளங்
களை வழங்க விருப்புற்றழைக்கின்ற தியாகிகளை யொத்
தும் வாழை - மா - பலா - இவை தம்மை யடுத்தவரு
ண்ணக்கனிகளையுதவுந் தன்மையினால் உத்தம குணங்க
ளையுடைய முதல்வள்ளலாதிய முத்திறத்தரளிக்குங்கொ
டையினைப்போன்றும் மடல்விரிந்த சைந்தோங்கிய தா
ழைகுரியனையுராய நிற்பதுபூமிதேவிகரங்களைநீட்டிஞ்சந்
திரனைப்போல மாசுறுமற்றுடைப்பதை யொத்தும்பரிம
ளமிகுத்த புட்பங்களலர்ந்த வுத்தியானவனங்களிடைவ
ர்கன்னியரை நவரத்தினங்களினுற் சோடித்தமேகலைநெ
கிழவுஞ் சொர்னவளையல்கள்சத்திக்கவும் புணர்வதைக்க
ண்டு பேடையினைப்பிரிந்த அன்றில்காமுற்றுவருந்தவும்
வாசனைகமழும் நந்தவனங்களினும்மேகத்தை யளாவிய
சோலைகளினுமெக்காலத்தும் ஆடவர்மகளிரைச்சேர்ந்தி
ருப்பது பிராணன் சரீரத்தைக்கலந்திருப்பதையொத்து
ங்கணிகளினீர் பெருகிக் குளிர்ந்த பூங்காவுகளி னிருக்
குங் கைதைக ளோங்கி வீசு மகரந்தத்தினுற் பசும்
பொன்னிலாயமேடைகடோறு மமைத்திரா நின்றதூப
க்குடங்களை வெள்ளி நிறமாக்கியும் அந்நாட்டி னிடங்
களெங்கும் பள்ளர்தேவிமாருடனெருங்கியுலவுவதினுனு
ம்வயறுளைந்துலவுஞ் சூற்சங்கினங்கள்கால்களி னிடறுவ
தினுனும்வெண்பட்டுக்கொடிக ளசைந்துதாக்கச்சேற்கெ
ண்டைகள்பாயத்தெங்கின்குலைகள்குலுங்கிநெத்துகள்தப
தபவென வுதிருவதினுனுஞ்சனங்கள் வருந்திநடந்தும்உ
யர்ந்துநிற்குங் கமுகின் பாளைகளின் வாளைகள்பாயப்பழு
த்தபாக்குகள்சடசடவெனச் சிதறுவது வானத்தின்விள
ங்கும்நட்சத்திரங்களு திருவதையொத்துஞ் சோலைகளிற்
படர்ந்திருக்கும் வல்லிக்கொடிகளின்மீது மயில்கணின்ற
சைவது பாகையொத்த தீஞ்சொலார் பொன்னூசல் களி
ன், இடைவருந்தஅதைக்கண்ட காமுகர்மனஞ்சுழன்று
வருந்த ஆடுவதைப்போன்றும்இதுவல்லாமல் மாந்தருக்
களிற்பூட்டியிருக்கு மூஞ்சலின்மாதர்களித்தாடுவதவர்கு
ழைகளின் காந்திக்குத் தோற்ற தளிர்களைப் பெற்றதாத
லாத் சகியாமலவரை வீசுவதற்கொத்துங் கிளிக டொனி
ப்பதைக்கண்டுபயந்து தம்மையடுத்தவரையிப்படிக்கு வ
ருத்துவது தருமமல்லவெனவசைபேசுவதை நிகர்த்துங்
குயிலினங்கள் கூவுதல்விழாமற்றப்பினர் களிவ்விருட்ச
ம்பிழைசெய்ததெனத்தூறிநிந்திப்பதைப்போன்றும்வே
லுக்கொப்பாய்க் காதளவுமோடியகண்களையுடையகொடி
ச்சியர் தினைப்புலங்களைக் காவல்கொண்டுகவண்களிற்பூ
ட்டிவீசுமணிகள் பட்சிகள்மீதுவிழ வவைகளைத்தழைத்
தசிறகினுன் விலக்கிக் கூச்சலிட்டோடியுங் கடல்நீரையு
ண்டுபெய்யுமேகங்களைப்போலமேதிகணெருங்கிவந்து த
டாகங்களின்விழுந் தந்நீரை முற்றும்பருகிக் கிடக்கவ
ளைகண்மடியிற் முக்குந்நோறுங்கன்றைநினைந்துமடிசுரந்
துபொழியும் பாலினுற் குறைவற நிரப்பியுந்தடாகங்களி
ற்செங்குவளைக் ளலர்ந்திருப்பது பூர்வத்தினமிநந்தியடி
கள் சமணர் வெட்கக்கமலாலயத்தி னொழுந்தருளிய சிவ
பிரான்சன்னிதானத்தினந்திவேளையிற்குளத்து நீரைவார்
த்தேற்றிய சரவிளக்கினை யொத்தும் இவ்விதச் சிறப்பி
னைவய்ந்த அந்நாட்டினுள்ளாவர் கடல்படு திரவியங்கான்
படுதிரவியம் மலைபடுதிரவியங்களை விரும்பாம லந்நிலங்
களின் விளையும்பொருள்களையே கொள்ளல் விற்பனை

செய்துவருவார்கள் சத்தசுரங்களி னளவைப்படி யாழை
மீட்டி குரல்ஞேசையைக்கூட்டி கின்னரிப்பட்சிகளு நா
ணும்படிக்குப் பாடுவதைக்கேட்டுக்களித்தவந்நாட்டினர
வர்களுக்குக்கிம்புரிக்கோடுகளையுடையகுஞ்சரங்கள்முத்
தாரங்கள்பதிக்குவைகளைக்கொடுத்துவருவார்கள். சுந்தர
முள்ளமங்கையருடுக்குஞ்சிறந்தகலைகள்பாறையினுங்கஞ்
சியினுலுந்தேய்ந்தும்பருத்தகொங்கைச்சுமையினலிடை
வருந்திவல்லிக்கொடியைப்போற்றேய்ந்தும்பாதங்கள்செ
ம்பஞ்சுக் குழம்பினுற்றேய்ந்தும் அவருட லதிற்ருெழுந்
தோறு முதைப்பட்ட வாடவர்சிகைதேய்ந்து மிருப்பத
ல்லது அந்நாட்டின் வேறுதேய்தல் கிடையாது கண்ணு
டியைப்போலவிளங்குங் கருவிழிகள்சிவக்கவுஞ் சரீந்து
வண்டு மதனவியர்வையரும்பவுங் கணவரைப்புணர்ந்து
களிக்கு மங்கையருங் கொழுனருட னூடிநிற்கும்பெண்
களுமளவற்றிருப்பார்கள். இதுவல்லாமற்காதலனைப்பிரி
ந்து வருந்துந் தலைவியைப்பாங்கிநோக்கித் தாயேநீயேன்
வாடுகின்ருய் அன்றில் பேடையைக்கலந் தின்புறுகின்ற
து இதுசுபகரமாகும் பொருளைக்கருதிச்சென்றநாயகனி
த்தினம்வருவார். சோபிக்கவேண்டாமெனக் கரங்களைக்
கூப்பிவேண்டுவரனேகர் பரந்தவல்குலையுடையவேசியர்
பிணக்குத் திரத் தொழுதுகூடி அவர் நகக்குறிகளைப்
பெற்று காமநூலை விர்த்திசெய்யுந் தூர்த்த ரெம்மருங்கி
னுங் குழாங்கொண்டுலவுவர் தடாகங்களின்வாளைகள் ச
ண்டைகொடுத்துப் பாய்ந்தருகினிருக்குங் கமுகம்பாளை
யிற்ருக்க வவை கமலம்நீலோற்பல பரிமளத்தினைவீசிக்
கொண்டிருக்குங் காமனுங்காமுற்று வருந்துவதாகவிழி
களைப்புரட்டுங்கன்னியர் பாதங்களினணிந்த கலவைச்
சாந்துக ளவர்பிணக்குத்திரப் பணியுங்காளையர் குஞ்சியி
னுங் கரங்களினுங் கமழ்ந்திருக்கும்மதயானைகள் மருத
நிலத்தினிருக்குங்கரும்பு முதலியவற்றைத்தின்றந்திவே
ளையில் தமது துயிலிடமாகியவேங்கையி னடியிற்சேர்ந்
துறங்கவும் மற்றச்சேனைக டத்தமிடங்களைக்கலந்து களி
க்கவும் பட்சிசாலங்கள் சோலைகளின்மீதுகூடித்தொனிக்
கவுங் கலைத்திரளதனடியின் மகிழ்ந்திருக்கவு மிலக்குமி
தாமரைத் தவிசினின்புற்று வதியவும் வண்டினங்களத
னிடத்துப்பெருகுந் தேனையுண்டுறங்கவுங் கன்னியர்சநி
முறையே நடித்திசைப்படிக்குப்பாடவும் இத்தன்மைய
னவாகிய சிறப்புகள் வாய்ந்ததாயும் பொன்மயமாயோங்
கிநிற்கு மதில்-கோபுரம்-விசாலமானமண்டபந்- சித்திர
மாடமாளிகைகள்-நாடகசாலைக ளணியணியாக விளங்கு
ம் நீண்டவீதிகள்முதலான பலவளங்கள் பாலிநதிபெரு
குந் தண்டகாடு பதிகளினிடங்களி னெங்குமிகுதியாயி
ருக்கும் இருவரையிற் றிரைகளைவீசுஞ் சமுத்திரஞ்சூ
ழ்ந்த பூமண்டலத்தில் நாவலந்தீவில் சகல செல்வங்களை
யும் பெற்ருேங்கிய ஜயங்கொண்ட மேழிக்கொடிப் பூபா
லபூவைசியஆரியவேளாளருக்குரியதொண்டைநாட்டின
முகுளிற் சிலகூறினேம் இனிமதுரமாகிய தமிழ்பெரு
த்துச் சகலராலும்புகழப்பெற்ற நகரத்தின் வண்மைக
ளைத் தெரிந்தவளாயிற்சொல்கின்ருேம்.

## நகரப்படலம்.

மாவுலகெங்குமலர்த்தடமாகத்
தாவறுசீர்புனைதண்டகநாடே
மேவியசஞ்சமதாவதின்மேவுந்
தேவினைபொத்ததுசீர்பெறுகாஞ்சி.

பெருமைபொருந்திய பூமண்டலமானது மலர்பொ
துளியதடாகமாகவுங் குடிவளமும் வயலினது செழிப்பு
ம் பெருமையுஞ்சிறந்தோங்கிய தண்டகநாடானது தாம
ரைமலராகவும் அதின்கண் வாசஞ்செய்யு மிலக்குமிக்
கொப்பாக விளங்குங் காஞ்சிப்பதியினெக்காலமும்விண்
டுவும் பிரமனு மற்றத்தேவர் பல்லாண்டிசைகள் பாடிப்
போற்றக்கலுழன்மீது மன்னத்தின்கண்ணு மாரோகணி
த்தவ்விடத்தி னுலவித்துதித்திருப்பதா னவர்கள் பதிக
ளாகிய வைகுந்தத்தினையு மனேவதியையுமொத்தும்வே
தசாத்திரங்களைக் கரைகண்ட பிரகஸ்பதியுடன் தேவேந்
திரன் விண்ணவர்கூட்டங்கள்சூழ வத்தலத்தின் வதிவ
தாற் பொன்னகரத்துக்கிணையாகவுங் கின்னரர்-சித்தர்-க
ருடகாந்தருவராதியர் பிரிவின்றி யமர்வதா லவர்கள்பத
விகளைப்போன்றுஞ் சேடன்முதலான நாகராசாக்களிரு
ப்பதாற் பாதலமுதலான வவர்பதிகளைநிகர்த்தும்அஷ்ட
திசைக்காவலரு மவரைச்சூழ்ந்தவர்களுமிருப்பதால் அ
வர்கள்பதங்களையொத்தும் வானத்திற்சஞ்சரிக்குஞ் சூரி
ய சந்திராதியான நவக்கிரகங்கள் மற்றையரிருப்பதால்
அண்டத்தைப்போலவுங் காஞ்சிப்பதி விளங்குகின்றதெ
னப் பலபெரியோர்கள் புகழ்வார்கள். இவ்விதமாகச் சக
லருமவ்விடத்திலிருக்குங் காரணத்தினுலொப்பனையொ
ன்றைக் குறிக்கப்படுவதோ அப்பதியே யதற்கிணையல்ல
து மற்ருெரு நகரங்களைக் காஞ்சிப்பதிக்குச் சமமாகச்
சொல்லப்படாது. வேதப்பொருளாய்ச்சோதிவடிவாயெ
ங்கும்பரிபூரணமாய் நிறைவெய்தி நடிப்பிக்குங் கார
ணவஸ்துவாகிய ஏகாம்பரநாத னைப்பற்றுத் தழைத்
தோங்கிய மாவிருட்சத்தி னிழலினுறைவதாகப் பேறு
பெற்ற காஞ்சிப்பதிக்குச் சராசரப் பிரபஞ்சங்களைப்
படைத்த பிரமனதியர் வாழ முன்னம் பரமனலுண்
டுபண்ணிய நகரங்களோ நிகராகும், ஊழி காலத்திற்
சத்தசாகரங்களும் பெருகி அப்பதியி னெல்லையை
ச்சூழ்ந் தலைகளைமோதி நிற்கப்பரஞ்சுடராகியகர்த்தனத
ன்மத்தியில் நின்றது மாயாபாசக்கருவிகள் சுற்றவிருக்கு
முயிரைப்போன்றன. சக்கிரவாளகிரியின்மீதலைகளைமோ
தும்பெரும்புறக்கடல்சூழ்ந்த பலவையகங்க ளடங்கியிரு
க்கும்அண்டங்கள் சிற்றுருவமைந்துவந்திருப்பதையொ
த்துச்சக்கிரவாகமுதலியபட்சிகடொனித்திருக்கவந்நகரு
க்கரணகநிற்கு மதிற்புறத்திற் சூழுமகழானது பிரளயத்
திற்பெருகிவளைந்த கடல்களின்வெள்ளத்தினை நிகர்த்தும்
ஆதியிற் பிதாமகன் பூமியைப்படைத்ததன் பொறையை
த்தாங்கச் சேடனுதியான பலவற்றைவகுத்தபின்பு அண்
டத்தினது பொறையையும் பரிக்கச்சுவரொன்றை யெழு
ப்பியதைப்போல வந்நகரத்தைச்சூழ்ந்தமதிற்பரப்பு வா
னத்தையளாவி விளங்கவுந் திரிபுரங்களைநகைத்தெரித்த
சிவபிரான் மேருவாகியதனுசைப் புயவலிகொண்டுவளை
த்தகாலத் தண்டவடுக்குஙன் குலைவதைப் பிரமன் கண்ட
வைகளைத் தாங்கக்கடவாயென் றருளவோங்கி நின்றதை

நிகர்த்துப் பாதலவரையினுழ்ந்து வானவெல்லை பரியந்த
முயர்ந்தும் விண்ணுலகத்துக்கும் விஞ்சையர் நகரத்துக்
குந் தேவர் வாழும் பொன்னுலகத்துக்கும் விண்டுபிர
மர்நாட்டுக்குஞ் சேடன்வாழும்பாதலத்துக்குமாதாரவாக
வெழுப்பிய பொன்மதிலை யொத்தும் பெரும்புறக்கடலை
ச்சூழ்ந்த சக்கிரவாளகிரியு மதற்குறையுளாக விளங்கும்
அண்டச்சுவரும்போலச் சிறகற்றபர்வத நிரைகளுக்கொ
ப்பாகச் சித்திரவீதிகடோறுஞ் சொர்ணமயமாய் நவரத்
தினகாந்திகளைவீசும் மாடமாளிகை - உப்பரிகைகள்-
பத்திபத்தியா யிருமருங்கினும் விளங்க வோங்கியமதிலி
னிடங்களி னமைத்திருக்குஞ் சித்திரப்பொறிகளிற் சில
துசொல்லுவோம், எதிர்த்த சத்துருக்கள்சதுரங்கசேனை
களுடன் புறந்தந்தோட முடுகி மின்னலையொத்த வாளா
யுதங்களை விதிர்க்கும் எழுவினுற்கண்டிக்குஞ்சேனைகளை
வாரிவாரி மோதுந்திக்குத் திபாந்திரங்களினெறியும், வி
ழுங்கும். பற்றிவலிக்கும் பெருங்காற்றிற்பட்டகதலிகளை
ப்போன் றரிக்கிடையாகத் தள்ளுங்கன்மழை பொழியும்
விற்களைவளைத்துச் சரமாரிதூவும் உருக்கிய வங்கத்தை
ச்செம்பைநெய்யுட னிறைக்கும்வடித்தசக்கிராயுதங்களை
ப்பிரயோகிக்கும் வச்சிராயுதங்களைச் செலுத்தும்லுடுங்கி
க்காட்டும் மீளவுமெழும்புங் குப்புறவிழுங்கோபித்தெதி
ர்க்குந் தாழும்உலகினை யளந்தவிண்டுவைப்போல நிமிரு
ம்பேரொலிபெற்ற பறைமுரசுமுதலான வாத்தியங்களை
த்திசைகள் செவிடுபட்டொடுங்க முழக்கும்வட்டணையா
கச்சுழலும் வானத்திற்பறக்கும் பட்சிசாலங்களை வாட்டு
ம்மதிலி னிடங்களெங்குமோடுந் திரும்புஞ் சூரியனுந் த
டைபடச் சரக்கூடுகளைக்கட்டுஞ் சூலங்களையெறியுந்தோ
மரங்களைச்செலுத்தும் விடங்களைக்கக்கும் வேல்களையெ
றியுஞ்சுடுமணலினை யிறைக்கும் பலவலைகளை வீசிப்புஞ்
சோபபுஞ் சங்களாக விழுத்தகழியிற்றள்ளுங் கொடியபூ
தங்களைப்போன்று திரியும் வெவ்வியகனலைக் கக்கும் ப
கைவர்செலுத்து மஸ்திர சஸ்திர வருடங்களை யுட்கொ
ள்ளும் பட்சிகளையொத்துப் பறக்கும் இவை யன்றியும்
அங்கனையிகழப்பட்டவர் நாவையு மனதையும் வாட்டு
மென்று சொல்லுவோமாயினம்மதிலின்மீ தமைத்திரு
க்குஞ் சித்திரப்பொறிகளினது சவுரியவன்மையையென்
போலிகளாற் புகழப்படுவதோ, இவைநிற்க கொம்மைக
ள்முதலிய வலங்காரங்களைக் கொண்டு பொன் மயமாக
வோங்கி வளர்ந்திருக்கும் அம்மதிலின்மீது நாட்டப்பட்
டதாய் வானத்தையளாவிப் பறக்குந் துசபடங்களசைவ
தெத்தன்மைத் தெனின் ஆதியிற் சிவபிரான் அண்டபி
த்திகையை யூடுருவிநின்ற சோதிமலையானது நான்கு வ
கைந்தாயோங்கி நிற்பதைப்போல விளங்கும் கோபுரங்
களினது சிகரங்களைக்காணப் பிரமன் பல அன்னவடிவு
கொண்டு பறப்பதையொத்தது குளிர்ந்தகிரண சமுகங்
களைவீசுஞ் சந்திரன்களங்கத்தைப் பெற்றனனென் றிவ்
வுலகுளோர் கூறுவதுண்மையன்று காவல்களைக்கொண்
டோங்கிநிற்கு மிம்மதிற்புறங்களினட்டிய மணிக்கொடி
களவன்மேனியிற் றைத் துடுத்திருந்த வெண்ணிலவின்
சட்டையானது பீறுண்டதோற்றமாகுஞ் சொர்ணமயமா
கிய சித்திரப்பொறிக ளமைந்திருக்கு மப்புரிசையின்மீ
தடர்ந்தோங்கிப் பறக்காநின்ற டெக்கயங்களினது செறி
வைக்கடக்கப்படாமையாற் சூரியனவைகளின் கீழ்ப்புற
வெளியி னுழைந்துபோவான் அதினுலவன் பெருமைக்

கழிவுண்டோ, உலகநெறியினையனுசரித்து நடந்துகொ
ள்ளும் விவேகசாலியானவன் றருணபேதமாயொருகெ
டுதியிற் பிரவேசிப்பானுயினு மவனைப் பிறர்குற்றஞ்சொ
ல்ல வறியார்கள்.

இவ்விதச்சிறப்பினை யுடைய சுவர்த்தலத்தி னுற்புறங்
களினும் விசாலமாகிய நிலைகளைப்பெற் றுகாயவளையினு
யர்ந்திருக்குங் கோபுரங்களானவைவிரத்தினதீப்பியமாக
விளங்குவனவும்அதன்கிழ்ப்புறத்தின் வாயல்கடோன்று
ம் காட்சியாவன தழல்வடிவாகிய பரமன்முடியைப்பிரம
னொருமுகங்கொண்டு பாற்கப்படா தெனக்காந்தி நான்கு
வதனங்களைப் பெற்றதற்கொக்கும் இவையன்றிச்சூரியச
ந்திரர்முதலான நவக்கிரகங்கடமது கதிகளிற் செல்லும்
போது உத்தரபாகத்தினுந் தட்சணபாகத்தினு மகமே
ருவுக்கொப்பாகநிற்குங்கோபுரங்களைக் கடக்கப்படாமை
யா லவைகளின் வாயிலின் மூலமாகச்சென்று தங்கடொ
ழிலை நடாத்துவார்கள். மேலுந் திரிபுரதகனரான சிவபி
ரானுணையினுற் சிறந்திருக்குங்காஞ்சிப்பதியினைவளைந்த
ளவிறந்த வொப்பனைகளைக்கொண்டுநிற்குமதிலினெல்லை
யானது பூமியின்கணிராநின்ற நகரங்களைப்போலப் பரந்
ததாய் அதின்கண்வேடிக்கைப்பார்த் துலவுமாந்தரவ்வந்
நகரவாசிகளை யொத்துங் கோபுரங்களி னணிவகுப்பாய்
நாட்டிய பட்டுக்கொடிக ளானவை யதின்வெடித் தெழுங்
கொழுந்துகளை நிகர்க்கும் இத்தன்மைபசிங்காரங்களைவா
ய்ந்த காஞ்சிப்பதியின்கண் விசாலமாயுநீண்டிருக்குமொ
வ்வொருவீதியின்நவரத்தினமயமாய்ப்பொன்வரைகளைப்
போன்ற மாடமாளிகைமண்டபமுதலானவைகள்கோடா
னகோடிகளுண்டவைகளின் விரிவையாவராற் கணிக்கப்
படும்அவைகளின்மீதுநாட்டியிருக்கும்பலநிறமணிக்கொ
டிகளி னளவையுமன்னதேயாம் இவைக டொனித்துப்ப
றப்பன வானவெல்லையி னுலவப்படாமையா னுழன்றுசி
றகையடித்து நிற்கும் பறவைகளைப்போன்று விளங்கு
ம்ஆயிரத்தெட்டு கொடிமுடிகளை யுடைய மகமேருபர்வ
தத்துக்கொப்பாகப் பலசிகரங்களைக்கொண்டு நிற்குமாட
மாளிகைகடோறு நாட்டியவிரத்தினமயமாகிய மகரதோ
ரணங்களும் நிலைக்கண்ணாடிகளுங் கலந்துவிளங்குங் கா
ட்சியாவன கதிரவனு முடுபதியுந்தங்கள்காந்தியையடக்கி
யேகவுருக்கொண் டவ்வீதிகளின்சிறப்புகளையுநோக்கியி
ருப்பதற்கொக்குஞ் சொர்ணமயமாகியகொங்கைகளையுமு
ருளைகள் முதலான வற்றைப்பெற்றணிவகுப்பாகப்பலநி
றப்பட்டுக் கொடிகளுங் கொடை சிகரத்துட னசையரா
ஜவீதிகளின் வட்டணையா யோடிவரு மிரதங்க டோற்ற
மாவன காரடிவித்தையாளர் சித்திரக்கோலி னுச்சியின்க
ண்பம்பரத்தைச் சுழற்றியதற்கொக்கு மிதுவல்லாமற்ப
ளிங்கினுற்செய்திருக்குஞ்சித்திரகூடங்களின்மீதுகுளிர்ந்
துவிளங்குமாணிமுத்துகளினுலுஞ் செம்மணிகளினுலு
ஞ் சோடித்திருக்கு மேலிடங்களிற்றொங்கும்பொன்னரி
மாலைகளி னவரத்தினகாந்திகளை வீசும்பாலிகைகடோற்
றமாவன தடாகங்களி னலர்ந்திருக்குங் கமலப் பொகுட்
டுக்கொக்கும் மரகதங்களினுற் சோடித்துச் சித்திரப்பிர
தமைகளமைந்த மர்டங்களின்மேனிலைப் பரப்புகள் தங்
கத்தினுலுமுத்துகளினுலுஞ் செம்மணிகளினுலுஞ்சோ
டித்திருப்பது மேகராசிகள் சோமசூரியாக்கினி வடிவை
யொருங்கெய்தப்பெற்றுச் சரிப்பதையொத்துங் கருப்பு
வில்லையேந்திய மாரனைநிகர்த்த வடிவுள்ளமைந்தரைஇர

திக்கொப்பாகிய சுந்தரமுள்ள மங்கையர் தழுவி நித்தில
ங்களினுற் சோடித்த மாளிகைப்புறத்தி னழகிய சிறகு
கடமைத்திருக்கு மன்னங்களைப்போல வுலவுகின்ற தோ
ற்றமாவன மேகபடலத்தின் மறைந்து வெளிவரும் பூர்
ணசந்திரனைப்போன்றும் பூமியின்க ணிராகின்ற நவரத்
தினத்திரள்க ளனைத்தையுந் தன்னிடத்திற் பதியப்பெற்
றுங்காற் றிருமாந்தோங்கிய மாடங்களினது கழுத்தின்
புறத்தினசையுந் துசபடாங்க ளெத்தன்மைய வெனின்.
வானத்திற் செல்லும் ஆதித்தனையும் அம்புலியையுங்க
ண்டு கோபித்துச்சீறிப் பற்றிவிழுங்க நாவைநீட்டிக்குல
வுவதைப்போன்றும் தேனினு மதுரமாகவசனிக்கு மங்
கையருடனுடவர் சலக்கிரீடை செய்யுந் தடாகங்களைப்
போலப் பளிங்கினு லமைத்த மாடங்களின்மேல் விளங்
குஞ் சித்திரகூடங்களானவை வானகத்தி னிற்குந் தேவ
விமான சேகரங்களைப்போலத் தோற்றும் - இஃதன்றி
யும், விண்ணவர் தானவர் சித்தர் இயக்கர் கின்னரர் உவ
ணர் கந்திருவர் முதலிய சகலருந் தத்தம்பதிகளை வெறு
த்தந்நகர மகத்துவங்களையுஞ் செல்வங்களையும் விரும்
பிவந்தவர்கள் வாசஞ்செய்ய வமைத் திருக்கும் மாடமா
ளிகைக டனித்தனியே வரிசைப்படநிற்குங் கமண்டலங்
களைத் தாங்கினவர்களாய்ச் சுவாசத்தைப் பந்தித்து ஞா
னசிரியன்குறித்தவாறே நிட்டியை நாசிமுனையி னிறுத்
திப் பஞ்சாக்கரத்தைச் செபித்துப் பரமசிவத்தின் பாத
கமலங்களை யிதயகமல பீடத்திருத்தி யோகங்களைச் செ
ய்யுமுனிவர் வதிகின்றசாலைகள் பெருத்திருக்கும்பூர்வத்
திற்முனும் விண்டுவுந் தேடுதற்கரிய பரஞ்சுடர் மீட்டுமி
ப்படிவத்தா னெங்கியதோவென்று பிரமனுமாசங்கையு
ற்றுநோக்க நான்கு வேதங்களையும் பூர்ணமாகக்கற்றவந்
தணர் வேள்விகளைச்செய்யுந தலங்களின் மூண்டெழும்
புகைப்படலமானது அண்டகோளகையினையுங் கடந்து
நிற்குஞ்சாலைக ளனந்தமுண்டு - நான்மறைக் குலத்தினு
தித்தவராய் உயிருக்கு முடலுக்குஞ் சம்பந்த மில்லாத
னபோன்று மில்லறத்தை யோம்பி ஐம்புலச்சேட்டைக
ளைவென்று சற்கருமங்களைநடாத்திவரும் பிராமணர்வா
சஞ்செய்யு முன்னதமாகிய மாளிகைகளிருமருங்கினும்
வானத்தையளாவிநிற்கும் வீதிகள்திரண்டும் பல திவ்வி
யபாணங்களைப் பிரயோகிக்கும் வலியினைப் பெற்றவர்க
ளும் வெவ்வியசமர்களைக்கடந்த செயசாலிகளுஞ் சதுர்
வேதங்களையு மிடைவிடாதுபயிலும் நாவைப்பெற்றவர்
களும் வதியுநன்கினைப்பெற்ற முதன்மை யாகிய காஞ்சி
யினது வீதிகளெங்குங் குருவிந்தமணிகளினுற் செய்தசி
கரங்கள் விளங்குதல் பொன்னுலகத்தைப் போன்றுங்கு
ன்றுகளைப்போலப் பலவகைப் பணிகளின் றிரட்சியும்
நவரத்தினங்களின் குவைகளும் அவாவைப்பெருக்கும்
பொன்ராசிகளு மற்றுமுள்ள சிறந்தபொருள்களு மெதி
ரின்விளங்க அதை நிதானிக்கப் படாமையாற் கணிதர்க
ளுநாணக் கற்பகத்தருக்களைப்போலச் சிறந்துவீற்றிருக்
கும் தனவைசியக்கடைகள் வைத்திருக்குஞ் சித்திரகூட
ங்க ளிடையிடையின் விலைக்கூறுகிறவர்களாய் கங்கைகு
லத்தவதரித்தவர்களாயப் பூபாலகராய் அஷ்ட லட்சுமிக
ளுங் குடிகொள்ளுஞ் செல்வப் பெருக்கினைப் பெற்றவர்
களாய்ப் பிரமன்றுடைகளி னுதித்தவர்களாய் வீற்றிரு
க்கும் காராள பூவைசிய வேளாளர் சூழும் தெருக்களு
நெருங்கிவிளங்கும் சத்த பரிச ரூபரச கந்த வாஞ்சைக

ளுக்கிடமாகிய பகுப்புற்றிருக்கின்றனம், கிருபைசெய்து
நடாத்துங் குண சம்ப... வர்கடுதிக்கின்றது செவிகளுக்
டமும் விழிவழியி னனந்த... க்கினியிற்பட்ட மெழுகை
ப்பித்தொழும் அண்டர் தொகு...
று மிடைவிடாமற பெருத்தும் நாசராய் ஆனந்தக்கண்
அன்னத்தி னடிச்சுவடும் பரமனுக் கெரித்துத்தவத்த
விண்டுவாகனமாகிய கருட னடிச்சுவடும் மே...ன்புத்திர
னதேவேந்திரனேறிநடாத்தும் அயிராவதத்தி னடி...ர்த்
டுமவ்வீதிகளெங்குந் தோற்றவும். பஞ்சவிலக்கணங்கள்
வாய்ந்து கால்களி னிரத்தினவெண்டையங்கள் சத்திக்க
வையாளியுலவும் புரவிகள் கனைப்புஞ் சித்திரமுகபடா
ம்விளங்க இருமருங்கினு மணிகள் கணில் கணீலென்று
மாறி யொலிக்கவுலவு மதயானைகள் வீறிடு மொலியுஞ்
சொர்னமயமாகிய வுருளைகள் மச்சுக்குத்துக் கால்கொடு
ங்கைகள் முதலியவற்று னலங்கரித்துமேருவைநிகர்த்து
நபுடைபரந் தோங்கிய விரதங்களோடுந் தொனியுங்கவி
கையினை யொப்பத்தழைத்து நிழலைப்பரப்புகின்றசோ
லைகளினின்றும் ஸ்ரீமான்கள் களித்துவருமாரவாரமு
ந்தேவதுந்துமி களினது முழக்கமுந் தெருக்களினிடை
விடாது பெரி தொலித்திருக்கும் அங்ஙகரத்திற் பரத
விலக்கணங்களின் வழுவின்றி நடித்தலனைத்தும் பஞ்ச
கிருத்தியங்களை நடாத்து முறைமையாற்பரமசிவனடித்
தலையாம். இசைப்பாட்டுக ளனைத்து மவனிசைக்கும்
வேதாகமத்தொனிகளாங், கேள்விப்படுவதனைத்தும் அ
வனது கீர்த்திகளைப்புகழுஞ் சுருதிகளுந் தேவாரமுமா
ம், பலர்கூடி யிருப்பதனைத்துந் திருத்தொண்டர் கூட்
டமாம்.

இஃதன்றியும், பால், தயிர், நெய், தேன், முதலியக
டல்கள் தத்தம் மெல்லையைக் கடந்திந் நகரத்திற்பெருகி
நின்றனவோ வென்றியாவரு மதிசயிக்க அவைகள்நிறை
ந்தகேணிகள் பெருத்திருக்கும் அன்னதானச் சாலைகள்
முன்னம்பராசத்தி யமைத்த முப்பத்திரண்டறச்சாலைக
ளைப்போ லிடைவிடாது சகலருக்குந்திருத்திசெய்திருக்
கும் அளவற்றகாலமாய் நீங்கியிருந்த தன்வர்க்கத்தி ன
ளைக் கண்டவுடன்முகமலர்ந்து நன்னயவசனங்களைக்கூ
றிமனங்களிக்கத் தமதில்லங்களின்வரவழைத்தறுசுவை
யுண்டி முதலியவற்றை யவர் மகிழ் சிறக்க வூட்டு மாறு
போல் அன்னசத்திரங்களின் வந்தவருகின்ற வாராநின்
ற பேர்களுக் குபசரித்து வழங்குமோதை மிகுத்திருக்
கும் இஃதன்றியும் மாடமாளிகைகளின் முற்றங்கடோ
றும் நாடகரைப்போலப் பொற்பாவைகள் நடிப்பதைத்
தேவர்முதலானவர்களெக்கி விருப்பமுற் றசைவற்றிரு
ப்பார்களிவ்விதச் சிறப்புகளையுடைய வீதிகளின்கணிரா
ஜகுமாரரேறி நடாத்து மிரத்தினமயமாகிய தேர்களான
வைஅளவற்ற சூரியர்க ளாரோகணித் தணியணி யாகச்
செலுத்து மிரதங்களை யொக்கும்வெண்பாவாதிய பாவி
னின்றுதியாநின்ற விருத்தங்கள்-துறைகள்-தாழிசைகள்
முதலிய வினங்களா னலங்காரமாகப் புனைகின்ற தமிழ்
ப்பிரபந்தங்கள் முதலான பலகலைகளை யாராய்கின்றகவி
வாணரு மவைகளின் கருத்துக்கிசைந்த படிக்குப் பிரச
ங்கிக்கக் கேட்டு மகிழ்ந்த வர்களுக்குத்தியாகங்கள்வழங்
குங் கல்விமான்கள் சபைகடோறு நெருங்கியிருப்பார்க
ள. வேழமருப்பினை நிகர்த்ததனபாரங்களையுடைய மங்

பலவாயில்களைக்கடந்து சிவபிரானைத்கைச் சமூகமுமவ
விழிகளினனந்தவாரிபெருகத் ரெவிரிற்கு மேகப்பெரு
ைாச்சொரிந்து திர்க்கதெண்டலிந்திருக்குஞ் சரிகம பதநிச
வாக்கியங்களினற் போ ப்பூரித்துச் சங்கீதங்களைப்பாடு
ர்கண்மீது கர்த்தன் குவளைமலரைவென்ற கரிய விழிகளை
யிட்டவாறே கயர் சத்தசுரங்களை யபிநயத்தாற்றமுவி
ங்கள் செ கணைப் பிரகாரநடிக்கின்ற வோசையுங்குளிர்
ன்றி யப்பெருக்கு நரம்புகளை முறுக்காணிகளிற்பிகி
விரலினன்மீட்டிக் கண்டத்தொனியைக் கூட்டி யி
சைக்குமியாழி னேசையுங் கூடிப்பெருத்துவிண்ணவர்
செவிகளுக் கமுததாரையை யுற்றியதைப்போலக் களிப்
பைவிளைத்திருக்குஞ் சுங்கரமிகுத்த தேவகன்னிய ரங்
காத்தி னிராவின்ற இராஜகுமாரர் வனப்பை விரும்பி
யவர்களோளைத் தழுவக் காமுறுவதானும் விண்ணவர்
மயங்கிக கணிகையரைக் கலந் தின்புறுவதானும் அழகி
யகாஞ்சிப்பதியானது மன்மதனுக் குரிய ராஜதானியாக
வும்விளங்குங் கூற்றுவனைப் போலச் செல்லுங் களியா
னைகளினது மதப்பெருக்கு மிடபங்களின்மீ தேறித்திரி
ந்து சுரபிகளைக்காக்கு மிடையர் சேரிகளிற் பசுக்கூட்ட
ங்கள் மடிசுரந்துபொழிந் தூற்றிட்டுப்பெருகும் பாலுங்
கலந்திடைவிடா தவ்வீதிகளினாற்றைப்போலப் பெருகி
க்கொண்டிருக்கும் மத்தள தாள சுதிக் கிசைவாகக் கர
ங்களின லபிநயங்களைக்காட்டிச் சிலம்புகள்கொஞ்சப்பா
தங்களைமிதித்துக் கணிகையராடலுங் கழைக்கூத்தர்பல
வித்தைகளைக் காட்டலுங் காமன் கருப்புவில்லை வளைத்
துப் பஞ்சபாணங்களைப்பூட்டிக் காமுகர்மீது செலுத்து
மாடலும் விண்ணவர்களித் தானந்தக்கூத்தாடுவதுமிகு
தியினல் நோக்குனருக்கு வெறுப்பையுண்டாக்கும் மங்
கையருமாடவரு மணிந்தணிந் துதவாமற் றெருக்களி
னெறிந்த நவரத்தினப்பணிகளே இலக்குமியு மிச்சிக்கு
ஞ்செல்வமாகுமாயிற் றுதித்தற்கரிய சிருட்டிகளை நடா
த்தும் பிரமனுக்காயினு மொப்பற்ற வக்காஞ்சியின் வள
ங்களைச் சொல்லப்படுவதோ. மாறுயிராஜகுமார ரொழிந்
தாடிய கத்தூரியினற்சேறுபட்டும் பொற்பிரகாசமா
கியசுண்ணப்பொடிகளின லவைபுலர்ந்தும் பனிநீர்களை
ச்சிவிறிகளினற்றாவப் பெருத் தாருகவோடியுங் கர்ப்பூ
ரம்மணற்செறிவாகவும் இவ்வுலகினர்மனங்கள் ராஜதசா
த்துவித தாமதகுணங்களினன் வேறுபடுவதைப்போல
வங்கர் வீதிக ளடிக்கடி மாறுபட்டுக்காட்டுந் தாமரைப்
பீடத்தமர்ந்து சிவராசிகளைப் பெருக்கிவரும் நான்முக
னைப்போன்று துதித்தற்கரிய விலக்குமியினது குமார
ஞன மன்மதன் றன்கணைவலியினன் மோகத்தைப்பெ
ருக்கிவருவான். குளங்களி னலர்ந்திருக்குந் தாமரைகளை
யொத்து மங்கையர் முகமலர்ச்சி பெற்றகாலத்தி னம்ம
லரிற்பெருகுந் தேனையுண்டுகளித் துலவிய வண்டினங்
களைநிகர்த்துப் பர்வதாகிருதியாகிய புயங்களைப் பெற்ற
புருடரவர்க ளின்பநலங்களைச் சரசசல்லாப லீலைகளின
ற்பருகிக் களித்திருப்பார்கள்.

பொன்மயமாய் விளக்கு முரசங்களாதிய மங்கலவாத்
தியங்கள் முழங்கத்திவ்விய பரிமளங்களைக் கமழும்புட்
பப்பத்தரின்கட் டத்தம்மரபுக்குரியவோம விதிகளைநடா
த்தியந்தரவாளர் களிப்பெய்தமணங்களைமுடிக்குமார
வாரங்க ளிடைவிடாது பெருத்திருக்கும். இதுவன்றியு
ம் யானத்தினுலவு மேகங்களிறங்கி யீனைப்பாறிச் செல்
லுமுன்னதமுள்ளசித்திரமாடங்களின்மீதுபாகையொத்
துவசனிக்கு மங்கையர்வாலிபர்மீது நீர்த்துருத்திகளின
ற்றாவும் பனிநீர்சிதறிச்சோனைப்பெயலையொத்தெத்தே
சகாலமு மவ்வீதிகள்விளங்கும். மேலுந்தேமல் பரந்து
பூரித்துத்ததும்பி விம்மிவனப்போங்கிய கொங்கை களை
த்தாங்கிய மாதருங்காமனை நிகர்த்தமைந்தரும் பொன்ம
யமாயோங்கியவுப்பரிகைகளின்மீநுலவிவிளையாட்டினெ
றிந்த சுண்ணப்பொடிகளுடன் புட்பச்செண்டுகளினுதி
ர்ந்தமகரந்தங்களும் வானத்தினெழுந்து படியக் கொண்
டல்கள் பொன்வடி வமைந்துபனி நீரைப்போலப் பரிம
ளிக்கு மாரியைப்பெய்துவரும் புட்பமாலைகள்புரளும்பு
யங்களையுடைய வீரரிடைவிடாமற் செல்லும் பொன்ம
லையினையொத்த விரதங்களினார்ப்பும் பாகனைச்சிறிநடக்
கும்மதயானைகள் வீறிடுமொலியுஞ் சவரிகளைநிகர்த்தபி
டரிமயிரலைய வேகமாய்ப்பாயும் புரவிகள் கனைப்பும் ப
டைவீரருராத்து நடக்குமதிர்ச்சியும் பலவளங்களிற்சிறந்
தவப்பதியின்வாழுமாந்தர்நெருங்கிவசனித்துச்செல்கின்
றகம்பலையு மேகமாய்ப்பெருத்திருப்பது முகிற்கூட்டங்
களினது முழக்கத்தையுஞ் சாகரங்களி னொலி யினையு
மொத் தெப்போதும்அவ்வீதிகளின்விளங்கும் மாரியை
யெதிர்பார்த்திருக்கு மூலகத்தைப் போலவு மன்னவன்
செங்கோன்முறையினை நாடியிருக்குங்குடிகளையொத்து
ம்அத்தல விசேடத்தைக்கருதிக் குற்றமற்ற தேவர்களு
ம்பாதலவாசிகளும் பூமண்டலத்தினரு மற்றையருமிட்
டசித்திகளைப்பெற்றுநற்கதியினையடையத் தேடிச்சேரு
மகத்துவமுள்ளது காஞ்சித்தலம். இதுவல்லாமல் அஞ்
ஞானம் வயிரம், மனக்கோட்டம், அகாலமரணம்,பிணி
முதலிய துன்பங்களவ்விடத்திற்பரிவாகவாசஞ்செய்பவ
ரையணுகாது நீக்கிரட்சிக்குந் தன்மையினற்சாயுச்சியப்
பதவியே அப்பதியெனி னதன்மகத்துவங்களையுஞ் சிற
ப்புக்களையும் என்போலிகளாற் சொல்லமுடியுமோ

இனியத்தலவிசேடத்திற் சிலகூறுகின்றும் சொர்ண
மேதாருவு மதன்கிளைகளாகவும் இலை தளிர் அழகிய பீ
தாம்பரமாகவும் பரிமள மிகுந்த மலர் கனிக ளிரத்தின
மாகவுமோங்கிய காஞ்சிவிருட்சமான தைந்து விண்டுக்க
ளைக்கண்டவர்களா லுண்டாக்கிய தடாகத்தினருகி னிழ
ல்பரப்பி நிற்பதாற் காஞ்சியென்றும் பிரமனுறக்கமாகிய
தினகற்பத்தினு மிறத்தலாகிய மகாகற்பத்தினும்பெரு
கிய பெரும்புறக்கடல்முதலான வெள்ள மங்நகரவெல்லை
யின்வருவதற் கஞ்சிப்புறத்தினிற்பதாகச் சத்திகாத்திரு
ப்பதாற் பிரளயசித்தென்றும், பூர்வத்திற் திருக்கயிலையி
னுமையவள் சிவபிரான் விழிகளைமூடிய காரணத்தானி
வ்வுலகமீடேற வித்தலத்தின்க ணெழுந்தருளி மாவடி
யின்வீற்றிருக்கும் ஏகாம்பரத்தை ஆராதிக்குந் தறுவா
யில் பரமனேவலிற் கம்பாநதி பெருகி வரக்கண்டு பயந்
தவ்விலிங்கத்தைத் தழுவக குழைந்தருளிக் காட்சிதந்த
தாற் சிவபுரமென்றும் — அயிராவதந் தவஞ் செய்து
புண்ணியகோடி கிரியாய்த் தம்மைத் தாங்கவும் அதன
ருகிற்பெருகும் வேசவதி திர்த்தக்கரையிற் பிரமன்மக
ஞ்செய்யத் தாமரைக்கண்ண னெழுந்தருளி யனுக்கிரகி
த்தலான் விண்டுபுர மென்றும்—பரமசிவன், கேசவன்,
நான்முகன் றத்தம்பதிகளை யிகந்திந்தத் தெய்வீகத்தலந்
தை விரும்பி வாசஞ செய்வதாற் றிரிமூர்த்தி வாசமெ
ன்றும் --பிரமன் மனமாசுநீங்கிச் சிறக்கக்காமுற்றுத்

தாமோதரனுமையாகிப்பூசித்தகச்சபாலயத்தினெழுந்த
ருளியபரமனைக் கருதித்தவஞ்செய்து பேறுபெற்றதாற்
பிரமபுரமென்றும் -மோட்ச காமியங்களை விரும்பித்த
வவிரதங்களைச்செய்தவருக்கிஷ்டப்படிக்கருளுந்தன்மை
யினுற் காமபீடமென்றும்—இந்திரனுதிய தேவர்தவஞ்
செய்து சிறப்பெய்திய தாற்றபோவன மென்றும்—திரி
லோகங்களினும் பூதலஞ்சிறந்ததாகும் அதன் கட்டங்கி
யதலங்களி னிப்பதியானது அறம்பொருளின்பத்தைய
ளிக்குந் தன்மையினுற் சகச்சார மென்றும்—அட்டசி
த்திகளையுந் தபோதனருக் கருளுமுக்கியத்தினுற்சகலசி
த்தியென்றும்—பரமசிவ மொருகாலம் பராசத்தியைநீ
லியென்றழைக்க வக்காளிமங்கழிவதாகக் காளியென்றவ
தரித்துஅரிய தவங்களைச் செய்யக்கர்த்தனிரங்கிக்காட்சி
தந்தருளிய வாறே அங்ஙகனாக் காத்திருப்பதாற் கன்னி
காப்பென்றும்—சிவகணங்களிற் ருெண்டீர னென்பவ
ன்மாலதியைக் காமுற்றகாரணத்தினுற் பூமியின் கணவ
தரித்திந்நகரத்தை யாண்டதாற் ருெண்டீரபுரமென்று
ம்—தண்டகராஜ னித்தலத்தின்விண்டுவைநோக்கித்தவ
ஞ்செய்ததாற் றண்டகபுரமென்றும் -- பதின்மூன்றுசிற
ந்தபெயரினைப்பெற்றது. இஃதன்றியும், அயோத்தி, ம
துரை, மாயை, அவந்தி, காசி, காஞ்சி, துவாரகையென்
னுஞ் சத்தபுரிகளிற் காஞ்சிநகர முதன்மையாகிய பேற்
றினைத் தருவதென்ருதியிற்பரமசிவன் பராசத்திக்கரு
ளியதா லித்தலத்தினுக் கொப்பெடுத்துக்கூறச் சொற்க
மத்தியபாதலங்களினுங் கிடையாது வசிஷ்ட ரிடத்திரு
க்குங் காமதேனுவின் மடியினின்றும் பெருகியபாலியா
றுவடபாரிசத்தினும் பிரமனுதியர் சுப்பிரமணியக் கட
வுளைத் திருமஞ்சனமாட்டிய திருநதி தென்பாரிசத்தினு
ம்கம்பை-வேகவதி அதனிடையினும் பரவுவதினுற் கங்
கை-காளிந்தி - சரஸ்வதி - முதலிய நதிகள்பாயுந் தலங்
களினுங் காஞ்சிநகரஞ் சிரேஷ்டமாகும். பிரமரினெரு
வனிறந்த மகாப்பிரளய வெள்ளத்தின்மீ தோங்கி நின்ற
மாவிருக்ஷத்தி னுெருகிளையினை மார்க்கண்டர் பற்றியிற
ங்கி உலகமுதித்த தறுவாயிற் பார்ப்பதியினது வளைத்த
ழும்பு முலைத்தழும்பும் பெற்ற கர்த்தனை யருச்சிக்கு ம
கிமையினைப் பெற்றும் அறுசமையங்களையுந் தாயை
யொத்துப் பரிவாய்க் காத்துச் சராசரப் பிரபஞ்சங்களீ
டேற முப்பத்திரண்டறங்களையும் வளர்த்த உமையவள்
ஆதிபீடத் தெழுந்தருளிய காமக்கோட்டத்தைச் சூரிய
சந்திராதியாகிய நவக்கிரகங்கள் சூழ்ந்துவருவதாற்றே
வருந் திசைதோற்ருமல் மயங்கிச் செல்கின்ற மகத்துவ
முமுடைய தத்தலங் கொடிய பாதகங்களைச் செய்தவனு
யினு மத்தலத்தை மனப்பூர்வமாகத் தெரிசிப்பானுயின்
அக்கினியிற்பட்ட பஞ்சைப்போலப் பாதகங்கள் தகிக்க
ப்பட்டு முத்தியினை யெளிதிற் பெறுவானுயிற் சாஸ்திர
விதிப்படிக்கொரு தரும முடித்தாற் கோடியாகப் பலிக்
கும். இம்மகத்துவத்தைக்கண்டு தேவர் - மாதவர் - முத
லாயினேர் தத்தமிருப்பிடங்களைவெறுத் தேகாம்பர நா
தனை யாராதித்துந் தவங்கள், விரதங்கள், யாகங்கள், மு
தலான சத்கருமங்களைநடாத்திய மிருப்பதால் அப்பதி
யின் மகத்துவங்களை யாவராலும் விரிக்கப் படாது. சுப்
பிரமணியக் கடவுளினுற் குட்டுண்டு பிரணவ வுண்மை
யினைத்தெளிந்த நான்முக னுறங்கும்போதும் அழிந்த
காலத்தும் பெருகிய சத்தசாகர வெள்ளமானது அங்ஙக
னைநெருங்காமலு மொருகுறைகளையுஞ் செய்யாமலுஞ்
சூழ்ந்துபோகுந்தன்மையினுற் பிறை கொன்றை கங்கை
தேவர் சிரமாலையுட னென்பணிகளையுந் தரித்த பரமசி
வமுண்டாக்கிய தல்லது பிரம சிருட்டியிற் பட்டதன்று
அத்தலத்தினிருப்பவர் வசனிப்பது வேதம் தடாகங்கள்
சிறந்தகங்கை, சிலைகள் இலிங்கம் மனிதர் தேவர், விரு
ட்சங்கள் பஞ்சதருக்கள், பொசிப்பது அமுதம், இசை
ப்பது சகத்திரநாமார்ச்சனை, நடப்பது பூவலஞ்செய்தல்,
சிந்தித்தல் தியானம், சயனித்தல் யோகசாதக மாகும்.
இத்தியாதிய மகிமைகளுஞ் சிறப்பும் விசேடமு மற்றெ
ந்தத்தலங்களினுங் கிடையா இஃதன்றியும் யானையுரிச்
சட்டையினைப்போர்த்த வயிரவர் - விநாயகர் - சூரனைக்
காய்ந்த சுப்பிரமணியர்- சாத்தா-விண்டு - காளி-முதலா
னவர்கள் காத்திருக்கும் பெருமையினையுமுடையது.

மேலுஞ் சண்மதங்களினுஞ் சிரேட்ட மாகிய சைவச
மையத்தினல்லது மோட்சபதவியினைப் பெறுத லரிதெ
ன்றறிந்து பிறருக்குத் தன் சமையத்தி னடிப்பவனைப்
போற்காட்டிக் கல்லை மலராகக்கொண்டு பத்தியுடன்றின
முஞ் சிவலிங்கத்தின்மீ தெறிந்து பரமன் பாதாரவிந்த
நீழலைப்பெற்ற சாக்கியநாயனுரும் அடியார்கள்வஸ்திரத்
தைவெளுத்துத்தரும் பத்தியைச்சோதிக்கக் கர்த்தன் றி
ருவுளங்கொண்டு திருத்தொண்டர் கோலமா யெழுந்தரு
ளித் தமதாடையைத்தந்து மழையினை யுண்டாக்கித் த
டைசெய்ததினுற் பாறையிற்றலையினைமோதப் பரமன்றி
ருக்கரத்தைநீட்டிக் காத்திரட்சிக்கும் பேறடைந்ததிருக்
குறிப்புத் தொண்டராதியான பத்தர்களும் மோட்சம்
பெற்றதலமாகும் இதுவல்லாமல் பரமன்விழிகளை மூடி
யதினுலுண்டாகிய பாதகநீங்கப் பார்ப்பதியார் காசியிற்
சென் றறம்வளர்த்துக் கைகூடாமையா லித்தலத்தினெ
ழுந்தருளி மாவடியின்வீற்றிருக்குஞ் சிவபிரானை வழிப
ட்டிட்ட சித்திகளைப்பெற் றின்னமுந் தவஞ்செய்திருக்கி
ன்றதால் அதனுக்கதுவே யொப்பல்லது வேருென்றை
ச்சொல்லப்படுவதோ சீவராசிகள் கடைத்தேறத் திருவு
ளங்கொண்டு லோகநாயகி யறம்வளர்த்த சாலைக்கருகிற்
பரமனைநோக்கித் தவஞ்செய்த பிலத்தின்கண்விளங்கும்
ஆலயத்தமர்ந்து காமாட்சியம்மனெனப் பெயர்பெற் றரி
யவழிபாடுகளைச் செய்துவருவதைவிரும்பிச் சிவபிரான்
அளாந்தகலைகளுடன் அத்தலத்தை நீங்காம லிருப்பார்.
அப்பதியிற் பிறப்பினு மிறப்பினு மிருப்பினு மல்லது
கணப்போது தங்கினும் மாவடியி னெழுந்தருளிய கர்த்
தன் நடனபாத தெரிசனைகிடைக்கப்பெறினுஞ் சிந்திக்கி
னுமோட்சவீட்டை காணியாகத் தரும். இவ்விதவிசே
டச்சிறப்புக்களைப்பெற்ற கச்சிப்பதியை நிகர்த்த தலந்தி
ரிலோகங்களினுங் கிடையாது பரமன் விண்டு பிரமன்
இந்திரன் காளி முதலானவருக்கு வாசயோக்கிய மாகவு
ம்மனுச்சக்கிரவர்த்தி துண்டீரன் தண்டகன் கரிக்காற்
சோழன் முதலியவர்கள் அரசுசெய்யுந் தலைமையும்பெ
ற்றது இக்காஞ்சிப்பதியின் முத்தியை விரும்பிப் பூசித்
தும் வலம்வந்தும் அலகிடல் மெழுகலாதியான பணிவி
டைகளைச் செய்துவரும் புண்ணியவான்கள்கோரிக்கைக
ளைத்தரவல்ல ஆலயங்க ளுாற்றெட்டுண்டு. அவற்றுட்ப
ரமசிவ னெழுந்தருளிய தல மிருபது. விண்டுவுக்குரிய
தலம் எட்டு மற்றத்தேவர்க ளவ்வாறே மற்றையத் தலங்

சளிற் சூழ்ந்திருப்பதால் அக்காஞ்சிநகரத்துக் குவமான மெங்குமிராதுமேற்கூறிய சிவத் தலங்களாவன- கச்சபாலயம், திருவேகம்பம், திருமயானம், திருக்காயாரோகணம், மகாகாளேசம், திருமேற்றளி, அநேகபேசம், கடம்பை, பணாதரேசம், மணீசம், வராகேசம், சுரகரேசம், பரசுராமேசம், வீராட்டகாசம், வேதநூபுரம், உருத்திரர்கா, இந்திராலயம், சதுர்முகசங்கரம், திருமாற்பேறு, திருவோத்தூர். ஆகிய இவையாம்.—விண்டுத் தலங்களாவன- அத்திரி, அட்டபுயம், வெஃகா, ஊரகம், சகாளாங்கம், நிராகாரம், சந்திரகண்டம், பாடகம். ஆகிய இவையாம்.—இஃதன்றியுஞ் சிவன் பார்ப்பதி சுப்பிரமணியக்கடவுள் முதலானதேவதைகள் வாசமா யிருக்குந் தலங்கள் அறுபதினாயிரமுண்டு.

இவைநிற்க, விளக்கமொன்று, இடங்க ளிரண்டு, தெற்றிகள்மூன்று, அரணங்களுனான்கு, தருக்களைந்து, புட்களாறு, நதிகளேழு, பொதுக்களெட்டு, பொய்கைகளொன்பது, சிலைகள்பத்து, மன்றங்கள் பதினொன்று இச்சிறப்புக்களு மோங்கியிருப்பதாற் காஞ்சித்தலம் அற்புதமாய்விளங்கும். மேற்குறித்த தொகைகளுக்கு வகையாவன ஆயிரங்கிரண சமூகங்களையுஞ் சோடச கலைகளின் பெருக்கையும் விரித் துலகை விளக்கிவருஞ் சூரியசந்திரரொளி மழுங்கச் செகமெங்குந்தனதருட்பிரகாசத்தை விரித்துக் காமக்கோட்டஆலயத்திற் பராசத்தியெழுந்தருளிய பிலத்தின்கண் எத்தேசகாலமு மழிவின்றிச்சொலித்திருக்குந் தூண்டாவிளக்கமொன்று—பிறந்த வுயிரிறவாமலு மிறந்தவுயிருதியாமலும் சுபகாரத்தைத் தரும் இடங்களிரண்டு--உயிர்களுக் குணவைத் தந்தும் விருப்புற்றவைகளையளித்தும் ஊமைகளைவசனிக்கச்செய்துமிராநின்ற தெற்றிகண் மூன்று—கீழ்பாரிசஞ் சமுத்திரந், தென்பாற்பெண்ணை, மேற்புறம்பவளசயிலம், வடதுபால் வேங்கடம், இந்நாற்பாங்கினைத்தெருட்டும் அரணம்நான்கு—வேதவுருவாய்ப் பூத்தல் காய்த்தலில்லனவாகிய மா,எக்காலமுங் கனிகள் மலிந்திருந்தவல்லபுண்ணியவான்களுக் கட்டசித்திகளைத் தரும்புளி,சுகந்தத்தினைவீசும் மலர்பொதுளிய இலுப்பை, வானத்தை யளாவித் தழைத் திருக்கும் அத்தி, குளிர்ந்த நீழலைப் பரப்பும் எட்டி, இம்மகிமையுள்ள தருக்கள் ஐந்து—அமுதத்தினைப் பெறச் செய்யும் வானம்பாடி, ஐசுவரியத்தினை யளிக்கும் அன்னம், வேதாகமங்களை யோதுங் கிள்ளை, வருங் கருமங்களை விளக்கும் ஆந்தை, பெருங்காலத்தைக் குறிக்குஞ் சேவல், ஞானச் செல்வத்தை விளக்குஞ்சக்கிரவாகம், இவ்விலக்கணங்களை வாய்ந்த புட்கள் ஆறு-கம்பைபம்பைமஞ்சினிபிச்சிகலிச்சிமண்ணிவெஃகா இச்சிறந்தநதிகளேழு—விடாய்த்து வந்தவருக்குநீருதவித் தேற்றுங்கூவலம்பொது-முயல்சிறி மதயானையைத்துரத்தும் பொது-சத்தசுரங்களைவிளக்கும் பொது-விண்டுகண்டுயிலும்பொது-மன்மதவடிவினைத்தரும்பொது புற்றின்கண்மத்தளவோசையினைமுழக்கும்பொது-திசைதோற்றாது மயக்கும்பொது- உமையவள் களித்தமரும் பொது- இவ்விசேடமுள்ள பொதுக்களெட்டு—பழம்பிணிகளை நீக்கும்பொய்கை, மனுக்கள்சக்கிரவர்த்திகளிருதிகாலத்தைக் குறிக்கும் பொய்கை செல்காலம்- நிகழ்காலம்-வருகால வேற்றுமைப்பாடுகளையு முணர்த்தும்பொய்கை, பரமசிவன் திருவடிகளைப்பெறச்செய்யும் பொய்கை,வேண்டியவற்றைப் பெறக்காட்டும்பொய்கை ஞானபோதகத்தைத் தரச்செய்யும் பொய்கை,பொன்வடிவைத்தரும் பொய்கை, இலக்குமி விலாசத்தை வருவிக்கும் பொய்கை, வசிகரத்தையளிக்கும் பொய்கை, இப்பேற்றினைவாய்ந்த பொய்கைகளொன்பது—விடத்தை நீக்குங்கல்-வினைகளைப்போக்குங்கல், சேர்ந்தவரைத் தேவராக்குங்கல், ஆயுதவனககளினன் வெட்டுப்பட்ட சரீரத்தினைப் பொருத்துங்கல், தேவாஸ்திரங்கள் மேல்வரினுந் துரத்திக்காக்குங்கல், புதைத்ததிரவியங்காணாது வினவிற்காட்டுங்கல், மிகுந்ததுன்பங்களை நீக்குங்கல், அரசருக்குவெற்றியைத்தருவிக்குங்கல், இவ்விதமகிமைகளைப்பெற்றகல்பத்து,பரதாரத்தைப்புணர்ந்தவன், புருடனைவஞ்சித்தன்னியனையணைந்தவள், குருவைநிந்தித்தவன்,இவர்களொருங்கினாலும் ஊமையாக்குமன்றஞ் சோரரைக்காட்டுமன்றம்பலவடிவினைவிளைக்கும் மன்றங் கலைக்கியானங்களை விளக்கும்மன்றஞ் சந்தேகங்களைத் ,தெளிவிக்கும் மன்றம் பொன்னுலகவாழ்வைத் தரும்மன்றம் நவரத்தினாபரணங்களை யுதவுமன்றம் அமுதத்தை விளைக்கும்மன்றம் வடிவினை மறைக்கும்மன்றம்மேகமிடைவிடாது பொழியக்காட்டும்மன்றம் பகலிரவாகவும் இரவுபகலாகவுமாற்றும்மன்றம், இவ்விதச் சத்தியினைவாய்ந்த மன்றங்கள் பதினொன்று. இஃதன்றியுஞ் சிலைகள்-தருக்கள்- இடங்கள்-கூவல்கள்-நதிகள் தடாகங்கள்-தீர்த்தங்கள் பிலங்கள்-பழனங்கள் சோலைகளாதியவந் தலத்தின்கண் கோடானகோடிகளுண் டவைக ளற்புதமகிமையினை யுடையனவாம். இவைகளின் மகிமைகளைப்பிரமன்றொகுத்துக்கூறவு முடியாது. இவ்விசேடங்களைப் பிதாமகனாதியிற்கேள்விப்பட்ட சனகன் வியாதனுக்கருளினர். அவரிடத்துச் சூதபுராணிகர்பெற்றுச் சவுனகாதிரிஷிகளுக்கோதும் அளவற்ற சிறப்புக்கள்வாய்ந்த காஞ்சிமாநகரத்தின் வளத்தினைக்கொஞ்ச வறிவைவாய்ந் தொருநாவைக்கொண்டஅடியேனாற் புகழப்படுவதோ.

இவ்விதப்பிரதாபங்களைப்பெற்ற கச்சிப்பதியினடுப்பிரதேசத்திற் பார்ப்பதியார் வீற்றிருக்குங் காமக்கோட்டத்தினையொத்துத் தென்பிரதேசத்திற் கோடிசூரியப்பிரகாசம் வாய்ந்த குமரகோட்டமென்னும் ஆலயமொன்றுண்டு. அதிற் சிவபிரானக்கினிவிழிகளிற்றோன்றி வெற்றிவேலினாற்சூரனாதிய அவுணரைவாட்டித் தேவர்சிறையினைமீட்டுப் பொன்னுலகவாழ்வை இந்திரனுக்கருளிய

சுப்பிரமணியக் கடவுளமர்ந்து திருச்செந்தி லாதியாகிய
தலங்களினும் பக்தரிதய கமலங்களினுந் திருவிளையா
டல்களைச்செய்து பிரமன் முதலியோர்பூசிக்கப் பாதுகா
த்துக் கமண்டலம் அக்குமணித்தாவடத்தினைக் கரங்க
ளிற்கொண் டாதியில்வேதனைச் சிறைப்படுத்திச் சிருட்
டியினைநடாத்திய கோலத்தைத் தாங்கித்தேவரனைவரு
ம் போற்றக் கிருபாநோக்கம் பாலித்திருக்கு மகிமையி
னைப்பெற்ற காஞ்சிநகரத்திற் பிரமன் றனதுளம்பவுத்தி
ரமாகவிண்டுஆமையுருவினைக்கொண்டு பூசித்த கச்சபா
லயத்தின் வீற்றிருக்கும் பரமனைக் கலைமகள்சமேதனுப்
வழிபட்டிருக்கின்ற தறுவாயில் இல்லறங்களை வழுவின்
றோம்பிய முனிக்கணங்கள்வந்து சேவித்துப்போற்றிவி
ண்ணப்பஞ்செய்வதாவது—சுவாமி, இதுபரியந்தங் கிர
கஸ்தாசிரமத்தினின்றனம். இனியரிய தவங்களைச்செய்
து முத்தியினையடைய விருப்புற்றனமாதலால் அதற்கு
ச்சிரேஷ்டமாகிய தலமொன்றை யனுக்கிரகஞ்செய்யவே
ண்டுமெனப்போற்ற, பிரமனிறங்கி யொருதருப்பையி
னை வட்டமாக்கி யுருட்டி, மாதவரோ இதனைத்தொடர்ந்து
போவீராக. அதுநின்றவிடம் பவுத்திரமாகு மத்தலத்தி
ன்வதிந்துதவங்களைச்செய்யக் கடவீரென்று திருவாய்ம
லர்ந்தவுடன், அத்தவத்தர்சேவித்து விடைபெற் றத்தரு
ப்பைச் சக்கரத்தின்பின்சென் றதுநின்றவிடத்தினைமுக்
கியமாகக்கொண்டு அரியதவங்கள் வேள்விகளாதியவற்
றைச் செய்திருந்தார்கள். தருப்பைக்காரணத்தா லுண்
டானதால் அவ்விடம் நைமிசாரணிய மெனப்படும். அ
வ்விருடியர் வேதவொழுக்கப்படிக் கரியதவங்கள்முதலி
யவற்றை முடித்துச் சிரேட்டராக விருப்பதைச்சுகருக்கு
நிகரான சூதபுராணிகரறிங் தவ்விடமெழுந்தருளுவதை
க்கண்ட தவத்த ரெதிர்கொண்டு சேவித்துப் போற்றித்
தேவரீரடியோங்களை யொருபொருளாகவெண்ணி வந்த
படியானித்தலம் பவுத்திரமாயிற்று. யாங்களுங் கிருதா
ர்த்த ரானோமென் றளவற்றவுபசாரங்களைச்சொல்லித்தங்
களாசிரமத்திற்கொண்டுபோய்த் தருப்பாசனத்தினெழு
ந்தருளச்செய்து அர்க்கியபாத்தியாதி விதிகளினாற் பூசி
த்தவர்களாய்ச்சுவாமி பிரமனருளியவாறே யிவ்விடத்தி
னைச்சேர்ந் தித்தினவரையிற்செய்த தவப்பேற்றினாலும்
மைத் தெரிசித்துப்புனிதரானோமென்றேத்த, சூதர்களி
த்துக் கிருபாநிதியாகிய பரமசிவத்தைக்கருதி நோற்றரி
யஞானத்தை யுணர்ந்த மகத்துக்களே உங்கள் திருக்கூ
ட்டத்தைச் சேர்வ தென்போலிக ளிம்மையிற்பெறும்
பயனாகும்,உங்களைக்காணவிரும்பிவந்தோமென்றவுடன்,
நைமிசாரணியவாசிகள் மகிழ்சிறந்து வணங்கிச் சுவாமி
வேதவியாசரிடத்தின்வாசித்த மாணாக்கருட் டேவரீர்மு
க்கியராய் வேதாகமங்க ளிதிகாச புராணமுதலியவற்
றைச் சாங்கமாக வுணர்ந்தீர்.உம்மாற் சூரனைவென்றசுப்
பிரமணியக்கடவுளினது திருவிளையாடல் களைக்கேட்க
வெகுகாலமாக விரு[illegible]சேந்திரியங்களையு மொருங் கெய்த
போதிக்கவேண்டுமென் [illegible]னரான திருத்தொண்டர் கூட்
கமுதமாக நுழைந்தவுடன்அ[illegible]லம் பெருகக் கரங்களைக்கூ
யொத்து மனமுருகித் திரோகபரவியுந் தேவாலயங்கடோ
ணீர்பெருக ஆசிரியன்றிருவடிகளைச் சி[illegible]மக ஞார்தி யான
னைநோக்கி இராசபுத்திரன்-குருபுத்திரன் -[illegible]ருபாக மாகிய
ன்-போதிப்பதைக் கிரகிக்கவல்லவன். ஒருவருக்கு[illegible]வாகனனு
துங் திறத்தைப்பெற்றவன்- தமக்குத் தொண்டுசெய்[illegible]ச்சுவ[illegible]
னிவ்வறுவருக்கும் நூல்களையுணர்த்த வேண்டுமெனச்
சாத்திரங்கள் சொல்லுகின்றன ஆதலாற் பத்திவிசுவா
சங்களைப்பெற்ற வுங்களுக்குக் காந்தபுராணத்தைச்சொ
ல்லுவோம். இச்சரித்திரங்களை விரிப்பவரும் பத்தியுட
ன் கேள்விப்பட் டானந்தமடைபவரு மற்றையருமெளி
தின் மோட்சத்தைப் பெறுவார்கள். அப்பேற்றினையடை
விக்கும் மகத்துவமுள்ள காதையை ஐம்புலனொருமித்த
பத்தியுடன் கேட்பீராகவென்றுசொல்லத்தொடங்கினார்.

## பாயிரம்.

———

முன்னமொருகாலஞ் சொர்க்கமத்திய பாதலங்களின்
அமர்ந்தபிராணிகள் செய்த பிரார்த்தகர்மசம்பந்தத்தினா
லளவுபடாத வேதங்களனைத்து மாதியந்த பதக்கிரமங்க
ள் தடுமாறிச் சிந்தியகாரணத்தினாற் றேவர் முனிவர்மரு
ண்டு திரிநேத்திர தாரியாகியபரமனனுக்கிரகப்படிக்கம்
மறைகள் முதற்றோற்றியவாறே பரவிக்காட்ட வதினொ
ழுக்கங்களை யாசங்கையற வாராய்ந் தொழுங்குபெறக்
கூறுவ தெவர்களுக்கு மரியனவாதலான், விண்ணவர்த
வத்தர் பூமியின்கண் வதியாநின்றமானிடர் முதலாயி
னோ ரறிவுவிளங்காமல் வேதவாய்மைகளின்மாறிப் பல
துஷ்கிருத்தியங்களை யனுசரித் தவற்றிற்கடுத்தசிலமோ
கன சாஸ்திரங்களையு முண்டுபண்ணிக்கொண்டு பூவுலக
த்தின் முக்கியமாகவழங்கிவருந்தருமங்களனைத்துங்கொ
டியபாசபந்தவினையென நீக்கிப் பாதகங்களுக்கேதுவாகி
யமார்க்கத்தைக் கடைப்பிடியாக வெண்ணிச்சகலருமத
னைத்தொடர்ந்து செய்து வருகின்றதை விண்டுபிரமன்
கண்டுபரமசிவகடாட்ச மில்லாதிந்த மாறுபாடு தவிரா
தென நிச்சயித்திந்திரன் முதலானதேவர் களுடன்றிருக்
கயிலையைச் சேர்ந்து கணங்கள்போற்ற முதல்வாயிலிற்
றமதாணையினைச் செலுத்தி வீற்றிருக்குந்நந்திதேவனை
ச்சேவித் தெங்கள் வரவைப்பரமனுக் கறிவிக்கவேண்டு
மெனப்போற்றக் கிருபையுற்றவர்களையவ்விடத்தில்நிறு
த்திக்கர்த்தன் சன்னிதானத்திற்சென்று வணங்கிக்கேச
வன் முதலானவர் வரவை விண்ணப்பஞ் செய்து அனு
மதிபெற்று வந்து நீங்கள் சபைக்குவருகவென பரமசி
வங்கட்டளை யிட்டதென்றார்.

அவ்வாக்கியத்தைச் செவிகளுக் கமுதமாகக்கேட் டா
னந்தபரவசராய்ச் சிவகணங்கள் காவல்கொண்டிருக்கும்

கைய ரளகத்தைப்புலராவூட்டு மகிழ்வு தெரிசித்தவுடன்
ர்களமைந்த மாடங்களின்மேற் றருவடிகளிற் கற்பகமல
க்கும் வேற்றுமையின்றிக் கடன் சமர்ப்பித்துவேதாகம
வே முதலாகிய பண்கதிறிக் கரங்களைக்கூப்பிநிற்க,அவ
கின்ற வோசையுங் கிருபாநோக்கம் பாலித்துக் கட்டளை
யுடைய கணி தத்தமக்குரிய யிடங்களினிருந்தபின்பு, உ
ப்பாதலி னைககள் குறைவறநடந்துவருகின்றனவோவெ
ந்தகுதி வினவ, கேசவன்வந்தித்துதேவரீர் திருவுளப்படிக்
கடியோங்கள் விருத்திகள் சிதைவின்றி, முற்றுகின்றன
வாயினும் பூமியின்கணிராநின்றதபோதனர்முதலினோர்
மோகனசாஸ்திரத்திற்பட்டுத்தேவரீரைப் பரமெனநினை
யாது.தமதுகட்டளைகளை நடாத்திவரு மென்னையும் பிர
மனையுஞ் சிலர் கர்த்தவ்வியமெனக் கருதித்தொழுகின்ற
னர்.சிலர் மற்றத்தேவர்களுடன்றேவரீரைச் சமமாகத்து
ணிவுகொண்டனர். காலகருமங்களைக்கடந்த ஆதிமூர்த்
தியுமுண்டோவெனச் சில ரவமதிக்கின்றனர். கடவுள்
வேறில்லை,நாங்கற்றசாஸ்திரவுணர்ச்சியே நித்தியமெனச்
சிலர் பாவிக்கின்றனர். சிலர்ஆகமவிதிப்படி விபூதிஉரு
த்திராக்கங்க ளணிவதைமறந்து தங்களுக்கிஷ்டமானகு
றிகளைத் தரிக்கின்றனர். சிலர் உண்ணல்உடுத்தல் புண
ர்தல் களித்த லிவைகளே மோட்சமென வவைகளைத்த
விரவேறொரு முத்தியிருக்கின்றதென்பது அஞ்ஞான
மெனவு நினைக்கின்றனர். இவ்வாறு பலபல விதங்களிற்
சகலருமுயற்சிகொண்டு பிறவிச்சாகரத்தைக்கடக்கு மு
ண்மையினை யறியாதுழன்று, வேதாகம வரம்பைக் கட
ந்துபவநெறியை முக்கியமாகத்தொடர்ந்து தீவினையிற்ப
டர்ந்தலைந்து மயங்குகின்றூர்கள். இவைகளனைத்துந் தே
வரீர் திருவுளத்தின் விளக்கமாயினும் அடியோங்க ளறி
ந்தவற்றை விண்ணப்பஞ்செய்தனம். இதனைத் திருவுள
த்திற்கொண் டெங்களுக்காக விரக்க முற்றுச் சீவராசிக
ள்மையலைநீக்கி முமுட்சுக்களாய்த் தேவரீர் பாத கமலங்
களைக்கருதி மோட்ச வீட்டைச் சேரும் வண்ணங் கிரு
பைசெய்யவேண்டுமென் றிரக்கும் விண்டுவை நோக்கி,
உனது கலைகளினொன்றைக் கொண்டு பூமியின்க ணவத
ரித்துக் கிலப்பட்டிறைந்திருக்கும் வேதங்களைச்சேகரித்
துநான்குவகைப்படுத்தித் தகுதியான விருடியருக்கவை
களைப் போதித்தவர்களால் அவ்வான்மகோடிகள் சிற்று
ணர்வைமாற்றிப் புனிதராக்குவாய். அவைகளை யோதப்
பெறுத சூத்திராதியர்க ளெளிதின் முத்திபெறத்தக்கதா
கவேதங்களுக்குமுந்தி விதிக்கப் பட்டதாய் ஆகமமென்
னுமொருசாத்திரமிருக்கின்றது. இஃதுநமது பெருமை
களையே முக்கியமாக விளக்கும் இதுவன்றியும், வாசித்
தவரைப் பவுத்திரமாக்கும் பதினென் புராணங்களுண்
டு. அவைகளை நந்திக்கருளியிருக்கின்றனம் அவன் சன
ற்குமாரனுக்கு வரன்முறையாகப் போதித் திருக்கின்று
ன். அவனிடத் தப்புராணங்களை யுணர்ந்து சகலருக்கு
மோதி யறிவுவிளங்கச்செய்யக்கடவாயென் றனுக்கிரகஞ்
செய்ய, அதற்கிசைந்து கேசவன் பிரமன்முதலானவர்க
ளுடன் கர்த்தனைவணங்கி விடைபெற்று வைகுந்தத்துக்
கெழுந்தருளிச் சகலருக்குஞ் செலவுகொடுத் தனுப்பிச்
சிலகாலஞ்சென்ற தறுவாயிற் பூமியின்கண்பராசர்ஒருதி
னப்பிராதக்காலையிற் கங்கையைக் கடக்க வோடமேறின
வரா யதைச்செலுத்து மச்சகந்தியினது சுந்தரத்தைக்க
ண்டுமோகித தவளைச் சம்மதப்படுத்தி யோசனைகந்தியா
க்கிப்புணர்ந்தார். அக்காலத்தின் விண்டு அவள்கெற்பத்
திற்பிரவேசித்துத் தண்டகமண்டலத்துடன் அவதரித்
தவர்களிடத்திற்செலவு பெற்றுப்போய் இலந்தைமல்கி
யகாரணத்தினுல் வெதிரிகாச்சிரமமென்னும் வனம் வா
சயோக்கியமென்றெண்ணி யவ்விடத் தமர்ந்தார். அக்கா
ரணத்தினுன் வாதராயணனென்னுந் திருநாமம்பெற்று
ப்பரம சிவகடாக்ஷத்தினுன் வேதாகமங்களை யொருவரி
டத்தோதா துணர்ந்து வேதத்தைநான்குவகைப் படுத்தி
அச்செய்கையினுன் வேதவியாதனென்னு நாமமும்பெற்
றதன்பின்பு சனற்குமாரரிடத்திற் பதினெண்புராணங்க
ளையும் வாசித்து வேதப்பொருள்கள் மகத்துக்களுக்குப்
போனதயாகத்தக்கதாகப் பல வேதாந்தங்களைச் சூத்திர
ங்களாக்கியபின் பயிலவர், வைசம்பாயனர், சைமினி, சு
மந்தர், இந்நால்வருக்கும் வேத நான்கையும் அறிவித்த
வைகளின் சூத்திரங்களையு மவற்றிற்குரியவர்களுக்கு வ
ரன்முறையாகப் போதிக்கக்கட்டளையிட்டார் அவர்களு
மவ்வாறே பரிபக்குவர்களுக் குணர்த்தினர் அதன் பின்
புபதினெண் புராணங்களையும் அடியேனுக் கனுக்கிரக
ஞ்செய்ய அவரனுமதியினுல் அவற்றைச் சாது சங்கங்க
ளுக்குரைத்து வருகின்றனன். இவ்விதமாக வேதாகமபு
ராணங்க ளுலகின்கண் பரவின. மேற்கூறிய புராணத்
தொகையிற் பரமேசுவரன் பெருமைகளைத் துதிப்பன.
பத்து,விண்டுவுக் குரிய வைநான்கு, பிரமனுக் கிரண்டு,
சூரியனுக்கொன்று, அக்கினிக்கொன்றுகவிளங்கும் சிவ
புராணங்களாவன சைவம், பவுடியம், மார்க்கண்டம்,இ
லிங்கம், காந்தம், வராகம், வாமனம், மச்சம், கூர்மம்,
பிர்மாண்டமெனவிவையாம் விண்டுபுராணங்க ளாவன
காருடம், நாரதம், விண்டு, பாகவதம், என விவையாம்
பிரமபுராணமாவன பிரமம், பதுமம், சூரியபுராணம்,
பிரமகைவர்த்தம், அக்கினிபுராணம், ஆக்கினேயம், இ
வற்றுட் சுப்பிரமணியக் கடவுளினது திருவிளையாடல்
முதலியவற்றை விரிக்கின்ற காந்தபுராணச் சரித்திரங்க
ளையுங்களுக்குக் கிரமமாகச் சொல்லுவோம்.

பாயிரம் - முற்றிற்று.

—

உ

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

ஸ்ரீவல்லீதேவஸேனாஸமேதஸ்ரீஸ்கந்தாயநம:

கச்சியப்ப சிவாசாரியசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

# ஸ்ரீகந்தபுராணவசனம்.

## உற்பத்திகாண்டம்



### திருக்கைலாசப்படலம்.

பாசநீங்கித்தன்பாற்படுநல்லரு
ளீசனல்குமியல்பெனவெய்தினோர்
தேசுமாற்றிச்சிறந்ததன்மெய்யொளி
வீசுகின்றதுவெள்ளியங்குன்றமே.

கேட்டீர்களோ, சவுனகாதிமஹாரிஷிகளே, யிப்போது நாமெடுத்துச்சொல்லாநின்ற சரித்திரங்களைப் பக்திபூர்வகமாகக் கேட்போருக்குநேரும் புண்ணியபலத்தினை யிப்படிப்பட்டதென் றெடுத்துச்சொல்ல வொருவராலுந் தரமன்று ஆதலால் ஐம்புலவழிகளில் மனதைப்போக்காமல் ஒருமைப்பட்ட சிந்தையுடன் கேட்பீராக.—சிவசுப்பிரமணியதேசிகர் வெளிப்பட்டகாரணத்தைப் பேசுவதன்முன்னம் எமதுகர்த்தனாகிய பரமசிவம்வீற்றிருக்கப்பெற்ற வெள்ளியங்கிரியின் பெருமைகளிற் சிலதெரிந்தமட்டுஞ் சொல்லக்கடவேனாக, கங்காசடாதரர்அணியத்தக்க திருநீற்றைப்போலவும் அவரேறிநடத்தும்விருஷபவாகனத்தையொத்தும் அக்கடவுளின் அன்பர்களது தூயவுள்ளத்தையொப்பாயும் ஸ்ரீமகாவிஷ்ணு பள்ளிகொண்டிராநின்ற திருப்பாற்கடலானது அன்புடன் சிவபிரானுக்கும் ஓரழகிய பீடமாகவந்துநிற்பதை நிகர்த்துஞ் சோடசகலைகளையுடைய சந்திரர்கள் பலஅண்டங்களினின்றும்வந்து பரமனைச்சேவிக்கக் காலம்பார்த்து நெருங்கியிருப்பதைப்போலவுந் தவளநிறமும் நெற்றிவிழியுஞ் சதுர்ப்புயங்களும் பலவளங்களும் பரமசிவத்தின் அனுக்கிரகத்தினாற்பெற்றுக் கரத்திற்பிரம்பினைத்தாங்கிக் கர்த்தன் திருவருளைச்செலுத்திவரும் நந்திதேவர் காவல்கொண்டு வீற்றிருக்கும் பெருமையினைப்பெற்று மகாபயபக்தியோடு பிரமன், இந்திரன், முதலான தேவர்கள் சத்தரிஷிகள் முதலியத்தவத்தர் தம்மையறியும் விவேகமுள்ள மகத்துக்கள் ஜயசாலிகளாகிய பூதகணங்கள்முதலாக எக்காலத்தும் நெருங்கிச்சூழ்ந்துபோற்ற அரம்பாஸ்திரீகள் ஆடலும் விஞ்சையர்கள் பாடலும்ஈசானமூர்த்திமுதலிய இமையவர் ஜயஜயவென்று வாழ்த்து மோசையும் அதிகரித்துக்கீழேழுலகங்களையுங் கடந்தாழ்ந்து மேலுலகங்களைஉருவ ஓங்கி அண்டகோளகையின் அடிமுடிகளைக்கலந்து சர்வசங்காரகாலத்திற் சகலபுவனங்களுக்கும் ஆதாரசத்தியாய்த் தன்னைச்சூழவிருக்கின்ற மகமேருமுதலியசத்தகிரிகளும் ஒருகாலம் அழிந்தாலும் உலகங்களெவ்விடத்துந் தனதொளியைப்பரப்பி அண்டரண்டபுவன சராசரங்களலையப்படினுங் கொன்றைமாலையணிந்த சிவக்கொழுந்தைப்போலச் சலனமற்றதாய்ச் சகலருக்குங்காட்சிதந்து சோலைகள் நந்தவனங்கள் அருவிகள்முனிவர்வாசஞ்செய்யுங்குகைகள் மற்றுமுள்ள மகிமைகளனைத்தையும் பெற்று விளங்குவது திருக்கைலாசபர்வதமானது மேலும், பொன்வரைமுதலிய சத்தகுலாசலங்களுஞ் சத்தசாக

ரங்களும் அவற்றைச்சூழ்ந்த சக்கிரவாளகிரியும் அதன்புறத்திற்றோன்றும் பெரும்புறக்கடலும் அவ்வெள்ளியங்கிரியினது நாற்புறங்களினும் மதில் கொத்தளம் அகழிகளைப்போல விளங்கிக்கொண்டிருக்கும், இவ்விதசிறப்புகளுள்ள அத்திருக்கயிலாயவரையினது நடுவிற் சொர்னமயமாகிய மேருகிரியானது வந்திருப்பதையொப்பாய் வானத்தை அளாவிய பொன்மதிலும் விசாலமாய் ஆழ்ந்திருக்கும் அகழிமுதலிய உறுப்புகள்தோன்ற அதன்மத்தியில் சிரோரத்தினமயமாகிய ஒருமாளிகை யிருக்கின்றது முத்துபவளம் வயிரம் நீலமுதலிய சிறந்தவிரத்தினவகைகளினாற் சித்திரப்பிரதமைகள்விளங்க எமதுபெருமான் அனுக்கிரகத்தின் முயற்சியினாலுண்டாகிய சிகரங்கள் அவ்வாலயத்தினைச் சூழவிளங்கும் அதன்மத்தியிற் கோடிசூரியப்பிரகாசமாய்ச் சிறந்த ரத்தினவகைகளினாற் சோடித்து விசாலமாகிய மண்டபமொன்றுண்டு, அதன் முகப்பில் சிங்கங்களினாற் றாங்கப்பட்டு திவ்வியமணியினங்களினாற் செய்தமைத்த ஆசனமொன்றுண்டு, அதன்மீது பரமேஸ்வரி யிடப்பாகத்தில்விளங்க வேதநாயகனாகிய சிவபிரானெழுந்தருளியகாலத்திற் றும்புருநாரதாதிகள்தேவயாழினைமீட்டி விஞ்சையர் மகத்துக்களும் கர்த்தன்புகழின் பெருக்கினைப்பாடித் துதிக்கவும் பரமனதுசடாமகுடத்தில் வீற்றிருக்குங் கங்காபவானியை மற்றநதிகள்போற்றி வணங்குவதைப்போல கணநாதர்களிருமருங்கினும்நின்று வெண்சாமரைகள்வீசவும்பலகணங்கள் ஆலவட்டங்களசைக்கவும் பலர் தவளக்குடைபிடிக்கவும் இவ்விதஆடம்பரங்கள் மேன்மேலும் நடந்துவரும்போது பரமசிவத்தைவழிபட்டு அவர்அனுக்கிரகத்தைப் பூர்த்தியாகப்பெற்றிருக்கின்ற கணாதிபதிகள்உருத்திரர்பூதநாயகர்முதலாகிய மகத்துக்கள் கர்த்தன்குணானுபவத்தை வாயாரத்துதித்துக் கரங்களைக்கூப்பி யெதிரில்நிற்க, அவர்களைக் கிருபையாகப்பார்த்து தீனதயாபரனாகிய பரமேஸ்வரன் கொலுவிருக்குஞ்சமையத்தில் நடந்தசம்பவங்களிற் சிலஅறிந்தமட்டு மினிசொல்லக்கடவோம்.

## பார்ப்பதிப்படலம்.

அன்னுழியிமையவளகத்தளோர்செய
ஆனவிவ்வினுக்கமுற்றெல்லைதானெழீஇத்
தன்னிகரில்லவன்றுளிமைதஞ்சியே
முன்னுறநின்றிவைமொழிதன்பேயினாள்

ஓ-சவுனகாதிமுனிவரோ,யித்தகைய திருவோலக்கத்துடன் சிவபிரானெழுந்தருளி யிருக்கின்றபோது, லோகநாயகியாகிய பராபரையானவள் மனதிலொன்றை நினைந்து திருமேனிநடுங்கச் சடுதியில்எழுந்து பரமசிவத்தின் பாதாரவிந்தங்களிற்சேவித்து ஓ நாயகனே, அடியேன்மனக்கவலையைப்போக்கும்வண்ணம் அனுக்கிரகஞ்செய்யவேண்டும் அதாவது தேவரீரைமதியாமலும் தான்பெற்றசெல்வத்துக்கு மூலத்தைநினையாமலுஞ் சுலபமாகவெண்ணி உம்மையிகழ்ந்த அபராதியானதக்கனிடத்தில்யான்பலநாள் வளர்ந்ததுமன்றியில் அவன்பெண்ணென்னும் பொருளுள்ள தாட்சாயணியென்னும் பெயரையும்பெற்றிருக்கின்றேன். ஆதலால் அந்நாமத்தையும், அவனாற் பரிபாலிக்கப்பெற்ற இவ்வுடலையும், தாங்கியிருக்கப்பயப்படுகின்றேன் அக்கவலைநீங்கி மகிழ்ச்சியாயிருக்கும்வண்ணங்கடாட்சிக்கவேண்டுமென்று அன்பினால் எமதன்னைவிண்ணப்பஞ்செய்யக்கேட்டு ஒப்புவமையற்ற பரமேஸ்வரன் நகைமுகனாய் ஓ-சங்கரி, உன்பத்திவிசுவாசத்துக்கு மெச்சினோம், உன்கருத்தின்வண்ணம் முடியவேண்டுமாகில் மகமேருவுக்குப் பந்துவாய்ப் பலராலும்புகழும்வளமைபெற்ற பர்வதராசன் உன்னைப்பெண்ணாகப்படைத்துப்போற்றி நமக்குத்திருக்கல்யாணஞ்செய்து கொடுக்கவேண்டுங் கருத்தைக்கொண்டு அரியதவங்களைச்செய்துவருகின்றனன். ஆதலால் அவன்மனக்கருத்து நிறைவேறவும், உனது மனவாட்டந்தீரவும், நீ யிவ்வுருவத்தைமாற்றிக் குழந்தையாய் அவனிடத்திற் சேருவையாகில்உன்னையெடுத்து மனமகிழ்ச்சியுடன் தனக்குப்புத்திரியென்னும் அபேட்சையினால் சகலசிறப்புடன்போற்றிவரஉனக்கு ஐந்தாண்டுநிறைந்தபோது நமதுகடாட்சப்படிக்குவிவேகந்தோன்றி நம்மைப்பாணிக்கிரகணஞ்செய்துகொள்ளுங் கருத்தளாய் அரியதவங்களைச்செய்யக்கடவை, அக்காலத்தில் நாம்அத்தலத்தில் எழுந்தருளி உன்தவத்தைச்சோதித்துப்பின்பு தேவர்கணநாதர் உருத்திரர்புடைசூழ்ந்துசேவிக்கத் திருக்கயிலையைக்கடந்து இமையவரையைச்சேர்ந்து உன்னைவேதவிதிப்படிக்குத் திருக்கலியாணஞ்செய்துகொண்டுபழையபடியேயிவ்விடஞ்சேர்வோமென அவள்கருத்துமுற்றும் மார்க்கத்தைக்காட்டிய பரமனைமீட்டும்வணங்கித் தேவரீர்கட்டளையின்படியே நடந்துகொள்வதற்கு விடைதரவேண்டுமெனத்துதித்து அவ்வாறேகர்த்தன் அனுக்கிரகத்தைப்பெற்றவளாய்த் திருக்கயிலாயத்தை நீங்கி இமயவரையைச்சேர்ந்தாள்.

கேட்டீர்களோசவுனகாதிரிஷிகளே அவ்வரையின்பெருமைகளிற் சிலகேட்பீராக வானத்தைத்தாவும் உன்னதமும் பாதலவரையி லாழ்ந்ததாய்விஸ்தீரணமானபரப்புடையதாய் மகத்துக்கள் தபோநிதிகள் கின்னரர்வித்தியாதரருக்கிருப்பிடமாகவிளங்கித்தேவதாருக்கள்சந்தனம், பாரிசாதம், அகில், மா, பலா, கொன்றை, கமுகு,வாழைமுதலிய தோப்புகள் சோலைகள் உத்தியானங்கள்மலிந்து காமதேனுமுதலிய தெய்வீகமிருகங்கள் அன்னமுதலிய சிறந்தபட்சிகள் வாசமாய்ப்பல்லாயிரம் பொற்சிகரங்கள் சூரியனைப்போலப் பிரகாசிக்க விருக்கின்றது அதனுச்சியில் எக்காலத்தினும் சத்தமேகங்களும் வாசமாய்பனித்தூவலைவீசிக்கொண்டிருப்பதால்திருக்கயிலாயத்தினையொத்தும் அவ்வரைக்கதிபனான பரமசிவத்தை நிகர்த்தும் நீருண்டமேகங்க ளிடிமின்னலைப் பெருக்கிக் கவிந்திருப்பது இலக்குமியைத் திருமார்பி னிடத்திருத்திப் பள்ளிகொண்டிருக்குஞ் சேஷசயனத்தைப் போன்றும்வெண்மையாய்ப் பனிமூடியிருப்பது பூமிதேவியானவள் நிதிக்குப்பையைத் தனதுவஸ்திரத் தொங்கலினால் மறைத்திருப்பதை நிகர்த்தும்மேலும் இந்திரன்முதலிய தேவர்கள்கூடி மந்தரகிரியை மத்தாகநாட்டித் திருப்பாற்கடலைக் கடையு முன்னிலையிற்றிரண்டெழுந்தவெண்ணெயாகிய அமுதத்தினை வைத்ததைப்போன்றும்பனிப்படல மூடிவிளங்குஞ் சிறப்புகளைவாய்ந்த இமயமலையினது சிகரத்தில் மதுரமிகுத்த ஜலசமர்த்தியாய்த் தாமரை அல்லிமுதலிய புஷ்பவகைகள்மலிந்து முதலைவரால் மற்றசிவராசிகள் பெருத்து விசாலமாயிருக்குந் தடாகமொன்றுண்டு அதன்கரைமீது விளங்கும்புஷ்பச்

சோலையினிடத்திற் பர்வதராஜன்தவத்திலிருந்துபரமே
ஸ்வரிதனக்குப் புத்திரியாகவுஞ் சிவபிரானெழுந்தருளி
விவாகஞ்செய்து கொண்டுபோகவும் நினைந்து பற்பலகா
லமாய் நோற்றுவருகின்றகாலையில் ஒருதினம்பிராதகால
த்தில் முற்குறித்தகங்கையிற் ஸ்நானஞ்செய்தெழுந்துபார்
க்கு மிடத்தில் அருகிலிருந்த வெண்டாமரை மலரினைத்
தொட்டிலாகக்கொண்டு அலைகளான்வைதாலாட்டச்சரா
சரப் பிரபஞ்சங்களனைத்தையுமீன்றருளிய லோகமாதா
வானபராபரை திருமுகம்அஸ்தங்கள்பாதங்கள்செந்தாம
ரைமலரைப்பழித்துவிளங்குந்திருக்கோலத்துடன்சுந்தர
முள்ளகுழந்தைவடிவு கொண்டுவிளையாடி யிருப்பதை
க்கண்டு ஆச்சரியப்பட்டவனைப் பரமசிவம் நமதுதவத்
துக்கிரங்கி அனுக்கிரகஞ்செய்தனர் அக்காரணத்தினால்
என்னையீடேற்றும் பொருட்டு லோகநாயகனைநீங்கிப் ப
ராசத்தியானவ ளிக்கோலங்கொண்டெழுந்தருளினள்அ
டியேன் கிருதார்த்த னானேனென்று விழிகளில் ஆனந்
தவாரிபெருக அன்புமிகுத்து வெளிபட்டதைப் போல
உரோமங்கள் சிலிர்க்க ஆடிப்பாடி வணங்கிப்போற்றிப
யபத்தியுடன் சமீபத்திற்போ யிருகரங்களினாலும் லோ
கநாயகியையேந்தி சிரத்திற்றாங்கித் தேகபரவசத்தனாய்
அவ்விடம்விட்டு தனது நகரத்துக்கு வந்து அரண்மனை
யில்நுழைந்து தன்மனைவியாகிய கற்புடைய மேனை
யைக்கூவி நமதன்னை வந்தாள் வந்தாள். உன்விரதமும்
என்தவமு மின்றைக்கீடேறியது பிழைத்தோம் பிழைத்
தோம் இந்தச்ஜெகன் மாதாவைப்பத்திரமாகப் போற்றி
வளர்க்கக் கடவையென்று கொடுக்க மேனைமயிர்சிலிர்
க்க கால்கள்பின்னலிட ஆனந்தவாரியில் மூழ்கிஎன்தாய்
வந்தனளோ இவ்வரண்மனை என்னபுண்ணியஞ்செய்த
தோ நமதுகுலத்தினர் முடித்தசத்கருமங்களினாற்கிடை
த்தனளெனப் பலபலகளிப்பு வார்த்தைகளைப் பேசிப்ப
ணிந்து மிருதுவாகிய கரங்களை நீட்டிமெல்லனவேந்திமு
கத்துடன் முகத்தைச்சேர்த்து முத்தமிட்டு பலதானங்க
ளைவழங்கி திருஷ்டிபரிகாரமாகப் பல ஆலங்களைச்சுழற்
றிவீசிப்பின்பு அந்தப்புரத்துக்குக் கொண்டு போய்த்த
ன்கணவனைப்பார்த்து அரசனே நமது குலதேவதைதே
வீருக்கெவ்விதமாகக் கிடைத்தனள் உமது பாக்கியமே
பாக்கியமென்று வினவப் பர்வதராசன் சொல்லுவான்.

ஓ பெண்ணே யிவ்வீஸ்வரியைப் புத்திரியாகப்பெறு
ம்வண்ணம் பலகாலந்தவஞ்செய்திருந்தோமன்றோஅத
ன்பயன் கடையிற்பரமனருளினா லித்தினந் தாமரை
மலரி லிக்கோலமாக விருக்கக்கண்டு கொண்டு வந்தே
னெனத் தெரிவித்துச் சிவத்தை யிருவரும் பலமுறை
போற்றிடுங் காலையிற் கற்புக்கரசியாகிய மேனையான
வள் அம்மையின் பசிக்குழப்பையறிந்துபூரித்துக்கொங்
ங்கைகளிற் பால் ஏராளமாகச் சுரந்தொழுகக் குழந்
தையை அணைத்து அமுதூட்டி மிகவுங்கவலையுண்டாய்
த்தன்பாபங்க ளனைத்தையும்போக்கினள்கேட்டீர்களோ
சவுனகாதிரிஷிகளே சராசரப்பிர பஞ்சங்களை யீன்றமா
தாவாகிய பராசத்தியைக் கரங்களாரத் தழுவி யேந்திம
னமாரப்போற்றி வாயாரவாழ்த்தித்தேகம் பூரிக்க அமு
தூட்டுவளாயின் அந்தமேனையின்தவப்பேற்றினை என்
போல்வாராற் புகழஆவதோ அரியதவமுடையளாகவே
ண்டும் பின்பு நகைப்பெட்டிகளைத் திறந்துநவரத்தினம
யமாகிய கட்டியினைச்சாத்தி பஞ்சாயுதபில்லை சரப்பளி
முத்தின் கோர்வையிவற்றைக் கழுத்திலணிந்து தங்கவ
ளையல் மோதிரவிதங்களைக் கரங்களிற்பொருத்தி அரை
வடஞ் சலங்கையிடையிற்கட்டிப் பொற்றண்டை சிலம்
புகெச்சைகொலுசு பாடகங்காலாழி பீலியிவற்றைப் பா
தங்களிற் பூட்டி மற்றும்ஏனைய பூஷணங்களைத்திருத்தி
க்கண்குளிரத் தரிசித்து மகிழ்ந்தபூரிப்பினாற் பெருகும்
பாலைத்தெவிட்டக் கொடுத்து ஐவகைநிறஅன்னங்களைத்
திரட்டிஅவைகளிற் றீபமேற்றித்திருஷ்டி பரிகாரமாகச்
சுழற்றியெறிந்தபின்பு திலதப்பொட்டுமிட்டு சீராட்டி
ன்னம்மைஅலசினள் சற்றுநித்திரைசெய்ப வேண்டுமெ
னச்சிந்தித்துப் பவளக்கால்களும் வயிரச்சட்டங்கள் நீல
ரத்தினப்பலகை யிவற்றினாற் சோடித்துத் தங்கச்சங்கி
லிகளிற்றொங்கும்அழகியதொட்டிலில் வளர்த்தித்தாலா
ட்டியும்பின்பு ஆசைமிகுதியினாலேந்திக் குலவியுங்கண
வன்மகிழ்ந்து நோக்கிக்களிக்கப்பல சீராட்டி வளர்பிறை
யைப்போல வளர்க்குமிடத்து லோகநாயகியும் பலதிரு
விளையாடல்களைச்செய்து தாய்தந்தையர் களிக்கும் வித
ங்களாக அற்புதச்சின்னங்களைக்காட்டித்தவழ்ந்துதளர்ந
டையிட்டுப் பொன்னூசலில் விளையாடி சப்பாணிகொட்
டிஅம்புலியைக்கூவிக் குதலைமொழியினைப் பேசிவருகி
ன்றநாட்களில் ஐந்தாண்டுகள் பூர்த்தியானவுடன் முன்
னந்தமக்கனுக்கிரகஞ் செய்திருந்தபரமசிவத்தின் கடா
ட்சத்தைநினைந்தவளாய்த் தன்கருத்தின் வண்ணமீடேற
தக்கதாகத் தவஞ்செய்யுங் கருத்தைக்கொண்டு ஒருதின
ந்தந்தை வதனத்தைநோக்கிஅமுதமுங் கிளியும் நாணக்
கொஞ்சியமொழிகளினா லிதனைச் சொல்வதாயினள்அத்
தனேயான்முக்கண்ணராகிய பரமேஸ்வரனை மணம்புரி
வதாகத் தவவிரதங்களைச்செய்து முடிக்கநினைந்தமையா
ல்அதற்குத் தகுதியாக இந்தபர்வதச் சாரலினொருபர்ன
சாலைசெய்து அவ்விடத்துக்கென்னை அனுப்ப வேண்டு
மெனச்சொல்லக்கேட்டுத் திகிற்பட்டு எங்கள்கண்ணேக
ண்மணியேதாயே அடியோங்களை நீங்கித்தவஞ் செய்வ
தற்கு இதுபருவமல்ல ஐந்துவயது பூர்த்தியாகவில்லைமி
ருதுவாகிய உனதுசரீரம் பனியினும் வெய்யலிலுங் காற்
றிலுஞ் சகிக்கப்படுவதோ இந்தக்கியாபகத்தைமறந்துவி
டக்கடவை நீநினைந்தபடி முடிப்பதற்கின்னஞ் சிலகால
ஞ்செல்லவேண்டும் அதுபரியந்தம் எங்கள்பாவந்திரத்த
க்கதாகஇவ்விடத்தி லிருக்கக் கடவாயெனப் பிதாவாகிய
மலையரையன் பரிவாகச் சொல்லுவதற்குச் சந்தோஷி
த்தவளாய் என்னிடத்திருக்கின்ற பட்சத்தினால்நீர்பேசி
யதுஉண்மையேயாகினுஞ்சர்வாத்துமாக்களையும்இரட்சி
ப்பவன் ஈசனல்லதுமற்றொருவ ருண்டெனநினைக்கவும்
போகுமோ அத்துணிவினால் அவனருளைக்கொண்டு மு
டிக்கவிருக்கின்ற தவத்தைத் தடைசெய்யவேண்டாம்து
ரிதமாக அதற்கடுத்த விடமொன்றைச் செய்விக்கக்கட
வையென்று சொல்லும்போது மறுக்கவஞ்சி அதற்குச்
சம்மதித்துத்தாயே உனது மனப்படிக்குச் செய்யக்கட
வை இதோமுடிகின்றனனென ஏவலாளர்க்குக்கட்டளை
யிட்டான் அவ்வாறே அவர்களும் பலதொழி லாளிகளை
க்கொண்டுவிசாலமாய் அகல நீளமுள்ளதாய்ப்பல அறை
களைச்செய்து நான்குபாரிசங்களினும் வாயில்கள் விளங்
கப்பன்னகசாலையை நிருமிதது அரசனுக்குத்தெரிவித்த
பின்புதன்வர்க்கத்துப் பெண்கள்பலர் ஏவல் செய்வதாக
க்கூட்டித் தவத்துக்குப்போகச் செலவு கொடுக்குந்தாய்

தந்தையரா வணங்கி விடைபெற்றுப்போய் அத்தலத்
தைச்சேர்ந்து சிவநாதனைச் சித்தத்திருத்திப் பஞ்சேந்தி
ரியங்களை ஒடுக்கி அன்பைப்பெருக்கி பிராண வாயுவை
மூலாதாரத்தில் நிறுத்திஏகமனதாய் விரதத்தினைச் செ
லுத்தி வராநின்றனள் தாய்தந்தையரும் இடைவிடா
மல்விசாரணை செய்துவருவர். கேட்டீர்களோ, சவுனகா
திரிஷிகளே, பரமேஸ்வரன், பராசத்தியைப் பிரிந்தபின்
புநடத்திய திருவிளையாடல்களையினிச்சொல்லுவோமெ
ன்று சூதபுராணிகர் ஆரம்பித்தனர்.

## மேருப்படலம்.

பன்னருஞ்சிறப்பின்மிக்கபனிவரையரசன்மன்பாற்
கன்னியம்புதல்வியாகிக்கௌரிநோற்றிருந்தகாலத்
துன்னியவவுணர்சூழச்சூரபன்மாவாம்வெய்யோ
னிந்நிலவனாப்பினண்டத்திறைவனேயாகியுற்றான்.

பார்ப்பதியார் இவ்விதமாகத் தவஞ்செய் திருக்கும்
போது சூரபதுமனுனவன் பரமசிவ கடாட்சத்தினாற்
பெற்ற ஆயிரத்தெட்டண்டங்களுக்கு மிறைவனாய்த்தே
வனைவாட்டிக் கொடுங்கோல்முறையாய் அரசுசெலுத்தி
வருங்காலையிற் பூர்வத்திற் சிவபிரான்வடவாலவிருட்சநீ
ழல்லெழுந்தருளி யிருந்தகாலத்திற் றம்மைப் போற்றி
வணங்கிக் கேட்டுக்கொண்டபடிக்கு வேதத்தின் அந்தப்
பொருளைப் போதிக்கப்பெற்ற சனகர்முதலிய நான்குத
வத்தருஞ் சிலகாலம்அரியதவங்களைச்செய்தும்மனவிரு
த்திஒடுங்காத காரணத்தினாற்சங்கரன் கட்டளைப்படிக்கு
த்திருக்கயிலாயத்துக்குப்போய் தலைவாயிலில்நின்றுபர
மன் அருளைப்போற்றிவரும் பெருமையினைப்பெற்றநந்
திதேவரை வணங்கிவிடைபெற்று ஆலயத்திற் பிரவேசி
த்து விஷ்ணுபிரமன் தேடிக்காண்பரிய பரம்பொருளி
னைஞானநாயகனை அம்மைஅப்பனைக் கண்குளிரக்கண்
டுமும்முறைவலம் வந்து தீர்க்க தெண்டன் சமர்ப்பித்து
விழிகளில் ஆனந்தவாரிபெருக புளகமெழவாய்குழறஅ
னலிற்பட்ட மெழுகையொத்து மனங்கரைந்து மகேஸ்வ
ரன்பெருமைகளைப் பன்முறைவேத வாக்கியங் களினாற்
போற்றிஆனந்தநிருத்தஞ்செய்தவர்களாய்விண்ணப்பஞ்
செய்கின்றனர் அஞ்ஞான மென்னுஞ்சமுத்திரத்தில்மா
யையாகியசுழல்காற்றிலகப்பட்டுப், பூர்வபுண்ணியபலத்
தினால்வேதப்பொருளாகிய தோணியேறியுங் கரைகாணு
துஇதுபரியந்தம் அலைந்திருந்தனம் போதவுணர்ச்சியெ
வ்வளவேனும் கிடைத்ததில்லை ஆதலாற் கர்த்தனேஅல்
லற்கடலைநீங்கிப்பிழைக்கும் உபாயமொன்றைப்போதிக்
கவேண்டுமெனப் போற்றுகின்றவர்மீது திருக்கண்சாத்
தி அன்பர்களுக்கிரங்கும் வள்ளலரன நீலகண்டன்கிரு
பையுற்று ஓரிஷிசிரேஷ்டர்களே, உமதுமனவிருத்திலய
ப்படும்படிக்குச் சிலசாஸ்திரங்களைப் போதிப்போம்இவ்
விடத்திருக்கக்கடவீரென்று ஆக்கியாபித்து நந்திதேவ
ரையழைத்து மன்மதன்தவிர மற்றதேவர்கள் யாவராயி
னும்ஆலயத்தினுள் விடவேண்டுவதில்லையெனத் திருவா
ய்மலர்ந்தனர் அக்கட்டளையினைச் சிரத்திற்றாங்கி வணங்
கிமீண்டு தமதிருப்பிடத்திற்சேர்ந்து போற்றியிருந்தனர்
அதன்பின்புசனகர்-சனற்குமாரர்-சநந்தனர்- சனந்தனர்-
இந்நால்வருஞ் சிவபிரானைவணங்கி வாய்புதைத்திருந்த
காலத்திற் பரமன்கிருபையுற்றுச் சதுர்வேதங்களினது
ஆதிமத்தி யாந்தமாயிராநின்ற சரிதைகிரியை யோக
மென்னும் நெறிகளைச் சாத்திர யுக்தமாகப் போதித்து
மேலுஞ் ஞானபாதத்தினது பெருமைகளையுங் கிரமமா
கச் சொல்லியதைக்கேட்ட ரிஷிகள் மீட்டும், பரமனைவ
ணங்கி சதாசாரியனே ஞானயோக நிலையின் உண்மை
யை ஆதியோடந்தமாக அநுக்கிரகிக்க வேண்டுமென
ப் போற்றுகின்றவரைப் பார்த்து நகைத்தருளி மாறு
த்தரமொன்றுங் கொடாமல் அதனிலையைச்சொல்லி ய
றிவிக்கக்கூடாததினால் இப்படித்தெனத்தெரிந்துகொள்
வீரெனக் குறிப்பினாற்காட்டி அனந்தகோடிஎனக்கோடு
களும் மச்சநேத்திரங்களும்பிரமதேவரதுசிரமாலைகளு
ம்விளங்குந் தமது மார்பகத்தில்ஒருகரத்தினைவைத்துவி
ரல்களினால் மோனமுத்திரையைக்காட்டிவேறொருசெய்
கையுமற்று யோகத்திலிருப்பதைத்தவத்தர்தெரிந்துஞா
னயோகம் வாக்கியத்துக் கடங்காததென நிச்சயித்தவர்க
ளாய்ச்சிவபிரான் அநுக்கிரகத்தினால்மனமானதுவிடை
யங்களிற் செல்லாமல் வயப்படுத்திக்கர்த்தன்திருவுருவி
னைச்சிந்தித்து யாதொரு செய்கையுமில்லாமற் சித்திரப்
பதுமையைப்போலத் தாமுஞ் சின்மய முத்திரையைத்
தாங்கி யோகத்திலிருந்தனர், இவ்விதமாகப்பரமன்யோ
கத்தி லிருந்த போது ஒருகணப்போது பிரமனுதியதே
வர்களுக்குப் பலயுகங்களாயின காரணனாகிய கண்ணுத
ல்மௌனத் திருந்தமையால் தேவர்களும் அரம்பையர்
களும் போகத்தை நீங்கி யிருந்தனர், மேலும்பூமியின்
கணிராநின்ற சர்வப்பிராணிகளுங் காமவின்பக் குறிப்பி
னைவெறுத்தனர்.

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே, சிவபிரான் சன
காதி தவத்தருக்கு யோகநிலையைக் காட்டியிருந்த காலை
யில் ஆண்பெண் கூட்டுறவில்லாமையாற்பரமன்காரண
கர்த்தனென்பதற்குச் சந்தேகமுமுண்டோ இவ்விதமாக
ச்சகலருங் காமவின்ப நீங்கிப்பேடியரைப்போ லாயினர்
ஒருகாலம் ஆண்பெண்கூட்டுறவில் இன்பமில்லாத கார
ணத்தினால் மன்மதனும் இரதிபோகத்தை மறந்தவனாய்
த்திரிலோகங்களினுந் தன்னரசாட்சிசெலுத்துவதைமற
ந்துகருப்புவில்லில் புஷ்பபாணங்களைத் தொடுத்துச்செ
லுத்துந் தொழிலும்விடுத்தான் நெற்பயிர் செழித்தோ
ங்கிவளரும் பருவத்தில் மழைபெய்தலரி தாகின் அதன்
விர்த்தியடங்கிச் கதிர்வாங்காமல் எரிந்து மங்குவதைப்
போலக்கர்த்தன் செய்கையின்முயற்சியினால் மன்னுயிர்
கள்போகத்தை வெறுத்து கருவிர்த்தியடையாமற் பிரா
ணிகளனைத்துந் தினேதினேகுறைந்து பிரமசிருஷ்டியு
ம்மல்காமல் அடங்கிற்று அண்டரண்டபுவனசராசரங்
களும் ஒடுங்கிக்களிப்பின்றிஊமரையொத்துக்கிடப்பதா
கப்பரமன் யோகத்திலிருந்த காலத்திற் சூரபன்மன்கொ
டுங்கோல்செலுத்தித் தகாத பணிவிடைகளைக் காட்டிச்
செய்யும் உபத்திரவத்தினாற் பொன்னுலகம் அழிபட்ட
துமன்றியிற் றேவருடனே இந்திரன் மகமேருச்சாரலி
ல்வந்து ஒளித்திருந்தான் அத்தருணத்தில் தேவதூத
ராற்சூரன் குமாரனாகிய பானுகோபன்தன்குமாரனையுந்
தேவர்களைப் பெண்டு பிள்ளைகளுடன் சிறை சாய்த்துப்
போனதையுஞ் சுவர்க்கலோகஞ் சாம்பலாய் உருமாறிய
காரணங்களையுங் கேள்விப்பட்டுப் புத்திர சோபத்தினா
ல்மிகவும்வாடி வருந்திப்படாத பாடுபட்டான். பின்பு

வேறு கதியில்லாமையாற் சிவபிரானைநோக்கிப்பலநாள் அரியதவங்களைச் செயதுவரும்போதுபிஞ்ஞகர்கிருபையுற்று வெள்ளியங்கிரியினை நிகர்த்த ரிஷப வாகனத்தில் ஆரோகணித்துப் பலகணநாதர்கள் சூழ்ந்து போற்றவருவதைத் தரிசித்தவுடன் மனமகிழ்ச்சியாய்எதிர்கொண்டுசேவித்துப்போற்றிநிற்கின்ற இந்திரன்மீதுகிருபாநோக்கம்பாலித்துச் சொல்லுவார். அளவிறந்த காலங்களாக அரிய விரதங்களைச்செய்து வருகின்றனை அதற்குமனமகிழ்ந்தோம், உனக்கு வேண்டிய பிரயோசனங் களைக் கேட்பாயென்று திருவுளம் பற்றியபோது கரங்களைக்கூப்பிக்கொண்டு தேவரீருக்குத்தெரியாத தொன்றுமில்லையாயினும் அடியேன் முறைகளைக்கேட்டருள்க சூரபதுமன் வெகுகாலமாய் எங்களை அலைத்துத் தகாதபணிவிடைகளைக் கொண்டு வாட்டுவதுமன்றியிற் சிலதினத்துக்குமுன்னந் தன்குமாரனாற் பொன்னுலகைக் கொளுத்தி என்னொருபுத்திரனை மற்றதேவர்களோடு கொண்டுபோய்த்தன்னகரத்திற் சிறையிலிடுவித்தான். அவன்செய்யுங் கொடுமைகளை ஒருவகையாகச்சொல்லி முடியாது. ஆகையால் ஐயனே, தீனர்மீது கிருபையுற்று அவனைக்குலநாசமடையக்கொன்று எங்கள்சுதந்தரங்களைக்கட்டளையிட்டுக் காக்கவேண்டுமெனப்போற்றுகின்றவனைக் கையமர்த்தி தேவராசனே, வருந்தவேண்டாம் ஆதியிற்றக்கன் நம்மையிகழ்ந்துசெய்த யாகத்துக்குடன்பட்ட பாதகத்தினால் இத்தனைவருத்தங்கள்நேர்ந்தன அதுவும்நீங்குங்காலஞ் சமீபித்தது இன்னஞ்சிலபோதில் நம்மிடத்துதிக்கப்போகின்ற குமாரனால் உங்கள் துன்பங்களனைத்தும்நீங்கி சுகத்திலிருப்பீர்கள். தயிரியத்தைவிடவேண்டாமென்று சிலதேறுதலைச்சொல்லிப் பூதநாயகன் திருக்கயிலைக்கெழுந்தருளினர்.

இந்திரனும் சந்திரசேகரன் வாக்கியத்தைநினைந்து நினைந்து களித்தவனாய் மேலும்மனதில் சிலசங்கைகொண்டிதனைநினைக்கின்றான். சிவபிரான்இப்போதுகட்டளையிட்டவாறு முடிவதற்குத் தாஞ்சனகாதியருக்கு யோகசாதனையினைக்காட்டி விருப்பையொழிந் திருக்கின்றனர் போலும் பராசத்தியாரும் இமையவரையிற் றவஞ்செய்திருக்கின்றனளெனக் கேள்விப்பட்டனம், இவர்களிருவருங் கூட்டுறவில்லாமற் குமாரனெவ்விதமாகத்தோற்றுவன் இந்தச்சந்தேகத்தைத் தெளியவேண்டுமென்று துரிதமாய் மனோவதிப்பட்டணத்துக்குப்போய்த் தன்மனைவியைச் சரஸ்வதியம்மனிடத்தில் நிறுத்தித் தேவர்களுடன் சபாமண்டபத்தைச் சேர்ந்து படைப்பின்றொழிலின்றி மனவாட்டத்துடன் சிங்காதனத்தில் வீற்றிருக்கின்ற பிர்மதேவனைக்கண்டுவணங்கி வேதவாக்கியங்களினாற் றுதித்துநிற்கின்றஇந்திரனைப்பார்த்துஅதிகசஞ்சலசித்தனாயிந்ததேவர்களுடன் வந்தகாரணமென்னென்றுவினவும்போது கர்த்தனே, அடியோங்களுக்கடுத்திருக்கின்ற சிறுமைகளைச் சொல்லமுடிவதோ, ஆகிலும் அவற்றிற் சிலவற்றை விண்ணப்பஞ்செய்கின்றேன். அரியதவங்களைச்செய்து பெரும்பேறுபடைத்திறுமாந்திருக்கின்றசூரன்செலுத்துங் கொடுங்கோல் முறைமையினையும் முக்கண்ணன்மோகம்நீங்கிய சனகாதிமுனிவர்களுக்கு யோகத்தைக்காட்டி யிருப்பதையுந் தான்செய்ததவத்திற்கிரங்கி காட்சிதந்து அநுக்கிரகித்துப்போயின செய்தியையும்விரிவாகச்சொல்லி யினிநானுந் தேவர்களும் பிழைக்கும்வழியைக் கட்டளையிடவேண்டுமெனக்கேட்கப் பிரமனிரங்கி ஓ இந்திரனே, தேவாதிதேவனாகிய பரமசிவமானது கிருபைக்கடலுக்கொரு தெப்பமாயிருப்பதினாலும்தன்னைவந்தடைந்த அன்பர்களுக்குதவுந் தன்மையினாலும் மலபரிபாகப் பகுப்பினையறிந்து அவற்றிற்குரியபாகங்களைக் கட்டளையிடும் நீதியாலுங் காலமறிந்துநம்மையாளும்பொருட்டுக் கயிலையங்கிரியில் ரிஷிகளைப்போலத் தாமும் யோகத்திலிருக்கின்றனர் நானும் விண்டுவும்வாதுகூறிப் போர்செய்யும்போது எங்கள்மத்தியில் அனல்வடிவாகத்தோன்றியதாணுவின் ஆதியந்தத்தை யாங்கள் தேடிக்காணாதலைந்து அவரனுக்கிரகத்தினால் கிருதார்த்தரானோம், அத்தகைய தேவதேவனை மற்றொருகடவுளருக்கு நிகராகச்சொல்லவும்போகுமோ, ஆதலாற்சனகாதியோகிகளுக்கு மவுனநிலையினைக்காட்டியிருப்பதும் நமதுகுறைகளைமுடிக்குங் கிருபைகொண்டெனநினைக்கவேண்டும், மேலுஞ் சந்திரசேகரனாகிய சங்கரன்முடிவில்சீவராசிகளனைத்தையுஞ் சங்கரிப்பதை யென்னவென்றெண்ணியிருக்கின்றனை அவைகள்வெகுகாலமாய்ப்பிறந்துமிறந்தும் அலைச்சற்படுந் துயரங்களைத்தீர்த்துச்சிலபோது சுகத்திலிருத்தக் கிருபையுற்றதாகும், அதைப்போலவேகொடியசூரனைக்கொண்டுநமக்கிந்தவருத்தங்களைக்காட்டினர். அதுவும் நீத்தற்கரிய பாதகங்களையனுபவிக்கச்செய்துபின்புசிறந்தபதவியை அனுக்கிரகஞ்செய்யுங்கிருபையன்றோ அதற்கொருதிஷ்டாந்தத்தைச் சொல்லக் கேட்பையாக —பிதாவானவன்தன்பிள்ளைக்கொரு நோய்சம்பவிக்கும்போது பிறரால் வருத்திவித்து அந்நோயைத்தீர்ப்பன், அதுபிள்ளைகளிடத்தன்போ, அல்லது கொடுமையோ,அதைப்போலவே தேவர்களுக்குண்டாகியபாதகங்களைப்போக்கவெண்ணி லோகநாயகன் இந்தத்தண்டனையைக்காட்டினர். மேலும் பாசத்திற்கட்டுப்பட்டிருக்கின்ற நமதிடத்திற்றோற்றுந் தீங்குகளனைத்தும்நீங்கும்படியானகாலம் நேர்ந்தபடியால் நிமலனெழுந்தருளிப் பரிவாய்உனக்கிதனையனுக்கிரகித்துப்போயினர். அவ்வாறே யினிமேலும்ரட்சிப்பர். அதற்குச்சில முயற்சியினைச்செய்து முடிக்கவேண்டியதால் மகாவிஷ்ணுவுடன்கலந்துபேசி நடத்தவேண்டுமென நிதானித்துப் பிர்மதேவர் தன்னாசனத்தைவிட்டிறங்கித் தேவராஜன் நாமீடேறுங்காலம் நேர்ந்ததெனக் களிப்படைய விண்ணவர்கள் பின்பற்றிவர, மனோவதிநகரத்தைக்கடந்து வைகுந்தமாகிய திருநாட்டுக்குப்போய் ஆலயவாயில் அருகில்வருவதைச் சங்குசக்கரத்தினைத் தாங்கிநிற்கின்றதுவாரபாலகர்கண்டு அந்தப்புரத்துக்கோடி விஷ்ணுவைக்கண்டுவணங்கிப் பகவானே, பிரமன் இந்திரன்முதலாகியதேவர்களோடு வருகின்றனனென்று விண்ணப்பஞ்செய்யக்கேட்டு நல்லகாரியம் அவர்களனைவரையும்அழைத்து வாருங்கோளெனக் கட்டளையிட்டவாறே யெதிர்கொண்டு கேசவமூர்த்தி உங்களைக்காணவிருப்பமாயிருக்கின்றனர்வாரும்வாருமென்றவாக்கியஞ் செவிகளுக்கினிப்பாய்மனம்பூரித்து உட்சென்றுரிஷிகளாற்றுதித்துவணங்கும்பெருமையினையுடையமாதவனைவழிபட்டு அவரனுக்கிரகத்தினால்அவர்வடிவினைப்பெற்ற கணக்கிறந்தமுக்தர்களும்நித்யசூரிகளும் இருபாரிசங்களினும்நின்று துதிக்கத்தேஜோன்மயமாகிய திருமாமணிமண்டபத்தில்சிரோரத்தினங்கள் ஜ்வலித்திருக்கும் ஆயிரம்பணாமகுடங்களையு

டையசேஷனுகியசிரியசிங்காதனத்தின்மீதுசெந்தாமரை
மலர்புஷ்பித்திருப்பதை நிகர்த்துவிழிகள்கரங்கள்பாதங்
கள்விளங்கும் மகாவிஷ்ணுவானவர் ஸ்ரீதேவிபூதேவிநீ
ளாசமேதனுய் வீற்றிருப்பதைப் பிரமனுதியர்சேவித்து
வேதவாக்கியங்களினுற்போற்றிநிற்கப் பரந்தாமன்தமது
புத்திரனுகிய பிரமனேச்சமீபத்திலிருக்கும் பீடத்திருக்க
ச்செய்து மற்றஇந்திரன்முதலானவர்களிடத்துங்கிருபா
நோக்கம் பாலித்தவராய்ப் பின்புபங்கயனைப்பார்த்து உ
ன்சிருஷ்டிக்கிடையூறின்றி நடந்துவருகின்றதோ ஏதே
னும் விசேஷமுண்டோவெனக் கேட்டகாலத்தில் பிரம
தேவன் சொல்லுகின்ருர்.

ஓ-கர்த்தனே, முன்னொருகாலம் நான்சபையிலிரு
க்கின்றதருணத்தில் சனகர்முதலியபிள்ளைகள்நால்வரும்
வந்தனர். அவர்களைப்பார்த்து பெறுதற்கரியஇந்தச்சிரு
ஷ்டித்தொழிலைநடாத்தி யிவிடத்திலிருப்பீராக வீணுய்
அலைவதிற் பிரையோசனமென்னவென்று சொன்னதை
க்கேட்டு அதைமுக்கியமாய் மனதிற்கொள்ளாமல்நகைத்
தவர்களாய்ப் பாசமென்னுஞ் சிறையில்மூழ்கிப் படைப்
பென்னும் பாரவிலங்கில்அகப்பட்டு வருந்தமாட்டோம்.
சிவநாதனைவழிபட்டு அவன்திருவடிநீழலைச் சேரக்கட
வோமென்று என்சபையைநீங்கிப்போய் அளவற்றகால
ம்வருந்தித் தவங்களைமுடித்து வருவதைக் கைலாசபதி
யறிந்து ரிஷபவாகனத்திலெழுந்தருளி உங்கள்தவத்தை
மெச்சினேம் உங்களுக்கு வேண்டியவரங்களைத்தருவோ
ங் கேட்பீராகவெனக் கட்டளையிட்டபோது குமாரர்கள்
திடசித்தராய்சுவாமி, அடியோங்கள் பாபரகிதராய் அழி
யாப்பதவியினைச்சேரும்பொருட்டு வேதநிச்சயங்களைஅ
ருளிச்செய்ய வேண்டுமெனப் போற்றுகின்றவரிடத்திற்
கிருபையுற்று அவர்களைத்திருக்கயிலாயத்துக்குவருவித்
து அதன்தென்பாரிசத்தில் வானத்தையளாவவளர்ந்துதி
சைகளைச்சூழத்தழைத்துக் குளிர்ந்தநிழலைப்பரப்பி யி
ருக்கின்ற வடவாலவிருட்சத்தடியில் வீற்றிருந்துவேத
சாரங்களைப்போதித்து இதனைஅனுஷ்டிப்பீராயின் உங்
களெண்ணப்படிக்குக் கைகூடுமெனத் திருவாய்மலர்ந்து
சிவபிரான் தமதாலயத்திற்போயினர். பின்புசனகாதிக
ள் கங்காதரனைநினைந்து வணங்கிப்போற்றி வெள்ளியங்
கிரியினைநீங்கினவர்களாய்ச் சமுத்திரஞ்சூழ்ந்தபூமண்ட
லத்தில்வந்து பத்திவயிராக்கியங்களுடன் பலநாட்கள்அ
ரியதவங்களைச்செய்தபோதினும் மனமொடுங்கும் வகை
காணுது வருந்தியிருக்கின்றபோது, கர்த்தனருளினுற்க
யிலாயத்துக்குவரும்படி அசரீரிமூலமாய்த் தெரிந்தவர்
களாய்ச் சிவபிரான் கிருபைக்குமகிழ்ந்து அதிவேகமாய்
க்கைலையைச்சேர்ந்து சபாமண்டபத்தில்வீற்றிருக்கின்ற
லோகநாயகனைவணங்கி ஓ-பரமனே, தேவரீர் கட்டளையி
ன்வண்ணம் இதுபரியந்தம் தவங்களைச்செய்தனமாயினு
ம் மனவிருத்தி லயப்படவில்லை.அதற்கோருபாயத்தை
ப்போதித்து அடியோங்களை ஆண்டருள வேண்டுமென
ப் பலவாகப்போற்றுகின்றவரிடத்துக் கிருபையுற்று அ
வர்கள்மனம் பக்குவப்பட்டதைத்தெரிந்து சமீபத்தில்வ
ரவழைத்துச் சரிதைகிரியை யோகத்தைப்போதித்துஅ
தற்குமேலாகிய ஞானப்பிரிவைச் சொல்லக்கூடாததால்
சின்மயமுத்திரையைக்காட்டி மவுனத்திருந்தனர். அவ
னருளினுல் அவர்பாதாரவிந்தங்களை யிருதயகமலத்திரு
த்திச் செயலற்று மவுனிகளாய்த்தாமும் அவ்வாறேயோ
கநிலையினிலிருக்கின்றனர். இவ்விதமாகவேதநாயகன்ச
னகாதிகளுக்கு ஞானயோகத்தினைக்காட்டி வருகின்றதரு
ணத்தில் அடியோங்களுக்குப் பலயுகங்கள் கடந்தன

இப்படிக்கு எமதிறைவன் உமையவளைப்பிரிந்து
யோகியர்களைப்போல் யாதொருசெயலுமற் றிருப்பதாற்
சுவர்க்கமத்திய பாதலங்கள்முதலிய சகலபுவனங்களினு
மிராநின்ற சீவராசிகளில் ஆண்பெண்கூட்டுறவின்றி அ
வைவிர்த்தியடையாம லழிகின்றன. அதனுற்படைப்பி
ன்வீக்கமுங்குறைபட்டு நானுஞ்சரஸ்வதியை ஆலிங்கன
ஞ்செய்வதையொழிந்து யோகிகளைப்போல விருக்கின்ற
னன் இவையன்றியும் பரமசிவத்தின்கிருபையினுல்அக
ண்டசாம்பிராச்சியத்தைப்பெற்றுக் கொடுங்கோல்செலு
த்திவாழுகின்ற சூரபதுமனனவன் என்னைப்பார்த்துப்
பிரதிதினமும் பிராதகாலத்திற் றன்னரண்மனைக்குவந்
து பஞ்சாங்கஞ் சொல்லிப்போம்படிக்குங் கட்டளையிட்
டான். அவ்வாறேநடத்தி வருகின்றனன் மேலுமிந்தத்
தேவேந்திரனையும்மற்றதிக்குப்பாலகர் தேவர்கள்முதலா
னவர்களோடு இதக்கமில்லாமற்றகாதயேவல்களைக்கொள்
ளுகின்ருன். இதுவுமன்றியிற் சயந்தனைச்சிலதேவர்மனே
விமக்களுடன்கூட்டிப்போய்க்கொடியகாவலிலும் அடை
த்துத்துன்பப்படுத்துகின்றனன்: அவன்செய்துவருகின்
ற அநியாயங்களைச்சொல்லி முடியாது; சூரன்கொடுமை
களிப்படிக்கிருக்க யிவையனைத்துந் தமக்குத்தெரியாத
தைப்போல் சிவபெருமான் யோகத்திலிருக்கின்றனர் ஆ
தலாற் றேவரீரிந்தஏழைகள்மீது கருணைகூர்ந்து நாங்க
ளினியாவது துன்பமற்றுப்பிழைக்கும் வழியையோசித்
திரட்சிக்கவேண்டுமென்று பிரமன்சொல்லியவாக்கியங்க
ளைவிஷ்ணுவானவர்நிதானித்து ஓ-தேவர்களே யிதனைக்
கேட்பீராகபஞ்ச பௌதீகங்களாய் அருவமாய் உருவாய்
அருவுருவாய்சகளமாய்நிஷ்களமாய்வேதப்பொருளாய்ச்
சிருஷ்டிதிதிசங்காரமென்னும்முத்தொழிலையும் நடாத்த
மும்மூர்த்திகளாய்மூலகாரணனுய் தேவதேவனுயிருக்கி
ன்றசிவபிரான்யோகநிஷ்டையினைச்சாதித்திருப்பின் எந்
தப்பிராணிகளின்பத்தைவிரும்புவார்கள்பூர்வத்திற்றக்க
னனவன்பிராரத்துவவினைக்கீடாய்அகந்தையுற்று தனக்
குச்சகலவாழ்வினையுங் கடாட்சித்த சங்கரனைமதியாமற்
செய்யத்தொடங்கியயாகத்தில்அவனுடன்சேர்ந்திருந்தஉ
மதுவினையின்முயற்சிகழிய அனுபவங்களைக்கூட்டிமுடித்
தபின்பு பழையவாழ்வில் நிலைபெறச்செய்யத் திருவுளங்
கொண்டதால் சூரனுக்களவற்றசெல்வங்களைக் கொடுத்து
அதுமுற்றுப்பெறு மளவுந்தேவர்தம்மை நெருங்கிவருத்
தாமல்ரிஷிகளுக்குமௌனநிலையைக்காட்டிச்சகலபிராணி
களுந் துக்கத்திலழுந்தத்தாம்பராமுகமாயிருக்கின்றதுகி
ருபைக்குரியதன்றிவேறல்லஆதலாற்சனகாதிகளுக்குப்ப
ரமசிவன் காட்டியிருக்கும்மோனத்தினை நீங்கிபர்வதராச
புத்திரியை மணந்துசேருவராகில் உனதுபடைப்புவிர்த்
தியாகும்அவர்களிடத்தொருகுமாரனுற்பவித்தால்சூரன்
குலமுற்றும் நாசமடைந்துவாடிநிற்கும் உலகங்களனைத்
தும் யதாப்பிரகாரங் களித்திருக்கும் இஃதுமுற்றுப்பெ
றுதற்கு ஒருசூழ்ச்சியினைச்சொல்வோங்கேட்பீராக, சர்வ
பிராணிகளுங் காமக்கவலையிற்பட் டின்பமடைவதாகப்
பஞ்சபுஷ்ப பாணங்களைப் பிரயோகித்துத் திரிலோகங்க

ளினுந் தன்னரசுசெல்ல விருக்கின்ற நமதுபுத்திரனை மன்மதனைவேண்டிப்பரமசிவத்தினிடத்துக்கனுப்புவீராயின் அவன் முயற்சியினால் ஹரன் யோகத்தினை நீங்கிப் பார்வதியைக்கலந்துஒருகுமாரனைத்தருவர் அவரால்உமதுகுறைகளனைத்தும்நீங்கிவாழலாம்,இதைக்கடைப் பிடியாகக்கொண்டு விரைவில் முடிக்கக்கடவீரென்று முகுந்தன்திருவாய்மலர பிரமன்கேட்டு மகிழ்ந்தவனாய்ப் பிதா போதித்த வாக்கியம் நன்றாகவிருக்கின்றது, அவ்வாறே முடிக்கின்றனமெனக்கூறிச்செலவுபெற்றுக்கொண்டு ஸ்ரீ வைகுந்தத்தைக் கடந்து மனோவதி பட்டணத்துக்கு வந்துசகலரும்போற்றிநெருங்கத் தமதாசனத்தில்வீற்றிருந்தனன்.

---

## காமதகனப்படலம்.

இந்திரன்வானவரீட்டமொடேகி
முந்துறுகஞ்சமுகட்டிடையுற்றோ
னைந்திரனாகியவாசகவில்வேள்
வந்திமோறுமனத்தினினைந்தான்.

---

இவ்விதமாகத்தேவர்கள் சூழ்ந்திருக்கசிங்காதனத்தில் விளங்கும்பிர்மதேவன்பஞ்சபுஷ்ப பாணத்துக்கதிபனான மன்மதனைவர நினைந்தகாலத்தில் அதனைத்தெரிந்துகொண்டவனாய்த் தென்றற்றேரிலாரோகணித்துப் பரிவாரங்கள்சூழ்ந்து போற்ற மனோவதிநகரைச்சேர்ந்து சபைக்குப்போய்ப்பிரமனை வணங்கித் தேவரீர் என்னை வரவழைத்த காரண மென்னென்று கேட்க பிரமன்மன்மதனையருகிலழைத்துப் பீடத்திலிருக்கச்செய்து ஓமன்மதனே உனது பெருமைகளைப்புகழ்வதற்கு ஒருவராலும் முடியாது கருப்புவில்லைக்கொண்டு திரிலோகங்களையும்வென்று உனது கீர்த்தியை யெங்கும்நாட்டியிருக்கின்றனை ஆதலால் எங்களுக்கு நேர்ந்த மனவருத்தங்களைப் போக்குவது உனக்குப்பெரிதல்ல சூரனால்மிகவும் அலைச்சற்படுகின்றனம் அதைநீக்கும்பொருட்டுத் தயைசெய்து திருக்கயிலைக்குப்போய்மோனத்திலிருக்குங் கங்காசடாதரராகிய பரமசிவத்தின் மீது உன்பாணங்களைச் செலுத்தி அவர்நிலையைக்கெடுத்து விரகமுண்டாக்கிப் பர்வதராச புத்திரியைக்கூடும்வண்ணஞ் செய்வையாகில் நாங்களனைவருஞ் சிலகாலம் சவுக்கியத்திலிருப்போம் ஆதலால்எங்கள்நிமித்தம் விரைவிற்போகவேண்டுமெனச் சொல்லியவாக்கியம் ஸ்ரீலட்சுமிகுமாரன் செவிகளில் கடூரமாகநுழைந்தமாத்திரத்தில் உள்ளமெங்கும் தகிக்கப்பட்டுவருந்தினன்.

கேட்டீர்களோ, சவுனகாதிரிஷிகளே சிவனது யோகத்தை அழிக்கவேண்டு மென்னும் வசனமேமன்மதன் மனதைச் சுடுமாகில் நெருங்கிப்பாணங்களைப் பிரயோகித்த காலத்து அவன் தேகஞ் சாம்பலாயிற்றென்பது அற்புதமோ இவ்வாறு பிரமன் பேசிய காலத்தில்மன்மதன்நடுநடுங்கிச் செவிகளைப் பொத்திப்பஞ்சாட்சரத்தைச்செபித்து ஒருகாலத்தினுந் தீராத பாதகங்களுக் கேதுவாகிய வார்த்தைகளைக் கேட்கவுமாயிற்றே என்னவிபரீதமெனக் கிலேசித்து அனலிற்பட்டபூளைப் புஷ்பத்தினைப்போல வாடினவனாய்ப் பிரமனைப்பார்த்துச்சொல்லுவான்பெரியோர்கள் தமக்கு முற்பட்டகொடியவனையும் பரிபக்குவப் படுத்தி அவனீடேறும் மார்க்கங்களைக்காட்டி யிரட்சிப்பர், பிதாவைப்போல நினைந்துதேவரீரிடத்துக்கு வந்தால் இத்தகையகுற்றமாகிய தொழிலையுங் காட்டலாகுமோ அடியேனிடத்திற் சற்றுங்கிருபை யில்லையோ சிருஷ்டிகர்த்தராகிய நீரிப்படியும் நினைக்கத்துணிவதோஎன்னுடைய பராக்கிரமங்கள் உமக்குத் தெரியாததல்ல அபலமான கருப்புவில்லினாலும்மிருதுவாகியபஞ்சபுஷ்பபாணங்களினாலும் என்பிதாவாகிய மகாவிஷ்ணுவையும்வென்று ஸ்ரீமஹாலட்சுமிதேவி பூமிதேவி முதலியதாய்மார்களைத் தழுவியிருக்கும்படிச் செய்யவில்லையோமேலுஞ் சிதேவியைக் காமவிருப்பத்தால்மார்பின் வைத்திருக்கவுஞ் செய்து கீர்த்தி பெற்றேன் மதனியாகிய சரஸ்வதியம்மனைக்காதலித்து நாவிலிருத்த வுந்திலோத்தமையினிடத்து மையல்கொண்டலையவுந் தேவரீரையுஞ் ஜயிக்கவில்லையோ இந்தத்தேவேந்திரனானவன் இந்திராணியிடத்துக் காமுகனாய்க் கூடியிருக்கவும் அகலிகையிடத்து விரகமுடையனாய்த்தேகமெங்கும்பெண்குறிவிளங்கச்செய்தது தமக்குத் தெரியாததோ, சந்திரனையும்மதிமயக்கி ஆசிரியன்தேவியை யிச்சிக்கச்செய்து அவளைக் கலந்து புதனென்னும்பிள்ளையைப் பெறச் செய்தவனும் நானல்லவோ சதுர்வேத பாண்டியத்துவமுடைய விவேக சாலிகளாகிய தேவர்களைமயக்கி அரம்பாஸ்திரீகளிடத்தில் அதிகமையல் கொண்டு பணிவிடைகளைச் செய்து திரியச்செய்ததை அறியாதவர்களுமுண்டோ ஞானவுணர்ச்சியினாற்றன்னையறிந்து பரத்துவந்தாமே யென்னும் நிச்சயத்தைத்தெளிந்த சுத்தாத்து மாக்களாகிய வதிஷ்டர் மரீசி அகஸ்தியர் அத்திரி கௌதமர் காசிபர் முதலிய சிறந்த ரிஷிசிரேஷ்டர்களுடைய நிலைகளைக்குலைத்துக் கன்னியர் மையலிற்பட்டு வாடச்செய்தது ஜகமனைத்தினும் வழங்கவில்லையோசுவர்க்க மத்தியபாதலங்களில் என்னாணையைக்கடந்தபேர் யாவரிருக்கின்றனர்.

மேற்குறித்தவெற்றிகளனைத்துஞ் சந்திரசடாதர ராகிய சிவபிரானிடப்பாகத்தமர்ந்த பராசத்தியின் வல்லபத்தினன்றி என்திராணிகொண்டு முடிக்குந்தரமோமேலும் மகாவிஷ்ணுமுதலிய தேவர்க்களைஜயங்கொள்ளவல்லனல்லது கங்காசடாதரக்கடவுளின்மீது புஷ்பபாணங்களைப் பிரயோகித்துவெல்லவும்போதுமோ அத்தேவனதுகட்டளைகளைச்செய்து வருங் கடவுளரைப்போல எளிதாகவெண்ணி யிக்க்ருமத்தைச்சொன்னீர் ஒருகாலம்அதற்கிசைந்து அழல்வடிவினை வாய்ந்தசிவபிரான் மீதிற்சரங்களைச் செலுத்துவேனாயினும் எரிந்து பொடியாவதல்லதுநெருங்கவுங்கூடுமோ கையும், நகையும்விழியும் மெய்யுந் தழல்வடிவமாகவிளக்குஞ் சர்வேஸ்வரனைப்பாணங்களை யேவி ஜயங்கொள்ளப்போவேனாயின் இந்தப் பிராணனுடன் பிழைத்து மீள்வதுமுண்டோ பற்றற்ற பரம்பொருளைமயக்கும் விதம்யாது ஓபிரமனே அக்கடவுளினாலுண்டாகியவர்களைப்போல அவரையும் மதிக்கின்றனை அவர் வல்லபங்களை வெல்வோ மென்பது எளிதாய்முடிகின்றதோ இதற்கொருதிஷ்டாந்தத்தைச்சொல்லக்கேளுஞ்சுழல்காற்றில் அகப்பட்டபூளைப்புஷ்பஞ் சலனமற்று நிற்குமானால் நீறணிந்த நின்மலக்கடவுள் முன்புபோகவல்லேன்மேலும்அரவாபரணக் கடவுளினுடனெதிர்த்தவர்களி

ல் அழிந்துபோனவரல்லது பிழைத்தவர்களைக்காட்டவல்லமோ விஷ்ணுமுதலான தேவர்கள் ராட்சதப்பாதகரால் மிகவும் வருந்தித் தீனசரண்ணியனேகாக்கக்கடவையெனத் துதிக்க அவரிடத்தன்பாய்த் திரிபுரங்களைநகைத்தெரித்ததை மறந்தீரோ மார்க்கண்டர்பத்திவயிராக்கியத்துக் கிரங்கி அந்தப்பத்தன் மீதெதிர்ந்த யமதருமராசனைத் திருவடிகொண்டுதைத்து வாட்டியசெய்தியின்னமும் நீர் கேட்டதில்லையோ நேற்றைப்போதில் தேவரீரும் மகாவிஷ்ணுவும்நாம்நாம் பரம்பொருளென்று வாதாடுகின்மகாலத்திற் சிவபிரா னெழுந்தருளிஉமது சிரங்களினொன்றைக்கிள்ளி யெறிந்ததை மறக்கலாகுமோ ஜயசாலிகளாகிய சலந்திரனே முதலாகிய சூராதிசூரர்கள் சூலபாணியுடனெதிர்த்து மாண்டதை அறியீரோ பரமனைநிந்தித்துத் தக்கன்செய்தயாகத்திற் பேரயிருந்தவர்க ளனைவருந் தமதுகோபத்தை வடிவாக்கியேவிய வீரபத்திரக்கடவுளினது வாளினால் பலகுறைகளைப்பெற்றுப்பங்கப்பட்டுமானமழிந்தோடச்செய்ததை எப்போதும் மறப்பதோதிருப்பாற் கடலினைக் கடையுமுன்னிலையிற் கொதித்தெழுந்த ஆலகால விஷத்தினால் இராட்சதர்விண்ணவர்முதலாகப் பயந்தோடிச் சரண்புக அதற்கிரங்கி அவ்விஷத்தையுண்டு காத்ததயாநிதியை மறக்க லாகுமோ பார்ப்பதியார்திருக்கரத்தெழுந்து சராசரப்பிரபஞ்சங்களையெல்லாம் அதப்படுத்திப்பெருகிய கங்காபவானியைத் தினையளவாக்கிச் சடையிற்றாங்கிய கிருபையை நினையாமலிருக்கலாகுமோ பிச்சாடனக்கோலங்கரித்து வந்து தாருகாவனரிஷிகள்தேவியர் கற்பினை அழித்தகாலத்தில் அத்தவத்தர் கொதித்தேவிய அழலைக்கரத்திற்றாங்கி யானையைப் புலியையுரித்துப் போர்த்துஉடுக்கையைகரத்திற்கொண்டுபரமன் நடித்தவிதத்தைப்பார்த்ததில்லையோமேலுந்தம்மை யாவராயினும் இகழ்ந்ததே யுண்டாகில் அவர்கள் வலியை யொடுக்கி வாட்டுவதைத் துதிக்கவேண்டாமோஇராவணனானவன் தான் கொண்ட வகங்காரத்தினால் திருக்கயிலையைக் கரங்கொண்டெடுத்த காலத்தில் ஈஸ்வரன்பெருவிரலினாலழுத்திப் பாதலவளையிற் றள்ளிய மகத்துவத்தை நீர் மறக்கவேண்டாம் சர்வசங்காரமுடிவிற்பரமன் விழியிலெழுந்தஒருபொறியினால் நாமும்மற்ற சராசரங்களும் அனற்பட்டு சாம்பலாவதை யெண்ணிப்பார்க்கலாகாதோ இத்தகையபெருமைகளையுடையபரஞ்சுடரை என்கரத்திற்கொண்ட கருப்புவில்லினாலும் புஷ்பபாணங்களினாலும் செயிக்கமாட்டேன், ஆதலாற் சரீரத்தின்மீதிச்சையில்லாதவர்கள் இக்காரியத்துக்குச் சம்மதிப்பார்களென்று நினைக்கலாகும் ஆதியிற்சத்திசிவமாய் விளங்கி உலகங்களனைத்தையும் படைத்துக் காத்தழிக்கவல்லதற்பரமூர்த்தியைநானேவிரகமுண்டாக்கவல்லவன் நல்லகாரியத்தை யெண்ணி எனக்குக் கட்டளை யிட்டீர் இதனை மறந்து மற்றெதனைக்காட்டினாலும் முடிக்கவல்லேனென்று மன்மதனானவன் சொல்வதைப்பிரமதேவன்கேட்டு மனங்கலங்கி பெருமூச்செறிந்திவனைப்பக்குவமாக வசப்படுத்தவேண்டுமென்றுயோசித்து மாரனே நீ யிப்போது பரமசிவத்தின் பெருமையைப் பேசியது உண்மையே மேலும் அத்தேவனை யெவ்விதத்திலும்ஜயிப்பது அரிது தான் ஆகிலுந் தம்மையடைந்தவர்க ளின்னலை நீக்கிரிட்சிக்கவல்ல கடவுளருளினா லிக்கருமம் உன்னால் முடியலாகும் மற்றயாவராலும் நினைக்கப்படுவதன்று சமஸ்தபிராணிகளினது செயல்களை முடிப்பிக்கும் எமதிறைவன்கட்டளையன்றிவேறில்லை அவனருளின்றிஓரணுவும்அசைய வறியாது ஆதலாற் சூரனால்நாங்களனைவரும்படும் வருத்தங்களுக்கிரங்கி எங்கள்மீது கிருபைவைத்துச்சிவபிரானிடத்துக்குப் போகவேண்டும் அவர் திருவருளின்றி உன்னாற் கூடுவதொன் றுண்டோ மேலும் உருவாய் அருவாய்அருவுருவாகும் ஈசனானவர் இவ்வுலகங்களிலிராநின்ற ஆத்துமகோடிகளனைத்தையும் நடிப்பிக்கும்வல்லபமுடையவர் அத்தேவன்முயற்சியல்லது நம்மாலொன்றுமாகாது அவரருளின்றி யிக்காரியம்எங்கள் கியாபகத்தில் வருமோ இவ்வுண்மைகள் உனக்குத்தோற்றாததன்று ஆதலால் எங்கள் கோரிக்கையைமாறாமற் சீக்கிரமாகப்போய்க் கருப்புவில்லை வளைத்துபுஷ்பபாணங்களைத் தொடுத்துப் பரமசிவத்தின்மீது பிரயோகிக்கக்கடவையிதுவும் அவனருளாகும் இதனைநிச்சயமாகவெண்ணக்கடவை யிதற்கேதுவை தேவேந்திரனுக்குக்காட்சிதந்தபோது கர்த்தன் புத்திரனைத்தந்து காக்கவல்லோமென்று அருளியிருக்கின்ற தாகக்கேட்டு மிருக்கின்றனம்.

இவையன்றியும் யாவராயினுந் தங்களால் நீக்கிக்கொள்ளப்படாததிங்குநேர்ந்து இத்தருணத்தில் உதவிசெய்யவேண்டுமென் றிரக்கவும் ஒருவன் அதைமறுத்து தன்னுயிரைத்தாங்கியிருப்பது பசாசத்துவமன்றோ மேலும் உலகநடைக் கேற்பதோ ஒருவன்உதவிகேட்பதற்குமுன்னம் அவன் கருத்தையறிந்து உதவுவது உத்தமம் கேட்டபின் வழங்குவது மத்திமம் பலநாள் மறுத்துச்செய்வதுஅதமம்சத்துருவேயாயினும் ஓரிடறிற்பட்டுமானமிழந்து கேட்டுக்கொள்ளுவனாயின் அவனுக்குஅவ்வுதவியை நடத்தி அதனால் தன்பிராணனைப்போக்கினும் பலராலும் புகழப்பட்டு மோட்சவீட்டைப் பெறுவன் இடருற்றவன் வேண்டியும் மறுதலைசெய்தவன் சகலராலுமிகழப்பட்டுப்பாபியாய்நீங்காதவழிக்குடன்பட்டுக் கடையில்நரகவாதனையிற்பட்டு வாடுவன் தன்பிராணனைப் பாதுகாக்கும் பொருட்டு ஒருபிராணிக்கும் ஒரு சகாயத்தையுஞ் செய்யநினையாதவன் சழித்தநாளொருநாளோ அவன்செல்வம் வறிதாய்த்தடாகத்திற் பரந்தோடியிருக்கும் பச்சைக்கொடி பிரயோசனப் படாததைப் போன்றுதோற்றும் உபேந்திரருடன் போராடிப் பத்தவதாரங்களைக்கட்டளையிட்டபிருகு மகாரிஷியினிடத்துத்தேவேந்திரன் தனக்கடுத்த சிறுமைகளைமுறையிட்டிரக்க விருத்திராசுரனைக்கொல்லும்படியாகத் தன்முதுகெலும்பை வச்சிராயுதமாகக்கொடுத்துப் பிராணனையிழந்து நித்தியப்பதவியைச்சேர்ந்த சரித்திரத்தை நீகேட்டதில்லையோ இன்னமுஞ் சொல்லவேண்டுமோபிறப்பிறப்பிலியாகிய சிவபிரான் கடலிலுதித்த விஷத்தனைத்தாமுண்டு அமுதத்தினைத் தேவர்களுக்குக் கொடுத்தருளியகுணாதிசயத்தைச் சிறிதும் நீயறியாயோ ஓமன்மதனே யிக்காலத்திற்பாதகனான சூரபதுமனால்மிகவும் வருந்தியிட்டஏவல்களைநடாத்தித் துக்கசாகரத்திலழுந்தி வருந்துகின்றனம் அதனை யொழிக்கும்பொருட்டுப் பரமன் திருக்கலியாணஞ்செய்து ஒருபுத்திரனைக்கடாட்சிப்பதாகப் புஷ்பபாணங்களைப்பிரயோகித்து மையல்மூட்டவேண்டும் ஆதலால் எங்கள்துன்பங்களைப்போக்கு முன்னிலையில் ஒருகாலஞ்சாவு நேர்ந்தாலும் இகழ்ச்சியோ புகழினை விரும்பினவர்கள்

எது வந்தாலும் பின்னிடைவரோ அவ்வாறேயினி ஒன்
றும் யோசியாமல் எங்கள்காரிய நிமித்தம் போய்வருவா
யென்று பிரமன்வேண்டிச் சொல்ல இரதிகாதலனுக்கதி
கக்கிலேசமுண்டாய் ஓ- பிதாமகனே, நீரென்ன சொன்னா
லும் பரமசிவத்தை மாறுகொண்டு பாணங்களைச்செலு
த்த மாட்டேன் ஆனால் எனக்கேற்ற காரியங்களெதனைக்
காட்டினாலும் இதோ நடக்கின்றேன் வெற்றிகொண்டுமீ
ளவும் வல்லேன் தேவரீரிப்போதுகுறித்தகட்டளையென்
னல் முடியாது முடியாது க்ஷமிக்கவேண்டுமென்றுபோ
ற்றுகின்றகாமனை நான்முகன்கோபித்துப்பார்த்து அடா-
பயலே, பலருக்கும் உதவியாயிருக்கின்ற நற்காரியத்தை
க்குறித்துத் தழுவி யின்சொற்களாற் சொன்னதைமறுத்
து ஏதோசில தெரிந்தவனைப்போலப் பேசுகின்றனை நா
ங்கள் குறித்த வண்ணம் விரைவிற்போய் ஜயஉச்சாகத்
துடன் மீள்வையாகில் இன்னஞ் சிலகாலம் பிழைத்
திருப்பை தடைசெய்வையே யானல் மீளாத கொடிய
சாபங்கொடுக்க விருக்கின்றனம் இவைகளைத் தீர்க்கமா
யோசித்துத் துணிவுகொண்டு இக்காரியத்தை முடிக்கவ
ல்லேனென்று சொல்லக்கடவாயெனக் கேட்டவுடன்வே
னிலான் அதிக விசனப்பட்டு மனந்தளர்ந்தவனா யினி
நான் சொல்லவேண்டிய காரியமென்னவிருக்கின்றது இ
தற்கென்னசெய்வேனென்று சற்றுநேரம்யோசித்துஒரு
வகையாகத் துணிந்தவனாய்ப் பிரமதேவனைப்பார்த்து நீர்
சிருஷ்டி கர்த்தனாயிருந்தும் நான்சொல்லும் நிச்சயமா
கிய காரியங்களை யெவ்வளவும்யோசியாமல் உங்களுடை
ய சவுக்கியங்களையே பெரிதாகவெண்ணி என்னைக்கெடு
க்கநினைந்தபடியால் உன்னுடைய கொடியசாபம்பெற்று
ப் பரமபதம்பெறுமல் துக்கசாகரத்திலமிழ்ந்தி அழிவ
தைப்பார்க்கிலுந் தீனதயாநிதியாகிய தாண்டவமூர்த்திச
ந்நிதியிற்போய் அவருடைய அக்கினிநேத்திரச் சுவா
லையினால்மாண்டு சாம்பலாய் விழுந்தபோதினும் பலரா
லும்புகழ்தற்குரிய மேன்மைபெறுவதல்லாமல் மீளப்பி
ழைக்கவும் ஏதுவுண்டு ஆதலாலம்புஜனே, கோபிக்கவே
ண்டாம், மகம்மேருவைத் தனுசாகப்படைத்த சிவபிரா
னிடத்துக்கு இன்றையத்தினமேபோய் ஜயங்கொண்டுவ
ரக் கடவேனென்றுசொன்ன விசேஷத்தை மறையவன்
செவிகள்குளிரக்கேட்டுத் தன்கோபந் தணிந்தவனாய் எ
ங்கள் கோரிக்கையின்படிக்குச் சூலபாணிபக்கல்போகத்
துணிந்தது நல்லகாரியம், ஓ-தென்றற்றேரோய், பயப்ப
டவேண்டாம், நாங்களுந் தாமதப்படாமல் உன்பின்பற்
றிவரக்கடவோம் நடவுமென்று சந்துஷ்டியாகப்பேசி ய
னுப்பியகாலத்தில் தேவேந்திரனெழுந்து மன்மதனெதி
ரிற்போய்க் கரங்களைப்பற்றினவனாய் ஐயனே,நானுந்தே
வர்களும் பலநாட்களாகப்படுகின்ற வருத்தமும் மானப்
ங்கமும் உனக்குத்தெரியாததல்ல, எங்கள்வாழ்வினைத்தி
ருப்பிக்கொடுக்க உனக்குமனமிருந்தால் உமையவளைப்ப
ரமசிவன் திருக்கலியாணஞ் செய்வதற்குவேண்டியதந்தி
ரங்களைச்செய்து முடிக்கக்கடவை யிந்தச்சகாயம் வீண்
போகாது, உலகமுள்ளளவும் நிலைபெற்றிருக்குமெனப்ப
லவினிய வசனங்களைச்சொல்லி விரைவிற் காரியசித்தியா
க்கிக்கொண்டு வரக்கடவையென்று விடைகொடுத்தான்

அக்காலத்தில் மன்மதனானவன் பங்கயனையும் இந்
திரனையும் வணங்கி அப்பதியைக்கடந்து தன்னகரத்தி
ற் பிரவேசித்துமனவாட்டத்துடன் அரண்மனையிற்புகு
ந்து தன்னை வணங்கிய இரதிக்கு இச்செய்திகளைச் சொ
ல்லக்கேட்டவுடன் அனலிற்பட்ட மெழுகைப்போல வா
டுகின்றவளைப்பார்த்து ஓ- பெண்ணமுதே என்செய்வே
ன் பிரமதேவனாதியாகியதேவர்க ளிக்கட்டளையை எனக்
கிட்டார்களென்னால் முடியாதென்றுபலவிதஞ்சொல்லி
யும் பலவந்தப் படுத்தியபடியால் உடன்பட்டுவந்தேன்,
இனி யோசித்தும் விசனப்பட்டும் ஆவதென்னை, ஹர
ன்செயலின்படிக்கு வரும் நன்மை தீமைகளை அனுபவி
க்க வேண்டுமல்லது தடுக்கக்கூடுவதோ, இனி நீயும் நா
னுங் கிலேசப் படுவதிற் பிரயோசனமில்லை, நீ தயிரியத்
தை விடவேண்டாமென்று பற்பல நீதிகளைச்சொல்லித்
தேற்றினவனாய்ப் பின்பு ஆயுதச்சாலைக்குப்போய் மது
வொழுகி மணம்வீசிமிருதுவாய் விளங்கும் பஞ்சபுஷ்ப
பாணப் புட்டிலை முதுகிலிறுக்கி சிங்காரத்தொனியினைவி
ளைக்கும் வண்டுகளை நாரியாகக்கொண்டிருக்குங் கருப்பு
வில்லைச்சேவித் தெடுத்துப் புசத்தில் மாட்டிக்கொண்டு
தங்கத்தகட்டினைப்போலப் பிரகாசித்தசையும் மாந்தளி
ராகிய வாளை யிடையிற்செருகி க்ஷேமகவசத்தைமார்பி
ற்றரித்துக் கிரீடம் குண்டலம்வாகுவலையம்மதாணிப்பத
க்கம் கரசாடு விரல்சாடு முதலிய போர்க்கோலத்தைத்த
ரித்து அழகியசிறகினைவாய்ந்த கிளிகள் பூண்ட தென்ற
ற்றேரின்மீது இரதி தேவியுடன் ஆரோகணித்தகாலையி
ற் சமுத்திரமாகிய ஜயபேரி முழங்கவும் குயிலினது மு
ழக்கமாகிய காகள மூதவும் திரைகளாகிய வெண்சாமர
ைகள் வீசவும் மீனக்கொடி படபட வென்றசையவும்
வெண்மதியாகிய குடை நிழலைச்செய்யவும் இவ்விதஆட
ம்பரங்களுடன் அரண்மனையைக்கடந்துதன்பதியைப்பி
ரிய மனமில்லாமல் வருத்தத்தோடு நடக்குமுன்னிலையி
ற் பற்பல துர்ச்சகுனங்களைக்கண்டு மனவாட்டத்துடன்
அதிவேகமாகச்சென்று தேவதேவனாகிய பரமேஸ்வரர்
வீற்றிருக்குந் திருக்கயிலாய பர்வதத்தைக் கண்டவுடன்
திடுக்கிட்டுத் தேரைவிட்டிறங்கிப்பலதரம்வணங்கிப் பிஞ்
ஞகன் பெருமைகளைத் துதித்தவனாய் தன்னுடன்வந்தப
ரிவாரங்களை அடிவாரத்தில்நிறுத்திப்போட்டு இரதிதே
வி பின்பற்றிப்போக கருப்புவில்லைக் கரத்திற்குங்கி நித்
திரையிலிருக்கும் புலியினை யெழுப்ப நடக்கும் மானைப்
போலத் துணிவுகொண்டு சந்திரசேகரக் கடவுள் வீற்றி
ருக்கும் பெருமையினையுடைய வெள்ளியங்கிரியின்மீது
மெல்ல மெல்ல ஏறிப்போய் தனுசில் நாணேறிட்டுப் ப
ஞ்சபுஷ்பபாணங்களைப் பூட்டிக்கொண்டு சுற்றினும்தன்
விழியினைச் செலுத்திப்பார்த்தவனாய் அத்தலத்தில் உல
வித்திரிகின்ற மான்முதலிய மிருகங்களையும் அன்னமா
தியபறவைகளையும் மூர்ந்திக் காமத்திலழுந்தச்செய்ய நி
னைந்து பிரயோகித்தான்.

அப்பாணங்களின் முயற்சியினால் முன்னஞ்செருக்
கற்றுச்சோர்ந்து நின்றவிடங்களிற் பிரமைகொண்டிருந்
த சிவராசிகளனைத்துங் காமலாகிரிமேலிட உல்லாசங்க
ளுடன் ஒன்றையொன்றுநெருங்கி மதனவிலாசமாகக் குல
வியிரைச்சலிடுகின்ற ஓசைகளைக் கைலாயமுதல் வாயிலி
ல்வீற்றிருந்து காத்துவரும் பெருமையினைப்பெற்ற நந்
திதேவர்கண்டு சிறுநகைகொண் டிவ்வதிசயங்களனைத்து
ம் மன்மதன்செய்கைகளெனத் தெளிந்தவராய் ஊங்கா
ரித்து ஒருபேரொலிசெய்ய, அவ்வதிர்ச்சியினால் அந்த
ப்பாணங்களானவைதம்மைவிடுத்த குறிப்பின்வண்ணம்

பாயாமல் வானத்திற் பறந்துபோயது. இவ்விதமாகத் தான்பிரயோகித்த சரங்கள் அபஜயப்பட்டுப்போனதையும் அந்தத்வனியையுங்கண்டு அம்மம்ம, இஃதென்ன காரணம், நமதுவீரத்தன்மை யிப்படிக்கபலமாகப்போகுங்காரணம் யாதோவெனச் சற்றுநேரம் ஆலோசித்தவனாய்ப் பொற்பிரம்பைக் கரத்திலேந்தி முதற்கோபுரவாயிலிற் சிங்காதனத்தி லெழுந்தருளித் தனதுஆணை ஆக்கினைகளைச்செலுத்திவரும் நந்திதேவரது முயற்சியெனத் தெளிந்துமனங்கலங்கிக்கிட்டிநெருங்குவதன் முன்னம் இப்பாடுபடலாயிற்றே, யினியென்னென்ன விளையவிருக்கின்றதோ, ஆயினும் தாமசப்படலாகாதென்றெண்ணி அதிசீக்கிரத்தில் நந்திதேவர் சந்நிதானத்திற்போய் மும்முறை வலம்வந்து பலதரம் வணங்கிப்போற்றி வாய்புதைத்துநிற்கும் வசந்தன்மீது திருக்கண்சாத்தியிவ்விடத்துக்குவந்த காரணமென்னை நமதாணைக்கஞ்சாமலிப்படிக்குஞ்செய்யத் துணிவையோவென்று கேட்கும்போது, விருஷபமூர்த்தியே, அடியேன் குற்றங்களைக்ஷமித்துஎன்முறைகளைக் கேட்டருள்கவென்றுபிரமதேவன்தன்னை வரவழைத்துக் கட்டளையிட்டசவிஸ்தாரங்களைச் சாங்கோபாங்கமாகச் சொல்லக்கேட்டருளி யிரக்கமுற்றவரா யிதனைநினைக்கின்றனர். இவனுக்கொரு குற்றமுமில்லை, பிரமன் இந்திரன்முதலாகிய தேவர்கள்தங்களுக்கு நேர்ந்திருக்கின்ற துன்பங்களைநீக்கிக் கொள்ளும்பொருட் டிவனைத் தூண்டினர்கள். மேலும் முன்னம்பரமசிவம் சனகாதிதவத்தருக்கு யோகசாதனைகளைத் தெளிவிக்கப்போகுமுன்னர் யாவர்வரினும் தடைசெய்யக்கடவை சாவுக்குத் துணிந்துவரும் மன்மதனைமாத்திரம் நாமிருக்குமிடத்திற்கு வரும்படியாய் விடக்கடவையெனக் கட்டளையிட்டிருக்கின்றனர். இதனை யோசிக்குமிடத்திற்பசுவைக்கொன்று யாகத்தைநிறைவேற்றிஅதனைப் பழயபடிக் கெழுப்புமாறுபோல மன்மதனைத்தகித்துப் பார்ப்பதியாரை மணந்தவுடனெழுப்பவெண்ணியதாகக்காணுகின்றது மேலுமிவன்வரவும் அதற்கிசைந்ததாக விருக்கின்றதெனத் திர்மானித்து மன்மதனே, சிவபிரான் சந்நிதானத்திற்குப்போக வேண்டுமோவென்று கேட்க, ஐயனே, அமரர்களுக்குச்சம்மதித்து வந்தபடியால் அடியேனுக் கிறுதிகாலம் நேரிருக்கின்றதாயினும் பரமனெதிரிற் செல்லத்துணிவுகொண் டிருப்பதால் அக்கோரிக்கையைக் கடாட்சிக்கவேண்டுமெனப் போற்றும்போது நந்திதேவர் நகைமுகராய் உனக்கவ்வாறுஇஷ்டமுண்டாயிருக்குமாகில் மேற்குவாயிலின் மூலமாக நடப்பாயெனக் கட்டளையிட்டனர்

உடனே மன்மதனனவன் நந்திதேவர்பாதங்களிற் சேவித்து விடைபெற்று அதிதீவரமாய் 'மேற்குத்திசையைக்கிட்டி தேவாதிதேவனாகிய எமதுகர்த்தன் நீறுபூத்தநெருப்பு மலையினையொப்பத் தூளிதந்தேகமெங்கும்பிரகாசிக்க மோனத்திருக்குந் தலத்தை நெருங்கியபோது சக்கிரவாகப்பட்சியைக்கண்ட சிங்கக்குட்டியைப்போலச் சிவநாதனைத் தரிசித்தவுடன் மன்மதனனவன் பயப்பிராந்திகொண்டு சரீரம்வியர்க்க மனங்கலங்கிக் கரத்திற் பற்றிய தனுசுடன் பூமியில்விழுந்து மரணசோபத்தையடைந்தான். இதனைபக்கத்தில்நின்ற இரதிதேவிகண்டு நமதுகணவன் மாண்டனனே, என்னகாரணமோ, என் செய்வேனெனக் கலக்குற்றுச் செந்தாமரைமலரையொத்த கரங்களினாலெடுத்து மடியில்வைத்துமார்புடனணைத்தவளாய் மலர்விசிறியால் சிறுகாற்றெழும்படிக்குவிசிமுகத்தில் முத்துகளைப்போலவெழும் வெயர்வையைத் துடைத்துவேண்டிய சயித்தியஉபசாரங்களைச்செய்துவரும்பொழுது சற்றுநேரத்தில் மன்மதனுக்கு உணர்ச்சியுண்டாய் விழிகளைத்திறந்து சுற்றுமுற்றும்பார்த்துஇதனைநினைப்பதாயினன். பிரமதேவன் இந்திரன்முதலாகியதேவர்களுக்குச் சம்பவித்த கொடுமைகளை நீக்கிக்கொள்ளும்பொருட்டுத் திரிபுரதகனராகிய பரமசிவத்தைக் காமக்கவலையிற் படும்படிக்குவென்று வருவதாகப்பலவந்தப்படுத்தி என்னைச்செலுத்தினர்கள். பாபியாகியநான் ஏன் அதற்குடன்பட்டேன். இத்தினம் நமக்குமுடிவுகாலம் நேருகின்றதற்குச் சந்தேகமில்லை குணக்குன்றமாகிய கர்த்தனைத் தரிசித்தபோதே பயப்பிராந்தியினாற்பிராணனைத் தரித்திருப்பது அரிதாகவிருக்கின்றதால் கனலைத்தான் எப்படித்தாங்குவேன். அல்லது மனவுறுதிகொண்டு பாணங்களைச்செலுத்தினும் அவைவெற்றிபெறவல்லதோ இச்செயல்கள் பிரமனாதியருக்குத் தோற்றுதனவோ, பிரசண்டவாயு மோதலுக்கெதிரிற் தீபத்தைக்காட்டினால் நிற்பதுண்டோ, அதைப்போலவேகடவுளர்மனதுக்கெட்டாத பரம்பொருள் முனம்விட்டனர். இன்னஞ்சற்றுநேரத்தில் அத்தேவன்பார்வைக் கனலிற்பட்டுச் சாம்பலாகவிழ விருக்கின்றேன் சராசரப்பிரபஞ்சங்களனைத்தையும் நாசமாக்கவல்ல முதல்வனைத் தேவர்களுடைய ஆலோசனையினால் பஞ்சபுஷ்ப பாணங்களினால் வெல்வேனென்று நான்துணிவுகொண்டுவந்தது பலருமிகழ்ந்து நகைத்தற்கேதுவன்றோ, மேலும்பிராரத்துவவினையின் முயற்சியைப் பிரமனாதியரால்வெல்லப்படுவதரிதாயிருக்குமாகில் என்போலிகளாற் றடைசெய்யலாகுமோ, இக்காலத்திற் கர்த்தன்செய லெப்படிக்குமுடியவிருக்கின்றதோ, என்செய்வேன். நல்லது நானிவ்விதமாக நினைப்பதிற் பிரயோசனமென்ன இதுமுன்னமேயிருக்கவேண்டும் பிரமனாதியருக்குச் சொல்லிவந்தசபதத்தினை மறக்கலாகுமோ, துணிந்தவர்களுக்குத்துக்கமேன் கர்த்தன்கட்டளைப்படிக்கு வருவதைத் தடைசெய்யவல்லனோ, இனிதாமசஞ்செய்வதிற் பிரயோசனமில்லை, நினைத்துவந்தகருமத்தை விரைவில்முடிக்கக் கடவேனென்றெழுந்து கருப்புவில்லினைவளைத்து சுரும்புகளாகிய நாரியைப்பிகிந்து பஞ்சபுஷ்பபாணங்களையும் ஓரோமுகத்திற் றொடுத்துக்கொண்டு தன்னைப்பிரிந்திருக்க மனமில்லாமற் பின்பற்றிவரும் இரதிநாயகியையு முடன்கொண்டுபோய்ச் சந்திரசடாதரமூர்த்திக் கொருபாரிசத்திற் சேர்ந்து பாணங்களைச் செலுத்துவதற்கு ஆயுத்தப்பட்டிருந்தான். இவன்சரித்திரமிப்படிக்கிருக்க, பிரமசபையைவிட்டு மன்மதன்போன சிலகாலத்தில் தேவேந்திரனுக்கு மனந்தாபரியாமல் பிரமனைவணங்கிக் கர்த்தனே, நமதேவலின்படிக்குத் தடைசெய்யாமற் றிருக்கயிலைக்குச்சென்ற சித்தசன்செய்தி தெரியவேண்டும் மேலும்நாம் வருவதாகவும் அவனுக்குச்சொல்லியிருப்பதால் அவ்விடம்போய் மீள்வது உத்தமமாகக் காணுகின்றதென்று பேசினான். அதைக்கேட்டவுடன் திசைமுகனுஞ்சம்மதித்தவனாய் அதிசீக்கிரத்திற் சிங்காதனத்தை விட்டெழுந்துஇந்திரன் விண்ணவர்சூழ்ந்துவரத்திருக்கயிலாயத்துக்குப்போய்ச் சேர்ந்து நந்திதேவரைவணங்கி அவரால்

அங்கசன்செய்கைமுற்றுந்தெரிந்து என்னமாகமுடிபவிருக்கின்றதோவென்னும் ஐயப்பாட்டுடன் மனந்தாபரியாமற் பரமசிவத்தைத் துதித்துக்கொண்டு ஒருபாரிசத்திலிருந்தனர்.

இதுநிற்க மேற்குறித்த மன்மதன்யோசித்து ஓ-மனதே, யேன்வருந்துகின்றனை சாவுக்குத்துணிவுகொண்டுவந்தும் அச்சப்படுவானேன் நினைந்துவந்தகாரியத்தை முடித்து கீர்த்திபெறுவதே மேலானதெனத் தேறுதல்பேசிவில்லைநேராகப்பிடித்துப் பரமனிருதயகமலத்துக்குக் குறிபார்த்துப் பஞ்சபுஷ்பபாணங்களையும்பிரயோகித்தான். அவைகளுந்தமதுவிரங்களைக்காட்டி அதிவேகமாய்ப்போய் கர்த்தன்தேகத்திற்றாக்கியமாத்திரத்தில் அனல்விழியினைச் சற்றேதிறந்து மன்மதனைப்பார்த்தகாலத்தில் அதிற்பெருகிய சுவாலைதாக்கி மன்மதனுடலங்கரிந்து துகளாயெரிந்துதீயும் புகையுந் திருக்கயிலாயபர்வதமெங்கும்மூடியது இஃதுஎப்படிக்குத் தோற்றியதெனில் பூர்வத்திற்பிரமன் மகாவிஷ்ணுமுதலாயினர் திருப்பாற்கடலினை மத்திக்கின்றதருணத்தில் தீட்சண்ணியமுள்ள ஆலகாலவிஷமானது உதித்தெழுந்ததைப்போன்றுகாட்டியது மேற்குறித்தபுகையுந்தீயும்பரந்துபெருகிவருகின்றதைக் கீழ்பாரிசத்தில்வீற்றிருந்த நந்திதேவர் பார்த்து நமதிடத்திற் செலவுபெற்றுப்போன மன்மதனிறந்தகாரண மிதுவாகுமென நிதானித்துத் தம்மைப் போற்றியிருக்கின்ற கணநாதர்கள் இதென்னபுதுமையாகவிருக்கின்றது கர்த்தனே, தெரிவிக்க வேண்டுமெனப் போற்றுகின்றவருக்கு மன்மதன் முடிவைபறிவித்துமேலுஞ்சொல்லுவார் பேரறிவினைவாய்ந்த கணாதிபதிகளே, இவன்பிரமனாதியருக்குப் பரமனைவென்று வருவேனெனச் சபதங்கள்பேசி யிவ்விடம்வந்த துணிகரமாகிய அகந்தையே அவனைச்சுட்டுச் சாம்பலாக்கியது. இனிஇரதிதேவியானவள் தன்கணவனிறந்த காரணத்தைத்தெரிந்து அனலிற்பட்டபுஷ்பமாலையைப்போல வாடி மார்பிலறைந்துகொண்டு எமதிறைவனைவணங்கிவேண்ட பழையபடியே நமதிறைவன் மன்மதனைபிழைப்பிப்பான் தேவதேவனாகிய பரமசிவம் இந்தத்திருவிளையாடல்களை முடிப்பது உங்களையொத்த புண்ணியவான்களுக்குக் காலபக்குவமறிந்திரட்சிக்கும் நீதியாகுமென்றுபஞ்சேந்திரியங்களையொடுக்கிச் சிவபிரானைச்சிந்தித்துநோற்றநந்திதேவர்சொல்ல அவரைச்சூழ்ந்திருந்த கணத்தலைவர்கள் கேட்டபோது சகலபிரபஞ்சங்களும் பிழைத்தற்பொருட்டு எமதிறைவன்நினைந்தகிருபையிதுவோவெனக் கர்த்தன்குணாதிசயங்களையெடுத்துப் போற்றினவர்களாய் இதனைச்சொல்லுகின்றனர்,கிளிகள்பூண்டதென்றற்றேரில் வந்தமன்மதன்செய்ததொழிலுக் கடுத்ததாய் அவனைநெற்றிக்கண்ணினாலெரித்தவர் அவன்பக்கலில்நின்றஇரதிக்கொரு துன்பமும்நேராமற் காத்தனர், இவ்வாறே பற்றற்ற பரமன்பூர்வத்திலும்முப்புரத்தினை யெரித்தகாலத்தில் தமது பத்திமான்மியத்திற் குறைவற நோற்ற மூன்று திரவரைப் பாதுகாத்தனனென்று மகிழ்ச்சியாகப் பேசிக்கொண் டிருக்கமன்மதனைச் சாம்பலாக்கிய பின்பு சிவபிரான் பழைய படிக்குத் தமதுயோக நிலையிலிருந்தனர்.

கேட்டீர்களோ சவுனகாதி ரிஷிகளே, சர்வமுந்தமதெண்ணத்தினால் முடிக்கவல்ல புராரிக்கு இச்செய்கையரிதோ இவைநிற்கச் சாம்பலாய் வீழ்ந்த தன்கணவன் முடிந்ததைக்கண்ட இரதிதேவியானவள்மனங்கலங்கி யறிவழிந்து விழிகளில் நீர்பெருகதேகமாதியந்தமும் வியர்த்து மூக்கினிடத்திற் சுவாசமோடாது இவளும்மாண்டனளென்றையப்படத் தக்கதாகப் பதைபதைத்துப் பூமியில் விழுந்து பெருக்கெடுத்தோடா நின்ற ஆற்றினது நீர்ச்சுழியிலகப் பட்டுச் சுழன்றலையும்மானைப்போலத் துக்கசாகரத்தில் மூழ்கிக் களைத்திருந்தவளாய்ப் போனபிராணன் சிவகடாட்சத்தினாலுடலிற் சேரச் சிலநேரத்திற்சற்றுணர்வுண்டாய்க் கண்களைத் திறந்துபார்த்து விசனமேலிட்டபடியால் கரங்களைக்கொண்டு வயிற்றிலறைந்துகொண்டு புலம்புவதாயினள், செந்தாமரைமலரில்வீற்றிருக்கும் ஸ்ரீமகாலட்சுமியினது மனதுக்கினிய மகனே அடியாள்பிராணனுக்குப் பிராணனைப்போன்ற கணவனே ஸ்ரீதேவியினை மார்பிற்கொண்டு சேஷசயனத்திற் பள்ளிகொண்டிருக்கும் மகாவிஷ்ணுவினது மனதுக்கேற்ற குமாரனே பிராணிகளை அலைத்துத்திரிந்த சம்பராசுரனிடத்திற் பகைகொண்டு வாட்டிய வீராதிவீரனே மதுரமாகிய பசியகரும்பினை வில்லாகக்கொண்டு திரிலோகங்களையும் வென்று ஜயங்கொண்ட தீரனே அழகியபவளமலையை நிகர்த்து விளங்கும் பரமசிவத்தினது நுதல்விழிக்கனலிற்பட்டுச் சாம்பலாய் மாண்டனையோ இவ்விதஅபாயந் தேவரீருக்குச்சம்பவித்ததால் இனியாவதுதேவேந்திரன் முதலிய விண்ணவர்கள் அல்லலற்றுநித்திரைசெய்வார்களோஇவ்வநியாயத்துக்குக் காரணமாகவிருந்தமூத்தாரும் மனங்களித்திருப்பரோ ஓஎன்பிராண நாயகா, நீர் உத்தேசித்துவருஞ் செய்தியினைக்கேட்டபோதே அடியாளுக்கு மனந்தாபரியாமல் பூர்வத்திற் றிரிபுராதிகளை நகைத்தெரித்த சுயஞ்சோதியாகிய சிவபிரானை மற்றையரைப்போல வெண்ணி ஜயிக்கப்போவதுநீதியோ வேண்டாமென்றுதடுத்துப் பலவாகச் சொன்னகாலத்திற் கிஞ்சித்தாவது காதுகொடுத்துக் கேட்டவரல்ல தேவர்கள்வேண்டிய பணிவிடையினை முக்கியமாகவெண்ணித் துணிவுகொண்டுவந்த உமது திருமேனி சாம்பலாயிற்றே யிதனைக்கண்ட தேவர்கள் நமதுநிமித்தம் உயிரிழந்தனனேயென்னும் ஆவலுடன் பிராணனைவிட்டனரோ, அல்லது பிழைப்பிக்கவாவது யத்தனப்பட்டனரோ ஓ உயிர்க்கொழுநனே எனது உயிருக்கொப்பாக விருந்த தேவரீர் மாண்டுபோனபின்பும் நான்தாபரித்துப் பிழைத்திருக்கவல்லனோ பரம்பொருளாக விளங்குஞ் சிவபிரானுடைய அக்கினிநேத்திரத்தின் சுவாலைக்குச் சகிக்கமாட்டாமல்உமது வலிகுன்றித் திருமேனி வெந்துநீறாய் இத்தலமெங்கும் நெருப்பெழவும் இச்சம்பவந்தெரிந்து தமது பிரயோசனம் வெற்றியாகாமையால் விண்ணவருஞ் சஞ்சலக்கடலிலாழவும் எக்காலத்துந் தீராதபெருந் துயரமானது என்மனதைவாட்டி யலைக்கவும் எவ்விடத்தில் ஒளித்திருக்கின்றீர் ஓ- இக்ஷு-கோதண்டபாணி அருவமாயாவது தோற்றி விசனப் படவேண்டா மென்று ஆறுதலையாக ஒருசொல்லாவது பேசாயோ அடியாள் செய்தகுற்றங்களேதேனுமுண்டோ அதனாற்றான் வாய்திறவாமலிருக்கின்றீரோ என்செய்வேன் ஓமணவாளா தேவரீர் ஜகதீஸ்வரனது சுடர்விழிக்கனலினால் வெந்து பொடியாகவும் அவ்வபாயத்தினால் அடியாள்நைந்துநைந்துசோரவும் நேர்ந்த விப்பழிபாதகமானதுவஞ்சகநினைவைக்கொண்டு

உம்மைப் போக்கிய தேவர் கூட்டத்தினைச் சார்வதோ அல்லது அப்பனே என்பிள்ளை அகப்பட்டுக்கொண்டிருக்கின்றுன் நாங்களும் பதியையிழந்து ஒளித்து நாளைக்கழிக்கின்றனம் ஆதலால் தயைசெய்து வெற்றிபெற்றுவரக்கடவையென்று பலவாகக்கெஞ்சிச் செலுத்திய இந்திரன்பக்கலிற் சாருமோ நீர் பரமசிவத்தின்மீது தயிரியங்கொண்டு போகமாட்டேனென்று மறுத்து முறையிட்டதையுங் கேளாமற் சபிப்பேனென்று பயமுறுத்தியனுப்பிய பிரமதேவனைத்தான் கூடுமோ அப்படிக்குத்தான் பலவந்தப்படுத்தினுலுங் காரியா காரியங்களையோசித்துப் பகுத்தறிந்து துணிவுகொள்ளாமல் உலகநாயகனை மோகிக்கவல்லேனென்று சபதங்கூறிவந்த திரனே உம்மைத்தானே சேர்வதோ இஃதின்னுறைப் பற்றுமென்று ஒன்மு ந்தோறறவில்லையே எனது பிதாவையொத்த அன்புள்ள நாயகனே மகம்மேருவை வில்லாகக்கொண்டு திரிபுரங்களை தகித்தழித்த புராதனக்கடவுளாகிய பரமேஸ்வரன் கொண்டிருக்கின்ற யோகத்தினைத் தவிர்த்துவிரகத்தினையுண்டாக்கித்தமதுகாரிய சித்தியாக்கிக்கொள்ள வேண்டினுல் தேவர்களெல்லோரும்அடியோடேமாண்டுபோயினரோ, உம்மைவிடயோதானயோதிகள் அவர்களில்லையோ என்காதலனே நீயோ அதற்கிலக்காகவிருந்தனை கொல்லாத விரதம் பூண்டவரைப்போலவே அபாயமார்க்கங்களைப் போதித்தனுப்பி உன்பிராணனைப்போக்கினரோ இஃதன்றியும் தேவரீருக்குச் சம்பவித்த இக்கொடுமையினை யெண்ணி யெண்ணி வாடி வருந்திச் சாகும்படிக்கு என்பிராணனுக்கு மிறுதிதேடினரோ நல்லவரைப்போற்காட்டிய கொடியவர் நினைவையறியாமல் உதவிசெய்ய ஒருவன்விரும்புவது தன்னுயிருக்கு அபாயந் தேடிக்கொண்டதன்றே பிராணவல்லபா இதனையறியாமல் மோசம் போனீரோ ஐயையோ பூர்வத்தில் நான் என்னபாதகங்களைச் செய்தேனே என்னையொத்த தீனராகிய கன்னியர்களுக் கென்ன தீங்குகளை முடித்தேனே அல்லது பிராரத்துவ வினைப்பயனை யறியவல்லனே உம்மையிழந்துபரதவிக்க இப்படியும் முடியவிருந்ததோ ஐயகோ கரும்பினைத்தனுசாகப்படைத்த என்னுசைத்துணைவனே உம்மைப்பறிகொடுத்து அலறுபவளைத் தேற்றிக்காக்கவாராயோ அக்கினி விழியினைப்பெற்ற சிவபிரானை நொந்துமுறையிடுவதற்குக் காரண மேதேனுமுண்டோ அவர் உம்மைத்தேடி வந்திப்படிச் செய்யவில்லையோ தேவரீர்தாமே அவர்யோகத்தைத்தவிர்க்கவந்த காரணத்தினுலிப்படி முண்டதன்றி வேறுமுண்டோ ஓ புஷ்பசாயகா நவரத்தினமயமாகிய கிரீடத்தினைத்தாங்கிப்பொன்னரிமாலைகளினுல் அலங்கரித்திருந்த தேவரீர் முடியினைக் காணேன் சோடசகலைகளைவாய்ந்த சந்திரபிம்பம்போன்ற அழகிய திருமுகமண்டலத்தின் பிரகாசத்தினையுங் காணேன் கார்கால மேகத்தினின்றெழும் மின்னலைப்போல ஜாவலித்திருக்கும் நவமணியினுற் சோதித்த வாகுவலயங்களைப்பூண்டிருந்த புஜத்தினழகினைக்காணேன் முத்துமாலை மோகனமாலை சரப்பளிமுதலிய வற்றை யணிந்துபர்வதத்தைப்போல விசாலமாயிராகின்றமார்பினைக்காணேன் திரிலோகங்களையும் மயக்கிவாட்டும் பெருமையினையுடைய பஞ்சபுஷ்பபாணங்களைக்காணேன் மதுரமாகிய கருப்புவில்லின் பொலிவினைக்காணேன் சகலரையும்பிரமித்து இச்சிக்கச்செய்யும் தேவரீர்அழகொழுகிய திருமேனியுங் காணேன் ஐயையோ பாபியாகியநானினியென்ன செய்ய விருக்கின்றேன் ஒஎன்னுசைக்கணவனே தேவரீரை நம்பியிருந்த அடியாளைத் தனிமையிற் பிரிந்து எவ்விடத்திற்போ யிருக்கின்றீர் இது உம்மையொத்த நீதிபருக்கு அடுப்பதோ ஆதியில் என்னைவிரும்பிச் சகல ஆடம்பரங்களுடனுந் தேவர் ரிஷிகள் பெரியோர்கள் சபைமுன்னிலையில் அக்கினிதேவன் சாட்சியாகவும் ஸ்ரீமகாவிஷ்ணு பிரமதேவனுருத்திரன் முதலியகடவுளர் ஆசிகளைச் சொல்லி நமது மங்கலக் கோலத்தைப் பார்த்து மகிழ்ந்திருக்க அழகிய மங்கிலியத்தை அடியாள் கழுத்திற்றரித்துமங்கலவாத்தியங்கள்முழங்கப்பலசடங்குகளும் முடிந்தபின்பு நாமிருவரும் திவ்வியமலரணையிற்சேர்ந்து கட்டியணைந்து இன்பமுற்றிருக்கின்ற காலையில் அடியாளை முத்தமிட்டு என்னுசைப்பெண்கள் சிகாமணியே யித்தினமுதல் உன்னை நிமைப்போதேனும் பிரியாமல் நேசமாயிருப்பேனென்று வாக்குத்தந்த ஓ மதனராசனே ஓ என்னரசே ஓபுருஷசிகாமணியே அத்தகைய என்னை ஒன்றியாகப் பரதவிக்கும் படியாய் விட்டுவிட்டுத் தேவரீர் சத்தியந் தப்பிப் போய் விடுவதும் நியாயமோ சொல்வீர் எமதின்னல் நீங்கும்படிக்குப்பரமனை வெற்றிகொள்ளப் போகுகவென்று செலுத்திய தேவர்களென்ன வேறநாசமாயினரோ இப்போது நீர் உயிரிழந்துசாம்பலாகியகாலத்தில் தங்கள் வல்லபத்தினுல் வருகவென்று விரைவிலெழுப்ப வல்லவர்களோஇது வல்லாமல் உமது பிதாவாகிய ஜனர்த்தனர் சகலவிதத்திலும் வல்லபமுடையவரென்று யாவருங் கொண்டாடக் கேட்டிருக்கின்றேன் இக்காலத்தில் தேவரீரைப் பறிகொடுத்து நான் ஓ வென்றலறிவாடுகின்றது தெரிந்து சில தேறுதல்சொல்வதாக வரவில்லையே, ஒகோ ஸ்ரீதேவி பூதேவி பாதங்களைப் பிடிக்க மெய்மறந்துநித்திரைசெய்கின்றனரோ அல்லது இக்காலத்தில் இன்னவகையாய் வெந்தபோவாயென்று ஜனனகாலத்தில் உமதுசிரத்தில் பிரமதேவனெழுதியிருப்பனுகில் மேற்குறித்தவர்க ளனைவரையும் வெறுக்கத்தக்கதோ ஓ கண்ணுளா பத்திவிசுவாசத்துடன் சதுர்வேதங்களையும் ஓதியுணர்ந் திருக்கின்ற சதுர்முகப் பிரமனையும் தேவேந்திரனையும் உம்மையீன்றருளிய மகாவிஷ்ணுவையும் ஐம்பொறிகளைவென்று பரமனைவழிபட்டிருக்கின்றமுனி சிரேஷ்டர்களையும் மற்றுந்திரிலோக வாசிகளிற் சகலரையும் உமது ஒப்பற்றகருப்புவில்லினுலும், புஷ்பபாணங்களினுலும் மயக்கிவென்று வெற்றிக்கொடி நாட்டி யிருந்தீரன்றே அப்படிக்கே சந்திர சடாதரக் கடவுளாகிய சிவனையும்நினைந்துலோகநாயகனென்று சற்றும் எண்ணிக்கையில்லாம லிப்படிக்கு நாசமடைந்தனையிதனையோசிக்கு மிடத்திற்கொடியவெப்பமாகிய அக்கினிக்கொதிப்பிற்பட்டதங்கத்தகட்டினையொத்திருக்கின்றதே ஓ, மணவாளா நாமிருவரு மிணைபிரியாமல் குளிர்ந்து பரிமளித்திருக்கும் பனிநீரைத் துருத்தியிற் கொண்டு ஒருவர்மீ தொருவர் தூவி விளையாடியும் திவ்வியமணங்களைவீசாநின்ற மல்லிகை முல்லை யிருவாட்சி பாரிசாதம் மந்தாரை முதலிய புஷ்பவகைகள்நெருங்கியிராநின்ற நந்தனவனங்கள் சோலைகள் இவ்விடங்களிற் கரங்களைக்கோத்துச்சென்று மனதுக்கினிய மலர்களைக்கொய்து சிகைகளிற் சூடியும் பலராலுங் கொண்டாடத்தக்க சிறப்பினைவாய்ந்த புஷ்பசயனத்தின்மீது படுத்து

இளந்தென்றலானது கவரிகளை நிகர்த்து மெல்லஅசைய குங்குமங் கஸ்தூரி புனுகு சவ்வாது முதலியகலவைக்குழம்பைப்பூசிக் கொண்டு நம்மிருவர் உடல்களும்ஒன்றுபடக்கட்டி ஆலிங்கனஞ்செய்து தேகம்புளக மெழத்தக்கதாகச் சரசசல்லாப லீலைகளை முடித்து அவ்விளைப்புநீங்குவதாகக் கிட்டிப்படுத்து நித்திரைசெய்திருந்த இத்தகைய வாழ்வினை யிக்காலத்தில்நினைந்து பார்க்கு மிடத்திற் பொய்மையாகவுங்கனவுகண்டதை யொத்துமிருக்கின்றதே ஓ நாதனே தக்கனானவன் சிவபிரானைத்தனக்கு மருமகனென் றெண்ணித்தான் பெற்ற செல்வப்பெருக்குக்கு மூலமின்னதென் றறியாதவனாய்க் கர்த்தனை யவமதித்து நீக்கிச்செய்த வேள்வியினையும் அத்தலத்தில் வந்திருந்த பிரமன் முதலான தேவர்களையும் வீரபத்திரக்கடவுளைக்கொண்டு வாட்டியழித்த தீனதயாபர மூர்த்திகொண்டிருந்த யோகநிலையை யழித்துவரக் கடவையெனவேண்டி தேவரனைவரும் உம்மைத் தூண்டினார்களே.அவர்கள் பொருட்டு உன்னரிய பிராணனைப் போக்கிச் சாம்பலாய் மாண்டனை நீ யெரிந்ததைப்போலவேசகிக்கப்படாத மிகுந்ததுன்பத்தினாற் பிராணனைப்போக்கி அடியாளும் நீர்சென்ற உலகத்துக்குஇதோ வருகின்றேன்வருகின்றேன் என்னுயிரை யொத்த மணவாளாவென்று இரதிதேவியானவள் புற்பலவாகப்பன்னிப்பன்னிப் புலம்பிவருந்தியிருந்தனள்.

---

## மோனநீங்குபடலம்.

இரதியின்னணம்வருந்திடத்தொன்மைபோலெங்கோமான்
விரதமோனமோடிருத்தலுமுன்னரேவிறந்காமன்
கருதுமுன்பொடிபட்டதுகண்டனர்கலங்குற்றார்
சுருதிகன்றுணர்திசைமுகன்முதலியசுரரெல்லாம்.

---

கேட்டீர்களோ, சவுனகாதிரிஷிகளே, சிவபிரானது நுதல்விழித்தீயினால் மன்மதன் சாம்பலாகியதைக்கண்டுஇரதிதேவியானவள் மேற்குறித்த விதமாக பிரலாபித்திருக்கப் பரமனும் பழையபடியே ஞானயோக நிலையில்நின்றனரெனச் சொன்னேனன்றோ இவைநிற்கக் கீழ்த்திசைவாயிலினிடத்திற்சேர்ந்து பரமனைத் தரிசிக்கக்காலம்பார்த்திருந்த பிரமாதிதேவர்கள் தாமேவிய மன்மதன் சாம்பலாயெரிந்துபோன சங்கதிதெரிந்தவுடன் மனநிலைகலங்கித் தேகம், நெக்குவிட்டுப் புற்றினிடத்திருந்து சிதல்கூட்டங்களெழுமாறுபோல விழிகளினின்றும், நீர்த்துளிகளானவை மேன்மேலும் பெருகவாய்களைத்திறந்தபடியே விசனத்தினால் ஓவெனப்புலம்பித் தேமல் பரந்ததுபோலத் தேகமெங்கும் வியர்வைகளரும்பி நடுக்கமெடுத்து புத்திவானாக விருந்த ஒருபுத்திரன் சடுதியில் மாண்டவிடத்து பிதாவானவன் களைத்துவருந்து மாறுபோலத்துக்கசாகரத்தில் மூழ்கிவாடினவர்களாய் இதனையெண்ணுகின்றனர், நாமெல்லோரும் வேண்டிமன்மதனை ஸ்ரீகாளகண்ட மூர்த்தியாகிய சிவபிரா னிடத்துக்கனுப்பினோம் அவனைக் கோபித்துப்பார்த்துச் சாம்பலாக வெரித்தனர் பின்பாவது குற்றமற்றயோகநிலையினின்றும் நீங்கினவரல்ல, முற்படியே மவுனத்திருக்கின்றனர், ஐயையோ யினிநாம் செய்யவேண்டிய முயற்சிகளேதேனுமுண்டோ என்செய்வோமென்று திகைத்துப்பின்னு மிதனைநினைக்கின்றனர் திரிலோகங்களையும் மெல்லிய மலர்க்கணைகளால்வென்றிருந்த ஜயசாலியாகிய மாரனைநிமைப்போதிற்பார்த்தெரித்தகடவுளை மற்றொருதந்திர உபாயங்களைக் கொண்டு வெல்ல நினைப்பது மிகவும் அரிது மேலும்அறிவின்மையாகும் நமதுதுக்கத்தை நீக்கிக்கொள்ள விரும்புவோமாகில் துரிதமாய் நாமெல்லோரும் ஒருமுகமாகப் போற்றி வேண்டுவதே முக்கியமாகிய காரியமென்று சகலருமொருமித்தவர்களாய் அன்னவாகன மூர்த்தியாகிய பிரமதேவன் முதலியவிண்ணவர்களாத்தியந்தமும் பத்திவிசுவாசத்துடன் திருக்கயிலையங்கிரியினது மத்தியிற் சொர்ன மயமாக விளங்கும் ஆலயக்கீழ்த்திசைக் கோபுரவாயிலின் முன்னங் கூட்டமாய் நின்று எமது பெருமானைக்கல்லென்னும் ஓசையெழ ஒரேமுகமாய்த் துதிப்பதாயினர், ஓ-தீனசரண்ணியக்கடவுளே, இவ்வுலகங்களிலிராநின்றசகல பிராணிகளுக்கும் யாதொருகுறையும் நேராமற் சுகத்திலிருப்பதாகத்திருவுளங்கொண்டு திருப்பாற்கடலினெழுந்து சகலரையும் வாட்டிவருத்தியஆலகாலவிஷத்தினைத்தினையளவாகவேந்தி உண்டு கண்டத்திற் றரித்துஞ் சகலபுவனங்களையும் அலைத்துப் பெருகிய கங்கையினை சலபமாகக் கிரகித்துத் திருச்சடையிற் சூடியும் சர்வசங்காரகாலத்திற் சகலத் தினையுந் தகித்துப் பொடிசெய்யவல்ல வடவாமுகாக்கினியை அடக்கியும் மன்னுயிர்களுக்கு உபத்திர வத்தினைச் செய்து கொடுங் கோல் செலுத்திவாழ்ந்த இராட்சதவீரர்முதலியபாதகரைக்காலமறிந்துவாட்டியும் இவ்விதஉதவிகளைச்செய்து பயப்படாதீர்களென்று அபயாஸ்தங்கொடுத்து இதுபரியந்தம் பாதுகாத்திரட்சித்தீர். அத்தகைய குணக்குன்றன்ன கர்த்தனே, யித்தினம்எங்களைப்போற்றி யிரட்சியாமற்போவீராயிற் புத்திரருக்குப் பிதாவையல்லது வேறுமொரு சார்புண்டோ, குற்றமற்றமனதைக்கொண்டு பத்தியினைச்செலுத்தவல்ல அன்பர்களிடத்திற் றம்மையறியாதுசிலகுறைவுகள் நேருமாயினும் அதைப்பாராட்டாமல்நன்மையாகவே கிருபையுற் றிரட்சிக்குந் தீனதயாபரமூர்த்தியே, தேவரீர் திருவடிகளையே தஞ்சமென்றெண்ணிச் சேர்ந்தனம், ஐயனே, நீர்கடாட்சித்தசெல்வச் செருக்கினை யனுபவித்திறுமாந்து கொடுங்கோல் செலுத்திவருஞ்சூரபதுமனால்வருந்தி மாளவிருக்கின்றனம், தேவரீருக்கடிமைப்பட்டும் அவமிர்த்திவாகவிறந்து போகலாகுமோ, ஓலோகநாயகனே, எங்கள் வருத்தங்களைச் சிறிதும்நினைந்து காவீரோ, ஓ-பரம்பொருளே, ஜகன்மாதாவாகிய வுமையவளைப்பிரிந்து யோகநிலைமைகளைக் காட்டிநின்ற ஒப்பற்ற தமதுசெய்கையானது அடிகளுக்குத் தினைத்துணையாயினும் அக்காலம் மனம்பதைத்து வாடுகின்ற எங்களுக்குப் பலயுகங்களாயின இன்னமும்நீர்பராமுகமாய் யோகத்தினைமுடித்திருப்பீராகில் யாமெல்லரும் பிழைக்கும்மார்க்க மெவ்விதம், மகாவிஷ்ணுமுதலியபிரதமதேவதைகளானவர் மனம்வருந்தித்தவஞ்செய்து அம்முயற்சியினால் தேவரீர்திருவடிகளைப் போற்றியருச்சித்த பத்திமான்மியங்களுக்கிரங்கினாங்களெல்லோரும் பெற்றுவாழுகின்ற செல்வங்களை முறைப்படிக்குக் கட்டளையிட்டீர்.

அதிர்சியமாகவிருந்து சிருஷ்டி திதிசங்காரந்திரோபவம் அனுக்கிரகமென்னும் பஞ்சகிர்த்தியங்களை நடாத்திய ஆதிமூர்த்தியே, தேவரீர்செய்கின்றகிர்த்தியங்களின் மூலத்தினை ஆராயுமிடத்தில் அடியோங்கள் காரணமாகவே காணுகின்றது. ஓ சர்வபூதபரிபூரண தயாநிதியே, மிகவுமிளைத்து வாடுகின்ற சிறியர்களைக் குற்றம்பாராட்டிவிணைகநீக்கிவிடாமல் தினேதினேயாங்கள் முடிக்கின்றபிழைகளைப்போக்கிப் பிழைக்குமார்க்கத்தைக்காட்டியினியாவது காத்திரட்சிக்கவேண்டும் அப்படிக்குச் சித்தமிரங்காவிடின் சர்வசங்காரத்தைப்போல ஏககாலத்தில் அனைவரையும் நாசஞ்செய்யக்கடவீர் தமது திருவுளப்படிக்கு மேற்குறித்த விரண்டிலொன்றினை விரைவில் முடிப்பீர். ஓ-காமதகனனே, பார்ப்பதியாரைத் திருக்கலியாணஞ்செய்து குமரனைத்தந்து எங்கள் துக்கத்தினை போக்கிப் பாதுகாக்கும்படிக்குப் புத்தியினராய்ச் சந்திரவட்டக்குடையினையுடைய மன்மதனைத் தேவரீரிடத்துக்கனுப்பினேம், அவனையுஞ் சாம்பலாக்கிக் கொன்றீர் மேலும் பழையபடிக்கே யோகநிஷ்டையிலிருந்து விட்டீரிதனால் நாங்கள்முன்னையினும் தளர்ச்சிகொண்டுவாடுகின்றனம், இனியாவது கிருபையுற்றுக் கிஞ்சித்திரங்கவேண்டும் ஓ- பரம்பொருளே, பூர்வத்திற் றருகாவனரிஷிகளேவிய புலியானையிவற்றையுரித்துஅவற்றின்தோலைப் போர்த்தருளினீர் தம்மையிகழ்ந்து மகஞ்செய்த தக்கன் வேள்வியினை வீரபத்திரக்கடவுளைக்கொண்டுபொடியாக்கினீர், இவையனைத்தும்பெரிதல்லதீனராகியதேவர் மானிடர் முதலியவரைவாட்டிக்கொடுங்கோலினைச்செலுத்திவரும் பாதகனாகிய சூரபதுமனைக்குலநாசஞ்செய்து அடியோங்களைக்காத்திரட்சிக்கவேண்டுமென்று கூரியகால்களையுடைய வண்டினங்கள் ரீங்காரத்தொனிசெய்து மொய்த்திருக்கும் ஆயிரமிதழ்கள்பொருந்திய தாமரைப்பீடத்தினனான பிரமதேவன் தேவேந்திரன்மற்றவிண்ணவராதியாக அனலிற்பட்டுருகும்அரக்கையொத்துச் சரீரம் நெக்குவிட்டு மனச்சோர்வுடன் முறையிட்டுப் போற்று முன்னிலையில் அத்தேவர் கோரிக்கையினைச்சிவபிரான் திருச்செவியினேற்று அவர்கள்முன்னாளிற்செய்தபாதகங்கள் கழியுநாள் சமீபித்தபடியால் கிருபையுற்று நந்திதேவரைத் திருவுளத்தில் நினைந்தனர், உடனே தமது காவலைநீங்கிப்பரமன் சந்நிதானத்துக்குவந்து மும்முறை வலம்வந்து வணங்கிக் கரங்களைக்கூப்பிநிற்கின்றவர் மீது விழிதனைச்செலுத்தி ஓ- நந்தி, நமது திருமாளிகைப்புறத்திலிருக்கின்ற பிரமாதிதேவர்களை விரைவில் தருவிப்பாயென்றவுடன் முதற்கோபுரவாயிலினிடத்திற்சேர்ந்து ஓ- தேவர்களே, எமதாண்டவன்உங்களைஅழைத்து வரச்சொல்லிக் கட்டளையிட்டனர். விசனமின்றிநடவுமென நந்திதேவர்சொல்லியவாக்கியம் அமுதத்தினுமேலாக பிரமனாதியர் செவிகளிற் புகுந்தவுடன்தேகங்கள் குளிர்ந்து மனம்பூரித்து ஆனந்தக்கூத்தாடிஏகமுகமாய் அரகரவென்னும் ஆரவாரங்களுடன் அமலன்குணாதிசயங்களைக் கொண்டாடி யிங்குமங்கும் உலவியாடிப்பாடி நின்றனர்.

கேட்டீர்களோ- சவுனகாதிரிஷிகளே, அத்தருணத்தில் தேவர்களுடைய களியாடலை யின்னவிதமென்றுசொல்லிமுடியாதாயினும் தெரிந்தவளவையிற் கேட்பீராக. பரமேஸ்வரன் உங்களிடத் தன்புகூர்ந்துவரக் கட்டளையிட்டனரென்று நந்திதேவர் தெரிவித்தவாக்கியமானது எவ்விதமாக விருந்ததெனில் ஒருவன் பிராரத்தவினையின் தொடர்பினால் மிகுந்ததுன்பங்களிற்பட்டு நரகவாதனையிலழுந்தி ஆதரிப்பவரின்றி வருந்துங்காலையிற் றெய்வகடாட்சத்தினால் அவ்வருத்தங்களைப்போக்கி வெளிவந்து களித்தவனையொத்தனர். மேலுந் தாங்கள்செய்யத்தக்கதை அறியாது ஆனந்தவாரியில் மூழ்கிக் களித்தவர்களாய் மெய்மறந்திருக்கின்ற தேவர்களைநந்திதேவர் அதிசீக்கிரத்திற் கொண்டுபோய் எமதையன் சந்நிதானத்தில்விட்டனர் கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே, அந்தநந்திதேவர் தவமிகுதியைப் புகழக்கூடுமோ, இல்லறந் துறவறமென்னு மிரண்டுமார்க்கங்களை அனுஷ்டித்தும் மகத்துக்கள் கிருதார்த்தராதற்பொருட்டுங் கொடியசெய்கையினையுடைய யமதருமராசன் தம்மைநெருங்கவொட்டாமலும் பூமியின்கண் அவதரித்து அரியதவங்களைச்செய்த முயற்சியினால் திருக்கயிலாயத்தைக் காவல்கொண்டு கர்த்தன்கட்டளைகளை நடாத்திவரும் மகிமையினைவாய்ந்த புண்ணியசீலராகிய நந்திதேவரது பின்பற்றிப்போன தாமரை வாசியாகிய பிரமன் இந்திரன் முதலிய விண்ணவர் ஆதியிற் சராசரப் பிரபஞ்சங்களைப்படைத்துக் காத்தழிக்கும் பரம்பொருளை ஏழைபங்காளனைத் தேவதேவோத்தமனாகிய சிவபிரானைக்கண்களாரத் தரிசித்தகாலத்தில் ஜயஜயவெனப்போற்றி வாழ்த்தினவர்களாய் இருகரங்களையுஞ் சிரத்திற் கூப்பிக் கொண்டு மெல்லமெல்லநடந்து நான்குவேதங்களையும்நிருமித்த சந்திரசேகரரது சமீபத்திற்கிட்டி ஆதியில்மகாவிஷ்ணுவானவர் மனோவாக்குக்காயம் ஒருமைப்படவழிபட்டதைப்போல மும்முறை வலம்வந்து ஆனந்தநீர்பெருகிச்சொரியும் விழிகள் விமலன்திருவடிகளிற் பொருந்தச்சேவித்து தங்கள்மனதிற் றோற்றியவாறே வேதவாக்கியங்களினாற் சர்ப்பகச்சினை அரையிற்கட்டி யிருக்கும் பரமனைப்போற்றி நிற்கின்றவர்களினது பத்திமான்மியங்களுக்கிரங்கினவராய்ப் பிரமனாதியதேவர்களே நீங்கள் மனவாட்டத்துடன் வருந்தி முறையிடுவதற்குக் காரணமென்ன சொல்லக்கடவீரெனத் திருவாய்மலர்ந்தபோது அத்தேவர்கள் வாய்களைப் பொத்திக்கொண்டு புராந்தகனே, சூரபதுமனானவன் அளவற்ற யுகங்களாக எங்களை அலைத்து தகாத ஏவல்களைக் கட்டளையிட்டவாறேசெய்து மானபங்கப்பட்டு வாடிவருந்துகின்றனம்ஓகிருபாநிதியே தேவரீரையல்லது அடியோங்களின்னலை விலக்கியிரட்சிப்பதற்கு யாவரிருக்கின்றனர் ஆதலாற் கொடுங்கோல்செலுத்தித் தினைவாட்டுகின்ற சூரனைக் குலநாசஞ்செய்வதாக லோகநாயகனே, திருவுளங்கொண்டு இமையவரையில் அரியதவங்களைச் செய்துவருகின்ற மாயைக்கரசியாகிய பார்ப்பதியாரைத் திருமணஞ்செய்துஒருபுத்திரனைத்தந்து எங்கள்குறைகளைத் தீர்க்கக்கடவீர். ஓ-பத்தவற்சலனே, யிவ்வரத்தினைத் தரவேண்டுமெனச் செந்தாமரையினையொத்த திருவடிகளிற்பணிந்து வேண்டுகின்ற பிரமனாதியரிடத்துக் கிருபையுற்று ஓ-தேவர்களே, கலங்காதீர்கள். உமதுகருத்தின்வண்ணம் முடிக்கக்கடவோம், இன்றுமுதல் விசனமென்பதை மறந்து விடக்கடவீர்கள். உங்கள்நிமித்தியம் இமையவரையினிடத்திற் றவஞ்செய்திருக்கின்ற பார்ப்பதியைத்திருக்கலி

யாணஞ்செய்து உங்கள்துன்பத்தினைப் போக்கக்கடவோம். ஆதலால் நீவிரனைவருந் தத்தமிடங்களைச்சேர்ந்து மனக்கவலையற்று சவுக்கியமாகவிருப்பீரென்று திரிகாலங்களையும் வரையறத்தெரிந்த திரியம்பகன் அனுக்கிரகஞ்செய்யத்தாமரை வாசியாகிய பிரமதேவனும் பொல்வு நீங்கியிருக்கின்ற பொன்னகருக் கதிபனாகிய தேவேந்திரனும் மற்றவிண்ணவருங் களிப்பிலாழ்ந்து சஞ்சலங்களைப்போக்கி மீட்டுங் கர்த்தனைப்பணிந்துபோற்றி விடைபெற்றுமீண்டு சிறந்தபொன்வரையாகிய மகம்மேருவைச்சேர்ந்து சிவபிரானை வழிபட்டிருந்தனர்

இவ்விதமாகத் தேவர்கள் பரமன் அனுக்கிரகம்பெற்று நீங்கியவுடன் ஒருபாரிசத்தில் மனவருத்தத்துடன் காலம்பார்த்திருந்தஇரதிதேவியானவள லோகநாயகனெதிரில்வந்து விழிகளில் நீரைப்பெருக்கி மிகுந்ததுக்கத்துடன்வணங்கித் துதித்துச் சகிக்கப்படாமையால் முறையோமுறையோ தீனதயாபரமூர்த்தியே ஏழைபங்காளனே, சுவர்னமயமாகிய மகரந்தங்களை யிறைக்குந் தாமரைமலர் வாசியாகிய பிரமதேவன் இந்திரன்முதலாகிய தேவர்கள் வஞ்சகப்போதனைக்குள்ளாகிய என்கணவன் தீர்க்கயோசனையைச்செய்யாமல் இவ்விடம்வந்து முன்பின்பாராமல் தகாதகாரியத்தை முடித்த காரணத்தினால் தேவரீர் நுதல்விழிக்கனலிற்பட்டு மாண்டனன் இக்கருமம் அவர் சுதந்திரபுத்தியினால் நேர்ந்ததன்று ஆதலால் அவர்செய்த அபராதத்தினைப்பொறுத்தருளிப்பழையபடியே சீவந்தனுக்கிப் புருஷபிட்சைதரவேண்டுமெனக்கரங்களைநீட்டி யிரக்குமுன்னிலையில் ஒப்பற்ற பரமேஸ்வரன் அவளிடத்திற் கிருபைகூர்ந்து பெண்ணே, நீபுலம்பிவாடவேண்டாங் கடககங்கணங்களை அணிந்திருக்குங் கவுரியினை இமையவரையினிடத்திற் பாணிக்கிரகணஞ்செய்கின்றகாலையில் உனதுமணவாளனாகிய மன்மதனையெழுப்பித்தருவோம். அதுபரியந்தம் நீஅவ்விடஞ்சேர்ந்து வருத்தமின்றி யிருப்பாயென்று ஒப்பற்ற பரமன் திருவுளம்பற்ற இரதிதேவியானவள் அப்போதே தன்கணவனைக் கண்டவளைப்போல மனமகிழ்ந்தவளாய் மகேசன் பாதாரவிந்தங்களிற் றொழுது துதித்து விடைபெற்றுப்போய்ப் பொன்மயமாகிய இமையவரையைச்சேர்ந்து நீருண்டமேகத்தின் வரவுக்கெதிர்பார்த்திருக்கின்றமயிலைப்போல°ஒருபாரிசத்திற் சிவநாதனைத் தியானித்திருந்தனள். இவ்விதமாக இரதியானவள் பரமன்கட்டளையின்படி தனிமையிலிருப்பவள் மனவாட்ட மொழிந்து தேவர்களது துன்பங்களொழிய வுந்தம்மைநோக்கித் தவஞ்செய்திருக்கின்ற பார்ப்பதியாரை விவாகஞ்செய்துதிருக்கயிலாயத்திற் சேர்க்கவும் நீலகண்டமூர்த்தியானவர் திருவுளத்தில் நினைந்து சனகர் சனந்தனர் சனாதனர்சனற்குமாரரென்னும் யோகிகளைப்பார்த்து என்னுசைக்குமாரர்களே, இதுபரியந்தங்காட்டியிருந்த ஞானயோகநிலைமைகள் போதிக்கப்படுவதன்று முதலில் சஞ்சலசித்தத்தையொழிந்து மவுனதீட்சைகொண்டு அந்நிலையிற்பிசகின்றிநின்று பின்பு நமதுதிருவடியினை யிருதயகமலத்தில்நினைப்பதே அஃது முற்றுப்பெறுவதற்குக் காரணமெனத் தெரிவித்து மேலுஞ்சொல்லுவார். கண்ணிமையினை யொப்பவிளங்கும் யோகநிலைமையினைச் சுலபமாகக்குறித்துக்காட்டினோம். இதனைக்கவனித்திருக்கக்கடவீரெனத் தெளிவித்தபோது பிரமகுமாரராகிய சனகாதிகள்திடசித்தராய் மகிழ்ச்சியடைந்துபயபத்திவிசுவாசத்துடன் சிவபிரான்திருவடிகளில் வேதவிதிப்படிக்குப்பணிந்தெழுந்து கடவுளே, தேவரீர்கடாட்சத்தினால்அடியோங்கள் மனவியாபாரங்களைப் போக்கிக் கிருதார்த்த ராயினோமென்று பலவாகப்போற்று முன்னிலையிற் பரமன் அவர்களிடத்திற் கிருபையுற்றவராய்க் குமாரர்களே,நாம்காட்டியவாறே மௌனநிஷ்டையினைமுடித்து மோட்சபதவிக்குப் பாத்திரராய்க் கடையில் நமதிடத்திற்சேர்ந்து சுகாதீதவின்பத்தைப் பெற்றிருப்பீரெனத் திருவாய்மலர்ந்து விடைதந்தனுப்பினர். கேட்டீர்களோ, சவுனகாதிரிஷிகளே,யிந்தஞானயோகமுறைமைகளை மனதொருமித்துப் பத்திவிசுவாசத்துடன் கேள்விப்பட்ட புண்ணியவான்கள் ஆனந்தபரவசராய்ச்சிவசாயுச்சியத்தைப்பெற்று எக்காலத்தும் பரமனைவழிபட்டுக் களித்திருப்பாரெனச்சொல்லியசூதபுராணிகரை நைமிசாரணியவாசிகள்வணங்கித் தேவரீர்கருணையினா லிதுபரியந்தங் கேட்டறியாத புண்ணியசரித்திரங்களையறிந்து கடைத்தேறினோம் தயவுசெய்து சிவநாதன் பின்புநடாத்திய திருவிளையாடல்களையும் முறைப்படியே போதித்தருள வேண்டுமெனப்போற்றினர்.

---

## தவங்காண்படலம்.

தீதறுமுனிமைந்தன் செல்லலுமதுபோழ்தின்
மாதவநெறிநிற்கு மலைமகடனியன்புங்
காதலுமெனைவோர்க்குங் காட்டுதலருளாகிச்
சோதனைபுரிவாரிற்றுண் ணெனவெழலுற்றான்.

---

அப்படி வணங்கிக்கேட்கின்ற சவுனகாதி ரிஷிகளைப்பார்த்துச் சூதபுராணிகர்சொல்லுவார். பிரமகுமாரர்களாகிய சனகாதிகள் சிவபிரானிடத்திற் செலவுபெற்றுப்போயினபின்பு பரமேஸ்வரன் யோகநிலையினைநீங்கினவராய்ப் பர்வதராசபுத்திரியாகிய பார்ப்பதியாருடையசிறந்த புத்திமான்மியங்களையும் அம்மனுக்குத் தமதிடத்திருக்கின்ற அன்பின் திறங்களையும் பலருக்குங்காட்டத்திருவுளங்கொண்டு அவற்றைச் சோதிக்கவேண்டிப் போவதாக வுத்தேசித்து நாமரூபமற்ற நம்பரமன் ஒருவேடத்தினைக் கொள்வதாயினர். அஃதாவது புலியதளைக்கழித்துக் காவிவஸ்திரத்தினை உடுத்துஞ் சடாமண்டலத்தினை மறைத்துச் சிகையினை முடிந்துவிட்டும்சுயஞ்சோதிவடிவினைமாற்றி, தூளிதம்நிறைந்தகோலத்தினைக்கொண்டும் அகண்டாகாரமாகிய தேகத்தினைக்குறுக்கி வாமனப்படிவந்தாங்கியும், முப்புரிநூல்மார்பினிடத் தசையவுங்கமண்டலத்தைக் கரத்திற்கொண்டும், வெய்யில்பனியிவற்றின் வருத்தங்களைப்போக்குவதாகக்குடையினையேந்தியும் கரத்திற்றண்டொன் றூன்றியும்வேதபாரகராகிய ஒருபிராமணக் கிழவனைப்போலத் திருவுருவெடுத்து மெல்லமெல்லநடந்து இமையகிரியினைச்சேர்ந்து அண்டாண்ட புவனசராசரங்களை யீன்றருளிய லோகமாதாவான பார்ப்பதியார் மிகவும் வருந்தித் தவஞ்செய்திருக்கின்ற சாலைக்கருகில் வருவதை வாயில் காத்திருக்கின்ற

கன்னியர்கள்கண்டு இவர் மகத்துவாகவிருக்கின்றதென
நிதானித்தவரா யெதிர்கொண்டுபோய்ப் பத்திவிசுவாச
ங்களுடன் பாதங்களிற் பணிந்தெழுந்திதனைச் சொல்லு
கின்றனர். முதிர்ந்தவயதினைப்பெற்றுத்தள்ளாடியநடை
யுடன்அருமையாக இப்பெரியவர்இப்பர்வதச்சாரலின்க
ண் வருவதெளிதல்ல நாம்செய்ததவமாகுமெனப்பேசிசு
வாமிகள் மிகவும்வருந்தி யித்தலத்துக் கெழுந்தருளிய
காரியம் யாதோதெரியவில்லையேதிருவுளம்பற்றவேண்டு
மெனப்போற்று முன்னிலையில் முதியவர்நகைமுகராய்ஓ
பெண்களே மலையரைய புத்திரி அரியதவங்களைச் செய்
திருப்பதாகக்கேள்விப்பட்டு அந்நிலையினைக்கண்டு களிக்
கும் படியானயெண்ணங்கொண்டு வந்த தெனக்குறித்த
வுடன் மகாபாக்கியமென்று அக்கன்னியரிற்சிலர்பார்ப்ப
தியாரிடத்துக்கோடிதாயே யாரோஒருபெரியவர் உம்மை
க்கண்டு வார்த்தைசொல்ல வேண்டுமென்று கடைவாயி
லினிடத்தில் வந்திருக்கின்றனரென்றபோது நல்லகாரிய
ம் நீங்கள் குறித்தவாறே விருத்தராயிருந்தால் இவ்விட
த்துக் கழைத்து வாருமெனக் கட்டளையிட அவர்கள் கடு
கிச்சென்று விருத்தப் பிராமணனையழைத்துவந்து அம்
மைமுன் விடக்கண்டு மகிழ்ந்தவளாய் இப்பெரியவர்எம
து கர்த்தனாகிய பரமசிவனுக்குமிகவும் உகந்தபத்தராகக்
காணுகின்ற தென்றெண்ணி யெதிர்கொண்டு பத்தியினை
யங்களுடன் பார்ப்பதியார் வணங்கிநின்ற காலையிற்பிரா
ணபதமாகவிருக்கின்ற விஜயையென்னுந்தோழிப்பெண்
ணனவள் பக்கத்திலிருந்த ஒருபீடத்தினைக் கொண்டுவந்
து வைத்து அக்கபட சந்நியாசியை வீற்றிருக்கச் செய்
தாள் அம்மையும் பக்கத்தில், அடங்கிஒடுங்கி நின்றனள்.
அத்தருணத்தில பிராமணசிரேஷ்டராக வெழுந்தருளி
யிருக்கின்ற ஐயனானவர் பார்ப்பதியாரை அதிகபிரியத்து
டன் பார்த்து ஓ பெண்கள் சிகாமணியே சொல்லுதற்கரி
ய உமதுஅழகியவடிவமானதுகெடவுஞ்சொர்னச் சாயை
யைப்பழிக்கும் திருமேனி நசித்துத் தளரவும் அரியதவ
த்தினைச் செய்கின்றனை, ஆதலால் என்னபேற்றினை விரு
ம்பினை உன்கருத்தியாது சொல்லக் கடவையென்று அழி
வற்றசிவநாதன் குறித்தகாலையில் வல்லிசாதக்கொடியினு
ம் மெல்லியவிடையினையுடைய பார்வதி நாணங்கொண்
டு பாரிசத்தில் நிற்கின்ற விஜயையென்னும்பாங்கியினது
முகத்தைப்பார்த்துச் சீக்கிரமாக விவர் கேள்விக்கு உத்
திரவுகொடுமென்று கண்சைகையினாற்காட்டியபோதுஅ
டியாளுககிந்த பணிவிடையினைக் கட்டளையிட்டனளெ
ன்னுங் களிப்பினை யடைந்தவளாய் ஓ- பிராமணோத்தம
ரே கேட்பீராக.

இவ்வுலகங்களில் அடங்கிய பிராணிகளெவற்றினும்பி
ராணபதமாக வீற்றிருந்து நடிப்பிக்குந் திரிநேத்திரதா
ரியாகிய சிவபிரான் தம்மைக்கடிமணமுடித்துத் தமதிட
ப்பாகத்திற் கொண்டாளுங் கருத்தி னளாய் எமதிறைவி
யானவ ளித்தனைய அரியதவங்களைச்செய்துவருகின்றன
ளென்று சிலதியானவள் சொல்லக்கேட்ட தேவதேவோ
த்தமனான பரமன் நகைத்துப் பேசுகின்றனர், ஓ பாங்கி
யே கேட்பாயாக கங்காதர மூர்த்தியாகிய பரமசிவம்இவ
ளுக்கெளிதிற் கிடைக்கப்பட்டவனோ இஃதன்றியுஞ் ச
கலபுவனங்களையும் படைக்கும்பிரமதேவனும் மன்னுயி
ரனைத்தையுங்காக்கும் பெருமை யினையுடைய மகாவிஷ்
ணுவுந் தேடிக்காணப்படாத சுயஞ்சோதிசொரூபியாகிய
கர்த்தன் இவள்செய்யாநின்ற சுலபமாகிய தவத்துக்கிரங்
கி வந்து காட்சி கொடுப்பரோ அல்லதுஒருகாலம் வரினு
ம் வேண்டிய பேற்றினைத் தருவதன்றியிவளையொருபொ
ருளாக நினைந்து மனமகிழ்ச்சியுடன் பாணிக்கிரகணந்தா
ன்செய்வரோ ஆதலால் உங்களிறைவியாகிய உமையவள்
அத்தேவதேவன் பெருமைகளை எவ்வளவும் அறியாதவ
ளாதலாற் றனக்குக்கிடையாத பொருளினைவிரும்பினள்,
கடைப்பிடியான வார்த்தை யொன்றினைச் சொல்லுவோ
ம் அன்னபானதிகள் முதலிய சவுக்கியங்களை விரும்பாம
ல் வருந்தி யிவள்தவஞ்செய்வதினாற் கிடைக்கும்பிரயோ
சன மொன்றுமில்லை இக்காலத்திற் பெறுதற்கரிய பொ
ருளானது உங்கள் நாயகிக்கு மாத்திரம் இலேசிற் கிடை
க்குமென்று நினைக்கின்றனையே, பலகாலம் வெய்யில் ம
ழைகுளிர் பனியிவற்றின் கொடுமையினால்வாடித்தனது
தேககாந்தியும் வலியும் மழுங்கிப்போயினள், ஆதலால்உ
மையவளுக்கினி உறுதியாகிய தேதெனில் விரைவில் இ
த்தவநிலைநீங்கிச் சவுக்கியமாகவிருப்பதே பலன் இவளிட
த்தில்நமக்குண்டாகிய விரக்கத்தினாலிதனைக்குறித்துக்கா
ட்டினோமென்று சிவபிரான்சொல்லியவிசேஷங்களைக்கே
ட்ட இமயவல்லியானவள் மனம்பொருமலிந்தப்பிரா
மண சந்நியாசியானவர் பெரியவரென்றும் எமதுகர்த்
தனுக் கன்பரென்றும் நினைந்தோம் முதியராகவந்த விவ
ர் இத்தகைய கொடிய வார்த்தைகளைப் பேசுவரென்றுஎ
வ்வளவும் நினையாமற் போனேனென்றுகோபங்கொண்டு
மனநொந்து பெருமூச்செறிந்தவளாய் நாணத்தைப்போ
க்கி நேரிலிதனைச் சொல்லத்தொடங்கினள், ஓ- விருத்த
ரேயிவ்வாக்கியத்தைக் கேட்பீராக எக்காலத்துஞ் சலன
மில்லாமல் நித்தியமாகவிளங்கும் பரமேஸ்வரனிரங்கி வ
ந்து என்மனவிருப்பத்தினை நிறைவேற்றுமற் போவரா
யினும் நான்உத்தேசித் திருக்கின்ற தவநிலையினைவிடுவே
னோ இன்னமும் வெகுகாலங் கடினமாகிய விரதங்களை
ச்செய்து பிராணனைவிட விருக்கின்றேன் வயதுஅதிகப்ப
ட்டுக்கிழவனாகிய காரணத்தினால் புத்திமயங்கி யித்தகை
ய தகாதவார்த்தைகளைச்சொன்னீர் உமக்கென்னபித்தந்
தொடர்ந்ததோ வென்று மன்னுயிரனைத்தினையும் படை
த்த லோகமாதாவாகிய பார்ப்பதியார்சீறிச்சொல்ல கபட
ப்பிராமணர் மற்றொரு தந்திரத்தைநினைந்து ஓ பெண்க
ள்சிகாமணியே நீ மிகவும் அறியாதவ ளாதலாற் காரியப
க்குவங்களைத்தெரிந்துநடந்துகொள்ளவறியாய்நீ பெரிதா
யெண்ணி ஆசைகொண்டிருக்கும் முக்கண்ணராகிய பித்
தன்வளப்பங்களையுங் குணங்கள் முதலியவற்றையும், ந
ன்றாக விசாரணைசெய்தவளுமல்ல கேள்விப்பட்டதுமில்
லைபோற் காணுகின்றது அவனுடைய ஆருசிகளிற் சில
வற்றினைத் தெரிவிப்பேன் கேட்பாயாக.

உலகநடத்தை தெரிந்தவனல்ல உடுப்பதோபுலித்தோ
ல் ஏறிநடாத்தும் வாகனமோ எருது அணியப்பட்ட ஆ
பரணங்களோவிஷமுடையசர்ப்பமும் எலும்புந்தலையும்
பன்றிக் கொம்புமாம் அமுதுண்ணும் பாத்திரமோ
ஓடு புசிப்பதோ கொடியவிஷம் வாசஞ் செய்வதோ
சுடலை யிதனையே யிடமாகக்கொண்டு தாண்டவமாடியிரு
ப்பன் அணிவதோ அபலமாகிய வெள்ளெருக்குஅமுகு

கொன்றை வில்வம் நொச்சி முதலிய பலவண்டு பூசு
ஞ்சாந்தமோ வெண்ணீறு கரங்களினேந்துவதோ சூலம்
மான்மழு உடுக்கைதி சேனைகளோ கோரரூபங்களையுடை
ய பூதங்கள் இன்னான்இன்னமரபென் றறிவதற்கு முதற்
றாய் தந்தையரோ கிடையாது மேலும் நாமரூபமில்லாதவ
ன் அவனுக்கித்தகைய பலசிறப்புகளுண்டு அவைஅனைத்
தும் உன்பட்சத்திற்சேரும்படியான கருத்தினைக்கொண்
டோ வெகுநாளாய் அரியதவங்களைச்செய்து வாடுகின்ற
னை பழமையாகச் சகலவளங்களையும் பெற்றிருக்கின்ற ப
ர்வதராச புத்திரியாகிய உன்னைத்தவளுக்கிங்க சுலப பி
ரயோசனத்தை யிச்சிப்பதழகோவென்று திரிபுரங்களை
நகைத்தெரித்த சிவபிரான் சொல்லியதைத் தவப்பேற்றி
னையுடைய இமயகிரி புத்திரியாகிய பார்ப்பதியார் கேட்
டமாத்திரத்தில் திருக்கரங்களினாலிரு செவிகளையும் மூ
டிக்கொண்டு சிவநாமங்களைச்செபித்து வருந்தினவளாய்
அதிககோபத்துடன் துன்பத்திலாழ்ந் திதனைச்சொல்வ
தாயினள், ஓ கிழப்பிராமணனே, கேட்பாயாக அழிவுப
டாத எமதுகர்த்தனிடத்தில் உன்மனதிற்சிறிதேனும் ப
த்திவயிராக்கியங்களின் திறமானது காணப்படவில்லை
லோகநாயகன் திருக்கோலத்தினை நீ கொண்டிருப்பதை
யோசிக்குமிடத்திற் காட்டினிடத்திருக்கின்ற பட்சிசாலங்
களினைவஞ்சித்துப் பிடித்துக்கொள்ளும் பொருட்டு வே
டனானவன் சிரத்திற் றழைகளைக் கட்டிக்கொண்டுபோகு
ம்விதமாக விருக்கின்றது இஃதன்றியும் பூர்வத்திற்றக்க
னானவன் சற்றுமிரக்கமின்றிச் சகலசெல்வங்களையுந்தன
க்குக் கடாட்சித்த கர்த்தனை உன்னைப்போலவேஉதாசின
ம்பேசிய காரணங்களையும் அக்கொடுமையினால் அவன்ப
ட்டகேட்டையும் இதுபரியந்தம்நீகேட்டறிந்ததில்லையோ
இக்காலத்தில் என்முனம் ஜகதீசுரனை மதியாமற்பேசினை
குற்றமற்ற வேதாகமபுராணமுதலிய சாஸ்திரங்களைச்சற்
றும்ஓதி அவற்றின்நிச்சயங்களைத் தெளிந்தவனல்லைபோ
ற்காணுகின்றது மேலுஞ் சிலகாரணங்களைச் சொல்லக்
கேட்பாயர்க சாமம்-ருக்கு-எசுர்-அதர்வணமென்னும்நா
ன்குவேதங்களையுங்கற்று அவற்றிற்குறிக்கின்றஉண்மை
களைத்தெளிந்தும் அம்மார்க்கங்களை தமக்காதரவாகக்
கொண்டு நடந்துகொள்ளாதவர்களாய்க் கொடியமார்க்கங்
களையே மேம்பாடாகச் சிந்தித்துச் சோமசூரியாக்கினி
யை நேத்திரங்களாகப்படைத்த சிவநாதனைப் பழிகூறி
மோட்சசாம்பிராச்சியத்தை எக்காலத்தினும் பெறாமல்
அலைந்து பாதகராகத் திரிவீரென்றுமுனம் நந்திதேவர்
ததீசிமுதலிய ரிஷிகளாற்பிராமணர்பெற்றிருக்கின்ற சா
பசம்பந்தமானது அறிவீனனாகிய உன்னையும்பற்றி மய
க்காமற்போவதோ இவையன்றியும் பிராமணர்முதலிய
எவ்வுயிர்களுக்குந் தந்தையாகநின்று அவற்றினைப்படை
த்தும் அவ்வுயிர்கள் செய்யுந்தொழில்களுக்குத் துணைக்
காரணமாகவிளங்கி முற்றுப்பெறக் கடாட்சித்துஞ் சர்வ
காருண்ணியனாக ஜகமனைத்தையும் நடிப்பித்தும் இவ்வி
தமகிமையினையுடைய தேவனல்லது தங்களுக்கு அசை
வின்மையாகச் சமஸ்தமுந் தமதுநாடகமாக வகித்திருக்
கின்ற மகாதேவனைக் கடைப்பிடியாகக்கொண்டு வாழவ
றியாமல் அஞ்ஞானத்தினால் அவர்பத்திமையைநீங்கி யா
தொருபிரயோசனமுமற்ற இதரதேவதைகளைத்தொழு
து நல்லொழுக்கங்களை நீங்கியவர்களைப்போலவும். மேற்
குறித்தபடிக்குத் தக்கன்மகத்தில் பங்கப்பட்டபிராமண
ர்மாறுபாட்டினைப்போலவுஞ் செய்தனை ஆதலால் நானு
ன்னை வெறுக்கவேண்டியதில்லை யென்றுபேசி மேலுஞ்
சொல்லுகின்றனள்.

பிராமணரிற் சிலர்சிறந்த வேதாகமங்களிற் சொல்
லுகின்றகிரமப்படிக்குச் சிவவேடத்தினைப்பவுத்திரமாக
த்தரித்துக்கொண்டு அதற்குரியபத்திவயிராக்கியங்களிற்
பிசகின்றி எமதுகர்த்தனிடத்திற்பிரீதியுடன் பணிவிடை
களைச்செய்துவரத்தக்க புண்ணியசீலருமுண்டு ஓவிருத்
தனே நீயும் அவர்களைப்போலவே காஷாயமுதலியகோ
லத்தைப் பூண்டிருந்தும் நித்தியனாகிய சிவநாதனையிப்ப
டிக்கிகழ்ந்து பேசுவையாயின் இராக்கதர் அவுணர்முத
லிய கொடியவர்களிலும் உன்னையொத்த கடினசித்தமு
டையவர்களிருக்கமாட்டார்கள் விருப்புவெறுப்புகளற்ற
அமலனாகிய பரமனையிப்போது, நீநிந்தித்துப்பேசிய த
னைத்தையும் பகைஉறவென்னும் வேற்றுமையின்றித்த
மதுபுத்திரராகிய மன்னுயிர்களையெல்லாம், ஏகபட்சமா
யிரட்சிக்கும் பிரியமுள்ளகர்த்தனாதலால் அவ்வாறேபுக
ழ்ச்சியாகவே கொள்வரல்லது திருவுளத்தில் மாறுபடா
மல் பரமேசுரர் குணாதிசயங்களின் பெருமைதெரியாத
வர்கள் பிரபஞ்சங்களில் யாவருமிரார்வேதபாரகனாபி
ரமாதிதேவர்கள்தொண்டினைச்செய்துவாயாரப்போற்று
கின்றவனைப்போலவே மற்றையரிடத்துங் கிருபாநோக்
கம்வைத்துப் பாதுகாக்கவல்ல சர்வக்ஞர் ஓபிராமணப்
பதிதனே நீயிகழ்ந்துபேசியவைகளையும்நன்மையாகவே
கொண்டு கடாட்சிப்பது அத்தேவோத்தமனுக்குரியகட
னாகும் இவைபுதிதாகப் பேசுகின்றதல்ல பழமையாகிய
வேதாகமங்களில் முறையிடுகின்றனநன்மார்க்கங்களைஅ
னுஷ்டித்துச்செய்யவல்ல குணசம்பன்னராகிய மகத்து
க்களானவர் இக்காரணங்களறிந்து, அவற்றிற்குமாறுபா
டில்லாமல் கடைப்பிடியாகக்கொள்வர் எமதுகர்த்தனைஎ
வ்வளவேனும் மதியாது புறங்கூறவல்ல கடினசித்தத்தி
னைப்படைத்த உன்னைத்தவனுக்கு இத்தகையரகசியங்
களை வெளியிடலாகாது அதனால் மிகுத்தபாகம் நேரும்
வேதவிதிப்படிக்குப்போய் வேடத்தைத்தரித்துவந்தமு
தியனே யிவ்விடத்தில்நில்லாமல் அப்புறம்போய்விடக்க
டவையென்று முப்பத்திரண்டு அறங்களையும்வளர்த்து
மன்னுயிரனைத்தையும் பாதுகாத்தருளிய பார்ப்பதியார்
பேசியகாலத்திற்கபடப்பிராமணர் அம்மையைநோக்கி ந
கைத்தவராய்ஓ-பெண்கள்அமுதமே ஏன்அவசரப்படுகி
ன்றனை உனதுமங்களகரமாகியகுணங்களைக்கேள்வியாய்
அதிகமையல்கொண்டுவந்த என்மனக்கருத்தையும் அத
ன்காரணங்களையும் கேட்டறியாதுபுறம்பிற்போபோவெ
ன்று சொல்லுவதென்னைவெகுதூரத்தில்நின்றும் மிகவு
ம்வருந்தியிவ்விடஞ்சேர்ந்தது யாதுகாரணமெனக் கேட்
பையாயின் வேதசடங்கின்படிபலரும்அறிய உன்னைத்தி
ருக்கலியாணஞ் செய்துகொண்டு போவதற்காகும் இப்பி
ரயோசனந்தெரியாமுன்னந் துரத்துகின்றாயென்று மா
யக்கோலம்பூண்டுவந்த சிவபிரான்சொல்லியதை எமத
ன்னையாகிய பார்ப்பதியார் கேட்டமாத்திரத்தில்திருச்செ
விகளை யிரண்டுகரங்களைக் கொண்டுமூடி சகிக்கப்படா
மையால் மனம்வருந்திச் சரீரந்துடிக்கத் துக்கித்தவளா
யிரக்கமற்ற இந்தக்கிழப்பிராமணன் இத்தலத்தினைக்க
டந்து செல்பவனாகக்காணவில்லை ஆதலால் நாமேபோய்
விடுவதுதகுதியென்றெண்ணி செம்பஞ்சூட்டித்தாமரை

மனினும் மிருதுவாகிய திருவடிகள் நோக அதற்கடுத்த ஒருமறைவிடத்தைநோக்கி ஜகதீஸ்வரி செல்லுகின்றபோது பரமசிவமானவர் மேகசஞ்சாரமருமற் தளிர்ந்திருக்கும் இமையகிரியினிடத்திற் றவஞ்செய்திருந்த உமையவளது மனவுறுதியையும் பத்திவயிராக்கியநிலைமைகளையும் திருவுளத்திற்கொண்டு மிகுந்தகிருபையுண்டாய்த் தாம்கொண்டகோலத்தினைமாற்றிச்சிவகணங்கள் உருத்திரகோடியர் முதலாகச்சூழ்ந்துபோற்றரிஷபவாகனரூடராய் ஆகாயத்தினிடத்திற் காட்சிதந்தனர்

இவ்வாறு பிறப்பிறப்பிலியாகிய தன்கணவன்வானத்தினிடத்திற் றோற்றியதைஉலகமாதாவாகிய பராபனைதரிசித்து தேகம்நடுக்குற்று நாணந்தலைக்கொள்ளப் பத்திவிசுவாசங்களுடன் பலதரம் பூமியில்விழுந்து சேவித்துக் கரங்களைச்சிரத்திற் கூப்பினவளாய்ப் பரமன்பெருமைகளை நினைந்துநினைந்து போற்றிசெய்து பேரறிவினுல் ஆராய்ந்து வருந்தியுங்காணப்படாத புராதனக்கடவுளே தேவரீருடையமாயையின் திருவிளையாடல்களையறியாதுஅறி வீனளாகிய நாயினேன் சுலபமாகவெண்ணியிகழ்ந்துபேசிய குறைபாடுகளைப் பொறுத்தருளவேண்டும் இறைவனேயென்று மிகவும் வருந்திநிற்கப் பரமேசுரர் களித்தவராய் அரியதவங்களைச்செய் திளைத்திருக்கின்ற இமையராசபுத்திரியே, கேட்பாயாக—நம்மிடத்துமுதிர்ந்த பத்தியினுல் நீமுன்னம்பேசிய வாசகங்களனைத்தையும் தோத்திரங்களாகக்கொண்டனங் குற்றங்களேதேனு மிருப்பினன்றோ, பொறுமைகேட்டுக் கொள்ளவேண்டும் உன்னிடத்திற்குறைபாடென்பதொன்றுமில்லை, ஆதலாற் சரீரமிளைத்து வருந்த இனிஅரியதவவிரதங்களைச்செய்து வாடவேண்டுவதில்லை. உன்னைத் திருமணஞ் செய்வதாக நமது பரிவாரங்களுடன் நாளையதினம் வருவோமென்று திருவாய்மலர்ந்து சர்வேசுரனுகிய பரமசிவன்தமது பத்தர்களுடன் மறைந்தனர். அக்காலத்திற் பார்வதி தன்மனதுநிறைந்த களிப்பைக்கொண்டு நித்தியமங்கள ஸ்வரூபியாகிய கணவனை நினைந்துநினைந்து அவரது மங்களகுணங்களை ஜெபித்துபலதரம்போற்றி யிருந்தனள், அக்காலையில் இக்காட்சிகளனைத்தையுந் தரிசித்து மகிழ்ந்து மெய்மறந்து நின்றதோழியரிற்சிலர்இந்தச்சந்தோஷவார்த்தையினைப்பர்வதராஜனுக்குத் தெரிவிப்பதாக ஓடித் தங்களிறைவனைக்கண்டுசேவித்து வாய்குழற மனப்பூரிப்புடனிதனைச்சொல்லுகின்றனர். சுவாமி. யித்தினம் தேவதேவனுகிய பரமசிவன்மாறுருக்கொண்டு எழுந்தருளி சிலதிருவிளையாடல்களைக் காட்டிக்கடையில் நாளையதினம்வந்து திருமணமுடிப்பதாக நமதன்னைக்கு வாக்குக்கொடுத்து மறைந்தனனென்றுசவிஸ்தாரமாகச்சொல்லிய விசேஷங்களைக் கேட்டமாத்தில் ஆனந்தபரவசத்தனுய் அதுபரியந்தந் தனதுபுத்திரியானவள் தவஞ்செய்து வருந்துவதற்காகவிருந்த மனவருத்தத்தைப்போக்கித் தன்தேவியுடன் துரிதமாய் தவச்சாலைக்குப்போய் பெண்ணைத்தழுவி முத்தமிட்டுத்தாயே, உன்மனக்கருத்தின்வண்ணம் பரமன்காட்சிதந்தனனெனக் கேள்விப்பட்டு மகிழ்ந்தனம், இனிஅரண்மனைக்குப்போவோமென்று அழைத்துவந்து சேர்த்துக்களித்திருந்தனர். கேட்டீர்களோ, சவுனகாதிமுனிவர்களே,அத்தருணத்தில் இமையராசனும் அவன்மனைவியாகியமேனையும் எம தன்னை யாகிய பார்ப்பதியாருள் கொண்டமகிழ்ச்சியின் மிகுதியையிவ்வளவென்று என்போல்களாற்சொல்லி முடிவதோ, இவைநிற்க, இனிப்பரமசிவம்திருக்கயிலைக் கெழுந்தருளியபின்புசெய்த திருவிளையாடல்களையுஞ் சொல்லுவோம்.

—∽෴∽—

அண்ணலங் தருளிச்செய்கையாசனுக்குளாத்தலோடு
முண்ணிகழுபர்ச்சிதீங்கியொலை தன்னில்லினேடு [ன்
தண்ணின னுமைமயகொண்டு நலநசொடனைகரத்துய்த்தா
கண்ணுநலி றைவனக்கட்செய்தனசழறலுற்றேன்.

---

## மணம்பேசுபடலம்.

பொருடருமலைக்கொடி புரிபுநோன்புகண
டருடனைநல்கிய வாதிநாயகன்
தெருட்ருசயிலையிற் சேர்வுற்றேழ்வகை
யிருடிகடங்களை யிதயத்துன்னினுன்.

---

சூதபுராணிகர் தமதாசிரியன் திருவடிகளைச்சிந்தித்துப்போற்றினவராய் நைமிசாரணிய வாசிகளைப்பார்த்து மேல்நடந்த சரித்திரங்களைச் சொல்வதாயினர் ஆதுலர்க்குச்சாலை, ஓதுவார்க்குணவு, அறுசமையத்தார்க்குண்டி, பசுவுக்குவாயுறை, சிறைச்சோறு, ஐயம், தின்பண்டநல்கல் அறவைச்சோறு, மகப்பெறுவித்தல், மகவுவளர்த்தல், மகப்பால்வார்த்தல், அறவைபிணஞ்சுடுதல், அறுவைத்துரியம், சுண்ணம், நோய்மருந்து, வண்ணுன், நாவிதன், கண்ணுடி, காதோலை கண்மருந்து, தலைக்கெண்ணெய், பெண்போகம், பிறர்துயர்காத்தல், தண்ணீர்ப்பந்தல், மடம், தடம், சோலை ஆவுரிஞ்சுதரி, விலங்கிற்குணவு, ஏறுவிடுதல், விலைகொடுத்துயிர்காத்தல், சன்னிகாதானம், இவ்வகைத்தாகவிருக்கின்ற முப்பத்திரண்டறங்களையும் வளர்த்தபார்ப்பதியார் தவநிலைமைச்சோதித்துப் பரிவாய்அனுக்கிரகஞ்செய்தெழுந்தருளிய முதற்காரணக்கடவுளாகியபரமேசுரர்பிரகாசம்பொருந்தியவெள்ளியங்கிரியினைச் சேர்ந்தவுடன் அகஸ்தியர்முதலிய சத்தரிஷிகளையும்வர நினைந்தனர். அவர்கள் பரமன்கட்டளையினைத் தெரிந்தவர்களாய் மனநடுக்குற்று சரீரம்விபர்க்க அதிவேகங்கொண்டுசென்று திருக்கயிலையினைச்சேர்ந்து நந்திதேவர் அனுமதிபெற்று ஆலயத்திற்போய் சபாமண்டபத்திற் சிங்காதனத்தினிடத்து வீற்றிருக்கின்ற சிவபிரானைத்தரிசித்து வணங்கிப்போற்றி கர்த்தனே, மகாவிஷ்ணுபிரமதேவன்முதலிய சிறந்ததேவர்கள்தேவரீர்கடாட்சித்தபணிவிடைகளைச் சிரசாகவகித்துமுடிக்கக்காத்திருக்க அடியோங்களை ஒருபொருளாகமதித்து திருவுளத்தில்நினைந்தருளினீர். நாங்கள்செய்ததவமானது அவர்களினும்பெரிதோ ஈசனே, எமதிறையவனுகிய நீர்அடியவரைவரநினைந்தகாரணத்தினுற் கிருதார்த்தராயினேம், நாயினேங்கள் இதுபரியந்தந்தேடியகொடியபாதகங்களனைத்தினையும்போக்கினேமினியெங்களுக்கொருகுறைவும்நேரவறியாது ஒருமுகுர்த்தமாகநின்றுசிருஷ்டிதிதிசங்காரந்திரோபவம்அனுக்கிரகமென்னும்பஞ்ச கிர்த்தியங்களை

யும்முடிக்கவல்லகடவுளே எமதுதீயவினைகளைப்போக்கி
ஆள்வதாகக் கிருபைபுற்றுச் சிந்தித்தருளினீர். ஆதலால்
அடியோங்கள் செய்பத்தக்கதொண்டினைவிரைவிற் கட்ட
ளையிடவேண்டுமென்றுமிகுந்த தவமகிமையினையுடை ய
சத்தரிஷிகளும் விண்ணப்பஞ்செய்ய. நிர்மலனாகிய நீலக
ண்டன் அத்தவத்தர்போற்றியவாசகங்களைத் திருச்செவி
யினேற்று நகைமுகராய் அவர்கள்மீதுதிருக்கண்சாத்திநீ
ங்கள் எனக்காக இமைய பர்வத ராசன் பக்கற் சென்று
அவன்கன்னிகையாகியபார்ப்பதியையித்தினமே தாராத
த்தஞ்செய்து திருமணமுடிக்கும் படியாகப்பேசி முடித்
துக்கொண்டு விரைவில் வரக்கடவீரென்று திருவுளம் ப
ற்றக்கேட்டுச் சத்தரிஷிகளுஞ் சிரசாகவகித்துவணங்கிவி
டைபெற்றுப்போய் இமையவரைக் கருகில் வருவதை ம
லையரசன் கேள்விப்பட்டுத் தன்தேவியுட னெதிர்கொண்
டு வணங்கி அதிக பிரிதி பத்தியுடன் வழிபாடுகளைச்செ
ய்து துதித்தவனுய்க்கரங்களைக்கூப்பிநின்றுசுவாமிகளே
தேவரீர்கள் திவ்வியசரணாரவிந்தங்களானவை யிவ்விடத்
தை மிதிக்கப்பெற்றமையால் இமையமானது பொன்மய
மாகிய மகம்மேருவினும் பவுத்திரமாய் முதன்மையாகப்
பேசும் பிரயோசனத்தையும் பெற்றது அடியேன் முன்
னோர்களுடன் செய்தபாதகங்கள் முற்றினுங்கடந்து கிரு
தார்த்தராயினேம்ஆதலாற் சுவாமிகள் திருவடிகள் நோ
வதாக நாயினேனைக்கடைத்தேற்ற நினைந்து வந்தகாரியத்
தைச் சொல்லி யிரட்சிக்க வேண்டுமென்று வாய்புதைத்
துக்கேட்க, அரியதவங்களைச் செய்திருக்கின்ற சத்தரிஷி
களும் அவனிடத்திற்பரிவாய் அரசனே, எமது வரவின்
செய்தியைக்கேட்பாயாக.

உன்முன்னோர்களும் நீயும் வருந்திநோற்ற தவப்பே
ற்றினல் உனக்குப்புத்திரியாக வெழுந்தருளியிருக்கின்ற
லோகமாதாவானபார்ப்பதியாரைத் திருக்கலியாணஞ்செ
ய்வதாக சகல சீவகோடிகளிடத்தும் பிராண பூதமாகவி
ளங்கி நடிப்பித்தருளுஞ் சர்வசங்கார மூர்த்தியானவர் தி
ருவுளத்தெண்ணி அதற்குவேண்டுஞ் சந்தி உன்னுடன்
பேசிவருவதாக அடியோங்களைச் செலுத்தினர் இதற்கு
ச் சம்மதமென்னவென்று கேட்டமாத்திரத்தில் வேறொ
ரு உரையுமாடாமற் கர்த்தன் கட்டளையின்படிக்குச் சம்
மதஞ் சுபஞ்சுபமென்று களித்துப்பேசி மேலுஞ்சொல்
லுவான், சராசரப் பிரபஞ்ச மனைத்தையுமீன்றருளிய க
ன்னிகையாகிய உமையவளை வேதவிதிப்படிக்குக் கலியா
ணச்சடங்கினை முடித்துத் தத்தஞ்செய்துகொடுப்பதுமா
த்திரமன்று அடியேன் வர்க்கத்தவரோடுகடைத்தேறும்
பொருட்டு நாயினேனையும் அடிமையாகக்கொடுக்க விரு
க்கின்றனனெனச் சொன்னகாலத்தில்ஒருபுறத்தில்நின்று
கொண்டிருந்த தன் மனைவியாகிய மேனை யம்மனைவ
ள் இச்செய்தி தெரிந்து சுவாமிகளே, எனக்கொரு கேள்
வியுண்டு அதனல் மனஞ் சந்தேகப்படுகின்றது அஃதெ
ன்னையெனில் தாமரைமலர் வாசியாகிய பிரம குமாரனு
ன தக்கன் அபராதத்தை மன்னியாமல் அவன்சிரத்தை
க் கண்டித் தெறிந்தாரென்று சொல்லுவார்கள், அக்கார
ணத்தைநினைந்துபார்க்குமிடத்தில் மனம்நடுங்குகின்றது,
ஆதலால் எங்கள் குலதெய்வமாகிய திருமகளை அவருக்கு
விவாகஞ்செய்துகொடுப்பதெவ்விதம், இதனை தீர்க்கயோ
சனைசெய்து பார்க்க வேண்டுமென்று வணங்கிச்சொல்லி
ய மேனையை சப்தரிஷிகளுங் கிருபை யாகப்பார்த்துச்
சொல்லுவார்கள் ஓ- பெண்களரசியே, நீ ஒன்றுக்கும்அ
ஞ்சவேண்டுவ தில்லை, சுமங்கிலியாய் வாழக்கடவை, ஒப்
புவமையற்ற பரமேசுரன் செய்கைகளை நன்றாக ஆராய்
ந்து தெரிந்தவளல்லை, ஆகையால் மயங்கிப்பேசுகின்றனை
தக்கனானவன் தனக்கு மகதயிஸ்வரியங்களையுங் காட்சி
த்த மகேஸ்வரனைமறந்து பவுத்திரமாகிய யாகத்தினைமு
டிக்க யத்தனித்தகாலத்தில் வேதங்களுங் குடிலையுந் ததீ
சிமகாரிஷி முதலாயினர், ஓ- தக்கப்பிரசாபாலகனே, யா
க கர்த்தாவாய்க்காரணபூதமாய் அம்மையப்பனுய்த்,தின
சரண்ணியனுய்த். தேவதேவோத்தமனுய், சகலமங்களக
லியாண குணங்களுக்குக் காரணனுயிராநின்ற சற்வேசுர
னை மதியாதுநீக்கி மகத்தினைத்தொடங்குவதுஉன்போலி
களுக்கழகன்று பரமனைவணங்கித் தருவித்துக்கொண்டு
நிறைவேற்றக்கடவையென்று பலவாக உண்மைகளையெ
டுத்துக்காட்டியுங் கேளாமலிகழ்ந்து தகாதனபேசிய பா
தகத்தினல் அவன் சிரத்தினைப்போக்கியும் பகதவற்சல
னுதலால் மீட்டும் ஆட்டுத்தலையினைத் தந்து ஆட்கொண்
டனர்.

இஃதன்றியுந் தம்மைச் சரணடைந்தவர்களுக்குஅனு
க்கிரகஞ்செய் திரட்சிப்பதும் தம்மை மதியாதவர்களைத்
தண்டிப்பதுந் தகுதியாதலால் அவ்வவர்களுக்கேற்ற நிய
திகளைக் கட்டளையிடுவது பரமனுக் குரிய செயல்களாகு
ம், ஓ- அம்மனீ, தெளிந்த மேலையோர் இந்தக்காரணகா
ரியங்களை உண்மையாகவே பாதுகாப்பர், அவ்வாறேநீயு
ம் மனஉறுதிகொண்டுநடந்துக்கொள்ளக்கடவை, விருதா
வாகிய யெண்ணங்களை நினையாதேயென்றுதிரிகாலங்களை
யுங் கணித்தறிந்த சத்தரிஷிகளு மித்திரங்களை விரித்து
க்காட்டியபோது மேனைக்கு மனத் தெளிவுண்டாய் மே
லுங்குற்றமற்ற பர்வதராசன் தன்புத்திரியைத் தாச் சம்
மதித்திருக்கின்றனனெனத் தெரிந்தும் நம திறைவன் உ
டன் பாடுகளைத் தெளியா முன்னம் சிலமறுதலை சொன்
னேமென்று பயந்து மன வாட்டத்துடன் மேனையான
வள் அத்தவத்தர் பாதாரவிந்தங்களிற் பணிந்தெழுந்துசு
வாமிகளே, பெண்களறிவானது எத்தன்மைத்தெனினும்
பேதமைப் பாலதன்றோ, என்கணவனதுதிருவுளச்செய
லினை அணுப்பிரமாணமும் மறுக்கவறியேன், புண்ணிய
முனிச்சிரோஷ்டர்களே அடியாள் புத்தியின்றிப் பேசியவ
சனத்தினைக்குற்றமாகநினையாது பொறுத்தருளவேண்டு
மெனவணங்கிச் சொல்லிய மேனயிடத்தில் அளவற்ற
அனுக்கிரகஞ்செய்து வாழ்த்த, இஃது மலையரையன்தெ
ரிந்து தவக்குன்றங்களன்ன முனிபுங்கவர்களே, இவ்வா
க்கியங்களை எவ்வளவும் நினைக்கவேண்டுவ தில்லை திரும
ணத்தை முடித்துப்போக எமதையனை வரும்படிக்குச்
சொல்லவேண்டுமென்று மேகங்கள் கவிந்து குளிர்ந்திரு
க்கும் மலையிறைவன் பேசியதைக்கேட்டு சத்தரிஷிகளும்
மனமகிழ்ந்தவர்களாய் அவ்வாறே செய்யக்கடவோம், நீங்
கள் சகசீவிகளாயிருப்பீரென்று வாழ்த்தி அப்பதியினை
நீங்கிப்போய்த் தனக்கொப் பொன்றுமில்லாத பெருமை
யினையுடைய திருக் கயிலாயத்தினைச்சேர்ந்து அதன்மீது
விளங்கும் நகரத்துக்குள்ளே பிரவேசித்து நந்திதேவரை
வணங்கி விடைபெற்று ஆலயத்திற்போய் சபாமண்டப
த்திற் சிங்காதனத்தின்மீது வீற்றிருக்கின்ற சிவபிரானைத்
தரிசித்து அளவற்றகளிப்புடன் கர்த்தன் திருவடிகளிற்
பணிந்து போற்றி எமதிறைவனே, நாங்கள்போய் வந்த

செய்தியினைக்கேட்டருள்கவென்று சவிஸ்தாரமாகச்சொல்வ தாயினா, தேவரீர் கட்டளையின் படிக்கு சுபகாரியத்தைக் குறித்துப் பேசும்போது இமையபர்வதராசன் ஆனந்தவாரியில் மூழ்கினவனாய்த் தன்குமாரத்தியை உமக்குத்தர விசைந்தானென்று அவ்விடத்தில் நடந்தசெய்திகளை விபரமாக விண்ணப்பஞ் செய்தனர், அவரிடத்திற் கிருபைகூர்ந்து விண்ணகத்தைச் சுற்றிவருகின்ற சத்தரிஷிகளே, உங்கள்தலைமையினைச் செலுத்துவதாகப்போய் வரக்கடவீரெனத் திருவாய் மலர்ந்த உடன் பரமன் பாத கமலங்களிற் பணிந்து வாழ்த்தி விடைபெற்றுத்தமது மண்டலத்திற் சேர்ந்திருந்தனர், கேட்டீர்களோ, சவுனகாதிரிஷிகளே, யிவ்வாறு எமது தவக்குறைகள்முற்றுப்பெற்றதென்னுங் களிப்புடன் சத்தரிஷிகளுந் தத்தமது பதவிகளிற் போயினரெனச் சொல்லினமன்றே இவைநிற்க இனி மலையரையன் தன்பதியிற் செய்யத்தொடங்கிய சம்பிரமங்களையும் உங்களுக்குத் தெரிவதாகச் சொல்லுவோம்.

எங்குறைதீர்ந்ததென்றெழுதவத்தருந்
தங்கடம்பதத்திடைத்தடையின்றெய்தினர்
இங்கிதுநின்றிடவிமையமேலிறை
யங்கினிச்செய்தவாறியக்கூறுவாம்.

## வரைபுனை படலம்.

கண்ணுதலுமைதவங்கண்டுபின்னையா
மண்ணவர்புகழ்வகைமணத்துமென்றதும்
விண்ணெழுமுனிவரின்வினவிவிட்டது
மெண்ணினன்மகிழ்ந்தனனிமையத்தண்ணலே,

ஓ- தவத்தரோ, மலையரையனானவன் திரிநேத்திர தாரியாகிய சிவபிரானெழுந்தருளி உமையவள் தவநிலையினைச் சோதித்துக் களித்தவராய் உன்னைநாம் பூலோகத்தார் மகிழ்ந்து கொண்டாடும்படிக்கு சகலசம்பிரமங்களுடனுந் திருக்கலியாணஞ்செய்யவருவோமென்று திருவுளம்பற்றியதையும் அவ்வாறே வானத்திலுலவுகின்ற சத்தரிஷிகளைக்கொண்டு தன் பெண்ணைக்கொடுக்கும்படிக்குக் கேட்டனுப்பியதையும் நினைந்துநினைந்து நமது பாக்கியமே பாக்கியமென்று மகிழ் சிறந்தவனாய்க் கணக்கிறந்த சிவராசிகளிற்கலந்து அவற்றின் உணர்வுகளிற் கூட்டுறவாக நின்று நடிப்பிக்கவல்ல பரமசிவத்துக்கு ஒப்புவமையற்ற தனது புத்திரியை திருமணஞ்செய்து கொடுப்பதைக் குறித்து யோசித்தவனாய்த் தேவர்க்கள் பணிவிடைகளை முடித்து வருபவனாகிய மயனை மனதில்நினைத்தனன், அவன் அரசன் நினைவறிந்து அதிவேக மாகவந்து இமையவரைக் கதிபனைக் கண்டு பணிந்து கரங்களைக் கூப்பினவனாய் அரசனே, என்ன நிமித்தம் நினைந்தீர் நான்செய்ய வேண்டுந் தொழில்யாது அதனைக் கட்டளையிடவேண்டுமென்றுகேட்க, சொல்லுகின்றான், என்னை ஆண்டிரட்சிக்கவல்ல பரமசிவத்துக்கு அருமைபாகப்பெற்ற தாயாகிய உமையவளைத்திருக்கலியாணஞ்செய்து தரவிருப்பதால் இம்மலைதனைச் சூழ்வர விருக்கின்ற நகரத்தினை பொன்னுலகத்தினு மேம்பாடாக அலங்கரிக்கக் கடவையென்று பர்வதராசன் சொல்லியமங்களவார்த்தையினைச்செவிகள் குளிரக் கேட்டவுடன் உள்ளம்பூரித்து ஆனந்தபரவசத்தனாய் அந்நகரத்தைச் சிங்காரிக்க யத்தனித்து வானத்தினை அளாவ உயர்ந்திருக்கின்ற தாருக்கள் கால்களாகவுஞ் செழுமையாக வளர்ந்து சாய்ந் தசைந்திருக்கின்றமூங்கில்கள்பரப்புக்கழிகளாகவும் மேகங்கள் கவிந்திருப்பது ஓலைகளினால் மூடியதைப்போலவும் அழகுபெற்று பந்தலுக்கொப்பாகவிளங்க·மத்தியிற்றோற்றுநின்ற இமயகிரியின்மீது பர்வதங்களுக்கிணையாகத் தோற்றநின்ற கோபுரவாயில்கள் மாடமாளிகை மண்டபங்கள் யானைக்கொட்டாரங்கள் தேர்ச்சாலைகள்குதிரைக்கூடங்கள்சேவகரிருக்கத்தக்க மாளிகைகள்தேன்களைச்சொரிந்துபலநிறங்களைப்பெற்ற புஷ்பவகைகளினாற் சோடித்த பந்தல்கள் முதலிய அலங்காரங்களை விசாலமாய் நீண்டிருக்கும் வீதிகடோறுஞ் சோடித்து அளவற்ற துகிற்கொடிகளும் வானத்தினை அளாவிப் படபடவென் றசையுந் துசபடாங்களும், ஆகாயத்தை மூடவல்ல சித்திரப் பந்தல்களும்,விதம் விதமாக நிருமித்து அவற்றினுட்புறத்தில் பற்பலசிங்காரங்கள் தோற்றச் செய்து மத்தியிற் கவரிகள், மயிற்பிஞ்சங்கள்,புஷ்பச்சரங்கள்,தண்டமாலைகள்,முதலியவை தொங்க விட்டு குதிரை முகத்தைப்போலப் பருத்துக்குவிந்திருக்குங் குலைகளையுடையவாழையையும்பவளக்கோர்வையினை நிகர்த்த காய்கள் பொருந்திய கமுகமரங்களையும் எங்கும் அணிபடநாட்டிபரிமளமிகுந்தபுஷ்பக்கொத்துகளினாற்சோடித்ததோரணங்களை வானத்தினை மூடநிரைத்துநிதிக்கிறைவனாகிய குபேரன்வாழுஞ் செல்வவளம்பெற்ற அளகையுந்தேவர்கள் போற்றுநின்ற இந்திரன்பதியாகிய பொன்னாடும் நாணும்படிக்குஅளவற்றவீதிகளைத்திருத்தி அவற்றிற்குவேண்டும் அலங்காரங்களை வரிசைபடச் செய் தமைத்த பின்பு இடப்பாகத்தை யினிமேல் உமையவளுக்குத் தரவிருக்கின்ற பரமேசுரருடன் வருபவராகிய சிவகணங்கள் உருத்திரகூட்டங்கள் முப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள்கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர்பன்னகர் முதலாகவிருக்க யோக்கியமாகிய உப்பரிகைகளும் அவர்களுக்கு வேண்டும் உபகரணங்கள் நிறைந்தபண்டாரங்களும் கிரமப்படிக்குப் படைத்தவனாய் அவற்றின்மத்தியிற் பதினாயிரயோசனை விஸ்தீரணமுள்ளதாய் பொன்மயமாக விளங்கும் மதிலை அரசன் மனைக்கொரு புறத்தில் எழுப்பிநாற்புறங்களினும் பலநிலைகளைப்பெற்ற கோபுரவாயில்களைத் தூக்கி அச்சூழலின்மத்தியில் மங்களகரமாகிய திருமணச்சடங்கினைச் செய்யச் சுவர்ணமயமாகிய கலியாண மண்டபத்தைச் சோடித்தபின்பு அம்மணச் சாலையினிடமுழுவதுஞ் சந்தனக் குழம்பையுங் கஸ்தூரியையும், புனுகுக்குழம்பிற்சேர்த்து மெழுகிட்டு அழகிய கோலங்களையுமிட்டு பரிமளமிகுத்தபுஷ்ப வகைகளையிறைத்துமுடிந்தவுடன் திருக்கல்யாண மகோச்சவத்தினைத் தரிசிக்கவருந் தேவர்கள் வீற்றிருக்கத் தகுதியாகிய சொர்ன பீடங்களை வரிசையாகப்பரப்பி முடிந்தவுடன் இந்திரதனுசுகாளமேக மிவற்றிற்குச்சமானமாக வெண்டாமரைசெந்தாமரை நீலோற்பலஞ் சண்பகமுதலிய பற்பல திவ்விய பரிமளமிகுத்த புஷ்பவகைகளினால் அளவற்றதிண்ணைகளைப் பிரமனும் நாணும்படிக்குச் செய்தமைத்த பின்பு

அழகினுக்கழகினைச் சேர்த்ததைப்போல நிலைக்கண்ணா
டிகள். பலநிறப்புஷ்பத்தினாற் சோடித்த தண்டைமாலை
கள் கவரிமயிர்ப் பிச்சங்கள். பலவண்ணவஸ்திரத்தொங்க
ல்கள் செக்கடயிட்ட நவரத்தினமாலைகள் முதலாகவே
ண்டும் வேண்டுமிடங்களிற் றகுதியாகத்தூக்கிப் பரமசி
வத்துடன் வருந்தேவகூட்டங்கள் விழிகளைவிருந்துகொ
ள்வதாக அலங்கரித்தார்கள்.

பின்புதேவர்கள் முனிவர்கள் இலக்குமிக்கொப்பா
கிய வடிவுள்ள அரம்பையர்கள் இவர்கள்கோலமாகப்பா
வைகளைச் சோடித்து உயிருள்ளவைகளைப்போலஅசை
வுபெறச்செய்து சிலகவரிவீசவுஞ் சிலபுஷ்பமாலைகளை
யேந்தவுஞ் சிலவீணைவாசிக்கவுஞ் செய்தவனாய் மேலு
ஞ் சர்வாபரண பூஷிதைகளாய்ச்சுந்தரமுள்ள பெண்பா
வைகளிற் சிலமத்தளத்தினைமுழக்கவுஞ் சிலதாளம்போ
டவுஞ் சிலசுதிபிடிக்கவுஞ் சிலகின்னரிவாசிக்கவும் இவற்
றின்முன்னணியிற் சிலசுந்தரமிகுத்த பாவைகள் பரத
நாட்டியங்களைச் செய்யவும் அதைக்கண்டதேவர்கள் அர
ம்பையர்முதலாயினர் பிரமித்து ஆசைப்பெருக்கினாழ்ந்
து இவர்களுமொரு சித்திரங்களைப்போலப்பார்த்து நிற்
பதாகவும் தன்வல்லபத்தினாற் படைத்தவனாய் மேலும்
பசியசிறகினையுடைய கிள்ளைக்கூட்டங்கள் அழகியதோ
கையையுடைய மயிலினங்கள் சக்கிரவாகப்பட்சிகள் பு
றாக்கள் மதயானைகள் பஞ்சலட்சணமுள்ள புரவிகள் ப
லபடைகளைப்பரித்த வீரர்கள் தேவர்களின் பற்பலவின
ங்கள் இவற்றைமணிவகைகளினாற் சித்திரங்களாகச்சோ
டித்து கல்யாணமண்டபச் சுவர்முற்றினும் ஸ்தாபித்தி
வ்விதவினோதங்களில் யாதுங்குறைபாடில்லாமல் முற்றி
யசாலையின்மத்தியில் வேதவிதிப்படிக்குத் திருமணச்ச
டங்குகளைச் செய்வதற்கு ஓமகுண்டமும் அதைச்சூழ்வ
ரவிருக்கத்தக்க வேதிகை விதங்களையும் குற்றமற்றமண்
டலவகைகளையும் வரிசைப்படவமைத்து வேள்வியினை
முடித்தற்குவேண்டுஞ் சமித்துமுதலிய பண்டங்களைதா
ராளமாகத் தத்தமிடங்களிற்சேர்த்து எண்வகைப்பாத்
திரவிதங்களையும் நிர்மித்து வைத்தபின்பு சூரியகாந்தஞ்
சந்திரகாந்தம் பளிங்குசொர்னம் அழகியபவளம் ஆணி
முத்து பிரகாசமிகுத்த வயிரம்கிரணங்களைப் பலதிசை
யினும்வீசும் சிரோரத்தினம்முதலியவற்றால் எண்ணிற
ந்த மண்டலங்களைச் சுற்றினும்படைத்துக் கருங்குவளை
மலர்ந்திராநின்ற பலசயங்கள் செங்குவளைமலர்நிறைந்த
பலஓடைகள் செந்தாமரை வெண்டாமரை மலிந்துவிள
ங்கும் பலதடாகங்கள் திருக்குளங்களிவற்றினைநியமித்து
ப் பச்சைமரகதம் பளிங்குவச்சிரம் குற்றமற்ற வயிரம்
பொன்முதலிய செல்வங்களைக்கொண்டு பற்பலசித்திரச்
சாலைகளைப்படைத்துப்பலவகைமலர்கள்மலர்ந்திருக்கும்
பொய்கைகளையுந் தேவேந்திரனும் ஒருகாலங்காணப்பெ
றுவானாயின் திகைத்துநோக்கி யிருக்கும்படியாகஉண்டு
பண்ணி கற்பகத்தருக்கள் சந்தனவிருட்சங்கள் அகில்ம
ரங்கள் வாழை-கமுகு பலா-மா-புன்னைமுதலிய விருட்
சங்களைப் பற்பலவிரத்தினவிதங்களினாற் றளிர்-பூ-காய்
கனிகளைப்பெற்று வேண்டினவருக்குஅவற்றின்பலன்க
ளைத் தருவதாகவும் படைத்தனன்.

கேட்டீர்களோ-சவுனகாதிரிஷிகளே, மேற்குறித்த
வளங்களை மிகுதியாகத் தேவகம்மியன் மனதினால் நிரு
மித்துவருந்தி நிறைவேற்றியவுடன் பொன்மயமாகிய
இமையகிரிக்கரசனைக்கண்டு தேவரீர்கட்டளையின்படிக்கு
ச்சகலமும்படைத்தாயிற்றென்று அறிக்கையிட்டபோது
அவற்றினை முற்றுங்கண்டு அதிகசந்தோஷம்பெற்றவனா
யித் தேவதச்சனைக்கொண்டாடி யினிதாமசஞ்செய்யலா
காதென்றெண்ணி வேகமுள்ள பலகோடி தூதரைத்தரு
வித்துமகாவிஷ்ணு பிரமதேவன் தேவேந்திரன் முப்பத்
துமுக்கோடி தேவர்க்கள் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிக
ளாதியானவர்கள் தத்தந்தேவிமாருடன் தயைசெய்துவ
ந்து பார்ப்பதிதேவியினது திருக்கல்யாண மகோச்சவ
சம்பிரமத்தினைத்தரிசித்துப்போகும்படிக்கு நாம்சொன்
னதாகத் தெரிவித்து வருவீரெனக்கட்டளையிட்டுப் பல
திசையினுந் தூண்டினான் அவர்களும் மனோவேகத்தி
னும், முந்திச் சென்று வைகுந்தம் பிரமலோகம்பொ
ன்னுலகமுதலாகிய பதங்களிற்சேர்ந்து திருமணச்செய்
தியினை விண்ணப்பஞ்செய்யக் கேட்டவுடன் மகாவிஷ்
ணுமுதலிய தேவர்களும் நாரதாதிமகாரிஷிகளும் மேரு
வில்லினாற் றிரிபுரங்களைவென்ற சிவபெருமான் பெரு
மைகளைப்புகழ்ந்து அவருடன் வருவோம் இச்செய்தி
யை உங்களரசனுக்குச் சொல்வீரென்று அவர்களை அனு
ப்பிவிட்டனர், இந்தச்சந்தோஷச்செய்தியினைத் தெரிந்த
வுடன் வீரத்தன்மையினையுடைய சிங்கவாகனத்தின்மீ
து துர்க்கையம்மனும் பத்திரகாளியும் ஆரோகணித்து
தம்மைப் போற்றியிருக்கின்ற வீரமாதர்கள்சூழ்ந்துவர
ச் செல்லும்போது எதிர்ப்பட்ட யமுனைமுதலிய சத்தந
திகளுடன் கலந்துபோய் இமயகிரியைச்சேர்ந்து லோக
மாதாவாகிய பார்ப்பதிதேவியைத் தரிசித்து வணங்கிப்
போற்றிப் பக்கங்களிலிருந்தனர் பொற்றாமரையில் வீற்
றிருக்கும் மகாலட்சுமியும் பிரமன்நாவிலிருக்கும் சரஸ்
வதியும் திரிலோகசாம்பிராச்சியத்துக்கிறைவியாகிய இந்
திராணியும் பாசபந்தங்களைக்கடந்த ரிஷிசிரேஷ்டர்பத்தி
னிமார்களும் தேவகன்னியர்களும் தமதுநாயகர்கள் அ
னுமதிபெற்று விமானங்கள்முதலிய வாகனங்களி லேறி
க்கொண்டுபோய்ப் பர்வதராசன் பதியினைச்சேர்ந்து அ
ங்ககாஞ்செய்த புண்ணியபலத்தினால் எழுந்தருளியிருக்
கின்ற உமையவளைக்கண்டு விசுவாசத்துடன் நமஸ்கரித்
துவாழ்த்திலோகநாயகியைத் திருக்கலியாணத்துக்கிசை
வாக அலங்கரிக்க யத்தனித்தவர்களாய் ஸ்ரீமகாலட்சுமி
சரஸ்வதிமுதலியோர்பார்வதிதரித்திருந்தமரவுரி முதலி
தவவேடத்தைமாற்றிச்சுகந்தபரிமள மிகுந்ததயிலத்தை
ச்சடைபற்றியிருக்கின்ற கூந்தலிற்றிமிர்ந்து மெல்லவில
க்கிச் சிக்கறுத்துக் கோதிக்கலவைச்சாந்துகளினால்அழு
க்கினைத்துலக்கிச் சத்தநதிகளின் சுத்தோதகங்களினால்
முழுக்காட்டி அகில்சந்தனத் தூமங்களினாலீரத்தைப்பு
லர்த்திவாரிமுடித்து விலையுயர்ந்தபட்டாடைதரித்துகொ
ண்டையினிடத்தில் பரிமளமிகுத்த பாரிசாதமலர்களைச்
சூட்டிச் சுட்டிமுதலிய அணிகளினால் அலங்கரித்துத்தி
லதப் பொட்டுமிட்டு முத்துமாலை சரப்பளியிவற்றை தி
ருக்கழுத்திற்றரித்துக் கடககங்கணம் வயிரமோதிரமாதி
யாகக் கரங்களிற்றரித்துத் தண்டைசதங்கைபாடகம் இ
வற்றைப்பாதங்களிற்பூட்டிச்செம்பஞ்சுக்குழம்பு மூட்டி
க் கண்ணாடிகாட்டித் திருஷ்டிசுற்றி யிப்படிக்குஅழகுக்
கிருப்பிடமாகியபரமேஸ்வரியினது திவ்வியமங்களசொ
ரூபமாகிய தேகமெங்கணுங்குறைவற அம்மைக்கூழிய
ஞ்செய்யுந் தோழிப்பெண்களினு மேலாகஅலங்கரித்து

முற்றியபின்பு ஸ்ரீமகாலட்சுமிமுதலிய தேவகன்னிகையர்கள் பார்ப்பதியாளைச்சூழ்ந்து மங்கலவாழ்த்துகளைப் பாடிக்கொண்டிருந்தார்கள்.

இதன்மத்தியில் ஆயிரத்தெட்டுமாற்றுடைய தங்கமயமாய் ஆயிரஞ்சிகரங்களையுடைய மகம்மேருவும் பாற்கடலைக் கடைந்தமந்தரகிரியும் மற்றகுலாசலங்களும்மற்றுமிராநின்ற பந்துவர்க்கங்களும் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் ஆதிசேஷன்முதலாகிய நாகராசாக்களும் அஷ்டகசங்களும் மற்றுமிராநின்ற சகலருந்தங்கள்தேவிமாருடன் அதிகசந்தோஷசித்தராய் அம்மன்திருக்கலியாண சம்பிரமத்தினைத் தரிசித்துப்போவதற்காகவந்துசேர்ந்தனர், அப்பொழுதுமலையரையன் தன்னைச்சூழ்ந்திருக்கின்ற சுற்றத்தாருடன் பிரயாணப்பட்டுச்சிறந்தவெள்ளியங்கிரியினைச்சேர்ந்து நந்திதேவர் அனுமதிபெற்று ஆலயத்திற்போய்ச் சபாமண்டபத்தில் உயிருக்குயிராக நின்றருட்டுகின்ற பரமசிவன்சிங்காதனத்தின்வீற்றிருப்பதைத்தரிசித்து மனக்களிப்புடன் சமீபித்துமும்முறைவலம்வந்து திவ்விய சரணாரவிந்தங்களிற்றாழ்ந்து கரங்களைக்கூப்பினவனாய் இதனைவிண்ணப்பஞ் செய்வதாயினன், கர்த்தனே ஆதியிற்சராசரப் பிரபஞ்சங்களனைத்தையும் படைத்தருளிய லோகமாதாவினிடத்தில் அதிகமையல்கொண்டு திருக்கலியாணஞ்செய்யக் குறித்தமையால் சோதிடசாஸ்திரிகளை விசாரிக்குமிடத்தில்அவர்கள்பரிசோதித்து இன்றையதினம் பங்குனிஉத்தரமாகும் பெண்ணுக்கும் பிள்ளைக்கும் பொருததநிமித்தங்கள்முற்றுஞ், சுபகரமாகவேயிருக்கின்றன மணஞ்செய்வதற்கு யுக்தமானகாலம் இதைவிடவேறில்லை யெனக்குறித்ததால் கிருபைசெய்து அக்காரியத்தினை முடித்தற்பொருட்டுத் தேவரீர் இமையவனாயினிடத்துக்கு எழுந்தருளவேண்டுமெனப்போற்றிநிற்க காளகண்டமூர்த்தியாகிய பரமசிவன் மலையிறைவன்மீது திருக்கண்சாத்தி உன்கருத்தின்வண்ணங் கணக்கிறந்த நமதுபூதப்படைகள் கணதிபதிகளுடன் இத்தினமே இமையத்துக்குவருகின்றனம், நீமுந்திப்போய் சர்வமும்சாக்கிரதைசெய்து வைப்பையெனத் திருவுளம்பற்றியகாலத்தில் திருவடிகளில் வணங்கிப்போற்றி விடைபெற்றுத்திரும்பி அதிசீக்கிரத்தில் தன்நகரத்தைச்சேர்ந்து மணப்பந்தலில் வேண்டும்வஸ்துக்களைச் சேகரித்துக்கொண்டிருந்தனன்

---

## கணங்கள்செல்படலம்.

அந்தவேலையிற்கயிலையிலெம்பிரானருளா
னந்திதேவரைவிளித் துநம்மணச்செயனுட
மூந்தசிருடையுருத்திரர்கணங்கண்மான்முதலோ
ரிந்திராதியர்யாரையுந்தருதியென்றிசைத்தான்.

---

நைமிசாரணிய வாசிகளானவர்கள்சூதபுராணிகளைவணங்கி மலையிறைவன் திருக்கயிலையைநீங்கியபின்பு சிவபிரான்செய்த திருவிளையாடல்களையும் போதித்துக் கிருதார்த்தராக்க வேண்டுமெனக்கேட்கஅவர்களிடத்துப்பரிவாய் அச்சரித்திரங்களைச் சொல்லத்தொடங்கினர், இமவானைப்போக்கிய பின்பு பரமசிவன் கிருபையுற்று நந்திதேவரையழைப்பித்து நமது திருக்கலியாண சம்பிரமங்களைத் தரிசித்துப்போவதாகமுதன்மைபெற்றஉருத்திரர் கணதிபதிகள் மகாவிஷ்ணு பிரமதேவன் தேவராசன் முதலிய விண்ணவர் அனைவரையும் வரவழைப்பையெனக் கட்டளையிட்டனர், அவ்வாறே நந்திதேவர் விரைவில்முடிக்கவெண்ணி அவர்களனைவரையும்வரநினைந்தனர் அக்குறிப்பறிந்து மன்னுயிருக்கிரங்கி எமதுகர்த்தன் திருமணமுடிக்க யத்தனித்த அருட்டிறத்தைப்போற்றிமனவிருப்புடன் ஆனந்தபரவசத்தராய்க் கர்த்தனெழுந்தருளிய திருக்கயிலைக்கு வருகின்றவர்களின் பெருமைகளில் தெரிந்தவளாயிற் சொல்லக்கேட்பீராக, அக்கினிச்சுவாலையாக விளங்கும் நுதல்விழியினைப்பெற்ற வடவாமுகாக்கினியையொத்துத் தேகமுற்றுந் தீவீசுவதாகவிருக்கின்ற விடபகேதுமுதலிய ஆயிரங்கோடிஉருத்திரர் அனல்வடிவாகிய சூலங்களைக்கரங்களிற்றாங்கிச் சூழ்ந்துபோற்றக்காலத்தீயென்னும் பெயராயுடைய உருத்திரத்தலைவனும், சூறாவளிக்காற்றும் வடவையும் வீறடங்கிமழுங்கவுஞ் சீவராசிகளனைத்தும் அலைந்துவாடவும்சுவாசங்களைவிடும் வலியினையுடைய பூதவீரர்கள் நூற்றுநாற்பதுகோடியர் நெருங்கித்துதிக்க மழுவாயுதத்தினைவலக்கரத்திற்றாங்குங் கூர்மாண்டதேவரும். நெற்றிவிழியினையும் பற்பலநிறத்தினையுடைய பருத்ததேகத்தினையும் வீரத்தன்மையையும்பெற்ற கோடாகோடிஉருத்திரர் கூட்டத்துடன் பாதலத்தில்வாசஞ்செய்கின்ற ஆடகேசரென்னும் உருத்திரப்பிரமுகரு மகோரரூபத்தைப்பெற்று வலியிலுயர்ந்தவர்களாயிராநின்ற பூதகணங்கள் ஆயிரகோடியர்சூழப் பிரமதேவனாதியர் பயந்தொளிக்கச் சரபப்பட்சியாகவந்த வீரபத்திரரென்னுந் திருநாமம்படைத்த உருத்திரத்தலைவரும், ஊழிகாலத்தில் மகாவிஷ்ணு வானவர் திருவயிற்றிற்கொண்டு பாதுகாக்கும் உலகங்களிலிராநின்ற பிராணிகளை ஒருவிரலினேந்தித்தாங்கவல்ல குறியதேகத்தினையுடைய பூதப்படைகள் நூறுகோடியர்சூழவர பூர்வத்திற் பரமசிவமும் மகாவிஷ்ணுவுங்கூடியபோது அவதரித்தசெண்டுடைய காத்தினராகிய அரிஹரபுத்திரதேவரும், சிருஷ்டிகர்த்தனாகியபிரமதேவன் மன்னுயிரைப் படைக்கவறியாது மயங்கியகாலத்தில்திரிநேத்திரதாரியாகிய சிவபிரான் கட்டளையினால் பிரமனுதலினிடமாகத்தோற்றி அவன்படைப்புக்கு உதவிசெய்துபேரறிவையும் அனுக்கிரகத்துக்காத்த பதினொருவகை உருத்திரரும், திருக்கயிலாயத்துக்குவந்து சேர்ந்தனர். இத்தகையபெருமையினைப்பெற்ற உருத்திரரையன்றியும் மற்றபுவனங்களில்நிலைமைகொண்டு பாதுகாத்துப்பரமசிவத்தினிடத்திற் பிரிதிபத்தியுடையவராய் வலிபெற்றஉருத்திரவீரரும், பரமன்கட்டளையின்படிக்கு நடந்துகொள்ளவல்ல சகரர்களால் தோண்டப்பட்ட சத்தசாகரங்களையும் பாதத்தினின்றெழுந்த தூளிபடலத்தினைற்றூர்க்கவல்ல வலிபெற்ற எண்ணூறுகோடி பூதப்படைகள் நெருங்கிப்போற்றச் சடாமண்டலதாரிகளாகிய பவரென்னுந் திருநாமத்தினைப்படைத்த வீராதிவீரராகிய அஷ்டமூர்த்திகளும், இவர்களன்றியும் விருஷபகர்ச்சனையினும் உருத்தசொல்லைப்பெற்று எமதுகர்த்தனாகிய சிவபிரான் விழிகளினிடத்திற்றூற்றிய நீர்த்துளியின் மூலமாக உண்டாகிய உருத்திராட்சத்துடன் தூளிதத்

தினையணியும் பேரறிவாளராகிய நூறுகோடி பூதப் படைகளுடன் நொடிப்போதில் உலகங்களை நாசஞ் செய்யவல்ல வல்லமைசால்யாகிய குண்டோதரப்பிரமுகரும் அண்டங்களனைத்தினையும் அவற்றுட்டங்கிய சர்வபிராணிகளையும் நாசஞ்செய்து மீட்டும் பழையபடியே நிலைபெறச் செய்யவல்லமகத்துவமுடைய பூதவீரர் இருநூறுகோடியர் நெருங்கிப்போற்றக் கண்டகானனும் பிஞகியும் வந்தனர், இவர்களன்றியும் ஆயிரமுகங்களு மிரண்டாயிரங் கரங்களும் விளங்கப் பொன்மயமாய் வானத்தினையளாவ நிற்கும் மகம்மேருவுக்குச் சமதையாகிய பருத்ததேகத்தினைப் படைத்த நூற்றைம்பதுகோடிவீரப்படைகள் சூழ்ந்துவர பானுகம்பனென்னும் வீராதி வீரனும், தமது பிரதாபங்களையே முக்கியமாக வெண்ணிய தேவர்கள் சிரங்களையும் அவரதுகொண்டை மயிர்களையும் பலபடைகளையும் பறித்து அவற்றினைச் சின்னமாகத் தரித்திராநின்ற ஜயசால்களாகிய அளவற்றகோடி பூதப் படைகள் தொடர்ந்து செல்ல சங்கு கர்னனென்னும் வீரனுந் திருக்கயிலையைச் சேர்ந்தனன்.

இதுவல்லாமல் காளகண்டனென்பவனும் தண்டியென்பவனும் நீல னென்பவனுங் கர னென்பவனும் வாட்போரில் வெற்றி பெற்றிருக்கின்ற விச்சுவமாலியென்பவனும் யாளியையொத்த வீரத்தன்மைபெற்ற பலபூத வீரரும் பற்பலகோடி சமுத்திரங்களையொத்த சேனைகளுஞ்சூழ்ந்து போற்றத் திருக்கயிலைக்குவந்தனர் யமதருமராஜன் வலியையொடுக்கவல்ல சுத்தவீரராகிய நூற்றுமுப்பதுகோடி பூதப்படைகள் சூழ்ந்துபோற்றத் திரிபுரங்களையும் நிமைப்போதிற் சாம்பலாக்கிய பரமசிவத்தினை வழிபட்டுச்சகலராலும்பூசிக்கப்பெற்ற ஈசானமூர்த்தியானவர் திருக்கயிலையைச் சேர்ந்தனர்பன்றி அன்னம் இவற்றின் வடிவெடுத்து பரமன்திருமுடியினையும் பாதாரவிந்தங்களையுந் தேடிவருந்தியமகாவிஷ்ணுவும் பிரமதேவனும் இந்திரனும் தேவர்களும் மற்றத் திக்குப்பாலகர்களும் சூரியசந்திரர்முதலிய நவக்கிரகங்கள் தாரகாகணங்கள் சத்தமாதாக்கள் வசுக்கள்முதலானவர்களுங் களிப்பினையுடைய விஞ்சையர் முனிபுங்கவர்கள் யாவரும்வந்தனர். உலகங்களுக்கு ஆதார சத்தியாயிராநின்ற வேதங்கள் ஆகமங்கள் மந்திரங்கள் பூமி அதிற்றங்கிய புவனங்கள் நகரங்கள் காலங்கள்மற்றுமிராநின்ற பொருள்களனைத்தும் தெய்வப்படிவங்களைப்பெற்றுத் திருக்கயிலையைச் சேர்ந்தன. இவ்விதமாகத் திருக்கயிலாயத்தில் யாவரும் யாவும்வந்து இடமின்றி நெருங்கியிருப்பதை நந்திதேவர்கண்டு மகிழ்ந்தவராய் அதிசீக்கிரத்தில் ஆலயத்தினுள்ளே பிரவேசித்துக் கர்த்தனைவணங்கி மகாவிஷ்ணு முதலாயினர் கோபுரவாயலி னிடத்திற்சேர்ந்திருக்கின்றதை விண்ணப்பஞ்செய்தகாலத்திற் கர்த்தனானவர் அவரனைவரையும் நமது சந்நிதானத்தில் அழைத்து வரக் கடவையென்று கட்டளையிட்ட மாத்திரத்திற் சிலாதரர் குமாரராகிய அருணந்தியானவர் முதல்வாயிலி னிடத்தில் வந்து உருத்திரப்பிரமுகாள் கணதிபதிகள் மசாவிஷ்ணு முதலிய தேவர்கள் ரிஷிகள் மற்றுமுள்ளவர்களையும்பரமன் சந்நிதானத்துக்குப் போவதாகவிட்டனர்.

இவ்விதமாக நந்திதேவர் செலவுகொடுத்த மாத்திரத்தில் அரகரவென்னுங் கோஷ்டத்துடன் ஆலயத்திற்பிரவேசித்து இரத்தினமயமாகச் சொலித்திருக்குஞ் சபாமண்டபத்தின் முகப்பில் விளங்குகின்ற சிங்காதனத்தில் எழுந்தருளி யிராநின்ற காளகண்ட மூர்த்தியினைத் தரிசித்த மாத்திரத்தில் முதிர்ந்த பத்திவிசுவாசத்துடன்சகலரும் மும்முறைவலம்வந்து வணங்கிக் கர்த்தன்பெருமைகளையும் மங்களகுணங்களையு மெண்ணரியெண்ணித்துதித்திருக்கின்றகாலையில் கணபதிகளில் முதன்மைபெற்றுத் திருக்கயிலையைப் போற்றும் பெருமையினை யுடைய நந்திதேவர் பொற்பிரம்பினைத்தாங்குந் தமதுதிருக்கரத்தில் விளங்கும் விரலினைக்கொண்டு கர்த்தன் முன்னம் வந்திருக்கின்ற அதிககீர்த்திபெற்ற உருத்திரர்களின்பிரிவுகளையும் கூட்டமாக விராநின்ற கணநாதனைப்பூதவீரரை நெருங்கி யிருக்கின்ற தேவர்வகைகளை முனிபுங்கவர்களை வெவ்வேறாக இன்னாரின்னாரெனப் பரமனுக்குச்சுட்டிக்காட்டிச் சொல்லிவணங்கி நிற்கக் காலத்தீ யுருத்திரர் கூர்மாண்டதேவர் வீரபத்திரக்கடவுளாகிய உருத்திரகணத்தலைவர்கள் போற்றுதல்செய்யவும் பூதப்படைவீரர் எமதுகர்த்த னிருபாரிசங் களினும் நின்று பத்திபூர்வகமாகத் தோத்திரஞ்செய்துகொண்டு கண்காட்சியாகப் பரமனைத் தரிசித்திருந்தனர். அப்பொழுதுபிரமதேவனானவன் சிவநாதன் சமீபத்தில்வந்து கிரீடம் வாகுவலயங்கள் மதாணிப்பதக்கம் முத்துமாலை வயிரக்கடக முதலான திவ்வியஆபரணங்கள் நிறைந்திருக்கும்பொற்பெட்டியை எதிரில்வைத்துச் சேவித்துக் கரங்களைக் கூப்பினவனா யிதனை விண்ணப்பஞ் செய்வதாயினன். லோகநாயகனே, தேவரீருக்கு விருப்பு வெறுப்புமில்லை, அடியோங்கள் பிழைத்தற்பொருட்டுப் பார்ப்பதியாரைத் திருக்கலியாணஞ்செய்ய நினைந்தீராயினும்திருமணக்கோலம்போலவிருக்கின்றதால் கொடியவிஷச் சுவாலையை வீசுஞ் சர்ப்பாபரணங்களைநீக்கி யிந்த விரத்தின மயமாகிய அணிகளைத்தரித் திரட்சிக்கவேண்டுமென்றிரந்து கேட்கக் கர்த்தன் திருநகைசெய்து பத்தியுடன் நீநமக்குக் கொடுத்ததனால் இவற்றைத் தரித்துக் கொண்டதைப்போலக் களித்தனமென்று அழகிய திருக்கரத்தினால் அப்பெட்டியினைத் தொட்டருளிப் பின்பு பிரமன் அன்புக்கிரங்கினவராய்த் தாமணிந்திருந்த பணியணிகளைப் பொன்னணிகளாகும்படிக்குத் திருவுளத்தில் நினைந்தமாத்திரத்தில்அவ்வாறேநவரத்தினமயமாகத்திருமேனியெங்குஞ் சொலித்துத் தோன்றியது.கேட்டீர்களோ.சவுனகாதிரிஷிகளே, ஜகங்களனைத்தினையும் ரட்சிக்கவல்ல பரமேஸ்வரருக்கு இச்செய்கை யரியனவோ, இக்காட்சியினைக்கண்ட விஷ்ணுமுதலாகிய சகலரும் அற்புதமடைந்து சிவபிரான்மகிமையினைக் கொண்டாடித் தொழுதுபோற்றினர், அத்தருணத்தில் கர்த்தனானவர் வண்டினங்கள்மொய்த்து ரீங்காரத்தொனி விளைப்பதாகத் திவ்வியபரிமளமிகுத்த புஷ்பங்களைக் கொண்டையினிடத் தணிந்திருக்கின்ற உமையவளிருக்குமிடத்துக்குப் போவதாகத்திருவுளத்தெண்ணி அக்கருத்தினைப் பக்கங்களிலிருக்கின்ற பிரமுகாளுக்குத்தோற்றக் குறிப்பினாற்காட்டி பூர்வத்திற் றேடிய மகாவிஷ்ணு பிரமதேவனுக்குக் காணப்படாதபரமன் சிங்காதனத்தினைநீங்கி வெளிவந்தனர்.

## திருக்கல்யாணப்படலம்.

நாற்றடம்புயக்கண்ணுதனந்தியம்பெருமான்
போற்றிமுன்செலவமரருமுனிவருப்புகழ
வேற்றதும்புருநாரதர்விஞ்சையர்யாரும்
பாற்றியக்கமுநிழலுமாமெனப்பாட
சொன்மறைத்தொகை யாகமமுதலியதுதிப்ப
பொன்னமைபெற்றதன்கோநகர்நீங்கியேபொற்றுள்
வன்மைபெற்றகுண்டோதரன்மொய்ம்பிடைவைத்துச்
சின்மயத்தனிமால்விடையேறினன்சிவனே.

---

கேட்டீர்களோ- சவுனகாதிரிஷிகளே, அக்காலத்திற்பரமசிவத்தின் திருக்குறிப்பினைத் தெரிந்தவுடன் நான்குபுயா சலங்களையுந் திரிநேத்திரங் களையுஞ் சிவவேடத்தினையுந் தாங்கி யிராநின்ற எமதுகர்த்தனாகிய நந்திதேவர் திருக்கரத்திற் பொற்பிரம்பினைத்தாங்கி பராமரிசெய்துகொண்டு பரமன்குணாதிசயங்களைப் போற்றினவராய்முன்னணியில் நடக்கவும் தேவர்களும் முனிசிரோஷ்டரும் ஜயஜயவென்று புகழ்ந்து கொண்டாடவும் சகலராலும் போற்றும் பெருமையினையுடைய தும்புருநாரதாதிகளும் விஞ்சையர் முதலாயினரும் பருந்து உலவுந்தோறும் அதனுடைய நிழல் தொடர்ந்துபோவதுபோல கண்டத்தொனியும் யாழின்சுதியும் லயப்பட்டுச்சிரவணானந்தமாகப் பாடிப்போகவும் ஆதிநூலாகச்சொல்லும் பெருமை வாய்ந்தவேதாகமபுராணமுதலியவைகள் தோத்திரித்து நடக்கவும், இவ்வித சம்பிரமங்களுடன் சுவர்னமயமாய் விளங்குகின்ற தமது அரசிற்குரிய பதியினைக்கடந்து அழகிய திருவடிகளை வலியுடைய குண்டோதரன் முதுகில்வைத்து ஒப்புவமையற்ற சின்மயசொரூபமாகிய ரிஷபவாகனத்தின்மீதுசிவபிரான் ஆரோகணித்து விழிகளுக்கமையாத சுந்தரவடிவுடன்தோற்றியகாலத்தில் அக்காட்சியினை பக்கத்திற் சூழ்ந்திருந்தவர்களல்லாமலும் லட்சுமிகரம்பொருந்திய நகரத்தினிடையில் நின்றவர்களுங் கடைவாயிலின் புறத்திலிருந்தவர்களுந் தரிசித்துக்களித்தவர்களாய்ச் சகலருந் தீர்க்கதண்டன் சமர்பித்துப்பரமசிவத்தின் புகழினைவாயாரத்துதித்துச் சமுத்திர கோஷ்டத்தினும் மேலிடும்படிக்கு அரகரவென்று ஆர்ப்பரித்துத் தொடர, நந்திவாகனத்தின்மீது நந்திஎன்னுந்திருநாமம்படைத்த சிவபிரானெழுந்தருளுமுன்னிலையில் கஜமுகாசுரனைப் பங்கப்பட்டுச் சின்னபின்னப்படவாட்டிய விநாயகமூர்த்தியானவர் ஐந்நூற் றெழுகோடி பூதப்படைவீரர் சூழ்ந்துபோற்ற எதிர்கொண்டு வந்து வந்தனைசெய்து துதித்துத் தொடர்ந்து செல்லும் போது சூரியனுஞ் சந்திரனுந் தவளவட்டக் குடைகளைத் தாங்கிவரவும், திவலைகளை யலைகளினால் றைக்குஞ்சமுத்திரராசனானவன் சிற்றாலவட்டங்களைப் பணிமாறிவரவும், தேவர்களுக்கிறைவனாகிய இந்திரன்விசிறியினைப்பற்றி சிறுகாற்றெழ அசைந்துப்போகவும், இவ்வாறு இத்தேவர்கள்முதிர்ந்த பத்தியுடன்மேற்குறித்த பணிவிடைகளை நடத்தி நடக்கும்போது வல்லமைசாலிகளாகிய பலகோடிபூதவீரர்கள் மங்கலபேரி வெற்றிமுரசம் கொக்கரை சல்லிகை கரடிகை பீலி சாரிகை துடி மத்தளங் குடமுழா தடாரி அதிகவோசையினையுடைய காகள மாதியாகச் சொல்லுகின்ற வாத்தியவிதங்களை ஆனந்தக் களிப்புடன் முழக்கிநடக்கவும், பரமன்கட்டளையின்படிக்கு உருத்திரக்கூட்டங்களும் விஷ்ணு பிரமதேவருந் தவச் சிரேஷ்டராகிய ரிஷிபுங்கவர்களும் இந்திராதிபவிண்ணவர்களுந்தேர் விமானங் கருடன் அன்னமுதலியதத்தம்வாகனங்களிற் போகவும் இவ்வித ஆடம்பரங்களுடன் தாங்கள்செய்த தவமுயற்சியினால் கர்த்தனைச் சூழநின்றுபணிவிடைகளைச்செய்துதரிசித்து வரப்பட்ட புண்ணியசிலர்களும் விரதமுயற்சியினால் வயிராக்கியங்கொண்டிருக்கும் மனதையுடைய பூதகணங்களும் மற்ற சிவகணங்களுந் திசைத்திசைகளெங்கிநும்வளைந்து போற்றிசெய்துபோவதாகப் பரமசிவமானது திருக்கயிலாய வெல்லையைக்கடந்து சமுத்திரஞ்சூழ்ந்த பூலோகத்தினர்கிருதார்த்தராதற் பொருட்டு இமையவரையினை நோக்கிச் செல்லுமுன்னிலையில் வார்களினால் பிகிந்திருக்கின்ற பேரிமுதலியபற்பல வாத்தியங்களைப் பூதகணங்கள்மிகவும்முழக்குதலினாலெழு மோசையானதோங்கி விசாலமாகிய வான வெல்லைமுற்றினும் நிறைந்த திரவும் பூதப்படைகளினாரவாரமும் தேவர்கள் சந்தோஷத்தினால்அரகரவென்னும்முழக்கமும் ரிஷிகள் ஜயஜய வென்று போற்றிசெய்யும் ஓசையும் மேலிட்டுச் சமுத்திரமுழக்கத்தினை அடக்கவும் இவ்வகைச் சம்பிரமங்களுடன் மாதுலன் பட்டினத்துக்குச் சமீபித்தகாலத்தில் மலையிறைவன் தன்பந்துவர்க்கங்களுடன் மாப்பிள்ளையை எதிர்கொண்டு மும்முறைவலம்வந்து வணங்கிப்போற்றி மற்ற மகாவிஷ்ணு முதலானவர்களுக்கு வந்தனாதிகளைச்செய்துபவுத்திரமாகியதன் பதிக்கு அழைத்துவரும்போது நவரத்தினமயமாகியமேடைகள் உப்பரிகைகளாதியாக அணிபட இருபாரிசங்களினுந்தோற்ற விசாலமாய் நீண்டிருக்கும்வீதிகளில்வாழுஞ் சனங்கள் சர்வக்கியனாகிய பரமசிவத்தின் வரவினை அதிக பிரியத்துடன் விழிகள்குளிரத் தரிசித்து பத்திவிசுவாசத்துடன் கரங்களைக்கூப்பித்தொழுது வாழ்த்தினவர்களாய் அக்காலத்திற்றெருக்கள்முழுதும் மிகுத்தகளிப்புடனே அழகிய வீதிகளில் நெருங்கியிருந்த தருணமங்கையரானவர் தேவதேவனாகிய பரமசிவத்தின்அற்புதமாகிய மிகுத்த ரூபலாவண்ணியங்களை நேத்திரோற்சவமாகக்கண்டு பூமியிற்படியச் சேவித்தவளவில் வேறொருசெய்கையுமற்றவர்களாய் அளவற்றஆனந்தவெள்ளமாகிய சமுத்திரத்தில் மூழ்கி மிகுதியாக அணிந்திருக்கின்ற ரத்தினாபரணங்களும் உடுத்திருக்கின்ற பீதாம்பரமும், பூசியிருக்கின்ற பரிமளமிகுத்த கலவைச்சாந்துந் திவ்வியசுகந்தங்களை வீசும் மலர்களாற் சோடித்திருக்கின்ற தண்டைமாலைகளுஞ்சேர்ந்து சந்திரசடாதரக்கடவுளினது மிகுத்த சுந்தரங்களைத் தரிசிக்கக்கூடாமல் மறைத்ததென்று சிலகன்னியர் மனந்தளரவும் இருதயத்திற்கொண்ட காமவின்பத்தைப்பொருந்திக் களிக்கவெண்ணியித்தேவனைக்கண்டவுடன் கொடிய மன்மதனானவன்பிரயோகித்த பஞ்சபுஷ்ப பாணங்களுஞ் சுறுக்கு சுறுக்

கௌத்தாக்கித் தகிக்கின்றமையாற் சகிக்கப்படாமல்வெந்
தொழிந்த கன்னியர்கள் தேகம்பட்டதூளிதமோ சுந்தர
ன்மேனியிற் பூசியிருப்பதென்று சிலபெண்கள் பேசவு
ம் யாழினிசையையொத்து வசனிக்கவல்ல மங்கையர் கூ
ட்டத்தினை நீங்கிச்சிவபிரான் அருகில்வந்த காலத்திற்பல
மணிகளினாற்சோடித்து இடையிலுடுத்திருந்தமேகலாப
ரணமானது நழுக.அதுதோற்றாமல் சிலகன்னியர் மெய்
மறந்துசேவித்து நிற்கவும், அகவிதழ்விரிந்து அலங்கார
மாக விளங்குஞ் செந்தாமரைப்புஷ்பவாசியாகிய ஸ்ரீமகா
லட்சுமிக்கொப்பாகிய சுந்தரமுள்ள சிலகன்னியர் காமமீ
றி யிடையிலுடுத்திருந்த பட்டாடை மெல்லச்சோர்ந்து
நழுகிவிழுந்துஅம்மணமாயிருப்பதைப்பார்த்துமங்கைய
ர்களுக்கு வஸ்திரமிராதோவென்று களிமிகுதியினாற்சில
கன்னியர்கள் வசனிக்கவும். மற்றுஞ்சிலதருண மங்கைய
ர்கள் சந்தோஷமிகுதியினால் மெய்மறந்து இடையிலுடு
த்தி ந்ததுகில் நெகிழ்ந்துபோன பின்பு சிலதூரம்போ
ய்த் தங்கள்மானக்குறைவினைக் கண்டமாத்திரத்தில் ஐய
ன் மணக்கோலத்தினைப் பார்க்கவந்த அவசரத்தினாற்புட
வையை உடுக்கமறந்து வந்தனமோ வென்றையுற்றுமீள
த் தங்கள்மாளிகைகளிற்போய் விலைஉயர்ந்த பீதாம்பரங்
களைத்தரித்து ஆசையுடன் மறுபடியுந் தெருக்களில்வந்
துவந்து அந்தஉடையினையுமிழந்து மீளத்திரும்பி யிவ்
விதமாக வூசலைப்போலச் சிலவாலிபப்பெண்கள் அங்கு
மிங்குமாய் அலையவும், மிகுத்தஅழகினையும் வாலிபத்தி
னையும்படைத்த குலமாதரோ, நாணத்தையிழந்து ஆலிங்
கனத்தினிடத்தி லிச்சைகொண்டுவோடி மேல்விழுந்துவந்
தபோது வருந்தாதீர்கள் உங்கள்மனஇஷ்டப்படியே ஆகி
ன்றதென்று சிலஆதரவுசொல்லாமற்போவதோ, ஆண்தி
றத்தினைப்பெற்ற இவ்வையருக்கழகென்று சிலகன்னியர்
வெறுத்துப்பேசவும், பாகினையொத்த மதுரவசனமுடை
ய சிலமாதர்கள் தமதிடத்து மையல்கொண்டு வேண்டினு
ம் அதற்கிசைந்து வருபவராகக் காணப்படவில்லை ஆத
லால் அரியபொன்வடிவினைப்பெற்ற நமதையருக்கு உள்
ளமானது இரும்போ, கல்லோ, வயிரமோ, சற்றுமிரக்க
மில்லையென்று சிலமாதர்கள்சொல்லவுஞ் சர்வாபரணபூ
ஷிதைகளால்பருத்துவிம்மி நெருங்கித் ததும்பித் தேமல்
பரந்திராநின்ற கொங்கைகளைப்பெற்ற பருவமங்கையர்
களுக்கு ஆசைமிகவும் விளையச்செய்து அவர்கள்மிகவும்
வாடிவருந்துதலைச் சற்றுந்தெரியாதவராகப்போவது உ
யிருக்குயிராகவிருக்கின்ற இவருக்குத்தகுவதோவென்று
சிலபெண்கள் ஏசவும் முறுக்குண்டு நீண்டிருக்குஞ்சடா
மண்டலதாரியாகிய சிவபிரான்அழகினைத் தரிசித்துத்தரி
சித்து மனங்கரைந்து சிலகன்னியர்வாடவும், மங்களகர
மாகவிருக்கின்ற பரமன்வடிவத்தைநினைந்துநினைந்து உ
ள்ளம்வெம்பி தேககாந்திமழுங்கிக்கறுத்துச் சிலமங்கைய
ர்சோரவுந் தங்களுடன் தொடர்ந்துவந்த பாங்கியருடன்
தாங்கள் ஐயனிடத்திற்கொண்ட ஆசையினால் உண்டாகி
ய காமமயக்கத்தினைச் சொல்லிச்சொல்லிச் சிலமாதர்வா
டவும், பக்கங்களில்நிற்கின்ற சிலதருணமங்கையர் தேக
மானதுவெளுத்திருப்பதைப்பார்த்துப்பிறப்பிறப்பற்றஇ
வ்வழகனை நம்மைவஞ்சித்து இவர்கள்கூடி யின்புற்றன
ரோ, இவர்கள்சரீரமெங்கும் விபூதிதூளிதம் பூசப்பட்
டிருக்கின்றதென்று அக்கன்னியரை உருத்துப்பார்த்து
உங்களுக்கிவ்விடத்தி லென்னகாரியம்போம்போமென்று
சிலகன்னியர் வாதுகொடுக்கவும் சடைமுடியினிடத்தி
ல் விளங்குஞ் சந்திரனது கலைகளானவை மெல்லியஇடை
யினையுடைய பெண்களைச் சுடுகின்றது, இவர் கங்காபவா
னியை முடியிற்றரித்திருப்பதினாற் பிரயோசனமொன்
றுங் கண்டதில்லையென்று சிலமடந்தையர் நெருங்கி வி
னாவவுந் தாமரைமலரைப் பீடமாகக் கொண்டிருக்கின்ற
பிரமதேவன் முதலாக மற்றைத் தேவர்கள் அபயம் அப
யமென்று அடைக்கலம்புகுந்த காலத்தில் அவர்களிடத்
திற் பரிவாய்த் தேவரீர்உண்டருளிய கொடியஆலகாலவி
ஷத்தினுங் கொடியதோ, தீனராகிய பெண்கள்கொங்கை
களின்மீது சூழ்ந்திருக்கின்ற கருமையும்முத்துமாலையுந்
தேமலுமென்று சிலகன்னியர்காமக்கனல்கொளுத்தவாடி
ச்சொல்லவும் மணச்சடங்கினுக்குரியசிறந்தொழில்களைச்
செய்வதாகக் கூட்டங் கூட்டமாய் புருஷர்கள் களிப்புட
ன் தெருக்கள்முற்றும் நெருங்கியிருக்க அவர்கள்மீது உ
மது சவுரியங்களைச்செலுத்தாமல் பேதைகளாகிய பெண்
களைமாத்திரமோ தேவரீர் துன்பப்படுத்த வல்லீரென்று
பலபெண்கள் வசனிக்கவும் ஓ, கன்னியர்களே யிப்படிக்
கு வீண்வார்த்தையாடுவதிற் பிரயோசன மென்னரிஷ
பவாகனத்தின்மீது வருகின்ற இச்சுந்தரன் நம்மைத்திரு
க்கலியாணஞ் செய்வதற்குஒப்பற்ற பர்வதராசபுத்திரிமு
டித்த தவத்தினையொப்பாகநாம் செய்ததில்லையென்று ம
னவருத்தத்துடன் சில மடவார் வசனிக்கவுந் தேவரனை
வருந் தமது துன்பங்களைப்போக்கிச் சுகசீவிகளாகவாழு
ம் பொருட்டுத் திருமணமுடிக்க வருபவர் மெல்லிய தே
கத்தினைவாய்ந்த மங்கையர்பிராணனைக்கொள்ளைகொள்ள
விரும்பினர், இவ்வித அநியாயத்தினை யாவர்தாஞ்செய்ய
வல்லரொன்றுசில அரிவையர் வசனிக்கவும் மதயானையை
யொத்தும் வீரபராக்கிரமமுடைய வேங்கையைநிகர்த்து
ம் வீறியிருக்கின்ற கொடியவரை வாட்டியடக்கமனமிசை
யாமல் மெல்லிய மானையொத்த பார்வையினையுடையமங்
கையருக்கு இத்தகைய துன்பத்தினைச்செய்வதழகோவெ
ன்றுசில தெரிவைமார் பேசவும் நமதிறைவனாகிய பர்வத
ராசன் செய்த தவமுயற்சியினாற் பெற்றிருக்கின்ற பார்ப்
பதியார்மீதிச்சைகொண்டுதிருக்கலியாணஞ் செய்யப்போ
கின்றவர் மனமிரங்கி நமக்கின்பநலத்தினைத்தருவரோஆ
கிலுந் தம்மையடுத்தவர்களையிரட்சிக்குந் தீனசரண்ணிய
னாகிய இந்தப் பிரானுக்கு இதுதகாது தகாதென்றுசிலவ
னிதையர் பேசவும் இவ்வாறுமங்கைப்பருவமுதல் பேரி
ளம் பருவம் வரையினுமுள்ள மாதர்கள் தெருக்களில் நி
றைந்து நின்றுதமதுமனதில் நினைந்தபடிக்குப்பேசிப்பே
சி யாதொரு பிரயோசனத்தையும் பெறாமல், அபலராய்
வாடியபோதினுங் குற்றமற்ற மனதைப் பெற்ற பதிவிர
தாசிரோமணிகள் சிலர் மெய்ப்பத்தியுடன் பரமன்திருக்
கோலத்தைத்தொழுது களித்திருந்தனர்.

இவ்வித வைபவங்களைப்பெற்றுச் சிருஷ்டிகர்த்தனாகி
ய பிரமதேவன்வாசஞ்செய்யும் சத்தியலோகத்தினும்பதி
ன் மடங்குஅதிகமாக அழகுபெற்றிருக்கின்ற பர்வதரா
ஜன் பட்டணத்தின் வீதிகளில் அண்டங்கள் நாணும்படி
க்கு அலங்கரித்திருக்கின்ற சுந்தரங்களையெல்லாஞ் சிவபி
ரானானவர் பார்த்துக்கொண்டு செந்தாமரைமலர்வாசியா
கிய மகாலட்சுமியும் இச்சிக்கத்தக்க வளப்பங்களைப்பெற்
றிருக்கும்நீண்ட தெருக்களைக்கடந்து பராபரையாகியபா
ர்வதி வீற்றிருக்கின்ற அரண்மனைக்கருகில் பரமன்வந்த

காலத்தில் மலையரையன்கட்டளையின்படிக்கு வேதப்பிராமணர்மலர்கள் நிறைந்ததடாகங்களின் தீர்த்தத்தைப்பொற்குடங்களில் நிரப்பிக்கொண்டு மங்களகரமாய் எதிரில்வரவும் இவையன்றியும் பற்பலபிராமணச் சுமங்கலிகள் மகாவிஷ்ணு பிரமதேவன் இவ்விருவருந் தேடிக்காண்பரிய பரமசிவத்தின்எதிரில் பெருமைபொருந்தியசாய்மனை நிறைகுடம் கண்ணாடி தோட்டி முரசு விளக்கு கொடியிணைக்கயல்இத்தகையசிங்காரமாகியஅஷ்ட மங்கலப்பொருள்களை வரிசைபடக் கரங்களினேந்தி யிருபாரிசங்களினும் மங்களகரமாக வரவும் அளவற்ற சுந்தரப்பருவமங்கையர்கள் அறுகு வேம்பு மஞ்சள் அட்சதை ஆலம் செம்பஞ்சின்விரை பூர்ணகும்பம் இவ்விதமங்கலச் சிறப்புகளைத்தாங்கி வீதிகளில் எதிர்கொண்டு போகவும்இவ்விதமாக அளவற்றமங்கையர்கள் கரங்களினேந்தி மாளிகைக்கடுத்த வீதிகளில் இருபாரிசங்களினும்வந்துநெருங்கி ரத்தினாபரணங்களைச்சுமந்து பூரித்துப் புடைபரந்து நெருங்கியிராநின்ற கொங்கைகள் குலுங்கப் பிராணிகடோறும் பொருந்தி நடிப்பிக்கின்ற ஆதிதேவனாகிய பரம சிவத்தினெதிரில்துரிதமாய்வந்துபலசோபன வாழ்த்துகளைப்பாடிக் கெம்பீரமாக நின்றுதமது பணிவிடைகளைச்செய்யவுங்கணக்கிறந்த நங்கைமார்கள் திருவிளக்குகர்ப்பூரதீபமாதிய சோதிகளை வைத்திருக்கின்ற பொற்றட்டுகளைஅழகிய கரங்களில் ஏந்திவந்து எமதுபெருமானைவலமாய் எதிரில்நின்று பத்திவிசுவாசத்துடன் மும்முறைசுற்றிவணங்கிப் போகவும் இவ்விதமணக்கோலச்சடங்கினைச் செய்துவருகின்றகாலையில் ஞானநாயகனாகிய சிவபிரானானவர் சிறந்தகலியாண மாளிகைக்கருகில்மகாவிஷ்ணுமுதலியதேவர்களுடன்வந்து அவர்கள் தாமேறிவந்த விமானங்கள்முதலிய வாகனங்களினின்றிழியத் தாமும் தவளநிறம்பெற்ற விருஷபவாகனத்தை விட்டிறங்கினர்.

அக்காலத்தில் பர்வத ராசன் பத்தினி யாகிய மேனைப் பிராட்டியானவள் பொற்கரகத்தினிடத்திற்பசுவின்பாலை நிரப்பிக்கொண்டு பலதேவகன்னியர்கள் சூழ்ந்துபோக எதிரில்வந்து பராபரமூர்த்தியாகிய பரமன் பாதகமலங்களின் மீது பாலைப்பொழிந்து சுத்திசெய்து முன்றுனையின வீரத்தைப் போக்கிச் சேவித்துத் தன்மாளிகையிற் போனபின்புசிவக்கொழுந்தானதுநந்திதேவர் எதிரில்வைத்தபொற்பாதுகைகளினிடத்திற்றிருவடிகளைச்சேர்த்துமகாவிஷ்ணு பிரமதேவன் இரண்டு பக்கங்களினுங் கரங்களைநீட்டக்கைலாகுகொண்டு குற்றமற்ற பலவகையிரத்தினங்களினுற்சோடித்து விசாலமாயிராநின்ற திருக்கோயிலிற் பிரவேசித்த தருணத்திற் சங்கீதமேளமுதலிய மங்களவாத்தியங்கள் சமுத்திரத்தினும்மேலிட்டு முழங்கவும் தேவேந்திரனாதிவிண்ணவர்கள் ஜயஜயவெனப்போற்றிவரவும்விஞ்சையர்கருடகாந்தருவர் யாழ்களைமீட்டிசிரவணானந்தமாகக்கர்த்தன் பெருமைகளைப் பாடிவரவுங் கணாதிபதிகள் பூதத்தலைவர் கல்லெனச்சத்தமெழ அரகரவென்று துதிக்கவும் உருத்திரகோடிகள் கர்த்தன் மணக்கோலத்தினைத் தரிசித்துச் சூழ்ந்து நடக்கவும் இவ்வித சம்பிரமத்தினுற் சிவபிரானானவர் மெல்லநடந்து போகும்போது மகாவிஷ்ணு பிரமதேவனிவர்களிருவரும் வணங்கிக்கர்த்தனே யிவ்விநோதங்களைப் பார்த்தருள வேண்டுமெனத்துதிக்கச் சிறுநகைகொண்டு வானத்தினை அளாவிவிசாலமாய்ச் சிங்காரித்திராநின்ற கலியாணமாளிகையிற் சோடித்திருக்கின்ற விசித்திரங்களை நோக்குமுன்னிலையிற் சிலாதரர் குமாரராகிய நந்திதேவர்பக்கத்தில்நின்று வண்டினங்கள் தொனித் திறங்காததாய்ச் செய்தமைத்த மலர்ச்சோலைகள் தடாகங்கள் சந்திரிகையையொப்பத தெளிந்த நீரைக்காட்டும் ஓடைகள் பொய்கைகள் பலநிறம் பெறச் சோடித்திருக்கும் மண்டபங்கள் மற்று மிராநின்றவினோதங்களைக்காட்ட அவ்வவ்விடங்களிற் சென்று அவற்றின் பெருமிதங்களைக் கைலாசபதிகண்டுகளித்துவரும்போது பரமன் பின்தொடர்ந்துவந்த தேவரனைவரும் தமது பத்தினிமாருடன் அவ்வதிசயங்களை நேத்திரோற் சவமாகப் பார்த்து பிரமித்தவர்களாய்ச் சிறந்தபொன்னுலகமானது இந்தபூமண்டல வெல்லையிலிறங்கி யிருக்கின்ற தாகவேண்டுமெனநினைந்து விசாலமாகிய தடாகங்கள் நடைபாவிகள் இவற்றில் றங்கி முழுகி விளையாடிக்களித்து வெளிவந்துபக்கங்களிலிராநின்ற குளிர்ந்த புஷ்பச்சோலைகள்உத்தியானவனங்களிற்சென்று புதியமலர்களைப் பறித்துத்தங்களிஷ்டப்படிக்கு உல்லாசமாகத்திரிந்தார்கள்.

கேட்டீர்களோ-சவுனகாதிரிஷிகளே, அத்தேவர்கள் சந்தோஷமிகுதியை யிவ்விதமெனப் பேசவும் கூடுமோ இவைநிற்க நந்திதேவர்காட்டச் சிவபிரானானவர் சகலவளங்களையும் பார்த்துக்கொண்டுபோய் சுகந்தங்களை வீசாநின்றபல மலர்களினுல் அலங்கரித்திராநின்ற மணச்சாலையினிடத்தில் இந்திர நீலரத்தின வகைகளினுற் சோடித்து விளங்கி யிருக்குஞ் சிங்காதனத்தின்மீது வேதங்கள்தேடிக்காண்பரிய திரியம்பகரெழுந்தருளி யிருந்தனர். இம்மகோச்சவகாலத்தில் வீரபத்திரக்கடவுளுங் காலாக்கினிஉருத்திரரும் வல யிலுயர்ந்த கூர்மாண்டதேவரும் ஆடகேசுரர்முதலிய உருத்திரர் சிவகணங்கள்பரமன் குணாதிசயங்களைப்போற்றிநிற்கவும்மகாவிஷ்ணுபிரமதேவன்தேவேந்திரன்முனிபுங்கவர்கள் மற்றதேவர்கள் தகுதியாகப் பரப்பியிருக்கின்ற பொற்பீடங்களிற் பரமனைச்சூழவீற்றிருந்தனர். அக்காலத்திற் சிவபிரான் திருமணச்சம்பிரமத்தினைத் தரிசித்துக்கிருதார்த்தராதற்பொருட்டு மேலைஅண்டங்களினிடத் தடங்கியிருக்கின்றபுவனவாசிகளனைவரும் ஏக காலத்தில் அவ்விடத்திற்கூடிய காரணத்தினுற்சுமைமிகுதிப்பட்டுப் பனிமயமாகிய இமையவரை எல்லையானது கம்பிதப்பட்டு வருந்துகின்ற தருணத்தில் ஆதிசேஷன் சிரத்தில்தராசுதட்டைப்போலத்தாங்காநின்ற இந்தப் பூமண்டலமானது தேவர்கள் வருந்தவடபாரிசந்தாழ்ந்து தென்புறம் மிகவும்உயர்ந்தது கேட்டீர்களோ, சவுனகாதிரிஷிகளே யிவ்விதமாகத் தென்பூமி உயர்ந்தபோதுதேவர்முதலானவர்கள் ஏக்கங்கொண்டு வாடவும் பூமண்டலத்திலிராநின்ற மானிடர் திகிற்பட்டு எமக்குநாசகாலமாகிய யுகமுடிவுநேர்ந்ததோவென்று தியங்கிச்சோரக் கலியாண மண்டபத்தி னிடமாக வந்திருக்கின்ற நாரதர் முதலிய முனிபுங்கவரும் பதைபதைத்து பிரமிக்கவும் இவ்விதமாகச் சிவபிரானொருவரன்றியில் மற்றையரனைவரும்வழிந்தித்தியங்குகின்றதை பரமசிவங்கண்டு திருநகைகொண்டுவாடுகின்றவர்கள்துன்பங்களைஒழிப்பதாகத் திருவுளத்தெண்ணினவராய்ப் பக்கத்திலிருக்கின்ற நந்திதேவர்மீது திருக்கண்சாத்திச் சமுத்திரநீரை உள்ளங்கையி னிடத்தேற்றுண்ட அகஸ்தியரை அழைத்து வரக்கடவை யென்று கட்டளையிட்டவுடன் நந்திதேவரானவர் கர்த்தனைவணங்கிப்போய்சபைமுற்றுந்தேடியழைத்துச் சலனமற்ற

தவசிரோஷ்டராகிய கும்பமுனிவனைக்கண்டு அழைத்துப்
போய்ப்பரமசிவத்தின் திருமுன்விட்டனர்உடனேபொதி
யமலைக்கதிபராகிய அகஸ்தியர் கர்த்தன்பாதகமலங்களிற்
பணிந்து பலவிதமாகத்துதிக்க திருக்கைலாச பதியாகிய
பரமன்பார்த்து குறுமுனிவனே திருக்கல்யாண சம்பிர
மத்தினைத் தரிசிக்க வந்தவர்கள் அதிகரித்து நெருங்குத
லாற் சுமைமிகுதிப்பட்டுத் தென்பூமிமிகவும்மேனேக்கிச்
சொற்கலோகவரையில் உயர்ந்தும் வடபாரிசமானதுபாத
லவரையிற்ருழ்ந்தும் நிற்பதினல் இப்பிரதேசத்தில்ருக்
கின்ற பிராணிகளனைவரும் அதிக துன்பத்திலாழ்ந்து தா
ங்கள்செய்தொழிலை மறந்துவாடிக்கலங்குகின்றனர், வான
த்தினை அளாவநிற்கின்ற மகம்மேருவும் மந்தரமுதலாகி
ய குலகிரிகளுந் தத்தமது நிலைபெயர்ந்து கீழ்மேலாகின்
றன ஆதலாற் றவசிரோஷ்டனே நீ ஒருவன்மாத்திரம் இ
ந்த இமையவரையை நீங்கி முக்கனியின் இரசங்கள்
ஏராளமாகப் பெருகிச் செந்நெல்முதல்ய பயிர்கள்செழி
த்தோங்கி வளர்ந்துவரும் வயல்கள் நிறைந்தநாடுகள்
அதிகரித் திருக்கும் தென்தேசத்தைச்சேர்ந்து மேலோங்
கிப்புடைபரந்து சகலவளங்களையும்பெற்றிருக்கின்றபொ
திகைபர்வதத்தில்வாசமாய்த்தவஞ்செய் திருப்பையாகிற்
பூமண்டலம் யதாப்பிரகாரஞ் சமமாய்த்தவறின்றிச் சவுக்கி
யமடையுமென்று சந்திரசடாதர மூர்த்தியாகிய சிவபிரா
ன் சொல்லியகாலத்தில் வேதாகமபுராணமுதலிய சாஸ்தி
ரங்களை வழுவாயற ஓதியுணர்ந்தமகத்துவாகியஅகஸ்தியரா
னவர் திடுக்கிட்டுப்பயந்து கர்த்தனே அடியேன் ஏதேனு
ங்குறைபாடு செய்ததுண்டோ தீனதயாபரமூர்த்திகொடி
யவனிடத்திற் கிருபைவைத்து அருகிலிருமென்று கட்ட
ளையிடுவதற்குமாருகத்தூரத்திற்போய் வாசஞ்செய்யப்ப
ணித்தருளினீ'ரென்று மனவருத்தத்துடன் சோருகின்ற
அகஸ்தியனைப் பார்த்துச்சொல்லுகின்றனர்.

உம்மையொத்த முனி சிரோஷ்டர்கள் இப்புவனங்களி
லொருவரேனு முண்டோ அன்னவாகனனான பிரமதேவ
வனையும் உனக்கொப்பாகச்சொல்லவும்போதுமோஇதை
க்கருதி நாம்கட்டளையிட்டபடிக்குப் போகத்துணிவீராகி
ல் நீர்வேண்டிய வரங்கள் யாவையுந்தருவோம் இஃதன்
றியும் பழமையாகப் பேர்பெற்றிருக்கின்ற தபோநிதிகளி
னுலும் முதன்மைபெற்ற தேவர்களினுலும் இக்கருமத்தி
னை முடிப்பதரிது சகலருக்கும் மேலான பேறுபெற்றிரு
க்கின்ற உனக்குமாத்திரம் எளிதாயிருக்கு இதனல்யா
தொருதடையும் பேசாமற்போய் வாருமென்று சிவபிரா
ன் திருவுளம்பற்றிய காலத்தில் அகஸ்தியர் என்னசெய்வ
ர் கர்த்தன் பணித்ததைக் கடக்கக் கூடாமையாற் சற்றே
யோசித்து விண்ணப்பஞ்செய்கின்றனர். தமதிடத்திற்பி
ரீதியுடைய காளமேக வண்ணரான மகாவிஷ்ணுவுந் தே
வ்களைப்பெருக்கிப் பரிமளித்திருக்குந் தாமரைமலரிலிரு
க்கின்ற பிரமதேவரும் சதமகனுகிய தேவேந்திரனுஞ்சுக
சிவிகளாகவிருக்கத் தேவரீர் குறித்ததைக்கொடியவனுகிய
அடிமையை முடிக்கக்கட்டளை யிட்டதால் அவரினும்நா
ன்செய்ததவமோ சிறந்ததாகத்திருவுளத்திற் ருேன்றியது
எமது கர்த்தனே நீரோ யிக்காரியத்தைநிறைவேற்றக் கடா
ட்சித்திராகில் எனதப்பனுகிய தேவரீரிடப்புறத்திற் பரா
சத்தியானவள்வீற்றிருக்கச்சகலசம்பிரமங்களுடனுஞ்செ
ய்ய விருக்கின்ற திருக்கல்யாணமகோச்சவக்காட்சியைநே
த்திரோற்சவமாகத் தரிசித்து ஆனந்தங்கொள்ளாமற் பிரி
ந்து போவதற்கு என்மனந்துணிவு பெருது வருந்துகின்
றது என்செய்வேன் விமலனேயென்று அகஸ்தியர்விண்
ணப்பஞ்செய்துகொண்டபோது திருக்கயிலாயவரைக்கதி
பராகிய பரமேஸ்வரரானவர் சொல்லுகின்ருர், சிறந்தத
வநிலையைக் கைகொண்டிருக்குங் கும்பமுனிவனே நீமன
ம்வாடாமல் தென்தேசத்தில்விளங்கியிருக்கும்பொதியை
மலையிற்போயிருப்பையாகில் பார்வதியுடன் நாம் அவ்வி
டம்எழுந்தருளித் திருமணக்கோல தரிசனையைக் காட்டு
வோம் அதனைத் தரிசித்து ஆனந்தமடையக்கடவை யிஃ
தன்றியும் நமதுதிருவடிவினைத்தியானித்து அதுவரையி
ற் சிலகாலந்தவஞ்செய்திருந்த பின்புபழையபடியேநமது
சந்நிதானத்தைச் சேர்ந்துவாழ்வை தவக்கொழுந்தே யெ
ன்று நிர்மலக்கடவுளாகிய சிவபிரான் திருவுளம்பற்றி
யகாலத்திற் போவதற்கு மனமிசைந்தவராய்ச் சிதாகாசத்
தினிடத்திற் றிருநடனஞ்செய்யும் மகிமைபெற்ற பாதார
விந்தங்களிற் பன்முறைவணங்கிநின்று கரங்களைக்கூப்பி
க்கொண்டு பரமன்பெருமைகளைவாயாரப்போற்றிசெய்து
பெருமூச்செறிந்தவராய் அருமையாகஅத்தலத்தைநீங்கி
த்தென்தேசத்தைநோக்கிக் கும்பமுனிவரானவர் அதிசீக்
கிரமாக நடந்துபோகு முன்னிலையிற் றன்னிடத் தகப்ப
ட்டவரை மயக்கி வாட்டும் மாயையின் திறம் பெற்ற
கிரவுஞ்ச கிரியையும் தனக்குநிகரில்லையென் றிறுமாந்தி
ருந்தவிந்தகிரியையும் மங்கும்படிக்கடக்கி ரிஷிகளைவஞ்சி
த்துக்கொன்றுநின்றிருந்த வில்வலன் வாதாவியென்னும்
இராட்சதப்பாதகரை அதம்பண்ணினவராய்த் தன்னிட
த்தில் மூழ்கியவர்களைப் பவுத்திரமாக்கி முத்தியிற்சேர்க்
கவல்ல காவிரியினைக்கமண்டலத்திலேந்தி முன்னம் அத்
தலங்களில் வாசஞ் செய்தவரைப் போலச் சதாரணமாய்
த் தென்தேசத்தில் அகஸ்தியர் வரும்போது எதிரில்நே
ர்ந்த சில இராட்சதப் பாதகர்கண்டுதிடுக்கிட்டு நடுநடுங்கி
னவர்களாய் வேதோக்த மாய்ப் பல வேள்வி களைச்செ
ய்திருந்த மகாபலிச்சக்கிர வர்த்தியினது வீருப்பை அ
டக்கிய வாமனமூர்த்தியைப்போல் வேருெருகுறளுருவ
மு முண்டாயிருக்கின்றதோவென்று பயந்து அவ்விடத்
தில்நில்லாமல் ஓடிஒளிக்கக் கும்பமுனிவன் நெடுந்தூரத்
தினைக் கடந்துபோய் பொதிகைவரையிற்சேர்ந்துபூர்வகா
லத்திற் கமலாசனனுகிய பிரமதேவன் சீரையும் வல்லமை
யுங்கெடுத்து உலகங்களை அழித்துத்திரிந்த திரிபுரங்களை
வாட்டநினைந்து பூமண்டலம் சூரியர் சந்திரர் தேவர்களா
கியரதத்தில் எழுந்தருளி அதுபாதலத்திற் போவதாகத்
திருவிரலினலூன்றிய சிவபிரான் திருக்கோலத்தினைமன
திற்சிந்தித்து அகஸ்தியர் அம்மலையிலிருந்தனர்.

கேட்டீர்களோ, சவுனகாதிரிஷிகளே, யிவ்வாறுபொ
திகையில் தவசிரோஷ்டராகிய கும்பமுனிவர் ஸ்தாபித
மாக வீற்றிருந்தகாலத்திற் பலராலும்புகழும் பெருமை
யினையுடைய வடபக்கமுந் தென்பாதியுந் தராசுதட்டினை
யொத்துச் சமமாகின்றது. அக்காலத்திற் சகலபிராணி
களும் வருத்தங்களையொழிந்து சிவநாதன் கிருபையின்
மிகுதியைப்போற்றி மனக்களிப்புடனிருந்தனர். இச்சரி
த்திரம்நிற்க. இனிதிருமணச்சடங்கின் விபரங்களைக் கே
ட்பீராக.—அகஸ்தியரானவர் கர்த்தன்கட்டளையின்படிக்
குப் பொதிகைவரையினைநோக்கிப்போனபின்பு பழமை
யாயிராநின்ற இமையகிரியினிடத்தில்வந்து சேர்ந்தரிஷி
கள் தேவர்கள்ஏகமாய்ச்சேர்ந்து சந்திரசடாதரக்கடவுளா

கியபரமன் தமதன்பரிடத்தில் வைத்திருக்குங் கருணைமி
குதியையும் அத்தேவன் பாதகமலங்களை யிருதயகமலத்
திருத்திப்போற்றிவாழும் பத்தர்களினது பெருமைகளை
யுங்கொண்டாடிக் களித்திருக்கின்றபோது மலையிறைவ
ன்கட்டளைப்படிக்கு எமது இறைவியாகிய பார்ப்பதியான
வள் துர்க்கையம்மன் தன்சேனைத்தலைவருடன் போற்றி
வரவும், தேவராசபத்தினியாகிய இந்திராணி அடப்பை
யைத்தாங்கிப்பக்கத்திற்போகவும்கங்கை யமுனை துங்கப
த்திரிமுதலிய சத்தநதிகளும் வெண்சாமரைகளைப்பணி
மாறிநடக்கவும், காளிக்கூட்டங்கள் சந்திரவட்டக்குடைக
ளைக் கவித்துச்செல்லவும், ஸ்ரீமகாலட்சுமியின் கரத்தினை
ப்பற்றிக்கொண்டு சரஸ்வதிதேவி அருகிலிருந்துஅம்மை
பெருமைகளைக் கொண்டாடிவர,இவ்விதஆடம்பரங்களு
டன் கலியாணமண்டபத்தினைச்சேர்ந்து பிறப்பிறப்பில
யாகிய பரமசிவத்தின் பாதாரவிந்தங்களிற்பணிந்து நிற்
கும்போது ஸ்ரீமகாலட்சுமியானவள் தாயே, லோகநாயக
னிடப்புறத்தில் வீற்றிருப்பையென்றுவேண்ட, அவ்வா
றே பரமனெழுந்தருளியிருக்குஞ் சிங்காதனத்தில் தே
வேந்திரன்முதலானவர்கள் ஜயஜயவெனப்போற்றப்பரா
சத்தியானவள் வீற்றிருந்தனள். அத்தருணத்தில்மலையி
றைவனானவன் ஆனந்தபரவசத்தனாய்க் கறுத்துக் காதள
வும் ஓடியிராநின்ற விழிகளைப்பெற்ற தன்குமாரத்தியாகி
ய பார்ப்பதியம்மனைச் சிவபிரானுக்குத் தத்தஞ்செய்து
கொடுக்க யத்தனித்துத் தன்தேவியாகிய மேனைக்குக்கட்
டளையிட்டபடிக்குப் பொற்கரகத்திற்கங்காசலமுஞ் சந்த
னம் புஷ்பந்தூப தீபமுதலிய பூசாதிரவியங்களைப் பொ
ற்பள்ளயத்திலும் ஏந்திக்கொண்டுவந்தமாத்திரத்திற் பர்
வதராசன்சிவபிரானைவணங்கி தன்தேவியானவள் கங்கை
நீரைப்பொழிய ஆதிதேவன் திருவடிகளைச் சுத்திசெய்து
தன்உத்தரீயத்தினால் ஈரத்தினைப்புலர்த்தி சந்தனக்குழம்
பைச்பூசிப் பலமலர்களினால் அருச்சித்துத் தூபதீபமு
தலிய சோடசஉபசாரங்களையுஞ்செய்து முடித்தபின்பு
அண்டாண்டபுவன சராசரங்களையும் ஈன்றருளிய பார்
ப்பதியார் திருக்கரத்தினைப் பரமசிவத்தின் கரத்தில்வை
த்து வேதசாகைகளை ஓதி ஐயனே,அடியேன் அரிதிற்பெ
ற்ற பெண்கொடியைமனதொருமித்துத் தேவரீர்க்குப்பா
ரியாகத்தந்தேனென்று அத்தேவதேவனைத்தனக்குமரும
கனாகவெண்ணி தாராதத்தஞ்செய்துகொடுத்தான் சவுனகா
திரிஷிகளே இவ்வதிசயத்தினை யென்சொல்லுவேன். சர்
வமுந் தமதுமயமாய் நவக்கிரகங்கள்முதலிய எவைகளுங்
கொடுப்பவனும் ஏற்பவனுந் தாமேயாகவிளங்குஞ் சர்வ
சங்காரமூர்த்தியானவர் உலகங்களனைத்தினையும் படைத்
தருளிய கன்னிகையை தேவர்முனிவர்கள் சாட்சியாய்ப்
பர்வதராசன் திருமணமுன்னிலையில்தாரைவார்த்துக்கொ
டுக்கப்பெற்றாரென்று சொல்லுவோமாகில் அவருடைய
கிருபையின் மிகுதியாவரால் அறிந்துபுகழப்படும், இவ்
வித மகோச்சவகாலத்தில் அரம்பாஸ்திரீகள் நிர்த்தனஞ்
செய்யவும், சித்தர்கள் இராகங்களைப்பாடவுந், தும்புருநா
ரதர் கந்தருவர்களும் ஏழுநரம்பினைவாய்ந்த தேவயாழி
னைமீட்டிக் கீதங்களைப்பாடவும், தேவர்கள்முனிசிரேஷ்ட
ர்கள் மற்றையரும் வேதங்களை ஓதிக்களிக்கவுஞ், செந்தா
மரைமலர்வாசியாகிய ஸ்ரீமகாலட்சுமியும், வெண்டாமரை
ப்பீடத்தமர்ந்த சரஸ்வதிதேவியும், மற்றதேவகன்னியர்
ரிஷிபத்தினிமார் ஏகமாகக்கூடிக்கொண்டு மங்களவாழ்த்
துகளைப்பாடவும் பூதகணங்கள் மங்கலமுரசம் சங்கம் சி
ன்னமுதலிய பதினெண்வகை வாத்தியங்களையும்முழக்கி
அரகரவென்று ஆர்ப்பரிக்கவும், இவ்வண்ணமாக ஆனந்
தக்களியாடல்களைச்செய்து வருகின்றகாலையில் மலையரை
யன்பசுவின்பால் மா-பலா-வாழைமுதலிய கனிவகைகளை
யுந் தேன்-சருக்கரை-நெய் முதலாகிய மதுரவகைகளையுந்
திரட்சியாகச் சேகரித்துப் பொற்பள்ளயங்களில் நிரப்பி
க்கொண்டு பரமசிவத்தினெதிரில் அணிஅணியாகவைத்
து எமதிறைவனே, யிக்கனிவகை ஆதியாகியவிதங்களைக்
கிருபையுற்றுப் புசித்தருளவேண்டுமென்று விண்ணப்
பஞ்செய்யக்கேட்டுக் காளகண்டமூர்த்தியானவர் அதிககி
ருபையுடன் அவற்றினைத் தமது திருக்கரங்களினாற்மரு
ட்டு மலைக்கதிபனே, நீநமதிடத்து மிகுந்தபிரியத்துடன்
படைத்த பதார்த்தவகைகள் முற்றும் நமக்குப்பிரீதியா
யிற்று இவைகளைஎடுப்பித்துப் போகக்கடவையென்று
திருவாய்மலர்ந்தனர்.

இவ்விதமாகப் பரமன் அதிககிருபையுடன் அருந்
தினவரைப்போலத் தொடப்பவுத்திரமாகிய சேடத்தைப்
பர்வதராசன் பத்தியுடன் ஒருபுறத்திற் பத்திரப்படுத்தி
னவனாய் புஷ்பஞ் சந்தனந்தாம்பூலமாதியான ஓமதிரவி
யங்களைச்சேகரித்தபின்பு பிரமதேவன் அதிகமகிழ்ச்சியு
டன் கர்த்தன் சமீபத்தில்வந்து விண்ணப்பஞ்செய்கின்ற
னன், ஆயிரம்பணாமகுடங்களைக்கொண்டு ஆதிசேஷன்
தாங்கும் பூமண்டலத் திருப்பவர்களும் தெய்வலோகவா
சிகளாதியர்விவாகஞ்செய்யுங்காலையில் வேதவிதிப்படிக்கு
ச் சடங்குகளைச்செய்து முடிப்பதுபோலவே தேவரீர் தி
ருமணச்சடங்கினைத்துவக்கி நடப்பிக்கவேண்டிய கருமங்
களை ஆரம்பிக்கின்றதற்குக் கடாட்சிக்கவேண்டுமென்று
போற்றுவதற்கிரங்கிச்சிறுநகைகொண்டு பிரமனே, அவ்
வாறேநடத்தக்கடவையென்று உத்தரவுதர, மறையவன்
மிகுத்தகளிப்புடன் வினாவில் ஓமகுண்டத்தருகிற்போ
ய்ப்பலதிரவியங்களையுஞ்சேகரித்துக்கொண்டுபிரகஸ்பதி
சுக்கிரன் மற்றுமிராநின்ற ரிஷிகள் பிராமணரைக்கூட்டி
க்கொண்டு அக்கினியை ஓமகுண்டத்திற்சேர்த்து மந்திர
பூர்வகமாய் சமித்துகளையும் ஆவின்நெய்பொரியிவற்றை
வேதவிதிப்படிக்கு பிராமணச்சடங்கின் முறையாக நட
த்திப் பூரணாகுதியைச்செய்தவுடன் அம்மையப்பனாகநி
ன்று உலகங்களனைத்தினையும்படைத்த பரமசிவத்தின்தி
ருவடிகளில்முதல் பிரமதேவன் வணங்கப்பின்பு மகாவி
ஷ்ணுவும் அதன்பின்பு தேவராசன் விண்ணவர்ரிஷிகள்
சேவித்தனர். இப்படிக்குப் பரமசிவத்தையும் உமையவ
ளையும் வழிபட்டபின்பு பேரறிவினைவாய்ந்த உருத்திர
கோடிகள் பரிசனராகிய பூதகணங்களும் வணங்கிப்போ
ற்றினர். முடிவில்பர்வதராசன்தன் பந்துவர்க்கங்களுடன்
திருவடிகளிற்பன்முறைபணிந்தனன். இவ்விதமாகப்பல
ருஞ் சேவித்துநிற்க பரமசிவனும்பார்வதியும் அவர்களி
டத்திற்கிருபாநோக்கம் பாலித்திருக்கின்றதருணத்தில்இ
மவான் இதுபக்குவமானகாலமென்றெண்ணி முன்னம்ப
ரமசிவந்தொட்டருளிய சேடமாகிய பழமுதலிய பிரசாத
ங்களைப்பகிர்ந்து கொடுக்கும்படிக்கு எனைந்து வேதங்கள்
தேடிக்காண்பரிய பரமசிவனது பாதோதகத்தினையும்மற்
றகனிவகைகளையுங் கிரமப்படிக்குப் பிரமதேவன்முதலா
ன தேவர்ரிஷிகள் மற்றையருக்குங்கொடுத்துவரப் பத்தி
விசுவாசத்துடன்கரங்களிலேந்திப்புசித்துப்பவுத்திராய்

ஆனந்தத்தை யடைந்தனர் ஆலகால விஷத்தினை உண்டு கண்டத்திற்றரித்த சிவநாதனுக்குஆராதித்தநிர்மலப்பொருள்களைப்பெற்ற சகலருந்தமதுபூர்வவினைத்தொடக்கனைத்தும்வேறறப்போக்கினமென்று தேகபரவசராய் ஆடிப்பாடிஜயஜயவென்று போற்றினர். அக்காலத்திற்சகலருங்கொண்ட மகிழ்ச்சியின்பெருக்கினை யிவ்விதமென்றுஎன்போலிகளாற் சொல்லிமுடிவதோ இப்படிக்குச்சகலருங்களித்திருக்கின்றகாலையில் மிகுதியாகநின்றசேடத்தினை மலையிறைவன்தன் தேவியுடன்சுற்றத்தாரும் அருந்திப்பாசபந்தங்களைநீங்கி மோட்சசாம்பிராச்சியத்தினைப் பெற்றவர்களைப்போல் அளவற்ற மகிழ்ச்சியில்மூழ்கிக் களித்தனர்.

கேட்டீர்களோ, சவுனகாதிரிஷிகளே, சகலருமிவ்விதமாக ஆனந்தமடைந்திருக்கின்றதருணத்தில்தன்கணவனைப்பறிகொடுத்துத் தவக்கோலங்கொண்டு துக்கசாகரத்தில்மூழ்கியிருந்த இரதிதேவியானவள் இதுதருணமென்றெண்ணிமெல்லக் கர்த்தன்திருமுன்வந்து சராசரப்பிரபஞ்சங்களை ஈன்றருளிய பார்ப்பதியாரைத் திருமணஞ்செய்து வீற்றிருக்கின்ற கோலத்தைத்தரிசித்துத் திருவடிகளிற் பன்முறைவணங்கிப்போற்றி கர்த்தனே, தேவரீர்திருக்கலியாணமகோச்சவத்தைக்கண்டு மகிழ்ந்திருக்கின்றவர்களைப்போலவே அடியாளுங் களிக்கத்தக்கதாக மங்கிலியபிட்சை தந்தாளவேண்டுமென்று சகலசுபங்களுக்குங்காரணமாகிய கணவனையிழந்து வாடுகின்றஇரதிதேவியானவள்செய்த விண்ணப்பத்தைத் திருச்செவியிலேற்றப் பிராணிகளனைத்தினிடத்தும் அந்தரான்மாவாகநின்று அவற்றின்நன்கு தீங்குகளைத்தெரிந்து அதற்குரியவினைப்போகங்களைக்கூட்டி நடிப்பிக்கும்பேரருளுடையசிவபிரான் இரதிதேவியினிடத்திற் கிருபையுற்று அம்மே மனம்வருந்தாதேயென்று ஆதரித்துமன்மதன்வருவதாகத் திருவுளத்தில்நினைந்தனர். தட்சணமேமகாவிஷ்ணுமுதலானவர்கள் பிரமிக்கும்படி துக்கித்திருந்த இரதிதேவியானவள்கண்டு கார்காலமேகத்தினைபெதிர்ந்த மயிலைப்போல மகிழ்ச்சியடைந்து துள்ளும்படியாகவும்அச்சபையினிடத்திற் கருப்புவில்லைக்கரத்திற்பற்றிக்கொண்டுஉம் உம்மென்றுஆர்ப்பரித்து அநங்கன்தோன்றினன். இவ்விதமாகப் பரமனருளினால் வெளிவந்த உருவிலியானவன் மூலகாரணியாகிய பார்ப்பதியாருடன்வீற்றிருக்கின்றபரமேஸ்வரனது பொற்பாதகமலங்களுக்குச் சமீபத்தில்நெருங்கிச் சிரத்திற்படுவதாகப் பன்முறைபணிந்துபோற்றிசெய்து கொடியபாதகன்முடித்த குற்றங்களைப் பொறுத்தருளவேண்டுமென்று வருந்துகின்றவன்மீதுகிருபாநோக்கம்பாலித்து சித்தசனே நாம்உன்னிடத்திற்கோபங்கொண்டாலன்றோ அதனைக்ஷமிக்கவேண்டியதுலட்சுமிகுமாரனே, மனம்நோகவேண்டாம் அக்கினிமயமாயிருக்கின்ற நமதுபார்வையினால் நீமாண்டுசாம்பலாயினை. அதுகாலையில் பதிவிரதையாகிய உன்மனைவி இரதிதேவியானவள் வருந்திக் கேட்டுக்கொண்டதற்கு நாம்அனுக்கிரகஞ்செய்தபடிக்கு அவளுக்குமாத்திரம் பழையபடிக்கு உருவமாய்விளங்கி மற்றவிண்ணவர் மண்ணவர்முதலானவர்களுக்கு அரூபியாகநின்று உன்பணிகளைச் செய்துவருவையென்று அவன்செய்தவினைக்கீடாகத் திருவுளம்பற்றிஅவன் அரசுரிமையையுஞ் சகலசிறப்பினையும்வலியினையுங்கடாட்சித்துமைதிமிர்ந்த நீண்டவிழிகளைப்படைத்த இரதிதேவியுடன்உன்னிடத்தைச்சேர்ந்துவாழக் கடவையென்றுவிடைதந்தபோதுமன்மதன்உமாபரமேஸ்வரனை வணங்கிப்போற்றித் தன்தேவியுடன் அதிவேகமாய்ப்பழையபடிநகரத்திற்சேர்ந்தான்.

இப்படிக்குமன்மதனும் இரதிதேவியும்மனச்செருக்குடன் வங்கணமாகச்சென்றபின்பு இந்திரநீலரத்தினவகைகளினாற்சோடித்திராநின்ற சிங்காதனத்தில்வீற்றிருந்தசிவபிரானானவர் பார்ப்பதியாருடன்பீடத்தைவிட்டிறங்கித் தமதுதிருவுருவினைப்பெற்ற சிறந்தஉருத்திரகணங்கள் தேவர்கள்முனிசிரேஷ்டர்முதலாகிய சனங்கள்போற்றிச்சூழ்ந்துவரப் பூதகணங்கள் பலவாத்தியங்களையும்மங்களகரமாகத் தொனித்துச்செல்ல, உலகங்களில்வாசமாகிய உயிர்களுக்குயிராகநின்று நடிப்பிக்கும்நடேசர்கெம்பீரநடையினையுடைய ரிஷபவாகனத்தின்மீது ஆரோகணித்துத் திருக்கரத்தினைநீட்டிப் பார்ப்பதியாரையெடுத்து இடப்புறத்திற்சேர்த்தணைத்துக்கொண்டுவாகனத்தை நடத்தி தேவர்கள் பழையபடிக்குவரன்முறையாகச்சூழ்ந்து பணிவிடைகளைச்செய்துவரவும் கணாதிபதிகள்நெருங்கித் துதித்துப்போகவும் பொன்மயமாகிய இமயகிரியினது எல்லையைக்கடந்து சந்திரிகையைவீசிவிளங்கும்வெள்ளியங்கிரியைச்சேர்ந்து திருமாளிகைப்புறத்தில் வந்தவுடன் மகாவிஷ்ணு பிரமதேவன்தேவேந்திரன்மலையனையன் தேவர்கள்முனிசிரேஷ்டர்முதலானவர்களிடத்துகிருபாநோக்கம்பாலித்து உங்கள்பதவிகளிற்போய்ச்சுகசீவிகளாய்வாழக்கடவீரென்று பிறப்பிறப்பில்லாதபரமசிவந்திருவுளம்பற்றிமேலுங்காலாக்நியுருத்திரன், கூர்மாண்டேசன், ஆடகேசுரன், வீரபத்திரக்கடவுள்முதலாகிய தமதுபத்தரான உருத்திரகோடியருக்குங் கணத்தலைவருக்கும் பூதவீரர்களுக்கும் விடைதந்தருளியபின்பு சிவபிரானானவர் ஒப்பற்ற தமதுதிருமாளிகையைச்சேர்ந்து நந்திவாகனத்தின் பிடரியினின்றுமிறங்கித் தமதுதேகத்தில் அர்த்தநாரியாகவிளங்கும் உமையவளுடன் தமதுஅரண்மனையிற்பிரவேசித்துச் சபாமண்டபத்தில் நவரத்தினமயமாகத்தோற்றுகின்ற சிங்காதனத்தில்யதாப்பிரகாரம் தேவியாருடன் வீற்றிருந்தனர் அடியருக்கெளியவராகியபரமசிவம் பராசத்திசமேதரா யிருந்தகாலத்திற் கூட்டுறவின்றி வேற்றுமைப்பட்டு வாடியிருந்த பிராணிகளனைத்துஞ் சிவமுஞ்சத்தியுஞ்சேர்ந்த மகிமையினாற்காமவின்பந்தலைக்கொண்டு போகங்களைஒருமைப்பட அனுபவித்துஆனந்தக்களிப்பிலாழ்ந்து வீறிவிளங்கியது.

## திருவவதாரப்படலம்.

பற்பகலினையவாற்றும்படர்தலும்பின்னோர்வைகன்
முற்படுமயன்மால்வேள்விமுதலவன்றிசைகாப்பாளர்
சொற்படுமுனிவர்வானோர்யாவருந்தொல்லைமேரு
வெற்பினிற்குழுமிச்சூரான்மிகமெலிந்திரக்கிச்சொல்வார்

கேட்டீர்களோ, நைமிசாரணியவாசிகளே, இதுபரியந்தம்உமையவள் திருக்கலியாணச்சிறப்பினைக் கேட்டீரன்றோ, இனிஎமதையனாகிய சிவசுப்பிரமணியதேவர்திருவவதாரச்சரித்திரங்களைப் பேசுவோம்.—பரமசிவம்பராசத்தியுடன் திருக்கயிலாயமாளிகையில் வீற்றிருந்தபின்புபலகாலம் மன்னுயிரனைத்தும் வீறிவிளங்கி வருகின்ற

காலையில் ஒருதினம்சிருஷ்டிகர்த்தனாகிய பிரமதேவன்மகாவிஷ்ணுதேவேந்திரனாதிய திக்குப்பாலகர்தவங்களிற்சிறந்த ரிஷிகூட்டங்கள் மற்றுமிராநின்ற தேவர்கள்முழுமையுஞ்சூரபதுமன் உபத்திரவத்துக்கஞ்சித் தமதுபதவிகளையிழந்துமகம்மேருச்சாரலில்வந்து ஒளித்திருப்பவர்கள்தம்மில்யோசிக்கின்றனர். தீனசரண்ணியனாகியசிவபிரானனவர்பலஅண்டங்களோடு இவ்வுலகினையுங்கொடியபாதகராகிய அவுணருக்குச்சுதந்தரமாகக் கொடுத்துவிட்டுநமக்குத்தீராத துன்பத்தினையுண்டாக்கித் தாம்யோகியரைப்போல மவுனதீட்சை வகித்திருந்தகாலத்தில்நமக்குநேர்ந்தவருத்தங்களைப் பொறுக்கமாட்டாமல்திருக்கயிலைக்குப்போய்எல்லோருக்குஞ்சம்பவித் திருக்கின்ற குறைபாடுகளைச் சொல்லி முறையிட்டகாலத்தில்நமக்கடுத்ததுயரத்துக்கிரங்கிக் கடாட்சித்தபடிக்கு இக்காலத்திற்றிருக்குமாரனைத் தந்து நமது சங்கடத்தைப்போக்கி ஆளுந்தயாரசத்தினால் மலையிறைவன் புத்திரியாகியபார்ப்பதியைத் திருக்கல்யாணஞ்செய்தவர் தாம்வாக்குதத்தஞ் செய்தபடிக்குப் பிள்ளையைத்தராமல் சும்மாவிருப்பதுஎன்னகாரணம் மேலுங்கர்த்தன் குணாதிசயங்களை நிதானிக்குமிடத்தில் விருப்புவெறுப்பின்றியாவரிடத்தினும்ஏகபட்சமாய் அவரவர்செய்த நல்வினை தீவினைகளைச் சீர்தூக்கிப்பார்த்து அவைகளுக்கேற்ற பலப்பிராப்தியைக்கடாட்சித்துஉலகங்களை நடிப்பிக்குஞ் சற்கருமியாகக் காணுகின்றது இத்தகையசர்வக்கியனை நாம்விருதாவாய் வெறுத்துப்பேசவது தகாதனவாம் முக்கியமாகியதவங்களைச்செய்து அவனருளைப்பெறாமல்குற்றங்களைத்தேடிக் கொண்டனமென்று நம்மையேநொந்து கொள்ளுவது நியாயமாகவிருக்கின்றது அப்படிக்கிருந்தபோதினும் தேவதேவனாகிய பரமசிவத்தின் திருவடிகளைப்போற்றிச் சரணடைவோமாகில் நன்மைகளனைத்துங் கிடைத்து வாழலாகுந் தீங்குகளனைத்தும்வேருடன்கெடுவதற்கையமில்லைஇஃதுஉண்மையாதலால் ஆயிரங்கிரணத்தினையுடையசூரியனுஞ்சோடச கலைகளைப்பெற்ற சந்திரனும் வலம்வரத்தக்கபெருமையினைவாய்ந்த திருக்கயிலாயத்தில் வீற்றிருக்கும் எமதுகர்த்தனுக்குஇன்னமொருவிசை நாம்படும் வருத்தங்களைவிண்ணப்பஞ்செய்து கொள்ளும்பொருட்டுப் போகவேண்டும் இதன்றியில்முக்கியமாகியநன்மைவேறில்லையென்று நிதானித்தனர், அத்தருணத்தில் பொன்னையொத்தமகரந்தங்களை யிறைக்குந்தாமரைப்பீடத்தினனாம்பிரமதேவன் தேவர்களைப்பார்த்துச்சொல்லுகின்றான்.

நம்முடைய சபையிலிப்போது தீர்மானித்த காரியந்தகுதியே ஆயினும் முந்தி ஒருகாரியத்தினைச்செய்யவேண்டியிருக்கின்றது அஃதென்னையெனிற் சிவபிரான் இக்காலத்தில் என்ன அவசரத்திலிருக்கின்றனர், அதைவிசாரித்துக்கொண்டு போவது நன்காதலால்ஒருதூதனைச்செலுத்தி யறியவேண்டுமெனச் சொல்ல அதற்குச் சகலருமிசைந்து இதற்குயாரை அனுப்பலாகு மென்று ஆராயுமிடத்தில் பிரமதேவன் அக்கூட்டத்தி லிருக்கின்றவாயுதேவனைப் பார்த்துச் சொல்லுகின்றான் குமாரனே உன்வல்லபத்தினைஎன்னவென்றுசொல்லுவேன் பூர்வத்தில்ஆதிசேஷனுக்கும் உனக்கும் வாதுநேர்ந்தகாலத்தில்அவனாற் சூழப்பட்டிருந்த மகம்மேருவினது சிகரங்கள் ஆயிரத்துள் ஒருமூன்றை உன்வேகத்தினாற் பறித்துப்பிரசண்டவாயுவும் அஞ்சிவாடத் தக்கதாகச்சமுத்திரமத்தியிலெறிந்தனை உன்வல்லபம்உனக்கே தெரியவில்லை ஆதலாலிக்காலத்தில் நமதுகுறைகளை நிவாரணஞ் செய்துகொள்ளும்பொருட்டு மேல்நடக்கவேண்டிய காரியங்களைக்குறித்து விண்ணப்பம் பண்ணவேண்டுவதற்காக நீமுந்தித் திருக்கயிலாயத்துக்குப்போய்ச் சந்திரசடாதரக் கடவுளாகியசிவபிரானிருக்கின்ற அவசரத்தினைத்தெரிந்து வருவையாகில் அதற்குத்தகுதியாக யோசித்து நடந்துகொள்ளலாகுமென்று ஆயிரமிதழ்களைப் பெற்றதாமரை மலர்ப்பீடத்தையுடைய நான்முகன் குறித்தகாலத்தில் வாயுதேவன் திடுக்கிட்டுச்சொல்லுகின்றனன், சிலதினத்துக்கு முன்னங் கருப்புவில்லைப் படைத்த மன்மதன் எதிர்த்தமாத்திரத்திற் சாம்பலாகவிழித்த தேவதேவனிடத்துக்குப்போவது யாவருக்கும் அரிதாகும் தேவரீர்கட்டளையின்படிக்குப் போவேனாயினும் அடியேனுக்குத் துன்பம் நேருவதன்றியிற் காரியசாதகமாவது அரிது இதனை நினைத்தமாத்திரத்தின் மனம் நடுநடுங்குகின்றது ஆதலால்ஒருபோதும் இக்காரியத்துட் பிரவேசிக்க மாட்டேன் போனபோதிலும் முடியாதென்று மறுத்தவாயுவைப் பிரமன்பரிவாகப்பார்த்து நீபிரமிக்கவேண்டாம் எவ்விடத்துந்தடையின்றி உலவுகின்றவன் நீஒருவனல்லாமல் இதனைமுடிக்கவல்லவரையித்தேவகூட்டத்திற்கண்டதில்லை இஃதன்றியுஞ்சிலநீதிகளைக் கேட்பாயாகத்தம்மைபடுத்தவருக்குதவிசெய்வதே பெரிதாய் நினைந்திருக்கின்றவருந் தேகமென்றுகேட்டவருக்கு மறாமற்சகலவளனுந்தரவல்லதியாகிகளும்அளவற்றதவங்களைச்செய்து கைகூடியமகத்துக்களும் சமர்க்களத்திற் றடைபடாமல் உயுத்தஞ் செய்யத்தக்க தீரம்பெற்றவீரரும்நற்காரியங்களைச்செய்யப் பிரவேசித்தபோது மற்றொருபிரயோசனத்தையும் அவர்களாற்பெறநினையாமல் முடித்துத்தருவர் வருத்தத்துக்கும்அஞ்சார்கள்பிராணன் போகவரினும் அதைப்பெரிதாக வெண்ணார்கள் உதவிசெய்வதே நன்மையென்று மகிழ்வர் ஆதலால் எங்களனைவருக்கும் பிராணபதமாகிய சகாயத்தினை முடிக்கும்பொருட்டு ஐயனே அவசியம்போகவேண்டுமென்றுஅவனைப்புகழ்ந்து மேலும் அளவற்றநீதிகளைப்போதிக்கவும் மறுப்பதற்கு நாவெழாமற் சம்மதப்பட்டுஅக்கினிதேவனுக்குச் சகாயனானவாயுவானவன் பிரமனைவணங்கி விடைபெற்றுப்போய்த் திருக்கயிலாயத்தைச்சேர்ந்தவுடன் அவ்வரையின் சாரலிற் கல்லென்னும் ஓசையுடன் பெருகுகின்ற குளிர்ந்த அருவிசலத்திற்படிந்துபக்கங்களிலிராநின்ற பூங்காவில்உலவிய பரிமளங்களைவாரிக்கொண்டு மந்தமாருதஅசைவாய் மெல்லென்று இரத்தினமய மாகப்பிரகாசித் திருக்கின்ற நகரத்திற் பிரவேசிக்கச் சமீபித்தபோது பலகோடி சிவகணங்கள் சூழ்ந்து போற்றப்பொற்பிரம்பினைக் கரத்திற்கொண்டு முதற்கோபுரவாயிலின்கண்வீற்றிருந்து ஆணை ஆக்கினையினைச்செலுத்தும் பெருமையினைப்பெற்றநந்திதேவர் வாயுதேவன்வருங்காரணத்தினைத்தெரிந்து அதிககோபங்கொண்டு சிறிதுஆரடாபயமின்றி வருபவனென்று அதட்டிய மாத்திரத்தில் மேகத்தினிடத்துண்டாகுமிடியின் முழக்கத்தினைக்கேட்ட சர்ப்பங்களானவைபடங்களைமறித்துப்புரண்டுவாடுவதைப்போல மீறிவருகின்ற வாயுதேவனானவன் வலியொடுங்கிமனம் நடுங்கித் தாபரிக்கப்படாமையால் கைகால்களோய்ந்து நிலத்தில்விழுந்து கிடந்திருந்து சற்றுநேரத்திற் றெளிவுண்டாய் என்னகாரியத்துக் குள்ளாய்வந்தோமென்று அதி

கபயத்துடன் கிலேசித்து மெல்லவெழுந்து தன்சுயரூபத்தினைக்கொண்டுவந்து வீரக்கழலணிந்தநந்திதேவர் பாதாரவிந்தங்களிற் சேவித்தெழுந்து வாயினைப்பொத்திக்கொண்டு விண்ணப்பஞ் செய்கின்றான்.

ஓ நந்தியெம்பெருமானே அடியேன் அபராதங்களைக்ஷமித்து என்வரவின்காரணத்தைக்கேட்டருள்க சூரனுக்குப்பயந்து மகமேருச்சாரலில்வந்து ஒளித்திருக்கின்ற மகாவிஷ்ணு பிரமதேவன் தேவேந்திரன்முதலாகியவிண்ணவர்களனைவருங்காளகண்டமூர்த்தியினது சந்நிதானத்துக்குவந்து தமதுகுறைகளைவிண்ணப்பஞ் செய்துகொள்ள நினைந்து அதற்கு முன்னஞ்சிவபிரானிருக்கின்றசமயத்தைத் துரிதமாகப்போய் தெரிந்துவருவதாகக்கொடிய பாதகனாகிய அடியேனுடன்சொல்லினர், அதைக்கேட்டவுடன் தேகமெங்கும் வியர்க்கப் பயந்தவனாய்ஆலகாலவிஷத்தினையுண்டு கண்டத்திற் றரித்தாண்டருளியபரமசிவத்தின் திருவிளையாடலின் திறத்தினையிவ்விதமென்று ஒருவராலும் நிதானிக்கக்கூடாது அப்படிச்சிருக்கத்தினனாகியஎன்னால்அளக்கப்படுவதோவென்றுபலவாகச்சொல்லித் தடுத்த போதினும் தங்கள்வருத்தங்களைக் காட்டி என்னைவெறுத்துக்கொண்டு பயமுறுத்தித் தங்கள்வல்லபத்தினால் பலவத்காரமாய் உடன்படுத்தி என்னை அனுப்பினார்கள் அடியேன் என்னசெய்வேன் தடுத்தால் என்னசெய்வார்களோவென்னும் ஏக்கத்துடன்புறப்பட்டு அஞ்சி அஞ்சி என் ஸ்வரூபத்தை மாற்றி தென்றற்படிவத்தைத் தாங்கி மெல்லமெல்லவந்தேன் என்னவிளையவிருக்கின்றதோ வென்னுங் கவலையிற்பட்டவனாதலால்இக்காரியத்தைத்தேவரீருக்குமுந்திவிண்ணப்பஞ் செய்துகொள்ளவேண்டுமென்பதை மறந்தேன் பேதை அறிவினையுடைய நாயினேன் பிழையினை கர்த்தனேக்ஷமித்துஇரட்சிக்கவேண்டும் மேலும்அளவற்ற அவுணவீரர்கள்சூழ்ந்துபோற்ற வீற்றிருக்கின்றவொப்பற்ற வீரபராக்கிரம சாலியாகியசூரபதுமனிட்டதகாதபணிவிடைகளைச்செய்துமானமழிந்து மதிகெட்டு வருந்திவாடுகின்றவனாதலால் முந்தியிதனைமுடித்துப் போகவேண்டுமென்னுங் கிரமங்களொன்றுந்தோற்றவில்லைபுத்திமயங்கினேன் நானொருவன் மாத்திரமல்லஇவ்வாறே மற்றையதேவர்களும் மதிமயங்கிவாடுகின்றனர் பெருமைபொருந்திய கணாதிபதிகளில் முதன்மையாக விளங்குகின்ற நந்திகேஸ்வரரே, தேவரீர் கோபத்துக் கிலக்கானவர் ஒருவருமில்லை ஆதலால் சிறியனாகிய என்னிமித்தஞ்சிற்றங்கொள்ளுகின்றீரோபொறுத்தருளவேண்டுமென்று மிகவும்வருந்திக்கேட்டுக்கொள்ள எமதிறைவனாகிய நந்திதேவர் மீறி யெழுந்தகோபத்தினைத் தணிந்து வாயுதேவனே, போகவிருந்த உன்பிராணனைத்தந்தனம் இனியிங்கு நில்லாமல் சீக்கிரத்தில்ஓடிப்பிழையென்று செலவுகொடுக்கப் பெற்று வாயுவானவன் பேரறிவினைவாய்ந்த நந்திதேவர்திருவடிகளிற் பலதரம்வணங்கிஒப்பற்ற திருக்கயிலாயத்தைக்கடந்துமகமேருச்சாரலிற் கூடியிருக்கின்றதேவர்கள் சமுகத்திற்சேர்ந்து திருமால்பிரமதேவன் திருவடிகளிற்பணிந்து நின்று சுவாமிகளே தங்கள் கட்டளையின்படிக்குத் துணிவுகொண்டுபோய் வெள்ளியங்கிரியினைச்சேர்ந்து மந்தமாருதவடிவுடன் மெல்லமெல்ல ஆலயத்துக்குள்போவதற்கு யத்தனப்படும்போது நான்பட்ட பாட்டையென்னசொல்வேனென்று முதற்கோபுரவாயிலினிடத்தமர்ந்து போற்றுகின்ற நந்திதேவர் காவலின்வல்லபத்தினையும் மற்றும்அவ்விடத்தில்நடந்தசரித்திரங்களையும்சவிஸ்தாரமாகச்சொல்லிக்கர்த்தர்களே யித்தினம்மீளத்தாய்வயிற்றிற்பிறந்ததாக நினைந்து தப்பிப்பிழைத்துவந்தேன் அம்மம்ம அந்தநந்திதேவர் கோபப்பெருக்கினையென்னசொல்வேன் நினைத்தாலும்மனம் நடுங்குகின்றதென்று வாயுதேவன்விண்ணப்பஞ்செய்த காரணங்களைச் செந்தாமரைக் கண்ணனாகிய மகாவிஷ்ணுவும் மலரயனும் இந்திரனுங்கேட்டுஅதிகவிசனங்கொண்டவர்களாய் மீளவும் யோசித்து ஒருதீர்மானப் படுத்திக்கொண்டு மற்றதேவர்களனைவருங் கேட்கச்சொல்லுகின்றனர் எமதிறைவனாகிய சிவபிரானிருக்கின்ற நிலையினைத்தெரிந்து வரும்படிக்குவல்லமையிற்சிறந்தவாயுதேவனைவேண்டி அனுப்பினோம் அவனோநந்திதேவர்ஆக்கினைக்குப்பயந்து தப்பித்துக்கொண்டுயிருடன் இவ்விடம்வந்துசேர்ந்தான் ஆதலாலினியாதொரு கியாபகமுங்கொள்ளாமல் நாம் எல்லோருந் திருக்கயிலாயத்துக்குச் சென்று கர்த்தன் சந்நிதிக்குப்போகத்தக்ககாலங்கிடைத்தபோது பரமனைவணங்கிச் சூரனால்நமக்குநேர்ந்தகுறைபாடுகளை விபரமாக விண்ணப்பஞ்செய்து கொள்ளவதே உத்தமமாக விருக்கின்றதென்று தெரிவிக்கச்சகலரும்ஏகமுகமாய் இதுதகுந்தகுமென்று ஒருமைப்பட்டனர்.

இவ்வாறுமகாவிஷ்ணு பிரமதேவன் முதலிய தேவர்கள் அனைவருமிசைந்தவுடன்பொன்மலையாகிய மகம்மேருவைக்கடந்துபோய் வெள்ளியங்கிரியின்மீதுவிளங்குந்தெய்வீகம்பொருந்திய ஆலயத்துக்கெதிரிற்சேர்ந்துசிங்காதனத்தில்வீற்றிருக்கும் நந்திதேவனைக்கண்டு வலம்வந்து சேவித்துப் போற்றிச்சொல்லுகின்றனர், எமதிறைவனாகியநந்திதேவரே கிருபையுற்றுக்கேட்டருள்களங்களுக்கடுத்த துன்பங்களனைத்தினையுந் திருவுளத்திற்கொண்டிரங்கி தேவாதிதேவனாகிய சிவபிரானுக்கு எங்கள்வரவினைத் தெரிவித்து விடைபெற்றுவந்து சீக்கிரத்தில்எங்களைப்பரமன் திருமுன்பு விடவேண்டுமென்று பலஉபசாரவார்த்தைகளைச்சொல்லி வேண்டுவதற்கிரங்கித் தேவர்கள்கூட்டத்தினை அத்தலத்திலிருக்கக்கட்டளையிட்டு ஆலயத்தினுள் பிரவேசித்துக்கற்றைக்கற்றையாக நீண்டிருக்குஞ்சடாமண்டலதாரியாகிய முக்கணெம்பிரான் பொற்பாதகமலங்களில்வணங்கிப்போற்றிக்கர்த்தனே தேவரீர்திருவடிகளைத் தரிசித்துப்போவதாக இந்திரன் முதலிய தேவர்கள் மகாவிஷ்ணு பிரமதேவனாதியர் கடைவாயிலினிடத்தில்வந்திருக்கின்றனரென்றுஅறிக்கையிட்டகாலத்திற் சந்திரசடாதர மூர்த்தியாகிய சிவநாதன்நந்திதேவனைக்கிருபையாகப்பார்த்து அவர்களனைவரையும் அழைத்துவரக்கடவையென்று திருவாய் மலர்ந்தருளியவுடன் தேவாதிதேவன் திவ்வியசரணாரவிந்தங்களில் நமஸ்கரித்துச் சீக்கிரத்திற் திரும்பி மகாவிஷ்ணு பிரமதேவன்முதலியதேவர்களைகண்டு எமதிறைவன் கட்டளையாயிற்றுவாருமென்று நந்திதேவர் சொன்னமாத்திரத்தில் மேககர்ச்சனைக்கு அஞ்சாதுகளித்திருக்குஞ் சாதகப்பட்சிகளைப்போலப் பிரமாதி தேவரனைவருந் தேவதேவோத்தமனாகிய சிவபிரான் சந்நிதானத்தைநோக்கிச்சென்று பராசத்தியிடப்பாகத்தில் விளங்கச் சிங்காதனத்தில் வீற்றிருக்கின்றஎமதையன் திருமுன்சேர்ந்து பொற்பாதகமலங்களிற்பன்முறைபணிந்தெழுந்து பத்திவிசுவாசத்துடன்போற்றுகின்றனர். ஓகர்த்தனே தேவரீர்மகிமைகள் எப்படிக்கொத்

தனவென்றால் விழிகளின் தோற்றத்துக்கு அகப்படாதவராய் மனோவாக்குக்கெட்டாதவராய்த் தியானித்தறியப்படாதவராய் இவ்விதநோற்றத்தினையுடையவரென்று பகுத்தறிவதற்குக்கூடாமையாய் விளங்குமிறைவனேதேவரீர் நடப்பிக்கும் திருவிளையாடலின்மகிமைகளை எங்களால்அறியப்படவில்லை சத்திசிவமாகவுஞ் சதாசிவமாகவும் இவ்விரண்டுக்கும் மேற்பட்ட பரசிவமாகவும் இதற்குப்புறம்பாகவிளங்கியும்அச்சந்நிதிப்பெருமையினாற்சராசரப்பிரபஞ்சங்களைப் படைத்தும் இவ்வித நாடகத்தைசெய்யும் மகத்துவமுள்ள கர்த்தனே தமதுலீலாவினோதப் பெருக்கினை ஓதற்கரிய சிறந்தவேதங்களாலும் நிதானிக்கக்கூடுவதோ நாமரூபமற்று எங்கும்பரி பூரணமாகநிறைந்திருக்கின்ற பரம்பொருளே முற்குறித்தகாரணங்களையோசிக்குமிடத்தில் உலகங்களிற் பரவியிருக்கின்றபிராணிகளுக்குமோட்சசாம்பிராச்சியத்தைக் கடாட்சிக்கக்கிருபையுற்றதல்லதுவேறுமொன்றுண்டோ அப்படிக்குத்தோற்றிய உயிர்களனைத்துந் தேவரீர் கிருபையில்லாதகாலத்தில்யாதொருதொழிலையுஞ்செய்யவறியாமல்மயங்கியிருக்கும் ஆதலால்விருப்புவெறுப்பற்றதேவரீர்எவ்விதமாகஇவ்வுலகங்களைநடிப்பிக்கின்றீரோ தோற்றவில்லைமுதன்மைசச்சொல்லாநின்றவஸ்துக்களில் முந்திப்பெறலாகுமென்றுநினைப்போமாகில்கடைப்பட்ட பொருள்களினுங்கடையாகவசனிக்கவும்விளங்குவீர்அந்நிலைகளில் மாத்திரமிருக்கின்றீரெனக் குறிக்கலாகுமெனினும் மற்றவைகளனைத்தும்உமதுசெயலல்லதுவேறுமுண்டோ ஆதலால்என்னவென்றுதேவரீர் குணநிசயங்களைவர்ணித்துத்துதிக்கின்றதுவினைப்போகங்கள்முதலிய கருமங்களனைத்தும்நீர்கிருபைகூர்ந்துநினைக்க அக்கட்டளையின்படிக்குநடக்குமென்றுசொல்லுவோமாகில் ஆதியிற்கொடியபாதகர் வாசமாகவிருந்ததிரிபுரங்களைச்சாம்பலாக்கியதும்மன்மதனை நுதல்விழியினலெரித்ததும்உமக்கொருபுகழின்பாலதோ, ஆதியில்எங்களைத்தமதுஅம்சையிற்படைத்தருளிஎங்களுக்குத்தகுதியாகியஅரசுரிமையையுங்கடாட்சித்துப்பரிபாலனஞ்செய்யவும் விதித்தீர்மேலும்எங்களுடனொருவனுகவின்று அசைப்பிக்கின்றீர். இத்தகையமகிமையினையுடைய தேவரீருடையகாரணங்களைஎங்களாற்றெரிந்துபோற்றவும்போதுமோவென்றுஇவ்வாறுதேவர்களனைவரும்அன்புமிகுதியினல் துதிக்கின்றபோழ்து காளகண்டமூர்த்தியாகிய சிவநாதன்அவர்களைக்கிருபையாகப்பார்த்து ஓதேவர்களே, நீங்கள்மிகவும்நொந்து மனம்வாடிவருந்தினீர்கள் ஆதலால் இத்தருணத்தில் உங்களுக்குவரங்கள் ஏதேனுந்தரவிருப்புற்றனம்வேண்டியதைக்கேட்டுக்கொள்ளக்கடவீரென்று பரமன்திருவுளம்பற்றியகாலத்தில் தேவர்களனைவரும் ஒருமுகமாய் விண்ணப்பஞ்செய்கின்றனர்.

அடியோங்களனைவரும் இத்தினவளையிற் கொடிய செய்கைகளையுடைய அவுணவீரரால் படாதபாடுகளும் பட்டோம், அவ்வருத்தங்களைப்போக்கித் தேவரீர்பூர்விகமாக எங்களுக்குக் கடாட்சித்திருக்கின்ற செல்வங்களைமனக்கவலையின்றி அனுபவித்து வீற்றிருப்பதாகத் தம்மிடத்தில் ஒருவரம்பெறவேண்டினோம் அதனையும் விண்ணப்பஞ்செய்துகொள்ளுவோம் பலவகைப்பட்ட சீவராசிகளைப்பெற்றுந் தளராதகொங்கைகளைப்பெற்ற கன்னிகையாகியபார்ப்பதியாளைத் தேவரீர்திருக்கல்யாணஞ்செய்தகாரணம் அவளிடத்திலொப்பற்ற திருக்குமாரனைப் படைத்துத் துக்கசாகரத்திற்பட்டுவாடுகின்றஅடியோங்களைக் கரையிற்சேர்த்து ஆளுகின்றதற் கேதுவன்றோ,மேலும்இத்தகையதிருவிளையாடல்களைத் தேவரீர்நடிப்பிக்கின்ற காரணங்களனைத்தும் அதற்குரித்தாகவே தோற்றுகின்றது. இஃதன்றியும் ஆதிமத்தியாந்தமும் அருவும், உருவும், ஒப்பும் ஏதுவும்போக்குவரவும்இன்பதுன்பமுமில்லாமல் சதுர்வேதங்களுக்கும்எட்டாதவராகவிளங்கும் நிர்மலக்கடவுளே, ஒருசத்புத்திரனைத் தேவரீருக்கொப்பாகஉம்மிடத்திற்படைக்கவேண்டுமென்று பலதரம்வணங்கிக் கேட்டுக்கொள்ளும் பிரமதேவன்முதலாகிய தேவர்கள் விண்ணப்பங்களைக்கேட்டருளி அவர்களைப்பயப்படாதீர்களென்று ஆதரித்த உங்கள்மனக்கவலைமுற்றும் பரிகரித்துச் சுகத்திலிருத்தவல்லதிருமகனைப்பெற்றுத் தருவோமென்று திருவாய்மலர்ந்தனர். அதன்பின்பு சற்றுநேரத்தில் அந்திவண்ணனாகிய பரமேஸ்வரர்கிருபையுற்றுபேரறிவாளரால் தியானிக்கப்பட்டதமதுபழையகோலமாகிய சண்முகங்களுடன்தோற்றி எதிரிலிருக்கின்றமகாவிஷ்ணு முதலாகியதேவர்களனைவருந்தமதுமனந்திடுக்கிட்டு அற்புதத்தராய்க் கர்த்தன்கிருபையின்பெருக்கினைநினைந்து நினைந்துபுகழ்ந்திருக்கின்றகாலத்திற்பராபரமூர்த்தியானவர் தாம்வகித்திருக்கின்ற திருமுகங்களாறினும் பிரகாசித்திருக்கின்ற நுதல்விழிகடோறும் ஒவ்வொருஅனற்பொறியினைஉண்டாக்கினர். இவ்வாறுபரமசிவத்தினது நெற்றிவிழிகளிற்பிறந்த பொறிகளாறும்பிரமதேவன்முதலானவர்கள் நெருங்கப்படாமையாக அதிகசுவாலையை வீசிப்பூமண்டலம் அண்டகோளகைமுற்றுஞ்சோலெனப்பரவிச் சங்குசக்கரந்தண்டங்கட்கங் கேதாண்டமென்னும் பஞ்சாயுதபாணியாகிய மகாவிஷ்ணு பிரமதேவனிவர்களாற்கணித்தறிவதற்கரிய சோதிமயமாகிய பொறிகளானவைஆலசாலவிஷமும்வடவாமுகாக்கினியும் ஏகமாய் உலவுவதைப்போல் பூமண்டலவெல்லைமுற்றும்வீறிவானவெல்லையைமறைத்து மூதண்டகோளகைபரியந்தம் பரிபூரணமாய்நிறைந்தும் பார்ப்பதியைவாமபாகத்திற்கொண்டருளிய சிவபிரான்கரத்திலேந்திய மழுவானதுஊழிக்காலத்தில் வெளிப்பட்டுஉலகங்களனைத்தினையும்நாசஞ்செய்துநிறைந்ததையொப்பாகவுங்கர்த்தன் நுதல்விழியிற்பெருகிய அனலானதுசகலவஸ்துக்களையும்வாட்டிப் புவனங்களனைத்தினும் ஓங்கின்றது. இவ்விதமாகத்தழற்பிழம்பானவை மேலோங்கி எழுந்தபோது அகிலசராசரங்கள்முற்றும் நிறைந்துலவும் பிரசண்டவாயுமுதலாகவேகமாறிக்குன்றியவும் மேலும்அவற்றின் வெப்பத்தினல் அலைகளைமோதிச்சுருட்டுஞ் சத்தசாகரங்களுங்கொதிப்பெடுத்துச்சுவறி அடங்கவுஞ்சராசரப்பிரபஞ்சங்களைத் தகிக்கவல்ல வடவாமுகாக்கினியுந்தன்வெப்பமும்வீறுப்பும்அடங்கிமங்கவும் பூமிமுற்றுங்கரிந்துபொரிந்துவெடித்துத் துகளெழவும் குலகிரிகள்முதலியபர்வதங்களானவைபடபடவென வெடித்துக்குன்றிக்குறையவும் ஆதிசேஷன்முதலியநாகங்கள் அச்சுடுகையைப்பொறுக்கப்படாமையால்நெளிந்துபுரண்டு பெருமூச்செறிந்து விஷங்களைக்கக்கிக்கொண்டுசோரவும் அஷ்டதிக்குகளைத்தாங்கின்ற அயிராவதமுதலாகியயானைகள் வாய்விட்டரற்றித்தியங்கிஓடவும் அண்டங்களில்அடங்கியிராநின்ற உயிர்த்தொகைகளானவை நடுநடுங்கிப்படாதபாடுகளைப்பட்டு

த்திகைக்கவும் இவ்விதஅனர்த்தங்களைச்செய்யத்தொடங்
கியது.

கேட்டீர்களோ, சவுனகாதிரிஷிகளே, ஆதியந்தமறி
யப்படாத பெருமையினையுடையபரமசிவத்தின்விழிகளி
னின்று பெருகியதீயானது எவ்வுலகங்களுக்கும் பேரரு
ளைக்காட்டியிரட்சிக்க உதித்தகாரணத்தினுல்யாதொருபி
ராணிகளையும் வதைசெய்யாமற் சராசரங்களைப்பயமுறு
த்தி அலைத்தது இச்சரித்திரம்நிற்க, சிவபிரானிடப்புறத்
தில் வீற்றிருந்த பார்ப்பதிதேவியும் அவ்வனற்பொறியி
னது வெப்பமானதுதாக்கச் சரீரமுற்றினும்வியர்த்துமன
ங்கலங்கிச் சிங்காதனத்தினைவிட்டிறங்கித் திருவடிகளிற்
சூழ்ந்திருந்த பாதசரங்கள் சத்தித்து ஒன்றுடனென்று
தாக்கத்தக்கதாகத் தாம்வாசஞ்செய்யும் அரண்மனையை
நோக்கி ஓடினள். அத்தருணத்தில் எதிரிலிருந்தமகாவி
ஷ்ணு பிரமதேவன்முதல்ய தேவர்கள் அனைவரும் அத்
தழற்பிழம்பின் வீக்கத்தைக்கண்டு அஞ்சினவர்களாய்ப்
பூர்வத்திலெழுந்த ஆலகாலவிஷத்தின்கொடுமையினுற்ப
ட்ட துன்பத்தினைப்போலவே ஒருவருடன் ஒருவர்கூடா
மல் தனித்தனியேபுறங்கால் புட்டத்திற்முக்க வேகமாய்
ப்பலதிக்குகளினுஞ் சுற்றிச்சுற்றிஓடினர். இவ்விதமாகச்
சொர்னமாளிகைப் புறங்களில்மறைந்திருந்த விண்ணவ
ர்கள்மனதில் அன்பானதுதூண்டப்பெருமூச்சுகளைப்பெ
ருக்கி மெல்லமெல்லச் சபையில்வந்துசேர்ந்தனர். இவர்
கள்போனதும் மீண்டதும் எப்படிக்கிருக்கின்றதெனில்வ
லையினிடத்தகப்பட்டுப் பலதிசையினுந்தாவி யலைகின்ற
மானினங்களைப்போலத் தேவனா அக்கினியானதுசூழ்ந்த
காலத்திற்பயந்து திருமாளிகையினை வளையவளையஓடிப்
பதுங்கினவர்கள் தன்னினத்தைப்பிரிந்த காக்கையானது
மீளத்தேடிக்கூடுமாறுபோலத் திரும்பினவர்களாய்க்கிரு
பா நிதியாகியும் அடுத்தவர்களை ஆதரிக்கின்றவருமாகிய
சிவபெருமானைச்சேர்ந்தனர். இவ்விதமாகக்கர்த்தன்நுதல்
விழிக்கனலுக்காற்றுமற் பலதிசையினும்பாறினவர்கள்அ
னைவரும்மீண்டு திருச்சந்நிதானத்திற் கூடியவுடன் அஷ்
டபுயங்களையுடைய ஞானநாயகனைப்போற்றிசெய்து மு
றையிடுகின்றனர். கர்த்தனே, கொடியவலியினைப்பெற்ற
பாதகராகிய அசுரரால் வருந்துகின்ற துன்பங்களைப்
போக்கி ஆள்வதற்காக ஒருபுத்திரனைக்கடாட்சித் திரட்சி
க்கும்படிக்குத் தேவரீரைக்கேட்டுக்கொண்டனம். அதற்
குமாறுகஅளவுபடாதஅனற்பொறியினைத்தந்தபடியாற்க
ண்ணுதற்கடவுளே, கேட்டருள்க.யாங்கள்எவ்விதத்திற்பி
ழைத்துவாழ்வது மேலும்முன்னொருகாலந்தமதிடப்பாக
த்திலெழுந்தருளியிருக்கின்றபராசத்தியினதுவிரல்களிற்
பெருகிய கங்கையானது அலைகளைவீசிஎவ்வுலகங்களினு
ம்பரந்து அலைத்ததைப்போலத் தமதுநுதல்விழியினின்
றும் எழுந்த தாபாக்கினியானது எத்தலங்களினும் பூர்
ணமாகமூடிக்கற்றைக்கற்றையாய்அதிகசுவாலையைவீசஅ
ந்தவெப்பமானது எவ்வெவ்விடங்களினும் பரந்துவாட்
டுவதினுல் பிராணிகள்நாசப்படுகின்றன, ஆகையால்தே
வரீர்தயைசெய்து கணப்போதில் அப்பொறிகளைத்தருவி
க்காபற் பராமுகமாயிருப்பீராகிற் சராசரப்பிரபஞ்சங்க
ள்முற்றுங்கேடுபடும், இதுவல்லாமல் மிகுதிப்பட்ட அன
லுக்குச்சகிக்கப்படாமையால்பயந்து பலதிசையினும்சித
றியொளித்த நாங்கள்மீளவுந் தேவரீர்திருவடிகளிற்றஞ்ச
மடைந்தோம் தற்பரனே,நீர்அறிய அடியோங்களை ஆதரி
க்கவல்லவர்கள் எங்கேனுமுண்டோ,அல்லலிற்பட்டுவாடு
ம்மனதையுடைய எங்கள்வருத்தங்கள் முழுமையும் அதி
சீக்கிரத்தில்நீக்கி யிரட்சிக்கக்கடவை அல்லது எங்களிட
த்தில் தயையின்றி வருத்தநினைப்பீராகில் அதைத்தடை
செய்வதற்கு யாவராலும் முடிவதன்று ஆதலால்ஆதிசே
ஷன்சிரத்திற்றுங்கும் பூமண்டலத்தினும் விண்ணகத்தி
னும்பரந்து தகிக்கின்ற இவ்வனலைப்போக்கி எங்கள்கு
றைகளைத் தவிர்த்திரட்சிக்கவேண்டும் சந்திரசடாதரக்க
டவுளேயென்று பலவாகப்போற்றிவேண்டினர்.

கேட்டீர்களோ, சவுனகாதிரிஷிகளே,யிவ்விதமாகஅ
ந்தணர்முதலாயினர் வழிபடும்பெருமையினையுடையசது
ர்முகன்முதலாகிய தேவர்கள் கரங்களைக்கூப்பிநின்று மு
றையிட்டுக் குறையிரந்தகாலத்திற் குளிர்ந்தஜலப்பெருக்
கினையுடைய கங்காபவானியைத் திருச்சடையிற்றரித்தரு
ளிய தாண்டவமூர்த்தியானவர் பயங்கொள்ளாதீர்களென்
றுகையமைத்து ஆதரவுசொல்லிப் பின்பு மகம்மேருவை
வில்லாகக்கொண்டு திரிபுரங்களைவென்ற பரமனுனவர்பு
திதாகக்கொண்ட தமதுதிருமுகங்கள்ஆறையும்மறைத்து
யதாப்பிரகாரம் ஒப்பற்ற சிறப்பினையுடையதமதுதிருமு
கமொன்றினைத்தாங்கிப் பழையபடிக்கு அருளுருவுகொ
ண்டு விளங்கினவராய் முன்னம்வகித்த சண்முகங்களினி
டத்திற் பிரகாசித்திருந்தநுதல்விழிகளின்மூலமாகத் தம
துஅருட்டிறத்தின் மகிமையினுற் படைக்கப்பட்டு பூமி
ஆகாயஎல்லையெங்கும் நிறைந்திருந்த அனற்பொறிகளை
த் தமதுதிருமுன்வருவதாகத் தேவன்திருவுளத்திற் கொ
ண்டனர். இவ்வாறுதேவர்கள் முதலானவர்படும் வருத்த
த்துக்கிரங்கி அந்திவண்ணனுகியசிவபிரான்கியாபகங்கொ
ண்டமாத்திரத்தில் அண்டாண்டங்களெங்கும்நிறைந்துஉ
ற்பாதங்களைச்செய்திருந்த பெரிதாகியஅனலமானதுயதா
ப்பிரகாரம் ஆறுபொறிகளாகஉருக்கொண்டு ஜ்வலித்து
வந்து பரமன்திருமுன்நின்றதை மகிழ்ச்சியாகப்பார்த்து
த்தமதுசபையில்நெருங்கி யிருக்கின்றதேவர்கள் கூட்டத்
தில்விளங்கும் ஜயசாலிகளாகிய வாயுஅக்கினிதேவர்கள்
முகங்களைப்பார்த்துக் கிருபையுற்றுச்சொல்லுகின்றனர்.
நீங்களிருவருமிந்த அனற்பொறிகளைப்பத்தியுடன்தாங்கி
க்கொண்டுபோய் ஜலப்பிரவாகத்தையுடையகங்கையாற்றி
னிடத்தில்விடுவீராகில் அவள்அவைகளைச்சரவணப்பொ
ய்கையிற்சேர்ப்பள். இதுநீங்கள்செய்யவேண்டும்பணிவி
டையென்று யமனைஉதைத்துவாட்டிய திருவடிகளைப்பெ
ற்ற ஐயன்திருவாய்மலர்ந்தகாலத்தில்அவ்விருவரும்எழு
ந்துசிவபிரான் அருகிற்போய்மும்முறைவலம்வந்துபணி
ந்தெழுந்து கரங்களைக்கூப்பிக்கொண்டு போற்றினவர்க
ளாய்த் தேகமெங்கும் நடுநடுங்க மனவாட்டங்கொண்டுவி
ண்ணப்பஞ்செய்கின்றனர்.

கர்த்தனே, ஒருநொடிப்போதி லிவ்வுலகங்களனைத்தி
னும்நிறைந்து சுவாலையைவீசிப்பெருகிய இப்பொறிகளா
னவைதேவரீர் அனுக்கிரகத்தின்மகிமையினுற் சிறுகக்கா
ட்டநின்றது ஆதலால் அடியோங்களாலிவற்றைப்பரித்து
ப்போவது மிகவும்அரிதரிதென்று முறையிட்டுமேலுஞ்
சொல்லுகின்றனர். சர்வசங்காரகாலத்தில் உலகங்கள்அ
னைத்தையும் அடக்கவல்ல மகிமையையுடையதேவரீரிட
த்தில் உதித்தபொறிகளின்மகிமைகளை நினைக்குமிடத்தி
ற்பூமிதேவிக்குக் கணவனுகிய மகாவிஷ்ணுவுஞ் சதுர்மு
கப்பிரமனும் ஒருகணப்போதேனுந்தாங்கும் வலியினைப்

பெற்றவரன்று பூர்வத்திற் றிருப்பாற்கடலினிடத்துதித்து உலகங்களை அலைத்த ஆலகாலவிஷத்தினையொத்துப்பெருகிய சுடரினைக்கண்டமாத்திரத்தில் தாபரிக்கப்படாமையாற்கலங்கித் திசைகெட்டோடி ஒளித்தோம்.இப்பொறிகளின் சமீபத்திற்போகவும்மனம்நடுங்குகின்றது. அப்படிக்கிருக்க அவற்றினை அடியோங்கள்சிரத்திற்றூங்கிக்கொண்டுபோவதற்குக்கூடுமோ, அல்லது இந்தத்தீட்சணியமுள்ள அனற்பொறிகளைக்கிட்ட நினைக்கின்றபோதுமனம்வெம்பி வாடுகின்றதுமல்லாமல் தேகமெங்கும்வியர்க்கின்றது. இப்படிக்கிருப்பதால் எவ்விததயிரியங்கொண்டு நாங்கள்தாங்கவல்லோமென்று முறையிடுகின்ற அக்கினி வாயுதேவனைக் கிருபையாகப்பார்த்துச் சிவந்தசடாமண்டலதாரியாகிய சிவபிரான்சொல்லுவார். ஒருநொடிப்போதில் உலகங்கள்முற்றினும்பரந்துநெருங்கிய இப்பொறிகளைச் சுமந்துகொண்டுபோய்க் கங்கையில்விடுவதற்கு உங்களிருவருக்கும் வலியுண்டாகக் கடவதென்றுஅருள்புரிந்தனர். இதைக்கேட்டமாத்திரத்தில் நல்லகாரியமெனச் சம்மதித்துப் பரமனைத்துதித்தனர். இதைக்கண்ட பிரமதேவன்முதலாகியதேவர்கள் மனவருத்தங்களைப்போக்கியின்றுடன் நமதுதுன்பங்களனைத்தும் நீங்கிற்றென்னுங் களிப்பினால் தேகம்பூரித்து முகமலர்ச்சிபெற்றிருக்கின்றவர்களைத் தேவதேவோத்தமனாகிய சிவபிரான்பார்த்தருளி யிந்தமகிமையுள்ள பொறிகளானவை சரவணப்பொய்கையிற் சேர்ந்தபின்பு வலியிற்சிறந்த குமாரனாக உருக்கொண்டு வெளிவந்து மகதயிஸ்வரியங்களைப்பெற்றுஉலகங்களை அலைத்திருக்கின்றசூரபதுமனைக் குலநாசஞ்செய்வன் ஆதலாலினிமேற் சங்கையின்றிப்பலரும்போய் வருவீர்களென்று எமதிறைவனாகிய பரமன்திருவாய்மலர்ந்தவுடன் பிழைத்தோம் பிழைத்தோம் இனியாதொருகுறைவுமின்றி வாழ்வோமென்னுங் களிப்புடனெழுந்துவீரக்கழலணிந்தசிவபிரான்திவ்விய சரணாரவிந்தங்களிற்சேவித்துப்போற்றி விடைபெற்று அத்திருச்சபையைக்கடந்து வெளிவந்திருக்கின்றகாலத்தில் வாயுவும்,அக்கினியும், ஆதிதேவன் பாதகமலங்களில்வணங்கி அவனருளின் திறத்தினால் வாயுதேவன்முந்தித் தெய்விகம்பொருந்திய அனற்பொறிகளைப்பத்திவிசுவாசத்துட னிருகரங்களினாலுமேந்திச் சிரத்திற்கொண்டு அக்கினிதேவன்பின்பற்றி வரப்பிரயாணப்பட்டுப்பரமன்வாசஞ்செய்யுஞ் சொர்னமயமாகிய நகரத்தினைக்கடந்து அப்பொறிகளைத் தாங்கிச் செல்லும் வாயுதேவனைக்கண்ட பிரமதேவன்முதலாகிய தேவர்கள் சொல்லுதற் கரியமகிழ்ச்சியுட னிதனைப்பேசுகின்றனர். சுயஞ்சோதி வடிவினையுடைய பரமனானவரிதற்கு முன்னமொருகாலம் நமக்கடுத்த அகந்தையைப் போக்கி ஆளும்பொருட்டு, இவ்வுலகின்கண் படைத்தருளிய வீரபத்திரக் கடவுளைப்போலவே யிக்காலத்தில் நாமனைவரும் பிழைக்கும்படிக்குத் தமதுநுதல்விழியின் மூலமாய் அனற்படிவம்பெற்ற திருக்குமாரனைப்படைத்தனர். மேலும், பழையபடிக்கு நமது அயிஸ்வரியங்களுஞ்செங்கோல்ன்முயற்சியும் பெற்றுவாழவுஞ் சூரபதுமன் குலநாசமற்றுப்போகவும் இன்னமுஞ்சிலகாலமிருக்கின்றதாற் சிவபிரான் அதைக்கருதித் தன்னையொத்த திருமகனைச் சரவணப்பொய்கையினிடத்தில் வளர்வதாக அனுக்கிரகஞ்செய்தனர், மேலும்திரிபுராதிகள்நகரங்களையெரித்த நிர்மலக்கடவுளாகிய பரமனானவர் அனுக்கிரகஞ்செய்துவருகின்ற காரணங்களை நோக்குமிடத்திற்கிருபையின்பாலதாகவே யிருக்கின்றது அதற்குத் திஷ்டாந்தம் அனற்பொறியினைப்படைத்ததும் நினைத்தற்கரிய கடாட்சவீக்ஷணியத்துக் கேதுவாகவே காணநின்றதென்று தேவர்கள் சந்தோஷப்பெருக்கினா லிவ்விதங்களாகப் பலபலவார்த்தைகளைப் பேசினவர்களா யினிமேலிராட்சதர்வகையறமாண்டு போவதற்கையமில்லைவாடிவருந்தியிருந்த நமது குறைபாடுகளனைத்துந்தொலைந்துநன்மைபயக்குமாதலால் அதுபரியந்தம் நாமுஞ் சரவணப் பொய்கையினிடத்திற் காத்திருப்போமென்று தேவர்களனைவரும் ஒருமைப்படப்பேசிக்கொண்டவர்களாய் அதிகவெப்பத்தினைக்கொண்டு சொலித்திருக்கும் பொறிகளை வாயுதேவன் சிரத்திற்றூங்கி முன்னடக்க லட்சுமிதேவியை மார்பினிடத்தில்வைத்திருக்கும் மகாவிஷ்ணுமுதலாகிய தேவர்கூட்டமானது வெள்ளியங்கிரியினைக்கடந்து பின்தொடர்ந்தது.

இவ்விதமாக விஷ்ணுவாதியாகிய விண்ணவர்சந்தோஷவார்த்தைகளைப்பேசிக்கொண்டு நடக்குமுன்னிலையில் ஒருநாழிகைப்போதாயிற்று அத்தருணத்திற் பரமன் விழிகளிலுதித்த அனற்பொறிகளைத் தாங்கிச்செல்லும் வாயுதேவன் அவற்றின்வெப்பமானது சிரத்திற்றூக்கத் தாபரிக்கப்படாமையால் மிகவும்வருந்திச் சந்திரசடாதரக்கடவுளினது கட்டளையின்படிக்குத் துரிதமாய்அக்கினிதேவன் வசத்தில் ஒப்பிக்க அவனும் அதிகபிரீதியுடன் தன்சிரத்திற்கொண்டு பாதங்களைப்பெயர்த்து ஒருஅடிவைத்தமாத்திரத்தில் தீப்பொறியின் சுடுகைமேலிட்டுக் கொளுத்துவதினால் அக்கினிதேவன் தனதுவெம்மையடங்கிச் சரீரம் வெம்பி வெயர்த்துத் துடிக்கத்தக்கதாகவருந்தி மற்றொரு அடிவைத்துப் பொறுக்கப்படாமையால் அதிசீக்கிரத்திற்றூவி ஆரவாரங்களுடன் பெருகுகின்ற கங்கையினிடத்தில்விட்டனன் இப்படிக்கு அக்கினிதேவன்வருந்தி அனற்பொறிகளை வெள்ளத்திற்சேர்த்த மாத்திரத்தில் பூர்வத்திற் பராசத்தியினுடைய கரத்தில்நின்றும் பெருகிய நீத்தமானது மேலிட்டு உலகங்களுக்கு உபத்திரவங்களைச் செய்யப் பரமனிரங்கித் தமது திருச்சடையிலொன்றை வீசிமீறிவரும் பிரவாகத்தினை வறளச்செய்ததுபோலக் கங்கையின்ஜலப்பெருக்கானது சுவறிக்காட்டியதுஇத்தகையவருத்தம் நேர்ந்தபோதினும் பரமன்கட்டளையினால் வந்ததாதலால் அதிகவேகங்கொண்டு அலைகளென்னுங்கரங்களினால் அப்பொறிகளையேந்தித் தாலாட்டிச்சென்றுசெந்தாமரை மலர்கள்புஷ்பித்து விளங்குகின்றதைப்போலக் காட்ட ஒருநாழிகைப்போதிற் சரவணப்பொய்கையினிடத்திற் சேர்த்தனள், அத்தருணத்தில்பின்தொடர்ந்துவந்த மகாவிஷ்ணு பிரமதேவன்முதலிய தேவர்களனைவருஞ் சரவணப் பொய்கையினிடத்தில்வந்தவர்களாய் அனற்பொறிகள் விளங்குவதைக்கண்டு மனமகிழ்ந்து நற்காரியந்தங்களுக்குச் சித்திக்க விருக்கின்ற காரணத்தினைத் தெரிந்தவர்கள் அதுமுற்றுப்பெறுமளவும் இடைவிடாது காத்திருப்பவரைப்போல அப்பொய்கையின் கரைமுற்றினுஞ் சூழ்ந்திருந்தனர்.

இவ்விதமாக அதிகசந்தோஷத்தினைக் கொண்டவர்கள் கொடிய இராட்சதப்பாதகர்களினால் ஏதேனும் உபத்திரவம்நேருமென்னுஞ் சங்கையினால் விஷ்ணு பிரமன் தேவேந்திரன்முதலிய திக்குப்பாலகர்களும் விண்ணவர்கூட்டமும் மற்றையதிக்குகளில்வாசஞ்செய்பவரும்ஏகமாகக்

கூடி ஜலசமர்த்தியாய்ப் பலமலர்கள் நிறைந்து விளங்குஞ் சரவணப்பொய்கையை அடரச்சுற்றிக்கொண்டு காத்திருந்தனர் இவர்கள்சரித்திரம்நிற்க பார்ப்பதியார் திருவவதாரஞ்செய்தருளிய இமயகிரியினதுசாரலிற் செந்தாமரை வெண்டாமரை அல்லிமுதலியமலர்கள் நிறைந்ததாய் அன்னங்கள் நாரைகள்முதலிய பட்சிசாலங்கள் செவிகளுக்கினிமையாகத் தொனித்திருக்க முதலைவரால்சேற் கெண்டையினங்கள் மிகுந்துத்துள்ளவும் கரைகள்முற்றுந் தேவதாரம் பாரிசாதங் கொன்றை வில்வம் ஆல்முதலியதருக்கள்மலிந்து சீதளமாய் மதுரமாகியஜலசமர்த்திபெற்று மூழ்கினவரைப் பவித்திரமாக்கும் மகிமையுள்ள சரவணத்திற் சோதிமயமாய் வெப்பமிகுத்த ஆறுபொறிகளுஞ் சேர்ந்தமாத்திரத்தில் அவற்றின் சுவாலையினால் அப்பொய்கையானது அல்லோலகல்லோலப்பட்டபோதினுந் தேவதேவனாகிய சிவபிரான் கடாட்சவிட்சண்ணியமகிமையினாற் குறைவின்றிப் பழையபடியேநிறைவெய்தி யிருந்தது மன்றியில் வெவ்வியகனலைப்போலச் சொலித்துக்கொண்டு வானவெல்லையிற்செல்லுஞ் சூரியபகவானுக்குப் பிரியமுள்ள வெண்டாமரைகளுடன் செந்தாமரைமலரையும்படைத்துத் தாங்கியிருக்குந் தன்மையைப்போலவே சரவணப்பொய்கையானது சிவபிரான் நுதல்விழியினிடத்தெழுந்த அனற்பொறிகளையுந் தன்னிடத்திற்றரித்திருந்தது இப்படிக்கு அருவாய் உருவாய்ப் பலவாய் ஏகமாய்ப் பரப்பிரம சொரூபமாகவிளங்குஞ் சோதிப்பொறிகளானவை பின்பு ஒருரூபத்தினைக்கொண்டு கிருபைவிளங்குஞ் சண்முகங்களையும் பன்னிருகரங்களையும்படைத்தலைப்பற்ற முருகக்கடவுளானவர் உலகங்களனைத்தும் பிழைத்தற்பொருட்டுத் திருஉருவினைப்பெற்று விளங்கினர்

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே யித்தகையகோலங்கொண்டு சிவசுப்பிரமணியதேவர் தோற்றினமாத்திரத்தில் விண்ணிடத்திற் றேவதுந்துமிமுதலிய வாத்தியங்கள் பேரொலியைக்காட்டி முழங்கவும் பூர்வீகமாகவிருக்கின்ற சதுர்வேதங்களுந்துதித்து ஆரவாரங்களைச் செய்யவும் மகாவிஷ்ணு பிரமதேவன் தேவேந்திரன் முப்பத்துமுக்கோடிதேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள் கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர் பன்னகர் நாகர்முதலானவர்கள் பரிமளமிகுத்த பாரிசாதபுஷ்பங்களை வாரிவாரிச் சோனைமாரியைப்போலச் சிவகுமாரன்மீதில் மங்களகரமாகத் தூவிக் கர்த்தனே அடியோங்களிடத்திற் கிருபையுற்றுப் பாதுகாத்திரட்சிக்க வேண்டுமென்று பலவிதங்களிற்போற்றிச் சரவணப்பொய்கையின் கரையில்நெருங்கி வளையவளையச் சுற்றிச்சுற்றிக் கரங்களைக்கட்டிக்கொண்டுசந்தோஷ மிகுதியினால் இவ்வித களியாட்டலைக் கொண்டாடினர் கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளோ சிவசுப்பிரமணியதேவர் தோற்றத்தினைத் தரிசித்தமாத்திரத்தில்அவர்கள்கொண்டமகிழ்ச்சியின்பெருக்கினையிரண்டாயிரம்நாக்களைப்படைத்த ஆதிசேஷனாலுங் கண்டறிந்து சொல்லக்கூடுவதோ ஆதலால் ஒருநாவைப்பெற்ற என்னாற் கூடியவரையிற்பேசினேன் இவ்விதமாகச் சகலருஞ் சந்தோஷசாகரத்தில் மூழ்கினவர்களாய்க் கரங்களைக்கூப்பிக்கொண்டு துதித்திருந்தனர், இஃதன்றியும் பிரமன் விஷ்ணுமுதலியசிறந்ததேவர்களுக்கின்றித் தேவதேவனாகிய சிவபிரானுக்கு மாத்திரம்விளங்கும் ஆறுநுதல் விழிகளும் இத்திருக்குமாரனுக்குச் சண்முகங்களாகக் காட்டியதென்று பலருஞ் சொல்லிக்கொள்வதாகப் பலமலர்கள்விரிந்திருக்குஞ் சரவணப்பொய்கையினிடத்தில் வீற்றிருக்கின்ற எமதுசண்முகதேவர் பிராணிகளைப் பாதுகாத்திரட்சிக்கும்பொருட்டுப் புராதனக் கடவுளுருவாகிய சண்முகங்களைப்பெற்று விளங்கினர் இவ்விதமாகச் சிவசுப்பிரமணியதேவர் திருவருக்கொண்டகாலையிற் சகலபுவனங்களிலும்நிறைந்திருக்கின்ற பிராணிகளானவர்களுக்கு நற்செயலாய் அதிகசந்தோஷங்களுண்டாய்ப் பலநற்குறிகளையுங் காட்டியது அளவற்றயுகங்களாகக் கொடுங்கோலினைச் செலுத்திவருகின்ற சூரபதுமன்முதலாகிய விராட்சதப்பாதகர்களுக்குமரணத்துக்கேதுவாகிய துர்ச்சகுனங்கள்மேன்மேலுந்தோற்றப்பட்டன இவைநிற்க வேதங்களின்பொருளாய்மனோவாக்கினால் நிதானித்துப் போற்றுதற்கரிதாய் எங்கும்பரிபூரணமாகவிளங்கும் நிர்மலக்கடவுளானவர் சண்முகங்களைப்பெற்ற குமாரனாகவுருக்கொண்டுகிருபாநோக்கத்தினைப்பரப்பிச் சரவணப்பொய்கையினிடத்தில் அலர்ந்திருக்கும் பரிமள மிகுத்த தாமரை மலரினைப் பீடமாகக்கொண்டு வீற்றிருந்தசம்பிரமகாலத்திலச்சரவணப்பொய்கையானதுவிளங்கியிருந்த காட்சியிற்சிலகூறுகின்றோம்.

பருத்துவானத்தினை அளாவ உயர்ந்து சரவணப்பொய்கையினைச் சூழவிருக்கின்ற விருட்சங்கள் பலகால்களாகவும் அவற்றிற்கிளைத்துத் தழைகள் மிகுதியாய்நீண்டு ஒன்றுடனொன்றுசேர்ந்து பின்னிக்கொண்டிருக்குங் கிளைகளானவை சூரியனது வெப்பத்தினைப்போக்கிக் குளிர்ந்த நிழலினைத் தருவதாக வானத்தினைமூடச்செய்தமைந்த பச்சைப்பந்தலைநிகர்க்கவும் அதனிடையில்விளங்குந் தளிர்களும் புஷ்பக்கொத்துகளும் பிஞ்சு காய் கனி வர்க்கங்களானவை நவரத்தினங்களினாற் சோடித்திருக்கின்ற சித்திரப்பெருக்கினையும் புஷ்பச்சரங்களை முதலிய வகைகளினால் அணிபெறத்திருத்தி யிருப்பதை நிகர்த்துக்காட்டவும் இவ்விதவுவமை அலங்காரங்களைப்பெற்றுக்குளிர்ந்த நிழலினைப் பரப்பியிருக்கின்ற மலர்ப்பந்தலின் நடுவிற் சரவணப்பொய்கையாகிய திருமாளிகையில் எமதையனாகிய பாலசுப்பிரமணியர் எழுந்தருளியும் வானத்தினை அளாவநிற்கின்ற அஷ்டகுலாசலங்களானவைவயிரக்கால்களாகவுஞ் சமுத்திரஞ்சூழ்ந்த பூவட்டமானது அடிப்பீடமாகவும் வளைந்திருக்கின்ற கரைகளானவை நாற்புறங்களிலும் அமைத்திருக்கின்ற பலகைகளாகவும் அதன்மீது பருத்துநீண்டு தழைத்துக்கவிந்திருக்கின்ற குருந்தம்கொன்றை பாதிரிமுதலிய தருக்களின் கிளைகளினால் மூடப்பட்டிருக்கின்ற வானமானது சித்திரித்திருக்கின்ற விதானமாகவும் பளிங்குபோலத் தெளிந்து மதுர மிகுத்திருக்கின்ற ஜலப்பெருக்கானது பஞ்சணையாகவும் அதன்மீதுஅலர்ந்திருக்கின்ற தாமரைமுதலிய புஷ்பங்களானவைமலர்ப்பாயலினைப்பரப்பி யிருப்ப தூங்கிணையாகவும் இவ்வித அலங்காரத்தைக் கொண்டிருக்கின்ற சரவணப்பொய்கையென்னுஞ் சிறந்த மஞ்சத்தின்மீது பள்ளிகொண்டிருக்கின்ற குமாரதேவரானவர் தமது திருவடிகளிலொன்றினையூன்றி மற்றதை அதன்மீதிற்சேர்த்து அசைத்துக்கொண்டிருந்தனர், இதுவுமல்லாமற் பிரோரத்தினங்களானவை சொலித்திருக்கும் பணாமகுடங்களையுடைய அஷ்டமாநாகங்களும் ஆதிசேஷனுஞ்[illegible]பெற்றதாய் அமைந்திருக்கின்ற கால்களைநிகர்த்துக்காட்டவும் பூமிதேவியான

மார்பிலணிந்திருக்கின்ற வயிரப்பதக்கத்தினை நிகர்த்துவி
ளங்குஞ் சரவணப்பொய்கையானது மலரிஞலமைத்த சி
ங்காதனத்தைப்போற் ருேன்றவும் நவக்கிரகங்கள்இராசி
அசுவினிமுதலிய நட்சத்திரங்கள் மேல்விளங்கும் முத்
துப்பந்தலாகவும் இத்தகைய வளப்பங்களைப் பெற்றிருக்
கின்ற சரவணமென்னுஞ் சிறந்தபீடத்தின்மீது உமைய
வள்புத்திரனுகிய பாலசுப்பிரமணியக்கடவுளானவர் எழு
ந்தருளிச்சமுத்திரராசன் பிராதக்காலத்திற்சூரியனுகியக
ண்ணுடியினைக்காட்டக் கண்டுமகிழ்ந்திருந்தனர் இவைய
ன்றியும் பூமிதேவியினது இருதயகமலம்போல் உலகமத்
தியிற் ருேற்றநின்ற சரவணப் பொய்கையினிடத்திற் பரி
மளமிகுத்ததாய் அலர்ந்திருக்கின்ற கமலபீடத்தினிடத்தி
ல் வீற்றிருக்கின்ற பாலசுப்பிரமணியதேவர் தோற்றமான
து எப்படிக்கிருந்ததெனில் பேருருவினைவாய்ந்த மாயை
யானது மீறியிருக்கின்ற மனத்தின்கண் சூட்சுமமாகக்கா
ட்டுஞ்சுடரினது உச்சியினும்பொருந்தி நடிப்பிக்கவல்லப
ரமேஸ்வரனைப்போலவும் அலைகள்மிகுத்து வளைந்திருக்
குஞ் சமுத்திரமத்தியில்விளங்குஞ் சரவணப்பொய்கையி
னிடத்தில் அலர்ந்திருக்கின்ற கமலங்களி னென்றின்மீது
குமாரதேவர் வீற்றிருக்கின்ற காட்சியினைச்சொல்லுமிட
த்திற் கோளமாகக்கவிந்திராநின்ற அண்டமென்னுந்தேவ
னது இருதயகமலப்பதியினைவிரும்பித் தமதுதாதையாகி
யபரமன் ஆதியில் வாசஞ்செய்திருந்ததைப்போலவும் அ
ப்பொய்கையினிடத்திற் படர்ந்திராநின்ற தாமரையினது
பசியஇலைகளின்மீது திவலைகளானவை முத்தினங்களைப்
போற்காட்டுவது தாராகணங்களுக்கிணையாகவும் அலைக
ளிஞலெறியப்பட்டு அமைந்திருக்குங் கொடிப்பாசிகள்கா
ளமேகத்தினைப்போலவுஞ் சுற்றினும் அலர்ந்து பிரகாசித்
திருக்குந் தாமரைமலர்கள் சாச்சல்லியமாகியகிரணங்களை
வாய்ந்த சூரியர்களாகவும் அவற்றின் நடுப்பிரதேசத்திற்
ருேற்றநின்ற மலரானது ஞானசூரியனைப்போலவிளங்க
அதன்கண் சிவபிரானைப்போலச் சுப்பிரமணியதேவர் வீ
ற்றிருந்தும் மகாவிஷ்ணு பிரமன் மேகவாகனனுகிய இந்தி
ரன் தேவர்கள்முதலிய சகலரும் பக்கங்களிற்காத்திருக்க
விருட்சங்கள் மிருகங்கள் பட்சிகளாதியவனைத்துஞ்சூழக்
குமாரதேவர் தாமரைப்பீடத்தில் வாசமாயிருந்த காட்சி
யானது ஆதிகாலத்திற் பரமசிவமானது மன்னுயிரனைத்
தையுஞ்சிருஷ்டித்துக்கமலத்தின்கண் ணெழுந்தருளியத
ற்கொப்பாகவும் தெய்வத்தன்மை பொருந்திய சரவணப்
பொய்கையினிடத்தில் விகசித்திருக்கின்ற தாமரைமலரி
னிடத்தில் உலகங்களுக்கு நன்மையினைக்கடாட்சிக்க உற்
பவித்திருக்கின்ற பாலசுப்பிரமணியக்கடவுள்வீற்றிருந்த
தோற்றமானது பின்னு மெப்படிக்கிருந்ததென்ருல் பிற்
காலத்திற் சதுர்முகப்பிரமனைச் சிறையிலடைத்துப் பஞ்
சபூதங்களினுல் உருப்பெறும்பிராணிகளைப்படைப்பதா
கப் பொற்ருமரைப்பீடத்தில் அமரவிருக்கின்றதற்குநிக
ராகவுந் தாமரைமலர்களினென்றின்மீது எழுந்தருளியி
ருக்கின்ற முருகக்கடவுளைச்சூழ வண்டினங்கள்ரீங்காரத்
தொனிகளைச்செய்து மொய்த்திருக்கச் சரவணப்பொய்
கையில்அலர்ந்து விளங்குந் தாமரைமலர்களானவைஎப்ப
டிக்கிருப்பதெனில் தேவதேவோத்தமனே ஓரிடத்தன்றி
எம்மையெல்லாம் பீடமாகக்கொண்டு வரிசைப்படவீற்றி
ருக்கவேண்டுமென்னுங் கோரிக்கையினுல் நீரில்நின்றுஅ
ரியதவங்களைச் செய்திருப்பதைப்போலத் தோற்றவுந்தரி
சித்தவர்கள் மனங்களைவாட்டியலைக்கவல்ல வடிவினையும்
பவளத்தின் பிரகாசத்தினும்மேலிட்டு விளங்குந் திருமே
னியையும்பெற்றுச் சுயஞ்சோதிவடிவமாகப் பிரகாசிக்கு
ங் குமாரதேவனைச்சூழ மணமிகுத்த தாமரைமலர்க
ள் அலர்ந்திருக்குந் தோற்றமானது அப்பகவானிடத்திச்
சைகொண்டு அணைவதாகச் சீதளத்தினுல்வருத்தும் புன
லில்முழுகிச் சூரியனைநோக்கிமெல்லியஇடையினைப்பெற்
றபலபருவமங்கையர் தவங்களைச்செய்துகொண்டுவிளைந்தி
ருப்பதையொத்துந் தவளநிறத்தினைப்பெற்று விளங்குஞ்
சங்கினங்கள் தாமரைமலர்களின்மீதுசேர்ந்திருக்கத்தேன்
களைப்பெருக்கியிருப்பது எத்தகையதெனின் தெய்வீகம்
பொருந்தியசரவணப்பொய்கையாகியபெண்கொடியானவ
ள்தன்னிடத்திலெழுந்தருளியிருக்குஞ்சண்முகக்கடவுளா
வர்பசியின்றி அருந்தும்படிக்குப் பலசங்குகளினிடத்தி
ற்பால்நெய் இவற்றினை மிகுதியாகச்சேகரித்து வைத்திரு
ப்பதற்கொப்பாகக்காட்டவுந் தாமரைமலர்களையும்அவற்
றினிடத்துதித்த முத்தினங்களையும் மகரந்தச்சேற்றினை
யும் பரிமளமிகுத்த புஷ்பங்களினின்ருெழுகுந் தேன்க
ளையொத்ததிரைகளினுல் வீசிவருவது எப்படிக்குத்தோ
ற்றுவதெனில் அப்பொய்கையானது சிவகுமாரன்பாதங்
களையடைந்து பேரானந்தத்தினைப்பெற்று வாழ்வதாகநி
னைந்து புதியமலர்சாந்தமுதலிய பூசாதிரவியங்களைக்கொ
ண்டு அன்புடன் அருச்சிப்பதைப்போலக்காட்டவுஞ் செ
ந்தாமரைமலர்கள் பதனழிந்துஇறைந்திருக்கின்ற இதழ்
களானவை பக்கங்களிலிருக்கின்ற விலைகளின்மீதில்விழ
அவைகள் அசைந்திருக்குங் காட்சியானது எப்படிக்கிரு
ந்ததெனில் பூமிதேவியானவள் சரவணமென்னும் பசிய
பொற்கலசத்தினிடத்திற் பிரகாசம்பொருந்திய பலரத்தி
னதீபங்களை அணிபடவைத்துத்திரைகளாகியகரங்களினு
ல்மங்களகரமாகச் சுழற்றிவரும் ஆலத்தினைநிகர்க்கவும்அ
ழகியதாமரைமலர்கள் அருகில்உயர்ந்திருக்கின்ற பசியவி
லைகள் குடைகளைப்போன்றும்அரும்புகள்தீபங்களையொ
த்தும் வாயுமோதலினுல் அசைந்திருக்கின்ற இதழ்கள்க
வரிகளையொப்பவும் அன்னங்கள்முதலியபட்சிகள் தொ
னித்திருப்பது பலவாத்தியங்களினதுமுழக்கம்போன்று
ம்விளங்கவும் இவ்விதராசஉபசாரங்களைச்சரவணமங்கை
யானவள் பத்தியினுல் பாலசுப்பிரமணியருக்குச் செய்வ
தைநிகர்த்தும் அக்கினிச்சுவாலை மேலோங்கியதைப்போ
ல இதழ்களைவிரித்து அலர்ந்திராநின்ற செந்தாமரைமல
ர்கள் அலைகளிற்பட்டு அசைந்தசைந்து நீங்காமல்விளங்
திருக்கின்ற காட்சியானது எப்படிக்கிருப்பதெனில்தேவ
ர்கள் சிவகுமாரன் ஜலத்தினிடத்தில் நழுகிவிழாமலுந்து
கள்முதலிய குற்றங்கள் அவர்மேற்படாமலும் போற்
றியிருப்பதற்கு வெண்பட்டினும் பீதாம்பரத்தினுலுஞ்
சோடித்த திரைச்சீலைகளை அணிபடத்தூக்கியிருப்பக்கா
ற்றினுல்அசைவதையொத்துக்காட்டவும் அழகியசிரகினை
யுஞ் சிவந்துவிளங்குங் கால்களையும் மூக்கினையும்உடைய
அன்னப்பட்சிகளானவை சரவணப்பொய்கையினிடத்தி
ல்வீற்றிருக்குஞ் சிவகுமாரனைச்சூழவிருக்கின்றதாமரை
மலர்களின்மீது ஒலித்திருப்பது எத்தன்மையதெனில்எ
மதிறைவனுகிய பாலசுப்பிரமணியதேவர் பிற்காலத்திற்
பிரமனைச்சிறைப்படுத்திச்சிருஷ்டித்தொழிலினைநடாத்த
வருங்காலத்தில்எம்மைவாகனமாகக்கொண்டுஆளவேண்
டுமென்று தனித்தனியேயிரந்துகேட்டுக் கொள்வதைப்

போலக்காட்டவும் இவ்விதவளப்பங்கள் மிகுந்தசரவணப்பொய்கையினிடத்தில் அலர்ந்திருக்குங் கமலங்களினொன்றிற் சராசரப்பிரபஞ்சங்க ளனைத்தினையுங் காத்தருளுவதாகத் திருவுளங்கொண்டதாற் கிருபையுற்று ஒப்பற்ற குமாரதேவரானவர் பாலபருவத்தினையுடைய பிள்ளையாக் கிருபாநோக்கத்தினைப்பரப்பி வீற்றிருந்தனர்.

கேட்டீர்களோ- 'சவுனகாதிரிஷிகளே, தீர்த்தவிசேஷத்தினைப்பெற்ற கங்கையினதுபாரிசத்தில் இவ்விதச் சிறப்பினைப்பெற்று விளங்குஞ் சரவணப்பொய்கையினிடத்தில் எழுந்தருளியிருக்கின்ற பாலசுப்பிரமணியக் கடவுளானவர் குழந்தைப்பருவமாகநின்று நடாத்துந்திருவிளையாடல்களைப்பார்த்து மகாவிஷ்ணுமுதலாகிய தேவர்கள் அன்பு மிகுதியினால் கார்த்திகை முதலிய கன்னியர்களைத்தருவித்துச் சொல்லுகின்றனர். ஓ- பெண்களே, சண்முகங்களைப்பெற்ற எமதுகடவுள் ஒருகுழந்தையைப்போலவடிவுகொண்டு சொல்லுதற்கரிய மகிமையினையுடைய இந்தச்சரவணப்பொய்கையினிடத்தில் வீற்றிருக்கின்றனர், அவருக்குஉங்கள் கொங்கைகளிற் பெருகும்பாலை உண்ணக்கொடுத்து அன்பாகப் போற்றிவரக் கடவீர்களென்று சொன்னமாத்திரத்தில் மகாபாக்கியமென்று இசைந்தவர்களாய்க் குற்றமற்ற பதிவிரதைகளாகிய அவர்களனைவருஞ் சரவணப்பொய்கையினிடத்திற் றிருவுருப்பெற்று விளங்குந்நிர்மலக்கடவுளாகிய குமாரதேவர் சமீபத்திற்போய் அதிகபிரியங்களுடன் ஐயனே,பசித்திருக்கின்றீர், அமுதுண்ணவாரும் வாருமென்று இருகரங்களையும்நீட்டி அழைத்து வேண்டுமுன்னிலையிற் றம்மையடைந்தவர்கள்வேண்டிய பேறுகளைக்கடாட்சிக்கும் பெருமையினையுடையவராதலாற்சண்முகங்களைப்பெற்று ஒருதோற்றமாகக் காட்டியவர் ஆறுகுழந்தைகளாக நின்றனர். இந்தப்பிரகாரம் அறுவகைத்தோற்றமாய் விளங்கிக் கைகால்களை உதறித்தாவும்போது கார்த்திகைத்தெரிவையருக்குத் தேகம்பூரித்துக் கொங்கைகள் குதுகுலித்து பாலினது சுரப்பினால் விம்மிவருந்தி அதிகமகிழ்ச்சியுடன்வெவ்வேறாகத் தமதுகரங்களைநீட்டி ஐயனேஎம்மைஆளவந்த குழந்தாய், பாலுண்டு பசியாற வா வாவென்று ஆவலுடனெடுத்து முத்தமிட்டு மார்பிலணைத்துஒப்புவமையிலடங்காத சுந்தரமுள்ள தமதுகொங்கைகளிற்பெருகும்பாலினைக் கொடுக்கவரும்போது அவ்வன்னையர் முகங்களைக்கிருபையாகப்பார்த்து திரு நகைகொண்டு அதிகபசியுடன் வருந்துகின்றவரைப்போலத் துரிதமாய் அவர்தனங்களைத் திருவாயினாற் பற்றிச் சப்பிச்சப்பித்தெவிட்டவுண்டபின்பு ஆறுருப்பெற்றுநின்ற ஒப்பற்ற முதல்வனைக் குளிர்ந்த தழைகளைப்படைத்துக் கவிந்திருக்கின்ற கடப்பமரத்தினது நிழல்பரவி யிருக்குஞ் சரவணப்பொய்கையினிடத்தில் வண்டினங்க ளிடைவிடாது மொய்த்துத்தேனையருந்திரீங்காரத்தொனிகளைச் செய்திருக்குந் தாமரைமலராகிய தொட்டிலினிடத்தில் வளர்த்தி மன்னுயிரைக்காக்கவந்த வள்ளலே? உறங்குறங்கு ஏழைபங்காளனே? உறங்குறங்கு எமது கண்மணியே! நித்திரைசெய்யுமென்றிவ்விதங்களாகத் தாலாட்டிப்போற்றி வருமுன்னிலையில்அவ்வன்னையர் களிக்கக் கிருபையுற்று இத்திருவிளையாடல்களைச் செய்யத்தொடங்கினர்.

ஒருருவம் மெய்மறந்து நித்திரைசெய்யவும், ஒருருவந் திடுக்கிட்டெழுந்து அமிழ்தினுமினிய குதலைச்சொற்களைப்பேசவும், ஒருருவந்தாயினது முலையினைத் திருவாயில் வைத்துப் பாலையுண்ணவும், ஒருருவம்அதிசயமாகநகைக்கவும், ஒருருவந் திருவிளையாடலைச் செய்யவும், ஒருருவம்எவ்வளவுசமாதானஞ்சொல்லினுங் கேளாமல்தாய்முகத்தைப்பார்த்துப்பார்த்து விம்மிவிம்மிஅழவும் ஒருருவங் கரங்களைநீட்டித்தவழவும், ஒருருவம் மெல்லவெழுந்து தத்தடியிட்டு நடக்கவும், ஒருருவமெழுந்துநிற்கக்கூடாமையாற் பொத்தென்றுவிழவும், ஒருருவம் உட்கார்ந்து சாஞ்சாடியிருக்கவும், ஒருருவமானது அப்பொய்கையினிடத்திற் பாய்ந்து கலக்கித்திரியவும் ஒருருவந் தாய்மடியிலிருந்து முலைக்காம்பினை வருடியிருக்கவும், ஒருருவமானது குதித்துக்களிக்கவும், ஒருருவந் திருக்கரங்களைக் கொட்டி அம்மானையாடவும், ஒருருவந்தன்பெருமைகளைப்பாடவும் ஒருருவம் பலதிக்கினும் மருண்டுபார்க்கவும். ஒருருவந் தாயைத்தப்பித்துக்கொண்டோடவும், ஒருருவம் தாய்க்ககப்படாமல் ஒருமூலையில் ஒளித்திருக்கவும்,ஒருருவந் தாயினைத்தேடித்திரியவும்,இவ்விதங்களாகஅறுவகைப்பட்டவுருவங்களானவை ஒருகணப்போதிற்பத்துநூறாயிரபேதங்களாகத்தோற்றிப் பரம்பொருளாகவெழுந்தருளிய சர்வக்கியனான குமாரதேவரானவர் தாமெவ்வுயிரினிடத்தும் பொருந்தி நடப்பிப்பதைப்போல இத்தகைய அதிசயத்திருவிளையாடல்களைத்தமது மாயாவிலாசத்தாற்காட்டினர். கேட்டீர்களோ- சவுனகாதிரிஷிகளே? சிற்பரமூர்த்தியாகிய சிவசுப்பிரமணியதேவருடையபிரபலத் திருவிளையாடல்களின் மகத்துவங்களனைத்தையும் தரிசித்த மகாவிஷ்ணு பிரமதேவன் இந்திரன் ரிஷிகள்தேவர்கள் முதலானவர்க ளனைவரும் அற்புதங்கொண்டு தங்களுக்குள் பேசிக்கொள்ளுகின்றனர்,குழந்தைப்பருவமாகவிருக்கின்றஇவரொருவரோ பலகோடி சிறுபிள்ளைகளாகநின்று நாமனைவரும் பார்த்திருக்க ஒரு நிமைப்போதில் அளவுபடாத பேதாபேதங்களைக் காட்டுகின்றனர். இந்தக்குமாரதேவர் திருவிளையாடலின் பெருமைகள் நம்போலிகளால் அறியப்படுவதன்றுமேலும் மாயவித்தைகளின் வல்லபங்களை மிகுதியாகச்செய்யவல்லர் கரங்களினேந்தித் தாலாட்டும் பருவம்பெற்ற சிறுகுழந்தையைப்போலத் தோற்றுகின்ற இக்கடவுளானவர் நடித்துவருகின்றஇத்தகைய சிறந்த மாயைப்பெருக்கினைப்போலமுடிப்பது எத்தகையருக்கேனும் அரிதரிது இதனைக்குறித்து வளைத்து வளைத்துப்பேசுவதிற் பயனென்னை தேவர்களிற்சிறந்தவராகப் பேசப்படுகின்ற நாமேதேனுஞ்செய்ததுண்டோ ஆதலாலிக்கடவுளானவர் ஒப்பற்றபரமசிவத்தோற்றமேயாம், இதற்கு யாதொரு சந்தேகமுமில்லையெனப் புகழ்ந்து அவரைநோக்கிப் பலதரந்தொழுது வாழ்த்தியிருந்தனர். இவர்கள்சரித்திரமிற்கக் கார்த்திகைத்தெரிவைமார் அனைவருந்தத்தமிடத் திருக்கின்ற குமாரதேவரது அதிசயத் திருவிளையாடல்களைப்பார்த்து மிகுந்த அற்புதமடைந்தவர்களாய்க் குழந்தைகளென மனதில் நினைந்திருந்ததைமறந்து சற்றேனும்பிரிய வாற்றாமையாய்த் தாங்கள் வழிபடுகின்ற இஷ்டதெய்வத்தைப்போலக்கருதிப் பத்திவினயங்களுடன் போற்றி யிருந்தனர்.கேட்டீர்களோ!நைமிசாரணியவாசிகளே!சரவணப்பொய்கையினிடத்திற்றோற்றியசிறப்புப்பொருந்தியதாமரைமலரையணையாகக்கொண்டு சண்முகங்களைப்படைத்தகுமாரதேவர் வீற்றிவிளங்கும்அவதாரமகத்துவங்களை யிதுபரியந்தஞ்

சொன்னேம், இவர் வெளிவந்தபின்பு திருக்கயிலாய
த்தில் எமதிறைவியாகிய பரமேஸ்வரியினது அனுக்கிர
கப்பெருக்கினல் பாலசுப்பிரமணியதேவரது துணைவரா
கிய நவவீரரும் இலட்சம் வீரருந்தோற்றிய பிரபாவங்க
ளையும் இனிமேற் பேசுவோம் பராமுக மின்றிக் கேட்பீ
ராக.

அம்புயமுறமுஞ்செங்கேழறுமுகம்படைத்தகோல
நம்பிதன்வரவுதன்னைவின்றனமினிமேலங்க [வே
ணெம்பெருமுதல்விதன்பாலிலக்கத்தொன்பதின்மர்செவ்
டம்பியராகிவந்ததன்மையைப்புகலலுற்றும்,

## துணைவர்வருபடலம்.

நஞ்சயின்றவனெற்றிநாட்டத்தினனல்கு
வெஞ்சுடர்ப்பொறிவெம்மையையாற்றலள்விமலை
செஞ்சிலம்படிதாக்கலினவமணிசிதற
வஞ்சியோடினளித்திறமுணர்ந்தனளகத்துள்.

ஆலகாலவிஷத்தினையுண்டு மன்னுயிரினைக்காத்தருளி
ய சிவபிரானுற் றமது நுதல்விழிகளின் மூலமாகப்படை
த்த தீட்சணியமுள்ள தீப்பொறிகளினதுசுவாலைக்குச்சகி
க்கப்படாதவளாய்ப் பரமேஸ்வரியானவள் பயந்து திருவ
டிகளிற்றரித்திருக்கின்ற சிலம்புகள்ஒன்றோடனென்றுதா
க்கி நவரத்தினங்களுமிறையத் தமது திருமாளிகையினை
நோக்கி ஓடினவள் அக்காரணங்களையோசித்து மகாவிஷ்
ணுமுதலாகிய தேவர்கள் வந்துபரமசிவத்தினைவந்தித்து
நமதுகுறைகள் நிவாரணமாதற்பொருட்டுத் தேவரீர்கிரு
பையுற்று ஒருகுமாரனைத் தரவேண்டுமெனப்போற்ற அ
தற்கிரங்கித் தமது நெற்றிவிழிகளினிடமாக அனற்பொ
றிகளைத்தந்து அவைபிள்ளையுருப்பெறத்தக்கதாகச் சரவ
ணப்பொய்கையினிடத்துக் கனுப்பினரெனப் பார்ப்பதி
யார்தெரிந்துகொண்டவளாய் உடனே அம்மனுக்கு அதி
ககோபம்பிரவேசித்து நிர்மலக்கடவுளாகிய பரமன் என்
னிடத்திற்றமதருளினைப்பெற்ற திருக்குமாரனைப்படைக்
கவொட்டாமற்றடைசெய்த பொன்னகரத்துக் கிறைவனா
கிய இந்திரன் பிரமன்விஷ்ணு மற்றதேவர் முதலியவர்க
ளுடைய தேவிமார்களுக்குஇத்தினமுதற்புத்திரசந்தான
மில்லாமற் போகக்கடவதென்று சபித்தனள். அவ்வாறே
விண்ணவர்ரிஷிகள் விர்த்தியடையாமல்அதுவனாயிற்றோ
ன்றிய தொகை முப்பத்துமுக்கோடி தேவரென்றும் நாற்
பத்தெண்ணாயிரம் ரிஷிகளென்றும் நாளது வரையிற்பே
சவிருக்கின்றனர். இவ்விதமாக இமையபர்வதராசபுத்தி
ரியானவள் சபித்தபின்பு மறுபடியுந் திருச்சபைக் கெழு
ந்தருளிச்சைவம்வைஷ்ணவம்சாத்தேயம் கபாலீகம்பௌ
த்தம் சாரவாகம்என்னும் அறுசமயங்களைப்படைத்துவீ
றச்செய்தருளியபரமசிவத்தினதுபவுத்திரமாகிய சங்கிதா
னத்தில்வந்து ஆதியில் மகாவிஷ்ணு தேடிக்காண்பரியதி
ருவடிகளைக் கண்கள்குளிரத்தரிசித்து வணங்கிக் களித்த
வளாய்க் கர்த்தனே? தேவர்களனைவரும் பணிந்து தமது
குறைபாடுகளை விண்ணப்பஞ்செய்துவேண்டியகாரணத்
தினல் தேவரீர் கடாட்சித்த சுயஞ்சோதிப் படிவமாகிய
பொறிகளினது உஷ்ணத்தினற் பயப்பிராந்திகொண்டுச
ரீரமுற்றும் வெம்பிப் பதைத்தகாரணத்தினல்தேவரீரை
ப் பிரிந்தோடியயான் எமதுநாதனே!நீர்அப்பொறிகளைப்
போக்கியபடியால் மீளத் திருச்சபைக்கு வந்தனனென்று
பராசத்தியானவள் விண்ணப்பஞ்செய்தகாலத்திற் சிவபி
ரான் அம்மையிடத்திற் கிருபையுற்றுக்கரங்களைநீட்டிவ
ரவழைத்து தமதிடப்புறத்திற் சேர்த்துக்கொண்டனர்.இ
ப்பிரகாரஞ் சிங்காதனத்தில் வீற்றிருந்தபார்ப்பதியார்தா
ம்முன்னமோடியகாலத்திற் சதங்கைகளினின்று சிதறிக்
கிடந்த மணிகளானவை எமதிறைவன் திருமுன் பிரகாசி
த்திருந்தது. கேட்டீர்களோ? சவுனகாதிரிஷிகளே! மாந்த
ளிரினும் மிருதுவாயபாதார விந்தங்களிற் றரித்திருந்த
சொர்ன சரங்களிற்கிண்கிணிகளாகக் கோத்திருந்தவைநீ
ங்கிச் சபையினிடத்திற் கர்த்தனது அனுக்கிரகப்படிக்கு
ப் பார்ப்பதியார் திவ்விய சுந்தர வடிவமானது அவற்றிற்
றோற்றிய தெப்படிக்கிருந்ததெனில் ஐம்முகக்கடவுளாகி
ய சிவபிரான் திருமுகத்தினிடத்திற்சோம சூரியாக்கினி
யாகிய முச்சுடர்களுந் திரிநேத்திரங்களாக விளங்குவதை
ப்போலக் காட்டியது. இவ்விதமாகச் சிறந்த நவமணிக
ளின் மூலமாகத்தோற்ற நின்ற உமையவள்திருவுருவனை
த்தினையும் பரமன் விழிகளைச்செலுத்திப்பார்த்தருளிவா
ருமென்றழைத்தகாலத்தில் உலகங்களிற் புகழ்நின்ற ஒவ்
வொருவகை மணிகளிடத்தில் ஒவ்வொரு சத்தியாகத்தே
வர்செய்தபுண்ணியபலத்தினல் நவசத்திகளும்ஏகமுகமா
ய்வெளிவந்தனர்.

இந்தப்பிரகாரம்பர்வதராச புத்திரியாகியபார்ப்பதியா
ரையொத்த சுந்தரவடிவினைப்பெற்றுதித்த நவசத்திகளு
ம்பரமசிவத்தினதுதிருவடிகளிற்சேவித்துநின்றஅத்தே
வருடையமங்களகரமாகியரூபலாவணியங்களைப்பார்க்கப்
பார்க்கமனந்தளர்ந்துமையல்கொண்டுமனப்பூர்வகமாகஇ
ச்சித்தமாத்திரத்தில் ரிஷிகள்பத்தினிமாரைப்போலத்தட்
சணமேகர்ப்பங்களைப்படைத்தனர்.இச்செய்கைளனைத்தி
னையும்உமையவள்திருஷ்டாந்தமாகக்கண்டமாத்திரத்தில்
ஆதியிற்சகலபுவனசராசரங்களையும் படைத்தருளியஈஸ்
வரிக்குஅவர்கள்மீது அதிககோபம்பிரவேசித்து எனக்கு
மாறுகச்சக்களத்திமாராகியகாரணத்தினல்மேலோங்கிய
கர்ப்பங்களுடன்பலகாலமிவ்வாறேயிருக்கக் கடவீர்களெ
ன்று சபித்தனள்இச்சாபமொழியைக்கேட்டமாத்திரத்தி
ல் அவர்கள்மிகவும்நடுங்கிப் பயப்பிராந்திகொண்டவெம்
மையினல்தேகமுற்றினும்வியர்த்தொழுகிய ஜலப்பெருக்
கினிடையில் தேவதேவோத்தமனுகிய பரமன்திருவரு
ளின்முயற்சியினற்சூரியர்கூட்டம்போலச் சலனமற்றவீ
ரபராக்கிரமஜயசாலிகளாகிய இலட்சம்பிள்ளைகள் பிறந்த
னர் இவ்விதமாக மாவடுவினையொத்த நேத்திரங்களைப்ப
டைத்தநவகன்னியர் வெயர்வையினிடத்திற்றோற்றியபல
சாலிகளாகிய இலட்சம் பேர்களுங் கோடை யிடிகளை
யொத்த உரத்தசொற்களோடு பொன்னுடை யிடையி
ற்றரித்து கரங்களி லொப்பற்ற வீரவாள்களைத் தாங்
கிச் சபையெங்கு மிடமின்றிநெருங்கிப் பரமனைக் கண்
டவுடன் சமீபத்திற்போய் உபயசரணரவிந்தங்களுந்
சிரங்களிற்படத் தீர்க்கதண்டன்சமர்ப்பித்து நாவினுக்
கினிப்பைத்தருங் கடவுளினது அளவற்ற திருநாமங்க
ளைத் துதித்தவர்களாய்க் கரங்களைக்கூப்பி நிற்கின்றவர்க
ளைச் சர்வக்கியனுகிய பரமன்கிருபையாகப்பார்த்துச்சொ

ல்லுகின்றனர், குமாரர்களே கேட்பீராக நீங்களனைவரும் ஜயசாலிகளாகவீறி இந்திரன்முதலாகிய தேவர்களுக்குப் பகைவராகிய இராட்சதர்முதலியோரைக் கண்டதுண்டமாகச் சங்கரித்து வேரறக்களையவிருக்கின்ற நமது திருக்குமாரனாகியகுமாரசுவாமிக்குப் படைத்துணைவராகவிருக்கக்கடவீரென்று அநுக்கிரகஞ்செய்து தேவாதிதேவனாகிய சிவபிரான் அவர்கள்மீது கடாட்சவீட்சணியத்தைச் செலுத்திவேண்டியவரங்களையும் புசபலபராக்கிரமசம்பத்தையும்பெறத்தந்தனர், இவ்வாறுபாலாக்ஷர் தயாரசத்துடன் அளவற்றபேறுகளைக் கடாட்சித்தவுடன் இலட்சத்தவராகிய நற்குணநற்செய்கைகளையுடைய பிள்ளைகளானவர்கள் பத்திவிசுவாசங்களில் மேம்பட்டவராய்த் தமக்கேற்றபணிவிடைகளைச் செய்து கொண்டு பரமன்சந்நிதானத்தைவிட்டு நீங்காமலிருந்தனர், இச்சரித்திரம்நிற்கநீக்குதற்கரியகோபத்தினாற் பார்ப்பதியானவள் முன்சபித்தசாபவலியினால் நவமணிகளினிடத்துதித்த கன்னியர்கள்கர்ப்பவாதனையிற்பட்டுமிகவும்வருந்தியும் அம்மனைப்பிரியாதிருந்து பலவிதங்களிற்போற்றிப் பணிவிடைகளைச்செய்துகொண்டு வெகுகாலமாகச் சிசுக்களைச்சுமந்து வாடியிருக்கின்றபோது மணிகளிடத்துதித்த அக்கன்னியர்உதரத்திற் பரமசிவத்தை வழிபட்டிருக்கின்ற நந்திதேவருடைய அம்சையைக்கொண்டிருக்கின்ற கணத்தலைவர்கள் தோற்றிப் பத்துமாதத்துக்குமேற்படப் பலநாள்களாகத் தாய்மார்உதரச் சிறையிற்பட்டுக் கைகாலாடாமற் பலதுன்பங்களைஅநுபவித்து வருந்தியிருந்தனர்.

இவ்விதமாக நவமணிகளிற்பிறந்த மங்கையர்திருவயிற்றிற் கர்த்தனைப்போற்றிவரும் நந்தியெம்பெருமான்கணத்தலைவர்பொருந்தியகாளையராய்சுகப்பிரமரிஷியைப்போலச் சிவபிரானைச் சிந்தித்து யோகசாதனைகளைச் செய்துகொண்டிருக்கு முன்னிலையிற்றாங்குதற் கரியபாரச்சுமையானதால் அப்பெண்கள் வருந்திஉமாபரமேஸ்வரனை வணங்கிப்போற்றி அம்மையப்பரோ யிதுபரியந்த மிந்தவுதரபாரத்தைத்தாங்கிக் களைத்தனம் இனிமேல்எங்களாற்பரிக்கச்சவுக்கியமல்ல கிருபையுற்றுவெளிகாணும்படிக்குக் கடாட்சிக்கவேண்டுமெனப் பலவாகத்துதிக்கு முன்னிலையிற் சோமசேகரர் அத்தெரிவையரிடத்திற் பரிவாய்த்த மதிடப்பாகத்தமர்ந்த உமையவள் திருமுகத்தினைப்பார்த்துச்சொல்லுகின்றனர், கறுத்துநீண்டுபரிமளித்திருக்கும் அளகபாரத்தினைப்படைத்த பார்ப்பதீஉனதுதிருவடிகளிற்றரித்த பாதசரங்களிற்றோற்றிய இவர்கள்உனதுசாபசம்பந்தத்தினாற்கருவைப் பலகாலமாகச் சுமந்துமிகவும்வருந்தினர், ஆதலால் இனியாவது புதல்வரைப்பெற்றுச்சிறுமைநீங்கிவாழும்படிக்குக்கடாட்சிப்பாயெனக் கட்டளையிட்டனர், பரமேஸ்வரரிப்படித்திருவாய்மலர்ந்தபோது உமையவளானவள் அதற்குச்சம்மதப்பட்டு திருநகைகொண்டவளாய் அப்பெண்கொடிகளைப்பார்த்து வலியபிள்ளைகளைப்பெற்றுச் சவுக்கியத்திலிருப்பீரெனக்கடாட்சித்தனள் அவர்கள்கர்ப்பத்திலிருந்து யோகசாதனைகளைச் செய்திருந்தபாலகர் இச்செய்திதெரிந்துநல்லறிவினைப்பெற்றபேருணர்வினைப்படைத்திருக்கின்ற வீரர்களாதலாற்றாம்வெளிப்படுவதற்கேதுவாகியபருவத்தை நிதானித்து யோகசாதனையைநீக்கிமனமகிழ்ச்சியாய்ப்பிறப் பிறப்பற்றபரம்பொருளினதுஅருட்டிறத்தினைப் போற்றிப்பணிந்துதாய்மார் கர்ப்பத்தினைநீக்கும் எத்தனத்திலிருந்தனர், அம்மன்பாதசரங்களின்மூலமாய்உற்பவித்தபெண்களும் பார்ப்பதியார் கிருபையுற்றுச் சொல்லியவிசேஷத்தினைக் கேட்டமாத்திரத்திற்சந்தோஷசித்தராய் மனவருத்தங்களைப்போக்கி யிருதிறவர்களையும் பணிந்துபோற்றிவிடைபெற்றுத்துரிதமாய்ஒருபாரிசத்திற்போய்ச்சற்புத்திரரைப்பெற்றனர், இப்படிக்கு நந்திதேவர்கணத்தலைமையினைப்பெற்றுப் பந்தபாசங்களை நீங்கியிருக்கின்ற ஒன்பதுபிள்ளைகளும் ரிஷபமுகத்தினைவாய்ந்த நந்தியெம்பெருமான் உலகத்தில் அவதரித்ததைப்போல உற்பவித்தவரது வரலாற்றினையுஞ் சொல்லுவோம்.

சிவசுப்பிரமணியதேவர் அநுக்கிரகத்தினாற் சூரன்முதலிய விராட்சதரால் தேவர்கள் யாதொருதுன்பங்களையும் பெறாமல் அவர்களை நாசஞ்செய்வதாக நாகரத்தினப்பாவையென்னுங் கன்னிகையினிடத்தில் உலகோர் அதிசயித்துப் புகழ்ந்துபோற்றத்தக்கதாக வீரவாகுதேவர்திருவவதாரஞ்செய்தனர், வீரசிங்கத்தினையொத்த சவுரியவான்களாகிய சூரன் சிங்கமுகன்தாருகனென்னும் பாதகர்படைத்த அளவற்றசேனைசமுத்திரமென்னு மிருட்கூட்டங்களை அதஞ்செய்து உலகங்களுக்கு சவுக்கியங்களைத் தருஞ் சூரியனைப்போலச்சொக்கட்டான் காயினையொப்ப அடிபரந்து நுனிகுவிந்து பலஆபரணங்களைப் பூண்டிருக்குந் தனபாரங்களைப்பெற்ற தரளவல்லியினிடத்தில் வீரகேசரியென்பவன்பிறந்தான் மானிடர்தேவர்முதலானவர்களுக்கும் பலநாட்களாகக் கொடியதுன்பங்களைச் செய்துகொண்டு வீரமாமயேந்திர புரியில்வாழும் பாதகராகிய ராட்சதவெள்ளங்களனைத்தையுங்கண்டதுண்டங்களாக வாட்டித் தொலைக்கவல்ல அதிகமகிமையுள்ள வீரமாமயேந்திரனானவன் புஷ்பராகக்கன்னிகையினிடத் தவதரித்தனன், ஆயிரங்கிரணசமுகங்களையுடைய சூரியனுஞ் சமுத்திரத்தினிடத் தடங்கியிருக்கின்ற வடவாமுகாக்கினியும் குளிர்ச்சிபெற்ற சோடசகலைகளையுடைய சந்திரனும்வெட்கிப்போசத்தக்கதாகப் பிரகாசிக்குஞ்சுந்தரவடிவினைப்பெற்ற கோமேதகப்பாவையினிடத்தில் தேவர்கள்செய்த தவவிரதபலத்தினால் வீரமாமயேச்சுரன்பிறந்தான் தெய்வலோகவாசிகளாகிய விண்ணவர்வீறிவிளங்கவும் இராட்சதப்பாதகரனைவரும்அதப்பட்டுப்போகவுந்தருமந்தலையெடுத்து விர்த்தியாகவுங் கிரணகாந்தியைப்பெற்ற வயிடூரியப்பாவையினிடத்தில் வீரகண்டையணிந்த பாதங்களைப்பெற்ற வீரமாபுரந்தரன்தோற்றினன், சூரபதுமன் புசபலபராக்கிரமமும் அவனதுதுணைவர்கள்வீரத்தன்மையும் அவர்களைச்சூழ்ந்திருக்கின்ற சவுரியபராக்கிரமசாலிகளாகிய சேனைசமுத்திரங்களுந்தேவர்கள்மனவாட்டங்களும் ஏககாலத்திற்றொலைந்து சீர்படும்படிக்குச்செய்யவல்ல வீரராக்கதனென்பவன்பரமசிவகடாட்சத்தினால் வயிரமங்கையினிடத்திற்றோன்றினன் மேருவை வில்லாகக்கொண்டு திரிபுராதிகளை நிமைப்போதிற்றகித்தெரித்த சிவபிரான்கிருபையினாற் கடையுகத்தில் வடவாமுகாக்கினியானது சீறியெழுவதைப்போல மரகதவல்லியினிடத்தில் வீரமார்த்தாண்டன் அவதரித்தனன், பர்வதாகிருதியாக விளங்குந்தேர்கள் மதயானைகள்தந்தித்தாவுங் குதிரைகள் ஆலகாலத்தினையொத்த கொடியசேனைசமுத்திரங்கள்முதலாகிய பலங்களையும் நிமைப்போதில்அதப்படுத்தவல்ல தீரனாகிய வீரராக்கதனென்பவன் பவளவல்லியினிடத்திற்றோற்றினன், கற்கம்பத்தினைப்பிளந்தெழு

ந்து இரணியனைவாட்டிய நரசிங்கமும் ஆலகாலவிஷமும்போலப் பாதகரைவாட்டித் தினையிரட்சிக்கவல்லவீரதீரனென்பவன் நீலவல்லியினிடத்தில் அவதரித்தனன்.

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே மேற்சொல்லியநவவீரர்களும் பரமசிவத்தின் அனுக்கிரகத்தினுற்றத்தமதுதாய்மாருடையநிறமும் நாமங்களையும்பெற்றுப்பிதாம்பரங்களையுடுத்துப் பலகாலந் தாய்மார்கற்பத்திலிருந்ததற்குத் தகுதியாகிய தேகங்களுடன் பிரமனைப்போலத்தமதன்னையர் உந்திக்கமலமூலமாக வெளிவந்தனர் இப்பிரகாரம் உதித்தசவுரியவான்களாகிய நவவீரர்களும் அச்சபையினிடத்தில் விளங்குஞ் சிங்காதனத்தின்மீதுபிராட்டியாருடன் எழுந்தருளியிருக்கின்ற சிவபிரானைக்கண்டவுடன் பயபத்திவிசுவாசங்களுடன் திருவடிகளிற்பணிந்தெழுந்து கரங்களைக்கூப்பி நிற்கின்றகாலையிற்பரமன்அவர்கள்மீதிற் கிருபாநோக்கம்பாலித்து இடப்பாகத்தமர்ந்திருக்கின்ற பார்ப்பதிதேவியைப் பரிவாகப்பார்த்தருளிப்பெண்ணே யிவர்கள்வரலாற்றினைக் கேட்பையாக,அதிகவிவேகசாலிகள் வலியிலுயர்ந்தவர்கள் இவர்களை யாரென்றிருக்கின்றனை நமதுபுத்திரராகவேண்டும் மேலும் நூதனமாகவந்தவர்களல்ல நம்மடியனுகிய நந்திதேவன்கணத்தலைவராகுமென்று வேதப்பொருளாகிய பரமசிவன்அருளிச்செய்த காரணங்களைப் பார்ப்பதியார்கேட்டுச் சந்தோஷமிகுதியினுல் அவர்களைவாழ்த்தி ஆதரித்தனள்,பரமனுந் தகத்தகாயமாய் விளங்கியிராநின்ற ஒப்பற்றவாளாயுதங்களை நிருமித்து அவர்களனைவருக்குங்கொடுத்துப் பிள்ளைகளே நவகன்னியர்கள் வெயர்வையினிடத்திற்பிறந்த இலட்சம்வீரர்களுடன் நீங்கள்கலந்து உங்கள் தமையனுகவுமிராநின்றகுமாரசுவாமியைக்கூடிப் பிரியாமல் அவனிட்ட ஏவற்பணிவிடைகளைச் செய்துகொண்டுவாழக்கடவீர்களென்று கர்த்தன் திருவுளம்பற்றியகாலத்தில் அக்குமாரர்கள் பரமனைச்சேவித்து அவ்வாறே நடந்துகொள்ளக்கடவோமெனச் சம்மதித்தவர்களாய் அவ்வீரர்களொன்பதின்மர்களும் இலட்சம்வீரர்களுடன்சேர்ந்து சிநேகமாய்க்குலவிக்கொண்டு சிவபிரான் வீற்றிருக்கின்றநகரத்தை நீங்காமல் அத்தலத்தில் வாசமாயிருந்து பணிவிடைகளைத்தவருமல் முடித்துவந்தனர், நவகன்னியர்களும் உமையவளை நிமைப்போதும் பிரியாமற்காத்திருந்து அம்மனிட்டஏவற்பணிவிடைகளைப் பத்தியுடன் நடத்தி சவுக்கியமாகவிருந்தனர்.

## சரவணப்படலம்.

ஏற்றநானவரொன்றெழியநின்மரோடிலக்கர்
தோற்றமெய்நியதன்மையையித்துணைசொற்று
மாற்றல்சேர்புனற்சரவணத்தடந்தனிலறுவர்
போற்றவைகினுன்கயிலையிற்புகுந்தமைபுகல்வாம்.

கேட்டீர்களோ? சவுனகாதிரிஷிகளே!சகலராலும்புகழவல்ல கீர்த்திப்பிரதாபசாலிகளாகிய நவவீரர்களும் இலட்சத்தவரும் பரமசிவகடாட்சத்தினுல் அவதரித்தகதாப்பிரசங்கங்களையிதுபரியந்தம்பேசினேம்இனிமேல் ஜலவளம்பெற்ற சரவணப்பொய்கையினிடத்திற்கார்த்திகைத்தெரிவைமார் அறுவரும்போற்றி வளர்க்கவீற்றிருக்கும் சிவசுப்பிரமணியதேவர்திருக்கயிலாயத்துக்கெழுந்தருளிய சரித்திரங்களையுஞ்சொல்லுவோங் கவனிப்பாகக்கேட்பீராக ஞானவான்களாற்றரிசித்துப்போற்றத்தக்கபெருமையினையுடையவெள்ளியங்கிரியினிடத்தில் வீற்றிருக்கின்றபரப்பிரமசொரூபியாகியசிவபிரானனவர்திருவயிற்றிற்சுமந்துபெருமல்மன்னுயிரனைத்தினையும்படைத்தருளியபார்ப்பதிதேவியைப்பார்த்துச்சொல்லுகின்றனர். மனக்கவலைகொண்டு வருந்தியிருந்தமகாவிஷ்ணு பிரமதேவன் இந்திரன் முதலாகியதேவர்கள் தமதிடர்களைப்போக்கிக்களிக்கத்தக்கதாக முன்னம்நமதுவிழிகளினிடத்திற்றிருவவதாரஞ்செய்துதாமரைமுதலியபுஷ்பவகைகள் பெருத்திராநின்ற சரவணப்பொய்கையினிடத்தில்வளருகின்ற நமதுதிருக்குமாரனையிந்தத்திருக்கயிலாயத்தினிடத்துக்குஅழைத்துவரப்போவோம்வாருமென்றுபுலித்தோலைத் தரித்தபரமன்பேசியதறிந்துபார்ப்பதியார் அதிகமகிழ்ச்சியைக்கொண்டவளாய்க்கர்த்தனே தேவரீர்திருவுளப்படிக்குநாமிருவருமாகச்சென்றுபுத்திரனைஎடுத்து வரும்படியாகப்பிரயாணப்படுமென்றுவேண்ட காளகண்டமூர்த்தி கிருபையுற்றுச்சிங்காதனத்தைவிட்டிறங்கித் துரிதமாய்த்தமதுதிருத்தேவியுடன்ரிஷபவாகனத்தின்மீதுஆரோகணித்தனர்இந்தப்பிரகாரம் நந்திவாகனத்தின்பிடரியில்பரமன் வீற்றிருந்தகாலத்தில் வானநாடராகியதேவர்கள் நமதுதுன்பங்களனைத்தும் இன்றுடன் அதப்பட்டுப்போய்விட்டதென்னுஞ் சந்தோஷப்பெருக்கினுல் வாழ்த்திப்போற்ற நந்திதேவர் கணத்தலைவராகிய நவவீரர் இலட்சர்சூழ்ந்து சிவன்பெருமைகளைக்கொண்டாடவும் தீட்சணியமிகுதியாகிய ஆலகாலவிஷத்தினைத் திருக்கரத்திலேந்திவந்து பரமனிடத்தொப்பிவித்த பெருமைபெற்ற ஆலாலசுந்தரர்முதலிய சிவகணங்களுஞ் சிவத்தின் திருக்கோலம்பெற்றிருக்கின்ற உருத்திரகோடிகள் இருபக்கங்களினும் நெருங்கித் துதித்துவரத்தக்கதாக வெள்விடையின்மீது நடக்கும்போது இச்செய்தியறிந்த மகாவிஷ்ணு பிரமதேவன் இந்திரன்முதலியதேவர்கள் அதிதீவரமாகவந்து பாரிசாதபுஷ்பங்களை வாரிவாரிப் பரமன்மீதி லிறைத்துச்சுபங்களைக் கொண்டாடிக்கொண்டு பின்பற்றிவரவும் ஜயபேரி வெற்றி முரசஞ் சங்கம் சின்னம் சல்லரி மல்லரி திமிலைமுதலிய பதினெண்வாத்தியங்களையும் பூதவீரர்சள்அதிகவோசையெழ முழக்கிக்கொண்டு போகவும் சதுர்வேதங்களுமற்றுமிராநின்ற கலைகளும் ஓவென்னும்ஓசையோடு உமாபதியின் குணநிசயங்களை விளக்கிச்செல்லவும்விஞ்சையர் கின்னரர் வீணைகளைமீட்டி தேவகானங்களைவாசித்துத்தொடரவும் சந்திரனெனவன் தனதுகலைகளிலொன்றாகிய மூன்றாம்பிறையினைப்பரமன் சடாமகுடத்திற்றரித்திருப்பதைப் படம்பொருந்திய விடநாகம்மேலிட்டுவருத்தப்போகின்றதென்னும் ஏக்கத்தினுற்றன்னிலையைவிட்டுவந்து கவிந்திருப்பதைப்போலவெண்பட்டுக்குடைகளைச் சூரியர்தாங்கிவரவும் சகரரென்னும்அரசர்கள் சாபசம்பந்தத்தினுற் சாம்பற்பட்டு நரகவாதனையில் வாடுவதை அவர்கள்மரபிலுதித்த போப்பிள்ளையாகியபகீரதராசன் கேள்விப்பட்டுத் தன்பிதுர்க்களை நற்கதியிற்சேர்க்கவெண்ணிப் பலகாலம் அரியதவங்களைச் செய்யும்போது பரமசிவமிரங்கிக் கடாட்சித்தகாலத்திற்பெருகிய கங்கையினிடத்தெழுந்த அலைகளைப்போல வெண்சாமரைகளைப் பலகோடி பூதகணங்கள் வீசிப்போகவும் சிங்கம் புலி யானை கரடி கடமை மான்முதலிய மிருகசமுகங்களை

யுடைய நூறுகோடிபூதவீரர்கள்பரிவட்டங்களைத்தாங்கிச் சூழ்ந்து செல்லவும் அளவற்றசிவகணங்கள் தாங்கிச்செல்லும்மீண்டதுவசபடங்கள் அசையுந்தோறும் வானகங்கையிற்றோய்ந்துதோய்ந்து சிதறுந்துளிகளானவைசொர்க்கவாசிகள் சிவபிரானை வழிபட்டுக் கடைத்தேறும் பொருட்டுக்கற்பகம் தாமரைமுதலியமலர்களைக்கொண்டு அபரிமிதமாய் அருச்சிப்பதை யொத்துக்காட்டவும் இவ்விதமாகநடக்கின்ற மகோச்சவகாலத்தில் அகிலசராசரங்களைப் படைத்தருளியுங் கன்னிகையாகவிளங்கும் பார்ப்பதியாருடன் வெள்விடையின்மீது சிவபிரான்வீற்றிருந்த தமது நகரத்தைககடந்து திருக்கயிலாய பர்வதத்தைத்தாண்டிப் பூமியினிடத்திற் பிரபலமாகக் கொண்டாடும் இமயபர்வதத்துக் கருகில்வந்து அன்னங்கள் விளையாடித்திரியுஞ் சிறப்பினையுடைய சரவணப்பொய்கையின் கரைக்குச் சமீபமாக க்கர்த்தன் உமையவளுடன் வந்துசேர்ந்தனர்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? யிவ்விதமாகச் சந்திர சடாதரக்கடவுளாகிய பரமனும் அவனைப்பிரியாமல் கலந்திருக்கும் பராசத்தியும் அறுவகைத் தோற்றத்தினைக்கொண்டு திருவிளையாடல் செய்திருக்கின்ற குமாரதேவர் குணாதிசயங்களைப்பார்த்து மனமகிழ்ச்சியாய்ச்சலப்பெருக்கினையுடைய சரவணப்பொய்கைக்கரையின்மீதிலெழுந்தருளி யிருந்தனர், அதுகாலையில் அப்பொய்கையினிடத்தில் அலர்ந்திருக்குந்தாமரைமலரின்மீதுசண்முகத்தோற்றமாக வெழுந்தருளியிருந்த பாலசுப்பிரமணியக்கடவுளானவர் தேவதேவோத்தமனையும் மன்னுயிரனைத்தினையும் ஈன்றருளிய பிராட்டியாரையுந்தரிசித்த மாத்திரத்தில் முகமலர்ச்சிகொண்டு புன்முறுவலுடன் மனமகிழ்ந்திருக்கின்ற சமையத்தில்எமதிறைவன்உமையவளைப்பார்த்துப்பெண்ணே?உனதுதிருக்குமாரனை எடுத்துவரக் கடவையென்று கட்டளையிட்டபோது அழகியரிஷபவாகனத்தினை விட்டிறங்கி மனம்பூரித்துச் சரீரம்புளகெழக் களிப்புடன் சரவணப்பொய்கையினிடத்திற்சென்று தமது பிள்ளைகளாகிய அறுவகைத் தோற்றங்களையும் அன்பு மிகுதியினாற் கரங்களைநீட்டிச்சேர்த்துவாரியெடுத்து மார்பினிடத்திற்சேர்த்திறுக அணைத்துச் சண்முகங்களும்பன்னிருகரங்களும்விளங்கும்படியான ஒருருவாகச்செய்தனள் திரிலோக காரணியானவள் இவ்விதமாகக்கூட்டிய தெப்படிக்கிருந்ததெனில் சர்வசங்காரகாலத்திற் பரமன்கட்டளையின்படிக்கு மன்னுயிரனைத்தும் ஒடுங்கிப் பரவெளியிற் சேருங்காலையில் எமதிறைவருக்குரிய சத்தியானவள் உலகங்களைவிளக்கும் பொருட்டுப்பரவியிருந்த தோற்றங்களனைத்தையுந் தன்னிடத்திற் கிரகித்துஏக உருக்கொண்டு பராசத்தியாய்ப் பரசிவத்தைக்கலந்துநின்றதுபோல ஆறுஉருவுகளும்ஒன்றாகவிளங்கி உலகமாதாவினால் கந்தசுவாமியென்றழைக்கப்பெற்றனன். இவ்வாறாகவுரியானவள் சேர்த்தொன்றுபடுத்திய திருக்குமாரனது உச்சிகளை மோந்து பளிங்கு போலவிளங்கும் முதுகினைத்தடவிக்கொடுத்து வருங்காலத்திற் புத்திரவாஞ்சையினாற் பார்ப்பதியாருக்குத் தேகம்பூரித்துக் கொங்கைகள்விம்மிச் சுரப்பெடுத்துப் பால்பீரிட்டோடியது. ஒருவருக்குமனப்பூர்வமான பட்சமுண்டாகுங்காலத்தில் இப்படிக்கல்லவோ விளையவேண்டும். பின்புசிவபிரானதுகிருபைப் பெருக்காய்ப் பவுத்திரமாகவிருக்கின்ற பிராட்டியார் கொங்கைகளினின்றூறியஅமுதத்தினைப்பிரகாசம்பொருந்திய இரத்தினக் கிண்ணத்திற் சேர்த்துத் தமதுபிரியமுள்ள புதல்வனுக்குப் பரிந்துகொடுத்தனள். இவ்வாறு சுவர்னகலசத்துக்கொப்பாகிய திருமுலைப்பாலைத்தெவிட்ட வூட்டுவித்தபின்பு பிரியமாய்க்குமாரசுவாமியை யிடையிலெடுத்துக் கொண்டுபோய்ச் சிவபிரானைச்சேவிக்கச்செய்தகாலத்திற் பசுபதி பூரணகடாட்சம்வைத்துத் தமதுதிருக்கரங்களைநீட்டிக் குமாரனைப்பரிந்தெடுத்துமார்பிற்சேர்த்து முத்தாடிமகிழ்ந்தவராய்த் தமது பக்கத்திலிருத்திக்கொண்டனர். பிரபலவாஞ்சைக் கேதுவாகிய பாலசுப்பிரமணியக்கடவுள் இவ்வாறு வீற்றிருந்தகாலத்திற்பிராணிகளனைத்தையும் உலகவியாபாரநிமித்தம் முன்னமே பெற்றருளிய பார்ப்பதிதேவியையும் பரமனானவர்கரத்தினைத்தாழ்த்தி அணைத்தெடுத்துத் தமதிடப்புறத்திற் சேர்த்தனர். இயல்பாகப் பரிமளித் திராநின்ற கூந்தலையுடைய எமதிறைவிக்கும் எமதிறைவனுக்கும் மத்தியிற் புத்திரசிகாமணியாகிய குமாரதேவர் வீற்றிருந்த காட்சியானது பூமியின்கண் தோற்றநின்ற இரவுபகலுக்கு மத்தியிற் சிவந்தநிறம்பெற்ற அந்திப்போதானது காட்டுமாறுபோல விளங்கியது.

இவ்விதமாக ரிஷப வாகனத்தின்மீ தெழுந்தருளிய உமாபரமேஸ்வரர் மத்தியில் ஜயசாலியாகிய குமாரசுவாமி விளங்குவதைப் பிரமன் இந்திரன் முதலாகிய தேவர்கள் தரிசித்த மாத்திரத்தில் ஊழிகாலத்திற் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் ஏகமாய்ஆர்ப்பரித் தெழுவதைப்போலக் கல்லென்னும் ஆரவாரங்களுடன் இருபாரிசங்களினும் நெருங்கிச் சூழ்ந்துகொண்டு புகழ்வதாயினர். சரபப்பட்சியாக வெழுந்து நரசிங்கத்தினது வீறுப்பையடக்கிய சிவபிரானுடைய திரு நுதல்விழிகளில்அவதரித்த குமாரதேவரோ? கேட்டருள்க.—இடைவிடாமல்வருத்தியலைக்குஞ் சூரபதுமனிட்டதகாத வீனத்தொழில்களைப் பலகாலமாகச் செய்து செய்து தேவரெனப் புகழப்பெற்ற யாங்கள் சகலத்திராளும் இகழ்ந்துபேசும்படியானகுறைபாடுகளைப்பெற்றுவாடுகின்றனம்,ஆதலாற்கர்த்தனே! யினிமேலாவது கடாட்சித்து எங்கள் பகைவரைத்தொலைத்துப் பாதுகாத்திரட்சிக்கவேண்டுந் தேவரீரையன்றி வேறுகதியில்லையென்று பரிமளமிகுத்த கற்பகம்பாரிசாதமுதலிய புஷ்பவருஷங்களைச் சொரிந்து பலதரம்பணிந்தெழுந்து வாழி வாழி யென்று ஆசிகளைச்சொல்லிக் கொண்டாடுகின்ற சமயத்திற் பீதாம்பரத்தினாற்செய்யப்பட்டிறுக்கியிராநின்ற கச்சைப் பீறியெழுவதைப்போல விம்மிச் சொர்னகலசத்தை யொத்திராநின்ற ஸ்தனபாரங்களையும் மயிலிறகினடியை நிகர்த்த தந்த பந்திகளையும் பவளத்தினைப்பழித்த சிவந்த அதரத்தினையும் பூரண சந்திரனை யொத்த அழகியதிருமுகமண்டலத்தினையும் படைத்துப் பால சுப்பிரமணிய தேவரைப் புத்திர வாஞ்சையினாற் போற்றிவந்த பாக்கியவதிகளாய்ப் பதிவிரதா சிரோமணிகளுமாக விராநின்றகார்த்திகைமாதர்கள் அறுவருங்குமாரதேவரைப் பிரிய மனமில்லாமல் ரிஷபவாகனத்தின்மீது வீற்றிருக்கின்ற சிவபிரான் முன்னம் பூமியிற்படிவிழுந்து சேவித்துநின்றனர். அக்காலத்தில் அரவாபரணர்அப்பெண்கொடிகளின்மீது கிருபாநோக்கம் பாலித்து நீங்களறுவரும் இந்தக்கந்தசுவாமிக்குமுலைப்பால்கொடுத்து அதிக பிரியத்துடன் போற்றி யிருந்த காரணத்தினால் இக்

குழந்தைஉங்களுக்குப்பிள்ளையெனப்பெயர்விளங்கக்கடவ
துமேலும்உங்களுக்குரியதினங்களில் இந்தப்பாலசுப்பிர
மணியனுடைய திருவடிகளிற் பணிந்து விரதங்களைச்செ
ய்து வருபவர் எத்தகையரெனினும் அவர்கள்தீவினைகளை
ப்போக்கி விரும்பியவரங்களையுந்தந்து கடையில்நமதுசா
ரூபபதவியையுங் கொடுத்தாள்வோ மென்று அனுக்கிரக
ஞ்செய்தனர். அக்காலத்தில் முன்னம் பார்ப்பதியார்சரவ
ணப்பொய்கையினிடத்தில்வந்து கந்தசுவாமியைக் கண்ட
வுடன் அதிகபிரியத்துடன்சமீபத்திற்போய் ஆவலுடனெ
டுத்துத் தழுவியபோது கொங்கைகளிற்சுரந்தபாலை வயி
ரக்கிண்ணத்திற்கறந்து புத்திரனுக்குச் சாப்பிடக்கொடுத்
தபோது அதிகரித்தொழுகிய பாலானது ஆற்றின்பிரவா
கத்தைப்போலவோடி விண்ணகத்திற் பாயுந் தெய்வகங்
கையை நிகராய்ச் சரவணப்பொய்கையிற் பெருகிய காலை
யிற் சதுர்வேதங்களையும் பூரணமாகவோதிஅவற்றின்மு
டிபினைத் தெரிந்திராநின்ற தவசிரேஷ்டனாகியபராசரரிஷி
க்குப்பிறந்த பிள்ளைகள் அறுவரும் நன்னெறிகளிற்பிசகி
க் கொடியகாரியங்களைச் செய்யக்கண்டு மனம்பொறாமற்
பெற்ற தந்தையர் சபித்தகாரணத்தினால்மீனுருப்பெற்று
அப்பொய்கையி னிடத்துலவிக் கொண்டிருந்தவர்கள் அ
ந்நீரிற்பாயும் பாலினையுண்டனர்.

இந்தப்பிரகாரந் திருக்கயிலைக் கிறைவியாகிய அம்மை
த் திருமுலைப்பாலைத் தெவிட்டக்குடித்தமாத்திரத்திற்சா
பவலியொழிந்து நித்திரைதெளிந் தெழுந்தவரைப்போல
ரிஷிபுத்திரர் தாங்கொண்டிருந்த மச்சவுருவநீங்கித்தமது
பழைய ரிஷிக்கோலத்தினைப்பெற்றவராய் அவ்வறுவரும்
பொய்கையைக்கடந்து வெளிவந்து சிவபிரானைவலம் வந்
து பணிந்துபோற்றுகின்றவர்மீது கிருபையுற்றுரிஷிபுத்
திரரே! நீங்கள் இப்பாரிசத்தி லிருக்கின்ற பர்வதங்களில்
வாசமாய்த் தவஞ்செய்திருப்பீராகிற் சிலதினத்துக்குப்பி
ன்பு இந்தப் பாலசுப்பிரமணியன் இம்மார்க்கமாக வரும்
போது உங்களுக்கு அனுக்கிரகஞ்செய் திரட்சிப்பனென
த் திருவுளம்பற்றினர். அவ்வருளைக்கேட்டமாத்திரத்தில்
மனமகிழ்ந்தவர்களாய் மகாபாக்கியமென்று மீளச்சேவித்
துவிடைபெற்றுத் தமக்குக் குறித்த விடத்தை நோக்கிப்
போயினர். பின்புஎதிரில்நிற்கின்றகார்த்திகைத்தெரிவை
யர் மகாவிஷ்ணுபிரமதேவன்முதலாகிய தேவர்கள்மீதுதி
ருக்கண்சாத்தி உங்கள்பதவிகளிற்சேர்ந்து சுகமேயிருக்க
க்கடவீரெனக் கட்டளையிட்டுப் பொன்னையொத்த சடாம
ண்டலதாரியாகிய பரமன்திருக்கயிலைக்கெழுந்தருளினர்.
இவ்வாறு தேவரனைவரையும் பிரிந்து திரிபுரதகனராகிய
சிவபிரான் வெள்ளியங்கிரியின்மீதுபோய்த்தமது திருமா
ளிகை வாயலினருகிற்சேர்ந்த மாத்திரத்தில் ரிஷபவாகன
த்தைவிட்டிறங்கி ஒப்பற்ற குமாரதேவரையும் பர்வதரா
சபுத்திரியையும் இறக்கிக்கொண்டுமெல்லநடந்து அரண்
மனையைச்சேர்ந்து நவரத்தின மயமாக விளங்குஞ்சபாம
ண்டபத்திற் பிரவேசித்துச் சிரோ ரத்தினங்களினால் அ
மைந்திருக்கின்ற சிங்காதனத்தின்மீது கிருபையானதுவி
ளங்கத் திருத்தேவியுடன் குமாரதேவர்மத்தியில் விளங்க
வீற்றிருந்தனர். சிவபிரான் அனுக்கிரகப்படிக்குஅத்தலத்
தில் வாசஞ்செய்திருந்த நவசத்திகள் சிலம்பிலுதித்தபிள்
ளைகளாகிய வீரவாகுதேவர் முதலிய நவவீரர்களும்இல
க்கத்தவரும் தமதுமுன்னவனாகிய பாலசுப்பிர மணியக்க
டவுளைத் தரிசித்தமாத்திரத்தில்மனமகிழ்ச்சியுடன் வலம்
வந்துபணிந்து கற்பகமலர்களைத்தூவித் துதித்தவர்களா
ய்த் தமது பிதாவைப்போலவும் உயிரையொத்தும்சிவகு
மாரனைநினைந்து அவரைப்பிரியாமற்சூழ்ந்திருந்தனர்.

## திருவிளையாட்டுப்படலம்.

அனந்தரமதாகவுமையம்மையொடுபெம்மா
னனந்தலையில்வைகியநலங்கொள்குமரேச
னினங்கொடுதொடர்ந்தவிளையாரொடுமெழுந்தே
மனங்கொளருணீர்மைதனினுடலைமதித்தான்.

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே இதுபரியந்தம்சிவ
சுப்பிரமணியக்கடவுளினது தோற்றமுந் திருக்கயிலாயத்
துக் கெழுந்தருளிய கதாப் பிரசங்கங்களைச் சொன்னோ
ம், இனிமேற்குமாரதேவர் நடித்தஅற்புதத்திருவிளையா
டலின் பெருமைகளிற் சில வற்றை விளக்குவோம் இவ்
விதமாகப் பரமசிவமும் பார்ப்பதியம்மனுந் தமதுபுத்தி
ரனைச் சரவணப்பொய்கையினிடத்திருந்து அழைத்துவ
ந்து வெள்ளியங்கிரியிற் றமது திருமாளிகையிலிருத்திப்
போற்றிவருகின்றகாலத்திற் குமாரசுவாமியானவர் தமது
துணைவராகிய நவவீரர்இலக்கத்தவர்களுடன் கூடிக்கொ
ண்டு பாலபருவத்துக்குரிய திருவிளையாடல்களைச்செய்ய
வெத்தனித்தவராய்த்தமது திருவடிகளிற் றரித்திருக்கின்
ற தண்டைசதங்கை கிண்கிணியிவைகளொன்றுடனொன்
றுதாக்கிக் கலீல் கலீலென்றுசத்திக்கவும் இடையில் பிகி
ந்திருக்கின்ற அரைவடங்களிற்றொங்கும் மணியினங்கள்
சலசலெனை அதிரவும் சிரோரத்தினக்குண்டலங்கள்செவி
களினிடத்திற் பன்னிரு சூரியரை யொத்து விளங்கவும்,
மார்பிற்றரித்திருக்கின்ற மதாணிப்பதக்கம் முத்துமாலை
மோகனமாலைகள் பின்னியலையவும் நெற்றிகளிற் றரித்தி
ருக்கின்ற வீரபட்டமானது கார்காலத்தெழும் மின்னலை
நிகர்த்துச் சொலிக்கவும், திருக்கயிலாய வெல்லையெங்
கும் உலவிவிளையாடியும், சபைகள்தோறுஞ்சென்றுநடி
த்தும் புஷ்பங்கள் மலர்ந்திராநின்ற தடாகங்களில் மதயா
னையைப்போலத் துணைவருடன் விழுந்துகலக்கியும், சிறு
தென்றற் காற்றசைந்திருக்கும் சோலைகள், நந்தனவனங்க
ள், உத்தியானவனங்கள், முற்றும்போய் மலர்களைப் பறி
த்துச்சூடியும் செடிகளைக்குலுக்கியும், கனிவகைகளையுதி
ர்த்தும், எக்காலத்தும் எவர்களாலுங் கண்டறியாதவிடங்
களிற் பெருகுங் கான்யாறுகளில் முழுகி நீந்தியும், சரப
சார்த்தூல முதலிய மிருகங்கள் வாசமாய்வானத்தையளா
வ விருக்கின்ற பாரித்த பர்வதங்களின் உச்சியிலேறி ஒன்
றினின் றொன்றிற் பாய்ந்தும்விசாலமா யிராநின்ற குளங்
கள் ஏரிகளாற்புகுந்து ஜலங்களை வாரிவாரி யிறைத்தும்ந
திகளில் பிரவாகங்குறைந்தகாலையிற் றோன்றும் மடுநீரி
ற்குதித்து முதலைகளைப்பற்றி வால்களைமுடிந்தெறிந்தும்
ரிஷிகள் அகோரதவங்களையும் யாகங்களையும் செய்வதற்க
மைத்திராநின்ற ஸ்தம்பங்களின்மீதுகழைக்கூத்தாடிகளை
ப்போலப் பாய்ந்து ஒருவிரலை யூன்றிநின்றுலகுக்கொண்
டு மற்றவைகளினிடத்திற் குதித்தும் தபோநிதிகள் வாச
மாயிராநின்ற பன்னகசாலைகள் முற்றும் நுழைந்துஅவர்
கள் க்ஷேமங்களை விசாரித்தும் உமாபரமேஸ்வரருக்கினி
ய குமாரதேவர்அடியேன் மனத்தினையும் ஒருபொருளாக

நினைந்துவாசமாய் அஞ்ஞானவிருளைப்போக்கி யாண்டு
ம் சந்திரசடாதாரக்கடவுள்வீற்றிருக்கின்றஆலயங்கள்தோ
றும்போய்த் தரிசித்துக் களித்தும் தமது தந்தையாகியஉ
மாபரமேஸ்வரர் களித்துப் பிரியமாக விருக்கின்ற திவ்வி
ய ஸ்தலங்கடோறும் உலவித் திருநடனங்களைச்செய்துக
ளிப்பித்தும் மகரந்தங்களையிறைத்துத் தேனைப்பெருக்கி
ப்பரிமளித்திராநின்ற புதிய மலர்களைவாய்ந்தகடம்பவிரு
ட்சங்களினல் நிறைந்த தோப்புகளிற்சென்றுமலர்களைப்
பறித்துச் சிகையிற்சூடி சந்தோஷித்தும் வேத சாஸ்திர
முதலிய கலைக்கியானங்களை ஓதுந்தலங்களினும் மதுரமா
கிய இயலிசை நாடகமென்னும் முத்தமிழினங்களை ஆரா
யும்கலாசாலைகளினும்இதரசங்கங்களிடத்தும்போய்த்தம
து பெருமைகளைப் போற்று கின்றவிதங்களைச்செவிகளு
க்கினிமையாகக்கேட்டும் சமுத்திரஞ்சூழ்ந்த பூவட்டத்தி
னிடங்களெங்கு முலவி அவ்வவ் விடங்களிலிராநின்ற அ
திசயங்களை வேடிக்கையாகப் பார்த்தும் அஷ்டதிக்குகளி
ற்சென்றுநாடியும்அளவையில்லாத சத்தசாகரங்களினும்
பெரும்புறக்கடலினும் செப்படிவித்தைக்காரனைப்போல்
நடந்து திரிந்தும் விசாலமாகவிளங்கும் விண்ணிடங்களி
ற் கந்தருவனைப்போலப்பறந்தும் கருடகாந்தருவர் சித்த
வித்தியாதரர் முதலியர் பதங்களிற்போய் அவர்களுடன்
குலவியிருந்தும் திரிலோகாதிபதியாகிய தேவேந்திரன் க
ளித்திருக்கும் சுவர்க்கலோகமுற்றுந் திரிந்து கண்டு விய
ந்தும்தவங்களிற் சிறந்த யோகிகள், சத்தரிஷிகள், அஷ்ட
வசுக்கள். பதங்களிற்போய் கெம்பீரமாகவுலவியும்,உந்தி
க்கமலவாசியாகிய பிரமன்வீற்றிருக்கின்ற மனோவதிநகரி
ற்போய் அவ்விடங்களிலிராநின்ற மகத்துவங்களைப்பார்த்
தும் அஷ்டலட்சுமிகளுங்குடிகொண்டிருக்குஞ் செல்வங்க
லங்களைவாய்ந்த மகிமையுள்ள வைகுந்தநகரினைக்கண்டுக
ளித்தும்எமதிறைவியாகிய பராசத்திவாசமாயிருக்குந்தல
த்தில்இடைவிடாமலிருந்துவிளையாடியும்,மூன்றும்பிறை
யினைச் சடாமகுடத்திற் தரித்தருளியபரமேஸ்வரன்வாச
மாயிருக்கின்றபதத்திற் பிரியாவிடையாகக்காட்டியும் சிவ
பிரான்அனுக்கிரகத்தினலுண்டாயிருக்கின்றஆயிரங்கோ
டிஅண்டங்கடோறும்நிமைப்போதிற்சென்றுசென்று அ
த்தலவாசிகள்அற்புதமடையத்தாண்டவமாடியும், வருண
மண்டலம், வாயுமண்டலம்,அக்கினிமண்டலம்வானவெல்
லை, அண்டப்பித்திகையின்மேற்பட்டவிடங்களெங்கணும்
நிறைந்து எங்குந்தாமாய்நடனங்களைக்காட்டியும்,இப்படி
க்குத்திரிகின்றபாலசுப்பிரமணியக்கடவுளானவர்சில விட
ங்களிற்சண்முகங்களைக்கொண்டுதோற்றியுஞ்சிலவிசை ஒ
ருமுகத்தைத்தரித்துலவியும்சிலகாலங்காளைப்பருவனகச்
சஞ்சரித்தும்சிலகாலம் வேதபாரகராகியபிராமணர்கோல
மாகத்தோற்றியும்சிலபோதுதவங்களிற்சிறந்த முனிபுங்க
வர்கள்கோலத்தினைத் தாங்கிநின்றும்சிலதலங்களில்புட்டி
லை முதுகிலிறுக்கிக் கரங்களிற் றனுசுகளைப் பற்றிச் சுத்
தவீரனக எதிரின்றித் திரிந்தும் சிலகாலம் பாதசாரியா
கச்சென்றும் சிலகாலம் உத்தம அசுவத்தில் விளக்கிவை
யாளிவிட்டும் சிலகாலம் மதயானையின்பிடரியில்வீற்றிரு
ந்துபவனிவந்தும் சிலகாலம் நவரத்தினமயமாகிய இரத
த்தில் ஆரோகணித்துத் துரத்தியும் சிலகாலம்வலிபெற்
றயாளியின்மீது தோற்றியும் சிலகாலம்முறுக்கியகொம்பி
னைப்பெற்றிருக்கின்ற ஆட்டுக்கடாவின்மீதுசென்றும்சில
காலந் தங்கமயமாகிய விமானத்திற்போகியும் சிலகாலம்
ஆகாயவெல்லையிற் சித்தனையொத்துலவியும் சிறிதுகாலம்
சர்வாயுதபாணியாய்ச் சூரனைப்பகைத்துச் சண்டைகொ
டுக்கப்பாய்ந்தும் சிறிதுபொழுது மணிகளைத் திருக்கரத்
திற்பற்றி கலகலென்றசைத்தும் சிலகாலம் புள்ளாங்குழ
லூதியும் சிலகாலம் ஓசைமிகுந்த எக்காளைதுத்தாரியிவ
ற்றைமுழக்கியும் வீணைகளைமீட்டி தேவகானங்களைப்பா
டியும் உடுக்கை சிறுபறைமுதலிய வாத்தியங்களைச்செய்
தும் எத்தகையோனும் அதிசயித்துக்கேட்டிருக்கும்படி
க்கு இராகங்களைப்பாடியும் ஆனந்தக்கூத்துகளைக்காட்டி
யும் இவ்விதங்களாகக் குமாரதேவர்பற்பல உருவங்களைக்
கொண்டு எவ்விடங்களினுந் தோற்றநின்று அற்புதத்தி
ருவிளையாடல்களைச்செய்து வருகின்றதருணத்தில் உலக
ங்களைப்படைத்த மாதாவாகிய பராசத்தியானவள் இவற்
றினைக்கண்டு அதிசயங்கொண்டு மகிழ்ந்தவளாய்ப் பிறப்
பிறப்பற்ற பரம்பொருளாகிய சிவபிரானைவணங்கிப்போ
ற்றிக் கர்த்தனே யிதுவென்னஅதிசயம் ஆறுதோற்ற
ங்களாக விருந்துநான்சேர்த்தணைக்க ஒருருவாகியநமது
குமாரனனவன் சிறுகுழந்தைப் பருவத்தினைக்கொண்டு
நடிக்குந்திருவிளையாடல்களைப்பார்க்குமிடத்தில் எனக்கு
மிகவும் அற்புதமாகவிருக்கின்றது இவனையொத்தவர்க
ளைத்தேடிப்பார்த்தாலும் யாவரையும் ஒப்புச்சொல்லப்ப
டவில்லை ஆதலால் மாயவித்தைகளுக்கு முதன்மையாக
விளங்கி அற்புதவினோதங்களைக்காட்டும் இந்தப்பாலகன்
காரணங்களை எனக்குப்போதையாகும்படிக்கு அனுக்கிர
கஞ் செய்யவேண்டுமென்று கறுத்தஅளகபாரத்தினையு
டைய கவுரிதனக்கொன்றுந்தெரியாதவளைப்போலக்கேட்
டபோது திரிபுரதகனராகிய பரமன் திருநகைகொண்டு
பெண்ணே உனதுதிருக்குமாரன் குணாதிசயங்களை மன்
னுயிரனைத்துந் தெரிந்துபோற்றிக் கிருதார்த்தராதற்பொ
ருட்டு வினவினை அவன்வரலாற்றினைக் கேட்பாயென்று
கிருபையுற்றுத் தெரிவிப்பதாயினர்.

ஏ! உமையவளே? முற்குறித்தபடிக்கு நமதுநுதல்
விழிகளின் மூலமாகத்தோற்றிய குமாரதேவனைக் கங்கை
யானவள் ஏந்திச்சென்று சரவணப்பொய்கையினிடத்தி
ற்சேர்த்தகாரணத்தினற் காங்கேயனென்னுந் திருநாமத்
தைப்பெற்றான். அழகியபுஷ்பங்கள்மலிந்து பொலிவாக
விருக்கின்ற சரவணப்பொய்கையிற் சிலகாலந்தங்கியதாற்
சரவணபவனென்று சகலராலும் புகழத்தக்க திருநாமத்
தினைக்கொண்டான். மேலும்அன்னையைப்போலப் புத்
திரவாஞ்சையினற் கார்த்திகைப்பெண்கள் அறுவரும்ப
ரிந்து தங்கள்கொங்கைகளிற் பெருகிய பாலைத்தந்துபோ
ற்றிய முறையினற் கார்த்திகேயனென்னும்பெயரினைத்த
ரித்தான் இத்தகையமகத்துவங்களைப்பெற்றிருக்கின்ற இ
க்குழந்தை அறுவகைப்பட்டிருந்ததைநீ சேர்த்தொன்று
படுத்திய பெருமையினற் கந்தசுவாமியெனத்துதிக்குந்தி
ருநாமத்தைப்படைத்தான் இஃதன்றியும்நமக்குப்புராத
னமுகங்களாறுண்டுஅதனல் இந்தக்கந்தசுவாமிக்குச்சண்
முகனென வொருதிருநாமம் விளங்குகின்றது.மேலும்ப
ழமையாக விளங்கியிருக்கின்ற தாரகப்பிரமத்தின் ஓசை
யானது ஆறெழுத்தாகத்தோன்றும் அவைஒன்றுபட்டு
உன்திருக்குமாரனது நாமத்துக்குரியசடாட்சரங்களாகி
ன்றது. ஆதலால் ஆறுமுகன் நமதுசத்துவத்தினைக் கொ
ண்டிருப்பவன் அவனுக்கும் நமக்கும்பேதமில்லைநம்மை
ப்போலவே சராசரப் பிரபஞ்சங்களிற் பரிபூரணமாக

எவ்விடத்துந்தோற்றநின்றனன், பார்ப்பதியேயின்னமும் அவன்பெருமைகளைக் கெட்பாயாக திரிகாலங்களுந்தெரிந்த சர்வக்கியன்மேலுந் தன்னைப்பந்தியுடன் பூசித்துப்பணிந்த புண்ணியவான்களுக்கு இம்மையிற் சகலசம்பத்துகளையும் ஞானபோதகமுதலான பேறுகளையுந்தந்துமறுமையிற் சலனமற்ற மோட்சசாம்பிராச்சியத்தையுந்தரவல்லன் இத்தகைய மகத்துவமுள்ள பாலசுப்பிரமணியனவன் பிற்காலத்திற் பிரமனையழைத்து வேதங்களுக்கு மூலமாகவிருக்கின்ற பிரணவத்தின் பொருளைவினவி அவன் அதனுண்மையைச்சொல்லவகையறியாமற்றியங்கக்கண்டுசிரங்களிற்குட்டிக்கொடியகாவலில்அடைத்துவைத்துத் தானேசிருஷ்டிகர்த்தனாகின்று உலகங்களில்விளங்கும் பிராணிகளனைத்தினையுங் குறைவறப் பலகாலம்படைப்பன் அதன்பின்புதமதுதுணைவருடன் வீரமாமயேந்திரபுரிக்குப்போய்த் தேவர்கள்முதலியோரை யலைத்திருக்கின்ற சூரபதுமனையும் அவன்துணைவராகியசிங்கமுகாசுரன் தாருகாசுர னிவர்கள் புத்திர மித்திர களத்திராதிகள்முதலிய அசுரர்களனைவரையுஞ் சின்னபின்னப்படவாட்டிக்கொன்று பிரமன் விஷ்ணு இந்திரன்முதலியதேவர்கள் துன்பங்களைப்போக்கிப் பழையபடிக்குத் தத்தம் பதங்களிற் சங்கையின்றிச்சேர்ந்து வாழும்படிக்கு அனுக்கிரகிப்பன் அக்காலத்தில் நான்சொல்லிய காரணங்களனைத்தையும் நீபின்பு திருஷ்டாந்தமாகக்காணப்போகிறாயென்று இளையபெருமாள் வரலாற்றைப் பரமசிவம்சவிஸ்தாரமாக எமதிறைவிக்குப் போதிக்கக்கேட்டு இப்படிக்கோவிருக்கின்றது தம்பிசெய்கையென்று மனமகிழ்ந்தவளாய் மேல்நடக்குங் காரணங்களை எதிர்பார்த்திருந்தனள்.

இவ்விதமாக உலகங்களெவற்றினும் பரவித்திருவிளையாடல்களைச்செய்துவருங் குமாரதேவரானவர் தாம்அதுபரியந்தம்நடத்திவந்த மகத்துவங்களுக்கு மேற்பட்டதாக விருக்கின்ற நடனங்களைமுடிக்கத் தக்கதாகத் திருவுளத்திற்கொண்டு சத்தகுலாசலங்களையும் பெயர்த்தெடுத்து கெச்சைக்காய்களைப்போலச்சேர்த்தும் மீட்டும்அவற்றை மாறுபடுவதாகப் பூவட்டத்தெங்கும் நாட்டியுஞ் சத்தசாகரங்களையும் அவற்றின்கரைகளைக் களைந்தெறிந்துபெரும்புறக் கடலுக்குமாறாக ஒன்றுபடச்செய்தும் வானத்தினை அளாவநிற்கின்ற சக்கிரவாளகிரியைத்தோற்றமறப்பாதலத்திற் சேரமிதித்தும் ஆரவாரங்களுடன் பெருகுகின்றகங்கைப்பிரவாகத்தை அணைபோட்டு எரிக்கொப்பாகத்தடுத்தும் இருண்டபிலத்தில்நின்று பூமிக்காதாரசத்தியாகத்தாங்கியிருக்கின்ற அஷ்டமாநாகங்களை வலிதிற்பற்றி யிழுத்துப்போய்ச் சுவர்னமயமாகிய மகம்மேருமுதலியகுலகிரிகளிற் பந்தித்திறுக்கிக் கிருபைக்கடலாகிய பாலசுப்பிரமணியக்கடவுளானவர் பிராணிகளுக்கு யாதொருதுன்பங்களும் நேராமல் அவற்றைச்சிறுதேர்களைப்போல வேகமாய்க் கடகடென்று எங்குமிழுத்துலவியும்அஷ்டதிசைகளினுந்தாங்கிநின்ற அயிராவதமுதலிய யானைகளைப்பிடித்து ஒன்றுடனொன்றைஇடிப்பித்துக்கண்டுகளித்தும் வானகத்திற் பரவியோடுந் தெய்வகங்கையினதுஜலப்பெருக்கினால் அதிகசுவாலையைக்கொண்டிருக்கும் வடவாமுகாக்கினியை உருத்தோற்றமறவவித்தும் அழகியசிறகுகளைப்பெற்ற கருடனையும் வாசுகியென்னுங்கொடியநாகத்தையும் பிடித்துவந்து போர்செய்யவிட்டுப்பார்த்தும் பாதலந்தில் வாசஞ்செய்யாநின்றநாகராசர்களையெடுத்துவந்து பூமியெங்கும் ஓடவிட்டும் மண்ணுலகெங்கினுமிருக்கின்ற பர்வதங்களனைத்தையும்பாதலவெல்லையெங்கும் நிறையவடுக்கியும் ஆயிரங்கிரண சமுகங்களைப்பெற்றிருக்கின்ற சூரியனைப்பற்றிச் சந்திரன் கதியில்விட்டுங் குளிர்ச்சிபெற்ற சோடசகலைகளைப்பெற்றிருக்கின்ற சந்திரபகவானைச்சூரியனடையிலோட்டியும் இந்திரன்முதலிய அஷ்டதிக்குப் பாலகர்கள் வாசஞ்செய்திருக்கின்ற நகரங்களைப்பெயர்த்தெடுத்துப் பழையபடிக்குத்தோற்றமறல் மாறுபட்டுக்காட்டத் தலைகீழாகமாற்றிவைத்தும் சத்தமேகங்களையும்பிடித்துஅவற்றினிடத்திராநின்ற இடிகளுடன் மின்னற்கொடிகளையுஞ் சேர்த்தெடுத்து வண்டினங்கள்மொய்க்கப்படாத மலர்மாலைகளாகத்தொடுத்துத் திருக்கழுத்தினிடத்தணிந்தும் பன்னிருசூரியர் சந்திரர்முதலிய நவக்கிரகங்கள் இராசிகள்மற்றுமிராநின்றவர் ஏறிச்செல்லும் விமானங்கள் தேர்கள்முதலானவைகளிற்பிணித்திருக்குங் கயிற்றினைக் கோர்வையாகச்சேர்த்துத்துருவனென்பவன் பற்றிக்கொண்டு மகம்மேருவினது சிகரத்தில்நின்று அவற்றின்நடைகளிற் பிசகின்றிச்சென்று காலக்கிரமங்களைக்காட்டு மாறுவிட்டுக்கொண்டிருக்கின்ற பாசங்களிற் றமக்கிஷ்டமானவைகளைவலித்துக் கரங்களிற்பற்றித் தாம்பூவட்டமத்தியில்நின்று அஷ்டதிக்குகளினும் வட்டாகாரமாகஓடவிட்டுங் களங்கரகிதமாகவிளங்கும் வானவெல்லையிற்போகின்றதனுசையும்இந்திரசாபத்தையுங் கரங்களிற்கொண்டு நாரிகளை வட்டாகாரமாகப்பிகிர்த்துநவக்கிரகங்கள்முதலிய நட்சத்திரங்களை உண்டைகளாகப்பூட்டித் தேவர்கள்மகுடங்கள்பொருந்திய சிரங்கள்நெற்றிமார்பு புசங்கண்டம் இவ்வுறுப்புகளைக் குறிகொண்டு பிசகாமற்படச்செலுத்தி விற்சா துரியங்களைக் காட்டியும் இவ்விதங்களாகச் சீவன்முத்தர்கள் விழிகளினன்றி ஏனையருக்குத் தோற்றப்படாத நிர்மலக்கடவுளாகிய குமாரசுவாமியார்விண்மண்பாதலங்களி னிராநின்ற பிராணிகள் மதிமருண்டு திகைத்துவாடி நாசமடையாமல் மாயவித்தைகளாக அளவுபடாத அற்புதத்திருவிளையாடல்களை எத்தலங்களினும்நடாத்திவருகின்றகாலத்தில் வீரமாமயேந்திரபுரியினும் மற்றவிடங்களினுமிராநின்ற அவுணர்இராட்சதர்கள் மேற்குறித்த விநோதக்காட்சிகளைக்கண்டுஇந்தமாறுபாடுகளையும் விபரீதங்களையும் யாவர்செய்தனரென்று அதிசயித்து மிகவுங்கொடும்பாதகங்களுக்குட்பட்ட துன்மார்க்கர்களாதலால் எமதிறைவனாகியகுமாரதேவர் திருவடிவினைக்காணாமல் மயங்கினர், மேலும்இன்னமுஞ் சிலபகல் உயிர்பெற்று உலகங்களிற் சஞ்சரித்துவாழவிருக்கின்ற காரணத்தினாற் சிவகுமாரன் தமதுதோற்றத்தைத் தெரியக்காட்டாமல் எங்கும் விளையாடிக்கொண்டிருக்கு முன்னிலையில் ராட்சதர்கள் இந்தஅற்புதங்களை நடத்துகின்றவனைக்கண்டு தெளியவேண்டுமென்கிற அவாவினாற்றங்களாற் கூடியவரையிற் றேடித்தேடித் தெரியாதவர்களாய்ப் பிரமன், விஷ்ணுவினாற் றேடிக்காணப்படாத பரமேஸ்வரர் மாயாவிலாசமென நிச்சயித்திருந்தனர்.

இஃதன்றியில் குமாரசுவாமியினது செய்கைகளைக்கண்டு பிரமித்தவர்களாய்க் கொடுங்கோல்செலுத்தித் தீனரைஅலைத்து அரசுசெலுத்திவருகின்ற ராட்சதர்கள் அனைவரும்மாளும் ஏதுவைக்குக்காரணமாகவிருக்கின்றது

மேலும்அதற்குத்திருஷ்டாந்தமாகஇத்தகையஉற்பாதங்கள்தோற்றுகின்றனவென்றுபடப்பிராந்திகளுடன்பூலோகவாசிகள் வசனிக்கவும் அஷ்டதிக்குப்பாலகர் சூரியன்முதலானோர் உருவத்தைத்தரிசிக்கப்படாமையால்மதிமயங்கி யிக்காரணங்கள் அவுணரால்முடிவதன்று ஆதலால்இத்திறங்களையாவர் செய்கின்றனரோவென்று ஐயப்பட்டுச் சகலரும் ஓரிடத்திற்சேர்ந்து என்னவிளையவிருக்கின்றதோவென வருந்தினர் இவ்வாறு மருண்டதேவர்கள் நமதிறைவன் மகம்மேருவினது சாரலிற்பதுங்கியிருப்பதாகக் கேள்விப்பட்டனம் பிரமதேவனும் அவ்விடத்திலிருப்பதற் கையமில்லை ஆதலாற்றாமதஞ்செய்யாமல் நாமனைவரும் மேருகிரிக்குப்போய் அவர்களைக்கண்டு இவ்வதிசயங்களைச் சொல்லுவோமாகில் இவைகள்விளைகின்ற மூலத்தைத்தெரிந்துகொள்ளலாகும் மேலும்அதற்குவேண்டும் சாக்கிரதைகளையுஞ் செய்வொனத் தீர்மானித்தவர்களாய் நாம்போகின்றமார்க்கத்தில் அளவற்றஅண்டங்களுக்கிறைவனாகிய சூரபதுமனால் என்னகெடுதிநேருமோவென்னும் மனவருத்தத்துடன் பதுங்கிப்பதுங்கிச்சென்று மகம்மேருபர்வதத்தின்மீது போகின்றகாலத்தில் ஆறுமாமுகக்கடவுள் நடிக்கின்ற அற்புதத்திருவிளையாடல்களைப் பார்த்துப்பார்த்து அதிசயங்கொண்டு அவர்உருவு தோற்றப்படாமல் மனவாட்டத்துடன்திகைத்துப் பலதிக்கினும் விழிகளைப்பரப்பியிருக்கின்ற தேவேந்திரனைக்கண்டு சமீபத்திற்போய்த் திருவடிகளிற்பணிந்தெழுந்துகரங்களைக்கூப்பினவர்களாய் இறைவனே எக்காலத்துமில்லாத அதிசயங்களைக்கண்டு தேவரீருக்கு விண்ணப்பஞ்செய்துகொள்ளவந்தோம் அதாவது சமுத்திரஞ்சூழ்ந்த பூவட்டங்களினும் வானநாடுகளினும்பழமையாகநிலைபெற்றிருந்த பொருள்களனைத்தும் மாறுபட்டு அதிகஉற்பாதங்கள்விளைகின்றன இத்தகையதிரிபுகளை யாவர்செய்கின்றனரோ ஒன்றுந் தெரியப் படவில்லை இஃது அவுணரால் முடிவதன்று இம்மாய வித்தைகள் நேர்ந்ததற்குக் காரணமென்னோ தேவரீரோ தெரிவிக்கவேண்டுமென்று வேண்டுகின்ற தேவர்கள்கோரிக்கையைக்கேட்ட இந்திரன்அதிசயித்து நீங்கள்கண்டவாறே நானும்பார்த்துப் பிரமித்திருக்கின்றனன், இதன்மூலஞ் சற்றுந்தோற்றவில்லை ஆதலால் நாமனைவரும்போய்ப் பொற்றாமரைப்பீடத்தில் வீற்றிருக்கின்ற பிரமதேவனைக்கண்டு இதன்காரியங்களைத் தெரிந்துகொள்ளுவோம் புறப்படுங்கோளென்று சொல்லியதற்குச்சகலருஞ்சம்மதித்துப் பிரயாணப்படுகின்றபொழுது அவர்கள்முன்செய்த தவப்பேற்றினால் உலகங்களெங்கினும் நடித்திருந்த அறுமுகக்கடவுள் இந்திரன்முதலாகிய தேவர்களுக்குத் தோற்றத்தக்கதாக ஒருமுகத்தைக்கொண்டு சிறுகுழந்தையாய் அப்பர்வதத்தின்மத்தியிற் காணப்பட்டவராய்மனவாட்டத்தினைப்பெற்றிருக்கின்ற தேவர்கள் சந்தேகங்களைக்கடந்துசந்தோஷிப்பதாகத் திருவுளத்திற்கொண்டு இவையனைத்துந்தமது செய்கைகளாகக்காட்ட வெழுந்தருளிய சிவகுமாரனனவர் அப்பொன்மலையினைக் கிடுகிடென்று அசைவதாகக்குலுக்கினவராய் மதயானையானது தடாகத்திலிறங்கிக்கலக்கித்தாமரைமலர்களைப் பறித்தெறிவதுபோல அப்பர்வதத்திற்றோற்றுகின்ற பொற்சிகரங்களைஒடித்துச் சிறுபிள்ளைகள் பந்துக்களையெறிவதுபோலவெடுத்துத்திசாதிசைகளில் வீசிநிற்கின்ற குமாரசுவாமியார் செய்கைகளை இந்திரனாதியாகிய திசைகாப்பாளரும் மற்றதேவர் கூட்டமுங்கண்டுபிரமித்தவராய் இதுவரையில் நாங்கண்ட மாறுபாடுகளைச்செய்தவன் இவனேயாமெனக் குறித்துவனாந்தரங்களில் எதிரின்றித்திரியும் மிருகராசனாகியசிங்கத்தின்மீது பகைத்தெதிர்ந்த மதயானைத்திரளையொத்துவீறியெழுந்து இவனைப் பாலகனென நினைக்கப்போகாது இவன் வல்லபங்களைப் பார்க்குமிடத்திற் கொடியமனதைப்பெற்ற இராட்சதர்களினுங் கொடியனாகக்காணுகின்றனன்மேலும் எவ்வெவர்களாலும் முடித்தற்கரியமாயவித்தைகளைப் பூர்த்தியாகக் கற்றவனென்று சகலரும் ஏகமுகமாகநின்று இவனைவளைந்துகொண்டு சண்டைகொடுத்து ஜயிக்கவேண்டுமென்றும் நிதானித்தவர்களாய் அத்தலத்திலிருந்த தேவாகளனைவருஞ்சேர்ந்து பாலசுப்பிரமணியக்கடவுளுடன் உயுத்தத்துக்கு நேருகின்ற தருணத்தில் இந்திரனானவன் தனக்கு வாகனமில்லாமையால் முன்னம் பானுகோபனாற் றந்தங்களையிழந்து வருந்தியோடித் திருவெண்காடென்னுந் தலத்தினைச்சேர்ந்து அவ்வாலயத்தி லெழுந்தருளியிருக்கின்ற சிவக்கொழுந்தைப் பத்தி வயிராக்கியங்களுடன் பலநாள் வழிபட்டு வருமுன்னிலையிற் கர்த்தன்அனுக்கிரகத்தினாற் பழையபடிக்குத்தந்தங்களைப் பெற்றிருக்கின்ற அயிராவதத்தினை நினைந்தமாத்திரத்தில் அதிவேகமாகநடந்து முகம்மேருவினிடத்திற் சேர்ந்து தனதிறைவனைவணங்கி நிற்கின்ற வெள்ளையானையின்மீதுஇந்திரனானவன் ஆரோகணித்து வச்சிராயுதம் பிரகாசம்பொருந்தியவாள்தனுசு கதை முதலியஆயுதங்களைத்தாங்கிப்போர்க்கோலத்தனாய்த்தன்சேனைகளுடன் சிவகுமாரனை முற்றிக்கைபோட்டுக்கொண்டனர்.அஃதெத் தன்மையாக விருந்ததெனிற் சர்வ சங்கார காலத்திற் பிரசண்ட வாயுவும் வடவாமுகாக்கினியும் ஆர்ப்பரித்தெழுந்தகாலையில் அபலமாகியசிறுமலைகளெதிர்ந்ததுக்கொப்பாகவிருந்தது.

இவ்விதமாகநினைத்தற்கரிய மகிமையினையுடைய குமாரசுவாமியின்மீது இந்திரனும் இராட்சதரால் வருந்திவந்த தேவர்களும்போர்செய்யத் தொடங்குகையிற்குளிர்ச்சிபெற்றிருக்கின்ற தாமரைமலர் வாசிகளாகிய மகாலட்சுமியையும் சரஸ்வதியையுந் தமதிரண்டு நேத்திரங்களாகப் படைத்திருக்கின்ற பராசத்திகுமாரனாகிய கந்தசுவாமியானவர் தம்மைத் தேவர்கள்சத்துருவாகவெண்ணிவளைந்துகொண்டதைக்கண்டு திரு நகைகொண்டு இவர்களை ஒரு பொருளாக மதியாமற் பழையபடியேதமது திருவிளையாடல்களைச் செய்திருப்பதைத் தேவராசன்கண்டுசீறி முப்பத்திரண்டு ஆயுதவிதங்களையும் பாசுபதம் நாராயணாஸ்திரம் பிரமசரமுதலியதேவாஸ்திரங்களையும் ஒன்றனந்தமாகப் பிரயோகிக்கும்போது விண்ணவர்களும் சோனைமாரியையொப்ப அஸ்திர சஸ்திரவகைகளை ஏராளமாகச்செலுத்தினர். இவையனைத்தும் அதிக வேகங்கொண்டு போய்ச் சிவகுமாரனை நெருங்குமுன்னிலையிற் றமதுகொடுமைகள்மாறிப் பத்தர்கள் அருச்சிக்கும் புஷ்பங்களைப்போல மெல்லத் தாக்கித் தாக்கி உதிருகின்றதை இந்திரன்கண்டு கோபமிகுத்தவனாய் வச்சிராயுதத்தையெடுத்து கிறுகிறெனச்சுழற்றிக் குறிகொண்டு எறிந்துஆர்ப்பரித்தனன் அவ்வலிபெற்ற வயிரப்படையானது அதிகமகிமைகளைக்காட்டி அதிவேகமாகவந்து சரவணபவன் மார்பிற்றாக்கின உடன்நுண்மணலைப்போலத் தூள்பட்டுப்பறந்

தது. இதனை இந்திரன்பார்த்துத்துக்கித்துச்சொல்லுவான் தேவாஸ்திரங்களைச்செலுத்தினம், அவைபிரயோசனப்படாமற் போயிற்று, கடையில்நமது பிராணபதயாக விருக்கின்ற குலிசாயுதத்தினையுங்கடாவினேம் அதுவுந்துகள்பட்டுப் பொடிப்பொடியாய்க்காற்றிற்பறந்தது இனி என்னசெய்வேன், அபாயம் நேருவதாகக்காணப்படுகின்றதென்று எண்ணாதனவெல்லாம்எண்ணி மதிமயங்கித்தியங்கிவாடுகின்றகாலத்தில் அவன்ஏறியிருந்த வலிக்கொப்பற்றவெள்ளையானையானது அதிககோபங்கொண்டுவாலைச் சுழற்றித்துதிக்கையினைவீசிமேகம்கர்ச்சித்ததைப்போலவீறிட்டுக்கொண்டு முருகக்கடவுளுக்கு நேராக வருவதைஉமையவள்திருக்குமாரன் பார்த்தவுடன் மனதிற்சிந்தித்து ஒப்பற்றவில்லினையுங் கொடியபாணங்களையும்நிர்மித்துதனுசில் நாணேற்றி அண்டங்களதிரக் குணத்தொனிகொண்டு சூரியனைப்போலப் பிரகாசித்திருக்கும் அலகையுடைய ஒருபாணத்தினைப்பூட்டி அயிராவதத்தின் நெற்றிக்கு நேராசப் பிரயோகித்தனர். அவ்வாளியானது வெளிப்பட்டவுடன் அக்கினிப்பொறிகளையிறைத்துக்கொண்டுபோய் தேவர்களுக்குஅதிபனாகியஇந்திரனேறியிருக்கின்றவெள்ளிமலைக்கொப்பாகிய அயிராவதத்தின் நெற்றிகிழியத்தடாரித்துருவிப் பிராணனையுங்கொண்டு வெளிப்பட்டகாலத்தில் மேகங்கள் அஞ்சி ஓடுங்கும்படிக்கு மரணக்கூந்தலிட்டுக்கொண்டு உதிரம்பெருகவிழுந்து மாண்டது. இப்படிக்குத்தன் யானையானது மடிந்ததை இந்திரன் கண்டமாத்திரத்தில் அதன்மீதிருந்து குதித்துஅப்புறம்போய்நின்று ஐயையோ! வெகுகாலமாக நம்மையடுத்திருந்த வாகனத்தையிழந்தோமென்று மிகவுஞ் சிலேசித்தவனாய் மாற்சல்லியத்தினைவிடாமல் மின்னலைப்போலப் பிரகாசித்திராநின்ற தனதுநெடியவில்லை வட்டாகாரமாக வளைத்துக்கோபித்துக் குரூரமாகிய பாணங்களைச் சந்திக்கவெத்தனிக்குமுன்னிலையில் ஆதிதேவனானபரமன் திருக்குமாரன் தமதுதனுசில் ஒருதீட்சணியமாகிய பாணத்தினைத்தொடுத்து இந்திரன்மார்புக் கிலக்காகப்பிரயோகிக்கஅதுவும் வெகு மகிமைகளுடன்சென்று மார்பைப்பிளந்து உருவியோடிய காலத்தில் மதிமயங்கி வலிகுன்றிவருந்திவிற்போனாமறந்துங்கோபத்தைவிடாமல் தான்அருமையாக வைத்திருந்தவல்பெற்றவேலாயுதத்தினைக் குமாரசுவாமியின்மீது எறிந்தனன். அதுவும் அதிககொடுமைகளைக்காட்டிவந்துநெருங்குமுன்னிலையிற் புற்றரும்பைப்போலப் பாலசுப்பிரமணியக்கடவுளினது தேகத்திற்றாக்கியவுடன் எரிந்துபோகக்கண்ட தேவர்களனைவரும் அற்புதமடைந்தவர்களாய் இதுவென்னஅநியாயம் உலகங்களிற்புகழ்கின்றவச்சிராயுதமும்வியர்த்தமாய் அதிகவன்மைபெற்ற வேலும் பிரயோசனப்படாமற் போய்விட்டதெனப் பேசிக் கொண்டிருக்கும்போது கந்தசுவாமியானவர் மற்றொரு குரூரமாகியஅர்த்தசந்திரபாணத்தினைஎடுத்துவில்லிற்பூட்டிச்செலுத்தித் தேவேந்திரன் சிரத்திற்றரித்திருந்த நவரத்தினமயமாகிய கிரீடத்தினைப் பொடியாகத்தள்ளிச் சிருங்காரதஞ்செய்துமேலும் ஒப்பற்றநாராசமொன்றைக்கொண்டுமேகதுசத்தினைவெட்டித்தள்ளி மற்றொரு சூரியபாணத்தினால் மார்பிலணிந்திருந்த வச்சிரக்கவசத்தைத் துகள்படுத்தி அவனுங்களைத்து விழும்படிக்கு எழு திவ்வியபாணங்களை ஏவினர்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? ஆதியிற்சலந்தரன்விஷயத்திற்சிருஷ்டித்திருந்த மகிமையுள்ளசக்கரப்படையினைப்பெற்றுக்கொள்ளவேண்டி மகாவிஷ்ணுவானவர்செந்தாமரை மலரினுக்கொப்பாக விளங்குந் தமது நேத்திரத்துடன் புதியமலர்களைக்கொண்டு சிவசங்கரமகாதேவதேவோத்தமனேயென்றுஅருச்சிக்கப்பெற்ற திருவடிகளையுடைய சிவபிரானுக்கினிய குமாரசுவாமிவிடுத்த கொடியபாணங்களேழும் அதிக வேகமாகச்சென்று வயிரமலைக்கொப்பாகியமார்பகத்திற்றாக்கித்தடாரித்துருவி யோடியகாலத்தில்வலியினுக்கொப்பற்றபராக்கிரமசாலியாகியதேவேந்திரன் பிரக்ஞை தப்பிமலைபோலவிழுந்தான். அப்படிக்குத் தமதிறைவனுக்கடுத்த துன்பத்தைக்கண்டதேவரனைவரும் பதைபதைத்து வருந்தினவர்களாய்த் தாங்கள் படவிருக்கின்ற காரணங்கள் தோற்றாமல் அதிகஉக்கிரத்துடன் ஓங்காரப்பொருளாக விளங்குஞ் சிவகுமாரனைச்சகலரும் ஏகமுகமாக வளைந்துகொண்டுஅஸ்திரசஸ்திரவிதங்களினால் அகோர யுத்தங்களைச் செய்யும்போது பாலசுப்பிரமணியக்கடவுளுந் தமது கரத்தில்விளங்கும்வில்லினதுநாரியையிறுக்கி வட்டாகாரமாகக்கொண்டுநான்குபாணங்களைச்செலுத்தி வருணனைக்கண்டித்தெறிந்துமற்றும் ஐந்துபாணங்களைக்கொண்டு யமதருமராஜன் புஜவன்மையையடக்கி ஒருபாணத்தினாற் சந்திரனை உருத்தோற்றாமல்வாட்டி இரண்டுவாளிகளினாற் சூரியனைப்பங்கப்படுத்தி இரண்டுபாணங்களினால் வாயுவைத்தகித்துஇதோ நிமைப்போதில் வெல்லுகின்றனனென வீரங்கள்பேசின திர்த்தஅக்கினிதேவனை நான்குபாணங்களினாற் கர்வமடக்கி யிவ்விதமாகச் சிறந்த தேவர்களைத் துத்துமுருகவடித்து காலாந்தகனைப்போல நிற்கின்ற பாலசுப்பிரமணியக்கடவுளினது விற்சாதுரியங்களையுங் கரவேக சரவேகத்திறங்களையுங்கண்ட மற்றதேவர்கள்அதிசயித்து அம்மம்ம இதுவென்ன அனர்த்தமாகவிருக்கின்றது! பிரமுகராகவிருந்தவர்களே! யிப்பாடுபடுவராயின் நம்மாலாகவேண்டுங்காரியமென்ன விருக்கின்றது உயிர்தப்பிப் பிழைத்திருந்தால் பிற்படிக்குப் பார்த்துக்கொள்ளுவோம், இனிசற்று தாழ்ப்போமாகில் நம்மெல்லோரையும் இவன் கொன்றுபோடுவதற் கையமில்லையென்று நிச்சயித்தவர்களாய்ச்சரபப்பட்சியானதுவீறிவருவதைக்கண்ட சிங்கக்கூட்டமானது வலிகுறைந்துநடுநடுங்கி ஓட்டமெடுப்பதைப்போல மனங்கலங்கிப் பலதிசைகளினும் ஓடி ஒளித்தனர். இவ்விதமாகச் சிவகுமாரனுக் கீடுசெய்யாமற் பரந்துபோன தேவர்கள் காரணங்களைப் பார்க்குமிடத்திற் பிராதகாலத்தில் உதயகிரியின்மீது தோன்றிய சூரியனது கிரணசமூகங்களானவை பரவி யிரவுமுற்றும் வீறியிருந்த சந்திரனது சோடசகலைகளின் பிரகாசத்தினை மாற்றிவிளங்குவதுக்கொக்கும். இவ்விதமாகத் தேவரனைவரையும் புறங்கண்டு ஜயங்கொண்டுவிண்ணவர் பட்டயுத்தகளத்திற்குமாரதேவ ரானவர் தனுர்பாணியாய்எதிரின்றிநின்றனர்.

அக்காலத்திற் சிவகுமாரன்காட்டிய சவுரியபராக்கிரமங்களை என்போலிகளாற் சங்கமாகச்சொல்லப் படுவதோ! இப்பிரகாரந் தம்மைச் சத்துருவாகவெண்ணிப்பகைத்துப் போராடிய தேவர்களிற்சிலர்மாண்டுபோகவும் மற்றையர் பிராணபீதியினால் எதிரில் நிற்கவஞ்சிஓடிஒளிக்கவும் இவ்விதகோலங்கண்டு வீரசிங்கம்போன்று ஒப்பற்றவில்வீரரில் வீரபராக்கிரமசாலியாகநிற்கின்ற விசாகப்பெரு

மாள்.தோற்ற மெப்படிக்கிருக்கின்றதெனிற் சர்வ சங்கார காலத்தில்மன்னுயிரனைத்தையும்நாசஞ்செய்துலவிய சங்கரனையொப்பக்காட்டியது. இவ்விதமாகஉமையவள்திருக்குமாரன் விண்ணவரனைவரும் மாள வெற்றிகொண்டு உலவுகின்ற காரணங்களைத்தெரிந்த நாரதரானவர் தேவருக்கடுத்த துன்பங்களுக்கிரங்கிஅதிவேகமாகத்தெய்வலோகத்துக்குப்போய் விண்ணவர்களுக்கு ஆசிரியனாகிய பிரகஸ்பதியினைக்கண்டு மகம்மேருவி னிடத்திலிருந்த தேவராசன் தனதுசேனைகளுடன் பாலசுப்பிரமணியர் பிரபாவங்களைத் தெரியாமலெதிர்த்து நாசமடைந்தகாரணங்கள் முற்றுஞ் சாங்கமாகத் தெரிவித்து ஓ? தேவகுருவேதுரிதமா யிதற்கொருமார்க்கத்தையோசியுமென்றுதவங்களிற் சிறந்த நாரதர் சொல்லிய வாக்கியங்களைத் திரிகாலங்களையும்வரையறத்தெரிந்து நடக்கவல்லபிரகஸ்பதி கேட்டமாத்திரத்தில் மனம்வாடினவராய் ஐயையோ? தேவர்கள்வாழ்வு இன்றுடன்போயிற்றேயென்று பலபலதுக்கவார்த்தைகளைப்பேசிஒன்றுந் தோற்றாமல் மதிமயங்கிக்கிலேசித்துக் கடையில் ஒருதீர்மானத்தை நிதானித்தவராய்ச் சுவர்கலோகத்தினைக்கடந்துமேருகிரியினைநோக்கி வேகமாகப்போய் இந்திரன் முதலிய அஷ்டதிக்குப்பாலகர் சூரியசந்திரர் மற்றதேவர்கள் மும்மதங்கள் சொரியவீறியிருந்த அயிராவதத்துடன் மாண்டுகிடக்கின்ற சமர்க்களத்தினைச்சேர்ந்து பிராணனையிழந்து பிரேதங்களாக இந்திரன் முதலானவர்கள் விழுந்துகிடக்கின்ற கோலத்தைத் தேவகுருவானவர் பார்த்து விழிகளில் நீரைப்பெருக்கித் திரிலோக சக்கிரேஸ்வரனே! உனக்கும் இப்படிக்குநேருவதோ! பரமன்செயலிப்படிக்காயதோ? இன்னமொருகாலம் உன்னைப்பார்க்கக்கிடைப்பேனோ? என்செய்வேனென்று பற்பல துயரவார்த்தைகளைப்பேசிஅதிக மனவருத்தங்களுடன் சுற்றிப்பார்க்கு முன்னிலையில் ஒப்பற்றபராக்கிரமசாலியாகிய சண்முகப்பெருமான் அவ்வரையினேரிடத்தில்வீற்றிருந்து நடத்தும்அதிசயத் திருவிளையாடல்களைச் சர்வக்கியனாகியபிரகஸ்பதியானவன் தரிசித்தவுடன் திடுக்கிட்டுப்பயபத்தி விசுவாசத்துடன்கரங்களைக்கூப்பிநின்று சிற்பநூலின் திறங்களை வரையறத் தெரிந்தவர்களாயும் எழுதப்படாத சிறந்த வடிவினை வாய்ந்துகுழந்தைப்பருவத்தினைப் பெற்றுவிளையாடுகின்ற சிவகுமாரனைச்சேவித்து சரவணபவன் பெருமைகளைப் பன்னிப்பன்னிப் போற்றினவனாய்க் கர்த்தனே! கிருபையுற்றுஅடியேன் முறைகளைக்கேட்டருள்க, பரமசிவ கடாட்சத்தினால் அளவற்றசெல்வச் சம்பத்துகளைப் பெற்றுக் கொடுங்கோலைச்செலுத்தி ஆளுகின்ற சூரபதுமன் அவன்துணைவராகிய சிங்கமுகன் தாருகன்மற்ற அவுணப்பாதகர் உபத்திரவங்களிற்பட்டு இந்திரனானவன் பலகாலமாக நிருபெறாமல் அலைந்து தன் பதத்தினையுமிழந்துஇந்தமேருகிரியினிடத்தில் வந்தொளித்திருந்தனன். அவன் கோரியிருந்த தென்னெனில் தேவரீர் திருவடிகளிற் றஞ்சமடைந்து உம்மைக் கொண்டு சத்துருக்களைக்கொன்று பழையபடிக்குத்தனதுஅரசுரிமையைப்பெற்றுத் திரிலோகசக்கிரேஸ்வரனாக வாழ்ந்திருக்க நினைந்ததன்றியில் வேறொரு கியாபகங்களை யெவ்வளவுங்கொண்டவனன்றுமேலும்பலகாலங்களாகச்சிவவிரதங்கள்முதலிய தவங்களைச் செய்துசெய்து வாடினவனாய்ப் பரம்பொருளாகியதேவரீர் உற்பவித்துச் சரவணப்பொய்கையினிடத்திற்சேர்ந்து வளருகின்றதைத்தெரிந்து பழமையாகவிருக்கின்றதன்பகைவரெல்லாமழிந்ததுபோலஅதிகசந்தோஷத்தினைப்பெற்றிருந்தனன். கடம்பு வெண்காந்தள் வெட்சிமுதலிய புஷ்பங்களைத்தரித்திருக்கின்ற குமாரசுவாமியே? தேவரீர் தொண்டுகளைச் செய்து பிழைக்குங் காலம்பார்த்திருந்த தேவேந்திரன்நீர் இவ்விதமாகத்திருவிளையாடல்களைச்செய்திருப்பதைத் தெரிந்தவனல்ல மேலும் மகாவிஷ்ணுமுதலிய தேவர்கள் ஆராய்ந்துங்காணவொண்ணாத சிவபிரானும் அவரிடப்பாகத் தமர்ந்தருளிய பராசத்தியும் அவ்விருவர் கிருபாநோக்கம் பெற்ற மகத்துக்களும் மற்றுஞ் சில பத்திமான்களும் தேவரீர் திருவிளையாடல்களைக் காண்பதன்றி யிதரராற்காணக்கூடுவதோ இடைவிடாமற்பற்றியலைக்கின்ற கர்மபந்தங்களையும் உயிரையும் வகுத்து இவ்விதமெனத்தெரியவகை யறியோம். அஞ்ஞானத்தைக் கடந்தவர்களுமல்ல அத்தகைய சிற்றுணர்வினைப் பெற்ற பாமராளாகிய எம்மை யொத்தவர்களாற் றமது அற்புத நடனங்களைக் காணக்கூடுவதோ? ஆதலால் இந்திரனுக்குச் சற்றுங்கியானமில்லாத காரணத்தினாற் றேவரீர் நடனங்களைப் பார்த்து அவற்றைத் தீயனவாகவெண்ணிக்கொடிய போர்செய்தனன். அவ்வபராதத்துக்குத்தக்கதாகஅவனையும் மீறிவந்த அயிராவதத்தினையுங் கொன்றீர். மற்ற தேவர்களும் நல்லறிவு விளங்காமையால்தேவரீரைப்பகைத்துப் போர்செய்து மாண்டனர். கர்த்தனே? தந்தைக்குப் பிழைகளைச் செய்த புத்திரரிடத்திற் றயையற்று தானே கொல்லத் துணிவனேயில்மற்றியாவர் அவர்களைப்பாதுகாத் திரட்சிக்கவல்லர். மேலும்பூர்வத்திற்சச்சிதானந்தமூர்த்தியாகிய சிவபிரான் சரபப்பட்சியாக வெழுந்தகாலத்தில் அழகியகருடகேதனராகிய விஷ்ணுவினது அவதாரமாக வீறியிருந்த நரசிங்கத்தை வாட்டினரல்லது மின்மினிப் பூச்சியினைக்கோபித்தனரோ! அப்படிக்குச்சீறுவராயில்அவருக்குஅஃது வெற்றிப்பாடாவதோ! அவ்வாறேஉலகங்களை அலைத்துத்திரிகின்றஅவுணர்கள்நாசமடைய அவர்கள்குலத்தினைவேறறக்களைந்துவிவேகமற்றதீனராகியதேவர்கள்தேவரீர்திருவடிகளை எக்காலத்துஞ்சிந்திப்பவராதலாற் கிருபா சமுத்திரத்தினை யொத்தகர்த்தனே! அவர்களறியாமற்செய்தகுற்றங்களைப்பொறுத் திரட்சிக்கவேண்டும் இவையன்றியிற்பற்பலசரக்கினை ஏற்றிக்கொண்டுவியாபாரஞ்செய்துவரப்போகுங்காலத்தில்சுமைமிகுதியினாற் கப்பல்கவிழஅதிலிருந்தவணிகரனைவரும்ஒருமுகத்திற்கடலினமுழுந்திமாண்டவனைப் போலத்தேவரீர் கடாட்சவீட்சணியத்தினாற்சகலவளங்களையும்பெற்று வாழ்ந்திருந்த இந்திரனாதியானவர்கள்உம்முடனெதிர்த்துரணக்களத்திலிறந்துகிடக்கின்றனர், முருகக்கடவுளேஉமது திருவடிகளைப்பூசித்துத் தொழுவதற்குரிய அடியராகிய விண்ணவர்செய்த குறைபாடுகளைக் குற்றமாகக்கொள்ளாமல் எக்காலத்தும் பயபீதியினால் வாடியிருக்கும்மனதையுடைய அத்தேவர்கள் ஞானஉணர்ச்சியினைப்பெற்றெழுவதாகக் கடாட்சிக்கவேண்டுமெனப் பற்பலதரம் பணிந்துபோற்றி விண்ணப்பஞ்செய்துகொண்டனன்.

இவ்விதங்களாகப் பிரகஸ்பதிபகவான்முறையிட்டுவேண்டுமுன்னிலையிற் றேவதேவோத்தமனாகிய பாலசுப்பிரமணியக் கடவுளானவர் திருநகைகொண்டு இந்திரனாதிய தேவர்கள் அயிராவதத்துடன் பிராணனைப்பெற்றெழுவதாகக் கடாட்சித்தனர், இவ்வாறு செக்கர்வானத்தினைப்

போலப்பிரகாசிக்குந் திருமேனியையுடைய குமாரசுவாமியார்அவர்களை எழுவதாகச் சிந்தித்தவுடன் இந்திரன் முதலிய அஷ்டதிக்குப்பாலகருந் தேவர்களும் உயிர்பெற்றெழுந்து கந்தர் திருவருளின்முயற்சியினாற் றங்களிருதயங்களில் நிச்சயஞானம் விளங்கித் தாங்கள்முற்செய்த துஷ்கிர்த்தியங்களைநினைந்து நமதிறைவனாகியகந்தசுவாமியுடனே நாம்பகைகொண்டு சண்டைசெய்ததென்றெண்ணிச் சகலருங்கலங்கிவருந்தித் துக்கித்துவாடி மனச்சோர்வடைந்து விஷத்தினைஉண்டவனைப்போலச்சோர்ந்துஅக்கினிசுவாலையிற்பட்ட கொசுகுகளையொப்பப்பதைபதைத்தொடுங்கிநடுங்கி வலியிழந்து பிரகாசித்திருக்கின்றமுகங்கள்வாடிச் சிவகுமாரனுடன் சண்டைகொடுத்ததம்மை வெறுத்துக்கொண்டு நித்திரைதெளிந் தெழுந்தவனைப் போலப் பிராணனைப்பெற்றுநின்ற அத்தேவர்களானவர் ஆதியில் ஈரேழுலகங்கள்முதலிய சராசரங்களைப்படைத்தருளிய பராசத்தியானவள்தந்த பாலசுப்பிரமணியக்கடவுள் ஆனந்தநடனங்களைச் செய்திருப்பதைக் கண்டமாத்திரத்திற் சமீபத்திற்போய்ப் பலதரம்வலம்வந்துவிழுந்து திருவடிகளிரண்டினையுஞ் சிரங்களிற்சேர்த்துக்கொண்டு செந்தாமரைப் புஷ்பங்களினிடத்திற்பெருகுந் தேனைஉண்ணப் பலநிறவண்டினங்கள்மொய்த் திருப்பதைப்போலத்தேவரனைவருஞ் சூழ்ந்துகொண்டு போற்றுவதாயினர், கந்தசுவாமியேநமஃ ஐம்முகக்கடவுளாகிய சிவபிரான்படைத்தருளிய முருகப்பெருமாளேநமஃ பார்ப்பதியார்திருக்குமாரனேநமஃ கங்காபவானிபாலாநமஃ நவரத்தினமயமாகிய வாகுவலயங்கள் பிரகாசிக்கும் பன்னிருபுயாசலங்களையுடையகடவுளேநமஃ மன்னுயிரனைத்தினையுஞ்சிருஷ்டித்துப் பிதாவைப்போல விரட்சிக்குந் தினதயாபரமூர்த்தியேநமஃ சண்முகங்களைப்பெற்றிருக்கின்றஆதிதேவனேநமஃ சுயஞ்சோதிமயமாகத் தோற்றும் வஸ்துவேநமஃ தற்பரமூர்த்தியாகியஎமதிறைவனேநமஃ எக்காலத்தும்வாலீபத்தினைப்பெற்றிருக்குங்குமாரசுவாமியேநமஃ சரவணபவனேநமோநமஃவென்றுபற்பலவிதங்களாகத்துதித்து அன்புமிகுதியினால்மீளவும் அஷ்டாங்கபஞ்சாங்கதிரியாங்க ஏகாங்கமுறையே தீர்க்கதண்டன்சமர்ப்பித்தெழுந்துவாழ்த்திமீளவும் பயபீதியினால் தேகமெங்கும்நடுநடுங்கக் கால்களுதறநிற்பவனைக் குமாரதேவர்கண்டு கிருபாநோக்கம்வைத்து தேவர்களே பயப்படவேண்டாம்பயப்படவேண்டாமென்று திருவாய்மலர்ந்தவுடன் விண்ணவரனைவருந் தங்களைப்பாதித்திருந்த மிகுந்தவிசனத்தையும் அச்சத்தையம் போக்கினவர்களாய்க் கரங்களைக்கூப்பித்தொழுது இவ்விண்ணப்பங்களைச்செய்துகொள்வதாயினர், கர்த்தனே அடியோங்கள்முறைகளைக்கேட்டருள்க அமுதத்துடன் கொடியவிஷத்தினையுங் கலந்து புசித்தவர்களை விஷமல்லது அமுதங்கொல்வதுண்டோ அவ்வாறே தேவரீர் கடாட்சவீட்சண்யத்தினால் நாயினேங்கள்சுதந்தரமாகிய பதியினையுஞ் செல்வச்சம்பத்தினையும்பெறவிருந்த யாங்கள்அறிவின்மையாற் புத்திமயங்கித் தேவரீருடன்போர்செய்தனம், அக்காரணத்தினால் நாங்கள்போர்க்களத்தில்மாண்டதை யோசிக்குமிடத்தில் தேவரீர்எங்களைமாய்த்ததன்று உமதுமகுத்துவங்களைத்தெரிந்துகொள்ளாமற்பகைத்த தீங்கானதே எமதுயிரைப்போக்கியது பூர்வத்திற் றக்கனானவன் பரமசிவத்தினை யிகழ்ந்துசெய்தயாகத்திற்றந்த அவிப்பாகத்தைப் பெரிதாகவெண்ணிப்புசித்த பாதகமானது இப்பாடுகள் பட்டும் இன்னமுந்தொலைந்ததில்லை மேலும் இக்காலத்திற் றேவரீருடன் மாறுகொண்டு கொடியபோரைச்செய்த முன்னிலையில்மீட்டும் அளவற்றபாதகங்களைத்தேடிக்கொண்டனம், குமாரதேவரோ தேவரீர்திருவுளத்தில் அடியோங்களிடத்திருந்தகிருபையினாற் றகுந்ததண்டனைகளைச்செய்து புதிதாகத்தேடிய பாதகங்களைப்போக்கியாண்டீர், ஆதலாற்றேவரீர் எங்களுக்குக்காட்சித்தகிருபைக்கு மாறுநடத்துவதற்கேதேனுமுண்டோ அல்லது நாங்களனைவரும் உமக்கு அடிமையாவோமெனினும் ஆதிதேவனாகிய தேவரீருக்குமுன்னமே தொண்டுபட்டிருக்கின்ற யாங்கள்புதிதாக அடிமையாவதெவ்விதம் மேலும் பிதாவானவர்கள் தாங்கள்பெற்றபிள்ளைகள் எத்தகைய தீங்குகளைச்செய்தபோதினும் அதற்குத்தக்கதண்டனைகளைச்செய்து பாதுகாப்பது அவர்களுக்குக்கடமையாதலால் விவேகசூனியராகிய அடியோங்கள்செய்த குறைபாடுகளனைத்தையுந் திருவுளத்திற்கொள்ளாம லிரட்சிக்கவேண்டுங் கடவுளேயென்று பலவிதங்களாகப் போற்றுகின்ற இந்திரன்முதலாகியதேவர்கள் முறைகளைக்குமாரசுவாமியார்திருச்செவிகளினேற்று அவர்களிடத்தில் அதிகதயையினால் இதனைச்சொல்லுவதாயினர்.

தேவர்களேமுன்னம் நம்மை ஒருகுழந்தையாகநினைந்து சண்டைகொடுத்தீர்கள் அக்காலத்தில் நமதுவல்லபங்களைக்கண்டீர்கள் இன்னமும் நமதுவலியினையும் பெருமைகளையும் உங்களுக்குத்தெரிவதாகக்காட்டுவோம்பாருங்கோளென்று ஒப்பற்ற விசுவரூபத்தினைக் கொண்டனர் அத்தோற்றத்தில் அஷ்டதிசைகள் பதினாலுலகங்கள் அஷ்டகுலாசலங்கள் சத்தசாகரங்கள் சக்கிரவாளகிரிமற்றுமிராநின்ற சகலவஸ்துக்களும்அடங்கிய அண்டகோடிகளனந்தமும் அவற்றிற்பட்ட பிராணிகளினது விதங்களும் பிரமன்விஷ்ணுமகேஸ்வரன் மற்றதேவர்களுந்தோற்றத் தக்கதாகநின்று சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலம்பாதலமெங்குந் திருவடிகள்நிறைந்து திசாதிசைகளெங்கும்புசங்கள்நெருங்கிக்காட்டவும் ஆகாயவெல்லைமுற்றுந் திருமுடிகளாகவும் சோமசூரியாக்கினியென்னும் விழிகள்அளவற்றவை விளங்கவுந் தேகமெங்கும் விபூதிதூளிதம் ருத்திராட்சத்தாழ்வடங்கள் பிரகாசிக்கவும் வேதங்களோதியிருக்கும் அளவற்ற திருவாய்கள்காட்டவும் இரத்தினகுண்டலங்களமைந்த பலசெவிகள்தோற்றவும் பக்கவிலாக்களனைத்தும் பிரமன்விஷ்ணுஉருவங்களாகக்காட்டவும் பராசத்தியானவள் சித்தமாகவும் ஈஸ்வரன்உயிராகவும்இப்படிக்கமைந்துவிளங்கக் குமாரசுவாமியார்நிற்கின்ற காட்சியினை இந்திரன்முதலியதேவர்கள்தரிசித்து இஃது மிகவும் அற்புதம் அற்புதமெனச்சேவித்துச்சகலரும்ஆகாயத்தில் விழிகளைப்பரப்பிப் பார்க்கும்போது தேகத்திற்குரிய அங்கங்களொன்றுந் தோற்றப்படாமல் முழுந்தாள்வரையில் அரிதாகக்கண்டு பிரமித்தவர்களாய் இவ்விதங்களிற் பாலசுப்பிரமணியக்கடவுளைப்புகழ்ந்து வேண்டுவதாயினர், சுயஞ்சோதிமயமாகவிளங்குஞ்சிற்பரமூர்த்தியே எங்கள்விழிகள்காணத் தேவரீர்கொண்டகோலத்தைத்தரிசிக்கக்கூடவில்லை ஆதலால் அடியோங்கள்கண்டுமகிழ்ந்துபவித்திரராதற்பொருட்டுத்தமதுபடிவத்தினைவெளிப்படையாகக் காட்டவேண்டுமென்று துதிக்கின்றதேவர் கோரிக்கையினை அண்டகடாகத்துக்கும் அப்புறமும்

அளவைப்படாமல் வளர்ந்திருக்கின்ற சரவணபவன்தெரிந்து கிருபையுற்று அத்தேவர்களுக்கு ஞானவிழிகளைக்கடாட்சித்தவராய் அனந்தகோடிசூரியர் ஏகமுகத்திலுதித்து விளங்குவதைப்போலச் சோதிமயமாகப் பிரகாசித்திருக்குந் தமதுதிருமேனியினை முற்றுங்காணக்காட்டியபோது மகம்மேருவின்மீதிருக்கின்ற இந்திரன்முதலிய தேவர்கள் விழிகளைப்பரப்பிக்குமாரசுவாமியார்தோற்றத்தைப் பாதமுதற்சிரசுபரியந்தம்அவனருளினால்ஆதியோடந்தமாகத் தரிசித்து அளவிறந்தகோடி அண்டநிரைகளுங்கணக்கிறந்த சீவபேதங்களுந் திரிமூர்த்திகளாகியதேவர்களும் மற்றுமிராநின்ற வஸ்துக்களும் அவ்வுருவத்தின்முற்றும் நெருங்கியிருப்பதை நிதானித்துத் தெரிந்தவர்களாய் இந்திரன்முதலிய தேவர்கள்வணங்கிப்போற்றி ஓவெனக்கோஷித்து இதனைவிண்ணப்பஞ் செய்வதாயினர்.

ஒப்பற்ற சுப்பிரமணியக்கடவுளே ஈரேழுபதினாலுலகங்கள்முதலிய வடங்கியிருக்கும் அளவற்ற அண்டங்களையும் அவ்வவ்விடங்களிலிராநின்ற தேவர்களையும் மற்றப்பிராணிகளையும் உயிரற்றபொருள்களாகிய அசுரபேதங்களையும் பிரமன் விஷ்ணு உருத்திரன்ஆகிய மூவர்களும் பொருந்திநிற்பதைத்திருஷ்டாந்தமாகக்கண்டனமல்லோ? எமதிறைவனே! அகிலசராசரங்கள்முற்றுந் தேவரீர்திருவுருவிலிருப்பதோ ஓ! தேவதேவோத்தமனே? புவனங்கள்முதலியவனைத்தும் நீரேயாக உருவகித்திருப்பதை யிதுவரையிற் றெரிந்தவரன்று தேவரீர் உருக்கொண்டுகாட்டிய மகத்துவத்தினாற் சிலவற்றைக்கண்டனம் ஓ! விசாகப்பெருமானே? உமதுதிருவடிவல்லனவாகிய பொருள்கள்வேறொன்றுந்தோற்றவில்லை சித்தவிருத்தியற்ற சிறியராகிய எங்களால் அளக்கவொண்ணாத பெருமையினையுடையதமதுதோற்றமகிமையைக்கண்டுதெளிவதற்குக்கூடுவதோ ஆதிகாலத்தில்உந்திக்கமலவாசியாகிய பிரமனொருவன்இறந்தபோது மகாவிஷ்ணுவானவர் அதற்குவேண்டும் யத்தனங்களைச்செய்யாமல் விசுவரூபத்தினைத்தாங்கி மமதையினாற் றிருப்பாற்கடலினிடத்திற் பள்ளிகொண்டிருந்த அகந்தையைப்போக்கி ஆள்வதாகச்சிவபிரானானவர் சகல அண்டங்களுந் தமக்குத்திருவாபரணங்களாகத்தேகரோமங்கடோறும் நிற்கவும் அக்கோலத்தினை விஷ்ணுபிரமித்துப்பார்த்திருக்கத்தக்கதாக மகாவிசுவரூபத்தினைக்கொண்டனர். அக்காரணங்களைத் தேவரீர் திருவடிவிற்றரிசித்தனம் இஃதன்றியில் முற்காலத்திற் பாத்துவநிலைமையினைக்காட்ட வாதாடிய மகாவிஷ்ணுவுக்கும் பிரமதேவனுக்கும் மத்தியிற்றோற்றிய சிவபிரான் அனற்றிருமேனியினை அவ்விருவரும் பலகாலங்கள் தேடியுங்காணாமல் அலைந்தனர், அவ்வடிவினையொப்பத்தேவரீர்தோற்றங்காணப்படுகின்றது எங்களைப்போல அவ்விருவரும் எமதுகர்த்தனாகிய தேவரீர் கிருபாகடாட்சத்தினைப் பெறுவராயிற் சங்கையின்றி அடியுமுடியுங்கண்டிருப்பர் இவையன்றியும் மற்றொருயுகமுடிவிற் பிரமனானவன் சராசரப்பிரபஞ்சங்களனைத்தினையும்படைத்து முற்றினும் பார்த்துவருமுன்னிலையில் மகாவிஷ்ணு திருப்பாற்கடலிற்பள்ளிகொண்டிருப்பதைக்கண்டு உதாசினித்த காரணத்தினால் வயிரமிகுந்து அவ்விருதிறவருஞ் சண்டைகொடுக்கின்ற காலையில் அகிலங்களுடன் ஒருவரையொருவர் விழுங்கிமீட்டும் உந்தியினாலும் முகத்தினிடமாகவும் அவற்றைப்படைத்துப்போராடுகின்றகாலத்திற் சிவபிரான் அவர்களைத்தடுப்பதாகக்கொண்டுநின்ற திருவுருவானதுதேவரீர் இக்காலத்திற்காட்டிய கோலத்துக்குமிகவுஞ்சிறிதாகத் தோற்றப்படுகின்றது ஆதலால் எமதிறைவனேதேவரீர்குணாதிசயங்களை யோசிக்குமிடத்தில் அருவுருவாகவிருக்கின்ற ஒப்பற்றகடவுளேயாக விருக்கின்றதுநாங்கள்முற்செய்ததவப்பேற்றினால் அடியோங்கள் துக்கவருத்தங்களைப் போக்கிச் சூரன்முதலானவர்களைக்கொன்று பழையபடிக்கு எங்களைப்பொன்னாட்டிற்சேர்த்து அரசுசெலுத்தும்படிக்குக் கடாட்சிக்கத் திருவுளத்தில்நினைந்து பாலசுப்பிரமணியக் கோலத்தினைப்பெற்றெழுந்தருளினீர் சகலவுருவுகளுக்கும் இடமாகவிருக்கின்ற உமதுஅழகியதிருவடிவினைத்தரிசித்துக் கிருதார்த்தராயினோம் பிராரத்துவவினைகளுக்கீடாக நல்வினை தீவினைகளை அனுபவிக்கவெடுத்த இந்தத்தேகவருத்தங்களைப் போக்கினவர்களாயினி எக்காலத்துந் துன்பத்துக்குக் காரணமாகிய பிறவியிற்பட்டுத் தடுமாறவறியோம் மோட்சசாம்பிராச்சியத்தைப் பெற்று வாழ்வோமென்று இவ்விதங்களாகப்போற்றி விண்ணப்பஞ்செய்து கொண்டவர்களாய்க் கோடிசூரியப்பிரகாசமாகவிளங்குந் திருவுருவினைவாய்ந்த குமாரசுவாமியார் விசுவரூபத்தைக்கண்டு இந்திரன்முதலாகியதேவர்கள் ஆயிரங்கிரணங்களைவீசி உதயகிரியினிடத்தெழுகின்ற சூரியனது பிரகாசத்தினைக்கண்ட சிலவறிவினையுடையவண்டுகள்முதலிய உயிர்கள்வருந்துமாறுபோல மனங்கள்மிகவும் பயப்பிராந்திகொள்ளவும்விழிகள்கூசிச்சுழல மயங்கினவர்களா யிதனைச்சொல்லுகின்றனர், அனந்தம் விழிகளைப் பெறுவோமாயினும் எமதிறைவனே தேவரீர்மெய்யுருவின் பிரகாசத்தைப்பார்க்கமாட்டோம் இத்திருக்கோலத்தைக்கண்டவுடன் எமதுவிழிகள்மயங்கிப்பிரகாசங்களையிழந்து வருந்துகின்றன அல்லவெனினுந்தேவரீர்பெருமிதங்களைப்பார்க்கவும் பயப்படுகின்றனம்அடியோங்கள் பிழைத்தற்பொருட்டுப் பழையதிருக்கோலத்தினைக்கொண்டுநின்று பாதுகாக்கவேண்டுங்கர்த்தனேயென்று தங்கள்வருத்தங்களை முறையிட்டுவேண்டு முன்னிலையில் எமதிறைவனாகிய குமாரசுவாமியார் அவர்கள்படுந்துன்பத்துக்கிரங்கி அண்டகடாகத்தினை உருவநின்றதமதுதோற்றத்தினைக்குறுக்கியதாப்பிரகாரஞ் சண்முகப்பெருமானாக உருவுகொண்டுநின்றகாலத்திற் றேவர்கள்வலம்வந்து பணிந்தெழுந்துபோற்றினர் பின்புபர்வதங்கள்சிறகினையரிந்த இந்திரனானவன்மீட்டும்வணங்கி யிதனைச் சொல்லுவான் கர்த்தனே சூரனானவன் பழயபடிக்குத் தேவர்முதலானவர்களை அலைத்துவாட்டுவதிற்குறைவின்றிநடத்திவருகின்றனன், ஆதலால் அப்பாதகன்முதலிய கொடியராட்சதர் பிராணன்களைவாட்டித் தேவர்களும்அடியேனும் பக்கங்களிலிருந்து தமதுஏவற்பணிவிடைகளைச் செய்யத்தக்கதாகவிண்ணகத்தில்விளக்குஞ் சுவர்க்கலோகத்திற்சேர்ந்து அடியேன் அரசுரிமைகளைத் தேவரீர்கைக்கொண்டு திரிலோகங்களினுஞ் செங்கோல்செலுத்தியிருக்க விருப்புற்றனன் எமதுஐயனே யிதுதானெனக்குமுக்கியமாகச் செய்யவேண்டும் உதவியென்றுபலவாகப்போற்றினன்.

கேளுங்கள் சவுனகாதிரிஷிகளே நம்மைமெய்ப்பத்தியினாற் பூசித்துவழுத்தவல்ல அடியார்களுக்கு இம்மையிற்சகலசெல்வங்களையுங்கடாட்சித்துமறுமையிற்கசேந்திர

வாழ்வினையுந் தந்து கடையிற் சாரூப பதவியையுங்
கொடுக்கவல்ல சண்முகப்பெருமாளுக்குத்தேவராசனை
வன்தன்செல்வங்களைத்தருவதாகவேண்டுகின்றதைப்பார்
க்குமிடத்தில் எப்படிககிருக்கின்றதென்றால் உலகங்கள
னைத்தையுந்தகிக்கவல்லஅக்கினிதேவனுக்குஒருவன் ஒரு
அனற்பொறியைத் தரவேண்டியதற்கொக்கும்அக்காலத்
தில்முருகப்பெருமான்தேவேந்திரனைப்பார்த்துநகைத்து
நீமதிட்டத்தன்பாகக்கொடுத்த செல்வங்களனைத்தினையும்
பெற்றனம் அவற்றினைமீட்டும்உனக்கேதந்தனம் மேலும்
நீங்களனைவரும் நமக்குப்படைகளாகவும் நாமுங்களுக்கு
த்தலைவனாகவுமிருந்துசூரனாதிய இராட்சதர்களைவேருட
ன்களைந்துநாசமடையச்செய்வோம்அதுபரியந்தம்மனந்த
ளர்ந்து வாடவேண்டாமென்று கடப்பமாலைதரிக்குங் கந்
தசுவாமியார்திருவாய்மலர்ந்ததை அவுணப்பாதகரால் வ
ருந்தியிருக்கும் அயிராவதத்தலைவனாகிய இந்திரன்கேட்
டவுடன் தன்பகைவரனைவருமாண்டுதிரிலோக சாம்பிரா
ச்சியத்தைப்பெற்று ஒப்பற்ற திருமுடிசூடி ஆளக்கிடை
த்தவனைப்போலத் தேவருடன் மனமகிழ்ந்தவனாய்ப்பால
சுப்பிரமணியரைப்போற்றிய பின்புஇந்திரன் மீட்டுங் கந்
தசுவாமியைப்பணிந்து கர்த்தனே! தேவரீர்திருவிளையாட
லின்மகிமையினால்இவ்வண்டத்தில்விளங்குஞ் சத்தகுலா
சலங்கள் சத்தசாகரங்கள் புவனங்கள் அவைகளிலுட்பட்
ட பிராணிகள் முதலாகக் கிரமங்கள்தப்பி மாறுபட்டிரு
ப்பதினால் தேவரீர்கிருபையுற்று அவற்றினைமுற்படியே
நிலைபெற ஸ்தாபிக்கவேண்டுமென்று போற்றுகின்றவன்
கோரிக்கையினைப் பால சுப்பிரமணியர் திருச்செவிகளி
னேற்று நகைத்தவராய்த் தேவராசனே! உன்னிஷ்டப்ப
டிக்குச்செய்வோமென்று இந்தஅண்டத்தில்நமதாடலினா
ல் மாறுபட்டவனைத்தும் யதாப்பிரகாரம் ஆகக்கடவதெ
ன்று ஒருவாக்கியத்தைத் திருவாய்மலர்ந்த மாத்திரத்திற்
சராசரப்பிரபஞ்சங்களனைத்துந் தத்தமது நிலைகளில்நின்
றது. இக்காட்சியைக்கண்ட தேவர்கள் முதலாயினர் அற்
புதமடைந்துசிவகுமாரனைப் பலவிதங்களிற்போற்றினர்.
அத்தருணத்தில் மகம்மேரு பர்வதத்தின்மீது வீற்றிருக்
கின்ற குமாரசுவாமியைச்சொர்க்கலோகத்துக் கதிபனாகிய
தேவேந்திரன் சேவித்து விண்ணப்பஞ்செய்கின்றான்.

வாரணத்துவசத்தினையுடைய கர்த்தனே! வேதாகமங்க
ள் பூசிக்கப்பெற்ற பெருமையினையுடையதேவரீர் திருவ
டிகளில் அருச்சித்துக்கிருதார்த்தராதற்கு விருப்புற்றன
ம். அப்பூசனையையாயினேங்கள் செய்துமுடிக்கக்கடாட்
சிக்கவேண்டு மெனப்போற்றுவதற்குப் பாலசுப்பிரமணி
யர் சம்மதித்தவராய்ப் பொன்மயமாகிய மகம்மேருகிரி
யைக் கடந்துபோய் தமது பிதாவெழுந்தருளியிருக்குந்தி
ருக்கயிலாயத்தின் பாரிசத்தில்விளங்கும் ஒருபருவதத்தி
ன்மீதிற் சேர்ந்தகாலத்திற் பர்வதங்களின் சிறகுகளையரிந்
த இந்திரன் முதலியதேவர்களுங் கரங்களைக்கூப்பித்தொ
ழுதுகொண்டு எக்காலத்துங்காளைப்பருவத்தினைப்பெற்றி
ருக்கின்றஎமதிறைவனாகியகுமாரசுவாமியின் பின்பற்றிவ
ந்து வானத்தையளாவ வளர்ந்து அசைந்துகாட்டும்மூங்கி
ல் முதலிய மலைந்திருக்குஞ் சாரலினைவாய்ந்த அப்பருவ
தத்தின் மத்தியிற் சண்முகப்பெருமாள் வீற்றிருப்பதை
க்கண்டு இந்திரனாதிய விண்ணவர்கள் அனைவரும் எமது
சுவாமியின்திவ்வியசரணாரவிந்தங்களில் ஆகமவிதிப்படி
க்கு அருச்சிக்கபத்தனிக்குமுன்னிலையில்இந்திரன்தங்கள்
மரபிற்குரிய சிற்பாசிரியனாகிய மயனை நினைந்தமாத்தி
ரத்தில் அதனைத்தெரிந்து தேவதச்சனானவன் அதிவேக
மாய்வந்து தங்களிறைவனைக் கண்டு வணங்கிக் கரங்களை
க்கூப்பி நிற்கின்றவனைக்கிருபையாகப்பார்த்து ஓ! தபதி?
யிப்பர்வதத்தினிடத்தில் நமது பொன்னகரத்தினும் பதி
ன்மடங்குசிங்காரங்களைப் பெற்றதாகஒருஆலயத்தினைவி
ரைவிற் படைக்கக்கடவையெனக்கட்டளையிட்டவுடன்தே
வசிற்பியானவன் வணங்கிப்போய்த் தான் கற்றிருக்கின்ற
சாஸ்திர வல்லபத்தினாற் பல்லாயிரகோடி அண்டங்களி
லிராநின்ற சூரியர்களனைவரையுஞ் சேர்த்து உருக்கிவார்
த்ததைப்போல ஜகச்சோதியாகப் பிரகாசித்திருக்குஞ் சி
ரோரத்தினவகைகளினாற் சோடித்த அழகிய திருவாலய
மொன்றினைப் பலவளங்களுடன் நிருமித்துப் பொற்சிகர
ங்கள் அமைந்து வானத்தினை யளாவிப் பற்பல நிலைகளை
ப்பெற்றிருக்குங் கோபுரவாயில்களைநாற்புறத்தினும்நிலை
பெறச்செய்து முற்றியபின்பு திருமாளிகையின் மத்தியி
ல் நவரத்தினமயமாகச் சொலித்திருக்குங் கற்பகிரகத்து
க் குட்பாரிசத்தில் மதயானைகளுக்கு வயிரியாய்ச் சரபப்
பட்சிக்குப்பின் தாங்குஞ் சிங்கங்களேந்த நின்ற ரத்தினக
சிதமாகிய ஆசனத்தினை யேற்படுத்தி மற்ற சிறப்புகளையு
ஞ் சிற்பநூலின் விதிப்படிக்கு மயனானவன் முடித்தபின்
பு அச்செய்தியைத் தெரிவித்தவுடன் இந்திரனானவன் க
ளிகூர்ந்துபலதேவர்களையழைத்துநமதிறைவனைப்பூ
சித்தற்குவேண்டுந் திருமஞ்சனமுதலிய உபகரணங்களை
த் துரிதமாகச் சேகரித்துவரக் கடவீரென்று கட்டளையி
ட்டபடிக்கு அதிவேகமாய் வானநாடுகளிற்போய் கங்காச
லம் சுகந்தபரிமளமுடைய பஞ்சதருக்களின் புதியமலர்க
ள்முதலிய வஸ்துக்களைக்கொண்டுவந்துசேர்த்ததைத்தே
வராசன்பார்த்துச் சந்தோஷித்தவனாய்ச் சண்முகப்பெரு
மாளை வணங்கிக்கர்த்தனே! தேவரீர்திருவடிகளில்அருச்
சித்து யாங்களனைவருங் கிருதார்த்த ராதற்பொருட்டு இ
த்திருவாலயத்தி லெழுந்தருளவேண்டுமெனத் துதிக்கின்
றதை அங்கீகரித்துத் தேவரனைவருந் தொழுது வரத்தக்
கதாகத் திருக்கோயிலிற் பிரவேசித்துக் கோடி சூரியப்பி
ரகாசத்தினைப்போல விளங்கியிருக்குஞ் சிங்காதனத்தில்
வேதத்தின் முடிவாகவிராநின்ற சரவணபவன் வீற்றிரு
ந்த காலத்தில் இந்திரன்மற்றதேவர்களனைவருடன் கூடி
க்கொண்டு ஞானநாயகனே! நாங்களனைவருந் தமக்குச்சே
னைகளாவோம் தேவரீர் எங்களுக்குத் தலைவராகவிருந்து
ஆளக்கடவீரென்றுபொற்குடங்களில் நிறைத்திராநின்ற
வானகங்கையினாற் றிருமஞ்சனமாட்டி யீரமுலர்த்திஅதி
கமிருதுவாயிராநின்ற பட்டாடை உடுத்திச்சந்தனம்புனு
கு சவ்வாது கஸ்தூரி முதலிய பரிமளத் திரவியங்களினா
ற் கூட்டியிராநின்ற கலவைச்சாந்தினை ஏராளமாகப்பூசி
ச் சூரியனது கிரணங்களைப்போலப் பிரகாசித்திராநின்
ற இரத்தினாபரணங்களையலங்கரித்துச்சுகந்தங்களைவீசா
நின்ற குளிர்ந்த கற்பகமலர் மாலைகளைச்சாத்திஜுவிதத்தூ
பதீப வகைகளைக்காட்டிக் கர்ப்பூரநீராஞ்சனமெடுத்துஇ
வ்விதமாகச் சோடச உபசாரங்களையும் ஆகமவிதிப்படிக்
கு முடித்துஇவ்வாறு தேவதேவோத்தமனுக்கு அர்ச்ச
னைவழிபாடுகளைச்செய்தவர்களாய் இந்திரனாதியவிண்ண
வர்கள் எமதிறைவனை மும்முறை வலம்வந்து திருவடிக
ளானவை தமது சிரங்களிற்பொருந்துவதாக தீர்க்கதண்டன்ச
மர்ப்பித் தெழுந்து கரங்களைக்கூப்பிநின்று அத் தேவன்

பெருமைகளைத் துதித்துப் போற்று முன்னிலையில் அத்தேவர் மனக்கவலைகள் திரும்படிக்கு அனுக்கிரகஞ்செய்து மின்னலைப்போலச்சடுதியில்மறைந்து அத்தலத்தினை விட்டுத் திருக்கயிலைக் கெழுந்தருளினர். அத்தினமுதல் பாலசுப்பிரமணியருக்குத் தேவசேனாபதியென்னுந் திருநாமம்விளங்குகின்றது. இப்படிக்குப் பரம்பொருளாகிய குமார சுவாமியார் திருவுருவைமறைத்துப் பருவதங்களிற்சிறந்த வெள்ளியங்கிரிக்குப் போனதைக்கண்ட இந்திரனும் மற்றதேவர்களும் அற்புத மடைந்தவர்களாய்த் தாமும் அந்தப்பருவதத்தைநீங்கினர். சிவகுமாரனாகியஇளையபெருமாளானவர் தேவர்கள் பூசிக்கத்தக்கதாக அந்தமலையினிடத்திற் றங்கியகாரணத்தினால் அத்தினமுதல் அது கந்தபருவதமென்று சகலருங்கொண்டாடும்பெருமை பொருந்திய திருநாமத்தைப்பெற்றது. இந்திரனனவன்சிலதேவர்களுடன் பிரமதேவன்வாசமாகியமனோவதிப்பட்டணத்தைச் சேர்ந்தனன். மற்றதேவர்களுந்தத்தமதுபதவிகளிற்போய் யதாப்பிரகார மிருந்தனர். கந்தபர்வதத்தினைக்கடந்து திருக்கயிலாயத்தினைச் சேர்ந்தகந்தசுவாமியானவர் நவவீரர்களும் இலட்சவீரரும்பூதத்தலைவருஞ்சூழ்ந்துபோற்றஅவ்வரையினிடத் தமர்ந்துதிருவிளையாடல்களைச்செய்திருந்தனர்.

## தகரோறுபடலம்.

சூரன்முதலோருயிர்தொலைக்கவருசெவ்வே
ளாருமகிழ்வெள்ளியசலத்தினமர்போழ்தின்
மேருவிலுடைப்பரன்விரும்பவநிலத்தே
நாரதனோர்வேள்வியைநடாத்தியிடலுற்றான்.

ஓசவுனகாதிரிஷிகளே இதுவரையிற்பாலசுப்பிரமணியக்கடவுளினதுஅற்புதத்திருவிளையாடல்களைக் கேட்டீரன்றோ, இனிஅதற்குமேல் நடந்த சரித்திரங்களையும் பேசுவோம் கவனமாகக்கேட்பீராக.—சூரபதுமன்முதலியபாதகர் பிராணன்களை மாய்க்க வெழுந்தருளிய வேலாயுதக்கடவுள் சகலராலும்புகழ்ந்துகளிக்கும்பெருமையினையுடைய வெள்ளியங்கிரியி னிடத்தில் வீற்றிருக்கின்ற காலையில் மேருகிரியினிடத்தும் விரும்பிவாசஞ்செய்யும் பரமசிவத்துக்குப் பிரீதியாகத்தக்கதாக நாரத ரிஷியானவர் பூமண்டலத்தில் முக்கியமாகச்சொல்லும் ஒருயாகத்தினைச்செய்ய யத்தனித்துப் பவித்திரமாகிய தலமொன்றினைக் குறித்து ஓமதிரவியமுதலிய உபகரணங்களைச்சேகரித்துக்கொண்டு தவங்களிற்சிறந்த முனிபுங்கவர்களையுந் தேவர்களையும் பூமண்டலத்தில் வாசமாயிராநின்ற சிவவிரதபராகியபிராமணோத்தமரையும் மற்றுமிராநின்ற மகத்துக்களையுந் தருவித்துக்கொண்டு ஓமகுண்டத்தினைத்திருத்தி வேதவிதிப்படிக்குச் செய்துவருகின்ற யாகத்தினிடத்தில் மந்திரமாறுபாடுகளினாற்பெசக்கர்வானத்தினையொத்ததேகத்தினைவாய்ந்தவெள்ளாட்டுக்கடாவொன்றுபிறந்தது, இவ்விதமாக அந்த ஓமகுண்டத்திற் சுவாலைகொண்டெரியும் அக்கினிமத்தியிலெழுந்தகடாவின்காரணங்களையோசிக்கு மிடத்தில் எப்படிக் கிருந்ததெனில் யாகங்களெனப் பலவற்றை யேற்படுத்திக்கொண்டு நம்முடைய வருக்கங்களை வகையறத்தினந்தோறும்மாய்த்துத்தின்கின்றனர். இக்காலத்திற் சகலரும் ஓரிடத்திற் கூடியிருப்பதால்இவர்களைவளைந்துகொண்டு கொல்வேனென நிச்சயித்து அக்கினிக்கொழுந்தாகியகுதிரைவாகனத்தின்மீதுஆரோகணித்தெழுந்ததைப்போலவிருந்தது. இவ்விதமாக வூழிகாலத்திற் சராசரப்பிரபஞ்சங்க ளனைத்தையும் நாசஞ்செய்யவெழாநின்ற பிரசண்டமாருதமும் வடவாமுகாக்கினியும் வானத்திற்பரவியமேகங்களி னிடத்துண்டாய்முழங்குமிடிக்கூட்டமும் ஒன்றிற்கலந்துஒருருக்கொண்டு வந்ததற்கொப்பாகக்கடுகி ஆர்ப்பரித்துக்கொண்டெழுந்தவெள்ளாட்டுக்கடாவானது யாகத்தைச் சூழவிருக்கின்ற ஏழைத்தபசிகள் முதலானவர்களைக் கொல்ல யத்தனித்து கழுத்தினிடத் தணிந்திராநின்ற மணிகள்கலகலெனச்சத்திக்கவும் நான்குகால்களினு மிராநின்ற கிண்கிணிகளிற்சேர்த்திருக்கும் பருக்கைக்கள் அசைவுகொண்டு சலசலெனச் சத்திக்கவுங் கூர்மையாய் வயிரத்தினைநிகர்த்து வலிபெற்றுமுறுக்குண்டிராநின்ற கொம்புகளை யுராய்ந்துகொண்டு கரியகுளம்புகளைப்பெற்ற கால்களை நிலத்திற்றூக்கிச் சீறிஅதிவேகமாய் மேலிட்டுப்பாயும் ஆட்டினைக்கண்டு யாகவெல்லையிற் கூடியிருந்தவர்கள் அனைவரும்அதிக பயப்பிராந்தியுடன்நடுநடுங்கி ஓடத்தொடங்கினர்.

இவ்விதமாகப் பறக்கின்றவர்களனைவரையும் பூமண்டலம் வானுலகமெங்கும் பின்தொடர்ந்து கோடுகளினாற்றூக்கியபோது சிலர் கால்களொடியவுஞ் சிலர் விழுந்துவிலாக்கள்முறியவுஞ்சிலர் கரங்கள் துளைபடவுஞ் சிலர் வயிறுகள்பீறுண்டு குடல்கள் சரியவுஞ், சிலர்மாளவும், இப்பாடுகள் பட்டு வாடுகின்ற முன்னிலையில் பூமியும்அதிலிராநின்ற பர்வதங்களுந் துகள்பட்டுப் பறக்கத் தாவிச்செல்லு மிடங்களெங்கினும் எதிர்ப்பட்ட பிராணிகள் அல்லோலகல்லோலப்பட்டு மங்குவதாக ஆக்கிரமித்துலவும்போது அதன் ஆர்ப்பாட்டங்களுக்கு அஷ்டதிசைகளைத் தாங்கும் யானைகள் சகிக்கமாட்டாமையால் தத்தளித்தேங்கவுஞ்சந்திரன் தலைகீழாக விழுந்து நகசிகபரியந்தம் நுறுங்குவதாக அவனேறிநடாத்தும் விமானத்தைமுட்டித் தள்ளியுஞ் சூரியன் ஆரோகணித்துச்செல்லுந் தேரைச் சின்னபின்னப்படப்பாய்ந்தும் அத்தேரிற்பூண்டிருக்கும் எழுபச்சைக்குதிரைகள்வயிறுபீறுண்டு களைக்கத்தக்கதாக விடித்தும் இவ்விதமாக வெள்ளாடானது எவ்விடங்களினுமுலவி, அதிகஉக்கிரத்துடன் மன்னுயிர்களுக் கிறுதிசெய்துகொண்டுபாய்ந்துலவுகின்றபோதுந்அவ்வேள்விக்குத் தலைவராகவிருந்தநாரதரும் மற்றரிஷிகளுந்தேவர்களும் தாபரித்துநிற்க விடமில்லாமற் பயப்பிராந்தியினால் ஒருவர்பின் னொருவராக ஓடித்தேகமெங்கும்பட்ட காயங்களில்உதிரம்பெருக்கெடுத்தோடஅலைச்சற்பட்டுத்திருக்கயிலாயகிரியினைச்சேர்ந்து சிவபிரான்ஆலயத்தினைநோக்கி வருகின்றதருணத்திற் புசபல பராக்கிரமசாலிகளாகிய நவவீரர்களும் இலட்சத்தவருஞ்சூழ்ந்துவரக் குமார சுவாமியார்சோத்தியமாகத் திருவிளையாடல்களைச்செய்துகொண்டு எதிரில் வருவதைத்தரிசித்து அனைவருஞ்சேர்ந்து நாமினிப் பரமேஸ்வரர்சந்நிதானத்துக்குப்போகவேண்டுவதில்லை யிதோகுமாரதேவர் நம்மிடத்தன்பாய் நமக்கடுத்த துன்பங்களைப்போக்கி யாள்வதற்கு எதிர்காட்சி தந்தனர். இத்தேவரைப் பாலகனென் றெண்ணலாகாது

முன்னம் மகமேருகிரியின்மீது தம்முடனெதிர்த்த இந்திரனுதிய தேவர்களைக் கொன்று மீட்டும்பிழைப்பித்தனர். இக்காலத்தில் நமக்கடுத்திருக்கின்றகுறைபாடுகளைத்தவிர்த்திரட்சிப்பது இவருக்குமிகவுஞ் சுலபமாகவிருக்கும் இதற்கையமில்லை ஆதலால் நமக்குநேர்ந்தசம்பவங்களை யிக்கடவுளுக்கு விண்ணப்பஞ்செய்துகொள்வதுநன்கெனத் தங்களிற் றீர்மானித்துக்கொண்டு ரிஷிகள்முதலாகியதேவர்களனைவருங் கரங்களைக் கூப்பினவர்களாய்ப் பாலசுப்பிரமணியக்கடவுளினது மகிமைகளைப் புகழ்ந்துகொண்டு எதிரிற்சென்று நெருங்கியவுடன் ரிஷிகள்முதலியர் அனைவரும் ஏகமுகமாய் ஜயஜயவெனப்போற்றி யானைமுகப்பிள்ளையாருக் கிளையவராகிய குமாரதேவனைவலம்வந்து பலதரம்வணங்கித் துதித்து நிற்பவர்கள்மனச்சோர்வினையும் முகாரவிந்தங்கள் வாடியிருப்பதையுந் தேகவருத்தங்களையுஞ் சிவகுமாரன்கண்டிரங்கினவராய் நீங்கள்மிகவும் நொந்திருக்கின்றீர். உங்களுக்குச் சம்பவித்தகாரணங்களைச்சொல்லக்கடவீர்களென்று திருவாய்மலர்ந்தவுடன் அத்தவத்தர் முதலாயினர் அதிகவருத்தத்துடன் இளையபெருமாளே அடியோங்களுக்கடுத்ததுக்கத்தினையென்ன சொல்வோம் அதனைக்கேட்டருள்க சிறந்த வேதங்களிற் சொல்லாநின்ற யாகங்களினுன்றைச் சிவம்பிரீதியாக நாங்கள் செய்யத் தொடங்கி அதனை முடித்து வருகின்ற தருணத்தில் அதிக சுவாலையை வீசியெரிகின்றஅக்கினிகுண்டமத்தியில் வளைந்த கோடுகளுடன் ஒருவெள்ளாட்டுக்கடாவானது பிறந்தது. அதன்கொடுமைகளையுஞ்சாமர்த்தியத்தையுங்கண்ட யாங்கள் பயமிகுதியினால்யாகநிலையினைவிண்டு இத்தலத்தைநோக்கிஓடிப்பலபின்னப்பட்டு வந்து சேர்ந்தோம், அதன்மத்தியில் அக்கடாவானது சீறிப்பாய்ந்து பாய்ந்து வாட்டியதால் எங்களிற் சிலர்காயப்பட்டுஞ்சிலர் மாண்டும் இவ்விதங்களாகப் பங்கப்பட்டனர். காங்கேயனே! பூலோகத்தினும்விண்ணுலகத்தினும் அளவற்றபிராணிகள் நாசமடைந்தனர். இதுஆதியிற் றிருப்பாற்கடலினிடத்தெழுந்த கரியவிடமன்றுசெவ்வானத்தினுஞ் சிவந்துகாட்டும்புதியவிஷமானதுஆட்டினுருக்கொண்டுஅண்டங்களதிரவினைந்து எவ்விடங்களினும் எதிரின்றித் தாண்டித்திரிகின்றது. இனிகணப்போதுசெல்லுமாயிற் சர்வசங்காரத்தைப்போலச்சராசரப்பிரபஞ்சங்களனைத்துந் துகள்பட்டுப்போம்இதற்கையமில்லை. கர்த்தனேயிப்படிக்கு அதிகஉக்கிரத்துடன் மன்னுயிரைநாசஞ்செய்துலவுகின்றவெள்ளாட்டுக்கடாவினது வீருப்பையடக்கிஎங்களுக்குச்சம்பவித்திருக்கின்றஅச்சத்தைப்போக்கிநாங்களுத்தேசித்த வேள்வியினையுங் குறைவறமுடிப்பித்திரட்சிக்கவேண்டுமெனப்போற்றுகின்றகாலையில் பாலசுப்பிரமணியக்கடவுளானவர் அத்தவத்தர்தேவர் முறைகளைக்கேட்டவுடன் கிருபையுற்றுப் பயப்படாதீர்களெனக் கையமர்த்தி அவர்களிடத்திற் கிருபாநோக்கத்தினைப்பரப்பி யினிஉங்கள்வருத்தங்களையும் மனச்சோர்வையும்விட்டுவிடக்கடவீரென்று திருவாய்மலர்ந்து அதிகபிரியத்துடன் தம்மைத்தொடர்ந்துவருகின்ற பரிசனங்களில்வலிக்கொப்பற்றவராய் மேகத்தினையொப்பவிளங்குந் திருமேனியையும் படைத்திருக்கின்ற வீரவாகு தேவரைப் பார்த்துச் சொல்லுகின்றார், ஓ!வீரவாகுவே!மண்டியெரியும் ஓமகுண்டத்தினிடத்தெழுந்து இவர்கள்செய்யும் வேள்வியினையும்அழித்து அண்டமுதற்சகலபுவனங்களினும் உலாவி அவற்றாட்பட்ட பிராணிகளையும்வாட்டியலைக்கின்ற வெள்ளாட்டுக்கடாவினைத் துரிதமாகத்தேடிப்பிடித்துக்கொண்டுவரக் கடவையென்று உமையவள்திருக்குமாரனாகிய குமாரசுவாமியார் திருவாய்மலர்ந்தனர்.

இப்படிக்கு உதயகிரியினிடத்தெழும் பாலசூரியனையொத்த தேககாந்தியினையுடைய சரவணபவன் கட்டளையிட்டவுடன் புசபலபராக்கிரமசாலியாகிய வீரவாகுவென்னும் நாமத்தினைப் பெற்றிருக்கின்ற காளையானவர் கர்த்தனே தேவரீர் திருவுளப்படிக்கு இதோமுடித்துவரக்கடவேனென்று சம்மதித்துக் கந்தசுவாமியாருடையசெந்தாமரைமலரையொத்த திருவடிகளிற்பணிந்துபோற்றிவிடைபெற்றுத் திருக்கயிலாயகிரியைக்கடந்துபோய் வீறியுலவுகின்ற வெள்ளாட்டுக்கடாவைத்தேடுவதாய் மண்டலாகாரமாகக்கடல்சூழ்ந்திருக்கும் பூவட்டத்தெல்லைமுற்றினும்ஆராய்ந்துங் காணாதவராய்ச்சத்தபாதலங்களினும் போய்த்தேடி அங்குந்தோற்றப்படாமல் வானநாடுகளெங்குஞ்சுற்றி அகப்படாமற் கடையிற்பிரமன் வாசஞ்செய்யும் மனோவதிநகருக்கருகில்வரும்போது அத்தலத்திற்சிவந்த மேனியையுடைய வெள்ளாடானதுபோகின்றவீருப்பைக்கண்டவுடன் பிராணிகளனைத்தும் ஓடியொளிக்கத்தக்கதாகப்பாய்ந்து அலைத்துவருகின்ற கடாவானதுபிரமித்து வாடும்படிக்கு வீரவாகுதேவர் ஆர்ப்பரித்துநெருங்கி முறுக்குண்டுவயிரத்தினும் வலிதாயிராநின்ற அதன்கொம்புகளைப்பற்றி வலித்துக்கொண்டுபோய்த் திருக்கயிலாயகிரியினைச்சேர்ந்து ஏடவிழ்ந்த கடப்பமலர்மாலைதரித்திருக்கின்றபெருமாள் முன்னம்நிறுத்தி வணங்கிநின்றகாலத்தில் அவரிடத் தன்பாகப்பேசி எதிரில்நிற்கின்றரிஷிகள் தேவர்களைப்பார்த்து வெள்ளாட்டுக் கடாவானதுநம்மிடத்திற்சேர்ந்தது இனிநீவிர்வருத்தப்பட வேண்டுவதில்லை நீங்களனைவருந் துரிதமாய்ப் பூலோகத்திற்சென்று ஆகவனியங் காருகபத்தியம்தக்கணாக்கினியமெனச் சொல்லும் முத்தழலைக்கொண்டுசெய்து குறைபட்டிருக்கும்யாகத்தினைச்சம்பூரணமாகமுடிக்கக்கடவீரென்று அழகியதிருமேனியையுடைய குமாரசுவாமியார் சொல்லியபோது அத்தவத்தார்முதலானவர்கள் இதனைவேண்டுகின்றனர், காளகண்டமூர்த்தியாகிய சிவபிரானுக்கினியகுமாரதேவரோ வேள்வித்தீயினிடத்தில் உற்பவித்தெழுந்தஇந்தவெள்ளாட்டுக்கடாவை நாயினேங்கள் கிருதார்த்தராதற்பொருட்டுவாகனமாகக்கொண்டுஏறிநடத்த வேண்டுமெனமீட்டும் போற்றுகின்றவரிடத் தன்பாய் உங்கள்மனோபீஷ்டப்படிக்கு இக்கடாவினை ஊர்தியாகக்கொள்ளுகின்றனம், நீங்கள் பூமண்டலத்திற்செய்துவரும் யாகத்தைப் பூர்த்திசெய்யப்போய் வருவீரென்று திருவாய்மலர்ந்தபோது யாவருக்குங்களிப்புண்டாய் ஆனந்தபரவசத்தராகும்படிக்கு வீணையினைவாசிக்கவல்லநாரதரிஷிமுதலானவர்கள் குமாரதேவர் திருவடிகளிற்பணிந்து செலவுபெற்றுக்கொண்டு திருக்கயிலாயத்தைக்கடந்துபோய் பூமியிற்சேர்ந்து குற்றமற்றமனதையுடையரிஷிகள் தேவர்கள் முதலானவர்களை வைத்துக் கொண்டுநாரதமுனிவர் தாம்யத்தனித்த வேள்வியைப் பூர்த்தியாகமுடித்து வேதவிதிப்படிக்குக்கடவுளருக்கு அவிப்பாகங்களைக்கொடுத்து மகிழ்ந்திருந்தனர், கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? அந்நாரதமுனிவர்முதலானவர்கள்செய்ந்ததவமுயர்ச்சியினால்

அன்றுமுதல்நின்மலக்கடவுளாகிய சரவணபவன் அந்த வெள்ளாட்டுக்கடாவினைவாகனமாகக்கொண்டு ஏறிபவனி வருவதாயினர் இவைநிற்க சிவகுமாரன்மேல்நடத்திய திருவிளையாடல்களையுங் கேட்பீரென்றுசூதபுராணிகர்சொல்லத்தொடங்கினர்.

---

## அயனைச்சிறைபுரிபடலம்.

மேடமூர்த்தியாகவுய்த்துவிண்ணுமண்ணுமுருகவே
ளாடல்செய்துலாவிவெள்ளியசலமீதிலமர்தரு
நீடுநாடிலொருபகற்கணெறிகொள்வேதன்முதலினோர்
கூடியீசனடிவணங்கவவ்வளாச்கணண்ணினர்.

---

நாரதர்முதலிய ரிஷிகள்போயினபின்பு பாலசுப்பிரமணியக்கடவுளானவர் ஓமகுண்டத்தில்வீறியெழுந்து தமக்குவாகனமாக வடங்கியிருக்கின்ற வெள்ளாட்டுக்கடாவின்மீது ஆரோகணித்துத் தெய்வலோகங்களெங்கினும்பவனிவந்தும் பூமண்டலமுற்றுந் திருவிளையாடல்களைச்செய்துகளித்தும் வெள்ளியங்கிரியினிடத்தில் வாசமாகவுமிருக்கின்றகாலத்தில் ஒருதினம் பிரமன்முதலாகிய தேவர்கள் சிவபிரானைவணங்கிப்போவதாகத் திருக்கயிலைக்குவந்து யானெனதென்னுஞ் செருக்கற்றுத் தன்னையுந்தலைவனையுந்தெளிந்த ஞானவான்கள்மனதைக்கோயிலாகக்கொண்டு வீற்றிருந்து அத்தகையமகத்துக்களுக்கு சாயுச்சியபதவியினைத் தந்தாளவல்ல பரம்பொருளாகிய சிவபிரானெழுந்தருளியிருக்கின்ற சந்நிதானத்திற் சென்று பயபத்தி விசுவாசத்துடன் கரங்களைக்கூப்பிக்கொண்டு மும்முறைவலம்வந்துசாஷ்டாங்கதண்டன்சமர்ப்பித்துப்போற்றிக் களித்து அவர் அனுக்கிரகத்தினைப்பெற்று பரமன் சந்நிதானத்தைக்கடந்து கோபுரவாயிலைத்தாண்டுமுன்னிலையிற் பன்னிருபுயாசலங்களைப் படைத்திராநின்ற குமாரசுவாமியானவர் நவவீரர்கள்இலட்சத்தவர்முதலிய படைத்தலைவர்கள் மனமகிழ்ச்சியுடன் தம்மைச்சூழ்ந்து போற்றியிருக்கப்பொன்மயமாகிய திருமாளிகைக்குமுன்னணியில்நிற்கின்ற கோபுரவாயிலின்மீது நவரத்தினமயமாக விளங்குகின்ற முதல்நிலையில்களித்து விளையாடிக்கொண்டிருக்கின்ற முருகக்கடவுளினது திருவடிகளைத் தியானித்துப்பணிந்து போகின்ற தேவர்களில்முதன்மைபெற்றிருக்கும் பிரமனானவன் அசட்டையாகநடப்பதைச் சிவகுமாரன்கண்டு ஓபிரமனே நமதுமுன்னம் வருவாயென்றழைத்தமாத்திரத்திற் றிரும்பிவந்து தாமரைமலர்ப்பீடத்தினனானபிரமன்சற்றுக்கர்வமடைந்து தீர்க்கதண்டன்சமர்ப்பியாமற் கரங்களைக்கூப்பித்தொழுதகாலத்திற் றேவாதிதேவனாகிய சிவபிரான்பெற்ற பாலனாகிய சரவணபவன் அதைநிதானித்து நாம்சிருஷ்டிகர்த்தன்மேலுந்திரிமூர்த்திகளிலொருவனாக விருப்பவன்இச்சிறுபிள்ளைக்கு நமதுமுடியினைச் சாய்ப்பதோவென்றுபிரமன்மனதிற்கொண்டிருக்கும் மமதையைத் தெரிந்து கொண்டவராய்ப் பிரமனே உட்காருவாயென் றிருத்தி உன்னைப்பார்க்குமிடத்தில் நான்குசிரங்களும் நீண்டதாடிகளும் கரங்களில் அக்குமணியுங் கமண்டலமுங்கொண்டிருப்பதால் அதிகமகிமையினைவாய்ந்த மகத்துவாகக்காணப்படுகின்றது, ஆதலால்நீதினந்தோறுஞ்செய்துவருகின்றதொழிலைச்சொல்லக் கடவையெனக் கேட்டகாலத்திற் பிரமன்இதனைப்பேசுவதாயினன், ஆதியிற்சிவபிரான்கட்டளையிட்டபடிக்குச் சீவராசிகள் அனைத்தையும் சிருஷ்டித்துவருவோமெனக்குறித்தனன் அதுதிருச்செவியில்நுழைந்தமாத்திரத்தில் முருகக்கடவுள் திருநகைகொண்டு நல்லகாரியம் சொர்க்கமத்திய பாதலங்களினிராநின்ற சீவராசிகளனைத்தையும்படைத்து வருபவனாதலால் வேதசாஸ்திரங்கள்முற்றும்ஓதி உணர்ந்திருப்பையோ சொல்லென்றுவினாவும்போது பலருந்துதிக்குஞ் சிறப்பினைப்பெற்ற பிரமனானவன் மேல்நடப்பதைத்தெரியாமல் ஐயனேவிதனைக்கேட்பாயாக ஆதிகாலத்திற் பரமசிவம் என்னைப்படைத்தபோது அளவிறந்த வேதங்களையும் பவுத்திரமாகிய ஆகமங்களையும் வெளியிட்டனர், அவற்றுட்சிலவற்றினை நான்கிருதார்த்தனாதற்பொருட்டு எனக்குப்போதித்தனர் அவைகளை வரையறக்கற் றிருப்பேனெனப்பிரமன் மறுமொழியாடியபோதுமிகவும் நேத்தி நேத்தியென்றுநகைத்து நீபூரணமாகவாசித்திருப்பதி லொன்றாகிய இருக்குவேதத்திற் சிலசாகைகளை ஓதக்கடவை பார்ப்போமெனமுருகப்பிரான் கேட்டபோது நல்லதெனப்பிரமன் சம்மதித்து வேதங்களி லதனைத்தொடங்கினும் முந்திஉச்சரிக்காநின்றஒப்பற்ற ஒருமொழியாகிய பிரணவமந்திரத்தை வரன்முறையாகவெடுத்து உச்சரித்தனன், இவ்விதமாகத் தாமரைமலர்வாசியாகிய பிரமனானவன்வேதங்களுக்குமூலமாகிய குடிலையினை ஓதிஇருக்குவேதத்தின் முதற்சாகையைத்துவக்கு முன்னிலையில் மங்களகரமாகிய திவ்வியதேசசைப்பெற்ற திருமேனியையுடையகுமாரசுவாமியார் பிரமனே மேற்சொல்வதை நிறுத்துநிறுத்தெனக் கையமர்த்தி நீயிப்போது முந்திஉச்சரித்த ஓமென்னும் வாக்கியத்தின் நிச்சயப்பொருளைச்சொல்லக்கடவையெனத் திருவாய்மலர்ந்தனர்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? தமதுசண்முகங்களினொன்றாக அவ்வெழுத்தினைப்படைத்திருக்கின்றமுருகப்பெருமாள்பீசாட்சரத்தின்பொருளைச் சொல்லக்கடவையெனக்கேட்டவுடன் பிரமனென்செய்வன் தனதுஎட்டுவிழிகளும் மிரளமிரளவிழித்து அப்பதத்தின்காரணத்தைத்தெரிவிக்க வகையறியாததால் வெட்கினவனாய்ப் பெருமூச்செறிந்து இதற்கென்செய்வோமெனத் திகைத்துத் தலைகளையிரங்கியிருந்தனன் அவ்வாக்கியமென்ன சுலபமாகவிருப்பதோ எத்தகையருக்கும் அரிதுஅதன்பெருமைகளைக் கேட்பீராக பரமசிவம் எழுந்தருளியிருக்கின்றபீடமாகவும் மற்றதேவர்கள்உற்பத்திக்கு மூலமாகவும் எல்லாஅட்சரங்களுக்கும் வேதங்களுக்கும் ஆதியாகவுங் காசியென்னுந்தலத்தினிடத்தில் உயிர்விடும்புண்ணியவான்களுக்கு எமதிறைவனாகிய சிவபிரானெழுந்தருளிச் செவிகளில் உபதேசித்து மோட்சவீட்டைச்சேர்க்கவல்லது, மேலும்அதன்காரணங்களை யோசிக்குமிடத்திற் குற்றமற்றதாய்ப் பிரமசொரூபமாகவு மிருக்கின்றதுஞானவிருத்தியினைப் பெறச்செய்யும் மகிமையினைவாய்ந்த குடிலையினைப் பிரமன் ஓதப்பெற்றதல்லது அதன்பொருளைத்தெரிந்துகொண்டவனன்று ஆதியிற்பரமசிவத்தின்

அனுக்கிரகத்தினால் அதன் தாற்பரியத்தைப்போதிக்கப்பெறாதகாரணத்தினால் மயக்கியிருந்தனன், சிவபிரானல்லதுமற்றயாவரால் அந்தப்பிரணவத்தின் பொருளைச்சொல்லக்கூடும் பவுத்திரமாகிய வேதங்களை ஓதுமுன்னிலையில் ஆதியினும் அந்தத்தினுந்துவக்கி ஓம்என்றுஆரம்பிக்கின்ற பீசாட்சரத்தின் நிச்சயத்தினைக் காணப்பெறாததால் உந்திக்கமல வாசியாகிய பிரமனே மயங்கினனெனச் சொல்லுவோமாகில் மற்றதேவர்கள்யாம்சிறிதறிவோமெனப் பேசுவராயில் அவரைப்பலரும்நகைக்கவரும்ளத்தகைபதேவர்கள் மனதினாலும் நிச்சயித்தறியவொண்ணாத பெருமையினையுடைய பிரணவப்பொருளைவிரிக்கவறியாது பிரமன்திகைத்தகாலத்தில் பாலசுப்பிரமணியக்கடவுளானவர் அவனைப்பார்த்து வேதங்களின்காப்பினது அர்த்தமேஉனக்குத்தெரியாதபோது மற்றவைகளுக்குப்பொருள்கள்நீசொல்லவறிவையோ நீசிருஷ்டித்தொழிலைச்செய்து வருவதிப்படிக்குத் தானோவென்றுஅவன் நான்குசிரங்களுங்குலுங்கி வருந்தத்தக்கதாகத் திருக்கரத்தினைக்கொண்டு குட்டியும் மனம்பொறாமல் ஆதியில் வேதாகமங்களைநிருமித்த சிவகுமாரனானவர் உந்திக்கமலவாசியாகிய பிரமன்விழுந்துஉருளும்படிக்குத்திருவடியினைக்கொண் டுதைத்துத்தள்ளித் தமதேவற்பணிவிடைகளைநடத்திவரும் பரிசனங்களைக்கொண்டுபிரமன்கால்களுக்குப் பாரவிலங்கைப் போடுவித்துக் கந்தமாதன பர்வதத்தின் குகைகளினொன்றில் அரியசிறையிலிடுவித்தனர், சமஸ்தமும் முடிக்கவல்ல பாலசுப்பிரமணியக் கடவுளானவர்பிரமனைநிகள பந்தனஞ்செய்வித்துக் காவலிற்படுத்தியபின்பு தாமுங் கந்தமாதனத்தினிடத்திற்போய்த் தமதாலயத்தில்வீற்றிருந்து சராசரப்பிரபஞ்சங்களைக்குறைவறச்சிருஷ்டிக்க யத்தனித்தவராய் ஒருகரத்திற் பளிங்குமணித்தாவடத்தையும் ஒருகரத்திற் கமண்டலத்தையும் மற்றஇருகரங்களையும் வரத அபயமாகக்கொண்டு ஏகமுகத்தினைப்பெற்றுப் பரம்பொருளாகியசிவகுமாரன்வீற்றிருந்து சதுர்முகப்பிரமனைப்போல மன்னுயிர்அனைத்தையும் படைக்கவாயினர், வரத அபயமென்பதின்காரணமேதெனில், ஒருகரங்கீழ்நோக்கிக்காட்டவும்மற்றொருகரம் மேல்நோக்கமாகவுமிருக்கும் அதின்பிரயோசனமென்னவெனில் தமதுதிருவடிகளைத் தஞ்சமாகநம்பிப் பூசிப்பவருக்கு இகத்திற் சகலசெல்வங்களையுந்தந்து பரத்திலும் மோட்சசாம்பிராச்சிய வைபவத்தினையுங்கடாட்சிப்போமென்று அனைவருக்குந் தெரிவிக்கும்பொருட்டுக் கொண்டகோலமாம், இப்படிக்குஉயிருக்குயிராய்ச்சுயஞ்சோதியினொளியாய்ச் சிறந்தவேதங்களின் முடிவாய்ச் சிருஷ்டி திதிசங்காரமென்னும்முத்தொழில்களுக்கும்மூலமாகவிருக்கின்ற கந்தசுவாமியானவர் பிரமனைப்போலச் சராசரங்களைப் படைத்திருந்தனரென்பது அற்புதமோசவுனகாதிரிஷிகளே? கேட்பீராக குளிர்ச்சிபொருந்திய கமலாசனனாகிய பிரமனைச்சிறையிலடைத்துச்சண்முகதேவர்அளவிறந்த உயிர்களைப்படைத்திருந்தனரன்றோ அந்த பிரமனைச்சூழ்ந்து வந்ததேவர்கள். இச்சம்பவத்தினைக்கண்டமாத்திரத்தில் நமக்கென்னவிளையுமோவெனப் பயப்பிராந்தி கொண்டவர்களாய்ச் சுப்பிரமணியதேவரைப் பலதரம்விழுந்து சேவித்துப்போய்த் தங்கள்பதவிகளிலிருந்தனர்.

## அயனைச்சிறைநீக்குபடலம்.

ஆலமாமிடற்றண்ணல்சேயித்திறமளபபில்
காலம்யாவையுமளித்தனனிருத்தலுங்கரியோ
னாலுமாமுகனுவளகநீக்குவானாடிச்
சிலவானவர்முனிவரைச்சிந்தனைசெய்தான்.

---

கேட்டீர்களோ! நைமிசாரணியவாசிகளே? ஆலகாலவிஷத்தினையுண்டு கண்டத்திற் றரித்திராநின்ற சிவபிரான்திருக்குமாரராகிய குமாரக்கடவுள்இவ்விதமாக அளவற்றகாலம் சராசரப் பிரபஞ்சங்களைப் படைத்து வருகின்ற தருணத்திற் கரியவண்ணனாகிய மகாவிஷ்ணுவானவர் இச்செய்தியைத்தெரிந்து பிரமனுக்குச் சம்பவித்த கொடுங்காவலினையும் விலங்கினையும்நீக்கவேண்டுமென்று யோசித்து பரிசுத்தவான்களாகிய தேவர்களையும் ரிஷிக்கூட்டங்களையும் வருவதாகத் திருவுளத்தில் நினைந்தனர். இவ்வாறு கேசவன் சிந்தித்ததைத் தெரிந்தவுடன் அஷ்டவசுக்கள் திசைக்காவலர் கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர் பன்னகர் உவணர் நரகர் சூரியசந்திராதிய நவக்கிரகங்கள் கணங்கள் வானையளாவ நிற்கும் பொதிகைமலையில் வாசமாயிராநின்ற அகஸ்தியர் முதலாகிய ரிஷிகள் சிருஷ்டிக்குதவியாக விருந்த நவப்பிரம்மாக்கள் கார்த்திகைத்தெரிவையர் முதலிய வானநாடரும் பூமியினைத் தாங்கும் பெருமையினைப்பெற்ற ஆதிசேஷனாதிய நாகராஜரும் பலதிசையினும்நின்று வருவதாயினர்இவ்விதமாகத் தேவர்கள்முனிபுங்கவர் முதலாகியவர் அனைவரும் வைகுந்தத்திற்கு வந்துசேர்ந்து கண்ணன்வாசமாயிருக்கும் நவரத்தினமயமாகிய கோயிலிற்போய்க்கண்டு சேவித்துப்போற்றி எங்களைவருவித்த காரியத்தையருளிச்செய்யவேண்டுமெனக் கேட்கப் பிரமனுக்குச்சம்பவித்த காரணங்களைச்சொல்லி அதற்கொருநிவாரணத்தினைத் தேடும்பொருட்டு நாமெல்லோருஞ்சிவபிரான் சந்நிதானத்துக்குப் போகவேண்டுமெனத்தெரிவித்து அவர்களையும் உடன்படுத்திக்கொண்டவராய் லட்சுமி விலாசராகிய மகாவிஷ்ணுவானவர் வந்தவர்களுடன் கலந்து சகலருமாய்த் திருக்கயிலாயத்தைச் சேர்ந்து சபாமண்டபத்தில்வீற்றிருக்கின்ற ஒப்பற்ற ஞானநாயகனாகிய பரமசிவத்தின் திருவடிகளிற் றாழ்ந்தெழுந்து துதிக்கின்றகாலையில் மகாவிஷ்ணுவானவர் மீளவும் அழகிய பொற்பாதகமலங்களிற்சேவித்து வேதவாக்கியங்களினாற் கர்த்தன் பெருமைகளைப்போற்றிக் கரங்களைக்கூப்பி நிற்கச் சிவபிரான் கிருபாநோக்கம்பாலித்து ஓ! மகாவிஷ்ணுவே? உங்களுக்குஎக்காலத்துமில்லாத மனவருத்தங்களுடன் நம்மைக்குறித்து வந்தகாரணமென்னமோ சொல்லுவீரென்று சிவநாதன் வினவியபோது மகாவிஷ்ணு விண்ணப்பஞ்செய்வதாயினர். கர்த்தனே சிலகாலத்துக்குமுன்னம் பிரமதேவன் தேவரீர் தரிசனைக்கு வந்துபோகின்ற முன்னிலையிற்சண்முகப்பெருமாளானவர் அவனை மடக்கிக்கொண்டுவேதங்களுக்கு ஆதியாக விருக்கின்றபிரணவ மந்திரத்துக்குப் பொருளைச்சொல்லுவாயென்றுகேட்க, அவன்அதன்பொருள்தெரியாமல் மயங்க சிரங்களிற்குட்டி விலங்குமாட்டிச் சிறைச்சாலையினும் அடைப்பித்து அவன்செய்துவந்த

சிருஷ்டித்தொழிலையுந் தாமேநடத்தி வருகின்றனர் கர்த்தனே! கந்தசுவாமியைப் போலவே பிரமதேவனுந் தேவரீருக்குப் புத்திரனாதலால் அவன்முற்செய்தவூழ்வினையினது முயற்சியினால் அளவற்றகாலமாய்க் கொடியகாவலிற்பட்டு மனம்நொந்து வாடிவருந்தித் துக்கித்திருக்கின்றனன்தீனதயாபரமூர்த்தி? சரஸ்வதிக்குமணவாளனாகியபிரமன்சிறையினைவிடுவிக்கவேண்டுமென்றுசிவபிரானுக்குத்தெரிவித்துவேண்டும்போது அதிககிருபையாய்நந்திதேவனைப்பார்த்து இதனைக்கட்டளையிடுகின்றனர். நமதுகுமாரசுவாமியானவன் சிருஷ்டிகர்த்தனான பிரமதேவனைச் சிறையில் வைப்பித்தனனென்று இத்தேவர்கள் முறையிடுகின்றனர். ஆதலால் நீ துரிதமாய் அத்தலத்திற்குப்போய் நமதுகட்டளையெனச்சொல்லி அவனைவிடுவித்துக்கொண்டு வரக்கடவையெனப் பணித்தனர்.

இவ்விதமாக எமதிறைவனாகிய பரமசிவம் ஆக்கியாபித்தபோது நந்திதேவர் நல்லதென்று பரமனைச்சேவித்து விடைபெற்றுப்போகு முன்னிலையிற் புசபலபராக்கிரமசாலிகளாகிய அளவற்ற சிவகணங்கள்சூழ்ந்துவர நடந்து கந்தமாதனவரையைச்சேர்ந்து அதன்மீது கோடிசூரியப் பிரகாசமாக விளங்காநின்ற நகரத்திற் பிரவேசித்தவுடன் நந்திதேவரானவர் சபாமண்டபத்துக்குப்போய்ச் சிங்காதனத்தின்மீது விளங்குகின்றசண்முகப்பெருமாளைத் தரிசித்தவுடன் வணங்கிப் போற்றித்தான்வந்த காரணத்தைச் சொல்வதாயினர். பரியள மிகுத்த பதுமாசனனாகிய பிரமதேவனைத் தேவரீர் காவலிற்படுத்தி யிருப்பதாக நமதிறைவனாகிய சிவபிரான் கேள்விப்பட்டு அவனைவிட்டுவிடும்படிக்கு உமக்குச்சொல்லிவர எனக்குக்கட்டளை யிட்டு இவ்விடத்துக்கனுப்பினர். ஆதலாற் றடைசெய்யாமல்அவனைச்சிறைச்சாலையில்அடைத்திருப்பதை நீக்கிவிடவேண்டும் எவர்களாலும்அறிய வொண்ணாதபிரணவத்தின்பொருளை அவன்வெளியிடுவதற்கு அவ்வளவு சுலபமாகவிருக்கின்றதோவெனச்சொல்லி முடிவதன்முன்னங் குமாரசுவாமியார் கோபித்து அன்னவாகனனாகியபிரமன் சிறையினை நீக்கமாட்டோம், இதைக்குறித்தின்னஞ் சிலநேரம்இவ்விடத்திற்பேசி யிருப்பையாகில் உன்னை அரியகாவலிற் படுத்துவோம் அதை யோசித்துக்கொண்டு துரிதமாகப் போய்விடக்கடவாயெனச் சீறிச்சொல்லியபோதுநந்திதேவரானவர் மறுமொழி பேசுவதற்கஞ்சி யிதுநம்மாலாவதன்று மேலுஞ்சிலகாலந் தாழ்ப்போமாகில் நமக்கும் என்னகெடுதிநேருமோவென்று யோசித்துச்சீக்கிரமாகச்சண்முகதேவனைவணங்கிவிடைபெற்று நந்திதேவரானவர்அவ்வரையைநீங்கித் தன்பரிவாரங்களுடன் திருக்கயிலாயத்துக்குவந்து துரிதமாகத் திருச்சபைக்குப்போய் நவரத்தின மயமாக விளங்குகின்ற சிங்காதனத்தில் வீற்றிருக்குங் காளகண்ட மூர்த்தியாகியசிவபிரான் சந்நிதானத்திற்சேர்ந்து கர்த்தன் பாதாரவிந்தங்களிற்பணிந்துநின்று நான்கந்தமாதனபர்வதத்துக்குப்போய்ப்பாலசுப்பிரமணிய தேவனைக்கண்டு தேவரீர் கட்டளையினைச் சொல்லும்போது அதைமறுத்ததுமன்றியில் என்னையுஞ்சிறைப்படுத்துவதாகச்சொல்லின ராதலால் மாறுபேசவஞ்சிவந்துவிட்டேன் தேவரீரெழுந்தருளினாலல்லது பிரமன்காவல் நீங்கமாட்டாதென்று சவிஸ்தாரமாக விண்ணப்பஞ்செய்யக்கேட்டுச் சிவபிரான்திருநகைகொண்டவராய்ச்சோதிமயமாகவிளங்கி யிருக்கின்ற அழகியசிங்காதனத்தைவிட்டிறங்கி நவரத்தினமயமாகஅமைந்திராநின்றதிருமாளிகையைக்கடந்து வெளிவந்துபலநிலைகளையுடைய கோபுரவாயிலினிடத்தில்காத்திருக்கின்ற ரிஷபவாகனத்தின்மீதுஆரோகணித்து நடக்கும்போது கர்த்தன்திருச்சபையில் வந்திருந்தகாளமேகவண்ணனாகிய மகாவிஷ்ணுவுங் கின்னரங்களை வாசித்திருக்கின்ற கந்திருவர்முதலிய தேவர்களனைவரும் ஆதிசேஷன் முதலிய நாகராசாக்களும் தவங்களிற்சிறந்த ரிஷிபுங்கவர்களும் மற்றும் அக்காலத்தில்வந்திருந்த சகலருங் கர்த்தனைப் புகழ்ந்துகொண்டு பின்பற்றிநடக்கவுஞ் சர்வாயுதபாணிகளாய்ப்பலநிறச்சட்டைகளையும், வஸ்திரங்களையும் உடுத்துத்தீச்சிகையினையொப்பவிளங்குகின்ற செம்பட்டமயிரினையுடைய பலசிரங்களைப் பெற்று இடிகளைப்போல உரத்துப்பேசாநின்ற ஜபசாலிகளாகிய அளவற்ற பூதகணங்கள்நாற்புறங்களினுஞ்சூழ்ந்துகொண்டுஅருகில்குடைகள்- சாமரங்கள்-ஆலவட்டம்-மகரதோரணங்-கொடிகள் முதலிய சின்னங்களையேந்தியுந் தேவமுரசம், வெற்றிச்சங்கம், திருச்சின்னமுதலியவாத்தியங்களை முழக்கியும், பரமன் பெருமைகளைப்புகழ்ந்துபோற்றியும், வரத்தக்கதாகவும் இவ்வித வைபவங்களுடன் சகலரும் நெருங்கிச் செல்கின்றகாலையில் அவர்கள்மத்தியில் உமையவள் சமேதனாய்ச் சிவபிரான் ரிஷபவாகனத்தினை நடத்திக்கொண்டு பவுத்திரமாகியதிருக்கயிலையங்கிரியினைக் கடந்துபோய் தமது திருக்குமாரனாகிய கந்தசுவாமியானவர் வாசமாகவிருக்கின்றகந்தமாதனபர்வதத்தினைச்சேர்ந்து சொல்லுதற்கரிய மகிமைகளையும்பெருமிதங்களையும் பெற்றிருக்கின்ற எமதிறைவனாகியசண்முகப்பெருமாள் எழுந்தருளியிருக்கின்ற நவரத்தினமயமாகியஆலயத்தின் முகவாயிலினருகில் வந்தகாலத்திற்சிவபிரான் ரிஷபவாகனத்தை விட்டிறங்கித் தேவர்கள் ரிஷிகள் முதலியசகலரும்போற்றிச் சூழ்ந்துவரத்தக்கதாகத் திரிநேத்திரதாரியாகிய கர்த்தன் மெல்லநடந்துதிருமாளிகைக்குள்ளாகப்போவதாயினர். இவ்வித ஆடம்பரங்களுடன் சிவந்த சடாமண்டலதாரியாகிய பரமன்கந்தசுவாமிக்கெதிரில் அதிகபிரியத்துடன் வருவதைக்கண்டவுடன் தமது பிதாவானவர் வருகின்றனரென்று துரிதமாய்நவரத்தினமயமாகிய சிங்காதனத்தைவிட்டிறங்கி எதிர்கொண்டுகர்த்தன் திருவடிகளிற் பணிந்து அழைத்துக்கொண்டு போய்பருத்தமணிகளினாற்சோடித்திருக்கின்றசிங்காதனத்தில்வீற்றிருக்கச்செய்துகரங்களைக்கூப்பிநின்று பிதாவே தேவரீர் இவ்வளவுவருத்தங்கொண்டு என்னைத்தேடிவரவேண்டியகாரியமென்னோ திருவுளம்பற்றவேண்டுமென்ப் போற்றுகின்ற திருக்குமாரனிடத்திற்பரிவாய் உமாபரமேஸ்வரர்சொல்லுவதாயினர்.

ஐயனே? யிதழ்கள்விரிந்திருக்கின்றதாமரைப்பீடத்தனாகிய பிரமனை நீ சிறைப்படுத்தியிருப்பதாகத் தெரிந்துநாமதைவிடுவிக்க நினைந்து வந்தோம். அவன்காவலைப்போக்கி அனுப்பிவிடக் கடவாயென்று திருவாய்மலர்ந்தகாலத்திற் குமாரக்கடவுள் இதனை விண்ணப்பஞ்செய்வதாயினர். வேதங்களே முதல்யசகலத்துக்கும் ஆதாரசத்தியாகவிருக்கின்ற பிரணவத்தின் பயனைச்சொல்லவகையறியாத பிரமன் தினந்தோறுஞ் சகலபிராணிகளையுங் கிரமமாகப் படைத்து வருவானெனப்பேசுவதுதகாதனவாம் மேலும் அவன்மற்றவேதசாஸ்திரங்களைவாசித்திருப்பானென்பதும் இதைப்போலவேயிருக்கும் அத்தகைய விவேக

சூனியனுக்குஇந்தச்சிறந்ததொழிலைக்கொடுக்கலாகுமோ! ஐயனே? தேவரீர் கிருபையுற்றுப்படைத்த வேதங்களை ஆரம்பிக்கு முன்னிலையில் உச்சரிக்காநின்ற ஓமென்னும் அட்சரத்தின்பிரயோசனத்தைத் தெரிந்துகொள்ளச் சக்தியில்லாத பிரமன்ஏதோ சில சிறந்த பூசனைகளைத்தமக்குச்செய்தானென்னுந் தயையினால் முதற்காரணமாகிய படைப்பின்தொழிலைக் கடாட்சித்தீர் அவனே அப்பிரயோசனமாகிய எட்டிமரமாக விருக்கின்றான் மேலுஞ் சராசரப்பிரபஞ்சங்களைச்சிருஷ்டிக்கும்மகிமையுள்ள தொழில் கிடைத்ததென்னும் மமதையைக்கொண்டவனாய்த் தாமரைபீடத்தமர்ந்த பிரமன் வீறுப்பினையடைந்து யாவரையும் ஒருபொருளாக வெண்ணினவனன்று உயர்வுதாழ்வுகளை நிதானித்து நடந்துகொள்ளத்தெரியாத கர்வமடைந்ததினால் அவனுக்கு விழிகள் மூடியிருக்கின்றன. இதுவல்லாமற் றேவரீர் திருவடிகளைத் தினந்தோறும் பூசித்துவந்துந் தனக்கடுத்த அகந்தை நீங்காம லிருப்பவனாதலால் அவனைப்படுத்தியிருக்கின்ற அரியசிறையை விடுவிக்கமாட்டேன், இன்னஞ் சிலகாலமிருந்தால்புத்திவருமென்று திருக்குமாரன்சொல்லியபோது சிவபிரான்யோசித்துப்பயமுறுத்தினல்லது இவன்வழிக்குவரமாட்டானெனத் திருவுளத்திலெண்ணினவராய்உருத்துப்பார்த்துக்குமாரனே? உன்நடவடிக்கைகளைப் பார்க்குமிடத்தில் வெகுநேத்தியாக விருக்கின்றது முன்னம் நமதுகட்டளையின்படிக்கு நந்திதேவன்வந்து பிரமதேவன் சிறையைவிட்டுவிடக்கடவையெனச் சொல்லியபோதும் எண்ணிக்கை யற்று மறுத்ததுமன்றியில் அவனை அதட்டித்திருப்பிவிட்டனை சிறுகுழந்தையாதலாற் றெரியாமல் இப்படிக்குநடத்தினனென்று அக்குற்றத்தினை மனதிற்கொள்ளாமல்நாமேவந்து பிரமனைவிட்டுவிடக்கடவையெனச்சொல்லினும் அங்கீகரித்தவனல்லை, நமதுகட்டளையினை மறுத்துஎதிருத்தரம் பேசுகின்றனை யென்றுகந்தசுவாமியின்மீது கோபித்தவனைப்போலக் கிருபாசமுத்திரமாகிய சிவபிரான்கடிந்து சொல்லிய காலத்திற் பிதாவினது திருவுளத்திற்கோபங்கொண்டு சொல்லுவதைச் சண்முகப்பெருமாள்யோசித்து இனிதடைசெய்யலாகாதென்றெண்ணி ஐயனே! தேவரீர் அடியேன்மீதுசீற்றங் கொள்ளவேண்டாம், சதுர்முகப்பிரமனை வைத்திருக்கின்ற காவலைநீக்கித் துரிதமாகத்தருவிக்கின்றனனென்று பயபத்தியுடன்வணங்கிச் சொல்லும்போது பரமேஸ்வரர் குஞ்சிரிப்புடன் கிருபாநோக்கம்பாலித்தனர்,

கேட்டீர்களோசவுனகாதிரிஷிகளே ஆதியில்அழகியசிறகினைப்பெற்றஅன்னப்பட்சியானது தேடநின்ற ஒப்பற்றகடவுளானவர்தமதிடத்திற்கொண்டகோபந்தணிந்து அருள்நோக்கங்காட்டியபோது பாலசுப்பிரமணிய தேவரானவர்தமதருகில்நிற்கின்ற பரிசனரைப்பார்த்துச்சிறைச்சாலைகளினொன்றில் முன்னம்வைத்திருக்கின்ற தாமரைமலராசனனாகிய பிரமதேவனைவிடுவித்துக்கொண்டு விரைவில் நமதுமுன்கொண்டு வரக்கடவீர்களெனக் கட்டளையிட்டனர் உடனே பூதகணங்களிற்சிலரோடிஅம்மலைஅடிவாரங்களி லிராநின்ற கெவிகளினொன்றில் யாதொருசவுக்கியங்களுமில்லாமல் ஒடுங்கி யிருக்கின்றபிரமனைக்கூவி அவன் காலிற்பூட்டியிருந்த பாரவிலங்கினைப்போக்கி அழைத்துவந்து குன்றுகள்தோறுந் திருவிளையாடல்களைச் செய்தமர்ந்திருக்கின்றகுமாரசுவாமியார்திருமுன்புவிட்டனர்அக்காலத்திற்சிவகுமாரனானவர் பிரமன்கரத்தினைப்பற்றிக்கொண்டுவந்து பரமேஸ்வரர் சந்நிதானத்தில் விட்டகாலத்திற் பிரமனானவன் பயபத்திவிசுவாசத்துடன்பரமன் திருவடிகளிற் பணிந்துபோற்றி அதிகவெட்கமும்மானமும் மனதைபாதிக்கத் தலைகவிழ்ந்திருக்கின்றவனைப் பரமன் தயையாகப்பார்த்துப்பிரமனேவெகுகாலமாகஅரிய சிறையிற்பட்டுவருந்தி வாடினையோவெனத் திருவாய்மலர்ந்தனர், கர்த்தனானவர் இவ்விதமாக விசாரித்து மிகவுங் கருணையாக விருக்கின்றகாலத்திற் பிரமனானவன் சிவபிரானைவணங்கித்தேவரீர்திருக்குமாரராகிய குமாரதேவர்செய்த இந்தத்தண்டனையானதுதகாதனவன்று நல்லுணர்வினைத்தந்து யானெனதென்னும் அகங்காரத்தைப் போக்கி அஞ்ஞானத்துக்கேதுதாகிய செய்கைகளைமாற்றியினி எக்காலத்தினுங் கர்வமடையாமற் புனிதனாக்கியது அவர்செய்தநன்றியினை எக்காலத்தும்நினைந்திருப்பேனென்று மனங்குழைந்து சொல்லியபோது திரிநேத்திரதாரியாகிய சிவபிரான் கிருபையுற்றுப் பிரமனே சொர்க்கமத்திய பாதலமென்னுந் திரிலோகங்களினும் வாசமாயிருக்கின்றசீவராசிகள்முற்செய்த காரணங்களுக்குத் தகுதியாகிய வினைப்போகங்களை ஆதியோடந்தமாகப் பரிசோதித்துப்பார்த்து அவற்றிற்குத் தக்கவாறே பழையபடிக்குஇத்தினமுதலாக நீயே படைத்துவரக் கடவையென்று அருளுவதாக விளங்கும் பரமன் பிரமனுக்குக் கடாட்சித்தபின்பு முருகக்கடவுள் திருமுகத்தினைப்பார்த்து நகைத்துக் கடாட்சவீட்சண்ணியத்தினைப் பாலித்தவராய் ஐயனே சமீபத்தில் வருகவருக வென்றழைத்துதிருக்கரத்தினை நீட்டிப் பாலசுப்பிரமணியனைத் தழுவியெடுத்துதமது துடையின் மீதில்உட்காரவைத்துக்கொண்டவராய்அழகியதிருமேனியினைப்பெற்ற திருக்குமாரனுடையஉச்சியைமோந்து முத்தமிட்டு ஆசானுபாகுவாய் செந்தாமரைமலரையொத்துவிளங்குங் கரத்தைக் கொண்டிறுகத்தழுவிக்கொண்டு அப்பனே பிரமதேவனை யொத்தவனால் வெளியிட வொண்ணாத ஓங்காரப் பதத்தினுக்குரிய பொருளுனக்குத் தெரியுமோ அப்படிக்குக்கூடுமாயில்அதனையிப்போது சொல்லக்கடவையென்று சிவபிரான்திருவாய்மலர்ந்தகாலத்திற் குமாரதேவர் குதலைமொழிகளினால்இதனைப்பேசுவார் சர்வசாதாரணமாகஉள்ளங்கைநெல்லிக்கனியைப்போலத் தெரியவல்ல ஆதிகர்த்தனே கேட்டருள்க, உலகங்களனைத்தையும் பெற்றதாகிய பார்ப்பதியாருக்குத்தேவரீர்முன்னம்யாவருக்குந்தோற்றாதபடிக்குப்போதித்துஅத்தகையசிறப்பினையுடையபீசாட்சரத்தின்சிறந்த பொருளினைமறைவிடமாகவல்லதுயாவரும் எளிதினுணரத்தக்கதாகப் பகிரங்கமாகஇவ்விதமென்றுசொல்லலாகுமோ சுவாமிகளுக்குத்தோற்றாததை நான்என்ன தெரிவிக்கப் போகின்றனனென்று குறித்தகாலத்திற் சிவபிரானானவர் நகைத்துக் குமாரனே அவ்வாறே நமக்குரகசியமாகத் தெரிவிக்கக் கடவையென்று தமதுதிருச்செவியினைத்தாழ்த்தியபோது சண்முகதேவர் குடிலையெனச்சொல்லாநின்றஒப்பற்றபதத்தின் நிச்சயத்தினைத் தெரிவித்தனர், அதனைக்கேட்டவுடன் ஞானநாயகனாகிய சிவபிரான் மனமகிழ்ந்தவராய்ப் பூரணகடாட்சத்தினைச்செய்து எமதுகர்த்தன் கிருபையுற்று அத்தலத்திற்றலைமை பெற்றிருக்கும்படிக்குத்திருக்குமாரனைநிறுத்தி என்னையுமொருபொருளாக அடிமைகொண்டிருக்கும் பரமனானவர்

பழையபடிக்கு விஷ்ணுமுதலியதேவர்கள் சிவகணங்கள் பூதவீரர்சூழ்ந்துபோற்றித் தங்களுக்குரிய செய்கைகளை நடத்திப்போக ரிஷபவாகனரூடராய் அவ்வரையினைக்கடந்து சிறந்ததிருக்கயிலைக்கெழுந்தருளி எதிரிற்றுதித்துநிற்கின்ற பிரமன் விஷ்ணு ரிஷிகளாதியானவர்களுக்குச்செலவுகொடுத்தனுப்பிவிட்டு தாமுந்திருமாளிகையிற்போய்ச் சிங்காதனத்தில்வீற்றிருந்து சகலரும்போற்றக் கிருபாநோக்கத்தினைப் பாலித்திருந்தனர், இவ்விதமாகச் சிவநாதன் தம்மைநீங்கியகாலத்திற் கந்தசுவாமியார்கந்தமாதன பர்வதத்தினிடத்தில் நவவீரர் இலட்சர் பூதகணங்கள்சூழ்ந்துதுதிக்கச் சிங்காதனத்திலமர்ந்து திருவிளையாடல்களைநடத்தியிருந்தனர், இப்படிக்கிருக்கின்ற தருணத்தில் அகஸ்தியர் இந்தச்சமாச்சாரங்கேள்விப்பட்டுவந்து சரவணபவனை வணங்கிப்போற்றி வேண்டிநிற்கஅரியவேதங்களுக்கு ஆதியாய்ச் சிறந்தபொருள்களெவற்றிற்கும் முக்கியமாகவிராநின்ற பிரணவப்பொருளினது நிச்சயத்தைப்போதித்து மேலும் ஆதியிற்பரமசிவமருளிச்செய்திராநின்ற ஆறுசாஸ்திரத்தின் மகிமைகளையும் வரையறஉபதேசித்தமுன்னிலையில் அகஸ்தியர் களங்கமறத்தெரிந்துகொண்டு பாலசுப்பிரமணிய தேவரைவணங்கி விடைபெற்றுத் தமதிருப்பிடத்தைச்சேர்ந்துகளித்திருந்தனர்.

---

## விடைபெறுபடலம்.

---

எல்லைபனனதின்மாலருள்கன்னியரிருவர்
சொல்லருமபெருவனப்பினர்சுந்தரியமுத
வல்லியென்றிடும்பெயரினர்சந்தவேள்வரைத்தோள்
புல்லுமாசையாற்சரவணத்தருந்தவம்புரிந்தார்.

---

இந்தப்பிரகாரம் சுப்பிரமணியக்கடவுளானவர் அகஸ்தியருக்கு ஓங்காரப்பொருளை யுபதேசித்தனுப்பிவிட்டுப் பின்பு கந்தமாதன பர்வதத்திலிருக்கின்றபோது மகாவிஷ்ணுவானவர் பெற்றெடுத்தகன்னியர்களிருவர் சொல்லுதற்கரிய அதிசுந்தரவதிகளாய்ச் சுந்தரி அமுதவல்லியென்னுந் திருநாமங்களைப்படைத்திருப்பவர்கள் கந்தசுவாமியார் பெருமைகளையும் ரூபலாவண்ணியச் சிறப்புகளையுந் தினந்தோறுங் கேள்விப்பட்டு மையல்கொண்டு பர்வதாகிர்தியாகவிருக்கின்ற அவர்புசங்களை யிறுகத்தழுவியின்பத்தினை அடைவதற்கிச்சைகொண்டவர்களாய்ப் பிதாவின் அனுமதியினாற் சரவணப்பொய்கைக்கருகில் அரிய தவங்களைச்செய்து வருமுன்னிலையில் என்னையுமொருபொருளாகஆண்டிரட்சிக்குந் தினதயாபரக்கடவுளாகியசண்முகப்பெருமானானவர் அவ்விரண்டுபெண்கொடிகளும் ஒருமித்து அகோரதவவிரதங்களைச்செய்து வருவதைத்திருவுளத்திற்கொண்டு அவர்கள் மனோபீஷ்டப்படிக்குக் காட்சிப்பதாக நிச்சயித்தவராய்க் கந்தமாதனபர்வதத்தினைநீங்கித் தமதுதாயாகிய பார்ப்பதியார் திருவவதாரஞ்செய்தருளிய இமயகிரிச்சாரலினிடத்தில்வந்து ஒப்பற்ற சிறப்புகளையுடைய அப்பர்வதத்தின்ஒருபாரிசத்தில் விளங்காநின்ற சரவணப்பொய்கையைநோக்கி வருவதைத் தவங்களைச்செய்திருந்த அம்மங்கையர் கண்டவுடன் அதிகபயபத்தி விசுவாசங்களுடன் எதிர்கொண்டுபோய்ப்பலதரம்வணங்கிக் கரங்களைக்குவித்துநின்று போற்றுகின்றகாலையில் அவர்கள்பத்திவயிராக்கியங்களுக்குக் குமாரதேவர் மெச்சினவராய் உங்கள்தவங்களை அங்கீகரித்தனம் வேண்டியகோரிக்கைகளைச்சொல்லுவீராயிற் றருகின்றனமெனத்திருவாய்மலர்ந்தபோது அப்பருவமங்கையர்கள்சேவித்துக் கர்த்தனே திருமணமுன்னிலையில் எங்களைக்கலந்து களிப்பிக்கும்பொருட்டுத் தேவரீரைநோக்கி வெகுகாலமாகத் தவங்கள்செய்து வருகின்றனம் அவ்வாறே கடாட்சிக்கவேண்டுமெனப் போற்றுவதைக்கேட்டவுடன் சண்முகப்பெருமான் அவர்கள்மீது கிருபாநோக்கம் பாலித்தவராய்த் திருவாய்மலர்கின்றார் உங்களிருவரில்மூத்தவளாகிய அமுதவல்லியே நீபோய்த்திரிலோகசக்கிரேஸ்வரனாகிய தேவேந்திரனுக்குப்பெண்ணாகவளர்ந்துகொண்டிருப்பாய் இளையவளாகியசுந்தரியே நீசமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலத்தில் அரியதவங்களைச்செய்துகொண்டிருக்கின்ற சிவமுனிபுத்திரியாக அவதரித்து வேடர்கள்மூலமாக வளர்ந்திருப்பாயிவ்வாறு நீங்களிருவரும் மேற்குறித்தவிடங்களி லிருக்கின்றகாலையில் நாம்அவ்விடமெழுந்தருளி உங்கள்கருத்தின்வண்ணம் பலருமறிய திருமணமுன்னிலையிற்சேர்ந்து களிப்பிக்கக்கடவோம் மனதில்யாதொரு சந்தேகங்களுங்கொள்ளாமற்போய் வருவீர்களென்று எமதிறைவனாகிய குமாரசுவாமியார் திருவாய்மலர்ந்தபோது, எதிரில்நிற்கின்ற அவ்விருமங்கையரும் மனங்கள்பூரிப்புடன் சிவகுமாரனைப்பணிந்துவாழ்த்தி விடைபெற்றுக்கட்டளையின்படிக்குமேற்குறித்தவிடங்களை நோக்கிப்போயினர்.

இப்படிக்குப்பாலசுப்பிரமணியக்கடவுளினது அனுக்கிரகத்தினைப்பெற்று நடந்தவர்களில் மூத்தவளாகிய அமுதவல்லியென்பவள் அதிசுந்தரமுள்ள பெண்குழந்தையாகவுருக்கொண்டு தேவேந்திரன் முன்னம்போய்பொன்னுலகத்துக்கரசனே என்னைப்புறத்தியாளென்றெண்ணவேண்டுவதில்லை உனக்கிளையவராகிய உபேந்திரருக்குப்புத்திரியாகவிருப்பவள் ஆதலால் நீஎனக்குமூத்தபிதாவாகும் உன்னிடத்திற் சிலகாலமிருப்பதாக விரும்பிவந்தேன் என்னைப்போற்றிவளர்க்கக் கடவையென்று அமுதத்தினுமினியகுதலைச் சொற்களினாற் பேசுவதைக்கேட்டமாத்திரத்தில் மகம்மேருவினிடத்திலிருக்கின்றஇந்திரனானவன் அதிகசந்தோஷத்துடன்குமாரத்தியைக் கிருபையாகப்பார்த்து என்னைப்பெற்ற அம்மணீ வருகவருகவென்றழைத்துத்தன்மனக்கருத்தின்படி நடந்துகொள்ளவல்ல அயிராவதத்தினையழைத்து எதிரில்வந்துநிற்கின்ற அந்தவெள்ளையானையைப்பார்த்து இதனைச்சொல்லுவான், இந்தப்பெண்பிள்ளையானது நமதுதிருக்குமாரத்தியாகும் மனதிலன்பாக இவளைச் சவரட்சணைசெய்துவரக்கடவை இந்த அம்மாள்மூலமாக இனி சிலதினத்தில் நமக்குஅளவற்ற சிறப்புகள் வரவிருக்கின்றதென்று தனதிறைவன்சொல்லியபோது மகாபாக்கியமென்றுவணங்கிஅயிராவதமானது துதிக்கையைநீட்டி திருக்குமாரத்தியை மெல்லவெடுத்துப்பிடரியில்வைத்துக் கொண்டுநடந்து கொவ்வைக்கனியினுஞ்சிவந்திராநின்றஅதரத்தினையுடைய கன்னிகையைப் பிரமன்வாசமாயிராநின்ற மனோவதிப்பட்டணத்துக்குக்கொண்டுபோய் வைத்திருந்துபெற்றதாயினும் பதின்மடங்கதிகமாகச் சகலசிறப்புகளுடன் சீராட்டிவளர்த்துவந்தது, அக்காரணத்தினாற் றெய்வயானையென்னும் ஒப்ப

ற்ற திருநாமத்தினைப் படைத்தவளாய் யாதொருகுறைவுமில்லாமற் குமாரசுவாமியைத் துதித்துக்கொண்டு அத்தலத்தில் வாசமாகவிருந்தனள், பெருமையிற்சிறந்ததிருப்பாற்கடலானது ஸ்ரீமகாலட்சுமியைப்பெற்றுப் பாதுகாத்திருந்ததைப்போல வலியிலுயர்ந்த சிறப்பினைவாய்ந்த அயிராவதமானது காலங்களில் வேண்டும்பணிவிடைகளைச் செய்துகொண்டு வளர்க்கத்தக்கதாக தெய்வயானையம்மனிருந்தனள், இச்சரித்திரம் இப்படிக்கிருக்க இவளுக்கிளையவளாகியவிவேகசாலியானசுந்தரியென்னும் பெண்கொடியானவள் முருகப்பெருமாள் கட்டளையிட்டகாரணத்தினை மனதில்நினைந்து பூமண்டலத்திற் சிரேஷ்டமாகக்கொண்டாடப் பலவளங்களைப்பெற்றிருக்குந் தொண்டைமண்டலத்தில்வந்து வள்ளிமலையைநோக்கி அதனருகிற்றவஞ்செய்திருக்கின்ற சிவமுனிவருக்குப் புத்திரியாகவேண்டுங் கருத்தினளாய்நடந்தனள்.

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே, தந்தைதாயில்லாத சிவபிரானைத் தடக்குப்பிதாவாகப்பெற்றும்முன்னம்பலகாலஞ்சிருஷ்டிகர்த்தனாகவிருந்து மன்னுயிரனைத்தினையும்படைத்தருளிய கந்தசுவாமியானவர்மேற்குறித்தபடிக்கு அவ்விருகன்னியர்களுக்கும் வேண்டியவரங்களைக்கொடுத்தனுப்பியபின்பு யதாப்பிரகாரங்கந்தமாதனபர்வதத்தில்விளங்குந் தமதுஆலயத்தைச்சேர்ந்து கிருபாநோக்கத்தினைப்பரப்பி சிங்காதனத்தில்வீற்றிருந்தனர், இவ்விதமாகக் கந்தமாதனபர்வதத்திற் பன்னிருபுயாசலங்களைப்படைத்த கந்தசுவாமியானவர் சிலபகலிருந்தபின்புதிருக்கயிலாயத்தில்வீற்றிருக்கின்ற தாய்தந்தையர்திவ்வியசரணாரவிந்தங்களிற் பணிந்துபோற்றித் தரிசித்திருக்கவேண்டுமென்னும் நினைவுகொண்டு நவரத்தினமயமாக விளங்குஞ் சிங்காதனத்தைவிட்டிறங்கியகாலத்திற் சிவகுமாரன்கருத்தறிந்து நவவீரர்கள் இலட்சர்முதலிய பரிசனங்கள் சூழ்ந்துகொண்டுதுதித்துநடக்கவும் கணக்கிறந்த பூதவீரர்கள் குடை வெண்சாமரை ஆலவட்டம்கொடிமுதலிய சிறப்புகளைத்தாங்கிப்போகவுஞ்சிலர்தேவமுரசம்வெற்றிச்சங்கம் சின்னமுதலியவாத்தியங்களை முழக்கிவரவும் அவர்கள்நடுவில் பாலசுப்பிரமணியக்கடவுளானவர் அமர்ந்து கந்தமாதனபர்வதத்தினைக்கடந்து சிலநேரத்தில் வெள்ளியங்கிரியைச்சேர்ந்து அதன்மீதுசோதிமயமாகவிளங்குகின்ற திருவாலயத்திற்போய்ச் சபாமண்டபத்திலிருக்கும் சிங்காதனத்திலெழுந்தருளிய தாய்தந்தையரைப் பணிந்துபோற்றி உமாபரமேஸ்வரர் ஆசீர்வதித்துத்தழுவியெடுக்க அவர்கள்மத்தியில்வீற்றிருந்தனர், இப்பிரகாரம் பாலசுப்பிரமணியக் கடவுளானவர் திருக்கயிலாயத்தில் வாசமாயிருக்கின்றபோது தேவர்களுக்கு அரசனாகிய இந்திரன் தங்களுக்குச் சூரபதுமன்முதலியஅவுணரால் சம்பவித்திருக்கின்ற கொடுமைகளையும் வருத்தங்களையும்மகாவிஷ்ணுவுக்கும் பிரமதேவனுக்கும்பலதரம்முறையிட்டுவருபவன் ஒருதினம் மிகவும்வருந்திச்சொல்லி அவர்களைஉடன்படுத்தி முன்னடத்திக்கொண்டு திருக்கயிலாயத்தைச்சேர்ந்து திருச்சபைக்குப்போக நடப்பவர்களைச் சிவபிரானெழுந்தருளிய ஆலயமுகவாயில் காவலராகியநந்திதேவர்கண்டு நில்லுங்கோள் நில்லுங்கோளென்றதட்டித்தடுத்தபோது மனந்தளர்ந்து பலகாலங்களாக அலைத்திருக்கின்றதுயரமானது மேலிட்டுவருத்த உள்ளேபோவதற்கஞ்சிநின்றுவிட்டனர் இப்படிக்குச் சமயங்கிடையாமல் அனேகநாட்கள் அத்தலத்திற்காத்திருந்தவர்கள் ஒருதினம்பரமன் அனுக்கிரகத்தினாற் சர்வஅதிகாரங்களையும்பெற்று ஆணைஆக்கினையைச் செலுத்திவருகின்ற சிலாதரர்புத்திரராகிய நந்திதேவர் முன்னம்போய் வணங்கினவர்களாய்த் தங்கள்மனதைஅலைத்துவருத்தியிருக்கின்றதுன்பங்களைச் சவிஸ்தாரமாகச்சொல்லி யிக்காரணங்களையும் எங்கள்வரவையுங் கர்த்தனுக்குத்தெரிவித்து விடைபெற்று எங்களைத்திருச்சபைக்குப்போக விடவேண்டுமென்றுபோற்றுகின்றகாலத்தில்நந்திதேவர் அவர்களிடத்திற் கிருபையுற்று ஓ! தேவர்களே? உங்களுக்கடுத் திருக்கின்ற தளர்ச்சிகளையின்றுமுதல்விட்டுவிடக் கடவீர்கள்உங்களுக்குச்சவுக்கியமாகியகாலம் நேரவிருக்கின்றதென்றுதேறுதலைசொல்லி உங்கள்கருத்தின்வண்ணங் கங்கையினையும் பிறையையுஞ் சடாமகுடத்திற்றரித்திருக்கின்ற சிவபிரான் சந்நிதானத்திற்போய்ச் சூரனால் உங்களுக்குச்சம்பவித்திருக்கின்ற குறைபாடுகளைச் சவிஸ்தாரமாகத்தெரிவித்துச் செலவுபெற்றுவந்து அதிசீக்கிரத்தில் உங்களை உள்ளேபோக விடுகின்றனன் அதுபரியந்தம் பொறுமைகொண்டு இத்தலத்தி லிருப்பீர்களெனக் கட்டளையிட்டுப் பரமன்வீற்றிருக்கின்ற திருச்சபையைச்சேர்ந்தவுடன் திரிநேத்திரதாரியை வணங்கித்துதித்துக் கரங்களைக்கூப்பிநின்று கர்த்தனே மகாவிஷ்ணு பிரமதேவன்இந்திரன்முதலிய தேவர்களனைவருந் திருக்கோயில் முதல்வாயிலினிடத்தில்வந்து தேவரீர் தரிசனைக்குக் காலம்பார்த்திருக்கின்றனரென்று விண்ணப்பஞ்செய்யக் கேட்டவுடன் தயாநிதியும் எமதிறைவனுமாகிய சிவபிரான் அவர்களிடத்தில்மிகவும்அன்புகூர்ந்து நந்திதேவனே அவர்களனைவரையும் நமதுமுன்கொண்டுவந்து விடக்கடவையெனக் கட்டளையிட்டகாலத்தில் அதிசீக்கிரத்திற் றிரும்பிவந்து தேவர்களைப்பார்த்துச் சுயஞ்சோதிவடிவினனான பரமன்உங்களைவரக்கட்டளையிட்டனனென்று ரிஷபமுகத்தினைப்பெற்றநந்திதேவர்சொல்லிய வாசகத்தினைச சகலருங்கேட்டவுடன் அதிசீக்கிரத்திற் கர்த்தன்சந்நிதானத்தைச் சேர்ந்து கிருபைக்கடலாகிய சிவநாதனைத்தரிசித்தவுடன் ஜயஜயவெனப்போற்றிச்சென்று சமீபித்து மும்முறைவலம்வந்துதீர்க்கதண்டன் சமர்ப்பித்துத் துதிப்பவர்களில்அதிகஅலைச்சற்பட்டு மனம்வருந்தியிருக்கின்ற இந்திரனானவன் துணிவுகொண்டு சகலருக்குமுந்திக்கர்த்தனைவந்தித்து இதனைவிண்ணப்பஞ்செய்வதாயினன்.

உலகங்களனைத்தினையும் பரிவாய் ஈன்றருளியபராசத்திசமேதனாகியகர்த்தனே யென்முறைகளைக் கேட்டருள்க அளவற்ற யுகங்களாய் சூரபதுமன்முதலிய அவுணப்பாதகரால் அதிகவருத்தங்களை அனுபவித்தொடுங்கித்தேவரென்னும் பெருமைகளையும் இழந்ததன்றியில் மிகுந்த ரூபலாவண்ணியங்களைப் பெற்றிருக்கின்ற அரம்பாஸ்திரீகளும் எனது அருமைபாகிய பிள்ளையும் மற்றதேவகுமாரர்களும் அளவற்றவிண்ணவர்களுங் கொடியசெய்கைகளைப்பெற்றிருக்கின்ற அவுணருக்கிறைவனாகிய சூரனுக்கிருப்பிடமாய் சமுத்திரமத்தியிற்றோற்றநின்ற வீரமமயேந்திரபுரியில் சிறையிற்பட்டுவருந்தியிருக்கின்றனர், மேலும் இழிவாகிய தொழில்களைச்செலுத்தி வருகின்ற அவுணரால்எக்காலத்துஞ்சலனமற்றுவிளங்காநின்றஎன்பதியாகிய பொன்னுலகமானதுசகலவளங்களுடனுங்கொளுத்தப்பட்டு அழிந்து நாசமாய்ப்போய்விட்டது, அவ்வ

நியாயங்களை அடியேன் இச்சந்நிதானத்திற் சொல்லவும் வேண்டுமோ அவையனைத்துந் தேவரீர்திருவுளத்துக்குநருகத்தெரிந் திருப்பதன்றே இத்தகைய துன்பங்களிற்பட்டுக் கிலேசிக்கின்ற யான்முன்னம் அரியதவங்களைச்செய்திருந்த முன்னிலையில் தேவரீர் கிருபையுநெழுந்தருளி என்குறைகளைத் திருச்செவிகளினேற்றுப் பயங்கொள்ள வேண்டாம் இன்னஞ்சிலதினத்தில் நம்மிடத்தில் ஒருகுமாரன் தோற்ற விருக்கின்றனன், அவனைக்கொண்டு அவுணர்களைக்கொல்லுவித்து உங்கள்,துன்பங்களைப் போக்கிப்பழையபடிக்கு நிலைபெறச்செய்வோமென்று எமது கர்த்தனேகடாட்சித்திருந்தீர் அவ்வாறே குமாரசுவாமியுந்திருவவதாரஞ்செய்திருக்கின்றனர்,இத்தினவரையில் அடியோங்கள் துக்கவருத்தங்களைஒழித்தவரல்லபுவனங்களனைத்தினுமிராநின்றபிராணிகள்முற்றும் வணங்கிப்போற்றத்தக்கபெருமையினையுடைய மூலகாரணக்கடவுளேதியபாதசராகியயாங்கள்செய்திருக்கின்ற வினைப்போகமானது இப்பாடுகள்பட்டும்இன்னமும் தொலையவில்லையோசூரபதுமன்புசபலபராக்கிரமங்களை அடக்கிஎங்களையிரட்சிக்கவல்லவரையாரையுங்காணவில்லைகங்காபவானியைச்சடாபாரத்தில் வைத்திருக்கின்றதேவரீருடனல்லது இனிமேல் என்குறைகளை யாவருடன் முறையிட்டுக்கொள்ளப் போகின்றனன் யாரைநோவேன் மகர சமுத்திரத்திற்சென்றகாக்கையானது நிற்கவிடங்கிடையாமல்அதனிடத்தோடுங்கப்பலின்மீதிறங்கிக்களித்திருப்பதுபோல இடரிலகப்பட்டு வாடுகின்ற எங்களுக்குத் தேவரீர்எழுந்தருளியிருக்கின்ற திருக்கயிலையல்லது சோபந்தீரப் போகததக்க விடமொன்று இப்பாதகர்படுந்துன்பங்களைமாற்றியிரட்சிப்பதற்குத் துணையாக விருப்பவர்களுந் தம்மையன்றியில் மாறுகண்டிலம், கடையுகத்தில்உலகங்களைஅழிக்கவல்ல வடவாமுகாக்கினியின்மீதுஒருகாலம்பள்ளிகொள்ளலாகுந் திருப்பாற்கடலினுதித்தஆலகாலவிஷத்தினையும் சில பரிகாரங்களைச்செய்து புசிக்கவும்கூடும், சத்திராதிகள் அலைத்து வாட்டுவதினால் எங்களுக்கடுத்திருக்கின்ற கொடியதுயரங்களைச் சகித்திருப்பது மிகவும்அரிதரிது மிகவும் கடினமாக விருக்கின்றது கர்த்தனே? ஒருவருக்குநேர்ந்த துக்கவருத்தங்களைப் போக்குவதற்குமுயற்சிசெய்வதும் அவன்வீறி விளங்கியிருக்கத் தக்கதாகச்சகலசெல்வங்களையும்பெறத் தேடுவதும் பிதாவுக்குரிய கடமையல்லது மற்றொருவருக்கு அத்தகைய சிரத்தையுண்டாவதோ ஆதலாற் தேவரீர் குழந்தைகளாகிய எமது துன்பங்களை அவ்வாறே திருவுளங்கொண்டுபாதுகாத்திரட்சிக்கக்கடவீர்.இன்னமும் பராமுகமாயிருப்பீராகில்அவுணரால் பட்டிருக்கின்ற துக்கங்களைச் சகிக்கமாட்டோம், தீனதயாபரமூர்த்தியே என்று தேவராசனானவன்வணங்கித் தங்களுக்கடுத்திருக்கின்ற வருத்தங்களைச்சொல்லிமுறையிடுகின்றகாலையில் மகாவிஷ்ணுவும்,பிரமதேவனும், இருபாரிசங்களினும்நின்று தேவராசனைக்குறித்துக்கர்த்தனே? கொடியசெய்கைகளையுடைய சூரபதுமனானவன் இவனை அலைக்கின்றதையும் மற்றைய பிராணிகளைக்கொன்றுகொன்று தொலைக்கின்ற காரணங்களையும் இன்னவிதமென்று எங்களாற்சொல்லி முடிவதன்று இனிகணப்போதேனுந் தாழ்க்காமல் இந்த நிமிஷத்தில்அதற்கொருநிவாரணத்தினை அனுக்கிரகிக்கவேண்டுமென்றுவணங்கிச்சொல்லிவேண்டினர். தம்மைவந்திப்போருக்கு இம்மையிற் சகலசெல்வங்களையுந்தந்து மறுமையினும் மோட்சசாம்பிராச்சியத்தினையுங்கடாட்சிக்கவல்ல சிவபிரானானவர் இவர்கள் சொல்லிய காரணங்களைக்கேட்டவுடன் மிகவுமிரங்கினவராய்த் தேவர்களேஇனிமனவருத்தங்களைவிட்டுவிடக்கடவீர்களென்று திருவாய்மலர்ந்துபக்கத்தில்வீற்றிருக்கின்றகுமாரசுவாமியார் முகாரவிந்தங்களைப்பார்த்து இதனைச்சொல்லுவதாயினர்.

ஐயனே? உலகங்களைச்சின்னபின்னப்பட அலைத்துஅவற்றிற்றங்கிய பலபிராணிகளுக்குங் கொடியதுன்பங்களைச் செய்துவாட்டித்தேவர்கள் வாசமாயிருக்கத்தக்க பெருமையுள்ளபொன்னுலகத்தையும்அக்கினிக்கிரையாகக்கொடுத்து நீறாக்கி யிந்தஇந்திரன்முதலாகிய விண்ணவர்களுக்குப் பலயுகங்களாகத் தகாதஏவல்களையிட்டு தீங்குகளைச்செய்து கொடுங்கோல்செலுத்திவருகின்ற புசபலபராக்கிரம சாலியாகிய சூரபதுமனை அவுணகூட்டத்துடன் வரையறக்கொன்று வேதமார்க்கமாகச் சகலமும் நடந்துவர நிலைபெறச்செய்து தனக்குரியசுதந்தரங்களையிழந்து பதிதனைய் நிலைபெறாமல் அலைந்திருக்கின்ற இந்திரனுக்குப்பழையபடிக்குத் திரிலோக சம்பத்தினையுங்கொடுத்துத்தேவர்கள் முதலானவர்கள்கிலேசங்களைப்போக்கிச் சவுக்கியத்திலிருத்துவதாகப் பிரயாணப்பட்டுப்போய் ஜயங்கொண்டுவரக்கடவையென்று எமதிறைவனாகவுந் தந்தையாகவுமிராநின்றசிவபிரான் அனுக்கிரகித்தனர். முன்னமேஅத்தேவர்களிடத்திற் பூரணகடாட்சத்தினைச் செய்திருக்கின்ற குமாரசுவாமியார் பிதாவின் வாக்கியத்தினைக் கேட்டவுடன் மனமகிழ்ச்சியாய்த் தேவரீர் கட்டளையின்படிக்குத் தடையின்றி முடித்துவரக்கடவேனென்று சொல்லியபின்பு அதிசீக்கிரத்திற்பதினொருருத்திரரைத்திருவுளத்தில் நினைந்தமாத்திரத்தில்அவர்களும்வந்துசேவித்துத் துதித்துக்கொண்டிருக்க அவர்கள்மீதுகிருபாநோக்கத்தினைப்பரப்பிநீங்கள்இந்தப்பாலசுப்பிரமணியன்கைப்படைகளாகச்சேர்ந்திருப்பீர்களென்றுஅவர்களைப் பதினொருவகை ஆயுதங்களாக நிருமித்துச் சரவணபவன் திருக்கரங்களிற்கொடுத்தனர். பூர்வத்திற் பரமசிவகடாட்சத்தினாற்றோன்றிஅவர் திருநாமமும் உருவமும் பெற்றிருக்கின்ற உருத்திரத்தலைவர்கள் பரமன்அனுக்கிரகப்படிக்குச்சொல்லுதற்கரிய வலிபெற்ற தோமரம், கொடி, வாள், குலிசம், பாணம், அங்குசம்,மலர்மாலை, கமலம்,தண்டம்,வில், மழுவாயுதம், இவ்வகையாகச்சண்முகதேவர் திருக்கரங்களில்விளங்கினர்.

அதன்பின்பு பல்லாயிரகோடி அண்டங்களிலிராநின்ற பஞ்சபூதங்களையும் வாட்டும்முயற்சிபெற்றதாயும்சகலபிராணிகளையும்ஏககாலத்தில் நாசஞ்செய்யத் தக்கதாயும் எத்தகையர்மேல் விட்டபோதினும்அவர்கள் புசபலபராக்கிரமங்களையும் வரமுயற்சிகளையும் அதப்படுத்திப்பிராணனை வாங்கத்தக்கதாயும் எவ்வுலகங்களுக்கும் நாயகமாகவுமிராநின்றதாய் வலியும் வீரமுங்கொடுமையும்பெற்றிருக்கின்ற ஒப்பற்றவேலாயுதத்தினைப் படைத்துத் திருக்குமாரன் கரத்திற்கொடுத்தபின்பு எமதிறைவனாகிய சிவபிரான் சந்நிதானத்திற் காத்திருந்து ஏவினபணிவிடைகளைச் செய்துவருகின்றநவவீரர்களாகிய பிள்ளைகளைப்பார்த்துத்தேவர்கள்முதலியசகலருக்கும் முதன்மையாக விருக்கின்றவிந்தக்குழந்தைவேலனோடு கலந்துபோய் அவுணர் குலநாசஞ்செய்துவரக்கடவீரெனக்கட்டளையிட்டுப்பற்

பலசிறந்தஆயுதங்களைப்படைத்து அவர்களுக்குக்கொடுத்துப் பாலசுப்பிரமணியனுக்குப் படைத்துணையாகத்தந்து அதன்பின்பு அண்டர்பாணன்-நந்தி-உக்கிரன்-தண்டன்-திக்கண்ணன்-சிங்கன்- முதலாகிய பூதகணத்தலைவர்மீது திருக்கண்சாத்தி உங்கள்வசத்திலிராநின்ற இரண்டாயிரம்பூதவெள்ளங்களையுங்கூட்டிக்கொண்டு சண்முகனுக்குச் சேனைகளாகப்போய்ச் சத்துருக்களை ஜயித்துவரக்கடவீரெனப்பணித்து அவர்களைக்குமாரனுக்குச் சேனைத்தலைவராகக்கடாட்சித்து மேலும்பஞ்சபூதங்களுக்கும்மேலான வல்லபங்களும் எத்தலங்களினும்பரவியிருக்கின்ற பொருள்களின் வலியும் கமலவாசியாகிய பிரமதேவன்முதலாகிய தேவர்கள் பலங்களும் ஒன்றுபட்டுப் பொன்னுருளைகள் நவரத்தினமயமாகவிளங்கும் அச்சுமச்சு குத்துக்கால்-கொடுங்கை-சிகரம்-குடை-கொடிகள்-முதலியசிறப்புகளைப்பெற்றதாய்ச் சுழிசுத்தங்கள் வாய்க்கிராநின்றஉத்தம அசுவங்கள் கோடிபூண்டதாய் மனோவேகத்தினுமுந்திரதிகன் எண்ணப்படிக்கு நடப்பதாய்ப்பற்பல படைகளைப் பரித்திருப்பதாய்க் கோடிசூரியப்பிரகாசமாகவும்விளங்கும் ஒப்பற்ற இரதமொன்றினைச் சிவபிரான் மனதிற்சிந்தித்துப்படைத்துத் திருக்குமாரனுக்கு வாகனமாகக்கொடுத்துச்சகலமும்முடிந்தவுடன்குமாரனேஇந்தப்போரணிகளுடன்போய்ச் சத்துருக்களை ஜயித்துவரக்கடவையென்று ஆசிர்வதித்தகாலத்திற் குமாரசுவாமியானவர் சிங்காதனத்தைவிட்டிறங்கி அதிகபயபத்தி விசுவாசங்களுடன் மையிட்டு நீண்டிராநின்ற விழிகளையுடையஉமையவளையும் பரமேஸ்வரனையும் மும்முறைவணங்கிக் கரங்களைக்கூப்பிநின்று வேதவாக்கியங்களினாற் போற்றுகின்ற திருக்குமாரன்மீது திருவுளத்தில் அதிகபிரீதியாகப்பரமனிருகரங்களைக்கொண்டெடுத்து மார்பிற்சேர்த்தணைத்துத் துடையினிடத்தில்வைத்து உச்சியைமோந்துமுத்தமிட்டு முதுகைத்தடவிக்கொடுத்துகிருபாநோக்கத்தினைப்பாலித்தபின்பு இடப்பாகத்தில் வீற்றிருக்கின்ற லோகநாயகிதிருக்கரத்திற்கொடுத்தனர் இந்தப்பிரகாரந் திருக்குமாரனிடத்திற் பரிவாகக்குலவி நீட்டியபோது அறுசமயங்களுக்கும் மூலகாரணியாக விளங்கி நடிப்பிக்கும் பார்ப்பதியார் அதிக ஆவலுடன் செந்தாமரைமலரைப்பழித்து விளங்குந் திருக்கரத்தினாலேந்திப்பக்கத்தில்வைத்துக்கொண்டு அன்புடன் அணைத்துக்குமாரசுவாமியினது உச்சியைமோந்து முத்தமிட்டு அப்பனே! ஐயனே? பிள்ளாயெனப் பரிவாய்முத்தாடிநமதிறைவன் கட்டளைப்படிக்கு உன்னாக்கினைக்குட்பட்டிருக்கின்ற நவவீரர்கள் இலட்சர் பூதகணங்கள்முதலானவர்களைச்சேனைகளாகக்கொண்டு கர்த்தன் கடாட்சித்த இந்தத் தேரிலேறிப்போய்யாவராலும் ஜயித்தற்கரிய புசபலபராக்கிமசாலிகளாய்மாயவித்தைகளிற் சிறந்தவர்களாயிராநின்ற அவுணவர்க்கங்களை வகையறக்கொன்று திளராகிய இந்தத் தேவர்களுக்குச் சம்பவித்திருக்கின்ற துன்பங்களைப்போக்கிப் பழையபடிக்கு அவர்கள் அரசுரிமைகளைக்கொடுத்து நிலைபெறச்செய்து வரக்கடவையென்று மங்களாசிர்வாதங்களைச்செய்தனள். பரமேஸ்வரியானவள்இப்படிக்குவாழ்த்தி விடைதந்தகாலத்திற் சண்முகப் பெருமாளானவர் வெளிவந்து அம்மையப்பனைவணங்கிச் செலவுபெற்றுக்கொண்டு பிரயாணப்பட்டு முன்னிலையிற் சேனைத்தலைவர்களாகப்பெற்ற வீரவாகுதேவர்முதலிய நவவீரர்கள் இலட்சர்பூதகணத்தலைவர்கள் முதலாக உமாபரமேஸ்வரனை வலம்வந்துமும்முறைவணங்கிப்போற்றிவிடைபெற்றுப் பாலசுப்பிரமணியக்கடவுளைச் சூழ்ந்துகொண்டு அதிகஉச்சாகங்களுடன் நடந்தனர். அப்போதுதிருச்சபையிலிருந்த மகாவிஷ்ணு பிரமதேவன் தேவேந்திரன் இவர்களெழுந்து எமதிறைவனே! தேவரீர் எங்களுக்கடுத்திருந்த சகலதுன்பங்களைப்போக்கி யிரட்சித்தீர் இதுபரியந்தம் இம்சைசெய்திருந்த பகைவனை முற்றினும்போக்கினோம் இத்தினம் பிழைத்தோம் பிழைத்தோமென்றுஅழகியதிருமேனியையுடைய உமையவளுடன் சிவபிரான் பொற்பாதகமலங்களைவணங்கிப் போற்றுகின்றவரைப் பரமன் கிருபையாகப்பார்த்து உங்களுக்கு நன்மைசெய்யும்பொருட்டுப்பிரயாணப்பட்டு நடக்கின்ற குமாரசுவாமிக்கு மந்திராலோசனைக்குரியவராகவிருந்துசகலகாரியங்களையுஞ்சீராய் முடித்துக்கொண்டு வரக்கடவீர்களென்றுசெலவுகொடுத்தனுப்பினர்.

## படையெழுபடலம்.

கண்ணுதல்விடைபெற்றரியயன்மகவான்
கடவுளர்தபமொடுகடிதி
னண்ணலங்குமரன்றன்னொடுசென்றே
யயல்வருமருத்தினைநோக்கித்
தண்ணளிபுரியுமறுமுகத்தெந்தை
தனிப்பெருந்தேர்மிசைநீபோய்ப்
பண்ணெறிமுட்கோன்மத்திகைபரித்துப்
பாகனுய்த்தூண்டெனப்பணித்தான்.

கேட்டீர்களோ? சவுனகாதிரிஷிகளேயென்று சூதபுராணிகர் சொல்லுகின்றார். மேற்குறித்தபடிக்குஉமாபரமேஸ்வரனிடத்தில் அனுமதிபெற்றுக்கொண்டு திருச்சபையைக்கடந்து வெளிவந்த மகாவிஷ்ணு பிரமன் இந்திரன் முதலாகிய தேவர்களுந் துரிதமாகக் குமாரதேவனைச்சேர்ந்தகாலத்தில் விஷ்ணுவானவர் தங்களுடன் வருகின்றவாயுதேவனைப்பார்த்து நமதிடத்திற் பிரியமாக வெழுந்தருளுகின்ற சண்முகப்பெருமாள் ஆரோகணிக்கத்தக்கதாக இந்தத் திவ்வியரதத்தின்பேரில் நீசீக்கிரமாகவேறி முன்தட்டிலிருந்து குதிரைகள் வார்களையுஞ் சவுக்கினையுங்கரத்திற்பற்றிக்கொண்டு பாகனாய்த்தேரைநடத்திச சிவகுமாரனெதிரில்நிறுத்தக்கடவையெனக் கட்டளையிட்டனர். இப்பிரகாரங்கேசவன் அன்பாக ஆக்கியாபித்தவுடன் வாயுதேவன் அதிக உச்சாகத்துடன் அதற்கிசைந்துவானத்தினை அளாவிநிற்கின்ற சொர்ணமயமாகியதேரின்மீதிற்பாய்ந்து தனக்குதவியாக விருக்கின்ற மற்ற ஒன்பதுவாயுக்களுடன் வீற்றிருந்து குதிரைகள் வார்களைத்திருத்தமாகப்பற்றிக்கொண்டு மனப்பூரிப்புடன் நடத்தி வந்துசண்முகப்பெருமாள் திருமுன் நிறுத்தினமதுகர்த்தனே? இந்தஇரதத்தின் பேரில் எழுந்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தனன்- இந்தப்பிரகாரம் வாயுதேவன்கரங்களைக் கூப்பித்தொழுது சொல்லியபோது அவன்சாரத்தியஞ்செய்கின்றகிரமங்களையெல்லாம்அதிக கிருபையாகப்பார்த்தவராய் உதயகிரியினிடத்திற் பாலசூரியனைவன்சோ

த்றியதைப்போல இரத்தினமயமாகப் பிரகாசிக்கின்றஇர
தத்தின்மேல் குமாரதேவர் வீரசிங்கத்தைப்போலத்தாவி
யேறி அரியணையில்வீற்றிருந்த காலையிற் சூரபதுமன்கு
லநாசமாய் மாண்டனன் மாண்டனனென்று இந்திரனுங்
தேவர்களுங் குதித்துக்குதித்து ஆர்ப்பரித்தனர், இவை
யன்றியில் பர்வதாகிருதியாக விளங்குகின்ற தேரின்மீது
குமாரசுவாமியார் விளங்குவதைக்கண்டமாத்திரத்தில் அ
வர்அனுக்கிரகத்தினைப் பூர்த்தியாகப்பெற்றிருக்கின்ற பு
சபலபராக்கிரமசாலிகளாகிய வீரவாகுதேவர்முதலிய து
ணைவர்கள்வந்து நாற்புறங்களிலுஞ்சூழ்ந்து போற்றிவர
வும் முனிசிரேஷ்டர்கள் தேவர்கள் அத்தேவனைநீங்காம
ற் சுற்றிக்கொண்டு மங்களஆசீர்வாதங்களைச்சொல்லிக்கற்
பகமலர்களைச் சோனைமாரியைப்போலவிறைத்துத் தொ
டர்ந்தனர், இவ்விதமாகச் சகலரும்முருகப்பெருமானைக்
கூடியபோழ்து கங்காசடாதரக் கடவுளாகிய சிவபிரான்
தாமெழுந்தருளியிருக்கின்ற திருக்கயிலாயத்தில் நெருங்
கியிருக்கின்ற அனந்தவெள்ளம் பூதப்படைகளில் இரண்
டாயிரத்தொகைகொண்டவர்கள் தங்கள்தலைவர்கள் கட்ட
ளையின்படிக்கு வீராவேசங்களுடன்வந்துசூழ்ந்தனர்.

அவர்கள் பெருமைகளைக்கேட்பீராகஎழுவாயுதம்மழு
வாயுதம் வச்சிராயுதம் கதை சக்கரம் வாளாயுதம்எறிவே
ல்முதலாகிய ஆயுதவிதங்களைக் கரங்களிற்பற்றி வலியி
னுக்கொப்பற்றவர்களாய்ப் பிரகாசம்பொருந்திய மூன்று
ம்பிறையினையிரண்டாகத்துண்டித்துப்பதித்துவைத்திரு
ப்பதைப்போல விளங்குகின்ற கோரதந்தங்கள்பிரகாசித்
திருக்க அனற்பொறிகளையிறைத்துச் சிவந்துசுழலும்மு
ண்டைக் கண்களைப்பெற்றும் இடியைப்போல உரத்த
சொல்லினால் வீரங்கள்பேசியும் வானத்தினையளாவுங் கா
த்திரதேகத்தைப்படைத்தும் குறளுருவினராயும் குறிய
தேகராயும் ஐவகைநிறங்களும் வீற்றுவீற்றுக்காட்டுந்
தேகத்தைப்படைத்தவராயும் நீண்டசடைகளையுடையசி
ரத்தராயும் செம்பட்டமயிர்விரிந்து பரந்திருக்குந்தலைய
ராயும் ஒருமுகத்தையும் பற்பலமுகங்களையும் படைத்த
வர்களாயும் பாதகரிற் பாதகராயினுந் தம்மைச்சரணம
டைவராயின் அவர்களைஆதரித்து வேண்டியஉதவிகளை
ச்செய்யவல்ல குணசம்பன்னராயும் விபூதிருத்திராட்சம்
விளங்குந் தேகத்தராயுங் காளகண்டமூர்த்தியைப் பூசித்
துப்போற்றி வணங்குவதல்லது மற்றதேவனை ஒருபொ
ருளாகமதியாத பத்திவயிராக்கியங்களைப் படைத்தவரா
யும் எத்தகையோனுந் தங்களைப்பகைத்தால் அவர்களைப்
பிடித்துப் பிசைந்துகொன்று நாசஞ்செய்யும் வீரபராக்
கிரமசாலிகளாயும் மன்னுயிர்களைக்கொண்டு போகவல்ல
யமன் கரத்திற்பற்றி வீறியிருக்கும் சூலத்தைப்பறித்து
முறித்தெறியும் ஜயசாலிகளாயும் சகலஅண்டங்களையும்
அவற்றுட்பட்ட பிராணிகளனைத்தினையும் கவளீகரமாக
விழுங்கிமீளக்கக்கவல்ல மகிமையினைப்பெற்றவர்களாயும்
அன்றியும் உதரத்திற்சுடர்விட்டெரியும் பசித்தீயானதுத
ணியும் பொருட்டு அவற்றினைப் புசித்து மீட்டுஞ்சிவபி
ரான்அனுக்கிரகத்தினால்யதாப்பிரகாரம்நிலைபெறப்படை
க்கும்மகத்துவங்களைப்பெற்றவர்களாயும்முன்யுகமுடிவுக
ளில் இறந்தஇந்திரன்முதலாகியதேவர்களினது சிரமாலி
கைகளைக்கழுத்தினும் மார்பினுஞ்சிரத்தினுஞ் செவிகளி
னுங்கரங்களினும் இடையினும்பாதங்களினும் பொன்ன
ணிகளுடன் கோர்த்துத்தரித்திருப்பவர்களாயும் இவ்வித
வீரபராக்கிரமங்களையும் மகத்துவங்களையும் பெற்றிருக்கி
ன்றஇரண்டாயிரவெள்ளம் பூதவீரர்கள்நெருங்கித்தமது
தலைவர்களுடன்வந்துசரவணப்பெருமானைவணங்கிச்சர்வ
சங்காரகாலத்திற்சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும்
ஏககாலத்திற்பெருக்கெடுத்தொலிப்பதுபோலவும்அண்ட
கோளகை வெடித்ததுக்கொப்பாகவுஞ்ஜயஜயவெனப்போ
ற்றி ஆர்ப்பரித்து எமதிறைவனைச்சூழ்ந்துகொண்டனர்,
அவர்களில் அண்டத்தினையளாவலுங்கியிராநின்ற பர்வத
த்துக்கொப்பாகப் பாரித்திருக்குந் தேகத்தினைப்படைத்
தபெரியபூதகணங்களானவர் வார்களினால்முறுக்கியிராநின்
றமத்தளங்-குடமுழா தப்பட்டை வெற்றிமுரசம்- காகள
ம்-சின்னம்-வெற்றிச்சங்கமுதலாகிய பதினெண்வாத்தியங்
களைமுழக்கியுங் குடை-வெண்சாமரை-அருகு-ஆலவட்ட
ம்- கொடி-மகரதோரணம் இவ்விதச்சிறப்புகளைக்கொண்
டு பணிவிடைகளைச்செய்து போகின்றகாலையில் ஆறுமு
கசுவாமியார் இச்சம்பிரமங்களைப் பார்த்துக்கொண்டு அ
ண்டங்கள் முற்றினும் பரிபூரணமாக நிறைந்திருக்கின்ற
கிருபாசமுத்திரமானது ததும்பிஓங்கிச்சூழ அதன்மத்தி
யிற்சொலித்தெழுகின்ற ஞானசூரியனைப்போலத்திசாதி
சைகளெங்கணும்பரந்தொலித்திருக்கின்ற பூதசேனாசமு
த்திரம் வளைந்துகொண்டுபோற்றத்தாம்மத்தியில் விளங்
கித்திருக்கயிலாயவெல்லையைக்கடந்து பூமண்டலத்தினி
டத்தில் வந்தகாலத்திற்கோபமேலிட்டு உரத்துவசனிக்கு
ம் வீரத்தினைப்படைத்த இரண்டாயிரவெள்ளம் பூதச்
சேனைகளுடன் கந்தசுவாமியார்மண்ணுலகில் நடக்கின்ற
போது பூதவீரர்பாதங்களைப்பெயர்த்துவைக்கும் உறுதி
யினாலெழாநின்ற தூளிப்படலமானது பூமியெங்கணும்
மூடிக்கொண்டதுஅதுஎப்படிக்கிருந்ததென்னில் வஞ்ச
கமே குடிகொண்டிருக்குங் கரியநிறம்பெற்ற அவுணவெ
ள்ளங்கள் ஏகமாகச்சேர்ந்து சுற்றிக்கொண்டதைப்போல
விளங்கியது.

இஃதன்றியிற் ஜயசாலிகளாகிய அப்பூதவீரர் நடக்கு
ம் வேகத்திலோங்கிய புழுதிகளானது வீறிஅஷ்டதிக்கு
களினும் பரவி நிறைந்ததன்றியிற் பொன்னுலகத்தினும்
அடர்ந்து அத்தலவாசிகளைத் திகைக்கச்செய்யப் பூதப்ப
டைகளினது ஆரவாரங்கள் அத்துகளினுமுந்தி விண்ண
கத்திலொலித்திருப்பதை யோசிக்குமிடத்திற் றூளிபட
ல மேலோங்கிவருகின்றது விழிகளையடைத்து வாதைப்
படுத்துவதன்முன்னம் இமையாநாட்டங்களை மூடிக்கொ
ண்டிருப்பீரெனத்தேவர்களிடத்திற் பிரியமாக முந்தி எ
ச்சரிப்பதை யொத்துக்காட்டியது இவையன்றியும் அப்
படிக்கதிகரித்துப்பலகழிகளைப்பெருக்கியிராநின்ற சத்த
சாகரங்களையும் மேலுலகமார்க்கங்களையுந் தூர்த்துவருகி
ன்ற தூளிபடலமுஞ்சேனையினொலியும்ஒன்றுபட்டு மன்
னுயிர்கள் விழிகளைமூடியும் நாசிகளை அடைத்தும் பேச
ப்படாமல் வாயினைநிறைத்தும் ஒருவர்வசனிப்பதுஒருவ
ருக்குகேளாமற் செவிகளைத்தூர்த்தும் இவ்வித உற்பாத
ங்கள் தோன்ற பர்வதா கிருதியாகப்பாரித்த தேகத்தை
ப்பெற்ற பூதர்கள்போகின்ற காலையில் பூமியெங்கணும்நி
றைந்திடம்பெறாமல்மேகங்கள்சஞ்சரிக்கப்பட்டவானவெ
ல்லையினும் அடர்ந்துபார்த்தவர்கள் மண்விண்ணெவ்விட
ங்களினுஞ் சற்றிடமில்லாமல் பரந்துபோகின்றதென்று
அற்புதமாகவசனிக்கத்தக்கதாக நடக்கின்ற சயின்னியங்
கள் மூலமாகப் பெருகியதுகளானது வானவெல்லையை

மூடிக்கொண்டகாரணத்தினாற்பலருந்திகைக்கவிருளோங்கியிருப்பதுபோன்றும் பிராதகாலத்தில் உதயகிரியின்மீதெழுகின்றதனதுதேஜாமூடிப்பெருகிய பனிப்படலங்களைச் சூரியனானவன் தனதுகிரணகாந்திகளைப்பரப்பிவாட்டி விளங்கியெழுவதுபோலப் பாலசுப்பிரமணியக்கடவுளினது தேககாந்தியினால் அடிபட்டு முன்னினும் அதிக வெளிச்சமாகத்தோற்றியது, கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? அந்தப்பூதவெள்ளங்கள்நடக்கும்போதுண்டாகியசிறப்புகளை யிவ்விதமென்று ஒருநாவைப்படைத்தவன்றாற்புகழக்கூடுவதோஇவைநிற்க மற்றச்சரித்திரங்களையுங்கவனமாகக்கேட்பீராகவென்றுசூதபுராணிகர்சொல்லத்தொடங்கினர்.

## தாருகன்வதைப்படலம்.

வெம்மைதீர்ந்திடுமெப்பெருநெறியிடைவிரைந்து
செம்மைசேர்தருகுமரவேள்படையொடுசெல்ல
வம்மசேர்ந்தது தாருகற்குறையுளாயடைந்தோர்
தம்மைவாட்டியேயமர்கிரவுஞ்சமாஞ்சயிலம்.

இந்தப்பிரகாரம் சோதிமயமாக விளங்குந் திருமேனியையுடைய பாலசுப்பிரமணியக்கடவுளானவர் வீரபராக்கிரமசாலிகளாகிய பூதப்படைகளுடன் திருக்கயிலாயத்தைக்கடந்துபூலோகம் பவுத்திரமடையும் படிக்குவந்திறங்கிஆரண்ணியங்கள்மலைகள் கான்யாறுகள்-நாடு-நகரங்கள்முதலாகக்கடந்து அதிவேகமாகவரும்போதுமுன்சென்றதூசிப்படையானது சூரபதுமனுக்குச்சகோதரனாய்ப்புசபலபராக்கிரமததுக்கொப்பற்றவனாயு மிராநின்ற தாருகாசுரனுக்குக் கெடிஸ்தலமாய்த் தன்னிடத்திற் சேர்ந்தரிஷிகள் தேவர்கள் முதலானவர்களை அலைத்துக்கொன்றுதின்னும் மாயாவல்லபெற்ற கிரவுஞ்ச பர்வதத்தினைச்சேர்ந்தது, அப்பொழுது சிவகுமாரன் பின்பற்றி வருகின்ற தேவர்கள் வானத்தினை யளாவ நிற்கின்ற கிரவுஞ்சகிரியைக் கண்டமாத்திரத்தில் மனநடுக்குற்றுதேகம்பதைபதைத்துவியர்க்க இப்பாதகனால் என்னவிளையுமோவென்று காலெழாமற் பின்வாங்கவும் இந்திரனானவன் பயப்பிராந்தியினால் மதிமயங்கி நின்றுவிடவும் இப்படிக்குத்தியங்குகின்றகாலையிற் கலகப்பிரியராகிய நாரதரிஷியானவர் துரிதமாகவந்து குமாரதேவனைத் தரிசித்துச்செந்தாமரைமலரினுமிருதுவாகப் பிரகாசித்திருக்குந் திருவடிகளிற் தீர்க்கதண்டன் சமர்ப்பித்தெழுந்துகரங்களைக் கூப்பிப்போற்றி யிதனைச்சொல்லுவார், கர்த்தனேயிதோஎதிரிற்காணப்படுகின்ற பர்வதத்தின் சரித்திரங்களைக்கேட்டருள்க- சூரனுக்குபந்துவாய் மாயவித்தைகளிற் சிறந்த கிரவுஞ்சனென்னும்பெயரைப்பெற்ற இராட்சதனானவன் இக்கோலத்தைக்கொண்டு பவுத்திரமாகிய சதுர்வேதங்களையும் ஓதாநின்றபிராமணசிரோஷ்டர் ரிஷிபுங்கவர்கள் ஆதியாக இச்சாரலின்மார்க்கமாகப்போகப்படுகின்றவர்களுக்குச் சாதாரணமாகிய பலவழிகளைக்காட்டி அதன்மூலமாக நடக்கின்றவர்களைத்தன்மாய்கையிற் படுத்தித் திகைக்கச்செய்தலைத்துக்கொன்று நாசஞ்செய்திருப்பவன் ஒருதினஞ்சிவபிரான் கட்டளையின்படிக்கு அகஸ்தியர்பொதிகைமலைக்குப்போக வருமுன்னிலையில் அவரையுந்தனக்குள் வருவித்துப்பற்பலவஞ்சகங்களைக்காட்டும்போதுஇஃதிராட்சதமாய் கையென்றறிந்து அம்முனிவர் கோபித்துச்சபித்தகாரணத்தினால் அன்றுமுதல்இந்தரூபத்தினையேபெற்றிருக்கின்றனன், அக்காரணத்தினால் இதற்குக்கிரவுஞ்சகிரியெனப்பெயர் விளங்குகின்றது இந்தமலைக்கப்புறத்தருகிற் பலவளங்களையுங் கட்டுக்காவல்களையுங்கொண்டிருக்கின்ற மாயமாபுரியென்னுஞ் சிறந்தபட்டணத்தில்ஜயசாலியாகியசூரனுக்குஇளையசகோதரனாய் முன்னொருகாலம்இந்தமகாவிஷ்ணுவுடன்சண்டைகொடுக்கும்போது இவர்கோபித்தேவியசக்கரப்படையைப்பற்றிக்கழுத்தணியாகத்தரித்து வெற்றிகொண்டபுசபலபராக்கிரமத்தைப்பெற்றவன் தேவர்கள்முதலியசகலரையும்அலைத்துவருகின்றகொடியபாதகன் தாருகாசுரனென்னும் பெயரினைப்பெற்றவன் வாசமாய்அரசுசெலுத்திவருவன் குமாரதேவரோ யித்தகையவல்லபசாலியைக்கொல்லுவீராயின்இவனுக்கு மூத்தவனாகிய சூரபதுமனை வெல்வதுவெகு சுலபமாகும் முக்கியமாயிவன் வலியைக்கொண்டுசூரன்அரசாட்சி செய்துவருகின்றனனென்று நாரதரிஷிசொல்லியதைப் பிரகாசம்பொருந்திய வெற்றி வேலாயுதத்தினைத் தாங்கியிருக்கின்ற பாலசுப்பிரமணியக் கடவுளானவர்கேட்டுத் திருநகைகொண்டு முனிவனே நீகுறித்த அப்பாதகனை யித்தினமேமுடித்து உங்கள் வருத்தங்களைப்போக்குவோமெனத்திருவாய்மலாந்தனர்.

இப்பிரகாரம் நாரதருக்கு அனுக்கிரகஞ்செய்தவாக்கியத்தைக்கேட்டமாத்திரத்தில் இந்திரனும்மற்றதேவர்கூட்டமுந் தங்கள் மனதில்நிறைந்துபாதித்திருந்த வருத்தங்களைப்போக்கினவர்களா யின்றுடன்தாருகனிறந்தானென்னும்நிச்சயத்தைக்கொண்டு அதிகசந்தோஷத்தையடைந்து இவ்விதமாகச்சகலரும் மிகுத்தவுச்சாகங்களைப்பெற்றிருப்பதைப் பன்னிருபுயாசலங்களையுடைய குமாரசுவாமியார் கண்டவுடன் தமதுகிருபையைப்பூர்த்தியாகப்பெற்றுச் சமீபத்திலிருக்கின்ற வீரவாகுதேவனென்னும் ஜயசாலியைப்பார்த்துச்சொல்லுவதாயினர், வீராதிவீரனே! அதோஎதிரிற் காணப்படுகின்றதுமலைகிரவுஞ்சபர்வதமாகும் அதனருகிற்பலவளங்களைப்பெற்றுக் கடினமாகியகாவலையுடைய மாயமாபுரியென்னும் பட்டணத்தில் ஜயசாலிகளாய் வலியினுக்கொப்பற்ற அளவற்றஅவுணப்படைகளுடன் புசபலபராக்கிரமசாலியாகிய தாருகாசுரன் வாசஞ்செய்கின்றனன் ஆதலால் நிகரற்ற சவுரியத்தினைப்பெற்றநீ உன்னுடையதுணைவர்எண்மரையும்இலக்ஷரையும் நமதுபூதசேனைகளில் ஓராயிரவெள்ளப்படைகளையும்அவர்களுக்கதிபராகிய பூதநாதரையுங்கூட்டிக்கொண்டுபோய் அப்பதியை முற்றுகைபோட்டுக் கொள்ளக்கடவைஅக்காலத்தில் உங்களுடனெதிர்த்து சண்டைகொடுக்கவருகின்ற அவுணசேனைகளைச் சின்னபின்னப்படக்கண்டித்துக் கொல்லும்போது தாருகனாகியபாதகன் சீறிமேல் வருவாயினாற் பின்னிடையாமற் போர்செய்யக்கடவைஒருகாலம் உனக்கருமையாகக் காணுமாயின் அவனைக்கொல்ல நாம் உங்கள்பின்னாகவருவோங் காலதாமதஞ்செய்யாமல் முந்தி நடக்கக்கடவையென்று கிருபாசமுத்திரமாகிய குமாரசுவாமியார் கட்டளையிட்டபோது சகலராலும் புகழத்தக்கசிறப்பினையுடைய வீரவாகுவானவர் மகாபாக்கிய

மென்று அப்பணிவிடைக்கிசைந்து சிவகுமாரன்திருவடி
களிற்பணிந்தெழுந்து கரங்களைக்கூப்பி நிற்கின்றகாலத்
திற் றேவ தேவோத்தமனுகிய பாலசுப்பிரமணியக்கடவு
ளானவர் அவனுக்குத்துணைவராகிய எண்மரையும் இல
க்ஷரையும்பூதநாதரையுங் கிருபையாகப்பார்த்து ஜயசாலி
யாகிய இந்தவீரவாகுவுடன்கூடியெதிர்த்தராட்சதரைவா
ட்டத்தக்கதாகப் போய்வரக்கடவீரென்று ஆக்கியாபித்த
வுடன் அவர்களனைவரும் எமதிறைவனைவலம்வந்து
பணிந்துபோற்றி விடைபெற்றுப் பிரயாணத்துக்குயத்த
னப்படுங்காலையிற் பிராண னுக்குப்பிராணனுகப்பொருந்
தி உலகங்களை அலைசப்பிக்கின்ற சிவகுமாரன் தமதருகி
ல் நிற்கின்ற தேவதச்சனைப்பார்த்து ஒப்பற்றபுசபலபரா
க்கிரம சாலியாகிய வீரவாகுமுதலிய படைத்தலைவர்கள்
ஏறிநடத்தத்தக்க சிறப்புகளைப்பெற்றதாய்ஆயுதசவரட்ச
ணைகளுடன்பலதேர்களைப்படைத்துக் கொடுக்கக்கடவை
யெனச் சராசரப்பிரபஞ்சங்களனைத்தையும் படைக்கவல்
ல சிவசுப்பிரமணியதேவர் திருவாய்மலர்ந்ததைத் தேவசி
ற்பியானவன் கேட்டவுடன் ஒருமாத்திரைப்போது கழிவ
தன்முன்னம்உத்தமஅசுவங்கள்-வீரசிங்கங்கள்-பூதங்களி
வற்றினைப்பூட்டிப்பொன் னுருளைகள்-நவரத்தினமயமாகி
ய- அச்சுமச்சு-குத்துக்கால்கொடுங்கை முதலியஉறுப்புக
ளைவாய்ந்த பலதேர்களை நிருமித்து அவற்றினைஎமதிறை
வனுப் பிரகாசம் பொருந்தியவேலினைத் திருக்கரத்திற்
கொண்டிருக்கும் வீரவாகுதேவருக்கும் அவர்தம்பியர்இ
லக்ஷர்பூதசேனைத் தலைவர்களுக்கும் தகுதியாகக்கொடுத்
தனன், சாரதிகளும்அவற்றினைநடத்திவந்து தமதிறைவ
ர்முன்னம் நிறுத்தியபோது வெற்றிமாலையணிந்தவீரவா
குதேவர் முதலிய துரைகள்அத்தேவர்களின்மீதுஆரோக
ணித்துச் சொர்ணமயமாக விளங்கும்இமயராசபுத்திரியா
கிய பார்ப்பதியார்திருக்குமாரனைத்தொழுதுபோற்றி எம
தாண்டவனைமும்முறைவலம்வந்து அவர்அனுக்கிரகத்தி
னையும் விடையையும் பெற்றுக்கொண்டு சுத்தவீரராகிய
ஆயிரவெள்ளம் பூதப்படைகள்ஆர்ப்பரித்து எங்கும் நி
றைந்துவரச்சிவகுமாரனுக்கு முந்தி நடக்கின்றகாலையிற்
பூதப்படைத் தலைவர்களுக்கும் இலக்ஷர் எண்மரிவர்க
ளுக்கும் நாயகமாய்வீரவாகுதேவர் நடுவிற்பலதிசைகளி
லும் விழிகளைச்செலுத்திப் பார்வையிட்டுக்கொண்டு செ
ன்றனர். இப்பிரகாரம்மாயமாபுரியைச்சூழ்ந்து சண்டை
செய்வதாக வீரவாகுவைப்படைகளுக்குத்தலைவராக்கிஅ
னுப்பியபின்பு அலைகளைவீசிஒலிக்குஞ் சமுத்திரத்தினை
யொத்து ஆர்ப்பரித்துமற்றஆயிரவெள்ளம் பூதசயின்னி
யங்கள் மொய்த்துவரவுந் தேவர்களுக்கதிபனுகியஇந்திர
னுதியர் தொழுதுபோகவுங்குமாரதேவரானவர்பின்னணி
யிற்சென்றனர்.

இவ்வண்ணம்எமதிறைவன் பின்பற்றிவரும்போது க
ர்த்தன் கட்டளையின்படிக்கு முன்னம்போகின்ற வீரவா
குதேவனைச்சுற்றிக்கொண்டு தூளிபடலமானது எங்கும்
பரந்தலைக்கச் சேனைகள்போவது எப்படிக்கிருந்ததெனி
ல் ஆதிகாலத்திற் சிற்பரமூர்த்தியாகிய சிவநாதன்நகைய
மூலானது புகையைவீசிக்கொண்டு திரிபுரங்களின்மீதுந
டந்ததைநிகர்த்துக்காட்டியது இவ்விதஆரவாரங்களுடன்
போகின்ற சேனைப்பெருக்கிற் சிங்கங்கள் பூண்டதேர் அ
னந்தம் பூதங்கள் பூண்டதேரனந்தம் பஞ்சலட்சணங்
களையுடைய புரவிகள் பூண்டதேர்கள் அனந்தமாகச்
செல்லுகின்றதின்காட்சி எப்படிக்கு விளங்கியதெனில்
விரிந்த சமுத்திரத்தி னிடத்தில் மேகசாலங்களுங் க
ப்பல்களும் போவதையொத்து விளங்கியும் சேனைகள்
அடர்ந்து போவதினுல் ஓடவிடங்கிடையாமல்நெருங்குந்
தேர் உருளைகளுடன் உருளைகள் தாக்கவும் வீரர்கள் நெ
ருக்கத்தினுல் அவர்கள்கரங்களிற் பற்றியிருக்கின்ற ஆயு
தவிதங்கள் ஒன்றுடனென்று தீயெழஓராய்ந்தும்பலநிற
த் துவசபடாங்கள் காற்றினுல் அசையுந்தோறும்ஒன்
றையொன்றுபின்னிப்புரள்வதினுலும்அவ்வெல்லை எப்படி
க்குத் தோன்றியதெனில்பூதவீரர்கள்சத்திராதிகளுடனெ
திர்த்துப்பொருகின்றதையொத்தது இத்தகையஆடம்பர
ங்களுடன் போகின்றசேனுசமுத்திரத்தின் இடை யிடை
யில் வெற்றிச்சங்கங்கள் ரணபேரிஜயபேரிகள்மத்தளம்உ
டுக்கை-எக்காளம்-சின்னங்கள் - முதலியபதி னெண்வகை
வாத்தியங்களும் அதிகரித்தொலிக்கும்ஓசையும்அவர்கள்
நடக்கும்போதெழுகின்ற துகள்பெருக்கும்ஓங்கிச்செந்தா
மரைவாசியாகிய பிரமன்பதத்தையும்மூடியது இவ்வித
சம்பிரமங்களுடன் நடக்குஞ் சேனைவீரர்களுங்கோபமே
லிட்டு உரத்துப்பேசும் பூதர்களும் போற்றிசெல்லஅவர்
களுக்குத்தலைவராகியவீரவாகுதேவர்ஜயசாலியாகியதாரு
கன்வாசஞ்செய்யும்மாயமாபுரத்தைச்சேர்ந்தபோதுபூதப்
படைகள்வீராவேசங்களுடன்அப்பட்டணத்திற்பிரவேசி
த்துஎதிர்ந்தஅவுணவீரர்களை வளைத்துக்கொண்டு கொ
டியசண்டையினைச்செய்துசாடுவதைக்கண்டதூதர்கள்அ
திவேகமாய்ஓடித்தமத்திறைவன் அரண்மனையைச்சேர்ந்
துசபாமண்டபத்தில்விளங்குஞ்சிங்காதனத்தின்மேல் வீ
ற்றிருந்தரசுசெலுத்துந்தாருகாசுரனைக்கண்டு சேவித்துக்
கரங்களைக்கூப்பிநின் றுவிண்ணப்பஞ்செய்கின்றனர்,மகத
யிஸ்வரியங்களைஅனுபவித்துவீற்றியிருக்கின்றஎமதிறைவ
னேமனவருத்தமாகியசமாச்சாரமொன்றைக்கேட்டருள்க
உமதுதமையன்சூரபதுமன்முன்னஞ்சிறைச்சாலையில்அ
டைத்து வைத்திருக்கின்றதேவர்கள் காவலைவிடுவித்துக்
கொண்டுபோவதாகயத்தனித்துப்பரந்தசடாமகுடத்தினை
யுடையபரமசிவகுமாரல்கந்தனெம்பவனொருவன் வருகி
ன்றனனென்று அந்தரவாசிகளாகிய சிலதேவர்கள்வசனி
த்துக்கொள்ளக்கேட்டோம் நமக்குப் பயந்தொளித்துத்தி
ரிகின்றவிண்ணவர்என்னமோபிதற்றுகின்றனரென்று அ
தை ஒருபொருளாகமதியாமல் அசட்டையாகவிருந்தோ
ம் அவ்வாறேஇரண்டாயிரவெள்ளம் பூதப்படைகள்சூழ்
ந்துவர ஆறுமுகனொருவன் திருக்கயிலையைவிட்டுவெளி
ப்பட்டனன். அவனுக்குமுன்வருகின்ற தூசிப்படையா
னது சலனமற்ற காவலையுடைய நமதுபட்டணத்திற் பிர
வேசித்து பலராட்சதவீரரைக்கொன்று அல்லோலகல்
லோலப்படுத்துகின்றது இதுசெய்திதேவரீர் சித்தமறிக
வென்று விண்ணப்பஞ்செய்தனர்.

இந்தப்பிரகாரஞ் சவிஸ்தாரமாகத் தூதர்கள்அறிக்கை
யிட்டமாத்திரத்தில் உலகங்களைஅழிக்கவெழுந்த வடவா
முகாக்கினியின்மீது நெய்சமுத்திரம்பெருகுமாயின் அத்
தீயானது அதிகரித்தெழுமாறுபோலத் தட்சணமேகோ
பமேலிட்டு நவரத்தினமயமாகப் பிரகாசித்திராநின்றசிங்
காதனத்தைநீங்கிக் குன்றுக்கொப்பாகப்பாரித்துவிளங்கு
கின்ற கிரீடமானது அண்டகோளகையை முட்டக்குதித்
தெழுந்து விழிகள்சிவந்து தீப்பொறிகளை யிறைப்பதாக
ச்சிறி பக்கத்தில்நின்கின்ற தூதரைப்பார்த்துக் கொஞ்ச

மாவதுபயமில்லாமல் லட்சுமீகரம்பொருந்திய இந்தப்ப
ட்டணத்தின்மீதுவந்து வருத்துகின்ற பூதச்சேனைகளையு
ம் மற்றவீரர்களையும்புற்கள்செழித்து வளர்ந்திருக்கின்ற
காட்டினிடத்திற் தீயானதுமீறிப்பரவி அழிப்பதுபோ
லக்கொன்று நாசஞ்செய்யக்கடவேன் இந்தநிமிஷத்தில் ந
ம்முடைய சேனைகளனைத்தையும் அதிவேகமாகக்கொண்
டுவந்து சேர்க்கக்கடவீர்களென்று கட்டளையிட்டனன். அ
ப் பணிவிடையின்படி முடிப்பதாகவணங்கித் தூதர்கள்
போனபின்பு அவர்கள்வருகிறபரியந்தம் தாருகாசுரனு
க்குத் தரித்திருக்கக்கூடாமையாற் பக்கத்திற் காத்திருக்
கின்ற வேற்படையைத்தாங்கியபரிசனங்களைப்பார்த்துஇ
ந்தநிமிஷத்தில்நமதுதேரைக்கொண்டு வருவீரெனப்பணி
த்தவுடன் அவர்களோடி நிமைகொட்டுவதன்முன்னந்து
ரத்திவந் தெதிரில்நிறுத்த வீரசிங்கத்தைப்போலத்தாவி
அதன்மீதேறி வீற்றிருந்து சபையிலிருந்து மந்திரிகள்பி
ரதானிகள்போற்றிச் சூழத்தக்கதாக அவர்களுடன்நடக்
கும்போது தாருகன் இத்தினம் சாகப்போகின்றனனென
த்தெரிந்து அதுவரையில் அவன்பெற்றிருக்கின்ற கீர்த்தி
களனைத்தும் ஏகமாகச்சேர்ந்து துரிதமாகவந்துபரிந்துபு
ரண்டுபுரண்டு அழுதுசோர்வதைப்போல அவுணவீரர்
கள் பலவெண்சாய்மரைகளை யிருபக்கங்களினும் வீசிவர
வும், வெள்ளாடைத் தொங்கல்களை அசைக்கவும், திருச்சி
ன்னங்களூதிவரவும், சோடசகலைகளையுடைய சந்திரனை
ப்போலவிளங்கும் வெண்பட்டுக்குடைகளைக் கவிக்கவும்
வலம்புரிச்சங்கங்களைப் பொம்பொம்மென்றூதவும், ரண
பேரி ஜயபேரிதுடுமு தப்பட்டைமுதலியவாத்தியங்களை
சமுத்திரகோஷ்டியினும் ஓசையெழமுழக்கவும், இவ்வி
தச் சம்பிரமங்களுடன் பொன்னுருளைகள்பூண்டதாய் ம
ணிகள் கொடிகுடைமுதலிய சிறப்புகளைப்பெற்றுப் பல
சிங்கங்கள்பூண்டு மேகத்தினும் வேகமாய்ச்செல்லுஞ்சே
மத்தேரின்மீது சர்வசங்காரகாலத்தில் மன்னுயிரனைத்து
ந் தமதுநுதல்விழித்தீயினாற் றகிக்கப்பட்டுக்கிடக்கின்றசு
டலையினிடத்தில்நிருத்தஞ்செய்யும் பெருமையினையுடை
ய பரமேஸ்வரர்திரிபுரதகனஞ் செய்யவெழுந்தகாலத்திற்
றேவர்கள் அமைத்தபேரணிகள்பலவற்றுள்ஒன்ருகச்சே
ர்ந்திருந்த மேருவென்னுந்தனுசை எடாமல்நகைத்தெரிந்
தனர்அந்தமேருவைப்போலவுந் திருப்பாற்கடலை மத்திக்
குமுன்னிலையில் மத்தாகநாட்டப்பட்டுக்கவிழ்ந்தகாலத்தி
ல் விஷ்ணுவினால் நிலைபெற நாட்டப்பெற்ற மந்தரகிரி
யினைநிகர்த்தும் முழுமணியினாற் செய்யப்பட்டுப் பாரி
த்திருக்கின்ற தண்டாயுதமொன்றினைச் சுமந்து ஒருபாரி
சத்தில்வரவும் மற்றதேவாஸ்திரங்கள்முதலிய சிறந்தப
டைகள்அனந்தம் நிறைத்திருக்கின்ற தேர்களும்பின்றொ
டர்ந்துபோகவும் இப்படிக்கு யுத்தசன்னத்தனாய் நடக்கு
ம்போது தாருகன் கட்டளையின்படிக்குத் தூதர்போய்அ
றிக்கையிட்டமாத்திரத்திற் புயங்கள் வானத்தோங்க அதி
ககளிப்புடன் சர்வாயுதபாணிகளாய்வீரங்களைப்பேசியெ
ழுந்த அவுணச்சேனைகளும் அலைகளைப்போலத்தாவுங்க
தியையுடைய புரவிகளும் மலையையொத்த பாரித்ததேர்
களும் கிம்புரிக்கோடுகளைப்பெற்ற மதயானைகளும் ஏக
மாய்ச் சத்தசாகரங்களைப்போல இரைந்துவந்து நிறைய
அவர்களுக்குத்தலைவராகிய அவுணவீரர்கள் பர்வதாகிரு
தியாகிய பலரதங்களினேறி மகம்மேருவினைச் சூழவிரு
க்கின்ற அஷ்டகுலா சலங்களைப்போலத் தாருகாசுரனு
க்கு நாற்புறங்களினும் போற்றிச்செல்லவும் இவ்வித ஆ
டம்பரங்களுடன் நவரத்தினமயமாகிய கிரீடங்களைத்தரி
த்த அவுணத்தலைவர்முதலாகிய சதுரங்கவெள்ளங்களும்
விரைந்துபோகின்றபோது பெருத்தெழுந்த தூளிப்பட
லமானது மண்ணுலகமெங்கணும்பரந்துமீறி விண்ணுல
கங்களினும்நிறைந்து வருத்தியது அதுஎப்படிக் கிருந்த
தெனில் நெருங்கியசத்துருக்களுடன் சண்டைகொடுத்து
வெல்லத்தக்க போரணிகளைத்தாங்கித் திரியம்பகன் முப்
புராதிகளின்மீது சென்றகாலத்தில் ஆயிரம்பணமகுடங்
கள் கவித்திருக்கின்ற சேஷசயனத்திற்பள்ளிகொண்டிரு
க்கும் மகாவிஷ்ணுவாகிய பாணத்தினைச்செலுத்தஅதின்
மூலமாக மூண்டெழுந்த அக்கினிச்சுவாலையானது பாத
கராகியஇராட்சதர்தேகங்களைச்சுட்டெரித்தகாலத்தெழுந்
தபுகைப்படலமானது எங்குமூடியதைப்போலவிளங்கவு
ம் நீலகிரியைப்போலக்கறுத்த தேகத்தினைப்பெற்றுமும்
மதங்களையும் ஒழுக்கிவருகின்ற யானைகளின்மீதுந் தத்தி
த்தாவிநடக்கும் புரவிகளின்மீதும் பர்வதாகிருதியாய்வே
கங்கொண்டுசெல்லும் இரதங்களின்மீதும் ஜயசாலிகளா
கிய அவுணவீரர் கரங்களினுங்கொண்டிருக்கின்ற துவச
படங்கள் மேலோங்கிப் படபடவென் றசைவதைக்கண்
டால் அழகியபொன்னாட்டிற் பெருகிப்படிந்த துகட்களை
த்துடைத்துச் சுத்திசெய்வதைப்போல விளங்கவும் இவ்
விதச் சிறப்புகளுடன் பலவாத்தியங்களும்முழங்க இரா
ஜேந்திரனாகியதாருகன் தன்பதியைக்கடந்து வெளிவந்த
தைக்கண்டமாத்திரத்திற் சமுத்திரத்தின்மீதுபலநதிகள்
பெருகியதைப்போலப் பருத்தசினைகளைப்பெற்றுவானத்
தினையளாவநிற்கின்ற மராமரங்களை வேருடன்பிடுங்கியு
ம் பலஆயுதங்களையுங் குன்றங்களையும்நீண்டு பருத்திரா
நின்ற கரங்களிற்கொண்டு புசபலபராக்கிரமசாலிகளாய்
கோபமேமேலிட்டிருக்கும் பூதசேனைகள் உச்சாகங்களு
டன் ஆர்ப்பரித்து எதிர்கொண்டு தேவர்கள்முதலியசகல
ராலும்பூசித்துவணங்கும் பெருமையினையுடையமுருகர
து பாதாரவிந்தங்களைத்தியானித்துப் போற்றினவர்களா
ய்ப்பராக்கிரமசாலிகளாகிய சிவகணங்கள்குன்றுகள்தழை
த்தோங்கியிருக்கும் மராமரங்கள் கதைகள் எழு மழுசூ
லமுதலியஆயுதங்களையுஞ்சத்துருக்களின்மீதுகோபித்து
ச்செலுத்தவும் அதைக்கண்டகொடியமனதைப்பெற்றவி
ராட்சதர்கள் அதிகவீராவேசங்களுடன்சீறி மந்தரத்தை
யொத்த தனுசுகளை வட்டாகாரமாகவளைத்துக் கொடியதீ
ட்சண்ணியமுள்ள பாணங்களைப்பிரயோகித்துங் கூரிய
வேல்களையெறிந்தும் சக்கரங்களைச்செலுத்தியும் மற்றஆ
யுதவிதங்களையும் ஒன்றனந்தமாகப் பிரயோகித்தும் பெ
ரும்போர்களைச்செய்யவும் இப்பிரகார மிருதிறத்துச்சயி
ன்னியங்களும் அஸ்திரசஸ்திரங்களை அமோகமாக ஒரு
வர்மீதொருவர்ஏவி ஜயிக்கவேண்டுமென்னும்வயிரங்களு
டன்மேலிட்டுப் போராடுகின்றகாலையிற்பெருத்தெழுந்த
தூளானதுபுகையைப்போலவானநாடுகளிற்பரவித்தேவ
ர்கள்விழிகளில் நிறையும்போது கண்கள்அருகலெடுத்து
ச் சகிக்கப்படாமையால் கண்களில்நீரானதுதாரைதாரை
யாகச்சொரிவது எப்படிக்குத்தோற்றியதெனிற்சமர்க்கள
த்திற் பெருக்கெடுத்தோடும் உதிரத்தினை அனலாகவெண்
ணி அதைமேலெழாமல் அவிப்பதற்கு வானகங்கையை
ச்சொரிவதுபோலக்காட்டியது. இவ்வண்ணம்அவுணவீ
ரரும் பூதவீரரும் பின்னிடையாமற் பலவிதபோர்செய்

வதினால் இரத்தம் பீரிட்டொழுகத் தோள்களற்றுஞ் சிரங்களறுப்புண்டும்வயிறுபீறுண்டுங் குடல்களறுந்துமேகங்களை யொத்துப்புரளவுங் கால்கள்கண்டிக்கப்பட்டு மிப்படிக்குத் தானவர்களிற் பலர்பின்னப்பட்டு மாண்டனர். போர்த்தொழிலிற் சூரராகவிருக்கின்ற பூதவீரர்களினுஞ் சிலர்அதப்பட்டனர். இப்படிக்குப்போராடுகின்றவர்களிற் சிவகுமாரன் சேனைகள்கைமிஞ்சி எதிரிகள்ஏறிவந்த பருத்ததேர்களையெடுத்து மற்றொன்றிற்றாக்கி யுடைத்தும் வாயுவேகத்தினு மேலிட்டுச்செல்லும் வேகத்தினையுடைய குதிரைப்பந்திகளைக் கண்டதுண்டங்களாகச் சிதைத்தும் சின்னபின்னப்பட்டுக்கிடக்கின்ற இரதங்களிற்பூட்டியிருந்த பொன்னுருளைகளை அழகியகரங்களினாலெடுத்து விரல்களிற்கோத்துச் சக்கரத்தைப்போலக் கிறுகிறெனச்சுழற்றி ஜயசாலிகளாகிய அவுணவீரர்நாசமடைய வேகமாய்ச்செலுத்துங் காரணத்தினாற்கறுத்த மேனியைப்பெற்ற சிவகணங்களிற் சிலர் மகாவிஷ்ணுவைப்போல விளங்கினர். இவையன்றியும் வெற்றிவேலாயுதக்கடவுளினது படைவீரர்செய்த அதிசயச்சண்டைகளையுங் கேட்பீராக.

சிவந்தகுளம்பினையுங் கறுத்தவாலையுமுடைய குதிரைகளை யிரதங்களிற்பூட்டிச் செலுத்தும்போதுபூமியினின்றிவானவெல்லையிற்பாய்வதைப்போனாவிரும்பியிருக்கின்ற பூதவீரர்கண்டவுடன் தங்கள்கரங்களிற்பற்றிய விருட்சங்களினால்மோதிப் பூமிபாரந்தீர்வதாகநிலத்திற்கிடத்தியும் எழுகுகம்பியைப்போன்ற வாலினைப்பெற்ற மதயானைகளைக் கரங்களினாலெடுத்து அம்மானையாடுவதுபோலத் திசாதிசைகளி னெறிந்தும் பொன்னுருளைகளைப் பெற்ற தேர்களைப் பாதங்களினாலுதைத்துருட்டியும் கவரிகளைப்போல அழகாய்அசைகின்ற வால்களையுடைய புரவிக்கூட்டங்களைக் கால்களைக்கொண்டுதேய்த்தும் சித்திரமுகபடாம்விளங்கும்மத்தகத்தினைப்பெற்றமதயானைகளைக்கொன்றுவாட்டியும் இவ்விதமாக மாண்டபிணங்கள் மலையைப்போலஉயர்ந்து விழுந்துகிடக்கின்றதின்மத்தியில் உதிரமானது தேங்கியிருப்பதைப்பார்த்தால் பிரகாசம்பொருந்திய சூரியனை மண்டலம்வளைந்திருப்பதைப்போலக் காட்டியது. இதுவுமல்லாமல் வீராவேசங்களுடனெதிர்த்துக் கொடியபோரினைச்செய்கின்ற கறுத்தவுடலையுடையஅவுணவீரரைப் பூதகணங்கள் வளைத்துக்கொண்டு திகைக்கும்படிக்குச்சாடி அவர்களைக் கரங்களினாற்பிடித்துக்கிறுகிறெனச்சுழற்றி வீசியபோது வானவெல்லை முற்றினுஞ்சென்று கரங்களிற்பற்றிய பிரகாசம்பொருந்தியவாளாயுதங்களுடன் மீண்டுவந்துவிழுவதைப் பார்க்குமிடத்தில் வானத்திற்பரவியிருக்கின்ற மேகங்களானவை தங்கள் நிலைகளிற்றப்பி மின்னலுடன் பூமியைநோக்கிவருகின்றதை யொத்துக்காட்டவும் இவையன்றியும் ஆயிரவெள்ளம் பூதவீரர்களிற் சிலரோங்கிப் பக்கங்களில்வானத்தைஅளாவ ஓங்கியிருக்கின்ற பர்வதங்களைப் பறித்துப்பறித்து ஒன்றனந்தமாக ரிவ்வுரிவ்வென்றெறிந்து புசபலபராக்கிரமசாலிகளாகிய இராட்சதவெள்ளங்கள் பலவற்றைச் சின்னபின்னப்படக்கொன்று திரிவதைநோக்கின் ஊழிக்காலத்திலதிகரித்து மலைகள்முதலியவனத்தையும்புரட்டி உலகங்களை அழிக்கும் பிரசண்டவாயுவைப்போலக் காட்டியது.

இவ்விதமாகம்பூதப்படைகள்கைமிஞ்சித் தாருகன்சேனைகளாகிய ரதகஜதுரகபதாதிகளை மடக்கிக்கொண்டு தும்சம்பண்ணுகின்றகாலையில் சின்னபின்னப்பட்டு ரணக்களத்திலிறைந்துகிடக்கின்ற பிணங்களைத் தெவிட்டவுண்டு உதிரபானங்களைச்செய்து திரிகின்றநாய்கள் ஒருபாரிசத்திலூளையிட்டோடவும் பூதபசாசங்கள் டாகினிகாளிக்கூட்டங்கள் கொழுத்தமாமிசங்களைத்தின்று ரத்தங்களைக் குடித்து வெறிகொண்டு ஒருபாரிசத்திற் குதித்துக்குதித்துக்கொண்டாடி நடிக்கவும் பருந்துகள்கூளிகாக்கைமுதலிய பட்சிகள் பிணங்களைப்பிடுங்கித்தின்று வானத்திற்பந்தலிட்டுலவவும் யானை குதிரை ராட்சதர் அளவற்றுமாண்டுவிழுந்துகிடக்கின்ற பிணமலைகளானவை இருதிறத்துப் படைகளின்மத்தியில் ஓங்கியிருப்பதினால் வீராவேசங்களுடன் தாராளமாகச் சண்டைசெய்வதற்குக் கூடாமையால் பூதர்களும் இராட்சதர்களும் மனவருத்தப்பட்டு அதன்மீதேறிவாதாடவும் இப்படிக்குப்பொருகின்றவர்களிற் சுப்பிரமணியதேவர் சேனைவீரர்கள்மீறிச்செய்த சண்டையின்பிரபாவத்தை என்னென்று சொல்லுவேன் இந்தப்பூமியே அம்மியாகவும் புசபலபராக்கிரம சாலிகளாகிய சிவகணங்களினதுபருத்து நீண்டகால்களேபருத்தகுழவிகளாகவும் எதிர்த்தராட்சதர்களைப் பற்றிப்பற்றித் தேய்த்துத்தேய்த்து உதிரவெள்ளமோட அரைத்துக் கொன்று திரியும்போது இராட்சதவீரரும் பின்னிடையாமல் அதிககோபத்துடன் பூதப்படைகளை வளைத்துக்கொண்டு சின்னபின்னப்படவாட்டிக்கொடியபோரைச்செய்து மேலிடுவதைக்கண்ட பூதவெள்ளங்கள் கொக்கரித்துக்கொண்டு சிலரோங்கி வானத்தினையளாவவோங்கித் திசாதிசைகளிற் கிளைகளைப்பரப்பி யிராநின்ற மராமரங்களை வேருடன் பிடுங்கிக்கொண்டு கிறுகிறெனச்சுழற்றி ஒவ்வொருமோதலினாற் றத்தித்தாவிச்செல்லும் பலகுதிரைகளைப் பூட்டியிருக்கும் பரந்ததேர்களனந்தம் நுறுங்கிப் பொன்னுருளைகள் வேறு அச்சுவேறு மச்சுக்குத்துக்கால் கொடுங்கை வெவ்வேறாகவிழமோதியும் மதயானைகள் ஆயிரம்பதினாயிரம்துதிக்கை கோடுகள் உரலையொத்தகால்கள்முதலிய உறுப்புகள் சின்னபின்னப்பட்டிறையத்தாக்கியும் சூலங்களைவீசியு மிருப்புலக்கைகளைக்கொண்டுமாறியும் இடியைப்போலக் கைக்குத்துகளினாலிடித்தும்இவ்விதமாகவிராட்சதரை அலைக்கும்போது சிரங்கள் கரங்கள் கால்கள் பின்னப்பட்டுமாளவும் கொடியபோரைச்செய்து பூதவீரர்கைமிஞ்சித் தாருகன்நால்வகைச் சேனைகளையும் வெகுவாய்மாண்டு பின்னிடையும்படிக்கு வீறியுலாவும் போதுரணக்களமெல்லாம் பிணமலைகளாகக் குவிந்தபோதுபலகவந்தங்கள்கூத்தாடவும் ஆற்றின்பெருக்கைப்போல உதிரவெள்ளமானது மேலிட்டிரைச்சலிட்டோடப்பிணங்களான்வைமச்சங்களையொத்துஅமுழுந்தியும்மேலெழுந்தும்வருவதாகப்பாய்ந்துசமுத்திரத்திற்பெருகிக்கறுத்தநிறத்தைமாற்றிச் சிவந்தகடலாக்கவும்பிணங்களையும் உதிரங்களையுந்தொந்திகள்நிறையஉண்டவெறியினால் பூதபைசாசகூட்டங்கள்சிவகுமாரன் கீர்த்திகளைப் பாடிப்பாடிக் குதிக்கவும்உதிரமாமிசங்களைஏராளமாகத்தின்று அத்தலத்தைநீங்க மனமில்லாமல் பட்சிசாலங்கள்வானத்தில்வட்டமிட்டுத்திரியவுமிப்படிக்குத்தன் சேனைப்பெருக்கானது அதப்பட்டுப்போனதை புசபல பராக்கிரமசாலியாகிய தாருகாசுரன் கண்டமாத்திரத்தில் வடவாமுகாக்கினி சிறி

யெழுவதைப்போலக் கோபங்கொண்டு விழிகளில் அக்கினிப்பொறிகள்சிதறப்பாரித்ததேரிலிருந்து அதிவேகமாய் நிலத்திற்பாய்ந்து சேமத்தேரில்வருகின்ற மங்கரகிரியையொத்த வலியவயிர தண்டாயுதத்தைக் கரத்திற்பற்றிக்கொண்டுகிறுகிறெனச்சுழற்றி அண்டங்களதிரத்தக்கதாக ஆர்ப்பரித்துக் கோடானுகோடி பூதச்சேனைகள் மாண்டுருளமோதியும் வலியபாதங்களினாற் றேய்த்துக்கொன்றுமிவ்விதமாக விருளைப்போலக்கறுத்த தேகத்தினைப்பெற்றதாருகனனவன்கரத்திற்கொண்டிருக்கின்ற பாரித்ததண்டாயுதத்தினால் பூதர்மீது மோதியகாலத்திற் சிரங்கள் பிளந்தும்பற்களுதிர்ந்தும் புசங்கள்சரிந்தும்கால்கள்முறிந்தும் சின்னபின்னப்பட்டு அக்காலத்திற்பெருகியோடும் உதிரநிணங்கள்பிசறிக் கொண்டிருக்கின்ற சேற்றினிடத்தில்அழுந்தினர்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? அவுணராசன்கரத்தில்விளங்கும் வயிரதண்டமானது பெரும்புறக்கடலைநிகர்த்துப்பரந்திருந்தபூதவெள்ளத்தைக் கண்டதுண்டப்படவாட்டியதெனச்சொல்வது அதற்கொருபுகழோபுசபலபராக்கிரமசாலியாகியதாருகன் பூதப்படையைக்கொல்லச்சுழற்றி ஓங்கியகாலத்தில் அஷ்டதிக்குகளும் அண்டகோளகையும் நெக்குவிட்டுவெடிக்க மோதியகாலத்திற் பூமிபத்தல்பத்தலாக வெடித்தும் இப்பாடுபடுமாயின்மற்றவைகளின்கேட்டைப்பேசவும் வேண்டுமோவெற்றிமாலைபுரளும் விசாலமாகிய மார்பையுடைய இராட்சதராசன் பற்றிய வயிரதண்டமானது சமர்க்களத்தி லெதிர்ந்தவர் சிரங்கள் புயங்கள் மார்புகள் கால்களானவை தறிபட்டுக் கருடனைக்கண்ட சர்ப்பங்களைப்போலத்துடிதுடித்துக்களமெங்கும் புரளக்கொன்று பூதப்படைகளனைத்தையும் பூமியில் அருக்கடையாகத்தள்ளியது இப்படிக்குஅதலகுதலப்படுகின்ற காலையில் பூர்வத்தில் மகாவிஷ்ணுவானவர் கோபித்தேவிய சக்கரப்படையினைக் கழுத்தணியாகத் தரித்தபாதகன் பூதப்படைகளில் மிகுதியாகக்கொன்றவிதத்தையும் தப்பினவர்கள் பகைவன்மீது போகவிருந்த தங்களிடத்தில் நில்லாமல் பலதிசையினும் ஓடியொளிப்பதையும் சேனைத்தலைவர்கள் பார்த்துத்திகைத்துஇனிநம்மாலாவதொன்றில்லைசிறிதுநேரமிவ்விடத்தில் நிற்போமாகில் படாதபாடுகள்படவருமென்றுமனங்கலங்கித்தங்கள்சேனைகளுக்கு முன்னம்அவர்களும்பறந்தனர், இவ்விதமாக ஜயசாலிகளாகிய பூதகணத்தலைவர் பின்னிட்டதை எண்மரும் இலக்ஷருங்கண்டவுடன் மானம்பாதிக்கக் கோபமேலிட்டுத் தங்கள்தேரைத் தூரத்திவந்துஇராட்சதராசனை வளைந்துகொண்டு வீராவேசங்களுடன்தங்கள் கரத்திற்பற்றியிருக்கின்ற பாரித்ததனுசுக்களை வட்டாகாரமாகவளைத்துத்திசைகளதிரக் குணத்தொனிகாட்டிக்கூறிய அலகையுடைய அளவிறந்த திவ்வியபாணங்களைக்கார்காலவருஷத்தினைப்போலப்பலதிசையினும் நின்றுவிடுகின்றவைகள் சிறிஅனலையிறைத்துக்கொண்டு அதிவேகமாகவந்து யானைமுகத்தினைப்பெற்ற அவுணராசன் தேகத்திற்றுக்கிப் பிளவாமலும்யாதொருகாயங்களையுஞ்செய்யாமலும் முனைகளொடிந்துவேகமாறிப்பலபலவெனப் பூமியில்விழுந்தது, அதுஎப்படிவிளங்கியதெனில்புத்தியீனனுப்க் கொடியதரித்திரத்தை அனுபவித்திருந்த ஒருவனுக்கு மகதயிஸ்வரியம்வந்து நேர்ந்தகாலத்திற்பெரியோர்கள் நீதிகளைச்சொன்னால் அவ்வாக்கியங்கள்அவன் செவிகளில் நுழையாமல் அப்பிரயோசனமாகப் போவதைநிகர்த்தது, இஃதன்றியும்புசபலபராக்கிரமசாலிகளாகிய வீரவாகுதேவர் துணைவர்கள் தூண்டியகுரூரமானசரங்கள்முற்றுமிளைந்து புகைந்துபோய் அண்டாண்ட புவனங்களெங்கினும் கொண்டாடத்தக்க ஜயத்தைநாட்டியிருக்கும் தாருகனுடையவிசாலமாகிய மார்பிற்றாக்கித் துளைக்க வலியில்லாமற் சலசலெனவிழுகின்ற தோற்றமெப்படிக்கிருந்ததெனிற் கோடைகாலத்திற் கல்மழையானது பாறையினிடத்திற்பெய்தகாலத்திற்சிதறிப்பலதிக்கினுமிறையுமாறுபோலக் காட்டியது.

இந்தவிதமாகத்தாங்கள்செலுத்திய பாணகோடிகளானவை சின்னபின்னப்பட்டுப் பிரயோசனப்படாமற் றிரும்பியதை எண்மர் இலக்ஷர் கண்டவுடன் மனஞ்சகியாமற் கோபதீபிதர்களாய்த்தேவாஸ்திரங்களையெடுத்துத்தங்கள் விற்களிற்சந்தித்து அபிமந்திரித்துப்பகைவன்கண்டத்துக்கும் மார்புக்குந்தோளுக்கும் குறிபார்த்துச்செலுத்தினர், அவைகள்வெளிப்பட்டவுடன் பலரும்நடுங்கத்தக்கதாக அதிகமகிமைகளைக்காட்டிப் பற்பலபடைகளைப்பெருக்கித் தீயையும் புகையையும்வீசிக்கொண்டுபோய்த்தாருகப் பாதகனைக்கிட்டியவுடன் வலிகுறைந்துநாணித்திரும்பிவிட்டது இப்படிக்குக் கடவுள்பாணங்கள் வலிகுறையக்கண்டதேவர்கள் மருண்டுகரங்களைப் பிசைந்துகொண்டு இஃதென்ன வநியாயம்முக்கியமாகிய தேவாஸ்திரங்களே அபலமாகுமாயின் இப்பாதகனைமற்றெவ்விதத்திற் கொல்வது இதற்கென்ன செய்வோமென்று கிலேசித்துத்தங்களுக்கென்ன அனர்த்தம் விளையுமோவென வருந்தித்திகைத்துப் பார்த்திருக்கின்ற தருணத்தில் புசபலபராக்கிரமங்களுக்கு நிகரற்றதீரனான தாருகாசுரன் வடவாமுகாக்கினியைப்போலக் சொதித்தத்தன்கரத்திற் பற்றியிருந்த வயிரதண்டத்தினைக் கரகரெனச்சுழற்றி வேகமுள்ள குதிரைகள் பூண்டு பர்வதத்துக்கொப்பாகக்காட்டத் தன்னைச் சூழநின்ற இரதசமுகங்களின்மீதில் மோதினன்அத்தாக்கலினால் அவைகள் நுறுங்கிச் சின்னபின்னப்பட்டு பூமியிலிறைந்தது உடனே தன்னுடைய நீண்டதுதிக்கையை நீட்டித் தனுர்ப்பாணிகளாய் நிலத்திற்றிகைத்து நிற்கின்ற இலக்ஷரைப்பற்றியெடுத்துச் செண்டுகளைப்போலச் சமுத்திரத்தின் மீதில் வீசினன்அவர்களுஞ் சுழன்றுகொண்டுபோய்க் கரைகளின்மீதுநிறைந்தோங்கிநின்றதெங்கின் கனிகளானவை முதிர்ந்தபோது பெருங்காற்றின் மோதலிற்பட்டுக் குலைகள்குலுங்கித்தடாகத்திற்சலசலென உதிருமாறுபோலக் கருங்கடலில்விழுந்து அலைச்சற்பட்டு மெல்லவெளிவந்துஅதன்கரையோரங்களிற் சேர்ந்து யாதுந்தோற்றாமற் றிகைத்துவருந்தியிருந்தனர், இந்த அபஜயத்தை எண்மரிலொருவனாகிய வீரகோளரியென்பவன் கண்டவுடன் மனம்பொறாமற்கோபமேலிட்டுச் சீறித்தன்தேரை அதிவேகமாகத்தூரத்திவந்து பகைவன் முன்னம் நிறுத்திப்பாலசுப்பிரமணியதேவர்திருவடிகளை மனதிற்றியானித்துத் தன்கரத்திற்பாரித்துவிளங்குந்தனுசையிருகுதையும் ஒன்றுபடவளைத்து நாணேற்றிக்குணத்தொனிகொண்டு விஷத்துவைபலிட்ட அலகுகள் நகத்தகாயமாகவிளங்குங் கொடியபாணங்கள் நூற்றினையெடுத்துச் சந்தித்துஆகரணாந்தபரியந்தமிழுத்துச்செலுத்தினன், அவைகள்வெளிப்பட்டவுடன் வடவா முகாக்கினியைப் போலச்சீறிப் புகையையும்அனலையுமிறைத்துக்கொண்டு

அதிவேகமாகமாய்வந்து அவுணராசன் சிரத்திற் றரித்
திருந்த நவரத்தினமயமாகிய கிரீடத்தினைத் துகளாக்கித்
தள்ளயது அதுகாலையில் வானத்திலிருக்கின்றதேவர்கள்
வீரகேசரி வெற்றியையும் தாருகன்பங்கத்தையுந் தெரிந்
துசந்தோஷப்பெருக்கினுற் கற்பகமலரைஏராளமாகவாரி
வாரி ஜயாவிஜயபவாவென வாழ்த்திச் சோனைமாரியைப்
போல அவ்வீரன்மீதிலிறைத்துக்கொண்டாடினர்கள்.

அக்காலத்திற் றேவர்களுக்குண்டாகிய களிப்பையுந்த
ன்பகைவன் விஜயத்தையுந் தாருகன்கண்டவுடன் கோப
மிகுதியினுற் சரீரமுற்றினும் வியர்க்கவும் மானமொருபு
றத்திற் பாதிக்கவும்வருந்தி ஆக்கிரமித்துத் தன்கரத்திற்
பற்றியிருந்த வயிரதண்டத்தினை கிறுகிறெனச் சுழற்றி
த்தன்பகைவனுக்கிலக்காய்வீசிப்போட்டுத்திரும்பிப்பர்வ
தத்துக்கொப்பாகப் பாரித்து விளங்குந் தன்னிரதத்தின்
மீதிற் பாய்ந்து சிரோரத்தினங்களினுற் சோதித்திராநின்
ற கிரீடமொன்றையெடுத்துச் சிரத்திற்றரித்துக்கொண்டு
மண்டிபோட்டு வீற்றிருந்தகாலத்தில் அவன்செலுத்திய
தண்டாயுதமானது மணிகள்சத்திக்கஅதிவேகமாகப்போ
ய்வலியினுக் கொப்பற்றவீரகேசரியினுடையஅழகியமார்
பினிடத்திற்கோடையிடியைப்போலத்தாக்கிய மாத்திரத்
தில் மனங்கலங்கிப்பொறிகள்நிலைதப்பிக்கண்கள்சுழல அ
டியற்றபனையை நிகர்த்துக்களைத்துத் தேரின்மீதில்விழுந்
தான் அதனைப்புசபலபராக்கிரமசாலியாகியவீரவாகுதே
வர்கண்டு அதிககோபங்கொண்டு குன்றுக்கொப்பாகப்பா
ரித்தோங்கி யிராநின்ற புசங்களைப்பெற்ற தாருகாசுரனு
டன் சண்டைசெய்துஅவன்கர்வத்தையடக்கநினைந்து அ
திவேகமாகத் தன்னிரதத்தைத் துரத்திவந்து அவுணரா
சனெதிரில் நிறுத்தித் தேன்களைத்துளித்துப் பரிமளித்
திருக்கும் வெற்றிமாலைதரித்துக் கிண்கிணிக ளிருபாரிச
ங்களினுந்தொங்க விட்டிருக்குமொப்பற்றதன் தனுசையெ
டுத்து நாணேற்றிஅண்டமதிரக்குணத்தொனிசெய்து கூ
ரியஅலகையுடையதாய்க் கழுகிறகுகள்பூண்டு அனலையி
றைக்குங்கொடிய சரவருஷங்களைத்தாருகன்தேகத்திற்ரு
க்கிப்பிளக்கும்படிக்குப் பிரயோகித்துச்சிருங்கநாதத்தை
ச் செய்தனர், அவைகள் விடுபட்டவுடன் சகலரும்பிரமி
க்கும் படிச்குப் புகைந்தெரிந்துகொண்டு வீறிவருவதை
யுந் தன்னெதிரியினது மனத்துணிவையும் இராட்சதரா
சன் கண்டவுடன் வடவையைப்போற்சீறி நல்லகாரியங்
கொஞ்சமாவது பயமில்லாமல் என்னெதிரினும்நிற்கத்தக்
க மனவுறுதிபெற்ற உன்னுணவத்தையடக்குகின்றனனெ
ன்று மேருவையொத்ததன்காண்டீபத்தையேந்தி நாட்டி
நாரியைப்பிகிந்து அண்டகோளகை அதிர்ந்து வெடிக்கத்
தக்கதாக டங்காரசத்தங்காட்டி விஷத்தொகையலிட்டு அ
திகமகிமைகளைப்பெற்றபாணங்கள் ஒன்றனந்தமாகப்பூட்
டிச் சோனைமாரியைப் போலச்செலுத்தும்போது சேனை
களுக் கதிபனுனவர் கொதித்துப் பராக்கிரமத்தில் மிகுத்
த எழுஅர்த்தசந்திர பாணங்களைப்போக்கி எதிரிவிட்ட
சரங்க ளனைத்தினையும் சின்னபின்னப்படக் கண்டித்தெ
ரிந்து சிருங்கநாதஞ்செய்தனர். அதைக்கண்ட தாருகனு
னவன் ஆலத்தையொப்பச்சீறி என்னை யொத்தவனுடன்
எதிர்த்த நீ இத்துடனுசமாகப்போகக்கடவையென் வசப
தம்பேசி முத்தலைச்சூல மொன்றையெடுத்து மார்புக்குக்
குறித்து வீசினுன், அதுவும் வெளிப்பட்டவுடன்அனலை
யிறைத்துக் கொண்டுவந்து அழகிய மார்பகத்திற்றுக்கிய
மாத்திரத்தில் வலிகுன்றித்திகைத்து அதிகக்ளைபட்டுநின்
றுவிட்டனர், அதைஅவருக்குப் படைத்துணையாகவந்
த சகோதரர்கள் எழுவருங்கண்டவுடன் மனம்வருந்திவ
டவையைப்போற் கொதித்து விழிகள்சிவக்கஅதிவேகமா
ய்த் தங்கள்கரங்களில் விளங்கும்விற்களை வட்டாகாரமாக
வளைத்துக் கோடையிடிகளைப் போன்ற தீட்சணியமாகிய
சரவருஷங்களைப்பொழிந்து பகைவன்தேகத்தைமூடி ஆ
ர்ப்பரித்தார்கள் அவர்கள்செருக்கையும் படைகள்வரும்
மகிமைகளையுந் தாருகன்கண்டு தட்சணமே தன்காண்டீ
பத்திற் கணக்கிறந்த குரூரமாகிய சரங்களைச்செலுத்திமீ
றிவருகின்றபாணங்களை நடுவதுபாதியிற் கண்டித்துத்த
ள்ளி அத்துடன் போகாமல் மீளவும்அளவற்றகொடியஅ
ஸ்திரங்களைக் கரவேகமாகத்தூண்டித்தேகமெங்குணுங்கா
யப்படுத்திக் கைகாலாடவொட்டாமல் சிதைக்கும்போது
அவ்வருத்தங்களுக்கு எழுவருஞ்சகிக்க மாட்டாமையால்
பின்னிடைந்தனர் இப்படிக்குத்தனதுதம்பிமார்கள் எண்
மரும் சத்துருவின் முன்னின்று போராடுவதற்கஞ்சி வா
டிப்போனதையும் பகைவன் தீரனுய்ச் சிலரோங்கப் பூத
சேனைகள் முதலாக தளரும்படிக்குச் சரவருஷங்களைப்
பொழிந்துகொண்டு எதிரின்றிரணக்களமெங்கும் உலவு
கின்றதையுங்கந்தசுவாமியார் திருவடிகளைச்சிரத்துக்கணி
யாகக் கொண்டிருக்கும் வீரவாகுதேவர்கண்டவுடன் து
ணைவர்களுக்கு நேர்ந்ததுன்பங்களுக்கு மனம்வருந்தி உ
டனேகோபமானதுமேலிடச்சீறி நம்மவர்கள் இப்பாதக
னுக்கஞ்சித் திரும்புவதோவென்று மேலிட்டுத் தன்தே
ரை அதிவேகமாகத் துரத்திப்போய் ஜயவுச்சாகத்துடன்
பொருகின்ற தாருகாசுரனெதிரில்நிறுத்தி வெற்றிமாலைத
ரித்திருக்கும் பாரித்ததனுசை எடுத்துநாட்டி நாணேற்றி
க்குணத்தொனிசெய்தகாலத்தில் அவ்வதிர்ச்சியினுல்நிலை
பெற்றிருக்கின்ற பர்வதங்கள்பெயர்ந்துதாறுமாறுகவும்இ
ராட்சதசேனைகள் செவிகளிற்பட்ட மாத்திரத்திற்பொறி
கலங்கிப் பயப்பிராந்தியினுற் செவிகளைமூடிக்கொண்டுப
லதிசையினும் ஓடியொளிக்கவும் அந்தரவாசிகளாகியதே
வர்கள் மகிழ்ச்சி ஒருபுறத்தில்மீறிக்காட்டவும் அவ்வதிர்
ச்சிக்காற்றுமல் மனங்கலங்கித் திகைக்கவுமாயினர்.இதை
யோசிக்குமிடத்தில் எப்படிக்கிருந்ததெனில்,மழைபெய்
ய வேண்டுமென விரும்பினவர்கள் மேகங்கள் வானத்திற்
பரவியபோது களித்துப்பின்புஅதனிடையிற்பெருத்தெ
ழுந்தஇடியின்முழக்கத்துக்குப்பயந்து வருந்துமாறுபோ
ன்றது.

இவ்விதமாகச்சகலருந் திப்பிரமைகொள்ளத்தக்கதாக
டங்கார ஒலியைக்காட்டி ஞானவான்களாற் கொண்டாட
வல்ல பெருமையினையுடைய வீரவாகுதேவரானவர் வில்
லைவளைத்துக் கரத்திற்பற்றிக்கொண்டுவெற்றிமாலை தரித்
திருக்கும் பாரித்தபுசங்களையுடைய வீராதிவீரனுனதா
ருகாசுரனைப்பார்த்து ஆலகாலவிஷத்தினைப்போலக் கொ
தித்துஇதனைச்சொல்லுவதாயினர் உன்னுடன் போராடி
ய அபலராகிய சிலபூதசேனைகளையும் தனுர்வித்தைகளை
யின்னமும்பூரணமாகக் கற்கவேண்டிய சேனைத்தலைவர்
முதலிய வீரரையும்உன்புசவன்மையினுல் வாட்டினமெ
ன்று கர்வித்திருக்கின்றதுபோற் காணப்படுகின்றது,ஆத
லால் உன்னை இமைப்போதிற் சின்னபின்னப்படக் கண
டித்துக்கொன்று உன்பிராணனை வீரசொர்க்கத்துக் கனு
ப்புவேனென்று சபதங்கள் பேசியதைத் தாருகன்கேட்டு

மறுமொழிசொல்லுவான் சிறுபிள்ளாய் இதனைக்கேட்பா யாகதிரிமூர்த்திகளி லொருவராகிய மகாவிஷ்ணுவுடன் போராடிவெற்றிகொண்டு அவ ரேவியசக்கரப்படையை யிதோகழுத்தணியாகத் தரித்திருக்கின்றவன் மற்றதேவ ரை ஒருபொருளாகமதியாமற் சகலபுவனங்களினும்வெற் றிக்கொடியை நாட்டிவீராதிவீரர்களால் மெச்சிப்புகழத் தக்கஜயத்தினைப் பெற்றிருக்கிறேன் அத்தகையமேன்மை யுடையேன் சாமர்த்தியங்களைச் சற்றும்மதித்துப் பாரா மல் ஏதோ வாயில்வந்தபடிக்கு உளறுகின்றாய் வீரபரா க்கிரமத்தைப்பெற்றிருக்கின்ற சிங்காசனைப்புதற்களிற் பதுங்கிக்காலங் கழிக்கின்ற குறுநரிவெல்ல வல்லதோ அ தையும்ஒருவர்நம்பக்கூடுமோ மேலும்உன்கண்ணுக்குமு ன்னம்சமுத்திரத்தினையொப்பவிளைந்து விரியிருந்தபூத ப்படைகளனைத்தையும் சின்னபின்னப்படக்கண்டித்து அ தப்படுத்தினேன் அவர்களுக் கதிபதிகளாக விருந்தசூரர் கள் என்னுடனெதிர்த்து நான்செலுத்தியபாணங்களுக்கா ற்றமல் பின்னிடைந்தனர்-உன்னைநினைக்குமிடத்தில் மு ன்னமே என்கைவாளிகளின் குரூரத்தினல் வாடியிருக் கின்றனை அப்படிக்கிருக்க இப்போதுமிட்டும் நீஎன்முன் வந்தது எப்படிக்கிருக்கின்றதெனில் திருவிளக்கு அணை யுந்தருணத்தில் அதிகசோதியைக்காட்டி ஒடுங்குவதைப் போலக்காட்டுகின்றது. அவ்வாறே ஏதோசிலவீரங்களை ப்பேசுகின்றனை சற்றுநேரத்தில் என்புயவலியினல் உன் பிராணனையும் வாங்கவிருக்கின்றேன் அதையும்நீயேபா ர்க்கப்போகின்றாயெனத் தாருகன் கொரேமாகச்சொல்லி ய விசேஷத்தினை வீரவாகுதேவர்கேட்டவுடன் விடசர்ப் பத்தையொப்பச்சீறித் தன்வில்லில் ஆயிரம்கொடியபா ணங்களைச்சந்தித்துப் பகைவன்தேகந்தெரியாமல்மூடிஆ ர்ப்பரித்தனர். அவ்வாளிகள்அதிக உக்கிரமாய்வரும்போ து தாருகன் அதிசீக்கிரத்திற் றன்காண்டீபத்தை யெடுத் துவளைத்து நாணெலிகாட்டி ஆயிரந்திவ்வியபாணங்களை ப்பூட்டி வேகமாகப்பிரயோகித்துத் தன்பேரிற்சீறிவருகி ன்ற சரங்களைச் சின்னபின்னப்படக்கண்டித்தெறிந்துமே லும் நூறுகுரூரமாகிய சரங்களைத்தூண்டி ஆர்ப்பரித்தா ன். அப்பாதகன்செலுத்திய சிலிமுகங்கள் அனலையிறை த்துப் புகைந்துகொண்டுவருவதைவீரவாகுதேவர்கண்ட மாத்திரத்திற் துரிதமாய் அத்தொகை வாளிகளைச்செலு த்தி வீறிவரும்பாணங்களை நடுப்பாதியிற் கண்டித்துத்த ள்ளியதையுங் கரவேகத்தினையுந் தாருகன்கண்டு வீரவா குதேவர் தனுர்வித்தையின்வல்லபத்துக்குமெச்சி யிவன் விற்றிறத்தில் முக்கியனுகக்காணுகின்றதால் இவனைச்சுல பமாக நினைக்கப்போகாது இக்காளையைத் தேவாஸ்திரங் களைக்கொண்டு முடிப்பேனென மனதிலெண்ணித் தன் முதுகிற் கட்டியிருக்கின்ற அம்புறுத்தூணியிற்கரத்தை ச்செலுத்தி அக்கினியாஸ்திரத்தையெடுத்து வில்லிற்பூட் டி மந்திரபூர்வகமாகப் பிரயோகித்தான் அவ்வாளியான துவெளிப்பட்டு அனலையிறைத்துக்கொண்டு சிடசிடத்த தொனிகளுடன் அதிவேகமாய் மேல்வருகின்றதை வீர வாகுதேவர்சண்டுவெகுண்டு தனக்குப்பரமேஸ்வரன்கொ டுத்திருக்கின்ற அனற்படையையெடுத்துப்பூசித்து வில் லிற்சந்தித்துக் சரவேகமாகத்தூண்டி வீறிவருகின்றபா ணத்தின் வலியையடக்கினர். அதைக்கண்டுதாருகன்கோ பித்து வருணஸ்திரத்தை யெடுத்துத்தொழுது பிரயோ கித்தகாலத்தில் வானவெல்லையிற்சென் றுமேகசாலங்களை ப்பெருக்கி யிருள்மூடி இடி மின்னல் மழை யிவற்றினை ஏராளமாகப் படைத்துவருவதைத் தெரிந்துநகைத்துத் தானும் வருணஸ்திரத்தைக்கடாவிப் பகைவன்பாணத்தி னை அடக்கினர். இதைக்கண்ட தாருகன்ஆக்கிரகித்துசூரி யாஸ்திரத்தினை வணங்கித்தூண்டினன் அதுவெளிப்பட் டுச் சகலரும்பிரமிக்கும்படிக்கு அதிகசோதியைக்காட்டி க் கொடியபாணவிதங்களைப்படைத்து மிகச்சினங்கொண் டுவரும்போது வீரவாகுதேவரும் அந்தப்படையினையெ டுத்துத் தொழுதுபோக்கி எதிரிவிட்டபாணத்தைக் கண் டித்தகாலத்தில் தாருகன் மனம்பொறுதவனுய்க்கோபித் து வாயுவாஸ்திரத்தினைக் கரத்திற்கொண்டுவழிபட்டுவிடு த்தகாலையிற் பிரசண்டமாருதத்தினைவீசிப் பர்வதங்கள் முதலியவைகளை வேருடன்கெல்லிக்கொண்டு மேலிட்டுவ ரும்போது கந்தசுவாமிக்குப் பிரியபத்தராய் அவனருளை ப்பூர்த்தியாகப் பெற்றிருக்கின்றதொண்டராகியவீரவாகு தேவர் அந்தப்படையினைக்கொண்டு பகைஞன்பாணத்தி ன் செருக்கையழித்தனர். இப்படிக்குக்காற்றின்படைவே கமழிந்ததைத்தாருகன்கண்டு வடவையைப்போற்சீறிபிர மாஸ்திரத்தினைப்பூசித்து வில்லிற்பூட்டித்தோள்புரளவா ங்கிச்செலுத்தினன். அதுவிடுபட்டவுடன் பற்பலதிவ்வி யசரங்களையும் அனற்பொறிகளையும் இறைத்துக்கொண் டு பகைவனெங்கே எங்கேயெனத்தேடி அதிகவுற்பாதங் களைவிளைத்து வேகமாய்வருவதைவீரகண்டைகள்சத்திக் கும் பாதங்களையுடைய வீரவாகுதேவர்கண்டு அச்சரத் தைக்கொண்டே அதன்வலியையடக்கினர்.

இவ்விதமாக ஜயசாலியாகியவீரன் வெற்றியைக்கண்ட தேவர்கள் பளாபளாவெனப்புகழ்ந்து கற்பகமலர்களைவா ரிவாரி ஜயாவிஜயபவாவெனத்தூவி ஆநந்தக்கூத்தாடினர் கள் அக்காலத்திற் றருகாசுரனனவன் தானேவியசிறந்த படைகளனைத்தையும் மாறுபடைகளைச்செலுத்தி வாட் டியதைக்கண்டு அற்புதமடைந்தவனுய் நாம்அரியதவங்க ளைச்செய்துபெற்று இதுபரியந்தம்போற்றிவந்தகடவுளர் படைகளைக் கிரமப்படிக்குச்செலுத்தினேம், அவற்றினை யிந்தவீரன் கணப்போதில்வென்றனன் ஆதலாலினிமாய் கையின்முயற்சியினல் இவன்வீறுப்பினையடக்கி வெல்ல வேண்டுமெனத் தாருகாசுரன்மனதில்நிச்சயித்து அதற்க டுத்ததந்திரங்களையும் முடித்துக்கொண்டு தனக்கினியதா யாகியமாயை ஆதியிற்றங்களுக்குப்போதித்திருந்த சவர வமென்னும் மாயமந்திரத்தை விதிப்படிக்குச்சரித்து அ தின்முயற்சியினல்முனம் ஒருவனகவிருந்தவன் அளவற் றஉருவினைத்தாங்கி அஸ்திரசஸ்திரங்களைஒன்றனந்தமா கப் பலதிசையினுமிருந்து எக்கும் பரந்திருக்கின்றஇரு ட்கூட்டங்களனைத்தும் ஒருமுகத்திற்சேர்ந்து வருத்துவ தைப்போல ஒப்பற்ற புசபலபராக்கிரமசாலியாகிய அவு ணராசன் சண்டைகொடுக்கின்றதை தேவர்கள்கண்டுமன மருண்டு என்னவிளைய விருக்கின்றதோவென்னும் ஏக்க த்தினல் மனங்கலங்கிப்பார்த்துக்கொண் டிருக்கின்றபோ து இதற்குமுன்னமே அப்பாதகனல் அடிபட்டுக்களைத் து நெடுந்தூரத்தில்நின்ற பூதப்படைகளிந்த உற்பாதம் விளைந்தபோது அதிகபயபீதியுடன் அவ்விடங்களிலும்சி ல்லாமற் றெலைதூரத்தில்ஓடிப்பொளிக்கவும் அவர்களுக் குத் தலைவர்களாகவிருந்த வீரர்களும்நிகைத்து அவர்க ளுக்கு முன்னம்பறக்கவும் அகோர யுத்தங்களைச்செய்து தாருகனல்வாடியிருந்த எண்மரும் மருண்டு எங்கிறிக்க

வும் இவ்விதமாகச் சிவசுப்பிரமணியர்சேனைகள்அல்லோலகல்லோலப்பட்டு வருந்துவதை அவுணப்படைகள்கண்டகாலத்திற் கரங்களைக்கொட்டி கெக்கலிகொட்டி நகைத்து ஏசித்துரத்துவதாயினர். இவ்வண்ணம் ராட்சதர்கெலிப்புடன் துள்ளும்படிக்குத் தாருகனானவன் மாய விஞ்சையின் வல்லபத்தினால் செய்துவருங் கொடியபோரினையும் தன்படைத்தலைவராதியாக அச்சங்கொண்டுவாடி மறைவதையும் புசபலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர்விழிகளில் அனற்பொறிகள் குபீல்குபீலெனக்கொட்டும்படிக்கு அதிகஉக்கிரமாகப்பார்த்து நல்லகாரியம்இந்தமாயையின்விளைவை நிமைப்போதில் மாற்றுவேனென்று அதிசீக்கிரத்தில் வீரபத்திராஸ்திரத்தினைச் செலுத்துவதாக அம்புருத்தூணியில்நின்றும் எடுத்தனர்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? பவித்திரமாகியமனதைப்பெற்ற வீரவாகுதேவர் வெற்றிமிகுத்தவீரபத்திரப்படையைக் கரத்திற்பற்றியபோது தாருகன்மந்திர உச்சாடத்தினால் அதிகவல்லபத்தினைக்காட்டிப் பரந்திருந்த மாயையானது நடுநடுங்கிவருந்திச் சூரியனெழுச்சியைக்கண்ட விருட்கூட்டத்தினைப்போலத் தட்சணமே அதப்பட்டுப்போயிற்று அக்காலத்திற் றான்செபித்திருந்த மாந்தரிய வியாபாரத்தினால் மூடியிருந்தமாயை பறந்துபோகப் பழையபடியே தனியனாய் எதிரிற்றோற்றிய தாருகனானவன் பராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவரை மற்றொருமாயையிற்படுத்தி வஞ்சிக்கும்படிக்கு ஒருதீர்மானத்தைநினைந்து நவரத்தினமயமாகப் பிரகாசித்திராநின்ற பரித்தேரைவிட்டு நிலத்திற்குதித்து அதிவேகமாய் ஓடினன். இவ்விதமாகச் சண்டைகொடுப்பதைநீங்கிப் பின்னிட்டபோது தனக்கொருவருநிகரற்றஜயசாலியாகிய வீரவாகுதேவர் யோசித்துப்போரழிந்து முதுகுகாட்டிப் போகின்றவன்மீதில் அதிகஜயத்தைப்பெற்ற வீரபத்திரக்கடவுளினது படையைவிடுவது வீரத்தன்மையன்றெனத்தீர்மானித்தவராய் அழகியதமது தூணியில்அப்படையினைச்செருகிச் சண்டையிலழிந்து இதோஓடுகின்றதாருகன்பின்பற்றி விரைவிற்சென்றுபிடித்து நாரியினாலிருதோட்களையும் இறுகக்கட்டிக்கொண்டு அடியேனுக்கிப்பணிவிடையைக்கடாட்சித்தேவிய வெற்றிவேலாயுதமூர்த்தியினது சந்நிதானத்திற்சேர்ப்பது உத்தமமென்று யோசித்தவராய் அவ்வாறேதமதிரதத்தினைவிட்டிழிந்து யானைமுகவிநாயகருக்கிளவலாகியசண்முகதேவர்திருவடிகளை மனதிற்றியானித்துத் தாருகன்பின்றொடர்ந்துஉலகங்களை அழிக்கவெழும் பெரும்புறக்கடலைப்போல ஆரவாரித்துஅவுணருக்கரசேஓடாதேஓடாதே நில்லுநில்லும்பற்பலவளங்களுடனும் ரதகஜதுரகபதாதிகளாகிய சதுரங்கவெள்ளப்பெருக்குடனும்விருப்பையடந்துவந்தஉன்னையொத்தசூரன் பற்பலராசசின்னங்களை முதலியவளங்களனைத்தையும் பறிகொடுத்துத்தினைப்போலஉலகமுள்ளளவுந்தீராத பழிப்புக்குள்ளாய் சவுரியத்தைமறந்து புறந்தந்தோடுவதோ ஜயசாலியாகிய சூரபதுமனுக்குத் தம்பியென்றும் மகாவிஷ்ணுமுதலிய சவுரியவான்களைவெற்றிகொண்ட தீரனென்றும் பலராலுந்துதிக்கவாழ்ந்தனை அத்தகைய ஜயசாலியாகிய நீயிக்காலத்தில் அபலனாய்பூதருக்கழிந்து புறங்கால்புட்டத்திற்றாக்கப் பாதசாரியாகஓடுகின்றனை உன்சரீரத்தில் உதிரமற்றனையோ மானத்தைநினைக்காயோ இப்படிக்குப் பலருமேசப்பதுங்கிக்காலங்கழிப்பதினும் நாக்கைப்பிடுங்கிக்கொண்டுசாவது உத்தமமாகக்காணுகின்றது அவுணராசனே? திரும்புதிரும்பென்று பற்பலவசைமொழிகளைப்பேசிக்கொண்டு வீரவாகுதேவர்விரைந்து சமீபிக்குமுன்னிலையிற் றாருகனானவன்மாயைத்திறங்களுக்கு மூலமாகவும் மாதுர்ஸ்தானமாகவு மிராநின்ற கிரவுஞ்சபர்வதத்துக்குச் சமீபத்திலோடி அவ்வரையிற்றோன்றாநின்ற குகைகளிலொன்றில்நுழைந்து மறைந்தனன் அதனைவீரலட்சுமி குடிகொண்டிருக்கும் புசபலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர்கண்டுஅவன்சென்ற அப்புழையின்மூலமாய் விரைந்து சிலதூரம்போகின்றபொழுது சூரியனானவன் சஞ்சரியாத விருட்பூமியைப்போல யாதுந்தோற்றாமற் கறுத்திருளோங்கியிருப்பதைக்கண்டு சிலதூரம்பாதங்களினால் நிலத்தைத்தடவிக்கொண்டுபோய்க் கரங்களைநீட்டிஆராய்ந்துந்தாருகனைக்காணாதபடியால் வெளியில்வருவதற்குநினைந்து திரும்புங்காலையில் அம்மலையின் வஞ்சகத்தினாற் புறத்தில்வருவதற்கு ஒருமார்க்கமாவதுகாணாமல் வளையவளையவருவதைஜயசாலியாகிய வீரவாகுதேவர்யோசித்துஇவ்வரைமாயைக்கிருப்பிடமாகவிருக்கின்றது இதன்காரணங்களை முன்னமே நாரதர் எமதிறைவனாகிய சிவசுப்பிரமணியதேவருக்குச் சொல்லியிருக்கின்றனர், அவ்வாறேநம்மையும் அலைக்கின்றதெனக் கோபித்து வடவையைப்போலச்சீறி யிக்கிரியின்முயற்சியை அதப்படுத்திவெளிப்படக்கடவேனென்று ஆலோசிப்பதை மலையுருப்பெற்றிருக்கின்ற கிரவுஞ்சப்பாதகன்தெரிந்தவுடன் வீரவாகுதேவர் மதியைமயக்கினன் முன்னம்இயலிசைநாடகமென்னும் முத்தமிழை வளர்த்த அகஸ்தியர்சபித்திருந்தகாரணத்தினாற் புயவலிக்கொப்பற்றவீரனை அம்மலையானது மையலிற்பட்டுச் சோரும்படியாகிய பற்பலமாயைகளைச் செய்தகாலத்தில் அதன்வயப்பட்டுமயங்கித் தனக்குணர்ச்சி எவ்வளவுமில்லாமல்நிலத்தில்விழுந்து மெய்மறந்து நித்திரையிற்பட்டிருந்தனர்.

இந்தப்பிரகாரந் தமதுமுன்னவனாகிய வீரவாகுதேவர் அவ்வரையினுள் உறங்கியிருக்க அவருக்கிளையவர்களாகிய எண்மருந் தங்கள்வருக்கமாகிய இலக்ஷரும் பூதப்படைவீரரும் அதிககிலேசத்திற்பட்டுச்சிறகற்றபட்சிகளைப்போல மிகவும்வருந்தினவர்களாய்ச் சண்டைகொடுக்கப் பயந்து முதுகிட்டோடிய தாருகப்பாதகனைநமதிறைவன்றொடர்ந்துபோயினர், திரும்பிவெளிவரவில்லை இந்தப்பர்வதத்தினுள் அவனைக்கண்டு மல்லயுத்தஞ்செய்கின்றனரோ! யாதோவொன்றுந் தோற்றவில்லையே என்செய்வோம் அவரைத்தனிமையாகவிட்டு நாமிவ்விடத்திலிருப்பது தகுதியல்ல நாமனைவரும் இதனுள்ளேபோய் ஏதுகாரியங்களையுங் கண்டறியவேண்டுமெனப் பலரும்எண்ணித்துணிவுகொண்டுஎண்மரும் இலக்ஷரும் பூதகணத்தலைவரும் தங்கள்கரங்களிற்பற்றியிருந்த விற்களைவளைத்துத்திவ்வியபாணங்களைப்பூட்டிக்கொண்டுங் கதைமுதலிய பற்பலஆயுதங்களைக் கரங்களிற்பற்றிக்கொண்டுந் தாங்கள்நின்றகளத்தைநீங்கி வானத்தினையளாவிநிற்கின்ற கிரவுஞ்சகிரியின்சமீபத்திற் றுரிதமாகவந்து புசபலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர்நுழைந்தகுகையின்மூலமாகஆர்ப்பரித்துச் சகலருநுழைந்துபோகுமுன்னிலையில் அக்கொடியபர்வதமானது அவர்களுக்குத்தலைவனுக்குச் செய்ததைப்போலவேபற்பலமாயைகளைக்காட்டியபோது அதன்

முயற்சிக்குள்ளாய்த் தங்கள்அறிவையும் வீரத்தையும் மறந்து திகைத்துச்சோர்ந்து யாதொருபிரக்ஞையுமற்றுத்தாமும்மயங்கிவிழுந்தனர், இந்தப்பிரகாரம்ஜயசாலியாகிய வீரவாகுதேவரும் மற்றவீரர்களனைவரும் வஞ்சகன் மாயையிற்பட்டுச்சோர்ந்து பிரேதங்களைப்போலவிழுந்துகிடக்கின்றவர்களைத் தாருகாசுரன்வந்துபார்த்து நமதுதந்திரமுயற்சியினாலிவர்களனைவரும் ஏககாலத்தில்மாண்டுஅருக்கடையாகக் கிடக்கின்றனரெனநினைந்து அதிகமகிழ்ச்சியைக்கொண்டவனாய் வஞ்சகத்துக்கு மாதுர்ஸ்தானமாகவிருக்கின்ற கிரவுஞ்சபர்வதத்தின் உச்சியிற்போயிறுமாப்புடன்நின்றனன் அக்காலத்தில் வானவெல்லையிலிருந்து சமர்க்களத்தில் நடக்கின்றவேடிக்கைகளைப் பார்த்திருந்ததேவர்கள் இக்காரணங்களைத்தெரிந்துகொண்டவுடன் விழிகளிற் றாரைதாரையாக நீர்பெருகக் கோகோவென்றழுது மனங்கலங்கி விசனமிகுதியினாற் றேகம்நடுநடுங்க பயபீதியானது மனதைஅலைக்க இதனைநினைக்கின்றனர், இவ்விடத்தில் இனிநிற்போமாகில் நமக்கென்னகெடுதிவிளையுமோவென்னும் ஏக்கமானது தங்கள்மனதைவாட்ட அதிவேகமாய் மேலுலகங்களில்ஓடியொளித்தனர், பூதப்படைகளுந் தம்மைஆதரிக்கவல்ல தலைவர்கள் ஒருவருமில்லாத காரணத்தினாற் பாதகன் என்செய்வனோவென்று அச்சங்கொண்டுதிகைத்துச் சுற்றுமுற்றும்பார்த்துக்கொண்டிருக்கின்றபோது கிரவுஞ்சபருவதத்தின்மீதுநிற்கின்ற தாருகனானவன் சிங்காசனைப்போலக் கர்ச்சித்து வீரபராக்கிரமசாலியாய்ச் சண்டைக்காயுத்தப்பட்டுநிற்கமுன்னம் சிவகுமாரன் படைவீரர்போருக்கஞ்சிஓடியொளித்த அவுணர்கள் அனைவரும் பலதிசையினுமிருந்துவந்து ஏகமாகச்சேர்ந்து பெரும்புறக்கடலைப்போலஆர்ப்பரித்துத் தமதிறைவனைச்சூழ்ந்துதிரராநின்றனர்தாருகனானவன் பொன்மணிகளிருகுதையினும்சத்தித்திராநின்ற வலியவில்லொன்றினைக் கரத்திற்கொண்டு சமர்க்களத்தைச் சேர்ந்து ரதாரூடனாய்ச் சிலையைவளைத்துச்சகலருந் திடுக்கிட்டஞ்சும்படிக்கு நாணொலிகாட்டி விஷத்துவையலிட்டுப் பிரகாசித்திருக்கும் அலகையுடையகொடியபாணங்கள் கோடாகோடியாக ஒவ்வொருதரந்தொடுத்து எத்தலங்களினும் பாணமயமாகச் சோனைமழையைப்போலச்சொரிய அவைகள் அனலையிறைத்து குறுகுறெனவந்து சுறுக்குச்சுறுக்கென்று தேகமாத்தியந்தமுந் தைத்துச் சல்லடைக்கண்களாகத் துளைக்க அவ்வருத்தங்களுக்குச் சகிக்கப்படாமையால் பூதசேனையானது நிலைகெட்டுச் சின்னபின்னமாய் மாண்டதுபோக மற்றவை திசாதிசையினும்மற்றத்தலங்களினும் ஓடிப்பதுங்கின, இப்படிக்குச்சிவகணங்கள் முற்றும் அல்லலுற்பட்டு மறைந்து போனதையும் இராட்சதர்வீறுப்பையும் நாரதமகாமுனிவர் அறிந்து துக்கித்துத் தேகமாத்தியந்தமும் வியர்க்கநடுநடுங்கித் தம்மைப்போலவே வாடிவருந்தி மனக்கோட்டத்துடன் துரிதமாகப்போகின்ற மகாவிஷ்ணு பிரமதேவன் தேவராசர்களுடன்கூடி அதிதீவிரமாகநடந்துதேவசேனாபதியாகிய குமாரசுவாமியார்எழுந்தருளியிருக்கின்ற பின்னணியைச்சேர்ந்து அரிடதவவிரதங்களைச்செய்து பலராலும்பூசிக்க விருக்கின்ற நாரதரிஷியானவர் ஆயிரவெள்ளம் பூதசேனாசமுத்திரத்தின்மத்தியிற் கிருபாநோக்கத்தினைப் பரப்பி ஞான சூரியனைப் போலப் பிரகாசித்திராநின்ற சண்முகப்பெருமானைவிழிகள்ஆனந்தமடையத்தக்கதாகத் தரிசித்துத் தம்முடன் கலந்துவந்த தேவர் சமுகங்களுடன் திவ்வியசரணாரவிந்தங்களிற் பணிந்து போற்றியிதனைவிண்ணப்பஞ்செய்வதாயினர்.

ஐயனே?தேவரீர்கட்டளையின்படிக்குச்சென்ற வீரவாகுதேவர் முதலாகிய படைவீரரும் பூதவெள்ளமும்சவுரிய பராக்கிரமங்களுடன்நின்று தங்கள்பேரில்பகைகொண்டு மேலும்மேலும் வந்தெதிர்த்தஇராட்சதவெள்ளங்களைக் கண்டதுண்டமாகத் திகைக்கும்படிக்குக்கொன்றும் அவர்களுக்கு உதவியாகவந்த சேனைத்தலைவர் மந்திரிபிரதானிகளுடனும் போராடி அவர்களையும்வாட்டிக்கடையில் ஜயசாலியாகிய தாருகனுடனும் அகோரயுத்தங்களைச்செய்து வரும்போது வீரவாகுதேவர் பாணங்களின் கொடுமைக்காற்றாதவனாய்ப் புலைத்தொழிலைவிரும்பி நடாத்தும் பாதகனான தாருகன் ஒருவஞ்சகத்தினை நினைத்துப்பயந்தவனைப்போலக் காட்டி முதுகிட்டோடிக் கிரவுஞ்ச பர்வதக்குகையிற்புகுந்தான். அதனைக்கண்டு ஜயசாலியாகிய வீரவாகுதேவர்சீறி அவனைக்கைப்பிடியாகத் தமதிடத்துக்குக்கொண்டுவரநினைந்துபின்றொடர்ந்து அவ்வனையினுள்ளேபோய்த் திரும்பிவாராமையால் அவர்துணைவரும்இலட்சரும் சேனைத்தலைவரும் பூதவீரரிற்சிலரும் அக்குகையின் மூலமாகச்சென்றனர். அக்காலத்திற் கிரவுஞ்ச பாதகன் தான்கற்றிருக்கின்றமாயவிஞ்சைகளினால் அவர்களனைவரையும்மயங்கச்செய்தனன்அதனால் அறிவிழந்து பித்தரைப்போலச்சோர்ந்து நின்றநின்ற விடங்களிற்களைத்துக் கிடப்பதாகக்காணுகின்றது. இச்சம்பவங்களைத்தெரிந்த தாருகாசுரனானவன் ஜயசாலியாய்ப்போர்க்களத்தில் வந்துவில்லைவளைத்துச்சோனைமாரியைப்போல அளவற்றகொடியபாணங்களைச்செலுத்தி நமதுபூதப்படைகளைச்சின்னபின்னப்படக்கண்டித்த கொடுமையைஎன்சொல்வேன்மிகவும் அநீதமாகவிருக்கின்றதுஅவன்போருக்கஞ்சிநமது சேனைகளில்மாண்டதுபோகமற்றவைபலதிசையினும்ஓடியொளித்தன. தாருகன் தன்சேனைகளுடன் தீரனாய்எதிரின்றி ரணக்களமெங்கும்உலாவுகின்றனன். சர்வபிராணிகளிடத்தினும் பரிபூரணமாகவிளங்கி நடிப்பிக்கவல்ல கர்த்தனே தேவரீருக்கிவையனைத்துந் தெரிந்திருப்பதாயினும் நடந்த சவிஸ்தாரங்களைச்சந்நிதானத்தில் விண்ணப்பஞ்செய்துகொண்டனன்.இதனைத்திருவுள்ளத்திற்கொண்டு துரிதமாய்வேண்டிய முயற்சிகளைச் செய்யவேண்டுமென்று நாரதரிஷியானவர்சொல்லிய செய்திகளைத்திருச்செவிகளினேற்றவராய்அவர்கள்மீதுகிருபாநோக்கத்தினைப்பரப்பி யிவ்விர்த்தாந்தங்களைத் தெரிவித்தநாரதரிஷியினது மனக்கோட்டத்தையும் தேவர்கள் முகங்கள்வாடிவருந்துகின்றதையும் இவர்களுக்கிறைவனாகிய இந்திரன்பதைபதைத்து வாடுகின்ற சோபத்தினையும் பிரமாதியர்துக்கவருத்தங்களையுந் தீர்க்கமாகத்தெரிந்துகொண்டு அவர்களிடத்திற் பரிவாய்ச் சண்முகப்பெருமாள்சொல்லுகின்றனர்.

சகலருமிதனைக்கேட்பீராக.—இந்த நிமிஷத்திற்சமர்க்களத்தைச்சேர்ந்து நமது கரத்தில்விளங்கும் வெற்றிவேலாயுதத்தினால் தாருகனைப்பிளந்துகொன்று அவுணர்வாசஞ்செய்வதற்குக் கோட்டையாகவிருந்து ரிஷிகள்முதலிய பெரியோர்களைவஞ்சித்து பாதைசெய்திருக்கின்றகிரவுஞ்சகிரியையுங்கண்டித்துவாட்டி வீரவாகுமுதலிய நம்ம

வனைக் கணப்போதில்மீட்டுத்தருவேன். நீங்கள்விசனப்படாமல் தாசிரியமாகவிருப்பீரென்று குழந்தைவேலர்திருவாய்மலர்ந்த அனுக்கிரகத்தினைச் செவிகள் குளிரக்கேட்டு மனதைவாட்டிவருத்திய கிலேசங்களைப்போக்கி அளவற்ற மகிழ்ச்சியடைந்து தேகபரவசத்தராய் ஆனந்தக்கூத்தாடிப் பலவிதங்களில் துதித்துக் கந்தசுவாமியார் திருவடிகளில்பணிந்து மனமகிழ்ந்திருக்கின்றகாலையில் முருகப்பெருமானானவர் தமக்குச்சாரதியாகவிருக்கின்றவாயுதேவனைக் கிருபைபாகப்பார்த்தருளி மனோவேகத்தினுந் துரிதமாக நமதுதேரைச்சமர்க்களத்தினெல்லையிற் சேர்க்கக்கடவையெனக் கட்டளையிட்டனர். உடனேஇதோகொண்டுபோவேனெனத் தனக்குத் துணையாகவிருக்கின்றன மூவருடன் குதிரைவார்களைத் திருத்தமாகப்பற்றிச் சவுக்கினைக் கரங்களிற்கொண்டு அசுவசாஸ்திரப்படிக்குப்பஞ்சலட்சணங்களைப்பெற்று வாயுவேகத்தினுமேலிட்டுப்பாயவல்ல புரவிகளை அதட்டி மின்னலைப்போலோடவிட்டு ஆர்ப்பரித்தனன். அக்காலத்திற் பெருத்தெழுந்தஅதிர்ச்சியினால் அண்டமும்பூமியும் அதிர்ப்பட்ட சத்தகுலாசலங்கள்முதலிய வனைத்தும் சத்தசாகரங்களும் அஷ்டதிசையினுமிருந்து பரித்துவரும் அயிராவதமுதலியயானைகளுந்நடுநடுங்கித் திகைக்கத்தக்கதாக அலைகளைப்போலப் பாயும் அசுவங்களைத்தூண்டித் தேவர்கள்சிறையினைநீக்கவரும் குமாரசுவாமியார் வீற்றிருக்கின்றஇரதத்தினை ஆகாயமார்க்கமாகச் சகலரும் புகழும்படிக்குநடத்தினன்இப்படிக்கு ஆதிதேவனாகிய சிவகுமாரனானவர் வானவெல்லையின் மூலமாய்ச் சுவர்னதேரின்மீது போகின்ற பொழுது மேகங்களானவை பற்பலஉருவங்களைக்கொண்டுவருவதைப்போலப் பூதவெள்ளமானதுககனமார்க்கங்களெங்கணும் நிறைந்து ஆர்ப்பரித்துப்போகு முன்னிலையில் முன்னே தாருகன் சண்டைக்குப்பயந்து ஓடிப்பதுங்கியிருந்த பூதவீரர்களனைவரும் கந்தர் வரவைக்கண்டுமனக்கவலைகளைப்போக்கிக் களிமிகுதியினால் ஆரவாரித்துக்கொண்டு பலதிசையினுமிருந்துவந்துசேர்ந்துசிவகுமாரனைவணங்கிப்போற்றித்தொடரவும், இவ்விதமாகமகாவிஷ்ணுவுக்கினிய மருகராகிய குமாரசுவாமியார்சகலஆடம்பரங்களுடனும்போகத் தாருகன்ஜயசாலியாய்த் தன்சேனைகளுடன் ரணக்களத்தைச்சேர்ந்தவுடன்சிவகுமாரன்சேனைவீரர்கள்பிரசண்டமாருதத்தைப்போலக்கொக்கரித்துப்பெரும்புறக்கடலை நிகர்த்து எங்கும்பரந்து ஆரவாரங்களைச்செய்து வருகின்றதை யிராட்சதசேனைகள் கண்டவுடன் ரவுத்திராகாரமாகமண்டியெரிந்து அணிவகுப்பாய்எதிரேதிரண்டனர்.

இவ்விதமாக எத்தலங்களினும் புகழத்தக்கபெருமையினையுடைய பூதப்படைகளும் அகந்தையிற்சிரேஷ்டராகிய இராட்சதசேனைகளும் அதிகவீரங்களுடன் ஒருவரை ஒருவர்வெற்றிகொள்ளவேண்டுமென்கின்ற தீரங்களுடனெதிர்த்து அதிக கோபங்களுடன் போர்த்தொழிலைச்செய்யத்தொடங்கிய முன்னிலையில் ஜயசாலிகளாகியஇராட்சதசயின்னியங்கள் வடவையைப்போலச்சீறித் தங்கள் கரங்களிற்பற்றி யிருக்கின்ற சக்கரங்கள்சூலங்கள்எழுவாயுதம் மழுவாயுதங்களைச்சிலர்பகைவர்மீதில் அதிவேகமாகச்செலுத்தவும் பலர்விற்களை வட்டாகாரமாக வளைத்து அனலையிறைக்கவல்ல கொடியபாணங்களை ஒன்றனந்தமாகப் பிரயோகிக்கவும் அதைக்கண்ட வீராதிவீரர்களாகிய பூதப்படைகள் ஆலகால விஷத்தைப்போலக் கொதித்து வானத்தையளாவின்ற பர்வதங்களைப்பெயர்த்துச் சத்திராதிகள் அதப்பட்டுப்போக வெறிந்தும் திசாதிசைகளிற் கிளைகளைப்பரப்பி ஓங்கியிராநின்ற மராமரங்களைவேருடன் பிடுங்கிக் கறகறவெனச்சுழற்றிச்சாடியும், இருப்புலக்கைகள் வளைதடிமுதலிய படைகளைக்கொண்டுவீசியும்இப்படிக்குச் சிவகணங்கள் அதிகவெகிப்புடன்மேலிட்டுச்சண்டைகொடுக்கும்போது தாருகனுடைய நால்வகைச்சேனைகளும் அல்லோலகல்லோலப்பட்டு அளவற்றதேரணிகளானவைஉருளைகள் அச்சுமச்சு குத்துக்கால்கொடிஞ்சைகொடிகுடைமுதலிய உறுப்புகள் பின்னப்பட்டுப் புரவிகள் அதப்பட்டுஉருளவும்யானைக்கூட்டங்கள் உரலையொத்தபாதங்கள்வேறு எமதண்டம்போன்ற இருப்புலக்கைகளைப்பற்றிச் சுழற்றிவரும் துதிக்கைகள்வேறுஇரத்தின முகபடாம் அணிந்த மத்தகம்வேறுவேறாகக்கண்டித்தும்புரவிப்பந்திகளானவைகண்டமற்றுங் கவரிகளைநிகர்த்ததசையும் வால்களற்றும் பொன்வண்டையங்கள் கலிக்குங்கால்கள் கண்டிக்கப்பட்டும் இவ்விதமாக அதப்பட்டும் அவுணபாதகர்கள் சிரங்கள் நொறுங்கியும் மூளைகள்சிதறியும் பற்களுதிர்ந்தும் தோள்கள் சரிந்தும்மார்புகள்கிழிந்தும் வயிறுபீறுண்டு குடல்களறுந்து சர்ப்பங்களைப்போலப் புரளவும் பருத்தகால்கள்தறிபட்டும் இவ்வாறு நால்வகைஸ்தோமங்களில்வெள்ளக்கணக்காகமாண்டும் அவுணர்பின்னிடையாமல் அதிக்கிரமித்து வாட்டும்போதுபூதசேனைகளினும் பலர்தலைகள் நொறுங்கியும்தோள்கள்சரிந்தும் கால்களறுபட்டும் உடல்கள் நகசெகபரியந்தம் சிதைந்தும் மாண்டனர், அக்காலத்திற்பெருகிய உதிரப்பிரவாகமானது அலைகளைவீசி யிறைந்துகளேபரங்கள்முதலானதைப் புரட்டிக்கொண்டு சமுத்திரத்திற் பாய்ந்துமகரமச்சங்களுக்கு விருந்திட்டதுகழுகுபருந்துகாக்கைமுதலியபட்சிசாலங்கள் நிணமாம்சங்களைத்தெவிட்டவுண்டு உதிரபானஞ்செய்து வானத்திற்பந்தலிட்டு வட்டம்வரவும் பூதபசாசுடாகினிகாளிகளாதியகணங்கள்வயிற்றுநிறையக்கொழுப்புகளையும் ரத்தமாம்சங்களையும்தின்றவெறியினால் முருகன் புகழைப்பாடிக்குதித்தோமென்று நடிக்கவும் கோடானகோடிகவந்தங்கள்ரணக்களமெங்கணுங் கூத்தாடவும் பிணமலைகள் வானத்தினையளாவக்குவிந்திருக்கவும், இவ்விதங்களாக இருதிறத்துச்சேனைகளும்ஒருவருக்கொருவர் மார்ச்சர்யங்களுடன் பின்னிடையாமல் வீரங்களைப்பேசிக்கோபித்துப் போராடுகையில் வெற்றிமாலைதரித்திருக்கின்றபூதவீரர்கள் ஜயவுச்சாகங்களுடன் வீறிவீராவேசங்களுடன் முன்பின்பாராமல் கொண்டதுகொண்டமட்டும்சாடும்போது அவ்வருத்தங்களுக்குச்சகிக்கக்கூடாமையால்இராட்சதர்வலிகுன்றிஎதிரில்நிற்கப்பயந்துமாண்டவர்கள்போகநின்றசேனைகளனைத்தும் பயபீதியினாற்பலதிசையினும்ஓடியொளித்தனர்.

இப்படிக்குத்தன்படைவீரர்கள் தலைவிரிகோல மாய்ச்சமர்க்களத்தில் ஒருவராவது நில்லாமற்புறங்கொடுத்து மறைந்ததைத் தாருகன் சண்டமாத்திரத்திற் கண்டவர்கள் அஞ்சியோடும் வெற்றிமிகுத்த தன்சிலையைவளைத்துமின்னலைப்போலப்பிரகாசிக்கும் அலகைப்பெற்றகோடாகோடிகொடியபாணங்களை அம்மாகமாகத்தொடுத்துப்பிரயோகித்துப் பூதப்படைகளைக் கண்டதுண்டங்களாகச் சங்கரித்துக்கொண்டுமேல்நடந்து எதிர்ப்பட்டசிவகணங்களனை

வரையுந் தொடர்ந்துதொடர்ந்து பற்பலதிவ்வியபாணங்களைப்போக்கிச் சூரியனெதிரிற் பட்டபனிப்படலத்தைப் போலப்பூதரைஓட்டி விலக்கிக்கொண்டு மேகசஞ்சாரங்களாருமல் விளங்கியிருக்கும் இமையராசபுத்திரி திருக்குமாரராகிய பாலசுப்பிரமணியக் கடவுளினது சமீபத்தில் வந்துசேர்ந்துதேசோன்மயமாகச்சொலித்துத்தன்னெதிரில்விளங்குகின்றகுமாரதேவரைப்பார்த்துத்தன்னருகில்வருகின்றதூதரைக்கூவிச்சற்றும்நீதியற்ற கொடியமனதைப்பெற்றதாருகப் பாதகனனவன்அதிகோபக்கனலானது மனதில்மூண்டு விழிகளிற்றீப்பொறிகள் பறக்கத்தக்கதாக இவன்தானோசிவகுமாரனென்றுகேட்டனன். அப்போது அச்சாரணர் வணங்கி யிராசாதிராசனே யிப்பாலனேத்தான் சிவன்பிள்ளையெனச் சொல்லுகின்றனரெனப்பேசிமுடிவதன்முன்னர் தன்தேரை மனோவேகத்தினும்முந்தச் செலுத்துவித்துக்கொண்டு சகலதேவர்களுக்கும்முதன்மையாக விருக்கின்ற பரமேஸ்வரருக்கினியதிருக்குமாரன் சமீபத்திற்போய்நின்று சோடசகலைகளையுடையபூரணச்சந்திரோதயத்தினும் பதின்மடங்கதிகமாகப் பிரகாசித்திருக்கின்ற சண்முகங்களின் பொலிவையும் செந்தாமரைமலரைப் பழித்துவிளங்குகின்ற கிருபாநோக்கங்கள் பன்னிரண்டினையும் ஆசானுபாகுவாகப்பருத்துநீண்டிருக்கின்ற பன்னிருபுயாசலங்களின் சீரையும்கரகமலங்களிற் பற்றியிருக்கின்ற வெற்றிவேலாயுத முதலியபடைகளின் வீரபராக்கிரமச் சிறப்புகளையும் பொற்றண்டைசதங்கைகள் கலித்திருக்கும் பவுத்திரமாகிய திருவடிகளின்பெருமிதங்களையும் நேரிற்றரிசிக்கப் பெற்றுன் ஆதலால்அவன்செய்ததவப் பேற்றின் முயற்சிகளையிப்படித்தென்று என்போல்களாற் புகழப்போகுமோ சவுனகாதி ரிஷிகளே சிவகுமாரன் திருநோக்கம்பட்டவுடன் ஞானவுணர்ச்சி விளங்கிச் சிற்பரமூர்த்தியாகிய சிவசுப்பிரமணியதேசிகர் கொண்டிருக்கின்ற திருக்கோலத்தினைப்பார்த்து அற்புதமடைந்தவனாய் நம்மையொத்த வீரன்மீதிற்பகைத்துச் சண்டைகொடுக்கவந்தானாதலாற் கற்பனைகளைக்கடந்தஆதிதேவனேயிவனாகுமென அற்புதமடைந்தனன், இவ்விதமாக அதிசயித்தவன் ஓரிறுமாப்பினைக்கொண்டனன், அஃதென்னையெனின் தேவதேவோத்தமனாக விளங்கியிருக்கின்ற பரமேஸ்வரன்தங்களுக்குக் கடாட்சித்திருக்கின்ற வரமுயற்சிகளையும் அகண்டசாம்பிராச்சியச்செல்வச் சம்பத்துகளையும் அழிவற்றவயிரதேகத்தின் வலிமையையும் புசபல பராக்கிரமத்தினையும் வீரத்தன்மையையும் ஆதியிற்றுங்கள் பெற்றிருப்பதைநினைந்தமாத்திரத்தில் முன்னந்தோற்றிய நல்லறிவினைப் போக்கிக்கோபமேலிட்டு வடவையைப்போற்சீறிக் கந்தசுவாமியைப்பார்த்துச்சொல்லுகின்றனன்.

இவ்வுலகத்தில் மகாவிஷ்ணுவுக்கும் பிரமதேவனுக்கும் வெள்ளையானை வாகனனான இந்திரனுக்கும் மற்றதேவர்களுக்கும் எங்களுக்கும் பகையுண்டல்லது சந்திரசடாதர மூர்த்தியாகிய சிவபிரானுக்கு நம்மிடத்தில் விரோதங்கிடையாது அப்படிக்கிருக்க குமாரனே நீ வந்த காரண மென்னமோ எனக்கொன்றுந் தோற்றவில்லை அதனை விரைவிற் சொல்லவேண்டுமெனக் கேட்ட முன்னிலையிற் குமாரசுவாமியார் தாருகன்மீதில் விழிகளைச் செலுத்தி ஓ அவுணராசனே நீவினவியதற்குக் காரணமேதெனின் எமதுதந்தையானவர் ஆதியிற்றும்படைத்திருக்கின்ற வேதங்களிற் குறித்திருக்கின்ற படிக்குத் தர்மத்தினை பரிபாலனஞ் செய்வதாகத் திருவுளத்திலெண்ணிச் சர்வசீவ தயாபரமூர்த்தியாதலால்மன்னுயிர்கள்செய்த நன்மை தீமைகளுக்குத் தகுதியாகிய வினைகளைப்புசிப்பித்துப் பாது காத்துந் தண்டித்தும் வருகின்றமுறையினால் எமதிறைவனாகிய பரமனானவர் உங்கள் கிர்த்தியங்களைத் திருவுளத்தில்மதித்துவெகுகாலங்களாகநீங்கள் தேவர்களைமதியாமற் றகாதபணிவிடைகளையிட்டு வருத்தியதன்றியில் அவர்கள்பெண்டுபிள்ளைகளுடன் அரியசிறையில் வைத்திருக்கின்றதைக்குறித்து உங்கள்வீரபராக்கிரமங்களையும் செல்வச்செருக்கினையும்அழித்துத் தீனராகியதேவர்கள் காவலைவிடுவித்து உலகங்களுக்குச் சவுக்கியங்களைச்செய்து வருவதாகநம்மைச்செலுத்தினரென்றுகூறிய வேலாயுதத்தினைத் திருக்கரத்திற்படைத்திருக்கின்ற குமாரதேவரானவர் கிருபைக்குப் பாத்திராதலால் அவர்கள்பிழைக்கும்பொருட்டு இவ்விதங்களாகவிரித்துக் காட்டியகாலத்தில் அவ்வனுக்கிரகத்தின் நன்கினைச் சற்றும் யோசியாமற்சண்டைசெய்வதே முக்கியமாகவெண்ணிய யானைமுகத்தினைப்பெற்ற தாருகனானவன் இதனைப்பேசுவதாயினன். ஓ! பாலனே? நமதுசவுரியபராக்கிரமங்களை சற்றுமறியாதவனாதலால் இப்படிக்குச்சொல்லுகின்றனை அவற்றுட் சிலவற்றைக்கேட்பாயாக. — இலட்சுமிதேவியை மார்பில்வைத்திருக்கின்றமகாவிஷ்ணுவானவர் ஒருகாலம் அழகியசிறகினையுடைய கருடன்மீதில் ஆரோகணித்துவந்து என்னுடனெதிர்த்துத் தன்னாற்கூடியவனாயிற் சண்டைகொடுத்து வெல்லக்கூடாமையாற் கடையில் வானத்திற்செல்லுஞ் சூரியனையொப்பச் சொலித்திருக்கும் சக்கரத்தினைப்பிரயோகித்தனன். அதுவும் அதிகமகிமைகளைக்காட்டி என்னருகில்வந்தபோது சுலபமாக அதனைப்பற்றி யிதோஎன்கழுத்தணியாகத் தரித்திருக்கின்றதை நீபார்த்ததில்லையோ? இஃதன்றியும் இதுபரியந்தம் எங்களுடன்பகைகொண்டு போரைச்செய்யவந்தவர்கள் நிமைப்போதிலிறந்தும்,முதுகுகாட்டியோடியும்போனதல்லது ஜயித்தவர்களொருவருமில்லை அதுகேள்விப்பட்டதில்லையோ? அன்றியும் என்னுடன்சண்டைசெய்து வெல்லும்படிக்கு முன்னணியிற்செலுத்திய சேனைகளை வெற்றிகொண்டு அவர்களுக்குத் தலைவராகவந்த வீரரைக் கிரவுஞ்சபர்வதத்திற்கிடத்தியதையும் பலகோடிபூதவீரரைச் சின்னபின்னப்படக்கொன்றதையும் இக்களத்தில் நீபார்த்ததில்லையோ? சதுர்வேதங்களைப் பூரணமாகக்கற்று தவங்களிற்சிறந்திருக்கின்ற ததீசிமகாரிஷியின்மேல்மகாவிஷ்ணுகோபித்தேவிய சக்கரப்படையானது என்தேகத்திற் பட்டமாத்திரத்தில் அதன்கூர்மழுங்கிக் குசவன்சக்கரத்தைப்போலக் கட்டையாய்ப் பிரயோசனப்படாமற்போனதை உனக்கொருவருஞ் சொன்னதில்லையோ! இன்னமும் பற்பலஜயங்களைப் பெற்றிருக்கின்றனன். ஆதலாற்பாலனே, யித்தகையவீரங்களைப்பெற்றிருக்கின்ற என்னுடன் போர்செய்துவாடி வருந்தவேண்டாம் சூலபாணியாகிய சிவபிரானிடத்துக்குப்போய்ப்பலசிறப்புகளையும்அனுபவித்துச் சவுக்கியமாக விருப்பாயென்று தாருகன்சொல்லி முடிந்தவுடன் வெற்றிமாலையினைத் தரித்திருக்கின்ற குமாரசுவாமியார்மறுமொழிகூறுகின்றனர் அவுணராஜனே யிதனைக்கேட்பையாக.

காளமேகவண்ணரான மகாவிஷ்ணுவினது செந்தாமரையையொத்த கரத்திற்படைத்த சக்கரத்தைப்போல படைகளுக்கரசாக நமதுகரத்திலிருக்கின்ற வெற்றிவேலானதுபழிபடுமென்றிருக்கின்றனையோ? உன்னரியபிராணனைநிமைப்போதில்வாங்கி வீரசொர்க்கத்திற்சேர்க்கவல்லது இதுவுமல்லாமல் இதுபரியந்தமும் சகலபுவனங்களையும் வெற்றிகொண்டு பிரகாசித்திருந்த உங்கள்புசபலபராக்கிரமமானதுநாம்வந்தமாத்திரத்தில் உலகங்களைச்சூழ்ந்து வருத்தியிருந்த விருளானது சூரியனதுஉதயத்தினைக்கண்டமாத்திரத்தில் அதப்பட்டுப் போவதைப்போல மங்கியடங்கியது மேலும் பற்பலகாலங்களாகக்கற்திருந்தமாயையின்பெருக்கினைக்காட்டி மயக்கியிருக்கின்றஇந்தக்கிரவுஞ்சபர்வதத்தையும் வஞ்சகனாகிய உன்னையுங்கூரிய வேலாயுதத்தைக்கொண்டு பிளந்துகொன்றுநமதுசேனைகளையும் அதிசீக்கிரத்தில் வெளியிட வல்லேனென்று குழந்தைவடிவேலர் பேசியதைக்கேட்டவுடன் தாருகனானவன் கோபமிகுதியினால் வடவையைப்போலச்சிறிமந்தரகிரியைப்போலத் தன்கையில்விளங்கும் பாரித்தவில்லை நாட்டி நாணேறிட்டு குணத்தொனிசெய்ய அவ்வதிர்ச்சியினால் அந்தரவாசிகளும் மற்றையருந் திகிற்பட்டுமிகவும்வாடிமயங்கினர். இவ்விதமாகப் பலரும்வாடும்படிக்குத் தாருகனானவன் தன்வலியைக்காட்டியபோது சரவணப்பெருமானுந் தமதுதிருக்கரத்தில்விளங்கிய வில்லைநிறுத்தி நாரியைப்பிகிந்து ஒருதரம்ரீங்காரஓசையைக்காட்டியபோது பெருத்தெழுந்த அதிர்ச்சியினால் அண்டங்களனைத்தும் அதலகுதலப்பட்டு அவற்றுட்பட்ட பிராணிகள் பொறிமயங்கிப்பிரமைகொண்டு நின்றநின்றவிடங்களிற்சோர்ந்தன இவ்விதமாகக் குமாரதேவர் நாணொலியைக் காட்டியபோது வேதபாரகனான பிரமதேவன்முதலாகிய பிரதமதேவதைகளும் அச்சங்கொண்டு வருந்தினர். இக்காரணங்களைத்தெரிந்த தாருகனும்மெச்சிச் சிரக்கம்பஞ்செய்தவனுய்த் தன்கரத்திற்பிடித்திருக்கின்ற வில்லென்னும் மேகமானது மழைத்தூவலைப் பெய்ததுபோலஅதிககுரூரமாகவுங் கொடுமைகளையும் பெற்றிருக்கின்றவயிரவாளிகளை அமோகமாகச்செலுத்தி ஆர்ப்பரித்தனன். அவைகள்வெளிப்பட்டுப் புகைந்தெரிந்து அனலைவீசி எங்கும்பரந்து அதிவேகமாக வரும்போது குமாரதேவருந் தமதுகாண்டீபத்தில் ஆயிரங்குரூரமாகிய சரங்களைப்பூட்டிப்பிரயோகித்துத் தாருகனேவியபாணங்களின் வீறுப்பையடக்கி அதப்படுத்தியதைக்கண்ட அவுணராசன்வடவையைப்போலக் கோபித்துத் துரிதமாக ஆயிரந்திவ்வியபாணங்களை யெடுத்துப்பூட்டிச் சிவகுமாரன்மீதில்விடுத்தனன். அவைகள்வரும் மகிமைகளைக் கந்தசுவாமியார்தெரிந்து நாறுகூரமாகிய வாளிகளைப்போக்கியெதிரிபாணங்களைக்கண்டதுண்டப்படுத்தி நகைமுகராயிருப்பதைத்தாருகன்தெரிந்தவுடன் நல்லகாரியம் இந்தப்பாலன்செருக்கை யிதோநிமைப்போதில் அடக்குவேனெனத்துணிவுகொண்டு தான்அருமையாகத் தேடிவைத்திருக்கின்ற அதிகதீட்சண்ணியமுள்ள அளவற்றபாணங்களைத் தனுசிற்பூட்டி விடுவதற்கு உத்தேசிக்குமுன்னே முருகக்கடவுள் ஒருஅர்த்தசந்திர பாணத்தைத்தூண்டிப் பர்வதத்தைப்போல அவுணராசன்கரத்திற்பற்றியிருந்தவில்லையிருதுணிவாகக் கண்டித்தெறிந்தனர். உடனேதாருகனானவன் மற்றொருபாரித்த வில்லையெடுத்து வளைக்குமுன்னமே எமதிறைவனாகிய சிவகுமாரன்தமதுகரத்திற்கொண்டிருக்கின்ற காண்டீபத்திற் கொடியபாணங்கள் ஆயிரத்தைச் சகலருங் கொண்டாடத்தக்கதாகப்பூட்டிக் கொடுங்கோலனாத்துந் தாருகப்பாதகன்பேரில்பிரயோகித்தனர். தட்சணம்வெற்றிமாலையணிந்திருக்கும் பாரித்தபுசங்களையும் நவரத்தினமயமாகிய கிரீடத்தினையும் பெற்றிருக்கின்ற அவுணராசனானவன் சத்துருக்கள்கொண்டாடவல்ல சாமர்த்தியபரனாகிய சுப்பிரமணியர் செய்கையினைப்பார்த்து அதிசீக்கிரத்தில் ஆயிரம் தீட்சண்ணியமாகிய கோல்களைச்செலுத்தித் தனக்குநேராகவெரிந்து புகைந்துகொண்டுவருகின்ற சரங்களைத்துகள்படக்கண்டித்தது மன்றியிற் பாதகனாகிய தாருகன்மேலும் அனந்தகோடி பாணங்களைத்தூண்டி ஆர்ப்பரித்தனன். உடனேசர்வகாருண்ணியனாகிய சிவகுமாரன்பற்பலபாணங்களைக்கொண்டுமீறிவருகின்றசரங்களை அதப்படுத்திமீளவும் அதிவேகமாய்க்கூரியகோடிகணைகளை வில்லிற்பூட்டிப் பிரயோகித்து மையைப்போலக் கறுத்ததேகத்தினைப்பெற்றிருக்கின்றஅவுணவீரராற்புகழ்ந்து போற்றவல்ல பெருமையினைப்படைத்த தாருகன்யானைவடிவைப்பெற்றிருப்பதைவெளிப்படையாகக் காட்டுமாறுபோல அவன்உடலிலிராநின்ற மயிர்க்கால்கடோறுந் தைக்கும்படிசெய்தனர்.

இவ்விதமாகக் கொடியபாணங்கள் ரோமங்களைப்போலத் தேகமெங்கும்பதிந்து வருத்துகின்றகாலத்திற் சண்டாளனாகிய அவுணராசன் வடவையைப்போலச்சிறிஅதிவேகமா யிரண்டுகோடி கொடியபாணங்களை வடிவேலர்மேற்செலுத்திச் சிருங்கநாதஞ்செய்தனன் அவற்றின்வேகத்தை எமதிறைவன்கண்டு திருநகைகொண்டு அவ்வளவுபாணங்களைத் தாமும்பிரயோகித்து மேல்வருவதைத் துகள்படுத்தியதுமல்லாமல் வெற்றிமாலைபுரளும் புசங்களையுடைய தாருகன்முகத்திற் றெருங்கியிராநின்ற துதிக்கையினையும் இரண்டுதந்தங்களையுங்கண்டித்துத் தள்ளும்படிக் கிரண்டுவீரவாளிகளைத் தொடுத்துவிட்டபோது அப்படைகள் குமுகுமென்னும் ஓசையுடன் அதிகமகிமைகளைக்காட்டிவந்து மாயையின்புத்திரனான தாருகனை நெருங்கிப் பனையைப்போல அசைந்திருக்கின்ற துதிக்கையினையும் மூன்றாம்பிறைக்கொப்பாக வளைந்திருந்ததந்தங்களையுங்கண்டித்து நிலத்திற்றள்ளியது. அக்காலத்தில் உதிரமானது பெருக்கெடுத்தோடுவதினால் அதிகவருத்தமும் பலஹீனமும் நேர்ந்தபோதினும் ரவுத்திராகாரமாகமண்டியெரிந்து ஆயிரங்கொடியபாணங்களைப்பொறுக்கியெடுத்து வில்லிற்பூட்டி அதிவேகமாய்ச் செலுத்தியபோது அவைகளிரைந்து புகைந்துவந்துகுழந்தைப்பெருமாள் தேரின்முகப்பிற் படபடென அசைந்திருக்கின்ற வெற்றிக்கொடியை வெட்டித்தள்ளியது. தமதுவிருதுக்கொடி அற்றதைக் கந்தசுவாமியார் கண்டவுடன் சற்றுக்கோபங்கொண்டு வஞ்சகமேகுடிகொண்டிருக்குந் தாருகப்பாதகன் கரத்திற்பற்றியிருந்த வில்லைஎட்டுபாணங்களினாற்பிளந்து மேலும் ஆயிரம்பாணங்களைப்போக்கி அவுணராசனேறிவந்த நவரத்தினமயமாகிய தேரைப்பொடிபடுத்திச் சாரதியைக்கண்டதுண்டமாக்கிப் புரவிகளைச்சின்ன பின்னப்படவாட்டவும் தாருகனானவன் மாச்சர்யத்தைவிடாமற் சிங்காசனப்போலப் பக்கத்திலிற்கின்ற சேமத்தேரிற்பாய்ந்துமண்டிபோட்டு உட்கார்ந்துமற்றொருவலியவில்லையெடுத்து நாரியைப்பிகிந்து குணத்தொனி

காட்டிக் கரவேகமாய் ஆயிரந்திமுகப் பாணங்களைத்தொ
டுத்துத் தமக்கொப்புவமையின்றிவிளங்கும் பரமசிவத்தி
னது வடிவாக அவதரித்திருக்கின்ற கந்தசுவாமியார்எழு
ந்தருளியிருக்கின்ற தேரைச்செலுத்தும் சாரதியாகியவா
யுதேவன் புசங்களுக்குக் குறிபார்த்துப் பிரயோகித்தான்
அவைகள்எரிந்து புகைந்துவந்துதாக்கி யிருபுசங்களையு
ந்துளைத்துக்கொண்டு புறம்பிற்போயினவளவில்உதிரமா
னதுபெருக மிகவும்வருந்தினன். இப்படிக்கு ஜயசாலிக
ளாகிய வீரராற்புகழப்பெற்ற குமாரதேவர்தேரைநடத்த
வொட்டாமற் பாகனைக் காயப்படுத்தி யதைச்சிவகுமார
ன்தெரிந்து அதிசீக்கிரத்திற் றமதுவில்லில் ஆயிரங்குரூ
ரமாகியபாணங்களைப்பூட்டி யானைமுகத்தினைப்பெற்றதா
ருகன் நெற்றியிற்பட்டுருவும்படியாகப்பிரயோகித்தபோ
து அவைகள்சிடுசிடுத்த தொனிகளுடன்வந்து வீரபட்ட
மணிந்திருக்கும் நுதலிற்பட்டு உருவிப்போயின, அவ்வ
ருத்தத்துக்குச் சகிக்கமாட்டாமற் புலம்பிச்சோர்ந்துஅடி
யற்றபனையைப்போல நவரத்தினமயமாகிய தேரின்மீது
விழுந்துமூர்ச்சித்தனன். இப்படிக்குவிழுந்தபோது உதி
ரமானது பெருக்கெடுத்தோடிப் பூமியிற்பரந்ததெப்படி
க்குத்தோற்றியதெனில் வடவாமுகாக்கினியானது கடலி
ற்பட்டகாலத்தில் அக்கொழுந்தானது அஷ்டதிசைகளிற்
காவல்கொண்டிருக்குங் கஜங்களின் மத்தகத்திற் பாய்ந்த
தைப்போலக்காட்டியது.

இப்படிக்குத் தாருகாசுரன் மயங்கிவிழுந்ததைஅவன்
சேனைவீரர்கள்கண்டு கிலேசித்து உடனே அதிககோபம்
பிரவேசித்தபடியால் சண்டைகொடுக்க யத்தனித்தவர்க
ளாய்ச் சிவபிரான்அக்கினிவிழியின்மூலமாக உற்பவித்த
சரவணபவனைச் சூழ்ந்துகொண்டு சூலாயுதம், சக்கிராயு
தம், தோமரம், பிண்டி, பாலம், கப்பணம், வேலாயுதம்,
எழுவாயுதம், தண்டாயுதம், வச்சிராயுதமுதலாகியபாண
விதங்களை நாற்றிசையினும்நெருங்கிப் பிரயோகித்தனர்.
இவ்விதமாகக்கறுத்ததேகத்தினைப்பெற்ற அவுணவீரர்க
ள்செய்யுஞ் சேவகங்களைச் சிவகுமாரன்பார்த்துத் தன்கா
ண்டீபத்தை நிறுத்திவளைத்து அமோகமாகச் சரங்களை
ச் சோனைமாரியைப்போலச் செலுத்திச் சூரியன்முன்ப
ட்ட பனியைப்போல அவுணப்படைகளேவிய பாணங்க
ளையும் அவர்கள்சேவகங்களையும்அடக்கிமேலும்அதிகஉ
க்கிரமுடையசரங்களை மிகுதியாகப்போக்கிக் கபடமன
தைப்பெற்ற அவுணவீரர்சிரங்களைக் கண்டித்தும் மார்
பைப்பிளந்தும் கொடியசொற்களைப்பேசும் வாயைக்கிழி
த்தும் கரங்களைக்கண்டித்தும் புசங்களைச்சரித்தும்கால்க
ளைவெட்டியும்இப்படிக்குக்கண்டதுண்டப் படுத்தியபோ
து உதிரமானது பெருக்கெடுத்துச் சமுத்திரத்தைப்போ
ல இரைச்சலிட்டோடியது இவ்வாறு வீரர்களாற்றுதிக்க
வல்ல ஜயசாலியாகிய சரவணபவன்விடுக்கும்பாணங்களி
ன்கொடுமையினால் வஞ்சகமே குடிகொண்டிருக்கும்மன
தைப்பெற்ற அவுணச்சேனைகளிற் பல்லாயிரகோடியர்சி
ன்னபின்னப்பட்டு மாண்டுபோக மிகுந்தசிலர் ரத்தப்பிர
வாகத்தில் விழுந்துமாண்டும் சிலர்நீந்திப்போய்த் தங்கள்
பிராணனைத் தப்பித்துக்கொண்டு பலதிசையினும் ஓடி
யொளித்தனர். அக்காலையிற் காளமேகமானது சிவந்துகா
ட்டுமாறுபோலத் தேகமெங்கணும் ரத்தமானது தோய்ந்
துகாட்டக் களைத்துவிழுந்திருந்த தாருகனானவன் பிரக்
ஞையுண்டாய் மெல்லவெழுந்து சுற்றுமுற்றும்பார்த்து
ச் சமுத்திரத்தைப்போல ஆர்ப்பரித்துச் சூழ்ந்திருந்தத
ன்சேனைவீரரில் ஒருவரையாவது காணாதவனாய்அதிகது
க்கசாகரத்திலழுந்தி நகைத்துத் தன்சேனைகள்பட்டகேட்
டையும் தனக்குநேர்ந்த அவமானத்தையும் எண்ணியெ
ண்ணித் தனக்குள்ளே பேசிக்கொள்ளுகின்றான் செவ்வா
னத்தையொத்த சடைமுடியையுடைய சிவபிரான்பெற்ற
சிறுபிள்ளையானவனொருவன் சண்டைகொடுக்க அதனைக்
காக்க வகையில்லாமற் றுதிக்கையினையுந் தந்தங்களையும்
போக்கி வாடுகின்றனன், மேலும் பிரக்ஞைதப்பிப்பிரேத
த்தைப்போலக் களைத்துவிழுந்தேன் பெரும்புறக்கடலை
ப்போல என்னைச்சூழ்ந்துவந்த ரதகஜதுரகபதாதிகளையு
ம் பறிகொடுத்ததுமன்றியிற் சூரராகியசேனைத்தலைவரை
யும் விவேகசாலிகளாகிய மந்திரிபிரதானிகளையும் போக்
கி யிக்காலத்திற் றனிமையாக யாதொருசகாயங்களுமின்
றித் தேகவுபாதியினால் மிகவும்வருந்தி வாடுகின்றனன்
வெகுகாலமாகப் பலரையும் வெற்றிகொண்டு அரசுசெ
லுத்திவந்த என்னாண்மைத்திறம் வெகுநேத்தியாகவிருக்
கின்றது இன்னமும் நமதுவிற்றிறத்தினால் அரியபாண
ங்களைத் தயிரியங்கொண்டு செலுத்துவேனாயினும் பகை
வனது பிராணனைவாங்குவதும் அல்லது வெல்வதும் மி
கவும்அரிது ஆதலால் வீண்யோசனைசெய்வதிற் பிரயோ
சனமில்லை. இனிநாம் அரிதாகத் தேடிவைத்திருக்கின்ற
தேவாஸ்திரங்களைச்செலுத்தி யிப்பாலன் ஆணவத்தைய
டக்கி வீறியிருக்கின்ற பூதசேனைகளையும் சாம்பலாக்க
வேண்டுமெனத் தீர்மானித்துச் சுத்தவீரர்களாற் கொண்
டாடவல்ல சவுரியபராக்கிரமசாலியாகிய தாருகாசுரனா
னவன் இதனைச்செய்வதாயினன். முன்னஞ்சிவகுமாரனா
ற்றான்பட்டமானபங்கத்தினை நினைந்துநினைந்து அதிககோ
பங்கொண்டு மண்டிபோட்டுஉட்கார்ந்து மந்தரகிரியைப்
போலப்பாரித்திராநின்றவில்லையெடுத்து வட்டாகாரமாக
வளைத்துக்கரத்திற்பற்றிப்பாதகனாகியதாருகன் அரியதவ
ங்களைச்செய்த மகிமையினாற் பெற்றுப்பிராணபதமாக
வைத்திருந்தநாராயணாஸ்திரத்தையெடுத்துப்பூசித்துப்பி
ரயோகித்தும்பின்பு பிரம்மாஸ்திரத்தையும்மற்றதேவர்ப
டைகளையுந்தொழுதுஒன்றின்பின்னொன்றினைச்செலுத்தி
யபோதுஅவைகள்வெளிப்பட்டு அதிகமகிமைகளைக்காட்
டிக்கொண்டுபோய் ஒப்பற்றமுதல்வனாகிய பாலசுப்பிரம
ணியதேவரைச் சமீபித்தகாலத்திற் றமதுவலிகுன்றிப்ப
யந்து எதிரினும்நில்லாமல் வணங்கிப்பக்கங்களிற் போற்
றியிருந்தது, இப்படிக்குமகாவிஷ்ணு பிரமதேவன் மற்ற
தேவர்படைகளனைத்தும் வேலாயுதமூர்த்தியைக்கண்டவு
டன் நடுநடுங்கிவழிபட்டுச் சூழ்ந்திருப்பதை அவுணருக்
கரசனாகியதாருகன்கண்டவுடன் சிவகுமாரன்மகிமையை
யுஞ்சேவகத்திறத்தையும் மதித்து அதுபரியந்தம்வீறியி
ருந்த ஆணவமலத்தைப்போக்கி நிமைப்போது மனதில்
பயங்கொண்டு மிகவும் அதிசயித்திருந்தவன்பிராரத்துவ
வினையின்படிக்கு தனக்கடுத்ததுன்பங்களை நினைந்துமன
மானதுபாதிக்க விழிகளிற் றீயெழக்கோபித்து இதனைஎ
ண்ணுவான் வெகுகாலமாகப்பெற்றிருந்தஜயங்களையும்வீ
ரத்தன்மைகளையும் போக்குநாள்வந்துசம்பவித்திருக்கின்
றது அதற்குத்திஷ்டாந்தம் இந்தச்சிறுபிள்ளையைவெல்வ
து அரிதாக விருக்கின்றது இனியென்செய்வோமென்று
சற்றுநேரம்யோசித்து முன்னம்நாம்அரியதவங்களைச்செ
ய்ததற்காகவிரங்கி யிடப்பாகத்திற் பார்ப்பதியாரை வைத்

திருக்கின்ற சிவபிரான் அனுக்கிரகித்திருக்கின்ற பாசுபதாஸ்திரத்தை யினிப்பிரயோகித்து இப்பாலன் புயவலிமையை அடக்குவேனெனத் தீர்மானித்தவனாய்அந்தச்சிறந்தபாணத்தினையெடுத்து மனப்பூர்வகமாக தூபதீபமுதலிய உபசாரங்களினால் அருச்சித்து அதிககோபங்கொண்டு நீண்ட தன்வில்லிற்பூட்டி அதற்குரியமந்திரத்தைஉச்சரித்துத்தோள்புரள ஆகரணந்தபரியந்தமிழுத்துப் பிரயோகித்து ஆர்ப்பரித்தகாலத்தில் அந்தஒப்பற்றபாசுபதமானது வெளிப்பட்டவுடன் பக்குபக்கென்றெரிந்து ஆலகாலவிஷத்தைப்பெருக்கித் தேவாஸ்திரவிதங்களை அபரிமிதமாகப் படைத்து அளவிறந்தபூதகோடிகளைச் சிருஷ்டித்து அவர்களுக்குவேண்டும் அஸ்திர சஸ்திரங்களையும் உண்டுபண்ணிக்கொடுத்து அளவற்ற சூலங்களையும் அனல்சமுகங்களையும் மற்றுமிராநின்ற கொடுமைகளனைத்தையும் படைத்துக்கொண்டு பிரசண்டமாருதமும்ஆலகாலவிஷமும் அஞ்சத்தக்கதாக ஆரவாரங்களைச்செய்து, சந்திரசடாதரமூர்த்தியாகிய சிவபிரான்திருநாமம்பெற்றிருக்கின்ற படைகளுக்கரசானது அளவிறந்த சீவகோடிகளுக்கும் அண்டாண்டபுவனங்களுக்கும் அதிக உற்பாதங்களைக்காட்டி உருத்து அதிவேகமாய்ச் சீறிவருவதைப் பிரகாசம்பொருந்திய அலகினைப்பெற்ற வெற்றிவேலாயுதத்தினைத் திருக்கரத்திற் படைத்தருளிய எமதிறைவனாகிய பாலசுப்பிரமணியதேவர்கண்டுஅப்படையின்மகிமைகளை நிதானித்தவராய்த் தமதுபிதாவாகிய ஒப்பற்றபரமனை மனதிற்றியானித்துப்போற்றிச் சிவகுமாரன்தமது திருக்கரத்தைநீட்டி உற்பாதங்களைக்காட்டிவந்த பாசுபதத்தைக்கொடுத்தவன் வாங்குமாறுபோலச் சுலபமாகப்பற்றினன்.

இப்பிரகாரம் நுதல்விழியைப்படைத்த சிவகுமாரன் ஏந்தியபடையினை மற்ற ஆயுதங்களுடன்சேர்த்துத் திருநகைகொண்டிருப்பதை ஜயசாலியாகியதாருகாசுரன்கண்டவுடன் திகைத்துமதிமயங்கி வாடினவனாய் நமதுவீரமும் செல்வப்பெருக்கும், இனிவிர்த்தியடையாமல்இத்தினமுதல் மங்கிப்போகும் காலமும் நேர்ந்ததோ, என்செய்வோமென்று மிகவுங்கிலேசித்து இதனை நினைப்பதாயினன். நாங்கள்செய்தஅரியதவத்துக்கிரங்கிச் சிவபிரான்கடாட்சித்திருந்த சிறந்தபாசுபதாஸ்திரத்தையும் பிரயோகித்தேன் அதனையும் எளிதாகக்கரத்திற்பற்றிக்கொண்டான் ஆதலாற் சண்முகங்களைப்பெற்ற இந்தத்தேவன்பெருமிதங்களையும் வீரபராக்கிரமத் தன்மைகளையும் எத்தகையருக்கும் நினைந்து துதிக்கக்கூடுவதோ ஆகிலுஞ் சூரபதுமனுக்குத்தம்பியாய்ப்பலரையும்வெற்றி கொண்டுஇதுவரையிற்சகலருந் துதிக்கவாழ்ந்த நான்பின்னிடைவேனாகில் இனிஎன்னை யாவர்தான்மதிப்பார்கள்ஆதலாற்சிவகுமாரன் தனுர்விஞ்சையிற்சொல்லாநின்ற நீதியாகிய சண்டையல்லது தீங்காகிய வஞ்சகப்போரைச்செய்யவறியான் இக்காரணத்தினால் இனிமேல் மாயவித்தைகளைக்காட்டி மறைவிடமாகவிருந்துதிகைக்கும்படிக்குப்போரைச்செய்துவென்று ஜயசாலியாகத்திரும்பக்கடவேனென்றுஒருகுருட்டுஆலோசனையையெண்ணி முடித்துக்கொண்டனன் இப்படிக்கு வஞ்சகனாகிய தாருகன்மனதில் உறுதியாகத்தீர்மானித்தவனாய் தன்தேரை அதிசீக்கிரத்திற்கிரவுஞ்சபர்வதத்தினருகிற் செலுத்தி ஓதுணைவனே யிதுநல்ல தருணமாதலால்உன்னாற் கூடியமாயைப் பெருக்கினைக்காட்டிஎனக்குவெற்றி கிடைக்கும்படியாய்ப்பாலசுப்பிரமணியனைப் பிரமிக்கச்செய்து உதவக்கடவையென்றுகூவிச்சொல்லியபோது அதைக்கேட்டமாத்திரத்திற் கிரவுஞ்சன்தான் அதுபரியந்தங்கற்றிருக்கின்ற மாயையின்பெருக்கினைப் பரப்பிச்சிவகுமாரனை வஞ்சிப்பதாகவெண்ணிச் சிலமந்திரங்களைச் செபித்துப்பூர்வத்திற் சிவபிரான்நெற்றிவிழிக்கனலினாற் சாம்பலாய்அழிந்ததிரிபுரங்களைப்போல வடிவுகொண்டுதிரியும்போது புசபல பராக்கிரமசாலியாகிய தாருகாசுரனானவன் அப்புரங்களில்வாசஞ்செய்திருந்த இராட்சதரைப்போலப்பற்பலஉருக்களைக்கொண்டுநின்று அமோகமாகப் பாணங்களைப்பொழிந்துவரவுங்கிரவுஞ்சபர்வதம் மற்றொருமாயை வித்தையினால்ஊழிகாலத்தெழும்மேகங்களின் வடிவுகொண்டுஎங்குமிருள்மூடப்பரந்தகாலத்தில் ஒப்பற்றசூரனுக்கிளவலாகியதாருகனானவன் அவற்றுட்கலந்து விழிகள் பிரமிக்கமின்னியும்பூமிமுதலாக அதிர்ந்து வாடத்தக்கதாக இடிமுழக்கங்களைக்காட்டவும் கிரவுஞ்சன் பெரும்புறக்கடலாதிய சாகரங்களையொப்ப அலைகளைமோதிப் பெருகியகாலத்தில்வெற்றிமிகுத்த அவுணராசனும் சர்வசங்காரகாலத்தில் உலகங்களை அழிக்கவெழும் வடவாமுகாக்கினியின் கொடுமைகளைக்காட்டித்திரியவும் பாதகனான கிரவுஞ்சன்சக்கிரவாளபர்வதத்தைச்சூழ விருக்கின்ற காடாந்தகாரமாகிய இருளின்படிவத்தினைத்தரித்து யாவருக்கும் விழிகளினொளிதோற்றாது மூடியதருணத்தில்யானைமுகத்தினைப்பெற்றிருக்கின்றதாருகன்பற்பலகோடி பூதங்களின் வடிவுகொண்டு ஆர்ப்பரித்துப் பலபடைகளைவீசித்திரியவும் கிரவுஞ்சன் இந்திரன்முதலாகிய திக்குப்பாலகர் வாசஞ்செய்கின்ற பதவிகளினிருக்கின்ற திக்கஜங்களின் வடிவுகொண்டு துதிக்கைகளில்இருப்புலக்கைகளைப்பற்றிச் சுழற்றிவீறிட்டு உலவிக்கொண்டிருக்கவும் தாருகனும்எண்டிக்கில் நிற்கின்ற அஷ்டகுலாசலங்களின் கோலங்கொண்டு சடசடத்தபேரொலியைக்காட்டி அசைந்துபோகவும், கிரவுஞ்சன் பிரசண்டமாருதத்தைப்போலஓவென்னுமிரைச்சலிட்டுப் பெருகியபோதுமதயானை வடிவைப்பெற்றதாருகன் அக்கினியுருக்கொண்டு தகித்துலவவும்உடனே கிரவுஞ்சன்அவ்வுருவைமாற்றி அனற்பொறிகளையிறைக்குங்கொள்ளிகளாகி வானகமெங்கும் நிறைந்தகாலத்தில்தருமமென்பது எவ்வளவும்விளங்காதகொடியமனதைப்பெற்றதாருகனும்ஆயிரகோடி சூரியரைப்போலத்தோன்றிச்சகிக்கப்படாதவெப்பத்தைக்காட்டி விண்ணகத்திற்றிரியவும்இவ்விதங்களாகத் தங்கள் நிசரூபத்தை எவ்வளவுங்காட்டாமல் மாற்றித் தாங்கள்கொள்ளுகின்ற கோலத்துக்குத்தகுதியாகிய நடைகளைக்காட்டித் தாருகாசுரனும் கிரவுஞ்சபர்வதமும்கோபித்து அளவிறந்தமாயப்படிவத்தைக்கொண்டு எவ்விடங்களினும் நெருங்கி அதிகஉபத்திரங்களைக்காட்டி மன்னுயிரைவருத்தித் திரியும்போது எமதிறைவனாகிய ஆறுமுகப்பெருமாள் அவ்விளையாடல்களைக் கண்டு மோகனவித்தையைக்கொண்டு வீண்வாது கொடுக்கின்ற இவன்பிராணனைவாட்டி அதப்படுத்தவேண்டுமென்றுமனதில் நிச்சயித்தவராய்த் தமதுதிருக்கரத்திற்கோடிசூரியப்பிரகாசமாகச்சொலித்திருக்கின்ற வெற்றிவேலாயுதத்தைப்பார்த்து இவ்விதமாகச் சிலவாக்கியங்களைச்சொல்லுவதாயினர்.

படைகளுக்கரசே யிதனைக்கேட்பாயாகத் தாருகாசுரனென்னும் பெயரையுடையவனையும் மாயைகளிற்சிறந்த கிரவுஞ்சபர்வதத்தினையும் ஒருகணப்போது கழிவதன்முன்னம் உடலையிருகூறாகப்பிளந்து தள்ளிப்பிராணனையுண்ட பின்புவெளிப்பட்டு அவ்வரையின் வஞ்சகத்தில்அகப்பட்டுமயங்கியிருக்கின்ற வீரவாகுதேவன்முதலாகியநவவீரரையும் இலக்ஷரையும் பூதவீரரையும் மீட்டுக்கொண்டு அதிசீக்கிரத்தில் இவ்விடம் வரக்கடவை எனக்கட்டளையிட்டு வேலாயுதத்தினைப் பிரயோகித்தனர், இப்படிக்குச் சுப்பிரமணியதேவர் போதித்துத்தூண்டிய ஒப்பற்றவேற்படையானது வெளிப்பட்டவுடன் அளவற்ற மகிமைகளைக்காட்டித் துரிதமாகப்போய் வஞ்சகப்போரைச் செய்திருக்கின்ற தாருகனுங் கிரவுஞ்சகிரியும் நடத்திவருகின்ற மாயஜாலங்களை ஊழிகாலத்திற் பரமன்நுதல்விழித்தீயிற்பட்டு அவன்மாயா விநோதங்களினால் விளங்கிய உலகங்களும் அவற்றுட்பட்டுப் பிராரத்துவவினையின்சம்பந்தத்தினால் மயங்கியிறந்தும்பிறந்தும்அலைகின்றபிராணிகளும் சாம்பலாய் மங்குவதைப்போல நிமைப்போதில் அதப்படுத்தித் தேவர்கள் போற்றிவாழ்த்த மேலிட்டு அடியவர்களுக்குமுத்தியைத்தரவல்ல திருவடிகளைப்பெற்ற பாலசுப்பிரமணியர்சண்முகங்களினும்விளங்கியவிழிகளினெழுந்த கோபக்கனலானது ஏகமாய்ப்பெருகியதைப்போலவும் பர்வதங்களுக் கிணையாகப்பாரித்த சதுர்ப்புசங்களைப்பெற்ற சிவநாதன்கரத்தில்விளங்கும் முத்தலைச்சூலமானதுவிடுபட்டு அத்தீயுடன் கலந்தொன்றாய்வருவதைநிகர்த்தும் அவ்வெற்றிவேலானதுபாய்ந்து மாயசமுத்திரங்களை வறளஉண்டு சமீபத்தில்வருவதை மூன்றாம்பிறையையொப்பவிளங்குங் கோரதந்தத்தையும்பகுவாயையும்பெற்ற தாருகாசுரனானவன்கண்டு இதைப்பற்றிச் சுள்ளியைப்போல முறித்தெறிகின்றனனெனவீரங்களைப்பேசிக்கொண்டு ஆக்கிரமித்துத் தாண்டிப்பாய்ந்து சற்றும் பயமற்றவனாய்ப் பட்சிகளுக்கரசாகிய கருடன்மீதிற்செல்லுஞ் சர்ப்பத்தைப் போலக்கொதித்து எதிர்ந்தபோதுவயிரமலையின்பேரில் கோடையிடிவிழுந்ததைப்போலக் கடப்பமாலைதரித்தபுயாசலங்களைப்பெற்ற சிவகுமாரன்செலுத்திய வேலானதுவிசாலமாய்வயிரத்தினும் வலியுடைய தாருகன்மார்பினிடத்திற்றாக்கிப்பிளந்து தடாரித்துருவி வெளிப்பட்டு மாய்கைக் கிருப்பிடமாகவிருந்தகிரவுஞ்ச பர்வதத்தினைக்கிட்டி யிருகூறாகக் கண்டித்துத் தள்ளி அப்படையின் வீரபராக்கிரமமும் புகழும்விளங்குவதுபோலஅவ்விருவர்பட்ட காலத்தெழுந்தஉதிரத்திற்றோய்ந்து தூளிபடலத்திற்றிமிர்ந்துவேகமாகப்போய்க்கிரவுஞ்சத்தின் குகையில் நித்திரைசெய்திருந்த வீரவாகுதேவர்முதலியசெயசாலிகளை நெருங்கிஅவர்கள் கொண்டிருந்த மையலைப் போக்கி எழுப்பினதாய் காற்றினுங்கடிகிவானவெல்லையைக் கடந்து ஆகாயகங்கையில் முழுகிப்பவுத்திரமாய்த் திரும்பி எமதையனாகிய சிவகுமாரன்பிரயோகித்த திருக்கரத்தில் யதாப்பிரகாரம் நின்றுவிளங்கியது.

சவுனகாதிரிஷிகளே! வெற்றிவேலானது வலியினுக்கொப்பற்ற அவுணராசனையும் மாய்கையிற்சிறந்த கிரவுஞ்சத்தையும் பிளந்துகொன்ற காலத்திற்றோன்றியபெருமிதங்களிற் சிலவற்றைகூறுகின்றோம்கேட்பீராக.—கொடியவர்களுக்குத் தகுதியாகிய தண்டனைகளைச்செய்யவல்லகூரியவேற்படையானது தாருகன்மார்பையும்பூர்வீகமாகத் தவத்தர் முதலியபெரியோர்களைவஞ்சித் தலைத்திருந்தகிரவுஞ்ச பர்வதத்தையுங் கண்டித்த காலத்தெழுந்தபேரொலியானது சகலபுவனங்களினுமிராநின்றவர்கள் செவிகளிற்பட்டபோது திகிற்பட்டுத்தேகம்நடுக்குற்றுக் கூட்டங்கூட்டமாகச் சேர்ந்து இதுவென்ன உற்பாதமாகவிருக்கின்றது எக்காலத்தினுமில்லாத இந்தச்சத்தமெழுவதற்குக் காரணமென்னோவென்று ஐயப்பட்டுவாடினவர்களாய்ப் பூமிபிளந்தோவெனச் சிலர்சொல்லவும்பொன்மயமாகியமேருகிரிவெடித்ததோவெனச்சிலர்பேசவும்அண்டகோளகை நெக்குவிட்டதோவெனப் பலர்குறிக்கவும்உண்மையாகிய விளைவைத்தெரியாமல் இப்படிக்குப்பேசிக்கொண்டனர், இவைநிற்கஅதிக கூர்மைபெற்றிருக்கின்ற வேலானதுமார்பிற்பட்டுப்பிளந்துருவிப் போகியகாலத்திற் பாரித்த தேகத்தைப் பெற்ற தாருகனானவன் அனந்தகோடியிடிக்கூட்டங்கள் ஒருகாலத்திற் பெருத்தெழுமாறுபோல ஓ வென்றிரைந்து உம்மெனத்துள்ளி எழுந்துபூமியில் விழுந்து பதைபதைத்துப் புரண்டு பிராணனைவிட்டனன், பர்வதாகிருதியாகியமார்பில் வேல்பாயத் தாருகன் நிலத்தில்விழுந்து பிராணன் போகியகாலத்தில் அவனுடலமானது சரேலெனவானத்திற் றுள்ளிஎழுந்துகடலுடைந்து பெருகுவதைப்போல ஆர்ப்பரித்தகாலத்தில் நட்சத்திரராசிகளானது கலங்கி நிலைதப்பிப் பலபலென உதிர்ந்தும் சூரியனானவன் மனங்கலங்கி பயபீதியினால்தன்கதியைமறந்துஓட்டமெடுக்கவும்எத்தகையசூரருக்கும் பின்னிடையாமற் போராடவல்ல தாருகன்பிளக்கப்பட்டு வானத்தெழுந்து மறிந்துவிழுந்தகாலத்திற்பூமியானதுபத்தல்பத்தலாகப் பிளந்தும் சத்தபாதலஅடுக்குகளழிந்து பின்னப்பட்டும் சத்தகுலாசலங்கள் முதலிய சிறந்தமலைகள் நுறுங்கியிறைந்தும் அண்டப்பித்திகை கலகலெனவதிர்ந்தும் திசைகளைத்தாங்கி நின்ற யானைகள் மனநடுக்குற்றுத் தங்களிருப்பிடங்களை விட்டுப்பறக்கவும் இவையன்றி யிச்சீவகாருண்ணிய மாகிய பூததயவுபச்சாத்தாபமென்பதுஎவ்வளவுங்கிடையாததாருகன்மேலெழுந்துவானவரையிற்போய் மீட்டும் மண்ணகத்தில்விழுந்தது எப்படிக்குக் காட்டியதெனில், பூர்வத்தில் இந்திரன்வச்சிராயுதத்தினாற் சிறகுகளறுபட்ட காலத்திற் பாரித்திராநின்றமகம்மேருவானது பழையபடிக்குப் பறக்கலாகுமோவெனச்சோதனைபார்க்கும்பொருட்டு விண்ணிடை யெழுந்துகூடாமையால் தொப்பெனப்பூமியில் விழுந்ததைப்போலவிருந்து, மேலும்வெற்றிமாலை தரித்திருக்கின்ற கூரிய வேலானது கிரவுஞ்ச பர்வதத்தைச் சின்னபின்னப்படப்பிளந்தபோதுஅதப்பட்டெழுந்த தூளிபடலமும்அனற்பொறிகளும் எவ்விடங்களினுஞ்சிதற அதனிடத்திற்பெருகிய புகைப்படலமுங்கலந்து அண்டவெல்லைமுற்றும்அடர்ந்தகாரணத்தினால்எக்காலத்தும்பெருக்கறுத் வானகங்கை கொதிப்பெடுத்து வறளவும் சத்தசாகரங்களும்சுவறவுமாயின மேலும்சிவகுமாரன் வேலானதுஅவ்வரையைக்கண்டித்த காலையிற்பெருகிய தீயைதீப்படலமெனப்பேசலாகுமோ தெரிந்தவர்கள் யோசிக்குமிடத்தில்அவ்வரையானது அவுணனுதலாற் றிரோகம்பிளப்புண்டகாலத்திற் பெருத்தெழுந்த உதிரமாக நினைக்கப்படும்.

இஃதன்றியும் அப்பொறிகளின்விளை வெப்படிக்கிருந்ததெனில் யாமிருந்த பர்வதத்தைக்கண்டித்தனராதலால் இந்தவேலாயுதக்கடவுள் ஆதியில்வாசமாயிருந்த கங்கை

யைவாட்டுவோமெனச் சீறிவந்ததுபோலச் சத்துருக்கள் நிணங்களிற் பழகியவேலானது கிரவுஞ்சனைப்பிளந்த முன்னிலையிலோங்கிய பொறிகளின் வெப்பத்தினால்வானத்திற்பெருகும்கங்கையும்வறண்டது மேலும் அப்பொறிகளுடன் துகளானதும் பொள்ளெனவெழுந்த ஓசையுடன் கலந்துபெருகுவது எப்படிக்குக்காட்டியதெனிற்சத்தசாகரங்களும் அவற்றினிடத்தடங்கிய வடவாமுகாக்கினியும் ஊழிகாலத்தில் உலகங்களை அழிக்க வெழுந்ததைப் போன்று மிருந்தது. இதுவல்லாமல் யானைமுகத்தினைப் பெற்ற தாருகன்மார்பிற் குமிழியிட்டெழும் உதிரமானதுபெருக்கெடுத்து அலைகளைவீசிப்பாய்ந்து வெற்றிவேல் கிரவுஞ்சபர்வதத்தைத் துளைத்துப்போகிய மார்க்கமாகவோடி திரைகளைமோதிச்சுருட்டும் கடலினிடத்திற்பாய்ந்து கருநீரைச் செந்நீராக்கியது. இப்படிக்கொத்த ரணக்களச்சிங்காரங்கள் பெருத்திருக்கின்றதருணத்தில் வேலாயுதக்கடவுள்விடுத்த சத்திவேல்சீறிப்போய் அதிசீக்கிரத்தில்மீண்டு பழையபடிக்குக் குமாரசுவாமியார் கரத்தில்நின்றதையும் கொடியபாதகனான தாருகன்பட்டதையும் கிரவுஞ்சவரையானது அழிந்தகாரணங்களையும் அவுணவீரர் நால்வகைச்சேனைகளுடன் மாண்டகோலத்தையும் மற்றகாரணங்களையும் மகாவிஷ்ணு பிரமதேவன்மனக்கோட்டம்நீங்கிக் களித்திருக்கின்ற இந்திரனும் முனிக்கூட்டங்களும்தேவர்களும்திருஷ்டாந்தமாகத் தெரிந்தமாத்திரத்தில் ஜயஉச்சாகங்களுடன் ஆர்ப்பரித்துச் சந்தோஷமிகுதியினால் தேகபரவசத்தராய் ஆடிப்பாடிக் கரங்களைச்சிரங்களிற்கூப்பிக் குமாரதேவரைப்போற்றிக்குளிர்ந்த பரிமளங்களைவீசும் கற்பகமலர்களைச் சோனைமழையைப்போலத்தூவிச் சிவகுமாரனைச்சூழ்ந்து சந்தோஷசாகரங்களில் மூழ்கினவர்களாய்க் கரங்களைச் சிரங்களிற்கூப்பித்தொழுது பலதரம் திருவடிகளிற் பணிந்தெழுந்துவிழிகளில் ஆனந்தவாரி பெருக்கெடுத்தோட நிற்கின்றகாலையில் அளவற்றமாய்கைகளைவல்ல கிரவுஞ்சன்அதப்படவெற்றிவேலானது எழுப்பியபோது அதனிடத்தில்அடங்கியிருந்த வீரர்களனைவரும் தங்களைவாட்டியிருந்தமயக்கங்கள்நீங்கி யுணர்ச்சிபெற்றெழுந்து துரிதமாகவந்து வேலாயுத மூர்த்தியினது திவ்விய சரணாரவிந்தங்களிற்றொழுதுபோற்றிப் பக்கங்களில்நிற்க சிவசுப்பிரமணிய தேவரானவர் வீரக்கழலணிந்த பாதங்களையுடைய வீரவாகுதேவர்முதலான வீரர்களைகிருபையாகப்பார்த்துதாருகன்வஞ்சகத்தினாற் கிரவுஞ்சபர்வதத்தின் மாய்கையிற்பட்டு நீங்களனைவரும்பிரக்ஞைதப்பிவாடியிருந்தீர்களேயென்று குமாரதேவர் கிருபையுற்று விசாரித்தகாலத்தில் அவ்வீரர்களனைவரும் இதனைச்சொல்லுவார்கள். ஐயனே? தேவரீர்கிருபை எங்களிடத்திற்பூர்த்தியாக விருக்கின்றமையால் அடியோங்கள் துன்பப்படுவதுமுண்டோ? அதிகநித்திரைமயக்கத்தினால் உறங்குகின்றவரைப்போல இளைப்பாறப் படுத்திருந்ததல்லது கொடியபர்வதத்தின் மாயையினாற் கர்த்தனே வருந்தவில்லையென்று விண்ணப்பஞ்செய்தனர். இப்படிக்குச் சகலரும்வணங்கிச் சொல்லியபோது குமாரக்கடவுள் வீரவாகுதேவரை அருகிலழைத்து ஜயசாலியாகிய சூரபதுமனுக்கிளையதாருகன்முன்னந் தம்மீதுவிடக் கரத்திற்கொண்டிருந்த படைகளுக்கரசாகிய பாசுபதாஸ்திரத்தை அவர்கரத்திற்கொடுத்துஇதனைப்பத்தியாய்ப் போற்றிவைத்து ஜயசாலியாய்ப்போனவிடங்களிலெங்கும் வெற்றிகொண்டுவரக்கடவையெனஅனுக்கிரகஞ்செய்தபின்பு தாருகன்சண்டையிற்சின்னபின்னப்பட்டு மாண்டுகிடக்கின்ற பூதவீரரனைவரையும் எழுந்துவரக்கடவீர்களென்று பரிவாய் ஒருதரம்அழைத்தகாலத்தில் அவர்களனைவரும் நித்திரைதெளிந் தெழுந்தவர்களைப்போல கெக்கலிகொட்டிக்கொண்டு வெளிவந்து குமாரதேவரை வணங்கித்துதித்துச் சமுத்திரத்தைப்போலஆர்ப்பரித்துச் சூழ்ந்துவரவும்தேவர்களனைவரும்வாழ்த்திப்போகவும் சேனைத்தலைவர்களாதியாக நெருங்கிச்செல்லவும் ரணபேரி ஜயபேரிமுதலாகியவாத்தியங்கள் கண்கணென்றுமுழங்கவும் இவ்விதஆடம்பரங்களுடன்குமாரதேவரானவர் சமர்க்களவெல்லையைக்கடந்து அப்புறம் போவதாயினர்.

## தேவகிரிப்படலம்.

மாகவந்தங்கள்கூளிவாய்ப்பறைமிழற்றவாடு
மாகவந்தங்குமெல்லையகன்றுசெங்கதிர்வேலண்ணல்
சோகவந்தங்கொண்டுள்ளசுரருடனனிகஞ்சுற்றி
யேகவந்தங்கணின்றவிமகிரியெல்லைதீர்ந்தான்.

வாரீர் நைமிசாரணியவாசிகளே? இவ்விதமாகத்தாருகனையும் கிரவுஞ்சபர்வதத்தையும் அதப்படுத்திச் சகலரும்சூழ்ந்துவரக் குமாரதேவரானவர் பூதபைசாசங்கள் பறையையொப்ப ஆர்ப்பரிக்க நாடகரைப்போலப் பற்பல கவந்தங்கள் கூத்தாடவிருக்கின்றசமர்க்களத்தைக்கடந்து அதுவரையிற் றங்கள்மனதைவாட்டியிருந்தசோபங்களுக்குத் தாருகனிறத்தலாகிய முடிவைக்கண்டு களித்திருக்கும் தேவர்களுடன் பூதசேனைகள் ஜயவுச்சாகங்களுடன் வரப் பலதேசங்களைக்கடந்து வளங்களிற்சிறந்த இமயகிரியைத் தாண்டினவராய் மகாவிஷ்ணு பிரமதேவன்இந்திரன் தேவர்கள் நவவீரர்கள் இலட்சர் சேனைத்தலைவர்மற்றபூதப்படைகள் யாவரும்போற்றிவர வெற்றிவேலாயுத மூர்த்தியானவர் தென்தேசத்தைநோக்கிநடந்து மேற்றிசையிற் சூரியனானவன்போகின்ற தருணத்திற் தேவகிரியென்னும் சிறந்தபருவதத்தைச்சேர்ந்தனர். ஒப்பற்றசூரனுக்கிளவலாகிய தாருகனைச் சிவகுமாரன்விடுத்த வேல் கொன்றசெய்தியை யிப்பாரிசங்களினிராநின்ற உலகவாசிகள் சகலருந்தெரிந்துகளித்தனர். அவ்வாறே அப்பிரதேசத்திலிருப்பவரும் அறிந்து சந்தோஷத்தையடைவதாகத் துரிதமாய் நானேபோய்ச்சொல்லிவருவேனென்று போனவனைப்போலச் சூரியபகவான் மேற்பாரிசக்கடலில்மறைந்தனன் அத்தருணத்திற் செக்கர்வானந்தோற்றியதெப்படிக்கிருந்ததெனில் முச்சுடரினொன்றாகிய அக்கினிதேவன் மனம்பொறாமல் நம்மிற்சேர்ந்த சூரியனென்னும்அரசன் பகற்போதனைத்தையுங் கைவசப்படுத்திக்கொண்டு அரசாட்சிசெய்து வருகின்றனன். மற்றசந்திரனானவன் இராக்காலத்துக்கதிபனாய் ஆளவிருக்கின்றான். ஆதலால்நான் அவ்விருகாலங்களுக்குமத்தியில்விளங்கும் அந்திப்போதையாவது அரசுசெலுத்துவேனெனநிதானித்துப் பிரமுகனாய் வெளிப்பட்டதைப்போல மாலைப் போதில் செவ்வானம் விளங்கியது. உடனே மூன்றாம்பிறையானது தோற்றியகாட்சி எப்படிக்கிருந்ததென்றால்

தேன்களைத்துளித்தப் பரிமளித்திருக்கும் அல்லிமலர்க
ளானவைமலரும்படியாகிய மாலைப்போதில் மன்மதனை
வன்உலகங்கள்மீதிற்புஷ்பபாணங்களைப்பிரயோகித்து த
ன்னரசுசெலுத்தவெழுந்ததால்தான்முன்பிறந்த சமுத்தி
ரமானது பேரியாக முழங்குகின்றது. அவ்வாறேநானும்
வெற்றிக்கொம்பாக ஜயத்தைக்குறிப்பேனென்று எழுந்த
தைப்போலப் பாலசந்திரன் தோற்றினன். இதுவுமல்லா
மற் சூரியனுனவன் தன்பேரிற் பகைத்தெதிர்ந்த பராக்கி
ரமசாலிகளாகிய அவுணவீரர்மீதுசீறி வாயுவினுங்கடுகித்
தேரைச்செலுத்திக்கொடியபோரைச்செய்துகொண்டுபோ
குமுன்னிலையில் அவன் அழகியமார்பினிடத்தில்விளங்கி
ய வயிரப்பதக்கமானதுஅற்று மேற்றிசையில் விழுந்த
தைப்போலவும்விளங்கியது. இஃதன்றியும் மாலைப்போ
திற்கறுத்தெழுந்த விருளானது வானகத்திற் சஞ்சரிக்கு
ம்பன்றியைப்போற்காட்ட அதன்கோரைத்தந்தத்தையும்
போன்றது. அக்கோட்டினை முனந்தரித்த பரமனைநிகர்
த்துஅண்டமானதுவிளங்கியது. அக்கோடுகளினின்றும்
உதிருகின்ற முத்துகளையொப்ப வானமெங்கும் நட்சத்தி
ரராசிகள் தோற்றநின்றது. இவ்விதச்சிறப்புகளைக்காட்டி
யிருளானதுநெருங்க முத்துத்தாவடத்தைப்போலக் கல்
லென்னும்ஓசையெழ அருவிகள்பெருத்திருக்கும் தேவ
கிரிக் கொருபாரிசத்தில் எழுந்தருளியிருக்கின்ற பாலசு
ப்பிரமணியதேவரைச் சூழ்ந்திருந்த மகாவிஷ்ணு பிரம
தேவன் இந்திரன் மற்றதேவர்களனைவரும் சிவகுமாரனை
வணங்கிப்போற்றி யிதனைச் சொல்லுகின்றனர்.

கர்த்தனே? கொடியசெய்கைகளையுடைய சூரபதுமனு
க்கிளைய தாருகனல் இதுபரியந்தம் மிகவும்வருந்தித் து
ன்பங்களை யனுபவித்திருந்தனம், அப்பாதகனையுங்கிரவு
ஞ்சகிரியையும் அதப்படுத்தி எங்கள்கிலேசங்களைப்போ
க்கினீர். இனியாதொருகுறைவுமில்லை,இவ்விதமாகக்களி
த்த அடியோங்கள் வேதவிதிப்படிக்குத் தேவரீர்திருவ
டிகளில்அருச்சித்து வழிபடவிரும்புகின்றனமாதலால்இ
ந்தச்சிறப்புள்ள பர்வதத்தின்மீது கிருபையுற்றுஎழுந்த
ருளவேண்டும் கர்த்தனே! யிந்தவரத்தைக் கடாட்சியுமெ
ன்று மெய்ப்பத்தியும் அன்பும்விளங்கத் தேவர்கள்வே
ண்டிநிற்க வெற்றிவேலைத்தரித்தசரவணபவன் அவ்வரை
யிற்றங்கநினைந்து தேவர்களேஉங்கள்கருத்தின்வண்ணஞ்
செய்வீரெனக் கடாட்சித்தவாக்கியத்தைக் கேட்டவுடன்
தேகங்கள்பூரித்து மயிர்சிலிர்க்க ஆனந்தபரவசத்தராய்க்
களித்திருக்கின்றகாலையிற் கோடிசூரியப்பிரகாசமாகவிள
ங்குகின்ற வேலாயுதமூர்த்தியானவர் ஆரவாரித்திருக்கி
ன்ற சேனைசமுத்திரத்துடன் மகாவிஷ்ணுமுதலியதேவர்
கள்போற்றிவரச் சகலவளங்களையுங் கொண்டிருக்கின்ற
தேவகிரியின்மீதிற்போய்ப் பக்கத்திற்றெழுது நிற்கின்ற
தேவதச்சனை அழைத்துச்சொல்லுவார். விவேகசம்பன்
னனை சிற்பாசிரியனே, தேவர்கள் கணத்தலைவர்கள் நம
துதுணைவர்கள் மற்றசேனைகள்முதலாக வாசஞ்செய்வத
ற்குத் தகுந்தவிடுதிகள் குறைவறவிருப்பதாக ஒருநகரத்
தினை விசாலம்பெற்ற இந்தவரையினிடத்திற் றுரிதமா
க முடிக்கக்கடவையென வேடமங்கையர்கள் குழாங்கற்க
ளைக்கொண்டு அம்மானையாடும் வேடிக்கைகளைக்கண்டுக
ளித்திருக்கும் குமாரதேவர்கட்டளையிட்டபோதுசிற்பியா
னவன்கரங்களைக்கூப்பிக்கொண்டு கர்த்தனே! தேவரீர்தி
ருவுளப்படிக்கு இதோமுடித்தேனெனத் தண்டைசிலம்
புகொஞ்சுந் திருவடிகளிற்பணிந்து விடைபெற்றுப்போ
ய் நாற்றிசையினும் விழிகளைப்பரப்பிப்பார்த்து நிதானி
த்தவனுய்ப்பருத்துவானத்தை யளாவநிற்கும் பொன்மதி
ல்களையெழுப்பிப் பலநிலைகளையுடைய கோபுரவாயில்க
ளைத்தூக்கி அதனுள் பற்பலவீதிகளைப்பிரித்து இருபா
ரிசங்களினும் பொற்சிகரங்கள் மகரதோரணங்கள் சித்தி
ரக்கவாட்சிகள் நவரத்தினமயமாகிய அறைகள்முதலியசி
ங்காரங்களைக்கொண்டிருக்கும் மாடமாளிகைகள் மண்ட
பங்கள் சித்திரக்கூடங்கள் உப்பரிகைகள் அங்காடிகள்மு
தலியன வாசயோக்கியமாகப்படைத்துத்தாமரைமுதலிய
மலர்நிறைந்த தடாகங்கள் பொய்கைகள் ஓடைகள்விதங்க
ளையும், புஷ்பச்சோலைகள் தோப்புகள்வகைகளையும்,நிரு
மித்து முடிந்தவுடன் அந்நகரமத்தியிற் சிற்பநூலிற்றிற
ம்பெற்ற மயனுனவன் தேவதேவோத்தமனுகிய பாலசுப்
பிரமணியக்கடவுள் வாசஞ்செய்யதற்குப் பவுத்திரமாகிய
ஆலயமொன்றினை நவரத்தினமயமாகவும் பலருங்கொண்
டாடத்தக்க சிறப்புமுள்ளதாய்ப்படைத்துச்சொர்னவரை
யாகிய மகம்மேருவின்மீது வயிரக்குன்றமொன்று நிற்ப
துபோல அவ்வாலயத்தின்மத்தியிற் சிரோரத்தினங்களி
னுற் பற்பலசித்திரங்களைப்பொருத்திய சிங்காதனமொன்
றைச்சோடித்து மற்றும் வேண்டுவனயாவையும் சாஸ்தி
ரப்படிக்கு முடித்தபின்பு மனுவின்பிதாவாகிய மயனுன
வன் மிகுந்தசந்தோஷத்துடன் வேகமாகப்போய்ச்சிவகு
மாரனைப்பணிந்து கர்த்தனே திருவுளப்படிக்கு நகரஞ்
செய்தாயிற்றென்று விண்ணப்பஞ்செய்தவுடன்வேலாயு
தக்கடவுளானவர் பிரமனுதியதேவர்கள்படைவீரர்துணை
வர் இத்தகையபிரமுகாளுடன் அப்பதியைச்சேர்ந்துகட
லையொப்ப ஆர்ப்பரித்திருக்கும் பூதசேனைகளை அவர்க
ளுக்குச் செய்திருக்கின்ற விடுதிகளிற்போயிருப்பதாகக்
கட்டளையிட்டு அனுப்பியபின்பு தமக்கேற்படுத்தி யிருக்
கின்ற ஆலயமுகவாயிலினிடத்திற்குமாரசுவாமியார்வந்த
வுடன் பொன்னுற்சோடித்திராநின்ற தேரைவிட்டிறங்கி
ப்பரிசனர் பரப்பியபொற்பாதுகைகளின்மீதிற் றிருவடி
களைச்சேர்த்து மெல்லநடந்து நவவீரர்கள் இலக்ஷர்மற்
றதேவர்கள்போற்றிவர ஆலயத்திற்பிரவேசித்து அளவ
ற்றசூரியரை யழகுபெறப்பதித்திருப்பதைப்போல விள
ங்குகின்ற சிரோரத்தினமயமாகிய சிங்காதனத்திற் குமா
ரக்கடவுள்வீற்றிருந்தனர்.

அந்தச்சமயத்தில் பிரமதேவன்முதலானவர்கள்ஏகமா
கக்கூடிக்கொண்டு குமாரசுவாமியைப்பூசித்து வழிபடய
த்தனித்தவர்களாய் பூர்வத்திற் பரமசிவத்தின் விழிகளை
மூடிய பார்ப்பதியார்திருக்கரத்தில்நின்றும் பெருகியகங்
யானது பிரமனுதியர் நினைவையறிந்து அதிகவேகங்கொ
ண்டு அத்தலத்திற்பெருகியது அதன்பின்பு நவரத்தின
மயமாகிய ஆபரணுதிகள் பொன்னுடைகற்பகமலர் சந்த
னக்கலவை தூபதீபமுதலியபண்டங்களை அருச்சனைக்கு
யோக்கியமாகச் சேகரித்தவர்களாய்ப் பூர்வத்திற்றேவர்க
ளுக்கு அமுதம்பகிர்ந்த பாத்திரத்தைக்கொண்டுகங்காச
லத்தைநிரப்பிச் சிவகுமாரன்சந்நிதானத்திற்போய்ப் பிர
மன்முதலிய தேவர்களும் ரிஷிகளுங் குமாரதேவர் திரு
நாமங்களை மந்திரவிதிகளினல் ஓதிக்கொண்டு திருமஞ்ச
னமாட்டியவுடன் ஈரத்தைப்புலர்த்தி முன்னம்அணிந்தி
ருந்த பொன்னுடையைநீக்கி மிருதுவாகிய சொர்னபட்
டாடையைஉடுத்தி மற்றொருதிவ்விய சிங்காதனத்தில்

எழுந்தருளச்செய்து சகஸ்திரதிருநாமங்களை ஓதிஓதிப்பரிமளமிகுத்த பாரிசாதபுஷ்பவிதங்களினால் அருச்சித்து முடிந்தவுடன் பஞ்சகற்பகப்புதியமலர்களினாற் சோடித்ததண்டைமாலையினைச்சாத்தி ஸ்ரீசந்தத்தேய்வையைப்பூசிப்பச்சைகற்பூரப்பொடியைஅதனிடத்தில்அப்பிப்புனுகுசவ்வாது கஸ்தூரிமுதலியதிவ்வியபரிமளக்கலவைகளையுஞ்சாத்தி முடிந்தபின்பு நவரத்தினமயமாகியகிரீடம் மகரகுண்டலம் வாகுவலயம் முத்துமாலை மோகனமாலை பொன்னரைஞாண் வயிரமோதிரமுதலிய இரத்தினாபரணவிதங்களைத் தேகம்தோற்றாமல் வகைவகையாக அணிந்துபின்பு பொற்றட்டுகளில் பழவகைகள்முதலியநைவேத்தியங்களைச்சேர்த்து எதிரிற் படைத்தவர்களாய்ச் சகலருங் கரங்களைக் கூப்பிக்கொண்டு சந்நிதானத்தில்நின்று சாம்பிராணி சந்தனம் அகிற்பொடிகளினாற் பெருகும் தூபங்களையுங்காட்டிக் கற்பூரநீராஞ்சனமுடித்து மணிகளைஆட்டி அவ்வவர்களும் சுற்றினவர்களாய் ஆகமவிதிப்படிக்குச் சோடசஉபசாரங்களைச்செய்து பத்திவிசுவாசங்களுடன் மும்முறைவலம்வந்து அஷ்டாங்கபஞ்சாங்கதிரியாங்க ஏகாங்கவிதங்களிற்குமாரசுவாமியார்திருவடிகளிற் றீர்க்கதண்டன்சமர்ப்பித்துச் சித்தசங்கற்பங்களை ஸ்மரித்து ஜயஜயவெனப் பற்பலவிதங்களிற்போற்றியிவ்விதங்களில் உபசரித்துநேத்திரோற்சவமாகத்தரிசித்துக்களிப்படைந்தனர், கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? மகாவிஷ்ணுபிரமதேவன்இந்திரன்முதலானவர்கள் மேற்குறித்தபடிக்குச் சிவகுமாரனைத்தேவகிரியினிடத்தில்மனதொருமித்துப் பூசனைவழிபாடுகளைநடத்தி வருவதைச் சண்முகப்பெருமாள்!பரிவாகஅங்கீகரித்துத்திருவிழிகளைச்செலுத்திப் பார்த்திருந்தனர்.ஓ? ரிஷிகளே?வெற்றிவேலாயுதர் தேவகிரியினிடத்திற் சேர்ந்தவளையில் நடந்தகதாப்பிரசங்கங்களைச் சொல்லினம், இனிசமர்க்களத்திற் ருருகன்மாண்டசமாச்சாரந்தெரிந்தவுடன்அவன் பிள்ளைவந்துமுடித்தகாரணங்களையும் மற்றசரித்திரங்களையுந் தெரிவிப்போ மென்று சூதபுராணிகர் ஆரம்பித்தனர்.

---

அமரர்வெற்பிலயிற்படையேந்திய
விமலனுற்றதுசொற்றனமேலினிச்
சமரிலடப்படுதாருகன்றந்திமு
குமரனுற்றதுமற்றதுங்கூறுசேம்.

---

## அசுரேந்திரன்மகேந்திரஞ்செல்படலம்.

எங்கசகுமாரனெறிந்ததனிவேற்படையாற்
றந்திமுகமுடையதாருகன்றுன்பட்டதனை
முந்துசிலதூதர்மொழியவன்றேவி
யந்தமிலாக்கற்பிற்சவுரியலக்கணுற்றாள்.

---

எமதிறைவனாகிய சரவணபவன்கோபித்தேவியவேலாயுதத்தினால் யானைமுகத்தினைப்பெற்ற தாருகாசுரன்மாண்டவுடன் அவ்விடத்திலிருந்த இராட்சதத்தூதர் புலம்பிக்கொண்டு அதிவேகமாய் ஓடி மாயமா புரியைச்சேர்ந்து பொலிவழிந்திருக்கின்ற பலவீதிகளைக்கடந்து அந்தப்புரத்தைச்சேர்ந்து விழிகளில் தாரைதாரையாகநீர்சொரியக் கிலேசித்து இராசபத்தினி பாதங்களில் விழுந்து தாயே மோசம்நேர்ந்தது அஃதென்னையெனில் உன்கணவன்பாலசுப்பிரமணியர் கரத்தில்விளங்கும்வேலினாற்பிளப்புண்டுமாண்டனனென்றவார்த்தையைக்கற்புக்கரசியாகிய சவுரியென்னும் பட்டஸ்திரீயானவள் கேட்டவுடன்பிரமைகொண்டு மெய்மறந்து அடியற்றபனையைப்போலநிலத்தில்விழுந்துபுரண்டுமுகத்தினும்மார்பினும் அறைந்துகொண்டு விழிகளில்நீரூற்றெடுத்துப் பெருகவாயில் அடித்து ஐயையோ இந்த அநியாயமும்விளையுமோ என்செய்வேனெனக் கோடுகோடெனப்புலம்புகின்றபோது தாருகனுக்குரிய மற்றதேவிமார்கள் இதென்னவுற்பாதமாக விருக்கின்றதெனப் பறந்துவந்து சேதிதெரிந்தவுடன்அவர்களும் வாயினும்வயிற்றினும்மோதி தலைமயிர்களைவிரித்து ஓவெனப்புலம்பித்தங்களுக்கு மூத்தவளாகிய சவுரியைக்கட்டிக்கொண்டு பதைபதைத்து விம்மியிழவுகொண்டாடினார்கள். அப்போது பட்டஸ்திரீயாகிய சவுரிக்கு மனந்தாபரியாமல் மற்றதேவிமாருடன் அழுதுகொண்டு அந்தப்புரத்தைக்கடந்து பாதசாரியாய்த் தெருக்களிற்போகுமுன்னிலையிற் புரசனங்கள்தத்தமக்கு அடுத்திருக்கின்றவிசனங்களோடு அரசனுக்குநேர்ந்தசம்பவத்தைக்கேட்டவுடன் படாதபாடுகளைப்பட்டுவந்து கூடிப்புலம்பிப்போகப் பட்டணத்தைக்கடந்து பிணமலைகளைத்தாண்டி ரத்தஆறுகளை நீந்தி ரணக்களவெல்லையைச்சேர்ந்து வச்சிரகாயம்பெற்ற தன்கணவனிருதுண்டமாக நிலப்பாயலிற்கால்போனது தலைபோனது தெரியாமல்மாறுபட்டு விழுந்துகிடப்பதைக் கண்டமாத்திரத்தில் ஆழ்ந்தகடலில்அகப்பட்டுவருந்தும்மயிலைப்போலச் சவுரியானவள்பதைபதைத்துத்துடிதுடித்து மேல்விழுந்துமெய்மறந்துமூர்ச்சித்தவளாய் மற்றகன்னியர்செய்த உபசாரங்களினாற் சற்றுநேரத்திற் களைதெளிந்துஎழுந்துபிரலாபித்துப்புலம்புவதாயினள்.

ஓ என்பிராணநாயகனே புருஷரத்தினமேயிராசாதிராசனே என்செய்தீர் தேவரீருக்கும்இப்படிக்குநேருவதோ தெய்வச்செயலும் இப்படிக்கிருந்ததோ ஓஎன்னாவியேஅடியாளைத் தனியாகவிட்டு என்னிடத்திலிருந்த பிரீதியை மறந்துபோய் விடுவது உம்மையொத்த அன்புள்ளக்ணவனுக்கு நீதியோ அல்லதழகோ ஐயையோ எவ்விடத்திற் போயிருக்கின்றீர் இவ்வுலகத்தின்வாழ்வையும் மற்றசம்பத்துகளையும் வெறுத்துச்சங்குசக்கரதரனாகிய மகாவிஷ்ணுவாசஞ்செய்கின்றவைகுந்தநகரைச்சேர்ந்துசகலசம்பிரமங்களையும் அனுபவித்திருக்கின்றீரோ அல்லதுபிரமலோகத்திற்முன்போய்க் களித்திருக்கின்றீரோ அன்றியுந்தேவரீர் ஆதியில்வருந்திச்செய்த தவத்துக்கிரங்கிபற்பலவரங்களைக்கடாட்சித்த கங்காசடாதரர்அனுக்கிரகத்தினைப் பூர்த்தியாகப்பெற்ற நீர் அக்கர்த்தன்வீற்றிருக்கின்ற வெள்ளியங்கிரியிற்போய்த்தேவதேவனை வழிபட்டிருக்கின்றீரோ என்பிராணபதமாகிய மணவாளாஎவ்விடத்திலிருக்கின்றீர் பூர்வத்தில்உம்முடனெதிர்த்துப் பிரகாசம் பொருந்திய சக்கரப்படையைக் கழுத்தணியாகக்கொடுத்துவிட்டுப் பின்னிடைந்துபோகியமகாவிஷ்ணுவும்உமது பணிவிடைகளைச்செய்து காத்திருந்த இந்திரனும்தினமும்பஞ்சாங்கஞ்சொல்லிவந்த பிரமனும்மற்றதேவர்களும்நமது நகரத்திற் கால்வையாமல் இடைந்திருந்த யமதரும

ராசனும் மற்றுமுண்டாகிய சகலரும் தங்கள்மனதைவா
ட்டியிருந்த கவலைகளைப் போக்கி அல்லலற்றுக்களி
த்து நித்திரை செய்வரோ ஓஎன்கண்மணியே பொன்னக
ரவாசிகளனைவரும் புலம்பிவாடவும் அவுணராசாக்கள்மு
தலாகச்சூழ்ந்துபோற்றவும் பற்பல ராசபின்னங்களுடன்
அடியாளிருக்கின்ற அந்தப்புரத்துக்குளழுந்தருளும்வை
பவங்களைக்காணமற் கழுகுபருந்து காக்கைவட்டமிட்டுல
வவும் பூதபைசாசங்கள் நடிக்கவும்இவ்வித ஆடம்பரங்க
ளின்மத்தியில் கால்மாடுதலைமாடாய் விழுந்துகிடக்கும்
அகோரத்தையும்பெருமானே?யிந்தப்பாழ்த்தகண்களாற்
பார்ப்பேனே நான்மிகவும் வருந்தித் தேவரீரைக் காண
வந்தேன் பழையபடிக்குஆசையுடனெழுந்து நன்மொழி
களைப்பேசி அணைத்துஆதரிக்காமலிருக்கின்றீர். பலரும்
காணத்தழுவினலிழிபென நினைந்திருப்பீராயினும்வெற்
றிமாலைபுரளும் வலியபுசங்களையுடைய கணவரேயிக்கா
லத்தில் வாடுகின்றஎன்மனங்குளிர ஒருவார்த்தையையா
வது பேசாமல்வாயடங்கி நித்திரைசெய்கின்றீர்அடியாளி
டத்திற் கோபமேதேனுமுண்டோ என்னரசே நீலமணி
யைப்போலப்பிரகாசித்திருக்குங் காளகண்டமூர்த்தியான
வர் தேவரீரிடத்திற் கிருபையுற்றுக் கடாட்சித்த வரமா
னது ஒருகாலத்தும் அழிவின்றிவீறியிருக்கும் நாமுஞ் ச
கலசெல்வங்களையும் அனுபவித்து உம்முடன் வங்கண
மாயிருந்து நாளைக்கழிக்கலாமென்றுஇதுபரியந்தம்எண்
ணிக்களித்திருந்தேன் இன்று அவ்வரமுயற்சிகளனைத்து
ம் மங்கிப்பொய்யாக முடிந்ததே என்னுசைக்கணவனேச
கலரையும் வென்று எதிரின்றியிருந்த நீயும் மாண்டனை
யோ ஐயையோஇந்த அற்பவாழ்வினைப்பெறவோமுன்ன
ம் அரியதவங்களைச்செய்து வருந்தினை தமக்கொருவரும்
நிகரற்றுத்தாமேமுதற்காரணக்கடவுளாக விருக்கின்றதே
வதேவோத்தமனுகிய சிவபிரான்பெற்றசிறந்தபாலசுப்பிர
மணியக்கடவுள் வந்தால்அவருடன் ஏன்எதிர்த்துச் சண்
டைகொடுத்து வீணிற் பிராணனைமாளக்கொடுத்தீர் உம்
மைவெறுப்பது நீதியன்று விதிவலியைமதியினுல்வென்
றவர்கள் யாவரிருக்கின்றனர், சந்தனக்குழம்புதோய்ந்தவி
சாலமாகிய புயாசலங்களைப்பெற்றஅவுணவீரர்மந்திரிசா
மந்தர்முதலாகிய பிரமுகாள்சூழ்ந்து கட்டளைகளுக்கெதி
ர்பார்த் திருக்க அரம்பையர்நடிக்கப் பட்டுவர்புகழ மங்க
ள வாத்தியங்கள் முழங்க இத்தகைய வைபவங்களைப்பெ
ற்றிருக்கின்ற சபாமண்டபத்தில் நவரத்தினமயமாகிய சி
ங்காதனத்தில் இராசாதிராசனுக வீற்றிருந்துஅரசுசெலு
த்தி வந்ததேவரீர் இந்தப்பறந்தலையிடத்திற்பற்பலபேய்
க் கூட்டங்கள் களித்துலாவ பிணமலைகள் பெருத்துஉதி
ரப்பிரவாகமானது இரைச்சலிட்டோடஅஸ்திர் அணையி
ல்வருந்திப் பள்ளிகொண்டு துஞ்சுகின்றீரோ- எமதைய
னே அரசே ஆவியேஒருவார்த்தையையாவது ஆடீரோ
இதுவுஞ்சிலநாளோ-வெற்றிமிகுத்த மழுப்படையைத்தா
ங்கி யிருக்கின்ற நிர்மலக்கடவுளாகிய சிவபிரான்உமக்கனு
க்கிரகஞ் செய்தவரத்தின் முயற்சியையும்புயவலிமையை
யும் முக்கியமாகவெண்ணி மோசம்போனீர்- காலங்களுக்
கடுத்த தந்திரஉபாயங்களை நினைந்து தப்பித்துகொள்ளவ
கையை யோசியாமல் அநியாயமாகவிறந்தீர் ஓபிராணநாய
கரோ உம்மையினிஎக்காலத்திற்காணப் போகின்றனன்,
அக்கினிவிழியைப் படைத்தசிவகுமாரன் சண்டைகொடு
க்க வெதிர்ந்தகாலத்திற் பழமையாகவிருந்தஉமதுவலிகு
ன்றி மாண்டனிரொனக் கேள்விப்பட்டும் இன்னமும்பிரா
ணனைவைத்துக்கொண்டிருக்கின்றேன்- ஆதலால் என்னி
னும்உம்மிடத்திற் பிரீதிபத்தியிருக்கின்றவர்கள்யாவரிரு
க்கின்றனர் இனியான்யென்செய்வேன்மணவாளரேயென்
று பற்பலவிதங்களாகப் பன்னிப்பன்னிப் பிரலாபித்துத்
துக்கசாகரத்தில் அழுந்திவாடுகின்றபோது மற்றையதே
விமார்களும் அவுணராசனைச் சூழ்ந்துகொண்டுகட்டிமு
த்தமிட்டும் முகத்துடன்முகத்தைச் சேர்த்தும் சிகையை
க்கோதி முடித்தும் முன்றானைகளினுல்முகத்தைத்துடை
த்தும் வஸ்திரத்தைச்சீராய்உடுத்தும்பணிகளைத்திருத்தி
யும்தலைகளைமோதியும்நீண்டஅளக பாரங்களைவிரித்துச்
சின்னபின்னப்படப்பிடுங்கியெறிந்தும் மேலுஞ்சொல்லா
நின்ற துக்கத்துக் கேதுவாகிய காரணங்களைச்செய்துகட
லுடைந்ததைப் போலக் கோவெனப்புலம்பி வாடுகின்ற
சமயத்தில் இச்சம்பவம் நேருவதற்குமுன்னம் பெரியத
ந்தையாகிய சிங்கமுகாசுரனைப்பார்த்துவருவதாக அவன்
வாசஞ்செய்யும் ஆசுரமென்னும்பட்டணத்துக்குப்போயி
ருந்த தாருகன்குமாரன்அசுரேந்திரனென்பவன் பிதாவுக்
குநேர்ந்த கொடுமையைக் கேள்விப்பட்டு வருந்தி மனோ
வேகத்தினுங் கடுகி ஓடிவந்து ரணக்களத்தைச்சேர்ந்துபு
சபலபராக்கிரம சாலியாகிய தந்தைமாண்டு விழுந்துகிட
க்கின்ற கோலத்தைக் கண்டவுடன்பெருமூச்செறிந்துகோ
டுகோடென்றழுது கரங்களைப்பிசைந்து அளவுபடாததுக்
கசாகரத்தி லழுந்தினவனுய்க் கொடியகனலிற்பட்டவனை
ப்போலப் பதைபதைத்துத் துடிதுடித்துச் சோர்ந்து நி
லத்தில்விழுந்து களைத்துத்தேறி எக்காலத்திலும்பெருத
கிலேசத்திற்பட்டவனுய்க் கணவன்மீதில்விழுந்து அலங்
கோலமாய்ப்புரண்டுவாடுகின்ற தாயினருகிற்போய்ப் பா
தங்களில் வணங்கிஎன்னுசைத்தாயே உன்காந்தனெங்கே
எத்தலத்திற் போயிருக்கின்றனர், என்னஅநியாயம்உன
க்குச்சம்பவித்தது மாதாவே என்செய்வேன்இராசாதிரா
சனுக விருந்த பிதாபட்ட இக்கோரத்தையும் தீராதஉன்
னுடைய துக்கத்தையும் எப்படிபார்த்துச்சகிப்பேனென்
று பற்பலவிசனவாசகங்களைச் சொல்லி அரற்றினவனுய்
மேல்நடக்கவேண்டிய காரியங்களைச்செய்து முடிக்கயத்த
னித்துத்தாய்மாருக்குப்பற்பலதேறுதலைச்சொல்லிஒருவ
கையாய் அவர்கள் துக்கங்களை ஆற்றிப்பக்கத்தி லோரிட
த்தில் அவர்களனைவரையுங் கொண்டுபோய்ச்சேர்த்துஅ
த்தருணத்தில் நேர்ந்தஅவுணவீரரைக்கொண்டு தகனத்
துக்கு வேண்டும் சந்தனக்கட்டைகள் முதலாகியவஸ்துக்
களைத் தருவித்துத் தட்சணம் ரணக்களத்திற் கிடக்கி
ன்ற பிதாவையெடுத்துப் பழையபடிக்குச் சேர்த்துமுழு
க்காட்டி வஸ்திராபரணங்களைக் கொண்டு அலங்கரித்து
புஷ்பத்தினுற் சோடித்த தேரின்மேலேற்றிச்சுடலையெல்
லையிற்கொண்டு போய்ச்சந்தனக்கட்டைகளினுல் அடுக்கி
யிருக்கின்ற அணையின்மீதில் வார்த்திரமவிதிப்படிக்குச்
செய்யவேண்டுஞ் சடங்குகளைமுடித்து ஓமத்தீயைக்கொ
ண்டு தகனஞ்செய்வித்து வருகின்றகாலையில் தாயாகியசவு
ரியென்பவள் அவ்விடம்வந்து தன்குமாரனைப்பார்த்துஐ
யனே என்புருஷனுன் நான்போவதற்கு மிகவும் விரு
ப்பமாயிருக்கின்றனனுதலால் அதற்குவேண்டும்முயற்சி
களைத்துரிதமாகமுடிக்கக்கடவையென்றுசொல்லியநற்று
ய்வாக்கியங்களைக்கேட்டவுடன் நடுநடுங்கிஅழுகியபாதங்க
ளில் விழுந்து வணங்கித்தாயே பிதாவைப்பறிகொடுத்து

வாடுகின்றஅடியேனைப் போற்றி யிரட்சித் திருக்கவேண்
டுமென்றுசொல்ல அந்தவசனத்தைமறுத்து நிமைப்போ
தும் இந்தப்பூமியிலிருக்கமாட்டேன்நான்குறித்தபடிக்கு
ச் செய்யக்கடவை யெனக்கோபித்துச் சொல்லும்போது
அசுரேந்திரன்பயந்து மாதாவேஅந்தப்படிக்கு இதோமு
டித்தேனென்று சம்மதித்த பிள்ளையைப்பரிவர்கப்பார்த்
துக் குமாரனேநானும்மற்றஉன் தாய்மாருங்கணவனுடன்
வானத்தைச்சேர்ந்து களித்திருக்கத்தக்கதாகத் தழலை மூ
ட்டிவையெனக் கட்டளையிட்டபடிக்கு வானத்தைஅளாவு
ஞ் சுவாலையைவீசுந் தீக்குண்டமொன்றை விசாலமாகச்
செய்வித்து முடித்தவுடன் மானையொத்த சாயலையுடைய
தாருகன்தேவிமார் அனைவரும் ஸ்நானஞ்செய்து பட்டா
டையுடுத்துப் பரிசுத்தராய்மும்முறைவலம்வந்து அனலி
ற்பாய்ந்தனர்.

இப்படிக்குத்தாய்மார் அனைவருந்தகனமாகியபின்புத
ந்தைதாயாருக்குச் செய்யவேண்டுங் கிரியைகளைமுடித்து
அசுரேந்திரனைவன் கிலேசத்துடன் புலம்பிக்கொண்டுத
ன்பட்டணத்தினும் போகாமல்தட்சணமே அத்தலத்தை
நீங்கிச்சேர்ந்த சுற்றத்தார்சிலர் சூழ்ந்துவரக்கடுகிநடந்து
கருங்கடலின் மத்தியிலிராநின்றவீரமா மயேந்திரபுரியை
ச்சேர்ந்து மனவாட்டத்துடன் பழைய முகப்பொலிவுநீங்
கி மேனிகரிகரிந்து புழுதிமூடக் கொடிய தரித்திரனைப்
போலப் பாதசாரியாய்த் தாருகன்பிள்ளை அசுரேந்திரன்
போகும்பொழுது அப்பதங்கோலத்தினை மயேந்திரபுரி
யின் வீதிகளிலிருக்கின்றஅவுணவீரர்களாதியர்கண்டுஅ
ந்தட்சணமே அதிககிலேசசித்தராய்வாடிநடுநடுங்கிக்கரங்
களைவிரித்துக்கொண்டு விழிகளிற்பெருகும்நீரானதுஓடி
க்கால்களின் மூலமாகப்பாயப் பெரும்புறக்கட லுடைந்த
துபோல மிகவும் வருந்திப் புலம்பினவர்களாய் இந்தராச
குமாரன் வெறியனுயிப்படிக்குத்திகைத்து ஓடிவருவதற்
குக் காரணமென்னோ வெனக்கும்புகும்பாய்ச்சேர்ந்துபே
சிக்கொள்ளுகின்றனர், இந்த அசுரேந்திரன் கொலைகளவு
கட்காம மென்கின்ற கொடுமைகளைச் செய்வதற்குச்சகி
யாமற் றருமத்தையேவிரும்பி யிருப்பவனென்றுபலரும்
வசனித்துக்கொள்ளக்கேட்டிருப்போம் ஆதலாற் றன்கு
லவிருத்திக்கடுத்தநடையில்லையென்றுபிதாவானவன் கோ
பித்துத் துரத்திவிட்டனனோவென்றுசிலர்சொல்லவும்அ
ல்லது பழிபாதகங்களை அஞ்சாது செய்துவருந் தாருகன்
நடவடிக்கைகளைப் பார்க்கமுடியாமல் இந்தக்குமாரன்தா
னே தூறிக்கொண்டுவந்து விட்டதாகவேண்டுமென்றுசில
ர்சொல்லவும் இந்திரன்தெய்வலோகவாழ்வையுந்திரிலோ
கஅரசினையுமிழந்துதனதுருவத்தைமறைத்து வேற்றுரு
க்கொண்டு பூலோகத்திற் சஞ்சரிக்கின்றனனெனச்சொல்
லுவர், அவன்ஒருகாலம் பரமசிவத்தைநோக்கிஅரியதவங்
களைச்செய்து அவரனுக்கிரகத்தினாற் புசபலபராக்கிரம
மும் மாயைப்பெருக்கையும்பெற்றுத் தன்சேனையுட ஓ
கோபித்து வந்தெதிர்த்துக் கொடியபோரைச்செய்துவாட்
ட அவன்பாணங்களுக்குச் சகிக்கப்படாமல் தாருகன் இ
றந்தனனோ அக்கொடுமைக்கஞ்சி யிக்குமாரன் இவ்விட
ம் ஓடிவந்துவிட்டனனோவென்று சிலர்சொல்லவும். வீ
ராதிவீரனை தாருகன் சிலபகைவருடன் போராடித்தி
ராணியில்லாமல் அவர்கள்கையில் மாண்டனனென்பத
ற்குச் சிலதிருஷ்டாந்தத்தைக்கண்டிருக்கின்றனம், அஃ
தென்னையெனின் வானத்தையளாவநின்ற கிரவுஞ்சபர்வ
தமானது இதுபரியந்தம் எவ்விடத்திலநின்று பார்க்கி
னுந் தோற்றப்படும் இப்போது அதனுருவையும் அத
ன்மீது உலவித்திரியும் அவுணராகிய நம்மவர்களையுங்கா
ணவில்லை தூளிபடலமாத்திரம் பெருத்து விளங்குகின்
றதுஇதைவிட வேறொருகாட்சியும் வேண்டுமோவெனச்
சிலர்வசனிக்கவும். ஆயிரம்பணமகுடங்களையுடையசேஷ
சயனத்திற் பள்ளிகொண்டிருக்கும் மகாவிஷ்ணுசெலுத்
திய சக்கரப்படையைப்பசியபொன்னணியாகக்கண்டத்தி
ற்றரித்திருக்கின்ற ஜயசாலியுடன் தயிரியங்கொண்டெதி
ர்த்துச்சண்டைகொடுப்பவர்யாவரிருக்கின்றனர், அல்லது
அவன்முனையில் நின்றுசற்றுநேரம் வாதுகொடுத்தபோ
தினும் ஈஸ்வரவரப்பிரசாதி யாதலால்மாள்வதுஅரிதுஇ
தைநிச்சயமாக நம்பவேண்டுமெனப் பலர்பேசவும்சிலநா
ட்களுக்குமுன்னம் நமதிறைவனுகிய சூரபதுமன்தங்கை
அசமுகியென்பவள் வீரமாகாளனென்னும் சவுரியபரனு
ல்தன்கரத்தையிழந்துவந்துஅரசன்முன்விழுந்து முறை
யிட்டகாலத்திற் சூரன்கோபித்துப்பலதேவர்களைப்பிடித்
துவரச்செய்து சித்திரவதையாகியதண்டனைகளைச்செய்து
ங் கோபந்தணியாமல் இந்திரகுமாரனுகிய சயந்தனையும்
தேவர்களையும் அவர்கள்பெண்டுபிள்ளைகளையும், இத்தின
வரையில் அரியசிறையில்வைத்திருக்கின்றனன், இக்கால
த்தினும் இந்தராசகுமாரன் இக்கோலமாய்த் துன்பக்கட
லிலாழ்ந்து கிலேசித்துப் போகின்றனன், இதைக்கண்ட
வுடன்நமதுஅரசன் வடவாமுகாக்கினியைப்போலப்பொ
ங்கிப்பழையபடிக்குத் தேவர் கூட்டங்களைத் தொந்தரை
செய்வதற்கு ஐயமில்லையெனச் சிலர்வழங்கிக்கொள்ளவும்
நீலமேகவண்ணரான மகாவிஷ்ணுவானவர்நமதுஅரசன்
தாருகனுடன் போர்செய்ய நினைக்கவேமாட்டார் சிருஷ்டி
கர்த்தனுன பிரமதேவன் இக்கருமத்தைக் கனவிலும்மதி
யான் ஆதலால்புசவன்மைக்கொருவனுகிய தாருகாசுரனு
டன் வாதாடுவதற்குபார்ப்பதிபாகனுன ஈஸ்வரனல்லதும
ற்றொருவராற் கூடுவதோவெனச்சிலர் கூறவும்தேவர்கள்
கருடகாந்தருவர் சித்தர்வித்தியாதரர் பன்னகர்முதலியஅ
ந்தரவாசிகள் நம்மவர்கள்காட்டிய பணிவிடைகளைச்செய்
து வருகின்றனர், அவர்களாலொன்றும் நேரவறியாதுஆ
தலால் இந்தராசகுமாரன் வாடிவருவதற்குஏதோஒருமு
க்கியமாகிய காரணமிருக்கவேண்டும் வெகுநாளாய் எதிர்
த்துச் சண்டைகொடுப்பவரின்மையாற் புசங்கள்தினவெ
டுத்துச்சோம்பலாய்வாடி யிருக்கின்றனம், சந்தேகமில்லா
மல் இனிமேற்சண்டைக் கேதுவுமுண்டு சந்தோஷமாயி
ருங்கோளெனச் சிலவீரர்கள்சொல்லவும் இந்தராசபுத்தி
ரன் அல்லலிற்பட்டுப் போகின்றகாரணத்தினுல் இதை
க்கண்டவுடன்நமது சக்கிரேஸ்வரன் சீறிக்கட்டளையிட் ட
னுப்புவதற்கு முன்னம்துரிதமாய்த்திரண்டசேனைகளுட
ன் பிரயாணப்பட்டு மாயமாபுரிக்குப்போய் நடந்தகாரிய
யங்களைத் தெரிந்து நம்மாற்கூடிய முயற்சி களைச்செய்து
திரும்புவோம் வாருமெனச் சிலஜயசாலிகள் துரிதப்பட
வும் இவ்விதங்களாக அவுணவீரர்கூடி மனவருத்தங்களு
டன் வசனித்துவரும்போது அசுரேந்திரன் வீரமாமயே
ந்திரபுரியின்வீதிகளைக்கடந்துவீரகண்டைகள்சத்திக்கும்
பாதங்களையுடைய சூரபதுமன் வாசஞ்செய்யும்அரண்ம
னையைச்சேர்ந்துஅவுணவீரர்மந்திரிபிரதானிகள் முதலா
கநெருங்கியிருக்கின்றநவரத்தினமயமாகியசபாமண்டபத்
தில் விளங்குஞ்சிங்காதனத்தில் வீற்றிருந்துஅரசுசெலுத்

தும் ராசாதிராசனை சூரபதுமனைக்கண்டு ஓவெனப்புல
ம்பிக்கொண்டு சமீபத்திற்போய் பாதங்களில்விழுந்துதன்
கரங்களினால் அவற்றைப்பிடித்துக்கொண்டு மிகவும்புல
ம்பி ஏங்குவதைஅவுணருக்கரசன்கண்டவுடன்மனவருத்
தத்துடன் ஐயனேகிலேசிக்கவேண்டாம்இப்படிக்கு அல
ங்கோலமாகவருவதற்கு உனக்குச்சம்பவித்தகாரியங்களை
விரைவிற்சொல்லக்கடவையெனக்கேட்டபோது அசுரேந்
திரன் ஒருவகையாய்த் தேறினவனாய் அப்பாநானென்ன
சொல்லுவேன் வாயெழவில்லை தேவேந்திரன்தந்திரவஞ்
சகத்தினால் இல்லாதவைகளையெல்லாஞ்சொல்லிமுறையி
ட்டுக்கொண்டு சிவகுமாரனாகிய பாலசுப்பிரமணியனென்
பவனை உடன்படுத்தியதால் அப்பாலன்பலபூதப்படைக
ளுடன்மாயமாபுரிக்குவந்து உன்தம்பியைவளைத்துக்கொ
ண்டு அகோரயுத்தங்களைச்செய்து சேனைகளனைத்தை
யும் தும்சம்பண்ணிக்கொன்று கடையில்தாருகனுடன்கி
ரவுஞ்சபர்வதத்தையும் வேலினாற்பிளந்துவதைத்து இப்
பூமண்டலத்திலிராநின்ற நம்மவரைத்தேடிக்கொண்டு வ
ருகின்றனனெனச்சொன்ன கொடியவசனங்களைச் சூரன்
கேட்டபோதுகுமாரனே நீபேசுவதுமெத்தவும் அதிசய
மாக விருக்கின்றதெனக்கோபநகைகொண்டவனாய்ச்சலன
மற்ற புசபலபராக்கிரமசாலியாகிய தாருகாசுரனையும் மா
யைக்கரசனான கிரவுஞ்சனையும்காளகண்டமூர்த்திகுமார
னோ வெல்பவன் இதுசுத்தபொய் அப்பனே நீஏதோசில
துன்பங்களிற்பட்டுத் திகைத்துவந்திருக்கின்றனை ஆதலா
ல் மனச்சஞ்சலமற்று நடந்தசெய்தியை எதார்த்தமாய்ச்
சொல்லக்கடவையெனக் கேட்டபோது அசுரேந்திரன் வி
ழிகளில் நீரைப்பெருக்கிப் பிதாவேகேட்பீராக இப்போ
துநான்விண்ணப்பஞ்செய்தது சத்தியமானவாக்கியம்என்
பிதாவையும் மாயையிற்சிறந்த கிரவுஞ்சவரையையும்சிவ
குமாரன் வேலினாற் கொன்றனன், அந்தச்சம்பவத்தைநா
ன் ஆசுரத்திற்கேள்விப் பட்டு வேகமாகப்போய் யதார்த்
மாகக்கண்டு பிதாவைத் தகனஞ்செய்துதாய்மார்மன இஷ்
டப்படிக்கு அக்கினிப்பிரவேசத்துக்கு வேண்டியதீக்குண்
டமுடித்து அவர்களையும்பறிகொடுத்து வறியனாய் அத்த
லத்தினும் நிற்கமனமில்லாமல் தேவரீருடன்இந்தமனவ
ருத்தத்தைச்சொல்லி ஆற்றிக்கொள்ளவந்தேன்இதுஉண்
மையானது நம்புமெனப்பேசிய வாசகஞ்செவியிற் பட்ட
வுடன்தன்வலதுபுசத்துக்குச்சமதையாகவிருந்துசகலஜய
ங்களும்பெற்றுக்கொண்டுவந்தகிரனாகிய துணைவன்மாண்
டனனென்பது நிச்சயப்பட்டகாலத்திற் சூரபதுமன்மன
தில் கோபாக்கினியானதுமூண்டு மேல்ட்டுவிழிகளிற் கு
பீல்குபீலெனத்தீப்பொறி சிதறவும்நாசிகளிற்புகைப்பட
லம் பெருகிச்சரீரத்திலிராநின்றரோமத்துவாரங்கள்முற்
றினும் அனற்சுவாலைவீசவும் புருவமானது உயர்ந்துநெ
ற்றியிலேறவும்பற்கள் கடகடெனக்கடித்துஉதட்டை அது
ங்கி படபடெனவாய்துடிக்கவும் மனமானது அண்டமுத
லிய புவனங்களனைத்தையும் அதப்படுத்தநினைக்கவும் இ
ப்படிக்குக்கோபக்கனலானது மீறியலைக்கும்போதுஅதன்
மத்தியிற் பிராணபதமாகவுஞ்ஜயசாலியாகவுமிருந்ததாரு
கன்மேலிருந்த பட்சத்தினால் உண்டாகிய துக்கசாகரமா
னதுபெருகி அத்தீயையவிக்கவும் பவளத்தினுஞ் சிவந்தி
ருந்த விழிகள்கலங்கி ஜலமானதுபெருகி நதியைப்போல
ஓடியொளிக்கவும் துக்கசாகரமென வழங்கிக்கொள்வதுஉ
ண்மையெனக் காட்டியாறுபோலத் தேகமெங்கணும்விய
ர்த்தொழுகிப் பாயவும் இவ்விதமாகத்துன்பக்கடலில்அக
ப்பட்டு ஐம்புலன்களும்நிலைகலங்கிஅறிவுசோர்ந்துசிங்கா
தனத்தில் நின்றுந்தவறி நிலத்தில்விழுந்து கோடையிடி
யைப்போலப்பிரலாபித்தகாலத்தில்எழுந்தஓசையினால்பூ
மிகிடுகிடெனநடுங்கி அதைச் சூழவிருந்தசமுத்திரமான
து கொதிப்பெடுத்துஅதலகுதலப்படவும் மன்னுயிர்களை
க்கொண்டுபோகுந் திறம்பெற்ற யமதருமராசனும் கிடுகி
டாய்த்துச்சோரவும்சமுத்திரத்தில் அடங்கியிருந்த வட
வையானது குலைகுலைந்து மங்கவும்பிரசண்டவாயுவும்பய
ந்தொளிக்கவும் சூரியசந்திரர்முதலிய நவக்கிரகங்கள்மற்
றநட்சத்திரராசிகள்நிலைதப்பிப்பூவட்டமெங்கும்பலபலெ
ன உதிரவும் இந்தமண்ணுலகை ஒருதலைப்பாரமாகத்தா
ங்கியிருக்கின்ற ஆதிசேஷன் ஆயிரஞ் சிரங்களைக்கொண்
டுசுமந்துங் கூடாமையால் வருந்தித்திகைக்கவும் அச்ச
பையிலிருந்தவீரராகிய அவுணரும் அரசன்படும் வருத்
தங்களுக்குமனந்தாபரியாமற் கிலேசத்தில் ஆழ்ந்துஏங்கி
விழுந்து அரற்றிச்சோர்ந்து படாதபாடுகள்படவும் இப்ப
டிக்குச் சமஸ்தமும் ராசபரமேஸ்வரனுக்குநேர்ந்த மன
வருத்தத்தைக்குறித்து வாடுகின்ற காலையில் அந்நகரவா
சிகளனைவருந்தங்கள் தங்களுக்குவந்தஇடையூறுபோலக்
கொடியதுன்பத்திற்பட்டுப் புலம்புமோசையானது பெரு
த்துப்பொலிவற்றுவாடினர், துக்கித்திருந்த சூரபதுமனு
க்குமுன்னமெழுந்துகோபக்கனலானது விசனத்தினால்அ
டங்கியிருந்தது மீறியெழுந்து அதினும் பதின்மடங்குசு
வாலையைவீசமானமும்நாணமும்மனதைத்தூண்டச்சோ
லென் றெழுந்து பக்கங்களிற் சூழ்ந்திருக்கின்ற தன்ப
ரிசனரைப்பார்த்துச் சொல்லுகிறான்,

ஆயிரத்தெட்டு அண்டங்களையும் ஏகசக்கிரமாக ஆண்
டு வரும் ராசாதிராசனாகிய நமது துணைவன் தாருகனை
க்கொஞ்சமாவது எண்ணிக்கையில்லாமற் கொன்றும் மே
லிட்டுவருகின்ற கந்தனென்பவன் புயவன்மையைக்காட்டி
வெற்றிகொண்டுவர நினைந்தனனாதலாற் கணப்போதுகழி
வதன்முன்னம் நமது இந்திரஜாலத்தேரையும்வயிரகவச
ததையும் வில்தேவாஸ்திரங்கள்முதலிய பற்பலஆயுதங்க
ளையும் கொண்டுவரக்கடவீரெனக்கட்டளையிட்டனன். அ
ரசன்வாயிலிருந்து இந்தஉத்தரவுபிறந்தவுடன் கிங்கரர்
மனோவேகத்தினும் முந்தியோடி அவற்றினைத்துரிதமாக
க்கொண்டுவரப்போயினர், உடனே சபையிலிருந்தவீரக
ண்டையணிந்த அவுணவீரர் அரசன் மனக்குறிப்பைத்
தெரிந்து சடுதியிற்போய் ஆயுதபாணிகளாய்ச் சயசாலிக
ளாகிய நால்வகைச்சேனைகளுடன்வந்துகடைவாயிலின்பு
றத்திற்சூழ்ந்தனர். இப்படிக்குச் சூரன்கோபித்துப் பி
ரையாணப்படுவதையும் சேனைகள்வந்து நெருங்கியிருப்
பதையுங் கண்டவுடன் சபையிலிருந்த மந்திரிகளில் அ
திகவிவேகசாலியாய்த் தீர்க்கயோசனை பரனாகிய அமோக
னென்பவன் சமீபத்திற்போய்ச் சூரன்அழகியபாதங்களி
ற்பணிந்துஅரசனே நானொருமந்திராலோசனையைச்சொ
ல்லுகிறேன் கோபியாமற் கேட்டருளவேண்டுமெனப்பே
சத்தொடங்கினன், கூர்மைபொருந்திய திவ்வியபாணங்க
ளைச்செலுத்தும் தனுர்வித்தைகளைப் பூரணமாகக்கற்று
நேர்ந்தசத்துருக்களை வளைந்துகொண்டு பின்னிடையாம
ற் சபதப்படிக்கு வெற்றிகொள்ளவல்ல சுத்தவீரராயிருக்
கின்ற அரசர்களாயினும் பராசர்கோபித்துத் தங்கள்நக
ரத்தின்மீதுவந்து சூழ்ந்தெதிர்த்தகாலத்திற் றுரிதப்படா

மல்விவேகசாலிகளுடன்கூடி மந்திராலோசனைகளைச்செய்து ஒருகருமத்தைத் தீர்மானித்தல்லது வெவ்விதாகிய கோபாக்கினிமேலிட்டச்சீறி யெதிர்த்துச் சண்டைகொடுக்கப்போகார்கள்மேலும் வந்தபகைவன் குலகோத்திரங்களையும் இன்னமரபில்இன்னானுக்குப் பிறந்தவனென்று விசாரணைசெய்தும் மற்றும்அவனுக்கிருக்கின்ற சேனைகளின்வலியையும் எவ்வகையிடம்பொருளேவல்களைப்பெற்றிருக்கின்றவனென்றும் அவன் முன்னவர்கள்சவுரியபராக்கிரமங்களையும் தன்பேரில் இன்னகாரணத்தைக்குறித்துக் கோபித்துவந்திருக்கின்றானென்பதையும் போருக்குவந்திருக்குஞ் சேனைகளின் வீரபராக்கிரமங்களையும் பகைவன் புசபலவலியினையும் பூர்த்தியாகத் தெரிந்தல்லது ஒருகாரியங்களையும் மனதிற்றீர்மானிப்பரோ இஃதன்றியும் பகைவன் தேவர்வரப்பிரசாதங்களைப்பெற்றவல்லபமுடையனென்றும் மாயைகளிற் சிறந்தபராக்கிரமசாலியென்றும் திவ்வியஅஸ்திரசஸ்திரவிதங்களைப் படைத்திருக்கின்றவனென்றும் அவற்றிற்குரியமந்திரதந்திரங்களைக்கற்றுக் கரவேகமாகச்செலுத்தவல்ல தீரனென்றும் தேகசம்பந்தமாகிய வலியில் முக்கியனென்றும் தருணத்துக்கடுத்த உபாயங்களைச்சீர்தூக்கிநடத்தத்தக்க விவேகசம்பன்னனென்றும் விசாரணைசெய்து அவற்றின்திறங்களைஆராய்ந்தபின்பு மேல்நடத்தவேண்டுவதற்கு முயற்சிசெய்வர். இத்தகைய ஆராய்ச்சிகளைமுடித்தபோதினும்நம்பிக்கையுள்ள சிலதூதரைச்செலுத்திப் பகைவருடன்வந்திருக்கின்ற சதுரங்கச்சேனைகளின் திறங்களையும் வல்லபங்களையும் பூர்த்தியாகத்தெரிந்து கொண்டபோதினும் அதனால் நிச்சயப்படாமல் மேலும் முன்னினும்மனதுக்குச் சம்மதமாகவி க்கின்ற வேவுகாரரைத்தூண்டி அவர்கள்திருஷ்டாந்தமாகத்தெரிந்துவந்தபின்புஇரண்டுகேள்விகளையுஞ் சீர்தூக்கிப்பார்த்து வித்தியாசங்களைத்தெரிந்து ஒன்றைமனதில் நிச்சயப்படுத்துவர், இவையன்றியும் பகைவரைப்போற்றிவந்தரதகஜதுரகபதாதிகளின்பெருக்கன்றியும் பின்பலமேதேனுந் தூலதூரத்தில்வைத்திருக்கின்றனரென்பதையும் நம்பிக்கையாக விசாரணைசெய்துகொள்வர்மேலும்தன்மீதிற்பகைத்துவந்த பகைவன்பலம் எளிதாகக் கண்டபோதினும் அதைச்சிறிதாகநினையாமற் பெரிதாகவேமதித்தும் சேனைகள் சுலபமாகவிருப்பினும் அவற்றினையும் அவ்வாறே திரண்டதாகவெண்ணியும் தங்கள்வலிக்குப்பகைவன் தாழ்ந்தவனாகிலும் பராக்கிரமசாலிகளாகிய மேம்பாட்டையுடையவர்களைப்போலமதித்தும் சாமபேததானதண்டமெனச்சொல்லும்சதுர்விததந்திரங்களில் முதற்குறித்த மூன்றுஉபாயங்களினால் வசப்படுத்திக்கொள்ளவேண்டும் அஃதாவனசமாதானத்தோடாயினும் பகைவன்கூட்டத்திலிருக்கின்ற வீரரைத்தந்திரத்தினாற் கலைத்துத் தம்மிற்சேர்த்துக்கொண்டு வலிகுன்றிப்போகச் செய்தாயினும், சிலஉலுப்பைமுதலிய பொருள்களைக் கொடுத்தாயினுங் காரியசாதகப்படுத்துவதாம் இவ்விதமுத்திறங்களினாற் கூடாதாயின் நான்காவதாகவிருக்கின்ற அரசர்களுக்குரிய தண்டத்தினால்வெல்லத்தகும் அஃதாவது நால்வகைச்சேனைகளைக் கூட்டிக்கொண்டுபோய் இராசதருமப்படிக்கு ரவுத்திராகாரமாகிய கோபத்தைப்பெற்றவர்களாய் முற்றுகைப்போட்டுத் தயிரியசாலிகளாகிய சேனைகளைக்கொண்டும் தான்படைத்திருக்கின்றஆயுதவகைபுயவன்மையினாலும்எதிரிகள் காரணங்களைமதித்துச்சுற்றிக்கொண்டுவெற்றிபெற்றுத்திரும்புவர்.

இவையன்றியும்அரசனே யின்னமொருநீதியைச்சொல்லக்கேளும் தம்முடனெதிர்த்துச்சண்டைகொடுக்க வலியற்றவர்களையும் உயுக்தமுகத்திற்பயந்து அடைக்கலம்புகுந்தவர்களையும் புறந்தந்தபேர்கள் மீதினும் சுத்தவீரர்களாகவிருக்கின்ற அரசர்கள்போரைச்செய்ய அவர்கள்மீதிற்போவதும்சேனைகளைச்செலுத்தித் துரத்துவதும்தீராதபழிபாதகமாம்வீரத்தன்மைகளைப்பெற்றவர்களுக்கு அழகுமன்று ராசாதிராசனே மேற்குறித்த பிரகரணங்கள் உலகத்திருக்கின்ற அரசர்கள்நடந்து கொள்ளவேண்டும் நீதியாகும் ஆதலால் தேவரீரைப்பார்க்குமிடத்தில் அழிவற்ற வச்சிரதேகத்தைப் பெற்றவன்மேலும் ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கும் ராசபரமேஸ்வரனாகவும் இதுவரையிற் குறைபாடொன்றும் பெறாதவனாய் இந்திரனாதிய தேவர்களைவென்று அடிமைகொண்டு ஆள்பவன்பிரமதேவன் காலங்களிற் பஞ்சாங்கஞ்சொல்லி வாழ்த்தவும் மகாவிஷ்ணுவானவர் புகழ்ந்துபோற்றவும் வாழுகின்றனை யித்தகைய ஜயங்களையும் புயவலிமைகளையுங் கீர்த்திப் பிரதாபங்களையும் பெற்றிருக்கின்ற தேவரீர் அபலனாய்த் தமக்குப் பயந்தொளித்துத் திரிகின்ற இந்திரன்சொல்லைப் பெரிதாகக்கேட்டு அவனுக்காளாய்ப்புல்லியபூதங்களைச் சேனைகளாகக்கொண்டு ஈஸ்வரன்நேற்றையதினம் பெற்றசிறுபிள்ளைவந்தால்அவனைஒருபொருளாகமதித்து நீரேபோய் வென்றுவர நினைந்தீர்அரசனே நானென்ன சொல்வேன், அவ்வாறே நடப்பீராயின்இதுவரையிற்பெற்றிருக்கின்ற கீர்த்திகளும்மங்கிப் பலராலு மிகழும்படியாகிய வசைகிடைப்பதல்லது வேறொன்றினைக்காணேன் எமதிறைவனே யிப்போது வருகின்றபகைவன் சவுரியபராக்கிரமங்களை நிதானித்துப்பார்த்தவனல்லை மேலும்அவன்படைவீரர்களினது பெருமைகளையும் வீரத்தையும் மதித்ததில்லை தேவர்கள்-அவுணர்-இராக்கதர்- முதலியசவுரியவான்களாற் புகழ்கின்ற உமதுமேம்பாட்டைமறந்தனை நீர்யத்தனித்துச் செய்யப்போகின்ற காரணங்களைஉமதுவெற்றியைக்கோரிக் காத்திருக்கின்றமந்திரிபிரதானிகளுடனும் சொல்லியோசித்து மேல்நடக்கவேண்டிய முடிவைத் தீர்மானித்ததுமில்லை காரியாகாரியங்களை மதித்துப்பாராமல் விருதாவில் தேகஞ் சூடெழும்பும்படிக்கு அதிககோபத்தைக் கொண்டுபோகத் துணிவது உம்மையொத்தசூரனுக்கு வெற்றிக்குரியதோ இவையன்றியும்வீரபராக்கிரமசாலிகளா யிருந்தபோதினும் பிராரத்வவினை வந்து கூடுமாயின் இப்பூமியின் கண்வலியில்லாத ஒருவன்கையில் அகப்பட்டுமாள்வர் உம்மைப்போலஅசைவற்ற உறுதிபெற்ற வச்சிரகாயத்தினைப்பெறுதகுறையினால் தாருகாசுரன்யிளைத்து மழலைச்சொல்லருத சிறுபிள்ளையினாற் கொல்லப்பட்டிறந்தான். மேலும்ஒருகாரணத்தைச்சொல்லக் கேட்பீராக. - கலகலெனச் சத்திக்கும் தண்டைசதங்கை யணிந்திருக்கும் பாதங்களையுடைய சிறுபிள்ளைகையினால் யானைமுகத்தினைப்பெற்ற உன்சகோதரன்மாண்டதை அற்புதமாக நினைக்கவேண்டுவதில்லை புசபலபராக்கிரமசாலிகளேயாயினும் ஒருகாலம் தங்கள்வல்லபங்களையிழந்துவாடவரும் அவ்வாறே அபலராயிருப்பவரும் அதிகசூரராய்ப் பலராலுந்துதிக்க வாழ்வதுமுண்டு ஆதலால் நிகரற்றுஜபசாலியாயிருக்கப்பட்ட அரச

னே சொற்களையின்னமுந் திருத்தமாகப் பேசவறியாத சிறுகுழந்தையின்பேரிற்கோபித்துப் போரினைச்செய்யநி னைந்துபோவது ஒருபோதும் புகழுக்குரியதன்று இதனை யோசித்து அக்குமாரன் சிறப்பினையும் வல்லபத்தையும் சேனைத்திறங்கள்முதலிவைகளையுந் தீர்க்கமாய்விசாரணை செய்து தெரிந்தபின்பு அவனைப்பார்க்கிலுந் தீரராகவிரு க்கின்ற புயவன்மைபெற்ற அவுணத்தலைவரிற் சிலரைச்ச துரங்கசேனைகளுடன் அனுப்பிப் பகைவரைஜயித்துவெ ற்றிபெற்றிருப்பீரெனச்சொன்னான்.

இப்படிக்கு விவேகசாலிகளாகிய மந்திரிகளிற்சிறந்த யோசனைபரனாகிய அமோகனென்பவன் அரசர்களுக்கடு த்த நீதிகளைஎடுத்துக் காட்டியபோதுசூரபதுமனனவன் அவைகளையோசித்து இஃதுண்மையாகிய காரியமெனத் தெளிந்தவனாய் மீறியிருந்தகோபத்தைத் தணிந்துநவரத் தினமயமாகிய சிங்காதனத்தின்மீதில்வீற்றிருந்துசபையி ல் நெருங்கியிருக்கின்ற மந்திரிகளிற் சிலரைப்பார்த்துச் சொல்லுகின்றான், ஓ! அறிவாளிகளே? நீங்கள்விரைவிற் போய், பகன்-மயூரன்-சொர்னபருதி-சரபன்-சுகன்-முதலி யவேகமுள்ளதூதரை அதிசீக்கிரத்திற் றருவீரெனக் கட் டளையிட்டவுடன் சூரனைவணங்கிப் போற்றியோடி அர சன்குறித்த தூதரைத்தேடிக்கொண்டுவந்து சேர்த்தனர், மேற்குறித்த வேவுகாரர்அதிவேகமாய்வந்துதட்சணம்ரா சபரமேஸ்வரன் பாதாரவிந்தங்களிற் பணிந்துநிற்கச்சூர னனவன் அவர்களைப்பார்த்து இந்தத்தட்சணம் நீங்கள் துரிதமாகவோடித் திருக்கயிலாயத்தைநீங்கி யிந்தப்பூம ண்டலத்தில் வந்திருக்கின்ற கந்தனென்பவனுடைய கார ணகாரியங்களையும் அவனுடன்சூழ்ந்திருக்கின்ற பூதசே னைகளின் பெருக்கையும் அவர்கள் பராக்கிரமங்களையும் மற்றுமிராநின்ற செய்திகளையும் விபரமாகத் தெரிந்து கொண்டு விரைவில் இவ்விடம்வந்து சேரக்கடவீரெனப் பணித்தனன், அவர்களும் ராசாதிராசனைப்போற்றிஅவ ர்பணிவிடையைச் சிரசில்வகித்துப் பூமண்டலத்தைநோ க்கியோடினர், அவர்கள்போயினபின்பு ஒப்பற்றசூரபது மனனவன் ஜயசாலிகளாகிய அவுணவீரர்முதலாகிய பல ருஞ்சூழ்ந்துபோற்ற அரசாட்சிசெய்திருந்தனன், சவுன காதிரிஷிகளே? அகண்டசாம்பிராச்சியச் செல்வங்களைஅ நுபவித்திருக்கும் சூரபதுமன் தன்துணைவனாகிய தாரு கனிறந்தசெய்தியைத்தெரிந்து துக்கசாகரத்திலமுந்திவரு ந்திய காரணங்களையும் மேல்நடத்தியசெய்திகளையு மிது பரியந்தஞ்சொன்னோம் இனிஆதிதேவனாகிய சிவகுமார ன் தேவகிரியைநீங்கிப் பூவட்டத்தெல்லையில் வந்தகதாப் பிரசங்கங்களையும் பேசுவோம் கேட்பீராகவென்றுஆரம் பித்தனர்.

---

ஏதமில்சூரபன்மனிளவறன்முடிவுநேடி
மாதுயர்கொண்டுதேறிவைகியதன்மைசொற்றாம்
மாதியங்கடவுண்மைந்தனமரர்தங்கிரியைநீங்கிப
பூதலமீதவர்ந்தநெறியினைப்புகலலுற்றாம்.

---

## வழிநடைப்படலம்.

குருமணிமகுடமாறுங்குழைகளுந்திருவில்வீசத்
திருமணிவரையின்மேவுந்திருக்கைவேற்பெருமானுக்குக்
கருமணியாழிப்புத்தேள்கையுறையாகவாங்கோர்
பருமணிநீட்டிற்றென்னப்பானுவந்துதயஞ்செய்தான்.

---

முன்னம்நாம்சொல்லியிருந்த தேவகிரியில் மயனனவ ன்செய்த நகரத்தின்கண் இராக்காலத்தைக் கழிப்பதாகச் சிவகுமாரன் தன்சேனைகளுடன் தங்கி யிருந்தன ரெனப் பேசியிருந்தோம், அவ்விரவுநீங்கிப் பிராதகாலத்திற்சூரி யன் உதயமாகியகாட்சிஎப்படிக்குக்காட்டியதென்றால்,சி ரோரத்தினங்களினாற் சோடிக்கப்பட்ட கிரீடங்கள் ஆறு ம் வயிர குண்டலங்கள் பன்னிரண்டும் அதிகபிரகாசங்க ளை வீசத்தக்கதாகப் பலவகை ரத்தினங்கணிறைந் திராநி ன்ற தேவகிரியில் வீற்றிருக்கின்ற வெற்றிவேலைக் கரத்தி ற்படைத்த சண்முகப்பெருமானுக்குமுத்தினங்களை அலை களினாற்கொழிக்கும் பெருமையினையுடைய சமுத்திரரா சன் திரைகளாகியகரங்களினால் ஒப்பற்ற மணியொன்றி னையேந்திவெகுமதிகொடுக்க நீட்டியதைப்போலச் சூரிய பகவான் உதயகிரியிற்றோற்றி மேகங்கள்சஞ்சரிக்கும்வா னத்தெழுந்து அடியார்கள்கரங்களைக்கூப்பித்தொழுவது போலக் கிரணங்களானவை சிவகுமாரன்திருவடிகளிற்ற ழைப் பிரகாசித்தெழுந்தகாலத்திற் சண்முகப்பெருமாள் பள்ளியைவிட்டெழுந்து நித்திய கருமங்களை முடித்துக் கொண்டுதேவர்கள் நவவீரர்கள்முதலாகிய சேனைகள் சூ ழ்ந்துபோற்றிவரத் தேவகிரியைநீங்கி நடந்துபற்பல தே சங்கள் வனங்கள்நதிகள்முதலானவைகளைக்கடந்து தவசி ரேஷ்டராகிய பிருங்கிமகாரிஷியானவர் ஒருகாலந் திருக்க லையிற் பத்திபரவசராய்ச் சிவம்ஆதியெனத்தெளிந்தவரா தலாற் கர்த்தனைமாத்திரம் வலம்வந்துபணிந்துபராசத்தி யைத் தரிசியாதவராய் நடக்கும்போதுஅம்மன்கோபித்து த் தன்மயமாகிய உதிரமாம்சங்களைக் கிரகித்தகாலத்திற்ச க்தியற்றுத்தள்ளாடி வரும்போது பரமனிரங்கி மூன்றா வதுபாதத்தைஆதரவாகக் கடாட்சித்தகாலத்திற் பார்ப்ப தியார்தனதுகணவன் வேதங்களின்அந்தமாயமூலகாரண னெனத் தெளிந்தவளாய் என்னாண்டவனைப் பிரியாமற்க லந்திருந்து பத்தர்செய்யும் வந்தனைவழிபாடுகள் தமக்கு ங் கிடைக்கவிருப்புற்று இமயராசபுத்திரியானவள்அரிய தவங்களைச்செய்துபரமன் வாமபாகத்தைபெற்ற சிரேஷ் டமாகிய கேதாரமென்னுந்தலத்தைச்சேர்ந்துஉமாபரமே ஸ்வர முகூர்த்தமாக எழுந்தருளியிருக்கின்ற பரமசிவத் தைப் பணிந்துபோற்றி அத்தலத்தைக்கடந்துபோய்ஆயி ரம் பணாமகுடங்களையுடைய சேஷசயனத்திற்பள்ளிகொ ண்டிருக்கும் மகாவிஷ்ணுவுக்கும் பிரமதேவனுக்கும்முத ன்மையாகவிருக்கின்ற பார்ப்பதி பாகனாகிய சிவபிரானே பரம்பொருளென்னுங் காரணத்தை மயக்கவாசனையைப் பெற்ற மானிடர்முதலாகத்தீர்க்கமாய்த்தெரிந்துவழிபடும் படிக்கு வேதவியாசரானவர் மயக்குற்று நாரணனேபரத் துவமென நீட்டிக்காட்டிய கரமானது அவ்வாறேவெறித் து நின்றுவிடச்செய்தசிறந்தகாசியென்னுந்தலத்தைச்சே ர்ந்து விசுவநாதனைவழிபட்டு அப்புறப்பட்டுப்போய்ச் சி லாதரரிஷிவிரதமுயற்சியினாற்கிடைத்தபிள்ளையாகியநந்தி

தேவர் தேவதேவோத்தமனாகிய சிவபிரான் வீற்றிருக்கத்தக்க பருவதவடிவைப்பெற நினைந்து அரியதவங்களைச் செய்து சிவகடாட்சத்தினாற் பருவதமாய்க் கர்த்தனைச்சிரத்திற்றாங்கி யிருக்கின்ற ஸ்ரீசைலத்தைவணங்கிஅத்தலத்திலிராநின்ற சிறப்புகளைக்கண்டுகளித்தவராய் அவ்வெல்லையைக்கடந்துஅண்டாண்ட புவனசராசரங்களையீன்றமாதாவாகிய பார்ப்பதியாருடன் பிணங்கிபத்திவயிராக்கியங்களைப்பெற்ற தொண்டர் இருதயகமலத்தி லிடைவிடாமல்வாசஞ்செய்யும் சிவபிரானெழுந்தருளியிருக்கின்றசுவாமிமலையைப்போற்றிச்சென்று தாம் திருவிளையாடல்களைச்செய்து வருங்காலத்திற் பாதலத்திற்போய் ஒருபிலத்துவாரமூலமாய் வெளிப்பட்டுநின்ற திருவேங்கடமலையைப் பார்த்துக் கொண்டுபோய்ச்சிலந்தி சர்ப்பம்மும்மதங்களைப்பொழிகின்ற யானை சிவகோசரியாரென்னும்பிராமணசிரேஷ்டர் கானகத்திற் சஞ்சரிக்கின்ற மிருகங்களைவேட்டையாடிப் பாகஞ்செய்து பத்தியுடன்படைத்தவேடர்பெருமானாகிய கண்ணப்பநாயனார், புலவர்பெருமானாகியநற்கீரதேவர்முதலானபத்தர்கள் சிலதேவகன்னியர்ஆகியஇவர்கள்முத்தியைப்பெறவிரும்பிவழிபாடுகளைச்செய்யவெழுந்தருளிய சிவக்கொழுந்தைப்போற்றிச் சாரூபபதவியைப்பெற்றுவாழ்ந்த தென்கைலாயமெனப்புகழுங் காளத்திமலையைவணங்கிப்போய்த் தனக்கொருவரும் நிகரில்லையென்னும் மமதையினால்வீறி அதிககொடுமைபற்றிய கோபத்தைக்கொண்டு காளியானவள் இப்பூமண்டலமுதலானவைகளை நாசமடையச் செய்வேனென்று சீறிஎழுந்தகாலத்திற் பதுமாசனனாகிய பிரமதேவன் முதலானவர்களனைவரும் அவ்வுக்கிரஞ் சகிக்கமாட்டாமல் வாடிவருந்துவதை அழிவற்ற சிவபிரான்தெரிந்து மகாகாளிகர்வத்தைப் பங்கப்படுத்தத் திருவுளத்திற்கொண்டுவந்து அவளெதிரில்நின்றுமாறி நடனங்களைச்செய்துவென்று அடக்கியதெய்வீகஸ்தலமாகிய திருவாலங்காடென்னும் க்ஷேத்திரத்தைத்தரிசித்துப்போற்றி வழிக்கொண்டுபிரளயகாலத்திற் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் ஏகமாய் மலைகளைப்போல அலைகளைமோதிப் பெருக்கெடுத்தோடி உலகங்களையிடித்துக் கரைத்துக்கலக்கி அழித்துச்சூழ்ந்தகாலத்திலுஞ் சலனப்படாமல் மகாவிஷ்ணு பிரமதேவன் தேவர்கள் ரிஷிகள் முதலானவர்களும் பரமனைவழிபட்டு வருந்தாமலிருக்கத்தக்க கெடிஸ்தலமாகவுந்திருக்கயிலையைப்போலச் சிறந்து எமதுகர்த்தன் மாவடிநீழலில் எழுந்தருளப்பெற்றுக் கம்பாநதிசூழ்ந்துவரும் மகிமையையும் வாய்ந்திருக்கின்ற ஸ்ரீகாஞ்சிபுரத்தைத்தரிசித்துப் பரிமளமிகுத்த புஷ்பங்களை யணிந்திருக்கும் அளகபாரத்தினைப்பெற்ற உமையவள்பூசித்துப்போற்றியமூலகாரணக்கடவுளாகிய ஏகாம்பரநாதர் வீற்றிருக்கும் ஆலயமும் மகாவிஷ்ணு பிரமதேவன் முதலாகிய தேவர்கள் ரிஷிகள் இராசாக்கள் வழிபட்டுப் போற்றிய மற்றசிவாலயங்கள்முற்றுந் தரிசித்து அத்தலத்தைக்கடந்துபோய் எமக்குநிகர் ஒருவருமில்லை நாமேபரமென்றுகருதிய அஞ்ஞானகர்வத்தினால் மகாவிஷ்ணுவும் பிரமதேவனுமொருவருக்கொருவர்வாதுபேசிக்கடையில் அதிககோபங்கொண்டு தங்களிற்பரத்துவத்தைஸ்தாபிக்கும்பொருட்டுகொடியபோர்செய்து வருமுன்னிலையிம்மன்னுயிர்வருந்திவாடுவதைச் சிவபிரான்தெரிந்திரக்கமுற்று அவ்விருவர்மயக்கவாசனையைப் போக்குவதாகத் திருவுளத்திற்கொண்டு அவர்கள்மத்தியில் ஆதியந்தங்காணப்படாமல் ஓங்கிநின்றுதடுத்து நல்லுணர்வைத்தந்திரட்சித்தும்மெய்ப்பத்தியுடன்தியானித்துப்போற்றும்அடியவர்களுக்கு முத்தியைத்தந்தாண்டுந் தனக்கொப்பொன்றில்லாமல்நின்றஅருணாசலத்தையுந் தரிசித்துவணங்கிப்போய்நரசிங்கமுனையரென்னும்அரசன் அபிமானபுத்திரனாகக்கொண்டு பருவகாலத்தில் அருந்ததியையொத்த ஒருகன்னிகையைத்தேடித் திருக்கலியாணஞ்செய்யயத்தனித்து அந்தணர்கோலமும் ராசபரிவட்டணைகளும் பெருத்துவிளங்க மணப்பந்தலில் வீற்றிருந்து சடங்குகள் நடத்திவருகின்றதருணத்திற் சிவபிரான் ஆதியிற்சொல்லி யிருந்தபடிக்கு அந்தவிவாகத்தைத் தடுத்தாட்கொள்ளநினைந்து விருத்தபிராமணனாகவந்து ஆளோலைகாட்டி அச்சபையி லிருக்கின்றவர்களை மேய்ப்பித்து வழக்கில்வென்று சுந்தரமூர்த்திகளைத் தமக்கடிமையாகக்கொண்ட பதியாகியபெண்ணை நதி பெருகும் வளமிகுத்த திருவெண்ணெய்நல்லூரையும் பார்த்து அப்புறம்போய் மூன்றானைத்தொங்கலினால்அன்னபூரணியம்மைவீசத் திருத்துடையிற்கிடத்தி நித்திரைசெய்வித்துக் குற்றமற்ற பிராணிகளுக்குப் பஞ்சாட்சரவுண்மைகளையும் போதித்திரட்சிக்கும் பரமசிவம் தமது கோலத்தைக் கடாட்சித்து முத்தியிற்சேர்க்கும்பெருமையினையுடைய வாரணாசியைப்பார்க்கினுஞ் சிறந்தமகிமையுள்ள திருமுதுகுன்றமென்னும் பதியைக்கண்டுசேவித்துப்போய் ஓங்கியெரியும் யாகத்திற் றமதுசிரேஷ்டமாகியசிரத்தையரிந்து பூர்ணாகுதிகொடுத்துஒப்பற்றதவத்தை முடித்த பதஞ்சலி வியாக்கிரமபாதரிவ்விருமகத்துக்களும்ஞான உணர்ச்சியினாற்றரிசித்துக் களிக்கத்தக்கதாகச்சிவபிரான்கிருபையுற்றுத் திருநடனதரிசனத்தைக்காட்டியசிதம்பரதலத்தைக்கண்டு குளிர்ந்தசையுந் தளிர்கள்வாய்ந்தசோலைகள் நந்தனவனங்கள் சூழ்ந்திருக்கும்அப்பதியினுள்போய்க் கனகசபையினிடத்தில் கோவைக்கனியை நிகர்த்த அதரத்தைப்பெற்ற பார்ப்பதியார் எக்காலத்துந் தொழுதுபோற்ற விருஷபவாகனனாகிய சிதம்பரேஸ்வரர்தேவர்களாலுங் கண்டறியாத ஆனந்தநடனஞ் செய்திருப்பதைக் குமாரசுவாமியார்தரிசித்து அன்புமிகுதியினால் உளங்கனிந்து களிக்கத்தக்கதாக வணங்கிப்போற்றி அப்பதியைக்கடந்து அகஸ்தியர்கரத்திற்றாங்கிவந்த கமண்டலத்தில்நின்றும் வெளிப்பட்டு பூமியின்கண் பலமுகமாகப்பாய்ந்து வெவ்வேறுநாமங்களைப்பெற்றுக் கடல்பெருகியதைப்போல ஆர்ப்பரித்துப்போகும் பிரவாகத்தையுடைய காவிரிநதியினைக்கடந்து அதன்வடபாரிசத்திற்பெருகும் மண்ணியாற்றங்கரையிற் கிருபாநிதியாகிய பாலசுப்பிரமணியதேவர்வந்துசேர்ந்தனர்.

## குமாரபுரிப்படலம்.

அளவில்பூதவெம்படையொடுமண்ணியாறதன்கட்
குளகன்வந்துழியெழுந்திடுபூழிவான்குறுகி
யொளிரும்வெய்யவன்கதிர்தனைமறைத்தலாலோடி
வளைநெடுங்கடன்மூழ்குவான்புக்கெனமறைந்தான்.

---

வாரீர் சவுனகாதிரிஷிகளேயென்றுசூதபுராணிகர்சொல்லத்தொடங்கினர். குமாரதேவர்மேற்குறித்தசிவஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு மகாவிஷ்ணுமுதலாகியதேவர்களும் அளவற்றபூதப்படைகளும் சூழ்ந்துவரத்தக்கதாக மண்ணிநதியென்னும் ஆற்றங்கரையில்வந்து சேர்ந்தகாலையிற்பெருகியதுளிப்படலமானது வானவெல்லையெங்கும்பரந்து ஆயிரங்கிரணங்களைவீசிப் பிரகாசித்திருந்தசூரியன்தேகத்தைமூடிவிழிகளினும்படிந்ததால்அதைசுத்திசெய்து கொள்ளும்பொருட்டுஓடிக் கடல்நீரிற் குளிக்கின்றவனைப்போலப் பகற்போதுகழிந்து அந்திக்காலம் நேர்ந்தவுடனே மேற்குச்சமுத்திரத்தில் ஆதித்தன்மறைந்தனன். இவ்விதமாகப் பகலவன் கடலில் மூழ்கியகாலத்தில் மாலைப்போதும் அதைத்தொடர்ந்த விருளும் பாலசந்திரோதயமும் நட்சத்திரங்களும்வானமுதலியவிடங்களெங்கும்நிறைந்துதோற்றுவது எப்படிக்கிருந்ததெனில்,இவ்வுலகங்களை ஏகச்சக்கிரத்தைச்செலுத்தித் துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனஞ்செய்துநீதிபரனாய்அரசுசெலுத்திவந்தசக்கிரவர்த்தியானவன்காலாதிகளிலிறந்ததட்சணம்அதுபரியந்தம்அவனுக்குப்பயந்துஒளித்துக்காலம்பார்த்திருந்தபகைவராகியகுறுநிலமன்னர்பலதிசையினும்விறிவந்து வளைத்துத் தங்கள் வசப்படுத்திக் கொண்டதையொப்பக்காட்டியது, இவையன்றியும்பலவளங்களைக்கொண்டிருந்த தாருகாவனத்தைப்போல வானத்தில்பரந்தெழுந்த இருளானதுவிளங்கவும் அவ்வனத்தில்வாழ்ந்த ரிஷிபத்தினிகளைநிகர்த்து நட்சத்திரங்கள்சொலிக்கவும்அதனடுவில்விளங்கும் அந்திவானமானது பிச்சாடனமூர்த்தியாகவந்த பரமனைப்போலத்தோற்றவும் அம்மங்கையர்படைத்த அன்னம் நிறைந்திருக்கின்ற கபாலத்தைப்போல மூன்றாம்பிறையானதுவிளங்கியது, அன்றியும்கலைகளின்விளக்கமானதுபெருத்துவெண்மைதங்கிய வானமென்னும்விரிந்த திருப்பாற்கடலில் மேகபுருஷனாகிய வணிகன் அதனிடமுதலிய தலங்களிலிருக்கும் பொருள்களனைத்தையும் நிரப்பிக்கொண்டுபோய்உலகங்களில்விற்பனைசெய்வதாகச் செலுத்துந் தோணியைப்போலவும்பிறையானது தோற்றியது, இவ்விதசிறப்புகளுடன் விளங்கியமாலைப்போதிற் காடந்தகாரமாகிய விருள்மூடியபோதுசண்முகப்பெருமானது சுயஞ்சோதிவடிவினின்றெழுந்த ஒளியானது இருட்பிழம்பின் வீக்கத்தையும் பாலசந்திரன் தோற்றத்தையும் அடக்கிச்சூரியனுதயத்தைப்போலப்பிரகாசிக்குந் தன்மையினாற் பரம்பொருளாகிய சிவபிரான் வீற்றிருக்கப்பெற்ற வெள்ளியங்கிரியைநிகர்த்துப் பூவட்டமெங்குந் துலங்கிக்காட்டவும் பிரதிபிம்பித்திராநின்றவொளியைப்பெருக்குந் தேகத்தைப்படைத்தசவுரியபரனாகிய குமாரதேவர் பவுத்திரமாகியமண்ணியாற்றங்கரையினிடத்தில் எழுந்தருளியிருக்கின்ற காலையில் மகாவிஷ்ணுபிரமதேவனாதியாகக்கூடி பரமசிவத் தோற்றமாகிய பாலசுப்பிரமணியரைத்தொழுது சொல்லுவதாயினர்.

கர்த்தனேயிந்தச் சிறந்தநதியின் விசாலமாகிய கரைமுற்றினும் துல்லியமாகத்தோற்றநின்றமணல்மேடுகள்கண்காட்சியாகமலிந்து பற்பலகனிவகைகள்பெருத்திருக்குஞ்சோலைகள் திவ்விய மலர்க்காவுகள்நெருங்கியிருக்கின்றதுமன்றியிற் சந்திரசடாதரக்கடவுளாகிய சிவபிரானெழுந்தருளும் ஒப்பற்ற ஸ்தலங்களும் மிகுதியாக விருக்கின்றதினால் இத்தகையவிடங்கிடைப்பது மிகவும்அரிது ஆதலாற் காங்கேயனே? யிவ்விரவுநீங்குகின்றபரியந்தம் இத்தலத்தில் எழுந்தருளவேண்டுமெனப்பிரமன்விஷ்ணுமுதலானவர்கள் விண்ணப்பத்தைச் செய்தகாலத்தில் யாவரினும் முதன்மைபெற்றிருக்கின்ற சரவணபவன் அவர்கள் கோரிக்கையின்படிக்குச் சம்மதித்துபடைக்குந்திறத்திற்சிரேஷ்டனாகிய விசுவகர்மனை அழைத்துஇதனைக்கட்டளையிடுகின்றனர். சிருஷ்டித்தொழிலிற் பிரமதேவனைப்போல நிருமிக்கவல்ல திறமையுள்ளவனே? ஒருகணப்போதில் இந்தநதிக்கரையினிடத்தில் தேவர்கள் பூதப்படைகள் நவவீரர்கள் முதலானவர்கள் தங்குவதற்குத் தகுதியாகிய விடுதிகளும் நாமிருப்பதற்கு யோக்கியமுடைய மாளிகைமற்றும் வேண்டுவன அடங்கியிருக்கும் ஒருநகரத்தை அழகுபெறச்செய்து முடிக்கக்கடவையெனப் பணித்தவுடன் மகாபாக்கியமென வணங்கிப்போய் ஓரிடத்தைக்குறித்துநாற்புறங்களினும் மதிலும்அதன்மத்தியிற் சிவகுமாரன் தேவர்கள் படைவீரர் சேனைகள்தாராளமாக விருக்கத்தக்க மாடமாளிகைகள் கூடகோபுரங்கள்முதலியசிறப்புகளைப்பெற்ற வீதிகள்முதலியவளங்களைக்கொண்டிருக்கும் நகரத்தைமனதிற்குறித்துச் சிருஷ்டித்துஅதனதிசயங்களைக்கண்ட சகலரும்மயன்வல்லபத்துக்குமெச்சிக்கொண்டாட முற்றியவுடன் தேவதச்சனானவன் திரிபுரதகனராகிய சிவபிரானுக்கினிய குமாரனாய்த்தேசோன்மயமாகிய தேகத்தையும்படைத்த கந்த சுவாமியைக்கண்டு வணங்கிஆதிகர்த்தனே! தேவரீர்கட்டளையின்படிக்குநகரமாயிற்று, கிருபையுற்று அதனிடத்தெழுந்தருள வேண்டுமென விண்ணப்பஞ்செய்யக் கேட்டவுடன் சிவசுப்பிரமணியக்கடவுள் தேரைவிட்டிறங்கி விஷ்ணுபிரமன் இந்திரனாதியதேவர்கள்ரிஷிகள்சேனைத்தலைவர்கள் பூதவெள்ளங்கள்சூழ்ந்துதுதித்துவர அந்தப்பட்டணத்திற்பிரவேசித்து மேகங்கள் சஞ்சரிக்கத்தக்க உன்னதமுள்ள மதில் கோபுரவாயில்கள்- மேடைகள்- உப்பரிகைகள்-மாளிகை முதலிய வளங்களைத்திருத்தமாகச் செய்தமைத்த நகரத்தின்சிங்காரங்களை விவேக சம்பன்னராகிய குமாரதேவர் பார்த்து நாம்வாசஞ்செய்வதற்குயோக்கியமாகியபதியிதுவெனமதித்து தேவதச்சன்கைத்தொழிலைப்புகழ்ந்துகொண்டாடிப் பேசியமுன்னிலையிற் சமீபத்திலிருக்கின்றசகலரும் வெற்றிவேலாயுதக் கடவுளினதுவாக்கியத்தைக்கேட்டமாத்திரத்திற் பற்பல சிங்காரவளப்பங்களைப் பெற்றிருக்கின்ற அப்பதிக்குத்திருச்சேய்ஞலூரென்னும் சிறந்த பெயரையிட்டனர். அந்நாமத்தைக்கொண்டே யிந்தக்காலத்தினும் விளங்குகின்றது. இப்படிக்குச்சகலருங் களிக்கத்தக்கதாக விளங்கும்வீதிகளைக்கடந்து சேனைகள்போற்

றவுந் துணைவர்விஷ்ணுமுதலானவர்கள் வாழ்த்தவுங்குமாரதேவரானவர் தமக்கேற்படுத்திய திருமாளிகையிலெழுந்தருளிச்சபாமண்டபத்தில் விளங்குஞ் சிங்காதனத்தில் வீற்றிருந்தகாலையிற் றம்மைப்புகழ்ந்து நிற்கின்றமகாவிஷ்ணுமுதலிய தேவர்களுக்குச் செலவுகொடுக்க அவர்களும் பன்னிருபுயாசலங்களையுடைய சிவகுமாரனைவணங்கிப்போய்த் தத்தமக்குநியமித்திருக்கின்ற விடுதிகளிற் சேர்ந்து களித்திருக்கவும் பூதப்படைகளும் சமுத்திரத்தைப்போலஆரவாரங்களைச் செய்துகொண்டுநடந்துவிசாலமாக விருக்கின்றசாலைகளிற்றங்கி வாசஞ்செய்தனர், அக்காலத்தில் நவவீரர்இலக்ஷர் வழிபட்டுப் போற்றத்தக்கதாக அடியேனையும் ஒருதொண்டனாகக் கொண்டிரட்சிக்குந் தினதயாபரமூர்த்தியாகிய சிவகுமாரனான சேய்ஞலூரிலிருக்கின்ற எமதிறைவனிடத்தில்விடைபெற்றுப்போன தேவர்களிலொருவனாகிய இந்திரன செய்கைகளைச்சொல்லுவோம்.

சகித்தற்கரிய கொடுமைகளைச்செய்து புயவலிமையிற் சிறந்தவனாக விருந்ததாருகாசுரனும் அவனுக்குதவியாக நின்றுமாயவித்தைகளினால் வருத்தியிருந்த கிரவுஞ்சகிரியும் அதப்பட்டுப்போன காரணத்தினால் இந்திரனானவன் அதுவரையிலிருந்த மனச்சஞ்சலங்கள் முற்றும்போக்கி மகிழ்ச்சியுடன்நகைமுகனாய்ச்சிறந்ததேவாமுதத்தை மீளவும் புசித்தவனைப்போலத் தேகங்குளிர்ந்திருக்கின்ற பொழுது நினைந்தவர்களுக்குமுத்தியைத்தரும்பெருமையினையுடைய சீகாழித்தலத்தைச் சூழ்ந்தவனத்தில் வாசமாயிருக்கின்ற தேவதைவந்துஇந்திரனைச்சேவித்து மேகங்கள் சஞ்சரித்திருக்கும் விண்ணாட்டுக்கதிபன் அணியத்தக்க நவரத்தினாபரணங்களும் கலவைச்சாந்தினைப்பூசப்பட்டுவிம்மிப்பருத்திருக்குங்கொங்கைகளைப்பெற்றஇந்திராணிதரிக்கும்திவ்வியபூஷணங்களும்பொன்னாடைபீதாம்பரங்கள் அடங்கிய பெட்டியைத்தன்வசத்தில் முன்னம்அடைக்கலமாக வைத்திருந்தனத அகில்சந்தன விருட்சங்கள் மலிந்திருக்கும் அவ்வனதேவதை எடுத்துவந்து எதிரில்வைத்துத் தேவராசனே! கேட்டருள்கசிலதினங்களுக்கு முன்னம் அவுணருக்கஞ்சிநீயும் உன்பத்தினியும் சீகாழித்தலத்தைச்சேர்ந்து மறைவிடமாகத்தவவிரதங்களைச் செய்யப்போகையில்என்னிடத்தில்வைத்துப்போன பணிகளிவையாகும் இனிஉமக்குச் சவுக்கியகாலமாதலாற் கொடுக்கின்றேன் வாங்கிக்கொள்ளுமென்றுசொல்லி நிற்க மகாவிஷ்ணு அம்சையிற்றோற்றிய உபேந்திரருக்கு மூத்தவனாகிய இந்திரன்தனக்கு ஆதியில் பிரமதேவன்படைத்துக்கொடுத்த ஆபரண மூட்டையைக்கற்பிலேசிறந்தஅயிராணிவிடுத்த தூதின்காட்சியாகப்பார்த்துப் பிரகாசத்தைவீசும் வயிரங்களினாற் செய்யப்பட்டபூண்கள் நிறைந்திருக்கின்ற வஸ்திர முடிச்சை மகாலட்சுமிவாசஞ்செய்யும் செந்தாமரைமலரானது வண்டினங்கள் மொய்க்க அலர்ந்ததைப்போலத் துரிதமாகஅவிழ்த்து மூடியிருந்த சீலையைச்சடுதியில் விலக்கியமாத்திரத்திற் பிரகாசம்பொருந்திய நுதலைப்பெற்ற தன்னாயகிபணியாநின்றபூஷணங்கள் மேல்வரிசையிற் காணப்பட்டபோது விழிகளாற் கண்டமாத்திரத்தில் இந்திராணியினிடத்தில் நினைத்தற்கரியஇன்பசுகங்களை யனுபவித்தவனாதலால் அவளை மனதில் நினைந்துயானைக்கோடுகளையொத்து நிமிர்ந்திருக்குந் தனபாரங்களைவாய்ந்த பொற்பாவைக்குநேராகஉவமிக்குந் தன்தேவியிடத்திலிச்சைகொண்டு வெகுகாலமாகஅவளுடன் வஞ்சணமாகக் கூடியில்வாழ்க்கையிலிருந்த காரணங்கள் அனைத்தையும் சிந்தித்துநோக்கியகாலத்திற்காமக்கவலைவலைபெற்றலைக்க அதன்வயப்பட்டு நெய்யை அதிகரித்துவிடவெழும் அக்கினியைப்போலக்காமக்கனலானது சடுதியில்மீறிவர சுரதலீலைகளையேயிச்சித்திருக்குங் கருத்தினனாதலால் வருந்திஏங்கி பெருமூச்செறிந்து வெதும்பிக் களைத்துவாடிச் செக்கிலிட்டாட்டிப் பிழிந்தெறிந்த பிண்ணாக்கைப்போல உதிரமாமிசத்தினால்விளங்கியிருந்ததேகமானது பொலிவற்றுச் சுருங்கிக்காட்ட மெலிந்து கைதேர்ந்த சித்திரக்காரன்எழுதும்பாவையைப்போலஅசைவற்றுத்தெய்வமருள் பிடித்தவனை யொப்பப்பிரமைகொண்டிருந்தனன்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? மயிலிறகின்அடியைநிகர்த்து அணிபடவிருக்கின்ற வெளுத்தபல்வரிசையினைப் படைத்த இந்திராணியினது தனபாரங்கள்அழுந்தக்கட்டியணைந்து நாள்தோறுமின்புற்றிருந்தவன் இப்படிக்குப்பிரிந்து தனிமையாகச்சோருவானாகில் அவன்வருத்தங்களைச் சொல்லமுடிவதோ! இவ்விதமாகத்தேகம் மாறுபட விரகதாபமேலிட்டு இந்திராணியைநினைந்து வருந்துகின்ற தேவராசன் எதிரிலிருக்கின்ற பொன்னணிகளைத்தரித்துக்கொள்ள விரும்பாமல் தன்பரிசனரைப்பார்த்துச் சொல்லுவான், இந்தமுடிச்சையெடுத்துமுன்போலச் சேர்த்துக்கட்டிமுத்திரித்துஉங்களிடத்திற் பதனமாகவைத்திருக்கக் கடவீர்களெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் வணங்கி அவ்வாறேமுடிக்கின்றனமென அந்தநிமிஷத்தில் அதனைச்சீர்பெறபந்தித்துத்தகுந்தவிடத்திற்சேர்த்துப்போற்றியிருந்தனர் அத்தருணத்திற் கூரியவச்சிரதரனான இந்திரனானவன் வனதேவதையைநோக்கியிது பரியந்தம்இப்பணிகளைப்பதனப்படுத்திவைத்திருந்ததற்குக்களித்தனம். உனதுவனத்தைச்சேர்ந்துபோற்றியிருப்பாயெனச் சொல்லியபோது நல்லதென்று அரசனைவணங்கிச் செலவுபெற்றுக்கொண்டுபோய்விட்டது. இப்படிக்குப்பரிசனரும் வனதேவதையும் நீங்கிய தருணத்தில்இந்திரன்தனியனாய்ப் புலோமிசையைநினைந்துநினைந்து காமநோயானது அதிகரித்து அவ்வெப்பத்தின் கொடுமையினால் மனங்கலங்கியெரியுண்டு தேகமுற்றுந் தீயெழக்களைத்து அவளிடத்தில் மனதைப்பூர்த்தியாகவைத்து ஏங்கினவனாய்ப் பிரகாசம்பொருந்திய ஆபரணங்களையணிந்திருக்கும் பள்ளஸ்திரீகள் கரியஅளகபாரத்திற் சூடியிருக்கும் புதியமலர்களிற்பெருகுந் தேன்களைஅருந்தியிரவிற் புஷ்பசயனங்களிற்றுஞ்சும்வண்டுகளையுடையசோலைகளுக்கடுத்தவிடமொன்றைச்சேர்ந்து அவ்விடத்திலிராநின்ற மணற்குன்றுகளிலொன்றின்மீது வீற்றிருந்தனன், அத்தருணத்திற்சூரியனதுகொடியகிரணங்களினால்வெப்பமிகுத்துக்காய்வதினும் அதிகமாய்த்தனக்குநீடித்துக்காட்டுமிராக்காலத்திற் சந்திரகலைகள்தாக்குந்தோறும்புஷ்பக்கொத்துகளிறைத்திராநின்ற மணல்மேடானதுஇந்திரனுக்கு மிகவும் வெப்பத்தைக்காட்டி நீருண்ட மேகம் பெய்யும் சோனைமாரியைச் சுவற்றிக்கொதித்திருக்கும்பாலைநிலத்திற்பரந்திருக்கும்பரல்கள் திரண்டோங்கியிருக்கும்மலையைப்போற்காட்டும் மணற்குன்றுகளின்மீதிற் பள்ளிகொண்

டிருக்கும் இந்திரன் சந்திரப்பிரகாசமானது தன்பேரிற்முக்கிய மாத்திரத்தில் வேறொருதுணையு மற்றவனுய்ச்சகிக்கப்படாமற் புரண்டுபுரண்டு வருந்தினன்; இப்பிரகாரஞ் சந்திரன்தகிக்க மற்றொருபுறத்தில் வெற்றி பரனுகிய மன்மதன்செலுத்தும் புஷ்பபாணங்கள் முதலானவை சூழ்ந்தலைக்கின்ற காரணத்தினுல் புத்திமயங்கிக்காமமிகுதியினுல்தேவராசன்புலம்புவதாயினன். நிலவின்வெப்பத்துக்காற்முமற்றிகைத்து ஓசந்திரனே உன்னுண்டிறத்தை என்சொல்லுவேன் புதியமலர்களினுல் அலங்கரித்திராநின்ற அளகபாரத்தையுடைய இந்திராணியானவள்முன்னமே எனதுடலிற் பிரவேசித்துப் பிராணனைகிரகித்துக்கொண்டு போகாநின்ற தேகத்தையுஞ் சுட்டுவாட்டுகின்றனை நன்மரபிலுதித்த திங்களே ஒருவிதவருத்தத்திற் பட்டு வாடுகின்றவர்களைப் பேரறிவாளராகவிருப்பவர் மேலுஞ் சிலகொடுமையைச்செய்து வாட்டுவரோ சொல்லுவாயெனத்துறியும் அழிவுபடாத அமுதத்தினைச்சகலருக்கும் பகிர்ந்துகொடுக்கின்ற நீவிஷச்சுவாலையை வீசுவதென்னகாரணம் இவன் சத்திராதிகளுக்குத் தப்பிப்பிழைத்திருக்கின்றனன், இவன்பிராணனைவாங்கவேண்டுமெனத்திர்க்க சபதங்கொண்டனையோ வெனச்சோர்ந்தும்தினேதினேவிர்த்தியாகவளரும் பெருமைபெற்ற நீயிப்படிக்குத்தயைதாட்சணியமென்பது சற்றுமில்லாமல் வருத்துகின்றனை மேலும் இதுதருணமென்றறிந்தெதிர்ந்தனைஇந்தச்சூதுகளையாவருடன் கூடிக்கற்றனைதிருடனேயெனக் கெஞ்சியும் சுந்தரவதிகளாகிய மங்கையரிடத்தில் உண்டாகும் காமமும் அதனுற்பெருகும் விரகமும் உனக்கு முண்டன்றே அக்காரணத்தினுற்றக்கன் உன்னைச் சபித்ததைமறந்து முன்பின்யோசியாமல் அனலையிறைத்துக் கொல்லுகின்ருய் குளிர்ந்தகலைகளைப்பெற்றவனுக்குஇதுதகுதியோவென்றிரந்தும், இதுபரியந்தம் அரியதவங்களைச்செய்துவருந்தியதினுல் எலும்பல்லது மாம்சசாரமெவ்வளவுங்கிடையாத தேகத்தை யுடையவனைக் கிருபையுற்றுச்சுடுவதிற்பயனென்னை யிதையோசித்துப்பார்த்துஎன்னொருவனைமாத்திரம் விட்டுவிடக்கடவையென்று கரங்களைநீட்டிவேண்டுவன் ஓசந்திரனே அண்டவெல்லையிற்றிரிவையாதலாற் பூமண்டலம் அஷ்டதிக்குகள்வானவெல்லையில் நடக்கின்ற செய்திகளனைத்தும் உனக்குத்தீர்க்கமாகத்தெரியும் மெல்லியஇடையினைப்பெற்ற ஒருபெண்கொடி என்னுயிரைக் கிரகித்துக் கொண்டுபோயினள், சந்திரபகவானே அவளை யெவ்விடத்திலாவதுநீ பார்த்ததுண்டோ சொல்லெனப்போற்றுவன்.

இவ்விதமாகச் சந்திரனைத்தூறிய இந்திரன்அக்காலையில்மன்மதன் செய்யும்போருக்கு ஆற்றுதவனு யிதனைச் சொல்லுவான், நான்முன்பிறந்தேன்எனக்குப்பின்னவனுகிய உபேந்திரனுக்குப் பிறந்தகுமாரனுகியமன்மதனே நீயிதுபரியந்தங் கற்றவித்தைகளினுற் பற்பலவிதங்களிற் பெரிய தந்தையென்பதையும் யோசியாமல் வருத்துவது பழியல்லது மேம்பாட்டுக்குரியதோ சொல்லென்று வினவுவன், இதுவல்லாமற் சடுதியில் உன் தேகத்தைச் சாம்பலாக வெரித்ததிரிநேத்திர தாரிபெற்ற சிவசுப்பிரமணியதேவர் இத்தலத்துக்கடுத்திருக்கின்றனர் இத்தகைய கொடுமைகளை நீ செய்வது தெரியுமாகில் கணப்பேர்தில் உன்பிராணனைவாட்டுவதற்குஜயமில்லைஅதைநினைந்து என்மீதிற்பகைத்துப் பாணங்களைச்செலுத்திச் சண்டைகொடாமற் றுரிதமாகப்போய்விடு போய்விடு உன்னிடத்திரக்கமுற்றிதனைச் சொன்னேனெனப் பயமுறுத்துவன் அக்காலத்தில் அசைந்துவருந் தென்றலைச்சீறி வானத்திற்சஞ்சரிக்கின்ற சந்திரன்செலுத்துங் கலைகளாகிய அனலானதுதாக்கிக் கன்றியிருக்கின்ற தேகத்தில் மன்மதன் விடுத்தபாணங்கள் நாராசங்களைப்போலத் தைத்துத்தைத்துக்காயப்படுத்திய விடங்களில் ஈக்கள்மொய்த்துவருத்துவதைநிகர்த்து வாட்டுகின்றனை இதுவுமல்லாமல் உன்செய்கைகளைப்பார்க்குமிடத்திற்கடினசித்தமுடையவேடர்வலைகளைவீசி மானைப்போலவஞ்சகஜைசையைக்காட்டிஅதனைக்கேட்டுத் தன்னினமிருக்கின்றதென்றுவந்து சேர்ந்தமான்கூட்டங்களில் ஒன்றொழியாமற் பிடித்துக்கொண்டுபோவதைப்போல இக்காலத்தில் நீமெல்ல என்சுவாசமூலமாகத் தேகத்தினுள்ளே பிரவேசித்துப் பஞ்சப்ராணனையும் வலித்துவருத்துகின்றனை, ஓ! தென்றலே? எக்காலத்திலாவது உனக்கேதேனுங் குறைபாடுகளைச்செய்ததுண்டோ அதைநினைந்து இப்படிக்குக்கொல்லுகின்றனையோவெனப் புலம்புவன் ஆந்தைஒலிப்பதற்குச் சகிக்காமல் மிகுத்த ரூபலாவண்ணியத்தைப்பெற்ற தருணமங்கையர்களினுல் உண்டாகும் காமக்கவலையென்னுங்கொடியசமுத்திரத்தில் அகப்பட்டு வருந்துகின்றவர்களையிறத்தலுக்கேதுவாகவிருக்கின்றவர்களிற் கூட்டிக்குறித்துக்கூவுங்கொடியபட்சியே என்செய்வேனென்றுவாடுவன், குயில்மொழிகளைக்கேட்டுவருந்தி ஓ! குயில்களே? நமதுஉருவை ஒருகாலங் தேவராசன்பெற்றனன், இவனைவருத்தலாகாதென்று ஓய்ந்திராமல் அதிகஓசையைச் சிலகாலங் காட்டியுஞ் சிலபோது வறிதாயிருந்தும் இப்படிக்குமன்மதனுக்குதவியாகநின்றது உங்களுக்கழகோவென்றேங்குவன். பொழுதுவிடியாததைக்குறித்து ஓ! சூரியனே? பூர்வத்தில்நீயும் நானுமாய்க் கூட்டுறவாக ஒருபெண்கொடியைச்சேர்ந்து களித்துஇடைவிடாமற் சினேகத்தைக்கொண்டாடியிருந்தனம். இந்தச்செய்தி தேவர்களும்அறிவர், அக்காலத்தில் நடந்தவைகளில் எதையாவது வித்தியாசமாகநினைந்து கோபங்கொண்டிருக்கின்றனையோ நான்இப்பாடுகள் படுவதற்கிரங்கிவந்து தேறுதலைசொல்ல உதியாமல் நீமறைந்திருக்கின்றனையே இதுமிகவும் அநியாயம் அநியாயமெனச்சோருவன். அன்றில் ஒலிப்பதற்காற்றுமல்செழித்த விதழ்களைப்பெற்ற தாழைகளின் பொங்தில் வாசமாயிருக்கும் அழகிய மூக்கினையுடைய அன்றிற்பட்சிகளானவை வலியகருப்புவில்லைப்படைத்தமாரன் வெற்றியைக்குறிக்கும் எக்காளத்தைப்போல இராத்திரிமுழுவதும் சற்றுவது ஓய்வின்றி ஒலித்திருக்கின்றதுஉறக்கம்வாராதோ! இதுமிகவுங்கொடுமைஎன்பான். சமுத்திரகோஷத்துக்காற்றுமல் எனக்குச் சத்திராதிகளாகவிருக்கின்ற விராட்சதனை தன்னிடத்தில் ஒளித்துவைத்துக்கொண்டு என்னைமுன்னம் மிகவும்வருத்தியது அதுவும் போகாமல் இக்காலத்தினும் என்பிராணனைவாங்கநினைந்து மன்மதன்வெற்றிமுரசமாக ஒலித்துநிற்கின்றதேவாயடங்காதோவென்செய்வேனென்பான் தேவராசனுனவன் இந்தப்பிரகாரம் அவ்விரவுமுற்றும் நித்திரையில்லாமல் விரகாக்கினிபற்றி யலைக்கவாடிக் கிலேசித்ததல்லது எவ்விதத்திலாவது சவுக்கியத்தைப்பெறவேறுகாரணங்களையுந்தேடவகையற்றவனுய் மனமானது அதிககவலையிற்

பட்டுவாடுவன் இவ்விதமாகத்தேவேந்திரனனவன்காமக்
கவலையிற்பட்டுவருந்தியதுயரத்தை ஒருவிதமாகச்சொல்
லிமுடியாது.

சேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? அத்தருணத்தி
ல்ஆதித்தன் உதயமானதற்குச் சிலவுவமானம்சொல்ல
க்கேட்பீராக.—இந்திரனனவன் இந்திராணியினிடத்தி
ற்பெற்று வருந்துகின்ற காமநோயைத்தெரிந்துபழையந
ட்பைக்கருதி மனமிரங்கி அவ்வருத்தங்களைஒழித்துச் ச
வுக்கியத்தில்வைக்க யத்தனித்தவனைப்போல ஒற்றைவ
ண்டிலும் நவரத்தினமயமாகிய அச்சுமச்சு குத்துக்கால்
கொடுங்கைமுதலிய சிங்காரங்களைக்கொண்டு ஏழுபச்சை
க்குதிரைகளைப்பூட்டி அருணன்செலுத்தும் இரதத்தின்
மீதில் ஆரோகணித்து ஆயிரங்கிரணங்களைப்பரப்பிச்சூ
ரியனனவன் கீழ்த்திசையிலிருக்கின்ற வுதயகிரியின்மீதி
ற்றேற்றி வெளிப்பட்டகாட்சியானது எதுபோலுமெனி
ல் அடர்ந்து உலகங்களை வருத்தியிருந்தவிருட்கூட்டமா
கிய விராட்சதவெள்ளத்தைக்கண்டித்து வானத்தில்வீறி
யிருந்த சந்திரனகிய சிங்கத்தைக்கண்டுசீறி அழகியகிர
ணசமுகங்களாகிய ஆயுதங்களைப் பலதிசையினும்போக்
கி அந்தமிருகராசன் ஆணவத்தைஅடக்கும்சரபப்பட்சி
யைப்போலவெழுந்த சூரியனனவன் சொலித்துவீசுங்கி
ரணப்பெருக்காகிய தூசிப்படையானது பரந்தலைப்பதா
ல்அதற்காற்றமல் நிலவின்வீக்கமாகிய சேனைகள்முற்று
ம்முதலணியில் மாண்டமுன்னிலையில் அவனைச்சூழவி
ருந்த நட்சத்திரங்களாகிய படைத்தலைவரும்பட்டுப்போ
கச்சமர்க்களத்திலெதிர்ந்த அரசன்தன்படைகள்பின்னப்
பட்டுத் தானும்வருந்தியகாலத்தில் முதுகிட்டோடுகின்ற
வனைப்போலச் சந்திரன் தன்காந்திகள் அடங்கி ஒடுங்கிம
றைந்தான், இவ்விதமாக விரிந்தபலகிரணங்களாகிய சே
னைகளைச் சூரியராசன்செலுத்த மீறியிருந்த சந்திரிகைக
ளாகிய படைகளைவாட்டியபோது அவற்றிற்குத்தலைவனு
கவிருந்த சந்திரராசனும் புறங்காட்டிமங்கியடங்கியதால்
சூரியன்பின்தொடர்ந்துபோனவனன்று அதேனெனில்சம
ர்க்களத்தில் அஞ்சிஓடுகின்றவனைச் சுத்தவீரராகவிரு
ப்பவர்கள்தொடர்வரோ. அவ்வாறேசூரியன்மெல்லத் த
ன்கதியிற்சென்றனன், அக்காலத்திற் றமரைமலர்கள் அ
லர்ந்தகாட்சியும் அல்லிமலர்கள் குவிந்ததோற்றமும் எப்
படிக்கிருந்ததெனில், தங்களுக்குப்பகைவனக வீறியிரு
ந்தசந்திரனுக்குத்தங்கள்கணவனகியசூரியன்வெளிப்பட்
டகாலத்திற்சம்பவித்த குறைபாடுகளைக்கண்டு வாய்விள்
ளநகைக்கின்றதைப்போலதாமரைகள்அலரத்தங்கள் கண
வனுக்குச் சம்பவித்ததுன்பத்தைத்தெரிந்துமேலும்ஒரு
கெடுதிநேராமல் மன்னித்துப் புருஷபிச்சை தரவேண்
டுமென்றிரந்து கரங்களைக்கூப்பிச் சூரியனைத் தொழுவ
துபோல அல்லிகள்குவிந்தன, இவ்விதஅதிசயக் காட்சி
யுடன் சூரியபகவான் வெளிப்பட்டகாலத்திற் சமுத்திர
முதலிய சலப்பெருக்கை வாய்ந்ததடாகங்கள் முற்றும்
அலைகளைவீசிக்களிக்கவும்தாமரைமுதலியமலர்கள் அலர்
ந்து தேன்களைச்சொரிந்துபரிமளம்வீசியிருக்கவும் வண்
டுகள் தமதுபள்ளிகளைநீங்கித் தென்னதென்னவென வி
ராகங்களைப் பாடிக்கொண்டு சோலைகள்முதலிய விடங்க
ளிற்போய் மதுக்களையருந்தித்திரியவும் சிங்கமுதலியமி
ருகங்கள் தங்கள்படுக்கைகளை நீங்கிக்கர்ச்சித்து இரைதே
டிப்போகவும் அழகியசிறகுகள்பொருந்திய அன்னப்பட்
சிகள் தாமரைச்சேக்கையைப் பிரிந்துலாவவும் மற்றபட்
சிசாலங்கள் காவுகூவுமெனக்கூந்தலிட்டுப் பறக்கவும்மா
னிடர் நித்திரைநீங்கிக்களிக்கவும் இவ்விதமாகச் சகலபி
ராணிகளும் வீறிக்களித்தன.

ஓ! சவுனகாதிரிஷிகளே? யிச்சரித்திரம்நிற்க இனிதே
வராசன் வரலாற்றைச்சொல்லுவோம் சூரியபகவான் உ
தித்தகாலையில் சராசரங்கள்அடங்கிச் செழித்திருக்கும்உ
லகங்களெங்கணும்பரந்து அடர்ந்து வீறியிருந்த விருள்
அனைத்தும் சூரியகிரணத்திற்குப்பயந்து ஒளித்திருப்ப
துதப்போலச் செவ்வரிபரந்து விசாலமாய்க் காதளவும்ஓ
டியிராநின்ற மருண்டவிழிகளைப்பெற்ற இந்திராணியா
னவள் கொடுத்தகாமவின்ப மயக்கத்தினற் பெருகியிருந்
த சஞ்சலவிருள்கள்முற்றுந் தன்மனதில் அடங்கியபோ
து இந்திரனவன் தெளிவுண்டாய் ஒருமைப்பட்டசிந்தை
யைப்பெற்று ஐம்புலன்களும் தன்வசத்தில் அடங்கிநில்
லாமல் மீறிப்போய்த்தேடிவந்து நிரப்பித்தன்பிராணனை
அலைத்திருந்த காமக்கனலின்பெருக்கானது சீறியாடுஞ்ச
ர்ப்பமானது.மாந்தரிகன்வல்லபத்தினல் தட்சணத்திற்ப
டத்தை நிலத்திற்சேர்த்து ஒடுங்குமாறுபோல மூலாதார
த்தில் அடங்கியவுடன் நல்லுணர்வுதோற்றத் தன்னிலை
யைக்கண்டு சடுதியிலெழுந்து தான்பட்டபாட்டையுங்கெ
ட்டகேட்டையும் எண்ணிஎண்ணிப்பதைபதைத்துநகை
த்து மிகவும் வெட்கினவனுய் ஐயையோ இந்தக்கேடுசக
லபோகங்களையு மிழந்துவறியனுயிருக்கின்ற எனக்கும்வ
ந்துநேருவதோவென்று பற்பலவிதங்களிற் பன்னிப்பே
சிக்கொண்டு தன்னைவெறுத்துச்சிறந்த விவேகசம்பன்ன
ராகியதேவர்களுக் கரசனகவிருக்கப்பட்ட என்னைத்தவ
னையே யிப்பாடுபடுத்துமாயிற் காமமென்பது உலகத்தி
லிருக்கின்ற தீமைகளனைத்தையுங்கிடைக்கச்செய்தும்கே
டுபடாதசெல்வத்தையும் பலராலும் புகழநின்ற கீர்த்தி
சம்பத்தையும்அழித்து நல்லுணர்வைப் போக்கிச் சாஸ்
விதமாகிய மோட்சசாம்பிராச்சியத்தைப்பெற வொட்டா
மற்றடுத்து மேலுமிருண்ட நாகத்தினுந்தள்ளுமாதலால்
அதைநினைக்குமிடத்திற் காமத்தைவிட வேறொருபகை
யானது உலகத்தில் ஒருவனுக்குண்டோவென்று இந்திர
ன்நினைந்து வருந்தினவனய்த் தான் அவ்விரவுமுற்றுமி
ருந்த மணற்குவியலைநீங்கித் தன்விடுதியைச்சேர்ந்துதன்
னைவந்துசேவித்த தேவர்களனைவருஞ்சூழ்ந்துவரப் பத்
தியுடன் சண்முகப்பெருமாள் வாசஞ்செய்யுந் திருமாளி
கையிற்போய்ச் சபாமண்டபத்திற் சிங்காதனத்தின்மீது

வீற்றிருக்கின்ற சிவகுமாரனைத்தரிசித்து ஆனந்தபரவசத்தினால் தேகம்பூரித்து மயிர்ச்செறிவெழக் கரங்களைக் கூப்பி அடங்கியொடுங்கிவஸ்திரத்திலெழுதியசித்திரத்தைப்போல ஐம்புலன்களும் ஒருமித்தவனாய்ச் சமீபத்தில் வந்துசேவித்ப்புதுழுதியானதுதேகமெங்கும்படிந்து வெளுத்துக்காட்ட வேதசாகைகளையோதிக் கர்த்தனைத்துதித்துக்கொண்டு எதிரில்நிற்கின்ற தேவராசன்மீதிற் கிருபாநோக்கத்தினைப்பாலித்துச் சமீபத்திலழைத்து இதனைச் சொல்லுவார், வேதங்கள்தேடிக்காண்பரிய சிவநாதன்திருவடிகளில் நாம்அருச்சிக்க விருப்புற்றனமாதலால்அதற்குவேண்டும் உபகரணங்கள் அனைத்தையுந் துரிதமாகத் தருவிப்பையெனக்கட்டளையிட்டவுடன்வணங்கிப்போய்ச் சிலபரிசனரைஅழைத்துப் பலதிசையினுஞ்செலுத்தி கங்காசலம்புதியமலர் சந்தனம் தூபதீப நைவேத்திய முதலிய பலவளங்களையுந் தருவித்துக்கொண்டு சண்முகமூர்த்தியைக்கண்டுகர்த்தனேபணித்தபடிக்குஆராதனைக்குவேண்டுவனவனைத்துஞ்சேர்ந்திக்கின்றதென இந்திரன் விண்ணப்பஞ்செய்தகாலத்திற் சரவணபவன் தேவதச்சனைக்கொண்டு ஒருஆலயத்தை உண்டுபண்ணிக்கொண்டு சைவாகமவிதிப்படிக்கு எக்காலத்தும் நிலைபெற்றிருக்கும் பிதாவின் கோலமாகிய சிவலிங்கத்தைப்படைத்துச் சிரோரத்தினமயமாகிய சிங்காதனத்தில் எழுந்தருளச்செய்தவராய்ப் பசுவின் பால் தயிர் நெய்முதலிய ஐவகைத் திரவியங்களினாலும் கங்காசலத்தினாலும் திருமஞ்சனமாட்டிப் பவுத்திரமாகிய வஸ்திரத்தைக்கொண்டு ஈரத்தைப்போக்கிப் பீதாம்பரத்தைஉடுத்துக் கற்பகமலர்மாலைசந்தனக்குழம்பு முதலியவற்றினுடன்சிறந்த அணிகளையுஞ்சூடி முடிந்தபின்பு தேவாமுதத்தினு மினியபிரசாத வகைகள்கனிவிதங்கள் கச்சாயங்கள் மற்றுமிராநின்றவைகளையும் பொற்கிண்ணங்களிற்சேர்த்துச் சிவபிரான்முன்னர்வைத்து நிவேதித்துமுடிந்தவுடன் மந்திரமூலமாய்திவ்வியபரிமளமிகுத்த கலவைச்சாந்துடன் புனுகுசவ்வாதுமுதலிய பரிமளதிரவியங்களைப்பூசித் தாம்பூலவகைகளைப்படைத்தபின்பு சாம்பிராணி தூபத்தைக்காட்டிக்கர்ப்பூர நிராஞ்சனத்தைக்கொடுத்து மற்றுமிராநின்றசோடசவுபசாரங்களையுஞ்செய்து முற்றியபின்பு மும்முறை வலம்வந்து பணிந்தெழுந்து வேதவாக்கியங்களினாற்போற்றினர்.

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே பிரமன் விஷ்ணு தேடிக்காண்பரியசிவபிரான்திருவடிகளைச் சரவணப்பொய்கையில் வளர்ந்தருளிய திருக்குமாரன்பூசித்த பத்திவயிராக்கியங்களுக்கிரங்கி யிடப்பாகத்திற்பார்ப்பதியார்வீற்றிருக்க அருளுருவாகிய ரிஷபவாகனத்தின்மீதுஆரோகணித்துச் சிவபிரான்தோற்றியகாலத்திற் கார்த்திகைத் தெரிவைபர் புத்திரனாகிய சரவணபவன் காளகண்டமூர்த்தியானவர்நல்லருளைச்செய்துபோகவெழுந்தருளியதைக்கண்டமாத்திரத்திற்கொப்பனவெழுந்துதீர்க்கதண்டன் சமர்ப்பித்துக் கரங்களைச்சிரத்திற்கூப்பி எதிர்கொண்டு கர்த்தன்பெருமைகளைப்புகழ்ந்துபோற்றுகின்றகாலையில் குற்றமற்றநந்திதேவர்அம்சையில் அவதரித்திருக்கின்றநவவீரர்களும் நவகன்னியர்வியர்வையிற்றோற்றியஇலக்ஷருஞ்சேர்ந்து சேற்கண்டையைப்போலப் பிறழுந்திருவிழிகளைப்படைத்த உமையவள் கணவனைத் தரிசித்தமாத்திரத்தில் ஆனந்தவாரியில் மூழ்கித்தேகபரவசராய்ப்புளகிக்க நிலத்தில்விழுந்து சேவித்துவாழ்த்தாநிற்கஇக்காட்சியைத்தெரிந்த பிரமனும் ஜயசாலிகளாகிய பூதவீரர் முதலானவர்களும் கரங்களைக் கூப்பித்தொழுதுமும் முறைதீர்க்கதண்டன் சமர்ப்பித்துஅஷ்டதிக்குகளும் செவிடுபடும்படிக்கு அரகரவெனப்போற்றினர் இந்தப்பிரகாரஞ்சகலரும்ஆனந்தக்களிப்பில்மூழ்கி யிருக்கின்றசமயத்தில்அருவுருவாகும் பரமசிவன்குமாரசுவாமியைக்கிருபையாகப்பார்த்துஉன்னுடையபூசனைவழிபாடுகளுக்குக்களித்தனம், ஆதலால் நீயிதனைப்பெற்றுக்கொள்ளக் கடவையெனப் படைகளுக்கரசாகவிருக்கின்ற பாசுபதாஸ்திரத்தைத்தந்து குமாரனே யிப்படையானது நமதுதோற்றமாகும் இதனைப்பிரமன்விஷ்ணு முன்னம் பூசித்துப்பெற்றனர் மற்றவர்களால் இந்தஅப்பற்ற அஸ்திரத்தைப்பாதுகாக்கும் வல்லபமிராது, பிராணிகளைஅலைத்திருக்கின்ற கொடியசூரன் பெற்றிருக்கின்றபடைகளின்வலியை யழிப்பதற்குக் குமாரனே யிதைப்பதனமாக வைத்திருப்பையென்றுஅனுக்கிரகஞ்செய்துதிருக்கயிலைக்கெழுந்தருளினர், இப்படிக்குக் கிருபாநோக்கம்பாலித்து நின்மலக் கடவுளாகிய சிவபிரான் வானத்தில் மறைந்தகாலத்தில் அருட்கடலாகிய பாலசுப்பிரமணியதேவர் அத்திசையை நோக்கித்தொழுது போற்றினவராய்ப் பிரமன் நவவீரர் இலக்ஷர்முதலானவர்கள் சூழ்ந்துதுதித்துவரப் பொன்னுருளைகளைப்பெற்ற விசாலமாகிய ரதத்தில்வீற்றிருந்தனர், அத்தருணத்தில் வாயுதேவன் தன்துணைவருடன்குதிரைகளைஅதட்டிச் செலுத்தும்போது பிரகாசம்பொருந்திய கிரணங்களையு[illegible] சூரியனுதயமான காலத்திற்களித்தெழுந்து ஆரவாரித்திருக்கும் பிராணிகளைப்போல ஓவென்னும் இரைச்சலைக்காட்டி பூதவெள்ளங்கள் ஜயஉச்சாகங்க ளுடன்தொடர்ந்து பூமியெங்கும் நிறைந்துபோர்க்கோலங்களைத் தாங்கியிராநின்ற நவவீரர் இலக்ஷர் மற்றசேனைத் தலைவர்களுடன் கூடிப்போகப் பிரமனாதிய தேவர்களும் நெருங்கிவரும்போது வானத்தை யளாவியிருக்கும் உன்னதமுள்ள தேரினிடத்தில் அவர்கள்மத்தியிற் குமாரசுவாமியார் வழிக்கொண்டு மண்ணியாற்றங்கரைக்குத் தென்புறத்திற் படைத்திருக்கும் திருச்சேய்ஞலூரைக் கடந்துபோய் நினைந்தவளங்கள் முற்றினுந்தரவல்லவளமிகுத்த வயல்கள்பெருத்து மயிலினங்கள் தோகையைவிரித்தாடுங் குளிர்ந்ததோப்புகள்முதலியசெழிப்பைவாய்ந்த திருப்பதியலூரையும் மற்றசிவஸ்தலங்களையுங்கண்டு திரிநேத்திரதாரியாகியசிவபெருமானைவண

ங்கிப்போற்றி அவ்வெல்லைகளைக்கடந்து மனக்களிப்புடன் போகுமார்க்கத்தில் மகிழமரச்சோலைசூழ்ந்த திருநெல்வேலித்தலத்தைத்தரிசித்துக்கர்த்தனை வழிபட்டவராய் செந்தாமரைப் பீடத்தினளாகியமகாலட்சுமிஞானகாலம்சகலவளனும்பெற்றுத் திர்க்கசுமங்கிலியாயிருக்க விருப்புற்றுத் தவவிரதங்களைச்செய்து பேறுபெற்றசிரேஷ்டமாகிய திருவாரூரைச்சேர்ந்தனர்.

## சுரம்புகுபடலம்.

புற்றிடங்கொண்டபுத்தேள்புரந்தரற்கருள்செய்திட்ட
நற்றலந்தன்னைச்சேர்ந்தகதாநூள்ளனவுங்காணூஉக் [ர்
கொற்றவெங்கதிர்வேலண்ணல்கொல்லுலையழலிற்செக்க
பற்றியவிரும்புபோலும்பாலையங்கானத்துற்றான்.

கேட்டீர்களோ? சவுனகாதிமஹரிஷிகளே? இவ்வண்ணமாகத் திருவாரூரைச்சேர்ந்து ஆலயத்துள்நுழைந்துதேவேந்திரன்முன்னம் வழிபட்டுப்போற்றியதற்கிரங்கிக் கடாட்சித்தசிவபிரான் புற்றிடங்கொண்டெழுந்தருளியிருக்கும் வன்மீகலிங்கத்தை வணங்கித்துதித்து வெளிவந்து அத்தலத்தைச்சூழ்ந்திருக்கும் ஸ்தலங்களையுந் தரிசித்துக்கொண்டுபோய்க் கொல்லனுலையிற் காயப்பட்டுச்சிவந்திருக்கு மிரும்பைப்போல அழன்றிருக்கும் பாலைநிலத்தில் வெற்றிவேலாயுதமூர்த்தியானவர் தேவர்களுடன்சேர்ந்தனர். நைமிசாரணியவாசிகளே! அந்தப்பாலைநிலத்தின் பிரபாவங்களிற் சிலசொல்லுவோம்கேட்பீராக.—பிரளயகாலத்திற் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும்ஏகமாகக்கலந்து பெருகியெழுந்து அஷ்டதிக்குகளைச் சூழ்ந்து நிறைவெய்தி அலைகளைமோதியிருக்கும் வேளையில் தன்னிடத்தில்வரும் ஜலப்பெருக்கினுல் எவ்வளவும்அழிவுபடாமற் பழையபடியே காந்திகொண்டு கடலினடங்கிய வடவா முகாக்கினியைப்போல அங்கிரைக் கிரகித்துச்சுவாலையைவீசி ஊழிகாலத்தினும் நிலைபெற்றிருக்கும் இவையன்றியும் விண்ணகத்துக்கு அரசன்வாழும் பொன்னுலகமானது யாகத்துக்குவேண்டும் திரவியங்களடங்கிய தலமாகவும் பிராணிகளனைத்தும் அவிப்பாகத்துக் குதவியாகும் பசுக்களாகவும் ஜலசமர்த்தியாகிய சமுத்திரங்கள்ஆகுதிக்கு உபயோகமாகும். நெய்ப்பதலைகளாகவும்,பூமண்டலமானதுயாகவெல்லையாகவும், அதன்மத்தியில் விளங்கும் முத்தழல்பெருத்தோங்கும் ஓமகுண்டத்தைப் போலச்சதுரக்கள்ளிகள்பெருத்து வெப்பமிகுத்த பாலையானதுகாட்டியது. அன்றியும் அழகிய திருவெண்ணீற்றினை அணிந்த திருமேனியைப்படைத்தசிவபிரான்சர்வசங்காரகாலத்தில் மன்னுயிரனைத்தையும் நுதல்விழித்தீயினுற் றகித்துக் கனலெழுகின்ற சுடலையைப்போலவும் சமுத்திர அலைகளைப்போலக் கானலைப்பெருக்கி யிரண்டுசிரங்களும்ஏழு நாவினையும்படைத்த அக்கினிதேவனுக் கிருப்பிடமாகவும்தோற்றுகின்றது, மேலும்அப்பாலையை வடவாமுகாக்கினியானது தன்னினமெனக் கேள்விப்பட்டுஅதனைக்கண்டு பூர்வீகமாக விருக்கின்ற உறவைப்பாட்டிப்போவதாசநினைந்து அப்பாலையினிடத்துக்குவந்து சற்றுநின்றமாத்திரத்தில் அங்கிலவெப்பமானது தன்கொடுமையை ஆற்றித் தாபத்தை உண்டாக்கிய காரணத்தினுல்நடுநடுங்கிப் புகையை உமிழ்ந்து அரற்றி நாப்புலர்ந்தோடிக் கடலில்விழுந்து இது வரையினும் அங்கிரை யருந்தியும் வெப்பம் ஆராமல் கொதித்திருக்கின்றது ஆயிரங்கிரணங்களைவீசி உலகங்களை விளக்கிவருஞ்சூரியனுஞ் சந்திரனும் தங்கள்கதியிற் போகும்போது அப்பால நிலத்தைச் சமீபித்தமாத்திரத்தில் அதன் வெப்பத்துக்காற்றுமல் பயந்து சுற்றிக்கொண்டு போவதல்லது நேராகச்செல்லார்கள். அந்தரவாசிகளாகியதேவர்கள் முதலானவர்களும் அவ்வாறே அதனைநெருங்கவும் பயப்படுவார்கள் மேகங்களும் வாயுவும் எக்காலத்தும் அவ்வெல்லையைநோக்கிப்போகச்சம்மதப்படாமற் றெலைதூரத்திற் சஞ்சரிப்பார்கள். அக்கினியிற்றேற்றிய பொருள் அதன்வெப்பத்தினுல் தேகங்கன்றி வாடியிருப்பதல்லதுமாளாததைப்போல அங்கிலத்திற் சஞ்சரிக்கின்ற யானைபன்றிகொடிய விஷத்தைப்பெற்ற சர்ப்பம் கற்புருசெந்நாய் கலைமான்முதலியமிருகங்கள் அந்தப்பாலைநிலத்தில் வாசமா யிருந்தபோதினும் பிராணனைப்போக்காமல் வருந்தித்திரியும் இதற்குச் சிலதிருஷ்டாந்தஞ்சொல்லக்கேட்பீராக.

வசனுபியிற்பிறந்த புழுக்கள் அதன்வேகத்தினுல் மாளாமல் சகித்திருப்பது போலாயிற்று, ஆகாயமானதுநீலநிறமாகவும் செக்கர்வானமாகவுங் காட்டுவதைஎன்னென்றிருக்கிறீர்கள் நினைப்பினுஞ்சுடும் வெப்பத்தினைப்பெற்ற பாலைநிலத்தினின் றெழுகின்றஅழலானது தாக்குவதினுலும் புகைப்படலம்பெருத்து நிறைவதினுலும் அப்படிக்குக்காட்டுகின்றது. சூரியனுஞ்சந்திரனும் அவ்வெப்பத்தினுல் வெடித்தபுண்ணுகும், நட்சத்திரங்கள்கன்றியெழுந்த கொப்புளங்களாகும் இதற்குயாதொரு சந்தேகமுமிராது, அதற்குச்சிலதிருஷ்டாந்தங் காட்டுவோம். கணப்போதில் ஆயிரங்காதவெல்லைநடக்கும் வேகமுள்ளசூரியன் பக்கமாகப்போவதைமறந்து ஒருதினம்நிமைப்போது அப்பாலைக்குநேராகச் சென்றகாலத்தில்அதனிடத்தெழுந்த சுவாலையினுல் தன்தேர்வண்டிலொன்றுபற்றிஎரிந்துங் கால்நீட்டிக்கொண்டு குதிரைகளைச்செலுத்தியிருந்தசாரதியாகிய அருணனுக்கு முழந்தாள் வரையில்வெந்தொழிந்துங் கருகிசூரியனும்வருந்தித் தன்கிரணங்கள்கொதிப்பெடுத்து அக்கினிச் சுவாலையாய்வீச நாளதுபரியந்தமிருக்கின்றனன். இத்தகையகொடுமை நேராவிடிற் சந்திரனைப்போலக் குளிர்ந்திரானே இவையன்றியும்பூர்வவினையின்தொடர்பை நீக்கிக்கொள்ள வறியாமல்அல்லலிற்பட்டிருக்கின்றசிலதேவதைகளைக்கோரிச்சாஸ்விதமாகியமோட்ச சாம்பிராச்சியத்தைப்பெற விருப்புற்றுச் சேர்ந்து

வாடுகின்றவரைப்போலத் தேகமுற்றும் வெந்து தங்களைப்போலவே வருந்தித்திரிகின்ற பருந்தினது நிழலைத் தேடிச்சிலமான்கள் அங்குமிங்குமாய் உழ்லும்சூரியனுஞ் சந்திரனும் காலையினும்மாலையினும் இராத்திரி முழுவதும் சமுத்திரத்திற் படிந்துபடிந்து வருவதையோசிக்குமிடத்திற் கொடியவெப்பத்தைப்பெற்ற பாலைநிலத்தெழும் அக்கினிச்சுவாலையினாற் றாக்குண்டு அந்தத்தாபத்தைப்பொறுக்கக்கூடாமல்கல்ப்பீரில்முழுகுகின்றனர்.இதைக்கருதி யிரக்கமுற்றுப் பிராமணர் திரிகாலங்களினுநீரை யிறைத்துக் குளிரச்செய்துவருவர். தேவர்கூட்டம்ஒருகாலம்அந்நில தேவதையாகிய துர்க்கை யம்மனை வழிபட்டுச்சேவித்து வருவதாகப் போனவர்கள்கொடிய பாலையின் வெப்பத்தையறியாமல் அதனிடத்தில் நடந்த காரணத்தினால் பாதங்கள் வெந்து சிவந்து படாதபாடுகள்பட்டு வாடிஅமுதமுண்ட முயற்சியினால் பிராணன் தப்பிஅன்றுமுதற் பூமியிற்கால்களை வைக்கப்பயந்துவிண்ணினிடத்திற்றிரிவர். நற்குலத்திலுதித்து அகண்டஅயிஸ்வரியங்களை அனுபவித்திருந்த மேலோர்களாயினும்உலகமிகழும் தரித்திரம்வந்தகாலத்திற் குலஹீனராயிருக்கின்ற அற்பரிடத்தினும் ஒருபிரயோசனத்தை விரும்பிப்போவர் அதைப்போலவே சிறந்த மதயானைகள் பாலையின்தீட்சணியத்துக் காற்றாமல் அந்நிலத்தில்உலர்ந்துகாந்தி கொண்டிருக்குங் கள்ளியினது நிழலைத் தேடிப்போய் ஒடுங்கிஒதுங்கி நிற்கும், இவையன்றியும் சூரியனாகிய தட்டான் கிரணங்களாகிய குறட்டினால் மணிகள் பரல்களாகிய நெருப்பை பாலையாகிய கும்மட்டியிற்கூட்டிகரிகளானவற்றைகரிகளாகச்சேர்த்துஅவற்றின்துதிக்கைபாகியவூதுகுழையினாற்காற்றெழவூதிப்பதனறிந்துபகானலென்னும் ஜலத்தைவார்த்துத் திருப்பிச்செய்யும் பொன்னாபரணங்களைப்போலப் படங்கள்பொருந்திய சர்ப்பங்கள் புரளும் பூமியிற்பெருகும் பிரவாகத்தையும் பாதல கங்கையின்பெருக்கையும் உண்டபாலைத்தீயானது அந்நீரைக் கக்கியதைப்போல அந்நிலத்திலெழுங் கானலானதுஅசைந்துகாட்டும் இப்படிக்குப்பெருத்திருக்கும்பேய்த்தேரை நதியெனக்கருதி மான்-மரை-யானை-பிடிமுதலாகியமிருகங்கள் தாகசாந்திசெய்ய விருப்புற்று அங்குமிங்குமுலாவிவருந்தும் அந்நிலத்திலெழுங்கொடிய அழலுக்காற்றாமற் சர்ப்பங்களானவை கக்கநின்றவிஷத்தைக்கண்டநாயானது தாகவிடாயினாற் பிராணனுக்குத்துணிந்து நக்கிச்சோரும் சூரியன் உலவப்படாமல் சொலித்துக்கொண்டிருக்கும் பாலையினிடத்திற்பெருத்தசையும் கானலானது பூமிதேவிவருந்தாமல்நதிபெருகுவதைப்போலத்தோற்றும் அத்தழலுக்காற்றாமல் சர்ப்பங்கள் கக்கியவிஷமும் சிரோரத்தினங்களும்எப்படிக்குக்காட்டுவதெனில், அதனிடத்தெழும் அழலையும் புகையையும் நிகர்த்துவிளங்கும் அதைச்சூழவிருக்கின்ற மூங்கில்கள்வெடித்து உதிரும் முத்துகளும் பொரியைப்போற்காந்திச்சிதறும்பரல்களும் நாகங்கள்கக்கிய சிரோரத்தினங்களும்பெருத்து எங்கும்பிரகாசித்திருப்பது எப்படிக்குக் காட்டியதெனில் சலனமற்றுச் சொலித்திருக்கும் பாலையினிடத்தெழும்தீயானதுசுடப் பூமிதேவியினது தேகங்கன்றிக்கொப்புளித்ததுக்கொப்பாக விருந்தது. கள்ளிகள்கரிந்து பாலைத்தருக்கள்தீய முள்ளிப்புதர்கள்காய்ந்து குராமரங்கள்பற்றியெரிந்து அகில்விருக்ஷங்கள் வெடித்தெங்கும்கொள்ளிகளைப்போலப்பிரகாசித்திருப்பதைப் பார்க்குமிடத்தில்கொடியபாலைநிலத்திற் புள்ளிபட்டதையொத்துவிளங்கும்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? இவ்விதச்சிறப்புகளைவாய்ந்த பாலைநிலத்தினிடத்தில் எமதுகர்த்தனாகிய சுப்பிரமணியக்கடவுள் துணைவர்பூதப்படைகள் முதலானவர்களுடன் வந்தமாத்திரத்தில் மின்னலிடிகளுடன்மேகங்க ளிடைவிடாமல்வருஷித்துப்பின்புகுளிர்ந்துசகலவிருட்சங்களும்தழைத்து நிழலைக்காட்டுங்குறிஞ்சித்திணையைப்போல வெப்பந்தணிந்து தண்மையாய்விளங்கியது மன்றிக் குமாரதேவர் கிருபையுற்றுச் சகித்தற்கரிய தீட்சண்ணியமுள்ள அக்கினிதேவனுக்கு அப்பாலை நிலத்தை அரசுசெய்யக் கொடுத்திருந்தஅதிகாரத்தைமாற்றிவருணராஜனுக்குப் பட்டாபிஷேகத்தைச்செய்தது போலக்கொடிய வெப்பமொழிந்து சகலருங் கொண்டாடத்தக்கநற்குணங்களைக்காட்டிக் குளிர்ந்திருந்தது. பெண்டுபிள்ளைகளென்றும் தன்பொருளென்றும் மானம்பாதிக்க ஆசைக்கவலையிற்பட்டு உழலுகின்றபிராணிகள்பூர்வவினைத்தொடக்கினாற் பரமேஸ்வரன் திருவருளைப்பெற்று முற்குறித்த பந்தங்களைப்போக்கி நல்லறிவு விளங்கிப்பதவியைப்பெறுமாறுபோல நீர்ப்பசையென்பது எவ்வளவுங்கிடையாமற் றழல்பட்டிருந்த கொடியபாலைச்சுரமானது சிவகுமாரன் போகப்பெற்ற மகிமையினாற்பரிமளமிகுத்த புஷ்பவனத்துக்குச் சமதையாகக் குளிர்ந்துகாட்டியது.மேலுஞ்சைவத்துக்குப் புறம்பாகிய இதரசமையங்களை முக்கியமாகவெண்ணி அவற்றைத்தொடர்ந்துயாதொருபிரயோசனங்களையும் பெறாமல்அலைந்து வாடியிருந்தவர்கள்சிவகடாட்சம் பெற்றகாலத்தில் அறிவுங்குணமுங்குறியும் வயிராக்கியமும்வேறுபட்டு நன்மார்க்கத்திற்றொடர்ந்து கிருதார்த்தராவதைப்போல யாதொரு பிரயோசனத்துக்கும் உதவியில்லாமற்றீப்பட்டுக் கிடந்த அக்கொடியை நிலமானது வேலாயுதமூர்த்திவந்த சிறப்பினாற் சுகந்தமிகுத்தகுளிர்ந்த நந்தனவனத்தைப்போன்றும் பலருக்குமினிமையுண்டாக்கியது. நீர்ப்பசுமைகிடையாமல் அனலைவீசிக்கொண்டிருந்த பாலைநிலத்திற் சண்முகதேவர் வருவதைத் திருப்பரங்குன்றச் சாரலிற்றவஞ்செய்திருந்த பராசரரிஷிகுமாரராகிய-தத்தன்-அனந்தன்-நந்தி-சதுர்முகன்-பருதிபாணிமாலிஎன்னும் அறுவரும்ஞானயோகத்தினாற் றெரிந்தவுடன்ஆதியிற் கர்த்தன்தங்களுக்குப்பணித்திருந்ததை நினைந்தவர்களாய்த்தவநிலையைவிட்டு உத்தரதிசையைநோக்கிப் பூவலம்வருவதைப்போலஅத்திசையை

நாடி விரைந்துபாலைநிலைத்துக்கருகில் வருகையிற்பூதவெள்ளங்கள் முதலானவர்கள் சூழச் சூரபதுமன் ஆணவத்தையழிக்க வெழுந்தருளிய சுப்பிரமணியதேவரைத்தரிசித்துச் சூரியனைப்போல பிரகாசிக்கும்மகுடங்கள்விளங்கிய சண்முகங்களின் பொலிவையும் ஆசானுபாகுவாய்ப்பருத்திருக்கும் பன்னிருபுயாசலங்களின் பெருமைகளையும் செந்தாமரைமலரைப் பழித்துப்பிரகாசிக்குந் திருக்கரங்களையும் அவைகளிற்சொலித்துக்கொண்டிருக்கும் வெற்றிவேல்முதலிய படைகளின் சீரையும்சிரோரத்னுபரணங்கள்புரளும் வயிரமலைக்கொப்பாகத்தோற்றும் மார்பின்வனப்பையும் பீதாம்பரம்தரித்திருக்குமிடையின் சுந்தரத்தையும் விழிகள்களிக்கக்கண்டவுடன் தேகம்பூரித்து ஆனந்தபரவசத்தராய் மும்முறைவலம்வந்து பாதாரவிந்தங்களிற் பணிந்தெழுந்து வண்டினங்கள் புஷ்பங்களிற் பெருகுந்தேனையுண்டுகளித்துச் சத்திப்பதைப்போல வேதவாக்கியங்களினூற் கர்த்தன் பெருமைகளைப் போற்றிக் கரங்களைகூப்பிநின்று தேவாதிதேவனே அடியோங்கள் அஞ்ஞானங்களைப்போக்கித் திருவருள் செய்திரட்சிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்கின்ற தருணத்தில் உயிருக்குயிராய் உணர்வுக்குணர்வாய் எங்கும்பரிபூரணமாய் நிறைந்து சராசரப்பிரபஞ்சங்களை நடிப்பிக்கும் நிருமலமூர்த்தியாகிய பாலசுப்பிரமணியதேவர் பக்கத்தில் நிற்கின்ற தேவேந்திரன் அந்தரிஷிகுமாரர் சரித்திரங்களைச்சொல்வதாயினான்.

கர்த்தனேயிவ்வறுவரும்தவங்களிற்சிறந்த பராசரரிஷிகுமாரர்களாகும் இவர்கள்பாலபருவத்தில் விளையாடித்திரிகின்ற வேளையில் ஒருதினம் நீர்வள்முடையதாய்ப் புஷ்பங்கள் செழித்தலர்ந்திருக்குஞ் சரவணப் பொய்கையில் விழுந்து முதலையைப்போலத் தனித்தனியேமுழுகிக்கலக்கிவரும்போது மிகவும் ஆழமுள்ளதாய் ஒருவராலும்நீந்தவரிய அப்பொய்கைநீரானது பஞ்சேந்திரியங்களுந்துர்மார்க்கமூலங்களிற் சென்றகாலத்தில் உயிர்கள்கவலையிற்பட்டுவாடுமாறுபோலக் கலங்கிக் கொதிப்பெடுத்து அலைகள் மீறிக்கரைகளில் மோதிநின்றதினால் அந்நீரிலிருந்த சலசரங்கள் பயத்தினூற் றுள்ளிக் கரைகளின்மீதுவிழுந்து துடிக்கின்றதையிவர்கள்பார்த்து வெளிவந்து அம்மச்சங்களைப் பற்றியெடுத்துக்கோரைப்புற்களில் அணிபடக்கோத்துக்கொண்டு கரங்களிற் பற்றினவர்களாய் உல்லாசமாக அடுத்ததோப்பினிடத்துலாவிவரும்போது சூரியன் வானவெல்லைமத்தியில்வர மத்தியானகாலமாதலாற்றவசிரேஷ்டராகியபராசரரிஷிகாலைக்கடனைக்கழித்துப்போகச் சரவணப்பொய்கைக்கருகில்வரும்போதுஜலங்கலங்கிவெளிகளி லிறைந்திருப்பதையும் சலசரங்கள்வெய்யில்சுடுகையிற்பட்டுப் பதைபதைத்துவாடுவதையும் தன்பிள்ளைகள் அவற்றைப்பற்றித் திரிவதையுங் கண்டமாத்திரத்தில் வடவாமுகாக்கினியைப்போற் கோபித்துக் குலவண்மையைக் கெடுக்கத்தோன்றிய பிள்ளைகாள் நீங்கள்செய்த துஷ்கிருத்தியங்களுக்குத் தக்கதாய்த்துள்ளித்திரிகின்றமீன்உருக்களைப்பெற்றுவருந்தி உழலக்கடவீர்களென்று சபித்தனர்அவ்வாக்கியம் வெளிப்படுவதன் முன்னம்இவர்கள் ஊழ்வினைத்தொடர்பினால் மீன்களாய் நடுநடுங்கிப் பிதாவின் பாதங்களிற்சேவித்துப்பால்யசேஷ்டையினால்மதியயங்கிச்செய்த பிழைபினைப்பொறுத்து இப்புல்லியபிறவிக்குநிவாரணகாலத்தை அனுக்கிரகஞ்செய்யவேண்டுமென்று மிகவும்பரிபவப்பட்டிரந்து கேட்டுக்கொண்டனர் அக்காலத்திற்பராசரருக்கு அவர்களிடத்திற்கிருபையுண்டாய் ஞானஉணர்ச்சியிற்றெரிந்து ஓகுமாரர்களே சிலகாலங்களுக்குப்பின்பு சிவபிரான் திருநுதல்விழிகளிற் சண்முகப்பெருமாள் தோற்றியிப்பொய்கையிற்றிருவிளையாடல்களைச் செய்து வருவர் அக்காலையில்ஜகதீஸ்வரியாகிய பார்வதியம்மன் இத்தலத்துக்கெழுந்தருளித் திருக்குமாரனைத் தழுவியெடுக்கு முன்னிலையிற் றிருக்கொங்கைகளி னின்றொழுகும் ஞானஅமுதானது பெருக்கெடுத்துப் புனலிற்பாயும் அதனைஆவலுடன் நீங்கள் உண்டமாத்திரத்தில் இச்சாபசம்பந்தம்நீங்கிப்பழயஉருவைப் பெறுவீர்க ளென்று பிள்ளைகளுக்குச் சாபவிமோசனத்தைக்கூறி மத்தியானகிரிகைகளைமுடித்துக்கொண்டு தமது ஆசிரமத்திற்போயினர். கர்த்தனேஅவ்வாறே யிந்தரிஷிபுத்திரர்கள் மச்சங்களாய் அளவற்றகாலம்வருந்திச்சரவணத்திலிருக்கின்ற காலத்தில் ஐயனேதேவரீர்அப்பொய்கையிற்சேர்ந்து திருவிளையாடல்களைநடத்தும்போதுபராசத்தியானவள்வந்து ஆவலுடன் தேவரீரைஎடுக்கவூற்றெடுத்து ஆறுகப்பெருகிய ஞானவமுதையுண்டு தங்கள் பாவத்தைப்போக்கிப் பழையரிஷிகோலத்தைப் பெற்றுப் பரமனை வழிபட்டகாலத்தில் அவர்அனுக்கிரகஞ்செய்த படிக்குத்திருப்பரங்குன்றத்தில் வாசமாய்த் தவங்களைச் செய்துவந்தனர், இக்காலத்திற்றேவரீரித்தலத்திலெழுந்தருளியசெய்திதெரிந்து திருவடிகளிற்பணிந்துகிருதார்த்தராகும் எண்ணங்கொண்டுவந்தனர், கர்த்தனேயிவர்கள்பெருமைகளைக்கேட்டருள்க பரிபக்குவப்பட்டமனதையும் ஞானவுணர்ச்சியையும் சிறந்த தவங்களையும் பெற்ற புண்ணியவான்களெனத்தேவராசன் விண்ணப்பஞ் செய்ததைப் பிள்ளைகள் மழலைவார்த்தைகளைப் பிதாவானவன் விரும்பிக்கேட்பதுபோலத் திருச்செவிகளினேற்றுத்திரிகாலவர்த்தமானங்களையும் வரையறத்தெரிந்த சிவகுமாரன் பராசரர்பிள்ளைகளிடத்திற் பரிவாய்க்கிருபாநோக்கம் பாலித்துக் குற்றமற்றகுணங்களைப்பெற்ற ரிஷிபுத்திரர்களே நம்முடன்வ வீர்களெனத் திருவாய்மலர்ந்தனர், அவ்வாக்கியத்தைக்கேட்டமாத்திரத்தில் ரிஷிபுத்திரர்கள் சிறந்த வெற்றிவேலாயுத மூர்த்தியினது திருப்பாதசேவைக் காளானோமாதலால் இனிச்சகலதுன்பங்களையும் போக்கிக் கிருதார்த்தராயினோம் பிழைத்தோமென்னும் மனவுச்சாகங்களுடன் போற்றித்தொடர்ந்து வரும்படிக்குக் குமாரசுவாமியார்? அக்கினிகளுக்குக்களித்திருக்கும்ராஜதானியாகச் சுவாலையைப்பெருக்கிவந்த கொடியபாலை நிலத்தைக்கடந்து தமது துணைவர்தேவர்கள்மற்றசேனைப்பெருக்கத்துடன்அப்புறம்போவதாயினர்.

## திருச்செந்திப்பட்லம்.

சூரமதுகடந்துநீங்கிச்சோதிவேலுடையவள்ளல்
விரிபுனற்சடிலத்தண்ணன்மேவுசெங்குன்றூர்நோக்கிப்
பருமணிவயிரமுத்தம்பலவளம்பிறவுமாழித்
திரையெறியலைவாயாகுஞ்செந்திமாநகரம்புக்கான்.

ஓ சவுனகாதிரிஷிகளே! மேல்நடந்தசரித்திரங்களையுஞ் சொல்லுகிறேன் கேட்பீராக வெற்றிவேலாயுதமூர்த்தியானவர்பாலைநிலவெல்லையைத்தாண்டிப்போகுமார்க்கத்திற்

கங்காசடாதரராகிய சிவபிரானெழுந்தருளிய திருச்செங்குன்றூரைத்தரிசித்துப்போற்றி அத்தலத்தைக் கடந்து பற்பல தேசங்களையும் நாடுகளையுந்தாண்டி முத்துபவளம் வயிரமாதியவளங்களைத்திரைகளினாற் கொழிக்குஞ் சமுத்திரக் கரையில் விளங்குந் திருச்செந்திற் பதியிற்பிரவேசித்தவுடன் பக்கத்திற்சேவித்துவருகின்ற விசுவகர்மனைப்பார்த்து இதனைப்பணிக்கின்றனர், தேவதச்சனே யித்தலம் வாசயோக்கியமாக விருப்பதால் நமதுபடைவீரர்சேனைவெள்ளங்கள் தேவர்கள் முதலாகக் களித்திருப்பதற்குத் தருந்தவிசாலமாகிய பட்டணமொன்றைத்துரிதமாகப்படைக்கக் கடவையெனக்கட்டளையிட்டவுடன்மகாபாக்கியமென்று வணங்கிப்போய்ச் சிற்பநூலின்வல்லபத்தினால் மனதிற்குறித்துக்கோபுர பிராகார மாடமாளிகை மண்டபம் கூடகோபுரங்கள்தோப்புகள்சோலைகள் தடாகங்கள்முதலியசிறப்புகளனைத்தும் பெருத்துப்பொன்னுலகமும் நாணும்படிக்குஅலங்காரம்பெற்றபட்டணத்தை நிருமித்து கர்த்தனை வணங்கிக் கட்டளையின்படிக்கு நகரமாயிற்றென்று விண்ணப்பஞ்செய்தவுடன் விசுவகர்மாவைப்புகழ்ந்து நவரத்தின மயமாகிய தேரைவிட்டிறங்கி மகாவிஷ்ணு பிரமதேவன் இந்திரன்தேவர்கள் பூதவீரர்கள்போற்றிச் சூழ்ந்துவரப் பட்டணத்தினுள்ளேபிரவேசித்துத்தமது திருமாளிகையிற்சேர்ந்து சகலரும்போற்றிவாழ்த்தச்சபாமண்டபத்தினிடத்தில் விளங்குஞ்சிங்காதனத்தில் வீற்றிருந்தனர், அப்போது மதுரமாகியயிசைகளைத் தருந்தேவயாழினைமீட்டிக் கந்தருவர் சிரவணானந்தமாகப்பாடவும் வேதபாரகனான பிரமன் இந்திரன்ரிஷிகள் முதலினர் கற்பகப்புதிய மலர்களையிறைத்து வாழ்த்திக்கொண்டிருபாரிசங்களினும் நிற்கவும்பவுத்திரமாகிய வானகங்கையாதிய நதிகள் குமாரதேவர் சுந்தரவடிவைக் கண்டு ஆனந்தக்கூத்தாடுவதைப்போலப்பூதவீரர்கள்அணியணியாகநின்று கவரிவீசவும். சோடசகலைகளையுடைய சந்திரன்இருதோற்றமாகஉபயபாரிசங்களினும்நின்று சுப்பிரமணியக்கடவுளினது திருமுகாரவிந்தத் தழகைக் கிரகித்துப் போகக்காலம்பார்த்திருப்பதற்குச் சமதையாக அக்கினிதேவனும் வருணராசனும் குளிர்ந்த நிழலைப் பரப்பும் முத்துக்குடைகளைத்தாங்கி நிற்கவும். விஷதந்தங்களைப்படைத்த அஷ்டமாநாகங்களும் மற்றைச் சர்ப்பங்களோடு பத்திவிசுவாசங்களுடன் சிவகுமாரனைநெருங்கிப்பணிவதற் சொப்பாகத்தேவர்கள் ஆலவட்டங்களை அசைக்கவும் பர்வதாகிருதியாக விளங்கும்புசங்களைப்பெற்ற வீரவாகுதேவர்உடைவாளைப்பற்றிக்கொண்டு பக்கத்திற்போற்றியிருக்கவும் மற்றத்துணைவர்எண்மரும் இலக்ஷரும் கரங்களைக்கூப்பித்துதித்துச் சூழ்ந்திருக்கவும் பூதவீரர்கள்மங்கலவாத்தியங்களைத் திசைகளெங்குஞ் செவிடுபடத்தக்கதாக முழக்கவும்சிவசுப்பிரமணியர்தேவர் எழுந்தருளியிருந்தனர்.

இவ்விதமாகத்திருவோலக்கத்தில்எழுந்தருளியிருக்குங் குமாரக்கடவுள் ஒன்றுமறியாதவரைப்போல்அநேகயுகங்களாகச் சூரபதுமனாதியர்செய்துவருகின்றவஞ்சகத்தினால் துன்பசாகரத்தில்மூழ்கிக்கரைகாணாமல்வருந்தியிருக்கின்ற தேவேந்திரனுடைய முகத்தைப்பார்த்து ஏ. மகபதியே? நன்றியைக்கொன்று தீமையைவிருத்திசெய்கின்ற சூரபதுமன்முதலிய அசுரர்கள் பிறந்தவரலாறும், அவர்கள் பரமபதியாகிய சிவபெருமானைநோக்கிச்செய்ததவமும், அவ்வரியதவத்திற்குப் பரமேஸ்வரன் மனமகிழ்ந்து அளவில்லாத அநேகவரங்களைப்பிரசாதித்தருளியதும், அவ்வரங்களைப்பெற்றபின்னர் அவர்கள் அரசுசெலுத்திவருகின்ற திறமும், அவர்கள்செய்துவருகின்ற வஞ்சகமாயமும், முன்னேகொண்டிருக்கின்றவெற்றியும், வல்லமையும், மேன்மையும், அவர்கள்இந்நாள்வரையில்உங்களுக்குச்செய்துவந்த துன்பமுமாகியவிவைகளையெல்லாம் ஒன்றேனும்விடாமற் சாங்கோபாங்கமாகச்சொல்வாயாகவெனக்கட்டளையிட்டனர். எமதுபெருமானாகிய குமாரதேவரிவ்வாறு கட்டளையிட்டவுடன் பொன்னுலக வாசியாகிய தேவேந்திரன் அக்கட்டளையைச் சிரசாகவகித்துத்தனக்குச் சமீபத்தில்வாக்கின் திறத்தில்மிகுந்தவல்லவராயுள்ள பிரகஸ்பதிபகவானைப்பார்த்துத் தேவரீர்இவையனைத்தையும் குமாரதேவருக்குச் சொல்லியருளவேண்டுமென்றிரந்தனன். வச்சிரதரனாகிய தேவேந்திர னிவ்வாறுசொல்லலும்அதற்குச்சம்மதித்தவராய் வெட்சிமலர்மாலையையணிந்தபன்னிரண்டு திருக்தோள்களையுடைய குமாரக்கடவுளினிரண்டு திருவடிகளும் தனது முடியிற்படும்படியாகத்தொழுது எழுந்துநின்று எமதுபெருமானேதேவரீர் எல்லாவற்றையும்தெரிந்திருக்கின்றீர் அன்றியும்உலகத்துள்ளஎல்லாவுயிர்க்கும் உயிராகவும் நிறைந்திருக்கின்றீர் அப்படிப்பட்ட தேவரீர் அடியேங்களுடைய துன்பத்தைநீக்கும்நிமித்தம் ஓர்சிறிய குழவியாகவுந்திருவுருவங்கொண்டருளினீர். ஏ! தேவநாயகனே? தேவரீர் திருவிளையாடலின் திறத்தையாவர்தானித்தன்மைத் தெனத்தெளியத்தக்கவர்கள் அளவில்லாத அநேககோடிபுவனங்கள்தோறும்பொருந்திய திரிமூர்த்திகளையும்அப்புவனங்களில்வசிக்கின்ற சீவகோடிகளையும் பழைய திருமேனியைக் கொண்டுசிருஷ்டித்த உமதுமாயவல்லபத்தின் திறத்தை யாவர்தான் தெரிந்துகொள்ளவல்லவர்அப்படிப்பட்டதேவரீர் கொடியவர்களாகிய அசுரர்களின் வரலாற்றைக் கேட்டருளியது ஐயனே அதைத்தெரிந்துகொள்ளும் நிமித்தமன்று வஞ்சகர்களாகிய எங்கள்துன்பத்தை நீக்கியின்பமாகிய வமுதத்தையெங்களுள்ளத்தில்பிரசாதித்தருளும் திருவருளேயாகும் ஆதலால் எம்பெருமானே? சூரபதுமன்முதலிய அவுணர்களின் வரலாறனைத்தும் சொல்லுகின்றேன் கேட்டருள்வீராகவென்று வெற்றிபொருந்திய குமாரக்கடவுளைப்பார்த்து மிகுந்த சந்தோஷத்துடன்பிரகஸ்பதிபகவான் சொல்லத்தொடங்கினர்.

## உற்பத்திகாண்டம்முற்றிற்று.

கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள் திருவடிவாழ்க.

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

ஸ்ரீஞானசம்பந்ததீர்த்தசரணாயநமஃ

கச்சியப்பசிவாசாரியசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

# ஸ்ரீஸ்கந்தபுராணவசனம்.

## அசுரகாண்டம்.

### மாயைப்படலம்.

ஊரிலான்குணங்குறியிலான்செயலிலானுரைக்கும்
பேரிலானொருமுன்னிலான்பின்னிலான்பிறிதோர்
சாரிலான்வரல்போக்கிலான்மேலிலான்றனக்கு
நேரிலானுயிர்க்கடவுளாயென்னுளேநின்றான்.

வீறுகாசிபன்சிறார்களாய்மேவியவறுபா
னாறுகோடியதாகியவவுணருக்கரசன்
மாறின்மங்கலகேசியாமரக்கியைமணந்து
பேறதாகவேசூரசையென்றொருமகட்பெற்றான்.

---

ஐம்புலன்களை நிக்கிரகித்துச் சித்தத்தைச்சிவன்பால்நிறுத்தித் தவங்களைச்செய்து சிறப்பெய்திய சவுனகாதிரிஷிகளே? மனதொருமித்துக் கேட்பீராக. மரீசிகுமாரனானகாசிபருக்குதித்த அறுபத்தாறுகோடி ராட்சதருக்கரசனாகிய அசுரேசனென்பவன் சுமாலிபுத்திரியாகிய மங்கலகேசியைக் கலியாணஞ்செய்து பாக்கியவசத்தினாற்சூரசையென்னும் பெண்ணைப்பெற்று, அவளொப்பற்றவடிவைக்கண்டு பரிவாகவளர்த்துவரும்போது குரவனானசுக்கிரன் அவளுக்கு மாயவித்தைகளனைத்தையும்மந்திரபூர்வகமாகப்போதித்து, அவள்வல்லபத்தைப்பார்த்து, மாயையென்னும் பெயரையிட்டு, ராட்சதர்சிறுமையினையும்தேவர்பெருமிதத்தினையும் அவர்களுக்கு நந்திதேவரிட்டசாபத்தையும்யோசித்து, மாயையை ஆசீர்வதித்து, ராசபுத்திரியே! கேசவனாலும் தேவேந்திரனாலும் அளவற்றராட்சதர்இறந்தபடியால் உன்தந்தை வலியற்றொடுங்கினான். ஆயினும் மின்னலினொளியினாலே தாழைபுட்பிக்கும், என்மகிமையினால் மழைபெய்யும், அவைபோலவே உன்னால் அசுரகுலம் விருத்தியடையவேண்டியிருக்கின்றது. ஆகையால் நீதாழ்க்காமல் இலக்குமிக்குமேலான வடிவுகொண்டுபோய் வனத்திலே தவஞ்செய்யுங் காசிபனைமையல்மூட்டி இரவில் அவளைப்புணர்ந்து வலியபிள்ளைகளைப்பெற்றுப் பெயரிட்டுப் பரமசிவத்தைக்கருதிச் சிறந்தவரங்களைப்பெறும்படி அவுணருக்கடுத்த வேள்விகளையும் விரதங்களையும்மந்திரபூர்வகமாகப்போதித்துப்பிள்ளைகள் நலத்தைப்பெறவும் சத்திராதிகளாகிய தேவர்பழியின்மூழ்கவும் அரியதவங்களைச்செய்ய அனுப்பிப்பின் திரும்பக்கடவாயெனச்சொல்லினர். அதைமாயைகேட்டு சுவாமி அவுணர் விருத்தியடையும்பொருட்டு இதனையனுக்கிரகஞ்செய்தீர். ஆதலால் அப்பணிவிடையை அடியேன்செய்யக்கடவனென்று சேவித்துப்போய் பிதாவாகியராட்சதராசனுக்கு இச்செய்திகளை யறிவித்துச் செலவுபெற்றுச்சென்று வெள்ளியங்கிரியைப்போலச் சர்வாங்கதூளிதமணிந்து, காசிபர்தவஞ்செய்திருக்கும் வனத்தைச்சேர்ந்து, இலக்குமியும் இரதியும் திலோத்தமையும் மோகினியும் ஏகமாயொருவடிவெடுத்ததையொப்ப உலகிற்கிடையாத மிகுந்தஅழகுவாய்ந்த உருவுகொண்டு, பூமண்டலவாசிகளும் திசைகளிலிருப்பவரும் விண்ணகத்தாரும் பாதலவாசிகளும் தனதுஎழில்நலத்தைக் காணப்பெறின் மாரன் கணைகளுக்கிலக்காய்ச் சரீரமெங்கும் புண்பட்டுமயங்கி விளக்கிற்பட்டவிட்டில்களைநிகர்ப்பவாடித்தொடரும்படி மேகலைமணிகள் பாதசரங்கள் கரத்தின்விளங்கும்வளையல்கள்சத்திக்க, அன்னத்தையொப்ப மெல்லெனவுலவி, அவ்விடங்களிற் பரிமளமிகுந்த புட்பங்கள்வாய்ந்த பூஞ்சோலைகள் மதுரமான சலசமர்த்தியுள்ள தடாகங்கள் சித்திரமண்டபங்களாதிகளைத் தன்வல்லபத்தினாலுண்டுபண்ணி, மறைந்திருந்தாள். அப்போது ஐம்புலன்களையொடுக்கிப் பொறிகளையடக்கிச் சித்தத்தைச் சிவத்தின்கண்செலுத்தித் தவத்தினின்றகாசிபர் கண்களைவிழித்து, நூதனமாகவிளங்குகின்ற சிங்காரங்களைப்பார்த்து, அற்புதமடைந்துவெளிவந்து ஒவ்வொன்றாகநோக்கி, இஃதுபுதுமையாகவிருக்கின்றது இதனையாவர்நிருமித்தனரோவெனப்பலதிசையினும்நாடிஒருவரையும்காணாதுமாயையின்

வஞ்சகத்திற்பட்டு, ஞானவுணர்வைமறந்து, பிரமித்துத் திகைத்து, பொன்னுலகமிறங்கியதோ! அளகைநழுகியதோ? இன்னதெனத்தோற்றவில்லை, அல்லது பிரமசிருஷ்டிதானோ! விண்டுவின்படைப்பின் வீக்கமோ! லோகநாயகனாகிய பரமசிவச்செயலோ! இதன்காரணமின்னதென நிதானிக்கப்படவில்லை, இவ்வரியகாட்டினிடத்தில் இச்சிறப்புகளுண்டாயது நன்கினுக்கேதுவோ? அல்லது தீவினைக்குக்காரணமோவென்று இவ்விதங்களாகப்பன்னியுழன்று, யாதுந்தோற்றாமையால் மனவாட்டமுற்றுத்தவத்தினைத்தொடங்கத்தமதிடத்துக்குச்சென்றார்.

அப்போது அவர்சென்ற காரணத்தையும் மனக்கலக்கத்தினையும் மாயைஅறிந்து இதுதருணமெனக்கருதி, அவர்வருமுன்னிலையி லுண்டுபண்ணிய வயிரக்குன்றினிடத்துச் சோடசகலைகளைவாய்ந்த சந்திரனைப்போலத்தோற்றினாள். காசிபர் அவள்வடிவைக்குறித்துநோக்கி, கற்பகத்தருக்களிலேதாவும்வல்லிசாதனக்கொடியானது அரியதவப்பேற்றினால் இக்கொடியாகஅவதரித்திறங்கியதோ! மின்னற்கொடியினது விளைவோ! இத்தோற்றம் அதிசயமாக்காணநின்றதென்று நினைந்து தவத்தைமறந்து அக்குன்றினருகிற்போய், இதுபெண்ணுருவாகத் தோற்றுகின்றது. சகத்தினைவிளக்கும் பெருமையினையுடைய இலக்குமியோ! அசுரரைமயக்கியமோகினிதானோ! பொற்பாவையோ! தேவகன்னியோ! எனதுபேரறிவைக்கலக்கிய இவளையாதொன்றுமறியேன். பிரமசிருஷ்டியிற் பட்டவளாகத் தோற்றவில்லை. மாயையே இக்கோலங்கொண்டு எழுந்ததாகக்காணுகின்றதென்றெண்ணமிட்டுவருந்தித்தவத்தை வெறுத்துப் புணர்ச்சியிற் கவலைகொண்டு,வலையிற்பட்ட மானைப்போற்கலங்கி, இவளெண்ணமியாதோவென்றேங்கினின்றார். அப்போது மாயையானவள் வேலையொத்தவிழிகளைச்சுழற்றிக் கலவிக்குறிப்பினைக்காட்ட பெரியவொன்செய்வர்மருண்டு, அவளிலக்கணங்களைப்பாதாதி கேசபரியந்தம்வர்ணித்து இவைகட்குவமை கூறுகின்றபொருள்களொன்றும் எவ்விதத்தினுஞ் சரியொவ்வாதென்றுஇகழ்ந்து, இக்கன்னிகையினதுவனப்பில் ஆயிரத்திலொருகூறேனும் இலக்குமிக்குக்கிடையாதாகையால் என்னால் அளவிடப்படுமோ! இவள்காலழகுக்கு இந்திராணியுமொவ்வாளெனப் பலவிதமாகத்துதித்து, மெல்லநெருங்கி, வனப்புகளுக்கோரணியாகநிற்கின்ற பெண்ணரசியே? உமதுவரவென்பாக்கியவசமாகும், ஆதலால் உமதுகுலம்யாது! நீரிருக்குமிடமெது! உமதுதிருநாமமென்ன உமதுதந்தையாவன் சற்றுத்தயைசெய்து சொல்லுமென்றுகேட்டார். மாயை அவரைப்பரிந்துநோக்கி தவத்தினைவிரும்பினோர்க்கும் உம்மைப்போன்ற மகத்துக்களுக்கும்இவைகளினாலாகவேண்டுவதென்னை! மேலும் காமத்தைவெறுத்த நீர்கன்னியரிருக்குமிடத்திலேதனித்துவரலாகுமோ! இருடியருக்கழகோ! இதுவல்லாமல் ஞானவறிவில்லாதமனிதரைப்போலப்பேசிக் கிட்டுவது நீதியல்ல, முத்தியினையளிக்குந் தவஞ்செய்யப்போமென்று மறுத்தாள். உடனே காசிபர்மனங்கரைந்து பெண்கள்சிகாமணியே? சரீரம்வருந்தி மனதையொடுக்கி அரியவிரதங்களைச்செய்வது இஷ்டசித்திகளைப்பெறவேயாதலால், நான்முடித்ததவப்பேறுகிடைத்தபின்பும் வருந்துவானேன், ஆதலாற்பெயர்முதலியவைகளைப்பின்பு தெரிந்துகொள்ளுவேன். காமநோய்வருத்துகின்றதாற் சற்றுத்தயைசெய்யவேண்டுமென்றுவேண்டினார். மாயைநகைத்து, என்னிமித்தம் தவஞ்செய்ததாகச்சொன்னீர்,பெரியவர்கள்இப்படிக்குப் பொய்யாடலாமோவென்றுகேட்க, அவள்குறிப்பைக்கலைகளனைத்துந்தேர்ந்தகாசிபர்நாடி பெண்ணரசே? கேட்பாயாக நான்பிரமகுமாரனாகும், ஒருபோதும் பொய்பேசமாட்டேன், காமவிகாரமேலிட்டு வாட்டுவதினாலுண்மையைத்தான்சொன்னேன். அதென்னவென்றால் மோட்சவின்பத்தைக்கருதி இதுவரையில் அளவற்றஅரியதவங்களைச்செய்தேன், அதனினுஞ் சிறந்தசுகத்தை யெளிதிற்றரவந்தீர், உம்மைச்சேருவதற்கு மேலானபயன் வேறில்லை, இதையுறுதியாகக்கொண்டு உம்மையடுத்தேன், சித்தமிரங்கவேண்டுமென்றிரந்தார்.

அதைமாயைகண்டுநகைத்து, ஓ! மாதவரோ? என்சரித்திரத்தைக்கேளும், நான்செல்வமிகுத்த வடதேசத்திலிருப்பவள், மேருவுக்குத் தட்சணபாரிசத்திற் பெருகுங்கங்கைக்கரையைச்சேர்ந்த யின்பநலத்தைப்பெற விருப்புற்றவளாதலால் அவ்வாறேபோய்வருவேன். நீர்நில்லுமென்றுசொல்லினாள். அதைக்கேட்டுக்காசிபர்மயங்கி, பெண்கள்சிகாமணியே? கிருபைசெய்து கேட்பீராக. கங்கைமுதலான சத்தநதிகளையும் காசியாதியாகியசிறந்ததலங்களையும்பொன்னுலகமுதலிய நாடுகளையும் மற்றுமெவைகளை நீர்வேண்டினும் நிமைப்போதில் தருவிப்பேன். திரிமூர்த்திகளைப்பார்க்க விரும்புவீராயினும் இதோவரவழைப்பேன். தேவாமிர்தத்தினிடத்தில் இச்சைகொள்வீராயினும்பெறச்செய்வேன். வானமடந்தையரைஉமக்கேவல்செய்யவகுப்பேன். இவையன்றியும்வலிய புத்திரரைவேண்டினும் உண்டாக்குவேன். ஆனாலென்பிராணனைமாத்திரம் நிற்கும்படி விரைவினென் தாபத்தைத்தீர்த்து ரட்சிக்கவேண்டுமென்றார். உடனே மாயைகுஞ்சிரிப்புக்கொண்டு பெரியவரோ! நான்தனியளா யிருக்கின்றனனெனக்கருதி இப்படிக்குப்பேசினீரோ? இனியதைமறந்துவிடும் தவத்தருக்கு இதுஅடாது என்னெண்ணப்படிக்குக் கங்கைக்கரையைச் சேருவேனென்றுநடந்தாள். காசிபர்பின்பற்றி, உமதுகருத்தின்படிக்கெல்லா முடிப்பேன், நில்லும்நில்லுமென்றுதொடர,மாயைதன்மந்திரவலியினால் உருக்கரந்திருந்தாள். அப்போது, அவள்தோற்றங்காணாமையாற் காசிபர் மருண்டுவாடி, மனநிலைபெறாமற் புலம்புவதானார்.

---

## காசிபன்புலம்புறுபடலம்.

தேனீர்மையெனப்புகல்வாள்சிறிதுந்
தானீரமிலாடனிமாயவளே
மானீருமதாம்வயினுற்றனளோ
வேனீர்மொழியாதிரிகின்றதுவே.

---

இவ்வாறு காசிபர் அக்கன்னிகையினிடத்திற் காதல்கொண்டு தம்மைக்கண்டோடும் மான்களைப்பார்த்து,தேனைப்போலமதுரமாய் வசனித்திருந்தவள் சற்றுமென்னிடத்தில் இரக்கமில்லாமல்மறைந்தாள். அவளுங்கள்கூட்டத்திற்சேர்ந்தாளோ? உண்மையைச்சொல்லாமல் நீங்களோடவேண்டிய காரணமென்னவென்பார் சிலையையொத்துப் பிரகாசிக்கும் நுதலையுடையவள் மாயையென்னும்

வலையைவீசி என்பிராணனைக்கிரகித்துச்சென்றாள். கலை
மான்களே! நீங்கள் அவளைக்கண்டீர்களோ? நிலைபெறாது
வெருவி ஓடுவானேனென்பார். மதயானையே! காதல்கொ
ண்டு பிடியையணைய விரும்பிப்போவாய்? நான்தனித்து
வருந்தாமல் அக்கொடியாளைத் தேடிக்கொண்டு வருவா
யென்பார். பூஞ்சோலைகளிலிருக்கும் வண்டுகளைப்பார்த்
துப் பெரியோர்கள் உங்களைஅளியென்று சொல்லுவார்க
ள், அஃது வியர்த்தமாகாமல் நீர்ஓரிடத்திலேதரியாமல்
உலவுகின்றதால் என்மனதில்நினைந்த மங்கையைத்தேடி
த் திரிவீர்போற் காண்கின்றதென்பார். குவளைமலரை
நோக்கி என்னுடன் வார்த்தையாடிப்பிரிந்தவள்விழியை
யொத்துவாட்டுவாய், என்பிராணனிடத்துப்பரிவில்லாம
ற்பாதகனான மன்மதனுக்கும் பாணமாகிப்பாய்ந்துஇத்த
ருணத்திற் சற்றுந்தயையில்லாமல் என்னுயிரை அலைப்
பதழகோவென்பார். செந்தாமரைப்பீடத்தமர்ந்த இலக்
குமிக்கு மேலான வனப்பைக்கொண்டுவந்து எனக்கதிக
மையலைத்தந்தகன்றாள், ஐயோ! சந்திரனே? நமக்குரியச
ம்பந்தத்தைக்குறித்தாவது இதனைவிசாரித்துஅவளிடத்
துக்குத் தூதுசென்றுஅழைத்துவாராத காரணமென்ன?
சொல்லுமென்று தூறுவார் பொன்னைப்போலப் பொலி
வாயிருக்கின்ற செழித்தகமலத்தின்கண் பெடையைத்த
ழுவிப் பிரியாதிருக்கின்ற அன்னங்காள் யான்தனித்துவ
ருந்தப்பிரிந்த அப்பெண்கொடிபோவதுதருமமோ? சொ
ல்லுவீரென்பார். புட்பித்தோங்கிநிற்கின்றவேங்கைமரத்
தைநோக்கி, தணியாசகாதலையடியேனுக்குத்தந்து துணி
வுகொண்டுசென்றாள். அவள்போகுமார்க்கத்தைக்கணித்
துச் சொல்லுமென்றுவேண்டினும் அதைமனதிற்கொள்
ளாய்காலத்தைக்குறித்துக்காட்டும்உன்னியல்புக்கிதுஅடு
க்குமோவென்றுபிணங்குவார். படைவேள்கணையாகவும்
சூரியனுக்குறவாகவும் மடவார்வதனத்தையொத்தும்சந்
திரனுக்குப்பகையாகியுமிராநின்றதாமரைமலர்காள் விட
த்தைநிகர்த்துச்சுழன்றுவாட்டும் விழிகளைப்பெற்றமெல்
லியலானவள்உம்மிடத்திற்குவருவளாயின்ஒளியாது சொ
ல்லுமென்றுவேண்டுவார். மலைகளைப்பார்த்து, மிகவும்ப
ருத்தோங்கிநிற்கின்றீர்கள், தயைதாட்சணியமில்லாமலெ
ன்னைநீங்கியகாதலிபோகுமார்க்கத்தினுமிருப்பீர்? அவள்
செயலுங்களுக்குத்தோற்றும்,அதைச்சொல்லாமலிருக்கி
ன்றீர்உங்களுக்கேதேனும்குறைசெய்திருப்பேனோவென்
றாடுவார். சோலைகளிலிருக்கின்ற குயில்களைநோக்கி,மயி
லையொத்தசாயலையுடையவள்மாயவளாகத்தோன்றுகின்ற
னள்.அவள்காரணமொன்றுமறியேன்,அவளிவ்விடத் தி
ருக்கின்றனளோ?நீர்சிலபயில்களைக்குறித்துக்கூவுகின்றீர்
ஆதலா லென்பிராணனைக்கொள்ள விரும்பினீரோவென்
று வாடுவார். மந்தமாருதம்வீச நடுங்கி, ஓ? தென்றலே!
உன்னிடத்திற்றான்செல்ல நினைந்ததாக வசனித்திருந்தா
ள். அவளிங்கில்லை, இந்தமார்க்கத்தைப்பற்றி நடந்தாள்.
நீதென் பிரதேசத்தினின்றும் வருவதால்அவள் செயலே
தேனு மறிவையாயிற்சொல்லக்கடவாயெனக்கெஞ்சுவார்.
சந்தன வனத்தைக்குறித்து, உன்னிடத்திற்குளிர்ச்சியும்
அன்புமுள்ளதாக எவரும்புகழ்வார்கள். அப்படிக்கிருக்
க நெருங்குவேனாயிற் சுடுகின்றனை.சோருகின்றவென்னை
த் தளரவேண்டாமென்று ஆதரித்துத் துயரத்தைப்போ
க்கினை யில்லையெனவருந்துவார். களித்தாடும்மயில்காள்!
கொஞ்சிப்பேசுங்கிளிகாள்! இன்பமாகக்கூவுங்குயில்காள்!
உங்கள்சுற்றமல்லாத வென்னைத் தளராவகை ஆதரவு
சொல்லுவீராயின்அடியேனுயிருக்கரணாவீரென்பார். பு
றாக்களைநோக்கி, எனக்கதிக துயரைவிளைத்துஅணையாம
ற்றாரித் துறவை விரும்பிச்சென்றவள்சினேகமு மொரு
சினேகமோ? உங்களைத்தானுறவாகக்கொண்டேன். இனி
யாவது அவள்சென்றமார்க்கத்தைத் தொடர்ந்து போகச்
சொல்வீரெனத்தொழுவார். இவ்வாறு தவசிரேஷ்டரான
காசிபர்மையல்கொண்டு புலம்புவதை மாயைகேட்டு மகி
ழ்ந்து, அழகிய திரோகத்தைமறைத்து அருகில்நேர்ந்த
போது சூரியன்அஸ்தமானகிரியையடைந்தான்.

அஃதெவ்வாறிருந்ததெனில்? அரியதவங்களைச்செய்த
முனிபுங்கவரிடத்தில் மாயைவந்துஅளவற்றவிகாரத்தை
த்தந்து அவர்செய்ததவப்பலன்களனைத்தையும்அழித்தா
ள்.ஐயோ! அதற்குடன்பட்டஇவரைப்பார்க்கப்படாதென
ப் பரிந்துபோனதை யொத்தும் பிதாவாகிய இருடியைப்
புணரவந்தனளாதலால் தாயாகும், இவரிருவரும் காதல்
முற்றச் சரசசல்லாபமாக விருக்கப்போகிறதைக் காண்ப
து பிள்ளைக்கடாதென்றெண்ணி மறைந்தவனைநிகர்த்தும்
இனியிருளென்னு மிராக்கதவெள்ளம் வரவிருக்கின்றதெ
னக்கருதி விண்ணகத்தரசன் செங்கோலைநடாத்தும் ஆக்
கியாசக்கர மொடுங்கியதைப் போன்றும் இருந்தது பின்
பு தேவர்பெற்ற மகதயிஸ்வரியமும் சீரும் வண்மையும்
பறந்தோட மாயையிடத்துதிக்கும் அவுணவெள்ளம் பெ
ருகநின்றதையொப்ப மாலையிருள்பரந்தது. உடனேசெக்
கர்வானமறைந்தகாட்சி தரித்திரமேலிட்டுஇரப்பவர்களு
க்கு இம்மியளவும்களித்துக்கொடாத பதிதன்செல்வம்அ
ழிவதைப்போன்றது, பின்பு இருள்பரந்ததோற்றம்பூமி
தேவிக்குப்படாம்போர்த்ததையொத்தது. அக்காலத்தில்
நட்சத்திரராசிக ளுதித்தது மன்மதனேறி நடாத்துங் கங்
குலாகிய மதயானையினது முகத்தில் விளங்கும் புள்ளியி
னைப்போன்றுங் கற்பகத்தருக்கள் சிதறும் மலர்களையொ
த்தும் வானத்திற்பரந்தமேகங்களில் நின்றுமுதிரும்முத்
துக்களை நிகர்த்தும்காட்டியது. பின்புசகலரும் திடுக்கிடு
ம்படி விஷத்தினையொத்து உலகமெங்குஞ்சூழ்ந்த இரு
ளின் பெருக்கத்தினைத் தெளிந்த நிலாக்கற்றையாகிய கர
ங்களினால்வாரிவாரி விழுங்கி விண்ணவர்போற்றக்காளத்
தையுண்டு கண்டத்திற்காட்டிய பரமசிவத்தைப்போலக்
கிழக்குச்சமுத்திரத்திற் சந்திரன்உதையஞ்செய்து, பாற்
கடலைத்தேவர் கடைந்தகாலத்தில் மணிகளுடன் தெறித்
ததிவலைகளைப்போலத் தாரகா கணங்கடோன்ற அவுண
வெள்ளம்போன்ற காரிருளொடுங்கஅக்கடலினெழுந்தஅ
முதத்தை யொத்துப் பிரகாசித்து, இரவென்னுங் கம்மி
யன் ஞாலமென்னும்உலையினிடத்தில் கரியகடலைக்கரியா
கக் கொண்டு வடவையென்னுங்கனலைமூட்டி வங்கத்தை
வெள்ளியிற்சேர்த்து வாயுவென்னுந் துருத்தியினாலூதிச்
சுத்திசெய்துவெண்காரத்தினாற்சொக்கமாக்கியதைப்போ
ன்று சிவந்த பிம்பமாகக்காட்டிய திரோகமானது கலைகள்
பூரித்துவெளுத்த வானமென்னும் விசாலமாகிய தடாக
த்தில் நட்சத்திரராசிகள் குவளை ஆம்பல்மலரினையொத்
துவிளங்க அவைகளின் நடுப்பிரதேசத்தின் அலர்ந்தவெ
ண்டாமரைமலரை நிகர்த்துச் சந்திரன் பிரகாசித்தவனாய்
அம்மலரிற் பெருகுந் தேனைப்போல நிலவைப்பெருக்கி
அதனையுண்ணும் வண்டினங்களைபொப்பக் களங்கம்விள
ங்கவும் கடலென்னுந் தடாகத்தில் அம்புலியென்னும்

பரதவன் நிலவாகியவலையைவீசிப்பலவகைமீன்களைவாரி
வானமென்னுங் களத்திற் புலரப்பரப்பியதைப்போன்று
நட்சத்திரங்கள் தோற்றியும் மேகசாலங்கள் கருங்கடல்நீ
ரையுண்டு வானத்திற் பரவிப்பூமியின்கண் பொழிவதை
க்கண்ட சந்திரனனவன் தானும்பாற்கடலைப் பருகி விண்
மண்ணெவ்விடங்களினும் பொழிந்த அமுதத்தைப்போ
லத் தெளிந்த நிலவெங்கும்விளங்கவும், இவ்வாறுசந்திரி
கை யெங்கும் பிரகாசித்தபோது உலகத்தில்கண்தோன்
றிய சகலசீவராசிகளும் களிக்கவும் அல்லிமுதலியமலர்க
ளலர்ந்து தேனைப்பெருக்கிப் பரிமளத்தினை வீசவும்பூங்
காவுகள் புட்பித்து மகரந்தங்களை யிறைத்து ரமணிய
மாகத்தோற்றவும்தாமரைப்புட்பங்கள் புலர்ந்துகுவியவும்
கணவரைப் பிரிந்த மங்கையரும் துணைவியையிழந்த கா
தலரும் மனம்புகைந்தழன்று வருந்தவும் இவ்வுலகத்தி
லொருவருக்கும் தீங்குகளைச்செய்யாதவ ராயினும் பேர
றிவாளராயினும் சகலருக்கும் நண்பாய்நன்கினைச்செய்து
கிர்த்தியடையக் கூடாததைப்போலப் பல்லுயிர்களுக்கும்
இன்பத்தை விளைத்த சந்திரனைக்கண்டவுடன் மெல்லிய
தாமரைகளனைத்தும் பொலிவழிந்து குவியவும் அக்கால
த்திற் குமுதங்கள் மலர்ந்து வண்டினங்கள்மொய்த்த தெ
த்தன்மைத்தெனின்? எமதிறைவன் பங்கமுற்றவரிடத்தி
ற் சேரான், கமலமேன்குவிந்ததென்று வாய்மலர்ந்துவச
னிப்பதைப்போலத்தோற்றவும் தேனையுண்டொலித்திரு
ந்த சுரும்புகளுடன் கமலங்கள்குவிந்தகாட்சி யெப்படிக்
கிருந்ததெனின்? சந்திரன்பரஸ்திரீகளை விரும்புகின்றவ
னென்றஞ்சி எமதிறைவி யிவ்விடத்தினில்லையெனச்சொ
ல்லிக் கபாடபந்தனஞ்செய்ததைப்போலவும் இரவுநேர்ந்
தகாலத்திற் கடிமனைக்கதவைப்பூட்டிச் செங்கண்மாலைய
ணைத்துப் பஞ்சணைமெத்தையிற் பள்ளிகொண்டதைப்
போல மகரந்தங்களையுந் தேனையுமிறைத்திருந்தகமலங்க
ள் இசைப்பாடலை முழக்கும் வண்டினங்களுடன் குவிந்
து பொய்கைகளின் விளங்கவும் இவ்விதக்காட்சி மலிந்த
தருவாயில் தேவரையும் தானவரையும்படைத்த காசிப
ர் வானத்தினெழுந்த சந்திரனது கிரணசமுகங்கள்தமது
மேனியிலே தாக்கியவுடன் சரீரம்வெதும்பி, மனம்நடுங்
கி, வலிகுறைந்து, அங்குமிங்கும்அலைந்து, பெருமூச்செ
றிந்து, அறிவுசோர்ந்து, ஐம்புலவிடையங்களழிந்து, புல
ம்பி, விண்ணிற்றோன்றியநிலவைநோக்கி, காலையிலெழுந்
தவெவ்விய கிரணசமுகங்களைப்பெற்ற சூரியன்மாலைப்
போதின் மேற்றிசையின் மறைந்தவனைப் போலக்காட்டி
மீளவும் விரைந்துகீழ்த்திசைக்கடலி லெழுந்தனனோ! இ
துபுதுமைபுதுமையென்றும், சூரியனல்லவெனிற்கூற்று
வனைப்போலக் கடல்மத்தியி னெழுந்ததன்மையினால் நி
மைப்போதி லுலகையழிக்கக் கடலினிடத் தடங்கினின்ற
வடவாமுகாக்கினியேயாம், மதியல்லவென்றும், அந்தியி
ற் செக்கர்வானமிடுங்காரணம் உலகுளோர்அம்புலியென
ப் புகழுந் தழற்கடவுள்கீழ்த்திசையினுதித்தவருவாயில்
விளங்கும் பிரகாசமாகுமென்று பதைத்தும், விண்மண்
திசைகளனைத்தினும் மாலையிருள்பரவியது காணயோக்கி
யமானகலைகளை விரிக்குஞ்சந்திரனெனத் துதிக்குஞ்செந்
தழல் கனன்றெழுந்த புகைப்படலமாகுமென்றேங்கியும்
கடலிலுதித்த சோமனென்னும் வெவ்வியதழலானதுவெ
ளுத்துக்காட்டுங்காரணம் உலகர் காராட்டைவெள்ளாடெ
ன்கின்றதனால் இஃதுண்மையென்றுபிரத்தியட்சவளவை
யினாற் காணப்பட்டனன்.

மேலும்அளவிறந்த பிராணிகளையுண்டுவெப்பமிகுந்த
அனலம் வெண்மையினைப் பெறுமாறுபோல இவ்வுரு
வைப் பெற்றதல்லது வேறில்லையெனநடுங்கியும், வடவ
னலைப்போலோங்கிச் செக்கர்வானமாக்கிய பின்புவெளுத்
துக்காட்டுஞ் சந்திரனது மிகுத்தெரிவதினின்றுஞ்சித
றுகின்ற கனற்பொறியேயல்லது வானத்திற்றோன்றிய ந
ட்சத்திரராசிகள் வேறுமுண்டோவெனச்சோர்ந்தும்,சிற
ந்த திருப்பாற்கடலிலுதித்நகாரணத்தினால்ஆலகாலவிட
மும் அமுதமாய் அக்காலத்திற்றேவரையோடச்செய்தநீ
லநிறத்தைநீங்கி யித்தினம் வெண்டிங்களாயெழுந்ததோ
வென்றேங்கியும், முற்கூறியதொன்றுமல்ல, அக்கடலின்
கட்டோன்றிய வடவனலமுழுதும் ஆலகாலவிடச்சமூகத்
திற்கலந்து ஆர்த்தெழுந்துமேகத்தின் மறைந்துதமது சு
வாலையை இப்பூமியின்கண்பொழியச் சந்திரவுருவைப்
பெற்று உதித்தேயாம், இஃதேயுண்மையெனத்துடித்து
ம், இவ்வாறுமருண்டு பலவாகப்பன்னி, மாயையைநினை
ந்து, மிகுந்தகாதலின் அவளைக்கூவி, புலம்பத்தொடங்கி,
உருவெளித் தோற்றத்தைக்கண்டு, பரிமள புட்பவகைக
ளையணிந்துதாழ்ந்தஅளகத்தினையுடைய பெண்ணே!கொ
டியவனெதிரில் எவ்வெவ்விடங்களினும் மின்னற்கொடி
யையொத்துத் தோற்றுவீராயினும் அணைக்கநில்லீர்,யா
ன்மங்கும்போது சேருவீரோ! உம்மையல்லது மனவுறு
திபெற்றவ ரொருவருமில்லை, யென்பார்முதற்கண்டவுட
ன் காதலைவிளைத்து மனவுறுதிமுதலியவைகளை,யழித்தீ
ர், அஃதன்றியும் மன்மதனையேவித்திரோகத்தினையும் வா
ட்டியதுடன் பேருணர்வனைத்தையும் சிதைத்தீர், இன்ன
முஞ் சிறியேனுக்குச் செய்யவேண்டு மேதுவுமுண்டோ
சொல்லுமென்பார், அழகியவயிரக்குன்ற முதலியவையு
ண்டாக்கிமனங்களிக்கவுலவிய நீர்என்னைஇவ்விடத்திலே
தனித்துவிட்டுச்சென்றுமீட்டும் புவியெங்குந்தோற்றுவீ
ர், ஆதலால்உமது செயல்கள் யாவராலறியப்படுமென்பா
ர். உம்மிடத்தன்பு கொண்டதனால் ஆதி துவக்கிச்செய்த
தவமுயற்சிகளை யிழந்த தன்றியும் மன்மதனால் மிகவும்
நொந்தேன், இவ்வித துன்பங்களைப்பெற்று உம்முடன்
வாராதுழல்கின்றேன், இதனால் வியர்த்தமாய் மாண்டே
னென்னும் பிழையைமாத்திரம் பெற்றேனென்பார். நே
சங்கொண்டவரைப்போல் வந்தீர்,அவ்வாறுநில்லாமல்மா
யப் படிவத்தினைப்பெற்றெனதுறுதியையும்பறித்துக்கொ
ண்டீர், அதற்கடுத்த மோகத்தைத்தரும் வடிவைப்பெற்
றீர், இவ்விதமகிமைகளையுடையநீர் என்பிராணன்நிற்கச்
சற்று நினையீராயின் கூற்றுவனுக்குறவாய்வந்ததாகுமெ
ன்பார் பெண்ணரசே!இனியொரு கன்னியரைக்கனவிலு
ம் விரும்பேன், உம்மிடத்தி லதிகமோகங்கொண்டேன்,
மேலும்உமது மாயைவிளைவனைத்தையும்திருஷ்டாந்திர
மாகக்கண்டேன், அவ்வாறேஇவ்விடத்துலவுவதைப்போ
ற்காட்டி மறைந்திராயினும் என்னிடத்திரக்கமுற்றுவரா
மற் சற்றுத்தாழ்ப்பிராயின் மாண்டுபோவேன், இத்தரு
ணத்திற்பிராணன்நிற்கவரவேண்டுமென்பார். மாயைகள
னைத்தும் ஒருருவமாகப்பெற்றுவந்த நீர் உலகங்களனைத்
தையும் வென்றுலவுவீர், ஒருகாலமென்னுயிரையுங்கொ
ள்ள விரும்புவீராயினும் இஷ்டமாகத்தருவேன், ஆனற்
சரசசல்லாபமாயொருகா லென்மையல்தீரச்சேரவேண்டு

மென்பார், இவ்விதமாகக் காசிபர் பன்னிப்பன்னி இடர்க்கடலிற்படிந்துவருந்திச்சோருமுன்னிலையிற்சகலதுன்பங்களுக்கும்மூலமான மாயையானவள் தானெண்ணி வந்த கோரிக்கையினைப் பெறுதற்கிது தருணமென்றெண்ணி, அவர்காண மின்னற்கொடியினையொப்பத் தன்னுருவம் வெளிப்படநின்றாள்.

## அசுரர்தோற்றுபடலம்.

கந்தார்மொய்ம்பிற்காசிபனென்போன்கடிதங்கண்
வந்தாள்செய்கைகாணுதலோடுமகிழ்வெய்தி
யந்தாவுய்ந்தேன்யானெனமின்கண்டலர்கின்ற
கொந்தார்கண்டல்போனகையோடுங்குலவுற்றான்.

இவ்விதமாகத்தோற்றிய மாயையினைக்காசிபர்கண்டவுடன் மகிழ்சிறந்து, இனிப்பிழைத்தேனென்று, மின்னலை நோக்கியவுடன் அலருந்தாழையைப்போலத் தந்தபந்திகள் விளங்கநகைத்து, குலவியவராய்க் கூத்தாடுவார். மோகபரவசமாய்விழுவார், அவள்மீதுபாடுவார், சரீரம்புளகித்து மயிர்ச்செறிவெய்த மாயையின்சமீபத்திற்சென்றுமரணமடைய நிற்கின்ற தன் பிராணனைக்காத்தற்பொருட்டு அவளை நோக்கிப்பெண்கள்நாயகமே? நானென்னகருமங்களைச்செய்ய நினைந்திரானும் உமதிஷ்டப்படிக்கு இந்நிமிஷத்தில்முடிப்பேன் ஆதலாற்கோபந்தணிந்துதயைசெய்தென்னையணைந்துரட்சிப்பீரென்று அழகியபாதங்களிற்சேவிக்கமாயை இரங்கி, ஓரிஷியே பயப்படவேண்டாம், இப்போதுநானிருக்கின்ற சுந்தரமாகியவடிவினுக்கும் அழகுக்குந் தகுந்தமேனியும் வனப்பும்பெறுவீராயின்உம்மையணைவேனென்று சொன்னாள். அதுசெவிகளுக்கமுதமாகக்கேட்டு முன்னங்காமக்கடலிற்படிந்த காசிபர் சந்தோஷசாகரத்திலாழ்ந்து, இதுநல்லகாரியமென்றுபுதைத்திருந்ததிரவியத்தைக்கண்ட தரித்திரனைப்போலக் களித்து, மின்னற்கொடியினையொத்த யிடையைப்பெற்றபெண்ணே? நீரேவியபணிவிடையைச்செய்யக்காத்திருக்கின்றேனெனத் தமது தவமுயற்சியினாலே தென்றற்றேரையுடைய மன்மதனுக்குமேலான உருவினைக்கொண்டுநிற்க, அவரை மாயைநோக்கிஉமதுவண்மை வெகுநேர்த்தியெனவியந்துநகைத்து அவர்கரத்தைப்பற்றிச்சென்று, பொன்மலைக்கொப்பாகிய சொர்ணமயமானவொருமண்டபத்தைச்சேர்ந்து, தன்மகிமையினா லுண்டாயிருக்கின்ற சப்பிரகூடமஞ்சத்தின்மீதுமுதற்சாமத்தில் அவரோடு சரசசல்லாபமாய்க்கலந்தாள்.

அப்போது காசிபமுனிவர், பசிப்பிணியினைநீக்கவகையில்லாமல் வெகுகாலமாக வருந்தி உழன்றவன் தற்செயலாய் அமுதத்தைக் கிடைத்து அவாவுடன் புசிப்பதையொப்ப அக்கன்னியை அணைந்து வருந்தி நோற்றுப்பெறுந் தவவமுதைப்போலவே அவளது மெல்லிதழமுதவானமுண்டு, கிரீடைகளைச்செய்து, அவளும்மனமுருகி இன்பவமுதத்தினைத் தருவதைப்போலக் கொவ்வைக்கனியை நிகர்த்த செவ்விதழூறலைத்தமக்குக்கொடுக்கத்தம் மறிவுமயங்கி, காமவாரியிற்பட்டு, இலக்குமிக்கொப்பான அவள் அல்குலென்னுஞ் சுழியிலகப்பட்டு, போகக்கடலின்கரை காண மன்மதநூலிலக்கணங்களை நினைந்து, நகக்குறி பற்குறிதாடனம் சும்பனம் புள்ளொலி முதலிய லீலைகளை நடாத்திப் புணர்ந்து, மோகபரவசராய், கலாபமஞ்ஞையினையொத்த இக்கன்னியிடத்து எக்காலமும்அறியாத இன்பநலத்தை உண்மையாகக் கிடைக்கச்செய்தவிதிக்கு யான்கைம்மாறுதவ ஒருபொருளு முண்டோவென்று புகழ்ந்து, கொக்கோக சாத்திரப்பிரகரணப்படி கிரீடித்தார். அப்போது மாயையானவள் மனம்பூரித்து, முனிவர் அங்கங்களிலே நகக்குறிக ளுறுத்த அவ்விடங்டோறுங் காம நீர் ஊற்றெடுத்துப்பெருக மிகவுமகிழ்ந்து, சுரதகலைகளைச் செய்துவர, முனிபுங்கவரும்சரீரம்பூரித்து, பேரானந்தவாரியைக் கடந்தவனைப்போலக்களித்தின்பமுற்றார். அப்போது பிரமன்விண்டு தேவேந்திரன்விண்ணவர் முனிவராதியர் தத்தமுள்ளம்நடுங்கப்புயவன்மைக்கொப்பில்லாத சூரபன்மன் மாயையிடத்துதிக்க, அவ்விருவரு மனங்கனிந்தணைந்தபோதுண்டாகிய வியர்வையிற் செயசாலிகளாய் வலிபெற்றமுப்பதினாயிரவெள்ளந்தானவர் உதித்தனர். அவர்களையும் பிரதமகுமாரனையும் அவ்விடத்தில்நிறுத்திவிட்டு காசிபரை மற்றொருசித்திரமண்டபத்திற்கொண்டுபோய்மாயையானவள் முன்னையுருவைமாற்றிப் பெண்சிங்கவடிவுகொள்ள, அவரும்மடங்கலுருப்பெற்றுக்களித்துஇரண்டாஞ்சாமத்திற் புணர்ந்தார். உடனே திசைகளெங்கும்நடுங்க, ஆயிரமுகங்களையும் இரண்டாயிரங் கரங்களையும்பெற்ற சிங்கமுகாசுரன் உதித்தான். அக்காலத்தில் அவ்விருவரிடத்தினும்பெருகியவியர்வையில் நாற்பதினாயிரவெள்ளஞ் சிங்கமுகம்பெற்ற இராக்கதர்பிறந்தனர். அவர்களையும் அவ்விடத்தில்நிறுத்திச் சொர்னமயமாய் ரத்தினகாந்திகளைவீசுகின்றவேறொருமண்டபத்திற்சென்று மாயைபிடியுருப்பெற்றுநிற்கக்காசிபரும் மதயானைவடிவுகொண்டு, துதிக்கையினைநீட்டி, வீரிட்டு, மூன்றாஞ்சாமத்திற்புல்லினர். உடனேஅவுணர் குலம்விர்த்திக்க நாற்கோடுகளைப்பெற்ற யானைமுகத்துடன் தாருகாசுரன்உதித்தான். அக்காலத்தில்அவ்விருதிறத்தவர் தேகங்களிற்பெருகிய வியர்வையில்நாற்பதினாயிரவெள்ளங் கசமுகங்களைப்பெற்றஅவுணர்வெளிவந்தனர். அவர்களையும் அவ்விடத்தில்நிறுவி மற்றொருசந்திரகாந்த மாளிகையைச்சேர்ந்து மாயைசெம்மறியாட்டின் பேடாயுருக்கொள்ள. முனிவரும் செச்சைவடிவுகொண்டு, நான்காஞ்சாமத்திற்கூடினார். உடனேஅசமுகியென்னும் பெண்ணானவள் அவதரித்தாள். அத்தருணத்தில் அவ்விருவர் வியர்வையினும் உலகங்கள்நடுங்க, முப்பதினாயிரவெள்ளம் அவுணர்பிறந்தார்கள். அவர்களையும் அத்தலத்திலிநிறுத்தி அவ்விருவரும் மற்றையமண்டபங்கடோறுஞ் சென்று-யாளி-புலி- குதிரை-மான்-கரடி முதலான மிருகங்களினது வடிவைப்பெற்று விடியற்காலத்திற்புணர, அவ்வம்முகங்களைப்பெற்று அறுபதினாயிரவெள்ளம் அவுணர்தோன்றினர். இவ்வாறு மாயையானவள் சூரன்முதலான நான்குபிள்ளைகளையும் இரண்டுலட்சம்வெள்ளஞ் சேனைகளையும் ஓரிரவிற்பெற்றனள்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? அகிலங்களையுண்டாக்கவல்ல மாயைக்கு இச்செய்கையரிதோ அவள்வல்லபத்தினை யென்போலிகளாற் புகழவும்போதுமோ! இவ்வாறு சூரன்முதலானவர்கள் தோற்றியகாலையில் இவன்பெறவிருக்கின்ற ஆயிரத்தெட் டண்டங்களிலும் அளவற்ற துர்நிமித்தங்களுண்டாக அத்தலங்களில் அமர்ந்த

பிராணிகள்கண்டு திடுக்கிட்டுஒருபோதுமில்லாதஇக்கொ
டியதோற்றங்களுண்டாகும் காரணமென்னமோ தெரிய
வில்லையே! யோசிக்குமிடத்து இவைகளென்னென்ன அ
னர்த்தத்துக் கேதுவோவென்று மனநடுக்குற்றேங்கியது,
பின்புமாயைதன்னுருவைப்பெற்றுநிற்கக்காசிபருந்தமது
வடிவைக்கொண்டு முன்பெற்ற இன்பநலத்தினை நினை
ந்துநினைந்து அவளுடன்கூடிக் குலவுகின்றபோழ்துசூரி
யனுதையகிரியிற்றோற்றினன் அக்காட்சியெப்படிக்கிருந்
தெனில்அவ்விரவிற் பிதாவுக்கும்மாயைக்கும்நேர்ந்தசம்
பவங்களைக்காணக் காமுற்று எட்டிப்பார்ப்பவனையொத்
துவிளங்கியது உடனேயிருள்நீங்கி வெளிச்சமாகியபோ
துசூரன் துணைவருடன்கலந்து திசையனைத்தும்நெருங்
கிச் செவிடுபட ஆர்ப்பரிக்கின்ற அவுணவெள்ளத்தைப்
போற்றிவருவதைக்கண்டு மாயைகளிக்கக் காசிபர்இப்பெ
ருக்கங் காமத்தினுண்டாகியதல்ல மாயமென்று அற்புத
மடைந்து பிரமித்துப்பார்த்திருக்கின்ற தாய்தந்தையரை
நோக்கி துணைவரோ நமதுகுரவரைச்சேர்ந்து இனிநாம்ந
டந்துகொள்ளவேண்டுங் காரணங்களைப்போதிக்கப் பெற
வேண்டுமெனத்தேற்றிச் சிங்கமுகன், தாருகன், தொடர்
துவரச்சேனைகளை அத்தலத்தில் நிறுத்திப்போந்தனன்.

## காசிபனுபதேசப்படலம்

நீங்கியசூர்முதனெறியினேகிமே
யாங்கவரடிதொழுதருள்செய்மேலையீர்
யாங்கள்செய்கின்றதென்னிசைமினீரென
வோங்கியகாசிபனுரைத்தன்மேயினன்.

இவ்விதஎண்ணங்கொண்டுவந்த சூரபன்மன்துணைவ
ருடன் தாய்தந்தையரைவணங்கிக்குரவரோ! நாங்கள்இனி
மேல் நடந்துகொள்ளவேண்டிய கிரமங்களையும் அதற்க
டுத்தநீதிகளையுங் கட்டளையிடுவீரென்றுபோற்றக் காசிப
ன்மகிழ்ந்து வீரகண்டையணிந்த பாதங்களையுடையபிள்
ளைகாள் நீங்கள் ஈடேறத்தகுதியாகிய நிச்சயமொன்றைப்
போதிப்போம் அதுஎன்னவென்றால் இதுமுதல்நீங்கள்
மூவரும் அரியதவநிலையில் நிற்பீராக அதன்கிரமங்களை
வரன்முறையாகத்தெரிவிப்பேன்பெரியோர்களானவர்தே
டியறியத்தக்கபொருள் மூவகைத்தென வேதங்களிற்சொ
ல்லும், அவையாவன பதி, பசு, பாசமாம்இவற்றுள்பதி
யாவது ஈசன், பசுவாவதுஆன்மா, பாசமாவதுதளையென
ப்படும், இவை உயிர்களுக்குத் துணைக்காரணமாயிருப்
பவையென்று மகத்துக்கள்சொல்லுவார்கள். சிருஷ்டி-தி
தி-சங்காரம்-திரோபவம்-அனுக்கிரகம்என்னும் ஐந்தொ
ழிலையும்நடாத்துங் காளகண்டமூர்த்தியானவர் அதற்கு
ப்பதியென்று சுருதிகளிற்பேசும் பாசபந்தமற்ற பரமன
துநிச்சயங்கள் இவ்வகைத்தென்று எவராலும்அளப்பத
ரிதெனப்பேரறிவாளராற் றுதிக்கப்படும், இவ்வாறேவே
தங்களுமயங்குகின்றன. அத்தன்மையாகிய சிவபிரானது
மங்களகுணாதிசயங்களை யிவ்வகைத்தென்று என்போலி
களாற் பேசப்படுவதோ? ஆணவங்காமியம் மாயையென்
னும் மும்மலங்களின் சிக்கிற்பட்டு அளவிறந்தகாலமாய்
அலைகின்றபிராணிகள் அனந்தமாம் அவைநல்வினைதீவி
னைமுயற்சியினால் இடைவிடாது உதித்துமாயும்இப்பிரா
ணிகள் பூமியினும் அதைச்சூழ்ந்த சலத்தினும் அக்
கினியினும் வாயுவினும் ஆகாயத்தினுந்தோற்றும்இவை
யேபஞ்சபூத காரணமெனக்கூறப்படும் அப்பிராணிகளு
க்கு ஓரிடம்நிலையெனச் சொல்லவுங்கூடுவதோ! மக்களா
யும் விலங்குகளாயும் பறவைகளாயுந் தாபரங்களாயுந் தி
சைகளைக்காக்குந தேவராயும் மற்றும் இராநின்ற பலபி
றவி பேதங்களாயும் உதித்துச் சகலபுவனங்களையும் விள
க்கும்.

இதன்றியும் அவற்றின்பெருமைகளைச் சொல்லுவோ
ம் பிள்ளைகளே? கவனமாகக்கேட்பீராக, ஸ்திரீபுருடர்கள்
காமவின்பத்திற்பட்டுக்கலந்து இன்பமுறுமுன்னிலையில்
பெருகுஞ் சுக்கிலசுரோணிதக் கூட்டுறவினால் உருப்பெ
ற்று சிவகடாட்சத்தினால் வளரும்போழ்து பற்பலவுருக்
கள் கெற்பத்தினிடமாகவே மாய்ந்தும் பிறந்தவுடன் இற
ந்தும் சிலநாள்தங்கிமங்கியும் காளைப்பருவத்திற்செத்து
ம் மூப்பில்மடிந்தும் இவ்வாறு மாறிமாறி வாதைப்படும்
அதன்செய்கை யிவ்விதமெனச் சொல்லப்படுவதோ'சூரி
யன் கிரணங்களில்தோற்றும் பரமாணுக்களினும் அதிக
பிறவிகளைப்பெற்றதென்று சொல்லுவோமாயினும்அது
வும் பேதமைப்பாலதாகுஞ் செயசாலியான கூற்றுவன்
கொண்டுபோகமாண்டவைகளும்மீளப் பிறப்பவைகளும்
எவ்வகையாலும் எண்ணிமுடிவதோ? கலைகளையாராயத்
தக்கவுணர்ச்சியையும் கற்பையும் வீரத்தையும்பொன்னை
யும் வலியையும் மற்றும்உண்டானவைகள் அனைத்தும்
பிராணிகளிடத்து மின்னலைப்போலத்தோன்றி மாறுவ
தைக் கணிக்குமிடத்து அலைகளிற்றோன்றும் நீர்க்குமிழி
யைநிகர்த்து நிலைபெறாமல்அழியும் அதனைஉறுதிப்பால
தாகநினைக்கப்படுவதோ? இவைகளனைத்திற்கும்மேலான
தாய்ச் சலனமில்லாததாய்விளங்குந் தருமமென்று ஒரு
பொருளிருக்கின்றது. அஃதுஇம்மைமறுமைப் பயன்க
ளைத் தகுதியானவருக்கு எளிதிற்பெறச்செய்யும் யாவரு
ம்இதனைஅருமையாகத் தேடக்கடவர் அதன்மகிமைபே
ரறிவாளிகளுக்கல்லது தெளியப்படுவதோ? அத்தருமத்
தினைப்பாதுகாப்பாராயின் அன்புவிளையும் அதனால் அ
ருளென்னும் பிள்ளையைப்பெறலாம் இப்பேறு தயமுய
ற்சியினாற்கிடைக்கும் அஃதுமுற்றுப்பெறுமாயின் அவ்
வுயிர் சிவத்தைச்சேருதற்கையமில்லை, இதைக்கடைப்பி
டியாக நம்பிப்போற்றினரை பிறவித்துன்பத்தினையொழி
த்து காமக்குரோதமோகமென்னும்மூவகைப்பாசத்தினை
யறுத்துப்பெறுதற்கரியபேரின்பத்தினைக்கிடைக்கச்செய்
யும் அதன்பெருமைகளை யிவ்விதமென் றொருவராலும்
விரிக்கப்படாது இதுவல்லாமல் சகலத்தினுக்குஞ்சிரேஷ்
டமாகவிளங்குந் தவமென்பதொரு சிறந்தநிலையுண்டு அ
துமிகவும் வன்மையையுடையதுஇஃதன்றிப்பிராணிகளு
க்குஉறுதியான கருமமொன்றில்லை அதுசொல்லுதற்கரி
ய சிவகதியைத்தரும் ஒருவன் பாதுகாக்கவேண்டுவதுஅ
தனையேயன்றி வேறுஒருபொருளிருக்கின்றதோ? அத்த
வம் அல்லலுக்குரியபிறவியைநீக்கிச் சிறந்தமுத்தியைத்
தந்து பவித்திரமாக்கும் இஃதன்றியும்நினைந்தபடிக்குஇ
ம்மைமறுமைப்பயன்களையும் எளிதிற்பெறச்செய்யும்ஆ
தலாற்பலகாலம் வருந்திச்செய்ததவம் பரமனருளினால்
இகபரசாதகங்களினாலுண்டாகுஞ் சிறந்தபயன்களைக்கொ
டுப்பதற்கு ஏதுவாகும்.

இதுவல்லாமல் ஒப்பற்றதவங்களைச்செய்துமுடித்தனராயினும் சிறந்தமோட்சத்தைப்பெற்றவர் சிலர்இலக்குமிலாசமான இன்பநலங்களைப்பெற்றுவாழ்ந்தவர் சிலர் மேற்கூறிய இருமைப்பயன்களையும் ஒருங்கெய்தப்பெற்றவர்சிலருண்டு இதற்குச்சிலதிருஷ்டாந்தங்காட்டுவோம் தமதுடல்வருந்த மனவூக்கத்துடன் பற்பகல்அருமையாகநோற்றவரல்லரோ தேவராய்வானநாடுகளிற் களித்திருக்கும் பேற்றைவாய்ந்தவர் இதனைச்சொல்லவும் வேண்டுமோ குமாரர்களே அம்மகிமைகள் உங்களுக்குத்தோற்றவில்லையோ பத்திவைராக்கியத்தினைக்கொண்டு சிறந்ததவத்தைமுடித்து முத்தியினைப்பெற்றவரது பாதங்களைச்சிந்தித்தவரை யிவ்விதப்பெருமையினையுடையரெனப் புகழவும்படுமோ இருமைப்பயன்களையும்வாய்ந்த மெய்த்தவரல்லரோபிரமன் விஷ்ணுவென்னுஞ் சிறந்தபதவிகளைப்பெற்றவர், பல்லுயிர்களைக்கொன்றுதின்றுபூமிக்கு எக்காலமும் பொறையாய்அதிகதுன்பத்தைச்செய்து மேலானதவங்களைவிரும்பி நோற்காதவர் இருமைப்பயன்களுங்கிட்டாதவர்களாய் நினைத்தற்கு அரியபிறவித்தடுமாற்றத்தழுந்தி துக்கசாகரத்தைக் கடக்கவறியார்கள் இதனைநினைந்து இரக்கமுற்று நன்னெறிகளைப்போதிக்கினும்இப்புவியின்உதித்த மனிதர் மறம்கொலைகளவு மயக்கத்தை நீக்கஅறியாது துறவறத்தைமறந்து துன்பத்திற்பட்டு இறந்தும் பிறந்தும் இவ்வாறலைந்து எக்காலத்தும் மோட்சவீட்டைப்பெறஅறியார்கள் ஆதலால்தவத்தினுஞ்சிறந்த பொருள்ஒன்றுமில்லை, அளவற்ற சிறப்பினைவாய்ந்ததவத்தினுக்கு இணையானதுஇல்லை இதனையோசிக்குமிடத்து அதற்கு அதுவேஒப்பாகும் ஆதலால் மைந்தர்களே? அறத்தைச்செய்வீர் தீயவைகளைவிலக்குவீர் சிவபிரானைக்கருதி மேலானதவத்தினைச்செய்வீர் அதல்லதுசெய்யத்தக்கபொருள்வேறொன்றுமில்லைசரீரவாஞ்சையற்று நோற்றவர் உலகர்புகழவாழ்ந்து தம்மையடைந்தவரைப் பாதுகாத்துக் காமக்குரோதலோபமதமாச்சரியமென்னுஞ்சத்துருக்களைக்கடிந்து சிறந்தபொருள்களைவிரும்பி நித்தியத்தைப்பெற்றுவாழ்வார்கள். இஃதுஉங்களுக்கு உறுதிபெற வொருகதையினைக் கேட்பீரெனக் காசிபர்சூரபன்மனுதியருக்குச்சொல்வதாயினர்.

## மார்க்கண்டேயப்படலம்.

நச்சகவமிர்தமன்னநங்கையர்நாட்டவைவே
றைச்சகமயக்கல்செய்யாத்தடுப்பருந்தவத்தின்மிக்கா
னிச்சகம்புகழுகின்றவிருபிறப்பாளர்கோமான் [ன்
குச்சகனென்னும்பேரோன் கொடிமதிற்கடகம்வாழ்வோ

ஓ! சவுனகாதிரிஷிகளே? அச்சரித்திரத்தினை வரன்முறையாகக்கேட்பீராக சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலத்தில் சகலராலும் புகழத்தக்க பிரகாரகோபுர, மாடமாளிகை, கூடகோபுரங்கள், துசபடங்கள்வாய்ந்து சிறந்திருக்குங் கடகமென்னும் நகரத்தில் பிரமகுலத்தில் அவதரித்து அமுதத்தினையும் நஞ்சையுமொத்து ஆடவரைமருட்டுமங்கையரது விழிகளென்னுங்கூரிய வேல்வாய்வதினால் அவசப்பட்டுக் காமபாணத்தில்மயங்காமல் துறவறநெறியில்நின்று பெறுதற்கரிய தவங்களைச்செய்துசிரேஷ்டராயிராநின்ற குச்சகனென்னும் பேரறிவாளரொருவருண்டு அம்முனிவர் இல்லறத்தினைவிரும்பிப்பதிவிரதாசிரோமணியாகிய ஒருகன்னிகையைமணந்து வாழ்ந்துகொண்டிருக்குங்காலையில் அவருக்குத் தவங்களே ஒருஉருவத்தைப்பெற்றதுபோலக் கவுச்சிகரென்னுங்குமாரர் உதித்தனர் அவர்வேதசாத்திரங்களைப்பூரணமாகக்கற்றுப்பின் புகலையற்றபவக்கடலைக்கடந்து முத்தியினைப்பெறவிரும்பி ஒருதடாகக்கரையில்சேர்ந்து தேவாதிதேவனாகியபரமசிவத்தைத் தியானித்தவராய் எல்லைக்கல்லைபொத்து அசைவறநின்று சுவாசபந்தனஞ்செய்து உலகவாழ்வைப்பித்தெனவெறுத்து ஞானனந்தப்பேரின்பசாகரத்தில்மூழ்கிப் பஞ்சாக்ஷரத்தைச் செபித்துக்கர்த்தன்திருவுருவினையிதையகமலத்தின் கண்பொருத்தி அரியயோகசாதனையில்நின்று ஓவியம்போல மவுனதீட்சைவகித்து ஊண்உறக்கம்அற்று இவ்விதசிறந்ததவத்தைச்செய்துவருகையில் மான்கடமை பன்றிமுதலிய மிருகங்கள் தமதுஉடல்தினவுநீங்க அத்தவசிரேஷ்டர் தேகத்தில்உராய்ந்து உராய்ந்துபோகுமாயினும் அப்பரிசத்தினை யெவ்வளவுந்தெரியாதவராய் ஒப்பற்றநிஷ்டையினைச் செய்துவருகின்றகாலையில் அவர்மனவுறுதிக்குத் திரிபுரதகனரான கர்த்தனிரங்கிக் கடாட்சித்தபடிக்கு விஷ்ணுவானவர் கருடன்மீதாரோகணித்து தேவர்சூழ்ந்து போற்றிவரச்சென்று கவுச்சிகர்தவநிலையைக்கண்டு அற்புதமடைந்து புகழ்ந்துகொண்டாடிச் செந்தாமரைப்பூவையொத்த தமதுதிருக்கரத்தினால் அவர்திருமேனியைத்தடவி தவக்குன்றமொத்தமஹரிஷியே? இன்றுமுதல் உமக்குமிருககண்டேயனென்னு நாமம் விளங்கக்கடவதெனத் திருவாய்மலர்ந்தருளினர்உடனே அம்முனிவர்கண்களை விழித்தெழுந்து கரங்களைக்கூப்பி வலம்வந்து சேவித்துப்போற்றக் கேசவன்மகிழ்ந்து தபோநிதியே சந்திரசடாதரனை சிவபிரானருளை ஒருங்கெய்தப்பெற்றுப் பூர்வவினைச் சம்பந்தங்கள்நீங்கி முனிபுங்கவனாக விளங்குவையென்று ஆசீர்வதித்துவிண்ணவர்வாழ்த்த வைகுந்தத்திலெழுந்தருளினர்பின்புமிருககண்டேயனென்னுந் தவசிரேஷ்டர் திரிநேத்திரதாரியாகியபரமனருளையடைந்து மகிழ்சிறந்தவராய்விரைந்துவந்து பிதாவைக்கண்டு பாதகமலங்களில்சேவிக்க சந்தோஷசாகரத்தின்மூழ்கியெடுத்து மார்பினணைத்து, குமாரனே? தவத்தால்பெற்றபயனைச் சொல்லுவாயென்றுவினவப் பிதாமனமுருகும்படிநடந்த சரித்திரங்களை விண்ணப்பஞ்செய்தவுடன்களித்து ஐயனே? உன்மரபில், இதுவரையில் எவர்இத்தன்மைய வரங்களைப்பெற்றார்கள். ஆதலால்,உனக்கரியது ஒன்றுமில்லை, பாதலவாசிகள்பூமண்டலத்தார்விண்ணகரத்தினர் இன்பநலங்களை அனுபவித்திருக்கின்ற துறக்கநாட்டினர் மற்றையபுவனங்களினும் அமர்ந்தமுனிவரில் உன்னைப்போலச்சிறந்தவர்யாவரிருக்கின்றார்கள்அப்பனே நீநோற்றவிரதமுயற்சியைக்காளகண்டமூர்த்தியல்லதுமற்றைஎவராலறியப்படுமென்றுபலவாகப்புகழுமுன்னிலையில்அக்குமாரன்மரபில்பிற்காலத்தில் ஞானவானனபுத்திரனுதித்துஎமனையும் வெல்லவிருக்கின்றதாலும் வினைப்பகையைநீக்கிஆளவல்லசிவபிரான்அருளினாலும் மற்றொருகியாபகமுதித்துப் பிள்ளையைநோக்கிஉனக்கின்னும் போதிக்கவொன்றுண்டு அதுஆதிநூலாகிய வேதங்களின்துணிபாகும்மேலும்நல்லொழுக்கங்களில்சிறக்கும் அந்தணருக்குரியதாகப்பெறவேண்டுங்கடனாகவும்

இருப்பது அஃதென்னையெனில் பிரமசரியங் கிரகஸ்தாசிர்மம் வானப்பிரஸ்தம் சன்னியாசத்துவமெனநால்வகைத்தாகும் அவைகளில் நினைத்தற்கரியபிரமசரியத்தை வகித்தவன் கன்னியரைக்கனவிலும் நினையாமல் அதற்குரிய தருமத்தினைக் குற்றமறப் பாதுகாக்கவேண்டும். அதற்குமேல் நின்ற கிரகஸ்தாசிர்மத்தில் நிற்பவன் உத்தமஸ்திரீயை மணந்துஇல்லறத்தை ஓம்பி அதிதிபூசைமுதல்யவைசெய்தற்கு உரிய வொழுக்கங்களில் தவறின்றிநடத்தவேண்டும் அதற்குமேல் நின்ற வானப்பிரஸ்தன் வனத்திற்சென்று கற்புடையமனைவி வழிபடகாலநியதியளவையில் நித்திய கருமங்களைமுடித்துப்பரமனைவழிபட்டு வேதாகமசாத்திர புராணங்களையாராய்ந்து சத்கருமங்களை நடாத்திவரவேண்டும் அதின்மேல்நின்ற சன்னியாசத்துவம் பூண்டவன் ஓரிடத்தில் நிலைபெருமல் பூவலம்வந்து பசிக்குஒருபோது பிச்சையேற்றுண்டு மனதையொடுக்கி யோகசாதனைகளைச்செய்து கர்த்தன் பாதாரவிந்தநீழலில் சேரவேண்டும் இவைவேதங்களின்துணிபாகும்.

அவைகளில் முந்தியதருமத்தைத் தவறின்றி இதுபரியந்தம் வழிபட்டுச்சிறந்த பேற்றைப்பெற்றனை அதன்மகிமையனைத்தும் உனக்குத்தெரியுமாதலால் விரிக்கவேண்டுவதில்லை அதற்கடுத்த இல்லறத்திற்கு மேல்நிற்கும் இரண்டறங்களின் பெருமைகளை யிப்படிஎன்று என்போலிகளால் சொல்லப்படுவதோ அவைநிற்க மேல்குறித்தவொப்பற்ற இல்லறத்தினைப் புனிதனேயினிநீவகித்துஅதினிலைமைகளைவரன் முறையாகக்கோடிக்கவேண்டுமெனத் தந்தைஉரைத்ததைக்கேட்டுப் பேதைமைப்பாலதாகும் பிறவிக்கடலைக்கடக்கவல்ல ஞானத்தைஉணர்ந்தவராதலால் தந்தையானவர் நான்ஈடேறுமார்க்கத்தைநன்ருகப்போதித்தாரென்ற சரீரங்குலுங்கநகைத்துக்குற்றமற்றதவசிரேஷ்டரே அன்புள்ள பிள்ளைக்கு இதனைப்போதிப்பது அழகோஐயனே முன்னமிருக்கின்ற பாசபந்தத்தினை நீக்க விரும்பியயான் மீட்டும்ஒருபுதிய தளையில்கட்டுண்பேனுயின் துக்கசாகரத்தில்அழுந்திவாடுவதல்லதுவொப்பற்ற பரமேஸ்வரன் பாதநீழலையெவ்வாறுகிடைக்கப்பெறுவேன் வலியற்ற முடவனொருவன் கரங்களைக்கொண்டு தவழுமுன்னிலையில் அதற்கும் வெவ்வியபிணி நேருமாயின் எவ்வாறுகடைத்தேறுவன் தேவரீர்போதித்த நிலையில்நிற்பேனுயின் யானும் அவனைப்போலத் தளர்ந்துவாடவருமே சிறப்பையெய்துதற்குரிய தவத்தின் அல்லது பொய்யாகிய இல்லறத்தைப்பூண்டு செனனவாதையையொழிக்கலாமென்பது மெய்மாசைக்கழிக்க விருப்புற்றவொருவன் நல்லசலநிறைந்ததடாகமிருக்கச்சேருடியகுட்டையில்கமுக நினைந்ததையொக்கும்பிரமனுனவன் பூமியின்கண் இராநின்ற அளவற்றமகாபாதகங்கள் அனைத்தையும் ஏகமாய்ச் சேர்த்துப் பெண்ணுருவாகப்படைத்ததன்றிவேறல்ல இதுதேவரீருக்குத் தோற்றுதது மன்றுஅவர்களைமனதில் நினைப்பினும் வரும்பாதகத்தை எழுபிறப்பினும் நீக்கப்படுவதோ அஞ்ஞானமென்கின்ற ஆதரவைப்பெற்று அலமரும் ஐம்புலன்களாநடிப்பிக்கும்பூதங்கள் தத்தம்வழியின் வலக்கப்புலம்புகின்ற கொடியேனைமாதரென்னும் கர்மம் தொடர்ந்துபற்றுமாயின் என்னசெய்வேன்ஐயோ இக்கொடுமையெனக்கோநேரவேண்டும் மேலும் இப்புவியில்பலகாலங் துன்பக்கடலின் அழுத்துவதன்றியும் பிற்காலத்தினும் ரவுரவாதி நரகக்குழியில் தள்ளி அலைப்பதற்கு ஏதுவாகிய மங்கையரிடத்து விருப்புற்ற காமுகருக்கு எக்காலமாயினும் இன்பமுண்டாகுவதோ நாயானது தன்பற்கள் மிகவும் வருந்தத்தசையற்ற எலும்பைக்கறிக்குமாயினும் அதின்இன்பச்சுவையினைப்பெறுமோஅவ்வாறேதுன்பத்துக்கு ஏதுவாகிய வினையின்தொடர்ச்சியினுல் பேரின்பத்தையனுபவிக்கின்றவரையொத்துப்பெண்கள் மையலிற்பட்டுச் சிற்றின்பத்தினைமேம்பாடாகவெண்ணித் துக்கசாகரத்தினுழ்ந்துழல்வர் மைதிமிர்ந்து கூரியவேலையொத்துக் காதளவுமோடிய விழிகளைவாய்ந்த அரிவையரிடத்தில்பொருந்திய மிக்கஆசைஒருவன்மனதில்படுமாயின் அதைக்கடத்தற்குஒருவகையுமுண்டோமேலும் கொல்லாது உயிரையெக்காலமும்வாதிக்குங், கொடியநஞ்சையுண்டால் ஒருதினமும்வருத்தாமல் அந்நிமிஷத்தில் மாய்க்கும் ஆதலால் அதைநன்ருகவேசொல்ல வேண்டும் பரிமளித்துக்கறுத்துநீண்டிராநின்றகூந்தலைச்சுகந்தபுட்பங்களுடன் அளகபாரமாகக்கொண்ட மங்கையர்மனதில் நினைந்த எண்ணங்களையாவராலு மளக்கப்படுவதோ பிறந்தநாண்முதல் இடைவிடாமல் தம்முடன் பழகிஉள்ளிருக்கும் ஆன்மாவாகிய கர்த்தனுலும் அறிதற்குஅரியனவாகும் மேலும்அவர்கள் வசனிப்பதுஒன்று உள்ளம் ஒன்று செய்கை வேறும்இவ்விதமாகியபேதைமனதைப்பெற்று மிகுந்தபாதகங்களைச்செய்யும்நாரியர்மையல்வலையில்பட்டு மயங்குகின்றவர் அல்லரோ இறந்தும்பிறந்தும் அலைகின்றவர் இதற்குஐயமும் உண்டோஆனுல்உலகின் அரியகற்பைவாய்ந்த மங்கையர் இல்லையோவெனச்சொல்லுவீராயில் கடவுளாக நினைத்தற்குரியதமது கொழுனன் கட்டளையினைமருமல் நடந்துகொள்ளவல்ல பாகைமொழியினர் சிலர்இருப்பர் அதற்கொரு திருஷ்டாந்திரங்காட்டுவேன்.

அக்கினிப்பொறியானது உலர்ந்த கிளையில் பற்றுமாயின் கனன்று தீயைவீசி தகிக்கப்படாத பச்சைமரங்களையும் வாட்டுமாறு போலவே கற்புடையவளெனக்க தி ஒருமங்கையினை அணையும்இன்பமும்துக்கசாகரத்தில்தள்ளும் இஃதன்றியும்பூரணசந்திரனை நிகர்த்து விளங்குந் திருமுகமண்டலத்தைப் பெற்றுச்சொர்னவளையல்கள்அசையுங் கரங்களை வாய்ந்த அகலிகையாகியகௌதமர்பத்தினியினுல் இந்திரனுக்குத் தீராதபழிபாதகநேர்ந்ததுஅஃது தேவரீருக்குத்தோற்றவில்லையோ அர்த்தசந்திரனையொத்த நுதலைப்பெற்றமங்கையர்கூட்டங்களுக்கு அரசியாகத்தன்கரத்தினுல்படைத்தமான்போன்ற நோக்கைவாய்ந்ததிலோத்தமையினிடத்துத் தாமரைப்பீடத்துஅமர்ந்தபிரமன்மையல்கொண்டுதொடர்ந்தகாலத்தில் அவள்திசைகளெங்கும்ஓடஅவள்பொருட்டுநான்முகனுனதன்மையினை நாமறியாததோ ஆதலால் மற்றையர் குணுதிசயங்களைப்பேசவேண்டுவதென்னை திரிலோகங்களினும் அளவற்றவர் இப்பெற்றியில்பட்டு அலைந்தவர் செய்கையினைச்சொல்லுவோமாயின் முடிவெய்தப்பெருது அவையனைத்தும்நிற்க பிறவித் தடுமாற்றத்தினைநீக்கவிருப்புற்ற யான் அவ்வரிவையர் செயற்கையைப்பெற்று இல்லறத்தை வகிக்கமாட்டேன் இஃதன்றியும்இரத்தினவாகுவலையங்கள்அணிந்து மேருவைநிகர்த்த புயங்களைவாய்ந்த இந்திரன்முதலானவர்பெற்றிருக்கும்செல்வச்சிறப்பினைஒருபோதும் வேண்டேன் இல்வாழ்க்கையென்னும்அரியசிறையினும்விழேன் மாட்சிமையிலதாகிய ஐம்புலன்களிற்பட்டு

மாயும் மயக்கத்தை நீத்துச் சிறந்த தவமெனச்சொல்லு
ம் சலனமற்ற பதார்த்தத்தினைப்பெற்று இன்பசாகரத்தி
ல்திளைத்து ஆனந்தித்திருப்பேனென்று பலவாகக்குமார
ன்சொல்வதைக்குச்சகர்வருந்திக்கேட்டு இப்பூவுலகவாசி
கள்சிறந்ததாகப்புகழும் இல்லறவாழ்க்கையைக்குற்றமெ
னவெறுத்திகழுகின்றனன் மேலும்மறைகளின்துணிபை
யாவது எண்ணிஅங்கீகரியாமல் தவத்தையேமுக்கியமாக
க்கருதினனென துக்கசாகரத்தில் அழுந்தினவராய்ப்புத்
திரனைநோக்கித் தவசிரேஷ்டரானபுலத்தியனை நிகர்த்துச்
சிறந்தவனே கேட்பாயாக வேதவிதிப்படிக்கு வேள்விமு
ன்னிலையில் திருமங்கிலியந்தரித்து வேட்டமங்கையைக்க
லந்து குலமுறையைவழுவின்றி ஓம்புநிமித்தத்தில் குமா
ரனைப்பெற்றுவைத்த பின்பு அன்றேசிறந்ததவத்தைச்
செய்து பெறுதற்கரிய பதவியினைச் சேரவேண்டும் ஐய
னேஇப்புவியில் அமர்ந்தபிராணிகளை யொத்து நீமைய
லிற் பட்டுமயங்கிக் காமவின்பத்தைஅனுபவித்திருப்பத
ற்கோ இதனைப்போதித்தனன்நமதுமரபிலிருந்தமேலோ
ர்நிரையத்து அழுந்திவருந்துவதை நீத்தற்பொருட்டுப்ப
ழமைபாராட்டி யிம்மைமறுமை யின்பநலத்தைத்தரும்
புதல்வனைப்பெறவேண்டி உத்தமக்கன்னியைமணஞ்செ
ய்யக்கடவை பவளத்தினை நிகர்த்துவிளங்கும் சிவந்தவா
யினையும் அழகியபாதங்களையும்வாய்ந்த சிறுவைப்புத்திர
னென்னும் வாக்கியத்தின்பொருளினது உறுதியைநீவனை
யறமறந்ததாகக்காணுகின்றது இச்சிறப்பையோசித்து இ
ல்லறவாழ்க்கையினை அனுசரித்திருப்பதுநன்மார்க்கமாகு
ம் மேலுந்தவத்தின் ஒழுக்கம் இஃதேயாகும் நீயிப்போ
து நோற்றபிரமசரியத்தில் நின்றாஞ் சிறந்தசன்னியாசத்
துவத்தைவகித்துபோகத்தில் நிற்கநினைப்பது இல்லறத்
தை அனுபவித்து வெறுக்காமல் இச்சைமிகுத்து அலை
க்கின்ற வொருவன்ஊக்கங்கொண்டிருவிந்து நிவப்புற்றி
ருக்கும் சிகரங்கள் வாய்ந்துஓங்கிய மலைச்சாரலிற்சென்று
தவத்தில் நிற்கவிரும்புவதைநினைக்குமிடத்து காமமயக்க
மேலிட்டு அலைக்கஅதன்வயப்பட்டொருதினத்தின்ஒழியா
து பலகாலம் வருந்திஉழன்றுசகலராலும் இகழத்துணி
புகொண்டதற்குஒக்கும்.

இஃதன்றியுந் தருக்களினும் மிருகங்களினும் அவ்வ
கைத்தாகிய மற்றவைகளினும் வரும் சிறந்தபயனைக்கொ
ள்வதற்கு அன்றேஅவற்றைப்படங்களினெழுதிவைப்ப
ர் அவ்வாறே சிறந்தஇல்லறத்தி னின்றுநற்குமரனைப்பெ
றும் பொருட்டு நீயும்உத்தமமங்கையைப்புணர்ந்து அக்
கருமநிறைவெய்தியபின்னர் அரியதவத்தைச்செய்யக்கட
வை இந்நிலையினைமுன்னமே நினையாதவனாய் இதுபரியந்
தம்முதல் செய்யுங்கடனாகிய பிரமசரியத்தைப்பலகாலம்
வழுவின்றி நோற்றனை இனியாவதுஆலோசித்துப்பாணி
க்கிரகணமுதலிய சிறப்பைநடாத்தி தேவராதியருக்குஅ
விப்பாகம் ஆராதனைக்கிரமங்களைக் காலங்களிற்கொடாம
ல் இன்னமும் தவத்தினையேவிரும்புவது தகுதியோஇந்
திரன் முதலாகப் புகழயோக்கியமானதாய்ப் பழமையாக
வும் இராநின்றயில்லறத்தை ஓம்பு கின்றவர்தத்தம்மரபு
க்குஉரியவொழுக்கங்களில்சற்றேனும்பிசகுவராயின்சகல
செல்வ வளன்களையும் இகழ்ந்து மலையினுச்சியில்நின்று
ம் விழுந்தவனைப்போல எக்காலத்தும்ஈடேறஅறியார்மா
றி மாறி வரும்பிறவியென்னும்வலையில் பட்டுச்சோர்ந்து
அழிவதற்குரிய துக்கசாகரத்தைக் கடக்கவேண்டுமாயின்
அதற்கு அடுத்தநெறிகளை அனுஷ்டித்துப் பற்பகல்வரு
ந்தி நோற்றல்லதுவினைவில்துறக்கப்படுவதோ ஆதலால்
ஆதிதொடங்கி வழிவழியாய் வருகின்ற உன்பெரியோர்க
ளை ஒத்து இல்லறத்தினைவகிக்கக்கடவை ஐயனேசெந்தா
மரைக்கண்ணனான் விஷ்ணுபிரமன் முதலியதேவர்முனி
வராதியர் அனைவரும்மங்கையரைத்தழுவியில்லறத்தினை
நடாத்துங்காரணமானது சர்வசங்காரத்துக்குப் பின்புப
ராசத்தியுடன் கலந்துசராசரப்பிரபஞ்சங்களைப்படைத்த
ஆதிகர்த்தனானபரமசிவத்தினால் உண்டாயதல்லதுவேறு
முண்டோஆதிநூலாகிய வேதாகமசாத்திர முதலியவற்
றை வரையறக்கற்றதூயனே அக்கடவுளினால்ஏற்படுத்தி
ய வரம்பினைக்கடக்கவேண்டாம்நான்போதிப்பதையும்அ
வ்வாறே யெண்ணாது வெறுக்கவேண்டாம் உலகநடை
யினை விலக்கவேண்டாம் வெறுப்பினால் இவைகளின் ஒ
ன்றினையும் துறவேண்டாம் இதற்குஒருதடையும்சொல்
லவேண்டாம் சத்தியத்தைத்துறக்கவேண்டாம் இக்கரும
ங்களையனுஷ்டிப்பதினால் உனக்குக்கீர்த்தியுண்டுமேலுஞ்
சில திருஷ்டாந்திரங்காட்டுவோம் அஃது என்னையெனி
ல் முனிபுங்கவராகிய வதிஷ்டர் இலக்குமியையொத்த வ
னப்புள்ளஅருந்ததியைநிமைப்போதும்பிரியாமல்தன்னு
டனிருத்திச்சிறந்ததவத்தை நடாத்திவருவர் இதனால்பெ
ருமைபொருந்திய பூமண்டலங்களில்அவருக்கு ஏதேனு
ம்பழிப்புரையுண்டோ பாசபந்தங்களைவென்றுதவமுயற்
சியில்சிறந்த மகத்துக்கள்வெறுப்பின்றிநயந்துநாள்தோறு
ம் மங்கையரைக்கூடிஇன்புறினும் அரியதவநிலையில் நிற்
பினும் ஞானவுணர்வைப்பெற்றுச் சிறந்ததமதுமனம்வே
று படுவதுண்டோ அக்கினிதேவன்சாட்சியாக மணந்தக
ன்னியரை மருவியில்லற நிலையைப்பெற்று அரியதவப்ப
யனையும் அடைந்துஇம்மை மறுமைப்பயனையும்பெற்று
ஊனமின்றி வாழ்வர்அவர்களுக்கு அரியபொருள்ஒன்று
மில்லை ஒப்பற்றதமதுகணவரைத்தெய்வமாகப் பாவித்து
உபசரிக்குங் கற்பைவாய்ந்த தவப்பெண்களினது சொல்
வழியின் தெய்வங்களும்மேகங்களும் நிற்குமாயின்ஆண்
திறம்பெற்ற புனிதரான ஆடவரை அவர்களுக்குநிகராக
ச் சொல்லவும்படுமோ கற்புடையமனைவியைக் கலந்துஇ
ல்லறத்தை முந்திச்செய்யாமல் பவுத்திரமானதவநெறியி
ல் நிற்பையாயின் மாயைப்பெருக்கமூடி காமமீறித்தாக்கு
மிடத்தில் சிருட்டி கர்த்தனானபிரமனே பாதுகாப்பினும்
விலக்கப்படுவதோ துறந்தவர் விருப்புற்றவுண்டியைக்கா
லங்களில் படைந்து உபசரித்தும்இறந்தபிதுர்க்களுக்கு
உரிய திலதர்ப்பணபிண்டவகைகளைவரன்முறையாகநடா
த்தியும் சிறந்த அறங்களைவழுவின்றிமுடித்தும் விருந்தி
னரைப்பரிந்து அழைத்து உணவுமுதலியவற்றைஅளித்
தும் போற்றுவதல்லது மானிடதேகமெடுத்ததில்பெறு
ம்அரியபயன் வேறுமுண்டோ சகலராலும்புகழும் நன்
னெறிகளில் பிசகாத ஆடவரும் சுகுணங்களைப்பெற்றஇ
ல்லாளும் மனதுஒருமித்து நன்குதீங்குகள்எவற்றைச்செ
ய்தாலும் அதற்குஅடுத்தபயனைப்பெறுவர்அதுஎதுபோ
லுமெனில்உழவர் புலங்களின்விளைத்தபொருள்களின்ப
யனல்லது வேறொன்றைப்பெறாததுபோலாம்.

ஆதலாற் நற்றவமாகிய இல்லறத்தினைமுந்தி நடாத்திக்
காமக்குரோத லோப மதமாச்சரியமென்னும் குற்றங்க
ளைக்கடிந்தபின் தொடங்கும் துறவேகுற்றமற்றதுறவாம்
அதற்குயாதொருஇடையூறும்நேராது.அதனைவழுவின்றி

நீசெய்து வருவையாகில் உனக்குஒருதீங்குகளும்நேர அறியாது அந்தச்சிறந்த நெறியைப்போற்றுவதற்கு ஒருமறுமொழியும் ஆடவேண்டுவதில்லைநமது ஆணையென்று பலவிதங்களில் விரித்துத் தவசிரேஷ்டரான பிதாபோதித்ததைக்கேட்டு இது வேத முதலான சாத்திரப்பிரமாணமென்றுஞ் சர்ப்பா பரணராகிய சிவபிரான் கட்டளையென்றுங் கூறுகின்றனர் இனிமேல்என்னமாறுரைப்பதென்று நினைந்து ஆலோசித்தவராய் தமது அருகுரவரானவர் ஒப்பற்றவளங்களைநீங்கிமகாபாதகங்களின் விழக்குறித்தாலும் அதை முக்கியமாயெண்ணிப்பத்தியுடன் செய்வது புத்திரனுக்குரியகடனாகும் இதுபுதிதல்ல தொன்றுதொட்டு உலகர் பாராட்டி வருவதாகும் ஆதலால் இக்கருமத்தை மறுக்காது சம்மதிப்பேன்எனத்துணிவுகொண்டுகடவுளைப் போலக் கருதும்பிதாவினதுவாக்கியங்களை வேதமொழியாக எண்ணிச்சிரமேல்கொண்டு போற்றுமல் சுலபமாகமறுத்த மகாபாதகரும்பத்துமாதஞ் சுமந்து பெற்றபின்பு பலதுன்பங்களையும்பாதுகாத்து உண்மையாக வளர்த்த தாய்பரிந்துரைத்ததைத்தடுத்துஉதாசனித்த சண்டாளரும் ஞானதேசிகனைப்போலத் தன்குலமுதல் ஈடேறக்கருதிப்போதித்த ஆசிரியன்ஏவியகட்டளைகளையெண்ணுமல் இகழ்ந்தபதிதரும் திரிலோகங்களினும் முக்கியமாக வோதிப்போற்றும் பெருமையினையுடையதாய்ப் பரமனுல்ஓதப்பெற்று ஆதிநூலாகவிளங்கும் வேதவொழுக்கங்களைத் தமக்குரியகடனாகமதியாமல் புறநடையில் செல்லும்தீயரும், மற்றக்கொடியரும் பூமியின்கண் இருந்தவனாயில் பலராலும் இகழத்துன்பத்துள்பட்டு உழன்று கடையில் இயமபடாள் பலதண்டனைகளைச்செய்யத் துக்கசாகரத்தில் அழுந்திச் செந்தழலைவீசிக் கொதித்திருக்கும் ரவுரவாதிமகாநரகக்குழியின் ஆழ்ந்துவருந்தியென்நாளும்இருப்பர். இதுசுருதிகளின்துணிபாகும், ஆதலால், பிதாவாக்கியத்தைமறவாமல் பரிபாலனம்செய்வதுகடனென நிச்சயித்துக் குற்றமற்ற தவக்குன்றம்போன்ற குணநிதியானகுச்சகர்அழகிய பொற்பாதகமலங்களில் தொழுதுஐயனே? கோபிக்கவேண்டாம்கட்டளைப்படிக்குப் பிசகின்றி நடந்துகொள்ளக்கடவேன் ஆனால், ஒருவிண்ணப்பம்உண்டு அதாவது கணவன்உரையைப்பத்தியுடன்வினவி அவ்வாறுநடாத்தஅறியாதமனைவியுடன்கலந்து இல்லறவாழ்க்கையைச்செய்வதினும்வெவ்வியநரகக்கும்பியில்அழுந்திவருந்துதல் உத்தமமாகும் அத்தன்மைய மகளிருடன்பொருந்திவாழும் ஆடவருக்கு வேறொருகூற்றுவனும்வேண்டுமோ! கொடியபிணிகளும் வேறுமுண்டோ? ஆதலால் என்னுரைகளில் சற்றும் பிசகின்றி நடந்துகொள்ளவல்லகுணாதிசயங்களை வாய்ந்த மங்கையிருப்பளாயின் அக்கன்னியை அக்கினிசாட்சியாய் மணஞ்செய்வேனென ஒருமித்துச்சொன்னவார்த்தையைக்கேட்டுக்குச்சகர்மகிழ்ந்தவராய் விவேகசாலியாகிய மிருககண்டியன் என்னும் குமாரனை நோக்கி யென்வாக்கியத்தை மறவாமல் நீகோடித்த காரணத்தினுல் யான்ஈடேறுவதன்றியில் என்வருக்கத்தினரும் சிறந்தவராவர் அரியவிரதங்களைச்செய்து உன்னைப்பெற்றதாயும் களிப்பின் ஆழ்வள். தவவிரதஎக்கியங்களும் விருத்தியடையும்காலம் நேர்ந்ததுஞானம் அன்புமுதலிய சத்கருமங்களும் தழைக்கின்றது, வானநாட்டினர்களிப்பர் பூமண்டலவாசிகள் குறைவின்றிவாழ்வர் தேவராஜனுந் தன் அரசுநீடிக்கவீற்வன், ஐயனே? உனக்குஇன்னும்வேண்டுவதைப் பயமின்றிக்கேட்பாயாக நீஇப்போதுகுறித்தஇலக்கணங்கள் அனைத்தும்வாய்ந்து குற்றமற்றுவிளங்குங் கன்னிகையை இப்பூவுலகமெங்கணும் ஆராய்ந்துகொண்டுவந்து உனக்களிப்பன் இதனைச்செய்யாமல் போவேனுயின் கலைகள்தேய்ந்து அழியும்சந்திரனது பிரகாசம்போலவே என்தவமும் மங்கக்கடவதென்றுஅரிய சபதத்தினைக்குச்சகர்சொன்னவுடன் முன்னம் தான்செய்ததவத்திற்குஇரங்கிவிஷ்ணுஎழுந்தருளிக்கடாட்சித்தமிருகக்கண்டியன்என்னும் நாமத்தினைப்பெற்றகுமாரன்தந்தைதிருவடிகளில்பணிந்து ஒருதனையன் உய்யும்பொருட்டுஇதனை ஒருபொருளாய் அருளினீர் தவசிரேஷ்டரானமுனிபுங்கவரே, தேவரீருக்கு அரியனவாகியகருமம் மும்மையுலகங்களினுமுண்டோ.

ஆயினும் இன்னமும் யான்விண்ணப்பஞ்செய்வது ஒன்றுண்டு அதாவது பிதாவையிழந்தவர் பெற்றதாயைப் பறிகொடுத்தவர் தமக்கையர் இல்லாதவர் தங்கையைப் பெறுதவர் தமக்குஅரணாயிருக்கும்தமையன்தம்பியருடன்பிறவாதவர் இவர்களிருந்தும் இறக்கப்பெற்றவர்பெருஞ்சுற்றமில்லாதவர்புகழயோக்கியமானசெல்வமற்றவர்நல்லகுடியில் பிறவாதவர்பிணியில்பட்டுஉழன்றதாய்தந்தையருக்குஉதித்தவர் காளகண்டமூர்த்தியாகிய கடவுள்திருநாமத்தைப்பெறுதவர் அவமிர்த்துவால் இறந்தவர்பெயரைப்பெற்றுச் சிறப்புற்றுத்திரியும்அலகைநாமத்தைப்படைத்தவர் இப்பூமியின்கண்சிறந்து ஓங்கியசைவசமயத்தைஅல்லது அஞ்ஞானமார்க்கமாகிய சிலசமையப்படுகுழியில்பட்டு உழல்கின்றவர் பிணியைப்பெற்றவர்-ஊமையர்-முடவர்-கூனர்-சதாகாலமும் புறமனையில் செல்கின்றவர் கணிகையரைப்போலமருட்டும் பார்வையுடையவர்சுந்தரமிகுத்த காளையரைப் பலகாலும்நோக்கிக் காமஇன்பத்தை விரும்பியிருப்பவர் வீதிவாயில் எப்போதும் நிற்பவர் நோக்குதற்கு வியப்பாகவஸ்திரம் ஆபரணங்கள்முதலியவைகளினுல் அலங்கரித்துத்திரிபவர்பிரமாணத்துக்கு அதிகரித்த உண்டியைப்புசிப்பவர் தன்னைமறந்து அதிகநித்திரைகொள்பவர் தனக்கு முதிர்ந்தவர் ஏககோத்திரத்தில் உதித்தவர்தகுதிக்கு மேற்பட்டுஉயர்ந்தவர்குள்ளமாக இருப்பவர்பருத்தஉடலைப்பெற்றவர்மெல்லியதிரோகத்தை வாய்ந்தவர்பார்க்கப் பிரயோசனமற்றுமிகுத்துக் கறுத்தவடிவைப்பெற்றவர் இலக்குமியைப்போலச் சொர்னகாந்தியைக்காட்டும் காயத்தைப்படைத்தவர் பெருமைபெற்ற பசலைபூத்தவர் தேமல்பரந்து வெளுத்திருப்பவர் சிவந்துவிளங்கும் படிவத்தினர் இயல்பாகிய நாணத்தைப்பெறுதவர் ஆடவரையெக்காலும் புணர்வதில்இச்சைகொண்டவர் பலகாலும்நகைப்பவர் மெல்லியகுரலல்லாதவர் பெருத்ததொனிவிளங்கப்பேசுபவர் தாய்தந்தையர்விதித்த கட்டளைக்குமீறிநடப்பவர் கோபமேலிட்டிருப்பவர் வீண்வாதாடுகின்றவர் ஒருகாரணமும்இன்றி சண்டையிடுபவர் கூத்துமுதலான வேடிக்கையைக்காண விருப்பம்உற்றவர் காமவிகாரத்தில் அகப்பட்டு வருந்துகின்றவர் தேவாதிதேவரான பரமசிவத்தின்கண் பத்தியில்லாதவர்பெரியோர் முனிவர்முதலான மேன்மக்களைச்சுலபமாய்எண்ணி யிகழ்பவர் தன்னுயிரைப்போல மற்ற சீவராசிகளிடத்து இரக்கமில்லாமல் கடிகின்றவர் தமது குலவண்மை ஒழுக்கங்களைமீறித் தமதுஇச்சையின்படி

செல்பவர் பொருமைக்குணத்தைப்பெற்றவர் சிறந்தகற்புத்தன்மையில்லாதவர்பஞ்சேந்திரியவிஷயங்களில் அறிவைச் செல்லவொட்டாமல் காக்கத்திறனற்றவர் ஆத்துமலாபத்தைப்போதிக்கும் கிருபாநிதியாகியதேசிகனை மற்றையமனிதருடன் சமமாகக்கருதிஅசட்டைசெய்பவர்ஆலயமுதலிய இடங்களில் தாபித்திருக்கும் இலிங்கமுதலியதெய்வப்படிவங்களைச்சிலையென்று அலட்சியமாகச்சொல்பவர்பத்துக்கு மேற்பட்டவயதையுடையவர் பிரவுடைகாலத்துக்குச் சமீபித்த பருவம்பெற்றவர் மனதுக்கினியகுணமில்லாதவர் அச்சமில்லாத மனத்தைப்பெற்றவர்இடியைப்போல வார்த்தையாடுகின்றவர் தாய்தந்தையர்ஒருமித்து ஒருகணவனைத்தேடிக் குலமுறைப்படிக்குமணஞ்செய்து தருவதின்முன்னம் தனக்குஇச்சையாகியவன் இடத்து ஆசைகொண்டு அவனைச்சேரவிருப்புறும்மனதைப்பெற்றவர் தனக்குஇணையாகியவனப்பும் வடிவமும் ஒருவருக்கும் இல்லையென வீறுப்படைந்திருப்பவர் நாணமட மச்சம்பயிர்ப்பென்னும் குணங்களைப்பெருதவர் தாயின்வயிற்றில்நின்றும் முதித்தகாலத்தின் விழியின்றிப்பின்பு சிலகாரணங்களினுல் பார்வையுண்டானவர் மறுவிளங்குங் கண்களையுடையவர் படலிகைவாய்ந்த விழிகளையுடையவர் குறிப்பினுல் மெல்லச்செல்லுங் குருடர் கருடப்பார்வைபெற்றவர்அசங்கதமானபூனைக்கண்ணைவாய்ந்தவர் கணப்போதில் பலதிக்கினுஞ்சுழலும் நோக்குடையவர் செம்பட்டமயிரையுடையவர் சுருட்டைமயிரைப்பெற்றவர் பாலநரைவிளங்கும் அளகத்தினர் பறட்டைமயிரைப்பெற்றவர் நீண்டகூந்தலைவாய்ந்தவர் சிறுத்தமயிரைப்பெற்றவர்விரிந்த அளகத்தைக்கொண்டவர்சிவந்தபங்கியர் பூமியில்புரளுங் கூந்தலைப்படைத்தவர் ஊறுபட்டகூந்தலைப்பெற்றவர் மிருகங்களைப்போன்று உரத்துப்பேசுங்குரலுள்ளவர் சிறுத்தகண்ணினர் நீண்டமூக்கைப்பெற்றவர் சேர்ந்தபுருவத்தைவாய்ந்தவர் குறியகாதைப்படைத்தவர் உயர்ந்தபற்களைப்பெற்றவர் வளைந்தகண்டத்தைக்கொண்டவர் மறுவுற்றிருக்கும் முகத்தினர் தேமல்படராத அழகிய கொங்கைகளோங்கிய மார்பையுடையவர்சிறுத்தஇடையைப்பெற்றவர் சிலையைப்போலத்தோற்றும் வயிற்றைப்பெற்றவர் தேகஇலக்கணங்கள்சாத்திரப்படிக்கு இராதஅல்குலையுடையவர் அதரமும் உள்ளங்கையும் நகமும் காலடிக்கீழ்ப்புறமும் அழகியசிவப்பைவாய்ந்திராதவர் மயிர்ச்செறிந்தகால்களையுடையவர் மெல்லியசிறகுதழைந்திருக்கும் அன்னத்தையொத்த நடையில்லாதவர் கால்விரல் பூமியிற்படாதவர் இவ்விதஇலக்கணப்பழுதுகளைப்பெற்ற மங்கையர்மணவினையில் சேரத்தகாதவராகச் சாஸ்திரங்களில் சொல்லுகின்றது அத்தன்மையினரை விரும்பேன் இவ்விதபழுதுகள்ஒன்றேனும்இல்லாத கன்னிகையிருப்பாளாயின் தேவரீர் இஷ்டப்படிக்குக் கலியாணஞ்செய்து இல்லறத்தில்நிற்பேன்.

ஆதலாற் கிரமமாயாராய்ந்து கடாட்சிக்க வேண்டுமென்று வனத்தில் பர்ணசாலையில்இருந்து நோற்றகவுச்சிகர்சொல்லக்குச்சகர்கேட்டு நகையுமுவகையும் பெற்றவராய்க் குற்றமற்ற சிறப்பையுடைய இப்பூவுலகின்கண்இராநின்ற நாடுநகரங்கள்முதலான இடங்களில் பரிசோதித்துச்சாத்திரவிதிப்படிக்கு நற்குணநற்செய்கையிலக்கணசுத்தமுள்ள பதிவிருதையைக் கொண்டுவந்து உனக்குத்தருவேன் சந்தேகிக்கவேண்டாமெனச்சொல்லிக் குமாரனை அவ்விடத்தில்நிறுத்தி அபரஞ்சிப்பொன்னினுல்சோடித்தபதக்கத்தில் நடுநாயகமாகவைப்பதற்கு அரியமணியொன்றைத்தேடுகின்றவரைப்போல ஒப்பற்ற பெண்கொடியொருத்தியைஆராய்ந்து திரிகின்றபோழ்துதம்மையொத்தசில தவசிரேஷ்டரைச் சந்தித்துத் தன்கருத்தை அவர்களுக்குச்சொல்லி அவர்களால் சோழதேசத்தில்சிறந்த அநுமயம்என்னும்வனத்தில் உசத்தியன்என்னும் அருந்தவன்புத்திரியானவள் இவ்விலக்கணங்களனைத்தையும்பெற்றுப்பருவமாய் இருக்கின்றதாக அறிந்து அவர்களிடத்தில் செலவுபெற்றுக்கொண்டு அதிசீக்கிரத்தில் அத்தவத்தர் ஆசிரமத்தில் வரக்கண்டவுடன் அவர்அகமுகமலர்ந்து எதிர்கொண்டு சேவிக்கத் தாமுங் கரங்களைக்கூப்பிவந்தித்து அணைத்து ஒருவருக்கு ஒருவர்க்ஷேமங்களைவினவித் தமதுசாலைக்கழைத்துப்போய்த் தர்ப்பாசனத்திலெழுந்தருளச்செய்து விதிப்படிக்குப் பூசைசெய்து தன்பத்தினியையும் அருமையில்பெற்றபெண்ணையும்அழைத்து ஞானதேசிகன்எழுந்தருளினர்என்று அவர்களையுஞ் சேவிக்கச்செய்து பூசித்துப்போற்றித் தவக்குன்றமொத்ததேவரீர்எழுந்தருள இத்தலமும்என்குலமும்முன்னம் என்னதவம்செய்ததோவெனப் பன்முறைஉபசரித்து, பின்பு அறுசுவைகறிவகைகள் பஞ்சகச்சாயவிதங்கள்முக்கனிதேன் பசுநெய் திரட்டுப்பால்முதலானவைகளுடன்அமுதம்போன்ற போசனத்தைச் செய்வித்தபின்பு சுவாமி தேகம்வருந்த பாதங்கள்நோகத்தொலைதூரம்அடியேனை ஒருபொருளாகத் தேடிவந்தகாரியத்தைத் தயைசெய்து திருவுளம்பற்றவேண்டுமென்று துதிக்கக் குச்சகர்அவர்கள்உபசாரங்களுக்கும் ஒழுக்கங்களுக்கும்மகிழ்ந்து தவசிரேஷ்டரே!நீர்அரியதவவிரதங்களைச்செய்துபெற்றபெண்கொடியை என்குமாரனுக்கு மணஞ்செய்யக்கருதிப்பேசவந்தோமென்றவாசகம் செவியில்விழுந்தவுடன் தேகபரவசமாய்க்களித்துஐயனே! தேவாதிதேவனுனபரமசிவனது பூரணகடாட்சம்பெற்ற உமதுகுமாரனுக்கு அடியேன்பெற்றவிருத்தையைப் பாணிக்கிரகணஞ்செய்துதரநான்முன்னம் எத்தவஞ்செய்தேனோஎன்றுஆனந்தவாரியின்மூழ்கி மனம்பூரித்து நகையும் உவகையும்பெருகத்திருக்கலியாணத்துக்கு இசைவுகொண்டு பின்னுஞ்சிலநாள்குச்சகரைத் தனதுஆசிரமத்தில் இருத்திஉபசரித்துவருகின்றகாலையில் ஒருதினம் தவசிரேஷ்டராகியஉசத்தியமுனிவரின்மனைவியாகிய மங்கலையின் அநுமதியில்குமாரத்தியாகிய விருத்தை தோழிப்பெண்களுடன்கலந்துசேற்கெண்டைமுதலிய சலசரங்கள்பாய்ந்து உலவும்புனலாடிவரச்சென்று கான்யாற்றில்குளித்துத் துணைவியருடன் அருகில்தழைத்து வீறியிருக்கின்ற பூஞ்சோலையில்சேர்ந்து அவ்விடத்தில்இராநின்ற பரிமளமிகுந்தபுஷ்பவகைகளைத் தேடிப்பறித்து அவைகளைச்சூடியும் மாலைகள் தொடுத்தும் உலவியபின்பு இலக்குமியைநிகர்த்த கன்னிகையானவள் பலநட்சத்திரங்கள் மத்தியில் பூரணசந்திரன்விளங்குவதுபோலப் பாங்கியர்சூழச் சோலைநீங்கித்தன்னிருக்கைக்கு வருந்தருணத்தில் மதயானையொன்று ஒலிமிகுத்த இடிகளைக்கக்குங் கரியமேகம்போல வீரிட்டுச்சீறிவெவ்விஅகன்றபொறிகள் கண்களில்சொரிவதாகப்பருத்ததேகத்துடன் மும்மதங்களையும் அருவிசலத்தைத்தழைத்துஒழுக்கிப் பனையைநிகர்த்துஅசையும்நீண்ட துதிக்கைபைச்சுலவி வயிரம்போல உறுதிபெற்றகோடுகள் விளங்க

உரலையொத்த கால்களைப்பெயர்த்து வைக்குந்தோறும்பர்வதங்கள் துகள்படமிதித்துப் பிரசண்டமாருதம்போல வேகமாய் எதிரில்வரக்கண்டவுடன் திருப்பாற்கடலின்உதித்தவிஷம்எதிர்ந்தகாலத்தில் தேவராதியர் மருண்டோடியதைப்போல அம்மார்க்கத்திற்செல்லும் ஆண்திறம்பெற்றமனிதர் திகில்பட்டுச்சிதறிஒளிக்கவும்தோழிப்பெண்களும் மனநடுக்கம்உற்றுவருந்திப் பலதிக்கினும்மறைந்ததருணத்தில் விருத்தையென்னும் கன்னிகைகைகால்உதறல்எடுத்து அன்னமொத்த நடையைவாய்ந்த பாங்கியைக்காணாதவளாய் இம்மதயானைஎன்னசெய்யுமோவென்று எண்ணியேங்கி அதிவேகமாகத் தானும்ஒருபுறத்தில் ஓடும்போது நரகக்குழியுற்று ஓங்கியிருக்கும் பாபிவருக்கங்கள்போலத்தாழ்ந்த பசியபுல்தழைத்து முடித்தோற்ருத ஆழ்ந்திருக்கும் பாழுங்கிணற்றில்விழுந்துஅழுந்திமாண்டனள்.

அக்காலத்தில் சுருண்டபிடரிமயிர் அலையப்பரந்த முகத்தைவாய்ந்த சிங்கராஜனே! எதிரில்நேரினும்மாறுகொண்டுவாட்டவல்ல மதயானையானது கல்லென்னும்ஆர்ப்புடன்மலையநாட்டை நோக்கிப்போயிற்று பின்பு திசைகெட்டுஓடியமகளீர் அனைவரும்சேர்ந்து மானைப்போல்திகைத்துப்பார்த்துத் திரோகமெங்கும்வியர்க்கக் கூந்தல்கலைந்துஅலைய மனநடுங்கக்களிப்புநீங்கினவராய்ச்சுற்றுமுற்றும்பார்த்துஎங்கும் மதநீர்சிந்த மேகம்போலஅதிவேகமாய்வந்தநீண்ட தந்தங்களுடைய களிற்றினைக்காணாது சற்றுத்தேறினவர்களாய் தமதுதோழியாகிய விருத்தையை நாடிக் காணாது பிராணன்உண்டுஇல்லையென்னும்படிபெருமூச்செறிந்து அத்தடங்கள்எங்கும் நதியைப்போலக்கண்ணீர்ஓடப் பொருமிக் கிலேசித்துச் சோர்ந்தபின்பு உயிர்பெற்றவராய்ப் பழைய புண்ணின்கண் அக்கினிபட்டுவருந்துபவரைஒத்துப் புலம்பத்தொடங்கிப் பெண்கள் சிகாமணியே சிறந்தவனப்புகள் அனைத்திற்குங் காரணமாகத்தோற்று முருவைவாய்ந்தவளே! நோக்குனர் கண்களுக்கு அணியாகின்றவளே தாமரைப்பீடத்து அமர்ந்த லட்சுமியைநிகர்த்த அழகுள்ளவளே மங்கையர்க்கரசேஇவ்வனத்தில்ஓடும் புனல்ல் படிந்துவெறுத்துச்சிறந்த ஆகாயகங்கையில்தோய்ந்து களிக்கநினைந்து துணிவுகொண்டுஎங்கள்தோழமையைமறந்துசென்றனையோகுளிர்ந்தகங்கையிலாட்டிப் பாதுகாத்து என்பெண்ணைக் கொண்டுவந்துசேர்ப்பீரென்று செலவுகொடுத்தனுப்பிய உன்அரியதாய்க்கு என்னசொல்லப்போகிறேம் அடிதோழிகொலைக்களிற்றின்முன்னம் உன்னைத்தனித்துக்காட்டிவிட்டு இந்தப்பாழ் உயிரைப்போற்றவிருப்பமுற்று ஓடினேம்உன்பிதாவாகிய உசத்தியரும் உன்தாயாகியகற்புடைய மங்கலையும்வையமெங்கும் துதித்துப்போற்றும் தவசிரேஷ்டராய் மாதுலனெனவந்தகுச்சகரும் துக்கசாகரத்தி லழுந்திவாடமறைந்தனையோ ஓதுணைவியேஇனி ஒருதரம் உனது செந்தாமரையைப்பழித்த முகாரவிந்தத்தையும் முத்தினங்களை நிகர்த்த தந்தபந்திகள் விளங்குந்திருநகையையும் காட்டாயோ என்றுஇவ்வாறு பலபலவாகப் பன்னிவனமெங்கும் அதிர இரங்கினவராய்க் கடையில்திரும்பிப் புகழ்தற்கரிய சிறப்பையுடைய உசத்தியமுனிவர் தவநிலையில் அமர்ந்திருக்கும் தெய்விகமாகிய சாலையின்அமர்ந்து இல்வாழ்க்கையை வழுவில்லாமல் ஓம்பிவருந் தேவியாகியமங்கலையைக்கண்டு இச்செய்தியை வாய்குழறச்சொல்லக் கடல் உடைந்ததைப்போலக்கதறினர்கள் அதனைக்கேட்ட தாய்வயிறுபற்றப் பிசைந்துதீயிற்பட்ட மெழுகைப்போல மனங்கரைந்துஉருகிவாடி, வாளைப்போல நீண்டு பரந்திருக்கும் விழிகளில் தாரைதாரையாகச் சலம்பெருக வாய்விட்டலறித் தன்கணவரது பாதகமலங்களில் பெருங்காற்றில்பட்ட பனைமரம்போலவிழுந்து மகளுக்குச்சம்பவித்ததை விண்ணப்பஞ்செய்தனள்உடனே ஐம்புலச்சேட்டைகளைக்கடந்த முனிபுங்கவர் மனநெகிழ்ந்து கன்றைப்பறிகொடுத்த பசுவைப்போலக்கதறிப் புலம்பிதிக்கென்றெழுந்துதேவி முதலானவர் சூழ்ந்துவரஅத்தலத்தைச் சேர்ந்துபிரிந்துவந்த தோழிப் பெண்களைப் பார்த்துச் சோபித்துஉங்களைத்துரத்திவந்தயானைநமதுபுத்திரியைக் கொன்றுபோயிற்ரே பயப்படாமல் சொல்லக்கடவீரென்று கேட்க ஐயனேபுனிதமாகிய நதியில்மூழ்கியபின்பு அச்சோலையில்சென்று மலர்பறித்து விளையாடித்திரும்பி இவ்விடத்தில் வரும்போது வெவ்வியகனல்பொறி சிதறும் சிவந்தகண்களைப்பெற்ற மதயானைகோபித்துவருவதைக்கண்டுமனந்தத்தளித்து எல்லோருங்கலைந்து ஒருவர்போனவழி ஒருவருக்குத் தோற்றுமல்பலதிக்கினும் பறந்து கொடியமதயானைக்குத் தப்பிக் கூடியபின்பு விருத்தையைக்காணமல் இத்தலங்களெங்கும்ஆராய்ந்து வந்தனமென்று துக்கித்துச் சொல்லினர்.

அதுகேட்டுப் பிதாவானவர் மீட்டும்சோதித்தும்தோற்றுமல் தியங்கிப்பார்க்கும் வேளையில்தன்குமாரத்திஅணிந்த பொன்னுபரணங்கள் ஒன்றொன்ருக ஒருபாதையில் விழுந்து கிடப்பதைக்கண்டு என்அம்மைஓடியமார்க்கமிதோகாணப்பட்டதென்றுஏங்கி அதைத்தொடர்ந்து தேவிமுதலானவர் பின்பற்றிவரப்போய்ச் சிலதூரத்தில்புதர்மூடியிருக்குங் கேணியையெதிர்ந்து வானத்தில்சென்ற பெண்கொடியினது உடல்மிதப்பக்கண்டு வருந்திவிழிகளில் நீர்குதிகொண்டு பெருக அதில்குதித்து ஆவலோடு மகளைத்தழுவியெடுத்துக் கரையில்கிடத்தியவுடன்தோழியர் அனைவரும் மேல்விழுந்து கட்டிக்கொண்டு புலம்பும் ஓசையைவாடிப்பின்னல் வருகின்ற தாயானவள்கேட்டுஓடிவந்து மாலையில்சோலைகளில்சேர்ந்து ஒலிக்கும்பட்சிக்கூட்டத்தினையொத்து மிகவும்அலறிக்கொடிய துக்கசாகரத்தில் பட்டுஅரியதவமுயற்சியினுல் தன்வயிற்றின் வந்துஅவதரித்த கன்னிகையைநோக்கித்தரியாதவளாய்அன்பினுல் உயிர்பதைக்கவயிற்றைப்பிசைந்து தேம்பித்தேம்பி அழுதுவாடி மின்னல்கொடியின்மீது வேறேயொருமின்னல்படிந்ததன்மையாய் மேல்விழுந்துமுகத்துடன்முகத்தை அணைத்துத்தாயேஇவ்வுலகவாழ்வையிகழ்ந்துதென்பிரதேசத்தில் விளங்கும் வைவசுத நகரத்தில்சேர்ந்து அச்செல்வத்தைக்கண்டு களித்திருக்கின்றனையோ ஓமகளேயென்று கண்களுடன் கண்களைஒற்றி முத்தமிட்டு என்னுசைக்கண்ணே எவ்வாறுஉன்பிராணனைஎமன் துணிந்துகொண்டு போயினுன் அக்காலத்தில் பயந்து என்னை நினைந்தனையோ வென்று புலம்பிப்பின்னும் என்னைப்பெற்ற பொற்பாவாய் தமியேனைத்தனித்து வாடவிட்டுப்பிரிந்து போகலாமோ ஆ ஆ கொடியஅறக்கடவுளேயென்னிடத்துச் சலமுண்டோ ஐயையோதெய்வமே இவ்விடிநேருதற்கொரு ஏதுவும்அறியேனே கனவிலுங்கண்டது மில்லையே சகுனப்பிழையாயினும் நேர்ந்ததுங்கிடையாதே ஆ! கர்த்தனே முன்னம் நெடுங்காலம்புத்திரர்இல்லாமல்

அரியவிரதங்கள்முதல்ய பிரபலந ருபடீளைப் பலகாலம் வருந்திச்செய்யப் பரமசிவகடாட்சத்தினால்பெற்றமின்னலையொத்த தவக்கொடியே உயிரிழந்து புறங்காட்டில் பொன்னையொத்த திருமேனிபுழுதியில் புரளக்கிடப்பையோ பிரமன்செய்கையிதுவோ யான் ஒருத்திபெண்ணாகப்பிறந்து பெற்றபலன் இதுதானோ ஒருமானை அரிதில்வளர்த்துக் கடைசியில் புல்க்கூட்டங்கள் சஞ்சரிக்கின்ற கானகத்தில்போக்கியிழந்து அலைகின்றவளைப்போலப் பெண்ணமுதைக்கைசோரவிட்டுப் தமியளாய் அழுவேனோ செந்தாமரைவாசியாகிய சிதேவியையொத்தமகளை அநியாயமாய்க் கொல்லவந்த கூரியகோடுகளைவாய்ந்த சொலைக்களிற்றி னுருவைப்பெற்றுவந்தது பாதகியாகிய யான்முன்செய்த பெரும்பாவத்தின்கோலமோ அதுமதயானையென்பது வெறும் பொய்யெனச் சோருவள் தருமதேவதை யித்தலத்தைவிட்டு ஆரணியங்களில்சென்று ஒடுங்கியதோ சராசரப்பிரபஞ்சங்களைப் பாதுகாக்கவல்ல சர்வாந்தரியாமியாகியகடவுளும் என்னிடத்தில் பொய்த்தனரோ அரியமோட்ச எல்லையைக்காட்டவல்லசிறந்ததவமும் தவறியதோ வரன்முறைபிசகுதற்கு ஏதுவாகியகலிகாலமும் நேர்ந்ததோ கொடியமதயானை துரத்திவந்து அடர்க்க என்மகள்இறந்து இப்புழுதி நிலத்தில் அழகியதேககாந்திமழுங்கிவாடி உயிரிழந்து கிடக்கக்காண்பேனோஎன்னே என்னே இதுவும்ஒரு புதுமையோ என்றுஇவ்வாறுபாடிப்பாடிப்புலம்பி ஆற்றுகின்றகாலையில் பரிமளிக்கின்ற அளகபாரத்தைப்பெற்றமாதர் அனைவரும்வந்து சூழ்ந்துஐயையோபாழுந்தெய்வமே கொடியஎமனேகொலையானையே பாதகமான ஊழ்வினையேஇப்படியும்செய்யலாமோ ஐயையோமகளேஉன் திருக்கல்யாணத்தைக்கண்டு மகிழ இருந்தஎங்கள் வயிற்றினும்அருமையாகச் சீராட்டிவளர்த்தவுன் தாயின்பாழ்உதரத்தினுந்தணியாத தீயைமூட்டிப்பரதவிக்க விட்டுப் போகலாமோ இவ்வாறு அலைவார்களென்பது உனக்குஎவ்வளவும் தோற்றவில்லையே எங்களை முற்றினும்மறந்து கண்களைவிழித்துத் தேறுதலையான வசனம் ஒன்றும் சொல்லாமல் மூடிப்பேருறக்கம்கொள்ளலாமோஎன்று இவ்வாறுபதைத்துச்சோரத் தோழிப்பெண்கள்முகத்தில் அறைந்துஅடிஅம்மேஅடிவிருத்தாய் ஆற்றில்குளிக்கவோடிவாராயோ நல்லமலர் பறித்துச் சூடிவிளையாடிப் பூங்காவுக்குப்போகஎழாயோ பவளம்போன்ற வாயைத்திறந்து ஒருவார்த்தையாவது ஆடாயோ என்றுஅரற்றிச் சோபித்தார்கள்.

கேட்டீர்களோ சவுனகாதிதவத்தரோ(கடந்துளோர்களும் கடப்பரோ மக்கள்மேல்காதல்)என்பதை இங்ஙனம் திருஷ்டாந்தரமாகக்கண்டனம் தபோநிதியாகிய பிதாமுதல் அனைவருக்கும்அத்தினம் நேர்ந்தகிலேசத்தினையும்அழும் ஓசையினையும்கண்ணீர்ப்பெருக்கினையும்இப்படித்தென்று யாவராலும்விரித்துச்சொல்லப்படுவதோ இவ்வாறு அனைவரும் ஒருவர்மேல்ஒருவர்விழுந்து பிராணன்இழந்தவளையொத்து வாடிவருந்துமுன்னிலையில்சலனமில்லாத மனவுறுதியையும்தவத்தினையும்பெற்றகுச்சகர்அத்தாய்தந்தைமுதலானவர்படும் துக்கத்தினைக்கண்டுஇரங்கிவிழிகளில் நீரைப்பெருக்கிப் புலம்புகின்ற பெண்கள் கூட்டத்தைச்சேர்ந்து என்வருந்துகிறீர்சிலநேரத்தில்இக்கன்னிகையை எழுப்பித்தருவோமெனத்தேற்றி மற்றோரிடத்தில் தலையைக்கவிழ்ந்து தாரைதாரையாகக் கண்களில் சலமோடச் சோபிக்கின்ற தந்தையையடைந்து இதனைச் சொல்லுவார் வேதாகமசாஸ்திரபுராணமுதலியநூல்களை வாசித்து அறியாதமனிதனைப்போலவும்சிற்றறிவைப்பெற்ற எளியவனையொத்தும் பஞ்சேந்திரிய நிலைகள்பிசகிய முதியோனைநிகர்த்தும் காரணகாரியக்கிரமங்கள்தோற்றுத பாலனைப்போன்றும்ரத்தினாபரணங்களையணிந்துபேதைமைப்பருவத்தின் ஆழ்ந்திருக்கும் மகளீருக்குச் சமதையாகவும் துக்கசாகரத்தில் அழுந்திவாடுகின்றீர்,ஊழ்வினைச்சம்பந்தத்தையெவ்வளவும் யோசியாமல்பேரறிவாளராகியநீரோ இவ்விதமாகமாய்கையில் கட்டுண்டுமயங்குவீராயின் வேதநிச்சயங்களை யுணராதமற்றைய பாமரரால் உணரப்படுவதா ஆதலால் ரிஷியேமனக்கவலைநீங்கிவாட்டம்ஒழிந்து களித்திருப்பாயாக மூர்ச்சித்துஉணர்ச்சிபெற்றவளையொத்துஉன்பெண்ணைநாளைக்கு எழுப்பித்தருவேன் பின்பு வேதவிதிப்படிக்கு மணமுன்னிலையில் நமதுகுமாரனுக்கு அளிப்பாய் இதற்குஎவ்வளவும்ஐயம் வேண்டுவதில்லை இக்கன்னிகை காலமுடிந்து இறந்தவள் அல்ல இதனைப்போத வுணர்வினால் அறிந்தோம் இவ்வுடலை இப்போதே தயிலக்கொப்பரையில் சேர்த்துபபதனப்படுத்துவாய் நான்தவத்தைச்செய்துஉயிரைமீட்டுத்தருவேனென்றபோது தந்தைஒருவகையாகத் தேறிச்சீக்கிரமாய் தயிலத்தில்கிடத்தி அவ்வுடலைப்போற்றியிருந்தான் இப்பால்தவசிரேஷ்டரான குச்சகர்அருகில் இருக்கும் ஒருதடாகத்தைச்சேர்ந்து அதில்மூழ்கி எமனைத்துதித்து தவத்தில் இருக்குங்காலையில் ரத்தினமயமாகிய குண்டலங்களை அணிந்தமகளீர் திடுக்கிட்டு அஞ்சிவாட முன்னம் பிரசண்டவாயுவைப்போலப்புகும்அந்தமதயானைமீட்டும் அதிவேகமாய்வந்து குச்சகர் தவம்செய்திருக்கும் தடாகத்தில் விழுந்து கால்களினால் உழக்கிப்பணமகுடம் விளங்கும் பாம்பினையொத்து அசையும் வலியதுதிக்கையினால் துழவி நிஷ்டையில் இருந்த முனிபுங்கவரைப் பற்றியெடுத்துப் பிடரியில்வைத்து வெகு தூரத்தில்கொண்டுபோகின்றபோழ்தில் குற்றமற்ற குணசிரேஷ்டரான குச்சகர் வாலறிவை நீக்கி உணர்ச்சிபெற்றுமதயானையைநோக்கி என்னைப்பற்றிச்செல்லும் காரணம் என்னையென்று அதனூழ்வினைச் சம்பந்தத்தைக்கணிப்பதாயினர்.

அஃதென்னையெனில் எதிர்ந்தவரைக் கோபித்துச்சின்னபின்னம்படக் கொல்லும் கொடியயானைகள்வீறி அவைகளின் மதப்பெருக்கானது காதவழிவரையில் கமழும் வளம்பெற்ற கலிங்கதேசத்தில் குபேரனை நிகர்த்தவைசியர் வாழும் அரிபுரத்தில் வணிககுலதிலகனாய்ச் சகலசம்பத்தையும்பெற்ற தேவதத்தனென்னும் செட்டிக்கு அரியதவமுயற்சியினால் தருமதத்தனென்னுங் குமாரன் உதித்துச் சிறந்தவனாய் இவ்வுலகத்தில்ருக்கும்மேன்மக்களும் புகழப்பல அறங்களைநடாத்திகீர்த்திபெற்று மெய்வழியின்று தர்மார்த்தகாமமென்னும்மூவகைப்பொருளையுங் கிரமப்படிக்கு அனுபவிக்கும் குணாதிசயங்களைவாய்ந்து தனதனுக்குமேற்பட்ட பாக்கியத்தைச்சம்பாதித்துவாழும்போழ்து தாய்தந்தையர் இறக்கமிகவும்வருந்தி அவர்களுக்குஉரியஈமவிதிமுதலிய கடன்களை நடாத்திமனந்தேறி உற்றதுணையொருவரும் இன்றித்தனித்திருக்கின்றநாளில் அவன்பொருள் அனைத்தையுங் கொள்ளைகொள்ளக் கருதி ஒருரசவாதியானவன் மொட்டந்தலையனாய்ச் சொர்ணமுதலிய கலப்பினால் செய்தகுண்டலங்கள் இருசெவி

களினும் அசைய முப்புரிநூல் மார்பில்புரள விபூதிமுப்பட்டையாக நுதலில்துலங்கக் காவிச்சட்டைஅணிந்துஉருத்திராட்சத்தாழ்வடங்கள்அசையக்கரத்தில்பிரம்புகொண்டு பஞ்சாட்சரம் ஓதித்தெருக்கடையில் வருவதை வணிகன் கண்டு எதிர்ந்துமும்முறை வலம்வந்துசேவித்து அரூபியாகியசிவபிரானைத் தெரிசித்தவனை ஒத்து மகிழ்ந்து இப்புவியிலிருக்கின்ற மகத்துக்களில்இவர்மிகுத்த தவசிரேஷ்டரெனக்களித்துச் சுவாமிதேவரீர் இச்சிறு குடிலைவிரும்பி வருவதற்குஎன்னபாக்கியம் பெற்றேன் உள்ளெழுந்தருளு மென்றுஅழைத்துப்போய்ப்பூசித்துபொற்பள்ளயத்தில் அறுசுவையுண்டியைப் படைத்து அன்பாய் உபசரித்து உண்டபின்புபொற்பீடத்தில் இருத்திகலவைச்சாந்தணிவித்துத்தாம்பூலவிடையநல்கிப்பின்வணிகதிலகன் தேகம்பூரிக்கக்கரங்களைக்கூப்பி நின்று பெரியவரோ அடியேனைஒருபொருளாகநினைந்துஇவ்விடத்திலெழுந்தருளுங் காரியம்யாதோ திருவுளம் பற்றுவீரெனப் போற்ற அக்கபட சந்நியாசிகுஞ்சிரிப்புகொண்டு அப்பா நீசுக சீவியாய் அஷ்டஅயிஸ்வரியங்களையும் பெற்று வாழக்கடவாய் என்றுஆசீர்வதித்து வணிககுலோத் தாரகனேகேட்பாயாக பரமனால்உண்டுபண்ணிய சாத்திரமொன்றை அரிதில் பெற்றேம் அதுயாவருக்கும் போதிக்கப்பட்டதன்று குருபத்தி விசுவாசம்விளங்கும் புண்ணியவான்களுக்கு உபதேசிக்கத்தக்கது இதற்குப்பாத்திரவான்கள் கிடையாமல் தேசமெங்குமாராய்ந்து கடையில் இத்தலத்தில் பரிசுத்தமனதையுடைய வுன்னைக் கண்டவுடன் அப்பேற்றினுக்குரியவனென நிச்சயித்தோம்.

இஃதன்றியும்சிவபிரான் உண்மையாகப்படைத்த இரதச்சுன்னமிருக்கின்றது அதனால்வேண்டியபொன்னைச் செய்வோம் அதுவும்எமக்கரியதன்று அதினும்அரிதாயுலகத்தில் விளங்காத பலவித்தைகளைக் குருகடாட்சத்தினால் பெற்றிருப்போம் இவைகளின்மகிமைகளை தவமேவிரதமாகவுடைய மஹரிஷிகளல்லது மற்றொருவரால் கணிக்கப்படுவதோகருமையாகியஇரும்பைநாகமாக்குவோம் திரும்பியும் அதனைஉரைபெறுமாற்றுடையபொன்செய்வோம் சொர்னமயமான மஹாமேருவையும் வெள்ளிக்குன்றமாகிய கயிலாசத்தையுந் திருஷ்டாந்தரமாகப்பார்க்கக்காட்டுவோம் இதுநமக்கரியனவோ காரீயத்தையும்பித்தளையையும் சொக்கவெள்ளியாக்க வல்லோம் இஃதன்றியும் வங்கத்தை அபரஞ்சியாகச்செய்யவல்லோம் மேலுந் தகுந்தவர்களுக்கெளிதில் அவைசித்திக்க வுணர்த்தவல்லோம்ஆயினும்பெரியோர்களால்இகழப்பட்டவஞ்சகருக்குக்குருவின்மொழிப்படிக்குச்சித்துகளைக்காட்டவும்போதிக்கவுமாட்டோம் மேலும் இரும்பில் செம்புண்டாக்குவோம்ஈயத்தையும்அவ் வாறேபெறச்செய்வோம்வேண்டுமாயின்அளவற்றபுவனங்களையும்அண்டங்களையும்நிமைப்போதில்பொன்மயமாக்கி விடுவோம் அவைகளைமறைக்க நினைந்தால்கணத்தினொடுங்கச்செய்யவும் வல்லோம் ஒன்றைக்கோடியாக்குந்திறமுமுண்டு கோடியிருக்குமாயின் கோடாகோடியாக்கிக்குன்றுகளைப் போலக்குவிக்குந் திறம்பெறுவோம்இவ்விதமகிமைகளையுடையயாம் இதுவரையிலொருவருக்கு மனுக்கிரகஞ்செய்ததில்லைநீசுகுணனதலால் உனக்கிஷ்டமாயளிக்க விருக்கின்றனம். ஆகையால் உன்னிடத்திருக்கின்றபொருளனைத்தையுந் தருவையாயின்உன்மனங்களிக்கச் சிலநேரத்தில் இந்தவிசாலமானமாளிகையினிடங்கொள்ளாமல்சொர்னக்குவைகளாய் நிரப்பிவிடுவோம்இனிவியாபாரத்தில்வருந்தாமல் சகலசெல்வங்களையுமனுபவித்துத் தானதருமங்கள்புரிந்துகுபேரனும்விருப்பங்கொள்ளவாழ்வாயெனப்போதித்தஅக்கபடசந்நியாசியின்வஞ்சகவார்த்தையை உறுதியாகநம்பிச் செல்வமென்னுமாசைதூண்டச்சேவித்துசுவாமிகள் அடியேனிடத்துக்கிருபையுற்றிதனையருளியது நானீடேறுங்காலம் நேர்ந்ததுசற்றுநேரத்தில்சேகரித்துவருவேனென்றோடிமுன்னோர்கள்தேடிவைத்தபிதிரார்ச்சனையையுந்தான்அரிதிற் சம்பாதித்தபொன்னையும் பேழைகளில் நிறைத்துவைத்திருந்தவெள்ளிபொன்நகைகளையும் அதிசீக்கிரமாய்வாரிவந்துஎதிரில்குவித்தான்.

அவைகளை அக்கபடவாதியானவன் சுலபமாகப்பார்த்து மற்றப்பொருள்களையுங் கிரகிக்க எண்ணங்கொண்டுவணிகர்திலகனே? நீபடைத்தசெல்வ மிவ்வளவுதானோ? ஓகோவென்றிகழ்ச்சியாகப்பேசிக் கரங்களைத்தட்டி மாலைப்பொழுதில் பிரகாசிக்கும் நட்சத்திரங்கள்போலப் பற்கள்விளங்கச் சரீரங்குலுங்க நகைத்து நீபெரிதாய்நினைந்துசேர்த்துவைத்த இந்தப்பொருள் நமதுவித்தையின் திறத்துக்கு இம்மியளவும்போதாது, நாம்மூசையில்வைத்துருக்கும்போது சிந்துகின்றதுகளளவுங்காணாது அப்பா? நம்முடன் சஞ்சரிப்பையாயின் அளவற்ற தனத்தைத்தருவோம் வருவாயென்றெழுந்திருப்பவனைப்போல்அபிநயித்துக்காட்ட, வணிகன்வெருவி, சுவாமி? கோபிக்கவேண்டாம் தேவரீர் குறித்தபொருளளவுக்குச்சரியாகவேண்டியபொருள் இட்சணமே தருகின்றனன் தயைசெய்திருந்தருளுமென் றிருத்திப்போய்த் தானணிந்த ஆடைஆபரணங்கள்தவிர மற்றஆடைமுதலான விலைபெற்றநவரத்தினங்களையும் சிறந்தமதிப்புள்ள நகைகளையுஞ் சரக்குகளையும் பண்டசாலைகள்-மனைகள்-வீடுகள்-கடைகள் - ஏவலாளிகள் முதலாக ஒன்றுபாதியாய் விற்பனைசெய்துரொக்கப்பணமாக்கி மதச்செருக்கினால் தலையில் மண்ணைவாரிப்போட்டுக்கொள்ளும் வெறிகொண்ட யானையைப்போலவே வணிகன்மயங்கி உலகத்திலே தனக்குஒப்பில்லாத பாக்கியவானுவோமென்னு மிகுந்தகளிப்பினாற் றருமம்நடாத்துவதற் கேற்படுத்திய சத்திரங்கள் மானியங்களையும் விலைக்குமாறித் தருமதத்தனென்னும்பெயரைப் புவியில்நாட்டினவனாய் இவ்விதமாகச் சேகரித்தபொருளனைத்தையுந் தலைமேல்சுமந்துந் தோள்களில் பரித்தும் கைகளில்தூக்கியும்வந்து வஞ்சகன்காணச்சொரிந்து கரங்களைக்கூப்பி நிற்கக்கண்டு உன்னைப்போலமனம்பழுத்தஅன்பரையெங்குங்கண்டதுமில்லை இதுவரையில் கேட்டதுமில்லையென்று மகிழ்ந்து குருகடாட்சிப்பாரென்று ஆசீர்வதித்து எதிரிலிருக்குந் திரவியமனைத்தையுஞ் சேர்த்தெடுத்துஉருக்க எத்தனித்தவனாய்த் தீயைமூட்டிப்பொன்முழுது மொருபெருங்கட்டிப்பாளமாக்கிஅதற்கிரட்டிப்பு எடைகொண்ட காந்தக்கல்லொன்றைத்தருவித்துரசத்தையுஞ்சேர்த்துப் பின்புவணிகன் பிரமிக்கத்தக்கதாகப்பொற்கட்டிமுழுதும் மூலிகைச்சாற்றினுரைத்து குருவாக்கி அத்தெய்வையில் சிறிது மேற்சொல்லிய காந்தக்கல்லைப்பெறப் பூசியுருட்டி மண்ணாற்செய்தபருத்தமூசையொன்றைப்பிடித்து கக்கத்திற்றொங்கும் பையிலிருக்குமருந்திற்கொஞ்சமெடுத்து அதனடியின்தெரித்துக்காந்தத்தையும்வைத்து மண்ணையப்பிச் சீர்செய்து மற்றதெய்

வையை வேறொன்றிற்சேர்த்து அதற்கும் மன்றடவும்
வேகத்துடன் குறியொன்றையுமிட்டு அவைகளின்மீதும
ண்சிலேசாத்திந் தீயைவேகமாயெரித்து வணிகனுக்குத்
தோற்றுமல் அதன்மருங்கில் பொற்குகையை மறைத்து
மற்றதையும் அக்கினியினிடத்தில்வைத்து மாறிமாறிநா
ற்றெட்டுப்புடமானபின்பு சோதித்து மாற்றுயர்கின்றது
வராகிதேவியார் கடாட்சத்தினுல் பழுத்துப்போகும்அத
ற்குள்ளாகநீ மயங்கவேண்டாமென்று வணிகனைத்தேற்
றியினிபத்திரப்படுத்தவேண்டுங் காற்றசைவற்றஅறைஇ
டமொன்றைக் காட்டென்று வஞ்சகன்சொல்வதைவணி
கன் கம்பிசேமமாயிருக்கும் அறையொன்றைத்திறந்துவி
ட்டான். அதில்அக்கபடவாதி பிரவேசித்து குறியவிறகு
களை விதிப்படிக்கடுக்கிச் சூரனுலே ஈமவிதிப்படிக்குக்
கொளுத்தியஅக்கினியையழைப்பித்துத் தீமூட்டியெரித்
துவராகி தேவியைமந்திரத்தால்கூவி, ஆவாகனஞ்செய்
து மதுமாமிசாதிகளைப்படைத்துப்பூசித்துப்பின்பு வணி
கனுக்கும் அம்மதுமாம் சாதிகளாகிய பிரசாதங்கொடுத்
துமயக்கி அவன்கண்காண மேற்சொல்லிய தீயைக்கொ
ண்டு அவல்மூட்டி மற்றதந்திரங்களைச்செய்துவரும்போ
து, இவையனைத்தையும் பிரத்தியட்சமாகக்கண்ட வணி
கன்களிப்பினுல் மனம்பூரித்து,விழிகளிலானந்தவாரிபெ
ருக, உயிர்தத்தளிக்க புளகாங்கிதனுய் வெப்பத்தினுலே
சலதாரையாய் சரீரமெங்கும் வியர்வையொழுக ஊமை
யைப்போலவாயைச் சப்பிக்கொண்டு ஒருவார்த்தையுமா
டினவனுமல்ல, அவ்விடம்விட்டுப் பெயர்ந்தவனுமல்ல,
அவன்பக்கத்தில் நெடுமரம்போலநின்றுகொண்டிருந்தா
ன். அவன்பட்டபாடு சவுனகாதிரிஷிகளே ஒருவராலும்
சொல்லப்படுவதோ.

இவ்வண்ணமாக அவன்சிந்தை பரவசப்பட்டிருப்ப
தைவாதிகண்டு இதுதருணமென்றெண்ணிப் பாதகனுன
வன்பொன்குகையைச் சூதாலெடுத்து மேற்போர்வையி
ற்பதனப்படுத்திஅதைப்போலவே பக்கத்திற்சாக்கிரதை
செய்திருக்கும் மற்றொன்றை சீக்கிரமாய் அதற்குப்பதி
லாகவைத்து ஓ! வணிகசூலதீபமானதருமதத்தனே? பத்
தியாய் இக்குகைகளை உன்கையினுலெடுத்து உனதிஷ்ட
தேவதையை வழிபட்டுப்போற்றித் தழலினிடத்து வை
ப்பாயென்றுகூற, அவ்வணிகனும்,அவ்வாறேசெய்தான்
பின்புவிதிப்படிக்கு அதற்குரிய தேவதைகளைமந்திரபூர்
வகமாய்க்கூவி விறகுகளையிட்டுத் திக்குபந்தனமுதலான
கிரிகைகளைமுடித்தவுடன் ஒருதந்திரயுத்தியையோசித்து
ச்சொல்லுகின்றுன். ஓ! வணிகர்பெருமானே? இதிலுள்
ளசரக்கு இன்னுஞ்சிலநேரத்தில் முழுவதும் பழுத்துவி
டும். அதற்குமுன் நீசெய்யவேண்டுவ தென்னவென்றுல்
உணவுசலபானமுதலாக யாதொன்றையு மருந்தாமலும்,
ஒருவரோடும்பேசாமலும், பெண்களை மனதினும்நினை
யாமலும், அன்னியனைக்கண்ணெடுத்துப் பாராமலுங்,க
பாடபந்தனஞ்செய்துகொண்டு குற்றமற்ற குணசம்பன்
னனே! நம்மைக்குருபாவனையாகக்கொண்டு இடைவிடா
மல் தியானித்து மூன்றுதினபரியந்தம் இராப்பகலாயெ
ப்போதும் இவ்விடத்தை நிமைப்போதும்விட்டுப்பிரியா
மல் பாதுகாத்துக்கொண் டிருக்கக்கடவாய், இதன்மத்தி
யில் இஃதுமுடிவுபெறப் பரிமள நெய்தடவி யலங்கரித்
திருக்குஞ் சடைகள் விளங்காநின்ற பத்திரகாளியம்மை
சந்நிதானத்தில் ஆகமவிதிப்படிக் கொருவேள்வியைகடா
த்தவேண்டும், அதையும் நாம்போயிருந்து கிரமமாகமு
டித்து இன்றைய நான்காவதுதினம் விடியற்காலையில் இ
வ்விடம்வருவோம், அத்தருணத்திற்குவேண்டுந் தூபதீ
பநைவேத்தியங்களைச்சேகரித்து, ஜாக்கிரதையாகவைக்க
க்கடவாய், இனிஉனக்கொருகுறைவுமில்லைச்சகலராலும்
பூசிக்கவாழ்வாயென்று வஞ்சகன்சொல்ல, அதனைநம்பி
மகாபாக்கியம் அவ்வாறே செய்யக்கடவேன், தேவரீரும்
நிச்சயித்தபூசையைக் காளிக்குப் பிரீதியாகச்செய்துவரு
கவென்று, மும்முறைவலம்வந்துவணங்கி செலவுதந்த
னுப்பிப் பொருள்முழுவதுமிழந்த வணிகன் அக்குகை
யினைப் பாதுகாத்துக்கொண்டிருந்தான். இப்பால்வஞ்ச
கமனதைப்பெற்ற வாதியானவன் பொன்னைக்கிரகித்துக்
கொண்டு அதிவேகமா யொருநாழிகையில் காதவழியாக
ப்பறந்து சிலதூரங்கடந்தவுடன் அவ்வேடத்தைமாற்றி
வேறொருதேசத்தையடைந்து மறைந்திருந்தான். இதுநி
ற்க, வணிகன் அவன்விதித்த ஏவலின்படிக்கு மூன்றுதி
னம்போற்றி நான்காவதுதினம் நியமித்தகாலங் கழிந்தத
னுலே பேரறிவாளரான தபசிகுறித்தகாலங்கடந்தும் இ
துவரையினும் வரக்காணேம், இதுமகாஅதிசயமாகவிரு
க்கின்றது. அவர்சொல்லியசொல் தவறுவாரோவென்று
மனந்தளர்ந்து சகலராலும் புகழ்ந்து பூசிக்கும் மகிமையி
னையுடைய பத்திரகாளி ஆலயத்துள்சென்று முழுவது
ம்நாடிக்காணுமல் பட்டினமெங்குந் தேடியலைந்து மனம
யங்கிப் பித்தனுய்வாடித் திரும்பித் தன்மனைக்குள்வந்து
வஞ்சகனுகிய வாதிவைத்த குகையையெடுத்துஉடைத்து
இரும்பாகக்கண்டு குற்றமற்ற மனதைப்பெற்ற வணிகன்
இதுமாயவஞ்சகமென்றறிந்து உடனே மதிமயங்கிக்கரத்
தினிருந்ததை நழுகவிட்டு அதுவிழுவதின் முன்னந்தா
னும்நிலத்தின் மறிந்துவிழுந்து பொருள்நிலமுதலானஅ
னைத்தையுமிழந்தவாட்டமுங்காலமுங்குறுகியதால்தரும
தத்தனென்னும் வணிகன் உயிரிழந்து விண்ணுலகத்தை
ச்சேர்ந்துந் தருமத்துக்குரியநிலமுதலியவற்றைவிற்பனை
செய்த கொடியகாரணத்தினுல் அப்பாதகன்மதங்கொண்
டயானையாகப்பிறந்து பூர்வசம்பவங்களொன்றையுமறியா
மல் இதனைச்செய்தானென்று போதவுணர்வினுலறிந்தகு
ச்சகர் இப்பிறப்பைச்சிவகடாட்சத்தினுல் இந்நிமிஷத்தில்
மாற்றுவேனெனத் துணிவுகொண்டவராய்த் தாம்ஆதியி
ல் தவநிலையினின்றகாலத் தொருதினஞ்செய்த விரதபல
த்தை அக்களிற்றினுக்கு மனோவாக்குக்காயங்களால் ஒரு
மித்து தத்தஞ்செய்தமாத்திரத்தில் சூரியோதயங்கண்ட
பனியைப்போல அப்பாதகம்நசித்துச் செப்படிவித்தை
யைநிகர்த்து அவ்வுருவமாறிச் சகலரும்புகழ்தற்கரிய சுந்
தரமுள்ள தேவவுருவம்பெற்றுநின்றுன்.

அக்காலத்தில் அந்தரவாசிகள் தேவதுந்துமியாதியான
பலவாத்தியங்களையும் முழக்கிக் கற்பகமலர்மாரியைப்
பொழிந்து வாழ்த்த, அந்தட்சணமே ஆகாயத்தினின்று
ம் இந்திரவிமானமொன் றிறங்கியது, தருமதத்தனும்அ
தின்மீது இந்திரவோலக்கமாய் ஆரோகணித்தகாலையில்
உடனேரத்தினபரண பூஷிதைகளாகிய அரம்பாஸ்திரீக
ளளவற்றவர்சூழ்ந்து வெண்சாய்மரைகள், ஆலவட்டங்க
ளசைக்க, தேவகன்னியர்நடிக்க,விண்ணவராசீர்வதித்தெ
திர்கொள்ள, இவ்விதசம்பிரமகாலத்தில் தருமதத்தனுன
வன் ஞானோதயத்தையெளிதினளித்ததேசிகரானகுச்சக
முனிவர் பாதாரவிந்தங்களைக்குறித்து தியானித்துக் கரங்

களைக்கூப்பி வந்தித்தனன். அதைக்கண்ட தவசிரேஷ்ட
ரும் தருமதத்தனிடத்துக் கிருபாநோக்கம் பாலித்தருளி
னர் தேவவுருவம்பெற்ற வணிகன் அவனைநோக்கித் தன்
வாயினாலேபற்பலவிதங்களாகத் தோத்திரஞ்செய்துவண
ங்கி, சுவாமி! நீக்குதற்கரிய வல்வினையைப்போக்கி நற்க
திதந்தாண்டீர். உமதுகடாட்சவீட்சண்ணியத்தினால் தே
வருளொருவனாய் அவ்வாழ்வினிருக்கப் போகின்றனனெ
னச் செலவுபெற்றுப் பொன்னுலகையடைந்தான். அத
ன்பின்பு குச்சகமுனிவர் பழையபடியே நினைத்தற்கரிய
தவத்தைச்செய்ய யமதருமராஜனிரங்கி, யமபடாள்சூழ்
ந்துபோற்ற மகிஷாரூடனாக எழுந்தருளிக்காமம் வெகு
ளிமயக்கமென்னும் முப்பகைகளைவென்ற முனிபுங்கவ
னே! உன் தவநிலையுறுதிக்குப் புகழ்ந்தோம், நம்மாலாக
வேண்டுவதைக்கேளுந் தருவோமென்றருள, உடனேஅ
வர்பாதங்களில் பணிந்துபோற்றி சுவாமி? தவமேயோரு
ருவங் கொண்டதையொத்த கீர்த்திபெற்ற வுசத்தியமகா
முனிவர் பயந்தபெண்கொடியை அடியேன் குமாரனுக்கு
மணஞ்செய்ய நிச்சயித்தபின்பு நேற்றையதினம்அவமிரு
த்துவாயிறந்தனள் தேவரீர் கிருபையுற்றுப் பழையபடிக்
கு உயிருதவி இரட்சிக்கவேண்டுமெனப்போற்றஅதற்கி
சைந்தவராய்ப் பக்கத்தில்நின்ற தூதனைநோக்கி முந்திய
தினம் நீகொண்டுபுகுந்த அக்கன்னிகையினது பிராண
னை அதிசீக்கிரத்திற் கொண்டுவந்து சேர்ப்பையாகவென்
று கட்டளையிட்டு அத்தவமுனிவனைவாழ்த்தித் தமதுபதி
யையடைந்தார். அவர்உத்திரவின்படியே காலதூதனே
டியவ்வுயிரைத்தேடிநொடிப்போதில்வாடியிருக்குமுடல்
ற்கூட்டியவுடன் பிணமாயிருந்தவள் உணர்ச்சிபெற்றுச்
சற்றுமூக்கசைவுகொண்டு கால்கள்துடிக்க, மார்பிற்பதை
ப்புண்டாய்த் திருமுகமண்டலந்துலங்கிப் பூரணச்சந்தி
ரனையொத்துவிளங்க முன்னடைந்தவாட்டத்தினால் தாக
முன்டாய்க் கைகளைத்தூக்கிச் சைகைகாட்டிப் பசியமூங்
கிலைநிகர்த்த தோள்கள்பூரிக்கக் கண்களைவிழித்து நித்தி
ரைசெய்தெழுந்தவளையொத்துக் குதித்தெழுந்தாள். அப்
போது சகலருங்களித்து வண்டினங்கள் தேன்கூட்டை
மொய்ப்பதுபோலச்சூழ்ந்துகொள்ளப்பெற்றதாயானவள்
மேல்விழுந்து குமாரத்தியை ஆவலுடன்வாரியெடுத்து
மார்பினிறுகத்தழுவித்தழுவித் தாயே! இதுவரையினும்
யாமெல்லோரும்வருந்த எவ்விடஞ்சென்றனையென்றிரங்
கிமுகத்துடன் முகத்தைச்சேர்த்தும் முத்தமிட்டுங் கூந்
தலைக்கோதிமுடித்தும் உடையைத்திருத்தியும் முத்தாடு
ம்போது பிதாவோடிவந்து பரிவாகப் பெண்ணையேந்தித்
தோளினும் மார்பினும் பலகாலணைத்து முதுகைத்தடவி
யுச்சியை யடிக்கடிமோந்து மடிமேலேந்தியவராய் எமது
ஞானதேசிகனாகவுங் கடவுளாகவுந் தவப்பயனாகவுமெழுந்
தருளிய ஆசிரியர் நேற்றைத்தினமருளியவாறே அரியத
வத்தைச்செய்து இவளைப்பிழைப்பித்தாரென்றுசகலரும
றியக்கூறினர்.

அதனைச்சூழ்ந்திருந்த சுற்றமுதலானவர்கேட்டுஅற்பு
தமடைந்து களிப்படைந்திருக்கும் காலையில் நற்குணநி
சயங்களில் உலகமாதாவாகியபார்வதியாரைப்போன்றும்
அழகில் செல்வநாயகியாகிய ஸ்ரீமகாலட்சுமியைநிகர்த்து
மிராநின்ற குமாரத்திமுகத்தைநோக்கி அம்மா நேற்றை
த்தினந் தோழிகளைக்கலந்து இவ்விடம்வந்ததும், இறந்த
விதமும், மறுபடியுமெழுந்தசவிஸ்தாரங்களையும் வரன்
முறையாகப்பவளமொத்த வாயைத்திறந்துகாது குளிரச்
சொல்வாயென்ற வாக்கியத்தை கடககங்கணங்களையணிந்
தபொன்னாற்செய்தபதுமையையொத்தவளாகிய மகள்கே
ட்டுக் கிள்ளையைநிகர்த்த மழலைச்சொற்களினால் தான்தா
யினிடத்துச் செலவுபெற்றுப் பலதோழிப் பெண்களோ
டுகூடிச்சென்றதும், சலப்பெருக்கையுடைய கானாற்றில்
அவர்களோடு நீராடியதுஞ் சோலையிற்சென்று மலர்பறி
த்துத் திரும்புங்காலையின் மதயானைதுரத்தியதும். அதை
க்கண்டு பாங்கியர் கலைந்தோடியதும், தானொருத்தியாகத்
தனித்து அதிவேகமாய்ச் செல்லும்போது காலிடறிகிண
ற்றில்விழுந்திறந்ததுந் தென்தேசமாகியயமலோகத்திலே
தன்னைவைத்திருந்தசீரும் மறுபடியும் பழையபடி இங்
குவந்ததும் ஆதியோடந்தமாகச் சொல்லத்தெரிந்த பிதா
முதல் சகலருஞ் சந்தோஷசாகரத்தின்மூழ்கிக் களித்தி
ருக்கின்றதருணத்தில் குற்றமற்ற சாந்தகுணமே ஒருமு
லைஉருவம் கொண்டாற்போன்ற குச்சகமுனிவர் கொடி
யசூலத்தைத்தாங்கிய எமதருமராஜ னருளைப்பெற்றுத்
திரும்பிவருவதைக் கண்டவுடன் அமுதத்தைத் தேவர்க
ளெதிர்கொண்டாற்போல உசத்தியமுனிவரும் அவர்மனை
வியும் குச்சகமகாமுனிவர்தவத்தால் பிழைத்தெழுந்தபெ
ண்கொடியு மற்றையரு மெதிர்கொண்டு வலம்வந்து திரு
வடிகளைச் சேவித்துப்போற்ற, அவர்களிடத்துக் கிருபா
நோக்கம் பாலிக்கும்போது உசத்தியர் கரங்களைக்கூப்பி
ச்சுவாமி அடியேனுயிரையும், பெருஞ்சுற்றத்தினது பி
ராணனையும், இல்லறத்துக்கியல்பாகநேர்ந்த பத்தினியி
னது ஆன்மாவையும், இப்பாங்கிமார் உயிரைசங்காரகா
லம்போல மாளாமற் பாதுகாத்தருளத் தவமுயற்சியினா
ல்பெற்ற பெண்ணமுதி னான்மாவைத் தந்தருளினீர், கு
ரவனே? சமுத்திரஞ்சூழ்ந்த சராசரப்பிரபஞ்சங்களனை
த்தையும்பெற்றுக் காத்தழிக்குஞ்சிவபிரான்தேவரீரேயெ
ன்று என்னுள்ளத்தில் நிச்சயமாகக்கொண்டதால்இச்செ
ய்கைதேவரீருக்கருமையோ? ஈதொருபொருளோ! அல்ல
து அதிசயமோ? உமதுமகத்துவத்தையும்மனத்தூய்மை
யையும்யாவராற்கணிக்கப்படும், உமதுதிருக்குமாரனாகிய
கவுச்சிகனென்னுந் தூயோனுக்கு அடியேனுடையதவத்
திற்பெற்ற விருத்தையைப்பேசிக்கொள்ளஎழுந்தருளினீ
ரோ அல்லது கூற்றுவன்கொண்டுபோகும்உயிரைத்திரு
ப்பித்தந்து அவளுக்கிருந்த ஆபத்தினைநீக்கிஎங்களையும்
ஆட்கொள்ளத்தான்வந்தீரோ அடியேனுக்குண்மையைச்
சொல்லியருள்வீரென்று இவ்வாறுபலவுபசாரவார்த்தை
களைக்கூறி அவரையழைத்துக்கொண்டு மற்றையருடன்
தமது பர்னசாலையைச்சேர்ந்து குச்சகமுனிவரைவழிபட்
டுச் சிலநாள் சென்றபின்பு ஒருதினங்குரவனைவணங்கி,சு
வாமி தேவரீர்தயைசெய்து குமாரனைஅழைத்துக்கொண்
டுவந்து சகலருங்களிக்க என்பெண்ணைத் திருமணஞ்செ
ய்வித்தருள வேண்டுமெனப்போற்றச் சம்மதித்துச்சென்
று கவுச்சிகனென்னும் புத்திரனையழைத்து வந்தனர் உ
டனே உசத்தியர் தன்குமாரத்தியாகியவிருத்தையென்னு
ங் கன்னிகையைத் திதிவாரயோககரணநட்சத்திரபஞ்சா
ங்கங்சளமைந்த சுபமுகூர்த்ததினத்தில்தேவர்முனிவர்அ
க்கினிசாட்சியாய் வேதவிதிப்படிக்குத் திருக்கலியாண ம
ஹோற்சவ முன்னிலையில் தத்தஞ்செய்யப்பெற்றுச் சில
நாள் அவ்விடத்தில்தங்கியிருந்து மாதுலனிடத்தில்செல
வுபெற்றுக்கொண்டுதந்தையுடன் பழையதமதிருப்பிடஞ்

சேர்ந்து, பத்தினியும் தானும்உயிருமுடலும்போல அன்பினாலொருமித்து, சிறிதேனும் மனங்கோணாமல் மனையாள் வழிபடக்களித்துப்பலநாள் இல்லறத்தைநடாத்திவருவதைத் தந்தைகண்டுகளித்துமனக்கவலையொழிந்தவனாய்ப் புதல்வனையும் மருமகளையும்அவ்வனத்தில்நிறுத்தித் தான்வடபுரத்தில் தவஞ்செய்யச்சென்றனர்.

பின்பு மஹாத்துமாவான கவுச்சிகமுனிவர்தவமுயற்சியினாலுங் கற்புத்தன்மைவாய்ந்தபத்தினியினது விரதமுக்கியத்தினாலும் பூவுலகவாசிகள் புகழத்தக்க சிரோஷ்டராய் அரியவடிவைப்பெற்ற மிருகண்டென்னும் புத்திரனுதித்த ஆறுவயதுசென்றவுடன்பிரமசரியம்விளங்கப்பூணூற்கல்யாண முடித்துவேதாகமசாத்திரபுராணமுதலான வைதிக நெறிகளை வரன்முறையாகப்போதித்துப்பிதாவைப்போலவே தாமுந்தவத்தைமுடித்துப் பரமன்றிருவடி நீழலின்வாழும் மோட்சத்தைவிரும்பி மேருபர்வதத்தின் சாரலிற்சென்றார். இப்பால்புத்திரனும்கிரமப்படிக்கு, பிரதமத்தி லனுஷ்டிக்கும் பிரமசரியத்தைச் சிலநாளனுசரித்தபின்பு வேதவிதிப்படிக்குஇரண்டாவதுஇல்லறத்தையோம்பக்கருதி அதற்குரிய நற்குணநற்செய்கையுடைய கன்னிகையையாராய்ந்து முற்கலரிஷி புத்திரியாகியமருத்துவதியினது நல்லொழுக்க விலக்கணங்களைக்கேள்விப்பட்டு அவருடன்கலந்து பேசிவேதவிதிப்படிக்குத் தேவர்முனிவர் அக்கினிசாட்சியாகத் திருமணம் புரிந்து கிரகஸ்தாசிரமத்தை வரன்முறையாக நடாத்திவருகின்ற நாளில் புத்திரப்பேறின்றி வருந்திச்சுற்றமுந் துணைவியுந் தொடர்ந்து வரக்காசிப்பட்டணத்தையடைந்து முன்னந் தேவர்கள்கடைந்தமுதம்பெற்றதிருப்பாற்கடலையொத்து வெளுத்துமதுரமாகிய சலப்பிரவாகத்தையுடைய கங்கையென்னுந்திருநதியில்தீர்த்தமாடி தவசிரோஷ்டராதியான புண்ணியவான்கள் நெருங்கியிருக்கும் விசாலமானமாடவீதிகளைக்கடந்து பொன்மயமாயோங்கிப் பரந்திருக்கும் பிராகாரகோபுர மண்டபமுதலியஅலங்காரங்களினால் பிரகாசிக்கும்திருமணிகன்னிகையென்னும் ஆலயத்தில் நுழைந்துஉள்பிராகாரத்தைவலம்வந்து சந்நிதானத்தையடைந்து மும்முறைவணங்கிச் சந்திரசடாதரனான சாம்பசிவமூர்த்தியின் நடனபாததரிசனம்பெற்றுச் சுருதிவாக்கியங்களினால்போற்றி வேதசாத்திரசம்பன்னனான மிருகண்டுவானவர் அந்தக்கோயிலுக்கருகில் இருப்பிடமொன்றண்டுபண்ணிப்புகழ்தற்கரிய வாகமங்களில்குறித்திருக்கும் முக்கியவிரதங்களை முடித்து ஸ்ரீகாளகண்டமூர்த்தியை வழிபட்டு வருஷத்திற்குரிய ருதுகாலங்களாறினும் வெயில்பனிமழை குளிர்முதலியவருத்தங்களுக்கெவ்வளவுமனமிடைந்து வாடாமல்பார்வதிபாகனான சிவபிரானைத்தியானித்து, புத்திரப்பேற்றைவிரும்பி ஒருவருஷகாலம் அரியதவங்களைச்செய்து வருகையில் அவன்பத்திக்கிரங்கித் திரிபுரதகனரான தேவதேவர்விருஷபவாகனரூடராய்எழுந்தருளக்கண்டு முனிபுங்கவனெழுந்து ஆனந்தக்கூத்தாடி பிரதக்ஷணம்வந்து வணங்கிப்பலவிதமாகத் துதித்துக் கரங்களைக்கூப்பி நிற்கஅவனைநோக்கித் தபோநிதியே உன்மனோபீஷ்டத்தைச் சொல்வாயென்றருளச்சகலசிவதயாபரமூர்த்தியே புதல்வரின்றி வருந்துகின்றனன் அப்பேற்றையளித்தருளவேண்டு மென்று விண்ணப்பஞ்செய்யப்பரமன்நகைத்தருளித்திருவுளம்பற்றுவார்.

முனிவனே துர்க்குணமிகுத்துச் சற்றும்நல்லறிவின்றி ஊமையாய்க் கூன்முடங்குருடுமாய் நூறு வயதைப்பெற்றுப் பிணிகளிலுழன்றலையும் பிள்ளைவேண்டுமோ அல்லது ஒப்பனையற்ற வனப்பினையுங் குறைவற்ற வடிவையும் பெற்று வருத்தும்பிணிகளின்றி நம்மிடத்துப் பத்திவிசுவாசம்பெற்றுப் பதினாறுவயதுபெற்றுப்பலகலைகளையுங் கற்றுத் தவவலிமையிற்சிறந்திருக்கும்பாலனைப் பெறவிருப்பமோயாதோ உன்னெண்ணத்தைக்குறியெனக்கேட்கத் தவசிரோஷ்டரானவர் அதைச்சீர்தூக்கிப்பார்த்து ஐயனே வயதுகுறைந்தாலும் பேரறிவாளனாய்த் தேகவுபாதியற்றுயாவர்க்குங்கடவுளாகிய தேவரீரிடத்து உண்மையாகிய பத்திவிளங்குங் குமாரனையே வேண்டுவேன்அவ்வாறேகிருபையுற் றளிப்பீரெனத்துணிந்துகேட்கப் பரமன் களித்துமுனிவனே நீநினைந்தபடிக் கொருசுபுத்திரனையளித்தோமெனத் திருவாய்மலர மிருகண்டு மகிழ்சிறந்து வாழ்த்திவிடைபெற்றுச்சந்தோஷ சாகரத்திலாழ்ந்தவராய்ச் சுற்றமுந் துணைவியுங்களிக்க வாழுநாளில் பூமிதேவி கவலைநீங்கிக்களிக்கவும் நன்மைக்குரியதரும தேவதைநான்குபாதங்களில் நடக்கவும்பெருமைதங்கிய தவமுனிவர் மகிழ்ச்சியடைந்து நடனஞ்செய்யவும், சைவசமயம்வளர்ந்தோங்கவும் தேவாதிதேவனான சிவபிரானனுக்கிரகத்தினால் யமனைவெல்லுதற்குரிய மேம்பாட்டினைப்பெறுங் குணநிதியாகிய சற்புத்திரன் மிருகண்டு மஹாமுனிவர்தமது தேவிவயிற்றில் கருப்பமாய் அடைந்ததையறிந்தவுடன்சாஸ்திரசம்பன்னரான பிதாவானவர்களித்துப் பரமசிவனுக்கபிஷேகமுதலானதிருவிழாக்களைநடாத்திச்சிவனடியார்களுக்கு வேண்டியமட்டும்பொருள் அணிமணி ஆடைமுதலான பலவளங்களையும் வேண்டியமட்டும்கொடுத்து இவ்விதமாக மாதந்தோறும் விதிப்படிக்குச் சகல சிறப்புகளையும் வழுவாமல்செய்து வருகையிற் பத்துமாதங்களும் நிறைவெய்திப் பங்குனிமாத முடிந்ததினத்தில் மிதுனலக்கினஞ் சம்பூர்த்தியாயிருக்கவுஞ் சுக்கிரனும் பிரகஸ்பதியும் உச்சத்திற் சுபகரமாய்நிற்கவுஞ் சூரியன் முதலிய மற்றகிரகங்கள் குற்றமற்ற இடங்களிற்பொருந்தவும்இத்தன்மையாகியசுபகரமானகாலத்தில்விஷத்தினைக்கக்குங் காளிகராளி மாதங்கியென்னுங் கூரியபற்கள் விளங்கக் கொடிய சீற்றத்தினைப் பெற்றஇராகு வென்னுங் கரும்பாம்பினால் கவ்வப்பட்டுத்தேகம்ஒளிமழுங்கிக்காட்டிய சந்திரன்அதைக்கடந்தவுடன் உலகம் விளங்கிக்களிக்கத்தக்கதாய் அமுதகிரணகூட்டங்களைவெளியிட்டதைப்போல அஷ்டஅயிஸ்வரியங்களைத்தரும்மகத்துவத்தையுமுடைய ஸ்ரீமஹாலக்ஷுமியையொத்த பதிவிரதாசிரோமணியாகிய ரிஷிபத்தினியானவள் கருப்பயாதனைபட்டுத் தேகம்வாடச் சிறிதுபொழுதில் திரிலோகங்களுமீடேறத்தக்கதாய்வேதங்களையோதுஞ் சிவந்தவாயைப்பெற்ற குழந்தையை பிரசவித்தாள் இவ்வாறு புத்திரனுதித்ததைக் கேட்டவுடன் பெற்றதாயானவளுற்ற களிப்பைச்சொல்லவறியோம். மற்றச்சுற்றத்தாரும் அவ்விடத்திற் பொருந்தியவரும் ஏகமாய்த்திரண்டு நவரத்தினங்களையும்பொற்காசுகளையும் பரிமளமிகுத்த பொற்சுண்ணப் பொடிகளையுஞ் சுகந்தபரிமளங்கள்வீசு மலர்களையும் மகரந்தப்பொடிகளையும் கலவைச்சாந்துகளையுங் குளிர்ந்த கஸ்தூரிகலந்த சேறுகளையுந் தலைத்தலைகொண்டுஉயர்ந்த விண்ணுலகத் திருக்குந்தேவரும் மண்ணுலகத்துறையும் மாந்தரும்

வியந்து கொண்டாடத்தக்கதாய் வீறிகொக்கும் இறைத்துசந்தோஷங்கொண்டாடி ஆர்ப்பரித்தார்கள் அக்காலையில் தோற்கருவி துளைக்கருவி நரம்புக்கருவி கஞ்சகருவி மிடற்றுக்கருவிகளாகிய பஞ்சவாத்தியங்களாகியதேவதுந்துமிகள் சமுத்திரகோஷ்டியினும் மேலிட்டு முழங்கவுந் திரிமூர்த்திகளன்றி மற்றவிண்ணவர் கற்பகமலர்களைத் தூவிச்சுகசிவியாயிருந் திம்மைமறுமை யின்பங்களையொருங்கெய்தப்பெற்று அமுதம்போலச் சகலருக்குமுதவியா யிருக்கக்கடவ னென்றாசிர்வதித்தார்கள்.

சைவுனகாதிரிஷிகளே அக்காலையிலுண்டாகியசம்பிரமத்தினையிப்படிப் பட்டதென்றுநம்போலிகளாற் கணிக்கப்படாது அதற்குத் திருஷ்டாந்தஞ்சொல்லக்கேட்பீராக அந்நகரமே முதற்சமுத்திரஞ்சூழ்ந்தபூமண்டலங்களிலிராநின்ற நாடுநகரங்கள் முதலாகிய இடங்களிலிருக்கும்மக்கள்தங்கள்தங்களுக்கொரு பெரிதாகியநன்மைகிடைத்ததைப்போலவே பரமனைப்போற்றி இரவலர்க்குத்தானங்கள் வழங்கிச்சுற்றங்களுடனுண்டுமகிழ்ந்திருந்தனர் பிதாவானவரு மிச்சந்தோஷவார்த்தையைக் கேட்டவுடனோடிப் பரிசுத்தமாகிய கங்கையின்முழுகிப் பிராமணர் சிவனடியராதியருக்குச் சொர்னமுதலான சோடசமகாதானங்களையுங் கரங்கள்சிவப்பக்கொடுத்து ஓமமுதலாகிய சிறந்தசடங்குகளை வரன்முறையாகச்செய்து வரும்போதுபிரமனெழுந்தருளி, பிள்ளைக்கு மார்க்கண்ட னென்னு நாமகரணஞ்செய்து ஆசீர்வதித்துத் தன்பதியைச்சேர்ந்தனர் பின்புதாயானவள் பரிவாக வளர்க்கின்றகாலத்தில் மறுவற்ற பூர்வபட்சசந்திரனை நிகர்த்துத்தினமொருமேனியாக அப்பாலன் வளர்ந்துவருகின்ற காலையில் மாதந்தோறுஞ் செய்யுஞ்சடங்குகளைக் கிரமப்படிக்குநடாத்தி அன்னப்பிராசனமுமுடித்து ஒருவயதுநிறைவெய்தியவுடன்சவுளமென்னும் மயிர்வினையைச் சிறப்பாகச்செய்துமுடித்து இரண்டாமாண்டில் தமதிருப்பிடத்தையலங்கரித்துச் சுற்றம்அந்நகரவாசிகள் திரண்டுகளிக்கப்பல்லியங்கள் முழங்கத் தானங்கள்வழங்கிக் காதுகுத்து முறையைநடத்தி ஐந்துவயதானவுடன் நற்சுபதினத்தில் மங்கலவாத்தியங்கள் முழங்கச்சிவபிரானைவழிபட்டு முனிவர்களும்பிராமணர்களும் சூழ்ந்துவேதவிதிப்படிக்குச் சடங்குகளைநடாத்திவாழ்த்தப்பற்பலதானங்களை வழங்கிப்பூணனூற்கலியாணமும் வித்தியாரம்பமுஞ் செய்து கலைகளனைத்தினையுந்தெளிவெய்த வாசிப்பித்து முற்றியகாலையின் வேதாகமபுராண இதிகாசங்களினது உண்மைப் பொருள்களைத் தெளிந்துஅவைகளுக்குக்காரணனாயுந் தேவதேவனாயுஞ் சுயம்பிரகாசனாயும் எங்கும்நிறைவெய்தி முத்தொழிலையும் அருட்சத்தியாலே முறையேநடாத்துந் திருவிளையாடலைச்செய்யும் மூலகாரணன் சிவபிரானென்றறிந்து அவரதுதிவ்வியசரணாரவிந்தங்களில் தஞ்சமடைந்தவனாய் அன்றுமுதற்காலையினெழுந்திருந்து, நித்திய கடன்களைக்கழித்துப் பரமேஸ்வரனை வேதவிதிப்படிக்கு வழிபட்டுவணங்கியும் அவனன்பரை அவனைப்போற்கருதித் தாழ்ந்துஉபசரித்துந் தனது உபதேசகுருவைப்பத்திவினயத்துடன்தொழுதுங் குற்றமற்ற தவசிரேஷ்டர்முதலானபெரியோர்களுக்குத் தொண்டுசெய்தும் அவர்களால் போதிக்கப்பட்டான்னெறிகளைச் சிரவணஞ்செய்துந்தன்னையீன்ற தாய்தந்தையர் திருவடித்தாமரைகளைச் சிரத்துக்கலங்காரமாகத் தரித்து அவர்களைப்பாதுகாத்தும் இவ்வாறு நடாத்தி வருங்காலையில் தனதுபிறவியைநீத்தற்குரியபுனிதன் சிறந்தபிரமசரிய ஆசாரவொழுக்கங்களை யனுஷ்டித்து வருந்தருணத்தில் பதினாறும் வயதுபிறந்தது, அத்தினத்தில் புத்திரசிகாமணியைக்கண்டவுடன் அருமையாகப்பெற்ற தந்தையுந்தாயும்மைந்தனே மைந்தனேயென்றுதனித்தனிபுலம்பித் துக்கசாகரத்தினாழ்ந்துதிரும்பியும் பிரலாபித்துவருந்துவதைப் பிள்ளைகண்டு பயபத்தியுடன் சமீபத்திற்சென்று அவர்பாதங்களில்நித்தியப்படிக்குச்சேவித்து நீங்கள்மிகவும் நடுக்குற்றுஅழுகின்றீர்இதற்கொரு ஏதுவையுங்காணேன் விசனத்தை பொழிந்து உங்களுக்கடுத்திருக்கின்ற துன்பத்தை அருளிச்செய்வீரெனப்போற்றும் குமாரனைவாழ்த்திஎமதுஐயனே அருந்தவக்கொழுந்தாய் எங்கள்பிராணனையொத்துஎம்மை நீபாதுகாத்துக்கொண்டிருக்க வொருகுற்றமுநேருமோஅப்பனேஎங்கள்மனக்கிலேசத்தைக்கேட்பாயாகமுன்னம்நெடுங்காலம் புத்திரனில்லாமையால் பரமனைக் குறித்துத்தவவிரதங்களைச்செய்தோம் அப்பொழுது, சுவாமிரிஷபவாகனரூடரா யெழுந்தருளி உன்னையனுக்கிரகித்துப்பதினாறுவயது சென்ற முடிவிலிறப்பாயெனவுந் திருவுளம்பற்றிப்போயினர் அவ்வருஷம் இன்றையதினம் பிறந்தகாரணத்தினால் சத்புத்திரனை யிழக்கப்போகின்றோமென்னும்மனவருத்தத்தினால் துன்பமுற்றிருக்கின்றோம்மற்றொன்று மில்லையென விழிகளில் தாரைதாரையாகநீரைப்பெருக்கிக்கொண்டு சொன்னதந்தை முகத்தைநோக்கிஅத்தனே இஃதொருபெரிதாகவெண்ணி யிரங்கவேண்டாம்,சகலசிவதயாபர மூர்த்தியாய்எங்கும்நிறைந்து நிற்கும்சங்கரனை யருச்சனைமுதலிய பூசனைகளைச்செய்து அவன்கடாட்ச வீட்சணியத்தினால் யமதண்டனை கடந்து அதிசீக்கிரத்தி லுங்களிடத்திற்கு வருவேன் அதுவரையினும்தயிரியங்கொண்டு இவ்விடத்திலிருப்பீரென்று அதற்கடுத்த ஏதுக்களைப் பல விதங்களிற்காட்டித் தேற்றி ஒருமிக்கச்செய்து திருவடிகளில் தொழுதுநிற்குஞ் சகலசாத்திரபண்டிதனைபிள்ளையையணைத்து உச்சியைமோந்துமுத்தமிட்டுச் சகித்தற்கரிய வருத்தத்தினை ஒருவகையாயொழித்து தாய்தந்தையர் மனங்களித்தனுப்ப விடைபெற்றுப் பரமனருளும் அன்பும்வழித்துணையாகச்செல்ல வொப்பற்றகளிப்புடன் அதிசீக்கிரத்தில் அவ்விடம்நீங்கிபொன்மயமாயோங்கிநிற்குந் திருமணிகன்னிகையென்னும்ஆலயத்துட்சென்று ஸ்ரீவிசுவநாதனைத் தரிசித்து மனங்களித் தென்புநெக்குருகவும் விழிகளிலானந்த வாரிபெருகவும் வலம்வந்துஅஷ்டாங்கபஞ்சாங்க திரியாங்க யேகாங்கமாகச் சந்நிதானத்தில்வணங்கிப்பரமன்திருவடிகளை முடியிற்சூடிப் போற்றியபின் அவ்வாலயத்தில் தென்பாரிசத்தில் ஓரிட மமைத்துக்கொண்டுபரமசிவத்தினுருவமாகிய இலிங்கத்தை ஸ்தாபித்து வேதாகமவிதிப்படிக்கு அன்புடன் காலங்களில் அருச்சித்தேத்தி, அரிய தவவிரதங்களைச்செய்து வருகையில் சிவபிரானெழுந்தருளி நம்மிடத் தன்புள்ள பூசனைகளையும் அரியவிரதங்களையுந்தேகவாஞ்சையற்று வருந்திநீடித்துச் செய்துவருகின்றாய் நாமிகவு மகிழ்ச்சிகொண்டோம் தவசிரேஷ்டனே இனியுனக்குவேண்டியவரங்களைத் தருவோங்கேளென்றுதிருவாய்மலர்ந்தனர் தட்சணமேகரங்களைக்கூப்பி விண்ணப்பஞ்செய்வான்.

அம்மையப்பனைப் சராசரப்பிரபஞ்சங்களைப் படைத்தாளுங்கர்த்தனே பற்றற்ற நிர்மலக்கடவுளே எள்ளினுளெண்ணெயைப்போலவெங்கும் நிறைந்துவிளங்குநித்தியத்தைப்பெற்றசோதியே! தேவதேவனே! பரஞ்சுடரே! உலகையழிக்கவெழுந்த அழலையடக்கிக் கரத்திலேந்தி அண்டரண்டபுவனங்களைப்பாதுகாத்த தயாநிதியே! தேவரீர் பாதங்களுக்கடிமைபூண்ட அடியேன்யமபாசத்திலகப்படாமல் அம்மரணகாலத்திலெழுந்தருளிப்பிராணனைக்காத்தருள வேண்டுமென்று பலவாகப் போற்றி நின்றனன். அவனைக் கிருபாநோக்கமாகப்பார்த்துப்பின்னாய்காலனுக்குச் சிறிதேனும் அஞ்சலை அஞ்சலையென்று உபய சரணாரவிந்தங்களையும் பத்தன் சிரத்திற்சூடினர். அப்பொழுது மார்க்கண்டன் சந்தோஷ சாகரத்தினாழ்ந்து தேகம் பூரித்து புளகாங்கிதனாய் விழிகளில் நீர்துளிக்கநாயேன் உய்ந்தேன்உய்ந்தேனென்றானந்தக்கூத்தாடிநிற்கின்றவேளையில் திருப்பாற்கடலினுதித்துப்பிரமனாதியரையழிக்கவெழுந்த காளகூடத்தையுண்டுகண்டத்தில்தரித்துஅவர்களைஆண்டகடவுள்மறைந்தனர் அதன்பின்னும்பழையபடியே சிவலிங்கத்தைப்பூசனைவழிபாடுகள்முன்னினும்முக்கியமாகச்செய்து வரும்பொழுது பதினாறுவயதும் பூரணமாயிற்று.

உடனே ஆகாயத்தில் சஞ்சரிக்குங்காளமேகம்நவழிவிழுந்ததைப்போலப்பருத்துக்கறுத்தவுடலைப்பெற்றுமூன்றும் பிறையைநிகர்த்துக்கோரதந்தங்கள் விளங்க, மின்னலை யொத்துப் பிரகாசிக்கும்முத்தலைச்சூல மொன்றைக்கரத்திற்பற்றி, அதிவேகங்கொண்டொருயமதூதன் அவ்விடத்தில் வந்து, ஆதியிலுலகங்களை யழித்துத்திரிந்த திரிபுரங்களை நகைத்தெரித்த சிவக்கொழுந்தினது திருவடிகளைத்தியானித்து மனோவாக்குக்காயமொருமித்துச்செய்யும் பூசனையைக்கண்டு உடனேநடுநடுங்கி மனமலைந்தவனாய் இம்மார்க்கண்டனருகில் செல்வதே அரிதாயிருப்பதால் அவனுயிரைப்பற்றிக்கொண்டு போவதெவ்விதம் இது நம்மாலாகும் காரியமல்லவென்று யோசித்து நிற்கவுமஞ்சிக் கண்களில்கனற்பொறிசிதறப் பாய்ந்தபுலியானது தான்புசிக்கநினைத்த இனாவல்பெற்றதாற் கொல்லச்சக்தியில்லாமலோடியதைப்போலவே வந்தவேகமாறி மனங்கலங்கித் திரும்பிஅத்தூதன் யமபுரம்போய்ச் சபாமண்டபத்திற் கொலுவீற்றிருக்கும் தமது தலைவனைக்கண்டு வணங்கி இந்திரன்முதலாகப்புகழவாழும் இறைவனே! கேட்டருள்க, அந்திவண்ணனான பரமசிவத்தின்கண் இடைவிடாது மனதைச்செலுத்த வல்லவன் பரமசிவன் பாதகமலங்களையெக்காலமுந்தொழும் கருத்தைப்பெற்றவன் இராப்பகலாக அவன்புகழ்களையேஓதும்நாவைவாய்ந்தசுகுணன் ஈசனது உருவமாகிய இலிங்கத்தினைக்காலங்கடோறும் திவ்வியபரிமள மலர்களால்அருச்சித்திருக்குஞ்சிரேஷ்டன் காமக்குரோத லோபமதமாற்சரிய மென்னுங்குற்றங்களைக்களைந்து பழுத்தமனதைக்கொண்டவன் ஞானபாதத்தினுக்குரியபேரறிவாளன் பிராமணகுலோத்தாரகன் மகத்துவமுடைய காசிப்பதியின்வாசஞ்செய்யும்பேறுடையவன், மார்க்கண்டனென்னுஞ் சிறந்த நாமம்படைத்தவன், இவ்விதமகிமைகளைப்பெற்ற பாலனுக்குமரணகாலங் குறுகியதால் தேவரீர் கட்டளையின்படிக்குப்போய்ப் பார்க்குமிடத்தவன்செய்யும் நற்கரும பூசாபலவலியினால் நெருங்கவும்படாமல்அஞ்சியெதிரினுஞ்சென்றவனுமல்ல திரிநேத்திர தாரியாகிய கர்த்தன் சந்நிதானத்தைப் பிரிவின்றி யிருத்தலாலவன் பிராணனைக்கொண்டுவருவதென்னாற் கூடுவதல்ல, ஆதலால் தண்டநாயகனே! யிதற்கு வேண்டுவதைக் கட்டளையிடுகவெனத்தூதன் அறிக்கையிட்டனன்.

உடனே ஆறியசெந்தழலில் நெய்யையூற்றியதைப்போலச்சீறிப் புகையுமனலுமெழப்பெருமூச்செறிந்து அந்தப் பையல்சிவபூசை செய்ததினால் அழிவில்லாத கர்த்தனாவானோவென்றுகொதித்து இந்நிமிஷத்தில் நமதுசமஸ்திகளை யழைப்பீராக வென்றாக்கியாபிக்கப்பக்கத்திலிருந்த தூதரிலொருவன் வணங்கியோடிக்கருணீகருக்குத்தலைவர்களைக்கண்டு நமதிறைவனும்மைக் கியாபகஞ்செய்தனனென்றனன். தட்சணம்கணக்குச்சுருளையும் எழுத்தாணியையுங்கொண்டு விரைந்துவந்து யமதருமராஜன் பாதங்களிற்சேவித்துக் கரங்களைக்கூப்பி நிற்கின்றவரைநோக்கி பிரமாதிதேவர்களாலும் அரிதற் கரிய வீரகண்டையணிந்த பாதாரவிந்தங்களைப்படைத்த பரமசிவநாதனையருச்சித்தேத்தி யிருக்கும்குற்றமற்ற காட்சிபெற்ற மார்க்கண்டனென்னுந் திருநாமமுமுடைய சிறுவனுக்கிறுதிகாலத்தைச் சோதித்துரைப்பீரென்று கூறக்கேட்ட சித்திரனென்றுங், குத்தனென்றும்,பெயரைப்பெற்றவர்கள். மேலும், அறிவாளிகளாயுஞ் சமரசகுணங்களைப் பெற்றவராயும் உணர்விற்சிறந்தவராயுமிருப்பவர்கள் இவ்வகைமேலான சிறப்பைப்பெற்ற கருணீகாகள் தங்கள்கரத்திலிருந்த சுருளைவிரித்துத் தள்ளிக் கணக்கையாராய்ந்து பார்த்துக் கூறுகின்றனர், சுவாமி! நெற்றிக்கண்ணையுடைய கடவுள் பூர்வத்தில்அவனைக் கடாட்சித்தபோது பதினாறுவயதிவனுக்கென்று நிச்சயித்தருளினர். அதுவும்நேற்றையதினத்துடன் கழிந்தது. ஆனாலவன்செய்த சிவபூசைமுக்கியமான தவமாயிருக்கின்றது. முதிர்ந்ததவப்பேற்றைவாய்ந்த முனிசிரேஷ்டராலும் அஷ்ட அயிஸ்வரியங்களைப் பெற்று முப்பத்திரண்டறங்களைவளர்த்தபுண்ணியவான்களாயினும் ஞானவறிவையுடைய யோகியராயினும்புசபல பராக்கிரமம்பெற்ற சூரரோயாயினும் பிரமவிதியைக் கடக்கவொண்ணாது அப்படிக் கடந்தவரை யிதுவரையிற் கண்டதுமில்லை, இப்பாலகன்செய்தநற்கருமபூசாபலத்தினால்கொடிய நரகவாதனையைக்கடந்து தெய்வலோகவாழ்வி னிருக்கப் பெறுவனென்று அவ்விருவரும் படித்தவுடன் தருமனதிககோபங்கொண்டு முக்காலங்களையும்உள்ளங்கை நெல்லிக்கனியைப்போலத் தெளிந்துரைக்கவல்லவனாய் மிகுந்தபராக்கிரமமுடையவனாய்மந்திரித்தலைமையும் பெற்றிருக்கும் பெருமையைவாய்ந்தகாலனையழைத்துப் பிராமணபுத்திரனொருவன் தன்வல்லமைகாட்டிக்கொண்டு காசித்தலத்திலிருக்கின்றானும் அவனுயிரைக்கவர்ந்துகொண்டு வரக்கடவாயென்றுகூற, வுடனேவிடைபெற்றுச் சிலதூதருடன் பூமியிலிறங்கிக்காசிப்பதியைச்சேர்ந்து குற்றமற்றதவசிரேஷ்டனிருக்கு மிடத்தையடைந்து பிராமணோத்தமன் பூசாவிதிக் கிரமங்களையும்அதற்கடுத்த வழிபாடுகளையும்பார்த்து இப்பேற்றைக்கிடைத்தவன் நம்முடன்வருவதேதென் றேக்கங்கொண்டு அவன்விழிகளுக்குத் தோற்றமாக எதிரிற்போய் வணங்கிநிற்க, மார்க்கண்டன்கண்டு நீர்யார்சொல்லு மென்றுகேட்க வுடனே உடல்கள்தோறு மிராநின்ற உயிர்களைக் காலங்கருதி முடிக்கும் ஆக்கினையைச்செலுத்துகின்றனமன்ப தங்களைப்

போற்றி அவன்பணிவிடையை நடாத்துங்காலன் யான் இவ்விடம் வந்தகாரணமென்னவென்றுகேட்பீராயின் பூர்வத்தில்நடந்த சவிஸ்தாரங்களைக்கேளும்ஆதிமூர்த்தியாகிய பரமசிவம் உமக்குநியமித்த பதினறுவயதும் நேற்றையதினமே கழிந்தது. இனிநீர் தென்தேசத்துக்கு வரவேண்டும் இக்கருமம் ஒருவராலுந்தடைசெய்யப்பட்டதல்ல மேலுஞ் சிருஷ்டிகர்த்தாவாய் மும்மூர்த்திகளி லொருவராக விளங்கும் பிரமதேவராலுந் தடைசெய்யப்படாமல் காலமுடிவிலடையத்தக்கது கர்த்தனனுக்கிரகப்படிக்கு சம்பவிப்பதன்றிவேறல்ல, அவ்வாறடுக்குமாயின் அத்தினமே அழிதலும்ஆதலும் முடிவுபெறும்இவ்விதமாகவே கூற்றுவனும் உயிர்களைப்படுக்கின்றகாரணமும்ஸ்ரீகாளகண்ட மூர்த்தியினது கட்டளையாகும், ஆதலால், உம்மையழைத்துவரச்சொன்னர். இஃதன்றியும் நிர்மலமூர்த்தியின் பாதாரவிந்தங்களை அருச்சித்துவரும்பெருமைகளைத் தூதர் சொல்லக்கேட்டு மகிழ்ந்து உம்மைக்காணநினைந்து சந்தோஷத்துடனே எதிர் பார்த்திருக்கின்றான் அழிக்குந்தொழிலைக்கொண்டதனல் இவ்வுண்மை தெரியாதவர் செய்கையைப்பற்றிக் கொடியவனென்பர். காலமுடிவைப்பெற்ற உயிர்க்கூட்டங்களை யெல்லாந் தனக்குரிய முறைப்படிஅழித்துவருவான். உலகங்களனைத்தினும் அவனைத்தருமனென்பதைக் கேட்டதில்லையோ? மனதில் யாதொன்றும் நினையாமல் தென்பாரிசத்திலிருக்கும்யமலோகமாகிய சமனுவதிக்கென்னுடன் வருவீராயின்அவனெதிர்கொண்டு கரங்களைக்கூப்பி வணங்கிப்போற்றிஉபசரித்து வளமிகுத்த போகபூமியாகியதேவேந்திரபதவியைத்தருவான். தடைபேசாமல்வாருமென்றனன்.

உடனேமார்க்கண்டர் நகைத்து, சந்திரசடாதரக்கடவுளை வழிபடும்அடியவர்கள் இந்திரனுலகையும்விரும்பார் அல்லது கூற்றுவன் பதவியினும் உன்னுடன்வரவறியார். சிறந்தோங்குஞ் சிவகதியிற்சேர்ந்தின்புற்றிருப்பர்லோகநாயகனை சிவனடியருக்கடியனுயிருக்கப்பெற்றயானும் அவ்வாறே உமதிறைவனை எமன் நகரத்துக்கும்வரமாட்டேன் பிரமன்விஷ்ணு பதவிகளையுங் கனவிலும் நினையேன். வீண்வார்த்தையடாடுவதிற்பிரயோசனமில்லை. இவ்விடத்தில் நில்லாமற் சீக்கிரமாய்வந்தவழியைநோக்கிப் போவாய் போவாய்என்று உருத்துச்சொல்லக் காலன்எதிர்மொழிகூறப்பயந்து நம்மிடதந்திரத்தில்அகப்படுகின்றவனல்லவென் ருலோசித்தவனுய்ச் சீக்கிரமாகத் திரும்பிப்போய் யமனைவணங்கி நடந்தசேதிகளைத் தெரிவித்தவுடன் மனம்பதைபதைத்துச்சரீரமெங்கும்வியர்க்க,கண்களில் அனற்பொறிசிதறப் புருவம்வளைந்து நெற்றியிலேற வடவாக்கினியைப்போற்கோபித்துப் பரிசனனைநோக்கி நமதுவாகனமாகிய கடாவைத்தருவீரென்றனன். உடனேகொண்டுவந்தெதிரில் நிறுத்த அதின்பிடரியில்மதயானையைப்போல ஆரோகணித்துப் பல தூதர் முத்துக்குடைகள்-ஆலவட்டங்கள்- வெண்சாமரைகளேந்தித்தொடரப் படைவீரர்குலம் பாசந்தண்டம்முதலான படைகளைத்தாங்கிப் போற்றிச் சூழ்ந்துவரத்தன்னகரைக்கடந்து காசிமாநகரத்தில் ரிஷிபுத்திரன் பரமனைவழிபட்டிருக்குமிடத்தைச்சேர்ந்து சிவந்தசிகையுங் காளமேகத்தையொத்து விளங்கும்கறுத்தமேனியுங் கோபாக்கினியை வீசுங்கண்களும் விளங்கக் காலபாசம்முத்தலைச்சூலம் வயிரத்தண்டமுங் கரங்களிற் பற்றிக்கொண்டு எதிரில் வந்து நின்றனன். மார்க்கண்டர்கண்டுஎமன்வந்தானென்றறிதுந் அவன் கொடியசெய்கைகளையும் பார்த்துச்சஞ்சலப்படாமல் தேவாதிதேவனை சிவபிரான் திருவடிகளில் வணங்கித் துதித்திருப்பதை எமன்கண்டு பிள்ளாய்நீஎன்ன காரியத்தைநினைந் தென்னசெய்தாய் ஊழ்வினைச் சம்பவமுஞ் சிவபிரான் கட்டளைநியதியும் ஒருவரால்அழிக்கப்படுவதோ! பிராரத்துவ கர்மவலியைக்கொஞ்சமாவது நினைந்தவனல்லஉறுதிப்பாட்டையும் அறிந்தவனுகக்காணவில்லை, பிறப்பதும் இறப்பதும் சர்வசாதாரணமாயிருப்பது இதனையெடுத்துச்சொல்லவும்வேண்டுமோ! சிறந்த தவசீலருக்காயினுங் கூடாதஇக்கருமத்தைப் பேதையறிவைக்கொண்டு சாதிக்கலாமென்றெண்ணி இவ்விதமாயொளித்திருப்பது சாத்திரசம்பன்னராய் நிச்சயத்தையுணர்ந்தபுருஷருக்கடுக்குமோ! பரமேஸ்வரனுடைய சரணார விந்தங்களில் மனதொருமித்த பத்தியுடன் நித்தியமும்நீசெய்யும் பூசனையின்முயற்சியானது கொடியபவத்தைப்போக்கும் அல்லது நானுருத்துவீசும் பாசவன்மையை விலக்கவும்வல்லதோ! அலைகள்வீசுகின்ற சமுத்திரக்கரையின் மெல்லிதாய்க் குவிந்திருக்கும் மணலை யெண்ணினலும் ஆகாயத்தி லடர்ந்திருக்கும்நட்சத்திரங்களைக்கணித்தாலும் என்னுக்கினைப்படிக்கிறந்த இந்திரர்களையெண்ணவும்படுமோ? இஃதன்றியுங்காலாதிகளிலிறந்த தேவர்களையும் புயவலிபெற்ற இராக்கதரையும் ஒருவகைத்தாக நிதானிக்கவுமுடிவதோ வென்று சொல்லுவோமாயின் மற்ற சீவராசிகளின் பாட்டைப்பேசவும்வேண்டுமோ! பிறப்பதும் இறப்பதுஞ் செந்தாமரையை யொத்த விழிகளைப்படைத்த விஷ்ணுவுக்குஞ் சிருஷ்டிகர்த்தனைபிரமனுக்குமுண்டு சகலசீவராசிகளையுந் தண்டிக்குமெனக்கு முண்டென்றல் உனக்கு மடுக்குமென்னக் குறிக்கவும்வேண்டுமோ! பூர்வத்திலளவிறந்தகாலஞ் சுகந்தபரிமள மிகுத்தகற்பகமலர்களினற் பரமன்பாதங்களி னருச்சித்துப்போற்றக் கர்த்தனிரங்கி யிவ்வரசாட்சியும்இதோநானேந்தியிருக்குங் கொடியபாசத்தையும் சூலத்தையுந்தண்டினையையும் அருளினர் அவற்றைக்கொண்டிதுபரியந்தந் தடையில்லாமல்அரசுசெலுத்திவருவேன். இக்காலத்தில் நீ வலிசெய்கின்றதால் உன்னிடத்தன்பாய் அமுதபோசன வலியுடைய தேவர்கள்வந்து காத்தாலும் படைத்தளித்தழிக்கு முத்தொழிலை நடாத்துந் திரிமூர்த்திகளே உனக்குத் துணையானலும் அல்லது இவர்களினுஞ் சூரராயிருப்பவரெவர்வந்துதவிசெய்தாலும் பரமன் கட்டளையின்படிக்கவர்கள் வலியினைக்கடந்து இன்றையதினம்உன்னுவியைப்பதைக்கப்பதைக்கக்கவர்ந்து கொண்டல்லது திரும்பிப்போவேனே! ஆதலால் நீமனம்வருந்திப்பயங்கொள்ளாமலென்னுடன்வருவாய். மேலுஞ்சூலபாணியினது அன்பர்களாயினுங் காலமுடிவில் நமதுலகுக்குவந்துஅவரவர்நல்வினை முயற்சிப்படிக்குச் சிவகதிகளிற்சேர்க்கப்படும்,இதுவுண்மையாகும், இனிமேல் தடைசெய்யாமல் என்னுடன்வருவையானல் உனக்குச்சவுக்கியமாகிய இடத்தைக் காட்டுவோம் நடவுமென்று சொன்னதைஅறிந்த மார்க்கண்டர் ஓயமனே! கேட்பையாக.

எமது கர்த்தனை சிவனடியருக்குளக்காலத்தும் முடிவில்லை, ஒருகாலமுண்டாயினுஞ் சிறந்தோங்கியவெள்ளியங்கிரியைச் சேருவதல்லது உன்பதவியை யணுகார்கள். அப்புண்ணியவான்கள் குணதிசயங்களில் சிலவற்றை

யுணர்த்துவோம். அவாவைநீக்கி அரியதவங்களைச்செய்த
வராயினுஞ்சிறந்த இல்வாழ்க்கையில் நின்றவராயினும்
வினைப்போகங்களைக்கடந்து சாரூப பதவியைச்சேர்ந்து
கர்த்தன் பாதநிழலைப்பெற்று வாழ்வார்கள். குற்றமற்ற
சோமசூரியாக்கினியென்னும் முச்சுடர்களையுமுலகத்து
க்காதாரமாகிய பிரிதிவு-அப்பு-தேயுவாயு-ஆகாயமென்னு
ம்பஞ்சபூதங்களையும் உந்திக்கமல வாசியாகியபிரமனையு
ம் புறம்பாகவே நீக்கியிருப்பர் அம்மகிமைபெற்ற மகத்
துக்கள் பாதங்களையடைதலே முத்தியாம்அவர்களுன்னை
யும் ஒருபொருளாக நினையார்கள். நரைதிரை மூப்பில்லா
தபொன்னுலகவாசிகளையும்மதியார்கள். அவர்களுக்கிறை
வனான இந்திரனையுஞ் சுலபமாகவெண்ணுவார்கள். தாம
ரைப்பீடத்தில் வீற்றிருக்கும் அயனையும் மதியார்கள். து
ழாய்மாலையையணிந்த கேசவனையுமெண்ணார்கள் மற்று
முள்ள தேவரை ஒருபோது மதிக்கவேமாட்டார்கள். இவை
தன்றியுஞ் சராசரப்பிரபஞ்சங்களுக்குக் கர்த்தனாய் நின்
றூட்டுவிக்குஞ் சிவபிரானையும் அவன் பாததாமரைகளைக்
கருதிப் போற்றி வழிபடும்பக்தரையும் சமமாயெண்ணாம
ல் பிரிவினைப்படுத்திமதிப்பவர்பேதையறிவை யுடையவ
ரென்றும் வேதங்களிற் சொல்லுவதுபொய்யாவதோ?மே
லும் நன்மார்க்கங்களிற் செலுத்தும் இருதயத்தைப்பெ
ற்றவர்ஞானபாதத்தையுணரும் பேரறிவினர்காமக்குரோ
தலோபமோக மதமாற்சர்யங்களென்னுங் கொடுமைகளை
முற்றுந் துறந்தபரிசுத்தவான்கள் யான்எனதென்னும் ப
ற்றைத்துறந்துதவநிலையில்நிற்பவர் இம்மைமறுமையின்
பங்களை யொருங்கெய்தப்பெற்றவர் தமக்கரியபொருளெ
ங்குமில்லாதவர் நன்மையை இயல்பாகக்கொண்டவர் கா
மம்வெகுளி மயக்கத்துக்கேதுவாகிய கெடுதிகளைக்கனவி
லும்விரும்பாதவர் இத்தன்மையாகிய சிறப்புள்ள பக்தர்
பெருமைகளையாவரால் விரிக்கப்படும், அப்பேற்றையு
டைய சிவனடியார்கள்பத்திவயிராக்கியங்களையுஞ்சார்பை
யும் எவ்வளவும் நினையாது பிரபஞ்சத்திலிருக்குமற்றமா
னிடர்களைப்போலநினைத்தாய். அவர்கள்அடியருக் கடிய
னாய்ப் பணிவிடைசெய்திருக்கும் என்பிராணனுக்குந் தீ
ங்குசெய்ய நினைந்துவந்தாய் இவைவியர்த்தமாய்ப்போவ
தோ? உன்பிராணனுக்கும் வெகுகாலமாகப்பெற்று வீ
ற்றிருக்கும் அரசுரிமைக்குங்கேடுகாலம் நேர்ந்தல்லது
இந்தஎண்ணம் உனக்குவரமாட்டாது சிவபூசைவேளை
யிற் கரடிபுகுந்ததென்னும் பழமொழிபோலவே தேவா
திதேவனை யருச்சிக்கும் அடியேன்செவிகளிற்கேட்க இக்
கொடியவார்த்தைகளை வதறுகின்றாய் அதனால்மேல்வரு
ங் கெடுதியாகிய பிரயோசனங்களையும் அபகீர்த்தியையும்
அறியாதபேதையே நீசற்றும் இச்சந்நிதானத்தில்நிற்கவு
ம் பெறுவையோ ஆதலாற் புறம்பிற்போவாய் போவா
யென்று குற்றமற்றமனதைப்பெற்ற மார்க்கண்டர்சொன்
னதைக்கேட்டவுடன் எமனுக்கதிககோபம்பிரவேசித்துக்
கண்களில் பொறிசிதற வடவாக்கினியைப்போற்சீறிநான்
பயந்து ஒதுங்கும்பொருட்டு உறுதியாகிய சொற்களைப்
பேசிக்காட்டுகின்றாய்போலும்வலியற்றவனே நம்முயிரை
க்கூற்றுவன் கைக்கொண்டுபோகமாட்டானென்றெண்ணி
னைபோற் காணுகின்றதென்று உடனே மேககெற்சிதம்
போன்றார்ப்பரித்து இவனைக் கிரமமாயழைத்துப்போக
நின்றால் அதற்கிசைந்து வருந்தன்மைய னல்லவென்றெ
ண்ணி வானத்தையளாவிய நீலகிரியையொத்த தேகத்தி
னையுங் கொடியவேலையுந்தாங்கிய யமதருமன்பாலன் சமீ
பத்திற்போய் தன்கரத்திற் கொண்டகாலபாசத்தைச் செ
லுத்தநினைந்து கிறுகிறெனச்சுழற்றிபெறிந்து அவன்திரு
க்கண்டத்தில்மாட்டிச் சிவலிங்கத்துடன் வலிக்கத்தொட
ங்கினான். அத்தருணத்தில் மார்க்கண்டர் சற்றும்மனமி
ளையாமற் சிவலிங்கத்தைத்தழுவி மிர்தஞ்செயா மிர்தஞ்
செயாவெனப் பரமனைப்போற்றிக் கர்த்தனே கூற்றுவன்
வலிசெய்கின்றான். ஆதியிற் கடாட்சித்தவாறேதேவரீரெ
ழுந்தருளியித்தருணத்திற்பாதுகாக்கவேண்டுந் தீனதயா
பரமூர்த்தியேயென்று அன்பென்னும்பாசத்தினால் பரம
ன்பாதாரவிந்தங்களைச் சிக்கெனக்கட்டி அந்நிழலைப்பிரி
யாமற் புகுந்திருக்க இக்கொடுமையைப்பார்த்திருந்ததே
வர்கள்கலங்கி ஐயையோ பாலகன்மரிந்து உயிர்துறந்தா
ன் உயிர்துறந்தானென்றேங்கினார்கள், இவ்வாறு. பாசத்
தைக்கழுத்தில்மாட்டி யிழுக்கும்போது சஞ்சலப்படாம
ல் மனதைப்பக்திநெறியிற்செலுத்து மார்க்கண்டரெதிரி
ல் தேவரையிரட்சிக்கும்பொருட்டுக் கடலிலுதித்த விஷ
த்தையுண்டு கறுத்தகண்டத்தையும் அழல்விழியையும்
படைத்த சிவபிரானெழுந்தருளி பக்தர்களிற்சிறந்தவ
னே உனக்கடுத்ததுன்பத்தைத் தீர்க்கவந்தோம்இனியொ
ன்றுக்கும் அஞ்சலைஅஞ்சலையெனத் திருவாய்மலர்ந்தரு
ளி நமதுபூசனையைச்செய்கின்றானென் றெவ்வளவும்மதி
யாமல் மதாங்காரத்தினால் எமனிப்பால னுயிரைக்கொள்
ளத் தீவரப்பட்டானென்றறிந்து திரிபுரதகனரான பரம
ன்கோபித்து வீரகண்டையணிந்த இடதுதிருவடியை நீ
ட்டிச் சற்றுதைத்தார். அத்தாக்கலினால்கூற்றுவன் இ
டிமுழக்கம்போல இரைந்து பூமியிலடியற்ற பனையைப்
போல விழுந்துருண்டுமாண்டான்.

அதைக்கண்ட பிரமாதிதேவர்கள் கர்த்தனுக்குக்கோப
ம்பிரவேசித்தகாரணத்தினால் உலகங்களும் நாமும்வாழ
வதரிதரிதென்று மருளவுஞ் சத்தசாகரங்களும் அலைக
ளோய்ந்தடங்கவும் ஆயிரகோடி அண்டங்களுங் கீழ்மே
லாய்க்கவிழ்ந்து மடியவும் பூமியும்பிளந்துகலங்கவும்நேரி
ட்டது மற்றசராசரங்கள்பட்டவருத்தங்களைச்சொல்ல மு
டியாது அக்காலத்தில் எமனைச்சூழ்ந்து வந்தகிங்கரர் சி
ன்னபின்னப்பட் டிறந்தார்கள் அவன்வாகனமாகிய எரு
மைக்கடாவும் உதைத்துக்கொண்டு மாண்டதுபின்புதன்
னுயிரைக்காத்திரட்சிக்கச் சிவந்தனிருக்கின்றான் உருக்
துவந்த கூற்றுவனென்னை யென்னசெய்பலாமென்று று
திகொண்டு ஆதிநூலாகிய வேதவாக்கியங்களினாலமைந்த
சந்தப்பாவினங்களினால் தம்மைப்புகழ்ந்து பாடியிருந்த
சிறுவனைக் கிருபையாகப்பார்த்து மகிழ்ந்து குழந்தாய்நீ
நம்மைப்போற்றிச் சிறந்த பூசனையைநடாத்தியகாரணத்
தினால்என்றும் பதினாறாய் அழிவில்லாத. ஆயுளையுனக்க
ளித்தோமென்றருளிச்செய்து தமதுபாதங்களைவாழ்த்தி
வழிபடுமார்க்கண்டன்பூசித்த இலிங்கத்துள்ளே காலனு
க்குங் காலனாயெழுந்தருளிய பரமேஸ்வரன் மறைந்தரு
ளினார்.

கேட்டீர்களோ நைமிசாரணியவாசிகளே? எமதுகர்
த்தனுக்குப் பிராமணப்பிள்ளையிடத்தன்பும்எமனிடத்தி
ற் கோபமுமுண்டா யிதனைச்செய்ததாக நினைக்கப்போகி
றீர்கள் பேரறிவாளரிதனையோசிக்குமிடத்தில் எமதைய
ன்செய்கைமுறைமைப்பாடாகவே விளங்கும் இவைதன்றி
யும் அடியவரிடத்துவிளங்கு முன்மைக்குங் காரணமா

கும் இவ்வாறு தயாநிதியாகிய சிவபிரான் மறைந்தவுடன் தாயைப்பிரிந்தகன்றைப்போலமார்க்கண்டன்வருந்திக் கர்த்தன் திருவுருவைபொருமிந்த பத்தியுடன் தியானித்துக்கொண்டே திருமணி தன்னிகையென்னும் ஆலயத்திற்போய் வலம்வந்து தேவாதிதேவன் பாதாரவிந்தங்களைச் சிரத்துக்கணியாகவணங்கிக் கரைந்துகரைந்தழுதுவிழிகளினானந்தவாரிபெருகப் பேரானந்தக்கடலின்மூழ்கிவெளவந்த குமாரனுக்கென்ன சம்பவித்ததோவென்றேங்கியிருக்குந் தாய்தந்தையரைக்கண்டு பத்திவினயத்துடன் வணங்கியவர்கள் கொண்டிருந்த விசனமுழுவதும்போக்கிச் சிலநாள் அவர்களிக்கவுடனிருந்து பின்பு அவர்களிடத்திற் செலவுபெற்றுக்காசியைக்கடந்து சிவந்தகண்களையுடைய ரிஷபவாகனமூர்த்தியெழுந்தருளிய திருப்பதிகளெங்கும்போய் அளவுபடாத காதலுடன்பரமசிவனை வணங்கி யருச்சித்துப்போற்றி யிவ்வாறுவெகுகாலஞ் சிவஸ்தலங்கடோறும் வாசஞ்செய்து வழிபட்டுப்பரிசுத்தாத்துமாவாய்ப்பின்பு சீவன் முத்தனுமாய்ச் சிவத்தினிச்சயங்களைப் பூரணமாயறிந்து உலகமெங்குஞ் சென்றுலாவியும் பக்தியுடன் தன்னைப்போற்றும் அன்பர்கண்ணினுங் கருத்தினும் இடைவிடாதிருந்தும் பூமண்டலங்கள் முற்றுஞ்சஞ்சரித்தும் மற்றையகாலங்களில் திருக்கயிலாயத்தில் வாசஞ்செய்துமிருப்பார். அவர்மகிமைகளைபொருவகைந்தாய் அளவிடப்படுவதோ அல்லது புகழவும்போமோ அவர்கண்டசிருஷ்டி கர்த்தனான நான்முகனிறந்த பிரளயங்களைத்தான் கணிக்கலாவதோ! உலகரட்சகனாய மகாவிஷ்ணு மாண்டகற்பங்களையாவது நினைக்கலாகுமோ இவ்விதச்சிறப்பைப்பெற்ற மார்க்கண்டரைத் துன்பஞ்செய்த எமனிறந்ததால் ஆயிரம்பணாமகுடங்களைக்கொண்டு ஆதிசேஷன்தாங்கும் பூமியின்கணுதித்தளறும்புமுதல் யானையீறுகச்சொல்லும் எண்பத்து நான்குலட்சஞ் சீவபேதங்களும் பிறந்தவைகளுக்கு நாசமில்லாமல்அளவிறந்ததாய்ப் பெருகச்சுமைமிகுத்ததைப் பூமிதேவிதாங்கப்படாமல் வாடித்திதிகர்த்தனான விஷ்ணுவைக்கண்டுசேவித்துத் தனக்கடுத்ததைமுறையிட இக்கருமம் சிவகடாட்சத்தினாலன்றி நம்போலிகளால்முடிவதோவென்றெண்ணினவனாய்ப் பிரமேந்திராதிதேவர்களுடன் ஸ்ரீகாளகண்டமூர்த்தி யெழுந்தருளிய திருக்கயிலாயமடைந்து நந்திதேவரருள்பெற்றுப்போய்க் கோடிசூரியப்பிரகாசத்தை வீசுஞ் சிங்காசனத்தில் உமையவளுடன் வீற்றிருக்குந் தேவதேவன் பாதாரவிந்தங்களில் வணங்கி நான்முகனுங் கேசவனும் வேதாகமவாக்கியங்களினாற்போற்றப் பரமசிவ னவர்களிடத்துக் கிருபாநோக்கம்பாலித்துக்கேசவனைநோக்கி நீங்கள்வந்த காரணமென்னவென்றுகேட்கச் சுவாமி தேவரீரனுக்கிரகப்படி பிதாமகன்முதலான தேவர்கள் தத்தம்பதங்களில்நின்று அவரவருக்குரியதொழில்களைக்கிரமமாய் நடத்துகின்றனர் கர்த்தனே தேவரீர் அடியேனுக்கு முன்னங்கட்டளையிட்ட கருமத்தைத் தமதுகிருபாநோக்கத்தால் குறைவில்லாமற் செலுத்திவருகின்றேன் ஆயினும் இக்காலம் அதற்கொருஇடையூறுநேர்ந்தது அதனை விண்ணப்பஞ்செய்து கொள்ளவந்தேன் இரக்கமுற்றுக்கேட்டருளவேண்டும் தேவரீர் அருட்சக்தியையறியும்விவேகமில்லாதஎமன்மாண்டதால் அத்தொழிலைச்செலுத்துவோரில்லாமல் சீவராசிகள் அதிகரித்தன அச்சுமையைப்பரிக்கமாட்டாது பூமிதேவிவருந்துகின்றாள் தன்னகத்திற்சமஸ்தத்தையுந்தாங்குந்திறம்பெற்றவளே வருந்தப்பிராணிகள் பெருகுமானால்என்காவலென்னபாடுபடாது அழித்தற்கொருவருமில்லாமையாலென்பேரிற் கோபங்கொள்ளாமல் எமன்செய்ததீமையைப் பொறுத்தருளி யெழுப்பவேண்டும் இக்கோரிக்கையைமறுக்காமல் தந்தருளுவீரென்று ஸ்ரீபாதங்களில்வணங்கி வேண்டச் சிவபிரானிரக்கமுற்று எமதருமனேவாவென்றழைக்க, தூக்கத்தில்நின்றும் எழுந்தாற்போல மீளத்தோன்றிப் பரமன் பாதங்களிற் பன்முறைபணிந்து வேதாகமங்கள் தேடியின்னுங் காணுதற்கரிய திருவடி அடியேன்மீது தாக்கலாற் சகலவினைகளும்நீங்கிக் கிருதார்த்தனானேன் இனியென்பிழையைப் பொறுத்தாள வேண்டுமென்று பலவாகப்போற்றுந் தருமனைத்திரிபுரதகனர் கருணைகூர்ந்து உனக்கின்னுங் கட்டளையிடுவதென்னவென்றால் பரிசுத்தமாகிய உருத்திராட்சந் திருநீறணிந்து எம்மைப் பூசனைவழிபாடுகளைச்செய்யு மகத்துக்களிடத்தில் கூற்றவனே நீயானென்கிற அகங்கொண்டு போகவேண்டாங்கிடைத்தற்கரிய முத்தியினைப்பெறநின்ற நமதடியரை பூலோகமனிதரென்றும் எண்ணவேண்டாம் அவர்களைநம்மைப்போலக் கோடிக்கக்கடவாய் ஒருகாலம் அவர்களைச் சந்திக்கநேரிட்டாலும் பத்தியுடன் பணிந்துபோற்றிப் போகக்கடவாய் மனோவாக்குக்காயமுதலானகருவிகரணங்களிலகப்பட்டுப் புண்ணியபாவங்களைச் செய்துழலும் மற்றையரைக்காலங்கருதிச் செய்கையைத்தெளிந்து சொர்க்கவாழ்வின் அல்லது நரகத்திற்கிரமப்படிக்குச்சேர்த்து உன்னரசிலிருக்கக்கடவாய் சீக்கிரமாகப்படைவீரருடன் பதிக்குப்போவாயென்றருளியதைக்கேட்டு சபைகடோறு நடனஞ்செய்யும் பொற்பாதகமலங்களிற் றொழுதுவாழ்த்திச்சுவாமிபுத்திவந்தது இனிதிருவுளப்படிக்குநடந்து கொள்ளக்கடவேனென்று விடைபெற்றுப் பரமனருளினா லெழுந்தகடாவாகனத்திலேறிக்காலதூதர்சூழ்ந்துவரத் தன்பதியைச்சேர்ந்துயதாப்பிரகாரந்தன்றொழிலைச்செலுத்திவந்தான்.

அதன்பின் மன்மதனைப்பெற்ற திருமால்முதலானதேவர்கள் முனிவர்கள் மும்முறைவணங்கிப்போற்றிச் செலவுபெற்றுத் திருக்கயிலையைநீங்கி தங்கள்தங்களிடங்களிற்போயினர் இப்பாற்கண்டவரைவருத்துங் கொடியசூலத்தினைத்தாங்கிய யமதருமராசன்பழையபடிக்கின்னுமெதுவிளையுமோ வென்றாராய்ந்துபரமனருட்சக்தியைப்பெற்றமார்க்கண்டருடைய திவ்யகதையைவாசிப்பவரிருக்குமிடத்தினும் போவதற்கஞ்சித்திரிவன் ஆதலால்குமாரர்களே தவமேசிறந்ததாகும் அதற்குச்சாட்சி குச்சகமஹாரிஷி தன்விரதமுயற்சியினால் மருமகளதுபிராணனை வரவழைத்தெழுப்பியதன்றியில் கர்மவசத்தினால்வந்த மதயானையின் பாதகத்தைப்போக்கித் தேவனாக்கி மேலான பதவியிற்சேர்த்தார். அவர்குமாரர்மிருககண்டயர், பிரமாதியர்கள்போற்றும் முதன்மையைப்பெற்றார். அவர்புத்திரர்மிருகண்டுமுனிவர் தவவலிமையினால் ஒப்பற்ற மார்க்கண்டரைப் புதல்வராகப்படைத்தார். அவர்தாஞ்செய்தசிவபூசைத்திறத்தினால் ஒருவராலுங் கடக்கப்படாதவிதியையும்வென்று எமன்அகங்காரத்தையுமழித் தெக்காலத்தும் இறவாத சிரஞ்சீவிப் பதம்பெற்றார் சகலரும் புகழவிருக்கின்றார்.

## மாயையுபதேசப்படலம்.

அன்னதுசரதமேயறிதிராதலா
வின்னமுமொழிகுவனியற்றுநோன்பென
முன்னுறுகாசிபமுனிவன்செப்பலு
நன்னலமாயவணகைத்துக்கூறுவாள்.

---

ஓ! குமாரர்களே? இதுவனையினும் விளக்கிய நிச்சயங்
களைத் தெளிந்தீர்களன்றோ இன்னமுந் தவவிரதமுக்கிய
ங்களைப்போதிப்போங் கியாபகமாய்க் கேட்கக்கடவீரென்
று பிதாவாகிய காசிபர் தொடங்குமுன்னிலேயில் அருகி
ல்வீற்றிருந்த மாயைநகைத்து நல்லநயவார்த்தைகளினு
ல் இதனைச்சொல்லுகின்றாள் வேதாகமசாஸ்திர சம்பன்
னராகிய மஹரிஷியே தேவரீர்இதுவனையில் வேதநிச்ச
யார்த்தங்களைத் தெளிவித்தீர். இதுமேலாகிய மோட்சவீ
ட்டைச்சேர விருப்புற்ற தவத்தருக்கல்லாமல் நாம்பெற்
றகுழந்தைப்பருவமுடைய சிறுவர்களுக்குப் போதிக்கப்
படுவதோ சகலசம்பத்துகளையும்பெற்று வீறிவிளங்கச்
செய்யுஞ் செல்வங்களையும் உலகமெங்குந் தழைத்தோங்
குங் கீர்த்திகளையும் தீர்க்காயுளையும் ராசராசர்கள்வணங்
கும் மேம்பாட்டையும்குற்றமற்றகல்விச்செல்வங்களையும்
மற்றுமுள்ள சிறப்புகளையும் நமதாசைக்குமாரர்கள்பெற்
றுச் சக்கிரவர்த்திகளாய் வாழவேண்டும்ஆதலால் முனிசி
ரேஷ்டரே இவைகளனைத்தினையும் பாலியத்திற்கிடைத்
துச் செயசாலிகளாகும்படிக் கன்பாய் அதற்குரியநடைக
ளைப்போதிக்கவேண்டுமென்றுகேட்க காசிபர்கூறுகின்றா
ர் உன்னெஃண மிதுவாகில்நீயே அவைமுடிவுபெறுமா
ர்க்கத்தினைத் தெரிவிப்பாயென்று உத்தரவுகொடுக்க மா
யைகளித்துத் தன்பிள்ளைகள் முகத்தைப்பார்த்துப் பிள்
ளைகளேஉங்கள் பிதாவாகிய தபோதனர்போதித்தவனைத்
தும் உண்மையேயாயினும் உங்களுக்கு இப்பொழுதுஅ
டுத்த கருமமல்ல ஆதலால் இனிநான்தெளிவிக்கும்மார்க்
கங்களைக்கவனித்துக்கேளுங்களென்று வரன்முறையாகச்
சொல்வதாயினள் மாயாபாசக் கருவிகளின் வசப்பட்டுழ
லும் புத்தியைக்கடந்து குற்றமற்ற அறிவின்சம்பந்தப்ப
ட்ட சீவர்கள் அனைத்துந்தாமெடுத்த பிறவிப்பயனைப்பெ
றத்தேடவேண்டும் அழிவற்ற பொருளாவதுகல்விச் செ
ல்வமும் பொருட்செல்வமுமாகும் இவ்விரண்டுக்குமேற்
பட்ட பொருளொன்று மில்லைலட்சுமிகரமாகிய பொரு
ட்செல்வங் குற்றமற்ற கல்விச்செல்வமாகிய இவ்விரண்டி
னென்றைப் பெருவிட்டால் அருமையாகவுதித்த அவ்வு
யிரினும் பேயின்சனனம் மிகவுஞ்சிறந்ததாகும் இவ்வுல
கத்திலே தோன்றியமனிதர்கள் பெருமிதத்தினைப்பெறச்
செய்யவல்ல சிறந்த விப்பொருளிரண்டினது மகிமை
யை அறிவுடையோர் நிதானிக்குமிடத்தில் அரியகல்வி
யினுஞ் சகலவளங்களையுந்தருஞ் செல்வமேசிறந்ததாகு
ம் உணர்ச்சிக்குரிய கலைகளைப் பலகாலம் அனுசரித்தா
ராய்ந்து அவற்றி னுட்பங்களைத்தெளிந்த பண்டிதராயி
னும் மனோபீஷ்டப்படிக்கு அனுபவத்திற்குவேண்டும்வ
ஸ்துக்களில்லாவிடின்அதனைத்தரும்பொருளைவேண்டிப்
பகைவரையும்பணிந்துநிற்பர்அளவுபடாதகல்வியுஞ்சகல
த்துக்குங்காரணமாகியசெல்வமும்பலமுயற்சிகளைத் தரு
வதில்ஒன்றுக்கொன்றுகுறைவுபடாதுஆயினும் அவைக
ளினுற்பெறும்பலசிறப்புகளையும்பிரையோசனங்களையு
ங் கீர்த்திகளையுஞ் சீர்தூக்கிப்பார்க்குமிடத்தில்வீறியோங்கு
வது கேடுபடாத செல்வமேயாகும் சகல வித்தைகளையுந்
தெளிவிக்குங் கல்வியைக் கூர்த்தபுத்தியினு லாராயுமிட
த்தில் பேரறிவைப்பெற்ற வரப்பிரசாதிகளே! ஆயினுஞ்
சிறந்த திருவைப்பெறுராயின்அவர்களை மதியாமல் உல
கத்தா ரிகழ்வார்கள். கல்வியானது, புத்திவிசாலத்தினையு
ஞ் சாதுசங்கங்களால் மதிக்கும் மகிமையினையும் முடிவி
ல் ஞானபாதமே முதலியவற்றை மாத்திரமேகிடைப்பிக்
க வல்லது, செல்வமோ போகபாக்கிய வனுபவங்களையும்
பலரும் வந்தித்துப் புகழத்தக்க கீர்த்தியினையும் அரியத
ருமவிரதங்களையும் கெம்பீரத்தையும் இம்மை மறுமை
ச் சம்பத்தையும் மற்ற மேம்பாடுகளெவற்றையும் பெற
ச்செய்வதால் அதனினுஞ் சிறந்த பொருள்இவ்வுலகத்தி
னென்றுமில்லை, இவ்விதப்பெருமையினையுடையசெல்வ
த்தை யொருவன் பெறவேண்டினுல் தீரம்வேண்டும் அ
தனுல் சுலபமாய்க்கிடைக்கலாகும், அதை யிடைவிடாது
போற்றுவானுயின் வினைவிற் பலவிதத்திலும் அதிகசெ
ல்வனுவன்.மேற்குறித்த வளம்பலவிதமாய்விளங்கும், அ
வற்றைச்சகலரும்பெற வறியார்கள். ஆதலால்,நீங்கள்செ
ல்வத்தைப்பெற்று வாழ்தற்கடுத்த முயற்சிகளைச் சீக்கிர
மாக அனுசரித்துக் காலங்களிற் பெறக்கடவீர். இதுவல்
லாமல் சிறந்திருப்பதற்கு வேறொரு தந்திரமுமில்லை, எ
மதிடத்து நேற்றையஇரவிலுதித்த காரணத்தினுற் செய
சாலிகளாகிய ராட்சத அமிசம்பெற்றீர்கள். உங்களுக்குச்
சென்மவயிரிகளாயிருக்குந் தேவர்கள்தங்கள்முயற்சியினு
ல் மேன்மையடைந்து மேலுலகத்துள்ள மேலாகியசெல்
வச்சம்பத்தை யனுபவித்து வாழ்கின்றார்கள். நீங்களும்
அவரிலுஞ்சிறந்த மேம்பாட்டைப்பெற நினைந்து அதற்
கடுத்த செல்வத்தை முதன்மையாகச் சம்பாதித்துக்கொ
ள்ளக்கடவீர்கள் இச்சிறப்பைப்பெறும்உபாயத்தையெடு
த்துக்காட்டுவேன்.அதைமூவருங்கவனித்துக்கேளுங்கள்.

இத்திசைக்கு ஆலயதீவெனப்பெயர், இதற்குவடபூமி
சிறந்ததாகும் அந்தப்பூமி தானவர் தவஞ்செய்யத் தகுதி
யாகும், நீங்கள்மூவரும் மிகுந்தசேனைகளுடன் அவ்விட
ஞ்சேர்ந்து யாகசாலை யொன்றையேற்படுத்தித் திருத்திஅ
தன்மத்தியில் விசாலமான ஓமகுண்டமுதலான கிரமங்க
ளை விதிப்படிக்குச் செய்துகொண்டுகுசைச்சமித்துக்களை
யடுக்கித் தீமூட்டி யாகதிரவியங்களையும் இரத்தமாம்சங்
களையும் மந்திரங்களைச்செபித்துச்சொரிந்து(சவுரியவான்
களாகிய குமாரர்களே) வீரமாமகத்தைத்தொடங்கித்திரு
மால் அயன்முதலான தேவர்கள்ஏத்தி வணங்குஞ் சீரா
த்தருவதாக கங்காசடாதரமூர்த்தியைச் சித்தத்திலிருத்தி
ப் பலகாலம்வருந்தி மகத்தினைச்செய்து முடிப்பீரானுல்
ஸ்ரீகாளகண்டக் கடவுளாகிய பரமசிவம் இரங்கிக் காட்சி
கொடுத்து நீங்கள்வேண்டியவைகளையெல்லாம் உண்மை
யாகக் கொடுத்தருளிவாழும்படிக் கனுக்கிரகஞ்செய்வார்.
மேற்குறித்த வேள்வியினை நீங்கள்முடிக்கப் போகுமிட
த்தில் அதற்குவேண்டும் உபகரணங்களைவெவ்வேறாகவு
தவிசெய்ய நானுமவ்விடம் வருகின்றேன். தாமசஞ்செய்
யாமல் நீங்கள்மூவரும் நடவுங்களென்று அதற்குரியமந்தி
ர தந்திரங்களையும் நடைநொடிபாவனைகள்முதலானவை
களையும் பிள்ளைகள் மறுபடியும்இந்திரன்செல்வத்தினும்

மேம்பட்ட சிறப்பினைப்பெற்று வாழும்படிக்குமனப்பூர்வகமாகப்போதித்தாள். இவையனைத்துந் தெளிவெய்தியபின்பு அவ்வாறேசெய்யக்கடவமென்றுதாய் தந்தையரை வணங்கிப்போற்றி அவர்கள்செலவுகொடுக்கப்பெற்றுதானவர்களுக்குத் தலைவனான சூரபன்மன் துணைவருடன் சேனைகள் புடைசூழ்ந்துவரத்தவஞ்செய்யுமிடத்தைநோக்கிநடந்தான்.

---

## மாயைநீங்கு படலம்.

ஏகியகாலையிலிணையின்மாயவண்
மோகமொடயலுறுமுனியைநோக்கியே
போகுவன்யானினிப்புதல்வர்ப்பேணுவா
னீகவலேலெனநிறுவிப்போயினள்.

---

ஓ சவுனகாதி ரிஷிகளே? மற்றைய சரித்திரங்களையும் போதிப்போமெனச் சூதபுராணிகர்சொல்லுவார். பிள்ளைகள்போனபின்பு ஒப்பற்றவனைப்பினையும்வடிவினையுமுள்ளமாயையானவள், தன்னிடத்திற் பொருந்திய மோகவாஞ்சையிற்பட்டு பக்கத்திற்குலவியிருக்கின்ற காசிபமுனியைப்பார்த்துத் தேவரீர் மனம்வருந்தாமல்இவ்விடத்தில் தவஞ்செய்துகொண்டிரும் நான்குமாரர்களுக்குஉதவியாகப்போய் வருகின்றேன். செலவுதாருமென்றுநடக்க, முனிபுங்கவன் தன்மனதிற்பொருந்திய ஆசைபிடரியைப்பற்றித்தள்ள, மாயையைத்தொடர்ந்து, ஓ? பெண்ணரசே? அன்னியனைப்போலநினைந்து கிஞ்சித்தும் இரக்கமில்லாதவளாய் என்னைத் தனித்து வாடவிட்டுமனந்துணிந்துநீ போவது தருமமோ? சொல்லென்றுவேண்ட மாயையானவள் காசிபனைநோக்கி சுவாமி? என்வரலாற்றைக்கேளும் நானிவ்விடம்வந்தது உம்முடன் கலந்து, இல்வாழ்க்கையைச் செய்திருப்பதற்கல்ல, வலிய பிள்ளைகளைப்பெறும் பொருட்டாகும், ஆதலாற் காரியந்தெரிந்தும்நீர்வியர்த்தமாய் விசனப்படவேண்டாம் நில்லும்நான்மாயவள். இதனைத்தெரிந்துகொள்ளுமென்றுசொல்லிச் சஞ்சலசித்தனாய் அரசுசெலுத்தும் இராஜனைவிட்டு நீங்குந்திருவுஞ்செல்வமும்போல வுருவம்மறைந்து போயினள். பின்புபிரமகுமாரரான காசிபரானவர்தான்மையல்கொள்வதற்குக்காரணமாகிய சிறந்தவடிவைப்பெற்ற மாயையின்தோற்றங்காணமல் மதிமயங்கித்தெளிவுபெறுமல் வருந்தித்திகைத்துத் தன்பெருமைகளனைத்து மழிவுவடப்பரதவித்துத் துக்கசாகரத்தி லழுந்தியவராய்ப பொன்னுலக வாசிகளாகியதேவரும் அதிசயிக்கவிளங்கிய பொய்கைகள் தடாகங்கள் சித்திரமண்டபங்கள் வயிரக்குன்ற முதலெவ்வற்றையுங் காணுதவராய் வாடிமயங்கிப் பிராணனை யிழந்த தேகத்தைப்போலப் பிரமித்துச் சோபித்திருக்கின்ற தருணத்தில் பிரமதேவர்தன்குமாரனுக்கடுத்த சம்பவத்தைஞானதிருஷ்டியாலறிந்து மோசம்நேர்ந்தது. இனி தாமதப்படலாகாதென்று அன்னவாகனமேறிக் ககனமார்க்கமாய்வருகின்றதைக் காசிபர்கண்டுபிதாவெழுந்தருளினுரென்று எதிர்கொண்டு வணங்கிநிற்க, ஆசீர்வதித்துக்குமாரனே? நீசெய்திருந்த சிறந்ததவங்களைவிட்டு இவ்வாறுபுலம்பித்திரிவதற்கடுத்த காரணமென்னவென்று வினவியதந்தைக்கு நடந்தசரித்திரங்களைத் தெரியப்படுத்திச்சொல்லி நாணமுற்றுத் தலைகவிழ்ந்துகொண்டனர்.

உடனேதன்குமாரனுக் கடுத்த மனக்கவலையையொழிக்க நினைந்தவராய் நான்குவேதங்களும் மற்றக்கலைகள் முதலியவும்ஓதித்தெளிந்து பேரறிவைப்பெற்றமுனிவனே! உன்னைப்போன்றவனே! ஒருபெண்பொருட்டாய் மயக்கமுற்று அறிவில்லாத மனிதனைப்போல மதிமயங்கி வருந்துகின்றனையோ? பெரியோர்களால் சோதித்து நீக்கப்பட்டு இவ்வுலகங்களில் தொன்றுதொட்டிருக்குங் கொடுமைபெற்ற பொருள்களுள் மிகக்கொடியவை கள்ளுங் காமமும்ஆகும், இவற்றில்கள்ளை ஒருவனுண்பானுயின் அவன்உணர்வையழிக்கும் மற்றக்காமத்தை மனதிற்கொண்டால் உயிரையும்மாயாமல் வதைத்துவாட்டும் சற்றுநினைத்தாலும் உள்ளத்தைச்சுடுங்கேள்விப்பட்டாலுஞ் செவிகளைக்கொளுத்தும் இதில்சம்பந்தப்பட்டு உடனேயிது கெடுதியென்றறிந்து தள்ளினுஞ்சுடும் இத்தன்மையினுற்கள்ளினுங்காமங்கொடியது மேலும் மாறிமாறிவரும் பிறப்பிற்கும் தீவினைகளனைத்திற்குங் காரணமாயுள்ளது. ஆகையால் சலனமில்லாத விவேகத்தினுலாராய்ந்து அந்தக் காமநோயைக் கொன்றவரல்லரோ? மோட்சவீட்டை எளிதிற் பெறவல்லவர். விவேகசாலிகள் அதனைநெஞ்சினும் நினைப்பார்களோ? ஒருகாலம் விதிவசத்தால் சற்றெண்ணினபோதினும் இப்பிறப்பில்மிகுத்த துக்கத்தி லழுத்துவதன்றியில் மறுபிறப்பினும் அளவுபடாத பவக்கடலிற் றள்ளியலைக்கும், இஃதன்றியும் கொடிய காமமானது உலகைநிமைப்போதிற் றகிக்கவல்ல விஷத்தினுங்கொடியதாம். ஆதலாற், குமாரனே? இம்மைமறுமைப்பயனையழிக்குங் காமக்கவலையிற்பட்டு வாடித்தவத்தை யிழக்கவேண்டாம், நீயிவ்விதக்களிப்புடன் புணர்ந்த மாதை யாரென்றெண்ணினை தேவர்களைவாட்ட வஞ்சகங்கொண்டு வந்த மாயையாகும், இனிஇத்தீயகருமத்தை யிச்சித்துச் செய்ததினுலுண்டாகிய குற்றங்களைக்கழிக்க நினைந்து பழையபடிக்குநிலைபெற்றுத் தவங்களைச்செய்யக்கடவையென்று பலவாகப்போதித்துக் காமக்கவலையைப் போக்கிக் குமாரனைத் தவத்தில்நிறுத்திப் பிரமதேவர் தங்கனைநோக்கிச் சென்றனர். பின்புஒப்பற்ற பிதாவானவர்போதித்த வுண்மைகள் மனதிற்பட்டவுடன் சேறுகக்கலங்கியஜலமானது தேற்றுங்கொட்டையை வுரைத்தவுடன் றெளிவை யடைவதுபோலக் காமவிகாரத்தினுற் கலங்கியகாசிபர்மனந்தெளிந்து ரிஷபவாகனக்கடவுளைப்போற்றிக் கொடியவினைகளை ஒழிக்கும்பொருட்டுக்களிப்புற்றுச் சிறந்த தவத்தினைச்செய்வதானுன். இதுநிற்க, காசிபனைப்பிரிந்துபோனமாயையானவள், அசுரர்குருவாகிய சுக்கிரனைக்கண்டு வணங்கி நடந்தசெய்திகளை விண்ணப்பஞ் செய்ய அவன்மகிழ்ந்து இனிமேல்அவள் நடந்து கொள்ளவேண்டும் மார்க்கங்களைப் போதித்தனன். அவ்வண்ணமேவனத்திற்சென்றுதன்பிள்ளைகள் அகோரமாகிய தீயைவளர்த்தி வேள்விசெய்கின்ற காலத்திற்குவேண்டிய உபகரணங்களைத்தரும் வரத்தைப்பெற்றுக்கொண்டுபோகச் சிவபிரானைநோக்கிக் கடினமாகியதவநிலையினின்றனள். கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே இதுபரியந்தங்காசிபன் மாயைக்கலந்தவிதமுஞ் சவுரியவான்களான சூரன் முதலியபிள்ளைகளைப்பெற்ற காரணத்தையும் விவரித்தோம், இனிஅந்தக்குமாரர்கள் தவவிரதயாகங்களைச்செய்து சிவகடாட்சத்தினுற் கிடைத்த வரப்பிரசாதமுயற்சிகளையும்விவரிக்கின்ருேம்கவனமாகக்கேட்பீர்களாக.

க்ாசிபன்மாயையைக்கலந்தவண்ணமு
மாசுறுமவுணர்கள்வந்தவண்ணமும்
பேசினமங்கவர்பெற்றபேற்றினை
யீசனதருளினுலினியிபம்புவாம்.

---

## அசுரர்யாகப் படலம்.

அன்னைதனைவலாலழன்மகஞ்செய
வுன்னினனுகியேயொல்லையேகியே
முன்னவனிளைஞர்தமுகத்தைநோக்கியே
யின்னதுகேண்மெனவிசைத்தன்மேயினன்.

---

மாயையாகிய தாயி னேவலின்பிரகாரம் வேள்வியைச் செய்ய வேகமாய்நடக்கின்ற சூரபன்மன்தன்துணைவர்முகத்தைப் பார்த்துச் சகலசெல்வங்களையும்பெறுதற்குரிய மகத்தைச்செய்து முடிக்கும் நிமித்தம்நாம் வடதிசையிற் குறித்த எல்லையைச் சேருமுன்னே உலகமெங்கும் பரந்து நடக்கின்ற சேனை வெள்ளங்களனைத்தையுஞ் சேர்த்து அணிவகுத்து முன்னும்பின்னும் நீங்கள்காவலாகவரக்கடவீரென்றனன். உடனேதமையனைவணங்கி தேவரீர் நினைந்த கருமம் நன்றாக விருக்கின்றதென்று எப்போதுங் கோபமே சொலித்தி க்குஞ் சிங்கமுகாசுரன் முன்னணியைக் காவல்கொண்டு போகவுஞ் செயசாலியாகிய தாருகன் பின்னணியைப்பாதுகாத்து வரவும்இசைந்து தமையனிடத்திற் செலவுபெற்றுப்போய்ப்பதாதிகளைக்கூட்டிவரிசைப்பட வகுத்து அவ்விருசூரருங்காவல்கொண்டுவர, அவர்களேவலின் பிரகாரம்இராக்கத சயினியங்கள்எங்கும்பரந்து அடர்ந்து இடிகளைப்போலக் கால்களைப் பெயர்த்து வைத்தும் வசனித்தும் பெரும்புறக்கடலானது பெருகிச்செல்கின்றதையொத்து நடக்கின்றபாரத்தைத்தாங்கக்கூடாமையாற் பூமிதேவிவருந்தவும், அவளுக்காதாரசத்தியாயிருக்கும் அஷ்டமாநாகங்களும், ஆதிசேடனும் நெளிந்து விஷங்களைக் கக்கிக் கண்மண்டைபிதுங்கித்தத் தளித்துச்சோரவும் அஷ்டகுல பர்வதங்களும்மேருபர்வதமும் சகிக்கமாட்டாமல் நெக்குவிட்டுச் சலக்கவும், ஆதிகூர்மமும்முதுகுநெளிந்து உறுப்புக்களைவெளியிட்டுவாடவும், மற்றவைகள் அல்லோல கல்லோலப்படவும் ஆயின. மேலும்அச்சேனை நடக்கும்வேகத்தினெழுந்த தூளிபடலமானது ஓங்கிப்பொன்னுலகத்தை மூடிப்பிரமன்பதியைத்தாண்டி விண்டுவினுலகைக்கூடி, யலைப்பதுஎப்படிக்கிருக்கின்றதென்றால் புதிதாகத்தோற்றி யெங்குமூடி அளவுபடாத இந்தராட்சதவெள்ளங்களின்சுமையைத்தாங்கவென்னுற் கூடாதெனப் பூமிதேவிபறந்து தனதுநாயகனுகிய கேசவனிடத்தில் முறையிட்டுக்கொள்ளச்சென்றதுக்கொக்கும். இஃதன்றியும் அந்தச்சேனைகள்பாதங்களிலணிந்த வீரகண்டாமணிகளினேசைக்கு மாறுகச்சமுத்திர மொலிப்பதோவென்று அதிகோபங்கொண்டுதாவியதைப்போல அளவிறந்த சேனைகள் கால்களைப்பெயர்த்து வைக்குந்தோறும் பறந்தபூழியானது சென்றுபடிந்து செருக்கிச்சத்தசாகரங்களின் சத்தங்களையடக்கவும், அப்பதாதிகள் கால்களிற் பட்டதுகள் வானத்தை யளாவித்தழைத்த விருட்சங்களை மறைக்கவும் பூமியை மிதிக்குந்தோறும் மேருவைநிகர்த்த பர்வதங்கள்முழுமையும்பொடிபட்டிறையவுஞ் சகலமுந்தன்சுமையாகத்தாங்கும் ஆதிசேடன் பரிக்கமாட்டாமல் மார்புபிளவுபட்டுவாடவும், எதிர்ந்த பிராணிகள்முற்றுஞ் சின்னபின்னப்பட்டொடுங்கவும், பூர்வத்திற்சங்கரனுலேதிரிபுரங்கள்பொடிபட்டதைப்போலப் பூமண்டலம் பொடிபட்டெழவும், வலியராட்சதவெள்ளத்திலுண்டாகும்பேரொலியும்நடையினெழுந்த தூசிப்படலமுங் கலந்தெழுவதைக்கண்ட தேவர்கள் வெருவி நமதுகர்த்தனை பிரமன் மாண்டனனே? சத்தசாகரங்களும் விண்ணகத்தெழுகின்றனவோவென்று வாடவும், குற்றமற்ற ஸ்ரீமகாலட்சுமியைப்பார்க்கிலும் அழகுள்ள மாயையினதுதேகத்தி னுதித்தசிறந்த அவுணவெள்ள மானது திசைத்திசைக்குப் பதினுயிரயோசனை யளவையில் நெருங்கி மண்ணினும், விண்ணினும் அடர்ந்து செல்வதைக்கண்ட தேவேந்திரன்இனியென்னசெய்வோமெனப் பயப்பிராந்திகொண்டு சோரவும்,அக்கினிபகவான் தன்வெப்பமாறி மறைவிடந்தேடவும், பிராணிகளையழிக்கும்எமன் ஏக்கமுற்று மூலையிற்சாரவும், நிருதியானவன்வாடி மனஞ்சோரவும், வருணன்வூக்கமடங்கிவாடவும் வாயுஆற்றலடங்கிபோடவும், ஈசானன்நெஞ்சழிந்தோடவும் இவ்வாறு சகலருந்தத்தளித்தலையப் பிறையைப்போல வளைந்து பிரகாசியாநின்ற கூரிய கோரதந்தங்களையுடைய ராட்சதவெள்ளங்கள் நடக்கும்போது எழுந்த புழுதியானது விரிந்துமூடிதேவர்களுடைய சரீரகாந்தியையொழிக்கவும், அந்தச்சேனைகள் கெற்சித்து ஆர்ப்பரிக்குமோதையானது அவர்மனவூக்கத்தை அழிக்கவும் ஆயின.

இவ்விதவுற்பாதங்களைவிளைத்து நடக்கும்சேனைகளின் முன்னேதீயும்அஞ்சியொடுங்குங்கோபக்கண்களையுடைய சிங்கமுகாசுரன் கண்ணிமைபோலக் காத்துப்போகவும், மதயானையையொத்ததாருகாசுரன் புறவணியைப்போற்றி வரவுஞ்,சக்கிரோஸ்வரனுனசூரபன்மன்பலதிசையினும்விழிகளைப் பரப்பி நடுப்பிரதேசத்திற்செல்கின்ற தருணத்தில், இச்சந்தோஷசேதியை அசுரர் குருவாகிய சுக்கிராசாரியறிந்து அவர்களைக்கண்டு வார்த்தைசொல்லி வாழ்த்திவர நினைந்துமுத்துப்பல்லக்கி லெழுந் தருளினவராய் அஷ்டதிசையினும் நெருங்கிப்போகின்ற சேனுசமுத்திரத்தைப் பார்த்து அவ்வீரர் நடக்கும்வேகத்தையும் வலியினையுஞ் சூழ்ந்த காவல்களையும் மனவூக்கத்தையும்கொடியவீரத்தையும் வெற்றியையும் நிதானித்தறிந்து மனந்திடுக்கிடவாடினவனுய் அம்மம்ம இதுபுதுமை யிதற்குமுன் அளவிறந்த அவுணவீரர்களைக் கண்டதுண்டுஆயினும் இவர்களையொத்த வலிமையும் வேகமுஞ்சூரமும் பெற்றவனா இதுவரையினும்பார்த்ததுங் கேட்டதுமில்லை ஆதலால் இது பிரமதேவருடைய படைப்பினதுபெருமையோ இவர்களுக்கும் ஒருவர்நிகருண்டோ எதிர்ந்த சத்துருக்களுயிரையும் உடலையும் ஏகமாய்க் கவளீகரஞ் செய்யவல்ல இந்தத்தானவருக்குத் தேவராசனையும் விஷ்ணுவையும் மற்றதேவரையும்போரில் வெல்வதொரு பொருளோ இந்தச்சூரர்களுடைய பராக்கிரமத்துக்கு அழிவில்லையாயினும் இவர்முன்னோர்கள் வருந்திநோற்றுப் பெற்றதைப்போலத் தவவலியுஞ் சிறந்தவரங்களுந்திவ்வியபாணங்களும் பெற்றவரல்ல ஐயையோஇவர்களுக்

கு மொருகுறைபாடிருக்கின்றது ஆகிலும்எமனைவென்ற சிவபிரானுக்குமாத்திரம் யாதொருகுறையுங் கண்டதில்லை மற்றஅண்டங்களினிருக்கும் அனைவருக்குமொவ்வொருகுற்றமுண்டு இதனைச் சகலருமறிவார்கள் ஆகையால் இவர்கள் தங்களிடத்துள்ள குறைவுபாட்டைச் சிலவிரதங்களை முடிப்பாராயின் எளிதிற்போக்கிச் சிறப்பைப்பெற்றுயர்வார்கள் இதுநிலைபட்டதல்ல, தாழ்ந்தவர்கள் ஒருகாலமுயர்வதுமுண்டு இதற்குக்காதிமகாராசன் பிள்ளைவிசுவாமித்திரன் சாட்சியல்லவோவென்று இவ்வாறுஅளவற்ற ஆட்சேபனை சமாதானங்களைத் தனக்குள்ளேபேசிய பின்பு ராட்சதராசராசனுகவிருக்கின்ற சூரபன்மனெதிரிற்போய் உபசரித்து ஆசிகளைச்சொல்லி வருவோமெனச்சுக்கிரன்நினைந்து இவ்வெள்ளத்தைக்கடந்து தீயின்வெப்பத்தையவிக்குங் கோபத்தையுடைய அவுணராசன்முன்னஞ்சேர்ந்துபேசுவது மிகவுமரிதாகவிருக்கின்றது ஆதலால் மாயமந்திரமொன்றைச் செபித்துப்போய் ராசனைக்காணுவேனெனக்குறித்து பூமியிலிருக்கும்பிராணிகளை வசியப்படுத்தவல்ல சம்மோகனமென்னு மந்திரத்தைவிதிப்படிக்கு உச்சரித்துச் சேனசமுத்திரமத்தியிற் புகுந்து ராட்சதராசனை நெருங்கும்போதுஅம்மாயமந்திரத்தின்கொடுமையினுல் வஞ்சகமே குடிகொண்டிருக்கும் ராட்சதருடைய வலியஇரும்பையொத்த மனமுருகிஉதிரத்திறை குழைபடும் வாளாயுதத்தைப்போலக்கரைந்துபத்திவினையத்துடன் எதிர்பார்த்திருந்தார்கள் ஆதலாற்பிரகாசமுள்ளவிடத்தில் இருள்நீங்காமல் நிற்குமோ பெரும்புறக்கடலையொத்து நெருங்கிச்செல்லுஞ்செயசாலிகளான இராக்கதப்படைத்தலைவர் சுக்கிரனைக்கண்டவுடன் வயிரம்போல வுறுதிபெற்றுத் தயையற்றிருக்கும் மனங்கரைந்துக் கரங்களைகூப்பித் தொழுதகாலத்தில் ஆசிரியனுனவன் சூரபன்மன் சிங்கமுகன் தாருகன் இவர்களைப்பார்த்தக் கையெடுத்துச் சகலசெல்வங்களையும்பெற்றுத்தேவேந்திரன்முதலானவருக்கு மேலோங்கிச் சுகசீவிகளாக வாழக்கடவீர்கள் இராக்கதருக்கு நெடுநாளாயடுத்திருக்குங் கொடியதுயர்நோயைநீக்கத் திரிகடுகின்சம்பந்தமாகிய மருந்தைப்போல வுதவிசெய்து உங்கள்குலம் வீறிவிளங்கச் சிவகடாட்சத்தினுற் சகலபேற்றையும் அடையக்கடவீர்களென்று பலவாகவாழ்த்த அவற்றைக்கேட்டசூரபன்மன்களித்துச் சொல்லுவான்.

தேவரீர் மேகவாகனனை இந்திரன்வாழும் பொன்னகரத்திலிருப்பவரோ மற்றவிண்ணவர் பதிகளின்வாழ்பவரோ பூமண்டலவாசியோ ஆதிசேஷன் அமர்ந்தபாதலத்தி லிருப்பவரோ ஐயனேநீரின்னுமொன்றும் வந்தகாரணம் இன்னதென்றும் அடியேனுக்கொன்றுந் தெரியவில்லை உம்மைக்கண்டவுடன்என்மனங்குழைகின்றதுஎலும்புமுருகித்தேகபரவசமாகப்பூரித்துப்பத்தி விளைகின்றதுஅரியதவத்தைச்செய்வதாக வனத்தைநோக்கிப்போகக்கால்களுமெழவில்லைஎங்களிடத்திற்பிரியத்தினுலெழுந்தருளினீர் போலும் உம்மைக்குறித்து யோசிக்குமிடத்தில் பிராணிகள் தங்களுக்கொரு இடர்நேருமாயின் அம்மையப்பனேயென்றுமுறையிடவிரங்கிப் பிரசன்னமாயாளும் அந்தப்பரமனைப்போற்காணுகின்றது இஃதன்றியும் யான்முன்சனனத்திற் றிரோகம் மிகவும் வருந்திநோற்ற தவப்பயனுல் தேவரீரைக்காணப் பெற்றேனென்றுஉருகிச்சொல்வதைக்கேட்ட சுக்கிராசாரியனுனவன் ஓராசக்கிரேஸ்வரனே எமதுசரித்திரத்தைக்கேட்பாயாக நாம் வானவழியிலுலவி உலகந்தழைத்தோங்க மழைபெய்தல் முதலான கருமங்களை நடாத்திவருவது மன்றியில் உங்கள்வம்சபரம்பரையாகக்குருவாகவுமிருப்போம் நமதுபெயர் சுக்கிரனெனச்சொல்லுவார்கள் நீங்களுதித்த சேதியறிந்து இனிமேல்நீங்கள் நடந்துகொள்ளவேண்டும் உறுதிகளைப்போதிக்கநினைந்து இவ்விடம்வந்தோமென்கின்ற விசேஷவாசகமானது சூரன்செவிகளில்விழுந்த வுடன் மனங்களித்துஎமதுகுரவனேயினி கிருதார்த்தனுனேனென்றுபோற்றி மும்முறைவணங்கிநிற்கச் சுக்கிரன்மகிழ்ந்து சகலசாஸ்திரங்களையுங் கேள்விப்பட்டசூரனேநீபோய் தவஞ்செய்திருக்கையில் உங்களுக்குச் சத்துருக்களாகிய தேவர் அளவற்றஇடையூறுகளைச்செய்வார்கள், அவைகளுங்களைநெருங்காமல் சிறந்தவுபாயஞ் சொல்லுவோமென்று கூற்றுவனையுதைத்த கர்த்தன் திருமந்திரமாகியபஞ்சாட்சரத்தை வேதவிதிப்பிரகாரஞ்செவியிலுபதேசித்துக் கேளும் மகாராசனே யிச்சிறந்தமந்திரத்தைமனம்வாக்கொருமித்துக் கொலைகளவு கட்காமமாகிய குற்றங்களைப்போக்கி யிடைவிடாது உச்சரித்துத்தவத்தைச்செய்வாயானுல் பரமன்காட்சிதந்து வேண்டும்வரங்களையுந் தருவானென்றருளச் சூரன்மீளவுஞ்சேவித்து எமதிறைவனே தேவரீர்கட்டளைப்படிக்குச்செய்யக் கடவேனென்று சொல்லக் களிப்படைந்து அவர்களுக் களவற்றஆசிகளைச்செய்து தவத்துக்குப்போகச் செலவுகொடுத்துத்தனது பதவியைச்சேர்ந்தான்.

இப்பால் மாயைபுத்திரர் அளவிறந்தசேனைகள் சூழ்ந்துபோற்ற வடதிசையைநோக்கி நடந்து தன்னிடத்திலிருந்து நோற்றவருக்கு இஷ்டகாமியங்களையும் மோட்சத்தையும் எளிதிற்பெறச்செய்யும் மகிமையையுடைய வுத்தரபூமியைச்சேர்ந்து தழைத்தோங்கிக் குளிர்ந்தநிழலைப்பரப்பும் விருட்சங்கள் அடர்ந்தவனத்தில் ஓரிடத்தைக்குறித்து வேள்வியைமுடிக்க யோக்கியமாய்ப்பதினுயிரயோசனைவிஸ்தீரணமுள்ள மதிலையெழுப்பநினைந்து வலிபெற்ற ராட்சதவீரரையழைத்து அவர்களாற் பூமண்டலங்களிலிருக்கும் பர்வதங்களனைத்தையுந் தருவித்துப்பொன்மலையளவையுயர்ச்சியுள்ளதாய்ச் சமுத்திரவரையிலோடிப்பரந்திருக்கும் மதிலையெழுப்பி அதன்மத்தியில்விசாலமாகிய வாயிலொன்றைவிட்டு கொம்மைகள்முதலியவுறுப்புகளைச் செய்வித்துச் சிற்பநூலின்படிக்கு முடித்தமதிலைச்சூழக் கணிதமற்ற ராட்சதப்படைகளைக் காவல்வைத்து அதனுள் பிராகாரத்தில் நான்குவாயில்களையெழுப்பிப் பூமிமுதல் வானபரியந்தம் ஏகமாய்ப் பலபர்வதங்களினுற் செய்யப்பட்டதாய் நம்போலிகளால் அதன்பெருமையைக் குறிக்கப்படாததாய்ப் பரந்தெழுந்தசுவரும்அதைச்சூழக் காவலாக ராட்சதவெள்ளங்களையணியாகவைத்திருப்பதையும் யோசிக்குமிடத்தில் இப்பூமண்டலத்தைவளைந்திருக்குஞ் சக்கிரவாளகிரியையும் அதைச்சூழ்ந்திருக்கும் இருட்பூமியையுமொத்துத்தோன்றும் அச்சுவர்த்தலத்திற் சித்திரப்பொறிகளைப்போலச்சிகரங்களோங்கிய வரைகளினுலடுக்கப்பட்டதாய் ராட்சதர் காத்திருக்கும் புரிசையின்புறத்தில்விளங்கும் வாயில்கடோறுங்காவல்கொண்டுபோற்ற மந்திரபூர்வகமாய்ப்பத்திரகாளியையழைத்திருத்தி வெளிப்புறம்முற்றினுங் காவல்கொண்டிருக்கக்காளிக்கேவல்செய்வோரையும் பூதபசாசங்களையும்

மந்திரவாக்கியங்களினாற்கூவி வரிசைப்படநிறுத்தி இவ்வாறு ஆம்பல்மலரையொத்துச் சிவந்தொளிரும் விழிகளையுடைய பத்திரகாளிமுதலானவரைக் காவலிருத்திய பின்பு மந்திரவிதியினா லுபாசித்துவந்த வயிரவக்கூட்டங்களைச் சேவித்துப்போற்றி யாகத்தைப் பாதுகாத்தருளத்தாபித்து இவ்வண்ணமாய் புறத்தினும் மத்தியினுமஜயிக்கக்கூடாத காவல்வைத்து தள்ளுதற்கரிய சூரனானவன் வேதாகமவிதிப்பிரகாரம் சிவத்துக்குப்பிரீதியாக வேள்வியைநடத்த யோக்கியமானதாய் அளவைப்படிக்குநடுப்பிரதேசத்தில் ஆயிரயோசனைப்பரப்பும் ஆழமுமுடைய ஓமகுண்டத்தையும் அதைச்சூழ வேதிகைகளையுஞ் செய்வித்தபோது பூமிதேவியானவள் பாதகர் நம்மைவருத்துகின்றனர். ஒளிக்கவும் இடமில்லை யென்னசெய்வோமென்றேங்கி யொடுங்கவும் ஆயிரயோசனை யாழமாகநிலத்தைப்பேர்த்தெறிவதைப்பாதலத்திலிருக்கும் ஆதிசேஷனும் மற்றநாகராசருங்கண்டு கொடியதானவக்கூட்டம் இத்தலத்தினும் இறங்கிவருவார்போற் றோற்றுகின்றதெனநடுங்கித் தமதிருப்பிடங்களைநீங்கி அண்டப்பித்திகையின் கீழ்ப்புறத்திற் சேர்ந்தொளிக்கவும் அக்காலத்திற் பாதலகங்கையானது குமிழியிட்டுப்பெருகி யெழக்கண்ட வருணராசன் பாதகர்சூழ்ந்திருக்கின்றனர்வெளியில்வந்தால் உள்ளங்கையிலேற்று உண்டுவிடுவர் மேலேவருவதுதகாது பாதலத்தைப்பிளந்தோடியொளிப்ப தழகென்ன அவ்வாறே பெருகியதுபோலக் கீழ்த்தலமேழினும் நிறைந்தலைக்க அவ்விடங்களிலுள்ள பிராணிகள்கண்டு இக்கங்கை யிவ்விடங்களிற்பாய்ந்து மோதுதற்குக் காரணம் யாதென்று அற்புதசிந்தையராய் இதனாலென்னதிங்கு நேரவிருக்கின்றதோ தெரியோமெனவாடவும்இப்படிக்கு நடுநாயகமாகிய ஓமகுண்டம் முற்றியபின்புஅதைச்சூழ நூற்றெட்டு குண்டங்களையமைத்து அவைகளைச்சூழ ஆயிரத்தெண்வகைக் குண்டங்களையுங் கல்லிவைத்து இவ்வாறு விதிப்பிரகாரம் மூவகைக்குண்டங்களும் அதற்குரியவேதிகைகள் முதலியவைகளையும் முடித்தவுடனே சூரன்இவற்றைக்கண்டுகளித்து வேள்வியைநடாத்த முயற்சிகொண்டவனாய் இனிஓமத்திரவியங்களும் மற்றவுபகரணங்களும்வேண்டும் இதற்கென்னசெய்வோமென்றுயோசிக்குமுன்னிலையில் இவ்வெண்ணத்தை மாயையறிந்து தேவதேவனாகிய சிவகடாட்சத்தினாலேயாளிசிங்கம் புலி யானை குதிரைவெள்ளாடுமுதலிய மிருகங்களினிறச்சியைஅவிக்கு உதவுவதாக மலைகளைப்போலஒருபக்கத்திற்குவித்தாள் மற்றோரிடத்தில் அவற்றினுதிரங்களைச் சமுத்திரம்போலநிரப்பினாள். மற்றொருபாலில் நெய்யைக்கடலையொப்பச்சேர்த்தாள்.மற்றொருபாகத்தில் வேம்புமுதலிய எண்ணெய்வகைகளைப்பிரமாணமில்லனவாகநிரப்பினாள் மற்றவிடங்களில் பால்தயிர்தேன்முதலியவற்றைச் சத்தசாகரங்களைப்போலச்சேர்த்தாள்.செஞ்சந்தனக்குழம்பை யொருபுறத்தில் நிரப்பினாள். ஐந்துவிதநிறமுள்ளசோறு, பாற்சோறு, தீஞ்சோறு, இவற்றை யொருபக்கத்திற் குன்றுகள்போலக் குவித்தனள். வேள்விக்குரியபசுக்களை யொருபுறத்தில் அணிவகுப்பாகச்சேர்த்தனள்.

இவையனைத்து முடிந்தபின்பு புதல்வருக்கரியபேற்றினைத்தரவல்ல வேள்விக்குண்ட மத்தியில் உலகங்களையுண்ட செந்தாமரைக் கண்ணனையுந் தடாரித்துருவுங் கூர்மைபெற்ற வயிரக்கம்பமொன்றை நாட்டினள், ஒருபுறத்திற் சிவப்பு அட்சதையைக் குவித்தனள், செந்நெல்அரிசியை யொருபாற்சேர்த்தனள், செம்மலர்வகைபுனுகுசவ்வாதுமுதலியவற்றை யொருபுறத்தில்நிரப்பினள். செம்மறியாடு தருப்பைவகைகளை யொருபக்கத்தில்வைத்தனள். விஷசம்பந்தப்பட்ட எட்டிவேம்புமுதலான கொடியவிருட்சங்களைமுறித்துச் சமித்துகளாக மலைகளைப்போல அடுக்கினள். வேள்விக்குண்டம் வேதிகைதோறும்நிறுத்தும்படியாகக் கும்பக்குடங்கள் மடக்குகள் கலயங்கள்பாலிகைகளாதிய பாத்திரங்களைக் குன்றுகள்போலச்சேர்த்தனள். பொற்றலத்தின்கண் வெள்ளிமுளைத்ததைப்போலநெற்பொரிகளை மலையையொப்பக்குவித்தனள். நவதானியங்களை ஒருமருங்கிற்சேர்த்தனள். இஃதன்றியும்வேண்டுவனயாவையும் வெவ்வேறாக அந்தச்சிறந்தயாகமுடியும்பொருட்டு மூன்றுயோசனையளவுங் குவித்தமாயையின் செய்கைகளைச் சூரன்கண்டு விம்மிதனாய் ஓஒ இவ்வாறு யாவரால் முடிக்கப்படும். நம்முடையதாயாதலினாலேயிவையனைத்தையும்வருந்திச்சேர்த்தாளென்று மகிழ்ந்து இனிதாமசப்படலாகாதென் றெண்ணிச்சகலரும்புகழத்தக்க வீரமாமகத்தைத் தொடங்குவதற்கு நிச்சயித்துஇரத்தமாம்சசம்பந்தப்பட்ட பலவகைப்பிராணிகள் நெருங்கிய உலகங்களனைத்தையும்எள்ளினுள் எண்ணெயைப்போற் கலந்தாட்டும் மகிமைபெற்ற பரமசிவத்தைப்போலவே மேம்பாட்டையடையநின்ற சூரபன்மன் வேள்விக்குண்டமத்தியிலிருக்கும் வச்சிரக்கம்பத்தைத் தன்வலிகொண்டு சீர்பெறநாட்டி வேதவிதிப்படிக்குப்பூசித்துயாகவெல்லையைச் சூழ்ந்திருக்கும் மதில்நாற்புறத்தினும் ஓங்கிநிற்கும் வாயில்கள்தோறுஞ்சென்று உக்கிரபார்வையையுடையரணபத்திரகாளிமுதலோரைப்பூசித்துப்போற்றி ஆட்டுக்கடாக்களின் மாம்சங்களையும் ரத்தங்களையுந் திருத்தியாகப் பலிகொடுத்தபின்பு மதிலினிடங்களில் நெருங்கிக் காவல்கொண்டிருக்கும் உரத்தவார்த்தையையுடையபூதவேதாளக்கூட்டங்களுக்கும் மேகத்தைப்போலக் கறுத்ததேகத்தைப்பெற்ற பசாசவகைகளுக்கும்போதுமானமட்டும் பலமிருகங்களி னூன்களைப்பலிகொடுத்துப் புறத்திற்காவல்செய்யாநின்ற காளிக்கூட்டங்களுக்கும் மாம்சங்களையும் உதிரங்களையும் அபரிமிதமாகப் பலிகொடுத்துக் கூற்றுவனையும்வெல்லும் வலிபெற்ற வயிரவக்கணங்களைப் பத்தியுடன்வழிபட்டுப்போற்றி அளவிறந்ததசையுடன் மதுக்களைப்புசிப்பித்து இவைமுற்றியபின்பு தலைமைபெற்ற குண்டத்தினைச்சூழவிருக்கும் ஆயிரத்தெண்வகைக் குழிகளிலும் விஷச்சமித்துக்களைமந்திரவிதிப்படிக்கிட்டு மூன்றக்கினியையும் சேரமூட்டித்தம்பியர்சூழ்ந்துவரச் சூரபன்மன் அவைகளைப்பூசித்துமாம்சவகைகளையும் உதிரவெள்ளங்களையும்இறைக்குந்தோறும் பரமசிவத்தின் திருமந்திரங்களையிடைவிடாமற்செபித்து அவ்வவிகளைச் சிவப்பிரீதிசெய்து இம்மகத்தைநடத்தவல்லவர் யாவரென்றாலோசித்துத் துணைவனாகிய தாருகனைப்பார்த்துப் பெருமைபொருந்திய இந்தவேதிகைகள்தோறுமுலவி வேதவிதிப்படிக்கு மந்திர பூர்வகமாகச் செய்யவல்லவன் உன்னையல்லது வேறுகாணேனாதலால் இவ்விடத்திலிருந்து பாதுகாக்கக் கடவாயென்று அவனை அவற்றிற்குத் தலைவனாக்கிவிட்டு அதற்குட்புறத்தில் விளங்கும் நூற்றெட்டு குண்டங்களைச்சேர்த்து

மேற்குறித்தபடிக்குப் பலிமுதலிய பூசனைகளைக் கிரமப்படிக்கு முடித்துச் சிங்கமுகாசுரனை நோக்கி யிம்மகத்தைப் பழுதுரூமல் நடத்திவருவாயென்று நிறுத்தியபின்புநடுப்பிரதேசத்திற்பிரம்மாண்டமாகிய அகலமும் ஆழமுமுள்ளதாய்க் கல்லியிருக்கும் பிரதான ஓமகுண்டத்தைச்சேர்ந்து மந்திரவிதிப்படிக்கு அர்ச்சனை முதலானவைகளில் ஒருகுறைபாடுமில்லாமல் நடாத்திப் பார்வதிபாகனுன பரமேஸ்வரனை மனதிற்றியானித்துப் பத்திபூர்வகமாய் வேள்வியைத்தொடங்கி விஷத்தைக்கக்குங்கொடியசமித்துக்களைக்குன்றங்களைப்போலஅடுக்கித்தீக்கடைக்கோலிற்பிறந்த அக்கினியை மந்திரங்களையோதி ஆவாகனஞ்செய்து மேகவருஷத்தைப்போல நெய்க்குடங்களைக்கவிழ்த்துப் பர்வதங்களைப்போலக் குவித்திருக்கும் மாம்சவகைகளை அபரிமிதமாகத்தீயிற்போட்டு மத்திமத்தியிற் சோரிகளை மந்திரமொழிகளினுற்சொரிந்து மிகுத்தஅக்கினியின்மீது பலவகைச்சோற்றையிறைத்து வேம்பாதிய எண்ணெய் நெய் இரத்தங்களை ஒன்றின்பின்னென்றைச்சொரிந்து இடையிடையிற் பால்தயிர்க்குடங்களையிறைத்து வெண்ணெற்பொறிகளை முத்துக்களைப்போல வாரிவாரியிட்டு ஒவ்வொருமந்திரமுடிவில் தேன்மதுக்குடங்களை வருஷத்தையொப்பச்சொரிந்து துவரை மலைநெல் செந்நினை பயறு எள்ளுமுதலிய நவதானியங்களையும் இறைத்து நெய்யைக்குடங்கொண்டுசொரிந்து கொடுமையாகிய ஐவகைநிறம்பெற்றசோறுடன் பலவகைக்கறிகள் முதலாகப் பூமியின்கணிராகின்ற பண்டங்களனைத்தையும் வடவாமுகாக்கினியின்மீது சமுத்திரம் பாய்ந்ததைப்போல மேலுமேலுங்கொட்டி உலகங்களில் எக்காலமும் அழிவற்றகீர்த்தியை ஸ்தாபித்த சூரபன்மனைவன் இவ்வாறுபலவகைப்பட்ட திரவியங்களை வேதவிதிப்பிரகாரம் சிவப்பிரீதியாக மந்திரங்களைச்சொல்லி ஓங்கியெரியும் வேள்விக்கனலிற்சொரிந்து வீரமாமகத்தை நடாத்திவருமுன்னிலையில் பூமிவளங்களையுண்டுபொன்னுலகத்தையும் வாட்டஎழுவதைப்போல முன்னம் விஷ்ணுவராகமாய்த்தேடிக் காண்பரிய பாதாரவிந்தங்களையுடையசிவபிரானைக் கருதிச்செய்யும் வேள்விக்குண்டத்தினின்று பெருகிய முத்தழலுஞ் சடசடத்த தொனியுடன் வீறிச்சகலரும் பயங்கொடுங்க மேலோங்கி ஆகாயமுழுதும்பரவி, அஷ்டதிசையெங்கும்மூடிப் பிரமனுலகைவளைந்து பாதலத்தைக்கிட்டி மற்றைய புவனங்களினும் படர்ந்தது மன்றியிற் சூரியன் பதத்தைக்கரித்தும் சந்திரமண்டலத்தையும் நட்சத்திரபதவிகளையும் அதற்குமேற்பட்ட சனிமுதலானவர் வசிக்குங் கோளங்களைத்தகித்துந் தேவராசன் வாசஞ்செய்யும், அமராவதிபட்டணத்தைக்கரியாக்கியுங், கேசவன்வாழும் வைகுந்தத்தைக் கொளுத்தியும், மற்ற தேவர் நகரங்களைச்சுட்டுந் திசைக்காவலர் பதங்களைவாட்டியும் அதஞ்செய்தது.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? அளவிறந்தகாலம் அரியதவங்களைச்செய்து மேம்பட்ட காசிபருடைய பிள்ளையாகியசூரபன்மன் தன் முயற்சியினுற்செய்த ஓமகுண்டத்திற் பற்றியெழுந்த தீயானது மேற்சொல்லியபடியே உலகங்க ளனைத்தையுங்கொளுத்தி வாட்டியதென்றால் இனிமேல்அவன் முடிக்குஞ்சிறப்புகளையாவராற்கணித்துச்சொல்லப்படும். இஃதன்றியும் மகத்தைநடத்தி வருமத்தியிற் பால்தயிர் தேன்முதலிய அவிகளையிறைக்குந்தோறும் ஓங்கியெழுந்த புகைப்படலமானது பரவிமேகக்கூட்டங்களை மறைத்தும் உலகத்தை விளக்குஞ் சூரியசந்திரர்களுடைய பிரகாசங்களையடக்கியும் மேகவண்ணரான விஷ்ணுபதத்தைமூடியும் பிரமன் பதியைக்கொள்ளைகொண்டும் விஸ்தீரணமாயிராநின்ற சத்த சாகரங்கள் பெரும்புறக்கடலினை மறைத்தும் வடவாக்கினியின் கொடுமையையடக்கியும் இந்தப்பூமண்டலமெங்கும்மூடியும் வருத்துகின்ற இந்தக்கொடுமையினுல்அவ்வவ்விடங்களிலிருக்கும் பிராணிகள் சுவாசம் விடப்படாமையாற் கண்கள்பிதுங்கிவாடித் தத்தளித்தார்கள். இவ்வாறு சூரபன்மன் வேள்விக்குண்டத்திலெழுந்ததிப்படலமும் அவன்றுணைவராகிய சிங்கமுகனும் தாருகனும் விளைத்தஆயிரத்தொரு நூற்றுப்பதினுறு ஓமக்குழிகளினும் பெருகிய சுவாலையும் ஏகமாயோங்கி அண்டமுகட்டைத்தாவநின்றது எப்படிக்கிருந்ததென்றால் சர்வ சங்காரகாலத்தில் அண்டரண்டபுவன சராசரங்களையுங் கொளுத்த வெழுந்த வடவாக்கினியை யொத்து விளங்கியது. இத்தன்மையாகச் சூரபன்மன் வளர்க்கும் வீரமாமகத்தினது பெருமைகளைக் கண்டதேவதூதரோடி இந்திரற்கிதனை விண்ணப்பஞ்செய்யக்கேட்டு அரம்பை ஊர்வசி முதலான தேவகணிகையராலும் மற்றுமுள்ள தந்திரங்களினுலும் இடையூறுண்டாக்க யத்தனித்துப்பார்த்துங் கூடாமையால்நடுநடுங்கிவாடி துக்கசாகரத்திலழுந்தவும் மேகவண்ணனை கேசவனும் நான்முகனும் ரிஷிகணங்களுஞ் சூரன் செயல்களைக் கேள்விப்பட்டு இவ்விதக்கொடியயாகத்தையாவர் செய்யவல்லவர் இப்பாதகன்நம்மினு மேம்பாட்டைப்பெற்று வாழமுயற்சிகொண்டானேவென்று அவரவரிடங்களி னிருந்தபடியே ஆகட்டும்இவன் வலியையுஞ்சவுரியத்தையும் அறிவோமென்று கோபித்தார்களல்லதுநெருங்கினவர்களல்ல, இவ்வண்ணமாகச் சூரன்தன்றுணைவர்களுடன்பஞ்சேந்திரியச் சேட்டைகளையடக்கித்தேகவாஞ்சையற்று வெய்யில்மழைகுளிர்பசியிவைகளினுல்வருத்தமின்றிப்பதினுயிரவருஷகாலம்அரியவேள்வியைச்செய்தும் அழகியசெஞ்சடையையுடைய சிவபிரானெழுந்தருளிக் காட்சிகொடாம லிருப்பது தெரிந்து முக்கணெம்பெருமான் நான்செய்யும்அல்பவேள்விக்கிரங்கிவருவாரோவென்றெண்ணித் தம்பிமாரைக்கூவித் தான்நடத்திவரும்மகத்தை முடிக்கக் கட்டளையிட்டுவைத்துத் தேவர்கள்மருண்டுருண்டோட விண்ணிற்பாய்ந்து ஓம குண்டத்துக்கு நேராகநின்று திடசித்தனுய் உடைவாளை யுருவிக்கொண்டு கூச்சமில்லாமல் தனதுசரீர வுறுப்புகளைநாடி அரிந்தரிந்து மண்டியெரியும் அக்கினியினிடத்தில் அவியாகப்போட்டுச் சோனைமேகம் மழைபொழிவதுபோலப்பெருகு முதிரத்தை நெய்க்குப் பதிலாகச்சொரிந்து வீரமகாவேள்வியைச் செய்துவருகையில் தன்னுடலி லிருக்கும் ஊனைக்கழிக்கப்பழைய படிக்குச்சேர்ந்துபொருந்துவதைக்கண்டு விம்மிதங்கொண்டு சகலருங்கிடுகிடென்றுநடுங்கக்கொக்கரித்து மனதி லதிகசந்தோஷம்படைத்தவனுய்இச்செய்கை நமதிறைவனுல் உண்டானதென்று நிச்சயித்து மந்தரகிரியையொத்த புயவலி பெற்ற நிருநராசனுனவன் மறுபடியும் அவ்வாறே அந்தரத்தில்நின்றுஆயிரவருஷவரையில் மாம்சயாகத்தைச்செய்தும் விஷ்ணுவும் பிரமனுந்தேடிக் காண்பரிய நிர்மலக்கடவுள் வாராமையைக் குறித்து சூரன் மனம்வாடி யேங்கியான்முடிக்கும் வேள்

விக்கிரங்கிப் பரமசிவ னிதுபரியந்தமெழுந்தருளாததன்மையினால் இவ்வுயிரை வைத்திருப்பதில் பிரயோசனமியாது ஆதலால்இறத்தலே யுறுதியெனநிச்சயித்துஒப்பற்ற விவேகசாலியாகிய சூரனானவன் அக்கினிக்கொழுந்துவிட்டெரியும் யாககுண்டத்தின் மத்தியில் சிவப்பக்காய்ந்து மந்திரவலியினால் அழிவின்றிப் பிரகாசித்துக் கொண்டிருக்கும் கூரியவச்சிரகம்பத்தின்மீதுகுதிக்க அவ்வூசியானது தடாரித்து கபாலத்துக்கு மேலுமுருவிவேள்விக்குண்டத்தி னடியின்விழுந்து சூரபன்மனுடைய தேகமுற்றுந் துகள்படப்பதை பதைத்து மாண்டனன்.

அம்மகத்துக்குத் தலைவனாய் ஓமஞ்செய்திருந்த சிங்கமுகாசுரன் இதைக்கண்டவுடன் மனம்நடுநடுங்கிச் சகோதர சம்பந்தத்தினாற் கண்களில்நீர்பெருகுவதுமாறி இரத்தவெள்ள மூற்றெடுத்துப்பாயக் கரங்கள்தீயினிடத்தில் அவிகொடுப்பதை ஓய்ந்தும்அதற்குரியமந்திரங்களைச்செபித்திருந்த வாயின்செய்கைகளையும் மறந்து கண்டவர்உயிரிருக்கிறதென் றையப்பட்டுவசனிக்கும்படியாகப் பிராணன் மூலாதாரத்தினொடுங்கத் துக்கசாகரத்திலழுந்தி யுணர்ச்சியழிந்து ஆயிரஞ்சிகரங்களையுடையமகம்மேருவைப்போலநிலத்தில் விழுந்துபுரண்டு சற்றுநேரத்திற்கியாபகம் வந்தவுடன் பதை பதைத்தெழுந்து மனஞ்சுழலப் பெருமூச்செறிந்து தன்வீரத்தையும் வலியையும்மறந்திவ்வாறு புலம்புவதாயினான், ஒப்பற்ற வலிமையுடையமாயைக்கும் அரியதவங்களைச்செய்து சிறந்த காசிபருக்கும் இஷ்டமுள்ள புத்திரனே! நிருதர்குலத்துக் கதிபதியே? மன்மதனையொத்த வுமதழகிய தேகத்தைக்காணேன் எங்கொளுத்தீர், தேவரீர்மனமும் உடலமும்வருந்திப் பலகாலம்அரிய மகஞ்செய்ததற்குப் பெறும்பேறிதுதானோ? ஓ! அண்ணாவே? சகலதுன்பங்களையும்நீக்கிச் சீராட்டிப் பரிந்துவளர்த்ததாயுங் கல்விமுதலிய செல்வங்களைப் பெறச்செய்யுந் தந்தையும் நீரேயென்றும் இந்தத்தானவக்குலத்தைவிர்த்திசெய்து ஆளவல்ல சக்கிரோஸ்பரனும்நீராகவும் எங்களுயிரும் நீரேயென்றும் எண்ணி உமதுஆதரவிலிருந்தோம் துணைவனே? சற்றும் அவ்வுறுதிகளை நினையாது எங்களைக் கைசோர விட்டிறக்கலாமோ? உமது சவரட்சணையில்லாதபொழுது மாய்ந்துபோகும் அபலாளான அடியோங்களுக்கு இனியொரு ஆதரவுமுண்டோ வீராதிவீரனே! தானவக்குலசிகாமணியே! மிகுத்தகீர்த்தியையும், பிரதாபத்தையும் பெற்றோங்காநின்றசூரபன்மனே! வெகுகாலமாக உம்மைப்போல இவ்விதமான அரியவேள்வியைத்தொடங்கிஇதற்குமுன் யாவர்செய்தனர். இவ்விதச் சிறந்தயாகத்தை வருந்திமுடித்தும் அதற்குரியவரத்தினைப்பெற்று வாழ்வதன்முன்னம்அடியோங்களிடத்தில் இதக்கமுந்தயையுங்கொண்டு பாதுகாத்தலைமறந்து தாமரையிலையிற்பட்ட நீர்த்துளியைப்போல நாங்கள் தத்தளித்துப் பரதவித் தலறவிட்டுப்போவதுஉம்போல்களுக்கழகோ பரமனுக்கு உம்மிடத்தில் அருளில்லையென்பது தெரிந்தவனாய்ப் பலகாலம் தேகவாஞ்சையையொழித்து வருந்திஆதியில் திரிபுரங்களையும் இரக்கமின்றிக் கொளுத்திய கல்மனதைப்பெற்ற சிவபிரானுக்குப் பிரீதியாக இவ்விதகொடிய யாகத்தை வருந்திச்செய்தனை அதற்குப் பரிசாகவோ உமதுடலிற் பொருந்திய உயிரையுங் கிரகித்துக்கொண்டனர்தீனதயாபரமூர்த்தியெனப் பெயர் பெற்ற கடவுளுக்கு இச்செய்கையும் ஒரு திருவிளையாடலோ! ஐயனே! உம்மைப்போல அரியபிராணனை யிழக்கும் மகத்தைச்செய்தவரும் பரமசிவத்தைப்போல இவ்வழி பாடுகளைக்கண்டுங் கிருபைசெய்யக் கடினகுணம்பெற்ற கடவுளரும்இச்செய்கைகளைத் திருஷ்டாந்தரமாகக்கண்டவுடன் உயிரைவிடாமல் என்னைப்போலப் பரிவற்றுப் பிராணனைத்தாங்கிநின்ற துணைவர்ஆகிய கடினச்சித்தம் பெற்றவரும் யாவராயினுமுண்டோ? எமதிறைவனே!வாயைத்திறந்து ஒருவார்த்தை சொல்லமாட்டீரோ. இஃதன்றியும் இவ்வரியவேள்வியை வருந்திமுடித்துச்சிவகடாட்சத்தினாற் சொல்லுதற்கரியவரப்பிரசாத உறுதிகளைப் பெறநின்றவர், தமதுயிரும் அழிவற்ற செல்வவளங்களையும் போக்குவாருமுண்டோ! இனிஎன்னசெய்வோமென்றெண்ணாது மெண்ணினவனாய்ஏக்கமுற்றிருந்த இந்திராதியர் இத்தின மனக்கவலையொழிந்து களித்திருப்பாரோ!ஐயனே! எல்லோருங்கொண்டாட முத்தீயுங்கொழுந்துவிட்டெரியும் வேள்வியைச்செய்து பல்லாயிரநாட்பழகியதேவரீர் சகோதரராயிருக்கும் நாங்கள் உம்முடன் வரமாட்டோமென்றெண்ணி யிதன்மகிமையை யெங்களுக்குவெளியிடாமலிருந்தீரோ! மணிவாயைத்திறந்தொரு உத்தரஞ்சொல்லலாகாதோ! இவ்விடத்தில்நின்றயாங்களனைவருங்காண கடினசித்தனாய் மண்டியெரியும் ஓமகுண்டமத்தியில் நின்ற வயிரக்கம்பத்திற்பாய்ந்து உயிரையிழந்துமாண்டுதேகத்தையும்போக்கினீர். இதனைக்கண்டு புலம்புகின்ற நான்இறந்தாலுந் தேவரீருடைய சந்திரபிம்பம்போன்ற திருமுகமண்டலத்தைக்காணப் பெறுவேனோவென்று இவ்விதங்களாகப் பன்னிப்புலம்பிய சிங்கமுகன் தன்னையீன்று முலைகொடுத்துக்காத்திருந்ததாயைக்காணாதஇளங்கன்றைப்போலக் கதறியழுங்காலத்தில்இத்திறங்களைக்கண்ட தாருகனும் பர்வதம்போன்ற தன்கரங்களினால் முகத்திலும்மார்பிலும் அறைந்துகொண்டுகோகோவெனப் புலம்பிச்சோபித்து நிலத்தில் மறிந்து பெருமூச்செறிந்து வேள்விக்களமுழுதும் வளையவளையப் புரண்டு, இரண்டுகைகளையுமோங்கி நிலம்பிளக்க வறைந்து, துக்கசாகரத்திலழுந்தி விண்ணுலகங்கள் திடுக்கிட் டஞ்சத்தக்கதாகப் புலம்பினான் இத்தன்மையாகச் சிங்கமுகனுந் தாருகனும் தமையனை யிழந்த கிலேசத்தினால் அலறி வாடுவதைக்கண்ட ராட்சதவெள்ளங்களனைத்துஞ் சத்தசாகரங்களும் அலைகள்வீசி யெழுந்தொலித்ததைப்போலக்கதறி வாய்விட்டலறிப் படாதபாடுபட்டார்கள்.

அக்காலத்தில் இவர்கள்புலம்புவதையும் சூரன் அக்கினிகுண்டத்தில்விழுந்து சாம்பலாய் மாண்டதையுங்கண்ட தேவதூதர் களித்தோடி வாட்டமுற்றிருக்கும் இந்திரனைவணங்கி இச்செய்திகளை விண்ணப்பஞ்செய்யக்கேட்டவுடன் மகிழ்ச்சியென்னும் அளவுபடாத சமுத்திரத்தில் முழுகிப்புதிய அமுதத்தையுண்டவனையொத்து நகைமுகத்தனாய் மனங்குளிர்ந்து சரீரம்பூரித்து மயிர் சிலிர்க்கக் கவலைமுற்றும்போக்கி அயிராவதத்தின்மீ தாரோகணித்துத்தேவர்புடைசூழ்ந்து போற்றப்பொன்னுலகைநீங்கிச் சந்திரமண்டலத்தைத் தாண்டிச் சூரியன் பதத்தைக்கடந்து ராட்சதர்படுந் துயரத்தைக்கண்டு களிக்க மேகமண்டலத்தில்வந்து விண்ணவர்புடைசூழ்ந்துநிற்கத்தேவராசனானவன் வேள்விக்களம் படும்பாட்டைக்கண்டுமகிழ்ந்து சரீரங்குலுங்க நகைத்துத்தான்பூர்வத்திற்செய்த தவமுயற்சிகள் வீண்படுமோவெனக் கொண்டாடி ஓவென்று

மோசைபடப்புலம்புஞ் சிங்கமுகனுநியான அவுணவெள்ளங்கள் படுந்துன்பத்தைக்கண்களாரநோக்கிவிம்மிதனுப்த்தேவர்களுடன்ஆகாயத்திலிருந்தான், அக்காலத்தில் ராட்சத சயினியங்களுடன் கலங்கி துக்கசாகரத்தி லழுந்தி வாடிய சிங்கமுகன்தெளிந்து நல்லகாரியம் நமது உயிரை வீணில்மாய்ப்பது தகுதியல்ல தமையனைப்போலவே இவ்வேள்வியை முடித்தும் அதின்முன்னிலையிற் பரமசிவமெழுந்தருளாவிடின் மாள்வது கீர்த்தியாகியதன்மையென்று நிச்சயித்தெழுந்து நடுநாயகமாய் விளங்கும் ஓமகுண்டத்தி னருகிற்போயிருந்து பரந்திருக்கும்ஆயிரஞ்சிரங்களையும் ஒவ்வொன்றாகத் தன்கரங்களில் விளங்குங்கூரியநகங்களினால் கிள்ளிக்கிள்ளிச் சமித்துகளாகக்கொண்டு தமையன்பூசித்த யாகத்தீயில் வீரங்களைப்பேசி மந்திரவிதிப்படிக்குப்போட்டு இரத்தவெள்ளங்களையிறைத்து வீரமாமகத்தைச்செய்யு முன்னிலையில் தவமுயற்சியினால்மீண்டும் அச்சிரங்கள் முளைக்க அவைகளையும்பறித்துப்பறித்து அவிகொடுத்து வருவதைக்கண்ட ராட்சதசேனைகள் மனம்பதைத்துஐயையோ! தமையனைப்போலவே தம்பியாகிய சிங்கமுகனுந் தன்தலைகள்அரிந்தரிந்து யாகத்தீயிலிட்டு மகத்தைச்செய்கின்றான் இதனாலென்னவிளையுமோவென் றேங்கிவாடுந்தருணத்தில்அதனைக்கண்டஅவுணவீரரிற்சிலர் உடைவாளையுருவிக்கொண்டு தங்கள்தலைகளையுங் கண்டித்துத் தீயிற்போட்டும் அக்குண்டத்தில் விழுந்தும் பிராணனை யிழந்தார்கள். அத்தருணத்திற் சிங்கமுகா சுரனுக்குக் கரங்களோய்ந்தும் சிவபிரான் அதுவனாயிற் கடாட்சி யாததினாற் சூரபன்மனைப்போலவே தானுந்தீயிற் பாயத்துணிந்து தேகத்தியாயானமாய் வேள்வியை நடத்திய தன்தமையனைப்போலவானத்தி லெழும்ப மனதிற் றிடங்கொண்ட மாத்திரத்தில் இச்செய்கை யனைத்தையும் பரிமளமிகுத்தகொன்றைமாலையையும் மூன்றாம்பிறையையுந்தாங்கியசிவந்த சடாபாரத்தைப்பெற்றுப் பேரின்பமாகிய கடலுக்கொருதெப்பமாகவிளங்கும்சிவபிரான்திருவுளத்தறிந்து இதனைச்செய்வதாயினர். கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே? இதுவரையினும் சூரனாதியர் வேள்விசெய்தசரித்திரங்களைப்பேசினோம். இனிசிவபிரானெழுந்தருளிவரங்களைப்பாலித்த விர்த்தாந்தங்களைச் சொல்லுவோமென்று சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினர்.

---

## வரம்பெறுபடலம்.

கண்டகறைமிடற் றுக்கண்ணுதலோன்சுந்தரனை
விண்டுமுதலோர்வியப்பவேவெண்ணெயிலாட்
கொண்டதொருபனவக்கோலந்தனைத்தரித்துத்
தண்டுமொருகைதனிலூன்றிவந்தனனே.

---

ஸ்ரீகாளகண்டமும் திரிநேத்திரமுமுடைய பரமசிவம் பூர்வத்தில்விஷ்ணுமுதலானவர்அதிசயிக்கத் திருவெண்ணெய்நல்லூரிற் சுந்தரமூர்த்திகளைத்தடுத்தாட்கொள்ளவெழுந்தருளிய விர்த்தப்பிராமணக் கோலங்கொண்டு திருக்கயிலையைநீங்கி ஒருகரத்திற் கோலூன்றித் தள்ளாடிநடந்துகண்டவர் அற்புதங்கொள்ள இராக்கதவீரர்வேள்விசெய்யும் ஓமகுண்டத்துக்கருகில்வந்து சிங்கமுகாசுரனைப்பார்த்து நீங்களெல்லோரும் அதிகக்லேசசித்தராய் இம்மகத்தைச்செய்கின்றீர் இப்படிவருந்துவதற்கு உங்களுக்கு அடுத்ததன்பத்தைச் சொல்லென்று எமதுகர்த்தன்வினவச்சிங்கமுகன் பரமன் திருக்கோலத்தைத் தெரிசித்தவுடன் மனமுருகிப் பத்திவிளைந்து பிதாவையொத்த இப்பெரியவர் அடியேன் படுந்துயரத்துக்கிரங்கி யித்தலத்தில் வருந்திவந்து விசாரிக்கின்றனர். இரக்கமுள்ளமனதைப்பெற்றவரென்றெண்ணி நின்மலமூர்த்தியினது திவ்வியசரணாரவிந்தங்களில் தன்சிரங்கள்முழுவதும்படச் சேவித்தெழுந்து கரங்களைக்கூப்பிக்கொண்டு சுவாமி! எங்கள்வரன்முறையும் இத்துன்பம் நேர்ந்ததற்குக் காரணமுங்கேட்டருள்க, பிதாவாகிய பிரமகுமாரனான காசிபருக்குந் தாயாகிய மாயையென்பவளுக்குஞ் சூரபன்மன் சிங்கமுகன் தாருகனென்னும் நாங்கள்மூவரும் மேலும்அளவற்றபிள்ளைகளும் பிறந்தோம். அதன்பின்பு தாயின்கட்டளைப்படிக்கு இவ்வனத்தில்வந்து லோகநாயகனானபரமசிவத்தைக்குறித்து மூவருமாய் இந்தமகத்தைச்செய்யத்தொடங்கிவருகையில் எங்களில்மூத்தவனான சூரனென்பவன் பலவருஷம் அரியவேள்வியைநடத்தியுங் கங்காசடாதரமூர்த்தியானவர் சற்றும் இரக்கமுற்று கடாட்சியாத காரணத்தைக்கண்டு மனம்வாடி மேகங்கள்பரந்திருக்கும் வானத்திற்பாய்ந்துநின்று திடசித்தனாய் மின்னலைப்போலப் பிரகாசியாநின்ற உடைவாளையுருவி கரத்திற்பற்றிச்சற்றும் மனஞ்சஞ்சலப்படாமல்தன்சரீரத்தைச்சேதித்து அத்தசையைச் சமித்துகளாகவும் உதிரத்தைநெய்யாகவுஞ்சொரிந்து பலநாள் வீரமாமகத்தைச்செய்துவருகையிற் பழையபடியே சரீரம்பூரிக்கமீட்டும் அரிந்தரிந்து கனலிற்போட்டும் பரமன் திருவுளமிரங்கிக் காட்சிதராததினால்வருந்தித் தன்சரீரத்தைப்போல வலியதாய்ச்சொலித்திருக்கும் இந்தவயிரக்கம்பத்திற் குதித்துத்தாரித்து உருவந்துகளாகிஅக்கினிக்கிரையாய்மாண்டான் அதையாங்கள் கண்டவுடன் உடல்பதைக்க மனங்கலங்கிப்புலம்பினவர்களாய் இவ்வக்கினியின் முன்னிலையில் எங்களுயிரையும் அவனுடன்விட நிச்சயித்து ஆயத்தமானோம். இத்தருணத்தில் தேவரீரொழுந்தருளிப் பரிவாய் விசாரித்ததால் உத்திரவுசொல்லுகின்றவனாயிற் சற்று நின்றோம். பிராமணோத்தமனே யிதுதான்எங்கள்வரலாறுந்துயரப்படுங்காரணமுமென்று சிங்கமுகன்விண்ணப்பஞ்செய்யக்கேட்டு எதிரில்நின்ற கிருபைக்கடலாகியமுக்கண்மூர்த்தியானவர் இரக்கமுற்று அப்பா சிங்கமுகனே உங்கள்தமையனைப்போலவே நீங்களும் இறக்கவேண்டாம் உமதுமுன்னவனைப் பழையபடியே யிந்தநிமிஷத்தில் வருவிப்போம் இவ்வுறுதியைநம்பி சகோதரவாற்சல்லியத்தினால் பாதிக்குந் துயரைநீங்கிச் சற்றிருமென்று தயாநிதியாகிய தற்பரன் திருவாய்மலர்ந்து உடனே பூர்வத்தில் பார்வதிதேவியார் திருக்கரத்தில்விளங்கும்விரல்களினின்றும் பெருகிய கங்காஜலத்தில் தமதுசடையிற்தரித்ததுபோக விஷ்ணு பிரமன் தேவேந்திரன் இவர்களுக்குத் தந்தவைகளிற் பொன்னுலகத்திற் பரவியிருக்குங்கங்கையைவருவதாகத் திருவுளங்கொண்டபோது ஆதியில்மாயவன் பூசித்துப்பெற்ற கோதண்டத்தைத்தாங்கிய கரகமலங்கள் விளங்கியசிவபிரானதுகருத்தைஅக்கங்கையானவளறிந்து குமுறித் தேவர்கூட்டங்களனைவரும் பயந்தோடஒலித்துப் பலமுகங்களிற்பெருகி மகத்துக்கள்பணிந்து

போற்றவும், அஷ்டதிசைகளினும் இருப்பவர் பயந்துநடுங்கவும், அதிசீக்கிரத்தில் உயர்ந்த விண்ணுலகங்களைத் தாண்டிப் பூமியின்கண்ணிறங்கிப் பரமனது பாதாரவிந்தங்களைப்பணிந்து அவரனுக்கிரகப்படிக்குக் கொழுந்துவிட்டெரியும் பலவேள்விகளுக்கு மத்தியில்விளங்கும் பிரதான ஓமகுண்டத்திற்பாய்ந்தவுடன் திருப்பாற்கடலினுதித்த ஆலாலவிஷத்தைப்போலக் கொக்கரித்துப்பழையபடியே சூரபன்மன் வெளியில்வந்ததைக்கண்ட சிங்கமுகனுந் தாருகனுங் கொடியதரித்திரத்தை யனுபவித்திருந்தவர் கஜேந்திர சம்பத்தைப்பெற்று வீறியதைப்போல மகிழ்சிறந்து மிகுந்தவலிபெற்றவராய் விரைந்தோடி ராஜாதிராஜன் பாதங்களிற்பணிந்துநிற்கத்தமதிறைவனைத் துணைவர்வணங்கப்பார்த்த தானவப்படைகள் எமதுகர்த்தன்வந்தான் வந்தானென்றுபதினாலுலகங்களினுங்கேட்கும் ஓசையுடன்கூவிச் சந்திரதோற்றங்கண்டசமுத்திரத்தைப்போல அரசனே! வாழிவாழியென்றார்ப்பரித்துதுச் சந்தோஷங்கொண்டாடினர்கள். இவ்வாறு கணக்கிறந்த நிருதவெள்ளங்கள் வாழ்த்திக்கொண்டுவர, துணைவர்களிக்கச், சூரன்வெளிவந்துநின்றதைக் கண்டமாத்திரத்தில்விண்ணகத்திற் சந்தோஷமாய் வேடிக்கைபார்த்திருந்த தேவேந்திரன் நடுக்குற்று விண்ணவருடன் ஓட்டமெடுத்துத் தமதுபதிகளிற் சேர்ந்து திகிற்பட்டிருந்தார்கள்.

அத்தருணத்தில் தம்பியர்கள் இருவரும் ஆனந்தசாகரத்தில்மூழ்கிச் சந்திரபிம்பம்போல முகமண்டலங்கள்துலங்க, இருமருங்கினுநிற்கவும், அசுரவெள்ளங்களுடைய புயங்கள் வானத்தோங்கப்பரந்து பல்லாண்டுகள்பாடிப்போற்றவும், நட்சத்திரக்கூட்டமத்தியிற் சந்திரன்விளக்குவதைப்போலச். சூரபன்மன் வலியதேகத்தைப்பெற்று நிற்கும்போது விருத்தப்பிராமணக் கோலங்கொண்டு நின்று. கங்கையையழைப்பித்த சிவபிரான்அவ்வுருவமாறித் தனதுபழமையாகிய ஆதியஞ்சோதியுருவத்தைஅவர்கள்தரிசிக்கும்பொருட்டுப் பார்வதியாரிடப்பாகத்தில்விளங்கவுந் திரிநேத்திரங்கள் துலங்கவுஞ் சதுர்ப்புயங்கள்பவளமலைகளைப்போலத் தோற்றவும் வலிபெற்ற ரிஷபவாகனத்தி லாரோகணித்துச் சிவகணங்கள்சூழ்ந்துதுதிக்கநமதிறைவன் அந்தரத்தில் வானின்கட்தோன்றிய சுந்தரமாகிய காட்சியைச் சூரன்கண்டவுடன் தேகபரவசனாய்ப் பூமியிற்படியவிழுந்து பணிந்தெழுந்துபலவிதங்களாகப் பன்னியேத்தித் துணைவருடன் கரங்களைச் சிரங்களிற்கூப்பி விழிகளி லானந்தநீர்பெருகநின்று போற்றுஞ் சூரபன்மன் முகத்தைப் பரமன் கிருபையாகப் பார்த்தருளி ஓதானவேஸ்வரனே! அளவற்றகாலமாய் மனவுறுதிபெற்று யாவராலும் முடித்தற்கரிய வீரமாமகத்தைநிறைவேற்றிமிகவும் வாட்டமுற்றாய்நமக்கும் உவப்பாயிற்று இனி உனக்குவேண்டியதைத்தருவோங் கேளென்றருளிச் செய்தவுடனே பொற்பிரகாசமாகிய ஆயிரம்இதழ்கள் விரிந்ததாமரைப் பீடத்தினனை நான்முகன் முதலானதேவர் வெருவி யின்றோடு நமதுபதங்களுஞ் சீரும் பெருமிதமும்போய்விட்டது போய்விட்டதென்றுவாடிவருந்தச் சூரன் விண்ணப்பஞ் செய்கின்றான் தீனதயாபரனே அடியவர்க்கெளியனே சச்சிதானந்தக்கடவுளேதேவரீருடையதெரிசனம்பெற்றுச் சிறப்படைந்தே னானும் விசாலமாகிய பூமிகளையுடைய பலபுவனங்களைக் கொண்டிருக்கும் அண்டங்களனைத்தினுக்குஞ் சக்கிரேஸ்வரனாய் அரசுசெலுத்தவும் அவைகளைக்காத்து ரட்சிக்கவல்ல ஆக்கினைசக்கரமும் நினைத்தற்குமுன் அவைகளைச்சுற்றிப்பார்த்துவரும் வேகமுள்ளவாகனங்களும், எக்காலமும் அழிவில்லாத வச்சிரதேகமுந்தந்தருளவேண்டும்இஃதன்றியும் அலைகள்வீசும் திருப்பாற்கடலிற் பள்ளிகொள்ளுங் கேசவனே முதலானவரெதிர்த்துப் போர்செய்தாலும் பின்னிடையாமல் அவர்களைவாட்டியோட்டும் பெருவலியும் சமஸ்ததேவாஸ்திரங்களும் நாசமில்லாமல் எப்போதுஞ் சிரஞ்சீவியாயிருக்கையும் கடாட்சிக்கவேண்டுமென்று சூரன் விண்ணப்பஞ்செய்யக் கலைகள்விளங்கும் பிறையையணிந்தசெஞ்சடாமண்டலதாரியாகியபரமேஸ்வரனருளிச்செய்வார் இப்பூமண்டலவெல்லையில் ஆயிரகோடி அண்டங்களுண்டு அவற்றுள் ஆயிரத்தெட்டுஅண்டங்களுக்கதிபனாய் நூற்றெட்டு யுகங்கள்வரையின் அரசுசெலுத்தக்கடவாய் மேற்குறித்த அண்டங்கள்முற்றினும் நினைவின்படிக்குச்செல்லும் வேகமும் வலியும்பெற்ற இந்திரஞாலமென்னுந் தேரொன்றும் அப்புவனங்களை எப்போதும் பாதுகாக்கத்தக்கதாய்ச் செந்தாமரைக்கண்ணனாகிய விஷ்ணுபரித்த சுதரிசனமென்னுஞ்சக்கரத்தினும் வலிபெற்றுச் சிறந்ததிகிரியொன்றும்திட்சண்ணியமாகிய கோபமும்வலியும் வீரமும்பெற்ற சிங்கவாகனமொன்றும் மற்றையுலகங்களிலிராநின்ற தேவருக்கெல்லாம்அன்றுமுதற்றலைமைபெற்றுவாழும் மேம்பாட்டையும் மேலுலகவாசிகளாகிய தேவரையும் மற்றுமுள்ளவர்களையும் எந்நாளும் வெற்றிகொள்ளத்தக்க பராக்கிரமமும் பாசுபதாஸ்திரமுதலான தேவப்படைகளையும் எக்காலத்தினுஞ் சலனமில்லாத வச்சிரகாயத்தையும் அனுக்கிரகித்து மேலும் வேகம்பொருந்தியகங்கையை விண்ணுலகத்தில் மீளக்கடாட்சித்த கங்கைக்கும்,பலவகைப்பட்ட வேள்விக்குண்டத்தில் மண்டியெரிந்த கொடியதழலுக்கும்மேலானதோற்றம்பெற்றுக் குலவத்தக்கதாய்ச் சர்வசங்காரகாலத்திற் பெருகிய சமுத்திரப்பிரளயம்போலவலிபெற்ற பதினாயிரகோடி வெள்ளமாகிய மதயானைகள் குதிரைகள் தேர்கள்ராட்சதர்கலந்தசயினியங்களையும்படைத்தளித்துச் சூரபன்மனை யாரினும்பெரியோனாகச் செய்தகாலையில் துணைவராகிய சிங்கமுகனுந் தாருகனுங்கர்த்தன் திருவடிகளிற் சேவித்துப்போற்றத் தமக்கொப்பற்ற சிவபிரானருளிச்செய்வார் சூரபன்மனிருபுயங்களைப்போலவே வீரத்தைப்பெற்றுச் செயசாலிகளாய்நூற்றெட்டியுகவரையினும் சகலவளங்களையும் பெற்றுச் சிறக்கவாழ்ந்து தேவாதியர்களைப் போர்க்களத்தில் வெற்றிகொண்டு முதுகுகண்டு கீர்த்திபெற்றிருப்பீர் தேவர்யாவரும் வந்து தொழத்தக்க முத்திறத்தராகிய வுங்களை நமதொப்பற்ற சத்தியொன்றினலன்றி மற்றெவர்களாலும் வெல்லப்படா தென்றருளி இவ்வாறு அழிவற்றவயதும் தமது திருநாமத்தால் விளங்கும் பாசுபதாஸ்திர முதலாகக்கொடுத்தது மல்லாமல் வெவ்வேறு பேறுகளையுந்தந்து வாழ்த்திக் கங்காசடாதர மூர்த்தியாகிய பரமேஸ்வரர் பூதகணங்கள்போற்றப் பழையபடிக்குத் திருக்கயிலையைச் சேர்ந்தார்.

## சுக்கிரன்உபதேசப்படலம்.

அற்றுகின்றவேலையின்முன்னோரணம்போற்
சுற்றுநிற்குந்தானவர்தங்கோன்றொலைவில்சீர்
பெற்றானென்னுந்தன்மையையுன்னிப்பெருவன்மை
யுற்றாரொல்லென்றார்த்தனராற்றவுவப்புற்றார்.

அக்காலத்திற் கோட்டையைப்போல வளைந்திருந்தரா
ட்சதவெள்ளங்கள் தமதிறைவனாகிய சூரபன்மன் பரம
சிவகடாட்சத்தினால் அளவற்றசம்பத்தைப் பெற்றானெ
ன்பதையறிந்து முன்னினும் அதிகவலிமையுந் தயிரிய
முமுடையவர்களாய்ச் சந்தோஷமிகுதியினாற் களிகொண்
டார்ப்பரித்துப் பிரமதேவன் உறங்கும் நித்தியப்பிரளய
காலத்திற் பூமண்டலத்தைச்சூழ்ந்திருந்த சத்தசாகரங்க
ளும் சர்த்தன் கட்டளைப்படிக்குத் தடைபட்டிருந்த தந்
தமெல்லையைக்கடந்து அலைகளைவீசிப்பெருகி உலகங்க
ளைமூடி மகம்மேருவைவளைந்துகொள்ளுமாறுபோலவே
ள்விக் களமுற்றிலுங் காவல்கொண்டிருந்த அணையைக்க
டந்து குலகிரிகளையொத்தோங்கிப் பூரித்திருக்கும் புயங்
களையுடைய சூரபன்மனைவளைந்து கண்களாரக்கண்டுஅ
ண்டமுகடும் வெடிபடச் சிங்கநாதங்கள்செய்து வீரகண்
டையணிந்த பாதங்களிற் சேவித்தெழுந்து தீநாற்றமிகு
த்தகள்ளை யுண்டவர்களைப்போலக் களித்துக் கரங்களைக்
கூப்பி மனப்பூரிப்பினால் இனியெங்களுக் கொருவருமிணி
கரில்லையென்று ஆடினார்கள் தமதரசன்கீர்த்திகளைப் பா
டினார்கள் இவ்வாறு அளவுபடாத சந்தோஷத்தினைப்பெ
ற்றுப் பழயகிலேசங்கள் அனைத்தையும்போக்கிச் சூரப
ன்மனைநீங்காமற்சூழ்ந்துபோற்றியிருக்கின்றகாலையில்ரா
ட்சதராசன்படைவீரரைப்பார்த்து ஓசெயசாலிகளேயித
ற்குமுன்னம் உங்களுக்குவலியில்லாமலிருந்தீர்களோவெ
ன்று சிலவுபசாரவார்த்தைகளைப்பேசிக் கிருபாநோக்கம்
பாலிக்கச் சந்தோஷசாகரத்தில் அழுந்தினவர்களாய்அவ்
வீரர்அனைவருஞ் சூரனைத்தொழுது சகலபுவனசராசர
ங்களனைத்தையும் நிமைப்போதில் தகிக்கவல்ல தீயைச்சி
தறும் நெற்றிக்கண்களையுடைய சிவநாதன் நமதிடத்திற்
பூரணகடாட்சம்வைத்திருக்கவும் அக்கர்த்தனாற் சகலவ
ளங்களையும்பெற்ற தேவரீர் எங்களுக்கிறைவனாயிருக்கவு
ம் அடியோங்களுக்குஒருகுறையுமுண்டோ சாஸ்விதமா
ய்நிலைபெற்றிருக்குஞ் சிறந்தசெல்வங்களைப்பெற்றுச்சகல
துன்பங்களையும் போக்கினோம் அருமையாகப்பெற்றுப்
போஷிக்கவல்ல தாயானவள் சுகமாயிருக்கின்றவளாயிற்
பிள்ளைகளுக் கொ குறையும் நேருவதுண்டோவென்று
மன்னனைப்புகழ்ந்து கொண்டிருக்குங்காலையில் இச்செய்
தியையறிந்த தேவகூட்டங்கள் நடுக்கமுற்றுவாடி யிது
வென்ன அதிசயம்பாரும் இத்தினவ்வளாயில் நம்மைப்பா
துகாத்திருந்த பரமேஸ்வரன் நம்மிடத்தன்பில்லாமல்இ
க்கொடியதானவர் பக்கலிற் பூரணகடாட்சம் வைத்தகார
த்தினாற் சூரன் வலியனானனென்பதற்குச் சந்தேகமுமு
ண்டோ இனிதாம் செய்யவேண்டுவ தென்னவென்றேங்
கிப் பிராணனை யிழந்தவனைப்போலவாடி வருந்தினார்க
ள் அப்பொழுது சத்தசாகரங்களைப்போலப் பரந்திருக்
குஞ் சேனைகளின் மத்தியிற் செல்வச்சிறப்புகளையும்வலி
யையும்பெற்ற சூரபன்மன் கெம்பீரமாகநிற்பதைச் சிவ
பிரானுடைய தோழனாகிய குபேரன்கண்டு தன்படைக
ளாகிய தானவருடன் வானத்தில்நின்று சோனைமாரியை
ப்போலக் கற்பகமலர்களைத்தூவி வஸ்திரங்களைவானத்
தெறிந்து சூரபன்மனே நீடூழிகாலம் வாழ்ந்திருக்கக்கட
வாயென்று ஆசீர்வதித்து ஆடிப்பாடினவனாய் இதனால்
இந்திரனுக்கடுத்ததுன்பத்தையறிந்துங்காலங்கருதிச்சொ
ல்லுதற்கரிய பெருமகிழ்ச்சியைப்பெற்றிருந்தான்.

இப்பாற் சூரனானவன் சிவகடாட்சத்தினால் ஓமகுண்
டத்தி லிருந்தெழுந்த கணக்கிறந்தபடைகளைப்பாதுகாத்
துவரத்தன்சேனைகளிலிருக்கின்றபலவீரர்களைத் தலைவர்
களாக்கினான் அத்தருணத்தில் மேருவையொத்தோங்கிய
புயங்களையுடைய அவுணராசன் சயினியவெள்ளமானது
பூமியினும் வானத்தினுந் திசைகளெட்டினும் நெருங்கிந
டக்கச் சூரபன்மன் தம்பியருடன் ஆலோசித்துப் பின்பு
யாகவெல்லையைக்கடந்து பிதாவாகிய தபோநிதியான கா
சிபரிருக்கும் வனத்தைச்சேர்ந்து அவர்திருவடிகளில் வ
ணங்கித் தாங்கள்வேள்வியைச்செய்ததுஞ்சிவபிரானெழு
ந்தருளித் தங்களுக்கனுக்கிரகஞ்செய்த வரங்களின் சிற
ப்பையுந்தெரிவித்து ஐயனே? இனிநாங்கள் நடந்துகொ
ள்ளவேண்டும் மார்க்கத்தைப்போதித் தருளுமென்றவா
க்கியங்களைக் காசிபர்கேட்டமாத்திரத்தில் மனம்வாடிதே
வேந்திரன்செல்வத்துக்குமுடிவுகாலம்நேர்ந்ததோ? பொ
ன்னுலகவாசிகள்துன்பப்படுமேதுவையுமுண்டாச்சுதோ
நான்பலநாள்வருந்திநோற்ற வேதவொழுக்கம் பழுதுப
ட்டதோ! எமதுகர்த்தனை ஸ்ரீகாளகண்டமூர்த்தியின் தி
ருவுளமிப்படிக்காயதோவென்றெண்ணி எண்ணிவருந்தி
ஊழ்வலியை நினைந்து துணிவுகொண்டு குமாரர்முகங்க
ளைப்பார்த்து உங்கள்வமிச பரம்பரையாய்க் குருவாகவி
ருப்பவர் சுக்கிராசாரியாகும் சீக்கிரமாய் அவரிடத்துக்
குப்போய் பத்திவினயத்துடன் சேவித்துப் போற்றுவீ
ராயின் இச்செல்வம் உங்களுக்குஅழிவின்றி நீடித்திருக்
கும் இம்மைமறுமைக்குரிய பயன்களையடைதற்குக் கார
ணமான நன்மார்க்கங்களைப்போதிப்பர். தாமசஞ்செய்யா
மற் போங்களென்று செலவுகொடுக்கப் பிதாவைச்சேவி
த்து விடைபெற்றுக் கொடியவனாசூரன் துணைவருடன்
அளவற்ற சேனாசமுத்திரஞ்சூழப் பிரயாணப்பட்டுமனை
துக்கினிய ஆசாரியர் வீற்றிருக்குஞ் சோலைக்கருகில்வரு
வதையறிந்து மனவாட்டமொழிந்து களிப்பைத்தருங்கள்
ளுண்டவனைப்போல மனப்பூரித்துசிஷர்கள்தொடர்ந்து
வரச் சுக்கிரன் எதிர்கொண்டகாலத்திற்சூரபன்மன்கண்
டுபத்திவினயத்துடன் சயின்னியப்பெருக்கைநீங்கிமுன்
னணியில்வந்து துணைவருந் தானுமாக மிகுந்தகாதலுட
ன் வருகின்றதேசிகன் பொற்றாமரையையொத்தபாதார
விந்தங்களில் தீர்க்கதெண்டன் சமர்ப்பித்தெழுந்து கரங்
களைக்கூப்பிநிற்கும் தானவராசனைச் சுக்கிராசசாரி கிரு
பையாகப்பார்த்து எந்நாளுஞ் சுகசீவிகளாகச்சிறந்து சக
லசெல்வங்களையும் அனுபவித்து இந்திரஒலக்கமாகவாழ
க்கடவீர்களெனப் பலபலவிதமாக ஆசீர்வதித்து நிருத
ராசனைத் தன்கைகளாரத்தழுவி மார்பினிறுகவணைத்து
உபசாரமாகத் தனதுஆசிரமத்துக் கழைத்துக்கொண்டு
போம்பொழுது கொடியமனதைப்பெற்ற சூரபன்மன்த
ன்தம்பியாகிய தாருகனைப்பார்த்து நான்ஆசிரியரோடுகூ
டப்போய் வருமளவும் இந்தச்சேனைகளுக்குக் காவலாக
விருக்கக்கடவாயென்று யூகமுனையில்நிறுத்தித் தன்பிரா

ணபதமாகிய சிங்கமுகன் தன்னுடன்வரச் சுக்கிரபகவானுடைய ஆசிர்மத்துக்குப்போய்க் கிரமப்படிக்கு அவர் செய்யும் உபசாரங்களைப்பெற்று ஆசனங்களிலிருந்துஅன்பாகச் சிலநேரஞ் சுபகரமான வார்த்தைகளைப்பேசிக்கொண்டிருந்து பின்பு நல்லகாரியம்நீங்கள்தவமுன்னிலையிற்பெற்ற பேறென்னவென்றுகேட்கச் சூரன்முகமலர்ந்து தான்அரியவேள்வியினைச்செய்ததுஞ் சிவபிரானெழுந்தருளி மனோபீஷ்டப்படிக்குச் சகலசெல்வங்களையும்அனுக்கிரகித்த விசேஷத்தையும் பின்பு பிதாவாகிய காசிபரிடத்துக்குவந்து அவரனுமதியின்மேல் இவ்விடம்வந்ததுமுதலாக விபரமாகத்தெரிவித்து சுவாமி? யினிநாங்கள் நடந்துகொள்ளவேண்டும் கிரமங்களை உபதேசிக்கவேண்டுமென்று பணிந்து குற்றமே குடிகொண்டிருக்கும்மனதைப்பெற்ற சுக்கிரன் இதனைப்போதிப்பதாயினன்.

ஓ! தானவராசனே? கவனித்துக்கேட்பாயாக பாசமென்றும், பசுவென்றும், பதியென்றும்மூவகையாகச் சொல்வர். அதனைநிதானித்துப் பார்க்குமிடத்துப் பிரகிருதியிற்றோன்றும் மாயாசம்பந்தமல்லது வேறல்ல, அதின் நிச்சயமாவது ஆன்மாவுஞ் சிறப்பைவாய்ந்தபதியும் ஒன்றேயாம், இஃதன்றியும் பிராணிகள்செய்கைகளை நல்வினை தீவினையென் றிரண்டுவகைப்படுத்தியும் அவற்றின் செய்கைகளின் முயற்சியினாற் பிறப்புண்டாவதென்றும் நல்வினைப்பிரயோசனத்தினா லின்பக்கடலிலேமூழ்கிச்சகலசெல்வங்களையும் அனுபவிக்கின்றதென்றுந் தீவினையின்வலியினால்வறுமைமுதலிய கெடுதிகளிற்பட்டுத் துக்கசாகரத்தி லழுந்துமென்றும் இவைகளையொருகாலத்தேயல்லாமல் ஊழ்வினைத்தொடக்கினால் இம்மைமறுமையினும் அதனால்விளையும் நன்குதீதுகளையனுபவிக்குமென்றும் மேலும் அந்தவூழ்வினைமுயற்சியினால் மேற்குறித்த இருவினைகளைநடத்துமிடத்து அவைகளுக்கடுத்த பலப்பிராப்தியைப் பெறுமென்றும் இவ்வகையாய்ச் சம்பாதித்த இருவினையின் வலிமையாலே பிராணிகள்மாறிமாறித்தோன்றி அழியுமெனவும் அதற்கேற்றவினைப்போகங்களை அறிதற்கரிய சிவநாதன்கூட்டியாட்டி வைப்பானெனவும் முற்குறித்த கர்த்தனும் அவன்பாசபந்தத்தில மூந்திஉழலும் பிராணிகளும் ஒருமைப்பட்டதல்லவென்றும் அப்படிக்குச்சொல்லுவோமாயின் அக்கடவுளுக்குக்குற்றம்நேருமென்றும் இவ்வாறு பலபலவிதங்களாகச் சிலர்சொல்வர். சூரனே! அதையுண்மையாக நினைக்கவேண்டாம், இதன்கிரமங்களைத் திருஷ்டாந்தமாகச் சொல்வோங் கேட்பாயாக ஆதியந்தமில்லாது நிலைபெற்றுச்சுயஞ் சோதியாகவிளங்கும் பரமசிவம் திருவிளையாடல்களைச்செய்ய விருப்புற்று நினைத்தற்கரிய தமதுமாயையினாற் பஞ்சபூதாதிகளை யுண்டுபண்ணியும் அம்மாயையே காரணமாகவுதிக்கும் பிராணிகளனைத்தையும் படைத்தும்அவற்றுட் கடாகாயத்தைப்போலக் கலந்திருந்துஅவ்வுடல்கள்மாயும்போது பழையபடியே ஏகமாய்நிற்பர். இவ்வாறு அளவற்ற பெருமைகளையுடைய அப்பரமமூர்த்தி தமதுதிருவிளையாடல்களை யிடைவிடாதுநடத்திவருவதன்றியில் பொய்யாகிய இருவினைமுதலிய வனைத்தையும் அவைக்குமேல்நின்ற மோட்சத்தையுங்குறித்து நோக்குமிடத்தில் அவ்வாறேசெய்து வருவதாகும்நிலைபெறுதகண்முதலிய ஐம்பொறிகளும் அதைநடத்தும் அந்தக்கரணசதுட்டயங்களும் ஒருமிக்குமாயினும் அவைகள்காணுஞ் சிறந்தபொருள்கள் உண்மையாகுமோ மனம்வாக்குக்காயங்களாற் செய்யப்படும் இருவினையினது காரணங்களும் மேற்குறித்தபடிக்குப் பரமன் திருவிளையாடலேயாகும், மேற்சொல்லியசெயல்கள் பொய்யானால்அவற்றின்காரணங்களினால்விளங்கும் இன்பதுன்பங்களை நித்தியமாக நம்பக்கூடுவதோ? அல்லது அத்துணிபையாவது பெறுமோ பொய்யினை மெய்யாகக்கொண்டாலும் அதனால்வரும் இன்பதுன்பங்களும் நித்தியனாகிய சிவபிரானைச்சேருவதுமுண்டோ? நிலைபெறாத ஸ்தூலவுடலுக்குத்தான் அடுக்குமோ? இதனைப் பகுத்தறிந்து கொள்ளக்கடவாய்.

இஃதன்றியும் பிறப்பதும் இறப்பதும் அப்பிராணிகளினாற் செய்யப்படும் வினைப்போகங்கள்யாவும் அவைகளைமுடிக்குங் கிரிகைகளுஞ் சிறந்த தற்பரமூர்த்தியைச் சேரப்பட்டதன்று இவைகள் நிதானித்துப்பார்க்குமிடத்துத் தேகமெடுத்ததற்குச் சுபாவமாகும், இதுவல்லாமற் சாவதும்உதிப்பதும்இதன்மத்தியிற்செய்யப்படுந் துன்பங்களும் அவை மாறிமாறிக்காட்டுந் தன்மைகளும்அவைகளினால்நடத்தும் வினைகள்முதலியவற்றைக்குறித்துநோக்குமிடத்துப் பலகுடங்களிற் பற்பலவாகத்தோன்றியஆகாயமானது அக்குடங்கள் அழிந்தபோது பரமாகாயமாகக்காணுமாறுபோலவே நினைக்கவேண்டும் அவ்வாறேபரமேஸ்வரனுஞ் சராசரப்பிரபஞ்சங்களிற் பரிபூரணமாகப்பரந்துநின்று திருவிளையாடல்களைச்செய்து அவைகள்பின்னமுறுங்காலத்திற் பழையபடியே சீவனும் ஈசனும் ஏகமாய்விளங்கும் ஆதிகர்த்தனாகியசிவன் வேறுபட்டிருப்பவனல்லன். மேற்குறித்தபண்பாகச் சகலத்தினும் பொருந்திநடிப்பித்தும் ஏகனாகவேதோற்றுவன். ஓ! தானவராசனே? இதனைச் சத்தியமென்றறியக்கடவைஇவைவன்றியுந் தனக்குத்துணையாக நினைக்கப்பட்டதருமத்தைச்செய்வதினால் நன்மைபயக்குமென்று நிச்சயங்கொண்டு அதனைச் சிரத்தையாகநடத்துவதும் அதிக்கிரமிக்கும்முயற்சியைப்பெற்றபாதகந் தீங்கைவிளைக்குமென்று அஞ்சிநிற்பதுஞ் சாதாரணமாக நடந்துவருமாயினும்அப்படிக்கெண்ணுவது மிகவும் அறிவின்மையாகும்எவ்வெவைகள் சம்பவித்தாலும் அவைகளைநன்கு தீங்கென்றெண்ணிச் சந்தோஷமுந் துயரமுங்கொள்ளாமல் இஃதனைத்தும் ஆதிகர்த்தன் மாயாவிலாசமெனத்தெளிந்து அவைகளைப் பேதமாகப்பாராட்டாமற் சமமாகநினைந்து அனுபவிப்பது நிச்சயமாகியமார்க்கமாம் நன்கினைத்தருந் தருமத்தினையே செய்யக்கடவை கெடுதிக்கேதுவாகிய பாதகத்தைநினைக்கவேண்டாமென்று அவைகளின்நிச்சயத்தைத்தெளிவுபெறஅறியுங் கருத்தில்லாதவர்கள் சொல்லுவார்கள். அவ்விரண்டையும் எவன்செய்தபோதினும்வரும் பயனென்றுமில்லை, அதேதென்றால் சகலமும் அவன் மாய்கையின் காரணமாகிய வித்தாகும் இதற்குச்சிலதிருஷ்டாந்தங்காட்டுவோம், கனவிற்கண்ட காட்சிகளும் அவைகளினால்வரும்மகிழ்ச்சி முதலியவைகளும் விழித்த காலத்தில் நாம்கண்டதில்லை, ஆதலாற்பரமசிவன்திருவிளையாடலும் அவ்வாறேவிளங்கும் இம்மையிற்செய்கின்றநல்வினை தீவினையின் பலன்களும் நம்மைச்சேருவதற்கொரு காரணமாவதுண்டாயினல்லவோ? அவைகளின்பலப்பிராப்த்தியினாற் சுகதுக்கங்களைப்பெறவேண்டிவரும் இஃதுபொய்மையோ? மின்னலைப்போலப் பிரகாசிக்கும் வேலைத்தாங்கிய சூரனே? பொய்யின் பகுதிகளாகத்தோ

ன்றுகின்றவை நிலைபெற்று நிற்கப்படுவதோ? மேற்கூறியநிச்சயப்பிரகரணங்களனைத்தையும் ஒருவன்பகுத்தாராய்ந்தறியும் பக்குவனாகியகாலத்தில் தான்பெறத்தக்க பேறுகளனைத்தையும் ஏற்றுக்கொண்டு மனக்கவலையற்றுப் பேரின்பச் சுகத்திலிருப்பன் அவற்றில் உறுதிவிளங்குங் காலத்தில் அஃதனைத்தும் உண்மையாகவே காணப்படும். இதுவல்லாமற் சிலரைஅஞ்ஞானிகளென்றுஞ்சிலரை ஞானிகளென்றும் வேறுபடநினைப்பது நீதியோ? சகலசிவராசிகளும் ஏகமென்றறியாநின்ற விவேகங்கிடைக்கவேண்டும் இஃதே சத்தியமாகும் ஓ! தானவேந்திரனே? யிவையனைத்தும் வேதநிச்சயமென் றறியக்கடவாய். மேலும் இவைகள் ஞானவான்களே யறியத்தக்க சூட்சுமமாம்.

இதுநிற்க இனிஉங்களுக்கு உதவியாகநின்றுமேம்படச்செய்யும் நீதிகளையும் உங்கள்முன்னோர்களுடைய வழிபாடுகள்முதலியவைகளையும் உனக்குத்திடப்படப்போதிக்கக்கேட்பாயாக விஷ்ணுவுக்கும் பிரமதேவனுக்கும் மற்றதேவர்முதலானவருக்கும் முதன்மைபெற்றஅரசுரிமையையுஞ் செங்கோலையும் அளவுபடாத செல்வவளங்களே முதலான சமஸ்தமும் உன்னிடத்தில் அமைந்திருக்கின்றது. இந்தப்பெருமையைக்கருதி உன்னைநீபிரமமெனநிச்சயப்படுத்திக் கொள்ளக்கடவை. இனிபிரமாதியரைச்சிறந்த தேவரொன்றொருபோதும்நினைக்கவும் வந்தனைமுயற்சிகளைச்செய்யவும் வேண்டுவதில்லை, இஃதல்லாமலுந் தேவர்கள் உங்களுக்கு வம்சபரம்பரையாகச் சத்துருக்களாய் உங்கள்முன்னோர்களைச் சின்னபின்னப்படக்கொன்று விர்த்திக்குவரவொட்டாமல் அடக்கி வீறியிருக்கின்றனர். ஆதலால் அவர்கள்செல்வங்களைக் கொள்ளைகொண்டுவோட்டியலைக்கச் சீக்கிரமாகத் துணிவுகொள்ளக்கடவாய் இந்திரனென்பவன் தேவருக்கரசனாகும் அவன்சிலநாளைக்குமுன் தன்சேனைகளுடன்வந்து உன்மரபுக்கதிபனாயிருந்தராஜனையுங் கணக்கிறந்த சேனைகளையும்வளைத்துக்கொண்டு பெருங்காற்றிற்பட்ட இலவின்பஞ்சைப்போலஅலைத்து நாசஞ்செய்துகொன்றான். ஆதலாலவனோடியொளிப்பதன்முன் சீக்கிரமா யவனைக்கைப்பிடியாகப்பற்றிவந்து பாரவிலங்கைப்பூட்டி அரியசிறையில்வைத்துப்பலதீங்குகளையுஞ்செய்து ஏவல்கொண்டும்மற்றைத்தேவர்களையும் வேதபாரகராகிய முனிக்கூட்டங்களையும்திக்குப்பாலகரையும் எக்காலத்திலும் உன்னுக்கினையிலடங்கியிட்ட ஏவல்களைச்செய்யக் கட்டளையிட்டுமீறாமலடக்கிப் பின்னும் அவர்கள்வாசஞ்செய்துகொண்டிருக்கும் பதவிகள்தோறும் இராட்சதவீரரைக் குடியேற்றுவிக்கக்கடவை, இதுவல்லாமற் கொலைகளவு கட்காமம் வஞ்சகமே முதலானவைகளை முக்கியமாகவெண்ணிச்சற்றுமிரங்காமல் திடசித்தமாய்நடத்தக்கடவாய், அவற்றால்உனக்கொருதீங்கும் சம்பவிக்காது. இவ்வாறுதுணிவுகொண்டுசெலுத்தாமற் போவையேயாயின் ஓ! சூரனே? நினைந்தகருமங்களனைத்தும் உலகத்தின்கண் உனக்குக் கைக்கூடமாட்டாது. மேலும் உன்னுக்கினைக் கெவர்பயந்துநடப்பார்கள். பரிமளமிகுத்த துழாய்மாலையைத்தரித்த முடியைப்பெற்ற மகாவிஷ்ணு ரிஷபமாகித் தாங்கும் பெருமையினையுடைய பரமேஸ்வர னனுக்கிரகஞ்செய்த ஆயிரத்தெட்டு அண்டங்களினும்உன்சேனாசமுத்திரத்துடன்கலந்து இன்றையதினமேபோய் முழுமையுந்திரிந்துதிரிந்து பார்த்து அவ்விடங்களி லுன்னரசுரிமைகளை ஸ்தாபிப்பதுமன்றியில் தகுந்தராட்சதவீரர்களைக் காவல்வைத்துத்திக்குவிசையமும்பெற்றுச் செயசாலியாய்ச் சகலரும்புகழ்ந்துவணங்க வெற்றிகொண்டுதிரும்பி இப்பூமியிற்சிறந்தவிடத்தில் ஒருநகரம்உண்டாக்கி அதிற்சகலருந்தொழுதுசூழ அரசுசெலுத்திவாழக்கடவாயெனச் சுக்கிராசிரியன் மனப்பூர்வகமாகப் போதித்தான். கேட்டீர்களோ!சவுனகாதிதவத்தரோ? இனிஅண்டப்பிரமாணங்களை சூரனுக்குச்சொல்லித் தெளிவித்த கதையையுஞ்சற்று கவனமாகக்கேட்பீர்களாக.

## அண்டகோசப்படலம்.

தீயதோரினையமாற்றஞ்செப்பலுமிதுநன்றெந்தை
யேயினபணியினிற்பனிறையவனெனக்குத்தந்த
வாயிரத்தெட்டென்றோதுமண்டங்கணிலைமையாவு
நீயுரையென்னவாசானிருபனுக்குரைக்கலுற்றான்.

தனதுஆசிரியனாகிய சுக்கிரபகவான் முத்திக்குவிலக்காகிய அஞ்ஞானமார்க்கங்களை விரித்துக்காட்டியவுடன் அவைகளை முக்கியமாயெண்ணிக் சூரவனைச்சேவித்துதேவரீர்கட்டளையிட்டபடிக்கு நடந்துகொள்ளக்கடவேன், அதற்குமுன்னம் பரமசிவம் எனக்கனுக்கிரகஞ்செய்த ஆயிரத்தெட்டண்டங்களின் பிரிவுகளையும் அதிற்பட்ட அடுக்குநிலைகளையும் அடியேனுக்குத் தெளிவாகப் போதிக்கவேண்டுமென்று சூரபன்மன் விண்ணப்பஞ்செய்ய, அதற்குச்சுக்கிரன்களித்துச் சொல்லுவான். ஓ! தானவேஸ்வரா? மூலப்பிரகிருதிக்குக் காரணனான புருடதத்துவத்தின்பொருளும் அதனால்விளைகின்ற தத்துவவிலக்கணங்களுநிற்க மேற்கூறிய அந்தமூலப்பிரகிருதியி னிச்சயத்தைச்சொல்லுவோங் கியாபகமாய்க் கேட்கக்கடவாய், மூலப்பிரகிருதியினிடத்திற் புத்திதத்துவந்தோன்றும் அதன்கண்அகந்தையுண்டாம், அதில்ஐம்புலனுமுகித்துபரிசுத்தமாகிய ஆகாயமுதற் பாதலவரையிற்பரவி எங்குந்தானாய்விளங்கும் இவ்விதச்சிறப்பினைப்பெற்ற புவியினிடத்தில் ஆயிரகோடிஅண்டங்கள்விளங்கும் அவைஒன்றினுக்கொன்று சகலவிதத்தினுஞ் சமமாகநிற்கும்அவைகளின்பெருமைகளை என்போலவர்களாற் சொல்லமுடியாது. சாத்திரவிதிப்படிக்கு விசாலமாகப்பரந்தோங்கிச்சொர்னகாந்தியை வீசிக்கொண்டிருக்கும் இவ்விதச்சிறப்பை வாய்ந்த ஞாலத்தின்கண்டோன்றிய ஆயிரகோடிஅண்டங்களிற் பரமசிவகடாட்சத்தினால் நீபெற்ற ஆயிரத்தெட்டண்டங்களில் ஒன்றின் பிரமாணத்தைஉள்ளங்கைநெல்லிக்கனியைப்போல நீமனதில்நிச்சயித்தறிந்து கொள்ளும்படியாக விரிக்கின்றேன் அதாவது சூரியகிரணத்திற்றோன்றும் பரமாணுக்களில் இருபத்திநாலுகொண்டது மயிர்நுனியென்றுசொல்லப்படும் மயிர்நுனிஎட்டுக்கொண்டது ஈர் அதுநான்குசேர்ந்ததுபேன்பேன் எட்டுக்கொண்டது இயவை அஃதுமூன்றுகொண்டது அங்குலம்அதுஇருபத்துநான்குசேர்ந்ததுமுழம்இதுநான்குகொண்டதுதனு அதுஇரண்டுகூடியது தண்டம் இஃதிரண்டாயிரங்கொண்டது ஒருகுரோசம் இதுநான்குசேர்ந்தாலொரு

யோசனை அஃதுநூறுகோடி கொண்டபரப்பும்அத்தொகையுயர்ச்சியும்பெற்றது ஒருஅண்டமாகும். இவ்வாறே மற்ற அண்டங்களுந் தொகைப்பட்டிருக்கும் இப்படிக் கொத்த பெருமைபொருந்திய புவிக்குக்கீழ் ஐம்பதுகோடியோசனை ஆழ்ந்தும் அந்தத்தொகை உன்னதமும்பெற்ற இடமுண்டு இவ்வாறே அப்புவிக்கு மேற்றலத்திலுமிருக்கின்றது இவ்வுலகம்புசமும் மகம்மேருவைச்சூழ்ந்த அஷ்டகுலாசலங்கள் ஐம்பதுகோடியோசனைஅண்டகடாகத்தினெல்லையி னேங்கியிருக்கும் மேற்கூறியஅண்டத்தின்கீழ் விளங்குஞ் சுவரின்கனங் கோடியோசனையாம் அதற்குமேல் ஒருகோடியெல்லையில் காலாக்நிருத்திரர்கள் வாசஞ்செய்யு முலகமிருக்கின்றதுஅவர்சரீரத்தெழும் அக்கினிச்சுவாலைபத்துக்கோடியோசனைபரியந்தம்பிரதிபலித்திருக்கும் அதிலெழுகின்றபுகைஐந்துகோடியோசனைவரையிற் பரவிநிற்கும் அத்தேவர் வீற்றிருக்கின்ற பொன்மயமான சிங்காதனம் ஆயிரயோசனை நிவப்பும்இரண்டாயிரயோசனைப் பரப்புமுள்ளதாயிருக்கும் அக்கடவுளினது அழல்மேனி பதினாயிரயோசனைப்பிரமாணமாய்விளங்கும் அவர்கரத்திற் கேடயங் கத்தி வாள் வில் சர முதலானவை பற்றியிருப்பார் அவரைப்போன்ற செயசாலிகளானருத்திரர் பதின்மர்சூழ்ந்து அவரைப்போற்றியிருப்பார்கள். அவர்கள்பணிவிடைகளைச் செய்துகொண்டு பத்துக்கோடிஅடியார்கள்நெருங்கியிருப்பார்கள்மேற்சொல்லிய காலாக்நிஉருத்திரரைச்சேவித்துவிஷ்ணுவாகிய ஆதிகூர்மம் புவனத்தைத்தாங்கி அவ்விடத்தில் அமர்ந்துநிற்கும் அப்பதவிக்குமேல் அடுக்கடுக்காக இருபத்தெட்டுகோடி யோசனைப்பரப்பில் நரகம்பரந்திருக்கும் அவ்வண்டத்தினுயர்ச்சியும் பரப்பும் இருபத்தொன்பதுகோடியும்பன்னிரண்டுலக்ஷமுங்கொண்டது. அதற்குமேல் தொண்ணூற்றொன்பதுலட்சம் யோசனைப்பிரமாணத்தில் ஒருபுவனமுண்டு அதின்கீழ்பாரிசம் இரும்புமயமாயும் மத்தியிலும் மேல்பாரிசமும் பொன்வடிவாயும்விளங்கும். அதற்கு மேற்பாகத்தில் கூர்மாண்டர் பொன்மயமான சிங்காதனத்தில் வாசமாயிருப்பார். அவரைச்சூழ்ந்து பேழ்வாயும்ஊழித்தீயைப்போன்றவடிவும்அரக்கைப்போலச்சிவந்துசுழலுங் கண்களும்பெற்று சூரியகணிச்சிமுதலானபடைகள் கரத்தில்விளங்கக்கணக்கற்றவுருத்திரகணங்கள் போற்றியிருப்பார்கள். அப்புவனத்துக்குமேல் ஆகாயம் ஒன்பதுலட்சம்யோசனை யுயர்ந்துநிற்கும் அதற்குமேல் அதலவிதலசுதலநிதல தராதலமகாதலபாதாளமென்றுசொல்லுஞ் சத்தபாதலங்கள்தோன்றும் அவை ஒவ்வொன்று ஒன்பதுலட்சம்யோசனை விஸ்தீரணம் பெற்றிருக்கும் இவ்வேழுபிலத்தினெல்லை அறுபத்துமூன்றுலட்சம் யோசனையாம்.

அதற்குமேல் எட்டுலட்சம் யோசனையுயர்ந்து கனிட்டபாதலம். விளங்கும்அஃதுமுப்பாகமாய் ஒவ்வொன்றுக்குப் பதினாயிரயோசனைபரப்புப் பெற்றுநிற்கும், அதன் கீழ்ப்பாகத்தில்அவுணரும்மத்தியில்விஷதந்தங்களைப்பெற்ற நாகராசர்களும் மேற்புறத்தில் அசுரரும் மனவெழுச்சியுடன் வாசஞ்செய்திருப்பார்கள். இதற்குமேல்ஒன்பதுலட்சம் யோசனையில் ஆடகேசுவரர் வாசஞ்செய்யுமுலகமிருக்கின்றது. அதற்குமேல்வெளிநூற்றிருபதுலட்சம்யோசனைகொண்டுநிற்கும், அதற்குமேல் அஷ்டதிக்கசங்களும் ஆதிசேடன்முதலிய அஷ்டமாநாகங்களும் இப்புவியைத்தாங்கியிருப்பர். இதற்குமேல் எண்பதுலட்சம் யோசனையில் பூமிதோன்றும், மேற்கூறிய பிலங்களில் ஆடகேசுரர் நாகர் அவுணர் அரக்கர் இறைவர்களாய் ஐம்பதுகோடி தொகைகொண்டசனங்கள் அவர்கள் ஆக்கினையைப்போற்ற அண்டகடாகமுதல் பூமிமீறாகக்காவல்கொண்டு பாதுகாத்திருப்பர். ஓ! தானவசக்ரேஸ்வரனே? இனிமுற்கூறிய பலவகையாகிய பிலங்கள்முதலியவைகளுக்கும் மேலாகத்தோன்றும் ஆதாரசக்தியான பூமண்டலத்தின் பிரிவுகளையும் அதனிடத்திருப்பவைகளையுஞ் சொல்லுவோம். அதாவது சம்பு-சாகங்-குசை-கிரவுஞ்சம்-இலவங், கோமேதகம், புட்கரமென்னும்விருட்சங்கள் விளங்கி, அந்நாமங்களைப்பெற்றிருக்கின்ற ஏழுதீவுகளுண்டு இவைகளைச்சூழ்ந்து இலவணஞ், க்ஷீரங், ததி, நெய், கருப்பஞ்சாறு, மது, சுத்தோதகம்என்கின்ற சத்தசாகரங்களும் மேற்சொல்லிய தீவுகளைக் கிரமமாகச்சூழ்ந்திருக்கின்றது. அவற்றிற்கப்பால் சொர்னபூமி பரந்திருக்கும். அதைச்சூழ்ந்துசக்கிரவாளகிரிநிற்கும். அதற்கப்பால்சாகரங்களுக்கிறைமைபூண்ட பெரும்புறக்கடல்தோன்றும். அதற்கப்பால் காடாந்தகாரமான இருட்பூமிதோன்றும். அதையடுத்து அண்டப்பித்திகை மேற்கூறியவகைகளையெல்லாஞ் சூழ்ந்துவிளங்கும், முன்சொல்லிய தீவுகளில் முதலாகிய சம்புத்தீவு லட்சயோசனை விஸ்தீரணமுண்டு அதைச்சூழ்ந்த லவணசமுத்திரமும் அத்தொகைப்பிரமாணமாயிருக்கும் மற்றஆறுதீவுகளுங் கடல்களும்ஒன்றுக்கொன்று இரட்டித்தவிசாலங்கொண்டுதோன்றும்இவையனைத்துங்கூடிய தொகைஇரண்டுகோடியும் ஐம்பத்துநான்குலட்சம்யோசனையுமாகும். இதுவல்லாமற்சொர்னபூமி பத்துகோடியோசனைகொண்ட விஸ்தாரம்பெற்றது. அதைச்சுற்றிய சக்கிரவாளகிரி பதினாயிரம்யோசனைப்பரப்பில்நிற்கும், அதைவளைந்திருக்கும் பெரும்புறக்கடல் ஒருகோடியுமிருபத்தேழுலட்சம்யோசனைப் பரப்புண்டு, அப்பால்தோன்றும் இருட்பூமி முப்பத்தைந்துகோடியும் பத்தொன்பது லட்சத்து நாற்பதினாயிரம்யோசனைப்பரப்பிருக்கின்றது. அதைச்சூழ்ந்திருக்கும் அண்டப்பித்திகை, கோடியோசனை கனமுண்டு அவ்விடத்திற் பூமி ஐம்பதுகோடி விஸ்தீரணங்கொண்டுதோன்றும். ஓ! சூரனே? நாங்கூறிய கணிதத்திற்பட்ட இத்திசையைத் தவிர மற்றமாதிரங்களைக் குறிக்குமிடத்துநாற்றிசைகளும் எட்டுக்கோணங்களுங்கலந்து இரண்டுகோடியும்நூறு யோசனைப்பிரமாணமுமுண்டு.

இனி யிவ்வுலகத்தையாண்டவர்கள் வரன்முறையைச் சொல்லுவோம். முட்களைப்பொருந்திய நாளத்தெழுந்து சகஸ்திரஇதழ்பெற்றுப் பொன்மயமாய்மகரந்தங்களையுந் தேனையுமிறைத்துப் பரிமளமிகுத்ததாமரைப்பீடத்திலெழுந்தருளிய சிருஷ்டிகர்த்தனான பிரமதேவன் வலதுபுசத்தில் அவதரித்த சுவாயம்பூமனு வேதவொழுக்கத்தில் பிசகாமல் தருமநான்குபாதங்களினுமோங்க மன்னுயிர்களைத்தன்னுயிரைப்போலெண்ணியிவ்வுலகமுழுவதுமொருகுடைநிழலில் ஏகசக்கிரத்தைச்செலுத்தி அளவற்றகாலம் அரசாட்சி செய்துவந்தான். அவனுக்கு அங்கிதீரன் மேதாதி வபுட்டுசோதிட்டு துதியான் அவ்வியன்சவனன் என்னும்ஏழுபிள்ளைகள் அற்புத புத்திவான்களாய் செயசாலிகளாய்ப்பிறந்தார்கள், அவர்களுக்குப்பருவம்வந்தகாலத்தில் அந்தப்பூமண்டலத்தை ஏழுகூறாக்கித் தனித்

தனியேஅப்பிள்ளைகளுக்குப்பட்டாபிஷேகஞ்செய்துபிதாவானவன் மோட்சத்தைவிரும்பித்தவத்துக்குச்சென்றுவிட்டான் பின்பு ஏழுராசகுமாரர்களும் அத்தீவுகளைப்பாதுகாத்தாண்டுவந்தார்கள். அவர்களிற் சம்புதீபத்தையாண்ட அங்கிதிரனுக்கு பாரதன், கிம்புருடன், கேதுமாலோன், பத்திராசுவன் இளாவிரதன், இரமியன், இரணியன், குருஎன்னும் பிள்ளைகள்பிறந்தார்கள், அவர்கள்பக்குவப்பட்டபின்பு நாவலந்தீவை ஒன்பதுகண்டமாக்கி அவர்களுக்குத்தந்து தான்மோட்சவீட்டையடைந்தான்.

சிறப்போங்கியசம்புத்தீவின் மத்தியிலிருக்கின்றமேருகிரியானது செந்தாமரைக்கொட்டையைப்போல விளங்கும் அதினுயர்ச்சி எண்பத்துநாலாயிரம் யோசனையுண்டு. பூமியிற்பதினாயிரமாழ்ந்திருக்கும் அதினுன்னதப்பரப்பு முப்பத்திரண்டாயிரமாம் உள்ளகலம் இதிற்பாதியளவு கொண்டிருக்கும் அதில்மூன்றுமேகலைகளுண்டு. அவற்றின்நடுநின்ற மேகலையிற் பலசிகரந்தோற்றும்அம்மேருபர்வதத்தின் மத்தியிற் பிரமன்வாசஞ்செய்யும்மனோவதிபட்டணமும் அதற்குமேற்பாகத்தில் விஷ்ணுவிருக்கின்றவைகுந்தமும் அதற்குவடகீழ் பாரிசத்திற் பரமசிவமெழுந்தருளிய திருக்கயிலாயமுதலெட்டுக் கிரிகளுமிருக்கின்றது அவைகளில் இந்திரன் அக்கினிஇயமன்நிருதிவருணன் வாயுகுபேரன் ஈசானமூர்த்திஇவர்கள் வாசஞ்செய்யும் நகரங்களுண்டு, அதற்குத் தென்பாகமுதல்வடபாரிசவரையில் நேரியதேசமோடியிருக்கும் அதற்குநேராய்த்திட்டிவாயலொன்று போகின்றது மேற்கூறிய மேருவுக்குக் கிழக்கில் மந்தரகிரிவெள்ளை நிறம்பெற்றுநிற்கும் அதற்குத்தெற்கில் பொன்மயமாகிய கந்தமாதனமுண்டுமேற்குத்திக்கில் நீலரத்தினமயமாகிய விபுலம்விளங்குகின்றது வடக்கில் மாதுளைப்புஷ்பநிறம்பெற்ற சுபார்சுபமுண்டு கடப்பவிருட்சம் நாவல்விருட்சம் அரசமரம்வடவாலவிருட்சம்இந்நான்குங் கிழக்குமுதல்நிற்கின்ற மேற்கூறியவரைகள்மீது முளைத்தோங்கியிருக்கும் மேற்கண்டநாவல் இரண்டாயிரயோசனை யுயர்ந்திருக்கும் மற்றத்தருக்களும் அதிற்பாதி யுயரமுண்டு இவ்விதச்சிறப்புவாய்ந்த மலைகளின் கிழக்குத்திசையில்அருணநதி, மேற்குத்திக்கில் அசிதோதநதி, தெற்கில் மானதமடு வடபாரிசத்திற் சிறந்தமடு நீர்விளங்குகின்றது கிழக்கில் சயித்திரதமென்னுஞ் சோலையுந்தெற்கில் நந்தனவனமும் மேற்கில் வைப்பிரசமென்னுஞ் சோலையும் வடக்கிற் கிருதாக்கியமென்னு நந்தனவனமுமுண்டு இதுமேருகிரிச்சாரலில்பரந்திருக்கும்மதுரமாய் பரிமளமிகுத்த சம்புநாவல் விருட்சந் தென்பிரதேசத்திலுண்டாகிய காரணத்தினற்பாரதகண்டமுற்றும் புகழ்பெற்ற நாவலந்தீ வென்றுபெயர்பெற்று அத்தருவிற்காய்த்துதிர்கின்ற கனிகளினிடத்தெழுந்தமதுரமானரசம்ஆறுய்மேருகிரியைவளைந்து வடபாரிசத்திலோடி சாம்புனதமென்று பெயர்கொண்டுவிளங்கும் அந்நீரையருந்தினவர்சரீரம் பொன்மயமாய்ப்பதின்மூவாயிரவருடம்வாழ்ந்து இளைப்பு, பசி, பிணியில்வருந்தாமலிருப்பார்கள். பொன்மலைக்கு நாற்றிசையினுமிருக்கின்ற மேற்சொல்லிய பர்வதங்களின்பரப்பும் உயர்ச்சியும் மேருகிரியிற் பாதிதொகையுள்அடங்கும் அதற்குக்கீழ்ப்பாரிசத்தில் நீலநிறம்பெற்ற மாலியவானென்கிறபர்வதமும் மேல்பாகத்திற் பொன்மயமான கந்தமாதனமென்கின்ற பர்வதமும், தென்றிசையில் மணிநிறம்பெற்ற நிஷதந், கனகநிறம்பெற்ற ஏமகூடம்,பொன்னிறம்பெற்ற இமையமென்கிற பர்வதங்களும், வடபாரிசத்தில்நீலநிறம்பெற்ற நீலகிரி, வெண்மைநிறம்பெற்ற சுவேதஞ், சந்திரகாந்தநிறம்பெற்ற சிருங்கமென்கிறபர்வதங்களுமுண்டு. தென்பாரிசத்தில் நிற்கின்ற மேற்சொல்லிய நிஷதமுதலானவரைகள் மூன்றுங் கிழக்குமேற்குச் சமுத்திரத்தைத் தலைக்கூடிப்பாய்ந்திருக்கும், வடபாரிசத்தில்நிற்கின்ற நீலகிரிமுதலாகியபர்வதங்கள்மூன்றும் மேற்கூறியபடிக்குப்பாய்ந்தோடும், இவ்வஷ்டகுலாசலங்களும் அவ்வவைகளும் இரண்டாயிரயோசனைவானத்தி லோங்கியிருக்கும், இவற்றுட்கந்தமாதனம் மாலியவானென்னுமலைகள் பதினாயிரயோசனைப்பரப்பில்நிற்கும், மற்றபர்வதங்களாறும் இரண்டாயிரயோசனை விசாலங்கொண்டிருக்கும், இவ்வஷ்டகோணங்களுள் நவகண்டங்க ளடங்கியிருக்கும், அவற்றினெல்லைப் பிரமாணமினிச்சொல்லுவோம் அரசனே கேட்பாயாக.

வடகடல்முதற் சிருங்கபர்வதவரையில் குருவருடமும் அதுமுதற் சுவேதபர்வதவரையில் இரணியவருடமும்அதுமுதல் நீலகிரிவரையில் இரமியவருடமும் மேருவைச்சூழ்ந்து இளாவருடமும் மேற்குச்சமுத்திரமுதற் கந்தமாதனபர்வதவரையிற் கேதுமால்வருடமும் கீழ்சமுத்திரமுதல் மாலியவான்பர்வதவரையில் பத்திரவருடமும்நிஷதபர்வதமுதல் ஏமகூடபர்வதவரையில் அரிவருடமும் அவ்வரைமுதல் இமையபர்வதவரையில் கிம்புருடவருடமும் அம்மலைக்குந் தென்கடலுக்கும் மத்தியிற்பாரதவருடமும் வழங்கிவரும் இவ்வாறு நவகண்டங்கள்விளங்கும்இதிற்பரதகண்டந்தவிர மற்றஎட்டுக்கண்டங்களிலிருக்கின்றவர்களுக்கு நாற்பத்துமூவாயிரம் வயதுண்டு, குருவருடம்வழங்குகின்ற நாட்டிலிருக்கின்றவர் ஒருதினத்திலிராவினிடத்தில் ஆண்பெண்ணுண்டாய்தங்களிலிச்சைகொண்டு புணர்வார்கள் அவர்களுக்குணவுபழவகைகளாதியாக தெய்வத்தருக்கள் வழங்கிவரும் தேகம்பசுமைநிறம் வயதுபதின்மூவாயிரவருடம், அத்தேசவடபாரிசத்தில் முனிவர் சாரணர்சித்தரிருப்பார்கள், அவர்களுக்கும்வயது பதின்மூவாயிரமுண்டு, படிகநிறம்பெற்றிருப்பார்கள். பத்திரவருடஞ்சூழ்ந்த தேசத்திலிருப்பவர்கனிகாய் புசிப்பர், பதின்மூவாயிரவயதுபெற்றுச் சிவந்தவடிவ முடையவர்கள். இரமியவருடஞ்சூழ்ந்த தேசத்திலிருப்பவர் பலாதிகளைப்புசித்துச்சந்திரனையொத்ததேகத்தைப்படைத்து பன்னீராயிரத் தைந்நூறுவயதுபெற்றிருப்பார்கள். இரணியவருடஞ்சூழ்ந்த தேசத்திலிருப்பவர் ஆலங்கனியைப்புசித்துக் குவளை புஷ்பநிறம்பெற்றுப்பன்னீராயிரவயதுடையவர். இளாவிரதகண்டத்தில் இருப்பவர் வெளுத்ததேகம்பெற்று கருப்பஞ்சாறுபுசித்துப் பன்னிரண்டாயிரவயதுபெற்றவர். கேதுமால்கண்டத்திலிருப்பவர் குவளைநிறம்பெற்றுத் தாழங்கனியைப்புசித்துப்பதினாயிரவயதுவாய்ந்தவர். அரிகண்டத்தில்வாழ்பவர் பதினாயிரவயதுகொண்டு கனிகாயுண்டு வெளுத்தவடிவுபெற்றவர். கிம்புருடகண்டத்திலிருப்பவர் அத்திக்கனியைப்புசிப்பர், பொன்வடிவுபெற்று வயதுபதினாயிரமுடையவர்.

ஏமகூடபர்வதத்துக்குத்தெற்கு இமையவரைக்குவடக்கில்பெருமைபொருந்திய திருக்கயிலாயமிருக்கும்,அதின்மேல்உமையவளுடன்பரமேஸ்வரர்வீற்றிருப்பார்ஊழிக்

காலத்தில்அவ்வனைமேல்கீழ்அண்டவனையிலோங்கிஆழ்ந்துநிற்கும். இவ்வெட்டுக்கண்டங்களிலிருப்பவர் துன்பம் பிணிநரைதிரை மூப்பெவ்வளவும் பெறமாட்டார்கள். கிரேதாயுகமுதல் மற்றமூன்று யுகங்களினும் நிறைந்தகியானம் தேகமுயர்ச்சி வயது அளவற்ற செல்வமுதலியவற்றை சமமாய்ப்பெற்று வாழ்வார்கள். பின்பு முதல் பாரதகண்டத்தில் அவதரித்து தாங்கள் பெறவேண்டிய வினைப்போகங்களை யனுபவித்து வாழ்வார்கள், மற்ற கண்டங்களில் மேகஞ் சஞ்சரித்துப் பெய்யாது, மேற்கூறிய பாதகண்டத்தி லிருப்பவர் பூமியை உழுது மற்றபல தொழில்களைச்செய்து பாவபுண்ணியங்களைத் தேடி தியானநிஷ்டை சமாதி யிவைகளை யனுஷ்டித்தவைகளால் அடையும் பயனைப்பெற்று வாழ்வர். பெருமை வலி அறிவு வயது உருவம் உண்டி செய்கை யிவற்றினை யுகாயுகங்களுக் கடுத்தபடிக்குப் பெறுவர், துவனை முதலான விளைவைச்செய்து அவற்றினூற்பெறும் பலனுடன் காய் கனி கிழங்குவகை முதலிய பதார்த்தங்களைப் புசிப்பார்கள். மற்றஎட்டுக் கண்டங்களி லிருப்பவருந் தெய்வலோக வாசிகளும் நாகலோகத்தாரும் பரதகண்டத்தை முக்கியமாய்விரும்பி வாசஞ்செய்து புண்ணியபாபங்களைச்செய்து அவற்றிற்கேற்ற சிறந்தபேற்றையடைவார்களென்று சொல்லுகின்றதால் நல்லொழுக்க மாதியான சத்கிர்த்தியங்களைப்பெற்ற பரதகண்டமொன்று மாத்திரம் நல்வினைதீவினையினுலுண்டாகுஞ் செயற்கைகளுக்கெல்லா மூலமாய் விளங்கும்,தேவர்முனிவர்முதலானவர்களுக்குக் குறைபாடுகள் நேருமாயின் அத்தலத்தில் வந்து தவம்பூசையாதியானவிரதங்களை பத்திபூர்வகமாகச் செய்துதாங்கள் விரும்பிய பேறுகளையடைவார்கள். கவீஸ்வரர்கள் புகழுங்கீர்த்திபெற்ற பரதனெனுஞ் சக்கிரவர்த்தியானவன் அரி-கசேருகன்- தாம்பிரபன்னி-கபத்திநாகன்-சவுமியன்-கந்தருவன்- வருணன்-என்னும் பிள்ளைகளெண்மரையுங் குமரியென்னும்பெண்ணையும்பெற்று உலகமெங்கும் கொண்டாடத்தக்க சிறப்புடைய பரதகண்டத்தை ஆயிரயோசனை யெல்லைபெற்றதாய் அவரவர்கள் பேரால்விளங்க நவகண்டமாக்கிக் கொடுத்தான் இக்கூறுகளில் கங்கை-கவுதமை-யமுனை-கவுரி-வாணி-காவேரி- நருமதை-பாலி-கம்பை-பம்பை-துங்கபத்திரை- குசைகோமதி- பாஞ்சாலி-சூரசி- பாபகனா-தூதபாவை- சங்கவாகினி- சிவை- பாரத்துவாசி-சார்வரி-சந்திரபாகை- சரயுவேணி- பிங்கலை-குண்டலை-முகரி-பொருனை- வெஃகா-பெண்ணை-முதலான பலநதிகள் பெருகிக்கொண்டிருக்கும், மயேந்திரம்-பொதிகை-சையஞ்-சத்தி-மாலிருடம்-பாரிபாத்திரம்- விந்தமென்னு மலைகளேழும், அயோத்திமதுரை-மாயா-காசி-காஞ்சி-அவந்தி-துவாரகை-என்னுஞ்சத்தபுரிகளும், விஷ்ணு-பிரமன்-இந்திரன்-மற்றதேவர்-முனிவர்முதலிய மேலுலகவாசிகளும் மனுக்கள் சக்கிரவர்த்திகள் இராஜாக்கள்முதலியபூமண்டலத்தாராலும் ஆதிசேஷன் அஷ்டமாநாகங்கள்முதலிய பாதலவாசிகளாலும்பார்வதி-லட்சுமி-இந்திராணிமுதலிய கற்புடைய தெய்வமங்கையராலும் பூசிக்கப்பட்டுவிளங்கும் ஆயிரத்தெட்டுசிவஸ்தலங்களானவை திருக்கயிலாயத்தைச் சூழ விருக்கின்றன. அச்சிறந்த தலங்களின்திருநாமங்களை அவற்றின்மகத்துவங்களுடன் பார்வதியாருக்குப் பரமேஸ்பரர் சிவரகசியத்தில் போதித்திருக்கின்றனர். அவ்வாறேநாமுமெடுத்துச் சொல்லுகின்றோம்.

(அவையாவன — திருக்கயிலாயத்துக்குக் கீழ்பாரிசத்தில் விளங்குந் ஸ்தலங்கள்.—ஸ்ரீகையிலாயேசுவரம், பூதேசுவரம், அம்பிகேசுவரம், சுரேசுவரம், கணேசுவரம், கந்தேசுவரம், தாரகேஸ்வரம், கங்கேசுவரம், நந்திகேஸ்வரம், பிரிங்கீசுவரம், பாளகேசுவரம், சண்டீசுவரம், முஞ்சிகேசுவரம், இரத்தினேசுவரம், கெந்தகேசுவரம், கெர்ப்பேசுவரம், வீரேசுவரம், சேஷ்டேசுவரம், குசுமேசுவரம், வீரபத்திரேசுவரம், கந்துகேசுவரம், பணீசுவரம், சுதேசுவரம், கபஸ்தீசுவரம், உருத்திரேசுவரம், பயிரவேசுவரம், கரவீரேசுவரம், நிஷதேசுவரம், வடேசுவரம், கச்சபேசுவரம், காசியபேசுவரம், ஆவட்டேசுவரம், அகரணீசுவரம், கலசேசுவரம், சோடவிகேசுவரம், பத்துமேசுவரம், மகதேசுவரம், துகுண்டேசுவரம், உகுண்டேசுவரம், சௌரேசுவரம், வருணேசுவரம், கருணேசுவரம், வயித்தியுதேஸ்வரம், மேட்சேஸ்வரம், தண்டகேசுவரம், மண்டலீஸ்வரம், குண்டலீஸ்வரம், கண்டேஸ்வரம், பாண்டவீசுவரம், கணிடேஸ்வரம், கருடேசுவரம், சந்திரேஸ்வரம், மாருதேசுவரம், விதீசுவரம், சுதீசுவரம், தண்டுகேசுவரம், மகேசுவரம், உமேசுவரம், கபந்தீசுவரம்,பத்திரகர்ணேசுவரம், வேகேசுவரம், விஷணீசுவரம்,வயிராதேசுவரம், அமரேசுவரம், சனுதனேசுவரம், சுங்தேசுவரம், சானந்தேசுவரம், செனேசுவரம், விக்கிரமேசுவரம், வசிஷ்டேசுவரம், குணிதம்பேசுவரம், குருண்டேசுவரம் நாகேசுவரம், கபாலேஸ்வரம், சுரேஸ்வரம், அயிற்புத்திரியேஸ்வரம், சமதக்கினியேஸ்வரம், விசுவாமித்திரேசுவரம். இராவணேசுவரம், பலீசுவரம், மனோன்மணீசுவரம், சுதாதரமேசுவரம், மார்த்தாண்டேசுவரம், வலந்தீசுவரம், சுவல்லலீஸ்வரம், துர்வேஸ்வரம்,கந்தர்வேசுவரம் விசுவகேசுவரம், பாடிபத்திரேசுவரம், கற்பேசுவரம்,மரீதன்னீசுவரம், ஸதோரணேசுவரம், அக்கிரதீசுவரம்,உத்பலேஸ்வரம்,மயேந்திரேஸ்வரம், தாண்டீஸ்வரம்,பரிதேஸ்வரம், அனங்தேசுவரம், கர்த்தமேஸ்வரம்,அமிர்தேஸ்வரம், வப்புருகேசுவரம், வாகுரீசுவரம், வர்மகேஸ்வரம் படுவத்திரேஸ்வரம், பிராமரேஸ்வரம், மிருகேந்திரேஸ்வரம், இரண்ணியேஸ்வரம், பவீசுவரம், அக்கினித்திரேஸ்வரம், சங்நதீஸ்வ்ரம், புருகுதீசுவரம், ரணேஸ்வரம் கிராதேஸ்வரம், கர்த்தசேசுவரம், வேணுதாரேசுவரம், சயந்தேசுவரம், மத்தியமேசுவரம், சங்கமேசுவரம், கதீஸ்வரம், வித்துருத்கற்பேஸ்வரம், திரிபுரேஸ்வரம், அரீசுவரம், பலப்பிரதமதளேசுவரம், சர்வபூதமேசுவரம், உகீனரேசுவரம், கற்பேசுவரம், மந்திரேசுவரம், தந்திரேசுவரம், சாமகேஸ்வரம்,யோமகேஸ்வரம், திகீஸ்வரம்,கபாலமோசனேசுவரம், மணிகற்பேசுவரம், சாதுகர்னேசுவரம், நிர்கீஸ்வரம், பாடலீஸ்வரம், கர்ணிகேஸ்வரம், சத்திரகேஸ்வரம், பிங்களேச்சுவரம், சிலேசுவரம், மத்துவீசுவரம், வாமகேசுவரம், யவ்வனேஸ்வரம், அபத்த ரேஸ்வரம், பிராத்தீஸ்வரம், சன்னுகேசுவரம். கோமேசுவரம்,அபிலேசுவரம், விசாலேசுவரம், சிம்மகேஸ்வரம், கண்டாகர்னேஸ்வரம், வியாக்கிரேஸ்வரம்,சம்புகேஸ்வரம்,லளிதேஸ்வரம், அமுர்தீஸ்வரம், வேதேஸ்வரம், திண்டிகேஸ்வரம், ககோளேஸ்வரம், துவரீசுவரம், பிந்துகேஸ்வரம், கண்டகீஸ்வரம், நிர்மதீஸ்வரம், அநிலேசுவரம், சபி

ண்டிலேசுவரம், அந்திரீசுவரம், கனகேசுவரம், சுரேசுவரம், சத்தியோசாதேசுவரம், வகுளீசுவரம், பிலவேசுவரம், சோமேசுவரம், வாரணேசுவரம், சாபேசுவரம், சடேசுவரம், பங்ககாரேசுவரம், முத்தகேசுவரம், ராகேசுவரம் பல்லூகேசுவரம், விராகேசுவரம், கிர்த்தனேசுவரம், அனகீசுவரம், உரகேசுவரம், கரோரேஸ்வரம், தர்த்தரேஸ்வரம், உரவரீசுவரம், ஷப்பிரேசுவரம், தாவ்வியேசுவரம் வினதேசுவரம், சசிசுவரம் சகுதேஸ்வரம், முகுந்தேஸ்வரம், பவானீஸ்வரம், சனீசுவரம், விருஷபேசுவரம், தேனுகேசுவரம், சவ்ரவேசுவரம், கணேசுவரம், ருக்ஷேசுவரம் சந்திரேசுவரம், மச்சேசுவரம், பாவனேசுவரம், துரங்கேசுவரம், மதங்கேசுவரம், காணதேசுவரம், பரிசேசுவரம், சலந்தரேஸ்வரம், சுவேதகவிஸ்வரம், பிகேசுவரம், தைப்பீசுவரம், முசுகுந்தேஸ்வரம், கங்கணேஸ்வரம், பிரகேஸ்வரம், வித்தியாதரேஸ்வரம், நிலேஸ்வரம் கட்சிவேஸ்வரம், பிரபேஸ்வரம், மருதேஸ்வரம், குந்திஸ்வரம், சுவர்க்கேஸ்வரம், மலயேஸ்வரம், மங்கணேஸ்வரம், சாகதீஸ்வரம், விபுதேஸ்வரம், கிரிஸ்வரம், கலஸேசுவரம், நிகூரணேசுவரம், கொரஷேசுவரம் வாசகேசுவரம், கந்தப்பேஸ்வரம், சூரியகேஸ்வரம், புஷ்டேஸ்வரம், துஷ்டகேஸ்வரம், விராயகேஸ்வரம், மணிகண்டேஸ்வரம், ரந்தனேஸ்வரம், பார்வதிசுவரம், வித்துருமேசுவரம், லதேசுவரம் விரிஞ்சேசுவரம், கற்பேஸ்வரம், பிரசன்னேஸ்வரம், விச்சேஸ்வரம், பார்பூதேஸ்வரம், லோகேஸ்வரம், பிராணிகேஸ்வரம், அந்தகேஸ்வரம், முக்திகேஸ்வரம், அரிகெசேஸ்வரம், ருஷீஸ்வரம், காருதேசுவரம், பதங்கேசுவரம், கன்னியேசுவரம், தவளேசுவரம், சாதுகர்ணேசுவரம், கந்தபத்திரேசுவரம் சக்கிரேசுவரம் அருணேஸ்வரம், அதாலப்பியேஸ்வரம், பகேசுவரம், திரியமலகேஸ்வரம், கவுதமேசுவ்ரம், கலேசுவரம், விதண்டேசுவரம், கடேசுவரம், வாரகேசுவரம், குலேசுவரம், கேதாரேசுவரம், பலேசுவரம், கின்னரேசுவரம், அமுர்தேசுவரம் இவைகளாம்.

திருக்கயிலேக்குத் தென்பாரிசத்தில் விளங்குந் தலங்கள்.—அகோரேசுவரம், கபாலேசுவரம், குருரேசுவரம், அனலேசுவரம், இந்திரேசுவரம், எமேசுவரம், திருதீசுவரம், நபேசுவரம், உதார்வர்தேசுவரம், தட்சிணவர்த்தகேசுவரம், பிகண்டேசுவரம், குடாரேசுவரம், மானவேசுரம், குலேசுவரம், மெசாபகேசுவரம், பெள்ளிகேசுவரம், அர்ச்சுனேசுவரம், கவீசுவரம், பகதத்தேசுவரம், நகுஷேசுவரம், அப்பிரிதீசுவரம், தங்கணேசுவரம், சந்தீசுவரம், மத்தியமேசுவரம், கசீசுவரம், வித்தியேசுவரம், பன்னகேசுவரம், கிர்த்தனேசுவரம், கிரேசுவரம், திவோதாசேசுவரம், ராதிதரேசுவரம், சவுனகேசுவரம், கணபத்திரேசுவரம், சேஷேசுவரம், வாசுகீசுவரம் சங்கபாலேசுவரம், சித்திரகுப்தேசுவரம், தண்டபாணீசுவரம், துர்க்கேசுவரம் சார்ச்சேசுவரம், அமசேசுவரம், மயூரேசுவரம், சக்கிரவாகேசுவரம், மந்தரனேசுவரம், மன்மதேசுவரம், ரதீசுவரம், கண்டகேசுவரம், பாண்டிரேசுவரம், வனேசுவரம், புரந்திரீசுவரம், பலேசுவரம், காரணேசுவரம், தாரணேசுவரம் கிருத்திவாசேசுவரம், சனர்த்தனேசுவரம், விசுவேசுவரம், மகாகாளேசுவரம், சரசுவதீசுவரம், லட்சுமீசுவரம், சசீசுவரம், சக்கிரகேசுவரம், புலகேசுவரம், புலஸ்தியேசுவரம், விர்த்தகாளேசுவரம், பரத்துவாசேசுவரம், சாகரேசுவரம், [illegible]மேசுவரம், விலேகினேசுவரம், சித்திரேசுவரம் பரதகேசுவரம், பிண்டாரேசுவரம், வனேசுவரம், திலகேசுவரம், திர்வேசுவரம் பிர்வேசுவரம், நலவேசுவரம், ஷீரிணீசுவரம், தனேசுவரம், கரந்தமேசுவரம், கோவேசுவரம், கிருஷ்ணேசுவரம், பர்னகேசுவரம், கங்காதரேசுவரம், மவுனேசுவரம், குருபத்திரேசுவரம், கமதளேசுவரம், சாளேசுவரம், தாளேசுவரம், பிலவகேசுவரம், அப்சரேசுவரம், மோட்சகேசுவரம், பூதாரேசுவரம், பதேசுவரம், அனரண்ணியேசுவரம், பாகுதேசுவரம், வேணேசுவரம், கவுதுகேசும், குசிரேசுவரம், விர்த்தினேசுவரம், நிரகேசுவரம், பர்ஜன்னியேசுவரம், இரமதேசுவரம், ஆடகேசுவரம், நதீசுவரம், விரோதேசுவரம், கங்கணேசுவரம், ரபசேசுவரம், ஸ்தலேசுவரம், அரிந்திரேசுவரம், குங்குமேசுவரம், நாகோத்தாரகேசுவரம், சுகேசுவரம், கியானகேசுவரம், புக்திசுவரம், முக்திகேசுவரம், ருணமோசனேசுவரம், காந்திசுவரம், தர்மேசுவரம், பாவளேசுவரம், பவனேசுவரம் காஞ்சேசுவரம் கோகர்னேசுவரம், சரேசுவரம், பாடீசுவரம், சவீசேசுவரம், வீதிகோத்திரேசுவரம், நீலேசுவரம் பிமேசுவரம் சங்கரேசுவரம், அமிர்தேசுவரம், பாரிசாதேசுவரம், மந்தரேசுவரம், சடேசுவரம், திரிசடேசுவரம், சிகண்டீசுவரம், பற்கீசுவரம், பரீளனேசுவரம், பணுமணீசுவரம், இராமேசுவரம், லட்சுமணேசுவரம், அருந்ததீசுவரம், பாகீசுவரம், பத்மகர்ப்பேசுவரம், அரண்மணீசுவரம், பக்ஷியேசுவரம், குசலீசுவரம், ஸலீசுவரம், உத்தாலகேசுவரம், நகதஞ்சரேசுவரம், பர்னகேசுவரம், சாண்டிலியேசுவரம், சாகலேசுவரம், கிர்ச்சேசுவரம், குசேசுவரம் தாரவேசுவரம், அனமித்திரேசுவரம், கரகந்தேசுவரம், உணேசுவரம், குருவிந்தேசுவரம், பட்டீசுவரம், குடபேசுவரம், ஸ்ரீசைலேசுவரம், கயேசுவரம், அரித்துவாரேசுவரம், கங்காவெலேசுவரம், குருக்ஷேத்திரேசுவரம், சுருபாண்டீசுவரம், யயாதீசுவரம், குதேசுவரம், வாராணசீஸ்வரம், அவிமுக்தேசுவரம், காளகஸ்தீசுவரம், விஷ்ணுசக்கிரப்பிரதேசுவரம், ரோமந்தேசுவரம், அகஸ்தியேசுவரம், மாலவேசுவரம், பகேசுவரம், அமகொலேசுவரம், பிரதானேசுவரம், மாருதேசுவரம், பவேசுவரம், நட்சத்திரேசுவரம், ஸ்தாலகேசுவரம், மல்லிகேசுவரம், குகுசாசுவரம், ரோகஅரீசுவரம், திரிசகேசுவரம், தனேசுவரம், சுபர்னேசுவரம், தாண்டலேசுவரம், மண்டலீசுவரம், அமிர்திசுவரம், தக்ஷகேசுவரம், பிரவாளேசுவரம், அரிபத்திரேசுவரம், விரோதேசுவரம், தும்புரேசுவரம், நாரதேசுவரம், கரேசுவரம், ரம்மியேசுவரம், விம்ரமேசுவரம், கர்த்தமேசுவரம், திரிணேசுவரம். சூலடங்கேசுவரம் சத்மலேசுவரம், ஆரீசுவரம், மறுதாமேசுவரம், சிந்தூரேசுவரம், அக்ரணீசுவரம், பிராந்தேசுவரம், பிறையாசேசுவரம் பிரதிஷ்டானபுரேசுவரம், கோதாவரீசுவரம், தாம்ரபர்ணீசுவரம், மர்த்துருதேசுவரம், பமலேசுவரம், பங்கிலேசுவரம், பனேசுவரம், புத்துதேசுவரம், ஆவர்த்தேசுவரம், சமேசுவரம், குலேசுவரம், விராடேசுவரம், பாலாசேசுவரம், கஸ்தீசுவரம், பிரளயேசுவரம், சாகதீசுவரம், திரலோகேசுவரம், துருதீசுவரம், சம்புகேசுவரம், குரவதேசுவரம், எக்கியேசுவரம், உதும்பரேசுவரம், வாலீசுவரம், பாலீசுவரம், பத்தினீசுவரம், பப்பிரவேசுவரம். கந்ததுவாரேசுவரம், சண்டேசுவரம். வருணேசுவரம், பிரபாசேசுவரம், புஷ்கரேசுவரம், ருத்திரகோடீசுவரம். வால்மீகேசுவரம் சுந்தரேசுவரம் ஸ்திரிணசோதீசுவரம், [illegible]காயத்திரீசு

வரம், சாவித்திரீசுவரம்' காலத்துவாரீசுவரம், துங்கேசுவரம், பீமசண்டேசுவரம், ரத்தினகர்ப்பேசுவரம் தேவேசுவரம், ஆரகேசுவரம். ரதிதேவேசுவரம்,காலஞ்சரேசுவரம், அஸ்தீசுவரம்' பைப்பலாதேசுவரம், கந்தர்வேசுவரம், திருகூலேசுவரம், ரஜதீசுவரம்,தீவேசுவரம்,சித்திரகண்டேசுவரம், துவாரபீடேசுவரம், திரிகூடேசுவரம், மங்களேசுவரம், ஆமலகேசுவரம், முத்திரேசுவரம், ஸ்தாடகேசுவரம், துவதண்டீசுவரம், கசேசுவரம், காத்தியாயனேசுவரம், யாக்கியவலகேசுவரம், திரிஷ்டேசுவரம், விசுவகர்மேசுவரம், மயேசுவரம், ரதகேசுவரம், வசுந்தரேசுவரம், ஷ்டிவுமேசுவரம், நாளகேசுவரம், மித்திரேசுவரம், கத்திரீசுவரம், காலவியேசுவரம், விபுதேசுவரம்,பவுமேசுவரம், பர்த்துருகேசுவரம், கருடேசுவரம், கர்த்திரேசுவரம், கங்கதீசுவரம், காவ்வியேசுவரம், சுவர்னதேசுவரம்.

திருக்கயிலைக்கு மேற்றிசையில்விளங்குந்தலங்கள். தத்புருஷேசுவரம், தாண்டவீசுவரம்' பைங்கேசுவரம், ருடகேசுவரம், சாலேஸ்வரம், இஸ்தாளகேசுவரம்,வைனதேயஸ்தலேசுவரம், முசலேசுவரம், அவுண்டகேசுவரம், குத்திரதனவீசுவரம், சுவார்ப்பாரகேசுவரம், ஷியஅரேசுவரம், பிரணவேசுவரம், விதர்ப்பேசுவரம், தேவேசுவரம், அசலேசுவரம், ஆனங்கேசுவரம், சம்பரேசுவரம், உக்கிரேசுவரம், தான்னியகேசுவரம், வலாசனேசுவரம், கனகோஷேசுவரம், வேதகர்ப்பேசுவரம், ஓங்காரேசுவரம், சகிலேசுவரம், கதூதரேசுவரம், பிலவமூலேசுவரம், சர்ப்பேசுவரம், பார்த்தீசுவரம், துங்கபத்திரேசுவரம், சகனுதனேசுவரம், வைத்தியேசுவரம், குனிங்கேசுவரம், பிரசேசுவரம், மாண்டவலியேசுவரம், ஸ்தம்பகேசுவரம், போதேசுவரம், விசுகேசுவரம், சகசேசுவரம்,தருப்புவீசுவரம்,கணபதீசுவரம், சுக்கிலேசுவரம், பிரசித்தேசுவரம், சித்தேசுவரம், சனேசுவரம்,பட்சீசுவரம், பத்திரிகேசுவரம்,வருளேஸ்வரம்,அவனீஸ்வரம்,பர்வேஸ்வரம், பர்வதேசுவரம்,குரவேசுவரம்,காந்திகேசுவரம், பரிகயித்துவசேசுவரம்,காபோதேசுவரம்,கணீஸ்வரம்,சதேஸ்வரம், ரோமகேசுவரம், காவ்வியேசுவரம்,வருஷகேசுவரம்,சோமநந்திசுவரம்,விபலீசுவரம்,கரேஸ்வரம்,அனயெதிசுவரம், சதர்சேசுவரம்,பவேசுவரம்,விதூரதேசுவரம், காம்பீசுவரம், சர்வேசுவரம், குணேஸ்வரம்,ஊர்த்துவகேசுவரம், சத்திரீசுவரம், ஸ்ரீகேசுவரம், சித்திரவ்வியாதேசுவரம், ரவுப்பியேசுவரம், பந்தகேசுவரம், பசுபதீசுவரம், பயஅரீசுவரம்,சன்மஅரீசுவரம், துக்கஅரீசுவரம், பிரமயோனீசுவரம். விஷ்ணுகர்ப்பேசுவரம், ருத்திரலோகேசுவரம், இந்திரதாமேசுவரம், சந்திரசூடேசுவரம், அக்கினிகர்ப்பேசுவரம், வாயுவீசுவரம் சலேசுவரம், மகேசுவரம்,வைத்தியுதேசுவரம், ஆமோதேசுவரம், தூரீசுவரம்,தியாவரபூமீசுவரம், கேசாசினதரேசுவரம், நாரசிம்மேசுவரம்,அவுபாசனேசுவரம், அவ்வியேசுவரம், கணிகேசுவரம்,கர்ண்ணீகேசுவரம்- ததிசேசுவரம், சமகேசுவரம்,கர்கடேசுவரம், சாபாவேசுவரம்,சுபாவேசுவரம்,புறத்துவரேசுவரம்,வேணுவிரேசுவரம், சுவுத்திரேசுவரம், காசீசுவரம், விஷ்ணுபேசுவரம், ராட்சசேசுவரம்,யட்சேசுவரம், பத்மராகேசுவரம், தூர்வாசேசுவரம், அயக்கிரீவேசுவரம், ராதந்தரேசுவரம், சாமசாலேசுவரம், யசுமூர்த்தீசுவரம்- இகேசுவரம், அதர்வகேசுவரம் புராணேசுவரம், உர்வசீசுவரம், பரிதி ஆசேசுவரம், தர்மசாரேசுவரம், சாங்கியேசுவரம், யோகீசுவரம், பவுளீசுவரம், பாலிகேசுவரம்' குசும்பேசுவரம், சம்பேசுவரம், இராசராசேசுவரம்' கதுமீசுவரம்' விசாகேசுவரம்' ஸ்கன்னேசுவரம், பவீகேசுவரம், கதளீசுவரம், பிஷ்டகேசுவரம், பிரிட்டுவீசுவரம்,கார்முகேசுவரம், அந்தரிகஷேசுவரம், மைத்திரேசுவரம்,குந்தமேசுவரம், உதாவசேசுவரம், மல்லேசுவரம், பிரமகேசுவரம்,தர்வகேசுவரம், குர்வகேசுவரம், மகரந்தேசுவரம், சுதாதரமேசுவரம் கிருதகோகேசுவரம்' வியானேசுவரம், விதர்க்கேசுவரம், கானனேசுவரம்,அமிதேசுவரம்,பத்திரமாலேசுவரம், கேதுமாலேசுவரம், மந்தரேசுவரம், வந்தியகேசுவரம், இமேசுவரம், நீலகேசுவரம், மகேந்திரேசுவரம், கர்மகேசுவரம், ருத்துவீசுவரம், தூணனேசுவரம்,வீதஅவ்வியேசுவரம், அசுவத்தாமேசுவரம், சிகரேசுவரம்,தீர்த்தகேசுவரம், திரிணவேசுவரம், அப்ஸகேசுவரம்' அப்ஸமாற்தரேசுவரம், சோமசண்டீசுவரம், மார்க்கசகாயேசுவரம், தேவீசுவரம் ருணசேசுவரம், சுவலனேசுவரம்,பாவகேசுவரம், ஆங்கிரசேசுவரம் தட்கேசுவரம், விதட்கேசுவரம் மைனுகேசுவரம், சதீசுவரம், பிரமதேசுவரம்,பிரமாதீசுவரம், போசேசுவரம், விக்கிரமே சுவரம், ஈட்டியேசுவரம், யோச்சியேசுவரம், கரணவேதேசுவரம், கரணகேசுவரம். பாண்டகேசுவரம், மேகவாகேசுவரம்,கனிஷ்டேசுவரம், செஷ்டேசுவரம், தாம்பிரேசுவரம்,சௌனகேசுவரம்,கர்ப்படேசுவரம். ஸ்ரீதாமேஸ்வரம், பரணுதேசுவரம், பிலேசுவரம், மாத்திரேசுவரம், பீதேசுவரம்,பந்துகேசுவரம்அரேசுவரம், பிராத்துருகேசுவரம், சாரதேசுவரம், ககணேசுவரம், அவிதேசுவரம், அனுஅதேசுவரம், பீதேசுவரம்,தூமாகேசுவரம், பந்தமோசனகேசுவரம், சதேசுவரம், பிரமரேசுவரம், காடகேஸ்வரம், தூர்மசண்டீஸ்வரம்,விசாலாக்ஷேஸ்வரம்,வசந்தேசுவரம்,ககேசுவரம், கசாசுரேஷ்வரம், நீலகண்டேசுவரம், சுமித்திராவருணீசுவரம், கன அம்சேசுவரம், சாவித்திரேசுவரம் கோமதீசுவரம், கோவர்த்தேசுவரம், விருஷேசுவரம்,கதிபிரதேசுவரம், வியாசேசுவரம், கோளகேசுவரம், மகாபூதேசுவரம், வசேசுவரம், கந்தகேசுவரம்,பாடபேஸ்வரம் படேசுவரம், சர்வபிராணிதிகேசுவரம், தடாதகேசுவரம், கர்ப்பகோசேசுவரம், தொரோணேசுவரம்,ரதீசுவரம்,ஆதப்பியேசுவரம், சசீசுவரம், துந்துபீசுவரம், சிந்துரேசுவரம், சவனேசுவரம்,கிருபேசுவரம், வீரபத்திரேசுவரம்,கரணதாரேசுவரம், தாம்பிரதுவசேசுவரம், கோவிதாரேசுவரம், சதருத்திரீசுவரம், பர்வதேசுவரம். தனேசுவரம் அருணேசுவரம், மரீசேசுவரம், திருமூலேசுவரம், விவேசுவரம், பூரணபத்திரேசுவரம், அரிகேசவனேசுவரம், இந்திரதுவசேசுவரம், மகாரோகஅரேசுவரம்,காமதானேசுவரம், பிலவோதேசுவரம்,கிமேசுவரம்,ரவேசுவரம்,நாககேசுவரம், தாரணேசுவரம், ஆவிகேசுவரம்.

திருக்கயிலைக்குவடபாரிசத்தில் விளங்குந்தலங்கள்.வாமதேவேசுவரம், கிளிகேசுவரம், சுசேசுவரம்,பிரகஸ்பதீசுவரம், வர்த்தனேசுவரம், மீகேசுவரம். கோகிலேசுவரம், பிரசண்டேசுவரம், வாமகர்ணேசுவரம்,ஆனந்தேசுவரம், கர்மரேசுவரம், அமரேசுவரம், பதீசுவரம்,வைராக்கியேசுவரம், கல்பகேசுவரம்,அரிபிரமேசுவரம், குணேசுவரம், விகுணேசுவரம், பிர்மாண்டேசுவரம், சடேசுவரம், விலாசேசுவரம், சுகசேசுவரம். ஆமகேசுவரம், பிலவேசுவரம். அன்னகோசேசுவரம், பிராணகேசேசுவரம்,விக்கி

யானேசுவரம், அசுனுசேசுவரம்·ஆத்மேசுவரம், ரட்சகேசுவரம்,ஆகன்னளியேசுவரம், முகதேசுவரம், கட்கேசுவரம், விசர்ப்பீசுவ்ரம், வாமனேசுவரம், ஆம்மிரோசுவரம் கமடேசுவரம், சிதாசுனேசுவரம்,உருகாயேசுவரம்,கபிஞ்சலேசுவரம்· கரகேசுவரம், ஷண்டகேசுவரம், அசங்கேசுவரம், சவகேசுவரம்,சோதீசுவரம், காரணேசுவரம்· அரிருத்திரோசுவரம், கிருபாணேசுவரம், திமீசுவரம்,ரனகாவர்க்கேசுவரம்,அரிசேபாருணேசுவரம்,அப்பிரோசுவரம்,தப்பிரகேசுவரம், தந்தகூகேசுவரம், உதாரோசுவரம்,இந்துமவுரீசுவரம், மகேசுவரம், சபேசுவரம்,அரிகேசுவரம்,திசோரீசுவரம், குத்தாலேசுவரம், அர்ப்பகேசுவரம், யுலேசுவரம், உதேசுவரம், தர்த்துகேசுவரம், பீர்சீசுவரம்,மதீசுவரம், வனஸ்தேசுவரம், கிரகஸ்தேசுவரம், அரிசேசுவரம், சகஸ்திரோசுவரம், சதேச்சுவரம்,லட்சேசுவரம்,கொடிகேசுவரம், பாஷேசுவரம், பானகேசுவரம், இந்திராவர்க்கேசுவரம், கஸ்தூரீசுவரம்,மதந்தீசுவரம்,மன்னுவீசுவரம், அற்புதேசுவரம். அயிராவதேசுவரம், தஞ்சேசுவரம், லிந்துகேசுவரம், அகங்காரோசுவரம், பாலநேத்திரோசுவரம், வைளிசளீசுவரம், கிரகசோசர்க்கேசுவரம்,பதுமாசளேசுவரம், வாரோசுவரம், தகரோசுவர்ம், வடமுலேசுவரம், உசனேசுவரம்,லுதீசுவரம், நதிலேசுவரம்,வங்கேசுவரம், பத்துமநேத்திரோசுவரம். உபசாங்தேசுவரம், தவேசுவரம், வர்த்தகேசுவரம், உலூகேசுவரம், பெருண்டேசுவரம், காவேசுவரம், பகந்தரோசுவரம்,விசித்தீரோசுவரம், ஸ்ரீணீசுவரம், பற்பாரோசுவரம்,சமசரோததாரணேசுவரம், களதௌதேசுவரம், உராவேசுவரம், ஸ்லேசுவரம், பரப்பஞ்சேசுவரம், பத்திரோசுவரம்· பர்ணீசுவரம்,அசுவினீசுவரம், ரோகணீசுவரம், பங்கசேசுவரம், விடேசுவரம், நிதினேசுவரம், ஸ்தோர்த்தவேசுவரம். பஸ்மமேசுவரம், சமேசுவரம், பபேசுவரம்,சர்ப்பேசுவரம்,பவதேசுவரம், சரசுவதேசுவரம், சுவாலேசுவரம், சாலகேசுவரம், தமேசுவரம், புண்ணியகேசுவரம், உசத்தியேசுவரம் அணிமாண்டேசுவரம்சர்வாத்தினேசுவரம், சுனக்கன்னேசுவரம், மாதனேசுவரம், பிரதூசுவரம், சிபிவிஷ்டேசுவரம், அம்சேசுவரம், மிருகேசுவரம், கெசானனேசுவரம் சாணேசுவரம், வீரகேசுவரம்,சண்டேசுவரம்,முண்டேசுவரம்,சுக்கிரோசுவரம்,பணிகேசுவரம், அனசூயேசுவரம், கந்தமாதேசுவரம், பண்டேசுவரம்,பிரசங்கேசுவரம்,காலகஞ்சேசுவரம், மிருத்தியுஞ்சயேசுவரம், சைலேசுவரம், சரச்சியேசுவரம்,கதீசுவரம், சுவபனேசுவரம்,சாங்கதீசுவரம், சுபத்தீசுவரம், அனேசுவரம்,சிதிசண்டேசுவரம்,சூரியேசுவரம்,கிரந்தகேசுவரம்,ஸ்படிகேசுவரம், கர்த்திரோசுவரம், வர்த்தேசுவரம், சீரணீசுவரம், சாரத்தூலேசுவரம்,ரபச்சியேசுவரம், புண்ரோசுவரம்,நர்த்தகேசுவரம்,ருத்திராட்சேசுவரம், கவிந்திரோசுவரம்,கவசேசுவரம்,மணீசுவரம், பரிபிலீசுவரம், ஆமர்த்தேசுவரம்,துருணேசுவரம், பிதாமகேசுவரம்,துடிலேசுவரம், சஷீசுவரம்,பர்த்தேசுவரம், லெசரேசுவரம், செகஷ-சுரோரேசுவரம், தண்டகேசுவரம்,லங்கேசுவரம், மணிபதிரோசுவரம்,கடொத்கசேசுவரம், புரேசுவரம்,நடேசுவரம்,காமர்த்தேசுவரம்,ஆம்பிராதகேசுவரம், கணிபூதேசுவரம்,ரத்னபூஷேசுவரம், பீடாளலேசுவரம் மணீசுவரம், மவுதீசுவரம்,புருஷேசுவரம், பரம்பேசுவரம், கவுரீசுவரம், ரமணீசுவரம்,பிலவங்கேசுவரம், கரீநதிரோசுவரம், நரத்தியேசுவரம்,பாஷ்களீசுவரம், மகாதானேசுவரம்,மண்டபேசுவரம்,வலீசுவரம்,ஈனிதேசுவரம், கீர்மகேசுவரம், பதுர்ப்பத்திரோசுவரம், திஷ்பராகேசுவரம், கோமேதேசுவரம், லவேசுவரம்,பிரபுசுவரம், ரட்சபேசுவரம், பிரசாதேசுவரம், குலேசுவரம், வச்சிரோசுவரம்· க்ஷேத்திரகேசுவரம், கரணிகாரோசுவரம் காவீரோசுவரம், புண்டரீகேசுவரம், விணைபாணீசுவரம், சந்திரீசுவரம்· கானகேசுவரம், ஆகாஉந்தீசுவரம், பயோதேசுவரம், குடேசுவரம், குடசாரோசுவரம், சுவேத்தானப்பிரிதீசுவரம், பிரதானேசுவரம், சிலாதேசுவரம்.கந்தேசுவரம், பத்தேசுவரம், திரிலோசனேசுவரம், பக்ஷேசுவரம் ஸ்தூலகண்டேசுவரம், பிரகடேசுவரம், தாரகேசுவரம், கோசாதீசுவரம், யந்திரோசுவரம்,மந்திரோசுவரம்,கனகலேசுவரம், கரவலேசுவரம், பிரதாரியேசுவரம், ஆதாரியேசுவரம்; குணீசுவரம், பகிரதேசுவரம்,திலீபேசுவரம், ருதீசுவரம், அனுதீசுவரம்,மித்திரவிங்தேசுவரம்·சுவரோகணஅரோசுவரம், சங்கேசுவரம், பிசங்கேசுவரம்,பாரியேசுவரம், தாரணேசுவரம், ககாரோசுவரம்;மாத்துருகேசுவரம்,குஷகாரோசுவரம், ஆரிதேசுவரம், அடசேசுவரம்,பக்தாலவியேசுவரம்· லோபாமுத்திரோசுவரம்,சுராபாண்டேசுவரம், மனுஅஸ்தீசுவரம், சித்திரதுவசேசுவரம், ரத்தினசௌதேசுவரம், காமேசுவரம். ருத்திரணீசுவரம்,அவந்தீசுவரம் கர்ப்படேசுவரம், துவசேசுவரம்· சத்திரகேசுவரம், சுதேசுவரம்,விசுதேசுவரம்,புல்லேசுவரம்,சாலகேசுவரம்· தேவகன்னியேசுவரம், நாதகன்னியேசுவரம்,சத்தியேசுவரம் நாவேசுவரம்· குபேரோசுவரம்,வனேசுவரம் பவித்திரோசுவரம். வளட்டேசுவரம். மகாட்க்ஷேசுவரம்நகேசுவரம்,சப்பினேசுவரம், தாவதேசுவரம்,சமாசினேசுவரம், சர்வகாமச்சப்பிரதேசுவரம், சச்சிநேசுவரம்· சுகேசுவரம், பிரணதார்த்திஅரோசுவரம், பஞ்சகங்கேசுவரம், பத்மனுபேசுவரம், பஞ்சவக்திரோசுவரம். பஞ்சாடசரோசுவரம், சமதேசுவரம், சுந்தேசுவரம்· கொர்ச்சிகேசுவரம்அதரிசேசுவரம், காகேசுவரம், கலாவர்த்தேசுவரம் தாம்ரதுவஜேசுவரம், அம்சதுவஜேசுவரம்,விருஷபத்துவஜேசுவரம், சிம்மதுவஜேசுவரம்.பிஞ்சேசுவரம், குமாரோசுவரம், நிஷங்கேசுவரம், கிலீசுவரம், ஈசானேசுவரம், விகர்த்தேசுவரம்· சுரபீசுவரம், அணிகேசுவரம், சாரங்கேசுவரம்,கடக்கேசுவரம், பந்துரோசுவரம், கமேசுவரம், சம்பேசுவரம்· மாதுரோசுவரம், ருத்திரகணேசுவரம், என்பனவாம்.)

இத்தலங்களைநினைப்பவரும், பூசிப்பவருஞ்சாரூபபதவியினைக்கிடைத்துவாழ்வர். இதுவல்லாமல்வேதாகமங்களை யோதுமகத்துக்களும், பிரமக்கியானிகளும், வாசஞ்செய்யும், பெருமையினைப் பெற்றதாய் பலகிரமங்களும் வேதவொழுக்கங்களைச் சார்ந்தொழுகும் உண்மைநெறிசேர்ந்தபுண்ணியபூமிகுமரிகண்டமாம்' மற்றஎட்டுக்கண்டங்களும்பலவித மிலேச்சர்களால் வாசஞ்செய்யப்பட்டு வியப்பில்லாமற் சிறப்பற்றிருக்கும் இவை சம்புத்தீவினுடையபிரிவாகும், தென்பாரிசக்கடல்சூழ்ந்த சாசத்தீவுக்கரசனை மேதாதிக்கு சாந்தபயன்-சிசிரன்-கோதயன்-ஆநந்தன்-சிவன்-கேமகன்-துருவனென்னுமேழுபிள்ளைகளுண்டு. அவர்பேரால் வருடமாக்கிஅக்கண்டத்தைப்பகிர்ந்தவர்களுக்களித்தான், அவர்கள் வாயுவைக் கடவுளாகத்தொழுபவர்கள் ஆரியர்-விந்தகர்-குரகர்- அவ்விடத்திருப்பார்கள்.சோமகம்-சுமனம்-சந்திரம்-துந்துபி- வப்பிராசன

ம்-நாரதியம்- கோமதமென்னுஞ்சத்தகிரிகளும்.சிவை-விபாபை - அமுதை-சுகிர்தை-மனுத்தநதை-சிந்தி - கிரமையென் றேழ்நதிகளும், அவ்விடத்திற்பரவியிருக்கும்.ததிக்கடலைச்சூழ்ந்திருந்த குசத்திவில் வபுட்டுவென்னும் அரசனுக்கு சுப்பிரகன்-உரோகிதன்-தீக்கன்-மூகன்-சுவேதகன்- சித்தசனன்- வயித்திதனென்னு- மேழுபிள்ளைகளுண்டு அவர்கள்பேரால்வருடமாக்கி தன்தேசத்தைப்பகிர்ந்துகொடுத்தான். உன்னதம்-குமுதம்-குமாரமேசம்-வைப்பருசம்-தகம்-மயிடம்-துரோணமென்னுமலைகளேழும் சோனை-வெள்ளி-மதி-தொகை- நேத்திரை-விமோசனை-விருத்தினென்னு மேழுநதிகளுமுண்டு.வாயுவைத்தெய்வமாகக்கொண்டாடுவார்கள். தர்பகர்-ஏகபிலர்-சாரணர்-நிலத்தர்-தண்டர்-விதண்டகரென்னுஞ் சனங்கள் அவ்விடத்திருப்பார்கள். அதற்கடுத்தநெய் சமுத்திரத்தைச்சூழ்ந்தது. கிரவுஞ்சத்திபமாகும், அதற்கரசன்சோதிடனென்பவனுக்குசாரணன்-கபிலன்-கிருதி-கீர்த்தி-வேனு-இலம்பன்-உர்ப்பிதனென்னு மேழுபிள்ளைகளுண்டு அவர்கள்பேரால்வருடமாக்கி தன்னரசைப்பகிர்ந்துகொடுத்தான் குசேசயம்-அருவி-துருமம்-புட்பம்-அருத்தம்-இமம்- மந்தாரமென்னு மேழுமலைகளும், சிவை-தூதபாவை- இயம்- புனிதை-பொருனை-அகிலபாவை-பந்தமென்னுமேழுநதிகளுமுண்டு. தபர்-சடாவகர்-மாதகரென்னுஞ்செனங்கள்வாசஞ்செய்பவர் பிரமனைத் தேவதையாகப்போற்றுவார்கள்.அதற்கடுத்த இட்சு சமுத்திரத்தைச்சூழ்ந்ததிபஞ்சான்மலியென்னும்பெயரையுடையது.அதற்கரசன் துதிமானனென்பவன்.அவனுக்குக்குசலன்-வெய்யன் தேவன்-முனி-அந்தகாரன் மனோதரன் துந்துமியென்னு மேழுபிள்ளைகளுண்டு. அவர்கள்பெயரால்வருடமாக்கி, தன்தேசத்தைப்பகிர்ந்தளித்தான்சொற்றிமிரம்-சுரபி-வாமனம்- விருத்தம் துந்துமி-தன்னியதடம்- புண்டரீகமென்னு மேழுவரைகளும்,பொது-குமுதம்-கவரி-இயாமம்-புண்டரீகம்- மனோபவம்-சந்தியமெனச்சொல்லு மேழுநதிகளு மோங்கியிருக்கும் புட்கலாதர்-புண்டகரர்-சிசிரர்என்பவர்அவ்விடத்திருப்பார்கள்பரமசிவத்தைத் தெய்வமாகப்பெற்றவர். அதற்கப்பால் மதுக்கடலைச்சூழ்ந்த கோமேதகத்திபத்தையாளப்பட்டவன் ஔவியனென்பவனுக்கு தூகவிமோகனன் மோகன்-சகலன்-சோமன்-சுகுமாரன்- குமாரன்- மணிசகனென்னு மேழுபிள்ளைகளுண்டு அவர்களுக்குத்தன்புவியைப் பங்கிட்டுக்கொடுத்தான்.சிங்கம்- அத்தம்-உதயம்-சலகம் - கிரவுஞ்சம் - அம்பிகேயம் - இரமிய மென்னு மேழுகிரிகளும், ஆதி - தேனு - சுபத்தி - குமாரி - சுகுமாரி - ருக்கு - மாயை யென்னு மேழுநதிகளு முண்டு அந்தகர் - மாகதர் - மானசர் - மங்கரென்னு மானிடர்கள் வாசமாய் சந்திரனைத் தெய்வமாகக் கொண் டாடுவார். அதன்பக்கத்திம் சுத்தோதகசமுத்திரம் அதை வளைந்த தீபம்புட்கரமெனச்சொல்லப்படும் சவனனென்பவன்- அரசன் அவனுக்குஉக்தாத்தி- மாவீரனென இரண்டுபிள்ளைகளுண்டு அவன் தன்னரசை அவர்களுக்கு இருகூறுக்கிக்கொடுத்தான். விடபம்ககேந்திரம், அருணம் வராகம் நீலம் இந்திரம், இந்திரியமென்னு மேழுமலைகளும். குடிலை-சிவை, உமைதரணிசுமனை சிங்கை குமரி என்னு மேழுநதிகளுமிருக்கின்றது நகரர் நாகரென்பவர். அவ்விடத்திலிருக்குமனிதர்கள்சூரியனைத்தேவதையாகப் பூசிப்பவர்கள். அத்தீவினது முடிவில் ஐம்பதினாயிரயோசனை பரப்பில் சக்கிரம்போலவட்டமாய் மானசோத்திரமென்றொருமலையுண்டு, அதனிடத்தில் இந்திரன்முதலான அஷ்டதிக்குப்பாலகர்களுக்கும், கிழக்குமுதலெட்டுத்திக்குகளிலும், வாசமாகிய பதவிகளிருக்கின்றன. இவையல்லாமற் சத்தசாகரங்களின் முடிவுகடோறும் வட்டணையாய்வளர்ந்து ஒவ்வொருபர்வதமிருக்கின்றது சாகத்தீவுமுதல்மற்றதீவுகளிலிருக்கின்றவர்களுக்கு நரைதிரைமூப்பு துன்பங்கிடையாது அவர்கள்கபிலையிலிருக்கின்ற கிம்புருடத்தன்மையைப்பெற்று பதினாயிரவயதிருப்பார்கள். அதற்கப்பாற் பொன்பூமிவிளங்கும் அதனைச்சூழ்ந்து சக்கிரவாளகிரிநிற்கும் அவ்வரைக்கிப்பாற் சூரியப்பிரகாசமுண்டு, அப்புறத்தில் இருள்மூடியிருக்கும். அதற்குரியமன்னர். செய்யமணிநிறம்பெற்று இயக்கர்இராக்கதர்பேய்க்கணங்கள்சூழவாசஞ்செய்வார்கள் திக்குப்பாலகர் தமக்குரிய திக்குகளிலும், மேருவினுந்தங்குவதைப்போல அவ்விடத்தினுமிருப்பார்கள் அதற்கப்பால் காடாந்தகாரமான இருட்பூமியிருக்கும்அதையடுத்த பெரும்புறக்கடலானது அண்டச்சுவரைப்போல வளைந்தோங்கும், ஊழ்வினைப்படிக்குத் தத்தம்உயிரைத் தாமேயொடுக்கும் வல்லபமுடைய மகத்துக்களுந் தெளிவில்லாத ஞானசூனியர்களுஞ் சக்கிரவாளகிரிமருங்கிற் சூழ்ந்திருப்பார்கள். மேற்கூறிய இருட்பூமியிலும்பிரமன்விஷ்ணு பரமசிவம்வாழும் நகரங்கள்மூன்றுண்டு.அதற்கடுத்த அண்டச்சார்பில் கணிதத்திலடங்காத தொகைப்பட்டருத்திரகணங்கள்கூட்டங்கூட்டமாயிருப்பார்கள்.

சம்புத்தீவுமுதல் அண்டச்சுவர்வரையில் பூமிவிளங்கிக்கொண்டிருக்கும், இப்புவிக்குமேல்கணங்கள்வாசஞ்செய்யுமுலகம், அதற்குமேல் குய்யகலோகம், அதற்குமேல் வாய்வுசஞ்சரிக்குமுலகம், அதற்குமேல் சத்தமேகங்களும் வாசஞ்செய்யு மேகமண்டலம், அதில்முப்பதினாயிரகோடி மேகசாலங்க ளொவ்வொருமேகத்தைச்சூழ்ந்திருக்கும், அதற்குமேல் கிம்புருடர் கருடர் சித்தர்விஞ்சையர் இயக்கர்வாசஞ்செய்யும் பதவிகளுண்டு, இதற்குமேல் தேவகங்கை பரவியிருக்கும், அப்பால் சூரியமண்டலம், அதுபூமிக்கு லட்சயோசனை பிரமாணத்திலிருக்கும்,அவ்விடத்தில் முப்பத்துமுக்கோடி தேவர் சூரியனுடன்கலந்திருப்பார்கள் அதற்குமேல் சந்திரமண்டலம் லட்சம் யோசனை, அதற்குமேல்நட்சத்திரமண்டலம் லட்சம்யோசனை அதற்குமேல் அங்காரகமண்டலம் லட்சம்யோசனை அதற்குமேல் புதமண்டலம் இரண்டுலட்சம்யோசனை, அதற்குமேல் பிரகஸ்பதிமண்டலம் இரண்டுலட்சம்யோசனை, அதற்குமேல்சுக்கிரமண்டலம்இரண்டுலட்சம்யோசனை அதற்குமேல் சனிமண்டலம், இரண்டுலட்சம்யோசனை அதற்குமேல் சத்தரிஷிகள் சஞ்சரிக்குமண்டலம், லட்சம்யோசனைஅப்பால் துருவமண்டலம் லட்சம்யோசனையிலிருக்கும், இத்தொகைகூடியது புவர்லோகத்தில்பதினைந்துலட்சம்யோசனை பாய்ந்திருக்கும் சந்திரவுலகத்தின்மீதி லிருக்கின்றதேசம் ஏழுவகையாய்த்தோன்றும் அவ்விடத்திலூழிமேகங்கள்வாசம்பண்ணும், சகலருங்கூடியிருக்கும் இப்பதவிக்குமேல் சுவர்லோகம்எண்பத்தைந்துலட்சம் யோசனையுண்டு, அவ்விடத்தில் தேவர்கள் போற்ற தேவேந்திரனமர்ந்து அரசாட்சிசெய்வான். அப்பால்மகாலோகம் இருகோடியோசனை அதில்மார்க்கண்டர்முதலான நாற்பத்தொண்ணாயிரம் ரிஷிகள் கூட்டமாய்

நெருங்கியிருப்பார்கள் அதற்குமேல் சனலோகம் எட்டுக்
கோடியோசனே அவ்விடத்திற் பிதிர்தேவதைகள்வாசஞ்
செய்வார்கள் அதற்கப்பால் தபோலோகவுயர்ச்சி பன்னி
ரண்டுகோடியோசனே அவ்விடத்திற் சனகாதிமகத்துக்க
ள்வாசஞ்செய்வார்கள் அதற்குமேல் சத்தியலோகம் பதி
னறுகோடியோசனே யுயர்ந்திருக்கும். அவ்விடத்திற்பிர
மனிருந்து உலகங்களைச் சிருஷ்டிப்பன். அதற்குமேல்பி
ரமபதம் மூன்றுகோடியோசனே அதற்குமேல் விஷ்ணு
லோகம் முக்கோடியோசனே, அதற்குமேல்சிவலோகம்நா
லுகோடியோசனே உயரத்தில்நிற்கும், அதற்குமேல்அ
ண்டகோளகை கோடியோசனேப் பிரமாணத்தில் கவிந்தி
ருக்கும் வேதாகமஇதிகாசஸ்மிருதிகளும் மற்றசாஸ்திர
ங்களும் வெவ்வேருகப்பேசும் அண்டத்தின்பிரமாணங்
களைச்சொல்லுவதற் களவுபட்டதோ மேலும்உண்மை
யை அறியவேண்டுமானல்படைப்பு அளவற்றபேதமுண்
டு ஆகையால் அவ்வவற்றின்பேதங்களை யோசித்தறியும்
அறிவையுடைய உனக்குமேற்கூறிய உண்மைகளைவிரித்
துச்சொன்னேம், இவ்வண்டத்தில் நூற்றெட்டுபுவனங்க
ளுண்டு அவைகளில் பரமசிவமருளிச்செய்தருத்திரகோ
டிகள்வாசஞ்செய்வார்கள், ஓ! அவுணேந்திரனே இவ்வ
ண்டத்தின் பிரமாணங்களையும். இயற்கைகளையுஞ்சொன்
னேம் பரமசிவமுனக்களித்த ஆயிரத்தெட்டண்டங்களி
லு மிவ்வாறேதோற்றும் அவைகளைப்போய் பார்த்துவர
க்கடவாயென்று ஆசிரியன்சொல்லமிகுத்தசந்தோஷத்து
டன்சூரபன்மன் தம்பியுடன்கேட்டு மகிழ்ந்திருந்தான்.

---

## திக்குவிசயப்படலம்.

குணங்கள்பற்பலவுணர்த்தியகுரவன்றன்கழல்கள்
வணங்கிவாளரிமுகனெடுவிடைகொண்டுவயமா
னணங்குவைகியதிறலுடைச்சூரர்கோனவுண
ரிணங்குதானையங்கடலிடைப்புக்கனனிமைப்பில்.

---

இவ்வாறு தாங்கள் சவுக்கியப்படுங்காரணங்களைப் பல
வாகப்போதித்த சுக்கிராசாரியைச்சேவித்து விடைபெற்
றுச்சிங்கமுகாசுரனுடன் வலியசிங்கவாகனத்தினேறிநடா
த்தும் வீரலக்ஷ்மிவாசஞ்செய்யும் புயவலியுடைய சூர
பன்மனனவன் இராட்சதவீரர் நெருங்கிக்கொக்கரித்துச்
சமுத்திரத்தைப்போலப் பரந்திருக்கும் நால்வகைச்சே
னசமுகத்தில் நிமைப்போதிற்கலந்ததருணத்தில் தாருக
ன்கண்டு எதிர்கொண்டு சூரனைச்சேவித்துச் சிங்கமுகனை
யும்வணங்கி கரங்களைக்கூப்பிநின்றதம்பியை, ராட்சதரா
சன் கிருபையாகப்பார்த்துத் தான்போனவிடத்தில் நடந்
தசெய்திகளைச்சொல்ல நல்லகாரியம்இனிசத்துருக்களைச்
செயங்கொள்வது தகுதியெனப் பேசிக்கொண்டிருக்குந்த
ருணத்தில் முன்னம் யாகத்துக்குவேண்டியவஸ்துக்களை
யுதவிப்போய்த் தவஞ்செய்திருந்த மாயையானவள் சிவ
ந்தசடைகளையும் நெற்றியில் அக்கினிக்கண்களையுடைய
பரமசிவத்தின் அனுக்கிரகத்தினற் பிள்ளைகள்பெற்றவர
ங்களையும் வலிமைகளையும் உணர்ச்சியிற்றெரிந்துவலிவா
ய் வானவழியாகவரக்கண்ட சூரபன்மனனவன் சிங்கமு
கன் தாருகன் அசமுகியோடும் அதிகபிரியத்துடனெதிர்
கொண்டு சேவிக்க, முன்னம்அவர்களைப்பெற்றநாளிலும்
மிகுந்தசந்தோஷத்தினைப்பெற்றவளாய்ச் சுகசீவிகளா
கச் சகலசெல்வங்களையும்பெற்று வாழ்ந்திருக்கக்கடவீர்க
ளென்று ஆசீர்வதித்தாள். அக்காலத்திற் குமாரர்கள்தா
ங்கள்தவஞ்செய்து பரமனிடத்திற்பெற்ற வரங்களின்சிற
ப்புகளைச் சொல்லக்கேட்ட தாய்மகிழ்ந்து பிள்ளைகளேஉ
ங்களைப்பார்த்துப் போகவந்தேன் இனியுங்களுக்கு ஒரு
குறைவுமில்லை, ஆதலால் தாமதஞ்செய்யாமல்தேவேந்தி
ரன்முதலானவர்களைச் செயித்து உங்கள் வசப்படுத்திக்
கொண்டு சகலரும்வணங்க இப்பூமியில் வாசமாய் அரசு
செலுத்தி வாழ்ந்திருக்கக்கடவீர்.

உங்களுக்கு மாயைகளின் முயற்சிவேண்டிய காலங்க
ளில் என்னைநினைப்பீராகில் அந்நிமிஷத்தில்வந்து நினை
ந்தபடிக்கெல்லாம் உதவிசெய்வதுமல்லாமல்உங்களைப்பி
ரியாமற் பலதரம்வந்து கண்டுபோவேன் நீங்கள்பேதமி
ல்லாமல் மனமொருமித்துச் செயசாலிகளாய்க் கஜேந்திர
செல்வங்களினு மேலாய் அனுபவித்திருப்பீரென்றுபிள்
ளைகளைவாழ்த்திச் செவிகளையளாவிப்பரந்த விழிகளையு
ஞ்சொர்னவளையல்களையும்படைத்ததாயானவள் போனபி
ன்புவிழிகளைப்புரட்டி கோடிதேர்க்காரராகிய தானவனை
ப்பார்த்துப்பெரும்புறக்கடலைப்போலப் பரந்திருக்கும்ந
மதுசேனைகள் நிதிபதியாகிய குபேரன்பட்டணத்துக்குந
டக்கும்படியாகப் பெருந்தொனியையுடைய பேரிகைக
ளைத்து ரிதமாயறையக் கடவீர்களென்று கட்டளை செய்
தமாத்திரத்தில் அரசனுத்தரவின்படிக்கு ராட்சதவீரர்
கள் பல்லாயிரம் யானைகளின் மீதிருக்கும்முரசங்களைமு
ழக்க அந்தச்சத்தத்தினைக் கேட்டவளவில் பிரமப்பிரள
யத்தில் புவனங்களனைத்தையும் ஏகமாய்மூடி அலைகளை
விழுங்கிராநின்ற சத்தசாகரங்களைப்போலச் சேனைப்பெ
ருக்கானது அத்திசையைநோக்கி ஆர்ப்பரித்து நடக்கும்
போது ஒன்றுபத்து நூறுஆயிரம் பதினாயிரம்லட்சம் இ
வ்விதமாகிய பலகணிதப்பட்ட சிரங்களையும் அதற்கிரட்
டிபெற்றகரங்களையுங் கொடியகுணங்களையும்அனற்பொ
றிசிதறும் விழிகளையும் சிங்கம்யாளிபுலியையொத்தமுக
ங்களையும் பர்வதம்போன்ற தேகத்தையும்பெற்றவர்களா
ய்ச் சூலந்தண்டமேமுதலான பலபடைகளைக்கொண்டவ
ர்களாய் அதிகவலியுடையவர்களாய்ச் சமுத்திரமுழக்கத்
தைப்பார்க்கினும்மேலிடும் உரத்தசொல்லையுடைய ராட்
சதவெள்ளங்கள் கணக்கிறந்ததாகத் தொடரவுங்,கண்ணி
மைத்து மூடுமுன்னே ஆகாயங்களிலுள்ள இடமெங்கும்
பாய்வதாய்ச் சூரியன் ரதத்தின்மீது தாவப்பட்டதாய்க்க
டலினிடத்துலவப்பட்டதாய் அஷ்டதிசைகளிற் குதிக்க
ப்பட்டதாய் வடவாக்கினியின்மீதும் நடிக்கப்பட்டதாய்ப்
பர்வதங்களினுச்சியில் தாவப்பட்டதாய்ச் சமுத்திரஞ்சூ
ழ்ந்த பூமண்டலமுற்றினும் சுற்றிவரப்பட்டதாய் இவ்வி
தவேகத்தைப்பெற்றுப் பஞ்சலட்சணங்களையும்வாய்ந்து
கவரிமானினது மயிரைப்போலப் பிடரிமயிரசையரத்தி
னத்தினுற்செய்த வீரகண்டைகள் கால்களைப்பெயர்த்து
வைக்குந்தோறுஞ் சத்திக்கத்தத்தித்தாவிநடக்குங் குதி
ரைப்பந்திகள் அபரிமிதமாய்த் தொடரவும் பருந்துகள்
வட்டமிட்டுவரவுங் காக்கைகள்அடர்ந்து கூவவும் பேய்க்
கூட்டங்கள்நடித்துவரவும் பூதங்கள் பின்பற்றிப்போகவு
ம்மேகசர்ச்சிதத்துக்கு மாருக வீறிடாது நின்றமுழக்கத்
தைப்பெருக்கி மும்மதங்களையும் மலையருவியைப்போ
லொழுக்கி சித்திரமுகபடாம் பிரகாசிக்க,மணிகளிருமரு

ங்கினும் மாறியொலிக்க, இவ்விதப்பெருமையினையுடைய யானையணிகள் தொடர்ந்துபோகவும் மகம்மேருவினிடத்துங், திருக்கயிலாயத்தினும், மற்றைய குலகிரிகளின் மீதும், மேகங்கள்பரந்திருக்கும்ஆகாயப்பரப்பினுங்கடல் சூழ்ந்த பூமண்டலத்தினும்நிமைப்பொழுதிற் சென்றுலவும் வேகமுள்ளதாய்ப் பொன்மயமானவண்டில் அச்சுமச்சுகுத்துக்கால் கொடுங்கைகொடிகள் சிகரங்குடைமுதலியஅலங்காரத்தைப்பெற்ற தேரணிகள் தொனித்தோடவும்இவ்விதசவுரியமுடைய சதுரங்கப்படைகளும் நெருங்கிமூன்றுகோடியோசனைப்பரப்பில் நாற்றிசையினும்விரிந்து செல்கின்றபொழுது தூசிப்படையானது பொன்மயமாய்ச் சகலவளங்களையும்பெற்ற அளகாபுரியைச்சேர்ந்து இதன்மத்தியிற் பஞ்சபூதங்களினும் மிகுத்தவலிபெற்றதாய் ஆயிரங்கிரணங்களைப்படைத்தசூரியனேறிச்செல்லும் இரதத்தினுஞ் சிறப்புடையதாய் அதனிலும் பிரகாசம்பெற்றதாய்த் திரிகாலங்களையுங் கணித்தோடும்பேருணர்வைப் படைத்ததாய்ப் பரப்பினல் அஷ்டதிக்குகளையும் மறைப்பதாய் எக்காலத்தும் எவ்விதத்திலும் அழிவில்லாததாய் மேருபர்வதத்துக்குமர்முகத்தோற்றுமுருவினதாய் நிமைப்போதில் அண்டங்களின் எல்லைமுற்றினும் உலவிவருங் கடியவேகமுள்ளதாய்ரதிகன்கருத்தின்படிக்கோடுவதாய் அழிவற்றகோடிகுதிரைகளைப் பூண்டதாய் நாசமுருதபலசாரதிகளிருந்து செலுத்தப்பட்டதாய் அளவிறந்த தேவப்படைகளேமுதலான அஸ்திரசஸ்திரங்களைப்பரித்ததாய் சத்திராதிகள்தேர்களின்மீதோடித்துகள்படுத்தும் வலிபெற்றதாய் இடிகளின்முழக்கமும் அடங்கும்படியான மணிகளின் சத்தங்களைக்கிடைத்ததாய்ப் பூமியைப்போன்ற பரப்புள்ளதாய் இஃதன்றியும் மற்றுமுள்ள சிறப்புகளனைத்தையும் படைத்ததாய்ப் பார்வதிபாகனை பரமசிவமுண்டாக்கிக்கொடுக்கும் பெருமைதங்கிய இந்திரஞாலத்தேரின்மீதுபர்வதத்தின்சிகரத்திலேதோன்றுஞ் சிங்காசனைநிகர்த்துச் சூரபன்மன் ஆரோகணித்து வெண்சாய்மரை ஆலவட்டங்குடைமுதலான ராசசின்னங்களைப் பல்லாயிரம் ராட்சதவீரர்தாங்கிவரஅவுணவீரர்புகழ்ந்துபோற்ற நடக்கும்போதுபதினாயிரம் யாளிக்கூட்டங்களையும் வேகமாய்த் தாண்டிப்பாயும் பதினாயிரம் புரவிகளையும் பருத்தபுயங்களையுடைய பதினாயிரம் பூதங்களையும் அணிவகுப்பாய்பூட்டிப் பொன்மயமாய் வானத்தையளாவிப் பரந்திருக்கும், உன்னதமுள்ளதேரின்மீது சிங்கமுகாசுரனேறியும்மனோவேகத்தினும் வாயுவேகத்தினும் மேலிட்டுச் செல்வதாய்ச் சுழிசுத்தங்களைப்பெற்ற பதினாயிரங் குதிரைகளைப்பூட்டிபொன்மலையினையொத்து மண்விண்ணெங்குமூடியிருக்கும் பெருமைபெற்றதேரின்மீது மதயானைபோன்றதாருகாசுரன்வீற்றிருந்தவனாய் இவ்விரண்டு வீரரும் சூரபன்மனுடைய இரண்டுபுயங்களைப்போல அவனுடையபக்கங்களில் தொடர்ந்துவரவுஞ் சேனைத்தலைவர் சொர்னமயமாய் ரத்தினகாந்திகளை வீசுந்தேர்களி லேறினவர்களாய் அணிகளின் மத்திமத்திற் காவல்கொண்டு போகவும்மற்றசேனைவீரர்கள் நீலகிரியையொத்த மதயானைகள்மேலும் கவரிகளிருமருங்கினும் வரிசைபடத்தொங்கக் கடிவாளமுதலிய முகச்சின்னங்கள் பிரகாசிக்கக்கால்களிற் பொற்றண்டைசத்திக்க அலைகளைப்போலத் தாவிப்பாயும் பலநிறக் குதிரை யணிகளினும் ஆரோகணித்து அரசனைத்துதித்து இருபாரிசங்களினும் வரிசைவரிசையாகத்தொடர்ந்து நடக்கவும் பதினெண்வகைப்பட்டு வலிபெற்றிருக்கும்வில்வாள் வேல் சக்கரங் கதைமுதலான படைகளைத்தாங்கினவர்களாய் ஆலகாலத்தையொத்த கடினமனதைப்பெற்றவர்களாயிராநின்ற தானவச்சேனைகள் சத்தசாகரங்களும்பெருகினாற்போல அடர்ந்துபடர்ந்து இடிகளும்ஒடுங்கியொளிக்கும்படியாகச் சிங்கநாதங்கள் அட்டகாசங்களைச் செய்து சவுரியங்களைப்பேசிக்கொண்டுதங்கள்தங்கள்தலைவரைச்சூழ்ந்து பூமியதிரச்செல்லவும் இத்தன்மையரதகசதுரகபதாதிகளாகிய சதுரங்கச்சேனை வெள்ளங்களானவை நிலமெங்கும் நிறைந்து ஆரவாரங்களைச்செய்துபோகமத்தியில் மதயானையைப்போலச் சூரபன்மன்நடக்கும்போது வீரங்களைவசனிக்குந்தானவர்களுடைய ஆர்ப்பாட்டமும் பொன்னுருளைகளைப்பெற்ற தேர்களோடுஞ்சத்தமும் அவைகளிற்பிணித்த குதிரைப்பந்திகளின்கனைப்பும் யானைக்கூட்டங்கள் மதவெறிகொண்டு வீறிடுங்கர்ச்சனையும், ராட்சதர்பாதங்களிற்கட்டிய வீரகண்டைகளின் ஒலியும், பதினெண்மேளவாத்தியங்கள் கணகணென்றதிருமோசையும் ஏகமாய் யுகமுடிவிலிடிக்காநின்றகாளமேகங்களின் அதிர்ச்சியைப்போலப்புவனங்களனைத்துஞ்செவிடுபட முழங்கவுஞ்சேனைகள் அடர்ந்துநடக்குந்தருணத்திற் சிங்கம்போன்ற வீரம்பெற்ற அவுணவீரர்கள் கரங்களிற்பற்றியகுரூரமானபலவகைப்பட்ட ஆயுதங்களொன் றுராயும்போது சிதறும் அனற்பொறியானதுயேகமாயோங்கிப்பரந்து எமதுகர்த்தனை சிவபிரான் சிரித்தெரித்த திரிபுரங்களைப்போலப் பர்வதங்களும் புவனங்களுங் கரிந்தும் பொரிந்துந் துகள்படவும் மதயானைகளையொத்த ராட்சதவெள்ளங்களும் ரதகசதுரகங்களும் புவியெங்கும்பரந்து செல்வதினாலெழுந்த தூளிபடலமானது பரந்து வானத்தைமூடிக்கொள்ள அவர்கள்கொடுமைக்குச் சகிக்கமாட்டாமல் சூரியனோடுவதைநீங்கி அத்துகள்போர்வையில் மறைந்து பயமொழிந்திருக்கவும்அச்சேனைநடக்கும்அதிர்ச்சியினாற் பூமண்டலமெங்குந் தத்தளிக்கவும் ஆதிசேஷனாயிர பணமகுடங்களும் நெரிந்து கழுத்துகளொடிந்து வாடவும், அஷ்டமாநாகங்கள் திகைத்தேங்கவும் நிலைபெற்றிருக்கும் வானங்கம்பிதப்படவுந் திசைகளெட்டும் நடுங்கவும். மேருபர்வதமுதலான குலாசலங்கள் நொறுங்கவுஞ் சத்தசாகரங்களும்அலைகளோய்ந்தடங்கவுங், கொடிய வெப்பத்தையுடைய வடவாமுகாக்கினியினது வெப்பமாறிப்பதுங்கவும், இவ்விதவுற்பாதம் விளையத்தக்கதாக நடக்குஞ்சேனைகள் சூழ்ந்துவர, சூரபன்மன்குபேரனுடைய அளகாபுரியைவளைந்துகொண்டனன்.

அதைத்தூதரறிந்துவாயுவேகத்தினுமேலிட்டோடி இயட்சர்பெருமான்வாழும் பொன்மயமான பட்டினத்தைச் சேர்ந்து சபாமண்டபத்தில் அரசுசெய்திருக்கும்வைச்சிரவண்ணனைத் தரிசித்துவணங்கிப்போற்றிஐயனே! சூரபன்மனென்னும் வீராதிவீரன் தன்தம்பிமார்சூழ அளவற்ற சேனைவெள்ளங்களோடும் வந்துநமதுபதியை வளைந்துகொண்டான் இனிநாம்சும்மாவிருப்ப தழகல்ல, சற்றுந்தாழ்க்காமல் தேவரீர்படைகளுடன்வெளிப்பட்டுச்சண்டைக் கெத்தனப்படாவிட்டால் மீறியிந்நகரத்திற் பிரவேசித்து நம்மைச்சின்னபின்னப்பட வாட்டுவார்க ளென்று விண்ணப்பஞ்செய்யஅளகேசன்நடுக்குற்றுவருந்திச்சொல்கின்றான். செய்சாலிகளாகிய அவுண வீரரைநாம்வெல்

வதரிது. பாலாட்சரான பரஞ்சுடரினதுபூரணகடாட்சம் பெற்றுச் சிறந்தவரங்களைப் பெற்றிருக்கின்றனர்.ஆதலாற் சிக்கிரமா யெதிர்கொண்டுஆசிர்வதித்துநன்மொழிகளைப்பேசிச் சிநேகங்கொள்வது தகுதியென்றெண்ணிச் சிங்காதனத்தைவிட்டு விரைந்தெழுந்து புஷ்பக விமானத்திலேறித் தன்னினமாகிய யட்சர்கள்சூழ எதிர்கொண்டுசூரனைக்கண்டு சேவித்துப்போற்றி அஷ்டலட்சுமி விலாசம்பொருந்திசர்வலோக சக்கிரேஸ்வரனாக வாழக்கடவையென்று பலஆசிகளைச்சொல்லி என்சுற்ற முதலானவர்களோடு என்னையும்உமதடிமையாகக்கொண்டுரட்சிக்கவேண்டுவதுன்கடனென வேண்டுவதற்கிரங்கிஓ! யட்சர்பெருமானே! பயப்படவேண்டாம். இனிமேல்நம்மவனாயிவடத்திலிருப்பாயென்றுகூறினன்.அதைக்கண்டஅவுணப்படைகள் மேகங்கள் வெருவியோட ஆர்த்துச்சிங்காநாதங்கள்செய்தனர். அக்காலத்தில் சூரன்துணைவருடன் அதிக சந்தோஷமடைந்து களிப்புற்றிருக்கும்போதுராட்சதவீரர்கள்மீறி அளகாபுரியிற்புகுந்து நவரத்தினவகைகளையும் நிதிக்குவைகளையும் விமாசன சேகரங்களையும்வலிபெற்ற படைவிதங்களையுந் தேர்மதயானை குதிரைவகைகளையுங் கொள்ளைகொண்டு மீண்டனர் அஃதெப்படி யிருந்ததென்றால் அந்நகரத்திற்குடிகொண்டிருந்த லட்சுமியானவள் பலவளங்களையும் இழந்துவறுமையுற்றுவெட்கி விலகியதைப்போலவும் மங்கிலியமிழந்த கன்னிகைபொத்தும் பொலிவழிந்து விளங்கியது. பின்பு சூரபன்மன்குபேரன் தன்மனதுக்கினியதொண்டனென்றெண்ணிமறுபடியும் அவன் நகரத்திற்கேபோகச் செலவுகொடுத்தனுப்பியபின்புநால்வகைச் சேனைசமுகங்களோடும் அநேகசாரதிகள் செலுத்தும் இந்திரஞாலத்தேரின்மீது கெம்பீரமாய் வீற்றிருந்து அப்பட்டினத்தைக் கடந்தபோதுவழிபறித்தலைக்குங் கள்ளரைப்போல ராட்சதப்படைகள்தன்னகரைச் சூறைகொண்டழித்துப்போனதைப் பங்கப்பட்ட குபேரன்கண்டு வெட்கிச்சிறப்பற்றுவிளக்கும்அளகாபுரியைச்சேர்ந்து வீற்றிருந்தான்.

பின்புசூரனும்அவ்விடத்தைநீங்கித்திசைகளுக்குஅந்தமாகியவடகிழக்கெல்லையைச் சேர்ந்து ஸ்ரீகாளகண்டமூர்த்தியினது வடிவம்பெற்ற ஈசானமூர்த்தி யிருப்பதென்றறிந்து அவ்விடத்திற் செல்லாமல் ராட்சதராசனனவன் மிகுந்த கோபத்துடன் தன்சேனைகள் சூழ்ந்துவரக்கிழக்குத்திசையைநோக்கி வருஞ்செய்தியை இந்திரன்அறிந்து திகிற்பட்டு தன்பதியைவிட்டு மேலுலகிலோடியொளித்தான் அப்பொழுது அந்நகரத்திற்புகுந்து தன்பகைவனைக் காணாதுபொங்கித் தன்சேனைகளால் அப்பட்டினத்தைக்கொள்ளையிடுவித்துத் தும்சம்பண்ணி அதைக்கடந்து தென்கிழத்திசையையடைகின்ற செய்தியைத்தூதராலறிந்த அக்கினிபகவான் வடவா முகாக்கினியைப்போற் கோபித்துச் சர்வாயுதபாணியாய்ச் சிங்கத்தையொத்த வீரம்பெற்ற தன்சேனைகள் பதினாயிரகோடியர் வில் வாள் வேல் சூலமாதியான படைகளைக்கொண்டு வீரங்களைப் பேசிச் சூழ்ந்துவரத் தனது தேஜோவதிப்பட்டினத்தை விட்டு வெளியில்வந்தவுடனே அப்படைகளுஞ்சூரன்சேனைகளும்ஒருவரையொருவர்சீறிப்பார்த்துஉடனேவடவாக்கினியும் ஆரண்யாக்கினியும்போலக் கோபித்தெதிர்த்து பலபடைகளைச் சோனைமாரியைப்போலச் சொரிந்துசண்டைகொடுக்கு முன்னிலையில் ராட்சதப்படைக்காற்றுமல் அக்கினிதேவன் சேனைகள் சின்ன பின்னப்பட்டோடிப் போயினர். இதனைத் தீக்கடவுள்கண்டு மனம்பொறாமல் கொதித்துச் சர்வசங்காரகாலத்திற் சராசரப்பிரபஞ்சங்களனைத்தையுஞ் சாம்பலாக்கவல்ல கொடுமைபெற்றதனது உருவங்கொண்டு பாதகனான சூரபன்மன் சேனைமுற்றும்இன்றையதினமே பெருங்காற்றிலகப்பட்ட பூளைப்புஷ்பத்தைப்போலவாட்டி அதம்பண்ணுவேனெனச் சபதம் பேசிப் பெரும்புறக்கடலையொத் தெங்கும்அடர்ந்திருக்கின்ற ராட்சதசயின்னியங்கள்மீது பலமுகமாய்ப்பரவிச்சடசடத்த தொனிகளுடன்கொளுத்திப் பொடிபடுத்துஞ் சேவகத்திறத்தைத் தாருகன்சண்டு திருப்பாற்கடலிலுதித்த ஆலகாலவிஷத்தை நிகர்த்துப்பொங்கித் தனதுஒப்பற்றதேரை அவன்முனையிற்செலுத்தக் கட்டளையிட்டமாத்திரத்திற் சாரதியானவன் குதிரைகளையதட்டி வாயுவேகத்தினும் துரிதமாக மேலிட்டுக்கொண்டுபோய் எதிரில் நிறுத்தியபோது கண்களில் அக்கினிப்பொறிகள் பறக்கமீசைதுடிக்கப்புருவம் நெற்றியிலேறக் கோபித்து மகம்மேருவையொத்த தன்வில்லையெடுத்துவளைத்து நாணேறிட்டுஅண்டங்களதிரக் குணத்தொனிசெய்து நல்லகாரியம், தலைகீழாய் விழுகின்றநமது சத்துருவையும் மற்றதேவர்களை முதலான சகலரையும்இந்நிமிஷத்தில் முடித்துவெற்றிபெறக்கடவேனென்று வீரம்பேசிவண்டின்ங்கள் ரீங்காரத்தொனிசெய்து தேன்களைப் பானஞ்செய்யுஞ் சிறப்பைப்பெற்ற கொன்றை மாலையையணிந்த சடாமண்டலதாரியாகிய சாம்பசிவமூர்த்திதனக்கனுக்கிரகஞ்செய்தபாசுபதாஸ்திரத்தை யெடுத்துமந்திரபூர்வகமாய் திவ்விய மலர்களினால் அருச்சித்துத் தூபதீபமுதலான விதிகளைநடாத்திப்போற்றிப் பிரயோகிக்க எத்தனப்படுவதை தழற்கடவுள்கண்டு மனநடுக்குற்றுப் படைகளுக்கு அரசாயிருக்கும் இந்தப்பாணத்தைச் செலுத்துவானாயின்சகல புவனங்களைச் சாம்பலாக்கிப் போடுவதல்லாமல் என்னையுங் கொளுத்திக்கொல்லும். இஃதன்றியும் பிரமன் முதலானசிறந்த தேவர்களையும் நிமைப்போதிற் பொடிபடுத்திப் போடுமே யிதற்கென்ன செய்வேனென்றுவாடி ஒரு நினைவுகொண்டுசீக்கிரத்தில்தனது தீட்சண்ணியத்தையடக்கிவீறுப்பொழிந்துசரீரம்நடுங்கவொடுங்கி முகம்வாடிக்கரங்களைக்கூப்பிக்கொண்டு புயவலிக்கொருவனான தாருகன் சமீபத்தில்வந்து வீராதிவீரனே? கேட்டருள்க.சகல புவன சராசரங்களையும் படைத்துக்காத்துக் கடையில்தகித்துத்தானே தானாய்விளங்கும்தற்பரனானஎமதுகர்த்தன் படையினைஅடியேன்மீது தூண்டமுயற்சிகொண்டனை அப்படிக்குச்செய்வையானால் என்மட்டுமாத்திரம்போகாது அண்டரண்டங்களிலிருக்கும் பிராணிகள்வலியும்வீரமும் ஆவியும் அதன்முன்தாபரித்து நீங்கப்படுவனவோஓ? ராஜனே! கோபிக்கவேண்டாம், இப்பாணத்தின்பெருமை யாவராலும் புகழப்படாது. அதையொருகாலஞ்செலுத்துவையேயாயின்உலகங்கள்அனைத்தும்அழிந்துபோவது மல்லாமல் அந்தச்சிறந்த ராஜபடைக்கும பழிவந்து நேரிடும். ஆதலால்அடியேன் பிழையினைப்பொறுத்தருள வேண்டுமெனப் பலவாகப்போற்றி நிற்கின்ற அக்கினிதேவனிடத்தில் இரக்கமுற்று ஸ்ரீகாளகண்டமூர்த்தியாகிய பசுபதியினது திருநாமம்பெற்ற பாசுபதாஸ்திரத்தைச் செலுத்துவதையுங் கோபத்தினையுமொழிந்துமகிழ்ந்து தன்படைவீரர் கோபாக்கினிமேலிட்டு அடியும் அடியும்

கொல்லும் கொல்லும்,இவன்மிகவுங் கொடியன்நமதுசே
னைகளைச் சுட்டெரித்தான். ஓடிப்போவதன்முன் பிடியும்
குததுங் குத்தும்வெட்டும்வெட்டுமென்று மேல்விழுகின்
றவனைவிலக்கி ஓ? வாயுவுசகாயனே? உன்பிராணனைத்தந்
தோம்.நமதேவலைச்செய்துகொண்டிருக்கக்கடவாய்,இனி
யுன்னூரைப்போய்ச்சேருமெனக் கட்டளையிட்டான்.

உடனேராட்சதசேனைகள்மீறி அவனது நகரத்திற்புகு
ந்து கொலைஞராகிய பலசெம்படவர் ஒருகுளத்திலிறங்கி
கலக்கி அதிலிருக்கும் மச்சங்களையெல்லாம்வாரிவாரிவெ
ளியிற் குவிப்பதைப்போல அப்பதியிலிருந்த வளங்களை
யெல்லாங் கொள்ளைகொண்டுமீண்டனர்இதனைக்கண்டுஅ
க்கினிதேவன் வெட்கி மனவாட்டத்தோடு தன்புரியைச்
சேர்ந்து தப்பிப்பிழைத்தோமென்னுங் களிப்புந்தன்பதி
யழிந்ததினு லுண்டாகிய கிலேசமும் மனதைவாட்டஅட
ங்கிப் பதுங்கியிருந்தான் இச்செயத்தையறிந்தசூரபன்ம
ன் தம்பியைக்கொண்டாடி விவேகசாலியானசாரதித்தலை
வனைப்பார்த்து நமதுதேரைத்தென்றிசையிற் செலுத்தக்
கடவாயென்று கட்டளையிட்டவுடனே பலிங்கனென்னும்
பெயரையுடைய சாரதித்தலைவன் கரங்களைக்கூப்பிச்சுவா
மி கூற்றுவனுடைய நகரத்தில் நிமைப்போதிற் சேர்க்கி
ன்றேன் தேவரீர் அதைக்கண்டுகளிகொள்ளப்போகின்றீ
ரென்று விண்ணப்பஞ்செய்து மற்றப் பாகர்களையெச்சரி
த்துக் குதிரைகளையதட்டி ஆயிரங்கிரண சமுகங்களையு
டைய சூரியனும் நாணும்படி மனோவேகத்தினும் மேல்
டச்செலுத்தி ஆர்ப்பரித்தான். அக்காலத்திற்பெரும்புற
க்கடலையொத்து நடக்கும் ராட்சதவீரர்களுதுகின்ற சிரு
ங்கநாதங்களின் சத்தமும்மதயானைகள் விறிடுங் கர்ச்சனை
யும் குதிரைகள் கனைப்பினோசையும்பதினெண்வாத்தியங்
களின் முழக்கத்துடன் கலந்து பிரளயகால அதிர்ச்சியை
ப்போலத் தோற்றவும் இந்நால்வகைச்சேனைகள்நடக்கும்
போது எழுந்ததூளிபடலமானது சப்த சாகரங்களையுந்
தூர்த்தும் பலவிதவர்னக்கொடிகள் வானைமூடிச்சூரியகி
ரணங்களை மறைத்துஇருளாக்கவும் வெண்பட்டுக்குடை
கள் சந்திரோதயம்போல விளங்கி அவ்விருளைநீக்கி நில
வைத்தரவும் இவ்விதஆரவாரங்களுடன்செல்லும்போது
தூசிப்படையானது சமனுவதி நகரத்தைச்சேர்ந்ததைக்க
ண்ட தூதனொருவன் அதிகவிரைவிலோடிச் சபாமண்ட
பத்தில் வீற்றிருந்து அரசுசெலுத்துந் தனது அரசனாகி
ய யமனைச்சேவித்துச்சுவாமி!காசிபருக்குப்பிறந்தசூரனு
டைய கொடியசேனை வெள்ளமானதுநமதுபட்டணத்தை
ச் சூழ்ந்துகொண்டது பார்க்கக்கூடவில்லைஎன்னமோஅ
னர்த்தகாலம் நேர்ந்ததாகக்காணுகின்றது. இதற்குவேண்
டும் எத்தனங்களை விரைவில்யோசிப்பதுஉத்தமமென்று
சொல்லக்கேட்டவுடன் கோடை யிடியைக்கேட்ட சர்ப்ப
த்தைப்போல யமதருமராஜன் நடுக்கமுற்றுஏங்கியிரங்கி
இனியென்னசெய்வோமென்று நினைந்து விவேகசாலியா
தலாற் குபேரனும் அக்கினிதேவனும்வணங்கிப்போற்றி
த் தங்கள்பதிகளையும் உயிர்களையும்பெற்றுத் தப்பினரெ
னக் கேள்விப்பட்டேன். அவ்வாறேநானுஞ்செய்வது அ
ழகென நிச்சயித்துச் சீக்கிரமாய்த்தனது வாகனமாகியஎ
ருமைக்கடாவின்மீதேறிச்செலுத்திசிலபடைத்தலைவர் சூ
ழ்ந்துவரப்போய் நிமைப்போதிற்சூரபன்மனையெதிர்ந்து
ராஜாதிராஜனே!ராசபரமேஸ்வரனே!ஆயிரத்தெட்டண்
டங்களுக்கதிபனே! வீராதிவீரனே யென்றுபலவாறுகப்
புகழ்ந்துவணங்கிக் கரங்களைநீட்டித் தேவரீர் துணைவர்க
ளுடனே சுகசீவியாகச் சகலசெல்வங்களையும் அனுபவித்
துச் செயசாலியாயிருக்கக்கடவீரென்று ஆசீர்வதித்து நி
ற்கின்றசண்டனை அவனது செய்கைகளினாலே சூரனறி
ந்து மனமகிழ்ந்து நல்லகாரியம் இதுமுதல்நமதேவல்களை
ச் சிரசாகவகித்து நடத்திக்கொண்டு உன் சேனைகளுடன்
பழையபடிக்கு இந்தநகரத்திலிருப்பாயெனச்செலவுகொ
டுத்து அனுப்பிவிட்டவுடனே அவுணப்படைவீரர்கள்அ
ந்நகரத்திற்புகுந்து மேகங்கள் சமுத்திரத்தில்விழுந்துஅ
தின்நீரை யுறிஞ்சு மாறுபோலக் கறுத்த தேகத்தையுடை
ய ராட்சதர் நகர்முற்றினும் பரவிச்சகலவளங்களையுஞ்சூ
றைகொண்டு திரும்பிய கெலிப்பைச்சூரன்கண்டுகளித்து
எமன் பெருவலிகுறைந்து அடிமைப்பட்டுத் துதித்துப்
போனதை நினைந்து அதிக சந்தோஷத்தைப்பெற்றுத் த
ன் சேனைகளோடு தென்மேற்குத்திசையைநோக்கி வருவ
தை அத்திசைக்காவலனானநிருதிகேள்விப்பட்டு மனந்தி
டுக்கிட்டு வருந்திச் சூரனுடன் சண்டைகொடுக்க நமக்கு
வலியில்லை அல்லதுஎதிர்த்தாலும் அபசயமும்பழியும்வ
ருமேயல்லது வேறில்லை,ஆதலால்அவனைக்கலந்துஉறவா
டித்தப்பித்துக்கொள்வது அழகெனநிச்சயித்துக் கொண்
டு அதிசீக்கிரமாய்ச் சிலகாணிக்கைகளை முந்தியனுப்பித்
தானுஞ் சேனைகளுடன் பின்தொடர்ந்துபோய்ச் சூரனை
க்கண்டு பற்பலவாழ்த்துகளெடுத்துப் புகழ்ந்து பாதங்க
ளிற்பணிந்து ஓ? ராஜாதிராஜனே! அடியேன் புறம்பல்ல
தேவரீர் சுற்றமாகும் ஆதலால்என்மீது கடாட்சம் வைத்
து ஆளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துபக்கத்தில்
வருகின்றதாருகாசுரனையும்வணங்கிப்போற்றிநின்றனன்.

அதுகண்டுசூரனும் அவனிடத்திற்பரிவாய்இதுமுதல்
நம்முடைய சுதந்தரனாய் இவ்விடத்தி லிருந்துபணிவி
டைகளைச்செய்துவருவாயென்று செலவுகொடுத்தனுப்பி
அப்பால் மேற்றிசைக்காவலனாகிய வருணன்பதியைச்சே
ர்ந்து அவனாற்பூசிக்கப்பட்டும் வடமேற்றிசையின் காவல
னாகியவாயுவின்நகரத்துக்குப்போய்அவனை அடிமைகொ
ண்டுஞ்சமுத்திரராசனைத்தன்மனிதனாக்கியும்பெரும்புற
க்கடலைச்சூழ்ந்த இருட்பூமியிற்சேர்ந்துஅவ்விடங்களிலி
ருப்பவர்அனைவரும்வணங்கிப்போற்ற ஆதரித்துநிறுத்தி
அவர்கள்புரங்களைக்கொள்ளைகொண்டும்இவ்வாறுஅஷ்ட
திசைகள்தீபாந்திரங்கள்முற்றினுந்தன்செயஸ்தம்பம்நாட்
டிப்பின்புசத்தபாதலங்களில்சென்றுஅங்குவாசஞ்செய்கி
ன்றதானவரைத் தன்வயப்படுத்தி அவர்கள்பதிகளையழித்
துச்சூறையிடுவித்துவெற்றிகொண்டுபின்புநாகலோகத்து
க்குச்செல்லவுடனேஆதிசேஷன் ரவுத்திராகாரமாகக்கோ
பித்துவிஷங்களையுடைய சர்ப்பபடைகளைக்கொண்டுஎதிர்
த்துச்சிலநேரம் அரியசண்டைகளைச்செய்து நிர்வகிக்கமா
ட்டாதவனாய்ச்சூரனைச்சேவித்து அடியேன்பிழையினைப்
பொறுத்தருளவேண்டுமென்றுபுகழக்கிருபையுற்று அவ
ன்கோரிக்கைப்படிக்குஅவன்நகரத்தில் ஒருதினந்தங்கித்
திவ்வியபோசனமாகஅவனிடத்திலிருந்தஅமுதத்தைப்ப
லவத்காரமாக வெடுத்துத் தம்பியர்களும்தானும்புசித்து
க்களித்து மற்றபிலங்களினுஞ்சென்று அந்தந்த பதிகளி
னிருப்பவர்கள்எதிர்கொண்டுபூசித்துவரவழைத்துஇட்ட
விருந்துகளைச் சவுக்கியமாகச்சாப்பிட்டு அவர்களைத் தன்
மனிதராக்கிக்கடந்து தான் போனவிடங்களி லெல்லாம்
தன்செயத்தைநாட்டித் தன்படைகள்சூழ பூமியின்மேல்

வந்து சமுத்திரஞ்சூழ்ந்த தீவுகளில்ராநின்ற தானவர்முதலானவர்களைச் செயங்கொண்டுஅவர்களாற் பூசிக்கப்பட்டுத் தனக்குரியவர்களாக்கித் தட்சணமே சேஷசயனத்தில் ஸ்ரீமகாவிஷ்ணு பள்ளிகொண்டிருக்குந் திருப்பாற்கடலைச்சேர்ந்து ஜெயசாலியான சூரபன்மன் சேனைவீரர்கள்அதிக்கிரமித்து நமதுமுன்னோர்களை வஞ்சகஞ்செய்து கொன்ற சத்துருவானவன் இக்கடலினிடத்திலிருப்பான் அவனைக்கண்டுபிடித்துக் கசக்கிப்பிழிவோமென நிச்சயித்தவர்களாய்ப் பூர்வத்தில் ராட்சதர்கள்திரண்டு மந்தரத்தைநாட்டிக் கடைந்ததைப்போலவே ஆர்ப்பரித்துவேகங்கொண்டுஅக்கடல்முற்றிலும்பரவிக்கலக்கிவரும்போது உண்டாகிய ராட்சதர்களினது கூக்குரலோசையானது கடையுக ஒலியினும் மேலிட்டுமுழங்குவதை ஸ்ரீகண்ணபிரானது இருபாரிசங்களினும்வீற்றிருந்து தாமரைமலர்போன்ற ஸ்ரீபாதங்களைத்தடவிக்கொண்டிருக்கும்ஸ்ரீதேவிபூதேவிகளுடைய திருச்செவிகளில் கேட்டமாத்திரத்தில் இதுவென்ன அனர்த்தமாக விருக்கின்றதென்று தளிர்போன்ற கரங்களைப்பிசைந்துகொண்டு இருதயங் கலங்கச் சொர்னத் திருமேனிகள்நடுங்கிவியர்த்துப்பெருமூச்செறிந்து வாடியேங்கி ஓ? பிராணநாயகனேயென்றுதிருவாய்ப்பவளங்கள்மலர்ந்துஇந்திரநீலமலையைப்பழித்த மேகவண்ணரான கவுஸ்துவாபரணமுந் திருத்துழாய்மாலையும் புரளுந் திருமால்மார்பின்மீது விழுந்துதழுவிக்கொள்ளஉடனே யோகநித்திரைநீங்கிச் செந்தாமரைபோன்ற கண்களைவிழித்துத் திருத்தேவியர்கிலேசத்தையும் ராட்சதர்பேரொலியையும்அறிந்துபயப்படாதீர்களென்று அவர்களை ஆதரித்துத்தேற்றி ஓங்காரித்துச்சேஷசயனத்தைவிட்டெழுந்துகடையுகத்திற் சகலபுவன சராசரங்களையும் நிமைப்போதிற்சாம்பலாக்குங்கொடுமையையுடைய வடவாமுகாக்கினியும் வெப்பமடக்கிப்பயந்தொடுங்கக்கோபித்து விழிகளில் அக்கினிப்பொறிகள் சிதறச்சீறிச் சற்றும் எண்ணமற்று நம்மிடத்திலும்பாதகரான ராட்சதர்சண்டைகொடுக்க வந்ததைப்போற் காணுகிறது நல்லகாரியம் அவர்கள்ஜயவுச்சாகங்களையும் புயவலிகளையும் நிமைப்போதில் அறிகிறேனென்று பொங்கிஆசானுபாகுவாய்ப் பொற்கடகங்களணிந்து தாமரைமலரை நிகர்த்து விளங்குங் கரங்களைக்கோடையிடியைப்போலத் தட்டித் தீயெழநகைத்தவராய்த் தமது வாகனமாகிய கருடனைத் திருவுளத்தில் நினைந்த மாத்திரத்தில் வலியும்வேகமும்பெற்ற கருடாழ்வான் அண்டகடாகங்களதிரப்பறந்துவந்து பகவானைச் சேவித்து நின்றவுடன்பெருமாளவனழகிய திருத்தோள்களின்மீதுபுருஷசிங்கத்தைப்போலத்தாவி வீற்றிருந்து சந்திரனையொத்து விளங்கும்பாஞ்சசந்நியமும் சூரியனைநிகர்த்துச் சொலிக்குஞ் சுதரிசனமும் மேருவையொத்த கதையும்மின்னலைப்பழித்த வாளும் உவமையற்ற கோதண்டமும்ஆகிய பஞ்சாயுதபாணியாய் ராட்சதசேனைகளி னெதிரிற்போய் வலியவில்லினை வட்டாகாரமாகவளைத்து நாணேற்றிப் பாதகர்செருக்கும் வலியும் அழிந்துதத்தளிக்கக் குணத்தொனிகொண்டு கார்கால மேகத்தினைப்போன்று சரமாரிகளைச்சொரிந்து சின்னபின்னப்படக் கண்டிக்கும்போதுசூரனுடையசேனசமுத்திரங்கலங்கி அழிபட்ட மாத்திரத்தில்தேர்களினது உருளைஅச்சு மச்சுகுத்துக்கால் கொடுங்கைமுதலானவைகள் வெவ்வேறாய்ப் பின்னப்பட்டுக் குவிந்தும் மதயானைக்கூட்டங்கள் பனையைப்போன்றசையுந் துதிக்கைவேறு பிறையையொத்த தந்தங்கள்வேறு மஸ்தகம்வேறுஉரலினை நிகர்த்த கால்கள்வேறு இப்படிவெவ்வேறாகக் கண்டிக்கப்பட்டிறைந்து மலைகளாகச்சேர்ந்துங் குதிரைப்பந்திகள் கவரியைப்போலசையும் பிடரிமயிர்கள்பொருந்தியகழுத்துகளற்றுங்கடிவாளம் பொடிபட்டும்அலைகளைப்போல் தாவிச்செல்லாநின்ற கால்களறுபட்டுஞ் சர்மரையைப்போன்றசையும் வால்கள்தெறிபட்டும் இவ்விதமாகச்சுழல்காற்றினிடத் தகப்பட்டமேகத்தைப்போலச்சின்னபின்னப்பட்டு மாள்கின்றபோது ராட்சதவீரர் வடவாமுகாக்கினியைப்போலக் கொக்கரித்தெதிர்ந்து விற்களைவளைத்து சரமாரியைத்தூவியுஞ் சக்கரந்தோமரம் பிண்டிபாலங் கதை கப்பணம்முதலான படைகளை ஒன்றனந்தமாகச் செலுத்தியும் வீரங்களைப்பேசியும்போர்செய்கின்றகாலத்தில் வாசுதேவனாகிய கேசவனது சரங்களினாற்சிரங்கள்வெட்டுண்டுதிரண்ட பந்துகளைப்போலிறைந்தும்வரைகளையொத்த தோள்கள்சரிந்தும் மார்புபிளந்தும்வயறுபீறுண்டு குடல்களிறைந்துங் கால்களற்றும்இப்படி சதுரங்க சேனைகளுஞ் சின்னபின்னப்படக் கண்டித்து இரத்தவெள்ளமானது பெருகிப்பாற்கடல் செவ்வானத்தைப் போற்காட்டவும், பிணங்கள்மலைகளைப்போல்உயர்ந்துசூரியன் தேரைத்தடைசெய்யவும், அந்தப்பிணமலையின்பாரத்தை தாங்கமாட்டாமற் பூமிதேவி குழிபட்டுவாடவும் பலகவந்தங்களாடவுங், காக்கை,கழுகு,பருந்து,கூளிமுதலிய பலபட்சிசாலங்கள் களித்துக்கூடவுந் தப்பிப்பிழைத்த ராட்சதரோடவும், இவ்வாறுரதங்கள் பொடிபட்டும் யானைகள் க[illegible]டிக்கப்பட்டும், புரவிகள்மாண்டும், ராட்சதவீரர் அரிக்கடையாக மறிந்துஞ் சூரபன்மனுடையநால்வகைச்சேனைகளுஞ் சிதைபட்டழிந்தபோது பூதபசாசவகைகள் நிணங்களைத்திருத்தியாகவுண்டு வெறிகொண்டு உதிரவெள்ளத்தில் முழுகி யெழுந்துகூத்தாடவும்இவ்விதபாடுபட்டவேளையில் அனந்தகோடி சூரியப்பிரகாசமாய் விளங்குஞ் சக்கரதரனைஸ்ரீமகாவிஷ்ணுபள்ளிகொண்டிருக்கும் க்ஷீராப்தியினது தோற்றஞ்சிறிதுங்காணுமல்லவிருக்கும் இரத்தமயமாய்ச் சிவந்து விளங்குவது எப்படிக்கிருந்ததென்றால் யுகாந்தத்திற் பரமசிவத்தினது நெற்றிக்கண்களினின்றும் பெருகிச் சகலத்தையுந் தகித்துப்பரந்த தீயைப்போற் காட்டியது.

இப்படிக்குகாளமேகவண்ணரான பரந்தாமன்கருடன்மீதெழுந்தருளிப் பூமியைச்சூழ்ந்த கருங்கடலைப்போல நெருங்கிய ராட்சதவெள்ளங்களை வளைந்து சூறுவளியை நிகர்த்துச் சுழன்றுசுழன்று யெங்குந் தானேயொருவருந்தப்பிப்போகாதபடிக்குப்பலபாணவருஷங்களைச்செலுத்தித் தேவர்கொண்டாடி ஆர்ப்பரிக்க அகோர யுத்தத்தைச் செய்துவரும்வேளையில் ராட்சதப்படைகளில் மாண்டவர்கள்போக மற்றவர் தாபரித்துநிற்கமாட்டாதவர்களாய்ப் பலதிக்கினும் சிதறிப் பின்னிடுவதை வீராதிவீரனைதாருகாசுரன்கண்டு உருத்துப்பார்த்துநீங்கள்ஒன்றுக்கும்அஞ்சவேண்டுவதில்லை நிமைப்போதில் நமது சத்துருவை வாட்டுவேன் நில்லும்நில்லுமெனக் கையமைத்து வடவாமுகாக்கினியைப்போற்சீறி மகம்மேருவை யொத்த வில்லைக் கரத்திற்கொண்டு இடியையொத்துக் கடகடவென்றேடும் வேகமுடைய தேரைத்துரத்திக் கணப்போதில் யுத்தமுனையில்வந்து கூடிப்பூர்வகாலத்தில் மண்ணையும்

விண்ணையும் அளந்த திருப்பாதங்களையுடைய செந்தாமரைக் கண்ணனை வளைந்துகொண்டு தனுசைவளைத்து நாணேற்றி அண்டங்களதிரக்குணத்தொனிசெய்துகருங்கடலின்மீது சோனமாரிசொரிவதைப்போல ஹரியினதுஉருத்தெரியாமற் சரவருஷங்களைச்சொரிந்து திசைகளதிரச்சிருங்காநாதங்கள் செய்தகாலத்தில் விஷ்ணுவானவர்கோபித்துக்கூரிய வேலாயுதத்தினைப்போன்ற குரூரமாகிய பாணங்களை ஒன்றனந்தகோடியாகப் பிரயோகித்துக்கொடியவனை தாருகன்ஏறிவந்த தேரையுருத்தெரியாமல்தூள்படுத்தி மேலும்அவன்தேகத்தையும் மறைத்தனர். அதற்குச்சலனமற்ற சூரனுக்கிளையவீரன் சற்றும் பயப்படாமல் ஆலகாலத்தைப்போற்பொங்கிச் சிங்கத்தைப்போல மற்றொருதேரிற்பாய்ந்து வில்லைவட்டாகாரமாய்வளைத்துக் கணப்போதிற் குரூரமாகிய ஆயிரம்பாணங்களைப்பூட்டிச்செலுத்தி வாசுதேவன் சரீரத்தினைமூடி மேலும்அவ்வளவுபாணங்களைக் கருடன்மீதினுந்தூவ அச்சரங்களதிவேகமாய்வந்து முகஞ் சிரம் மார்புமுதலானவிடங்களில்தைத்து உதிரப்பிரவாகத்தைப் பெருக்கித் தோன்றியது எப்படிவிளங்கியதென்றால் சர்ப்பக்கூட்டங்கள் நமது பகைவனைவளைந்துகொல்லஇதுநல்ல தருணமென்றெண்ணிச்சூழ்ந்துகவ்வி யதையொத்தது. அக்காயத்தினாற்கருடன்மனந்தளர்ந்து வலியற்றுச்சோர்வதை மாயன்கண்டு சிறி அளவிறந்தருபங்களைக்கொண்டு அப்பாதகனைநாலு மூலைகளினும் வளைந்துகொண்டு கொடியபோரைச் செய்யும்போது தாருகாசுரனுந் தன்தாயாகிய மாயைபோதித்த மோகனமந்திரத்தையுச்சரித்துத் தானும்அவ்வாறேபற்பலவடிவெடுத்து எங்குமுலவி நான்குதினபரியந்தம் லட்சுமிகாந்தனுடன் அகோரயுத்தஞ்செய்துவருவதைப் பிரமன்கண்டு கேசவனே? இப்பாடுபடுவானாயின் இவ்வசுரேந்திரன் முன்னின்று யாவர் சண்டைகொடுக்க வல்லவரென்று அதிசயித்துப்பார்த்திருக்கும்போது பரமபுருஷன் தன்கரவேகத்தினால் தாருகன்ஏவியபாணங்களைக்கண்டித்துமீளவுங் கோடிசரங்களைத்தூண்டி அவன்கரத்திற்பற்றிய வில்லினைக்கண்டித்துத் தேரையுங்குதிரைகளையும் பாகனுடன்அதம்பண்ணும்போது இந்தஜயத்தையறிந்த தேவேந்திரன்மனங்களித்துப் புயங்கள்பூரிக்க அளவற்றசந்தோஷத்தினைக்கொண்டான். இவ்வாறுதன்தேர்முதலானவைகள் சின்னப்பட்டமாத்திரத்திற் சூரனுக்கிளையவீரன் ரவுத்திராகாரமாகக்கோபித்துமந்தரகிரியையொத்த வயிரத்தண்டமொன்றைக் கரத்திற்பற்றித் தேரைவிட்டுக்குதித்துச் சக்கிராகாரமாகச்சுழற்றித் தேவர்கள்பயந்து தலையையிரங்கி கிலேசிக்கவும் அண்டங்கள்குலுங்கியடுக்கழியவும் ஆர்ப்பரித்து லகுவாகத் தன்மீதுபாய்ந்து வருவதைஜனார்த்தனன்கண்டு உடனே சார்ங்கமென்னுந் தமதுவில்லிற்கூரிய சிரியபாணங்களைப்பூட்டி யிடைவிடாது தூண்ட அவை அக்கினிச்சுவாலையுடன் புகைகளை வீசி மேலிட்டுவரத் தாருகன்சீறித் தன்கதையினால்மோதிப் பொடிசெய்து சிங்கத்தையொத்துத்தாவியபோதுபாதகன்நெருங்கிவிட்டான். இனி அசாரிசஞ்செய்யலாகாதென்றெண்ணித் தமதுதிருக்கரத்தில்விளங்குஞ் சக்கரத்தைச்சுழற்றிப் பிரயோகிக்க இமைகொட்டிமூடுவதன்முன் பிரபஞ்சங்களனைத்தையுஞ் சாம்பலாக்கியழிக்கும்வெற்றிபெற்ற அப்படையானது தாருகாசுரனை நெருங்குமுன்னிலையிற் பரமசிவத்தின் அருட்சத்தியின் பெருமையினால் அதன்வேகமுங் கொடுமையுமடங்கிப் பொன்னணியைப்போல ராட்சதராஜன் கழுத்தில்விழுந்து அசைவற்றுவிளங்கியது.

கேட்டீர்களோ? சவுனகாதிரிஷிகளே? சகலரும்போற்றிப்பணியும் நேமிப்படையானது தாருகன்கழுத்தணியாகநின்றுவிட்டதால் தவத்தினுஞ்சிறந்த பொருளொன்றுமில்லை- யிதனைக்கண்ட மணிவண்ணன் அற்புதமடைந்து பரமசிவமளித்த வரத்தின்பெருமைகளை நினைந்து இனியிவனைஜயிக்க நம்மாற்கூடாது ஆதலாற்றந்திரஞ்செய்து தப்பித்துக்கொள்வது காரியமென்றெண்ணிச் சமீபத்தில் வந்து சபாசு தாருகாசுரனே! வீரனென்பதுஉனக்கேதகும். வலியிலும் உனக்கு மேலானவர்க ளெவருமில்லையெனப்புகழ்ந்து இதனைத் திருவாய்மலர்கின்றனர்.சிருஷ்டிகர்த்தனை நான்முகன்பெற்ற ததீசியென்னும் ரிஷிபுங்கவனையுங் கொடியபோரைச்செய்யவல்ல அவுணவீரரையுந்தூக்கிப் பார்க்குமிடத்தில் உன்சவுரியத்துக்கு எவ்விதத்திலும் அவர்கள் ஒப்பாகமாட்டார்கள். ஆனால்தக்கன் மகத்தையழித்த செயசாலியாய் வீரகண்டையணிந்த பாதாரவிந்தங்களையுடைய அகோரவீரபத்திரரையே சரியாகக்குறிக்கவேண்டும் அல்லாமலும் பலதிசையிலுஞ்செயம்பெற்று வலிதாய்விளங்குஞ் சக்கரப்படையானது உனக்குக் கழுத்தணியாகநிற்குமாயில் ஜயமானதுஉன்னுடையதல்லது வேறுமுண்டோ மேலும்உனதுவீரமே யிப்படியிருக்குமாயின் அதோநிற்கின்ற உன்தமையன்மார்புசபலபராக்கிரமப் பெருமைகளை யாவரால் துதித்துமுடியும் இஃதன்றியும் பற்பலகாலம் அரியதவங்களைச்செய்து சிவபிரானிடத்தில் இவ்விதச்சிறந்தபேற்றை நீங்கள் பெற்றதைப்போல உங்கள்மரபிலும் மற்ற எவர்களிலாவது கிடைத்துவாழ்ந்தவருமுண்டோ இனிஉங்களை வெல்லத்தக்கவர் யாவரிருக்கின்றார்கள். இதுமுதல் நீங்கள்நமக்கு நெருங்கிய சுற்றமாகநினைந்தோமென்று பற்பலமங்களகரமாகிய ஆசீர்வாதங்களையுஞ்செய்துவிடைபெற்று விஷ்ணுவானவர் தமதிடத்துக்குப் போனபின்புஇவையனைத்தையுங்கண்ட ராட்சதச்சேனைகள் செயவுச்சாகங்களைக் கொண்டாடி விண்ணகம்அதிர ஆர்ப்பரித்தார்கள். இதனாலேதேவர்திடுக்கிட்டுமனம்வாடிவருந்தித் தேகமெங்கும்வியர்க்க இறந்தவர்களைப்போல வானத்தில் நிற்கவும்பயந்து திசைகெட்டோடினர்கள். இவ்வாறுகேசவன் கருடாரூடனாய்ப்போனபின்பு வெற்றிமாலையணிந்ததாருகன் வேறொருதேரிலேறித் தன்முன்னவன் அருகில்வந்து நடந்தசெய்திகளைச் சொல்லக்கேட்டுச் சூரபன்மன்மகிழ்ந்து தம்பியை மார்பினிறுகச்சேர்த்தணைத்துத் தேகம்பூரிக்கமகிழ்ந்து சேனைகளுடன் திருப்பாற்கடலைக்கடந்துசக்கிரவாளகிரிபரியந்தம்போய் அத்தலங்களிலிருப்பவரைத் தன்வயப்படுத்தி அவ்விடங்களிலெங்கும் உலவிப்பார்த்து பின்பு இருண்டவானத்திற்சென்று தங்கள் கதிகளில் முறைபிறழாமல்நடந்து தினத்தைவிளக்குஞ்சூரியசந்திரர்முதலான நவக்கிரகங்களும் மற்றவரும்எதிர்கொண்டு வாழிவாழியெனப்புகழ்ந்துகொண்டாட அத்தலங்களின் அதிசயங்களைக்கண்டுகளித்துக்கடந்துதேவலோகத்துக்குச் சமீபத்தில்வருவதைக்கண்ட தூதர்களிற்சிலர்வாயுவேகத்தினு மேலிட்டோடிஇந்திரனைச்சேவித்துச்சுவாமி சூரனென்னுங்கொடியவீரன் தம்பிமார்களோடுஅளவற்ற ராட்சதசேனைகள்சூழ இதோவந்துவிட்டானென்றமாத்தி

ரத்தில்இடியுண்டசர்ப்பம்போலமனநடுக்குற்றுமுகம்வாடிச் சரீரம்வியர்க்கப் பயப்பிராந்திகொண்டுபெருமூச்செறிந்து பதைத்துஇறந்தவனைப்போல அசைவற்றுச்சோர்ந்துதேறித் தன்வலியையும் வீரத்தையுஞ் செல்வச்செருக்கையும் மறந்துஏக்கமுற்றவனாய்இதனையெண்ணுவான்.

இந்நகரத்தைத் தேடிவருகின்ற அவுணராஜனெதிரில் நமது சேனைகளுடன்போய்ச் சண்டைமுகத்தி லெதிர்ப்பேனாயினும் என்னுயிருக் கபாயம்வருவதுமல்லாமல் துக்கசாகரத்திலழுந்தி எக்காலத்தினுந் தீராதபழியையுஞ்சுமப்பதல்லது வெற்றிபெறமாட்டுவேனோ? மேலும் ஆதியில்தன்வர்க்கத்தவரை நான் அலைத்ததைக் கேள்விப்பட்டுஞ் சூரபன்மன்கோபித்து இவ்விடம்வருவதுஎன்னைப்பற்றித்துன்பப்படுத்தவல்லதுவேறுமுண்டோ(முற்பகல் செய்யிற்பிற்பகல்விளையு) மென்றுபெரியோர்களாற் சொல்லியிருப்பது வீண்படுவதோ ஆதலாற் சிறந்தகேள்விகளையுஞ் சாஸ்திர விசாரணைகளையு முடைய பெரியோர் பரமசிவகடாட்சத்தினாற்பெற்ற செல்வமிகுதியை யனுபவிக்குங் காலத்தில் மகிழ்ந்தும் அந்தச் செல்வப் பேறும்போது துக்கத்தி லழுந்தியும் யான் எனதென்னும் பாசத்திற்கட்டுண்டு முன்னே தான் அனுபவித்தவைகளை நினைந்துவாடி வருந்துவார்களோ. மேலுஞ் சிவபிரான் கட்டளையின்படிவருவது வந்துநேருமல்லது தன்முயற்சியினால் மறுக்கக்கூடுவதோ ஆதலால் வருங்கருமம் நேராய்த்தெரிந்தும்வீணிற்சண்டைக்குநேர்ந்துபிராணனையிழந்து கிலேசமும் பழியும் பூணேன் மேலும் பொருட்செல்வமும் நிலைபெற்றதல்ல சிறப்பாகவாழ்ந்தவர்சிலகாலம்வருந்திப் பலரும் இகழத்தாழ்ந்துஅல்பராய் ஒருவராலும்மதிக்கப்படாதவருமாய்த் தரித்திரத்தை யனுபவித்திருப்பவர், மேலானசெல்வத்தைப்பெற்றுப்பலர்புகழ உயர்வதுஞ் சிவச்செயலல்லது வேறுமுண்டோ இதைப்பிராணிகளை யலைத்து வருத்துகின்ற அவுணரிடத்தில் திருஷ்டாந்தமாகக்கண்டேன் மேலுஞ் சத்திராதிகள் நகைக்கநாணித் தலைகவிழ்ந்திருக்குந் திசையினைப்பெறவிரும்பேன் அல்லதுபர்வதத்தை யொத்த புயங்களையுடைய சூரனைக்கண்டு உறவாடிநாளைக்கழிக்கநினைத்தாலுங் கறுவிக்கொண்டிருக்கும் மனதைப் பெற்றவனாதலாற் பார்த்தவுடன்பிடித்துப்பாரவிலங்கைப்பூட்டி அரியசிறையில்வைத்துத் தகாத ஏவல்களைக்கொண்டுஅலைப்பான்இதற்கையமில்லையென்று தேவராசன்யோசித்துச்சீக்கிரமாகச் சிங்காதனத்தை விட்டிறங்கி அரண்மனையைச்சேர்ந்து இந்திராணிக்கு இச்செய்திகளைத்தெருட்டி இருவருங் குயில்வடிவுகொண்டு மனவாட்டத்தோடுபுலம்பிவிண்ணிற் பறந்தோடிமறைந்தனர் இதன்மத்தியின் ராட்சதவீரர் பொன்னுலகத்தை முற்றிக்கை செய்துகொண்டு இந்திரனைத்தேடிக்காணாமல் மூலைமுடுக்குகளெங்கும் ஆராய்வதைத்தேவர்களறிந்து நடுங்கிநமது அரசன்வெற்றியுஞ்செல்வப் பெருக்கும் அழியுங்காலமும் நேர்ந்ததோஇனிநம்மாற்செய்யவேண்டும் முயற்சியாதிருக்கின்றதென்று வருந்திவாடிச்சோருந் தன்மையினாற் பொன்னுலகச் சிறப்பனைத்தும் அழிவுபட்டுராட்சதவீரர் மேலிட்டுத்தேவர் விடுதிகளிற்புகுந்து அவர்களைப்பிடித்துக் கதறிப்புலம்பத்தக்கதாகத் தண்டங்களினால் மோதியடித்துங் கரங்களைக் குவித்துக்கோடையிடிகளைப்போல முதுகெலும்புமுறியக்குத்தியும் பருத்திருக்குந் தோள்கள் முறிந்ததென்று சொல்லத்தக்கதாகவலியகரங்களினால்நெருங்கிச்சேர்த்துக் கயிற்றினால் அணிவகுத்துக்கட்டியும்இவ்விதமாகச்சற்றும் இரக்கமற்றதானவர் வானவரைத் துன்பப்படுத்தியிழுத்துக்கொண்டுவந்து அகண்டசாம்பிராச்சியத்தைப்பெற்றிருக்குந் தங்கள்அரசன்முன்னம்விட்டனர்.

உடனே விண்ணவர்கள்தொழுதுஓராசாதிராசனே? ராசபரமேஸ்வரனேஆயிரத்தெட்டுஅண்டங்களுக்கதிபனே வீராதிவீரனே வாழிவாழி தேவரீர்அவுணமரபிலுதித்தீர் மேலும் அரியதவங்களைச்செய்து பரமசிவத்தின்பரிபூரணகடாட்சத்தினாலே சகலசம்பத்துக்களையும் பெற்றீர் இஃதன்றியும் அஷ்டதிக்குப்பாலகர் முதலான சகலரையும் வெற்றிகொண்டு செயத்தைநாட்டினீரென்று சொல்லுவார்கள் ஆதலால்அபலாளாகிய அடியோங்களைத்துன்பஞ்செய்வது நன்மையோ இதனால்உமதுசிறந்த வெற்றிக்கிழிவல்லவோமேலும் உமது புசபலபராக்கிரமம்எப்படிக்கொத்தது நீர்சற்றுக்கோபிப்பீராயிற் பிராணிகளனைத்தையும் வாட்டுகின்றவலியினையுடைய எமன்தாபரிததிருப்பானோ திக்குப்பாலகர் முதலானதேவரும் பிழைப்பதுமுண்டோ சகலபுவனசராசரங்களும்நாசமடையாதோ ஆதலால் இன்றையமுதல் தேவரீரை எங்கள்குலதெய்வமாகவும் வழிபடு கடவுளாகவும் நெருங்கிய சுற்றமாகவுங் கோடிப்பதுமல்லாமல் தேவரீர் கட்டளையிட்ட ஏவலைச்சிரசாகவகித்துச் செய்யக்கடவோமென்று புகழ்ந்துவேண்டுகின்ற தேவர்களைப்பார்த்து உங்கள்செய்கைவெகுநேத்தியாகவிருக்கின்றதென்று சரீரங்குலுங்கநகைத்துகட்டுகளையவிழ்ப்பித்து விட்டுஇனிநமதேவலின் வழியேநிற்கக்கடவீர்களென்றுரைத்து, இதன்மத்தியில் ராட்சதசேனைகள் இந்திரன்வளங்களைக் கொள்ளைகொண்டு வருவதைமகத்தில் பிராணனைவிட்டுப் பரமசிவகடாட்சத்தினால்சகலவளன்களுடனும் மீட்டும்பெற்ற காசிபர்புத்திரனைசூரன்கண்டுகளித்து அப்பதியைக்கடந்து அளவற்ற சேனைகள் சூழ்ந்துவர வேதகோஷ்ட மாருமலொலித்திருக்கும் முயற்சிபெற்றமகலோகத்தைச்சேர்ந்தான் உடனேவேதாகமசாஸ்திரசம்பன்னராய்ப் பரமசிவந் தடுத்தாட்கொள்ளப் பெற்றவராய்த் தவசிரேஷ்டராயிருக்கும்மார்க்கண்டேயர் முதலானபெரியோர்கள் வாசஞ்செய்யும் இடமுதலான மூன்றுலகங்களிலிருப்பவர் சூரன்வரவையறிந்துபயப்பிராந்தியினால் மறையக்கண்டு அவர்களையிகழ்ந்துஅவ்விடம் நீங்கிப்பிரமதேவன்வாழும் மனோவதிபட்டினத்துக்குப்போகும்போது இச்சமாசாரத்தை நான்முகன்கேள்விப்பட்டவுடனே திடுக்கிட்டு அவன்பெற்றவரத்தின்பெருமையைநினைந்து இவனுடன் நன்மைகொண்டாடிஅனுப்பிவிடுவது நல்லதென்றுநினைத்துக் குற்றமற்றதவவிரதங்களை முடித்துப்பேரறிவைவாய்ந்த மஹரிஷிகள்வேதபாராயணஞ்செய்து சூழ்ந்துவர அன்புமேலிட்டவனாய்பெரும்புறக்கடல் புரண்டதைப்போலவருகின்றராட்சதசேனைகளின் மத்தியில்இந்திரஞாலத்தேரின்மீது விளங்குகின்ற சூரபன்மனைக்கண்டு கரங்களை நீட்டி ஓராசாதிராசனேநீரும் உமது துணைவருஞ்சகலசெல்வங்களையும்பெற்று நீடூழிகாலம்வாழிவாழியெனச்சிறந்த ஆசீர்வாதங்களைக்கூறிப் பின்னும்கூறுகின்றான்அரசனே. சிவகடாட்சத்தைச் சம்பூரணமாகக் கிடைத்து சகலருக்குமிறைவனாய் ஆயிரத்தெட்டு அண்டங்களையும்ஆளும்பெருமைகளையுடைய உம்மைப்போன்ற தன்னியனானவன் இந்தநகரா

ஒருபிரயோசனமாகநினைந்து வருவதற்குபானென்ன தவஞ்செய்தேனோ தெரியாது உன்பெருமைகள் பரமசிவமல்லது மற்றெவர்களாற் கணித்துப்பேசப்படும்அளவற்றகாலம் மனமுந்தேகமும்வருந்திப் பரமனைக்குறித்து அரிய வேள்விகளைச்செய்து அவனருளினால்இவ்விதவளங்களைப்பெற்றது மல்லாமல் வீராதிவீரனாய்ச்சகலபுவனங்களினும் உன்வெற்றியைநாட்டிஜயவிருதுங்கட்டினாய்லட்சுமிவிலாசரானவிஷ்ணுமுதலானதேவர்களை உன்தம்பியைக்கொண்டுவென்றாய் ஆதலால் உனக்கொப்பெடுத்துச்சொல்லத் திரிலோகங்களினும் யாவரிருக்கின்றார்கள்மேலுங் காசிபனுக்கு நீங்கள்அன்பாகியபிள்ளைகளாதலால் நானுங்களுக்குப் பாட்டனாகும். இதனையதார்த்தமாக நம்பக்கடவாய், ஆதலால்நீபெற்ற சிறப்புகளனைத்தும் நம்மதாகும். யானும்புறம்பல்ல வென்று பற்பலவுபசாரவார்த்தைகளைச்சொல்லிப் பக்கத்தில்வருகின்ற சிங்கமுகன்-தாருகன்- அருகில்வந்து தீர்க்காயசாயிருக்கக் கடவீர்களென்று வாழ்த்தி எவரையும்அதம்படுத்தவல்ல அழிவற்றதேர்களையும் வில்லுகளையுந் தமதுநாமத்தினால்விளங்கும்பிரமசரத்தையு மளித்தனர்.

அவற்றைச் சகலராலும் புகழ்ந்துவணங்கும் வெற்றிபெற்ற சூரன்பார்த்து அதிகமகிழ்ச்சியடைந்து பாட்டனாகிய பிரமதேவனை அன்புடன் ஆதரித்துநிறுத்திஅப்பதியைக்கடந்து மாயைபுத்திரனானசூரன் தன்சேனைகள்சூழ்ந்துவரப் பரிமளமிகுத்த திருத்துழாய்மாலைமார்பனாகிய மரகதவண்ணன்வாசஞ்செய்யும் வைகுந்தத்தைச்சேர்ந்தகாலத்தில் பரவாசுதேவனறிந்து சூரனையெதிர்கொண்டு ஓஅசுரேந்திரனே சகலசம்பத்துக்களையும் அனுபவித்து அளவற்றகாலம்ஜயசாலியாய் வாழக்கடவாயென ஆசிர்வதித்து உபசார வார்த்தைகளையு மொழிந்தனர் அவற்றைக்கேட்டுச்சூரன். மகிழ்ந்துஅந்தவுலகத்தின் சிறப்புகளைத்துணைவர்மித்திராளுடன் கண்குளிரச் சேவித்தும் பார்த்தும்பாம்பணைப் பள்ளியனான மாதவனிடத்திற்பரிவாய் யதாப்பிரகாரம் இவ்விடத்திற்சுகமாயிருமெனச்செலவுகொடுத்துத் தன்சேனைகளுடன் அத்திருநாட்டைக்கடந்து காளகண்டத்தையுந் திரிநேத்திரங்களையு முடைய பரமசிவம் பிரமாதிதேவர்களுக்கும் அவரவர்க்குரியதொழில்களைக்காட்டித் திருவிளையாடல்களைச்செய்யும் தேவாதிதேவனாகிய பரமன்வீற்றிருக்குந் திருக்கயிலையைச்சேர்ந்து வாகனத்தைவிட்டிறங்கிப்பரிசனங்களைக்கடந்துதேவராதியர்புகழும் வெற்றிபெற்ற சூரன்தனதுதம்பிமார்களோடு ஆலயத்துக்கருகில்வந்து முதல்வாயிலிற்காவல்கொண்டிருக்கும் நமதுகர்த்தனான நந்திதேவர் அனுமதிகொண்டு பரமேஸ்வரன் சந்நிதானத்தில் நுழைந்து காந்தள்மலரையொத்துச் சிவந்துவிளங்குங் கரகமலங்களையுடைய கவுரிசமேதனாய் வீற்றிருக்கும் எமது ஆண்டவன்முனஞ்சென்று பத்திவிசுவாசத்துடன்மும்முறைவணங்கிப் போற்றிநிற்கக்காளகண்ட மூர்த்தியானவர் கிருபாநோக்கம் பாலித்து இனிமற்ற அண்டங்கள் முற்றினும் போய்ப்பார்த்துவந்துஅகிலங்களுக்கெல்லாம் தலைமைபூண்டு அஷ்டதிக்குகளெங்கும்புகழச்செங்கோல் செலுத்தியாளக்கடவா யென்று அனுக்கிரகஞ் செய்யச் செந்தாமரையையொத்த திருவடிகளில் மறுபடியுஞ்சேவித்துவிடைபெற்றுப்போய்சமுத்திரகோஷ்டம்போல் ஆரவாரஞ் செய்யுஞ் சேனைகளிற்கலந்து ஜயபேரிரணபேரிமுதலான வாத்தியங்கள் முழங்கநடந்து சிறந்தோங்கிய அண்டகோளகை முகப்பைநோக்கி செல்லும்போது பரமசிவக்கோலமாய் அவனருளைப்பெற்று ஞமலிகளைவாகனமாக நடாத்தும் அளவற்ற உருத்திரர்சூரபன்மனையெதிர்கொண்டு உபசரித்து அண்டங்களுக்குப்போகும் வழிகளைக்காட்ட அதன்மூலமாய்ச் சூரனானவன் தன்சேனைகளுடன்சென்று அவ்விடங்களிலிருப்பவர் அனைவரையும் வென்று தன்வசப்படுத்தி மற்றவைகளையும் அவ்வாறேஉருத்திரகோடிகள் தொடர்ந்துகாட்டமுழுவதுந் தேடிஅத்தலங்களில்வாசஞ்செய்யுந் தேவாதியரை ஜயித்து அவர்களில் அநேகர்களைக்காவல் வைத்துஇவ்வாறேமற்ற அண்டங்கள்தோறுஞ்சுற்றிச்சுற்றிப்பார்த்துத் தன்சுற்றமாகிய அவுணவீரர்களை அண்டங்களுக்கும் பதங்களுக்கும் அதிபராய்வைத்து மனமகிழ்ச்சியுடன் தம்பியர்மற்றசேனைகள்சூழ்ந்துபோற்றத்திரும்பி இவ்வண்டச்சுவரைச்சேர்ந்து சுவர்க்கலோகம்புகுந்தான்.

## எதிர்கொள்படலம்.

திண்டிறன்மாயையின்செம்மலித்திற
மண்டர்தந்துறக்கமேலடைந்தகாலையிற்
பண்டிமையோர்களாற்படருந்தானவர்
கண்டனர்மகிழ்ந்தனர்களிப்பின்மூழ்கினர்.

இவ்விதமாகமாயைபுத்திரனானசூரபன்மன்தேவலோகத்தைச்சேர்ந்தனன் உடனேபூர்வத்தில் தேவர்களுக்குத் தோற்றோடி மறைந்திருக்குந் தானவர்கள்இச்செய்திகளையறிந்துகளித்துச் சந்தோஷசாகரத்தில் மூழ்கவும்சூரனெங்குமுலவி ஜயசாலியாகவருகின்றசம்பிரமத்தைத்தூதர்கண்டு விரைந்தோடி அசுரேந்திரனுக்குவிண்ணப்பஞ்செய்யக்கேட்டு, உடனே அரிய வமுதத்தை யெளிதாகப்பெற்றுப் புசித்தவனைப்போல் மகிழ்ந்து மூன்றாம்பிறையினையணிந்த சடாமண்டலதாரியாகியபரமசிவகடாட்சத்தினாற் சூரன்பெற்ற அருட்டிறத்தையுஞ் சிறந்தபேறுகளையும் படைகளின்சீரையும் மற்ற அயிஸ்வரியங்களையுந் தெரிந்து அவைகளைநினைந்து நினைந்துசரீரம் பூரிக்கவும் புயங்கள் வானத்தை யளாவவும் விழிகளில் ஆனந்தவாரி பெருகவும் உற்சாகத்தோடு விரைந்துசென்று தங்கள் குலகுருவாகிய சுக்கிரனைச் சேவித்த, சுவாமி! தேவரீர்கடாட்சத்தினாலுதித்து நங்குலத்துக்குத் தலைவனும் ஜெயசாலியுமாகிய சூரபன்மன் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாய்த் திக்குவிஜயஞ்செய்து வருகின்றானெனக்கேள்விப்பட்டேன். ஆதலால் அவனைத் துரிதமாகக்காணவிரும்புகிறேன். தேவரீர்தயைசெய்து முந்திச்சென்றுநமக்கிருக்கின்ற சம்பந்தங்களையுந் தேவர்கள் எனக்குச்செய்த கொடுமைகளையுந்தெரிவிப்பதுமல்லாமல் நான்காணவருவதாகவும் அறிவிக்கவேண்டுமென வேண்டினான். அதைக்கேட்டு அரசனை வாழ்த்தி உன்னிஷ்டப்படிக்குச் செய்வோமெனத்தேற்றி ராக்ஷதகுருவாகிய சுக்கிரன்சொர்ணமயமாகவிளங்கும் விமானத்திலேறிப் பலசிஷர்கள்சூழ்ந்து வேதகோஷ்டஞ்செய்துவரப் போயினன். அசுரேந்திரனும் ரதத்திலாரோகணித்துச் சேனைகள் பின்பற்றிவரச் சுக்கிராசாரி சிறிதுதூரத்தில் வருகின்றதைச் சூரன்

கண்டவுடன் பரமனைப்போலப்பாவித்து சீக்கிரமாகத்தன்தேரைவிட்டிறங்கி யெதிர்கொண்டு கரங்களைக்கூப்பிச் சேவித்தபோது சுக்கிரன் மனமகிழ்ந்து உமதுசெல்வம் வீறி ஜயமோங்கி வாழக்கடவையென்றுபலஆசிகளைக்கூறி, வீற்றிருந்தபொழுது பாதகராகிய சிங்கமுகன் தாருகன் இவ்விருவரும் இரதங்களைவிட்டிறங்கிக் குருவைவலம்வந்து வணங்கித்துதிக்க அவர்களையுஞ் சுகசீவிகளாய் அஷ்ட அயிஸ்வரியங்களையும் பொருந்திச்செல்லு மிடங்களெங்கும் ஜயம்பெற்று வாழவும் வாழ்த்திப்பின்பு சூரபன்மனைப்பார்த்து அரசனே! உமக்கொரு செய்திசொல்லுகிறோம், அதனைக்கியாபகமாய்க் கேட்பாயாக, அஃதென்னவென்றால் தவசிரேஷ்டராகிய காசிபர் பத்தினியான உன்தாயைப்பெற்றவன் மேலும்என்னிடத்திற்பலநூல்களையும் ராசதந்திரங்களையுங் கூர்மையாகக்கேட்டறிந்தவிவேகசம்பன்னன் அளவற்ற தானவச்சேனையைப்படைத்தவன் என்போலிகளுக்கு வேண்டும் உதவிகளைச்செய்து பாதுகாக்குங் குணாதிசயத்தைக் கிடைத்தவன் அசுரேந்திரனென்பவன் இவன்ராசயோக்கியனாய்ச் சகலரையும்வென்று அரசாட்சிசெய்துவருகையில் இவன்செல்வத்துக்கும் ஜயத்துக்கும் பொறாமைகொண்டுஉங்கள்குலத்துக்கெக்காலமும் பகைவனாயிருக்கின்றதேவேந்திரனானவன்தேவர்களைச்சேர்த்துக்கொண்டுவந்து எதிர்த்து அளவற்றகாலங் கொடியபோர்செய்து கடையில் ராட்சதச் சேனைகளனைத்தையும்வாட்டி உன்பாட்டனையும் புறங்கண்டு வெற்றிகொண்டு ஜயவுச்சாகத்துடன்களித்தவனாய்ப்பொன்னுலகைச் சேர்ந்து இன்புற் றிருந்தான் அக்காரணத்தினால் அவ்வசுரேந்திரன் மாரிகாலத்திற்றன் பிரகாசங்கள் மழுங்க வொடுங்கிக்காட்டுஞ் சூரியனைப்போலத் தன்பட்டணத்தில் பெட்டியிலடங்கிய பாம்பைப்போல பதுங்கிமனம் புழுங்கி வருந்தியிருந்தவன் தன்பெண்வயிற்றில் நீங்களுதித்ததைக் கேள்விப்பட்டுச் சமுசாரியானவன் விதையைப்புலத்தில் விரைத்து விளைவையெதிர்நோக்கி யிருப்பதுபோல தன்சிறுமையை யொழித்து சவுக்கியத்திலிருப்பதாக உங்களையெக்காலத்தும் நினைந்து நினைந்து எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்ற காலத்தில் அரிய தவநிலையை வகித்து சிறந்தவேள்விகளைச்செய்தும் அதற்குச்சிவபிரானிரங்கிக்காட்சிதந்துவேண்டியவரங்களைக் கடாட்சித்துப் போனதுந்தெரிந்து உடனே சந்தோஷசாகரத்தில் முழுகிமனவாட்டமொழிந்து புயங்கள் வானத்தையளாவப் பூரித்திருந்தான்.

பின்புதிரிபுரதகனராகிய தேவாதிதேவன்தந்தவரமுயற்சியினால்திக்குவிஜயஞ்செய்துசத்துருக்களையடக்கிவருவதையறிந்து முன்னிலும்பதின்மடங்கு மகிழ்ச்சியைப்பெற்றவனாய்உங்களைப்பார்த்துவிட்டுப்போகச்சுற்றத்தாருடன்வருகின்றான். அவனை ஆதரிப்பாயென்று கடினசித்தமுடையசுக்கிரன்சொன்னமாத்திரத்தில் வீரகண்டைசப்திக்கும் பாதங்களையுடையசூரன்களிசிறந்துபாட்டன்வரவையெதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றதருணத்தில் அசுரேந்திரன் பந்துக்கள் சிநேகிதருடன் நெருங்கி நீங்கிய பிராணன்மீட்டும் அவ்வுடலைக் கூடுமாறுபோல் மனமுங்கண்களுங்களிக்கப்பேரனைக்கண்டுகரங்களைக் கூப்பித்தொழுது வாழ்த்தும்போது பாட்டனிடத்துப் பரிவாய்நீர்சுகமாயிருக்கின்றீரோவென்று விசாரிக்க அசுரேந்திரன்களித்துஜயனே! யிக்குலம்வீறி யோங்குவதாக நீங்களுதித்துப் பரமசிவகடாட்சத்தைச் சம்பூரணமாகப்பெற்றுஜயசாலிகளாயிருக்கும்போது எனக்கொரு குறைவுந் துன்பமுஞ் சிறுமையும் நேருவதுண்டோவென்று நயமொழிகளைப்பேசித் தொடர்ந்துவரத்தேவலோகத்தைநீங்கி ஜயசங்கம் சயபேரிமுதலான பலவாத்தியங்களுந் திசைகளெங்குஞ்செவிடுபடமுழங்கத் துணைவர்கள் ஆசிரியன் பாட்டனிவர்கள்சூழச் சேனாசமுத்திரத்துடன் புவியில்வந்து சேர்ந்தான். இச்செய்தியை பிரமன்இந்திரன் மற்றதேவர்முனிவ ரனைவருந்தெரிந்து சகலரும்ஏகமாய்க்கூடி மனவாட்டத்துடனென்றுந்தோற்றாமல் திருப்பாற்கடலைச் சேர்ந்து சேஷசயனத்திற் பள்ளிகொண்டிருக்கின்றதிருத்துழாய்மாலை மார்பரான விஷ்ணுவைக்கண்டு கரங்களைக் கூப்பித்தொழுது போற்றிச் சயசாலியாய்க் கொடியமனதைப்பெற்றிருக்கின்ற சூரபன்மனால் தாங்கள்படுந்துன்பங்களை முறையிட்டுச் சுவாமி? யினிநாங்கள்நடந்துகொள்ளவேண்டும் கிரமங்களை யோசித்துச்சொல்லி யிரட்சிக்கவேண்டுமெனத் துதிக்கின்றவர்களைக் கேசவன்பார்த்தருளி வருந்தாதீர்கள் ஆதியில் தக்கன் பரமனைநீக்கிச்செய்த வேள்வியில் நாமெல்லாம்போயிருந்த கொடுமையினால்இத்துன்பங்களையனுபவிக்க நேர்ந்ததல்லதுவேறல்ல இது யாவரால் நீக்கப்படும் ஆகிலும்மேற்செய்யத்தக்கதுகேட்பீராகச் சூரபன்மனைச் சாமான்னியனாகநினைக்கப்போகாது திரிபுரங்களைத்தகித்த பரமசிவகடாட்சத்தினால் அளவற்றவரங்களைப்பெற்று அண்டங்களனைத்தையும் வென்று ஜயவுச்சாகத்தோடுஇருக்கின்றவன்அவனையொருபோதும் நாம்வெல்லமாட்டோம் இனிச்செய்ய வேண்டுவதென்னவென்றால் யாவரும்போய் அவனைக்கண்டுவிசாரித்துச் சுபங்களைக்கொண்டாடி நட்புகொண்டுசிவகடாட்சம்நேருகிறவரையில் நாளைக்கழிப்பதே யோக்கியமா யிருக்கின்றது எனச்சொல்லப் பிரமன் முதலானவர்கள் ஸ்ரீமாதவனை யஞ்சலித்துத் தேவரீர்போதித்ததே காரியமாமெனச் சம்மதித்தமாத்திரத்தில் விஷ்ணுவானவர் சேஷசயனத்தினின்றும் நீங்கி அவர்களுடன்கலந்துவந்து பெரும்புறக்கடலைப்போலவிரைந்து பரந்திருக்கும் ராட்சதச்சேனைகளைக்கடந்து அதன்மத்தியில் இந்திரஞாலத்தேரின்மீது விளங்குஞ்சூரனைக்கண்டு தட்சணம் உடலைவளைத்துக்கரங்களைவிரித்து மனம்நயந்து சமீபித்து ராசசக்கிரேஸ்பரனே! சகலபுவனங்களுக்கும்அதிபனே! சுகசீவியாய்சயசாலியாய்ப் புத்திரமித்திரதனதானிய சம்பத்துக்களைப் பெற்றுவாழ்ந்திருக்கக்கடவாயென்றுவாழ்த்தி நிற்கின்றவர்மத்தியிற் பதினொருகோடி உருத்திரகணங்களிருப்பதைச் சூரன்பார்த்து அதிசயித்தவனாய் மாயன்மீது விழிகளைச் செலுத்தி யிமையாதமுக்கட் பெருமானைப்போலவே அமைந்திருக்கும் வடிவைப்பெற்று அளவிறந்தவர்களாய்உங்களுடன்வந்த இவர்கள்யாவர் இவர்கள்சரித்திர மென்னென்றுகேட்டான். அப்போது துளபமாலையைத்தரித்த விஷ்ணுவானவர் அவ்வுருத்திரர்வரலாற்றைச் சொல்வதாயினர்.

## உருத்திரர்கேள்விப்படலம்.

மன்னவர்மன்னகேண்மோபற்றிதுபுகல்வன்வேதா
முன்னொருகற்பந்தன்னின்மூவகையுலகுநல்கித்
துன்னுயிர்முழுதுநல்கித்துண்ணெனவகந்தைகொண்டு
தன்னையும்பரமென்றுன்னித்தாணுவையயர்த்தானன்றே.

---

இராசாதிராசனே! யிவர்கள்விர்த்தாந்தத்தைக்கேட்பா
யாகமுன்னமொரு கற்பாந்தமுடிவிற் சராசரப்பிரபஞ்சங்
களனைத்தையும் பழையபடிக்குச் சிருஷ்டிக்கப் பிரமன்நி
னைந்து சொர்க்கமத்தியபாதலங்களையும் அதிலடங்கிய எ
றும்புமுதல் யானையீருகச்சொல்லும் எண்பத்தினான்கு
லட்சஞ் சீவபேதங்களையும்படைத்து உலகங்கள்எதாப்பி
ரகாரம் நிலைபெற்றதைப்பார்த்துக் களித்தவனாய்இவைய
னைத்தும் நாம்உண்டுபண்ணுங்காரணத்தினால் நாமேபர
மெனநிச்சயித்துஅந்தமமதையினால்நமதுபிதாவாகியபர
மசிவனைமறந்தான். அப்பாதகமுயற்சியினால்தான்உண்டு
பண்ணிய சீவராசிகள்வீறிப் பெருகாத காரணத்தையறி
ந்து மனம்நொந்துவருந்தி யிவ்விதமாக விர்த்தியாகாமலி
ருப்பதற்குக் காரணமென்னவென்று ஆலோசித்து நம்
மையெல்லாம் ஆதியிற்பெற்றுச் சிருஷ்டி திதிசங்காரந்
திரோபவம் அனுக்கிரகமென்னும்பஞ்சகிர்த்தியங்களை ந
டாத்தும் பரமசிவத்தை மதியாததால் நமதுசிருஷ்டிபெ
ருகாமல்அடங்கியது. ஆதலால்அவன்கடாட்சத்தைப்பெ
ற்றாலல்லாமல் இக்கருமம் முடியாதென்று நிச்சயித்துந
மதுகுமாரனாகிய பிரமன் தவநிலையில்நின்று அளவற்ற
காலம்வருந்தி நோற்றுஞ் சந்திரசடாதரமூர்த்தியாகியமு
க்கணெம்பெருமான் அவனுக்குக்காட்சிகொடாமலிருப்ப
தைக்கருதி ஐயோ கொடியதீவினையினேன் முன்னம்பி
தாவாகியபரமன் எவ்வாறுவெளிவருவானென வருந்தித்
திகைத்துச் சர்வசங்காரகாலத்தில் அவனும் யானும் இற
க்கின்றசபதங்களைப் புயங்களிற்றாங்கிநடிக்கும்பரமன்த
ன்முன்னம் எழுந்தருளாததை நினைந்து நினைந்து அறி
வில்லானைப்போலவே ஏக்கமுற்றுத் துன்பக்கடலிற்பட்
டுக் குமாரனென்னசெய்வான். கடையில்லைவென்றலறிஅ
ழுதான். அக்காலத்திலொழுகிய கண்ணீர்த்துளிகளனைத்
தும் பேய்க்கூட்டங்களாகிக் கூத்தாடுகின்றதைப் பிரமன்
கண்டு கருத்தழிந்துசோர்ந்து மாண்டவனைப்போலப் பு
வியில்விழுந்து கிடக்கும்போது திரிபுவனங்களினும் வி
ளங்கிய உயிருக்குயிராய்நின்று ஆட்டுவிக்குந் தேவதேவ
னான திரியம்பகன் கிருபையுற்று அவன்கனவில் தோன்
றி புத்திரனே வருந்தவேண்டாமென்றுரைத்து ஐயனே!
படையின்வீக்கத்தைப் பெரிதாய்நினைந்து நமதுமாயை
யிற்சிக்கி அஞ்ஞான கர்வத்திற்பட்டு உன்னையே ஆதியா
கவெண்ணி முன்னம் உன்னைப்படைத்து இத்தொழிலை
யுங்காட்டிய நம்மைமறந்தாய் அக்காரணத்தினால் உனது
சிருஷ்டி விர்த்திக்காமற் குறுகியது அதுதுரிதமாய்முடி
யும்பொருட்டு நமதுஅருளுருவாகிய உருத்திரரை உன்
னிடத்துக் கனுப்புவோமென்று பிறப்பிறப்பில்லாமல் ச
கலத்தையுமுண்டுபண்ணி நடிப்பிக்கும் பெருமைகளையு
டைய எமதுகர்த்தன்சொல்லி மறைந்தனர்.

அவனருளைப்பெற்ற பிரமன் திடுக்கிட்டெழுந்து கர்த்
தன்போதித்ததைநினைந்து நினைந்து களித்து ஆனந்தபர
வசனாய் வாட்டமொழிந்து மனம்வாக்குக்காய மொருமித்
துப் பரமனைக்கருதி நிஷ்டையிலிருக்கின்றபோது பிதா
வாகிய சிவநாதன் கட்டளையின்படிக்கு ஏகாதசவுருத்திர
ர் பிரமன்நெற்றிமூலமாய் வெளிவந்துநிற்க அவர்களைக்க
ண்டவுடன் நான்முகன் அற்புதமடைந்தவனாய் நமதுநு
தலில்நீவீர் வருங்காரணமென்னைநீங்கள்யாவர் உமதுசரி
த்திரமென்னென்றுவினாவ, பரமசிவக்கோலமாயெழுந்த
ருளிய அவ்வுருத்திரர் பிரமனைப்பார்த்து சர்வசிவதயாப
ரமூர்த்தியாகிய சிவபிரான் அருளின்படிக்கு உன்படை
ப்பை அபிவிர்த்தியாக்கும்பொருட்டுவந்தோம், நாங்கள்
பரமன் அருளாலேஉதித்த உருத்திரராகுமெனச் சொல்
லினர். உடனே பிரமன்களித்துத் தேகம்பூரிக்கக்கண்ணு
தலைப்புகழ்ந்து அவ்வுருத்திரரைத்தொழுது சிவனனுக்
கிரகப்படிக்கு என்னிடத்திற் றோற்றினீர் ஆதலாற் சீவ
ராசிகளைப்படைத்து அடியேன் மனக்கவலையை நீக்கவே
ண்டுமென்றுபோற்ற, அவ்வுருத்திரர் தட்சணம்தமதுரு
வையொத்த பதினொருகோடி உருத்திரரைப்படைத்தார்
கள் அதனைநான்முகன்தெரிந்து பிராணிகளைவினைக்கீடா
கவிதியாமல் அறிவாளிகளாகப்படைப்பது பரமசிவத்தி
ன்திருவிளையாடற்குரிய மார்க்கமல்லவென்று விண்ணப்
பஞ்செய்ய நல்லகாரியம் பிரமனே பழையபடிக்கினி உ
ன்சிருஷ்டியினைச்செய்யத் தொடங்குவையானால் முற்கு
றித்த உருத்திரர் உற்பத்திபோல முற்றுப் பெறுமென்
றருளித் தாம்படைத்த பதினொருகோடி உருத்திரரையு
ந் தேவர்களுடன் கலந்திருக்கக் கட்டளையிட்டு உணர்வா
ளிகளாகிய அவ்வேகாதச உருத்திரரும் சிவன்றங்களுக்
கு ஆதியிற்றந்த அண்டகோளகையிலிருக்கும் புவனங்க
ளிற் சேர்ந்தார்கள். அத்தினமுதல் இவர்களும் பரமசிவ
த்தின் கோலம்பெற்று தேவர்களோடுகூடி எவர்களுந்து
திக்கப் பிராணிகளுக் கிடையூறின்றிப் பாதுகாத்து வரு
வார்கள். இஃதிவர்கள் சரித்திர மென்று விஷ்ணுவான
வர் சூரபன்மனுக்குத் தெரிவித்தார்.

---

## நகர்செய்படலம்.

எனவரிபுகலக்கேளாவின்னதோநிகழ்ச்சியென்று
னனையதற்பின்னராண்டையமரர்கம்மியனைநோக்கி
வனைகழற்சூரபன்மன்மற்றியாமுறைதற்கொத்த
புனைதிருநகரம்வல்லேபுரிமதிபுலவவென்றான்.

---

இவ்வாறு விஷ்ணுவானவர்சொல்லச் சூரபன்மன் கே
ட்டு இதுவோ இவர்கள் விர்த்தாந்தமென்றுதலையையசை
த்து அக்கூட்டத்தில் வந்திருக்குந் தெய்வதச்சனைப்பார்
த்து நாங்கள்மூவருமிருக்க யோக்கியமாகிய சிறந்தநகரங்
களைச் சீக்கிரமாக முடிக்கக்கடவாயென்று கட்டளையிட்ட
னன். உடனேவிஸ்வகர்மா அவன்பாதங்களிற் சேவித்து
த் தேவரீர்குறித்த பட்டினங்களை உண்டாக்குமிடத்தை
நேமித்தருள்கவென்றவுடனேபக்கத்திலிருந்த சுக்கிராசா
ரியன்யோசித்து அவைகளுக்குத்தக்க வெல்லைகளை அள
வைப்பிரமாணங்களுடன் போதிக்கத்தெரிந்தவனாய் வி
டைபெற்றுப்போய்த் தென்சமுத்திரத்தைச்சேர்ந்து அ
தன்மத்தியில் எண்பதினாயிரயோசனை பரப்பில் நாற்பா
ங்கைக்குறித்துத் தன்சிஷர்மூலமாய்ப் பூமியிலிராநின்ற

பருத்தமலைகளைத்தருவித்துக் கடலைத்தூர்த்துத்திருத்திச்சமஞ்செய்து ஸ்ரீகாஞ்சிப்பதியில் ஏகாம்பரநாதர் வீற்றிருக்கும்ஆலயத்தைச் சூரியர் சந்திரர்முதலான நவக்கிரகங்கள் வலம்வருமாறு போலச் சுற்றிப்போகும்படியான உன்னதமுள்ளதாய்ப் பொன்மயமாய்ப்புடைபரந்து ஆகாயத்தைக்கடந் தோங்கியிருக்குஞ்சத்தப்பிராகாரங்களையெழுப்பி அதன்நாற்புறங்களினும் அண்டங்களின்துவாரங்களைப்போல விசாலமாய் உயர்ந்தவாயில்களை நிர்மித்து அம்மதில்கடோறுங் கொத்தளங்களையுஞ் சத்துருக்கள் மனதையும் வாட்டவல்ல யந்திரசித்திர உறுப்புகளையும் சிருஷ்டித்து முற்குறித்த நான்குவாயில்களின்மீது மகம்மேருவந்திறங்கி யதைப்போலப் பற்பலநிலைகளைக்கொண்டதாய்ச் சித்திரப்பிரதமைகளமைந்து நவரத்தினகாந்திகளைவீசிப் பலசிகரங்கள்விளங்க வானத்தையளாவும் உன்னதமுள்ள கோபுரங்களையெழுப்பிப்பின்பு அதன்மத்தியில் இலக்கணப்படிக்கு நூறுயோசனை பரப்புள்ளதாய் இருபாரிசத்தினும் அணியணியாகச் சித்திரமாடங்கள் உப்பரிகைகள் அமைந்ததாய் விசாலமாயிருக்கும் பலமாடவீதிகளைப்படைத்து அதன்நடுவில் திரிபுரங்களைப்போலச் சொர்னமயமாகிய மும்மதில்களைவளைத்து ஒப்பற்றலட்சுமீகரம்பொருந்திய பற்பலதெருக்களைத்திருத்திச் சந்திரன் நகைநிகர்த்த மாளிகைமுதலானவைகளை அபரிமிதமாய்ப்படைத்து இலக்குமியைப்போன்ற சுந்தரமுள்ள மங்கையர் ஆடல்பாடல் ஊஞ்சல் விளையாடல்கணவருடன் உல்லாசமா யிருத்தல் இவ்வித சம்பிரமங்களுக்கு யோக்கியமாகிய சந்திரகாந்த மண்டபங்கள் சித்திரக்கூடங்கள் பொற்றிண்ணைகள் முதலாகப்படைத்து முற்குறித்த மாளிகைமுதலிய விடங்களில் நிலாமுற்றங்கள் பளிங்குதிண்ணைகள் சிரோரத்தினமயமாய்ப் பிரகாசிக்கும்விதானங்கள் சொர்னமயமாய்விளங்கும் யாளியாதியபிரதமைகள் தாங்கலுங்கியகோபுரங்கள் செய்குன்றங்கள்பொற்சூளிகைகள் சாலைகள் சபைகள் சந்திரகாந்தம் பளிங்கு இவைகளினாற்சோடித்த மேலுப்பரிகைகள் அத்தலங்களில் வயிரமரகதமணிகளாற்செய்த சன்னல்கள் இவைகளையமைத்து இத்தலங்களின்மேல் கீழ்பாரிசங்களிற்பார்க்க வியப்பைத்தரும் பிரதமைகள் முதலான சித்திரங்களைத்திருத்தி முடிந்தபின்பு ஸ்ரீபூமான்கள் களித்துலவத்தக்க சோலைகள் பூங்காவுகள் நந்தனவனங்கள்முதலியவற்றையும்விதித்து நீர்ச்சுழலின்வேடிக்கைகளைக்காட்டுந்தடாகங்கள் குளங்கள் மடுக்கள் கூவல்களி னினங்களையும் உண்டுபண்ணி முடிந்தபின்பு பக்கத்திற் பதினாயிரயோசனை விஸ்தாரமாகப் பொன்மதிலெழுப்பி மாயைபுத்திரனாகிய சூரபன்மன் வாசஞ்செய்ய நவரத்தினமயமாய்ப் பொன்னினாற்சோடித்து சிங்காரமுள்ள அரண்மனையை விதித்து மலைகளைப்போன்ற மதயானைகள் உன்னதமாய்ப் பலசித்திரப்படாங்களினால் அலங்கரித்த தேர்கள்குதிரைகள் தாராளமாய் வரப்போகப் பக்குவமா யுயர்ந்திருக்குந் தோரணவாயில்களைப்படைத்து அவைகளி னிருபாரிசங்களினும் பொற்றிண்ணைகளையிட்டுச் சொர்னமயமாய்ச் சிறந்திருக்குஞ் சிங்காரங்களையுடைய கோபுரங்கள் பலவகைரத்தினங்களினாற் சோடித்த சூளிகையிவற்றைப் படைத்த பின்பு சித்திரத்தேர்கள்வைக்குங் கூடங்களும் மதயானைகளிருக்கச் சாலைகளும்குதிரைக்கொட்டாய்களும்படைத்தலைவர் வாசஞ்செய்யத் தகுதியாகச்சிறப்புள்ள மாளிகைகளுஞ் சேனைவீரர் இருக்கத்தக்க விசாலமான வீதிகளும் அரம்பை ஊர்வசி திலோத்தமை ஆதியான தேவதாசிகள் நிர்த்தனஞ்செய்ய யோக்கியமாகியநடனசாலைகளுஞ் சங்கீதங்களைப்பாடும் பொற்கூடங்களுந் தேவகாந்தாரங்களை வாசிப்பவரிருக்கும்வயிரமண்டபங்களும் அழகியகலாபத்தையுடைய மயிலினங்கள் மாடப்புறாக்கள் மிருதுவாகிய நடையையுடைய அன்னங்கள்கொஞ்சிவசனிக்கும் பஞ்சவர்னக்கிளிகள் சிரவணானந்தமாகக் கூவுங்குயில்கள் பகையின்றிக் கண்டவுடன் சீறிப் போர்செய்யுங் காடைகள் கவுதாரிகள் கோழிகள்முதலானபட்சிகளிருக்குஞ் சித்திரஅறைகளும் புலிமானாதிய மிருகங்கணிற்குஞ் சாலைகளும் வேதமோதுவோர் அமரும் மண்டபங்களும் ஐவிதயாகசாலைகளும் மந்திராலோசனைசெய்யும் சபாமண்டபங்களுந் தேவாதியர் வீற்றிருக்கத்தக்கமாளிகைகளும் சயசாலயாகிய சூரபன்மன் விண்ணவர்முதலாகச்சூழ்ந்து போற்றியிருக்க அரசுசெலுத்திவரும் நவரத்தினமயமாகிய ஆஸ்தானமண்டபமுந் திரவியக்குவைகள் மணிவகைகள் வஸ்திராபரண விதங்களாதியாகவைக்கும் பொக்கிஷஅறைகளுஞ் சிவநாதன் அனுக்கிரகஞ்செய்த தேவாஸ்திரங்களைவைக்கும் ஆயுதச்சாலைகளுந் திவ்விய போசனங்களைச்சமைக்கும் மடைப்பள்ளிகளும் அளவற்றவர் பந்திதீர்ந்துபுசிக்க யோக்கியமாகிய போனகசாலைகளுங்களபகஸ்தூரி சந்தனக்கலவை பனிநீர் பாக்கிலைவாசனைத்திரவியங்களாதியாகச் சேர்க்கும் விடுதிகளும்மயிலையொத்தசாயலையும், அன்னத்தைநிகர்த்த நடையினையும் மானுக்கிணையாகிய நோக்கையுமுடையமங்கையர்வாழுஞ் சுந்தரமுள்ள சித்திரமாளிகைகளும் அவர்பொன்னூசல்களிலாடியும் பாடியும் பகடைசாலையாடியுங் கிள்ளைகளுடன் கொஞ்சிப்பேசியும் இவ்விதங்களாகப்பொழுதுபோக்கிக்கொண்டிருக்கும் பளிங்குக்கூடவகைகளுஞ் சந்திரிகையைவீசும் பளிங்குமண்டபங்களும் வானையளாவியசந்திரகாந்தமேடைகளும் பிரகாசமுடையபவளமண்டபங்களும் பார்த்தவர்கள்களிக்கும் மரகதமண்டபங்களுந்தாமரைகள்மலர்ந்து ரமணியமாகவிளங்கும் நீராழிமண்டபங்களும்இவ்விதமாகராசாதிராசராயிருப்பவர்அமர்ந்துஅரசுசெலுத்தியிருக்க யோக்கியமானஎவற்றையுஞ்சிற்பசாஸ்திரவிதிப்படிக்கு அமைத்தபின்பு இதன்மத்தியில் வீரலட்சுமிவாசஞ்செய்யுந் திரண்டபுயங்களையுடையசூரபன்மனும் அவன்பட்டத்துத்தேவியும் வாசஞ்செய்யச்சிறந்ததாகப் பொன்னினாலும் பலவகை யிரத்தினங்களினாலுஞ் சித்திரவிசித்திர முள்ளதாய்த் தன் வல்லபத்தைக் காட்டி ஒருஅந்தப்புரத்தையும் விதித்து இதைச்சூழமங்களாகரமாகிய மாடவீதிகளும் அதைச்சூழப்பொன்மதில் அகழ்முதலான காவல்களையும் உண்டுபண்ணி ராசபரமேஸ்வரன் காந்தர்வவிவாக முதலானவிதங்களிற்சேருங் கன்னியரிருக்கத் தகுதியாகிய சித்திர மாளிகைகளையும் படைத்துஅக்கன்னியருடன்அரசன்சலக்கிரீடைசெய்வதற்கான தாமரைத் தடாகங்கள் நீலோற்பலம் அல்லி முதலிய புஷ்பங்களலர்ந்துகுளிர்ந்துமதுரமாகியநீர்ப்பெருக்கையுடைய மடுக்கள்சந்திரகாந்தத்தினாற் படிகள்திருத்திய சித்திரக்குளங்கள் இவற்றைச்சிருஷ்டித்துஅரசன் தேவிமாருடன் வசந்தகாலத்தில் உலவிக்களிக்கயோக்கியமானதாய் வானத்தையளாவித் தழைத்துக்குளிர்ந்த நிழலைபரப்பிப் புஷ்பவகைகள் கனிவர்க்கங்கள் நிறைந்துபரி

மளித்துத் தேன்களைத்துள்த்திருக்கும் உத்தியான வனங்கள் பொற்குன்றங்கள்முதலிய அனைத்தையும்அளவைப்பிரமாணப்படிக்கு மனதிலெண்ணிவிதித்துஜயசாலியாகிய சூரபன்மன் வாசஞ்செய்வதாதலால் அதற்குவீரமாமயேந்திரமென்னும் பெயருமிட்டு அப்பட்டினத்தை அஷ்டதிசைகளினுங் காவல்கொண்டிருக்கத்தக்கதாகச்சமுத்திரத்தைத் தூர்த்து மதில்முதலான உறுப்புகள் மாடமாளிகை கூடகோபுரங்கள்முதலான சிறப்புகளோடுஏமபுரம் இமயபுரம்இலங்கைபுரம் நீலபுரம் சோமபுரமெனச் சொல்லுஞ்சுவேதபுரம் அவுணபுரம் வாமபுரம்பதுமபுரம் என்பவைகளையும், படைத்துப்பின்பு வடசமுத்திரத்தைச்சேர்ந்து மேற்குறித்த அளவைப்பிரமாணப்படிக்கு அகழ்மதில்கோபுரம் மாடவீதி பொன்மயமாய்நவரத்தினகாந்திகளை வீசும் உப்பரிகைமாளிகை ஆஸ்தான மண்டபம்அரண்மனை முதலானவற்றைப் பொன்னுலகமும் நாணும்படிக்குப்படைத்து அதிககாவலையுடைய பட்டினமாக்கிச் சூரனுக்கிளைய வீராதிவீரனை சிங்கமுகன் வாசஞ்செய்யப்படுவதாதலால் அதற்கு ஆசுரமென்னும் பெயருமிட்டு அதன்பின் சூரபன்மனுடைய சேனைகளாகிய அசுரர்கள் சுற்றங்களுட னிருக்கத்தக்கதாக மற்றசாகரங்களின் மத்தியில்ராநின்ற தீவுகள்தோறும் பற்பல பட்டினங்களையும் நிர்மித்துஉடனேமயன்பிதாவாகியதேவசிற்பியானவன் தன்சீஷருடன் மகம்மேருவுக்குத்தென்பாரிசத்திற் சகலராலும்புகழும் பெருமையைப்பெற்றநாவலந்தீவிலிராநின்ற ஏமகூடபருவதத்தினருகில்வந்து சுற்றிப்பார்த்து விசாலமாகிய விடமொன்றை யேற்படுத்தி முன்போலவே சகலவளங்களையுங் கொண் டிருப்பதாய்ச் சிறந்தநகராவிதித்துத் திசைகளனைத்தையும் வென்று ஜயத்தைநாட்டியிருக்கும் புயவலிக்கொருவனை தாருகனிருப்பதாலேஅதற்கு மாயாபுரமென்னும் நாமமுமிட்டுஇவ்வாறு விசுவகர்மனனவன் சாஸ்திர அளவைப்படிக்குச் சீஷர்களை வைத்துக்கொண்டு தன்மனதுக்கிசைந்த மூவகை நகரங்களையும் மற்றபுறக்காவற்பட்டணங்கள்முதலாகப் படைத்துமுடிந்தபின்பு ராசாதிராசனாகிய சூரபன்மனிடத்துக்குவந்து வணங்கி ஐயனேதேவரீர்கட்டளையின் பிரகாரம் முப்புரங்களையும் இலக்கணப்படிக்கு படைத்தாயிற்று இனிதம்பிமார்களுடன் சென்று மனமகிழ்ச்சியாயிருக்கலா மென்றுவிண்ணப்பஞ்செய்யச் சிற்பியின்வல்லபத்துக்குச் சந்தோஷித்தவனய்ச் சகலருஞ்சூழ்ந்துவரத் தனக்கேற்படுத்திய வீரமாமயேந்திரபுரத்தைச் சேர்ந்தான்.

---

## பட்டாபிஷேகப்படலம்.

மற்றவ்வீரர்மகேந்திரநண்ணியே
யுற்றுநாடியவ்வும்பர்தங்கம்மியன்
கற்றவிஞ்சைவியந்துகளிப்புறீஇ
கொற்றநீடுதன்கோயிலைநண்ணினன்.

---

கேட்டீர்களோ சவுனகாதி முனிவர்களே இவ்விதமாகத்தம்பியர் சேனைத்தலைவர்கள் இந்திரன்பிரமனாதியர்சூழ்ந்து போற்றிவரச் சூரபன்ம னனவன் வீரமாமயேந்திரபுரத்திற் பிரவேசித்து எங்குமுலவிக் கண்டவர் மனதையும் விழிகளையுங் கிரகிக்கவல்ல சிங்காரங்களைப் பார்த்துக்களித்து சிற்பிகற்றவித்தையின்முயற்சிக்குமெச்சிக்கொண்டாடிக் கட்டுக்காவலையுடையதன் அரண்மனையைச்சேர்ந்ததருணத்தில் பிரமனாதியர்நமதுஅரசனுக்குப்பட்டாபிஷேகஞ்செய்யவேண்டுமென நிச்சயித்துஅதற்குவேண்டும் வஸ்துக்களைத் தருவித்துச் சூரபன்மனை மஞ்சனச்சாலையி லழைத்துப்போய் நவரத்தின மயமாய்விளங்கும் பொற்பீடத்திலிருத்திச் சந்தனக்குழம்பினால் நலங்கிட்டுச் சுத்தோதக சமுத்திரமுதலானகங்காசலத்தினால் ஸ்நானஞ்செய்வித்துச் சிகையைக்கோதி அகிற் சந்தனப்புகையையூட்டி முடித்து விலையுயர்ந்த பீதாம்பரத்தையுடுத்தி வாச மிகுத்த கலவைச்சாந்துகளைப்பூசி சிரோரத்தினங்களினாற் சோடித்த கிரீடம் வாகுவலயங்கள் மதாணிப்பதக்கம் முத்துத்தாழ்வடம்மோகனமாலைசரப்பளிமகரகுண்டலம் ரத்தினகடகங்களாதியான பணிகளைப்பூட்டிகற்பகமலர் மாலைகளைச்சூட்டிச்சகல அலங்காரங்களும்முடிந்தபின்பு தம்பியர் இருமருங்கினும் உபயபுயங்களைப்போலத் தொடர்ந்துவரவும் ஜயஜயவென்று பிரமன் இந்திரன் முதலானதேவர்கள்சூழ்ந்து போற்றவுஞ் சேனைத்தலைவர் முன்பின்னெருங்கிப்புகழ்ந்துகளித்துச்செல்லவும் பட்டுவர்பாவினங்களினாற்புகழவும் ராசாதிராசன்வருகின்றான் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபன் வருகின்றான், புவனங்களனைத்தையும் வெற்றிகொண்டபுசபலபராக்கிரமசாலியாகிய சூரன்வருகின்றானென்று சட்டியக்காரர் எச்சரிக்கைசொல்லி முன்னடக்கவும் பலராட்சதவீரர் அணிவகுப்பாய்நின்றுவெண்சாய்மரைகளை வீசித்தொடரவும். பலர் ஆலவட்டங்களை அசைத்துப்போகவுஞ் சந்திரனையொத்த முத்துக்குடைகளைப் பலர்தாங்கி நடக்கவுந் தவளச்சங்கங்கள் பொமபொம்மென்றொலிக்கவுந் திருச்சின்னங்களூதவுஞ்ஜயபேரி முதலானவாத்தியங்கள்முழங்கவும் அரம்பைஊர்வசி திலோத்தமை மேனகையாகிய தேவகன்னியர் நடித்துவரவுங்கந்திருவர் வீணைவாசித்துத்தொடரவும் இவ்வித ராஜசின்னங்களுடன் மெல்லநடந்து நிகரற்றநிருதராசன் தொழுதேத்தவுஞ்சுக்கிரனும் மஹாரிஷிகளும் ஆசீர்வதித்துவாழ்த்தவும் விண்ணவர் பத்திவினையங்களுடன் கைகட்டிச்செல்லவும் இந்திரன் மனவாட்டமுற்று ஏங்கவுஞ் சொர்னமயமாய்ரத்தினகாந்திகளைவீசி விசாலமாய்விளங்குஞ் சபாமண்டபத்தைச்சேர்ந்து அதின்முகப்பிற் கோடிசூரியப்பிரகாசமாய் வயிரங்களினாற்சோடித்திருக்குஞ் சிங்காதனத்தில்வீற்றிருந்தான், அத்தருணத்தில் மகாவிஷ்ணுவுக்கு யோக்கியமாகியசுந்தரமுள்ளவயிரமுடியினை நான்முகன்ஏந்திவேதங்களையோதிராசாதிராசன் சிரத்திற்சூடினான் இதைக்கண்டதானவவீரர்கள் காசிபன்புத்திரன் பாதங்களிற்சேவித்து அளவற்றசந்தோஷத்தைப்பெற்று அமுதத்தை உண்டவர்களைப்போல மனமகிழ்ந்தனர் அம்மகோச்சவகாலத்தில் முப்பத்துமுக்கோடிதேவர் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள் கற்பகமலர்களைக் கரங்களிலேந்தி ஜயா விஜயபவாவென்று மங்களவாழ்த்துகளெடுத்து ராசபரமேஸ்வரன்மகுடத்தின்மீது முறைமுறையாக விரைத்து நிற்கச்சிங்கமுகனும் தாருகனும்உற்சாகத்தோடு விஷ்ணுபிரமர்களைப்பார்த்து நீங்கள் எழுந்தருளலாமென்று சொல்ல அவ்வாறேயெதிரிலிருந்த பீடங்களில்உட்கார்ந்தார்கள்.

இவ்வாறு அனைவருங் களித்திருக்குங் காலையில் திரிலோகவாழ்வைப் பெற்ற தேவேந்திரன் பொற்படிக்கமே

ந்திப் பக்கத்தில்நிற்கவும் நிதிபதியாகிய குபேரன் அடை
ம்பைதாங்கியிருக்கவும் வாயுதேவன் வெண்சாமரை வீ
சவும் நிருதிஉடைவாள்கொண்டு நிற்கவுஞ் சூரியசந்திரர்
குளிர்ந்த நிழலைப்பரப்பும் முத்துக்குடைகளை யிருபாரி
சத்தினுந்தாங்கவும் வருணனுஞ் சமுத்திரராசனும் ஆல
வட்டங்களைப்பணிமாறவுங் கருடகாந்தருவர் சித்தவித்தி
யாதரர் யாழ்களைமீட்டித் தேவகாந்தாரங்களைப் பாடவும்
முத்தலைச் சூலத்தைக்கொண்டு முறைதப்பாமல் மன்னு
யிர்களை யடக்கியாளுந் திறம்பெற்ற யமதருமராசனும்அ
க்கினிதேவனும் பொற்பிரம்புகளைக் கரங்களிற்பற்றிச்சூ
ரனெதிரில் எவ்வெவர்களும், விலகிநிற்கத்தக்கதாய்விழிக
ள்சிவக்க உருட்டிப்பார்த்து இடியும்அஞ்ச அதட்டியிரு
மருங்கினும் வரிசைப்படநிறுத்திப் பராபரிசெய்துவரவு
ம் பிரகஸ்பதிபகவானுஞ்சுக்கிராசாரியனும் அளவற்ற ரி
ஷிபுங்கவர்களுந் தங்கக்குடங்களில் வானகங்கையையேந்
தி வேதங்களையோதி அறுகம்புல்லினாற்சூரன்மீதுதெளி
த்துப் பல ஆசிகள்கூறவும் அளவிறந்த அரம்பையர்கள்
பரதசாத்திர விலக்கணப் படிக்கு கின்னரியைப்போலத்
தேவகாந்தாரங்களைப்பாடியும் மயிலையொத்துப் பரதநா
ட்டிய முறைப்படியே அபிநயங்களைக்காட்டிநடிக்கவும்இ
வ்விதமாக தேவர்கள் முனிவர்கள் அவுணவீரர்கள்நெரு
ங்கித் தத்தஞ்செய்கைகளிற் குறைவில்லாமல் நடத்திவர
ச் சூரபன்மன் நவரத்தினமயமாகியசிங்காதனத்தின்மீது
இருந்து வித்துவனங்கள் புகழ்வோர் முதலானவர்களுக்
கு மேகத்தைப்போல விலையுயர்ந்த பற்பல வஸ்திராபர
ணங்களை யிடையறுமற்கொடுத்து வருகின்றகாலையிற் ச
பையிலிருப்பவர்களைப்பார்த்துஇதனைக்கட்டளையிடுவதா
யினன்.

---

## அரசு செய்படலம்.

---

களித்திடுஞிமிறும்வண்டுங்கலந்திடநறவம்பொங்கித்
துளித்திடுதுழாய்மாறன்னைச்சூரனுமவுணன்பாரா
வளித்தவன்றன்மூதாதையாயினையதனுனின்னை
விளித்திடுமெல்லைதோறும்விரைந்திவண்மேவுகென்றான்

---

கேட்டீரோசவுனகாதி மஹரிஷிகளே!மேற்குறித்தவை
பவங்களை அனுபவித்திருந்த சூரனுனவன் வண்டினங்க
ள் ரீங்காரத்தொனியைச் செய்திறங்கியுண்டு களிக்கத்தக்
கதாகத் தேன்களைத்துளிக்கும் பரிமள மிகுத்த திருத்து
ழாய்மாலைமார்பனுகிய விஷ்ணுவைப்பார்த்து நீநமது தந்
தையின்றந்தைக்குத் தகப்பனுதலால்இன்றுமுதல்எக்கா
லங்களில் நாம்வேண்டுமோமாயினும் அந்நிமிஷத்தில் வி
ரைந்திவ்விடம்வந்து செய்திகளைக்கேட்டுப்போகக்கடவை
யென்றும்உந்திக்கமலவாசியாகியபிரமனைநோக்கிப்பாட்ட
னே நீஉமதுகுமரர்களுடன் நித்தியம்பிராதகாலத்தில் வ
ந்து பஞ்சாங்கமாகிய திதிவார நட்சத்திரயோக கரணசா
ரங்களைச் சொல்லிப்போவா யெனக்கட்டளையிட்டுஞ்சூரி
யனையழைத்து நீநமதுபட்டினத்தின் மேலாகப்போகாம
ற் கிழக்குமேற்குக் கோபுரவாயில்களின் பக்கமாகக்குளி
ர்ந்த கிரணங்களை வீசிச்சென்றுஉன்தொழிலைநடத்துவா
யென்றுஞ் சந்திரனைஅழைத்துத் தேய்தலும் வளர்தலு
ம் மறைதலுமில்லாமலெக்காலமுஞ்சூரியனைப்போலவே
சோடசகலைகளோடும் சஞ்சரிப்பா யென்றும்யமதருமரா
சனைநோக்கி இவ்வுலகங்களிலிராநின்றசீவராசிகளைக்கொ
ல்வதைப்போல நமதுசேனை யானைகுதிரைகள் முதலான
வைகளைகொல்லக்கனவிலும் நினையாமல் பயபத்தியோடு
அவைகட்குக் குறைவில்லாமல் விசாரித்து வருவாயென்
றும் அக்கினிதேவனை அழைத்து நமதுநாட்டிலிருப்பவ
ர் யாவர்நினைந்தபோதினுந் தட்சணத்தில் அவ்விடங்களி
ற்போ யிட்டஏவல்களைச்செய்து யாவர்தொடினுஞ்செங்க
மலத்தைப்போலக் குளிர்ந்துகாட்டி உன்முறைமையைச் செ
லுத்துவாயென்றும் வாயுதேவனைப்பார்த்து நமதுநகரத்
திலிருப்பவர் தெருக்களில் வீசியவஸ்திராபரணங்கள்பு
ஷ்பமாலைகள் கலவைச்சாந்து சுண்ணப்பொடிமகரந்தமு
தலான குப்பைகளை யிராப்பகலின்றிச் சுத்திசெய்துபோ
வாயென்றும் வருணராசனையெச்சரித்துப் புனுகுசவ்வா
து அகிற்சந்தனத்தேய்வை களபகஸ்தூரி பாலின்மணமு
தலான பரிமளங்களைத் திவ்வியசுகந்தங்கமழும்பனிநீரிற்
கூட்டி யிப்பதியெல்லை முற்றினும் வாயுசுத்தி செய்தவுட
ன் சிறுதுளிகளாயிறைத்துத் துகளெழாமல் அடக்கியிரு
ப்பாயென்றுந் தேவேந்திரன்மீது விழிகளைச் செலுத்திச்
சொர்க்கலோகத்தி லிருக்கும் விண்ணவர் அஷ்டதிக்குப்
பாலகர் ரிஷிகளுடன்வந்து நமது அரண்மனை முதலான
விடங்களில்வேண்டும் பணிவிடைகளில்யாதுங் குறைவி
ல்லாமற்செய்து காத்திருப்பாயென்றும் இவ்விதமாகச் ச
பையிலிருப்பவர்களுக்கு வெவ்வேறுபணிவிடைகளைஏற்
படுத்தியபோது அவர்கள் பயத்துடன் அரசனேதேவரீர்
கட்டளையின்படியே செய்யக்கடவோமென்று வணங்கநல்
லகாரியமெனக் கையமர்த்தி, யிவ்விதமாக அரசாட்சி செ
லுத்தி வருகின்றகாலத்தில் திருக்கலியாணம் புரிந்துகொ
ள்ள நினைந்தவனுய்க் குலகுருவாகிய சுக்கிராசாரியனுக்கு
த் தெரிவித்தமாத்திரத்தில் அவன்இவனுக்குத் தகுந்த க
ன்னிகையாகிய விசுவகர்மன் புத்திரியாகிய பதுமகோம
ளை யானவள் லட்சுமிக்கொப்பான சுந்தரமுஞ் சந்திரனை
நிகர்த்த முகாரவிந்த முதலானவடிவுகளும்நற்குணநற்செ
ய்கைகளும் பெற்றிருப்பதையறிந்து அவனுடன் பேசித்
தினவாரநட்சத்திர யோககரணங்கள் அமைந்த சுபதின
த்தில் அம்மங்கையைத்தருவித்துக் கலியாண மண்டபத்
தைச் சிங்காரித்து விஷ்ணுபிரமன் தானவர் முதலாகத்தி
ரண்டு வேதவிதிப்படிக்குச் சடங்குகளைநடத்திவர மங்க
ளவாத்தியங்கள்முழங்க சகலவைபவங்களுடனும் மணத்
தினைமுடித்துவைத்தான். பின்புசூரபன்மன் அவளின்ப
ரசத்தை யனுபவித்து வருகையில் மீட்டுந்தேவர்அவுண
ர் கந்திருவர் சித்தர் கின்னரர் இயக்கர் நாகர் கிம்புருடரா
தியர் பெண்களில்அளவற்றவரைக் கடிமணஞ்செய்துபுஷ்
பங்களினிடத்தி றங்கித்தேனையுண்டு களிக்கும்வண்டின
ங்களைப்போல அவ்வவர் கலவிச்சுகங்களை யனுபவித்துப்
பின்பு தன்தம்பியாகிய சிங்கமுகாசுரனுக்கு அக்கினிதே
வன் பெண்ணுகிய சுந்தரமுள்ள விபுதையென்னுங் கன்
னிகையைப்பேசி விவாகத்தைமுடிப்பித்து அதன்பின்பு
மங்கையர்க்கரசியான நிருதிபுத்திரியாகிய சவுரியென்னுந்
தருணமங்கையைத்தேடித்தாருகாசுரனுக்கு மணஞ்செய்
வித்தான்.

இவ்விதமாகத் திருக்கலியாணங்கள் முடிந்த வுடன்
தம்பிமாரைப் பார்த்து உங்களுக் கேற்படுத்திய நகர
ங்களிற் சேர்ந்து நம்மைப் போலவே சகல செல்வங்

களையும் அனுபவித்திருப்பீர்க ளென்று சொல்லி ஒவ்வொருவருக்கு இரண்டுகோடிவெள்ளஞ்சதுரங்க சேனைகளையுங்கூட்டிச் செலவு கொடுத் தனுப்பிய பின்பு தன் சயின்னியங்களுக்குத் தலைவரை நோக்கி நீங்கள் இரண்டுகோடி வெள்ளஞ் சேனைகளுடன் சத்தசாகரங்களின்மத்தியில் விளங்குந்தீபாந்திரங்களி லிராநின்ற நகரங்களுக்குச் சேருங்கோமென்று விடைகொடுத்தனுப்பி மற்றுஞ் சில சேனைக்காவலரைப்பார்த்து ஆறுகோடிவெள்ளம் படைகளைக்கொண்டு நீங்கள்போய் அஷ்டதிக்குகளினும் வானுலகேழினும் பூமிவட்டத்தினும் பாதலப் பிலங்களினும் மற்றைய எல்லைகளினும் அமர்ந்துநமதுஆக்கினைகளைச் செலுத்தியிருப்பீ ரென்றேவிய பொழுது அவர்கள் வானத்தில்நட்சத்திரவகைகள்பிரகாசிப்பதைப்போலஎங்கும்பரவிக்காவல்கொண்டிருந்தனர். இவ்வாறுஎங்குந்தன் காவலைநாட்டிமேலுந்தன்தேவியர்வாசஞ்செய்யும்மங்களகரமாகிய அரண்மனைஅந்தப்புரஎல்லைகளில்லட்சம்வெள்ளஞ் சுத்தவீரரைக் காவல்வைத்துப் பின்பு சிங்கம்யானை குதிரை யாளிகரடி புலி பன்றிமான்இவற்றின்முகங்களைப்பெற்ற அவுணவீரரைநோக்கி அளவற்றபடைகளுடன் நீங்கள்போயிந்த வீரமயேந்திர புரியைச்சூழ்ந்த எண்டிசைகளினும் ஏற்படுத்தியிருக்கும் இலங்கைகளினுஞ்சேர்ந்து நமதுகட்டளையின்றி ஒருவரையும் இப்பதியில்வரவொட்டாமற் காத்திருப்பீர்களென்றனுப்பிக் கொத்தளங்களமைந்த மதிற்புறங்களினும் மகம்மேருவைப்போலஓங்கிவிளங்குங் கோபுரங்களினுந் தன்னரண்மனையைச்சூழ்ந்த சுவர்முதலான தலங்களினுமிருந்துகண்ணிமையைப்போலக் காவலிருக்கப் பலதானவ வீரர்களுக்குக் கட்டளையிட்டு இத்தன்மைய காவல்களைத் தகுந்தவிடங்களில் வைத்தபின்பு துர்க்குணன்-தருமகோபன்-துன்முகன்-சங்கபாலன்- வக்கிரபாலன்-தீயன்-மயிடன்-முதலானவர்களை மந்திரித் தலைவராக ஏற்படுத்திச் சூரபன்மன் தேவாதியர் போற்றிவணங்க அரசுசெலுத்தியிருந்தான்.

---

## தேவரையேவல்கொள்படலம்.

அரசுசெப்தலுமந்தரநாதனுஞ்
சுரருமேனைமுனிவருந்தொக்குறீஇ
வரைசெய்மாடமகேந்திரமாபுரத்
தொருவனேவலின்முன்னமொழுகுவார்.

---

ஓ! சவுனகாதிரிஷிகளே? கேட்பீராக. இப்படிக்குச்சூரபன்மன் ஆயிரத்தெட் டண்டங்களுக்கும் அதிபனாய்க் கொடுங்கோல்செலுத்தி வருகின்றகாலையில்தேவேந்திரன் தேவரிஷிகளைக் கூட்டிக்கொண்டுபொன்மலையைப்போன்ற மாடமாளிகை கூடகோபுரங்கள் நெருங்கி விளங்குகின்ற மயேந்திரபுரியில் வாசமாயிருந்துமேற்குறித்தகட்டளையின்படிக்கு நடத்தி வருவதன்றிச் சிங்கமுகன் தாருகன் மற்றப்பிரமுகாளாகிய அவுணவீரர் வாசஞ்செய்யும் நகரங்களினுந்தினந்தோறுஞ்சென்று அவர்கள் பணித்தவைகளைக் குறைவற முடித்துஊஞ்சலைப்போல நிலைபெறுமல் இங்குமங்குமாய் உழன்றுஅலைந்து பங்கப்பட்டுமனம்வாடி நடந்துவருகின்ற போழ்து ஓர்தினஞ் சூரபன்மனவன் இந்திரனதியரை அழைப்பித்துநீங்கள்தானவருக்குத் தம்பியராகும், அவர்களுக்குரிய தொழில்களை முடிப்பது உங்களுக்கு உரிமையாதலால் இதுபரியந்தம் நீங்கள் செலுத்திவரும் வேலைகளுடன் அலைகள் பெருத்த சமுத்திரத்திலிராநின்ற மகரமச்சங்கள் முதலானவைகளில் நாம்புசிப்பதற்கு யோக்கியமாகியபருத்தமீன்களைப் பற்றிக்கொண்டுவந்து கொடுப்பீர்களெனப் புதியகட்டளையிட்டான். அவ்வார்த்தையினை விண்ணவர்கேட்டவுடன் மனந்திடுக்கிட்டுவாடி ஏங்கினவராய்ப் பூமியைச்சூழ்ந்த கடலில்வாழும் மீன்களைப்பிடித்துவந்து கொடுக்க ஏவுகின்றான். இதற்குநாம் செய்யவேண்டுவதென்னை பரிமளமிகுத்த கமலாசனனாகிய பிரமன் நமதுதலையில் இவ்வினைத்தொழிலைச்செய்துவரவும் எழுதினனோ வென்றிரங்கித் தடுக்கப்பயந்து ராஜாதிராஜனே! அவ்வாறேசெய்யக் கடவோமெனப்பணிந்து விடைபெற்றுப்போகின்றமார்க்கத்தில் தேவராசனும் இமையவரும்புலம்பி ஏக்கமுற்று இவன்பணித்த கருமத்தினைச்செய்வதினால்தீராதபழிபாதகம் நேருதற்கையமில்லை, அவைவந்தடுப்பதற்கு முன்னம்அரிய பிராணனை வலிதிற்போக்கிச்சாகின்றதுமிகவும் நன்மையாகும், பாழான அமுதத்தினை யுண்டதினாலே அதுவும் நமக்குச்சம்பவிப்பது அரிதாகக்காணுகின்றது. ஐயையோபுழுங்குகின்ற மனதையுடையயாம்இனியெண்ணியாகவேண்டுங் கருமமொன்றுங் காணோமென்று பலபலகுறைகளைப்பேசிக்கொண்டுகடற்கரையைச்சேர்ந்து தேவேந்திரன்கடலைநோக்கிக் குரலோசையுடன் ஓ! வருணராசனே? யென்றழைத்து இந்தக்கருநீரையுடைய சாகரத்துக்குநீர் தலைவராதலால் உம்மைப்பார்க்கிலும்வலிபெற்றவரு முண்டோ! இக்காலத்தில் எங்கள் மனக்குறைமுடியத்தக்கதாக அலையாகியகைகளினால்திமிங்கலமுதலான மீனினங்களை வெளியிடுவையாயில் நாங்கள்பட்டலையுந் துக்கசாகரத்தின் கரையிலேற்றியதாகநினைந்துகளிப்போமென்று அயிராவதத்தலைவன் கூவிச்சொன்னவசனத்தைக்கேட்டு உடனே தேவருக்கதிபனாகிய நீரும்இப்படிக்கிரங்குங்காலமும் நேர்ந்ததோ உமதுஇஷ்டப்படிக்குத் தருவேனென்று விரைவாய்ச்சேருடி ஆழ்ந்திருக்குஞ் சமுத்திரத்திற்புகுந்து அலைக்கரங்களினால் அலைத்து அதிலிருக்கும் பருத்தமீன்களை வாரிவாரிவிசாலமாகியகரையின்கண்மலைகளைப்போலக்குவித்தான். இதனைக்கண்ட புரந்தரன்தேவரைப்பார்த்துஇவற்றை உமதுவலிகொண்டெடுத்துவரக் கடவீர்க ளென்று கட்டளையிட்ட வுடனே அவர்கள்உடல்நடுக்குற்று மனம்பதைக்க விழிகளில் சலத்தைப்பெருக்கிக் கரங்களைத்தட்டிப்பிசைந்து அளவுபடாத வெட்கமுடையவராய்த் தமதுஅரசன் கட்டளையின்படிக்கு வருணபகவான் குவித்த திமிங்கலமுதலான மச்சங்களின் ஆவியையமன்வாட்டவும், நீர்ப்பசையைச் சூரியன்காய்ந்துஉலர்த்தவும், அனந்தன்வாசுகிதட்சன்முதலிய சர்ப்பங்கள் திரண்டுகட்டிய சுமைகளைக் கடாவாகனனாகிய யமன்தேவரினும் அதிக மனக்கவலையுடன் தூக்கப் பவுத்திரமாகிய தங்கள்சிரங்களிற்றூங்கி வரிசையாகப்போகின்ற தேவர்கள்இவ்விதமாகப் புலம்புவராயினர். உலகங்களனைத்தினுங் கொடுங்கோல்செலுத்திச்சகலரும் நடுங்கிப்புகழ்ந்து வணங்குங்கீர்த்திபெற்ற சூரனென்னும்பாதகனால் இதற்குமுன்னமே மகத்தாகிய துக்கசாகரத்திலழுந்தி மனவூக்கமும் வலியுமிழந்துவருந்திய யாம் எப்புவனங்களினும்பிரகாசமாய்வெறுக்கும்பழிபாதகத்துக்

கேதுவாகிய இவ்வீனத்தொழிலையுஞ் செய்யத் துணிந்தோம், இன்னமும் என்னென்னகொடியகிருத்தியங்களை நடத்த விருக்கின்றனமோ தெரியாது, மேருவையொத்த புசபலபராக்கிரமசாலியாகிய அரசன்கட்டளையிட்ட இக்காரணத்தினாற் பலராலும் இகழ்ந்து கூறப்படுவோம் ஐயையோ? மானம்உயிரைவாட்டுகின்றது. ஓ! விதியே! எமக்குத் தகாததொழில் நீங்குங்காலமும்நேருமோதயைசெய்து ஒருவார்த்தைசொல்லாயோ! பூமியின்கண்வாசமாய் இருவினைத்தொடக்கிற்பட்டலைகின்ற மானிடருஞ் சாஸ்திரமுன்னிலையில் மகாபாதகமென்றிகழ்ந்துநீக்கியிருக்கும் இவ்வற்பத்தொழிலை யாவர்செய்வார்கள். இக்கொடிய செய்கைஎமக்கோ நேரவேண்டும், ஆதலாற்சிறப்பாகப்புகழுந் தேவகதியிலும் அழற்பிழம்பைவீசும் ரவுரவாதிநரகவாதனை மேலாகக் காணப்படுகின்றது. மேலும் நல்லது தீதென்றறியும் விவேகமில்லாத தானவர்களினும் பேரறிவற்றபூலோகவாசிகளினுந் தாழ்வுபெற்றபுலைஞர்தொழிலைச் செய்கின்றோம்.

இச்சொர்க்கவாழ்வினை மேம்பாடாகக்கருதி நாங்கள்வருந்திநோற்ற தவப்பலனானது கடையில் வினைப்போகத்துக்குக் காரணமாய்முடிந்தது. லோகநாயகனாகியபரமசிவத்தினால் நிருமித்த வேதவொழுக்கங்களைக் கடந்ததுமன்றியிற் சிறந்தோங்கிய ஞானவரம்புக்கும் விலக்காகியவராய்க் கொடியசூரபன்மன் கட்டளையிட்ட கடியசெய்கையைச் சுருதிவாக்கியமாயெண்ணிச் சிரசாகவகித்துமுடிப்போமாயின் எங்களினுஞ்சிறந்தவர்எங்கேனுமுண்டோ? இடைவிடாமல் தேனைத்துளித்து திவ்விய பரிமளங்களை வீசும் புஷ்பங்களலர்ந்தபஞ்சதருக்கள்நிழலமர்ந்துதேவபோகங்களை யனுபவித்துக்களித்திருக்கும் பெருமையினையுடைய வானவரெனப்பலராலும் புகழத்தக்க கீர்த்திபெற்ற நாம்கண்டவர்கைகொட்டிநகைக்க வலைக்காரரைப்போலப் புலால் நாற்றத்தினைவீசும் மீன்களைச்சுமந்து மயேந்திரபுரியிலிருக்குந் தானவர்களுக்குமுன்னே போவதினுஞ் சாகின்றது மிகவும்நல்லதாகுமென்று இவ்விதங்களாகப் பலபலவாகப்பேசிப் புலம்பிக்கொண்டு ராட்சதர்புகழ்ந்து போற்றுங் கீர்த்திபெற்ற சூரபன்மன் வாசஞ்செய்யும் கெடிஸ்தலத்திற் றிசைக் காவலருடன் தேவர்களாய்ப் பிரவேசித்தகாலத்தில் அவர்செய்கைகளை அந்நகரவாசிகள்கண்டு இவர்கள் நமதரசன் கட்டளைப்படிக்குப் பெருமைபொருந்திய சமுத்திரத்தைக்கலக்கி மச்சங்களைக்கொண்டு வருகின்றனரெனச் சிலர்சொல்லவுஞ் சூரியன் காய்ந்து பசையனைத்தையும் உண்டு நின்றவெறுங்கோதினைத் தருகின்றனரெனச் சிலர்தூறவுங் கடலையலைத்து அதிலிருந்த மச்சங்களைப்பற்றிச் சிரசிற்சுமந்துவருகின்றனர். இதனால்இவர்களுக்குச் சிறிதும் நாணமில்லையோவென்று பலர்பேசவுஞ் சத்துருக்களேயாயினும் இத்தொழிலைச்செய்யத் தகாதென்று அளவற்றவர் இரங்கிப்பரிந்து சொல்லவும், ஒன்றும்பேசாமற்போகும்போது இவர்ஊமைகளோவெனப்பலர்பரியாசஞ்செய்யவும்பூமியைச்சூழ்ந்த சாகரத்தின்கரையில் வாசஞ்செய்யும்வலைஞருக்குரிய இத்தொழிலானது சிலாக்கியமாகப் பேசிக்கொள்ளும் இவர்களுக்கு லபிக்கலாமாவெனப்பலர் இரங்கவும், ஏன்வீண்வார்த்தையாடுகின்றீர். விதியின்முயற்சியினை யாவரால் விலக்கப்படுமெனப் பலர் சமாதானஞ்சொல்லவும் வேதமார்க்கப் பயிற்சியினை மறந்துபாவிகள்செய்யும் ஈனத்தொழிலை யேற்றுநடக்கின்றவரெனச் சிலர்விசனப்படவும் ஜயசாலிகளாகிய நங்குலத்தவரைப் பலகாலந் துன்பப்படுத்திவாட்டித் தேவபோகங்களை யிதுபரியந்தம்அனுபவித்து இறுமாந்திருந்த இந்தத் தேவருக்கு இதுபோதாது. இன்னமெப்பாடுகள்கிடைக்கவிருக்கின்றனவோவெனச் சிலர்சீறவும், பூலோகவாசிகளாகிய மானிடரும் அஞ்சத்தக்கபழிபாதகந்தனக்குநேர்ந்தும், இவ்விந்திரன்பிராணனைப்போக்கிக்கொள்ளாமற்பிணம்போலப் போகின்றான். ஆதலால் இவனுக்கு கண்களனந்த மிருந்த போதினும் அறிவுசிறிதாகுமென்றுசிலர் ஏசவும், இப்படிக்குநாம் இகழ்ந்துபேசவுஞ் சற்றும் நாணமில்லாமல் நடக்கின்றஇந்தஇந்திரன் பெண்ணோ! பேடோவெனச் சிலர் பரியாசஞ்செய்யவும், இவ்விதங்களாகப் புரசனங்கள் கூட்டங் கூட்டங்களாகத் தெருக்களிற்சேர்ந்து பற்பல நிந்தாஸ்துதிகளைப்பேச அச்சொற்கள் விஷத்தையொத்துச் செவிகளில் நுழைந்தமாத்திரத்தில் நாணமும் மானமும் மனதைவாட்ட வருந்திய தேவேந்திரன் விண்ணவர்களுடன் அவ்வீதிகளைக்கடந்து பாதகனான சூரபன்மன்வாசஞ்செய்யும் அரண்மனைவாயிலிற் சேர்ந்தவுடனே காவலரிற் சிலரோடி இராஜனுக்கிவர் வரவை விண்ணப்பஞ்செய்து விடைபெற்றுவந்து செலவுகொடுத்தவுடன் அத்தேவர் அடங்கி ஒடுங்கித் திரைகள் பெருத்தசமுத்திரத்தில்வாழும்மீன்சுமைகளைப் பவுத்திரமாகிய சிரங்களிற்றாங்கிச் சபாமண்டபத்தில்வீற்றிருந்துகொடுங்கோல்செலுத்திவருஞ்சூரபன்மனெதிரில் நின்றகாலத்தில் அவர்கள்கோலத்தைப் பார்த்துக் களித்தவனாய் தேவர்களே யிவ்வாறேதினந்தோறும் பருத்தமச்சங்களைக்கொண்டுவந்து கொடுக்கக்கடவீர்களெனப் பணித்தவுடன் மகாபாக்கியமெனஅக்கட்டளையைச் சிரசாகவகித்துத் திரும்பிமடப்பள்ளிகளிற் சேர்த்தனர். அத்தினமுதல்இவ்வாறே நாள்தோறும் அப்புல்லிய தொழில் முதலிய துஷ்கிருத்தியங்களைமனம் வருந்திக் குறைவறச்செய்து துக்கசாகரத்திலழுந்தி வேதவொழுக்கங்களைமறந்து தங்கள்பதங்களையிழந்து வீரமாமயேந்திரத்திற் குடியாகவிருந்து சிங்கமுகன் தாருகனுக்குரிய பணிவிடைகளையு முடித்துவருவார்கள். கேட்டீர்களோ! நைமிசாரணியவாசிகளே? (முற்பகல்செய்யிற்பிற்பகல்விளையு)மென்னும் பழமொழியின்படிப்பரமசிவத்தை யிகழ்ந்து தக்கன்செய்த யாகத்திற் களித்திருந்த பாதகசம்பந்தத்தினாற் சிறந்த தேவரும் இப்பாடுபடும் காரணமும் நேர்ந்தது, இதுநிற்கஇனிச் சூரனுக்குநேர்ந்த புத்திரோற்சவமுதலான சரித்திரங்களைக்கேட்பீராகவெனச் சூதபுராணிகர் சொல்வதாயினர்.

## புதல்வரைப்பெறு படலம்.

அதுபொழுதமரர்கோமானுற்றியதவத்தின்சீரால்
பதுமகோமளையென்றோதும்பாவைதனுதரம்போந்து
புதுமதிக்குழவியேபோற்பொற்பொடுபொலிந்துமுன்ன
மதலையக்கொருவன்வந்தான்மறலிக்குமறலிபோல்வான்.

இவ்வாறுதேவர்கள் தகாதபணிவிடைகளைச் செய்துவரத்தக்கதாக ஆயிரத்தெட்டுஅண்டங்களினும் ஏகச்சக்கிரத்தினைச்செலுத்தி ஆண்டுவருந்தருணத்தில்சயசாலியாகிய சூரபன்மன் அரியிற்செய்த தவமுயற்சியினால் இலக்

குமிக்கொப்பாகிய சுந்தரமுள்ள பதுமகோமளை யென்னு
ம் பட்டபுதேவியின் திருவயிற்றிற் பாலசந்திரன் தோற்
றம்போலக் கருவுண்டாகிப் பத்துமாதமும் நிறைந்தவுட
ன் கிரகநிலைகள் மங்களகரமாக அமைந்திருக்குஞ் சுபதி
னத்தில் மன்னுயிர்களை வாட்டும் எமனுக்கும் எமனைப்
போன்ற சவுரியவானகுங் குமாரன் அவதரித்தான். அ
ச்சந்தோஷ வார்த்தையை ராசராசன் கேள்விப்பட்டவுட
ன் ஆனந்தவாரியில்மூழ்கி மங்கலவாத்தியங்கள் முழங்க
வுந் தேவேந்திரனுதியர் மனந்திடுக்கிட்டுவாடவும், புரச
னங்கள் களிகொண்டாடவும் அந்நகரத்திலிருக்கும் அவு
ணருக்குக் கற்பகத்தருக்களும் நாணும்படிக்கு நவரத்தி
னமயமாகிய பூஷணங்களையும் பீதாம்பரங்களையுஞ்சொ
ர்னக்குவைகளையுஞ் சிவிகை யானை தேர் குதிரை முதலா
னவைகளையும் வெறுக்கக்கொடுத்து போசனவிதங்களினு
லுந் திருத்திசெய்து இவ்விதங்களாகப்பலநாள்சுபங்களை
க்கொண்டாடி மற்றொருசிறந்ததினத்திற் பொன்னினுலு
ஞ் சிரோரத்தினவகைகளினுலும் பருத்த முத்தினங்களி
னுலுஞ் சித்திரவிசித்திரமாகச் சோடித்துவிளங்குந் தொ
ட்டிலினிடத்திற் பற்பலவேடிக்கைகளுடன் தேவகன்னி
யரும் அவுணமங்கையருந் திரண்டு மங்கள வாழ்த்தெடு
த்து அக்குழந்தையினைச்சேர்த்துத் தாலாட்டிப் போற்றி
வரக்குற்றமற்ற சந்திரனைப்போலத் தினமொருமேனியா
க வளருங்காலையில் ஒருதினங் கட்டழகுள்ள ராசபுத்திர
ன் விதானந்தூக்கிய பொற்றொட்டிலில் நித்திரை செய்யு
ம்போது சூரியப்பிரகாசத்தினுலுண்டாகும் கிரணமான
து சன்னலின் மூலமாகப்பாய்ந்து தன்மீதிற்றுக்கக்கண்டு
பாலன்கோபித்து உருத்துப்பார்த்து உடனே பலமணிக
ளினுற் சோடித்திருக்கும் ஊஞ்சலில்நின்றும் வேகமாக
அண்டத்திற்பாய்ந்து கேதுகிரகமானதுகவ்வியதைப்போ
ல ஆயிரங்கிரணசமோகங்களைவீசி உலகைவிளக்குஞ்சூ
ரியனைக்கைப்பிடியாகப்பற்றி நிமைப்போதிற்றிரும்பித்தா
ன் பள்ளிகொள்ளுஞ் சிறந்ததொட்டிலின் வயிரக்காலில்
வலித்திருக்கிக்கட்டிப்பழையபடிக்கு நித்திரைசெய்தான்.

கேட்டீர்களோ! சவுனகாதி ரிஷிகளே? தவழ வறியாத
சிசு வானது கொடிய வெப்பத்தினைப் பெற்ற சூரியனைக்
கட்டினுல்தவத்தினும் மேலானபொருளொன்றுண்டோ?
இச்செய்கையைத் தேவர்கண்டு மனம்நடுக்குற்றுவெருவி
அம்மம்ம இந்த ராசகுமாரன் குழந்தைப் பருவத்திற்
றனே யிவ்வலியினைச் செய்வானுயின் காளைப் பருவத்தி
ல் நாமெல்லோரும் இவனு லென்னபாடுபட விருக்கின்ற
தோவெனப் பயந்து வசனித்துக்கொண்டிருக்கும்போது
சூரியன்வெளிச்சமில்லாமையாற் சகலபிராணிகளும்வரு
ந்த உலகமெங்கும் இருள்மூடியிருப்பதைப் பிரமன்கண்
டு அதிசயப்பட்டவனுய் இந்திரன்முதலியதேவர்களோடு
சூரபன்மன்சபைக்குப்போய்ராசாதிராஜனேஉமதுதிருக்
குமாரன்சூரியனைப் பற்றித்தளைசெய்த காரணத்தினுற்பி
ரபஞ்சம் ஒளியிழந்து வாடுகின்றது. அவனைவிடுவிக்கத்
தயை செய்யவேண்டுமெனத் துதிப்பதை அரசன்கேட்டு
நமது குமாரன் சூரியனைச் சிறைசெய்த காரணத்தினை
யறிய மாட்டோம், அப்படிக்கவன் நடத்தத் தக்ககுறை
பாடேதேனுமுண்டோவெனப் பாதகன்கேட்கப்பிராணி
கள்வினைக்கீடாகப்படைக்குந்தொழிலையுடைய பிரமன்அ
ரசனைப்பார்த்துத் தேவரீர்குமாரன் நித்திரைசெய்யுமுன்
னிலையிற்சூரியனுடைய கிரணகாந்தியானது முகத்திற்று
க்கிய நிமித்தியமாகப்பிடித்துச் சிறையிலிட்டானென்று
சொல்லக்கேட்டு மனமகிழ்ந்தவனுய்ப் பிரமனே அதற்கு
நான்செய்யவேண்டுவதென்னை நீங்களனைவரும்போய் ரா
சபுத்திரனுக்கு இதம்பெற நன்மொழிகளாற்புகழ்ந்துஅ
வன்சம்மதம்பெற்றுச் சூரியனைவிடுவிக்கக் கடவீரென்ற
மாத்திரத்தில் அவ்வாறேசெய்வோமெனப் பிரமன்செல
வுகொண்டுதிருப்பிப்பொன்னுலகவாசிகளாகிய அரம்பை
மேனகை திலோத்தமைமுதலிய கன்னியர்சிரவணனந்த
மாகப்பாடித் தாலாட்டிப்போற்றப் பாலன் நித்திரைசெ
ய்திருக்கும் பொற்றொட்டிலினருகில்வந்து பற்பலஆசீர்
வாதங்களைச்சொல்லி உபசரித்துப் புகழுகின்ற பிரமனை
அக்குமாரன் கண்ணெடுத்துப்பார்த்துத்திருநகைகொண்
டு உமக்கென்ன பேறுவேண்டிவந்தீரென்றனன்.

உடனேபிரமன் சூரியகதியில்லாமையாற்சகலபிராணி
களும் வருந்துகின்றன அவன். வாடப்பிணித்திருக்குங்
கட்டினைநீக்கிவிட வேண்டுமெனக் கேட்க நல்லகாரியம்
பாட்டனே, அவன்வேண்டுமாயில்உமதுபடைக்கலத்தை
த்தந்தால் அப்படிக்குச் செய்வோமென்று சொல்ல அந்
தக்குதலைவாக்கியத்தினுக்கு மெச்சித் தன்பாணமாகியபி
ரமசாத்தினை மந்திரபூர்வகமாகக்கொடுத்துச் சூரியனைவி
டுவித்துமேலும் ராசபுத்திரன் வலியினுக்குந் தீரத்துக்
கும் அதிசயித்தவனுய் மோகனுஸ்திரத்தையுந்தந்து வா
ழ்த்த ராசபுத்திரன்களித்துப் பிரமனுக்குஞ் சூரியனுதி
யருக்கும்விடைகொடுக்கப்பெற்றுப்போனசெய்தியைப்பி
தாவாகிய சூரன்கேள்விப்பட்டுச்சரீரம்பூரிக்கச்சபையை
க்கடந்து புத்திரனிருக்கும் மாளிகையில்வந்து குமாரனை
யெடுத்து முத்தாடித்தழுவி உச்சியைமோந்து வாழ்த்தி
னவனுய்ச் சூரியனைக்கோபித்துத் தளைசெய்தகாரணத்தி
னுல் அச்சுபதினத்திற் குமாரனுக்குப் பானுகோபனென்
னுந் திருநாமஞ்சாத்திச் சகலவைபவங்களுடனும் பாது
காத்துவருகின்றகாலையிற் பாலபருவங்கடந்து மான்பார்
வையினைப்பெற்ற தருணமங்கையர் மோகிக்கும் மன்மத
னையொத்த வடிவுவிளங்குங் காளைப்பருவம்நேருந்தருண
த்தில் வேதாகமபுராணமுதலியகலைகளைப் பூரணமாகவா
சித்துத் தனுர்வித்தைகளை வரையறக்கற்று யானையேற்ற
முதலிய பயிற்சிகளையும்பழகிப் புசபலபராக்கிரமத்துக்
கொப்பில்லாதவனுகவிருக்க ஒருதினம் ரதாரூடனுய்சது
ரங்கசேனைகளுஞ் சூழ்ந்துபோற்றிவர உலகங்களிற் பவ
னிவருமுன்னிலையில் லட்சுமிகாந்தனுகியமகாவிஷ்ணுவா
மும் வைகுந்தத்துக்குப்போய் அவருடன் கொடியபோ
ரைச்செய்துவென்று அவராற்புகழப்பெற்று மற்றதேவ
ரைச் சுலபமாகமதித்துந் திக்குவிஜயங்கொண்டும் இவ்வி
தமாகப் பிரமுகனுப்ப் பிதாமனங் களிக்கவிருக்கின்ற கா
லத்தில் வனப்பினுக்கொப்பற்றுப் பரிமளபுஷ்பமணிந்த
அளகபாரத்தினையுடைய பதுமகோமளையானவள் பானு
கோபனைப்பெற்ற பின்பு கிரமப்படிக்கு அக்கினிமுகன்
இரணியன்வச்சிரவாகு இவர்களையுஞ் சூரன் மனங்களி
க்கப்பெற்றுள் அவ்வாறே வேலைப்போன்ற கூரியவிழிக
ளையுடைய மற்றதேவிமாரும் ராசராசன் மனதுக்கினிய
மூவாயிரம் புத்திரரை யீன்றுர்கள் இக்குழந்தைகளின்
அழகையுஞ் சூரத்தையும்பார்த்து மனங்களித்துப் பூரி
க்கச்சூரபன்மன் கொடுங்கோல்செலுத்திமயேந்திரபுரியி
லிருக்கின்றகாலத்திற்சிங்கமுகனுக்கு அதிசூரனும், மற்
றும் நூறுபிள்ளைகளும் பிறந்தார்கள் இவர்கள்வீரத்தை

யும் புஜபலபராக்கிரமத்தையும்ஒருவராலும் புகழப்ப
டாமல் ஜயசாலிகளாயிருந்தனர் இப்பால் இவனுக்கிளைய
தாருகன்செய்த தவமுயற்சியினாற்பாலசூரியனைப்போன்
ற குமாரனைப்பெற, அவன்குணாதிசயங்களையும் பராக்கி
ரமத்தையுஞ் சுக்கிராசாரியன்கண்டு குறித்தபடிக்கு அசு
ரேந்திரனென்னும் பெயரையிட்டுச் சகலசீருடனேகாத்
து வருகின்றபோது தாய்தந்தையர்களிக்கச் சிறந்து மன்
மதனே யிவனெனப் பலருங்காதலித்துக் கொண்டாடும்
அழகைப்பெற்றுக் காளையாய்ப் பள்ளியிற் சகலசாத்திர
ங்களையும் வாசிக்கு முன்னிலையிற் குற்றத்துக் கேதுவா
கிய வித்தைகளைக்கற்காமலும் பாதகத்தொழிலைச் செய்
யவிரும்பாமலும் பழிகொலைகளுக்கஞ்சியும் நீதியல்லாத
வைகளை மனதிலும் நினையாமலும் வேதமுதலானவைக
ளைவரையறக்கற்ற பின்பு தனுர்வித்தைகளைப் பூரணமா
கத்தெளிந்தவனாயிருந்தும் யாவராயினும் வீரம்பேசிப்ப
டைகளோடு வலதிற்றன்மீதெதிர்த்து வருவாராயின்அவ
ர்களைச் சின்னபின்னப்படக் கண்டித்தும் மற்றையரைத்
தாயினும் பரிவாகப்போஷித்தும் இவ்வகைப்பட்டகுண
திசயங்களைப் பெற்றிருக்கின்றகாலத்திற் பலசிகரங்கள்வி
ளங்கும்பருவதத்தினிடத்திற் கிளைத்தோங்கிநிற்குஞ்சது
ரக்கள்ளியானது முற்றிச் சுகந்தத்தினையுடைய அகில்கட்
டையைத்தந்து மேம்பட்டிருப்பதைப்போல அச்சுபுத்தி
ரனையீன்று சகலசெல்வங்களையும்வாய்ந்தமாயமாபுரத்தி
ற்பலரும்போற்றத் தாருகாசுரன் களித்திருந்தான்.

## வில்வலன்வாதாவிப்படலம்.

அன்னவருடன்வந்தாளசமுகியெனுநாம
மன்னினளொருவன்றன்மனையெனுமுறையில்லா
டன்னிறைதவிர்கின்றுடருமமதிலள்வானோர்
பன்னியர்தமைமுன்னோர்படர்புயமுறவுய்ப்பாள்.

இவ்விதமாகச் சூரபன்மனுந் துணைவரும் மனதுக்கி
னியபுத்திரரைப்பெற்றுச் சிறந்த செல்வங்களையும்,அனு
பவித்து வரும்பொழுது இவர்களுக்குத் தங்கையாகியஅ
சமுகியென்பவள் கலியாணமூலமாக ஒருவருக்குப்பத்தி
னியென்னும் முறைபாடில்லாமல் நாணம் மடம் அச்சம்
பயிர்ப்பு, என்னும் நிறைவரம்பற்று விலைமாதரைப்போ
ல மனஇஷ்டப்படிக்குத் திரிந்து தருமமென்பதை யெவ்
வளவும் பாராட்டாதவளாகிச் சிறந்தவடிவுள்ள தேவர்ப
த்தினியரைப் பலவந்தமாகக்கொண்டுவந்து தமையன்மா
ர்புயங்களாரத்தழுவி மனங்களிக்கக் கொடுத்தும் இருவி
னைத்தொடர்பை வெல்வதாக நற்கருமங்களை யனுஷ்டித்
து மேம்பட்ட ரிஷிகள்செய்யும் மகத்துவமுள்ள வேள்வி
கள் முடிவுபெறாமல் பின்னப்பட அவ்விடங்களில் ஆசு
சியாகிய காரியங்களைநடத்தியும் அவர்களைவலிதிற்றழுவி
யும் இவ்விதக்கொடிய தொழில்களைமுடித்,தும்அழித்து
ம் பிராணிகள்செய்த நீடித்த வினைகளின் வடிவையொத்
துத் தொடர்ந்துவாட்டித் தின்றும் அசுரர்குலமுழுதும்
மாளுதற்கு ஊழின்பயனை நிகர்த்துத் தினமும் புவனங்
களிலெல்லாந் திரிபவளாகிக் கட்டழகுள்ள புருஷரைத்
தேடி யிரவுபகலென்னும் பேதமில்லாமல்நேர்ந்தபோது
வலிவிற்றழுவி இன்பநலத்தினை யனுபவித்துக் களித்து
ம் அச்சுகத்துக்குச் சம்மதப்படாதவரை யமனைப்போலக்
கொன்றுதின்றும் இவ்வண்ணமாகத்திரிபவள் ஒருதினந்
தவசிரேஷ்டராகிய தூருவாசமுனி வாசமாகிய வனத்திற்
போய் அத்தபோதனரைக்கண்டு இவன் விரதமுயற்சியி
னையழிப்பதன்றியில் வலியபிள்ளைகளையும் பெறுவேனெ
ன்று நிச்சயித்தவளாய்த் தூருவாசரெதிரிற்போய் நிற்கி
ன்றவளை ரிஷிபார்த்து ஓ! பெண்ணே? நீயார்தனித்திவ்வி
டத்தில் வருங்காரியமென்னவென்றுகேட்கக் குற்றமற்ற
தபோதனரே நானும்மைத்தழுவிப் பிள்ளைகளைப்பெற்று
க்கொண்டு போகவந்தேனெனக்குறிக்கத் தூருவாசர்யோ
சித்து இவள்சூரபன்மன்தங்கையென்றறிந்து முயற்சிபெ
ற்றபெண்கொடியே கேட்பாயாக உன்னிஷ்டப்படிக்குக்
காமவின்பத்தை யிச்சித்து உன்னையணைவேனாயில் இது
பரியந்தம்வருந்தி அரிதாகச்செய்ததவமனைத்தையும் அ
வத்திற்போக்கவரும், ஆதலால் நீயிவ்விடத்தில்நிற்பதுப
ழிபாதகத்துக் கேதுவாகின்றதன்றியில் நம்மையொத்தவ
ருக்கு உன்னைப்போன்ற ராசபுத்திரியுடன் வார்த்தையா
டுவதே நீதியல்ல. பின்னையாரையாவது தேடிப்போகக்க
டவாயென்று சொல்லியதை பரிமளபுஷ்பமணிந்த அள
கத்தினையுடைய அசமுகிகேட்டுநகைத்துரிஷியேஉம்மை
க்கூடிக்களியாது இவ்விடம்விட்டு நீங்கமாட்டேன் வீ
ணெண்ணத்தினைவிட்டுவிடுமென்றுமேல்விழுந்துஅணை
த்து வலிதிற்புணர்ந்து அதரபானஞ்செய்து இன்பமுற்
றியவுடனே ஆலத்தையும்வடவாக்கினியையும்போன்றுவ
லிபெற்ற இரண்டுபிள்ளைகளுதித்தார்கள், அவரைஅசமு
கிகண்டுகளித்து மார்பிலணைத்து முத்தமிட்டவளாய் வலி
யரிஷபத்தையொத்த பிள்ளைகளே அசுரர்திறத்திலுதித்
தநீங்கள்வருந்தித் தவங்களைச்செய்து வலியராய்ச்சிறந்து
வீறிவிளங்குவீரெனப்போதித்து வில்வலன் வாதாவியெ
ன்றும் பெயரையுமிட்டாள் அப்போது தாயினுடையவு
ருவாகித் தந்தையின்தோற்றம் பெற்றுதித்த அவ்விருபி
ள்ளைகளும் அன்னை குறித்தவாக்கியத்தை நிதானித்தவ
ராய்ப் பிதாவாகிய தூருவாசரிஷியினது பாதங்களிற்சே
வித்துநிற்க கோபமேயுருவாகவிளங்குந் தவத்தர்மக்களை
ப்பரிந்து நோக்கி உமக்குவேண்டுவதென்னையென வின
வியகாலத்திற் சுவாமி யிதுபரியந்தந் தேவரீர் நோற்றத
வமுயற்சிகளை எங்களிருவருக்குந் தரக்கடவீரெனக்கேட்
கக் குமாரர்களே வெகுகாலமாக வருந்திப்பெற்ற விரதப
லனை யெளிதிற் கொடுத்துவிட்டு வறுமையாளனாகமாட்
டேன் இதுவன்றியில் மற்றஎதனை விரும்பினாலும் தரு
வோமென்று தூருவாசர் தடுத்தமாத்திரத்தில் அவ்விரு
வருங் காளகூடவிஷத்தைப்போலக் கொதித்து இப்பிரா
மணன் பிராணனைவாங்கித் தவத்தையும் பெற்றுக்கொள்
ளுவோமெனச் சீறி மேலேவிழும்போது அதனை ரிஷிக
ண்டு குருத்ரோகிகளாகிய பாபிகாள் இதுமுதலாக எப்
போதுங் குற்றமற்ற தவத்தருக்குத்துன்பங்களையேசெய்
துழன்று கடையில் தவசிரேஷ்டராகிய அகஸ்தியமுனி
வரால் மாளக்கடவீரெனச்சபித்துச் சிறிதுபொழுதுநின்
றோமாகிற் றடையில்லாமற்கொல்வதுநிச்சயமென்றெண்
ணிச் சீக்கிரமாக ஒருமாயமந்திரத்தையுச்சரித்து அப்பா
தகர்விழிகளுக்குத்தோற்றாமல் மறைந்தனர்.

அக்காலத்திற் பிதாவைக் காணாமல் அவ்விருவருந்தா
யைச்சேவித்து விடைபெற்று அந்தவனத்தைநீங்கி மற
ெருருவனத்தைச்சேர்ந்து தூருவாசரிட்டசாபபலத்தாற்

பிரமக்கியானிகளாகிய தபசிகளைக் கொல்வதையே ஒருபலப்பிராப்தியாக நினைந்து அவ்விடத்திலமர்ந்து அக்கினியைவளர்த்தி அதன்மத்தியில்நின்று வெய்யில்மழைகுளிர்முதலிய வருத்தங்களுக்கு மனமிடையாமற் பிரமதேவனைநோக்கி அளவற்றகாலம் வருந்தித்தவத்தைச்செய்தும் அதற்கிரங்கி நான்முகன் காட்சி தராமையால் வேறொருசெய்கையைக்குறித்து வில்வல னென்னும் பாதகன் தன் துணைவனாகிய வாதாவியை மின்னலையொத்துப் பிரகாசிக்கும் வாளாயுதத்தினுற் கண்டித்துங் பலதுண்டங்களாகச்சேதித்து உதிரநிணங்களைக்கூட்டி அவியாக ஓமகுண்டத்திற் சொரிந்து பிரமமந்திரப்பிரகரணங்களையுச்சரித்து வீரமாகத்தினை மனவுறுதிகொண்டு வில்வலன்பலநாள்செய்து வருங்காலத்தில் அக்கனல்பரவி உலகங்களிலிராநின்ற பிராணிகளைவருத்துகின்றதையும், ராட்சதகுமாரன் தீரத்தையும் பிரமன்கண்டிரங்கி அவன் எதிரில் அன்னவாகனத்தின் மீதெழுந்தருளி அளவிறந்தகாலமாக வருந்திநோற்றனைஉன்தவத்தினைமெச்சினேம்வேண்டும்வரங்களைத்தருவோங்கேளுமென்றுதிருவாய்மலர்ந்தருளக்கேட்ட வில்வலன் பத்திவினயத்துடன் பிரதட்சணம் வந்து சேவித்துப்போற்றிச்சுவாமி வேள்விமுன்னிலையில் தேவரீருக்குப்பிரீதியாக ஓமஞ்செய்த அடியேன் தம்பியானவன் உருப்பெற்றெழக் கடாட்சிக்கவேண்டுமெனத்துதிக்கப் பிரமன்மகிழ்ந்துவாதாவி வாவென் றழைத்தமாத்திரத்தில் அப்பாதகன் கோடை யிடியைப்போலக் கொக்கரித்தெழுந்ததை முன்னவன் கண்டுகளித்துமேலுந் துஷ்கிருத்தியங்களுக் கேதுவாகிய ஜாபகங் கொண்டு தாமரைப்பீடத்தினனான பிரமனை மீட்டும்வணங்கி அடியேனுக்குப் பின்னுமொரு வரந்தரவேண்டும் அஃதென்னையெனின் ஆட்டினுருவாகவிருக்கின்ற என் துணைவன் இனிமேலும் உடல்துணிபடுவானாயினும் நானழைக்கும்போது பழையபடிக்கு உயிர் பெற்றெழ வேண்டுமெனத் துதிக்க அவ்வாறே பலகாலமும் நடந்துவரக் கடவதென்றருளித்தமதுலகத்துக்கெழுந்தருளினர் பின்புஅவ்விருவருஞ் சிங்கத்தினை யொத்த வல்பெற்ற சூரபன்மன் சபைக்குப்போய் வீரகண்டையணிந்ததிருவடிகளிற்பணிந்து யாங்கள்வேறல்ல. தேவரீர் தங்கைபுத்திரர் உமக்குமருகராவோம். இதுவுமல்லாமற் பிரமனைவழிபட்டு ரிஷிக்கூட்டங்களைவாட்டும் வரப்பிரசாதத்தினையும் பெற்றோமெனத் தமது வரலாற்றைத்தெரிவித்தமாத்திரத்தில் சூரன் அவர்களைச்சேரவழைத்து மார்பிலிறுகத்தழுவிமருகரோ உங்களைப்பார்க்க மிகவுங் களித்தனம். இவ்விடத்திற் சகலசவுக்கியங்களையும் அனுபவித்துச் சுகமாயிருப்பீரெனச் சொல்லச்சம்மதித்து மயேந்திரபுரத்தில் ராசவுபசாரங்களைப்பெற்றுச் சிலநாளிருந்து பின்பு மாதுலனிடத்திற் செலவு பெற்றுக்கொண்டு பூமியின்கண்வந்துபர்வதங்கள் பெருத்துச் சோலைகள்மிகுத்து மதயானைகள்களித்து வயல்கள்செழித்துப் பலவளங்களையும்பெற்றுச்சிறந்திருக்குங் குடகநாட்டைச்சேர்ந்து தருக்களடர்ந்துகுளிர்ந்த நிழலைப்பரப்பியிருக்கும் ஒருவனத்தில்நாலுபாதையுங்கூடுமிடத்தில் ஆசிரமமுண்டுபண்ணிஎவ்வெவர்களும் இச்சிக்கத்தக்க வஸ்துக்க ளெவ்வெவற்றையும் விளைவோங்கச்செய்து அம்மார்க்கத்தில் ஆண்பிள்ளைகளாக விருப்பவர் யாரிவரினும் அவர்கள்பிராணனைவாங்கியலைக்க நிச்சயித்து அவ்விருவரில் இளையவனாகிய வாதாவியானவன் திருகிவளர்ந்து பொன்னையொத்து விளங்குங்கோட்டினையுடைய ஆட்டுக்கடாவி னுருப்பெற்றுப் புலத்தில் மேய்ந்து முன்னவனாகிய வில்வலன் தவவேள்விகளைச் செய்யுஞ்சிறந்த முனிவனைப்போல மாயவேஷந்தாங்கியிருந்தும் அம்மூலமாகப் போகின்ற ரிஷிகளைக்கண்டவுடன் அதிகவேகமாயெதிர்கொண்டுபணிந்து உபசரித்து அடியேன் ஆசிரமத்தில்எழுந்தருளிப்பவுத்திரமாக்கிப்போகவேண்டுமெனப் போற்றியழைத்துப்போய்அருக்கியபாத்தியமுதலிய கடன்களைநடாத்தியபின்பு சுவாமிகளுக்கு இத்தினம் இச்சிறுகுடிசையிற் புசிப்பினைப்படைக்கவிரும்பினேன் விரைவில்முடியும்,ஆதலாற்கிருபையுற்றுமனங்களிக்கவுண்டு நாயினேனைக் கிருதார்த்தனுக்கிப் போகவேண்டு மெனத்துதித்திருத்தி அறுசுவைப்பதார்த்தங்களைப் பாகமாகச்சமைத்தபின்பு ஆடாகிமேய்கின்றதுணைவனைப்பிடித்துவந்து கண்டித்துத் தோலைப்போக்கி மின்னலையொத்துப் பிரகாசிக்கும்வாளினுல்உறுப்புகளைவகைவகையாகச் சேதித்தெடுத்துச் சுத்திசெய்து பதப்படுத்தியவுடன் விசாலமாகிய வாழையிலையைப் பரப்பிக் கறிவகைகளைச் சுற்றிலும்வைத்துத் திவ்வியபோசனத்தையும் படைத்து அவர்கள்திருத்தியாகச்சாப்பிட்ட பின்புவாதாவிவாவென்றழைப்பான், அவ்வொலியினைக் கேட்டமாத்திரத்தில் பிரமன்வர முயற்சியினுல் உருவம்பெற்றுக்கூரியகொம்பினுல் அம்முனிவன்வயிற்றைப்பீறி வெளிவந்துஇறந்தவுடலை யிருவருமாகப் புசித்துப்பழையபடியே தம்பி ஆடாக மேய்ந்துந் தமையன் ரிஷியாக விருந்தும் இவ்விதமாகப் பற்பல தவத்தரை நாள்தோறும் கொலைசெய்துண்டு அம்மரபினருக்கு யமனைப்போலத் தொடர்ந்தலைந்திருப்பார்கள்.

## இந்திரன்கரந்துறை படலம்.

இப்படியவுணர்களினையரேனையோர்
செப்பருமுனிவரைத்தேவர்தங்களை
யொப்பருநரர்தமையொருப்பமாயைதன்
வைப்புறுகாதலனரசின்மன்னினுன்.

இவ்விதமாகவில்வலனும் வாதாவியும் மற்றுங்கடினசித்தம்பெற்ற ராட்சதருமாகப் பலதிசைகளினுமிருந்து நேர்ந்ததவசிரேஷ்டராகிய ரிஷிக்கூட்டங்களையுந் தீனராகிய தேவரினங்களையுந் தருமசீலராய்த் தெய்வபத்திவிளங்கி ஒப்பற்றிருக்கும் மானிடவகைகளையும்வளைத்துமாய் கையினுலும் வலிதினும்வாட்டி நாசஞ்செய்துவரமாயைபுத்திரனுகிய சூரபன்மன் மயேந்திரபுரத்திலிருந்துகொடுங்கோல்செலுத்துங் காலையிற் பொன்மயமாய் ரத்தினகாந்திகளைவீசி ஒப்பற்றிராநின்ற இந்திரஞாலத்தேரி லாரோகணித்துப் பரமசிவந் தனக்கனுக்கிரகஞ்செய்த ஆயிரத்தெட்டண்டங்களிலுந் தினந்தோறும்போய் நிமைப்போதில் முற்றுமுலவி அவ்விடங்களிற் காவல்கொண்டிருக்குந் தன்படைவீரருக்குத் திட்டவட்டங்களைக் கட்டளையிட்டு எங்குந்தன்னுக்கினைசெல்ல அரசுசெய்பவன் ஒருதினம் பாதலங்களினுலவிவிசாரித்தும் ஒருதினந்திசைகளைச்சுற்றிப்பார்த்தும் ஒருதினம் வானநாடுகள்தோறுஞ்

சென்றும்ஒருதினம்பிரமனுலகிற்போய்ப்பாட்டனைக்கண்டு வார்த்தையாடியும் திருதினங்குளிர்ந்து பரிமளமிகுத்துத் தழைத்துச்சிறந்திருக்குந் திருத்துழாய்மாலை மார்பராகிய விஷ்ணுலோகத்தைக்கண்டும் இவ்விதமாக அளவற்ற உலகங்கள்தோறுந் தினமுமுலவிவிசாரித்தும் மாலைப்போழ்து வருவதன்முன்னந் தன்நகரத்தைச்சேர்ந்துசகலசெல்வங்களையும் அனுபவித்தும் பலகன்னியர்கள் இன்பநலங்களைப் பெற்றுக்களித்தும் இருக்கின்றபோழ்து ஒருதினம் மேல்வருங்கெடுதியை யோசியாமற்காமாந்தகாரனாய்த் தேவராஜனாகிய இந்திரனைப் பிடித்துச் சிறைசெய்யவும், அவன்பத்தினியாகிய கற்புவாய்ந்த இந்திராணியைவருவித்துஅவளின்பநலங்களை யனுபவித்துக் களிக்கவும், இத்தகைய கெடுநினைவுகொண்டு தன்படைத்தலைவர்களி லொருவனையழைத்து இந்தநிமிஷத்திற் சேனைகளுடன்போய்ப் பொன்னுலகிலிருக்கின்ற தேவேந்திரனைக் கைப்பிடியாகப் பற்றிவந்து நமது முன்னேவிடக்கடவாயெனக் கட்டளையிட்டு முந்தியனுப்பி வாள் கேடகம் வேலாதியபடைகளைக் கரங்களிற்பற்றித் தன்னரண்மனை அந்தப்புரங்கள் இவ்விடங்களிற் காவல்கொண்டுபாதகங்களுருப் பெற்றதையொத்துக் கறுத்துப் பாரித்த தேகத்தைப்பெற்றுக் கொடியமனதை யுடையவராய்ப்பாடகங்கள் பாதங்களிற்பிரகாசிக்கப் பலபூண்களையணிந்து பாதகராகிய ராட்சதகுலத்திலுதித்து வீரத்தன்மைபெற்ற ஒன்பதுகோடி பெண்சேனைகளைத் தருவித்துநீங்கள் அதிசீக்கிரத்தில் தேவலோகத்தைச்சேர்ந்து இந்திரன்மனதுக்கினிய சுந்தரமுள்ள இந்திராணியைப் பிடித்துவந்து ஒப்பிக்கக் கடவீரென நிர்த்தாட்சண்ணியமாகிய வுத்தரவைத்தர, அவர்கள்வணங்கி விடைபெற்று வடவாக்கினியைப்போலக் கொதிக்கும் மனதையுடையவராய்க் கோபித்து வேகங்கொண்டுவானநாட்டைநோக்கிவருவதைத்தேவதூதர்கண்டு திடுக்கிட்டுவாயுவேகத்தினுமேலிட்டோடித் தமதரசனைக்கண்டுசேவித்து ஐயனேசூரபன்மன் சயின்னியங்களிற் பலராட்சதவீரருஞ் சயசாலிகளாகிய திரண்டபெண்படைகளுஞ்சர்வாயுதபாணிகளாய்ச் சண்டைக் காயுத்தப்பட்டவரைப் போல ஆர்ப்பரித்து இதோவந்துவிட்டார்கள். அவர் கருத்தின்னதெனத் தெரியவில்லையிச்செய்தியைச் சித்தமறிகவென்று விண்ணப்பஞ் செய்து கரங்களைக்கூப்பி நிற்கின்றவரை யனுப்பிவிட்டுக் கொடிய மனதைப்பெற்ற பகைவர்நினைவை நிதானித் தறிந்தவனாய் விரைவில் அந்தப்புரத்தைச் சேர்ந்து தன்தேவிக்கு இதைத்தெளிவுபெறச்சொல்லி அவளுந்தானுமாகக்குயிலுருப்பெற்று மாயமாகத் தன்னகரைக்கடந்துஇப்பூமியைச்சேர்ந்தான்.

அத்தருணத்திற்சூரனேவிய ராட்சதப்படைகளும்பெண்சேனைகளுமாக இந்திரன்பதியைச்சேர்ந்து அரண்மனைமுதலிய விடங்களில் தேவேந்திரனையும் இந்திராணியையுந் தேடிக்காணாமல் மனவலியற்றுக்கவலையுற்றுச்சகலருமோரிடத்திற்கூடி அரசன் நம்மையொருகாரியக்காரராக நிதானித்துஅனுப்பிய பணிவிடையைமுடிக்க வகையற்றோம். இந்திராணியுடன் தேவராஜன் இவ்விடத்தைநீங்கிப் போய்விட்டதாகக்காணுகின்றது. ஆகிலும் மற்றொருவிசை சந்துபொந்து மூலைமுடுக்குகள்முதலியதலங்கள்தோறும் ஆராய்ந்து பார்ப்போமென்று நிச்சயித்துப் பட்டினமெங்குங் கவனிப்பாக நாடிக்காணாமையால்தேவர்களைப்பற்றி வளைகள்சிறகினையரிந்த உமதிறைவனைக் காட்டுமெனப் பல்லுதிர அடிப்பார்கள். இந்திராணி எவ்விடத்திருக்கின்றாள் சொல்லுமென்று முதுகெலும்பொடிந்து வாய்வழியாக உதிரத்தினைக்கக்கக் குத்துவார்கள். அண்ணாந்தாள்கிட்டி யாதியவைகளினால் வாட்டுவார்கள். இவ்விதமாகத் தாமரைத்தடாகத்தில் மதயானைகள்விழுந்து கலக்கினாற்போல அலைக்கும்போது அவ்வுபத்திரவத்தைத் தேவர்சகிக்கமாட்டாமல் ராட்சதவீரர்களேதேவேந்திரன் தேவியுடன் இருக்குமிடம் எங்களுக்கு எவ்வளவுந்தெரியாது நருக்கிப்பிழிவீராயினும் உங்களுக்கு வேண்டும்பிரயோசனங்கிடையாது மிகவும்வருந்துகின்றோந் தீனராகிய எங்களிடத்துக்கிருபையுற்று மன்னிக்கக்கடவீரென்று அவர்களிரங்கும்படிக்குப் பலவாக முறையிடுவதை ராட்சதரும் பெண்படைகளுங்கேட்டுப் பரிவாய் அவர்களைவிட்டுத் தேவலோகத்தினைக்கடந்து சமுத்திரமத்தியிலிருக்கும் வீரமாமயேந்திர புரியைச்சேர்ந்து சபாமண்டபத்தில் வீற்றிருந்தரசுசெலுத்தும் ராசராசனைக்கண்டுசேவித்து மனக்கவலையுடன் தாங்கள்பொன்னுலகத்துக்குப்போனதையுந் தேவராஜனையும் புலோமிசையையுந் தேடிக்காணாமல்வந்ததையும்விபரமாகச்சொல்லக்கேட்டு உடனே சூரபன்மன் வடவையைப்போற்சீறித்தேடற்கரிய சிரோரத்தினத்தையிழந்த சர்ப்பத்தினைநிகர்த்து மனம்வருந்தித் திகைத்துத்தேறி சமர்த்தராகிய பலகோடிதூதரை அழைத்து நீங்கள்அதிவேகமாகப்போய் விண் மண்பாதலங்களாகிய இம்மூன்றிடங்களெங்குங்கிரமமாக ஆராய்ந்து தேவேந்திரன் இந்திராணியிருக்கு மிடத்தைத்தெரிந்து சீக்கிரத்தில்வந்து நமக்குத் தெரிவிப்பீரெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் வெற்றிமாலையணிந்தசூரனை வணங்கிப்போயப் பலதிசையினும்பரந்து உலகங்களெங்குந்தேடுவதாயினர். இதுநிற்கப் பொன்னகரம்பட்டதுன்பத்தையும் மற்றசேதிகளையும் இனிச்சொல்லுவோம்

மேகவாகனனாகிய தேவேந்திரனும் இந்திராணியும் நீங்கியவுடன் பொன்னகரமானது சோடசகலைகளையுடைய சந்திரனும் நட்சத்திர ராசிகளுமில்லாமல் இருள்மூடிய வானம்போலப் பொலிவழிந்து சிறப்பற்று லட்சுமிவிலாசமங்கிச் சகலவளங்களுங்குன்றி வானவர் செருக்குகளடங்கித் துயரமேலிட அப்பதியெங்கும் அழுகுரல்மேலிட்டு யாவர்கள்விழிகளினுஞ் சலத்தாரைபொழிய எங்கும்புகழத்தக்க சொர்க்கலோகம் பிராணனையிழந்த பிரேதம் போன்றுவிளங்கியது. இச்சம்பவம்நேருகின்றதற்குமுன்னம் இந்திரனுக்குத் துணைவராகவிருந்த உபேந்திரரானவர் வானநாட்டைநீங்கித் தன்பதியாகிய வைகுந்தத்தினைச்சேர்ந்து அவ்விடத்தில்ஸ்ரீதேவிபூதேவிகளிக்கவீற்றிருந்தார் அஃதெப்படியிருந்ததென்றால்பூர்வத்திலிருஷிகள்கலிவருவதையறிந்து லோகநாயகியாகியபார்ப்பதியார் முப்பத்திரண்டு அறங்களைவளர்த்துத் தவத்தினைச்செய்திருந்த பெருமையினையுடைய திருக்காஞ்சிநகரையடைந்து மனம்பூரித்து களித்திருந்ததைப்போலத்தோற்றியது அக்காலத்தில் தேவராசபுத்திரனாய் கற்கம்பத்தினையொத்த சுந்தரமுள்ளபுயங்களைப்பெற்ற சயந்தனனவன்சிறிய தந்தையைக் கண்டுவர நினைவுகொண்டவனாய் வைகுந்திற்குப்போய்ச் சிலபகல் அன்னையர்போஷிக்கச் சகலசம்பத்துகளையும் அனுபவித்திருக்கின்றபோது சிலதேவதூதரோடிவந்துவணங்கி ராட்சதர் உபாதிகஞ்சித்தாய்தந்தை

யரோடி யொளித்ததையும் அத்தருணத்தில் அவுணப்படைகள் பொன்னுலகைமுற்றிக்கைபோட்டுக்கொண்டு ஆராய்ந்து அவர்களைக்காணாதவர்களாய்த்தேவனை அலைத்துத்திரும்பியதையும் அதனால் விண்ணுலகம் மாறுபட்டுத் தேவர் பங்கப்பட்டொடுங்கியதையும், விண்ணப்பஞ்செய்யக்கேட்டுவருந்தி, பிதாவுக்கு யாதொரு மெலிவுசம்பவிக்குமானால் அக்குடிக்குத் தலைமைப்புத்திரனாயிருப்பவன் ஏற்றுக்கொண்டு சுற்றமுதலியனைப் பாதுகாப்பது முறைமையாகும். தருமசாஸ்திரங்களிலும்அப்படிக்கேசொல்லுகின்றது. மேலும் என்பிதாவுமில்லாமற் பட்டினம் வாடியிருப்பதைத்தெரிந்துந் தாமசப்படலாகாது சீக்கிரமாகப்போய் நமது பதியினைத்துயரகற்றப் புரப்படுங்களென்று ஆலோசித்து உபேந்திரராகிய சிற்றப்பனுக்கு இச்செய்திகளைக்கூறிச் செலவுபெற்றுப் பொன்னகரையடைந்து வாடிவருந்திக் கிலேசிக்கின்றதேவனைக்கண்டுஇரக்கமுற்று தன்பிராணனையொத்த தாய்தந்தையனைப்பார்ப்பதற்கில்லாமல் துக்கசாகரத்திலழுந்தி யேக்கமுற்றுமனந்தெளிவுபெறாமலும் யாதொருசெய்கையையும் நினையாமலும் பித்தனைப்போலச் சோபித்திருப்பதைத் தவசிரேஷ்டராகிய நாரதர்தெரிந்து தேவராசபுத்திரன் மனக்கவலையைநீக்கநினைத்து அப்பதியில்வருவதைச் சயந்தன்கண்டு உடனேநடுக்குற்று பக்தியோடு எதிர்கொண்டுசேவித்து நவரத்தினமயமாகிய பீடத்திலெழுந்தருளச்செய்து கரங்களைக்கூப்பிப் பக்கத்தில்நின்று சுவாமி! தயைதாட்சண்ணியமற்றுத் தினந்தோறுந் தகாதஏவல்களைக்கொண்டிருந்த சூரபன்மன் புதிதா ஏதோவொன்றைமுடிக்க நினைந்தகாரணத்தையறிந்து பயந்து அடியேனையரிதிற்பெற்றுச் சீராட்டிவளர்த்ததாய்தந்தையர் என்னையு மறந்து இவ்வுலகையும் வெறுத்துப்போயினர் சென்றவிடமுந் தெரியவில்லை ஓ! மகானுபாவரோ! தீங்குகள்நீங்கி யாங்கள் தாபரித்திருக்குங் காலமுமுண்டோ! தயைசெய்து சொல்லவேண்டுமென்று மனச்செருக்கற்றுவாடுஞ் சயந்தன் போற்ற, நாரதர்ஞானத்தாலாராய்ந்தறிந்து அவன்மீது கிருபாநோக்கம்பாலித்து அருகிலிருக்கின்ற நவரத்தினமயமாகிய சிறந்த சிங்காதனத்திலிருக்கக் கட்டளையிட்டு ஐயனே!தீங்குகள்சம்பவிப்பதும் நன்மைகளைப் பெறுவதுந் தாங்கள்செய்த பூர்வகர்மவசத்தினால் தத்தமக்கடுப்பதல்லது ஒருவர்முயற்சியினால் வருவதன்று அதற்குச் சிலதிருஷ்டாந்தஞ்சொல்லக் கேட்பாயாக, அமுதத்துக்கும் விஷத்துக்கும் ருசிபேதங்களைக்கூட்டினவருமுண்டோ! அஃது சுபாவமாகவேதோன்றும் அவ்வாறே முற்றுமுணர்ந்த மேலையோர் பரமசிவகடாட்சத்தினால் இன்பம் வந்தபொழுது களித்திறுமாந்திராமலுந் துன்பம்விளைந்தகாலத்தில்திடுக்கிட்டுவாடிவருந்தாமலும்இவ்விரண்டும்பிராரத்துவ சம்பந்தமெனக்கருதிச் சமமாகவேபாவித் தனுபவிப்பார்கள்.

இவையன்றியும்,மிகுத்ததரித்திரராயிருப்பவர் அகன்றசாம்பிராச்சியத்தைப் பெறுவதுஞ் சகலசெல்வங்களையும் அனுபவித்திருந்த பாக்கியவான்கள் சிலதினத்தில் வறுமையுற்று வாடுவதுமுண்டு. சிறியவர்கள்பலரும்புகழமேன்மையையடைவதுஞ் சிறந்தகல்விமுதலியவை யொருங்கெய்தப்பெற்ற பெரியோர்கள் தீனராவதுமுண்டு. இவ்விதங்களாக மாறிமாறிவருவது ஊழ்வினைச்சம்பந்தமாம் இவைஉங்களுக்குமாத்திரமல்ல சூரியனொளிபரவியிருக்கும் உலகங்களெங்குஞ் சாதாரணமாகவே நடந்துவருஞ் செல்வமும் வறுமையும் இன்பமுந் துன்பமும் பிராணிகளுக்கு நிலைபட்டதென்றெண்ணப்படுவதோ! சோடசஅமுதகிரணங்களைப்பரப்பி வானத்திற்பென்று உலகைவிளக்குஞ்சந்திரன் பூர்வபட்சத்தில் விர்த்தியாகியும் அமரபட்சத்திற்றேய்ந்தும் நாளாதிகளிற் பேதப்பட்டுவருவதைக்கண்டதில்லையோ! ஆதலால் ராஜகுமாரனே! உங்கள்தாழ்வும் அவுணர்வாழ்வும் பிசகின்றிநிற்கவறியாது. உண்மைக்கெக்காலத்துமழிவில்லை, பொய்ஸ்தாபிதமாகநிற்பதுமில்லை, இதனால் நிதானித்துக்கொள்ளக்கடவாய். ஐயனே? யிந்நகரைநீங்கிப்போகிய உன்தாய்தந்தையருஞ்சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலத்திற் சிரேஷ்டமாகிய தலத்தைச்சேர்ந்து சுகமாயிருக்கின்றனர். இந்திரகுமாரனே!நீ பிறப்பதற்குமுன்னந் தேவர்களைவருத்திக்கொண்டிருந்த கஜமுகனென்னும் ராட்சதராசன் மாளும்படிக்கு உன்பிதாவானவன் பரமசிவத்தைவழிபட்டு அவனுபத்திரவத்தைநீக்கினான். அதைப்போலவே பாதகனாகியசூரபன்மன் முடிவெய்தத் தவங்களைச்செய்துபெறுவானென்று பலதிருஷ்டாந்தங்களைச் சொல்லிக்காட்டி யினி சீக்கிரத்திற் கொடியசூரன் சுற்றத்தோடுமாண்டுபோவன் உங்களுக்கடுத்திருக்குந்துன்பமுஞ் சடுதியில் நிவாரணமாகும் இதனை உறுதியாகக்கொள்ளககடவாயென்றுசயந்தனைத்தேற்றிநாரதர்போயினார். பின்புஇந்திரதனையன்மனத்தெளிவுபெற்றுத் தயிரியங்கொண்டு பொன்னுலகில் வருந்திவாடுகின்றதேவர்களுக்குநாரதர்போதித்தவுண்மைகளைத்தெரிவித்து மனக்கிலேசங்களைநீக்கிச் சத்துருவாகியசூரன்பணிவிடைகளிற் குறைவில்லாமல் நடத்திவரத்தக்கதாகக் காலங்கள்தோறும் தேவரையனுப்பித் தானுங்களித்திருந்தான். இவைநிற்கமுன்னம் பூமியிற்போன தேவேந்திரன்செய்கைகளை யினிவிரித்துச்சொல்வோங் கேட்பீராக.

பஞ்சதருக்கள் சுகந்தபரிமளங்களைவீசிப்பரம்பியகுளிர்ந்தநிழலில் வாசமாய்மகிழ்ந்திருந்தமகதயிஸ்வரியத்தை வெறுத்துப் புனிதனாய்ச் சுந்தரவதியாகிய தேவியுடன்பூலோகத்திற்சிறந்த தென்பிரதேசத்திற்போய்ப் பன்னிருதிருநாமங்களைப்பெற்ற தெய்வீகத்தலமாகிய சீகாழியைச்சேர்ந்து அதன்பெருமைகளைக்கண்டுஇத்தலம்வாசயோக்கியமாகுமென்றெண்ணித் தேவராசன் இந்திராணியுடன் மனம்வருந்தித் துக்கசாகரத்திற்பட்டுக் கிலேசித்திருக்கின்றகாலத்தில் லோகநாயகனாகிய பரமசிவனைப் பத்திவினயங்களுடன் அருச்சனைவிதிகளைச் செய்துபோற்றித் தன்மனவாட்டத்தைப் போக்கவெண்ணி அவ்வாலயத்துக்கருகில் நந்தவனமுண்டாக்கஉத்தேசித்துச் சந்தனம்-அகில்-பலா-தித்திப்பு-மா-ஆச்சா - மஞ்சாடி- தேக்கு-அசோகு-முருங்கை-குரா-தெங்கு-இலைவிரிந்திருக்கும்- வாழை-கரும்பு-வன்னி-காஞ்சி-வேங்கைமுதலியதருக்களினால் விஸ்தீரணமாய் வேலிகோலி அதன்மத்தியிற்சிறுசண்பகம்-கோங்கு-புன்னை-சண்பகம்- கொன்றை- குங்குமம்-பாதிரி-சுரபுன்னை-பாரிசாதஞ்.செருந்தி-நாரத்தை-வில்வம்-அலரி-வெட்சி-இருவாட்சி.வனமல்லிகை- மருங்கொழு

ந்து-செவ்வந்தி-முல்லை -இவைமுதலாகிய திவ்வியமலர்களையுதவுந் தருக்களையும்புதர்களையும் யோக்கியமாகத்தருவித்துக்குளிர்ந்த நந்தவனமாக்கிப் பரிபக்குவப்படுத்திக்காலங்களிற் சலம்விட்டுக்காப்பாற்றிவரச்சிலதினத்தில் தழைத்துவிர்த்தியாய்அரும்பெடுத்துச்சுகந்தமலர்கள் அபரிமிதமாகப்பூத்ததைஇந்திரன் கண்டுகளித்துத்தினமும் பிராதக்காலையில் ஸ்நானஞ்செய்து நித்தியகருமங்களைமுடித்தபின்பு புழுக்கடிமுதலிய குற்றங்களில்லாமலும் வண்டுகள்முகராமலும் நன்றாக மலர்ந்திருப்பதைத் தேடிப்பறித்துக் குடலைகளிற் சேர்த்துக்கொண்டு ஆலயத்திற்போய் மாலைகள் விதங்களாகத் தொடுத்துப் பரமேஸ்வரனைத் திரிகாலங்களினும் ஆகமவிதிப்படிக்கு அருச்சனைமுதலிய சோடச உபசாரங்களைச்செய்து பணிந்துபோற்றித் தன்குறைகளை விண்ணப்பஞ்செய்து இவ்விதமாகத் தினந்தோறும் வழிபட்டு தேவேந்திரன்தன்பத்தினியுடன் அத்தலத்திலிருக்கின்றகாலையில்உலகங்களிலிருக்கின்றஅவுணருக்கரசனாய் ஆயிரத்தெட்டண்டங்களினுங்கொடுங்கோல் செலுத்திச் சிறந்த தேவரைவாட்டி ஏவல்கொண்டிருக்கின்ற சூரனானவன்முன்னம்விடுத்தகோடாகோடி தூதர்கள் பூலோகமெங்கும் பரவித்தேடுவதை இந்திரனறிந்து திடுக்கிட்டுத் துரிதமாய்த் தேவியுடன்மூங்கில் வடிவுகொண்டு பூங்காவன வேலியில் மறைந்திருந்துமனவருத்தத்துடன் தினந்தோறுஞ் சிவபிரானைக் கிரமப்படிக்குப் பூசித்து அரிய தவவிரதங்களைச்செய்து வருகையில் முற்குறித்த அசுரர்திரிலோகங்களினுந் துருவித்தேடி இந்திரனைக்காணாமல் திரும்பி விட்டார்கள். காளமேகம் போன்ற ராட்சதவீரர் ஆக்கினைபிசகின்றி எங்குநடப்பதென்பதற்குச் சந்தேகமில்லாததைக் காட்டுமாறுபோல மழைப்பசுமை நீங்கினதாலே அப்பூங்காவனமாதுநெருப்புப்பட்டு வெந்ததையொத்துச் சூரியவெப்பம்பரவிவாடிச் சருகாய்மங்கிப் போவதைத் தேவேந்திரன் தெரிந்து வருந்தி வேறொருசெயலில்லாததாற் பிரமனும், விஷ்ணுவுந் தேடுதற்கரிய பரமசிவனை நினைந்து முறையிட்டுப் போற்றும்பொழுது நந்தவனம் வாட்டமுறினுந் திரிபுரதகனராகிய பரமன்அனுக்கிரகப்படிக்கு நசித்துப்போகாமற் பிழைத்திருந்தது மன்றியில்தேவராசனே யிக்காவின்மத்தியில் ஒருநதிபெருகவிருக்கின்றது, அதனால் இவ்வனம் மிகவுஞ்செழித்து உன்பூசனைக்குத் தாழ்வில்லாமற் புஷ்பங்களைத் தருமென் றொருவாக்கியம் வானத்தி லுண்டாகியதை இந்திரன்கேட்டமாத்திரத்தில் இஃது சிவகடாட்சத்தினாலுண்டாயதென நிச்சயித்து அத்திசையை நோக்கிப் பலதரந்தொழுது வாழ்த்திச்சரீரம் பூரித்து மயிர்புளகிக்க மகிழ்ந்துதயிரியத்துடன்அவ்விடத்திற்பழையபடிக்குத் தவஞ்செய்து கொண்டிருந்தான் சவுனகாதிரிஷிகளே யினிதெய்வீகம்பொருந்திய நதிஅதன்கண்பெருகிய சரித்திரத்தைக்கேட்பீரெனச் சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினார்.

---

எழுவதோர்செஞ்சொற்கேளாவெம்பிரானருளீதென்னைத், தொழுதனன்போற்றிமேனிதுண்ணெனப்பொடிப்பச்சிந்தை, முழுவதுமகிழ்ச்சிபொங்கமொய்ம்பொடேயிருந்தானங்க,ணழகியநதியொன் றுற்றவரன்முறையறையலுற்றேன்.

---

## விந்தகிரிப்படலம்.

அந்தப்பொழுதத்தளிகொண்டுடையோர்
சிந்தைக்கெளிதாஞ்சிவன்மெய்யருளான்
முந்துற்றனர்நாரதமாமுனிவன்
விந்தக்கிரிமுன்னுறமேவினனால்.

---

அந்தக்காலையில் மெய்ப்பத்தியையுடைய மகத்துக்களுக்கெளிதாகிய காட்சிதந்தருளுங் கிருபாநிதியாகியபரமேஸ்வர கடாட்சத்தினால் திரிகாலங் களையும் பகுத்தறியும் பேரறிவினைப்பெற்ற நாரதமுனிவர் விந்தகிரியி னருகில் வந்து பற்பல ஆசிகளைச்சொல்லக்கேட்டவுடன் தெய்வப்படிவமாக விருக்கும் அக்கிரியானது களித்துச்சேவித்துத் தேவரீர் இவ்விடத்தெழுந் தருளியதுஅற்புதக்காட்சியாகுஞ் சுவாமிவந்தகாரிய மென்னென்றுபோற்றும்போது வரைகளிற் சிறந்தவிந்தமே ஒரு அதிசயத்தைக் கேட்பாயாக. மகம்மேருவானது பிரமன்தேடிக்காணுதற்கரிய சிவநாதன் தன்னைத் தனுசாகத்தாங்கிய பெருமையையெண்ணியுஞ் சகலபுவன சராசரங்களையும்பெற்ற பரமேஸ்வரி தன்மரபில் விளங்கும் இமாசலத்துக்குப் புத்திரியுமாகத் தோற்றியகாரணத்தை நினைந்தும்பர்வதங்களனைத்துக்கும் ராசனாகச்சொல்லும வெற்றியைக்கருதியும் அண்டகோளகையைமுட்ட வானத்திலோங்கி நிற்கும்உயர்வை மதித்தும் நித்தியத்தைப்பெற்ற பரமன் சமஸ்தத்தையுஞ் சர்வசங்காரகாலத்தில் நாசஞ்செய்கின்றபரியந்தம் இப்பூமியை யசையவொட்டாமல் தாங்கும்வலியைமதித்தும் ஆயிரம் பொற்சிகரங்களைக்கொண்டிருக்கும்பெருமையை நினைந்துங் காளகண்டமூர்த்தியெழுந்தருளுந் திருக்கயிலாயத்துக் கருகிலிருக்கும் பெருமையை மதித்தும்பிரசண்டவாயுவின் மோதலினாற் சலனப் படாமல் உறுதிபெற்றிருப்பதினாலும் ஆயிரங்கிரணங்களை விரித்துப்பகலைவிளக்குஞ் சூரியனும் குளிர்ந்த சோடசகலைகளைப்பரப்பி யிரவைத்துலக்குஞ் சந்திரனாதிய நவக்கிரகங்களுஞ் சத்த ரிஷிகளும்மற்ற நட்சத்திரங்கள் முதலாகத் தினந்தோறுந் தன்னைத்தொன்றுதொட்டு வலம்வர நிற்பதினாலுந் தேவர்களுந் தன்னிடத்தில் வாசஞ்செய்வதினாலுஞ் சொர்னமயமாகிய பல சிகரங்களைப் பெற்றிருப்பதினாலுங் குலகிரிகள்சூழநிற்கின்றதோற்றத்தினாலுந்தனக்கொருவரும் நிகரில்லையென்றுதன்னையே முக்கியமாகவெண்ணியிறுமாந்திருக்குங்காரணத்தை அதற்குமேம்பட்ட சிறப்பையுடைய விந்தகிரியேநீமதித்துப்பார்த்ததில்லையோஇவ்வநியாயத்தை உனக்குத்தெரிவிக்கத்தான்இவ்விடம்வந்தோமென்று நாரதர்சொன்ன விசேஷத்தைக்கேட்ட மாத்திரத்திற் பொன்மயமாய்த் தெய்வப்படிவத்தினைப்பெற்று நிற்கின்ற விந்தகிரியானது மனம்பொறாமல் வெம்பிப் பெருமூச்செறிந்துதேவரீர்குறித்த காரணங்கள் வெகுநேர்த்தியெனநகைத்திகழ்ந்து தபோநிதியே? கேட்பீராகமேற்குறித்த வெல்லாம் நித்தியமாகவெண்ணி நின்ற வீறுப்படங்கவும் பலருஞ் சுலபமாகநினைந்து நிந்திக்க நாணியினாற்கட்டுண்டு பரமன்கரத்திலடங்க வில்லாகவளைந்துநாணப்படுவது மேம்பாடென் றெண்ணப்படுவதோ. சொர்னமயமாகிய இமையவரைவெகுகாலம் நோற்றதவமுயற்சியினாற் பார்ப்பதியார் அபிமான புத்திரியாகத் தோற்றி

னள் அச்காரணத்தினற் பர்வதராசனெனச் சொல்வதல்
லது வேறுமுண்டோஅப்பட்டத்தினையார்கட்டினர்சராச
ரப்பிரபஞ்சங்களை யிடைவிடாமற்படைத் தாட்டிவைக்கு
ம் பெருமையினையுடைய பராசத்திஅவன் பெண்ணுகிவி
ட்டனளோ பரந்தபூமியைத்தாங்குகின்றனனென்றிருமா
ந் தானே இவனைப்போலவே பலகிரிகளும்புவனங்களைச்
சுமந்திருக்கின்றன.இவை யனைத்துந் திரிநேத்திரதாரியி
னுடைய சத்தியின்முயற்சியினற் சுமப்பதல்லது வேறு
முண்டோகிரணசமுகங்களைப்படைத்த சூரியன்முதலிய
நவக்கிரகங்களும் நட்சத்திரகணங்களுந் தன்னைமாத்திர
மோ வலம்வருவர் என்னையுஞ்சூழ்ந்துபோவதில்லையோ.

இஃதன்றியுஞ் சத்ததீவுகளில் நிற்கின்ற பர்வதங்களை
வலம்வரவில்லையோ கடல்களைச் சுற்றிப்போவது பொய்
மையோ பலசிகரங்களைப் பெற்றிருப்பதாகச்சொல்லுவா
னுயின் கள்ளிவிருட்சத்திற்கும் அளவற்ற தலைகளுண்டு
இதனற்சிறப்பென்னை நான்குசிரங்களையுடைய பிரமதே
வன்தான் நேராகப்பேசலாமோ பூர்வத்திற் சிலகாரணத்
தினல் வாயுதேவன்மோதியபோது தேவர்போற்ற விரங்
கியபடியால் அச்சிகரங்கள் நிலைபெற்றிருந்ததல்லதுஒன்
றேனும் படைக்கப்பெறுவனே. இச்சரித்திரத்தைமேரு
மறந்தானே. இவையன்றியுஞ் சக்கிரதரனுகிய ஸ்ரீவிஷ்
ணுவுக்கும் மேலானவல்லமைபெற்றனே குளிர்ந்தபிர
காசத்தினைத்தரும் ஆயிரத்தெட்டுமாற்றையுடைய தங்க
ஸ்வரூபமுடையவனென்று நினைப்பானுகில் நல்லஅறிவு
சற்றுமில்லாதவனுகும் அதேனென்றால் மண்ணினற்செ
ய்த பதுமையைச் சொர்ணவணிகளினல் அலங்கரித்தால்
அதுவும்பொன்மயமாகவேதோற்றும்இதுவல்லாமற்றன்
னிடத்திற்சகலதேவர்க்களும் வாசஞ்செய்வாரொன்றுமதி
ப்பானுனல் அவர்கள் என்னிடத்திலும் பொருந்தாமல்
போயினர்களோ வெள்ளியங்கிரிக்கருகில் நிற்போமென்
றுநினைத்தானுனல் உமாமகேஸ்வரர் வீற்றிருக்கப்பெற்
ற அக்கயிலையங்கிரியைச்சேர்ந்திராத பர்வதங்களுமுண்
டோ திருமறுமார்பனுகிய விஷ்ணுவானவர்பள்ளிகொள்
ளும் ஆதிசேஷன் தன்ஆயிரம் பணமுடிகளால் இவனை
மூடியபோது கோபித்து மோதியவாயுதேவன் தன்சிகர
ங்களில் மூன்றைப்பறித்துக் கடலிலெறியஇக்காலத்தினு
ங்குறைபட்டு நிற்கும்வெட்கத்தை மறந்தானே விஷ்ணு
வானவர் நாரசிங்கமாகஅவதரித்து இரணியசங்காரஞ்செ
ய்துபின்பு ரத்தவெறிகொண்டு உலகங்களை அல்லோலக
ல்லோலப்படுத்தும்போது பரமனிரங்கிஅண்டங்களை மூ
டும்வடிவுடைய சரபப்பட்சியாகிப் பறந்துமஸ்தகத்தைக்
கொத்திப் பரிகாரஞ்செய்து தேவர்களைரட்சித்தகாலையில்
அப்பட்சியின்காலினற் றன்னைப்பருக்காங்கல்லைப்போல
வாரியெறிந்ததையும் அதன்சிறகடிக்காற்றினல்மின்மினி
யையொத்து அங்குமிங்கு முழன்றதையும் மறந்தானே
ஆதியில் விநாயகமூர்த்தியானவர் கஜமுகாசுரன்மீதுமுறி
த்தெறிந்துகொன்ற தனதுஒற்றைக்கொம்பால்பஞ்சமவே
தமாகிய ஸ்ரீமஹாபாரதசரித்திரத்தைத் தன்மீதிலெழுத
உடல்முழுவதும் பொத்தற்பட்ட தென்னபொய்யோமே
லும் இவ்வண்டத்தில் நிற்கின்றவரைகளைப்போலத் தா
னும் ஒன்றல்லது லோகநாயகராகியபரமசிவமோ சாமள
வண்ணனுகிய விஷ்ணுவோ சொர்க்காதிபதியாகியதேவே
ந்திரனே என்னகாரணத்தினற் றன்னைத்தானே மேலாக
நினைப்பதென்று இவ்வண்ணமாக வடமேருவையிகழ்ந்
து விந்தகிரிபேசியதை நாரதர்கேட்டுநீசொல்லியது உண்
மையாகும் ஆதலாற் றுரிதமாய் அச்சயிலத்தினது கர்வ
த்தையடக்கநினைப்பாயெனத் தூண்டினர்.

உடனேஅவரெதிரில்நின்ற தன்உருவைமாற்றி சகலரு
ந்துதிக்கும் மேன்மையைப்பெற்றவிஷ்ணுவானவர்திரண்
டுஅனேககோடி மாயவுருப்பெற்றுவளர்ந்தெழுந்ததைப்
போல முன்னம் வானத்தையளாவிநின்ற விந்தகிரியான
து ஒருமந்திரத்தை யுச்சரித்துஅண்டகோளகையையளா
வித் தாமரைமலரில் வீற்றிருக்கும் பிரமனுலகமாகியசத்
தியலோகவரையிலும் உயர்ந்து மஹாமேருவைநெருங்க
ப்பரந்துநின்றது இதுஎப்படியிருந்ததென்றால் மூன்று
லகங்களைத் தமதுதிருவடிகளாலளந்த மகாவிஷ்ணு பீதா
ம்பரத்தினைப்போர்த்துக்கொண்டிருந்த காட்சியாகவிளங்
கியது இவ்விதமாக விந்தகிரியானது பாதலமுதல் அண்
டவரையில் நிமிர்ந்து திசைகளைமறைத்து வெளியிடமில்
லாமல் அடர்ந்தகாரணத்தினல் வானவழியடைபட்டுச்சூ
ரியன்சந்திரன் சனி ராகு கேதுமுதலிய கிரகங்கள் தங்க
ள்கதிகளிற் சஞ்சரிப்பதற்குக் கூடாமையால் மனம்நடுக்
குற்று இதுபாதகராகிய தானவர்செய்கையோவென்றுந்
தருமத்தைக்கொஞ்சமாயினும்நினையாத அரக்கர்சூதோ
வென்றும் அல்லதுபிரமவிஷ்ணு ருத்திரர்களாலுண்டா
னதோவென்றும், யோசிக்குமிடத்தில் மாயமாகவிருக்கி
ன்றதென்றும் எங்கும் பர்வதத்தின் தோற்றமல்லாமல்
வெளியிட மில்லையென்றும் இவ்வாறு பலபலவிதங்களா
கக்கருதிமயங்கிக் கடையிற் சிவபிரானருளின்படிக்குஞா
னபோதத்தாலாராய்ந்து பார்க்கும்போது விந்தகிரியான
து மகம்மேருவோடு பகைத்து விண்மண்திசையெங்கும்
மூடிவளர்ந்திருக்கின்ற தெனத்தெளிந்துஇனியென்னசெ
ய்வதெனக்கருதிப் பொன்மலைச்சாரலிற் சிவநாதனைநினை
ந்து தவஞ்செய்திருக்கின்ற கடலையுண்ட அகஸ்தியமுனி
வர் இவ்விடமெழுந்தருளினல் அண்டமெங்குத் நிறைந்
திருக்கின்ற விந்தகிரிஒடுங்கி நமதுதொழில்களுக்கு வி
ரோதமில்லாமல் முடியுமென்று நிச்சயித்தவர்களாய் அ
த்திசையைநோக்கிச் சகலரும் இதனைமுறையிடத்தொட
ங்கினர்.

---

செம்பொன்மால்வரையின்பாங்கர்சிவனடியுன்னிநோ
ற்றே, யம்புராசியையுமுன்னுண்டோனமர்ந்தனனவனீண்
டுற்று, லும்பர்போய்நின்றவிந்த மொடுங்குமென்றியாரு
மோர்ந்து,கும்பமாமுனியையுன்னியினையன கூறலுற்றார்

---

## அகத்தியப்படலம்.

பொன்னர்கழல்களருச்சித்திடப்போதுகொய்யுங்
கைந்நாகமாலைநினைந்தேகராவொன்றுகௌவ
வென்னையகனேயெனத்தன்கையெடுத்தழைப்ப
வன்னனங்கெய்திவிடுவித்ததறிகிலாயோ.

---

ஓ தபோநிதியாகிய அகஸ்தியமகாமுனிவரே பூர்வத்தி
ல்கசேந்திரனென்னும் மிருகமானது தன்பவத்தைப்போ
க்கநினைந்து வேதாகமவிதிப்படிக்கு விஷ்ணுவையருச்சிக்
கும்பொருட்டுச் செந்தாமரைமுதலியபுஷ்பங்களைப்பறிக்
கத்தடாகத்திலிறங்கிய மாத்திரத்தில் அதிலிருந்தமுதலை
காலைப்பற்றிவலிக்க ஆயிரவருஷமாக அதனுடன்வாது
கொடுத்திளைத்துவேறுகதிகாணமல் ஓபரமேபரஞ்சுடரே

பராபரமே ஆதிமூலமே யித்தருணத்திற் காத்திரட்சிக்
கக்கடவையென முறையிட அவ்வபயக்குரலானதுதனது
திருச்செவியில்நுழைந்தமாத்திரத்தில்கேசவன்ஸ்ரீமஹா
லட்சுமியையும் பாராமல் திருமுடிநிழலையுந் தேடாமல்
பீதாம்பரம்நிலத்திற்புரள வோடோடியும்வந்து சக்கரத்
தைச்செலுத்திக் கராவைக்கொன்று யானையைக்காத்த க
ஜேந்திரமோக்ஷந் தேவரீருக்குத் தெரியாததல்லவே பிர
மதேவர்தான்படைத்த திலோத்தமையின் அழகைக்கண்
டு மோகங்கொண்டு அவளைத்துரத்த அவள்பெண்கிளி
யாய்ப்பறக்கத்தானும் ஆண்கிளியுருவங் கொண்டுவிடா
துதொடர திலோத்தமைதிகைத்துப் பரம்பொருளேதே
வாதிதேவனே காத்திரட்சியும் ரட்சியுமெனப்போற்ற த
ட்சணமே பயங்கொள்ளவேண்டாமென்றுதரித்துப் பர
மசிவமெழுந்தருளிஆண்டசரித்திரம் உமக்குத்தோற்று
ததோ பிரமநிலையைத்தெளிந்த பிருகுரிஷியானவர் தன்ப
த்தினியை உபேந்திரர்சக்கரத்தைவிட்டுக்கொன்ற சமாச்
சாரந்தெரிந்து கோபித்து மானிடர்களைப்போலஉலகத்தி
ல்பலசனனமெடுத்து அலைந்துதிரிவாயெனச்சபிக்க இந்
திரானுஜர்வருந்திப் பரமனைஅளவற்றகாலம் வழிபடச்சி
வனிரங்கிக்காட்சிதந்து பத்தவதாரமாகநியதி கட்டளையி
ட்டுக் காத்தகாரணம் அடிகளுக்குத் தெரியாததோ பொ
ன்னுலகவாழ்விலிருக்குந் தேவர்களுக்காயினும் பூலோக
த்திலிருக்கும் மானிடர்க்காயினும் நாகருக்காயினும்வரு
த்தம்நேர்ந்தகாலத்தில் அவ்வருத்தத்தை போக்கிக்காப்
பாற்றுதல் பரமசிவனுடைய கடமையாகும் அவ்வுறுதி
பாட்டைச் சீர்தூக்கி யாவரேனும்காப்பாற்றுவரானல்அ
வருக்குஇதைவிட சிறந்தமுத்தியும்வேண்டுமோஓதினவ
ர்களைப் பவுத்திரமாக்குஞ் சதுர்வேதங்களையுந்திருடிக் க
டலிலொளித்த சோமுகாசுரனை வாட்டி அவற்றைப்பழை
யபடிக்கு நிலைபெறச்செய்து அக்கடல் நீரெல்லாம் சிறு
துளி நீரைப்போலத் தன்செலுவிலடக்கிய மச்சாவதார
னுகிய விஷ்ணுவைப்போலச் சமுத்திரநீரை உள்ளங்கை
யிலடக்கி வஞ்சகராகிய ராட்சதரைவெளியிட்டுத் தேவே
ந்திரனுற் கொல்லுவித்து எங்கள்பதவியிற் சலனமற்றிரு
க்கவைத்த பிதாவையொத்த தேவரீர் கிருபாசமுத்திர
வெள்ளமானது உலகங்களெங்கும்பரந்து துதிக்கும்படி
யாகநின்றது ஆதலால் ஐயனே இக்காலத்தில் விந்தகிரி
யானது நாரதர் ஆலோசனையைக்கேட்டு மேருகிரியுடன்
மாறுகொண்டு பாதலமுதல் அண்டபரியந்தம் வளர்ந்து
திசைகளைமூடிச் சர்வசங்கார காலத்திலும் அழிவின்றி
நிற்குந் திருக்கயிலைக்குச் சமமாகவிருக்க நினைந்தோ எ
ன்னமோதெரியாது எங்கும் நிறைந்து பூர்வத்தில் பூமி
யைத் தனதுதிருவடிகளினு லளந்தநெடியோனுகிய திரு
மாலோவென்று சகலருந்தியங்கிப்பார்க்க அண்டகோள
கை பரியந்தம் ஓங்கியிருக்கின்றது. இக்காரணத்தினுற்
கிருபையுற்றுச் சாம்பசிவனது திருவடிகளிற் செலுத்தி
ய தேவரீர் பார்வையை அடியோங்கள்மீது திருப்பி
ஆளங்நினையீரோ தவத்திற்சிறந்த விந்தகிரிநீண்டுவானவ
ழியைமாற்றியகாரணத்தினுல்எங்கள்கதிகளில் உலவுவது
கடினமாகவிருக்கின்றது மேலுஞ் சொர்க்கமத்தியபாதல
மெங்கும் இரவுபகலெனத்தெரியாமற் காடாந்தகாரமாய்
ச் சகலபிராணிகளும் மயங்கிவாடுகின்றன இதைப்போக்
கியாளத்தக்கதாக முனிபுங்கவரேவிரைவில்வரவேண்டுஞ்
சற்றுத்தாமசஞ்செய்தால் உலகஅடுக்கழிந்துபிராணிகள்
மாண்டுபோகுமென்று தியானித்து முறையிடுவதைப்பூ
மிக் கச்சாணிபோல் நின்றுசலனமில்லாமற்றுங்கும்பொ
ன்வரைச்சாரலில் விளங்கும் நந்தவனத்திற் றவஞ்செய்தி
ருக்கின்ற முத்தமிழையோதிய அகஸ்தியர்திருவுளத்திற்
றெரிந்து நல்லகாரியம்அண்டத்தினை யளாவிநிற்கும் விந்
தகிரியின்வலியையொடுக்கிவானவழியைப்பழையபடிக்கு
விளக்கித் தேவர்முதலானவர்துன்பங்களை நீக்குவேனெ
ன்று கடலையுண்டகுறுமுனிநிச்சயங்கொண்டு பொற்சடி
லத்தையுடைய பரமசிவனைத்தியானித்துவிழிகளில் ஆன
ந்தபாஷ்பம்ஒழுகக் கரங்களைச் சிரத்திற் கூப்பித்தொழு
து அன்பினுல்உள்ளங்கரைந்துருகத் தேகம்பூரித்துமயிர்
சிலிர்க்கப் போற்றிநிற்கும்போது வெள்ளியங்கிரியினிட
த்திற் பொன்மலைதோற்றியதைப்போலப் பரமசிவன்ரிஷ
பவாகனத்திலாரோகணித்துப்பூதகணங்கள்சூழ்ந்துதுதி
த்துவரக் காட்சிதந்தபோது நவவியாகரணங்களையும் மந்
றத் தமிழ்நூலினது நுட்பங்களையுந்தெளிந்தஅகஸ்தியர்
பயபக்தியோடு விரைந்தெழுந் தெதிர்கொண்டுசிரம்பூமி
யிற்பொருந்தத் திருவடிகளிற் சேவித்தெழுந்துகரங்களை
க்கூப்பி நின்று வேதவாக்கியங்களினுற் போற்றுங் காலை
யில் பொன்போன்ற சடைமுடியையுடைய பரமேஸ்வர
ன் கிருபாநோக்கம்பாலித்துத் தவசிரேஷ்டரே! உமக்கு
வேண்டுவதென்னை கேளுமென்று திருவாய்மலர்ந்தவுட
ன் சுவாமி! விந்தகிரியானது மேருவுடன்பகைத்திறுமாந்
து அண்டமுகட்டையளாவி நிற்கின்றது. அ[illegible]ன்மனஅக
ங்காரத்தை யடக்கத்தக்க சக்தியை அடியேனுக்குக் கடா
ட்சிக்கவேண்டுமெனத் தமிழைவிரித்தஅகஸ்தியர்வேண்
டுவதற்கிரங்கி அவ்வாறேதந்தனம், விந்தத்தினுருத்தோ
ற்றுமற் பாதலத்திற்சேர்ந்தபின்பு தென்தேசத்திற் சிறந்
தோங்கிய பொதியமலையைச்சேர்ந்துதவத்தைச்செய்திரு
ப்பாயென்று கட்டளையிட,அகஸ்தியர் மீளவும்வாழ்த்திக்
கர்த்தனே? தேவரீர்பூசனைகளை இடைவிடாமற் செய்வத
ற்குக் குளிர்ந்த நீரையுடைய தடாகங்களுங் கேணிகளும்
நீடித்திருக்க நீர்வளம் வேண்டுமாதலால்அத்தலத்தில் ஒ
ருபவுத்திரமாகிய சீவநதிபெருகக் கடாட்சிக்கத் தயைசெ
ய்வீரென்று விண்ணப்பஞ்செய்தார்.

அப்போது பரமன்திருக்கயிலாயத்திலிருக்கின்றசத்த
நதிகளிலும் பவுத்திரமாகியகாவிரியைத் திருவுளத்தில்நி
னைந்தருள அக்கிருபையைப் பொன்னிநதி தெரிந்துகொ
ண்டுமனோவேகம்பிற்படவும் உலகங்கள்நடுங்கவும் ஆர்ப்
பரித்துப் பெருகிவந்து பத்தியுடன் சங்கரன்பாதங்களிற்
பணிந்தபோதுஎமதுகடவுள்அவளிடத்திலிரக்கமாகிக்கா
விரிப்பெண்கொடியே? யித்தவசிரேஷ்டர் நமதேவலின்ப
டிக்குப் பொதிகைக்குப் போகின்றனர் அவர் பின்செல்ல
க் கடவாயென்றருளியதைக்கேட்டுக் காவிரிமீட்டுஞ்சேவி
த்துச் சுவாமி! யித்தபோநிதியானவர் பஞ்சேந்திரியச்சே
ஷ்டைகளை வென்று ஒருமைப்பட்டமனதையுடையவரா
யினும் ஆண்பாலாதலால் யான்தனித்திவருடன்போவது
நீதியோ? உலகத்துக்கடுக்குமோ! இதனைத்திருவுளத்தினு
லோசித்தருள்கவென்று விண்ணப்பஞ்செய்யக்கேட்டு இ
ஃது உண்மையேயாயினும் இத்தவசிரேஷ்டரைப் பிசகா
க நினைக்கலாகாது. நல்லொழுக்கத்தில் மாறுபடாத பழு
த்த மனதைப்பெற்றவர். நல்வினைதீவினைச் சம்பவங்களி
ற்படாத ஒருமைப்பட்ட பேரறிவாளர்மேலும்நமது பத்
தரிற்சிறந்தவர் ஆதலால்இவர்பின் போகலாமென்று மீட்

டுங் குறித்தபோது காவிரியானது சம்மதித்துப் பரமனை வணங்கித் திருக்கயிலைக்கிறைவனே! தேவரீர்கட்டளைப்படிக்கு இம்முனிவர்பின் போவேனாயினும் இவரைவிட்டு நீங்குங்காலத்தை யருளிச்செய்கவென்று கேட்க, நல்லகாரியம்பெண்ணே! யிவர் உன்விஷயத்திற் கையைக்காட்டும் காரணஞ் சம்பவிக்குமானால் அன்றையதினம் பிரிந்து பூமியின்கண்பெருகிச் சகலரும்மூழ்கிப்போற்றிக்கதியைப்பெற நிற்பாயென அவ்வாக்கியத்தைச்செவிகளுக்கமுதமாகக்கொண்டு காவிரியானவள் பரமனிடத்து விடைபெற்று அகஸ்தியர் பின்பற்றிப்போகும்போது ஒப்புவமையற்று உயிர்களுக்குயிராய்விளங்கும் பரமசிவன் ரிஷியைப்பார்த்து இக்கங்கையை உமது கமண்டலத்திற்கொண்டு நடக்கலாமென்றருளினார் அவ்வாறேசேகரிக்கக்காவிரியானவள் அத்தவமுனிவர்கமண்டலத்தில்வந்துசேர்ந்தனள். அப்போது சிவபெருமான்அகஸ்தியருக்குத்தட்சணதேசத்துக்குப்போகச் செலவுகொடுத்துப் பூதகணங்கள் போற்றிச்சூழ ரிஷபவாகனரூடராய்த் திருக்கயிலையைச் சேர்ந்தார். அத்திசையைநோக்கிவணங்கி விதர்ப்பதேசாதிபதி தவத்திற்பெற்ற லோபாமுத்திரையம்மனை மணந்து நித்திய தத்துவத்தைப்பெற்றிருக்குஞ் சித்தனாகிய குமுந்தையைப்பெற்றெடுத்தஅகஸ்தியர்தென்திசையைநோக்கி நடந்தனர்.

---

## கிரவுஞ்சப்படலம்.

பொன்றிகழ்வரையினின் றுங்குறுமுனிபுவியேயாருத்
தென்றிசைக்கேகுமெல்லைத்திறலரிக்கிளவல்வாழ்க்கை
வன்றிறன்மாயமூதூர்வந்தெய்தவாண்டைவைகு
மன்றிலம்போர்பெற்றுள்ளவவுணனத்தன்மைகண்டான்.

---

ஓ! சவுனகாதிரிஷிகளே? கேட்பீராக.— கும்பமுனிமகம்மேருச்சாரலினின்றும் புறப்பட்டு நாடு நகரம்வனம் பர்வதம் முதலியவற்றைக்கடந்து தென்திசைக்குவருமுன்னிலையில் சிங்கமுகாசுரனுக்கிளைய தாருகாசுரன்அரசுசெய்கின்ற மாயமாபுரத்தை நெருங்கி வருவதைஅப்பதியையடுத்துப் பருவதவடிவுகொண்டிருந்தகிரவுஞ்சனென்னும் இராட்சதப்பாதகன் தெரிந்து வஞ்சிக்கநினைந்தவனாய் மாயமந்திரங்களையுச்சரித்து அவற்றின்முயற்சியினால்வானகத்தி லிருக்கும் பொன்னுலகத்தை மண்ணுலகமாக்கியும் மண்ணுலகத்தை விண்ணுலகமாக்கியுஞ் சமுத்திரங்களைமலைகளாக்கியும் அஷ்டகுலகிரிகளைக் கடல்களாக்கியுங் கொடியகிரணங்களையுடைய சூரியனைக்குளிர்ந்த சந்திரனாக்கியுஞ் சந்திரனைவெப்பங்கொண்ட சூரியனாக்கியும் அணுவை மகம்மேருவாக்கியும் மேருவைப்பரமாணுவாக்கியும் புவனங்களைப் பெரும்புறக்கடலாக்கியும் பெரும்புறக்கடலை புவனங்களாக்கியும் வடவாமுகாக்கினியைவிரிந்தகடலாக்கியும் இஃதன்றியும்ஒருநாழிகையிற் பதினாயிரத்தி லொருகூறாகிய காலத்தை தேவர்களுக்காயினுந் துறந்தயோகிகளுக்காயினுந் தோற்றவொட்டாமல்மயக்கிப்பலகாலங்கழிந்ததாகப்பிரமிக்கச்செய்துவாட்டுவானால் அம்மம்ம அவன்கற்றவித்தையை யாவரால்வகுத்துச் சொல்லப்படும். இவ்விதவல்லபங்களைப்பெற்ற கிரவுஞ்சராட்சதன் அகஸ்தியருக்கெதிரில் விந்தகிரியைப்போலப் பலசிகரங்களைக்காட்டிப்பருவதஉருவங்கொண்டுதன்மூலமாகப் போகும்படிக்கு வழியைக்காட்டி நிற்பதைக் குறுமுனிகண்டு அதிசயங்கொண்டு நல்லகாரியம்இதனிடத்திற் சேற்றும்வழியின் மூலமாகக் கடப்போமென்றுநிச்சயித்து அதனைப்பற்றிக் கூப்பிடுதூரஞ் சென்றபொழுது, அப்பாதைமறைந்துமற்றொருவழிதோற்ற அதன்வழியாக அகஸ்தியர் போகும்போது வழிகாணமல்திரும்பிவருகையில் முன்தான் வந்தவழியுந்தெரியாமல் மயங்குமுன்னிலையில் மற்றொ மார்க்கந்தோற்ற மனவருத்தத்துடன் அதைத்தொடர்ந்து நடக்கும்போது கிரவுஞ்சன்மாய்கையினால் ஒருபுரத்திற் கடோமாகிய தீயானது மண்டியெரிந்துவரவும், மற்றொருபுறத்தில் சுழல்காற்றுசுழன்று வீசவும், மற்றொருபுறத்தில் மேகங்கள் சோனை மழையைப் பொழிந்து கோடையிடிகளிடித்துக் காட்டாந்தகாரமாகக்கம்மவும் இவ்விதவுபாதிகளை அகஸ்தியர்கண்டுஇவையனைத்தும் பாதகராகிய ராட்சதர்கள்செய்யுங் கபடமென்றறிந்து அதன்காரணந்தெளிந்து சிவபிரானது நெற்றிக்கண்ணில்வீசும்அக்கினியைப்போலச்சீறிக்கரங்களைத்தட்டிநகைத்து நல்லகாரியம் ஒருஅவுணனோ நமக்கிவ்விதக்கொடுமைகளைச்செய்பவன். இந்நிமிஷத்தில் அவன்மாயவலியினைஅடக்குகின்றேனென்று கொதித்து ராட்சதப்பாதகனது உருவமாகிய மலையினிடத்திற் றமதுகையிலுள்ள தண்டினாற்குத்தி பற்பலவிரிந்த துவாரங்களாக்கிச்சொல்கின்றார். நல்லறிவைப்பெறாத சண்டாளனே? உன்பழையவடிவுநீங்கி மலையுருவாகவேநின்று கொடியராட்சதருக்கிருப்பிடமாகித் தேவர்களுக்குந் தபோதனர்களுக்கும் பலகாலந் தீங்குகளைச் செய்திருக்கக்கடவாய். மேலும்நமதுதண்டத்தினாற் றுளைபட்ட இடங்கள் முழுவதும்பலமாய் கைகள்வளர்ந்து கடையில்எமது கடவுளாகியபரமேஸ்வரனது பாலநேத்திரத்தில் அவதரிக்கும் பாலசுப்பிரமணியராகிய சரவணபவன்கரத்தில் விளங்கும் வெற்றிவேலினால் இறக்கக்கடவாயென்றுகொடியசாபமிட்டுத்தமது கமண்டலத்தி லிருக்கும் பொன்னியின் சலத்திற்சிறிதுகரத்திலெடுத்து மந்திரபூர்வகமாகத் தெளித்து மாய்கைகளைக்கடந்துவெளிவந்துதென்தேசத்தைநோக்கிநடந்தார்.

---

## விந்தம்பிலம்புகுபடலம்.

அன்னதோரவுணர்கோமானன்றுதொட்டசலமாகித்
துன்னெறியவுணர்யாருந்துவன்றியவரணமாகி
நென்னலின்முதனாள்காறுநின்றனனனையான்றன்னை
யென்னையாளுடையநீயன்றியாவரோயடுதற்பாலார்.

---

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? அகஸ்தியரை வளைத்து மயக்கிய கொடிய கிரவுஞ்சனென்னும்ராட்சதவீரன் அத்தினமுதற்குறுமுனியின் சாபபலத்தாற்பர்வதாகிருதியாக விருப்பதன்றியும் பாதகராகியராட்சதர்களுக்குக்காவலாகியகோட்டையாக ஸ்தாபிதமாகத் தோன்றிஅம்மார்க்கத்திற் போகின்றமுனிவர் முதலானவரை வருத்துகின்றான். அவன்செய்கைகளையும் வல்லபத்தையும்நம்மை அடிமையாகவுடைய சுப்பிரமணியக்கடவுளல்லது மற்றை யாவரா லடக்கப்படும். இவ்விதமாகத் தமிழைவளர்த்த கும்பமுனியானவர் வானத்தையளாவி மேகங்கள்சஞ்சரிக்கும் அம்மலையின் கர்வத்தைவாட்டிப் பின்புஆகா

யத்தையளாவும் பலசிகரங்களையுடைய தேவகிரியின்மார்க்கமாகச்சென்று பாசபந்தத்தைக்கடந்த மகத்துக்களிடத்திற் கிருபையுற்றுப்பஞ்சாட்சரத்தைப்போதித்தாளும் பெருமையினையுடையசிவபிரான் மகிழ்ந்தெழுந்தருளியிருக்குங் காசிஸ்தலத்தைச்சேர்ந்து அப்பதிக்கருகிற் பரந்து பெருகுந் தெய்வீகம்பொருந்திய கங்கையின்மூழ்கிப் பவித்திரனாய் விசாலாட்சியின் வலதுபாகத்தில் வீற்றிருக்கும் விசுவநாதர் சந்நிதானத்திற் பிரவேசித்துக்கண்களாரக்கண்டு களித்துவாழ்த்தி வழிபட்டு அத்தலத்தைக் கடந்து நாரதமுனிவரது கலக வாலோசனையால் இறுமாந்திருக்கும் விந்தகிரியின் சமீபத்தில் வந்து அதன் நிலைமைகளைமதித்து வானத்தையடைத்து அண்டத்தைமுட்ட நிற்கின்ற ஓ! விந்தமே? கேட்பாயாகபரமனருளின்படிக்குப் பொதியவரையைச் சேர்ந்திருக்க வந்தனம், ஆதலால் உன்னெல்லையைக்கடக்க நீசிறிதுவழி காட்டுகவென்று கூவிச்சொல்லுவதை விந்தகிரிகேட்டமாத்திரத்தில்நகைத்துச் சூரிய சந்திரர்முதலாகிய நவக்கிரகங்களும் போகின்றதற்குக் கூடாமல் ஆகாயவழியையடைத்து ஆதியில் உலகத்தை யளந்தருளிய திரிவிக்கிரமனைப்போல நிற்கின்றேன். ஓ! ஓ! குறியவனே? உனக்கஞ்சிவழிகொடுப்பேனோ? என்பராக்கிரமத்தை யெவ்வளவுந்தெரிந்தவனல்லை, ஏன்விருதாவாய் நிற்கின்றாய். வந்தமார்க்கத்தைத் தேடியோடிப்போவாயென்று சொல்லிய ஓசைஅகஸ்தியர் செவிகளில் விழுந்தமாத்திரத்திற் கோபஞ்சொலிக்க நகைத்துப் பரமேஸ்வரன் பாதாரவிந்தங்களைச்சிந்தித்துப்போற்றிப் பூர்வத்தில் தேவேந்திரனது துயரத்தையகற்றச் சமுத்திரநீரைச் சிறுதுளியாக ஏற்ற குறியகரத்தைப் பிரமலோகபரியந்தம்நீட்டினார். கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? ஆதலால்தவத்தினுஞ் சிறந்த பொருளொன்றுமில்லை. அதனிடத்திற் சிரத்தைவைத்து முடிப்பவனே ஜனனசாகரத்தைக்கடந்து பரமன் பாதாரவிந்த நீழலிற் சேரப்பெறுவன். பின்புதேவர்க்களும் அதிசயிக்க ஓர்அங்குலப்பிரமாணமுள்ள தேகம்பெற்ற அகஸ்தியர் விந்தகிரியினது உச்சியினிடத்திற் றமது உள்ளங்கையினால்வலிகொண்டழுத்திய மாத்திரத்தில் விந்தகிரியானது நெறநெறவென்று நுறுங்கிப்பூமிக்குளிறங்கிப்பாதலத்தைச்சேர்ந்து ஆதிசேஷன்வாழுந் தலத்திலொடுங்கி நடுநடுங்கி யடங்கி நரகக்குழியில்வீழ்ந்து வாடுகின்றவரையொத்துக்கீழ்நிலையில்ஆழ்ந்ததட்சணம்திடுக்கிட்டுவருந்தி ஓ! தபோநிதியே? அடியேனிடத்திற் கிருபையுற்று இவ்விண்ணப்பத்தைக்கேட்டருள்க, தேவரீரைவழிபட்டீடேறவறியாமல் இகழ்ந்தகாரணத்தினால் தொன்றுதொட்டுக் கிடைத்திருந்த பெருமைகளனைத்தையும் இழந்தேன். இப்பொழுது கிருபையுற்று நாயினேன்செய்த அபராதத்தைப் பெரிதாகவெண்ணாமல் க்ஷமித்து அடியேன் பழையபடிக்குப்பூமியின்கண்ணெழுந்து நிற்குந்தன்மையைஅருளிச்செய்யவேண்டுமென்று பரிதாபப்பட்டு போற்றுவதைத் தமிழ்முனிகேட்டுக் குறுநகைகொண்டு தாம் நினைத்த காரணத்துக்கடுத்த தந்திரமாகவும் அதன்மனதுக்குத் திருப்திபெறவும் நினைந்து விந்தமே? நாம்பொதிகைமலையிற் சேர்ந்து இப்பாதையிற்றிரும்பி வருங்காலத்தில் நீயும் யதாப்பிரகாரம் பெயர்ந்து நிற்பாயென்றுசொல்ல, அப்படியே விந்தம் அத்தவணையைநோக்கிப் பிலத்திலிருந்தது பின்பு முக்குறும்பைவென்ற ரிஷியானவர்பழையபடித்தமது கரத்தைக்குறுக்கி நின்றனர். அதுபரியந்தந்துக்கசாகரத்திற்பட்டு வாடிய தேவாதியர்கள் மனவூக்கமடைந்து ஆனந்தவாரியில் மூழ்கிக்களித்தவராய்ப் பஞ்சதருக்களின் மலர்களை மழையைப்போலச் சொரிந்து இன்றெமது குறைகள்தீர்ந்தோம், நீடூழிவாழிவாழியெனத்துதித்துவாழ்த்துதலைக்கேட்டுக் களித்தவராய் அகஸ்தியர்தென்பாரிசத்தைநோக்கி நடந்தனர். விந்தகிரியானதுபாதலத்தில்மறைந்து பழையபடி ஆகாயத்தில் சூரியசந்திரர்முதலான நவக்கிரகங்களின் பிரகாசம் எவ்விடத்தும் பரந்தோங்கியது எப்படிக்கிருந்ததென்னில் பிரளயகாலத்திற்சத்தசாகரங்களும்அணைகடந்துபுவனங்களனைத்தினு மூடிநின்றதைப் போன்றது அக்காலத்திற்சூரியாதிதேவர் மகிழ்ந்து துரிதமாய் அகஸ்தியரிடத்துக்கு வந்து கரங்களைக்கூப்பித் தொழுது, தேவரீர்செய்த உதவிக்குப்பிரதி யுபகாரமுமுண்டோ! வெகுகாலமாக வாட்டமுற்றிருந்த நாங்கள் கவலையொழிந்து நின்றோமென்று துதிக்கின்றவர்களை ஆதரித்துச் செலவுகொடுத்துஅவர்களை யனுப்பிவிட்டுப் போகும்போது மலைகள்நெருங்கிக்காடடர்ந்திருக்கும்மேற்குத்திசையில்வாசமாய் ரிஷிகளைத்துன்பப்படுத்திக்கொண்டிருக்கும் வில்வலன்வாதாவியென்னுங் கொடிய ராட்சதர்களுக்குத் தங்கள்பிராணனை யிழக்குங்காலம் சமீபித்தபடியால் அகஸ்தியர்வரவைக்கண்டுஇருவரும் ஒன்றை யோசிக்கின்றனர்.

---

## வில்வலன்வாதாவிவதைப்படலம்.

---

கண்டனரிவனேபோலுக்காய்சினத்தவுணராவி
கொண்டனன்வேலைமுன்னங்குடித்துமிழ்கின்றநீரா
னண்டரையருள்வானுங்கொலடைந்தனனவனுக்கின்னே
யுண்டியையுதவியாவிகொள்ளுதுமுனெடென்றார்.

---

இந்தமுனிவன்கோலத்தைப்பார்க்க அதிசயமாகவிருக்கின்றத ஆதியிற்கடல்நீரையுள்ளங்கையிலள்ளியுண்டுதேவேந்திரனாலே ராட்சதர்களைக் கொல்லுவித்தபாதகன்இவனாகும், இப்போதுந்தேவர்களுக்குஉதவிசெய்ய வருகின்றான்நல்லகாரியம்இவனைமடக்கிவிருந்திட்டு இன்றையதினம்விவன் பிராணனைவாங்கித் தசையையுந்தின்று பழியையுந் தீர்த்துக்கொள்ளலாமென்றுநிதானித்தவர்களாய்த் தம்பியாகிய வாதாவி ஆட்டினுருப்பெற்று அவ்விடத்திலிருக்கும் மலைச்சாரலில்தழைகளைமேய்ந்திருக்கமூத்தவனாகிய வில்வலன் தபோதனர் வடிவுகொண்டு சடைகள்விரிந்தசைந்து புரளவும் திருநீறு நெற்றியில்விளங்கவுங் காதுகளிற் குண்டலங்கள் அசையவும் ருத்திராட்சத் தாழ்வடங்கள் சிரசுமுதல்துலங்கவும், வெள்ளியங்கிரியைப்போலச் சர்வாங்க தூளிதனாய்க் கரங்களில் தண்டுகமண்டலமேந்திப் புலித்தோலைப் புறத்தில்கட்டிக் கண்டவர்கள் பூசிக்கத்தக்க கோலத்தைப் புறம்பிற்காட்டி உள்ளத்தில் வஞ்சகத்தைக்கொண்டு எட்டிப்பழத்தைப்போல விளங்கும்பாதகன்கும்பமுனிவருக்கெதிரிற்சென்று போற்றி மும்முறைவலம்வந்துவணங்கி நெடுங்காலமாய்அரிய

தவங்களைச்செய்த முயற்சியினாலே சுவாமிகள்யான் தரிசி
க்கக் கிருபையுற்று இவ்விடத்திலெழுந்தருளியதால் அ
டியேனும் முனிவர்களுக்குள் பெருஞ்சிறப்பெய்தப்பெற்
றேன் ஆதலால்எளியேனாகியதொண்டனிருக்கின்றபர்ன
கசாலை யிதோயிருக்கின்றது அதுபவித்திரமாகக்கிருபை
யுற்றெழுந்தருள்கவெனமீட்டும் பணிந்துவேண்டத்தாம
ரையிலையில்விழுந்த நீர்த்துளியைப்போலச்சமுத்திரசல
த்தைஉள்ளங்கையிலேந்தியுண்டஅகஸ்தியர்பாதகன்கொ
ண்ட சூதையறியாமல் அவன்செய்யும் உபசாரத்துக்கிர
ங்கி ஓதவசிரேஷ்டரே நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளினு
ம் மற்றைமுனிவர்களிடத்தும் உன்னிடத்திற் றோற்றும்
பத்தியில் அணுப்பிரமாணமும்யான்கண்டதில்லையிதனை
உண்மையாகச் சொல்லுகின்றனன். உமது ஆசிரமமெங்
கிருக்கின்றது வாரும்போவோமென் றிசைந்தமாத்திரத்
தில் சுவாமி சமீபந்தான் எழுந்தருளுமென்றுநாசகாலம
டுத்தபாதகன் வழிகாட்டிஅழைத்துப்போய்த்தன்னிடத்
தைச்சேர்ந்து உடனே தருப்பாசனத்தைவிரித்து வீற்றி
ருக்கச்செய்து கமண்டலசலத்தினால் பாதங்களை விளக்கி
அருக்கிய பாத்தியமுதலான பூசனைகளைவழுவின்றிமுடி
த்துக் கரங்களைக்கூப்பிஅடியேன்முன்னோர்களும்,யானு
ங் கிருதார்த்தராகும்பொருட்டுத் தயைசெய்துஇச்சிறுகு
டிசையில் வந்தீர் இஃதுபவித்திரப்பட்டதன்றியில் யாங்
களும் பிழைத்தோம் ஆதலால்இத்திவசம் நாயினேனிரு
க்கையிற்றங்கிப் போசனஞ்செய்துஅடியேனுக்குச் சேஷ
ப்பிரசாதந்தந்துபோவீரென்று உபசரித்துக்கேட்டுக்கொ
ள்ள அதற்கிரங்கிச் சூரபன்மனுடைய மருகனிடத்திற் க
ருணைமேலிட்டு முனிசிரேஷ்டனே உன் பணிவிடைகளு
க்குமெச்சினோம் உன்னையொத்தபத்தன் கோரிக்கையை
யீடேற்றுவதே என்போல்களுக்குக் கடனாதலால்அவ்வா
றே உணவுசெய்து போவோமெனத் தவத்தருக்கடுத்தது
ன்பங்களை நீக்கியாளுங் குணநிதியாகிய கும்பமுனிவர் ச
ம்மதித்தனர்.

தட்சணம் பாதகனாகிய வில்வலன்அகமுகமலர்ந்தவனு
கக்காட்டி நிலத்திற்படியச் சேவித்து எமதுஐயனேசற்று
நேரம் இளைப்பாறுவீராக.புனிதமாகிய பிரசாதத்தைவி
ரைவிற்சமைத்து வருவேனென விடைபெற்றுப்போய்ப்
பக்கத்திலிருக்குந் தடாகத்தில் முழுகிமடியுடுத்தி மடை
ப்பள்ளியைச்சேர்ந்து பசுவின்சாணத்தினால் மெழுகிட்டு
க்கோலமுமிட்டு முத்துகளைப்போலத்துல்லியமாயிருக்கு
ஞ் சன்னசம்பாவின் அரிசியைநன்றாகக் குத்திக்கொழித்
து அலம்பிச் சீர்படுத்திப்பின் தீக்கடைக்கோலினால் அக்
கினியை உண்டாக்கி அடுப்பிற்போட்டுச்சந்தன விறகினா
ல்மூட்டிப்பவித்திரமாகியபாண்டத்தைஅலம்பிச்சுத்தோ
தகத்தைநிரப்பி உலையேற்றிஅரிசியையுமிட்டுச்சிறுகளரி
த்துப் பக்குவப்பட்டதைச் சோதித்துவடித்திறக்கிவைத்
தபின்பு மற்றப்பாத்திரங்களில் பொன்னையொத்துவிளங்
கும் பருப்பு கந்தமூலவருக்கங்கள் பாற்சோறுசருக்கரை
ப்பொங்கல் குழைக்கறிபுளிங்கறிதீங்கறி பொரியல்கரியல்
முதலியவிதங்களைச் சம்பாரங்களைச்சேர்த்துத் திசையெ
ங்கும் மணக்கத்தக்க புனிதமாகியபதார்த்தங்களைச்சமை
த்தும் பலகாரவிதங்களையும்நெய்யிலிட்டுச்சுட்டுமுடித்து
உடனேவேகமாய் ஓடிப்பிராமணனதுபிராணனைவாங்கவி
ருக்கின்றேனென்று பிறர்க்குக்காட்டு மாறுபோலத் தலை
யையசைத்து மேய்ந்திருக்குந்தம்பியாகிய ஆட்டைத்துர
த்திப் பிடித்துத்தங்களுயிருக்கு யமனையொத்து எழுந்த
ருளியிருக்குங் குறுமுனிவனெதிரில் வலித்துவந்து இரு
கூறாகவாளினாற் கண்டித்துத் தூக்கித் தோலைப்போக்கி
உறுப்புகளை வெவ்வேறாக்கித்துடை-மார்க்கண்டம்-ஈரல்
தலை முதலாகிய மாம்சங்களைப்பதமாக அரிந்துசேர்த்து
ப் பாத்திரங்களிலிட்டு முக்கால்அலம்பிச்சுத்திசெய்துஅ
தற்குவேண்டுங் காரசாரங்களைக்கூட்டி அடுப்புகளிலேற்
றிச் சிறுதீயாக எரித்துக் கறித்துகள் பொரித்துகளைத்து
வி நெய்யைவிஸ்தாரம்வார்த்துப் பொரியல் குழம்பு வற
ல் சுண்டல் விதங்களைச்சமைத்துக்காயங்களைப்புகட்டிவா
சனைத்திரவியங்களைச்சேர்த்து முடிந்தபின்பு மணம்போ
காமல்மூடிப் பச்சடி தொகையல் மற்றவைகளையும் பக்கு
வமாக்கிய பின்பு வாழை மா-பலாவாகிய முப்பழங்களை
யுந் திருத்திக்கொண்டு தேன்கருப்பஞ்சாறுபாயசவிதங்க
ளையுந்தெய்வ ஆராதனைக்குயோக்கிய மாகும்படிக்குமுடி
த்து இப்படிக்குப் பஞ்சகச்சாய வகையையும்அறுசுவை
வர்க்கங்களையுந் துரிதமாகச்சமைத்து முடித்து தட்சண
ம் அகஸ்தியரிருக்கு மிடத்தைச்சேர்ந்துவணங்கிச்சுவாமி
கள் பசி உபாதியினால் வருந்திச்சரீரம் வாட்டமுற்றிருக்
கின்றீர் இனிகாலதாமசஞ்செய்யாமல் அடியேன்சுத்தியா
கச் சமைத்திருக்கும் உண்டியை உண்டுஆயாசந் தீர்ந்த
ருளவேண்டுந் தயைசெய்து வாருமென்றுவேண்டச் சம்
மதித்தெழுந்த மாத்திரத்தில் அழைத்துப்போய்மடைப்
பள்ளிக் கருகிலிருக்கும் அறையில்பீடத்தைப்போட்டுரி
ஷியை வீற்றிருக்கச்செய்து உபசரித்துப்பாதங்களைச்சுத்
திசெய்து சந்தனபுஷ்பங்களைச்சாத்தித் தூபதீபநைவேத்
யஞ்செய்துபாததீர்த்தத்தைஉள்கொண்டுசேவித்துக்கொ
ண்டவனாய்ப் பொன்மயமாகப்பரந்து நீண்டிருக்கும் வா
ழையிலையைப் பரப்பி அதைச்சூழ பலதங்கக் கிண்ணங்
களைவைத்து சலத்தினால் அவைகளைச் சுத்திசெய்து அக
ஸ்தியர்மனங்குளிரஅமுதமொத்த போசனத்தைப்படை
த்துப் பருப்பை அதன்மேல்வைத்து முதற்சொல்லிய க
றிவகைகளை வெவ்வேறாகஇலைமுற்றினும் பரப்பியினி ச
ற்றுநேரத்திற் றன்பிராணனைப்போக்க விருக்கின்ற வில்
வலன் பசுவின்புத்துருக்கு நெய்யை ஏராளமாகவிட்டுஆ
ட்டி னிறைச்சி விதங்களையும் புஷ்டியாகக் கிண்ணங்களி
ற்படைத்துச் சித்திரான்னம் பலகாரங்கள் பழவகைகளை
யும்மறவாமல்வைத்துக்கடல்நீரையேற்ற அகஸ்தியர்கரத்
திற் கமண்டலசலத்தைவார்க்க இரண்டுவிசைபோசனத்
தைச் சூழத்தெளித்து ஒருதிரம் ஆசமனஞ்செய்து சூரி
யனாதியகடவுளருக்குப்பிரீதியாக அருக்கியங்களைவரன்மு
றையாகச்செய்து இவ்விதமாகச் சகலமும்முடித்துப்போ
சனஞ்செய்யுந் தருணத்திற் சற்றுந்தயையற்றவில்வலன்
அருகிலிருந்து இக்கறிபதார்த்தங்கள் மதுரமாக விருக்கு
ம் இந்தமாம்சந் திவ்வியமாகவிருக்குஞ் சுவாமிகள்தேனி
ற்றெட்டுப் புசிக்கலாகுமென்று மற்றும் இலையிலிருக்கி
ன்றவைகளைக்காட்டிக்காட்டி உபசரித்துமேலும்மேலுஞ்
சாதிக்கஅகஸ்தியர் மனங்களித்துக் கண்டமட்டும்பூர்த்தி
யாகஉண்டவராய் ராட்சதக்கொடியன் கொண்டுவந்தசுத்
தோதகத்தையுஞ் சாப்பிட்டுக் கைலாகுகொடுக்க வெழுந்
து சாணப்பொடியினாற் கரங்களைத் தேய்த்து வெந்நீரினா
ற் சுத்திசெய்தபின் சுத்தோதகத்தினால் முக்கால்ஆசமனி
த்து வாயைப்பூசி முறைப்படிக்கு அங்கங்களையலம்பிஉட
னே மற்றோரிடத்திற்றருப்பாசனத்தைவிரித்து நயமொழி

களினல் அதின்மீதிருத்திச் சந்தனம் புஷ்பங் தாம்பூ
லவிதங்களேயுங் கொடுத்து அவர்சயனித்துக் கொண்டிரு
க்குந் தருணம்பார்த்து இதுதான் நல்லசமயமென்றெண்
ணிச் சண்டாளனுகிய வில்வலன் தனக்குமுன்னம் பிரம
தேவன் அனுக்கிரகஞ்செய்த மந்திரத்தை யுச்சரித்துஅ
ப்பாதம்பி வாதாவி சிக்கிரத்தில் வெளிவருவாயெனக்கர
ங்களேத்தட்டியழைத்த சத்தத்தைகேட்டு முனிவன் வயி
ற்றில் ஆட்டினுருவம்பெற்றுச் சற்றும் இரக்கமில்லாமற்
பூர்வத்திற்கடல்நீரையுண்டு நம்மவரைமாய்த்ததைப்போ
லவேசுலபமாகநினேந்து என்தசையையுண்ட இந்தப்பாத
கன் அகத்திலிருக்கும் உயிரையும்இவன்வலியையும்போ
க்கிக் குறியவயிற்றைக்கீறி அண்ணுஇதோ வந்துவிட்டே
னெனச்சிங்கத்தைப்போல முழங்கிச்சொல்லுவதைத்திரி
லோகங்களினும் புகழ்ந்துவணங்குந் தவ சிரோஷ்டராகிய
கும்பமுனி கேட்டமாத்திரத்தில் இதுகொடியராட்சதர்வ
ஞ்சகமென்றறிந்து வடவாமுகாக்கினியைப்போலக் கொ
தித்துப் பவுத்திரமாகிய திருநீற்றைக் கரத்திலள்ளிமாம்
சவகைளினற் செய்யப்படுங் கறியாகப் புசிக்கப்பெற்றவா
தாவி அவ்வாறே சீர்ணவியாகக்கடவையென்று பரமனே
நினேந்து மூன்றுதரம் வயிற்றைத்தடவியபோது மண்டி
யெரிந்துவருங் காட்டுத்தீயினெதிரிற்பட்ட சிறுபுதரைப்
போலஉதராக்கினிகொளுத்தஅப்பாதகன்மலமாய்விட்டா
ன். இக்காரணங்களே மேகத்தையொத்துஎதிரிலிருந்தவி
ல்வலன்தெரிந்து ரவுத்திராகாரமாகக் கோபித்துமாயவடி
வைநீங்கிப் பழையகோலங்கொண்டுதண்டமொன்றையெ
டுத்துச் சுழற்றிப்பாய்ந்து முனிவர்சிரத்தில் மோதிக்கொ
ல்லவருவதை அகஸ்தியர்கண்டு உடனே தருப்பையைக்
கிள்ளி பாசுபதமந்திரத்தையுச்சரித்துப் பிரயோகித்தமா
த்திரத்திற் தம்பியைப்போலவேவில்வலனுஞ்சாம்பலாய்
விழுந்தான் அக்காலத்தில் அகஸ்தியருக்குக்கோபந்தணி
ந்து அவ்விடத்தைக்கடந்து தமதெண்ணப்படிக்குப்போ
வதாயினர்.

---

## காவிரிநீங்குபடலம்.

செங்கைதூங்கியதீர்த்தநீரொடுங்
கொங்கின்பாற்செலக்குறியமாமுனி!
மங்குகின்றவம்மைந்தர்நேருரு
வங்கண்மேவினருந்தவத்தர்போல்.

---

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே அகஸ்தியர்இவ்வித
மாகஅசமுகிபிள்ளேகளே மாய்த்தபின்புகாவிரிப்புனலடங்
கிய கமண்டலத்தைத்தாங்கித்தண்டையூன்றி நடந்துகோ
ங்குதேசத்தைச் சேருஞ்சமீபத்தில் அவர்கோபாக்கிரியா
ல் மாண்டராட்சதகுமாரர்களிருவரும்பைசாச உருவம்
பெற்றுத் தவமுனிவர் கோலமாய்க்காளமேகத்தைப்போ
லக் கறுத்ததேகத்துடன்அகஸ்தியர் எதிரில்நின்று தீயெ
ழ விழிகளேச் சுழற்றி அதிககோபங்கொண்டுதீரராய் ஆ
வ் ஆவென ஆர்ப்பரித்து மேலேசெல்லுவார் நெருங்கிப்
பயமுறுத்துவார் பின்னேபோவார் கோரரூபமாகத் தோ
ற்றுவார் உருத்தெரியாமல் மறைவார் வானத்தி லிருக்கு
ம் மேகத்தில் ஒடுங்கி ஓவெனக்கூவுவார்.மண்ணிலிறங்கி
ரிஷியைவளேந்து வளேந்து சுற்றுவார் இவ்விதமாகத் தட
ங்கல்செய்து வருவதைத் தவசிரேஷ்டராகிய அகஸ்தியர்
கண்டு இவர்களே முன்னமேவாட்டினேம்மீட்டும் நம்மை
நெருங்குங்காரணம் யாதென நிதானித்து இவர்கள் தூர்
வாசர் புத்திரராதலாற் ப்ரம்மஅம்ஸம்பெற்றவர்இவரை
வதைத்ததால் நமக்குப்பிரம்மஹத்திசுற்றிக்கொண்டதெ
னத் தெளிந்துநல்லகாரியம்ஒழித்தற்கரியஇப்பாதகத்தை
அகற்றப் பரமேஸ்வரன் பாதாரவிந்தங்களே அருச்சிக்க
வேண்டுமென நிச்சயித்தவராய்க் கொங்குதேசத்தில்ஒரு
வனத்தைக்கண்டு இத்தலஞ்சிவ பூசனேக்குத்தகுதியென்
றெண்ணி அவ்விடத்திற் பரமனேச் சிவலிங்கமூர்த்தமாக
ஸ்தாபித்துக் கமண்டலத்திலிருக்குங் காவிரிதீர்த்தத்தினு
ல் அபிஷேகஞ்செய்து சந்தன புஷ்பவகைகளினல் அரு
ச்சித்து திவ்வியபோசனங்களேப்படைத்து வணங்கித்தே
வாதிதேவர் பத்தவற்சலர் சகலசீவதயாபரமூர்த்திதவங்க
ளிற் சிறந்த ரிஷிகள் முதலானவர்களேவழிகட்டிக் கபட
வேடந்தாங்கி வஞ்சித்துக்கொன்று வருவதைப்போலவே
நம்மையுமோசஞ்செய்து கொல்லவந்தபாதகரைவாட்டிய
காரணத்தினற் சம்பவித்தமகாபாதகத்தைப் போக்கிஇர
ட்சிக்கவேண்டுமென் றிவ்வாறு உமாமகேஸ்வரனேப் பல
நாள் வழிபட்டுவருங்காலேயிற் பரம சிவகடாட்சத்தினல்
அப்பாதகமானது தீப்பட்ட பஞ்சைப்போலப் பறந்து
போயிற்று இதன்மத்தியில் அகஸ்தியர் செயல்களேத்தெ
ரிந்தநாரதர் அதிவேகமாய் தேவேந்திரன்தவஞ்செய்திரு
க்குஞ் சீகாழிஸ்தலத்தை நெருங்கி வருவதைப் பரமசிவ
த்தின் பாதகமலங்களேச் சிந்தையிலிருத்தி மூங்கிலுருப்
பெற்றுத் தவம்புரியுந் தேவராசன்கண்டுஉடனேபத்திவி
னேயத்துடன் எதிர்கொண்டு திருவடிகளிற்சேவிக்க அவ
னேவாழ்த்தி எழுந்திரும்இமையவர்க்கிறைவனேயென்று
தூக்கி மார்பில்றுகச்சேர்த்தணேத்துச் சுகமோவெனப் பி
ரியமாக விசாரித்தனர் அதுகேட்டு இந்திரன் கரங்களேக்
கூப்பிநின்றுசுவாமி! தேவரீர்கிருபையினல்இத்தினவரை
யிற் சவுக்கியமாயிருக்கின்றனனுயினுஞ்சிவபிரான்பூசனே
க்கொரு இடையூறுநேர்ந்திருக்கின்றது சுத்தசாத்வீக கு
ணக்குன்றையொத்த தபோநிதியே அதனேக்கேட்டருள்
க. திவ்வியபரிமளமலர்களேத்தரும் பூங்காவனமானது சி
றிதும்நீர்ப்பசுமையின்றி உலர்ந்தழிகின்றது. ஆதலாற்ப
ரமனேப்போற்றுவதற்குப் போதுமானமலர்கள்கிடைப்ப
து அரிதாகியது. இக்குறைதமியேன்மனதை வாட்டுவதி
னல் இதற்கொருமார்க்கத்தைக்கட்டளேயிடுவீரெனப்பல
வாகமுறையிட்டு ஓராசனத்தில் முனிவரையெழுந்தருள
ச்செய்து அவரனுமதியில் தானுமொரு பீடத்திலிருந்தா
ன். அத்தருணத்தில் நாரதர்இந்திரனேப்பார்த்துச் சிவக
டாட்சத்தினல் உமது அமராவதியும் அரசாட்சியுஞ்சில
தினத்திற் கிடைக்கவிருக்கின்றது.மனந்தளரவேண்டாம்
இப்போது கங்காசடாதரமூர்த்தியின் பூசனேக்குத்தவறு
நேர்ந்திருப்பதாகச்சொல்லினய். அதுவும்விரைவிற்ற வி
ருங்காலமும் நெருங்கியது. அதன்காரணங்களேச் சொல்
லுவோம் சொர்க்காதிபதியே? கேட்பாயாக.

தனக்கு வமையில்லாத முக்கட்பிரான் அகஸ்தியரை
ப் பொதிகை வரையைச் சேர்ந்து தவத்தைச் செய்திரு
மென்று அனுப்பினர். அவர் வரும் வழியில் வானவழி
யை மூடிநின்ற விந்த மலேயைப் பாதலத்தி லடக்கி ரிஷி
களுக்குப் பலகாலங் கெடுதி செய்திருந்த சூரன் மருக
ரைத் தொலேத்து அப்பழி நீங்கக் கொங்குநாட்டைச்

சேர்ந்துதிரிபுரதகனராகியதேவதேவனையருச்சித்துப்பவு த்திரராகி இப்பொழுதும் அத்தலத்திற்பரமனை வழிபட் டிருக்கின்றனர் நான்கண்டுவந்தேன் பரமசிவகடாட்சத்தி னுல் அவர்கமண்டலத்தில்அடங்கியிருக்குங்காவிரிநதிவெ ளிப்பட்டுஇவ்வழியாகப் பெருகும்படிக்கு முயற்சிசெய் வாயாகில்உமக்குத்ததிலேசமுழுதுந்தீர்ந்துமனமகிழ்ந்தி ருப்பையெனச்சொல்லினர்உடனேசுவாமிஅகஸ்தியர்தம க்குஉதவியாகும்பொருட்டுச்சம்பாதித்துவைத்திருக்கின் றகாவிரிப்புனல் இக்காவினிடத்தில் வருவதற்குச்செய்ய வேண்டியகாரியமென்னை அதனையுங்கிருபையுற்றுப்போ திப்பீரென வேண்ட நல்லகாரியம்விரைவில் விநாயகமூர் த்தியைப்பூசித்துப்பலகாரவகைகள்பாற்சோறுபழ வருக் கங்களைமிகுதியாகப்படைத்துப்போற்றிவேண்டுவையாகி ல் அக்கமண்டலத்தைக்கவிழ்த்துவிடுவர்தாமதஞ்செய்யா மல்விரைவில்முடிப்பையென்றுஇவ்வுபாயத்தைஞான சீ லராகிய நாரதர்போதிக்கமனவாட்டமொழிந்துசூரபன்ம னுல்இழந்தபதியும்நிதியும்அரசும் பெற்றவனைப்போலச் சந்தோஷித்து சுவாமிகள் தயைசெய்து இவ்வரியமார்க்க த்தைக்காட்டி யதனுற் கிருதார்த்தனுவேன் தேவரீர்கட் டளையின்படிக்கு அகஸ்தியர் கமண்டலத்திலிருக்கும்நதி இத்தலத்திற் பெருகத்தக்கதாகக் கணபதியை இதோபூ சிப்பபேனென்ற வாக்கியத்தை நாரதர்கேட்டுஅதுவேகாரி யம் விரைவில் விக்கினேஸ்வரரை வழிபடக்கடவையென வாழ்த்தி அத்தலத்தைக்கடந்து தேவர்கள்போற்ற அம்பெ ருமையுடைய பிரமலோகத்துக்குப்போயினர். பின்புபுர ந்தரனும் பரிசுத்தனுய்க் கங்கையையுஞ் சர்ப்பங்களையும் பிறையையும் முடியிற்றரித்தருளிய சிவநாதன்பெற்ற க ணபதியின்வடிவை ஆகமவிதிப்படிக்கு ஸ்தாபித்துத் தி வ்வியமலர்களினல் திருவடிகளில் அருச்சித்துச் சோடச வுபசாரங்களைச்செய்து முடித்தபின்பு கரும்பு தேங்காய் தினைமா தேன் முக்கனி பாகு உருண்டை தோசைவடை அதிரசந்திரட்டுப்பால் பாற்சோறு பயறு கடலைமுதலிய சுண்டல் எள்ளுருண்டை மற்றுந் தேவபோக்கியமாகிய பதார்த்தங்கள்யாவையுந் தேடிச்சேகரித்து ராசிராசியாக ப்படைத்து நிவேதித்து எமதிறைவனே வேதாகமவாக்கி யங்களினல் தோத்திரஞ்செய்துகொண்டிருக்க நீலமலை போன்ற ஸ்வரூபமுள்ள யானைமுகமுடைய விநாயகர்பல கோடி பூதப்படைகள்சூழ்ந்துதிசைகளிரப் போற்றிவர மூஷிகவாகனத்தில் எழுந்தருளியகாட்சியைத் தேவராச ன் தரிசித்தமாத்திரத்தில் திடுக்கிட்டுச் சரீரம்நடுங்கத்தி யங்குவதை விநாயகர்தெரிந்து மேலவர்க்கிறைவனே? பய ப்படவேண்டாம்பயப்படவேண்டாமெனக் கையமர்த்திய போது அச்சம்நீங்கிப் பேரானந்தவாரியில்மூழ்கினவனு ய்ப் பூமியில்விழுந்துபிள்ளையார்திருவடிகளிற்பன்முறை பணிந்தெழுந்து விழிகளில் ஞானநீர்பெருகத் தேகபரவ சப்பட்டு மயிர்க்குச்செறிய கரங்களைச் சிரத்திற்கூப்பிப் பிரணவச்சுரூபியாகிய பெருமானைப் பலவாகத்துதித்துநி ற்கின்றவன்மீது கணேசர்கிருபாநோக்கம்பாலித்து ஓ!மே கவாகனனே? உன்பூசனையை நாம்விருப்பமாய் அங்கீகரி த்தோம், இனிஉனக்குவேண்டும் வரங்களைத்தருவோங் கேட்பாயென் றருளிச்செய்ய மறுபடியுஞ்சேவித்து வா யைப்பொத்தி ஐயனே? எமதிறைவனுகிய சிவநாதன்பூச னைக்குவேண்டும் புஷ்பங்களைத்தருவதாக இவ்விடத்தில் ஒருநந்தனவனம் வைத்திருக்கின்றனன். அஃதுநீரில்லா மல் தீப்பட்டதுபோலச் சூரியன்வெப்பத்தினல் வாடிவ தங்கித் துகள்பட்டுப் பரமன் நெற்றிக்கண்ணினலே திரி புரங்கள் சாம்பலானதுபோலக் காற்றிற்பறக்கின்றது. இ ம்மனவாட்டத்தைத் தீர்த்திரட்சிக்கவேண்டுமென் றிரக் க, விநாயகர் கிருபையுற்றவராய் நல்லகாரியஞ் சத்தபாத லங்களிலிருக்கும் போகவதிநீரைத் தருவிப்போமோ, ஆ காயகங்கைமுதலிய தீர்த்தங்களையழைத்து உதவுவமோ? சுத்தோதகக்கடலை வரச்செய்வமோ? இவற்றுள் உனக்கு வேண்டுவதைச் சொல்வாயெனக் கடாட்சித்தபோது மக வான் கரங்களைக்கூப்பிச் சுவாமி? உலகங்களிலிராநின்ற பிராணிகள் வேண்டியவை அனைத்தையுந் தரவல்லபிரம ன்விஷ்ணு உருத்திரஸ்வரூபமாகிய புராதனக்கடவுளே? இவை தேவரீருக்கு அரியனவோ இத்தீர்த்தங்களில்எத னையும் வேண்டினவனன்று என்மனம்விரும்பிய தொன் றைக்கேட்டருள்க.

உலகத்திற்சிறந்த மேருச்சாரலைக்கடந்துவந்து சகலரு க்கும் அதிகதுயரைச்செய்திருந்த பாதகியாகிய அசமுகி பிள்ளைகளைக்கொன்றபாதகம் நிவாரணமாதற்பொருட்டுக் கொங்குதேசத்தைச்சேர்ந்து பரமசிவத்தின் பாதாரவிந்த ங்களில்வழிபட்டிருக்கும் அகஸ்தியர்கமண்டலத்திற் கா விரியென்னுஞ் சிறந்ததீர்த்தமிருக்கின்றது தேவரீர்கிரு பையுற்று அவ்விடத்துக் கெழுந்தருளி அக்குண்டிகை யைக் கவிழ்ப்பீராயின் அந்நதிபெருகி யிப்பூஞ்சோலை யிற்பாயும் அதனல்தமியேன் குறைகள்நீங்கித் தன்னிய னுவேனென்று சதமகன்வேண்டப் பிள்ளைப்பிறையும்வீ ரபட்டமும்விளங்கும் மத்தகம்பொருந்தியகஜமுகமுடை ய ஐங்கரன்நகைத்து அப்படியேமுடித்துத் தருவோமெ ன்றருளி இந்திரனைநிறுத்தி வேகமாய் அகஸ்தியரது ஆ சிரமத்திற்குச் சமீபத்திற்சென்றுகாக்கைஉருவமாகிஅத் தீர்த்தத்தைப் பரமன்கடாட்சித்தவிதமும் அதற்கடுத்த காரணத்தையும் யூகித்தறிந்து பறந்துவந்து அகஸ்தியர்க மண்டலத்தின்மேல் உட்காந்திருந்தனர். கும்பமுனிக்கு க்கணபதியென்பது தோற்றுமற் காக்கையிறங்கியதென் றெண்ணிக் கரத்தைநீட்டிப்போபோவெனத்துரத்தினர். அப்பொழுது கயமுகாசுரனைக்கொன்ற கஜானனர் குண்டி கையைத்தள்ளித் தேவராசன்கோரிக்கையின்படிக்குப் பூ மியிற்பெருகக்கடவாயென் றனுக்கிரகஞ்செய்தனர். தட் சணமே பூர்வத்திற் ஸ்ரீகாஞ்சிபுரத்தில் தவம்புரிந்த பார் வதிதேவியார் பத்தியைவிளக்கப் பரமசிவந் திருவுள ங்கொண்டு வரவழைத்த கம்பாநதியைப்போலக் காவிரி வெள்ளமானது மண்விண்ணெங்குமடங்க ஆர்ப்பரித்து உலகத்திற்சென்றது. பின்புஉமைமைந்தனுகிய விநாயக ர்காக்கைவடிவுநீங்கி வேதபாராயணராகிய பிராமணப்பி ள்ளைவடிவுகொண்டு போவதைத் தவங்களிற்சிறந்த அக ஸ்தியர்கண்டு பிரளயகாலருத்திரனைப்போலஉருத்தெழு ந்து இவ்வஞ்சகன் தேவனே! அவுணனே! அரக்கனே! இன்னனெனத் தோற்றவில்லை. அருமையாகப்பெற்றுஇ துவரையினும் காத்துவந்தநதியைக் கவிழ்த்ததுமன்றியி ல் அம்மம்ம நம்மையும்மதியாமல் அகந்தைகொண்டுகெ ம்பீரமாகப்போகின்றனே? எத்திறத்தானுயினும் இவன் வலியை யிந்நிமிஷத்திலறிகின்றேனென்று கோபித்துத் தொடர்ந்தபோது மெய்யாகவழிபாடுசெய்பவர் அல்லலை நீக்கியாளும் எமதிறைவன் பயந்தவனைப்போல வேகங் கொண்டுஓடுமுன்னிலையில்அகஸ்தியர்இரண்டுகரங்களும்

சேரப்பிடித்துத் தலையதிரக்குட்டநினைந்து பின்பற்றிவரக்கணேசர் ஒருதிருவிளையாடலைநினைந்துசமீபித்தவனைப்போலக்காட்டியும், வானத்தில்உலாவியுந் திசைகளிற்பாய்ந்தும், பூமியிற்றோற்றியும், கைக்கெட்டுபவனைப்போல நின்றும், தூரத்தில்விலகியும், இவ்விதமாகச் சகலருக்கும்மேலாகிய விநாயகர்எங்கும்உலாவித்தப்பித்துக்கொண்டு திரிகின்றபொழுது கும்பமுனிவரிளைத்து வலியடங்கிச்சோர்ந்து இவன் மாயவல்லபத்தை யளவிட்டறியக்கூடவில்லை இனியென்னசெய்வேனெனக் கவலைபட்டுவருந்துவதை விநாயகர்அறிந்து கருணைகூர்ந்து தமதுநிசதரிசனத்தைக்காட்டினர்.

அக்கோலத்தை முனிவர்கண்டு திடுக்கிட்டுக்கலங்கிக் கெட்டேன். அந்தோ? அச்சோ? இத்திருவிளையாடலைச் செய்யக்கணேசரோ திருவுளங்கொண்டு எழுந்தருளியகருத்தையறியாமல் நாயினேனுந் துறத்துவதோவென்று ஏங்கிவருந்திப் பிள்ளையாரைக் குட்டக்குவித்த கரங்களை நீட்டிக் கோடையிடியானது பருவதத்தின்மீதுவலியோடிடைவிடாமல் விழுவதைப்போலத் தமதுசிரம்வருந்தமாறிமாறி யிருகன்னங்களிலுங் குட்டிக்கொள்ளவும், தாரகப்பிரம சொரூபியாகிய வேழமுகக்கடவுள் மிகுந்ததயாரசத்துடன்பார்த்து ஓ! முனிவரோ? என்னகாரியஞ் செய்கின்றாய், நிறுத்தி உன்கருத்தைச் சொல்லுமெனக்கேட்கச்சுவாமி? தேவரீரைப் பிராமணப்பிள்ளையென்றெண்ணிச் சிரத்திற் குட்டநினைந்தனன். அப்பாதகந்தீரத்தக்கநாய்ப்பிராயச்சித்தஞ்செய்து கொள்ளுகிறேனென்று விண்ணப்பஞ்செய்யநகைத்து அகஸ்தியரோ? வருந்தவேண்டாம் நிறுத்துநிறுத்துமெனக் கையமர்த்தியபோது குட்டுவதைத் தவிர்ந்து கர்த்தன் பாதாரவிந்தங்களிற் பலமுறை விழுந்தெழுந்து அவர்குணாதிசயங்களைத் துதித்துத் தேவரீர்பெருமைகளை எவ்வளவுமறியாமற் செய்தகுற்றங்களைசிறிதும் நினையாமல் இரட்சிக்கவேண்டுமெனப்போற்றபேழைவயிற்றோனும் பரிந்து முனிவரனே யிதனைக் கேட்பாயாக. தேவேந்திரன் சிவபூசனைசெய்வதற்கு ஒரு நந்தனவன முண்டாக்கி யிருக்கின்றனன். அதுநீர்ப்பசுமையற்று வாடிச்சோர்ந்து துகள்படுவதைக்கண்டுவேறு கதியில்லாதவனாய் நம்மைப்பூசித்து வேண்டினன். ஆதலால் நாமும் காக்கையாகிவந்திறங்கி உன்குண்டிகையிலிருந்த நதியைக்கவிழ்த்துஅத்தலத்திற்பெருகவுங்கட்டளையிட்டனம், அதற்குப்பொறாமல் நீநமக்குச்செய்ததுகளைச்சற்றுங் குற்றமாக மனதில்நினையாமல்அவையனைத்தையும் உவப்பாகவே கண்டுமகிழ்ந்தனம், இவையனைத்தும் நமக்கொரு திருவிளையாடலாகுமல்லது கோபமில்லை. நீண்டசடாதரராகிய எம்மப்பனுக்கு நீசிறந்ததொண்டனாதலால் நமக்கும் அவ்வாறேயாவாய். இனியுனக்குவேண்டும்வரங்களைத் துரிதமாகக்கேளுந் தருவோமென் றருளக்கேட்டு, அகஸ்தியர் மனக்கவலையொழிந்து பிள்ளையார் திருவடிகளிற்சேவித்துத் தேவரீர் கிருபைக்கும் பாத்திரனாய்ச்சகலவினைகளையும் நீங்கிப்பிழைத்தேன். இனிமேலுந் தமதிடத்திலும் தமதடியாரிடத்திலும் அம்மையப்பன் திருவடிகளிலும்மிகுத்த பத்திவிளைந்து வழிபடும்பேற்றைத்தரவேண்டும், இதனையேபிரியமாகக் கோருகின்றனன்.

இஃதன்றியும் இக்காலத்தில் நாயினேன் செய்கையைப்போலவே யாவராயினும் இனிமேல் தேவரீரைவழிபட்டுக் குட்டிக்கொள்வராயின் தாயையொத்துப்பரிந்துகாட்சிதந்து ரட்சிக்கவேண்டுமென முத்தமிழையருளிய அகஸ்தியர் விண்ணப்பஞ்செய்ய, விநாயகர்களித்து அவ்வாறேதந்தனம், இதுவன்றியும் உன்மனதில் விரும்பியவைகளையுங் கேட்டுக்கொள்ளுகவென்றருளச் சுவாமி? அடியேன் அருமையாகப்பெற்றுக் கமண்டலத்தில்வைத்திருந்ததீர்த்தத்தைத் தேவரீர்கவிழ்த்தால்எள்ளின்பிரமாணமும்நில்லாமல் முழுவதும் பூமியிற்பெருகிப் போய்விட்டது. ஊனும்உயிராய் உலகாய்எங்கும் பரிபூரணமாய்நிறைந்திருக்கும் நிமலன் தயைசெய்து கடாட்சித்த காவிரியைப்போன்ற பவுத்திரமாகிய தீர்த்தம் யான்மூழ்கத்தக்கதொன்றை இனிஎங்கேனுஞ் சம்பாதிக்கமாட்டுவேனோ! ஆதலால்தேவரீர் கிருபையுற்றுக் குற்றமற்ற பொன்னியை அடியேனுக்குத் தரவேண்டுமெனப் போற்றினர். உடனேமேகமானது சமுத்திரத்திலிறங்கியதைப்போலத்தமதுதுதிக்கையினைநீட்டிக் காவிரிப்பெருக்கின்சலத்தினைக்கிரகித்து அகஸ்தியர் கமண்டலத்தில்விட்டனர். மற்றப்பிரவாகமெல்லாம் பூமியிற்பெருகிப்போயிற்று குண்டிகையிற்பூரித்த நீரானதுபழையபடிக்குஒலித்துப்பூரணமானதைக்கும்பமுனிவர்கண்டு அற்புதமடைந்து ஆனந்தபரவசராய் மொழிகின்றனர். ஓடிப்போகின்றபுனலிற்சிறியஅளவை நீரையிதனிற்சொரிந்தனர்.அஃதுயதாப்பிரகாரமாயிற்று வல்லவராயினும் யாவர் இப்படிச்செய்பவர். பிரமன், விஷ்ணு, உருத்திரர்கள் வந்தித்துப்போற்ற அவர்கள் கோரிக்கையின்படிக்கு வரங்களைத்தந்தருளியும், முதன்மையாகிய பிரணவப்பொருளாகவும்விளங்கும்நமதுஐங்கரற்கு இச்செய்கைஅரியதோவெனக் கொண்டாடி பாதாரவிந்தங்களில்வீழ்ந்து வணங்கிநாயினேனுக்குயாதொருகுறைவுமில்லாமற்கவிழ்ந்தோடியகாவிரியை உதவிரட்சித்தீர். மூலாதாரக்கடவுளே, தேவரீர் பரிபூரணகடாட்சத்தினால் வளங்களெல்லாம்பொருந்தி யீடேறினேன். இதுமுதல் சுவாமிகளைச்சிந்திக்கும்போதெல்லாம்மறவாமல் எழுந்தருளி யிரட்சிக்கவேண்டுமென் றிரக்க, வல்லபைமணாளனும் அவ்வாறே செய்யக்கடவோமெனத் தேற்றிப்பலபூதகணங்கள் சூழ்ந்துவரச் சகலருங்களிக்கமறைந்தனர். அப்பொழுது குடமுனிவர் விம்மிதராய்ச் சராசரப்பிரபஞ்சங்களெவற்றினும்பொருந்தி நடிப்பிக்கும் ஆதிதேவர் புத்திரராகிச விநாயகர் திருக்கோலத்தைத் தியானித்துப்போற்றித் தமதுகமண்டலத்திற் குமிறியலைந்திருக்குங் காவிரியைப்பார்த்து நகைத்தவராய்த் தம்மைத்தொடர்ந்த பிரமஹத்தியைநீக்கிப் பவுத்திரமாக்கியகொங்குதேசத்தைக்கடந்து தென்றிசையைநோக்கிப் போயினர்.

## ·திருக்குற்றாலப்படலம்·

செற்றாலமுயிரனைத்துமுண்டிடவேங்மிர்ந்தெழலுஞ் சிந்தைமேற்கொள்,பற்றாலங்கதுநுகர்ந்துநான்முகனேமுதலோர்தம்பாவைமார்கள், பொற்றாலிதனையளித்தோன் புகழ்போற்றிமுகின்மேனிப்புத்தேள்வைகுங்,குற்றாலமாவதொருவளநகரைக்குறுமுனிவன்குறுகினனால்.

ஓ! சவுனகாதிரிஷிகளே? கேட்பீராக. அகஸ்தியர் இவ்வாறுகொங்குநாட்டைநீங்கிப் பூர்வத்திற் சகலரையுங்கொல்லவெழுந்த ஆலகாலவிஷத்தைப்பரிந்துண்டு பிரமாதி

தேவர்களுடைய பத்தினிமார் பொற்றாலிகளைக்காத்தாண்ட பரமேஸ்வரன் புகழினைத் துதித்துக்கொண்டுகௌமேகவண்ணனாகிய விஷ்ணு வாசஞ்செய்யுங்குற்றாலத்தைச் சேர்ந்தனர். அங்குஅச்சுதன் வாசஞ்செய்யும் ஆலயமொன்றுண்டு பூமண்டலவர்சிகள் அம்மம்ம இதையொத்தசிறந்தகோயில் பிரபஞ்சத்திலெங்குங் கிடையாதெனப் புகழ்வதுமன்றியில் தெய்வநாட்டினரும் அவ்வாறே கொண்டாடுவர். அத்தலத்திலிருக்கின்ற வயிணவப்பிராமணர்தமதுசாஸ்திரக் கிரமங்களை ஆராய்ந்தறிந்த மதத்தாலேதமதுமதசாம்பிரதாயமே மேம்பட்டதெனக்கருதி யிறுமாந்துஅக்கொள்கையினால் எமதிறைவனாகிய சிவனடியாரைக்கண்டால் ரவுத்திராகாரமாகக் கோபித்து இகழ்ந்து அவர்கள் முகத்தைப்பார்ப்பதும் மகாபாதகமென்றுஇவ்விதமார்க்கங்களை யனுசரித்தவர்களாய் வேதபாரகரென்பதொருசொல்லை மாத்திரந்தாங்கி தமது நெறிகளிலுங்கிரமமாக நடந்துகொள்ளாதவர்களாய் வீறியிருப்பதை அகஸ்தியர்தெரிந்து இவர்கள் மதாங்காரத்தைஅடக்கவெண்ணி அப்பழம் பதியின்வீதிகளைக்கடந்து விஷ்ணுவெழுந்தருளும்ஆலயத்துக்கருகில் வருவதை அத்தலத்தில்நெருங்கியிருக்கும் வயிணவர் தூரத்திற்பார்த்தவுடன் ஜென்மவயிரிகளைக்கண்டு பதைபதைப்பவனைப்போலப் பெருமூச்செறிந்து கோபித்தவர்களாய்இதனைச்சொல்லுவர்காணச்சகியாத ருத்திராட்சத்தையுந் திருநீற்றையுந் தரித்தவனாதலாற் றேவரனைவருங்காண உலகத்திற் பிட்சையேற்ற சிவனுக் கடிமையாகும் நீபவுத்திரமாகிய இத்தலத்தின் எல்லையையும் மிதிக்கக்கூடுமோ உன்கர்த்தன் ஓடேந்தினான் நீயுங் கரத்திற்கோலையுங் குடுவையையுந்தாங்கினாய் புத்தியீனனே? எமதுபெருமாள்வீற்றிருக்குந்திவ்வியதேசத்தில் நில்லாமற் சீக்கிரமாய்ப் புறப்பட்டுபோவாயென்று தூரத்துகின்றவர்மீது அகஸ்தியர் கோபியாமல் நகைத்து ஓ! பிராமணரே? வேதமார்க்கங்களையிகழ்ந்த நீங்கள் இவ்விடத்திலிருப்பதையான் தெரிந்தவனுமல்ல யாருஞ்சொல்லக்கேட்டதுமில்லை சற்சனாளிருப்பதாக நினைந்துவந்தோம் உங்கள் குணாதிசயங்கள் தெரிந்திருந்தால்வரவும் நினைக்கமாட்டோம், கோபிக்கவேண்டாம் இதோபோய்விடுகிறேனெனச்சொல்லியும் அப்பாதகர்மனம்பொறாமல் பாஷாண்டிக்கடிமைப்பட்ட .நீயிச்சிறந்தஸ்தலத்தில்வந்ததே மகாபாதகமாகுந் துரிதமாய்நடந்துவிடும்நடந்துவிடுமென்று முடுக்குகின்றவர்களைப்பார்த்துசத்தியமாகியவசனத்தையே சொன்னீர் மேலும் பூர்வாசாரியர்களினாற் பிரசித்தப்படுத்தியசாஸ்திரங்களின் துணிபும்இதுவேயாமென்றுதக்கன்மரபில்வந்தஅப்பிராமணனை நீங்கிவருகின்றவர் ஞானவான்களாற் புகழப்படுந் திருக்கயிலாய வரையைக் காவல்கொண்டிருக்கும் நந்திதேவர் உந்தித்தாமரை வாசியாகிய பிரமதேவர் தூர்வாசர்பிருகு கவுதமர் கண்ணுவர் ததீசி முதலிய தபோநிதிகள்சபித்த கொடுமை வீண்போவதில்லையென நினைந்து மனம்பொறாதவராய் உயிருக்குயிராய்நின்ற பரமேஸ்வரனை யிகழ்ந்து வசைபேசிய இவ்வயிணவர் மயக்கவாஞ்சையிற் பட்டிருக்கின்ற அகந்தையை வேருடன்களைவேனெனக் கிருபைக்கடலாகிய அகஸ்தியர்நிச்சயித்து பாதரசச்சுவடுபட்ட பொன்னைப்போல மாயைவித்தையினால் துவாதசத்திருமண், நெற்றிமுதல்விளங்கவுந் துளசிமாலை மார்பிற்புரளவும் பாகவதர்வடிவுகொண்டு விஷ்ணுவுக்கு உகந்ததாசனைப்போலத் திரும்பிதூரத்தில் வருவதை அவ்வாலயத்தைச்சூழ்ந்து நெருங்கி யிருக்கின்ற வயிணவர்கண்டவுடன் இவர்மகத்துவாகக்காணுகின்ற தென்றெண்ணிஎதிர்கொண்டு சுவாமி? தேவரீரைத் தரிசிக்கமுன்னம்என்ன தவஞ்செய்தனமோ வெனப்போற்றிப் பாதங்களிற்சேவிக்க நாராயணனுக்குப் பிரீதியாகவென்று வாழ்த்தித் தம்மைப்பணிந்தவரைப்பார்த்து ஓபிராமணசிரேஷ்டரேநீங்கள் ஆதிமூலமாகிய விஷ்ணுவினிடத்தில் மிகுந்தஅன்புள்ளவர்களெனப் பலர்சொல்லக் கேள்விப்பட்டு அதைக்கண்டு களிக்கநினைத்து, இத்தலத்தில் வந்தனம்இப்போது திருஷ்டாந்தமாகத் தெரிந்தது மன்றியில் இப்பூமண்டலத்தில் உங்களுக்குச் சமானமானவர் யாவருமில்லையெனத் தெளிந்தனம் இப்படிக்கொத்தவரை தரிசித்தமுயற்சியினால் நாமும்நல்லறிவைப்படைத்தோமென்றுகொண்டாடி வேதபாரகரே மோட்சவீட்டை எளிதிற்றரவல்ல கிருபாநிதியாகிய அழகர்கோயிலாகிய திருமாலிருஞ்சோலைமலையில் யாம்வெகுகாலமாயிருந்தோம் இப்போதுஅருளாளனாகிய தேப்பெருமாள் வாழும் அத்திகிரியிற்சில தினந்தவஞ்செய்திருக்க நினைந்துபோகின்றயாம்நமதுபெருமாள் எழுந்தருளியகோயில் இத்தலத்திலுமிருக்கின்றதெனமகத்துக்களாற் கேள்விப்பட்டு அப்பகவானைத் தரிசித்துப் பரவிப்போகும் விருப்பத்தினால் வந்தோமென்றவுடன் அவர்கள் கைவிரலினொன்றினாற்சுட்டி அதுதான்திருமாலிருக்கையெனக்காட்டக்கரங்களைக்கூப்பித்தொழுது விஷ்ணு வெழுந்தருளிய ஆலயத்திற் றுரிதமாகப் போய்ப் பத்திவினையத்துடன் மும்முறைவலம்வந்து செந்தாமரைக்கண்ணன் பாதாரவிந்தங்களிற் பணிந்துபோற்றி நிற்கின்ற பரமபாகவதர்களைப் பார்த்து இத்தேவனை வழிபட்டுக் கடத்தேற நமதுள்ளம் விரும்புகின்றதாதலால் அதற்குவேண்டுந் திருமஞ்சனமுதலிய திரவியங்களை விரைவிற்சேகரிக்கக் கடவீரென்றனர்.

அதனைஅருச்சகராக விருக்கின்றவயிணவர்கேட்டுச்சந்தோஷித்து நல்லகாரியம் அவ்வாறே தரக்கடவமென்று சிலரோடி சுத்தோதகம் பீதாம்பரந் திவ்வியபரிமளமிகுத்த துளசிதளம் புஷ்பமாலைகள் சுகந்தம் வீசுஞ்சந்தனக்கலவை புனுகு சவ்வாது தூபதீப நைவேத்தியமாதிய வகைகளைவேதவிதிப்படிக்குத் திரட்சியாகக்கொண்டுவந்து குறுமுனி முன்னம்வைத்துசுவாமி? உமதுதிருவுளப்படிக்குப் பூசனையை முடிப்பீரெனச்சொல்லிய வயிணவக்கூட்டத்தினைப் பார்த்தருளி ஓபரமபாகவதரேஇதுபரியந்தங் கண்ணனை நீவிர்வழிபட்டிருந்தீரன்றோ இத்தினம்யாம் அத்தேவனை அருச்சிக்கும்முறைமைகளை யாவருந்தரிசிப்பீர்களென்று திருமால் வீற்றிருக்கு மிடத்திற்போய் அறுகுகொன்றை கங்கைபிறைசர்ப்பமுதலியவற்றைத்தரித்து விளங்கும் அழகியசடாமண்டலத்தையுடைய எமதிறைவனாகிய சிவபிரானைப் பத்திவிசுவாசத்துடன் தியானித்து தமதுகுறியகரங்களை உலகையளந்ததிரிவிக்கிரமமூர்த்தியாகிய நாராயணக்கடவுளினது திருமுடியின்மீது வைத்து குறுகு குறுகு குற்றாலாவென்றழுத்திச் சிவந்த அரக்கினாற்செய்த பாவையானது அக்கினிசம்பந்தப்பட்ட காலத்தில் உருகுமாறுபோலக் குழையச்செய்துதிரட்டியுருட்டிச் சிவலிங்கவடிவமாக்கிப் பொற்றாமரைப் பீடத்திலுள்ள பிரமதேவனும் மகாவிஷ்ணுவும் உருத்திரரும் ஆகியமூவரும் ஒருருவாகியபரப்பிரமவஸ்துவைஸ்தா

பித்து பஞ்சாட்சரமுதலிய சகஸ்திரதிருநாம மந்திரங்க
ளையெடுத்து வாயாரத்துதித்துத்தாங்கொண்டிருந்த வயி
ணவக்கோலத்தைமாற்றிப்பழையபடியே விபூதிருத்திரா
ட்சம் விளங்குஞ் சிவவேடத்தினைத்தாங்கித் திருமஞ்சன
முதலிய திரவியங்களை மந்திரபூர்வகமாகச் சுத்திசெய்து
சிவநாமங்களையோதி அர்ச்சிக்கும்போது அவ்வாலயத்தி
னிடத்திருந்த வயிணவப்பிராமணர் இச்செயல்களைப்பா
ர்த்துச் சரீரம்புழுங்கக்கோபித்து ஒருவரையொருவர் பா
ர்த்து இதனைச்சொல்லுவார்கள் கண்டீர்களோ இம்மாயப்
பிராமணனைக் காணுமிடத்து, வடிவில்மிகவுங்குறியவன்,
திரிபுரதகனனுன உருத்திரனை வழிபடும் பாஷாண்டிக்
கோலங்கொண்டுமுன்னம்இவ்விடம்வந்தான்நாங்கள்கண்
டு இகழ்ந்துதுரத்தச்சற்றும் நில்லாமல் அஞ்சினவனைப்
போல வோடினவன் மாயவித்தையினுல் ஸ்ரீபாகவதவடி
வினைப்பெற்று அதற்குரிய நடைநொடி பாவனைகளையுங்
காட்டி மீட்டும்வந்து வஞ்சகசித்தனய் இச்சிறந்தசமைய
த்தையும் ஸ்தலவிசேஷத்தையும் நமதுதிருமாலின் கோ
லத்தையும் ஏககாலத்தில் அழித்தான் ஐயையோ யிதற்
கென்செய்வோம் மிகுத்தமாயன் வஞ்சகன்சூதன் தப்பி
த்துக்கொண்டுபோமுன்னம் பிடியுங்கோள்கட்டுங்கோள்
அடியுங்கோளென்று பலபலவசைகளைப்பேசிக்கொண்டு
சூழவளைந்து மேலிட்டுப் பிடிக்கவருவதை அகஸ்தியர்க
ண்டு கோபித்து கண்களிற்றீப்பொறிசிதற நோக்கிக் கட
லினிடத் தடங்கிநின்ற வடவாமுகாக்கினி மேலிட்டெழு
ந்ததைப் போல முனிபுங்கவனுக்குண்டாகிய சீற்றக்கன
லதிகரித்துப்பரந்து பலதிக்கினும் கோபங்கொண்டுவந்த
வயிணவரைச்சுற்றிக்கொண்டு தேகங்களைச்சுட்டுப் பொரி
த்துக் கரித்துவாட்டஎண்ணி துரத்தித்தொடர்ந்தமாத்தி
ரத்தில் ஏழைப்பிராமணர்என்செய்வர்அக்கொடுமைக்கு
ச்சகிக்கமாட்டாமல்அத்திவ்யதேசத்தினும் நில்லாமல்பூர்
வீகமாயிருந்த பதியையும் யிகழ்ந்து கைகாலொடியபல
திக்கினும் சிதறியோடி ஒளித்தனர். இவ்வாறு கடினசித்
தமுடையவயிணவப்பிராமணர் முற்றுந்தேசாந்திரிகளா
ய்ப்போயினர் திருக்குற்றாலமானது அத்தினமுதல்விஷ்
ணுஸ்தல மென்பதுமாறி சிவஸ்தலமாயிற்று. குறுமுனி
யும் ஆதிகர்த்தனுகிய சிவக்கொழுந்தை வேதவிதிப்படிக்
குச் சோடசவுபசாரங்களோடு அர்ச்சனைசெய்துவணங்கி
ப்போற்றி விடைபெற்று அத்தலந்தைநீங்கி தென்தேச
த்தை நோக்கிப்போய்ப் பலநகரங்களைக்கடந்துகடையில்
பொற்சன்னங்களையும் நவமணிகளையும்வாரிக்கொண்டுஅ
ருவிகள் பாயாநின்ற பொதியமலையைச்சேர்ந்து ஓர்சாரலி
ல் அமர்ந்தவராய் பரமேசுவரன் திவ்விய சரணாரவிந்தங்
களைக்கருதி அரியதவவிரதங்களைச் செய்திருந்தனர்கேட்
டீர்களோ சவுனகாதிரிஷிகளே யிதுவரையினும் மகரந்த
ங்களைவீசித்தேன்களையிறைத்துத்திசைகள்தோறும் பரி
மளிக்குந்திவ்வியமலர்கள்பொருந்தியபூஞ்சோலைகள்தோ
ப்புகள் நந்தனவனங்கள்முதலியசிறப்புகள் நெருங்கியிரா
நின்ற பொதிகை மலையில் அகஸ்தியர் சேர்ந்தவரையிற்
சொல்லினேம் இனிதேவேந்திரன்பரமசிவனைவழிபடுத
ற்குயோக்கியமாகிய பலவகைப் புஷ்பங்கள் அலர்ந்திருக்
கும் பூங்காவிற் காவிரிநதிபெருகிய விதமும்மற்றையசரி
த்திரங்களையுஞ் சொல்லுவோமென்றுசூதபுராணிகர் ஆ
ரம்பித்தனர்.

பூவிரிகின்றகாமர்பொ தும்பர்சேர்பொதியவெற்பிற்
ருவிரிகும்பத்தண்ணல்வந்திடுதன்மைசொற்று
மாவிரிகின்றசாதிவனத்திடைமலர்ப்பூங்காவிற்
காவிரிபோந்தவாறுமேனவுங்கழறுகின்றும்.

---

## இந்திரனருச்சனைப்படலம்.

---

கொடியுருக்கொண்டுமுன்னங்குண்டிகையிருந்தபிள்ளை
படிமிசையதனைத்தள்ளப்பட்டந்தகாவிரியின்றன்மை
விடலருந்தளையினீக்கிவியனெறிப்படுத்தலோடு
மடிகளினருளாற்செல்லுமாருயிர்போன்றதன்றே.

---

சிவபிரான் மூத்தகுமாரனுகிய விநாயகமூர்த்தியானவ
ர்ஆதியில் இந்திரன்கோரிக்கையின்படி காக்கையுருக்கொ
ண்டு அகஸ்தியர் கமண்டலத்தின்மீதிறங்கிக் கவிழ்த்தகா
லத்தில் அதனிடத்திருந்த காவிரிபூமியின்கண்பெருகிய
தோற்றமெவ்வண்ணம் விளங்கியதெனில் நீக்குதற்கரிய
காமக்குரோதலோபமோக மதமாற்சர்யமென்னுந்தளையி
னைக்கடந்து நன்மார்க்கத்திற் செல்லும்போது ஞானசாரி
யனெதிர்ப்பட்டு பஞ்சாட்சரப்பொருளி னுண்மையைய
னுக்கிரகிக்கச் சிவசாரூபத்தைப்பெறும் பிராணிகளைப்
போலலோகோபகாரமாகப்பாய்ந்தும்மந்திரபலத்தாலொ
ருவனாற் குடத்திலடைக்கப்பட்டிருந்த சர்ப்பமானது த
டைநீங்கினவுடனே வெளியில்பிரவேசித் தோடுவதுபோ
ல் வேகங்கொண்டுபாய்ந்தும் அஞ்ஞானஒழுக்கத்தை அ
ழிக்கவல்ல சிவபிரா னருளிய ஆகமத்தையும், வேத
ஒழுக்கத்தையுங் கிரமப்படிக்கு அனுசரித்த திருவ
டியைப்பெற்றவர் பெறும்ஞானவெள்ளத்தையும் எமது
கர்த்தனுகிய பரமன் கிருபாசமுத்திரத்தையும்ஒத்துமது
ரமிகுத்துப் பொருந்திய காவிரியானது பெருகியும் அள
வுபடாதசத்தசாகரங்களானவை பூமியினுல் அணைபட்டி
ருந்த தடையை நீக்க எண்ணங்கொண்டு அவற்றின்கரை
களைக் கரைத்து ஏகமாய்ப்பெருகி ஓவென்னுமிரைச்சலு
டன் பரவியதைப்போலப் பூமியெங்கும்பரந்து ஆர்ப்பரி
த்துக் கலங்கியோடியது.

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே தெளிந்தஅலைகளை
யுடையகடலைத்தினைப்பிரமாணமாகஉள்ளங்கையிலேற்று
ஆசமனஞ் செய்தத வசிரேஷ்டரான அகஸ்தியர் சிவபூ
சனைக் குதவியாக விச்சித்துவேண்டியகாலத்தில் தேவா
திதேவனுகிய பரமன் கிருபையுற்றுக்கொடுக்கச் சமுத்தி
ரத்தினை யேற்ற பெருமைபெற்ற கரத்திற்றுங்குங்கமண்
டலத்தில் தாங்கப்படுமானல்அத்திர்த்தத்தின், பெருமை
யை என்போலிகளால் உவமித்துப்புகழ்தற்காகுமோ இ
துவல்லாமல்பழையபடிக்குக் குறுமுனிவந்து மீட்டும் பு
சித்து விடுவானே வென்றுசமுத்திரமானது பயப்பிராந்
திகொண்டு இரைந்து பலமுகங்களாக அளவுபடாமல்பூ
மியின்கண்பரந்து ஓடுவதைப்போலப் பூஞ்சோலைகள்நந்
தவனங்களாதியாக வேருடன்பறித்து வாரிக்கொண்டு ஒ
லித்துச் செல்கின்ற காவிரிவெள்ளமானது சந்தனமரங்க
ளையும் அகில் விருட்சங்களையுஞ் சங்கினங்களையும் முத்
துகளையுங் கவரிகளையும் யானைத்தந்தங்களையும் பொற்ச
ன்னங்களையும்மணிவகைகளையும்அலை களினுல் மோதிக்

கொண்டுபோகும் கெம்பீரத்தையொக்கு:மிடத்து வருணராசன் இத்திரவியங்களை யெல்லாந் தேவேந்திரனுக்கு வெகுமதியனுப்புவதை யொக்கும் இஃதன்றியுந் தேர்களைப்போலப் பாரித்தோங்கிய மலைகளையும் மதயானையினங்களையும் வேடர்முதலிய மனிதரையும் அலைகளை யொத்துத் தாவுங் குதிரைக் கூட்டங்களையும் அணிபடவாரிக்கொண்டு விண்ணகத்தைத்தாவி வேகமாய்ப்போகின்றது எதையொக்குமென்றால் சூரபன்மன்கோபித்துத் தேவராசன்மீது சண்டைசெய்யஏவியசேனைசமுத்திரவெள்ளத்தனை யொக்கும் இவ்வித சிறப்போடு ஆகாயத்தையளாவ அலைகளைவீசிப் பலகாதவெல்லை யளவாகப்பரந்து பூமியைமூடிக்கிழக்குத்திசையைநோக்கிப்பெருகுங்காவிரிவெள்ளமானது தேவேந்திரன்வாசமாய்சிவபிரான்வழிபட்டிருக்கும் வனத்தில் பரிமள புஷ்பங்களையுடைய பூஞ்சோலையிற்பாய்ந்து வாடிநின்ற நந்தனவனங்குளிர்ந்து பசுமையாகத்தோற்றுவதை மனவாட்ட முற்றிருக்கின்ற மகவான்கண்டு மனம்பூரித்து ஆனந்தக்கூத்தாடிதேகங்குலுங்கநகைத்து எமதுகர்த்தனாகிய பரமசிவத்தின்அருச்சனையானது குறைவறநிறைவேறு மென்னும் மகிழ்ச்சியினாற் பரமனையும் விநாயக மூர்த்தியையும் வேதாகமவாக்கியங்களினாற்றுதித்து பாதகமலங்களைத்தியானித்து வணங்கிக்கவலையற்றுத் தனதுகஜேந்திரச்செல்வக் செருக்கை யொழித்து நீங்காததிரிலோகவாழ்க்கையின்பத்தை மாற்றிப் புவனங்களிலெங்கும் புகழச்சகல சிறப்பையும் பெற்றுவிளங்கும்பொன்னுலகவாழ்வையும், வேரோடுபறித்துக்கொண்டதுமன்றியிற்றனதுபிராணனுக்கும்முடிவைத் தேடியிருக்கின்ற சூரபன்மனை ஜயித்துஇவ்வகை மேன்மையான அயிஸ்வரியங்களைப் பெற்றவனைப்போல அளவற்ற சந்தோஷத்திலாழ்ந்தவனாய்முகமலர்ந்திருந்தனன்.

அத்தருணத்தில் இந்திரன் கொண்ட மேலான மகிழ்ச்சி யிவ்விதமென்று யாவராற்சொல்லப்படும்இவைநிற்கத் தன்னிடத்தின் மூழ்கினவனைமுத்தியிற்சேர்க்கும்படியான மகத்துவமுள்ள காவிரிப்பெருக்கானதுபாய்ந்த மாத்திரத்தில் தேவேந்திரன் மனதைப்போலவாடிச் செழிப்பற்றிருந்த நந்தனவனமானது அந்நிமிஷத்திற் றழைத்துத் தேகத்தைவாட்டும் பசிப்பிணியினால் வாடியிருந்தவருக்கு பெறுதற்கரியதேவாமுதந் தற்செயலாய்க்கிடைத்துண்டு களித்ததைப்போலக் குளிர்ந்துதளிர்த்துநின்றதன்றியும் வானத்திற் பரவிய மேகங்கள்பொழியுந்திவலைகளின் பரிசம்பட்டவுடன் காட்டினிடத்தி லிராநின்ற விருட்சங்கள் புதர்கள் கொடிகள்முதலானவை தளிர்த்துவிளங்குவதுபோல சதமகன்வைத்தகாவிற் றங்கியபூஞ்செடிகள்தழைத்துக்கிளைத்துபுஷ்பித்துப் பரிமளித்துத் தேனைச் சொரிந்துநின்றன அவற்றுள்வானத்தையளாவவளர்ந்தோங்கி யிருக்கின்ற புன்னை விருட்சங்கள்முற்றினும்மலர்களையரும்பி நின்றகாட்சியானது ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் பிரகாசத்தையுடைய முத்துத்தாழ்வடங்களைத் தேகமுழுவதும்அணிந்திருப்பதையொத்துங் குளிர்ந்துபசிய விலைகள்பொருந்தியபுன்னைமரங்கள் பார்ப்பதற்கழகாகக் கிளைத்திருக்குங் கிளைகள் முறியும்படியாகபுஷ்பித்ததோற்றமானதுபற்பல நட்சத்திரக்கூட்டங்கள் ஜொலிக்க ஆகாயத்தினிடத்தில் மேகசாலங்கள்விளங்குவதைப்போலிருந்தது கீதங்களைப்பாடியுலவும் வண்டினங்கள் முகரப்படாத திட்சணியமுள்ளசண்பகத்தருக்கள்மலர்ந்திருப்பது பொன்னினாற் செய்யப்பட்ட மலர்களைத்தாங்கிநின்றதை யொத்தும்மேகங்கள் தவழுமுன்னதமுள்ளதாகவளர்ந்திருக்கும் பாதிரிமரங்கள் வண்டினங்கள்தொனித்திறங்கித்தேனையுண்ணப் பூத்திருப்பதுவசந்தகம்மியன்அவ்வண்டினங்க ளூதும்படியாகச் செய்துவைத்தபலசிறு சின்னங்களைப் போலத்தோற்றவும் வானத்தைத்தாவ வளர்ந்திருக்குங்கோங்கு விருக்ஷங்கள் பூத்திருப்பதுஆகாயத்தில் விளங்குஞ் சூரியசந்திரர் நட்சத்திரங்களின்அழகைப் பார்ப்பதற்காகப்பூமிதேவியானவள் பலகண்ணாடிகளைத் தொகுத்துவைத்ததை யொத்தும் பொன்னைப்போல விளங்கும் மலர்களையுடையகொன்றையும் அழகியபூக்களையுடையகாயா மரமும்இருபாரிசத்தினும்நிற்க, நடுவில்சிவந்த தளிர்களையுடைய மாவிருட்சந்தோற்றுவதுஆதியில் பரத்துவநிச்சயத்தினைத்தாபிக்கும் பொருட்டு மகாவிஷ்ணுவும் பிரமதேவரும்வாதுகொடுக்கும்போது அவர்கள் சண்டையினையும் அஞ்ஞானவிருளையும் விலக்கநினைந்துமத்தியில் நின்றுதடுத்த பரஞ்சுடர்த்தோற்றம்போலவுஞ் சூரியமண்டலத்துக்கு மேலாகவளர்ந்து அசைந்திருக்குந் தெங்குகளின் பாளைகள்வெடித்துத்தொங்குங்காட்சியானதுபுவியில்வாசஞ்செய்யும்லட்சுமிகரம்பொருந்தியகன்னியர்கள் அணியத்தக்கதாகநீட்டியஆணிமுத்துகளின்கோவைகளைநிகர்த்தும்வயிரத்தினையொத்த மேனியும் மூங்கிலையொத்தவளப்பம் பொருந்தியபசியகமுகுகள் பாளைகளை விரித்து நிற்குந்தோற்றமானது பலரும் விரும்பத்தக்க குளிர்ந்த சோலையென்னும் பெண்ணுக்குஅளவற்றவர் சாய்மரைகளை வீசுவதுபோலவுஞ் செழித்தோங்கிநிற்கும் அலரிச் செடிகள் கிளைகள்தோறும் அபரிமிதமாகப் பூத்திருப்பது நாற்புயங்களையுடைய ஈசுரனுக்கு இந்திரனேற்றிவைத்த மணிவிளக்குகளையொத்துவிளங்கவுஞ் சிறுசண்பகம் மல்லிகையிவற்றின்மீது வல்லிசாதக் கொடிகள் படர்ந்திருப்பது கணவனைத்தருணமங்கையர் ஆலிங்கனஞ்செய்திருப்பதைப்போற்றோற்றவும், முல்லைகள்அரும்பியிருப்பது இதுவென்ன அதிசயம்பகற்போதினும்நாணமின்றிப் புருடனைத்தழுவுவது நீதியோ? கற்புக்கழகோவென்றேசி நகைப்பதைப்போற்றோற்றவும் மதுரமாகிய நீர்பரந்திருக்குந் தடாகங்களிற் கருங்குவளைமலர்கள் பசியதழைகளின் மத்தியில் அலர்ந்திருப்பதுஎப்படித்தோற்றுவதெனின்அதைச்சூழ நிற்கின்றதருக்களினது குளிர்ந்தநிழலின்கண்வீற்றிருந் தரசுசெலுத்தும்இந்திரனது ஆயிரங்கண்களைப்போலக் காட்டவுஞ் சமுத்திரமத்தியி லடங்கிநிற்கும் வடவாமுகாக்கினியானது கொழுந்துவிட்டு மேலோங்கிவிளங்குவதைப்போலச் செவ்வல்லியும் அரக்கினது நிறம்போல ஆம்பலும் வாவிகளிற் பூத்துப் பிரகாசிக்கவும் பொய்கைகளினிடத்தில்இலைகள் விரிந்திருக்க அவைகளின்மத்தியிற் செந்தாமரைகள்விகசித்திருப்பது அக்கினியானது புகைப்படலஞ்சூழ நீரினிடையிற் றவஞ்செய்திருப்பதை நிகர்த்துக்காட்டவும், இத்தகையசிறப்புகளைக் கொண்டிருக்கும் நந்தனவனத்தின்மத்தியில் தழைத்தோங்கிநிற்குந் தருக்களுங் கொடிகளும் புதர்களே முதலியவைகளிடத்திற் பலவிதபுஷ்பங்கள் அலர்ந்திருப்பது எப்படிதோன்றுமெனில் மாலைக்காலத்தில்விளங்குஞ்செவ்வானமும் அதன்மத்தியிற்றோற்றிய நட்சத்திரகணங்களின் காட்சியையொப்பநின்றது.

இவ்விதபலவளங்களைப்பார்த்துத் தேவேந்திரன்மனவெழுச்சிபெற்றானந்தவாரியின் முழ்கத்தக்கதாக பூஞ்சோலைமுழுவதும் பரிமளமிகுத்துப் புஷ்பித்திருப்பதைக்கண்டு உடனே தேவராசன்தேகபரவசனாய் ஆடிப்பாடிஅத்தகைய திவ்வியசுகந்தமலர்களைக்கொண்டு ஆதிதேவனாகிய உமாபதியை யருச்சிக்கவிருப்புற்றவனாய் பிராதகாலத்தெழுந்து நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு வண்டுகளிறங்கி முகராமுன்னம் புழுக்கடிமுதலிய குற்றங்களில்லாத பத்திரபுஷ்பவகைகளைக்குடலைகளிற் சேர்த்துக் காலையினும்மாலையினுங்கண்ணுதல் சந்நிதானத்திற்போய்ச் சகஸ்திரநாமங்களையோதி சோடசவுபசாரங்களுடன் அருச்சித்துவேதாகமவாக்கியங்களினால்வழுத்தி விருபாட்சன் திருவடிகளைத் தியானித்து வணங்கி இவ்வண்ணம் அத்தினமுதல் தேவதேவோத்தமனை ஆராதித்து அச்சண்பகவனத்தில் வாசமாயிருந்தான். கேட்டீர்களோ!சவுனகாதிரிஷிகளே? அவன்பத்திவயிராக்கியச் சிறப்புகளையிவ்விதமெனச் சொல்லவுங்கூடுமோ? அப்பொழுதுநடந்தசரித்திரங்களையும் விளக்குவோங் கேட்பீராகவென்று சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினார்.

---

## தேவர்புலம்புறுபடலம்.

அந்நாளதனிலவுணர்க்கிறையேவ
றன்னான்மிகவுந்தளர்ந்துசிலதேவ
ரெந்நாளிப்புன்மையெமைநீங்குமென்றிரங்கிப்
பொன்னாடுவிட்டுப்புவிதன்னிற்போந்தனரே.

---

இவ்விதமாக ஆயிரங்கண்ணன் அம்பிகாபதியைவழிபட்டுவரும்போது அவுணருக் கரசனாகிய சூரபதுமனிட்டகொடியபணிவிடைகளைச்செய்துதேகமும்மனமும்மிகவும் வருந்தியதேவர்களிற் சிலர் ஐயகோ! எக்காலம் இவ்வினைத்தொழில் எங்களைவிட்டு நீங்கப்போகிறதென்றிரங்கிவாடிதெய்வலோகத்திலுந்தாபரித்தி க்கப்படாமையால்அவ்விடத்தினின்றும்நீங்கிப்பூமியின்கண்வந்துமதுரமாகிய இயலிசைநாடகமென்னும் முத்தமிழுஞ் செழித்தோங்குந் தென்தேசத்தைச்சேர்ந்து மகத்துக்கள்புகழ்ந் வழிபடத்தக்கசிறப்புள்ள சீகாழித்தலத்தில் வீற்றிருக்கும் நந்தவனத்திற்போய் தேவராசனைக்கண்டு பரிமளமிகுத்த தாமரைமலர்போன்ற அழகியபாதங்களிற் பணிந்து போற்றித் தேவர்கோமானே? ஒப்பற்ற தருமத்தைமறந்து லோகங்களனைத்தையும் தமதுவயப்படுத்திக் கொடுங்கோல் செலுத்தும் பாபிகளாகிய இராட்சதர் வசத்தில்அடியோங்களைக்காட்டிக்கொடுத்துவிட்டு வந்துவிடலாமோ இது தேவரீருக்கழகோ? எமக்கு நீர்அரசனல்லவோ? பிறைபோன்ற தந்தங்களைப்பெற்ற யானைமுகத்தையுடைய தாருகாசுரனாலுஞ் சிங்கமுகாசுரனாலும் புவனங்களனைத்தையும் வாட்டி வருத்துவிக்கும் புலியொத்த சூரபன்மன்சிறையில் அளவுபடாத தேவர்கூட்டங்களாகிய பசுக்களையாதொரு ஆதரவுமில்லாமல் ஒப்பித்துப்போட்டு நீர் மாத்திரம்பிராணனைத்தப்பித்துக்கொண்டு இவ்விடத்தில் மறைந்திருப்பது நீதியோ உம்மையொத்த வீரருக்கடுப்பதோ? இதுவல்லாமல் பன்றி மான்மரை பசுமுதலியமிருகங்களின்மாம்சங்களையுஞ்சமுத்திரத்திலிராநின்றமகர மச்சவகைகளையுந் தேவரீரெனப் புகழப்பெற்றஎங்கள் தலைகள் மொட்டையாகும்படிக்குச் சுமந்துசுமந்துவலிபெற்ற அசுரரிட்ட தகாதஏவற்பணிவிடைகளையுஞ் செய்து மானங்கெட்டு அருமையாகக்கிடைத்த வேதாகமவிசாரணைகளையும் மறந்துவிட்டோம் ஸ்ரீகாளகண்டமூர்த்தியாகிய காலகாலனால் அளவிறந்த வரங்களைப்பெற்ற சூரபன்மனுக்குச் செய்யத்தகாத தொண்டுகளைநடாத்தினோம் ஒழுக்கம் நீதிபெறுதற்கரிய மானமுதலிய சிறப்புகள்முழுவதும் போக்கினோம் மிகவும் அலுத்தோம் இதுவல்லாமல் முற்காலத்திலுங் கஜமுகாசுரனிட்டதொழில்களைப்பலகாலஞ்செய்து வருந்தி முறையிட்டகாலத்தில் முக்கட்பிரானிரக்கமுற்று விநாயகமூர்த்தியைப்படைத்து அவனையும் எங்களுக்கடுத்திருந்த துயரத்தினையும் ஒழித்திரட்சித்தார். இக்காலத்தில் மீட்டும் பாதகனாகிய சூரனானவன் எங்களைவாட்டப் பொறுக்கப்படாமையாற் சிறந்தபொன்னுலகவாழ்வையும் இழந்து அலைகின்றனம் ஓ! அமரர்க்கரசனே? இனி எங்களால் சகிக்கமுடியாது முடியாது எப்போதுந் தேவரீரையேசரணென்றிருந்தயாங்கள்அவனாற்சோர்ந்து துக்கசாகரத்தில் அழுந்திவாடஉமதுபிராணனைமாத்திரம் முக்கியமாகவெண்ணி இத்தலத்தில்வந்து மறைந்து ஏற்றுவாகனனைப் போற்றியிருக்கின்றீர். ஓ! மேலவர்க்கிறைவனே? யிதுஉமக்குத்தகுமோ? அல்லது புகழிற்சேருமோ? உலகமுள்ளவுந் தீராதவசையன்றோ? ஆதலாற்சூரன்முதலிய கொடியஅசுரரானவர் தமதுவீரங்கெட்டு நாசமடைவதற்கும் இவ்வுலகின்கண் யாவரும்பழிக்கநாங்கள் பெற்றிருக்கும் இடையூறுகள்தீரும்படிக்கும் எதாவது ஒருபிரயத்தினத்தைச்செய்துமுடியாதோவெனப் பற்பலமுறைகளைச்சொல்லி வாடுவதை அவர்களுக்குத் தலைவனாகிய இந்திரன்கேட்டு தேவர்படும் மனவாட்டத்தையுந் துன்பத்தையு மறிந்துநெடும்போதுயோசித்து வருத்தப்பட்டு பெருமூச்செறிந்து சொல்லுகின்றான்.

மாயைபுத்திரனாகிய சூரபதுமன் அகோரதவங்களைச் செய்யயத்தனித்த அத்தினமேநமதுசுதந்தரங்களும்பொன்னுலகவாழ்வுந் தோற்றோமெனச் சொல்லவில்லையோ? அவ்வாறே தவமுடிந்தவுடன்பரமசிவகடாட்சத்தினால்அளவற்ற வரங்களைப்பெற்று நமதுவளங்களனைத்தையுங் கைக்கொண்டு மகதயிஸ்வரியங்களை யனுபவிக்கின்றவன் சமுத்திரத்திலுள்ள மச்சங்களைப்பிடித்துக் கொண்டுவரவும், மாம்சவகைகளைச் சேகரித்துவரவும், இப்பேர்ப்பட்டஇழிவானதொழிலையுங் கட்டளையிடுகின்றான்.அவைகளையுஞ் சகித்துக்கொண்டு நற்காலம் நேருகின்றவனாயினும் உபாயமாகநாட்களைக்கழிக்கலாமென்று நினைந்திருக்கும்போது மறுபடியும் ஏதோவொரு பாதகவினைவைக்கொண்டு இலட்சுமியையொத்த கற்பையுடைய இந்திராணியைக் கொண்டுவரவும், என்னைப்பற்றிச் சிறையில்அடைக்கவும் உத்தேசித்து தன்கொடியசேனைகளைப் பொன்னுலகத்துக் கனுப்பினான். இந்தரகசியங்களை அறிந்து நானும் மனைவியும் விண்ணுலகைவிட்டுக் குயிலுருவங்கொண்டு இத்தலத்தைச்சேர்ந்து ஒளித்துத் தவஞ்செய்திருக்கின்றனம் இவ்வுபாயத்தினையோசித்து முடியாமலிருப்பேனாகில் மீன்சுமந்த புழியோடு மானபங்கமும்நேருவதன்றியில் மீளாதசிறையிலும்பட்டுப் பலராலுந் தூஷிக்கவும்வரும் அப்படிக்குச் சம்பவிக்குமானால்பின்புபிரா

ணனைவைத்திருக்கவும் கூடுமோ ஆதலால்நமதுபகைவர்
களாகிய இராட்சதர்கள் குலநாசமடையவும நாமெல்லா
ந்துன்பம்நீங்கிச் சவுக்கியமடையவுஞ் சிவபூசையை யிரு
ப்பிடத்தில்முடிப்பது அரிதெனக்கருதி உங்களைச்சிலகா
லம்மிகுந்த துக்கசாகரத்தில் மூழ்கவிட்டு இவ்விடத்திற்
கங்காதரனை வழிபட்டுப்போற்றி யிருக்கின்றனன். நீவிர்
முறையிடுகின்றதைக்கேட்டுச் சகிக்கப்படாமையாலும் ந
மதுசுதந்தரங்களனைத்தையும்இழந்ததுமன்றியில்அவுண
ரால் மிகவும் அலைச்சற்படுவதாலும் நாமெல்லோருந் தி
ருக்கயிலைக்குச்சென்று புவனேஸ்வரருக்கு இவையனைத்
தையும் விண்ணப்பஞ்செய்து நமது துக்கங்களை நீக்கிக்
கொள்ளக் கடவோம்வாருமென்றனன். அவ்விசேஷந்தே
வர்கள்செவிகளில்நுழைய நீண்டமேகத்தைக் கண்டமயி
ற்கூட்டங்களைப்போல ஆனந்தமடைந்துதிரோகபரவசரா
ய்நிருத்தஞ்செய்து கைகளைக்கூப்பிக்கொண்டு தேவரீரை
அடியோங்களுக்குச் சிறந்தஅரசனாகவுங் குலதெய்வமா
கவும் ஞானசாரியனாகவுஞ் சகலசெல்வங்களாகவுந்தவப்ப
யனாகவும் பிராணனாகவும் இன்பதுன்பமாகவும் நம்பியி
ருப்பதால் நாயினேங்களுக் கொருபயமுமுண்டோ? மு
ற்காலத்தில்வெகுகாலமாகஅலைத்துப்பாதைபடுத்திக்கொ
ண்டிருந்த ராட்சதப்பாதகரனைவரையுங் காலமறிந்துதந்
திரவுபாயங்களினாற்கொன்று இன்றளவும் ரட்சித்தீர்தற்
காலத்திலும் வருத்தியலைக்கின்ற சூரன்முதலானவர்கள்
நாசமடையயோசிக்கின்றீர். சிறந்ததவசிரோஷ்டர்களுக்கு
ம் பலவளங்கள்பொருந்திய பூமண்டலத்தில் நீதிபரராக
அரசுசெலுத்திவரும் அரசர்களுக்கும் பாதலவாசிகளுக்
கும் ஏனையர்க்கும் உம்மையன்றி யாவர் துணையாகவிருக்
கின்றார்கள். தேவரீர்கட்டளையிட்ட பணிவிடைகளைமுடி
த்து உம்மையே போற்றியிருப்பது எங்களுடையகடமை
யாகும் எமதுவருத்தங்களை நீக்கிரட்சிப்பது உமக்கு
முறைமையல்லவோ ஆகையால் ஐயனே? அடியோங்க
ள் வருத்தங்களைத் தவிர்த்தருளத் திருக்கயிலைக்கெழுந்த
ருளவேண்டுமென வேண்டாநிற்க, இந்திரன் சம்மதப்ப
ட்டுத் தேவர்களை அவ்விடத்தில்நிறுத்தி அயிராணிவாச
மாகியதலத்திற்குப்போயினான்.

---

## அயிராணிசோகப்படலம்.

அன்னம்பொருவுநடையாளவன்வரவு
முன்னங்கெதிராமுறையாற்பலமுறையும்
பொன்னங்கழலிணையைப்பூண்டுவணங்கியெழீஇ
யென்னிங்கொரெண்ணமுடனேகிற்றிறையென்றாள்.

---

இவ்விதஎண்ணங்கொண்டு வருங்கணவனைக்கண்ட இ
ந்திராணியானவள் அன்னத்தைப்போல மெல்லநடந்தெ
திர்கொண்டு சேவித்து ஓ! பிராணநாயகா? யாதோஒருஎ
ண்ணத்தையுத்தேசித்து வருவதாகக்காணப்படுகின்றது.
அதுயாதுகாரணமென்றுவினாவியபோது, வச்சிராயுதபா
ணிநகைமுகனாகிப் பெண்களரசே? சூரனால்வருந்தியசில
தேவர்வந்து தம்முடையதுன்பங்களினைமுறையிட்டமை
யால் அவர்களிடரையும் நமதுசிறுமையினையும் நீக்கிக்
கொள்ளும்பொருட்டுத்திருக்கயிலாயத்துக்குப்போய் ஸ்ரீ
நீலகண்டருக் கிவையனைத்தையும் விண்ணப்பஞ்செய்து
அவர்அனுக்கிரகத்தைப்பெற்றுவர யத்தனித்தேன். அ
தனையுனக்குத் தெரிவித்துச்செலவுபெற்றுப்போக விரு
ப்புற்றுவந்தேன்என்ற வாக்கியஞ் செவிகளில் நுழைந்த
மாத்திரத்தில் வேடன்வலையிற் சிக்கிய மயிலைப்போலமய
க்கி துக்கசாகரத்தில் அழுந்திக் கணவன்பாதங்களில்வி
ழுந்து மூர்ச்சித்தனள். அதை இந்திரன்கண்டு மனவாட்
டத்துடன் ஆசானுபாகுவாகிய நீண்டகரங்களினால் வா
ரியெடுத்து மார்பில்அணைத்து மடியில்வைத்து கோபத்
தினையொழிப்பதாகச் சிலசயித்தியஉபசாரங்களைச்செய்த
மாத்திரத்தில்இந்திராணிக்குச்சற்றுத் தெளிவுபிறந்துமு
ன்னையவிசனமானது சூழ்ந்தலைக்க நடுநடுங்கி முறையிடு
கின்றனள். ஓ! பிராணநாயகா? சூரன்கொடுமைக்கஞ்சிப்
பொன்னுலகவாழ்வை யிழந்து பூமியின்கண்வந்துதவங்
களிற்சிறந்த மகத்துக்கள்சேவைசெய்து அவர்கள்அனுக்
கிரகத்தைப்பெற்றுத்தேவரீர் ஆதரணையில் இதுபரியந்த
ங்களித்திருந்தேன். பிரியமுள்ளநாயகரோ அடியாளைத்த
னிமையிற் பிரிந்துபோகத் துணிவீராயின்ஏழைக்குவே
றுமொரு துணையுமுண்டோ? மேலும், பகைவருக்குத்த
ப்பிப்பிழைப்பதெவ்விதம், ஓ! வுயிர்க்கொழுநனே? மேமி
ப்பட்சிக்கும் வானம்பாடிக்குங் குளிர்ந்தமேகமுஞ்சந்திர
னும் உதவியாகவிருக்கின்றதுபோல நீரல்லது என்சோ
பத்தினைநீக்கத் துணையாகவிருக்கின்றவர் அன்னியருமு
ண்டோ அல்லது உம்மைப்பிரிந்து தயிரியங்கொண்டு பி
ராணனோடிருந்தாலும் இச்செய்தியை விவேகமற்றராட்
சதர்அறிந்தால் கெடுதிநேருவதற் கையமுமு ண்டோ மே
லுஞ்சூரன்மனைந்திருக்கின்றவஞ்சகத்தைத்தெரிந்துபோ
கபூமியினது சுகத்தைமறந்து இவ்வரியகானகத்தில் வந்
தொளித்துத் தவஞ்செய்திருப்பது பழிக்குப்பயந்தல்ல
வா பலமாயையினையுடைய கொடியஇராட்சதப்படைவீ
ரர் தேடித்திரிகின்றனர்.

மேலும் பாதகங்களையல்லது தருமமென்பதை எள்ள
ளவேனும் அறியார்கள். பழிக்கும் அஞ்சார்கள் ஓ! பிரா
ணேசனே? யிவைதேவரீருக்குநன்றாகத் தெரிந்திருந்தும்
இத்தருணத்தில் நமதுபிரியமுள்ள குமாரனாகிய சயந்த
னு மிங்கில்லை தேவர்கள் உதவியுங்காணேன். அயிராவ
தமாவது சமீபத்திலிருக்குமாயின் சிறிது தயிரியங்கொள்
ளலாம், அதுபோனவிடமே தெரியவில்லை, அல்லதுஒரு
வல்பெற்ற பெண்துணையேனுமில்லை. யாதொருஉதவியு
மற்றுப் பேதையாகியஉமதுஅடியாள்கலக்கமின்றிதனித்
திருக்கக்கூடுமோ ஓ! ஆவிநாயகனே? கொடுமையே குடி
கொண்டிருக்கும் மனதையுடையராட்சதர்க ளென்னைக்க
ண்டால் தட்சணமே பிடித்துப்போய் என்னசெய்வார்க
ளோ இப்பழிபாவம் உம்மையன்றி யாரைச்சேரும் ஆத
லாலிவ்விடத்தில் தேவரீரைப்பிரிந்து ஒன்றியாயிருக்கச்
சகியேன் தேவரீருடன் லோகநாயகியோடு பரமசிவமெ
ழுந் தருளியிருக்கின்ற திருக்கயிலாயத்துக்கு வருகின்
றேன் போவோம் வாருமென்றெழுந்து விழிகளில் நீர்
சொரிய நிற்கின்ற இந்திராணியை தேவராசன் இரக்க
மாகப் பார்த்து என்மனதுக்கினிய பெண்ணமுதமே, நீ
குறித்ததனைத்துந் தகுதியேயாமென் றவளை அணைத்து
முத்தமிட்டு ஓ! பிராணநாயகி தயிரியத்தைவிட்டுப் பயங்
கொள்ளவேண்டாம் வருந்திவாடுகின்ற தேவர்களோடு நா
ன்வெள்ளியங்கிரிக்குப்போய்த் திரும்புகிறவரையில்உன்
னைப்பாதுகாக்கத் தகுதியானவர்க ளில்லாவிட்டாலல்ல

வோ நீஎன்னுடன் தொடரவேண்டியது ஆதியில்ஒருகாரணத்தினல் மகேசுவரருக்கும் மகாவிஷ்ணுவுக்கும் உற்பவித்து உலகங்களைப்பாதுகாத்துவருகின்ற அரிகரபுத்திரர்நமக்கொருகாவலாகவிருக்கவிசனப்பட வேண்டியகாரணமென்னை அத்தேவனைத்துதித்தழைத்து நான்கயிலைக்குப்போய்வருமளவும் கண்ணிமையைப்போலக்காத்திரட்சிப்பதாகஉன்னை அந்தஐயனர் வசப்படுத்திப்போகவிருக்கின்றேன் வலியிற் சிறந்த ஐயனர் உனக்கொரு துன்பமும்வராமல் காப்பாற்றுவார்இனிசுகமாயிருக்கக்கடவையென்று பற்பலஉறுதிகளைச்சொல்லித்தேற்றச்சசிதேவியானவள் ஒருமித்துநல்லகாரியம் அக்கடவுளினதுவரலாற்றைச் சாங்கோபாங்கமாக வெனக்குத் தெரியும்படிக்கு அனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்றுகேட்கவலாரிஅப்படியேகேட்பாயெனத்தெரிவிப்பதாயினன்.

## மகாசாத்தாப்படலம்.

முன்னம்பரமனருளின்றிமுகுந்தனுதி
மன்னுஞ்சுரர்தானவர்வேலைமதித்தவேலைக்
கன்னங்கரியவிடம்வந்துமிழ்க்காரினங்க [ர்
டுன்னும்பொழுதிற்குயில்போற்றுணுக்குற்றிரிந்தா

கேளும்பெண்கள்நாயகமே!முன்னொருகாலம்பரமசிவனருளைப்பெருமல் மகாவிஷ்ணுமுதலானவர் அமுதமுதலியவளங்களைப்பெறநினைத்துத் தானவர்களோடுசேர்ந்து மந்தர கிரியினைக் கொண்டுவந்து மத்தாகநாட்டித் திருப்பாற்கடலைக் கடையும்போது கயிறாகவிருந்த வாசுகிக்கு அவ்வருத்தம் சகிக்கப்படாமையால் ஆவலித்துப் பெருமூச்செறிந்து சீறிக்கக்கிய விஷமும் மந்தரகிரியைத்தாங்கி நின்றஆமையினது முதுகோடுஅரைபட்டு உரைபட்டுக் கிளம்பிய தீயுங்கலந்துஆலகாலமெனப்பெயர்பெற்றோங்கிக் கொடிய வெப்பத்தைவீசிச் சுவாலைமிகுத்துத்தகித்துவரக்கண்ட விஷ்ணுபிரமன்இந்திரனுதியாகிய தேவர்கள் நடுக்கமுற்றுஇடிமுழக்கத்தைக்கேட்டகுயிலினம்போலக் கலங்கித்திசைகெட்டோடி வேறுகதிகாணுமல்திருக்கயிலையைச்சேர்ந்து நந்திதேவர்அனுமதிபெற்றுப்பூதநாதனைத் தரிசித்துப்போற்றித் தமக்குற்றவருத்தத்தை முறையிட அவர்களிடத்தன்புகூர்ந்து பயப்படாதீர்களென்று ஆதரித்திருத்திஅக்கொடியவிஷத்தை உளங்கரித்துக் கரத்திலேற்றுண்டு கண்டத்தில்நிறுத்திப்பின்பு விஷ்ணுமுதலயோரைக் கிருபையாசப்பார்த்து நீங்கள்மறுபடியுஞ் சென்று திருப்பாற்கடலைக்கடைவீராயின்உங்கள்கோரிக்கையின்படி அமுதமுதலியவை உதிக்குமெனத் திருவாய்மலர்ந்தருளிய கட்டளைப்படிப் பரமனைச் சேவித்து விடைபெற்றுச்சென்று கடையும்போதுமுதலில் கணபதியை ஆராதித்து ஆரம்பிக்காத காரணத்தினல்மந்தரகிரியானது தத்தளித்துக்கவிழ்ந்துபாதலத்திலழுந்துவதைக்கண்ட மகாவிஷ்ணுமுதலியோர்கலக்கமுற்றுவிநாயகமூர்த்தியை முந்திவழிபடாமையால் இவ்வாபத்துகள் சம்பவித்ததெனத் தெளிந்துபயபத்தி விசுவாசத்தோடு கணேசனைப்பூசித்து நிவேதனங்களைப் படைத்து அக்கடவுளினதுஅனுக்கிரகத்தினல் பாதலத்திலழுந்தியமந்தரத்தையெடுத்து நிலைபெறநிறுத்தி மீண்டுங் கடைந்தபோதுசிந்தாமணி பதுமநிதி சங்கநிதி அயிராவதம் கற்பகத்தருகாமதேனுமுதலிய வளங்களின் மத்தியில்பூரணச்சந்திரோதயத்தைப்போல அமுதமானது தங்கக்கும்பத்தில் சோதிமயமாகப் பிரகாசித்துக் குளிர்ச்சியாக வருவதைக்கண்ட அவுணர் இராக்கதர்தேவர்முதலியோர் தமதுதமது வல்லபங்களினல் உண்டாயதென்றுஒருவருக்கொருவர்முற்பட்டுச் சென்று எமதுஎமதென்றுகலகப்பட்டுவாதாடுகின்றதைமகாவிஷ்ணுகண்டு அவர்கள்கைகலப்பதற்குமுன்னம் விலக்கநினைந்து தமது மாயாசக்தியினல்ஒரிமைப்பொழுதில் ஜகங்மோகினிக்கோலங்கொண்டுநிற்கின்றதிரிலோகங்களினும் பார்க்கக்கிடையாத அப்பெண்ணரசியினது சவுந்தரியவடிவைக்கண்ட மாத்திரத்தில் அசுரர்காமிகளாதலால் அமுதத்தினைவிரும்பாமல் மோகினியைவளைந்து பற்களைத்திறந்து நகைமுகராய் நிமைகொட்டாமல் பார்த்துக்கொண்டிருந்தனர் விவேகசாலிகளாகியதேவர்களும் மயக்கமுற்றுத் தெய்வமோகினியைச் சூழ்ந்து வாய்நீரையிழுக்கிச்சித்திரங்களைப்போல அசைவற்றுப்பிரமித்துநின்றனர்.

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே மண்ணசைபொன்னசைக்கு மேலான பெண்ணசையைநீக்க ஐம்புலன்களையும்வென்ற மகத்துக்களாலும் அரிது அப்படிக்கிருந்திறவருங் காமியராகமேல்விழுந்து வருகின்றதை செகன்மோகினி யானவள் மான்விழியினையொத்தகண்களைச் சுழற்றிப்பார்த்து கோகிலமும் நாணத்தக்கதாக ஒருவார்த்தைசொல்லுகின்றுள் தேவர்களே அவுணர்களே நீவிர்ஏன்போராடிச்சாகின்றீர்நானொருபுறம்நிற்கின்றேன் அமிர்தமொருபுறம் வைக்கின்றேன் இவற்றில் உங்களுக்கு வேண்டியதைப் பெற்றுக்கொண்டு அனுபவித்துக்களிப்பீர்கள் இதைப்பார்க்கிலும் உங்களுக்கு உறுதிவேறில்லையென்று சொல்லக்கேட்ட தானவர் அசுரர் காமிகளாதலால் அவசரப்பட்டு ஓபெண்கள்சிகாமணியே நீதான் எங்களுக்குவேண்டும் அமிர்தமானது உமதுவாய்மொழிமதுரத்தினும் மேலானதோவென்று சூழ்ந்துகொண்டார்கள் ஜகதீசனருளினல் தேவருக்கு நல்லுணர்வுதோன்றிஅமுதத்தினையே யிச்சித்து வளைந்தெடுத்துக்கொண்டு ஒருபுறத்தில்நின்றனர்தேனையும் பாகையும்பழித்தமாதுரியமாகிய குதலைச் சொல்லையுடைய மோகினியை அசுரர்சூழ்ந்துகொண்டிருக்க அவர்களின்மீது பெண்கள்சிகாமணியானவள் விழிகளைப்பரப்பிப் பரிமளித்துத்தேன்களொழுகாநின்ற குளிர்ந்த மலரணையில் என்னையணைத்துப்புணரவல்ல ஒருசுந்தரவீரனையின்னமுங்காணேன்காமவிகாரத்திற்பட்டு வருந்துகின்றேன் தாமதப்படாமல் இன்னுனென்று வெளிப்படுவீரென்று மோகினியாகநின்ற கள்வன்சொல்ல நாசமடையவிருக்கின்ற தானவ வீரர்களிவ்வசனத்தினைக்கேட்டவுடன் எனக்கொருவரும்நிகருண்டோ நானேசுத்தவீரன் நானேசுத்தவீரனுகுமென்று தனித்தனியாகச் சபதங்கள்பேசி என்னிடத்துவரக்கடவாய் என்னிடத்திரக்கமுற்றுவரக்கடவாயெனச்சூழ்ந்து காமவெறியினல் சுற்றமென்றுந் துணைவனென்றும் பாராமல் வயிரமிகுத்து ஒருவருக்கொருவர் சண்டைசெய்துமாண்டனர் தீக்கடைக்கோலி லுதித்த அக்கினியானது தன்கிளைகளாகிய விருட்சவகைகளைக் கொளுத்துமாறுபோல ராட்சதர் தங்களுக்குள் சண்டை கொடுத்துச் சாம்பலாக மாள்வதை அவர்களி லிருவர்கண்டு திடுக்கிட்டு இஃது

விஷ்ணுவினதுவஞ்சகமேயாகும்விண்டிச்சாவதிற்பலனென்னையென்று நிதானித்தவர்களாய் தேவர்களுருவங்கொண்டு அக்கூட்டத்திற்கலந்து மறைந்திருந்தனர் அக்காலத்தில் மாயைக்கரசியாகிய மோகினியானவள் ராட்சதர்முற்றும் மாண்டவுடன் தேவகூட்டங்களை அணிபடநிறுத்தி அமுதத்தினைப்பகிர்ந்து கொடுத்துவருகின்ற தருணத்தில் அவர்கள்மத்தியில்மாறுருக்கொண்டு நிற்கின்றதானவக்கள்வர் நீட்டிய கரங்களில்அமுதினை விட்டமாத்திரத்தில் மந்திரபூர்வகமாக உட்கொள்ள மல்பயபீதியினற்றுரிதமாகப்புசிக்கப்பக்கத்தில் நிற்கின்றசந்திரசூரியர்தனைக்கண்டிவர்கள்ராட்சதரென்று நிதானித்துஇதற்கென்னசெய்வதென்று சற்றுயோசித்து மோகினி வேஷத்தைத் தாங்கிச் செல்லும் திருமாலுக்கு இத்தந்திரத்தை கண்சைகையினற் காட்டினர் உடனேதமதுகரத்திற்பற்றியசட்டுவத்தினால் அவர்களின்சிரங்களைக்கொய்துதள்ளிப் பின்பு தேவர்களுக்குப்பகிர்ந்து கொடுத்தார். மேற்குறித்த இரண்டு ராட்சதர் கழுத்துமட்டும் அமுதம்படிந்ததால் உடலழிந்துந் தலைகள்சீவித் திருக்கஇவர்களுக்குநாசமில்லாமல் பகவதநுக்கிரகத்தினால் சத்திரபதவியிற் சேர்த்தனர் பின்பு அவர்களும் விஷ்ணுவைநோக்கித் தவஞ்செய்து அப்பகவனது கடாட்சத்தினால் செம்பாம்புகரும்பாம்புகளாகஇராகுகேதுவென்னும் நாமங்களைப்பெற்றுத்தங்களைக்காட்டிக் கொடுத்த சந்திரசூரியரைக்காலங்களில் மறைப்பர் இதனைக்கிரகண புண்ணியகாலமெனவுஞ்சொல்வார்கள்மேலும்நவக்கிரகங்களினுங்கலந்திருக்கின்றனர்.

இவைநிற்க அமுதமுண்டதேவர்மோகினி வேடத்தினைத்தாங்கி நம்மைப்பாதுகாத்துரட்சித்தவர்விஷ்ணுவென்றறிந்து அவரைப்பின்பற்றிப்போற்றிவருபவரைவிடைகொடுத்தனுப்பியபின்பு அத்தலத்தினைநீங்கித்தமதிருப்பிடமாகிய திருப்பாற்கடலில் விஷ்ணுவானவர்எழுந்தருளினார் அக்காரணத்தையறிந்து சிவமூர்த்தியானவர்நவசத்திகளில் விஷ்ணுவும் ஒருருவாதலால் அதனைச் சகலருக்குந்தெளிவிக்கும் பொருட்டுத்திருவுளங்கொண்டியாவர்களும் மோகிக்கும் பிச்சாடனப் படிவங்கொண்டுவேதங்களையோதித்திருப்பாற்கடலினருகில்வந்துமோகினியைக்கண்டு மான்போலும் விழியினையுடைய ஓ மாயா சிரோமணி உம்மைப்புணரும் இச்சைநமக்குண்டாயது நீகொண்ட திருவுருவம் மஹாசுந்தரமாகவிருக்கின்றதென்றவாக்கியத்தைக்கேட்டமோகினியானவள் உமது திவ்வியதிருமேனியில் எப்பொழுதுங்காணியாகவிருக்கின்றவுமையவள் நகையாளோ திருமுடியிலுள்ள கங்கைபரியாசஞ்செய்யாளோ நீரென்னையிச்சிப்பதுதகுதியோ ஆதியிற்பிரம சிருட்டி விருத்தியடைய நான்சத்தியுருக்கொண்டு வந்ததுகாதலோ உமக்குவெறுப்பு விருப்பில்லையாதலால்நீர்பெற்ற இச்சையையும் நிச்சயமாயொழித்துவிடும் நீர்நினைந்துவந்த காரணம் எனக்குத்தோற்றவில்லை தேவரீர் திருவிளையாடல்கள்தேவரீரல்லது மற்றையாவரால் அறியப்படும்மேலும் புருடர்புருடரைக்கலந்துசுகித்தலைக்கண்டதுமில்லையாதுகருதியோ பலவத்காரமாக வென்னை அணையவருவது நீதியோ உம்மையொத்தவருக் கடுப்பதோவென்றுகபட நாடக மாயாமோகினியாகிய விஷ்ணுவானவர்குயிலைப்போல ரசமாகவசனிக்கக்கேட்டு பரமசிவம் நகைத்து நீர் சொல்லியதனைத்தும் அன்னியருக்குத் தகாதனவேயாம் நீரோநமக்கொரு சத்தியாவீர் அக்காரணத்தினால் நாம்பிட்சாடனப்படிவமாய்தாருகாவனத்துக்கெழுந்தருளியகாலத்தில் நீர்மோகினியாகவந்த தறியீரோ மேலும் ஆதியிற் பிரமனொடுங்கியபோது உம்மையாமணைய உமதுந்தித்தாமரையில் மீட்டும் பிரமனைப்பெறவில்லையோ ஆதலால்க்காலத்திலும் உமதுதேசோன்மயமான விளமைநலத்தினை யனுபவிக்க விருப்புற்றுவந்தனம்தாமதஞ்செய்யாதுநெருங்கவருவீரென்று சமீபித்தமாத்திரத்தில்சர்வஜகன்மோகினிஓடக்கண்ணுதலும்பின்தொடர்ந்துதங்கத்தொடிகளையணிந்த கரத்தினைப்பற்றிக்கொண்டுசரசசல்லாபங்களுடன் கெஞ்சிதேகபரவசராய்ச்சென்றுநாவலந்தீவைச்சூழ்ந்த சமுத்திரவடபாரிசக்கரையினிடத்துத்தழைத்து வானத்தையளாவிக்குளிர்ந்த நிழலைப்பரப்பிநிற்கின்ற சாலவிருட்சத்தடியிற்சேர்ந்து சிறந்த பெண்ணுருப்பெற்றிருக்கின்ற மகாவிஷ்ணுவினது தேகமும்மனமும்பூரித்துக்குழைந்து களிக்கக்கட்டியணையும்போது காமவெப்பத்தினால் இருதிறவருக்கும் வியர்த் தொழுகிய ஜலமானது பெருகிக் கண்டகிநதியெனப் பெயர்பெற்று விளங்கியது அங்கீரி னிருபக்கங்களினுஞ் சக்கரத்தாரைகள் பொன்மயமாய்விளங்க வச்சிரதந்தியென்னுங் கீடங்களுற்பவித்து நாளதுவரையினும் உலாவிக்கொண்டிருக்கின்றன அக்கண்டகி தீர்த்தமானது பெருகிப்பூலோகத்திற்பாய அதிற்றோற்றிய சாளக்கிராமங்களாகிய கீடங்களைமகத்துக்களெடுத்துப் பொன்னையுரித்துக்கொண்டுஅதின்மூர்த்திகரமுக்கியத்தினால் ஸ்ரீமகாவிஷ்ணுவினது ஸ்வரூபமாகக்கருதிச்சாளக்கிராமமெனப்பெயர்விளங்கப் பூசித்துவருவர்.

பின்னர்பரமசிவமும் மோகினியாகநின்ற பரந்தாமனுங் கலந்தின்பமுற்றியகாலத்து நமதையனாகிய அரிகரபுத்திரர் கறுத்த திருமேனியும்நீண்டசடைகளும்விளங்க உதயமாய்த் தாய்தந்தையர்களாகிய பரஞ்சுடரிருவரையும் வணங்கிநிற்கப் பரமசிவமானது கிருபாநோக்கம் பாலித்து, அவன்வேண்டிய வரங்களை மென்மேலுங் கொடுத்து உருத்திரர் கூட்டங்களுக்குத் தலைமைபெற்று விளங்கவும் சகலபுவனங்களிலுந் தமதாக்கினைசெலுத்திப் பாதுகாக்கவுந் தேவரனைவருந்தொழுது போற்றத்தக்கசிறப்பையுந்தந்து பின்புதம்மைவணங்கியகுமாரனுக்கும் மகாவிஷ்ணுவுக்கும் விடைகொடுத்தனுப்பிச் சிவபிரான்திருக்கயிலைக்குளெழுந்தருளினார்கேசவனும்தமதுவைகுந்தநகரைச்சேர்ந்திருந்தனன் நமதையனாகிய அரிகரபுத்திரருந்தமக்குக் கட்டளையிட்டஉருத்திரலோகம் போய்அளவற்ற பூதப்படைகள் சேவிக்கஉருத்திரகணங்கள் சூழ்ந்துபோற்றவீற்றிருந்து புவனசராசரங்களனைத்தையும் இரவுபகலாய்ப்பாதுகாத்திரட்சித்து வருகின்றனர். இவ்விதமகத்துவமுடைய அத்தேவனே உன்னையிரட்சிக்கக்கடவன் ஓ சசிதேவியே நான்வருமளவும் வருத்தமின்றியிவிடத்திலிருப்பையாகவென்று இந்திரனானவன் தேறுதல்சொல்லக்கேட்ட இந்திராணிமனக்கவலையொழிந்து சம்மதித்திருந்தனள் அக்காலத்தில்தேவராசன்விரைவிற்பரிசுத்தனாய் பத்திவினயங்களுடன் அரிஹர புத்திரரை தியானித்துப்போற்றி நிற்க இந்திரன்பத்திக்கிரங்கி வெள்ளையானையின்மீது ஆரோகணித்துபலகோடி பூதகணங்கள் வெண்சாமரை ஆலவட்டங்கள் வெண்பட்டுக்குடைகள் முதலாகவேந்திச் சூழ்ந்துவரபற்பல வாத்தியங்களதிரவருவதைத் தேவேந்திரன்கண்டு எதிர்சென்று போற்றிவணங்கி யிருகரங்களையுங்கூப்பி நிற்கின்றவனைப்பரிவாகப்பா

ர்த்து உமக்குவேண்டியவரங்களைத்தரவிருப்புற்றனங்கே
ட்பையாகவெனத் திருவாய் மலர்ந்தபோது தேவராசன்
வாயைப்பொத்திக் கர்த்தனேசூரபதுமன் முதலானவர்க
ளால் மிகவும்வருந்திப் பொன்னுலகவாழ்வினையிழந்துப
திதாய் இத்தலத்தில்வந்தும் அக்கொடியவருக்கஞ்சி மூ
ங்கிலுருக்கொண்டு மனைவியும் நானுமாகத் தவஞ்செய்து
கொண்டிருக்கத்தேவரிற்சிலர்சூரனுபாதிக்கஞ்சி என்னை
உலகமெங்குந் தேடிக்கடையில்இத்தலத்திலென்னைக்கண்
டு தங்களுக்குநேர்ந்தகுறைபாடுகளைத் தெரிவித்து அத
னைப்போக்கியிரட்சிக்கும் படியாக முறையிட்டுப்புலம்பி
நின்றனர். அவரதுதுக்கத்தை நீக்கநினைவுகொண்டு திரு
க்கயிலாயத்துக்கழைத்துப்போய் பரமசிவத்துக்கெமதுகு
றைபாடுகளை விண்ணப்பஞ்செய்து அவரனுக்கிரகத்தை
ப் பெற்றுவரத் தீர்மானித்து இவளையிப்பதியில் வைத்
துப்போக விருக்கின்றேன். தனிமையாயிருக்கவிவள் வ
ருந்திநான் நீங்கியகாலத்தில் இராட்சதர்பிடித்துப்போவ
ரெனப் பயங்கொள்ளுகின்றனள். ஆதலால்ஐயனே நான்
மீட்டும் வருமளவும் இம்மடமயிலைப்பாதுகாப்பதுதேவ
ரீர் கடமையென்றிரக்க, அரிஹரபுத்திரர் கிருபையுற்று
ஓதேவேந்திரனே உன்தேவிக்குயாதொருகுறைகளும்நே
ராமற் காக்கின்றனம், தனித்துவிட்டுவந்தன னென்னுங்
கவலைஉனக்கு வேண்டுவதில்லை. சந்தோஷமாகவேதிருக்
கயிலைக்குப்போய் வாக்கடைவையெனச் செலவுகொடுத்து
வாட்படைவல்லபத்தில் முக்கியனுயுஞ்சவுரியபராக்கிரம
ங்களுக் கொப்பற்றவனுகவுந் தமதுசேனைத் தலைவனுகவு
மிராநின்ற மகாகாளனைப்பார்த்து இந்திரன் பரம சிவத்
தைத் தரிசித்துவருமளவும்,இந்திராணிக்கொரு கவலையு
நேராமற் காத்து இவ்விடத்திலிருப்பையெனக் கட்டளை
யிட்டுத் தமதுபதவியினைச்சேர்ந்தனர்.

## இந்திரன்கயிலைசெல்படலம்.

அத்துணை தன்னிலருந்துணையில்லான்
மெய்த்துணையாகியமின்னினைநோக்கி
யெய்த்திடலையனளிக்குவளீண்டே
சித்தம்வருந்தலெனத்தெளிவித்தான்.

பின்புதேவராசன் களிப்புடன் இந்திராணியைப்பார்
த்துமதையனுர் உனக்கு யாதொரு இடையூறுகளுமின்
றியிரட்சித்திருப்பர் ஆதலால்மனக்கவலையற்றிருப்பாயெ
ன ஆதரித்துச்செலவுபெற்றுக்கொண்டு தேவர்களிருக்கு
மிடத்தைச்சேர்ந்துஅவர்களோடுபரமனெழுந்தருளியிரு
க்கும்வெள்ளியங்கிரிக்குப்போய்முதல்வாயலில்வீற்றிருந்
துஅரசுசெலுத்தும்நந்திதேவனைவணங்கித்துதித்துநிற்க
அவரதுமுகவாட்டத்தையும் மனக்கோட்டத்தையும்நிதா
னித்திரங்கி ஓ! தேவேந்திரனே? தேவர்களுடன்வருங்கா
ரண மென்னையென்று திருவாய்மலர்ந்தருளச் சுவாமி சூ
ரபதுமனிரக்கமற்று ஏவியதகாத பணிவிடைகளைச்செய்
து மிகவும்வருந்தி மற்றொருசார்புமில்லாமையால் அடி
யோங்கள் துக்கங்களைச் சிவபிரானுக்குமுறையிட்டு இத
ற்கொரு நற்றுணைமார்க்கத்தைத்தேடிப்போகவந்தனமெ
னச் சொல்லுகின்ற புரந்தரனைப்பார்த்து அன்பாய் ஓ!
விருத்திராரி? யின்னமும் உங்கள்வருத்தங்க ளொழியுங்

காலஞ் சமீபிக்கவில்லை. பரமேஸ்வரன் சனகரசனந்தன
ர் சனற்குமாரர் சனுதனராகிய தவசிரேஷ்டருக்கு ஞான
யோக நிலைமைகளைக் காட்டிக்கொண்டு ஏகாந்தமாகவிரு
க்கின்றனர். ஆகையால் யாவரும்போய்தரிசிக்கப்படாதெ
னச்சொல்லிய விசேடஞ்செவிகளில் நுழைந்தவுடன் இ
றங்கிய விஷமானதுமீட்டுஞ் சிரத்துக்கேறியதைப்போல
தேவேந்திரன் வாடிவருந்தி நடுக்கடலிற்கப்பல் கவிழும்
போது கிலேசிப்பவரைப்போல அமரர்களோடு பரிபவப்
பட்டுப் புலம்பி ஐயையோ எமதுதுன்பங்களை யொழித்
துவாட்டமற்றிருக்கலாமென்று இவ்வளவுதூரம்வந்தும்
காலஞ்சரிப்படவில்லையே என்னசெய்வோம் பூலோகத்தி
ல் ஒளித்திருப்போமென்றாலும் இராட்சதர்தேடி அலை
க்கின்றனர். சுதந்தரமாகிய பொன்னுலகையுமிழந்தோம்
இனிஎன்னசெய்யக்கடவோம் தீனராய்நின்றனமென்றுப
ற்பலதுயர வசனங்களைப்பேசி மீட்டும் நந்திதேவனைவ
ணங்கி நல்லொழுக்கம் பூததயவுபசியாத்தாபமென்பதெ
வ்வளவேனு மற்றசூரபதுமன்செய்த தவத்திற்கு நமதி
றைவன்மெச்சி அளவற்றவயதும் வச்சிரதேகமும் அக
ன்ற சாம்பிராச்சியமுந் திரிமூர்த்திகளும்வந்திக்கும் அர
சாட்சியையுந் தந்தனர். யாங்கள்பலநாட்களாக அரியதவ
விரதங்களையும் சிவபூசனைமுதலிய நல்லொழுக்கங்களையு
ம் பெரியோர்கள் சேவையையும் பக்தியுடன்செய்து மு
டித்ததற்குரிய பலப்பிராப்தி எவ்வளவேனுங் கிடையாம
லிழந்ததுமன்றியில் அடியோங்கள் முற்செய்த பிரார்த்த
வினையின் சம்பந்தப்படிக்கு நமதுசுதந்தரங்களையிழந்து
ம் மேலும் அப்பாதகன் ஏவலிற்பட்டு தகாதவினைகளை
முடித்துப் பலருமேசப் பிராணனைச்சுமந்து வாழ்கின்ற
னம்.

இவையனைத்தும் லோகநாயகனுகிய பரமசிவத்துக்கு
த் திருவிளையாடலாகும்ஐயனே? சண்டாளர்தொழிலினை
த் தேவர்களென்று மற்றையோர்பூசிக்குஞ் சிறப்பினையு
டைய எங்களுக்கிடுகின்ற சூரன் கொடுமைகளை விண்ண
ப்பஞ்செய்து கொள்ளவந்தகாலத்தில் ஆதரித்துஅடியோ
ங்கள்முறையினைக்கேட்டு அவைகளுக்கொரு நிவாரணத்
தினைத்தேடி யிரட்சியாமல்பராமுகமாயிருந்தால்கி நபை
க்குநாயகனெனப் பலபூதகோடிகளுந் துதிக்கின்ற பெரு
மைக்குத்தாழ்வல்லவோ வேதவாக்கியங்களுக்கு மாறுப
டாதோ? சர்வபிராணிகளையும் பருவமறிந்திரட்சிக்கும்அ
மலமூர்த்தி மோகமற்ற ரிஷிகளுக்குச் சிவயோகசாதனைக
ளைக்காட்டிக்கொண் டிருக்கின்றனரோ அவரையல்லதும
ற்றதேவர்களில் அடியோங்களுக்கடுத்த துக்கத்தைத்தீர்
க்கவல்லவர்தேவரீரறியயாவரிருக்கின்றனர். அதற்குத்தி
ருஷ்டாந்தம் புருஷோத்தமனுகியமகாவிஷ்ணுவேஒருகா
லம் அப்பாதகருடன் பொருதுலோகமெல்லாம் புகழும்
வலியுள்ள சுதரிசனத்தையுமிழந்து உபசரித்திருந்தனர்
மற்றையர் பாடுகளைப்பேசவும் வேண்டுமோ மேலும்பர
மசிவத்தைத் தரிசித்து எங்கள்குறைகளை விண்ணப்பஞ்
செய்துக்கொள்ள இது தருணமல்லவென்று எங்களிருப்
பிடங்களுக்குப் போவோமாகிலும் இராட்சதப்பாதகர்ப
ற்றிச்சிறைவைப்பதுநிச்சயம், இதற்கொருஐயமுமில்லை.
ஆதலால் தீனசரண்ணியனை நமஸ்கரிக்கக் காலம்நேரும
ளவுந் தேவரீர்எழுந்தருளும் முகவாயில் மண்டபத்துக்
கொருபாரிசத்தில் காத்திருக்கின்றனந் தேவரீர்எங்களிட
த்தன்புற்று விடைதரவேண்டுமெனப் பலவிதங்களாகப்

போற்றுகின்ற துயரத்துக்கிரங்கி நந்திதேவர் கிருபையுற்று தேவர்களுடன் வருத்தமின்றி யித்தலத்தி லிருக்கக்கடவீரென்று கட்டளையிட்டனர். அவ்வாறேபரமசிவத்தைத்துதிசெய்துகொண்டிருந்தார்கள்.

## அசமுகிப்படலம்.

நீங்காதுறைதனிநாயகனெடுமாலயனுணரா
ஓங்காரமுதற்பண்ணவனுறையுங்கிரிசெல்லப்
பாங்காயணங்கினர்போற்றிடப்பயில்காழிவனத்திற்
பூங்காவனந்தனிலேசசியிருந்தேதவம்புரிந்தாள்.

கேட்டீர்களோ! சவுனசாதிரிஷிகளே? இவ்வாறுதேவேந்திரன் பரமேஸ்வரனைவணங்கிவர திருக்கயிலைக்குச்சென்றதருணத்தில் பூலோகத்திற் சிறந்தோங்கிய சீர்காழியென்னுந்தலத்தில் விளங்கிய பூஞ்சோலையில் தன்கணவனேவலின்படிக்குப் பலதேவகன்னியர்கள்வணங்கிக் காலங்களில்வேண்டும் பணிவிடைகளைச்செய்து காவல்செய்துவர, இந்திராணியானவள் தன்கொழுநன் குறித்துப் போயிருக்குங் காரியமானது சித்தியாதற்பொருட்டுத் தன்னிஷ்டதேவதையைவேண்டித் தவஞ்செய்துகொண்டிருந்தவள் இந்திரன்வருவதற்குத் தாமசப்பட்டதால்ராட்சதப்பாதகராலென்ன நேர்ந்ததோ வெள்ளியங்கிரியில் விமலனைக்காணப் பக்குவப்படவில்லாமற் காத்திருக்கின்றவரோ? ஏதுந் தோற்றவில்லையிதற்கென்ன செய்வோமென்னும் ஏக்கத்தினால் தினமொருவாட்டமாகத்தன்மேனி மழுங்கி வலிகுறையவருந்தித் தான்குறித்ததவநிலையிற்குறைவுபடாமல் முடித்துவரும்போது அவ்விடத்தில்நடந்தசெய்தியைத் தெரிவிப்போங் கேட்பீராக.

ஒருதினம் பலவாலிபரைச்சேர்ந்துஞ் சற்றுமிளைக்காதசூரன் தங்கையாகிய அசமுகியென்னும் நாமம்பெற்றவள். காமலாகிரிகொண்டு உலகங்களிற் சஞ்சரித்து வரும்போது தவசிரேஷ்டராகிய முனிவர்கள் தேவர்கள்முதலியோரைக்கண்டால் பலவத்காரமாக மேல்விழுந்து நாணமின்றிக் கண்டவிடங்களிற்கூடிக் களித்துக் குலவுவாள். மேலும் கோடைகால மேகமுழக்கம்போல வசனிக்கும் உரத்தகுரலைப்பெற்றவள். பொறுமை கிருபைநீதி முதலியவை எள்ளளவேனும் கிடையாமல் கற்பின்வரம்பைக்கடந்து மனம்போனவழியேசென்று தேவர்மனுஷியர் முதலானவர்களுக்கொரு யமனைப்போலத்திரிந்துதிரிலோகங்களிலும் ஒருநாழிகைப்போதிற்சென்று அவ்விடங்களில் தனதிஷ்டப்படியேபோய் பொய்வஞ்சகம் மாயைமுதலிய கெடுதிகள்நிறைந்த மனதைப்பெற்று மதுமாம்சாதிகளை யெக்காலத்தும்புசித்துப் புலால்நாற்றமெங்கும்வீச வெறிகொண்டு மதயானையைப்போலவுலாவிஎதிர்ப்பட்டவரைச் சற்றுமஞ்சாதுபற்றிச் சருகைப்போலக்கசக்குங் கரங்களோடு எக்காலத்துங் கண்கள்சிவந்துஅனற்பொறிகள்சிதறப் பாதகங்களனைத்தும் ஒருருக்கொண்டதைப்போன்று அக்கினிக்கொழுந்துபோலச் செம்பட்டமயிர்துலங்கஎவ்விதவல்பெற்றவ ரெதிர்த்துப்போராடினுஞ் சற்றுமிளையாமல் அவர்களைவாட்டு மாய்கையென்னும் வித்தைக்குமுக்கியமானவளாய்ச் சூரன்முதலிய துணைவரினும் அதிகவலியைப்பெற்று இரத்தினமலையினையொத்த அசைவற்றதேகத்தினைப்படைத்துச் சத்தசாகரங்களையும் ஓரடியிற்றாண்டிச் சூரனாதியர் கிளைகள் முற்றும் வேரறச்செய்யும் ஊழ்வினையைப்போலவும் காலருத்திரனைப்போலஒருகரத்திற்சூலத்தினைப் பற்றிக்கொக்கரித்துக்கொண்டு தன்மனதுக்கினிய தோழியாகிய துன்முகியென்னும் பாதகியுடன்ஆலகாலமும் வடவனலும் போன்று யாவருந் திடுக்கிட்டோடவருபவள்இந்திராணிவாசஞ்செய்யுஞ் சோலைக்குச் சமீபத்தில் நெருங்கியபோது அப்பூங்காவின் செழிப்பினைநோக்கிக் களித்து அடிபாங்கி! யிதன்வளப்பத்தைக்கண்டாயோ தேவேந்திரனநமக்கஞ்சிப் பொன்னுலகத்திலிருந்த கற்பகச்சோலையையித்தலத்தி லிறக்கிவைத்ததாகவேண்டும், இதற்கையமுமுண்டோ, நான்திரியாத உலகங்களிராது எவ்விடத்திலும் இத்தகைய சிங்காரவளப்பத்தினைப்பெற்ற நந்தவனத்தினைப்பார்த்துமறியோங் கேட்டதுமில்லை, அம்மம்ம இதன்விசாலத்தையும் தழைத்துக் குளிர்ந்தநிழலைப்பரப்பிப்பரிமளம் வீசுவதையும்பார்க்கப் பதினாயிரம் விழிகள் வேண்டும் ஆதலால் அடிதோழி? யிதனுள்புகுந்து முற்றினும் பார்த்துப்போவோம், வாடியென்று அவளுடன் ஆலத்தையொத்த அசமுகியானவள் அதிற்பிரவேசித்துப் புஷ்பவகைகள் அலர்ந்து தேன்களைச்சொரிந்து அலங்காரமாகவிருப்பதையும் வகைவகையாக அணிவகுத்து மல்லிகைமுல்லை அசோகுமந்தாரங்கோங்கு சண்பகம்பாதிரிபுன்னைமரு மருக்கொழுந்து பாரிசாதம் வாழைபலாமாகுருக்கத்தி ஆதியாகியபுஷ்பவிருட்சங்களும்செடிகளும் வானத்தினையளாவித் தழைத்தோங்கிநிற்பதையும், அன்னங்கள்முதலியபட்சிசாலங்கள் செந்தாமரை வெண்டாமரைஅல்லி நீலோற்பலமாதிய புஷ்பசாதிகள்நெருங்கிவராலினங்கள் குதிகொண்டு மதுரமாகியஜலப்பெருக்கினையுடைய தடாகங்கள் கூவல்கள் தகுதியாக அமைந்திருப்பதையும் மற்றசிங்காரங்களையுங் கவனித்துப்பார்த்து இவ்வனமே யிவ்வகைச்சிறப்பினைப் பெற்றிருக்குமாகில் இதைப்படைத்தவர்க ளெத்தன்மையுடையவர்களாக விருக்கவேண்டும் அவர்களையும் பார்த்துப்போவது தகுதியென்றுநிச்சயித்துப் பலதிசையினும் உலவுகின்றதைக்காவலாகவிருந்த அதிசூரராகிய மகாகாளர்பார்த்து இவள்சூரன் தங்கையாகிய அசமுகியாகவேண்டும், இவள் துன்மார்க்கியெனக் கேள்விப்பட்டிருப்போம். ஆகிலும், இப்பாதகியினது செய்கைதெரிந்தபின்பு அதற்குத்தகுதியாகிய பிராயச்சித்தத்தை நடத்தக்கட்வோமெனநினைந்துஒருபக்கத்தில்மறைந்து பார்த்திருந்தனர்.

அத்தருணத்தில் அசமுகியானவள் துன்முகியென்னும்பாங்கி கரத்தினைப்பற்றிக்கொண்டு உல்லாசமாகப்பேசிக்கொண்டு போகும்போது அவர்களுக்கெதிரில்குளிர்ந்தநிழலினையுடைய ஒருவிருட்சத்தினடியில் ததேகத்தியானமாய்ப் பரமனைநினைந்துஇந்திராணிதவஞ்செய்திருப்பதை அசமுகிகண்டு அடிதோழி யிவள்இந்திராணியாகும் இவள்வடிவத்தையும், இளமைப்பருவத்தையும்போன்றரூபலாவண்யத்தை, யிதுபரியந்தம் நாமெவ்விடத்திலுங் கண்டதில்லை யித்தகையசுந்தரமுள்ளவள் அண்ணனுக்கஞ்சி சகலவளமைகளும் அமைந்துபலராலும் புகழப்பெற்ற பொன்னாட்டைவிட் டிவ்விடம்வந்து புகுந்தொளித்

திருக்கின்றனள் என்தமையனேஇவளிடத்ததிக மையல்கொண்டு பிடித்து வரும்படிக்கு அளவற்றசேனைகளை அனுப்ப அவர்களும் வீராவேசத்துடன் ஆயுதபாணிகளாய் தெய்வலோகத்தைச்சேர்ந்து அரண்மனைமுதலியவிடங்களிற் றேடிக்காணாது திரும்பிவர அவ்வீரர்மேல் அதிககோபங்கொண்டு மீட்டும் வேகமுள்ள பலகோடிதூதர்களைத் தேடும்படியனுப்பியிருக்கின்றனன் அவர்களும்வாயுவேகமனோவேகத்தினும் விரைந்து வானநாடுகள் முற்றினுந் துருவிக்காணாது பாதலமெங்கும் ஆராய்ந்துஞ்செய்திதெரியாது இப்போது சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலங்கள் தீவுகள் வனங்கள்முதலியவிடங்களிற்சென்று தேடுகின்றனர் நமக்கோ எளிதிற் கிடைத்தாள் ஆகையால்துரிதமாய் நானிவளைக்கொண்டுபோய் என்தமையன் கொண்டிருக்கும் விரகதாபந் தீரத்தக்கதாகஅணையும்படியாகக் கொடுப்பேனாகில் என்மீது மிகவுஞ் சந்தோஷங்கொள்வான் இதுவே நல்லகாரியம் மேலும் இந்திரன் இப்பெண்கொடிக்கு யாதொருகாவல்களுமின்றிவிட்டுப்போயிருக்கின்றனன் அவன்வருகின்றதற்கு முன்னமே யிவளைக்கொண்டு போகவேண்டுந் தாமசப்படலாகாதென்று கோடையிடியைப்போல வசனித்துப் பர்வதங்கைகால்முளைத்து நடப்பதைப்போலக் கறுத்துப்பருத்ததேகத்தையும் மூன்றாம்பிறைப்பிளவினை நிகர்த்துவிளங்குங் கோரதந்தங்களையும்பெற்ற அசமுகியானவள்நெருங்கி வருவதை இந்திராணி கண்டவுடன் பிராணனைக்கொண்டுபோகவரும் எமன் சமீபத்தில் வந்தாற்போலத்திடுக்கிட்டுநடுநடுங்கிக் குலைகுலைந்து தயிரியமுங்குறைந்தவளா யிதோ வருகின்றவளைப் பார்க்குமிடத் திராட்சதியாகவும் பசாசத்தைப்போலவும் நிருதக்கன்னிகையையொப்பவுங்காணப்படுகின்றது அல்லது காளிக்கேவல்செய்பவளோ இன்னாளென்னத் தோற்றவில்லை யிதற்கென்செய்வோமெனப்பயப்பிராந்தியோடு துரிதமாகத் தன்தவநிலையை விட்டெழுந்து அப்புறம்போக யத்தனப்படுகின்றகாலத்தில் நில்லுநில்லென்றதட்டிச்சமீபத்தில்வந்துஓ! இந்திராணியே? உனதிளமைப்பருவமும் வனப்பும் அப்பிரயோசனமாக விருக்கின்றது அநித்தியத்தை நித்தியமாகவெண்ணியென்விருதாவில் சரீரம்வருந்தித் தவஞ்செய்கின்றாய் இவ்வெண்ணங்களை யினிவிட்டு விடக்கடவாய் உனதுசௌந்தரியத்துக் கிணையானவர்கள் சொர்க்கமத்திய பாதலங்களிலில்லை சகலரும்புகழ்ந்து துதிக்கப்பெற்ற பெருமையினையுடைய ஸ்ரீமகாவிஷ்ணுவினது மார்பகமே திருமாளிகையாகவாசஞ்செய்யும் ஸ்ரீமஹாலட்சுமிதேவியும், உன் வனப்புக்கு ஒப்பாவாளோ அத்தகைய சிறப்பினைப்பெற்ற நீபுருஷனை இழந்து ஒன்றியாக இந்தப்பூமண்டலத்தில் வந்தொளித்திருப்பானேன் அல்லது தவத்தினைத்தான் செய்யவேண்டுவதென்னை உன்னிளமைநலத்தைப் பிரயோசனப்படக் கட்டியணைத்து இஷ்டாலாபமாகச் சேரவேண்டி என்தமையனாகிய சூரபதுமன் வருந்தித்தவஞ் செய்கின்றனன்.

இதுபரியந்தம் நீகணவனாகக் கலந்திருந்த தேவராசன் உன்வடிவுக்குச் சமமான புருஷனல்ல அல்லாமலும் தன்னழகு தனக்குத்தெரியாதெனவசனிப்பர். அதனை உன்னளவில்திருஷ்டாந்தமாகக்கண்டேன். பாகனிடத்துமதயானை யடங்குமாறுபோலவே பலநாட்களாக அவனுக்கிணங்கியிருந்தனை. யிஃதன்றியில் உனக்குக்காரியாகாரியங்களையறிந்து நடந்துகொள்ள வகைதெரியாது ஐயையோஏன் அநியாயமாக நாட்களை வீணிற்கழிக்கின்றாய். உன்னைக்கண்டமாத்திரத்தில் உன்னிடத்தெனக்குமிகுந் தபிரியமுண்டாகியது நீகடைத்தேறும் வகையையோசிக்கின்றேன். மேலுஞ்சிலதிருஷ்டாந்தமாகியவித்தியாசங்களைக்காட்டுவேன்அதனாலாவது இனிபுத்திபோம் பிழைக்கக்கடவாய் என்தமையன்பெருமையையும்உன்கணவன் சிறுமையையும் விரித்துக்காட்டுவேன் அஃதென்னையெனில் உன்புருஷனாகிய தேவேந்திரனோ அற்பவாழ்வைப்பெற்ற சொர்க்கலோகமாத்திரமே அரசுசெய்திருப்பவன் என்தமையனாகிய வச்சிரகாயம்பெற்ற சூரபதுமன் இவனைப்போன்ற இந்திரர்அடங்கிய ஆயிரத்தெட்டு அண்டங்களைத்தன்னாக்கினையி லடங்கக் காவல்செலுத்தும் செல்வவல்லபமுள்ளவன் இந்திரனோ அவனிட்ட வினைப்பணிவிடைக ளனைத்தையுஞ் சிரத்திற்றாங்கித் தினந்தோறுஞ் செலுத்தியிளைத்து வாடியொளித்திருப்பவன் சூரனோ சகலதேவர்களையும் ஏவல்கொண்டு உலகங்களிலெதிரின்றி ஏகசக்கிரத்தினைச்செலுத்தி ஆள்பவன் மேலுஞ் சலனமற்ற வச்சிரப்படிவமுடையவன் இந்திரன்காலாதிகளில்மாளுஞ் செய்கையைப்பெற்றவன் சூரன்பழியென்பதில்லாமல் கீர்த்திபெற்றுமாளாமலிருப்பவன்இந்திரனோபழியாகியசமுத்திரத்தில்மூழ்கி நிலைபெறாதலைந்துதிரிந்துமிடைவிடாமற்பாதிக்குந்துக்கத்தை அனுபவித்திருப்பவன்சூரன் எக்காலத்துந்தீரனாய்க்களித்து வாழ்ந்திருப்பவன்இந்திரன்பலதேவதைகளைப்போற்றித் தொழுந்தாழ்வைப்பெற்றவன்சூரன்தேவர்களேமுதலியபலரும் பணிந்துதங்கள்குறைகளைமுறையிடப்பெற்றுவாழும் மகிமைபொருந்தியவன், ஆதலால்இந்திராணியேகேளும் இன்னமும்பற்பலபேதங்களுண்டுஅவற்றிற்சிலதெரிவித்தேன்இவ்வித அகன்றசெல்வ சாம்பிராச்சியனாய்வாழுஞ் சூரபதுமனைச் சேர்ந்துகாமவின்பத்தையனுபவிக்க வறியாமல் அவன்பணிவிடைகளைச் செய்தொளித்துத்திரிகின்ற அபலனான இந்திரனையேமேன்மையாகவெண்ணியிருப்பதென்னகாரணம் இதுஉனது பெருமைக்குத்தகுதியோ? மேலும் முன்யோசனையின்றிஉனதுஇளமைப்பருவத்தை விபர்த்தத்திற் கழிக்கின்றாய் இதுநலமோதேவர்களும் இந்திரனும்மற்ற ராட்சதர்களும் அவரவர் தேவிமாரோடு நீயிட்ட பணிவிடைகளைச்செய்து போற்றத் திரிமூர்த்திகளுந் துதிக்கும்படியான தெய்வீகத்தையும் வல்லபத்தையும் பெற்றுவாழுஞ் சூரபன்மனிடத்திற் சேர்ந்து அவனுடன் உலகங்களையெல்லாம்ஆளும்படிச்செய்வேன் அவனோ லட்சுமியே முதலானவரைவிரும்பப்பட்டவனல்ல உன்பாக்கியமேபாக்கியம்நீசம்மதப்படுவையேயாகில் உன்மனநிஷ்டப்படிக்கு நடத்துவதன்றியில் அளவுபடாத வின்பத்திற் களித்திருப்பான் இதுஉண்மையாகும் ஆதலால்விரைவி லென்னுடன்வரக்கடவாயென்றுகற்பினையுந் தர்மத்தினையும் எள்ளளவேனும்விரும்பாதபாதகியான அசமுகிசொல்லிமுடித்தாள்.

## இந்திராணிமறுதலைப்படலம்

தங்கவேழகத்தலையள்கூறிய
வங்கொடுஞ்சொலையணங்குகேட்டலுந்
தொங்கதன்செவித்துளையிலங்கிவேல்
புக்கதேயெனப்பொருமிவிம்மினள்.

இவ்விதங்களாகப் பாவியாகியஅசமுகிசொன்னகொடிய சொற்களை இந்திராணிகேட்டமாத்திரத்தில்சிவக்கக்காய்ச்சிய நாராசத்தைச் செவிகளிற் சொருகியதைப்போலக் கேட்டுப் பதைபதைத்து வருந்திச்செவிகளைப்பொத்திப் பரமனைத்தியானித்து ஏங்கினவளாய் எதிரில் நிற்கின்ற கொடியவளாகிய அசமுகிகேட்கச்சொல்லுகின்றாள்.அடிதுன்மார்க்கி நீஇப்போதுபேசியஅநீதியாகியவார்த்தைகளை விரும்பியவர்கள் எக்காலத்தினும்நிவாரணமில்லாதரவுரவாதிநரகவாதனையிறபட்டு இடைவிடாமல் வருந்துவார் இப்பேர்ப்பட்ட துர்ப்போதனைசெய்த உனக்குச்சம்பவிக்குங் கெடுதியை யாவராற்சொல்லிமுடியும் வேதங்களை நிருமித்தபிரமபுத்திரனாகிய காசிபருக்குப் பெண்ணாகப்பிறந்த நீ அறிவில்லாதவளைப்போல நீதிக்கிடையூறாகிய வார்த்தைகளைப்பேசக்கூடுவதோ ஒருவருக்குத் தீங்குசெய்யாதவர்கள் தாங்களும் வருந்தாமல் பலருக்குமிஷ்டராகவே யிருப்பர்நீயிதனை நினைந்ததில்லையோமேலுந்தருமத்தைச் சீர்தூக்கிப்பார்த்தவளல்லை. உலகினர் நல்லொழுக்க நடவடிக்கைகளையுங் கற்பிலக்கண மேம்பாட்டையும் மறக்கலாமோ. மேலும் நீபிறந்தமரபினையும் உரிமையினையும் உறவையும் மேல்வரும் பழிபாதகங்களையுந் திரிலோகங்களினுமிகழ்ந்துபேசும் சொற்களையும்நமக்குரிய முறைமைகளையும்மற்றும்நற்கருமங்களையுந்தீக்கருமங்களையும் எவ்வளவேனும் பகுத்துநிதானித்து இதுதகுந்ததாதென்று யோசித்துப் பேசினவளல்லை. உன்னையொத்தவள் இவ்வித தீயசொற்களை போதிக்கலாகுமோ. மேலுந்தனக்குக்கிடைத்த மிகுந்தசெல்வத்தையும் மிகுந்தவயதினையும் இம்மைமறுமைகளிற்பலராலும்புகழவிளங்குங்கீர்த்தியையும் போக்குகின்றவர்களுக்கு இக்கெடுமதி தோற்றுமேயல்லது வேறல்ல. இதனைவிடுவையாகில் ஈஸ்வராநுக்கிரகத்தால் வெகுகாலம் வாழ்ந்திருப்பாய் வீணாகப் பேசுவதிற்காரியமென்னை என்உறுதியைக் கேட்பாயாக.என்னையகனிடத்தல்லதுமற்றதேவர்கள் முதலியோரிடத்திச்சைகொள்ளேன்கற்புநிலைதவறுதளனக்குஉலகவிரோதமான நடக்கைகளைப் போதிக்கத் துணிந்தாய் இவை உன்வமிசம் விர்த்தி யடைவதற்குக் காரணமல்ல வேதாகமபுராண சாத்திரமுதலியவைகளைப்பூரணமாகக் கற்றுணர்ந்துங் கொடுங்கோன்மை செலுத்தும் மதமேறிய அரசர்களும்மற்றக் கொடியவர்களுந்தங்கள் செய்கைகளுக்கடுத்த யமதண்டனையும் நரகவாதனைகளும் பெற்றுமீளவறியார்கள். இதனைநிச்சயமாகக் கொள்ளக் கடவாய். மேலும் என்கணவன் நீங்காததுக்கசாகரத்தி லழுந்தினவன் அபலனெனப்பேசினை ஈஸ்வரன் கட்டளைப்படிக்கு யாவருக்கும் இன்பதுன்பவனுபவங்களுண்டுபிராரத்தவினைகளைக் கடந்தவர்யாவர். இவ்விததுன்பம் நாளைக்கேஉங்களுககுங் கிடைக்கலாகாதோ. வேதமார்க்கத்துக்கடுத்த நீதிகளைத் தெளிவிக்க வறியாதமூடியே கற்புதவறியதுன்மார்க்கி யாதலால் உள்ள அறிவுங்கெட்டுப் பிறர்நகைக்கும் பழிப்புரைகளைச் சொல்லத்துணிந்தாய். இவை உன்போன்றவர்களுக்கு யோக்கியமல்ல. இனியாவதுநீநற்கதியடைந்து பிழைக்கவேண்டுமாகில் இவ்விதக் கெடுநினைவை மறந்துவிடு.மேலும்நான்தனித்திருக்கிறதாயெண்ணவேண்டாம் எனக்கொருதுன்பம் வராமலும் துன்மார்க்கர்யாரும் நெருங்க வொட்டாமலும் சிலதேவர்கள் காவலுண்டு உனக்கொருதீங்கு நேருகின்றதற்குமுன்னமே விரைவிலிவ்விடம்விட்டு அப்புறம்போகக்கடவை நீயும்என்னைப்போலப் பெண்ணாதலால் ஏதோதெரியாமல் சொன்னாயென்று அக்குற்றங்களைப்பாராட்டாது மேல்வருங்காரியத்தைச்சொன்னேன் இதனைஉறுதியாக நம்பக்கடவாயென்று புலோமிசைமாறுத்தரவு கொடுத்தவுடன் பாதகியாகியஅசமுகியானவள் நாகத்தைப்போலச்சீறி அக்கினிப்பொறிகள் பறக்கப்பற்களை நெறநெறெனக்கடித்துப் புகையும்அனலும்வீசப்பெருமூச்செறிந்துசிவந்தகண்களைச்சுழற்றிக்கோடையிடியைப்போலக் கரங்களைத்தட்டி நல்லகாரியம் நல்லகாரியமெனக் கோபித்தாள்.

கேட்டீர்களோ! நைமிசாரணியவாசிகளே? கற்பின்வரம்பிற் பிசகின்றி நடக்கும்இந்திராணி சொல்லிய நீதிவசனங்கள் அக்கொடியவளுக்குப் பிரயோசனப்படாமல்ஒருஞானசாரியன்தன்னையடுத்தபித்தனுக்குப்போதித்தஉபதேசத்தைப்போலப் பயன்படாதுபோய்விட்டது. பின்பு இராட்சதியாகையால் தானெண்ணியது சித்தியாகவில்லையென்னும் மானம்பாதிக்க, இந்திராணியை உருத்துப்பார்த்து இதுவும் புண்ணியமெனநினைந்து உன்வருத்தங்கள் நீங்கி சவுக்கியமடையத்தக்கதாகவும் சீர்படும்படிக்கும் நல்லவழிகாட்டினால் இதுவுந் தெய்வ சங்கற்பமென்று இனிமேலாவது சீர்படுவதாக என்னைத் துணைபற்றிக் கொண்டுவராமல் ஏதோதெரிந்தவளைப்போல மறுத்தும் பேசினாய். இந்தட்சண முன்னைக்கொன்று தின்றுகோபந்தணிவேன். ஆனால்என்தமையனுக்குஉதவியாக நினைந்தகாரணத்தினாற் பொறுத்தேன். இதனை யதார்த்த மாகவேயெண்ணக்கடவாய். உன்துன்பங்கள்நீங்கிச்சீர்படவேண்டுமாகில் அகன்றசாம்பிராச்சியமுங் கீர்த்தியு முள்ள என்சகோதரனிடத்துக்குக் குறியாய்வரக்கடவாய், அல்லது பழையபடியே குறுக்குப்பேசுவையாகில் இந்நிமிஷத்தில்உன்னைப்பலவத்காரமாய்ப்பிடித்திழுத்துப் போவது நிச்சயம் ஒருகாலந்திரிமூர்த்திகளேஉனக்குஉதவியாகநேர்ந்து தடுப்பாராயினும் எதிர்த்துப் போர்கொடுத்தாலும் அவர்களைவென்றுஉன்னைக்கொண்டுபோகக்கடவேன். அதையுமினி சற்றுநேரத்திற்காணப்போகின்றாய்எனப்பேசிப் பாதகியானவள்மீறி இந்திராணிகரத்தைப்பற்றியிழுத்தபோது பூனைவாயிற்பட்ட கிளியைப்போல் அலறி யிளைத்து வாய்குழற ஓலமிடத்தொடங்கி, ஓ? ஐயனோ! காப்பாற்றும். பாதகிபற்றி வலிக்கின்றனள். விடுவிக்கவாரும் வாருமென்று கூவவுஞ்சங்கையில்லாமல்வாயினைமூடிநடவென்றுதள்ள, இந்திராணியானவள் அந்தச் சண்டாளிகையிற் பட்ட மாத்திரத்தில் பிராணனிழந்த வளைப்போலக் களைத்து விழிகளில்நீரைப்பெருக்கிக் கதறவுங்கிஞ்சித்துமிதக்கமற்றுவலிக்கப்பதைபதைத்துச்சுற்றிலும் பார்த்து யாவரையுங்காணாதபடியால் திகிற்கொண்டுபுலம்புவதாயினள்.

## மகாகாளர்வருபடலம்.

பையராவமளியானும்பரம்பொருண்முதலுங்கும்
ஐயனேயோலம்விண்ணோர்க்காதியேயோலஞ்சென்டார்
கையனேயோலமெங்கள்கடவுளேயோலமெய்யர்
மெய்யனேயோலந்தொல்சீர்வீரனேயோலமோலம்.
ஆரணச்சுருதியோர்சாரடலுருத்திரனென்றேத்துங்
காரணக்கடவுளோலங்கடனிறந்தெந்தாயோலம்
பூரணைக்கிறைவாவோலம்புட்கலைகணவாவோலம்
வாரணத்திறைமேற்கொண்டுவரும்பிரானேலமென்றாள்.

---

ஓ கர்த்தனே? இப்பாதகி வலிதிற்பற்றிவலிக்கின்றாள் விடுவிக்கவருவாய், ஸ்ரீமகாவிஷ்ணுவுக்கும், பரமசிவத்துக்கும், உதித்த ஐயனே? ஓலம். ஹரிஹரபுத்திரனே? ஓலம். தேவர்கள்தொழும் முதற்கடவுளே! ஓலம். அழகிய சண்டாயுதத்தையேந்திய கரதலத்தைப்பெற்றதீரனே? ஓலம். எமதுகுலதெய்வமே! ஓலம். பொய்யருக்குப்பொய்யனுப் மெய்யருக்குமெய்யனுப் விளங்குந்தினதயாபரமூர்த்தியே? ஓலம்.சகலரும்புகழ்கின்ற வீரம்பொருந்திய சவுரியபரனே! ஓலம்.என்முறையினைக்கேட்பாய்ஓலம்.வேதபாராயணராய் சிவக்கோலம்பெற்று விளங்கும் மகிமைபெற்ற உருத்திரகணங்கள்சூழ அரசுசெலுத்தியிருக்குங் காரணக்கடவுளே! ஓலம். கருங்கடலையொத்துக் கறுத்து விளங்குந் தேகத்தையுடைய எனதப்பனேஓலம். வடிவினுங் குணத்தினுங் கற்புத்தன்மையினுஞ் சிரேஷ்டமாகப்புகழும் பூரணைபுட்கலையென்னுங் கன்னியரிருவர்க்குக் கணவனுகவிருக்குங் கடவுளே! ஓலம் மும்மதங்களொழுகாநின்ற கட்டுத்தறிமுறித் துலவவல்ல வெள்ளையானையின் மீதில்வருங் கெம்பீரபுருஷனே! ஓலம்ஓலமென்றுஅபிராணிமுறையிடுவதை மகாகாளர்கேட்டு ஐயையோ! எங்கள் ஐயனைக்குறித்துக் கூவி யிப்பதிவிரதை ஓலமிடுவதோ! அறற்றுவதோ!நானிருந்தும்இத்தகையகாரியம்நடக்கலாகுமோவென, நீருண்டமேகத்தைப் பறக்கச்செய்ய வல்லவாயுவினைப்போலக் கொடியவர்களுக்குமிகவுங்கொடியவனுயும் ஹரிஹரபுத்திரர் சேனைக்குத் தலைவனுகவுந் தேவர்கள் அனைவருங் கொண்டாடுஞ் சவுரியபராக்கிரமமுள்ள வீரனுகவும் பிரமாதி தேவர்கள்வந்திக்கும் புகழினைப்பெற்றுஅவர்களுக்கடுத்ததுன்பந்தீரவிஷத்தையுண்டு பாதுகாத்த பரமசிவநாமத்தைப் பெற்றவனுகவுங்காலமுடிவில்மன்னுயிரனைத்தையுங்கொண்டு போகவல்லயமதருமராஜன் பங்குக்குவந்த யமனையொத்த தீரனுகவும்மூன்றாம்பிறையினைக் கண்டித்துத் தரித்திருப்பதையொத்து விளங்குங் கோரதந்தங்களை யுடையவனுகவுங்கோடைகாலமேகமானதுமின்னியிடிக்குந்தன்மையாகவீரவாளைக் கரத்திற்பற்றிச் சுழற்றிப்பாயுங் கெம்பீரனுகவும்பலரும் புகழும் மகாகாளனென்னும் பெயரையும்படைத்த வீராதிவீரன் பாய்ந்துவந்து தேவராஜபத்தினியாகியஇந்திராணியை வஞ்சித்தெங்கே கொண்டுபோகின்றாய் நில்லு நில்லென்று அதட்டி ஓ பதிவிரதாசிரோமணியே!இதோவந்துவிட்டேன். இனிபயப்படாதே? விசனங்கொள்ளாதே வாழிவாழி யிப்பாதகியாகிய கொடிய அசமுகிக்கெவ்வளவும் அஞ்சவேண்டாம்.உன்னைத்தொட்ட இவள்கரங்களை வெட்டித் தள்ளி விடுவிக்கவல்லன்பாரென்று அவன்பேசிய தயிரியவாக்கியத்தைப் புலோமிசைகேட்டுத்தனக்கடுத்த துன்பத்தைச்சிறிது நீங்கிவாடிநின்றபயிரானதுமழைத்தூவல்பட்டுத் தழைத்தோங்கி நிற்பதையொத்து முகமண்டலம்விளங்க வீரமகாகாளனைப்போற்றினள்.

அத்தருணத்தில் அசமுகியென்னும் பாதகியானவள் மகாகாளனைப்பார்த்து நகைத்து முத்தொழிலினைநடத்துகின்ற மும்மூர்த்திகளும் இந்திரன்முதலிய அஷ்டதிக்குப் பாலகரும் மற்றதேவர்களும் என்முன் நிற்பதற்கஞ்சி ஒளிப்பார்கள் அப்பேர்ப்பட்ட பலபராக்கிரமத்தைப்பெற்ற நம்மை வானவர்களிலொருவனுக விருக்கின்ற இவனே இகழ்ச்சியாகப் பேசுவான்.நல்லகாரியம்இவன்ஆணவத்தைச்சற்றுநேரத்தில் அடக்குகின்றனனெனக் கோபித்து விழிகளிற்றீப்பொறிசிதறநோக்கிப்பற்களைக்கடித்துக்கொக்கரித்துக் கரும்பாம்பைப்போலமுறித் திவன் வல்லபத்தைத் தொலைக்கின்றேன் சமீபிக்கட்டுமென் றெதிர் பார்த்திருந்த அசமுகிக்குநேராய் வீராதிவீரனுகிய மகாகாளன்வந்து அடிராட்சதப்பட்டி! பதிவிரதாசிரோமணியாகிய இந்திராணியைத்தனித்திருப்பதாகவெண்ணிவஞ்சித்துக் கொண்டுபோகின்றாயோ? நல்லகாரியம் அவளை விட்டுப்போகக்கடவாய். பயங்கொள்ளவேண்டா மென்று சொல்லக்கேட்டுஅசமுகியானவள்சீறிக்கொதித்துத் துணிவுகொண்டு வசனிக்கும்உன்னை யிவளைக் காக்கும் படியாய் வைத்தவர்களார் அவர்கள் பெயரைக்கேட்க விரும்புகின்றேன் சொல்லடாவென்றுதன்குலத்தைஊழ்வினையைப்போல நாசமடையச்செய்ய நினைந்திருக்கும்பாதகிகேட்க வீரபராக்கிரமசாலியாகிய மகாகாளர்உரைக்கின்றார்.அடிதுன்மார்க்கி! கேட்பாயாக, திரிலோகங்களினுந் துன்பமில்லாமல் காக்குந் தினதயாபரன், நீருண்ட மேகத்தையொத்த கரியநிறம்பெற்றவன். வெள்ளையானையின்மீது பவனிவருபவன், வலியினுக்கொப்பற்ற அரியரபுத்திரர் எனக்கிப்பணிவிடையினைக் கட்டளையிட்டனர். நான்அவர் சேனைத்தலைவனுகும், என்பெயர் வீரரில்வீரனுன வீரமகாகாளன், இனியாவதுஇந்திராணியை விட்டுப்போகவென்று சொல்லியவாக்கியத்தினை அசமுகிகேட்டு அரியரபுத்திரன் சேனைத்தலைவனென்பது பொய் இவன் தேவேந்திரன் மனிதனுகும், இதற்கையமில்லையெனநினைந்து அதிகோபங்கொண்டவளாய் நமக்குப்பயந்தெளித்துத்திரிகின்ற தேவராஜன் தொண்டனே நம்மைத் தடைசெய்ய வல்லவனென்று சீறிக்கரத்திற்பற்றியிருந்த சூலத்தைச் சுழற்றி மகாகாளர் மார்புக்கிலக்காக வெறிந்தனள்.அப்படையானது விடுபட்டவுடன் முத்தீயும் ஒருருக்கொண்டோங்கியதைப்போலப் புகைந்தெரிந்து மேல் வருகின்றதை வீரன்கண்டு குறுநகைகொண்டு ஆதியில்வடவா முகாக்கினியை வீரபத்திரக்கடவுள் அழித்ததுபோலத்தன் கைவாளினல் இருதுணிவாக வெட்டித் தள்ளியகாலத்தில் அச்சூலமானது கடல்கடையுங்காலத்தில்வருந்தி வாசுகிகக்கிய விஷச்சுவாலையினை யொத்துங்கோரதந்தங்களையுடைய கொள்ளிவாய்ப் பசாசமானதுஅனற்பொறியைச்சிதறியது போன்றும் கார்காலத்தில்மேகமானதுஇடித்தெழுந்து மின்னலைவீசியது போலவும் அனற்பொறிகளைக் கொட்டி விழுந்ததுமேலும்அச்சூலத்தின்பெருமையைக் கேட்பீராக.

ஊழிக்காலத்திலுலகங்களேயழிக்கக் கடலினடங்கியிரா நின்ற வடவாக்கினியானது ஆலகாலவிஷத்தினுற்பூசப்பட்டு அசமுகியென்னும் பாதகிகரத்திற்பிடியுண்டுநின்றாற்போலவுஞ் சொல்லவும் வேண்டும்அதனைத் திருஷ்டாந்தமாகக் காட்டுவேனென்றதைப்போலவீராதிவீரனுகிய மகாகாளர் வாளானது அதன்சுபாவகுணத்தை வெளியிடத் தண்டித்ததையொப்ப வெட்டித்தள்ளியது. இவ்விதமாகத்தானேவியசூலமழிய அசமுகிசிறிதருகில்நிற்கின்றவுயிருக்குயிராகியதோழியினது கரத்திலிருந்தசூலத்தை வாங்கியமனும்அஞ்சக்கொக்கரித்துத் தானெண்ணிய காரியத்துக் கிடையூறில்லாதுதான்பற்றியிருந்தஇந்திராணியைச்சற்றேகாத்திருமென் றுதோழிவசத்தில்ஒப்பித்துஇராகுவானதுசந்திரன்மீதுதாவியதைப்போலப்பாதகியாகிய அசமுகிபாய்ந்து வீரமகாகாளர்பேரிற்குதித்துமார்பிற்குத்தநினைந்துமாறிமாறிவாதுகொடுக்குமுன்னிலையில் அக்குறிப்பைத்தெரிந்துவீராதிவீரனுகியமகாகாளர்தமதுகரத்தில்விளங்கும்வாளினுல்அதனேயும்வெட்டித்தள்ளிச்சிங்காதஞ்செய்தனர். அக்காலத்தில்அசமுகிசற்றுத்தளர்ச்சிகொண்டு பின்னிடைந்துபக்கத்தில்வானத்தினேயளாவநின்ற ஒருபர்வதத்தை வேருடன்பறித்தெடுத்துக்கிறுகிறெனச்சுழற்றி யிதனல் பொடிப்பொடியாக நாசமடையக்கடவாயென்றெறிந்தாள் அதுவும் அதிவேகமாய் வரும்போது மகாகாளர் நகைத்துத் தமதுவெற்றிவாளினேயுதறிஓங்கிவீசப் பர்வதமும் அந்தவாளுந் துகள்பட்டது அதனேக்கண்ட அசமுகியானவள் ஊழிகாலசமுத்திரத்தைப்போலக்கூவி அடா! வீரமகாகாளா? என்னடாதலைகிழாய்விழுகிருய் முன்பின்யோசித்தவனல்ல சூரபதுமன் ஆக்கினையையும் நினைந்தவனல்ல அதனைத்தெரிவிக்கின்றனன் கேட்பாயாக. உலகங்களனைத்தையுஞ் சிருஷ்டிக்கவல்ல மகத்துவத்தைப்பெற்ற பிரமதேவன் பிராதகாலத்தில் ஆசாரவாசலில்வந்து காத்திருந்துகாலம்பார்த்துப் பஞ்சாங்கந் தினந்தோறுஞ்சொல்லி ஆசீர்வதித்துப் போகவும், மற்றதேவர்களனைவரும் ஏவல்களைச்செய்து போற்றிக்காக்கவும், வீராதிவீரர்களாகிய அவுணரோமுதலாகக் கைகட்டிநின் றேவல்கேட்கவும் அளவற்ற அண்டங்களை ஆளப்பெற்ற சூரனுகிய என்தமையன் தோள்களைத்தழுவியணைந்து களித்திருக்க இந்தஅயிராணியைக் கொண்டுபோவதையறியாதுபேதமைப்புத்தியினுற்றடைசெய்தனை யிதுமுக்கியமாகத் தகாதகாரியம் மேலுந்தாருகாசுரன் சேனைத்தலைவர்கள் இவளையும் இவள்கணவனையுந் தேடித்திரிகின்றனர். அவர்கள் ஒருகாலங் காணுவார்களாயின் உன்னைவிடமாட்டார்கள் கொன்றுதின்றுவிடுவர். அல்லாமலும் நானே உன்னைவாயிற்போட்டுக் கொறித்துவிடவல்லலேன், ஆனல் பசிதணியப்போதாமையால் விட்டேன் கெடுதிநேருவதற்குமுன்னமேதப்பித்துக்கொண்டோடிப் பிழைப்பாயாகவீணிற்சாகவேண்டாம் ஓ! அபலனே? உன்மீது தயையினுலிதனைச்சொன்னேன். தாமதஞ்செய்யாமல் நடந்துவிடுவையென்று அசமுகிசொல்வதை வீரன்கேட்டு குறுநகைகொண்டு நல்லகாரியம் என்வல்லபங்களையறியாது இவ்வார்த்தைகளைப்பேசினை வெகுகாலமாக வெற்றிபெற்றுநின்ற உன்குலத்தைப்பொடிசெய்ததறியாயோ? உன்னையும் வதைப்பதெனக் கரியதல்ல பெண்ணதலால் உயிர்தப்பிப்பிழைத்தாய் இதனையறிந்து விரைவில் இந்திராணியை ஒப்பித்துப்போட்டு நடந்துவிடக்கடவை வீணிற்காயத்தைப் போக்கடித்துக்கொள்ளாதேயென்று வீரன்பேசியஉண்மைகளைஊழின்சம்பந்தப்பட்டவளாதலால் யோசியாமல் இவன்கரத்திலிருந்த வாளும்போய்விட்டது மேலும் நிராயுதனுடன்சண்டைகொடுப்பதிற்பயனில்லை நீதிக்கும் விரோதமாகக்காணுகின்றது அல்லாமலும்இவனைச் சுலபமாகஎண்ணவும்போகாது வெல்வதரிதாயிருக்கும் இத்தருணத்தில் வீண்காரியத்துக்குள்ளாகாமல் நாம்நினைந்தபடியே இந்திராணியைக்கொண்டுபோய் விடக்கடவேம்மெனநிச்சயித்தவளாய்த்தன்தோழியருகிற்போய் அவள்காவல்கொண்டிருந்த இந்திராணியைப் பழையபடியே தன்கரத்திற் பற்றினவளாய்ப் பூர்வத்தில் வாயுதேவன்மகம்மேருபர்வதச்சிகரங்களைப் பறித்துப்போனதைப்போல அதிவேகமாய்நடப்பதை மகாகாளர்பார்த்து அடிபாதகி? எங்கேபோகின்றனை நில்லுநில்லெனத்தொடர்ந்து கொடியமனதையுடையஅசமுகி கூந்தலைஒருகரத்தினுற்பற்றி மற்றக்கரத்தினுல்உடைவாளைஉருவிக்கொண்டு இந்திராணியைப்பற்றியிருந்த வலதுகரத்தைத் தோள்வளையில் தேவர்களித்துக் குதித்துக்கொண்டாடவெட்டித்தள்ளி யிருண்டபிலத்தில் வகைமோசமாய் அகப்பட்டுத்தப்பிப்போகவகைகாணுதுமயங்குகின்றவரை வெளியிற்கொண்டுவந்து விட்டதைப்போல மதிமயங்கிவருந்தித் துக்கித்திருந்த இந்திராணியைப் பக்குவமாய் அப்புறப்படுத்தியபின்பு மனஞ்சகியாமல் பாதகியாகிய அசமுகியைத்தமது பாதத்தினுல் மலையின்மீது விழுந்த இடியைப்போல உதைத்துத்தள்ளி யுருட்ட அதைக்கண்டுதுக்கித்துப்பக்கத்தில்நிற்கின்ற துன்முகியைப்பார்த்து இந்திராணியைத்தொட்டகை உனக்கு மிருக்கலாகாதென்றுஉதிரம் பெருகக் கொய்துதள்ளி அவளையுங்காலினுல்உதைக்க ஓவென்றலறிபூமியில்விழுந்தனள்.

---

## அசமுகிசோகப்படலம்.

அறைபடுகழலினனவுணமாதர்கை
யெறிதலுக்குருதிநீரொழுந்ததன்மையாற்
றிறல்கெழுவெய்யசூர்திருவைச்சுட்டிடுங்
குறைபடுஞெகிழியின்கோலம்போலுமே.

---

கேட்டீர்களோ! சவுனகாதி மஹாரிஷிகளே? இவ்வாறு வீரகண்டைசத்திக்கும் பாதங்களையுடையமகாகாளர்கோபித்து இரண்டுராட்சதக்கன்னியர் கரங்களைவெட்டித்தள்ளியகாலத்தில் ஊற்றெழுந்து பெருகுவதைப்போல இரத்தமானது வீரிட்டோட விழுந்துகிடந்த தெப்படியிருந்ததென்றால் அகன்றசாம்பிராச்சியச் செல்வப்பெருக்கையும் புசபலபராக்கிரமத்தையும் பெற்றிராநின்ற சூரபதுமனிடத்து இதுபரியந்தம் வாழ்ந்திருந்த லட்சுமியைச் சுடுவதற்கமைத்த குறைத்தலைக் கொள்ளியினையொத்து விளங்கியது. பின்பு சுழித்தோடும் ஆற்றைப்போலஇரத்தமேலிட்டுப்பெருக, அசமுகியானவள் வருந்திவிழுந்துமூர்ச்சித்துத் தெளிந்தவுடன் தனக்குநேர்ந்ததுன்பத்தினும் சமுத்திரமிரைவதைப்போலக் கோ கோ வெனப்புலம்பி மருண்டுபதைபதைத்து இடதுகையை பூமியில்அடித்து நெரித்து மகாகாளன் மீட்டு மெங்கேவருகிருனே வென்

னும் ஏக்கத்தினுற் சுற்றுமுற்றும் பார்த்து வெருண்டும் கரத்தினுற்பூமியிளக்க மோதியும் முதுகும்மார்புந்தேயக் கடகடெனப் பூமியிற்புரண்டுஞ்சரீரமுற்றுமிரத்தந்தோய்ந்தபடியால் செவ்வானத்தைப்போல விளங்கியும்இவ்வபாயத்துக்குக் காரணம் இந்திரன்தேவியாதலால் அவளைப்பற்றிப் பிசைந்துமென்றுதின்றுகோபந்தணிவேனெனச் சடுதியிலெழுந்து விழுவாள். சற்றுமவுனியைப்போலச் சும்மாவிருந்தெண்ணி வாடுவாள், முன்னும் பின்னுஞ் சாய்வாள். பலவீனத்தினுல்மூர்ச்சையாவாள்கோபத்தினுல் உதட்டைக்கடிப்பாள். மேலுமேலும்பெருகும்உதிரத்தைக்கொப்பளித்து உமிழ்வாள். நல்லகாரியம் நல்லகாரியமெனத் தலையையசைப்பாள்.இடியையொப்பப்பற்களைக்கடிப்பாள். பயபீதியினுல் திகைத்துப்பார்ப்பாள். என் செய்கைவெகு நேத்தி நேத்தியென்று நகைப்பாள். சபா சென்று விரலை மூக்கின்மேல் வைப்பாள். கோபாக்கினி மேன்மேலும்மூளப்புகையும் அனலும்பெருகவாயினுல் பெருமூச்சுவிடுவாள். உம்மெனக்கர்ச்சனைகொள்வாள், நல்லதாகட்டுமெனக் கோபிப்பாள். விழிகளிற் றீப்பொறி பறக்கச் சுற்றுமுற்றும்பார்ப்பாள். வீரமகாகாளன் பராக்கிரமத்தையெண்ணி யெண்ணி மெச்சுவாள். சரீரம்வியர்க்கவருந்துவாள். தனக்குடுத்தகுறையை நினைக்குந்தோறும் வெட்கித் தலையையிரங்கிக்கொள்வாள் அறுபட்டுப் பூமியிற்கிடக்கின்ற கரத்தினை மற்றையகரத்தினுலெடுத்துப்பார்ப்பாள். அதனைக்கண்களில் ஒத்திக்கொள்வாள்புசத்திற்சேர்த்துத் துக்கிப்பாள். இப்பாடுபட்டவர்கள்என்னைவிட யாவரிருக்கின்றனரென்பாள். இத்தனைஅவமானம்நேர்ந்தகாலத்தில் உயிர்தரியாமல் இறப்பதே உத்தமமெனக் கருதுவாள் அகன்றசாம்பிராச்சிய மிகுதியையுடையசூரன்தங்கையாகியஎனக்கும் இப்படிக்குநேருமோவென்பாள். ஐயையோ இதுமிகவும் அநியாயம் அநியாயமென்பாள். திரிமூர்த்திகள்முதலிய பலரும்புகழவாழும் என்தமையன்முன்இக்கோலத்துடனெப்படிக்குப்போவேனென்பாள். பலபலஎண்ணமிட்டுஅழுவாள். இனி வாலிபமுள்ள புருடர்என்னைத்தொடக் கூசுவாரோ யென்னசெய்வதென்று வாடுவாள். முடத்தியென்று சகலரும் ஏசுவாரோயென்று கிலேசிப்பாள். பயந்தொளித்துத்திரியுந் தேவர்கள் பழிபேசுவாரோ என்பாள். இதற்கென்ன செய்வோம் ஒருதந்திரமுந் தோற்றவில்லையே என்பாள். தேவர்களெல்லாம் யோசித்து என்கையைப்போக்க இவ்விதஉபாயந்தேடினராதலால் இனிஉயிர் சுமந்திருக்கலாதென்பாள். அதற்குமுன்னமே அவர்களுடன் மற்றஉலகங்களையுஞ் சாம்பலாக்கி யூதுவேனெனக்கோபிப்பாள்.சகலபுவனங்களினு மிராநின்ற பிராணிகளையும் நாசமடையச்செய்து கோபம்நீங்குவேனேவென்பாள். கடையுகத்திற் சராசரப்பிரபஞ்சங்களைத் தகிக்கவல்ல வடவாமுகாக்கினியையவிப்பேனேவென்பாள்.

அண்டவடுக்குக்குலைய கீழ்மேலாக்குவேனே வானத்தில்விளங்கும் நட்சத்திரராசிகளைவாரிக்கொறிக்கவோவென் றிவ்விதங்களாகப் பலபலகோபவார்த்தைகளைப் பேசுவதைக்கேட்ட தோழியாகிய துன்முகிராட்சதக்கன்னிகையாயினும் விவேகசாலியாதலால் மன்னுயிருக்கிரங்கிஅசமுகியைப்பார்த்து அடிஅம்மா? ஏன்வீண்வார்த்தையாடுகிறுய் நீயிப்போதுகுறித்ததனைத்தும் உன்னையென்ன செய்தது, அப்படிக்கல்லவென்று நீநினைந்தபடிக்கு முடிப்பையாயினும் உன்னைத்தடுப்பவர்யாவர் உன்தமையனுகியசூரபதுமனறிந்தால் தன்பெருமைக்குக்குறைகொண்டுவந்துவைத்தாயென்று உன்னைத்தண்டிப்பான். ஆதலால் நீயேன் வீணிற்காலங்கழிக்கிறுய். நாம்விரைவில்வீரமாமயேந்திரஞ்சேர்ந்து நமதரசனுக்கு நமக்குச்சம்பவித்ததைச்சொல்லிக்காட்டினுல் அந்தநிமிஷத்தில்தேவரைப்பற்றி வருவித்துத்தகுந்ததண்டனைகளைச்செய்துகொல்லுவன். மேலும் நமக்குமாத்திரமே யிவ்வூனம் நேர்ந்ததென் றெண்ணவேண்டாம் முற்காலத்திற் றக்கன்செய்தயாகத்தில் வந்திருந்ததேவகன்னியர்கள் வீரபத்திரரால் சிகையரியுண்டு மூக்குநாக்கு முலைமுதலிய உறுப்புகள் ஊனப்பட்டு வருந்தி மானங்கெட்டதைக் கேட்டதில்லையோ! இதுவல்லாமல் உனக்குமுக்கியமாய்த் தெரிவிப்பதென்னவென்றுல் சிவனடியார்கள்தவிர மற்றபிராணிகளுக்கு ஊழ்வினைச்சம்பந்தத்தை மாற்றப்போமோ? அனுபவித்துக் கழிக்கவேண்டும், இக்காரணத்தினுல் நமக்கடுத்த துன்பத்துக்கு விசனப்படவேண்டுவதில்லை. யின்பதுன்பங்கள் அமைப்பின்படிக்கு மன்னுயிர்களுக்கு காலாதிகளில்நேரும் அதற்குவருந்திக் கோபித்ததினுல் பிரையோசனமென்ன எழுந்திரும் போவோமென்றுபற்பலதிருஷ்டாந்தங்களைச்சொல்லித்தேற்ற அசமுகியானவள் ஒருவகையாகத் தெளிவுகொண்டவளாய் எதிரில்நிற்கின்ற இந்திராணியைப்பார்த்துப் பற்களைக்கடித்துச் சொல்லுவாள் என்தமையனுகிய சூரபதுமன் ஆக்கினைஎங்தஅண்டங்களினுஞ் செல்லுகின்றது. ஆகையால் நீங்களிருவரும் எவ்விடத்தி லொளித்திருப்பினுந் தூதரால் பிடித்துவரச்செய்து கொல்லுவிப்பன். மறைந்து திருடனைப்போலத் திரியும் உன்புருஷனையும் மற்றதேவர்களுடன் பற்றிக்கொண்டுவந்துமாறுதசிறையி லடைப்பிப்பேன். இப்போதுநான்சொல்லியபடிக்குச்செய்வியாமற்போவேனுகில் நான்சூரன் தங்கையுமல்ல என்மார்பிலிருப்பது கொங்கைகளுமல்ல பேடியாவேனென்று பற்பலசபதங்களைப்பேசி அவ்விடத்தைக் கடந்துபோயினள்.

## இந்திரன் மீட்சிப்படலம்.

அகலநின்றதோர்வீரமாகாளனுமடலோ
னுகவையோடுறுசசிதனைநோக்கிநின்னுளத்திற்
றகுவர்தங்களுக்கஞ்சலையன்னையுன்றலைவன்
புகுதுமெல்லையுமளிப்பனீண்டுறைகெனப்போனுன்.

ஓ! சவுனகாதிரிஷிகளே? இவ்விதமாகச் சூரன்தங்கையாகிய அசமுகியென்னும் பாதகியானவள் வீரங்களைப் பேசி துன்முகியென்னுந் தோழியுடன்மறைந்தபின்புமனச்செருக்குடன் விளங்குகின்ற இந்திராணிமுகத்தைவீராதிவீரனுன மகாகாளன்பார்த்துத் தாயே! அசுரப்பட்டிமக்களுக் கெவ்வளவேனும் அஞ்சாதே உன்கணவனுகியதேவராசன் வருமளவும் உனக்கியாதோ ரிடையூறுமின்றி காக்கக்கடவேன். மனக்கவலையற்றுப்பழையபடியே தவஞ்செய்யக் கடவாயென்று தயிரியஞ்சொல்லித் தமதிருப்பிடத்திற்குப்போயிருந்தனன். பின்பு இந்திராணியானவ ளினத்தைப்பிரிந்த மானைப்போல ஒன்றியாகத் தன்னிலையிலிருந்தாள். இச்செய்திகளை நாரதமகாரிஷிதெரிந்

தவராய்த் தாமதஞ்செய்யாமல் விரைவிற் திருக்கயிலாயத்தக்குப்போய் இந்திரனைக்கண்டு ஆசீர்வதித்து இந்திராணிக்கடுத்த துன்பங்களையும் மகாகாளர் சகாபங்களையுஞ்சவிஸ்தாரமாகச் சொல்லக்கேட்டு உடனே மனங்கலங்கிக் கிலேசித்துப்பரமனைப்போற்றித் தட்சணமே தேவர்களுடன் நந்திதேவ ரிடத்துக்குப்போய் வணங்கித்துதித்து ஓ! நந்தியெம் பெருமானே? அடியே னிவ்விடம் வந்தபின்பு என்தேவிக்கு அசமுகியென்னும் பாதகியினாற் சிலதுன்பம் நேர்ந்ததாகக் கேள்விப்பட்டேன். மேலும்நாயினேன் வினைக்கீடாய்க் கர்த்தனைக்காண்பதற்குக் காலமும் நேரவில்லை. ஆதலாற் பூலோகத்துக்குப்போய் இன்னஞ்சிலகாலந் தவஞ்செய்யத்தக்கதாக அடியேனுக்கும் மற்றத்தேவர்களுக்கும் விடைதரவேண்டுமென்றிரக்க நல்லகாரியம் அவ்வாறேபோய் வரக்கடவீர்களென்றனுக்கிரகஞ்செய்தபடிக்கு உடனே சகலரும் அரகரவென்னுமுழக்கத்துடன் வெள்ளியங்கிரியினைக்கடந்து பூலோககயிலாயமாகிய சீகாழித் தலத்தைச்சேர்ந்து மகாகாளரைக் கண்டு ஆவலுடன்கட்டிக்கொண்டு நீர்செய்தவுதவிக்குக் கைம்மாறுண்டோ! என்பிராணபரியந்தம்இதனைமறப்பதில்லையெனப் பற்பலஉபசாரங்களைச்சொல்லி அவ்விடங் கடந்துபோய்த் தனதுதிருத்தேவியாகியபுலோமிசையைக்கண்டு அவள்துக்கத்தைத் தீர்க்கும்பொருட்டுப்பலஉறுதிமொழிகளை பேசினான். அக்காலத்தில் இந்திராணியானவள் அசமுகிசொல்லிப்போயின சபதங்களையும் வஞ்சகங்களையுஞ் சவிஸ்தாரமாகச் சொல்லக்கேட்ட இந்திரன்திடுக்கிட்டு இதற்கென்ன செய்வோமென்று யோசித்துத் தாமதஞ்செய்ய லாகாதெனத் துணிவுகொண்டு தேவர்களுடன் இந்திராணியை யழைத்துக்கொண்டுபோய் மகம்மேருச்சாரலிற் பதுங்கியிருந்தான்.

## சூரனரசிருக்கைப்படலம்.

இன்னபான்மையின் மகபதியிருந்தனனிப்பான்
முன்னமேகியவசமுகிவெய்யதுன்முகத்தா
டன்னெடேகியேமகேந்திரத்தனிநகரடைந்தா
ளன்னகாலையிற்சூரன்வீற்றிருந்தவாறறைவாம்.

இவ்விதமாக இந்திரன்பதுங்கியிருந்தகாலையில் முன்னங்கைஅறுப்புண்ட அசமுகியானவள்தன்தோழியுடன் சீகாழிப்பதியைக்கடந்து மிகுந்தமனவாட்டத்தோடுவீரமாமயேந்திரபுரத்தைச் சேருவதன்முன்னஞ் சூரபதுமன்அரசுசெலுத்தியிருந்த சிறப்பிற் சிலவற்றைச் சொல்லுவோம் ஓ! சவுனகாதிரிஷிகளே? கேட்பீராக. எண்ணிறந்த பிரமர்கள்கூடி நமதரசனாகிய சூரபதுமனுக்குசபாமண்டபஞ்சோடிக்க வேண்டுமெனக் கருதி அவன் குடைநிழலிற்பட்ட ஆயிரத்தெட் டண்டங்களி லிராநின்ற ஆயிரத்தெட்டு மாற்றுடைய சொர்ணமலைகளைப் பறித்து வந்து உருக்கிக் கற்களாகச்சோடித் தமைத்ததைப்போலக் கனத்ததாய் உயரத்தினுமிகுந்து சக்கிரவாளகிரியையொப்பாக வளைந்து ஆயிரம்யோசனை விஸ்தீரணமுள்ளதாய்ப்பசுமை தங்கிய காந்திகளை வீசிவிளங்குஞ் சபாமண்டபமானது வீரமாமயேந்திரத்தின் உள்பிராகாரநடுப் பிரதேசத்திலுண்டு அதனிடையிற் சொர்ணமலைகள்செக்கடமிட்டுப் பட்டைகள் தீர்ந்து தொழில்முற்றுப்பெறச் செய்தமைத்ததாயிராநின்ற ஆயிரங்கோடி தூண்கள் இடையிடையில்நாட்டி மேற்பரப்புகளைத் தாங்கிநிற்கவும் அண்டகோடிகளினிராநின்ற சொர்னபூமிகளிற் சிறந்ததாய் மாற்றுயர்ந்ததாகவிருப்பவைகளைச்சேகரித்துஉருக்கிவார்த்துச் சீர்படுத்திமெருகிட்டிருப்பதைப்போல ஜ்வலித்திராநின்றவிசாலமாகியமேற்பரப்பு வானத்தைஅளாவநிற்கவும்பலவளங்களையுடையபூமண்டலத்திலுண்டாயிருக்கின்ற குலகிரிகளைப் பேர்த்தெடுத்துப்பிளந்து கடையலிட்டு அமைத்திருப்பதுபோல விளங்குந் இரத்தினமயமாகிய பொன்கொடுங்கைகள் உத்திரங்கள்போரிகள் அவைகளினிடையிற் சிற்பசாஸ்திரத்துக்கு மேற்பட்டசிங்காரமுள்ள சித்திரங்கள் பலவகைப்பதுமைமகள் அவற்றின் செய்கைகளை நடத்திக்கொண்டிருக்கவும் பற்பலபுவனங்களில் விளங்கியசெக்கர் வானங்களைச் சேகரித்து வரிசைப்படத்திருத்தி அமைத்துவைத்திருப்பதை நிகர்த்துச்செந்தாமரைகள் முதலியபலவகைபுஷ்பங்களினாற்சோடித்தவிதானங்கள்பரிமளித்துக் குளிர்ச்சியாய் மேற்பரப்பினிடையே கட்டி விளங்கவும்பன்னிருகோடிசூரியரைப் பிடித்துவந்தமைத்ததையொப்பமுற்றினும்நிலைக்கண்ணாடிகள் தூக்கி நிற்கவும்அளவுபடாத சந்திரருடைய சோடசகலைகளையும் மேகவகைகளையும் ஏகமாகச்சேர்த்துஒழுங்குபெறச்செய்தமைத்ததைப் போலக்கணக்கிறந்த வெண்சாமரைகளையும் ஆலவட்டங்களையும் வெண்பட்டாடைத் தொங்கலையும் மயிற்பிச்சங்கள்முதலியசிறப்புகளைப் பற்பல சிங்காரவளப்பமுள்ளவாலிபப்பெண்களேந்திப்பரிமாறவும் முத்துக்கோவைகளினாலும் நவரத்தினங்களினாலும் பட்டு விதங்களினாலுஞ்சோடித்துத்திசையெங்கினுங் காந்திகளைவீசிவிளங்கும்பூச்சக்கிரக்குடையானது சந்திரபிம்பம் போன்றசையவும்அளவுபடாதஅண்டங்கடோறுமிராநின்றபிரகாசங்களைமுற்றுஞ்சேகரித்தொன்றுக்கிச்சிற்ப நூல்களிற் றேர்ந்தவரால்அமைத்திருப்பதைப்போலச் சொர்னத்தினாலும் இரத்தின வகைகளினாலுஞ் சோடித்து வானத்தில்விளங்கும் நட்சத்திர வகைகளைப்பொறுக்கி மாலைசெய் தமைத்ததைப்போல ஆணிமுத்துக்கோர்வைகள் தொங்கவிட்டுவிளங்கவும் பூரணசந்திரர்களைப்பற்றி இலக்கணப்படிக்குச் செய்ததைப்போலவிளங்குஞ் சந்திரகாந்தக்கற்களினாற் சோடித்தசிங்கங்கள் நாற்புறத்தினுந் தாங்கப்பொற்பாவைகள் பக்கங்களில் நடித்திருக்க இவ்விதச் சிங்காரங்களைப்பெற்ற சிங்காதனமானது அஷ்டலட்சுமிகளுங் குதிகொண்டிருக்குஞ் சபாமண்டபத்தின் முகப்பில்அவுணருக்கரசனை சூரபதுமன்வீற்றிருக்கும்படிக்கு விளங்கியது.அவ்வாசனத்தின்மீது ஆயிரகோடி அண்டங்களிலிராநின்றவடவாமுகாக்கினியும்;ஆலகாலவிஷமும்ஏகமாய்ஒருமித்துஅமைந்ததைப்போல மாணிக்கம்நீலரத்தினம் முதலிய மணிகளினாற் செய்தமைத்த கிரீடம்குண்டலம்வாகுவலயம்மதாணிப்பதக்கம் அரைவடங் கடகமுதலாகிய சர்வாபரணங்களுஞ் சொலிக்க ராட்சதவீரர் சேவிக்கமேற்குறித்த அண்டங்களின் அரசுசெலுத்தி யிருக்கும்கூற்றுவரனைவருஞ்சேர்ந்தொன்றிடதையொப்ப வீரபராக்கிரமகெம்பீரஉத்தண்டராச ராசப்பிரபுடீகனைசூரபதுமன்வானத்தையளாவவீற்றிருந்த காலத்திற் முன்பூர்வத்திற்செய்ததவத்திற் கிரங்கிசிவபிரான் அனுக்கிரகஞ்செய்த பலஅண்டங்கடோ

றும் நடாத்துகின்ற ஆக்கினைச் செங்கோல் அளவுபடாத கீர்த்தியிவைகளனைத்தும் ஏககாலத்திற் சேர்ந்தொருமித்து இருகூறுருக நிற்பதைப்போலஉபயபாரிசங்களினும்தவளச்சக்கிரக்குடைகளைத் தாங்கிநிற்பதுசோடசகலைகளைப்பெற்ற சந்திரர் இராசாதிராசனை வந்தித்துப்போகத் தலைகளைநீட்டி நீட்டிக்காலம்பார்த்திருப்பதைப்போலவும் பூமண்டலத்தை வளைந்திராநின்ற கருங்கடலும் மகாவிஷ்ணுபள்ளிகொள்ளப் பெற்ற திருப்பாற்கடலும்இரண்டுருக்கொண்டு நிற்பதைப்போல சவுரியபராக்கிரம சாலிகளான சிங்கமுகாசுரனுந் தாருகாசுரனும் இருபாரிசங்களினுமிட்ட சிங்காதனத்திற் கொடிய சிங்கங்களையொப்ப வீற்றிருந்து தமையன் கட்டளைப் படிக்கு காரியங்களைச் செலுத்திக்கொண்டிருக்கவுஞ் சூரியர்சந்திரர்முதலியகிரகங்களைப்போல பானுகோபன் இரணியன்முதலிய குமாரவருக்கங்களும் விவேகசாலிகளாகியமந்திரிபிரதானிகள் சேனைத்தலைவருஞ் சூழ்ந்திருக்கவும் அண்டங்களிலிருக்கின்றவாயுக்கள் வருணர்களுஞ்சேர்ந்து பனிநீர் தூவிக்குளிர்ந்த காற்றைவீசிப்பணிந்தெழுந்தேவல்களைக்கேட்டிருப்பதுபோல நீலமலைக்குச்சமமாக பருத்திருக்குந்தேகத்தையுடைய இராட்சதர்க ளிருபாரிசங்களினும் நின்று கவரிகளைவீசுதல் பற்பலஅண்டங்களிற் பரந்திருக்குந்திருப்பாற் கடல்களிலெழாநின்றநுரைகளைச்சேகரித்துவைத்திருப்பதற்கொப்பாகவும் வெள்ளித்தகட்டுக்கு உவமிக்கும் வெள்ளிலைபாக்கு வருக்கங்கள்நிறைந்த பொற்பெட்டிகளைப் பலகன்னியர் ஏந்திநிற்கவும் ஆயிரங்கிரணங்கள் பொருந்திய சூரியர்களைப் பிடித்துருக்கிவார்த்ததற்கு நேராகச்சொலித்திருக்கும் பொற்படிக்கங்களை யிராட்சதர்களேந்தி நிற்கவும் அகன்ற வெல்லையைச்சூழ நிற்கின்றசக்கிரவாளகிரியிற்றோன்றிக் குளிர்ந்தகிரணங்கள் சொலிக்குஞ் சிரோரத்தினக் காந்தியும் அக்கிரியின் புறத்தில்விளங்குங் காடாந்தகாரமாகிய விருளுந்திருப்பாற் கடலினுதித்த சிறப்புள்ளஅமுதமும் விசாலமாய் ஆழ்ந்திருக்குஞ் சத்தசாகரங்களும் நவரத்தினங்கள்,முதலியவனைத்தும் ஊழிக்காலத்திலொன்றுடனொன்று கிரமந்தப்பிமாறிக்கலந்து விளங்குவதற்கிணையாக விசாலமாகப்பரந்திருக்கும் அச்சபையில்இராசராசர்கள்அவுணத்தலைவர்கள்ராட்சதவீரர்கள் பந்துவர்க்கங்கள் பெரியோர்கள்சினேகிதர்கள் ஆதியாகவிடமின்றி நெருங்கிக்கிரீடங்களுடன் கிரீடங்கள்தாக்கச் சக்கிரேஸ்வரனுடையநோக்கத்துக்கெதிர்பார்த் திருக்கவுந் தேனைக்கிரகிக்கப் புஷ்பங்களினிறங்கி மிதிக்குந்தோறும் மகரந்தங்களிற்படிந்துமணத்திருக்குஞ் சுரும்பினங்களின் வயிற்றிலுராய்ந்து மன்னுயிர்களுக்குக்களிப்பினைத்தருங்குளிர்ச்சியுடையசோடசகலைகள்பொருந்திய சந்திரனது தேகத்தைத்தழுவிமகாவிஷ்ணுவிருப்பமாகப் பள்ளிகொள்ளத்தக்கசீதளத்தைப்பெற்றுமதுர மிகுத்த திருப்பாற்கடலிற்றவழ்ந்து கடல்சூழ்ந்தபூமண்டலந் தெய்வலோகமிவற்றுட் சிறந்திராநின்றபூங்காவுகள் நந்தவனங்கள் மாமுதலிய சிறந்த தருக்களிற்றிளைத்து, தன்வேகத்தையடக்கி மெல்லெனவசைந்து குளிர்ச்சியாக மந்தமாருதமானது உலவித்திரியவுஞ்சத்தமேகங்களும் மாறிமாறி தெய்வகங்கையிற்றோய்ந்து சந்திரனோடுறவுகொண்டு பனித்தூவலைமேய்ந்து பொன்னுலகத்திலிராநின்ற கற்பகச்சோலையிற் பலநாட்பழகிவந்துதண்மையாகச் சிறுதுளிகளையிறைக்கவும் ஊர்வசிரம்பைதிலோத்தமை மேனகை முதலியதெய்வப்பெண்கள் இயக்கர் மகளீர் அரக்கர்மாதர் தானவப்பெண்கள் விஞ்சையர்கன்னியர் சாரணஸ்திரீகள் சித்தமங்கையர் முதலாகியசுந்தரமுள்ள நாடகப்பெண்கள் நவரத்தினமயமாகிய ஆபரணங்களைத் தரித்துப் பட்டாடையுடுத்திப்புஷ்பவகைகளை அலங்கரித்துக்கொண்டவர்களாய்ப் பரதசாஸ்திர விதிப்படிக்கு அபிநயங்காட்டி மயிலினங்களைப்போல நடித்துங்குயில் வருக்கங்களுக்குச் சமதையாகச்சுரலோசையெழப்பாடியுஞ் சராசரப்பிரபஞ்சங்களைப்படைத்துவரும்பெருமையினை யுடைய பிரமதேவனனவன் பிராதகாலத் தெழுந்து தன்கடன்களைமுடித்துக்கொண்டு சூரன் ஆசாரவாசலில் வந்து பஞ்சாங்கஞ்சொல்லிப்போகக் காலங்கிடையாமல் ஒருபாரிசத்திற் காத்திருக்கவும் அவர் பிள்ளைகளாகிய நவப்பிரமாக்களுங் காலத்தினைநாடிநாழிகையினை முறைமுறையாகப் பக்கங்களில்நின்று சொல்லிவரவும்மன்னுயிரைவாட்டுங் கொடுமையினைப்பெற்ற புலிக்கூட்டமத்தியில் சிலமானினங்கள் போவதைப்போல கடினசித்தமுடைய இராட்சதர் நெருக்கி லகப்பட்டு கரங்களைநீட்டி ராசராசேந்திரனே வாழிவாழியெனப்பற்பல ஆசிகளைச் சொல்லிச் சமுத்திரகோஷ்டத்தினு மேலிட்டொலிக்கும் ஆரவாரங்களினுற் செவிகளிற்படவில்லையோவென்னும் சந்தேகத்தோடு நிற்கின்ற முனிவர்பாரிசத்திற்சூரபதுமன் விழிகளைச்செலுத்துந்தோறுங் கரங்களைத்தூக்கிஅவுணத்தலைவனே சுகசீவியாக வாழிவாழியென்று சொல்லிவருந்தவுந் தேவேந்திரன் தவிரமற்றதேவர் அரசனைச் சேவிக்கச் சமீபத்திற்போயிருந்தகாலத்தில் ராட்சதர்கள் நெருக்கிலகப்பட்டு மீட்டுங் கடைவாயில் வரையிற்றள்ளுண்டு அரசனைவணங்குதற்கு காலதாமசமாகின்றதெனமீட்டும், அவர்கள்மத்தியில் நுழைந்தும் பழையபடியே தள்ளுண்டுவரக்கடைவாயிற் காப்போர் இவர்கள்அடிக்கடி வருகின்றனரெனப் பொற்பிரம்புகளினுல் மோதப்பட்டு சபையைத்தரிசிக்கப்பெறுமையால்மனவாட்டத்துடன்அலைந்துநிற்கவும் அவ்வீரர்களிற்சிலர் ஜபசாலிகளாய் பொற்சட்டைகளை யுடுத்துக்கரத்திற் கோலைக்கொண்டுபராபரிசெய்து போம்போமென்று விண்ணவர்மகுடங்கள்சிதற மோதிமேகங்களைக் கலைக்குஞ்சுழல்காற்றையொத்துத் துரத்தியுஞ் சிலர்தப்பி நுழைந்துசபைக்கருகிற்போய்சூரன்கீர்த்திகளைச் சொல்லிப்புகழ்வும் ஆயிரமிதழ்கள்பொருந்திய பொற்றுமரைவாசியாகிய ஸ்ரீமகாலட்சுமியானவள் பலவுருவுகொண்டு அணிவகுப்பாய் நிற்பதைப்போலச் சொர்ன மலைகளையொப்பப் பாரித்துத்தேமல்பரந்துததும்பிவிளங்கும் கொங்கைகளையுடைய மங்கையர் அளவற்ற சிரோரத்தின தீபங்களையேந்தி வாழ்த்தெடுத்துச் சுழற்றவும் கின்னரர் சித்தர்இயக்கர் கந்திருவர் வீணைகளைமீட்டி மங்களம்பாடவும் வீரமாமகத்தைச்செய்துமுடித்தஉறுதிப்பாடுகளையும்அதற்கிரங்கிப் பரமசிவமெழுந்தருளி வேண்டியவரப்பிரசாதங்களைக் கடாட்சித்தமுயற்சிகளையும் இந்திரன்முதலியோர்களைப் புறங்கண்டுவெற்றிகொண்டு ஜயஉச்சாகத்துடன் திக்குவிஜயஞ்செய்துதிரும்பிய புகழினையும் சிவபிரான்கட்டளையிட்ட ஆயிரத்தெட்டு அண்டங்கடோறும் இந்திரஞாலத்தேரில்ஆரோகணித்துலவி அத்தலவாசிகளை தன்வயப்படுத்தித்தனதுதுவசத்தினைநிறுத்திச் செங்கோல்செலுத்திவரும் வீரப்பிரதாபத்தையும் மற்றவிஜயங்களையும் பலகோடியிராட்சத

ர்கள் கட்டியங்களினுற்சொல்லி யிருபாரிசங்களினும் நின்றுதுதிக்கவும் அவுணராசர் திக்குப்பாலகர் முதலாகச் சேவிக்குந்தோறும் அரசன்பாதங்களிற்சொரியும்பொன் மலர்களையும் முனிபுங்கவர் பெரியோர்கள் பண்டிதர்கூட்டங்கூட்டமாகவந்து மந்திரஆசீர்வாதங்களைச்சொல்லியிறைக்கும் அறுகு அட்சதைகளையுங் காலங்களிற் காத்திருந்து வாயுவானவன் சுத்திசெய்துவரவும் வருணராசன் பனிநீர்களைத்தூவி புழுதிகளையடக்கவும் பரதநாட்டியங்களை நூலின்முறையே அபிநயங்களைக்காட்டி நடிப்பவருக்கும் ராஜேந்திரன் கீர்த்திப்பிரதாபங்களைக் கொண்டாடும் பட்டுவர்களுக்கும் சித்திரக்கவிகண்டசுதிஅஷ்டாவதானங்கவித்துவங்கள் செய்யவல்ல வித்துவாம்சர்களுக்கும் உசிதங்களாகப்பேசிச் சபையைக்களிப்பிக்கும் அகசியக்காரர்களுக்கும் மற்றும்யாசகர்முதலாக ஏற்பவர்களுக்குங்கொடுக்க நவரத்தினமயமாகியகிரீடம்வாகுவலயஞ் சரப்பளி கடகமுதல்யவிலைபெற்ற ஆபரணதிகளும் பட்டுபட்டாடைகளும் திரவியவிதங்களையும் இருபாரிசங்களினு மேந்திநிற்பவர் சூரன்மகிழ்ந்து விரலைச்சுட்டிக்காட்ட அவர்களுக்குக் கொடுத்துவரவும் தேவர்ரிஷிகள் முதலாகத் தங்களிடத்திற் குற்றங்களில்லாவிடினும், அரசன் ஒருவர்மீதிற் கோபங்கொண்டகாலத்தில் தங்கள்பிராணனுக் கிறுதிநேருகின்றதைப்போலப் பயங்கொண்டிருகரங்களையுமேந்தித்துதித்து வாடவும் சூரன்நகைமுகனுய்த்தோற்றியகாலத்திற் றமதுபிராணனுக்கிறுதியில்லையெனக்களித்து மிவ்விதஆடம்பரங்களைக் கொண்டிருந்தது சூரபதுமன்அரசுசெலுத்தியிருந்தசபையானது. கேட்டீர்களோ சவுனகாதிமஹரிஷிகளே யிச்செய்கைகளெத்தன்மையாக விருந்ததெனின் இடிவிழும்போ தெல்லாம் மந்திரங்களைச்செபிப்பவர்களையொப்பநின்றது.

## அசமுகிநகர்காண்படலம்.

இன்னனபலபலவெய்தச்சூரனு
மன்னவனிருத்தலுமற்றவ்வெல்லையிற்
றென்னகரணித்துறத்துன்முகத்தினு
டன்னெடுமசமுகிதான்வந்தெய்தினள்.

இவ்விததிருவோலக்கங்களுடன் சிங்காதனத்தில் வீற்றிருந்து சூரன் அரசுசெலுத்தி வருகின்றபோது அசமுகியானவள் தோழியுடன் கரங்களறுப்புண்டசோர்வும் மனவாட்டமும்வருத்த பற்பலவளங்களைக் கொண்டிருக்கும் வீரமாமயேந்திரபுரிக்குச் சமீபத்தில் வருகின்ற தெப்படிதோற்றியதென்றால் அப்பட்டணத்திற்குதிகொண்டிருந்த அஷ்டலட்சுமிகளுங் குலைகுலைந் தோடத்தக்கதாக மூதேவியானவள் தன்தோழியுடன் வருமாறுபோன்றது இவ்விதமாக அசமுகியானவள் வானத்தைஅளாவ நிற்கின்ற கிழக்குக்கோபுரவாயில் மூலமாகப் பட்டணத்திற்பிரவேசிக்கின்றதருணத்தில் இவர்கள்சிறுமையைக் கண்டபுரசனங்கள் துக்கித்து விழிகளில் நீர்சோரச் சமீபத்திலுஞ்சேரவஞ்சி ஐயகோ இப்படிக்குத் துணிவுகொண்டு செய்தவர்கள்யாவர் அவர்கள் பிராணன் தப்பிப்பிழைப்பதோவெனக் கோபித்துச் சிலர்பேசவும் ஈனமானமற்ற அசமுகியின் புசத்திலிரத்தம் பெருகிவழிவது ஒருகாலத்திநும் வளமைகுன்றாத பட்டணத்திற்கு இனிசம்பவிக்கப்போகின்ற துயரத்துக்கு வழிகாட்டியதைப்போலத் தோற்ற அக்கொடுமையைக்கண்ட சிலஅவுணவீரர் தமதுதொழில்களை மறந்துவந்து கும்புகும்பலாகக்கூடி விழிகளில்நீர்பெருக மனம்பதைபதைக்கத்தீயும்புகையுமெழப் பெருமூச்செறிந்து கோபித்துக் கூறுகின்றார் இவ்வநியாயந் திரிபுரதகனராகிய பரமசிவத்தின் செய்கையோவென்றும் மகிஷாசுரன் நிகும்பன் கும்பன்முதலாகியவிராட்சதர்களைவாட்டிய காளியினதுசெய்கையோவென்றும் மகாவிஷ்ணுவுக்கும் பரமசிவத்துக்கும் உதித்தஅரியரபுத்திரர் செயலோவென்றுங் கயமுகாசுரனைவென்ற விநாயகமூர்த்தியினது கட்டளையோவென்றும்ஆயிரம்பணமகுடங்களைப்பெற்ற ஆதிசேடன்மீது பள்ளிகொண்டிருக்குங் கேசவன் தண்டனையோவென்றும் அப்படிக் கவன் செய்யத் துணிவனோ அல்லது பிரமதேவன்தா னிக்கொடியகாரியத்தைக் கனவிலும்நினைப்பானோவென்றுஞ் சூரனுல்வருந்தி ஓடிப்போன தேவேந்திரன் வஞ்சகத்தினுல்நேர்ந்ததோவென்றும் அப்படிக்கொளித்து திரிபவனிதனைநினைக்கவுமாட்டான். அவனுல்முடிந்ததல்லவென்றும் ஒருவேளை தேவர்கள்முடித்திருப்பாரென்று நினைப்போமானுல் அவர்கள் நமதேவல்களைத் தினந்தோறும்நடாத்தி வாடிவருந்து மவராலாமோவென்றும்குடியன்அல்லது வெறியன்செய்கை யாகுமென்றும் இவள்கொடுமைகளுக் கஞ்சியோடி யொளித்திருக்கும் ரிஷிசிரேஷ்டர்கள் சாபத்தால் லபித்ததோவென்று மதுமாம்சங்களைமிகவும் அருந்திய வெறியினுல் அறிவுமயங்கியவர்களிலொருவருக்கொருவர் கலகப்பட்டு வெட்டிக்கொண்டனரோவென்றும் இவளை யாவர்தான் பார்க்கவல்லவர். ஒருகாலம் மோகத்தினுல் ஒருபுருஷனைவிரும்பி அவன்கோரிக்கையின்படிக்கு இவளைவெட்டி யெறிந்ததாக வேண்டுமென்றும் இதுஎப்படி உண்டாகியதென் றிவளைக்கேட்கலாமோ? அப்போது கோபிப்பாளோ? நமக்கென்னவென்றும் இவளைக்கேட்பானேன். பூமண்டலமுற்றினும் ஒரிமைப்போதிற் சுற்றிவருவோமாகி னிதனுண்மை விளங்குமென்று மிப்படிப்பலபலவிதங்களாகராட்சதப்பாதகர் வசனித்துத்தொடர அவர்கள் தேவிமார் அசமுகியினுலாகோலத்தைக் கண்டவுடன் மார்பி லறைந்துகொண்டு கூந்தலவிழ்ந்து புரளத்தாமரை மலர் முத்துகளைச் சொரிவதுபோல விழிகளில்நீர்பெருகத் தொடர்ந்து புலம்பிவரவும் இவ்விதங்களாகநகரவாசிகள்கிலேசித்திரங்கப் பற்பலவீதிகளையுங்கடந்து ராஜாதிராஜன்கொலுவிருக்கின்ற சபாமண்டபத்துக்கருகினில் வருகின்றனள்.

## அசமுகிபுலம்புறுபடலம்.

மறிமுகமுடையதீயாண்மன்றினுக்கணியளாகிக்
கிறிசெயுமன்னைதன்னைக்கேளிரைமருகானுரைத்
திறலுடைமுன்னையோரைச்சிந்தையிலுன்னியாண்டைப்
பொறிமகளிரியல்போகக்கதறியேபுலம்பலுற்றாள்.

கேட்டீர்களோ சவுநகாதிமஹரிஷிகளே இவ்விதக்கோலத்துடன்வருகின்ற அசமுகியானவள்தாயைத்தமையனை மருகனைக்கூவி அச்சபையினிடத்தில் விளங்குஞ்ஜயலட்

சுமி முதலியோர் விலகிப்போகப்புலம்பிக்கண்ணீர்பெரு
கப் பாடிப்பாடி அழுவதாயினள் ஓதாயோராட்சதராசனு
க்குப் புத்திரியாகத்தோன்றி மாயைக்கரசியாகப்பரமசிவ
கடாட்சப்படிக்குக் காசிபர்மூலமாக வெங்களைப்பெற்றுச்
சீர்படுத்திப் பிரிகின்றகாலத்தில் நான்மறையவிருந்து உ
ங்களுக்குயாதொரு தீங்குகளும் நேராமற் பாதுகாத்திரு
ப்பேனென்று சொல்லிப்போனவாக்கைப் பிசகலாமோஎ
ன்கைபோனது உனக்குத்தெரியாததோ பயப்படவேண்
டாமென் றொருமொழி கூறலாகாதோ அன்னையே நான்
கடைப்பெண்ணுகப்பிறந்து பட்டதுன்பம்போதும் போ
தும் பிதாவானவன் பிள்ளைகளிடத்துவிருப்பமுள்ளவனு
யும், மாதாவானவள்பெண்களிடத்து விருப்ப முடையவ
ளாயுமிருப்பரென்று உலகங்களிற பேசிக்கொள்ளக்கேட்
டிருப்பேன் ஓ மாதாவே எனது துக்கத்தை ஆற்றவாரா
யோ ஐயையோ யாவருமின்றி ஓர் துணையுமில்லாதவளை
ப்போல என்கையிழந்தும் இன்னமு மிந்தப்பாழும் உயி
ரைச் சுமந்திருப்பேனேஓஎன்மரபினரோ சுற்றத்தாரே ப
டைவீரரோ கொடிய வேகமுடைய தூதரோ நீங்களெங்கு
மூலவிநம்மவருக்கொருதுன்பமும்வாராமற்காத்திரட்சிப்
பீரென்னுந் தயிரியத்தினுலெவ்வளவும் அஞ்சாமல் ஒளி
த்திருந்த இந்திராணியைத் தற்செயலாய்க்கண்டவுடன்நம
து அரசனுக்குதவுவாளெனத் துணிவுகொண்டு பலவந்த
மாய்ப்பற்றிவலித்து வருகின்றவேளையில்அபலரான தே
வர்களுக் கேவல்செய்யும் மகாகாளனென்பவன் என்னைத்
தடுத்து அரசனுக்கினைக் கெவ்வளவும்பயப்படாமல் என்
கையைவெட்டி அவளையும் விடுவித்துக்கொண்டு போயி
னன் அந்தநந்தனவனமார்க்கமாய்நீங்களொருவரும்போ
கீர்களோ அவனுக்குப்பயந்தீர்களோ தேவர்கள் செல்வத்
தையும் வீரத்தையும்வலிமையையுஞ் செருக்கையுங்கொ
ள்ளைகொண்டு பதிதராக்கினேமென்று இறுமாப்படைந்
திருந்தீர்களே ஓவீரர்களே அத்தேவரிலொருவன் என்க
ரத்தைத் துண்டித்ததை யறியீர்களோஇச்செய்கையென்
னுடன் போனதன்று உங்களனைவருடைய மூக்கை யரிந்
ததைபொப்பான அவமானமல்லவோஎன்பங்கத்தைப்பா
ருங்கோள் பாருங்கோள் ஓசுற்றத்தாரே யிப்படிக்கொத்த
அநியாயம் நேர்ந்ததற்குநீங்கள் சுத்தவீரரென் றிருப்பதி
ற் பிரயோசனமென்னே பேடிகளானீர்களோ இதுஉங்கள்
விழிகளுக்குத்தான் தோற்றவில்லையோ தேவேந்திரனை
வன் பழிக்கஞ்சாமல் நமக்குமீன்சுமந்துநாமிட்ட பணிவி
டைகளைச்செய்து பயந்தோடிப்போய்ஒளித்தானென்றெ
ண்ணி அசட்டையா யிருக்கிறீர்கள்அவன்அனுப்பியஒரு
வனே என்னைத்தவள் கரத்தைத்துணிப்பானுயில் அவ
னைச்சுலபமாக வெண்ணவும்போதுமோ. மேலும்அவன்
செய்கையானது ஒருவன்தான்வாசஞ்செய்யும்கிரகத்தினை
அக்கினிப் போர்வையினல் மூடிப்பாதுகாத்ததற் கொப்
பாயிருக்கின்றது இதுவல்லாமல்எள்ளினிடத்துதிர்ந்தது
கட் பிரமாணம்பகை ஒருவனுக்கிருக்குமாகில் அதனையு
ந்தட்சணமே ஒழித்துவிடாமல்இது எவ்வளவென்று அ
சட்டையா யிருப்பானுனல் ஒருகாலம்அச்சிறிய பகைவ
னே வலிகொண்டு கெடுதிவரும்படிச்செய்தழிப்பானென்
று பெரியோர்கள் சொல்வார்கள். அஃதுண்மை யென்ப
து இதனளவிற்கண்டேன். அதாவதுநமக்கஞ்சிஒடுங்கிநா
மிட்டஏவல்களை முடித்துவணங்கியிருந்தஇந்திரன்கபட
த்தினை மனதிற்கொண்டு ஒளித்தவனைப்போற்காட்டித்த
ன்னேவலாளியினல் என்கையைவெட்டியெறிந்தான். இ
தனைச்சகலரும் பாருங்கோள்மேலுஞ்சமுத்திரத்திலடங்
கி நின்ற வடவாமுகாக்கினியானது காலம்பார்த்து அண்
டரண்ட புவனங்களையும் அழிப்பதைப்போலப் பதுங்கி
யிருந்து என்கரத்தைப்போக்கினன் இன்னஞ் சிலகால
தில் உங்களையுங் கொல்லுவா னென்பதற் கையமுமுண்
டோ ஆதலாலிவ்விடத்திற் சவுக்கிய மடைந்திருந்துசெய்
கின்ற கருமம்யாது விண்ணவரைச் சுலபமாகநினைந்தீர்க
ளே யிப்போதென்செய்வீர் ஓமருகனே நீபாலபருவத்தி
ல் நவரத்தினமயமாகிய தொட்டிலில் நித்திரை செய்யும்
போது சூரியனதுகிரணகாந்தி முகத்திற் படக்கோபித்து
வானத்திற் பாய்ந்து அவனைப்பற்றி வந்து தொட்டிலின்
சொர்னச்சங்கிலியிற் கட்டிப்பள்ளிகொண்டிருந்தஉன்னை
ப்பிரமன் வேண்டஅவன்பிரமசரத்தைப் பெற்றுச்சூரிய
னை விடுத்துஅவ்வெற்றியினுற் பானுகோபனென்னுஞ் சி
றந்தபெயர்பெற்ருய்.

அத்தகைய கீர்த்திவகித்த என்னுசைமருகனேதேவரி
லொருவன் அஞ்சாதென்னைப்பற்றிக் கரத்தினைக்குறைப்
பதோ இதனைவிசாரித்துத் தண்டிக்கலாகாதோ இதென்
னகொடுமை அவனுக்கிளையவர்களாகிய மருகரோஉங்களி
ல் இரணியனென்பவனுக்குத் தங்கத்தேகமும் மூன்றுசி
ரங்களுமுண்டு. சுவாலை வீசிக்கொண்டிருக்கும் அக்கினி
முகனுகியஉனக்கு இரண்டுசிரங்களுண்டு.வயிரத்தேகத்
தைப்பெற்ற வச்சிரவாகுவே உனக்குப்பத்துத் தலைகளு
ண்டு. இத்தனைதலைகள் ஏன்விருதாவில் வளர்க்கின்றீர்இ
த்தலைகளினுற் பிரயோசனமென்ன ஒரு சிரமுள்ள தேவ
னே என்கையையறுப்பவன் அவனுக்குஉங்களையொத்த
வீரபராக்கிரம முள்ளவர்கள் அஞ்சுகின்றதோ அவனைப்
பிடித்துக்கசக்கிப்பிழிந்து·நான்பட்டகாயத்திற் பூசி என்
விசனத்தைத்தணியீரோ ஓ இளையஅண்ணுவோதாருகா
சுரனே நீ திக்குவிஜயஞ் செய்கின்ற காலத்தில் உன்னுட
னெதிர்த்து உலகங்களைஓரடியிலளந்த மகாவிஷ்ணுவான
வன் கோபித்தேவியசக்கரத்தினைக்கழுத்தணியாகத்தரித்
துவெற்றிகொண்ட நீயிக்காலத்தில் உன்னொரு தங்கையி
ன்பொன்கை யிக்கோலமாகவாடி நிற்கும்படியான பழியி
னையுந் தரிக்கலாகுமோ குறும்பகைவர்இவ்வஞ்சனைகளை
ச்செய்துகளிக்க நீயுஞ்செங்கோல் செலுத்தி உலகங்களை
ஆளுகின்ருய் என்விஷயத்தில் உன்சவுரியங் குறைந்து
போகலாமோ கோரதந்தங்கள் பிறையினைப்போலவிளங்
கும் ஆயிரஞ்சிரங்களைப் படைத்தசிங்கமுகாசுரனென்னு
ம் நாமம்பெற்ற நடுவுள அண்ணுவோ ஒருகாலந்தேவர்க
ளுக்கரசனுகிய இந்திரன்வெள்ளைநிறம்பெற்றஅயிராவத
த்தின்மீது ஆரோகணித்து வச்சிராயுதத்தைக்கரத்திலே
ந்தி வந்தெதிர்த்தகாலத்திற் சீறி ஒருகரத்தினுற்பற்றிவா
னத்தெறிந்து திரும்பிப்பூமியில்விழுந்தவனைக்காலினுலு
தைத்து வெற்றிகொண்ட வீராதிவீரனென்றுன்னைப் ப
லருங்கொண்டாடக்கேட்டு மகிழ்ந்திருந்தேன் இதுவென்
னகட்டுனைதானே அத்தேவராசன் தூதரிலொருவன் என்
கரத்தினைக் கண்டித்தானே யிக்கோலத்தைப் பார்த்து
அவர்களுக்குத்தக்க தண்டனைசெய்யலாகாதோ ஓ மூத்த
அண்ணுவோ பலருஞ் சூரனென்று கொண்டாடும்பெய
ரைப்பெற்றனை செய்தற்கரியவீரமாமகத்தினைமுடித்துப்
பரமசிவகடாட்சத்தினுற் சகலவளங்களும் பொருந்திவா
ழும் அவுணர்கள்பெருவாழ்வே ஆயிரத்தெட் டண்டங்க

ளினும் உன்னுணைசெல்ல ஏககாலத்தில் அரசுசெலுத்தி உன்ஆக்ஞாசக்கர மெங்குமுலவி துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்துவாழுஞ் சவுரியபராக்கிரமமுடைய உன்கட்டளைக்கஞ்சி ஒளித்து வாழும் இந்திரனேவலாளரிலொருவனுக வீரமாகாள னிடத்தில்மாத்திரம் உன்வீரப்பிரதாபம் தோன்றவில்லையே வலையோர்முன்செல்லமாட்டாதோ இதுவன்றிச்சத்துருக்களாகிய தேவர்கள்தந்திரவஞ்சகச் செய்கையினுல் முன்னம்என்புத்திரனைக்கொல்லுவித்தனர் இக்காலத்திலும் என்கையைக்கண்டிப்பித்தனர் அகன்றசாம்பிராச்சியவானுகிய உனக்கிளையவள்கரமிழந்துயாதொருதுணையுமின்றிவருந்திவாடிப்பரதவிக்கஇதைவிசாரணை செய்யாமல்அரசுசெலுத்துவதுஉன்னைத்த சூரனுக்கழகோ பழிப்பன்றோ பெருமிதத்துக்கடுப்பதோ ஓமன்னுவோமன்னுவோ நான்பட்டுவாடும்இழிவை மதிக்காயோ சகல புவனங்களினும் உன்னுக்கினைசெல்ல ஆண்டுவரும் அண்ணுவோ கரத்தினையிழந்தேன், மானபங்கமானேன் பலரும்நகைக்கலானேன் இவ்விசனத்தைப் போக்கிமனதைத்தேறறுவார் எனக்காரிருக்கின்றனர் ஊனப்பட்டும் பிழைத்திருப்பதிழுக்கன்றோ இனிஉயிர்தரியேன் பிராணனைவிடுவதற்கு முன் என்பகைவனை வென்று களிக்கமானம்பாதிக்கின்றது பாபியாகிய நான் பெண்ணுகப்பிறந்துபெறும்பயனிதுதானே விதிதனக்கு மென்னிடத்திற் பகையுண்டோ வென்செய்கே னென்செய்கே னென்றிவ்விதங்களாகப் புலம்பி நின்றனள்.

---

## சூரன்றண்டஞ்செய்படலம்.

என்றுபறபலவுரைத்தனளாவலித்திரங்கிப்
பின்றொடர்ந்திடுதுன்முகிதன்னெடும்பெயரா
மன்றின்மேவருசூரபன்மாவெனும்வல்லோன்
பொன்றடங்கழன்முன்னரோவீழ்ந்துபோய்ப்புரண்டாள்.

---

இவ்வண்ணமாக அசமுகியானவள் புலம்பிக்கொண்டு தோழியாகிய துன்முகியுடன்ஆசாரவாசலைக்கடந்து அவுணர் இராக்கதர்மந்திரி சாமந்தர்படைவீரர் புத்திரவருக்கங்கள்முதலானவர்நெருங்கியிருக்கும் இரத்தினமயமாகிய சபாமண்டபத்தின் முகப்பில்விளங்குஞ்சிங்காதனத்தின்மீது வயிரமலையைப்போல வீற்றிருந்து அரசுசெலுத்துஞ்சூரபதுமன் பாதாரவிந்தங்களில்அலறிவிழுந்துசக்கிராகாரமாகச் சுழன்றுபுரளுகின்றதை அச்சபையிலிருந்தவர்களனைவரும் மருண்டு அவள்படும் வருத்தத்துக்கிரங்கி ஓகோகோராஜராஜபரமேஸ்வரன், செல்வததங்கைக்கு மிப்படிச்சம்பவிக்கலாகுமோ இதனைத்துணிந்துசெய்தபாதகர்யாவர் சூரன்கோபாக்கினியினுல்அவர்களென்னபாடுபடுவார்களோ இப்படிக்கொத்தகடினசித்தமுடையவர்களுமுண்டோ வென்றுகிலேசிக்கச் சூரனனவன் தன்தங்கைக்கடுத்த குறைவையும் வருத்தத்தையுங் கண்டவுடன் கோபமேலிட்டு அக்கினிப்பொறிகள்விழிகளிற்குபீல்குபீலெனக்கொட்டவருந்தி ஒன்றுந்தோற்றுது என்னுசைத்தங்கையே உன்னை யின்னுரென்று மதியாமலும் என்சூரத்தை நினையாமலும் இதனுற்றங்களுக்குநேரும் தண்டனையைக் குறியாமலும் உன்கரத்தையுந்தோழிகையையுங் கண்டித்தபாதகர்யாவர் யாவனெனக்கேட்க அசமுகியானவள் சற்றுத்தேறிச் சொல்லுவாள் ஓ அண்ணு அவுணருக்கரசே என்னசொல்வேன் நானுமிவளுமாகப் பூவுலகத்தைச் சுற்றிப்பார்த்துக்கொண்டு ஒருபட்டணத்துக்கருகில் வரும்போது பலபலபுஷ்பசாதிகள் மலிந்துபரிமளித்திருக்கும் பூங்காவினைக்கண்டு அதனுள்போகின்ற காலத்தில் ஒருவிருட்சத்தினடியில் தேவேந்திரன் பத்தினியாகியஇந்திராணியானவள் மின்னற்கொடியினைப்போலத் தவஞ்செய்திருந்தாள் அவளைக்கண்டவுடன் மிகுத்த சந்தோஷத்துடன் உன்புசத்தினைஅணைவதற்கு இவள்தகுதியானவ ளென்றெண்ணி நன்மையில் வாராதபடியால் வலிதிற்கொண்டு போகஉத்தேசித்து கரத்தைப்பற்றி யிட்டுக்கொண்டு வரும்போதுதேவர்களிலொருவன்ஒருபாரிசத்திலிருந்து ஓடோடியும்வந்து முன்பின்யோசியாமல் எங்களிருவர் கரங்களையும் வெட்டியெறிந்துஉதைத்துத் தள்ளி அவளையும் மீட்டுக்கொண்டுபோய் விட்டானெனச்சொல்லி முடிவதன்முன்னம் வடவா முகாக்கினியைப் போற்கொதித்து கொவ்வைக்கனியைப்போல விழிகள் சிவந்து தீயினையிறைத்துச் சுழலவும் புருவம்நெற்றியிலேறவும் நாசிகளிற்சுவாலையும் புகையும் பெருகவும்பற்களுதட்டைக்கடிக்கவும் அண்டகோளகைகள் வெடித்ததைப் போல நகைதோன்றவும் இதழ்துடிக்கவும் பற்களைக்கடித்து முத்துகளைப்போல முகத்தில் வியர்வை தோன்றுந்தோறும், ரோமங்களின் மூலமாயெழுஞ் சுவாலையானது உலர்த்திக்கொண்டுவர இவ்வித உற்பாதங்கள்சம்பவிக்கச் சூரன் கோபங்கொண்டகாலத்தில் இவ்வதிர்ச்சியினுல் யுகாந்தமுடிவோ யாதோவென்றையப்பட்டுநின்றுதாபரிக்கப்படாமையால் திக்குப்பாலகர் ஓட்டமெடுக்கவும் ரிஷிகள்நாடகப்பெண்கள் அரசன்புகழைப்பாடுபவர் முதலாகப் பதைபதைத்துக்கலைந்து திசைதப்பிப்பதுங்கவும்திக்கஜங்கள் வீறிட்டலறி ஒடுங்கவும் அஷ்டமாநாகங்களுந்தடுமாறி அடங்கவும் மகம்மேருகம்பிதப்படவும் விண்ணவர் மண்ணவர் பாதலவாசிகள்பொறிகலங்கிச் செய்கையற்று யாதுநேருமோவெனப்பதைத்துவாடவும்பூமண்டலந்தத்தளிக்கவும் பொன்னுடுகலங்கவுஞ் சத்த சாகரங்களும் கொதிப்பெடுத்துச் சுவறியடங்கிப் போகவும் துருவமண்டல் முதல் பிரமலோகவரையினும் அதலகுதலப்படவுங் கொடியமனதையுடைய அவுணர்களுந்திடுக்கிட்டு வருந்தவும் இவ்விதமாகத் தடுமாற்றங் கொண்டன மற்றவைபட்ட பாடுகளைச்சொல்லவும்வேண்டுமோ ஏ! சவுனகாதிரிஷிகளே? சூரனுக்குக்கோபம் பிரவேசித்தகாலத்தில் யாவர்தாம் வருந்தாமலிருந்தவர்கள்உடனே தேவரனைவரையுங்கொல்ல நினைந்தவனுய் பக்கங்களிலிருந்த தம்பிமாரைப் பார்த்துச்சொல்லுவான் புலால்நாற்றமிகுத்த மச்சங்களைத் தலையிற்சுமந்து நமதேவல்களைச்செய்திளைத்தோடி ஒளித்திருக்கும் இந்திரனுன கள்வன் வஞ்சகத்தினுற் றனதேவலாளியைக் கொண்டு இவர்கள் கரங்களைத் துணிப்பிப்பானுகில் இனிமானிடரும் இராட்சதர்களைக் கண்டவிடத்தில் கொல்வதற்கையமுமுண்டோ பரமசிவனுமல்ல பங்கயனுமல்ல பங்கயக்கண்ணனுமல்லஇந்திரனுமல்ல இவர்களிலொருவன் பணிவிடைக்காரனே இவர்கள்கரந்தறிப்பவன் நல்லகாரியம் முன்னமே தேவனைப்பற்றிவந்து ராட்சதர்களுக் கிரையாகக்கொடாமல்தருமத்தினை யெண்ணி விட்டுவிட்டேன்.

மேலும் இந்திராணியுடன் தேவேந்திரனைநானும்படிக்கு அரியசிறையில் வைத்தவனுயல்ல, அபலனென்றும் ஓடியொளித்தவனென்றும் பாராமுகமாயிருந்தேன், அஃதெப்படி முடிந்ததென்ருல் தீப்பற்றியகாலத்திற்குறைவறஅவியாமற்சிறுபொறிகளை யலட்சியமாய்விடப்பின்புஅதுமீறி வருந்துகின்றவர்களைப் போலானேன். இப்படிஅணைகடப்பார்களென்று ஒருபோதும் போசித்தவனேயல்ல, இவர்கள் கரங்களைக் குறைத்ததை என்னவென்று நினைக்கின்றீர் என்தேகத்திற் படுத்திய வூனமல்லதுவேறு முண்டோசவுரியபராக்கிரமசாலிகளாகியதம்பிமார்களிருக்கின்றீர்.உலகமுற்றினுமிமைப்போதில்நாசஞ்செய்யவல்ல பிள்ளைகளிருக்கின்றனர்.கணப்போதில் அண்டரண்டபுவனங்களையுஞ்சுற்றிவரும்பெருமைபெற்றஇந்திரஞாலத்தேரிருக்கின்றது. துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ்செய்யவல்லஆக்ஞாசக்கரமிருக்கின்றது.பரமசிவகடாட்சம்பெற்ற ஜயசாலியாகிய நானுமிருக்கின்றேன்.யாரிருந்துமென்னபலன் மகம்மேருவுக்கொப்பாக வுயர்ந்து கிடக்கின்ற பஞ்சுப்பொதியில்அக்கினிப்பொறியொன்றுபட்டெரித்ததைப்போல இவர்கள் கரங்கள் வெட்டுண்டகாயங்களிலிருந்தொழுகும் உதிரத்துளியினுற் பலஅண்டங்களினும் நிறைந்துநின்ற நமதுகீர்த்திப் பிரதாபங்களனைத்தும்மழுங்கிப்போய்விட்டது. இவ்விதக்குறைவுகளுமிவர்களுக்குநேருவதோ தேவர்கள் உபத்திரவமு மின்னமும்இருப்பதோ எக்காலத்துந் தீராதவிப்பழியும் என்னிடத்திற்சார்வதோ, இந்தஅபகீர்த்திக் கொழியுங் காலமுமுண்டோ, என்னைப்போன்றவன் இதனைப்பொறுப்பதோ நமது ரதகஜதுரகபதாதிகள் தீவுதீபாந்தரங்கள் முற்றினும் இடைவிடாதுநெருங்கிப் பாதுகாத்திருக்க ஒருதங்கையாகிய அசமுகிக்கு இவ்விதபாடும் நேருமோஎன்செங்கோன்மை வெகுநேத்தி நேத்தியென்றுகோபநகைகொண்டுரைத்துச் சபையைப்பார்த்தகாலத்தில் ஒருபாரிசத்திலிருந்த பானுகோபனுனவன் சகிக்கப்படாமல்கடலினடங்கிநின்ற வடவாமுகாக்கினி யுகாந்தத்தில்மீறி யெழுவதைப்போல காலிற்கட்டிய வீரகண்டைகள்தொனிக்க உத்தரியந்தாழச் சடுதியிற் சிங்காதனத்தினை விட்டெழுந்து பிதாவாகிய சூரன்பாதங்களிற்சேவித்து ஐயனே! தேவர்களுந் தேவரீர் கோபத்தினைப்பொறுக்கவல்லரோ க்ஷமித்தருள்க, நமதேவல்களை முடித்துவருந்திய இந்திரன் போனவிடந்தோற்ரு தொளித்திருக்கின்றனன் தேவர்களொருபோதும் இவ்விதகருமத்தை நினைக்கவேமாட்டார்கள். தேவரீர் தங்கை கரமிழந்ததென்னமாயமோ ஒன்றுந்தோற்றவில்லை. விண்ணவர்களிலொருவன்இவர்களுக்கூனஞ்செய்தானெனச் சொல்வது எப்படிக்கிருக்கின்றதெனில் வெகுகாலம் மலடியாகவிருந்த ஒருத்திபெற்ற குமாரன் வானத்திற்செல்லுஞ்சூரியனைப்பற்றிவந்தானென்பதையொக்கும். மேலுந்தம்மையொத்த வீராதிவீரன்பரமசிவம் மகாவிஷ்ணு பிரமதேவன் இப்படிக்கொத்த கண்ணியர்மீது கோபத்தினைச்செலுத்துவது தகுதியாம். ராஜாதிராஜனே நமக்குத்தொண்டுசெய்துதிரிகின்றசிறியரிடத்திற்சீற்றங்கொள்வதுபெருமிதத்துக்கடுத்ததோ, புகழின்பாலதோ, தயைசெய்து சற்றுக்கோபந்தணிக, ஓ சக்கிரேஸ்வரனே? கிருபையுற்று அடியேனுக்குச்செலவு கொடுப்பீராயின் இந்நிமிஷத்தி லிவர்கள் கரங்களிழந்தவிடத்தைச்சேர்ந்து பயமற்று இக்கொடுமையைச்செய்த பாதகனையும் உமக்கு விரகமதிகரிக்கச்செய்தஇந்திராணியையும் நமக்குப்பயந்தொளித்துக் காலங்கழிக்கின்றதேவராஜனையும் அவனேவல்செய்து திரிகின்ற விண்ணவரையும்பிடித்து வருகின்றேன் அவ்விடத்திற்காணப்படாமல் ஒளிப்பராயினும் அண்டரண்ட புவனமுற்றினுந் தேடிக்கொண்டுவரக்கடவேன்.

மேலும் பொன்னுலகத்தை முற்றிக்கைபோட்டுக்கொண்டு அக்கினிதேவனுக்கிரையாக்கி நாசஞ்செய்து தேவர் கூட்டங்களை அவர்கள் பெண்கள் பிள்ளைகளுடன் பந்தித்துஒருநாழிகைப்போதில் தேவரீர்முன்விடக்கடவேனென்று குமாரனுகிய பானுகோபன்வணங்கி விடைகேட்கும்போது சூரபதுமனுக்குச் சற்றுக்கோபந்தணிந்துகுமாரனே? உனதுசேனைப்பெருக்குடன் தாமதஞ்செய்யாமற்போய் நீசொல்லியவாறே நமதுபகைவரைநெட்டித் தள்ளிக்கொண்டுவந்து சேர்க்கக்கடவையெனக் கட்டளையிட்டபிதாவை மீட்டும்வணங்கி யிளையபிதாக்களையும்வந்தித்துவிடைபெற்று இராஜசின்னங்களுடன்தன்அரண்மனைக்குப்போய்ப் பயணத்துக்கு முஸ்தீதுசெய்துகொண்டிருக்குமுன்னிலையிற் சபாமண்டபத்தில்நின்ற சூரனுனவன் கண்களைநெடுத்துப்பார்த்து கண்கள்சிவந்து அனற்பொறியினை வீசிக்கொண்டிருக்கும் நேத்திரங்களையுடைய சிலதூதர்களைஅழைத்துப் பிரமனிவ்விடம் வந்திருப்பான் அவனை விரைவில் நமதிடத்துக்குக் கொண்டுவரக்கடவீரென்றவுடன் வணங்கியோடித்தேடிக்கண்டு இராஜாதிராஜன் உம்மை வரும்படிக்குக் கட்டளையிட்டாரெனச்சொல்லக்கேட்டவுடன் திடுக்கிட்டுப் பஞ்சாங்கத்தையவிழ்த்துக் கால்கள்நடுங்கப் பூணுநூல் மார்பிற்புரளகோவணம் அவிழ்ந்துபுரள, சபையினைச்சேர்ந்து ஆசீர்வதித்துத் தினச்சரியைபடித்துக் காட்டிநிற்கின்றவனைப்பார்த்துப் பிரமனே யிவர்கள்கரங்களை யதாப்பிரகாரஞ் சிருஷ்டிக்கக்கடவையென்றவாக்கிய முடியாமுன்னம் அசமுகி துன்முகியென்னு மிருவர்கரங்களும் பழையபடிக்காகவெனச் சிந்தித்தனர் அவ்வாறே நிமைப்போதில் வளர்ந்தன, அப்படைப்பைச் சூரன்கண்டு சந்தோஷசித்தனுய்ப் பாட்டனே உன்வல்லபத்துக்கு மெச்சினேன், சபாசென்று கொண்டாடி உடனே தங்கையைப்பார்த்து அரண்மனையிற்போகக் கட்டளையிட்டு அவள்தோழியைக் குமாரனுடன்போய்க் கரத்தைத்துண்டித்தவிடத்தைக் காட்டும்படிக் குத்தரவுசெய்தனுப்பிவிட்டனன். பின்புமீளவுஞ் சிலதூதரைநோக்கிச் சூரியசந்திரர்முதலிய நவக்கிரகங்களையும் ராசிகள்முதலிய நட்சத்திரங்களையும் இந்நிமிஷத்திற்கொண்டு வருவீரெனக்கூற வணங்கிப்போற்றியோடி முற்குறித்தவ ரனைவரையு மிழுத்துக்கொண்டுவந்து சூரன் சந்நிதானத்தில்நிறுத்தினர். அவர்களைக்கண்டவுடன் மேகசம்பந்தத்தினுல் மறைந்திருந்த சூரியன்மீட்டும் வெளிவந்து சொலிப்பதுபோல மாறியகோபமானதுமென்மேலு மதிகரித்து ஓ! சூரியசந்திராதியர்களேநிமைப்போதும் ஒழிவின்றி மாறிமாறி வானத்திற்றிரிகின்ற உங்கள்விழிகளுக்குத் தோற்ருததுஒன்றுமிராதே என்னுசைத்தங்கையின் கரத்தினை வெட்டியகாலத்தில் அதற்கொருதடைசெய்யாமல் சும்மாப்பார்த்திருந்த காரணமென்னை யிக்கொடுமையினைஅஞ்சாது முடித்தவன் பிராணனைப் போக்கினவர்களுமல்ல அல்லது அவனைக்கட்டி யிவ்விடத்துக்குக் கொண்டுவந்தவர்களுமல்ல இத்தகைய

அநியாயம்நடக்கின்றதென் றறிவித்ததுமில்லை யிச்செய்
கை உங்கள்பார்வையிற் பட்டிருக்குமேயல்லதுவேறில்லை
நமதேவலின்படிக்கு உங்களுக்குரிய பணிவிடைகளை நட
த்திவருகின்ற நீங்கள் உலகங்களில் நடக்கின்ற நியாயஅ
நியாயங்களைக்கண்டறியாமலப்படி அஜாக்கிரதையாயிரு
க்கலாகுமோ உங்களையொத்தவர்களுக் கழகோவென்றுநீ
தியறியாதசூரன் சீறிப்பேசியகாலத்திற் சூரியன்முதலா
னோர் நடுநடுங்கிக் கரங்களைக்கூப்பிக்கொண்டு ஓ! இறை
வனே? அடியோங்கள்பேரில் கோபிக்கவேண்டாம், அச
முகித்தாய்க் கரத்தைக்கண்டித்தவனைக்கண்டதில்லை. தே
வரீர் ஆக்கினையின்படிக்கு எங்கள்கதிகளிற் பிசகின்றி வி
ழிகளைச் செலுத்திநின்றனம், இக்காரியம் எங்களுக்குத்
தோற்றுமாயின் அப்படிக்கு நடக்கப்பார்ப்போமா அவ
னையும் விடவல்லமோ இதனாலெங்களை மன்னிக்கவேண்
டுமெனப்போற்றி நின்றவர்களைஅதட்டிச் சபையினிருப்
பவரைப் பார்த்துச்சொல்லுவான்.

கேட்டீர்களோ இவர்கள்வாய்மொழிகள் வெகுநேத்தி
யாகவிருக்கின்றது. நமதுதங்கைக்கரம் வெட்டுண்டதைப்
பார்க்கவில்லையாங் தமதுகதியிற்சென்றபோதினும் இவ்
விதக்கொடுமைநடக்கின்றகாலையிற் றேற்றுமற்போமோ
இவர்கள்காவல் நன்றாகவிருக்கின்றதெனக் கொதித்துத்த
ண்டநாயகரைப்பார்த்து இவர்களைக் கொடியசிறையில்அ
டைப்பீரெனக் கட்டளையிட்டுமீட்டுஞ் சிலவேவுகாரரை
நோக்கித் தசவாயுக்களையும்இங்கிமிஷத்திற்றரக்கடவீரொ
ன்றமாத்திரத்தில் மனோவேகத்தினு மேலிட்டோடி அவ
ர்களைப்பிடித்துவந்து அரசனெதிரில்விட்டகாலத்தில் வி
ழிகள்சிவக்கக் கோபித்துப்பார்த்து நீங்கள்வானநாடுகளி
னும்பூமண்டலப்பரப்பினும்பாதலவெல்லையினுந்திசாதி
சைகளினுஞ் சத்தசாகரவிரிவினும்அதிற்பட்டதீவுதீபாந்
தரங்களினுஞ் சரீரத்தினும் அதிற்றங்கும் உயிரிலும்ம
ற்றும் எவற்றினும்பரவியும் பொருந்தியுமிருப்பீர் ஆத
லால் என்சகோதரிகரத்தைத் தேவரிலொருவன் வாளி
னாற் சேதித்ததைக்கண்டிருப்பீர்களே அவனுங்கள் பார்
வையிற்படாமலிருப்பானோ இதனை உடனே எனக்கறிவி
த்தவர்களுமல்ல அவனைக் கண்டித்தவர்களுமல்லஇதனை
யோசிக்குமிடத்து உங்களினமாகிய தேவர்களால் அசுர
ருக்கித்தகையபழிவருவது நன்மைதானென்று மகிழ்ந்து
பார்த்திருந்தீர்கள். உங்கள்கர்வம்நன்றாயிருக்கின்றதென்
று அதிகதீட்சண்ணியமாகப் பேசும்போது என்னவிளை
யுமோவெனப்பயந்து மாறுத்தரஞ்சொல்லஅஞ்சி ஊம
ரைப்போலநின்ற வாயுக்களைத்திக்குக்கொருவனாகச்சிறை
ச்சாலையில்வைப்பித்தான் அதன்பின்பு சிலசாரணரைப்
பார்த்துருத்துக்கள்முதலியோர்களைக்கொண்டு வருவீரென
ச்சேவித்தோடி அவர்களைப்பிடித்துத்தள்ளிவந்து சூரன்
முன் விடும்போது தீயெழப்பார்த்து இந்திரன்ஏவலாளி
யொருவன்செய்த கொடுமையைப்பார்த்துச் சம்மதித்தி
ருந்தீர்கள் எவ்விடத்தினும் பரவியிருக்கப்பட்டஉங்களு
க்குத்தெரியாதகாரண மொன்றுண்டோ என்தங்கைக்கு
ச்சம்பவித்த அபவாதத்தினை எனக்குக்காட்டினவர்களு
மல்ல எப்போதும் நமதேவலிலிருந்ததினாற்பயனென்னை
முக்கியமாகத் தேவர்களுடைய ஜயத்தையே கோரிக்கொ
ண்டிருக்கிறீர்களென்பதும் இதனாற் றேற்றப்படுகின்ற
தெனப்பொங்கி அவர்களையுஞ் சிறையில்வைப்பித்துமே
லுஞ் சிலதூதரினால் மற்றைத்திக்குப்பாலகரை வருவித்
து அவர்கள்மீது தீயைப்போலக்கொதித்துவிழுந்து நம
தேவலுக்கஞ்சித் தேவேந்திரன் தன்தேவியுடன் பூமண்
டலவெல்லையிற் பதுங்கிக்களித்திருக்கின்றனன் அதுதெ
ரியாமல் நீங்கள் திசைகளைப்போற்றிவருவது நன்றாகவி
ருக்கின்றது. இந்திரனேவல்செய்வோன் ஒருவன் எனக்
கிளையாளைப் பின்னப்படுத்தியதும் அவனிருக்குமிடமும்
உங்களுக்குத்தெரியாது மதுபானஞ்செய்த மயக்கத்தினா
ல் மெய்மறந்து நினைவழிந்திருந்தீர்கள்போற் காணுகின்
றது. அல்லது உறக்கமிகுதியினாற் காவலைமறந்தீர்களோ
அல்லது செல்வச்செருக்கினாற் கண்கள் மூடிக்கொண்ட
தோ என்பகைவனுடன் உறவுகொண்டு பராமுகமாய்வி
ட்டீர்களோ அல்லது அவர்களுக்கஞ்சியிருந்தீர்களோபெ
ண்மையலிற்பட்டு காமாந்தகாரத்தினால் உங்களுக்குரிய
தொழிலைமறந்தீர்களோ சொல்லுவீரெனக்கேட்கும்போ
து வாய்புலர நாவறளக் கரங்களைக்கூப்பிக்கொண்டு எம
துகர்த்தனே? தேவரீர்குறித்த செய்கைகளொன்றினும்ப
ட்டவர்களல்ல தேவரீர்கட்டளையின்படிக்கு யதாப்பிரகா
ரம் திசைகளைக்காத்து வருகின்றனம். உமதுபகைவரை
க்கண்டதுமில்லை அவர்களொளித்திருக்குமிட மெவ்வள
வேனுந்தெரியாது கேட்டதுமில்லை எங்கள்தாயாகியஅச
முகியானவள் தன்தோழியாகிய துன்முகியுடன்இன்னவி
டத்துக்குப் போயினார்களென்றும் அவர்கள்கரங்களிழந்
தசெய்தியும் எவ்வளவேனுந் தெரியாது. யோசிக்குமிட
த்தில் இதுமாயவஞ்சகமாகவிருக்கின்றது. எங்களால் யா
தொருபிசகுமில்லை, ஆதலால் தொண்டரைக்ஷமிக்கவே
ண்டுமெனப் போற்றிநிற்கச் சூரன் வடவையைப்போற்
கொதித்துநீங்கள்மதாங்காரத்தில் அழுந்திப்பரிபாலனஞ்
செவ்வையாய் நடத்தினவரல்ல அதுவெனக்கு நன்றாகத்
தெரியவந்தது. எனக்கிந்தப் பழிசம்பவித்ததுமாபமென்
று அறியாதவர்கள்போல் அதிசயமாய்ச்சொன்னது வெ
குநேத்தி நேத்தியாமெனச்சீறி வயிரவாளையுருவிப் பக்க
த்திற் காத்திருக்கின்ற தண்டநாயகர் கையிற்கொடுத்துச்
சிலரை நாவினைக்கொய்துஞ் சிலரை மூக்கினைக்கிள்ளியுஞ்
சிலரைக் கரங்களைக்கண்டித்துஞ் சிலரைச்செவிகளை அரி
ந்துஞ் சிலரை மார்பினைப்பிளந்துஞ் சிலரைமுதுகினைச்
சேதித்துஞ் சிலரைத் தாள்களைத் தோள்களைவீசியுஞ்சில
ரைச் சிரத்தினை உருட்டியுஞ் சிலரைக்கண்களைக்கெல்லி
யுஞ் சிலரை வாய்களைப்பிளந்துஞ் சிலரைப்பற்களுதிரஅ
டித்துஞ் சிலரைநறுக்கிப்பிழிந்துஞ் சிலரைச் சின்னபின்
னமாகவரிந்துஞ் சிலரைவாச்சிகளினாற்செதுக்கியுஞ் சில
ரைத்தரையிற்றேய்த்துஞ் சிலரைப் புலிமுதலிய கொடிய
மிருகங்களினாற் றண்டித்தும்பின்னர் என்முன்கொண்டு
வருவீர்களெனக் கட்டளையிட்டபடிக்குக்கொலைஞர்திசை
க்காவலரை வாதைசெய்தபின்பு சற்றுக்கோபந்தணிந்து
சிங்காதனத்தைவிட்டிறங்கித் துணைவர்புத்திரர் மந்திரிபி
ரதானிகள் சேனைத்தலைவர் முதியோர்மற்றுஞ் சபையிலி
ருந்தவர்களுக்குச் செலவுகொடுத்தனுப்பியபின்பு பிரம
ன்மீது விழிகளைச்செலுத்தி வேதக்கிழவனேபோய் வா
ருமென்ன அவர்பற்பலஆசிகளைக்கூறி ஓ! பவுத்திரரோ?
க்ஷமித்துக்கேட்டருள்க. நீகட்டளையிட்ட தண்டனைகளிற்
சற்றுங் குறைவறநடந்தபோதினுஞ் சூரியசந்திராதியரா
கிய நவக்கிரகங்கள் ருதுக்கள் இராசிகள் முதலியோர்உம
துபணிவிடையின்படிக்கு நடந்துகொள்ளப்பட்டவர்கள்
இவர்கள் சஞ்சரியாமல் உலகரக்ஷணார்த்தம்நடவாதுமுக்

கியமாய் உமது அரசுக்கே விரோதமாக விருக்கின்றதால் அவர்களைமாத்திரம் மன்னித்து விடுதலைசெய்யவேண்டுமெனப்போற்ற அதற்குச்சம்மதித்துச் சிலதூதரைஅனுப்பிவரவழைத்து விலங்குகளைக் கழற்றிவைத்துச்சூரியசந்திராதியரைப்பார்த்துப் பத்திரமாக இனியெக்காலத்தாயினும் நம்மவர்களுக்கொரு கெடுதிநேருமாகில் உடனேதெரிவிக்கக்கடவீர்கள் நமதாணையைக் கடப்பீராகில் கொடியதண்டனைகிடைக்கும் நமக்குப்பகைவனான இந்திரனுடன் உறவாடப்போகிறீர்கள் மோசம்வரும் பயபத்தியுடன் உங்கள்தொழில்களை நடாத்திவரக்கடவீர் ஆலசியஞ்செய்யாமல் உங்கள்மண்டலங்களிற்சேர்ந்து வாழ்ந்திருப்பீர்களெனச் சொல்லியமாத்திரத்தில் சூரனைவணங்கிப்போற்றித் தேவரீர்கட்டளையிற் பிசகின்றிச் சஞ்சரிக்கக்கடவோமெனப் பற்பல நல்லவார்த்தைகளைப்பேசித் தப்பினேமென்னுஞ் சந்தோஷத்துடன்யதாப்பிரகாரம் தங்களுக்குரிய தொழில்களைப் பூண்டனர்பின்புபிரமனையும் அவன்பிள்ளைகளையும் ரிஷிகளையும் அனுப்பிவிட்டுத் தானுந்தன்னரண்மனையிற்சென்று போசனமுதலிய சவுக்கியங்களைப்பெற்றிருந்தனன்

---

போதலுங்கமலத்தோற்கும் புதல்வர்க்குமமைச்சர்யார்க்கு,மேதகுமுனிவர்யார்க்கும்வியன்படைத்தலைமையோர்க்கும், போதலையுதவிச்சூர னுறையுளிற்புகுந்தான்முன்செ, லாதவன்பகைஞன்செய்த செயலினையறைதலுற்றேன்.

---

## அமரர்சிறைபுகுபடலம்.

எழிலிகண்மொய்த்ததன்னிருக்கைபோகிய
மழவுறுசூர்மகன்மாறிலாதபே
ரழகினைமெய்கொளவணிந்துதொல்படை
விழுமியகொண்டனன்மிலைச்சித்தும்பையே.

---

கேட்டீர்களோ! சவுனகாதியர்களே? இதுநிற்க பலசாலியாகியபானுகோபனென்பவன் மேகங்கள்சஞ்சரிக்கும்உன்னதமுள்ள தன்மாளிகையைச்சேர்ந்துஇரத்தினமயமாகியகிரீடம்வாகுவலயங்கள் மதாணிப்பதக்கங்கள்கரசாடுவிரல்சாடுவயிரக்கவசம்முதலியவற்றை அணிந்துகொண்டு அம்பறாத்தூணியை முதுகிலிறுக்கித் தேவாஸ்திரமுதலாகியபடைகளைச் சேகரித்தவனாய் வெற்றிமாலைதரித்து யுத்தசன்னத்தனாய்ச் சிலதூதரைஅழைத்து நமதுசேனைகளை யழைப்பிப்பீரெனக் கட்டளையிட்டுத் தன்அரண்மனைப் புறவாயிலைச் சேர்வதன்முன்னம் பொன்னுருளைகள் நவரத்தினமயமாகிய அச்சுமச்சுகுத்துக்கால் கொடுங்கைபீதாம்பரக்கொடிகள் தோரணம் முத்துக்குடைமுதலியவளங்களினாற்சோடித்து பர்வதாகிருதியாய்த் தத்தித்தாவிமனோவேகத்தினுங்கடிகிச்செல்லவல்லஇலக்கணமுள்ளஇரண்டாயிரம்புரவிகள்பூண்டிராநின்ற இரதத்தினைப்பாகன் கொண்டுவந்துநிறுத்த அதன்மீது சிங்கத்தைப்போலத்தாவி ஆரோகணித்தபோதுமுன்சென்றதூதர்அறிக்கையிட்டவுடன் சர்வாயுதபாணிகளாய்ச் சவுரியபராக்கிரமசாலிகளாயிராநின்றஇராட்சதவீரர் ஆயிரம்வெள்ளமும் அத்தொகைகொண்ட ரதங்கள்மேருவையொத்தயானைகள் பஞ்சலட்சணமுள்ள குதிரைகள் இந்நால் வகைச்சேனைகள் சேர்ந்தவெள்ளங்களுடன் படைத்தலைவன் வந்து வணங்கிச் சூழும்போது சூரியனைச்சிறையிலிட்ட விராதிவீரனான பானுகோபன் அவர்கள்மத்தியில்நட்சத்திரங்களின் நடுவிற் சோடசகலைகளோடு கூடிய சந்திரன்தோற்றம்போலப் பிரகாசித்தவனாய் ரணபேரி ஜயபேரி வெற்றிச்சங்கங்கள் முதலிய பற்பலவாத்தியங்கள் அண்டமதிரத் தொனித்துவர நடக்கின்ற தருணத்தில்பூமியெங்குஞ் சேனைகளாகப்பரவிப் போகின்றபோதெழுந்த தூளிபடலமானது மிகுத்தெழுந்துதிக்குகளைத் தூர்த்துக் கடல்களை மேடுகள்செய்யவும் வீரர்கள் புசங்களோங்கவும் அவர்களணிந்திராநின்ற புஷ்பமாலைகளில்வண்டுகளிறங்கித் தேனையுண்டு களித்துத்தொனித்திருக்கவும்இவ்விதவாடம்பரங்களைத்தெரிந்த தேவர் மனவாட்டங் கொண்டுவாடியொளிக்கவும் இவ்வெள்ளங்களின் பாரத்தினைத்தாங்கமாட்டாமல் ஆதிசேஷன் ஆயிரஞ்சிரங்களும்வருந்திநெளியவும் புழுதிகள் மேலெழுந்து வானத்தைத்தாவுவது இராட்சதர்முந்திச்சேதிதெரியும்பொருட்டுத்தூதரைத் தேடவிட்டதைப்போற் றோற்றவும் புரவிகள்வாய்களினின்றொழுகும் விலாழியும் யானையினது துதிக்கையினின்றுபாயும் நீரும்மும்மதச் சலங்களும் ஏகமாய்ப் பெருகுவது மழைபொழியபர்வதங்களினின்றிழியும்அருவிகள் கான்யாறுகளையொத்துக் காட்டவும் பற்பலநிறமுள்ள துவசங்களுங் குடைகளும்பெருத்து வானத்தினை அளாவநிற்பது காக்கைகழுகுபருந்து முதலியபட்சிசாலங்கள் மாம்ஸவிருப்பினால் ஆகாயத்தில்உலாவித்தொடர்வதுக் கிணையாகவும் வெண்பட்டுக்குடைகள் வீரமாமயேந்திரபுரிதோற்றாது மூடிநிற்பது சூரன்ஆக்கினைக்கஞ்சி பற்பலசந்திரர் சூரியன் காந்திபடாமல் போற்றியிருப்பதுக்கிணையாகவும் இத்தகைய ஆடம்பரங்களுடன்பானுகோபன் தன்சேனைகளுடன் பலபெண்கள்ஆலமெடுப்ப மகிழ்ந்தவனாய்ப் பட்டணத்து வீதிகளைக்கடந்துவெளிவந்து அகழியாகச் சூழ்ந்துநிற்குஞ் சமுத்திரத்தைத் தாண்டிக் கடையிற் பூமண்டலத்தைச் சேர்ந்தவுடன் துன்முகிமுகத்தைப்பார்த்து உங்கள்கரங்களை வாளினால்வெட்டியெறிந்தவிடமெது காட்டுவாயென்று கேட்கஇளவரசே? அதோதோற்றுகின்ற வனந்தானென்று விரலினாற் சுட்டிக்காட்டி அவ்விடத்தில்எங்கள் கரங்களைச் சேதித்தவனும் இந்திராணியுமிருந்தனர் வாருமென்று பன்னிருதிருநாமங்களைப்பெற்ற சீகாழிப்பதியிற் கொண்டுபோய்ச்சேர்க்குமுன்னமே தூசிப்படையானது அப்பூங்காவனத்தைவளைந்துகொண்டு செழித்திருந்த பூந்தருக்கள் கொடிகள் முதலாகப் பறித்துக்கசக்கியெறிந்து இந்திராணியையும் மகாகாளனையுந்தேடிக் காணாதபடியால் இராசகுமாரன்கட்டளையின்படிக்கு பூமண்டலமுற்றும் ஆராய்ந்துந்தோற்றாமையால் தெய்வலோகத்தை நோக்கி நடக்கும்போது இராக்கதவெள்ளங்கள் பொன்னகரைச்சூழ்ந்துகொண்டன. அவர்கள் ஆபரணகாந்தியானது முற்றும்பரவிப் பொன்னுலகம் வேறொரு பொன்னுலகமாகக் காட்டியதுஇதுவல்லாமற்சதுரங்கபலங்களும் அத்தலத்தினைச்சேர்ந்தபோது தோற்றப்பட்டவேடிக்கைகளிற்சிலசொல்லுவோங்கேட்பீராக.

எக்காலத்துங் கோபமேலிட்டுகொவ்வைக்கனியையொ
ப்ப விழிகள்சிவந்துகாட்ட உதட்டைக்கடித்துக்கொண்டு
தேவர்கள்முதலிய பலரும் அஞ்சிவாடும் வெடித்தசொற்
களையுடைய இராட்சதப்பாதகர் மிகுதியையும் அவர்கள்
செய்யுங் கொடுமைகளையும்இன்னபடித்தென்றுஎன்போ
லிகளாற்சொல்லப்படுவதோ, நான்குபாதங்களினும்பொ
ன் வெண்டையங்கள் சத்திக்கத் திக்குகளிற்பாய்ந்துகடல்
களைத்தாவி வானத்தினுலவி எதிர்த்தவர் சிரங்களில்மிதி
த்துச் சுழிசுத்தங்களிற் குறைவின்றி வாயுவேகத்தினுமே
லிட்டுச்செல்லுங்குதிரைப்பந்திகளின் அளவைப் பேசப்
படுவதோ?மேலும், பாதங்களைப்பெயர்த்துவைக்குந்தோ
றும் எழாநின்ற தூளிபடல மானது படிந்து பிரகாசத்
தையுடைய பொன்னுலகத்தை மண்ணுலகமாக்குஞ்சிறப்
பினைப்பெற்ற குதிரைக்கூட்டங்களெங்கும் நெருங்கவும்நீ
லகிரியைப்போலப் பாரித்த தேகமுடையதாயிருபாரிசங்
களினும் மணிகள்மாறியொலிக்க பொன்னாட்டைக் கரிநா
டாக்கிப் பனையை யொத்த துதிக்கைகளைநீட்டி வானகங்
கை வறளவுண்டு பாகனைச்சீறும் மதயானைகளெங்கு மு
லாவிவரவும் அவற்றின் மதநீர் வெள்ளத்தில்மூழ்கியுண்
டு களித்துத் தொடர்ந்துவந்த வண்டினங்கள்எக்காலத்து
மறியாத தேவகன்னியர் கூந்தல்களிற்செருகிய பாரிசாத
புஷ்பங்களினின்று ஒழுகாநின்றபுதியதேனையுண்டு களி
த்திருக்கவும் அதனாலக்கன்னியர்கள் பூலோகத்திலிராநி
ன்ற மானிடப் பெண்களோவென் றையப்படத் தக்கதாக
விருந்தது. இஃதன்றியும் நவரத்தினமயமாகஅலங்கரித்
துக்கொடி குடைமுதலிய சிங்காரங்களைப் பெற்று மகம்
மேருஅசைவதைப்போலச்செல்லுந் தேரணிகளினதுகா
ட்சி யெப்படிக்கிருந்ததென்றால் பூதலத்திலிராநின்றமலை
களனைத்துஞ்சேர்ந்து ஆலோசித்து நமதுசிறகுகளை அறி
ந்து பங்கப்படுத்திய தேவராசன் சூரனுக்கஞ்சிஓடியொ
ளித்தான் அவன்குமாரன் தனித்திருப்பதால் அவனையா
வது பற்றி அலைத்து நமதுபழியினைத் தீர்த்துக்கொள்ள
வேண்டுமெனநிதானித்து ஏகமாய்ப்பொன்னாட்டுக்கு வ
ந்ததை ஒத்திருந்தது. இத்தகைய வுவமைப்பெருக்கினை
ப்பெற்ற இரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச்சயின்
னியங்களுஞ் சத்தசாகரங்களுங்கூடி ஏகமாய்ப் பெருகு
வதுபோல இரைந்து எங்குமிடமில்லாமல் வருகின்றதை
த் தேவர்கண்டு நடுநடுங்கி வியர்த்துமயங்கி ஓடி இந்திரச
பையி லிரத்தினவகைகளினாற் சோடித்திருக்குஞ் சிங்கா
தனத்தில்வீற்றிருந்துஅரசுசெலுத்துகின்றசயந்தராசனு
க்குமுன்போய்அடியற்ற பனைமரம்போல் விழுந்துசேவி
த்து வாய்புலர நாக்குழற முறையிடுவார்கள். ஓ! புரந்த
ரபுத்திரனே? யிக்காரணங்களைக் கேட்டருள்க.

பரமசிவகடாட்சத்தினாற் பலவளங்களைப்பெற்றுநம்ம
வரை அலைத்துவாழுஞ்சூரன் பிரதமகுமாரன் பானுகோ
பனென்னும் வீராதிவீரன் அளவற்றவெள்ளஞ் சேனைக
ளைக் கூட்டிக்கொண்டு வந்து நமது பதியினை முற்றிக்கை
போட்டுக்கொண்டான் இனிநாம் என்ன பாடுபட வரு
மோ தெரியாது,எங்களையிரட்சிப்பதுஉமதுபாரமென்று
வருந்திப் பேசுகின்றவரைப்பார்த்துச்சொல்லுகின்றான்.
கேட்டீர்களோ! விண்ணவர்களே? என்னை அருமையாகப்
பெற்ற தாய்தந்தையரோ அப்பாதகர் கொடுமைக்கஞ்சிப்
போனவிடமே தெரியாது. நமதுகுலகுருவாகியபிரகஸ்ப
திபகவானு மிங்கில்லை. தேவர்களில்அனேகர் சூரன்தன்
டனைக்கஞ்சிப் பதுங்கிப்போயினர். மற்றசிலருடன்நான்
மாத்திர மிருக்கின்றேன் வந்தவனோ மகாபலாஷ்டியன்
மும்மூர்த்திகளையும்வென்ற தீரன்நாமவனுக்கு திரணப்
பிரமாணமாகும் மேலும் பிராரத்வவினையின்படிக்கென்
னமுடியுமோதெரியாது. திரிலோகசக்கிரேஸ்வரனாய்ப் ப
லதேவர் ரிஷிகள்போற்ற விருந்தஎனது பிதாவானவ ரிச்
சிறந்தபொன்னாட்டின் வாழ்வுமிழந்துசூரனிட்டதகாதப
ணிவிடைகளைச்செய்து பழியில்மூழ்கி வாடிப் பதுங்கியி
ருக்கவும் நான்மாத்திர மிதுபரியந்த மிப்பதியில்உங்கள்
ஆதரவிலிருந்தேன். இன்றையதினம் நினைத்தற்கரிய து
ன்பம் நேருவதாகக் காணப்படுகின்றது. ஆதலாற் குற்ற
மற்ற மனதைப்பெற்ற தேவரோ நான்பாலியனாதலால் இ
க்காரியங்களைச் சாங்கோபாங்கமாக யோசித்துஇந்தஅபா
யத்தக் கொருதந்திரத்தினைச்சொல்லவேண்டும்,அதற்கு
முன்னம் எனது கருத்தையும்உங்களுக்குத்தெரிவிக்கின்
றேன். என்னைப்பெற்ற தாய்தந்தையர் அளவற்ற தேவர்
களுடன் சூரனுக்கஞ்சி ஒளித்திருப்பினும் பாதகன் கட்
டளையின்படிக்கு அளவற்றராட்சதத்தூதர் தேடித்திரிகி
ன்றனரெனக்கேட்டோம், அப்படிக்கிருப்பதாலிப்போது
நாமெவ்விடத்திற் சென்றுபதுங்கப்போகின்றனம்,அல்ல
துஅப்பாதகன்குடைநிழற்படாதவிடமுமிருக்கின்றதோ!
மேலும் காலத்தில் உதவிசெய்யவல்ல துணையுமொன்று
மில்லை ஆதலால் அவர்களுக்குப் பயந்தெங்கும் ஓடவும்
மாட்டேன். போனவிடத்திற் பலவிததுன்பங்களால் விச
னப்படவுமாட்டேன். அல்லது அதனாலாகும் பிரயோ
சனமென்னை ஊழின்படிக்குவருகின்றதுன்பம் ஒருவன்
செய்யும் முயற்சியினால் விலகுவதுமுண்டோ! பிராண
னைப்போக்கலாமென்று நினைத்தாலும் அமுதமுண்டப
லத்தினாற் சாவும்நேராது திரிலோக சக்கிரேஸ்வரனாகிய
இந்திரகுமாரனாகவிருந்த யான்ஒருவருக்கிளைத்து வண
ங்குவதோ, தீரனாய்ப்பகைவருட னெதிர்த்துச் சயங்கொ
ள்வேன் அல்லது அவர்களைக் கண்டதுண்டங்களாகவெ
ட்டிமடித்து வீரசொர்க்கமடைவே னிதைவிட வுறுதிப்
பாடாகிய காரியமொன்றில்லை. ஓ! தேவர்களே? பிராண
னைஒருபொருளாகநினையாதவீரனானவன்விஷத்தினையொ
த்ததீங்குகள்வரினும் வருந்தித் தீரத்திற்குறையான். அ
வ்வாறே நமதுநகரத்தைவளைந்திருக்கும் ராட்சதப்பாதக
ருடனெதிர்த்துச் சண்டைகொடுத்துச் சின்னபின்னப்பட
க்கொன்று வெற்றிபெறக்கடவேன். இனிஒருகணப்போ
தேனும் தாமசப்படாமல் தயிரியத்துடன் அவர்கள்மீது
சண்டைக்குப்போக நினைந்ததால் என்சவுக்கியத்தை வி
ரும்பினவர்கள் உடன்பட்டு வரக்கடவீர்கள்.அப்படிக்கு
ச் சம்மதமில்லாதவர்க ளிப்போதேசொல்லி நின்றுவிட
லாம். அல்லது அனைவருக்குமே என்னுடன்வருவது யு
க்தமாயிராவிட்டாலுஞ் சம்மதமே. அப்போதுங்கொஞ்
சமாவது அஞ்சிப் பின்னிடைவேனென்றுநினைக்கப்போ
கிறீர்கள். துணிந்தவர்களுக்குத் துக்கமில்லையெனப்பலப
ல பிரதிக்கினைகளைச் சயந்தன்சொல்லுந்தருணத்தில்தே
வர்க்களுக்கிரக்கமும் வருத்தமும் மனதைவாட்டியலைக்க
ச்சொல்லுவார்கள்.

ஐயனே? உமதுமனக்கருத் திதுவாகில்அதற்குவிரோ
தமாய் நாங்கள்நினைக்கலாமோ? அரசன் மனப்படிக்கு
க் குடிகள் நடந்துகொள்ள வேண்டும் அதிற்பிசகுவராயி
ன் மீளாதநரகமுண்டென்று வேதசாஸ்திரங்களிற்சொல்

லுகின்றதையறிவோம், ஆகையால்நாங்களும் பாதகராகிய இராட்சதர் பாதையிற்பட்டு வருந்தமாட்டோம் மேலும் இவ்விதமாக நடுங்கி உயிர்வாழ்வதிலுங்கூடியமட்டும் போராடிச் செத்தாலுஞ் சம்மதமெனத் துணிந்திருக்கின்றனம். இனிகாலதாமதஞ்செய்யாமற் சண்டைக்குப் போவோம். வாருமெனச் சொல்லிய தேவர்களைச் சயந்தன் கிருபையாகப்பார்த்துநல்லகாரியம்உங்களுக்குந் துணிவுபிறந்ததால் இதோ புறப்படுகின்றனனெனவிரைவிற் சிங்காதனத்தை விட்டிறங்கித் தன்னரண்மனையைக்கடந்து புறவாயிலினிடத்தில் வருபவன்நினைவையறிந்துபிறையினையொத்த தந்தங்கள்நான்குவிளங்கப்பொன்மணிகள் மாறியொலிக்க இரத்தினமுகபடாம் பிரகாசிக்கக்கயிலையங்கிரியினைப்போன்றுபாரித்துவெள்ளைநிறம்பெற்றஅயிராவதமானது வந்துஇந்திரகுமாரனைவணங்கிநிற்கச்சயந்தனானவன் சர்வாயுதபாணியாய் அதன்மஸ்தகத்தில் ஆரோகணித்து வீராவேசத்துடன் நடக்க தேவர்களுந்திரனைப் போல வில்-வாள்-கேடகம்-பரிசு-தண்டம்-எறியீட்டி- முசலம்-சக்கர முதலியபடைகளைப் பரித்துப்பயபீதியானது மனதையலைக்க அரசனைச்சூழ்ந்து போகின்றவரிற் சிலர் சந்துவழிகளைக் கண்டபோது அதின்மூலமாய் ஓடிப்பிழைக்கநினைந்து அப்படிச்செய்வோமாகில்மீளாதவசையாகுமே ஒருகைபார்த்துவருகிறதே ஆண்மைக்கழகெனத் துணிந்துதொடர அக்காலத்தில் தேவதுந்துமி காகளஞ் சின்னமுதலிய வாத்தியங்கள்தொனிக்குமொலியும்அயிராவதத்தின் கர்ச்சனையும் அச்சமே குடிகொண்டிருக்கும் விண்ணவர்களினது ஆரவாரங்களும் ஏகமாய் தொனிப்பது எப்படிக்கிருந்ததெனில் ஓ! தேவரோ? துன்பம் வரவிருக்கின்றது வரவிருக்கின்றதென முறையிடுவதற்கொத்திருந்தது, இவ்விதஆடம்பரங்களுடன்தேவசேனையானது ஊழிகால வாயுவைப்போல அதிவேகமாய் நடக்க அவர்கள்மத்தியிற் சயந்தனானவன் அயிராவதத்தின்மீது வீரசிங்கத்தைப் போலச்சென்று பட்டணத்துக்குபுறத்திற் சூரியனைச் சிறையில்வைத்த வீராதிவீரனான பானுகோபன்சேனாசமுகஞ் சூழ்ந்திருக்கக்கண்டவுடன்கொக்கரித்து மேலிடுவதை ராட்சதாள்கண்டு கைகளைக்கொட்டிநகைத்து நேற்றையவரையில் நமதேவல்களைச் செய்து வருந்தி ஒளித்துத்திரிகின்ற பதிதரான தேவர்கள்தாமும் ஒரு வீரர்களைப்போலச் சண்டைகொடுக்கவருவதுமிகவும் அதிசயமெனப்பேசித் தாங்களும் அதிகோபத்துடனெதிர்ந்தனர்.

இவ்வாறிருதிறத்துப்படைகளும் ரவுத்திராகாரமாகிய கோதிப்புடன் கைகலந்து ஒருவர்மீதொருவர் வேல்களை வீசியும் வாளினால்வெட்டியும் விற்களைவட்டமாகவளைத்துக் குரூரமாகியபாணங்களைப்பிரயோகித்தும்எழு-மழு-தோமரம்-பிண்டி-பாலம்-முசலங்-கப்பணங்-குலிசஞ்- சூலஞ்-சக்கரம்முதலாகிய அஸ்திரசஸ்திரங்களைக் கோடைகால வருஷத்தைப்போலப் பிரயோகித்ததருணத்திலிருதிறத்துச் சேனைகளிலுங் கால்களற்று மார்புபிளந்துகரங்களிற்றுச்சிரங்கள்துணிபட்டு இவ்விதங்களாகச்சின்ன பின்னப்படுமுன்னிலையிற்கருமான்உலைக்களத்தில் அக்கினி மேலெழுவதைப்போலரத்தவெள்ளமானது பெருக்கெடுத்தோடியது. இவ்வாறுஉபயவாதிகள்படைகளும்ஜயத்தினைப்பெறவேண்டுமென்னும்ஆசையினாற்போராடும்போது இராட்சதவீரருக்கஞ்சிதீனராகியதேவர்படைசின்னபின்னப்பட்டுக்கலைந்தோடும்போதுஎதிரிகள்கெக்கலிகொட்டிப்பின்பற்றித் தொடர்ந்துபிடித்துக்குத்திப் புசங்களொடிய நெருக்கிநரியினாற்கட்டிமானினங்களைப்புலிக்கூட்டங்கள் கவ்விக்கொண்டுபோகுமாறிழுத்துப்போய் பானுகோபன்முன்விட இவர்களைக்கொடிய காவலில்வைப்பீரெனக்கட்டளையிட்டபடிக்குக்காவலில்வைத்தனர். அதனை அயிராவதத்தின்மீதிருந்தசயந்தன்கண்டுகோபித்துத்தன் கரத்திற்பற்றிய வில்லைவளைத்துக் குணத்தொனிசெய்து சத்துருக்கள் சின்னபின்னப்படுவதாகச் சரவருஷங்களைப் பொழியஅதனாற்காயங்கள்பட்டபோதினும்ராட்சதவீரர் சீறி மனோவேகமும் பின்னிடமுன்னிட்டுஊழிக்காலத்தில் வெள்ளியங்கிரியினைச்சூழ நிற்குஞ் சாகரங்களைப்போல அயிராவதத்தினைவளைந்துகொண்டு ஆர்ப்பரித்துச்சயந்தராசன்மீதும் நவரத்தினமயமாகிய கட்டுகள்பொருந்திய நான்கு தந்தங்களையுடைய வெள்ளையானையின் மீதுங் கோடானகோடிபாணங்களைச் சந்திரனை இராகு சூழ்ந்ததைப்போலப் பிரயோகித்து ஆர்ப்பரித்தனர்அவைகளைச்சயந்தன் கண்டித்து மேலுந்தன்வில்லில்அளவிறந்தபாணங்களைச் சந்தித்துச் சத்துருக்கள் பிடித்த வில்லுகளை அவர்கள்சிரங்களுடன் கண்டித்துத் தள்ளிமீட்டுஞ் சரமாரிகளைப் பொழிந்து நீல கிரியினைப் போன்ற கரியநிற முடைய யானைகளையும் மனோவேகத்தினுங்கடுகிப்பாயும் புரவிகளையும்பர்வதங்களையொத்தரதங்களையும் பொடிப் பொடியாக்கியிவ்விதமாக ஒருவெள்ளஞ்சேனைகளைத் தும்சஞ்செய்யும்போது அயிராவதமுங்கோபித்து வாலினாற் சிலராட்சதரைவாட்டியுந் துதிக்கையினாற் பலரைவாரிவானத்தெறிந்துங்கால்களினாற் பலரைத்தேய்த்துங்கோடுகளினால் அளவிறந்தவரைக்குத்திப் பிளந்தும் இவ்விதங்களாக நூறுவெள்ளம் இராட்சதரை நிமைப்போதில் நாசஞ்செய்தது அத்தருணத்தில் பெருகிப்பரந்தஉதிரவெள்ளத்திற்பட்ட பலபாணங்களும் ஆபரணவகைகளும் மச்சராசிகளை நிகர்த்துமிதந்துபோக மேலிட்டு ஆகாயகங்கையினை மாறுகொண்டோடியது இக்கொடுமையைக்கண்ட நீலகேசனென்னும் ராட்சதச்சேனைத்தலைவன்கோபித்து அடாபயலே உன்னைப்பிடித்துக் கொண்டு போகத் தேடிவந்ததையறியாமல் விளக்கிற்படும் விட்டிலைப்போலஎன்னடாதலைகீழாய்விழுகின்றனை அபலனான நீயோ இவ்வளவுசேனைகளைக்கொல்பவன் போகாதேநில்லுநில்லென்றெதிரில்வந்து வளைத்துக்கொண்டு நீண்டதன்வில்லை வட்டாகாரமாகவளைத்து பாணவருஷங்களைச் சொரிந்து கொக்கரித்தான் அதனைச்சயந்தன்கண்டு சிறுநகைகொண்டு ராட்சதப்பட்டிமகனே பிதற்றினதினாலாவதென்ன ஏதோ சிலபாணங்களைப்பிரயோகித்தனமெனக் கர்விக்கவேண்டாம் அவைபடும்பாட்டை யிதோபாரடாவென்று குரூரமாகிய பாணங்களைச்செலுத்திஅவைகளை நடுவதுபாதியில் வெட்டியெறிந்து மேலும் அளவற்றதிவ்வியசரங்களைத்தூண்டி சேனைத்தலைவன் பூண்டிருந்தரத்தின கவசத்தைப்பிளந்து சரீரத்தையுஞ் சல்லடைக்கண்களாகத்துளைத்து ஆர்ப்பரித்தபோது அவ்வருத்தங்களுக்குச் சகிக்கப்படாமையால் நீலகேசனென்போன் சற்றுமயங்கிப் பெருமூச்செறிந்துநின்று உடனேதெளிந்தவனாய் வடவனலைப்போற்சீறித் தன்வில்லிலொரு அர்த்தசந்திரபாணத்தைப்பூட்டிச்செலுத்திச் சயந்தன் கரத்திற்பற்றிய வில்லினதுநாணியை படீலென்றறுத்துக்கொக்

கரித்தான் அதனையெறிந்துபோட்டுச் சீக்கிரமாகமோகமந்திரமொன்றை யுச்சரித்து பற்பலவுருவங்களைக்கொண்டெதிர்த்துச் சிருங்காதம்பண்ணி வளைந்து மேல்வருகின்றதைராட்சதவீரன்கண்டு இதுமிகுந்தஆச்சரியம்ஒரு ஆனையின்மேல்வந்தவன் அளவற்ற தோற்றங்களாக நின்று சண்டையிடுவதை யோசிக்குமிடத்து மாயையின் முயற்சியாகவேண்டும் இதனைநம்மால் விலக்கப்போகாதுஇனிச்சற்றுநிற்போமாகில் பிராணஆனிவருமென்று பயந்துதன்தேரைவிட்டுக் குதித்தோடிப் போயினன்.

இவ்வாறு சயந்தன்பாணங்கள் சுறுக்குச் சுறுக்கெனத்தைத்துவதைக்கச் சகிக்கமாட்டாமல் அஞ்சிச்சின்னபின்னப்பட்டுப் பானுகோபன் சேனைகளோடு வதைக்கண்ட சோமாசுரன்மாயாவலிசுரகேசரிபதுமன்வலிதண்டன்வாமன்வருணன்மாகதன்முதலானசேனைத்தலைவர்கள்மனம்பொறுமல் தங்களிரதங்களை முடுக்கிக்கொண்டு மேலிட்டுவந்து சயந்தன் மோகனவிஞ்சையின் முயற்சிதெரியாமல் தாங்கள் கற்றிருக்கும் மாயமந்திரங்களனைத்தையுஞ்செபித்துச் சண்டைகொடுத்துந் தேவராசகுமாரன் வித்தை வல்லயைக்கடக்கப் படாமையால்திகிற்கொண்டுமனமயங்கியேங்கி யினிஎன்ன செய்வோம் இச்சிறியன்கையில் அகப்பட்டு விழிக்கலாச்சுதோ சற்றுத்தாழ்த்தோமாகில் மோசம்வரும்போற்காட்டுகின்றதென ஒருவரையொருவர்பார்த்துயோசித்திருக்கின்றதைப்பானுகோபன்கண்டுமனம்வருந்தித்தன்சேனைகள் பட்டபாட்டையும் படைத்தலைவர்கள் சிக்குப்பட்டுத்தியங்குவதையுஞ் சயந்தன்ஜயத்தையும்நிதானித்துஇனிநாம்சற்றுதாழ்ப்போமாகில்மோசம் நேருமென்று அதிசீக்கிரமாகத்தன்குலகுருவாகியசுக்கிராசாரியானவன் தனக்குப் போதித்திருந்த ஞானேசிதமென்னும்மந்திரத்தை ஆசிரியன்திருவடிகளைநினைந்துவிதிப்படிக்குஉச்சரித்தகாலத்திற் சயந்தன்மோகனமந்திரவலியழிந்து பழையபடியே தானொருவனாகின்றவன்இஃதுசுக்கிரன் மந்திரவல்லபத்தினாலானதென்றறிந்துமானமுங்கோபமும் மனதைவருத்தவாடியிருப்பதைச் சூரன்மகன் பார்த்துத் தன்தேரைத்துரத்திவந்து எதிரில் நின்றுகொண்டிதனைச்சொல்லுவான்ஓ! இந்திரகுமாரனே? உனதுமாய்கையின் முயற்சியுஞ் சவுரியமும்நான்வருவதன்முன்னமேபோய் விட்டதைக்கண்டாயோ இனிஉன்னைச் சூரியனைப்போலப்பற்றிச்சிறையில்வைப்பேன்கூடுமாகிற்சண்டை கொடுக்க வரலாமெனப்பானுகோபன் பேசிய விசேஷத்தைச் சயந்தன்கேட்டுநகைத்துச்சொல்லுவான் வல்லவர்கள் வெல்வதும்மாட்டாதார் தோற்பதுமென நினைவது அறிவின்மை யிவைவூழ்வினைப்படிக்கு மாறிவரும் இப்படிக்கிருக்க உன்சவுரியத்தினை நீயேதுதிக்கப்படுமோ செல்வச்செருக்கினாலிதனையெடுத்துப் பேசுகின்றாயென்பதைப்பானுகோபன்கேட்டுச் சவுரிய மில்லாதவர் பேசும்வசனத்தைச் சொன்னாய் சுத்தவீரனிப்படி நினைக்கவுமாட்டான் உன்னுடன் வீண்மொழி பேசுவதிற் பயனென்ன இதோபாருஞ்சற்றுநேரத்தில் நான்குறித்தபடிக்கு முடிப்பேனென்று யமனுக்கும் யமனாகவிருக்கின்ற தனதுநீண்டவில்லினைவட்டாகாரமாகவளைத்துகுணத்தொனிகொண்டு சிருங்காதஞ்செய்தான் சயந்தனுஞ்சற்றும் மனந்தளராமல்திரணாய்கிண்கிணிகள்கலிக்கும்பொன் வில்லைமண்டலாகாரமாக வளைத்துநாரியினையேற்றிடங்காரசத்தங்காட்டிமண்டிபோட்டுநின்றான்அதனைப்பானுகோபன் கண்டவுடன் வடவாமுகாக்கினியைப் போலச் சீறிக்கொஞ்சமாவது பயமில்லாமற் சவுரியங் காட்டுகின்றாயோ நல்லகாரியம்உன்னாணவத்தையடக்குகிறேனென்று கழுகிறகுகள்பூண்டு தங்கக்கட்டுகள் பிகிந்துசாணைபிடித்துத் தகத்தகாயமாய்விளங்கும் அலகைப்பெற்ற குரூரமாகிய பாணங்களை அம்புக் கூட்டிலிருந் தெடுத்துக் கோடைகாலவருஷத்தைப்போலச் சொரிந்து ஆர்ப்பரித்தனன்.

சயந்தனும் வீராவேசங்கொண்டு தனது நெடியகாண்டீபத்தில் விஷத்துவையலிட்டுக் கூர்மையாயிராநின்ற தீட்சணியமாகிய சரவருஷங்களை மென்மேலுஞ்சொரிந்து தன்பகைவன்செலுத்திய கணைகளைக்கண்டித்துத் தள்ளி மேலும் அபரிமிதமற்ற பாணங்களை வாயுவேகத்தினும் விரைவாகச் செலுத்தினன். அவைகளைப் பானுகோபன் சின்னபின்னமாக்கிமேலும் பாணங்களைச்செலுத்தச் சயந்தன் கண்டிக்கயிவ்விதமாக விருதிறவரும் இருளும் மின்னலும்போலமாறிமாறிப்போர்செய்துவரத்தேவராசபுத்திரன்கைமேலிட்டுப் பானுகோபன் தூண்டியசிலீமுகங்களைக்கொய்துதள்ளி மேலும் ஆயிரங்கோடிபாணங்களைப்போக்கிப் பகைவன் வில்நாரியைப் படீரொன்றறுத்துச் சிங்காதஞ் செய்தகாலத்திற் பானுகோபன் காளகூடத்தைப்போலக் கொதித்து வேறொருவில்லையெடுத்துவளைத்து மிகுத்தகூர்மையுள்ள பாணங்களினைத்தூண்டி எதிரிவிட்டசரங்களைச்சின்னபின்னமாக்கி மீளவும்ஆயிரம்பாணங்களையேவி சயந்தன்சரீரத்தைச் சல்லடைக்கண்களாகத்துளைக்க அதனால்வருந்தியுஞ்சற்றும்பயப்படாமல்தானும் ஆயிரங்குரூரமாகிய பாணங்களைப்போக்கித் தன்பகைவன் தேரைநடாத்துங் குதிரைகளைக்கொன்றுமேலும் அளவற்றசரங்களைப் பிரயோகித்து ராட்சதச்சேனைகளைக் கண்டதுண்டமாக விழக்கண்டித்தான் அச்சமயத்தில் பானுகோபன் தன்தேர்பின்னப்பட்டதையும் படைகள்படும் பாட்டையுங்கண்டு நாகம்போற்சீறி மற்றொருதேரிற் பாய்ந்து பற்களைக்கடித்து இடிபோலக்கர்ச்சித்து வில்லையிறுக்கி நூறாயிரகோடி சரங்களைத்தூண்டிச் சயந்தன்கரத்திற் பற்றிய வலியவில்லைக்கண்டித்துஅவனுடலும்அயிராவதத்தின் தேகமும் ரத்தமயமாகத்துளைக்கஅதனால் இந்திரகுமாரன்மிகவும்வருந்திக்களைபட்டுச்சண்டைகொடுக்க நிருவகிக்கமாட்டாமல் வெள்ளையானையின்மீதுமூர்ச்சித்துவிழுந்தான்.

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே அமுதமுண்டவலியினாற் சயந்த னிறந்தவனல்ல ஆகிலு மிறந்தவனைப்போலக் களைபட்டுப் பசியவிலைகளின் மத்தியிற் செந்தாமரைப் புஷ்பித்திருப்பதுபோலச் சரீரமெங்கும் உதிரங்குபீர்குபீரென்றோடக்களைத்து விழுந்துகிடப்பதைஅயிராவதங்கண்டுவருந்தி ஐயையோதிரிபுவனசக்கிரேஸ்வரன்குமாரன் இந்தப்பாடுபடுகின்றதோ விதியினை வெல்லவல்லவரொருவருமில்லையென்பது இதனால் திருஷ்டாந்தமாகவிருக்கின்றது இனிநான் சும்மாவிருப்பேனாகில் ஒருகாலம் அபாயம் நேருமென்று அதிககோபங்கொண்டதாய்த் துதிக்கையினைச் சுழற்றி அதிவேகமாய்ப்பானுகோபன்தேரிற்பாய்ந்து மோதியது. அத்தாக்கலினாற்குதிரைகள்பொடிபட்டுப் பாகன்துகள்பட்டுத்தேர்துச்சப்பட்டுப்போகப் பானுகோபன் தப்பித்துக்கொண்டு பூமியிற் பாய்ந்து அயிராவதத்தைக் கோபித்துப் பார்த்தான் அப்போதுஅத

ற்குக் கோபந்தணியாமற் பின்னிடைந்துவேகங்கொண்டு வயிரம்போன்ற ராட்சதவீரன் மார்பிற்பாய்மடமடென்று நான்குகோடுகளு மொடிந்துபின்னிட்டுவாடி வருந்தி நிற்கும் வெள்ளையானையினது மத்தகத்தினிடத்திற்றன்வலிகொண்டு குத்தினான். அத்தாக்கலின்உறுதியினாற் சகிக்கமாட்டாமல் திருப்பாற்கடல் உடைந்ததைப்போல வீறிட்டு உதைத்துக் கொண்டுநிலத்தில்விழுந்துமரணகளை பட்டது அத்தருணத்தில் அதன்மீது மூர்ச்சித்திருந்த சயந்தனுக்கு ஆயாசந்தீர்ந்து கண்களைவிழித்துஅயிராவதத்துக்கு நேர்ந்தவருத்தத்தைப் பார்த்து அதிகக்லேசப்பட்டுத் தேறியோசிக்கின்றான் நமதுஆசிரியன் அன்பாகப் போதித்த மோகனமந்திரப்பெருமை மழுங்கியது மன்றியில் நிற்கவுஞ்சக்தியில்லாமல் வலியுங்குறைந்தேன் இனியிவர்கள் பற்றிக்கொண்டுபோய்க் கொடியசிறையிலிடுவரிதற்கையமில்லை, பொன்னுலகமும் நாசப்பட்டுப் போமென்றுமனமே சிறிதும்வருந்தவேண்டாம் ஈஸ்வரன் கட்டளையின்படி நடப்பதுநிச்சயமாதலால் நீதுக்கப்படுவதினாலாவதொன்றில்லை யென்று சமாதானப்படுத்தித் தியங்கி நிற்பதையும் அயிராவதங் களைபட்டுக்கிடப்பதையும் ராட்சதத் தலைவர்கண்டு ஆர்ப்பரித்துப் பலசர்ப்பங்கள் சூரியனைவளைந்து கொள்வதுபோல இந்திரதனயனைச் சுற்றிப் பிடித்துக்கொண்டபோது ராட்சதர்மேல்விழுந்துஇவன்வஞ்சகன் மாயாவாதியாகையாற் பத்திரப்படுத்தவேண்டுமெனச்சிலர் சொல்லச் சிலர்அடியுங்குத்தும்பிராணனைப் போக்குமென்றும் பேசித்தொடரச் சயந்தனைக்கைப்பிடியாகக் கொண்டுபோய்ப்பானுகோபன் முன் விட்டபோது சேனைத்தலைவனைப் பார்த்து என்னுடைய பாணங்கள் படுத்திய காயத்தினால் மிகவுஞ் சரீரம்நொந்து பேசவுஞ் சக்தியில்லாம லிருக்கின்றனன். ஆதலாற்சத்துருவென்றெண்ணி யிவனைவருத்தாமல் தேவர்களுடன்காவலில் வைப்பீரென்று அரசன்கட்டளை யிட்டபடிக்குமந்தரகிரியினை வாசுகியினாற் பந்தித்ததைப்போல வில்நாரியினாலிருபுயங்களு மிற்றுப்போயினாற்போல வரிந்துகட்டி விண்ணவர் கூட்டத்திற் சேர்த்தனர்பின்புபானுகோபனானவன் சிலசேனைத்தலைவரைப் பார்த்திவ்விடத்தில்அகப்பட்டவர்களல்லாமற் பட்டணத்திலிருப்பவரையுந்தேடிப் பிடித்துக்காவல்வைத்துப் பின்பு பொன்னுலகத்தை அக்கினிப் பிரவேசப்படுத்திச் சாம்பலாக்கி அச்சமாச்சாரத்தைஅதிதீவரமாகத்தெரிவிப்பீரென்று ஆக்கியாபித்தபடிக்கு வணங்கிப்போய் நகரமெங்குந் துருவிக்கண்ணிற்பட்டவர்களைத் தேவகன்னிகையருடன் நாமணியாகப் பிணித்து வந்து தமதரசன் பணித்தலாலே அவர்களையுங் காவலிற் சேர்த்துப்போய்ப் பொன்மயமாய்ரத்தினங்களினால் அலங்கரித்த முத்துத்தொங்கல் விளங்கப்பலநிலைகளைப்பெற்றுச்சித்திரப் பிரதமைகள்மற்றஅலங்காரங்களையுடைய மாடமாளிகை கூடகோபுரம்மண்டபங்கள்அரண்மனை சபாமண்டபம் நாடகச்சாலைகள் கற்பகவனங்கள்உத்தியானவனங்கள் முதலிய பலவளங்களைக் கொண்டிருக்குஞ் சொர்க்கலோகத்தைப் பலதிசையினும்அக்கினியை மூட்டிக்கொளுத்திய காலத்தில் அப்பொன்னுடானது பூர்வத்திற் பரமசிவத்தின் விழிக்கனலினாற் றிரிபுரங்கள் எரிந்ததைப்போலச்சாம்பலாய்உருத்தெரியாமற்போய்விட்டது.

இச்சேதியைப் பானுகோபன் கேட்டவுடன்மனமகிழ்ந்தவனாய்ச்சயந்தன்முதலாகியதேவர்களைமுற்றிக்கைபோட்டுக்கொண்டிருந்த ராட்சத வீரனைப்பார்த்து ஓ! படைத்தலைவரோ யிவர்களைப் பத்திரமாய்க் கட்டுக் காவலுடன் முன்னதாக வீரமாமயேந்திரபுரியிற் சேர்ப்பீரெனக் கட்டளை யிட்டனுப்பிவிட்டுத்தானும் ரதகசதுரகபதாதிகள் சூழ ஜயவுச்சாகத்துடன் ஜயபேரிரணபேரி வெற்றிச்சங்கங்கள் முதலியவாத்தியங்கள் சமுத்திரகோஷ்டியினுமேலிட்டு முழங்கப்பொன்னுடுபட்ட கோலத்தைக்கண்குளிரப் பார்த்து அதிகசந்தோஷத்துடன் அப்பதியைக்கடந்து பூமண்டலத்தில் வந்திறங்கிப்பலதேசங்களைத் தாண்டிச் சமுத்திரமத்தியில் உலகங்களுக் கரசாகவிளங்குந்தன்பதியைச்சேர்ந்து சேனாசமுகங்களுக்கு விடைகொடுத்தனுப்பிவிட்டுத் தானுந்தேரை விட்டிறங்கிப் பலமங்கல வாழ்த்துகளைச் சுமங்கலிப்பெண்கள்பாடமுத்துமுதலிய நவரத்தின ஆலார்த்திகளை ஏந்திநிற்கப் பட்டணவீதிகளைக்கடந்து சிறையிற்கொடுவந்த சயந்தன்முதலிய தேவப்பசுக்களைக்கொண்டுபோய்ப்ஆயிரத்தெட்டண்டங்களுக்கதிபனாகிய சூரபதுமன்முன் னிறுத்திச் சேவித்தவனாய்ஐயனே தங்கள்கட்டளையின் படிக்குப்போய் பொன்னுலகம் பூலோகம் பாதலமேமுதலிய விடங்களெங்குந் தேடியும் இந்திரனை அவன்பத்தினியுடன் காணாமையால்விண்ணாட்டைக் கொளுத்தி அதிலிருந்த தேவராச புத்திரனாகிய சயந்தன் மற்றவிண்ணவரை அவர்கள் பத்தினிமாருடன் கொண்டுவந்து சேர்த்தேன் இதுதங்கள்சித்த மறிகவென்றான் இதனைக்கேட்ட சூரன்மனமகிழ்ச்சியுடன் குமாரனை அருகிலழைத்துக் கட்டித் தழுவிச்சமீபத்திலிருத்திப்பின் தேவர்கள்மீது விழியினைச்செலுத்தி பற்களைக்கடித்து அதிககோபத்துடன் தண்டநாயகர்களைக் கூவியிவர்கள் உறுப்புகளைச்சின்னபின்னப்படக் கண்டிக்கக் கடவீரென்று உத்தரவுசெய்தான். அவ்வாறே அவர்களுந் தங்கள்கரங்களிற் பற்றியிருந்த ஆயுதங்களையுதறிக்கொண்டு சிறைபட்டிருந்த புலியானது விடுபட்டுமான்கூட்டங்களின்மீது பாய்வதைப்போல தேவர்கள்மேற்றாவிப் பற்றினவர்களாய்ச் சூரன் தங்கையாகிய அசமுகிகண்டு களிக்கும்படியாகச் சிலர்கரங்களைச் சிலர்புயங்களைச் சிலர்தோள்களைச் சிலர்கன்னங்களைச்சிலர் கண்டங்களைச் சிலர்நாசிகளைப் பலர் கபோலத்தினைப் பலர்தொடைகளைமார்பகங்களைக் கண்களை மற்றுமிராகின்ற உறுப்புகளை வெவ்வேறாகக் கண்டித்துங் கெல்லியும் பிளந்தும் இவ்வாறுபலவாகத்தண்டித்தும் அமுதபோசனமுண்ட மகிமையினால்மீட்டும்அவைகள்யதாப்பிரகாரந்தோற்றக்கண்டு சூரன் அதிசயப்பட்டுத்தண்டிப்போரைநிறுத்தி இவர்களைக்கொல்லவுமாகாது பங்கப்படுத்தவும்போகாது இவ்வளவுசிறந்தபெருமைகளெல்லாம் பரமசிவகடாட்சத்தினால்நாம்பெற்ற வரமுயர்ச்சியினாலடங்கி யொடுங்கினாரென நிதானித்து ஆகிலும்ஒருபோதும் நீங்கப்படாத கொடியநரகத்தினைப்போன்ற கடியசிறைச்சாலையில்வைத்துக் காவலிருக்கக் கடவீரெனக்கட்டளையிட்டான். எதிரில்நின்றதூதர்மகாபாக்கியமெனச்சேவித்துச்சயந்தனாதியாகியதேவர்களைப்பிடரியைப்பற்றித்தள்ளிப்போய்நினைத்தற்கரியகொடிய சிறைச்சாலைகளிற்காவல்கொண்டிருக்கும்வீரருக்குக்காட்டி நமதரசனேவலின்படிக் கிந்தத்தேவகூட்டங்களைப் பத்திரமாகக் காத்திருப்பீர்களெனச் சொல்லிப்போயினர்.

பின்பு அங்குள்ளகொடிய ராட்சதர்சற்றுமிதக்கமில்லாமற் பாரவிலங்குகளை மிருதுவாகிய கால்களில்மாட்டிச் சிறைச்சாலைகள்தோறும் பிரித்துவிட்டு அவ்விடங்களிற்காவலாக விருப்பவருக்குத் திட்டவட்டங்களைச் சொல்லிப் போட்டுத் தமதிடங்களிற்காத்திருந்தனர். இவைநிற்கச்சபாமண்டபத்தில் அரசுசெலுத்தியிருந்தசூரன் தன்குமாரனைப்பார்த்து அப்பனே? மிகவும்வருந்தினய் சீக்கிரத்தில் உன்னரண்மனையைச்சேர்ந்து சவுக்கியமாயிருப்பாயெனவிடைகொடுத்தனுப்பிவிட்டுத்துணைவர் மித்திரர் மந்திரிகள்முதலாகிய சபையாருக்குஞ் செலவுதந்துதானும்ராசபரிவட்டங்களுடன் அரண்மனைக்குப்போய்ச்சுகலசவுக்கியங்களையும் அடைந்திருந்தான்.

இவ்வாறு ராட்சதர்கள் களித்திருக்கச்சயந்தனும்மற்றதேவர்களுஞ் சர்ப்பத்தினதுபடத்துக் கிணையாகிய நிதம்பத்தினையும் உடுக்கையையொத்தசிறுத்தவிடையினையும்உடைய தேவர்பத்தினிகளுந் துக்கசாகரத்திலழுந்திக் கொடியராட்சதர்கள் நாட்டில்வேடன் வலையிற்பட்டமயில்னங்களையொத்து மிகவுமஞ்சிப் பட்சிசாலங்கள்கூண்டுகளில் வைத்திருக்கும் மின்மினிகளைப்போலச் சிறைச்சாலையிற்கட்டுண்டு அசுத்தமாகிய பணிவிடைகளைநடாத்திமனவாட்டத்துடனிருந்தனர். அவர்கள் படுந்துன்பத்தைஒருவராலுஞ் சொல்லிமுடியாது. இவையன்றியுந்திரிலோக சாம்பிராச்சியத்தைப்பெற்று வாழ்ந்தஇந்திரன் தன்பதியையிழந்து காடேகதியாயிருக்கவும் பலராலும் புகழ்பெற்றபொன்னுலகம் பொரிந்து கரிந்துசாம்பற்பட்டுநாசமடையவுஞ் சயந்தன்முதலிய தேவர்கள் நீத்தற்கரியசிறையிற்படவும் இவ்விதமாகத் தெய்வபோகங்களையிழந்தபடியால் பரமசிவகடாட்சத்தினற் பெறும்மோட்சசம்பத்தல்லாமல் துன்பமில்லாத சவுக்கியம்வேறொன்றுமில்லை. இச்சரித்திரங்களைக் கேட்டீரன்றோ, இனிபானுகோபனல் அதப்பட்டவிண்ணுட்டில் நடந்தசெய்திகளையுஞ்சொல்லுவோம், தேவர்களனைவரையுஞ் சிறைசாய்த்துக்கொண்டு போனபின்புமுன் பானுகோபன் மார்பிற்பாய்ந்து தந்தங்கள்முறிந்து அவன்குத்தினல்மூர்ச்சித்துக்கிடந்த அயிராவதமானதுதெளிந்து விண்ணுடுபட்டபாட்டைக்கண்டிரங்கி யினியிவ்விடத்திலிருப்பதிற் பயனென்னை அரசனில்லாதவிடம் பாழன்றோவெனச் சிந்தித்துச் சயந்தன்முதலான தேவர்களென்னபாடு பட்டனரோவென்றேங்கி மனவருத்தத்துடன் அப்பட்டணத்தைக்கடந்து சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலத்திற்போய்ப் பலஸ்தலங்களைச் சேவித்துக்கடையிற்றிருவெண்காடென்னும் பெருமையிற்சிறந்த நகரைக்கண்டுஇஃதுசிறந்ததாமெனக் கருத்திற்கொண்டு அத்தலத்தில்பரம்பொருளாய்ச் சர்வசிவகாருண்ணியராகின்ற பரமசிவக்கோலமாகிய லிங்கத்தினைஸ்தாபித்துக்காலைமாலைப்போதில்ஸ்நானஞ்செய்து திவ்வியபரிமள புஷ்பவகைகளைத்தேடி யெடுத்துவந்து சிவனைச்சுத்தோதகங்களினுல்அபிஷேகஞ்செய்துவேதவிதிப்படிக்கு அருச்சனைமுதலிய ஆராதனைகளை பத்திபூர்வகமாகநடத்திப்போற்றி வணக்கிப்பூசித்து வரும்போது அதன்பணிவிடைகளுக்குப் பரமன்களித்து அனுக்கிரகஞ்செய்தபடிக்கு முன்னமிற்றகோடுகள்நான்கும் பழையபடியே முளைக்கக்கண்டுகளித்து அப்பதியை நீங்காமல் லோகநாயகனைவழிபட்டிருந்தது.

இதுநிற்க பொன்னுலகமழிந்து தேவர்சிறையி லகப்பட்டவுடன் நேவதூதர் மிகவும்வருந்தி மனேவேகத்தினுமேலிட்டோடி மகம்மேருச்சாரலிற் றவஞ்செய்திருக்கும் இந்திரனைக்கண்டுவணங்கிப்போற்றிக்கோவென்றழுது ஓ! இறைவனே? யென்சொல்வோம். தேவரீர்பொன்னுட்டை நீங்கினபின்பு ராசகுமாரன் அரசுசெலுத்திநேற்றையவரையில் எங்களைப்போற்றி வந்தனர் சூரன்குமாரன் பானுகோபனென்பவன் அளவற்ற ராட்சதப்படைகளைக் கூட்டிக்கொண்டுவந்து பொன்னுலகை முற்றிக்கைபோட்டுக்கொண்டதையறிந்து தமதுகுமாரன் கோபித்தவனைத் தேவப்படைகளுடன் அயிராவதத்தின்பேரில் ஆரோகணித்துப்போய் அகோரயுத்தங்களைச்செய்து பற்பலராட்சதரைவாட்டியுங் கடையிற் சத்துருக்களுக் கிளைத்துத் தானும்விண்ணவர்களும் அவர்கள் தேவிமாருடன்பாதகன் சிறையிலகப்பட்டுக்கொண்டான். கொடியமனதையுடையராட்சதர் அத்துடன்போகாமற்சொர்க்கலோகத்தைத் தீக்கிரையாகச் சுட்டுக்கொளுத்தி நாசஞ்செய்தனர். அவ்வகியாயத்தை யிவ்விதமெனச்சொல்லவுங்கூடுமோசொல்ல வாயெழவில்லையென்று கண்களில்நீரைப்பெருக்கிமுறையிட்டதைக்கேட்டவுடன் திகிற்கொண்டு புத்திரசோபமேலிடச்சோர்ந்துஐயனே? பகைவர்கையிற்சிக்கினையோ அக்காலத்தில் என்னைநினைந்து மிகவும்வருந்தினையோ!என்செய்வேனென்று துக்கசாகரத்தி லழுந்தினவனுப்க் கிலேசிக்குமுன்னிலையில் இந்திராணி தன்செவிகளி லிச்சம்பவங்கேட்டவுடன் சாவுக்குச்சரியான மூர்ச்சையாய்ச்சற்றுநேரத்திற்றெளிந்து ஓ! குமாரனே? ஓ! புத்திரசிகாமணியே? ஓ! என்கண்மணியே? எங்கள்பாழும்பிராணனைப் பெரிதாகவெண்ணி உன்னைத்தனித்துவிட்டுவந்தோம் பின்பு நீசுகமாய் அரசுசெலுத்தி யிருக்கின்றனை யென்பதைப் பலரிஷிகள்சொல்லக்கேட்டு மனமகிழ்ச்சியாயிருந்தேன் இக்காலத்திற் சிறுபிள்ளையாகியநீயோ கொடியசெய்கைகளையுடைய ராட்சதப்பாதகர் கையிலகப்பட்டுச் சிறையிலிருக்கின்றனை யென்பதைக்கேட்கவும் சகிக்குமோ என்னுசைமகனே! என்னைவிட்டுப் போகலாமோ? ஓடிவந்து என்துக்கத்தைத்தீராயோ? பாவி ஒருபெண்பிறந்து படாதபாடுபட்டும் புத்திரனையுமிழக்கலாச்சுதே! தெய்வமே? யென்செய்வேன் உனக்கென்னிடத்திற் குறையுண்டோ? ஓ! என்பிராணனுக்கினியமகனே? நீராட்சதர் வசப்பட்டாயென்னுங் கொடியசொல்லைக்கேட்டும்பிராணனை விடாமலிருக்கின்றேன். என்னினுங்கல்மனதையுடையவர் யாரிருக்கின்றார்கள். பரமன்செயலிவ்வாறோவென்றுபலபலதுக்கத்துக்கேதுவாகிய சொற்களைச்சொல்லிச்சொல்லிப் புலம்புகின்றகாலத்திற் றேவராசன் அவளை ஒருவகையாகத்தேற்றி மனவருத்தத்துடன் பழையபடியே பரமனைவழிபட்டிருந்தான்.

இவ்வாறு தேவேந்திரனனவன் மிகுந்த துன்பத்துடன் மேருமலைச்சாரலில்கங்கையையணிந்தசடைமுடியினையுடைய பரமேஸ்வரனைநோக்கி அநேககாலந் தவஞ்செய்துகொண்டிருக்கையில் பரமசிவங்கிருபைகூர்ந்து ரிஷப

வாகனரூடராயெழுந்தருளிஓ! தேவேந்திரனே? நீசெய்த தவத்திற்கு மனமகிழ்ந்தோம் ஆதலால்வேண்டியவரங்களைக்கேளென்று திருவாய்மலர்ந்தருளினார் அதைக்கேட்ட தேவேந்திரன் நமஸ்கரித்து எம்பெருமானே தீமையேகுடிகொண்டிருக்கிற சூரபன்மன்முதலியஅசுரர்களைக்கொன்று எங்களுக்குள்ளதுன்பத்தைநீக்கியருளவேண்டுமென்று வேண்டினான் அதற்குப்பரமசிவம் மகிழ்ந்து ஏ! மகபதியே? யாம்பார்வதியோடுகூடிஒருகுமாரனைத்தருவோம்அந்தக்குமாரனே வெற்றிபொருந்தியசூரன்முதலிய அவுணர்களைக் கொன்று உங்களுடைய செல்வத்தையுங்களுக்குக்கொடுப்பான் ஆகையால் நீவருந்தாதேயென்றுஅருளிச்செய்து சிவபெருமான்அந்தரத்தானமாயினர் சிவனருளிச்செய்த அவ்வாசகத்தையிந்திரன்கேட்டு விஷ்ணுபிரமாதிகளோடுசூழ்ந்து மன்மதனைஅச்சிவன்யோகிருந்தகாலத்திலேவுதலும் அவன் அவருடையவிழிகளிலுண்டாகிய அக்கினியால் வெந்துசாம்பலாயினன்அதுகண்ட தேவர்கள் யாவரும்சிவபெருமானிடம்போய்அவனை யுயிர்ப்பித்தருளும்படி வேண்டிக்கொண்டதன்பேரில் அப்படியேயருள் புரிந்தனர். பின்புதிருமால்பிரமன் இந்திரன் தேவர்கள் கணத்தலைவர்கள் என்னுமிவர்கள்துதிக்கும்படிச் சிவபெருமான் இமயமலையை யணைந்து உமாதேவியைத்திருமணஞ்செய்துகொண்டுஅவ்விடத்தினின்றுந் திருக்கயிலாயத்தைச்சேர்ந்து எங்களுடைய வருத்தத்தைக்கண்டிரங்கித்தமது நெற்றிக்கண்ணால் தேவரீரைத்தந்தருளினர்.

எம்முடையதந்தையாகிய தேவரீர் அவதாரஞ் செய்தபிறகுஇந்திரன்-பிரமன்-விஷ்ணுதேவர்கள் முனிவர்களென்னு மிவர்களுக்கு முன்போயிருந்தவுயிர் மறுபடியும்வந்து பொருந்தியதுபோலாயிற்று.அன்றியும்சூரனைக்கொன்று தத்தமரசுகளைக் கைக்கொண்டவர்போலவுங் களித்தார்கள். ஆயினும்எம்பெருமானே தேவரீரையும் முக்கண்மூர்த்தியாகிய சிவபெருமானையும் நேரிற்கண்டுதரிசிக்கவருங்காலத்திலன்றி மற்றைக்காலங்களில் தேவர்கள் ஒளித்துக்கொண்டே திரிகின்றனர். சூரபதுமனையும் அவனது சேனைத்தலைவர்களையு நினைக்குந்தோறு முண்டாகியபயத்தால்தேவர்களுக்குநித்திரைஸ்வப்பனங்களு முண்டாவதில்லை.இந்திரனுடையமகனாகிய சயந்தனென்பவனைப்பிடித்துக்கொண்டுபோய்ச் சூரன்சிறையிலிட்டிருக்கின்றனன் ஒப்பில்லாதசெல்வத்தினாலும், பெருமையினாலும், சிறப்பினாலும், பலத்தினாலும், மேன்மையாலும், அழியாததன்மையாலும்,தேவர்களுக்கெல்லாந்துன்பஞ்செய்தலாலும் அந்தச்சூரனுக்கு ஒருவரும்எதிரில்லை. இந்தஒருஅண்டத்தில் அவன்செய்கிறகொடுமைகளையாமறிவோம் ஏனையஆயிரத்தேழு அண்டங்களிலும்அவன்செய்யுங் கொடுமையையாங்களறியோம்ஓ! குமாரக்கடவுளே? தேவரீரோ அவைகளையறிகின்றவர் சூரபதுமனுடைய ஆணையென்று சொன்னால் அதைவிஷ்ணுவும் பிரமனும் தேவர்களுமே கடக்கமுடியாமல் அஞ்சுகின்றனர். ஆதலால் அவனுடைய பெருமையை யாவர்தானளந்துரைக்கத்தக்கவர்கள் பரஞ்சுடராகிய சிவபெருமான் இப்படிப்பட்ட வரங்களைக் கொடுத்துவிட்டாராகையால் அவர் அவனைத்தண்டிப்பதுகூடாது ஆகையால்தேவரீரோ அவ்வசுரனைமுடித்து எங்களைக்காக்கவேண்டியதேயன்றி வேறுபுகலிடமெங்களுக்கில்லை சூரபதுமனையும்அவனுடையமக்களையும் துணைவர்களையுங்கொன்று பிரமன் இந்திரன் முதலினோருடையபதங்களை அவரவர்களும்பெற்றுச்சுகித்திருக்கும்படிக் கருணைசெய்யவேண்டுமென்று பல முறைவணங்கித் தேவகுருவாகிய பிரகஸ்பதி பகவான் சொல்லிவந்தபோது தங்கள் குழந்தைகள் தாங்கள்சொல்லிக்கொடுத்ததைக் குதலைச்சொல்லாற் சொல்லியபோது கேட்டுச் சந்தோஷிக்குந் தாய்தந்தைகள்போல எல்லாமுணர்ந்தவராகிய குமாரக்கடவுள்கேட்டு அதிக மகிழ்ச்சியடைந்துஅந்தப்பிரகஸ்பதியைப்பார்த்துச்சொல்லுகிறார்.

துன்மார்க்கராகியஅவுணர்செய்தியையொன்றுவிடாது நீசொல்லிவந்ததைக்கேட்டுஅதிகசந்தோஷமடைந்தோம் நீசமஸ்தகலைகளுந்தெரிந்தகுருவாயிருப்பதால்உனக்குத் தெரியாதது என்னவிருக்கின்றதென்றுபுகழ்ந்துஅந்தவியாழபகவானைஅருகிருத்திஅவருடையமுதுகைத்தடவியுபசரித்துமகிழும்படிச்செய்தனர் இவ்வாறுவியாழபகவானுக்குஅனுக்கிரகித்துவிட்டுத்தம்முடையசமீபத்தில்நின்றுகொண்டிருந்தஇந்திரனைப்பார்த்து ஓ! இந்திரனே?நீயுன்மனதிலொன்றும் எண்ணவேண்டாம் அசுரர் குலமானதுமாய்ந்துவிடவும். தேவர்களெல்லாம் அவர்களிட்டசிறையிலிருந்து நீங்கிச்சுகிக்கவும் தேவலோகத்தை நீயாளவுஞ்செய்து யாம் உங்களை ரக்ஷிப்போம் ஐயப்படவேண்டாமென்று இகபரங்களை யுயிர்களுக்குக் கொடுத்தாளும் எம்பெருமான் [illegible]றியமாத்திரத்தில் மகபதியானவன்அன்போது அவ்வறுமுகக்கடவுளுடைய பாதங்களில்தேவகூட்டத்துடன்வணங்கித் துன்பமெல்லாம்போய் அளவிடக்கூடாத ஆநந்தசாகரத்தின்மூழ்கினான்.

---

## உ-வது, அசுரகாண்டம்-முற்றிற்று.

---

கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள் திருவடிவாழ்க.

---





உ

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

ஸ்ரீஞானசம்பந்ததீர்த்தசரணாயநமஃ

---

கச்சியப்ப சிவாசாரியசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

# ஸ்ரீகந்தபுராணவசனம்.

## மூன்றாவது

## மகேந்திரகாண்டம்.

---

### வீரவாகுகந்தமாதனஞ்செல்படலம்.

விரிஞ்சன்மாறேவராலும் வெலற்கரும்விறலோனாகிப்
பெருஞ்சுரர்பதமும்வேத வொழுக்கமும்பிறவுமாற்றி
யருஞ்சிறையவர்க்குச்செய்த வவுணர்கோனாவிகொள்வான்
பரஞ்சுடருருவாய்வந்த குமரனைப்பணிதல்செய்வாம்.

---

இந்திரனாதியானவமரருமேனையோரும்
புந்தியிலுவகைபூத்துப்புடைதனிலொழுகிப்போற்றச்
செந்திமாநகரந்தன்னிற்சியமெல்லணைமேல்வைகுங்
கந்தவேளருளினீராலினையனகருதலுற்றான்.

---

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே மாயையினிடத்திற் சூரபதுமனாதியர்பிறந்ததுமுதல் இந்திகுமாரனாகிய சயந்தனாதியரைச் சிறையிலிட்டது வரையிற்குமாரக்கடவுளுக்குப் பிரகஸ்பதிபகவன்கூறிய கதாப்பிரசங்களை உங்களுக்குவரன்முறையாகச் சொல்லக்கேட்டீர்களன்றோ இனிகுமாரக்கடவுள் வீரவாகு தேவரைச் சூரனிடத்திற் றூதாகஅனுப்பிய சரித்திரங்களையுங் கேட்பீர்களாக. மேற்குறித்தபடிக்கு இந்திரன்முதலிய தேவர்களும் வீரவாகுவும் அவன்துணைவரும்மற்றையருஞ்சூழ்ந்துபோற்றி யிருக்கத்தக்கதாகத் திருச்செந்தில் நகரத்தில்தேவதச்சன் படைத்திருக்கின்ற சபாமண்டபத்தில் நவரத்தினகசிதமாகப் பிரகாசித்திருக்குஞ் சிங்காதனத்தில்வீற்றிருக்கின்ற கந்தசுவாமியார் மன்னுயிர்களிடத்திற் பெற்றிருக்கின்ற கிருபைப் பெருக்கினால் இதனையோசிப்பதாயினர், பிரமாதி தேவர்கள் முனிக்கூட்டங்கள் மற்றையரைப்போலவே அகன்றமண்டலாதி பத்தியங்களைப்பெற்று மகதயிஸ்வரியங்களை அனுபவித்து வாழுகின்ற சூரபதுமன்முதலாகிய அவுணர்களும் நமதிறைவனாகிய சிவபிரானுக்குப் புத்திரபாவகமாக விருந்தபோதினும் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ்செய்து உலகங்களுக்கு வருத்தமின்றிப் பாதுகாத்துவருவது தருமசாஸ்திரங்களிற்சொல்லுந் துணிபாக விருப்பதன்றியிற் சிறந்தநீதிகளின்பிரகரணங்களுந் துஷ்டரைக்கண்டிக்கவே வழங்குகின்றது அவ்வாறேநடத்துவது திடமாகக் காணப்பட்டபோதினும் சிவகடாட்சவீக்ஷண்ணியத்தினால் ஜயசாலியாய் அளவற்ற கீர்த்திபரனாகவிருக்கின்ற சூரபதுமனையும் மிகுத்தசம் பத்துகளைப்பெற்று வாழுகின்ற அவன்துணைவர்கள் இராசயோக்கியமாகவிருக்கின்ற அவுணவீரரையும் ஒருயோசனையுஞ்செய்து பாராமற் கொல்வது நம்போலிகளுக்கு நீதியாகக்காணவில்லை, ஆதலாற் காலதாமசஞ்செய்யாமற் றுரிதமாய் ஒருதூதனைச் சூரனிடத்துக்குச்செலுத்தித் தன்வசத்திற் காவலிற்பட்டுவாடுகின்ற தேவர்கூட்டங்களை விடுதலைசெய்துவிட்டு இன்னஞ்சிலகாலம்வாழ்ந்திருப்பையெனச் சொல்லியனுப்புவோம்அப்படிக்குநாம்செலுத்தியதூதன் சொல்லுகின்ற நீதிவாக்கியங்களைக் கேட்டு அதற்கிசைந்து கொடியசிறையை விடுதலைசெய்து

தேவர்களை அனுப்பிவிடுவானாகில் மாளாமல் மேலுஞ்சிலகாலம் வாழ்ந்திருக்கக்கடவன் அல்லது நமதுகட்டளையைமதியாமலுந் தனக்குவரவிருக்கின்ற துன்பங்களைநினைந்துபாராமலும் விண்ணவரை நமதுவசப்படுத்தச் சம்மதமில்லாமல் நமது தூதனைத்திருப்பிவிடுவானாகில்தட்சணமே நமதுசேனைகளுடன் அந்தப்பட்டணத்தின்மீது சென்று புத்திரமித்திரகளத்திராதிகளுடன் சூரனைவாட்டி நம்மவரைவிடுவித்துவருவது நன்மையாகும் இதன்றியில் நன்மார்க்கம்வேறில்லையென மனதிற்றீர்மானித்துக்கொண்டவராய்க் கூரியவேலாயுதத்தைக் கரத்திற்றாங்கியிருக்கும் சுப்பிரமணியர்தமது சந்நிதானத்திலிருக்கின்றமகாவிஷ்ணு பிரமன் இந்திரன்முதலாகிய தேவர்கள்மீது விழிகளைப்பரப்பிச் சொல்லுகின்றனர், ஓ! தேவர்களே அவுணர்குலமுற்றும் நாசமடையச்செய்யநாளைக்கேபோக விருந்தபோதினும் தருமசாஸ்திரப்படிக்கு முந்தி ஒருதூதனைச்செலுத்திக் கொடுங்கோல் செலுத்திவருஞ் சூரபதுமன் கருத்தின்னதென்றுஅறிந்துகொள்ளவேண்டுமென்று குமாரக்கடவுள்எடுத்துக்காட்டியநீதியைவிஷ்ணுவும் பிரமதேவனுங்கேட்டுகர்த்தனே தேவரீர்கொடியபோரைச்செய்யத் தொடங்குமுன்னம் சூரபதுமன்சபைக்கு விவேகசாலியாகவிருக்கின்ற ஒருதூதனை அனுப்பக்குறித்தது தருமமார்க்கத்துக்கடுத்ததே அப்படிக்குச்செய்வது தகுந்தகுமென்று சம்மதவார்த்தைகளைப்பேசியவுடன் குமாரசுவாமியார்மீளவும் அவர்களைக்குறித்துஉங்களுக்கும் இஷ்டமாகவிருக்கின்றதால்இந்தச்சபையிலிருக்கின்ற ஜயசாலிகளில் வீரமாமயேந்திர புரிக்குப்போய்ச் சூரனைக்கண்டு வார்த்தையாடி அவன்கருத் தின்னதெனத் தெரிந்துவரச் செலுத்துவதற்குத் தகுதியானவர்களை யாரைநேமிக்கின்றீர்கள் அதையோசித்துச் சொல்லக்கடவீரென நல்லகாரியமென்று அதைக்குறித்துப்பரிசோதித்துப் பிரமதேவர் கூறுகின்றார்,எத்தலங்களினுந்தடையின்றி உலவிவரும் வாயுதேவனும்அந்தவீரமாமயேந்திர புரியில் மந்தமாருத அசைவைக் கொண்டுபோவதும் அரிதரிது அந்நகரத்தின் புறம்பினும் உள்ளினுமிருக்கின்ற காவலின் கட்டுகளைச் சொல்லி முடிவதன்று என்னொத்தவனுக்கு அவ்வாறேகடினமாகவிருக்கும்ஆதலால் அவுணருக்குக் கீழ்ப்பணிந்துவாடித்திரும்பாமல்தீரத்துவமாய் நகரத்துக்குள்ளேபோய் அரசனைக்கண்டுதக்கவார்த்தைகளைப் பேசுமுன்னிலையில் ஒருகாலம் மீறிப்பேசினால் சத்துருக்களைப்புறங்கண்டு வெற்றிகொண்டுதிரும்ப வல்லவர், புசபலபராக்கிரம சாலியாகிய இளையபெருமாள் வீரவாகுதேவரை யன்றியில் இக்கூட்டத்தில் யாவரையும் நினைக்கப்படவில்லை அவரைத்தூண்டுவதே உத்தமம் சுபகரமாகவுமிருக்குமென்றுபிரமன்பாலசுப்பிரமணியர் மனதுக்கு இரம்மியமாக விருக்கின்ற காரியத்தைக்குறித்துத்தயிரியமாகக் கடுகிச்சொல்லிநிற்க, குகனும்பிரமனிடத்திற் பரிவாய் நீகுறித்தது மிகவும்அழகாகவும்யோக்கியமாகவுங் காணப்படுகின்றதெனக் கொண்டாடித் தேன்களைத்துளித்துப் பரிமளித்திருக்கும் வெற்றிமாலைபுரளப் பர்வதாகிருதியாகப் பருத்திருக்கும்புயாசலங்களைப் படைத்த வீரவாகுதேவர் முகாரவிந்தத்தைப்பார்த்துமுதிர்ந்த கிருபையினால் இதனைச்சொல்லுகின்றனர்.

வீராதிவீரனே! வீரமாமயேந்திரமென்னுங்கட்டுக்காவல்களையுடைய பட்டணத்துக்குத் துரிதமாகப்போய்நீர் மலக்கடவுளாகிய சிவபிரான்அனுக்கிரகஞ்செய்திருக்கும் இந்திரஞாலத் தேரினிடத்தில் ஆரோகணித்து ஆயிரத்தெட்டு அண்டங்களினும் உலவிஏகச்சக்கிரமாக அரசாட்சியினைச் செலுத்திவரும் சூரபதுமன் சபைக்குப்போய் இராசனைக்கண்டு நாற்கோடுகளைப் பெற்ற அயிராவதவாகனனை இந்திரகுமாரனாகிய சயந்தன்முதலியதேவர்களை வெகுகாலமாக அரியசிறையில்வைத்திருக்கின்றனை உன்னொத்தவனுக்குஇதுதகாது, ஆதலால்தருமத்தை நினைந்து தீனராகிய தேவர்கூட்டங்களை விடுதலைசெய்து சுகசீவியாய் மகதயிஸ்வரியங்களை அனுபவித்துச் சவுக்கியமாக வாழக்கடவாயெனச்சொல்லக்கடவாய்,சூரன் அவைகளைச் சீர்தூக்கிப்பார்த்து இதுநன்மையென்றுதெரியாமல் தடுத்துப்பேசுவானாகில் அவுணராசனே? உன்வம்சபரம்பரைமுற்றினும் வேருடன்நிமைப்போதிற் சின்னபின்னப்படக்கண்டித்து உன்னையும்வெற்றிவேலாயுதத்துக்கிரையிடத்தக்கதாகப்போருக்கு நாளைக்கே நாம்வரவிருக்கின்றனம், இது உண்மையாகிய வார்த்தையிதைதீர்க்கமாயோசித்துப் பிழைக்கக்கடவையெனத் தெரிவித்து மீளக்கடவையென வீரரில்வீரராகிய வேலாயுதமூர்த்திவிளம்பிய வாக்கியங்களை வீரவாகுதேவர் கேட்டவுடன் கர்த்தனே! தேவரீர்கட்டளையின்படிக்குக் கொடியசெய்கைகளையுடைய அவுணர்வீறியிருக்குங் கெடிஸ்தலமாகியவீரமாமயேந்திரபுரியைச்சேர்ந்து மகதயிஸ்வரியங்களை அனுபவித்து மமதைகொண்டிருக்கும் சூரபதுமனைக்கண்டுதேவரீர் குறித்திருக்கின்ற காரணங்களைவிபரமாகச்சொல்லி அதன்பேரில் அவனுக்கிருக்கின்ற கருத்தையுந்தீர்க்கமாகத் தெரிந்துகொண்டுவிரைவில் வரக்கடவேனெனத்திருவடிகளிற்பணிந்து விடைபெற்றுத்திருச்சபையைக்கடந்து வெளியில்வரும்போதுகூரியவச்சிராயுதத்தைப்படைத்த இந்திரனானவன் குமாரதேவர் விடுத்ததூதன் பின்தொடர்ந்து வீரவாகுதேவரோ? நீர்பராக்கிரமசாலியாகிய சூரபதுமன் பட்டணத்தைச் சேர்ந்தவுடன் அப்பதியிற் கொடியகாவலிற் பட்டிருக்கின்ற என்குமாரன் சயந்தனையும் மற்றதேவர்களையுங்கண்டு சிலதேறுதலைச்சொல்லித் தேற்றி அவர்களுக்குத் தயிரியமுண்டாகச் செய்தபின்பு அரசன் சபைக்குப்போய் வார்த்தையாடிவரவேண்டும்இந்தச்சகாயத்தைஅடியேனுக்குச் செய்யக்கடவீரெனத்தேவராசன் சொல்லிக்கொண்டதைக் கேட்டவராய் இந்திரனே! உன்கோரிக்கையின்படிக்கு அவர்களைக்கண்டு பேசிவருவேன்மனக்கவலையற்றிருப்பையெனத்தேற்றி அவனைக்கடந்துபோய் தம்மிடத்திற் பிரீதிபத்திவைத்துப்பின்பற்றிவருந்தம்பியர் எண்மரையும்இலக்ஷரையும்பார்த்துச் சொல்லுவார்.

நீங்களனைவருங்கேட்பீராக.—விசாலமாய் அலைகளைப் பெருக்கியிருக்கின்ற கடலைத்தாண்டிகொடுமைகளுக்கிருப்பிடமாகிய வீரமாமயேந்திரத்தைச்சேர்ந்துசூரனுடன் நமதுகர்த்தன் பணித்ததைச்சொல்லிக் காட்டுமுன்னிலையில் அதைநன்கெனமதியாமற் றடுப்பனாயின்தட்சணத்தில் அந்நகரத்தைஅதம்பண்ணினபின்புதிரும்புவேனெனப்பேசிய தீரத்துக்குக்கொண்டாடித் தம்பியர்சேவித்துக்கொள்ள அவர்களை விசாலமாயிராநின்ற தமதுமார்பிலிறுக அணைத்துக்கொண்டு தம்பிகாள் நீங்களனைவரும் பூதசேனைத்தலைவர்களுடன்கலந்துகர்த்தன் சந்நிதானத்திற் காத்திருந்து பணிவிடைகளைச்செய்து வரக்கடவீரெனப்

பணித்து அவர்களையுங்கடந்து பரந்தகருநீரைப்பெற்றச
முத்திரக் கரையைநோக்கிச்சென்று அணியணியாகஅலை
களைமோதிச் சுருட்டும் கடலினிடத்தைச்சேர்ந்து அதன்
மருங்கில் மேருகிரியைப்போலப் பாரித்து உயர்ந்திருக்கி
ன்ற கந்தமாதனவரையைக்கண்டு பாதங்களிற்றரித்திருக்
கின்ற வீரக்கழல்கள் கலீல் கலீலெனச்சத்திக்கத்தக்கதா
க அதிசீக்கிரத்தில் அவ்வரையின்மீதேறிப்போய் விபூதி
துளிதந் தேகமெங்குஞ் சந்திரனைப்போலப் பிரகாசிக்கு
ம் அழகியதிருமேனியுடன் பச்சிலைமரங்கள்மிகுதியாகப்
பெருத்திருக்கும் சோலைகள்மலிந்து மேகசஞ்சாரமருமை
ற் குளிர்ந்திருக்கும் கந்தமாதனத்தினுச்சியில் வீரவாகு
தேவர்போய்நின்ற காட்சியைப்பார்த்தால் நீலகிரியின்மே
ல் வெள்ளிமலையொன்று தோற்றுவதையொக்கும்இவை
யன்றியும் சிலவுபமானங்களைச் சொல்லக்கேட்பீராக வா
யுவேகத்தினு மீறிச்செல்லும் ஏழுபச்சைக்குதிரைகள்பூ
ண்டுசெலுத்துந் தேரினிடத்தில் ஆரோகணித்துப் போ
கும் சூரியபகவான் தவழ்ந்துகடக்கும் உன்னதமுள்ள க
ந்தமாதனபருவதத்தின்மீதில் வீரவாகுதேவர்வந்து நின்
றபோத அந்தபாரத்தைத்தாங்கமாட்டாததாய்க்கோடை
யிடிவீழுந் தன்மையாகக் கிடுகிடெனஅசைவுகொண்டுப
டலெனப்பிளந்த அதிர்ச்சியினால்அவ்வரையினுச்சியிற்ச
ஞ்சரித்திருந்த மிருகங்களும் பட்சிசாலங்களுந்திகிற்பட்
டு ஓவென்னு மிரைச்சலைக்காட்டி ஓடியது. இவ்விதமாக
அத்தலத்திலிருக்கின்றசீவராசிகள்சத்தித்துப்போவதுங்
கல்லென்னும்ஆரவாரங்களுடன்அருவிகள்பெருகுவதும்
எப்படிக்கிருந்ததெனில்இந்தத்தேவனைத் தாங்கமாட்டே
ன்தாங்கமாட்டேன்ஐயையோ!எளியன்தீனனெனத்துக்கி
த்துவிழிகளில்நீரைப்பெருக்கிவருந்தியதையொத்தும்புச
பலபராக்கிரமசாலியாகியவீரன்நடக்குமுன்னிலையிற்பாத
ங்களைப்பெயர்த்துவைக்கும்உறுத்தலுக்குத்தாளமாட்டா
ததாய்த் துன்பத்தையடைந்து வாடிநிற்க அவ்வரையின்
மீதிருக்கும் நாகங்கள் திடுக்கிட்டுப் படங்களையுதறிக்கக்கி
யபாரித்த சிரோரத்தினங்கள் பலதிக்கினுஞ் சிதறிவிளங்
குவது அப்பர்வதத்தின்துதேகம்வெடித்த வாயினிடத்தி
ல் உதிரமானது பீரிட்டுத்துள்ளிவிழுமாறுகாட்டவும் க
லீன்கலீலெனமுழங்கும்வீரகண்டைவீக்கிய பாதங்களை
ப்படைத்த வீரவாகுநிற்கும்உதிட்டியினால் அவ்வரையா
னது கிடுகிடென்றசைய அத்தலத்திலிருந்தமிருகங்கள்ப
யந்தபோதினும் அப்புறம்போகாமற் சுற்றியிருப்பதையு
ம் பறவைகள்பறந்தோடியதையும்யோசிக்குமிடத்திற்பெ
ரியோர்களாக விருப்பவர் தாம்சினேகித்தவிடத்தில் வரு
த்தம்நேர்ந்தபோதினும் அதற்குத்தாமும் உடன்பட்டுஅ
னுபவிப்பதைப் போன்றும் செய்நன்றியறியாதமூடன்பி
ராணனைப் பெரிதாகநினைந்து தப்பித்துக்கொண்டுபோய்
விடுவதை யொப்பக்காட்டவும், மும்மதங்களை ஆற்றைப்
போலப்பெருக்கிவரும்யானைகள்வீரத்தன்மைபெற்ற சிங்
கங்கள்-வேங்கைகள்-நீண்டதுதிக்கையினைப்படைத்த யா
ளிகள்-கரடிகள்முதலாக அம்மலை அசைவுகொண்டபோ
து தாங்களடங்கியிருந்த கெவிகளில் நின்றுந் தவறிவிழு
வது பிரசண்டவாயுவின் மோதலிற்பட்டுத் தோப்புகளி
லிராநின்ற கனிவகைகள் உதிருமாறுகாட்டவும் மேலும்
உலகவிருளைக்கடிந்து நன்மைசெய்துலவுஞ் சூரியன்தலை
மாலையைப்போன்றும் கிரணகாந்திகளானவை நீண்டுகா
ட்டுஞ் சடைகளாகவும் ஆர்ப்பரித்துவானகங்கைஅதன்மீ
து பரவுந்தன்மையினாலும் சந்திரன்போக விடமில்லாம
ல் ஒருபாரிசமாகச்செல்லுவதாலும் இத்தகைபசிவரூபச்
சிறப்பினைக்கொண்டு ஓங்கியிருக்குங் கந்தமாதனத்தின்உ
ச்சியில்நிற்கின்ற புசபலபராக்கிரம சாலியாகிய வீரவாகு
தேவர் நெற்றிவிழியினைப்படைத்த சிவபிரானுக்குச் சம
தையாகக் காட்டவும் இதுவுமல்லாமல் வலிக்கொப்பற்ற
தூதன்பாதங்களையூன்றும் உறுதிக்காற்றாமல் அவ்வரை
யானது உடல்வருந்தி நெளிந்திருக்கஅதன்மீது வீரன்நி
ற்பது ஆதியிற்றாருகாவன ரிஷிகள்கோபித்துச்செலுத்தி
ய முயலகனைக்குப்புறத்தள்ளிக் குலைகுலைந்துஉடல்வருந்
திவாடத் திருவடிகளையூன்றிச் சந்திரசடாதரர்நின்றகோ
லமாகக்காட்டவும் அலைகளைவீசிச் சுருட்டுந்தெளிந்தகரு
நீரைப்பெற்ற கடற்கரையினிடத்திற்பசியதழைகளைப்பெ
ருக்கி யிராநின்ற சோலைகள்பெருத்திருக்குங்கந்தமாதன
வரையின்மீதிற் சிவகுமாரன் தூதன்தோற்றநின்றகாட்சி
யானதுபூர்வத்திற் கொடுங்கோல்செலுத்திவந்த கயமுகா
சுரன் பிராணிகளையலைத்துத் துரத்திக்கொண்டு காசிப்ப
தியில்வருங்காலத்தில் அந்நகரவாசிகளுடன்சகலரும் ஆ
லயத்திற்புகுந்து முறையிடுவதற்கிரங்கி விசுவநாதர்சீறி
யெழுந்த களிற்றினுருவைப்பெற்று மீறிவரும்இராட்ச
தனை உதைத்துத்தள்ளித் தோலையுரிப்பதாக அவன்தே
கம் பதைபதைக்கத்துதித்தூன்றிநின்றதைநிகர்த்துக்காட்
டவும் இவையன்றியிற் பாலசுப்பிரமணியக்கடவுள் மாய
மாபுரியைச்சூழ்ந்து போர்முடித்தகாலையில்பூதவீரர்தா
ருகன் சேனைகளை மடக்கிக்கொண்டு சின்னபின்னப்படச்
சாடுவதற்குப் பயந்து தப்பித்துக்கொண் டோடிப்போய்
அந்தமலையின் கெவிகளினுமற்ற மறைவிடங்களினும் ப
துங்கியிருந்த இராட்சதப்பாதகர்கள் புசபல பராக்கிரம
சாலியாகிய வீரவாகுதேவர் அத்தலத்தினும்வந்து அல்
லோலகல்லோலப் படத்திரியுஞ் செய்திதெரிந்தவுடன் எ
ன்னசெய்வானோவென்னும்ஏக்கத்துடன்நடுநடுங்கிப்பயப்
பிராந்தியினால் உதைத்துக்கொண்டுமாண்டனர்.

சவுனகாதிரிஷிகளே! கொடிய பாதகராக விருப்பவர்க
ள் பிழைக்கும்பொருட்டு சேர்ந்துவாழத்தக்கஷேஸ்தல
மு மொன்றுண்டோ? அவர்கள்தீங்கு அவர்களைத்தொட
ர்ந்துகொன்றது இத்தகையஉற்பாதங்களைப்பெற்றஅம்ம
லையானது வீரவாகுதேவர் மிதிக்காற்றாமற்கிடுகிடென்ற
சையும்போது அச்சாரல்களில் உல்லாசமாக வந்திருந்த
வீரகண்டைகள் சத்திக்கும் பாதங்களையுடைய விஞ்சை
யர் தங்கள்மனதுக்கினிய தேவியர்ஊடலைத்தீர்த்துரதிகே
ளியிற் கட்டியணைந்து தேகபரவசமாகவிருந்தவர்கள்பய
ந்தவர்களா யின்பமுற்றுவதற்குமுன்னம் பிரிந்துமனவா
ட்டத்துடன் வானவழிக்கொண்டோடவும் இந்தப்பிரகா
ரம் சமஸ்தமுந்தியங்கத்தக்கதாகக்கந்தமாதனத்தின்மீது
நிற்கின்ற வீரகண்டைகலிக்கும் பாதங்களையுடைய வீர
வாகு தேவரானவர் ஜயசாலியாகிய சூரபதுமன்வாசமா
யிருக்கின்ற சிறந்தபட்டணத்தின்மீதிற்போக மனதில் நி
ச்சயித்துக்குமாரதேவர் திருவுருவைத் தியானித்துக் கர
ங்களைக்கூப்பித் தொழுதுமகாவிஷ்ணுவும்,பிரமதேவனு
ம், பிரமித்துப்பார்க்கத்தக்கதாகவிசுபரூபத்தைக்கொண்
டு சொர்னசன்னத்தையொப்ப மகரந்தங்களையிறைக்கும்
வெற்றிமாலைபுரளும் புயாசலங்களைப்படைத்த வீரன்அ
வ்வரையின்மீதில் ஒப்பற்றதிருவுருவைத்தரித்துக்குலவி
நின்ற தோற்றமெப்படிக் கிருந்ததெனில், முன்னொரு

காலம் மகம்மேருவினிடத்திற்திருவிளையாடலைச்செய்து
வரக் கண்டதேவர்கள் கோபித்தெதிர்த்த மாத்திரத்தில்
அவர்களைக்கொன்று பிரகஸ்பதி கோரிக்கையின் படிக்கு
இந்திரனுடன் மற்றத்தேவரைமீளவும் எழுப்பித் தமது
பெருமைஅவர்களுக்குத் தோற்றும்படியாகப் பாலசுப்பி
ரமணியர் விசுவரூபத்தைக்காட்டி நின்றதற்கொக்கும்,இ
ந்தப்பிரகாரம் ஆண்திறம்பெற்றவீரவாகுதேவர்சிரம்அ
ண்டகோளகையை உராயநிற்கின்றபோது அச்சுமையை
த்தாங்கமாட்டாமல் பூமிபிளப்புண்டுஅவ்வழியேகந்தமா
தனம் பாதலத்திலிறங்குவது குற்றமற்ற தவமகிமையை
ப்பெற்ற அகஸ்தியர் வீற்றிருந்த விந்தகிரியி னுச்சியிற்
றமது குறியகரத்தைநீட்டிஅழுந்தகசெகபரியந்தம் து
றங்கிப் பாதலத்திலிறங்கியதை நிகர்த்துந்திரிபுரதகனத்
துக்கெழுந்தருளு முன்னிலையிற் றேவர்கள் நிருமித்துக்
கொடுத்த பூவட்டத்தேரினிடத்திற் சிவபிரா னெருபாத
த்தையூன்றியமாத்திரத்திற்பாதலத்திலிறங்கியதைப்போ
லவும் வீரவாகுமிதித்தகாலத்திற்கந்தமாதனம்கீழுலகை
ச்சேர்ந்தது, ஆதலாற் சவுனகாதிரிஷிகளேபிதாவுக்கிருக்
கின்ற வல்லபம் பிள்ளைக்குண்டாவதற்குச் சங்கையுண்
டோ இப்பிரகாரம் விற்றழும்புபெற்றிருக்கும் திருக்கர
த்தையுடைய வீரன்மிதித்த காலையில்அவ்வரையுடன்அ
வர்பாதமும் பிலத்திலிர்ங்கிச் சிரமாத்திரம் விழிகளுக்க
ளவுபடாமல் அண்டகோளகையை முட்டநின்றது பூர்வ
த்திற்பிரமன் விஷ்ணுதேடி ஆதியந்தத்தைக்காண்பதற்க
ரிதாகநின்ற அக்கினிமலையைப்போன்றும்நாரசிங்கத்தை
யொத்த புசபலபராக்கிரமசாலியாகியவீரவாகுதேவர்பா
தங்களுடன் கந்தமாதனம் பாதலத்திலழுந்து முன்னிலை
யிற் காட்டுப்பன்றிமுதலிய மிருகங்கள்அவ்வழியேயிரங்
குவதும் வானத்தையளாவநின்ற சிரத்துக்குநேராகஅன்
னமாதியபறவைகள் பறப்பதும்எப்படிக்குக்காட்டுவதெ
னில், முற்குறித்த அக்கினிமலையைத்தேடி யதைப்போ
லவே மகாவிஷ்ணுவும் பிரம.தேவனும் வீரவாகுதேவர்
அடிமுடியை நாடுவதற்கெழுந்ததையொத்தும்வலிக்கொ
ப்பற்ற வீரன் நிற்பதற்கருகில் உறங்கியிருந்த மலைப்பா
ம்புகளானவை அலறிவிழித்து அவ்வரையைச் சுற்றியிரு
ந்த தோற்றமாவது திருப்பாற்கடலைக் கடையுமுன்னிலை
யில் ஆமைமுதுகினிடத்திருந்து வாசுகியினாற்பிணிக்கப்
பட்டுச் சுழலநின்ற மந்தரகிரியை நிகர்த்துக் கந்தமாத
னம்விளங்கவும் செந்தாமரைக்கண்ணனாகிய மகாவிஷ்ணு
வினது நகரமும் பிரமனுலகமும் பலவகைமுனிவர்பதங்
களும் தேவர்கள் நகரங்களும் கருடகாந்தருவர்உவணர்ப
தங்களும் நவக்கிரகங்கள் உலகங்களும் சந்திரசூரியாதி
யர் பதவிகளும் மற்ற விண்ணுடுகளனைத்தும் வீரவாகு
கொண்டிருக்கும் விசுவரூபத்திற் பலவகை ஆபரணங்க
ளாகத் தோற்றவும் விளங்கியது.

இவ்வித உவமானங்களைக்கொண்டுபாதலவரையிலாழ்
ந்து அண்டவெல்லை பரியந்த முயர்ந்துகாட்டும்விசுவரூப
த்தைக்கொண்டு நின்றவீரன் அஷ்டதிசைகளையும் சத்த
சாகரங்களின் பரப்பையும் அதனிடையிற்பட்டிருக்கின்
ற தீவுகளையும் பெரும்புறக் கடலையும் பூவட்டமுழுமை
யையும் சக்கிரவாளகிரியின் செழிப்பையும் அண்டவெல்
லையின் பரப்பையும் மண்ணுலகப்பிரிவுகளையும்விண்ணு
டுகளின் அலங்காரங்களையும் தமது விழிகளைப்பரப்பிப்
பார்த்தவராய் எமதிறைவனாகிய சிவபிரான்வீற்றிருக்கப்
பெற்ற வெள்ளியங்கிரியையுந் தரிசித்துத் திருக்கரங்களை
க் கூப்பித்தொழுது மகாவிஷ்ணுமுதலிய தேவர்கள்நகர
ங்களையும் பார்த்து எண்டிசைக்காவலர் பட்டணங்களைப்
பார்த்துப் பூலோகத்திலிராநின்ற நகரங்களனைத்தையும்
பார்த்துச் சமுத்திரமத்தியிற் சொர்னமயமாக விளங்கியி
ருக்கின்றவீரமாமயேந்திரபுரியையும் பார்த்து மதித்தவ
ராப்ச் சூரபதுமன் வாசமாயிருக்கின்ற பட்டணத்துக்கு
மற்றெந்தநகரங்களும் ஈடுபடாதெனத் தமது திருவுளத்
தில் நினைந்தவுடன் வானவெல்லையையளாவவோங்கியிருக்கு
ம் பொன்மதில் சூழ்ந்த சூரபதுமன்பட்டணத்தின்மீதில்
அதிககோபங் கொண்டவராய்த் தமது கரங்களி னொன்
றைநீட்டி அப்பட்டணத்தைப்பிசைந்து சத்துருக்கள்பே
ரில்லாமல் நாசப்படச் செய்வேனென்னும்எண்ணங்கொ
ண்டவர் அத்தலத்திற்காவலிற்பட்டிருக்கின்றதேவர்களை
நினைந்தவுடனிரக்கமுண்டாய் அதனைமறந்து தமதுவிசு
வரூபஉக்கிரத்தைக்கண்டு தாபரிக்கப்படாமல்விழிகள்கூ
சப் பயப்பிராந்திகொண்டு வாடுகின்றவிஞ்சையர் இயக்க
ர்சித்தர் அழகிய சிறகுகளைப்படைத்த கந்தருவர் சூரியச
ந்திராதியாகிய நவக்கிரகங்கள் இராசிகள்தேவர்கூட்டங்
கள் முதலானவர்கள் துன்பங்களைவீரன்கண்டுபயப்படா
தீர்களெனக் கரங்களை அமைத்துக்காட்டினர், அவ்விடத்
திலுள்ள வலியிற்சிறந்த கருடர்தங்கள் மனதுக்கினியமா
தர்களை யிஷ்டாலாபமாகக் கூடிக்காமவின்பங்களை விளை
த்த இளைப்பினால் தாங்களிருந்த பர்வதத்துக்குநேர்ந்தது
ன்பங்களையுமறியாமல் தேவியருடன் நித்திரைசெய்திருந்
தவர்கள் மன்மதனிலும்வடிவுள்ளவீரன் துதிக்கக்கீழ்போ
கியவரையுடன் பாதலத்திற் சேர்ந்தவுடன் தெளிவுண்டா
யத் தமதுபத்தினிமாருடனெழுந்து அத்தலத்தில்வாழு
ம் நாகங்களைப் பற்றித் துன்பப்படுத்தவும் குமாரதேவர்
செலுத்திய தூதன் வலிகொண்டூன்றி நின்றகாலத்திற் பூ
மிபிளந்து கந்தமாதனம் சரேலெனப் பாதலத்திலிறங்கு
கையில் அதனிடத்திருந்த சர்ப்பங்களைப்பிலத்தில்வாழு
ம் நாகர்கண்டுதம்மினமாதலால் அவற்றிற்கு விருந்துசெ
ய்து குலவவும்தேன்களைத்துளித்துப்பரிமளிக்கும் வெற்
றிமாலையணிந்த வீரன்மலையை மிதித்தகாலத்தில்அச்சா
ரலிலிருந்து மேலானநற்கதியைவிரும்பித் தவங்களைச்செ
ய்துவரும் இராட்சதர்பிலத்தில் விழுந்து தங்களெண்ண
ம் முற்றுப்பெறாமல் மனம்வருந்திக் கிலேசித்திருப்பதா
ற் கொடியபாதகர்களுக்குப் பிழைத்தற் கேதுவாகியமே
லாகிய பதங்கிடைப்பது மிகவும்அரியதன்றோஇத்தகை
ய விநோதங்களைக்காட்ட நின்ற பருவதத் தின்மீது சிவபி
ரானுக்குச் சமதையாகிய வீரவாகுதேவர் நிற்கின்றதீரத்
தைத்தேவர்கள்கண்டு இவ்வீரன் இத்தகையகாத்திரமுள்
ள திரேகத்தைக்கொண்டு திரிலோகங்களினும் புகழத்தக்
கவளமிகுத்த வீரமாமயேந்திரத்துக்குப்போகநினைந்திரு
ப்பதைப் பார்க்குமிடத்தில் வீரகண்டையணிந்த பாதங்
களையுடைய அவுணர்களுடன் அண்டங்கள்முற்றினும்அ
ழித்துச்சாடும்படியாகிய சிந்தையைக் கொண்டிருப்பதா
கக்காணுகின்றதென வசனிக்கவும் மயேந்திரத்திலிருக்கி
ன்ற அவுணரும்மற்றதீவுதீபாந்திரங்கள்முற்றினும்வாழு
கின்ற அவுணரும் புசபலபராக்கிரம சாலியாகிய வீரவா
குதேவர் பேருருவைப்பார்த்தவுடன் நமதுமரபிலுதித்தி
ருந்த கிரவுஞ்சபர்வதம் அதப்பட்டதென்று முன்னம்

இவ்விடத்திற் பிறந்தசெய்தி முழுவதுமபொய்க்குத்தோற்றம் அவ்வாயின் மாயைப்பெருக்காகும்இதைத்தீர்க்கமாகத் தெரியவேண்டுமெனக் கும்புகும்பாகக்கூடித் தம்மில்வசனிக்கவும் கலீல்கலீலெனச்சத்திக்கும் வீரகண்டை தரித்த வீரவாகு கந்தமாதனத்தின்மீதில் இவ்விதகோலங்கொண்டு நிற்கின்றதை பிரமதேவன்இந்திரன்தேவர்கள் அவர்துணைவராகிய எண்மர்இலக்ஷர்படைத்தலைவர் பூதவெள்ளங்களாதியாகக் கண்டவுடன் அற்புதத்தையடைந்து ஜயவுச்சாகங்களுடன் ஆர்ப்பரித்துக்கொண்டாடினர், அக்காலத்தில் விண்ணுடுகளிலிருப்பவரும் ரிஷிகள்முதலாகிய சகலருந்தத்தமது பதவிகளில்நின்று இக்கோலத்தைத் தரிசித்து அதிகசந்தோஷங்களைப்பெற்றவர்களாய் பஞ்சகற்பகமலர்களை வாரிவாரி வீரன்மீதிறைத்துக் கரங்களைக் கூப்பித்தொழுது ஐயனே காலதாமசஞ்செய்யாமற் கொடியபாதகனாகிய சூரபதுமன் நகரத்துக்குப்போய்அடியோங்கள்குறைபாடுகளைத் தவிர்த்தாளவேண்டுமெனப்போற்றினர், இப்பிரகாரஞ்சகலருங்களித்துத் துதிக்கும்போது வீரவாகுதேவருக்குச் சந்தோஷம்பிரவேசித்து சிவகுமாரனைச் சிந்தித்துப்போற்றுவதாயினர், எம்மிறைவனாகிய பாலசுப்பிரமணியதேவர் பன்னிருபுயாசலங்களும்வாழி, சண்முகாரவிந்தங்களும்வாழி, கிருபைதங்கிய பன்னிருவிழிகளும்வாழி, கோடிசூரியப்பிரகாசமாய்க் கூர்மைபெற்று நீண்டிருக்கும் வேல்வாழி, மற்றப்படைகளும்வாழி, தேவதேவோத்தமனாகிய சிவகுமாரன் திருவடிகள் வாழிவாழியென்று கரங்களைச் சிரத்திற்கூப்பித்தொழுது இவ்விதமாகப் புகழ்ந்துபோற்றிய காலையில் அன்புமிகுதியினால் விழிகளிற் ஜலப்பெருக்கு மீறிப்பெருகியோடிக் கடலிற்பாய்ந்த பிரவாகத்தினால்அந்நீரின் உவர்ப்பைமாற்றத்தக்கதாகத் தேகபரவசத்தனாய் உருத்திராட்சத் தாழ்வடங்களைப்போல மயிர்ச்சிலிர்த்து தேகமுற்றினும் மூடிக்கொள்ளத் தக்கதாகப் பேரானந்தவெள்ளமானது மனதிற்றேக்கிட்டலைக்கநாக்குழறித்தித்து நிற்குமுன்னிலையிற் பருவதங்களும் குழைந்துகாட்ட விழிகள்செருகிச் சுகாதீதவெல்லையைநோக்கத் தேகங்குதுகுலித்துக்காட்டியபோது சகலபுவனங்களினுமிராநின்ற பிராணிகள்முற்றும் சந்தோஷசாகரத்திற்படிந்து மனமகிழ்ந்தது, இப்பிரகாரம் சமஸ்தமும் பேரானந்தத்தையடைந்து விறியிருக்கின்றகாலத்தில் வேலாயுதக்கடவுளினது அனுக்கிரகத்தின் முயற்சிகொண்டு கந்தமாதனத்தின்மீதில்நின்ற வீரவாகுதேவர்யோசித்துமேலேழுலகங்களையுங் கடந்திருக்கின்றஇந்தவிசுவரூபத்துடன்நாம்போகத்துணிவோமாகில் உலகங்கள் மங்குவதன்றியில் அவற்றினுட்பட்ட பிராணிகள்அதப்பட்டுப்போமாதலால் இதுதகுதியன்றென்றெண்ணி அதற்கிசைந்த கோலத்தைக்கொண்டு கந்தமாதனத்தில்நின்றவீரன்வானத்திலெழுந்து சிரோரத்தினங்களினாற் செய்யப்பட்டு சொலித்திருக்கும் கிரிடமானது அண்டகோளகையைத்தடவ வீரரில் வீரனாகிய தீரன்கோபித்தெழுஞ் சரபப்பட்சியினது உருக்கொண்டு போவதைப்போலப் பர்வதங்களுக்குச் சமதையாக வோங்கியிருக்கும் மாடமாளிகை கூடகோபுரங்களாதியாகச் சொர்னமயமா யிரத்தினகாந்திகளைவீசியிருக்கும் நீண்டதெருக்களைப்பெற்ற வீரமாமயேந்திரபுரியைநோக்கிவாயுவேகமும் பிற்படமுற்பட்டுத்தாவிப்போவதாயினர்.

## கடல்பாய்படலம்.

அழுங்கியகழற்கால்வீரனவ்வழியவனிக்கீழ்போய்
விழுங்கிரிநிலைமைநோக்கிமீண்டுநீயெழுதியென்னு
வழங்கினன்வழங்குமெல்லைவல்லையிற்கிளர்ந்துதோன்றி
முழங்கிருங்கடலினமாடேமுந்துபோனின்றதன்றே.

வாரீர் சவுனகாதிரிஷிகளே? மற்றச்சரித்திரங்களையுங்கேட்பீராக, கணீல்கணீலெனச்சத்திக்கும் ஜயகண்டைதரித்தபாதங்களையுடைய வீரவாகுதேவர் வானத்தெழுந்தகாலத்திற்றும்நின்ற உறுதிக்காற்றுமற் பாதலத்திலிறங்கியிருந்த கந்தமாதனபருவதத்தின் நிலைமையைப்பார்த்து மனமிரங்கிப் பழையபடிக்கு மீளவெழுந்துநிற்கக்கடவையென்று அனுக்கிரகவார்த்தையைச் சொல்லியவுடன் அதிசீக்கிரத்தில் வெளிப்பட்டு வானத்தையளாவ யதாப்பிரகாரம் சமுத்திரக்கரையின்மீதிற் றோற்றியது அதைக்கண்டு மகிழ்ந்தவரால் வானவழிக்கொண்டு தாவிப்போகும் வேகத்தினாற்பிறந்த வாயுவின்பெருக்கிற்பட்டபருவதங்கள் அடியுடன்பெயர்ந்துசருகைப்போலஅவர்பின்தொடர்ந்துபோவது எப்படிக்கிருந்ததெனிற் கொடியசூரன்பட்டணத்தின்மீதில் நமதிறைவன் தனிமையிற்போகின்றனராதலால் நாம்படைத்துணையாகச் செல்லவேண்டுமென்றெண்ணித் தம்பியர்எண்மரும் இலக்ஷரும்படைத்தலைவரும் பூதவீரரும் புறவணியில்நடப்பதற்கொக்கும், இஃதன்றியும் அதிகவேகமாக அந்தரவழிக்கொண்டு நடக்கும் வீரவாகு தேவர்தேகத்தில்நின்று மெழுந்தபெருங்காற்றின் உறுதிக்காற்றுமல்அண்டகோளகையானது கிறுகிறெனச்சுழலவும், பிராணிகள்முற்றுந் திப்பிரமைகொண்டு சுவாசமெழாமல் அலைந்துவாடவும் சத்தசாகரங்களும் அல்லோலகல்லோலப்பட்டு அலைகளைமோதித்தமதுநிலைகளைக்கடந்து ஏகசமுத்திரமாகப்பெருகவும், சத்தமேகங்களுங் காற்றுடியைநிகர்த்துக் க்ரகொனச்சுழன்றொதுங்கவும், சர்வசங்காரகாலத்தில் உலகங்களை அழித்துவரும் வடவாமுகாக்கினியின் வெம்மையை அணைக்கக்காத்திருக்கும் ஊழிக்காற்றானதும் சகிக்கப்படாமையாற் றனதுநிலைகுலைந்து ஓடியொடுங்கவும் இஃதன்றியில் அதிகவல்லபசாலியாகிய வீரன்பின்னும் விரைந்துதாவிச் செல்லுகின்றகாலையிற் பெருகிய காற்றின்வேகமானதுமீறி ஆயிரங்கிரணகாந்திகளைவீசி உலகங்களைவிளக்கிவரும் சூரியன் வெம்மையையும் தன்னிடத்திற்பட்டவை யனைத்தையுந் தகிக்கவல்ல சுவாலையைப்பெற்ற அக்கினியின் கொடுமையையும்அடக்கிச் சோடசகலைகளைப்படைத்துக் குளிர்ந்திருக்குஞ் சந்திரனையும் வருணனையுமொப்பத் தண்மைபெறச்செய்தும் வடவையெனப்பெயர்பெற்று அலைகள்பெருத்த கடலினிடத்தடங்கியிருக்கும் ஊழித்தீயின்வெப்பத்தையவித்துக் குளிரச்செய்தும் இதுவல்லாமற் பரிமளித்திருக்கும் கடப்பமாலைபுரளும் புசங்களையுடைய வீராதிவீரன்முன்னினும் துரிதமாகச்செல்லுகின்றபோது வாயுவும் அதிகரித்து அலைத்துக்கலக்குந்தருணத்திற் றிரைகளைச்சுருக்கிக்கடலானது உள்வாங்கிக்கட்டுக்காவல்களைப் பெற்றிருக்கின்ற மயேந்திரபுரியின் மீதிற்றாவுவது எப்படிக்கிருந்ததெனில் ஆயிரத்தெட்டண்டங்களையும் ஏகச்சக்கிரத்தைச் செலுத்திவரும்சூரன்

சேனைகள் வீரவாகு தேவர்மீதிற் பகைத்துப்போய் அ
வர்வலக்குடைந்து பயபீதியினூற் றமதுநகரத்தைநோக்
கித்திரும்பி ஓடிவந்ததுக்கொக்கும், இவையன்றியில் ரி
ஷபத்தையொத்த கெம்பீரநடையையும் வலியையும்பெ
ற்றிருக்கின்ற வீரன்பாதங்களைக்கொ டு மிதித்தகாலத்
தில் அவ்வுறுத்துதலுக் காற்ருமற் பூமிபிளந்து கந்தமா
தனங்கீழ்போய்ப் பாதலந்தோற்றக் காட்டியபடியால் அ
வர்போகும் வேகத்திலுண்டாகிய காற்ருனதும் அத்த
கைய வலியினைப்பெற்ற தாதலால் அதன்வேகத்திற்பட்
டகடலானதுஅலைந்து கருநீரானதுபிளந்து வெள்ளிடை
யாகத்தோற்றியபூமியும்வெடித்து நாகலோகத்தைத்தோ
ற்றச்செய்தது பசியசொர்னத்தினூற்செய்யப்பட்ட சரப்ப
ளிமுதலிய ஆபரணங்கள்புரளும் புயாசலங்களைப்பெற்ற
வீரன் அதிகவேகமாகப் போகுமுன்னிலையிற் பெருகிய
காற்றுடன் அவருக்குண்டாகிய கோபவெம்மைமிகுந்து
சுவாசங்களிற்பெருகுஞ் சுவாலையுங்கலந்துபோய்க் குற்ற
ங்களே குடிகொண்டிருக்கும் மனதையுடைய சூரன்வா
ழும் வளமிகுத்த நகரத்தினைச்சுற்றிய தெப்படிக்கிருந்த
தெனில், அவன் தூசிப்படைவெளிப்பட்டு வளைந்திருப்
பதர்கொக்கும், அழகிய வீரகண்டைகள் சத்திக்கும்பா
தங்களைப்பெற்ற வீரன்போய்ச் சேருவதன்முன்னம் அ
வர்வேகத்திலுண்டாகிய காற்ருனதிணைந்துகொண்டுசென்
றுபருவதங்களைப் பழித்தோங்கியிராநின்ற புசங்களைப்ப
டைத்த சூரபதுமன் வாசமாயிருக்கின்ற மயேந்திரபுரி
யினைச்சூழப் பொன்வரையையொத்தோங்கி வளைந்திருக
கின்ற மதிலின்பாரிசத்திற் பசியசிறகினையுடைய கிளிப்பி
ள்ளைகள்முதலிய பட்சிகள்பெருத்துச் செவிகளுக்கினி
மையாகச் சத்தித்திருக்கும் சோலைகள் நந்தனவனங்கள்
இவற்றிற்புகுந்து கிளைகளொடிந்து சின்னபின்னப்படத்
தக்கதாகஅலைத்து நிலத்திற்கிடத்தவும் உறையிற்செருகி
யிருக்கும்கூறிய வாளாயுதத்தைத்தாங்கிய வீரன்சுவாச
த்திற்பெருகிய அனற்கொழுந்தானது முந்திப்பறந்து ப
கைவன்பட்டணத்தினைக்கொளுத்து முன்னிலையில் அவ்
வீரன்போகும் வேகத்திலுண்டாகிய காற்ருனதோங்கி
அலைகளைவீசுங் கடலினிடத்திற் ருக்கக்கொதித்து மாறி
மாறியெழும் அலைகள்கரங்களாகத் தாவிப்பற்றிய தீமூள
வொட்டாமல் அப்போதைக்கப்போ தவித்துவரவும் வீ
ரன் தாவிச்சென்றகாலத்தோங்கிய சுவாசமும் வேகத்தி
லுண்டாகும் ஓசையும் விழிகளிற்பெருகும் அனற்பொறி
களும் நாசிகளினின்ருெங்கும் சுவாலையும் ஏகமாய்மோத
த் தாக்குண்டு ஜலப்பெருக்கையுடைய சமுத்திரம்மேலி
ட்டோங்கும் அலைகளும்சேர்ந்து பகைவன்பட்டணத்தி
ன்மீதிற்போய் வானமூலமாக விழுவது பூதப்படைகள்
நாற்புறங்களினும் முற்றுகைபோட்டுக்கொண்டு சமர்வி
ளைப்பதற்கொத்தும் மந்தரத்தினையொத்த புயங்களைப்ப
டைத்து ஒருவராலும் வெல்லுதற்கரிய வலியையும்பெற்
றிருக்கின்றவீரன் சக்கிரவாகப் பட்சியைப்போல விசை
கொண்டு தாவும்போதுண்டாகிய வாயுவின் ஆரவாரத்தி
னூற் சமுத்திரங்கலங்கிஅதனிடத்துலவியிருந்த-சின்னை-
மகரம்- பனை- திருக்கை-திமிதிமிங்கலகிலங்களாதியாகிய
மச்சராசிகள் சின்னபின்னப்பட்டுமாளவும் எமதிறைவ
னூகிய பாலசுப்பிரமணியதேவர்விடுத்த தூதன்பாய்ந்து
போம்போது கடலானது எதிரோருமற் புறகிட்டுச்சா
ய்ந்து அலைகளாகிய கரங்களினூற் சலசரங்களையேந்தி
ஒருவனுக்குஅந்தியகாலம்நேர்ந்துசாகவிருக்கின்றதருண
த்தில் அவன்சுற்றத்தினர் அவனுக்குவிருப்பமுள்ளபண்
டங்களைக் கொடுப்பதுபோலச் சூரன்பட்டணத்தில்வீச
வும் வயிரக்கம்பத்தினையொத்த வலியபுசங்களைப்படைத்
த வீரவாகுசெல்லும் வேகத்திலுண்டாகிய வாயுவினூ
சையானது சூழ்ந்துகொண்டகாலத்தில் அதன்அதிர்ச்சி
க்குத் தாளமாட்டாமல் வானத்திலிருந்த மீன்களுங் கலை
பட்டுப்பலபலெனஅமோகமாகச் சமுத்திரத்தில் விழும்
போதுண்டாகிய கொதிப்பினூலெழும்அலைகளின்மூலமா
கத்தாவியமீன்கள் அவற்றிற்குமாருகச்செல்வதுபோற்கா
ட்டவும்மன்மதனும்இச்சிக்கும் சுந்தரவடிவுள்ளகாளையா
கியவீரன்வேகங்கொண்டுதாவும்போது செந்தாமரைமல
ரையொத்த திருக்கரங்களிற் பூண்டிருக்கின்ற பிரகாசம்
பொருந்தியவயிரக்கடகங்களினின்றுமெழுஞ்சோதியான
துபளபளெனப்பரந்து சக்கிரவாளகிரியினுக்கப்புறத்திற்
காடாந்தகாரமாகப்பரந்திருக்கின்ற இருளையுந்துரத்திஅ
ழகியவானத்திற்ருேற்றும்மின்னற்படலம் இந்திரதனுசு
இவற்றையும்எதிர்ந்து அவற்றின்பிரகாசத்தையடக்கிவீறி
விளங்கிக்காட்டவும் தேவர்கள்படைத்துக்கொடுத்தபூவட்
டத்தேரிலாரோகணித்துஅவர்களைச்சேனைகளாகக்கொண்
டுசிவபிரான்திரிபுராதிகளைவாட்டவெழுந்தகாலத்திற்பிற
ந்ததிருநகையழலைப்போன்றும்நுதல்விழித்தீ பரந்ததை
யொத்தும்மகம்மேருவாகிபதனுசிற்பூட்டிச்செலுத்தியம
காவிஷ்ணு உருக்கொண்டபாணத்தைநிகர்த்தும்வீரவாகு
தேவர்பாய்ந்தும் பூலோகமுற்றுமலைத்துத்தவ விரதங்க
ளைச்செய்துவரும் ரிஷிகளுக்குத்துன்பங்களைவிளைத்தும்
தேவர்கள்செல்வங்களனைத்தையுங்கொள்ளைகொண்டுதுர
த்தியலைத்தும் இவ்விதகெடுதிகளைச்செய்து வீறியிருக்கி
ன்ற சூரபதுமனைஅவன்வருக்கத்தவருடன் துரிதமாகக்
கொன்றுவாட்டக்குமாரதேவர்திருவுளத்தெண்ணிக்கோ
பித்தேவிய ஒப்பற்றவேலாயுதத்தைநிகர்த்து புசபலபரா
க்கிரமசாலியாகிய வீரன்பாய்ந்தும் உலகங்களைத் திருவ
யிற்றடக்கி மீளவெளியிடும் மகாவிஷ்ணுவானவர் அலைக
ள்மிகுத்த திருப்பாற்கடலைக் கடைந்துதேவர்களுக்கு அ
முதத்தினைத்தர நினைந்தகருத்தின்படிக்கு வானத்தை ய
ளாவநின்ற மந்தரகிரியானது பாற்கடலைச் சேர்ந்ததைப்
போன்றும் வானநாடுகளும் பூவட்டமுற்றினும் வருந்தி
வாடத்தக்கதாகச் சுவாலையைவீசிப் பெருகிய ஆலகாலவி
ஷத்தைத் தருவித்துண்டு கண்டத்திற் றரித்தவிடமான
து சிவபிரானைவேண்டித் தன்னைவெளிவிடக்கோரியதற்
கிசைந்து கர்த்தன்செலவுகொடுத்த காலத்தில் அவ்விஷ
மானது கடலைநோக்கி வந்ததைப்போன்றும் வீராதி வீ
ரனூகிய தூதன் பாய்ந்து வருகின்றனன். சவுனகாதிரிஷிக
ளே! சொர்ன வீரக்கழல்களைத்தரித்திருக்கும்பாதங்களை
யுடைய வீரவாகுதேவர் இவ்விதமாகச் சமுத்திரமார்க்க
த்திற்சென்று வெற்றிமாலைபுரளும் புசபலபராக்கிரமசா
லியாகிய சூரபதுமன் வாசமாயிருக்கின்ற மயேந்திரபுரி
யின் வடபாரிசத்தில் ஜயசாலியாகியபாளிமுகனென்னும்
அவுணவீரன் காவல்கொண்டு போற்றிவருகின்ற இலங்
கைநகரத்துக்கருகில் வருவதாயினர்.

## வீரசிங்கன்வதைப்படலம்.

அன்னதோர்வேலைமுன்னமகன்றலையாளிப்பேரோன்
றுன்னுபல்லனிகத்தோடுஞ்சூரனைக்காண்பானேக
மன்னதிவீரனென்னுமதலையாயிரமாம்வெள்ளந்
தன்னொடுமிலங்கைவைகித்தணப்பறப்போற்றியுற்ருன்.

ஓ! சவுனகாதிரிஷிகளே? வீரவாகுதேவர் கந்தமாதன வரையை நீங்கிச் சமுத்திரமார்க்க வேகங்கொண்டுசென்று இலங்கைக்கருகில் வருகின்றகாலத்திற்சம்பவித்தசேதிகளையுங் கேட்பீராக.—வீரவாகுதேவர் அத்தலத்துக்கு வருவதன்முன்னம்பாரித்த சிரத்தைப்படைத்தயாளிமுகனென்னும் அவுணவீரன் பலவெள்ளம் இராட்சதப் படைகள் சூழ்ந்துவர இரதாரூடனாய் இராசசின்னங்களைப் பலரேந்திநடக்கவும், ஜயபேரிமங்கலவாத்தியங்கள் தாம் தாமென்றதிரத் தான்வீற்றிருந்து அரசுசெலுத்தும் இலங்கைநகரைக்கடந்து இராசராசப்பிரபுடீகனாகிய சூரபதுமனைக்கண்டு போற்றிவரத்தக்கதாகவீரமாமயேந்திரபுரிக்குப் போயிருந்தவன் வருமளவும்அவன்பிள்ளையாகிய அதிவீரனென்பவன் ஆயிரவெள்ளஞ் சேனைகளுடன் இலங்கைநகரில் வாசமாய் பிதாவிருந்தசிங்காதனத்தில்வீற்றிருந்து மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர் தண்டநாயகர்முதலாகிய சகலருஞ்சூழ்ந்திருக்க அரசுசெலுத்தி வருகின்றகாலையில் அந்நகர வடபாரிசத்தில்மேருவையொத்துவிளங்கும் கோபுரவாயிலி னிடத்திருந்து ஜயசாலிகளாகிய அவுணவீரர் ஐந்நூறுவெள்ளம் சேனைகளுடன்படைத்தலைவர்களிலொருவனாகிய வீரசிங்கனென்னும்ஜயசாலியானவன் காவல்கொண்டிருப்பன் இத்தகைய சவுரியவான்களாகிய அவுணர்களுடன் கண்ணிமையைப்போல அவ்வாயிலினிடத்திருந்து காத்துவரும்வீரசிங்கனானவன் விரிந்த சிறகினைப்படைத்தசரபப்பட்சியைப்போல அதிவேகங்கொண்டுவெற்றிமாலைபுரளும்புயங்களையுடைய வீரவாகுதேவர் வருவதைக் கண்டமாத்திரத்திற் கோபநகைகொண்டு நல்லகாரியம் கிஞ்சித்தும்நமதுகாவலின் வலியையும் வீரத்தையும் மதியாமற் றனிமையில் ஒருவன் இவ்விடம்வருவதோ இவன்யாரென்று வடவையைப்போற்சீறி யித்தகைய தயிரியங்கொண்டுவந்த இவன்பிராணனைக் கணப்போதில் வாங்கிவீரசொற்கத்திற்சேர்ப்பேனெனத் துணிவுகொண்டு ஐந்நூறுவெள்ளம் இரதகஜதுரக பதாதிகளாகியசேனைகள் கடலைப்போலஆர்ப்பரித்துப் பின்பற்றிவர வாயுவேகமும் மனோவேகமும் பிற்படமுந்தி அதிசீக்கிரத்தில் வீரவாகுதேவருக் கெதிரிற்போய்த்தடுத்துநின்றுபுயவலிக்கொப்பற்ற வீரவாகுவை உருத்துப்பார்த்து அடாபயலே! யித்தினவரையில்நாங்கள் காவல்கொண்டிருக்கும் இந்தஇலங்கைக்கருகிலும்வந்தவர்களொருவருமிராதுஅப்படிக்கிருக்கச் சற்றும்பயமில்லாமற்றனித்து உயிரினிடத் திச்சையில்லாமல்வீணிற்பறிகொடுக்கவந்த உன்னைக்கொல்லுவதன்முன்னம் இவ்வளவுதூரம் வருந்திநீவந்தகாரியத்தைத்துரிதமாகச்சொல்லக் கடவையெனக் கேட்டபோது சொர்னமலையையொப்ப ஓங்கிப்பருத்துருண்டு திரண்டிருக்கும்அழகியபுசங்களைப்படைத்தவீரவாகுதேவர்மறுமொழிசொல்லுவார்.

இந்தஇலங்கையைக்கடந்து உங்களுக்கரசனாகவிருக்கின்ற சூரபதுமன் அரசுசெலுத்திவரும் வீரமாமயேந்திரத்துக்குப்போய் இராசகாரியங்களைக்குறித்து அவனுடன் வார்த்தையாடித்திரும்புவதாக நினைந்துவந்தனம், நமதுவரவின் சேதியிதுவாகும் நீசுத்தவீரனாகவிருப்பையாகில் என்னைத் தடுப்பதற்குஉன்னாற்கூடியமுயற்சியொன்றினைத் தேடக்கடவை, அதனைப்பார்க்கவிருப்புற்றனமென்று பேசியபோது புசபலபராக்கிரமசாலியாகியவீரசிங்கன் அவர்சொல்லிய வார்த்தையின் சுறுக்கைக்கேட்டமாத்திரத்திற் கொஞ்சமாவது அவுணராகிய நமதாணை ஆக்கினையை மதியாமற்பேசுகின்றனன். இவனைப்பார்க்குமிடத்திற்சற்றுவலியனாகக்காணுகின்றது ஆகிலுமென்னநமது காவலைக்கடந்துபோவதைஅறிவோம்கடலைத்தாண்டிச்சங்கையற்று இவ்வளவுதூரம் வரவிடுத்ததுமெத்தவும் அழகாகவிருக்கின்றதேனநினைந்து தன்னைச்சூழ்ந்திருக்கின்ற அவுணவீரர்மீதில் விழிகளைப்பரப்பி யிவன் பிராணனை நிமைப்போதில் வாங்கக்கடவீரென்று ஆக்கியாபித்தமாத்திரத்தில் மிருகங்களுக்கரசனாகவிருக்கின்ற வீரசிங்கத்தைக் கானகத்தில் வேட்டையாடித்திரியும் வேடர்கள் வளைந்துகொண்டு போராடியதைப் போலப் பொன்போன்று விளங்குந் திருமேனியைப்படைத்த வீரவாகுதேவனை நாற்புறங்களினும் வளைந்துகொண்டுஅதிகோபாவேசங்களுடன் போர்செய்யத்தொடங்கினர். ஒருபாரிசத்திற் பலகோடி அவுணர்சீறி வேலாயுதங்களைக் குறிக்கொண்டு வீசவும் மற்றொருபுறத்தில் மந்தரத்தையொத்த தண்டாயுதங்களைச் சுழற்றிஎறிந்தும் ஒருபுறத்தில்முசலங்களைச் செலுத்தியும் பிண்டிபாலங்களைவிசியும்கப்பணங்களைத்தூண்டியும் நீண்டவிற்களை வட்டாகாரமாகவளைத்துக்கொடியபாணங்களைப்பிரயோகித்தும்கூரியசூலங்களைவீசியும் தோமரங்களைவிடுத்தும் இந்தப்பிரகாரம் அவுணர்மேலிட்டு அஸ்திரசஸ்திரங்களை ஒன்றனந்தமாக ஆயிரங்கிரண சமுகங்களையுடைய சூரியபகவானை யிடிகளைப்பெருக்கும் மேகங்கள் மறைத்ததைப்போல அமோகமாகச்செலுத்திக் கொடிய சண்டைகொடுத்து வருவதை வீரவாகுதேவர்கண்டு திருநகைகொண்டு சற்றும் மனந்தளராமல்தீரத்துடனெதிர்த்துக் கூர்மையாகச்சொலித்திருக்குந் தமது உடைவாளாயுதத்தை உறையினிடத்திருந்துருவிக் கரத்திற் பற்றிக்கொண்டு உதறிலகுப்பாய்ந்து மனதிற்கோபாக்கினிமூண்டு பாதிக்க உருத்துத்தன்பேரிலெதிர்த்துப் போர்கொடுக்கும்அவுணச்சேனாசமுத்திரத்தைச் சடுதியிற் சுற்றிச்சுற்றிக்கொல்லத்தொடங்கி அரக்கினாற் செய்யப்பட்டு வானத்தையளாவநின்றபருவதத்தின்மீதிற் குரூரமாகிய வெம்மையைக்காட்டும்அக்கினிதேவன் சீறிப்பற்றிக் காய்ந்துருக்கி அதனுருவைமுற்றினும் அதிசீக்கிரத்திற்கரைத்துவாட்டுவதைப்போலத்தன்மீதில்நெருங்கியெதிர்த்துவந்துசண்டைகொடுத்தவனைவரையும்அல்லோலகல்லோலப்படும்படிக்கு அதிகரணசூரனாகிய வீரன்வாளாயுதத்தைஉதறித்திசாதிசையினும்பாய்ந்து பாய்ந்துகொன்ற விதமாவது குளிர்ந்தபனிப்படலத்தையும் இருட் பெருக்கையும் அக்கினிக்கொழுந்தைப்போலவீசுங் கிரணகாந்தியைச் சூரியபகவான்பரப்பி வாட்டுவதை நிகர்த்து வீரவாகுதேவர் பிரகாசம்பொருந்திய வாளாயுதமொன்றினாற் கடலையொப்பப்பரந்திரு

ந்த சேனைகள் முற்றினுங் கண்டதுண்டமாகவெட்டி வெட்டிக் குவித்துலாவினர்.

அக்காலத்திற்பெருகிய உதிரமானது ஆற்றைப்போல இரைந்தோடிச் சமுத்திரத்திற்பாய்ந்து அதனுவர்ப்பை மாற்றிச் செங்கடலாக்கிமகரமச்சங்களுக்கு விருந்துசெய்யவும் இரதகஜதுரகபதாதிகளனைத்தும் ஒன்றாவது ரணக்களத்திற் றேற்றாமல் நாசமடைந்துவெள்ளிடையாய்இரதங்கள் சின்னபின்னப்பட்டுக் குவிந்தும்கஜங்கள்கண்டதுண்டப்பட்டும் வேகமுள்ள புரவிகள்தாறுமாறாகப்புரண்டும் அவுணர் கால்வேறு கரங்கள்வேறு சிரங்கள் வேறுவேறாகக்கண்டிக்கப்பட்டுப்பிணமலைகளெங்கும் ஓங்கிக்காட்டியகாலத்தில் கவந்தங்கள் மிகுதியாகக்கூத்தாடவும் பூதபைசாச டாகினிகாளிக்கூட்டங்கள் நிணமாம்சங்களைத் தெவிட்டவுண்டு களித்துக்கெக்கலி கொட்டிக்குதித்துலவவுங் கழுகு பருந்து காக்கைகள் தசைகளைப்பிடுங்கித் தின்று உதிரங்களையருந்திப் பந்தலைப்போல வானவெல்லையில் வட்டமிடவும் இப்படிக்கு ஐந்நூறுவெள்ளத்தொகைகொண்ட நால்வகைச்சேனைகளைக் கண்டதுண்டமாக வீரவாகுதேவர் வளைந்துவளைந்து வீரவாளினுல்வெட்டிச் சங்கரித்துலவு முன்னிலையிற் றப்பிநின்றமற்றஅவுணவீரர்களனைவரும் அதிககாயங்கள் தேகமுற்றும்பட்ட வருத்தத்தினுல் தாபரித்துநிற்கப்படாமல்நடுங்கி ஏங்கித்தங்கள் பிராணனைக் காப்பாற்றிக் கொள்ளும்பொருட்டு பூவட்டவெல்லைகளினும் தீவு தீபாந்திரங்களினும் ஆரண்ணியங்களினும் வனகாடுகளினும் மாறுருக்கொண்டோடி ஒளித்தனர். இவ்வாறுஒருவரின்றி மறைந்தகாலத்தில் அந்த விபரீதத்தை வீரசிங்கன்கண்டு மனம்பொறாமல் மானம்பாதிக்க வடவாமுகாக்கினியைப்போல அதிககோபங்கொண்டு அஷ்டதிசைகளினும்விண்ணகரத்தினும்புகழவோங்கி யிராநின்ற புசங்களைப்பெற்றவீரவாகுபேரில் முத்தலைச்சூலமொன்றைக்குறிகொண்டுவிடாவினன்அப்படைவெளிப் பட்டவுடன் அனலையிறைத்துவேகமாய் வருவதை வீரன்கண்டுதன்கரத்திற்பற்றியவாளினுல் இருதுண்டமாக வெட்டித்தள்ளி ஜயவுச்சாகத்துடன்சிருங்காதஞ்செய்யும்போது தான்விட்ட சூலத்தைக்கண்டித்ததுமன்றியில் கெலிப்புடன் வீறியிருப்பதைவீரசிங்கன் கண்டு ஆண்டிறம்பெற்ற வீரவாகு பராக்கிரமங்களைமதித்து இவனைச் சுலபமாகவெண்ணப்படாதுதகுந்த பிரயத்தினங்களினுல் வெல்லவேண்டுமெனநிச்சயித்தவனுய்த் தன்னிடத்திலிருக்கின்ற படைகளில்முக்கியமாகியவச்சிராயுதத்தையெடுத்துவலிகொண்டு வீசியபோதுவீரவாகுதேவர் எதிரிற்பாய்ந்துவாளைவீசி அதையுந்துண்டமாக வெட்டித் தள்ளியதுமன்றியிற் பகைவன் மற்றொருபடையையெடுத்துச் சண்டைகொடுப்பதற்குமுன்னமலகுப்பாய்ந்து அவுணவீரன் முன்குதித்துப் பின்னிடைந்து முன்னடிபாய்ந்து மின்னலையொத்த வாளையுதறிவீசிக்கரங்களைக் கண்டித்தெறிந்து கொடியபாதகன் சிரத்தைவெட்டிக் கடலிற்றள்ளிஎதிர்ப்பவரொருவருமில்லாமையால் ஒப்பற்ற வாளாயுதத்தைஉறையிற்சேர்த்துக்கொண்டுதாம்வந்தகாரியத்தைமுடித்துப்போகுமுன்னம்நேர்ந்தபோனா விநாயகப்பிரீதியாக வென்றுவெற்றிகொண்டுவீரலட்சுமி புசங்களிற் குடிகொண்டிருக்க வேலாயுதசுவாமியார் விடுத்த தூதன்அத்தலத்தைக்கடந்து போவதற்கு யத்தனப்பட்டனர்.

## இலங்கைவீழ்படலம்.

மலங்கொடுசுறவுதூங்குமறிகடன்மீதுமேரு
விலங்கல்சென்றிட்டதென்னவிண்ணிடந்தன்னினீங்கி
யலங்கலந்திண்டோள்வள்ளலவுணர்தம்மிருக்கையாகு
மிலங்கையங்குவடுமூன்றிலிடைப்படுசிகரம்பாய்ந்தான்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே?யென்றுசூதபுராணிகர்மற்ற சரித்திரங்களையுஞ் சொல்லுவார். மகரதிமிங்கலமுதலிய மச்சங்கள் சஞ்சரித்திருக்கின்றசமுத்திரத்தின் மூலமாக மேருகிரியானது பறந்து வருவதைப்போல வான்வழிக்கொண்டு வெற்றிமாலை புரளும் புசங்களைப்படைத்த வீரவாகுதேவர் போகுமுன்னிலையிற் றம்மைத்தடுத்த வீரசிங்கனுதியாகிய சேனைகளை ஜயங்கொண்டுமனவுச்சாகத்துடன் இலங்கைநகரிற்றேன்றும் முச்சிகரங்களில் மத்தியில் விளங்கும் உன்னதமுள்ளசிகரத்திற்பாய்ந்து நின்றனர், நைமிசாரணியவாசிகளேகிரவுஞ்சபருவதத்தை வெற்றிவேலினுற் றுகள்கண்ட பாலசுப்பிரமணியக்கடவுள் விடுத்ததூதன் இலங்கைக்குவட்டிற் குதித்தகாலத்தில் அந்நகரந் தத்தளித்துப்படும் வருத்தத்தினுற் புசபலபராக்கிரமசாலியாகிய இராச குமாரன் அதிவீரனென்பவனும்மற்ற அவுணவீரரும் மனங்கலங்கிஏங்கிக் கோடையிடியிற்பட்ட சர்ப்பங்களைப்போல யாவருக்குந் தேகங்கள் நடுநடுங்கவாடிச் சோர்ந்து குப்புறவிழுந்து களைத்தனர். இராசதானியாகவிருக்கின்றவீரமாமயேந்திரபுரத்துக்கு வடபாரிசத்தில் கெடிஸ்தலமாக விருக்கின்ற இலங்கையின் கொடிமுடிகளினென்றின்மேல் வலிக்கொப்பற்றவீரன் பாய்ந்துநிற்கும் உறுதிக்காற்றமற் கிடுகிடெனவதிர்ந்து அதில்வாசமாயிருந்த அவுணருடன்புலால்கமழ்ந்து ஆழ்ந்திருக்குங்கடலில் மெல்லமுழுவதைக்கண்டு வீரன்களித்துப் பார்த்திருந்தனர். இப்பிரகாரம்இலங்கைகடலில் வீழ்வதுஎப்படிக்குக்காட்டியதெனிற்றேவர்கள் முதலானவர்கள் அமுதமுதலிய வளங்களைப் பெறநினைந்து முன்னொருகாலம் திருப்பாற்கடலை மத்திக்கயத்தனப்பட்டகாலத்தில் முந்தி விநாயக மூர்த்தியைப்பூசித்துத் தொடங்காதகுறைபாட்டிற்குக் கணேசர்திருவுளத்திற் கோபங்கொண்டவுடன் தாம்பாகப்பூட்டியிருந்தவாசுகியுடன் மந்தரகிரியானது நிலைதப்பிக் கடலிற்கவிழ்ந்ததைப்போன்றும் புசபலபராக்கிரமசாலியாகியவீரன்பாதங்களூறுத்திய மாத்திரத்தில் அலைகளைப்பெருக்கியிராநின்றகடலில் அழுந்திய இலங்கை முற்காலத்தில்உலகங்களின்மீது பறந்துவிழுந்து நாசஞ்செய்துலவியபருவதங்களின் சிறகுகளையரிந்து மன்னுயிர்களைப் பாதுகாக்கவெண்ணித் தேவராசன் வச்சிராயுதத்தைக்கொண்டு அவற்றின் சிறகினைக்கண்டித்து வருவதைத்தெரிந்தமைநாகபருவதம்பயந்து கடலிற்பாய்ந்தொளித்ததையொத்தும்முற்காலத்திற் சோமுகாசுரனென்னும் அவுணராசன்பிரமனைவஞ்சித்துச் சதுர்வேதங்களையும் அபகரித்துக்கொண்டுபோய்ச் சமுத்திரத்தில் ஒளித்திருந்தபோதுமகாவிஷ்ணு அவனை அதப்படுத்தி வேதங்களை யதாப்பிரகாரம்நிலைபெறச்செய்யும்பொருட்டு பொன்னையொத்தமேனியை

யுடைய மச்சமாய்ச் சமுத்திரத்திற் பாய்ந்ததையொப்ப
வும் பிரமன் முடிவுகாலத்திற்சத்தசாகரங்களும்பெரும்
புறக்கடலும் கரைபுரண்டு ஏகமாய்க்கரைத்துப் பூமியை
ப்பாதலத்தில் விழச்செய்தகாலத்திற் பழையபடிக்குநில
த்தைத் தாபிக்க நினைந்து மகாவிஷ்ணுவானவர் கூரிய
கோடுகளைப்பெற்ற வராகமாய் அப்புனலிற்பாய்ந்ததை
நிகர்த்தும் இஃதன்றி யிவ்வீரவாகுதேவர் மிதிக்காற்ரு
மற் கடற்கரையில்நின்ற கந்தமாதனம் பாதலத்திலழுந்
தியதுடன் விசாலமாக விருந்த இலங்கையுஞ் சமுத்திரத்
ல் முழுகியதை யோசிக்குமிடத்தில் முற்காலத்தில் ஒரு
பெண் கொடியினிடத்திற்பெற்ற மோகத்தினுற் சலந்தர
னென்னும் ரிஷியானவர் சமுத்திரத்தில்விழுந்து தேடு
ம்போது இந்திரனும்அவள்மையிலிற்பட்டுக் கடலிற்பாய்
ந்ததையொத்தும் கற்கம்பத்தையொத்த புசங்களையுடை
யவீரன் பாதங்களையூன்றிநின்ற காலத்திற்கந்தமானம்நா
கருலகத்தி லழுந்தியதெனக் கேள்விப்பட்டதாய் அதனை
க்கண்டுவரும்படிக்குப் போனதையொப்ப வீரன்மிதித்
த இலங்கை கடலின்முழுகியது.

இவ்விதமாகஇலங்கைப்பதியானதுகடலிலழுந்தியகால
த்திற் பெண்டுபிள்ளைகள் சுற்றத்தினரோடு அங்கரில்வா
சமாயிருந்த அவுணர் முற்றினுந் திடுக்கிட்டு மனங்கலங்
கிவருந்திக் கிலேசித்து வாடிவிழுந்துபுரண்டு மருண்டுப
யப்பிராந்திகொண் டளவிறந்தஅவுணர்கள் குடும்பசமே
தராகக்கடலில் முழுகியகாலத்திற் சுருதிமிங்கலங்கள் தி
ருக்கைமுதலிய பருத்தமீன்கள்அமோகமாகமேலிட்டுஅ
வர்களைச் சுற்றிக்கொண்டு பருவதாகிருதியாக விருக்கின்
ற பாரித்தவுடல்கள் பதைபதைக்க வருத்திய காரணங்க
ளைச் சொல்லக்கேட்பீராக சிலமகரங்கள்தாவிக் கரங்க
ளைப்பற்றித்தறித்தும் சிலகால்களைக் கண்டித்தும் சில
விசாலமாகிய மார்பைப்பிளந்தும் சிலசிரங்களைக் கறித்
தும் இவ்விதமாக மகரமச்சங்கள் அவுணரைப்பற்றிச் சி
ன்னபின்னமாகத் தொலைத்துத்தின்றுகளித்துலவும்போ
துஅதைக்கண்டசிலஅவுணவீரர் தீரத்துவமாய் தாய்தந்
தையர் பெண்டுபிள்ளைகள் மாமன் மைத்துனன்இத்தகை
ய சுற்றத்தினரைச்சேர்த்து வாரியெடுத்துக்கொண்டு மே
லிட்டுவரும் மச்சங்களை அதட்டிக்கூவித்துரத்திக் கருநீ
ரை நீந்திமேலெழுபவரும் சிலர் களைத்துத் தன்னினங்க
ளைமறந்து பிராணபதமாகப்போற்றியிருந்த படைகளையு
மெறிந்த போட்டுத்தமது உயிரைமாத்திரங்காத்துவெளி
வரவும் கும்பலாக எதிர்ப்பட்ட அவுணர்களைச் சிலசுருக்
கள் சுற்றிக்கொண்டகாலத்தில் அவற்றினிடத்துவிருப்பி
னுல் அவுணவீரர்சேர்த்துப் பிடிக்கும்போது பருவதங்
களையொத்த மச்சங்கள் திமிரிக்கொண்டு அவர்களைச்சா
டிக்கொன்று திரியவும் சிலபருத்தமீன்கள் பசிக்குண்ணு
ம் இச்சைகொண்டு இரைந்துபாய்ந்து தாக்கும்போதுஅ
வுணர்கள்கோபித்து வாளாயுதங்களினுலும்சூரியினுலும்
வேல்களைக்கொண்டும் மச்சங்களின்மீது அதிககோபங்
கொண்டு ஒருபுறத்திற்சண்டைகொடுக்கவும்உலகங்களெ
ங்கனும் கொண்டாடுங் கீர்த்திபெற்ற இலங்கையானதுக
டலினிடத்தழுந்தியகாலத்தில் அவ்விடத்தில்வருந்திவெ
ளிவரும் ஆவலுடன் தாவுகின்றசில தருணமங்கையர்கர
ங்களைப்பற்றி மகரமச்சங்களிழுப்பதுபிறர்தாரத்தினிடத்
திச்சைகொண்டு கரத்தைப்பற்றி வலிக்குங் காமுகரை
யொத்தும் மற்றொருபுறத்திற் சுருக்கள்மீறி அவுணகன்
னியர்கள் கரங்களிலொன்றைப் பற்றியிழுக்க மற்றக்கரத்
தை அவள்சுற்றத்தினர் பற்றிவலிக்க மானையொத்த கன்
னியர் வருந்துவது ஐம்புலன்கள் தமது வசத்தில்யிழுத்
தலைக்க வருந்தும்பிராணனை யொப்பக்காட்டவும் வலிமி
குத்த திருக்கை சுருதிமிங்கலங்களாதியாகியமீன்கள்அவு
ணர்கூட்டத்தைப் பார்த்துத்தாவித்தாக்குமுன்னிலையிற்
றுரிதமாகத் தமது உடைவாளை யுருவிக்கொண்டு அவற்
றினைத்துண்டமாக வெட்டியெறிந்தும்அக்கினியைப்போ
லச் சிவந்த விழிகளில் அனலைவீசும் சுருமீன்கள்வாட்க
ளைக்கரத்திற் கொண்டிருக்கும் அவுணர்களைக்கொன்றுதி
ன்னவருபவைகளின்முதுகைத்தடவிக்கொடுத்து மெல்ல
ப்பற்றித் தமது பேழ்வாயிற்போட்டுமென்று தின்றுபசி
யாறிச்சிலர்வெளிவரவும் ஆழ்ந்த ஜலத்திற்றெற்றுமல்ந
ம்மவர்களென்று வேறொருநாயகியினது கரத்தைப்பற்றி
அவர்களை அணைத்து வெளிவரும்போதுஅன்னியராகக்
கண்டு கரங்களையுதறிக்கொண்டுசிலகன்னியர்வாடிப்போ
கவும் சிலர்அவுணர்கள் கைப்பட்டபடியால் இல்வாழ்க்
கைக் கிசைந்து அவர்களுடன் தொடரவும்சிலஅவுணவீ
ரர் தமதுதேவியென அன்னியரைத்தாங்கியெழுந்தகால
த்தில் அவர்கள் தங்கள்கணவரல்லாததைத் தெரிந்தவுட
ன் அவர்கள் வாடும்படிக்கு விடுபட்டு மனவருத்தத்துட
ன் கொழுநரைத்தேடிப்போவது எப்படிக் கிருந்ததெனி
ற் காமவின்பத்திற்பட்டுவாடுகின்றவனைச்சேர்ந்த ஒருபெ
ண்கொடியானவள் தப்பித்துக்கொண்டு புறம்பிற்போகவ
ருந்துகின்றவரைப்போலக் காட்டவும் கொடுமை தங்கிய
மதயானைகளையும் புரவிகளையும் சுருமீன்கள்வளைந்துபற்
றி யிழுத்துப்போய்த் தமது மனதுக்கினியபெண்சுருக்க
ளுக் குண்ணக்கொடுத்துக் குலவியிருப்பதால்எத்தகைய
சீவராசிகளுக்கும் பெண்களினது மயக்கத்தைவிலக்குவ
து மிகவுமரிதாகக்காணுகின்றது.

இவையன்றியுந் தடுப்பதற்கரிய வலிபெற்றசிலமகரம
ச்சங்கள் பெண்யானைதுதிக்கையினைப் பற்றித்தனக்குரிய
பெட்டைச்சுருவைத் தேடிப்போம்போதுஅதுஎதிர்கொ
ண்டுவந்து குலவுவதுதன்கணவன் வேறொருத்தியி னிட
த்தில் விருப்புற்றதென்றெண்ணி உபசரித்துத்தன்வயப்
படுத்துவதற்குச் சமதையாகக்காட்டவும் இலங்கையுடன்
பாதலத்தைச்சேர்ந்த சில அவுணவீரர்தத்தளித்துநீந்தி
க்கடலின்மீதில் வந்தவுடன் கந்தசுவாமிவிடுத்த தூதனை
க்கண்டு நடுநடுங்கி சற்று நிற்போமாகில் இவன்நம்மைக்
கொல்வன் சந்தேகமில்லை யென்றெண்ணி பயப்பிராந்தி
யினுல் நாற்புறங்களினுமோடி யொளிக்கவும்கருநீரைக்க
டந்து வெளிவந்த சிலமங்கையர்அழகியதங்கள்கணவரை
ப்பிரிந்துபோக மனமில்லாதவர்களாய் அவர்களைத்தேடி
த் திரியும்போது அலைகள்உடையை அலைத்துப்போக
வெளிவந்தவுடன் கலைகாணுது வருந்திக்கரங்களினுல் அ
ல்குலைமூடியுந் தலையவளைத்துத் தனங்களைமறைத்தும்
இந்தப்பிரகாரஞ் சில தருணமங்கையர்வெட்கி வருந்தவு
ம் வானத்தையளாவிய மாடமாளிகை கூடகோபுரங்களி
னுல் விளங்கியஇலங்கைகடலிலழுந்தியகாலத்தில்அதனு
டன்முழுகியெழுந்த சிலகன்னியர்கள்தரித்திருந்தசெம்ப
ட்டாடைநனைந்துஅதனிடையில் அல்குல்தோற்றுவதுசி
வந்துகாட்டுஞ் சந்திரனிடத்தில் விளங்குங் களங்கத்தை
யொப்பவும்கரிய தேகத்தைப்பெற்றசிலஅவுணமங்கைய
ர் கடலில்விழுந்து தாவி வெளிவரும்போது இடையிற்

தரித்திருந்த வஸ்திர நெகிழ்ந்த மானக்குறைவைக்கண்டு வெட்கிப்புறம்பில் வருவதற்கஞ்சித் தேரைகளைப்போல முகத்தை மாத்திரம்வெளியிற்காட்டித்தேகத்தைநீரில்ம றைத்துத் திரியவும் சிலமங்கைய ரிடையிலணிந்தவஸ்தி ரம் அலைகளிற் சுருண்டுபோக வெளிவந்துநாணினவர்க ளாய் அதிசீக்கிரத்தில் வானத்திற்றாவி மேகங்களைப்பற் றி யிடையிலுடுத்துமீளவும் இந்தப்பிரகாரம்இலங்கையி ல் வாசமாகவிருந்த ஜனங்கள் தத்தளித்துப்படாதபாடுக ளைப்பட்டு வருந்தினர்.

## அதிவீரன்வதைப்படலம்.

அன்னதொர்பான்மைகளாகவிலங்கை
முன்னுறுவார்கடலாழ்ந்ததுமூழ்க
வின்னகர்போற்றியிருந்திடுகின்ற
மின்னுனைவேலதிவீரனுணர்ந்தான்.

ஓ சவுனகாதிரிஷிகளே! மேற்குறித்தபடிக்குஇலங்கை ப்பதியானது கடலிலமுந்தித் தத்தளிக்கு முன்னிலையில் அப்பட்டணத்தைக் காவல்கொண்டிருந்த கூரியவேலைப் படைத்த அதிவீரனென்னும் இராசகுமாரன் இவற்றை த் தெரிந்தவனாய்த் தான்வாசமாயிருந்த நகரங்கடலில்மு முகிவாடுவதைத் திருஷ்டாந்த மாகக்கண்டு அதிகமனவ ருத்தத்தைக்கொண்டு வெட்கித் துக்கித்து மானம்பாதிக் க வடவாமுகாக்கினியைப்போலக்கொதித்துப்புகையுமன லுமெழப் பெருமூச்செறிந்து தீயெழநகைத்தவனாய் மன தில் இதை யோசிப்பதாயினன், வச்சிரதேகம்பெற்றசுந் தரமுள்ள சூரபதுமனும் அவன்துணைவர்களும் அவர்க ள் பிள்ளைகளும் இத்தகைய கெடுதிகளைச்செய்ய விரும்பு வனென்று ஒருபோதும் மதிக்கமாட்டேன்அவர்களால்மு டிந்ததல்லாவிடின், இவ்வனர்த்தங்களை யாவர் துணிந்து செய்யவல்லர் நல்லது முற்குறித்த நமதிறைவர்களால்நே ர்ந்ததெனச் சிந்திப்பதற்கு யாதொருவதுவையுங்காணே ன் மேலுந் தங்கள்நகரத்துக்காணை விருக்கின்றஇப்பதி க்குத் தீங்குகளை முடியார்கள் அதைக்குறித்து யோசிப்ப துதகுதியன்று இவர்களுக்குத் தாயாகவிருக்கின்றமாயை ஒருபோதும் இவ்விதக்கொடுமையை மனதிலுமெண்ணு ள். பிரமன்! விஷ்ணு? சிவபிரான்! ஆகியமும்மூர்த்திகளு ம் இச்செய்கையைக்கருதார்கள் அப்படிக்கிருக்கமற்றதே வர்களில் யாவரிதனை முடிக்கத்துணிவர்மேலும்அவரனை வரும் நமது சிறையிற்பட்டோடியடங்கி யிருக்கின்றனர், இவர்களுக் கிறைவனாகிய இந்திரனும் நமதரசனுக்கஞ்சி பிராணனைத் தப்பித்துக்கொண்டுமறைந்திருக்கின்றனன், அஷ்டதிசைகளினு மிருப்பவர்களும் வானநாடுகளில்வா சஞ்செய்யும் விண்ணவரும்விஞ்சையர் சித்தர்முதலாகிய வர்கள் நமதரசன் ஆக்கினையைக்கடந்தொருகாரியங்களை யுஞ் செய்யவறியார்கள் ஆதலால்இந்தகெடுதிகளை நினைக் கவு மாட்டார்கள் சத்துருக்களின்றி ஜயசாலிகளாகவித்த லங்களி லிருக்கின்ற அவுணவீரர்கள் சவுரியபரராகவும் மாயைவிஞ்சைகளிற் சிறந்தவர்களாகவு மிருந்தபோதிலு ம் சத்துருக்களையடக்கி வாட்டவல்லசூரபதுமன்படைக ளின் வீரத்துக்கஞ்சி யிவ்விதக் கொடுமைகளைச்செய்யத் துணியார்கள் இவர்களேமுடிக்க வஞ்சுவராயின் இக்கால த்தில்நேர்ந்தஅநியாயங்களை நடத்தினவர்கள்யாவர். பிதா வானவன் என்னைஒருசூரனைக நினைந்துஇந்த இலங்கைப் பதியைப் பத்திரமாகக்காவல் கொண்டிருக்கும் படிக்குக் கட்டளையிட்டுப் போயிருக்கின்ற காலத்திற்பலவெள்ளஞ் சேனைகளுடன் பிள்ளையாகியயான் இங்ககாக்காத்திருந் தது வெகுநேத்தியாக விருக்கின்றது. தாபாக்கினியானது தேகமெங்கணும் பற்றிக்கபாலமூலமாக வெழுந்துஅண் டவெல்லைமுற்றும் பரவஅகோரமாகியதவத்தினைச்செய் து மெய்ப்பித்து மாயவித்தைகளையுந் தேவாஸ்திரங்களை யும் வலியையும்பிரமன் முன்னங்கொடுக்கப் பெற்றஎன் வல்லபம் நன்றாகவிருக்கின்றது பிதாவானவர்இவ்விடத் தி லில்லாமல் இராசகாரியமாகப் போகின்றவேளையிற்கா வல்கொண்டிருந்த பிள்ளையானவன்இந்தஇலங்கையுடன் விசாலமாகிய கடலில்முழுகினனென்றால் நமதுசுற்றத்தி னர் நகையார்களோமேலும்இராசாதிராசனாகிய சூரபது மன் இந்தச்செய்தியைக்கேள்விப்படுவனாகில்தட்சணமே என்னைக் கொல்லுவிப்ப தன்றியில் என்னைப்பெற்ற தந் தையையும் கண்டிப்பன் மேலும் நம்மவர்கள் இகழ்ந்து பேசவும்வரும் அப்படிக்குநேருமாகில் என்சவுரியம்நன் றாகவிருக்கும் பிள்ளையானவன் குலத்தை உத்தாரணஞ் செய்வதற்கிடாய் உலகமுள்ளளவும் பழிதேடி வைப்பது நன்றோவென்று மனம்வருந்தி நொந்து துக்கசாகரத்திற் பட்டு வாடினவனாய் அதிவீரனென்னும்இராசபுத்திரன் ஊழ்வினைப் பிடரியைப்பற்றித் தூண்டத்தன்மனதில்இ வ்விதசவுரியங்களை நினைக்கின்றனன்.

அலைகளைமோதி யிரைந்திருக்கும் இந்தலவண சமுத் திரத்தின்மேல் நானேநேரிற்போய் இவ்வகைத் தீயகரும ங்களைச் செய்தவர்கள் யாரெனத்தெரிந்து கொண்டுஅவர் களைப் பற்றிக்கொன்று அவர்கள் தேகத்திற்பெருகும் உ திரபானஞ் செய்வேனெனத் தீர்மானித்து தாபத்தைத் ணித்துக் கோபதீபிலனாய்வயிரக்கவசத்தைத்தரித்துநீண் டவில்லைத் தோளில்மாட்டி தேவாஸ்திரமுதலிய படைக ளைச் சேகரித்துக்கொண்டு கரசாடுவிரல்சாடுகளைப்பூட்டி யுத்தசன்னத்தனாய் வெளிவந்து பலதூதர்களைக் கூவித் துரத்தித் தன்காவலிலடங்கி யிருக்கின்றஇரதகசதுரகப தாதிகளைத் தருவித்து இரதாரூடனாய்அவ்வெள்ளங்களு டன் பிரயாணப்பட்டு வெற்றிமுரசம் ரணபேரிமுதலிய பொற்பறவைகள் முழங்க வீராவேசத்துடன்அதிசீக்கிர த்திற் கடற்கரையிற் சேர்ந்து ஜயசாலியாகியவீரவாகுதே வருக் கெதிரில் வருவதாயினன் அவன்தோற்றமானதுச ர்வசங்காரமூர்த்தியாகிய சிவபிரான்மீதுசீறியெழும்படிக் கு ஆலகாலவிஷமானது திருப்பாற்கடலினிடத் துற்பவி த்துக் குலவியோங்கியதை யொத்தது, சவுனகாதிரிஷிக ளே மேற்குறித்த படிக்குத் தத்தளித்துக்கடலினிடத்து முழுகிய இலங்கையைப்போற்றியிருந்த அதிவீரன் உயு த்த சன்னத்தனாய்ச் சேனைகள் சூழ்ந்து வரப்பெருமை பொருந்திய கடலானது கொதித்தோங்கிய அலைக்கொழு ந்துதாவி நிற்பதைநிகர்த்துத்தூளிதம் தேகமெங்கும்விள ங்கக் கொடிமுடியினுச்சியில்வீறியிருக்கின்றபுசபலபரா க்கிரம சாலியாகிய வீரவாகுதேவனை நேரிற்கண்டு அவ் வீராதிவீரன் நிற்கின்ற தீரத்தைப்பார்த்த மாத்திரத்தி ல் இராசகுமாரனுக்கு அதிககோபம் பிரவேசித்துமனம் வேகப்பற்களைநெறநெறெனக்கடித்துத்தீயும்புகையுமெழ

நகைத்து நல்லகாரியம் தேவர்கள்கூட்டத்திலொருவனாகவிருக்கப்பட்ட விவன் ஆண்டிறம்பெற்ற சூரனைப்போல எண்டிசையினும் புகழ்நின்ற நமது இலங்கைப் பதியை அலைகள்மிகுத்த கடலில்மூழ்கச்செய்ததுமன்றியிற்பயமில்லாமல் இச்சிகரத்தில் நிற்கின்றனன், ஆதலால் அஷ்டதிசைகள்முதலாகியபதங்களினும் கொண்டாடிப் பணியும் பிரபலவான்களாகிய அவுணர் ஆணையாக்கினை வெகுநேத்திநேத்தியென்றுயாளிமுகன் பிள்ளையானவன் துரிதமாக இவனைப்பற்றிக்கொன்று பிராணனைக் கொள்ளைகொள்ளக்கடவனென நினைந்தவனாய் மேலேறி நடக்கும்போது அந்நகரவாசிகள் கடலினழுந்தி அலைகின்ற வேடிக்கைகளைப்பார்த்துக்கொண்டிருந்த பேரறிவாளியாகிய வீரவாகுதேவர் அவன்கருத்தின் குறிப்பைத்தெரிந்து இவனுக்கும் நாசகாலம்நேர்ந்ததுபோற் காணுகின்றதென் றெண்ணி அவன்மேல்நடத்துவதையும் பார்த்திருக்கும்போது அதிசூரனுடன் கூடிவந்த நால்வகைச்சேனைகளும் கைமிஞ்சிச்சிலர் பாரித்தவிற்களைவளைத்துச்சோனைமாரியைப்போலபாணங்களைப் பிரயோகித்தும்எழுவாயுதம்-மழுவாயுதம்- பிண்டிபாலம்-கப்பணம்-முசலம்- சக்கரமாதிய அஸ்திரசஸ்திரங்களைப் பிரயோகித்துப்பலதிசையினும் சூழ்ந்து அகோரமாகிய உயுத்தங்களைச் செய்யும்போது வலியிற்சிறந்த வீரன்தமது அரையிலிருக்கும் உறையிற்செருகியிருந்த உடைவாளாயுதத்தைஉருவி கரத்திற்பற்றிக்கொண்டு தம்மைவளைந்து பொருதிருக்கின்ற அவுணர்பிராணன் துடித்துஉடல்கள்கண்டதுண்டப்பட்டிறைந்து துள்ளிவிழும் படியாகச்சங்கரிக்கத்தொடங்கிஒவ்வொருவீசலில் அளவற்றசிரங்களற்று விழவும்கணக்கற்றகரங்கள் வெட்டுண்டுசிதறவும் அமோகமாகிய தோள்கள்சரிந்தும் கால்கள் தறிபட்டும் மார்பங்கள் பிளந்து வயிறுபீறுண்டு சர்ப்பங்களைப்போலக் குடல்கள் பதைபதைத்திரையவும் சரீரம் சின்னபின்னப்பட வெட்டுண்டும் இப்படிக்கு எதிர்ந்த அவுணச்சேனைகள் பிராணனைப்போக்கிக் களத்திலொருவரு மில்லாமல்மாண்டு அவர்கள்செய்யும் சண்டையுமற்ற துரகங்களனைத்தும் வண்டில்அச்சுமச்சு குத்துக்கால் கொடுங்கை கொடி குடை சிகரம்இவைகள் வெவ்வேறாகச் சிதைந்தும் யானைகள்துதிக்கை தந்தங்கள் கால்கள் தாறுமாறாகக்கண்டிக்கப்பட்டு விழவும்குதிரைக்கூட்டங்கள் பின்ன லிட்டிருக்கும் பிடரிமயிரினைவாய்ந்த தலைகள்வீரகண்டையணிந்த கால்கள் கவரியையொத்தசையும் வால்கள் கண்டதுண்டங்களாகவிழவும்இந்தப்பிரகாரம் சதுரங்கச்சேனைகளும்மாண்டுபோனகாலத்திற் பெருகிய உதிரவெள்ளத்திற்செம்பட்ட மயிரையுடைய அவுணர்சிரங்கள் மிதந்தோடிக் கருங்கடலெங்கனும் மிதந்திருப்பது கொடிகள்படர்ந்தோடி யிருக்கின்ற பவளக்காட்டிற் செந்தாமரைமலர்கள் மலர்ந்திருப்பதைப்போன்றது.

இவ்விதங்களாகப் புசபலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர் அவுணப்படைகளை வளைத்துக்கொண்டு வெட்டித்தள்ளியகாலையில்மாண்டவர் களேபரங்கள் மலைகளாகக்குவிந்து கடலைத்தூர்த்து மேலோங்கிச் செம்மணிகளால் வேறொரு இலங்கையைப்படைத்ததைப்போலவிளங்கவும், இவ்விதங்களாகத் தன்னைச்சூழ்ந்துவந்த சேனைகளனைத்தும் சின்னபின்னப்பட்டுச் சமுத்திரத்திற்கலந்ததை வீரபராக்கிரமசாலியாகிய அதிவீரன்கண்டு வடவாமுகாக்கினியையொப்பச்சீறி அடாபயலே? கொஞ்சமாவது பயமில்லாமல் என்னுடன்வந்த சேனைகளனைத்தையும் வெட்டியெறிந்தனை ஆதலால் உன்னைப்பிராணனுடன்பற்றி வாயிற்போட்டுக்கசகசென்று மென்றுதின்பன் அதையும்பார்க்கப் போகின்றனையெனப்பொங்கிச் சண்டைக்காரம்பித்து மேல்வருகின்ற அதிவீரன்சேவகத்தை வீரன்கண்டு அடா! இராட்சதப்பட்டிமகனே! என்தலைகீழாய்விழுந்து பிதற்றுகின்றனை துரிதமாக வாவாவென்றழைத்தகாலத்தில் அவுணராசகுமாரனுக்கு அதிககோபம்பிரவேசித்துத் தன்னிடத்திலிருக்கின்ற கைவேலாயுதத்தையெடுத்து சண்டைக்கெதிர்த்திருக்கின்ற இவனைவளைத்துக்கொண்டு இந்தநிமிஷத்திற்கொன்றுவரக்கடவையெனக் குறித்துச்செலுத்தினன். இப்படிக்குக் கொடியனாகிய இராசகுமாரன்எறிந்த படையானது எரிந்து புகைந்துகொண்டு தன்மார்புக்கிலக்காக வருவதன்முன்னம் அதன்வீரத்துக்கு மேற்பட்ட பராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர் அவ்வேலின் முயற்சியைப்பார்த்து அக்கினிக்கொழுந்தையொப்ப சொலித்துத் தன்கரத்திலிருக்கும் வாளாயுதத்தினால் இரண்டுதுண்டமாகிவிழவெட்டியெறிந்தனர். இந்தப்பிரகாரந் தான்செலுத்திய வேல்கண்டிக்கப்பட்டுப்போனதை அதிவீரன்தெரிந்து ரவுத்திராகாரமாகக்கொதித்து மந்தரகிரியையொத்ததண்டமொன்றையெடுத்துக் கரத்திற்பற்றிக்கிறுகிறெனச்சுழற்றிநமதாணையாக்கினையைச் சட்டைசெய்யாமல்எதிர்த்துச்சண்டைகொடுத்திருக்கின்ற உன்னரியபிராணனை யிப்படைவாங்கி வீரசொர்க்கத்திற் சேர்ப்பதற்குத் தடையில்லையென்று சபதம்பேசித் தேவர்கள்புகழ்ந்துகொண்டாடும் ஜயசாலியாகிய வீரவாகுதேவர் சரீரத்திற்றுக்கும்படிக்குவிட்டனன். இவ்வண்ணம் பாதகனாகிய அவுணன்எறிந்த தண்டமானது அதிவேகங்கொண்டு குமுறியிரைந்து சீறிவருவதை வீரன்கண்டு அதனைவெட்டியெறியாமலும்வாளினாற்றட்டிப் போடாமலும் அதனையொருபொருளாக மதியாமற் றீரத்துவமாகநிற்கும்போதுவயிரமலையையொத்த மார்பினிடத்திற் கோடையிடியைப்போலவிழுந்துதன்வலியொடுங்கிச் சின்னபின்னப்பட்டுப் பறந்துபோனதை அப்பாதகன்கண்டு அதிகஆச்சரியப்பட்டவனாய் மானம்பாதிக்கக் கோபங்கொண்டு அதிவீரனென்பவன் மாற்சரியத்தைவிடாமல் தானரிதிற்பெற்றுவைத்திருக்கின்ற கூரியமுத்தலைச் சூலமொன்றையெடுத்து ஒருவரும்நிகரற்ற புசபலபராக்கிரமசாலியாகியவீரவாகுதேவர்மார்பைப்பிளந்துகொண்டு போகும்படிக்குக் குறிகொண்டு ஓங்கிவீசியதை நமதையன்கண்டு விடநாகத்தையொப்பச்சீறிச் சமீபித்தமாத்திரத்தில் அழகிய கரத்தைநீட்டி அப்படையைப்பற்றியொடித்து இரண்டுதுண்டமாக்கி விட்டவன் மீதிலெறிந்தனர்.

இப்பிரகாரம் அனலையிறைத்தோடியசூலப்படையைச் சுள்ளியைப்போல முறித்தெறிந்தபோது இலங்கைக்கரசனாகிய யாளிமுகன்மனதுக்கினிய குமாரன் கோபித்து இவனை யிவ்விதப்போரில் வெல்வதுமிகவுமரிதாகக்காணுகின்றது, ஆதலால் வேறொருதந்திரத்தினால்வாட்டிக்கொல்லக்கடவேனெனத்திர்மானித்தவனாய் வீரவாளொன்றைக் கரத்திற்கொண்டுதேரைவிட்டுநிலத்திற்குதித்துமுன்னடிவைத்துப்பின்னடிவாங்கித்தாண்டிக் காளமேகத்திலெழும் மின்னலைப்போல வாளைச்சுழற்றி யிடசாரிவலசாரி

யாகக் காற்றாடியையொப்ப வட்டணைவந்து தன்கரத்திற் கொண்டவாளாயுதத்தைக் கடல்நீர் அலைவதற்கஞ்சிப்புரண்டெழும் வாளைமீனைப்போல இடத்தினும்வலத்தினும் வாட்போருக்குரிய கிரமப்படிக்குச்சுற்றிக்கொண்டுவீரவாகுதேவரைப்பார்த்து இதனைச்சொல்லுவான். இந்த வாளாயுதத்தைப் பிரமன் நான்செய்த தவத்திற்கிரங்கிஅனுக்கிரகித்தனன். மேலும் எத்தகையர்களுக்காகிலும்இதனைப்பேதிப்பதுஅரிதுஅப்படிப்பட்ட சிறந்தபடையைக்கரத்திற்பற்றி யிருக்கின்றனன் இதனால் உன்னரியபிராணனைப் போக்கிக்கொள்வது நிச்சயம் தாமசப்படாமற்சண்டைக்கு வாவாவென்று வசைமொழிகளைச் சொல்லிக்கொண்டு குற்றமற்ற வீரவாகுதேவர் முன்சென்றமாத்திரத்தில் அவர்மாறுத்தரங்கொடுப்பதாயினர். உன்சவுரியமும் வலியும் வெகு நேத்தி நேத்தி நம்மைஜயிப்பையாகிற் சகலரும் உன்னைக்கொண்டாடுவர் ஆதலால்வீண் வார்த்தைகளைப் பிதற்றுவதினாற் பயனென்னை ஜயசாலிகளாகவிருக்கின்றவர்கள் தங்களைப்புகழ்ந்து பேசார்கள் துரிதமாய் வாட்போருக்கு வரக்கடவை ஏதோவுன்சாமர்த்தியத்தைப் பார்ப்போமென்று பேசியகாலத்தில் அதிவீரன் ரவுத்திராகாரமாகக் கோபித்து வாளைவீசிச் சமீபித்தகாலத்தில் வீரவாகுதேவரும் எதிரில்நேர்ந்தனர்.

இவ்விதமாக இருதிறவரும் வலம் இடம் இடம் வலமாகச்சுழன்று சுழன்று மாறிமாறிப்பாய்ந்து வாட்போரைச் செய்துவருவது எப்படிக்கிருக்கின்றதெனில், விசாலமாகிய வானவெல்லையில் இரண்டுமேகங்களெதிர்த்துமின்னல்களைவீசி மறைத்துமீட்டும் வெளியிடுவதையொத்தும் மேலும் அவ்விருவீரரும் ஒருவரைஒருவர் வெல்லநினைந்து வாளாயுதங்களைவிதிர்த்துச் சிரங்களுக்குக்குறிகொண்டுவீசியும் கண்டத்தினைக்குறித்துமோதியும் கன்னத்துக்குக் குறிபார்த்துவெட்டியும் புசங்களைநோக்கிவீசியும் வீரகண்டைதரித்த கால்களைக்குறித்துவீசியும்மார்புக்கிலக்காகவீசியும் இவ்வண்ணம் வீரவாகுதேவரும் அதிவீரனுங் கைகலந்து தேகத்திலிராநின்றஉறுப்புகளைக் குறிபார்த்துப்பார்த்துப்பின்னப்படுத்தும்படிக்குசாஸ்திரயுக்தமாய்த் தகத்தகாயமாகப் பிரகாசித்திராநின்றவாளாயுதங்களை வீசி வீசி மாறிமாறித்திரிந்தும் தங்கள்தேகத்திற்படாமற்றட்டியும் வெகுநேரமாகப்பொருது வருகின்றவேளையில் எமதிறைவனாகியபாலசுப்பிரமணியதேவர்விடுத்த தூதனாவர் தம்முடன் வாள்கொண்டு உயுத்தஞ்செய்கின்றவனை யித்தனைநேரம்வாதுகொடுக்கப்பார்த்திருப்பதுதகுதியோ, ஆதலால் வலிதினல்லாமல் வாள்விஞ்சையின் முறைப்படிக்குவெற்றிகொள்வது நீதியென்றெண்ணினவராய் ஒருசாரிபின்னிடைந்துபாய்ந்துவாளாயுதத்தைவீசி அதிவீரன் இரண்டுபாதங்களையும் சிரத்தையும் தோள்களையும் மார்பையுங்கண்டதுண்டமாகத் துணித்து நிலத்திற்றள்ளியகாலத்தில் யமதருமராசன்அவன்பிராணனைக்கொண்டுபோயினன்.

## மகேந்திரஞ்செல்படலம்.

வீரவாகுநின்றவ்வதிவீரனைவீட்டித்
தாரைவாளுறைசெலுத்தியேவெஞ்சமர்தணித்து
நேரில்வீரமாமகேந்திரம்போவதுநினைந்தே
யேருலாவருமிலங்கையினெல்லைநீத்தெழுந்தான்.

வீரவாகுதேவர் மேற்குறித்தபடிக்கு அதிவீரனென்னும் இராசகுமாரனைக்கண்ட துண்டமாக்வெட்டி யெறிந்தபின்புபகைவரொருவருமில்லாமையாற் பிரகாசம்பொருந்திய சூரியவாளாயுதத்தை உறையிற்செருகிச் சமர்க்களத்தைநீங்கிப் பலவளங்களினுஞ் சிறந்திருக்குங் கெடிஸ்தலமாகிய வீரமாமயேந்திரபுரிக்குப் போவதாகநினைந்து பொன்மயமாகவிளங்கும் இலங்கையெல்லையைக்கடந்து வானவழிக்கொண்டுசென்றனர். இந்தப்பிரகாரம்வீரவாகுதேவர் அந்தரத்திலெழுந்தகாலத்திற் சமுத்திரத்திலழுந்திப்பாதலத்தைச்சேர்ந்திருந்தஇலங்கைத் தீபமானது சரேலெனமேலெழுந்து யதாப்பிரகாரம்நின்றது. அஃதெப்படிக்கிருந்ததெனில், சுமைமிகுதியினாற் கடலில் மூழ்கிய கப்பலானது பாரத்தையிறக்கிய மாத்திரத்தில் சுலபமாக மேலோங்கிநின்றதையொத்தும், சிருஷ்டிகர்த்தனாகியபிரமன்உறங்கும் யுகமுடிவிற் சத்தசாகரங்களும் பெருகி அண்டபுவனங்களெங்கணும் நிறைந்தோங்கியஜலப்பிரவாகத்திற்பட்டு மறைந்திருந்த மகம்மேருவானது அவ்விரவொழிந்து சிவபிரான் கட்டளையின்படிக்குப் பன்னிருசூரியரும் ஏகமாய் அதிகசுவாலையாயெரிக்கப் பழையபடிக்குச் சமுத்திரங்கள்சுருங்கித் தத்தம் எல்லையைச்சேர்ந்தகாலத்திற் பொன்வரைவெளிப்பட்டுநின்றதுக்குச் சமதையாகவும் பலராலும் இகழத்தக்க கொலைமுதலிய கொடியதொழிலைச்செய்துவரும் பாபிகளாகியஅவுணரை இலங்கையானது பற்பலகாலங்களாகத் தாங்கியிருந்தகாரணத்தினாற் சம்பவித்திருக்கின்ற மிகுத்தபவத்தொடக்கினைஞானவானாகிய வீரவாகுதேவருடையபாதாரவிந்தங்களின் பரிசம்பட்டமாத்திரத்தில் ஒழித்து அதனால் மூடியிருந்த அழுக்கைக்கழுவிப் பரிசுத்தமாகவிருக்கநினைந்துதெளிந்த கருநீரைவாய்ந்த கடலிற்படிந்துபவுத்திரமாக வெழுந்ததைப்போன்றும் பூர்வத்திற் கடையுகமுடிவில் எமதிறைவனாகிய சிவபிரான் அனுக்கிரகத்தினால் வெளிவந்த மகாவிஷ்ணுவினது உந்திக்கமலமூலமாகத்தோற்றிய பிரமன் படைப்பின் வீக்கத்தைப்போலவும் வீரகண்டையணிந்த வீரவாகுதேவர் மிதிப்புக்காற்றாமல் மேகங்களிறங்கி நீரையுண்டு சஞ்சரித்திருக்கும் கடலிற்பட்டிருந்த இலங்கைநகரமானது பழையபடிக்குவெளியிலெழுந்துநின்றது, இவ்விதஅதிசயங்களைக்காட்டும் இலங்கையெல்லையைக்கடந்து அந்தரகமனமாகத்தாவிஆயிரயோசனைதூரஞ்சென்று வீரலட்சுமிகுடிகொண்டிருக்கும் வெற்றிமாலையணிந்த புயங்களைவாய்ந்த வீரவாகுதேவர் தேவகாதகனாகிய சூரபதுமன் வாசஞ்செய்யும்வீரமாமயேந்திரத்தின் எல்லையைச்சேர்ந்து சக்கிரவாளகிரியினை நிகர்த்துவளைந்து வானத்தையளாவிநிற்கும் பொன்மதிலையும் அதன்மீதிலணிபடவிருக்கின்ற கொம்மைகளையும் மற்றஉறுப்புகளின் தீர்மானங்களையும் விசாலமாகவுயர்ந்திராநின்ற வாயிலினையும் அதன்மீது பலநிலை

களைப்பெற்றுச் சித்திரங்களை யுடையதாய்நவரத்தினமய
மாகவானத்தைபளாவ விளங்கும் கோபுரத்தையும்நிதா
னித்துப் பார்த்துக்கொண்டு திருக்கயிலைவாயிலைப் போ
ற்றியிருக்கும் நந்தியெம் பெருமான் கணத்தலைவர்களிற்
சிறந்தவீரவாகுதேவர் வருகின்றமார்க்கத்துக்குநேராகம
யேந்திரபுரியின் வடபாரிசத்திற்றோன்றும் வாயிலின்மு
தல்நிலையில் வாசமாய்க் கொடியரிற் கொடியராகியகோர
னென்றும் அதிகோரனென்றும் பெயரினைப்பெற்ற சே
னைத்தலைவர்கள் வீரபராக்கிரமசாலிகளாகிய அவுணசயி
ன்னியங்கள் வெள்ளக்கணக்கிற் போற்றிவரக்கண்ணிமை
யைப்போலவிருந்து இடைவிடாமற் காத்துவருவார். அ
வ்வாயில்னிடத்திருக்கின்றசேனைகளின்தொகையைக் கே
ட்பீராக.

மேருவுக்குச் சமதையாகப்பொன்வண்டில் அச்சுமச்
சு குத்துக்கால் கொடுங்கைமுதலிய உறுப்புகளுடன் வி
ளங்கும் ரதங்கள் ஆயிரவெள்ளம், மும்மதங்களையும்பெ
ருக்கிவீறி நீலகிரிக்குச் சமதையாகவிருக்கும் யானைக்கூ
ட்டங்கள் ஆயிரவெள்ளம், தத்தித்தாவிப் பகைவர் சிரங்
களில்மிதிக்கவல்ல புரவிகள் இரண்டாயிரவெள்ளம், இ
த்தொகைகொண்ட சர்வாயுதபாணிகளாகிய கால்பலங்க
ள் இத்தகைய நால்வகைச்சேனைகளானவைமதிற்புறங்க
ளினும் கொம்மைகள்மீதினும் மற்றவிடங்களினும்நிமை
கொட்டாமற் போற்றியுலவிவரவும் அடிக்கடி காவலாளி
களைக் கண்டிதமாக விசாரணை செய்துகொண்டு சேனாதி
பதிக ளிருவரும் அவ்வாயில்ன்மீதிருந்தனர்,இவ்விதமா
கச் சதுரங்கச்சேனைகளும் எங்கணும்பரந்து சமுத்திரத்
தைப்போல ஆர்ப்பரித்துத் தத்தமது காவல்களிற்பிசகி
ன்றியிருக்கின்ற அமோகமாகிய பெருங்கூட்டத்தை வீர
ன்கண்டு அதிசயித்தவராய்ப் பகைவர்கொண்டிருக்கும்
போற்றுதலின் கிரமங்களையுந் தீரத்தையும்அவர்கள்சவு
ரியங்களையும் நிதானித்துப்பார்த்துஅந்நகரத்துக்குள்ளே
பிரவேசித்துச் சூரனைக்கண்டு வார்த்தைபாடிவரவிருந்த
நினைவைமறந்து தடைபட்டுநின்று இதனையோசிப்பதா
யினர், நான்இவ்வாயிலின்மூலமாகத் தாராளமாகப்போ
கயத்தனப்படுவேனாகில் இத்தலத்திற்காவல்கொண்டிரு
க்கின்ற சேனைவீரர்தடுத்துச் சண்டைக்குநேர்வர் அக்கா
லத்தில்நானும் பின்னிடையாமற் கூடியவரையிற் போர்
செய்யினும் இவர்கள்முற்றினும் மாள்வதற்குஒருதினமு
முமையுஞ்செல்லும் அப்படிக்குவருந்தி வெற்றிகொண்
டபோதினும் அத்துடன் நிற்கமாட்டாது இராசதானியா
கவிருக்கின்ற இப்பட்டணத்திலிருந்து இரதகசதுரகப
தாதிகள் வெள்ளக்கணக்கில் மேலுமேலும் வருவதற்கை
யமில்லை அப்படிக்கு நேர்ந்தநேர்ந்த சயினியங்களுடனெ
மதிறைவனாகிய கந்தசுவாமியார் கிருபாகடாட்சத்தினால்
நானொருவனுமெதிர்த்து யுத்தத்தைச்செய்து சின்னபின்
னப்படக் கண்டித்துக்கொல்வேனாயினும் இப்பட்டணத்
திலடங்கியிருக்கின்ற சேனைப்பெருக்கையொழிப்பதற்கு
வெகுநாள்செல்லும் அவுணர் பலஹீனரன்று அதிகவரு
த்தங்கொண்டு வெற்றிபெறுதற்குப் பலதினங்களாயினு
மாகட்டும் இந்தமயேந்திரபுரியிலடங்கிய படைகளை என்
புயவலிமைகொண்டு முடித்தசெய்தியைக் கேள்விப்படு
வானாயிற் சூரபதுமன்கோபித்து ஜயசாலிகளாகிய தன்
துணைவர் புத்திரர்களைச் சண்டைக்குத்தூண்டுவன் அவ
ர்கள்மிகவும் பலாஷ்டிகாள் மாயவித்தைகளிற் சிறந்தவர்
கள் அத்தகையவல்பெற்ற தம்பியர் பிள்ளைகள் சேனைத்
தலைவர் மந்திரிபிரதானிகள் முதலானவர்களைவெல்வது
மிகவுமரிதாக விருந்தபோதினும் வெற்றிவேலாயுதக் கட
வுளினது கிருபாநோக்க வலிகொண்டு பற்பகலித்தலத்தி
லிருந்து கொடியபோரைச்செய்து அவர்களனைவரையும்
சங்கரித்துமாய்ப்பேனாயினும் எவர்களாலும் வெல்லுதற்
கரிய ஜயசாலியான வச்சிரதேகத்தைப்பெற்ற சூரபதும
ன் வடவையைப்போற்சீறி வந்தெதிர்த்துப் போர்செய்யு
முன்னிலையில் நானும் பின்னிடையாமல் அளவற்றபகல்
ஓய்வின்றிச் சண்டைகொடுப்பினும் அவுணராசன் முற்
காலத்திற் செய்திருக்கின்ற தவமுயற்சியினால் தேவதே
வோத்தமனாகிய சிவபிரானிடத்திற் பெற்றிருக்கின்ற வர
ப்பிரசாத முயற்சியினால் ஒருபோதுமாளான் அவனைப்
பிரமன்விஷ்ணு பலதேவர்களுடனும்நேர்ந்துவாதாடினு
ம்வெல்வதரிது மேலும்அவன் ஆணையாக்கினைக்குப்பயந்
து அவன்கட்டளைப்படிக்கு நடந்துவருகின்றனர்.

அப்படிக்கிருக்க மற்றெவர்களால் அவனைஜயங்கொள்
ளப்படும்அவ்வாறேபற்பகல் நானெதிர்த்துக்கூடியதந்திர
ங்களினாற்சண்டைகொடுத்தபோதிலும் சற்றும்இளைத்து
ப்பின்னிடையான்இவ்விதமாகப் புறகிடாமலெதிர்க்கின்ற
காலத்தில்நானும் பின்வாங்காமல்விருதாவிற்சரீரம்வருந்
திப்பொருதும் வெற்றிபெறாமல் மனவெறுப்புடன்மீண்
டுபோவதுஎன்போலிகளுக்கழகன்றுமேலும் வீரருக்கடு
த்தநீதிப்படிக்குச்சண்டை கொடுத்துக்கொண்டேயிருக்க
வரும்எக்காலத்தினும் வீண்வாதுகொடுத்திருப்பதன்றி
யில்அவன்சிறையிற்பட்டிருக்கின்றதேவரை மீட்கக்கூடு
மோ அல்லதுபற்பகல்பொருது ஜயம் பெறாதகாரணத்
தினாற் சண்டையை நிறுத்தி நான்வந்ததூதின் காரணங்
களை அவனுடன்சொல்லி அதற்கவன் கருத்தின்னதென்
று தெரிந்துபோவதற்குக் கூடுமோ ஒருபோதிலும் கிட்
ட நெருங்கவொட்டான் நெடுங்காலம் நான்சண்டைசெய்
தே விருதாவில்நாளைச்செலுத்தவரும்,ஆதலால்ஞானநா
யகனாகவும் பரம்பொருள் நாயகமாகவும் ஒப்பற்றவேதங்
களுக்கு நாயகமாகவும் சிவபிரா னருளுருவாகத்தோற்றி
ய நாயகனாகவும் விண்ணவர்களனைவருக்கும் நாயகமாகவு
ம் சண்முகங்களைப்படைத்த நாயகனாகவும்நிர்மலமாகவி
ளங்கும் சோதிநாயகமாகவும் எம்மையாளுங்கிருபைக்கு
நாயகமாகவு மிராநின்றபாலசுப்பிரமணியக் கடவுளல்லது
சூரபதுமனைக்கொல்லத் தக்கவர்யாவரிருக்கின்றனர் மே
லும்சவுரியத்தை நினைந்து இத்தலத்தைநீங்காமலிருந்து
சூரபதுமனுடன் பொருதிருப்பேனாகிலும் எமதிறைவ
னாகிய ஆறுமுகப்பெருமாள் ஒருகாலம்வந்து சவுரியபர
னாகிய சூரனைவெற்றிவேலினாற் சங்கரித்தபின்புகொடிய
காவலிலிருக்கின்ற தேவர்கள் சிறையை விடுவித்துக்கொ
ண்டு போகவேண்டியிருக்கின்றதுஆதலால் அப்பிரயோ
சனமாகிய சண்டைகொடுத்திருக்க நினைப்பது நீதியன்று
மேலும் இக்காரியத்தைத் தொடங்குவதற்குஎமது பெரு
மாள் கட்டளையுமில்லை மேலும் தூதாகவந்தவர்கள் முடி
க்கத் தக்ககாரியமுமன்று இத்தகையசங்கட்டங்களிருப்ப
தாற்போர்விளையாதமார்க்கமாய்நகரத்துக்குள்ளே பிரவே
சித்து நாம்வந்தகருமத்தைமுடித்துக்கொண்டு திரும்புவ
தே நன்மையென்று ஒப்பற்ற விவேகசம்பன்னராகியவீ
ரவாகுதேவர் தீர்மானித்தவராய் அந்தக் கோபுரவாயிலி
னெல்லையைக்கடந்து புசபலபராக்கிரமசாலிகளாகிய அவு

ணவீரர் காவல்கொண்டிருக்குங் கோட்டைமதிலின் மேற்புறத்திற் போகக் கூடாமையால் ஒருபாரிசமாகச்சென்று கீழ்க்கோபுர வாயிலைச்சேர்ந்து பார்ப்போமென மனதிலெண்ணி வடபாரிசத்திற் றோன்றும் பொன்மதில்மேலாகப்போகாமல் அதன்பாரிசமாகவானவழிக்கொண்டு நடந்து வல்யகாவலைப்பெற்றிருக்கின்றகீழ்ப்பாரிசவாயிலின்முன் ஜயசாலியாகிய வீரவாகுதேவர்சேர்ந்து கூர்மையாய் சொல்த்திராநின்ற வாளாயுதங்களைக்கரத்திற் கொண்டு அவுணச்சேனைகளுக் கதிபராகிய மேதிக்கண்ணனென்றும் வீரபானுவென்றும் பெயரைக்கொண்ட இரண்டுவீரரும் அவ்வாயிலினிடத்திற் காவல்கொண்டு வடபுறத்தி லிருக்கின்ற வாயிலினிடத்திலிருந்த அவ்வளவு தொகைகொண்ட சதுரங்கவெள்ளம்,சேனைகள்பலபாதகங்கள் சேர்ந்திருப்பதுபோல வெங்கும்நெருங்கிக்கோபுரத்தின் மீதினும் கொத்தளங்களிடத்தினும் மதிலுறுப்பினும் ஆயுதபாணிகளாகநின்று இடைவிடாமற்போற்றியிருப்பதை வண்டினங்க ளுருதவெற்றிமாலைபுரளும் புசங்களைப்பெற்ற வீரவாகுதேவர்கண்டு அவர்கள்காவலின்வலியையும் சேனைப்பெருக்கையும் நிதானித்து அதிகஅற்புதமடைந்தவராய் அத்தலத்திலிருக்கின்ற படைகள் நெருங்கி விண்மண்ணெவ்விடங்களினும்இடமின்றிக்காத்திருப்பதால் இவ்வாயிலின்மூலமாகவும் போவதரிதெனநிச்சயித்துஅதன்மூலமாகவும்செல்வது கூடாமையாற்றென்பாரிசவாயிலைச்சேர்ந்து பார்ப்போமென நினைந்து பர்வதாகிருதியாகிய புசங்களைப்பெற்ற வீரவாகுதேவர் அத்தலத்தையுங் கடந்து தான் குறித்த திசையைநோக்கிப் போவதாயினர்.

## கஜமுகன்வதைப்படலம்.

ஏகாநிற்புழியேந்தல்கீழ்த்திசை
மாகாவற்கொண்மதங்கமாமுகன்
மீகானெப்பவியன்கலத்தினுக்
காகாயத்தினமர்ந்துபோற்றுவான்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? வீரவாகுதேவர் தான்சென்ற இரண்டுகோபுரவாயில்க ளிடத்தினுமிராநின்றகாவலின் பெருக்கினுற் பட்டணத்துக் குள்ளேபோகக் கூடாமல் தென்பாரிச வாயிலினிடத்தைச்சேர்ந்து பார்க்கயத்தனித்து அத்தலத்தில்நின்றுபுகழ்ந்து வானவழிக்கொண்டு போகுமுன்னிலையில் அவ்வாயிலின்மேல்நிலையிற் கப்பலைச்செலுத்தும் மாலுமியைப்போல வாசமாயிருந்து பற்பலகோடி அவுணவீரர் சேவித்துப்போற்றியிருக்கத்தக்கதாக நவரத்தினமயமாய் விளங்குஞ்சிங்காதனத்திலிருந்து அம்மார்க்கமாக ஒருபிராணிகளுந்தன்கட்டளையின்றிநகரத்திற் பிரவேசிக்கவொட்டாமல் ஜயசாலியாகிய கஜமுகனென்னும் சேனைத்தலைவன் காத்துவருவன் அவன்சவுரிய பராக்கிரமங்களையும் பெருமிதங்களையுஞ் சொல்லக்கேட்பீராக பந்திபந்தியாகவிளங்கும்ஆயிரம்யானை முகங்களைப்பெற்றவன். அத்தொகை புல்லிய நீரையொழிக்கியிருக்குந் துதிக்கைகளைப் படைத்தவன் நவரத்தின மயமாகிய கிம்புரிக்கோடுகள் ஒவ்வொருபாரிசங்களிற் பிறையைப்போல இரட்டையாகப்பெற்றவன்பருவதாகிருதியாகத்தோற்றும் இரண்டாயிரம் புசங்களைப்படைத்தவன் எக்காலத்துங்கோபமேகுடிகொண்டுகாந்திக்கொண்டிருக்கும் மனதைப்பெற்றவன் மன்னுயிர்னைத்தினையுங் காலாதிகளிற்கொண்டுபோகவல்ல யமனுக்குமொருயமனையொத்த கொடியதொழிலை நடத்தும்பாதகன்ஒருகாலம் பொன்னுலகத்துக்கதிபனுகியஇந்திரன்எதிர்த்தஞ்சியோடிப்போன நாள்முதல் தன்னைப் பகைத்தெதிர்ப்பவரொருவருமில்லாமல் வாடியமனதையுந் துவண்டுதினவுண்ணும் பாரித்தபுசங்களையும் படைத்தவன் தாகசாந்திவேண்டியகாலத்திற் கடலிற்படிந்துநீரையுண்டெழும்மேகங்களைத்துதிக்கைகளினுற்பற்றி வாரிப்பேழ்வாய்களினிடத்திட்டு பற்களினுலதுக்கி அம்மேக ஜலத்தையுண்டுஇடிகளையும்மின்னலையும்பெருக்கியோடுவதாகத் துப்பும்வலிபெற்றவன்கொலைகளாதியபாதகங்களையே எக்காலமும் விரும்பியகருத்தை யுடையவன்சண்டைஎப்போதுகிடைக்குமென்று எண்ணியிருக்கும் மனதைப்படைத்தவன்மதயானைவீரசிங்கம் புலிகரடி பன்றியிவ்வித மிருகங்களை ஒவ்வொருகரத்தில் ஆயிரக்கணக்கிலெடுத்து பிலத்தையொத்த வாய்களிற்போட்டு மென்றுஇருகடையினும் உதிரம் பீரிட்டொழுகத்தின்னும் மிகுத்தபசியுள்ளவன்காயாம்பூவினதுநிறத்தையொப்பக் கறுத்ததேகத்தைக்கொண்டு தென்றிசைக்கதிபனுக விருக்கின்ற யமதருமராசர்கள் காலபாசத்தைத்தாங்கி ஆயிர அண்டங்களிலிருப்பவர்கள் வந்துசேர்ந்து நிற்பதையொப்பத் துதிக்கைக ளசைந்திருக்கப்பெற்றவன் இவ்வித புசபலபராக்கிரமசாலியாகிய கஜமுகன்தனக்கு வாழ்நாள் குறுகிமாய்வதற்குக் காலஞ் சமீபித்தபடியாற் ககனமார்க்கமாகப்போகின்ற வீரவாகு தேவனைக்கண்டவுடன் வடவையைப்போற் பொங்கியெழுந்துஅவனைத்தடுப்பதாகஇவ்வார்த்தைகளைச்சொல்லிக்கொண்டு தொடர்வதாயினன்.

ஆரடாபயலே அப்புறம்போகாதே நில்லுநில்லென்ற தட்டிப் பலசாலிகளாகிய அவுணவீரர்போற்றிவருகின்ற தடைகளைக்கடந்துஅபலனுகியநீயோதனித்திவ்விடம்வரப்பெறுபவன்மாயவிஞ்சைகளைச்செபித்து அதன்முயற்சியினுல்வந்ததாகக்காணுகின்றதுசிட்டுமுதலியசிறுபறவைகளும்எமதானையைக்கடந்து இந்தப்பட்டணத்திற் போகவொண்ணுது அபலராய்ப்பேடிகளையொப்ப விருக்கின்ற தேவப்பயல்கள் வாசமாயிருக்கின்றகட்டுக்காவலில்லாத நகரங்களைப்போல எண்ணிவந்தனை. சகலசிறப்புகளையுங்கொண்டிருக்கின்ற இந்தவீரமாமயேந்திரத்தையென்னை யொத்தவீராதிவீரர் நிமையையொப்பக்காத்திருக்கும் வலியின்திறத்தையறிந்ததில்லையோ கோபாக்கினி யானதுமீளமீள அதிகரித்து வந்தேன்இந்த நிமிஷத்தில்மாளப்போகின்ருய் இனியெக்காலத்தும் நீமீண்டுபோகும் எதுவைநினைக்கவேண்டாம் பிரமன் உன்சிரத்திலெழுதியபடிக்கு இத்தலமோ உனக்குநாசகாலத்துக்கிருக்கின்றது ஆயிரத்தெட்டு அண்டங்களையும் ஏகசக்ரத்தைக் கொண்டு அரசாட்சிசெய்து வரும் பெருமைபொருந்திய இந்தப்பட்டணத்தைப் பார்த்துப்போகவந்த உன் துணிபை யோசிக்குமிடத்தில் வீரத்தன்மைபெற்ற சிங்கராசன் வாசமாயிருக்கின்ற தலத்தைக்காணவிரும்பி மெல்லியதேகத்தையுடைய பெண்மானுனது வந்ததையொக்கும் வட்டாகாரமாகவளைந்திருக்கும்விசாலமாகிய கடலைக்கடந்துஇதன்மத்தியிலிருக்கும்இலங்கைக்காவலையுந்தாண்டி

யிப்பட்டியினைக் கண்டுபோகத் துரிதமாய்வந்தனை யாதலால் தேவர்கூட்டங்களில் நீயாவன்சுந்தர வடிவுள்ள விண்ணவர்களிற் றிடசாலையைப்போலச் சாவுக்குத் துணிந்து ஒருவாளாயுதத்தைப் பற்றிக்கொண்டுநீ தனிமையில் வந்தனையாதலால் மாயவித்தைகள் பூர்த்தியாகக்கற்றகளவனே யித்தகையதிரங்கொண்டு இவ்விடம்வந்தகாரியமென்ன உன்னையிப்பட்டணத்துக்கனுப்பினவர்கள் யாவர்ஆலகால விஷத்தையுண்டு கண்டத்திற் றரித்திருக்கின்ற சிவபிரானோ சேஷசாயியாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவோ சிருட்டிகர்த்தனாகிய பிரமனோ அல்லதுபின்னையாவர் தயிரியங்கொண்டு உன்னைத்தூண்டினர், துரிதமாகச்சொல்லக்கடவை.

மேலும் இந்தகெடிஸ்தலத்தினைச்சுற்றிப் பார்த்துவருகின்றனை யாதலாற்றாதாகவந்தவனைப்போற்காணுகின்றது அக்காரியத்தைக் குறித்து உன்னைப்போக்கினவர்கள் பெயரைவிரைவில் வெளியிட்டு வந்தகாரியத்தையுஞ் சீக்கிரமாகச் சொல்லக்கடவாய் இந்தநிமிஷத்திலிறக்கவிருக்கின்றனை யாதலால் எப்படிக்குப்பிராணன்தப்பிப்பிழைத்துப்போகவல்லை இப்பட்டணத்தில் அரியசிறைச்சாலைகளில் வாடியிருக்கின்ற தேவர்கள் செய்திகளைத்தெரிந்துபோக இந்திரன் உத்தரவின்படிக்கு வந்ததாகவுங்காணுகின்றது என்னகொடுத்தாலும் இவ்வகைச் சங்கடமான அரியகாரியத்துக்குடன் பட்டு வருவதுதகுதியோவானத்தையளாவளரிந்தோங்கியிருக்கும் அக்கினிமயமாகியகோட்டையினிடத்தில் மோந்தமாத்திரத்தில் மெல்லியபூளைப்புஷ்பமானது வாயுவினால் தள்ளப்பட்டுவருவதுபோல ஊழ்வினையானது உன்பிடரியைப்பற்றி நெட்டிக்கொண்டு வந்துவிட்டது நாங்களிட்ட ஏவல்களைச்சிரசாகவகித்துப் பழமையாகச் செய்துஇளைத்து வாடிப்பதுங்கித்திரிகின்ற தேவராசன் மனிதனாகவுங் காணப்படவில்லை மிகவும் மனவுறுதிபெற்றனை யின்னமும்சற்றுவதுபயந்தவனுமல்ல என்னையொத்தவனை மதியாமலும்போகின்றனை அரியபிராணனை வாங்கவரும் யமனைப்போலத் தொடர்ந்துவருகின்ற பலசாலியாகிய என்முன்னம்நின்றுமாறுத்தரங்கொடாமல் எங்கேபோகின்றனை அடாபயலே நில்லு நில்லென்றதட்டிக் கொண்டுவருங் கஜமுகாசுரன்வாக்கியங்களை வெற்றிமாலைபுரளும் புசங்களைப்படைத்த வீரவாகுதேவர்கேட்டு வெகுநேத்திநேத்தி யென்று நகைத்துத் திரும்பிப் பார்த்துநின்றுஓயாமல்இவ்விதங்களாகப்பிதற்றிக்கொண்டுவருங் கொடியவாயையுடைய பாதகனேதிரிற்சென்று உனக்கிறுதிக்காலம் நேர்ந்தபடியால் என்னைதிரிற் பட்டனை சீக்கிரமாய் வாவாவென்றுபர்வதாகிருதியாகிய தோட்களைப் படைத்தவீரன் கூவிச்சொல்லியவாக்கியத்தைத் தேவர்கள் நடுங்குங்கொடிய பாதகனாகியகஜமுகாசுரன் கேட்டவுடன் வடவா முகாக்கினியைப்போற்கோபித்துப் பக்கத்தில்வானத்தை யளாவநின்ற ஒருபருத்தமலையை வேருடன்பேர்த்தெடுத்து அடாபயலே யிது உன்பிராணனை யுண்டு சரீரத்தையுந் துகள்செய்யுமென்று சிவகுமாரன்மீதில் உருத்து வீசினான் அப்பருவதமானது பந்துக்கொப்பாகக் கிறுகிறெனச்சுழன்று கொண்டுபோய் வண்டினங்கள் சத்தித்திருக்கும்வெற்றிமாலை புரளும் வீரவாகுதேவர் புயத்துக்குநேராகவந்துகோடையிடிக் கொப்பாகத் தாக்கியமாத்திரத்தில் தூளிதக்கட்டியானது பாறையிற்பட்டுஉதிர்வதைப்போலப் பொடிப்பொடியாய்த் திசாதிசைகளிற்பறந்து போய்விட்டதுஇவ்விதமாகத்தானெறிந்தமலைசின்னபின்னப்பட்டதையும் வீராதிவீரன் வலியையுங் கஜமுகன்கண்டவுடன் சரீரம்புழுங்கக்கோபித்து விழிகளில் அனற்பொறிகள் சிதறுவதாகப்பாய்ந்து பாரிசங்களில் நிற்கின்ற உன்னதமுள்ள ஆயிரம் பருவதங்களைத் தன் துதிக்கைகளைச் சுற்றிப்பறிக்கத் தொடங்கினன், அந்தத்தோற்றமானது, மகம்மேருவினது சிகரங்களனைத்தினையும், வாயுதேவன் வளைந்தெடுப்பதுபோலவும் திருப்பாற் கடலைமத்திக்கு முன்னிலையில் வாசுகியைமந்தரகிரியிற்சுற்றியதையொத்தும்விளங்கியது

இவ்விதமாக ஆயிரங் குன்றங்களையு மெடுத்து இடிகளு மஞ்ச ஆர்ப்பரித்துச் சிவகுமாரன் விடுத்த தூதன்பேரில் வீசிய காலத்தில் அவைகள் வீறிவெழுந்து ஒன்றுட னொன்று தாக்கிக் கிறுகிறெனச் சுழன்று கொண்டு வரும்வேகத்தினா லுண்டாகும் வாயுப்பெருக்கிற்பட்டு அம்மலைக ளிடத்திற் சஞ்சரித்திருந்த யாளிகள் சிங்கங்கள் வளைந்த கோடுகளைப் பெற்ற மதயானைகள்வேங்கைகள் கரடிமுதலிய மிருகங்கள் கோடானகோடிகள் பயப்பிராந்தியினால் அரற்றிக்கொண்டு பலதிசையினும்மிரண்டோடி விழுந்து நாசமடையவும் அவ்வரைச் சாரல்களிற் கட்டியிருந்த பாரித்த தேன் கூண்டுகள் சிதைபட்டுத் தாரைவிட்டொழுகும் மதுக்களை வண்டினங்களெளிதிற் றெவிட்டவுண்டு வறுமையுற்றிருந்தமன்னர்சிவகடாட்சத்தினால் மகதயிஸ்பரியங்களைப்பெற் றனுபவித்துக்களிப்பவரைப்போல ரீங்காரத்தொனிகளைச் செய்துகொண்டு பலதிக்கினுஞ் சஞ்சரிக்கவும், செழித்தோங்கி வளர்ந்திருந்த பருவதங்களை அடியுடன் பறித்தெடுத்த ஆழ்ந்தவிடங்களில் மாறுமற் சுரப்பெடுத்துப்பெருகும்ஜலமானது சேர்ந்துபிரவாகமாய்க் கடலைப்போலஅலைகளைமோதியிறைச்சலிட்டோடவும் கஜமுகன் துதிக்கைகளைச் சுற்றி ஊங்காரித்துப்பெயர்த்த பருவதங்களி னடிவாரத்திற்காட்டும்பள்ளங்களிற்பெருத்தோடும்புனற்பெருக்கிற் கடமைமான்முதலியமிருகங்கள் அச்சத்தினாற் சிதறியிரைச்சலிட்டோடி விழுகின்றஅதிர்ச்சியினாற்றுள்ளியெழும் நீர்த்திவலைகளானவைவானத்தெழுந்து தாக்குதலினாற் சூரியன்வெம்மையையொழிந்து குளிர்ந்துகாட்டவும்இவ்விதச்சிறப்புகளைப்பெற்ற பருவதங்களை வீசியபோதுகயிற்றைச் சுற்றிவிடுத்த பம்பரத் தொகையையொப்பக்கிறுகிறெனச்சுழன்றுகொண்டு வீரவாகுதேவர் சமீபத்தில்வருமுன்னிலையில் இவற்றினாலுண்டாகிய ஆரவாரங்களுக்கஞ்சிச் சுவாலைமிகுத்த கிரணங்களைவீசிவரும் சூரியனும் பயந்தொளிப்பதாக அந்தஆயிரம்பர்வதங்களும்ஒருமுகமாகச்சமுத்திரத்திலிறங்கும் மேகசாலங்களைப்போன்று அதிவேகமாகத்தன்பேரில்வருவதைவீரவாகுதேவர்கண்டு சற்றும்மனந்தளராமல் வெற்றிவேலைத்தாங்கிய சரவணபவன் திருவடிகளை மனதிற்றியானித்துக்கொண்டு அவைகளைத்தடுப்பதற்கு யாதொருமுயற்சிகளையும்நினையாமற்கம்பீரமாகஎதிரில்நிற்கின்றபோது கஜமுகாசுரன்வீரவாகுதேவனைஅதம்பண்ணுவதாகக்கோபித்துச் செலுத்திய ஆயிரம்பருவதங்களும் நந்தியெம்பெருமானவிடைநாத்தலைவன்மீதிற் றாக்கியமாத்திரத்தில் ஆயிரந்தொழில்முகங்களைப் படைத்த சூரியபகவானைப் ஓர்த்தும் இவ்டிய மேகசாலங்கள் பின்னப்பட்டுப்போவன

கார்த்திகைத்தெரிவையரைத் தாயாகப்படைத்தசிவகுமாரன் பாதகமலங்களைத் தியானித்திருந்தமகிமையினலியாதொருதுன்பங்களுஞ்செய்யாமல் தட்சணத்திற் பொடிப்பொடியாகப் பின்னப்பட்டுத்துகளாய்த் திசாதிசைகளிற் பறந்ததுமன்றியிற் பற்பலவளங்களுங் குறைபட மழைபெய்யாதகாலத்திற் சலப்பரிசமற்று வெளுத்திருக்கின்ற மேகங்கள்பரந்தும் பிரயோசனப்படாமற் சிதறிப்போகுந் தன்மையாக வியர்த்தப்பட்டது, இதுவல்லாமற் குபவன் பலநாள்களாகச்செய் தடுக்கியிருந்த மண்பாத்திரவடுக்குகளின்மீதில் கற்றூண்விழுமாயின் நுறுங்கிச்சிதைந்தடங்குவதைநிகர்த்துக் கஜமுகாசுரன்விடுத்தவரைகள் வீரவாகுதேவர் வலிக்காற்றுமல்மங்கி உருத்தோற்றமல மறைந்தது, இவ்விதமாக புசபலபராக்கிரமசாலியின்பேரிற் செலுத்தியவரைகளனைத்துங் கேடுபட்டுப் பயனடையாமற்போனதைக்கண்ட கஜமுகன் பிரமித்துத் திகைத்தநின்றகாட்சி யெப்படிக்கிருந்ததெனில் தருமமார்க்கச் சைவழிக் கொடுங்கோல் முன்னிலையிற் றேடிவைத்த பொருள்களனைத்தையும் நீதிபரனுகிய அரசன்றண்டித்துக்கொண்டுபோகத் தான்சம்பாதித்துப்போற்றிவந்த திரவியங்கள்முற்றினும் பரிகொடுத்து வறுமையுற்றுவாடும் பதிதனைப்போலக்காட்டியது.

இவ்வாறு தான்வீசியபருவதங்களின் பலமானதுதெரிந்தவுடன் அதிசயித்து மானம்பாதிப்பதாகக் கஜமுகாசுரனுனவன் வடவையைப்போற்சீறி மந்தரத்தையொத்த பாரித்ததண்டாயுதமொன்றையெடுத்து கிறுகிறெனச் சுழற்றி யிதனல் நாசமடையக்கடவையென்று வலிக்கொப்பற்ற வீரவாகுதேவர்மீதுவீசி ஆர்ப்பரித்தகாலத்தில் அப்படையானது மணிகளசைய அதிவேகங்கொண்டு மீறிவருவதை வீரன்கண்டு அனலையொத்த கொடுமையையும் பிரகாசத்தையும்பெற்ற வாளாயுதத்தை உறையினின்றும உருவிக்கரத்திற் பற்றிக்கொண்டு இடம்வலம்வலம் இடமாகச்சுழற்றிவிட்டவன்மீதிற் பறப்பதாகதுகள்படவெட்டியெறிந்து தீரனுய் முன்னடிவைத்து பின்னடிவாங்கித் தாவிப்பாய்ந்து மேல்வருங்காலத்தில் யானைமுகங்களைப்பெற்றபாதகன் வெற்றிமாலைதரித்திருக்கின்ற வீரவாகுதேவருடைய வல்லபங்களையுந் தீரத்தையும்மதித்து இவனை தாமசப்படாமற் கொல்லவேண்டுமென்றெண்ணி ரவுத்திராகாரமாக மண்டியெரிந்து அம்மருங்கில்வானத்தையளாவகிற்கின்ற பருத்தஆலவிருட்சங்களிற் பனையையொத்த சைந்திருக்குந் தனது நீண்டதுதிக்கைகளைச்சுற்றி வேருடன்பறித்து வீரவாகுதேவர் மேலெறிந்தான்அத்தருக்கள் பிரசண்டமாருதத்தைப் பெருக்கிமேலிட்டுவரும்போது தமதுதிருக்கரத்திற்கொண்டிருக்கும் வீரவாளைஓங்கிக் கண்டதுண்டமாகத்தறித்துக் குவித்தனர். அதுகண்டு கஜமுகாசுரன் கோபதீபிதனுய் விழிகளில் அனற்பொறிசிதற உருத்துமீட்டும் வீரவாகுபேரிற்செலுத்துவதாகநினைந்து வானத்தையளாவகிற்கின்ற பற்பலபருவதங்களைப் பறிக்கத்தொடங்கியதைசுப்பிரமணியதேவர்விடுத்த தூதன்கண்டுலகுக்கொண்டுபாய்ந்து அப்பாதகன் துதிக்கைகளாயிரங்களையும் மலைப்பாம்புகளை ... ப்ப புரளத்தக்கதாக வெட்டித்தள்ளியபோது அத ... மாக வி... ...ாகிய நோய்க்காற்றுமல்வருந்தியும் அப்பாதக பருவதங்...னைப்பற்றி வாயிற்போட்டுமென்று கோபதாவிளங்கச் சித்...ணிவேனென்றெண்ணிவனு யிரண்டாயிரங்கரங்களையும் இருபாரிசங்களினும்பரப்பி வளைத்தகாலையில் ஜயசாலியாகிய வீரவாகுதேவர் வாளாயுதத்தை வீசி ஒருபாரிசத்தில்வந்த ஆயிரங்கரங்களையுந் தரித்தெறிந்தபோது யானைமுகத்தைப்படைத்த பாதகன் தன்கரங்களிற் பாதிவெட்டுண்டு உதிரம்பெருகுவதையும் அதினுலுண்டாகிய வருத்தத்தையும் எவ்வளவும்லட்சியம்பண்ணுமற் கொக்கரித்துக்கொண்டு மற்றஆயிரங்கரங்களினுலும் வெற்றிமாலைபுரளும் வீரன்மார்பிற்கோடையிடிகளைப்போல மோதினன், அக்காலத்தில் வீரன் அதிககோபங்கொண்டு ஒருவிசைவாளைவீசி அந்தக்கரங்களையுங் கண்டித்தெரிந்தனன்.

ஓ! சவுனகாதிரிஷிகளே கொலைத்தொழிலையே முக்கியமாகச்செய்திருந்த யானைமுகப்பாதகன்இரண்டாயிரங்கரங்களையும்ஆயிரந்துதிக்கைகளையும்பறிகொடுத்துசிரபந்திகள்மாத்திரம்விளங்கக் கட்டையாகநின்ற தெப்படிக்குக்காட்டியதெனிற் பலகிளைகள்மாத்திரம்நிற்க விழுதுகள்முற்றினுமிழந்துதோற்றும்ஆலவிருட்சத்துக்குச்சமதையாகவிளங்கியது இவ்வாறு கரங்களனைத்தினையும்போக்கிநிற்கின்ற கஜமுகன் தன்கோலத்தைப்பார்த்து மிகவும் வெட்கி யினியென்செய்வேன் எனக்குமுடிவுகாலம் நேர்ந்தபோதினும் இவனையெவ்விதத்திலாவது கொன்றுதின்று கொறித்தபின்பல்லது பிராணனைவிடேன் வீரனுகவிருப்பவன் செய்கையிதுவாகுமென்றெண்ணினவனுய்மல்லயுத்தத்தினைச்செய்யக்குறித்துப்பின்னிடைந்துமலைகளையொத்த தோள்களினல் வீரவாகுதேவர் புயங்களிற்றுக்கிச் சிங்கநாதஞ்செய்து மறுபடியும் பின்னிடையும்போது நமதையனுகிய வீரவாகு அப்பாதகன் கோலத்தைப் பார்த்து இதங்கிக் கரங்களைப்போக்கி வலியற்றவனுய்நின்றனன், இவனுடன் வெற்றிவாளாயுதத்தைக்கொண்டு போர்செய்வது வீரருக்கழகன்று சாஸ்திரவிதிக்குமொவ்வாது ஆதலால் இவனைப்போலவே நானும்வெறுங்கையனுகநின்றுகொல்வது நீதியென்றெண்ணி பிரகாசம்பொருந்திய வாளாயுதத்தை உறையிற்செருகித் துரிதமாகப் பின்னிடைந்துதாவித் தமதுபாதங்களினுன்றினல்அப்பாதகன் விசாலமாகிய மார்பினிடத்துதைத்தனர். அக்காலத்தில் நமதையன் பாதங்களின் உறுதிக்காற்றுதவனுய் ஓவென் றிரைச்சலிட்டுக்கொண்டு விழுந்து மும்மதங்களொழுகாநின்ற யானைமுகங்களைப்படைத்த கஜமுகாசுரன் பதைபதைத்து உதைத்துக்கொண்டு மாண்டனன். வீரவாகுதேவர்பாதங்கள் பட்டுப்பிளந்த மார்பினின்றும் கரங்களின்மூலமாகவும் பெருக்கெடுத்தோடும் உதிரப்பிரவாகமானது இசைச்சலோடு அலைகளையுடைய சமுத்திரத்திற்பாய்ந்து தேக்கிட்டுக் கருநிறத்தைமாற்றியது.

வீரவாகுதேவருக்கும் கஜமுகாசுரனுக்குஞ் சண்டைநேர்ந்தபொழுதுண்டாகிய ஆரவாரங்களைக்கேள்விப்பட்ட அவுணவீரர்கள் இதுவென்னகாரணம் சத்துருக்கள் நேர்ந்து சண்டைகொடுப்பதாகக் காணுகின்றது இத்தகையகாரணம் நேருவதற்கு ஏதுவென்னே அதைப்பார்த்துவருவது காரியமென்றெண்ணி அளவற்றவர்பலமுகங்களினுந் துரிதமாக ஆர்ப்பரித்துக்கொண்டு ஆயுதபாணிகளாகவருவதை வீரவாகுதேவர்தெரிந்து இப்பாதகர் என்சேவகத்திறத்தைக் காண்பாராயின் மனங்கொதித்துக்கோபமிகுதியினுற் கொடியபோர்செய்யத்தொடங்குவர் அக்காலத்தில்நானும்பின்னிடையாமற் சண்டைகொடுக்க

வரும் இதுநன்மையாகக் காணவில்லை மேலும்சண்டைக்காரம்பித்தேனாயினும் இவர்களுடன் வாதாடி வெற்றி பெறுவது இன்றுடன்முடியாது வளர்ந்துகொண்டேயிருக்கும் சதுர்வேதங்களுக்குமெட்டாத ஆதிதேவன்அடியேனுக்குக் கட்டளையிட்டபேரருளைமறந்து இந்தத்துன்மார்க்கர்களுடனெதிர்த்து வாதாடுவது கெடுதியாகும் இனிகாலதாமசஞ்செய்யாமற் சூரபதுமன் வாசஞ்செய்யாநின்ற இந்தப்பட்டணத்திற் றுரிதமாகச்சென்று வந்தகாரியத்தை முடித்துக்கொண்டு மீளக்கடவேனெனத் தீர்மானித்து மேலும் யோசிக்கின்றனர், நல்லது நாம்நினைந்தபடிக்குப் போவோமெனினும் எந்தவாயில்களின் மூலமாகநடக்கயத்தனப்பட்டாலும் அத்தலங்கடோறும் அளவற்றவெள்ளக் கணக்கிற் சர்வாயுதபாணிகளாகஅவுணவீரர்கண்ணிமையைப்போலக் காவல்கொண்டிருக்கின்றனராதலால் இந்தத்தேகத்துடன் நான்அவர்களைக்காணாமற்போவது ஒருபோதுங் கூடாமையால்வேற்றுருப்பெற்றுநடப்பது உத்தமமெனநிதானித்து கொடியவர்களுக்கு இயமனையொப்ப விளங்கிக்கொண்டிருக்கும் கூரிய வேலாயுதத்தைத்தாங்கிய குமாரசுவாமியார் அனுக்கிரகத்தினால் இந்தத்தேகத்தைமறைத்துச் சிற்றுருவமைந்து பாதகராகிய அவுணவீரர் காவல்கொண்டிருக்கின்ற விந்தக்கிழக்குக்கோபுரவாயிலைத் துரிதமாகத் தாண்டிப்போய் சூரபதுமன் நகரத்திற் பிரவேசிப்பனெனத் துணிவுகொண்டவராய்நுண்மையிற் பரமாணுவினும் மிகச்சிறியும் மேன்மையில் அகண்டாகாரபரிபூரணமாகவுமிராநின்ற குமாரதேவர் திருவடிகளைமனதிற்சிந்தித்துப்போற்றி அத்தேவதேவன் கடாட்சவீட்சணியமுயற்சிகொண்டு அணுப்பிரமாணம்பெற்ற தேகத்தைக்கொண்டனர். தமதுநுட்பவறிவினைப்போலவே அதிருசியதேகத்துடன்சமர்க்களத்தைவிட்டு நீங்கி ஒப்புவமையற்ற கந்தசுவாமியைத் துதித்துக்கொண்டு மேலெழுந்து ககனமார்க்கமாகச்சென்று கிழக்குத்திசையில்விளங்குங் கோபுரவாயிலின்மீதேறிநின்றனர்.

## நகர்புகுபடலம்.

அண்டம்யாவையுமெழுவகை யுயிர்த்தொகையனைத்தும்
பிண்டமாம்பொருண்முழுவதுநல்கியெம்பெருமான்
பண்டுபாரித்ததிறமெனமகேந்திரப்பதியின்
மண்டுதொல்வளநோக்கியேயின்னனமதிப்பான்.

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே முற்குறித்தபடிக்கு வீரவாகுதேவர் கோபுரமேற்புறத்தைக்காவல்கொண்டிருந்த கஜமுகாசுரனைச் சின்னபின்னப்படக்கண்டித்தபின்பு நவரத்தினமயமாக விளங்கிக்கொண்டிருக்குங் கிழக்குக் கோபுரவாயிலின்மீதில்நின்றவர் ஆதிகாலத்திற் சிவபிரான் ஆயிரகோடி அண்டப்பரப்பினையும் அவற்றுட்பட்ட தேவர்மக்கள்விலங்குபறவை ஊர்வனநீர்வாழ்வனதாபரசங்கமெனச் சொல்லுகின்ற எழுவகைத்தோற்றங்களையும் பிண்டமாகநின்ற பொருள்களையும் மற்றவஸ்துக்களையும் படைத்தவராய் அவைகளின்வரிசைக் கிரமங்களனைத்தையும் பார்த்தறிந்த விதத்தைப்போல வீரமாமயேந்திரபுரத்தில் அடங்கியிராநின்ற பற்பலவளங்களையும் பெருமிதங்களையுந் தமதுவிழிகளைப் பரப்பிக்கண்டு அற்புதமடைந்து புகழத்தொடங்கினர், இந்நகரத்தைச் சூழவிருக்கின்ற கொட்டாரங்களில் நாட்டப்பட்டுஅவைகளிடத்தில் இருப்புச்சங்கிலிகளினாற் பந்திக்கப்பட்டிருக்குந் தறிகளைமுறித்துப் பாகனைச்சீறிவீறிட்டு மும்மதங்களொழுகாநின்ற நீலகிரிகளைப்போலக் கறுத்தகாத்திரவுடல்களையுடைய யானைக்கூட்டங்களை யோசிக்குமிடத்தில் முற்காலத்திற் சூரபதுமன்செய்த கொடியதவத்துக்கிரங்கி எமதிறைவனாகிய சிவபிரான் பற்பலவளங்களுடன் அவனுக்குக் கடாட்சித்திருக்கின்ற ஆயிரத்தெட்டண்டங்களினும்பரந்து அலைகளைமோதி வளைந்திராநின்ற சமுத்திரங்களனைத்தும் ஏகோபித்துவந்து தேங்கியிருப்பதற்கொத்தும் பிடரிமயிரலைய இருமருங்கினுந் தூக்கியிராநின்ற சாமரங்கள் சுழலவும் முத்துகளினாலும் பட்டுகளினாலுஞ் சோடித்திராநின்ற சீனிகளிற் றொங்கவிட்டிருக்கும் சிறுசலங்கைகள் சத்திக்கவும் நான்குபாதங்களினும் பொருந்தியதண்டைகள் கலிக்கவையாளியாகவிட்டும் வட்டணைப்பயிற்சிகளைச்செய்தும் பாய்ச்சலிற்செலுத்தியும்வருகின்ற பற்பலநிறங்கள்பொருந்தி அலைகளையொப்பத்தாவும் உத்தமஅசுவப்பந்திகளின் சமோகங்களைப் பார்க்குமிடத்தில் மேற்குறித்த அண்டப்பெருக்கிலடங்கியிராநின்ற மேகசாலங்களோரிடத்திற் சேர்ந்து குலவிவிளங்குவதுக் கொப்பாகவும் பொன்னுருளைகள் அச்சுமச்சு குத்துக்கால் கொடுங்கை பட்டுச்சீலை கொடிகுடைமுதலிய சிங்காரங்களைப்பெற்று நவரத்தினமயமாகச்சொலித்திராநின்ற தேர்களின் பந்திகளை நிதானிக்குமிடத்தில் அண்டங்களிலுள்ள சத்தகுலாசலங்கள்முதலிய பருத்தமலைகளனைத்தும் சூரனுக்கினைக்கஞ்சிவந்துநெருங்கியிருப்பதற் கிணையாகவும் கோணத்தந்தங்களையும்செம்பட்டமயிரினையும்பருத்த தோள்களையும் தேசகாத்திரத்தையும்பெற்றுச் சர்வாயுதபாணிகளா யிராநின்ற கால்பலங்களின்விரிவை நோக்குமிடத்திற் பற்பலபுவனங்களிலடர்ந்திராநின்ற விருட்கூட்டங்கள் ஒருமிக்கச்சேர்ந்து நெருங்கியிருப்பதற்குச் சமதையாகவும் இவ்விதமாகச் சூரபதுமன் பரமசிவகடாட்சத்தினாற்பெற்ற ஆயிரத்தெட்டண்டங்களிலடங்கியிருக்கின்ற மதயானைகளும் வேகமுள்ள குதிரைகளும் சொர்னமயமா யோங்கியிராநின்ற தேர்களும் அதிசூரராக விருக்கின்ற அவுணவீரரும் மற்றநிறந்தபொருள்கள்முதலிய வளங்களனைத்தும் இந்தநகரத்திற்சேர்ந்திருக்கின்றதுபோலக் காட்டுவதால் இவற்றின்பெருக்கையும் சிறப்புகளையுங்கண்டு பூர்த்தியாகத்தெரிந்தவரன்றோ அகிலங்களனைத்தினையுங் கண்டவர்கள் இத்தலத்திற்கிடையாத பொருளெங்கேனுமுண்டோ இந்தமயேந்திரபுரத்தி லடங்கியிருக்கின்ற ரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச்சேனைகளின் பெருக்கைக்கணித்து இவ்வளவெனச் சொல்லக்கூடுவதோ ஆகிலும் ஒருவகையாகக் குறிக்குங்காலையிற் சகலபுவனங்களினும் புகழாநின்றபெருமையினையுடைய சூரபதுமன் சிவபிரான் கொடுக்கப்பெற்ற ஆயிரத்தெட்டண்டங்களிலு மிராநின்ற பருவதங்களின்தொகைக்குமேற்பட்ட தேரணிகளும் இர[illegible] மயமாகவிளங்கும் முகபடாங்கள்பொருந்திய ம[illegible] ளையும் மும்மதங்களொழுகும் பனையையொப்[illegible] சையுந்துதிக்கையினையும்மூன்றும்பிறையைநி[illegible] டுகளையுமுடைய யானைக்கூட்டங்கள் பெரு[illegible]

திய சமுத்திரங்களின்விரிவுக்கு மேல்ாகவும் தத்தித்தா
விப்பாயும் புரவிகளின் பெருக்கானது சமுத்திரங்களி
னெழும் அலைகளின் தொகையினுமேலிட்டும் புசபலப
ராக்கிரமசாலிகளாகிய அவுணப்படைகளின்கணிதமான
து கடற்கரையிலடர்ந்திருக்கின்ற வெண்மணற்றிரைகைக்
குமேலிட்டு மிருப்பதாகச் சொல்லவேண்டும்.

இவையன்றியிற் சிவபிரான் கடாட்சித்திருக்கின்றஆயி
ரத்தெட் டண்டங்களினுமிராநின்ற செல்வமிகுதிகளெல்
லாம்இந்தமயேந்திரபுரியினெல்லையாகிய பதினாயிரயோச
னைவிஸ்திரணத்திலடங்கியிருப்பதற்கொத்து அற்புதக்கா
ட்சியாகத்தோற்றுகின்றது, இதையோசிக்குமிடத்திற்சத்
துருக்கள் உதிரத்திற்றோய்ந்து பிரகாசியாநின்ற வேலைத்
தாங்கிய சூரபதுமன்செய்த அரியதவமுயற்சியினால் மே
ற்குறித்திருக்கின்ற வளங்களனைத்தும் ஏககாலத்தில் இத்
தலத்திற் சேர்ந்து படிந்திருக்கின்றதாகச் சொல்லவேண்
டும் இப்படிக்குப் பலவண்டங்களிற் பெருத்திராநின்ற
அஷ்ட அயிஸ்பரியச் சம்பத்துக ளனைத்தும் ஏகமுக
மாக இப்பட்டணத்திற் பெருத்திருக்கக் கண்டபோதினு
ம் முக்கியமாக ஒருவன் தேடவேண்டிய சிறந்த தருமங்
களையும் தயை தாட்சணியம் சீவகாருண்ணிய மென்னு
ம் இத்தகைய சற்கருமங்கள் எவ்வளவுந் தோற்றப்பட
வில்லை சூரபதுமன் தேவர்களைவாட்டிச் சிறையிலடை
த் திருப்பதைப்போலவே யிவ்வித நற்கருமங்களையுங் கி
ட்டி நெருங்கவொட்டாமல் தள்ளிவிட்டனன், இவன்பெ
ற்றிருக்கின்ற மகதயிஸ்பரிய சம்பத்துகளுடன் நித்திய
மாகிய தருமமுதலிய நல்லொழுக்கங்களுஞ் சேர்த்திருக்
குமாயின்ஒருகாலத்தினும் இவன்செல்வத்துக்குத்தாழ்வு
நேரவறியாது இத்தகைய அகன்ற சாம்பிராச்சியவைப
வங்களைப் பெற்றுவாழும் சூரபதுமன்வீற்றிருக்கின்றஇ
ந்தச்சிறந்த பட்டணத்தில் அவுணவீரர்கள்மாளிகைகளி
டத்தினும் ஆலயங்கடோறும்மற்றுமிராநின்ற சுபகரமா
கிய சடங்குகளைச் செய்துவரும் இடங்களினும் முழங்கி
வருகின்ற ஜயபேரி மங்கலமுரசம்சின்னம் சங்கமாதியப
தினெண்வாத்தியங்களும் சத்தசாகரங்களினொலிக்குமே
லாக எங்கும் அதிர்ந்துகொண்டிருக்கின்றன இத்தகைய
வாத்தியங்களைச் செய்து வருகின்றவர் பெருக்கத்தை யா
வராற்கணிக்கப்படும் இவர்கள் வாசமாயிருக்கின்றவீதிக
ள் இரண்டாயிரயோசனைப் பரப்புள்ளதா யிருக்கின்றன
இதுவுமல்லாமல்மாறியொலிக்கும்மணிகளைப்பெற்றதாய்
மும்மதங்களொழுக வீறிட்டுப் பாகனைச்சீறிச்செல்லும்
யானைகள் பெருக்கைஎன்னிரண்டு விழிகளைக்கொண்டுக
ணிக்கப்படுவதன்று இவைகளிருப்பிடம் பதினாயிரயோ
சனை எல்லையுண்டுநவரத்தின மயமாய் பாரித்திராநின்ற
தேர்கள் தொகையையும் நிதானிக்கக்கூடாதுஅவைகளை
நிறுத்துங் கொட்டாரங்களும் பதினாயிரயோசனைப் பிர
மாணமுண்டு மல்லகதிமயூரகதியாகிய நடைகளைப்பெற்
ற உத்தம அசுவங்களின்மிகுதியைஎண்ணக்கூடுமோஅ
வற்றினைக் கட்டியிருக்கின்ற சாலைகள்மாத்திரம்இருபதி
னாயிரயோசனை விஸ்திரணத்தினு மேலிட்டிருக்கின்றது,
...மே குடிகொண்டிருக்கும் சுத்தவீரராகிய அவுணப்
...ளின்விரிவை எண்ணிமுடியாததைப்போலவே அ
...சமாயிருக்கின்ற விசாலமாகிய தெருக்களையும்
... படவில்லை! இவைகிற்கத் தத்தித்தாவிஅலைக
...பாயும் புரவிகளினதுவாயிலிருந்துபெருகும்
விலாழியென்னும் நுரைப்பெருக்கும், யானைக்கூட்டங்
களினது மத்தகத்தினுங் கன்னத்தினும் பீசங்களினும்நி
ன்றொழுகும் மதநீர்களும் சேர்ந்துபெருகிநீலோற்பலத்
துக்குச் சமதையாகிய கரியவிழிகளைப்படைத்தராசஸ்தி
ரீகள் தங்கள்கணவருடன் பிணங்கிக் கழற்றியெறிந்தமுத்
துமாலைகள்புஷ்பசரங்கள் கலவைச்சேறுமுதலியகுப்பை
களைவாரிக்கொண்டு ஜலதாரைகளின்மூலமாக ஓடிஅகழி
யாகவளைந்திருக்கும் விசாலம் பொருந்திய சமுத்திரத்தி
ற்சேர்த்து வழிகளைச்சுத்திசெய்திருக்கின்றது.

இத்தகைய சிறப்புகளைப்படைத்த இந்தமயேந்திரபுரி
யைத் தாமரைமலர் வாசியாகிய இந்தப்பிரமனொருவனால்
நிர்மித்ததெனச்சொல்ல நாவெழவில்லை,பிரகாசம்பொரு
ந்திய வெற்றிவாளைத்தாங்கும் சூரபதுமன் சிவபிரான் க
டாட்சத்தினாற் பெற்றிருக்கின்ற ஆயிரத்தெட்டண்டங்க
ளினு மிராநின்ற பிரமதேவர்களனைவருங்கூடியோசித்து
ச் சிற்பநூலிற்குறித்திருக்கின்றவிதிப்படிக்குச்செய்தமை
த்ததாகக்காணுகின்றது. மேலும் இந்நகரத்தைப்படை
க்கும்பொருட்டு முந்தி இந்திரன்வாசஞ்செய்யும் பொன்
னுலகத்தையும், விஷ்ணுவீற்றிருக்கின்ற வைகுந்தத்தை
யும், பிரமனுலகையும், அஷ்டதிக்குப்பாலகரிருக்கின்றந
கரங்கள் முதலியசிறந்த பதங்களைச் சிருஷ்டித்துப்பழகி
யபின்பு இதனைப்படைத்ததாகவேண்டும்,இஃதன்றியிற்
பூமியைவளைந்திராநின்ற கடலினது பெருமையையொரு
போதுங் கண்டுங்கேட்டு மறியாதவர்கள் ஒருதடாகத்தை
அருமையாகப் பார்க்கப்பெறுவராயின் அதனைவிசாலமா
கவும் ஆழ்ந்து ஜலசமர்த்தியாகவுமிருக்கின்றதெனக்கொ
ண்டாடுவதைப்போலப் பொன்மயமாகிய தெய்வலோகத்
தினையுந் திசைக்காவற்பட்டணங்களையும்நாகலோகத்தை
யும் மிகுத்த செல்வவளங்களைப்பெற்றிருக்கின்றதாகப்பு
கழ்வர். இப்பட்டணத்துக்குச் சமதையாகிய வைபவங்க
ளைப்படைத்த நகரம் யாதிருக்கின்றது. சொர்னத்தினால
மைந்த உருளைகள்அச்சுமச்சு குத்துக்கால்கொடுங்கைமு
தலிய அலங்காரங்களுடன் நவரத்தினமயமாகச்சொலித்
திராநின்றதோரணிகளும்உரலையொத்த கால்களையும் மா
றியொலிக்கும் மணிகளையும் இரத்தினவகைகளினாற்சோ
டித்தமுகபடாத்தினையும் பெற்று மும்மதங்களையும்பெ
ருக்கியுலவும் யானைக்கூட்டங்களும் பக்கங்களிற் சாமரை
களசையவும் நான்குபாதங்களினும் வீரகண்டைகள் கலி
க்கவும் அலைகளைநிகர்த்துத்தாவி வட்டணைவருங்குதிரை
ப்பந்திகளும் சகலஆயுதபாணிகளாய்க் கண்களில் அக்கி
னிப்பொறிகள்பறக்க எக்காலத்தினுஞ் சண்டையையேவி
ரும்பிக் கறுத்த தேகத்தைப்பெற்றிருக்கின்ற வீரபராக்
கிரமசாலிகளாகிய அவுணவெள்ளங்களும் இடைவிடாம
ற் சமுத்திர கோஷ்டியைப்போல விசாலமாகியதெருக்க
ளெங்கும் ஆர்ப்பரித்தடர்ந்திருப்பதையோசிக்குமிடத்தி
ல் அண்டங்கள்முற்றினு மிராநின்றசதுரங்கச்சேனைகளை
யும் சூரபதுமன் ஒருமிக்கத்தருவித்து ஓரிடத்திற்சிறை
படுத்தியிருப்பதுக் கிணையாகவிருக்கின்றதல்லதுமற்றொ
ரு வுவமானங்களையும் பேசுவதற்கு எனக்குத்தோற்றவி
ல்லை. மருதம், முல்லை, குறிஞ்சி, நெய்தல், பாலை எனச்
சொல்லும் ஐவகைநிலங்கள்முதலியவடங்கிய பூமண்டல
த்திற்பரந்து மிகவும்நுட்பமாகவிருக்கின்ற பரமாணுக்க
ளும் சேனைகளினது நெருக்கில் நுழையப்படாமையாக
விருப்பதால் லட்சுமீகரம்பொருந்திய இந்நகரவீதிக

ளெங்கும் நெருங்கிப்போகவும்வரவுமிருக்கின்றஇரதகஜ
துரகபதாதிகளின் பெருக்கினையாவராற்கணித்துச்சொல்
லக்கூடும்,கருநீரைப்பெற்றகடலினை அகழியாகவளைந்திரு
க்கப்பெற்ற இந்தவீரமாமயேந்திரபுரிக் கிணையாகச்சகல
செல்வச் சிறப்புகளையும் படைத்-திருக்கின்ற நகரமொ
ன்றிருக்கின்றதென உவமானக் குறிப்பினலாவது பேசு
வோமெனினும் பெருமைபொருந்தியஆயிரத்தெட்டண்
டங்களினும் அடங்கியிருக்கின்ற பற்பலவளங்களையும்இ
ந்த நகரத்திற்காணுகின்றதைப்போலமற்றொருபதங்களி
னுமுண்டோ! ஆதலால்இந்நகருக்கிதனையேஒப்புக்காட்
ட வேண்டுமெல்லது வேறுகிடையாது.

இவ்விதவைபவங்களைக் கிடைத்திருப்பதாயினும் ஒப்
பனையற்ற கீர்த்தியைப்பெற்ற இந்நகரத்திலடங்கியிருக்கி
ன்ற சம்பத்துகளானவை சிறந்த தங்கத்திற் பதிந்திருக்
கின்ற வயிரத்தினின்றெழும் ஒளியானது பலதிசையினு
ம் வீசினலும் கண்டவர்களுக் குதவியாகாததைப்போன்
றும் உலோபிக்குக்கிடைத்திருக்கின்ற செல்வத்தை நிகர்
த்தும் யாவருக்கும் பயன்றராமல் நன்மைபொருந்தியசுத்
தோதகம்-பால்-தயிர்-நெய்-கருப்பஞ்சாறு-மது-இந்த ஆ
றுகடல்களும் பிற்பட ஒருபிராணிக்கும் உபயோகமற்ற
லவணசமுத்திரத்தினைச் சிறந்ததாகமுன்னெடுத்துப்பே
சு ம்புகழ்வாய்ந்ததைப்போல விருக்கின்றது. இவையன்
றியுங் கறுத்தமேனியைப் படைத்த பூதபைசாச டாகினி
க்கூட்டங்கள் பணிவிடைகளைச்செய்து போற்றிவர உயி
ர்ப்பலியுண்டு களித்திருக்கின்ற காளிதேவியினது சந்நி
தானத்திலிருக்கின்ற கற்பகத்தருவினதுவளங்கள் பிறரு
க்குதவாமல் வியர்த்தமாகவிருக்குந்தன்மையுமொத்துஅ
லைகள்பெருத்த சமுத்திரமத்தியில் விளங்கும் மயேந்திர
நகரத்தி லடங்கியிருக்கின்றசம்புத்துகள் உலகங்களிலிரா
நின்ற யாவருக்கும் பிரயோசனப்படாம லிருக்கின்றது.
இக்குறைவன்றியில்மற்றொருதாழ்வுங்காணப்படவில்லை,
கொலைத்தொழிலையே முக்கியமாகவிரும்பிச் செய்துவரு
ம் பாதகனாகிய பானுகோபன் அக்கினிப்பிரவேசப்படுத்
தப் பொன்னுலக மெரிந்ததெனச்சொல்லுகின்றது முழு
ப்பொய்யாகும்அந்தத்தெய்வலோகமானதுஇந்தமயேந்தி
ரபுரியினது செல்வப்பெருக்கைப் பார்த்துப்பார்த்துஇத்
தகைய வளங்கள்சிறப்பாகப் பேசிக்கொள்ளுந்தன்னிடத்
தி லில்லையென்னும் வெட்கம்மனதையலைத்துப் பாதிக்க
அவ்வெப்பத்தினல் தகிக்கப்பட்டதாக வேண்டும்ஜயசா
லியாகிய சூரபதுமன்சிவகடாட்சத்தினற் பெற்றிருக்கின்
றஅண்டகோடிகளிற் சொலித்திருந்த சூரியர்களனைவரு
ம் அவன்கட்டளையின்படிக்கு இத்தலத்திற்சேர்ந்து கிர
ணங்களைப் பரப்பித் தமதுதொழில்களைச் செய்திருப்ப
தைப்போல இந்நகரங்களெங்கணும்நவரத்தினமயமாகவி
ளங்குங் கோபுரங்களைக் கணிக்கக்கூடவில்லை.
மேலும் மாட்சிமைபெற்ற பூலோகமுதற் சொல்லா நின்
ல யேழுலகவடுக்குகளைப்போல விசாலமாகியஏழுநிலைக
ளைப் படைத்திருக்கின்ற கோபுரவாயில்களின் பெருக்க
ங்களுக்கு மத்தியிற் சூரியசந்திரர் நவக்கிரகங்கள்முதலி
யோர் பதங்கள் சேர்ப்பதற்கிணையாகப் பற்பலஅந்தஸ்து
களைப் படைத்துச் சித்திரங்களமைந்து இரத்தினமயமா
க விருக்கின்ற மாடமாளிகைகள் வானத்தை யளாவவோ
ங்கி யிருபாரிசங்களினும் நெருங்கி நூறுயோசனைநீளமு
ம் ஆறுயோசனைப் பரப்பும் பெற்றிருக்கின்றபற்பலதெ
ருக்கள் முற்றினும்போகின்ற இரதகஜதுரகபதாதிகள் ந
டக்கவிடம் போதாமல் வானவழிக்கொண்டும் நெருங்கிச்
செல்லுகின்றன, வீரபராக்கிரமசாலிகளாகிய அவுணர்க
ள் தங்கள்மீதிற் கிரணகாந்தி தாக்குவதினற்கோபித்துஇ
ப்பட்டணவெல்லையைத் துரிதமாகத்தாண்டிப்போகும்ப
டிச்குச் சவுக்குகளினல் அடித்தோட்டுவதைப்போலமே
க்சாலங்கள் பரவியிருக்கின்ற உன்னதமுள்ள கோபுரங்க
ள்முதலிய தலங்களில் நாட்டியிருக்கின்றகொடிச்சீலைகள்
காற்றினசைவிற்பட்டுப்படபடெனத் தாக்குவதினற் சூரி
யன் தேரிற்பூட்டியபுரவிகள் விரைந்தோடுகின்றனமேலு
ப்பரிகைகளைப் பெற்றிருக்கின்ற பளிங்குமாடங்களின்மீ
து வாசமாயிருக்கின்ற மின்னலையொத்த சாயலையுடைய
பருவதருண மங்கையர்கள் மஞ்சனமாடி புஷ்பங்களணி
யப்பட்ட அளகபாரங்களைப் புலர்த்தும் பொருட்டு அகி
ற்சந்தனப் புகைகளைக் கொடுக்குந்தோறு மேலிட்டுஅம்
மாளிகையைச்சூழ்ந்துமறைத்திருப்பதைப் பார்க்குமிட
த்தில் நன்னெறிகளற்ற அவுணவீரர்கள் கீர்த்திப்பிரபா
பங்க ளனைத்தும் அவர்கள் தினந்தோறும் செய்துவருகி
ன்ற பாதகவிருளினல் மங்கியடங்கியிருப்பதுக் கிணையாகக்
காட்டுகின்றது முத்து பவளம் வயிரம் வயிடூரியம் கோ
மேதகம் புஷ்பராகம் நீலம் மரகதமெனச்சொல்லாநின்ற
நவரத்தினவிதங்களினல் வெவ்வேறுகச் சோடித்துப்பிர
காசிக்கும் பற்பலநிலைகளையுடைய பொன்மயமாகியஉப்ப
ரிகைகள் அணியணியாகப்பெருத்திருக்கின்றன, இவை
யன்றியில் அழகிய சந்திரகாந்தப் பாறைகளினற்சோடி
த்திருக்கின்ற சிலமாடங்களின் மேல்நிலைகளில் மேகவர
வையிச்சித்திருக்கின்ற தோகைமயில்கள் சஞ்சரித்திருக்
கவும் சேற்கண்டையையொப்பப் பிறழ்ந்துவிளங்கும் வி
ழிகளைப்படைத்த அவுணமங்கையர்உலவுகின்றதையோ
சிக்குமிடத்திற் களங்கத்தைப் பெற்றிருக்கின்றசந்திரனை
மேகங்கள் சூழ்ந்திருப்பதையொப்பக் காட்டுகின்றதுசிற
ந்த செம்மணிகளினலும் பளிங்கினலும் சோடித்திராநி
ன்ற அரண்மனைகளின் மேற்புறத்தில்விளங்குகின்றபொ
ன்னடுக்குகளி னிடத்தில் சிலமடந்தையர்கள் தங்கள்பாத
ங்களிற் சத்தித்திராநின்ற சிலம்பு தண்டைகளிற்பதித்த
நீலமாதிய மணிகளின் காந்தியானது பரவிக்காட்ட அன்
னங்களையொப்ப மெல்லமெல்லப்பாதங்களைப்பெயர்த்து
வைத்துவருவதைப் பார்க்குமிடத்தில்வெண்டாமரைசெ
ந்தாமரை மலர்களினிடத்திற் பெருகுந் தேனைவண்டின
ங்கள் புசித்துச் சப்தித்திருப்பதற் கிணையாகத்தோன்று
கின்றது, இதுவல்லாமல் வருணராசன்முத்துகளையொத்
த சன்னசம்பா அரிசியைச் சுத்திசெய்து உலையிலிட்டு
ப் போகவும் அக்கினிதேவன் சிறுக எரித்துப் பதனறிந்
திறக்கிய அன்னத்துடன் பற்பலபதார்த்தவகைகளைச் சே
ர்த்துத் தேவகன்னியர்கள் பொற்கிண்ணங்களிற்படைத்
து உபசரிக்கஅவுணராசர்தங்கள்தேவிமாருடன்ஒவ்வொ
ருபதார்த்தத்தை ஒருக்காலருந்தி நெய்பாலுடன்இஷ்டா
ன்ன போசனஞ்செய்து களபகஸ்தூரிகளை யணிந்துபுஷ்
பங்களைச்சூடி உல்லாசமாக மேடைகளி னிடங்கடோறு
ங் களித்திருக்கின்றனர்.

செம்பட்டமயிர்களுடைய காளையர்களும் செ[illegible]
க் குழம்புபூட்டி விளங்கும் பாதங்களைப்பெற்[illegible]
யுகிகளும் கூட்டங்கூட்டமாகச்சேர்ந்து கல[illegible]
களைச்செய்துகளித்தும்பிணங்கியும் ஊடல்[illegible]

விதங்களாக எவ்விடங்களினுங் காட்டுகின்றதால்மன்ம
தனுலக மிதுவென்றேசொல்லவேண்டியிருக்கின்றது, இ
துவுமல்லாமல் சிலகாமுகர்கள் இரத்தினாபரணங்கள்முத்
துமாலைகள் சொர்ணச் சரப்பளிகள்முதலாகியஉலுப்பை
களைத் தூதர்மூலமாகப் பரத்தையர்களுக்கனுப்பி அவர்
கள்விரும்பி அங்கீகரித்ததைக்கண்டு களித்தும் வெறுத்
துத் திருப்பியதைத்தெரிந்து வாடியுமிருக்கின்றனர்வண்
டினங்களானவை அவுணராசர்களணிந்திருக்கின்றபுஷ்ப
மாலைகளினிடத்தும் கன்னியர்கள் அளகபாரங்களிற் செ
ருகியிராநின்ற புதியமலர்களினும் நவரத்தினமயமாக வி
ராநின்ற புஷ்பக்கொத்துகளிடத்தினும் பற்பலமலர்களை
ப்பெற்றுப் பரிமளித்திருகின்ற நந்தனவனங்களினும்தா
மரைமுதலிய புஷ்பவகைகள் அலர்ந்திருக்குந்தடாங்களி
னும் பர்வதாகிருதியாக விருக்கின்ற யானைகளதுமதநீர்ப்
பெருக்கினும் யாழினைமீட்டிப்பாடுந்தோறும் அவ்வோ
சையினது இன்பத்தினிடத்தில் விருப்புற்று அவர்களு
ணர்வானது அதைத்தழுவி உலவுவதைப்போல ரீங்கார
த்தொனிகளைச்செய்து திரிந்து திரிந்து தேனையுண்டுதிரி
கின்றது இஃதன்றியிற் றனக்கொருவருநிகரில்லாதபு
சபலபராக்கிரமசாலியாகிய சூரபதுமன்கட்டளையின்படி
க்குஇந்நகரத்தில்உலவுகின்ற தென்றலானது தெளிந்தநீ
ரைப்பெற்றிருக்கின்றசமுத்திரத்திற்படிந்து கற்பகம்பாரி
சாதமுதலியமலர்களையுடையநந்தனவனங்களினுலாவி ந
வரத்தின மயமாகவிளங்கும் உப்பரிகைகளிலிராநின்றசா
ளரங்களின்மூலமாய்மெல்லநுழைந்து மதுபானஞ்செய்த
வனைப்போல அசைந்தசைந்துலவுகின்றது, இதுவல்லாம
ல்இப்பட்டணத்தில் அணியணியாகவிளங்குகின்ற உப்ப
ரிகைகளின் மேல்நிலைகளில் வாசஞ்செய்கின்ற அவுணம
ங்கையர்நவரத்தினமயமாகிய ஆபரணங்களையும்புஷ்பமா
லைகள்முதலிய அலங்காரங்களைச் செய்துகொண்டு அத
னைப்பார்க்கும் பொருட்டுச் செந்தாமரையையொத்தகரங்
களைநீட்டி வானத்திற் செல்லுஞ் சூரியனைப்பற்றிக் க
ண்ணாடியாகக் கொண்டு தமது அலங்காரங்களைக்கண்
டு களித்து மீட்டும் வானத்தில் வீசுகின்றனர் சித்
திரங்களெழுதியிராநின்ற பொன்மயமாகிய மேடைகளி
ன் மீதிற் கணவருடன் சரசசல்லாபங்களை விளைத்தி
ருக்கின்ற மங்கையர் ஏதோ சிலகுற்றங்களைப்பாராட்டிப்
பிணங்கிக் கணவர்களுடையசிவந்தசிகையைப்பற்றி யிழு
த்துச் செம்பஞ்சூட்டிய பாதங்களினு லுதைக்க அதைக்
கட்டியிருந்த பொற்கயிறுக ளறக்கண்டு சீக்கிரமாகத்தம
து கரங்களை மேகத்தி னிடத்தில் நீட்டிஅதிலிராநின்ற
மின்னற்கொடியை எடுத்து விரிந்தலைகின்ற சிகையைக்க
ட்டிக் கொண்டு தேவியர் பிணக்கை நீக்கிக் களித்திருக்கி
ன்றனர், ஆரவாரங்களைச் செய்து பெருகுகின்ற வா
னகங்கை தவழத்தக்க உன்னதமுள்ள பொன்உப்பரிகை
களின் மேனிலைகளினுலவுகின்ற சுந்தரவதிகளாகிய கன்
னியர்கள் யாதொருகுறைபாடுகளு மில்லாமற் பாங்கியர்
சேடியர் ஏவல்களைச்செய்துவரத்தக்கதாக காலங்கழிக்க
நினைந்து ஆகாயத்தினுலவும் மேகங்களிலிருக்கின்ற இடி
களையும் நட்சத்திரங்களையும் வாரியெடுத்துக்கொண்டுஅ
ம்[illegible]னைகளாடியுங் கழங்குகளுருட்டியும் அவற்றின்மூல
[illegible]கள்சுழல விளையாடுகின்றனர்.

[illegible]களுக் கிணையாகவோங்கிப் பொன்சிகரங்கள்
[illegible]ரப்பிரதமைகள் வெண்சாமரைமுதலிய
தொழில்களைச்செய்துவரும் இரத்தினமயமானமாளிகை
களின்மீதில் வாசஞ்செய்கின்றபெண்கள் தங்கள்பிள்ளைக
ள் அழுகின்றதை நீக்கும்பொருட்டுச் சூரியன்தேரிற்பூ
ட்டிச்செல்லும் பச்சைக்குதிரைகளேழையும் அவிழ்த்து
அவர்களுக்குக் கொடுத்தகாலத்திற் சூரியன்வந்துசூரன்
கட்டளையின்படிக்குத் தன்தொழிலைநடத்தக் காலதாமத
மாகுதென்று இதங்கள்பேசி மெத்தெனக் குதிரைகளைவி
டுவித்துக்கொண்டு பழையபடிக்குத் தன்கதியிற்போகின்
றனன். மகரதோரணம் கொடிகள்நாட்டி சொர்ணமயமா
கிய சன்னல்கள் பவளவுத்திரங்கள் மரகதக்கொடுங்கைக
ள்முதலிய சிறப்புகளையுடைய மெத்தைகளின்மீதிற்பாங்
கியர்களுடனிருக்கின்ற மங்கையர்கள் கடககங்கணங்க ள
ணிந்திராநின்ற கரங்களைநீட்டி மேகங்களிலிராநின்ற மி
ன்னல்களையும் இடிகளையும்எடுத்துச் சிரோரத்தினங்க
ளை யிடையிற்கோத்து அரைச்சலங்கையாகத் தம்துபிள்
ளைகளுக்கணிந்தும் வானத்திற்செல்லும் மேகத்தைப்பற்
றி வஸ்திரமாக இடையிற்கட்டி விளையாடுவதைக்கண்டுக
ளிக்கின்றனர். நவரத்தினமயமாகிய பொன்மாளிகைகளி
ன் மேற்றலங்களிற் பளிங்கினாற்சோடித்து நிலைக்கண்ணா
டிகள் தாபித்திராநின்ற மாளிகைகளினிடங்களிற் பிள்
ளைகள் விளையாடிக்கொண்டிருக்கின்றவேளையிற்சூரியன்
உச்சியில்வரக்கண்டு இதுகனிந்த கனியென்று பற்றி வா
யிலிட்டுக்கடித்து சுடுகைக்காற்றுமலெறிந்து அழக்கண்
ட தாயர்கள் சீக்கிரமாய் ஆகாயகங்கையைக்கரங்களிலேந்
தி வாயைக்கழுவிக்குடிப்பித்தபின்பு சொர்ணமஞ்சத்திற்
கிடத்தித் தாலாட்டி உறங்கச்செய்கின்றனர். இங்ஙனக்க
ண்டு வானநாடுவெட்கி யிறங்கியிருப்பதுக்கொப்பாக வி
சாலமாயிருக்கின்ற சொர்ணமாடங்களின்மீதிற் சஞ்சரிக்
கின்ற ரூபலாவண்ணியமுள்ள இராசபத்தினிகள் கண்ட
வர்கள்களித்துப் புகழத்தக்க சுந்தரமுள்ள தமதுபிள்ளை
கள் கிலேசிக்கின்றகாலையில் வானத்திற்போகின்ற சூரிய
ன்கரத்திற் கொண்டிருக்கும் தாமரைமலரைப் பறித்துக்
குழந்தைகளுக்குக்கொடுத்து ஓயப்படுத்தியிருக்கின்றனர்
மற்றொருபுறத்திலிராநின்ற சித்திரவிசித்திரமாகப்படை
த்துவிளங்கும் பாரித்த மேடைகளின்மீதிற் சர்வாபரண
பூஷிதைகளாகக் களித்துக் காமலாகிரிவீறிச் சோபப்படு
கின்ற அவுணமங்கையர் வானத்திற்போகின்றதேவர்களை
த் தாமரைமலரையொத்தகரங்களைநீட்டிச் சைகைகாட்டி
யழைத்தகாலத்தில் அவர்களைக்கூட மனமில்லாமல் மறு
க்கக்கண்டு பயமுறுத்தும்பொருட்டு கள்ளர்கள்ளரெனக்
கூவ அதற்கஞ்சிச் சம்மதித்துச் சமீபத்தில்வரும்போது
அவ்வோசையைக்கேட்டுவந்த தங்கள்கணவருக்கு நம்மு
டையகுழந்தைகளுடன் விளையாடுகின்றனரெனச்சொல்லி
யனுப்பிப்பின்புமனதுக்கிஷ்டமாகக்குலாயிருக்கின்றனர்.

இவ்விதமாக விண்ணவர்படுந்துன்பங்களைநினைக்கமன
ம்வருந்துகின்றது சொர்ணமயமாகப் பரந்திருக்கின்றஉப்
பரிகைகளினிடத்திற் களித்திருக்கின்ற தருணமங்கையர்
அழைக்கின்ற சமையத்தில் வந்தால் பலவத்காரமாகக் க
ளவுப்புணர்ச்சியை முடிக்கின்றனரென்று அத்தினசயை
நோக்கப் பயந்தும் அப்படிக்கு மறுக்கின் என்னகொடு
மைகளைச் செய்விப்பரோவென வாராமலிருக்க நடுங்கியு
ம்வஞ்சமாகத் தமதுமங்கையர்புணர்வதைஅவுணர்காணு
வராயிற் கொல்வரோ யிதற்கென்செய்வோமென்றுவாடியு
ம் இப்படிக்குப்பலவிதங்களினும் அச்சமானதுமனதைப்

பாதிக்க நோகின்றனர். இந்தத்தினராகியதேவர்களென் செய்வார், இஃதன்றியிற் சந்திரகாந்தங்களினாற் செய்து முத்துமாலைகளைத் தூக்கியிராநின்ற மேலுப்பரிகைகளிலே வாசஞ்செய்கின்ற அரிவைமார்கள் தங்கள் குமாரர்கள் ஓயாமல் அழுகின்றபோது சூரியன் தேர்வரக்கண்டுபிள்ளைகளை அதன்மீதிலேற்றிச் சிலதூரம்போய் அழுகை ஓய்ந்தபின்பு கொண்டுவந்து விடக்கடவையெனக் கட்டளையிடுகின்றனர். மூதேவிக்குச் சமதையாகிய அவுணமாதர்களிட்ட ஏவல்களைச்செய்தும் அவர்களுறங்கும்போது பாதங்களைத்தடவியும் தோழிகளைப்போலத் தேவகன்னியர்கள் ஊழியங்கள்செய்கின்றனர், ஆதலாற் சமுத்திரஞ்சூழ்ந்த இந்தவுலகத்தில்வேண்டிய பேறுகளைத்தருவதற்குத் தவத்தினுமேலானதொன்றில்லை, இவையன்றியிற் பஞ்சகற்பகத்தருக்களும் சிந்தாமணி காமதேனுவும் சங்கநிதி பதுமநிதி முதலானவை யிந்தமயேந்திரபுரியில் வாசஞ்செய்கின்ற அவுணமங்கையர்க ளிருக்கின்றதலங்களிற்சென்று வேண்டியவஸ்துக்களைக்காலங்களிலுதவிவருகின்றன. இதுவுமல்லாமல் வானத்தையளாவிச் சொர்னமயமாகவிருக்கின்ற மேலுப்பரிகைகளில் வாசஞ்செய்கின்ற காமிகளாகிய பெண்கள் சூரன்தங்கை அசமுகியைப்போல வானத்திற்செல்கின்ற தேவர்களிற் றங்களுக்கு இஷ்டமானவர்களைப் பலவந்தமாகவலித்து காமவிகாரத்தினாற் கட்டியணைத்து முத்தமிட்டுப் பஞ்சணைமெத்தையிற்சேர்ந்து கிரீடித்துத் தமதிஷ்டந் தீர்ந்தபின்பு அவர்களைவிடுகின்றனர்.

ஆயிரங்கிரணங்களைப்பரப்பி உலகங்களை விளக்கித்திரிகின்ற சூரியனானவன் முன்னம் பானுகோபனால் கட்டுண்டபடியால்பயந்து தன்கிரணகாந்தியானது உப்பரிகைகளின் சாளரவாயில்களின் மூலமாக நுழையவொட்டாமற் சுருக்கிக்கொண்டு போகின்றனன். நவரத்தினமயமாகிய மேல்நிலைகளில் வாசஞ்செய்கின்ற பேதையர்கள் கணவரிடத்துப்பிணங்கியெறிந்த முத்துமாலை புஷ்பசரங்கள் முதலாகிய குப்பைகளை வாயுதேவன் காலங்களில்நீக்கிச் சுத்திசெய்யவும் வருணராசன்பனிநீரிற்கலவைச்சாந்தைக்கூட்டித்தெளித்துப் புழுதிகளையடக்கித் திரிகின்றகாலத்தில் உண்டாகுஞ் சேற்றைச் சூரியபகவான் புலர்த்திப் போகின்றனன். இவ்வித உபசாரங்களைப்பெற்று இந்நகரவாசிகள் களித்திருக்கின்றனர். திருப்பாற்கடலில் வடவாலிலையின்கண் ஸ்ரீமஹாலட்சுமி சமேதராகப் பள்ளிகொண்டிருக்கும் மகாவிஷ்ணுவைப்போல வானத்தையளாவிற்கும் பளிங்குமாடங்களின் மேற்புறத்தில் மேகங்கள் மின்னலைவீசி நித்திரைசெய்கின்றது இத்தகையசிறப்புகளையுடைய மயேந்திரபுரியினிடத்தி லிராநின்ற இராஜவீதிகளினும் ஆலயங்கள்முதலிய தலங்களிலும் எக்காலத்தும் புள்ளாங்குழலினோசையும், யாழினதுநாதமும் திருச்சின்னம், காளம், சங்கம், சங்கீதமேளமுதலிய பதினெண் மேளவாத்தியங்களின்முழக்கமும், சரிகமபதநிசவெனப்பாடுகின்ற சப்தசுரகண்டத்தொனியும்,இடைவிடாமற்செய்துவரும் திருக்கலியாணமாதிய மகோச்சவங்களிலெழுகின்ற ஆரவாரங்களும், மங்கலபேரி, ஜயபேரியினதுதொனியும்பெருத்துச் சமுத்திரகோஷ்டத்தினும்மேலிட்டு சத்தித்திருக்கின்றது. பர்வதாகிருதியாகவிருக்கின்ற யானைக்கூட்டங்கள் போகுந்தோறும் பெருகுகின்ற கன்னமதம் கபோலமதம் பீசமதமென்னும் வெள்ளங்கள் பெருத்திருக்கின்ற. இராசவீதிகளில் மன்மதனைப்பழித்த சுந்தரமுள்ள அவுணவீரர்களும் இலக்குமிக்குமேலிட்டவடிவுள்ள மங்கையர்களும் தங்களிற்களி மிகுதியினால்வீசுஞ் சுண்ணப்பொடிகளானவைபடிந்துசேறாக்கவும், கன்னியர்கள் கணவரிடத்தூடலினாற் கழற்றியெறிந்த இரத்தினாபரணங்கள் முத்துமாலை புஷ்பசரங்கள் விழுந்து பழையபடிக்குப் பூமியாக்கவும் இவ்விதச்சிறப்புகளைப்பெற்ற இப்பட்டணவீதிகளிலெங்குந் தோற்றுகின்றது. நவரத்தினமயமாகிய உப்பரிகையின்மீதில்உலவுகின்ற அழகுள்ள கன்னிகை ஒருத்தியானவள் மிகுத்த சுந்தரமுள்ள இராசகுமாரன் அவ்வீதியில் விருஷபத்தைப்போலக் கம்பீரமாகநடந்துபோவதைக்கண்டு மோகித்து அவனிடத் தளவற்ற இன்பத்தைக்கொண்டவளாய் வெட்கத்தினால் அதனைத் தோழியர் பாங்கியரிடத்தில் வெளியிடாமல்மறைத்து காமவிகாரமேலிடத் தீயிற்பட்ட புஷ்பக்கொத்தைப்போல மனம்வாடிவருந்தி மயங்குகின்றகாலத்தில் அத்தோற்றமானது முகமுதலான குறிகளினால் வெளிப்படக் காட்டத்தெரிந்து ஓ! மனதே? என்னாசைப் புருடனிடத்திற் றூதுசென்று ஒருமைப்படுத்தாமல் ஒளித்திருப்பது உனக்கழகோவென மிகவுந்தளர்ந்து கனிவகைகளைக்கொடுத்து வளர்த்துவருகின்ற கிளிகளைப்பார்த்து இச்சரீரத்தில் ஆதிதொட்டிருக்கின்றமனமானது இப்படிக்கும் வஞ்சிக்கலாகுமோ சொல்லென்று முறையிடுகின்றனள். தண்டைசதங்கைமுதலியஆபரணங்களையணிந்து விளையாடித்திரிகின்ற இராஜகுமாரர்கள் மான்குட்டிகளைப் பூட்டியோட்டும் கொடிகளாகிய சிறப்பினைப்பெற்ற சிறுதேர்களினது உருளைகளின்பொன்னை வீதிகளிற்பரப்பி யிருக்கின்ற சந்திரகாந்தப்பாறைகளும் இந்திரநீலக்கற்களும் கிரகிக்கின்றபடியால் மண்ணாசை பொன்னாசை பொருளாசையென்னுங் கால்விலங்கில்அகப்பட்டுழலுகின்ற மனிதர்களைப் பொன்னாசைகொண்டவர்களென்று .வெறுக்கலாகுமோ? ஐம்புலன்களைத்தன்வயப்படுத்தி வஸ்துநிச்சயத்தை யறிந்திருக்கின்ற தபசிகளும் இச்செல்வமிகுதியைக் காண்பாராயில் இச்சிப்பரெனச் சொல்லவேண்டும் ஆதலாற்பொருளாசையையொழிந்தவர்களிரார்கள் அவாவை நீங்கிய மகத்துக்களும் இந்தப்பட்டணத்திலிராநின்ற செல்வங்களைப்பெற்று வாழும்படிக்கு தவங்களைச்செய்வர். அளவற்றகாலம் அரியதவங்களைச்செய்தவர்களல்லது இந்தசம்பத்தைப்பெறமாட்டார்கள்.

இவ்வித வளமைகளையுடைய மயேந்திரத்திலிருக்கின்ற கிளியையொத்த மழலைச்சொற்களைப்பேசுகின்ற பிள்ளைகள் விளையாடுகிறபோது இறைக்கின்ற சுண்ணப்பொடிகள் அவ்வீதிகளிற்போகின்ற யானைக்கூட்டங்களினிடத்துண்டாயோடும் மதப்பெருக்கிற்படிந்து உலர்த்தியும் வானத்திலோங்கி ஆகாயகங்கையைச் சேறாக்கியும் வருகின்றது சூரபதுமன் ஆக்கினையின்படிக்கு ஆகாயகங்கையானது இந்நகரத்திலிராநின்ற இராசராசன்முதலிய சகலருக்கும் தாகசாந்திக்குதவியாகப் பரவியும் சுத்தோதகசமுத்திரமானது இப்பதியிலிருக்கின்றவர்கள் ஸ்நானமுதலிய நித்தியகருமங்களைக் கழித்துக்கொள்ளும்பொருட்டு மாடமாளிகைகள் வீதிகள்சோலைகள் முதலியவிடங்களிற் குளங்கள் தடாகங்கள் ஓடைகள் மடுக்கள் ஏரிகள்ஜலதாரைகள் ஆகிய உருவுகொண்டு தாய்யைப்போல உதவி

வருகின்றது ஆசிரியனிடத்தில் தனுர்வித்தையின்படிக் குறிப்பயிற்சிகற்கின்றவர்களும் வாள்வரிசையையிடசாரி வலசாரிமுறைப்படிக்குவட்டணைவருபவரும் கதைப்பழக்கத்தை கற்கின்றவர்களும் மற்றபடைகளின் திறங்களைத்தெரிகின்றவர்களும் ஆனைஏற்றங்குதிரைஏற்றம்தேரோற்றம் இவைகளைக் கற்கின்றவர்களும் அனற்பொறிகள்விழிகளிற்பறக்கத்தக்கதாக மல்லயுத்தஞ்செய்பவரும் இந்திரஜால மயேந்திரஜாலங்களைப் பழகுகின்றவர்களும் திருக்கல்யாணமுதலிய காரியங்களைக்குறித்துப்பேசப்போகின்றவரும் வருகின்றவரும் இப்பட்டணத்தெல்லையில் விழிகளுக்குத் தோற்றுகின்றவ்வாயில் நேத்திரோற்சவமாகக் காணப்படுகின்றனர். சூரபதுமன் ஆதியிற்செய்திருக்கின்ற தவ்முயற்சியினுல் இந்நகரத்திலிருக்கின்றவர்களில் நரம்புகள்தோற்ற வாடியும் தசையில்லாமல்உலர்ந்து வதங்கிய தேகத்தையும் நரைதிரை மூப்புகளினுல்வருந்திக் கோலூன்றித்தள்ளாடிநடக்கும் விருத்தப்பருவத்தினைப்பெற்றும் யமதரும ருக்கினையிற்பட்டுச் சாகின்றவரும் பிணிகளிற்பட்டுவருந்தியும் வறுமையாளராய் உழலப்பட்டவர்களும் காணப்படவில்லை. ஆதலாற் றவத்தினும் உறுதியானதொன்றுமில்லை. சூரபதுமன் ஆக்கினைக்குட்பட்டுப் பால்தயிர்முதலிய சத்தசமுத்திரங்கள் தமதுவிசாலமாகிய உருவங்களைச்சுருக்கி யிந்தமயேந்திரபுரியிலிருக்கின்ற உப்பரிகைகள் மேடைகள் இல்லிடங்கள் வண்டகசாலைகள்முதலிய தலங்களில் தனித்தனியாக குளங்கள் கேணிகளாகவிருந்து இப்பட்டணத்திற்றங்கியிருக்கின்றவர்களுக்குக் காலங்களில் வேண்டியவைகளைவழங்கிவருகின்றது. லட்சுமீகரம்பொருந்திய இவ்வீதிகளிலிராகின்றசிலஅவுணமாதர்கள்கள்ளுஞ்சாராயமுங் கலந்துண்டவெறியினுல்இடையிற்றரித்திருக்கின்றபட்டாடை நழுகிப்போக நாணத்தையும்போக்கிக்கடககங்கணங்களையணிந்து செந்தாமரைபோலவிளங்கும் கரங்களைக்கொட்டிக்கொண்டு கண்டவர்கள்களித்து நகைக்கத்தக்கதாகக்குரவைக்கூத்தாடுகின்றனர்

இந்தவிசாலமாகிய வீதிகளில் வாசஞ்செய்கின்றவடிவுள்ளகாளையரும் திலதப்பொட்டணிந்து சந்திரனையொப்பப் பிரகாசிக்கின்ற முகாரவிந்தங்களைப்பெற்ற கன்னிகையரும் அலங்கரித்துக்கொண்டு நிலைக்கண்ணடிகளிற் பார்த்து மனதுக்குரம்மியப்படாமல் அடிக்கடிக்குக் கழற்றியெரிகின்ற நவரத்தினமயமாகிய பணிகளும் பொன்னுடைகளும் கற்பகமலர்மாலைகளும் கலவைச்சாந்துகளும் நெருங்கிச் சகலரும் புகழ்கின்ற பொன்னுலகத்தைப்போல எக்காலத்தும் இராசவீதிகள் விளங்குகின்றனதங்கமயமாகிய தண்டை சதங்கைமுதலிய ஆபரணங்களையும் புஷ்பமாலைகளையும் அலங்கரித்துக்கொண்டு தோழியர்களுடன்கலந்து அழகிய வீதிகளில்விளையாடித்திரிகின்ற சிறுபெண்கள் பொன்முச்சில்களில் முத்துகளை வாரிவாரிக்கொழித்து வருமுன்னிலையிற் பெருகுந் துகளானவைஇந்நகரமுற்றும்பரந்துசமுத்திரத்தைச்சேருக்கிக் கழிகளைமேடாக்கி மீறி பொன்னுலகையும் தூழிபட்டுவருந்தச் செய்கின்றது இந்தமயேந்திரபுரியில் வாசஞ்செய்கின்ற இளவரசர்கள் செம்மலரினுலும் வெண்மலர்களினுலும் சோடித்திராகின்ற பந்துகளை வானத்தெறியுந் தோறும் மேலோக்கிமறிந்து விழ்வதைப் பார்க்குமிடத்திற் சந்திரசூரியர்கள் தங்கள் நிலைகளிற்றப்பி யிறங்குவதை யொத்துக் காட்டுகின்றது புசபலபராக்கிரம சாலிகளாகிய அவுணவீரர்கள் மதுவுண்ட வெறியினுற்கள்ளைப்பொற்கிண்ணங்களில் நிரப்பிக்கொண்டு பொற்பஞ்சரங்களில் வளர்கின்ற ஆண்கிளிகளுக்குக் குடிப்பித்து காமத்தியின்புறச்செய்து மனதுக்கினிய ஆண்வருக்கிப் பார்த்திருக்கப் பேடை அன்னங்களின் மீதேற்றிப் புணரச்செய்து அதனைக்கண்டு சரீரம்பூரித்து நகைத்துத் தாங்களுங்காமுற்றுத் தத்தந்தேவிமார்களை வலிதிற்புணர்ந்தின்புற்றுக் களித்திருக்கின்றனர், பானுகோபன் சிறைசாய்த்து வந்தடைத்திருக்கின்ற தேவர்கள் சிரங்களினணிந்திருந்த வயிரமுடிகளைச் சிலகாமுகர் பறித்துக்கொண்டு அதிற்பதித்திருக்கின்ற இரத்தினங்களை ஊடலினுலுதைத்துச் சிவந்திருக்கின்ற தங்கள் சிகைழினிடத்திற் செம்பஞ்சூட்டிய பாதங்களின் குறியைக் காட்டியிருக்கின்ற பரத்தையர்தரிக்கின்ற பாதுகைகளில் அழகுபெறப்பதிந்துவெகுமதியாகக்கொடுத்துப் பிணக்கைத்தீர்த்துக்குலாவுகின்றனர், விசாலமாய்நீண்டிருக்கின்றஇவ்வீதிகளிற்றிரிகின்ற சிலகாமுகராகிய அவுணர்கள்அக்கினிமுதலிய தேவர்கள் வேதப்பிராமணர் பெரியோர்கள்பந்துக்கள்சாட்சியாகத் திருமணஞ்செய்த கற்புடையதேவியர் வருந்திவாடத் தக்கதாகஅவர்களைவிரும்பாமற் பிறர்நகைத்து நிந்திக்கப் பிராணனுக்குத்துணிந்து அன்னியர் தேவியர்களிடத்துக் காமுற்றுச்சோரத்திற் புணர்ந்துவருகின்றனர், இக்கொடிய செய்கையையும் என்விழிகளினுற் பார்ப்பதோவென்று வீரவாகுதேவர் வருந்தினவராய் அப்புறம்நோக்கு மிடத்தில் இழைநுழைய விடம்பெறுமல் விம்மிநெருங்கித் தேமல்பரந்துமுத்துமாலை மோகனமாலைகளைத் தரித்துத் தங்கக்கலசங்களைப்போலப்பொலிவாயிருக்கின்ற கொங்கைகளைப்பெற்ற இயகூமங்கையரும் கண்டவர்கள் மனதைக்குழைந்து வாடச்செய்யும்வனப்புள்ள அரம்பையர்களும் மனதிலிரக்கமென்பதில்லாத கடின்சித்தமுடைய அவுணப்பாவையரும் அரக்கர்பெண்களும் மற்றுமிராநின்றசுந்தரமுள்ளபருவமங்கையர்களுக் கணிகையர்களாக மாடமாளிகைகளிலிருந்துகாமுகராகிய அவுணவீரருக் கின்பத்தைக்கொடுத்துக்கொண்டு வருகின்றனர், இவையன்றியும் சந்தனகளபகஸ்தூரிக்குழம்பும் கதம்பப்பொடியும் பரிமளமிகுத்தபுஷ்பச்செண்டுகளும் சுகந்தமலர்மாலைகளும் பனிநீர்த்தூவல்களும் மற்றுமிராநின்ற சின்னங்களைக்கொண்டு சுந்தரவதிகளாகிய பரத்தையர்கள் காளைப்பருவத்தினராகிய அவுணராச குமாரர்களுடன் வங்கணமாகக்கூடி விளையாடுகின்றதைப் பார்த்தவர்கள் மனதைமயக்கிஅவர்கள் மையலிற்படச்செய்வதால் அனங்கனுகிய மன்மதன்உருக்கொண்டுவாசமாய்த் தன்தொழிலைச் செய்திருக்கின்றவீதியிதுதானேவென்று ஆச்சரியமாகப்பேசினவராய் அழகியஅன்னப் பட்சிகள் பதுமாகத்தையொத்த நிறத்தினைவாய்ந்த மாடப்புருக்கள் பசியகலாபங்களைப்படைத்த மயிலினங்கள்பஞ்சவர்னக்கிள்ளைகள் நாகணவாய்ப் பறவைகள்முதலிய சிறந்த பட்சிசாதிகளனைத்தும் இந்நகரத்திலிருக்கின்ற மங்கையர்கரங்களினும் மாடமாளிகைகளினும் வாசமாய்ப் பொற்கிண்ணங்களிற் பாலகனிகளைத் தரத்தின் றுகளித்திருக்கின்றன இந்த வீரமாமயேந்திரத்தில் வாசஞ்செய்கின்ற இராசகுமாரர்சள் தாங்கள் திருமணஞ்செய்துகொண்ட மனைவியிடத்தினும் காந்தருவவிவாக மூலமாகச்

சம்பாதித்தபாவையர்களிடத்தினும்காமுற்றுத்தேடிவை த்திருக்கும் இரதிகளையொத்த மாதர்களிடத்தினும் சுந்த ரவதிகளாகிய கணிகையரிடத்தினும் வண்டினங்கள்பற்ப லமலர்களினிடத்திறங்கித்தேனையுண்டுகளிப்பதைப்போ ல இன்பநலங்களை யனுபவித்துஇஷ்டாலாபமாகவிருக்கி ன்றர்.

இவையன்றியிற் சிலகன்னியர் செம்பஞ்சுக்குழம்பினு ற் சித்திரங்களெழுதப்பட்டுப் பொற்றண்டை சதங்கைக ளணிந்து செந்தாமரைமலரையொப்ப விளங்கும் பாதங்க ள் மத்தளத்தைப்போலச் சதிமுறையில் மதிக்கவும்தங்க ச்சங்கிலியைப்பட்டு முத்தாரங்கள்முதலியஆபரணங் களைத்தாங்கி யிறுமாந்து யமனையொப்பக்கண்டவர் மன தைவாட்டும் கொங்கைகள் தாளங்களைப்போற் றுக்கவும் கோகிலங்களை நிகர்த்து வசனித்துக் கருப்புவில்லையுடை ய மன்மதனும் மயங்கும்படியாக உத்தரியப்போர்வை ச ரிந்து தனங்கள்தோற்றத் தங்கள் மனதுக்கினியகணவரு டன் கலந்துகொண்டாலந்தித்தும் குரவையாடல்கள் மு தலியவேடிக்கைகளைச் செய்துகொண்டுஇனை பிரியாமலி ருக்கின்றனர், நவரத்தினமயமாக விளங்கும் மேடைகளி ன்மேல் நிலைகளில்வாசஞ்செய்கின்றசுந்தரவதிகளாகிய சி லகன்னியர்கள் தங்கள்கணவருடன்சொக்கட்டான்முதலி ய விளையாடல்களைச்செய்துகொண்டு வரும்போது காம விகாரமேலிட்டுத் தம்பதிசமேதராய்ப்பொன்மஞ்சங்களி ன்மீது சேர்ந்துஇரவுபகலென்றெண்ணுமல்மதனநூலின் படிக்குச் சுரதலீலைகளைச்செய்துசொவ்வைக்கனியையொ த்த இதழ்வெளுக்கவும் சந்திரனையொத்ததிருமுகமண்ட லத்தில் முத்துக்களைப்போல வியர்வைகாட்டவும் இருவர் மனமும் ஒன்றுபடப் புணர்ந்துகளித்திருக்கின்றனர், சி ல வனிதையர்கள் தங்களிஷ்டதேவதைகளை மனைகளில் நிறுத்திப்புஷ்பங்களைக்கொண்டு அருச்சித்துஆடுகோழிமு தலிய பலிகளைக்கொடுத்துத்தூபங்களைக்காட்டி முற்றிய பின்பு பறைமுதலிய வாத்தியங்கள்முழங்கஅத்தேவதை உருவைக்கொண்டுபோய்க் கங்கையிற்சேர்த்துத் திரும்பு ங்காலையில் தெய்வமருளுறைக்கூத்தாடிக்குறிகள்சொல்லி த் தங்கள் மனைகளிற்சேருகின்றனர், வெற்றிமாலைதரித்த வேலையொத்த விழிகளைப்படைத்த இராஜகன்னியர்களு ம்காமனும்நாணத்தக்கவடிவுள்ள இராசகுமாரர்களும்வா சஞ்செய்கின்ற பொன்மேடைகளின் மேற்புறங்களில்நா ட்டி அசைந்திருக்கின்ற தோரணங்களானவைமகரமச்ச ங்களுலவி யிருக்கின்றசமுத்திரத்திலோடும்கப்பல்களில் நிறுத்தியிருக்கின்ற பாய்மரங்களைப்போலக் காட்டநின்ற து, சித்திரபடாம் பொருந்திய மத்தகத்தையுடையயானை கள் குதிரைகள் தேர்கள்வீரர்கள் சுற்றிப்போகவும்ஈட்டி கதைமுதலியபடைகளைக்கொண்டு பரிசனர்காத்து நடக்க வும் முரசங்கள்பறைகளைமுன்னம்முழக்கிநடக்கவும்இத ன்மத்தியில் இராசபட்டத்தானைகள் அளவற்றவைஅரண் மனையை நோக்கிப்போகின்றன தேன்கள்சொரிந்துவண் டினங்கள்மொய்த்திராநின்ற புஷ்பமாலைகளை தரித்திருக் கின்ற சிகையினையும் மேகத்தைப்போன்றகறுத்தமேனி யையுமுடைய சிலஅவுணவீரர்கள் பல்வகை குதிரை யா னைவற்றின்மீது ஆரோகணித்துக் கொடி கொடைமகர தோரணம் விருதுகள்மங்கல முரசம்சின்னமுதலிய பரி வட்டணைகள் முன்செல்ல இராசவீதிகளிற் பவனிவருகி ன்றனர், இத்தகையசிறப்புகள் வாய்ந்தஇந்தப்பட்டணத் தி லிருக்கின்ற பலருக்கும்உபயோகமாகும் பொருட்டுச் சிங்கம்புலிகரடி யானைபன்றிமான்கடமை முதலியபெருத் தமிருகங்களின் மாம்சங்களை வண்டிகளில் நிரப்பிக்கொ ண்டுதெருக்கள்தோறுந்திரிந்துதிரிந்து அவரவர்களுக்குச் சம்மதமானபண்டங்களைக்கொடுத்துக் கொண்டுபோகின் றனர்.

மேகங்கள்சஞ்சரிக்கின்ற உன்னதமுள்ள கோபுரவாயி ல்களும் பொன்மதிலும் பலசிகரங்களும் நிலைகளும்சோ லைகளும் வாவிகளும்மற்றும்வேண்டும் சிறப்புக ளில்லா தஅரண்மனைகளொன்றுங்காணவில்லைமேகங்களைப்போ ல ஜயபேரிமுழங்கவும் வானத்திற்படபடென்றசையும்ப டிக்குப் பலதுசபடாங்கள் மகரதோரணங்கள் அருகுகள் ஆலவட்டங்கள் தாங்கிநடக்கவும் அருகுதீவர்த்திகள்பலர் தாங்கிப்போகவும் சுத்தவீரர்களாகியசேவகர்கள்ஆயுதபா ணிகளாய் நாற்புறங்களினுஞ் சூழ்ந்து காத்துச்செல்லவு ம் ஒற்றைச்சாய்மரை யிரட்டைச்சாய்மரைகளையிருபாரி சங்களினும் வீசிக்கொண்டு போகவும்தவளக் குடைக ளைத்தாங்கிநடக்கவும் இவ்விதவலங்கங்களின்மத்தியில்இ ராசகுமாரர்கள் விருஷபங்களைப்போலக் கம்பீரமாக வா கனங்களிற் போகின்றனரென, இவ்விதங்களில் அந்ந கரமுற்றினு மிராநின்ற அதிசயங்களைப்பார்வையிட்டவீ ரவாகுதேவர் பேசுகின்றனர், பலவளங்களைப்பெற்றிருக் கின்ற பூமிதேவியானவள் அளவற்றகாலம் அரியதவங்க ளைச்செய்து வருந்தியதற்குப்பெற்ற பலப்பிராப்தியைப் போல ஒப்பனையிலடங்காத பலசிறப்புகளைக்கொண்டிரு க்கின்ற வீரமாமயேந்திரபுரியில் அடர்ந்திருக்கின்றம்கத யிஸ்வரியப் பெருக்கினை யிரண்டுவிழிகளைப்பெற்றிருக்கி ன்ற யான்நிதானித்துப்புகழ்வதற்களிதோதிரிலோகங்க ளையுஞ் சிருஷ்டிக்கவல்ல பிரமனுலும்இப்பதியின்பெரு மைகளைவர்னிக்கக்கூடுவதோபலயுகங்கள்அரியதவங்களை ச்செய்து சிவபிரான்கடாட்சத்தினுல்அளவிறந்தவிழிகளை ப்பெற்ற மகத்துக்களிருக்கின் அவர்களாலொருகாலம்இ தன்பெருமைகளை மதித்துப்பேசப்படுமெனநினைக்கவே ண்டும் அப்படிக்குப்பெற்றுக் கண்டபோதினும் ஒருவா யினுல் விரித்துச்சொல்லப்படாது மேகசாலங்கள் தினந் தோறும் பானஞ்செய்தபோதினும் சமுத்திரநீர்குறைப ட்டுக் காட்டுவதில்லை அதைப்போலவே யிச்சிறந்த மயே ந்திரபுரியினது செல்வங்கள் ஒருபிரமாணத்திலடங்கப்ப ட்ட தாகக்காணவில்லை பற்பலவிழிகளைப்பெற்றுகோடா கோடி வாயினைப்படைத்த ஒருவன் பரமசிவகடாட்சத்தி னுல் பூர்த்தியாக நிதானித்துப்பேசினும்கேட்கப்பட்டவ னுக்கு ஒருசெவிபோதாது பலகோடிவேண்டும்ஆதலால் விரித்துவிரித்துப்பேசுவதிற்பயனில்லை அமோகமாகியவி ழிகளும், வாய்களும், செவிகளும், அறிவும்பெற்றுச்சிவ நாதன் கடாட்ச வீட்சணியமுங்கிடைப்பின் ஒருபரியாய மாகக் கணிக்கலாகுமாயினும் ஆயிரயுகங்கள்வேறொருசி ந்தனையுமில்லாமற் குறிக்கவேண்டும். அப்போதும்இந்த ஒப்புவமையற்ற பட்டணத்தின்சிறப்புகளைமுற்றினும்அ ளக்கவெண்ணுது தேவர்கள்முதலாயினர் இதன்பெருமை கள் முழுவதுந்தெரிந்து அனுபவித்துக்களிக்கும் பொரு ட்டுப்பற்பலயுகங்கள்அரியதவங்களைச்செய்து பெற்றவர முயற்சியினுல் ஆயிரம் பதினுயிரம்கோடியித்தொகைசி ரங்களைப்படைத்து இத்தலத்தில் அவதரித்து இதிற்பட் டஅளவற்றசெல்வ வளங்களைக்கண்டுகேட்டு பின்புற்று

மிருக்கின்றனர், என்மனந்திருப்தி பெறும்படிக்குத் தேவாதிதேவனாகிய ஆறுமுகசுவாமியார் கிருபையினால் விசுவரூபத்தைக் கொண்டு இத்தினமே யிச்செல்வவளங்களைக் கண்டுபோக நினைப்பேனாயில் அத்தோற்றத்தைக் கண்டபகைவர்சண்டைக்குநேர்வர் அதனாற்காலதாமசமாகும் மேலும்உந்திக்கமலத்திலுதித்தபிரமனறியாதவேதப்பொருளை அகஸ்தியருக்கு வெளியிட்டஎமதுகர்த்தனாகிய சரவணபவன் கட்டளையிட்டிருக்கின்ற பணிவிடையை மறந்து இச்சிறப்புகளைப்பெரிதாகவெண்ணிப்பார்த்திருப்பது என்னொத்தவனுக்கடாதுஅழகுமன்று ஆதலால் விரைவில்இப்பதியினுள்ளே பிரவேசிப்பேனெனநிதானித்தவராய் மேலும்சில சங்கைகொண்டுபேசுகின்றனர்.

தங்கமயமா யிரத்தினகாந்திகளைவீசிச்சித்திரஅலங்காரங்களைப்பெற்றுமேருவையொப்பப்பாரித்திராநின்றமேடைகள் உப்பரிகைகள் அரண்மனைகளிருபாரிசங்களினும் நெருங்கிச்சூரியனுடைய கிரணங்கள்தோற்றாமல் நிழல்பரந்துகுளிர்ந்திருக்கும் நீண்டதெருக்களில் இப்போது நான்கொண்டிருக்கும் அணுப்பிரமாண வுருவத்துடன்போக யத்தனித்தபோதினும்ரதகஜதுரகபதாதிகளும் நகரவாசிகளும் நெருங்கிக் கிரீடங்களுடன்கிரீடங்கள்புசங்களுடன்புசங்கள் தாக்கச் செல்லுகின்றபெருக்கில் தப்பித்துக்கொண்டுபோகக் கூடாதாகையாற்ககனமார்க்கமாக நடப்பது தகுதியெனத்தீர்மானித்துத்தாம்வீற்றிருந்த கோபுரவாயிலைக்கடந்து வானத்திற்றாவிச் சிலதூரஞ்சென்றவராய்ச் சூரபதுமன் பிரதமகுமாரனாகியபானுகோபன் வாசஞ்செய்கின்ற நவரத்தினமயமாகிய மேடையின் மேல்நின்று அதின்சிங்காரங்கள் முற்றினுங்கண்டு ஆச்சரியப்பட்டு இதுபரியந்தம் பார்த்துவந்த செல்வங்களைப் பெரிதாக மதித்தனம்இதில் ஆயிரத்திலொருபங்குக்கொவ்வாது இவர்கள் தவமுயற்சிகளை யாவரால்அளக்கப்படுமெனப்புகழ்ந்து அத்தலத்தைநீங்கி எக்காலத்தினும் அக்கினிசொலித் திருக்கும் விழிகளையுடையஇரண்டாவது குமாரன் அக்கினிமுகன் வாசஞ்செய்கின்றஉப்பரிகையின் மீதிலிறங்கி அத்தலத்திற் றோற்றுகின்ற வினோதங்களைப்பார்த்துஒன்றுக்கொன்று அதிகரித்தவளமிகுத்ததாக விருக்கின்றது இவர்கள்சம்பத்தின் பெருக்கையளவிட்டுமுடியாது பொன்னுலகவாசியென்றும் திரிலோக சக்கிரேஸ்வரனென்றும் புகழாநின்ற தேவேந்திரன் சம்பத்தைப்பெரிதாகப் பேசுவது அபலமென்றிகழ்ந்துஅதைக் கடந்து அபராஞ்சியினும் மிகுத்து விளங்குகின்ற தேகத்தைப்படைத்த ஆடகனென்னும் மூன்றாவதுகுமாரன்வீற்றிருக்கின்ற மாளிகையினிடத்திற் பாய்ந்துஅதன்பெருமிதங்களையுங் கண்டுமதித்து இந்தச்சுந்தரத்துக்கு எந்தவுலகங்களும்ஈடுபடாதுமேலும் குபேரனையிவர்களுழியனாக வைக்கவேண்டும் அத்தகைய சம்பத்துகளெங்குநிறைந்திருக்கின்றதெனக்கொண்டாடி அதையுந்தாண்டிநவரத்தினமயமாகிய கிரீடங்கள் சொலித்துக் கொண்டிருக்கும் பத்துத்தலைகளைப்பெற்ற வச்சிரவாகுவென்னும்நான்காவதுபிள்ளை வாசஞ்செய்கின்ற மாளிகையின்மீதில்நின்று அத்தலத்திலிருக்கின்ற வேடிக்கைகளைப் பிரமனாலும் எண்ணிமுடியாதெனத் தீர்மானித்து அதையுங்கடந்து மற்றபிள்ளைகள் மூவாயிரர் வீற்றிருக்கின்ற மேடைகள்தோறும் போய்ப்போய் அத்தலங்களிற்காணப்படுகின்ற செல்வப்பெருக்கைக்கண்டு அதிசயித்தவராய்இத்தகையவளங்கள் இவர்களுக்குக் கிடைத்ததுமிகவும் அற்புதம்முக்கியமாகச்சொல்லநின்ற வைகுந்தநகரையிந்தவீரமா மயேந்திரபுரிக்கு ஒப்பாகப்பேசலாகாது ஆதலால்என்னால் அளவிடப்படுவதோ வென்றுபேசி ஆயிரத்தெட்டண்டங்களுக் கதிபனானசூரபதுமன் மனதுக்கிசைந்தமந்திராலோசனைகளைச்சொல்லவல்லமந்திரிகளிற் றலைமைபெற்றிருக்கின்ற தருமகோபன் அரண்மனைமீதிற் பாய்ந்து அதன்மகிமைகளைப்பார்த்து இதற்கொன்றும்ஒப்புச்சொல்லத்தகாதெனப்பேசி அதன்மீதுவிளங்குகின்றசொர்னச்சிகரங்களி னொன்றில்நின்று கொடிய செய்கையையுடைய புலிக்கூட்டமத்தியில் மானினங்களகப்பட்டு வாடுவதைப்போல பாதகராகியஇராட்சதர்காவலிற்பட்டு வருந்துகின்ற இந்திரகுமாரன் சயந்தன்முதலாகியதேவர்கள் வாசஞ்செய்யும் சிறைச்சாலைகளை விழிகளைப்பரப்பி நகரமுற்றினும் பார்ப்பதாயினர்.

---

கறையடித்தொகைபிரிதலுங்கயமுனிகவர்ந்து
மறையிடத்தினில்வேட்டுவருய்ப்பவைகுவபோற்
பொறையுடைத்துயரிந்திரன்போந்தபின்புல்லார்
சிறையிலுற்றவர்செய்கையிற்சிறிதுரைசெய்வாம்.

---

## சயந்தன்புலம்புறுபடலம்.

பரஞ்சுடர்நெடுங்கணைபடுத்தபாயலில்
வருஞ்சசியனையதோர்வாணுதற்சசி
தருஞ்சிறுகுமரனாஞ்சயந்தன்வ்விடை
யருஞ்சிறையிருந்தனனமரர்தம்மொடும்.

---

வாரீர் சவுனகாதிரிஷிகளேயிதுபரியந்தம்வீரவாகுதேவர்மயேந்திரபுரியைச்சேர்ந்துநடந்தசரித்திரங்களைச்சொன்னோம்இனிமேல்சயந்தன்முதலாகியதேவர்கள்காவலிலடங்கிக் கிலேசிக்கின்றசெய்திகளையும் தெரிவிக்கின்றனம் தாய்தந்தையராகிய யானைகள்நீங்கியகாலத்தில்தனித்திருந்த யானைக்குட்டியைப் பற்றிக்கொண்டுபோய்வேடரானவர்கள் மறைவிடத்திற்பதனப்படுத்தியபோது அந்தக்குட்டியானது ஒன்றுந் தோற்றாமற் றிகைத் திருப்பதைப் போலப் பொன்னுலகத்துக்கதிபனாய்த் திரிலோகசாம்பிராச்சியத்தை யனுபவித்திருந்த தேவேந்திரன் தன்னிருப்பிடத்தையும் செல்வத்தையும்விட்டுப் பனாதியாய்த்தன் தேவியுடன் போய்விட்ட பின்பு தேவர்கள் சூரன்பட்டணத்திற் சிறைபுகுந்து பட்டவருத்தங்களிற் சிலவற்றை சொல்லக் கேட்பீராக, சூரபதுமன் கட்டளையின்படிக்கு முன்னம் பானுகோபனானவன் பொன்னுலகத்தைக் கொளுத்திப் பூர்னச் சந்திரோதயம் போன்ற முகமண்டலத்தை யுடைய இந்திராணி புத்திரன் சயந்தன்முதலானவர்களைப் பிடித்துப் புயங்க ளொடியக் கட்டிக் கொண்டுபோய் மயேந்திர புரியிற் சேர்த்துக் காவல் படுத்தியகாலத்தில் தவள நிறத்தைப் பெற்ற தேகத்தை வாய்ந்ததேவர்கள் சூழ்ந்துபோற்ற அவர்கள்மத்தியிற்பிதாவைப்போலக் கரியதேகத்தைப்படைத்த சயந்தனிருந்ததோற்ற மெப்படிக்குக் காட்டுவதெனில், பூர்வத்தில் அமுதெழத் திருப்பாற்கடலைக் கடையும்போது அதன் மத்தியிற் காளமேகவண்ணரான மகாவிஷ்ணுநின்றதைப்

போன்றும் கரியமேகத்தையொத்த காத்திரவுடலைப்பெ
ற்றிருக்கின்ற அவுணர்காவலில் பவுத்திரதேகிகளாகியவி
ண்ணவர்கள் மத்தியிற் சயந்தனிருப்பதைச்சொல்லுமிட
த்தில் இராகுகேதுவையொத்த சர்ப்பங்கள்நெருங்கிக்க
விந்தகாலத்திற் றோற்றுநின்ற பூரணச்சந்திரன்தேகத்தி
ற்காட்டும் களங்கத்துக்குச் சமதையாகவும் பாலபருவத்
தில் ஜயத்திற்குரியதனுர்வித்தையையாசாரியனிடத்திற்க
ற்கின்றகாலத்தில்வில்லைப்பற்றியும் பாணங்களை பிரயோ
கித்தும்வருந்தியதினாற் கரங்கள் காய்த்திருப்பதைப்போ
லவே விலங்குபூண்டு பலநாள்களாய்க் காவலிற்பட்டுஉழ
லுகின்றதினாற் பாதங்களினுங் கறுத்த தழும்புகள் விள
ங்கவும், முயற்சிபெற்றமானமும், சவுரியமும் வெட்கமு
ம்மங்கியடங்கவும் தீராதபழிப்பென்னுந்துக்கத்தீக்கடலி
ல் அழுந்தியுழலுமுன்னிலையி லெழுகின்ற சுவாலையான
து பிராணனை வாட்ட வாடிக்களைத்தும்நினைத்தற்கரியஅ
ரியகாவலிற் பலயுகங்களாகக் கட்டுப்பட்டிருந்ததினால்நே
ர்ந்ததீராத அபவாதத்தைப் போக்கிக்கொள்ளும்படிக்கு
ப் பிராணனைவிடநினைந்தும் அமுதமுண்டிருக்கின்ற மு
யற்சியினால் நாசமடையாமல்உயிரைத்தாங்கிவருந்தியும்,
ஒருவனைக் கூரியவாளினாற் சின்னபின்னப்படச்சேதித்த
காலத்தில் அவன்படும் துன்பத்துக்குமேலாக அவுணப்
பாதகரால் அலைக்கப்பட்டுக் கிலேசித்தும்ஒருகணப்போ
தை அளவற்றயுகங்களைப்போல வாடிக்கழித்தும் சிறந்த
மரகத ரத்தினத்தினாற்செய்யப்பட்ட பாவையானதுமாசு
ண்டு பிரகாசமழுங்கிக் காட்டுவதைப்போலத் திருமேனி
யின்காந்திமழுங்கிப் பொலிவற்றுப் புஷ்பமாலைஅனலிற்
பட்டதைப்போலச் சரீரம் இளைத்துவதங்கிபுலிக்கூட்ட
த்தினைப்போன்ற கொடிய அவுணர்காவலில்மானபிமான
மிழந்து பலயுகங்களாக வருந்துகின்றசயந்தன்ஒரு நிமை
ப்போதாவது நித்திரை செய்வானாயில் இத்தகையதுன்ப
ங்களை மறந்திருப்பன், தேவர்களுக்கு உறக்கமென்பதில்
லாதபடியால் எக்காலத்தும் ஒருவிததுயரத்தைப்பெற்று
வாடினன்.

இவ்விதமாக அரிய துக்கசாகரத்திற்பட்டுஇந்திரதனை
யன் கிலேசித்திருக்கின்றபடியால் தவங்களைச்செய்த பல
ப்பிராப்தியினால் தேவனாய்ச் சகலசெல்வங்களையும்அனு
பவித்துச் சவுக்கியத்திலிருப்பனெனச்சொல்லுவதுதகுதி
யாகக்காணவில்லை, விசனத்தினைத் தருமென்பது இதனா
ற்கண்டனம் இவையன்றியும் மரகதமணியினாற்செய்யப்
பட்டுப் பொன்மயமாக அலங்கரித்திருக்கின்ற ஒருசித்தி
ரப்பிரதமையானது மலினப்பட்டிருப்பதுபோல சுந்தர
வடிவுள்ள தனது தேககாந்திமாறி மழுங்கிநாள்தோறும்
குரூரமான செய்கையையுடைய காவலாளிகளாகிய அவு
ணரால் படாதபாடுகளைப்பட்டும்அவர்களைக்காணும்போ
து பூனைவாயிலகப்பட்ட பசியகிள்ளையைப்போல நடுநடு
ங்கியும் தான்மீளுவதற்குரியயாதொருஏதுவையுங்காணா
தவனாய் மனம்நிலைபெருமாற் கலங்கிஎன்செய்வோமென்
று பலநினைவுகளைக் கொண்டலைந்து மனக்கிலேசமாகிய
அனல்மேலிட்டுப் பெருமூச்சினிடத்தெழும்சுவாலையினா
ல் பசியமேனி கரிகரித்து ஒளிமழுங்கிவாடிவிழிகளில்இ
டைவிடாமல் நீரைப்பெருக்கிக்கொண்டு திகைத்துத் தி
கைத்துப்பார்த்து தனக்கடுத்த துக்கவருத்தங்களையெண்
ணி யெண்ணி அனலிற்பட்ட வெண்ணெயைப்போலக்க
ரைந்து கரைந்துபுலம்புவன் இதைக்காணுவராயிற் காவ
லாளிகளென் செய்வரோ வென்னும் ஏக்கத்தினாற்றுரித
மாய்ச் செந்தாமரையையொத்த கரங்களினால் விழிகளிற்
பெருகும் நீரைத்துடைத்து வாயைமூடிக்கொள்ளுவன்
கொடியஅவுணப்பாதகர்கள் கூடிக்கொண்டு இந்தசயந்த
னுக்கு எக்காலத்திலும்சிறை நீங்குவதில்லை, யிவன்பிதா
வாகிய இந்திரன்இந்திராணியுடன்மறைந்திருந்தவனைக்க
ண்டு நம்மவர்கள்பிடித்துவந்து அரசனேவலின்படிக்குச்
சிறையி லடைத்தனரெனச்சிலர்வசனிக்கக்கேட்டனம்,ஆ
தலால் இவனையினியாவர் மீட்கப்போகின்றனரெனப்பே
சிக்கொள்ளும் பொய்வசனத்தைக் கேட்டவுடன்அனலிற்
பட்ட வல்லிசாதக்கொடியைப்போல வாடிமூர்ச்சித்துவி
ழுந்து தேவர்கள்செய்யுஞ் சயித்திய உபசாரங்களில்உட
னேதேறியெழுந்து தான்கற்பகத்தருக்களின் நீழலிலிரு
ந்து சகலசவுக்கியங்களையும் அனுபவித்திருந்தவைபவங்
களைநினைந்து அவ்விதபேற்றினை யின்னமொருகாலம்பெ
றுவனோவென்று துக்கிப்பான். அத்தருக்களினலர்ந்தபு
தியமலர்களின் காம்புமுதலிய குற்றங்களைப்போக்கி மெ
ல்லிய இதழ்களைப்பரப்பி யலங்கரித்திருந்தமஞ்சத்திற்ப
ள்ளிகொண்டு அரம்பையர்கள் ஆலவட்டங்கள்வீச சவுக்
கியமாகவிருந்த சுகங்களையெண்ணி யெண்ணிப் பெருமூ
ச்செறிவன். ஸ்ரீமகாலட்சுமிக்குச் சமத்துவமாகியதேவக
ன்னியர்கள் தன்னிடத்தில் மோகங்கொண்டு தாதியர்களை
யனுப்புவித்து மேல்விழுந்துவந்து கட்டியணைந்துசரசச
ல்லாபங்களினாற் காமவின்பத்தைத்தந்த விதங்களைநினை
ந்து சோருவன், இந்திரபோகப் பெருக்கினைநினைந்துவா
டுவன். கேட்டதைவழங்கும் பெருமையையுடைய பஞ்ச
தருக்கள்நீழலிற் பலகாலம் போகபாக்கியங்களையனுபவி
க்கச்செய்திருந்த பொன்னுலகமானதுபானுகோபனால்எ
ரிந்துகரிந்து சாம்பலாயிற்றேவென வாடுவன், சிவபிரா
ன் கிருபாகடாட்சத்தினாற் பழையபடிக்குத்தெய்வபோக
ங்களைப் பெறவல்லனோவெனச்சோபிப்பன், ஆதியிற்கடி
னசித்தமுடைய சூரபதுமன்செலுத்தியசேனைகளுக்கஞ்
சிக்குயிலுருக்கொண் டோடியொளித்திருக்கின்றதாய்தந்
தையர் எத்தலத்திலிருக்கின்றனரோ! என்னபாடு படுகி
ன்றனரோ! பகைவர்கைப்பட்டு வருந்துகின்றனரோ! யா
துந்தெரியவில்லை யிதற்கென்செய்வேனெனக் கிலேசிப்ப
ன், நான்புத்திரனாகப்பிறந்து அவர்களுக்கித்தகையதுன்
பங்கள் நேர்ந்ததே யெனக் கிலேசிப்பன், தாய்தந்தையர்
பொன்னாட்டைவிட்டபின்பு பூலோகத்திற் சேர்ந்திருக்கி
ன்றனரெனச் சிலர்சொல்லக்கேட்டனம். அவர்கள்வாசஞ்
செய்கின்ற தலத்தைக்குறிப்பாகக்காட்டுவார்களைக்காணே
னேயென்று களைப்பான்.

சிலதினங்களுக்குமுன்னம் இவ்வரியகாவலில்வருந்திக்
காவலாளிகளாகிய அவுணப்பாதகரால் நேருந்துன்பங்க
ளைப் பொறுக்கக்கூடாமையால்தப்பித்துக்கொண்டோடி
ப்போன தேவர்கள்பிதாவைக்கண்டனரோ! அடியேன்மீ
ளுவதற்கொரு ஏதுவையோசிக்கின்றனரோ? அல்லதுமீ
ளவும் அவுணர்களிடத்தகப்பட்டு வருந்து கின்றனரோ?
மாண்டனரோ! ஒன்றுந்தோற்றவில்லை, பிதாவானவர் நீ
ங்கியகாலத்தில் விண்ணுலகத்தையும் அதிற்பட்டதேவர்
களையும் நான்பாதுகாத்திருந்தது நேத்தி நேத்தி யென்
று தன்னைவெறுத்துக்கொள்ளுவன்,இப்பதியைக்கடந்து
போன தேவர்கள் தங்கள்வருத்தங்களையுஞ் சூரன்கொடு
மைகளையும்விரித்துச்சொல்லக்கேட்டு மனந்தாபரியாமல்

என்பிதாவானவர் பார்ப்பதிபங்கனுகிய சிவபிரான் வா
சஞ்செய்திருக்கின்ற திருக்கயிலையைச்சேர்ந்துதங்கள்வரு
த்தங்களைச் சொல்லி முறையிட்டுக்கொள்ளப் போயிருக்
கின்றனரோ வென்பன், இவர்களைத்தேடித்திரிகின்ற அ
வுணர் விழிகளிற்படுவராயில் என்செய்வரோ! இதற்கஞ்
சித் தேகங்களைமறைத்து மாறுருக்கொண்டு ஒளித்திரு
க்கின்றனரோ வென்பன், அல்லதுதிருடரைப்போலப் பு
தர்கள் குகைகளிற்பதுங்கிக்காலங்கழிக்கின்றனரோவென்
பவன், ஓரிடத்தில்நிலைபெருமல் பூலோகமெங்கும்வலம்
வந்துழலுகின்றனரோ! என்செய்வே னென்பன், பரமசி
வகடாட்சத்தினுல் ஆயிரத்தெட்டண்டங்களையுநூற்றெ
ட்டு யுகங்கள்ஆளப்பெற்ற சூரபதுமன் கட்டளையின்படி
க்குவந்த அவுணர்கள் தேடித்தேடித் தாய்தந்தையரைக்
காணுமல் மீண்டனரோ! அல்லதுதெரிந்துபிடித்துவந்து
இத்தலத்திற் சிறைபடுத்தி யிருக்கின்றனரோவென்பன்,
அப்படிக்கு நேருமாயின் இப்பாதகர்கள் ஏசிக்காட்டுவர்,
அதுகாணுதபடியால் அவர்கள்இப்பாதகர்களுக் ககப்பட
வில்லை யிதற்குச்சந்தேகமு மில்லையென்று களிப்பன், ம
னதுக்கினிய புத்திரனுகிய என்னிடத்தில்அளவற்ற வின்
பத்தைப்பெற்றிருக்கின்ற தாய்தந்தையர்சர்வாயுதபாணி
களாகிய அவுணர்களைக்கண்டால் திகிற்பட்டுவாடிக்கிலே
சித்து என்படுவரோ! ஸ்ரீகாளகண்டமூர்த்தியேயெனத்து
க்கிப்பன், பானுகோபன் அளவற்ற சேனைகளைக்கூட்டிக்
கொண்டுவந்து பொன்னுலகைக்கொளுத்தித்தேவர்களையு
ம் அயிராவதத்தையும்வென்றுஏகபுத்திரனுகிய என்னை
யும் பாசத்தினுற் பிணித்திழுத்துவந்து மயேந்திரபுரியி
லிருக்கின்ற சிறைச்சாலையிலடைத்து கொடியஅவுணர் க
ண்ணிமையைப்போலக் காக்க இந்ததேவர்களுடன்வாடி
யிருக்கின்ற என்னிலைகளை நாராசத்தைக்காய்ச்சிச்செவிக
ளிற் செருகியதைப்போலக் கேள்விப்பட்ட என்னரியதா
யான இந்திராணியானவள்அனலிற்பட்டமெழுகைப்போ
ல மனமுருகி வயிற்றைப் பிசைந்துகொண்டு என்னென்
னநினைந்துபுலம்புவளோ!என்னைத்தேடித்திகைப்பளோ!
மகனேயெனக் கூவியழுவளோ? அக்காலத்தில் அருகிலி
ருக்கின்ற பிதாவானவர் தேறுதல்களைச்சொல்லிச்சோப
த்தைநீக்குவரோ? அல்லது தாயைத்தனிமையிற்பிரிந்து
எங்கேனும் போயிருக்கின்றனரோ! யாதுசெய்வேனென
ச்சோபிப்பன்.

ஒருகாலம் மாயைவஞ்சகங்களைக் கற்றிருக்கின்றபாதக
ராகிய அவுணர்கள் தாய்தந்தையரைக்கண்டு கொண்டுவந்
து என்னெதிரில்நிறுத்துவார்களோ! அக்காலத்திலாவது
அவர்களைக்கண்டு களைநீங்கியிருப்பேனே' இப்பாதகர்இ
ந்தவுதவியைச் செய்வாரோவென்பான், அளவற்றகாலங்
களாகச் சகிக்கப்படாத துக்கசாகரத்திலழுந்தி அவுணரு
க்குப் பயந்து ஒளித்திருக்கின்ற பழியைத்தீர்த்துக் கொ
ள்ளுகின்றதற்கு ஒருதந்திரங்களைக் காணுதபடியினுல்எ
ன்னிடத்திருக்கின்ற பட்சத்தையும் மறந்து இல்வாழ்க்
கையைவெறுத்துத் தவவேடங்கொண்டு விரதராய்த்தே
வாதிதேவனுகிய பரமனைநோக்கி அரியவிரதங்களைச் செ
ய்து அவர்கடாட்சத்தினுற் சிவசாயுச்சியப்பதவி பெ
ற்றனரோயாதொருசெய்தியுந்தெரியவில்லையேயெனவாடு
வன், ஜயசாலியாகிய பானுகோபன்பொன்னுலகத்துக்கு
வந்துசண்டைகொடுக்கும்போது என்னைத்தாங்கியிருந்த
அயிராவதமானது கோபித்துமேகத்தையொப்பக்குமுறி
க்கொண்டெதிர்த்து அவன்மார்பிற்ருக்கியகாலத்தில்இர
த்தின கிம்புரிக்கோடுகள் நான்கையும்பறிகொடுத்து அவ
ன்கைக்குத்தினுற் களைத்துவிழுந்தது, அதன்பின்புபிரா
ணனைப்பெற்றெழுந்ததோ! மாண்டதோ! அதன்காரண
மின்னதென்று சொல்லுகின்றவரைக்காணேனேயென்று
ஏங்குவன், பிராரத்துவ வினையின்படிக்குப் பிரமதேவர்
சிருஷ்டித்தகாலத்தில் நியமித்திருக்கின்றவினைப்போகங்
களை யனுபவித்தல்லது தீராதெனவேதங்களில் முறையி
டுகின்றது அவ்வாறே சகலருக்குஞ்சம்பவித்துவருவதை
க்கண்டிருந்தும் பாதகராகிய அவுணர்கள்கொடுமை செ
ய்கின்றனரென வெறுத்துக் கொள்ளுவதினுற் பிரயோச
னமென்னவென்று மனதைத்தேற்றுவன், திரிலோகங்க
ளினும் முக்கியமாகக் கொண்டாடும் வளமிகுத்தபொன்
னுடுகரிந்து சாம்பலாகவும், ஜயசாலியாகிய பிதாவும் கற்
புத்தன்மைகளிற் சிறந்திருக்கின்றதாயும், சுகசீவிகளாக
விருக்க ஏகபுத்திரனுகியயான்ஒழியாதசிறையிற்பட்டுவா
டியாதொருதுணையுமில்லாமற் கிலேசிப்பதற்குமுற்பிற
ப்பில் முடித்தபாதகமேதோ அதுதெரியுமாயின் தகுந்த
பரிகாரங்களைச் செய்துகொள்ளக்கடவேன். இதைச்சொ
ல்லுவாரைக் காணேனேயெனச் சிந்திப்பான். சூரபதும
ன் ஆதியிற்செய்த அரியதவத்துக்கிரங்கிசெக்கரஞ்சடை
யனுகிய சிவபிரான் அழியாதவயிரதேகத்தையும்,தீர்க்கா
யசையும், அளவிறந்த செல்வச்சம்பத்தினையும் மற்றும்
வேண்டிய வரங்களையுங் கடாட்சித்திருக்கின்றதால் அவ
ன் எக்காலத்தும் நாசமடையான்ஒருவராலும்ஜயிக்கப்ப
ட்டவனன்று மேலும் நான்வருந்துவதைக்கண்டிரங்கிவி
டுவிக்கவுமாட்டான் ஆதலால் ஓ! பார்ப்பதிபாகனே?லோ
கநாயகனே! ஏழைபங்காளனே! அடியருக்கெளியகட்வு
ளே? மும்மூர்த்திகளுக்கும்முதல்வனுகவிருக்கின்றஓ! சி
வபிரானே? அடியேனிப்பாதகராகிய அவுணரால் விலங்
குபூண்டு மானபங்கப்பட்டுத் துக்கசாகரத்திலழுந்தி வா
டுகின்ற விந்தசிறையானது இனிஎக்காலத்திற் றீரவிருக்
கின்றது இப்பாடுபட்டவர்கள் விண்மண்பாதலமென்னுந்
திரிலோகங்களினும் யாவருமிருக்கமாட்டார்கள் இத்துன்
பங்களை யனுபவிப்பாயெனப் பிரமனென்தலையிலெழுதி
னுனேவென்றழுவான்.

சகலரும்புகழ்கின்ற செல்வமிகுதியையுடைய தெய்வ
லோகவாழ்வைப்போக்கித் திரிலோகாதிபதியாகவாழ்ந்த
அரசுரிமையையிழந்து தேன்களைச்சொரிந்துபரிமளித்து
மகரந்தங்களை யிறைத்துக் கவிந்திருக்கும்கற்பக நீழலில்
நவரத்தினமயமாகவிளங்குஞ்சிங்காதனத்தின்மீது வீற்றி
ருந்து முப்பத்துமுக்கோடிதேவர்கள்நாற்பத்தெண்ணுயி
ரமகரிஷிகள்போற்றவும்,காமதேனு,சங்கநிதி, பதுமநிதி,
முதலியவளங்கள் ஏவலின்படிக்குவழங்கிவரவும், அரசு
செலுத்தியஇந்திரவோலக்கத்தையும், அரம்பையூர்வசிதி
லோத்தமையாதியாகியதேவகன்னியர்கள்பணிவிடைகளை
ச்செய்துவரநவரத்தினமயமாகியஅரண்மனையில்வீற்றிரு
க்கின்றஇந்திராணியுடன்கலந்துகற்பகமலர்கள்பரப்பியம
ஞ்சத்தின்மீதில் சரசசல்லாபமாகக் களித்திருந்த போக
ங்களையும் பறிகொடுத்து பாதகராகியஅவுணருக்கஞ்சி பி
தாவானவர்ஓடிப்போயினரென்று கேட்டபோதேபாபியா
கியநானும்அவர்களைக்கலந்துகொண்டு அவர்களுக்கடுத்த
வின்பதுன்பங்களை யனுபவித்திராமல் பாலியசேஷ்டை
யினுல் தெய்வலோகத்தில் வீற்றிருந்து அரசுசெலுத்திச்

சத்துருக்கள்கையில்அகப்பட்டுக்கொண்டு இவ்வனைத்து
ன்பங்களை அனுபவிப்பேனோவென வாடுவன்,இத்தகைய
தீராதபழியைச் சுமந்து வாடாமல் பிராணனைப்போக்கி
னவனு மன்று தாய்தந்தையருக்கு நேர்ந்த இடையூறை
யொழித்துப் பயப்படாதீர்கள். எவ்விதத்திலும்நமது சு
தந்தரங்களைப்பெற்று வாழ்வோமென்று சிலதேறுதலை
யும் சொன்னவனுமல்ல, இவையனைத்தும்பரம சிவகடா
ட்சத்தினால் நேருவதென்று தேறினவனுமல்ல, இந்தச்
சிறையிலகப்பட்டு நாள்கழிப்பது அரிதாகவிருக்கின்றதெ
ன்றுபிதாவைநினைந்து கதறுவான்.மன்னுயிர்களுக்காதா
ரசத்தியாகவிருக்கின்றதருமமானது பலதமில்லாமலடங்
குங்காலமும்நேர்ந்ததோ? கொடியபாதகமேலிட்டுவீறும்
படியாயிற்றே! அரியதவமுயற்சிகள்ஒடுங்குங்காலமாயிற்
றே! நல்லொழுக்க மடங்கியதோ? கலிகாலம்பிறந்ததோ?
வேதாகமவிதிகளொளித்ததோ! எள்ளுக்குள்ளெண்ணெ
யைப்போல வெங்கும் பரிபூரணமாகவிருக்கின்ற சிவபி
ரானில்லையோ! அடியவரிடத்துக்கொண்டிருக்கின்ற கிரு
பையை மறந்தனரோ தீனனைவாட்டி யலைக்கும் சூரபது
மன் முதலானவர்களைக்கொன் றிரட்சிப்பது பரமனுக்கு
ப்பெரிய காரியமோ அல்லது அடியோங்கள் முற்செய்த
பாதகங்களை நினைந்து பராமுகமாக விருக்கின்றனரோ
வெனப் போற்றுவான் சூரபதுமன் கட்டளையின்படிக்கு
அவுணர்செய்தகொடியதண்டனைகளைப் பொறுக்கப்படா
மையால் தப்பித்துக்கொண்டோடிப்போன தேவர்களன்
றியில் மற்றவிண்ணவர்கள் பானுகோபன் தெய்வலோக
த்துக்கு வந்தகாலத்தில் அவன்சூரத்துக்கஞ்சிப்பதுங்கி
னைந்திருந்தவர்களைத்தடுத்துப்பலநீதிகளையும் தயிரியங்க
ளையுஞ்சொல்லித்தேற்றி அப்பாதகனுடனெதிர்த்துப்புற
கிட்டு படாதபாடுகளும்பட்டு அவன்காவலிற்பட்டு என்
னுடன் அவர்களையும்வருந்தும்படிக்குச் செய்தேனேயெ
னத் தன்னைத் தூறிக்கொள்ளுவான்.

பிராதகாலத்தெழுந்து முழுகி நித்தியகர்மங்களை முடி
ப்பதையும், வேதபாராயணங்களையும் ஓமவிதிகளைச்செ
ய்வதையும் தேவதேவோத்தமனைசிவபிரானைப்பூசித்து
வழிபடுவதையும் நல்லுணர்வையும் மற்றுமிராநின்ற சத்
கருமங்களையுமொழித்துப் பாமரனாய் இந்தப்பாதகர்பட்
டணத்தில் அரியகாவலிலிருக்கின்றேன் இனியான்செய்
வதென்னென்று திகைப்பான் இவ்விததுன்பங்கள் நேரு
வதற்குக் காரணத்தைநினைந்து பார்க்குமிடத்தில் ஆதியி
ற் பிரமதேவன்செய்த வேள்வியினிடத்தும் பரமனைநிந்
தித்துநீக்கி நடாத்திய தக்கன்மகத்திலுங் களித்திருந்து
இதுதகாத காரியமென்றெண்ணாமல் இன்பமாக அவிர்
ப்பாகங்களை வாங்கிப்புசித்த பாதகத்துக் கடுத்ததாய்க்
காளகண்ட மூர்த்தியாகிய சிவபிரான் இவ்வளவுகடினத
ண்டனைகளைக் கடாட்சித்திருந்தால் ஒருவரைநோவதிற்ப
யனில்லையென்று மனதைத்தேற்றிக்கொள்வான்ஆகிலும்
பிருதிவு அப்பு தேயு வாயு ஆகாயமென்னும் பஞ்சபூதங்
களாய் எள்ளினெண்ணெயைப்போன்று சராசரப்பிரப
ஞ்சங்களினுமுலாவி சரிதைகிரியை யோகம்ஞானமென்
னும் நான்குபாதங்களுக்கும் கர்த்தனாய்ச் சிவன் விஷ்ணுபி
ரமனென உருக்கொண்டு முத்தொழில்களைநடத்தித் தம்
மையன்றி ஓரணுவுமசையாமற் சர்வமுந் தமதுமகிமையி
னால்ஆட்டியூட்டி உறக்கிச் சகலபிரபஞ்சங்களையும் நடா
த்தும் பெருமையினைப்பெற்றிருக்கின்ற தேவாதிதேவனா
கிய சதாசிவமல்லது அடியோங்கள் துக்கவருத்தங்களைத்
தீர்ப்பவர் யாவரையுங்கண்டிலேன் அத்தேவதேவனே எ
ங்கள்குறைபாடுகளைநீக்கி யிரட்சிக்கக்கடவனென்றுபரம
னைச் சிந்திப்பான் ஓ! கர்த்தனே? தேவரீர் கடாட்சவீட்ச
ணியத்தினால் இந்தச்சூரபதுமன் பெற்றிருக்கின்றவரமு
யற்சிகளும் செல்வப்பெருக்கும் ஆயிரத்தெட்டண்டங்க
ளினுஞ் செலுத்தி வருகின்ற அரசாட்சியும் அளவிறந்த
வெள்ளஞ் சேனைகளும் அழிபட்டுத் தேவர்களுடன்அடி
யேன்படும் வருத்தங்களும் தீராதபழியும்நீங்கிப் பழை
யபடிக்குப் பொன்னுலகவாழ்வைப் பெற்றிருக்கின்றகா
லமும் இனியொருதரங் கிடைக்கப்போகின்றதோவென
வாடுவான் வேதாகம புராணமுதலிய கல்விகளிற் சிறந்த
வர்களாய் நல்லொழுக்கம் பூததயவு பெரியோர்கள்சேர்
வை சிவபூசை மான்மியங்கள்முதலிய சத்கருமங்களைவ
கித்திருக்கின்ற மகத்துக்கள் இருதயகமலத்திலெழுந்தரு
ளியிருக்கின்ற பரமசிவத்தைவழிபட்டு அத்தேவன் கிரு
பாகடாட்சத்தினைப் பெற்றிருப்பேனாகில் இத்தகையதுக்
கசாகரத்தைக்கடந்து களித்திருக்கவல்லேன் பாதகனாகி
ய நான்யாதொரு பூசனைகளையும் விரதங்களையும்செய்யா
தவனாதலா லிந்தஅரிதாகிய பாக்கியத்தைப்பெற வல்லே
னோவென்று கரங்களைக்கூப்பித் தொழுவான்.

இவ்விதமாக தேவராசகுமாரனாகிய சயந்தன் மனங்க
லங்கி அனலிற்பட்ட மெழுகைப்போலஉருகியுருகி அவ
ன்பட்டவருத்தங்களை யிவ்விதமென்று என்னாற்சொல்லி
முடியாது இப்படிக்குச் சயந்தன் புலம்புகின்றகாலையில்
பொன்னுலகவாழ்விலமர்ந்து சகலசெல்வங்களையும்அனு
பவித்திருந்த தேவர்களும் தாங்கள்படுகின்ற சிறுமைக
ளை எண்ணியெண்ணி துக்கித்து வாடிநின்றனர். அக்கா
லையில் சூரபதுமன் கட்டளையின்படிகண்டன் உதாவக
ன் காரளன் மாபலன் சண்டகன் சங்கன்முதலாகியபடை
த்தலைவர்கள் அளவிறந்தஅவுணப்படைகள்சூழ்ந்துபோ
ற்றச் சயந்தன்முதலிய தேவர்களிருக்கின்ற சிறைச்சாலை
களைக் கண்ணிமையைப்போலக் காத்துவருகின்ற பாதக
ர்சிவகுமாரன்விடுத்த தூதனாகிய வீரவாகுதேவர் அத்
தேவர்களைக் காணப்போகுமுன்னிலையில் தீயிற்பட்டத
ளிரைப்போலவாடிப் புலர்ந்திருக்கின்ற தேவராசகுமார
னையும் மற்றவிண்ணவர்களையும் மானினங்களைப் புலிக்
கூட்டமானது வளைந்துகொண்டதையொப்பச் சூழ்ந்து
கொண்டு வடவாமுகாக்கினியைப்போலச்சீறி அதட்டிக்
கோபித்து தேவப்பயல்களே கேட்பீராக ஆயிரத்தெட்ட
ண்டங்களுக்கும் அதிபனாய்ச் சகலரையும்வென்று விஜய
க்கொடி நாட்டியிருக்கும் சக்கிரேஸ்வரனாகிய சூரபதும
ன் பணிவிடைகளைக் காலங்களிற் செய்துகொண்டு காத்
திராமல் பயந்தோடிப்போன இந்திரனும்அவன்தோளை
த்தழுவும் இந்திராணியும் உங்களையன்றியில் மற்றதேவ
ர்களும் எத்தலத்திற் பதுங்கியிருக்கின்றனர், இதனைக்கி
ரமமாகச் சொல்லுவீராகில் இன்னஞ்சிலகாலம் பிழைத்
திருப்பீர்கள் அப்படிக்கு உண்மையைப்பேசாமல்மறை
த்தால் உங்களைச் சின்னபின்னப்படக் கண்டித்துக்கொன்
று தின்போம் முன்போலநினைக்க வேண்டுவதில்லை எம
திறைவனாகிய சூரபதுமன் இச்செய்தியைத்தெரிந்து த
மக்கறிக்கையிடக் கட்டளையிட்டிருக்கின்றனர் துரிதமாக
த் தெரிவியாமலிருந்தால் எங்களிடத்திற்கோபித்துக்கொ
ள்ளுவார் ஆதலால் நிசத்தைப்பேசித் தப்பித்துக்கொள்

வீர்கள்மேலும் அவர்களைப் பலகோடி தூதர்கள்தேடித்திரிகின்றனர், அவர்கள்கண்டுகொண்டு வருவதன்முன்னம் உங்களால் இவ்வளவு வெளிப்படுமானால் இராசாதிராசன் உங்களிடத்தி லிரக்கமுற்றுவிடுதலைசெய்வானென்று நயபயங்களைக்காட்டிக் கேட்குமுன்னிலையில் தேவராசபுத்திரனாகிய சயந்தன்முதலானவர்கள் அவர்களைப்பார்த்து எங்களுக்குத்தெரிந்தவரையில் உண்மையைச்சொல்லுவோம்கேட்பீராக.

இந்திரனும் இந்திராணியும் உங்களுக்குப்பயந்துபொன்னுலகவாழ்வைவிட்டு ஓடிப்போயினரென்பதுமாத்திரந்தெரியும் அவர்களின்னவிடத்திலிருக்கின்றனரென்னும் பரிச்சியம் எங்களுக்குத்தெரியாது கேள்விப்பட்டதுமில்லை யிந்தப்பட்டணத்தில் அரியசிறையிலகப்பட் டிருக்கின்ற எங்களுக்கிந்த சமாச்சாரம் யாவர்சொல்லவிருக்கின்றனர், இதைக்குறித்து எங்களாலொரு சங்கதியுந்தெரிவிப்பதற்கு ஏதுவில்லையென்றுசொல்லியபோது காவலாளிகளாகிய அவுணர்கூடி யிவர்கள் பிராணனுக்குத்துணிந்து எதனையும்வெளியிடாமல் மறைத்திருக்கின்றனர் எதைச்செய்தா லிவர்கள் உண்மையைப் பேசுவாரென்று யோசித்துக் கடினதண்டனைகளைமுடித்துத்தெரிந்துகொள்ளவேண்டுமென நிதானித்தவர்களாய் இதனைச்செய்யத்தொடங்கினர், திருப்பாற்கடலினிடத்துதித்து மகாவிஷ்ணுமுதலானவர்களைநடுங்கச்செய் தெழுந்தஆலகாலவிஷத்தைப்போலவும்ஊழிக்காலத்திற் சராசரப்பிரபஞ்சங்களைத்தகித்தெழும் வடவாமுகாக்கினியைநிகர்த்தும்சீறிச்சுடச்சுடப்பேசினவர்களாய்ப்பிரம்புகளினால் அடிப்பார்கள்இருப்புலக்கைகளினால்மோதுவார்கள் கன்னங்கள்பிளக்க அறைவார்கள் கடைச்சலிலிட்டுச் சேதிப்பார்கள் செக்கிலிட்டறைப்பார்கள் சுரிகையினாற் கண்டித்து காக்கைபருந்து முதலியபட்சிகளுக் கெறிவார்கள் அவயவங்களைச் சேதிப்பார்கள் கைவேறு கால்வேறு தலைவேறு வேறாகத்தறித்துத் திசைகளினும் வானத்தினும் எறிவார்கள்நாய்களுக்குத் தின்னப்போடுவார்கள் அக்காலத்தில்அமுதமுண்ட முயற்சியினாற் பழையபடிக்குத் தேகங்கள்பூரித்துத்தோற்றுவதைக்கண்டவுடன் அதிககோபங்கொண்டு சீறிமின்னலைப்போலப் பிரகாசிக்கும் வாளாயுதத்தையுருவிக்கொண்டு வெட்டுவார்கள் மார்பிற் குத்துவார்கள்வயிற்றைக்கிழித்து குடலைச்சரிப்பார்கள் தண்டாயுதங்களினால்தலையுடையமோதியும் உடல்நுறுங்கும்படிக்குத்தாக்கியும் கால்களைமுறித்துங் கரங்களையொடித்தும் இவ்விதங்களிற் காவலாகவிருந்த அவுணர்கள் அளவற்றதுன்பங்களைச்செய்து வரும்போது சயந்தனும் மற்றதேவர்களுங் குலைகுலைந்து நடுநடுங்கி பூனைவாயிலகப்பட்டபசியகிளிகளைப்போலவும் புலிக்கூட்டத்திலகப்பட்ட மானினங்களைநிகர்த்தும் பயந்துவாடி வேறுபுகலிடமில்லாதபடியால் அழிவற்ற சிவபிரானை மனதிற்சிந்தித்துக்கதறி ஓ தேவதேவோத்தமனே தேவரீரை ஏழைபங்காளனென்றும் தயாநிதியென்றும் தீனசரண்ணியனென்றும் வேதங்களிற் சொல்லுகின்றபடியால் இக்காலத்தில் அடியரிடத்திரக்கமுற்றுவந்து காத்திரட்சிக்கவேண்டுமெனப்போற்றிக் கிலேசிக்கின்றகாலத்திற் காவலாளிகள்விழிகளிற்றீப்பொறிகள் சிதறக்கொதித்தும் பலபடைகளினாலுங் கரங்களினாலும் குத்தியும் வெட்டியும்அறுத்தும் கிழித்தும் பீறியும்மோதியும்உதைத்துங் கடித்தும் முட்டியும்இடித்தும் இந்தப்பிரகாரம்அரிய தண்டனைகளைச்செய்கின்றபோது சகிக்கப்படாத வருத்தங்களை அனுபவித்ததல்லதுயாதொருகாயங்களும்பட் டிறந் தவர்களல்லர். ஓசவுனகாதிரிஷிகளே? திரிலோகசக்கிரேஸ்வரன் குமாரனாகியசயந்தன் மேற்சொல்லியபடிக்குத் தேவர்களுடன் அரிதாகியகாவலிலிருக்கவும் விண்மண் பாதலங்களுக்கதிபனாகவிருந்த இந்திரன் தன்தேவியுடன் கஜேந்திர சம்பத்துநீங்க காட்டிற்பதுங்கவும் தேவர்கள்கடினமாகிய அலைச்சற்படவும் முத்தலங்களுக்கும் இராசதானியாகவிருக்கின்றபொன்னுலகந்தகிக்கப்பட்டுப்போகவும் இப்படிக்குச்சகலமும் நிலைபெறாமல் நாசமானபடியால் சிவபிரான் கடாட்சத்தினாற்பெறவல்ல மோட்சசாம்பிராச்சியப் பேறல்லது நித்தியமாகிய செல்வம்வேறில்லை அதன்பின்புசிறைச்சாலையைக்காக்கின்ற அவுணர் பற்பலவிதங்களிற்பாதைப்படுத்தியபோதினும் தேவர்களுக்கு யாதொருசேதமுமில்லாமல் ஆயுதங்கள் மழுங்கிப்போகக்கண்டுபிரமித்துக் கரங்கள் கால்கள் மனமும்ஓய்ந்துநின்றவர்களாய்த் தம்மிற்பேசிக்கொள்ளுகின்றனர், இந்தத்தேவர்கள்அமுதமுண்டிருக்கின்ற வலியினாற் பிரளயகாலத்தல்லது மற்றொருபடைகளினாலும் சாகின்றவரல்ல இதுபரியந்தம் செய்ததண்டனையைப்பார்க்கிலும் இனிவேறென்னவிருக்கின்றது அல்லது ஒருகருமத்தை முடிப்பதற்கும் வலியில்லையென்று வெறுத்துநின்றுவிட்டனர், இதையோசிக்குமிடத்தில் மகத்துக்களாக விருப்பவர்களுக்குத் தீங்கினைசெய்தவர்களுக் குடனே தற்செயலாய் அதிகதுன்பங்கள் சம்பவிப்பதைப்போன்றது. இப்பிரகாரம்வருத்தினவர்கள் பழையபடிக்குத் தங்கள்காவல்களிலிருந்தனர், இப்பாதகரால் பற்பலதுன்பங்களை யனுபவித்த சயந்தன்முதலியதேவர்கள் மனம்நொந்து இவ்விதங்களிற்பரமசிவத்தைத்துதித்து முறையிடுகின்றனர்.

ஓ! கர்த்தனே? தீனதயாபரக்கடவுளே சுயஞ்சோதிவடிவாயெங்கும்பரிபூரணமாகவிளங்கும் பரம்பொருளே மனதொருமித்துத் தியானிக்கும் பத்தர்களுக்கடுத்த துன்பங்களைப்போக்கியாளுந் தயாநிதியே பிரமன் விஷ்ணுமுதலிய தேவர்க்ள் மனதினாலளவிடப்படாத பரம்பொருளே எங்கள்குலதெய்வமாகிய சிவநாதனேஅடியோங்களுக்கு இந்தப்பிறவியைக் கட்டளையிட்டுஇப்பாடுகளைஅனுபவிக்கும்படிக்குவிதித்தீர் தேவரீர் மாயாவினோதங்களையும் பெருமைகளையும் யாவராற் காணப்படும் ஆதியிற்பானுகோபனாலறையுண்டு தந்தங்களையுமிழந்து வருந்திய அயிராவதமானது திருவெண்காட்டில்வந்து தம்மைப்பூசித்ததற்கிரங்கிப் பழையபடிக்குத் தந்தங்கள்முதலியவலியைக்கடாட்சித்தும் திருக்காளத்தி மலையின்மீதிலெழுந்தருளி யிருக்கின்ற உம்மைவழிபட்டயானைக்கும் சிலந்திக்கும் பாம்புக்கும் மோட்சவீட்டைத்தந்தும் மாதவக்குறையினால் காசிப்பதியில்அவதரித்த மூர்த்தம் ஜயாவெனப் பாடித்திரிந்த கரிக்குருமானென்னும் பட்சிக்குச்சாயுச்சியப்பதவியைத்தந்தும் மதுரைப்பதியில் தேவரீரைவழிபட்டிருந்த நாரைக்குத்தமது திருவடிநீழலைத்தந்தும் இப்பிரகாரம் அளவற்றபிராணிகள் பணிவிடைகளுக்குக் கிருபையுற்று காலங்களில் பாதுகாத்திரட்சித்தலோகநாயகனே தீனராகிய அடியோங்கள் வருந்திமுறையிட்டுக்கொள்ளுவதைத் திருச்செவிகளினேற்றுக்காக்கமனமிரங்காமல்பராமுகமாகவிருப்பதென்னை எங்கள்துக்க

வருத்தங்கள் திருவுளத்திற்றேற்றவில்லையோ பார்ப்பதி
யார் கரதலத்திற்பிறந்து உலகங்களனைத்தும் நாசப்படப்
பெருகிய கங்கையை மன்னுயிருக்கிரங்கித் திருச்சடையி
னேற்றதும் திருப்பாற்கடலினுதித்துத்தேவர்கள்முதலா
னவர்களை அலைத்து மீறியெழுந்த ஆலகாலவிஷத்தையு
ண்டு கண்டத்திற்றரித்தும் இவையென்னபொய்மையோ
பிராணிகள்படும்வருத்தங்களுக்கிரங்கிச் சர்வசங்காரகால
த்தில் நுதல்விழித் தீயினலெரித்துச் சிலகாலம் சவுக்கி
யத்தில்வைத்த பரம்பொருளே தக்கன்சாபத்திற்பட்டுத்
தம்மைச் சரணடைந்த சந்திரனை ஆதரித்து அவனொரு
கலையைச் சடாபாரத்திற்கொண்டு பழையபடிக்கு சோட
சகலைகளையுங் கடாட்சித்த பத்தவற்சலனே யிக்காலத்தி
ல் அவுணர்செய்யும் பாதைகளுக்குச் சகிக்கமாட்டாமல்
சிவனேசிவனேயென்று முறையிடுவது தேவரீர்திருவுள
த்துக்கேறுததோ பிராணிகள் முற்செய்த பிராரத்வகர்ம
ங்களுக் கீடாகவிளைகின்ற ஆசாபாசமென்னும்தளையிலக
ப்பட்டுழலச்செய்து அவைகளுக்குரிய இன்பதுன்பங்க
ளையனுபவிக்கப்பண்ணி ஆட்டுவோனும் அஞ்ஞானபந்
தங்களைப்போக்கி மோட்சசாம்பிராச்சியத்தைக்கடாட்சித்
தாள்பவனும் தேவதேவனுகிய சதாசிவமென்று வேதங்க
ளில் முறையிடுகின்றது அத்தகைய குணசம்பன்னனுகி
ய தேவரீர்கட்டளையிட்ட இக்கொடிய தண்டனைகளையா
வரால் சகிக்கவும் விலக்கவுங்கூடும் பிரமன்விஷ்ணுதேடி
க்காண்பரியகர்த்தனே தம்மையல்லது வேறொருபிராணி
யைக்கண்டிலேம் ஆதலால் இத்தருணத்திலெழுந்தருளி
அடியோங்கள் பிராணனைக்காத்தாளவேண்டுமென்று கர
ங்களைக்கூப்பிக்கொண்டு போற்றினவர்களாய் மேலும்இ
தனைவிண்ணப்பஞ்செய்வதாயினர்.

ஓ! கர்த்தனே? முற்காலத்தில் அந்தகாசுரனென்பவன்
தேவரீரைநோக்கிச் செய்ததவங்களுக்கிரங்கிக் கடாட்சித்
தபற்பலவரங்களைப்பெற்ற கர்வத்தினுல் கொடுங்கோலை
ச்செலுத்தியமனைப்போல உலகங்களெங்குமுலவிதேவர்
கள்முதலான சகலபிராணிகளையும்அலைத்துக்கொன்றுதி
ன்றுவடவாமுகாக்கினியைப்போல வீறித்திரிவதையும்தி
னராகிய பிராணிகள்படுந் துன்பங்களையும் திருவுளத்திற்
கொண்டுஅவ்வசுரன்வலிகுன்றிக்குறைந்து நாசமடையத்
தக்கதாகவெளிவந்துமுடித்தலைச்சூலத்தினுல் அவன்மார்
பிற்குத்திமுதுகிலுருகப்பாய்ச்சிக்கொண்டு சராசரப்பிரப
ஞ்சங்களைக்கலங்காமற்பாதுகாத்த தீனசரண்ணியனல்லை
யோதமது தொண்டர்களிற்சேர்ந்த அடியோங்கள்அளவ
ற்றகாலமாய் சூரனுக்கினையிற்பட்டுவாடிவருந்திமுறையி
டுவதுசற்றுந் திருச்செவிகளில்நுழையவில்லையோ நாயி
னேங்கள் செய்தபாதகங்கள்தீர இன்னமுங்காலஞ் சமீபி
க்கவில்லையோ முற்காலத்திற் காகாசுரனென்பவன் கொ
டுமைக்கஞ்சி பிரமன் விஷ்ணுமுதலாகிய தேவர்கள் ரிஷி
கள் மானிடராதியாகத் திகிற்பட்டேங்கிநடுநடுங்கித்தத்த
மதுபதவிகளை விட்டோடத்துரத்திய பாதகனைக்கோபித்
துச் சின்னபின்னப்படக் கண்டித்துக்கொன்றுசகலரையு
ம் தத்தம்பதவிகளில்நிலைபெறவிருத்தி அந்தவிஜயந்தோ
ற்றும்படியாக அவன்சிரகி லொன்றைச்சடையிலணிந்த
கிருபாநோக்கத்தைப் பாதகராகிய அடியோங்களிடத்திற்
காட்டாததற்கு நாங்கள்செய்த குறைபாடுகளேதோ பூரு
வத்திற் திருப்பாற்கடலிற் பெருத்தெழுந்தஆலகாலவிஷ
த்துக்கஞ்சிப் பிரமன்முதலிய தேவர்களனைவரும்பயந்து
முறையிட்டகாலத்தில் அவர்களிடத்திற்கிருபையுற்றுஅ
தனையுண்டு கண்டத்திற்றரித்த கடாட்சத்தைப்போலவே
இக்காலத்தில் எங்களைக் காக்கவாராயோ இவையன்றியி
ற் கோரரூபத்தையும் கொடியபடைகளைத்தாங்கியபலகர
ங்களையும் தீச்சிகைமுதலிய உக்கிரகோலத்துடன்காளி
யம்மனுனவளெழுந்து வடவையைப்போலத்திரிந்து உல
கங்களிலுள்ள சீவராசிகளை வாட்டுகின்றகாலையிற் சகிக்க
மாட்டாமல் அவர்கள்முறையிட்டதைத் திருச்செவிகளி
னேற்று அவளுடன்வாதுக்காடிவென்று மன்னுயிரைப்
போற்றியதயையானது எங்களிடத்தும் உண்டாகலாகா
தோ தேவரீர் கோபமேவடிவாகவெழுந்தசலந்தரன் ஜய
சாலியாய்த் திசைகளைவென்று திருக்கயிலையில் மறைந்தி
ருந்த தேவர்களைப்பங்கப்படுத்த வெண்ணித் துரத்திவந்
தகாலத்தில் வெளிவந்துசக்கரப்படை யொன்றைப்படை
த்து அதன்மூலமாகஅவனைவென்றுதீனரைக்காத்தருளி
யது தேவரீரல்லவோ பாதகவிருளைக்களைந்துமோட்சசா
ம்பிராச்சியத்தைத்தரும் மகத்துவமுள்ள கங்கைசூழ்ந்த
காசிப்பதியில் வந்தொளித்திருந்த முனிவர்கள்பிராமண
ர்முதலானவர்களைத் தேடிவந்த கயாசுரனையுதைத்துத்த
ள்ளித் தோலையுரித்துப் போர்வையாகக்கொண்டபாதுகா
த்த கிருபையானது தமதுவழி யடிமையாகிய அடியோங்
களிடத்திற் காட்டக்கால மில்லையோ பத்துத்தலைகளும்
இருபதுகரங்களையும் பெற்ற இராவணன் கும்பகர்னன்
இந்திரசித்து முதலாகியவிராட்சதர் கொடுமைக்கஞ்சிவா
டிப்போற்றிய தேவர்களிடத்திற் கிருபையுற்றுத்தம்மடி
யவர்களைக் கொண்டு வாட்டிஉலகங்களைநிலைபெறச் செய்
த ஆதிமூலமே யிவ்விண்ணவர்களுடன் அடியேன் கொ
டியகாவலிற்பட்டுஅவுணர்தெண்டனைக்கஞ்சி வாடுவதை
த் திருவுளத்தினேற்று இப்பாதகரைக்கொண்டு தவிர்க்க
விரங்காயோ! கர்த்தனே? தேவரீர்பெருமைகளை நினையா
மல் மருகனென்றிகழ்ந்து யாகத்தைச்செய்த தக்கன்கற்வ
த்தையடக்கி அத்தலத்திலிருந்த தேவர்களுக்குத்தக்க த
ண்டனைகளைச் செய்ததைப்போல இந்தக்கொடிய பாபிக
ளாகிய அவுணரிடத்திற்காட்டலாகாதோ! உலகங்களுக்கு
மிகுத்த துன்பங்களைச்செய்துதிரிந்ததிரிபுராதிகளைநகை
த்தெரிந்து மன்னுயிர்களுக் கடுத்திருந்த உபாதிகளைத்த
விர்த்தாண்டீரெனப் பலரும்புகழ்கின்றனர். அவர்கள்ம
ரபிற்றோற்றிய கொடியராகிய அவுணர் வீறியிருக்கின்ற
இந்த மயேந்திரபுரியையும் தகித்துத் தீனரையாண்டு இ
ரட்சிக்கலாகாதோ! தேவரீரிடத்திற் பத்திவயிராக்கியங்க
ளைக்கொண்டு பூசிக்கின்ற அன்பர்களுக்குநேர்ந்த விடை
யூறுகளைத் தவிர்த்திரட்சிப்பது விருதாகவிருக்கின்றதா
யினும் அத்தகையபத்திமான்மியங்கள் அடியேனிடத்தி
ற் கிஞ்சித்துமில்லாதபடியாற் பராமுகமாக விருக்கின்றீ
ரோவென்று பற்பலவிதங்களிற்போற்றி மேலும்இதனை
ச்சொல்லுகின்றான்.

சந்திரசடாதரக்கடவுளே! லோகநாயகனே? கிருபாநிதி
யாகிய தேவரீரை நொந்துகொள்வதுபுத்தியில்லாமையா
கும் ஆதலாற்றமதிடத்திற் மெய்ப்பத்தியில்லாவிடினும்
அடியேனிடத்திருக்கின்றகுற்றங்களைமன்னித்துவேறொ
ரு உதவிகளுமில்லாமல் வாடுகின்றவன்முறைகள் திருவு
ளத்துக்கேராதனவாயினும் லோகநாயகனுதலால் தாமே
யிரங்கிவந்து பாதுகாத்திரட்சிப்பீராகில் எக்காலத்துந்தி
ராதவிந்தத்துக்கசாகரத்தைக்கடந்துகடைத்தேறுவோம்,

அத்தகைய பேற்றினைக் கிடைத்தபோதினும் வெகுகாலமாக அனுபவித்திருந்த தெய்வலோகவாழ்வை யொருபோதினும்வேண்டேன் சிறந்தஞானபோகங்களைச்செய்கின்ற மகத்துக்கள்-ரிஷிகள்-அவுணர்-இராட்சதர்- மானிடர்-முதலாகியசகலரும் புகழ்கின்ற செல்வப் பெருக்கையுடைய கஜேந்திரபோகங்களை அனுபவித்திருந்தயான்பதியையிழந்து தாய்தந்தையரைப் பிரிந்துதீனராகியதேவர்களுடனிக்கொடிய சிறையிலகப்பட்டுவாடுகின்றதால் இவ்பஞ்சிறிது அதனாலுண்டாகுந் துன்பமானதுமிகுதியாகக்கண்டனன் எலும்பு கங்கைகொன்றைமாலை முதலிய அலங்காரங்களைக்கொண்டிருக்கின்ற பரஞ்சோதியே!தேவரீர் கிருபாகடாட்சத்தினால் இந்தஅரியசிறையைநீங்கிமகிழ்வேனாயினும் பொன்னுலகவாழ்வை யினியெக்காலத்தும் வேண்டேன், கனவிலும்நினையேன், மோட்ச சாம்பிராச்சிய வைபவங்களைத்தரும் பெருமையினையுடைய தேவரீர் திருவடித் தாமரைகளைநினைந்து தவங்களைச்செய்து நித்தியவாழ்வைப்பெற்றுக் களிக்கவிரும்பினேன்,மேலும் தேன்களைத்துளித்துக் குளிர்ந்த நிழலைவிரித்திராநின்ற கற்பகத்தருக்களினது நீழலில் நவரத்தினமயமாகியசிங்காதனத்தி லிருந்து திரிலோகவாழ்வைச் சிலதினம் அனுபவித்த பாதகத்தினால் இத்தகையகொடிய தண்டனைகளைப்பெற் றனுபவிக்கலானேன் கரும்பை ஆலையிற்கொடுத்து இரசத்தைக் கிரகித்துக்கொண்டெறியுந்திப்பியைப்போல வாழ்வை மதித்திருக்கின்றனன். மற்ற தேவர்கள் பதங்களுங் காலாதிகளில் அழிபட்டுப்போவதாகவிருக்கின்றன, ஆதலாற்பரம்பொருளாகியசிவனே? சிவனே? தேவரீர் பாதாரவிந்தநீழலில் வாசஞ்செய்யவிரும்பியிருக்கிறேன் பிராரத்துவ வினைப்படிக்கு நன்மைதீமையெனும் பாசத்தழுந்தி அதற்குரிய இன்பதுன்பங்களை யனுபவித்து அக்காரணத்தினாலுண்டாகும் பிறவியானது எக்காலத்தும் அபலமாகக்காணுகின்றது, பொன்னுலகவாழ்வும் நித்தியமென்று மற்றப்பொருள்கள்யாவும்நீடித்ததல்லாதபடியால் அரியதவங்களைச் செய்திருக்கின்ற பதஞ்சலி-வியாக்கிரமபாதர்-பிருங்கி-தும்புரு-நாரதர்- பராசத்தி யிவர்கள் தரிசித்துக் களிக்கத்தக்கதாகச்சிதாகாசகனகசபையினிடத்தில் நிருத்தஞ் செய்தருளிய தேவாதிதேவனே! யினியாவது அடியோங்கள்படுந்துன்பத்துக்கிரங்கியிக்கொடிய காவலைநீக்கித்திருவடிநீழலைத் தந்திரட்சிக்கவேண்டும், ஆதிமூலமாய் பிருதிவு-அப்பு- தேயு-வாயு-ஆகாயமென்னும்பஞ்ச பூதங்களாய் ஏகமாய், சத்திசிவமாய் விளங்குகின்ற சிவநாதனே! யிக்கோலங்களை நினைக்குமிடத்தில் மன்னுயிரனைத்தினையும் பாதுகாத்தாளுங்கிருபைக்குரியதன்றோ பொன்னையொத்தகொன்றைப்புஷ்பமாலையினையும், பிறையையும்,கங்கையையும்,நகுவெண்டலையையும், சர்ப்பமாலைகளையுந் தரித்திருக்கின்றதாணுவே? உலகமாதாவாகிய பார்ப்பதியாரைப் பாகத்திற்கொண்டுவிளங்கும் சன்னிதி மகிமையினாற் சராசரப்பிரபஞ்சங்க ளனைத்தினையும் விருத்திக்கச்செய்துஅவைகளுக்குரிய வினைப்போகங்களையூட்டி யாட்டி யுறக்கும் ஆதிதேவனே! அடியேனுக்கடுத்திருக்கின்றதுக்கவருத்தங்களைப்போக்கி பொன்னுலகவாழ்வி லிச்சைபெறாமல் விலக்கச்சிறந்த தவங்களைச்செய்து பெறுதற்கரிய தேவரீர் திருவடிநீழலில் வீற்றிருந்து சுகாதிதவாரியிலழுந்திக் களித்திருக்கும்படியாகிய செல்வத்தைத் தமியேனுக் கனுக்கிரகஞ் செய்யவேண்டுமென்று பற்பலவிதங்களில்முறையிட்டுப்போற்றினவனைப் விஷமானது தலைக்கொண்டு வாடுவதைப்போல விசனமதிகரித்து மாறிமாறிமனதைவருத்துவதினால் வாடிவருந்தி யாதொருசெய்கையுமற்றுமயங்கிச்சோபித்து இறந்தவர்களைப்போல அறிவழிந்துமரணமூர்ச்சையாக விழுந்தனன். திரிலோக சக்கிரேஸ்பரனாகிய தேவராசனுக்குப் புத்திரனாய்ப் பொன்னுலகவாழ்வையனுபவித்திருந்த சயந்தன் இப்பாடுபட்டமுன்னிலையில்மற்றதேவர்களும் தகாதபணிவிடைகளைச் செய்துவருகின்றதினாலும் அவுணர் உபத்திரவங்களினாலும் மிகவும் வருந்துகின்ற படியால் இந்தஇடையூறுகள் எக்காலத்தில் நீங்கப்போகிறதென்கின்ற ஏக்கமானது மனதைப் பீடித்துப் பாதிக்கப் பரமசிவத்தைக்குறித்துப் புலம்பிக் களைத்து அவர்களும்சோபித்து விழுந்தனர், இக்காட்சியானது எப்படிக்கிருந்ததெனில், வானத்தையளாவவோங்கிப் பலகிளைகளையும் விழுதுகளையும் பெற்றிருந்த ஒருஆலமரமானது பெருங்காற்றிலடிபட்டுச்சாய்ந்தகாலத்தில்அதன்மேற் படர்ந்திருந்த பசிய கொடிகளானவை அம்மரத்துடன்சின்னபின்னப்பட்டுமறிந்து விழுவதற்கொப்பாகவிருந்தது.

---

## சயந்தன்கனவுகாண்படலம்.

விண்ணுளார்களுஞ்சயந்தனும்வியன்மகேந்திரத்தி
னுண்ணுலாம்பெருந்துயருடன்மாழ்கியதுணர்ந்தா
னெண்ணிலாவுயிர்தோறுமுற்றின்னருள்புரியு
மண்ணலார்குமரேசனுமறுமுகத்தமலன்.

---

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? இவ்விதங்களாக இந்திரதனையன் சயந்தனும் மற்றதேவர்களும் அகன்ற சாம்பிராச்சியப் பெருக்கையுடைய மயேந்திரபுரியினிடத் திருக்கின்ற சிறைச்சாலைகளிற் கட்டுண்டுவருந்திச்சிவபிரானைநோக்கித்தங்கள் துக்கவருத்தங்களை முறையிட்டுச் சோர்ந்து அறிவிழந்து பிரேதங்களாக விழுந்துகிடக்கின்றபோது சராசரப்பிரபஞ்சங்களனைத்தினும் எள்ளிலெண்ணெயைப்போலப் பரிபூரணமாகவிளங்கிநடிப்பிக்குங் கிருபைக்கடலாகிய ஆறுமுகக்கடவுள்அவர்கள்கிலேசங்களைத் திருவுளத்திற்கொண்டு சிறுகுழந்தைகள் தனித்து யாவரையுங்காணாமல் திகைத்துத் துக்கிக்கின்ற காலத்தில் அவ்வழுகைக்குரலைக்கேட்டு ஓடிவந்தணைத்துப் பயந்தீர்க்குந் நற்றாயைப்போலக் கொடியசிறையிலகப்பட்டு அவுணரால்அதிகபாதைகளை யனுபவித்து வருந்தி மதிமருண்டு சோர்ந்திருக்கின்ற சயந்தன் முதலாகியதேவர்களின்னலைப்போக்கித் தேற்றி யிரட்சிக்கும்படியாகக்கிருபையுற்று இவர்களை விடுவிக்கும்பொருட்டுத் திருக்கயிலையைநீங்கித் திருச்செந்தில்மாநகரத்தி லெழுந்தருளி அவுணர்கள் களைகளையகங்கணங்கட்டிக் கொண்டிருக்குஞ்சரவணபவன் மயங்கிக் கிடக்கின்ற சயந்தன் கனவிற்றோற்றி மேல்நடக்கவிருக்கின்ற காரியங்களைத் தெரிவித்துத்தேற்றித் தயிரியம் பெற்றிருக்கச்செய்யத் திருவுளத்திற் கொண்டெழுந்த காட்சியைக் கேட்பீராக. வெற்றிக்கொடி-வச்சிராயுதம்-அங்குசம்-பாணம்-வெற்றிவேல்- அபயம்-சின்மயமுத்திரை-கமலம்-மழு-தண்டாயுதம்- வில்-

மலர்மாலை- இவைகள்பொருந்தியபன்னிருகரங்களும், பூரணச்சந்திரோதயம்போன்ற சண்முகங்களும், பிரகாசிக்கத்தக்கதாக தாய்தந்தையில்லாத சிவபிரானைப்பிதாவாகப்பெற்ற கந்தசுவாமியானவர் இக்கோலத்துடன்சயந்தன் கனவிற்றோற்றியனதக் கண்டவுடன்இராசகுமாரனுக்குச் சரீரம்பூரிக்க விழிகளில் ஆனந்தவாரிபொழிய மனப்பூரிப்புடன்விழிகள் களிக்கத் தரிசித்துக் கரங்களைக்கூப்பிக்கொண்டு கிருபைக்கடலே அடியருக் கெளியகடவுளே? நாயினேன் இக்கொடிய பாதகர்வசத்தி லகப்பட்டு வருந்துகின்ற துன்பங்களைநீக்கியிரட்சிக்கக்கிருபைகூர்ந்தெழுந்தருளினர் தமதுதிருநோக்கம் பட்டவுடன் கிருதார்த்தனாய்ப் பிறவியையொழித்துதன்னியனானேன், கர்த்தனே? தேவரீர் திருவடியைப் பார்க்குமிடத்தில் உலகங்களை யிரட்சிக்கின்ற மகாவிஷ்ணுவாகவுந் தோற்றவில்லை, சராசரப்பிரபஞ்சங்களைப் படைத்துவரும் பிரமதேவனாகவுங்காணவில்லை, ஆதிதேவனாய் எள்ளினெண்ணெயைப்போல எங்கும் பரிபூரணமாகநிறைந்து பிராணிகளனைத்தையும் அவற்றின்வினைக்கீடாக நடிப்பித்து கண்டு களித்திருக்கும் ஆதிமூலமாகிய பரமசிவமாகவும் தோன்றவில்லை, ஆதலால் தேவரீ ரின்னகடவுளென்று கொடியபாதகனாகிய அடிமைக்குத்தெரிவதாகத் திருவுளம்பற்றவேண்டுமென்றுபோற்றுகின்ற தேவராச குமாரனிடத்திற்கிருபையுற்று அப்பா! சயந்தனே? கேட்பாயாக.

நாம் ஆலகாலத்தையும் வடவைக்கனலையும் அடக்கித் தேவர்கள் முதலிய பிராணிகளையும் உலகங்களையும் இரட்சித்த கிருபாநிதியாய் கொன்றைமாலை, மூன்றாம்பிறை கங்கை, நகுவெண்டலை, சர்ப்பம், முதலாகிய பூஷணங்களைத் தரித்திருக்கும் சடாமண்டல தாரியாகியசிவபிரான் நுதல்விழியிலுதித்த சரவணபவனாகும், இவ்விடத்தில் நாமெழுந்தருளிய காரணமேதெனில் உன்னுடைய வருத்தங்களையும் மனக்கோட்டத்தையுந் தெரிந்து அவற்றினைநீக்கி யிரட்சிக்கவும்மேலும்உன்னைப்புத்திரனாகப்பெற்ற தேவராசனானவன் தன்குறைகளையும் விண்ணவர்கள் படும் வருத்தங்களையும் தவிர்த்து உன்சிறையை நீக்கித்தரவும் நமக்கு விண்ணப்பஞ் செய்துவேண்டிக்கொண்டபடியால் சிவபிரான் கட்டளைப்படிக்கு அளவற்றபூதப்படைகளுடன் திருக்கயிலாயவரையைக் கடந்து பூலோகத்துக்குவந்து பற்பலமாயவஞ்சகங்களினால்ரிஷிகள் தேவர்கள் முதலானவர்களை வெகுகாலமாகவருத்தி வாட்டிக்கொண்டிருந்த கிரவுஞ்சபருவதத்தையும்அரியவரங்களைப்பெற்று யமனைப்போல உலகங்களைவருத்தியிருந்த தாருகாசுரனையும் வேலினாற் பிளந்துகொன்று அவன்சேனைகளையும் நாசப்படுத்தினம், அதன்பின்பு திருச்செந்திற்பதியில்வந்து சேர்ந்தோம் தாமரைமலரில்வாசஞ்செய்கின்ற பிரமதேவன் மகாலட்சுமியைமார்பிற் கொண்டிருக்கும் விஷ்ணு உன்பிதாவாகிய தேவேந்திரன் மற்றவிண்ணவரனைவரும் நம்மிடத்திற் சவுக்கியமாகவிருக்கின்றனர். உன்தாயாகிய இந்திராணியானவள்சிலதேவர்போற்றிவரமகம்மேருவினிடத்திற்சுபமாகவாசஞ்செய்கின்றனள்.

நேற்றைய தினம் நமது சகோதரனாகிய வீரவாகுவை உங்களை விடுதலைசெய்விக்கும்பொருட்டுச் சூரபதுமனுடன் பேசும்படிக்கு இந்தப்பட்டணத்துக் கனுப்பினோம் அவன்தன்னாற் கூடியவரையிற் சமாதானஞ் சொல்லியபோதினும் சூரன் அதற் கிசையான். அக்காலத்தில்வீரவாகு கோபித்துத் தன்மேற் சண்டைக்கு வரும் அவுணராச புத்திரனொருவனையும் அளவற்ற சேனைத் தலைவர்களுடன் அவுணவெள்ளங்களையுங் கொன்றுவாட்டிலைப்பற்ற இந்தமயேந்திரபுரியை அக்கினிதேவனுக் கிரைகொடுத்துச் சாம்பலாக்கி நம்மிடத்துக்கு இத்தினம் வந்தவுடன் பிரயாணப்பட்டு நாளை யத்தினந் திருச்செந்திலைக் கடந்து பூதவெள்ளங்களுடன் இந்நகரத்துக்கருகில் வந்திறங்கிப் பத்துதினத்துக்குள்ளாக தேவர்கள்மானிடர்முதலாகிய சகலரையும் பலயுகங்களாக அலைத்திருந்த சூரபதுமன் அவன்சகோதரர்கள் புத்திரர்கள்மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர்கள் அளவற்றவெள்ளம் அவுணப்படைகள் முதலாகச் சின்னபின்னப்படக்கொன்றுவேரறப்பார்த்தபின்புஉன்னையும்மற்றதேவர்களையும்பலகாலமாக அடைத்துவைத்திருந்த கொடியகாவலைவிடுவித்து பழையபடிக்குப் பொன்னுலகத்திற்சேர்த்துத் தாய்தந்தையருடன் மகதயிஸ்வரியங்களையனுபவித்துச் சவுக்கியத்திலிருக்கச்செய்வோம் ஆதலால் இனியாதொரு வருத்தங்களையும்மனதில்நினையாமற் சந்தோஷமாகவிருக்கக்கடவையென்று ஞானவான்களறிவில் நடனஞ்செய்யும் ஆதிதேவனாகிய சிவசுப்பிரமணியதேவர் அனுக்கிரகஞ்செய்ததிருவாசகத்தைக்கேட்ட சயந்தராசனானவன் மனக்கிலேசத்தைப்போக்கிச் சஞ்சலங்களையொழிந்து ஆனந்தவாரியில்மூழ்கிச் சரீரம்புளகித்து உரோமங்கள்சிலிர்த்துக் களிமிகுதியினால் நேத்திரங்களில் ஆனந்தஜலமானது பெருக்கெடுத்தோடவும் பருவதாகிருதியாகவிளங்கும்புசங்கள் பூரித்தோங்கவும் பெறுதற்கரிய ஞானஅமுதைஎளிதிற்கிடைத்தனுபவித்தவர்களைப்போல மனங்குளிர்ந்துவாய்குழறச் சிவகுமாரன் பெருமைகளை வேதவாக்கியங்களினாற்றுதித்துத் தேகபரவசத்தனாய் ஆடிப்பாடிஜயஜயவெனப்போற்றினன். வாரீர்சவுனகாதிரிஷிகளே அக்காலத்தவனடைந்த சந்தோஷப்பெருக்கினை யாவரால் அளவிட்டுச்சொல்லப்படும் இவ்விதமாகத் தனக்கடுத்திருந்த துயரங்களையொழித்து ஆனந்தத்திலழுந்திய இந்திரகுமாரன் நமது கர்த்தனாகிய குமாரதேவர் செந்தாமரை மலரையொத்த பாதாரவிந்தங்களிற் பணிந்து கரங்களைக்கூப்பிநின்று அவர்பெருமைகளைக்கொண்டாடியிதனைவிண்ணப்பஞ்செய்வதாயினன், தேவரீர்திருவடிகளைத் தஞ்சமாக நம்பியிருக்கின்ற அடியவர்கள் துன்பங்களைத்தடுத்தாள்வதற்குத் தாமேயெழுந்தருளிப் பாதுகாத்திரட்சித்தீர் இப்படிப்பட்ட கருணைக்கடலெனவறிந்து புகழத்தக்கஅறிவைப்பெறுதவனாதலால் இத்தேவர்களுடன் தமக்கடிமையாயினேம், எங்களிடத்திருக்கின்ற குற்றங்களை மன்னித்து வழியடிமையாகக் கொண்டாளவேண்டுமென்று சயந்தனானவன் பலவிதங்களில் விண்ணப்பஞ்செய்துகொள்ளுகின்றதைச் சுயஞ்சோதியாகிய சரவணபவன்கேட்டருளிஅப்பாசயந்தனேயிதுவரையினுங்கொடியசூரனாற்பட்டதுன்பங்களைமறந்து விடக்கடவை உனக்கொருசிந்தனைகளுமில்லாமல் காக்கக்கடவோம் இதுவல்லாமல்நமதுகட்டளையின்படிக்குச் சூரனுடைய கருத்தைத்தெரிந்து வரும்படிக்கு இவ்விடம் தூதாகவந்த வீரவாகுவானவன் சற்றுநேரத்தில் இந்தத்தலத்துக்குவந்து உன்னையும் மற்றதேவர்களையுங்கண்டு உன்தாய்தந்தையர் சவுக்கியங்கள்முதலாகத்தெரிவித்து உங்கள்மனங்கள்திருத்திபெறத்தக்கதாக மேல்நடக்கப்போகின்ற காரியங்களையுஞ்

சொல்லிப்போகச்செய்வோம் அதைக்கண்டுசகலமும் உண்மையாகநம்பிமனதிற்றிடம்பெற்றிருப்பையெனப்போதித்துச் சரவணபவன்மறைந்தனர்.

அப்படிமறைந்தது ஆதிகாலத்திற் பிரமதேவனானவன் தன்சிருஷ்டிவிர்த்தியடையாதகாரணத்தினால் வருந்திக்கிலேசித்துக் களைத்திருந்தவன் கனவில் சிவபிரானெழுந்தருளிப் பிரமனைத்தேற்றிக் குமாரனே மனமிரங்கவேண்டாம் உன்கருத்தின்வண்ணம் முற்றுப்பெறும்படிக்கு ஏகாதசஉருத்திரரை யனுப்புவோம் அவர்களால்சிருஷ்டிமலிந்து பழையபடிக்கு விளங்குமென்று அனுக்கிரகித்துமறைந்ததைப்போலவிருந்தது, அப்பொழுதுகொடியதுன்பத்திற்பட்டு ஒடுங்கியிருந்த ஐம்புலன்களும்தத்தமது நிலைகளிற்சேர்ந்து அறிவைவிளக்கியபடியாற்சயந்தன்களைதெளிந்து கனவைமறந்து விழிகளைத்திறந்துசுற்றுமுற்றும்பார்த்து விஷமானதுதலைக்கேறி மயக்கியகாலத்திற் பரியாரிமந்திரித்த முயற்சியினாலிறங்கித் தெளிந்தவனைப்போலவெழுந்து மனக்களிப்புடன்தன்கனவிற்றோற்றிய பாலசுப்பிரமணியதேவர் காட்சியையும் அவரனுக்கிரகித்துப்போன வாக்கியங்களையும்நினைந்துநடுக்கங்களைப்போக்கி மனத்தெளிவுடன் இதனைப்பேசுகின்றனன், ஓ! கர்த்தனே? பலயுகங்களாகஅடியோங்கள்யாதொருதுணையுமில்லாமல் இந்தப்பாதகர் வசப்பட்டுவருந்தி முறையிட்டவிண்ணப்பமானது இக்காலத்திற் றேவரீர்திருச்செவிகளினேற்று எங்கள்துக்கவருத்தங்களை தவிர்க்குங்காலமும்நேர்ந்ததோ எங்களையும் ஒருபொருளாக மதித்தாண்டகடவுளே யித்தருணத்திற் காவாவிடில் யாங்கள்மிகவும்நலிந்து நாசமடைவோம் அதைத்தவிர்த்துப் புத்திரபாவகமாக இரட்சித்தீரென்று சிவகுமாரன் திருவாய்மலர்ந்தகாரணங்களைநினைந்துநினைந்து அதனாலுண்டாகும் ஆனந்தவாரியில் மூழ்கிக்களித்து நகைமுகனாயிருக்கின்றகாலையிற் சோபித்திருந்த தேவர்கள் கனவிலும் சயந்தனுக்குப்போதித்தபடிக்கு தேறுதலைச்சொல்லி ஓ! தேவர்களே? சிலதினத்தில்உங்கள்வருத்தங்களொழிந்துபழையபடிக்கு நிலைபெற்று உங்கள்செல்வங்களைப்பெற்று வாழப்போகின்றீர் அதுபரியந்தம் சலனமற்றிருப்பீரென்று தேன்களையும் மகரந்தங்களையுமிறைத்து பரிமளித்திருக்கின்ற கொன்றைப் புஷ்பமாலிகையைத்தரித்த கங்காசடாதர மூர்த்தியாகிய சிவகுமாரன்அனுக்கிரகித்துப்போயினகாலத்திற் றேவர்கள் நித்திரைதெளிந்தெழுபவரைப்போல உணர்ச்சியைப்பெற்றெழுந்து கர்த்தன் வாக்கியங்களைஎண்ணியெண்ணிக் களிமிகுதியினால் ஆனந்தக்கூத்தாடிக் கரங்களைக்கூப்பிக்கொண்டு பலதிக்கினுமோடிப் பாலசுப்பிரமணியக்கடவுளை அநேகவிதங்களிற் றுதித்து வாழ்த்தினவர்களாய்க் கடினசித்தமுடைய துன்மார்க்கராகிய காவலாளிகள் இக்கனவின் சவிஸ்தாரங்களைத்தெரிவராயின் என்செய்வரோவென்னும் வருத்தங்களினால் நடுநடுங்கி மெல்லமெல்ல சயந்தனிருக்கின்ற தலத்தைச்சேர்ந்து தாங்கள் கண்டகாட்சியைச்செவிகளிற் சொல்லக்கேட்டுத் தனக்கனுக்கிரகித்தவிதமாகவேவொத் திருந்தபடியால் ஆனந்தவாரியில்மூழ்கி யுலகையுண்ட விஷ்ணுவைப்போலச் சரீரம்பூரித்தோங்கி உரோமங்கள்சிலிர்க்கஞானநீர்விழிகளிற்பெருகக்களித்து ஆறுமுகக்கடவுள்இவ்வுலகங்களனைத்திலும் சோதியினொளியைப்போலப்பரிபூரணமாகநிறைந்து நடிப்பித்துக் காலபக்குவங்களைக் கணித்திரட்சிக்கும் குணநிசயங்களைப்போற்றி சிவகுமாரன் திருநாமங்களை வேதவாக்கியங்களினாற் துதித்துக்கொண்டு சயந்தனும்மற்றதேவர்களும் வீரவாகுதேவர்வரவை எதிர்பார்த்திருந்தனர்.

---

## வீரவாகுசயந்தனைத்தேற்றுபடலம்.

இத்திறமமரரொடிந்திரன்மக
னத்தலையிருத்தலுமனையர்யாவரு
மொய்த்திடுசிறையகமுண்கண்டானரோ
வித்தகவறிவனும்வீரவாகுவே.

---

வாரீர் சவுனகாதிமஹரிஷிகளே இவ்விதமாக இந்திரகுமாரனாகிய சயந்தனும் மற்றதேவர்களும்களித்திருக்கின்றகாலையிற் சூரபதுமனுக்குப் பிரதானமந்திரியாகியதருமகோபன்மாளிகையின் மீதில்வீற்றிருந்ததேவர்கள்காவலிலிருக்கின்ற சிறைச்சாலையைத் தேடிப்பார்த்துவந்த வீரவாகுதேவர்விழிகளிற்கொடிய பாதகராகிய பலகோடி அவுணர்போற்றிவரும்சிறைச்சாலைதோற்றப்பட்டமாத்திரத்திற் காவலர் கண்ணிமைகொட்டாமல் எத்தலங்களினும் அடர்ந்திருப்பதைப்பார்த்து இப்பாதகர்கள்தன்னைக்காணாமலறிவழிந்திருக்கவும் விண்ணவர் நிசதரிசனமாகத் தன்னைப்பார்த்து வார்த்தையாடவும் நினைந்துஆதியில் மாபலிச்சக்கிரவர்த்தியினிடத்தில் தானமேந்தி விசுவரூபங்கொண்டு பூமியை ஓரடியாலளந்த ஸ்ரீமகாவிஷ்ணுவையொத்த வல்லமைசாலியாகிய வீரவாகுதேவரானவர் பிரணவப்பொருளாய் ஆதிமூலமாய்ப்பிராணிகளிடத்தில் அந்தரான்மாவாகப்பொருந்தி நடிப்பிக்கும் குமாரதேவரைமனதிற் சிந்தித்து அவர்திருநாமத்துக்குரிய சிறந்தமந்திரத்தைச் செபித்துக்கொண்டு தீயகுணங்களைப்பெற்றிருக்கின்ற அவுணர்சூழ்ந்து காத்திருக்குஞ் சிறைச்சாலையிற் றமதுருவைக்கொண்டு பிரவேசித்தமாத்திரத்திற் கரியதேகத்தைப்படைத்த காவலர் அறிவழிந்து குமாரதேவர் திருநாமமந்திரமுயற்சியினால் மயங்கிச் சித்திரப்பிரதமைகளைப்போலக் கண்களைவிழித்தபடியாய்ப் பூமியில் விழுந்துகிடக்கின்ற முன்னிலையில்வெற்றிமாலைபுரளும் வேலைத்தாங்கிய பாலசுப்பிரமணியதேவர் சகோதரனாகவுஞ் சேனைத்தலைவனாகவுந் தூதனாகவும்வந்திருக்கின்ற வீரவாகுவைச்சயந்தன் முதலாகிய தேவர்கள்வெளிப்படையாகக் கண்டவுடன் மகதயிஸ்வரியங்களையனுபவித்திருக்கும் சூரன்கட்டளையின்படிக்கு இப்பாதகராகிய காவலர்செய்யுந் தகாததண்டனைகளுக்கஞ்சி நாமெல்லோரும் மாண்டவர்களைப்போல மூர்ச்சித்துக்கிடந்தவேளையில் நமதுகனவி லெழுந்தருளி தயிரியங்கள்சொல்லித் தேற்றிப்போன கிருபாநிதியாகிய சுப்பிரமணியதேவர் தூதனாகவேண்டுமெனநிதானித்து ஆனந்தவாரியில்மூழ்கியிருக்கின்றகாலையில் வீரவாகுதேவர்அவர்கள் வாசஞ்செய்கின்ற சாலையைச்சேர்ந்து வேலாயுதக்கடவுள் திருநாமங்களைச் செபித்துக்கொண்டு ஜயஜயவெனப்போற்றித்துதித்துப் பொன்னுலகவாழ்வைநீங்கிச் சிறையிற்பட்டுவருந்துகின்ற சயந்தனுக்குச் சமீபத்தில்வந்தனர்.

இவ்விதமாக ஞானவான்களிருதயகமலத்தில் விளங்குகின்ற சரவணபவன்மந்திரங்களை வீரவாகுதேவர்ஸ்மரிக்கின்ற ஓசையானது அமுததாரையைப்போலச் செவிகளிற்கேட்டமாத்திரத்தில் மனங்குளிர்ந்து அதுபரியந்தம் வருத்தியிருந்த துயரங்களையொழித்துச் சயந்தராசனானவன் பண்டுபழகியவனைப்போல நெருங்கிக் கரங்களைக் கூப்பிக்கொண்டு இதனைச்சொல்லுவதாயினன், அடியோங்கள்செய்த பாதகமானதுசூழ்ந்தலைப்பதைப்போல அக்கினிக்கொழுந்தையொத்த செம்பட்டமயிரைப்பெற்ற இராட்சதர்களிடைவிடாமற்சூழ்ந்து கடினதண்டனைகளைச்செய்து வருவதற்குச் சகிக்கக்கூடாமல் அறிவழிந்துபேயனைப்போலிருக்கின்ற எங்களிடத்திற் கருணைகூர்ந்துஐயனே தேவரீரெழுந்தருளுங் காரணமென்னமோஅதைத்தயைசெய்து சொல்லவேண்டுமென்று சயந்தன்போற்றுகின்றகாலையில் நீதிபரனாய்க் கிருபைக்கும் பாத்திரமாய்ஜயசாலியாகவுமிருக்கின்ற வீரவாகுதேவர்இந்திரதனயனைப்பரிவாகப்பார்த்து ஓ! சயந்தனே? என்வரவின்காரணங்களைக்கேட்பாயாக தேவதேவோத்தமனாகியசிவபிரான்நுதல்விழிகளிற்றோற்றியசண்முகப்பெருமாளைஉன்பிதாவாகிய இந்திரன்வணங்கி உன்னைவிடுவித்துத்தரும்படிக்குக் கேட்டுக்கொண்டதற்கிரங்கி அவ்வாறேசெய்வோமெனத் திருவாய்மலர்ந்து பூதப்படைகளுடன் திருக்கயிலையைக்கடந்து பூமியில்வந்து தாருகனைக் கிரவுஞ்சகிரியுடன்வாட்டி யிப்போதுதிருச்செந்திற்பதியிலெழுந்தருளியிருக்கின்றனர், உன்பிதாவுக்கு வாக்குதத்தஞ்செய்தபடிக்கு அவர்சேனைகளுக்குத் தலைவனாகவும்திருக்கயிலையைப்போற்றிவரும் பெருமையையுடைய நந்திதேவர் கணத்தலைவனாகவு மிராநின்ற என்னைப்பரமசிவகடாட்சத்தினால் மகதயிஸ்வரியங்களைப்பெற்று வாழ்கின்றசூரபதுமன் சபையைச்சேர்ந்து உங்களைவிடுதலைசெய்யும்பொருட்டுச் சந்திபேசிவரும்படிக்குத் தூதுவிட்டனர், என்பெயர் வீரரில் வீரனாகிய வீரவாகுதேவனெனவழங்கிவருவனெனச்சொல்லக்கேட்ட சயந்தனானவன் திருப்பாற்கடலிலுதித்த அமுதத்துடன் தவமுயற்சியினாற்கிடைக்கின்றதத்துவஅமுதையுமுண்டு ஆனந்தத்திலடைந்து களிக்கின்றவனைப்போலமகிழ்சிறந்தவனாய் ஐயனே தேவரீர் கிருபையுற்று வெகுகாலமாகவருந்திக் கொடியபாதகர்தண்டனைகளிற்பட்டுவாடுகின்ற அடியோங்கள் துயரங்களைநீக்கியிரட்சிப்பதாக எழுந்தருளியதால் துக்கசாகரத்தில்மூழ்கிவாடிக்களைக்கின்றயாங்கள் அதன்கரையைக்கண்டு வெளிவந்துவாழ்ந்ததுமன்றியிற் பிராத்துவினைகளையும்போக்கிக்கிருதார்த்தராயினேமென்று சயந்தன்புகழ்ச்சியாக வசனிப்பதைவீரவாகுதேவர் திருச்செவிகளினேற்று இரங்கினவரா யிதனைச்சொல்லுவார், கொடியசெய்கைகளைப்பெற் றிருமாந்திருக்கின்ற சூரபதுமனிடத்துக் கென்னைச்செலுத்திய வேலாயுதக்கடவுளானவர் நாளையத்தினமே யிவ்விடம்வந்து அவுணர்பூண்டை வேரறக்களைந்து உங்கள்சிறையையும் விடுவிக்கவிருக்கின்றனர்.

மேலும் பூர்விகமாக அனுபவித்திருந்த பொன்னுலகவாழ்வையும் வேண்டியபேறுகளையும் பெற்றுவாழ்வீர்கள் வெற்றிமாலைபுரளும் வலியபுயங்களைப்படைத்ததேவர்களே எமதிறைவனாகிய சுப்பிரமணியக்கடவுளினதுபிரபாவத்தைச்சொல்லமுடிவதோ நம்மை மெய்ப்பத்தியினாற் பூசித்துவழிபடும் பத்தர்களுக்கு மோட்சசாம்பிராச்சியத்தைத்தந்து சுகத்திலிருத்தியும் சிருஷ்டிகர்த்தனாகிய பிரமதேவன்முதலாகிய தேவர்கள் அவரனுக்கிரகத்தினால் வாழ்ந்திருக்கின்றனரெனச் சொல்லுவோமாகில் அத்தேவனைமனப்பூர்வகமாக நம்பிப்போற்றுகின்ற உங்களுக்குக்கிடைக்கவிருக்கின்ற அயிஸ்வரியத்தைப் புகழக்கூடுவதோ இனிஉங்களுக்கு யாதொருகுறையும் நேராமல் சுகத்திலிருப்பீர்கள் சிலகாலங்களுக்கு முன்னம்பிரணவவாக்கியத்தின்பொருளை வெளியிடவறியாமல் மயங்கியபிரமனைச் சிறைப்படுத்திச் சிருஷ்டித்தொழிலைப்பலகாலம் நடத்திவருமுன்னிலையிற் சிவபிரானெழுந்தருளிக்கேட்டுக்கொண்டபடியால் அவன்சிறையைவிடுதலைசெய்து இரட்சித்த சண்முகப்பெருமாள் உங்களிடத்திற் பரிபூரணகடாட்சம்வைத்திருக்கும்போது மனக்கவலைகள் முதலியகொடுமைகளனைத்தும் அகப்பட்டுப் புனிதராவதொருபொருளோ மேலும் பிறவிக்கடலையுங் கடந்து மோட்சவீட்டையும்பெறுவீர்கள் பிரமனைச்சிறைபடுத்தியபோது சொர்க்கமத்தியபாதலங்களினுட்பட்டசராசரங்களைப்பழையபடிக்கு நிலைபெறநாட்டிய மூலகாரணராகிய சிவசுப்பிரமணியதேவர் உங்களைச்சூரபதுமன் பாதைசெய்தடைத்துவைத்த சிறையைவிடுவிக்கத் திருவுளங்கொண்டுஇவ்விடம்வருவாராகில்உங்கள் தவத்தையின்னவிதமென்று புகழக்கூடுவதோ இத்தகையபேற்றினைக்கிடைத்தவர்களுமுண்டோ அளவிறந்த பாதகங்களைச்செய்துவருங் கொடியஅவுணர் வாசஞ்செய்கின்ற இந்தமயேந்திரநகரத்தில் அறிவாளிகளாகவிருப்பவர்கள் வரவிரும்பார்கள் எமதுகர்த்தனாகிய சிவகுமாரன் கட்டளையிட்டபடியால் மனவருத்தத்துடன் இவ்விடம்வந்த யான்உங்களைக்கண்டமாத்திரத்தில் அவ்வாட்டத்தினைநீங்கி அளவற்றமகிழ்ச்சியைப்பெற்றிருக்கின்றேனென வீரவாகுதேவர்சொல்லிய வாக்கியங்களைக்கேட்ட இந்திரகுமாரனாகியசயந்தன் ஆனந்தபரவசத்தனாய் நாங்கள்இராட்சதர் காவலிற்பட்டு இந்நகரத்திற் சிறைசாய்த்துவந்து சேர்ப்பதற்கு முன்னமே என்தாய்தந்தையர் சூரபதுமன் கொடியநினைவைத்தெரிந்து ஓடியொளித்தனர். அவர்களிருக்கின்றதலமும் சவுக்கியங்களும் மேல்நடக்கவேண்டிய யத்தனங்களுக்குத் தேடியிருக்கின்றகாரணங்களையும் அடியேனிடத்திற் றயைசெய்து சொல்லவேண்டுமென்றுவருந்திக்கேட்பதற்கு வீரவாகுதேவரிரங்கிப் புரந்தரகுமாரனே உன்பிதாவானவன்இந்திராணியுடன்பொன்னுலகை விட்டபின் புபூமியில்வந்துசேர்ந்துமோட்சசாம்பிராச்சியத்தை எளிதிற்றரவல்ல மகத்துவமுடையசீகாழியென்னுந்தெய்வீகத்தலத்திற்போய் அப்பதியிலெழுந்தருளியிருக்கின்றபரமசிவத்தைத் தரிசித்துப்போற்றிப் பரிமளமிகுத்ததிவ்வியமலர்களினால் அருச்சித்துக்கொண்டு சிலகாலமிருந்தபின்பு அவுணப்பாதகர்உபாதியினால்அத்தலத்தைக்கடந்து திருக்கயிலைக்குப்போய்ச் சிவபிரானைத்தரிசித்து தங்களுக்கடுத்திருக்கின்ற வருத்தங்களையும் சூரன்கொடிய செய்கைகளையும் விண்ணப்பஞ் செய்துகொண்டதினால் ஐயனிரங்கி எமதிறைவனாகிய சரவணபவக்கடவுளை நுதல்விழிகளின் மூலமாகப்படைத்து அளவற்றபூதப்படைகளையுங்கூட்டிச் சூரனைஜயித்துத் தேவர்களை நிலைபெறச்செய்துவரக் கடவையெனப் பணித்து விடைதந்தனுப்பியபடிக்குக் குமாரதேவர் திருக்கயிலையைக்கடந்து பூமியில்வந்து தாருகனையும் கிரவுஞ்சனையும்வெற்றிவேலினாற்பிள

ந்துகொன்று திருச்செந்திலென்னும் சிறந்ததலத்திற்சேர்ந்து இந்திரன் மகாவிஷ்ணு பிரமதேவன்முதலாகியதேவர்கள்போற்றிச் சூழவிருக்கின்றனர்.

உன்தாயும் சவுக்கியத்திலிருக்கின்றனளெனச்சவிஸ்தாரமாகச் சொல்லியகாரணங்களைச் சயந்தன் கேட்டவுடன் மனதிற் கொண்டிருந்த சந்தேகமொழிந்தவனய்ஐயனே! தேவரீர் அடியேனிடத்திற் கிருபையுற்றுச் சொல்லிய சந்தோஷச் சேதியானது தாய்தந்தையர்குருதெய்வமாகிய வெற்றிவேலாயுத மூர்த்தியாலே யிவர்களைவிழிகளுக்கெதிரிற் கண்டு களித்ததையொப்பக் காட்டுகின்றது, செய்யாமற்செய்த உதவியாக எண்ணுவதல்லதுஉமக்குக் கைம்மாறென்ன நடத்தப்போகின்றனனென்று சொல்லியசயந்தனையும் மற்றதேவர்களையும்வீரவாகுதேவர்தயையாகப்பார்த்து நீங்கள் வெகுகாலமாக இப்பாதகர்சிறையிலகப்பட்டு வாடுவதைக் குமாரசுவாமியார் விடுவித்துப்பாதுகாக்குங் காலம்சமீபித்திருக்கின்றது, அதுவனாயிற்சகித்திருப்பீர்கள் அத்தேவனைஎன்னென நினைத்திருக்கிறீர்கள் ஒப்புவமையற்ற பரம்பொருளாய் சோதிமயமாய்யாவராலுங் காணவொண்ணாத மூலகாரணனய்த் தேவதேவோத்தமனாக விருக்கின்ற ஆதிமூலமே! சண்முகங்களும், பன்னிருகரங்களையும் தண்டைசதங்கைகள் கொஞ்சும் அழகிய செந்தாமரைமலரையொத்த பாதாரவிந்தங்களையும்பெற்றுக் கந்தசுவாமி யென்னும் திருநாமத்தைக் கொண்டு சகலருந் தரிசித்துக்கிருதார்த்தராதற்பொருட்டு எழுந்தருளியிருக்கின்றனர். இத்தேவன்தோற்றத்துக் கேதுவேதெனிற் சிவபிரான் கடாட்சித்த வரமுயற்சிகளினல் வீறிக்கொடுங்கோல்செலுத்தி வருகின்றசூரபதுமனுக்கஞ்சி மகாவிஷ்ணு, பிரமதேவன்,தேவராசன்,விண்ணவர்,மானுடர்முதலாகியபிராணிகள்வருந்தி வாடுவதையும் நீங்கள்பட்டிருக்கின்ற சிறையையும்நீக்கிச் சகலபுவனங்களையும் பழையபடிக்குச்சலனமற்றுநிலைபெற்றுவாழும்படிக்குச் செய்யநினைந்து வெளிப்பட்டதாகும்,இதுவல்லாமல் ஆதியில்தக்கனனவன் தனக்குச் சகலசெல்வங்களையுங் கடாட்சித்தசிவபிரானை மருகனென்றெண்ணி அவர்பெருமைகளை மதியாமல் அகந்தையுற்றுஅக்கடவுளை நீக்கிச்செய்த யாகத்தில் விஷ்ணு. பிரமன்,இந்திரன் முதலிய தேவர்கள் அவன்கட்டளைக்குட்பட்டு தகுந்ததாதென நினைந்துபாராமல் அவிர்ப்பாகத்தை யிச்சித்துண்ட பாதகத்துக்குத் தக்க தண்டனைகளை வீரபத்திரக்கடவுளைக்கொண்டுசெய்வித்தும்சிறிதுமிகுதியிருந்தவைகளை சூரபதுமனல் வாட்டியனுபவிக்கச்செய்தனர். அத்தகைய தேவாதிதேவனுகிய சிவபிரான் கட்டளையை ஆறுமுகக்கடவுளினலல்லது மற்றெவர்களால் நீக்கப்படும், இதற்குச்சிலதிருஷ்டாந்தத்தைக் காட்டுகின்றேன். அதனல் தெரிந்துகொள்ளக் கடவை அளவற்ற யுகங்களாய்த்தேவர்கள் ரிஷிகள் மானுடர் முதலாகியவர்களைபலமாயைகளைக்காட்டி அலைத்துக்கொன்று கொண்டிருந்த கிரவுஞ்சபருவதத்தையும் சராசரப்பிரபஞ்சங்களுக்குயமனைப்போல வருத்தித் திசைகளைவென்று மகாவிஷ்ணுவுடன்போராடி அவர்செலுத்திய சக்கரத்தையுங் கழுத்தணியாகத் தரித்துக் கொடுங்கோல்செலுத்திவந்த தாருகாசுரனையும் வெற்றிவேலினற்பிளந்து அவுணவெள்ளங்களையுங் கொன்று வாட்டியதை என்னென்று நினைந்திருக்கின்றனைபரமசிவகடாட்சத்தினற் பலவளங்களையுப்பெற்றுஆயிரத்தெட்டண்டங்களை நூற்றெட்டு யுகங்களாகஆண்டுகொண்டு தினைவாட்டி வருத்திவரும் அழிவற்ற வச்சிரதேகத்தைப்பெற்ற சூரபதுமன் குலநாசஞ்செய்வதற்கு முகூர்த்தநாள் கொண்டதாக மதிக்கக்கடவைபொன்னையொத்த மகரந்தங்களை யிறைத்துப் பரிமளித்துத் தேன்களைத்துளிக்கும் கற்பகமலர்மாலை புரளாநின்ற புசங்களையுடைய தேவராசகுமாரனே! யின்னமுஞ்சொல்லக்கேட்பையாக.

எமதிறைவனுகிய பாலசுப்பிரமணியதேவர்சற்றுகோபங்கொண்டு மந்தரத்தையொத்து மணிகள்கலிக்குந்தனுசை வட்டாகாரமாகவளைத்து ஒருசூரியபாணத்தைச்செலுத்துவராயில் இந்தச்சூரன் முதலாகிய அவுணவீரர்களனைவரும் அதப்பட்டுப் போவதற்குச் சந்தேகமில்லை, அப்படிக்கிருக்க பிரமன் விஷ்ணு தேடிக்காண்பரியசோதிமயமாகிய சிவசுப்பிரமணியதேவர் திருக்கரத்திற் கோடிசூரியப்பிரகாசமாக விளங்குகின்ற வெற்றிவேலாயுதத்துக் கெதிரொன்றிருக்கின்றதெனச் சொல்லப்போமோ? அந்தச் சிறந்தபடையைப் பிரயோகிப்பது அதிகமுயற்சியாக வெண்ண வேண்டி யிருக்கின்றது. சத்தசாகரங்கள் அஷ்டகுலாசலங்கள் சராசரப்பிரபஞ்சங்க ளடங்கியிருக்கின்ற அண்டகோடிகளனைத்தையும் நிமைப்போதிற் சாம்பலாக்கிமீளும், அப்படிக்கிருக்கச் சூரபதுமன் முதலிய அவுணவீரரையும் சேனைவெள்ளங்களையுமாய்த்து ஜயங்கொள்ளத்தக்கதாகக் குமாரதேவர்தாமேயெழுந்தருளியதை யோசிக்குமிடத்தில்இதுவுமொருதிருவிளையாடலாகும் இவையன்றியும் மகரமச்சங்கள் திமிதிமிங்கலகிலங்கள் உலவித்திரிகின்ற சமுத்திரத்தை அகழியாகப்படைத்திருக்கின்ற இந்தமயேந்திரபுரியையாண்டிருக்கின்றசூரபதுமன் விசாலமாகிய மார்பை வெற்றிவேலினற்பிளந்து ஜயங்கொண்ட பின்பல்லது உங்களரியசிறைகள்மீட்கப்படாதெனத்தெரிந்தபோதினும் வேதசாஸ்திர விதிப்படிக்குப் பெரியோர்கள் நடந்துகொள்ளவேண்டும்நீதியை யோசித்துச் சிவசுப்பிரமணியதேவர் நம்மைச் சமாதானம் பேசிவரும்படிக்குத் தூதனுப்பினர், அவர்கட்டளையின்பிரகாரம் சபைக்குப்போய்ச் சூரபதுமனைக்கண்டு அவுணராசனே? நீபிழைக்கும்பொருட்டு இதனைக்கேட்டுநடந்துகொள்ளக்கடவையென்றுமேல்நடக்கவிருக்கின்றகாரணங்களைப் பலவிதங்களில் விரித்துத்தெரிவித்தபோதினும் ஊழ்வினையின் சம்பந்தப்பட்டவனுதலால் அவ்வாக்கியங்களை முக்கியமாகநினைந்து உங்களைவிடுதலைசெய்யச்சம்மதப்படான், உடனேநான்இப்பதியைக்கடந்துதிருச்செந்திற்பதியைச்சேர்ந்து சூரபதுமன்கருத்தைத்தெரிவித்தமாத்திரத்திற் சிவசுப்பிரமணியக்கடவுள்கோபித்து பூதப்படைகளுடனெழுந்தருளி நாளையதினமே இவ்விடம்வந்து இப்பாதகராகிய அவுணர்பூண்டில்லாமற் களைந்தெறிந்து உங்களையிரட்சிப்பர்அதனையும்நீங்களேகாணப்போகிறீர்கள்.

மகாவிஷ்ணுவை பொத்தவரும் அந்தத்தேவன் பெருமைகளைத் தெரிந்து புகழவறியார் ஆதிமூலமாகவிளங்கும் சரவணபவன்கரத்திற் பற்றியிருக்கின்றவெற்றிவேலாயுதத்தைத் தாமிருந்த விடத்தில் நின்றுபிரயோகித்துச் சூரபதுமனை அவன்துணைவர் புத்திரகளத்திராதிகளுடன் நாசஞ்செய்யவல்லர், அப்படிக்கிருக்கப் பொன்மயமாகியவண்டில்கள்-அச்சு-மச்சு-குத்துக்கால்-கொடுங்கை-முதலிய அலங்காரங்களைப் பெற்றிருக்கின்ற தேரினிடத்

தெழுந்தருளிப் பூதப்படைகள்சூழ்ந்துபோற்ற இவ்விடம்வந்து சமர்க்களத்தில் யுத்தஞ்செய்து இப்பாதகர்களைக்கொல்ல நினைந்திருப்பது பாலசுப்பிரமணியருக்குஇதுவுமொரு திருவிளையாடலாகும் உங்களுக்கு விரித்துவிரித்துச் சொல்லவேண்டுவதில்லை, எமதிறைவனாகிய சரவணபவன் எங்களையும்பூதப்படைகளையுங்கூட்டிக்கொண்டு இப்பட்டணத்தைச்சேர்ந்து பத்துதினத்துக் குள்ளாக சூரபதுமனையும் அவுணவீரர்களையும் சேனைசமுத்திரங்களையும் மடக்கிக்கொண்டு மகா யுத்தங்களைச் செய்துசின்னபின்னப்பட ரணக்களத்தில் மாய்த்தபின்பு கொடிய காவலிற்பட்டு நெடுநாளாய் வாடுகின்ற உங்களனைவரையும் விடுவித்துக்கொண்டுபோய்ப் பழையபடிக்குப்பொன்னுலகத்திற் குடியேற்றி மகதயிஸ்வரியச் செல்வங்களையும் அனுபவிக்கச்செய்வார், மற்றொரு வியாபகங்களையுங் கொள்ளாமல் இதனைக் கடைப்பிடியாக நம்பியிருக்கக்கடவீர்களென்று வீரவாகுதேவர் சயந்தன்முதலாகியதேவர்களுக்குப் போதித்துத் தயிரியம் பெறச்செய்துதேற்றியகாலத்தில் மிகுந்த வணக்கத்துடன் அவ்வாக்கியங்களைக்கேட்டு ஆனந்த பரவசத்தராய்த் தேவரீர்கடாட்சித்தபடிக்குக் குமாரதேவர் இவ்விடமெழுந்தருளி யிப்பாதகரை விரைவில்ஜயங்கொள்ளக்கடவரென வாழ்த்தியபின்பு சயந்தன்முதலிய தேவர்கள் கரங்களைக்கூப்பிக்கொண்டு இதனைவிண்ணப்பஞ்செய்வதாயினர். ஐயனே! நாங்களிருக்கின்ற சவுக்கியங்களையுந் துன்பங்களையுந்தேவரீர் நிசதரிசனையாகக் கண்டிருப்பதைப் பிதாவாகியதேவராசனுக்குத்தெரிவிக்கவேண்டும் வீரகண்டாமணிகள் கலீல்கலீலெனச் சத்திக்கும் பாதாரவிந்தங்களைப் படைத்தவீராதிவீரனே? யினி காலதாமசஞ்செய்யாமல் நீர்நினைந்துவந்த தூதின் காரியங்களை முடித்துக்கொண்டுதிரும்பும்படிக்குப் போய்வாருமென்று அனைவரும் போற்றுவதை வீரசிங்கம்போன்ற ஜயசாலியாகிய குமாரதேவர்தூதன் கேட்டு அவர்களிடத்திற் பரிவாய்உங்கள் கருத்தின்வண்ணம் செய்வோமென்று அத்தேவர்கள்கூட்டத்தைக் கையமைத்திருத்திச் சிறைச்சாலையைக்கடக்குமுன்னிலையிற் காவலர் சோர்ந்துகிடப்பதைக்கண்டு பழையபடிக்குநினைவுண்டாயெழக் கடவரெனச் சொல்லிநடந்தனர். அவ்வாறே அப்பாதகரும்தட்சணத்தில் நித்திரை தெளிந்தவர்களைப்போலவெழுந்து சர்வசாக்கிரதைகளுடனும் சயந்தன்முதலாகிய தேவர்களைக் காத்திருந்தனர்.

---

## அவைபுகுபடலம்.

மடந்தையொடிரிந்திடும்வாசவன்மக
னடைந்திடுசிறைக்களமகன்றுவானெறி
நடந்தனனவுணர்கோனண்ணுகோநக
ரிடந்தருகிடங்கையிகந்துபோயினன்.

---

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? யிவ்வாறுவீரவாகுதேவர் சயந்தன்முதலிய தேவர்களுக்குத்தேறுதலைசெய்துநிறுத்தி வெளிப்பட்டபோது பழையபடிக்குச்சூட்சுமரூபத்தைக்கொண்டு வானவெல்லையிற் றாவிப்போய் இராஜபரமேஸ்வரனாகியசூரபதுமன்வாசஞ்செய்கின்ற அரண்மனையைச்சூழ்ந்து சமுத்திரத்தைப்போல விசாலமாய் விளங்கிருக்கின்ற அகழியைக்கடந்து சக்கிரவாளகிரியைப்போலப் பாரித்தோங்கி மேகங்கள்சஞ்சரிக்கும் உன்னதமுள்ளதாய் நூறுவெள்ளம் ரதகச துரகபதாதிகள் சர்வாயுதபாணிகளாய்க் கண்ணிமையை நிகர்த்துக்காவல் கொண்டிருக்கும் பொன்மதிலுக் கருகிற்சென்று அதன் மீது நாட்டப்பட்டு வானவளாவி லுயர்ந்துஅசையுந்தோறும் ஆகாயகங்கையிற்றோய்ந்து தோய்ந்து வரளச் செய்து சூரியசந்திரர் நட்சத்திரங்களின் பிரகாசத்தைமறைத்துவிளங்கும் பொற்கொடிகளின்பெருமைகளைப்பார்த்து அதிசயித்தவராய் அம்மதிலுக்கு நாற்புரங்களினுந்தோன்றுகின்ற உன்னதமுள்ள நவரத்தினமயமாகிய கோபுரவாயில்களின் சிறப்பைக்கண்டுவியந்துஇதனைச்சொல்லுவதாயினர், அலைகள்பெருத்த கடல்நீரை உள்ளங்கையினேற்று ஆபோசனஞ்செய்த அகஸ்தியர்கோபித்துக் கரத்திற்பற்றியிருந்த தண்டாயுதத்தினாற் குத்தியகாலத்திற் பற்பலதுளைகள்பட்டு நிற்கின்ற கிரவுஞ்சபருவதத்தின்மீது தாருகனெழுந்து நின்றதைப்போலச்சொர்ணமயமாகிய அளவற்ற நிலைகளைப்பெற்றதாயும் கற்கம்பத்தை நிகர்த்து உருண்டு வலிபெற்றுப்புஷ்பமாலைகள் புரளும்புயங்களையுடைய சூரபதுமன் பரமசிவகடாட்சத்தினாற்பெற்றிருக்கின்ற அண்டவடுக்குகள்தோறும் ஏறிப்போவதற்கு நாட்டிவைத்திருக்கும் பொன்னேணியைப்போன்றும் இக்கோபுரங்கள் தோற்றுகின்றது. இவற்றுள்நமக்கெதிரிற் காட்டுகின்றபொற்றகடுகள் பரப்பிய பல அடுக்குகளைப் பெற்றிருக்கின்ற கோபுரத்தைப் பார்க்குமிடத்திற் சர்வசங்காரகாலத்திற் சமுத்திர அணையைக்கடந்து மீறிச் சொலித்திருக்கும் வடவாமுகாக்கினியினிடத்துண்டாகும் அக்கினிக்கொழுந்தானது வானவெல்லைமுற்றும்பரந்து விளங்குவதுபோலநவரத்தின காந்திகளைவீசிக்கொண்டிருக்கின்றது இதனைவிசுவகருமன்படைக்கும்போது பலஅண்டங்களினு மிருக்கின்ற மகம்மேருமுதலாகியகுலகிரிகளைப்பறித்துச் சீர்படுத்திப் பதித்து வைத்திருப்பதற்குநிகராக பலசிகரங்கள் அணிபடக்காட்டுகின்றன.

இத்தகைய சிறப்புகளைப் படைத்திருக்கின்ற நவரத்தினமயமாகிய இந்தக்கோபுரத்தைச்சூழ நாட்டியிருக்கின்ற கொடிகளானவை அசைந்திருப்பதைப் பார்க்குமிடத்தில் மகாவிஷ்ணு பிரமதேவன் தேடிக்காண்பரிய சோதியாகிய சிவபிரான் சடாமகுடத்திற் சர்ப்பங்கள் படங்களை விரித்தாடுவதைப்போலக் காட்டநின்றது, இவையன்றியும் பலசித்திரப்பிரதமைகளினால் அலங்கரித்திருக்கும் இந்தக்கோபுரத்தின் உச்சியில்நாட்டப்பட்டிருக்கின்ற துவசபடங்கள் அசைவு கொள்ளுதல் அண்டச்சுவரிற்றாக்குந்தோறும் பணைக்கல்லினிடத்திற் சம்மட்டியினாலடிப்பதைப்போன்றும் பேரிகையின் மீதிற் குறுந்தடிகளினால் தாக்குவதற் கொப்பாகவும் கணகணென முழங்கிக் கொண்டிருக்கின்றது தேவர்கள் - இயக்கர்- சித்தர்- கின்னரர்- கிம்புருடர்- சித்தர்- வித்தியாதரர்- கருடர்- காந்தருவர்- முதலாகத் தாங்கள் வாசமாக விருந்த பதங்களை வெறுத்து இந்தக்கோபுரத்தி லிருக்கின்ற சித்திரவிசித்திர அலங்காரங்களினிடத்தில் இச்சைகொண்டு தங்கள் தேவியர் புத்திரமித்திரர்களுடன் இதிலடங்கியிருக்கின்ற அடுக்குகள் தோறும்வாசமாய்க் களித்திருக்கின்றனர், இதைப்பார்க்குமிடத்தில் இக்கோபுரத்தைப்படைத்தகாலத்திற் சிற்பியானவன் பொற்பாவைகளைச்செய்து வைத்

திருப்பதுக் கொப்பாகக்காட்டுகின்றது, பற்பலஆயுதசவரட்சணைகளைக்கொண்டு சத்துருக்கள்முதலியசிவராசிகள் நுழைய விடங்கொடாமல் உயர்ந்திருக்கும் மதிலுக்குநாயகமாக வானத்தை யளாவிநிற்கின்றகோபுரவாயிலின்சிறப்புகளை வீரவாகுதேவர் பார்வையிட்டு அதிகசந்தோஷத்தைப் படைத்தவராய் அவ்வாயிலி னிடத்தும் மேல்நிலைகளினும் மதயானைகளைப் போன்ற வலிபெற்றஉக்கிரன் மயூரன் முதலாகிய படைத்தலைவர்கள் நூறுவெள்ளம் ரதகசதுரக பதாதிகளுடன் இடைவிடாமற் காத்து மசகமுதலாகத் தங்களையறியாமல் உள்நுழைய வொட்டாமற் சர்வாயுதபாணிகளாய்நிற்பதை வீரவாகுதேவர்கண்டு இவ்வாயிலின்மூலமாகப்போவது அரிதெனநினைந்து அதன்பாரிசத்திற் சூழ்ந்திருக்கின்ற மதிலின் மேற்புறங்களிற் போற்றியிருப்பவர்களுக்குத் தோற்றாமல்அப்புறப்பட்டுப்போய்த்தமக்கெதிரில் பொன்மயமாய்வானத்தை யளாவிநிற்கின்ற முகச்சாலைமண்டபத்தின்மீதிற்றாவிநின்று அதன்பெருமிதங்களைப்பார்த்து மகிழ்ந்து அதன்மீதிருந்த படிக்குவீரசிங்கம்போன்ற தூதனானவர்அவுணர்க்கரசனாகிய சூரபதுமன்வாசஞ்செய்கின்ற நவரத்தினமயமாகிய மாளிகையினிடத்தி லிருக்கின்ற வளப்பங்களனைத்தையும் கண்களும்மனமுங்களித்துநீங்குவதற்கரிதாகக்கண்டுகளித்துகொடியமனதைப்பெற்றிருக்கின்றசூரபதுமன் நவரத்தினமயமாகியசிங்காதனத்திலெழுந்தருளிஆணை ஆக்கினைகளைச்செலுத்திவரும் சொர்னமயமாகிய சபாமண்டபத்தின் பெருமைகளைநோக்கிய முன்னிலையில் வீரவாகுதேவர்கொண்ட அதிசயத்தை யின்னபடித்தென்று சொல்லிமுடிவதோ.

ஆதியில் அரியதவங்களைமுடித்து வருந்தியதற்கிரங்கிச்சிவபிரானெழுந்தருளிக் கடாட்சித்துப்போயின மகதயிஸ்வரியச் சம்பத்தினையனுபவித்துச் சகலபுவனங்களினுமிராநின்றவர்களனைவரும் வந்துவந்து வீரகண்டைதரித்திருக்கின்ற பாதாரவிந்தங்களிற் பணிந்துபோற்றிநெருங்கியிருக்கத்தக்கதாக இராசபரமேஸ்வரனாகிய சூரபதுமன் கொலுவிருக்கின்ற சபாமண்டபத்தின் சிறப்புகளையும் அலங்காரங்களையும் வர்னிப்பதாயினர் சூரபதுமனுக்கிருப்பிடமாகிய அரண்மனைமத்தியில் ஆயிரயோசனை விஸ்திரணமுடையதாய்த் தங்கத்தினாற் செய்யப்பட்டுச் சிரோரத்தினவகைகளினால் அலங்கரித்துச்சித்திரப்பாவைகளாதியாகிய சிறப்புகளைப்பெற்றுச் சூரியனைப்போலப் பிரகாசித்துப்பார்த்தவர்கள் விழிகளைக்கிரகிக்கவல்ல முச்சட்டைகளைவாய்ந்த சபாமண்டபத்தின் முகப்பிற் சூரபதுமன்வீற்றிருந்த காட்சியைப்பேசுவார், சுந்தரவதிகளாகிய அரம்பை ஊர்வசி திலோத்தமைமேனகை முதலாகிய தேவகன்னியர்கள் சர்வாபரண பூஷிதைகளாய்ச் செந்தாமரைமலரையொத்த மிருதுவாகிய கரங்களிற் பொருந்தி யிருக்கின்ற வயிரவளையல்கள்கலிக்கத்தக்கதாக ஆலவட்டங்களையும்வெண்சாமரைகளையுங்கொண்டுகுளிர்ந்த சிறுகாற்றசையும்படிக்கு இருபாரிசங்களினும்நின்றுவீசவும் முத்துச்சரங்களசையவும் மேற்புறத்தில்இந்திரநீலகலசம் விளங்கவும் நவரத்தினமயமாய்ச்சபைமுற்றினும் விளங்கிப் பரந்திருக்கும் பூச்சக்கிரக்குடைகளைச்சோடசகலைகளைப்பெற்ற சந்திரனுஞ் சூரியனும்பக்கங்களில்நின்றுதாங்கவும் தங்கத்தகட்டினையொப்பப் பிரகாசிக்கும் வெள்ளிலைபளிங்கையொத்தபாக்கு துல்லியமாகியசுண்ணம்பு மற்றவாசனைத் திரவியங்களடங்கிய இரத்தினமயமாகிய பெட்டிகளையும் புனுகுசவ்வாதுமுதலியகலவைகளைச்சேர்த்த பொன்கலசங்களையும் மின்னலையொத்தஉடைவாளையும் கரங்களிலேந்திவீரசிங்கம்போன்றஅவுணர்கள்சூழ்ந்திருக்கவும் ஆயிரகிரணசமோகங்களைப்பெற்று உலகங்களை விளக்கித்திரிகின்ற சூரியனைச் சிறைசெய்த ஜயசாலியாகிய பானுகோபன்வச்சிரவாகுபருதிக்கண்ணன் மூவாயிரர்முதலிய குமாரவர்க்கங்கள் நட்சத்திர இராசிகளைப்போல எதிரிற்பரப்பியிருக்கின்ற சிங்காதனங்களில் வீற்றிருக்கவும் பழிபாதகங்களுக்கஞ்சாதகொடியமனதைப்பெற்றவர்களாய் அரசன் மனதுக்கேற்றமந்திராலோசனைகளைச் சொல்லவல்ல தருமகோபனாதியாகிய மந்திரிகள் பிரதானிகள் நெருங்கியிருக்கவும் சேனைத்தலைவர்கள் விழிகள்சிவந்து அரசன்கட்டளைக்கெதிர்பார்த்திருக்கவும் தண்டநாயகர்கள் காத்திருக்கவும் காரியப்பேர்கள் இராசாதிராசன் பணித்தவைகளைதட்சணத்தில் முடித்துக்கொண்டுநிற்கவும் இராசபரமேஸ்வரனே சிவபிரான் பூரணகடாட்சம்பெற்ற தீரனே ஆயிரத்தெட்டண்டங்களுக்கதிபனே அஷ்டதிசைகளையும்வென்று சகலனையு மேவல்கொண்டுவருங் கீர்த்திப்பிரதாபனே வீரசிங்கம்போன்ற சூரனேயென்றுபட்டுவர் புகழவும்கட்டியக்காரர்கள் பொற்பிரம்புகளைத்தாங்கி அரசன்முகவணியில்நெருங்க வொட்டாமல் எச்சரித்துவரவும்ணிதர்கள் காலங்களையறிந்து சொல்லிவரவும் வாயுவேகத்தினு முந்திச்செல்லவல்ல தூதர்கள் பிரபஞ்சங்களில்நடந்துவருஞ்செய்திகளை விண்ணப்பஞ்செய்துபோகவும் வித்துவான்கள் பாமாலைகளைச் சாற்றிப்புகழவும் பரதசாஸ்திரமுறைப்படிக்கு இராகங்களைப்பாடி அபிநயகளைக்காட்டி அன்னங்களைப்போல நடித்துக்கண்டவர்கள் விழிகளையும்மனதையும் கிரகிக்கவல்ல சுந்தரமுள்ள தேவகன்னியர் இயக்ஷர்மகளிர் இராட்சதப்பாவையர் முதலியநாடகப்பெண்கள்சபைக்குமுன்பாரிசத்தில் நெருங்கிக் கேளிக்கைகளைச் செய்துவரவும் சுந்தரமுள்ள கருடகாந்தருவர் சித்தர்-வித்தியாதரர்கள் தேவயாழ்களைமீட்டி மதுரமானபாடல்களைப்பாடவும் ஜகதீஸ்வரனாகியபரமேஸ்வரனைப்பூசித்துப்பெற்ற வரமுயற்சியினால் இறுமாந்து பரமனைமறந்து நாசமடைந்த பாதகராகிய பழையஇராட்சதக்கூட்டங்களைப்போலமனதிற் சற்றும் இரக்கமற்றவராய்க்கோபமேகுடிகொண்டிருக்கும் மனதையும் சிவந்தவிழிகளையும் கடினசொற்களையும்பெற்ற அவுணவீரர்கள் சேட்டைகளைத்தரித்துக்கொண்டு பிரம்புகளைத்தாங்கி அரசனைப்பணியவருபவரை முன்பின்பாராமல் அடித்துத்தள்ளியும் உடைவாட்களைப் பற்றிக்கொண்டு சூரபதுமன் முன்னம்பராபரிசெய்துலாவவும் இவ்விதமாக ஆயிரயோசனைபரப்புள்ளசபையிலிடம்பெறாமற் சகலரும் நெருங்கு முன்னிலையிற்கிரீடங்களுடன்-கிரீடங்கள் - புசங்களுடன்-புசங்கள்-தாக்கும்போது-உதிருகின்ற நவரத்தினங்கள் பிரகாசித்திருக்கவும் எள்ளைப்போட்டால் கீழேவிழவிடமில்லாமல்அடர்ந்து இறைச்சலிட்டிருக்கின்ற மகாமண்டபமுகப்பில் வயிரத்தினால் உடலும்வயிடூரியத்தினாற் பற்களும் முத்தினாற் புறமயிரும் கெம்புகளினால் விழிகளும்மரகதத்தினால்நகங்களும்மற்றவிரத்தினங்களினால் உறுப்புகளுமாகசோடித்திராநின்ற சிங்கங்கள் சிரங்களிற்றாங்கும் பிரகாசம்பொருந்திய பாரித்தஅணையின்மேல் உதயகிரியி

ளிடத்தெழுகின்ற பாலசூரியனைப்போல நவரத்தினமயமாகிய கிரீடமானது சிரத்திற்பிரகாசிக்கவும் இராகுகேதுக்கள் எக்காலத்திற் சூரியசந்திரரைக்கவ்வியிருப்பதை நிகர்த்து வயிரத்தினுற்சோடித்த மகரகுண்டலங்கள்இருசெவிகளினும் பிரகாசிக்கவும் வயிரமலையின்மீதிற்சோடசகலைகளைப்பெற்ற சந்திரன்விளங்குவதைப்போல திருநீறுவிளங்கும் நெற்றியானது பிரகாசிக்கவும் இரத்தினமலையினிடத்துண்டாகிய புழைகள்தோறும் குளிர்ந்தஜலத்துளிகளுதிப்பதைப்போல அழகிய திருமார்பிற்பாரித்த ஆணிமுத்துத் தாழ்வடங்கள்புரளவும் சுகந்தபரிமளமிகுத்த சந்தனக்குழம்பினிடத்திற் புனுகுசவ்வாதுமுதலியவாசனைத் திரவியங்களைச்சேர்த்துதேகத்திற்பூசியிருப்பதுஅண்டமுழுவதுங் கமழ்ந்திருக்கவும் நீருண்டகாளமேகத்தினிடத்தில்விளங்கும் மின்னலைப்போல ஆயிரத்தெட்டண்டங்களையும்வென்று அரசுசெலுத்தும் வலிபெற்றதிரண்டதோள்களினிடத்தில் நவரத்தினங்களினுற் சோடித்திருக்கின்ற வாகுவலயங்கள்சொலிக்கவும் ஆதிசேஷன் சுமந்திருக்கும் பூமிபாரத்தை ஆற்றிக்கொள்ளும்படிக்குச் சிரத்தில்நின்ற சுமையைக்கரங்களினுல் உயர்த்தியதைப்போல முன்னங்கையில் வயிரக்கடகங்கள் மின்னலையொத்தசைந்திருக்கவும் நீண்டவிரல்கள்தோறும்நட்சத்திரங்களைநிகர்த்து இரத்தினமோதிரங்கள்துலங்கவும் நீலரத்தினமலையின்மீதில் வெளுத்தகங்கைசூழ்ந்தோடுவதற்கொப்பாக அழகியகண்டத்தில்முத்தாரங்கள் பிரகாசிக்கவும் வீரலட்சுமிஜயலட்சுமியிடைவிடாமல் எக்காலத்தும் வாசமாயிருக்கின்றபுசங்களின்மத்தியிற்றேற்றநின்ற மார்பினிடத்தில் நவரத்தினங்களினுற்சோடித்தமதாணிப்பதக்கம் சரப்பளிமோகனமாலை பொன்மயமாகிய முப்புரிநூல்முதலிய ஆபரணங்கள்புரண்டு சொலித்திருக்கவும்செக்கர்வானத்தைநிகர்த்துவிளங்கும் பீதாம்பரத்தை நீலமேகவண்ணனுகிய மகாவிஷ்ணுதரித்திருப்பதைப்போலப் பொன்னுடையிடையில்விளங்கவும் அதன்மீதிற் சிரோரத்தினமயமாகிய பட்டிகைபிரகாசிக்கவும் மின்னலினுடனிடிகளைச்சேர்த்திருப்பதைப்போல அபரஞ்சிப்பட்டிகையில் பிகிந்திருக்கின்ற வீரகண்டைகள் பாதங்களிற்சத்திக்கவும் இத்தகைய சிறப்புகளைவாய்ந்த பூஷணங்களுடன் பிரமதேவன் நூதனமாக்ச்சோடித்துக் கொண்டுவந்து வெகுமதிகொடுத்தஇரத்தினபரணங்களும் விளங்கத்தக்கதாக ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனுகிய சூரபதுமனனவன் நவரத்தினமயமாய் பொன்வடிவைப்பெற்றிருக்கின்ற மேகத்தைப்போலச் சிங்காதனத்தில் வீற்றிருந்தனன்.

இவ்விதஆடம்பரங்களுடன் இராசாதிராசனுகிய சூரபதுமன் வீரசிங்கசர்தைப்போலக் கம்பீரமாகவிளங்குகின்றகாட்சியைவானத்தையளாவிய மாளிகையின்மேலருக்கின்ற வீரவாகுதேவர் கண்காட்சியாகக்கவனித்துப்பார்த்து அதிகசந்தோஷத்தைப்பெற்றவராய் அவனிடத்துண்டாகிய அன்புமிகுதியினுல் இதனைச்சொல்லுவதாயினர், சிருஷ்டிதிதிசங்காரமென்னும்முத்தொழிலைநடத்தும்பொருட்டு பிரமன் விஷ்ணு உருத்திரனெனவிளங்கியுலகவியாபாரங்களைச்செய்து கடையிற் சர்வசங்காரகாலத்தில் அவ்வுருவங்களனைத்தும் தம்மிற்சேர்ந்தொன்ருய்ச் சுயஞ்சோதிமயமாக நின்று ஆனந்தநடனங்களைச்செய்து மறுபடியும் மூவராகக்காட்டிச் சராசரப்பிரபஞ்சங்களையும் பழையபடிக்குப்படைத்துப் பிராணிகள்பருவங்களுக்கடுத்த இன்பதுன்பங்களையூட்டி நடிப்பித்து அதனைக்கண்டு களித்திராநின்ற ஆதிதேவனுகிய பரமேஸ்வரர்திவ்வியசரணரவிந்தங்களில் வணங்கிப்பூசித்து அரியதவங்களைச் செய்திருக்கின்ற இந்திரன்முதலாகியதேவர்கள்-அவுணர்-அசுரர்-மானிடர்- நாகர் - இவர்களிற் பிரகாசம் பொருந்திய சூரியவேலைத்தாங்கியிருக்கின்ற சூரபதுமனைப்போல இத்தகையஅகன்றசாம்பிராச்சியச் செல்வப்பெருக்கை யனுபவித்தவர்கள் யாவரையுங் கண்டதில்லை மேலும் ஐம்புலன்களைப்பஞ்சேந்திரியவிஷயங்களிற் செல்லவொட்டாமலடக்கியிருதயகமலத்திருத்திப்பரமசிவத்தின் திருவடிகளைச் சிந்தித்துப் பனி-குளிர்-வெய்யல்- மழையிவற்றின் கொடுமைகளுக்கஞ்சாமற் பலகாலம் கடினதவங்களைச்செய்து அவனருளைப் பூர்த்தியாகப்பெற்று வாழுகின்ற ரிஷிகள் மகத்துக்களிலும்இவனையொத்தபேற்றினைக்கிடைத்திருப்பவரைக்காணேன் இதுவுமல்லாமற் பிராணிகள்செய்த விரதங்களுக்குத்தக்க பேறுகளைக்கடாட்சித்தாளுங் கிருபாநிதியாய் எமதையனுய் திரிநேத்திரதாரியாகிய பரமசிவனும் இவனுக்கு அனுக்கிரகித்திருக்கின்ற பெருஞ்செல்வத்தைப்போல யாவருக்குங்கொடுத்திருப்பதாகக் கேட்டதுமில்லை. இப்படிக்கிருந்தபோதினும் இந்தஅவுணராசன் அளவற்றகாலம் அக்கினிமத்தியிலிருந்து தவங்களைச்செய்தும் தேகத்தைச்சேதித்து உதிரப்பெருக்கினுல் ஆகுதிகொடுத்தும் கடையில் வயிரவூசியிற்பாய்ந்திறந்து மீட்டும்பரமன்கிருபையினுல் வெளிவந்து அத்தேவதேவன் கடாட்சித்திருக்கின்ற இந்தஅகன்றசாம்பிராச்சியச் செல்வங்களைச் சாஸ்விதமாகஅனுபவித்துச் செங்கோலைநடாத்திக்களித்து சுகசீவியாகவாழ்ந்திருக்கநினையாமல் இப்பாதகன் நாசமடைவதற்குவேண்டியமுயற்சிகளைச் செய்துவருகின்றனன், இவன்ஊழ்வலியை யென்சொல்லுவேன் வெகுநேத்தியாகவிருக்கின்றது, ஆதலாற் பிராரத்தகர்மசம்பந்தங்களை எத்தகையருக்குங் கடக்கவொண்ணுதெனச் சொல்வதையிவனளவிற்றிருஷ்டாந்திரமாகக் கண்டனம்.

அஃதெப்படிக்கெனிற்சிலபட்சிகளானவைபிரகாசித்திருக்கும் சிறுகொள்ளிகளை மின்மினிப்பூச்சிகளெனக்கருதிக்கொண்டுபோய் தங்கள்குஞ்சுகளுக்குச் சவுக்கியமுண்டாக்கவெத்தனித்துக் கூண்டுகளில் வைத்தகாலத்தில் எரிபட்டு அவைகளுந்தானும்வெந்து சாம்பலாய்மாண்டதைப்போலத் தீனராகியபலதேவர்களைப் பெண்டுபிள்ளைகளுடன் வருத்திக்கொண்டுவந்து இந்தபட்டணத்தில் அரியசிறையில் வைத்திருக்கின்ற பாதகமானதுமேலிட்டுகசேந்திரச்செல்வங்களை யனுபவித்துஆயிரத்தெட்டண்டங்களினு மிருப்பவர்களனைவரும்போற்ற இதோசிங்காதனத்தில் வீற்றிருந்து அரசுசெலுத்தும் சூரபதுமன்புத்திரமித்திரகளத்திராதிகளுடன் நாளைக்கேமாண்டு நாசப்படுங்காலம் நேர்ந்துவிட்டது இதற்குபாதும் சந்தேகமிராது வீரபராக்கிரமசாலியா யிருந்தபோதினும் அவனுக்குக்கொஞ்சம்பகை எவ்விடத்திலாவது இருக்குமாயின் அவன்பெற்றிருக்கின்ற செல்வங்களை நிச்சயமாயனுபவிப்பானென்று நம்பப்போகாது ஒருகாலம் அந்தசுலபமாகிய பகைவனே வீறிமேலிட்டு தன்செல்வத்தை அபகரித்துக்கொள்ளுவதன்றியும் தாரத்தையிழந்து பதியையும் போக்கவரும் அவ்விதமாகவே யிந்தசூரபதுமன் தங்க

ளுக்குத்தாயாதியாய்யாதொருகுறைபாடுகளேயுஞ்செய்யா
மல் தன்னேவணங்கியிருந்த தேவேந்திரனுக்குத் தகாத
பணிவிடைகளேக்காட்டி மேலும் அவன்தேவியாகியஇந்
திராணியையும் அபகரிக்கநினேந்த காரணத்தினுல் அவ்
விருவரும் தங்கள்பதவியைக்கடந்தோடி யொளித்தகால
த்தில் அவன்புத்திரனுகிய சயந்தன் மற்றதேவர்களேச் சி
றைசாய்த்துவந்து அரியகாவலிற்படுத்திவருத்தியும் திரி
லோகங்களுக்கும் ராசதானியாகவிருக்கின்ற பொன்னுல
கையும் அக்கினிக்கிறையாகக்கொடுத்துச் சாம்பலாக்கியி
ப்படிக்குச் சகலரும் மனம்வருந்த அலேத்த பாதகமான
து ஆயிரத்தெட்டண்டங்களேயும் நூற்றெட்டுகங்களாகக்
கொடுங்கோல்செலுத்தியாண்டுவந்த மகதயிஸ்வரியங்களே
ச்சந்தேகமில்லாமல்அழித்துவிடும், இந்தஅற்பவாழ்வை
நிலேயாகவெண்ணித் தினைவாட்டி சீவகாருண்ணியமெ
வ்வளவுமில்லாமல் வீறியிருக்கின்ற இந்தசூரபதுமனுட
ன்போகாதுஇவன்தம்பியர் புத்திரமித்திரர்கள்சேனேவெ
ள்ளங்கள்முற்றும் செல்வவளங்களேக்கொண்டிருக்கும்இ
ந்த வீரமாமயேந்திரபுரியும் ஆதிசேஷனுலும் புகழப்ப
டாத அஷ்டஅயிஸ்வரியப்பெருக்கும் நாளேக்கேசின்னபி
ன்னப்பட்டுப் போகவிருக்கின்றது, ஆகையால் திரிலோ
கங்களேயும்வருத்தி அரசுசெய்துவரும் இந்தஅவுணராச
னுக்குக் கடையில் தேவதேவனுகிய சண்முகப்பெருமா
ள் அனுக்கிரகிக்கப் பெறவிருக்கின்ற மோட்சசாம்பிராச்
சியத்தைப்போலச் சலனமற்ற செல்வமொன்றில்லேயென்
று அவனிடத்துண்டாயிருந்த விரக்கத்தினுல் இவ்விதங்
களாகப் பேசியிருந்த வீரவாகுதேவரானவர் தாமிருக்கி
ன்ற பொன்மயமாய் வானத்தையளாவவோங்கிய உப்பரி
கையைக்கடந்துதுணேவர்-புத்திரர்-மந்திரி - பிரதானிகள்
சேனேத்தலேவர்கள் முதலாகிய அவுணவீரர்சூழ்ந்துபோ
ற்ற அவர்கள்மத்தியிற் சூரியனேப்போலசொலித்திருக்கி
ன்ற சிங்காதனத்தில் வீற்றிருந்து அரசுசெலுத்திவரும்
சூரபதுமன் முன்னம்போய் வார்த்தையாட எத்தனித்
துப் பரம்பொருளாய் சுபஞ்சோதிவடிவாய் விளங்கியிரு
க்கின்ற சரவணபவன் திவ்வியசரணரவிந்தங்களேத்தியா
னித்துப்போற்றிப் பர்வதத்தி னுச்சியில்நின்ற சிங்கமா
னது தாவியதுக் கொப்பாக அந்தஉப்பரிகையைக் கடந்
து ஆகாயமார்க்கமாகப்போய் நவரத்தினமயமாக விளங்
கிக்கொண்டிருக்கும் சபையைச்சேர்ந்து அத்தலத்தில்ந
டக்கும் விநோதங்களேப்பார்த்துக்கொண்டு வீரவாளேக்
கரத்திற்பற்றி செயகெண்டை பாதங்களிற்பொருந்தியிரு
க்கவயிரபீடத்தினிடத்திற் கொலுவிருக்கின்ற ராசராசப்
பிரபுடீகனுகிய சூரபதுமனுக்கெதிரில்நின்றுசத்திராதிக
ளால் செயிக்கவொண்ணுத புசபலபராக்கிரம சாலியாகி
ய வீரவாகுதேவர் சிவகுமாரன் பாதாரவிந்தப்பெருமை
யினுல் அதிர்சியமாகிய உருவைமாற்றிச்சகலருங்காணத்
தக்கதாக தமது நிசரூபத்தைக்கொண்டு ஆயிரத்தெட்ட
ண்டங்களுக்கும் அதிபனுன சூரபதுமனேப்பார்த்து ஓ!
அவுணராசனே? கேட்பீராக.

மகம்மேருவை வில்லாகக்கொண்டு திரிபுரங்களேநகை
த்தெரித்த சிவபிரானுக்கினிய குமாரதேவர்விடுத்த தூத
ன் யானெனச்சொல்லித்தெரிவித்தவுடன் யோசித்து இந்
தசூரன் சிங்காதனத்தின்பேரில் வீற்றிருக்கின்றகாலத்தி
ல் நான்கிலத்திலிருந்து வார்த்தையாடுவதுஎமதிறைவனு
கிய பாலசுப்பிரமணியக் கடவுளினதுபெருமைக்கடாது,
அதைக்கருதி மாயைபுத்திரனுகிய இந்தராசனெழுந்தரு
ளியிருக்கின்ற சிங்காதனத்தி லொருபாரிசத்தி லிருப்
போமென வெண்ணி இதுநம்போலிகளுக்கழகன்று- அ
வனே நெருங்கினும் மகாபாதகம்நேருமென்று அதைமற
ந்து துரிதமாய் சண்முகப்பெருமாள் திவ்வியசரணரவிந்
தங்களேநினேந்து துதித்தகாலத்தில் அக்கடவுளினது அ
னுக்கிரகத்தினுல் இரவில்- ஆயிரகோடிசூரியர்- ஏககால
த்திலுதித்ததைப்போலத்தங்கத்தினுற்சோடித்துச் சிரோ
ரத்தினங்களே யிழைத்துப்பலசிங்காரங்களேக்கொண்டிரு
க்கும் ஒப்பற்றசிங்காதனமொன்று வானவழிக்கொண்டு
சொலித்து அதிவேகமாகவருகின்ற காட்சியெப்படிக்கிரு
ந்ததெனில் இயலிசைநாடகமென்னும் முத்தமிழின் திர
ங்களேப்பூர்த்தியாகத்தெளிந்து மதுரமாகிய தேவாரப்ப
திகங்களேச் சிவபிரானெழுந்தருளியதலங்கள்தோறும்பா
டித்திரியும் திருஞானசம்பந்தப்பெருமான் பத்திவயிரா
க்கியப் பெருமைக்கிரங்கிப் பரமசிவம்அனுக்கிரகிக்கவந்
த-முத்துப்பந்தல் முத்துச்சிவிகையை யொப்பக்காட்டிய
து. மேலும் பன்னிருகோடிசூரியர்கள் சூழத் தக்கதாக
ப் பொன்மயமான மகம்மேருகிரியானது அலேகள்பெரு
த்த சமுத்திரமத்தியிற் றேற்றியதுக்கொப்பாக அப்பீட
மானது ராசாதிராசன் சபையில்விளங்கவும் கந்தசுவாமி
யார் கிருபையின் முயற்சியினுல் வானவெல்லே பூவட்ட
மெங்கணும் சோதிமயமாக விளக்கிவந்த சிங்காதனத்தின்
காந்தியினுற் றங்கள் கொடியமனதைப்போலவே கறுத்தி
ருக்கின்ற அவுணப்பாதகர் திரேகங்களிற் றுக்கியமாத்தி
ரத்தில் தேவர்களேப்போலத்துல்லியமாகவிளங்கவும்கோ
ரதந்தங்களேப் பெற்றிருக்கின்ற அவுணர்களிடத்திருக்கி
ன்ற ரத்தினுபரணங்களின் காந்தியானது சூரியன்முன்
னேர்ந்த மின்மினிகளேப்போலக் காந்திகளடங்கப் பரல்க
ள்போலத்தோற்றவும் செக்கர்வானமுஞ் சந்திரோதயமு
ம் நட்சத்திரவிளக்கமும் அந்தியிருளும் மேகப்பெருக்கு
ம் சந்தித்துவிளங்குகின்ற மாலேப்போதிற் பன்னிருசூரி
யர்களும் வானத்துதித்துப் பெருக்கிய கிரணகாந்திகளி
னுல் அவைகள்பொலிவழிந்து மங்குவதைப்போலராசப
ரமேஸ்வரன் சபையின் விளக்கமானது நசித்தும் சதுர்
முகப்பிரமதேவனுலும் சிருஷ்டிக்கப்படாத அந்தசிங்கா
தனத்தின் பிரகாசத்தின் பொலிவினுல் செயசாலியாகிய
சூரபதுமன்கீர்த்தியும் ஆணேயாக்கினேயும் நவரத்தினப
ணிகளின் காந்தியும் சுலபமாகமறைபட்டுப்போகவும்இ
த்தகைய சிறப்புகளேக்காட்டச் சூரபதுமன்முன்னம்வந்
து நின்றசிங்காதனத்தை வீரவாகுதேவர் கண்டமாத்திர
த்தில் எமதிறைவனுகிய சரவணபவன் கடாட்சிக்க வந்த
தென நினேந்துசந்தோஷித்தனுய் சண்முகப்பெருமாள்
பாததாமரைகளேச் சிந்தித்துப்போற்றிச் சிங்கராசன்மலே
யின்மீதிற்பாய்வதைப்போலத் தாவியேறிவீரவாகுதேவ
ர் கெம்பீரமாக வீற்றிருந்தனர்.

இத்தகைய வளங்களேப்பெற்ற சிங்கவணேயின் மீதில்
வீரனெழுந்தருளியதைப் பார்க்குமிடத்தில்ஆயிரகிரண
சமோகங்களேவிரித்துஉலகங்களனேத்தினேயும் விளக்கிவ
ரும் சூரியர்கள்மத்தியிற் சிவபிரான் றேற்றம்போலக்கா
ட்டவும் இவையன்றியில் மின்னலேயொத்தபிரகாசத்தை
யுடைய வேலேத்தாங்கிய சூரபதுமன்முன்னம் வீரவாகு
தேவர் தோற்றமெப்படிக்குக்காட்டுவதெனிற், பரமசிவக
டாட்சவீட்சண்ணியத்தினுற் பெற்ற செல்வப்பெருக்கை

யனுபவித்து இறுமாந்து கர்வித்தவனைத் திரிலோகங்களேயும் அலேத்துவென்று சகலருந்தன்னைப்பணிந்துபோற்றவும் தானேபரம்பொருளெனமதித்து இரணியநமோவென்றேதவுங் கட்டளேயிட்டு வீறியிருந்த இரணியனுக்கும்மித்திரனைப் பரமபாகவதனுமாகவிருந்த பிரகலாதனன் அரிஓம் நமவென்றேதக் கோபித்துத் தன்குமாரன் குறித்தபடிக்கு தனக்கெதிரில் பாரித்துநிற்கின்ற வயிரத்தூணைத்தன்வலயகரத்தினைக்கொண்டறைந்த காலத்தில் அதனிடையில் முளைத்து அப்பாதகனைப் பிளந்து கொன்று அச்சபையில் நவரத்தினமயமாக விளங்கியிருந்த சிங்காதனத்தின்மீதி லெழுந்தருளிய நாரசிங்கமூர்த்தியைப்போன்றும் மனதில்யாதொரு அச்சமும் வாட்டமுமின்றி மிகுந்த உச்சாகத்துடன் வீரவாகுதேவர் சிவகுமாரன் கடாட்சித்த சிரோரத்தினமயமாகச் சொலித்திருக்குஞ் சிங்காதனத்தில் மண்டிபோட்டு உட்க்கார்ந்திருக்கின்ற கெம்பீரத்தை விசாலமாய்ப் பற்பலமணிகளினுலும் சித்திரங்களினுலும் அலங்கரித்து கோடிசூரியப்பிரகாசமாகவிளங்குகின்ற சபாமண்டபத்தி லிருக்கின்றஅவுணவீரர்முதலாகிய சகலரும் வெளிப்படையாகக் கண்டனர், அதுஎப்படிக்கிருந்ததெனில், ஆகமவிதிப்படிக்கு அரிய விரதங்களைப்பத்தி பூர்வகமாகச்செய்து வருமுன்னிலேயில் பரமசிவகடாட்சத்தினல் எளிதிற்கிடைத்த மகதயிஸ்வரியத்தைப் போலச்சந்ததியிற் றேற்றப்பட்டது, வீரவாகுதேவரிருக்கின்ற உக்கிரத்தையும் யாவரையுமஒருபொருளாகமதியாமற் சபைமுற்றினும் விழிகளைச்சுழற்றிப் பார்த்திருப்பதையும் பார்த்த மாத்திரத்திற் றிடுக்கிட்டுத்திரோகமுற்றினும் வியர்க்கநடுங்கி இதென்னஉற்பாதமாகவிருக்கின்றதெனப் பிரமித்தவர்களாய் இப்படிக்குப்பேசிக்கொள்வதாயினர்.

வீரகண்டையானது கலிக்கும்பாதாரவிந்தங்களைப்பெற்று ஆயிரத்தெட்டண்டங்களுக்கும்அதிபனையவிஷ்ணு, பிரமன், வணக்கிப்போற்றும் பெருமையினையுடையநமது சக்கிரவர்த்திக்கெதிரில் நவரத்தினமயமாய் பாலசூரியனைப்போலச் சொலித்திருக்கும் சிங்காதனத்தின் மீதிற் சலனமற்று மனஉறுதியாயிருக்கப்பட்ட இவனைப்பார்க்குமிடத்தில் அதிவீரனுகக்காணுகின்றது, இவன்வந்திருக்கின்ற காரியமின்னதெனத் தோற்றவில்லை, இத்தகைய தீரத்துவத்தைப்பெற்ற இவனின்னனெனத் தெரியவுமில்லை, முன்னமெக்காலத்திலும் இவனைக்கண்டதுமில்லை, ஒருவராலுஞ் செயிக்கவொண்ணுத புசபலபராக்கிரமசாலியாகிய எமதிறைவன் முன்னம்நமது காவலைக்கடந்துஎவ்விதமாகவந்தனன். இவன்வரவுக்கெதிர்பார்த்து இந்த சொர்னமயமாகிய சிங்காதனம் போந்ததையோசிக்குமிடத்தில் ஆச்சரியமாக விருக்கின்றது, மேகத்தினிடத்தில் வெளிப்படும் மின்னலைப்போலச் சடுதியில் இந்தமகாசபையினிடத்திற் காணப்பட்டபடியால் நம்மைப்பார்க்கினும் பதின்மடங் கதிகமாகிய மாயைவித்தைகளைக்கற்றிருப்பவனுக நினைக்கவேண்டும் வீரகண்டாமணியணிந்திருக்கும் பாதங்களையுடைய இவனைக்கூட்டங் கூட்டமாகக் காவல்கொண்டிருந்தவர்களை என்னெதிரில்வரவிடுத்த காரணமென்னென்று அரசன் நம்மிடத்திற் கோபங்கொண்டு என்னதண்டஞ் செய்வனேவெனச்சிலர்நடுங்கவும், நமதுசத்துருக்களி லொருவனுகவிருக்கின்ற இவன் இந்தவீரமாமயேந்திரபுரியில் பயமற்றுவருங்காலத்திலிவனைத்தடுத்துக் கொன்றுதின்னமல்ஏதோசிலபிரயோசனத்தைப்பெற்றுப் பாராமுகமாக விருந்தீர்களென்று நம்மிடத்தில் அரசன் கோபங்கொள்ளுவதற்கு முன்னம் இவனைச் சூழ்ந்துகொண்டு குத்தியும், இடித்தும், உதைத்தும், பற்களினற்கடித்து உதிரமாம்சங்களைப் பசியடங்கவுண்டு வருவோமென்று சிலர் துரிதப்படவும் சலனமற்ற வயிர தேகத்தைப் படைத்திருக்கின்ற நமதரசன் சந்நிதானத்தில் மனக்கோட்ட மில்லாமல் ஒருவனையுமெண்ணமைல் தீரனுக முகப்பொலிவுடன்இராசபரமேஸ்வரனுக்கும்மேலாகச் சிங்காதனத்திலிருக்கின்றனன், இவன்காரணங்களைப் பார்க்குமிடத்தில் மாய்கையிலும் வலியிலும் சிறந்தவனுகவிருக்கின்றனுதலால் இவனைச்சுலபமாகநினைந்து நெருங்கவொண்ணுது அல்லது சூரனைப்போல மேலிட்டுப்போவோமாகில் பிராணஆனி வருவதன்றியில் ஒருகாரியமுமாகாதெனச் சிலர்சொல்லவும் எவ்விதத்திலோ கொடியகாவலைக்கடந்து நம்மையுமறியாமல் இந்தச்சபைக்கு வந்துவிட்டனன். இனிஅரசன் கட்டளையன்றியில் ஒருகாரியங்களினுந் துணிவுகொள்ளலாகாது.அவசரப்படுவோமாகில் அதனுலென்னதீங்குநேருமோவென்று சிலர் தடுக்கவும்ஆத்திரப்படாதீர்கள். இவன்வரவின்காரணம் நமக்கொன்றுந் தெரியாது, ஒருகாலம் தேவர்களுக்குப் பகைவனைய் இந்திரன் இந்திராணி முதலிய விண்ணவர்கள் மறைந்திருக்கின்ற தலத்தை நமதரசனுக்குத் தெரிவிக்க வந்தனனே? அல்லது நமது சத்துருக்களாகிய தேவர்கள்பட்சமாய் ஏதாவதுபேசவந்தனனே சகலமுஞ்சற்றுநேரத்தில் வெளியாகின்றதுஅதுபரியந்தம் தாபரித்திருப்பீர்களென்று சிலர் சொல்லவும், முன்னம் நமதிறைவன் தங்கையாகிய அசமுகிகரத்தினையிழந்து வந்தகாலத்தில் அரசன்கோபித்துஅஷ்டதிக்குப்பாலகர் சூரியசந்திராதிய நவக்கிரகங்கள் முதலானவர்களையும் திக்குதீபாந்திரங்களிற் காவல்கொண்டிருக்கின்ற அவுணவீரர்களையும் கடினதண்டனைகளைச் செய்வித்ததைப்போலவே யிக்காலத்திலும் வீரகண்டாமணி யணிந்த பாதங்களையுடைய இந்தவீரனை உள்ளே வரவிட்டகாரணமென்னென்று அரசன்சீறி யிந்தநகரத்தைக்காவல்கொண்டிருக்கின்றவர்களைக் கொல்லுவித்துக் கோபந்தணிவனேயென்றுசிலர்சொல்லவும், முற்காலத்திற்கஜேந்திரச்செல்வத்தைப் பெற்றிருக்கின்றன மென்னும் மமதையைக்கொண்டு திருக்கயிலாயத்துக்கு வந்ததேவராசன் முன்னம் மாறுருத்தாங்கி யெழுந்தருளிய பரமனைமதியாதகாரணத்தினுற் கோபித்தகாலத்தில் இந்திரனுக்குத் தெளிவுண்டாய்ப் போற்றிவணங்கியபோது அக்கோபத்தைக் கடலில் வீசியமுன்னிலேயில் ஜயசாலியாசியசலந்தரனை வெளிவரச்செய்த பெருமையினையுடையசிவபிரானே யிக்கோலங்கொண்டு வந்ததாகக் காணுகின்றது,இதற்குப்பிசகில்லை எனச்சிலர் வசனிக்கவும், முற்காலத்தில் வாமனப் படிவத்தைப்பெற்று மகாபலிச்சக்கிரவர்த்தியினிடத்திற்சென்று மூன்றடிமண்ணிரந்து பெற்றுக்கொண்டு இரண்டடியினல் விண்மண்ணையளந்து மூன்றுமடிக்கு அந்தச்சக்கிரவர்த்தியினது திருமுடியை யிலக்காகவளந்து அவனுக்குச்சாஸ்விதப்பதவியைக் கடாட்சித்த மகாவிஷ்ணுவே யிவனுகவேண்டுமெனச் சிலர் வழங்கவும், திரிமூர்த்திகளாகிய பிரமன்-விஷ்ணு-பரமன் இவர்களிலொருவனே? அஷ்டதிக்குப் பாலகர்களிலொருவனே?

பொன்னுலக வாசிகளாகிய தேவர்களிலொருவனே? சத்
தியலோகவாசிகளாகிய ரிஷிகணங்களிலொருவனே? அல்
லது யாவனேவென்று மயங்கிச்சிலர் வசனிக்கவும், ஆதி
காலத்திற்செய்த தவங்களுக்கிரங்கி நமதரசனுக்குக்கடா
ட்சித்திருக்கின்ற தேவதேவனாகிய சிவபிரான் மீட்டுந்த
யைகூர்ந்து முன்னினும் பற்பலவரங்களைத் தந்தாளவெ
ழுந்தளினரோ வெனச்சிலர்சங்கையுற்றிருக்கவும், அப்ப
டிக்கல்ல திரிமூர்த்திகளும்நமதரசன்முன்னம் இப்படிக்
குஅச்சமற்று நம்மையுமெண்ணமல் வரத்துணியார்கள்
ஆதலால் அக்கினிதேவன் வாயுதேவன்சிவந்த விழிகளை
ப்பெற்ற யமதருமராசன் அவன்மந்திரியாகியகாலன்இவ
ர்களனைவரும் ஏகோபித்து இவ்வுருவைக்கொண்டு வந்த
தாகவேண்டும், அல்லது மற்றொருவர்தயிரியத்துடன்அ
கண்டமண்டலாதீஸ்வரனாகிய சூரபதுமன்வீற்றிருக்கின்
ற மகாசபையிற்றுணிந்துவர நினைக்கவுமாட்டார்களென
ச்சிலர்வசனிக்கவும், சிலதினத்துக்கு முன்னம் மாயையி
ற்சிறந்த கிரவுஞ்சனையும் ஜயசாலியாகிய தாருகனையும் ஒ
ப்பற்ற வேலாயுதத்தைச்செலுத்திப் பிளந்தானெனக்கே
ள்விப்பட்டனம், அந்தச்சூரனே யித்தினம்இராஜாதிரா
சனைக்கண்டு வார்த்தையாடிப்போக வந்தனனோவென்று
சிலர்சங்கிக்கவும், பலவகை யிரத்தினங்களினாலும் சித்தி
ரங்களினாலுஞ் சோடித்திருக்கின்ற இந்தவிசாலமாகியம
ண்டபத்தின் காந்தியும் அவுணராச னணிந்திருக்கின்ற
ஆபரணங்களிற் பதிந்திருக்கின்ற சிரோரத்தினக் காந்தி
யும் மற்ற அவுணவீரர்க ளணிந்திருக்கின்ற அணிகளிற்
பொருந்திய மணிகளின்காந்தியும் உலகங்களை விளக்கித்
திரியும் சூரியனது ஒளியும் இதோஎதிரில்தீரனாகவீற்றி
ருக்கின்ற காளைதரித்திருக்கின்ற பூண்களில்விளங்கும் வ
யிரமாதிய மணிகளின் சொலிப்புக்குப் பிற்பட்டு இவன்
வீற்றிருக்கின்ற சிங்காதனத்திற் ருபித்திருக்கின்ற விரத்
தினங்களின் பிரகாசத்துக்கடங்கிப் பொலிவற்றிருக்கின்
றன பாருமென்றுசிலர்பேசவும், நம்முடைய வருக்கத்தி
னராகிய அவுணர்இராக்கதர் இச்செய்கையைக் கனவிலு
ம் நினையார்கள். ஆதலால்இதை யோசிக்குமிடத்தில் நம
தரசுனே தாம்கற்றிருக்கின்ற மாயையினாற் காட்டியதாக
வேண்டுமெனச்சிலர் சொல்லவும். இப்போதுநாம்பேசிக்
கொண்ட காரணங்களினொன்று மல்லாவிடின் நேற்றை
யதினம் வெற்றிவேலினால் மாண்ட தாருகாசுரன் அவ்வ
டிவைப்போக்கி யிப்படிக்கெழுந்தருளித்தன்குறைகளைத்
தமையனுக்குச் சொல்லவந்ததாக வேண்டுமென்று சிலர்
குறிக்கவும் இவ்விதங்களாகச் சபையில் நெருங்கியிருக்கி
ன்ற சகலரும் அற்புதமாகக் கொண்டாடிப் பேசிக்கொள்
ளுகின்ற காலத்திற்கோடிசூரியருதித்ததைப்போலச்சொ
லித்துக்கொண்டிருக்கும் சிங்காதனத்தின்மேல் இராஜா
திராசனுக்கும் மேலாக கம்பீரமாய் வீற்றிருந்துபாலசுப்
பிரமணியதேவர் திருநாமங்களைச்செபித்துக்கொண்டிரு
க்கின்ற வீரவாகுதேவர் ஜயவுச்சாகங்களை அகண்டமண்
டலாதீஸ்வரனாகிய சூரபதுமன்கண்டவுடன் அதிககோப
ம் பிரவேசித்து விழிகள்சிவந்து அனற்பொறிகளைவீசவு
ம் நெறநெறெனப் பற்களைக்கடித்துத் தீயெழநகைத்துச்
சரீரம்புழுங்கி வியர்க்கத் தீயும்புகையும்பெருக பெருமூ
ச்செறிந்து புருவம்நெற்றியிலேறச் சிறியநட்டிவீரவாகு
தேவனைக்குறித்து இதனைச்சொல்லுவதாயினன்.

அடாபயலே! பெண்டுபிள்ளைசள்சுற்றம்துணைவர்முத
லானவர்களைநீங்கிவனத்திற்சென்று கந்தமூலபலங்களைத்
தின்று சுனைகளிற்பெருகும் நீரையருந்தி மிருகங்களைப்
போலதூங்கியிருக்க ஓரிடமில்லாமற்குகைகள்பன்னகசா
லைகள் செடிகளெங்குந் திரிந்தலைந்து குளிரினும் வெய்யி
லினும் மழையினும் வருந்திவாடுகின்றசிற்றறிவையுடை
யதபசிகள் கற்ற சித்தின்திறமிதுவாகும் அபலனே? அவ
ற்றுட் சில கற்றுக்கொண்டவனாகக் காணுகின்றது. இ
தனைப் பெரிதாக நினைந்துஇந்தமகாசபையில் என்னெ
திரிற் காட்டவந்தனை நீண்ட சடைமுடிகளையுடையயோ
கியர்களன்றியும் தேவர்களும் இந்தச்சிறிய தொழிலைச்
செய்யவல்லர். அவர்களும்முக்கியமாகிய சித்துவிளையா
டவராவிடின்உன்னைப்போலத் துணிவு கொண்டு இவ்வி
டம்வந்து காட்டவிரும்பார்கள் அப்படிக்கிருக்கநமதுபெ
ருமைகளையும் வீரபராக்கிரமங்களையும்இத்தலத்தில்நெ
ருங்கியிருக்கின்றசேனைத்தலைவர்முதலியவீரர்கள்சவுரிய
ங்களையும் எவ்வளவேனும் மதியாமல் இச்சன்னிதானத்
தில் நீசெய்திருக்கின்ற நடனமானது வெகுநேத்தியாக
விருக்கின்றது, அரியதவங்களைச்செய்து முயற்சிபெற்றி
ருக்கின்ற சித்தர்களும் மாயையிற்சிறந்த விஷ்ணுமுதலி
யதேவர்களும் என்னெதிரில்வரவும்இத்தகையஇந்திரசா
லமயேந்திரசாலங்களைக் காட்டுவதற்கு மிகவும் பயப்படு
வார்கள் பயித்தியக்காரனே, உன்வித்தைகளை அதற்குத்
தகுதியாகிய விடங்களிற் காட்டவேண்டுவதல்லதுநம்மை
யொத்த இராஜாதிராசனெதிரிற் செய்யநினைப்பையோ ச
ற்றும்விவேகமற்றவனாதலால்இந்தப் புல்லியசித்தைக்கா
ட்டிநமதுதயையைப்பெற்றுவாழக்கருதினை அடாபேயா?
ஜகங்களனைத்தினும் முயற்சியாகக்கொண்டாடும் பெரு
மைபொருந்திய இந்தப்பட்டணத்தில்வாசஞ்செய்யும் அ
ல்பமாகியபெண்களும் இதனிலும் மேம்பாடாகியமாய
வித்தைகளைச் செய்யவறிவர் முக்கியமாகச்சொல்லுமிடத்
திற் கன்னியர்கள் கற்பத்திலிருக்கின்ற சிசுக்களுக்கும் இ
த்தகையவித்தையைச்செய்ய சுலபமாகத் தெரிந்திருக்கு
மென்று நினைக்கக்கடவை யிந்தபட்டணத்தைச் சூழவி
ருக்கின்ற பர்வதங்கள் மிருகங்கள்முதலாகியவைகளுக்கு
ம் இதைப்பார்க்கினும் பிரபலமான வேடிக்கைகளைக்கா
ட்டத்தெரியும் ஆதலால் விவேகமற்றமூடனேநீயிப்போ
துகாட்டிய இந்திரசாலம் அரிதாகியகாரியமென் றெவ்வ
ளவும் நினைக்கவேண்டாம், பரமசிவகடாட்சத்தினால் அ
ளவற்ற அயிஸ்வரியங்களையும் வயிரப்படிவத்தையும் தீர்
க்காயுசையும்கிடைத்து ஆயிரத்தெட் டண்டங்களுக்கும்
அதிபனாய் மகாவிஷ்ணு பிரமதேவன் இந்திரன்முதலிய
தேவர்கள்பணிந்துஇட்டஏவல்களைச்செய்துவரத்தக்கதா
கநூற்றெட்டுயுகங்களாய் ஏகச்சக்கிராதிபதியாக அரசுசெ
லுத்திவரும் சூரத்துவமுடையநம்மையொத்த ராசராச
னை எவ்வளவும் லட்சியஞ்செய்யாமலிருக்கின்றனை இது
வுமல்லாமல் நாம்வீற்றிருக்கின்ற அரியணைக்கும் மேலா
னசிறப்பும் உன்னதமுமுள்ள சிங்காதனத்திற் சலனமற்
றுஅடக்க ஒடுக்கமென்ப தெவ்வளவுமில்லாமல் நகைமு
கனாய் மண்டிபோட்டுக் கம்பீரபுருஷனைப்போல உட்கா
ந்திருக்கின்றனை. இந்தக்கர்வமும் என்கோபமுந் தணியு
ம்படியாக இந்தநிமிஷத்தில் மின்னலையொப்பப் பிரகாசி
த்திருக்கும் இந்தவாளினால் உன்சிரமானது நிலத்தில்வி
ழுந்துருளத்தக்கதாகவெட்டியெறிந்துபோடுவேன் ஆனால்

நீயின்னுனென்றும் உன்னைச்செலுத்தினவனையும் உன் வரவின்காரணங்களையுந் தெரிந்துகொண்டபின்புகண்டிக்கநினைந்து பொறுத்தேன் பகைவராகியதேவர்கள் முதலானவர்கள் கண்டவுடன் நடுநடுங்கி வணங்கிப்போற்றவல்லபுசபலபராக்கிரமசாலிகளாகியஅவுணவீரர்கள்-மந்திரி-பிரதானிகள்-சேனைத்தலைவர்கள் முதலாகிய பிரமுகாளும், மற்றும் இச்சபையிலிருப்பவரும், நாமும், நீகாட்டிய மாயவித்தைகளைக்கண்டோம். இதனாற்சில பலப்பிராப்தியைப்பெறவந்த வுன்னை யிதுபரியந்தம்பிராணனுடனிருக்கத் தயைசெய்ததே உன்னுணவத்துக்குத் தகுதியாகிய தியாகமாக நினைக்கக்கடவை, அடாமூடப்பயலே கேட்பையாக.

திரிலோகசக்கிரேஸ்வரனுய் கசேந்திரபோகங்களை வெகுகாலமாக அனுபவித்திருந்த தேவேந்திரனும் நமக்குப்பயந்து பொன்னுலகவாழ்வையுமறந்து தன்தேவியுடனேடியொளித்துத் திருடனைப்போலக் காலங்கழிக்கின்முன் மற்றதேவர்களில் இத்தகையதகாதகாரியங்களைநமதுமுன்னஞ்செய்யமதியார்கள் உலகரட்சகனுகிய மகாவிஷ்ணுவும் இதைக்கியாபகத்திலுங்கொள்ளான் வேதபாராயணனுகிய பிரமதேவன் பிராதகாலமுதல் நமதரண்மனையிற் காத்திருந்து ஆசிகூறிப் பஞ்சாங்கத்தைக்காலங்களிற்சொல்லிப்போகின்முன் இவர்களுக்கும்மற்றபுவனசராசரங்களுக்கும் ஆதியாகவிருக்கின்ற பரமசிவன் நம்மிடத்திலதிகஅன்புள்ளவனுதலால் இவ்விடத்துக்குவர நினையார் ஆதலால் அவர்களுக்கு மேலானதுணிவுகொண்டமனதைப்பெற்றிருக்கின்றநீ என்னநிமித்தம்வந்தாய் யாவர் செலுத்தினர், இதனைவிரைவிற் சொல்லக்கடவையெனக் கடினசித்தமுடையசூரபதுமன் கேட்டமாத்திரத்தில்வெற்றிமாலைபுரளும் புசபலபராக்கிரமசாலியாகியவீரவாகுதேவருக்கு அதிககோபம் பிரவேசித்தபடியால்வானத்திலுதிக்கின்ற நட்சத்திரங்களைப்போலத் தேகமெங்கும் வியர்க்க விழிகளிலனற்பொறிகள் சிதறத்தக்கதாகச் சூரபதுமனைப்பார்த்து ஓ! அவுணராசனே? மாயவித்தைகளைக்காட்டித் தியாகம்பெற்றுண்டுதிரிகின்ற பதிதனைப்போல என்னைநினைந்தனை நல்லகாரியம் அந்தக்கியாபகத்தை மறந்து உனக்குச்சமமான சூரனுகவெண்ணி நான்வந்த காரணத்தைக் கேட்பாயெனச் சொல்லுவதாயினர், திரிலோகசக்கிரேஸ்வரனுகிய இந்திரனுக்குன்னல் நேர்ந்திருக்கின்றமனக்குறையினையும் பிரமதேவன்முதலாகிய தேவர்களுக்கடுத்துவருத்தும் அவமானத்தையும் தினராகிய விண்ணவர்கள்கொடியகாவலிற்பட்டுத்தகாதபணிவிடைகளைச் செய்துவாடுகின்ற சிறையையும்நீக்கிப் பழையபடிக்கு அவ்வவர்களரசுரிமைகளைக் கடாட்சித்து நிலைபெற்றுவாழும்படிக்குச்செய்யத் திருவுளத்திலெண்ணித் திருக்கயிலையைக்கடந்து சமுத்திரஞ்சூழ்ந்த பூமியினிடத்தில்வந்து திருச்செந்திற்பதியில் வீற்றிருக்கின்ற ஆதிதேவனுகிய குமரகுருபரனுக்கடியனுகவிருக்கப்பட்டவன்யான்உன்சகோதரனுகிய வீரசிங்கம்போன்ற தாருகனையும் பலநாட்களாக ரிஷிகள்முதலியோரை மாயையினல் அழித்திருந்த கிரவுஞ்சபர்வதத்தையும் நிமைப்போது கழிவதன்முன்னம் பிளந்துகொன்ற வெற்றிவேலாயுதத்தைத் திருக்கரத்திற் படைத்திருக்கின்ற சண்முகப்பெருமாளாவர் கிருபாநிதியாதலால் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனுய் சகலரையும்வென்று சூரனென்னும் பெயராக்கிடைத்திருக்கின்ற நீபிழைக்கும்பொருட்டு உன்னிடத்துக்கு நம்மைத்தூதாகச் செலுத்தினரெனப்பேசிமேலுஞ்சொல்லுவார், தேவசேனபதியாகியசிவசுப்பிரமணியதேவருக்குப் பின்பிறந்த நவவீரர் இலக்ஷர்களில் நாம் மூத்தவனுகும் மேலுந்திருக்கயிலாயத்தினைக் காவல்கொண்டிருக்கும் பெருமையினையுடைய நந்தியெம்பெருமான் கணத்தலைவனுகவு மிருக்கப்பட்டவன் பகைவர்கள்பணிந்து புகழ்ந்துகொண்டாடும் சவுரியபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவரென்னுந்திருநாமத்தைப்பெற்றவனென்று சிவபிரான் நிருமித்துக் கொடுக்கப்பெற்ற வீரவாளாயுதத்தைத்தாங்கியிருக்கும் வீரன்சொல்லிய விசேஷங்களைச் சகலசீவராசிகளும் வாடிவருந்தும்படிக்குக்கொடுங்கோல் செலுத்திவரும் பாதகனுகிய சூரபதுமன்கேட்டவுடன் நல்லகாரியம் பாலசுப்பிரமணியன் உன்னைநம்மிடத்துக்குச்செலுத்திய காரணம்யாது அதனைவெளிப்படையாகவிரித்துப் பேசக்கடவையெனக் கேட்டபோது வீரவாகுதேவர் மறுமொழிசொல்லுவதாயினர்.

இந்திரனைப்பலவிதங்களிலும்வருத்தி அவன்தேவியாகிய இந்திராணியுடன்பதியையிழந்தோடிவனங்களினும் பருவதங்களினிடங்களினும்பதுங்கி உழலச்செய்ததுமல்லாமல் அவன் வாசமாகவிருந்த இராசதானியாகிய பொன்னுலகத்தை அக்கினிதேவனுக்கு இரைகொடுத்துச் சாம்பலாக்கியழித்தும் மேலும் அவனேகபுத்திரனுகியசயந்தனையும் மற்றதேவர்களைப் பெண்டுபிள்ளைகளுடன் கட்டிக்கொண்டு வருவித்துப் பாரவிலங்குகளைப் பூட்டிச் சமுத்திரமத்தியிலிருக்கும் இந்தப்பட்டணத்தில் அரியசிறையிற்படுத்தித் தகாதஏவல்களைக்காட்டி வருத்துகின்றனையென்பதை எமதிறைவனுகிய சண்முகப்பெருமாள் கேள்விப்பட்டதுமன்றியில் இந்திரனுதிய தேவர்கள் மகாவிஷ்ணுபிரமதேவன் இவர்கள் பற்பலதரந் திருக்கயிலைக்குவந்து உன்னல் தங்களுக்கு நேர்ந்திருக்கின்ற குறைபாடுகளைமுறையிட்டுக்கொண்டு அதனைத்தவிர்த்தாளத்தக்கதாகவேண்டியிரந்த முன்னிலையிற் சிவபிரானும்மனமிரங்கி அத்தேவர்கள்துன்பங்களைப்போக்கித்தருவதாகக்கட்டளையிட்டு மிருப்பதாற் பன்னிருபுயாசலங்களையுடைய பாலசுப்பிரமணியர் அளவற்ற பூதப்படைகளைக்கூட்டிக்கொண்டு திருக்கயிலாயத்தைக்கடந்து சமுத்திரஞ்சூழ்ந்திருக்கின்ற இந்தப்பூமண்டலத்திலிறங்கிவருகின்றமார்க்கத்தில்நேர்ந்த உன்சகோதரனுகிய தாருகாசுரனையும் கிரவுஞ்சபருவதத்தையும் வெற்றிவேலினுற் பிளந்துகொன்று அப்பதியைக்கடந்து நேற்றையதினம் தெய்வீகம் பொருந்திய திருச்செந்திற்பதியில்வந்து சேர்ந்திருக்கின்றனர், இவையன்றியும் கொடுங்கோல்செலுத்தி மன்னுயிரைவருத்தி அரசுசெய்துவரும் உன்னைப்புத்திரமித்திரகளத்திராதிகளுடன் அளவிறந்தவெள்ளம்அவுணச்சேனைகளையுஞ் சின்னபின்னப்படவாட்டி நாசஞ்செய்து உலகவுபாதிகளை நீக்கிச் சகலரும் நிலைபெற்றுவாழும்படிக்குச் செய்யத்திருவுளத்தி லெண்ணி யிருக்கின்றனர். இப்படிக்குத் தீர்மானித்திருந்தபோதினும் கிருபாநிதியாதலால் மனதிலிரக்கமுண்டாய் நீவெகுகாலம் அக்கினிமத்தியில்நின்று கடினதவங்களைச்செய்து பரமசிவகடாட்சத்தினல் இத்தகைய அகன்றசாம்பிராச்சிய விபவங்களைப் பெற்று வாழ்ந்திருக்கின்ற மமதையினல் நீதியையோசித்துப்பாராமலும் தெரியாமையாகவும் பலநாட்களாகச்

சிறையிலடைத்து வைத்திருக்கின்ற தேவர்கள்காவலைநீக்கிநீயின்னமுஞ் சிலகாலம் இச்சம்பத்தில் வீறிவாழும்படிக்கு உன்னிடத்தில்அன்புவிளங்கியதால்என்னையிவ்விடத்திற்குத் தூதனுப்பினர்.

அதன்காரணங்களையுஞ் சொல்லக் கேட்பையாக பிரபஞ்சங்க ளனைத்தினுங் குளிர்ந்திருக்கின்ற சோடசகலைகளைவீசிப் பிராணிகளைமகிழச்செய்துவரும் பெருமையைப்படைத்த பூரணசந்திரனை விஷப்பற்களைப் பெற்றிருக்கின்ற கொடியகேதுவென்னும் பாந்தளானது அநீதமாகப்பற்றி யவன்பிரகாசத்தினை மறைத்து மன்னுயிரனைத்தினையும் வாடச்செய்வதுபோலச் சகலவளங்களையும் அனுபவித்திருந்த தேவராசபுத்திரனாகிய சயந்தனாதிய விண்ணவரைநிரோதுவையாகப் பற்றிவந்து மிருதுவாகியபாதங்கள்சறுத்துக் காய்த்துவருந்தும்படிக்குப் பாரவிலங்குகளையிடுவித்துத் தாயாதிகளென்பதைச் சற்றும்நினைதுபாராமற் புலைத்தொழில்களைச்செய்வித்துத் துக்கசாகரத்தில்மூழ்கியலையத்தக்கதாகச் சற்றுமிரக்கமில்லாமற்கடினசிறையினும் அடைத்துவைத்திருக்கின்றனை மேலும் பிறவிகளிற்சிறந்த தேவர்-அவுணர்-மானிடர்-முதலாகியசகலரும் அனுசரித்து நன்னெறிகளைப்பாராட்டி இம்மைமறுமைச் செல்வங்களைப்பெற்று வாழும்படிக்குச்சிவபிரான் படைத்திருக்கின்ற வேதாகமசாஸ்திரங்களைப் பூரணமாகவோதியுணர்ந்தும் அவற்றுட்குறித்திருக்கின்றகிரமங்களையும் வருணாசிரம விதிகளையும் சிவகாருண்ணியமுதலிய நன்னெறிகளையும் பாராட்டிநடந்து கொள்ளவறியாமற் சிவபிரான் கடாட்சித்திருக்கின்ற மகதயிஸ்வரியங்களை யனுபவித்துவரும் மமதையினால் மேற்குறித்த உண்மைகளைச் சற்றும்நினையாமல்மறந்தனை இராசாதிராசனேயிதுபரியந்தம்நீநடாத்திவருங்கொடுங்கோல்முறையானது தருமமார்க்கத்துக்கெவ்வளவுமடாது. மேலும் சுத்தவீரனாகவிருப்பவன்செய்ய யோக்கியமாகியநீதியுமன்று, அதன்காரணங்களைச்சொல்லக்கேட்பையாகஉலகங்களுக்கதிபனாய்ச் செங்கோன்மைவிதிப்படிக்குப் பிறழாமல் அனுசரித்துவரும் அரசனானவன் நடந்துகொள்ளவேண்டியதாவதுமன்னுயிரைத் தன்னுயிருக்கொப்பாகவெண்ணி துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனஞ்செய்துதன்குடைநீழலிற்பட்ட பிராணிகளைப்பாதுகாத்து வரவேண்டும். தீனராகவிருப்பவரைவருத்துவதினால்ஒருகாலம் பிராணசேதம்வரும் மேலும் பிரமகுமாரனாய்ப் பரமசிவகடாட்சத்தைப் பெற்றிருக்கின்ற கசியப்பிரசாபாலகனையொத்த மகானுபாவனைப் பிதாவாகப்படைத்து அவருக்குப்பிள்ளையாகவிருக்கின்ற நீஉன்னைப்போலவே அவருக்குப்பிறந்திருக்கின்ற தாயாதிகளாகிய தேவர்களைஅலைத்தும் சிறையிற்படுத்திவருத்தியும் இப்பாடுகள் படச்செய்வது தருமத்துக்கெவ்வளவுமடாதுஆதிநூலாகச்சொல்லும்வேதமார்க்கங்களையுங் கடந்து அற்பரைப்போலப்பாதகங்களுக்கிடாகிய தீயகருமங்களைச்செய்து வருகின்றனை நீதிபரனாய் உலகங்களையிரட்சித்துவருவது சக்கிரவர்த்தியாக விருப்பவனுக்கு அழகும்ஆண்மையும்நல்லொழுக்கமுமாம் இன்னமுஞ் சிலகாரணங்களைத் தெரிவிக்கின்றனன், முற்காலத்திற் கற்கம்பத்தைப்போலப்பாரித்துவலிபெற்றிருக்கின்ற புசபலபராக்கிரமசாலியாகிய சலந்தரன்அந்தகாசுரன் திரிபுராதிகள் முதலாகிய அவுணராசாக்கள் தருமமார்க்கத்துக்கிடையூறாகவும் வேதஒழுக்கங்களையுமறந்து தீனராகியதேவர்களை அனலிற்பட்டபுழுகைப்போலப் பதைபதைத்துவாடிவருந்தும்படிக்குக் கொடுமைகளைச்செய்த காரணத்தினாற் சிவபிரான்விண்ணவர்படுந் துன்பத்துக்கிரங்கி ஒருநிமைப்போதில்அந்தஅவுணவீரர் குலநாசமாய்ப்போகும்படிக்கு அதஞ்செய்தனர். இந்தச்சேதியை நீகேள்விப்பட்டதில்லையோ கொடியவனே உன்னையொத்த அசன்றமண்டலாதீஸ்வரனானவன் பேதைமைத்திறமுடைய தேவர்களை வருத்துவதழகோ மேலுங் கொலைகளவுகட்காமமுதலிய மகாபாதகங்களைக் கடந்து பஞ்சேந்திரியவிஷயங்களையடக்கி அறிவைவிளக்கிப்பரத்துவநிலைதெளிந்து சுகாதீதவின்பத்தைப்பெற்று வாழ்ந்திருக்கின்ற பெரியோர்களைக்கோபித்துத் தருமத்துக்கடாத துன்பங்களைச்செய்துவரும்பாதகர்கள் பிராணபரியந்தம்தீராதபழியைச்சுமந்து துரிதமாகப்புத்திரமித்திரகளத்திராதிகளுடன் அலைச்சறப்பட்டுமாண்டு யமகிங்கரர்வசப்பட்டுப் பாசங்களினாற்கட்டுண்டுதென்புலத்தைச்சேர்ந்து ரவுரவாதி மகாநரககும்பியிற் றள்ளுண்டுபலகாலம்வருந்தியும்மீளப் பலஜனனங்களிற்பிறந்து அளவற்றதுயரங்களையனுபவித்துழல்வர், இவர்களுக்கெக்காலத்தும்மோட்சபதவியென்பதுகிடையாது.

இவையன்றியும் தன்னைப்போலவே சகலபிராணிகளினிடத்தும் இரக்கமில்லாமற்பிறருக்கெக்காலத்தும்அல்லல்செய்துவருபவர்கள்தாங்கள்பெற்றிருக்கின்றசம்பத்துகளைப்பறிகொடுத்துவறுமையாளரா யிரந்துண்டுபிணிகளிற்பட்டுத் துக்கசாகரத்திலழுந்திவாடினவர்களாய் இறந்தகாலத்தினும்யமபடாள்வசப்பட்டுக்கட்டுண்டுகதைகளினால் மொத்துண்டுவைவசுதபட்டணத்தைச்சேர்ந்துநரகங்களிற்கடைப்பட்ட-அட்டை-அரணை-பாம்பு-தேள்முதலிய கொடியஜந்துக்கள்நெருங்கியிருக்கும்கும்பியிற்றள்ளப்பட்டு பதைபதைத்துச்சோர்ந்தும் இருப்புலக்கைகளினால்தலைபிளக்கஅடியுண்டும்வயிரவூசிகளினாற்குத்துண்டும்சிவக்கக்காச்சி அனலைவீசியிருக்கும் எழுகுகம்பங்களையணைந்து வருந்தியும் வாளினாற் சேதிக்கப் பட்டும் செக்கிலிட்டரையுண்டும்கொதிக்கின்றஎண்ணெய்க்கொப்பரையிற்றள்ளுண்டும் இத்தகைய கடினதண்டனைகளையனுபவித்த பின்புமீட்டும்இவ்வுலகில்பிறந்து வறுமையிற்பட்டுப்பலதுன்பங்களை யனுபவித்துவாடுவர். அத்துடன்போவதன்று மீளவும் இறந்தும் பிறந்தும் அலைவதன்றிநிவாரணங் கிடையாது இதுவுமல்லாமல் இதனைச் செய்தால் பாதகம் நேருமென்றும் இதனாற் புண்ணியமுண்டாகுமென்றும் நன்றாகத்தெரிந்தும் பல திருஷ்டாந்தரங்களினாற் கண்டுங்கேட்டு மிருப்பவன்,அயலாருக்குத்தீங்கினைச்செய்வானாயின் உடனே கொடியதண்டனை நேரும்அவனுக்கு மன்னிப்புக்கிடையாது, ஆதலால் வேதாகமசாஸ்திரவிதங்களைப் பூர்த்தியாகத்தெரிந்த நீஅறிவில்லாதவர்களைப்போலத் தீனராகிய தேவர்களைச் சிறைபடுத்தியும் பலதுன்பங்களைச்செய்தும் வருத்திய பாதகத்தினால் இந்தச்சம்பத்துகள் நசித்துமிகுத்த துயரத்தழுந்தி வாடுவதன்றியிற் பிராண ஆனியும்நேரும் தேவர்கள் வலியையடக்கிச் சகலசிவராசிகளுக்கும் மிகுத்தவுபத்திரங்களைச்செய்து வீறியிருந்த உன்தம்பி தாருகாசுரனை யிருபிளவாகக் கண்டித்துக்கொன்ற வெற்றிவேலாயுதமானது கோடிசூரியப்பிரகாசத்தினை வீசிக்கொண்டு குமாரதேவர் திருக்கரத்திலிருக்கின்றது,அதனைப்பிரயோகிப்பராயின்உன்

வயிர தேகத்தையும், பிளந்து உயிரையுண்டுவிடும் அப்படிக்கிருந்தபோதினும் தருமத்தைநினைந்து நீசெய்து வருங் குற்றங்களுக்குத்தக்க தண்டனையைவிரைவில் முடியாமல் இதுபரியந்தம் க்ஷமித்தனர். ஆதலால் அமுத போசன மகிமையினால் நீசெய்வித்த தண்டனைகளிற் சாகாமலிருக்கின்ற தேவர்களைப் பலயுகங்களாக விலங்குபூட்டி வருத்தித் தகாதஏவல்களைச் செய்வித்துக் கொடுங்கோல் செலுத்தின யாயினும் இனியாவது அத்தேவர்களை விடுதலைசெய்விப்பையாயில் நீ யின்னமுஞ்சிலகாலம் பிழைத்திந்தச் செல்வத்தை யனுபவிப்பை.அல்லது நாம் சொல்லுகின்றதை யுறுதியாகக் கொள்ளாமல் ஊழ்வினைப்படிக்குத் தடுப்பையாகில் அதிசீக்கிரத்திற்சகல சேனைகளுடனும் நீ யழிந்துபோவது நிச்சயம் வேதவாக்கியங்களும் அப்படிக்கே முறையிடுகின்றன.

பூர்வத்தில் நீயளவற்றகாலம் அருமையாகியயாகத்தைச்செய்யும்போது பரமசிவம் வெளிப்படாமையால்வானத்திலெழும்பி வச்சிராயுதத்தினால் தேகத்தைச்சேதித்து உதிரப்பெருக்குடன் ஆகுதிகொடுத்தும் நினைந்தகருமம் முடியாததால் அக்கினிமத்தியில் விளங்கும்வயிரவூசியிற் பாய்ந்திறந்த உறுதிக்குச் சிவபிரானிரங்கிக் காட்சிதந்து பிராணனையும் வயிரதேகத்தையும் வேண்டிய வரங்களையும் அழிவற்ற செல்வங்களையும் கடாட்சிக்கப்பெற்றனை, அப்படிக்கு வருந்திச் சம்பாதித்திருக்கின்ற அகன்றசாம்பிராச்சியங்களையும் சலனமற்ற பிராணனையும்தகாதகாரியங்களை முக்கியமாகச்செய்து வியர்த்தமாகப் பறிகொடுத்துக் கெடுவதுஉனக்கழகோ!மகம்மேருவினுமேலாயோங்கியிருக்கின்ற சம்பத்தைப்பெற்ற நீயும் உன்வர்க்கத்தினரும் இன்னமுஞ் சிலபகல்விருத்தியடைந்துவாழநினைப்பையாகில் சயந்தன்முதலிய தேவர்களை விடுதலைசெய்து விட்டுத் தருமமார்க்கமாக உலகத்தைப் பாதுகாத்தாண்டுவரக்கடவை அப்படிக்குச் செய்யச் சம்மதப்படாமற் போவையாகிற் பாலசுப்பிரமணியக்கடவுள்அதிசீக்கிரத்தில் இவ்விடத்துக் கெழுந்தருளிக்கொடியபோரைச்செய்து உன்வம்ச நாசமாகக்கொல்வர்.நானிதுபரியந்தம்பேசியகாரியங்களைக்கிரமமாகயோசித்து இவைகளைச்சத்தியமாகக்கொண்டு நடக்கக்கடவையென்று உனக்குவிரித்துக் காட்டும்படிக்குக் குமாரதேவர் எனக்குக் கட்டளையிட்டனுப்பினர் ஆதலாற்றுரிதமாய்த் தேவர்கள்காவலைவிடுதலைசெய்து வேதவிதிப்படிக்கு உலகங்களைப் பரிபாலித்து மகதயிஸ்வரியங்களை யனுபவித்து வாழக்கடவையென்று தருமமார்க்கங்களைப்பரிபாலிக்க உற்பவித்திருக்கின்ற வீரவாகுதேவர் பிரித்துப்பிரித்துச் சுடச்சுடச்சொல்லிய நீதிகளைச்சூரபதுமன் கேட்டவுடன்மனதிற்கோபக்கனலானது மூண்டுவிழிகளில் அக்கினிப்பொறிகள்குபீல்குபீலெனக் கொட்டப் பெருமூச்செறியுந் தோறுங்கொண்டல் கொண்டலாய் புகைபெருகத்தக்கதாகக் கோடையிடியைப்போலக் கரத்துடன் கரத்தைத்தட்டிச் சபையதிரும்படிக்குநகைத்துச்சொல்லுகின்றான். அடாபயலே? கேள் ஜகதீஸ்வரனாகிய பரமசிவகடாட்சத்தையும் படைகளுக்கரசாகிய பாசுபதமுதலிய சிறந்த பாணங்களையும் அழிவற்ற வச்சிரதேகத்தையும் மனோவேகத்தினுமேலிட்டுச்செல்லும் இந்திர ஞாலத்தேரையும் அகன்றசாம்பிராச்சியச்செல்வப் பெருக்குகள் முதலாகப்பெற்றுஆயிரத்தெட்டண்டங்களையும் வென்று நூற்றெட்டுயுகங்களாக எதிரின்றி இராசராசாக்கள் தொழுது போற்றிவர ஏகசக்கிராதிபதியாக விருக்கின்ற நம்மையொத்தசூரனுக்கு இன்னமும் பற்கள் முழுமையும் முளையாமல்பாச்சிசோச்சியென்று மழலைச்சொற்கள் திருந்தாமல் வசனித்திருக்கும் அந்தச்சிறுபாலனோ! இத்தகைய புத்திகளைச்சொல்லியனுப்புவன், இதைப்பார்க்குமிடத்தில் வெகுநேத்தியாகவிருக்கின்றது, இதுவுமல்லாமல் மிகுத்தவலியும் வீரமும் வெற்றியும் புசபலபராக்கிரமமும் பெற்றிருக்கின்றதீரராகிய அவுணவீரர்சூரத்துவமில்லாமல் நீயிப்போதுசொல்லிய பூச்சிக்கு பயப்படப்பட்டவர்களாம்வலியற்றுபேடிகளைப்போலப் பதுங்கித்திரியும் தேவப்பயல்கள் மேம்பாட்டையும் ஆண்தன்மையையுமுடையவர்களாம், சூதலைமொழிகளைப்பேசித்திரியும்சிறுபிள்ளையானவன்ஆயிரத்தெட்டண்டங்களுக்கு மதிபனைச் சகலரையும்வென்று சூரனென்று பெயர்பெற்றிருக்கின்ற சக்கிரவர்த்திக்கு மந்திராலோசனையைத் தெரிவிப்பவனும் அலைகள் பெருத்தசமுத்திரஞ்சூழ்ந்தஇந்தபூமண்டலத்தில்நீசொல்லியபடிக்கு வழங்கிக்கொள்ளுவது வெகுநேத்தியாகவிருக்கின்றது.

ஆதிமுதற் பரிமளமிகுத்த புஷ்பமாலைகள்புரளும் பருத்த புசங்களையுடையஅவுணர்-இராக்கதர்-இத்தகையர் வம்சங்களை விர்த்திக்கவொட்டாமற் பலவிதங்களினும்அலைத்துக்கொன்றடக்கிவந்த தேவர்கள் அயிஸ்வரியங்களையுங் கருவங்களையும்வாட்டிப்பனரிகளாயோடத்துரத்திப் பதியையுமழித்துத் தொண்டரைப்போலச் சிற்றேவற் பணிவிடைகளையும்செய்ய ஜயசாலியாகவிருக்கின்றேன்.அவர்களாதியி லெங்கள் முன்னோர்களுக்குச்செய்த தீங்குகளைக்குறித்து நீதியைப் பாராட்டாமல் அலைத்துவாட்டிக் கடையில்மீளாதசிறையினும்அடைத்துவைத்தேன்.இது புதிதல்ல, எங்கள்முன்னோர்கள் செய்துவந்தபடிக்கு முடித்ததாகும், உன்னை ஒருபொருளாக மதித்துப் பலபல சொல்லவேண்டேன். என்னுடைய தீர்மானமேதெனில், உலகபாலகராகிய மகாவிஷ்ணுவினது உந்திக்கமலத்துதித்து சராசரப்பிரபஞ்சங்களைப்படைத்து வருகின்றபிரமதேவருக்கு நியமித்திருக்கின்ற பகற்போது கழிந்துஇரவுறங்குகின்ற காலையில் நித்தியப்பிரளயஞ்சம்பவித்துச் சத்தசாகரங்களும் ஏகமாய் அலைகளைவீசிப்பெருகி உலகங்களனைத்தையும் அழிக்கின்றதருணம் நேர்ந்தாலும் என்வசப்பட்டிருக்கின்ற தேவர்களைவிடகினையேன். நீஅவர்களுக்காகமிகவும் பிரயாசைப்படுகின்றதாகக் காண்பதால் இனிமேல் அந்தத்தேவர்களை பலமான காவல்செய்து நமதரசுசெல்லும் ஆயிரத்தெட்டண்டங்களின் கடையில்வைப்பேன் மேலும் என்னுக்கினைக் கடங்கியிட்ட பணிவிடைகளைச்செய்து ஒடுங்கியிருந்து தப்பித்துக்கொண்டோடிப்போயிருக்கின்ற இந்திரனையும்மற்ற தேவர்களையும் தேடிப்பிடித்துவந்து விலங்குகளைமாட்டியிந்தபட்டணத்தில் அரியகாவலில்வைத்து வருத்தும்படியாகிய வெண்ணங்கொண்டிருக்கின்ற நான் இப்போதுகையிலகப்பட்டிருக்கின்றவர்கள் சிறையைநீக்கி விடுதலைசெய்வதற்கென்ன பயித்தியம்பிடித்ததோ! ஒருபோதும் விடமாட்டேன் ஓ! தூதனே? யிதனைமனதிலுறுதியாகநினைக்கக்கடவை, ஒருவரும் நிகரில்லாத வீரனாய் சூரனென்றும் பெயர்பெற்றிருக்கப்பட்ட யான் அப்படிக்குச்செய்வேனாயின் ஓர் பாலகனுக்குப்பயந்தானென்றுசகலரும்என்னை

யிகழ்வார்கள், இவையன்றியும் அரிய தவங்களைச் செய்து பிரகாசம்பொருந்திய வயிரதேகத்தினையும், மாளாத வயதையும், அழிவுபடாததேரும் ஒடியாதவில்லும் மீளாதபாணங்கள் முதலிய பற்பலவளங்களையும் பூர்வத்தில் உன்னைச்செலுத்திய பாலன் பிதாவாகிய பரமசிவனெனக்கனுக்கிரகித்திருக்கின்றனர், இதுவரையிலெதிரின்றி அரசுசெலுத்தி வருகின்றனன். அத்தகையபேற்றினை யினியாவரால் அழிக்கப்படும். இப்படிக்கிருக்கின்றஎன்னை ஆயிரகோடி அண்டங்களிலிருப்பவர்களில் யாவர்கொடியபோரைச்செய்து புயவன்மையினால் வெல்லவல்லர். மதயானை முகத்தைப்பெற்றிருந்த என்தம்பிதாருகனைக்கொன்ற செய்தியைக் கேட்டமாத்திரத்தில் வெளிப்பட்டுவேலைத்தாங்கியிருக்கின்ற குமாரனை வளைந்துகொண்டு அவனுடன்வந்த பூதவெள்ளங்களாதியாகச் சின்ன பின்னப்பட அதப்படுத்த நினைந்த யான்பாலொழுகுஞ் சிவந்தவாயையுடைய குழந்தையை யெதிரிட்டுச் சண்டைகொடுக்கப்போவது என்னையொத்த சக்கிரவர்த்திக்கடாதென்றும்தீராத அபகீர்த்திநேருமென்றும் மந்திராலோசனைக்குரிய காரியப்பேர்கள் தடுத்தகாரணத்தினால் இதுவரையிற்றாழ்ந்தேன் அல்லாவிடின் அத்தினமே என்னெண்ணத்தைமுடித்துக்கோபந்தணிந்திருப்பேன், இப்போதொன்றும்முழுகிப்போகவில்லை. என்தம்பிதாருகனையும்கிரவுஞ்சனையும் பிளந்துகொன்றசெய்தி நேற்றையதினந்தான் கேள்விப்பட்டேன், இதோ என்சேனைத் தலைவர்களிற் சிலரையனுப்பி அந்தபாலனைவாட்டி என்துணைவனைக்கொன்ற பழியைத்தீர்த்துக்கொள்ள விருக்கின்றனன், இதனுண்மையை நாளைக்கேநீதெரிந்து துக்கப்படப்போகின்றனை, இவையன்றியும் அண்டங்கடோறும் அளவற்ற விஷ்ணுக்கள் பிரமர்கள் இந்திரர்கள்முதலிய தேவர்களிருக்கின்றனர். அவர்கள்நம்மைக் கண்டவுடன் சண்டைகொடுக்கத் திராணியற்றவர்களாய் நமக்கடிமைப்பட்டு எங்களனைவருக்கும் இறைவனாய்ப் பரிபாலித்துவெகுகாலம் சுகசீவியா யிருக்கக்கடவாயென்று வாழ்த்திப்போற்றித் தத்தமதுபதங்களிலிருக்கின்றனர். இப்படிக்கிருக்கநேற்றையதினம் சிவனிடத்துதித்த பாலனே! சூரனாகியஎன்னெதிரில்நின்று சண்டைகொடுக்கவல்லவன், இனிபலபலசொல்லியாவதென்னை தேவர்கள் சிறையையெக்காலத்தினும் விடுதலைசெய்யமாட்டேன் சிறிது மறிவில்லாத பிள்ளை சொல்லியசொற்ப வார்த்தையைமுக்கியமாகவெண்ணி யதற்கிசைந்து பயித்தியக்காரனானபடியால் தூதாக வந்தனையாயினும் உன்பிராணனைவாங்காமல் தயைசெய்து விடுகின்றனன். இனியிந்தபட்டணத்திற் சற்றும் நில்லாமல் தப்பிப்பிழைத்தோடக் கடவையென்று ஆயிரத்தெட்டண்டங்களை யாண்டுவரும் வீரபராக்கிரமசாலியாகிய சூரபதுமன் பேசிய வசனங்களானவைநாராசத்தைச் சிவக்கக்காய்ச்சி நுழைத்ததைப்போல வீரவாகுதேவர் செவிகளிற் பட்டமாத்திரத்திலெழுந்த கோபக்கனலானது மனதைவருத்தச்சீறிப் பெருமூச்செறியுந்தோறும் புகையுமனலும் பெருகவும் உரோமங்கள் சிலிர்த்துத்தேகமுற்றும்முத்துகளையொப்ப வெயர்வைதோன்றவிழிகள் சிவந்து தீப்பொறிகள்சிதறக் கோபப்பெருக்கினால் சபையதிரும்படிக்கு நகைத்தவராய் இதனைப்பேசுவதாயினர்.

நல்லகாரியம் ஓ! சூரனே? நீயிப்போது சொல்லியது வெகுநேர்த்தி நீயின்னஞ் சிலகாலம் இந்தமகதயிஸ்வரியங்களை யனுபவித்துச் சுகசீவியாகவிருந்து அரசுசெலுத்து மார்க்கத்தைத் தேடவறியாமல்இந்தஅல்பசம்பத்தைப்பெற்றிருக்கின்ற கருவத்தினாலிதனைசாஸ்விதமாயெண்ணிப் பிரமைகொண்டலையும் மனதைப்பெற்ற கயவனேயிப்போது நான்குறிக்கின்ற உண்மைகளைத்தீர்மானமாக நினைக்கக்கடவை. அஃதென்னையெனிற் சிரோரத்தினங்கள் பிரகாசிக்கும் பணாமகுடங்களைப்பெற்ற சர்ப்பங்களையும் மூன்றாம்பிறையையும்கொன்றைமாலையையும்அணிந்திருக்கின்ற சடாமண்டலதாரியாய் உலகநாயகனாய்ச்சுயஞ்சோதி வடிவாய்ஓசையினெல்லையாய்எங்கும்பரிபூரணமாகநிறைந்து நடிப்பிக்கும் பரமேஸ்வரனுடைய நுதல்விழிகளினுதித்த சரவணபவன் பெருமைகளையும் குணாதிசயங்களையும் வீரபராக்கிரம உத்தண்டங்களையும்எவ்வளவுங் கவனித்தறிந்தவனல்லை யாதலாற் பாலனென் றிகழ்ச்சியாகப்பேசினை அவற்றின் காரணங்களைக்கேட்பையாக.--மானை யிடக்கரத்திலேந்தியிருக்கின்றசிவபிரானைத் தேவனென்றும் தெய்வலோகவாசிகளாகிய விண்ணவரைச் சிருஷ்டி திதி சங்கார கிர்த்தியங்களை நடாத்திவருந் திரிமூர்த்திகளென்றும் மகாவிஷ்ணு பிரமதேவனைப்பரம்பொருளென்றும் உலகங்களில் வாசஞ்செய்திருக்கின்ற சிலபுத்தியீனர்கள் துதிக்கின்றனர். இதனையென்னென்றிருக்கின்றனை தாங்கள் கொண்டிருக்கின்ற அன்பினாற்பேசும் உபசாரவார்த்தைகளா மல்லது நிச்சயமல்ல சகலமும்மூலகாரணனாகிய சிவனைச்சேரும், பிற்குறித்தசுலபகீர்த்தியைப்பெற்ற தேவர்களைப்போல எமதிறைவனாகிய பாலசுப்பிரமணியதேவரை நினையாதே போதவுணர்வைப் பெற்றிருக்கின்ற மகத்துக்கள் இச்சித்திருக்கின்றசாயுச்சியபதவியைப் பெறச்செய்வதும் யாவருக்குமெட்டாதிருக்கின்ற பெருவெளியைத் தோற்றக்காட்டுவதும் பேரறிவினருக்கு மோட்சவீட்டைத் தருவதும் வேதங்களிற்குறித்திருக்கின்ற ஒழுக்கங்களெனப்படுகின்றது, அதன் நிச்சயங்களையுந் தெரிவிக்கின்றனன் கேட்பையாக.

வாமனாவதாரங்கொண்டுபோய்பலிச்சக்கிரவர்த்தியினிடத்திற்றானமேந்தி விண்ணையும் மண்ணையுமிரண்டடிகளினாலளந்தமகாவிஷ்ணுவும், உந்திக்கமலவாசியாகியபிரமதேவனும், அளவற்றகாலந்தேடிக்காணவரிய அனற்படிவமாகியபரமசிவத்தின்நுதல்விழிகளினிடத்திற் பரவஸ்துவாக விருக்கப் பட்ட கர்த்தன் உருக்கொண்டு தயாரசம்பெருகும் மனதையுடைய குழந்தைக்கோலமாகத்தோற்றுகின்றனர். தேவதேவோத்தமனாகிய சிவபிரான் திருநாமத்தைப்படைத்துச் சகலருக்கு மேலாய்ப்பிராணிகளனைத்தினும் அந்தரான்மாவாகப்பொருந்தித் தாய்தந்தையரைப்போலப்பரிந்து நடிப்பித்தும் அருவுருவாகவிளங்கியும் இவ்விதநாடகங்களைக் காட்டிவரும் பாலசுப்பிரமணியதேவரைப் புராதனக்கடவுளாக நினைக்கக்கடவை, பரமேஸ்வரனே தமதுதிருவிளையாடல்களைமுடிக்கும்பொருட்டு பாலனாகவுருவகப்பட்டுக் காட்டுகின்றனர், சுயஞ்சோதிமயமாகிய குமாரதேவர்படைத்திருக்கின்றசண்முகங்களின்காரணத்தினால் ஆதிதேவனென்றறியக்கடவை, நிதானித்துப்பார்க்குமிடத்தில் முதற்காரணக்கடவுளாகியசிவத்துக்குந்தமக்கும் அபேதமாய் ஒன்றுபட்டிருப்பர்

அதற்குச் சிலதிருஷ்டாந்தரத்தைக் காட்டுவோம்.பிரகா
சம்பொருந்தியிருக்கின்ற சிரோரத்தினத்தினிடத்திற் கி
ரணமானது பிரதிபிம்பித்துப் பிரியாமற்கலந்துவிளங்கு
வதுக்கொக்கும் இதனால்தெரிந்து கொள்ளக்கடவை!சூ
ரனே?பிரிதிவு-அப்பு-தேயு-வாயு-ஆகாயமெனச்சொல்லா
நின்றபஞ்சபூத உருவகமாய்த் தோன்றநின்றபுவனங்கள
டங்கியபலகோடி அண்டங்களில் ஆயிரத்தெட்டண்டங்
களையுமசலனமற்ற செல்வப் பெருக்கையும் மீளாததெய்
வப்படைகளையும் மற்றுமிராநின்ற சீரையும்ஆதியிலுன
க்குக் கொடுத்திருக்கின்ற பரம்பொருள் அவனெனில்தா
ன்கடாட்சித் திருப்பவைகளைமீட்டும் வாங்கிக்கொள்ளுவ
து அரிதென நினைக்கவேண்டாம் பற்பலவளங்களைப்பெ
ற்றிருக்கின்ற ஆயிரத்தெட் டண்டங்களையும்மற்றசிறப்பு
களையும்பெற்று வெகுகாலமாக வநுபவித்திருக்கின்றன
மென்று நினைந்திறுமாந் திருக்கின்ற மூடனே கேட்பை
யாக. யாவராயினும்அரிய விரதங்களைச்செய்து வந்தநல்
லொழுக்க மகிமையினால் பரிபூரணகடாட்ச வீட்சணிய
ங்களிற்சிலவற்றைப்பெறுவராயின்பஞ்சபூதச்செயற்கை
களினால் உள்ளும்புறம்பினும் மற்ற காரணங்களையுங்கா
ட்டி விளங்குகின்ற அண்டகோடிகளனைத்துக்கும் சக்கிர
வர்த்திகளாய் எக்காலத்தும்போற்றிமாளாதசெல்வத்தை
யநுபவித்திருப்பார். இதுவுமல்லாமற் சகலத்துக்கும்ஆ
தியாகவிருக்கின்ற பிரணவமந்திரமும் மெய்வாய்கண்மூ
க்குச்செவியென்னும் ஐவகைப்பொறிகளும் சதுர்வேதங்
களும்ஆகமங்களும் மற்றுஞ்சொல்லா நின்றகலைக்கியான
ங்களும் அவ்வவற்றின் நிச்சய உணர்ச்சியாகியஞானப்பி
ரகரணங்களும் ஒப்பற்ற குமாரதேவர் பேருருவின்கார
ணங்களெனக்கருதுவாய், அக்கடவுளினது பெருமிதங்க
ளை என்போன்றவனாலளவிடப்படுவதோ ஆகிலும்இன்ன
முஞ் சிலகாரணங்களைக் கேட்பையாக.

சோடசகலைகளைப் பெற்றபூரண சந்திரனைப்பார்க்கி
லுங் குளிர்ந்துவிளங்கு முகாரவிந்தங்களெங்குந் தோற்ற
வும் செந்தாமரைமலரை நிகர்த்த விழிகளெங்கும் கிருபா
நோக்கங்கொண்டும் திருச்செவிகளெங்கும்பரந்தும்ஆசா
னுபாகுவாகிய புயாசலங்க ளெவ்விடங்களினும் பெருத்
தும்அழகிய பாதாரவிந்தங்க ளெத்தலத்தினும்நிறைந்து
ம் கோடிசூரிய ரேககாலத்திலுதித்ததைப்போல எங்கும்
பரிபூரணமாக நிறைந்திருக்குந் திருமேனியும் கொண்ட
விசுவரூபத்தைப் படைத்திருப்பார் அக்குமாரதேவர் இ
வையன்றியும் செந்தாமரையையொத்த விழிகளைப்படை
த்த ஸ்ரீமகாவிஷ்ணு முதலாகிய தேவர்களுக்கும் ஆதிநூ
லாகிய நான்குவேதங்களுக்கும் மூலமாகவிளங்கும்பெரு
மையினையுடைய ஓமென்றோதாநின்றகுடிலையானது தம
க்கொப்பற்ற ஆதிதேவனாகிய முருகப்பெருமானுக்குரிய
சண்முகங்களினொன்றாக விளங்கிக்கொண்டிருக்கின்றது,
ஆதலால் அத்தேவன்பெருமைகளையுங்குணாதிசயங்களை
யும் யாவரால்கண்டு துதிக்கப்படும் திரிநேத்திரதாரியாகி
ய பரமசிவசொரூபமாகவும், விஷ்ணுவடிவாகவும் பிரம
தேவனாகவும்திக்குப்பாலகராகவும்சூரியர்சந்திரர் முதலி
ய கிரகங்களும்சத்தரிஷிகளும் சிறந்ததேவர்களும் தாமா
ய் ஆதிபத்தியங்கொண்டு பிரமசிருஷ்டியினாலுண்டாகிய
சகலசீவராசிகளினிடத்தும் பொருந்திநடிப்பித்துஇருவி
னைப்பட்ட பிராரத்வ கர்மபோகங்களை யநுபவிக்கச் செ
ய்தும் நன்குதீங்குகளைச் சமமாகநினைந்து அவைகள்நேர்ந்
த காலத்திற் கிலேசியாமலும் சந்தோஷப் படாமலும்ஏ
கபாவமாகநினைந்து நடந்து கொள்ளவல்ல பிராணிகளுக்
குவேண்டிய சம்பத்துகளைத் தந்து கடையில்மோட்சசா
ம்பிராச்சியங்களைத் தகுதியாக வநுக்கிரகஞ்செய்துபாது
காத்திரட்சிக்குங் குணாதிசயத்தையும் பெற்றவர், மேலு
ம்அணுவுக் கணுவாகவும் பெருமையிற் சகலத்துக்கு மே
லாகவுங் காட்டநிற்பான் ஆதலால் ஆதிகாரணக்கடவுள்
அவரேயெனத்தெளிந்து கொள்ளக்கடவாய், இவையன்றி
யும் பாலனாகத்தோற்றியும் விருத்தனாகக்காட்டியும்தினை
த்துணையினுஞ் சிறுகியும் அகண்டாகாரமாகத்தோற்றியு
ம் சூக்குமஸ்தூலவடிவுகளைப்பெற்றிருக்கின்ற உருவங்க
ளைக்கொண்டும் உலகங்களை நடிப்பித்து வருவான்.ஞான
வான்களாலும்யோகிகளினாலுங்கண்டறிந்துபோற்றவொ
ண்ணாத பெருமையினைப்படைத்த கந்தசுவாமியினது தி
ருவிளையாடல்களை எத்தகையராலு மறியப்படாது பரம
சிவத்தின் அருளுருவாகத் தோற்றியிருக்கின்ற வேலாயு
தமூர்த்தியினது திருவாணையினல்லது ஓரணுவுமசையா
து எத்தகையதேவர்களும் அக்கடவுளினது கட்டளையை
மீறிஒருகாரணங்களையுஞ் செய்யவறியார்கள் இப்படிக்கி
ருக்கும்போது நீஉற்பத்தியாகிய காரணத்தையும்இந்தச்
செல்வப்பெருக்குகள் கிடைத்தமூலத்தையும்கொஞ்சமா
வது யோசித்தறிந்து பிழைக்குமேதுவையாராய்ந்துகொ
ள்ளவகைதெரியாமல் சுத்தமூடனாய் மயங்கியிச்செல்வம்
நிலைபெற்ற தென்றும் அழிவுபடாதவச்சிரதேகங் கிடை
த்ததென்றும் பலசாலிகளாகிய தம்பியரும்புத்திரரும் ஜ
யசாலிகளாகிய பலசேனா சமுத்திரங்களுமுடையவ னெ
ன்றும் ஆணவ கருவத்திற்பட்டு பிரமித் திருக்கின்றனை
ஐயையோ அவன்மாயைப் பெருக்கி லகப்பட்டுக்கொண்
டு தடுமாறுகின்ற நீயினியெவ்விதத்தில் அதனைக்கடந்தீ
டேறவிருக்கின்றனை பாலசுப்பிரமணியதேவர் லீலாவி
னோதங்களிற் சிலவற்றைச் சொல்லக்கேட்பையாக, பிர
மாணத்தடங்காத பற்பலபொருள்களி னுருவகமாயும்அ
வற்றுட்படாமற் றனியனாகவும் ரூபீகரித்தும்அரூபியாயு
ம் எழுவகைத்தோற்றமாகவும் நூதனக் கோலங்களாகவு
ம் ஆதிதேவனாகவும் அதற்குமேற்பட்ட அநாதிப்பொரு
ளாகவும் விளங்கித்திருநடனங்களைச்செய்து வருவார்.

இத்தகைய பரிபூரண தேகத்தைப்பெற்றிருக்கின்றசி
வகுமாரன் திருவடிவிற்றோற்றி யிருக்கின்ற அளவற்றவு
ரோமங்களினிடத்தில் புற்கள்முனையிற்பனித்துளி நிற்ப
தைப்போல அளவுபடாத அண்டகோடிகள் தோற்றிவி
ளங்கும் ஆதலால் அவர் திருமேனியின்பெருமைகளையு
ம் மற்றகாரணங்களையும் பூரணமாகக் கண்டறிந்தவர்க
ளொருவருமில்லை, அளவிறந்த சீவராசிகளின்பெருக்கு
ம் இவற்றைவிளக்கிவரும் மூலகாரணமாகிய பிருதிவு-அ
ப்பு-தேயு-வாயு-ஆகாயமென்னும் பஞ்சபூதங்களின் றோ
ற்றத்தினால் நிறைந்திருக்கின்ற அண்டவகைக ளனைத்து
ம் சரவணபவன் வடிவில்விளங்கும் உரோமங்களில் உ
ற்பவித்துப் பலகாலம் அசைவற்றிருந்து இறுதிகால மு
டிவில் வந்த மூலமாகவேஒடுங்கிப்போகும் அத்தகையதி
வ்வியமங்கள கரமாகிய திருமேனியிற் சகலபுவனங்களு
ம் அடர்ந்திருக்கின்றன,அவற்றின் திறங்களையும்மேம்பா
டுகளையும் அவனன்றி இந்தஉலகங்களில் வாசஞ்செய்கி
ன்ற பிராணிகளில் யாவர்கண்டுதரிசித்தவர்கள் இத்தகை
யமகிமைகளைப் பெற்றிருக்கின்றதிருமேனியினது பெரு

மிதங்களை எமதுகர்த்தனுகிய பாலசுப்பிரமணியதேவ
ர் கிருபையுற்று முன்னமொருகாலங்காட்டியபோதுதே
வர்களனைவரும் ஆனந்த பரவசத்தராய் அத்தோற்றத்தி
ற் சிலவற்றைக்கண்டுகளித்து மோட்சசாம்பிராச்சிய ப
தவிக்குப் பாத்திரராயினர், இப்படிக்குத் தரிசனையைக்
காட்டுவதற் கேதுயாதெனில், தமதுதிருவிளையாடல்களை
க் கண்டும் அவற்றிற்குக் காரணமின்னதெனத் தோற்ரு
மல் மயங்கிமகம்மேருவினிடத்திலிருந்த தேவர்களிடத்
திற் பரிபூரணகடாட்சத்தைக்கொண்டு அவர்களையிரட்சி
க்க நினைத்தமையால்அவர்கள் மையலொழிந்துதமதுபெ
ருமைகளை யறிந்து வீறியிருக்கும்பொருட்டுவிசுவரூபத்
தைக்கொண்டு அளவற்றகோடி அண்டங்கள்உரோம
ங்கள்தோறும் அணிபடத் தொங்கத்தக்கதாகநின்ற கந்த
சுவாமியார் திருக்கோலத்தைப் பாதகங்களைச்செய்துவரு
ங் கொடியோனுதலால் நீகண்ட தில்லையோ அக்காலத்தி
ற்குமாரதேவர் கொண்டுநின்ற விசுவரூபத்திற்ருேற்றிய
உரோமங்களிலொன்றில் விளங்கிய பலகோடிஅண்டங்க
ளில் ஆயிரத்தெட்டண்டங்களைச் சிவபிரான்அனுக்கிரக
த்தினுற் பெற்று ஆண்டுவருகின்றனை, இந்தரகசியத்தை
த் தெரியாமல் அக்கடவுளைப் பாலகனெனச்சொல்லுகின்
ருய் யோகியர் ஞானவான்கள்முதலிய மகத்துக்களாலுங்
கண்டறிதற்கரிய மங்களகரமாகிய குணதிசயங்களைப் ப
டைத்திருக்கின்ற ஆதிதேவனுகிய பாலசுப்பிரமணியக்க
டவுளானவர் தீனசரண்ணியனுதலால்திருவுளத்திரக்கமு
ற்று தீனராகிய தேவர்கள் வெகுகாலமாய் வருந்தியும் வி
லங்குகளைப்பூண்டு கொடிய சிறையிலிருக்குந் துன்பங்க
ளைமாற்றிப்பழையபடிக்குஅவர்கள் பதவிகளில்நிலைபெ
றச்செய்யவும் பிரமதேவனுகிய ரடைந்திருக்கின்ற கிலே
சங்களையும் போக்கிச் சுகத்திலிருத்தவும் கொடியராகிய
துர்ச்சனரைத் தண்டித்துப் பலவளங்களையும் பெற்றிரு
க்கின்ற உலகஉபாதியைத்தவிர்த்து யதாப்பிரகாரம்சவுக்
கியத்திலிருத்தவும்திருக்கயிலையைக்கடந்துஇந்தமண்ணு
லகில் வந்திருக்கின்றனர், அத்தேவன்கரத்தில்விளங்கும்
வெற்றிவேலானது சர்வசங்கார காலத்திலோங்கிவீசும்பி
ரசண்டவாயுவின் மோதலினுல் உலகத்துக்கச்சாணியாக
அண்டத்தைத்தாவ வளர்ந்திருக்கின்ற மகம்மேருவைச்
சின்னபின்னப்படத் துகளாக்குவதுபோல வயிரதேகத்
தைப்பெற்று மாளாத உன்னுசையும்புயவலிமையையும்
வரமுயற்சிகளையும் துணைவர் பிள்ளைகள் பந்துவர்க்கங்க
ள் ரதகசதுரகபதாதிகளின் பெருக்கையும் சகலபுவனங்
களையும் நிமைப்போதிலழிக்கும் மகிமைகளைப்படைத்தி
ருக்கின்ற தேவாஸ்திரச் செருக்கையும் சின்னபின்னப்ப
டக் கண்டித்துவாட்டும் இந்த மகிமைகளைத் தெரியாமல்
ஒப்பற்றுவிளங்கும் தேவாதிதேவனுகிய குமாரதேவனை
க் குழந்தையென் றிகழ்ந்து பேசினுய் சுத்தபவுத்திரமன
தைப்பெருத மூடனே வாயைமூடக்கடவாய், எமதுகர்த்
தனை மதியாமற் சின்னப்படப்பேசிய உன்நாவையிந்தவீ
ரவாளினுற் கொய்துசிரமற்று நிலத்தில்வீழுந்துருளவெ
ட்டித்தள்ளி உன்னுயிரையும் யமலோகத்துக்கனுப்பி வி
டுவேன்ஆனுல் அப்படிக்குச்செய்யும் படியாகியகட்டளை
யை எமதையனிடத்திற் பெற்றுவாராத காரணத்தினுற்
பாதகனுகிய நீயின்னஞ் சிலபோது உயிர்பெற்றிருக்கப்
பொறுத்து ஏதோதெரியாமற்பிதற்றினுயென் றுமன்னி
த்தேன் வேலாயுதத்துக்கிரையாகவிருக்கின்றகொடியனே
யிதனைஉண்மையாக நம்பக்கடவாயெனக் கடிந்துபேசிஅ
டாமூடராசனே உன்னுயிருக்குறுதியாகியமார்க்கமின்ன
மொருதரஞ் சொல்லக்கேட்பாயாக.

பாதகனுகிய நீயும்உன்கிளையும் நாசமடையாமல்இன்
னஞ்சிலகாலம்வாழ்ந்திருக்க நினைப்பாயாகில்இந்தநிமிஷ
த்தில் தேவர்கள்சிறையைநீக்கி விடக்கடவாய் மேலும் வ
யிரத்தைமறந்துகுமாரதேவர் வீரகண்டையணிந்தபாதா
ரவிந்தங்களைத் தஞ்சமாக வடைந்து வாழக்கடவா யென்
று கிரவுஞ்சபருவதத்தை வேலினுற் பிளந்துவாட்டியகு
மாரசுவாமியார் பெருமைகளை விரித்துவிரித்துவீரவாகு
தேவர் சொல்லக்கேட்ட கொடியமனதைப்பெற்ற சூரப
துமன் வடவாமுகாக்கினியைப் போலப்பொங்கி மனங்
கொதிக்கப் புகையுமனலும் சுவாசங்களிற் பெருகச்சீறி
வீரவாகுதேவனைக்குறித்துப் பேசுகின்ருன், பாற்பல்லு
திர்ந்தின்னமுமுளையாத சிறுபிள்ளையானவன்ஏதோ சில
காரியங்களைப்பேசும்படிக் கனுப்பிய நீ கொஞ்சமாவதுப
யமில்லாமற் சக்கிரவர்த்தியாக விருக்கப்பட்ட நம்மெதிரி
ல் நின்றுமரியாதைக்குக் குறைவாய் முன்னம்நீபேசியத
ற்குத் தூதனென்றெண்ணிக் கொல்லாமல்விட்டேன்-அ
தையறிந்து தப்பிப்பிழைத்தோடிப்போகாமல்எதிரிலிரு
ந்து மேலும்மேலும் அந்தக்குழந்தையினது பெருமை
களைப் படித்துப்படித்துச் சொல்லுகின்றனை அவன்வீர
த்தையும் புயவன்மைகளையுங்காட்டி பயமுறுத்துகின்ரு
ய் நமதுகுரூரமாகிய கோபத்தின்முயற்சியைக்கிஞ்சித்து
ம் யோசித்தவனல்லை குதலைச்சொல்லருத பிள்ளையாகிய
உன்னிறைவன் சிறந்தபரம்பொருளாகவிருந்தபோதினு
மிருக்கட்டும் இந்தப்பூச்சிக்குக் கொஞ்சமாவதுபயப்படு
வேனென் றெண்ணவேண்டாம்அளவற்றஅண்டங்கடோ
றுமிராநின்ற தேவர்களனைவரையும் ஜயங்கொண்டு பணி
யப்பெற்றிருக்கின்ற யான் பொன்னுலகவாசிகளாகிய சய
ந்தன் முதலியதேவர்கள் சிறையை விடுதலைசெய்யக் கன
விலும் நினையேன் இராசாதிராசனுகவிருக்கின்றஎன்னெ
திரிற் சலனமற்றதீரத்துடன்உயர்ந்த சிங்காதனத்தின்மே
லிருந்து வியர்த்தமாகிய பலபலவாக்கியங்களைப்பிதற்று
கின்ருய் அந்தகர்வத்தை ஒருகணப்போதி லறிகிறேனெ
ன்று சொல்லிஅகன்றமண்டலா தீஸ்வரனுகிய சூரபது
மன் தன்பக்கத்திற் பணிவிடைக்கெதிர்பார்த்திருக்கின்ற
ஜயசாலிகளாகிய ஆயிரம்வீரரைப்பார்த்துத் தூதாகவந்
தவனைக் கொல்லுவதென்போன்றவனுக் கழகன்று, ஆத
லால் அதிசீக்கிரத்தில் நம்மெதிரிலிருந்து வாதாடிக்கொ
ண்டிருக்கின்ற இவனைப்பிடித்துக் கொண்டுபோய்பாரவி
லங்குபூட்டி அரியசிறைச்சாலையி லடைத்துவைத்துப் ப
த்திரமாய்க் காக்கக்கடவீரென்று உத்தரவுசெய்த மாத்தி
ரத்தில் அந்தஅவுணவீரர்கள் வடவையைப்போற் கொ
தித்துக்கண்களில் அக்கினிப்பொறிகள் சிதறத்தக்கதாக
மேலிட்டுவந்துவானத்தையளாவ ஓங்கியெரியும்அக்கினி
யைப் புகைசூழ்ந்திருப்பதைப்போல நாற்புறங்களினு
ம் வளைந்துகொண்டு நவரத்தினமயமாய்ச் சூரன் வீற்றி
ருக்கின்ற பீடத்துக்கும் மேலாய்சிரோரத்தினகாந்திகளை
வீசிக்கொண்டிருக்கும் சிங்காதனத்தின் மேல் அசைவற்
றுக் கம்பீரமாக உட்கார்ந்திருக்கும் புசபலபராக்கிமசா
லியாகிய வீரவாகு தேவனைப் பிடிக்கநெருங்கி அதட்
டிக்கொண்டு வருகின்ற அவுணப் பாதகரை வீரவாகு
தேவர்கண்டு நகைத்துக் கரங்களைப் பிசைந்து கொண்டு

வீரத்தன்மை பொருந்திய சிங்காசனேப்போல வெழுந்து சிறித்தன்னைச்சூழ நிற்கின்ற மதயானைகளையொத்தஜயசாலகளாகிய வீரர் சிகைகளை மந்தரகிரியினும்வலிபெற்றுத்திரண்டு நீண்டிருக்கும் தமது கரங்களினொன்றை நீட்டிச் சேர்த்துப்பிடித்துத்தூக்கிக் கிறுகிறெனச் சுழற்றிச் சூரபதுமன் வீற்றிருந் தரசுசெலுத்திவரும் சபாமண்டபத்தைத் தாங்கியிருக்கின்ற இரத்தினமயமாகிய தூணி னிடத்திலோங்கி மோதிய மாத்திரத்திற் சிரங்களுடைந்து மூளைசிதறிச் சபையினிடத்திலிருக்கின்றவர்கள் முகங்களெங்கும் படியவும் மார்புகள் பிளந்துவயிறுகிழிந்து குடல்கள் சரிந்திறையவும் கைகால் துண்டித்துப் பலதிசையினு மிறையவும் உதிர வெள்ளமானது பெருக்கெடுத்தோடவும், இவ்விதமாகச்சபைமுற்றும் அல்லோல கல்லோலப்படச்செய்து அவர்களுயிரையமலோகத்துக்கனுப்பி உடல்களை உதிரப்பெருக்குடன் சூரபதுமன் மேலெறிந்து கண்களில் அக்கினிப்பொறிகள் சிதற மனம்வெந்து சரீரம்வியர்த்து இதனைச்சொல்லுகின்றார், அடாபாபி எமது கர்த்தன்கட்டளைப்படிக்கு நீ பிழைக்கும் பொருட்டு நீதியாகிய வசனங்களைக்காட்டினால் அதனை உறுதியாகக்கொண்டு அங்கீகரியாமல் இப்படிக்கொத்த தகாதகாரியத்தை நினைந்து செய்வித்தபடியால் இனிதடையில்லாமல் எமதையனாகிய சுப்பிரமணியக்கடவுள் திருக்கரத்தில் விளங்கும் வெற்றிவேலாயுதமானது உன்வயிரதேகத்தினைப் பிளந்துகொல்லுவது நிச்சயம்அப்படிக்குக்குலநாசப் பட்டுப்போவதற்கு முன்னம் ஐம்புலன்களுந்திருத்தியடையும்படிக்கு யருமையாகத்தேடிய செல்வங்களையனுபவித்துக் கடைநாள் நேர்ந்ததென்று மனதில் நிச்சயப்படுத்திக்கொண் டிருக்கக்கடவாய் இனிசண்டாளனாகிய உன்முகத்தையும் பார்க்கமாட்டேன். போய்வருகிறேனென்று ஆண்சிங்கம்போன்ற வலியுடைய வீரவாகுதேவர் வானத்திலெழுந்தமாத்திரத்தில் அவர்வீற்றிருந்த சிங்காதனமானது செப்படிவித்தையைப்போலச் சடுதியில் ஆகாயமார்க்கத்தெழுந்து ஒருவருக்குந்தோற்றும ல்மறைந்தது.

## சதமுகன்வதைப்படலம்.

ஒண்ணிலவெயிற்றினரொராயிரரையட்டே
யெண்ணலனவைக்களமிகந்துபடர்காலைக்
கண்ணினழல்காலும்வகைகண்டுபுடையாக
நண்ணுசதமாமுகனைநோக்கிநவில்கின்றான்.

வாரீர் சவுனகாதிரிஷிகளே? இப்பிரகாரம் வீரவாகுதேவர்கோபங்கொண்டு பிறையைப்போல கோரைத்தந்தங்கள்விளங்கும் அதிசூரர்களாகிய ஆயிரம் அவுணவீரரையும் சுலபமாகச் சின்னபின்னப்படக்கொன்றுசபையினிடத்திருந்த சூரபதுமன்முதலிய வீராதிவீரர்களை எவ்வளவும்மதியாமல்வைதுபேசிக்ககனத்தெழுந்தமாத்திரத்திற்சூரபதுமனுக்கு அதிககோபம் பிரவேசித்து விழிகளில்அனற்பொறிகள்சிதறத்தக்கதாகச்சபையைப்பார்த்துத் தனக்கருகில் மதயானை யைப் போல உட்கார்ந்திருக்கின்ற சதமுகனென்னும் அவுணவீரனைக்குறித்துச்சொல்லுவான். ஓ! சேனைத்தலைவனே? நேற்றையதினம்பிறந்தசண்முகனிடத்திருந்து தூதாகவந்த ஒருவன்நமது கட்டளையின்படிக்குப்போன ஆயிரம் வீரரையும் இந்தமகாசபையானதகலங்கி எங்குமுதிரம் பெருகும்படிக்கு நிமைப்போதிற் கொன்றதுவுமல்லாமல் நமதுசவுரியங்களையும்ஆக்கினையையும் இகழ்ந்து ஜயசாலியாய்ப் பலவீரங்களைப்பேசிப் பயமில்லாமற் போகின்றனன், அவனிருந்த பீடமும் அவனுக்கு முன்னம் மறைந்துவிட்டது,இப்படிக்கொத்ததயிரியங்கொண்டுநம்மவரைக் கொன்றுபோவானாயினும், சிலராசகாரியங்களைப்பேசும்படிக் கனுப்பியதூதனாதலால் அவன்பிராணனை வாங்காமல் விரைவிற்போய்மடக்கிக்கொண்டு கொடியபோரைச்செய்து அவன்கர்வத்தையடக்கிப்பிடித்து புயங்களொடியத்தக்கதாக இறுகக்கட்டிக்கொண்டுவரக் கடவாயென்று கட்டளையிட்ட மாத்திரத்தில் பீடத்தைவிட்டெழுந்து வீரசிங்கம்போல சிங்காதனத்தில் வீற்றிருக்கின்ற சூரபதுமன் பாதாரவிந்தங்களிற்பணிந்து தேவரீர்திருவுளப்படிக்குச்செய்துவருவேனென்று செலவுபெற்றுக்கொண்டு சர்வசங்காரகாலத்திற் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் மேகங்களும் ஒன்றிப்பெருகி மகம்மேருவைவளைந்தகாலையில் பிரசண்டவாயுவின் மோதலிற்பட்டுஒலிப்பதைப்போலக்கர்ச்சித்துக்கொண்டு சபையைக்கடந்து வெளியேவந்துபோர்க்கோலத்தைத்தாங்கித் தானரியதவங்களைச்செய்துபெற்றிருக்கின்ற தேவாஸ்திரங்களைச் சேகரித்து வயிரகவசத்தைத்தரித்து மந்தரகிரியையொத்தவில்லைக் கரத்திற்கொண்டு கருங்கடலையொப்ப ஆரவாரித்திருக்கின்ற ரதகசதுரகபதாதிகள் அமோகமாகச் சூழ்ந்துவர அதிவேகமாகப் போய் முருகக்கடவுள்விடுத்த தூதனாகிய வீரவாகுதேவரைவளைந்துகொண்டு இதனைச்சொல்லுகின்றான்.

இலங்கைமுதலிய கொடியகாவல்களைத் தப்பிக்கடந்து திரிமூர்த்திகளும் மதிக்கவல்ல கட்டுக்காவல்களைப்பெற்றிருக்கின்ற இந்தப்பட்டணத்திற்புகுந்து இந்திரசாலமயேந்திரசாலங்களைக் கற்றிருக்கின்ற திருட்டுப்பயலே ஆயிரத்தெட் டண்டங்களினிருக்கின்ற வீராதிவீரர்களனைவரும் வணங்கித்துதித்துக் கட்டளைகளுக் கெதிர்பார்த்திருக்கின்ற வீரலட்சுமி குடிகொண்டிருக்கும் புசபலபராக்கிரமசாலியாகிய சூரபதுமனென்னும் எங்களரசன் சபையில்வந்த நீபேசவேண்டிய காரியங்களைக் குறிப்பதற்குமேலாகஇராசராசன் கீர்த்திப்பிரபாவங்களை யிகழ்ந்து பேசினாய், மேலும் அரசன்கட்டளையிட்டபடிக்குவந்தசிலஅவுணவீரரை உனக்குச்சம்பவிக்கவிருக்கின்ற கெடுதிதெரியாமற்கொன்றாய், இப்படிக்கெல்லாம் தயிரியங்கொண்டுசெய்த நீயி ப்போது எங்கே ஓடுகின்றாய், நில்லுநில்லுஉன்சவுரியத்தையும் கர்வத்தையும் நிமைப்போதிலழித்துநாசஞ் செய்யவந்தேன். இனிமாயவித்தைகளைச் செய்துபோக நினைப்பையாயினும் விடமாட்டேன். அஷ்டதிக்குகள்முதலிய விடங்களிற் புகுந்தொளித்த போதினுந் தொடர்ந்துபற்றிக் கட்டிக்கொண்டுபோய்என்னரசன்சந்னிதானத்தில் விடக்கடவேன், போகாதேபோகாதேஎன்றதட்டி வீரங்களைப்பேசிவருவதை ஆண்சிங்கம்போன்ற வலியுடைய வீரவாகுதேவர்கண்டு குகையிற்படுத்திருக்கின்ற மிருகராசன் தன்மீதிற் கல்லையெறிந்தவன்மீதிற்சீறிப்பாயுமாறுபோலச் சரேலெனத்திரும்பி நல்லகாரியம் வெற்றிவேலாயுதபாணியாகிய குமாரசுவாமியார் கிருபை

யுற்றுச் சூரன்பிழைத்துவாழநினைந்து சமாதானம்சொல்லியனுப்பிய நீதிகளைப் பலவிதங்களிலுந்தெரிவித்தபோதினுங்கேளாமல் இகழ்ந்ததுமன்றியில் என்னைப்பிடித்துச்சிறையில் வைக்கும்படிக்கும் ஆயிரம் அவுணவீரரைத் தூண்டினன், அவர்களைக்கொன்றுபோகின்ற இத்தருணத்தில் இதோமீட்டு மொருவீரனைச்செலுத்தினனாதலால் இனிசும்மாப் போகமாட்டேன். இவன்பிராணனையும் யமலோகத்துக்கனுப்பி மகதயிஸ்வரியத்தைக்கொண்டிருக்கும் இந்தப்பட்டணத்தையும் சின்னபின்னப்படஅழித்தல்லது திரும்பேனென்று சபதம்பேசித் திடசித்தனாய் வேலாயுதமூர்த்தி திருவடிகளைச்சிந்தித்துச் சேனைத்தலைவனாகிய சதமுகனைப்பார்த்து அடா அவுணப்பயலே? சண்டைகொடுக்கநினைந்து வீரங்களைப்பேசிவருகின்றவுன்னையும் உன்னைத்தொடர்ந்துவருகின்ற ரதகஜதுரகபதாதிகளாகிய நால்வகைச்சேனாசமுத்திரத்தையும் கண்டதுண்டமாகவெட்டியெறிவேன் சீக்கிரமாய் வாவாவென்றுபருவதங்களைப்போ லோங்கியிருக்கின்ற புசங்களைத்தட்டி நிற்கும்போது சதமுகனைச்சூழ்ந்துவந்த சதுரங்கபலங்களுங் கொக்கரித்துக்கொண்டு மேலிட்டுக்காலகாலனையொத்த சயசாலியாகியவீரவாகுதேவரை வளைந்துகொண்டுவீராவேசங்களுடன் பாரித்திராநின்ற தனுசுகளைவட்டாகாரமாகவளைத்து நாரிகளைபிகிந்து திசைகளெங்குமதிரத்தக்கதாகக் குணத்தொனிகொண்டு விஷம்பூசிய கூர்மையாய்ப்பளபளென விளங்கிக்கொண்டிருக்கும் அலகையுடைய கொடியபாணங்களை அமோகமாகச் சந்தித்துக்கார்காலமழையைப்போலச்சொரிந்தும் வேல்-சக்கரம்-பிண்டி-பாலம்-கப்பணம்-முசலம்-தண்டம்- சூலம் - இவ்விதங்களாகச் சொல்லாநின்ற ஆயுதங்களை அபரிமிதமாகச்செலுத்தியும் வாள்-வேல்-இவைகளைக்கொண்டுதாக்கியும் இவ்விதமாகச் சற்றுமிரக்கமற்ற பாதகர் ஒருவன்மேல்கொடியபோரைச்செய்யும்போது அவர்கள்செலுத்திய அஸ்திரசஸ்திரங்கள் அனலைவீசிக்கொண்டு பிரசண்டமாருதத்தைப்போலஇரைந்து புகைந்து அதிவேகமாகவந்து ஜயசாலியாகிய வீரவாகுதேவர் மேனியிற்றாக்கியமாத்திரத்தில்எரிந்தும் பலதுண்டங்களாக முறிந்தும் துகள்பட்டும்பறந்தும்யாதொருபிரயோசனத்தையும்பெறாமல்அபலமாகப்போய்விட்டன. அக்காட்சி யெப்படிக்கிருந்ததெனில்விஷப்பற்களையுடைய சர்ப்பக்கூட்டங்களானவை பட்சிகளுக்கரசனாகிய கருடபகவான் நிழல்பட்டமாத்திரத்தில்நெளிந்துபுரண்டு பதைபதைத்து மாண்டதுபோலத் தோற்றியது.

அக்காலத்தில் மதயானையையொப்ப நிற்கின்ற வீரவாகுதேவர் அவுணச்சேனைகள்செய்யும் போரைக்கண்டு அதிகோபங்கொண்டு பூமிக்கச்சாணியாகநிற்கின்ற மகம்மேருவைப்போலப் பதினாயிரம் பொற்சிகரங்கள்பிரகாசிக்கவானத்தையளாவியிருந்தவொருகோபுரத்தைத்தாவிப் பறித்துக்கொண்டு தமக்கெதிரில் கொக்கரித்துவாதாடிச்சூழ்ந்திருக்கின்ற சயின்னியங்கள்மேல்வேகமாய் வீசியபோதுபூர்வத்தில் இந்திரனானவன் வச்சிராயுதத்தினால்சிறகுகளையரிந்தகாலத்தில் எழுந்துவிழுந்த பொன்மலையை நிகர்த்துப் பரந்திருந்த சேனைப்பெருக்கின்மீதுபட்டமுன்னிலையில் எலும்பு நரம்பு உதிரமாம்சமுதலிய தாதுக்களினால்விளங்கும் சரீரங்கள்சந்தனக்குழம்பைப்போலஅரையுண்டு இடிகள் மின்னல்களுடன் சத்தமேகங்களுங் குமுறிக்கொண்டிறங்கி நீரைக்கிரகிக்கின்றபோது வாயில் அலைகள்பெருத்த சமுத்திரங்களானவை கரைகளைச்சாடிமோதுவதைப்போலப் பேரொலியுண்டாய் உதிரப்பெருக்கானது இரைந்தோடவும்கொடிகள் இடக்கையங்களினால் அலங்கரித்துநவரத்தினமயமாகவிளங்கியிருந்தஅந்தக் கோபுரமானது விழுந்தபோது துகள்துகளாகப் பின்னப்பட்டிறையவும் அவுணவீரர்சிரங்கள் படபடெனநெரியவும் தேர்கள் மடமடென நுறுங்கவும் இவ்விதவுற்பாதம் நேரும்போது அவ்வதிர்ச்சியினால் அண்டகோளகை நெக்குவிடவும் விசாலமாகிய பூமண்டலம்பிளந்து நாகலோகந்தோற்றவும் வீரமாமயேந்திரபுரமானது கீழ்மேலாய்அதலகுதலப்பட்டு அதிலிருந்தவர்கள் திகிற்பட்டு யுகப்பிரளயம் நேர்ந்ததோவென்று ஒருவர்பேரிலொருவர்விழுந்துதடுமாறவுமாயிற்று. இவ்விதமாகச்சதுரங்கசேனைகளையும் சொர்னமயமாகநின்ற கோபுரத்தையும் நிமைப்போதிற் றுகள்கண்டு மதயானையைப்போல வீறிநிற்கின்ற வீரவாகுதேவர் ஜயவுச்சாகத்தை சதமுகனாகியசேனைத்தலைவன்கண்டு தனக்குப்படைத்துணையாகவந்த பலவெள்ளம்ரதகஜதுரகபதாதிகளாகிய சேனைப்பெருக்கில்ஒருவரையுங் காணாதவனாய் அம்மம்ம இதென்ன அனர்த்தமாகவிருக்கின்றது, எதிரியோ ஒருவன்நம்முடன்வந்த நால்வகைச்சேனைகளோ அளவற்றவையிதனைச்சற்றும்எண்ணிக்கையில்லாமல் மேருவையொப்பநின்ற கோபுரமொன்றினால்உருத்தெரியாமற்கொன்றனன். இவன்வல்லபத்துக்கொருவரையும் ஒப்புச்சொல்லவொண்ணாது!.

மேலும்சூரனென்பது இவனுக்கேயடுக்கும்நான்பலசண்டைகளில்நேர்ந்துபோராடி ஜயங்கொண்டிருக்கின்றனன்இத்தகையபலசாலியையிதுபரியந்தங்கண்டதில்லை யாவராயினுஞ் சொல்லக்கேட்டதுமிராது ஆதலாலிவனைச்சுலபமாகவெல்வது மிகவுமரிதாகுமென்று மனங்கலங்கிவாடினவனாய்ப்பின்பு தன்குலவிருத்தியையெண்ணி தயிரியங்கொண்டு நல்லகாரியம் இவனாணவத்தைச்சற்றுநேரத்திலறிகின்றனனெனச்சீறிக் கரவேகமாய்எழுகுலக்கைசூலம்சக்கரம் தோமரம்-பிண்டி-பாலம்-கதைமுதலிய படைகளை ஒன்றின்பின்னொன்றாக ரிவ்ரிவ்வெனப்பிரயோகித்து ஆர்ப்பரித்தனன், அவைகள் பிரசண்டமாருதத்தைப்போல இரைந்து புகைந்து பலகொடுமைகளைக்காட்டிவருவதைவீரவாகுதேவர் பார்த்தமாத்திரத்திற் கோபதீபிதனாய்த் தன்மீதில் ஆரவாரங்களைக் காட்டிவருகின்ற ஆயுதவிதங்களைப்பற்றிப்பற்றிச் சுள்ளிகளைப்போல முறித்துவிட்டவன்மீதிலெறிந்துபோட்டுச் சிங்கராசனைப்போலச்சீறிக் கோடையிடியையொப்பக்கொக்கரித்துக்கொண்டுநவரத்தினமயமாய் பருவதத்தைநிகர்த்து வானத்தையளாவத் தோற்றுகின்ற ஒருகோபுரத்தைமீட்டும்பறித்துச் செண்டைப்போல வேகமாய்த்தன்பகைவன்மீதிலெறிந்தனர். அதுசுழன்றுகொண்டு வேகமாய்வருவதை சதமுகன்கண்டு சீக்கிரமாய்த் தன்கரத்திலிருக்கின்ற பாரித்தவில்லைவளைத்துத் திசைகளதிரக் குணத்தொனிகாட்டிக்கழுகிறகுகள்பூண்டதாய்க் கூர்மைதங்கி யிருக்கின்றகொடியபாணங்களாயிரத்தைக் கரவேகமாகச்செலுத்திமேலிட்டுவருகின்றகோபுரத்தைப்பொடிப்பொடியாகக்கண்டித்தெறிந்து மேலும் நாறுதிவ்வியசரங்களையெடுத்துபகைவன் சரீரத்தைத்துளைக்கும்படிக்குக்குறிகொண்டு கரவேகமாய்ப் பிரயோகித்தகாலையில் வீரவாகுதேவர் அவற்றைச்

சட்டைபண்ணாமல் மசகங்களைப்போலத்தட்டிப்போட்டு இவனுடன் வீண்வாதாடுவதிற்காலதாமசமாகிறதென்றெண்ணிச் சிங்கராசனைப்போலப்பாய்ந்து அந்தச்சேனைத்தலைவன் கரத்திற்பற்றியிருந்த வலியவில்லைப்பிடுங்கி யிருதுண்டமாக ஒடித்தெறிந்தபோது சதமுகன் அதிக்கிரமித்து இவனைப்பிடித்துக் கட்டிக்கொண்டு நம்மரசனிடத்துக்குப்போக இதுநல்லதருணமெனநினைந்து யானைத்திக்கையைப்போலக்கறுத்துப்பாரித்திராநின்றதனதுவலப்புறத்து நூறுகரங்களையும் வேகமாய் நீட்டிப்பிடித்தான் அத்தருணத்தில்வீரவாகுதேவர்மகம்மேருவைப்போலப் பாரித்து வலிபெற்றிருக்கின்ற தமதுபுசத்தினால் அவன்மார்பிற் கோடையிடியைப்போலத்தாக்கிப் பூமியில் விழுந்துருளத் தள்ளியபோது அந்தசேனைத்தலைவன் பதைபதைத்துப் புரண்டெழுகின்றதற்குள் மந்தரகிரியினும்வலிய தமதுபாதத்தினாலுதைத்து மீட்டும் நிலத்தில்விழும்படிக்குத்தள்ளி யிடியைக்கேட்ட சர்ப்பமானது பதைபதைத்து வாடுவதைப்போல மற்றொருபாதத்தினால் அவன்மார்பிலூன்றி உதிரமானது நூறுவாய்வழிகளினு மூற்றெடுத்துப்பெருக மிதித்துநின்றனர்.

ஓ! சவுனகாதிரிஷிகளே? நவரத்தினமயமாகிய வாகுவலயங்களைப்பூண்டு கற்கம்பத்தையொப்பப்பாரித்து வலிபெற்றிருக்கின்ற புயாசலங்களையுடைய கொடியவனாகிய சூரபதுமன் கட்டளையின்படிக்குச் சபதம்பேசிவந்தசதமுகனை யிவ்விதமாகத் தருமசிந்தனையைப் படைத்திருக்கின்ற வீரவாகுதேவர் மிதித்திருந்தகாட்சி யெப்படிக்கிருந்ததெனில், முற்காலத்திலுலகங்களையலைத்திருந்தஅந்தகாசுரனையும் வலியினுயர்ந்த முயலகனையும் கயமுகாசுரனையும் விழத்தள்ளிப் பாதங்களினொன்றினால் மிதித்துநின்ற தமதுபிதாவாகிய சிவபிரானைப்போலவிருந்தது இவ்விதமாக வீரவாகுதேவர் பாதங்களையூன்றியகாலத்தில் மூன்றாம்பிறையினைக்கண்டித் திருபாரிசங்களினும்பதித்திருப்பதைப்போலவும் மின்னற்கொடியைநிகர்த்தும் விளங்குகின்ற கோரைத்தந்தங்களைப்படைத்த சதமுகன் மார்பானது கோடைக்காலத்திற் களிப்பாகவிருக்கின்றபூமியானது பிளந்திருப்பதைப்போலப் பத்தலாகவிண்டுகுடல்சரிந்து உதிரவெள்ளம் பெருக்கெடுத்தோட விருந்தபோதினும் திமுறிக்கொண் டெழும்படிக்குப் பிரயத்தனப்படுவதைவீரன்தெரிந்து ஒருபாதத்தையெடுத்துதைத்து வாயுமோதலினாற் றெங்கின்னெற்றுதிருவதைப்போல அப்பாதகன் நூறுதலைகளும் அறுபட்டிறையும்படிக்குச்செய்து கொன்றவராய் மேலும் அதிககோபங்கொண்டு சண்முகப்பெருமாள் கிருபையுற்றுச்சொல்லி யனுப்பியநீதிகளைச் சிறந்ததாகவெண்ணி யங்கீகரியாமல் இகழ்ந்துபேசிய சூரபதுமன் வீற்றிருந் தரசுசெலுத்தும் நவரத்தினமயமாகிய சபாமண்டபத்தைமுந்திச் சின்னபின்னப்படுத்தியபின்பு அளவற்ற செல்வப்பெருக்கைக் கொண்டிருக்கும் இந்தப்பட்டணத்தையும் நாசம்பண்ணக்கடவனெனச் சபதம்பேசி வீரவாகுதேவர் இதனைச்செய்வதாயினர்.

## காவலாளர்வதைப்படலம்.

சுடரும்வேற்படைத்தொல்குமரேசன
தடிகண்முன்னியருளுடனாண்டகை
படியளந்திடுபண்ணவனாமென
நெடியபேருருக்கொண்டுநின்றானரோ.

---

இவ்விதமாக வீரவாகுதேவர் தீர்மானித்துக்கொண்டவராய்க்கோடிசூரியப்பிரகாசமாகவிளங்கிக் கொண்டிருக்கும்வெற்றிவேலாயுதத்தைத்தாங்கியிருக்கின்ற சரவணபவன்திருவடிகளைத்தியானித்து மண்விண்ணை யிரண்டடியாகவளந்தமகாவிஷ்ணுவைப்போலவிசுவரூபத்தைக்கொண்டுநின்றகாலத்தில்வீரவாகுதேவர்புசங்கள்திசைகளை மறைக்கவும் நவரத்தினமயமாகவிளங்குகின்ற கிரீடமணிந்த சிரமானதுஅண்டத்தை முட்டவும் பாதங்கள்பூமியை மறைக்கவும் இக்கோலமாகத் தோற்றியகாலையில் பூமண்டலத்தைத் தாங்கியிருக்கின்ற ஆதிசேஷனாகியஅஷ்டமாநாகங்களும் கூர்மாண்டரும் அச்சுமையைத் தாங்கமாட்டாமல்இதென்னவிபரீதம் விளைந்ததென்று நடுநடுங்கிவாடவும் வீரமாமயேந்திரபுரியானது கம்பிதப்பட்டொருபாரிசத்துக் கொருபாரிசந் தலைகீழாகத்தத்தளித்து உயர்ந்தபோதினும் சூரபதுமன் தவமுயற்சியினால் இலங்கையைப்போலச் சமுத்திரத்தி லாழ்ந்து சின்னபின்னப்படாமல் நிலைபெற்று நின்றதாயினும் வீரவாகுதேவர்மிதிக்காற்றாமல் நகரவெல்லைமுற்றினும் வெடித்து· அதன்மூலமாகச் சமுத்திரங்காணப்பட்டு அவர்பாதங்களூன்றுதலினால் கடல்நீரானது அவ்வெடிப்புகளின் மூலமாக மேலிட்டுப் பெருகிச் சூரபதுமன் வாசஞ்செய்யும் அரண்மனையைவளைந்துகொண்டு சபாமண்டபத்தினும் பரந்துஅதிலிருந்த சகலரும்வருந்தி ஒதுங்கும்படியாக நிறைந்தது மன்றியில் அவ்வெள்ளமானது மீறிப்பெட்டியிற் சர்ப்பமடங்கியிருப்பதுபோல விசாலமாய் இருபாரிசங்களினும் நவரத்தினமயமாகிய மேடைகள் உப்பரிகைகள் முதலியநெருங்கியிருக்கின்ற தெருக்களிலோடி மேலிட்டு இரதங்கள்-யானைகள்-குதிரைகளிருக்கின்ற- சாலைகள்-கூடங்கள்-கொட்டாரங்களி னிடங்களிற்புகுந்து வாரிக்கொண்டு பூமண்டலத்திற் பாயும்நதியின் வெள்ளத்தைப்போல நகரமுற்றும்பரந்து சுழன்று கொண்டோடும்ஜலமிகுதியானதுவிசாலமாய் நீண்டிருக்குந் தெருக்களி னிருபாரிசங்களினும் நவரத்தினமயமாய்ச் சித்திரவிசித்திரங்கள்பெருத்திருக்கும் உப்பரிகைகள் மாடமாளிகைகள் மண்டபங்கள்கூடங்கள்கோபுரங்கள் முதலாகக் கடைகாலுடன்பெயர்த்துக்கொண்டு ஆழ்ந்திராநின்ற சமுத்திரத்திற் பெருகியது, அந்தவேளையில் அடியருக்கெளியனாகிய சிவசுப்பிரமணியதேவர் விடுத்த தூதனாகியவீரவாகுதேவர்கொண்டகோலத்தின் பெருமிதத்தைக்கண்ட அந்நகரவாசிகள் கரங்களைப் பிசைந்துகொண்டு அம்மம்ம இதென்ன விபரீதமாகவிருக்கின்றது இதுபரியந்தம் இத்தகைய உற்பாதங்கள் விளைந்ததையறியோம் ஏதோமோசத்திற்கிடமாகக்காணுகின்றதென நடுநடுங்கி யினிதாமசப் படுவோமாகில் பிராண ஹானிவருமென்று அவ்வீதிகளிலிருந்தவர்க ளனைவரும் பெண்டுபிள்ளைகளுடன் பலதிசையினும் ஓடிப்போயினர்.

அக்காலத்தில் அளவற்றகாவலுடன் பட்டத்தானைகளு
லாவிக் கொண்டிராநின்ற சூரபதுமன் அரண்மனையைக்
காவல்கொண்டிருக்கின்ற அவுணவீரர்கள் வீரவாகுதே
வர் கொண்டிருக்கின்ற உருவத்தினைப்பார்த்து ஓகோ இ
தோஒருதூதன் வந்தான்ஓடிவாருங்கோளென்றுகரங்களை
த்தட்டிக்கூவிச் சகலரும் ஏகமாகச்சேர்ந்துஇந்தகோரரூ
பத்துக் கஞ்சிச்சண்டைகொடுக்காம லிருப்போமாகில் இ
தைக்கண்ட மாத்திரத்தில் நமதரசன்கோபித்து நம்மனை
வரையுந் தண்டிப்பன் இதற்குச்சந்தேகமில்லைஅதற்குமு
ன்னம் நம்மாற்கூடியமட்டும் ஒருகை பார்க்கவேண்டுமெ
ன்றெண்ணினவர்களாய்க் கொம்மைகள்முதலியஉறுப்பு
களமைந்திராநின்றமதில்முதலியதலங்களினிடத்திற்காவ
ல்கொண்டிருக்கின்ற ஐம்பதுவெள்ளம் அவுணவீரர்களு
ந்தங்கள் தலைவர்களுடன் கொக்கரித்துக்கொண்டு கோப
மிகுதியினால் விழிகளில்அனற்பொறிகள் சிதறத்தக்கதாக
ச் சபதங்களைப்பேசிக்கொண்டு சண்டைகொடுக்கயத்தனி
த்து நாலுபக்கங்களினும் வளைந்துகொண்டுஎழுவாயுதம்,
மழுவாயுதம், தோமரம்,பிண்டி பாலம்,முசலம்,சக்கரம்,
பாரித்திராநின்ற தண்டாயுதமுதலாகியபடைகளைஅதிவே
கமாகச் செலுத்தி அண்டகோளமசையுங் கிடுகிடெனநடுங்
கத் தக்கதாக ஆர்ப்பரித்துப் போராடுவதையும் அந்தஅ
வுணவீரர்திரங்களையும் வீரவாகுதேவர் பார்த்துச்சிறிஆ
யிரகோடி கோடையிடிகள் ஏககாலத்தில் ஒலித்ததைப்
போலப் பாரித்திராநின்ற தமதுபுசங்களைத்தட்டிசிருங்க
நாதஞ்செய்தனர், அவ்வொலியானது செவிகளிற்பட்டவு
டன் அதிகவீறுப்புடன் சண்டைகொடுத்திருந்த அவுண
ப்படைகளனைத்தும் மனங்கலங்கி யறிவழிந்துமேககர்ச்ச
னையைக்கேட்ட சிறுபட்சிகளைப்போலக்கைகால்களுதறத்
தக்கதாசப்பயந்து உடனேதயிரியங்கொண்டவர்களாய் இ
ருளைப்போலக்கறுத்துப்பாரித்திராநின்றதேகங்களைப் ப
டைத்த சேனைவீரர்கள் திரண்டுஅஸ்திர சஸ்திரவிதங்க
ளைச் சோனமாரியைப்போலக் கரவேகமாகச் செலுத்திய
காலத்தில் அப்படைகளனைத்தும் அனலையிறைத்துப் பு
கைந்துகொண்டு வேகமாகவந்து வீரவாகுதேவர் சரீரமு
ற்றுந் தைத்துப் பலவிழுதுகள் தொங்கநிற்கும்ஆலமரத்
துக்கொப்பாக உதிரம்பெருகத் தொங்கியிருக்கும்போது
வீரவாகுவுக்கு அதிககோபம் பிரவேசித்து வடவாமுகாக்
கினியைப்போலக் கொதித்துச்சுத்த வீரர்மீதல்லது வீர
வாளையெடேனென உருத்துத்திருப்பாற்கடலைக்கடைந்த
மந்தரகிரிக்குச் சமதையாகப் பாரித்திராநின்ற திருவடிக
ளைக்கொண்டு தம்மைச்சூழ்ந்திருக்கின்றசதுரங்கச்சேனை
களையுஞ் சின்னபின்னப்படக் கொல்லநினைந்து சிலரையு
தைத்துருட்டியும் சிலரைப் பூமியிற்றேய்த்தும் சிலரைக்
குடல்சரிய மிதித்தும் சிலரைப்பஞ்சைப்போலச் சதைத்
தும் சிலரைப்பூமிக்குள்ளடங்கத்தாக்கியும் சிலரைத்திசா
திசைகளிலெற்றியும் சிலரைச் சமுத்திரங்களில் வீசியும்
சிலரை வானவெல்லையிற் கடாவியும்சிலரை மூளைகள்சித
றஉதைத்தும் சிலரைக்கரங்கள்தோள்கள் முதுகுகள்நுறு
ங்கச்சாடியும் இவ்விதமாகக்கால்களைச் சக்கிராகாரமாகச்
சுழற்றிச் சுழற்றிச் சின்னபின்னப்பட மாய்த்துங் கோபந்
தணியாமல் கரங்களைநீட்டிச்சிலரைப்பற்றிக் கழுத்துகளை
யொடித்தும் சிலர்மார்பைக்கிழித்தும் சிலரைப் பிளந்தெ
றிந்தும் சிலரைப் பதைக்கப்பதைக்கத் தோலையுரித்து வீ
சியும் சிலரைப்பிசைந்தும் சிலரைக்கசக்கியூதியும் சிலர்மூ
க்கைக் காதைக்கிள்ளியும் சிலர்வாயைப்பிளந்தும் சிலர்வி
ழிகளைக்கெல்லியும்சிலர்சிரங்களிற்கோடையிடியைப்போ
லக்குத்தியும் சிலரைவாரி அண்டகோளகைக்கப்புறத்திற்
செல்லவீசியும் சிலரைப்பல்லுதிரமோதியும் சிலரைப் பு
சங்களினுற்றுக்கித்தள்ளியும் சிலரைச்சேர்ந்து கரும்பை
ப்போல முறுக்கி உதிரம்பெருகவீசியும் சிலரைக்கால்த
லையை வட்டாகாரமாகச் சேர்த்துச் சக்கரங்களைப்போலு
ருட்டியும் சிலரைஅம்மானையாடியும்சிலரைப்பந்தையொ
ப்பவெறிந்தும் சிலரைச் சின்னபின்னமாகக் கிழித்தும் சி
லர்மார்புகள்நெக்குவிட் டுதிரம்பெருகக்குத்தியும் சிலரை
க்கரங்களை முறித்தும் சிலரைத்துவைத்தும் இவ்விதமாக
வீரவாகுதேவர் ஒருருவாகவும் பலதோற்றங்களைக்கொ
ண்டும் அவுணவீரரைத்தொடர்ந்துதொடர்ந்து பிரசண்
டவாயுவைப்போல உதறிக்கொண்டு சூறுவளியைநிகர்த்
துவளைந்து வளைந்து ஒருவரையும் அப்புறம் இப்புறம்
போகவொட்டாமல் குதித்துக்குதித்துக் கடலைக்கலக்கியம
த்துக்கொப்பாக அலைத்து ஒருவர்தப்பாமல் ஐம்பதுவெ
ள்ளம் சேனைசமுத்திரங்களையும் வீரன்கொன்ற காலத்தி
ற்பெருகிய உதிரவெள்ளமானது மீறிவிசாலமாய் நீண்டி
ருக்கின்ற வீதிகளிலிறைச்சலிட்டோடும்போது மயிலின
ங்கள் மாடப்புறாக்கள் அன்னங்கள்கிளிகள் வாசஞ்செய்யு
ம்நவரத்தினமயமாய் வானத்தை யளாவநிற்கின்ற உப்பரி
கைகள் மாடமாளிகைகள் கூடகோபுரங்கள் இவற்றின்மீ
துஉணவினிடத்திச்சைகொண்டுவந்து சேர்ந்திரைச்சலிட்
டிருந்த பருந்துகழுகு காக்கைகள்அந்தவெள்ளத்திற் படி
ந்துகளித்து நிணங்களையுண்டுலாவவும் பூதபைசாசங்கள்
காளிக்கூட்டங்கள் நாய்கள் உதிரமாம்சங்களைத் திருத்தி
யாகத்தின்று வெறிகொண்டு கூத்தாடவும் பற்பலகவந்த
ங்கள் நாடகரைப்போல ரணக்களமெங்குங் கூத்தாடவும்
இன்னமும்புதியவிருந்துக் கேதுவிருக்கின்றதென்று பற
வைகள் பந்தலிட்டுலாவவும் இவ்விதமாகமானினங்கள்கூ
ட்டமாக நெருங்கியிருப்பதின் மத்தியிற் சிங்கமானதுபா
ய்ந்தமாத்திரத்தில் அவைகளழிந்து மங்குவதைப்போலச்
சூரபதுமன் வீற்றிருக்கின்றஅரண்மனையைக் காவல்கொ
ண்டிருந்த ஐம்பதுவெள்ளம் சேனைகளையும்தமது கோ
பாக்கினிக்கிரையாகக் கொடுத்துச்சிரங்கள் கரங்கள் தொடை
கள் புசங்கள் மார்புகபோலம் இவைகள்கண்டிக்கப்பட்டு
மச்சராசிகளைப்போல உதிரவாரியில் மிதந்தும் அழுந்தி
யும் போகவும் யானைகள்குதிரைகள் கால்வேறுதலைவேறு
மற்றஉறுப்புகள் வேறாகக்குவியவும்தேர்கள்அச்சுமச்சுகு
த்துக்கால் கொடிங்கை முதலியவைகளனைத்தும் பின்னப்
பட்டிறைந்து நிணச்சேற்றி லழுந்தவும்,இவ்விதமாகக்கு
லாலன் சக்கரத்தையும் சுழற்காற்றையும்நிகர்த்துமாறிமா
றிக் கரங்களினாலும் பாதங்களினாலும் அவ்வளவுஅவுண
வீரரையுங்கணப்போதிற்கொன்றனர்,சவுனகாதிரிஷிகளே
பருவதராசபுத்திரியாகியபார்ப்பதியார் திருவடிகளிற்றரி
த்திருந்த பாதசரங்களிற்கிண்கிணிகளாகச் சத்தித்திருந்த
நவமணிகளினுதித்தகன்னியர்களில் மூத்தவராகியமாணி
க்கவல்லியினது தவப்பேற்றினாலுதித்திராநின்ற ஜயசாலி
யாகிய வீரவாகுதேவர் கோபங்கொண்டு சாடிய வினோத
ங்களை யென்சொல்வேன் இவ்விதமாகமாண்ட அவுணவீ
ரர் சரீரங்களிலிராநின்ற இரத்தம்சுக்கிலம்-மூளை- தசை-
எலும்பு-நரம்புதோலெனச்சொல்லாநின்றஎழுவகைத்தா
துக்களின் பேதங்கள் தோற்றாமல் ஏகமாய்க்கதம்பக்குழ

ம்பைப்போலச் சதைத்துக்கிடத்திய தெப்படிக்கிருந்ததெ
னில், பொன்-வெள்ளி-பித்தளை-செம்பு- இரும்பென்னும்
பஞ்சலோகங்களையுஞ்சேர்த்து உருக்கியகாலத்திற் பிரிவி
ன்றிக்கலந்து காட்டுவதையொத்தது அக்காலத்தில்நடந்தச
ண்டையின்பெருமைகளை எத்தகையராலுங் கணித்துச்
சொல்லக் டுமோ இவ்வாறு வெற்றிகொண்டு வீரவாகு
தேவர்மேல்நடத்திய சரித்திரங்களையுங்கேட்பீரென்று சூ
தபுராணிகர் சொல்லத்தொடங்கினர்.

---

## நகரழிபடலம்.

ஆசுறுமவுணவெள்ளமைம்பதுமுடித்தோனைந்நூ
றேசனையளவையான்றேயொராயிரமும்பரோங்கித்
தேசுறுமேருவென்னச்சிகரமோரிலக்கஞ்சூடி
வீசுபொன்சுடர்கின்றவேரமொன்றங்கட்கண்டான்.

---

ஓ? சவுனகாதிரிஷிகளே! மேற்குறித்தவிதமாய் புஜபல
பராக்கிரமசாலிகளாகிய ஐந்நூறுவெள்ளங் காவலனைஎத்
தகையருங்கொண்டாடித் துதிக்கும் படிக்குக் கோலாகல
மாகச் சின்னபின்னப்படக்கலக்கிவாட்டியபின்பு சண்டை
முகத்திலொருவனையுங் காணாதபடியால் வீரவாகுதேவர்
காலாந்தகனைப்போலக் கொக்கரித்துபாரித்த புசங்களைத்
தட்டிக்கொண்டு ஐந்நூறுயோசனை விஸ்தீரணமும் ஆயி
ரம்யோசனைஉன்னதமும்பெற்றதாய்அபரஞ்சியினாற்சோ
டித்து நவரத்தினமயமாக விளங்கும்ஆயிரங்கலசங்களையு
ந்தாங்கிப் பார்த்தவர்கள் விழிகளைகிரகிக்கவல்ல சித்திரப்
பிரதமைகள் பெருத்துப் பொற்றகடுகள்பரப்பியபலநிலை
களைக் கொண்டோங்கி நாற்புறங்களினும் இருளைப்போக்
கிச் சொலித்துக்கொண்டு சூரியனையொப்பவிளங்கிஆயிர
த்தெட்டண்டங்களுக்கும்அதிபனாகவிருக்கின்றசூரபதும
ன் அரண்மனைமுகப்பில் மகம்மேருவினும் பாரித்து நிற்
கின்ற கோபுரத்தைக்கண்டு அதிசீக்கிரத்திற்றாவிஅதனை
ப்பறித்துச் செண்டையொப்பக் கரத்திற்கொண்டு பாதக
ங்களுக் கிருப்பிடமாக விருக்கின்ற கொடியமனதைப்பெ
ற்ற சூரபதுமன் நன்மார்க்கங்களையழித்துக் கொடுங்கோ
ல்செலுத்தி வீற்றிருந்தரசுசெலுத்தும் நவரத்தினமயமா
கிய சபாமண்டபமானது நுறுங்கிஅதப்படும்படிக்குக்கு
றித்து வீசிச்சிருங்க நாதஞ்செய்தனர், அக்காலத்திற்பற்
பலசிறப்புகளமைந்த அக்கோபுரமானது குலாலன் சக்க
ரத்தைப் போலக் கிறுகிறெனச் சுழன்றுகொண்டுபோய்
இராசாதிராசனாகிய சூரன் கொலுவிருக்கும்மண்டபத்தி
ன்மீது மேருமுதலியகுலகிரிகள்கோபித்துவருவதையொ
ப்பக் காட்டிக் கோடையிடியினும் அதிகஓசையெழச்சூர
ன் ஆர்ப்பரித்த சத்தமானது அத்தலத்திலிருக்கின்ற மந்
திரிபிரதானிகள் சேனைத்தலைவர் முதலானவர்கள்செவிக
ளில் விழுவதன்முன்னம் ஆஸ்தான மண்டபத்தின்மேற்
பேரொலியைக்காட்டி விழுந்தது நவரத்தினமயமாகியஆ
பரணங்களைப் பூண்டிருக்கின்ற சூரபதுமன் செய்த தவ
முயற்சியினால் அவனும்பிள்ளைகளும் பிரமனுமற்றதேவ
ர்களுமிருக்கு மிடங்களன்றியில் மற்றசபையின் மேற்பர
ப்பனைத்துந் துகள்பட்டிடிந்து நாறபுறங்களினுந்தாங்கியி
ருந்த சித்திரச்சுவர்கள் பொடிப்பொடியாயுதிர்ந்துநாசமா
குவதாக பாலசுப்பிரமணியதேவர் விடுத்த தூதன்நிற்கின்
ற காட்சி எப்படிக்கிருந்ததெனில், சர்வசங்காரகாலத்திற்
சராசரப்பிரபஞ்சங்களை யழித்துஅண்டமுகட்டையூடுரு
வியுலாவிய ஓங்காரப்பொருளாய்தேவாதிதேவனாய் விள
ங்குகின்ற சிவபிரானைப்போலக் காட்டியது.

இவையன்றியும்பவளத்தையொத்தகால்களையும்சிவந்த
மூக்கையும் அழகியசிறகுகளையும்படைத்தஅன்னப்பட்சி
கள்குயிற்கூட்டங்கள் பசிய சிறகைவாய்ந்தமயிலாதியபட்
சிகள்நெருங்கிச் செவிகளுக்கினிமையாக ஒலித்திராநின்ற
தோப்பினிடத்திற் கோடையிடியானது உருத்துவிழுமா
யின் அதிலடங்கிய பட்சிகள்அங்குமிங்குமா யுலாவியலை
கின்றதையொப்ப வீரன்வீசிய கோபுரநிலைகளிற் காவல்
கொண்டிருந்த அவுணவீரர்கள்கீழ்மேலாக வுருண்டுதலை
கள் பிளந்தும்கால்களொடிந்தும் கரங்கள் முறிந்தும்தேக
ம்நெக்குவிட்டுச் சிதைந்தும் பம்பரங்களைப்போலச்சுழன்
றும் புரண்டும் ஒருவருடனொருவர் முட்டிக்கொண்டுங் க
ட்டிக்கொண்டும் குப்புறவிழுந்தும்வாய்சிதைந்துபற்களு
திர்ந்தும் இவ்விதங்களாக அலைச்சற்பட்டுஇதென்னவிபரீ
தம் விளைந்ததென்று திகிற்பட்டு இப்படிக்கார் செய்தன
ரென்றுசிலர்கோபித்து அதட்டிக்கொண்டோடியும்,வயிர
ங்களைப்பேசியும், அல்லோல கல்லோலப்படத் தக்கதாக
அக்கோபுர மானது சபாமண்டபத்தின் மீது விழுந்
த மாத்திரத்தில் மரகதங்களினாற் சோடித்து விளங்
கும்மேற்பரப்பனைத்தும் இடிந்தும் பொன்மயமாகவிரா
நின்ற உட்சுவர்கள் துகள்பட்டும் வயிரங்களினாற் செய்த
மைத்திருந்த உத்திரங்கள்பின்னப்பட்டும் பவளத்தினாற்
சேர்த்த போரிகைகள் சின்னபின்னமாயழிந்தும் சிரோர
த்தினங்களினா லெழுப்பியிராநின்ற தூண்வரிசைகள் நு
றுங்கியும் இவ்விதங்களாகச் சகலவளப்பங்களைக்கொண்டு
ஸ்ரீமகாலட்சுமி வீற்றிருக்கத்தக்க சிறப்பினைவாய்ந்திருந்
த ஆஸ்தானமண்டபமானது உருத்தோற்றாமல் தும்சப்
பட்டுப் பார்க்கப் பயங்கரமாய் அழிந்தகாலத்தில் அச்ச
பையில் வீற்றிருந்த சூரபதுமனைச் சூழ்ந்திருந்த பரிச
னங்களிற் சிலர் திகைத்தோடவும் சிலர்காயப்பட்டு வா
டவும் சிலர் நுறுங்கிச் செத்தும் சிலர் கைகால்களொடி
ந்து பெண்டுபிள்ளைகளை நினைந்துவாடவும் சிலரிதென்ன
அனர்த்தமாக விருக்கின்றது இராசபரமேஸ்வரன்வீற்றி
ருக்கின்ற சபையானது இடிபட்டபடியால் இவ்வரசாட்
சிக்கென்னமோ கெடுதிநேரும்போற் காணுதென்றுபேசி
க்கொள்ளவும், சிலர்ஆயசுபரியந்தம் வாழ்ந்தவனுங் கெட்
டவனுமில்லையென்று வழங்கிக்கொள்ளுவது நிச்சயமாக
விருக்கின்றது அல்லாவிடில் இத்தகைய துர்ச்சகுனம்நே
ரவேண்டியதென்னவென்று வசனிக்கவும், சிலர்நமதுசக்
கிரவர்த்தியானவர் பரமசிவகடாட்சத்தினால் ஆயிரத்தெ
ட்டண்டங்களையும் நூற்றெட்டுயுகங்கள் எதிரின்றி அரசு
செய்துவரப்பெற்ற காலமுடிவாயிற்றோவெனத் துக்கிக்
கவும், சிலர்பிரமன் விஷ்ணுமுதலானதேவர்களையடக்கித்
தன்கட்டளையின்படிக்கு நடந்துகொள்ளப் பணித்திராநி
ன்ற விஜயனாகிய நமதிறைவனையும் இத்தலத்தில் நெருங்
கியிருக்கின்ற புசபலபராக்கிரமசாலிகளாகிய சூரர்களையு
ம்எவ்வளவும்மதியாமல் தனியனாகவந்த ஒருவன்இப்படி
க்கு நவரத்தினமயமாக விளங்கியிருந்த இந்தமண்டபத்
தைத் துகளாக்குவனாயில் இனி நமதரசன் ஆணைஆக்கி
னைகளென்ன செல்லப்போகின்றன செல்வநிலையாமையெ
ன்பது திஷ்டாந்தமாகக் காணவருகின்றதென்றுவாடவும்

சிலர்சிவகுமாரனுகிய பாலசுப்பிரமணியன்அளவற்றபூதப்படைகளுடன் தேவர்கள்போற்றிவரத் திருக்கயிலாயத்தைக்கடந்து இராட்சதர்முதலிய நம்மவர்கள் குலநாசஞ்செய்ய பூமியில்வருகின்றனரெனக் கேள்விப்பட்டனம்,அவனுல் இப்பட்டணமும் நாமும் என்னபாடுபட விருக்கின்றதோ தெரியவில்லையென்று வருந்திப்பெருமூச்செறியவும், இவ்விதங்களாகச் சபாமண்டபத்திலிருந்தவர்களனைவரும் வசனித்துக்கொள்ளுமுன்னிலையில் மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர்களாதிய வீரர்கள் தாங்கள்தரித்திருந்த மகுடங்களுடைந்துந் தலைகள்பிளந்தும் கரங்களொடிந்தும் கால்கள்முறிந்தும் புயங்கள்சரிந்தும் தேகம்நசுங்கியும் மண்டைபிளந்து மூளைசிதறியும் வயிறுகிழிந்துங் குடங்களறுந்தும் மேற்பரப்புவிழுந் ததிலகப்பட்டுக்கொண்டு வெளிவரக்கூடாமையால் பதைபதைத்துவருந்தியும், குப்புறவிழுந்தும், ஒருவருடனெருவ ரிடியுண்டும், வீரங்களைப்பேசியெழுந்தும் இப்படிக்குப்பிரமுகராயிருப்பவரும் கலங்கி வாடத்தக்கதாக சபைமுற்றும்நுறுங்கி யிறைந்தபோது பொற்றுகளெழுந்து திசைகளிற்பரவிச் செவ்வானத்தைப்போல விளங்கவும், சமுத்திரத்தைத்தூர்க்கவும், பூமண்டலமுற்றும்பெருகிப் பொன்னுலகமாக்கவும், இவ்விதஉற்பாதங்கள்நேருகின்றதருணத்திற் சபாமண்டபத்திலிருந்த சகலரும் முற்குறித்தபடிக்குச் சின்னபின்னப்பட்டுமாண்டும், ஓடியும், பதுங்கியும், தியங்கியும்வாடுவதைப் பரமசிவகடாட்சவீட்சண்ணியத்தினுற்பெற்ற பலவளங்களை யனுபவித்திருந்தமமதையினுல் அவரைமதியாதிகழ்ந்து அதற்குரியதண்டனையைப்பெற்ற தக்கனைப்போலக் கர்வங்கொண்டு மதயானையைநிகர்த்துச் சிங்காதனத்தில்வீற்றிருக்கின்ற சூரபதுமன்கண்டு வீரவாகுதேவர்விசுவரூபத்தைக்கொண்டுசபையைக்கலக்கியதறிந்து சருவசங்காரகாலத்திற்சராசரப்பிரபஞ்சங்களனைத்தையும் நாசஞ்செய்யவல்லவடவாமுகாக்கினியைப்போலக்கோபித்து விழிகளில் அக்கினிப்பொறிகள்சிதறவும், மீசைதுடிக்கவும்முகத்தில்வியர்த்துப் புருவம்நெற்றியிலேறவும், சுவாசம் விடுந்தோறும் கருமானுலையிற்பெருகும் தீயைப்போலஅனலும் புகையும்வீசவும்கோடையிடியைப்போலக்கர்ச்சித்துத் தன்னருகிலிருக்கின்ற ஐந்நூறுசிரங்களும், ஆயிரங்கரங்களும், பிறைகளையொத்தகோரைத்தந்தங்களையும்,செவ்வானத்தைநிகர்த்தசிவந்த சிகையையும், கொவ்வைக்கனியைப்போலச் சிவந்துசுழலும் விழிகளையும், சண்டைகிடையாமல்வாடி யிருக்கின்றவலியபுசங்களையும், இரக்கமற்றமனதையும் பெற்றிருக்கின்ற வெற்றியாளராகிய அவுணவீரர் ஆயிரவரைப்பார்த்து பேரிடியுமஞ்சத்தக்கதாகக் குமுறிக்கொண்டு இதனைக்கட்டளையிடுவதாயினன். வானத்தையளாவி நவரத்தினமயமாய் நமதுஆசாரவாயிலின் முகப்பிலிருந்த கோபுரத்தை பாலசுப்பிரமணியன்விடுத்த தூதன்பறித்தெறிய வெகுகாலமாய் அரசுசெலுத்திவரும் இந்தச்சபாமண்டபத்தின்மேல்விழுந்து நாமும்மற்ற நமதுபிள்ளைகளிருக்கின்ற சிலவிடங்கள்தவிர மற்றவையெல்லாமிடிந்துவிழுந்து துகள்பட்டது கண்டீர்களோ! ஆயிரத்தெட்டண்டங்களையும்வென்ற சூரனுகிய நமக்கு இதைவிடவேறேபழியுமுவேண்டுமோ! பிரமன் விஷ்ணுமுதலியதேவர்களையேவல்கொண்டிருந்த கீர்த்திப்பிரதாபத்துக்குஇழிவுநேர்ந்தது. பலஹீனராகிய தேவப்பயல்க ளினியென்னைமதிப்பரோ! அப்படிக்கிருந்தபோதினும் தூதாகவந்தவன் என்னகொடுமைகளைச்செய்யினுங்கொல்வது தீராதபழிக்கிடமாகும் மேலும் என்னெத்த சக்கிரவர்த்திக்கழகுமன்று ஒருகாலம்வலியில்மிகுத்த தீரனுகவிருந்து அவனைவென்றபோதினும் நம்மையொத்தசூரனுக்குத் தாழ்வல்லது புகழாகவிருக்கமாட்டாது. ஆதலால் வீரர்களே, நீங்கள்விரைவிற்போய் உங்கள்சதுரங்கசேனைகளுடனும் அவனைவளைத்துக்கொண்டு தந்திரஉபாயங்களினுலாவது சண்டைகொடுத்து வென்ருவது அல்லதுமாயையின்முயற்சியினுலாவது அவனுக்குக் காயமுண்டாகாமலும் பிராணனுக் கிடையூறுநேராமலும்கைப்பிடியாகவசப்படுத்திக் கட்டிக்கொண்டுவந்து நமதுமுன்னம் விடக்கடவீர்கள் அவன்நம்மைமதியாமற்பேசியும் இவ்வகைக்கெடுதிகளைச்செய்ததற்குத்தக்கதாக-மூக்கு-காது- முதலாகிய அவையவாதிகளைக்கொய்து பின்னப்படுத்தித்தேவர்களுடன் அரியகாவலிற்படுத்திப்பின்பு என்கோபந்தணிவேனென்று சொன்னமாத்திரத்தில் எமதிறைவனே? கிருபையுற்று அடியோங்கள் விண்ணப்பத்தைக்கேட்டருள்க.

தேவரீர்மேற்பகைத்து வருகின்ற பகைவன்விடுத்ததூதனுனவன் தம்மைமதியாமலிகழ்ந்துபேசியபோதேஅவனைப்பற்றிக் கசக்கிப்பிழிந்து உதிரத்தைக்கோபக்கனலாறும்படிக்குக்குடித்துப் பிராணனையமலோகத்துக்கனுப்பநினைந்தோமாயினுந் தேவரீர்கட்டளைக்கடங்கிமனம்வெந்துகொண்டு இதுவரையிற் பொறுத்திருந்தனம், உமதுதிருவுளம் இப்படிக்கிருக்குமாகில் இதோகட்டளையின்படிக்கு நிமைப்போதில்அவனைப்பற்றிக்கட்டிவரக்கடவோம் விடைதரவேண்டுமெனப் போற்றுகின்றவர்களுள்மீது வடவையைப்போலக்கொதிக்கும் மனதையுடைய சூரபதுமன்பட்சத்தோடு நீங்கள்சீக்கிரத்தில்நடந்து தூதனைப்பிடித்து வாருங்கோளென்று திருவாய்மலர்ந்தமாத்திரத்தில் அவர்கள் சூரனைப்பணிந்து சபையைவிட்டு வெளிவந்து மனமானதுபுழுங்கி வேகத்தக்கதாகத் தங்கள் அரண்மனைகளிற்போய் வயிரக்கவசத்தைப்பூண்டு விரல்கோதைகளைத்தரித்து கொடியபாணங்கள் நிறைந்திருக்கின்றபுட்டில்களை முதுகிலிறுக்கிப்பாரித்த விற்களைக்கரங்களிற்கொண்டு வெற்றிமாலைதரித்து பொன்வண்டில் அச்சுநவரத்தினமயமாகிய கொடுங்கை வயிரக்குத்துக்கால் கொடிகுடைமுதலிய சிங்காரங்களைக்கொண்டுபெருவதாகிருதியாகவிளங்குந் தேர்களிலேறிக்கொண்டு சேனுசமுத்திரமானது ஊழிகாலத்தெழும் சத்தசாகரங்களைப்போலச்சிருங்கநாதம் அட்டகாசமுதலிய ஆரவாரங்களைச் செய்துகொண்டுநடக்கவும், ரணபேரி ஜயபேரிவெற்றிச்சங்கமாதியாகிய பொற்பறைகள் திசைகளதிர முழங்கிவர உயுத்தஞ்செய்ய வேண்டுமென்கிற வீராவேசங்களுடன் வேகமாய்வருகின்றனர், சவுனகாதிரிஷிகளே! இவைநிற்கவிசுவரூபங்கொண்டு மயேந்திரபுரியையழிக்கயத்தனித்திருக்கின்ற வீரவாகுதேவர் செய்கைகளைச்சொல்லக் கேட்பீராக.

சொர்னமயமாய் நவரத்தினகாந்திகளைவீசி மேருவையொப்பப்பாரித்து வானத்தையளாவநின்ற கோபுரத்தைவேருடன்பறித்தெறிந்து ஆயிரத்தெட்டண்டங்களுக்கதிபனுய்ச் சகலரையும்வென்று ஜயசாலியாகவிருக்கின்ற சூரபதுமன்வீற்றிருந்தரசுசெலுத்தும் சபாமண்டபத்தை

அல்லோலகல்லோலப்படத் துகளாக்கியபின்புஅவுணரா
சன் வாசஞ்செய்யும் பட்டணத்தின்சிறப்புகளையும் செல்
வப்பெருக்கையும் அதப்படுத்தி அவுணவீரர்வாசமாயி
ராநின்ற நவரத்தினமயமாய் வானத்தையளாவவோங்கிப்
பலசித்திரங்களைப் பெற்றிருக்கின்றமாடமாளிகைகள்உப்
பரிகைகூடமுதலியவைகளனைத்தையும் இந்தநிமிஷத்தி
ற் சின்னபின்னப்பட அதப்படுத்தி யழிப்பேனென்றுபே
ரறிவாளனாகிய வீரவாகுதேவர் நிதானித்து வடவாமுகா
க்கினியைப்போலச் சீறிப்பாய்ந்து-மான்-கடமை - கரடி-
முதலியமிருகங்கள் வாசமாயிருக்கின்ற சோலைகள்-அன்
னம்-மயில்-குயில்-புறாவாதியாகிய பட்சிகள்களித்திருக்கி
ன்றதோப்புகள் உத்தியானவனங்கள் நவரத்தினமயமாக
விளங்குகின்ற செய்குன்றங்கள் மேடைகள் மாடங்கள்இ
த்தகைய பொருள்களனைத்தையும் வேருடன்பறித்து அ
ஷ்டதிக்குகளில்வீசியும், விசாலமாய்அபரஞ்சியினாற்சோ
டித்துச் சிரோரத்தினமயமாய் முத்துமாலைகள் புஷ்பசர
ங்கள் தூக்கிச் சித்திரப்பிரதமைகள் கொடிகள்முதலிய சி
ங்காரங்களைக்கொண்டு மத்தியானசூரியனைப்போலச்சொ
லித்திராநின்ற சித்திரக்கூடங்களை வாரியெடுத்துச்சக்கர
த்துக்கொப்பாகச் சுழற்றி யிராஜவீதிகளிலெறிந்தும் சந்
திரகாந்தத்தினாலும் இந்திரநீலத்தினாலும் பளிங்கினாலு
ம் அமைத்திருக்கின்ற மேல்நிலைகள் திண்ணைகள்முதலி
யவற்றைப் பாதங்களினாலுதைத்து விசாலமாய் நீண்டிரு
க்கும் வீதிகளில்நடக்க விடமில்லாமல் தள்ளியும் வயிர
த்தூண்கள்நிறுத்தி மரகதக்கொடுங்கைதூக்கிப் பவளஉ
த்திரங்கள் பரப்பியிராநின்ற அளவற்றமண்டபங்களை யு
தைத்துப் பெட்டியைத்திறந்து அதிலுள்ளபூண்கள் திர
வியங்களாதிய பண்டங்களைத் தலைகீழாகக் கொட்டியதை
ப்போலக் கலகலென்று அங்காடிவீதிகள்முதலியவிடங்க
ளில்ஒலித்துவிழும்படியாகத் தள்ளியும் செந்தாமரைமல
ரிலமர்ந்த ஸ்ரீமகாலட்சுமியைமார்பிற்கொண்டிருக்கும்ஸ்ரீ
மகாவிஷ்ணுவை யணையும்பொருட்டு ஸ்ரீபூமிதேவியான
வள் கடகக்கணங்களணிந்தகரத்தை நீட்டியதைப்போ
ல வானத்தையளாவநிற்கும் பொற்கோபுரங்கள் அளவற்
றதைப் பறித்தெடுத்துச் சுற்றிலும் நவரத்தினமயமாகத்
தோற்றநின்ற மேடைமெத்தைகளின்பேரிலெறிந்து துக
ள்படச்செய்தும் அவுணவீரர்கள் தம்பதிசமேதராய்ச் சு
ற்றத்தாருடன்கூடி வேதவிதிப்படிக்கு முத்தீயும்ஓங்கி
விளங்க நெய்சமித்துகளையிறைத்துவேள்விகளைச்செய்து
வரும் ஓமசாலைகளைப்பெயர்த்துப் பட்டணமுற்றினும்
பற்றி யெரியத்தக்கதாகவீசியும் வேதாகமங்களையோதும்
பள்ளிக்கூடங்கள் அவுணவீரர் தங்கள்தோழருடன் உல்
லாசமாய் சொற்கட்டான் சோழிசதுரங்கம்முதலிய விளை
யாடிக்கொண்டிருக்கும் பகடசாலைகள் வாள்-வேல்-மல்ல
யுத்தம்-வில்முதலிய ஆயுதவித்தைகளைக் கற்குங்கூடங்க
ள் அந்திப்போதில் விலாசமாகப் பலரும்வீற்றிருந்துவச
னித்துப் பொழுதுபோக்குஞ் சந்திரகாந்தத்திண்ணைகள்
பரதநாட்டியங்களை அப்பியாசிக்கின்றவிசாலமாகியசாலை
கள் இவற்றையிடித்து நிரவியும் பலபட்சிகள்நெருங்கித்
தொனித்திருக்கும் சாலைகள்-சோலைகள்-மல்லிகை - இரு
வாட்சி-சண்பகம்-பாரிசாதமுதலிய சிறந்தபுஷ்பங்களபெ
ருத்துத்தேன்களையினைத்து வண்டுகள் தொனித்திருக்கு
ம் பூங்காவுகள் தாமரை அல்லியாதியபுஷ்பங்கள் மலிந்தி
ருக்குந் தடாகங்கள் அன்னங்கள்முதலிய பட்சிகள்நிறை
ந்திருக்கும்சித்திரக்குளங்கள்-ஏரிகள்-மடுக்கள்-இவற்றின்
உருத்தோற்றமற் பாதங்களினாற்கலக்கித்தேய்த்துப் பூ
மியுடன் சமன்பட்டுக்காட்ட அதப்படுத்தியும் பொன்னு
ருளைகள் அச்சுநவரத்தினமயமாகிய மச்சு-குத்துக்கால்-
கொடுங்கைமுதலிய சின்னங்களைப்பெற்றுப் பர்வதாகிரு
தியாகவிருக்கின்ற தேர்கள்விடும் கொட்டாரங்கள் மும்ம
தங்களையும்பெருகிப் பாகனைச்சீறிக் கட்டுத்தறியைமுறிக்
கும் வீரம்பெற்றயானைகளைப் பந்திக்குங்கூடங்கள் தத்தி
த்தாவிநடக்கும் வேகமுள்ள உத்தமஅசுவங்கள்வரிசைவ
ரிசையாகக் கட்டியிருக்கும் சாலைகள் அளவிறந்த சூரரா
கியசேனை வெள்ளங்களிருக்கின்றவிடுதிகள்இவைகளனைத்
தையும் வாரிவாரி யலறிக்கொண்டு போம்படிக்கும் சின்
னபின்னப்பட்டு மாளும்படிக்குத் திசாதிசைகளில்வீசியு
ம் பாதலவரையிலாழ்ந்து அண்டமுகட்டைத்தாவிபருத்
துச் சக்கிரவாளகிரியைப்போலப் பொன்மயமாய்இரத்தி
னங்களினாற்சோடித்த கொத்தளங்களைப்பெற்றுச் சத்து
ருக்கள்முதலாகக்கொண்டும் நுழையவொட்டாமற் பலசூ
த்திரங்கள் படைகள்கருவிகள் பொருந்திவிளங்கும் ஏழு
வகைமதில்களையும்வீரகண்டையணிந்தபாதங்களைக்கொ
ண்டுதைத்துப் பெரும்புறக்கடலைப்போல விசாலமாய்ஆ
ழ்ந்திருக்கும் அகழிகளிற் றள்ளித்தூர்த்தும் இவ்விதமா
க ஜயலட்சுமிவாசஞ்செய்திருக்கும் வலியபுசங்களையுடை
ய வீரவாகுதேவர் சிலரோங்கி ஆயிரத்தெட்டண்டங்களு
க்கும் அதிபனாய்க் கொடுங்கோல்செலுத்திவரும்சூரபது
மன் வீற்றிருக்கத்தக்க சிறப்புகளைவாய்ந்த வீரமாமயேந்
திரபுரியிலடங்கிய பலவளங்களும் சின்னபின்னப்பட பி
ரசண்டமாருதத்தைப்போலச் சுழன்றுசுழன்று நாசஞ்
செய்தகாலத்திற் றோன்றிய சிலஉவமானங்களையும் அதி
சயக்காட்சியையும் விநோதங்களையும் எடுத்துக்காட்டுகி
ன்றோங்கேட்பீர்களாக.

அவையாவன அண்டப்பித்திகையைச் சூழவிருக்கின்
ற பெரும்புறக்கடலையொத்த அகழியில் வீரவாகுதேவ
ரிடித்துத்தள்ளிய மதில்முதலானவைவிழுந்து நிறைந்த
காலத்தில் அதிலடங்கியிருந்த நீரானது மேலெழுந்தோ
டிப்புரசனங்களனைவரையும் அலைத்து வாரிக்கொண்டோ
டி நதிகளைப்போலச் சமுத்திரத்திற்பாய்ந்து மகர மச்ச
ங்களுக்கு விருந்துசெய்யவும் தருமமார்க்கங்களை யழித்து
த்தேவர்கள் ரிஷிகள் மானிடர்முதலாகிய தீனரையலைத்
துக் கொடுங்கோல்செலுத்திவருஞ் சூரபதுமன் அரண்
மனையைச்சூழ்ந்திருந்த நவரத்தினமயமாகிய கோபுரங்க
ள் உப்பரிகைகள் சந்திரகாந்தமேடைகள் மண்டபங்கள்
முதலாகியவிதங்களை வீரன் வாரி வாரி வானத்தெறிந்த
காலத்திற் சடசடத்த தொனியுடன் மேலோங்கிவிரைந்
து வருகின்றதை வானவெல்லையி லிருந்து வேடிக்கைபா
ர்த்திருந்த தேவர்கள்கண்டு மிகவும் பயந்து இதனால் நம
க்கென்ன கேடுவிளையுமோவென்னும் ஏக்கத்தினால் நடு
நடுங்கிப் பயமிகுதியினால் மேலுலகங்களி லோடியொளி
க்கவும் மேலும் பொன்னுலகத்தைத் தாண்டி வீறிப்
போகின்ற பலவளங்களும் வானகங்கையில்விழுந்து ஜ
லப்பரிச மில்லாமல் மேடுசெய்யவும் கேதுவானது மறை
த்ததைப்போல சூரியமண்டலத்தைமூடி உலகங்களுக்
கு விளக்கமில்லாம லிருளாக்கியும் வீரவாகுவீசிய சோ
லைகள் தோப்புகளில் வாசமாயிருந்த அன்னமுதலிய ப
ட்சிகள் பிரமித்து வானநாடுகளிற்போய்த் தங்களினத்

தைக்காணாது கடையில் பிரமதேவன் வாகனமாகிய அம்
சத்தையும், மகாவிஷ்ணுவி னூர்தியாகிய கருடனையுங்க
ண்டுகுலாவி தங்களுக்கடுத்த மனவாட்டத்தைச் சொல்
லிக்களித்திருக்கவும்வீரன் வீசியமேடைகள்மாளிகைகள்
வீறிகிறுகிறெனச்சுழன்று வருவதைச் சூரியபகவான்தே
ரைச்செலுத்தும் சாரதியாகிய அருணன்கண்டு முன்ன
மே கால்களிழந்திருக்கின்றனம் இதோவிரைந்து இறைந்
து வருகின்றபொருள்களினல் மற்றஅவையவங்களுக்கெ
ன்னபின்னம் நேரவிருக்கின்றதோ வென்று வருந்தியோ
டவும் வீரவாகுசெலுத்திய கோபுரங்கள் சுழன்றுபோவ
து சிறுபிள்ளைகள் பம்பரங்களிற் கயிற்றைச்சுற்றியாட்டி
யதுக் கொப்பாகக் காட்டவும் வீரன்செலுத்திய கற்பகச்
சோலைகள் வானத்திற் செல்லுகின்றதைப்பார்க்குமிடத்தி
ல் வெகுகாலமாய்ச் சூரன் பட்டணத்திலடங்கியிருந்தன
ம், இத்தினம் நல்லகாரியம் நேர்ந்ததென்றுபழயபடிக்கு
ப் பொன்னுட்டைச்சேரப் போவதையொத்தும்வீரவாகு
செலுத்திய பலபலவஸ்துக்களும் வானத்தை மூடியகார
ணத்தினுற் சூரியன் தேர்போக விடமில்லாமல்சந்துகளி
ல்நுழைந்து தப்பிப்போகவும் இவையன்றியும் மேலோக்
கின்ற சொர்னமேடைகள் கோபுரங்கள்உப்பரிகைகள்வி
ஞ்சையர்-சித்தர்-கருடகாந்தருவர்-வாசஞ்செய்யும் பதங்க
ளினும் பொன்னுலகங்கள் முற்றினும் விழுந்துஅத்தலங்
களிலருந்த அரண்மனைமுதலியவைகளைச் சிதைத்துவா
ட்டவும் வீறியெழுகின்ற நவரத்தினமயமாகிய மேடைக
ள் முதலாக ஒன்றுடனென்றுதாக்கி உடைந்தெழுந்தது
கள் பரந்து சூரியகாந்தியைமழுக்கிச் சந்திரனை நிகராகக்
காட்டவும் அக்காலத்தில் அவற்றிற்பதிந்திருந்த நவரத்தி
னங்களும் திசாதிசைகளில் விழுகின்ற தெப்படிக்கிருந்த
தெனில், கடையுகத்தெழுந் தொலிக்கும்பிரசண்டவாயுவி
ன்மோதலினல் நிலைதப்பி விழுகின்ற நட்சத்திரங்களைப்
போலக்காட்டவும் கோபுரங்களொன்றுடனென்று தாக்கி
யபோது பெருத்ததுகளானது புகையினையொத்து விளங்
கவும்அதிற்பதிந்திருந்த மணிகளுளைபட்டுப்பெருகியதிப்
பொறியுங்கலந்துகாட்டுவதையோசிக்குமிடத்திற் கோடை
காலத்தெழும் மேகத்தினிடத்தி லுண்டாகும்மின்னல்இ
டிக்கூட்டத்தை யொப்பக்காட்டவும், வீரவாகுதேவர்சூ
ரன் பட்டணத்திலிருந்த பல உறுப்புகளை வீசியகாலத்தி
ற் பொடிபட்டுப் பூழியாயெங்கு முதிர்வதை நிதானிக்கு
மிடத்தில் பூர்வத்தில் ஒருபிராமணப் பிள்ளையின்காரண
மாகத் திருக்காஞ்சிபுரத்தில் மண்மாரிபெய்ததை நிகர்த்
தும் வீரவாகுதேவர் வீசிய ஆயுதச்சாலைகளிலடங்கியிரு
ந்த கருவிகள்சிதறித் தேவர்கள் தேகங்களிற் றுக்கியபோ
து பெருகிய உதிரமானது இரத்தமழையைப்போல பூம
ண்டலமெங்கும் பொழியவும் இவையன்றியும் சூரபதும
ன் செய்ததவமுயற்சியினுற்பலதேவர்களை யலைத்துத்தகா
த ஏவல்களைக்காட்டி வருத்துகின்றனன், அவ்வாறேஅவ
ன் வீற்றிருந்து அரசுசெலுத்தும்பட்டணத்திலிருந்தமே
டைகள் முதலிய பலவளங்களும் தேவர்களை வளைத்துக்
கொண்டு பலபின்னங்களைச்செய்து பதியையுமழித்து ஒ
டியொளிக்கச்செய்தது, இவையன்றியும் வீரவாகுதேவர்
வானத்தெறிந்த பளிங்குமண்டபங்கள் சதுக்கங்கள் நிலா
முற்றங்களுாய்ந்து பெருகிய தீயும்புகையும்பெருத்துப்
பூமியெங்கும் அக்கினிமழையைப்போல உதிரவும்சூரிய
னேறி நடத்தும்தேரிற்கட்டிய பச்சைப்புரவிகளைக்காய்ந்
து கருகிறமாக்கவும், மற்றுஞ்சிலபொருள்கள் எழும்பித்
தாக்கியபோது மேகங்கள் கர்ப்பங்கள்பீறுண்டு ஜலம் பெ
ருகுவது எப்படிக்கிருந்ததெனில் அக்காலத்தி லுண்டா
கிய வருத்தங்களைப்பொறுக்கக் கூடாமையால் விழிகளி
ல் நீரைப்பெருக்கிவிசனப்படுவதையொத்துக் காட்டவும்
எக்காலத்தும் மாருதகீர்த்திப்பிரதாபத்தைக்கொண்டிரு
க்கும் வீரவாகுதேவர்? விசுவரூபங்கொண்டு வீரசிங்கம்
போலவும் மதயானையைநிகர்த்தும் உலவிச் சூரபதுமன்ப
ட்டணத்திற் றங்கியபலவளங்களையும் வாரிவாரியெறிந்த
காலத்தில் அவைகளனைத்தும் மேலிட்டுத் தேவர்களை ய
லைத்து அண்டமுகட்டிற்றுக்கி மறிந்து கோடையிடிகளை
ப்போல பூமியில் விழுவதைப்பார்க்குமிடத்திற் சந்திரசே
காதரக் கடவுளாகிய சிவபிரான்கடாட்ச வீட்சண்ணியத்
தைப்பெற்ற விசுவாமித்திரர் வசிஷ்டருக்குவிரோதமாக
த் திரிசங்கு மகாராசனைச் சுவர்க்கத்துக்கனுப்பியகாலத்தி
ல் ஆசிரியனையிகழ்ந்த நீச்சனென்று தேவர்கள்கோபித்து
தள்ளியபோது அவ்வரசன் தலைகீழாகத் திரும்பியதைப்
போலவும்விளங்கியது.

இவ்விதமாகவீரவாகுதேவர் கோபித்தெறிந்த சூரபது
மன் பட்டணவளங்களனைத்தும் வானத்தி னும்திசாதிசை
யினும் பெருத்தபூவட்டத்தினும் அஷ்டதிக்குகளினும்ச
த்தசாகரங்களினும் நவகண்டங்களினும் சத்ததீவுகளினு
ம் சோலைகள்தோப்புகளிலும் காடுகள்-பருவதங்கள்-நதிக
ள்-மடுக்கள்-ஓடைகள் மற்றுமிராநின்ற தலங்களினும்சட
சடத்தொனிகளுடன் இடிகளைப்போல விழுகின்றகால
த்தில் அத்தலங்களில் வாசஞ்செய்யும் சீவராசிகள் திடுக்
கிட்டு இதென்ன உற்பாதமாக விருக்கின்றதென்று பயப்
பிராந்திகளுடன் தியங்கியும் கரங்களற்றுஞ்சிரங்களுடை
ந்தும் மூளைகள்சிதறியும் விழிகள்வெளிப்பட்டும்பல்லுதி
ர்ந்தும் மார்புபிளந்தும் கால்களொடிந்தும்துடைகள்முறி
ந்தும் இப்படிக்குப்பாதபாடுகளைப்பட்டுமாண்டவைகள்
போக மற்றபிராணிகளோரிடத்தில் நிலைபெற்றிருக்கப் ப
டாமையால் அங்குமிங்குமாக அலைந்துதிரிந்தன, இப்
படிக்கு அல்லோலகல்லோலப் படுங்காலத்தில் உதயகிரி
தத்தளித்தும் மகமேருகம்பிதப்பட்டும் அஷ்டகுலாசல
ங்களும் சக்கிரவாளகிரியும் உடைந்து துகள்படவும் பொ
ன்னுலகங்களழிந்து உலகங்களெங்கு முதிரவும்அவ்வதிர்
ச்சியினுல் பூமிநெக்குவிட்டுக் கிடுகிடெனநடுங்கவும்,சத்த
சாகரங்களுங் கொதிப்பெடுத் தடங்கவும் திசையானைகள்
வீரிட்டோடவும் இவ்வாறு மாடமாளிகைகள்கூடகோபு
ரங்கள் பெருத்திருந்த மயேந்திரபுரியானது அதப்பட்டு
வீதிகள்தோற்றும லிடிந்துதுருக்குலைந்தும் கோட்டைகொ
ம்மைகளனைத்தும் துகள்பட்டு அகழியில் விழுந்தும் சக
லருங்கொண்டாடவல்ல சிறப்பினைவாய்ந்த கோபுரங்கள்
தெற்றிகள் சித்திரமேடைகள் முதலாகச்சின்னபின்னப்ப
ட்டு உருத்தெரியாமல்மங்கி எண்பதினுயிரயோசனைவிஸ்
திரணமுள்ள வீரமாமயேந்திரபுரிமுற்றும் ஓவென்னும்
இரைச்சலுடன் பின்னப்பட்டுநறுங்கியகாலத்தில்அவ்வீ
திகளில் நவரத்தினமயமாகிய உப்பரிகைகள்மாளிகைகள்
மேடைகளில் வாசமாயிருந்த அவுணவீரர்கள் பெண்டுபி
ள்ளைகளுடன் சிதைபட்டுமாண்டும் பின்னப்பட்டும்தப்பி
த்துக்கொண்டோடியும் இப்பாடுகள் படுகின்றபோதுபிர
சண்டமாருத ஓசையைப்போல இரைச்சலுண்டாயிற்று.
மேலும் தேவதாரம் புன்னைஅகில் சந்தனமுதலிய விரு

ட்சங்கள் பெருக்திருக்கின்றசோலைகள் கிளைகள் முறிந்தும்வேருடன் பறிந்தும் துகள்பட்டு மங்கியும் மல்லிகை சண்பகம் இருவாட்சிமுதலிய பரிமளமிகுந்த புஷ்பசாதிகள் மலிந்திராநின்ற பூஞ்சோலைகள் பாதங்களில் அரைபட்டுத் துகள்பறந்து போகவும்இப்படிக்குச் சாடும்போது தேவர்கள்காவலேற்பட்டிருக்கின்ற சிறைச்சாலைக்குயாதொருபின்னமும்நேராமல் பாதுகாத்திரட்சித்தனர்.

ஓசவுனகாதிரிஷிகளே? அந்தவீரவாகுதேவர்சாமர்த்தியம் என்ன சொல்லுவேன் அவர்சாடியபோது மதயானைகள் வெறியடங்கிக் கிம்புரிக்கோடுகள் நுறுங்கிமுகபடாம் விளங்கும்மத்தகம்விண்டுமலைகளைப்போலவிழுந்தும்ஓடியும்அலைச்சற்படவும்பாரித்திராநின்றதேர்நிரைகள் பொன்மயமாகியஉருளைகள்உருண்டும்அச்சுகள்முறிந்தும் மச்சுகள் சிதைந்தும்கொடுங்கைகள்பறந்துங்கொடிகள்குடைகள் காற்றாடிகளைப்போல எழும்பியும் பஞ்சகல்லியாணிகளாகிய உத்தமஅசுவங்கள் பொன்வண்டையங்க ளணிந்த கால்களொடிந்தும் கழுத்துகள் தறியுண்டும்வால்களறுந்தும் இப்பாடுகள்படவும் அவுணவீரர்கள் திகைத்துவாடியும் ஓடியும் விழுந்தும்,எழுந்தும்,பெண்டுபிள்ளைகளைத்தேடியும், பல பின்னங்கள்பட்டுச்செத்தும், சதைந்தும் இப்படிக்குச் சொல்லப்படாத வருத்தங்களை யனுபவிக்கவும் சிலர்பருவதங்களைப்பறித்துக் குண்டைகளைப்போலப்பிடித்துக்கொண்டு தங்கள் மேலொன்றும்விழாமல் காத்துக்கொள்ளவும் வீரவாகுதேவர் வீசியமாளிகைகள் விழுந்து பிளந்திருக்கின்ற பூமிவெடிப்புகளிற் கால்களகப்பட்டுக்கொண்டு சிலர்வாடவும்அக்காலத்தில்நேர்ந்தஉபாதிகளுக்கஞ்சி தப்பிப்பிழைத்தோடிப் பிழைக்கநினைந்து பெண்டுபிள்ளைகள் தாய்தந்தையர்சுற்றத்தினர்களை கூட்டிக்கொண்டு தங்கள் அரண்மனைகளைக்கடந்து வீதிகளில் வந்து இரைச்சலிட்டோடும் உதிரப் பிரவாகத்தைக்கண்டுஇதற்கென்னசெய்வோமென்று பலர் வாடிவதங்கவும் சிலர் மகரமச்சங்க ளுலவுகின்றசமுத்திரமத்தியிற் பாய்ந்தொளிக்கவும் வீரவாகுதேவர்வீசியமேடைகள் முதலானவையெங்கும் விழுவதைக்கண்ட சிலவீரர்கோபித்து அக்கினிப்படைகளாதிய வலியகணைகளைச் செலுத்தி அவற்றினைத் துகள்செய்யவும், இன்னமும்சொல்லப்படாததுன்பங்களனைத்தையும் அனுபவித்தலைந்தனர், சவுனகாதிரிஷிகளே! தீனராகவிருக்கின்ற தேவர்களைப் பலநாட்களாகஅலைத்துவந்தபாதகமே அப்பதியைச்சுட்டு நாசஞ்செய்ததற்கு யாதொருசந்தேகமுமில்லை, வீரவாகுதேவர் வடவாமுகாக்கினியைப்போலச்சீறி நகரமெங்கு முலாவிச்சாடியகாலத்திற் பட்டணவீதிகளிலிருந்த மேடைகள்உப்பரிகைகள்மாளிகைகள் ஒன்றேனும்உருவாக விருந்ததென்று நினைக்கவேண்டுவதில்லை, சகலமுமிடிந்து நுறுங்கிநிலத்திற்கலந்து சமனாய்கதம்பத்தைப்போலக் காணவிளங்கியது, இவ்வனர்த்தங்கள் முடிந்ததருணத்தில்நேர்ந்தகாரணங்களையுஞ்சொல்லுவோங்கேட்பீராக.

## சகத்திரவாகுகள்வதைப்படலம்.

ஏயினபான்மையினிவன்மூதூர்
மாய்தருமெல்லையின்வருகின்ற
வாயிரவாகுளவடல்வீரர்
மேயினதன்மைவிளம்புற்றும்.

வாரீர்! நைமிசாரணியவாசிகளே? பாலசுப்பிரமணியர் செலுத்திய தூதனாகியவீரவாகுதேவர் ஆயிரத்தெட்டண்டங்களையும் நூற்றெட்டு யுகங்களாகக் கொடுங்கோல்செலுத்தி சீவகாருண்ணியமென்பது எவ்வளவு மில்லாமல்வேதவிதியைக்கடந்து மன்னுயிர்களை நாசஞ்செய்து உலகங்களுக்கு யமனைப்போல அரசுசெலுத்திவந்தஜயசாலியாகிய சூரபதுமன் வீற்றிருக்கப்பெற்ற ராசதானியாய்ச்சகல புவனங்களுங் கொண்டாடவல்ல செல்வச் சம்பத்துகளைக்கொண்டுஅஷ்டலட்சுமிகளும் ஒருமைப்பட வாழ்ந்திருக்கும்மகதயிஸ்வரியங்களைப் பெற்றிருந்தவீரமாமயேந்திரபுரியானதுகண்டவர்கள்பழித்துநகைக்கத்தக்கபதங்கோலப்பட்டு மூதேவிவாசஞ் செய்யும்படியாகச்சின்னபின்னமாய் வெட்டவெளியாக்கியபோது சூரபதுமன் கட்டளையைப்பெற்றுச் சபதங்களைப்பேசி வெளிவந்தகீர்த்திமான்களாகிய சகத்திரவாகுகளென்னுங் கொடியபாதகர்கள் ஆயிரவரும் சேனைவெள்ளங்களுடன்அதிவேகமாகவருகின்றவர்களினுடைய பெருமிதங்களிற் சிலகேட்பீர்களாக திருப்பாற்கடலினுதித்த ஆலகாலவிஷத்தைப்போன்றகரியதேகத்தைப் பெற்றும் கொழுந்துவிட்டெரியும் வடவாமுகாக்கினியை யொத்த செம்பட்டமயிரைவாய்ந்தும் மதயானைகரடிசிங்கம்புலியித்தகைய மிருகங்களைவலிதிற்பற்றிப் பிலத்தையொத்த வாய்களிற்போட்டுஇருகடைவாயினும் உதிரம்பெருகமென்றுதின்றும் சுடலையைப்போலக்கொதித்துக் கொண்டிருக்கும் உதரத்தீயைப் பெற்றும் கடையுகத்திற்பெருகும் சத்தசாகரங்களினோசையும்இடியின் முழக்கமும்அஞ்சத்தக்க உரத்தசொல்லைப் பெற்றும்வீரசிங்கங்களைப்போல நடக்கும்வேகத்தினால் பூமிபிளக்கப்பாதங்களைப்பெயர்த்துவைத்தும்பலசிகரங்களைக்கொண்டு நீலகிரியசைவதைப்போல வானத்தையளாவிய வயிரமகுடங்கள் விளங்கும் ஐந்நூறுசிரங்களைப் படைத்தும் மராமரமானது கிளைகளைவிரித்து நிற்பதுபோன்ற ஆயிரங்கரங்களில் எழுவாயுதம்-மழுவாயுதம்-வாள்-வேல்-சக்கரம்-வச்சிரம்-சூலம்-முதலிய படைகளைப்பரித்தும் மந்தரத்தையொத்த வில்லைத்தாங்கிக்கொடிய பாணவிதங்களைப்பரித்தும் ஆழம்பொருந்திய சாகரங்களையும் சகலபிராணிகளுமடங்கிய பூமண்டலத்தையும் ஒருமுகத்திலுண்டபோதினும் நிரம்பாத பருத்தவயிற்றையும் பெற்றவர்கள் இப்படிக்கொத்த பெருமிதங்களைப்படைத்த அவுணவீரர்கள் நால்வகைச் சேனசமுத்திரங்களுடன் வேகமாய்வந்து எதிரில்நிற்கின்ற வீரவாகுதேவரைப்பார்த்தவுடன் இரண்டுபுசங்களையும் ஒருமுகதனையும் படைத்தஒரு தேவப்பயலை வெல்வதற்கு அளவற்றசேனைகளுடன் ஐந்நூறுமுடிகளையும் ஆயிரங்கரங்களையும்பெற்றஆயிரம்வீரராகிய நாம்வரவேண்டுமோ இதையோசியாமல்வந்துவிட்டோம் இத்தகையசூரராகிய நாம்இவனுடன் சண்டைகொடுப்பதுமிகவும் அபகீர்த்தியாகும்.

மேலும் இதுபரியந்தம் பெற்றிருக்கின்ற வெற்றிக்கும்
குறைபாடுண்டென்று மனம் வாடினவர்களாய் மேகங்கள்
சஞ்சரிக்கும் வானவழிக்கொண்டு மாயமாய்வந்தவனுதலா
ல் நம்மையும் இந்தபெருத்தசேனைகளையுங்கண்டு பயந்து
சடுதியில் மறைந்தோடிப்போய்விடுவான் ஆகையாற்சீக்கி
ரத்தில் வளைத்துக்கொள்ளவேண்டும் நடவுங்கோள்நடவு
ங்கோளென்று துரிதப்பட்டு வீரவாகுதேவர் முன்னமெ
றிந்தமாடமாளிகை கூடகோபுரங்கள்வானத்திலிருந்துவி
ழுகின்றவைகளைப் பருத்துநீண்டிருக்குந் தமதுகரங்களி
னுற் பற்றிப்பிசைந்தூதி அதிககோபவெப்பத்தினுல்தேக
மெங்கும் வியர்த்தொழுகவும்விழிகள்கொவ்வைக்கனியை
ப்போலச்சிவந்து அக்கினிப்பொறிகளை யிறைக்கவும்சுவா
சம் விடுந்தோறும் தீயும் புகையும் வீசவும்உரப்பிக்கொ
ண்டு தேவர்களுக்கு யமனையொத்தகொடியபாதகராகியஆ
யிரம்வீரர்களும் சிங்கங்களைப்போன்ற பராக்கிரமராகவி
ருக்கின்ற வீரவாகுதேவரை வளைத்துக்கொண்டு ஆர்ப்ப
ரித்தலைசையானது குகையிற்படுத்திருந்த வீரசிங்கத்தை
யதட்டியவ.தப்போல வீரவாகுதேவர் செவிகளிற் பட்ட
மாத்திரத்தில் திரிபுராதிகளை விழித்தெரித்தசிவபிரானை
ப்போலச் சிறுநகைகொண்டு சீறிவானத்தையளாவித் தி
சைகளைமூடத் தழைத்திருக்கின்ற மராமரமொன்றைவே
ருடன் பிடுங்கித்திசைக ளிருள்மூடிச் சூரியகாந்தியும் ம
றையத்தக்கதாகக் கிறுகிறெனச் சுழற்றிச் சாடும்படியாக
வீரவாகுதேவர் வருவதை ஆயிரம் புசங்களைப்படைத்தி
ருக்கின்ற அவுணவீரர்கள்கண்டு பார்த்தீர்களோகொஞ்ச
மாவது பயமில்லாமல் தீரனய் ஒருமரத்தைப் பிடுங்கிக்
கொண்டு நம்மைக்குறித்து வருகின்றுன் நல்லகாரியம்இ
வனுணவத்தைச் சற்றுநேரத்திலடக்கிக் கட்டிக்கொண்டு
போவதற்குச் சந்தேகமில்லையெனச் சபதங்களைப்பேசின
வர்களாய் வடவையைப்போல மண்டியெரிந்துநாலுமூலை
களினுஞ் சுற்றிக்கொண்டு சிலர்விற்களை வட்டாகாரமாக
வளைத்துத் திசைகளதிரக் குணத்தொனி கொண்டு- பிர
மாஸ்திரம்- வாயுவாஸ்திரம்- வருணஸ்திரம்- அக்கினி
யாஸ்திரம்- முதலாகிய தேவப் படைகளைப் பூட்டிக் கா
தளவு மிழுத்துக் கரவேகமாய்ப்பிரயோகித்த காலத்தில்
அவைகள் அக்கினிபுகையிடிமுதலியகொடுமைகளைக் கா
ட்டிக்கொண்டுவரவும் மற்றொருபுறத்திற்சிலர்பிரகாசிக்கு
ங்கூரிய அலகுகளையுடைய வேலாயுதங்களையெறிந்துசிரு
ங்கநாதஞ்செய்யவும், சிலர்மழுப்படைகளைத்தூண்டி ஆர்
ப்பரிக்கவும், சிலர்சூலங்களையெறிந்து மேகங்களுமதிரக்
கர்ச்சிக்கவும், சிலர்பாய்ந்து ஈட்டிகளினுற்குத்தவும், சில
ர்பிரகாசம்பொருந்திய வச்சிராயுதங்களைப்போக்கிக்கொக்
கரிக்கவும், சிலர் சக்கரங்களைக் கரகரெனச் சுழற்றியெறி
ந்ததட்டவும், சிலர் மந்தரத்தையொத்த தண்டாயுதங்க
ளைச் சக்கிராகாரமாகச் சுழற்றிமாறவும், சிலர் மற்றஆயு
தங்களைத்தூண்டி கெக்கலிகொட்டவும், இவ்விதங்களாக
அஸ்திரசஸ்திர விதங்களனைத்தையும் சோனைமாரியைப்
போல அபரிமிதமாய் புசபலபராக்கிரமசாலியாகிய வீர
வாகுதேவர்மீதிற் செலுத்தியகாலையில் வீரன்சீறித் தம
துகரத்திற்பற்றியிருந்த மராமரத்தைச் சுழற்றிமோதிஅ
வற்றினைச் சின்னபின்னப்படச்சாடி மேலிட்டுவருவதை
க்கொடியபாதகராகிய ஆயிரம் அவுணவீரர்கண்டு வட
வாமுகாக்கினியைப்போலச்சீறி மீசைகள்துடிக்கவும் மு
கம்வியர்க்கவும் கண்கள்சிவந்து அக்கினிப்பொறிகளை
யிறைக்கவும்சேனைகளுக்குதயிரியங்களைச்சொல்லித்தேற்
றினவர்களாய் வீரவாகுதேவரைநெருங்கி ஆயுதவிதங்க
ளனைத்தையும் ஒருமுனையிற் சோனைமாரியைப்போலஅ
பரிமிதமாகச்சொரிந்து அண்டங்களதிரத்தக்கதாக ஆர்ப்
பரித்து கொடும்போர்செய்யும்போது வீரவாகுதேவர்அ
திககோபங்கொண்டவராய்க் கிளைகள்தழைத்திருக்கின்ற
மராமரத்தைஉதறிச் சக்கிராகாரமாகச் சுழற்றிக்கொண்
டுதம்முடையபேரில்புகைந்தெரிந்திடிகளைப்பெருக்கிமே
லிட்டுவருகின்ற ஆயுதங்களனைத்தையும்சின்னபின்னப்ப
டும்படிக்குச்சாடி மேலுந் தம்முடன்போராடுகின்ற சத்
துருக்களுங் கெட்டழிந்து போகத்தக்கதாக மோதியகால
த்திற் செவ்வானத்தையொப்பச் சிவந்துவிளங்குந் தலைக
ள்பிளந்தும் மூளைகள்சிதறியும் சிலர்விழவும், சிலர்கன்ன
ங்கள்கிழிந்து சகிக்கப்படாமையால் பின்னிடவும், சிலர்
நெற்றிகள்வெடித்துச்சோரவும், சிலர்விழிகள்பிதுங்கிக்கா
துகளிலணிந்த குண்டலங்களுடன் தெறித்துப்போகவரு
ந்திமானமழிந்தும், சிலர் பலகறைகளைப்போலப் பற்கள்
கொட்டுண்டு அவ்வுபாதியினுலும் வெட்கத்தினுலும் வா
யைமூடிக்கொள்ளவும், சிலர் நாசிகள்சிதைந்து பெருகு
முதிரத்தையுண்டு இளைப்பாறவும், சிலர் வாய்கிழிந்தல
றிவிழவும், சிலர்முத்தாரம் மோகனமாலைகள் தரித்திருக்
குங்கண்டமானதுமுறிபடப்புலம்பியும், சிலர் கால்களொ
டிந்து நடக்கப்படாமல் தத்தளிக்கவும், சிலர் புசங்கள்சரி
ந்துபுரளவும், சிலர் வயிரக்கவசந் தரித்திருக்குமார்புகி
ழிந்திளைக்கவும், சிலர்வயிறுவெடித்துக்களைக்கவும், சிலர்
கொப்பூழானது குடத்தின் வாயைப்போலத் திறக்கப்பட்
டபடியாற் குடல்கள்முதலிய சின்னங்கள்வெளிப்பட்டுவி
ழுந்துமாளவும், சிலர் இடுப்புநெகிழ்ந்து விருட்சங்களை
ப்போலவிழவும், சிலர் எலும்புகள் நுறுங்கிக்குப்பறக்க
விழவும், சிலர் முழந்தாள் சிப்பிகள்பெயர்ந்து மறிந்தும்,
சிலர் உருத்தெரியாமற்சிதைந்தும், சிலர்மூர்ச்சித்தும், சி
லர்மாண்டும், சிலர்பதைபதைத்துருளவும், சிலர் உதிரச்
சேற்றிலகப்பட்டுவாடவும், சிலர்தாபரிக்கப்படாமையால்
ஓடிப்பிணக்குவைகளி லிடறிவிழுந்து நாசமடையவும்,சி
லர் மண்ணுடன்அரைபட்டுப்போகவும்,சிலர்தாங்கள்பிடி
த்த ஆயுதங்களைப் பிரயோகிக்க யத்தனப்படுமுன் வீர
வாகுதேவர் சாடியமராமரமோதலினுல்விழுந்துஅந்தஆ
யுதங்களினுல் வெட்டுண்டிறந்தும், சிலர்மாண்டுவீரசொ
ர்க்கத்தைச்சேர்ந்து முன்னம்போயிருக்கின்ற தோழருட
ன்கூடிக் களித்திருக்கவும், சிலவீரர் சிரங்களற்றும்வீரா
வேசங்களினுல் படைகளைக்கொண்டு போராடவும், இவ்
விதங்களாய்ப் பெரும்புறக்கடலைப்போல வந்தெதிர்த்தச
துரங்கச்சேனைகள் கண்டதுண்டமாக மாண்டகாலத்தில்
அவர்களுக்குத் தலைவராகவிருந்த ஆயிரம்வீரர்களும் த
ங்களாற் கூடியமட்டும்போராடிச் சின்னபின்னப்பட்டுநா
சமடைந்தனர்.

இந்தப்பிரகாரம் இறந்தவர்கள்போகத் தப்பிநின்றசில
ர்பயப்பிராந்தியினுல் வீரமும்வலியுங்குன்றிப் பலதிசை
யினு மோடியொளித்தனர். அக்காலத்திற்பெருகிய உதி
ரவெள்ளமானது மீறியோடிப்பட்டணத்தையலைத்துப்ப
லவளங்களையும் புரட்டிக்கொண்டோடி மகரமச்சங்களு
லாவித்திரியும் சமுத்திரத்திற்பாய்ந்துமேலிட்டுப்பூமியி
லுமோடியது, இவையன்றியும் தருமமார்க்கங்களை வழு
வாமல் நிலைபெறச்செய்யவல்ல கருணைக்கடலாகிய வீர

வாகுதேவர் சாடியகாலத்திற் கண்டிக்கப்பட்டு வானத்தெழுந்தசிரங்கள் மூன்றும்பிறையைப்போலவிளங்கும் கோரைத்தந்தங்கள் தோற்றப்போவ தெப்படிக்கிருந்ததெனில் திருப்பாற்கடலினுதித்த அமுதத்தைத் தேவருடன்மறைந்திருந்துண்டு சட்டுவத்தினுற்றலைகளையிழந்த இராகுகேதுவென்பவர்கள் பழியைதீர்த்துக்கொள்ளும்பொருட்டு சந்திரனைக்சவ்வி யுலாவுவதைப்போலக் காட்டவும், குதிரைமுகங்களைப் படைத்திருக்கின்ற சிலஅவுணர் சிரங்கள்கண்டித்து வாய்வழியாக உதிரம்பாயவிழுந்துகிடப்பதைப் பார்க்குமிடத்தில் விசாலமாகியசமுத்திரத்திலடங்கியிருக்கின்ற வடவாமுகாக்கினியானது அக்கினிக்கொழுந்தை வீசிக்கொண்டிருப்பதற்கொத்தும், சிலர் பற்களானவைஉதிர்ந்து மேலெழுந்து சமுத்திரத்தில் விழுவதைப்பார்க்குமிடத்தில் வானத்திலிருக்கின்ற நட்சத்திரக்கூட்டங்கள் கலங்கி நிலைதப்பி உதிர்வதைப்போன்றும் இத்தகையரணக்களச்சிங்காரங்களின் மத்தியிற் சவுனகாதிரிஷிகளே? யின்னமொருஅதிசயத்தைச்சொல்லக் கேட்பீராக.

ஊழ்வினைவலியை யாவராலுங் கடக்கவொண்ணுதென உலகங்களில் வழங்கிக்கொள்ளுவதற்குத் திஷ்டாந்தமாக அந்தப்போர்க்களவெல்லையில் நவரத்தினமயமாகிய கிரீடம்-வாகுவலயம்-மதாணிப்பதக்கமுதலிய ஆபரணங்கள் தேகமெங்கும் பிரகாசிக்கவும் வீரகண்டாமணியணிந்த பாதங்களிற் கலீல்கலீலெனச் சத்திக்கத்தக்கதாக மஹாசூரராகிய வீரவாகுதேவரானவர் ரவுத்திராகாரமாகிய கோபங்கொண்டுபாரித்த விருட்சமொன்றினைப் பிடுங்கிக் கரத்திற்கொண்டு இடசாரிவலசாரியாகச்சுழற்றிச்சுழற்றிக் கோடையிடிகளைப்போல மோதுகின்றகாலையில் எதிர்த்துவந்த அவுணவீரர்களிற் சிலர்பற்றியிருந்த வாளுடன் கரமானது கண்டிக்கப்பட்டெழுந்து அதற்குமுன்னம் பயந்தோடி யொளிக்கப்போகின்ற அவுணர்சிரங்களைக்கண்டித்துத்தள்ளின ஆதலால் விதிவலியைக் கடக்கவொண்ணுது அப்பொழுது பற்பலகோடிகவந்தங்களெங்கும் நடிக்கவும், பிணமலைகள் வானத்தையளாவக் குவிந்திருக்கவும் இப்படிக்குச் சிங்காசனைப்போலப் புயவலிக்கொருவராகியநிகரற்றவீரவாகுதேவர் நிமைப்போதில் சகத்திரவாகுகளாகிய ஆயிரம் வீரரையும் அவர்களுடன் பெரும்புறக்கடலையொப்ப இரைந்துவந்த சதுரங்கவெள்ளங்களின்பெருக்கையும்,மராமரமொன்றினுல்மோதி கண்டங்கண்டமாய்த் துண்டந்துண்டமாய் அதாஅதப்படுத்திக்கொன்று எதிரிகளொருவருமில்லாமையாய் மதயானையைப்போலப் போர்க்களத்தை நோக்கிநின்றனர். அந்தச்சமயத்தில்-காக்கை-கழுகு-பருந்து- முதலியபட்சிகள் நிணங்களையும் மாம்சங்களையுந் தெவிட்டப்பிடுங்கித் தின்று உதிரங்களைக்குடித்துப் பந்தலைப்போலவானத்தில் வட்டமிட்டுலாவவும், பூதபைசாசங்கள் காளிக்கூட்டங்கள் நாய்நரிகள்நெருங்கிப் பிணங்களைஅங்குமிங்குமிழுத்து வயிறுகள் திருத்தியாகப்பொசித்துக்கூத்தாடிக்கொண்டுவீரலட்சுமி குடிகொண்டிருக்கும் புசங்களைப்படைத்த வீரவாகுதேவரைத் துதித்துத் திரிந்ததுகள். சவுனகாதிரிஷிகளே! அந்தவீரன் பராக்கிரமங்களை என்னுற்புகழக்கூடுவதோ! அதன்பின்பு நடந்தசரித்திரங்களையுங் கேட்பீராகவென்று சூதபுராணிகர் சவுனகாதிரிஷிகளுக்குச்சொல்ல வாரம்பித்தனர்.

## வச்சிரவாகுவதைப்படலம்.

கூடியாரமரியற்றினர்தம்வலிகுறைந்து
வீடியாவிபோய்விளிதலுமன்னதுவிரைவி
னேடிவிண்ணிடைநணுகியதூதுவர்நில்லா
தோடியாளுடையவுணர்கோன்முன்புசென்றுரைப்பார்.

---

வாரீர் நைமிசாரணியவாசிகளே? ஆயிரத்தெட்டண்டங்களுக்கு அதிபனுகிய சூரபதுமன் கோபித்துச்செலுத்திய சகத்திரவாகுக ளாயிரவரும்சபதங்களைப்பேசிவந்து கொடியபோரைச்செய்து முடியாமல் நாசப்பட்ட காரணங்களையும் வீரவாகுதேவர்சிங்காசனைப்போலச்சீறி மராமரமொன்றைக்கொண்டு தன்பேரில்வந்தெதிர்த்த சகலரும் சின்னபின்னப்படக் கண்டித்துக்கொன்று எதிரின்றிநிற்கும் உத்தண்டத்தையும் வானவழியில்நின்று கண்டதூதர்கள் மனங்கலங்கி வாயுவேகமும் மனோவேகமும் பின்னிட முற்பட்டோடி அவுணர்குலப்பெருமானுய் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனுய் மன்னுயிரைவாட்டிக் கொடுங்கோல்செலுத்தி நவரத்தினமயமாயிராநின்ற சபாமண்டபத்திற் புத்திரமித்திரர் மந்திரிபிரதானிகள்சேனைத்தலைவர் முதலானவர்கள்சூழ்ந்துபோற்றச் சிங்காதனத்தில் வீற்றிருந்து அரசுசெலுத்திவருகின்ற சூரபதுமனைத் தரிசித்து வீரகண்டாமணிசத்திக்கும் பாதாரவிந்தங்களிற்பணிந்து வாய்புதைத்து இதனைவிண்ணப்பஞ்செய்வதாயினர். ஐயனே? தேவரீர்கட்டளையின்படிக்குச்சென்ற சேனைத்தலைவர்கள் ஆயிரவரும் கணக்கிறந்த சயினியங்களுடன் வேகமாகப்போய்த் தூதனைவளைந்துகொண்டு கொடியபோர்செய்து வருகின்றகாலத்தில் அவன் வடவாமுகாக்கினியைப்போலச்சீறி வானத்தையளாவநின்ற ஒருமரத்தைப் பிடுங்கிக்கொண்டு சக்கிராகாரமாகச்சுழன்றுசாடிய பராக்கிரமத்தை என்னசொல்லுவோம் அதனுல் நம்மவர்கள் நிர்வகிக்கமாட்டாமல் பின்னப்பட்டுச் சகலரும்மாண்டனர். தூதன்மாத்திரம் தனியனுய்விருஷபத்தைப்போலப்பார்க்கப் பயங்கரமாய் நிற்கின்றனன். இதுசேதி தேவரீர் சித்தமறிகவென்றுசொன்ன காரணங்கள் செவிகளில் விழுந்தமாத்திரத்தில் ஆலகாலவிஷத்தையொப்பாகக் கோபித்து விழிகளில் தீப்பொறிகள் சிதற மீசைதுடிக்கச் சரீரமெங்கும்வியர்க்கஅனற்சுவாலை வீசப் பெருமூச்செறிந்து மனம் வேகத்தக்கதாக வருந்தினவனுய் வீரவாகுதேவர் சவுரியங்களையும் புயவன்மைகளையும்நினைந்து நினைந்து மனம்பொருமற் சபையிலிருக்கின்றவர்களைப்பார்த்துச் சொல்லுகின்ருன்.

இந்தஅநியாயங்களைப்பார்க்குமிடத்தில் வெகுநேர்த்தியாகவிருக்கின்றது, பார்வதிகுமாரனுகியபாலசுப்பிரமணியன்விடுத்த அபலனுகிய ஒருதூதன்வலியனுய் விசாலமாகிய கடலைத்தாவி இலங்கைமுதலிய அரியகாவல்களைக்கடந்து இந்தமகாசபையிற்சேர்ந்து சற்றும்பயமில்லாமல் நாம்வீற்றிருக்கின்ற சிங்காதனத்தினுஞ் சிறந்ததாய் உன்னதமுள்ளபீடத்தில் அசைவற்றிருந்து தகாதனவாகிய வார்த்தைகளைப்பேசி அகன்றமண்டலாதிபதியாகிய நம்மிடத்திற் கொஞ்சமரியாதையுமில்லாமல் அவமதித்துநாமேவிய வீரரையுங்கொன்று சபையைக்கலக்கிப்போனவன்லட்சுமி விலாசம்பொருந்திய நமதுபட்டணத்தைதும்

சஞ்செய்தழித்து மஹாவீரர்களாகிய அளவற்ற அவுணகாவலரைச் சின்னபின்னப்படக்கண்டித்து இன்னமும்இப்பதியைவிட்டுப் போகாமல் வீறியிருக்கின்றனனெனக் கேட்டோம். ஆதலாற் சிவபிரான்கடாட்சத்தைப் பூர்த்தியாகப்பெற்று நூற்றெட்டுயுகங்களாக ஆயிரத்தெட்டண்டங்களையும் பரிபாலித்துச்சகலதேவர்களையும்வென்றுசூரனெனப் பேர்பெற்றிருக்கின்ற நமதுபெருமைவெகுநேர்த்தியாக விருக்கின்றதென நகைத்து மேல்நடக்கவேண்டியதற்கு யோசித்திருக்கின்ற சூரன் நினைவைத்தெரிந்த மாத்திரத்தில் பத்துத்தலைகளு மிருபதுகைகளையும் வயிரதேகத்தையும்பெற்ற தீரனாகிய வச்சிரவாகென்னும் சூரன் பிள்ளையானவனெழுந்து பிதாவின் பாதங்களிற்சேவித்து, ஐயனே அபலனாகிய ஒருதூதன் சவுரியங்களையும்வலியையும் புகழ்ச்சியாகப் பேசுவதை அகன்றமண்டலாதிஸ்வரனாகிய தேவரீர் காதுகொடுத்துக் கேட்கக்கூடுமோ அதைநினைக்கத்தான் போகுமோ அவனெவ்வளவு மனிதன் அவன்புயவலி எவ்வளவு நிமைப்போது மனம்பொறுத் திவ்விடத்திலிருப்பீராகில், அடியேன் வேகமாகப்போய் அந்தத்தூதன் ஆணவத்தை யடக்கிப்பிடித்துக் கட்டிக்கொண்டுவந்து தேவரீர்முன்னம்விடக்கடவேன்இதைக்கேட்டியாய்நம்பி எனக்குச் செலவுகொடுக்கவேண்டுமென்று பலவித உறுதிகளைச்சொல்லிக்காட்டிய குமாரன் தீரமானவார்த்தைகளைக் கேட்டவுடன் ஜயசாலியாகிய சூரபதுமனுக்குப் பிள்ளையினிடத்திற் றயையுண்டாய்க் கிருபையாகப்பார்த்துக் கொதிக்கின்றபாலிற் புளாகுத்தியதைப்போலக் கோபந்தணிந்து சந்திரனைப்போல முகமண்டலம்விளங்கப் புத்திரசிகாமணியே பிதாவின்குறிப்பறிந்து தயிரியம்பேசி யெழுந்ததீரனே சமீபத்தில்வா வாவென்றழைத்துநெருங்கியஉடன்கட்டி யணைத்துக்கொண்டு முத்தமிட்டுஉன்னையொத்த சூரனிருக்கின்றபோது எனக்கென்னகுறைபாடிருக்கின்றது.

அப்பனே சீக்கிரமாகப்போய் நீபேசியசபதப்படிக்கு அந்தத்தூதனைப்பிடித்துக்கொண்டு வந்தென்முன்விடக் கடவாயென்று ஆசீர்வதித்து விடைகொடுத்த காலத்திற் பிதாவைச்சேவித்து சபையைவிட்டு வெளிவந்து தன்னரண்மனையிற்போய் ஆயுதச்சாலையிற்பிரவேசித்து ஒருவராலும்அசைக்கவொண்ணாத அபேத வயிரகவசத்தையெடுத்து விசாலம்பொருந்திய மார்பிலணிந்துகொண்டு வெற்றிக்குரிய வீரபட்டத்தை நெற்றியிற்கட்டிக் கரசாடுவிரல்சாடுகளைமாட்டி விஷத்தொகையலிட்டுக் கூர்மையாய் பளபளத்துவிளக்கும் அலகைப்பெற்றதாய்க் கழுகிறகுகள்சொருகித் தங்கக்கட்டுகளைப் பிகிந்திருக்குங் கொடிய பாணங்கள் நிறைந்திருக்கின்ற அம்பறாத்தூணியைமுதுகிலிறுக்கி வெற்றியைத்தருந் தும்பைமாலையையணிந்து பொன்மணிகள் இருகுதையினுங் கவித்திருக்கும் பாரித்தவில்லைத் தொழுதெடுத்துத் தோளில்மாட்டி வாள்-வேல்-சூலம்-சக்கரந்-தோமரம்-பிண்டி- பாலம் - தண்டாயுத முதலிய படைகளைச் சேகரித்துக்கொண்டு பிரமன்-விஷ்ணு-மற்றதேவர்கள் கொடுத்திருக்கின்ற தேவாஸ்திரங்களைப் பரித்து இவ்விதமாகப் போர்க்கோலத்தைப் பெற்றவனாய் வீரலட்சுமியைப் பூசித்துச் சகலவித்தைகளிலுங்கைகண்ட வீரனாகிய வச்சிரவாகுவென்னும் ராசகுமாரன் வெளிவந்தவுடன் ஜயாவிஜயபவா சத்திராதிகளாகிய யானைக்கூட்டங்களுக்குச் சிங்கத்தையொத்து வாட்டுந்திரனே அகன்றமண்டலா தீஸ்வரனாகிய சூரபதுமன்கீர்த்தியை விளக்கவந்த சவுரியபரனே ஒப்பற்ற புசபலபராக்கிரமமுள்ளகாளையேஎன்று பட்டுவர் புகழவுங்கட்டியக்காரர் எச்சரிக்கைகளைச்சொல்லி முன்னேபோகவும்சுந்தரமுள்ளகன்னியர்கள் முத்தாலங்களைச் சுழற்றிநிற்கவும், பரிசாரகர்சூழ்ந்து வெண்சாய்மரை அருகுமயிற்பிஞ்சம் ஆலவட்டங்கள் சந்திரவட்டக்குடைகள்முதலியஇராஜசின்னங்களையசைத்துவரவும் அருகுதீவட்டிகள்பிடிக்கவும், இவ்விதஆடம்பரங்களுடன் முகவாயிலுக்கருகில்வருகின்றபோது பக்கங்களிற்கைகட்டி வாய்புதைந்திருக்கின்றதூதர்களைப்பார்த்து அதிவேகமாயோடி நமதுசேனைவெள்ளங்களைச் சகலாயுதபாணிகளாய்ச் சண்டைக்குப்பிரயாணப்பட்டுப்போகும்படிக்கு இட்டுவரக்கடவீர்களென்று கட்டளையிட்ட மாத்திரத்தில்அவர்களும்மகாபாக்கியமெனத்தொழுது சேனைகளிருக்கு மிடங்களை நோக்கிப்பறந்தனர்.

அதுகாலையிற்சூரபதுமன் குமாரன்தன்னிழலைப்போலப் பிறிவின்றிச்சூழ்ந்திருக்குந் தோழர்களைப் பார்த்துக் கேட்டீர்களோ! சினேகிதர்களே? குமாரதேவன் அனுப்பியதூதனொருவன் அதிக்கிரமித்து பலகொடுமைகளைச்செய்துகொண்டிருக்கின்றன னெனத்தெரிந்து பிதாவானவர் கட்டளையிட்டிருக்கின்றபடிக்குஅவனை மடக்கிக்கொண்டு போர்கொடுத்துவென்று கட்டிக்கொண்டு வந்து என்பிதாவின் சபையில் விடும்படிக்குப்போக விருக்கின்றதால்நீங்களும்ஆயுதபாணிகளாக வாருங்கோளென்றுஇராசகுமாரன் சொன்னவார்த்தையைக் கேட்டவுடன் மனக்களிப்புடன் நீர்சண்டையைக்குறித்துப் போகும்போது நமக்கிங்கென்னகாரிய மிருக்கின்றது நாங்களுமிதோ வருகிறோமென்று தங்கள் அரண்மனைகளிலோடி வயிரகவசங்கள் முதலிய போர்க்கோலங்களைத் தரித்துக்கொண்டு சர்வாயுதபாணிகளாய்ச் சிங்கங்களைப்போல கர்ச்சித்துக்கொண்டு வேகமாய்வந்து இராசகுமாரனைச்சூழநின்றனர், உடனே சிலதூதர்களைப்பார்த்து நமக்கும்இந்தத் தோழர்களுக்கும் இரதங்களையிந்த நிமிஷத்திற் கொண்டு வரக்கடவீர்களெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் அவர்களும்வேகமாயோடிப் பாகரைக்கண்டுஇராசகுமாரன்பணித்ததைத்தெரிவித்தமாத்திரத்தில்அலைகளைப்போலத்தாவும்நடையையுடையதாய் நற்சுழிகளைவாய்ந்து பஞ்சகல்லியாணிகளாய்ச் சாமரையைப்போன்ற பிடரிமயிர் வால்களைப்பெற்றதாய்நாலுகால் களினும் இரத்தினவண்டயங்கள் கலிப்பதாய்ப் பாகன்குறிப்பின் வழியிற்போவதாய்மேககர்ச்சனையையொத்தகனைப் பைப்பெற்றிருக்கின்ற பதினாயிரம்புரவிகளை அணிபடப்பூட்டிப் பொன்வண்டில் அச்சுமச்சு- குத்துக்கால்-கொடுங்கை-கொடி-குடைமுதலிய சிங்காரங்களைப்பெற்று மணிகள்சத்திக்கும் வலியதேரை யலங்கரித்து வேகமாகத்துரத்தி வந்துஎதிரில் நிறுத்திச் சேவித்தகாலத்தில் இருபது புசங்களைப்பெற்ற வச்சிரவாகுவானவன் சிங்காசனமலையின் மீதிற் றாவுவதைப்போலப்பாய்ந்தேறி மண்டிபோட் டுட்காந்தபோது மற்ற பொன்மயமாகிய ரதங்களின்மே லிராசகுமாரனுக்குத் தோழராக விருக்கின்ற மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர்கள் முதலியபிரமுகாள் பிள்ளைகளும் பாய்ந்தேறிக்கொள்ள இராசபுத்திரன் அனுமதிப்படிக்குப் போனதூதர்கள்தெரிவித்தவுடன் யானையின்மேல்பேரிகைகளை யேற்றிப்படையெழுச்சி

யென்றறைவித்த மாத்திரத்தில் அவுணவீரர்கள் சந்தோ
ஷங்களுடன் அஸ்திரசஸ்திரவிதங்களைத் தாங்கிப்பலவெ
ள்ளங் கால்பலங்கள் வெளிப்படவும் பருவதங்களையொத
த தேரணிகள் நடக்கவும் நீலமலையைப்போன்றயானை வ
ரிசைகளும் வாயுவேகத்தினும் மேலிட்டுப்பாயும்வேகமு
ள்ள புரவிப்பந்திகளும் பிரயாணப்பட்டபோது அந்தச்
சதுரங்கவெள்ளச் சேனைகளுக் கதிபாரகவிருக்கின்றவர்க
ள சர்வாயுத பாணிகளாய்ப் போற்றிநடக்கும்போ துண்
டாகிய அதிசயக்காட்சிகளிற் சிலசொல்லக்கேட்பீராக.

பாரித்தரதங்கள் வரிசைப்பட ஓடுகின்ற பாரத்தைச்சு
மக்கப்படாமல் தேகம் நெக்குவிட்டதைப்போலவண்டில்
கள் பதிந்தோடவும் அவ்வருத்தத்தின லிரங்குவதற்கொ
ப்பாக சக்கரத்தொனிகளெழவும்நடக்கின்றதேர்களைப்பர்
வதங்களென்றெண்ணி நீருண்டமேகங்கள் அவற்றின்மீதி
றங்கி மின்னலிடிகளைப்பெருக்கிக்குமுறுகின்றஓசையைக்
கேட்டமாத்திரத்தில் மிரண்டு காத்திரதேகத்தையுடைய
கறுத்த யானைக்கூட்டங்கள் மதங்களை யிறைத்துக்கொண்
டு கிம்புரிக்கோடுகள் விளங்க வேகமாய்நடக்கவும்விழிகள்
சிவந்து பிடரிமயிரைப் பின்னிவரிசைவரிசையாக விட்டி
ருக்கின்ற குச்சுகளசைய நான்குபாதங்களினும் வண்டய
ங்கள் கலிக்கக்கவரிகளைப்போல வால்கள்வீச வேகங்கொ
ண்டு சத்துருக்கள் மனமும் விழிகளும் சுழலத்தக்கதாக
அஷ்டதிசைகளினும் பாய்ந்துலாவிவரும் புரவிக்கூட்ட
ங்கள் அலைகளைப்போலத்தாவிச்செல்லவும்கூரியஅலகை
வாய்ந்த வேலாயுதம் தங்கக்கட்டுகள்பிகிந்திருக்கின்றபரு
த்ததண்டாயுதம் சொர்னமயமாகிய சக்கரம்கேடகம் மின்
னலையொத்த வாளாயுதம் முத்தலைச்சூலம் பாரித்திருக்கி
ன்ற தனுசுதிவ்விய பாணவகைகள் எழுவாயுதம், மழுவா
யுதம், இத்தகையபடைகளைப் பரித்திருக்கின்ற அவுண
வீரர்கள் இடிகளைப்போல உரத்தவசனங்களினூற்சபதங்
களைப் பேசிக்கொண்டு பலநிறச்சட்டைகளையணிந்துஅள
வற்ற சண்டைகளில் தீரராய்த்தேவர்கள்முதலிய பலவா
ன்களைவென்று கீர்த்திபெற்றவர்கள் படைகளைச் செலுத்
துங் கிரமங்களைப் பூர்த்தியாகக் கற்றவர்கள் பாரித்திராநி
ன்ற பருவதங்கள் கால்முளைத்துப் போவதையொத்தகாத்
திரமுள்ள தேகத்தைப்பெற்றவர்கள் செவ்வானத்தைப்
போன்ற சிவந்த சிகையையுடையவர்கள்பசிய பொன்னினு
ற் செய்தவீரபட்டத்தைநெற்றியிலணிந்தவர்கள் நிரும்பா
சுரன் முதலிய இராட்சதரையொத்தவலியுடைய சத்துரு
க்கள் தேகங்களை கவளீகரமாகவிழுங்கிஉதிரத்தைப்பான
ஞ்செய்யவல்ல பிலத்தையொத்த வாயையுடையவர்கள் வீ
ரசிங்கம்போன்ற சூரத்தையும் வலியையுமுடையவர்கள்
தறியைமுறித்துப் பாகனைச்சீறும் மதயானையைநிகர்த்தந
டையைப்பெற்றவர்கள் சண்டைக்குவெளிப்படுவதாக அ
றைந்தமுரசத்தின் சத்தமானது செவிகளில்நுழைவதற்
கு முன்னம்வீராவேசங்களுடன் வாகுவலயங்கள் தெறி
க்கத்தக்கதாகப் பூரித்தோங்கும் புசத்தைப்படைத்தவர்க
ள் பிராணனிடத்திற் சற்றும்ஆசையற்ற கொடியபாதகர்
சவுரியங்களில் ஒருவனாயும் ஒப்புச்சொல்லப்படாததீரத்
தைப்பெற்றவர்கள் சண்டைகிடையாத காரணத்தினுல் பு
சங்கள் தினவெடுக்கக்கரங்களைப் பிசைந்துகொண்டுஎதி
ர்பார்த்திருக்கின்ற வீரத்தன்மையை யுடையவர்கள் இத்
தகைய பதாதிவெள்ளங்கள் சமுத்திரங்கள்புரண்டோடுவ
தைப்போல ஆர்ப்பரித்துக்கொண்டு காற்றினுங்கடுகிநடக்
கவும் இப்படிக்குப்போரைக்குறித்து ஜயவுச்சாகங்களுட
ன்போகின்ற சதுரங்கவெள்ளங்களின்தொகையையும்சொ
ல்லக்கேட்பீராக

நவரத்தினமயமாய்க் கர்ச்சனைகளைச் செய்துபூமியதிர
ஓடுகின்றதேர்கள் ஐந்நூறுவெள்ளம் வானத்திற் சஞ்சரிக்
கின்ற மேகங்களிலூறாநின்ற ஜலத்தைத்துதிக்கைகளைநீட்
டி யுறிஞ்சித் தாகசாந்திசெய்யவல்ல உன்னதமுள்ள மத
யானைகளின்தொகை ஐந்நூறுவெள்ளம் தத்தித்தாவிப்பா
யும் குதிரைப்பந்திகள் ஆயிரவெள்ளம் கொலைகளுக்கெவ்
வளவுமஞ்சாத கொடிய மனதையுடைய அவுணர்இரண்
டாயிரவெள்ளம் இத்தொகை கொண்ட சதுரங்கசேனைக
ளும் சர்வசங்காரகாலத்தில் உலகங்களை யழிக்கவெழும்ச
த்தசாகரங்களைப்போல இரைச்சலிட்டுக்கொண்டு வச்சிர
வாகுவைச்சூழ்ந்துநடக்குமுன்னிலையில்ரணபேரி-ஜயபே
ரி-வெற்றிச்சங்கம் துந்துமி சச்சரிகுடமுழாஎக்காளைசின்
னமுதலிய தோற்கருவி துளைக்கருவிமிடற்றுக்கருவிகஞ்
சக்கருவிநரம்புக்கருவியெனச்சொல்லப்பட்ட ஐவகைவா
த்தியங்களும் ஏகமாய்அண்டங்க ளெங்குஞ்செவிடுபடும்
படிக்குத்தாம்தாமென் றுமுழங்கஇவ்விதஆடம்பரங்களு
டன்மந்திரிபிரதானிசேனபதிகள் பிள்ளைகள்சூழ்ந்துபோ
ற்ற நட்சத்திரக்கூட்ட மத்தியிற் பூரண சந்திரனுதயஞ்
செய்திருப்பதைப்போலப் பருவதாகிருதியாய்த் திரண்டி
ருண்டு வலிபெற்றிருக்கின்ற இருபதுபுசங்களைப் படைத்
திராநின்ற இராசகுமாரன் நவரத்தினமயமாகிய தேரின்
மேற்போகின்றபொழுது வீரசிங்கங்களையொத்த வலியும்
வீரமுமுடைய அவுணவீரர் நடையினேசையும் மேகமு
ழக்கங்களைப்போலப்பேசும் ஆரவாரங்களும் மதயானைக
ள்வீறிடுஞ் சத்தங்களும் நவரத்தினமயமாகிய தேரணிக
ளோடும்போ துண்டாகிய அதிர்ச்சியும் அலைகளைப்போல
த்தாவும் வேகமுள்ள குதிரைப்பந்திகளின் கனைப்பினே
சையும் ஏகமாகக்கூடிப் பேரோசையைக்காட்டிச் சத்த
சாகரங்களின் முழக்கத்தையடக்கி மேலிடவும் இத்தகை
யஆரவாரங்களுடன் சதுரங்கசேனைகளும் நடக்கும்போ
தெழுந்த தூளிபடலமானது மேலிட்டுப் பொன்னுலகை
மண்ணுலகமாக்கியும், கடல்களிற்படிந்து அலைகளையடக்
கிச் சேறுக்கியும் அஷ்டதிசைகளினும்பரந்து மயக்கியும்
சூரியன்காந்தியையடக்கியும் பூவட்டமுற்றினும்நிறைந்து
சீவராசிகளனைத்தையும் பிரமிக்கச்செய்தும் இப்பாடுகள்
படுத்தி வீறியகாலத்திற் பலசிறப்புகளைக்கொண்டு பாரித்
திராநின்ற இரதபந்திகளின்மீதிற் கட்டியிருக்கின்ற துவ
சங்களானவை அசையுந்தோறுந் திசைகளெங்கும் நிழலை
ப்பரப்பியிருக்கின்றதைப்பார்க்குமிடத்திற் குமாரதேவர்
விடுத்த ரணரங்கசூரனுகிய வீரவாகுதேவர் புயவன்மை
களையும் வீரபராக்கிரமங்களையுங்கண்டு வானதேவதை
யானது அற்புதமடைந்து சபாசென்றுமெச்சிச் சிரக்கம்
பஞ்செய்வதையொப்பக் காட்டியது.

அந்தக்காலத்திற்சூரபதுமன் மனதுக்கினிய குமாரனு
கிய வச்சிரவாகு வீற்றிருந்துபோகின்ற சொர்னமயமாகி
ய இரதத்தின்மீதிற் பேய்க்கூட்டங்கள் நின்று ஒன்றுட
னொன்றுபோராடவும்-பருந்து-கழுகு-காக்கை-ஆந்தைமு
தலிய கொடியபட்சிகள் வட்டமிட்டும் தேரின்மீதுநின்று
கூவவும் இவையன்றியும் உதட்டைக்கடித்து விழிகளிற்
றீயெழக்கோபித்து வீராவேசத்துடன் போகின்ற இரா
சகுமாரன் கரத்திற்பற்றியிருந்த பாரித்தவில்லானது தற்

செயலாய்த் தெறித்துவிழவும் சிறந்தபடைகள் நிறைந்து முதுகில் றுக்கியிருந்த அம்பறாத்தூணியானது அற்றுக் குப்புறவிழவும் இடப்புறத்தோள்களும் விழிகளும்படபடெனத்துடிக்கவும் இரதத்தின்மேல் நாட்டியிருக்கின்ற கொடிகள் துண்டித்துப் பூமியிற்புரளவும் மேகசஞ்சாரமற்று வெளுத்திருக்கின்ற வானத்திலிருந்துசிவந்த நீர்த்துளிகள் சிதறியிடிக்கவும் இத்தகையபற்பல துர்ச்சகுனங்கள் காட்டியபோது சூரகுமாரன் அவற்றினைஎவ்வளவுஞ் சட்டைபண்ணாமற் கோபத்தையேமேலிட்டுத்தான்குறித்துவந்தபடிக்கு முடித்துப்போகுங் கருத்தனாய்த் தன்னிரதத்தில்நிறுத்தியிருக்கின்ற வலியவிற்களினொன்றைக்கரத்திற்கொண்டு அம்புக்கூடை முதுகில் றுக்கிஉயுத்தசன்னத்தனாய்ச் சதுரங்கசேனைகளும் பிரளயகாலத்தெழும் பிரசண்டவாயுவைப்போலக் குமுறிக்கொண்டு சூழ்ந்துவரத்தக்கதாகத் துரிதமாய் நடந்துவெற்றிவேலாயுதமூர்த்தியினது தூதன் வீறியிருக்கின்ற சமர்க்களத்தைச்சேரப்போகுமுன்னிலையில் தேன்களைப்பெருக்கிப் பரிமளித்திருக்கும் வெற்றிமாலையணிந்த வச்சிரவாகு நால்வகைச்சேனா சமுத்திரங்களுடன் மேல்நோக்கிவருவதை வீரவாகுதேவர்கண்டு மிகுத்த வைபவக்காட்சியுடன்வருகின்றவன் இந்திரஞாலத்தேரைப்பெற்றிருக்கின்ற சூரபதுமனைக்காணவில்லை, அவன் குமாரர்களிலொருவனாக விருக்கவேண்டும் ஆயினுமென்ன அயிஸ்வரியகர்வத்தினால்முன்பின்யோசியாமற் சண்டை கொடுக்கஎதிர்த்துவருகின்றவனையும் சேனைப்பெருக்கையும்சின்னபின்னப்படக் கொன்று பகைவரைக்கடந்துசூரியன் அஸ்தமானகிரியிற்போகுமுன்னம் எமதுகர்த்தனாகியசரவணபவன்திருவடிகளைத் தரிசிக்கப்போவேனெனத் தீர்மானித்துக்கொண்டவராய் அப்படிக்கு இந்தவிராச குமாரனையும் அவுணவீரரையுங் கண்டதுண்டப்படவாட்டி அந்திபடுவதற்கு முந்தி வெற்றிபெற்று மீளாமற்போவேனாயின் ஆறுமுகேசன்அடியனாக மாட்டேனென்று பிரதிக்கினை செய்துகொண்டு வெற்றிவேலாயுதப் பெருமாளினது செந்தாமரைமலரையொத்த திவ்விய சரணாரவிந்தங்களைத் தியானித்துத் திக்குநோக்கிப் போற்றி உயுத்தசன்னத்தனாய் உருத்துச் சத்தசாகரங்களுங்கொதிப்பெடுத் தடங்கவும், சத்தகுலாசலங்களும் கிடுகிடாய்க்கவுங் அண்டப்பித்திகையும் திசைகளும் பூமி ஆகாயமெங்குந் தத்தளித்துக் கலங்கவும்வெற்றிமாலை புரண்டுக்கொண்டிருக்கின்ற புசங்களைத்தட்டிஉலகங்களெங்கும் இதென்ன உற்பாதமென்று திகிற்பட்டு வாடும்படிக்குச் சிருங்கநாதம் அட்டகாசங்களைச் செய்து வலியகரங்களைப் பிசைந்துகொண்டு இராசகுமாரன் வரவுக் கெதிர்பார்த்திருக்கின்ற வேளையில்அப்பேரொலியானது பெருத்துச் செவிகளிற்பட்ட மாத்திரத்தில் நவரத்தினமயமாய்ப் பருவதங்களைப்போலோங்கியிராநின்றதேரணிகளின்மீதில் வீற்றிருக்கின்ற சூரர்களுந் திசைக்களிறுகளை யொப்பாகப்பாரித்து வலிபெற்றிருக்கின்றமதயானைகளின்மீ தேறிவந்த வீரர்களும் வாயுவேகத்தினும் மனோவேகத்தினும் மேலிட்டுத்தாவவல்ல மல்லகதி மயூரகதி முதலிய சிறந்தநடைகளைவாய்ந்த புரவிக் கூட்டங்களின்மீது வீற்றிருந்து தங்களினத்தாரைக்கொன்ற பழிகளைத்தீர்த்துக்கொள்ள நினைந்து விரங்களைப்பேசிவந்த சூரர்களும் சகலாயுதபாணிகளாய்த் தமிரியவுச்சாகங்களுடன் கொல்லுவோம் வெட்டுவோம் குத்துவோமென்றுபற்பல திரங்களைப் பேசிக்கொண்டு விருஷபங்களைப்போலப் பாதங்களைப் பெயர்த்துவைத்து நடக்கின்றசேனைகளும்இடியின்முழக்கத்தைக்கேட்ட சர்ப்பக்கூட்டங்களைப்போலத் திடுக்கிட்டு நடுநடுங்கி மனந்தாபரியாமற் கைகால்களுதரலெடுத்துச் சரீரமெங்கும் வியர்க்கப் பிரமைகொண்டவர்களாய்ஒருவரையொருவர்பார்த்துஇதனைப்பேசுகின்றனர்.

சருவசங்காரகாலத்தில் அண்டரண்ட புவனங்களையும் அடக்கி அதிலடங்கியிருந்த எறும்புமுதல் யானை யீறாகச் சொல்லா நின்ற எண்பத்து நான்கு நூறாயிர சீவபேதங்களையும் நாசஞ் செய்து நித்தியானந்த சுகத்திற் சிலகாலங் களித்திருக்கும் படியாய்க் கிருபையுற்றஉருத்திரமூர்த்தியானவர் கர்ச்சிக்கின்ற சத்தமோ அல்லது அக்காலத்தி லெழுந் துலகங்களை யழிக்கும் பெரும்புறக் கடலாதிய சாகரங்களின் ஒலியோ பிரசண்ட மாருதத்தின் முழக்கமோ அண்டங்க ளனைத்தும் இடிந் ததிறற் பெருத்தசத்தமோ இப்போதுநாம்கேட்ட தெனத் தத்தளித்து யாதுந் தோற்றாமல் மயங்குகின்றபோது போரைவிரும்பி யட்டகாசஞ் செய்த வீரவாகுதேவர் முழக்கமானது பரிமளபுஷ்பமாலை புரளும் புயாசலங்களைப்பெற்ற வச்சிர வாகுவினது இருபதுசெவிகளினும் சோனையிடிகளைப்போல வீறிநுழைந்த மாத்திரத்தில் மனம் நடுக்குற்றுத் தியங்கி இதனைஎண்ணுவ தாயினான், ஈரேழுபதினா லுலகங்களினும் இதுவரையினும் இத்தகையபேரொலி யுண்டாயதைக் கேட்டதில்லை இப்படிக்கொத்த சத்த முண்டாகிய தற்குக் காரணமென்னமோ தெரிய வில்லையே யென்று சங்கையுற்று பக்கங்களிற் கைகட்டி நிற்கின்ற சில தூதரைப் பார்த்து இப்போது முழங்கிய சத்தமுண்டாகியகாரணத்தைத்தெரிந்துஅதிசீக்கிரத்தில் வந்து அறிவிக்கக் கடவீர்களென்று கட்டளையிட்டுத் தூண்டுமுன்னிலையில் தன்தேரைச்செலுத்தும் பாகனாகிய விஜயனென்பவன் கடிதினெழுந்து சேவித்துமகாராசகுமாரனே! யிதனைக்கேட்டருள்க. அடியேன் சுலபத்தொழிலைச்செய்பவனென்று நினைந்துநான்சொல்லுங் காரணத்தைத்தீர்க்காலோசனை செய்யாமல் இகழ்ந்துவிடவேண்டாம் இதனுண்மையைச் சற்றுநேரத்தில் தேவரீர் அறியப்போகிறீர் அதென்னவெனில் அளவற்ற சேனாசமுத்திரஞ்சூழத்தக்கதாக நீர்சண்டைகொடுக்கவருவதைப்பார்த்து இந்தச்சிறந்த பட்டணமழிவதாகப் பாலசுப்பிரமணியன்விடுத்த தூதனானவன் போரைவிரும்பி அளவிறந்தவெள்ளக்கணக்கில் வருகின்ற வீரர்களைக் கிஞ்சித்தும் மதியாமற் கொக்கரித்த சத்தமாகும் இப்போதெழுந்தஓசையானது இதுவேயிப்படிக்கிருக்குமாகில் அந்தவீரவாகுவினது புயவன்மைகளைச்சொல்லவும் வேண்டுமோ? அதைநினைந்து மேல்நடக்கவேண்டிய காரணங்களைத் தேடுவீரென்று மதியூகியாகியதன்சாரதிபேசியநீதியானதுசெவிகளிற்புகுமுன்னம்வடவாமுகாக்கினியைப்போலக்கோபித்து விழிகளில் அக்கினிப்பொறிகள்சிதறவும் வாயிற்புகையும் அனலுமெழ அண்டங்களதிர நகைத்துச்சுவாலையெழப் பெருமூச்செறிந்து சீறி ஓ! பாசனே? என்னசொன்னாய் என்சவுரியங்களையும் புயவன்மைகளையும் அளவற்றபோர் முன்னிலையிற் கண்டிருந்தும் தெரியாதவர்களைப்போல ஓர்பாலகன் செலுத்தியதூதன் பெருமிதங்களை முயற்சியாகக் காட்டவந்தனையிதோபார் நான்போய்க்கணப்போதில் அவன்வீரத்தையும் கர்வத்தையும் என்புய

வன்மையினு லடக்கிக் கைப்பிடியாகப் பற்றி யிருபுயங்க
ளுஞ்சேரப் பாசத்தினு லிறுகக்கட்டிக்கொண்டுபோய் ஆ
யிரத்தெட் டண்டங்களுக்கும் அதிபனுய்த் தேவர்களைய
டிமையாகப்படைத்த பிதாவின் சந்நிதானத்தில்விட்டு அ
வர்களித்து அவனுக்குத்தக்க தண்டனையைச்செய்யப்பா
ர்ப்பேன் இதனைச்சீக்கிரத்தில் காணப்போகிருய்இதுசத்
தியமாகிய வசனமென்று சொல்லிக்கொண்டிருக்கிறபோ
து முன்னணியிற்சென்ற அவுணவீரர்கள்தங்கள்கட்டளை
களுக் கடங்கியிருக்கின்ற நால்வகைச்சேனைகளையும்பதும
யூகம் சகடயூகம் காருடயூகம் இவ்வரிசைப்படிக்குஅணி
வகுத்து உயுத்தசன்னத்தராய் ஆலகாலவிஷத்தைப்போ
லக் கொதித்துச் சீறித்தங்களுக்கெதிரில்தமதிரண்டுபாத
ங்களும் புசங்களும் கரங்களும் சேனைகளாகவும் படைக
ளாகவுங்கொண்டு வீரசிங்கத்தைப்போல லருக்கொண்டு
நிற்கின்ற முருகப்பெருமாள் தூதனுகிய வீராதிவீரனைக்
கடலைப்போல இரைச்சலிட்டுக்கொண்டுவந்து நால்வகைச்
சேனைகளும்வளைந்து வீராவேசங்களினுற் கொக்கரித்து
ச்சில அவுணர் தங்கள் கரங்களிற் பற்றியிருக்கின்றவலிய
விற்களைவளைத்து நாணேற்றித்திக்குகளதிரக் குணத்தொ
னிசெய்து குரூரமாகிய அர்த்தசந்திரபாணமுதலியகணை
களையமோகமாகக் கரவேகமாய்ப் பிரயோகித்தமாத்திரத்
தில் அப்படைகளிரைந்து புகைந்துதீப்பொறிகளையிறை
த்துக் குறுகுறென்னும்ஓசையைக்காட்டிப்பலதிசையினு
ம் வேகமாய்வரவும்சிலவீரர்கோபித்துத் தங்கள்கரங்களி
ற் பற்றியிருக்கும் முசலம்,குந்தம்,கப்பணம் இவற்றினைக்
குறிகொண்டுசெலுத்தவும், சிலர்பாரித்திராநின்றதண்டா
யுதங்களைச் சுழற்றியெறியவும், சிலர்சூலாயுதங்களைமார்பு
க்கிலக்காகக்கடாவவும், சிலர்பிண்டிபாலம் மழுவாயுதங்க
ளைவிட் டார்ப்பரிக்கவும், சிலர்நிணங்களைப்பூசிவிளங்கும்
அலகையுடைய வேல்களைறிவ்வு றிவ்வென்றெறியவும், சி
லர் சக்கரங்களைக் கரகரெனச் சுழற்றிவிடவும், இவ்விதங்
களாக விஷத்தைப்போல உலகங்களுக்குக்கொடுமைகளை
ச்செய்துவரும் பாதகராகிய விராட்சதசேனைகள் மிகுத்
த கோபங்களுடன் செலுத்திய ஆயுதவிதங்களனைத்தும்
சீறிக்கொண்டுவந்து பிரமனை நெடுநாள்சிறையில்வைத்த
சுப்பிரமணியக்கடவுள் தூதனுன வீரவாகுதேவருடைய
அனலையொத்த திருமேனியிற்ருக்கிய மாத்திரத்திற் சரீ
ரமுற்றும் உதிரம்பீரிட்டு அந்திவானத்தைப்போலச்சிவ
ந்து காட்டவும், மேலும்உதயகாலத்தில் ஒளிமழுங்கிவட்
டமாய்க் கிழக்குத்திசையிலெழுந்த சூரியபிம்பத்தினிடத்
திற் கொஞ்சங் கொஞ்சமா யுண்டாகுங் கிரணங்க
ளைநிகர்த்தும் விளங்கியகாலத்தில்எமதையனுகிய வீரவா
குதேவருக்கு அதிககோபம் பிரவேசித்துமான்கூட்டமத்
தியிற் சடுதியிலொரு வேங்கையானது பாய்ந்தகாலத்தில்
மதிகெட்டழிவதைப்போல இராட்சதச்சேனைகளைவளைத்
துக்கொண்டு சின்னபின்னப்படக் கண்டிக்கத் தொடங்கி
னுர்.

அதெப்படி யென்ருல் கோடிகோடிக் கணக்கில் சூரர்
களாகிய சத்துருக்களினது சிவந்து விளங்குஞ் சிகைகளை
ப்பற்றிக் கிறுகிறெனச்சுழற்றிப் பூமியில்மாறியும்பருவத
ங்களில் மோதியும், திக்குகளில்வீசியும்இப்படிக்குநிமை
ப்போதிற் கணக்கிறந்த படைகளைக்கொன்றும்வீறிமேல்
வருகின்ற சரங்கள் எறியாயுதங்கள் முதலானவைகளை நீ
ண்டகரங்களினுற்பற்றி அக்கினியெழும்பும்படிக்குப் பி

சைந்து துகள்படவூதியும்,ஓவென்றலறச்சிலராட்சதரை ம
ந்தரகிரிபோன்ற பாதங்களினுற் பூமியிற்றேய்த்தும்வண்
டில்-அச்சு-மச்சு-குத்துக்கால்-கொடுங்கை முதலியவைகளி
னுற் சோடித்திருக்கின்ற சித்திரத்தேர்களை வாரிவாரி அ
ண்டத்துக் கப்புறத்தெறிந்தும் மும்மதங்களை யாற்றைப்
போலொழுகும்பருவதாகிருதியாகிய யானைக்கூட்டங்கள
ளவற்றதைச் சேர்த்துத் துதிக்கைகளைப்பற்றி ஒன்றுட
னென்றைமோதிக் கடலினிடத் தெறிந்தும் அலைகளைப்
போலத் தத்தித்தாவிப்பாயும் புரவிக்கூட்டங்களை யணி
யணியாய்ப் பாதங்களினுலுதைத்துத்தள்ளியும். சிலவற்
றைவாரி யிராட்சதவெள்ளங்களின்மீதுகடாவித் துள்ளத்
துள்ளக்கொன்றும் நால்வகைச்சேனைகளிற் சிலவற்றைப்
பாதங்களினுலெற்றிப் பெரும்புறக்கடலில்விழுந்து மூழ்
கச் செய்தும் சிலஅவுணர்களை யிருகால்களையும்பற்றிப்பி
ளந்தெறிந்தும் சிலரைப் பாதங்களினுலதுக்கிக்குயவன் ம
ண்ணைமிதிப்பதைப்போல உதிரமாம்சங்களேகமாய்க் கு
ழம்பத்துவைத்தும் சிலரைத் துள்ளித்துள்ளிவிழச் சிரங்
களைக்கிள்ளிப் பந்தைப்போலவானத்திலெறிந்தும்சிலரை
மந்தரம்போன்ற புசங்களினுற்ருக்கிப்பனையைப்போலமு
றிந்து விழும்படிக்குத் தள்ளியும் சிலரைப்பற்றிச் சம்பா
த்தாளறைவதைப்போலப் பக்கங்களிலிருக்கின்ற கோபு
ரங்களிலடித்துக் குப்பல்குப்பலாகப்போட்டும் சிலரைத்
துடிக்கத்துடிக்க மிதித்துங் கோபந்தணியாமற்பக்கத்தில்
வானத்தையளாவித் தழைத்திருக்கின்ற மரங்களைப்பிடுங்
டுக்கொண்டு கிறுகிறென வலசாரியிடசாரியாகச்சுழற்றிச்
சாடும்போது கரங்கள்வேறு சிரங்கள்வேறுதலைகள்வேறு
வேருய் விழுந்துருளக்கொன்றும் சிலரைபூமியிற்குப்புற
விழ உதைத்துத்தள்ளியுங் கோபமாருமல்இரதகஜதுரக
பதாதிகளைக் கோடிகோடியாக ஒன்றின்மேலொன்றுவிழு
ந்து சாகும்படிக்குக் கைகளினுற்குத்திக் கிடத்தியும் பரு
வதசிகரங்களின்மீது சிங்கம் பாய்வதைப்போலச்சிரமலை
களிற்ருவி அவ்விடங்களிற் பதுங்கியிருந்தஇராட்சதரை
ஓரறையினுற் பூமியைக்கவ்விக்கொள்ளத் தாக்கியும் சிலர்
பற்களுதிரவும் சிலர்விழிகள் தெறிக்கவும்சிலர் வாய்பிளக்
கவும் சிலர்மார்புகிழியவும்சிலர்மண்டைதிறந்து மூளைதெ
றிக்கவும் சிலர்கபோலம் நெரியவும் சிலர்வயிறுபீறுண்டு
குடல்கள்சரியவும் இவ்விதங்களாகச் சின்னபின்னப்படச்
சாடிவரும்போது சூரபதுமன்புத்திரனுக்குப் படைத்து
ணையாகச் சூழ்ந்துவந்த இரதங்களனைத்தும்வண்டில்வே
று அச்சுவேறு மச்சுவேறுபீடம்வேறுகுத்துக்கால்வேறு
கொடுங்கைவேறு கொடிகள்வேறு குடைகள்வேறுவேரு
கவுருளவும் அவற்றிற்பூண்டிருக்கின்றபுரவிகள்சாரதிகள்
கண்டதுண்டப்பட்டழிந்துபோகவும் யானைப்பந்திகள்சித
றி முகபடாமற்றும் மத்தகம்பிளந்தும் துதிக்கை துணிந்
தும் தந்தங்கள் முறிந்தும் பற்கள்கொட்டுண்டும் உரலை
யொத்த கால்கள் வெட்டுண்டும் வால்கள்சிதறியும் பாகனு
ருண்டும் இவ்வண்ணமாக மாளவும் புரவிக்கூட்டங்கள்சி
தைந்தும் இரத்தினமயமாக விருக்கின்றமுகவணிகள்கடி
வாளங்கள் நுறுங்கியும் பிடறிமயிரலையத் தலைகள்அறுப
ட்டும் பட்டினுலுஞ் சரிகையினுலுஞ் சோடித்தணிந்திரு
க்கின்ற சீனிகளுடன் முதுகுகள்கிழிந்தும் இருபாரிசங்க
ளினுந் தொங்கவிட்டிருக்கின்ற கவரிகள்திசைகளிலிறை
ந்தும் பொன்னினுற்செய்த வண்டையங்கள்சத்திக்கும் கா
ல்கள்தறிந்தும் இவ்விதங்களில்மாண்டும் சிவந்தசிகையை

யுடைய விராட்சதர்கள் சிரங்கள்வெட்டுண்டும் பற்கள்தெ
றித்தும் வாய்பிளந்தும் பருவதங்கள்போன்ற புசங்கள் ச
ரிந்தும் பதக்கங்கள் சரப்பளிகள்புரளும்மார்பு திறந்தும்
வயிறுசரிந்தும் கடகங்களணிந்த கரங்களொடிந்தும் வீர
கண்டைகலிக்குங் கால்களற்றும் துடைகள்முறிந்தும் இ
வ்விதமாகக் களமெங்கும் மாண்டுருளவும் இப்படிக்குவீ
ரவாகுதேவர் காட்டழலைப்போலவும் சுழல்காற்றை யொ
த்தும் வளைந்துவளைந்து சாடுகின்ற தருணத்தில்அளவற்
றவெள்ளம் இரதகசதுரகபதாதிகள் சின்னபின்னப்பட்டு
மாண்டதுபோக நின்ற சில ராட்சதர்கள் தாபரிக்க மாட்
டாமல் நாலுமூலைகளினு மிறைந்து ஓடியொளித்தனர்.

அக்காலத்திற் சண்டையுமொடுங்கியது. இதனால்ஆயி
ரத்தெட்டண்டங்களைவென்று தேவர்கள்முதலானவர்களை
ஏவல்கொண்ட சூரபதுமன்பெற்றிருந்த கீர்த்திகளும்மங்
கிப்போகும்படிக்குச் சேனாசமுத்திரங்கள்முற்றும் பட்ட
பாட்டையுந் தூதன்ஜயவுச்சாகத்துடன் நிற்பதையுஞ்சூர
பதுமன் குமாரனுக்குச் சக்கிரரட்சகராகவந்த தோழர்க
ள்கண்டு அம்மம்ம! இதென்ன அதிசயமாக விருக்கின்ற
து. ஒரு நிமைப்போதிற் சமுத்திரத்தைப்போல இரைந்
து சூழ்ந்திருந்த நால்வகைச்சேனைகளையும் ஒருவன் யா
தொரு துணையுமில்லாமல்ஆயுதங்களைக்கரத்திலெடாமல்
மராமரமொன்றினுற் கொன்றனன்.வீரனென்றுசொல்லு
வது இவனுக்கேதகும், ஆனால்தான்என்னவாச்சுதுநம்மு
டைய விற்சாதுரியங்களினால் இவன் கருவத்தையடக்கிக்
கட்டிக்கொண்டுவந்து இராஜபுத்திரனாகிய நமதுதோழ
னுக்கு வெகுமதியாகக்கொடுப்போமென்றுசபதங்கள்பே
சி ஓடுகின்றசேனைகளைமடக்கிப் பயப்படாதீர்கள், இதோ
சற்றுநேரத்தில் நமதுபகைவனைக் கண்டதுண்டப்படக்
கொல்லுவோம் நில்லுங்கோள்நில்லுங்கோளென்று தயிரி
யங்களைச் சொல்லிக்கூவும்போது மிகுந்திருக்கின்ற சது
ரங்கசேனைகளும் திரும்பி புசங்களைத் தட்டிக்கொண்டு
சிருங்கநாதங்கள் அட்டகாசங்களைச்செய்து தூதனைவளை
ந்து சாடவேண்டுமென்கிற வயிரத்தினால் மாரிகாலத்தில்
நதியானது பெருகுவதைப்போல ஏகமாகக்கூடிக்கொக்க
ரித்துக்கொண்டு வந்து இராசகுமாரன் தோழனாக்கலந்
து சருவசங்காரகாலத்தில் மகம்மேருகிரியைச் சமுத்திர
வெள்ளமானது சூழ்ந்தொலிப்பதுபோல மதயானையைப்
போல கெம்பீரமாய் நிற்கின்றவீரவாகுதேவனைவளைத்து
க்கொண்டு பாரித்தவிற்களை வட்டாகாரமாகவளைத்து நா
ணேற்றி பூமியதிரத்தக்கதாகக் குணத்தொனிசெய்துதே
வாஸ்திரமுதலிய கொடியபாணங்களைக் கார்காலத்திற்சத்
தமேகங்களும் பருவதத்தின்மீதுபெய்வதுக்கொப்பாகஅ
பரிமிதமாகச் சிலர் பிரயோகிக்கவும்,வேல்-சூலம்-கப்பண
ம்-பிண்டி-பாலம்-சக்கரம்- முசலம் முதலாகிய ஆயுதங்க
ளைப் பலர்வேகமாய்வீசவும், இவ்விதங்களாய்க் கொடிய
போரைச் செய்கின்றதைக்கண்டு வீரவாகுதேவர்சிறித்த
மது கரத்தில் காலதண்டத்தைப்போலவிளங்குமராமர
த்தைக் கரகரெனச்சுழற்றி யிடசாரிவலசாரியாகத்திரிந்து
எதிர்த்துவந்து போர்செய்கின்ற இராட்சதகுமாரர்கள்அ
வர்களுடன்வந்த சேனாசமுத்திரங்களையும்வளைத்துக்கொ
ண்டு சாடும்போது சித்திரங்களொழுகிநிராகின்ற மத்தக
ங்கள்பிளந்தும் கற்றூணைப்போலப் பாரித்திராநின்றகால்
களற்றும் பனையைப்போ லசைந்திருக்கிற துதிக்கைகள்
வெட்டுண்டும் தந்தங்கள்முறிந்தும் முறத்தைப்போல அ
சைந்திருக்கின்றசெவிகள்பறந்தும் இவ்விதமாகயானைக்கூ
ட்டங்கள்மாண்டும் செம்பஞ்சூட்டிச் சாமரைகளைப்போ
லவீசும் வால்கள்தறிந்தும் நவரத்தினமயமாகிய வண்டய
ங்களணிந்தகால்கள்முறிந்தும் பின்னலிட்டுக்குச்சுகள்தொ
ங்கும், பிடரிமயிரையுடைய கழுத்துகள்வெட்டுண்டும் இ
வ்விதமாகக் குதிரைப்பந்திகள் அதப்பட்டும், தட்டுகுலை
ந்து மொட்டழிந்து அச்சுமுறிந்து வண்டிலுருண்டுமச்சு
கள் பறந்துகொடிகுடைமுதலிய சிங்காரங்கள் மங்கியும்
சாரதிகள் குதிரைகள் சிதைந்தும் இவ்விதமாகத் தேர்கள்
சின்னபின்னப்பட்டும் குதையோடுகுதை சேரவளைந்துச
ரவருஷங்களைப் பெய்யுந் தனுசுகள்முறிந்தும்பிரயோகித்
த ஆயுதங்களதப்பட்டும் சிரங்கள்நெரிந்தும் மார்பு பிளந்
தும் வயிறுகிழிந்தும் சதைகள்சரிந்தும் கொடுமைபேசி
யவாய்கிழிந்தும் இப்படிக்கு இராட்சதவீரர்கள் மடிந்த
னர்.

இக்கோலமாய் நால்வகைச் சேனைகளும், அதப்பட்
டுப்போனதை வச்சிரவாகுவினது தோழரான பாலகுமா
ரர்கள்கண்டு உருத்திரா காரமாய்க் கோபித்துத்தேர்களை
முடுக்கிக்கொண்டு வந்து முன்பின்பாராமல்பாரித்தவிற்க
ளை வளைத்துக் குணத்தொனிகாட்டிக் குரூரமாகியபாண
ங்களைச் சோனைமாரியைப்போலச் செலுத்துகின்ற காலை
யில் அப்படைகள் வெளிப்பட்டவுடன் அனலையும்புகை
யையும் வீசிக்கொண்டு கோடையிடிகளைப்போலக்குமுறி
ப்பற்பல கொடுமைகளைக்காட்டி மேலிட்டு வருவதை வீ
ரவாகு தேவர்கண்டு வடவாமுகாக்கினியைப்போலக் கோ
பித்துக்கரத்திற்பற்றியிருந்த மராமரத்தைச்சுழற்றி மோ
தியகாலத்தில் அதிக உக்கிரத்தைக்காட்டிவந்தபாணங்கள
னைத்தும் துகள்பட்டுப் பறக்கவும், அவற்றினைச்செலுத்தி
ய பாலகுமாரர்கள் கரங்க ளற்றும் தோள்கள்சரிந்தும்வீ
ரபட்டமணிந்த நெற்றிகள் பிளந்தும் சிரங்களற்றும் நாசி
கள்துணிந்தும் புஷ்பமாலைகள் புரளும் மார்புகிழிந்தும்
வீரகண்டை யணிந்திருந்த கால்க ளொடிந்தும் தாங்க
ள்பெற்றிருந்த வரப்பேறுக ளழிந்தும் வலியும் வீரமும
டங்கி மங்கும் படிக்குச் சாடியும் இஃதன்றியிற் சி
லரை வாயுரப்பினாற்கொன்றும் சிலரைக்குத்தினால்மா
ய்த்தும் வெறித்தபார்வையினாற்சிலரைவாட்டியும் சிலர்உ
தைத்துக்கொண்டு சாகும்படிக்குரப்பியும் இவையன்றியு
ம் பலவீரரையும் யானைகுதிரைகளை கரங்களினால்வாரிவா
ரி மேகங்கள் சஞ்சரித்திருக்கின்ற வானவெல்லையினும்ம
கரமச்சங்கள் சஞ்சரிக்கின்ற பெரும்புறக்கடலினும் சரப
சார்த்தூலம்சிங்கம் புலி முதலியமிருகங்கள் சஞ்சரிக்கின்
ற பருவதங்களினும் ஆரண்யங்களினும் கான்யாறுகளி
னும் விழுந்துமாளும்படிக்கு வீசியும் இப்படிக்குக் கோ
லாகலப் போரைச்செய்து வருகின்றபோது இராட்சதர்பி
ராணன்களைப் பிடித்துக்கொண்டு போக வருகின்ற யம
தூதர்களிற் சிலர் சில வீரர்கள் குத்துயிருட னிரு
ப்பவர்கள் சமீபத்திற் போகுமுன்னிலையில் அவர்கள்பார்
வையின்கொடுமைக்குப் பயந்து சமீபத்தினும்போகவஞ்
சிவீரவாகுதேவரைவணங்கித்தங்கள்வருத்தங்களைமுறை
யிட்டுக் கொள்ளுபவர்களையாதரித்துபயப்படாதீர்களென
க் கையமர்த்தி வைவசுதபட்டணத்தில் நவரத்தினமயமா
கவிளங்குஞ் சபையிற் சித்திரவிசித்திரங்களாகச் சோடி
த்திருக்கின்ற சிங்காதனத்தின்மீது வீற்றிருந்து சித்திர
குத்தனென்னுஞ் சம்பிரதிகள் பூலோகத்தில்ராகின்றபிரா

ணிகள் ஆயுள் முடிவையும் அவைகள் செய்திருக்கின்ற நன்குதிங்குகளையும் படித்துப்படித்துச்சொல்லிக்கொண்டு வருவதைக்கேட்டு அதற்குத் தகுதியாகிய தண்டனைகளைக் கட்டளையிட்டுக்கொண்டு நீதியைசெலுத்திவரும்யமதருமராசன் முன்னம்விழுத்தக்கதாகக் கணக்கிறந்தகொடியமனதைப்பெற்ற இராட்சதவீரரை வாரியெறிந்தும் பலரை அவுணர்பிரானாகிய கிருதிவாசஞ்செய்யும் நகரத்திலவிழவீசினர், அதைப்பார்க்குமிடத்தில் இவர்கள்ஓரினமாதலால் பிராணேசமாய்க்கூடிக் களித்திருக்கவினைந்து சேர்த்ததைப்போற்காட்டவும், சண்டைமுகத்தில் அடியுண்டுவிழுந்துகிடக்கின்ற இராட்சதவீரர்கள் பிராணன்துடித்திருப்பதைக்கண்டு அவர்களை வீரசொர்க்கத்திற்சேர்க்கும்படிக்குத் தேவர்வருந்தி விமானங்களைக்கொண்டுவராமலும் அண்டயோனியெனநின்ற சூரியன்பிளந்துவழிவிடாமலும் ரணரங்கசூரராகவிருப்பவர் சேரவேண்டியசிறந்தபதங்களிற் கணக்கிறந்தவர்களைச்செல்லவெற்றியும் அஷ்டதிசைகளைப்போற்றியிருப்பதை நீங்கப்படாமற் பசியினாலுழன்றிருக்கின்ற திசைக்களிறுகளுக் கிரைபோடுவதைப்போலச் சிலரை அத்திசைகளில்வீசியும் சமுத்திரசலத்தையுண்டும் உதராக்கினி தணியாமல் காந்திகொண்டிருக்கும் வடவாமுகாக்கினியானது திருப்தியாகப்புசித்துக் களிக்கும்படிக்கு அதனிடத்துச்சிலரைவீசியும் இவ்விதங்களாகச் சுப்பிரமணியர் தூதனாகிய வீரவாகுதேவர் பகைவர் சின்னபின்னப்படும்படிக்குச்சாடியபோது கொக்கரித்துவந்த சேனாசமுத்திரமும் அவைகளுக்குத்தலைமைபெற்றுப் போற்றியிருந்தவீரர்களும் நிமைப்போதில் அதப்பட்டிருந்த விடந்தெரியாமல்மறைந்தகாலத்தில்தப்பிய சிலராட்சதர்கள்நடுநடுங்கி வலியற்று மானமும் நாணமுமிழந்து பயப்பிராந்தியினால் நாலுமூலைகளினும் ஓடி அஷ்டதிசைகளினும் தீவுகளினும் வானவெல்லைகளினும் ஆரண்யங்களினும் கான்யாறுகளினும் பருவதங்களினும்பதுங்கினர், இப்படிக்குமாண்டும் புறந்தந்தும் தன்சேனைகளனைத்தும்மறைந்துவெள்ளிடையாகவிருப்பதை வச்சிரவாகுகண்டு பிரமித்தவனாய் இதனையெண்ணுகின்றான். நம்முடனிரைந்துவந்த சேனைப்பெருக்கும் படைவீரர்களும் பிராணசினேகமாகவிருந்த பாலகுமாரர்களும் அதப்பட்டுக் கூப்பிட்டகுரலுக்கு ஏனென்றுசொல்ல ஒருவரையுங்காணேன் இராஜராஜ பரமேஸ்வரனுக்குப் புத்திரனாகப்பிறந்தநான் தனியனாகுங்காலமும் நேர்ந்ததே கர்த்தனேயெனக் கிலேசித்துவாடியும் இராட்சதகுலத்தி லுதித்தவனாதலால் மானமானது தூண்டவுடனே கோபம்பிரவேசித்து பற்களைக் கறகறெனக்கடித்து விழிகள்சிவந்து அனற்பொறிகளையிறைத்துப்புருவம் நெற்றியிலேற வடவையைப்போற்சீறிச் சாரதியைப்பார்த்து அதிசீக்கிரத்தில் நமதுதேரைத் துரத்திப்போய் அதோநிற்கின்றதூதன் முன்னம்விடக்கடவையெனக் கட்டளையிட்ட வசனமுடிவதன் முன்னம் சூரியன் தேரைநடத்தும் அருணனும் நாணும்படிக்குமனோவேகத்துக்கு முந்தி குதிரைகளைத்தூண்டி வீரவாகு தேவருக்கெதிரிற்கொண்டுபோய்நிறுத்தினன்.

இப்படிக்குச் சூரபதுமன் குமாரன் வீராவேசத்துடன்ஜயத்தைப்பெற்றுப்போகவினைந்து மேலிட்டுவருவதைப் புசபலபராக்கிரமசாலியாகிய தூதன்கண்டு அதிகசந்தோஷத்தையடைந்தவனாய்ப் பூமண்டலமுற்றினும் ஓரடியிலளந்த மகாவிஷ்ணுவைப்பார்க்கினும் உயர்ந்தவனென்று சொல்லும்படிக்கு அண்டமுகடானது சிரத்திற்ருக்க ஓங்கிவளர்ந்து மண்ணுலகைப் பாதங்கள்மூடவும் புயாசலங்கள் ஆகாயத்தைமறைக்கவும் கிரீடமானது அண்டகோளகையைத் தாவும்படிக்கு நிமிர்ந்துநின்று பாதங்களையசைக்குந்தோறும் அச்சுமையைத் தாங்கமாட்டாமல் ஆதிசேஷன் தன்னாயிரஞ் சிரங்களைக்கொண்டு பூமியைச்சுமந்துவாடி யிதுவென்ன அற்புதமாகவிருக்கின்றதென்று மயங்கவும் பூமண்டலமானதுநெக்குவிட்டுமயேந்திரபட்டணமெங்கும் இடிபட்டுப் பாதலத்திற்சேரவும் அண்டகடாகங்குலுங்கவும் ஆர்ப்பரித்துத் திரிபுரங்களையெரித்த சிவபிரானுக்குப் பாணமாகவும்தன்னையவமதித்த இரணியன் வரமுயற்சிகளையும் புயவன்மைகளையும்ஆணவத்தையும் உதிரத்தையும் பிராணனையுங் கிரகித்து உலகஉபாதியைத்தீர்க்கும்பொருட்டுக் கற்கம்பத்தில் முளைத்தெழுந்த நாரசிங்கமூர்த்தியுந் திடுக்கிடும்படிக்குச்சுவாலையெழநகைத்துச் சொர்க்கமத்தியபாதலமென்னுந்திரிலோகவாசிகளும் சபாசென்றுமெச்சும் சாமர்த்தியனாகிய வீரவாகுதேவர் ஒருதரம் கர்ச்சித்தமாத்திரத்தில் அவ்வொலியையும் நகையினதிர்ச்சியையும் சூரபதுமன்குமாரனாகியவச்சிரவாகுகேட்டவுடன்திடுக்கிட்டு மனஞ்சுழலச் சற்றுநேரம் திகைத்திருந்து பத்துசிரங்களையும் அசைத்து நல்லகாரியம் எப்படிக்கிருந்தபோதினும்இவன் வீறுப்பை யடக்குவேனெனப்பேசி அக்கினிகொட்டும்படியாக விழிகளையுருட்டி விஷநாகம்போற்சீறி வடவாமுகாக்கினியைப்போலக்கொதித்து வீரனைப்பார்த்து இதனைச்சொல்லுவான்

ஓ! தூதனே? உன்புசபலபராக்கிரமத்துக்குமெச்சினேன் வீரவாகுவென்பது உனக்குத்தகும்இத்தகையசேனைவெள்ளங்களைக்கண்டும் சற்றும்அஞ்சாமல் எதிர்த்தஉன் தயிரியத்துக்கு யாவரையும் ஒப்புசொல்லக் கூடவில்லை என்கண்கள்காண இக்காலத்தில் நீசெய்தசண்டைக்குநிகராய் முன்னோர்களில் யாவரையுங் குறிக்கமாட்டேன்புவனங்களதிரக்கர்ச்சித்தது உன்வல்லபத்துக்குத் தகுமெனப்புகழ்ந்தவனாய் ஓ! வீரனே? உன்னுடனெதிர்த்துப்போராடிய ஜயசாலிகளாகிய சேனைத்தலைவரையும் ரதகசதுரகபதாதிகளின் பெருக்கையும் வென்றோமென்கிற கருவத்தைப்பெற்றிருக்கிறதாகக் காணுகின்றது, அந்தவீறுப்பைவிட்டுவிடக்கடவை யினிசிலநேரத்தில் உன்னாணவத்தையடக்கிக் கைப்பிடியாகப்பற்றி கட்டிக்கொண்டுபோய் அண்டங்களனைத்தையும்வென்ற சவுரியவானாகிய என்பிதாவின்முன்னம்விடக்கடவேன், இதைகெட்டியாய்நம்பி அதற்குத்தக்கபடி சாக்கிரதையா யிருப்பாயென்றுபேசிய வாசகங்களை வீரவாகுதேவர் கேட்டுநகைத்து ஓ! அசுரேந்திரகுமாரனே? வீண்வார்த்தையாடுவதிற் பிரயோசனமொன்றுமில்லை உன்னை ஜயித்துப்போகும்படியான முயற்சிகளைப்பார்ப்பேன் நீயும் அவ்வாறே என்னைவெற்றிபெற ஆசைகொண்டிருக்கலாம் அப்படிக்கிருக்கஉன்னைநான்கண்டிக்கிறேனென்றும்என்னைநீகட்டிக்கொண்டு போவேனென்றும் வீரங்கள்பேசுவதிற் பயனென்னை விரைவில் சண்டைக்காயுத்தப் படுவையாகில்தோற்புகெலிப்பு உடனே தெரிந்துபோகிறது அக்காலத்தில் கண்டவர்கள் இவன்வீரனென்று புகழவேண்டுமென்றுநீதிமானாகிய வீரவாகுதேவர் சொல்லிமுடிவதற்குமுன்னம்சூர

பதுமன் குமாரனாகிய வச்சிரவாகுகோபங்கொண்டு தன் கரத்திற் பற்றியிருக்கின்ற பாரித்தவில்லை வட்டாகாரமாகவளைத்துக் குணத்தொனிகாட்டி விஷம்பூசிய கூர்மையாகிய அலகைப்பெற்றுக்கழுகிறகுகள்பூண்டிருக்கும் ஆயிரங்குரூரமாகிய பாணங்களைக் கரவேகமாய்ப்பூட்டி வீரவாகுதேவர் கண்டத்துக்கும் புசங்களுக்கும் மார்புக்கும் குறிகொண்டுசெலுத்தித் திசைகளதிரும்படிக்கு ஆர்ப்பரித்தனன்.

அந்தபாணங்கள் வெளிப்பட்டவுடன் இடி-புகை-மின்னல் அனற்பொறிகள்முதலிய கொடுமைகளைக்காட்டி வடவாமுகாக்கினியைப்போலச்சீறி அதிகமகிமைகளுடன் மேலிட்டுத் தன்மேல்வருவதைக்கண்டுநீண்ட தமதுகரத்தைக்கொண்டு அவைகளனைத்தையுஞ் சேர்த்துச்சுள்ளிகளைப்போல முறித்தெறிந்து சலனமற்றுநிற்கும்போதுதானேவியபாணங்கள்முற்றும் துகள்பறந்துபோனதை வச்சிரவாகுகண்டு மனம்பொறாமல் ஆலகாலத்தைப்போலக்கோபித்துமீளவும் நாரியைச்செவ்வையாகவிறுக்கிப்பதினாயிரம் அர்த்தசந்திரபாணங்களைஒருமுனையிற்பூட்டிவீரவாகுதேவர் மார்புக்கு லக்குபார்த்துத் தூண்டியபோது அப்படைகள் சர்ப்பங்களைப்போலச்சீறிக் குறுகுறுவென்னும் ஓசையுடன் விஷங்களைக்கக்கிக்கொண்டு மேலிட்டுவேகமாய்வருவதைக் குமாரதூதன் கண்டுநகைத்து முன்னந் தன்னுடன்போர்செய்தழிந்துபோன இராட்சதவீரர்கரத்தில்நின்று களத்தில்விழுந்துகிடக்கிறபாரித்த இருப்புலக்கை ஒன்றையெடுத்துக்கொண்டு கிறுகிறென சுழற்றிக் கோட்டுப்புள்ளையடிப்பதைப்போலத் திக்குகளெங்கினுமிறைந்து போகும்படிக்குச் சாடியபோது அழிவற்றபாணங்களானவை முசலத்தினாற் சின்னபின்னப்பட்டு வியர்த்தமாய்ப்போகக்கண்ட சூரகுமாரன் முன்னினும்அதிககோபங்கொண்டுமீளவும் மிகுத்தகுரூரமாகியபதினாயிரம்பாணங்களைச்சந்தித்துத் துரிதமாகத்தூண்டி வீரன்கரத்திற்பற்றியிருந்த இருப்புலக்கையைத்துகள்கண்டு மேலும் அளவிறந்த கடூரமாகிய சரங்களை அம்புக்கூட்டிலிருந்தெடுத்துக் கோதண்டம்போன்றவலியதன்வில்லில்பூட்டிச் சுப்பிரமணியர்தூதன்சிரத்துக்கிலக்காகவும் ஆயிரம் அர்த்தசந்திரபாணங்களைக் கண்டத்துக்குக்குறிகொண்டும் ஆயிரக்கூரியகணைகளை பருவதாகிருதியாகவிருக்கின்ற புசங்களுக்குச்சரியாயும் மற்றஉறுப்புகளுக்கும் ஆயிரம் இரண்டாயிரங்கணக்கிற் கொடியபாணங்களைச்சந்தித்துக் கரவேகமாய்ஒன்றின்பின்னொன்றாகத்தாண்டியமனைப்போலப் பிராணிகளிடத்திற் சற்றுமிரக்கமற்ற சூரபதுமன் குமாரன் ஆர்ப்பரித்தவுடன் வீரவாகுதேவர் கரத்திற்பற்றியிருந்த யிருப்புலக்கைபொடிபட்டுப்போனபடியால் மேற்குறித்தபாணங்கள் சரீரமுற்றுந்தாக்கி உதிரம்பெருக்கெடுத்தோடுவதினாற் களைத்துஎமதையனாகிய வீரவாகுதேவர் நிமைப்போது மயங்கியிருந்து உடனே தெளிவுண்டாய்ச் சிங்கத்தைப்போலப்பாய்ந்து துன்மார்க்கனாகிய வச்சிரவாகுஏறியிருந்ததேரை உதைத்தமாத்திரத்தில் அதிற்பூட்டியிருந்த வேகமுள்ளகுதிரைப்பந்திகள் உடலமெங்குந்நுறுங்குண்டுபதைபதைத்துப் பூமியில்விழுந்துமடியவும் தேர்ப்பாகனுந் தலைசிதைந்துமாளவும்-வண்டில்-அச்சு-மச்சு-குத்துக்கால்- கொடுங்கை-கொடி-குடை-முதலிய உறுப்புகள்துகள்பட இரதமானது அழிந்துபோனபோது சூரகுமாரன் துரிதமாய்ச் சிங்காசனைப்போல மற்றொரு சேமத்தேரிற்பாய்ந்து மூன்றாம்பிறையை இராகுவானது வளைந்திருப்பதைப்போல வட்டமாய் நாணேறிட்டிருக்கின்ற தனுசினிடத்தில் அம்புறாத் தூணியிலுள்ள பாணங்களில் அதிகதிட்சணியமுள்ள ஆயிரங்கணைகளைத் தேடியெடுத்துப் பூட்டித் தேவர்களனைவரும்இவைகளென் செய்யுமோவென்று வருந்திக்கிலேசிக்கும்படிக்கு வீரவாகுதேவர் நெற்றிக்குக் குறிபார்த்துப் பிரயோகித்தான்.

அவ்வாளிகள் வெளிப்பட்டவுடன் சர்ப்பங்களைப்போலச்சீறிக் குமுறிக்கொண்டு-அனற்பொறிகளைக்கக்கிவெகுவுற்பாதங்களைக்காட்டிவந்துவீரன்நெற்றியிற்றாக்கியபோது அவற்றினைச் சட்டைபண்ணாமல் தட்டிப்போட்டு வேகமாய்ப்பாய்ந்து சூரபதுமன்குமாரன் ஏறியிருந்தபாரித்த இரதத்தைவாரியெடுத்துக் கிறுகிறெனச்சுழற்றிச் செண்டைப்போல ஆகாயத்தில் பறக்கும்படிக்குவீசிச் சிருங்காதஞ்செய்து மேலும் வச்சிரவாகுவுக்கு உதவியாகப் பக்கங்களில்நிற்கின்ற-யாளி-சிங்கம்-புலி- குதிரைகளைப்பூட்டி நவரத்தினமயமாய் பாரித்திருக்கும் சேமத்தேர்களனைத்தையும் திசைகளிற்பறந்துபோகும்படிக்கு உதைத்துத்தள்ளியுங் கரங்களினாலெற்றியும் இப்படிக்கு ஒன்றில்லாமல் நாசப்படுத்தி வீரசிங்கத்தைப்போலக் கர்ச்சித்துக்கொண்டு ஒருவரும் எதிரில்லாமல் ரணக்களத்தில்உலாவிக்கொண்டிருந்தனர். அக்காலத்தில் வீரவாகுதேவர்வாரிவீசியதேருடன் இராசகுமாரன் சக்கிரத்தைப்போலச்சுழன்றுகொண்டு நூறுயோசனைப்பிரமாணம்வானத்திலெழும்பித் தலைகீழாய்மறிந்து விழிகள்சுழலமிடவும் வாய்ப்புலரவும் மனந்தத்தளிக்கவும் அறிவுமயங்கிக்களைக்கவும் இப்பாடுகளைப்பட்டுவந்து தேரானது சண்முகப்பெருமாள் தூதன்முன்னம் பூமியில்விழுந்தமாத்திரத்தில்பொடிப்பொடியாய் நுறுங்கியகாலத்தில் தனக்கும்பலகாயங்கள் பட்டபோதினும் சூரகுமாரன் வீரனாதலால்தயிரியத்தைவிடாமல் பக்கத்திற்பாய்ந்து தீரனாய்நின்று தன்கரத்திற்பற்றியிருக்கின்ற பாரித்தவில்லைவளைத்துச் சண்டைகொடுக்கப் பிரயத்தினப்படுவதை நிகரற்றபுசபலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர்கண்டு கடகமணிந்திராநின்ற தமதுகரத்தைநீட்டிச் சூரன்குமாரன்கரத்திற்பற்றியிருந்த பாரித்தவில்லைபறித்துப் படீலெனமுறித்தெறிந்தபோது வச்சிரவாகுவடவையைப்போற்சீறிக்கொவ்வைக்கனியையும் அரக்கையும்போலச் சிவந்தவிழிகளிலிருந்து தீப்பொறிகளைக்கொட்டமீசைதுடிக்கக் கோபித்தவனாய்க் கைகளைமுறுக்கிக்கொண்டு புசங்களைத்தட்டிஉடைவாளைச் சரேலெனஉருவி மின்னலைப்போலவிளங்கும்படிக்குக் கரத்திற்பற்றிக்கொண்டு இடசாரிவலசாரியாகத்திரிந்து பாய்ந்து மேல்நோக்கிவருவதைச் சிங்கம்போன்றவலியுடைய வீரவாகுதேவர்பார்த்தவுடனினியிவனைவைக்கப்போகாதென்றெண்ணித் துரிதமாய்த்தமதரையிற்சொருகியிராநின்ற வாளாயுதத்தை உறையிலிருந்துருவிக்கரத்திற்கொண்டு விதிர்த்து லகுக்கொண்டுசூரகுமாரன்மீதிற்பாய்ந்தமாத்திரத்தில் வச்சிரவாகுவானவன்சீறிக்கந்துபோட்டு ஓங்கிவீரவாகுதேவர்புசத்தின்பேரில்வெட்டினான், அதைவீரன்தட்டிப்போட்டுத் தமதுவெற்றிவாளாயுதத்தைச்சுழற்றிச் சூரன்கரத்தைவாளுடன் அற்றுவிழும்படிக்குக் கண்டித்துத்தள்ளியகாலத்தில்அப்பாதகன் அதறாமல் பதறாமல் மனஞ்சஞ்சலப்படாமல்காட்

டழலைப்போலக்கோபித்துப் பருவதத்துக்கொப்பாகப்பாரித்துத் தன்கரத்திலிருக்கின்றதண்டாயுதத்தைகிறுகிறெனச்சுழற்றி வீசியபோது மணிகள்சத்திக்க அதிவேகமாய்வருவதை வீரன்கண்டு வாளைக்கொண்டு இருதுண்டமாய்ப் பூமியில்விழக்கண்டித்துத்தள்ளி மறுபடியும் அவனொன்றை எறிவதன்முன்னம் சூரபதுமன் மனதுக்கினியகுமாரனாகிய வச்சிரவாகுவினது பத்துத்தலைகளையும் பெருங்காற்றி லடியுண்ட பனங்காயைப்போலஉருளும்படிக்கு வெட்டித்தள்ளியகாலத்திற் கோடையிடியைப்போல இரைந்துகொண்டு நிலத்தில்விழுந்துருண்டு பிராணன்நீங்கி வீரசொர்க்கத்தைச்சேர்ந்தனன்.

இவ்விதமாய்க் கொடியமனதையுடைய சூரபதுமன்குமாரனாகிய வச்சிரவாகுமாண்டு ரணக்களத்தில் விழுந்ததைக்கண்டவுடன் பக்கங்களிற் பதுங்கியிருந்த இராட்சதவீரர்கள் புலம்பி இனிஇவ்விடத்தி லிருப்போமாகில் பிராணசேதம் வருமென்றுநடுநடுங்கிப்பலதிசைகளிலும் ஓடிப்போயினர். அக்காலத்தில் போர்க்களமுற்றும் பிணமலைகளாகக்குவிந்து பலகவந்தங்கள் கூத்தாடவும், பூதபைசாசங்கள் ரத்தமாம்சங்களைத் தெவிட்டவுண்டு வெறிகொண்டு நடிக்கவும், நாய்நரிகள் பிணங்களைப்பிடுங்கித்தின்று ஊளமிட்டுலாவவும்,பருந்து-கழுகு-காக்கைகள்பிணங்களைக் கொத்தித்தின்றுகளித்துவானத்தில் வட்டமிட்டுப்பறக்கவும், உதிரப்பிரவாகமானது பெருக்கெடுத்துஇறந்துகிடக்கின்ற ராட்சதர் யானைகள்குதிரைகள்களேபரங்களை வாரிக்கொண்டோடிச் சமுத்திரத்திற் பாயவும், மகரமச்சங்கள் திருப்தியாகப்புசித்து ஒன்றுடனொன்று வாதாடவும், கறுத்திருந்த நீரானது சிவந்துகுழம்பிக்காட்டவும், இப்படிக்கு இரதகசதுரகபதாதிகளும் பாலகுமாரர்களும் சூரன்புத்திரனும் மாண்டமுன்னிலையில் வீரவாகுதேவர் ஜயவுச்சாகத்துடன் எதிர்க்க ஒருவருமில்லாதபடியால் மதயானையைப்போலவீறி நின்றனர். அக்காலத்தில் பகற்போதுகழிந்து சூரியபகவான் தனதுஆயிரங் கிரணங்களையுஞ் சுருக்கிக்கொண்டு மேற்குக்கடலில் மூழ்கி மறைந்தனன்.அஃதெப்படிக்கிருந்ததெனில் வச்சிரவாகுவென்பவன் ஜயசாலியாகிய வீரவாகுதேவரால் மடிந்தனன். இனிசற்றுநேரமிருப்போமாகில் இந்த அபசயத்தைக்கண்டு களித்துலாவுவதாக நினைந்துசூரபதுமன்கோபித்து முன்னமொருக்கால் அசமுகி கரந்துணிந்தபோது நம்மனைவரையுந் தண்டித்ததைப்போலவந்துநேருமென்றெண்ணிப்பயந்து மனவாட்டத்துடன் ஓடியொளித்தவனைப்போலத்தோன்றியது. அன்றுவீரவாகுதேவர்செய்தசண்டையின்விநோதங்களைமுற்றிலும் விரித்துச்சொல்லுவதற்கென்னாற்கூடுவதோ இப்படிக்குச் சர்வசங்காரமூர்த்தியைப்போலநிற்கின்றகாலத்தில் நடந்தவிர்த்தாந்தங்களையுங்கேட்பீராகவெனச் சூதபுராணிகர்பேசுவதாயினர்.

## யாளிமுகன்வதைப்படலம்.

திண்டிறலவுணர்கோன்சிறுவன்வீந்தது
மண்டமரியற்றிடவருநரின்மையுந்
தண்டமதுடைந்ததுந்தபனன்மாய்ந்ததுங்
கண்டனனினையனகருதன்மேயினன்.

வாரீர் நைமிசாரணியவாசிகளே? மேற்குறித்தபடிக்குச் சூரியன் மேற்குச்சமுத்திரத்தில் மறைந்தவுடனே செவ்வானம் பிரகாசித்த காட்சியெப்படிக்கிருந்ததெனிற்சூரபதுமன்குமாரன் சிரங்களைவெட்டியெறிந்தகாலையில்உதிரமானது தெறித்துப் பரவியதைப்போலக் காட்டவும், உடனே நட்சத்திரங்கள்விளங்கியது, வீரவாகுதேவர் செய்ததைக்கண்ட தேவர்கள் களிமிகுதியினால் முத்துகளையிறைத்து இன்னமுஞ் சண்டைகளில் வெற்றிபெறவேண்டுமென வாழ்த்தியதைப்போலக்காட்டவும்,சந்திரனுதித்துவிளங்குவது வெண்பட்டுக் குடையைக் கவித்ததுக்கொப்பாகவும், வண்டினங்கள் தேன்களையுண்டுலாவியிருந்ததுகள், ரீங்காரத்தொனிகளைச் செய்துகொண்டுபோய் பக்கங்களிலிருக்கின்ற சோலைகளிலும் தோப்புகளிலுஞ்சேர்ந்து களித்திருக்கவும், வீரவாகுதேவர் ஜயத்தைக்கண்ட அவுணர்கள் முகாரவிந்தங்கள் வாட்டமுற் றிருப்பதைப்போலத் தடாகங்களில் விரிந்திருந்த தாமரைப்புட்பங்கள் மூடிக்கொள்ளவும், பாதகராகிய இராட்சதர் மாண்டதையும் வீரன்ஜயத்தையுங்கண்டு பூமிதேவிக்குச் சரீரம்புளகித்ததைப்போல அல்லிகள்அலரவும், அப்பொழுது மயேந்திரபுரியில்தற்செயலாய் அளவற்றஉற்பாதங்கள்தோற்றவும்இத்தகைய சிங்காரங்கள் தோற்றுகையில் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாகிய சூரபதுமன்மனதுக்கினிய குமாரனாகியவச்சிரவாகுமாண்டதையும்சண்டைகொடுக்க ஒருவரையுங்காணாததையும் சூரியன்அஸ்தமித்ததையும் வீரவாகுதேவர்நிதானித்துஇதனைஎண்ணுகின்றனர்.

எமது கர்த்தனாகியகுமரகுருவின் பெருமைகளைச் சற்றும் மதியாமல் இகழ்ந்தகொடிய பாதகனாகியசூரன்அரண்மனைமுற்றும் துகள்படக்கண்டும் விசாலமாகவிருக்கின்ற இந்தப்பட்டணத்தைச் சின்னபின்னப்படவாட்டியும், மேலும்எதிர்த்துவந்த வீராதிவீரர்களனைவருங் கண்டதுண்டப்பட அதாஅதம் பண்ணியும்மனதிற்பெருத்திருந்த கோபக்கனலிற் கொஞ்சம்ஆறினேன். இதுவல்லாமற் சண்டைகொடுப்பதற்கு யாவரும்வரக்காணேன்,பூலோகத்தை விளக்கித்திரிகின்றசூரியபகவானும் மேற்றிசையில் மறைந்தனர். இரவும்மேலிடுகின்றது, வேதவிதிப்படிக்கு தருமமார்க்கங்களை எவ்வளவுமெண்ணாமல்பிராணிகளை யலைத்துத்திரியுங் கொடிய ராட்சதர்கள்வாசஞ்செய்யும் இந்தமயேந்திரபுரத்துக்குத்தூதாகவந்தயான்லோகநாயகனாகிய பாலசுப்பிரமணியக்கடவுளை யிதுவரையினுஞ் சேவித்துப் போற்றாமல்வீண்வாதாடிக்கொண்டிருப்பது என்னையொத்த அடியனுக்கழகன்று ஆதலாற்சகலதேவர்களுந்துதிக்கும் பெருமையினையுடைய வெற்றிவேலாயுதக்கடவுளினது திருவடிச்சேர்வையை நீங்கிவாடுகின்ற நாயினேன் மனக்கோட்டமும்இப்பட்டணத்தில்அரியசிறையிலகப்பட்டு வாடுகின்ற தேவர்கள்வாட்டமும்,துரிதமாய் நிவாரணமாதற்பொருட்டுவிரைவிற் றிருச்செந்திற்பதியைச்சேருவதே காரியமெனமனதில்நிச்சயப்படுத்திக்கொண்டவராய் வீராதிவீரனாகிய தூதன்சத்துருக்க ளிறந்துகிடக்கின்ற ரணக்களத்தைக்கடந்து பிரசண்டவாயுவைப்போன்றும் அக்கினியையொத்தும் இயமனைநிகர்த்தும்காலனுக்குச் சமதையாகவும் கண்டவர்கள்வெருவிப்பறக்கத்தக்கதாக லட்சுமிகரம்பொருந்திய இராஜவீதியைக்கடந்துபோகின்றகாலையில் வீதிகளிலெதிர்ந்த சகலரும் திடுக்கிட்டு இதோபிராணனைக் கொண்டுபோகும்காலன்வருகிறான் வருகிறானென்றும்போகின்றவரைத்தடுத்துநிற்க

வும்பயந்துகொல்லுவான்கொல்லுவானென்று கூவிக்கொ
ண்டோடும்போதுவீரவாகுதேவர்முன்னந்தாமழித்துப்ப
தங்கோலமாக விளங்குந்தெருக்களைத்தாண்டிமகதயிஸ்வ
ரியச்செல்வப்பெருக்கைக்கொண்டிருக்கும் மயேந்திரபுரி
யைக்கடந்து விருஷபத்தைப்போலக் கம்பீரநடையை யு
டைய வீரனனவன்ககனமார்க்கமாகப்பறந்துமுருகப்பெ
ருமானைத் தியானித்துக் கொண்டு அப்பட்டணத்துக்கு
வடபாரிசத்திற் காவலாகவிருக்கின்றகெடிஸ்தலமாகிய இ
லங்கைக்குச் சமீபத்தில்வரும்போது அப்பதியிற்பழமை
யாகக் காவலிருப்பவன் திரிபுராதிகளைப்போன்ற வலியும்
வீரமும்பெற்று பட்சிசாதிகள் முதலாகத் தன்னுக்கினை
யைக்கடந்து போகவொட்டாமற் கண்ணிமையைப்போல
இடைவிடாமலிருந்து காக்கின்ற ஜயசாலியாய் வடவாமு
காக்கினியானது பலகொழுந்துவிட் டெரிவதைப்போலச்
சிவந்த சிகைவிளங்கும் ஆயிரஞ்சிரங்களையும் கற்கம்பங்க
ளைநிகராய்ப்பாரித்திராநின்ற இரண்டாயிரங் கரங்களையு
ஞ்சூரபதுமன் வீற்றிருக்கின்ற பட்டணத்தைச்சூழவிரு
க்கின்ற கோபுரவாயில்களைப்போன்ற பருத்தவாய்களையு
ம்பெற்று உலகத்துக் கச்சாணியாகநிற்கின்ற மகம்மேரு
பலதிரண்டொன்றியிருப்பதையொத்தகாத்திரதேகத்தை
ப்பெற்றவனுய் வில்-வாள்-வேல்-சூலம்-பிண்டிபாலம்-கப்
பணம்-தோமரம்-சக்கரமுதலாகிய ஆயுதங்கள் மின்னலை
யொப்பக் கரங்களில் விளங்கத்தக்கதாகச்சருவசங்காரகா
லத்தில்உலகங்களையழிக்கவெழும்வடவாமுகாக்கினிக்கொ
ப்பாகக் காந்திக்கொண்டிருக்கின்ற விழிகளைவாய்ந்துஇர
க்கம் பூததயவுபச்சாத்தாபமென்னும் நற்குணங்களெவ்
வளவும் பெறுதவனுய் உலகங்களிலிழிவாகச் சொல்லும்
பாதகங்களுக்கிருப்பிடமாக முடிக்கவல்லவனுய் நிகரற்ற
வல்லமைசாலியாய் வீரசிங்கம்போன்ற சூரமும்வேகமு
ம்பெற்று வாள்வேல் பாணப்பயிற்சிகளிற்கரைகண்ட சூ
ரனுய்ச் சகலரும்போற்றி வணங்கும் ஜயசாலியாகவு மிரு
க்கின்ற யாளிமுகனென்னும் பெயர்பெற்றவன் இவன்சவு
ரியபராக்கிரமங்களைச் சூரன்தெரிந்து மெச்சிஇலங்கைக்க
ரசனுகப் பட்டந்தரிக்கப்பெற்றவன்.

ஓ! சவுனகாதிரிஷிகளே? யிந்தப்பாதகன் சவுரியத்தை
யும் புயவன்மைகளையும் மாயாசாமர்த்தியத்தையுமின்ன
விதமென்று என்னெருவாயினுற் சொல்லிமுடிவதோ!இ
த்தகையவல்லப முடையவன்முன்னம்வீரவாகுதேவர்அ
வ்விடம்வந்து சின்னபின்னப்படச் சாடிப்போனபோதுத
னதிறைவனுகிய சூரபதுமனைக்காணப்போயிருந்தவன்தி
ரும்பி இலங்கையைச் சேர்ந்தகாலத்தில்அமுதினு மனது
க்கினியவனுய் நிகரற்ற சூரனுய்ப் புயவன்மைக்கொப்பற்
றவனுயிருந்த குமரானிறந்த சேதியும்பட்டணமழிந்தவி
தமுந் தெரிந்தவுடன் பதைபதைத்துவாடிக்கிலேசித்துத்
துக்கசாகரத்திலழுந்தித் தனக்குநேர்ந்த அபகீர்த்திக்கும்
நஷ்டத்துக்கும் வெட்கிச் சோறுகின்றவனை மந்திரிபிரதா
னிகள் முதலாகத்தேற்றித் தயிரியஞ்சொல்லுமுன்னிலை
யில் ஒருவகையாகத் துக்கமாறிஇலங்கையில்வீற்றிருந்து
அரசுசெலுத்தியிருக்கின்ற யாளிமுகனுனவன் பிரசண்ட
மாருதத்தைப்போல அதிவேகமாய்க்ககனமார்க்கத்தில்த
ன்பதிக்கருகில் வீரவாகுதேவர் வருகின்றதைக்கண்டுசீறி
யிவனுர் சோரனைப்போற்காணுகின்றது. கொஞ்சமாவது
பயமில்லாமல் நமதுவலியையும் எண்ணுமல் தீரனுய்வா
னமார்க்கத்திற் போகின்றனனெனச் சொல்லியபோதுபக்

கத்திலிருக்கின்ற மந்திரிகளிலொருவன் சேவித்து இலங்
கைக்கதிபனே? கேட்டருள்க.—தேவரீர்முன்னந்தமதுகு
மாரனை யித்தலத்தைக் காவல்கொண்டிருக்கவிட்டு நமத
ரசனைக்காண மயேந்திர புரிக்குப் போயிருந்தகாலத்தில்
இதோவருகின்றவன் இப்பட்டண மார்க்கமாகப் போவ
தை உமதுசேனைத்தலைவன் சிங்கமுகன்கண்டுஆலகாலவி
ஷத்தைப்போலச்சீறி யிரதகஜதுரகபதாதிகளைக் கூட்டி
க்கொண்டுபோ யெதிர்த்துப்பிரபல யுத்தஞ்செய்தபோது
சட்டைபண்ணுமல் அச்சேனைமுற்றினும் நாசஞ்செய்து
கடையில் படைத்தலைவனையும் வாளினுற் சின்னபின்னப்
படக் கண்டித்துப்போட்டுஜயவுச்சாகத்துடன்நவரத்தின
மயமாய் வானத்தையளாவிய இவ்விலங்கைவடபாரிசத்தி
ல்நிற்கின்ற கோபுரத்தின்மீதிற் பாய்ந்து நின்றமாத்திரத்
தில் அச்சுமையைத்தாங்கமாட்டாமல் துருவாசமுனிவன்
சாபத்தினுற் சகலவளங்களுடனுந் தெய்வலோகமானதுச
முத்திரத்திற்சேர்ந்ததைப்போலஇந்தச்சிறந்தஇலங்கைத்
திட்டு கடலிற்படிந்த அளவற்றஜனங்கள்மகரமச்சங்களு
க் கிரையாய் மாண்டவர்கள் போகத்தப்பிநின்றவர்கள்இவ்
வீரனைக்கண்டவுடன் இயமனைப்போல நினைந்துபயபீதி
யினுல் திக்குகளினும் மற்றவிடங்களினும்ஓடியொளித்த
னர்.

அக்காலத்தில் உமதுபுத்திரன் வடவையைப்போற்சீறி
க்கோபித்து வில்லைவளைத்து நாராயணுஸ்திரம், பிரமாஸ்
திரம், அக்கினியாஸ்திரம், வாயுவாஸ்திரமுதலியதிவ்விய
பாணங்களைப் பிரயோகித்தும் சக்கரம்,பிண்டிபாலம்,கப்
பணம், தோமரம்,தண்டாயுதமுதலிய படைகளையுஞ்செ
லுத்திப்பெரும்போர்செய்யஅவைகளனைத்தையும்பகைவ
ன்நிமைப்போதிற் சின்னபின்னப்படக்கண்டித்துப்போட்
டு மின்னலைப்போல விளங்கும்வாளாயுதத்தைவீசிக்கொ
ண்டு பாய்ந்து பராக்கிரமசாலியாகிய உமதுகுமாரன் சிர
ம்வேறு கரம்வேறு புசம்வேறுகால்வேறுதுடைவேருக
க்கண்டித்துப்போட்டு எதிர்க்க ஒருவருமில்லாதபடியால்
வானமார்க்கமாகக் கடுகிப்போயினன் அதன்பின்புசமுத்
திரத்தி லழுந்தியிருந்த இலங்கையானது பழையபடிக்கு
மேலெழுந்துநின்றது நாங்களனைவரும் அக்காலத்திற்பட்
ட வருத்தங்களைச் சொல்லிமுடியாது இப்படிக்கொத்தஅ
லங்கோலஞ்செய்து நடந்த இந்தப்பாதகன்பின்புஉலகங்க
ளெங்கும் புகழ்ந்துகொண் டோடத்தக்க செல்வவளங்க
ளைப்பெற்ற நமது சக்ரேஸ்வரன் வாசஞ்செய்யும் வீரமா
மயேந்திரபுரத்திற் பிரவேசித்துத் திருச்சபையைச்சேர்ந்
து சூரபதுமனை யவமதித்துப்பேசி நகரத்தையும்சின்ன
பின்னமாகவழித்து அளவற்றராட்சதவீரர்களையுங்கொன்
று கடையில்இராசபுத்திரனுகிய வச்சிரவாகுவையும்வெ
ட்டி யெறிந்துபோட்டுஎதிர்ப்பவரொருவருமில்லாமையா
ல் ஜயசாலியாய்ப் போகின்றனன்.இவனைச்சுலபமாகநினை
கப் போகாது, இறைவனே? தேவரீர் இவனுக்குத்தக்க
தண்டனையைச்செய்ய வேண்டுமென்று சொன்னசங்கதிக
ளைக் கேட்டமாத்திரத்தி லிடிகளைப்போலக் கர்ச்சித்துஅ
னலும் புகையுமெழப் பெருமூச்செறிந்து உதட்டைக்கடி
த்துக் கொவ்வைக்கனியிலும் விழிகள்சிவந்துதீப்பொறிசி
தறத் தேகமுற்றும் வியர்த்துக் காட்டாக்கினியைப்போல
மிகவும் கோபித்துச் சொல்லுகின்முன், மந்திரிபிரதானி
களே பாருங்கோள் நமதுகாவலின் கட்டுப்பாட்டைச் சற்
றுமெண்ணுதவனுய்க் கடந்துபோனதுமன்றியில்அரிதிற்

பெற்ற பிள்ளையையும் பலசேனைவெள்ளங்களையும் அத
ம்பண்ணித் தீராதபழியும் துக்கத்தையும்எனக்குக்கொடு
த்தது மல்லாமல் அசண்டமண்டலா தீஸ்வரனுகிய கமதி
றைவன் பட்டணத்தையும் பிள்ளைமுதலிய வீரர்களையும்
நாசப்படுத்தித் தீரனுகத்திரும்பிவருகின்றனன்,இத்தகை
ய துன்மார்க்கனைக் கண்டவுடன் பிடித்துக் கசகசென்று
மென்றுதின்று உதிரத்தைக்குடித்து என்கோபமும்துய
ரமும் போக்கவேண்டுமெனச் சபதங்கள்பேசித் தாபரித்
து நிற்கப்படாமையால் யாளி முகனுனவன் சடுதியிற்சிங்
காதனத்தை விட்டிறங்கி உடைவாளை யுருவிக்கொண்டு
வெளிப்பட்டவுடன் முன்னம்மாண்டதுபோக நின்றநால்
வகைச் சேனைவெள்ளங்களும் பெரும்புறக்கடலைப்போல
ஆர்ப்பரித்துக்கொண்டு வந்து பல வீரங்களைப்பேசிச்சூ
ழ்ந்த முன்னிலையில் அவர்களுடன்கூடி வேகமாகப்போ
ய் வீரவாகுதேவரை வளைத்துக்கொண்டு இதனைப்பேசுகி
ன்றனன். அடாபாதகனே நாமில்லாதகாலத்திற்பதியைய
ழித்தது மல்லாமல் இந்தவம்சத்தை விளக்கவந்தபுத்திர
சிகாமணியாகிய பிள்ளையைத் தயைதாட்சண்ணியமில்லா
மற் கொன்றனை. மேலும்சக்கிராதிபதியாகியசூரபதுமன்
நகரையும் பலவளங்களையும் மனதுக்கினிய புதல்வனையும்
பின்னப் படுத்தினை இப்படிக்கொத்த பழிகாரன்மீளவும்
இப்பட்டணத்தைத்தாண்டி உன்னூரைச்சேரப்போகின்
றுயோ அந்த வெண்ணங்களை யினிவிட்டுவிடக் கடவாய்
உன்னரியபிராணனைக்கொண்டுபோகநேரும்யமனைப்போ
லவந்து வளைத்துக்கொண்டேன் இதோபார்உன்னைநிமை
ப்போதில் வாட்டித் தென்னுட்டைச்சேர்ப்பேன் அதற்கு
முன்னம் உன்னிஷ்டதேவதையை நினைந்துகொள்ளக்கட
வாய் நீமாய வுருக்கொண்டு திக்குதீபாந்திரங்களில் ஓடி
யொளித்தபோதினும்விடமாட்டேன்புத்தியீனனேஉன்னு
ற் கூடியமட்டும்பாரென்று பலபலகொடியவார்த்தைகளை
ச் சொல்லக்கேட்டமாத்திரத்தில் வீரவாகுதேவருக்குஅ
திகோபம் பிரவேசித்துக் காட்டழலைப்போலச்சீறி நகை
த்துயாளிமுகனைநோக்கியிதனைச்சொல்லுகின்றனர்.

அடா இராட்சதப் பயலே வீண்வார்த்தை யாடுவதி
ற் பிரயோசனமென்ன விருக்கின்றது ஒருசிரத்தைப் ப
டைத்திருக்கின்ற நமது வீரபராக்கிரமங்களையும் பனங்
குலையைப்போல அணிபட ஆயிரஞ் சிரங்களைப் பெற்றி
ருக்கின்ற உனது சவுரியங்களையும் சண்டைமுனையிற் ப
லருங் காணவிருக்கின்றனர், பஞ்சுப்பொதியை யொப்
பாகப் பருத்திருக்கின்ற உன்உடற்சுமையிலாவ தொ
ன்றில்லைஅடாஅவுணப்பாதகனே நாம்பேசியதுஉண்மை
யாகும் நீண்டதுதிக்கைகளைப் பெற்றிருக்கின்றஉன்னுயி
ரஞ் சிரங்களையும் பெருங்காற்றிலடியுண்டிறையுந் தெங்
கின்நெத்தைப்போலப் பூமியிற்புரளும்படிக்கு இந்தவீ
ரவாளினுல் வெட்டித்தள்ளி நாய்நரிகள்பிடுங்கித் தின்ன
ச்செய்வேனென்று நந்திதேவர் அம்சையில் அவதரித்தி
ருக்கின்ற வீரவாகுதேவர்பேசியமாத்திரத்தில் ஊழிகால
த்திற் சத்தசாகரங்களும் மேருகிரியைச்சூழ்ந் தார்ப்பரி
க்கின்றதைப்போலக் கொதித்து யாளிமுகனுனவன் தன்
னைச்சூழ்ந்துவந்த சதுரங்கச்சேனைகளையும் வீரவாகுதே
வர்மீதிலேவியபோதுவீராவேசங்களுடன்வளைத்துக்கொ
ண்டு சிலவீரர் தனுசுகளைக்கோலி, நாகாஸ்திரம், கருடா
ஸ்திரம், வருணுஸ்திரம், குபேராஸ்திரமுதலிய கொடி
யபாணங்களைக் கரவேகமாகச்செலுத்தவும், கவண்-கப்ப
ணம்-இருப்புலக்கை-முசலம்-பிண்டி-பாலம்- இத்தகைய
ஆயுதங்களைக்குறிகொண்டு சிலர்வீசவும், சக்கரம்-தோம
ரம்-கதை-நாஞ்சில் இவற்றைப் பலர்விட்டு ஆர்ப்பரிக்கவு
ம், மற்றையர் பற்பலவிதப்போர்களைச்செய்யவும் இவ்வி
தங்களில் இராட்சதப்படைகளனைத்தும் கொக்கரித்துக்
கொண்டேவிய அஸ்திரசஸ்திரங்களானவை ஆலகாலத்
தைப்போலஎரிந்து புகைந்துகொண்டுசீறி மேலிட்டுவரு
வதை வீரவாகுதேவர்கண்டு சஞ்சலப்படாமல் கோடை
யிடியையொப்பாகக் கர்ச்சித்து வாளாயுதத்தையுருவி மி
ன்னலைப்போலவிதிர்த்து இடசாரிவலசாரியாகப்பாய்ந்து
அதிவேகமா யிறைந்துவருகின்ற படைகளனைத்தையும்,
சின்னபின்னப்பட வெட்டியெறிந்து மான்கூட்டங்களிற்
புலிநுழைந்ததைப்போல அந்த விராட்சதகூட்ட மத்தி
யிற்குதித்துத் தலைவேறு தோள்வேறு மார்புவேறு புச
ங்கள்வேறு கடகமணிந்த கரங்கள்வேறு வீரகண்டைசத்
திக்குங் கால்கள்வேறு இவ்விதங்களிற் சேனுசமுத்திரங்
களைக்கலக்கி அச்சு-மச்சு-குத்துக்கால்-கொடுங்கை-கொடி
குடைகளினுல் அலங்கரித்திருந்த தேரணிகளைத்துகள்ப
டுத்தி யானைக்கூட்டங்களைத் தாறுமாறுகக்கண்டித்தெறி
ந்து தத்தித்தாவிப்பாயும் புரவிப்பந்திகளைக்கண்டதுண்
டமாகக்கண்டித்து இவ்விதங்களிற் கணப்போதிற் சமுத்
திரத்தைப்போல விரைந்துபெருகிவந்தசதுரங்க வெள்ள
ங்களையும் நாசப்படுத்தியதை யாளிமுகன்கண்டமாத்திர
த்திற் கோபதீபிதனுய் மண்டியெரிந்து வில்லைவளைத்துப்
பாணங்களைத் தேடிச்செலுத்தப்பொருமல் தட்சணத்தி
ல் வீரவாகுவைப்பற்றிப்பிசைந்து கொல்லத்துணிந்து க
றுத்து நீண்டிருக்கின்ற வலியகரங்கள்ஆயிரங்களையும்பி
டித்தமாக்கிக்கொண்டு யுகாந்தத்தில்முழங்கு மிடியைப்
போல வீரன்மார்பிற்குத்தி ஆர்ப்பரித்த முன்னிலையில்
வீரவாகுதேவர் வடவாக்கினியைப்போலச்சீறித் தமதுதி
ருக்கரங்களினென்றினுல் பாதகன் கரங்களைச்சேர்த்துப்
பிடித்துக்கொண்டு மற்றக்கரத்தில் தகத்தகாயமாய்விளங்
கும் வீரவாளையுதறி உதிரம்பெருக்கொடுத்தோடக் கண்
டித்தெறிந்து கொக்கரித்தனர், அவ்வுபத்திரவத்துக்குயா
ளிமுகன் சற்றும்இளைக்காமல் தீரனுய் பின்னிடைந்தும
ற்றஆயிரங் கரங்களினுலும் வானத்தையளாவநின்ற பர்
வதங்களைப் பெயர்த்தெடுத்து வீரன்மீதில்வீசினுன்.

ஓ! சவுனகாதிரிஷிகளே? அந்தப்பாதகன் முன்செய்தி
ருக்கின்ற பராக்கிரமங்களிற் சிலவற்றைச்சொல்லக்கேட்
பீராக. பூர்வத்தில் அஷ்டதிசைகளையும் தன்குரூரமாகி
ய பார்வையில்வென்றடக்கிப் பொன்னுலகத்துக் கதிபனு
கிய இந்திரனைமடக்கிக்கொண்டு கர்ச்சித்தகாலத்தில் அத
ற்குப்பயந்தோடத் துரத்தித்துரத்தியலைத்த சூரத்தைப்
படைத்தவன் அப்படிக்கொத்தபாதகன் மேருவையொத்
த பருவதங்கள் ஆயிரங்களையும் சுழற்காற்றைப்போல நீ
லமேகவண்ணனுகிய வீரனைத் துகளாக்கும்பொருட்டுஎ
றிந்தபோது அவைகள் கிறுகிறெனச் சுழன்றுகொண்டு
அதிவேகமாய்வந்து வயிரத்தையொத்ததேகத்திற் ருக்கி
யமாத்திரத்தில் வலிகுன்றி நெக்குவிட்டுப் பொடிப்பொ
டியாய்த் துகள்பட்டுப்பறந்துபோயது, உடனே வீரவா
குதேவருக்கு அதிகோபம்பிரவேசித்து மலைகளைப்பறி
த்தகரங்கள் ஆயிரங்களையும் பளபளத்துவிளங்கும்வெற்
றி வாளாயுதத்தைக்கொண்டு சங்கரித்துச் சிருங்கநாதஞ்
செய்தனர், அப்போது அந்தக்கொடியபாதகன்மானமும்

நாணமும் உபாதியும் மனதைவாட்டியலைக்கவருந்திகாட்டுத்தியைப்போலக்கொதித்துக்குமார தூதனைப்பிடித்துமுறித்தெரியத் துணிவுகொண்டவனைத் துவாரம்பொருந்திய நீண்டதுதிக்கைகள் ஆயிரங்களையும், நீட்டித்தாவினான், அவன்கருத்தை வீரவாகுதேவரறிந்துகோபித்தவராய் வல்குறைந்தும் உலகஅபவாதங்களுக்கஞ்சி வாதாடுகின்ற யாளிமுகன் ஆயிரந்துதிக்கைகளையுடைய தலைகளைத் தெங்கின்குலையைப்போல வெட்டித்தள்ளியகாலத்தில் யாளிமுகன் தேகமானது அசைவற்றிருக்கின்றமகமேருவானது வேர்பறிந்து மறிந்ததைப்போலவும் வானத்தையளாவித் திசைகளைமூடித்தழைத்திருந்த ஆலமரமானது பெருங்காற்றிற்பட்டு விழுதுமுதலானவற்றையிழந்து கடையிற்சாய்ந்ததுக்கொப்பாகவும் ஆயிரஞ்சிரங்களையும் இரண்டாயிரங் கரங்களையும் பறிகொடுத்து முண்டமாய்க் கோடையிடியைப்போலக் கதறிக்கொண்டுஉதிரவெள்ளம் பெருகத்தக்கதாகமாண்டனன், அவன்விழுந்த அதிர்ச்சியினால் பூமிபிளந்து பக்கத்திற்சூழ்ந்திருந்த சமுத்திரசலம்மேலிட்டு இராட்சதர்முதலியபிணக்குப்பல்களைப்புரட்டிக்கொண்டுபோய்ப் பிலத்திற்சேர்த்தது அப்பொழுது பலகவந்தங்கள் நாடகரைப்போலக் கூத்தாடவும், பூதபைசாசடாகினிக்கூட்டங்கள் ரணக்களமெங்கும் திரிந்துதிரிந்து கொண்டானடித்துத்திரியவும், கழுகு பருந்துகாக்கைகள் இரத்தவெள்ளத்தில்முழுகிச் சிறகையுதறிக்கொண்டு வானத்திற் பந்தலிட்டுலாவவும், நாய்நரிகள் ஒன்றுடனொன்று வாதுகொடுத்து ஊளமிட்டோடவும், உதிரப்பிரவாகமானது ஆற்றைப்போலப்பெருக்கொடுத்தோடிக் கடலைநிரப்பவும், அப்போர்க்களமானதுசெவ்வானத்தைப்போலக் காட்டியது, அப்போர்க்களமெங்கும் பிணமலைகளாகக்குவிந்துவிளங்கின, அதன்சிறப்பைச்சொல்லிமுடிவதோ யாளிமுகனிறந்தசேதிதெரிந்தவுடன்இலங்கைப்பதியிலிருக்கின்றசகலரும் அழுகின்றவோசைமேலிட்டுச் சமுத்திர முழக்கங்களையடக்கியதுமன்றியில் அவர்கள்அழுகின்ற கண்ணீரானது ஆறுகி உதிரப்பசுமையைக் கழுகியோடியது.

## வீரவாகுமீட்சிப்படலம்.

இன்னபான்மையால்யாளிமாமுகன்
றன்னையட்டபின்றன்கைவாளினைப்
பொன்னுலாவுறைபுகுத்திச்சென்றனன்
மின்னுசெஞ்சுடர்மேனிவீரனே.

வாரீர்! சவுனகாதிரிஷிகளே? இவ்விதமாகயாளிமுகனையும் அவனுடன் ஆரவாரங்களைச்செய்துவந்த சேனைசமுத்திரங்களையும் அதஞ்செய்தபின்புகருஞ் சூரியனைப்போலப் பிரகாசிக்கும் நீலமேகவண்ணனாகிய வீரவாகுதேவர் எதிர்ப்பவரொருவரையுங் காணாதபடியால் மின்னலைப்போலவிளங்கும் வீரவாளைப் பொன்மயமாகிய உறையிற்சேர்த்துக்கொண்டு இந்திரபோகச்செல்வங்களை யிழந்திருக்கின்ற இலங்கை எல்லையைக்கடந்துககனவழிக்கொண்டு வாயுவேகமும் மனோவேகத்தினுமுந்தி திமிதிமிங்கலகிலங்கள் மகரமச்சங்கள் உலாவித்திரியும் ஜலப்பிரவாகத்தையுடைய சமுத்திரத்தைத்தாண்டிக் கந்தமாதனபர்வதம்நிற்கின்ற வெல்லைககருகில் விளங்கும்திருச்செந்திற்பதியைச்சேர வருகின்றதைப் பூதவீரர்கள் பார்த்தமாத்திரத்திற் சோடசகலைகளையுடைய பூரணசந்திரோதயத்தைக்கண்ட ஆழ்ந்த கடலானது சத்தித்தோங்குவதுக்கொப்பாக ஆர்ப்பரித்து மகம்மேருபருவதத்தைச் சத்தசாகரங்களும்வளைந்து கொண்டதைப்போலச்சூழ்ந்து ஜயவுச்சாகங்களைக்கொண்டாடிக்குதித்துக் குதித்துக் களிக்கின்ற சாலத்தில் அவர்களுக்குத் தலைவராகவிருக்கின்றவர்கள் ஓடிவந்து தாமரைப்புட்பங்கள் குவிந்ததைப்போலக் கரங்களைக்கூப்பிக்கொண்டுநெருங்கி ஆனந்தபரவசராய் மனமுருகித் தேகம்பூரித்து மயிர்சிலிர்க்க விழிகளில்நீர்ததும்ப வாய்குழறத் தேகங்க ளொன்றும்படிக்குத் தழுவிக்கொண்டு தேவாமுதத்தையுண்டவர்களைப்போலச்சந்தோஷசாகரத்திலழுந்தினவர்களாய் இதனைப்பேசுகின்றனர், வீராதிவீரனே கடினசித்தமுடைய சூரபதுமன்பட்டணத்துக்குப்போய்க் காரியசாதகஞ் செய்துகொண்டு திரும்பினவர்களொருவரு மிருக்கமாட்டார்கள் ஆதலால் எமதிறைவனே தேவரீர் புசபலபராக்கிரமங்களை எங்களாற் புகழக்கூடுவதோவென்று பலவிதங்களில்துதித்துபசரித்திருக்கின்றகாலையில் வீரவாகுதேவரும் அவர்களிடத்தில் மிகுந்தபரிவுடன் ஆதரித்துத்தோழர்களேகொலைபழிபாதங்களுக் கெவ்வளவும் அஞ்சாத சண்டாளராகிய இராட்சதர்கள் வாசஞ்செய்யும் மயேந்திரபுரிக்குப் போய்ச் சூரபதுமனைக்கண்டு நமதுகுமாரக்கடவுள்குறித்தபடிக்கு வார்த்தையாடிவந்தேன் ஆனால் அவர்களைப்பார்த்தபாதகங்களை நல்லுணர்வைப்பெற்ற உங்களைக்கண்டமாத்திரத்திற்போக்கி மனக்களிப்படைந்தேனென்றுபிரியவசனங்களைப் பேசிக்கொண்டிருக்கின்றகாலத்தில் சண்முகப்பெருமாள் சன்னிதானத்திற்காத்திருந்த துணைவர்களெண்மரும் இலக்ஷரும் வேகமாய்வந்து ஒப்புவமையற்ற புசபலபராக்கிரமசாலியாகிய முன்னவன் திருப்பாதங்களில்வணங்கினார்கள் உடனே அவர்கள்மனவாட்டந் தீர்வதாக வாரியெடுத்துஅனைவரையும் விசாலமாகியமார்பிற்சேர்த்தணைத்துச் சுகமாயிருக்கிறீர்களோவென்றுக்ஷேமங்களை விசாரித்தபின்பு பூதவீரர் தம்பியர்சூழ்ந்துவர நடந்துபோய் அமலனாய் சுயஞ்சோதிவடிவாய் உலகநாயகனாய் எள்ளிலெண்ணெயைப்போல எங்கும் பரிபூரணமாகநிறைந்துநடிப்பிக்கும் பெருமையினைப்பெற் றிருக்கின்ற குமாரதேவர்வீற்றிருக்கின்ற திருமாளிகையிற் பிரவேசித்து மகாவிஷ்ணு பிரமதேவன் இந்திரன் தேவர்கள்ரிஷிகூட்டங்கள்முதலாகியபெரியோர்கள் சூழ்ந்துபோற்ற நவரத்தினமயமாகிய திருச்சபையில் விளங்குகின்ற சிங்காதனத்தில் தேவதேவோத்தமனாகிய குமாரசுவாமியாரெழுந்தருளியிருக்கின்ற காட்சியை விழிகளாரத்தரிசித்து ஆனந்தபரவசத்தனாய் மனமும் எலும்புங்குழைந்துருகி அன்புபெருகுவதைப்போல விழிகளில் நீர்பொழியச் சரீரம்புளகித்து அதிகஆவலுடன் ஜயஜயவெனப் போற்றிக்கொண்டு சமீபித்தமாத்திரத்தில் சூரபதுமன் வம்சநாசஞ்செய்ய வெழுந்தருளியிருக்கின்ற பாலசுப்பிரமணியதேவர் பாதாரவிந்தங்களில்மும்முறைவலம்வந்து சேவித்தெழுந்து கரங்களைக்கூப்பிக்கொண்டு வேதவாக்கியங்களினால் துதித்துநிற்கின்ற வீரவாகுவைக் குணநிதியாகிய குழந்தைவேலன்கிருபையாகப்பார்த்தருளியிதனைப்பேசுவதாயினர்.

பலகாலங்களாகத் தேவர்களையலைத்துச் சிறையிலடை
த்திருக்கின்ற சூரபதுமன் சபையைச்சேர்ந்து நாம்பணி
த்திருந்தபடிக்குக்குறித்துக் காட்டியதையும் அதற்கவன்
மறுமொழியாடியதையும்மற்றசரித்திரங்களனைத்தையும்
சவிஸ்தாரமாகச் சொல்லக்கடவாயெனக் கட்டளையிட்ட
போது பத்திவினயங்களுடன் வாய்புதைத்துக்கொண்டு
தேவரீரருளிச்செய்தபடிக்குச் சூரன்பிழைக்குமார்க்கங்க
ளைப் பற்பலவிதங்களில் தெரிவித்தபோதினும் அவைக
ளைத் தான்கடைத்தேறத்தக்கதாக நினையாமற்கோபித்து
த் தேவர்கள்சிறையை ஒருபோதும்விடமாட்டேனென்று
திர்க்கமாகச் சொல்லிவிட்டனன், ஊழ்வலியைக்கடக்கமா
ட்டாதவனாதலால் அவன்சம்மதப்படிக்குப் பேசினேன், க
ர்த்தனே யாதொருபிரயோசனங்களுமில்லாமல் திரும்பி
னேன், இதுசேதிதேவரீர் சித்தமறிகவெனப் பேசியமா
த்திரத்தில் எங்கும் பரிபூரணமாக நிறைவெய்திச் சகல
முந்தெரிந்த குணசம்பன்னராகிய கந்தசுவாமியார் திருந
கைகொண்டு ஓ! சூரனே? நீசெய்துவந்தகாரியங்களில் ஒ
ன்றுஞ்சொன்னவனல்லை அவைகளையிச்சபையிலிருக்கின்
ற சகலருங்கேட்டு களிக்கும்படிக்கு வெளியிடக்கடவை
யெனத் திருவுளம்பற்றியபோது கர்த்தனே அஞ்ஞான
வானாகிய சூரபதுமன் நகரத்திற்பிரவேசிக்கின்றபோதும்
திரும்புமுகத்திலும் சிலராட்சதர்கள்தடுத்து வாதாடிய
தால் தேவரீர்திருவடிகளின் வலிமையினால் அவர்களனை
வரையும் சின்னபின்னப்படத்துரத்திவிட்டுவந்தேனென்
றுசொல்லியபோது சரவணபவன் அவரிடத்துப்பரிபூர
ணகடாட்சத்தினால் அப்பனே கொடியபாதகராகிய இரா
ட்சதர்கள் மடக்கிக்கொண்டு வாதாடியபோது மிகவும் வ
ருந்தினையோவென்று முதுகைத்தடவிக் கிருபாநோக்கத்
தையும்பாலித்து விஷ்ணு-பிரமதேவன் இந்திரனாதியரை
ப்பார்த்து இதனைச்சொல்லுகின்றார், கேட்டீர்களோஅநீ
தமாய்வருத்திக் கொடியகாவலில் அடைத்துவைத்திருக்
கின்ற தேவர்கள் சிறையைநீக்கிவிட்டு இன்னஞ்சிலகால
ஞ்சுகசீவியாகவாழ்ந் திருக்கக்கடவாயெனத் தூதின்மூல
மாகத்தெரிவித்தனம்பாதகனானவன் அவைகளை உறுதியா
கநம்பிச் சம்மதிக்காமற் சாவதையே முக்கியமாகவெண்
ணி நமதுவாக்கியங்களைத் தடுத்தனனாதலால் இனிசெய்
வதென்னை தடைபடாமல் அந்தபாதகனாகியசூரபதுமன்
கொண்டிருக்கின்ற மதாங்காரத்தையடக்கித்தேவரைமீட்
டுக்கொண்டு வரும்படிக்கு நாளைக்கேபோவது காரியமாக
விருக்கிறதென்று சண்முகப்பெருமாள் அருளிச்செய்த
நீதிகளைக்கேட்ட விஷ்ணுமுதலிய தேவர்கள் நமதுவருத்
தங்கள் முதலாகிய குறைபாடுகளனைத்தும் பொடிபட்டு
வாழ்ந்தோமென்னுங் களிப்பினால்முகமலர்ந்துகர்த்தனே
தேவரீர் திருவுளம்பற்றியபடிக்குத் தடைபடாமல்நடத்
துவதே முக்கியமாகவிருக்கின்றதெனச்சொல்லிமனச்செ
ருக்குடனிருந்தனர். இப்படிக்குச் சகலரும் ஆனந்தவா
ரியில்மூழ்கிச் சந்தோஷித்திருக்கின்றகாலையில் வீரவா
குதேவர் இந்திரனைக்கண்டு சயந்தன்முதலாகிய தேவர்க
ளைப்பார்த்ததையும் அவர்கள்கடினமாகிய சிறையிலடை
பட்டிருக்கின்ற கொடுமையையும் தாம்அவர்களுக்குதயி
ரியங்களைச்சொல்லி வந்தகாரணங்கள்முழுமையுஞ்சவிஸ்
தாரமாகத் தெரிவித்து இனிதுரிதமாய் விடுதலையாவார்க
ளென்றுஅவன்பட்டிருந்தமனவாட்டங்களைப்போக்கினர்
ஓ! சவுனகாதிரிஷிகளே? இதுவரையில்வீரவாகுதேவர்
மயேந்திரபுரிக்குப்போய்ச் சூரனைக்கண்டு வார்த்தையா
டித்திரும்பிய சரித்திரங்களைச்சொன்னோம், இனிபுத்தி
ரசோபத்தினாற் சூரபதுமன் துக்கசாகரத்திற்பட்டுவாடி
ய சம்பவங்களையும்,மேல்நடத்திய காரணங்களையுந் தெரி
விப்போமென்றுசூதபுராணிகர் சொல்லத்தொடங்கினர்.

---

சீருலாமகேந்திரபுரத்தினும்
வீரவாகுமீண்டதுவிளம்பினா
மாரனூர்க்கடலலைப்பவாண்டுறுஞ்
சூரனுற்றதும்பிறவுஞ்சொல்லுவாம்.

---

## சூரனகர்புரிபடலம்.

---

ஊகவான்படையுலப்பவச்சிர
வாகுமாண்டதும்வாகைமொய்ம்பினா
னேகுந்தன்மையுமேவற்றூதுவர்
சோகமோடுபோய்ச்சூர்முன்கூறினர்.

---

வாரீர் நைமிசாரணியவாசிகளே? புசபலபராக்கிரமசா
லியாகியவீரவாகுதேவர்மயேந்திரபுரியில்தன்மீதுவந்தெ
திர்த்த அளவற்ற சேனாசமுத்திரங்களைச் சின்னபின்னப்
படவாட்டி வச்சிரவாகுவையும் வீரவாளினால்வெட்டியெ
றிந்து வெற்றியுடன் போய்விட்டதை வேகமுள்ளதூதர்க
ண்டமாத்திரத்திற் பரதவித்தலறிக்கொண்டோடி நவரத்
தினமயமாகிய சபாமண்டபத்தில் விளங்குஞ்சிங்காதனத்
தில் வீற்றிருந்துஅரசுசெலுத்திவரும் சூரபதுமன் பாத
ங்களில்விழுந்து புலம்பினவர்களாய் இராசபரமேஸ்வர
னே! தேவரீர் புத்திரனாகியவச்சிரவாகுவானவன் தூதனை
வளைத்துக்கொண்டு செய்தபோரைச் சொல்லிமுடியாதுக
டையிற் சதுரங்கசேனைகளையும் மாளக்கொடுத்துத் தா
னும் பகைவன்வாளினால்வெட்டுண்டுவிழுந்தனனென்னு
ங்கொடியசேதியைச் சொல்லியபோது என்னசெய்வான்,
நடுநடுங்கித் துக்கசாகரத்திலமூழ்ந்தி மதிமயங்கிச்சோர்ந்து
சிங்காதனத்தைவிட்டுப் பூமியில்வீழ்ந்துவிழிகளில்நதியை
ப்போலவூற்றெடுத்துச்சலம்பெருகப் புத்திரனிடத்திருந்
த பட்சமானது உயிரையலைந்து வாட்டத்தீயும் புகையும்
பெருகத்தக்கதாகப் பெருமூச்செறிந்து பத்துத் தலைகளை
ப்பெற்றமகனே! மோசஞ்செய்தையோ? என்செய்வேன்
புத்திரசிகாமணியே யெனப் பலவிதங்களிற்பன்னிப்பன்
னிப் புலம்புகின்றபோது சபையிலிருந்த மற்றப்பிள்ளை
கள் மந்திரிப்பிரதானிகள் சுற்றத்தினர்சேனைத்தலைவர்கள்
முதலாயினர் விழிகளிற்சலத்தைப்பெருக்கிப்புலம்பினர்.
இப்படிக்குச் சகலரும்வருந்துகின்றகாலையில் ஆயிரத்
தெட்டண்டங்களுக்கும் அதிபனாகியசூரபதுமனுக்குப்ப
ட்டபுதேவியாய் பதிவிரதாசிரோமணியாய் கற்புக்கரசியா
ய் சவுந்திரியங்களில் ஸ்ரீமகாலட்சுமிக்குச்சமதையாகவிரு
க்கின்ற பதுமகோமளை மன்மதனையொத்தஅழகினைப்பெ
ற்ற தன்னுசைக்குமாரன்ரணக்களத்தில்விழுந்தசேதியை
க் கேள்விப்பட்டவுடன் அனலிற்பட்டபுழுவைப்போலத்
துடிதுடித்துவிழுந்து புரண்டெழுந்து பரிமளமிகுத்தபு
ஷ்பங்களையணிந்திருக்கும் அளகபாரமானதுகலைந்துபூமி
யிற்புரள மார்பிலறைந்துகொண்டுகோடுகோடெனக்கதறி
ப்புலம்பி ஐயையோ! கர்த்தனே! என்னசெய்வேனென்று

கரங்களைவிரித்து விழிகளில்நீர்பெருகக்கதறி ஐயனே? அப்பனே? பிள்ளைக்கலி தீர்க்கவந்த பெருமானே? கொஞ்சிய வார்த்தைகளைப் பேசிக்கொண்டு என்முன்னமுலாவியிருப்பதை மறந்து எங்கொளித்தனை எவ்விடத்திற்போயிருக்கின்றனை நடுங்கித்திரிந்த எமன்உன்பிராணனைப்பதைபதைக்க கயிற்றினாற்கட்டிக்கொண்டுபோகத்துணிந்தானோ! பாவிதெய்வமே! யிப்படிக்குஞ்செய்வையோ! நானென்ன குறைகளை முடித்தேன், இப்படிக்கும்என்தலையி லிடிவிழலாகுமோ! அப்பனே! உன்னரிய திருமேனிவெட்டுண்டு நிலத்திற்கிடப்பதோ! அக்காலத்தில்என்னைநினைந்தனையோ! அகன்றமண்டாதீஸ்வரனாகிய உன்பிதாவானவர் சவுக்கியமாகவிருக்கும்போது உனக்கிந்த அபாயம்நேரலாகுமோ! அவர்எப்படிக்கு மனந்தரித்திருப்பார் புத்திரசிகாமணியே! என்னசெய்தாய் துரிதமாகவந்து என்துக்கத்தைத் தீர்க்கலாகாதோ! பிணங்கினையோ? ஓடிவாமகனே! ஓடிவாவென்று இப்படிக்கெல்லாம் பாடிப்பாடிப்புலம்பு முன்னிலையிற் சூரபதுமன் காந்தருவவிவாகத்திற்றேடிய அவுணமங்கையர்தேவகன்னியர் சித்தமங்கையர்வித்தியாதரஸ்திரீகள் முதலாகிய தேவியரும் இந்தச்சாவுசமாச்சாரங் கேட்டமாத்திரத்தில் தங்கள் சேடியர்பாங்கியர் சிலதியர்களுடன் ஓடிவந்து இராஜபத்தினியைக்கட்டிக்கொண்டு புலம்பும்போது மந்திரிபிரதானிகள்சேனைத்தலைவர்முதலியர் மங்கையர்களுங்கூடிப் பேரிழவுகொண்டாடியசாலத்திலெழுந்தவோசையானது பெருத்துச்சங்கீதமேளவாத்தியங்களையும் யாழினோசையையும் மற்றமங்களகரமாகிய நாதங்களையும் அடக்கிமேலிட்டுமயேந்திரபுரியெங்கும்அழுகைக்குரல் பெருத்து அஷ்டதிக்குகளுஞ் செவிடுபடச்சத்தித்தது, இப்படி யிவர்கள் துக்கசாகரத்திலழுந்திவாடியிருக்கச் சபையில் சூரபதுமனும்மனந்தேறுமற் கிலேசிக்கின்ற காலையில் துன்மார்க்கனாகிய தருமகோபனென்னும் பெரியமந்திரியானவன் சூரனருகில்வந்து கரங்களைக்கூப்பிக்கொண்டுஅகன்றமண்டலாதீஸ்வரனே! கோபியாமல் அடியேன்சொல்லுகின்றதைக் கேட்டருள்க.

அரசனே! உமதுபெருமிதங்களையும் கீர்த்திப்பிரதாபங்களையும் சூரத்தன்மையையும் எவ்வளவும்நினையாமற்கிலேசத்தையே மேலிட்டிருப்பது உம்மையொத்ததீரனுக்குத்தகுதியோ? சிருஷ்டிகர்த்தனாகிய பிரமபுத்திரன் காசிபருக்குப் பிள்ளையாகப்பிறந்தீர் மேலும் அளவற்றகாலம் சொல்வதற்கரிய தவங்களைமுடித்து லோகநாயகனாகிய பரமசிவத்தின்கடாட்சத்தைப் பூர்த்தியாகப்பெற்றுப்பலவரங்களையும்பெற்றீர். ஆயிரத்தெட்டண்டங்களையும்வென்று தேவர் முதலானவர்கள் வணங்கிப்போற்றப்பலகாலம் அரசுசெலுத்தி வருகின்றீர் அகன்றசாம்பிராச்சியச்செல்வங்களையும் வயிரத்தேகத்தையும் மாளாதவயதையும்புசபலபராக்கிரமங்களையும்பெற்றுப் பூமியெங்கும் புகழத்தக்க கீர்த்தியையும்படைத்தீர். அப்படிக்கொத்த சக்கிரவர்த்தியாகிய தேவரீர் இப்படிப்பதிதனைப்போல வாடுகின்றது உம்மையொத்தவருக் கடுக்குமோ! சத்தசாகரங்களும்பெருகிச் சொர்க்கமத்திய பாதலங்களையும் அழித்துமூடிக்கொண்டு அண்டங்களனைத்தையு மிடித்தழித்தகாலத்திலும் சலனமற்ற தீர்க்காயசைக்கொண்டுவாழும்பெருமிதத்தைப் படைத்திருக்கின்ற தேவரீர்பெற்ற மனவூக்கத்தையும் வீரத்தையும் விடத்தகுமோ சகலரும்திருவடிகளிற்பணிந்து போற்றும்புசபலபராக்கிரமத்தைக்கொண்டிருக்கின்ற அரசனேஒருபாலனிறந்ததைப்பெரிதாகவெண்ணி ஓவென்றலரிப் புலம்புவையாகில் திரிமூர்த்திகளும் நகைப்பார்களே அடிமைத்தொழில் செய்திருந்தஇந்திரனாதிய தேவர்கள்பரியாசஞ்செய்து சுலபமாக வெண்ணுவர்-மேலும், உமதுகீர்த்தியும் வெற்றியும் மழுங்கும்அஃதேனெனில் இப்போது உமக்குக்கிடைத்திருக்கின்றவருத்தம் லோகநாயகனாகிய சிவபிரானைச்சூழ்ந்து பணிவிடைசெய்திருக்கின்ற பூதப்படைகளினாலும் மற்றசிறந்ததேவர்களாலும் நேர்ந்ததன்று திரிபுரதகனராகியபரமன் நேற்றையதினம் பெற்ற பாலசுப்பிரமணியனாலுமன்று, அவனேவலின்படிக்குவந்த ஒருதூதன்செய்த சுலபகாரியத்துக்குச் சகிக்கப்படாமல் விசனப்படுவார்களோ- ஒப்பற்ற கீர்த்தியைப்பெற்றிருக்கின்ற இராசபரமேஸ்வரனே இதனைக்கேட்பீராக. தன்னைப்பெற்ற பிதாவானவ ரிறப்பினும் தமையன்தம்பிபிள்ளைகள்மாளவரினும்மாமன்மைத்துனன் மற்றுமிராநின்ற சிநேகிதர்கள்நாசமடையினும் அஷ்டதிசைகளினும் வெற்றியை நாட்டியிருக்கும் சூரனானவன் அவற்றிற்குட்பட்டுத் தான் கொண்டிருக்கின்ற மனவலியைச்சற்றேனும் இளக்கப்பார்ப்பரோ பிராரத்வவினை நேரிடுமாயின் அதிகவலியும்வெற்றியும்பெற்றவீராதிவீரனும் பேதமைவாய்ந்திருக்கின்றவொருபெண்ணினால் அபசயப்படுவன். ஆதலால் உன்னுசைக்குமாரனுக்குப் பிரமன்நிச்சயித்திருக்கின்றஆயசு முடிந்தபடியால் தூதனாற்கொல்லப்பட்டான் பரமசிவகடாட்சத்துக்கு மேற்படநடப்பிப்பதற்கு எத்தகையனாலும்முடிவதோ அந்தத் தூதனால் அணுப்பிரமாணமும் அசைக்கப்படாது இது பழியுமல்ல இப்படிக்கிருக்கின்றபடியால் இனிநடத்தவேண்டியகாரியமேதெனிற், கோபித்து மேலிட்டுவருகின்ற பகைவன்சூழ்ச்சிகளையும்,வலியையும்,சேனைத்திறத்தையும், உள்ளங்கைநெல்லிக்கனியைப்போலத் தெளிவாகவிசாரணைசெய்தறிந்துகொண்டு மேல்நடக்கவேண்டிய பிரயத்தனங்களைத் துரிதமாக மந்திராலோசனைசெய்து நிச்சயித்துச் சீக்கிரத்தில்முடியாமல் மனம்வருந்தித்துக்கிப்பதுசூரனுக்கடுப்பதோ அரியதவங்களைமுடித்து பரமனருளைப்பெற்றுச் சகலரையும்வென்று சூரனென்னும்நாமத்தைப்பெற்ற தேவரீர் கொடியகவலையிற்பட்டுக் கிலேசிப்பதுஉமதுபெருமிதத்துக் கடாதாகையால் இனிவிசனமென்பதைவிட்டுவிடக் கடவாயென்று தருமகோபன் பலவிதங்களில் தேற்றியமாத்திரத்தில் அவுணராசன் புத்திரசோபத்தைநீங்கியெழுந்து துக்கத்தையடக்கிப் பக்கங்களில்யமபடாளைப்போலநிற்கின்ற தூதரைப்பார்த்துச் சொல்லுகின்முன், நமதுதிருக்குமாரனை அஞ்சாமற்கொன்றும்அகண்டஅயிஸ்வரியங்களைப்பெற்றிருந்த இந்தப்பட்டணத்தையு மிடித்தழித்த பலசாலியாகிய தூதன் இவ்விடம்விட்டுப்போனதை யாவராகிலுங்கண்டீர்களோகேள்விப்பட்டிருப்பீர்களோ விபரமாகத்தெரிவிக்கக் கடவீரென்றுகேட்டபோது, சிலதூதர்சேவித்து அரசனே? யிந்தமகா சபையில் பயமில்லாமல்வந்து தேவரீரையும்மதியாமல்தான்வந்ததூதின் காரணங்களைச்சொல்வதன்றியிற்றகாதகாரியங்களை நடத்திச்சபையைக்கடந்துபோனபின்பு தன்னைவளைத்தஅளவற்றபடைகளையும் இராசபுத்திரனையுங்கொன்றவன் தனக்கெதிரில் யாவரையுங்காணாதவனாய் மயேந்திரபுரியைக்கடந்து இலங்கையை நோக்கிச்சென்றனன்,

அதைநாங்கள் கண்டனமென்றும் மேல்நடந்தகாரணங்கள் தெரியாதென்றும் விண்ணப்பஞ்செய்தனர்.

இச்சேதியைத் தெரிந்தமாத்திரத்திற் சூரபதுமனைவன் தன்னருகிற் காத்திருக்கின்ற பரிசனனைப்பார்த்து அதிவேகமாயோடிஉலகங்களைச் சிருஷ்டித்துவருந் திசைமுகப் பிரமனைக் கணப்போதில் அழைத்துவரக்கடவீர்களெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் அவர்கள் சேவித்து இராசாதிராசனே யிப்புவனங்களைப் படைக்கும்பிரமன்-இந்திரன்-விஷ்ணு- முதலானதேவர்கள் திருக்கயிலையைக் கடந்து வந்திருக்கின்ற பாலசுப்பிரமணியனைச்சூழ்ந்துஉம்மை மதியாமல் பபமற்றிருக்கின்றனரெனப் பலர்சொல்லக்கேட்டோமெனத் தெரிவித்தகாலத்தில்நல்லகாரியமெனக் கோபித்து அவர்கள்கர்வத்தைச்சீக்கிரத்தில் அடக்குகின்றனன், நீங்கள்துரிதமாய்மற்றொரு அண்டத்துக்கோடி அவடத்திலிருக்கின்றபிரமனைப்பிடித்துக்கொண்டுவேகமாய் வரக்கடவீர்களெனப் பணித்தமாத்திரத்தில் மகாபாக்கியமெனப் பணிந்து காற்றினும்வேகமாகப்பறந்துஇதற்கடுத்த அண்டத்திற்சிருஷ்டித்துக்கொண்டுரிஷிகள்முதலாகிய பெரியோர்கள் போற்றிச்சூழப்பதுமாசனத்தில் வீற்றிருக்கின்ற பிரமனைக்கண்டு அரசன்பணிவிடையைத் தெரிவித்துக் கரத்தைப்பற்றியிழுத்துவந்து சூரபதுவன்முன்னம் நிறுத்தினர், அக்காலத்தில் சிருஷ்டிகர்த்தனை அருகிலழைத்துப் பிரமனேஅழகுகுலைந்தழிந்துபின்னப்பட்டிருக்கின்ற இந்தப்பட்டணத்தைப்பழையபடிக்குச் சகலசெல்வங்களும் பெருத்திருக்கும்படியாகநிருமித்து வரக்கடவையெனக் கட்டளையிட்டமாத்திரத்தில்ஐயனே, உமதுநினைவின்படிக்குக் கணப்போதில் முன்னினும் பதின்மடங்குசீர்பெறச் செய்யக்கடவனெனச் செலவுபெற்றுப்போய் உலகங்களைப்படைக்கும் விதியைக்கருதி சிருஷ்டித்தவிதமேதெனில், பட்டணத்தைச்சூழப்பொன்மயமாகிய மதிலைவானத்தையளாவிநிற்கும் படிக்கெழுப்பி நவரத்தினமயமாய் அண்டப்பித்திகையையுராயும்உன்னதமும் பலநிலைகளையும் பெற்றிருக்கின்ற கோபுரவாயில்களைப் படைத்துப் பெரும்புறக்கடலையொப்ப ஆழ்ந்துவிசாலமாகவிருக்கின்ற அகழியைத்திருத்திப்பொன்னினும்மணிகளினும் பளிங்கினும் சந்திரகாந்தத்தினும் மரகதங்களினும் சோடித்துப் பருவதங்களைப் போலத்தோன்றநின்ற மாடமாளிகை மண்டபங்கள்அரண்மனை உப்பரிகை சித்திரக்கூடங்கள்முதலாகியசிறப்புகளைநீண்ட தெருக்களில் இருபாரிசங்களினும் படைத்து வீதிகளைத்திருத்திக் காமனுங் காமுறும்படியாகியபுஷ்பவனங்கள் பலகனிவகைகள் நிறைந் திருக்கின்ற சோலைகள்தோப்புகள் இவற்றினைச்செய்தமைத்து விசாலமாய் மதுரமாகிய ஜலவளமிகுந்த பொய்கைகள் தடாகங்கள் சித்திரக்குளங்களாதியவைகளைப்படைத்துஅரசன்வீற்றிருக்கின்ற அரண்மனை ஆஸ்தானமண்டபத்தை வெகுவினோதங்களாகச் சோடித்துக் கண்டவர்கள்மனதையும் விழிகளையுங்கிரகிக்கும் படியாகப் பற்பலவளங்களைநிறைத்துமுற்றியவுடன் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாகிய சூரபதுமனைக்கண்டு ஆசிர்வதித்து அரசனே உமதுமனதின்படிக்கு யதாப்பிரகாரம் இப்பட்டணமுழுமையும் நிருமித்து அரண்மனையையும் சீர்படுத்தி யாயிற்றென்று அறிக்கையிட்டமாத்திரத்திற் சூரன்வெளிவந்துமுழுதுங் கண்ணோட்டமிட்டு அவைகளிருக்கின்ற சித்திரவிசித்திரவினோதச் சிறப்புகளுக்கு மெச்சிப்பிரமனைப் புகழ்ந்து மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர்கள்முதலாகிய சகலரும்போற்றிச்சூழச் சிரோரத்தினங்களினாற் சோடித்து விசாலமாக விளங்குஞ்சபாமண்டபத்திற் சேர்ந்து பூச்சக்கிரக்குடை கவிந்திருக்கும் சிங்காதனத்தில் வீற்றிருந்து வெண்சாமரைகள் ஆலவட்டங்கள்முதலிய இராஜசின்னங்கள்பெருத்தசையப் பட்டுவர்புகழ வித்துவான்கள்கொண்டாட இவ்வோலக்கத்திலிருப்பவன்பிரமன்மீது விழிகளைச்செலுத்தி நல்லகாரியம்உன்னுடைய சாமர்த்தியங்களுக்குபாவரும்நிகரில்லையெனக் கொண்டாடிப்பழையபடிக்கு நீயிருக்கப்பட்ட அண்டத்தைச்சேர்ந்துபணிவிடைகளிற் பிசகில்லாமல்நடத்தி வரக்கடவாயெனச் சொல்லியபோது நல்லதென்றுசெலவுபெற்றுப்போய்த் தன்பதவியைச்சேர்ந்து பிரமனிருந்தனன்.

## சூரனமைச்சியற்படலம்.

அந்தநல்லமையந்தன்னினவுணர்கோனேவல்போற்றி
முந்துசெல்லொற்றரானோர்மூரிநீர்க்கடலைவாவிச்
செந்தியிற்சென்றுகந்தன்சேனையும்பிறவுந்தேர்ந்து
வந்தனர்விரைவினங்கண்மன்னனை வணங்கிச்சொல்வார்.

கேட்டீர்களோ! சவுனகாதி ரிஷிகளே? மேற்குறித்தபடிக்குச் சூரபதுமன் சிங்காதனத்தில் வீற்றிருந்து அரசுசெலுத்தி வருகின்ற காலையில்முன்னம் அரசன் கட்டளையின் படிக்குச் சென்றதூதர்கள் மனோவேகத்தினுங்கடுகிச் சமுத்திரத்தைக் கடந்து திருச்செந்திற் பதியைச் சேர்ந்து பூதவெள்ளங்களின் பெருமிதங்களையும்படைத்தலைவர் வீரத்தையும் சுப்பிரமணியக் கடவுளினது மகிமைகளையும்கிரமமாகத்தெரிந்து கொண்டவர்களாய்க் கடுகிவந்து மயேந்திர புரியைச் சேர்ந்து விசாலமாகிய சபாமண்டபத்தில் வீற்றிருந்து இராஜ காரியங்களை நடத்திவரும் சூரபதுமனைத் தரிசித்தவுடன் வணங்கியிதனைச் சொல்லுகின்றனர், ஆயிரத்தெட் டண்டங்களையும் வென்று சகலரையும் ஏவல்கொண்டு அகண்டஅயிஸ்வரியச் சாம்பிராச்சியங்களை யனுபவித்திருக்கின்ற இராஜாதிராஜனேகேட்டருள்க,தேவரீர்கட்டளையின்படிக்கு விரைவிற்சென்று எதிராளிகளின்காரணகாரியங்களைத் தெரிந்துவந்ததைச்சவிஸ்தாரமாகச்சொல்லுவோம், ஒன்றுபத்துநூறுஆயிரம்சிரங்களையும் அதற்கிரட்டிவலியகரங்களையும் அதற்கடுத்த காத்திரமுள்ள தேகங்களையும் பெற்றிருக்கின்ற இரண்டாயிரவெள்ளம் பூதப்படைகளும் அவர்களுக்குத்தலைவர்களாய்ச் சிங்கத்தைப்போன்ற வலியும் சூரமுமுள்ள சூரர்கள் நூற்றெண்மரும்சொல்லுதற் கரிய புசபல பராக்கிரமசாலிகளாய் வீரத்தன்மை பொருந்திய தம்பியர் இலட்சத்தொன் பதின்மரும் மகாவிஷ்ணு,பிரமதேவன் இந்திரனாதிய தேவர்கள் முனிவர்கள் முதலானவர்கள் சூழ்ந்துபோற்றத் தேவாதிதேவனாகியசிவபிரான் நுதல்விழிகளினளித்த பாலசுப்பிரமணியர் திருக்கயிலையைக்கடந்து பூலோகத்துக்கு வருமார்க்கத்தில்நேர்ந்த தேவரீர் தம்பியாகிய தாருகாசுரனையும் மாய்கைக்கரசனாய் நமதுபகைவர்களை யலைத்திருந்த. கிரவுஞ்சனையும் அளவற்றவெள்ளம் அவுணவீரரையும் வெற்றி

வேலாயுதத்தினாற் பிளந்து தும்சப்படுத்தினவராய் இப்போது கடற்கரையில் விளங்கும் திருச்செந்திற்பதியிற் சேர்ந்தவுடன் மந்திராலோசனைசெய்து ஒருதூதனைச்செலுத்தித் தேவரீர்மனக்கருத்தை யறிந்தபின்பு போர்புரியவருவதாகத் தீர்மானித்துக் கொண்டவராய் வலியோனாகிய ஒருவனைத்தூண்டினர், அவன்கடலைக்கடந்து வரும்போது வழியில்நேர்ந்த இலங்கைப்பதியைச் சின்னபின்னப்பட அதலகுதலஞ்செய்து அதிற்காவல்கொண்டிருந்த யாளிமுகன் பிள்ளையையும் அளவற்ற அவுணவீரர்களையுங்கொன்றுஇங்குவந்துதிரும்பிப்போகும்போது தமதுசேனைத்தலைவனாய் இலங்கையைக் காவல்கொண்டிருந்தயாளிமுகனையும் வளைத்துக்கொண்டு வாளினாற்கண்டித்தெறிந்து மிகுதியாகவிருந்த சேனைகளையுங்கொன்றழித்துத் திருச்செந்திலைச்சேர்ந்தனன், இனிமேல்குழந்தைவேலாயுதன் சகலசேனைகளுடனும் பிரயாணப்பட்டுக் கடலைக்கடந்து இவ்விடம்வந்து அண்டேஸ்வரனாகிய தேவரீருடன் சண்டைகொடுக்க நினைந்திருக்கின்றனன். இப்போது நாங்கள்சொல்லியசேதிகளனைத்தும் யதார்த்தமாகும் புவனேஸ்வரனே இனிதாமசப்படாமல் இதற்குவேண்டும் பிரயத்தினங்களை முடிக்கவேண்டும் பகைவரைச் சுலபமாகவெண்ணப்போகாது அதிகவல்லமைசாலிகளாகக்காணுகின்றதென்று தூதர்கள்பேசியதைக் கேட்டவுடன் சிலதூதரைப் பலதிசையினும் செலுத்தித் தன்மனதுக்கினிய தம்பியாகிய சிங்கமுகாசுரனையும் திக்குதிபாந்திரங்களிலிருக்கின்ற சேனைத்தலைவர்களையும் மதியூகிகளாகவிருக்கின்ற சுற்றத்தினரையும் முதியோர்களையுந் தருவித்தகாலத்தில் அவர்களனைவரும் அதிவேகமாகவந்து சேர்ந்து மண்டலேஸ்வரன் பாதாரவிந்தங்களிற்சேவித்துஅரசன்விடையைப்பெற்றுப் பக்கங்களிற் சூழவிருந்தனர்.

அப்போது சூரபதுமனுக்கு அதிககோபம்பிரவேசித்து வடவாமுகாக்கினியைப்போலப்பொங்கி அனலும் புகையும் பெருகத்தக்கதாகப் பெருமூச்செறிந்து சபையிலிருக்கின்ற சகலரையும்பார்த்துச் சொல்லுகின்றான், நமதுகுலப்பகைவர்களாகிய தேவர்களனைவரையும்பற்றிவருவித்து நீக்குதற்கரியகாவலில் நான்வைப்பித்திருப்பதை இந்திரன்தெரிந்து திருக்கயிலைக்குப்போய்ச் சிவபிரானைத்தரிசித்துவணங்கித் தனக்கடுத்ததுக்கவருத்தங்களை முறையிட்டுக்கொண்டதின்மேல் பரமனிரங்கி நுதல்விழிகளின் மூலமாக ஒருபிள்ளையைப்படைத்து வேல்முதலியபடைகளைப்படைத்துக்கொடுத்துப் பலவெள்ளம் பூதரைக்கூட்டி நம்மைவென்று தேவர்கள் சிறையைநீக்கும்படிக்குக் கட்டளையிட்டமாத்திரத்தில் அந்தக்குழந்தையானது கயிலையைக் காவல்கொண்டிருக்கும் நந்திகணத்தலைவர் முதலானவர்களுடன் நமக்குப்பயந்தொளித்துத் திரிகின்றமகாவிஷ்ணு பிரமதேவன் இந்திரனாதிய தேவர்கள் போற்றிவரப் பூமியில் வருமார்க்கத்தில்நேர்ந்த நமதுமனதுக் கினியதுணைவன் தாருகனையும் மாயைக்கரசனாகவிருந்தகிரவுஞ்சனையும் சத்திவேலினாற்பிளந்துகொன்று அப்பதியிலிருந்த இராட்சதவெள்ளங்களனைத்தையும்நாசஞ்செய்துவந்து இப்போதுசமுத்திரக்கரையிலிருக்கின்றதிருச்செந்திற்பதியிற்சேர்ந்து அந்தபாலகனானவன்ஒருதூதனைநம்மிடத்துக் கனுப்பினன், அவன்கடலைக்கடந்து பொன்மயமாகவிளங்கியிருந்தஇலங்கையையழித்துச்சமுத்திரத்திற்சேர்த்து அதைக்காவல்கொண்டிருந்தயாளிமுகனையும் பிள்ளையையும் அளவற்ற அவுணவீரர்களையுங் கொன்றுபோட்டு யாவரும் மனதிலும் நினைப்பதற்கரிய கொடியகாவலையுடைய இந்தப்பட்டணத்தில்வந்து சற்றும்பயமில்லாமல் நமதுசபையிற்குதித்து மாயை வல்லபத்தினால் ஒருசிறந்த சிங்காதனத்தைத் தருவித்துஎனக்குமேலாகவுட்காந்து மரியாதையில்லாமற் பேசியகாரணங்களைக்குறித்து நான்கோபித்தேவிய அவுணவீரரைஎன்கண்முன்னங்கொன்று வெளிப்பட்டுப்போய்நமதுசூராந்துக்கும் ஆக்கினைக்கும் எவ்வளவும்அஞ்சாமல் சகலபுவனங்களினுங் கொண்டாடத்தக்கவளங்களைப்பெற்றிருக்கின்ற இந்தப்பட்டணமெங்கும் சின்னபின்னப்பட்டுப்போகவிடித்தெறிந்து.நமதுதிருச்சபையையும் அதம்பண்ணிநமதுகட்டளையின்படிக்குப்போயெதிர்த்த அவுணவீரர்களனைவரையுஞ் சாடியதுமல்லாமல் நமதுகுமாரன் வச்சிரவாகுவையும் சற்றுமிரக்கமில்லாமற் கண்டித்தெறிந்துபோட்டுப் போய்விட்டான். அப்பொழுது இந்தப்பட்டணம் பட்டபாட்டை யென்னசொல்வேன் எங்கும்பிணமலைகளாய் உதிரப்பிரவாகமோட நகரவாசிகளனைவரும் பலதுன்பங்களிற்பட்டு வாடியலைந்தனர். அளவற்றவெள்ளம் படைகளிறந்தனர், இதனால்வெகுகாலமாய்அரசுசெலுத்திவந்த நமதுகீர்த்தியும் பலரையும்வென்றசவுரியங்களும் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாய் அகண்டஅயிஸ்வரியங்களை யனுபவித்துவந்த பிரதாபங்களும் மழுங்கிப்போய்விட்டது மேலும்தூதாகவந்து இக்கோலங்களைச்செய்த ஒருவனைப்பிடித்து அரியகாவலிற்படுத்தினவனுமன்று பின்னப்படுத்திவிடாமலும்போனேன் அல்லது என்கோபந்தணியப்பிசைந்துகொல்லாமலுந்தூதனென்று தருமத்தையேபாராட்டி மோசம்போனேன் இதனாலுண்டாகியவசைமொழியை இவ்விதமெனச்சொல்லி முடிவதோ.

இவ்விதஅனர்த்தங்களையெல்லாஞ்செய்ததூதன் நமது நகரத்தைக்கடந்துபோய் இலங்கையிற்புகுந்து அவ்விடத்திற் காவல்கொண்டிருந்த சேனைத்தலைவன் யாளிமுகனென்பவனை வாளினால்வெட்டியெறிந்துஅவன்பிள்ளைமுதலியசேனைகளையும் சின்னபின்னப்படக்கொன்றுகடலைக் கடந்து விஜயத்தோடு திருச்செந்திலைநோக்கிப் போயினானெனக் கேள்விப்பட்டனம் இனிகாளகண்டமூர்த்தியாகியசிவபிரான்பிள்ளை பாலசுப்பிரமணியன் பிரயாணப்பட்டுப் பூதப்படைகள் துணைவருடன் சமுத்திரத்தைத்தாண்டி யிவ்விடம்வந்து நம்முடன்சண்டைகொடுக்க யத்தனித்திருப்பதாகக் காணுகின்றது, இச்சேதிகளனைத்தும் நாமனுப்பிய தூதர்கள்தெரிந்துவந்து அறிக்கையிட்டிருக்கின்றனர், இவைகளில் எவ்வளவும்பிசகிராதுஉண்மையாகவே நம்பத்தக்கது இவர்கள்வரவின் காரணங்களைத் தெரிந்தவுடன் மேலிட்டுப்போய்ச் சிவகுமாரனாகிய பாலசுப்பிரமணியனையும் அவனுக்குத்துணையாக வந்திருக்கின்றசேனைத்தலைவரையும்பூதவெள்ளங்களையும்- விஷ்ணுபிரமன், இந்திரன்முதலாகியதேவர்களையும்மடக்கிக்கொண்டு கொடியபோர்செய்து சின்னபின்னப்படவாட்டித்துரத்திக்கணப்போதில் ஜயத்துடன்மீள நினைத்திருக்கின்றேன், ஆனால் ஆயிரத்தெட்டண்டங்களையும்வென்றுசகலரையும், ஏவல்கொண்டு ஒருவரும் நிகரில்லாமல் அரசுசெலுத்திவந்த சூரனாகிய யான்இக்காலத்தில் பைசாசங்களுடனும் பாலனுடனும் எதிர்த்துவென்றபோதினும்

என்னெக்தவனுக்கு வீரமும் புகழுமல்லவெனாினேந்து
இதுவனையினும்பொறுத்தேன், இவைபன்றியும் புசபல
பராக்கிரமங்களையும் தந்திரஉபாயங்களையும் சேனைகளி
னுதவிகளையும் மகதயிஸ்வரியச் செல்வங்கள்முதலியவள
ங்களையும் பெற்றிருந்தபோதினும் பெரியோர்களாகவிரு
க்கின்றவர்கள் பகைவர்கள் மேலிட்டு வருவதாகத்தெரிந்
தாலும் கோபித்துத் தட்சணத்திற் சண்டைக்குப்போக
லாகாது அப்போது தனக்குநன்மைகோருகின்றதுணைவ
ர் மந்திரிபிரதானிகள் தன்மரபிலிருக்கின்றமுதியோர்கள்
தீர்க்கயோசனை பரராகிய சினேகிதர் முதலாகியவர்களைச்
சேர்த்துப் பகைவன்திறங்களை விசாரணைசெய்தபின்பும
ந்திராலோசனையில் பலருக்கும் சம்மதமாகியகாரியமொ
ன்றைத் தீர்மானித்துக்கொண்டு காலதாமசஞ்செய்யாமல்
அவ்வாறேமுடிப்பார், இதுசக்கிரவர்த்திகளாகவிருப்பவ
ருக்குத் தகுதியாகும் மேலும் நீதிநூலினும்இப்படிக்கே
சொல்லுகின்றது, ஆதலால் உங்களனைவரையுந் தருவித்
தனன். இவைகளனைத்தினையுஞ்சீர்தூக்கிப்பரிசோதித்து
த் தீர்க்கமாய் ஆலோசித்து மேல்நடத்தவேண்டியகாரிய
மொன்றைச் சொல்லும்படிக்குக் கேட்டுக்கொள்ளுகின்
றேன், துரிதமாக ஒருகருமத்தைக் குறிக்கக்கடவீர்களெ
ன்று சூரபதுமன்பேசிய முன்னிலையிற் சபையிலிருக்கி
ன்றவர்களில்மதியூகிகளாக விருக்கப்பட்டமந்திரிகளில்தீ
ர்க்கயோசனைபரனுகிய மேதிமாமுகனென்பவன்காலகாரி
யங்களை நிதானித்துத் தனக்குத்தோற்றியபடிக்குச் சொ
ல்லுகின்றுன்.

எமதரசனே? மனம்பொறுத்துக் கேட்டருள்க பற்ப
லமாய வித்தைகளைக்காட்டி முனிவர்கள், தேவர்கள், மு
தலானவர்களை மயக்கி யலைத்து வாட்டியிருந்த வலியகிர
வுஞ்சனையும் சகலனையும் புறங்கண்டுவிஷ்ணுவையும்வெ
ன்று அவனேவிய ஒப்பற்ற சக்கரத்தையும், கழுத்தணி
யாகத் தரித்திருந்த புசபலபராக்கிரமசாலியாகிய உமதுச
கோதரன் தாருகாசுரனையும் வீரசிங்கங்களையொத்த ப
டைத்தலைவரையும் சேனைவெள்ளங்களையும் கணப்போ
தில் நாசஞ்செய்த வீராதிவீரனைப் பாலன் பாலனெனச்
சொல்லுவது பேரறிவுடைமையல்ல, மேலுந்தயிரியத்தி
ல் ஒப்பற்றதாருகாசுரனையும் மற்றவர்களையுஞ் சட்டைப
ண்ணுமல் ஜயிக்கவல்ல ஆண்தன்மையையுஞ்சூரத்தைய
ம்பெற்றிருக்கின்ற தீரனைச் சற்றும்வலியற்றவனென்றும்
அத்தகையவீரனுக்குதவியாக வந்திருக்கின்ற படைத்து
ணைவரைப் பைசாசங்களென்றும் இகழ்ந்துபேசுவதுசெ
ல்காலம் நிகழ்காலம் வருகாலமெனச் சொல்லாநின்றமுக்
காலங்களின் திறங்களைத்தெரிந்தாராய்ந்து பார்க்கத்தக்க
பேரறிவினருக்கழகோ, இதுவுமல்லாமல் அந்தப்பகைவ
ன்சேனைகளி லொருவனுகிய தூதன் திரனுப் அலைகளை
மோதிப் பரந்திருக்கின்ற சமுத்திரத்தைச் சுலபமாகக்க
டந்து இராஜதானியாய் அளவற்ற காவலைக்கொண்டிருக்
கும் இந்தப்பட்டணத்தைச் சின்னபின்னப்படுத்தி உரு
த்தோற்றுமலழித்துக் கணக்கிறந்த அவுணவீரர்களைக்
கொன்றதுமல்லாமல்உமதாசைக்குமாரனுகியவலிக்கொப்
பற்றவச்சிரவாகுவையுங்கண்டித்துத் தேவரீரையும் மதி
யாமற் பேசிப்போயினகள்வனை அபலனுகிய தூதனென்
றிகழ்வது கல்விமான்களுக்கு நியாயமோ அந்தத் தூதனை
அழகியசிறகினைவாய்ந்த கருடன்மீ தாரோகணித்துலாவு
ம் மகாவிஷ்ணுவும் பிரமதேவனும் தேவர்களுக்கரசனு
கிய இந்திரனும் ஏகஉருக்கொண்டு போந்ததாகநினைப்ப
தல்லது அவன்வந்தகாரணத்தையே குறிக்கக்கூடுமோ.
இஃதன்றியும் நிதிகர்த்தனுகிய மகாவிஷ்ணுவை வென்ற
தல்லாமற் புவனங்களையுந் தன்வயப்படுத்தியாண்டவீரா
திவீரனுகிய தாருகனையும் இந்தமரபுக்குப்பலவிதங்களி
லும் உதவியாய் உங்கள்பகைவராகியதேவர்கள்முதலான
வர்களைவஞ்சித்து வாட்டியிருந்த கிரவுஞ்சனையும்பலவெ
ள்ளம் ராட்சதவீரரையுந் திரிபுரதகனனுகிய பரமசிவகு
மாரன்பாலசுப்பிரமணியன் கொன்றுனென்ற சேதிதெரி
ந்தமாத்திரத்தில் தேவரீர் கோபித்துப்போய் அந்தப்பா
லனையும் மற்றவர்களையுங் கண்டதுண்டப்பட வாட்டியா
வது அல்லது அதற்குத்தக்க ஜயசாலிகளாகிய அவுணவீ
ரரையாவதுசெலுத்தித் தம்பியைக்கொன்ற பழியைத் தீர்
த்துக்கொண்டவருமன்று அசாரிசமாய் இப்படிக்குப்பிர
மாதம் விளைகின்றவரையில் யாதொருயோசனைகளுஞ்செ
ய்யாமற் சும்மாயிருந்துவிட்டீர் இதற்கொரு திஷ்டாந்தத்
தைச் சொல்லக்கேளும் அக்கினிப்பரிசஞ் சிறிதாகக்கண்
டபோதே அறிஞராக விருப்பவர்கள்சுலபமாகவெண்ணு
மற் பெரிதாகமதித்துத் தட்சணத்தில் அதற்குவேண்டி
யமுயற்சிகளைச்செய்து வீறவொட்டாமல்அவித்து மனங்
களித்திருப்பர், அல்லது சிறிதுபோடதாழ்ப்பராயின்அ
ந்தச்சிறுபொறியே பிரபலமாய்மேலிட்டு வெகுசீக்கிரத்தி
ல் சமுத்திரஞ்சூழ்ந்த பூலோகத்தையெல்லாந் தகித்துச்
சாம்பலாகஅழித்துவிடும் அவ்வாறே விவேகசாலிகளாயி
ருப்பவர்கள் தமக்குநேர்ந்திருக்கின்ற சத்துருவானவன்
பலவிதங்களினும் பலஹீனனுகவிருந்தபோதினும் அவ
ர்களைத் தமக்குமேலாகிய வீரராகவும் தமதுசேனைகளுக்
கு வீறியிருக்கின்ற படைத்துணையைப்பெற் றிருக்கின்ற
வராகவும்பின்பலங்கள் பலவற்றைப் படைத்திருப்பவரா
கவும்கருதிச் சாமபேத தானதண்டமென்னுஞ் சதுர்வித
தந்திரவுபாயங்களினுற் கூடியவரையிற் பிரயத்தினஞ்செ
ய்து சுப்பட்டமாகக் களைந்துபோட்டு மனச்சஞ்சலமற்றி
ருப்பர், இதற்கொருவுதாரணத்தைக் காட்டுவேன் ஒருவ
னுக்குத்துன்பம்நேரத்தக்க விடத்தில்முளைத்த சிறுசெ
டியைக் கண்டபோதே பரிகரித்துவிடாமலிருந்தால் சில
தினத்தில் நகத்தினுற் கிள்ளிப்போடத் தக்கதுவீறிபருத்
தவிருட்சமாய் வேர்களைப்பெருக்கி அவன்வாசஞ்செய்தி
ருந்த கிரகத்தைப்பேர்த்துத் தள்ளிவிடும் மேற்குறித்த
திருஷ்டாந்தங்களைநிதானித்துநடந்துகொள்ள வல்லவர்க
ளுக்குத்தங்களால் அசாத்தியமாகியகாரியங்களொன்றும்

நேரவறியாது அரசனே மகதயிஸ்வரியங்களை யனுபவித்துச் செருக்கியிருக்கின்ற மமதையினால் அந்தந்தகாலங்களிற்செய்யவேண்டிய காரியங்களைமுடிக்காமல்மறந்துதமக்குப் பலவிதங்களினும் உதவியாகவிருந்த துணைவனைக் கொன்ற வொருவனை எவ்வளவென்றிகழ்ந்து இவ்விடத்தில் வாழ்ந்திருப்போமாகில் அந்தகஷ்டம் நம்மைவிடபிறகைச்சேரவறியாது, ஆதலால் மனதுக்கு வித்தியாசங்கண்டவுடன் பாலசுப்பிரமணியன் மேலெதிர்த்துப்போய்ச்சண்டைசெய்துவாட்டித்தூத்தி யிருப்பையாகில்தேவரீர்வாசஞ்செய்கின்ற இந்தப்பட்டணத்துக்குத் தூதன்வருவானோ இத்தகையகஷ்டங்களும் அவமானமும் நேருமோஅப்போதே தகுந்தயோசனையைச்செய்து தட்சணத்தில் நடத்தவேண்டுங் காரியங்களைமுடியாமலிருந்தீர்இந்தஅசாரிசத்தினால் ஜயவீரனாகிய பிள்ளையைமாளக்கொடுத்துச் சலனமற்ற மயேந்திரபுரமும் பார்க்கப் பதங்குலையாயழிந்ததென்று உம்மையொத்தசூரன் மனம்வருந்தலாச்சுது புசபலபராக்கிரமசாலியாகியதிருக்குமாரனிறந்ததற்கும் செல்வவளங்களைப்பெற்றிருந்த நகரமதப்பட்டுப்போனதற்கும் காரணத்தையோசித்துப் பார்க்குமிடத்தில் அந்தந்தகாலங்களில் நடத்தவேண்டுவதைத்துரிதமாகத்தேடாமல் மகதயிஸ்வரியச்சம்பத்தில்மூழ்கி மயங்கியிருந்தபடியால் நேர்ந்ததல்லது வேறுமுண்டோ ஏதோதோற்றாமல் முடிந்துபோன காரியங்களை நினைந்துநினைந்து இனிபேசிவருந்துவது தெரிந்தவர்களுக் கழகன்று ஆதலால் மிஞ்சிநடந்ததுபோக இனிசீர்படுவதற்குஅடியேனுக்குத் தோற்றியமார்க்கமொன்றைச்சொல்லக் கேட்பீராக.

துரிதமாய்ச் சூரர்களாகியஅவுணவீரர்களுடன் பலவகைச்சேனைவெள்ளங்களைக் கூட்டிக்கொண்டுபோய்க் கொன்றைமாலை பிறைகங்கையைத்தரித்திருக்கின்றசடாமண்டலதாரியாகியசிவபிரான்பெற்றபிள்ளையைவளைத்துக்கொண்டு அவனுக்குதவியாகவந்திருக்கின்ற வீரரையும்பூதப்படைகளையும் சின்னபின்னப்பட்டுப் பறக்கும்படிக்குச் சாடி வெற்றிகொண்டுதிரும்பிசவுக்கியத்தி லிருக்கக்கடவீர்நேற்றையதினம் போலவேயினிஅசாரிசமாகவிருக்கலாகாதென்று பலபலவிதங்களைக்காட்டி மேதிமாமுகனென்னும் மந்திரிசொன்னகாரியங்க ளனைத்தையும் பக்கத்திலிருந்து கேட்டுவந்த கொடியபாதகனான துர்க்குணனென்னும் மந்திரியானவன் இப்போது சொல்லியநீதிகள்வெகுநேத்திநேத்தியெனக் கரங்களைக் கொட்டிநகைத்துசுராசுரேந்திரனே நான்சொல்லப்போகிற வுபாயத்திற்சித்தம்வைத்துக்கேட்டருள்க, ஆதியிற்சிவபிரான் திருவருளைப் பெற்றவுடன் திக்குவிஜயஞ்செய்ய நடந்த காலையில்அவுணருக்கரசனாக விருக்கின்ற குபேரன்மேலும்மகாவிஷ்ணுவின் மீதும் இந்திரன்முதலிய தேவர்கள் மீதினும்நீர்சண்டை கொடுத்ததில்லை ஜயசாலிகளாகிய தம்பியரைக் கொண்டு வென்று ஜயவுச்சாகங்களுடன் திரும்பினீர்அப்படிக்கிருக்க இக்காலத்திற் சகலரும் வணங்கஅரசுசெலுத்திவருகின்ற தேவரீர் சிறுபிள்ளையாகியகந்தன்மீதிற் சீறிப்போவது புசழாக விருக்கின்றதோ உம்முடைய மகிமைகளைப் படிக் கொத்ததெனில் அளவற்றகாலம்அக்கினிமத்தியில் நின்றுஅரிய தவங்களைச்செய்து பரமசிவகடாட்சத்தைப் பூரணமாகப்பெற்றுமாளாதவயதும் அழியாதவயிரத்தேகத்தையும் சலனமற்ற இந்திரஞாலத்தேரையும் ஆக்கினாசக்கரத்தையும் பாசுபதமுதலிய சிறந்த படைகளையும்ஆயிரத்தெட்டண்டங்களை நூற்றெட்டு யுகங்கள்எதிரின்றியாளும் சம்பத்தையும் வலியையும் வீரத்தன்மையையும் மகதயிஸ்வரியச் சம்பத்துக்களையுஞ் சம்பாதித்து யாவரும் நெருங்குதற் கருமையாய்ச் சமுத்திரமத்தியிற் பலவண்மைகளையும் காவல்களையுங்கொண்டுஸ்ரீமகாலட்சுமிதாண்டவமாடிக்கொண் டிருக்கின்ற வீரமாமயேந்திரபுரிக்குஇராஜராஜ பரமேஸ்வரனாகச் சகலரும் வணங்கிப் போற்ற அரசுசெய்து வருவதுமூலைப்பால் மணமாறாத வாயையுடைய சிறுபிள்ளையைப்பெரிதாகநினைந்துபகைத்துப்போய்ப் போர்கொடுப்பதற்கோ மேலும்பசிப்பிணியிற் பட்டுவாடி பலிக்கெதிர்பார்த்துத் திரிந்தலைந்துழலுகின்ற அசுத்தராகிய பூதகணங்களையும் தூதாகவந்த பதிதனையும்உமக்குப்பயந் தொளித்துத்திரிகின்ற விண்ணவரையும்ஒரு பிரயோசனமாக வெண்ணிக்கோபித்துப்போகத்துணிவீரோ அஷ்டதிக்குப்பாலகர் முதலாகப்புறந்தந்தோடப் பவனிவரும் பெருமிதத்தைப்படைத்த எமதரசனேஇதுகளைத் தீர்க்கமாயோசித்து இந்தநிமிஷத்திற் நமது சேனைத்தலைவர்களிற் சிறந்த வலிபெற்றசிலரைச் சதுரங்கசேனைகளுடன் போகக்கட்டளையிட்டு கிரவுஞ்சனையும் தேவரீர் தம்பிதாருகாசுரனையும் வெற்றிவேலாற்பிளந்துகொன்ற பாலசுப்பிரமணியனையும் அவனுக்குதவியாக வந்திருக்கின்ற பூதப்படைகள் முதலானவர்களையுஞ் சின்னபின்னப்படவென்று ஜயத்துடன் வரக்கண்டுகளித்திருப்பீர், இதுதவிர மேலானயோசனை ஒன்றுமில்லையென்றுயாவருக்குங் கொடியனாகிய துர்க்குணன்பேசி முடிந்தவுடன் தருமகோபனென்னும் பெரிய மந்திரியானவன்நல்லகாரியம் நீபேசியது வெகுநேத்திநேத்தியெனக் கரங்களை நீட்டியமர்த்தி அகன்றமண்டலாதீஸ்வரனாகிய சக்கிரவர்த்தியைப்பார்த்துச் சொல்லுகின்றான்.

இராஜாதிராஜனே சிலம்புதண்டைகொஞ்சும் பாதங்களையுடையமழலைச்சொல்லாறாதபாலசுப்பிரமணியனையொருபொருளாகமதித்து உம்மையொத்தசூரன்சண்டைக்கு மேலிட்டுப்போவதைப் பார்க்குமிடத்தில் எப்படிக்கிருக்கின்றதெனில், ஒருவன் தங்கத்தினாற்செய்து நவரத்தினங்களை யிட்டிழைத்த கலப்பையைக்கொண்டு அபலமாகிய காய்த்தானியங்களைப்பெறவிரும்பிப்பூமியைஉழுகின்றதையொக்கும், இதுவுமல்லாமல் இப்போது உம்முடைய பேரிற் பகைத்து வந்திருக்கின்றவன் லோகநாயகனாகிய

பரமசிவமுமன்றுஉலகையளந்தமகாவிஷ்ணுவுமன்றுசிருஷ்டிகர்த்தனாகிய பிரமனுமன்று முடிவிற் பிராணிகளைக் கொண்டுபோய்அவைகள்செய்தவினைகளுக்குத் தக்கதண்டனையைச்செய்யும யமனுமன்று தத்தடியிடும் பாலன்மீதுசீறி ஆயிரத்தெட்டண்டங்களையுங் காவல்கொண்டிருக்கும் பெருமிதத்தைப்படைத்தஉம்மையொத்ததீரன்போய்ச் சண்டைகொடுப்பதினாற்பெறும்பயனென்னை, மேலும் தேவரீர்புசபல பராக்கிரமங்களையும் சேனைப்பெருக்கையுங் கண்டமாத்திரத்திற் பாலசுப்பிரமணியன் புறந்தந்தோடாம லெதிர்த்துச் சண்டைகொடுக்கவல்லனோ அதனாலபகீர்த்தியல்லவோ இவையன்றியும் பகைவன்மீறிவருவனாகில் அதனைப்பெரிதாகவெண்ணி மிகுத்தஆலோசனைகளைச் செய்வது அறிவீனருக்கடுக்குமல்லது தெரிந்த மேலையோருக்குத் தக்கதன்று, விவேகசாலிகளாக விருப்பவர்கள்தட்சணத்திலொருவகையாகப்பரிசோதித்துத் தகுந்தபடிக்கு முடித்துப்போடுவர் ஆதலாற்பலபலநினைத்துழலாமல் தேவரீர் புத்திரர்களாகிய எரிமுகன்இரணியனென்னும் இவர்களிலொருவனைச் செலுத்துவீராகில் சிவகுமாரனாகிய பாலசுப்பிரமணியனும் அவன் துணைவரும் சேனைத்தலைவரும் பூதவெள்ளங்களும் எதிரில் நின்று போர்செய்யத் தாளமாட்டார்கள்,நகத்தினாற்கிள்ளிப்போடுகிற முளையைக் கூர்மையுள்ளவலியவாளினால் வெட்டநினைக்கலாகுமோ அதைக்கண்டவர்கள் நகையார்களோ? அவ்வாறே வலியவீரனொருவனால் அதப்படுத்திப் போடத்தக்கவர்களைப் பெரிதாகநினைத்து பரமசிவகடாட்சத்தினாற் பெற்றவரியவில்லைத்தாங்கித் தேவரீர்போயெதிர்க்கலாகுமோ மேலும், நீர்ச்சீலைசெவ்வையாகத் தரிக்கவறியாத பாலனையும் பலிக்குழன்று திரியும் பைசாசங்களையும் எதிரிகளாய் மதித்துத் தேவரீர்சண்டைகொடுக்கப்போகிறீரென்னும் விசேஷத்தைநமது சுற்றத்தினர், கேட்பராயில் நாணிஏசுவார்கள், இவையன்றியும்உமக்கஞ்சி நடுங்கியொளித்துத் திரியும்தேவப்பயல்களுங் கரங்களைக்கொட்டிநகைப்பார்களே! நீர் இப்போது பிரபலமாகயோசிப்பதைப் பார்க்குமிடத்தில் விஷ்ணுவைவென்றதீரனாகியதாருகனையும் மாயையிற்சிறந்தகிரவுஞ்சபருவதத்தையும்வேலினால் நிமைப்போதிற்பிளந்து தள்ளியபடியாற்சிவகுமாரனை ஜயசாலியாகவும் சிங்கத்தைப்போலவலியனாய்ச்சகலரையும் வெற்றிகொண்டிருந்த வச்சிரவாகுவைக் கண்டித்தகாரணத்தினாற் றூதனாகவந்த வீரவாகுவைத் திராணியுள்ளவனாகவும் மதித்திருப்பதாகக் காணுகின்றது,அவர்கள் மாண்டதற்குரியகாரணங்களைநினைந்து பாராமற்போனீர், அதனையுஞ் சொல்லக்கேட்பீராக சந்திரசடாதரக் கடவுளாகிய சிவபிரான் சத்திகளனைத்தையும்ஒன்றாகச்சேர்த்தளித்த வெற்றிவேலாயுதத்தினைப் பாலசுப்பிரமணியன் பிரயோகித்தபடியால் மற்றபாணங்களினாற் றடுக்கப்படாமல் உன்சகோதரன் மாண்டதல்லதுதாருகனைவெல்ல வல்லவர்கள்யாவர்.

இதுநிற்க கிரவுஞ்சனானவன் அகஸ்தியனைமடக்கிக்கொண்டு பலமாயைகளைக்காட்டி வருத்தியதைக்குறித்துஅவர்கோபித்து சபித்தசாபசம்பந்தத்தினால் அவன்மடிந்தனன். அக்கொடிய வசைமொழிக்குள்ளாகாம லிருந்தால் கிரவுஞ்ச வரையைத் திரிமூர்த்திகளாலும் அசைக்கக்கூடுமோ இவைகளனைத்தையும்ஆராய்ந்துபாராமல்பலவீனனாகிய குழந்தைபாலசுப்பிரமணியனால் முடிந்ததென நினைக்கலாகுமோ இதுவல்லாமல் தேவரீர்புத்திரனாகிய வச்சிரவாகுவானவன் அபேத கவசத்தையும்அழிவுபடாதவில்லையும் மீளாதபாணங்களையும் அழியாததேரையும்சிறந்த வரப்பிரசாதங்களையும்பெற்றவனன்று அவைகளைத் தேவரீர்தெரிந்து தகுந்தஉதவிகளையுஞ்செய்யாமற் செலுத்தியபடியால் அபலனாகிய தூதன்கையில் வச்சிரவாகுமாண்டான், ஆதலால் இனிபலபலவாக யோசிக்கவேண்டுவதில்லை துரிதமாய்ப் புசபலபராக்கிரமமுள்ள உமதுசேனைத்தலைவர்களில் வீராதிவீரனாக விருக்கப்பட்டஒருவனைநேமித்துத் தகுந்தசேனைகளை உதவியாகக்கூட்டி பிரகாசம்பொருந்திய வேலைத்தாங்கிய காளையின்மீதிற்செலுத்துவீராகில் பூதப்படைகளையும் படைவீரர்களையும் நவவீரர்களையும் அவர்களுக்கதிபனாகவந்த சிவகுமாரனையும்நொடிப்போதிற் சின்னபின்னப்படக்கலக்கித் துரத்திவிட்டு வெற்றியுடன் திரும்பிவருவான் அதைத்தெரிந்து மனச்சஞ்சலத்தைப்போக்கிக் சுகத்திலிருக்கக்கடவீரென்று இத்தகையதுருட்டாலோசனைகளைப்பேசிய மந்திரியாகிய தருமகோபன்சொல்லி முடிந்தவுடன் உதிரத்திற்பழகிவிளங்கும் வேலைத்தாங்கிய ஒப்பற்ற சவுரியபரனாகிய காலசித்தனென்னும் பெயரினையுடைய சேனைத்தலைவனானவன் சரீரங்குலுங்கக்குலுங்கநகைத்து இதனைச்சொல்லுவான் இராசாதிராசனே திருச்செந்தில்மாநகரத்திலிருக்கின்றசிவகுமாரன் பூதப்படைகளுடன் இவ்விடம்வருவானாகில் தேவரீர்படைவீரரிற் சிலரையேவி துத்துமுருக்கித் துரத்திவிடுவதல்லதுஇந்தச்சுலபமாகியகாரியத்தைப் பெரிதாகவெண்ணி மந்திராலோசனையுஞ் செய்யவேண்டுமோ இதற்குநடத்தவேண்டிய முயற்சிகளைப் பலரைக்கேட்டறிய நினைந்ததைப் பார்க்குமிடத்தில் விநோதமாக விருக்கின்றது.

ஆதியில்வசந்தகாலத்துக் கரசனான மன்மதன்தந்தையாகிய மகாவிஷ்ணுவையும் பிரமதேவனையும்திரிலோகசக்கிரவர்த்தியாகிய இந்திரனையும் மற்றதிசைக்காவலர்முதலானவர்களையும் வென்றகாலையில்அடியோங்களைச்சேர்த்துக் கொண்டு யாதொருயுத்திகளையுங் கேட்டனல்லை அப்படியிருக்க இப்போது ஒருஅறியாத சிறுபிள்ளை நிமித்தியமாக இத்தகையபாரியயோசனைகளைச் செய்ய நினைந்தீரோ இந்திரன்முதலாகிய தேவர்களனைவரும் தங்கள்பதவிகளையிழந்து சகலசெல்வங்களையும் பறிகொடுத்துவலியற்றுப் பதிதராக ஓடியொளித்தனர், அஷ்டதிக்குப் பாலகர் மற்றவிண்ணவர் உமதேவல்களிற் பிசகாமல்நடத்திவருகின்றனர், உமது கட்டளையைக் கடந்தவர்களொரு

வரையுங்கண்டதில்லை, அப்படிக்கிருக்கஅகோரயுத்தங்களிற் பகைவரைவாட்டி கைகண்டிருக்கின்ற அவுண வீரரைப்பார்க்கிலும் பிணங்களைப்பிடுங்கித்தின் றுழலும்பூதபைசாசங்களை வலியராகவெண்ணி மயங்குவதையிக்காலத்திற் கண்டனம் இதையோசிக்குமிடத்தில் மிகவும் அநியாயமாக விருக்கின்றது. மேலுங்கலிகாலம்நேர்ந்ததாகக் காணுகின்றது, தேவரீரையொத்த சூரன் இப்படிக்கும்கவலையிற்பட்டு வருந்தலாமோ அரசனே தயைசெய்துஅடியேனுக்குக் கட்டளையிடுவீராகில் இந்நிமைப்போதிற் சமுத்திரத்தைக் கடந்து பூலோகத்திற்சேர்ந்து சிவகுமாரனையும்அவனுக்குதவியாகவந்திருக்கின்ற நவவீரர்கள்இலக்கர் சேனைத்தலைவர்கள் பூதவெள்ளங்கள் மகாவிஷ்ணு, பிரமதேவன், இந்திரன்முதலாகியதேவர்களையும் வளைத்துக்கொண்டுசாடி காலபாசத்தினாற் கட்டித்தேவரீர் சந்நிதானத்திற் கொண்டுவந்துசேர்க்கின்றேன், இதைத்தயைசெய்யவேண்டுமென்று சேனைத்தலைவன் சொல்லி முடிந்தவுடன் தண்டனென்னும்மந்திரியானவனெழுந்து கரங்களைக் கூப்பினவனாய் இதனைவிண்ணப்பஞ்செய்கின்றனன். மிகுத்தபசிப்பிணியினால் வாடிவருந்தியுழன்றுதிரிகின்றபூதர்களும் மழலைச்சொல்லறாத பாலனும் அவனுக்கேவலாளிகளாகவிருக்கின்ற நவவீரர் முதலாகியபசகளும் தேவரீரையொத்தசூரன் சற்றே யோசிக்கத்தக்க வலிமையுடையவர்களோ இப்போதுகூடியிருக்கின்றமந்திராலோசனை மெத்தவும்அழகா யிருக்கின்றது, அவுணவீரர் வலியும் வெற்றியும் வெகுநேத்தி ஓ! அகன்றமண்டலாதீஸ்வரனே தேவரீர் துணைவனைக் கொன்றசேதியைத்தெரிந்தபோதே மேல்நடந்துபோய் பூதப்படைகளைக் கலக்கிக் கொன்று சிவகுமாரனையும் அடித்துத்துரத்திமற்றபடைவீரரையும் உருத்தெரியாமற் கசக்கிச் சாறுபிழிந்தழிக்க வல்லேன் ஆனால் வெற்றிமாலைபுரளும் புசபலபராக்கிரம சாலியாகிய இராஜராசபரமேஸ்வரனேதேவரீர்உத்தரவைப்பெறாதகாரணத்தினால் இதுபரியந்தந் தாழ்த்திருந்தனன், இக்காலத்திலாவது கிருபைசெய்து அடியேனுக்குக்கட்டளையிட்டனுப்புவீராகில்நிமைப்போதிற்போய்த் திரிமூர்த்திகளுதவியாகவந்துகாக்கினும்அவர்கள்வலிமையடக்கிவெற்றி வேலாயுதத்தைப் படைத்திருக்கின்றபாலசுப்பிரமணியன் முதலானவர்களை அதாஅதஞ்செய்துவெற்றியுட னிவ்விடம் வரக்கடவேனென்று தண்டன் சொல்லிமுடிந்தவுடன் சேனைத்தலைவர்களில்அனலியென்பவன் அதிக கோபத்துடனெழுந்து சூரபதுமனைவணங்கி இதனைச்சொல்லுகின்றான்.

இராசாதி ராசனே கேட்டருள்க, சந்திராதிக ளானவர்கள் சிறியராயினும்வலியிற் குறைந்தவர்களாயினும்படைச் செருக்கைப் பெறாதவர்களாயினும் மற்றுமிதரமாகிய கிரமங்களிற் றாழ்ந்தவர்க ளாயினும் கோபித்துமேலிட்டு வருவராயின் தட்சணத்தி லெதிர்த்துப்போய்சண்டைசெய்து துரத்தி விடாமல் எங்களுடன் மந்திரா லோசனைகளைச் செய்துகொண் டிருந்தால் சூரனெனப் பேர் பெற்றிருக்கின்ற தேவரீருக் கழகோ ! ஆண்மையோ சவுரியத்துக் கடுப்பதோ வென்று அனலி பேசி முடிந்த வுடன் பக்கத்திலிருந்த சிங்கனென்பவன் விழிகளாற் தீப்பொறி சிதறநகைத்துஅக்கினிச்சுவாலைவீசப்பெருமூச்செறிந்து மனம்வேக அரசனைப்பார்த்திதனைப்பேசுகின்றனன், போருக்கஞ்சாத சுத்தவீரனானவன்ஒருகாரியம்வந்துநேருமாயின் மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர்கள்முதலானவர்களைத்தருவித்துமந்திராலோசனைகளைச் செய்தும் தந்திரவுபாயங்களை ஆராய்ந்தும் இவ்விதங்களிற் காலதாமசஞ் செய்திருப்பாரோ ஆகிலும் தமக்குப்பயந்தோடி யொளித்திருந்தஇந்திரனாகிய தேவர்கள் தங்கள் துக்கவருத்தங்களை முறையிட்டுக்கொண்ட காலத்தில் அவைகளைத்தீர்க்கமாயோசியாமல்பாலசேஷ்டையினால் நல்லது பயப்படாதீர்களெனத் தயிரியங்களைச் சொல்லித்தேற்றி அவர்களுக்கு ஆளாகவந்திருக்கின்ற சிவகுமாரன் வலிமையையும் அவனுடனிருக்கின்ற சேனைகளின்வீரத்தையும் அடக்கவோ இவ்விதவெண்ணங்கொண்டிருப்பதுஇனியாதொருயோசனைகளும்செய்யவேண்டியதில்லை.இந்தபாலசுப்பிரமணியன்முதலானவர்கள்மாத்திரமல்ல.ஆதிகர்த்தனா லுண்டாயிருக்கின்றஅண்டகோடிகளிலிருக்கின்றவிஷ்ணுபிரமன்முதலாகிய தேவர்களனைவரும்ஏகமாகச்சேர்ந்துகோபித்துவரினும் அடியேனொருவனாகச்சென்றுவளைத்துக்கொண்டு பெருங்காற்றிற்பட்ட பூளைப்புஷ்பத்தைப் போலச்சின்னபின்னப்படப்பறக்கடித்துவெற்றிபெற்றுவரக்கடவேன் தேவரீருக்கு அடியேன்காரியங்களும்வீரமும்வலியுந்தோற்றவில்லையோ, வீரனாகவிருப்பவன் தன்சவுரியங்களைவிரித்துப் பேசவொண்ணாதாகையால் அடங்கியிருந்தேன், தருணத்தில் உதவியற்றநானிருந் தென்னபலன்ஆதலாற் கர்த்தனேசண்டைக்குப்போகச்செலவுகொடுப்பீராயின் இந்தநிமிஷத்திற் சேனைகளைக் கூட்டிக்கொண்டுபோய்த் தேவரீர்மேற் கோபித்துவந்திருக்கின்றசத்துருக்களை வளைத்துக்கொண்டு கண்டதுண்டப்பட வெட்டியெறிந்து இருந்தவிடந்தோற்றாமற் பறக்கடித்துக்கணப்போதிற் றிரும்பிவந்து ஜயசமாச்சாரத்தை விண்ணப்பஞ்செய்யக்கடவேன். துரிதமாய் விடைதாருமென்றுவேண்டவும், இவ்விதங்களில் துர்ப்புத்தியையும் கொடியமனதையும் தயைதாட்சணியமென்பதைக் கிடையாதகடினசித்தத்தையும்பெற்ற மந்திரிபிரதானிகள்சேனைத்தலைவர்களனைவரும் ஒருவருக்கு முன்னொருவர்முந்தித் தங்களுக்குத் தோற்றியபடிக்கெல்லாம்சொல்லி வருகின்றகாலையில் பிரதமகுமாரனாகிய பானுகோபன் அவர்களனைவரையுங் கையமர்த்திப் பிதாவாகிய சூரபதுமனுக்கு இதனைச்சொல்லுவதாயினன்.

ஐயனே! தேவரீர் இப்படிக்கு மயங்குவதென்னகாரணம், தன்மூலமாகப்போக வரவிருந்த இருஷிகள் தேவர்களை மயக்கிக்கொன்று வாட்டியிருந்த கிரவுஞ்சனையும்

திக்குவிஜயஞ்செய்துஜயசாலியாகவும்விளங்கிவந்த உமது தம்பி தாருகாசுரனையும் சிவகுமாரனுனவன்வெற்றிவேலினுற்பிளந்து கொன்றனனென்னுஞ் சேதிதெரிந்தமாத்திரத்தில் எனக்குச் செலவுகொடுத்தனுப்பாமற்போனீர், அழைத்தாவது யோசித்தவருமல்ல, அப்படிக்கிருக்க இப்போது மந்திராலோசனைகளைச்செய்ய வேண்டுவதென்னை, பிதாவே, வஞ்சகனுகிய தூதனொருவன் மாயவித்தையினுல் வானவழிக்கொண்டு இவ்விடம்வந்து சிலகொடுமைகளைச்செய்ய நேர்ந்தகாலத்தில் விற்பயிர்ச்சிகள்முற்றும் பழகித்தேருத பாலனுகிய வச்சிரவாகுவைச்செலுத்தலாமோ சகலமுந்தெரிந்த தேவரீர் அற்பனுகிய தூதனுல் அவமானப்பட்டாயென்னும் பழிப்புரையைப்பெற்றதுமன்றியிற் குமாரனையும் பறிகொடுத்துச் சிறந்தபட்டணத்தையுஞ் சீரழியச்செய்துகொண்டனை இவையனைத்தும் தீர்க்கயோசனையைப் பாராதகாரணத்தினுற் சம்பவித்ததல்லது வேறல்ல, அப்பிரயோசனமாகிய காரியத்தைப்பெரிதாகவெண்ணி அச்சப்படுவதும் அதற்குவேண்டும் பிரயத்தனங்களை ஆராய்ந்து நடந்துக்கொள்ளாமல் மனம்போனபடிக்கெல்லாம் புத்தியைச்செலுத்தி அதையனுசரித்து வாழ்ந்திருப்பதும் அறிவீனருக்கடுக்குமல்லது பேரறிவாளருக்குத் தக்கதோ ஆதலால் உமதுதுணைவனையுங் கிரவுஞ்சபருவதத்தையும் வாட்டிய பாலசுப்பிரமணியன் ஜயத்தையும் பூதப்படைகளின்வலியையும் சேனைத்தலைவர்கள் வீரத்தையும் தூதாகவந்துபோனவன் செருக்கையும் நான்சென்றுவாட்டிப் பாசத்தினுற்பிணித்துக்கொண்டுவந்து உமதுமுன்விடக்கடவேன், ஆயிரத்தெட்டண்டங்களுக் கதிபனுய்ச் சகலரும்போற்றிவாழத்தக்க தேவரீர் சிவபிரான்பெற்றபிள்ளையை எதிரியாக நினைந்து போர்செய்யப்போவது உம்மையொத்த சூரனுக்கழகன்று ஆதலால் அடியேனைச்செலுத்திப்பகைவனைப்புறங்கண்டு சவுக்கியத்திலிருக்கக்கடவாய், இதைநிதானித்து அவர்கள்மீதென்னையனுப்பியகாலத்தில் எதிர்த்துவரும் வீரர்களனைவரையும் சின்னபின்னபடக்கண்டித்து பிரமன் விஷ்ணு இந்திரன்முதலிய தேவர்களை அடித்துத்துரத்தி மீள்வனெனப் பானுகோபன்பேசிமுடிந்தவுடன் வீரகண்டாமணிகலிக்கும் பாதங்களையுடைய இரணியனெழுந்து சலனமற்ற பிதாவைவணங்கி இதனைச்சொல்லுவான், பலஅண்டங்களுக்கும் அதிபனுய்ச் சகலரையும் ஜயங்கொண்டு வீராதிவீரனென்னும் பேர்பெற்றிருக்கின்ற தேவரீர் மழலைச்சொல்லருத பாலசுப்பிரமணியனுக்குக் கலங்கினையென்னும் வார்த்தைவெளிப்படுமாகிற் கனவிலும்மை நினைந்தபோதினுந் திடுக்கிட்டுவாடும் தேவர்களும் மதிப்பற்றுத் திரிவதற் கேதுவாகும் ஆகையால் இனிமந்திராலோசனையைநீக்கித் தீரனுக விருக்கும்படிக்குக் கேட்டுக்கொள்ளுகின்றனன், இவையன்றியும் காளகண்டமூர்த்தியாகிய சிவபிரான்பெற்ற பாலசுப்பிரமணியன் நம்மைப்பகைத்துச் சண்டைகொடுக்கும்படிக்குப் பூலோகத்தில் வந்தனனென்னுஞ் சேதியைத்தெரிந்தமாத்திரத்தில் அடியேனைத்தருவித்து அவர்களைஜயித்துவரும்படிக்குக் கட்டளையிட்டவருமல்ல, என்னுடைய வீரபராக்கிரமங்களைச் சுத்தமாய் மறந்துவிட்டீர். சூரியனைத்தளைசெய்த பெருமையையுடைய என்தமையனைப் பார்வதிபாகனுகிய சிவபிரான் நேற்றளித்த சிறுபிள்ளையின்மேலும் பசியினுல்வருந்தி பலிக்குழன்றுதிரியும் பூதப்படைகளின் மேலும் சண்டைக்கனுப்புவது பழிப்புரையாகமுடியும் ஆதலாற் சேனைகளைக் கூட்டிக்கொண்டு நானேபோய் பாலனையும் பூதபைசாசங்களையும் தூதனையும் வளைத்துக்கொண்டு சின்னபின்னப்படசாடி இந்திரன்முதலாகிய தேவர்களைக்கட்டிவந்து இன்றையபொழுது கழிவதன்முன்னம் தேவரீர்முன்னம்விடக்கடவேன். செலவுகொடுத்தருளுமெனக் கேட்கின்றகாலையில்அவனுக்கிளைய காளையாகிய எரிமுகனென்னும் ஜயசாலியானவன் இதனைச்சொல்லுகின்றனன்.

பிதாவே தேவரீர்பெருமைகளெப்படிக்கொத்ததெனில், நூற்றெட்டுயுகங்களாய் ஆயிரத்தெட்டண்டங்களையும் ஏகச்சக்கரமாய்ஆளப்பெற்றதீரன் அழிவுபடாதவயிரதேகத்தைப்பெற்றவன். சகலபுவனங்களினும் நொடிப்போதிற்சுற்றிவரும் வேகமுள்ள இந்திரஞாலத்தேரினையும்யாளிவாகனத்தையும் படைத்தவன் சலனமற்ற தனுசையும் அட்சயதூணியையும் வெற்றிகொண்டல்லது மீளாதபாணங்களையும் சகலவிதச் செல்வசம்பத்தையும்பரமசிவகடாட்சத்தினுற்பெற்று வாழப்பட்டவன் தம்மையொத்தவல்லமைசாலியாகிய தம்பியைப்படைத்தவன் ஒருவரினுமொருவன் அதிகசாமர்த்தியமுள்ள புத்திரசம்பத்துள்ளவன் கணக்கிறந்தவெள்ளம் இரதகசதுரகபதாதிகளையுடையவன், விஷ்ணுவும் மயங்கத்தக்க மாயைத்திறமுள்ளவன் இத்தகைய அளவற்றசெல்வச்சம்பத்தைச் சம்பாதித்து ஒருவரும் நிகரில்லாமல் ஜயசாலியாயிருக்கப்பட்ட தேவரீரைப்போன்ற சக்கிரவர்த்தியானவர்கள் முற்காலத்தினும் இக்காலத்தினும் பிற்காலங்களினுமிருக்கவேமாட்டார்கள், அப்படிக்கிருக்க,இமோற்பருவதராசபுத்திரியாகிய பார்ப்பதிதேவி திருக்குமாரனேவிய தூதன்செய்தசிலவீரங்களை நினைந்துநினைந்து வாடிமயங்கியித்தகையபெரிதானயோசனைகளைத் தம்மையொத்தசூரர் நடத்தக்கூடுவதோ? சந்திரசடாதரமூர்த்தியாகிய சிவகுமாரனையும் குறியபாதங்களையும் பருத்ததொந்தியையுமுடைய பூதப்படைகளையும் அபலனுகிய தூதனையும் சேனுதிபதிகளையும் இவர்களைநம்பிச் சூழ்ந்துவந்திருக்கின்ற தேவர்களையும் வெற்றிகொண்டு திரும்பும்படிக்கு எங்களில் உனக்கிஷ்டமானவர்களைச்செலுத்தி விஜயம்பெற்றுக் களித்திருப்பதல்லதுபயந்துவாடிமந்திராலோசனைகளைச் செய்வதென்னை இதுஉமது பேரறிவுக்கடுப்பதோ, இனிபலபலவெண்ணங்கள் வேண்டுவதில்லை, அடியேனுக்கு விடைகொடுத் தனுப்பும் இதோகணப்போதிற் சென்று

கொடியபோரைச்செய்து என்துணைவன்வச்சிரவாகுவின்
சிரங்களை வாளினால்வெட்டியெறிந்ததூதன்முதலாகியசக
லரையும் சிவகுமாரனுடன் தும்சப்படச்சாடிவெற்றிகொ
ண்டல்லது இந்தமகதயிஸ்வரியச்சம்பத்தைப் பெற்றிரு
க்கின்ற வீரமாமயேந்திரபுரிக்குத்திரும்பமாட்டேனென்
று பற்பலசபதங்களைப்பேசினவனுய் மேலும் இராஜாதி
ராஜனே கடப்பமாலையைத்தரித்திருக்கின்ற கந்தவேளை
ப்போர்முகத்தில்வாட்டி விஜயஞ்செய்து வரும்படிக்குஇ
ச்சைகொண்டவர்கள் பலரிருந்தபோதினும் இந்தச்சண்
டையை அடியேனுக்குத் தேவரீர்தயைசெய்து தத்தஞ்
செய்யவேண்டும் ஆதியிற் பாதலத்திலொருவரையும்மதி
யாமற் கொடுமைசெய்திருந்த அரக்கரை ஜயிக்கப்போன
தைப்போலவே இதோவெளிப்படுகிறேன், மகம்மேரு
வையொத்த வல்யதனுசையும் அபேதகவசத்தையும்திவ்
வியபாணங்களையும் முற்காலத்திற் பிரமதேவன் கொடுத்
திருப்பதை யறியாதவர்கள் யாரிருக்கின்றனர்.

மேலும் பலசாலிகளாகிய அரக்கர்குலத்தையடக்கியே
வற்பணிவிடைகளைச் செய்திருக்கும்படிக்கு வெற்றிகொ
ண்டிருக்கின்றேன், இதுசகலருக்குந் தெரிந்திருக்கின்ற
விஷயமாகும். ஆதலால் அடியேன் வலியற்றவனன்றுஇ
தைதீர்க்கமாயோசித்துக் கடைக்கண்வைத்து ஆறுமுகன்
மேல் என்னையே அனுப்பவேண்டுமென்றுஎரிமுகன்வே
ண்டுமுன்னிலையில் அப்பாகுமாரனே, சற்றுநில்லெனக்
கையமர்த்தி மஹாவீரதீரனுகிய ஆயிரஞ்சிரங்களைப்ப
டைத்த சிங்கமுகாசுரன் தமையனைப்பார்த்து இந்தப்பி
ரகாரங்கூறுகின்றான். ஓ! ராஜராஜபரமேஸ்வரனே? மந்
திரிபிரதானிகள் சேனைத்தலைவர்கள் புத்திரர்கள்முதலாக
த் தங்களுக்கிருக்கின்ற வீரங்களையும் வலியையும் விஜய
ங்களையுஞ் சொன்னதல்லது மகதயிஸ்வரியச் சம்பத்தை
க்கிடைத்திருக்கின்ற உமக்குத்தகுதியாகிய யோசனைகளை
யும் இந்தஅரசுநிலைபெற்றிருப்பதற்கடுத்த காரணங்களை
யுந் தெரிவித்தவரில்லை, ஆதலால் எனக்குத்தோற்றிய நீ
திகளையுஞ் சொல்லுகின்றேன்காதுகொடுத்துக்கேட்டுமே
ல்நடத்தவேண்டியதைத் தீர்மானித்துக் கொள்ளக்கடவீ
ர். அஃதென்னையெனில், ஒருவன்தான்பெற் றனுபவித்
திருக்கின்ற செல்வப்பெருக்கினாலுண்டாகும் வெவ்விதா
கிய கோபமானது சகலசாஸ்திரங்களையுங்கற்று அவற்றி
ன்நிச்சயங்களைத் தெரிந்திருக்கின்றமகத்துக்களேயாயினு
ம் அவர்களறிவையும் பேதித்துவீறிக் கெடுதியிற்றள்ளு
ம்அப்படிக்கு முடிவதற்குமுன்னம் தன்விவேகத்தினால
தனைத்தடுத்துத் தனக்கிதந்தேடத்தக்கஅன்புள்ளவர்களு
க்குத் தன்கருத்தையுங்காரணகாரியங்களையும் தெரிவித்
து அவர்களாலோசித்துச்சொல்லுங் கிரமங்களையறிந்து
அவைகளிற்சிறந்த ஒருகாரியத்தை யனுசரித்துநடந்து
கொள்ளவேண்டும். அரசன் மனம்போனவழியி லறிவை
விடாமற் நடத்து வருத்தமின்றி நன்னெறிகளையனுசரித்
துக் கீர்த்திபரனுப்த் தான்பெற்றசெல்வத்துக்கழிவுநேரா
மல் வாழும்படியாகிய நடுவுநிலைமைகளைச் செவிகளிற்சு
றுக்கென்றேறச்சொல்லவல்லவர்களைத் தன்னுடைய நன்
மையைக்கோரத்தக்க மந்திரிகள் துணைவர்புத்திரராக நி
னைக்கவேண்டும், அதற்குவிருத்தமாய் அரசனானவன்
கோபம்பாபத்திற் சேர்க்குமென்பதைத்தெரியாமற்சீறிச்
சொல்வதைத்தடுத்து நியாயங்களைக்காட்டி நல்லொழுக்க
ங்களிற் கொண்டுவராமல் அரசன் இஷ்டப்படிக்குச் சரி
சரியெனப் பேசுகின்றவர்களைக் கொலைசெய்யத்தக்கபகை
வரினும் மேலானசத்துருக்களாக நினைக்கவேண்டும், இ
வ்வாறேஆதிநூலாகிய வேதங்களினும் முறையிடுகின்ற
ன சகலசாஸ்திரங்களையும் கற் றுணர்ந்த பெரியோர்களா
லுங் கேள்விப்பட்டிருக்கின்றேன், செல்காலம் நிகழ்கால
ம்வருகாலமெனச் சொல்லாநின்ற பூதபவுஷியவர்த்தமா
னங்களைத் தீர்க்கமாய் ஆராய்ந்து தான்பிரயத்தனப்படுங்
காரியத்தினால்நேரும் பிரயோசனத்தையும் கெடுதியையு
ஞ் சீர்தூக்கிப்பார்த்து ஒருகருமத்தை நன்றெனக்கொண்
டு நடத்தவல்ல விவேகசாலிகள்செய்யும் யத்தனங்களில்
எவ்வளவும் எந்தவிதங்களிலும் ஒருகுறைவும் நேரவறி
யாது அதற்குச் சிலதிருஷ்டாந்தத்தைச்சொல்லக்கேட்பீ
ராக.

நீரில்வீறித்திரிகின்ற மச்சங்களானவைபாய்ந்து தூண்
டிலிற்கோத்தெறிந்த சிற்றாணினிடத் திச்சைகொண்டு
அச்சூதையறியாமல்விழுங்கிச்சலாகையிலகப்பட்டு மாளு
வதைப்போல தேவரீரிப்போது காணப்படுகிறதைச் சுல
பமாகநினைந்து பிற்காலத்திற்பிராணனளவும் வருவதை
யோசியாமல்மயங்குகின்றீர், இவைகளின்வரலாற்றைவிப
ரமாகச்சொல்லக்கேட்பீராக,திரிலோகசக்கிரேஸ்வரனுகிய
இந்திரனையும் பொன்னுலகவாசிகளாகிய தேவர்களையும்
வீணில் அலைக்கின்றகொடியவர்கள்தாங்களரியதவங்களை
ச்செய்து பெற்றிருக்கின்ற மகதயிஸ்வரியங்களும் வலியு
ம்வீரமும் வரப்பேறுகளும் மற்றுமிராநின்ற வளங்கள
னைத்தும் யானையுண்டவிளாங்கனியைப்போலப் பறிகொ
டுத்துக் கடையிற் றுங்களும் மாள்வதல்லது நீடித்துவா
ழ்ந்தவர்களை யின்னாரெனக் காட்டவல்லமோ பலகாலம்வ
ருந்தி ஆயிரம் அசுவமேதங்களைச்செய்தபலப்பிராப்தியி
னால் தெய்வலோகவாழ்வைப்பெற்றனுபவித்திருந்த இந்
திரன்முதலிய விண்ணவரை அலைகளைவீசுஞ் சமுத்திர
த்தினுலாவித்திரியும் புலால்நாற்றத்தையுடைய மகரமச்
சங்களைப்பிடித்துச் சுமந்துவந்து நீஒருவனன்றியிற் பல
ருக்குந் தினந்தோறுங் கொடுத்துவரும்படிக்குஏவிய ப
ணிவிடைகளைச்செய்யவுங் கட்டளையிட்டீர் அவர்கள் அக்
காலங்களில் மனம்வருந்திக் கிலேசித்தபாதகங்கள் வீணி
ற்போவதோ இச்செய்கைகளைப் பிராணனிடத்திச்சைய
ற்றவர்களன்றியில்இதரமாகவிருக்கின்றவர்யாவருந் துணி
ந்து செய்யமாட்டார்கள், மேலும்அப்படிக்குத்துணிந்து
நாமிட்ட ஈனத்தொழில்களைநடத்தி ஒடுங்கியிருந்தவீரக
ண்டையணிந்த பாதங்களையுடைய தேவராசன்மனைவிக
ற்புக்கரசியாகிய இந்திராணியினிடத் திச்சைகொண்டு

கொடியராட்சதர்பலரையேவிய காரணத்தினாற்பதியையு
மிழந்துதன்தேவியுடன்இந்திரனையும் ஓடியொளிக்கச்செ
ய்தனை இவையன்றியும் அகன்றசாம்பிராச்சியச் செல்வ
வளங்களைக்கொண்டு திரிலோகங்களுக்கும் இராசதானி
யாகவிருந்த பொன்னுலகை அக்கினிதேவனுக் கிரையா
கக்கொடுத்துச் சிரழித்ததுமன்றியில்அவன்பிள்ளைசயந்த
னையும்தேவர்களையும்பிடித்துவந்து சிறைச்சாலையிற்கொ
டிய காவலில் வைக்கச்செய்தீர் அக்காலத்தில் அந்தத்தே
வர்கள் தாங்கள்படும் வருத்தங்களுக்குச்சகிக்கக்கூடாமை
யாற் பரமனைக் குறித்து முறையிட்டுக் கொண்ட கார
ணங்களினால் இராஜாதிராஜனே நமக்கெல்லா மிப்படிப்
பட்ட அல்லல் வந்து சம்பவித்தது இத்தகைய தீயகரு
மங்களை நடத்தினால்கெடுதிநேருமென்பதை உண்மையா
கநினைந்து சிலபரிகாரங்களைத் தேடிக்கொள்ளாமல்அயிஸ்
வரியங்களை யனுபவித்திருக்கின்ற செருக்கினால் மயங்கிப்
பித்தனைப்போலத் திகைக்கின்றீர்,தெய்வலோகத்தைபழி
த்துக் கட்டிவந்து சிறையிலடைத்திருக்கின்றதீனராகியவி
ண்ணவர்களை யின்னமும்விடச் சம்மதமில்லாமலும் அவ
ர்கள்படுந்துன்பங்களைக்கண்டும் ஆதரியாமற் கடின சித்த
ராய் இரக்கமென்பதைமறந்துவிட்டீர், சண்முகதேவர்உ
ன்மீது சீறிவந்துபோர்செய்யவிருப்பது இந்தக்காரணத்
தைக் குறித்தல்லது வேறுமுண்டோ ஆதியில் நாமனை
வரும் வருந்தித்தவங்களைச் செய்தகாலையிற்பரமசிவம்அ
தற்கிரங்கி வந்து வேண்டியவரப்பேறுகளைக் கடாட்சித்த
முன்னிலையில் இந்தஅகன்ற சாம்பிராச்சியச் செல்வங்க
ளைநூற்றெட்டுயுகங்கள் அனுபவித்திருப்பீர்களெனச்சொ
ல்லியிருக்கின்றனர் அத்தவணை யிதுவரையில்முடிந்தது
இவ்வாக்கியத்தை மகதயிஸ்வரியங்களை யனுபவித்துவரு
ங்களிப்பினால் மறந்தீர் உன்னைவெறுக்கவேண்டியதில்லை
விதிவலியை மதியினால்வென்றவர்களொருவருங்கிடையா
து, இதுவுமல்லாமற் பரமசிவம்வரப்பேறுகளைத் தந்து
போம்போது உங்களையாவரும் வெல்ல மாட்டார்கள் க
டையில் நமதுசத்தியானது கண்டித்துவிடுமெனக் கடாட்
சித்திருக்கின்றனர். அதற்குத் திருஷ்டாந்தமாகப் பால
சுப்பிரமணியர் செலுத்திய வெற்றிவேலானது ஜயசாலி
யாகிய தாருகனைக்கண்டித்துயிரையுண்டது இதையன்றி
யில் நமக்குவேறுசாட்சியும் வேண்டுமோ கபடுசூதுவஞ்
சகமென்பதைச் சற்றுந்தெரியாத பேதைமனதையுடைய
தேவர்களை அநியாயமாகவருத்திச்சிறையிலும்வைத்தகொ
டுமையாலன்றோ இவ்வருத்தங்கள் உனக்குவந்துநேர்ந்த
ன, இம்மைமறுமைகளில் யாதொருநல்லபிரயோசனங்க
ளையும் பெறச்செய்யாத அல்பகாரியத்தைமுக்கியமாகவெ
ண்ணி நடத்தினீர், இதனால் மனஞ்சஞ்சலப்பட்டுமுன்பி
ன்தோற்றாமல் வாடுவது விவேகசாலிகளுக்கழகோ தாய்
தந்தையரைப்பாலரை மங்கையரை தவவிரதபரராகியமக
த்துக்களை வேதபாராயணராகிய பிராமணரைப் பரத்து
வநிச்சயந்தெரிந்திருக்கின்ற யோகிகளை மற்றும் நற்கரும
ங்களைச் செய்துவரத்தக்க பெரியோர்களை மனம்வருந்தச்
செய்தவர்களல்லரோ கடையில்தென்புலத்தைச் சேர்ந்து
ரவுரவாதி நரகக்குழிகளில் மாறிமாறிவிழுந்து அளவற்ற
காலம் வருந்தியுழல்கின்றவர்கள்அரசனேயிவைகளையெல்
லாந் தீர்க்கமாயோசித்து நன்னெறிகளைக்கருதி யிக்காலத்
திலாவது தீனராகியதேவர்களைச்சிறையைவிட்டுநீக்குவை
யாகிற் குமாரதேவர் உன்மீதெதிர்த்துச்சண்டைகொடுக்க
வர நினைக்கமாட்டார், மேலும் நாமிதுவரையிற்செய்திரு
க்கின்ற கணக்கற்ற குற்றங்களையும் மனதில்நினையாமல் நா
ளைக்கே பூதப்படைகள் முதலானவர்களுடன் பூலோகத்
தைக்கடந்துதிருக்கயிலைக்கெழுந்தருளுவார் ஓ! அண்ணா
வே? இவற்றையெல்லாம் உறுதியாகநம்பித் தெய்வபக்தி
குருவிசுவாசம் சீவகாருண்ணியமுதலிய நற்கருமங்களைய
னுசரித்துவருஞ் சிரேஷ்டராகிய தேவர்கள் சிறையை நீக்
காமல் சற்றுத்தாழ்ப்பீராகில் திரிபுராதிகளை நகைத்தெரி
த்த சிவபிரான்பெற்ற குழந்தைவேலர் துரிதமாகவந்தும
டக்கிக்கொண்டு அவுணப்பூண்டில்லாமற் களைந்தெரிந்து
கடையில் நம்மையும் வெற்றிவேலினாற்பிளந்துகொல்வது
நிச்சயம் இதனைப்பிசகாகவெண்ணவேண்டுவ தில்லைஇவ
ற்றைச் சத்தியமாகக்கருதித்துரிதமாய்நீர்பிழைக்கவேண்
டும் மார்க்கத்தைத்தேடிக்கொள்ளக் கடவீரென்றுபலபல
விதங்களைக் காட்டிச் செவிகளிற்சுறுக்கிடச்சொல்லி முடி
ந்தவுடன் குலநாசகாலனாகிய சூரபதுமன்கோபங்கொண்
டு கோடையிடிகளைப்போலக்கரங்களைத்தட்டிப்பெருமூச்
செறிந்து சிங்கர்ச்சனைசெய்து கோரத்தந்தங்கள் பிறை
களைப்போல விளங்கநகைத்துபற்களைக்கடித்துத்தேகமெ
ங்கும் வியர்க்க நவரத்தினகசிதமாய்விளங்குகின்ற கிரீடத்
தைத்தாங்கிய சிரத்தையசைத்துத் தன்துணைவனாகியசிங்
கமுகாசுரனைப் பார்த்து இதனைச் சொல்லத் தொடங்கி
னான்.

அடாதம்பி நல்லமந்திராலோசனைகளைக்குறித்துக்காட்
டினை வெகுநேத்தியாக விருக்கின்றது பற்கள் முழுமையு
ம் இன்னமும்முளையாத பாலனுக்கும் நமதேவற்றொண்
டுகளைச்செய்து பயந்தோடிஒளித்திருக்கின்ற இந்திரனுக்
கும் திருக்கயிலையைக் காத்திருக்கின்ற பூதப்படைகளுக்
க்கும் அபலராகிய தேவர்களுக்கும்பயந்து தம்பீ நீ மதி
மயங்கி யிப்படிக்கெல்லாம் சொன்னதாகக்காணுகின்றது
திரிமூர்த்திகளாலும் அசைக்கப்படாத புசபலபராக்கிரம
முள்ள உனக்குஇந்த ஏழைமதி கிடைத்தகாரணமென்
னமோதெரியவில்லை. ஆதியில்நாம்செய்ததவங்களுக்கிரங்
கிப் பரமசிவமெழுந்தருளி வரங்களைக்கொடுத்த காலத்தி
ல் நமக்குக் கடாட்சித்திருக்கின்ற சம்பத்துகளுக்கு முடி
வு இன்னகாலமென் றொன்றைக்குறித்ததையும்நமதுசத்
திப்படையானது நம்மைவெல்லுமெனச்சொல்லிய வாக்கி
யத்தையும் நான்கேட்டதேயில்லை உனக்குமாத்திரம்தனி
த்துக்காட்டினாரோ தெரியாது அடாதம்பீவஞ்சகஞ்சூது
களைநன்றாகக்கற்றாய் புதிதாகிய ஏற்பாடுகளைஉண்டுபண்
ணுகின்றாய் ஒருகாலம்இந்தச் சம்பத்துகளைநூற்றெட்டு

யுகங்களனுபவிக்கக்கடவீர்களென்றுசொன்னதாகவேயிரு
க்கட்டும் அக்காலத்தில் கங்காசடாதர மூர்த்தியாகிய சிவ
பிரான்கடாட்சித்திருக்கின்ற அழிவற்றவரப்பேறுகளையா
வரால் ஜயிக்கப்படும் லோகநாயகனுகியபரமசிவத்தின்வா
க்கியம் பொய்படுவதுண்டோ நல்லது அந்தச்சிவன்சத்தி
யினுலல்லது மற்றயாவராலும்உங்களை வெல்லப்படாதெ
ன்று சொன்னதாகவே யிருக்கட்டும் சத்திக்கும்சிவத்துக்
குத் பேதமுண்டோ ஆதலால், நாம்செய்ததவங்களுக்கிர
ங்கிமனதொருமித்துக் கொடுத்தவனேஅழிப்பனென்பது
தப்பிதம் இப்படிக்குப்பேசுவதுவழக்கமல்லது நித்தியமா
வதன்று தாருகனுனவன் நம்மைப்போலஅழிவுபடாத த
வங்களைச் செய்யாத ஏதுவினுற் சலனமற்ற பேறுகளை
ப்பெற்றவனல்ல அக்காரணத்தினுற் பாலகனேவியவேலி
னுல் மாண்டனன், வச்சிரவாகுவும்சிறுபிள்ளையாதலால்த
ந்திர உபாயங்களை யோசித்துப்போர்கொடாமல் மேல்வி
ழுந்து போராடியபடியால் தூதன்கையிலகப்பட்டுக் கொ
ண்டிறந்தான், காரணகாரியங்களினுற் சம்பவித்தஇவைக
ளும் ஒருகுறைபாடுதானே அடாதுணைவனே பரமனரு
ளிய படிக்குஆயிரத்தெட் டண்டங்களையும் வெகுகாலமா
க ஏகசக்கிரத்தை நடாத்திஅரசுசெலுத்தித் தேவர்கள்
வம்சபரம்பரையாய்த் தொண்டுசெய்யப் பெற்றேன்எத்த
கையவல்லமை சாலிகள்வந்தெதிர்த்துப் போர்செய்தபோ
தினும் சலனப்படாமல் வெல்லவல்லேன் மேலும் எனக்
கொப்பாகப் பேசத்தக்க சாமர்த்தியம்பெற்றவர்க ளொரு
வருமில்லை ஒருகாலங்கனவிலும் நினைக்கவேண்டாம் தவ
ங்களைச்செய் துழலுந் தேவர்களில்அரக்கர்களில் அவுண
ர்களில் மற்றுமெத்தகையர்களிலும் ஆயிரத்தெட்டண்ட
ங்களை நூற்றெட்டுயுகங்களாக எதிரின்றி அரசுசெலுத்தி
வந்தவர்களுமுண்டோமேலும்அழிவற்றவயிரதேகத்தை
யுந் தீர்க்காயசையும் பெற்றவர்கள்யாவர் நான் வெகுகால
மாய்த் தேவர்களைச்சிறையிலடைத்திருப்பதைப் பிரமன்,
விஷ்ணு, முதலியசிறந்த கடவுளர்கண்டிருந்தும் அதைக்
குறித்தொன்றும் பேசலாகாதென் றஞ்சித்தங்கள்பணிவி
டைகளைச்செய்து வருவார், அப்படிக்கிருக்கத்தனித்துவ
ந்திருக்கின்ற சிறுபிள்ளையோ அழிவற்ற என்னுயிரைவா
ங்கவல்லவன் சலனமற்ற வச்சிரதேகத்தையும் அசைவற்
றவலியையும் இறுதியில்லாத ஆயுளையும் பெற்றிருக்கின்
ற என்னைஒருவராலும் பின்னப்படுத்தக்கூடாதெனிற் சி
வகுமாரனேஎதிர்த்து நம்மைப்பொருதழித்துக் கொல்ல
வல்லவன் மழலைச்சொல்லறுத பாலகனென்னை வெல்வா
னெனச் சொல்வதைப்பார்க்கு மிடத்தில் உலகைவிளக்கி
வானத்திற் சஞ்சரித்திருக்கின்ற சூரியனைக்கனிந்த கனி
யென்று கண்ணில்லாதவன் காட்டக்கையில்லாதவன்மிகு
த்த ஆவலுடன் பிடித்துண்டதற்குச் சமமாகவிருக்கின்ற
தென்று பற்பலதயிரியங்களையும்பிரமாதவெண்ணங்களை
யுஞ்சூரபதுமன் காட்டிப்பேசிய வினைத்தையுஞ்சிங்கமுகா
சுரன்கேட்டு நல்லகாரியம்தமையனேயின்னஞ்சிலநீதிகளை
க்காட்டுகிறேன்கோபியாமற்கேட்டருள்கவென்றுசொல்லு
கிறுன்.

பவளமலையையொத்த திருமேனியையும் கங்கைபிறை
நகுவெண்டலைவிளங்குகின்ற சடாமண்டலத்தினையும்திரி
நேத்திரங்களையும் சதுர்ப்புயங்களையும் காளகண்டம்என்
புசர்ப்பாபரணங்களையுந்தரித்து ஆதியந்தமற்றபரம்பொ
ருளாய்த்தேவதேவோத்தமனுய் சுயஞ்சோதிப்படிவத்தை
யும்பெற்றிருக்கின்ற சிவபிரான் இக்கோலங்களைப்பெற்றி
ருப்பதற்குக் காரணங்களைக்கேட்பீராக. சிருஷ்டிதிதிசங்
காரந் திரோபவம் அனுக்கிரகமெனச்சொல்லாநின்ற பஞ்
சகிருத்தியங்களையும்நடத்தி யிவ்வுலகத்தில் ஆதிதொட்டி
ருக்கின்ற எறும்புமுதல் யானையீறுகத்தோற்றும் எண்ப
த்து நான்குநூறுயிரசீவபேதங்களின்கருமபந்தங்களைமா
ற்றிமேலாகிய ஞானவீட்டைக் கடாட்சிக்கக் கருணைகூர்ந்
ததாகும் இத்தகையமங்கள குணதிசயங்களைப்பெற்றிருக்
கின்ற லோகநாயகனைச் சிந்தித்துப்பூர்வத்தி லரியதவவிர
தங்களைச்செய்தீர், அதற்கிரங்கிக்காட்சிதந்து ஒப்பற்ற வ
ரங்களையுங் கடாட்சித்து அதற்கிறுதிகாலத்தையும்நியமி
த்துப்போயினர், அந்தமகதயிஸ்வரியங்களை அனுபவித்
துவரும் மமதையினுற் சிவபிரான்கிருபைசெய்திருக்கின்
றகட்டளைகளைமறந்தீர். ஓ! அண்ணுவே! ஒருவரால்பெறு
தற்கரிய செல்வத்தைப்பெற்றிருக்கின்ற தேவரீர்தருமமா
ர்க்கத்தை யனுசரித்து அதற்கடுத்த செங்கோலைச்செலுத்
திச் சவுக்கியமாயிராமற் செல்வச் செருக்கையே பெரிதா
கநினைந்து நமக்குத்தாயாதிகளாகவும் சன்மார்க்கங்களைக்
சடைப்பிடியாக நம்பிநடந்துகொள்ள வல்லவர்களாயும் சி
வகாருண்ணியராயு மிராநின்ற தேவர்கள்மீது விருதாவா
ய்க் கோபித்துத் தினமொன்னுமிரக்கமுமில்லாமல்வெருகா
லமாய் அரியசிறையிலும் வைத்திருக்கின்றீர், அவ்வருத்
தங்களைச் சகிக்கக்கூடாமல் அவர்கள் தீனதயாபரனேசரு
வசீவகாருண்ணியனே எங்கும் பரிபூரணமாகநிறைந்திரு
க்கின்ற பரமேநாங்கள்படுந்துயரத்துக் கிரங்கிப்பாதுகாத்
திரட்சிக்கவேண்டுமென்று முறையிட்டுக் கொள்ளுவதை
த்திருச்செவிகளி னேற்றுக்கிருபாநிதி யாதலால் அவர்க
ளை வருத்திவருகின்ற உன்வலியையும் மதாங்காரத்தையு
ம் அழித்து உன்வம்சநாசமுஞ் செய்யப்பரமன் நினைந்தி
ருந்தபோதினும் நீதிமானுதலால் மேற்குறித்தபடிக்குச்ச
கலவளங்களையும் கடாத்சித்ததாமேஅதைமாற்றுவதுதரு
மமல்லவென்றும் அதிகவரங்களைப் பெற்றுப்பலஅண்ட
ங்களைப் பரிபாலித்துவரும் உன்னைக்கொல்வது சகலருக்
குமரிதெனநினைந்து தமதருளுருவமாக விளங்குங்குமார
சுவாமியைக்கொண்டு அதப்படுத்த நிச்சயித்தவராய்ப்பூ
ர்வீகமாகிய தமதுதிருக்கோலத்தைத்தாங்கி நுதல்விழிக
ளின் மூலமாய்ச்செவ்வானத்தை நிகர்த்ததிருமேனியையு
ம் பூரணசந்திரோதயத்தை நிகர்த்த சண்முகாரவிந்தங்
களையும் நீண்ட பன்னிருபுயாசலங்களையும்பெற்றஆதிமு
லமாக விருக்கின்ற பாலசுப்பிரமணியனைப் படைத்தனர்,

மக்கள்மிருகம் பறவைமுதலிய அழிபடுந்தேகத்தைப்பெற்ற சீவராசிகளைப்போல நினைக்கவேண்டாம்சுயஞ்சோதியாகிய மூலகாரணக்கடவுளினது நுதலினிடத்தில்வேதங்களு மறிதற்கரிய தேவன் அவதரித்திருக்கின்றனர், நல்லொழுக்கம் அறிவுஞானமுதலிய சத்கருமங்கள்விளங்காத மனதைப்பெற்றபாமராளுக்கு எக்காலத்தினுந்தோற்றப்படாத சிற்பரமூர்த்தியைப் பாலகன்பாலகனெனப்பேசுகின்றீர், அப்பாலகன் பெருமைகளில்சிலவற்றைத்தெரிந்தவளாயிற் சொல்லக்கேட்பீராக.

அஷ்டதிசைகளையும் மூடவல்லகிளைகள்பெருத்த ஆலமரமானது, சிறியவிதையினிடத்தடங்கியிருப்பதைப்போல இவ்வுலகங்களனைத்தும் அக்குழந்தை நினைப்பிலுதிக்கும் மேலும்அருவமாயும் உருவமாயும்அருவுருவாகவும் வினைப்போகங்களாகவும் அதற்குக்காரணமாகவும் விளங்கிஅண்டரண்டபுவனங்களையும் அதிற்பட்டசராசரங்களையும் மாயாவிலாசங்களினால்நடப்பிப்பார், இத்தகையமகிமைகளையுடைய மூலகாரணக்கடவுளினதுதிருவிளையாடல்களை யாவரால்நிதானித்துத் துதிக்கக்கூடும் ஆதிநூலாகவும் சகலபிராணிகளுக்கும் அறிவைவிளங்கச் செய்யும் ஆதாரசத்தியாகவும் விளங்குகின்ற சதுர்வேதங்களின்நிச்சயங்களைப்பேசும் உபநிடதங்களின் முடிவிற்சொல்லும் ஞானவுணர்ச்சிக்கு மெட்டாமல் புதியரிற்புதியனாய்த்தேவாதிதேவனாய் மூலப்பொருளாய் ஆதியந்தமாய்உயிருக்குயிராய் எள்ளிலெண்ணெயைப்போலப் பிரபஞ்சங்களனைத்தினும் பரிபூரணமாகநிறைவெய்திமணியின்பிரகாசத்தைப்போலவும் விளக்கினொளியாகவும் ஒலியினோசையாகவும் விளங்கிஞானபாதத்தைத் தமதுருவாகப் பெற்றிருக்கின்ற ஆதிபரமேஸ்வரன் குணாதிசயங்கள் அறிவீனராகவும் அவன்மாயையிற் பட்டுழலும் பாபிகளாகியநம்மையொத்தவர்கள் துதித்தற்கெளியதோ மெய்வாய் கண்மூக்குச்செவி யென்னும்பஞ்சேந்திரிய விஷயங்களையடக்கியான் எனதென்னும் பாசபந்தங்களை யறுத்துப்பரத்வநிச்சயந்தெரிந்து ஒருமைப்பட்ட மனதுடன் பரமனைக்கருத்திலிருத்தி யோகசாதனைகளைச் செய்யவல்ல தவசிரேஷ்டர்களும் யோகியரும் சித்தர்களும்சிறந்தஞானவான்களாகியமகத்துக்களும் அத்தேவன்பெருமைகளைச்சற்றுந்தெரிந்தவர்களல்லர் விரித்துவிரித்துசொல்லுவதென்னை தாமேதமது மகிமைகளைக் கண்டறியாதவராக விருக்கின்றனர், இவையன்றியும் சைவத்துக்குப் புறம்பாகிய இதரசமயங்களையனுசரித்துவருபவர்கள்அதனையே முக்கியமாகஸ்தாபித்து வாதிக்கும் மூடர்போதனைகளுக் குட்பட்டு நடந்துகொள்ளும் அறிவில்லாதவர்கள் எக்காலத்திலும் அத்தேவன்செயல்களைக் கண்டறியமாட்டார்கள், பரிசுத்தவான்களாய்ப் பரத்தின்நிச்சயங்களை யுணர்ந்து தத்துவநிலையைச் சாதிக்கும் பேரறிவினைப்படைத்த மகத்துக்கள் அவன் குணாதிசயமகிமைகளிற் சிறிதறிவர், சகலத்தையும் விளக்கும்அறிவும் அதனிடத்தில் விளங்கப்பட்டவனும்அதைக்காண்பவனும்அதனாலுண்டாகுங்காட்சிப்பொருளும் அதற்குக்காரணமாக விருக்கின்றமனம்புத்திசித்தம்-ஆங்காரமென்னும் நான்குகரணங்களும் - சத்த-பரிச-ரூப-ரச-கந்தமென்னும் பஞ்சேந்திரியவிஷயங்களும் நன்கு தீங்கென்னு மிருவினைகளும் செல்காலம் நிகழ்காலம் வருகாலமென்னும் திரிகாலங்களும் இடம்பொருள் ஏவலென்னும் உபகரணங்களும் இவற்றிலடங்கிய பயன்களுமாய் அந்தத்தேவன்விளங்கியிருப்பர்,இதுவுமல்லாமல்ஆதிகாலத்தில் மகாவிஷ்ணு, பிரமதேவன்இவ்விருவரும்சிருஷ்டி திதித்தொழிலைமுடித்துவரும்மமதையினால் முத்தொழில்களையும் நடத்தவல்ல பரம்பொருள்யாம்யாமெனவாதுகொடுத்து அந்தத்தேவன் மாயையிற்பட்டுப் பலகாலம் போர்செய்து கடையில் அவனனுக்கிரகத்தினால் மயக்கவாசனைகளை யொழித்துப்போற்றிப் பழையபடிக்குத்தங்கள்பதவிகளிற்சேர்ந்து தமக்குரிய தொழில்களைநடத்தினர், ஆதியாகவிருக்கின்ற தத்துவங்களைக்கடந்து மேல்நிற்கப்பெற்ற கடவுள் அவனன்றிவேறில்லை மேலும்சிவகாருண்ணியனாய் வேதங்களின் மூலமாகிய குடிலையாய் அதன்பொருளாய்ச் சராசரங்களடங்கிய புவனங்களும்அவற்றினால் நிறைந்திருக்கும் அண்டகோடிகளும்அவைகளினிடத்தில் விளங்குகின்ற பலபொருள்களும்அதற்குமேலாகவுமாக விருப்பர், அவர்மாயைத்திறங்களைக் கடந்தவரொருவருமில்லை இன்னமும் வேதாகமங்கள் அவரது பெருமைகளையறியாமல் மயங்கித்தேடுகின்றன.

இத்தகைய சகலமங்கள குணாதிசயங்களையுடைய மூலகாரணக்கடவுளைப் பாலகனென் றிகழ்ந்துபேசினீர், இந்தமகாபாதகத்தினால் அவுணர்கிளைகள் முற்றினும் மடியக்கொடுப்பதுமல்லாமல் வயிரதேகத்தையும் சலனமற்றதீர்க்காயசையும் பெற்றிருக்கின்றனமென வீறியிருக்கின்ற உன்னையும் நொடிப்போதிற் கண்டித்துப்போடுவர் அப்படிக்குச்செய்யாமற்சேனைகளைக்கூட்டிக்கொண்டுசகலாயுதபாணியாய் வந்தகாரணமென்னவெனில் இக்காரணங்களைத்தெரிந்து நல்லறிவுவிளங்கிப் பிழைப்பீரென்னும் அனுக்கிரகத்தினால் இச்சின்னங்களைப்பெற்றுவந்ததாகநினைக்கக்கடவீர் ஓபிராத்ருவேபரமசிவகடாட்சத்தினால்ஆயிரத்தெட்டண்டங்களையாளப்பெற்றனமென்று உம்மைமதித்திருக்கின்றீர்,தத்துவபேதாபேதங்கள் முழுமையுமறிந்தீரல்லீர், அவர்நினைப்பில்பலகோடி அண்டங்களுதித்தன அவற்றின் பெருமைகளைக்கேட்பீராகில் மதிமயங்கிவாடுவீர் இதுவுமல்லாமற் பிரணவப்பொருளீறாகச்சத்தசாகரங்கள்முதலிய பற்பலவஸ்துக்களையுங்கொண்டு விளங்கும்அண்டங்களைக் குறிக்குமிடத்திற்கணக்கிலடங்காததெனப் பெரியோர்களாயிருப்பவர்கள் சொல்லக்கேட்டனம் அவற்றினொன்றி லடங்கியிருக்கும் புவனங்களின் நிலைமைகளையும் பெருமைகளையும் யாவராலறியக்கூடும்முடிவற்ற பொருள்களுக்குநியதிசொல்லப்படுவதோ இத்தகைய சிறப்பையுடைய பலகோடிஅண்டங்களையுந் தமதனுக்கிரகத்தினால் நிமைப்போதி லுண்டாக்கவும் மீட்டுமவைகளையழிக்கவும் வல்லவனாகியதேவதேவோத்தமன் அவனென்றறிந்து கொள்ளக்கடவீர் உன்னுடன்சமர்செய்யவேண்டுமென்னுந் திருவிளையாடலைநினைந்து திருக்கயிலையைக் கடந்து பூலோகத்தில்வந்து திருச்செந்திலென்னுந் திருப்பதியிற் சேர்ந்திருக்கின்றனர்,வயிரதேகத்தைப்பெற்றிருக்கின்றனமென மிகவும் மதித்திருக்கின்றீர்இந்தக்கியாபகத்தை மறந்துவிடவேண்டும் இருவினைகளின் காரணங்களின்படிக்கு மன்னுயிரனைத்தும் பிறந்துஅவ்வினைப்போகங்களை யனுபவித்த பின்புமாண்டும் மீளவுமுதித்தும் இவ்விதத்திலலைந்துதிரியுமென்றுபேரறிவைப்படைத்த மகத்துக்கள்வசனிப்பார். இவைகளைப்பார்க்குமிடத்தில் நீர்முடிவற்றிருப்பீரோபெருமையிற்சிறந்ததெய்வலோகத்தினும்பூமண்டலத்தினும் பிறந்தவர்கள்சிலகாலந்தாங்

கள் செய்திருக்கின்ற வினைப்போகங்களை யனுபவித்த பின்புஅரிதாகப்பெற்ற இவ்வுடலைவிட்டிறந்துபோவது நிச்சயம் அதிகசிலாக்கியமாகச் சொல்லப்பட்டஉமது வச்சிர தேசமும் பிருதிவு சம்பந்தப்பட்டிருப்பதால் அழியாமல் நீடித்திருக்குமோ பரமசிவகடாட்சத்தினாற் சலனமற்றசிறந்தவரங்களைப் பெற்றிருக்கின்றனம் அவற்றை யாவராலும்அசைக்கவொண்ணாதென்று பேசுகின்றீர்,அதற்குச் சிலதிருஷ்டாந்தத்தைச் சொல்லக் கேட்பீராக.

சொர்க்கமத்திய பாதலமென்னும் திரிலோகங்களினுமிருக்கின்ற சீவராசிகளைப்போலஅற்பாயசாக வழிந்துபோகாமல் அளவற்றகாலம் உமதுதேகமிருக்கும் கடையில்மற்ற பிராணிகளைப்போலவேநசித்துப்போகுமல்லது சாஸ்விதமாக விருக்கமாட்டாது மேலும்பிரமன்,விஷ்ணு,முதலிய சிறந்ததேவர்களை நிலைபெற்றவர்களாகப்பேசுவதுமுகஸ்துதியல்லது வேறில்லை அந்தத்தேவதைகளும் சர்வசங்கார காலத்தில் நாசப்படுவார், ஆதலால்நீர்பெற்றிருக்கின்ற வயிரப்படிவமும் அழிவற்ற வரங்களும் திரிலோகவாசிகளும்வணங்கிப்போற்றப்பற்பலயுகங்களிருந்துபின்பு நாசமடைவதற்கையமில்லை அத்தனேநீ பொன்னுலகவாசிகளாகிய தேவர்களைநீதிக்கிடையூறாகிய ஹீனத்தொழில்களைச் செய்யப்பணித்தது மன்றியில் வெகுகாலங்களாக அரியசிறையிலும்வைத்து வருத்துவதைநினைந்துதிருவுளமிரங்கிச் சர்வசீவ தயாபரமூர்த்தியாக விருக்கின்ற ஆதிதேவன் கோபித்து பூருவத்திலுனக்குத்தாமனுக்கிரகித்திருக்கின்ற வரப்பேறுகளைத்தாமேநீக்கநினைந்தால்இதுதகாதெனச்சொல்லி அவரைத்தடுப்பவர்கள்யாவரிருக்கின்றார்கள், ஆதலாற்சலனமற்ற இந்த அகன்றசாம்பிராச்சியச் செல்வத்தை யனுபவித்துக்கொண்டு நீரும் உம்முடைய புத்திரமித்திர களத்திராதிகள்முதலாக அதப்பட்டுப்போகாமல் இன்னஞ்சிலகாலம் சுகசீவிகளாக விருப்பீர்களென நினைந்துஇப்போது குறித்தநற்கருமங்களைத்தெரிவித்தேன் மூத்தோனேயிவைகளுனக்குச் சம்மதப்படுமாகில் வாடிவருந்திச் சுசியற்றுத்துக்கசாகரத்தி லழுந்தியிருக்கின்ற தேவர்கள்சிறையையிந்தநிமிஷத்தில்விடுதலைசெய்துபோட்டுச் சிவபிரானருளிய செல்வத்திற் சவுக்கியமாகவிருப்பீரென்று விவேகசம்பன்னனாகிய சிங்கமுகன் சொல்லிய நீதிகளைச் செவிகளில் நாராசத்தைக் காய்ச்சிச் சொருகியதைப்போலச் சூரபதுமன் கேட்டமாத்திரத்தில் நவரத்தினகசிதமா யிராநின்ற கிரீடமணிந்திருக்கும்முடியையசைத்து ரவுத்திராகாரமாகக்கோபித்துத்தம்பியைப்பார்த்துச் சிலவாசகங்களைப்பேசுகின்றான். அறிவில்லாதவனேகேள்? காற்றினாற்றள்ளுண்டு அக்கினிச்சுவாலையிற்பட்டுக்கங்காநதியின் அலைகளினால் மொத்துண்டு சரவணப்பொய்கையிற்சேர்ந் தலைச்சற்பட்டு வேற்றுமாதர்கள்ஸ்தன்னியபானத்தையுண்டு பசியினால் வாடிவருந்தியழுது விளையாடிக்கொண்டிருந்த நேற்றையபாலகனையோபரப்பிரம சொரூபமாக நினைந்திருக்கின்றனை, வஸ்துநிச்சயத்தைச்சொல்லக் கேட்பையாக, பலபாண்டங்களிலிருக்கின்ற ஜலத்தில் வானத்தில்விளங்குஞ் சூரியன்வெவ்வேறுகக்காட்டுமாறுபோலப் பரப்பிரமமென்கிறவொருபொருள் அளவற்ற உயிர்களெனப்பேர்பெற்று பற்பல வுருவுகளைத்தாங்கித் தமது மாயையின் வீக்கத்தினால் அளவற்ற பேதாபேதங்களாக நடிப்பார். மேலும்கடமானது உடைந்தகாலத்தில் அதிற்காட்டிய வெளியானது ஆகாயத்திற்கலந்து போவதைப்போல உடற்பேதங்களனைத்தும் முடிவெய்தியகாலத்திற்பழைய படிக்குமனோவாக்குக்கெட்டாத சோதியாகிய கர்த்தனைக்கலந்து அபேதமாகவிளங்கும் கடுக்கன்- மோதிரம் சந்திராரம்- அரைவடமெனச்சொல்லும் பலஆபரணாதிகளும்ஒருபொன்னினிடத்துண்டாய் விளங்கி மீட்டும்அவைகளையழித்தகாலத்திற் பழையபடிக்குப் பொன்னேயாவதுபோல இவர்பரமென்றும், இவர் ஜீவனென்றும்பேதித்து இருவகையாகநினைக்கவேண்டாம் தேகமாத்திரம்வேறல்லது பரப்பிரமசொரூபமாகவிருக்கின்ற ஜீவாத்மாக்களெல்லாம் ஒன்றாகவேயிருக்கும்அடாதம்பி இப்போதுநான்சொல்லிய இரகசியங்களைநிதானித்துப்பார்ப்பையாகில்உண்மையாகவேவிளங்கும் இதுநிற்கவீரமும்வலியுமில்லாதவர்கள்பலருமிகழத்தக்கதாகத் தாழ்ந்தும் புசபலபராக்கிரமமும்அறிவுமுள்ள சூரர்கள் சகலரையும்வென்று தன்வயப்படுத்தி வாழ்வதும் இவ்வுலகத்தில் சாதாரணமாய்நடந்துவருகின்றது. அவ்வாறே அசைவற்றவயிரதேகத்தையும் தீர்க்காயசையும்பெற்றுசகலரையும் வென்றுஅரசுசெலுத்திவரும்நான்மிகவுஞ்சிறந்தவனாகும் சண்முகனென்பவன் சிறியனாதலால்அவனை நான்வெல்வது உண்மையாகும்.

இதுவல்லாமற் பூர்வீகமாகவாழ்ந்திருந்த நம்முடைய பெரியோர்களைக்கொன்று அவர்கள்செல்வங்களை அபகரித்துக்கொண்டபழம்பகைவராதலால்தேவர்களை வாட்டி யழிவற்றசிறையிலடைத்துவைத்திருக்கின்றேன்,இதுபுதிதல்லசக்கிரவர்த்தியாகவிருப்பவன் கொடியோர்களைத்தேடிப்பிடித்துத்தண்டிப்பது தகுதியென்று நீதிசாஸ்திரங்களினுஞ்சொல்லுகின்றது. ஆதலாற்பொன்னுலகவாசிகளாகியதேவர்கள்சிறையை ஒருபோதும் விடமாட்டேன்.மேலும்ஓடியொளித்துத் திரிகின்றஇந்திரனையும் மற்றதேவர்களையும்பிடித்துவந்துபாரவிலங்குகளைப்பூட்டிக் காவலிற்படுத்தவிருக்கின்றேன், பலபலசொல்லியாவதென்னஇதைக்குறித்துஏகநாயகனாகியபரமேஸ்வரனேகோபித்தெதிர்த்துவந்தாலும்தடையின்றிச்சண்டைசெய்யக்காத்திருக்கின்றேன், ஆகையாலினியித்தகைய அவலமாகிய சிதுவார்த்தைகளைப்பேசாமலிருக்கக்கடவாய், தம்பிநானென்னசொல்லப்போகிறேன்.ஒருதாய்வயிற்றிலென்னுடன்கூடப்பிறந்துஎன்னைப்போலவேபலரையும்வென்றுவீரவிஜயனாகவிருந்த நீகடையில் நமதுவம்சபரம்பரையாய் வயிரிகளாகவிருக்கின்ற தேவர்களைவாட்டிக் கீர்த்தியைப்பெறாமல்அவர்களுக்குப்பயந்து இப்படிக்கொத்த விதங்களைப்பேசஎவ்விடத்துக்கற்றாய் இவ்விததீரனாகியதம்பியிருக்கிறபோது எனக்குவேறொரு பகைவரும் வேண்டுமோ! அடாஇளையோனே பலகொடிமுடிகள் மகம்மேருவினிடத்தில்விளங்குவதுபோல ஆயிரஞ்சிரங்களையும்,ஆலின்விழுதுகளுக்கொப்பாக விரண்டாயிரம் நீண்டகரங்களையும் அணிபடப் படைத்ததினால் பிரயோசன மென்னை குலவண்மையையும் சவுரியத்தையும் அழித்துப் பயித்தியக்காரனிலும் அறிவிழந்து மயங்குகின்றனை பூர்வீகமாய் வீறியிருந்த அவுணர்வழிபாடுகளையும் வெற்றிகளையும்மறந்துபதிதர்களாகிய தேவர்களைப்போலப் பிதப்பையானாய்அண்டங்களெங்கும் புகழாநின்ற கீர்த்திப்பிரதாபங்களையும் புசபலபராக்கிரமங்களையும்வீரத்தன்மையையுங்கொன்றாய்ஆதலால் உன்னையொத்த குலவீனனுக்கு மேருகிரியையொத்தவில்லேன்வரமுயற்சிகளினாற்பெற்றிருக்கின்ற சிறந்த

தேவாள்திரங்களேன், அபேதவிரக்கவசமேல், இவைவ
கள் சுமையாகக் காணுகின்றபடியால்தலையைச்சுழற்றியெ
றிந்துபோட்டு மவுனதிட்சையை வகித்துஅரியதவங்களை
ச்செய்தற்குக் கானகத்தைநோக்கிப்போய் விடக்கடவை,
அடாபின்னேனே மானமௌனத்தையும் வயிரத்தையும்
மறந்து புவனங்களெங்கும் கொண்டாடவல்ல அவுணரா
சர்கள் பிரபாவங்களையும் விஜயங்களையும் வீரபராக்கிரம
ங்களையும் நாசப்படுத்துவதாகத் தான்வளர்ந்தகாட்டைய
ழிக்கநேர்ந்த கோடாரிக்காம்பைப்போலச் சிறந்த இக்குல
த்தை நீறுசெய்யப்பிறந்தாய் இந்தராஜயோக்கியமாகியம
ரபிற்றேற்றியதற்கொருபயனும்பெற்றுக்கொள்ளாமல்வி
யர்த்தனுனாய் அடாகுலநாசா நீயிருந்ததினாற்பயனென்னே
செத்தவனேடொத்தவனுனாய், அல்லது உன்னை உயிருட
ன்றிரியும் நடைப்பிணத்துக்குச் சமமாகநினைக்கவேண்டு
ம். அடா! அநுஜா? எதாகிலும் முக்கியமாயிருச்கின்றகா
ரியங்களைக்குறித்துமந்திராலோசனைகள்செய்யவேண்டுமா
கில்இதுவரையில்உன்னைச்சிரேஷ்டனுகமதித்திருந்தேன்.

இப்படிக்குப் பயப்பிராந்திகொள்ளுவாயெனத் தெரியு
மாகில் உன்னைத்தருவிக்கமாட்டேன். பரமசிவகடாட்சத்
தினற் பெற்ற வீரவாளாயுதத்தைக்களிகிளறந்துடுப்பை
ப்போல ஏன்வீணிற்சுமக்கின்றனை, அதைவீசிப்போட்டு
ப் பிரமனைப்போலப்பஞ்சாங்கமொன்றைகரத்திற்கொண்
டு பிராதகாலத்தில்வீடுகள்தோறும் நுழைந்துஅவர்களு
க்கிதம்பெறத் தினசரியைகளைச்சொல்லி அவர்கள்தயை
செய்து கொடுக்கப்பெற்ற தியாகத்தைக்கொண்டுவயிறுவ
ளர்க்கிறதுமிகவும் உத்தமமாகக்காணுகின்றது, தழைத்தி
ருக்கின்றகள்ளியின் கிளைகளைப்போலவிளங்கும்சிரங்களி
ற் கிரீடமேன், புயங்களில் வாகுவலயங்களென்னத்துக்கு
அடாசகோதரனே இந்தப்பூமியானது வெகுகாலமாய்ச்சு
மந்துவாடத்தக்க பருத்த உடலையெடுத்துக்கெட்டாய், இ
னியென்னசெய்வாய், ஆதியில் விவேகம்விளங்காதபாலப
ருவமாதலால் மதிமயங்கி திரனுகச்சென்று யமனைவளைத்
துக்கொண்டு சாடியும்வருணனைப்பொருதுபிடித்துவந்து
விலங்குபூட்டிச் சிறைச்சாலையில்வைத்தும்தேவர்களைபெ
ருங்காற்றிற்பட்ட பூளைப்புஷ்பத்தைப்போலச் சின்னபின்
னப்பட்டலைபக்கலக்கியும் இவ்விதமாக அளவற்றவெற்றி
பெற்று மரபையும் புகழையும்விளக்கினை,இப்போதுபே
ரறிவுதோற்றியபடியால் அவலமாகிய பெண்களைப்போல
நாணிமயங்குகின்றனை, அடாதம்பி யினியுன்னைப் பேடி
யாக நினைக்குங்காலம் சம்பவித்தது நம்முடையதாயாகிய
மாயையானவள் வருந்தியுன்னைப் பெற்றபின்புபலதலைக
ளைப்பெற்ற பிள்ளையான உன்புசபலபராக்கிரமத்தையும்
பிரதாபத்தையும் இன்னமும்வந்து பார்த்தவளல்லஇப்ப
டிக்கொத்த சூரனைப்பார்க்கப்பெறுமல் அருவமாய்ப்போ
னது தாய்செய்த குறையோ! அல்லாவிடில்உன்னைக்காண
த்தான் சகிப்பாளோ பிடரிமயிரைப்பெற்றிருக்கின்றசிங்க
ராசன் தனக்குப்பகையாகிய தொன்றைக்கண்டமாத்திரத்
திற்பதைபதைத்துச்சீறி எழுந்துபாய்ந்து அதனைச்சின்ன
பின்னப்படக்கண்டித்துக்கொல்லும்அத்தகையசூரத்தை
யுடைய சிங்கமுகத்தைப்பெற்ற பலதலைகளைக் கிடைத்தி
ருப்பது வீணுகமுடிந்தது இனிபலபல சொல்லியாவதெ
ன்ன இதோ நானேபோய்வளைந்துகொண்டு கோரரூபமு
டைய பூதவெள்ளங்களையும் நவவீரர்முதலிய சேனைத்த
லைவரையும் திரிபுரதகனனுகிய சிவபிரான் பாலகனுகியவ
டிவேலனையும் அவனைநம்பிச்சூழ்ந்து வந்திருக்கின்றபிர
மன்விஷ்ணு இந்திரனுதிய தேவர்களையும் நிமைப்போதி
ற் சின்னபின்னப்படச்சாடி வென்று வெற்றிக்கொடியோ
டு மீள்கின்றேன். ஆதலால் நீபயந்து சாகவேண்டாம்துரி
தமாய் உன்பட்டணத்தைச்சேர்ந்து மூலைவிட்டிற்பத்திர
மாயொளித்துக்கொண்டிரு, அடா அப்பா மோசம்வரப்
போகுது சிக்கிரமாய் நடநடவென்றுசற்றும்விவேகமற்ற
சூரபதுமனைவன் இவ்விதங்களில் அவமதித்துப்பேசிய
காலையிற் சிங்கமுகாசுரனுக்கு அதிககோபம்பிரவேசித்து
அண்ணு! உன்விவேகமும் நீதியும் வெகுநேத்தியாகவிரு
க்கின்றதென்று நகைத்துவிழிகளில் அனற்பொறிசிதறவு
ம் மனங்கொதித்து வேகவும் சுவாசம்விடுந்தோறும்புகை
யுமனலும் வீசவும்பொறுத்துமுடியாமல்இதனைநினைக்கி
ன்றான்.

அவுணர்குல பெருமானுக விருக்கின்ற தமையனைவ
ன்இக்காலத்தில் நேர்ந்திருக்கின்ற இடையூறுகளை நீங்கி
ப் பிழைத்திருக்கும்பொருட்டுப் பற்பலஉறுதிகளைச்சொ
ன்னேன் விவேகமற்றவனுதலால் அவைகளினுற்கிடைக்க
விருக்கின்ற பிரயோசனங்களைத் தெரிந்துநடந்துகொள்ள
வறியாமல் வீணில்என்னைத்தூறுகின்றனன், மேல்வருங்
குறைபாடுகளை எவ்வளவும்நிதானித்துப்பார்க்கவில்லை,சா
கிறதே துணிபாகக்கொண் டிருக்கின்றான், ஒருவன் நன்
னெறிகளைப்புத்தியீனனுக விருக்கின்றவனுக்குப்போதித்
தால் அவைகளும்வியர்த்தமாய்த் தானும் பயித்தியக்கார
னுவானென்று பேரறிவாளர் சொல்லுவார்கள்அதைஉண்
மையாகக்கண்டனம்.வேம்பு, எட்டி, இந்தமரங்களுக்குத்
தேனையும் பாலையுங்கலந்து விஸ்தாரமாகவிட்டு வளர்த்த
போதினும்அதன்கசப்புநீங்காததுபோல அறிவீனருக்கு
ப்போதிக்கும்நடுவுநிலைமைகளும்பழிபட்டுப்போகும், மே
லும்சிறந்தமகதயிஸ்வரியங்களையனுபவித்து வீறியிருக்கி
ன்றஇந்தச்சூரபதுமனுக்குப்பலஉண்மைகளையும்நல்லொ
ழுக்கங்களையுங்காட்டிப் போதித்தபோதினும்தான்நீடித்
திருக்கின்ற வகையற்று நன்னெறியிற் றிரும்பாமற்பழை
யபடியே துணிந்திருக்கின்றனன் இதுபரீஷ்காரமாகத்
தெரிந்தும் வியர்த்தமாய்க் கெட்டுப்போகிறனென்கிற ப
ரிவினுல் வருந்திச் சீர்படுத்த நினைந்தாலும் ஆவதொன்
றையுங்காணேன் பிராரத்துவவினையின் முயற்சிகளைஒரு
வன் தந்திரத்தினுல் கடக்கக்கூடுமோ! ஊழ்வினையின்ப
டிக்கு நற்காலம்நேர்ந்தமுன்னிலையிற் சகலமும் இலாப
மாகவேமுடியும் அவ்வாறே துர்க்காலம் சம்பவித்தபோ
துந் தானருமையாகத்தேடிப் பத்திரப்படுத்தியிருந்த சி
றந்தபதார்த்தங்களனைத்துந் தனக்குத்தோற்றுமல் மறை
ந்துபோகத் தினனுப்வாடுவன், இந்தத்தேவ ரகஸ்யங்க
ளொருவராலுமறியவொண்ணுது,தேவதேவோத்தமனுகி
யபரமசிவத்துக்குமாத்திரம் உள்ளங்கைநெல்லிக்கனியை
ப்போலவிளங்கும் செவ்வானத்தையொத்த சடாமகுடத்
தைத்தரித்தசிவபிரான்சூரபதுமனுக்கு இச்செல்வத்தை
யனுக்கிரகித்தகாலத்திற்குறித்திருக்கின்றமியதியாகிய நா
ற்றெட்டுயுகங்களுங்கழியுநாள்நெருங்கியிருக்கின்றது.ஆத
லாற் சூரபதுமனும் இவ்விடத்திலிருக்கின்றசகலரும் த
டையின்றிமாள்வர் வெகுகாலம் நாடுநகரமிழந்து வாடிம
றைந்திருக்கின்ற இந்திரன்முதலியதேவர்கள் செய்துவரு
ம்தவவிரதங்கள் வீணுப்போகுமோசகோதரசம்பந்தத்
தினுல் இன்னமுஞ்சிலகாலம் சுகசீவியாகவிருக்கநினைந்து

நன்னெறிகளைப்போதித்தபோதினும் முடிவுகாலம் நேர்ந்தபடியால் தமயன் என்வாக்கியங்களை எவ்வளவும்உண்மையாகநம்பி யனுசரியாமல் தடுத்ததுமன்றியிற் பலநிந்தையாகிய வசனங்களையும் பேசினன் ஆதலால் நாம்தப்பித்துக்கொள்ளுமார்க்கம் யாதென்றால் அண்ணா அடியேன் சிறியனாதலால் ஏதோதெரியாதபுத்தியினாற்சிலகருமங்களைச்சொன்னேன், அக்குற்றங்களைப்பொறுத் திரட்சிக்கவேண்டுமென்று மூத்தோனைவேண்டிக் கொள்வதுதகுதியாகும் இனியாதொரு நன்மையைக்குறித்துந் தகுந்தமாறுத்தரம் பேசுவதழகல்ல சிலதினத்தில் தேவதேவோத்தமனாகிய குமாரதேவர்கரத்தில் விளங்குகின்ற வெற்றிவேலினால் நமதுதமையன்மாள்வதற் கையமில்லை அந்தக்கோரத்தைப்பார்ப்பது நம்மால்முடிவதன்று ஆதலால் இவனுக்குமுந்திநாம்மாண்டுபோவதே காரியமெனத்தீர்க்காலோசனைசெய்து முடித்துக்கொண்டு மனதைத்தேற்றிக் கோபத்தையாற்றி யானத்தையடக்கிச் சிங்கமுகாசுரனானவன் சீக்கிரத்திலெழுந்து ஆயிரத்தெட்டண்டங்களுக்குஞ்சக்கிரவர்த்தியாகவிருக்கின்ற சூரபதுமன்பாதாரவிந்தங்களில்விழுந்து சேவித்தெழுந்து கரங்களைக்கூப்பிநின்று ஓ! பிராத்ருவே? அடியேன்மீதிற் கோபியாமல் க்ஷமித்தருள்க, பேரறிவுவிளங்காதசொற்பக்கியானத்தைப்பெற்றிருக்கின்ற அடியேன்பேசிய பிசகுகளைக்குறித்துப்பாராட்டாமற்கிருபைசெய்திரட்சிக்கவேண்டும்சிறியோர்செய்த சிறுபிழைகளைப்பெரியோர்களாக விருப்பவர்கள் க்ஷமித்துப்பழையபடிக்குப் பாதுகாத்துவருவதுகடமையாதலால், தம்பியாகிய நான்செய்த தப்பிதங்களைப் பேரறிவுவிளங்கியிருக்கின்ற தேவரீரல்லது இதரரால்மன்னிக்கப்படுவதோ ஆகையால் என்னறியாமையைப்பொறுத்து ஆதரிப்பதன்றியில் இதைநினைந்துநினைந்து கோபித்து அடியேனை யிகழவேண்டாம் தேவரீர் சித்தப்படியே யுத்தசன்னத்தனா யிந்தநிமிஷத்திற்போய் எதிர்த்துவருகின்ற பகைஞர்களைவளைந்துகொண்டு பெருங்காற்றி லகப்பட்ட பூளைப்புஷ்பத்தைப்போலச்சாடுவேன் அதைத் தேவரீர்கண்டு களிக்கப்போகிறீர், பாலசுப்பிரமணியன் முதலாகிய பகைவர்மீதில் இந்தநிமிஷத்தில்நடந்துவெற்றிபெற்றுவருவதற்குச் செலவுகொடுக்க வேண்டுமென்று சிங்கமுகாசுரன்வணங்கிக் கேட்டமாத்திரத்தில் மனம்பூரித்துத் தேகபரவசத்தனாய்ச் சந்தோஷசாகரத்தில்மூழ்கி அக்காலத்திலுண்டாகிய தயையினால் தம்பிவாவாவென்றழைத்து மார்பிலிறுகத்தழுவிக்கொண்டு இதனைச்சொல்லுகின்றான்.

ஆயிரம் பணாமகுடங்களைப்பெற்றிருக்கின்ற ஆதிசேஷன்வாசஞ்செய்யும் பாதலத்தினுஞ்சமுத்திரஞ் சூழ்ந்திருக்கின்றபூமண்டலத்தினும்தெய்வலோகத்தினும்திசாதிசைகளினும் அளவற்ற அண்டங்களினும்நீபோய்ச் சண்டைகொடுத்தகாலத்தில், ஐயனே உனக்கரியதொன்றிருந்ததோஉன்னுடைய புசபலபராக்கிரமங்களுக்கு ஒருவனாலொப்புச்சொல்லக்கூடுவதோ குறைவற்ற கேள்விகளையுடைய தம்பீ!முன்னம பேசியகாரணங்களனைத்தையும் பார்க்குமிடத்தில் என்மனத்துணிவையும் உறுதிப்பாட்டையுந் தெரிந்துகொள்ளும்பொருட்டுச் சோதித்ததைப்போற்காணுகின்றது உன்னுடைய புசபலபராக்கிரமமென்னை எனக்குத்தெரியாததோ சத்துருக்களென்னும் மதயானைக்கூட்டங்களைவாட்டும் வீரசிங்கமல்லவோ பகைவரெதிர்ந்து வருகின்றனரென்னும் வசனஞ்செவிகளிற்பட்டமாத்திரத்தில் வடவாமுகாக்கினியைப்போலச் சீறிப்போய் வளைந்துகொண்டுசாடிக்கொன்றுவதுசத்துருக்கள் வணங்கிக் கீழ்ப்பணிந்தகாலத்தல்லது நீபெற்றிருந்தகோபந்தணிவாயோ அத்தகைய உன்சூரத்தையும் புயவலிமையும்நான்நன்றாகத்தெரிந்தவனல்லனோ நீமுன்னம்பேசியபோது சற்றுமயங்கினேன் ஆதலால் அப்பனேயிப்போது உன்பட்டணத்துக்குப்போய்த் திக்குதீபாந்திரங்களில் வாசஞ்செய்திருக்கின்ற உன்சதுரங்கச்சேனைப்பெருக்குகளையும் அழைப்பித்துக்கொண்டு விஜயத்துடன் களித்திருக்கக்கடவாய் ஒருகாலம் சிவகுமாரன்பூதப்படைகளுடன் சண்டையைக்குறித்து இவ்விடம்வருவானாகில் தட்சணத்திற்சொல்லி யனுப்புகிறேன் உடனே உன்சேனாசமுத்திரங்களுடன்வரவேண்டும்ஒருவேளை அந்தமுருகவேளானவன் உன்பட்டணத்தைநோக்கி வருவானாயில் நீயெதிர்த்து போவதற்கு முன்னம் அதிவேகமுள்ள தூதர்களைச்செலுத்துவையாகில் உடனேநமது சதுரங்கசேனைவெள்ளங்க ளனைத்தையும் கூட்டிக்கொண்டு வேகமாய்வந்து சத்துருக்களைஜயித்துத்திரும்பக்கடவேனென்று அவுணருக்கரசனாகியசூரபதுமன்சொல்லியபோது அண்ணாதேவரீர்குறித்தகாரியங்கள் தகுதியானதெனக் கொண்டாடி நீர்கட்டளையிட்டபடிக்குச்செய்வேனெனச்சொல்லி வணங்கிச் செலவுபெற்றுக்கொண்டுபோய்த் தன்னகரத்தைச்சேர்ந்து பழையபடிக்குச் சிங்கமுகாசுரன் அரசுசெய்திருந்தனன், இந்தப்பிரகாரஞ்சம்மதித்து புசபலபராக்கிரமசாலியாகிய சிங்கமுகன்மீண்டபின்பு சூரபதுமனானவன் தன்சபையிற் கூடியிருந்த மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர்கள் புதல்வர்முதலானவர்களுக்குச் செலவுகொடுத்தனுப்பிவிட்டுச் சபையைநீங்கி இராஜபரிவட்டங்களுடன்சென்று நவரத்தினமயமாய் மேருகிரியைப்போலவிளங்குந் தன்னரண்மனையைச்சேர்ந்து இந்திரபோகத்தினுமேலானசெல்வங்களை யனுபவித்திருந்தனன்கேட்டீர்களோ? சவுனகாதிரிஷிகளே, அகன்றசாம்பிராச்சியச்செல்வவிபவங்களையனுபவித்திருக்கின்ற சூரபதுமன்சகலனையுந்தருவித்து மந்திராலோசனைகளைச்செய்ததையும் மற்றகாரணங்களையும்இதுவரையினுஞ்சொன்னோம்இனி இந்திரன்-பிரமன்-விஷ்ணுமுதலாகியதேவர்கள்துனைவர்கள்முதலாகச்சூழ்ந்துபோற்றத் திருச்செந்திற் பதியென்னுந் தெய்வீகஸ்தலத்தில் வீற்றிருந்தசரவணபவன்நடத்தியயத்தனங்களையும்மற்றகதாப்பிரசங்கங்களையுங்கேளுங்கோளென்று சூதபுராணிகர்சொல்லத்தொடங்கினர்.

---

௩-வது, மகேந்திரகாண்டம்-முற்றிற்று.

கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள் திருவடிவாழ்க.

உ

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

ஸ்ரீஞானசம்பந்ததீர்த்தசரணாயநம:

கச்சியப்ப சிவாசாரியசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

# ஸ்ரீஸ்கந்தபுராணவசனம்.

நான்காவது

## உயுத்தகாண்டம்.

### ஏமகூடப்படலம்.

நாரணனென்னுந்தேவுநான்முகத்தவனுமுக்கட்
பூரணன்றானுமாகிப்புவிபடைத்தளித்துமாற்றி
யாரணமுடிவுந்தேறாவநாதியாயுயிர்கட்கெல்லாக்
காரணனாயமேலோன்கழலிணைகருத்துள்வைப்பாம்.

திண்ணியவவுணர்தம்மைச்செற்றிடவின்னேசெவ்வேற்
பண்ணவனேகுமெல்லாவமரரும்பாங்கிற்செல்வர்
துண்ணெனயானுமேகாதொழிவதுசூழ்வன்றென்னா
வெண்ணிவந்திடுவான்போலவிரவிவந்துதயஞ்செய்தான்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? பிரமன் விஷ்ணு உருத்திரனென்னும் திருநாமங்களைப்பெற்ற திரிமூர்த்தி சொரூபமாக விளங்கிச்சராசரப்பிரபஞ்சங்களைப் படைத்தும் அவற்றிற்கு யாதொருகுறைவுமின்றிப் பாதுகாத்திரட்சித்தும் பிரளயமுடிவிற் சகலபிராணிகளும் அல்லலற்றுச் சுகத்திலிருப்பதாகச் சங்கரித்தும் இவ்விதமுத்தொழில்களை நடாத்தியும் வேதாகமங்கள் தேடிக்காண்பரிய அனாதிவஸ்துவாகநின்று சகலபிராணிகளினிடத்துங் காரணபூதமாகப்பொருந்தி நடிப்பித்துக்களித்திருக்கும் மேலவனாகிய மூலகாரணக்கடவுளினது திருவடிகளை அடியேன் இருதயகமலத்திற் சிந்தித்துப்போற்றி உயுத்தகாண்டத்தினது கதாப்பிரசங்கங்களைச்சொல்லத்தொடங்கினேனென்று சூதபுராணிகர் முந்திக்கடவுளை வழிபட்டு நைமிசாரணிய வாசிகளைப்பார்த்து மஹரிஷிகளே முன்னம் வீரவாகுதேவர் மயேந்திரபுரியினிடத்துக்குத்தூதுபோய்ச் சூரபதுமனைக்கண்டு வார்த்தையாடித் திரும்பிவந்து சுயஞ்சோதிசொரூபியாகிய பாலசுப்பிரமணியக்கடவுளைச்சேவித்து அவுணராசன் கருத்தைத்தெரிவித்தவுடன் நல்லகாரியம் நாளையத்தினமே பிரயாணப்பட்டுப்போய்ச் சூரபதுமன் வம்சநாசஞ்செய்வோமெனச்சிவகுமாரன் திருவாய்மலர்ந்தருளினானெனச் சொல்லியிருந்தோம். அத்தினமிராக்காலங்கழிந்து ஆயிரங்கிரணங்களைப் படைத்திருக்கின்ற சூரியபகவான் கிழக்குத்திசையில்நிற்கின்ற உதயகிரியினிடத்திற் றோற்றியகாட்சியானது எப்படிக்கிருந்ததெனில் உலகங்களையலைத்துத் தீனைவாட்டிப் பற்பலகொடுமைகளைச்செய்து வீறியிருக்கின்ற ஜயசாலிகளாகிய அவுணர்பூண்டை வேரறக்களைவதாக வெற்றிவேலாயுதத்தைத் திருக்கரத்திற்கொண்டிருக்கும் ஒப்பற்ற பாலசுப்பிரமணியதேவர் இத்தினம் பிரயாணப்பட விருக்கின்றனர். பிரமனாதிய தேவர்களனைவருங் களித்துப்போற்றிச் சூழ்ந்துபோவார்கள், நாமும்வினைவிற்சென்று அவர்களுடன் தரிசிக்காமலிருப்பது அழகன்றென நினைத்தெழுந்தவனைப்போல ஒற்றைவண்டிலையும் ஏழுபச்சைக்குதிரைகளையுமுடையஇரதத்தில் அருணன் சாரத்தியஞ்செய்வதாகச் சூரியன்ஆரோகணித்துக்கீழ்த்திசையிலுதித்தகாலையில் இராட்சதப்பாதகனைப்போல உலகங்களிற் பரந்துவருத்தியிருந்த இருளைத்தும் அதப்பட்டுச் சகலபிராணிகளும் வீறிக்களிப்பதுடன் திருச்செந்திற்பதியில் வாசமாயிருந்தஇந்திரனாதியர் அதிகசந்தோஷத்துடனெழுந்து தங்கள்நித்தியகருமங்களை முடித்துக்கொண்டுவந்துசொர்ணமயமாகப் பரந்திருக்கும் சபாமண்டபத்தைச்சேர்ந்தவுடன் நவரத்தினமய

மாகப் பிரகாசித்திருக்கின்ற சிங்காதனத்திற் கோடிசூரியர் தோற்றம்போல விளங்கிவீற்றிருந்தகுமாரசுவாமியானவர் புசபலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர்மீதிற் திருவிழிகளைப்பரப்பி இந்திரன், பிரமன், விஷ்ணு, இருஷிகளாதியர் கேட்கும்படிக்கு இதனைச்சொல்லுவார்.

கொடியபாதகங்களையே முக்கியமாகவிரும்பிச் செய்துவருகின்ற சூரபதுமனுதிய அவுணர்களனைவரும் நாசப்படவும் பலநாட்களாகவருந்தியிருக்கின்ற தேவர்கள்துக்கவருத்தங்களை யொழிந்துகளிக்கவும் அஷ்டலட்சுமிகளுங் குடிகொண்டு செல்வப்பெருக்குகளனைத்தையுங்கொண்டு விரியிருக்கின்ற வீரமாமயேந்திரபுரிக்கு இன்றையதினம் போகவேண்டுமாதலாற் றுரிதமாய் நமதுதேரைத் தருவிப்பையெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் இந்தச்சுபவார்த்தைகளைப் பிரமன்-விஷ்ணு-இந்திரனுதிய தேவர்களனைவருங்கேட்டுக் களிசிறந்துசந்தோஷசாகரத்தில் மூழ்கித் தேகபரவசராய்ச்சிலபோதில்நமதுதுக்கங்களனைத்துந் தீர்ந்துவாழ்ந்தோம் வாழ்ந்தோமென் றுதுள்ளித்துள்ளி ஆனந்தக்கூத்தாடிச்சிவசுப்பிரமணியதேவர்குணதிசயங்களைப்போற்றித் தண்டைசதங்கைகொஞ்சுந் திருவடிகளிற்பணிந்தெழுந்து ஜயஜயவெனத்துதித்தனர், இப்படிக்குச் சகலருங் களித்திருக்கின்றபோது திருக்கயிலையைக் காவல்கொண்டிருக்கும் நந்திதேவர் கணத்தலைவராகிய வீரவாகுதேவர் சிவகுமாரனை வணங்கிச்சென் றுவாயுதேவனைக்கண்டு பலவித சிறப்புகளைக் கொண்டிருக்கின்ற இரதத்தை யலங்கரித்துத் தீவிரமாகக்கொண்டு வரக்கடவையெனப் பணித்தவுடன் ஆனந்தபரவசனுய்த் துரிதப்பட்டுச் சகலசுபலட்சணங்களையும் பெற்றிருக்கின்ற யோகப்புரவிகளைச் சீர்படுத்திக்கொண்டுவந்துநவரத்தினமயமாகச் சொலித்திருக்கின்ற இரதத்திற்பூட்டிஅலங்கரித்துத் தன்றுணைவர்களுடனேறி அடித்தட்டில்வீற்றிருந்து புரவிகளுடைய வார்களைக்கரத்திற்கொண்டுகெற்கரத்தொனிகளுடன் நிமைப்போதிற் றுரத்திவந்துஆசாரவாசல்முகப்பில் நிறுத்தினன், இந்தச்சேதியைச் சண்முகப்பெருமாள் தெரிந்தவுடன் உயர்ந்தசிரோரத்தினங்களினுற் சோடித்திருக்கின்றசிங்காதனத்தைவிட்டிறங்கித்தேவர்களனைவரும் ஜயஜயவெனப்போற்றப்பொற்பாதுகைகளின்மீதிற் திருவடிகளைச்சேர்த்து நடந்துபன்னிருசூரியர்களும் பொன்மயமாகியமேருகிரியின்மீது விளங்குவதைப்போல வாகுவலயங்கள்சொலிக்கும் பன்னிருபுயாசலங்களையும் வயிரமுடிகள் கவித்திருக்கும்சண்முகாரவிந்தங்களையும் படைத்திருக்கின்ற குமாரதேவர் சொர்னமயமாகிய அச்சு-மச்சு-குத்துக்கால்-கொடிஞ்சை- டக்கயமுதலிய உறுப்புகளைக்கொண்டு பாரித்திராநின்ற இரதத்தினருகில்வந்து வீரசிங்கத்தைப்போலத்தாவியேறிப் பீடத்தில்வீற்றிருந்தவராய்த் தம்மைத்தொடர்ந்து வந்தசகலரையுங்கிருபையாகப்பார்த்தருளி இதனைச்சொல்லுகின்றனர்.

பூமிதேவிக் காடையாகவளைந்து தெளிந்தாழ்ந்த ஜலப்பெருக்கையுடைய சமுத்திரத்தையேஅகழியாகப்பெற்று மத்தியில்விளங்கும் ஒப்புவமையற்ற செல்வப்பெருக்கைப்பெற்றிருக்கும் வீரமாமயேந்திரமென்னும்சிறந்தபட்டணத்துக்குப்போய்ச் சூரபதுமன் முதலாகியஅவுணவீரர்களை நாசஞ்செய்யவேண்டுந்தமையால் நீங்களனைவருந்துரிதமாக உங்களுக்குரிய வாகனங்களில்ஏறிக்கொண்டு அப்பட்டணத்தைநோக்கி நடப்பீர்களென்று சிவகுமாரன்கட்டளையிட்டமாத்திரத்தில் மகாபாக்கியமென்று மகாவிஷ்ணுவானவர் பட்சிகளுக்கரசாகிய கருடன்மீதினும் பிரமன்அழகியசிறகையுடைய அன்னவாகனத்தினும்இந்திரன் சொர்னவிமானத்தின்கண்ணும் மற்றதேவர்கள் தத்தமது வாகனங்களின்மீதும் போகவும் மந்தரகிரியையொத்த புசங்களையும்மதயானையைநிகர்த்த கம்பீரநடையையும் வாய்ந்தவீரவாகுதேவரும்எண்மரும் இலக்ஷரும் வேகமுள்ள புரவிகளைப்பூண்டு சொர்னமயமாய் விளங்கும்பாரித்த தேர்களின்மீதிலேறி மனோவாக்குக்கெட்டாத சோதிமயமாகிய குமாரதேவரைச்சூழ்ந் திருமருங்கினும் போற்றி நடக்கவும் இவர்களன்றியிற் சேனைத்தலைவர்களாகியசுப்பிரன், மேகமாலி, சுவேதசிரிடன், கபாலி, அப்பிரசித்து, சித்திராங்கன், சுவாலதாலு, வச்சிரன், வீமன், உக்கிரன், உக்கிரோசன், பிப்பிலன், நந்திசேனன், பிரமசன், பிரமசேனன், பதுமன், காளன், தண்டன், பத்திரன், பரிகநேமி, உத்வகன், புட்பதந்தன், உருத்திராகாரன், வீரன், மதிசயன், கேதுமாலி, வக்கிரன், பிரமகேசன், அதிபதி, கலிங்கன், கோரன், அச்சுதன், அசலன், சாந்தன், சித்திரசேனன், பூரிசிசிலன், மாசயன், சிங்கன், சுப்பிரதியன், உபதிட்டன், சயன், சாரசன், மத்தகன், மதங்கன், சண்டி, மகாபலன், சுவேதன், நீலன், பத்திரன், சுவாகு, அண்டர்பாணன், காகபாதன், பிங்கலன், சமானன், மாயன், நிகும்பன், கும்பன், சங்கபாலன், விசாகன், சதநாவன், அயக்கிரீபன், ஆயிரவாகு, செங்கண்ணன், அயுத்தன், அநந்தன், வாமன், மங்கலகேசன், சோமன், வச்சிரமாலி, சண்டன் அசமுகன், சரபன் கும்பன், ஆடகன், கபந்தன், மேகன், விஜயன், வித்துருமன், தண்டி, வியாக்கிரன், காலபாசன், தசமுகன், குமுதன் பானு, தனஞ்சயன், இடபரூபன், சசிமுகன், அனலகேசன், சுபத்திரன், கேது, மோகன், மத்தன், உன்மத்தன், நந்தி, மனோபவன், வாயுவேகன், ஆயிரபாதன், பானுகம்பன், பதங்கன், சுத்தன், அனிதன், சீதன், சுனதன், சுமாலி மாலி, அத்திரி, அவுணர்கூற்றன், அரிகேசன், சுவாலகேசன், என்னும்நாமங்களைப்பெற்ற நூற்றெண்மர்கள்புயவலிக்கொப்பற்றவர்களாகவும் எக்காலத்திநுங்கோபமேமேலிட்டு விழிகள்சிவந்து அனற்பொறிகளைச் சிதறத்தக்கதாகவும் சகலபுவனங்களையும் அதப்படுத்தும்படிக்குக்கட்டளையிடின் நொடிப்பொழுதில் நாசஞ்செய்யவல்ல சூரர்களாகவும், சண்டைகளிற்கைகண்டதீரராகவும்புசபலபராக்கிரமத்தில் ஒப்பற்றவர்களாகவும் பலசிரங்கள் கரங்களைப்பெற்று பாரித்ததேகத்தையும்பிலத்தையொத்தவாயையும் அண்டத்தைப்போன்ற வயிற்றினையும்படைத்தவர்களா யிடியையொத்தசொல்லையுடையவர்கள் இத்தகையவீரசூரத்தன்மைகளைப்பெற்றிருக்கின்றவர்கள் ஜயவுச்சாகங்களுடன் சர்வாயுதபாணிகளாய்ச் சண்முகப்பெருமானைச் சூழ்ந்துகொண்டு நடக்கின்றகாலையிற் சண்டைக் கெழுகவெனச்சொன்ன வார்த்தைமுடிமுன்னந்தங்கள்தங்கள ஆயுதங்களைக் கரங்களிற்கொண்டு உற்சாகங்களுடன் சருவசங்காரகாலத்திற் பெரும்புறக்கடல் வீறியெழுந்ததைப் போல ஆர்ப்பரித்தவர்களாய் இரண்டாயிரம்வெள்ளம்பூதப்படைகளும் ஓவென்னும்சத்தத்துடன் வெளிப்பட்ட காலத்தில் அவர்கள்செல்லும் அதிர்ச்சியினுல் சத்தசாகரங்களுங் கொதிப்பெடுத்தொன்றுபடவும் அஷ்டகுலாசலங்களுங் கிடுகிடெனக்குலுங்கவும் திக்குகளைத்தாங்கிநிற்கின்ற அயிராவதமுதலிய கஜங்கள்திகைப்பட்டு வீறிட்டுப்

பதுக்கவும்,பூமியானதுதத்தளித்துக் குலேகுலேந்துநடுங்க
வும் இவ்விதவுற்பாதங்கள் பெருத்தது.

சவுனகாதிரிஷிகளே அந்தப்பூதப்படைகளின் செருக்
கையுந் தேகஉன்னதங்களேயும் வீரபராக்கிரமங்களேயும்
கோபமிகுதியையும் இன்னவிதமென்று என்னுற்கணித்
துச்சொல்லமுடிவதன்று இவ்விதங்களாகத் துணைவர்தே
வர்கள் சேனைசமுத்திரமுதலாகச் சூழ்ந்துபோற்றநடுநாய
கமாய்க்குமாரதேவர் அவர்களுக்குமத்தியிற்போவதைவா
னத்தில்நெருங்கியிருந்த தேவர்கள்கண்டமாத்திரத்திற் க
ளிமிகுதியினல் ஆடிப்பாடிப் பஞ்சதருககளினதுபரிமள
மிகுத்த புஷ்பங்களே ஏராளமாக வாரிவாரி ஜயஜயவென்
னுமோசையெழச் சோனேமாரியைப்போலஇடைவிடாம
ற் சொரிந்தனர். இவ்விதஆடம்பரங்களுடன் பூதப்படை
கள் ஜயவுற்சாகத்துடன்சிருங்கநாதங்கள் அட்டகாசங்களே
ச்செய்துகொண்டு நடக்கின்றகாலேயிலுண்டாகியஓசையா
னது தெய்வலோகங்களினும் அஷ்டதிசைகளினும் பூ
மண்டலமுரற்றினும் பரவியகாலத்தில் அத்தலங்களில்வா
சஞ்செய்கின்ற சகலரும் இதுவென்னஉற்பாதமாகவிருக்
கின்றதென நடுநடுங்கி வாடிவருந்தவும் சத்தசாகரங்களு
ங் கொதிப்பெடுத்தலேகள்மோதவும்மேகங்கள்கலங்கிக்கரு
வழிந்து ஏககாலத்தில் ஜலங்களேக்கொட்டவும்அண்டமு
கடானது நெக்குவிட்டதிரவும் இவ்விதமாறுபாடுகள்நட
க்கின்றபொழுது பூதவீரர்கள் பேரொலியெழ முழக்குகி
ன்ற ரணபேரிகை-ஜயபேரிகைகளும்- வெற்றிச்சங்கம்- சி
ன்னம்-மத்தளம்-உடுக்கை-சல்லரி-மல்லரி-எக்காளே- குட
முழவுமுதலிய பதினெண்மேளவாத்தியங்களுந்தேவமுர
சங்களுந் திசைகள்செவிடுபட வதிரவும்தேல்களேப்பெரு
க்கிப் பரிமளித்திருக்கும் வெற்றிமாலேபுரளும்புசங்களேயு
டைய பூதவெள்ளஙகள் பூமியதிரத்தக்கதாகப்பாதங்களே
ப்பெயர்த்துவைக்கும்போ தெழுந்த தூளிபடலமானது
மேலிட்டெங்கும்பரவிச்சூரியகாந்தியை மறைத்துச் சமு
த்திரங்களிற்படிந்துசேருக்கித் திசைகள்தோற்றுமலடை
த்துப் பொன்னுலகையும் மண்ணுலகமாக்கியது,இவ்வித
ங்களாகக்கலீல்கலீலென்றெலிக்கும்வீரகண்டையணிந்த
பாதங்களேயுடைய பூதவெள்ளங்களானவைவெற்றிவேலா
யுதத்தைத்தாங்கி யிருக்கின்ற குமாரதேவர் பாதங்களேத்
துதித்து வாழ்த்திக்கொண்டு பருவதங்கள் கால்கள்முளே
த்து நடப்பதைப்போலத் தத்தமது தலேவர்களுடன்சென்
று அலேகளேமோதிச்சுருட்டும் பெருமைபொருந்தியசமு
த்திரக்கரையைச்சேர்ந்து வீரகண்டைகள்கலிக்கும்பாதங்
களேப்பெயர்த்து மேலிட்டோங்கிவருந்திரைகள் மறிபட்ட
டங்க நடக்கும்போது அச்சுமையைத் தாங்கமாட்டாமல்
ஆதிசேஷனைவன் ஒருதலேப்பாரமாகத்தாங்கியிருந்தபூ
மியை ஆயிரம்பணமகுடங்களினுஞ் சுமந்து வருந்தவும்
போகுமுன்னிலேயில்ஜயசாலிகளாகிய பூதவீரர்களேக்கா
லளவில் சமுத்திரசலமானது சுவறித்தாழ்ந்துகாட்டியது,
அக்காலத்தில்அதிற்றங்கியிருந்த சிவந்தகண்களே யுடைய
சுறு சின்னேதிமிதிமிங்கலகிலங்கள் முதலிய பருத்தமச்ச
ங்களனேத்தும் புழுக்களேப்போலப்புரளவும் மேலும்அக்
கடலினிடத்தடங்கியிருந்த மலேகளனேத்தும் பரல்களேப்
போல வெற்றியாளராகிய பூதர்கால்களிற்பட்டிடறவும்இ
வ்விதமாக சிவகணங்கள் சமுத்திரமார்க்கமாய் நடக்கின்ற
தருணத்திற் பிரமன்-விஷ்ணுஇந்திரன்- வீரபராக்கிரம
சாலிகளாகிய தம்பியர்நவவீரர்களும் இலக்ஷருமற்றதே
வரனேவர்களும் போற்றிச்சூழ்ந்து வரத்தக்கதாகப் பால
சுப்பிரமணியக்கடவுளானவர் வானவழிக்கொண்டு போகி
ன்றகாலேயிற் சத்துருக்களேவாட்டித்தீனர்களேப் பாதுகா
த்திரட்சிக்குங் குணசம்பன்னர்களாகியபூதவெள்ளங்களா
னவை நெருங்கிப்போவதினலும் அதிர்ச்சியினலும்ஆழ்
ந்துதெளிவுபெற்றிருந்த சமுத்திரஜலமானது அலேபட்டு
க்கலங்கிச் சேருய்ச்சற்றுநேரத்திற்பசையற்றுப்பூமிதோ
ன்றும்படியாகப் பாதங்களேப் பெயர்த்துவைக்குந்தோறு
ந் துகள்பட்டெழுந்த பூமியானதெங்கும் பரந்தலேக்கவும்
இவ்வித ஆடம்பரங்களுடனும் வெற்றிவேலாயுதக் கடவு
ள் பின்வந்தஇரண்டுவெள்ளம் பூதசயின்னியங்களும்பே
ரொலியைக் காட்டிக்கொண்டு ஜயவுற்சாகங்களுடன் முன்
னம் வீரவாகுதேவர்பராக்கிரமத்தினுற் சீரழிந்துவிளங்கு
ம் இலங்கையைக் கடந்துகடினசித்தத்தைப் பெற்றிருக்கி
ன்ற சூரபதுமன் வாசஞ்செய்யும் மயேந்திரபுரத்துக்கரு
கில் வருகின்றவேளேயிற்சங்கு-சக்கரங்-கோதண்டம்- கட்
கம்-கதை யென்னும் பஞ்சாயுதபாணியாகிய ஸ்ரீமகாவிஷ்
ணுவும் அன்னவாகனனுகிய பிரமனும் பொன்னுலகத்து
க்கதிபனுகிய தேவேந்திரனும் சுப்பிரமணியக்கடவுளேப்
போற்றிக் கரங்களேக்கூப்பிக் கொண்டவர்களாய் இதனே
விண்ணப்பஞ்செய்கின்றனர்.

கர்த்தனே இதோஎதிரிற் சொர்ணமயமாய் நவரத்தின
காந்தியைவீசி விளங்குகின்றது ஜயசாலியாகியசூரபதும
ன் வீற்றிருந்தரசுசெலுத்தும் இராஜதானியாகிய மயேந்
திரபுரியாகும் அப்பட்டணத்திற் கடினசித்தமுடைய பா
தகர் வாசஞ்செய்திருப்பதாலும் நாம்விரோதித்துப்போவ
தாலும் அதற்கருகிற்சேர்வது தகுதியாகக்காணவில்லேஆ
தலால் இவ்விடம் விசாலமாய் நமதுசேனேகளும் நாமுமி
ருப்பதற்குயோக்கியமாகவுமிருப்பதால் இவ்விடத்திற்பா
சறையுண்டாக்கிக்கொண்டு அதிற்சேர்ந்தபின்பு மேல்நட
க்கவேண்டிய காரியங்களுக்குத் தகுந்தயோசனேகளேச்செ
ய்து நடப்பிக்கிறது நன்மையாகுமென்று விண்ணப்பஞ்
செய்தகாலத்திற் கிரவுஞ்சனே வெற்றிவேலினுற் பிளந்தெ
றிந்த குமாரதேவர்நீங்கள் சொல்லியகாரணங்கள் மிகவும்
உத்தமமாகக்காணுகின்றபடியால்அவ்வாறேநடப்பிப்போ
மெனத் திருவாய்மலர்ந்தருளிப் பக்கத்தில்வருகின்றசிற்பி
யைப்பார்த்து நாமும் இந்தத்தேவர்கள் சேனேத்தலேவர்க
ள் துணேவர்கள் பூதவெள்ளங்கள் முதலாகத் தாராளமாக
விருக்கத்தக்க விசாலமாகிய பாசறையை விரைவிற்சிருஷ்
டிககக்கடவாயெனக் கட்டளேயிட்டமாத்திரத்திற்றேவதச்
சனைவன் கரங்களேக்கூப்பித்தொழுது அடியேனேயொ
ருபொருளாக நினேந்துஇந்தப்பணிவிடையைக் கடாட்சித்
தபடியால் தேவரீர் பரிபூரணகடாட்சத்தின் முயற்சிகொ
ண்டு சகலருங்கண்டு களிக்கஇதோ படைக்கின்றன னெ
னச்செலவுபெற்று நடந்துவிசாலமாகிய மதிலேயெழுப்பி
அதைச்சூழ்வரப் பூதசேனேகளிருக்கத்தக்கதாக நீண்ட
அறைகளேயுடைய மண்டபங்களே அணிபடப் படைத்து
அதற்கருகில் படைத்தலேவர்கள் வாசஞ்செய்யத்தக்கஉப்
பரிகைகளே நிருமித்து அதற்குட்புறத்தில் இலக்ஷருக்கு
த்தக்க மாளிகைகளே வரிசைப்படச்செய்து அதைச்சூழ
வரமகாவிஷ்ணு-பிரம்தேவன் இந்திரனுதிய தேவர்கள்இ
ருஷிகள் முதலானவர்களுக்குவாசயோக்கியமாகியமேடை
கள் அரண்மனேகளேயுண்டுபண்ணி அதற்குட் பிரதேசத்
திற்ஜயசாலியாகியவீரவாகுதேவர்முதலியநவவீரர்களுங்

களித்திருக்கத்தக்க பாரித்தமெத்தைகள் வினோதங்களா
கப் படைத்துமுற்றியவுடன் தேவதேவோத்தமனாகியபா
லசுப்பிரமணியதேவர் வீற்றிருக்க யோக்கியமுள்ளசொர்
ணமயமாகிய திருக்கோயில் சபாமண்டபம்முகவாயில்மற்
றும்வேண்டு மிடங்களைச் சீர்பெறப்படைத்துப் பலவித
கனிவகைகளைக் கொண்டிருக்கும் சோலைகள்தோப்புகள்
விதங்களையு நிருமித்துக்கற்பகம்பாரிசாதம்மந்தாரைகோ
ங்கு இருவாட்சி சண்பகம் மல்லிகைமுதலிய திவ்வியபரி
மளங்களை வீசத்தக்க நந்தனவனங்களைப் படைத்து மது
ரமிகுத்த ஜலப்பெருக்கை யுடையவாரிகள் குளங்கள்மடுக்
கள் தடாகங்களை வேண்டுமிடங்களில்நியமித்து அங்காடி
வீதிகளை விசாலமாகத்திருத்தி இரதங்கள் குதிரைகள்
விமானங்களாதிய வாகனங்களை நிறுத்தத்தக்கசாலைகள்கூ
டங்கள் மண்டபங்களைப்படைத்துஇவ்விதங்களில்வேண்
டுவன வனைத்தையும் சிருஷ்டித்துமுடிந்தவுடன் தேவத
ச்சனானவன் அதற்கு ஏமகூடமென்னும் பெயருமிட்டுக்
குமாரதேவரைக்கண்டு வணங்கிக்கர்த்தனேதேவரீர்கட்ட
ளையின்படிக்குப் பாசறைசெய்து முடிந்ததெனவிண்ணப்
பஞ்செய்தவுடன் பிரமன், விஷ்ணுமுதலானவர்கள்சூழ்ந்
துவரப்படைவீட்டைச்சேர்ந்து வாயுதேவன்செலுத்தும்
இரதத்தைவிட்டிறங்கி யுள்ளே பிரவேசித்துஅதன்வளப்
பங்கள் முற்றும்பார்த்துச்சந்தோஷித்தவராய்ச்சிற்பியின்
வல்லபத்துக்கு மெச்சிஅவன்மீது கிருபாநோக்கத்தைப்ப
ரப்பி பூதவெள்ளங்களை அவர்களுக்கு நியமித்திருக்கின்ற
சாலைகளிற்போம்படிக்குச் செலவுகொடுத்துத் தமக்கேற்
படுத்தியிருக்கின்ற சொர்னத்திருமாளிகையிற்போய்விசா
லமாகவிருக்கின்ற சபாமண்டபத்தில் நவரத்தினமயமாய்
விளங்கிக் கொண்டிருக்குஞ் சிங்காதனத்தில் வீற்றிருந்த
காலத்தில் பிரமன், விஷ்ணு, இந்திரனாதியர் இருபாரிசங்க
ளினும் பரப்பியிருக்கின்றபீடங்களி லிருக்கவும் வீரவா
குதேவர்எண்மர்-இலக்ஷர் சேனைத்தலைவர்கள்நெருங்கிப்
போற்றிப் பணிவிடைகளைச் செய்திருந்தனர், சவுனகாதிரிஷி
களே! தேவர்கள்கோரிக்கையை முடிக்கத்திருவுளத்தெண்
ணியிருக்கின்றகுமாரதேவர் ஏமகூடத்திலிருந்தபின்பு ந
டந்தசெய்திகளையுங் கேட்பீரென்று சூதபுராணிகர்சொல்
வதாயினர்.

## வரவுகேள்விப்படலம்.

ஏகநாயகனுமையனிவ்விடையிருந்தவெல்லை
நாகர்மேலளிவைத்துள்ளநாரதனவற்றைநாடி
மாகநீள்புரிசைசூழ்ந்தமகேந்திரபுரத்திற்சென்று
போகமாருலகின்மேலாம்புரவலன்கோயில்புக்கான்.

---

தேவதேவோத்தமனாகிய சிவபிரான் திருக்குமாரர் பா
லசுப்பிரமணியதேவர், இவ்விதமாகப்படை வீட்டிற்சேர்
ந்திருப்பதைத் தேவர்கள்மீது பூரணகடாட்சம் வைத்தி
ருக்கின்ற நாரதமஹாரிஷியறிந்து வானத்தையளாவவோ
ங்கிய பொன்மதில் கோபுரவாயில்கள் நவரத்தினமயமாகி
ய மாடமாளிகை அரண்மனைமுதலிய சிறப்புகளைக்கொ
ண்டிருக்கின்ற வீரமாமயேந்திரபுரியைச்சேர்ந்து கஜேந்
திரசம்பத்தினும் மேலானசெல்வப்பெருக்கையுடையசூ
ரபதுமன் வீற்றிருக்கும் அரண்மனையைக்கண்டு முகவா
யிலைப்போற்றியிருக்கின்றஅவுணவீரருக்கிதங்களைச்சொ
ல்லிச் செலவுபெற்றுக்கொண்டு நவரத்தினமயமாய் விள
ங்கியிருக்கின்ற சபாமண்டபத்திற்போய் அகன்றமண்
டலாதீஸ்வரனாகிய சூரபதுமனானவன் மந்திரிபிரதானிக
ள்சேனைத்தலைவர்கள் சூழ்ந்திருக்கவும் பட்டுவர்புகழவும்
கட்டியக்காரர் எச்சரிக்கைகளைச்சொல்லிநிற்கவும் அரம்
பை ஊர்வசி திலோத்தமை மேனகைமுதலாகிய தேவக
ன்னியர்கள் பரதநாட்டியங்களைச்செய்யவும் கருடகாந்த
ருவர்கள் தேவயாழ்களை மீட்டிப்பாடவும் இவ்விடஆட
ம்பரங்களுடன் சிங்காதனத்தில்வீற்றிருந்து அரசுசெலு
த்துவதைப்பார்த்து இந்தக்கொடியபாதகன் துரிதமாய்
வம்சநாசப்பட்டு மாளக்கடவனென்று பூர்த்தியாகமனதி
ல்நினைந்து வெளியிற் சகலருங்கேட்கத்தக்கதாக ஓ இரா
சாதிராசனே இராசபரமேஸ்வரனே ஆயிரத்தெட்டண்
டங்களைவென்று ஒப்பற்ற ஆக்கினைச்சக்கரத்தைச் செலு
த்தி அரசைநடாத்திவரும் சூரனேஎனப்புகழ்ந்து தீர்க்
காயசுடன் சத்துருக்களைஜயித்துவாழ்ந்திருக்கக்கடவீரெ
ன்று கரங்களைநீட்டி அளவற்றஆசிகளைச் சொல்லிக்கொ
ண்டு தவசிரேஷ்டராகிய நாரதரிஷிவருவதைச் சூரபது
மன்கண்டு விருத்தனாகவிருக்கின்றனைநீயாவன்இருக்குமி
டமேது இவ்விடம்வருவதற்குக் காரணமென்னை சீக்கிர
த்திற் சொல்லக்கடவையெனக் கேட்டகாலத்தில் ஓராஜ
மார்த்தாண்டனே கேட்டருள்க, பார்ப்பதிபாகனாகிய சிவ
பிரான்வீற்றிருக்கின்ற வடகயிலைச் சாரலிலிருந்து தேவ
ரீர் வம்சபரம்பரையாக நீடித்துவாழவும் அகன்றசாம்பி
ராச்சியச்செல்வங்களை அனுபவித்து ஜயசாலிகளாய் வீ
றிவிளங்கத்தக்கதாகப் பரமசிவத்தைக்குறித்து அரியதவ
ங்களைச்செய்து வருபவன் இதைஉண்மையாக நம்பக்கட
வீர், மேலும் கொலை-களவு-கள்-காமம்-வஞ்சகமென்னும்
பஞ்சமாபாதகங்களைக்கடிந்து மெய்-வாய்-கண் - மூக்குச்
செவியென்னும் பஞ்சேந்திரியவிஷயங்களையடக்கி மன
விருத்தியை லயப்படுத்திப் பரவஸ்துவைச்சிந்தித்து பல
தவங்களை முடித்திருப்பவன், இதுவுமல்லாமல் தீனரை
ப்போலக்காட்டி நம்மவர்களுக்குத் துன்பங்களைச்செய்து
வரும் தேவர்கூட்டங்களுக்கு எக்காலத்தும் தீமைகளைச்
செய்துவருபவன் பரிசுத்தவானாகிய உங்கள் குலாசாரிய
ன் சுக்கிரபகவானுக்குஅந்தரங்கபக்தனாகவிருப்பேன்யெ
ன்பெயர் நாரதனெனச்சொல்லுவார்கள்.

இப்போது ஒருகாரணத்தைக்கண்டபடியால் அவசிய
மாய் அதைத்தேவரீருக்குத்தெரிவிக்கத் துரிதப்பட்டுவந்
தனன், அஃதென்னையெனில் தேவர்கள்கோரிக்கையின்
படிக்கு கங்காசடாதரமூர்த்தியாகிய பரமசிவன் உம்மை
க்கொல்வதற்காக நெற்றிவிழிகளின்மூலமாய் கந்தனென்
றொரு பிள்ளையைத்தந்தனர், இந்தசமாச்சாரந் தெரிந்த
வுடன் தமதேவல்களைச்செய்து கொண்டிருந்த இந்திர
னானவன் மற்றதேவர்களுடன் திருக்கயிலைக்குப்போய்ச்
சிவபிரானைக்கண்டு சேவித்து பாலசுப்பிரமணியரையும்
வணங்கித் தங்களுக்குஉம்மால்நேர்ந்திருக்கின்ற துக்கவ
ருத்தங்களனைத்தையும் முறையிட்டுவேண்டிக்கொள்வத
ற்கிரங்கிப் பரமன்கடாட்சித்தபடிக்குப் பாலசுப்பிரமணி
யனானவன் அத்தேவர்களை யஞ்சவேண்டாமென்றுஆதரி
த்து வீராதிவீரர்களாகிய துணைவர்கள்ஜயசாலிகளாகியபூ
தவெள்ளங்கள் சூழ்ந்துபோற்றிவரத்திருக்கயிலாயத்தை
க்கடந்து பூமண்டலத்திலிறங்கிவருமார்க்கத்தில் நேர்ந்த

ரணரங்கசூரனாகிய உன்னுடைத்தம்பி தாருகாசுரனையும்
அவனுக்குதவியாகவிருந்தகிரவுஞ்சபருவதத்தையும் வெ
ற்றிவேலினால் மாய்த்தபின்பு திருச்செந்திலைச்சேர்ந்துஉ
ம்மிடத்துக்கொரு தூதனைத்தூண்டி அவன்திரும்பிவந்
து செய்தியைத்தெரிவித்தவுடன் துரிதப்பட்டுத் துணை
வர்கள் சேனைத்தலைவர்கள் பூதவெள்ளங்கள் விஷ்ணுபிர
மன் இந்திரனாதியருடன் சமுத்திரத்தைக்கடந்து இரா
சாதிராசனே தேவரீர்பட்டணத்துக்கு வடபாரிசத்தில்வ
ந்துசேர்ந்து அவ்விடத்திற் பாசறைவிடுதி ஒன்றைச்செய்
வித்து அதிற்றம்முடன் வந்தவர்களுடனிருக்கின்றனன்,
இப்போது நான்சொன்ன காரணங்களனைத்தையும் என்
விழிகளாரக்கண்டு வந்ததாகும் மேல்நடக்கவேண்டியகா
ரியங்களைச் சித்தத்துக்குத் தோற்றியபடிக்குத் தீர்மானி
த்துக்கொண்டு அவர்களை நமதுபட்டணத்துக்கருகி லிரு
க்கவொட்டாமற் றுரத்தும்படிக்குக் கேட்டுக்கொள்ளுகி
றேனென்று நாரதர்சொல்லியதைக்கேட்டவுடன் சூரப
துமனானவன் வடவாமுகாக்கினியைப்போலவும் ஆலகா
லவிஷத்துக்கொப்பாகவும் சீறிக்கோபித்துக் கறகறெனப்
பற்களைக்கடித்து அனலெழநகைத்து இதனைப்பேசுவதா
யினன்.

நல்லகாரியம் அந்தப்பாலகன் இந்தநகரத்தை என்ன
வென்றுதான் நினைந்தனன், மேகவாகனனாகிய இந்திரன்
வாழ்ந்த பொன்னுலகத்தைப்போலவும் உந்திகமலவாசி
யாகிய பிரமன்வீற்றிருக்கின்ற மனோவதியையொப்பாக
வும் காளமேகவண்ணனாகிய விஷ்ணுகளித்திராநின்றவை
குந்தநகரைப்போலவும் சுலபமாக மதித்தனன்போற் கா
ணுகின்றது, பரமசிவகடாட்சத்தினால்ஆயிரத்தெட்டண்
டங்களையும்வென்று சகலரும்போற்றவாழுகின்ற ரணர
ங்கசூரனாகிய நாம்வாசஞ்செய்திருக்கின்ற பலகாவல்களை
யுடைய இந்தப்பட்டணத்தைநோக்கிஒருபாலகனோபோ
ருக்குவருபவன். அந்தக்குழந்தை தீரனாய் பசிப்பிணியி
னால்வருந்தி பலிக்குழன்றுதிரியும் பைசாசங்களைத் தன
க்குதவியாகக் கூட்டிக்கொண்டெதிர்த்து இவ்விடம்வந்தி
ருக்கின்ற தயிரியத்தை யோசிக்குமிடத்தில் மிருகங்களு
க்கரசாகவிருக்கின்ற சிங்கக்கூட்டங்கள் சேர்ந்திருக்கின்ற
ஒருவனத்தில் மதயானையானது பலமான்கூட்டங்களைச்
சேர்த்துக்கொண்டுபோய் வெற்றிபெறநினைந்ததைப்போ
லக் காணுகின்றது, இந்நகரத்துக்கரணாகவும், அகழியாக
வுமிருக்கின்றஆழ்ந்த கடலைக்கடந்துகொடியகாவலைப்பெ
ற்றிருக்கின்ற இலங்கைத் தீபத்தையும்தாண்டி விஷ்ணு,
பிரமன், முதலிய சகலரையும்வென்று ஜயங்கொண்டிரு
க்கின்ற சூரனாகிய என்னுணை ஆக்கினைகளைச்சட்டைபண்
ணாமல் அபரிமிதமாகிய பூதப்படைகளுடன் சத்துருக்க
ளாகவிருப்பவர்கள் கனவிலும் நினைக்கப்படாத கட்டுக்கா
வலைப் பெற்றிருக்கின்ற இந்தவீரமாமயேந்திரபுரத்தின்
மீதில் வந்தபடியால் அப்படிக்குத்தயிரியசாலியாகவிருக்
கின்ற கந்தன் வீரத்தையும் வலியையும் அதப்படுத்துவ
தற் கிதுநல்லதருணம் மேலும் சிவகுமாரனென்றும்காரி
யாகாரியங்களைப் பகுத்தறியவல்ல கியானமில்லாத பருவ
மென்றும் நினைந்து விட்டுவிடமாட்டேன்பாலகனைக்கொ
ல்வது பழிப்புரையென்றொருகாலத்திலும் அஞ்சமாட்
டேன் முன்னமொரு காலத்தில் என்தங்கையாகிய அச
முகிகரங்களினொன்றை வெட்டியகாலத்தில் நமக்குக்குல
வயிரிகளாக விருக்கின்ற தேவர்களில் யாவனொன்தண்ட
னைகளிற் படாதவர்கள் அதைப்போலவே இக்காலத்தில்
என்தம்பிதாருகனையுங் கிரவுஞ்சனையும் வென்றோமென்
னுங் கெலிப்பினாற் றன்னுயிர்போவது தெரியாமற்சிவகு
மாரன் இந்தப்பட்டணத்துக்கும் வந்தானோஆகட்டும்வந்
தவனைமடக்கிக்கொண்டுசின்னபின்னப்படச்சாடி அவனு
க்குதவியாக வந்திருக்கின்ற துணைவர் இலக்ஷர் சேனைத்
தலைவர்கள் பூதவெள்ளங்கள் பிரமன் விஷ்ணு இந்திரனா
திய தேவர்களையும், அவர்களுக்குத்தக்கதண்டனைகளைச்
செய்து கொடியகாவலிலும்வைப்பேன் நல்லகாரியம்சிறு
பிள்ளைகளும் இந்தஇராஜதானியாகிய வீரமாமயேந்திர
த்தின்மீதிற் பகைத்துவருவதற் கெளிதாயிற்றோ. திருப்
பாற்கடலிலுதித்த அமிர்தத்தை அவுணரைவஞ்சித்துத்
தேவர்களுக்குப் பகிர்ந்துகொடுத்த வஞ்சகமாயனான வி
ஷ்ணுவும், நூறுஅசுவமேதயாகத்தைச்செய்ய முயற்சியி
னால் தெய்வலோக வாழ்வைப்பெற்ற இந்திரனும் சிருஷ்
டிகர்த்தனாகிய பிரமனும் ஆயிரத்தெட்டண்டங்களை வெ
ன்ற ஜயசாலியாகிய நமதுபெயரைச்சொல்லினும் நடுங்கி
யொளிப்பர் அப்படிக்கிருக்க சாம்பலைவிரும்பி யணியும்
சிவகுமாரனோ என்னுடனெதிர்த்துச் சண்டைகொடுப்ப
வன் பாலப்பருவத்தில் வானத்திற் சஞ்சரித்து உலகைவி
ளக்குஞ் சூரியனைப்பற்றிவந்து தொட்டிற்காலிற்சேர்த்து
க் கட்டிச்சிறைசெய்த வீராதிவீரனாகிய புத்திரன் பானு
கோபனைச் சதுரங்கபலத்துடன் அனுப்பிக் கொடியபோ
ரைச்செய்வித்துக் கந்தனைவென்று அவனுக்குத் துணை
யாக வந்திருக்கின்ற நவவீரர் இலக்ஷர் படைத்தலைவர்பூ
தவெள்ளங்களையுஞ் சின்னபின்னப்படக் கொல்லுவிப்பே
ன் அதையுஞ் சிலபோதில் நீயேபார்க்கப்போகிறாயென்
று அவுணருக்கரசன் கோபித்துச்சொல்லியவாசகங்களை
நாரதர்கேட்டு நீர்நினைந்தகாரியம்தகும் தகும் இனிஅசா
ரிசஞ்செய்யாமல் ஜயசாலிகளாகிய அவுணப்படைகளைவி
ரைவிற்றூண்டி உமதுபட்டணத்தைச் சூழ்ந்திருக்கின்ற
கந்தனைவாட்டிச் சவுக்கியத்திலிருக்கும் பிரய்த்தனங்களை
த்தேடக்கடவீர் உங்களுக்குவிஜயமுண்டாகும்படிக்குநா
ன்தவஞ்செய்யப் போகின்றனனெனச் செலவுபெற்றுக்
கொண்டு இனிசந்தேகமில்லாமல்இவன்வம்சநாசமாய்அ
ழிந்து போவனென்னும் சந்தோஷத்துடன் வானவழிக்
கொண்டு போய்விட்டபின்பு மஹாவீரனாகிய சூரபதும
ன்பக்கத்தில்நிற்கின்றகோரன் உற்கோரனென்னும் தூத
ரைப்பார்த்துச் சமுத்திரராசனை யிந்தநிமிஷத்திற்பிடித்
து வாருங்கோளெனக் கட்டளையிட்டமாத்திரத்திற்சேவி
த்தோடிக் கடற்கரசனே கடற்கரசனேயெனக்கூவக்கேட்
டு வெளிவந்தவனைக் கைப்பிடியாகப்பற்றி யிழுத்துவந்
து சூரன்முன்னம்விட்டவுடன் வருணன், மனநடுக்குற்
றுவாய்புலர்ந்து உடலையொடுக்கிக்கரங்களைக்கூப்பிக்கொ
ண்டு நிற்கின்றவனைச் சூரபதுமன்கண்டு கண்களில்அன
ற்பொறிசிதற உக்கிரமாகப்பார்த்து இதனைச்சொல்லு
வான்.

கடற்கிறைவனே, நீநமதுகட்டளைக்கடங்கி நடந்துவரு
வது வெகுநேர்த்தியாக விருக்கின்றது பிரமன் விஷ்ணு
தேடிக்காண்பரிய சிவகுமாரன் நம்முடையபேரி லெதிர்
த்துவந்தால் பூதப்படைகளுடன் அவனை யிப்பட்டணத்
துக்குவரும்படிக்கு வழிவிட்டுறங்கிக் கிடந்தனையோதே
வர்கள்மேலிருக்கின்ற பட்சத்தினாற் பராமுகமாகவிருந்
தையோ மங்கையரைக் கலந்தின்புற்று மயங்கினையோ

வெனச் சீறிக்கேட்டகாலத்திற்சமுத்திரராசன்திகிற்பட்டு வாயைப்புதைத்து மறுமொழிசொல்லுவதாயினன். இராஜாதிராஜனே அடியேன் விண்ணப்பத்தைக்கோபியாமற் கேட்டருள்க தேவரீர்குறித்தபாலசுப்பிரமணியன்மகாவிஷ்ணு, பிரமதேவன், இந்திரன், நவவீரர் இலக்ஷர்சூழ்ந்து போற்றிவரக் ககனமார்க்கமாய்வந்தனர், பூதவெள்ளங்களுஞ் சேனைத்தலைவரும் என்மூலமாகத் தான்சென்றபோதினும்கடல்நீரானது அவர்கள்கணைக்காலளவையிலிருந்தது, அப்படிக்கிருக்க நானெவ்விதத்தில் அவர்களைத் தடைசெய்யவல்லேன் ஒவ்வொருபூதத்தின் சிரம்வானத்தையளாவவும் புசங்கள் அஷ்டதிக்குகளைத்தாவவும்இவ்விதபாரித்த தேகங்களைப் பெற்றிருக்கின்றனர், அவர்கள்பெருமைகளையும் வீரத்தையும் என்னொருநாவினாற் சொல்லமுடிவதோ சருவசங்காரகாலத்தினுஞ் சலனப்படாத தீரர்களாகிய பூதவீரர் நடக்கும்போது முழந்தாளளவையிலிருந்த ஜலமானது சற்றுநேரத்திற் சேறாய்ச்சுவறிப் பசையற்றுப் பூமியாக விளங்கிப்பின்பு துகள்பறந்துபோயது, உலகங்களிற்சமுத்திரராசனென்று வழங்கிக்கொள்ளும் பெருமையையு மிழந்தேன் பூதர்கள்பாதங்களின் வல்க்காற்றுமற் போனேனென்னும் வசையுரையையும்பெற்றேன், அப்படிக்கொத்த அபலனாகிய என்னால் அவர்களை என்னசெய்யக்கூடும் வல்லவனாடிய பம்பரமெனச் சொல்வதைப்போல வலியருக்கெதிருண்டோ இயலிசை நாடகமென்னும் முத்தமிழைப்படைத்தருளியதவசிரேஷ்டராகிய அகஸ்தியரானவர் ஒருகாலம் உள்ளங்கையினேற்று ஆபோசனஞ்செய்ததைப்போலச்சமுத்திர நீரனைத்தினையும் ஒருபூதனுண்டுவிடுவன் ஆனால் அவர்கள் கரத்திற்கொள்ளத்தக்க புனல்உதவாதபடியால் அவர்கள் உதரவங்கியிற்பட்டு மாளாமல்தப்பிப் பிழைத்துவந்தேன் அரசனே கோடையிடியைச் சர்ப்பமானது மாற்றுமாயினும் வீரத்தன்மைபெற்றிருக்கின்ற சிங்காசனை மதயானை வெல்லுமாயினும் பிராரத்வகருமவினையின் முயற்சியை ஒருவன் மதியினாற்கடக்கினும் பலஹீனனாகிய நான்வீரபராக்கிரமசாலிகளாகிய பூதப்படைகளைத் தடைசெய்ய வல்லேனென்று கடற்கிறைவன் பலதிருஷ்டாந்தங்களைக்காட்டி என்னவிளையுமோவென்றுதிகிற்பட்டிருக்கின்றகாலையிற் சிலவேகமுள்ள தூதர்களோடிவந்து சூரபதுமன் பாதாரவிந்தங்களில்வணங்கி யெழுந்து கரங்களைக்கூப்பிநின்று இதனைவிண்ணப்பஞ் செய்கின்றார்கள், இராஜாதிராஜனே இந்தஅதிசயத்தைக் கேட்டருள்க ஆயிரம் பணமகுடங்களையுடைய சேஷசயனத்திற் பள்ளிகொண்டிருக்கும் விஷ்ணு பிரமதேவன் இந்திரன் முதலானதேவர்கள் நவவீரர்கள் இலக்ஷர் சேனைத்தலைவர்கள் இரண்டாயிரவெள்ளம் பூதப்படைகள்சூழ்ந்துபோற்றி வரத்தக்கதாகக் கங்காசடாதரக் கடவுளாகிய சிவகுமாரன் பாலசுப்பிரமணியனென்பவன்வானமூலமாகவும் சமுத்திரமார்க்கமாகவும்வந்து நமதுபட்டணத்துக்கு வடபாரிசத்திற்சேர்ந்து தெய்வசிற்பியினாற் பாசறையுண்டு பண்ணிக்கொண்டு அதிலிருக்கின்றனன், இவைகளனைத்தையும் நாங்கள் திருஷ்டாந்தமாகக்கண்டுவந்தனமென்று நம்பிக்கையுள்ள தூதர்கள்சொல்லக்கேட்டவுடன்சூரபதுமனானவன்வடவையைப்போலக்கோபித்துக் கொவ்வைக்கனியினும் விழிகள்சிவக்கச்சீறிச் சபையிலிருக்கின்ற சகலருங்கேட்க இதனைச்சொல்லுவதாயினன்.

## முதனாட்பானுகோபன்யுத்தப்படலம்.

கோதைவேலுடைக்குமரனதாற்றலுங்கொற்றப்
பூதராற்றலுமேனையராற்றலும்போர்செய்
தூதனாற்றலுந்தொலைக்குவன்றுண்ணெனநீவி
ராதவன்றனிப்பகைஞனைக்கொணர்திரென்றறைந்தான்.

வாரீர்! நைமிசாரணியவாசிகளே? வெற்றிமாலையைச்சூடியிருக்கின்றவேலாயுதத்தைத்தரித்தசரவணபவன்ஜயவுச்சாகத்தையும், சேனைத்தலைவர்கள் புயவன்மையையும் வீறியிருக்கின்ற பூதவெள்ளங்களின் பராக்கிரமங்களையும் இந்தப்பட்டணத்தில்வந்து கொடியபோரைச்செய்துபோனதூதன் வீறுப்பையும் இந்தநிமிஷத்திலடக்கிஜயசாலியாய்க் களித்திருப்பேன் நீங்கள்துரிதமாகப்போய்ப் பானுகோபனையழைத்து வருவீர்களெனக்கட்டளையிட்டமாத்திரத்திற்றூதர்கள்காற்றினுங்கடுகியோடிப் பலவீதிகளைக்கடந்துபோய் நவரத்தினமயமாய் வானத்தையளாவிருக்கின்ற அரண்மனையைச் சேர்ந்துவிசாலமான சபாமண்டபத்தில்விளங்கும் அரியணையில் வீற்றிருந்துஇராஜகாரியங்களைப்பார்த்துக்கொண்டிருக்கின்ற பானுகோபனைக்கண்டு வணங்கிப்போற்றி ஐயனே தேவரீரை அரண்மனைக்கு வரும்படிக்கு இராசாதிராசன் கியாபகங்கொண்டனனென்று விண்ணப்பஞ்செய்த மாத்திரத்திற் சிரோரத்தினங்களினாற் சோதித்திருக்கின்ற சிங்காதனத்தைவிட்டிறங்கி மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர்கள் சூழ்ந்துபோற்றிவரவும் வெண்சாமரைகள் ஆலவட்டங்கள்அருகாகப்பலர் அசைத்துப்போகவும் திருச்சின்னம் புள்ளாங்குழல் முழக்கவும் அருகுதீவர்த்திகளைப்பலர்காட்டி நடக்கவும் பட்டுவர்புகழவும் வித்துவான்கள்கொண்டாடவும் கட்டியக்காரர்கள்எச்சரிக்கை சொல்லவும்தேவமங்கையர் நடிக்கவும் சுமங்கலிகள் ஆலங்களைச்சுழற்றவும், இவ்வித ராஜசின்னங்களுடன் ஆசாரவாயிலினிடத்தில்வந்து நவரத்தினமயமாகிய தேரிலாரோகணித்துப்பற்பலபடைவீரர்கள் போற்றிச்செல்லவும் ஜயபேரிவெற்றிச்சங்கம்குடமுழாமுதலிய பதினெண்மேளவாத்தியங்களும்மேகமுழக்கத்தைப்போல அதிர்ந்துவரவும்விசாலமாய் நீண்டிருக்கும ஆயிரகோடிவீதிகளைக்கடந்து எதிரில்நேர்ந்தஇராட்சதவீரர்கள் சேவித்துப்போகப் பிதாவாசஞ் செய்திருக்கின்ற நகரத்தைச்சேர்ந்து மங்கலவாழ்த்தெடுப்பத் தேரைவிட்டிறங்கித் தன்னைத்தொடர்ந்துவந்த பிரமுகாளுடன் அரண்மனைக்குள்ளேபோய் அவுணராசர்சேனைத்தலைவர் மந்திரி பிரதானிகள் பெரியோர்கள் அணியணியாகப் பரப்பியிருக்கின்ற பீடங்களிலிருந்துஇராஜராஜன் கட்டளைகளுக் கெதிர்பார்த்திருக்கவும் மற்ற இராசசின்னங்களனைத்தையும்வரிசைப்பட நடத்திவரவும் விசாலமாய்சொலித்திருக்கும் சபாமண்டபத்திற் சிரோரத்தினங்களினாற் சோதித்திருக்கின்ற சிங்காதனத்தின்பேரில்வயிரமலையைப்போல வீற்றிருக்கின்ற பிதாவைக்கண்டுதீர்க்கதண்டன் சமர்ப்பித்து ஐயனே, அடியேனைத்தருவித்தகாரணமென்னே திருவுளம் பற்றவேண்டுமெனக் கேட்டமாத்திரத்தில் வீரகண்டாமணி கலிக்கும் பாதாரவிந்தங்களைப் பெற்றிருக்கின்ற சக்கிரவர்த்தியானவன் பிள்ளையையருகிலழைத்துத் தழுவிக்கொண்டு ஆசீர்வதித்து அப்பனே?

சிலதினங்களுக்கு முன்னம்உன்னிளையபிதாவாகியதாருக
னையும் கிரவுஞ்சனையும் வேலினாற்பிளந்துகொன்றகந்தன்
செய்தியைக் குறித்தும்அவன்செலுத்திய தூதன் கொடு
மைக்காகவும் மந்திராலோசனைகளைச்செய்திருந்த காரண
ங்கள்உனக்குத் தெரிந்திருக்கின்றதே அந்தச்சிவகுமாரன்
சற்றும் பயமற்றவனுய்த் தானிருந்த திருச்செந்திற் பதி
யைக்கடந்து துணைவர்பூதவெள்ளங்களுடன் அலைகள்பெ
ருந்தாழ்ந்திருக்கின்ற சமுத்திரத்தைத்தாண்டி இந்தச்சி
றந்தபட்டணத்துக்கு வடபாரிசத்தில் விளங்குகின்றகோ
புரவாயிலுக்கருகிற் சேர்ந்துபாசறையொன்றைச் செய்வி
த்துக்கொண்டுஅதிலிருக்கிறதாகவும்வாமனப்படிவங்கொ
ண்டு உலகையளந்தகள்வனாகியவிஷ்ணுவும் பிரமதேவனு
ம் நமக்குப்பயந்தோடி ஒளித்துத்திரியும் இந்திரனும்மற்
றதேவர்களனைவரும் சண்முகனுக் குதவியாய்ச்சேர்ந்திரு
ப்பதாகவும்நமது தூதர்கள்வந்துவிண்ணப்பஞ்செய்தனர்.

நல்லகாரியம் அபலராகியதெய்வப்பயல்களும்பாலசுப்
பிரமணியனும், பிரகாசம் பொருந்திய வாளாயுதத்தைப்
படைத்திருக்கின்ற நவவீரர்இலக்ஷர்சேனைத்தலைவர்கள்க
ளித்திருக்கின்றபூதங்களும்சற்றும்எண்ணிக்கையில்லாம
ற்பலகாவல்களைக்கொண்டிருக்கின்றஇந்தவீரமாமயேந்தி
ரத்தின்மீதுபோராக்குறித்துவருகின்றதோ வெகுநேத்தி
நேத்திகுமாரனே இந்தச்செய்திதெரிந்தமாத்திரத்திற்பிர
யாணப்பட்டுப்போய்த் தம்பியையும் கிரவுஞ்சனையும் எ
ன்னுசைக்குமாரன் வச்சிரவாகுவையும்அளவற்றஜயசாலி
களாகிய அவுணவீரர்களையும் வதைத்த சத்துருக்களைவ
ளைத்துக்கொண்டு ஒருவனுவதுதப்பிப்போகாமற் சின்ன
பின்னப்பட்டழியச் சாடநினைந்தேன் ஆனல்பகைவர்சிறி
யரென்றும் பைசாசங்களென்றும் அத்தகையர்மீதில்இரா
சாதிராசனுகவிருக்கப்பட்ட நானேநேரிற்போவது அழக
ல்லவென்றும் மனதிற்றேற்றப்பட்டதால்இதுபரியந்தம்
தாழ்த்தேன், இதுவுமல்லாமல் நமக்கழிந்தோடிப் பதுங்
கியிருந்த மேகவாகனனாகிய இந்திரனாதியதேவர்கள்தங்க
ளுக்குநேர்ந்திருக்கின்ற குறைபாடுகளைப் பரமசிவனுக்கு
முறையிட்டுக்கொண்டதின்மேல் அவர்களிடத்திற்பரிவா
ய்த் தமது நுதல்விழியிற்படைத்த பாலசுப்பிரமணியனை
ப் பூதப்படைகளைக்கூட்டி நம்முடன் சண்டைகொடுக்கச்
செலுத்தினராதலால் அவ்வாறே குமாரனேஜயசாலியாகி
ய உன்னைஅனுப்பிஅவர்களைவெற்றிகொள்ள நினைந்திருக்
கின்றனன், இதுதகுதியாகையால்நீயுன்சேனைகளைக் கூட்
டிக்கொண்டு துரிதமாகப்போய்ச் சிவகுமாரனையும்நந்திக
ணத்தலைவர்களையும்பூதவெள்ளங்களையும் மடக்கிக்கொண்
டு பெருங்காற்றிற்பட்ட பூளைப்புஷ்பத்தைப்போலச்சின்
னபின்னப்படச்சாடி வெற்றிகொண்டுமனக்களிப்புடன்தி
ரும்பித் துரிதமாய்ச் சந்தோஷச்செய்தியைச்சொல்லக் க
டவாயென்று தன்மனதுக்கினியகுமாரன் பானுகோபனு
க்குச் சூரபதுமன் கட்டளையிட்டமாத்திரத்தில் நவரத்தி
னமயமாகச் சொலித்திருக்கின்ற வாகுவலையங்களையணிந்
தபுசங்கள்மகாமேருவைப்போலோங்கவுந்தேகம்பூரித்து
ப்புளகாங்கிதனய்அதிகவுற்சாகத்துடன் கட்டழகனனபா
னுகோபன்பிதாவைப்பார்த்துஇதனைச்சொல்லுகின்றான்.

ஆயிரத்தெட்டண்டங்களையும் வென்று தேவர்கள்முத
லாகிய சகலருந் தொண்டுசெய்யஇராஜராஜேஸ்வரனுகச்
சிறந்திருக்கும் வீராதிவீரனே இதனைக்கேட்டருள்க, கா
ளகண்டமூர்த்தியாகிய சிவபிரான்செலுத்திய பாலசுப்பிர
மணியனையும் வெறிகொண்டுபலிக்குழன்றுதிரியும்பூதப்
படைகளையும் நவவீரர்கள்முதலிய படைத்தலைவர்களையு
ம் ரணக்களத்தில்வெற்றிகொண்டுதிரும்புவதைப்பெரிதா
கிய காரியமென்றெண்ணியோ பிதாவே! இப்படிக்குக்கெ
ஞ்சிச் சொல்லுகின்றீர், அந்தச்சிவகுமாரன்இந்தப்பட்ட
ணத்தைநோக்கி வருவதற்குமுன்னமே யெதிர்கொண்டு
போய்க் கொடியபோராச்செய்து சின்னபின்னப்படச்சா
டித் துரத்திவருவேனென்று தேவரீருக்குநேற்றையதின
மே விண்ணப்பஞ்செய்துகொண்டேன். அதனைச்சற்றும்
யோசித்துச் செலவுகொடாமல் அசட்டையாக விருந்துவி
ட்டீர், இப்போது பகைவர்கள் நமதுபட்டணத்துக்கருகி
ல்வந்து சேர்ந்தபின்பு இந்தக்கட்டளையையிட்டீர், ஆகிலு
மென்ன முழுகிப்போயிற்று. இந்தநிமிஷத்திற் சதுரங்க
சேனைகளையுங் கூட்டிக்கொண்டுபோய்ப் பரமசிவன்பெற்
றபிள்ளையாகிய கந்தனைவளைத்துத்திகைத்தோடும்படிக்கு
ச்சாடி மேலும்அவனுக்குப் படைத்துணையாகவந்திருக்கி
ன்ற நந்திகணத்தலைவர் பூதவெள்ளங்கள்முதலானவர்களை
யுங் கண்டதுண்டப்பட்டுருளும்படிக்குக்கொன்றுபகைவ
ர் பூண்டில்லாமற்படிக்குச் செய்து மனவூக்கத்துடன்திரு
ம்பக்கடவேன், இந்தவெற்றியைத் தேவரீர்கண்டு களிக்க
ப்போகிறீர். இதுவுமல்லாமற் பாலசுப்பிரமணியனுக்குச்
சக்கிரரட்சகராகவும் மந்திராலோசனைக் குரியராகவும் வ
ந்திருக்கின்ற ஸ்ரீலட்சுமிகாந்தனனமகாவிஷ்ணுவையும்,ச
துர்முகப்பிரமதேவனையும், தேவரீருக்குப் பயந்தொளித்
துத்திரிகின்ற இந்திரக்கள்வனையும்பற்றிப் பாசத்தினுற்பி
ணித்துக்கொண்டுவந்துஉமதுசந்நிதானத்தில்விடக்கடவே
ன், அப்பால் அவர்களைஉமக்கிஷ்டமான தண்டனைகளை
ச்செய்யுமெனப் பிரதிக்கினைகளைப் பேசித் துரிதமாகவி
டைதரவேண்டுமெனச்சேவித்தபுத்திரனைஎடுத்து மார்பு
டனணைத்துக்கொண்டு அப்பனே தீவிரமாகப்போய்ச்சத்
திராதிக ளனைவரையும்வென்று ஜயவுற்சாகத்துடன் தி
ரும்பக்கடவாயென்று வாழ்த்திச்செலவு கொடுத்தவுடன்
பானுகோபனனவன் மகாசபையைக்கடந்து வெளிவந்து
நவரத்தினமயமாகிய தேரிலேறிக்கொண்டு பலகோடிஅவு
ணவீரர் சூழ்ந்துபோற்றிவரவும் பலர்பலவிதவாத்தியங்
களை முழக்கிநடக்கவும் மற்றுமிராநின்ற இராஜசின்னங்
களைத் தாங்கிக்கணக்கிறந்த அவுணர்சூழ்ந்துதங்கள்பணி
விடைகளைச் செய்துதொடரவும் இவ்விதவோலக்கத்துட
ன்பிதாவாகிய சூரபதுமன் வாசமாயிருக்கின்ற நகரைக்கட
ந்து மாடமாளிகைகள் நெருங்கியிருக்கின்றவிசாலமாகிய
பலகோடி வீதிகளைத்தாண்டித்தன்னரண்மனைக்கருகில்வ
ந்தவுடன் பாரித்ததேரைவிட்டிறங்கிப்பக்கத்திற்காத்திரு
க்கின்ற வேகமுடையதூதர்களைப்பார்த்துநீங்கள்அதிகது
ரிதமாயோடித் திவுதீபாந்திரங்கள்முதலிய இடங்களிலிரு
க்கின்ற கணக்கிறந்தஇரதகஜதுரக பதாதிகளாகிய நமது
சதுரங்கசேனை வெள்ளங்களையும் இந்தநிமிஷத்திற் கொ
ண்டுவந்து சேர்க்கக்கடவீர்களெனக் கட்டளையிட்டவுடன்
அவர்கள் இராஜகுமாரனே இதோபணிவிடையின்படிக்
குத் தருவிக்கின்றனமென்று சென்றபின்பு தன்னைச்சூழ்
ந்திருக்கின்ற மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர்கள்முத
லாகிய வீரர்கள்மீதில் விழிகளைச்செலுத்திப் பிதாவின் க
ட்டளைப் படிக்குப் போகவிருக்கின்றதால் நீங்களனைவரு
ம் சர்வாயுதபாணிகளாய் உங்கள்வசத்திலிருக்கின்றசேனை
சமுத்திரங்களையுங் கூட்டிக்கொண்டு அதிசீக்கிரத்தில்

வந்துசேருங்கோளென் றுஅவர்களுக்குச்செலவுகொடுத்த
னுப்பிவிட்டுத் தன்பரிசனர்போற்றிவரத்தக்கதாகஅரண்
மனையில் நுழைந்துசந்தனம்சாம்பிராணி கர்ப்பூரதீப மு
தலாகிய பரிமளங்கள் கமழ்ந்திருக்கின்ற விசாலமாகியஆ
யுதச்சாலையில் நுழைந்துபரிசுத்தனுப் வணங்கிப்பூசித்து
ப் பொன்னுடையையுடுத்து ஆம்பற்புஷ்பநிறமுடைய ப
ட்டுக்கச்சையை இடையிலிறுக்கிக்கூர்மையாய் ஜ்வலித்து
க்கொண்டிருக்கும் வயிரவாளாயுதத்தை மடியிற்சொருகி
மேகத்தினிடத்தி லுண்டாயதிரும் இடிக்கூட்டத்தைப்
போலக் கலிக்கும் வீரக்கழல்களைபாதத்திற்கட்டி விசால
மாகிய மார்பினிடத்தில் வயிரங்களினுற் சோடித்திருக்கு
ம் அபேதகவசத்தைப்பிகிந்து கரசாடு விரல்சாடுஇவற்றி
னை வரிசைப்படத்தரித்து மின்னலையொப்பப் பிரகாசித்
திருக்கும் அலகையுடைய கொடியபாணவிதங்கள்நிறைந்
திருக்கின்ற தூணியை முதுகிலிறுக்கித் தங்கத்தினுற் செ
ய்து பிரகாசிக்கின்ற வீரபட்டத்தை நெற்றியிற்கட்டிமற்
றும்போர்க்கோலத்துக்குரிய சின்னங்களையுந்தரித்துதும்
பைமாலையை நவரத்தினமயமாகவிளங்குங் கிரீடத்திற் சு
ற்றிமந்தரகிரியைப்போல பாரித்த பொற்கட்டுகள்பிகிந்து
இருகுதைகளினும் மணிகள் சத்திக்கும் வில்லைவணங்கி
யெடுத்து ஜயமுண்டாகக்கடவதென்று தோளில்மாட்டிஎ
த்தகையரையும் மயக்கித்தன் வயப்படுத்திவாடச்செய்யவ
ல்ல மோகனுஸ்திரமுதலிய சிறந்தபடைகளையுஞ்சேகரித்
துக்கொண்டு வீரலட்சுமியைத்தொழுதுபோற்றிச்செலவு
பெற்றுக்கொண்டு ஆயுதச்சாலையைக்கடந்து மனவுற்சாக
த்துடன்வெளிவந்தனன்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? அவன்விவேகத்
தை யென்னசொல்வேன் தங்கள்மீதிற் பகைத்துவந்திருக்
கின்ற சத்துருக்களினது புசபலபராக்கிரம வன்மைகளை
யும் பெருமைகளையும் எவ்வளவும் மதித்துப்பாராதவனு
ய்ப் பானுகோபன் மிகுத்தகளிப்புடன் ஆசாரவாயிலுக்க
ருகில்வரும்போதுமுன்னம்இராஜகுமாரன் கட்டளையின்
படிக்கோடிய தூதர்கள் பலதிசைகளினும்நெருங்கியிருக்
கின்ற சேனைகளுக்குத் தலைவர்களைக்கண்டு போருக்குப்பி
ரயாணப்பட்டுத் துரிதமாய் வரும்படிக்கு உத்தரவாயிற்
றென்று தெரிவித்தமாத்திரத்தில் மனமகிழ்ந்தவர்களாய்
யானைகளின்மேல் பேரிகைகளையேற்றிப் படையெழுச்சி
யென்றறைவித்தவுடன் சர்வசங்காரகாலத்திற் சத்தசாகர
ங்களும்பெரும்புறக்கடலும் பெருக்கெடுத் தெழுவதைப்
போல இராட்சத சேனைவெள்ளங்கள் அதிசவுற்சாகங்க
ளுடன் பேரொலியைக்காட்டி வீரங்களைப்பேசிச்சிருங்க
நாதங்கள் அட்டகாசங்களைச்செய்து அண்டங்களுங்குலு
ங்கத்தக்கதாகஆர்ப்பரித்துவந்து தங்கள்தங்கள் தலைவரை
ச்சேர்ந்தகாலத்தில் அந்தச்சேனைவெள்ளங்களைப்போற்றி
ப்புறப்பட்டபடைவீரர்கள்பெயரைக்கேட்பீராக. விஜயன்
நேமியன், மாயன், முயலி, சண்டகன், சூரன், கரன்; மூர்க்க
ன், தசமுகன், அலி, சண்டன், விகண்டன், அசமுகன், மயி
டன், அக்கிரவாகு, விஜயசேனன், விட்சேனன், விமோகன்
சோமுகன், மதுச்சகித்தன், சுசிமுகன், சனி-சூனியகேது
அசுரசேனன் முதலிய வீராதிவீரர்கள் இவர்கள்பெருமி
தங்களைச்சொல்லி முடிவதன்று நிமைப்போதில் அண்ட
ங்களனைத்தையும் பிசைந்தூதும் வலியையுடையவர்கள்ப
கைவரில்லாமையாற் புஜங்கள்தினவுண்டு வாடியிருந்தவ
ர்கள் சண்டைகிடைத்ததென்னும் உற்சாகங்களுடன்வயி
ரக்கவசங்களையணிந்துபாரித்தவிற்களைத்தாங்கியாவராலு
ந் தடைசெய்வதற்கரிய தேவாஸ்திரங்களைச் சேகரித்துக்
கொண்டு விஷத்தொவையலிட்டுக் கூரிய அலகையுடைய
பாணங்கள் நிறைந்திருக்கும் தூணிகளைமுதுகிலிறுக்கிம
ற்றப்படைகளையு மெடுத்துக்கொண்டு பருவதாகிருதியா
கிய தேர்களிலேறி வெளிவந்தவுடன் பதினுயிரவெள்ளம்
இராட்சதச்சேனைகளும் தங்கக்கட்டுகள் பூண்டிருக்கின்
ற விற்களைத்தாங்கி மந்தரகிரியையொத்த கதை-முத்தலை
ச்சூலம்-சக்கரம்-வேல்-தோமரம்- பிண்டிபாலம்- எறியீட்
டி- எழுவாயுதம்- மழுவாயுதம்-காலபாசமுதலிய ஆயுதங்
களையும் தேவப்படைகளையுமேந்திக்கொண்டுமகரமச்சங்
களுலவிக்கொண்டிருக்கின்ற சமுத்திரத்தைப்போல ஆர்
ப்பரித்துப் பூமியதிரும்படிக்குப் பாதங்களைப்பெயர்த்து
வைத்துத்தங்கள்இறைவரைக் கூடினர், இவர்களன்றியிற்சு
ழிசுத்தங்களுள்ளதாய்த் திசைகளினும் கடல்மீதினும்வா
னத்தினிடத்தினுந்தாவும் வேகமுள்ளதாய் இடியையொ
ப்பக் கனைக்குங்குரலோசையைப்பெற்ற புரவிக்கூட்டங்க
ளும் கர்னமதம் கபோலமதம் பீஜமதமெனச் சொல்லாநி
ன்ற மும்மதங்களையும்பெருக்கி பருவதாகிருதியாக வீறி
ட்டு இருப்புலக்கைகளைத் துதிக்கைகளிற்பற்றி அண்டங்
களதிரச் சுழற்றிவரும் யானையணிகளும் பொன்வண்டில்
அச்சு-மச்சு-குத்துக்கால்-கொடுங்கை-டக்கயம்- குடைமுத
லிய சிங்காரங்களைக்கொண்டு நவரத்தினமயமாகப் பிரகா
சித்திருப்பதாய்ப் புரவிகள்-புலி-யாளி-சிங்கம்- இவைகள்
அளவற்றதைப்பூண்டு கற்கரத்தொனிகளைச் செய்தோடு
ம் தேரணிகளும் கூடியதொகை பதினுயிரவெள்ளங்களு
ம் தமதுதலைவரைக் கலந்தனர். ஆகஇருபதினுயிர வெள்
ளம் இரதகஜ துரகபதாதிகளும் நெருங்கிச்சூழ்ந்துபோ
கத்தக்கதாக அவுணவீரர்கள்தங்கள் மனதைப்போல அ
திவேகமாகவந்து பானுகோபன் அரண்மனைக்கருகிற் சே
ர்ந்தனர். அந்த நால்வகைச்சேனைப் பெருக்கையோசிக்கு
மிடத்திற்பிரமகற்பமுடிவிற் சத்தசாகரங்களும்பெரும்பு
றக்கடலும் ஒன்றுபட்டுப்பெருகி மகம்மேருவைச் சூழ்ந்
தொலிப்பதைப்போலக் காட்டியது.

அக்காலத்திற்சேனைத்தலைவர்கள்இளவரசனைக்கண்டமா
த்திரற்கரங்களைக்கூப்பித் தொழுதுநிற்கவும்சதுரங்க சே
னைகளும் புகழ்ந்துபோற்றவுமிராகின்ற தன்சேனைப் பெ
ருக்கைப் பானுகோபன்பார்த்துக் களித்தவனுய் கையமர்
த்திப் பக்கத்திற் காத்திருக்கின்ற பரிசனங்களைப்பார்த்து
இந்தநிமிஷத்தில் நமதிரதத்தை யலங்கரித்துக் கொண்டு
வரக்கடவீர்களெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் வணங்
கியோடி யிரதசாலையைச் சேர்ந்து தேர்ப்பாகனுக் கிராச
குமாரன் கருத்தைத்தெரிவித்தவுடன் பொன்மலையைப்
போலப் பாரித்ததேரை டக்கையங்கள் கலகலெனச்சத்தி
க்கும் மணிகள் பீதாம்பரத்தொங்கல்கள் முத்துமாலைகள்
முதலியவிதங்களினுற் சிங்காரித்துப் பஞ்சகல்லியாணிக
ளாகிய முப்பதினுயிரம் உத்தம அசுவங்களைப்பூட்டிபூமி
பிளக்கும்படிக்குக்கறகறென்றோடச் செலுத்திக்கொண்டு
வந்து எதிரில்நிறுத்தியகாலத்தில் உதயகிரியின்மேற்சூரி
யபகவான் வெளிப்பட்டதைப்போலவும் மலையினிடத்தி
ல் வீரசிங்கந்தாவிப் பாய்வதைநிகர்த்தும் பானுகோபன்
தாவியேறி மத்தியில் நவரத்தினமயமாகச் சொலித்திருக்
கின்ற அரியணையில்வீற்றிருந்தகாலத்தில் ஜயமுண்டாக
க்கடவதென்று சேனைவீரர்களனைவரும் வாழ்த்தெடுக்கு

மோசையானது அஷ்டதிசைகளினும்பரவிச்சகலரையும்
பிரமிக்கச்செய்தது அக்காலத்திற்கமுகமரங்கள்பாளைகளை
விரித்திருப்பதுபோல வெண்சாமரைகளை ஆயிரங்கோடி
அவுணவீரர்கள் வீசிப்போகவும் பானுகோபன்மேனியா
னது கருமையாதலால் அதிற்பொருந்தாமல் அவன்தேடி
யிருக்கின்ற கீர்த்திப்பிரதாபங்க ளனைத்துஞ்சேர்ந்து கவி
ந்திருப்பதைப்போலமுத்துத்தாழ்வடங்களசையும்வெண்
பட்டுக்குடைக ளனந்தம் அவுணராசர்கள் தாங்கிவரவும்
பிரகாசம்பொருந்திய வாளாயுதம் தாம்பூலவிதங்களடங்கி
யிருக்கின்ற பொற்பெட்டிகள்படிக்கம்இவற்றினைப்பலசே
னைத்தலைவர்கள் தாங்கிச்செல்லவும்அருகுகள் ஆலவட்டங்
கள்மயிற்பிஞ்சங்கள் இவைகளைக்கணக்கிறந்தவீரர்களசை
த்துத்தொடரவும்இவ்வித ஆடம்பரங்களுடன்தேரில்விள
ங்குகின்ற பானுகோபனைவன் பக்கத்திலிருக்கின்றஏவ
லரிற்சிலரைப்பார்த்து வலியவிற்கள் கொடியபாணங்கள்
நெடியகதைமுதலிய அஸ்திரசஸ்திர விதங்களைக்கொண்
டிருக்கும் ஆயிரகோடி சேமத்தேர்களைத் துரிதமாகச்
சாக்கிரதைசெய்து நம்முடன் வரும்படிக்குத்திட்டஞ்செ
ய்வீரெனக் கட்டளையிட்டமாத்திரத்திற் சேவித்தோடிச்
சொர்னமயமாய் நவரத்தினகாந்திகளைவீசிப் பாரித்துப்ப
ற்பலபடைகளைக் கொண்டிருக்கும்தேர்நிரைகளைக்கொண்
டுவந்து சேர்த்தனர்.

அக்காலத்திற், பானுகோபன் மதியூகியாகியதன்தேர்ப்
பாகனைப்பார்த்து இந்தநிமிஷத்தில் நமதிரதத்தைத் துரி
தமாகச் செலுத்திக்கொண்டுபோய்ச்சிவகுமாரனிருக்கின்
றவிடத்திற் சேர்க்கக்கடவாயெனக்கட்டளையிட்டமாத்திர
த்திற் சவுக்கினுற்புரவிகளையதட்டி வாயுவேகத்தினும் ம
னேவேகத்தினு மேலிட்டுச் செல்லும்படிக்குத் துரத்திக்
கொண்டுபோவதைக் கண்டமாத்திரத்திற் கரியநிறமுடை
ய அவுணச்சேனைகள்பாதங்களிற்கட்டியிருக்கின்ற வீரக
ண்டைகள் கலீல்கலீலெனச்சத்திக்கவென்னும்ஆரவார
ங்களுடன்காற்றினுங்கடுகிப்போகவும்பாரித்தஇரதங்களு
ம் மதயானைகளும் தத்தித்தாவுங் குதிரைக்கூட்டங்களும்
அணியணியாக அதிவேகங்கொண்டு செல்லவும் ரணபே
ரிஜயபேரி வெற்றிச்சங்கம் சல்லரிமல்லரி குடமுழா திமி
லை தக்கைகாகளம் சின்னம் முதலாகிய தோற்கருவிதுளை
க்கருவி மிடற்றுக்கருவி கஞ்சக்கருவி நரம்புக்கருவி யெ
னச்சொல்லும் ஐவகைத்தாகிய பதினெண்வாத்தியங்களை
யும்அண்டங்களதிர முழக்கிக்கொண்டு பற்பலகோடி அ
வுணர்கள் போகவும் விருதுக்கொடிகள் மகரதோரணங்க
ள் துவசபடங்களைப்பலர்தாங்கிநடக்கவும்இவ்விதமாகச்ச
துரங்கசேனைகளும் போகும்போதுபெருத்ததூளிபடல
மானது மேலிட்டெழுந்து வானநாடுகளிற்பரவி யிமையா
நாட்டத்தினையுடைய தேவர்கள்கண்களிற்படிந்து வருத்
திமூடச்செய்யும் அஷ்டதிக்குகளினும் பெருத்து அத்த
லங்களிலிருப்பவர்கள் திகைத்து மதிமயங்கிவாடியிதென்
னவுற்பாதமாக விருக்கின்றதென்று தியங்கவும் சமுத்தி
ரங்களிற்படிந்து அலைகளையடக்கிச்சேருக்கவும் திசையா
னைகளின் மதத்துவாரங்களைத் தூர்த்தடக்கவும் வானத்
தையளாவநிற்கின்ற தேர்களோடும்போதுண்டாகும் கற்
கரத்தொனிகளும் மதயானைகள் வீறிட்டுச்செல்லு மொ
லியும் புரவிகளின் கனைப்பின்சத்தங்களும் இராட்சத
சேனைகள் வீராவேசங்களினுற்சிருங்கநாதங்கள் அட்டகா
சங்களைச்செய்யும்முழக்கமும்மணிகள்கலகலென்றசையும்
சத்தமும்கொடிகள் காற்றிற்பட்டுப் படபடென்றசையுந்
தொனியும் வீரமாமயேந்திரபட்டணமுழுமையுஞ் செவி
டுபடப்பெருத்தொலிக்கவும் இவ்விதஆரவாரங்களுடன்ச
துரங்கசேனைகளும் வேகமாய்நடக்கும் பாரத்தினுற் பூ
மியானது தத்தளித்துக்கிடுகிடென்றுநடுங்கவும்அச்சுமை
யைத்தாங்கமாட்டாமையால் ஆதிசேஷனனவன்ஒருதலை
ப்பாரமாகச்சுமந்திருந்த பூமண்டலத்தை ஆயிரம்பணும
குடங்களைக்கொண்டு தாங்கியும் தாபரிக்கப்படாமையால்
பெருமூச்செறிந்து விஷங்களைக்கக்கிச்சோரவும் அக்கால
த்திலுண்டாகிய அதிர்ச்சியினுல் வானகத்திலிருந்த நட்ச
த்திரங்கள் நிலைகுலைந்து பலபலென்றெங்குமுதிரவும்இந்
தக் கொடுமைகளைக்கண்டதேவர்கள் பயப்பிராந்தியினுல்
தேகம்நடுக்கமெடுத்துத் தியங்கித் தங்கள்பதங்களைவிட்டு
மேல்நாடுகளிலோடி யொளிக்கவும் மேகங்கள்திகைத்துஇ
டிகளைக்கக்கி மின்னல்களை வீசிப்பறந்துதிசாதிசைகளில்
மறையவும் பூமிக்கச்சாணியாகவிருக்கின்ற மகம்மேருகி
ரியும் நெக்குவிட்டு அஷ்டகுலாசலங்களும்பொடிபட்டுதி
ரவும் இத்தகையவுற்பாதங்கள் தோற்றத்தக்கதாக நூற்
றெட்டுயுகங்களாக ஆயிரத்தெட்டண்டங்களைப் பரிபால
னஞ்செய்து சகலரையும்வென்று வீராதிவீரனுகவிருக்கி
ன்ற சூரபதுமன்பிள்ளையாகிய பானுகோபனேறியிருக்கி
ன்ற இரதமோடும் அதிர்ச்சியைக்கேட்டமாத்திரத்திற்சூ
ரியபகவான்திடுக்கிட்டு இத்தினம் நமக்கென்னகேடுவிளை
யுமோவென்னும் ஏக்கத்தினுல் மயங்கியிருக்கின்றபொழு
து சேனைப்பெருக்குகள் போகும்வேகத்திலெழுந்துமுடி
ய தூளிபடலத்தைக்கண்டு பிழைத்தோமென்னும் சந்
தோஷத்தைக்கொண்டு அவைகளில்மறைந்துபோவதாயி
னன்.

இதுவல்லாமற் கணக்கிறந்தஇராட்சதர்முதலிய படை
கள் கெக்கலிகொட்டிக்கொண்டுவீறிவருகின்றவேகத்தினு
ல்வீரமாமயேந்திரபுரிக்ககழாகவிருக்கின்றசமுத்திரமான
து அலைகளைச்சுருக்கிப் பின்னிடைந்ததுமல்லாமல்துகள்
பறந்த சேருய்ப்பின்புவறண்டு பொடிபட்டெழுந்து மு
ன்னம்பூதப்படைகள் வந்தகாலத்திற் பட்டகேட்டினும்ப
தின்மடங்கு வருந்தியது இவைநிற்க வானத்தை யளாவ
வோங்கியசையுந் துவசபடங்களைப் பார்க்குமிடத்தில்வட்
டமாகவிளங்கும் ஆகாயப்பறையை பூமிதேவியானவள்ப
லகரங்களைக்கொண்டு முழக்குவதைப்போலக் காட்டவும்
கொடியமனதையுடைய அவுணவீரர்கள்கரங்களிற்பற்றி
யிருக்கின்ற ஆயுதவிதங்களொன்றுடனென்று தாக்கியகா
லத்தெழுந்த பொறிகளானவை கொடிகளசைவிற்பட்டுவி
ழுவதெப்படிக்கிருக்கின்றதெனில், துவசபடங்களசையுந்
தோறும்வானகங்கையிற்றேய்ந்துவீசுந்திவலைகளைப்போ
லக்காட்டவும் சூரியகிரணங்களைப்போலச்சொலித்திருக்
கின்ற வாள் வேல் முதலியபடைகளைத்தாங்கிச்செல்லும்
அவுணவெள்ளங்கள்போகவிடம்பெருதபடியால் வானவ
ழிக்கொண்டு அளவற்றவெள்ளம் இராட்சதர்நடக்கவும்இ
வ்விதஆடம்பரங்களுடன்ஆயிரகிரணங்களைவீசி யுலகை
விளக்குஞ்சூரியபகவானைப்பாலபருவத்திற் சிறைபடுத்தி
ய தீரனுகிய பானுகோபனைவன்அளவற்றவெள்ளம்இர
தகஜதுரகபதாதிகள் சூழ்ந்துவரத்தக்கதாக நடுநாயகமாய்
வீராவேசத்துடன் வருகின்றசிறப்புக ளனைத்தையும் வா
னவெல்லையிலிருந்து பார்த்த நாரதரிஷியானவர் அதிசீக்
கிரத்தில் அத்தலத்தைக்கடந்து பூதவெள்ளங்கள்உற்சாக

த்துடன் வாசமாயிருக்கின்ற பாசறையைச்சேர்ந்து மகாவிஷ்ணு பிரமதேவன் இந்திரன்முதலிய தேவர்கள்சூழ்ந்துபோற்றவும்வீரவாகுதேவர்முதலாகிய துணைவர்கள்பக்கங்களில்நெருங்கியிருக்கவும்நவரத்தினமயமாய்ச்சொலித்திருக்கும் சபாமண்டபத்திற்சிரோரத்தினங்களினாற்சோடித்திருக்கின்ற சிங்காதனத்தில்வீற்றிருக்கின்ற ஞானநாயகனாகிய குமாரதேவனை விழிகள்களிக்கத் தரிசித்துச் சமீபத்திற்போய் பத்திவினயங்களுடன் திருவடிகளிற் பணிந்தெழுந்து வேதவாக்கியங்களினாற் புகழ்ந்துபோற்றிக் கரங்களைக் குவித்துக்கொண்டிதனைவிண்ணப்பஞ்செய்வதாயினர், கர்த்தனே தேவரீர் சவுரியவான்களாகிய பூதச்சேனைகளுடன் இவ்விடஞ்சேர்ந்து பாசறைசோடித்துக்கொண்டிருக்குங் காரணங்களனைத்தையுந் தூதர்கள்தெரிந்தோடிதேவகாதகனாகிய சூரபதுமனுக்கறிக்கையிட்டமாத்திரத்தில் வடவாமுகாக்கினியைப்போலச் சிறிக்கொதித்துத் தன்மூத்தபிள்ளையாகிய பானுகோபனைத் தருவித்துத் தேவரீரையும நவவீரர்முதலிய படைத்தலைவர்களையும் பூதவெள்ளங்களையும் சின்னபின்னப்படச்சாடித்தூரத்திவரும்படிக்குக் கட்டளையிட்டு அளவற்றவெள்ளங் கொடியபாதகராகிய அவுணச்சேனைகளைக் கூட்டிச்செலுத்தினன் அவன்பிதாவின் வாக்கியத்தைப்பரிபாலனஞ்செய்யும் பொருட்டு யுத்தசன்னத்தனாய்ச் சதுரங்கசேனைப்பெருக்குடன் தேவரீருடன்போர்செய்யும்படிக்கு அதிவேகமாய் வீறிவருகின்றனன், இந்தவிராசகுமாரன் புசபலபராக்கிரமங்களையும் வெற்றியையும் இன்னவிதமென்று சொல்லமுடிவதன்று இந்த துன்மார்க்கனுடன் போர்செய்வதற்குத் தேவரீரும் லோகநாயகனானசிவபிரானுமல்லது மற்றெத்தகைய தேவர்களுக்குமரிது மேலும்இவனைச் சுலபமாகவெல்லக்கூடாது முன்னொருகாலம்இந்தமகாவிஷ்ணுவைவளைந்துகொண்டு முதுகுகாட்டியோடும்படிக்குப் பொருதழித்து உலகங்களிற்புகழவிருக்கின்ற இவர்சக்கரப்படையையும் பிரயோசனப்படாமல் வென்றதீரன்இவையன்றியில், அளவற்ற சண்டைகளிற்கைகண்ட ஜயம் பெற்றிருப்பவன் சுக்கிராசாரியினிடத்தில் மந்திரபூருவகமாக அளவற்றமாயவித்தைகளைக்கற்றவன்மேலும் தன் பிதாமகளாகிய மாயையினிடத்தில் ஆசிரியனிடத்திற்பெற்றிருக்கின்றவித்தைகளினும் மேலாகிய மாயவஞ்சகங்களை வரையறக்கற்றசூரன் ஆதிசேஷனிலும் வலியுடையவன் சூரியனைத்தளைசெய்தகாலத்தில் விடுவிக்கவந்த இந்தப்பிரமன் தானாய்வேண்டி பிரமாஸ்திரத்தைக் கொடுக்கப்பெற்றவன் அதிகவோசையைப் பெருக்கியிருக்குஞ்சமுத்திரராசன் படைத்திருந்த பாசத்தையும் எமதருமராசன் கரத்திற்பற்றியிருக்கின்ற சூலத்தையும் வலிதிற்பறித்துக்கொண்டு அவர்களைப்புறந்தந்தோடத்துரத்தியவன் இன்னமுமிவன்செய்த சாமர்த்தியங்களளவற்றதுண்டுஆதலால்யானையாவதனுப்பி இவனைவெல்லநினைப்பது அரிதரிது தேவரீரோ சற்றுவருத்தமெடுத்துக்கொண்டு நவவீரர்கள்இலக்ஷர் படைத்தலைவர் பூதவெள்ளங்களுடனெதிர்த்துவெற்றிகொண்டு திரும்புவது நன்மையாகுமெனப்பலவிதங்களில் நாரதர்பானுகோபன்பெருமிதங்களைச்சொல்லியதனைத்தையும் பாலசுப்பிரமணியதேவர் கேட்டருளிச்சிறுநகைகொண்டவராய்ப் பக்கத்தில் மின்னலையொப்பச்சொலித்திருக்கும்வாளாயுதத்தைக் கரத்திற்கொண்டு காத்திருக்கும் ஜயசாலியாகிய வீரவாகுதேவனைக்கிருபையுற்றுப்பார்த்தருளிநாம் பூதச்சேனைகளுட னிவ்விடம்வந்திருக்கின்ற செய்தியைச் சூரனறிந்து அளவற்ற இராட்சதசேனைகளைக்கூட்டி நம்முடன் சண்டை கொடுக்கும் படிக்குத் தன்குமாரன் பானுகோபனைச்செலுத்தியதாக நாரதர்சொல்லத் தெரிந்தனம் ஆதலாற் புசபலபராக்கிரமசாலிகளாகிய உன்சகோதரர் எண்மர்இலக்ஷருடன்ஆயிரவெள்ளம் பூதப்படைகளைக் கூட்டிக்கொண்டுபோய்மயேந்திரபுரியை முற்றுகைபோட்டுக்கொண்டு கோட்டைமதில்உறுப்புகள் கோபுரங்கள் மாடமாளிகைமுதலிய வனைத்தையுந்துகள்படவிடித்து நாசஞ்செய்யக்கடவாய், அக்காலத்திற் சூரன்புத்திரன் பானுகோபனெதிர்த்துபோர்செய்யவருவனாயினுந் தீரனாய்வளைத்துக்கொண்டு வீறியிருக்கின்ற அவுணச்சேனைகளைச் சின்னபின்னப்படவாட்டிஅவனையும் வெற்றிகொண்டு திரும்பக்கடவையென்றுவெற்றிவேலாயுத மூர்த்தியானவர் வீரவாகுதேவருக்குச்செலவுகொடுத்து மற்றதம்பியரையும்பூதவெள்ளத்தையும்போகக் கட்டளையிட்டபின்பு சிவகுமாரனானவர்நாரதரிஷியைப்பார்த்து இதனைத்திருவுளம் பற்றுவதாயினர்.

சரபப்பட்சிகள்கூட்டமாகச் சேர்ந்திருக்கின்றவிடத்திற் சிலசிங்கங்களெதிர்த்துவருமாயிற் சாவதல்லது உயிருடன்ஜயித்து மீளவல்லதோ, இதனைச்சற்றுநேரத்தில் திருஷ்டாந்தமாகப் பார்ப்பாயென்று வார்த்தையாடிக் கொண்டிருக்கும்போது குமாரதேவரால் அனுப்பப்பட்டவீரவாகுதேவர் சபையைக்கடந்து வெளிவந்து தன்விடுதியைச்சேர்ந்து வயிரக்கவசத்தையணிந்து மின்னலைநிகர்த்துவிளங்கும் குரூரமாகிய பாணங்கள் நிறைந்திருக்கின்ற அம்புக்கூண்டை முதுகிலிறுக்கி அங்குலிப்புட்டில்களை மாட்டித் தேவேந்திரன் முதலானவர்கள் வாழ்த்தெடுக்கத்தக்கதாக மகம்மேருவுக்குச் சமமாகிய வில்லையெடுத்து புசத்தில்மாட்டிக் கொண்டவராய்ப் பலபடைகள் நிறைந்திருக்கின்ற சேமத்தேர்களின்மத்தியில் மேருவையொப்ப நவரத்தினமயமாகவிளங்கும் இரதத்தின்மேலேறிவீற்றிருந்தகாலத்தில் தம்பியரெண்மரும்இலக்ஷரும்படைவீரர்களும் சருவாயுதபாணிகளாய்த் தங்கள்தங்களுக்குரிய வாகனங்களிற் பாய்ந்திருந்து வீரவாகுதேவரைச் சூழ்ந்தமாத்திரத்தில் ஆயிரம் பூதகணங்கள் ஆயிரவெள்ளம்பூதப்படைகளைச் சூரபதுமன் அரசுசெலுத்தி யிருக்கின்ற மயேந்திரபுரியைநோக்கிப் போருக்கு நடக்கும்படியாகப் பறையறைந்தவுடன் எழுசூலக்கைகள்-வளைதடிகள்-கதைகள்-மராமரங்கள் முதலிய ஆயுதங்களைக்கரங்களிற் பற்றிக்கொண்டு மேகங்களும் நடுங்கக்கற்சித்துவீராவேசங்களுடன் ஆழ்ந்திருக்கின்ற சமுத்திரம்புரண்டதைப்போலஇரைந்து பிரசண்டமாருதத்தைப்போலவேகமாய்நடந்தனர், மற்றஆயிரவெள்ளம் பூதப்படைகளும் சேனைத்தலைவரும் சுப்பிரமணியதேவரைப் போற்றியிருந்தனர், வீரவாகுதேவருடன் போகின்ற பூதப்படைகளின் வல்லபமெப்படிக்கொத்ததெனில் ஆதிசேஷன்ஆயிரம்பணாமகுடங்களினாலுந் தாங்கும் பூமண்டலத்தில்விளங்கும் சகல புவனங்களையும் ஒருகரத்திலேந்தி அம்மானையாடும்வலிமையைப் பெற்றவர்கள் சகலபிராணிகளையுங் காலாதிகளிற் கொண்டுபோகும் இயமனையுங்கொல்லத்தக்ககோபத்தைப்பெற்றவர்கள் வீரர்களாக விருக்கப்பட்டவர்களனைவரினும் முந்திப்பேசும் சூரத்தைக் கிடைத்தவர்கள், அந்திவானத்தைப்போலச் சிவந்தசிகையைப்பெற்றவர்கள், சூல

ம், வேல்முதலிய படைகளைப் பரித்திருப்பவர்கள், வீர
கண்டைகலித்திருக்கும்பாதங்களைப்பெற்றவர்கள், பரமசி
வகடாட்சத்தைப்பூர்த்தியாகப்பெற்றிருப்பவர்கள், மாயை
களைக்கடந்த பரிசுத்தமனதைப்பெற்றவர்கள், வலியினால்
அண்டங்களையும் அசைத்துத்தள்ளவல்லவர்கள், பாரித்
ததேகத்தைக்கொண்டவர்கள், இவர்கள் சவுரியபராக்கிர
மங்களையும் ஜயத்தையும் எத்தகையர்களாலும் புகழக்கூ
டுமோ, இவ்விதப்பெருமைகளைவாய்ந்தபூதவெள்ளமான
துபோகுமுன்னிலையில்இடம்பெறும லெவ்விடங்களினு
ம்நெருங்கிப் பேரொல்லைபக்காட்டி நடக்கும்போது சே
னைத்தலைவர்கள் நாற்புறங்களிலும் பாதுகாத்து முன்ன
ணியிற்செல்லவும் துணைவராகிய எண்மர் இலக்ஷர்சூழ்
ந்து போற்றிவரத்தக்கதாக வீரவாகுதேவர் புறவணியிற்
போவதாயினர்.

இவ்வித ஆடம்பரங்களுடன் நடக்கின்றகாலையில் ரண
பேரி-ஜயபேரி-வெற்றிச்சங்கம்-திமிலை-கரடி-காளம்-சல்
லரி-மல்லரி-தமுக்கு-கடாரி-உடுக்கை- பம்பைமுதலியவா
த்தியங்களையும் பலகோடி பூதவீரர்கள்அஷ்டதிசைகளு
ம் செவிடுபடத்தக்கதாக முழக்கிப்போகவும், அவர்கள்ந
டக்கும் அதிர்ச்சியினால் பூமியானது தத்தளித்துவாடவு
ம், சுமைமிகுதியினால் ஆதிசேஷன்நெளிந்துநெளிந்துவி
ஷங்களைக் கக்கிவாடவும், சமுத்திரஜலமானது அலைந்து
மேலிட்டுப்பெருகவும், பூதவெள்ளங்கள் பாதங்களைப்பெ
யர்த்துவைக்குந்தோறுமெழுந்த தூளிபடலமானது மே
லிட்டுப் பொன்னாடுகளை மண்ணுலகமாக்கவும், பூமிமுற்
றும் படர்ந்து சகலபிராணிகளையும் மயக்கித்திகைக்கச்
செய்ததுமன்றியில் மேலிட்டுப் பானுகோபனுடன்வருகி
ன்ற அவுணச்சேனைகளைமூடித் தியங்கச்செய்ததெப்படி
க்கிருந்ததெனிற் சிவகணங்கள்கலந்து சண்டைகொடுப்ப
தற்குமுன்னம் தாம்வளைத்துக்கொண்டு பொருதழிக்கவி
ருப்புற்றுச்சென்றதையொப்பக்காட்டவும் இவ்விதஆட
ம்பரங்களுடன்சென்ற பூதப்படைகளானவைஅஞ்ஞான
வானுய்த் தேவர்களுக்கெக்காலத்திலும் தீங்குகளைச்செய்
து கொடுங்கோல்செலுத்தி வருகின்றசூரபதுமன் வீற்றி
ருந் தரசுசெலுத்துங் கெடிஸ்தலமாகியமயேந்திரபுரியை
வளைந்து சக்கிரவாளகிரியைப்போல வானத்தையளாவிப்
பருத்து விளங்குகின்ற கோட்டைமதிலுக்குச் சமீபத்தி
ல் நெருங்கியதைச் சிலதூதர்கள் கண்டோடிச் சத்தசாகர
ங்களும் பெருக்கெடுத்தோடுவதைப்போல இரைந்துவே
கமாய்வருகின்ற இராட்சதசேனைகளை நிமைப்போதிற்
கடந்து இராசகுமாரனாகிய பானுகோபனைக்கண்டு சேவி
த்து வாயைமூடிக்கொண்டு, ஓ! சக்கிரவர்த்தித்திருமக
னே? தேவரீர் அளவற்றசேனைப்பெருக்குடன் சண்டை
கொடுக்கப் பிரயாணப்பட்டு வருவதைப்பாலசுப்பிரமணி
யன்தெரிந்து முன்னமிவ்விடந் தூதாகவந்தலைத்துப்போ
னவீரவாகுவைத் தேவரீருடன் போர்செய்யத்தூண்டின
ன் அப்பாதகன் ஆயிரவெள்ளம் பூதப்படைகளுடனும்
தன்துணைவர் சூழ்ந்துபோற்ற இந்தப்பட்டணத்தை நெ
ருங்கிவந்துவிட்டான். இதுவரையிலென்ன அனர்த்தங்க
ளைச்செய்தானோதெரியாது இதனைப்பார்த்து வந்தனமெ
ன்று விண்ணப்பம்பண்ணிக்கொண்டதைக் கேட்டமாத்
திரத்திற் பொற்கடகங்களணிந்த நீண்டகரங்களைத்தட்டி
க்கோபநகைகொண்டு உதட்டைக்கடித்துப் பெருமூச்செ
றிந்து கண்களிற்றீயெழ விழித்து இந்தச்சிறந்தபட்டண
த்தின்மீது எண்ணிக்கையில்லாமற் சண்டைகொடுக்கவந்
த பாலசுப்பிரமணியனையும் தயிரியசாலியாகிய தூதனை
யும் படைவீரரையும் பூதப்படைகளையும்வளைத்துக்கொ
ண்டு அதாஅதப்படும்படிக்குச் சாடிக்கொன்று வானநா
டுகளிலும் திசைகளிலும் சத்தசாகரத்தீவுகளிலும்மே
ருமுதலிய குலகிரிகளினிடத்திலு மோடியொளித்துவா
டச்செய்வேன் அப்படிக்குப் பாலனையுந் தூதனையும்ம
ற்றவீரர்களையும் வலிகுன்றிக்குறைந்துமாண்டோடச்செ
ய்தபோதினும் இக்காலத்தி லெனக்குண்டாகிய கோபக்க
னல்தணிவதோ! ஒருகாலம் என்னுடைய கொடியபாண
ச்சுடுகைக்கஞ்சிச் சத்துருக்களானவர்கள் அண்டங்களினு
ம் திசைகளினும் தீவுதீபாந்திரங்களிலும் புவனங்கள் வ
னங்கள்முதலிய தலங்களிலும் ஓடியொளித்தபோதினும்
அரைநாழிகைப்போதில் அவ்விடங்களெங்கும் புகுந்தா
ராய்ந்து பிடித்துவந்து தேவர்கள்கண்டு கிலேசித்துவாடி
ச் சோரும்படிக்கு என்வீரவாளினாற் கண்ட துண்டமாக
வெட்டியெறிவேன் இவையன்றியும்பாலசுப்பிரமணியன்
பிரமன் மற்றதேவப்பயல்களைப்பிடித்துவந்து அகன்றம
ண்டலாதீஸ்வரனாகிய பிதாமுன்னம்விட்டு இப்பட்டண
த்தி லடைபட்டிருக்கின்ற தேவர்களுடன் கொடியகாவ
லிற்படுத்திப்படாதபாடுகளனைத்தையும் அனுபவிக்கச்செ
ய்வேன் இவர்களுக்குச் சகாயமாகத் திரிமூர்த்திகள்வந்து
தடுப்பினும் அவர்களையும் பறந்தோடச்சாடி நினைந்தகா
ரியத்தைமுடிப்பேனென்று இவ்விதசபதங்களைப் பேசிக்
கொண்டுமனமானதுவடவாமுகாக்கினியைப்போலக் கொ
தித்துக்காந்தியலைக்கப்பானுகோபன்போகும்போது கொ
லைக்கஞ்சாத கடினசித்தமுடைய அவுணச்சேனைகள்வீர
மாமயேந்திரபுரிக்கு வடபாரிசத்தில் நவரத்தினமயமாய்
வானத்தையளாவ நிற்கின்ற கோபுரவாயிலைக்கடந்து வெ
ளிவந்தகாலத்தில் கண்பார்வைசெல்லும் இடமெங்கணு
ம்அடர்ந்து பருவதங்களுக்குக் கால்முளைத் தசைவதைப்
போலக் கோரரூபங்களுடன் அளவற்ற பூதப்படைகள்
ஆவ்ஆவென்று வாய்களைத் திறந்துகொண்டு கரங்களைத்
தட்டிச் சிருங்காதங்களைச்செய்து வீறியிருப்பதைக்கண்
ட இராட்சதவீரர்கள் அவர்கள் பராக்கிரமங்களைநிதானி
த்து இதனைப்பேசிக்கொள்ளுகின்றனர்.

முன்னம் பலதிசைகளினும் நம்முடனெதிர்த்துப்போ
ர்செய்தகாலையில் புறங்கால் புட்டத்திற்றாக்கப் பறந்தோ
டிய் தேவர்களைப்போல இந்தப்பூதரைநினைக்கலாகாதுஇ
வர்கள் தீரத்தையும் வலிமைகளையும் யோசிக்குமிடத்தி
ற் சற்றுவலியராகக் காணப்படுகின்றதெனத் தம்மில்வச
னித்துக்கொண்டவர்களாய்ஆகிலுமென்ன இவர்கள்நம்மு
டனெதிர்த்துச் சண்டைகொடுத்து முற்றினும்நிற்கவல்ல
தீரத்தைப் பெற்றவர்களோ சற்றுநேரம்வாதாடி நமது
போருக்குத் தாபரித்துநிற்கமாட்டாமற் பலதிசையினும்
பறக்கப்போகின்றனர், உலகங்களெங்கும் பரந்திருக்கின்
ற பலமலைகளானவை பூமண்டலத்துக் கச்சாணியாசவி
ருக்கின்றசிறப்புள்ளபொன்மலைக்கு நிகராவதோ, ஒதிபெ
ருக்கினும் வலியசெம்மரத்தூணாகுமோ, மின்மினிகளெ
ங்கணும்பரந்து சொலிப்பதாயினும் ஆயிரங்கிரணங்களை
ப்பரப்பி உலகங்களைவிளக்கிவரும் சூரியனுக்கிணையாவ
தோ, அதைப்போலவே போர்முன்னிலையில் இந்தப்பூத
ர்பராக்கிரமங்களைப் பார்க்கப்போகின்றோமென்று பலப
லவிதங்களாகப் பேசிக்கொண்டவர்களாய்அவுணச்சேனை

கள் கோபமிகுதியினல் விழிகளில் அனற்பொறிகள்சிதறச் சிறிமனங்கொதிக்கத்தக்கதாகமான்கூட்டங்களின்வரவை யெதிர்பார்த்திருக்கின்ற வலியவேங்கைத்திரளையொப்பத் தாவிக்கொண்டிருக்கின்ற பூதவெள்ளத்தினருகில் வருங்காலத்தில் ரணபேரிவெற்றிமுரசங்களாதிய பொற்பறைகளைத்திசைகளதிரமுழக்கியதட்டி உறுக்துப்பார்த்துச் சிறிக்கொக்கரித்துவரும் இராட்சதசேனைகளைப் பூதப்படைகண்டமாத்திரத்தில் உலகங்களில் வாசஞ்செய்திருக்கின்ற பிராணிகள்கண்டவுடன் பிராணனைக்கிரகித்துப்போகும் இயமன் இயமனென்றச்சங்கொண்டு தியங்கிவாடச்செய்து அவர்களைக்கொன்று தின்னும் பாதகர்களிவர்களோவென்று ஆலகாலவிஷத்தைப்போலக் கோபித்துச் சற்சனரைப்பாதுகாத்துப்போற்றியும் துர்ச்சனரைத்தண்டித்தடக்கும் சுகுணமுடையபூதவீரர்கள்பூமிபிளக்கப்பாதங்களைப்பெயர்த்துவைத்து மேலேறிவருமுன்னிலையிற் கொலைக்கஞ்சாத துர்க்குணங்கள்குடிகொண்டிருக்குங் கொடியமனதைப்பெற்ற அவுணவெள்ளங்களும் பகைத்து நேர்ந்தகாலத்தில் இருதிறத்துப்படைகளுக்கும் வீராவேசங்கள் பிரவேசித்து ஒருவரையொருவர் அதட்டிச்சீறிக் கைகலந்து சண்டைசெய்வதற் காரம்பித்தபோது இராட்சதவீரர்கள்மிஞ்சி காலதண்டங்களைப்போலொத்த வலியஇருப்புலக்கைகளைத் துதிக்கைகளிற்கொண்டு வீறியிருக்கின்ற மதயானைக்கூட்டங்களை டிக்கொலுப்பிப் பூதர்கள் பிரமிக்கும்படிக்கு வளைந்துவளைந்துசாடவும் பலகோடியிராட்சதர்களிடியையொப்பக்கனைக்கும் வேகமுள்ள குதிரைப்பந்திகளை வையாளிவிட்டுபூதவெள்ளமானது இதென்னஉற்பாதமாக விருக்கின்றதெனத் தியங்கத்தக்கதாக மிதிப்பித்துப் பூமியில்விழுந் துருளச்செய்தும் மேகங்கள்வழுவி நிலத்தில்விழுந்து நடப்பதைப்போலக் கரியதேகத்தைப்பெற்ற மதயானைகளின்மீதிருந்து சண்டைகளைச்செய்யும் அவுணருக்கும் அலைகளைப்போலத்தாவும் வேகமுள்ள புரவிகளின்மீதிருந்து சக்கிராகாரமாய் வட்டணைவந்து பகைவரைக்கலக்கித்திரியும்அவுணருக்கும் உதவியாகப்பருவதாகிருதியாய் கற்கரத்தொனிகளைச்செய்தோடும் பொன்னுருளைகளைவாய்ந்த தேரணிகளிற் புசபலபராக்கிரமசாலிகளாகிய இராட்சதவீரர்கள் மண்டிபோட்டுட்காந்து மேருவையொத்த விற்களைவளைத்துக் கொடியபாணங்களைச் சோனைமாரியைப்போலப்பிரயோகித்துப் பூதரைவாட்டவும் இவ்விதமாக நேர்ந்தவர்களைக்கொல்லும் கோபமும் வேகமுமுடையயானையணிகளையும் நிமைப்போதிற் றிசைகளனைத்தினும் வட்டாகாரமாகவுலவிவரும் புரவிப்பந்திகளையும் பொன்மயமாகிய அச்சு-மச்சு-குத்துக்கால்-கொடுங்கைமுதலிய சிங்காரங்களைக்கொண்டு மேருவையொப்ப விளங்குந் தேர்ப்பந்திகளையும் அவுணவீரர்கள்தூண்டிக் கடலைவளைந்திருக்கின்ற கரையைப்போல பூதவெள்ளத்தைச்சூழ்ந்து கணக்கிறந்த இராட்சதவெள்ளங்கள்பிரளயவெள்ளத்தைப்போலமுற்றுகைபோட்டுக்கொண்டவர்களாய்- சூலம்-கப்பணம்-தோமரம்-பிண்டி-பாலம்-முசுண்டி-சத்தி-எழு-மழு-தண்டம்-குலிசம்-சக்கரம்-பாசம்-வளைதடி-பெறியிட்டிமுதலிய ஆயுதவிதங்களையும் தேவாஸ்திரங்களாதிய திவ்வியபாணங்களையும் சோனைமாரியைப்போலப் பலதிசையினும் நின்றுசொரிந்து கரேமாகிய போரைச்செய்து அதிகவீறுப்புடன் சிருங்காதங்களைச்செய்து திரிந்தனர்.

இவ்விதமாக பானுகோபனுடன்வந்த சதுரங்கசேனைகளும் நாற்புறங்களினும் சூழ்ந்துகொண்டு சருவாயுதங்களையும் கரவேகமாகத்தூண்டிக் கெக்கலிகொட்டியிருக்கின்றகாலத்திற் பூதவீரர்கள் ஆலகாலவிஷத்தைப்போலப்பொங்கிப் பாதகராகிய இராட்சதவெள்ளங்கள் திடுக்கிட்டுவாடிச் சோரும்படிக்குச் சிலர்மராமரங்களை வேருடன்பிடுங்கிக்கொண்டு கிறுகிறெனச்சுழற்றி மோதியும்எழுவாயுதங்களைக் கடாவியும் வானத்தையளாவியிருக்கின்ற பருவதங்களைப்பறித்துப் பந்துகளைப்போல வீசியும்மந்தரத்தையொத்த கரங்களினுல்மோதியும் வலியபாதங்களைக்கொண்டுதைத்தும் இப்படிக்குப் பூதர்வீறிச்சாடும்போது இராட்சதசேனைகள் சின்னபின்னப்பட்டுக் கரங்களற்றும் சிரங்களற்றும் மார்புகள்பிளந்தும் வீரக்கழலணிந்த கால்களற்றுந் தோள்கள்சரிந்தும் மாண்டவிராட்சதரை இவ்வளவெனச் சொல்லக்கூடுமோ, அக்காலத்திற் பானுகோபன்சேனைகளும் பின்னிடையாமற்கொடியபோரைச்செய்யும்போது பூதவீரர்களும் அல்லோலகல்லோலப்பட்டுத் தலைவெட்டுண்டும் மண்டைகளதிறந்தும், மார்புகிழிந்தும், தோள்கள்துடித்தும்,வயிறுபீறுண்டும், குடல்கள்சரிந்தும், இடுப்புமுறிந்துங் களத்திற்பட்ட பூதர்களையும் இவ்வளவென்று கணிக்கப்படாது, இவ்விதமாக இருதிறத்துச்சேனைகளும் ஒருவரையொருவர் வெல்லவேண்டுமென்கிற தீரத்தினுல் பயங்கரமாகியபோரைச் செய்யுமுன்னிலையில்மாண்ட விராட்சதசேனைகளும்பூதர்களேபரங்களும்சமர்க்களமெங்கும்மலைகளைப்போல அணிபடக்கிடப்பதால் அக்காலத்திற்பெருகிய உதிரவெள்ளமானது போவதற்கிடம்பெருமல் நிறைந்து சமுத்திரத்தைப்போலத்ததும்பி அலைகளைமோதிக்கொண்டிருந்தது.

அந்தக்காலத்திற் பூதகணங்கள் மனம்பொருமல் வடவாமுகாக்கினியைப்போல மண்டியெரிந்துபாய்ந்துசத்துருக்களேறிவந்த கோடானகோடியிரதங்களை யிருகரங்களினுலுமெடுத்து ஒன்றுடனென்றைத்தாக்கிப், பொடிப்பொடியாக்கியெறிந்தும் மதயானைகளின் துதிக்கைகளைப்பற்றிக் கிறுகிறெனச்சுழற்றியானையணிகளின்மேல்மோதிஅருக்கிடையாகச்சாய்த்தும்குதிரைப்பந்திகளைவாரிக்குதிரைப்பந்திகளின்மேலெறிந்து தும்சப்படக்கொன்றும்சிலபூதவீரர்கள்பிரசண்டமாருதத்தைப்போலச்சுழன்று இராட்சதரைஅமோகமாகவாரிச் சேனைகளின்மேல்மோதிச் சின்னபின்னப்படச்சாடியும் மலைகளையொத்தபுசங்களைக் கொண்டுதாக்கிப்பலவிராட்சதரைஉருட்டியும்வலியகரங்களினுற் கோடையிடிகளையொப்பக்குத்திக்கொன்றும்பாதங்களைச்சுலவிஒவ்வொருஉதையிற் கணக்கிறந்தவிராட்சதரைத்தரையிற்கிடத்தியும் ஒவ்வொருஅறையினுற் கோடாகோடிக்கணக்கில்மடித்தும்பலவிராட்சதர்கள் தலைகள்பெருங்காற்றிற்பட்டுதிருந் தெங்கின்குலைகளைப்போலரணக்களமெங்கும்புரளும்படிக்குமோதியும் இவ்விதமாகஅமோகமாயிராநின்ற மான்கூட்டங்களிற்சிங்கராசன்பாய்ந்தலைப்பதைப்போல எதிர்த்துவந்த விராட்சதவெள்ளங்களை அதப்படுத்திவீறிவருகின்றபோது இராட்சதர்கள்மனவூக்கமற்றுங்கலங்கித் தத்தளித்து இறந்தவர்கள்போக மற்றையர்பயபீதியினுல்தளர்ந்து பின்னிடைவதைவாடையடங்கித்தென்றற்காற்றுனதோங்கிவீசியெழுவதைப்போலவலியும்வீரமும் பெற்றிருக்கின்ற வீராதிவீரனுனஅனலி

யென்னும் இராட்சத சேனைத்தலைவன் கண்டமாத்திரத்
தில் மண்டியெறிந்து கோபமானது மனதைப்பாதிக்கத்த
ன்தேரை யதிவேகமாகத் தூரத்திக்கொண்டுவந்து இராட்
சதசேனைகளைப்பயப்படாதிர்க ளென்று ஆதரித்துநிறு
த்திக் கெக்கலிகொட்டிக்கொண்டு தீரராகவிருக்கின்றபூத
ச்சேனைகளுட னெதிர்த்து மந்தரகிரிக்கொப்பாகவிளங்கு
ம் பாரித்தவில்லையெடுத்து நாட்டிநாணேற்றி மணிகள்ச
த்திக்கத்தக்கதாகவளைத்து டங்காரத்தொனியைக் காட்டி
யபோதுண்டாகிய ஓசையைத் தேவர்கள் கேட்டமாத்திர
த்தில் ஐயையோ, என்செய்வோம் எவ்விடத்தோடியொ
ளிப்போம், இப்பாதகனென்செய்வனோவென்று தியங்கி
வாடுகின்றகாலையில் முன்னம் பூதவீரருக்கஞ்சிப்பின்னி
ட்ட விராட்சதசேனைக ளனைத்தும் ஒன்றுபடக்கூடித்த
ங்கள் படைத்தலைவன் ஜயவுற்சாகத்தைக்கண்டு சமுத்தி
ரத்தைப்போல விரைந்துகொண்டு வந்துகூடினர், அக்கா
லத்தில் இராட்சதர் கணகணெனமுழக்குகின்ற ரணபே
ரி ஜயபேரிமுதலிய வாத்தியங்களினோசையு மிராட்சதர்
ஆரவாரங்களினொலியும் மேலிட்டுக்கடலினொலியையடக்
கவும்இவ்வித ஆடம்பரங்களுடன்வந்த ரதகஜதுரகபதா
திகளும்வீரங்களைப்பேசிப்பலதிசையினும்நின்றுபோரா
டவும்அவர்களுக்குத் தலைவனாகவந்திருக்கின்றஅனலியெ
ன்னும்வீரனானவன்வட்டாகாரமாகவளைத்திருக்கின்ற வி
ல்லில்அக்கினியாஸ்திரத்தையெடுத்துப் பூசித்துவணங்கி
க்கரவேகமாகப்பிரயோகித்தனன், அத்தேவப்படையான
துவெளிப்பட்டவுடன் வானத்தெழுந்து பலபலஅனற்ப
டைகளைஉண்டுபண்ணிக்கொண்டு தீயையிறைத்துச் சீறி
அதிவேகமாகப்போய்ப்புற்றினிடத்திற்சர்ப்பங்கள்நுழை
வதைப்போலப்புசபலபராக்கிரமசாலிகளாகியபூதவீரர்க
ள் மார்பினிடத்திற்றுக்கித்தடாரித்துருவிப்போன காலத்
திற்சிவகணங்கள்அக்கொடுமைக்காற்றமாட்டாதவர்களாய்
க்கலங்கிவாடிப்பின்னிடுவனதஇலக்ஷர்களிலொருவனாகிய
சிங்கனென்னும் வீராதிவீரன்கண்டுதன் தேரைமுடுக்கிக்
கொண்டுவந்து எதிரில்நிறுத்திஅடாஇராட்சதப்பயலேஏ
ண்டாதலைகீழாய்விழுகிறாய் மிஞ்சாதேமிஞ்சாதேஇனிஉ
ன்சிலம்பமொன்றும் நடவாது உன்பிராணனைக்கொண்டு
போகும்இயமன் வந்தேன்நீபிழைத்து ஊரைப்போவமெ
ன்பதை மறந்துவிடக்கடவாய், இதோசற்றுநேரத்தில் உ
ன்னுயிரை யமலோகத்திற் குடியேற்றுகிறேன். பயந்தோ
டினும் விடமாட்டேனென்றுஅதிககோபங்கொண்டவனா
ய் வெற்றிமாலை யணிந்திருக்கும் தண்டாயுத மொன்றை
யெடுத்துக் கிறுகிறெனச்சுழற்றிக் கோடையிடியைப்போ
லமோதியகாலத்தில் தேரிற்பூண்டோடுங் குதிரைகள் சி
தைந்து சாரதிதலையுடைந்துமாண்டமுன்னிலையில்அசை
வற்றுச் சித்திரத்தைப்போலத் தன்னிரதமானது நின்று
விட்டதை அனலியென்னும் இராட்சதவீரன்கண்டமாத்
திரத்தில் ரவுத்திராகாரமாகக் கோபித்து வீரலட்சுமிவா
சஞ்செய்திருக்கின்ற தன்வில்லிற்கணக்கிறந்த திவ்வியபா
ணங்களைத் தொடுத்து அடாபைசாசமேஇந்தச்சிறந்தபா
ணங்களினால் உன்சிரத்தைவெட்டிப் பூமியிற்றள்ளிஜயம்
பெறுமற் போவேனாயில் இனிஎன்பிராணபரியந்தம் இந்
தவில்லைக் கரத்திற்றொடுவதில்லையெனப் பிரதிக்கினை செ
து பிரயோகித்தகாலத்தில் அப்படைகள் அதிகமகிமைக
ளைக்காட்டி எரிந்து புகைந்துகொண்டுவந்துதாக்கித்தேக
முற்றினுஞ் சல்லடைக்கண்களாகத் துளைத்துருவியோடி
யகாலத்தில் பூதகணத்தலைவனாகிய சிங்கனென்பவன் சற்
றும் அதறுமல் பதறுமல் அக்காயங்களை யெவ்வளவுஞ்
சட்டைபண்ணாதவனாய்த் தீரத்துடன் இராட்சத சேனை
த்தலைவன் தேரிற்பாய்ந்து காளமேகத்தைப்போலக் கரிய
தேகத்தைப் படைத்திருக்கின்ற பாதகன்கரத்திற்பற்றியி
ருந்த பாரித்தவில்லுடன் கரத்தைத்திருகிப்பறித்து சர்ப்
பம்புரளுவதைப்போல நிலத்திற்றுடிதுடித்துருளுவதா
கவீசினன்.

அக்காலத்தில்இராட்சதவீரன் சற்றும்வருந்தாமல்வல
க்கரத்தினாலொருபாரித்தகதையையெடுத்துத்தன்கையை
முறித்தெறிந்த சிங்கனென்பவன் தலையின்மேற் கோடை
யிடியைப்போல மோதியகாலத்தில் அதைக்கண்டவிராட்
சத சேனைகளனைத்தும் ஜயவுற்சாகங்களுடன் ஆர்ப்பரி
த்துச் சந்தோஷக்கொண்டாடினர், இந்தஅபாயத்தைக்க
ண்ட தேவர்கள்கலங்கி மோசம்வந்ததென்று வாடிச்சோ
பிக்கின்ற காலையிற் சிங்கனென்னும்வீரன் சற்றுமிளையா
மல் அனலிகரத்தைத் தண்டாயுதத்துட னொருகரத்தினா
ற்பிடித்துக்கொண்டு மற்றக்கரத்தினால் விசாலமாய்வயிர
த்தைப்போல உறுதிபெற்றிருக்கின்றமார்பு நெக்குவிட்டு
உதிரம்பெருகும் படிக்குமூன்றுதரங் கோடையிடியைப்
போலக் குத்தினன், அத்தாக்கலினால் மனங்கலங்கி வருந்
தியபோதினும் இராட்சதனாதலால் தயிரியத்தைவிடாமல்
பருவதத்துக்கொப்பாகிய தன்புசத்தினாற் சிங்கன்மார்பிற்
றுக்கியபோது பூதசேனாபதிக் கதிககோபம்பிரவேசித்து
த் தண்டத்தினைப்பற்றியிருக்கின்ற கரத்தைத்தூக்கிக் கி
றுகிறெனச்சுழற்றி அண்டங்களதிரத் தக்கதாக ஆர்ப்பரி
த்துக்கொண்டு சுழற்காற்றைப்போல வட்டாகாரமாகத்தி
ருப்புகின்ற காலத்தில் அப்பாதகன்வீறுப்பனைத்தும் அ
டங்கிபித்தனைப் போல மதிமயங்கிச்சோர்ந்துகாட்டியபோ
து சிவகணத்தலைவன் இராட்சத சேனைத்தலைவனை ஓங்
கிப்பூமியி லறைந்தனன், உடனேஅவன்பெருங்கூச்சலி
ட்டுப் பதைபதைத்துத் துடிதுடித்து மாண்டனன், இவ்
விதமாகச் சிங்கனானவன் அனலியென்னும் அவுணனைக்
கொன்றகாலத்தில் இந்த அபசயத்தைச் சண்டனென்னு
ம் இராட்சதவீரன் கண்டுகிலேசித்துக் கோபாக்கினியான
து மேலிட்டு மனதைவருத்தத்தக்கதாகச்சிறிக்கண்களில்
அனற்பொறிகள் சிதறத்தக்கதாகத் தன்தேரைத் தூரத்தி
வந்து சிங்கனெதிரில் நிறுத்திப் பாரித்தவில்லைவளைத்து
த் திசைகளதிரக் குணத்தொனிகொண்டு யாவராலுந் த
டைசெய்வதற்கரிய கொடியபாணங்களைத் தேடியெடுத்து
ப் பூட்டியிவைகளினால் உன்னரியபிராணனைவாங்குகிறே
னென்று பேசிய வார்த்தையைக்கேட்டமாத்திரத்தில் வி
ழிகளிற்றீசிதறப்பார்த்துநகைத்துஇறந்துகிடக்கின்ற அ
னலிகரத்திற் பற்றியிருந்த பருத்ததண்டாயுதத்தைப்பிடு
ங்கிக்கொண்டு கிறுகிறெனச் சுழற்றியிராட்சதவீரன் தே
ரிற்பாய்ந்து வயிரக்குன்றினைப்போலப் பாரித்திரா நின்ற
தோளின்மேல் இயமனும் அஞ்சும்படிக்கு மோதியகால
த்தில் அத்தாக்கலைச்சகிக்கமாட்டாமற்பெருமூச்செறிந்து
நடுநடுங்கித்தேரிற் சாய்பவன் பக்கத்திலிருந்த தண்டாயு
தத்தையெடுத்துத்தன்தேரிற் பாய்ந்தசிங்கன்மார்பில்மோ
தினன், அத்தாக்கலினாற் சிங்கனும்மதிமயங்கி யிருவீரர்
களும் மூர்ச்சித்துத் தேரில்விழுந்தனர்.

இச்சம்பவத்தை ஒருபுறத்திலிருந்தஇராட்சத சேனை
த்தலைவனாகிய மாயனென்பவன் பார்த்தவுடன் வாயுவேக

த்தினாமேலிட்டுத் தன்தேனை முடுக்கிவருவதை ஜயசாலி
களாகிய பூதச்சேனைகளுக்குத் தலைவனா யிருக்கின்றநீல
ன்கண்டவுடன் தன்தேனைத் துரத்திக்கொண்டு போய்த்த
டுத்துச்சிவபிரான் திரிபுராதிகளைத்தகித்தபாணத்துக்கொ
ப்பாகவிருக்கின்ற கதையையெடுத்துச் சுழற்றிவீசியகால
த்தில் அப்படையானது அதிவேகமா யிரைந்துகொண்டு
வந்திராட்சதவீரன் மார்பிற்பட்டமாத்திரத்தில் மனங்கல
ங்கிமரணமூர்ச்சையாகத் தேரில்விழுந்து கிடந்தவன்சற்
றுநேரத்தில் தெளிந்தெழுந்து அதிககோபங்கொண்டவ
னாய்த் தானரியதவங்களைச்செய்து பெற்றுவைத்திருக்கி
ன்றமுத்தலைச்சூலத்தை யெடுத்துப் பூதச்சேனைத்தலைவ
ன்மார்பிக்குக் குறிபார்த்துவீசிய காலத்தில் அச்சிறந்தப
டையானது சீறித்தீயைவீசிக்கொண்டுவந்து நீலன்மார்பி
ற்பட்டுருவிப்போனபோது உதிரமானது பெருக்கெடுத்
தோட மதிமருண்டுவிழுந்து அசைவற்றிருந்தவன்சற்று
நேரத்திற் களைதெளிந்தெழுந்து ஆசானுபாகுவாய் நீண்
ட இரத்தினக்கடகத்தை யணிந்திருக்குந்தமது கரத்தைப்
பிடித்தமாக்கிக்கொண்டு பாய்ந்து இராட்சதவீரன்வலிய
மார்பிற் கோடை யிடியைப்போலக் குத்திய காலத்தில்வீ
ரகண்டைகலிக்கும் பாதத்தையுடையமாயனென்பவன்அ
றிவழிந்து பிரமித்திருக்கின்றகாலையில்நீலன்விஷபற்களை
யுடைய சர்ப்பத்தைப்போலச்சீறி மந்தர கிரியையொத்த
மாயன்புசங்களை வாசுகியைப்போன்ற தன்கரத்தினாற்சே
ர்த்துப் பிடித்துக்கொண்டு கூர்மையாகவிருக்கின்றதமது
பற்களினால் அவன் கண்டத்தினைக் கடித்துப்பெருகும்உ
திரத்தை யருந்திக்கோபந்தணிந்தனன், உடனேமாயனெ
ன்னும் இராட்சதவீரன் பேரொலியைக்காட்டி மாண்ட
காலத்தில் அவனுயிரை யமபடாள் கட்டிக்கொண்டுதெ
ன்னாட்டைச்சேர்ந்தனர், இவ்விதமாய் மாயன்முடிந்தவுட
ன் இதற்குமுன்னம் சண்டைகொடுத்து மூர்ச்சித்திருந்த
சண்டனென்னும் இராட்சதவீரனும் சிங்கனென்னும் பூ
தத்தலைவனும் களைதெளிந்தெழுந்தவுடன் இருவீரர்களு
ம் வயிரங்களைப்பேசி நிலத்திற்குதித்து அதிககோபாவே
சங்களுடன் தண்டாயுதங்களைச் சுழற்றிக்கொண்டு வலசா
ரியிடசாரியாகத் திரிந்துஒருவரையொருவர் ஜயிக்கவேண்
டுமென்னு மாசையினாற் குறிகொண்டு மோதியும்அதை
த்தடுத்தும் பின்னிடைந்து மீளத்தாக்கியும் வயிரங்களை
ப்பேசியும் இவ்விதங்களாகத் தண்டாயுதபோர் வரிசைக்
கிரமப்படிக்குச் சிங்கனும்சண்டனும்சுழற்காற்றைப்போ
ல வட்டணைவந்து பிரபலயுத்தங்களைச்செய்துவரும்போ
து பூதத்தலைவன் கைமிஞ்சி யிராட்சதவீரன்கரத்திற்பற்
றியிருந்த மந்தரத்தையொத்த தண்டத்தை ஓரடியினாற்
றுகள்பறந் தோடத்தாக்கிய காலத்திற் புயவன்மைக்கொ
ப்பற்ற விராட்சதசேனைக ளனைத்தும் மனம்வருந்தி வா
டிப்பெருமூச்செறிந்துநமதுசேனைத்தலைவன் கதியென்ன
மாய் முடியுமோ வென்று தியங்கிப்பார்த் திருக்கும்போ
து சண்டன் அதிககோபங்கொண்டுசீறிச்சிங்கனைப் பார்த்
து பாரித்தபுசங்களைப் பெற்றிருக்கின்ற பூதத்தலைவனே
அற்பமாகிய தண்டாயுத மொடிந்ததெனக்கருவமடையா
தே முற்காலத்தில் இயமனைவென்று தேவர்களைச்சின்ன
பின்னப்பட வாட்டிஜயம்பெற்றிருக்கின்ற நானிப்போது
உனக்கஞ்சுவேனென் றெண்ணவேண்டாம் இனிமல்லயு
த்தஞ்செய்வோம் வாவென்று புசங்களைத் தட்டிக்கரங்க
ளை முறுக்கிமேலிட்டு வருவதைச் சிங்கனென்னும்பூதத்
தலைவன்விழிகளிற்றீயெழ வுருத்துப்பார்த்து அடாஇரா
ட்சதப்பயலே நீமிகவும் வலியுடையவன்தான் அதையுஞ்
சற்றுநேரத்தி லறிகின்றனன், இதைத்தடுத்துக்கொள்ளெ
ன்று தண்டாயுதத்தைச் சுழற்றிமோதிய காலத்திற் சண்
டனென்பவன் தன்மேல் வரவொட்டாமற் கரத்தினாற்றட்
டிப்போட்டுத் தன்வலிய கரத்தையோங்கிப்பகைவனதுவ
யிரமலைபோன்ற புசத்திற் குத்திக்கூற்றுவனும்நடுங்கும்
படிக்கு ஆர்ப்பரித்தகாலத்தில் அவன்உற்சாகத்துக்கு ம
னம்பொருமற் சிங்கனானவன் வடவையைப்போலச்சீறி
மேருவையொப்பப் பாரித்திருக்கும், தண்டத்தைக் கரக
ளெனத்திருப்பி இராட்சதவீரன் புசத்தின்பேரில்மோதி
ய காலத்திற் கதையானதுதுகள்பட்டுப் பறந்தபோதினு
ம் கற்கம்பத்தையொப்பப் பூரித்து வலிபெற்றிருக்கின்ற
புசத்தைச் சங்கரித்துத் தள்ளியது இப்படிக்குத்தோள்த
றிபட்டுவருத்த மிகுதியாக விருந்தபோதினும் வீரனாத
லாற்சவுரியத்தை விடாமல்தீரனாய்ச் சண்டனென்னும்இ
ராட்சதவீரனானவன் முறிந்திருக்கின்ற தன்கரத்தை மற்
றகரத்தினாற் பறித்து தண்டாயுதத்தைப்போலப் பற்றிக்
கொண்டு வட்டணை யாகச்சுழற்றி யிடசாரிவலசாரியாகத்தி
ரிந்து வருவதைத் தேவர்கள் கண்டு கொண்டாடினவர்
களாய் வீராதிவீரனென்பது இந்தச்சூரனுக்கே தகுமெ
னப்புகழ்ந்தனர்.

இவ்விதமாகக் கரியதேகத்தைப் பெற்ற சண்டன் கரமா
கிய தண்டத்தையோங்கி வயிரத்தையொத்த சிங்கன்மார்
பிற் றாக்கினபோது அதற்குச்சற்றும் சளையாமற்சர்ப்பத்
தைப் போலச் சீறிவலிய தமதுபாதத்தைக்கொண்டு சண்
டன் மார்பிலுதைத்துப் பூமியிலுருளும்படிக்குத் தள்ளி
யதைக்கண்ட தேவர்கள் சந்தோஷமிகுதியினாற்கரங்களை
த்தூக்கித்தட்டி ஜயம்ஜயமென்றார்ப்பரித்துச்சிவந்தவிழி
களையுடைய பூதர்களுக்குத் தலைவனென்பது உனக்கேத
கும்மேலும்உமது பராக்கிரமத்துக்குத் தகுதியாகிய சிங்
கனென்னுந் திருநாமத்தைக் கொண்டிருக்குந்தீரனேகொ
டியபாதகனாசண்டனை யுதைத்துத் தள்ளும் வல்லமையு
டையவர்க ளெத்தலத்தினுங்கிடையாதுஓவீராதிவீரனே
காலதாமசஞ்செய்யாமல் அவன்பிராணனைவாங்கி விடக்
கடவையென்று வேண்டுவதைத் தெரிந்தமாத்திரத்திற்ச
ண்டனென்பவன் ஆக்கிரமித்து இயமனைவென்ற ஜயசா
லியாகிய என்னைஇந்த அபலனோகொல்லவல்லவன்புத்தி
யீனராகிய தேவர்களே இந்தநிமிஷத்தில் இவனைக்கொன்
று இவனுக்கு ஜயத்தைக்கோரியிருக்கின்ற உங்களையுமெ
ன்பசியுங் கோபமுந்தணியும்படிக்குவாரிவாரிவாயிற்போ
ட்டுமென்று தின்றுஉதிரத்தைக்குடித்து வாட்டவிருக்கி
ன்றேன், அதையுஞ் சற்றுநேரத்திற் றெரிந்துகொள்வீர்
இதற்குள்ளேயேன்பொரியைப்போலத் துள்ளுகிறீர்களெ
ன்று அதட்டியகாலத்தில் எதிரில்நிற்கின்ற சிங்கன்மண்டி
யெறிந்து அனலையொப்பச் சொலித்திருக்குமுண்டைக்
கண்களையுடைய விராட்சதனே சற்றும்பயமில்லாமல் இ
வ்வார்த்தைகளை என்முன்னம் பேசியபடியால்உனக்குமு
டிவுகாலஞ் சமீபித்தது பத்திரமாகத் தப்பித்துக்கொள்ள
க்கடவா யெனச்சொல்லி தமதுதிருக்கரத்தைக்குவித்துக்
கொண்டு வசையுரையாடிய வாயானது சிதைந்துபற்களு
திர்ந்து போம்படிக்குக் கொடிற்றிற் குத்தியகாலத்தில் இ
ராட்சதப்பாதகன் கோடைகால மேகத்தைப்போலக் கத
றிக்கொண்டு பூமியில்விழுந்தனன். சவுனகாதிரிஷிகளே!

இராட்சதவீரன் வாய்பிளந்து உதிரம்பெருக்கெடுத்தோடப் பற்களுதிர்ந்துகோரைத் தந்தங்கள் விளங்கக்கிடப்பதைப் பார்க்குமிடத்தில் நட்சத்திரங்கள் மத்தியிற்சந்திரபிறையானது பிரகாசிக்கவிருந்த செவ்வானம்நழுகிவிழுந்திருப் பதைப்போலக் காட்டியது, இப்பிரகாரம் சண்டன் பட்டமாத்திரத்தில் யமபடாள் அவனுயிரைக் கொண்டுபோவதற்கு நெருங்கினலென்ன விளையுமோவென்றுதிகைத்திருப்பவர்களைச் சிங்கன்பார்த்து ஏன்பயப்படுகின்றீர் இந்தப்பாதகன் பிராணனைக்கொண்டுபோவீர்களெனக் கட்டளையிட்ட மாத்திரத்தில் தயிரியசாலிகளாய்ப்பாசத்தினுற் கட்டியிழுத்துப்போயினர், இந்தச் சம்பவங்களைக்கண்ட அசமுகனென்னும் இராட்சதவீரன் அதிககோபத்துடன் தன்தேரைத் தூரத்திவிழிகளிற் றீயெழவுருத்துப்பார்த்து அடாபூதப்பயலேசற்றும்எண்ணிக்கையில்லாமல் நம்மவனை யிப்படிக்குங் கொல்லத்துணிவையோபதருதேநில்லுநில்லு உன்பிராணனைக்கொண்டுபோகும் இயமனைப்போல வந்துவிட்டேன் சற்றுநேரத்தி லுன்னையும் தென்னுட்டிற் குடியேற்றுவேன் இதுவரையில்நீயெதிர்த்துப் போராடியவர்களைப்போல என்னைநினைக்கவேண்டாமென்று வீரங்களைப்பேசிவாயுவேகத்தினுமேலிட்டுச்சிங்கன்மீதி லுருத்துவருவதைப் புசபலபராக்கிரம சாலியாகிய மதுவென்னும் பூதத்தலைவன் கண்டுதன்தேரைத் தூரத்திவந்து எதிரில்மறித்துக்கொண்டு எங்கேபோகின்றுய் நில்லுநில்லுஇதுதான்உனக்குமரணபூமியெனக்கோபித்துப் பேசுவதைக்கேட்டவுடன் அசமுகனென்னும்இராட்சதவீரன் ரவுத்திராகாரமாகப்பொங்கி விழிகளிற்றீப்பொறிகள்சிதற மதுவென்னும் பூதத்தலைவன்மீதிற்றிரும்பி அடாபயலே உன்னை முதற்பலியிட்டபின்பு உன்துணைவன் பிராணனையும் வாங்குவேனெனச் சீறியெதிர்த்தனன், இவ்விருவீருருஞ் சண்டைகொடுக்க நேர்ந்ததெப்படிக் கிருக்கின்றதெனில், முற்காலத்திலொருகாரணத்தைக்குறித்து இயமதருமராசனுடன் அவன்மந்திரியாகியகாலனென்பவன் பகைத்துப்போர்செய்ய நேர்ந்ததைப்போல விருந்தது.

இவ்விதமாகவிருதிறவரும்நெருங்கியகாலையில்இராட்சதத்தலைவனுகிய அசமுகன் அதிக்கிரமித்து மேருவைப்போலப்பாரித்ததாய்த்தன்கரத்திற் பிடிபட்டிருக்கின்றவில்லையிருகுதைகளுமொன்றுபடவளைத்துக்குணத்தொனிகொண்ட அதிர்ச்சியினுல்பூமிடுகிடென்றதிர்ந்துசமுத்திரமுங்கொதிப்பெடுத்துக்கலங்கியதுஉடனேவேலைப்போலப்பிரகாசியாநின்றபரத்தையர்விழிகளானவைகாமுகரிடத்திற்சுழன்றுகாட்டுமாறுபோலப்பளபளத்துவிளங்கும் கூரியஅலகையுடையகொடியபாணங்களை யபரிமிதமாகப் பூட்டிக் கரவேகமாய்ச் செலுத்திய காலத்தில் அப்படைகள்வில்லிலிருந்து வெளிப்பட்டவுடன் குறுகுறென்னுஞ் சத்தத்துடன் அனலையிறைத்துக் கொண்டுஅதிகமகிமைகளைக்காட்டி வருவதை ஜயசாலியாகிய மதுவென்னும் பூதத்தலைவன்கண்டு நகைத்து அவற்றின்கொடிய செய்கைகளைச் சற்றும் சட்டைபண்ணுமல்நெருங்கிய காலத்திலும் சஞ்சலப்படாமல் விழிகளையும் இமையாமற் பக்கத்திலிருக்கின்ற மராமரத்தைப்பறித்து அந்தப்பாணங்களைத்துகள்பட்டுப்போகச் சாடவும்நினையாமல்வேடிக்கைபார்த்துக்கொண் டிருந்தனன், அக்காலத்தில்மீறிவந்தபாணங்கள் சுறுக்குசுறுக்குமெனச் சரீரமுற்றுந்தைத்துத்தாரித்துருவிப்போகச் சத்தியில்லாமல் உதிரத்தைப்பெருக்கிக் கவசத்தைப்போலவிளங்கியகாலத்தில் எவ்வளவுஞ் சஞ்சலப்படாமல் தீரனுய் உருக்துவாயுவைப்போலப்பாய்ந்து இராட்சதவீரனேறியிருக்கின்ற தேரில்நின்றுகாளமேகத்தைநிகர்த்து கர்ச்சித்தமாத்திரத்தில்,அவ்வோசையானது அசமுகனென்னும் இராட்சதவீரன் செவிகளிற்பட்டபோது திடுக்கிட்டுப்பஞ்சேந்திரியங்களும்நிலைதப்பிக்கலங்கி வாய்புலரமனம் நடுங்கச்சோபித்துக் கரத்திற்பற்றிய வில்லையும் பாணங்களையுந்தேரில்நழுகவிட்டுத் தேகமெங்கும் வியர்க்கக்கிலேசித்து யாதொருசெய்கையுமற்றிருப்பதை மதுவென்னும் பூதத்தலைவன்கண்டுஅடாஇராட்சதப்பதரோஏதோசிலசவுரியங்களைப்பேசிக்கொண்டுவந்து சண்டைக்குநேர்ந்த நீநமதுகர்ச்சனைக்கு தாளமாட்டாமல் உதைத்துக்கொள்ளுவதென்னை, வீரமென்பதைச் சற்றுந்தெரியாதவனுகக்காணுகின்றனை பின்னிடையாமற் சத்துருக்களைவெல்லவல்ல சூரனுமல்லை சமர்க்களத்திலெதிர்த்துக் கொடியபோரைச்செய்வதைக்கண்டுநிறுவகித்து உற்சாகத்துடனிருக்கத்தக்க தீரனுமல்லை, ஆதலால் நீயென்னசண்டைசெய்யவல்லை உன்பிராணனைத் தப்பித்துக்கொண்டுபோய்விடக்கடவாய், உன்னைநானென்றுஞ்செய்யவில்லையெனச்சொல்லித் தேரைவிட்டுநிலத்திற்பாய்ந்தமாத்திரத்தில் அசமுகனென்னும் இராட்சதசேனைத்தலைவனுக்குப் பஞ்சேந்திரியங்களுந் தத்தமதுநிலைகளிற்சேர்ந்து மனத்தெளிவுண்டானவனுய்வெட்கிஇதனைநினைப்பதாயினன்.

ஐயையோ சத்துருவானவன்நெருங்கியமாத்திரத்திற்சவுரியத்தையொழிந்துபயப்பிராந்தியினுல் நடுநடுங்கிச்சோர்ந்தேனென்னும் பழியைப்பெற்றேன் இதையெவ்விதத்திற் றீர்த்துக்கொள்ளவல்லேன். சமர்க்களத்திற் பகைவனுக் கஞ்சினவனென்று நம்மையொத்த சூரர்களிகழ்ந்து பேசும்படியான அபவாதத்தை பிராணனுள்ளமட்டுந்தாங்கிப் பலருமேச உயிரைவளர்த்திருப்பதிலும் இவனுடன்சண்டைகொடுத்து வென்றுவது அல்லதுமாண்டாவது இந்தஅபவாதத்தைத் தீர்த்துக்கொள்ளக் கடவேனெனத் தீர்மானித்துக்கொண்டு மானமென்னுங்கனலானது மனதையுந் தேகத்தையுங்கொளுத்தி வாட்டத்தீரனுய்ஆலகாலவிஷத்தைப்போலக்கோபித்துசண்டைசெய்யத் துணிவுகொண்டு தன்தேரைத்துரிதமாகத்தூரத்திப்போய் அடாபூதப்பயலே யெங்கேபோகிறுய் நில்லுநில்லு ஏதோதேகஅசதினுற் சற்றுவாட்டங்கொண்டிருந்தேன் இனிநீயெவ்விடத்திலோடியொளிப்பினும் விடாமற்றொடர்ந்துகொன்று பழியைத்தீர்த்துக்கொள்வேனெனப் பேழ்வாயைத்திறந்து திசைகளதிர ஆர்ப்பாட்டங்களைச் செய்துகொண்டு அசமுகன்வருவதை வீரசிங்கத்தையொத்த புசபலபராக்கிரமசாலியாகிய மதுவென்னும்பூதத்தலைவன்கண்டு நகைத்து ஓ சுத்தவீரனே செத்தவனைப்போலவிருந்த நீ ஒருநிமைப்போதில் இத்தகையசவுரியங்களைப்பேசும்படிக்கு யாவரிடத்திற்கற்றுய் அடாபேடி கிஞ்சித்துஞ்சவுரியத்தைப்படையாத பதிதனென்றெண்ணி பிராணபிட்சைதந்துபோகின்ற வீராதிவீரனுகிய என்கீர்த்திக்கொரு பழிப்புரைதரவந்தாயோ, அபலனேயென்றிகழ்ந்து பேசும்மதுவென்னும் பூதசேனுபதியைஅசமுகனென்னும் இராட்சதன்தடுத்துத் தங்கக்கட்டுகள்பூண்டு பாரித்திருக்கின்ற வில்லையெடுத்து வளைத்துநாணெலிகொண்டு தீயை

யிறைக்கத்தக்க கடூரமாகிய அர்த்தச்சந்திரபாணங்கள் அளவற்றதையெடுத்துக் கரவேகமாகப் பிரயோகித்துச்சிருங்காரஞ்செய்தான், இதனைமதுவென்னும் வீரன்கண்டு அதிககோபங் கொண்டு மிகுத்தமகிமைகளைக்காட்டி மேவிட்டுவரும்பாணங்களை வயிரதண்டத்தையொத்த தமதுகரத்தினாற்கோட்டுப்புள்ளைப்போலத்திசாதிசைகளினும்இறைந்துபோகும்படிக்குத் தட்டிப்போட்டு இன்னமும் இவன்சேவகத்தைப்பார்ப்போமென்று தீரனாகநிற்கும்போது இராட்சதவீரன் மனம்பொறாமல் மறுபடியும் கூரியகடியபாணங்களைத்தூண்டி ஆர்ப்பரித்தகாலத்தில் மதுவென்னும் பூதவீரன் சற்றுமஞ்சாமல் வீறிவருகின்றசரங்களைத் தக்கையைப்போலத் தட்டியகாலத்தில் அசமுகன்திடுக்கிட்டு நாம்அரிதாகத்தேடிவைத்திருந்தபாணங்களைச்செலுத்தினோம் அவைகளைச் சட்டைபண்ணாமல் விலக்கிச் சலனமற்றுநிற்கின்றான்,இனியென்னசெய்வோமென்று எண்ணாததெல்லாமெண்ணி உடனே ஒருநினைவுகொண்டு சூலம்வேல் இருப்புலக்கை கழுமுள்தண்டம்வளைதடி சக்கரம் கவண்முதலிய படைகளையெடுத்துஒன்றின்பின்னொன்றாக ரிவ்ரிவ்வென்று பிரயோகித்தகாலையில் அவைகள் அதிவேகமாகவந்துமதுவென்னும்வீரன் தேகத்திற்றாக்கி வருத்தியகாலத்திற் காலாந்தகனைப்போலச்சிறிப்பாய்ந்திராட்சதவீரனேறியிருந்த தேரைச்செண்டைப்போலவெடுத்துச்சுழற்றி வேகமாய்ச் சமுத்திரத்தினிடத்தில் வீசியபோது அப்பாதகன்மத்தியிற் பூமியிற்குதித்தோடிவந்து கரங்களைப்பிசைந்துசுழற்றி மல்லயுத்தத்துக்குப் பூதநாயகன்மீதில் வருவதைக்கண்டு கோபித்துப் பாதத்தைநீட்டி அண்டத்துக்கப்புறத்திற்போகும்படிக்கு எற்றியகாலத்தில் வானவெல்லைமுற்றும்போய்த்திரும்பிவந்து பூதத்தலைவன்முன்னம்விழுந்து கிளம்பிமதுவின்மார்பிற் கோடையிடியைப்போலவறைந்து அடாபூதப்பயலே நீயோஎன்னை வெல்லவல்லவன் இதோஉன்பிராணனைவாங்கிச் சமனாவதிக்குக் குடியேற்றுகிறேன் பாரென்று வசைமொழிகளைப் பேசிக்கொண்டு மாயமந்திரத்தினை யுச்சரித்து அதன்முயற்சியினால் வானத்திற்போய்மறைந்திருந்து தான்முன்னமரிய தவங்களைச்செய்துமகாவிஷ்ணுவினிடத்திற் பெற்றுவைத்திருந்தசக்கரத்தையெடுத்து மனப்பூர்வகமாகத் தூபதீபநைவேத்தியமுதலிய பூசைகளைநிரப்பி வணங்கிப்போற்றி ஓ! படைகளுக்கரசே? அதோநிற்கின்ற பூதத்தலைவன் சிரத்தைக்கண்டித்து அவன்பிராணனையுண்டுவரக்கடவையென்றுவேண்டி அதிகவேகமாய்ப் பிரயோகித்துக் களித்துப்பார்த்திருந்தான்.

பகைவனைக்கண்டிக்கச்செலுத்திய பாணத்தினால்தான் மாளப்போகின்றகாரணந்தெரியாமல் அசமுகனென்னும் இராட்சதப்பாதகன் பவுத்திரமனதைப்பெற்றிருக்கின்ற மதுவென்னும் பூதத்தலைவன்மீதிற்செலுத்தியநாராயணாஸ்திரமானது வெளிப்பட்டவுடன் தகத்தகாயமாய் பிரகாசித்து அனலையிறைத்துப் பலகோடி பிரமாஸ்திரம்அக்கினிவருணன்வாயுகுபேரன் முதலியதேவாஸ்திரங்களைப்படைத்துக்கு முறிஎறிந்து புகைந்துகொண்டுஎங்குந்தன்மயமாய்அதிகமகிமைகளைக்காட்டிச்சீறியிரைந்து பகைவனைத்தேடிச்சமீபத்தில்வந்தமாத்திரத்தில்மதுவென்னும்பூதத்தலைவன் வெறுங்கையுடன்நிற்பதைப்பார்த்தவுடன்நம்மைஇப்படிக்குநிராயுதனாகியசிவபத்தன்மேற்செலுத்துவானோவெனக்கொதித்துத்திரும்பிக் காடாந்தகாரமாகவீறியிருந்தவிருட்பெருக்கைப் பிரகாசம்பொருந்தியகிரணங்களையுடையசூரியன்மாய்த்ததைப்போலமாயப்பெருக்கைக்காட்டி அதன்மத்தியிலிருந்து தன்னைவிடுத்தஅசமுகனென்னும் இராட்சதபாதகன் மாயவஞ்சகத்தையும் அவன்சிரத்தையுங் கண்டித்துத்தள்ளிப்போட்டுவானகங்கையில் முழுகிப்பரிசுத்தமாய் சொலித்துக்கொண்டு சக்கரப்படையானதுபோய் மகாவிஷ்ணுவினிடத்திற்சேர்ந்தது, அப்போது அந்தஅசமுகனென்னும் இராட்சதசேனைத்தலைவன் இடிமின்னலுடன் மேகமானது குமுறிக்கொண்டு நழுகியதைப்போலக் கோரைத்தந்தங்கள்விளங்க அலறி ஆவ்ஆவென வாயைத்திறந்துவந்து ரணக்களத்தில்விழுந்துருண்டுமாண்டனன், இந்தச்சம்பவத்தைக்கண்ட இராட்சதசேனைகள் திடுக்கிட்டு நடுநடுங்கிச்செருக்கற்றுப் புலம்பிவாடினர். தேவர்கள் மனமகிழ்ந்துஇனிஇப்படிக்கொத்த சண்டைசெய்யவல்ல இராட்சதவீரர்கள் யாவரிருக்கின்றனர், இவனுடன்போர்முற்றியதென்று ஆனந்தக்கூத்தாடிக் கற்பகமலரை மதுவின்மேலிறைத்து வாழ்த்திக்களித்தனர், இப்பிரகாரம் அசமுகன்மாண்டதையும் பூதப்படைகளின் கெலிப்பையும் தேவர்கள்செருக்கையும் இராட்சதப்படைகள் சஞ்சலங்களையும் பானுகோபன் சேனைத்தலைவர்கள் கண்டமாத்திரத்தில்நல்லகாரியம் நம்மையொத்தவீரர்களிருந்தும் இத்தகையகாரணங்கள் நேருகின்றதோவென்று ஆலகாலவிஷத்தைப்போலக் கோபித்தவர்களாய்த் தங்கள்சேனைகளுக்குத்தயிரியங்களைச்சொல்லிக் கூட்டிக்கொண்டுஇரதங்களைத்துரத்திப்போய்ப் பூதசேனைகளை நாற்புறங்களினும் வளைந்து தங்கக்கட்டுகள்பூண்டு இருகுதைகளினும் மணிகள்சத்திக்கும் பாரித்ததனுசுகளை வட்டாகாரமாகவளைத்துத்திசைகளதிரக் குணத்தொனிகொண்டு விஷத்தொவையலிட்டிருக்கின்ற திவ்வியபாணங்களை அமோகமாகப்பூட்டிச் சோனைமாரியைப்போலப் பிரயோகித்தும் சக்கரம்-பிண்டி-பாலம்-தோமரம்-கப்பணம்-முசலம்- சூலம்-தண்டமுதலாகிய ஆயுதங்களையுங் கணக்கிறந்ததாகச்செலுத்திச் சக்கிராகாரமாய் ரணக்களமெங்கும் உலவும்போது அவர்கள்தூண்டியபடைகள் அனலையிறைத்துப் புகைகளைப்பெருக்கி அதிகஉற்பாதங்களை விளைத்துக்கொண்டு தடைக்கஞ்சாமல்மீறி வேகமாய்ப்பாய்ந்து பூதப்படைகள்சரீரங்களிற் சுருக்குச்சுருக்கெனத்தைத்துச் சல்லடைக்கண்களாகத் துளைத்துவாட்டும்போது அந்தஉபத்திரவங்களுக்குச் சகிக்கப்படாமையால் தயிரியத்தைவிட்டுத் தலைவிரிகோலமாய்த்திசைகளெங்கும்பறந்தொளிக்கத்தொடங்கினர்.

இவ்விதமாகச் சிவகணங்கள் வலியிழந்து பின்னிடுவதையும் இராட்சதவீரர்கள் அகோரயுத்தங்களைச்செய்து ஜயசாலிகளாய் வீறித்திரிவதையும் இலக்ஷர்களிலொருவனாகிய தண்டகனென்னும் வீரன்கண்டு மனம்புழுங்கி நம்மவர்களிப்பாடுபடுவதோவெனச்சீறித் தன்தேரைமுடுக்கிக்கொண்டுவந்து இயமனுக்கொப்பாகச்சொல்லும்பாரித்தவில்லைவளைத்துப் பகைவர்திகைத்து வாடும்படிக்கு டங்காரசத்தத்தைக்காட்டிக் கணக்கிறந்த கடூரமாகியபாணவிதங்களைக் கரவேகமாகப் பிரயோகித்தனன், அதெப்படிக்கிருந்ததெனில் தண்டகனென்னும் மேகமானது இந்திரதனுசையொத்த வில்லைக்கொண்டு இடியைநிகர்த்த

குணத்தொனிகாட்டி மின்னலைப்போன்ற அலகையுடை
ய சரங்களைச் சோனைமழைக்குச் சமமாகச்சொரிந்ததற்
கொப்பாகக்காட்டியது. இவ்விதமாக புசபலபராக்கிரம
சாலியாகிய தண்ட னென்னும் வீராதிவீரன்விட்ட பா
ணகோடிகளானவைஎங்கும்பரந்துபுகைந்தெரிந்துகொண்
டுபகைவரை வளைந்துவளைந்து சாடும்போது கொடியசெ
ய்கைகளையுடைய இராட்சதசேனைகள் சின்னபின்னப்ப
டச்சிதறிச் சரீரமுற்றும் துளைத்தும் பிளந்தும் கண்டது
ண்டமாகவெட்டியும் கால்களைத்தறித்தும் புஜங்களைச்சரி
த்தும் மார்பைப்பிளந்தும் சிரங்களைக்கண்டித்தும் வயிற்
றைப்பீறிக் குடல்களை யிறைத்தும் இப்படிக்கதம்பட
வும் மேருவைப்போலப் பாரித்திருந்ததேர்களானவைஅ
ச்சொடிந்து வண்டில்களுருண்டு மச்சுகள்துறுங்கி கொடு
ங்கைகள் துகள்பட்டுக் குடைகொடிகள்பறந்து நாசப்பட
வும் நீலகிரியைப்போலக் கறுத்ததேகத்தைப்பெற்றிருக்
கின்ற மதயானைப்பந்திகள் வீறிட்டுக்கலைந்து இரத்தின
முகபடாமணிந்த மத்தகங்கள்பிளந்துபனையையொத்தது
திக்கைகள்வெட்டுண்டு பிறையையொப்பவிளங்குந் தந்த
ங்களிறைந்தும் பாரித்தகால்களற்றுத்தும்சப்படவும்பஞ்
சகல்லியாணிகளாகிய புரவியணிகள்அல்லோலகல்லோல
ப்பட்டுபின்னிவிட்டிருக்கும் பிடரிமயிரையுடையசிரங்க
ள்துறுங்கிச் சொர்னவண்டயங்கள்கலிக்கும் கால்கள்தறி
ந்துசாமரங்களையொத்த வால்கள் பறந்துமாளவும்இவ்வி
தமாக ரதகசதுரக பதாதிகளாகிய சதுரங்கசேனைகளும்
அதாஅதப்பட்டகாலத்திற் பெருகிய உதிரமானது கட
லைப்போலவிரைந்து அலைகளைவீசிச் சமுத்திரத்திற்பாய்
ந்துதேக்கிக் கரைகளையுடைத்துப் பூமண்டலமுற்றினும்
பெருகிக் கண்டயுகவெள்ளத்தைப்போல மலைகளைப்புர
ட்டிக்கொண்டோடவும், பிணமலைகளெங்கும்பெருத்துவா
னத்தையளாவக்குவியவும், பலகோடிகவந்தங்கள்கூத்தா
டவும், இப்பாடுபடுமுன்னிலையில் தப்பிநின்ற இராட்சத
ச்சேனைகள் அதிககாயங்களினால் மனம்வருந்திநிலைபெற்
றுநிற்கக் கூடாமையால் திகைத்துத் தங்கள்பிராணனைக்
காப்பாற்றிக் கொள்ளும்பொருட்டு மானத்தையும் வீரத்
தையும் பறிகொடுத்தோடித் திசாதிசைகளினும் பூவட்
டங்களினும் பருவதச்சாரல்களினும் வனாந்தரங்களினு
ம் தீவுகளினும் பதுங்கினர்.

எத்தகையராலும் ஜயிக்கவொண்ணாத இராட்சதவெ
ள்ளங்களனைத்தும் இவ்விதமாகவிறைந்து பறந்துபோக
வும் அவர்களைக்காத்திருந்த வீரபராக்கிரமசாலிகளாகிய
கணக்கிறந்த படைத்தலைவர்கள் சின்னபின்னப்பட்டு மா
ண்டதையும் பூதர்களும் இலக்ஷருஞ்சேனைத்தலைவர்களு
ம் ஜயவுற்சாகங்களுடன்களித்து ரணக்களமெங்குமெதிரி
ன்றித்திரிவதையும் ஆயிரங்கிரணங்களையுடையசூரியனை
த்தளைசெய்த வீராதிவீரனாகிய பானுகோபன் கண்டமா
த்திரத்தில் வடவாமுகாக்கினியைப்போலக் கொதித்துத்
தீயும்புகையுமெழ நகைத்துச்சீறி இதனைச்சொல்லுகின்
றான், கற்பகமலர்களையணிந்த புயாசலங்களையுடைய இந்
திரன்முதலிய தேவர்கள் தங்கள்பதங்களையிழந்துசின்ன
பின்னப்பட்டு வாடியோடக் கொடியபோரைச்செய்த ஜய
சாலிகளாகிய நம்முடைய சேனைவீரர்கள்இத்தினம்சிவகு
மாரனேவிய அபலராகிய பூதங்களினாலும் படைவீரர்க
ளாலும் இப்பாடுபடுவதோ சூரியனைச் சிறைபடுத்திச்ச
கலதேவரையும்வென்று கீர்த்திபெற்ற நான்பார்த்திருக்க
ச் சத்துருக்கள் வலியுள்ளவர்களாய்ப் புசபலபராக்கிரம
சாலிகளாகிய இராட்சதவீரர்களைவாட்டி ஜயம்பெறுவது
வெகுநேத்தியாகவிருக்கின்றது வீரசிங்கமானதுகோபித்
துத் தன்சவுரியத்தைக்காட்டாமல் அடங்கியிருக்குமாயி
ல் மதயானைகள்வீறி வெற்றிபெறுவதரிதன்று நான்பட்ட
ணத்தைவிட்டுப் புறப்படும்போது இரதகஜதுரகபதாதி
ள் இருபதினாயிரவெள்ளங்களுடன்வந்தேன்இப்போதுந
ம்மைச் சூழ்ந்திருக்கின்றவர்களைப் பார்க்குமிடத்தில்ஆயி
ரவெள்ளம்சேனைகளிருக்கும்போற் காணுகின்றது கொடி
யபோரைச்செய்துமாண்டவர்கள் இரண்டாயிரவெள்ளத்
துக்குமேற்படுமாயினும்மற்றவெள்ளங்கள் பறந்துபோன
விடந்தெரியவில்லை இந்தப்பூதப்படைகளைஒருபொருளா
கமதியாமல் அசட்டையாய்ப் புறவணியில்நின்று நம்மு
டையசேனைகளையும்படைத்தலைவர்களையும் சண்டைகொ
டுக்கும்படிக்கனுப்பி வீணில்மாளக்கொடுத்தேன், இதை
முன்னமே தீர்க்காலோசனைசெய்துஒப்பற்ற பாரித்தவில்
லைக்கரத்திற்கொண்டுபோயெதிர்த்துச் சத்துருக்களைமிஞ்
சவொட்டாமற்படிக்குச்செய்துஜயம்பெறநினையாமற்போ
னேன், நடந்துபோனகாரியங்களைநினைந்துநினைந்துமனம்
வருந்துவதினாற்பிரயோசனமொன்றுமில்லை,இனிகாலதா
மசஞ்செய்யாமல் நானேபோர்முனையில்நடந்துபகைவர்க
ளைவளைந்துகொண்டு கொடியபோரைச்செய்து ஒருநாழி
கைப்போதிற்சின்னபின்னப்படவாட்டிக்கொல்வேன் இந்
தவெற்றியினைப்பெறுமற் போவேனாயில் ஆயிரத்தெட்ட
ண்டங்களுக்கதிபனாயிருக்கின்றசூரபதுமன்குமாரனாகமா
ட்டேனெனச்சபதம்பேசிச் சாரதியைப்பார்த்துநமதிரதத்
தினைப் பகைவர்முனையில் நிமைப்போதிற் கொண்டுபோ
ய் சேர்க்கக்கடவாயெனக் கட்டளையிட வுடனேஅவன் வா
யுவேகமும் மனோவேகமும் பிற்படத்தக்கதாகச்செலுத்தி
யகாலத்தில் இரதகஜதுரகபதாதிகளும் ஜயவுற்சாகங்களு
டன் ஆர்ப்பரித்துக்கொண்டு பலவாத்தியங்களும்முழங்க
த்தக்கதாகப் பிரளயவெள்ளத்தைப்போலத் தொடர்ந்து
போகவும் போர்முனையைச் சேர்ந்து பானுகோபனுக்குக்
கோபமிகுதியினாற் புருவம்நெற்றியிலேற மண்டியெறிந்
து மகம்மேருவுக்குச் சமதையாய் பாரித்துத் தங்கக்கட்டு
கள்பூண்டிருக்கும் வெற்றிவில்லையெடுத்து நாணியைப்பி
கிந்து குணத்தொனிகாட்டிய வோசையினால் அண்டவடு
க்குகள் கலகலத்தும் குலகிரிகள் நெக்குவிட்டும் மேருகிரி
தத்தளித்தும் சத்தசாகரங்களுங் கொதிப்பெடுத் தார்ப்ப
ரிக்கவும் பூமியானது நடுநடுங்கிவாடுமுன்னிலையில் அச்சு
மையைத் தாங்கமாட்டாமல் ஆதிசேஷன்கொண்டவருத்
தத்தை இன்னவிதமெனச்சொல்லக்கூடுமோ! சூரியன்தி
சைமாறிக்கலங்கி என்னவிளையுமோவென்றேங்கவும் நட்
சத்திரங்கள்நிலைதப்பிப்பலபலவென்றுபூவட்டமெங்குமு
திரவும், இவ்வித உற்பாதங்கள் நேர்ந்தபொழுது சருவ
சங்காரகாலத்தில் தேவாதிதேவனாகிய சிவபிரான்அண்ட
ரண்டபுவன சராசரங்களையொடுக்க நினைந்தபோதுஊழி
மேகங்க ளொன்றுபட்டு வருஷிப்பதைப்போலப் பரந்து
கெலிப்புடன் வீறியிருக்கின்ற பூதப்படைகளின்மேற் ச
ரவருஷங்களைப் பொழிய கோடையிடிகளைப்பெருக்கி வி
ழிகள்கூச மின்னிதீயைவீசிப்புகைந்து பற்பலகொடுமை
களைக்காட்டி அதிகமகிமையுடன் பிரசண்டமாருதந்தை
ப்போல வேகங்கொண்டு குறுகுறெனச்சீறி வருவதைவீ
ரர்களாகியசிவகணங்கள்கண்டமாத்திரத்தில்வடவையைப்

போலச்சீறிக் குழிபட்டிருக்கின்ற விழிகளில்தீப்பொறிகள் சிதறத்தாவி அஷ்டகுலாசலங்களுக்குச் சமமாகவோங்கிநிற்கின்ற பருவதங்களையும் மாமரங்களையும்பறித்துக்கிறுகிறெனச்சுழற்றி றிவ்வுறிவ்வெனவீசி யூழிகாலத்திற் பெருகுமிடிகளைப்போல ஆர்ப்பரித்தனர்.

அவைகள் அதிவேகமாகப்போய்த்திக்குதிசைகள்தோற்றுமல் நிறைந்து குமுறிக்கொண்டு மேலிட்டுவருகின்ற பாணப்பெருக்கைத்தடுத்துப் பிரயோசனப்படாம லழித்ததுமன்றியில் மேலிட்டு வருவதைப்பானுகோபன்பார்த்து ஒவ்வொருபருவதத்துக்குக் கோடிபாணங்களாகக் கரவேகங்கொண்டு செலுத்திப் பொடிப்பொடியாக்கித்துகள் பறக்கச்சாடியபோது மலைகளனைத்தும் நுறுங்கித் தூளியாயெழுந்து வானநாடுகளிற்பரவித் தேவர்கள்கருட காந்தருவர் சித்தவித்தியாதரர் முதலிய சகலர்தேகங்களினும் படிந்து அவர்களாற்கூடியவரையிற் றுடைத்தும் போகாமல் வானகங்கையிற்படிந்துசுத்திசெய்துகொண்டவர்களாய்த் திகைத்திருந்தனர், இவ்விதமாகப்பருவதங்களனைத்தும் பறந்துபோனகாலத்திற் பானுகோபன் கோபதீபிதனாய்த் தன்தேரைச் சுழற்காற்றைப்போல ரணக்களமெங்குஞ் சக்கிராகாரமாகத் திருப்பித்திருப்பிப் பாரித்தவில்லானது இருகுதைகளுமொன்றுபட ஒவ்வொருதொடையிற் கோடாகோடிக் கணக்கிற்குரூரமாகிய சரங்களைப்பிரயோகிக்கும்போது மந்திரமுயற்சியினு லொன்றனந்த உருக்கொண்டு மின்னலைப்போல அலகுகள் பிரகாசிக்கவும் விஷங்களையுந் தீயையுமிறைத்துச்சோமசூரியாக்கினியென்னும் முச்சுடரா விழிகளாகப்படைத்திருக்கின்றஉருத்திரமூர்த்தியும் மன்னுயிர்களைக்கொண்டுபோகுங்கடினசித்தமுடைய யமனும்அஞ்சும்படிக்குஅதிகஉற்பாதங்களைக்காட்டிவந்து ஜயசாலிகளாய் வீறிஇருந்த பூதச்சேனையின் பேரிற்றுக்கி அல்லோலகல்லோலப் படுத்தும் போது சிரங்களற்றும் மண்டைகள்திறந்தும் மூளைகள்சிதறியும், விழிகள்பெயர்ந்தும், பற்களுதிர்ந்தும், தோள்கள்சரிந்தும், மார்புபிளந்தும், கரங்கள்வெட்டுண்டும், வீரகண்டைகள்கலக்கும், கால்கள்முறிந்தும், உடல்கள்சதைந்தும்,சவுரியங்கள்பேசிய வாய்பிளந்தும், கரங்களிற்பற்றியிருந்த ஆயுதங்கள் துகள்பட்டும், இவ்விதமாகஅதப்படும்போது பூதர்கள் களேபரங்கள் பூமியிற்சாயுமுன்னம்,உதிரம்பெருகிப் பரந்ததெப்படிக் கிருக்கின்றதெனிற், கொடியபாதகராகிய இராட்சதர்கள் மிதித்தமண்ணை முந்திச்சுத்திசெய்வதைப்போலக்காட்டவும், பிரகாசம்பொருந்தியஅலகையுடையபகைவன் பாணங்கள் கண்டித்தகாலத்திற் பூதர்சிரங்களானவைமின்னலைவிரித்துமேகங்கள்சஞ்சரிக்குப் வானத்திலெழுந்தபோது அந்தமுண்டங்களி னின்றும்உதிரமானது பீரிட்டோங்குவதைப் பார்க்குமிடத்தில் ஓ சிரமே நாம்குமரகுருபரன் சேனையாதலாற் பகைவனுக்கஞ்சியோடலாகாது நில்லுநில்லெனப் பின்தொடர்ந்து தயிரியங்களைச்சொல்லி இட்டுவரச்சென்றதற் கொக்கும்.

அக்காலத்திற் பானுகோபன் செய்தபோரின்வல்லமைகளை இன்னவிதமென்று சொல்லக்கூடுமோ வில்வித்தைக்கும் கரவேகத்துக்கும் சரவேகத்துக்கும் மனவுறுதிக்கும் புசபல பராக்கிரமத்துக்கும், ஸ்ரீமகாவிஷ்ணுவிலுமுந்தி விரலைமடக்கவல்ல சூரனுமிந்ததிரிலோகங்களினுமுண்டோ அவன்கற்ற தனுர்வித்தையின் பிரபலத்தைநினைக்க நினைக்கமனதாலுங்கணித்தற்கருமையாகும்அவன் செலுத்திய ஒவ்வொரு பாணமானது எங்களையனுகியசிவசுப்பிரமணியதேவர் சேனைகளிற் பாய்ந்து வலிய சிரத்தையுந் தோளையும் மார்பையும் வீரகண்டையணிந்திருக்கின்ற கால்களையும் ஏககாலத்திற் கண்டித்தோடும் ரிஷிகளே? இத்தகைய சண்டையை எந்தச்சூரனும்செய்திருக்கமாட்டான் இப்படிக்குத்தேவர்களை யலைத்துச்சிறைவைத்திருக்கின்றபாதகனாகியபானுகோபன்ஒப்பற்ற வில்வன்மையினாலும் புசபலத்தினாலும் சின்ன பின்னப்படவாட்டி யழிக்கின்றகாலத்தில் மாண்டவர்கள்போக நின்றவர் திகைத்துப்பஞ்சேந்திரியங்களுங் கலங்கிக்கால்கள்நடுநடுங்கி நிற்கமனம்தாபரியாமற் சற்றுநேரந்தாமசப்பட்டு இவ்விடத்தி லிருப்போமாகிற்படாதபாடுகள்பட்டுப் பிராணனையும்போக்கவரும் பகைவனைப் பார்க்குமிடத்திற்காலாந்தகனைப்போலத் திரிகின்றான்இந்தவேளை தப்பித்துக்கொண்டால் பிற்படிக்குப் பார்த்துக்கொள்ளுவோம் மேலும் கோடிசூரியப் பிரகாசமாய் விளங்கியிருக்கின்ற வெற்றிவேலாயுத பாணியாகிய பாலசுப்பிரமணியதேவரானவர் பிரமன், விஷ்ணு, முதலியதேவர்கள் போற்றத்தக்கதாக பாசறையிற் சலனமற் றிருக்கின்றார், நம்மைப்பாதுகாத் திரட்சிக்கும் படிக்குக் கட்டளையிட்டனுப்பிய வீரவாகு தேவரும் முதற்பலிக்கு நம்மைசெலுத்திவிட்டுபுறவணியிற் சவுக்கியமாகவிருக்கின்றனர், இவ்விடத்தில் நாம்படும்வருத்தங்களொன்றும் அவருக்குத்தெரியாது நம்மைத்தொடர்ந்துவந்த சேனைத்தலைவர்களுந்தீனராகியநம்மைமுன்தள்ளிஇந்தபாதகனிடத்திற்காட்டிக்கொடுத்துவிட்டு அங்குமிங்கும் களித்துலாவுகின்றனர், எதிரிலகப்பட்ட ஏழைகளாகிய நம்மையிந்தப்பாதகன்முன்பின்பாராமல் மடக்கிக்கொண்டு கொல்லுகொல்லெனச்சாடி அளவற்றவர்களைச் சங்கரித்தனன், நமக்கோ இவனுடனெதிர்த்துப் போர்செய்யும் வலியுமில்லை உடலும் ஊசலாடுகின்றது அப்படிக்கொத்தநாமிவ்விடத்திலிருப்பதினாலாகவேண்டுவ தென்னையென்றுஇவ்விதமாகப் பற்பலவெண்ணியெண்ணித் துணிவுகொண்டவர்களாய் ரணக்களத்தில்நின்ற பூதப்படைகளனைத்தும் பயபீதியினாற் றிசைதப்பியோடிப் பின்னணியில் வெற்றிமாலைபுரளும்புசபலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவரிருக்கின்றதலத்தைநோக்கிப்பதைபதைத்தமனதுடனும்வாடி யமுகங்களுடனும்பலகாயங்கள்பட்டு உதிரப்பிரவாகமோடுந் தேகத்துடனும் ஓடோடியும் வருகின்றவர்கள் நிலைகளைரணரங்கசூரனாகிய உக்கிரசேனனென்னும் படைத்தலைவன் கண்டவுடன் மனம்வருந்தி நம்மவர்களுக்கிந்த கேடுநேருவதோ வெனப்பொங்கி விழிகளில் அனற்பொறிகள் சிதறவும் புருவம் நெற்றியிலேறவும் முகமண்டலம் வியர்க்கவும் வாய்துடிக்கவும் அதிககோபங்கொண்டு பூதகணங்களைப்பார்த்து பயப்படாதீர்கள் உங்களுக்கிந்த தொந்தரையைக் கொடுத்த பகைவனை நிமைப்போதிற் சின்னபின்னப்படக் கண்டிப்பேன் நில்லுங்கோள்நில்லுங்கோளென்றுதேறுதலைச்சொல்லிக்கொண்டு அதிவேகமாய்த்தங்கக்கட்டுகளிறுக்கியிராநின்ற பாரித்ததண்டாயுத மொன்றைக் கரத்திற்கொண்டு தேவர்கள் சபாசென்று கொண்டாடும்படிக்கு ஆர்ப்பாட்டங்களைச்செய்து பகைவனைத்தேடிப்போர்க்களத்தைநோக்கிவருகின்றஉக்கிரசேனன் வீரத்தன்மையைச்சூரியகாதகனாகிய பானுகோபன் கண்டுநல்லகாரியம் இவனுணவத்தையும் சற்றுநேரத்தி லடக்குவேனென்றுவெற்றிமாலை

தரித்து மந்தரத்தையொப்ப விளங்கும்வில்லைவட்டாகாரமாகவளைத்து நாராசங்களைப்போன்ற ஆயிரகோடிதிவ்விய பாணங்களைச் சந்தித்துத்தூண்டிப் பகைத்து வருகின்றவன் தேகந்தெரியாமல்மறைத்துச் சிருங்கார தஞ்செய்தனன்.

இவ்விதமாகக் கொடியபாதகனுகியசூரபதுமன்பிரதமகுமாரன் தூண்டியபவாளிகள் அதிகமகிமைகளைக்காட்டியிணைந்து வந்துகரியதேகத்தைப்பெற்ற உக்கிரசேனன்சரீரத்தில் வேகமாய்த்தாக்கித் துளைத்துப்போகச்சக்தியில்லாமலும் சிலகாயங்களையுஞ் செய்யாமலும்வலியற்று முனைமழுங்கி யொடிந்து பலபலென்றுபூமியிலிறைந்துபோயிற்று, அதெப்படிக்கிருந்ததெனில், ஒருவன்நீதிக்கிடையூறுய்த் தேடியபொருளை மெய்ப்பத்தியினாலுந் தருமசிந்தையைக்கொண்டும் அப்பொருளைத்தேவாலயம் சோலைகள் தடாகங்கள்அதிதிகளுக்கு வேண்டும்உதவிகள் பெரியோர்களுக்கும் தானதருமங்களுக்கும்சுற்றத்தினருக்குப் போசனமுதலிய உபசாரங்களைச் செய்யாமல்தானுமுண்ணுமல் ஆழப்புதைத்துவைத்திருக்கின்ற பதிதன்பொருளானது கடையில் நற்பிரயோசனங்களுக்கு முதலியாகாமற்பூதம் திருடர் பகைவர்,மற்றும்வியர்த்தமாகியகாரணங்களுக் குபயோகமாயழிந்துபோகுமாறுபோலவும்யானையுண்ட விளாங்கனியையொப்பவும்குன்றிக்குறைந்து போயிற்று இவ்விதமாகத்தான்வருந்திச்செலுத்தியபாணகோடிகள் பயன்படாமல்மங்கியதைப்பானுகோபன்கண்டுமெச்சிஇந்தவீரனைச் சுலபமாக நினைக்கப்போகாதுமிகவும்வலியனுகக்காணுகின்றனன், இவனைக்கொல்லுவ தெவ்விதமென்றுசற்றுநேரம் யோசித்துத்தானரிதிற்றேடிவைத்திருக்கின்ற பாரித்த எழுவாயுதத்தை யெடுத்துக்கிறுகிறெனச்சுழற்றிக்குறிகொண்டு பகைவன் மார்புக்கிலக்காக வீசியபோது அந்தமுசலமானது வெளிப்பட்டவுடன் கோடையிடியைப்போல முழங்கி யனலையிறைத் ததிவேகங்கொண்டு மீறிவருவதைஉக்கிரசேனன்கண்டுநகைத்துத்தன்கரத்திற் பருவதா காரமாக விளங்கியிருக்கின்றவலியகதையைக் கறகறெனச் சுழற்றிஓரடியினுற் றுகள்பட்டுப்பறக்கத் தாக்கியதுடன் கோபந்தணியாமல் லகுக்கொண்டு வேகமாய்ப் பானுகோபனேறி யிருக்கின்ற தேரின்மீதிற்பாய்ந்து தண்டத்தைச்சுழற்றிமோதியணிபடக்கட்டியிருக்கின்ற குதிரைப்பந்திகளைகண்ட துண்டப்படக்கொன்றுநிலத்திற்றள்ளித் திரும்பினன், இந்தவெற்றியைக்கண்டதேவர்கள் கரங்களைக் கொட்டிச் சந்தோஷமிகுதியினுல் உக்கிரசேனனைக் கொண்டாடி ஏ, ஏ, யெனப் பானுகோபனை இகழ்ந்தார்ப்பரித்தனர், அக்காலத்திற்பரிகள்பட்டதையும் விண்ணவர் உற்சாகங்களையும் பார்த்தமாத்திரத்திற் பானுகோபனுக்கு அதிககோபம் பிரவேசித்து வடவையைப்போற்சீறி உன்னுணவத்தையடக்குகிறேனெனச் சபதம்பேசிச் சீக்கிரத்திற் பக்கத்தில்நிற்கின்ற சேமத்தேரிற் பாய்ந்திருந்து மணிகள்கலித்துப் பொற்கட்டுகள்மிகுந்திருக்கின்ற வெற்றிவில்லைவளைத்து உக்கிரன் தாங்கியிருக்கின்ற வலியதண்டத்தைக் கண்டிக்கும்படிக்குக்கூர்மையாகவிருக்கின்ற அர்த்தசந்திரபாணங்கள்நூற்றையெடுத்துச் சந்தித்துக் கரவேகமாகத்தூண்டியகாலத்திலிணைந்து புகைந்து சீறிக்கொண்டு வீறிவந்துதாக்கி உக்கிரன்கரத்தில்விளங்கும் தண்டாயுதத்தைப் பொடிப்பொடியாகக் கண்டித்துத்தள்ளியது, அப்போது உக்கிரன்சிங்காசனைப்போலச்சீறிப் பாய்ந்து பானுகோபனேறியிருக்கின்றவிரதத்தை வாரியெடுத்துப் பந்தைப்போல வானத்தில் வீசியபோது கிறுகிறெனச் சுழன்றுகொண்டு சூரியமண்டலவளையிற் சென்று இதனைக்கண்ட சூரியன் திடுக்கிட்டுப் பாலபருவத்திற் பந்தித்ததைப்போலபாதினை நினைந்துவருகின்றனனேவெனத் தியங்கிப்பறக்கவும்இரதமானது கொடிடக்கையங்கள் முதலிய சிங்காரங்களுடன்திரும்பிப் பூமிக்கடுத்து வருவதைப்பார்க்குமிடத்தில் மேகத்துடன் வானமானது தகறித்தழைத்திருக்கின்ற ஆலவிருட்சத்தில் விழுந்தகாலத்தில் வேர்பறிந்துசாய்ந்ததைப்போலக் காட்டவும்நெருங்கிய காலத்திற் பானுகோபன்தேரைவிட்டு நிலத்திற்பாய்ந்து புசபலபராக்கிரம சாலியாகியஉக்கிரசேனனை நெருங்கிக் கடககங்கணங்களணிந்துநீண்டிருக்குந் தனதுகரத்தினுல் அவனைவாரிமேலே மூலகங்களுக்கு மப்புறத்திற் போகும்படிக்கு வீசிமேலும்மனஞ்சகியாமல் தனக்குமுன்னம் பிரமதேவன் கொடுத்திருக்கின்ற வேலையெடுத்துப் பூசித்துவணங்கிஅண்டகோளகைவளையிற் போய்த் திரும்பிவருகின்ற உக்கிரனுக்கு நேராகச்செலுத்திய மாத்திரத்தில்அனலைச்சொரிந்துகொண்டுபோய் உக்கிரசேனன் மார்பிற்றாக்கித்தடாரித்துருவித்துளைத்து முதுகின்வழியாக ஓடியது, அக்காயத்தினுல்உக்கிரன்வருந்திவந்துநிலத்தில் விழுந்து சற்றுநேரங்களைத்திருந்தனன்.

இச்சம்பவத்தைக்கண்ட தண்டியென்னும் பூதசேனுபதியானவன் ரவுத்திராகாரமாகமண்டி யெரிந்து விழிகளில் தீப்பொறிகள் சிதறப்பாய்ந்து பக்கத்தில்பாரித்துவானத்தையளாவ நிற்கின்ற பருவதமொன்றைப்பேர்த்தெடுத்துச்சீறி யெதிர்த்து வேகமாய்ப் பானுகோபன்மீதிற் கடாவிய காலத்தில்வரும் வேகத்தைக்கண்ட ராசபுத்திரன்துரிதமாய்த் தன்வில்லிற்கொடிய பாணங்களாயிரத்தைப்பூட்டி அதற்கு நேராகப் பிரயோகிக்க அவைஅதிகமகிமைகளுடன் புகைந்தெரிந்துவந்து மேருவைப்போல வருகின்ற பருவதத்திற் றாக்கிக் கணப்போதிற் கண்டதுண்டப் பட்டுப் போகச்சாடிப்போயது, இதைக்கண்டதண்டியென்பவன் சீறிப்பாய்ந்து வானத்தை யளாவத் தழைத் திருக்கின்ற மராமரமொன்றை வேருடன் பறித்துச் சக்கிராகாரமாகச் சுழற்றிவந்துபானுகோபனேறியிருந்தஇரதத்தின்மேல் மோதியகாலத்தில் அதிற்பூண்டிருந்த குதிரைப்பந்திகளனைத்தும்சின்னபின்னப்பட்டுமாண்டும்சாரதிதலைபிளந்துருண்டும் இரதமானதுநுறுங்கி நிலத்திற்சேர்ந்தும் இத்தகையதுன்பம் நேர்ந்தகாலத்தில் இராசகுமாரன் சிரக்கம்பஞ்செய்து இவனைச்சுலபமாக நினைக்கப்போகாதுதகுந்தபிரயத்தனத்தினுற்கொல்லவேண்டுமெனநிதானித்துமற்றொருதேரிற்பாய்ந்து மண்டிபோட்டிருந்துபளபளத்து விளங்கும், அலகைப்பெற்ற கூரியமுத்தலைப்பாணங்கள் பதினுயிரத்தையெடுத்து வில்லிற்பூட்டித்தண்டிநெற்றிக்குக்குறிகொண்டுசெலுத்தினன், அவைகளிடிகளைக் கக்கிக்கொண்டு சீறிவந்து விசாலமாகவிருக்கின்ற நுதலிற்பாய்ந்து துளைத்துருவிப் போனகாலத்தில் உதிரம்பிரபலமாகப் பெருகும் படிக்குத் தளர்ச்சிகொண்டு திகைத்தசைவற்றுநின்றுவிட்டனன், இச்சம்பவத்தைக்கண்ட பிங்கியென்னும் பூதநாயகன்வடவையைப்போலப்பொங்கி விழிகளிற் தீப்பொறிசிதறவுருத்துப் பக்கத்திற்பாரித்து வானத்தையளாவநிற்கின்ற பருவத

மொன்றைப்பறித்துக் கரத்திற்கொண்டு வீசுவதற்காயுத்தப்படு முன்னிலையிற் பானுகோபன் துரிதப்பட்டு ஆயிரங்குரூரமாகிய பாணங்களைவில்லிற்பூட்டிக் கரவேகமாகச்செலுத்திப் பகைவன்மார்பைச் சல்லடைக்கண்களைப்போலத் துளைத்தபோது இரத்தமானதுகுமிழியிட்டோடக்களைத்துச்சோர்ந்தனன், இதைக்கண்ட பூதசேனைத்தலைவர்கள் மானமும் வீரமும் மனதைவருத்தக் கோபாவேசங்களுடன் பகைவனை ஜயங்கொள்ளவேண்டுமென்கின்ற வயிரத்தினல் ஒவ்வொருவனுக மாறிமாறியெதிர்த்துத் தழைத்தோங்கியிருக்கின்ற மரங்கள்பாரித்த மலைகளிருப்புலக்கைகள் தண்டாயுதங்கள் கொடியபாணவிதங்களாதியாகிய படைகளை ஒன்றனந்தமாகப் பிரயோகித்துக் கூடியவனாயிற் போராடுகின்ற சமயங்களிற் பானுகோபன் தன்வில்லானது எக்காலத்தினும் இருகுதைகளும் ஒன்று பட்டிருக்கும்படிக்குக் கரவேகமாய் அர்த்தசந்திர பாணங்கள் அனலைக்கொட்டும் கொடியகணைகள் விஷத்தொவையலிட்டுச்சென்ற விடங்களில் வெற்றியுடன்திரும்பவல்ல திவ்வியசரங்கள்முதலியபடைகளைச் சோனைமாரியைப்போலச்சொரிந்து திக்குமுக்கிடச்சாடும்போது நிருவகிக்கமாட்டாமல் மனங்கலங்கித்திசைகெட்டுப்பின்னிட்டுப்பதுங்கினர்.

இவ்விதமாக ஜயசாலிகளாகிய கணத்தலைவர்கள்பானுகோபன் சேவகத்திறத்துக் காற்ருமலழிந்துபோனதைக் கண்டமாத்திரத்தில் புசபலபராக்கிரமசாலிகளாகிய இலக்ஷர்களிற் கபாலி அண்டலோசனன், நிரஞ்சனன், உருத்திரன், கண்டன், தண்டன்முதலிய வீராதிவீரர்கள்ரவுத்திராகாரமாகக் கோபித்து ஒருவர்முன் னெருவராகவந்தெதிர்த்துப் பலதிசைகளினுஞ்சூழ்ந்துகொண்டவர்களாய்த் தங்கள்கரத்திற்பாரித்துவிளங்கும் விற்களைவட்டாகாரமாகவளைத்து நாணேறிட்டுக் குணத்தொனிகொண்டகாலத்தில் அவ்வதிர்ச்சியினுற் சத்தகுலாசலங்களும் திசைகளும்பட்டபாட்டை இன்னவிதமெனச் சொல்லிமுடியாது பூமிக்கச்சாணியாகவும் விநாயகமூர்த்தியினுற் பாரதம் தன்மீதெழுதப்பட்டதாகவுமிராநின்றமகம்மேருவானது கிடுகிடென நடுநடுங்கித் தத்தளிக்கவும் திரிலோகங்களிலிருக்கின்ற பிராணிகளனைத்தும் செவிடுபட்டுப்பஞ்சேந்திரிய நிலைகள்பேதித்துத்தியங்கவும் இப்படிக்குச்சகலமும் வருந்துவதைப்பானுகோபன்பார்த்து நகைத்தவனுய் விற்களில் முதன்மையாகப்புகழவல்ல வலியதன்தனுசைவளைத்து ஆயிரகோடிஅண்டங்களும் நிலைகுலைந்துபிரமித்து இதென்ன உற்பாதமாகவிருக்கின்றதெனச் சோரும்படிக்குக் குணத்தொனிகாட்டியபோது கற்கம்பங்களையொத்த வலியபுசங்களைப் படைத்திருக்கின்ற இலக்ஷர்கள் ரவுத்திராகாரமாகக்கோபித்துச் சத்தமேகங்களுமொன்றுபட்டு மழைத்தூவலைப்பொழிவதைப்போலத்தங்கள்விற்களிற் கொடியபாணசமோகங்களைஏராளமாகப்பூட்டிச் சொரிகின்றகாலத்திற் காசிபர்பௌத்திரனுகிய பானுகோபன்மேல் நாற்புறங்களினும் இரைந்துபுகைந்து சிறிப்போவதெப்படிக்கிருந்ததெனிற் ஜலமிகுதியையுடைய பலநதிகளும் பற்பலதிசைகளினின்றும்பெருகிப்பூமிக்காடையாகவளைந்திருக்கின்ற சமுத்திரத்திற்பாய்வதுக்கொப்பாகக்காட்டியது இவ்விதமாக இலக்ஷர்விடுத்தசரங்கள் இராட்சதசேனைகள் திடுக்கிட்டு வருந்தும்படிக்குமேலிட்டுப் புகைந்தெரிந்துகொண்டுவருவதைப்பானுகோபன்கண்டமாத்திரத்தில் யமனைப்போலத் தன்கரத்தில்விளங்கும் தனுசிற்குரூரமாகிய ஆயிரகோடிதிவ்வியபாணங்களைக் கரவேகமாகச் செலுத்தித்துகளைப்போல நெருங்கிப் பரந்துவருகின்றபடைகளைநடுவது பாதியிற்கண்டித்துத்தள்ளி மேலும் ஆயிரகோடிகுரூரமாகிய நாராசங்களை வேகமாகச்செலுத்தினன். அவைகள்வெளிப்பட்டவுடன் ஒன்றனந்தமாகப்பெருகி யிடிமின்னல்மற்றகொடுமைகளைவிளைத்து மீறிவரும்போது சண்முகப்பெருமாள் படைத்தலைவர்கள் கோபதீபிதர்களாய்ப் பகைவன்செலுத்தியதொகைக்குப் பதின்மடங்கதிகமாய் அனலையொத்த கடூரமாகிய பாணங்களைக்கரவேகமாகப்பிரயோகித்து இராட்சதராசகுமாரன் தூண்டியசரங்களனைத்தையுங் கண்டதுண்டமாகக் கண்டித்தெரிந்தவேகத்தினல்மறிந்து தருமசிந்தையென்ப தெவ்வளவுமில்லாமற்கொடுங்கோல்செலுத்திவரும் சூரபதுமன் பிள்ளையின்மேற்சத்தித்துக்கொண்டுபோய்விழுந்தது அதைப்பார்க்குமிடத்திற் பெருங்காற்றிற்பட்ட மழைத்தூவலானது தாம்போகும்நிலைதப்பிப் பறப்பதற்குச் சமமாகக்காட்டியது.

இச்சம்பவத்தையும் பகைவர்பாணங்கள்மீறிவருவதையும்கண்ட பானுகோபன் வடவையைப்போலச்சீறிவயிரவூசிகளைப்போன்ற முனைகளைப்பெற்று கழுகிறகுகள்பூண்டு பளபளத்திருக்கும்அலகைவாய்ந்தகடூரமாகியகணைகளை மென்மேலுஞ்செலுத்திச் சிவந்தவிழிகளையுடைய வீராதிவீரர்கள் தூண்டியகணைகளைக் கண்டித்ததுமன்றியில் அவர்கள்கரங்களிற் பற்றியிருக்கின்ற வலியசிலைகளையும் இருதுண்டமாகவெட்டியெரிந் தார்ப்பரித்தகாலத்தில் இலக்ஷர்கள் கோபித்தவர்களாய்த்தமதிரதங்களில்நாட்டியிருக்கின்ற. சேமவிற்களைத் துரிதமாகவெடுத்து நாணேற்றிக் கொடியபாணவிதங்களைச் சோனைமாரியைப்போலச்செலுத்திப் பானுகோபன் தங்கள்பேரில் மேலும்மேலும்விடுகின்றசரங்களனைத்தையும்கண்டதுண்டமாகக்கண்டித்தெறிந்து மீட்டும் இராட்சதவீரனேறியிருக்கின்ற நவரத்தினமயமாகிய தேரின்மீதில் நூருயிரங்கூரிய பாணங்களையும் புரவிகளின்மீதில் ஆயிரம்அர்த்தசந்திர பாணங்களையும் மேகமண்டலத்தையளாவநிற்கின்ற துவசபடத்தின்மேல் ஆயிரங்கடியசரங்களையும் தேரைச்செலுத்தும் சாரதியின்மேல் ஆயிரம்திவ்வியபாணங்களையும் கரவேகமாகவிட் டார்ப்பரித்தகாலத்தில் அவைகள்தடைபடாமல் உரப்பிக்கொண்டுவந்துதாக்கியமாத்திரத்தில்தயைதாட்சணிய மெவ்வளவுங்கிடையாதகடினசித்தமுடையபானுகோபனேறியிருந்த நவரத்தினமயமாகிய தேரானது சின்னபின்னப்பட்டு நுறுங்கியும் பாகன்சிரங்கண்டித்துத் தேகமுற்றுங் கண்டதுண்டப்பட்டிறைந்தும் புரவிப்பந்திகள் சின்னபின்னப்பட்டுமாண்டும் உன்னதமாய்படபடென்றசைந்திருந்த வெற்றிக்கொடிதறிபட்டுக் காற்றிற்பறக்கவும்இப்பாடுகள்நேர்ந்தகாலத்திற்பானுகோபன் மற்றொருதேரிற்பாய்ந்து மனமானது மண்டியெரியக்கொதித்துத் துரிதமாய்த் தன்வில்லைவணக்கிப் பளபளத்த அலகையுடைய நூறுநூருயிரம் பாணப்பெருக்குகளை ஒவ்வொருநொடியிற்செலுத்திச்சுப்பிரமணியதேவர் சேனைத்தலைவர்கள்விடுகின்ற பாணகோடிகளைத் தும்சப்படக்கண்டித்து சரீரங்களுருத்தோற்ருமல் மூடியகாலையில் அந்தக்கொடியசரங்கள் சுருக்குச்சுருக்கெனத்தைத்துச் சல்லடைக்கண்களைப்போலத் துளைத்தோடுமுன்னி

லையில் உதிரம்பீரிட்டோட வலிகுறைந்துநடுங்கிப் பகைவனுடனெதிர்த்துச் சண்டைகொடுக்க நிருவகிக்கமாட்டாமற்பின்னிடைந்தனர்.

சவுனகாதிரிஷிகளே, மேற்குறித்தபடிக்கு இலட்சம்பூதத்தலைவர்கள் ஏககாலத்திற் பலதிசையினும்நின்று அஸ்திரசஸ்திரவிதங்களை ஏராளமாகத்தூண்டி அகோரயுத்தங்களைச்செய்யவும், ஒப்பற்றவில்லாளியாகிய பானுகோபனென்னுஞ் சூரனொருவனுமெதிர்த்து அவர்கள் வன்மையையடக்கி ஜயங்கொண்டதால் இச்சாமர்த்தியம்முன்னம் செய்திருக்கின்ற தவமுயற்சியினாற் கிடைத்ததென்றும் அல்லது கற்றதனுர்வித்தையின் வல்லபமென்றும் பிரித்துக் குறிக்கப்படவில்லை, இப்பிரகாரம் இலக்ஷர் அபசயப்பட்டுத் திரும்பியதை நவவீரர்களி லொருவனாகிய வீரகோளரியென்னுஞ் சூரன்கண்டு வடவாமுகாக்கினியைப்போல மண்டியெரிந்து தன்றேரைத்துரத்திவந்து பானுகோபனுக் கெதிரில்நிறுத்திக்கொண்டு பிநாகத்துக்கொப்பாகிய தன்வில்லைவளைத்துச் சகலருந்திடுக்கிட்டு வாடும்படிக்குக் குணத்தொனிசெய்து சோனைமழையும் நாணும்படிக்குக் கணக்கிறந்தபாணகோடிகளைக்கரவேகமாகச்சொரிந்து வீறிநிற்பதைச் சூரன்குமாரன்கண்டு மணிமுடியையசைத்து இவன்வலியும், வீரமும், விற்சாதுரியமும், கரவேகமும், வில்வித்தையின்மிகுதியையும், நன்றுநன்றெனப்பேசி மந்தரகிரிக்குச் சமமாகவிளங்கும் தன்வில்லில் நாரியையிறுக்கித்தேவர்கள்முதலானவர்கள் நடுங்கும்படிக்குக்குணத்தொனிகாட்டி நூறுநூறாயிரகோடி திவ்வியபாணங்களைத்தொடுத்துச்செலுத்தித்தனித்துத் தீரனாகவந்தவன்விட்ட பாணங்களனைத்தையும்கண்டதுண்டமாகக் கண்டித்தெறிந்து மேலுங்குரூரமாகிய ஆயிரங்கணைகளைத் தோளுக்கிலக்காகத் தூண்டிக்கொக்கரித்தனன். அவற்றினைத் தன்மீதில்வரவொட்டாமற் பலகணைகளைக்கொண்டுதடுத்து மேலுங் கரவேகமாய்ஆயிரங் கூர்மையுள்ள சரங்களையெடுத்து பானுகோபன் மார்புக்கிலக்காகப் பிரயோகித்தகாலத்தில் அப்படைகள் குமுறியினைந்து சர்ப்பங்களைப்போலச் சீறிக்கொண்டுவந்து விசாலமாகவிருக்கின்ற மார்பிற்றைத்துத் தடாரித்துருவிப் போயிற்று, இதனாற் பானுகோபன் சற்றுவருந்தித்தேறி ஆலகாலவிஷத்தைப்போலக் கோபித்து இவனைவில்வலிமையினாலும் மற்றபாணங்களின் முயற்சியினாலும்வெல்வதரிதெனநிதானித்து தானரிதிற்செய்த தவத்துக்கிரங்கி மகாவிஷ்ணுகடாட்சித்திருந்த படைகளிற்சிரேஷ்டமாகிய நாராயணாஸ்திரத்தையெடுத்துத் தூபதீபநைவேத்தியமுதலிய உபசாரங்களை மனப்பூர்வகமாகநிரப்பினவனாய் வில்லிற்பூட்டிப் பகைவன்மார்புக் கிலக்காகச்செலுத்தினன் அப்படையானது விடுபட்டவுடன் பிரமன்முதலாகிய தேவர்படைகளைப்படைத்து எங்கும்பரந்து இடிமின்னல் அக்கினி இத்தகையகொடுமைகளைப் பெருக்கிக்கொண்டு வேகமாய்வந்து வீரகோளரிசெலுத்தியபாணங்களனைத்தையும்விழுங்கி விண்மண்ணெங்கும் நடுங்கும்படிக்கு ஆர்ப்பாட்டங்களைச்செய்துகொண்டு மேலிட்டுவருவதை வீரன்பார்த்துத் தன்னிடத்திலிருக்கின்ற நாராயணாஸ்திரத்தையெடுத்து மாறுசெலுத்தித்தடுப்பதற்குமுன்னம்பகைவன்விடுத்த சரம்மீறிவந்து வண்டுகளொலித்து மொய்த்திருக்கும் புஷ்பமாலையணிந்த மார்பிற்றாக்கிப்பிராணசேதமில்லாமல் மூர்ச்சையாகத் தள்ளிப்போய்விட்டது, தன்னைக்குறித்துப் போக்கியவர்களைவதைத்துத் திரும்பவல்ல திவ்வியபாணமானது குமாரதேவர்கரத்தில்விளங்கும் வேலாயுதத்தின் மகிமைக்கஞ்சி உதிரத்தைப்பானம்பண்ணித்தன்மகிமையையுஞ் சிறிதுகாட்டி மீண்டு பானுகோபனிடத்திற்சேர்ந்தது அக்காலத்தில்வீரகோளரியென்பவன் பஞ்சேந்திரியநிலைகள்பேதிக்க மதிமயங்கி மாண்டவனைப்போலத் தேரில்மறிந்தனன்.

இவ்விதமாகத் தன்துணைவனுக்குநேர்ந்தஅபாயத்தை வீரமார்த்தாண்டனென்பவன் கண்டவுடன் காட்டழலையொப்பச்சீறித் தேரைத்துரத்திக்கொண்டுவந்து பகைவன்முன்நிறுத்தி ஒப்பற்றதன்வில்லைவளைத்துப் பாணங்களைச்செலுத்துமுன்னம் பானுகோபன்மிஞ்சி பற்பலகடினமாகிய சரங்களைத்தூண்டிப் பகைவன்கரத்திற்பற்றியிருந்தபாரித்தவில்லை நடுவதுபாதியில்வெட்டித்தள்ளி மேலுந்தேவர்களும் நடுங்கும்படிக்கு அனந்தம்பாணங்களைப்பிரயோகித்து வீரபட்டமணிந்துவிளங்கும் நெற்றியிலழுத்தினன், அதைச் சட்டைபண்ணாமல் வேறொரு பாரித்தவில்லையெடுத்து நாணேற்றுவதற்குமுன்னம் பானுகோபன் கரவேகமாய் நூறுதிவ்விய கணைகளைத்தூண்டிக் கரத்தில்நின்றதனுசைக் கண்டித்து மேலும் ஆயிரம் பாணங்களைக்கொண்டு இரதத்தையும் புரவிகளையும் சாரதியையும் சின்னபின்னப்படக் கண்டித்தெறிந்து எழுநூறு குரூரமாகியபாணங்களை மார்புக்கிலக்காகவிடுத்தனன். அவைகளும்புகைந் திரைந்துகொண்டுவந்து கோடையிடிகளைப்போலத்தாக்கியாதொருபிரயோசனப்படாமல் முனைமழுங்கித் தெறித்துப்போயிற்று. சவுனகாதிரிஷிகளே? இவ்விதமாகத்தேரையும் புரவிகளையும் சாரதியையுந் தனுசையும்போக்கிஒருவிதச்சண்டையையுஞ்செய்வதற் கேதுவில்லாமற் றனித்துநிற்கின்ற தெப்படிக்கிருந்ததெனில் மேகபடலங்கள் மூடியகாலத்திற் பிரகாசமானது மழுங்கிக்காட்டுஞ் சூரியனைப்போலத் தோற்றவும் உடனே மேகக்கலையச் சொலித்திருப்பதுக்கொப்பாக வீறிஅதிககோபங்கொண்டு பகைவர்கள்திகைத்து நடுங்கத்தக்கதாகக் கொக்கரித்தெழுந்து பூர்வத்திற் சிவபிரான் அனற்றோற்றமாகநின்றகாலத்தில் இரட்டைக்கோடுகளைப்பெற்றுப் பூமியைக்கெல்லித்தேடிச்சென்ற வராகத்தினு மாயிரம்பங்குயர்ந்த வலிபெற்றிருக்கின்ற பானுகோபன்மேல் ஆயிரங் கிரணங்களையுடைய சூரியன் இராகுவின்மீது தாவுமாறுபோலப்பாய்ந்து பகைவன்கரத்திற் பற்றியிருந்த வலியவில்லைப்பறித்து இரண்டுதுண்டமாக ஒடித்தெறிந்தனன், அக்காலத்திற் பானுகோபன்கோபதீபிதனாய்த் தன்னரையிற் சொருகியிருந்தவாளையுருவி வீரமார்த்தாண்டன் மார்பிற்குத்தித்திருகிப்பிடுங்குவதற்கு முன்னதாக உதிரமானது பீரிட்டெழுந்தபானுகோபன் மார்பிற்றாக்கியதைப் பார்க்குமிடத்தில்வீரமார்த்தாண்டன் அரையிலிருந்த சூரியவாளானது மாறாகவெதிர்ந்துகுத்தியதைப்போலக்காட்டியது, அத்தருணத்தில் வீரமார்த்தாண்டனுக் கதிககோபம்பிரவேசித்து பிரகாசத்தையுடைய சுரிகையைச் சரேலென் றுருவி யிராட்சதர்கள் தியங்கும்படிக்குப் பானுகோபனணிந்திருக்கின்ற வயிரக்கவசம் பொடிப்பொடியாகப் போகும்படிக்குத்தாக்கியதைத் தட்டிப்போட்டு பானுகோபன்மீளவும் தன்வாளினால் வீரமார்த்தாண்டன்கண்டத்திற் றடாரித்துருவும்படிக்குச் சொருகிவாங்குமுன்னிலையில்உதிரப்பெருக்கெடுத்தோட

வலிகுறைந்துசெயலற்றப்பெருங்காற்றிலகப்படச்சாயுங் கற்பகத்தருவைப்போல விழுந்தவனை இறந்தானென்றெ ண்ணிச்சட்டைபண்ணுமல்விட்டுவிட்டு இச்சம்பவத்தை க்கண்டுதன்மேல் அதிககோபத்துடன்நாற்புறங்களினும் ஆர்ப்பரித்து விரிவருகின்ற பூதப்படைகளைப்பார்த்துக் கோபித்துவில்லைவளைத்துச் சின்னபின்னப்படப்போர்செ ய்வதைச்சத்துருக்கள்புகழுஞ்சவுரியபரனுகியவீரராக்ஷத ன்கண்டு வாயுவேகத்தினுமுந்தித்தன்தேரைத்தூரத்திவந் துதுணைவர்களுக்கு நேர்ந்தஅபாயங்களைத்தெரிந்தவுடன் கோபக்கனலானது மேலிட்டு மனதைவாட்டச்சிறித்துரித மாக நெடியவில்லை வட்டாகாரமாய்வளைத்துக் கரவேகமா ய்ஆயிரங்கரூரமாகியகணைகளைத்தொடுத்து வீரகண்டைய ணிந்த பாதங்களையுடைய பானுகோபன்மேல் பிரயோ கித்தபோது அவனும் அத்தொகைபாணங்களைத்தூண்டி மேல்வருகின்ற சரங்களைவிலக்கிமீட்டும் நூறுதிவ்வியபா ணங்களைச்செலுத்தி வீரராக்ஷதன்தேரை நடாத்துஞ்சா ரதிசிரத்தைக்கண்டித் தெறிந்தான் உடனே வேறொருசா ரதியை யமர்த்திக்கொண்டு காலாந்தகனையொப்பப் பொங் கிச் சண்முகதேவர் பாததாமரைகளைச்சிந்தித்துஅதிசீக்கி ரத்தில் ஆயிரங்குரூரமாகியகணைகளைச்செலுத்திப்பானு கோபனணிந்திருந்த நவரத்தினமயமாய்ச் சொலித்திருந் த திவ்வியமகுடத்தைப் பொடிப்பொடியாய்த்திசைகளிற் பறக்கும்படிக்கண்டித்துச் சிருங்கநாதஞ் செய்தனன்.

சவுனகாதிரிஷிகளே! மகுடபங்கப்பட்டு முண்டமாய்த் திருவழிந்து மிகவும்வெட்கி நின்றவனைப்பர்க்குமிடத்தி ற் சிகரத்தைஇழந்தமேருவைப்போன்றும் சிரோரத்தின த்தைப்பறிகொடுத்த சர்ப்பத்தைநிகர்த்தும்சூரியனில்லா த வானத்தையொத்தும் கிளைகளைப்போக்கியகற்பகத்தரு வுக்கொப்பாகவும் துணைக்கோடுகளைஇழந்தமதயானையை ப்போலவும் அமங்கலியை நிகர்த்தும் லட்சுமிகரமில்லாம ற் பின்னப்பட்டவன் அதிககோபங்கொண்டு வேறொருதி வ்விய கிரீடத்தைச்சிரத்தில் தரித்துச் சிறித்தன்வில்லில் அளவற்ற கரூரமாகிய பாணங்களைப் பூட்டிப்பிரயோகித் துஜயசாலியாகிய வீரராக்ஷதன் செலுத்தும்பாணகோடி களை விலக்கிமேலும் ஆயிரம்வேகமுள்ள கணைகளைத்தூ ண்டிப் பகைவன்கரத்திற் பற்றியிருக்கின்ற பாரித்தவில் லையுங் கண்டித்தெறிந்து மறுபடியும்வேறொருவில்லையெ டுப்பதற்கு முன்னம் ஆயிரம் பாணங்களைக்கொண்டு தே ரிற்பூட்டியிருந்த குதிரைகளைக்கொன்று அவன்மற்றொ ருதேரிற் பாய்வதன்முன்னம் ஆயிரங்கணைகளைச்செலுத் திக் கரத்திற்பிடித்திருந்த புதியவில்லைவெட்டித்தள்ளிவி றிவரும்போது வீரராக்ஷதனுக்கு அதிககோபமுண்டாய் ப் பிரளயகால ருத்திரனைப்போலக் கொதித்து விழிகள்சி வந்து தீப்பொறிகள்சிதற உருத்துத்தெய்வத்தன்மைபொ ருந்திய வேலொன்றினையெடுத்துச் சுழற்றிக்கரவேகமாய் வீசியபோது பகைவன் நூறுபாணங்களினல் அதனைக்க ண்டித்தனன், உடனே ஜயசாலியாகியவீரராக்ஷதன்காட் டழலையொப்ப மண்டியெரிந்துதேரைவிட்டுநிலத்திற்குதி த்து மல்லயுத்தத்துக்குக் கூவிப்பாய்ந்து பானுகோபனே றி யிருக்கின்றவிரதத்தைச் செண்டைப்போலச் சுலபமா யெடுத்து வானத்தில்வீசியபோதுதேருடன் சுழன்றுகொ ண்டு போகின்ற இராட்சதவீரன் யோசித்துமுன்னம்பிர மதேவன் தனக்குக்கொடுத்திருந்தகூரியவேலையெடுத்துப் பகைவன் பிராணனையுண்டு மீளக்கடவாயென வேண்டிக் கரவேகமாய்க் கடாவியபோது அப்படையானது அதிகம கிமைகளைக்காட்டி அனலையிறைத்துக் கொண்டுபோய்க் கோடையிடியைப்போல மாற்பிற்றுக்கிய மாத்திரத்தில்உ திரங்களைக்கக்கி வீரராக்கதன் நிலத்தில்விழுந்தனன், பா னுகோபனும் பூமியிற் சேர்ந்த மாத்திரத்தில் வேறொரு தேரிலேறி மண்டிபோட்டுட்காந்து மேருவையொத்தபுதி யவில்லொன்றையெடுத்து நாணேற்றிக் குணத்தொனிகா ட்டிச் சோனைமாரியைப்போல அபரிமிதமாகிய திவ்விய பாணங்களைச் சொரிந்து மற்றவீரர்களையும்ஜயங்கொள்ள நினைந்தவனைச் சுழற்காற்றைப்போலச் சக்கிராகாரமாக த் திரிந்துதிரிந்து பூதப்படைகளை வாட்டும்போது நவவீ ரர்களிற் சேர்ந்த வீராந்தகன், வீரமாமயேச்சுரன், வீர தீரன், வீரமாமகேந்திரன், வீரபுரந்தரனெனச்சொல்லு ம் ஐந்துவீரர்களும் தங்கள் தேரைத்தூரத்திவந்து சூரிய னைச்சிறைசெய்த தீரனுகியபானுகோபனைவளைந்துகொண் டு ஒப்பற்றவிற்களைவளைத்துஅதிகதீட்சணியங்களையுடை ய பாணங்களைச் சங்கோபசங்கமாய்மழைத்தூவலைப்போ லச்சொரிந்தும், வேல், சூலம், சக்கரம், பிண்டி, பாலம், மு சலம், கப்பணம், தோமரம், கதைமுதலிய ஆயுதங்களைச் செலுத்தியும் பற்பலவிதங்களாகிய உயுத்தங்களைச் செய் து போராடும்போது பானுகோபனும் இருகுதைகளினு ம் மணிகள்கலகலெனச் சத்திக்கும்படியாய் வில்லிற் கோ டானகோடி குரூரமாகிய பாணவிதங்களைச் செலுத்திப்ப கைவர் தூண்டிய அஸ்திர சஸ்திரங்களனைத்தையும் சின் னபின்னப் பட்டுப்போகக்கண்டித்ததுமன்றியில்கோடை வருஷத்தைப்போலக் கணக்கிறந்தகொடிய பாணங்களைச் செலுத்தி எங்குந்தானுபுலாவும்போது அவைகள்அதிகவு ற்பாதங்களைக் காட்டி பிரசண்டமாருதத்தைப்போல ஆர் ப்பரித்துமின்னல் இடிபுகை தீ இத்தகையகொடுமைகளை விளைத்துக்கொண்டு பாய்ந்து சரீரமுற்றுஞ் சல்லடைக்க ண்களாகத் துளைத்து வாட்டும்போதுமிகவும்நொந்துமன ங்கலங்கித் தாபரிக்கமாட்டாமையால் இருவர்கள் யாதொ ருசெயலுமற்றவர்களாய்த் திப்பிரமைகொண்டு நின்றுவி ட்டனர், ஒருவன்மூர்ச்சித்து விழுந்தனன், மற்றஇருவரு ம் தேரழிந்து வில்லிழந்துபயப்பிராந்தியினல்ஓடிப்போ யினர்.

இவ்விதமாகப் படைவீரர்இலக்ஷர்எண்மர்பூதப்படை கள் நிலைகுலைந்து சின்னபின்னப்பட்டுப் பறக்கும்படிக்கு வெற்றிகொண்டு வீரகாளிபரணிபாடிப்புகழ்ந்து கொண் டாடத்தக்கதாகப் பானுகோபனெதிரின்றிவீரபராக்கிரம சாலியாய் உலவுந் தீரத்தைக்கண்டமாத்திரத்தில் முன்ன ம் சிவகணங்களுக் கழிந்தோடி மறைந்திருந்த இராட்சத ர்களனைவரும் ஜயவுற்சாகங்களுடன் சிருங்கநாதங்கள் அ ட்டகாசங்களைச் செய்துகொண்டு நாற்புறங்களினு மிருந் துவெளிப்பட்டுப் பெருங்கூச்சலிட்டுக்கொக்கரித்துவந்து தங்களரசனைச் சூழ்ந்து ஜயமுண்டாகக்கடவதெனவாழ்த் திக் குலாவியிருக்கவும் இவர்கள் மத்தியிற்பானுகோபன் காலாந்தகனைப்போல ரணக்களமெங்கு மெதிரின்றித் திரி வதைப்புறவணியி லிருந்த நந்திகணத்தலைவராகிய வீர வாகுதேவர்தெரிந்து வெகுசேதியாகவிருக்கின்றதெனக் கோபநகைகொண்டு பிரமன் விஷ்ணுதேடிக்காண்பரியசு யஞ்சோதிப் படிவத்தைப்பெற்ற சிவகுமாரன்திவ்வியசர ணரவிந்தங்களைப் பத்திவிநயத்துடன் சிந்தித்து வாழ்த் திப்போர்த்தொழிலுக்கெழுவதாக மனங்கொண்டவராய்

கொடியமனதையுடைய பானுகோபனிருக்கின்ற இடத்திற் றனதுதேரைத்துரத்திவந்து இந்திரனாதியதேவர்கள் களிக்கவும் தருமதேவதை வேதாகமங்கள்வாழ்த்தவும்வீரலட்சுமியுங் காளியுங் கொண்டாடவும் சுபகரமாகியசகுனங்கள்தோற்றவும் இத்தியாதிய வைபவங்களின்மத்தியில் தங்கக்கட்டுகள் பூண்டுமணிகள் கலக்க ஜயலட்சுமிதாண்டவஞ் செய்திருக்கும் மேருவையொத்ததனுசை இருகுதைகளுஞ்சேரவளைத்துப் பிரசண்டமாருதமும்வடவாமுகாக்கினியும் தியங்கி யொடுங்கவும்சமுத்திரமானது அலைகளைச்சுருக்கி மங்கவும்பரந்திருக்கின்ற அண்டங்களும் அதிலடங்கிய புவனங்களும் தத்தளிக்கவும் திசையானைகள் துதிக்கையைத்தூக்கி வீறிட்டோடவும் டங்காரசத்தத்தைக் காட்டிப்பூதபைசாசங்கள்காக்கைகழுகு பருந்துகள் குலவியிருக்கின்றபோர்க்களத்தை நோக்கிச் சண்டைகொடுக்கவருகின்ற வீரவாகுதேவர் தீரத்தைச்சூரியனைப் பகைத்த ரணரங்கசூரனாகிய பானுகோபன்பார்த்து இவனைமற்றவர்களைப்போலச் சுலபமாகநினைக்கக் கூடாதென நிதானித்தவனாய் எப்போதுமெடாமற்சேமத்தில்வைத்திருக்கின்ற ஒப்பற்றவில்லைத்தாங்கி நாணேற்றிதேவர் மக்கள்முதலாகநடுங்கி ஏங்கும்படிக்குக் குணத்தொனிசெய்து எதிர்த்துநின்றகாலையில் முன்னம் வீரவாகுதேவர்காட்டியடங்காரசத்தத்தைச் செவிகளுக் கினிமையாகக்கேட்டுச் சந்தோஷித்திருந்ததேவர்கள்கொடியதுன்மார்க்கனாகியபானுகோபன் குணத்தொனியின் சத்தத்தைத்தெரிந்தமாத்திரத்தில் வாடித்திகைத்தவர்களாய் இன்பதுன்பங்களைஏககாலத்திற் கண்டனமென்று பேசியிருந்தனர்.

சவுனகாதிரிஷிகளே? நன்னெறிகளிற் சிறந்தவீரவாகுதேவர் நாணொலிக்குச்சந்தோஷித்த விண்ணவர்கள் துர்க்குணங்களைக்கொண்டிருக்கும் பானுகோபனெடுத்த குணத்தொனிக்குக் கிலேசித்ததைப் பார்க்குமிடத்திற்சிறந்த அமுதத்தையுண்ணப்பெற்றவர்கள் விஷத்தைக்கிடைத்த காலத்தில் வருந்துமாறுபோலவும் இன்பஞ்சிறிதுஅதைச்சேர்ந்துவருந்துன்பம்பெரிதெனச் சருவசாதாரணமாக வழங்கிக்கொள்வதைஇங்ஙனம்திருஷ்டாந்தமாகக்கண்டீர்கள் ரிஷிகளே மேற்குறித்தபடிக்கு இருசூரர்களும் நெருங்கியகாலத்திற் பிரமன் விஷ்ணு இந்திரன்தேவர்கள் ரிஷிகளாதியர் இந்தபிரபலச்சண்டையைப்பார்க்கவேண்டுமென்கின்ற விருப்பத்தினால் வானவெல்லைமுற்றும் நெருங்கியிருந்தனர், அக்காலையிற் சூரபதுமன் பிரதமகுமாரனாகியபானுகோபன் நற்குணநற்செய்கைகளையுடையவீரவாகுதேவரைப்பார்த்து இதனைச்சொல்லுகின்றான், உன்னைப் பார்க்குமிடத்தில் வெற்றிமாலைதரித்திருக்கின்ற வேலாயுதத்தினால் என்சிறியதகப்பன் தாருகனையும், கிரவுஞ்சனையுங்கொன்ற சரவணபவனைக் காணவில்லை வராகவுருக்கொண்டு ஆதிதேவனடியைத் தேடப்போனவிஷ்ணுவுமல்லை சராசரப்பிரபஞ்சங்களைப் படைத்துவரும் பிரமனுமன்று எங்களுக்குப்பயந்து பூனையைப்போலப்பதுங்கித் திரிகின்றஇந்திரக் கள்வனுமல்லை ஆதலால் நம்முடையநகரத்துக்குத் தூதாகவந்தவனைப்போலக் காணுகின்றது அப்படிக்கொத்த ஈனத்தொழிலைச் செய்யுஞ்சிறியனாகிய ஆயிரத்தெட்டண்டங்களையும் அரசாட்சிசெய்துவருகின்றஜயவீரனாகிய சூரபதுமன் ஜேஷ்டபுத்திரனாய்த் திசைகளனைத்தையும் வென்று ஜயக்கொடிநாட்டிச் சிறந்ததேவர்களையும் வாட்டிக்கட்டிவந்து சிறைபடுத்தி யிருக்கின்ற வீராதிவீரனாகிய என்னுடனெதிர்த்துப் பயமில்லாமற்சண்டைகொடுக்க வந்தனை எத்தகையனெனினுங் கண்டவுடன் சிங்கராசனை நேர்ந்த யானைக்கூட்டங்களைப்போலப் புறந்தந்தோடும் வெற்றிபரனாகிய என்னுடனெதிர்த்துநின்று போர்செய்யும் நிருவாகமு முனக்குண்டோமுன்னம்என்னையறியாமற் சிலமாயவித்தையின்முயற்சியினால்இந்தப்பட்டணத்திற் பிரவேசித்து இராசபிரபுடீகனாகிய சூரமகாராசன் வீற்றிருக்கின்ற மகாசபையிற்போய் அகன்றமண்டலாதிபனென்னும் எண்ணமில்லாமலிகழ்ந்துபேசியும் என்தம்பியை மதியாமற்கொன்றும்சகலபுவனங்களினுங்கொண்டாடுஞ் சிறப்பையுடைய இராஜதானியாகவிருக்கின்ற இந்தவீரமா மயேந்திரபுரியையும் பலவளங்களுங் குன்றிச்சீரழிந்து போடும்படிக்கிடித்துநகர்த்தியும்பலஅவுணவீரர்களையும் கொன்றுபோயினை இச்சம்பவங்களிலேதாவது என்காதிற்படுமாயின் அன்றைக்கே யுன்னைச் சின்னபின்னப்படக் கண்டித்துப்போடவல்லேன்இக்காலத்தில் நீ யிவ்விடம் வரவும்பெறுவையோ இப்போதுமென்ன முழுகிப்போச்சுது இந்தநிமிஷத்தில் உன்னைவளைத்துக்கொண்டு திகைக்கும்படிக்குச் சாடிஉன்பிராணனை யமலோகங் குடியேற்றுவேன் இதனைச்சத்திய மாகியவசனமாக நினைக்கக்கடவை.

மேலும் என்சவுரியங்கள் உனக்கெவ்வளவுந்தெரியாது அவைகளிற் சிலவற்றைச் சொல்லக்கேட்பாய்நான்பாலபருவத்திற் றொட்டிலிற் பள்ளிகொண்டிருக்கும்போதுபயமற்றுக்கிரணங்களை வீசியகாரணத்தினாற்சூரியனைத்தளைபடுத்தி அவனைவிடுவிக்கவந்த பிரமனிடத்திலும் அவன் படையைப்பெற்றேன் விஷ்ணுவும்என்பேரைச்சொன்னால் திடுகிட்டுவாடுவார் மற்றதேவர்கள்நமக்கடிமையாகவிருப்பர் இத்தகைய ஜயசாலியாக விருக்கப்பட்ட சூரனாகிய நான்இக்காலத்தில்உன்னை ஜயிப்பதினால் அபலனாகிய தூதனைக் கொன்றானென்னும் பழிப்புரையைப் பெறுவதல்லது என்கீர்த்திப் பிரதாபத்துக்குத் தக்கதோஇவையன்றியும் சேனைத்தலைவரைச் சித்திரவதைசெய்து கொன்றும் வீராதிவீரனாகிய உன்துணைவரையும் இலக்ஷரையும் புறந்தந்தோட வெற்றிகொண்டு வலியிற்சிறந்திருந்தபூதவெள்ளத்தை அதாஅதப்படுத்தி மாய்த்தேன்கடையிற்றனிமையிலகப்பட்ட பழம்பழிகாரனாகியஉன்னையுங்கண்டதுண்டப்பட வெட்டிக்கொன்று உன்னையொரு காரியக்காரனாக நினைந்தனுப்பிய பாலசுப்பிரமணியனையும் மடக்கிக்கொண்டு பிரமிக்கும் படிக்குச்சாடிச் சிறியதந்தையைக்கொன்ற பழியைப்போக்கிக் கோபந்தணிவேன்இதுவுமல்லாமல் உங்களை முக்கியமாகநம்பி யிருக்கின்றதேவேந்திரனைப் பிடித்துவந்துபாரவிலங்குபூட்டிக்கொடியசிறையில்வைத்துப் பிரமன் விஷ்ணுவையும் தக்கதண்டனைகளைச் செய்து துரத்துவேன் இப்போது நான்சொன்னகாரணங்களனைத்தையும் சற்றுநேரத்திற்பார்ப்பாய்உங்களாற் றங்கள் வளங்களைப்பெற்று வாழவிருக்கின்ற தேவப்பயல்கள்இந்தக்கொடுமைகளைக்கண்டு வயிற்றினும் வாயினும்அறைந்துகொண்டு துக்கசாகரத்திலழுந்திவாடவிருக்கின்றனரென்று பயமுறுத்தித் தன்பெருமிதங்களையும் வீரபராக்கிரமங்களையும் பேசியதைக்கேட்டு வீரவாகுதேவர்நகைத்து பானுகோபனுக்குமாறுத்தரஞ் சொல்லுகின்றனர்.

வாய்புலர வீண் வார்த்தைகளைப் பேசியாவ தென்ன
சூரனாக விருப்பவன் எவர்கள் வந்தெதிர்த்தாலும்அவர்க
ளுடன் போராடி வென்றுபலருமறியஜயத்தைநாட்டவே
ண்டும் புறந்தந்தவர்களை மடக்கிக் கொண்டு தானுமொ
ரு வீரனைப்போல அலைத்துக் கொல்வது தீராதபழிபாத
க மல்லது வேறுமுண்டோ ஜயசாலிகளாகவிருக்கப்ப
ட்டவர்கள்நான்சூரன்வீரன் அவர்களைக்கொன்றேன்இவர்
களைவாட்டினேனென்றுபேசார்கள் அதனால்தங்களுக்குரி
ய வீரபராக்கிரமந்தேய்ந்துபோகும்போர்முனையிற்றன்ச
வுரியத்தைக்காட்டிப் பகைவரைவென்றுபலராலும்இவன்
சுத்தவீரனென்று புகழ்விரும்புவர் இப்போதுநீபேசியப
டிக்குவீரபராக்கிரம முள்ளவனாகிற் றுரிதமாய்ப் போர்
செய்ய வருவாய்அப்போது உன்சூரத்தையும்சகலரும்ம
தித்துக் கொண்டாடுவரென்று இராசநீதிகளைச் சொன்ன
மாத்திரத்திற் கொடியபாதகனாகிய பானுகோபன் ரவுத்தி
ராகாரமாகக் கோபித்துநல்லகாரியம்சற்றும்எண்ணிக்கை
யில்லாமல் நம்மையொத்தவன் முன்னம் நின்றுவழக்குப்
பேசுகின்ற வுன்பிராணனை வாட்டுவேனெனச்சீறி அதிக
வேகமாகப் பத்துத்திவ்வியபாணங்களை யெடுத்துப்பாரித்
திருக்கின்ற வில்லிற்பூட்டிவிட்ட காலத்தில் மின்னலைப்
போலப் பிரகாசித்துத் தீயையிறைத்துக்கொண்டு வீறிவ
ரும்போது வீரவாகுதேவருந் தமதுவில்லில்அத்தொகை
க்கணைகளைப்பூட்டிவிடுத்துக்கண்டித்தெறிந்துமேலும்நூ
றுபாணங்களைப் பகைவன்மீதிற்றூண்டியகாலத்திற்பானு
கோபனும்நூறுகணைகளைக்கொண்டு அவைகளைவிலக்கிப்
பிறப் பிறப்பிலியாகியசிவகுமாரன்மீதிற்கொடியசரங்களா
யிரத்தைப்போக்கியபொழுது வீரவாகுதேவரும் அவ்வ
ளவுபாணங்களினால் அவைகளைநடுவதுபாதியிற்கண்டித்
தெறிந்துசர்ப்பங்களைப்போன்ற குரூரமாகியபதினாயிரம்
பாணங்களைப் பகைவன்மீதுதொடுத்தகாலத்திற்பாதகனா
கிய விராட்சதவீரன்அதற்குச்சரியான பாணங்களைக்கொ
ண்டவைகளைக்கண்டித்து வடவைக்கொப்பாகியதீட்சண்
ணியமுள்ள நூறாயிரம்பாணங்களை வீரவாகுபேரிற்பொ
ழிந்தான் அத்தொகைக்கணைகளைக்கொண்டுவாட்டிப் பத்
துநூறாயிரதிவ்வியபாணங்களைப் பகைவன்மேற் பிரயோ
கித்தமாத்திரத்திற் பானுகோபனும் அவ்வளவுநாராசங்
களைச்செலுத்திவாட்டிக்கரவேகமாய் நூறுநூறாயிரங்கொ
டியகணைகளைத்தூண்டியபோது வீரவாகுதேவர்சீறிநொ
டிப்போதில் அத்தொகைச்சரங்களைப் பிரயோகித்துச் சி
ன்னபின்னப்படக் கண்டித்தவராய் மேலும்கோடையிடி
களைப்போன்ற நூறாயிரங்கோடி அஸ்திரங்களைத்தூண்
டியகாலத்திற்காசிபன்பேரனானவன்அவைகளின்வலியை
க்கண்டு துரிதமாய்ச் சங்கோபசங்கம் கொடியசரங்களைச்
சர்வசங்காரகாலத்திற் சத்தமேகங்களும் வருஷிப்பதைப்
போலச் சொரிந்துதடுக்கவும் இவ்விதமாக இருவீரர்களு
ம் தனுர்வித்தைகளின் மகிமைகளைக்காட்டிச் செலுத்து
கின்ற பாணகோடிகளானவைபூமியந்தரமெங்கும்பரந்து
திசைகள்தோற்றாமல்மூடி ஜலமிகுத்த சத்தசாகரங்களு
ம் அடைபட்டுச் சுவறிப்போகவும் அஷ்டகுலாசலங்களு
ம் பங்கப்பட்டு மேகமண்டலம் வருணமண்டலம் சூரிய
மண்டலமுதலாக விழிகளுக்குத்தோற்றாமல்நிறைந்து ச
கலபிராணிகளையும்வருத்தியது, இப்படிக்குப் போராடு
கின்ற இருதிறவர்களேறிய தேர்கள் இடசாரிவலசாரியா
கச் சக்கரங்களைப்போலச் சுழன்றுசுழன்று பூவட்டமெ
ங்கும் அஷ்டதிசைகள்முற்றும் சமுத்திரங்கள்மீதினும்
தீவுதீபாந்திரங்களினும்சக்கிரவாளகிரியின்மீதினும்விண்
ணுடுகளினும் அண்டவெல்லைப்பரப்பினும்சுழற்காற்றை
யொப்பவுலாவியும் ஒப்பற்றவிற்களைக்கோலி குணத்தொ
னிகாட்டிச் சோனைமழைக்கொப்பாகதிவ்வியபாணங்களை
ஒருவர்மீதொருவர்சொரிந்தும் அவைகளைவிலக்கியும் வி
ழிகளுக்குத்தோற்றாமல்மறைந்தும் மீளத்தோற்றியும் நி
மைப்போதிற் பற்பலவித வித்தைகளைக்காட்டியும் வீர
ங்களைப்பேசியும் உருத்துப்பார்த்தும் புசங்களைத்தட்டியு
ம் இப்படிக்குச் சகலபுவனங்களினுந் தாமாய்ச்சூறாவளி
க்காற்றைப்போல வளைந்துவளைந்துகொடியபோரைச்செ
ய்துவருங்காலையிற் சீறிப்பாயும்பாணங்களானவை மேலி
ட்டு ஆயிரங்கிரணங்களைவிரித் துலகங்களைவிளக்கிவரும்
சூரியபகவானேறிவரும் ஒற்றைவண்டிலையுடையஇரதத்
திற்பூட்டப்பட்டு நிமைப்போதில் அளவற்றயோசனைப்பி
ரமாணம் பாய்வதாயிராநின்ற ஏழுபச்சைக்குதிரைகள்
மேலும்சோடசகலைகளைவிரித்துஇரவைவிளக்குஞ்சந்திர
னைத்தாங்கிப் பிரசண்டமாருதத்தினு முந்திச்செல்லும்
வேகமுள்ளவிமானத்தினும் திசைக்களிற்றின்மீதினும் நி
னைந்தவிடங்களிற்போகவல்ல கருடகாந்தருவர்சித்தவித்
தியாதரர் கின்னர்முதலாயினர்மீதினும்பாய்ந்துலாவும்இ
வ்விதச் சித்திரப்போரைச்செய்துவரும் வீராதிவீரர்கள்
விழிகள்கொவ்வைக்கனியைப்போலச்சிவக்கவும் ஆலகால
விஷமும் வடவாமுகாக்கினியும் தாபாக்கினியும்காட்டமு
லும் ஒடுங்கியடங்கத்தக்க கோபாக்கினிசொலிக்கும் மன
தையுடையவர்களாய் வாயுவேகத்தினும் மனோவேகத்தி
னுமேலிட்ட கதியைப்பெற்றவர்களாய்த் தேராளிகளில்
முந்திப்பேசவல்ல வீரபராக்கிரமசாலிகளாகவிருக்கின்ற
இந்தவிரண்டுசூரர்களும் போராடுகின்றதிசையின்னதெ
ன்று எத்தகையராலுங் குறிக்கப்படாது.

அவர்கள்சொரிகின்ற பாணவிதங்களைக்கணிப்பதற்கு
ஆதிசேஷனாலு முடிவதன்று இப்படிக்குச் செலுத்துகி
ன்ற அஸ்திரசஸ்திரங்கள் பெருத்து மேகசஞ்சாரமாறு
மலிருக்கின்றவானத்திலும்நிறைந்துமேலிடுகின்ற தருண
த்தில் அத்தலத்திலிருந்து சமர்க்களவேடிக்கைகளைப்பா
ர்த்திருந்த தேவர்கூட்டங்கள்தியங்கிமதிமயங்கி இனியிவ்
விடத்திருப்போமாகில் என்னபாடுபட வருமோவெனப்
பயந்து மேலுலகங்களிலோடி யொளிக்கவும் இதுவுமல்
லாமல் அவர்கள்செலுத்தும்பாணங்கள் பாய்வதினாற்கோ
டைகாலத்திற் களிப்புள்ளநிலம்வெடித்துக் காட்டுவதை
ப்போலப் பூமண்டலமுழுதும்பிளந்துபாதலத்தைக்காட்
டவும் அண்டகோளகையைத் துளைத்து மேல்வெளியி
லோடவும் சத்தசாகரங்களினும் பெரும்புறக்கடலினும்
நிறைந்து ஜலப்பரிசமறவுறிஞ்சி நிலத்தை வெளியிடமா
கக்காட்டவும் சர்வசங்காரகாலத்திற் சராசரப்பிரபஞ்சங்
களைத் தகித்தொடுக்கவல்ல வடவாமுகாக்கினியின்நாவை
யரிந்தும் இவ்விதமாக யெங்கும்நிறைந்து அதிகவுற்பாத
ங்களைச்செய்தன, சவுனகாதிரிஷிகளே? பகைவர்வயிரியா
கிய வீரவாகுதேவரும் தேவகாதகனாகிய பானுகோபனு
ம்அக்காலத்திற்செய்த கொடியபோரின்பெருக்கத்தை எ
த்தகையராலும் விரித்துச்சொல்லக்கூடுவதன்று அளவி
றந்தகணைகளையோயாமற் பிரயோகித்து வருகின்றகாரணத்
தினால் அவர்கள்கரங்களிற்பற்றியவிற்களானவை சக்கரத்
தைப்போல வட்டாகாரமாய் விளங்கியது.

இந்தப்பிரகாரம் சண்டைசெய்து வருகின்றவேளையிற் சூரியனைத்தளைபடுத்திய வீராதிவீரனாகியபானுகோபன் பவுத்திரமனதையுடைய வீரவாகுதேவர்பொழிந்த பாணசமோகங்களைக் கொடியகணைகளைக்கொண்டுமாற்றிமேலுங்கரவேகமா யிருநூறு திவ்வியபாணங்களைக் கடாவிக் கரத்திற்பற்றியிருந்த பாரித்தவில்லையு மிருதுண்டமாக வெட்டித்தள்ளிச் சிங்கத்தைப்போலக் கர்ச்சித்தவுடனே வீரவாகுதேவருக்கு அதிககோபம்பிரவேசித்துத் துரிதமாய் வேறொருவில்லையெடுத்துவளைத்து நாணேற்றிச்சகலபுவனங்களுங் கிடுகிடென்றுநடுங்கும்படிக்குக் குணத்தொனிகாட்டி ஆயிரங்கொடியபாணங்களைப்பூட்டிக் கரவேகமாகச்செலுத்திக்கொடியபாதகன்கரத்தில்மேருவைப்போல விளங்கியிருந்த தனுசைக்கண்டித்துச் சிக்குப்படுத்தியபோதுபானுகோபன் வடவாமுகாக்கினியைப்போல மண்டியெரிந்து வேறொருவில்லையெடுத்துவளைத்துஅர்த்தசந்திரபாணங்களாயிரத்தைத்தூண்டிச் சிவகுமாரன் வலியமார்பைப்புண்படத் தாக்கியபோதுசற்றுவருந்தினவராய் ரவுத்திராகாரமாகக்கோபித்து அதிசீக்கிரத்திற்கூர்மையுள்ளஏழுபாணங்களைப்பூட்டிப் பிரயோகித்துப்பானுகோபன்சிரத்திற் சூரியனைப்போலப் பிரகாசித்திருந்த வயிரமுடியைப் பொடிப்பொடியாக்கியபோது இராட்சதவீரன் மனம்வருந்தி விடசர்ப்பத்தைப்போலச்சீறிப்பொங்கினவனாய் நவரத்தினமயமாகிய கிரீடமொன்றைப்பாலபருவத்திற் சூரியனைப்பற்றியதுபோலவெடுத்துச் சிரத்திற்றரித்துக்கொள்ளுவதற்கு முன்னம்கூறியஅலகைவாய்ந்த ஆயிரந்திவ்வியபாணங்களை வேகமாகச்செலுத்திவயிரம்போன்ற மார்புக்குக்காவலாகப்பிகிந்திருந்தஅபேதரத்தின கவசத்தைப்பிளந்து துகள்படவீசினன், இந்த ஜயத்தைக்கண்ட தருமதேவதை மனமகிழ்ந்து ஆனந்தக்கூத்தாடி வீரன்சவுரியத்தையும் புயவலிமையையும் புகழ்ந்துவாழ்த்தவும் சூரியனும் தன்பகைவனுக்கடுத்த பங்கத்தைக்குறித்து நகைமுகனாய்க்களித்தனன், இவ்விதமாக இவர்கள்கொண்டிருக்கின்றமகிழ்ச்சியைப்பானுகோபன்பார்த்துவெட்கி நல்லகாரியம் நிமைப்போதில் இவர்கள்வீறுப்பையடக்கிவெற்றிபெறுவேனெனத் துணிவுகொண்டு காலாந்தகனைப்போலக்கோபித்துத்துரிதமாய்க்கொடியபாணங்களாயிரத்தைத் தன்வில்லிற்சந்தித்து வீரவாகுதேவர் நெற்றிக்குக்குறிகொண்டு செலுத்தியகாலத்திற் புகையுமனலையும் வீசிக்கொண்டு வேகமாய்வந்து நுதலிற்றைக்கியமாத்திரத்தில் உதிரம்பெருக்கெடுத்தோடியதெப்படியிருந்ததென்றாற் பிராதகாலத்தில் உதயகிரியின்மீது பாலசூரியன்தோற்றியதைப்போலக் காட்டியது சவுனகாதிரிஷிகளே! அந்தவீரவாகுதேவர் சூரத்தையும்மனவுறுதியையும் என்னசொல்வேன் நெற்றியிற்பட்டகாயத்தினாற் சிறிதும்வருந்தி மனந்தளர்ச்சிகொள்ளாமற் றைத்திருக்கின்றபாணங்களை முட்களைப்போலப்பிடுங்கி யெறிந்துபோட்டு வீராவேசங்கொண்டவராய்த் தட்சணத்திற் றன்வில்லிற் கணக்கிறந்த தீட்சணியமாகிய சரங்களைப்பூட்டிக் கொடியபாதகனாகிய பானுகோபன்முகத்தி லாயிரம்மார்பிலாயிரம் பருவதாகிருதியாய் வாகுவலயங்கள்தரித்தோங்கியிருக்கின்ற புசங்களொன்றுக் காயிரமாகக்குறிகொண்டு பிரயோகித்தவுடனே சர்ப்பங்களைப்போலச்சீறியிரைந்து தீயைப்பெருக்கித் தடைபடாமலோடிவந்து தங்களைச்செலுத்திய தானங்களிற்பட்டுத்தடாரித்துருவிப்போயின, அக்காயங்களில் உதிரமானது ஊற்றெடுத்தோடும்போது மதிமயங்கி கரத்திற்பற்றியிருந்த வில்லை நழுகவிட்டுக் களைத்துச்சோர்ந்து தேரில்விழுந்தனன்.

இப்படிக்குச்சோபித்து கோபக்கனலானதுமனதில்மூண்டு பாதிக்க ரத்தமானது தேகமெங்கும்விளங்கக் கிடப்பதெப்படியிருந்ததென்றால் கோடைகாலத்தில்மூங்கில்களொன்றுடனொன் றுராய்ந்துண்டாகிய தீயினாற்புதர்கள் புற்கள்பற்றி யெரிந்திருக்கின்ற பருவதத்தைப்போலவும் அந்திக்காலத்தில் மேற்குத்திசையிற்றோற்றும்செவ்வானம்நழுகிவீழ்ந்ததையொத்தது, இவ்விதமாகஇராஜாதிராஜனாகிய சூரபதுமன் குமாரனுக்குச் சம்பவித்தகேட்டை இராட்சதவீரர்கள் கண்டவுடன் திகிற்பட்டுமோசம்வந்ததுபோற் காணுகின்றதென்று வருந்தினவர்களாய் மானம்பாதிக்கச்சீறிக் கோபமானது மனதைவாட்டத்தங்கள்இரதங்களைத் துரத்திக்கொண்டுவந்து வெற்றிமாலைபுரளும் வேலைத்தாங்கியிருக்கின்றவீரவாகுதேவனைச்சமுத்திரத்தைப்போல வளைத்துக்கொண்டு தேரிலிருந்தும்மதயானையின் பிடரியில்நின்றும் புரவிகளின்மீதினுமிருக்கப்பட்ட ஜயசாலிகளும் கைமிஞ்சி-வாள்-வேல்-சூலம்-சக்கரம்-தண்டம்-தோமரம்-பிண்டிபாலம்-கப்பணம் - கழுமுள்முதலிய ஆயுதங்களையும் கோடைபிடிகளையொத்த கொடியபாணவிதங்களையும் சூரியனைவளைத்த விருளைப்போல அமோகமாய்ச்சொரிந்து ஆர்ப்பாடங்களைச்செய்தனர், அக்காலத்திற் றிருக்கயிலையைப்போற்றிவரும் நந்திகணத்தலைவராகிய வீரவாகுதேவர் காலாந்தகனைப்போலச்சங்கோபசங்கமாகிய தீட்சண்ணியமுள்ளசரங்களைத் தமதுவில்லிற்பூட்டிச் சோனைமழையைப்போலப்பொழிந்து பகைவர்செலுத்திய படைகளனைத்தையும் சின்னபின்னப்படக் கண்டித்தெறிந்து மேலும் அனந்தகோடி குரூரமாகிய பாணங்களைக் கரவேகமாகச்செலுத்தித் தம்மைச்சூழ்ந்து கொடியபோரைச்செய்திருந்த நால்வகைச்சேனைகளைத் துத்துமூருகச்சங்கரித்துப் படைத்தலைவரையுங் கைகாலாடவொட்டாமற்கலக்கிச் சராசரப்பிரபஞ்சங்களைத்தகிக்கவல்ல வடவாமுகாக்கினியைப்போலச் சாடத்தொடங்கியதெப்படியென்றால் சிரங்களைக்கண்டித்தும் மண்டைகளைத்திறந்தும் மூளைகளைச்சிதறியும்கவசத்தைப்பொடித்தும் மார்பைக்கீறியும் தோளைச்சரித்தும் வீரகண்டையணிந்த கால்களைக்கண்டித்தும் கரத்திற்பற்றிய விற்களைத்துணித்தும் வீரங்கள்பேசிய வாய்களைப்பிளந்தும் உருத்தேவிய அஸ்திரசஸ்திரங்களைத் துகள்கண்டும் இவ்விதமாக இராட்சதப்படைகளைமாய்த்தும் சொர்னமயமாகிய அச்சைமுறித்தும் வண்டில்களையுருட்டியும் மோட்டைச்சிதைத்தும் நவரத்தினமயமாகிய கொடுங்கைகளைப் பொடிசெய்யும் தேரணிகளை அதப்படுத்தியும் இரத்தினமயமாகியமுகபடாமணிந்தமத்தகம்பனையையொத்த துதிக்கைகள் உரலையொத்த கால்கள் சின்னபின்னப்பட்டிறையமதயானைகளைமாய்த்தும்சொர்னச்சிலம்புகள்பூண்டு தத்தித்தாவிப்பாயும் கால்கள் தலைகள் வால்கள் தறிபட்டிறையப் புரவிப்பந்திகளை நாசஞ்செய்தும் இவ்விதமாக இரதகஜதுரகபதாதிகளையும் சங்கரித்தபோதினும் வீரவாகுதேவர்செலுத்தும் பாணகோடிகளின்வேகமடங்காததாய் வானத்திற்பாயும் திசைகளினூடும்வனாந்திரங்கள் மலைகள் தீவுதீபாந்திரங்களிற்றுருவியும் அணைகளைச்சிதைத்துச் சமுத்திரத்தைப்பெருக்கியுங்கப்பலைப்

போல நீர்ப்பெருக்கிலோடியும் மேகத்திற்ருவிஜலத்தை
ப்பருகியும் விண்ணுடுகளிற்பறந்தும் பூமண்டலமுற்று
ம்நிறைந்தும் சூரியசந்திரர்காந்தியையடக்கியும் சமுத்தி
ரங்களைமுடிப் பூமியைப்போலக்காட்டியும் இவ்வித உற்
பாதங்களைச்செய்துபோகின்ற வீரவாகுதேவர்செலுத்திய
பாணங்களி லொவ்வொன்று ஆயிரகோடி அவுணர்சிரங்
களைக் கண்டித்தோடியபோதினும் அதின்வேகமடங்காம
ல் அக்கினியைப்போலவும் பிரசண்டமாருதத்தையொத்
தும்வீறியோடும், இவையன்றியும் அளவற்றதவங்களைச்
செய்து சிறந்தவரப்பிரசாதங்களைப் பெற்றிருக்கின்ற வீ
ராதிவீரர்களாகிய இராட்சதராஜர்கள் சிரங்களைக்கல்லு
மென்றறிந்து வேகமாயோடிச் சூரபதுமன் வாசமாயிரு
க்கின்ற மயேந்திரபுரியிற்சேர்ந்து அவர்களுக்குரியதேவி
யர்கரங்களிற்போட்டுப் போகுமென்றால் கந்தசுவாமிச
கோதரனாகியவீரவாகுதேவர் மகிமைகளைநம்போலிகளா
ல்அளவிட்டுச்சொல்லப்படுவதோ.

இத்தன்மையாக உயுத்தபூமியெங்கும் சுழற்காற்றை
ப்போலத்திரிந்துதிரிந்து சங்கையற்ற பாணவருஷங்களை
ப்பொழியுமுன்னிலையில் தேரணிகளனைத்தும் துகள்பட்
டும் யானைவரிசைகள்முற்றும் அதப்பட்டும் வேகமுள்ள
குதிரைப்பந்திகள் சின்னபின்னப்பட்டும் இராட்சதவீரர்
கள்காலாள்களுடன் கண்டதுண்டமாக வெட்டுண்டும்ர
ணக்களத்திலொருவனாயுங் காணக்கிடையாமற் போனப
டியால் சர்வசங்காரமூர்த்தியைப்போல வீரவாகுதேவ
ரொருவருந் திரிந்தனர். எவ்விடங்களினும் பிணமலைக
ள்தோற்றவும் உதிரப்பிரவாகமானது அலைகளைமோதியி
ரைந்து பூமியெங்குமூடவும் ரணக்களத்தில் விழுந்துகி
டந்ததேர்வண்டில்கள் யானைப்பிணங்கள் முதலாகஅவ்
வெள்ளத்தில் மகரமச்சங்களைப்போல் அழுந்தியும் மிதந்
தும்போகின்றது, மேலும்கருங்கடலைச் செங்கடலாக்கித்
திமிதிமிங்கலங்கள்முதலிய மச்சங்களுக்கு விருந்திட்ட
து, இதுவுமல்லாமல் அவ்வெல்லையெங்கும்பற்பலகோடி
கவந்தங்கள்கூத்தாடவும் பூதபைசாசங்கள் காளிக்கூட்ட
ங்கள் நிணமாம்சங்களைத் தெவிட்டவுண்டு வீரன்புகழை
ப்பாடித்திரியவும் கழுகு பருந்து காக்கைகள் திருப்தியா
கப் புசித்து வானவெல்லையில் பந்தலிட்டுலவவும் நாய்
நரிகள் பிணங்களைப் பிடுங்கித்தின்று வூளமிட்டுலாவ
வும் இப்பிரகாரம் இரதகஜ துரகபதாதிகள் மாண்டு ச
ண்டையு மொழிந்ததையும் காலயமனைப் போன்ற பா
னுகோபன் வீரவாகுதேவர் பாணங்களின் காயத்தினா
ல் தேரில் மூர்ச்சித்துக்கிடப்பதையும் முன்னம் இராட்
சதவீரர்கள்போருக்காற்றமலோடிஒளித்திருந்த பூதப்ப
டைகள்கண்டவுடன் சத்துருக்கள்பூண்டற்றதென்றுமன
நடுக்கமொழிந்துகளித்துத் தயிரியங்களுடன் இனிமதி
றைவனைச் சேரக்கடவோமென்று ஒருவரை யொருவர்
கூவியழைத்து ஒன்றுபடச் சேர்ந்து சமுத்திரத்தைப்
போலவிரைந்துகொண்டுவரவும் பானுகோபனும் களைத்
திருந்தபடைத்தலைவரும்எண்மரும்இலக்ஷரும்உணர்ச்சி
பெற்று மிகுந்தவீராவேசங்களுடன்வீரவாகுதேவரைச்
சேர்ந்துகளித்திருந்தனர். அக்காலையில் வீராதிவீரன்பா
ணங்களின் காயத்தினால்மதிமயங்கிப் பிரேதத்தைப்போ
ல விழுந்துகிடந்தபானுகோபனுக்குப் பஞ்சேந்திரியங்க
ளுந் தத்தமதுநிலைகளிற்சேர்ந்து உணர்ச்சியுண்டாய்விழி
களைத்திறந்து சுற்றிலும் பார்த்துத் தன்னைச்சூழ்ந்திருந்
த சதுரங்கசேனைகளின் பெருக்கைக்காணாதவனாய் நாய்
நரிகளோடிப் பிடுங்கித்தின்றுலவும்பிணமலைகளைநோக்கி
மேலும்எதிரில் வீரசிங்கத்தைப்போலச்சொலித்துக்கொ
ண்டுதிரிகின்றரணரங்கசூரனாகிய வீரவாகுதேவரைப்பா
ர்த்து கடலைப்போல விரைந்துகொண்டு நம்மைச்சூழ்ந்தி
ருந்தநால்வகைச் சேனைகளையும் உருத்தெரியாமற் கொன்
றவனிவனென நிதானித்துவலியும்வீரமும் ஒருவனுக்கு
ல்ல நானேவீரனென்று சொல்லத்தகாதெனத்தீர்மானித்
துக் கொண்டவனுப்சூரனென்பதுஇந்த வீரனுக்கடுக்கு
ம் மற்றொருவரைச் சொல்லப்போகாதெனக் கொண்டாடி
இதனைநினைக்கின்றனன் இத்தினவரையில் என்னுடனெ
திர்த்துப் போர்செய்தவர்கள் எத்தகைய வீரர்களெனி
னும் மாண்டும்முதுகுகாட்டி யோடினவரல்லது வெற்றி
கொண்டு திரும்பினவர்கள்கிடையாது இக்காலத்திலென்
வீறுப்பை யடக்கித் தனுர்ப்பாணியாக வீறியிருக்க இவ
னைக்கண்டேன் சூரியனைச்சிறைபடுத்திய வீரனென்றுசக
லருங்கொண்டாடவிருந்த என்வலியும் வீரமும்வெகுநே
த்தியாகவிருக்கின்றதென்று தன்னைவெறுத்துக்கொண்டு
மானம்பாதித்து மனதையலைக்கக்கோபமேலிட்டுவடவை
யைப்போலப்பொங்கி ஒருநாழிகைப்போதிற்சிவகுமாரன்
தூதனைச் சின்ன பின்னப்படக் கண்டித்துக் கொல்லாமற்
போவேனாகில் இந்தவுயிரைத் தாங்கிவாழவிரும்பேன்வீ
ரபராக்கிரம சாலிகளாகிய அவுணர் குலத்திற்பிறந்தவனு
மல்லேன், ஒப்பற்றஇந்தவில்லுடன் அக்கினிப் பிரவேச
மாவேனென்று கொடிய பிரதிக்கினையைச்செய்து ஆயிர
த்தெட்டண்டங்களுக் கதிபனாகியசூரபதுமன்குமாரனா
வன் பூர்வத்திற்றிருப்பாற்கடலிலுதித்தஆலகாலவிஷமா
னது பரமேஸ்பரர் முன்னம்நேர்ந்ததைப்போலத்தன்தே
ரைத் துரத்திக்கொண்டுமதயானைக்கு வயிரியாகியவீரசிங்
கம்போன்ற புசபலபராக்கிரமசாலியாய் நிற்கின்றவீரவா
குதேவரிருக்கின்ற ரணக்களவெல்லையைச் சேர்ந்து ரவுத்
திராகாரமாக மண்டிபெரிந்து மேருவைப்போலத்தன்கர
த்தில் விளங்குகின்ற தனுசைவளைத்து நாணேற்றிக் குண
த்தொனிசெய்து ஆயிரம்முத்தலைப் பாணங்களைப்பூட்டி
வீரவாகுதேவர் சிரத்துக்குந் தோளுக்கும் மார்புக்குங்கு
றிகொண்டு செலுத்தியவேளையிற் சிடசிடத்ததொனிகளு
டன் எரிந்துபுகைந்து மேலிட்டுவருவதைவீரன்கண்டுது
ரிதமாய் அத்தொகைப்பாணங்களைக்கொண்டுமீறிவரவொ
ட்டாமற் கண்டதுண்டப்படக் கண்டித் தெறிந்துபோட்டு
மேலும்ஆயிரந்திவ்விய பாணங்களைச்சூரன்குமாரனுக்கி
லக்காகத் தூண்டியபோது கொடியபாதகனானவன் துரித
மாய் அத்தொகைப் பாணங்களைப்போக்கிச்சின்னபின்ன
ப்படப் பறக்கடித்ததுமன்றியில் மேலும்ஆயிரம்கடூரமா
கிய சரங்களைக்கடிதிற் பூட்டிச் செலுந்திவீரவாகுதேவ
ரேறியிருந்த இரதத்தைப் பொடிபடுத்திக்குதிரைகளைவெ
ட்டிக் தன்னிச்சாரதித்தலையையுங் கண்டித்துச்சிருங்கநா
தஞ்செய்தனன்.

இதைக்கண்டதேவர்கள் மனம்வாடித் திகைத்துப்பார்
த்திருக்கும்போது வீரவாகுதேவர்சற்றும்அதருமல்பெ
தருமல் சிங்காசனைப்போல மற்றொருஇரதத்திற்பாய்ந்
து மண்டிபோட்டுட்காந்தவராய் தமது ஒப்பற்றகாண்டீ
பத்திற் பதினாயிரம் தீட்சணியமுள்ள கணைகளைச்சந்தித்
துப்போக்கி பானுகோப னாரோகணித்திருந்த மேருவை
யொத்ததேரைப்பொடிப்படுத்தி அளவற்றபுரவிகளைக்கால்

மாடு தலையாடாக விழுந்துபுரளச்செய்துசாரதியையும்பி
ன்னப்படுத்தி அவன்கரத்திற்பற்றியிருந்தபாரித்தவில்லை
யும், படாலுமெனவெட்டித்தள்ளினர், இதைவானத்தில்
வேடிக்கைபார்த்திருந்த தேவர்கள்கண்டமாத்திரத்தில்மு
கமலர்ச்சியுடன் மனமகிழ்ந்து தேவதுந்துபியைமுழக்கிப்
பரிமளமிகுந்த கற்பகமலரைத்தூவி வாழ்த்தினர், இப்ப
டிக்குக் களியாடலைக்கொண்டாடும் தேவர்களைச் சிறித்து
ரிதமாய்ப் பக்கத்திலிருக்கின்ற சேமத்தேர்களிலொன்றிற்
பாய்ந்துவீற்றிருந்தவனுய் வில்லைமண்டலாகாரமாய்வளை
த்து அதிசீக்கிரத்தில்விடநாகங்களைநிகர்த்துச்சீறித்தீயை
யிறைத்தோடும் எழுநூறுபாணங்களைத் தொடுத்துக் கா
தளவுமிழுத்துப் பருவதாகிருதியாகப் பூரித்திருக்கும் பு
சங்களையுடைய வீரவாகுதேவர் மார்பிற்றைக்கும்படிக்கு
ப் பிரயோகித்து அட்டகாசஞ்செய்த காலையில்அந்தச்சர
ங்கள் வெளிப்பட்டவுடன் சர்ப்பங்களைப்போலச்சீறித் தீ
யைப்பெருக்கிச் சிடசிடத்த தொனிகளைக்காட்டிஅதிவே
கமாய்வந்து வயிரத்தையொத்தமார்பிற்சுறுக்குச்சுறுக்கெ
ன்று பாய்ந்தமுன்னிலையில் அதுபரியந்தஞ் சோபமென்
பதுதெரியாத வீரவாகுதேவர் சற்றுவருந்தித்துக்காநுப
வத்தைக்கண்டு அதிககோபங் கொண்டவராய்ச் சூரியனே
ச் சிறைசெய்தஇந்தப்பாதகன்சிரத்தைக்கண்டித்துநாய்-ந
ரி-கழுகு பருந்து -காக்கைக்கு விருந்திடுகின்றேனென்று
யமனைப்போலவுங்காலருத்திரனைநிகர்த்தும் உருத்துச்சீ
றித் தமது வீரவில்லிற் குரூரமாகியபதினுன்குவயிரவா
ளிகளைச் சந்தித்து அபிமந்திரித்துத் தூண்டிப்பானுகோ
பன் கரத்தில்மந்தரகிரிக்கொப்பாகப் பாரித்துவிளங்கி யி
ருந்த வில்லைக்கண்டித்து மேலுங்கரவேகமாய்ஆயிரந்தி
வ்வியபாணங்களைப்போக்கிப் பகைவன்ஆரோகணித்திரு
ந்த நவரத்தினமயமாக அலங்கரித்திருக்கின்ற தேரை வ
ண்டில்-அச்சு-மச்சு-குத்துக்கால்-கொடுங்கைமுதலியஉறு
ப்புகளனைத்தும் சின்னபின்னப்பட் டிறையும்படிக்குக் க
ண்டித்து அதிற்பூண்டிருந்த புரவிப்பந்திகளைத் தலை-கா
ல்-வால் பின்னப்படத்தறித்துத் தேர்ப்பாகனையுந்தலைத்தி
துருள வெட்டித்தள்ளியுங் கோபந்தணியாதவராய்விஷத்
தொவையலிட்டுக் கூர்மையாய் சொலித்திருக்கின்றநூறுக
ணைகளைக்கொண்டு அவுணராசபுத்திரன் தரித்திருந்த வ
யிரக்கவசத்தைப் பொடிப்படுத்தி மார்பையும்பிளந்துவா
யிலைப்போலத் தோற்றச்செய்தனர்.

சவுனகாதிரிஷிகளே, அந்தவீரன்மனவுறுதியை யென்
னசொல்வேன் உதிரப்பிரவாகமாய்ப் புண்பட்டிருக்கின்
றகாயத்தைஎவ்வளவுஞ்சட்டைபண்ணுதவராய்வருந்தியி
ளையாமல் திடசித்தத்துடன் வீரசிங்கத்தைப்போலப்பக்
கத்திலிருக்கின்ற சேமத்தேரிற் பாய்ந்தகாலையில வீரவா
குதேவர் கரவேகமாய் ஆயிரம்அர்த்தசந்திரபாணங்களை
ப் பிரயோகித்து பிளந்திருக்கின்ற மார்பின்மூலமாக உரு
விமுதுகிற்கட்டியிருக்கின்ற அட்சயத்தூணிரத்தையறுத்
தெறிந்தபோது பானுகோபன் மனந்தளர்ந்துஇந்தசூரனை
வில்வித்தையின்முயற்சியினுல் வெல்வதுமிகவுமரிதுஇனி
யென்னசெய்வோமென்று சற்றுயோசித்துஒருதுணிவை
க்கொண்டவனுய்த் தனக்குப்பூர்வத்திற் றேவதேவோத்த
மனுகிய சிவபிரான்கடாட்சித்திருக்கின்ற மோகனுஸ்திரத்
தைக்கரத்திற்கொண்டனன், அதன் மகிமைகளைச்சொல்ல
க்கேட்பீராக. எத்தகைய வீரபராக்கிரம சாலிகளின்மீதி
ற் செலுத்தப்படுமாயினும் நெருங்கியவுடன் அவர்கள்
பஞ்சேந்திரியநிலைகளைப்பேதித்து அறிவையழித்துப்பிரே
தத்தைப்போலச் சோபித்துக் கிடக்கச்செய்பவல்லநுஇத்
தகையசிறப்புள்ள படைக்குத் தூபதீபநைவேத்திய விதி
களைமானசபூசையில்நிறப்பிமந்திரத்தை உச்சரித்துஓதே
வாஸ்திரமே துரிதமாகப்போய் ஜன்மவயிரியாகத்தோன்
றி வருத்துகின்ற தூதனையும் அவனைச் சூழ்ந்திருக்கின்ற
படைத்தலைவர் பூதவெள்ளங்களறிவைப்போக்கி வாட்டித்
திரும்பக்கடவாயென்றுபோற்றிச் செலுத்திய காலத்தில்
அந்தவெற்றிப்படையானது உக்கிராகாரமாகக்கோபித்து
ஒற்றை வண்டிலையுடையதேரில்விளங்கிக் கிரணங்களைப்
பரப்பிஉலகங்களை மகிழச்செய்துலாவுஞ்சூரியனொளியை
யடக்கிக்காடாந்தகாரமாய் இருளைப்பெருக்கி பூமியிலிரு
க்கின்ற பல்லுயிர்களும் நடுநடுங்கித் தெளிவில்லாமல்அந்
தகனைப்போல மயங்கிவாடித் தத்தளிக்கத்தக்கதாகச்சீறி
நகைத்துக்கொண்டுவரும் மோகனுஸ்திரத்தின் மகிமைக
ளையும் வலிமையும் பூதப்படைகள் கண்டவுடன் துக்கசா
கரத்தி லழுந்திப் பயப்பிராந்திகொண்டு மனந்திடுக்கிட்டு
வாடிமூர்ச்சித்தனர், அவர்களுக்குத்தலைவராக விருந்தவீ
ரர்களும் பித்தனைப்போல மதிமயங்கித் தேரைவிட்டுநில
த்தில்விழுந்து சோர்ந்தகாலையில் வீரவாகுதேவருக்கிளை
யவராகிய எண்மரும் தங்கள்மேல் வீறிவருகின்றபகைவ
ன் பாணத்தைத் தடுக்கவகையற்றவர்களாய்க் கரத்திற்பற்
றியிருந்தவிற்களையும் பாணங்களையும் சோரவிட்டுக்களை
த்துவிழுந்தனர், இவ்விதமாயைகளைப் பெருக்கிமோகன
ப்படையானது சீறிவருகின்றகாலையில்வீரவாகுதேவர்இ
ந்தப்படையைஎந்தப்பாணத்தினுல் வெல்லலாகுமென்று
யோசித்து யாதுந்தோற்றுமலிருக்கின்றபோது பூர்வத்தி
ல் ஆலகாலவிஷம்பரந்து வந்ததைப்போலச் சகலரும்புக
ழத்தக்க மோகனப்படையானது வேகமாய்ப்பாய்ந்துவீர
வாகுதேவர்உணர்வையழித்துத்தள்ளியது.

இவ்விதமாக எண்மருமிலக்ஷரும் சேனைத்தலைவர்க
ளும் வாடிக்கிடப்பதையும் அவுணவீரர்வாசமாகவிருக்கி
ன்ற வீரமாமயேந்திர புரியைக்கலக்கி ஜயசாலியாகத்திரு
ம்பிய வீரவாகுதேவர் நிலைக்கண்பட்டுகற்றூணைப்போல
ச் சோர்ந்திருப்பதையும் சூரியகாதகனுகியவீரன்கண்டும
னக்கவலையொழிந்து மகிழ்ந்தவனுய் என்னுடனெதிர்ப்ப
வர்க ளொருவருமில்லாமற் சகலரையும் வென்றேனென்
னும்வீறுப்பினுல்மேருவைப்போலப்புசங்கள்வளர்ந்தோ
ங்க மதயானையைப்போலக் கம்பீரமாய் நின்றுநகைத்துஜ
யவுற்சாகத்துடன் ரணக்களத்திற் றிரிந்துபார்த்துச் சண்
டைமுனையில்வெல்லுதற்கரிய புசபலபராக்கிரம சாலியா
கிய வீரவாகுதேவரும்மற்றபடைத்தலைவர்கள்பூதசேனை
கள் சோபித்திருக்கின்றனர், காலதாமதஞ் செய்யாமல் இ
னியென் வில்வன்மையினுல்இவர்களைக்கண்டதுண்டப்ப
ட வெட்டிக்கொல்லக்கடவேனெனத்தீர்மானித்துக்கொண்
டுதங்கக்கட்டுகள் பூண்டுமணிகள்சத்தித்திருக்கின்றபாரித்
த வில்லைவளைத்துச் சங்கோப சங்கமாகியதிவ்வியபாணங்
களைச் சோனைமழையைப்போலச்சொரிந்து ரணக்களமெ
ங்கும்நெருங்கி விழுந்துகிடக்கின்றபூதசேனைகள் முதலா
னவர்களைச் சல்லடைக்கண்களாகத் துளைத்தும் சின்னபி
ன்னமாகக் கண்டித்தும் இத்தகைய கொடுமைகளைச் செ
ய்துவருகின்ற காலையில்நடந்தசெய்திகளைச் சொல்லக்கே
ட்பீராகப் பாசறைவீட்டிற்பிரமன்,விஷ்ணு,இந்திரன்,மு
தலாகிய தேவர்கள் போற்றிச் சூழ்ந்திருக்க நவரத்தின

மயமாகிய சிங்காதனத்தில் வீற்றிருந்தசரவணபவன்தன்னை நீங்காமற் காத்திருக்கும் வீரவாகுவும் மற்றதுணைவரும் பூதப்படைகளும் கேடுபடாத மயக்கத்தைப்பெற்றுச் சத்துருவினுற் படும் பாதைகளைத் திருவுளத்திற் றெரிந்தவராய்ச் சராசரப்பிரபஞ்சங்களனைத்தினும் பரிபூரணமாய்நிறைந்து நடிப்பிக்கும் பெருமையையுடைய சிவசுபிரமணியதேவர் அதிசீக்கிரத்திற் சகலவலிமைகளையும் பெற்றிருக்கின்ற மோகனாஸ்திரமொன்றைச் சிருஷ்டித்து அந்தப்படையைப்பார்த்து இவ்வனுக்கிரகத்தைச்செய்வதாயினர், போர்க்களத்திற் பகைவன்செய்தவஞ்சகத்திற்பட்டுமயங்கிக் கிடக்கின்ற நமதுதுணைவர்படைத்தலைவர்பூதச்சேனைகள் மையலைப்போக்கிப் பழையபடிக்குத்தெளிவுபெறச்செய்து கொடியபாதகனாகிய பானுகோபன்செலுத்திய பாணத்தின்வலியையழித்து மீளக்கடவாயென்று கட்டளையிட்டுப் போக்கிய தட்சணத்தில்அப்படையானது வானத்தி லெழுந்துகோடி சூரியப்பிரகாசமாக விளங்கிஅதிகமகிமைகளைக்காட்டி நடந்துமதிமயங்கிஒருவர்மீ தொருவராகவிழுந்துஅசைவற்றுக்கிடக்கின்ற விசாலமாகியரணக்களத்தை நெருங்கியமாத்திரத்திற் கொடியமனதையுடைய பானுகோபன் தூண்டியமாயப்படையானது திடுக்கிட்டு நடுநடுங்கித் தன்வல்லபத்தினுற் சிவசுப்பிரமணியதேவர் சேனைகளுடைய அறிவைக்கலக்கி மயக்கியிருந்த மாயைப்பெருக்கனைத்தினையும் கிரகித்துக்கொண்டு இனி சற்றுநேரம் இவ்விடத்தி லிருப்போமாகில் மோசம்நேருமென்று துரிதமாய்ச் சிவகணங்களிருக்கின்றவெல்லையைத்தாண்டிப்பானுகோபனிடத்திற்போய்ச்சேர்ந்தது.

இவ்விதமாய் மாயப்படையானது தன்வலிகுன்றிக் குறைந்து மீண்டகாலையில் புசபலபராக்கிரம சாலிகளாகிய வீரவாகுதேவருந் துணைவர் இலக்ஷர்படைவீரர் பூதசேனைகளுடன் மயக்கத்தை நீங்கித் தெளிவுண்டாய் முன்னினும் பதின்மடங்கு வலிபெற்றெழுந்து கோடிசூரியப்பிரகாசமாய் ரணக்களத்தில்உலாவியிருக்கின்றசண்முகதேவர்செலுத்திய மோகனாஸ்திரத்தைத் தரிசித்தமாத்திரத்திற் சந்தோஷசாகரத்தில் முழுகிக்கரங்களைக்கூப்பிக்கொண்டு ஜயஜயபோற்றிபோற்றி யெனத்துதித்து விழிகளில் ஆனந்தவாரி பெருகப்பலவிதங்களில் வாழ்த்தித்துன்மார்க்கனாகிய பானுகோபன் செலுத்திய மாயப்படையினுற் சோர்ந்து கிடந்த நாமெல்லோரும் இந்தப்படைக்கரசின் பெருமையினுல் தெளிவுபெற் றெழுந்தனமெனத்தெரிந்தவுடன் சகலவீறுப்புகளுமடங்கி யொடுங்கிமெய்ப்பத்திவிளங்க இதனையோசிக்கின்றனர், பகைவனுல்நாமெல்லோரும் புத்திமயங்கிச் சோர்ந்தகாரணத்தைப்போதநாயகனாகிய குமாரதேவர் திருவுளத்திற் றெரிந்து கிருபைகூர்ந்தவராய் நமதுமையலையொழித் திரட்சிக்கும் பொருட்டு இந்தத்தெய்வீகப் படையைச் செலுத்தினரெனநிதானித்துப் பன்னிருபுயாசலங்களைப் பெற்றிருக்கின்ற பாலசுப்பிரமணியதேவர் பாததாமரைகளைச் சிந்தித்துப் போற்றிப்பயபத்தியுடன் திக்குநோக்கித் தீர்க்கதண்டன்சமர்ப்பித்துக்கர்த்தன் குணதிசயங்களை வாழ்த்தி அஷ்டதிசைகளும் செவிடுபடத் தக்கதாகத் துதித்து ஆனந்தக்கூத்தாடுகின்றபோது மோகனாஸ்திரமானது ரணக்களத்தைவிட்டுமின்னலைப்போலச் சடுதியிற்றிரும்பி குமாரசுவாமியாரிடத்திற்சேர்ந்தது, பாலசுப்பிரமணியர் கிருபாகடாட்சத்தினுல் மையலையொழிந்து உணர்ச்சி பெற்றெழுந்த பூதப்படைகளானது சிருங்கநாதம் அட்டகாசங்களைச்செய்துகொண்டுவீரங்களைப்பேசிக்கரங்களைப் பிசைந்து மோசக்காரன்வஞ்சகன் இவனைவிடலாகாது அடியுங்கோள் கட்டுங்கோள் கொல்லுங்கோளென்று சீறிக்கோபாவேசங்களுடன் சண்டைகொடுக்க மேலிட்டுநடக்கின்ற தருணத்தில் வீரசிங்கத்தையொத்த ஜபசாலியாகிய வீரவாகுதேவர்பகைவன்வஞ்சகத்திலகப்பட்டு மயங்கியிருந்த மானமுங்கோபமும்மனதைவருத்த ரவுத்திராகாரமாகக்கொதித்து இதை யெண்ணுவதாயினர்.

இந்தச்சத்துருவானவன் ஒருவஞ்சகப்படையின்பெருமையினுல் நம்மெல்லோரையும் மயக்கிவீற்றியிருக்கின்ற கருவத்தைஇந்தநிமிஷத்தில்வாட்டிக்கொன்றுகோபந்தணிவேனெனநிதானித்து தமக்குப் பாலசுப்பிரமணியதேவர் கொடுத்திருக்கின்ற பாசுபதாஸ்திரத்தைத்தொடுக்கநினைந்துகரத்திலெடுத்தபோதுபானுகோபன்அப்படையின்பெருமிதங்களைமதித்து இதனை நினைப்பதாயினன்,தேவதேவோத்தமனாகிய சிவகுமாரன் செலுத்திய மோகனாஸ்திரம் ஜகசோதிமயமாய் வானவழிக்கொண்டு வந்ததையும் அதற்குமுன் வீற்றிருந்த தன்படையின் வல்லபமடங்கியொடுங்கித்திரும்பிவிட்டதையும் கோபாவேசத்துடன்வீரவாகுதேவர் யத்தனித்திருப்பதையும் திஷ்டாந்தமாகக் கண்டனம் இனிநம்மாலாகவேண்டுவதென்ன விருக்கின்றதென்று மனத்தளர்ச்சிகொண்டு வீரபராக்கிரமசாலியாகிய கந்தசுவாமியின் துணைவன்மீதிற்கோபித்துச்சண்டைகொடுக்கப்போக மனமில்லாமற்ஜயவுற்சாகத்தையும் வீரத்தையும் புயவலிமையையும்மறந்து துக்கசாகரத்தி லழுந்தி மனவாட்டத்துடன் நினையாதஎண்ணங்களையோசிப்பதாயினன். சிலநேரத்திற்குமுன்னம் என்பாணவலிமையினுற் சத்துருக்களனைவரையும்மதியைமயக்கிப்பிரேதங்களைப்போல ரணக்களத்திற்கிடத்தினேன் உடனேமுன்னினும் அதிகவீறுப்புடனெழுந்து வளைந்துகொண்டு கொடியபோரைச்செய்ய உத்தேசிக்கின்றனர். பரமசிவகடாட்சம் இப்படிக்கிருக்குமாகிற் றனிமையில்நிற்கின்றஎன்னுல் இனிமுடிக்கத்தக்க காரியமென்ன விருக்கின்றது அப்படிக்கல்லவென்றுஇன்னமும் சிலதந்திரங்களைக்கொண்டு போராடுவோமென்று நினைந்தபோதினும் நமது பகைவன்கடைப்பிடியாகவிருக்கின்ற பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகிக்கநினைந்து கரத்திற்கொண்டிருக்கின்றுன்இனிமந்திரபூர்வகமாகச் செலுத்துவானுயிற் றடையில்லாமலென்னைக்கொன்று பிராணனையுண்டுபோகும் இதைத் தடுத்துப்போராடி ஒருவிதஜயத்துடன் திரும்பலாமென நினைப்பேனாகில் சிவபிரான் முன்னங்கடாட்சித்திருக்கின்ற பாசுபதத்தைக்கொண்டுவராமல் இந்தப்போரைச் சுலபமாகவெண்ணி வந்துவிட்டேன் மற்றெந்தத் தந்திரத்தினுலும் இந்தத்தூதனைவெல்வதரிது இவன்மிகவும் பலாட்டிகனாகவிருப்பதாற் றுரிதமாய் நகரத்துக்குப்போய்ப் பாசுபதாஸ்திரமுதலிய தெய்வபாணங்களனைத்தையுஞ் சேகரித்துக்கொண்டுவந்து இவனைஜயிப்பது உத்தமமாகவிருக்கின்றது சற்றுநேரந் தாழ்ப்போமாகில் மோசம்வரும் இவையன்றியில் வேறொருஉறுதியைக் காணேனெனத் தீர்மானித்துப் பானுகோபன் தட்சணத்திலொரு மாயமந்திரத்தை உச்சரித்து அதன்முயற்சியினுல் அரூபியாய் நவரத்தினமயமாக விளங்கிக்கொண்டிருக்கின்ற தன்தேரைவிட்டு வானத்திற்பாய்ந்து மேகவடிவாய்அதி

சீக்கிரத்தில்மயேந்திரபுரியைச்சேர்ந்தனன், இதைக்கண்
டமாத்திரத்திற் றப்பியிருந்த இராட்சதர்களனைவருந்தி
கைத்து மனவாட்டத்துடனேடிப்போனார்கள், இச்சம்ப
வங்களை வானத்திலிருந்த தேவர்கள்பார்த்து உத்தரியங்
களை மேலெறிந்து முதல்நாள் ஜயம் நம்மதுநம்மதென்று
கூவிக்கூவித்துள்ளிச் சந்தோஷசாகரத்திலமிழ்கி இனி
மேலும் வீரவாகுதேவருக்கு வெற்றியுண்டாகக்கடவதெ
ன்றுவாழ்த்தி ஓ! வீராதிவீரனே? சூரன்குமாரன்உமது
சவுரியபராக்கிரமத்துக்குத் தாபரித்து நிற்கமாட்டாமல்
வானவழிக்கொண்டோடி நகரத்தில்மறைந்தனன். அந்தி
ப்போதும்நேர்ந்தது நாளையத்தினம் வருவானாகில்விட்டு
விடாமல்மடக்கிச் சாடிக்கொண்டு எங்கள்மனவருத்தத்
தைப் போக்கவேண்டுமெனபஞ்சகற்பகளைமலர்கவாரிவா
ரியிறைத்தார்கள்.

இதுநிற்கப் பானுகோபன் ஜயசாலியைப்போலவில்லை
க்கரத்திற்கொண்டு நின்றதையும்பின்பு மாயமாய்வானத்
தில்மறைந்துபோனதையும் வீரவாகுதேவர்பார்த்துப்பா
தகன் தப்பித்துக்கொண்டுபோய்விட்டனனென்கின்றகோ
பாவேசத்துடன் கட்டுப்பட்ட மதயானையைப்போலவும்
காலாந்தகனுக்கொப்பாகவும் சீறிநிற்கின்றகாலையில் இக்
காரணங்களைத்தெரிந்த துணைவரும் இலக்ஷரும் பூதவீ
ரர்களும் பாதகன்வஞ்சகன் வலியற்றோடினான் நாமெல்
லோரும்போய்ச் சண்டாளனைத் தேடிப்பிடித்துக்கட்டிக்
கொண்டு வருவோமென் றெத்தனப்படுவதைவீரன்கண்
டு தம்பியர்முதலானவர்களை அருகிலழைத்து இதனைச்
சொல்லுவார், பேடியைப்போல மானாபிமானமில்லாமல்
மரணபீதிகொண்டோடிப்போன சத்துருவைத்தொடர்ந்
துகொல்வது வீரருக்கடுக்குமோ, மேலும் ஜயப்பிரதாப
மாகவுமிராது ஆதலாற்போர்விரும்பி யின்னமொருத
ரம்வருவானாயில் முன்பின்பாராமற் சத்தியமாய்க்கொல்
வேன் இனிகோபத்தைத் தணிவீர்களென வீரன்பேசிய
நீதிமார்க்கங்களிற்கட்டுப்பட்டு நல்லதுஎங்கேதப்பிப்போ
கின்றான், நாளைக்கேமுடித்துப்போடுவோமெனச்சம்மதி
த்திருந்தனர். இந்தஜயத்தைக்கண்ட பூதப்படைகள் சந்
தோஷமிகுதியினாற் பருவதங்களைப்போலப் பூரித்திருக்
கின்ற கரங்களைக்கொட்டிக்கூத்தாடி அண்டங்களதிரஆ
ப்பரித்துக் களித்திருந்தனர்,அக்காலத்திற் சூரியபகவா
ன் அஸ்தமானகிரியைச்சேர்ந்த தெப்படிக்கிருந்ததென்
றால் இன்றையதினம்போர்முடிந்தது இனிசண்டைநடக்
கப்போகிறதில்லை ஜன்மப்பகைவனாகிய பானுகோபன்வ
லியிழந்தோடினான், வீரவாகுதேவர் சேனைகளுடன்பாச
றையைச்சேர்வார், நாமும் இரவுமுற்றுஞ் சவுக்கியமாக
விருந்து நாளைக்குவந்து சண்டையைப்பார்ப்போமென்
றெண்ணி மறைந்ததைப்போலவும் செவ்வானமும் அத
னிடையில் நட்சத்திரங்களும் விளங்குவதைப் பார்க்குமி
டத்தில் லட்சுமிவாசஞ்செய்யுஞ் செந்தாமரைப்புஷ்பத்
தைப்போன்றும் அதனிடத்திருந்திறையும் முத்துகளை
நிகர்த்துக்காட்டவும் சந்திரனுதயஞ்செய்ததைப் பார்க்கு
மிடத்தில் தாருகாவனரிஷிகள் சிவபிரானிடத்திற் கோபி
த்துச்செலுத்திய நகுவெண்டலையைப்போலத் தோற்றிய
து, இவ்விதச்சிறப்புகளைக்காட்டும் அந்திப்பொழுதுநேர்
ந்தமாத்திரத்தில் துணைவர் இலக்ஷர் படைத்தலைவர்கள்
பூதச்சேனைகள்சூழ்ந்துபோற்றிவரத்தக்கதாகபுசபலபரா
க்கிரமசாலியாகிய வீரவாகுதேவர் ரணபத்திரகாளி நடி
த்திருக்கின்ற போர்க்களத்தைக்கடந்து ரணபேரி-ஜயபே
ரி-வெற்றிச்சங்கமுதலிய வாத்தியங்கள் ஜயம்ஜயமென்று
முழங்கிவரப் பாசறையைச்சேர்ந்து தேரைவிட்டிறங்கித்
துணைவர்முதலியோர் பின்தொடர்ந்துவரச் சபாமண்டப
த்தைக்கண்டு பிரமன், விஷ்ணு, தேவேந்திரனாதியர்போ
ற்றிச் சூழ்ந்திருக்கச் சிங்காதனத்திலெழுந்தருளி யிராநி
ன்ற சிவசுப்பிரமணியதேவரைநெருங்கிச் சேவித்துக் கர
ங்களைக்கூப்பிநின்று தான்ரணக்களத்தைச்சேர்ந்ததும்பா
னுகோபன் கணக்கிறந்தசயின்னியங்களுடன் வந்துகொ
டியபோரைச்செய்து கடையிற்புறந்தந்தோடியதையும் ச
விஸ்தாரமாக விண்ணப்பஞ்செய்துகொண்டதனைத்தையு
ம்பாலசுப்பிரமணியதேவர் விரும்பிக்கேட்டு பரிவாய்ச்ச
கோதரனே? யின்றையதினம் பானுகோபனுடனெதிர்த்
துஅரிய சண்டைகளைச்செய்தபடியால் மிகவும் வருந்தி
னைஉன்துணைவர் முதலானவர்களுடன் இருப்பிடங்களை
ச்சேர்ந்து சவுக்கியமாக விருக்கக்கடவாயெனத்திருவாய்ம
லர்ந்தபோது செலவுபெற்றுக்கொண்டு வெளிவந்துபூத
சேனைகளை அவர்களுக்குரிய இடங்களிற்செலுத்தித் தா
மும்மற்றவீரர்களுடன் விடுதிகளிற்சேர்ந்தனர், சவுனகா
திரிஷிகளே? இனிமகதயிஸ்வரியச் செல்வத்தைக்கொண்
டிருக்கின்ற வீரமாமயேந்திரபுரியில் நடந்தசெய்திகளை
ப்பேசுவோமென்று சூதபுராணிகர் சொல்லத்தொடங்கி
னர்.

வீரகாளி பரணிபாடிக் களித்துலாவுகின்ற போர்க்கள
த்தில் வீரவாகுதேவருக் கழிந்தோடியபானுகோபன்மன
தில்அளவற்ற துக்கமும் பழியும் மானமும்நிறைந்துபா
தித்துவருத்தத்தனக்குரிய இராசசின்னங்க ளனைத்தையு
ம்இழந்தவனாய் இராஜாதிராஜன் வீற்றிருக்கின்ற நகரத்
திற்போகாமற் றன்வாசஞ்செய்யும் அரண்மனையைச்சே
ர்ந்துஊனமடைந்தவனைப்போல வருந்தித் தலையைக்கவி
ழ்ந்துமந்திரி பிரதானிகளுடன் கலந்து வார்த்தையாடம
னமில்லாமலும் சேனைத்தலைவர்களையழைத்து மேல்நடக்
கவேண்டிய காரியங்களுக்குக் கட்டளையிட நினையாமலும்
சபாமண்டபத்திற்போய் நவரத்தினமயமாகியசிங்காதன
த்திலிருந்து அரசுசெலுத்த வேண்டாமலும் அரம்பை-
ஊர்வசி-திலோத்தமை-மேனகை-முதலாகியதேவகன்னி
யர் மயிலைப்போல நடித்துங் குயிலையொப்பத் தேவகான
ங்களைப்பாடுவதையுங் கண்டுகளிக்க விரும்பாமலும் இர
திக்குச் சமமாகிய சுந்தரமுள்ள தேவியர் முகாரவிந்தங்க
ளைப்பார்த்து இன்சொற்களைப்பேசி ஆலிங்கனஞ்செய்யு
ங்கியாபகத்தைக்கொள்ளாமலும்ஊடியிருந்தமங்கையரை
த்திருத்தியடைவிக்கக் கருதாமலும் சப்பிரகூடமஞ்சத்தி
னிடத்திற்பள்ளிகொள்ள விஷ்டமில்லாமலும் நித்திரை
யைவெறுத்து இரவுகழிந்து சூரியனுதயமானவுடன்சது
ரங்கசேனைகளையுங் கூட்டிக்கொண்டுபோய்ப் பிரகாசம்
பொருந்திய வேலைத்தாங்கியிருக்கும் பாலசுப்பிரமணிய
க்கடவுளையும் வீரவாகுதேவர்முதலிய படைவீரர் பூதக
ணங்களையும் மடக்கிக்கொண்டு கொடியபோரைச்செய்து
சின்னபின்னப்படக்கண்டித்துவெல்லுகின்றதற்குவேண்
டியதந்திரவுபாயங்களை வேறொருகியாபகங்களுமில்லாம
ல் ஆராய்ந்துகொண்டு தாமரையிலையிற்பட்டலையும் நீர்த்
துளியைப்போல மனம்நிலைபெறாமல் கவலைகொண்டுவரு
ந்தியிருந்தனன், இவ்விதசவுக்கியத்திற்பானுகோபனிருக்
கின்றகாலையிற் சமர்க்களத்தில்நடந்தவிசித்திரங்களையெல்

லாம்பார்த்திருந்த தூதர்கள்வேகமாயோடிவந்து பட்ட
ணத்தைச்சேர்ந்து இராஜாதிராஜனாகிய சூரபதுமன்வீற்
றிருக்கின்ற நகரத்திற்போய்ச்சக்கிரவர்த்தியைக்கண்டுசே
வித்துகரங்களைக்கூப்பி முகப்பொலிவழிந்து மனவாட்ட
த்துடன் இதனை விண்ணப்பஞ்செய்கின்றனர்.

அகன்றமண்டலாதீஸ்வரனே கேட்டருள்க, தேவரீர்தி
ருக்குமாரன் பலவெள்ளஞ்சேனைகளுடன்ரணக்களத்தை
ச்சேர்ந்து வெற்றிமாலைபுரளும் புசபலபராக்கிரமசாலி
யாகிய வீரவாகுவுடனெதிர்த்து அகோரயுத்தங்களைச்செ
ய்து ஜயசாலியாகிய துணைவர் இலக்ஷர் படைவீரர் பூத
ச்சேனைகளுடன் சின்னபின்னப்படவாட்டிக் கடையிற்ற
னியனாய் இவ்விடம்வந்துசேர்ந்தான், அப்படிக்குத் திரு
ம்புவதற்குச் சிலஹேதுவுண்டோவென்னமோ அடியோ
ங்களுக்குப் பூர்த்தியாகத்தோற்றவில்லை இதன்காரணங்க
ளை விசாரணைசெய்யுமிடத்திற் றேவரீர்சித்தத்துக்குவிசி
தமாகும் பானுகோபன் திரும்பியபின்பு மின்னலையொப்
பவிளங்குகின்ற வேலாயுதக்கடவுள் தூதனும் சேனைப்
பெருக்குடன் துணைவர்முதலானவர்கள்போற்றிவர ஜய
வுற்சாகத்துடன் ஜயபேரி மங்கலவாத்தியங்கள்முழங்கத்
தக்கதாகப் பாடிவீட்டைப்போய்ச்சேர்ந்தான், இதுகளை
நாங்கள்பார்த்துவந்தோமென்று வேவுக்காரர்குறிப்பாகச்
சொன்னதைச் சூரன்நிதானித்துப்பார்த்துச் சத்துருக்க
ளுடன் போர்செய்துவெல்லத் திராணியில்லாமல் தன்கு
மாரன் திரும்பிவிட்டதைத் தெரிந்துகொண்டமாத்திரத்
தில் வடவாமுகாக்கினியும் ஆலகாலவிஷமும் வெப்பமட
ங்கிப் பதுங்குவதாகக் கோபங்கொண்டு விழிகளிற்றீயெ
ழப்டார்த்துப்புகையும் அனலும்பெருகப்பெருமூச்செறி
ந்து நகைத்து இதனைச்சொல்லுவான், துணைவனையும் பி
ள்ளைகளையும் படைத்தலைவனையும் மிகவும்பிராணபதமா
கவிருக்கின்ற சுற்றத்தாரையும்நம்பி இப்படிக்கொத்தகடி
னசண்டையை வெற்றிபெறக்குறித்தனுப்பலாகாது இ
தைமுன்னமே தீர்க்காலோசனைசெய்துதகுந்தபிரயத்தன
ங்களைச்செய்யாமற்போனேன் ஆயிரத்தெட்டண்டங்களை
யும் நூற்றெட்டுயுகங்களாக எதிரின்றி அரசுசெலுத்திவ
ந்தேன் அப்படிக்கொத்த கீர்த்தியுள்ள இந்தஅவுணமர
புக்கு இக்காலத்தி லொருகுற்றம்வந்துநேர்ந்தது இனியொ
ருவனையும்நம்பிப் போருக்கனுப்பமாட்டேன் பாற்பெரு
க்கத்திற் பிரைகுத்தியதைப்போல இந்தப்பழிப்புரையை
ச்செவிகளிற்சுடும்படிக்குக் கேட்கலாச்சுது ஆதலால்அள
வற்ற ரதகஜதுரகபதாதிகளைக் கூட்டிக்கொண்டு நாளைய
த்தினம் நானேபோய்ச் சிவகுமாரனாகிய கந்தனையும்அவ
னைச்சூழ்ந்திருக்கின்ற வீரர்களையும் மடக்கிக்கொண்டு சி
ன்னபின்னப்படச்சாடி துரத்திவிட்டு ஜயவுற்சாகத்துட
ன் திரும்பக்கடவேன் தூதர்களேபதனமாய்காத்திருக்கக்
கடவீர்களெனக் கட்டளையிட்டமாத்திரத்திற் சேவித்து
வெளிவந்திருந்தனர், அதன்பின்பு சத்திராதிகளைவென்
று கீர்த்தியைநாட்டவேண்டுமென்கின்ற கியாபகத்துடன்
அதற்குவேண்டும் முயற்சிகளை நினைந்துநினைந்துமற்றகா
ரியங்களை மறந்தெப்போ பொழுதுவிடியப்போகின்றதெ
ன்று எதிர்பார்த்து நித்திரையையிழந்து மனந்தாபரியா
மல்அலைச்சற்பட்டு எண்ணுதெல்லாமெண்ணியெண்ணி
ச்சூரபதுமன்வருந்தியிருந்தனன், அவ்விரவானதொழிந்
துசந்திரன்மறைந்து நட்சத்திரங்கள்மழுங்கிப்போனதெ
ப்படிக்கிருந்ததெனில்,எதிர்ந்தசத்துருக்களைச்சின்னபின்
னப்படவாட்டி ஜயம்பெறநினைந்திருக்கின்ற சுத்தவீரர்க
ளுக்குரீடித்தும் வீரமற்றஹிருதயத்தையுடையவர்களுக்
குக்குறுகியும் அவ்விரவுதோற்றவும்தம்பநிசமேதராகவி
ருப்பவர்களருகினும் நிற்கமனமில்லாமற் றங்கள்மனதுக்
கினிய மங்கையைத்தேடித் திரிகின்ற காமுகனைப்போ
லக்கழிந்தும் தென்திசையைப் பரிபாலனஞ்செய்திருந்த
இரவென்னும் அரசனானவன் பகற்கிறைவனாகிய சூரிய
ன்கிரணகாந்திகளை விரித்துவர யத்தனித்திருப்பதைக் க
ண்டமாத்திரத்திற் சந்திரனென்னும் குடையானதுமுன்
போக நட்சத்திரக்கூட்டங்களாகிய சேனைகளுடன்ஓடிப்
போனதைப்போலமறைந்தும் இருளென்னும்பகையைக்
கணவனாகிய சந்திரனானவன் கரத்தினால்நீக்கிப் புணர்ந்
தின்பமுற்று நீங்கியகாலத்திற்சூரியன்வருவானெனத்தெ
ரிந்து நாணத்தினால் முன்னிகழ்த்தியிருந்த இருட்படாத
தையுடுத்திக்கொண்டு இரவென்னுங்கன்னிகை யோடிப்
போனதைப்போலவும் இராத்திரிகாலங்கழிந்தது.

## இரண்டாநாட்சூரபதுமன்யுத்தப்படலம்.

கங்குல்போந்திடுதலுங்கணபணப்பன்னக
துங்குறுதகலவேநோற்றுமாலேந்திடுஞ்
சங்கமாய்மதிசெலச்சக்கரப்படையெனத்
துங்கமோடெழுதல்போற்றோன்றினன்பரிதியே.

வாரீர்சவுனகாதிரிஷிகளே இப்பிரகாரம்இராக்காலம்நீ
ங்கிச் சூரியனுதயமானதெப்படிக்குக் காட்டியதென்றால்
இராகுகேதுவென்னும் பாம்புகள்விழுங்கி யலைப்பதை
யொழிந்து களித்திருக்கும்படிக்குநினைந்து அரியதவங்க
ளைச்செய்து மகாவிஷ்ணுவின்கடாட்சத்தினாற் சந்திரன்ச
ங்கமாய்முன்செல்லவும் சூரியன்சக்கராயுதவடிவுகொண்
டுவெளிப்பட்டதைப்போல உதயஞ்செய்தனர், இவ்வித
மாகச் சூரியன்கீழ்த்திசையிற்றோற்றுவதற்குமுன்னம்சூ
ரபதுமன் நவரத்தினமயமாகிய அம்சதூளிகாசயனத்
தைவிட்டெழுந்து ஸ்தானபானமுதலிய நித்தியகருமங்
களை முடித்துக்கொண்டு பரிசனங்கள் குடைகள் வெண்
சாமரைகள் ஆலவட்டங்கள் முதலாகிய இராஜஉபசாரங்
களைச் செய்துவரத்தக்கதாக அரண்மனையைக்கடந்துநவ
ரத்தினமயமாக விளங்கிக்கொண்டிருக்கும் சபாமண்டப
த்திலெழுந்தருளி மந்திரிபிரதானிகள்சேனைத்தலைவர்கள்
முதலியசகலரும் பணிந்துபோற்றச்சிங்காதனத்தில் வீற்
றிருந்தவனாய்த் தன்குமாரன் நேற்றையத்தினம் பெற்று
வந்த அபஜயத்தையும் அதனாலுண்டாகும் பழிப்புரை
யையும் நினைந்து மனதிற்கோபாக்கினிபெருகப்பெரிமூச்
செறிந்து இனிசண்டைசெய்ய யாரையும் செலுத்தமாட்
டேன் சேனைகளைக்கூட்டிக்கொண்டு நானேபோய்ப்பகை
வர்கள் வலியையும் வீரத்தையும்வாட்டிவெற்றிகொண்டு
திரும்பக்கடவேனென நிச்சயித்து எக்காலத்தினுமழியா
த கீர்த்தியைப்படைத்திருக்கின்ற சூரபதுமனானவன்தன
க்கெதிரில் கரங்களைக்கூப்பிக்கொண்டு நிற்கின்ற தூதர்க
ளிற் கோடானகோடி பேரைக்கூவிச் சத்தசாகரங்களின்
மத்தியிற்றோற்றும் தீவுதீபாந்திரங்களில் வாசமாயிருக்கி
ன்ற நமதுசேனைகளனைத்தையும் இந்த நிமிஷத்திற்கூட்
டிக்கொண்டு வரக்கடவீர்களெனக் கட்டளையிட்டவுடன்

மகாபாக்கியமென்றுவணக்கிப்போய்இராட்சதவீரர்களிருக்கின்ற விடங்களைச்சேர்ந்துஇராஜபரமேஸ்வரன்பணிவிடையைச் சொன்னமாத்திரத்திற் போர்கிடைத்ததென்னும் மனஉற்சாகங்களுடன் இரதகஜதுரக பதாதிகளாகிய நால்வகைச் சேனைகளுஞ் சேர்ந்துநாறுயிர வெள்ளத்தொகைகொண்ட சயின்னியங்கள் வெளிப்பட்டுசூலம்- கணிச்சி தண்டம்-தோமரம்-குலிசம்-கப்பணம்-பிண்டி-பாலம்-சக்கரம்-கேடகம்- குந்தமுதலான படைகளையும்பாரித்த விற்களையும், கொடியபாணவிதங்களையும் அபரிமிதமாகத் தாங்கிக்கொண்டு நடக்கும்போது அவர்களுக்குத் தலைவர்களாகிய அவுணவீரர்கள் சர்வாயுதபாணிகளாய்ப் பாரித்ததேர்களில் வீற்றிருந்து போற்றிவருகின்ற காலையில் அச்சுமையைத்தாங்க மாட்டாமல் பூமியானதுநெளிந்து நெளிந்து தத்தளிக்கவும் ஆதிசேஷன்ஆயிரஞ் சிரங்களும் வருந்தித்தாங்கி விஷங்களை கக்கிக்கொண்டுபரதவிக்கவும் இவர்கள் ஆரவாரஓசையினுற் றிசைகள்செவிடுபட்டுத் தியங்கவும், அக்காலத்திலெழுந்ததூளிபடலமானது படிந்துசத்தசாகரங்களும் சேறுய்க்கலங்கவும்ரணபேரி-ஜயபேரி-வெற்றிச்சங்கம் சின்னமுதலிய போர்ப்பறைகள் அண்டங்களதிர முழங்கவும்வெண்பட்டுக்குடைகொடி துவசங்களெங்கும் நிறைந்துநிழலைச்செய்துவரவும்தேர்களோடுங் கெற்கரத் தொனிகளினுலும் மதயானைகள்வீறிடுமுழக்கத்தினுலும் குதிரைகள் கனைப்பின்சத்தத்தினுலும் தேவர்கள்திகிற்பட்டு என்னவிளையுமோவென்றுநடுநடுங்கிவாடவும் இவ்வித ஆடம்பரங்களுடன்பெரும்புறக்கடலைப்போல எங்கும்பரந்து வீரமா மயேந்திரபுரியைச் சேர்ந்து சமுத்திரகோஷ்டமும் நாணும்படிக்கு வாத்தியங்களை முழக்கி ஆர்ப்பரித்தனர்.

அக்காலத்திற் றூதர்களோடிச் சபாமண்டபத்திலிருக்கின்ற சூரபதுமனைப்பணிந்து இராசாதிராசனே சேனைகளனைத்தும்வந்து சேர்ந்ததென விண்ணப்பஞ்செய்தமாத்திரத்தில் மகாசபையைக்கடந்து வெளிவந்துமகம்மேருவுக்குச் சமமாகப் பலநிலைகளைப்பெற்றோங்கியிருக்கின்ற நவரத்தினமயமாகிய கோபுரத்தின் மீதிலேறிச் சக்கிரவர்த்தியானவன் நாலுபக்கங்களினும் விழிகளைப்பரப்பிச்சூரியக்கிரணங்களும் பாயவிடமில்லாமல் நெருங்கிச் சிருங்காதங்கள் அட்டகாசங்களைச் செய்துகொண்டு பட்டணத்தைச் சூழ்ந்திருக்குஞ் சேனுசமுத்திரத்தின் பெருக்கைப்பார்த்து மனதைவாட்டி யிருந்தவருத்தங்களை யொழிந்து வாகுவலையங்கள் தெறித்து நவரத்தினங்களும் பலதிசையிற் சிதறும்படிக்குப் புசங்கள் பூரித்தோங்கவும் சத்துருக்க ளனைவரையும் வெற்றிகொண்டவனைப்போலச் சரீரம்விம்மிக் களித்து விழிகளுக்களவுபடாமற் சருவசங்காரகாலத்திற் பெருகும் வெள்ளத்தைப்போல நிற்கின்ற வீரர்கள் பெருக்கத்தைமனத்திருத்தியாகப்பார்த்துபகைவர் மீதிற்றுரிதமாய்ப்போகும் எண்ணங் கொண்டவனுய்ச் சூரியனையொப்ப சொலித்துக்கொண்டிருக்கும்கோபுரநிலைகளைக் கடந்திறங்கிப் போய்க்கோபம் பிரவேசித்தகாலத்தில் தாய்தந்தையரெனப் பார்க்காமற்கொன்றுதின்னுங் கடினசித்தமுடைய வீராதிவீரர்கள் கோடாகோடி கணக்கிற் கண்ணிமையைப்போலக் காவல்கொண்டு சொர்ணமயமாகச் சொலித்திருக்கின்ற விசாலமாகிய ஆயுதச்சாலையைச் சேர்ந்துவணங்கி ஆதியிற்சிவபிரான் கடாட்சித்திருக்கின்ற தனுசையும்பாசுபதமுதலாகியதிவ்வியபாணங்களையும் மற்றதேவர்கள் வேண்டிக்கொடுத்த அஸ்திரங்களையும் சேகரித்துக் கொண்டுகூரியகணைவிதங்களடங்கியிருக்கின்ற அட்சயத் தூணிரத்தை முதுகிலிறுக்கிக் கரங்களில் திவ்வியமாகிய கோதைகளைமாட்டி விரல்கடோறும் பொன்மயமாகிய புட்டில்களைத் தரித்துச்சுகந்ததயிலத்தினுல் வாரிச்சேர்த்துக் கட்டியிருக்கின்ற சிகைவிளங்கும் சிரத்தினிடத்திற் கோடிசூரியப் பிரகாசமாக சொலித்துக்கொண்டிருக்கின்ற வயிரமுடியிற் பரிமளித் திராநின்ற தும்பைமாலையைச்சூடி மற்றபோர்க்கோலத்தையும் பூர்த்தியாகச்செய்துகொண்டு வெளிவந்துமகம்மேருவோமந்தரகிரியோவெனச் சங்கிக்கும் உன்னதமுள்ளதாய் நவரத்தின காந்திகளைவீசிப் பரந்திருக்கும் இந்திரஞாலத்தேரில் சூரியனைப்போலத் தாவியேறி வீற்றிருந்து வாயுவேகத்தினுமேலிட்டுப்பாயும் வேகமும் பஞ்சலட்சணங்களும் அண்டங்களதிருங் கனைப்புமுள்ள குதிரைப்பந்திகளும் பருவதங்கள்கால்கள் முளைத்தெழுந்ததைப்போன்ற பாரித்த தேகத்தைப்பெற்ற மதயானையணிகளும்சொர்ணமயமாகிய வண்டில்கள் அச்சுமச்சுகுத்துக்கால்கொடுங்கை குடைமுதலிய சிங்காரங்களைக் கொண்டு அலைகளைப்போலத்தாவும் வேகமுள்ள புரவிக்கூட்டங்களையும் சிங்கம்-யாளி-புலி-முதலிய மிருகங்களையும் அணியணியாகப் பூட்டிச் செலுத்தும் நவரத்தினமயமாகிய தேர்நிரைகளானவை சூழ்ந்துபோகவும் மின்னலையொப்ப விளங்குகின்ற வாளாயுதங்களைக் கரத்திற்றூங்கிக் கொண்டுசேனைத் தலைவர்களும் மதியூகி மந்திரிபிரதானிகளும் நெருங்கியிருபாரிசங்களினும் நடக்கவும்வானத்தையளாவி நவரத்தினங்களி னொளியை வீசியிருக்கின்ற மாடமாளிகைகள்கோபுரங்கள் சித்திரக்கூடங்கள் இருபாரிசங்களினும்நெருங்கிச் சூரியக்காந்தியையும்மறைத்திராநின்றகோடானகோடி இராஜவீதிகளைக்கடந்து ஜயபேரி-வெற்றிச்சங்கம்- சின்னம் புள்ளாங்குழல் முதலாகிய வாத்தியங்கள் முழங்கிவரச் சக்கிரவாளகிரியைப்போலப் பாரித்து வளைந்திருக்கும் பொன்மதிற் புறத்தில் அண்டநிரைகளைநிகர்த்துப்பலநிலைகளையுடைய தாய்ச்சித்திரப் பிரதமைகள்பெருத்துரத்தினகாந்தியை வீசிக்கொண்டிருக்கின்ற கோபுரவாயிலைத்தாண்டி வெளியில் வந்தகாலத்தில் அவ்விடத்தில்நெருங்கியிருக்கின்ற சேனைகள் இராஜாதிராஜன்வரவைப்பார்த்தவுடன் ஆயிரங்கிரணங்களை வீசியெழுஞ் சூரியனுதயத்தைக்கண்டஉலகங்களைப்போன்றும், சோடசகலைகளைப் பெற்றிருக்கின்ற சந்திர னெழுச்சியைத் தெரிந்த சமுத்திரத்தை நிகர்த்தும் மேருவைவளைந்தலைத்திருக்கின்ற யுகப்பிரளயத்துக் கொப்பாகவும் இரதகஜ துரகபதாதிகளாகிய ஆயிரநூறுவெள்ளம் சயின்னியங்களும் பேரொலியைக்காட்டி ஜயம்ஜயமென்று ஆர்ப்பரித்துக் கொண்டுவந்து சக்கிரவர்த்தியைச் சூழ்ந்துபோற்றினர்.

இப்படிக்குச் சந்தித்தபோது முழக்கிய ரணபேரி, காகளம், சல்லரி, மல்லரி, திமிலை, தக்கை, குடமுழா, முதலிய வாத்தியங்களி னேசையை யின்னவிதமென்றுயாவராலுஞ் சொல்லிமுடியாது அத்தருணத்திற்சிங்கமுகாசுரன்பிள்ளை அதிசூரனும் தாருகாசுரன்பிள்ளைஅசுரேந்திரனும் போர்க்கோலங்களைத் தரித்துக்கொண்டுஅதிகவுக்கிரத்துடன்வந்து பெரிய தந்தையைக்கண்டு வணங்கிக் கட்டளைக் கெதிர்பார்த்திருக்கின்ற குமாரர்களிடத்திற்பரிவாகப்பார்த்துஇந்தவுத்தரவைச்சொல்லுவதாயினன், குமார

ர்களே இதனைக் கேட்பீராக, அலைகளை வீசிக்கொண்டிரு
க்கும் சமுத்திரத்தைப்போல ஜலசமர்த்தியாகவிருக்கின்
ற தடாகமானது தகுதியாகிய கரையில்லாதகாலத்தில் மீ
றியுடைத்துக்கொண் டோடிப் பலதிசையினும் பாய்ந்து
போகும் அதைப்போலவே சத்துருக்களைச்சின்னபின்ன
ப்படச் சண்டைகொடுக்க வல்லசேனைப் பெருக்கானதுமி
குதியாக விருந்தபோதினும் அவைகளுக்குத்தக்ககாவலை
ப்போற்றும் வீரபராக்கிரம சாலிகளாகிய தலைவர்க ளில்
லாதபோது யுத்தமுனையில் தலைவிரிகோலமாய்ச் சிதறி
யழிந்தோடிப்போகும் ஆதலால் நீங்களிருவரும் போர்க்
களத்தில் இந்தப்பெருத்த சேனைகளுக்குத் தலைவர்களாக
விருந்து காலங்களுக்கடுத்த அணிவகுப்புகளைச்செய்து ச
த்துருக்களை வெல்லும்படிக்கு முன்னதாய் நடக்கக்கடவீ
ர்களென்று கட்டளையிட்ட மாத்திரத்தில் மிகுத்தசந்தோ
ஷத்துடன் பிதாவே தேவரீர்நினைந்தகாரியம்தகுதியாகவி
ருக்கின்றது அவ்வாறே போய்ஜயப்பிரதாபத்துடன் திரு
ம்பிவந்துசொல்லக்கேட்டு மகிழ்வீராகதேவரீர்வருத்தமி
ன்றிமெத்தெனப்புறவணியில்வரலாமெனவீரங்களைப்பே
சிச் செலவுபெற்றுக்கொண்டு தங்களிரதங்களைச் செலுத்
தித் துரிதமாகப்போய்ப் பற்பல சண்டைகளிற்சத்துருக்
களைப் புறங்கண்ட வீராதிவீரர்களாதலாற்சேனைத்தலைவ
ர்களைக் கூவிச்சக்கிராகாரமாகச் சூழன்றுஅதிகஆரவாரங்
களைச் செய்து போகின்ற நால்வகைச்சேனைகளையும்சீர்ப்
படுத்திப் பலபல யூகவணிகளாக்கி அதன்மத்திகளில்ஜய
சாலிகளாகவிருக்கப்பட்ட அவுணவீரர்களையிருத்திநாற்பு
றங்களினும் வெற்றிபரராக விருக்கின்ற படைத்தலைவர்க
ளைக் காத்துவரச்செய்து தாங்களும் வில்லைவளைத்துக்கர
த்திற்கொண்டு யுத்தசன்னத்தராய்க் கண்டவர்கள் கற்பத்
திற் பேதப்படும்படிக்குக் காலாந்தகனைப்போல முன்ன
ணியிற் போகின்றனர், இப்பிரகாரங் காவலுடன் இராஜ
குமாரர்க ளிருவரும் தங்களுக்குத்தலைவராகப்போவதை
த்தெரிந்த நூறுயிரவெள்ளம் இராட்சதசேனைகளும்அ
திகசந்தோஷத்தை யடைந்து வீராவேசங்களுடன்ரணக்
களமெங்கே பகைவரெங்கேயெனத் தேடிக்கொண்டு நடக்
கின்றபோது அப்பாரத்தினைத் தாங்கமாட்டாமல்ஆதிசே
ஷனும் அஷ்டமாநாகங்களும் திசையானைகளும் விழிகள்
பிதுங்கிவாடவும் பூவட்டமானது தத்தளித்துக்கீழ்மேலா
கவும்சமுத்திரம் கொதிப்பெடுத்துப் பெருகவும் இவ்வித
உற்பாதங்களுடன் மும்மதங்களைப்பெருக்கிவானத்திலோ
டும், மேகங்களைத் துதிக்கையை நீட்டிப் பற்றியதனிடத்
திருக்கின்ற நீரைத் தாகசாந்திசெய்யும் உன்னதமுள்ளயா
னைப்பெருக்கும் பர்வதங்களைப்போலப் பாரித்திருக்கின்
றசொர்னமயமாகிய தேர்ப்பந்திகளும் தத்தித்தாவிப்பாயு
ம் வேகமுள்ள புரவியணிகளும் இரைச்சலிட்டுப் போகி
ன்ற சதுரங்கசேனை வெள்ளங்களின் மத்தியிற்பருத்தவ
யிரங்களினுற் சோடித்துச் சொல்லுதற்கரிய சிங்காரங்க
ளைப்பெற்றிருக்கின்ற இந்திரஞாலத்தேரின்மீதிற் சூரப
துமன் ஆரோகணித்துப்போகின்ற தெப்படிக்கிருந்ததெ
னில், கடலினிடத் தடங்கியிருந்தவடவாமுகாக்கினியான
து மீறிப்பிரளயவெள்ளத்தைப்போலப் பாய்ந்தெழுந்தகா
லத்தில் ஆலகாலவிஷமானது தனியுருவினைத்தாங்கிஅத
ன்மத்தியிற் பிரதிபிம்பித்துக்காட்டுவதைப்போலத்தோற்
றியது.

இவ்விதமாகிய சேனைப்பெருக்குடன் இராஜாதிராஜன்
புறவணியில்வருகின்ற காலத்திற் கோடானகோடியிராட்
சதர்கள்-ரணபேரி, ஜயபேரி, உடுக்கை, பம்பை, தூரியம்,
பீலி, கோடு, படகம், மொந்தை, திமிலை, தடாரி, தக்கைகண்
டை, ஆகுளி, தாளம், காகளம், பதலை, வெற்றிச்சங்கம், குட
முழா, முதலாகிய தோற்கருவி, துளைக்கருவி, மிடற்றுக்க
ருவி, கஞ்சக்கருவி, நரம்புக்கருவி, யெனச் சொல்லாநின்
ற ஐவகைத்தாகிய பதினெண்வாத்தியங்களையும்திசைகளை
திரமுழக்கிச் செல்லுகின்றகாலத்திற் சொர்ன மயமாய்வா
னத்தையளாவும் உன்னதமுள்ள தேர்ப்பந்திகள் கெற்கர
த்தொனிகளைக்காட்டியோடுந்தொனியும் நீலகிரிகளுக்கொ
ப்பாகப் பாரித்து மும்மதங்களையும் ஒழுக்கிக் கொண்டுந
டக்கும் யானைக்கூட்டங்கள் வீறிட்டுப்போகுஞ்சத்தமும்
அலைகளைப்போலத்தாவி இடிகளதிரக் கனைக்கும் புரவிக
ளின் ஆரவாரங்களும், பீதாம்பரங்களினுல் சோடித்துப்
படபடத்த வோசைகளைக்காட்டி வானத்தையளாவ நிற்கி
ன்ற துவசங்களின் முழக்கமும் அவுணவீரர்கள் பாதங்
களிற் கட்டியிருக்கின்ற வீரகண்டைகளின்கலிப்பும்ஒன்
றுபடக் கலந்தெழுவதினுல்திசைகளினும்புவனங்களினு
ம் தீவுதீபாந்திரங்களினு மிருக்கின்ற சகலபிராணிகளும்
திப்பிரமைகொண்டு மதிமயங்கிச் செவிடுபட்டுக்களைக்கவு
ம் வயிரத்தேகத்தினைப் பெற்றிருக்கின்றசூரபதுமன்சது
ரங்கசேனைகளும் நடக்கும்போதுண்டாகிய தூளிபடலமா
னதோங்கி ஆயிரங்கிரணங்களைப்பரப்பி உலகங்களைவிள
க்கிவருஞ் சூரியனைமூடி மழுக்கிச் சந்திரனைப்போலக்கா
ட்டவும் மேலும் தெய்வலோகத்தில் நெருங்கியதெப்படி
க்கிருந்ததெனில் மானிடர் தேவர் பாதலவாசிகளாதியாக
என்னிடத்தில் வாசமாயிருந்து தவவிரதங்களைச்செய்து
அம்முயற்சியினுல் இம்மைப்பிரயோசனங்களை அனுப
வித்தும்மறுமையில் இந்திரபோகச்செல்வத்தையும்மோ
ட்ச சாம்பிராச்சிய முதலிய வளங்களையும் பெறச் செ
ய்ய வல்ல பெருமையினை யுடைய என்னைக் கீழுலக
மென விண்ணவர்கள் வசனிப்பதால் என் பெருமிதங்
களைக்காட்டுவேனென்று பூமிகோபித்துச் சண்டைகொடு
க்கப்போவதாக நினைந்து முந்தித்தூசிப்படையைச்செலு
த்தியதற்கொப்பாகப் பொன்னுலகை நிறைத்து மண்ணு
லகமாக்கியும் இமையாநாட்டத்தினையுடைய தேவர்கள்வி
ழிகளிற் படிந்துவருத்தியும் தெளிந்த நீர்ப்பிரவாகத்தை
யுடைய தேவகங்கையில்விழுந்து கலக்கிச்சேறுக்கியும்தி
சைகளிற் பரந்து மயக்கியும்பெருகிய தூளியின் பெருமி
தங்களை யென்னசொல்வேன் இதுவுமல்லாமற்பருவதாகி
ருதியாயோங்கி யிருக்கின்ற இரதங்களின் மீதினும் சிவந்
தவிழிகளையுடைய மதயானைகளின் மீதினும்விளங்குகின்
ற துவசபடங்களானவை அசையுந்தோறும் வானகங்கை
யிற் படிந்துபடிந்துவீசுந்திவலைகள் பூமியிற் சிதறுவதை
ப்பார்க்குமிடத்தில் நம்மிடத்தி லிருந்து அரசுசெய்துவந்
த சூரபதுமன் இத்தினம்வருந்தி அபஜயத்துடன்திரும்
புவான், இதற்கென்னசெய்வோமென்று வீரமாமயேந்தி
ரபுரியாகிய நாயகிதுக்கித்து விழிகளில்நீரையிறைப்பதை
ப்போன்றும் சந்திரவட்டக்குடைகள் ஆலவட்டங்களெவ்
விடத்தும் பெருத்துக்காட்டுவதை நிதானிக்கு மிடத்தில்
வெண்டாமரை செந்தாமரைமலர்கள் அலர்ந்து தோற்று
வதையொத்தும் பாரித்தமணிகளினுற்சோடித்திருக்கின்
ற காம்புகளினிடத்தில் வெண்பட்டாடைகளினுல் வட்ட-

மாக்கி ஆணிமுத்துத் தாழ்வடங்களைச்சுற்றிலுந் தொங்கவிட்டு இரத்தினமயமாக விளங்கும் பூச்சக்கிரக்குடைகளும், மயிற்பிஞ்சங்களும், வெண்சாமரைகளும்நெருங்கிவானத்தைமறைப்பதால்சூரியகிரணங்களைத்தடுத்து இருள்செய்யவும் சிரோரத்தினக்காந்திகள்பரந்துஅவ்விருளைப்போக்கி மிகுத்தஒளியைக்காட்டவும் இவ்விதஆடம்பரங்களுடன் இராட்சதசேனசமுத்திரஞ்சூழ்ந்துவரஇந்திரஞாலத்தேரினிடத்தில் வீற்றிருந்து சூரபதுமன்வருகின்ற பெருமிதங்களைத் தேவராசனை இந்திரன்கண்டவுடன் நடுநடுங்கிப் பயப்பிராந்திகொண்டோடி பிரமன்,விஷ்ணு, முதலியதேவர்கள்போற்றத் திருச்சபையில்விளங்குஞ் சிங்காதனத்தில்வீற்றிருக்கின்ற குமாரதேவனைச் சேவித்துக் கரங்களைக்கூப்பிக்கொண்டு வாய்குழற இதனைவிண்ணப்பஞ்செய்கின்றனன்.

தேவாதிதேவனே வேதங்களின்முடிவே சோதிமயமே லோகநாயகனே அடியவர்களைப் பாதுகாத்தாளவெழுந்த தெய்வமே கேட்டருள்க சச்சிதானந்தமூர்த்தியாய்எள்ளுக்குளெண்ணெயைப்போலச் சராசரப்பிரபஞ்சங்களினிடத்தினும் பரிபூரணமாக நிறைவெய்தியிருக்கின்றபரமசிவம் பூர்வத்திற்சூரன் துணைவருடன்செய்த அரியதவங்களுக்கிரங்கி வேண்டியவரப்பேறுகளைத் தரப்பெற்றுகொடுங்கோல்செலுத்திவரும் பாதகனைசூரன்மதயானைகளைப்போன்ற வலியையும் வடவையைநிகர்த்த கோபத்தையும்பெற்ற ஜயசாலிகளாகிய இராட்சதவெள்ளங்கள் யானைகுதிரை தேரணிகளுடன் சூழ்ந்துவரத்தக்கதாகத் தேவரீருடன் பகைத்துச்சண்டைகொடுக்கச் சீறிவருகின்றனன் இவனைச் சுலபமாகயெண்ணலாகாதுஅடியோங்களுக்கனுக்கிரகஞ்செய்திருக்கின்றபடிக்குத் தேவரீரெழுந்தருளித் தேவர்கள் குலகாதகனைவென்று புராதனமாகவிருக்கின்ற எங்கள்அரசுரிமைகளையும் பொன்னுலகவாழ்வையும் கடாட்சிக்கவேண்டுமெனப்பலவிதங்களிற்போற்றி யிரக்குமுன்னிலையில் பாலசுப்பிரமணியதேவர் இந்திரன்படும்வருத்தத்தைத்திருவுளத்திற்கொண்டு கிருபையாகப்பார்த்தருளி தேவராசனே பயப்படவேண்டாம்உன்னிஷ்டப்படிக்குச் செய்யக்கடவோமெனக் கையமர்த்தினவராய் நவரத்தினமயமாகவிளங்குகின்ற சிங்காதனத்தைவிட்டிறங்கி ஆதிசேஷனைவென்ற ஜயசாலியாகிய வாயுதேவன்மீது விழிகளைப்பரப்பித் துரிதமாய் நம்முடையதேரைக்கொண்டு வரக்கடவாயெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் அதிகசந்தோஷத்துடன் கர்த்தனே யிதோதந்தனனென்றோடி வேகமுள்ளபுரவிகளைப்பூட்டிச் சொர்னமயமாகவிளங்கிக்கொண்டிருக்கும் தெய்வீகத்தேரைத் திருத்தித்துரத்திக்கொண்டுவந்து எதிரில்நிறுத்திச் சேவித்தகாலத்திற் பிரமன்-விஷ்ணுமுதலாகியதேவர்கள் பாரிசாதபுஷ்பங்களையிறைத்து வாழ்த்தெடுப்பதாக வெற்றிவேலாயுதக்கடவுளானவர் ஒப்பற்றசிங்காரத்தைக்கொண்டிருக்கும் இரதத்தில் ஆரோகணித்தமாத்திரத்தில் அக்கினிக்கொழுந்தைப்போன்ற சிவந்தசிகையையுடையபூதப்படைகள் சமுத்திரமும் அஞ்சும்படிக்கு ஆர்ப்பரித்துக் கூத்தாடவும் ரணபேரி ஜயபேரி வெற்றிச்சங்கம் உடுக்கை-சல்லரி-மத்தளம்-குடமுழா-படகம்-வீணை-புள்ளாங்குழல்-எக்காளை-சின்னமுதலாகியவாத்தியங்களைக்கோடானகோடிகணநாதர்கள் முழக்கிச்செல்லவும் தவசிரேஷ்டர்களாகிய தும்புருநாரதர் கின்னரர் கிம்புருடர்கருடகாந்தருவர்கள் யாழினங்களைமீட்டிச்சிவசுப்பிரமணியதேவர்பெருமைகளைப்பாடித்தொடரவும் முப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம்இருஷிகளும்குமாரதேவர்பாததாமரைகளைச் சிந்தித்துப்போற்றிக் கூத்தாடவும் இவ்விதஆடம்பரங்களுடன் நடக்கின்றதருணத்திற்பாலசுப்பிரமணியதேவர் கட்டளையின்படிக்குப் புசபலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவரும் தம்பியரும்இலக்ஷருங் கணநிபதிகளும் தங்களுக்குரிய வாகனங்களி லேறிக்கொண்டு யுத்தசன்னத்தராய்ச் சேனைகளின்மத்தியிற்காத்துப்போகவும்பெரும்புறக்கடலைப்போல விரைந்துகொண்டுவரும் பூதவெள்ளங்களுடன் முந்திச்செல்லுகின்றபோது சிவகுமாரன் தேவேந்திரன்முதலானவர்கள் சூழ்ந்துபோற்றிவரப் புறவணியில்வருவதாயினர், முதலணியிற்போகின்ற பூதப்படைகளானவை பிரளயவெள்ளத்தினுமேலிட்டிரைந்துகொண்டு அணிவகுத்துச் சண்டைக்காயுத்தப்பட்டிருக்கின்ற ரணக்களத்தைச்சேர்ந்தவுடன் பூமி ஆகாயமெங்குமிடமில்லாமல் நெருங்கிரவுத்திராகாரமாகக் கோபித்திருந்த சூரபதுமன் சேனைகள்சிறிப்பூதப்படைகளைவளைந்த தெப்படிக்கிருந்த தெனில்,சராசரப்பிரபஞ்சங்களைத் தகிக்கவல்ல வடவாமுகாக்கினியைப் பகைத்துக் கருங்கடல் அலைகளைவீசியெழுந்துசூழ்ந்ததைப்போலக்காட்டியது.

இவ்விதமாகப் பாதகர்மேலிட்டுவருங்காலத்திற் ஜயசாலிகளாகிய பூதவீரர்கள் வீராவேசங்களுடன்அதட்டிச்சண்டைக்கு நேர்ந்தமாத்திரத்தில் இராட்சதர்அதிககோபங்கொண்டு பூதரைச்சட்டைபண்ணுமல் நெருங்கி யிருதிறத்துச் சேனைகளுங் கைகலந்து கொடியபோரைச்செய்யத்தொடங்கியபோ துண்டாகிய அதிர்ச்சியினால்பூமிகிடுகிடெனநடுங்கி அண்டகோளகை நெக்குவிட்டுதிரத் தலைப்பட்டது, இவ்விதவுற்பாதங்கள்காட்டும்படிக்கு ஜயசாலிகளாகிய பூதவீரர்கள்சிலரோங்கி விழிகளில்தீப்பொறிசிதற வடவையைப்போற்சீறிப்பாய்ந்து வானத்தையளாவித் திசைகளிற் கிளைகளைப்பரப்பித் தழைத்திருக்கின்றமராமரமுதலிய பருத்தவிருட்சங்களை வேருடன்பிடுங்கிச்சுழற்றிமோதியும் மேருகிரிக்குச் சமமாகப் பாரித்திருக்கின்ற பருவதங்களைப் பெயர்த்தெடுத்துக் கடாவியுந்தீயையிறைக்கும் கழுமுள் சக்கரம் பிண்டிபாலம்வேல்தண்டமுதலிய ஆயுதங்களைப் பகைவர்மீதுசெலுத்தியும் போராடுகின்றதை இராட்சதப்பாதகர்கண்ட மாத்திரத்தில்விஷப்பற்களையுடைய சர்ப்பங்களைப்போலச் சீறி நல்லகாரியம் உங்கள்ஆணவத்தை யடக்குகிறோமென்று வீரங்களைப்பேசிப் பாரித்தவிற்களை மண்டலாகாரமாகவளைத்துச்சகலருந்திடுக்கிடத்தக்கதாகக் குணத்தொனிகொண்டுவிஷத்தொவையைலிட்டிருக்கின்ற கொடிய பாணவருஷங்களைப் பொழிந்தும்-கணிச்சி-சக்கரம்-வேல்-சூலம்-முசலம் கப்பணம்-பிண்டிபாலம்-இத்தகையவலிய ஆயுதங்களைக்கடாவியும் பின்னிடையாமற்போராடுகின்றதருணத்தில்பூத வெள்ளமானது ஆக்கிரமித்துக் காலாந்தகனைப்போலமண்டியெரிந்து யானையணிகளினிடத்திற்பாய்ந்து பற்பல துதிக்கைகளைச்சேர்த்துப்பிடித்துக் கிறுகிறெனச்சுழற்றிக் குதிரைப்பந்திகளின்மீதிற் சாடிகொன்றும் சம்பாத்தாளைப்போல நிலத்திலறைந்தெறிந்தும் வால்களைப்பற்றித் திசாதிசைகளிற்போய் விழுந்தருளவீசியும் மேகங்கள் திகைத்தோட வானத்தெறிந்தும் பதைபதைத்து

விறிட்டுப்புரளக் கழுத்தைமுறித்துச்சாய்த்தும் இப்படிக்குவிறி உலாவுகின்றவர்கள்ற் சிலசிவகணங்கள் கொக்கரித்துக்கொண்டு சொர்னமயமாய் இரத்தினகாந்திகளைவிசிப்பாரித்திருக்கின்ற இரதபந்திகளிற்பாய்ந்து ஆயிரமாயிரமாக விசாலமாகியகரங்களினல்வாரி அளவற்றமதயானைகள் சின்னபின்னப்பட்டுருளச்சாடியும் ஆயிரம்யானைகளைத்தூக்கிப் பதினுயிரம்புரவிகள்துகள்பட மொத்தியும் பருவதம்போன்ற காத்திரதேகத்தைப்படைத்திருக்கின்ற சிலபூதவீரர்கள் கோபாவேசங்களுடன்தாவி வேகமுள்ளபதினுயிரங்குதிரைகளைச் சேர்த்தெடுத்து ஆயிரகோடி சுத்தவீரராகிய இராட்சதர்கள் பூமியிலரைபட்டிறக்கச்சாடியும் கோடானகோடி அவுணவீரரைக் குத்திக்கொன்றும் மண்டைகளையுடைத்தும் கால்களைமுறித்தும் கரங்களையொடித்தும் மார்புகள் பிளந்துருளத்தாக்கியும் வாய்பிளக்கஅறைந்தும் இவ்விதமாகப்பூதப்படைகள் வீறிக்கொன்று சதுரங்க சேனைகளையும் நாசப்படுத்துவதை வாயுவேகத்தினும் மேலிட்டுப்பாயும் புரவிகளின்மீதேறி வையாளிவிடப்பட்ட இராட்சதசூரர்களும் நீலகிரிகளையொத்த காத்திரமுள்ள மதயானைகளின்மீதுவருகின்ற ஜயசாலிகளும் சக்கிராகாரமாகச்சுழன்று கெற்கரத்தொனிகளைக்காட்டி ஓடுகின்ற தேர்ப்பந்திகளில் மண்டிபோட்டிருக்கின்ற வீராதிவீரர்களும் பாதசாரிகளாகவருகின்ற ஜயசாலிகளும்பார்த்துஅதிககோபங்கொண்டுஅபலராகிய இந்தப்பூதர்கள் சூரமுள்ளநம்மவரை இப்படிக்கும்வாட்டுவரோ இவர்கள்வீருப்பைபடக்கிக் கொல்லுவோமென்னுந் தீரங்களுடன் வலையைவீசியதைப்போலப்பலதிசையினுஞ் சுற்றிக்கொண்டு ஒருபுறத்தில் ஊசிகளையொத்தகூரிய அலகையுடையகணைகளைப்பிரயோகித்தும் அர்த்தசந்திரபாணங்களைப்போக்கியும்கொடியவிஷத்தொவையலிட்டிருக்கின்ற சரங்களைச்செலுத்தியும்சோனைமழைக்குமேலாக பலகணைகளைத் தூண்டிக்கொல்லவும் சிலஅவுணவீரர்கள் காலாந்தகனைப்போலப்பொங்கி வாளாயுதங்களைக்கொண்டு வெட்டியும் சூலங்களினற்குத்தியும் பிண்டிபாலங்களினல்மோதியும் தண்டங்களினற்முருக்கியும் சக்கரங்களைச்செலுத்திச் சங்கரித்தும் பகைவர்வீசுகின்ற பருவதங்களைத் துகள்கண்டும் விருட்சங்களைப்பொடிபடுத்தியும் பாரித்தகால்களைக்கண்டித்தும் பருத்திருக்கின்ற தோள்களைச்சரித்தும் ஆசானு.பாகுவாக நீண்டிருக்குங் கரங்களைத்தறித்தும் சிவந்தமயிரையுடைய சிரங்களைவெட்டியெறிந்தும் விசாலமாகியமார்பைப்பிளந்தும் கண்டதுண்டப்படக்கண்டித்தும்இவ்விதமாக இராட்சதர்மேலிட்டுச்சாடும்போது பூதர்கள்தாபரிக்கப்படாமையால் இளைப்பதை அவர்களுக்குத் தலைவராகவிருக்கின்ற வீராதிவீரர்கள்கண்டு ரவுத்திராகாரமாகக் கோபித்துநீண்டு இருகுதைகளினும் மணிகள்கட்டியிருக்கின்ற விற்களைவளைத்து நாணேற்றிக் காளசர்ப்பங்களையொத்த திவ்வியபாணவிதங்களைப் பிரயோகித்தும், தண்டாயுதம், பிண்டிபாலம், முசலம், கப்பணமுதலாகியபடைகளைச் சங்கோபதங்கமாகச்சொரிந்தும் திக்குமுக்காடவொட்டாமற் கண்டங்கண்டமாய்த் துண்டந்துண்டமாய்க் கால்மாடு தலைமாடாகச் சின்னபின்னப்பட்டுருளக் கண்டிக்கும்போது பூமியிடம்பெருமல்வானவெல்லையினும்நெருங்கியிருந்த பாதகராகிய இராட்சதர்கள் தேரணிகள் மதயானைக்கூட்டங்கள் புரவிப்பந்திகள் அளவிறந்தவெள்ளக்கணக்கில் நின்றவைமாண்டு ரணக்களமெங்கும் பிணமலைகளாய்க் குவிந்துகிடக்கவும் அப்போதுபெருக்கெடுத்தோடிய உதிரவெள்ளமானது அலைகளைவீசியிரைந்து களேபரங்கள்முதலாகியவற்றைப் புரட்டிக்கொண்டுபோய் கருங்கடலிற்பாய்ந்து செங்கடலாக்கி மகரமச்சங்களுக்கு விருந்திட்டு மகிழச்செய்யவும் உயுத்தகளமெங்கும் பலகோடிகவந்தங்கள் கூத்தாடுவதெப்படிக்கிருந்ததெனில், வெற்றிவேலைத்தாங்கியிருக்கின்ற சரவணபவன் திருநோக்கம்பாய்ந்து அவன்படைகளினல் மாண்டபடியால் இருவினைப்பந்தங்களுக்கிடமாகிய கொடியபிறவியிற்படவறியோம் கிருதார்த்தராய். நற்கதியைச்சேருவோமென்றுகளித்து ஆனந்தக்கூத்தாடுவதைப்போல விருந்தது.

கழுகு-பருந்து-காக்கைமுதலிய பறவைகள் நிணமாம்சங்களைத் தெவிட்டவுண்டு சூரியகிரணங்கள் படவொட்டாமல் பந்தலைப்போலவானத்தில் வட்டமிட்டுலாவவும் இவ்விதமாகமானத்தை பூஷணமாகக்கொண்டிருந்த இராட்சதப்படைகளும் யானைக்கூட்டங்களும் புரவிப்பந்திகளும்மாண்டு வெள்ளிடையாகக்காட்ட அகோரயுத்தங்களைச்செய்து ஜயசாலிகளாய் வீறியிருக்கின்றகுறியபூதகணங்களின் ஜயத்தையும் வீருப்பையும் ஆணவத்தையும் அவுணச்சேனைகளுக்குத் தலைமைபெற்றிருக்கின்ற இராசகுமாரர்களி லொருவனகிய அதிசூரனென்னுங்காளையானவன் கண்டமாத்திரத்தில் தன்தேரைமுடிக்கிக்கொண்டு விழிகள்சிவந்து தீயையிறைக்கமீசைதுடிக்கமானம்பாதித்து மனதைவாட்டிக்கொளுத்த ரவுத்திராகாரமாகிய கோபங்கொண்டு அதிவேகமாய்ப்போகும்போது நவரத்தினமயமாய் வானத்தையளாவவோங்கி பற்பலபுரவிகளைப்பூண்டு மனோவேகத்தினுமேலிட்டோடும் வேகமுள்ள கோடானகோடிதேர்க்காரர்நாற்புரங்களினும்போற்றிவரவும் துதிக்கைகளில் வயிரத்தண்டத்தையொத்த இருப்புலக்கைகளைப்பற்றி அண்டமுகடுடையும்படிக்குச் சுழற்றிப்பாகன் குறிப்பின்வண்ணம் சத்துருக்களையதஞ்செய்யவல்ல வலியையுடைய மதயானைக்கூட்டங்கள்பருவதங்கள் கால்முளைத்தசைவதைப்போலவீறிட்டுக்கொண்டுபோகவும் கடலினும் வானத்தினும் திசைகளினும் அரைக்கணத்திற்பாய்ந்துமீளும் பாய்ச்சலையுடையபுரவியணிகளிடிகளைப்போலக் கனைத்துவரவும் சருவாயுதபாணிகளாய்ப் பகைத்தெதிர்த்தவர்களுட்டியைக்கடித்துதிரபானஞ்செய்யும் கோபாவேசங்களைவாய்ந்த இராட்சதவெள்ளங்கள் பிரசண்டவாயுவினுமேலிட்டு எவ்விடங்களினும் நெருங்கிப் பகைவரைத்தேடிநடக்கவும்இத்தகையசதுரங்கசேனைகளின் மத்தியில் சுழிசுத்தமுள்ள இரண்டாயிரம் புரவிகள்பூண்டோடும் நவரத்தினமயமாகிய தேரினிடத்தில் ஆயிரஞ்சூரியர்கள் ஒருருக்கொண்டுநிற்பதுக்கொப்பாகச் சிரோரத்தினபரணங்கள் தேகமெங்குஞ் சொலிக்கத்தோன்றியஅதிசூரனென்னும் இராசகுமாரன் வீராவேசத்துடன் சேனைகளுக்குமுந்தி இரதத்தைக்கொண்டுபோய் மகம்மேருவுக்கொப்பாகப் பாரித்திராகின்ற தனுசையெடுத்துநாட்டி வட்டாகாரமாய்வளைத்துநாணேற்றித்திசைகளதிரக் குணத்தொனிகொண்டு விஷத்தொவையலிட்ட கொடியசிலீமுகங்களையும் அர்த்தசந்திரபாணங்களையும் வயிரவூசிகளைப்போலக் கூர்மையுள்ள கணைகளையும் மற்றுமிராகின்றதிவ்வியசரங்களையும்அபரி

மிதமாகச்சந்தித்துக் கரவேகமாய்ச் சோனைமாரியைப்போலச்சொரிந்து எதிரில்வீற்றியிருந்த பூதவெள்ளங்களைச்சின்னபின்னப்படவாட்டிச் சிரங்களைக்கொய்தும்தோள்களைச்சரித்தும் கரங்களைக்கண்டித்தும் மார்பைப்பிளந்தும்கால்களைத்தறித்தும் இவ்விதமாக அல்லோலகல்லோலப்படுத்திச்சக்கிராகாரமாகத் தேரைச்சுழற்றிக்கொண்டு ரணக்களமெங்குமுலாவிச்சாடுவதைக்கண்ட சிலபூதர்கள் பிரமித்துஅம்மம்ம இதுவென்ன அதிசயமாகவிருக்கின்றது ஒருதேர்க்காரன்சிலரோங்கிப்பகைவரைச்சட்டைபண்ணுமல்காலாந்தகனைப்போலவளைந்துகொண்டு சாடுகின்றனன், இவனையொத்தவீரர்களையிதுபரியந்தங் கண்டதில்லையாருமிருக்கவுமாட்டார்கள் சூரனென்பது இவனுக்கே தகுமென்று கொண்டாடித்திகைப்பதையும்சத்துருவாகியவிராஜகுமாரன் சேவகத்திறத்தையும் ஊழிகாலத்திற்சத்தசாகரங்களும் மேருகிரியைச்சூழ்ந்தலைப்பதைப்போலப் பகைவரைவளைந்துகொண்டு சக்கிராகாரமாய்ச்சுழன்றுசுழன்றுவாட்டி ஜயங்கொள்ளத்தக்கவீரபராக்கிரமசாலியாகிய உக்கிரனென்னும் பூதகணத்தலைவன்தெரிந்தவுடன்கொவ்வைக்கனியைப்போல விழிகள்சிவந்துதீப்பொறிகள்பறக்க உக்கிராகாரனாய்க்கோபித்து மன்னுயிரைக்கொண்டுபோகும் யமதருமராசன் ஒருகாலம்நேர்ந்தபோதினும் அவன்பிராணனையும் நிமைப்போதில்வாங்கவல்லகொடியதண்டாயுதமொன்றை கரத்திற்கொண்டுகிறுகிறெனச்சுழற்றி லகுப்பாய்ந்து பகைவனாகிய அதிசூரன்வயிரம்போன்றமார்பிற் கோடையிடியைப்போல மோதிய காலையில் அவ்வதிர்ச்சியைக்கேட்ட இராட்சதவீரர்கள்ஐயையோ இராசகுமாரனிறந்தானிறந்தானிதற்கென் செய்வோமென்றுபரதவித்துக்கைகால்களுதறவாடிக்கிலேசித்துப்பார்த்திருக்குந் தருணத்தில் அதிசூரன்மார்பிலணிந்திருந்த அபேதவயிரக்கவசமானதுபொடிப்பொடியாயுதிர்ந்திறைந்துசற்றுவருத்தியபோதிராஜகுமாரனுக்கு அதிககோபம்பிரவேசித்துவடவையைப்போற் சீறிஇவனையிந்தரணக்களத்திற்பலிகொடுப்பேனெனவீரங்களைப்பேசித்துரிதமாய்நூறாயிரந் திவ்வியபாணங்களையெடுத்துவில்லிற்பூட்டிப் பிரயோகித்தமாத்திரத்தில்அவைகள்வெளிப்பட்டவுடன் இடிமின்னல் அக்கினி முதலியகொடுமைகளை வீசிக்கொண்டு குறுகுறெனச்சீறி வேகமாய்வந்துஉக்கிரன் தேகமுற்றினுந் தாக்கிச் சுறுக்குச்சுறுக்கெனத் தைத்தபோது புண்பட்டு உதிரம்பீரிட்டுப் பாயவும் அந்தவீரன்அதறாமல் பெதறாமல் சஞ்சலப்படாமல் உருத்திரமூர்த்தியைப்போலக் கொதித்துப் பாய்ந்துபக்கத்தில்வானையளாவநிற்கின்றபருவதமொன்றைப்பறித்துப்பந்தையொப்பக்கடாவி ஆர்ப்பரித்தனன் அந்தமலைசக்கிராகாரமாகச் சுழன்று இரைந்துவேகமாய் வந்து தாக்கியகாலத்தில் அதிவீரனேறியிருந்த பாரித்ததேரானது துகள்பட்டுக்குதிரைகள் அதப்பட்டுத் தேர்ப்பாகனும் பொடிபட்டுப்போகுமுன்னிலையில் இராசகுமாரன் நிலத்திலிறங்குவதுவீரமல்லவென நினைந்துபக்கத்தில் நிற்கின்ற சேமத்தேர்களினொன்றிற் பாய்ந்து பிராணிகளுயிரைக்கொண்டுபோகும் எமனைப்போலச்சீறி மண்டிபோட்டுட்கார்ந்துவில்லையெடுப்பதற்கு முன்னம் பூதகணத்தலைவனாகிய உக்கிரன் சிங்கராசனுக்கு சமமாகப் பாய்ந்து மந்தரத்தையொத்தவலியபாதத்தினால் உதைத்தமாத்திரத்தில் பலரத்தினவகைகளினாற் சோடித்திருந்ததேரானது நுறுங்கிப்புரவிகள்மாண்டு சாரதியுஞ் செத்தான்இச்சம்பவம் நேர்ந்தகாலத்தில்அதிசூரன் மண்டியெரிந்து இந்தச்சிறுவனை வைக்கலாகாதுசீக்கிரமாய்அதப்படுத்தக்கடவேனெனப்பேசிநூறுகோரமாகிய பாணங்களைத் தேடியெடுத்துத் தாண்டிவதருணத்தில்அப்படைகளானவைசர்ப்பங்களைப்போலச் சீறி எரிந்துபுகைந்து வெகுவிநோதங்களைக்காட்டிமேலிட்டுவருவதை உக்கிரன் தெரிந்தவுடன் தன்கரத்திலிருந்தபாரித்ததண்டாயுதத்தைக் கரகரெனச்சுழற்றிக் கோட்டுப்புள்ளுகளைப்போல வந்தவழியே திரும்பியோடத்தட்டிச்சிருங்கநாதஞ் செய்தனன்.

இப்படிக்குத்தன்படைகள் மங்கியதையும் பகைவன்வீரத்தையும் இராஜகுமாரன்கண்டு மானமானது மனதை வாட்ட உடனே மற்றொரு இரதத்திற் பாய்ந்திருந்துஉக்கிரனைக்கோபித்துப் பார்த்து அடாபூதப்பயலேதேவாஸ்திரங்களினால்உன்பிராணனையமலோகத்திற்சேர்ப்பேனெனச் சபதம்பேசிச் சீக்கிரமாய் அக்கினியாஸ்திரத்தையெடுத்து தீபதூபமுதலிய உபசாரங்களை மானசபூசையினால் நிரப்பிப்போற்றிச் செலுத்திய தருணத்தில்அப்படையானது அஷ்டதிசைகளினும்பரவிக்கொடியகனலையிறைத்துக் கோடையிடிகளைப்போல விரைந்து வடவைக்குச்சமமாகச் சீறிமேலிட்டுவருகின்ற உக்கிரத்தையும் மகிமைகளையும் உக்கிரன்பார்த்துச் சிவகுமாரனாகிய பாலசுப்பிரமணியக் கடவுளினது உபயசரணாரவிந்தங்களையும் மனப்பூர்வகமாகச் சிந்தித்துப்போற்றப் பத்தன் கோரிக்கையைத் திருச்செவிகளினேற்று தேவாதிதேவனாகிய சரவணபவன் ஜயம்பெறக் கடவதெனக் கடாட்சித்தபடிக்குப் பூதத்தலைவன் தீரனாகப்பாய்ந்து மண்டியெரிந்துவருகின்ற அனற்படையைப் பற்றிவிழிகளிற் சுவாலைவீசும்படிக்கு வாயிற்போட்டு விழுங்கினன் அவன்மனவுறுதியைச்சிங்கமுகாசுரன்பிள்ளைபார்த்து ஆச்சரியப்பட்டுநல்லகாரியம் உன்பிராணனை யிதோநிமைப்போதில் வாட்டக்கடவேன் பத்திரமாயிருக்கக் கடவாயென்று எச்சரித்துத்துரிதமாய் வருணாஸ்திரத்தை யெடுத்துவில்லிற்பூட்டி அபிமந்திரித்து ஆகரணாந்த பரியந்தமிழுத்து விட்டான்அதுவானத்திலெழுந்து இடிகள் மின்னலைக்காட்டி அமோகமாகிய நீரைப்பெருக்கி எங்கும்ஜலப்பிரவாக மாக்கிக்கொண்டு ஆவ் ஆவெனச் சீறிவருவதை உக்கிரன்கரத்தை நீட்டிப்பிடித்துக்கவளீகரமாக விழுங்கினன், பின்புபகைவன்வாயுவாஸ்திரத்தைப் பிரயோகித்தபோது பிரசண்டமாருதத்தைப் பெருக்கி பருவதங்கள் முதலானதைப் புரட்டிக்கொண்டு வரக்கண்டு வீராதிவீரன் கரத்தினேந்தி வாயிற்போட்டுக் கொண்டனன், உடனேஅவுணவீரன் அதிக கோபங்கொண்டு பிரமாஸ்திரத்தையெடுத்துப் பூசித்துமந்திரபூர்வகமாகச் செலுத்தியபோது அந்தமகிமையுள்ள பாணமானது அளவற்றகொடிய பாணவிதங்களைப்பெருக்கிக் கலகலென்று நகைத்து விஷங்களைக்கக்கிமுழங்கிச்சமீபித்தகாலத்தில் ஆவெனவாயைத்திறந்துவிழுங்கினன்.

பின்பு இராட்சதப்பாதகன்மனம்பொறாமல்நாராயணாஸ்திரத்தை யெடுத்துப் பூசித்துப்போற்றிப்பகைவனைஜயங்கொண்டுவரக் கடவாயெனச் செலுத்தினன்,அந்தத்தேவப்படையினுடைய மகிமைகளை யின்னவிதமெனச் சொல்லிமுடியாது அதையும் சிவசுப்பிரமணியதேவர்கடாட்சத்தினால் விழுங்கினன், அதைக்கண்ட சிங்கமுகாசுரன்பிள்ளை பிரமித்து இனிநான்செய்யவேண்டிய முயற்சிக

ளென்ன விருக்கின்றதுஓப்பற்றதேவாஸ்திரங்களைச்செலு
த்தினேன்அவைகளனைத்தினையுங்கனிந்தவாழைக்கனியை
ப்போல உட்கொண்டனன், இவன்செய்கைகளைப் பார்க்
குமிடத்தில் தேவாதிதேவனுகிய பரமசிவ உருவாகக்கா
ணுகின்றது அல்லது உலகரட்சகனுகிய விஷ்ணுவோ பிர
மனோ இந்தத் திரிமூர்த்திகளிலொருவ னல்லாவிடில் இ
த்தகைய கருமங்கள் யாவராற் செய்யப்படும் சந்தேகமில்
லாமல் இவன் மேற்குறித்தவர்களி லொருவனுகவேண்டு
மென நிதானித்து இதற்கென்செய்வதென யோசிக்கின்ற
காலையிற் பூதகணத்தலைவனுகிய உக்கிரனென்னும்வீரா
திவீரன் ஊழிக்காய்ச்சலைப்போல இராட்சத சேனையிற்
பிரவேசித்து வலியதண்டாயுதத்தைச்சக்கிராகாரமாகச்சு
ழற்றிக் காலாந்தகனைப்போலச்சின்னபின்னப்படச்சாடுகி
ன்ற வேளையில் மண்டைதிறந்தும்மூளைசிதறியும்விழிகள்
பிதுங்கியும் பற்களுதிர்ந்தும் உடல்சிதைந்தும் இப்படிக்
கு அல்லோலகல்லோலப் படுவதையும் உக்கிரன் ஜயவுச்
சாகங்களையும் பார்த்த இராட்சதர்கள் திகிலடைந்துஎன்
செய்வோம் எங்கேயொளிப்போமென்று இயமனைக்கண்
ட பிராணிகளைப்போலப்பதைத்து தியங்கி ஜயசாலிகளா
கிய நம்மவர்க ளிடத்தில்பலிக்குழன்று திரியும் அபலரா
கிய பூதகணங்களுக் கெளியராய்ப் போவதோவென்றுஎ
ண்ணுதவைகளை யெண்ணியெண்ணிவருந்துகின்றகாலையி
ல் வானத்தில்நின்று வேடிக்கைபார்த்திருந்த இந்திரனுதி
ய தேவர்கள்உக்கிரன் சேவகத் திறத்தைக்கண்டுஆச்சரிய
ப்பட்டவர்களாய் நான்முகனைவணங்கிக் கமலாசனனேயி
துவென்ன அதிசயமாக விருக்கின்றதுஅதிசூரனேவியநா
ராயணாஸ்திரமுதலிய தேவப்படைகள் வடவையைப்போ
லச் சீறிவருவனதச்சட்டைபண்ணுமல்இந்தவீரன் பிடித்
துப்பிடித்துக்கவளீகரம்பண்ணிவிட்டான். அந்தச்சிறந்த
பாணங்களென்ன வெளிதாய்ப்போய் விட்டனவே யிதன்
காரணங்களை எங்களுக்குத் தெரிவதாகவிரித்துச்சொல்ல
வேண்டுமெனக் கேட்டகாலத்திற் பிரமன்அவர்களைப்பார்
த்து இந்திராதிதேவர்களேயிவன் ஆதியிற் செவ்வானத்
தையொத்த சடாமண்டலதாரியாகிய பரமசிவத்தை நோ
க்கி அரியதவவிரதங்களைச் செய்து அதிகவரப்பேறுகளை
யும் கர்த்தன்பரிபூரணகடாட்சத்தையும் பெற்றவன் மே
லும் இக்காலத்திலும் எமதுகர்த்தனுகியகுமாரசுவாமியா
ர் திருவடிகளுக்குப் பாத்திரனுய்த் தொழுதுபோற்றி அ
வர்அனுக்கிரகத்தையும் பூர்த்தியாகக் கிடைத்திருப்பவன்
எத்தகைய ஜயசாலிகளாலும் வெல்லப்பட்டவனன்றுசிற
ந்த தேவாஸ்திரங்களினுலும் வாட்டமில்லாமல் அவற்றி
னைநாசஞ்செய்யுந் திராணியைப்படைத்தவன் மேலும் சி
வபிரான் நுதல்விழியி லவதரித்திருக்கின்ற பாலசுப்பிரம
ணியதேவனைத் தன்னிஷ்ட தேவதையாகநம்பித்திரிகால
ங்களினும் பத்திபூர்வகமாகப் பூசித்துவழிபடுங்குணநிச
யத்தைப் பெற்றவனுதலால், எம்மினுஞ்சிறந்தவனுயும்எ
க்காலத்தினும் அழிவுபடாமலும் நித்தியத்தைப் பெற்றி
ருப்பவன் கருங்கடல்வண்ணராகியமகாவிஷ்ணுமுன்னொ
ருகாலம் சோபித்தேவிய சக்கரத்தைவிழுங்கிய தவசிரோ
ஷ்டராகிய ததீசிமகாரிஷியினும் அதிகவல்லப முடையவ
ன் இத்தகைய வீரபராக்கிரமங்களையும் மகிமைகளையும்
பெற்றிருக்கின்றஉக்கிரன் நமதுபடையையும்மற்றதேவா
ஸ்திரங்களையும் விழுங்கினனென்பதொருஅதிசயமோஅ
ல்லது அவனுக்கொரு புகழோ இந்தவீரன் சற்றுநினைப்
பில் அண்டங்களனைத்தினையும் அழித்துமீட்டும் பழைய
படிக்கு நிலைபெறச் செய்யும் வல்லபத்தைப் பெற்றவன்
இவனிதுபரியந்தம் பெற்றிருக்கின்ற கீர்த்திப் பிரதாபங்
களையும் வெற்றியையு மின்னவிதமெனச் சொல்லக் கூடு
வதோவென்று பிரமதேவன் திருவுளம் பற்றியதைக்கே
ட்டதேவர்கள் விம்மிதராய்ச் சிரக்கம்பஞ்செய்து இன்ன
மு மிந்தவீராதிவீரனுக்குச் சென்றசென்ற விடங்களில்
ஜயப்பிரதாபமுண்டாகக்கடவதென்றுவாழ்த்தினர்.

இவைநிற்க ரணக்களத்தில்வாடித்திகைத்திருக்கின்றஇ
ராட்சதசேனைக்கு தலைமைபெற்றிருக்கின்ற அதிசூரன்த
ன்படைகள் பட்டபாட்டையுங் கேட்டையும்பார்த்து வரு
ந்தி ரவுத்திராகாரமாகக் கோபித்துஉக்கிரனைப்பார்த்துப்
பற்களைக்கடித்துஇதனைச்சொல்லுவான்முன்னம்நாம்செ
லுத்திய தெய்வீகமாகிய பாணங்களைவிழுங்கினமென்று
வீறியிருக்கின்றனை, யிதோ ஞானநாயகனுகிய பரமசிவம்
கடாட்சித்திருக்கின்ற பாசுபதாஸ்திரத்தை விடுவேன்மற்
றப் படைகளைப்போலச் சுலபமாயெண்ணவேண்டாம் நி
ஙமப்போதில் உன்னுயிரையுண்டு களத்திற்றள்ளும் பத்
திரமாய்த் தப்பித்துக்கொள்ளென்று எச்சரித்து பாசுபத
த்தைக் கரத்திலேந்தி மந்திரபூர்வகமாகத்தூபதீபமுதலி
யசோடச உபசாரங்களையும் விதிப்படிக்கு நிரப்பிவில்லி
ற்பூட்டி மனதிலடங்காத கோபத்துடன் பிரயோகித்தகா
லத்திற் சராசரப்பிரபஞ்சங்களை நுதல்விழித்தீயினுற் சா
ம்பலாக்கவல்ல மகிமையையுடைய உருத்திரமூர்த்தியின்
உருவைப்பெற்று அனந்தகோடி விஷ்ணுபிரமனுதியதே
வர்கள் படைகளைப்படைத்து ஆலகாலவிஷத்தையும்வட
வைக்கனலையும்பெருக்கிக் கோரரூபங்களைப்பெற்றிருக்கி
ன்ற பூதகணங்களைச் சிருஷ்டித்து அக்கினியும் பிரசண்
டமாருதமும் போற்றிச்சூழஅண்டரண்டபுவனங்களனை
த்தும் நடுங்கிப் பயப்பிராந்தியினுல் வாடித்திகைக்க இன்
னமுஞ் சொல்லாநின்ற பலகொடுமைகளைக் காட்டிக் கொ
ண்டு பாசுபதாஸ்திரம் வருவதை ரணரங்க சூரனுகியஉ
க்கிரன்கண்டு கரத்திற் பற்றியிருந்த பாரித்ததண்டாயுத
த்தை யெறிந்துபோட்டுப் பஞ்சேந்திரியங்களினு லுண்
டாகும், விஷயவாசனைகளை யொழித்து சாயுச்சியபதவி
யைத்தரவல்ல பஞ்சாட்சரமந்திரத்தைஜபித்துப் பத்திவி
சுவாசத்துடன் பரமேஸ்வரன் உபயசரணுரவிந்தங்களை
யிருதயகமலத்தி லிருத்திப்போற்றி நின்றகாலையில் வேக
கமாய்வந்த பாசுபதமானது நெருங்கிப் பார்த்து இவன்நி
ராயுதனுய்க் கரங்களைக்கூப்பிச் சிவபிரானைச் சித்தத்திலி
ருத்தி வழிபடும் பவுத்திரமனதைப் பெற்றவனுகவிருக்கி
ன்றனன். இப்படிக்கொத்த பத்தனைநாமொன்றுஞ் செய்
யமாட்டோமென்று சரேலெனத்திரும்பி விட்டவன் பக்க
லிற்போகாமற் சிவபிரானிடத்திற் சேர்ந்தது.

சவுனகாதிரிஷிகளே, இந்தஅதிசூரன்ஆதியிற்பிரமனை
நோக்கி அளவற்றகாலந் தவங்களைச்செய்து வருவதற்கிர
ங்கி காட்சிகொடுத்து இந்தத்திவ்விய பாணத்தைக்கடாட்
சிக்கும்போது கரத்திற்படைகளொன்று மில்லாதவர்கள்
மேற்செலுத்துவையாகில் அவர்களைஒன்றுஞ்செய்யாமல்
நம்மிடத்துக்குத் திரும்பி விடுமென்று காளகண்டமூர்த்
திதிருவுளம்பற்றி யிருந்ததால் அவ்வாறே சிவநாதனைக்க
லந்தது, இந்தமகத்துவத்தைக்கண்ட அதிசூரன்நடுநடுங்
கி யிவன்பரமசிவ வடிவமாமெனத் திகைத்துயாதுந்தோ
ற்றுமல் நின்றகாலத்திற்பூதப்படைகள் தங்கள் தலைவன்

விஜயத்தைத்தெரிந்து சேடசகலேகளேவாய்ந்த பூரணச்
சந்திரோதயத்தைக்கண்ட சமுத்திரத்தைப்போல ஜயம்
ஜயமென்று அதிகவுச்சாகங்களுடன் துள்ளித்துள்ளிக் க
ளிக்கவும் மற்றபடைத்தலேவர்கள்சரீரம்பூரித்துவிழிகளி
ல் ஆனந்தவாரிபெருகச் சந்தோஷசாகரத்திலழுந்தி உக்
கிரனேக்கொண்டாடி யெதிர்கொள்ளவும் வானத்தில்நிற்கி
ன்ற தேவர்கள் முன்னினும் அதிகமகிழ்ச்சிகொண்டு வீ
ராதிவீரனென்பது இந்தச்சூரனுக்கே தகுமெனப்புகழ்
ந்து பஞ்சகற்பகமலர்களே வாரிவாரி யேராளமாகச்சொரி
ந்துவாழ்த்தவும் இந்தஅபஜயங்களேக்கண்ட விராட்சத
சேனேகளனேத்து மனம்பதைபதைத்துவாடி இன்னமும்
என்னசெய்வானேவெனப் பயந்துநிற்க மனந்தாபரியாம
ல் நாலுமூலேகளினும் ஓடத்தொடங்கினர், இப்படிக்குத்
தன்படைகள்படும்வருத்தத்தை அதிசூரன்பார்த்து வரு
ந்தி மானம்பாதிக்கத் தன்தேரைத்துரத்திக்கொண்டுபோ
ய் மடக்கிக்கொண்டு பயப்படாதீர்கள் இதோசற்றுநேரத்
திற் பகைவனேவாட்டுகிறேன் நில்லும்நில்லுமெனக்கைய
மர்த்தி ரவுத்திராகாரமாகக்கோபித்துத் தன்தேரைவிட்டு
நிலத்திற்பாய்ந்து பொற்கட்டுகள்பதிந்து மணிகள்சத்திக்
க மந்தரகிரியைப்போலப் பாரித்திருக்கின்ற தண்டாயுத
த்தைக் காத்திற்பற்றிக்கொண்டு இடசாரி வலசாரியாய்க்
கிறுகிறெனச் சுழற்றிப்பாய்ந்து பருவதாகிருதியாகவிளங்
குகின்ற உக்கிரன்புசங்களின்மீது கோடையிடியைப்போ
லமோதியகாலேயில் நீண்டகரத்தினுல்தட்டி அப்படை
யைப் பறித்துக்கொண்டு வடவையைப்போற்சீறி அதிசூ
ரன் வயிரத்தையொத்த மார்புபதைபதைக்க ஓங்கிமோ
தியநிமிஷத்தில்மார்புபிளந்து உதிரங்களேக்கக்கிக்கொண்
டுபேரொலியைக்காட்டிப் பூமியில்விழுந்துமாண்டனன்,
உடனே யமதருமராசன் தூதர்கள்பயமற்று அவன்பிரா
ணனேக்கட்டிக்கொண்டு போய்விட்டார்கள்.

இப்படிக்குஅதிசூரன்களத்திற்பட்டகாரணத்தைக்கா
ளமேகத்தைப்போன்ற கரியதேகத்தைப் படைத்திருக்கி
ன்ற அசுரேந்திரன் பார்த்தவுடன் ஆலகால விஷத்தைப்
போலச் சீறிக்கொதித்து ஜயவுற்சாகத்துடன் வீறிமேல்
வருகின்ற பூதவெள்ளத்தின்மேல் தன்தேரை வேகமாய்
முடுக்கிக்கொண்டு எதிரேறித் தேவேந்திரன் கரத்திற்ப
ற்றியிருக்கின்ற இந்திரதனுசினும் இரண்டாயிரம் பங்கு
சிறந்ததாய் பாரித்திராநின்ற கொடியவில்லேவளேத்து நா
ணேற்றிக் குணத்தொனிசெய்த அதிர்ச்சியினுல் பூமிகிடு
கிடென நடுங்கவும் அண்டகோளகை நெக்குவிடவும் கரு
டனேக்கண்ட சர்ப்பங்களேப்போல மன்னுயிர்களனேத்து
ம் திப்பிரமைகொண்டு படாதபாடுகளே யனுபவித்துவா
டியது இச்செய்கைகளேக்கண்ட பூதப்படைகள் கோபித்
துப் பக்கங்களில் வானத்தையளாவநிற்கின்ற பருவதங்க
ளேப்பிடுங்கி யெறிந்தும் திசைகளிற் கிளேகளேப்பரப்பித்
தழைத்திருக்கும் ஆல்முதலிய விருட்சங்களேக்கரகரென
ச்சுழற்றிமோதியும்மந்தரத்தையொத்தபாரித்ததண்டாயு
தங்களேயிடம்வலமாகத்திருப்பிச்சாடியும்மற்றபடைகளே
அமோகமாகவீசியும் இவ்விதமாகக்கொடியபோரைச்செ
ய்கின்றதைக்கண்டு தாருகாசுரன் குமாரனுகிய அசுரேந்
திரனென்னும்பாதகன்வடவையைப்போலச்சீறியிறுதிகா
லத்திற் பொழியும் மேகங்களேயொப்பாகத் தன்வில்லிற்
கணக்கிறந்த கொடியபாணங்களேக் கரவேகமாகச்செலுத்
திப் பகைவர்கடாவிய மலேகள் முதலானவற்றை நடுவது
பாதியிற் றுகளாகிப் போகப்பறக்கடித்துமேலும் அமோ
கமாகிய பாணங்களேச் செலுத்திப் பூதர்கள்சிரங்களேக் க
ண்டித்தும்தோள்களே வெட்டியும் மார்பைப்பிளந்தும்கா
ல்களேத்தறித்தும் தேகமுற்றுஞ் சல்லடைக்கண்களாகத்
துளேத்தும் குடல்களிறைந்து சர்ப்பங்களேப்போலத்துள்
ளும்படிக்குச் சரிந்தும் கால்களேத்தட்டியும் குப்புறவிழ
மோதியும் இவ்விதமாகச் சித்திரவதைகளேச்செய்து பீச்
சாங்குழலேப்போலத் தேகத்தில் உதிரமானது பீரிட்டுப்
பாய்ந்து ரணக்களமெங்கும்பெருகும்படிக்குச்சாடும்போ
து பூதப்படைகள் மிகவும்வருந்தி மாண்டவர்கள்போகம
ற்றவர்திகைத்து நிற்பதையும் பகைவன் வீரத்தையும் க
னகனென்னுஞ் சேனேத் தலேவன் கண்டு மனம் பொரு
மல் ரவுத்திராகாரமாகக்கோபித்து விழிகளிற்றீப்பொறி
கள்சிதற உருத்துத் தன்தேரை யதிவேகமாகத் துரத்திக்
கொண்டுவந்து அசுரேந்திரனேவளேத்துக்கொண்டு பாரித்
தவில்லே வட்டாகாரமாகவளேத்து நாணேற்றி விண்மண்
பாதலமுதலிய சகலமும் மயங்கித்தியங்கிச்சோரும்படிக்
கு டங்காரசத்தத்தைக்காட்டி அதிவேகமும் கொடுமையு
முள்ள குரூரமாகியசரங்களேச் சங்கோபசங்கமாகப்பூட்டி
ப் பகைவன்தேகந்தோற்ருமல் மூடியகாலத்தில் அசுரேந்
திரன் நகைத்து தன்வில்லிற் காலசர்ப்பங்களேயொத்த க
ணேகளே அமோகமாகப்பிரயோகித்துத் தன்மீதிற்புகைந்
திரைந்துவருகின்ற பாணகோடிகளேச் சின்னபின்னப்பட்
டுப்போகச்சாடிச் சூரியன்மேற்கோபித்துவந்த கேதுவை
ப்போல ஒருதிவ்வியகணேயைத்தூண்டித் தேரைச்செலு
த்தும் சாரதிமார்பைப் பத்தலாகப்பிளந்தபோதுஉதிரமா
னது மிகுதியும்பெருக மரண மூர்ச்சையடைந்து விழுந்
தான்.

அப்போது கனகனுக்கு மிகுதியாகியகோபாவேசம் பி
றந்து மிருகராசனுகிய சிங்கத்துக்கொப்பாகப் பகைவன்
தேரிற்பாய்ந்து சாரதிதேகம் நுறுங்கிச்சாகும்படிக்கு உ
தைத்துத்தள்ளிப் பிறையைப்போல வளேந்திருக்குங்கோ
ரைத்தந்தங்களேயுடைய இராஜகுமாரன் கரத்திற்பற்றியி
ருந்தவில்லிற் பூட்டியநாரியைப்பறித்துக்கொண்டுகாளமே
கமானது இந்திரதனுசுடன்பூமியிலிறங்குவதைப்போலப்
பாய்ந்து பக்கத்தில் பாரித்தோங்கியிருந்தபருவதமொன்
றைப் பெயர்த்தெடுத்து ஜயசாலியாகியஅசுரேந்திரன்மீதி
ல்வீசிச்சிங்கத்தைப்போலக் கர்ச்சித்தான், அந்தமலேபம்
பரத்தையொப்பாகச் சுழன்றுகொண்டிரைந்து வேகமாய்
த்தன்மீதில்வரும்போது இராசகுமாரன்பின்னப்பட்டவி
ல்லேயெறிந்துபோட்டு மந்தரத்தையொப்பப் பாரித்திருக்
கின்ற வேறெருவில்லேயெடுத்துவளேத்து பூதப்படைகள்
மதிமருண்டோடக் குணத்தொனிகாட்டிக் காலசர்ப்பங்க
ளேப்போன்ற எட்டுக்கொடிய பாணங்களேத்தொடுத்தேவி
மீறிவருகின்ற பருவதத்தைத் துகள்பட்டுப் போகச்சாடி
மேலும் வட்டமாய் பிரகாசித்துக்கொண்டிருக்கும் ஆயிர
ம் அர்த்தசந்திரபாணங்களேக் கரவேகமாகப்போக்கிமூன்
ரும்பிறையானது மேகத்தில் நுழைவதைப்போலக்கனக
னிருபுஜங்களினும் தைத்துத்துளேக்கஉதிரமிகுதியாயோ
டிப் பலஹீனப்பட்டுத் திகைத்துவருந்தி நின்றுவிட்டன
ன், கொடியசெய்கைகளேவிரும்பிச் செய்யுங்கடினசித்தமு
டைய அதிசூரனும் வேறொருசாரதியை யமைத்துக்கொ
ண்டு காலாந்தகனேப்போலச்சீறிப் பூதப்படைகளின்மீதி
ற்கவிந்துவருவதைஉன்மத்தனென்னுஞ்சேனேத்தலேவன்

கண்டுமண்டியெரிந்து அதிவேகமாய்ப்பாய்ந்து பக்கத்தில்வானேயளாவ நிற்கின்றபாரித்தபருவதமொன்றைப்பறித்துப் பகைவன்மேல்வீசி அண்டங்களதிரக் கர்ச்சித்தனன், அந்தபருவதம் பிரசண்டமாருதத்தைப்போல இரைந்துகொண்டுவேகமாய்வந்து தாக்கியமாத்திரத்தில்நவரத்தினமயமாகவிருந்த தேர்பொடிபட்டுக்குதிரைகள்சின்னபின்னப்பட்டுப் பாகனுங்களத்திற்பட்டுப்போன காலத்தில்தாருகன்பிள்ளையானவன்பிரளயகாலருத்திரனைப்போலக்கோபதீபிதனாய் அதிசீக்கிரத்திற் பக்கத்திலிருக்கின்ற சேமத்தேர்களி னொன்றிற் பாய்ந்து மண்டிபோட்டுட்கார்ந்துதன்வில்லில் தீட்சணியமாகிய பாணகோடிகளை ஒன்றனந்தமாகச்செலுத்திச் சமுத்திரத்திற்பவளக்கொடிகள் படர்ந்துகாட்டுமாறுபோல உன்மத்தன் தேகமெங்குமுதிரம்பெருகப்பிளக்கும்போதுவலிகுன்றிக்களைத்துஅசைவற்று நின்றுவிட்டான்.

இதைமந்தனென்னும் பூதகணத்தலைவன் கண்டமாத்திரத்தில் அதிகஉக்கிரம் பிரவேசித்து விழிகளில் அனற்பொறிகள்சிதற, ஆலகாலத்தைப்போலச்சீறித்தேரைத்துரத்திவந்து அசுரேந்திரன்முன்னம் நிறுத்தி இதோஉன்னாணவத்தையடக்கி யமலோகங் குடியேற்றுவேனென்று சபதம்பேசி வில்லையெடுத்துவளைப்பதற்குமுன்னம்இராஜகுமாரன் தன்வில்லிற் பத்துப்பாணங்களைப் பூட்டிப்பிரயோகித்துத் தேகத்தைப்பிளந்துசெவ்வானத்தைப்போல உதிரம்பெருக்கெடுத்தோடச் சாடியகாலத்தில் மந்தன் காட்டழலைப்போலக் கொதித்து உதயகிரியையொப்ப பாரித்திருக்கின்ற மலையொன்றைப்பிடுங்கி அதிவேகமாய்வீசியபோது அசுரேந்திரன் நகைத்துக்கொண்டுபார்த்திருக்க அவ்வரையானது வயிரம்போன்ற மார்பிற்றாக்கிசெண்டுமறிவதைப்போலத் திரும்பிப் பொடிபட்டதுஉடனேயிராஜகுமாரன் தன்வில்விற் கொடியபாணங்களாயிரத்தைத் தூண்டிக் கொக்கரித்தமுன்னிலையில் அந்தப்படைகள் தீயைவீசிப்புகைந்துகொண்டோடி வந்து சரீரமெங்குந் தைத்துத்துளைத்து உதிரத்தைப் பெருக்கியபோதுமதிமயங்கி மந்தனென்னுஞ்சூரன் திகைத்துநின்றதைமற்றொருபுரத்திற் சண்டைகொடுத்திருந்த பூதத்தலைவனாகிய சிங்கன்விழிகளிற் தீயெழப்பார்த்துவந் தெதிர்த்துப்பாரித்தமலையொன்றை அடியுடன் பறித்துவீசி சிருங்கநாதஞ் செய்தகாலத்தில் இராஜகுமாரன்சிலபாணங்களைக்கொண்டு மேலிட்டுவரும் மலையைப் பொடிபடுத்தியவுடன் சிங்கனுக்கு அதிககோபம்பிரவேசித்து ரணக்களத்தி லிறந்து கிடக்கின்றஇராட்சதர்கரங்களிற்பற்றியிருக்கின்றதண்டாயுதமொன்றை வலிதிற்பிடுங்கிச் சக்கிராகாரமாகச்சுழற்றி மோதியபோது அதையும் பொடிபடுத்திக் கரவேகமாய் நூறுதிவ்விய பாணங்களைச்செலுத்தி மார்பைப்பிளந்தகாலத்தில் இரத்தங்களைக்கக்கிக்கொண்டு சிங்கனென்னும்வீரன்களைத்துக் களத்தில்விழுந்தான், இதைக்கண்ட மற்ற சேனைத்தலைவர்களனைவரும் ஒருவன்பின்னொருவனாகவந்துவந்தெதிர்த்துத் திட்சண்ணியமாகிய பாணவிதங்களைச்செலுத்தி அகோரமாகிய உயுத்தங்களைச்செய்துபோராடும்போது அசுரேந்திரன் காலாந்தகனைப்போல மண்டியெரிந்து கரவேகமாகக் கணக்கிறந்த திவ்வியபாணங்களைச் சோனாமாரியைப்போலச் சொரிந்து அவர்களேவியபாணங்களையும் கண்டித்தெறிந்தும்தேகத்தைப்பிளந்தும்துளைத்தும் புண்படுத்தியும் இவ்விதங்களாகச்சின்னபின்னப்படச்சாடும்போது உதிரம்பெருக்கெடுத்தோட மதிமருண்டும் வாடியும் சோர்ந்தும்மரணமூர்ச்சையடைந்தும்பங்கப்பட்டும் மானமிழந்தோடியும் இவ்விதமாகத்தாபரித்து எதிரில்நின்று போராடவகையில்லாமற் பின்னிட்டசமயத்தில் அசுரேந்திரன் வடவாமுகாக்கினியைப் போலக் கோபித்துத் தன்தேரைச் சக்கிராகாரமாக ரணக்களமெங்குஞ் சுழற்றிக் கார்காலவருஷத்தைப்போலப்பாணங்களைப்பொழிந்து பூதரை அசையவொட்டாமல்மடக்கிக்கொண்டு சின்னபின்னப்படச் சாடும்போது மனங்களர்ந்து வலியற்று நடுநடுங்கி அதிககாயங்கள்பட்டுஉதிரம்பெருகாணக்களத்தில் நிற்கவும் அஞ்சிச்சிலவீரர்கள் பலதிசையினும் பறந்தொளித்தனர், மற்றவர்கள் தலையிழந்து தோளற்று மார்புபிளக்க வயிறுபீறுண்டு குடல்களிறையாணக்களத்துக்கிரையாகவிழுந்து எங்கும்பிணமலைகளாகக்குவிந்தன.

இவ்விதமாகச் சிவகணங்கள் அல்லோலகல்லோலப்படுவதையும் பகைவன் விஜயத்தையும் இலக்ஷர்களி லொருவனாகிய தண்டனென்பவன்பார்த்துமனம் வருந்திக்கோபாவேசத்துடன் தன்தேரைத்துரத்திவந்து வில்லைவளைத்து விஷங்களைக் கக்கத்தக்க ஆயிரங்கொடிய பாணங்களைப்பூட்டிப் பிரயோகித்துக் தாருகன்பிள்ளைநெற்றியைப்பிளந்தகாலத்தில் உதிரமானது பிரவாகமாகவோடமிகவும் வருந்தியபோதினும் வீராதிவீரனாதலால்உக்கிராகாரனாய் அதிசீக்கிரத்தில் எட்டுப்பாணங்களைக் கழுத்துக்குக்குறிபார்த்து போக்கியகாலையில் படபடென்னுஞ் சத்தத்துடன் அனலைவீசிக்கொண்டுவந்து பாய்ந்துருவி யோடியபோது இரத்தப்பிரவாகமேலிடப் பிரக்ஞைதப்பிச்சோபித்துத் தேரில் அசைவற்றுநின்றனன், அவனுக்கிளவலாகிய சோமுகனென்பவன் தன்தமையனுக்கடுத்த அபாயத்தைத் தெரிந்தவுடன் கோபமும் விசனமும்மனதைபாதிக்கத்தன்தேரைத் துரத்திக்கொண்டுவந்துதாருகன்பிள்ளையை வளைந்துகொண்டு வில்லைவளைத்துகுரூரமாகியநூறு பாணங்களைப்பூட்டிப் பகைவன்மார்புக் கிலக்காகச்செலுத்த அவைகள் தீயையிறைத்துக்கொண்டு வேகமாய்வந்து வயிரமலையைப்போல விசாலமாயிருக்கின்ற மார்பிற்றாக்கி வலியற்று முனைகள்மடங்கிச் சிதறியவேலையில்அசுரேந்திரனுக்கு அதிககோபம் பிரவேசித்து சிங்கத்தையொப்ப கர்ச்சித்துத் தன்வில்லிற்பிரகாசிக்கும் அலகையுடைய ஐம்பதுகுரூரமாகிய பாணங்களைப்பூட்டிப் பிரயோகித்துச் சரீரமுற்றினுந் துளைத்தகாலத்தில் அதிகவருத்தம்சேர்ந்தபோதினும் தயிரியத்தைவிடாமற் சீக்கிரத்திற்றன்வில்லில் ஆயிரங்குரூரமாகிய பாணங்களைப்பூட்டிப் பிரயோகித்தகாலத்தில் அந்தசரங்கள் வடவாமுகாக்கினியைப்போலப் புகைந்தெரிந்து சீறிவந்து அசுரேந்திர னேறியிருந்த பாரித்ததேரைப் பொடிப்பொடி யாக்கிக் குதிரைகளைக்கண்டித்துத்தள்ளிச் சாரதியையும்நிலத்திற்கிடத்தியது,உடனேமற்றொரு தேரிற்பாய்ந்து தான்அருமையாகத் தேடிவைத்திருக்கின்ற ஒப்பற்ற வேலாயுதத்தை யெடுத்துப் பகைவன் பிராணனை உண்டுவரும்படிக்குக்கடாவியபோது அனலையிறைத்துக்கொண்டு வேகமாய்வந்துவலியமார்பிற்றைத்துத் தடாரித்துருவியோடியகாலத்தில்உதிரம்பீறிட்டோடக்களைத்து யாதுந்தோற்றாமற் றேரில்நின்றுவிட்டான் அதைக்கண்டமாத்திரத்தில் அவனுக்கிளையவனாய் மகாவிஷ்ணுவினும் வலியிற்சிறந்தவீரபராக்கிரமசால்

யாகிய விஜயனென்பவன்மனவாட்டத்துடன் ரவுத்திராகாரமாகக்கோபித்துத் தன்தேரைவேகமாகத் தூரத்திவந்தெதிரில் நிறுத்திப் பினகத்துக்குச்சமமாகிய தன்வில்லையெடுத்து நாணேற்றித் திசைகளதிரக் குணத்தொனிசெய்து ஆயிரம் அர்த்தசந்திரபாணங்களைப்பூட்டிக் கரவேகமாகச்செலுத்தி அசுரேந்திர னேறியிருந்ததேரைச் சக்கைசக்கையாகப் பேர்த்தெறிந்து பாகனையும் புரவிகளையுங்கண்டதுண்டமாக வெட்டியெறிந்து மேருவைப்போலஅவன் கரத்தில் விளங்கியிருந்த வில்லைநாரியுடன்கண்டித்துச் சிருங்கநாதஞ்செய்தனன்.

இராஜகுமாரன் உடனே மற்றொருதேரிலேறிவிட நாகத்தைப்போலச்சீறி மந்தரகிரியையொத்த தண்டாயுதமொன்றையெடுத்துகிறுகிறெனச்சுழற்றி விஜயன்மேல்வீசியகாலத்திற் சக்கரத்தைப்போலச் சுழன்றுகொண்டுமேவிட்டுவருவதைப்பார்த்துக் குரூரமாகிய பாணங்கள்அளவற்றவைகளைச் செலுத்திச் செலுத்தித்தடுக்கவும் அதன் வேகமடங்காமல் குமுறிக்கொண்டுவந்து விசாலமாகியமார்பிற் கோடையிடியைப்போலத்தாக்கியமாத்திரத்தில்தேகம்நெக்குவிட்டு உதிரம்பெருக்கெடுத்தோட மனநிலைதளர்ந்து கரங்களிற்பற்றியிருந்த வில்லையும் அம்பையும்நழுகவிட்டுக்களைத்து இரதத்தில்விழுந்தான்,இதனைக்கண்டதுணைவர்களாகிய இலக்ஷர் அனைவரும் மானமும்கோபமும் மனதவாட்டியலைக்க விழிகளிற்றீப்பொறிசிதற வடவையைப்போல மண்டியெறிந்து இந்தப்பாதகன் பிராணனைநொடிப்போதில்வாங்கிவீரசொற்கத்திற்சேர்ப்போமெனச் சபதங்களைப்பேசிக்கொண்டு இரதங்களைத்தூரத்திவந்து அசுரேந்திரனை நாற்புறங்களினுஞ்சுற்றித்தங்கள் கரத்தில்விளங்கும் பாரித்தவிற்களை வட்டாகாரமாகவளைத்து கூர்மையாய்வடித்து விஷத்தொவையலிட்டிருக்கின்ற கொடியபாணவிதங்களனைத்தையும்பூட்டிக்கோடைகாலவருஷத்தைப்போலச் சொரிந்து கடியபோரைச்செய்கின்ற தருணத்தில் அசுரேந்திரன்அவர்கள்சேவகங்களைக்கண்டு நகைத்துத்துரிதமாய்த்தன்வில்லில்புற்றினிடத்திருந்திசல் பெருக்கெடுத்தோடுவதைப்போல அனந்தகோடிதிவ்வியபாணங்களைத் தொடுத்துக் கரவேகமாகச்செலுத்திப் பகைவர் விட்டவிட்டகணைகளைஒன்றொழியாமற்கண்டித்துப்போட்டு இரதங்களையும் பொடிபடச்சாடிகுதிரைகள் பாகர்களைச் சின்னபின்னப்படவாட்டி இலக்ஷர்தேகந்தோற்றுமற் சல்லடைக்கண்களாகத் துளைத்துச் சக்கைச்சக்கையாகப்பேர்த்தெறிந்தும்காயப்படுத்தியும்அல்லோலகல்லோலப் படுத்துகின்றபோது ரத்தவெள்ளம்பெருத்தோட மிகவும்வருந்திப் பலனொடுங்கி வில்லையெடுக்கநிருவாகமில்லாமல் திகைத்தோடினர்,சவுனகாதிரிஷிகளே! அசுரேந்திரன்செய்தசண்டையின்பெருக்கத்தையென்னவென்றுசொல்லுவேன், ஒருதேர்க்காரன் கோடிவீரர்களுடனெதிர்த்து சித்திரப்போரைச்செய்துபாதசாரிகளாகப்பறக்கடித்தான்.

இவ்விதமாக இலக்ஷரும் துணைவரும் படைவீரரும் பூதப்படைகளும் சின்னபின்னப்பட்டு மங்கியதையும்பகைவன்வெற்றியையும் புஜபலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர் கண்டமாத்திரத்தில் மனம்வருந்திச் சருவசங்காரமூர்த்தியைப்போலக்கோபித்து கொவ்வைக்கனியினும் விழிகள்சிவந்து புருவம் நெற்றியிலேறப் பற்களைக்கடித்து நல்லகாரியம் நல்லகாரியம் ஒருஇராட்சதவீரனால் ஜயசாலிகளாகிய நமதுசேனைகள் இப்பாடுபடுவதோசற்றுநேரத்தில் இவன்வலியையொடுக்குகிறேனென்று சிறிச்சிவசுப்பிரமணியக்கடவுளினது பாதாரவிந்தங்களைத்தியானித்துப்போற்றிப் பருவதாகிருதியாகப் பாரித்திராநின்றதேரைத் தூரத்திவந்து அசுரேந்திரனெதிரில்நிறுத்தித் தங்கக்கட்டுகள்பூண்டு மணிகள்சத்திக்கும் நீண்டவில்லைநாட்டிவளைத்து நாணேற்றிக்குணத்தொனிசெய்தனர். அப்பொழுது அண்டபுவன கோடிகள்பட்ட வருத்தங்களை இன்னவிதமெனச்சொல்லிமுடியாது. உடனேதேவர்கள்களிக்கவும் இராட்சதப்பாதகர் வாடியிளைக்கவும்சர்ப்பங்களையொத்த கொடியபாணகோடிகளை அபரிமிதமாகச்செலுத்திஅசுரேந்திரன்தேகந்தோற்றுமல்முடியவளவில் அவைகள்அதிககொடுமைகளைக்காட்டிவந்துசுறுக்குசுறுக்கெனத்தைத்துமிகுத்தகாயங்களைச்செய்து உதிரத்தைப்பெருக்கிவருத்தியபோதினும்அதருமல்பெதருமல் சஞ்சலப்படாமல்அவற்றினைப்பிடுங்கியெறிந்துவிட்டுச்சீக்கிரமாய்த் தன்வில்லிற் கணக்கிறந்த பாணங்களைப்பூட்டிப்பிரயோகித்துவீரவாகுதேவர்தேகத்தைத் துளைத்தமாத்திரத்தில்உதிரம்பீரிட்டோடஇவ்விருவீரர்களும்பாலசூரியர்களைப்போல விளங்கினர்,அக்காலத்திற்றுருகன்பிள்ளைமீறித்துரிதமாயொருதிவ்வியபாணத்தைச்செலுத்திவீரவாகுதேவர்கரத்திற் பற்றியிருந்த வலியவில்லைக் கண்டித்தகாலையில்அதிககோபங்கொண்டுமற்றொருவில்லையெடுத்துவளைத்து விஷங்களைக்கக்கும் தீட்சணியமுள்ள கொடியபாணங்களைச்செலுத்த அதுஅதிகவுற்பாதங்களைக்காட்டிவந்து இராஜகுமாரன் கரத்திலிருந்தபருத்தவில்லைத்துண்டித்துத் தேரையும், சக்கைச்சக்கையாகப் பிளந்தெறிந்து பாகனையும்புரவிகளையுந்துண்டித்துஅவனையுந்தண்டித்துவாட்டியதுஅப்போதுஅசுரேந்திரனென்னசெய்வான் வெகுநேரமாய்க் கணக்கிறந்த வீரர்களுடன்கொடியபோரைச்செய்து வருவதினாலும் வீரவாகுதேவர் பாணங்களின் சுறுக்கினாலும் ஜயவுற்சாகமற்றவனுய்ப் பக்கத்தில்நிற்கின்ற சேமத்தேரிற்பாய்ந்தான் இதைப்பார்த்திருந்த தேவர்கள் அவன்வீரத்தன்மைக்கும் போரின்திறத்துக்கும்மெச்சி இந்தவீரனைத் துரிதமாய் வீரவாகுதேவர் வெற்றிகொள்ளக்கடவரென்று ஆசிகளைக்கூறினர், இந்தஇராட்சதகுமாரனை வீரன்வெல்வது அரிதோஅவன் யானைமுகன்பிள்ளை இவன் சரபப்பட்சியாகிய சிவகுமாரன் யானையைவாட்டுவது சரபப்பட்சிக் கொருபொருளோ உடனே அசுரேந்திரன் மனம்பொறுமல்தன்வில்லைவளைத்து நூறுஅர்த்தசந்திர பாணங்களைத்தூண்டி வீரவாகுதேவர் ஆரோகணித்திருந்த தேரைக்குதிரைகள் சாரதியுடன் சின்னபின்னப்பட் டுருளக்கண்டித்தகாலத்தில் வீரவாகுவுக்குத் தேருதவியில்லாமையால் கருடனைப்போல வானத்திலெழும்பிச் சண்முகதேவரைத்துதித்து அண்டங்களதிர ஆர்ப்பரித்துக்கொண்டுதமதிடையிலிருக்கின்ற வீரவாளாயுதத்தையுருவிக் கரத்திற்பற்றினவராய்ச்சந்திரனைக்கவ்வும் இராகுவைப்போல இராஜகுமாரனேறியிருக்கின்ற தேரிற்பாய்ந்து பருவதம்போல உருண்டுதிரண்டுவிளங்கியிருக்குந் தோள்களினொன்றைவெட்டித்தள்ளியகாலத்தில் உதிரமிரைச்சலிட்டோடிய தெப்படிக்கிருந்ததெனில், நீலகிரியின்மருங்கில் வாசஞ்செய்திருந்த காளமாநாகமானது கிரணகாந்திகளைவீசும்சிரோரத்தினத்தைக் கக்கியதைப்போலத் தோற்றியது இவ்விதமாய்

வலக்கரமற்றவுடன் அசுரேந்திரன்கோபித்து பருவதாகாரமாகப்பாரித்திருந்த தண்டாயுதத்தையெடுத்துச்சுழற்றி வீரவாகுதேவர்மேல்மோத அவர் அதைத்தட்டிவிட்டுப் பின்னிடைந்து அவன்சிரத்தில் உதைத்தனர்.

அப்போது அசுரேந்திரனுக்கு அதிககோபாவேசமுண்டாய் வடவாமுகாக்கினியைப்போற்சீறிஉடைவாளையுருவிக்கொண்டு பின்னடியிட்டு முன்னடிபாய்ந்து வரும்போது இனியிவனைவைக்கலாகாதென்றெண்ணித் துரிதமாய்த் தமதுகரத்தில் மின்னலைப்போலச் சொலித்திருந்த வீரவாளைச்சுழற்றியோங்கி அசுரேந்திரன் சிரமானது நிலத்தில்விழுந்துருள வெட்டித்தள்ளிய காலத்தில் மைநாகபருவதம்சாய்ந்ததைப்போலஇராஜகுமாரன் கரியதேகம் உதிரத்தைப்பெருக்கிப் பூமிபிளக்கும்படியாய்விழுந்து பேரொலியைக்காட்டிப் பிராணன்நீங்கியது இந்தஜயத்தை வானத்திலிருந்த தேவர்கள்கண்டவுடன் நகைமுகராய்க் கரங்களைத்தட்டிக்கொண்டு வீரவாகுதேவர் சவுரியத்தையும் பெருமைகளையும் புகழ்ந்துவாழ்த்தினர், இந்தக்கொடியசம்பவம்நேர்ந்ததைக்கண்டஇராட்சதப்படைகள்மனந்தாபரியாமற் கோடுகோடெனப்புலம்பி இனிசற்றுநேரம் நிற்போமாகிற் பிராணசேதம்வருமென்று நாலுதிக்குகளினு மிறைந்தோடினர், அத்தருணத்தில் புறவணியிலிருந்த சூரபதுமனுனவன் குமாரர்களிருவருமிறந்ததையும் சமுத்திரத்தைப்போல ரணக்களமெங்கும் நிறைந்து குமுறிக்கொண்டிருந்த இராட்சதசேனைகள்மாண்டும் பயப்பிராந்தியினுற் பறந்தோடியதையும் தெரிந்தவுடன் வடவைக்கனலும் ஆலகாலமும் ஒன்றுபட்டுச்சீறியெழுந்ததைப்போல ரவுத்திராகாரமாய்க்கோபித்து பிரளயகாலருத்திரனை யொப்பாகச்சீறிநமது சதுரங்கசேனைகளையுஞ் சின்னபின்னப்படுத்திய சத்துருக்களை இந்தநிமிஷத்திற் கண்டதுண்டப்படக் கொல்லுவேனென்று உக்கிராகாரனுய் மனோவேகத்தினுமேலிட்டுநடக்கும்இந்திரஞாலத்தேரை முடுக்கிக்கொண்டுவந்து யமனுடையபசியைத் தணிக்கவல்லதாய்த்தங்கக்கட்டுகள்பிகிந்துமணிகள் சத்திக்கும் மகிமையுள்ள தனுசைவளைத்து வீரலட்சுமிவாசஞ்செய்யும் நாணேற்றிஅழகியவிரலினுற்குணத்தொனியை யெழுப்பியகாலத்தில் அவ்வதிர்ச்சியைக்கேட்டபூதப்படைகள் கைகால்களுதறலெடுத்து பற்றியிருந்தமராமரங்கள் பருவதங்கள்சோர்ந்துபோகச் சண்டைகொடுக்கவிருந்த தயிரியமும் வலியுமிழந்து தேகம்நடுநடுங்கிப் பஞ்சேந்திரியங்களைகள்பேதித்துத் தலைகிறுகிறெனச்சுழலப் பிராணபீதியினுல் தலைவிரிகோலமாய்த் திசைகெட்டோடியும் மூர்ச்சையாய்ப் பூமியில்விழுந்தும் காலாடாமல்திப்பிரமைகொண்டுநின்றும் உதைத்துக்கொண்டிறந்தும் அறிவழிந்துகோபித்தும் இவ்விதமாகப் படாதபாடுகளைப்பட்டனர், சூரன்குணத்தொனிக்கஞ்சிப் பூதப்படைகள்பட்டகோரத்தை யின்னவிதமென்று சொல்லிமுடியாது பிரமதேவனும் நமக்கென்னகேடுநேருமோவென்றுதிகிலடையவும் ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் இந்தப்பாதகனைநம்பவொண்ணுது எங்கொளிப்போமென்று யோசிக்கவும் சருவசங்காரமூர்த்தியாகிய சிவபிரான் சபாசென்றுமெச்சி மணிமுடியை யசைக்கவும் பொன்னுலகத்துக்கதிபனுன இந்திரன் திடுக்கிட்டு நமக்கென்ன கேடுண்டாகுமோ இனிஎன்னசெய்கேன் ஒன்றைநினைக்க மற்றொன்று நேர்ந்ததகதையாகமுடியும்போற் காணுகின்றது, ஆயிரத்தெட்டண்டங்களையும்வென்ற ஜயசாலியாகிய இந்தச்சூரபதுமனுடனெதிர்த்து வீரவாகுதேவர்போர் செய்யவல்லரோ ஆகிலுமென்ன நம்மனைவரையும் பாதுகாத்திரட்சிக்கவல்ல கிருபாநிதியாகிய பாலசுப்பிரமணியதேவர்பின்னணியிலிருக்கின்றனர், இந்தப்பாதகனைமிஞ்சவிடமாட்டாரென்று பலபலநினைந்து பார்த்திருக்கவும் மன்னுயிர்களைக் காலாதிகளிற்கொண்டுபோகும் யமதருமராசன்திகிற்பட்டு இதுபரியந்தம் இராட்சதரிருக்கின்ற பிரதேசங்களில் அடிவைத்தவர்கள்நாமல்லஇப்போதுதாருகாசுரனுயிரையும்சிங்கமுகாசுரன்பிள்ளையின்பிராணனையுமின்னமும்பலகோடியிராட்சதர் ஆவியையும்கொண்டுவந்தனம்இதை வஞ்சகன்மனதிற்கறுக்கம்வைத்து என்னபாடுபடுத்துவானே இதற்கென்னசெய்வேன் தெய்வமேதுணையென்றுசிவபிரானைத்துதித்திருக்கவும் சுத்தபவுத்திரமாகிய தருமதேவதை சத்துருக்களுடைய பாதகத்துக்கிரங்கியஞ்சவும் உலகவியாபாரங்களைநடாத்தும்பஞ்சபூதங்களும்திகைத்துவாடவும் எறும்புமுதல் யானையீருகச்சொல்லாநின்ற எண்பத்துநான்குலட்சம் சீவபேதங்களும்பொருமித்திகைத்து ஒன்றின்மேலொன்று சோர்ந்துகிடந்தன, கொடியபாதகனுகிய சூரனெடுத்த நாணோசையைச்செவியிற் கேட்டவுடன் வலியும்வீரமும் ஜயப்பிரதாபங்களும் மகிமைகளையும்பெற்று வீறியிருந்த இரண்டாயிரவெள்ளம் பூதப்படைகளும்திகைத்து நடுநடுங்கிப்பறந்ததென்றால் உருவகமற்ற பஞ்சபூதங்களும் மற்றபிராணிகளும்வாடியதெனப் பேசுவதொரு அதிசயமோ இதைக்குறித்துவளைத்துவளைத்துப் பேசவேண்டுவதில்லை, சூரன்காட்டிய நாணோசையானது அண்டபுவனகோடிகளனைத்திலும் பன்னிரண்டுதேவவருஷகாலம் முழங்கிக்கொண்டிருந்தது.

இப்படிக்கொத்தநாணோசைக்குநடுங்கிக் கருங்கடலைப் போலப்பரந்திருந்த பூதசேனைப்பெருக்கானது இருந்தவிடந்தெரியாமற்பறந்துபோனவேடிக்கையைப்பார்த்துப் படைத்தலைவர்களாகிய நூற்றெண்மரும் மனம்பொருமல் தயிரியசாலிகளாய் மேலிட்டுவந்து வானையளாவநிற்கின்ற பருவதங்கள் திசைகளைமூடத்தழைத்திருக்கின்ற மரங்கள்-தண்டாயுதங்கள்-பிண்டிபாலம்-கப்பணம் - முசலம்-நாஞ்சில்-எழு-மழு - முதலியபடைகளைச் சோனைமாரியைப்போல அமோகமாய்ச் சூரபதுமன்மேற்சொரிந்து அட்டகாசங்களைச்செய்தபோது இராஜாதிராஜன் அவர்கள்செய்கைக்கு நகைத்துப் பத்துநூருயிரகோடிகுரூரமாகிய பாணங்களை வில்லிற்பூட்டிப் பிரயோகித்துத்தன்மேல் வீறிவருகின்ற பருவதங்கள்முதலானவைகளைத்துகள் பறந்துபோகச்சாடி கெக்கலிகொட்டியிருக்கின்ற பூதசேனைத்தலைவர்கள் தலை-முகம்-கண்டம்-தோள்-கரங்கள்-மார்பு-துடை-கால்முதலிய சரீரஉறுப்புகளைப் பலகணிவாயிலைப்போலத்தொளைத்தும் சக்கைச்சக்கையாகப் பேர்த்தெறிந்தும் ஊசிநாட்டவிடமில்லாமற் பாணங்களைச்சொருகியும் இப்படிக்கு வாட்டும்போது உதிரம் பிரவாகமாயோடிப் பலஹீனப்பட்டு அதிபலன் திகைத்துநின்றனன், வக்கிரன்களைத்து விழுந்தனன், வச்சிரன் காயங்களின் உபத்திரவத்தினுல்வருந்தி துக்கித்திருந்தனன். கபாலிமனவூக்கமற்று பிரமித்துநின்றுவிட்டனன், உன்மத்தன்மிகவும்வருந்திஏங்கினேன், அச்சுதன்கரத்திலேந்தியபர்வதத்துடன் மதிமயங்கிநின்றனன், மாபலன் அதிகவருத்தப்பட்டபடியால் ஓடினவனுமன்று சண்டைக்கெதிர்ந்த

வனுமல்ல சித்திரப்பிரதமையைப்போல விழிகளைத்திறந்துகொண்டுகின்றனன், அதிசயன்வாடினன், மேகன்மருண்டான் அண்டவர்பானன் துயரத்தோடிரங்கினன், மேகமாலிமனம்நடுங்கினன், சுப்பிரன்மெலிந்தனன், கரகபாதன், சரீரம்பதைபதைத்துநின்றனன், உதவகன்மருண்டிருந்தனன், அசலன்சரீரத்திற்பெருகும் உதிரத்திலமூந்தி அசைவற்றிருந்தனன், மாகபந்தன் மிகவும்நொந்திரங்கினன், அத்திரிசோபித்து அடியற்றபனையைப்போல விழுந்தனன், பத்திரன் சற்றேபின்னிட்டனன், பதுமனினைத்துக்களைத்தான் வியாக்கிரனுந் தனஞ்சயனும் ஓடிப்போயினர், மத்தன், பலவிதமாகவைது பெருமூச்செறிந்தனன், பினாகிமெய்மறந்திருந்தனன், சித்திராங்கதனும் கனகனுந் துக்கசாகரத்திலழுந்தினர், நீலனும்மாலியும்மனவலிகுன்றிக்குறைந்தனர், கும்பனும், நிகும்பனும், கண்பஞ்சடைந்து தோற்றமற்றுத் துழாவியிருந்தனர், சண்டியும், தண்டியும், பதைபதைத்தஞ்சியேங்கினர், வாமனும், சோமனும், மாண்டனர், உக்கிரன்எழுந்திருக்கச்சத்தியற்றுக்கிடந்தனன், சிங்கன்ஓய்ந்துபோனான், சுவேதகிரீடன் மனத்தெளிவற்றிருந்தான், சங்கபாலன்விழுந்துருண்டனன், நந்திசலித்தனன், பிங்கலன், சுவாசமற்றுக் கிடந்தனன். உரோமசன்பறந்தனன். இப்படிக்கிவர்கள் முதலிய சேனைத்தலைவர்கள் நூற்றெண்மரும் சின்னபின்னப்பட்டுவாடி வருந்திக்களைத்து மருண்டு திகைத்துச் சோபித்தும் செத்தும் புறந்தந்தோடியும் ஒளித்தும்பதுங்கியும் சோர்ந்தும் கிலேசித்தும் சண்டைகொடுக்க வலியுந்தயிரியமு மில்லால் மானமற்று நடுநடுங்கிப் போனதை நாலுயிருஞ் சுத்தவீரர்களாகிய அணித்தலைவர்க ள்கண்டுமனம்பொறுமற் கோபதீபிதர்களாய்ச் சூரியனைமூடிய பனிப்படலத்தைப்போலவயிரதேகத்தைப் படைத்திருக்கின்ற சூரபதுமனைச்சூழ்ந்துகொண்டு தங்கள்கரங்களிற்பற்றியிருந்த விற்களைவளைத்து பலவிதபாணகோடிகளைப்பிரயோகித்துப்பிண்டிபாலந்தோமரம், முசலம், கப்பணம், முசுண்டி, எறிவேல், சக்கரம், இருப்புலக்கை முதலிய படைகளையும் பருவதத்தின்மேல் மேகங்கள் கவிந்து வருஷித்ததைப்போல ஒன்றனந்த கோடிகளாகச் சொரிந்து சிருங்காதங்கள் அட்டகாசங்களைச் செய்து போராடுவதைச் சூரன்பார்த்துச் சற்றுகோபங்கொண்டவனாய்ப்பினாகத்தையொத்ததன்வில்லில் அதிகதீட்சணியமுள்ள பாணங்களை அபாரியாகப்பூட்டிப் பிரயோகித்து எதிரிகள் செலுத்திய அஸ்திரசஸ்திரங்களைத் துகள் பறந்தோடக்கண்டித்தும் துண்டித்தும் தண்டித்தும்சின்னபின்னப்படவெட்டியும் தட்டியுமிடித்தும் பொடித்தும், இவ்விதமாக நிமைப்போதிற்சூரியன் முன்பனியைப் போலவிலக்கி ஆர்ப்பரித்து ஆயிரகோடி நாராசங்களைச் செலுத்தி ஏககாலத்தில் அவர்கள்கரங்களிற் பாரித்திருந்தவிற்களைப் பற்பலதுண்டங்களாக வெட்டியெறிந்து மறுபடியும் அவர்கள்மாறுவிற்களை யெடுப்பதற்குமுன்னம்கூரிய அலகைப்பெற்றிருக்கின்ற பதினாயிரகோடிகொடியபாணங்களைப் பிரயோகித்து அவர்களேறியிருந்தநவரத்தினமயமாய்ப் பாரித்ததேர்களை வண்டில்-அச்சு-மச்சு-குத்துக்கால்-கொடுங்கை-கொடி-குடை- வெவ்வேறாகச் சிதைந்துருளும்படிக்குச்சாடி வேகமுள்ள குதிரைகளைக் கண்டதுண்டப் படுத்திச்சாரதிகளைக் கொன்று மேலும் ஒவ்வொருவனுக்குஆயிரங்கரேமாகியபாணங்களைச்செலுத்தினன்.

அவ்வாளிகள் வெளிப்பட்டவுடன் புகைந்து தீயையிறைத்துக் குறுகுறென்றும் ஆவ்ஆவென்றும் உதறிக்கொண்டு அதிவேகமாய்வந்துபாய்ந்துமார்பையுங்கண்டத்தையும் முகத்தையும் புசங்களையும் சல்லடைக்கண்களாகத்துளைத்துங் கண்டித்துங் கொன்றும் பிளந்துமோடியதருணத்தில் உதிரப்பிரவாகம் பெருக்கெடுத்தோட அணித்தலைவர்கள்சின்னபின்னப்பட்டுச்சிதறிமங்கிப்போனதை நவவீரர்களி லொருவனாகிய வீரமார்த்தாண்டன் கண்டு மனம்நொந்து மானம்பாதிக்க வடவாமுகாக்கினியைப்போலக்கொதித்து அதிவேகமாகத் தன்தேரைமுடுக்கிக்கொண்டுவந்து சூரபதுமனுக்கெதிரில்நிறுத்தி ரவுத்திராகாரமாகக்கோபித்துப்பாரித்திராநின்ற தன்வில்லை வளைத்து அண்டங்களதிர குணத்தொனிசெய்துசத்தசாகரங்களும் ஏங்கிவாடும்படிக்கு ஆர்ப்பரித்து குரூரமாகிய பாணவருஷங்களைப் பொழிந்தகாலையிற் சூரபதுமன் கோபித்துப் பற்பலகணைகளினால் மீறிவருகின்ற பாணங்களைப்பொடிபடுத்தி மேலுந் தீயையொத்த கொடியபாணங்கள் ஆயிரத்தைப் பகைவன் நெற்றிக்குக் குறிக்கொண்டு செலுத்தினன், அந்தச்சரங்கள் சீறிக்கொண்டுவந்து நாராசங்களைப்போலச் சுருக்குச்சுருக்கெனத் தைத்தமாத்திரத்திற் சிந்தூரப்பொட்டுகளை யப்பியதைப்போல உதிரமானது பீரிட்டுக்காட்ட அதைத் துடைத்துக் கொண்டு காளகூடத்தைப்போலச்சீறி நாராசங்களுக்குச் சமதையாகிய கணக்கிறந்த பாணங்களைச் சூரபதுமன் மேற்செலுத்த அவற்றினை ஆயிரம் பாணங்களைக்கொண்டு நடுவதுபாதியிற் கண்டித்துப்போட்டுக் கரத்திற் பற்றியிருக்கின்ற வில்லையும் வெட்டியெறிந்து மார்பைப்பிளந்து முதுகிற்கட்டியிருந்த அம்புறுத்தூணியையும் அறுத்துத்தள்ளினன் அந்தக்காயத்தினால் வீரமார்த்தாண்டன் புழுகைப்போலப் பதைபதைத்துவிழுந்து சோர்ந்தனன், இந்தச்சம்பவத்தை வீரராக்கதன்பார்த்து மனம் பதைபதைக்கப்பொங்கி சத்திராதியை இந்தநிமிஷத்தில் அடக்கி வாட்டுவேனெனச் சபதம்பேசித் தேரைக்கொண்டுவந்து எதிரில்நிறுத்தித் தங்கக்கட்டுகள்பிகிந்து வெற்றிமாலையணிந்து மணிகள்சத்திக்கும் பாரித்தவில்லை வளைத்து ஆயிரம் அர்த்தசந்திரபாணங்களைப் பிரயோகித்தனன். அவைகளிரைந்து புகைந்துகொண்டு வருகிறவேகத்தைச் சூரபதுமன்பார்த்துக் கோபித்தவனாய் அவ்வளவு கொடியபாணங்களை மாறுசெலுத்திக் கண்டித்து மேலுஞ் சிலகணைகளைப்போக்கி வீரராக்கதன் கொண்டவில்லையிருதுண்டமாக்கியபோது அவன்சர்ப்பத்தைப் போலச்சீறிச் சீக்கிரமாய்உடைவாளாயுதத்தையுருவிகரத்திற்பற்றிக்கொண்டுவானத்திலெழும்பித்திசையானைகள்பயந்தோடக் கர்ச்சித்து இராஜாதிராசன்ஏறியிருக்கின்றஇந்திரஞாலத்தேரிற் பாய்ந்து மகம்மேருவைப்போலஇராஜன் கரத்திலிருக்கின்ற வில்லை வெட்டியபோது அதற்குச்சற்றும் காயம்படாமல் வாள் பொடிப்பொடியா யிறைந்தது அப்போது வீரராக்கதனுக்கு அதிககோபம்பிரவேசித்து இந்தப்பாதகனை விடமாட்டேனென்று கையைப்பிசைந்து கொண்டோங்கி மார்பிலறைய யத்தனப்படுவதைச் சூரன்கண்டு நிராயுதனாக விருப்பவனைக்கொல்வதுபழிபாதகமா மென்றெண்ணிகால்விரலினால்வானத்திற்போக

வெற்றியபோது சக்கரத்தைப்போலச் சுழன்றுகொண்டு அண்டப்பித்திகை வரையிலெழும்பி முட்டிமறிந்துஇரைச்சலிட்டுப் பூமியில் வந்துவிழுந்து பதை பதைத்துச் சோர்ந்தனன். இந்தஅபாயத்தைவீரமாமகேந்திரன்கண்டு கோபதீபிதனுய்ச் சூரனைவளைந்துகொண்டுவில்லைவளைத்துக் குரூரமாகிய பாணங்களை அபரிமிதமாகச்செலுத்தி இந்திரஜாலத் தேரொருவருக்குந் தோற்றமல்மறைத்த காலத்திற் சில திவ்வியபாணங்களைக்கொண்டு அவற்றினைக்கண்டித்துப்போட்டுமேலும் கணக்கிறந்தகணைகளைச்செலுத்த வீரன் அவற்றினைத் தடுத்துத்தன்தேரைக்குயவன் சக்கரத்தைப்போலத்திருப்பிக் கோடானகோடி பாணங்களைப் பிரயோகித்து வாதாடும்போது சூரனும்உக்கிராகாரனுய்த் தன்தேரையும்வட்டாகாரமாகச் சுழற்றிமறுகணைகளைப்போக்கிப்பகைவன் தூண்டியவற்றினைப்பொடிபடுத்தினன்.

இவ்விதமாய் அவ்விருவீரர்களும்சூறுவளிக்காற்றைப் போலத் திரிந்துஒருவர்மீதொருவர் சரமழைகளைப் பொழிந்தும் அவைகளை மாற்றியும் உலாவுகின்றவேகத்தினல் அவர்களுருவு யாவருக்குந்தோற்றமற்போயிற்று அக்காலத்தில்சூரன்சீறி வீரமாமகேந்திரன் விட்டபாணங்களனைத்தினையும் கண்டதுண்டப்பட வெட்டிமேலும்பாதங்களுக்கிலக்காய் முப்பது பாணங்களையும் மார்புக்கிலக்காய் இருபதுகணைகளையும் பாரித்ததோள்களைக்குறித்துமுப்பது சரங்களையும் போக்கிச் சக்கைசக்கையாகப் பேர்த்தெறிந்தகாலத்தில் ரத்தம்பீரிட்டோடப் பிரக்ஞை தப்பிவிழுந்தான் அத்தருணத்தில் சூரபதுமன் கோபதீபிதனுய் ஆட்டுமந்தையிற்கோனாய் புகுந்ததைப்போலப் பக்கங்களிலிருக்கின்ற பூதர்களைவாட்டிக்கொண்டுமேலிட்டுவருவதை வீரதீரன் பார்த்து மிகுதியாகக்கோபித்துவில்லைவளைத்து அமோகமாகபாணங்களைச்செலுத்திக்கொண்டெதிர்த்து வரும்போது சூரபதுமன் கோபித்து ஆயிரம்பாணங்களினு லவைகளைப்பொடி செய்து மேலுஞ்சிலசரங்களைத் தூண்டிபகைவனேறியிருந்த பாரித்ததேரை வண்டில், அச்சு, மச்சு, குத்துக்கால்கொடிங்கைமுதலியவற்றைச் சின்னபின்னப்பட வெட்டியெறிந்துஜயத்தைக்கொண்டாடியபோது அதற்குச் சகிக்கமாட்டாதவனுய் நல்லகாரியம் உன்கெலிப்பை யடக்குகிறேனெனச்சீறி மந்தரகிரிக்கொப்பாகப் பாரித்திராநின்றதண்டாயுதத்தைக் கரத்திற்கொண்டு கிறுகிறெனச் சுழற்றிப்பாய்ந்துமேலிட்டுவருவதைச்சூரன்கண்டு நான்குதிவ்விய பாணங்களினுல்வீரதீரன் பற்றியிருக்கின்ற கதையைப் பொடியாக்கி விசாலமாகிய மார்பிலும் பருவதத்தையொத்த தோள்களினும்பதினுன்கு கொடியபாணங்களைச் செலுத்திஅவனைப் பூமியிற் கிடத்தினுன், இதைச்சிங்கத்துக்குச்சமானனுகிய வீரமாமகேசன் கண்டுகண்களில் அக்கினிப்பொறிகள் பறக்கக்கோபித்துவேகமாய்வந்துஇவனைத்தனுர்வித்தையில்வெல்வதரிதென நிதானித்து சவுரியபராக்கிரமங்களையும்மகத்துவங்களையுங் கிரகிக்கவல்லசூரியவேலாயுதத்தையெடுத்துக் குறிக்கொண்டுதீவிரமாயெறிந்தான் அதுஇரைந்துவரும் மகிமையைப்பார்த்து சூரபதுமன் துரிதமாய்த்தன் வில்லில் ஆயிரம்பாணங்களைப்பூட்டிச்செலுத்தித் தடுக்கவும் அவற்றினை விழுங்கிக்கொண்டு சீறியிரைந்துஅனலைக்கொட்டி வடவையைப்போலச்சீறிவந்து மேகத்தினிடத்தில் மின்னல் விளங்கியதைப்போல இராட்சதராசன்மார்பிற்றுக்கி யாதொரு காயங்களையும்படுத்தாமல் வலிகுறைந்து பொடிப்பொடியாய்ப் பறந்துபோயது. அப்போது மானம்பாதிக்கச் சர்ப்பத்தைப் போலச்சீறிமீளவும்ஒருதண்டாயுதத்தை யெடுத்துச் சுழற்றிவீசுவதற்கு முன்னம் சூரனுனவன்மகத்துக்களிட்ட சாபத்தினும்வேகமுங்கொடுமையையும் பெற்ற குரூரமாகிய பாணங்களேழைப்பிரயோகித்து வீரமாமகேசன் வயிரம்போன்ற மார்பைப்பிளந்தான் அவ்வழியே உதிரம்பீரிட்டோடஅறிவழிந்துவிழுந்தனன்.

இச்சம்பவத்தைச் சிவசுப்பிரமணியதேவருக்கடியனுகிய வீரகேசரிதெரிந்து உக்கிராகாரனுய்ச்சந்திரன்மேல்தாவும் இராகுவைப்போலத் தன்தேரைத்துரத்திவந்து சூரனுடனெதிர்த்து வலியவில்லைவளைத்து அமோகமாகியபாணங்களைப்பிரயோகித்தகாலையில் இராஜாதிராஜன்சிலபாணங்களைக்கொண்டு கண்டித்துப்போட்டு மேலும்ஏழுதிவ்வியபாணங்களைப் பிரயோகித்து வீரகேசரிகரத்திற்பற்றியிருந்த வில்லைக்கண்டித்து கர்க்கரத்தொனிகளைக் காட்டியோடும் தேரையும் குதிரைகளையும் சாரதியையும்உருத்தெரியாமற் சிதைத்துமறுபடியும் ஆயிரம் வெப்பமுள்ள பாணங்களினுல் அவன்நெற்றியைத் துளைத்தகாலத்தில் உதிரம்பெருகவருந்தியும் அதைச்சட்டைமண்ணுமற்றுவிப் பக்கத்திலிருந்த பருவதத்தைப்பறித்துச் சூரன் மேலெறிந்து கர்ச்சித்தகாலத்தில் அவ்வரையானதுசூரியன்முதலானவர்கள்திடுக்கிட் டஞ்சும்படிக்குச் சக்கரத்தைப்போலச் சுழன்றுகொண்டுவருவதைப்பரிமளமிகுத்தபாரிசாதமாலைபுரளும் மார்பையுடையசூரன்கண்டுதன்வில்லில்அர்த்தசந்திர பாணமொன்றைப் பூட்டிப்பிரயோகித்துத் துகள்கண்டு மேலும் ஆயிரம் திவ்வியபாணங்களைப் போக்கி வீரகேசரிமார்பைத் துளைத்தமுன்னிலையில் மிகவும்வருந்தி வடவையைப்போலச்சீறியிராட்சதராசனேறியிருக்கின்ற தெய்வீகமாகிய தேரிற்பாய்ந்து முத்துமாலை மோகனமாலைகளையணிந்து விசாலமாய் வயிரத்தையொப்ப விளங்குகின்ற மார்பிற்கோடையிடியைப்போலக் கரத்தையோக்கிஅறைந்தகாலத்திற் களர்நிலம்வெடித்துக்காட்டுவதைப்போலக் கரமானது பத்தல்பத்தலாய்ப்பிளந்து ரத்தப்பிரவாகமோடப் பதைபதைத்து நொந்துதேரில்விழுந்தனன், அவனைக்கொல்லுவதுபாதகமென்றெண்ணிச் சூரன்தன்கையினுல் வாரியெடுத்து தேவர்கள்மருண்டுதிக்கிக்க ஸ்ரீமகாவிஷ்ணுபள்ளிகொள்ளுந் திருப்பாற் கடலில் விழும்படிக்கெறிந்தான் அவன்கருடனைப்போல் வேகமாய்ப்போய்விழுந்து முழுகித் தாவியெழுந்துகனத்திற் பாய்ந்துவந்து ரணக்களத்தைச்சேர்ந்து வாடியொளித்திருக்கின்ற தம்மவருடன்கலந்திருந்தனன், இச்சம்பவங்களைத்தெரிந்த வீரமாபுரந்தரனென்னுஞ்ஜயசாலியானவன் காலாந்தகனைப்போலக்கோபித்து தன்தேரைத்துரத்திவந்து சூரபதுமனுக்கெதிரில் நிறுத்தி இந்தப்பாதகன்மேல் எத்தகையபாணங்களைச் செலுத்தியபோதினும் பிரயோசனப்படாமற் போகின்றபடியால்தேவாஸ்திரங்களைக்கொண்டு வெல்லக்கடவேனெனநிதானித்துத் துரிதமாய்ஒப்பற்ற தன்வில்லைவளைத்து குணத்தொனிகொண்டுயமதருமராஜன் படையையெடுத்து மானசபூசையினுல்சகலவுபசாரங்களையுஞ்செய்து பூட்டிச் சூரன்மார்புக்கிலக்காகக் காதளவுமிழுத்துப்பிரயோகித்தபோது அதிகமகிமைகளைக்காட்டிப் புகைந்தெரிந்துகொண்டு ஆவ்ஆவென வாயைத்

திறந்துகொண்டு வேகமாய்மேலிட்டுவருவதைச் சூரன்கண்டும் சட்டைபண்ணாமல் நகைத்துக்கொண்டிருந்தபோதுசீறிவந்தபடையானதுவச்சிராயுதத்தைப்போலத்தாக்கித்தன்வலிகுன்றிக் குறைந்து வெட்கித்திரும்பிவிட்டதுசவுனகாதிரிஷிகளே, இதனாற்சூரன்பெற்றிருக்கின்ற வரப்பிரசாதமுயர்ச்சியைத்தெரிந்துகொள்ளக்கடவீராக.

இப்படிக்குத்தான் செலுத்தியபடையானதுதிரும்பிவிட்டதைக்கண்டவுடன் அதிககோபங்கொண்டு பிரமாஸ்திரத்தைத்தொடுக்க யத்தனிக்குமுன்னிலையிற் சூரன்தன்வில்லில் நூறாயிரங்கடினமாகிய பாணங்களைப்பூட்டிவீரமாபுரந்தரன்மார்புக்குச் சரியாய்ப்பிரயோகித்த காலையில் வடவையைப்போல எரிந்துசிடசிடத்ததொனிகளுடன்அதிவேகமாய்வந்து தடாரித்துருவி வாயிலைப்போல வெளியாக்கி யோடியபோது உதிரங்களைக்கக்கிக்கொண்டு கரத்திற்கொண்ட பிரமன் படையுடன் நிலத்தில்விழுந்து மாண்டனன், இதைக்கண்ட வீரராந்தகன் நல்லகாரியம் பாதகராகிய இராட்சதர்வீறிப் பூதப்படைகள் மங்கவும் சூரனுக்கஞ்சி நம்மவர்கள் பின்னப்படுவதோ இதுவெகுரோத்தியெனப்பொங்கித் துரிதமாய்த் தேரைத்துரத்தி வந்துஎதிரில்நிறுத்திச் சூரனைப்பார்த்துச்சொல்லுவான்ஏதோசில வெற்றியைப்பெற்றனமென்று வீறியிருக்கின்றனைஅதைவிட்டுவிடக்கடவாய், உனக்குயமனைப்போலவந்தேன் நிமைப்போதில் உன்பிராணனை வீரசொர்க்கத்திற்சேர்ப்பேன்.பத்திரமாயிருக்கக்கடவையென்று எச்சரித்துச்சார்ங்கத்தினும் மன்மதன்வில்லினும் மேலிட்டவலியுடையதாய் வரிவரியாய்த் தங்கக்கட்டுகள்பூண்டுவெற்றிமாலைசூடியிருக்கும் பாரித்தவில்லையெடுத்துவளைத்து பன்னுயிரனைத்தும் செவிடுபட்டுத்தியங்கவும் சூரியனிதென்ன உற்பாதமாகவிருக்கின்ற தென்றோடவும் தேவர்கள்தேகமுற்றும்வியர்த்துக்கிடுகிடெனநடுங்கவும் விஞ்சையர் சித்தவித்தியாதரர் பயப்பிராந்திகொண்டுபறக்கவும் இணைபிரியாமலிருக்கும் பேடைகள் வருந்தியேங்க அன்றில்பட்சிகள்பறந்தோடவும் சக்கிரவாகப்புட்கள் மதிமருண்டுகுஞ்சுகளை வாயிற்கவ்விக்கொண்டு தமதுநிலைகளைவிட்டுப்பறந்துபோகவும்இப்படிக்குச்சகலமும் தத்தளிக்கக் குணத்தொனிசெய்து உடனேசங்கோபசங்கமாக அதிகமகிமைகளைப்பெற்றிருக்கின்ற திவ்வியபாணங்களைப்பூட்டிச் சூரபதுமன் ஆரோகணித்திருக்கின்ற இந்திரஞாலத்தேர்ஒருவருக்குந்தோற்றாமல் மூடிக்கர்ச்சித்தகாலத்தில் மாறுகணைகளைக்கொண்டு அவைகளைச்சூரியன்முன்பட்ட பனியைப்போலவாட்டி உதிரமாம்சங்களைப் பிராணனுடனுண்டுகளிக்கும்படியான கொடியபாணங்களை மிகுதியாகப்போக்கி வீரராந்தகனை மறைத்தான்அவைகளை அத்தொகைச்சரங்களைச்செலுத்திச் சின்னபின்னப்படக் கண்டித்தெறிந்து சிருக்கநாதஞ்செய்தகாலையிற் சூரபதுமன் அதிககோபங்கொண்டு கூர்மையாய்முத்தலைகளைப்பெற்றிருக்கின்ற ஆயிரம்வயிரப்பகழிகளைவேகமாய்வில்லிற்பூட்டி வீரராந்தகனைக் கொல்லும்படிக்குக் கடாவியபோதுஅவைகள் சர்ப்பங்களைப்போலச்சீறிக்கொண்டு தீயையிறைத்து வாயுவினுங் கடுகிவரக்கண்டுவீரராந்தகன் சீக்கிரமாய்த்தன்வில்லிற் கணக்கிறந்த பாணங்களைப்பூட்டிப் பிரயோகித்துத் தடுத்தபோதினும் அவற்றினைக்கவளீகரமாய் விழுங்கிக்கொண்டிரைந்துவந்துவிழுந்து தேரையழித்துக் குதிரைகளைக்கொன்று பாகனைச்சிதைத்துக் கரத்திற்கொண்ட வில்லைக்கண்டித்துத்தயிரியத்தைக்கலக்கிமார்பிற்பாய்ந்துஉயிரையுண்டு இரத்தப்பிரவாகமாக்கியிந்திரனாதியதேவர்கள்திடுக்கிட்டுவாடிச்சோர முதுகின்வழியாயோடிப்போய்விட்டது. இப்படிக்கு வீரராந்தகன் முதலாகியவீரர்கள்மாண்டும் புறந்தந்தும் மறைந்தும் போனகாலத்தில் எதிர்ப்பவரைக்காணாமையால் சூரபதுமன் அதிகவுற்சாகத்துடன் ரணக்களமெங்குமுலாவி வருவதைச் சிங்கத்தையொத்த ஜயசாலிகள்கண்டவுடன் பயந்தோடும் புயவன்மையைப்படைத்திருக்கின்ற வீரவாகுதேவர் பார்த்தவுடன் நல்லகாரியமெனக்கோப நகைகொண்டவராய் மானமும்வீரமும் மனதைவாட்டவடவையுங் குளிர்ந்துபோகும்படிக்குச்சீறி அதிவேகமாய்த்தேரை முடுக்கிக்கொண்டுவந்து சூரபதுமனுட னெதிர்த்தவளவில் அவர்சுந்தர வடிவைக்கண்டவுடன்இவன் ஆதியில்தம்மிடத்துக்குத்தூதாகவந்தவனென்றறிந்து ரவுத்திராகாரமாகக்கோபித்துஇதனைச்சொல்லுகின்றான்.

அடாபயலே சிறந்தபற்பலஅண்டங்களினும்புகழ்ந்துகொண்டாடத்தக்க பெருமையினையுடைய வீரமாமயேந்திரபுரத்தை நாசம்பண்ணிக்கணக்கிறந்த இராட்சதரைக்கொன்று சற்றும்பயமில்லாமல் என்னரியகுமாரனையுங்கண்டதுண்டமாகவெட்டிமாய்த்து தப்பிப்பிழைத்துப்போயின நீயோ இக்காலத்தில்உனக்குநாள்குறுகியபடியால்என்முன்னம் வந்தனைஇதோ உன்பிராணனையமலோகத்துக்கனுப்புவேன் சண்டையையும் இந்தநிமிஷத்தில்முடித்துவெற்றியுடன் நகரத்துக்குமீளக்கடவேன்,என்னைக்கண்டவுடன் தீர்க்காலோசனையைச் செய்து சூரத்தைவிட்டுத்தூதனைப்போல வந்திருப்பையாகிற் பிழைத்துப் போகும் ஹேதுவுண்டு அதைமறந்துநீயுமொருசூரனைப்போலநீண்டதனுசைக் கரத்திற்பற்றி உன்னதமாகியதேரிலேறிக்கொண்டு வந்தபடியாற் சந்தேகமில்லாமல்மாள்வதற்குத்தடையில்லை, ஐயையோ! இன்றைக்குஇந்த ரணக்களத்தில் மாளக்கடவாயென்று உன்தலையிற் பிரமனெழுதினனே! இதுதானுனக்குக் கடைநாளோ!சீக்கிரமாய் உன்னிஷ்டதேவதையை நினைந்துகொண்டுசண்டைக்காயுத்தப்படக்கடவாயெனச் சொல்லி முடித்தவுடன் வீரவாகுதேவர்சிறுநகைகொண்டு அவுணருக்கரசனேஇதனைக்கேட்பையாக, தூதனாகவுமிருப்பேன் மந்திரியைப்போலவும் விளங்குவேன், சத்துருக்களுக்கு ஜன்மவயிரியாகவிருந்து அவர்கள்வம்சநாசஞ்செய்வேன் எமதிறைவனாகிய பாலசுப்பிரமணியதேவர் கட்டளையிடும் பணிவிடைகளனைத்தையும் சிரசாகவகித்து நடப்பிக்கவல்லேன், அத்தேவ தேவோத்தமன் பரிபூரணகடாட்சவீட்சணிய முயற்சியினால் இந்தஉலகங்களில் எனக்கரிதாகியகாரியமொன்றுமிருக்கமாட்டாது ஆதலால்வீண்வார்த்தையாடுவதிற்பிரயோசனமென்னை நீசூரனெனப்பேர்படைத்தது நிச்சயமாகவிருக்குமாகில் துரிதமாய்ச் சண்டைக்குவரக்கடவாயெனப்பேசி யதுசெவியிற்பட்டவுடன் அதிககோபம்பிரவேசித்துக்காளகூடத்தைப்போலமண்டியெரிந்துகொவ்வைக்கனியையொப்பவிழிகள்சிவந்துதீப்பொறிகள்குபீல்குபீலெனக்கொட்டவுருத்துப்பார்த்துப்பற்களை நெறநெறெனக்கடித்து உதட்டையதுக்கிமயிர்க்கால்தோறும் அனல்வீசச்சர்ப்பத்தையொப்பாகச்சீறி நல்லகாரியம்சற்றுமெண்ணிக்கையில்லாமற்பேசிய உன்னாணவத்தைச் சற்றுநேரத்திலடக்குகிறேனெனக் கொதித்து மேருகிரிக்குச்சமமாக

விருகும்தனுசைவளைத்து நாணேற்றிக் குணத்தொனிசெய்தான்அவ்வதிர்ச்சியினுல்உலகங்களுக்கச்சாணியாகவிருக்கின்றமகம்மேரு கிடுகிடென்றசைந்து அஷ்டதிசைகளும் நடுக்குற்றுக்குலகிரிகள்நெக்குவிட்டு திசையானைகள்வீறிட்டுமெங்கி அண்டகோளகைநெக்குவிட்டுப்பூமிபாதலவளையில்பத்தல பத்தலாகப்பிளந்து அதைஒருதலைப்பாரமாகச் சுமந்திருக்கின்ற ஆதிசேஷனும்தத்தளித்து,ஆயிரம்பணமகுடங்களைக்கொண்டுதாங்கவருந்திவிஷங்களைக்கக்கவும் மற்றபிராணிகளும் நிலைகலங்கிவாடின, இவ்விதமாகச்சகலமும்பயப்பிராந்திகொண்டகாலத்தில்வீரவாகுதேவரும் தமதுகரத்திற்பிறைகத்தைப்போலவிளங்கும்தனுசைவட்டாகாரமாய்வளைத்து நாரியைப்பிகிந்துஒருதரம் டங்காரசத்தத்தைக் காட்டியபோதுபெருத்தஓசையை யின்னவிதமெனச் சொல்லிமுடியாது.

இவ்விருவீரருங்காட்டிய நாணொலியினேசையானது கலந்து திரிலோகங்களும் ஒருமுகூர்த்தகாலம் அல்லோலகல்லோலப்பட்டு மன்னுயிரனைத்தும் செவிகளடைபட்டுக் களைத்துச்சோர்ந்தது அச்சமயத்திற் சூரபதுமன்காட்டழலுக்கொப்பாகப்பொங்கி ஆயிரங்கோடி கொடியபாணங்களைச்சந்தித்து வீரவாகுதேவர்மேற்செலுத்திச் சிங்கத்தைப்போலக்கர்ச்சித்தான் அவைகளிளைந்துபுகைந்து அனலைவீசி பலகொடுமைகளைக் காட்டிவரும்போதுவீரன்அதிவேகமாகக் கோடைகாலமேகத்தைப்போலத் தமதுவில்லிற் கணக்கிறந்த குரூரமாகிய சரங்களைப்பூட்டிச் செலுத்தி மீறிவருகின்ற பகைவன்கணைகளைக்கண்டித்து வேடிக்கைபார்த்திருந்தனர், அப்போது சூரபதுமனுக்கு வீராவேசம்பிரவேசித்த இவன்மனஉறுதியைச் சற்றுநேரத்திற்கலக்கிவாட்டுவேனென்று சர்ப்பங்களைப்போல விஷச்சுவாலையை வீசவல்ல கடூரமாகிய பாணங்களை அமோகமாகப்போக்கினன், அவைகளின் கொடுமையை வீரவாகுதேவர்பார்த்து ஆயிரகோடி தீட்சண்ணியமாகிய சரங்களைக்கொண்டு மேல்வருகின்ற பாணங்களைத்துண்டித்துத்தள்ளியபோது சூரபதுமன் ரவுத்திராகாரனுய்த் துரிதமாக வெற்றிகொள்ளவேண்டுமென்கின்ற கருத்தைக்கொண்டு அதிகமகிமைகளைப்பெற்றிருக்கின்ற கொடியபாணங்களைப்பூட்டி வீரவாகுதேவர்மீதிற் செலுத்தினன். அவைகள் சிடசிடத்ததொனிகளுடன் சீறியிளைந்துவருவதைப்பார்த்தவுடன் மாறுசரங்களைச்செலுத்திக் கண்டித்துப்போட்டு மேலும் நூறுகடியகணைகளைச் சூரன்நெற்றிக்குக் குறிபார்த்துவிட்டகாலத்தில்அனலையிறைத்துக்கொண்டு வேகமாய்வந்து அர்த்தசந்திரனைப்போல விளங்கிக்கொண்டிருக்கும் நுதலிற்றாக்கி வயிரமலையின் உச்சியிற்பட்ட பொன்னூசிகளுக்கிணையாகமுனைகளொடிந்து துகள்பட்டுப் பறந்துபோயது,இதனைவீரவாகுதேவர்தெரிந்தவராய் நமதுபாணங்களிதுபரியந்தம் ஒருவன்மீதிற்றாக்கினுல் காயப்படுத்தாமற் போனதில்லைநூறுகூரியபாணங்களுங் குறிப்படிக்குப்பாய்ந்தும் பிரயோசனப்படவில்லை ஆதலாற் சண்முகப்பெருமாள் திருக்கரங்களில் விளங்கும் வெற்றிவேலன்றியில் மற்றெவ்விதபாணங்களினுலும்,இவன்வயிரத்தேகத்தை பின்னப்படுத்தலாகாதென நிச்சயித்து அப்படிக்கிருந்தபோதினும் என்னுற்கூடியவரையிற் போராடிப் பார்ப்பதல்லது சும்மாத்திரும்பமாட்டேனெனத் தீரனுய்த் தன்வில்லில் அதிகதீட்சணியமுள்ளபலகோடிகணைகளைச்சந்தித்துப்போக்கிச் சூரபதுமன் தேகத்தைத்தோற்றுமல் மறைத்தகாலத்தில் அமோகமாகிய பாணங்களினுல் அவைகளைவிலக்கி மேலும் ஏழுதிவ்வியபாணங்களை வீரவாகுதேவர் புசங்களுக்குக் குறிபார்த்துத்தூண்டினன், அவைகள்வெளிப்பட்டவுடன் பக்குபக்கெனவெரிந்துசீறி வேகமாய்வந்து பருவதாகிருதியாகப் பாரித்திருந்த புசங்களிற்றைத்துஉதிரங்களைப்பெருக்கித் தேவர்கள் கிலேசித்து வாடும்படிக்கு உருவிப்போயது அதனுல்மிகவும்நொந்து வருந்தியபோதினும் வீரனுதலால் மிகுத்தகோபங்கொண்டு தீட்சண்ணியமுள்ள பலகோடி பாணங்களைச்சோனைமாரியைப்போலச்சொரிந்து சூரபதுமன்தேரைச்செலுத்தும்சாரதிகள் தேகத்தைச் சல்லடைக்கண்களாகத் துளைத்தமாத்திரத்தில் உதிரம்பெருக்கெடுத்தோடத்திகைத்து வலிகுன்றிக் கைகால்களோய்ந்து மிரளமிரள விழித்துக்கொண்டு தங்கள்தொழிலைமறந்துநின்று விட்டனர், இதைக்கண்டசூரனுக்குக் கோபமிகுதியினுல் விழிகள் சிவந்துஅக்கினியைக் கக்கப்பெருமூச்செறிந்து துரிதமாய்த் தன்வில்லில்தீயினும் கொடுமைபெற்றிருக்கின்ற ஐம்பதுபாணங்களைப்பூட்டிச்செலுத்தி வீரவாகுதேவரேறி யிருக்கின்ற தேரைப்பொடிப்படுத்திக் குதிரைகளைக்கண்டித்துப் பாகக்கொன்று கர்ச்சித்தனன்.

உடனே மற்றொருபாரித்த ரதத்திலேறி வாயுவாஸ்திரத்தையெடுத்து மானசபூசையினுற் சகலஉபசாரங்களையும்முடித்து வில்லிற்பூட்டிச் செலுத்தியபோது சூரன்கண்டு குஞ்சிரிப்புடன் மற்றொன்றையுந் தூண்டாமல் விலலையூன்றிக்கொண்டு வேடிக்கைபார்த்திருந்தபோதுஅந்தப்பாணமானது சக்கிராகாரமாகச்சுழன்றுபிரசண்டமாருதத்தைப்பெருக்கித் தீயையிறைத்துச் சீறிவந்து வயிரமலைக்குச்சமனுக விசாலமாகவிருக்கின்ற மார்பிற்றாக்கிவலியற்றுப்பொடிபட்டுத் திசைகளிற்பறந்துபோயது,அப்போது வீரவாகு மனம்பொறுமல்உடனேஅக்கினியாஸ்திரத்தையெடுத்துப் பூசித்துச்செலுத்தினர், அதுவெளிப்பட்டவுடன் அனற்பெருக்கையிறைத்துத் திகுதிகென்றெரிந்து புகைப்படலத்தைவீசிக் காந்திக்கொண்டுவந்து வயிரமேனியிற் றாக்கிப்பொரிந்துமங்கியது, அதன்பின் புரவுத்திராகாரனுய் இயமாஸ்திரத்தையெடுத்துவழிபட்டுப்போக்கியகாலையில்வானத்திலெழுந்துபலகோடிபடைகளைப்படைத்து விஷங்களைக்கக்கிச் சர்ப்பத்தைப்போலச்சீறிவந்துமார்பிற்றைத்துவெட்கி முனைமழுங்கிமறிந்துபோயது, உடனேசூரியாஸ்திரத்தைப்போற்றிக் கரவேகமாகச் செலுத்தியபோது பலகோடிசூரியர்தோற்றங்களைக்காட்டிதகத்தகாயமாயெரிந்து சகலரும்பிரமிக்கும்படிக்குச் சீறிக்கொண்டுபோய்ச் சூரன்தேகத்திற்றாக்கிப்பயன்பெருமற் சின்னபின்னப்பட்டுப் போய்விட்டது, அதைக்கண்டவுடன் பார்ப்பதியார் திருவடிகளிற்பிரகாசித்திருந்தபாதசிலம்புகளிலுதித்தநவகன்னியரில்மூத்தவள்செய்தவிரதமகிமையினுற் ரேற்றியிருக்கின்ற வீரவாகுதேவருக்கு அதிசயமுண்டாய் நல்லகாரியம் இன்னமுமிவன் வலியை யறிவோமெனத்துணிந்து வருணஸ்திரம் இந்திராஸ்திரம், நிருதாஸ்திரம், இந்தமூன்று தேவபாணங்களையும் ஒருமுகத்திலெடுத்து மந்திரமூலமாய்ச் சோடசஉபசாரங்களைமுடித்து ஏககாலத்திற்பூட்டிக் காதளவுமிழுத்துப் பிரயோகித்தமாத்திரத்திற் பலமேகங்களைப்பெருக்கி இடிமின்னல்குமுறல்களைக்காட்டிக்கல்மழைகளைச்

சிதறி வச்சிராயுதமுதலாகிய படைகளையுண்டு பண்ணிக் கொடியபூதங்களைநிர்மித்து அதிகமகிமைகளுடன் வேகமாய்வந்து மிகுத்தபாதகனாகிய சூரபதுமன் புசங்களினும் மார்பிலும்பட்டு படாதபாடுகளைப்பட்டு உருத்தெரியாமல் துகள்பட்டுப்பறந்தது, இதைப்பார்த்த வீரவாகுதேவர் கோபாவேசத்துடன் குபேராஸ்திரம், மாயாஸ்திரம், இவ்விருவாளிகளையும் சந்தித்துத் துரிதமாய்ச்செலுத்தியபோது மலைகளைப்பெருக்கிக் காடாந்தகாரமாகிய விருளைக்காட்டியும், பலகொடுமைகளை யுண்டுபண்ணிக்கொண்டு நாகங்களைப்போலச்சீறி அதிகவேகமாய்வந்துசூரன் மார்பில்மோதித் தங்கள்பெருமைகளழிந்துதிரும்பின, இப்படிக்குத்தாமேவிட தேவாஸ்திரங்களனைத்தும் பிரயோசனப்படாமற் குன்றிக்குறைந்து நாசப்பட்டதைக்கண்டு பகைவன் தவமுயற்சியையும் வலியையும்நிதானித்துப்பிரமித்தவனாய் இன்னமுமிவன்பெருமிதங்களைப்பார்ப்போமென்று சிருஷ்டிகர்த்தனாகிய பிரமன்படையையும் கைகால்முகமுதலிய உறுப்புகள் செந்தாமரையைப்போலவிளங்கும் உலகையுண்ட மாயவனாகிய மகாவிஷ்ணுவின் படையையும் எடுத்துப்பூசித்து ஒருதொடையிற் பூட்டிப் போக்கினன், அந்தத்திவ்வியபாணங்கள் வெளிப்பட்டவுடன் சிடசிடத்ததொனிகளுடன் ஆர்ப்பரித்துக்கொண்டு பலதேவாஸ்திரங்களை உண்டுபண்ணிச் சுழற்காற்றைப் பெருக்கி அக்கினிக்கொழுந்தைவீசி அதிககொடுமைகளைக்காட்டிவந்து பரிமளமிகுத்த புஷ்பமாலைபுரளும்விசாலமாகிய மார்பிற் கோடையிடிகளைப்போலவிழுந்துவானத்தையளாவநின்ற வயிரமலையைச் சுந்தரமுள்ள சிறகைப் பெற்றிருக்கின்ற வண்டினங்கள் துளைத்துப்பயன்பெறாது வாடித்திரும்பியதைப்போல வலிகுறைந்து வானத்திலிருந்து வேடிக்கை பார்த்திருந்த தேவர்கள் ஏ ஏயெனக்கூவி யிகழத்தக்கதாகத் தலைகுத்தலிட்டுத் திரும்பிவிட்டது.

இச்சம்பவங்களை மனம்நோக விழிகள்சிவக்கவீரவாகுதேவர்பார்த்து லோகநாயகனாகிய சிவபிரான்கடாட்சித்திருக்கின்றவரத்தின் முயற்சியைநினைந்து அதிசயித்தவனாய் சூரனென்பது இவனுக்கேதகும்புசபலபராக்கிரமத்துக் கிவனுக்கு நேராக ஒருவனையும் பேசலாகாதென்று மனதில் நினைந்து இனியென்னசெய்வோமென்று யோசித்திருக்கின்றவேளையில் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும்அதிபனாய்ச் சகலரையும்வென்று கொடுங்கோல்செலுத்திவரும் சூரபதுமன் நகைத்து அடாதூதனே திரிமூர்த்திகளிற் காரணக்கடவுளாய் வேதப்பொருளாய் சுயஞ்சோதிமயமாய்மணியினொளியைப்போல எங்கும் பரிபூரணமாய் தேவதேவோத்தமனாகவுமிருக்கின்ற பரமேஸ்வரன்அனுக்கிரகித்திருக்கின்ற வரப்பிரசாதமகிமையினால் எத்தகையதேவர்கள் படைகளைச்செலுத்தியபோதினும் என்னைவெல்லமாட்டாது மேலும் சரீரத்திற்சிறிதுகாயத்தையும் படுத்தவல்லதோ அப்படிக்கொத்த சலனமற்றவயிரத்தேகத்தைப்பெற்றிருக்கின்றேன் மேலும் அந்தத்தேவன்பெயரால்விளக்கும் பாசுபதாஸ்திரத்தைச் செலுத்தியபோதினும் மற்றொருபாணங்களையும் பிரயோகியாமலிப்போதிருந்தபடிக்கிருப்பேன் மேற்குறித்த தேவப்படைகளாதிய அஸ்திரசஸ்திரங்களை என்மேல்விடுவதை யோசிக்குமிடத்திற் சமுத்திரஜலமுற்றினும் கிரகிக்கவல்ல வடவாமுகாக்கினியை ஈக்கூட்டங்களானவை மாம்சமெனநினைந்து ஓடிவந்துவிழுந்து மாய்ந்தகதையாகும் அதற்குத்திஷ்டாந்தமாக நீஇக்காலத்திற்செலுத்திய தெய்வீகப்படைகளானவை என்னையொன்றுஞ் செய்யத்தக்கதன்று யாதொருஜயத்தையும்பெறுமற் சின்னப்பட்டுவாடி முனைமழுங்கிமுறிந்து துகள்பட்டுப்போயது இதுகள்கேள்வியல்ல உன்கண்முன்னமேகண்டாய் இப்படிக்கிருக்க இதுவரையில் நீதலைகீழாய் விழுவதைப்பார்த்திருந்ததென்னகாரணத்தினாலென்றால் உன்வில் வல்லபத்தையும் தேவாஸ்திரமுதலிய சரங்களின் பிரபாவங்களையும் உன் சேவகத்தையும் வேடிக்கையாகப்பார்த்திருந்தேன்இனிபிராணனைக்கொண்டுபோகும் யமனையொத்தஒருபாணத்தினால் உன்னுயிரைத் தென்தேசத்திற் சேர்ப்பேன் அதையுஞ்சற்றுநேரத்தில் நீயேகாண்பையெனச் சூரபதுமன் சொன்ன விசேஷங்களை வீரவாகுதேவர்கேட்டு நல்லகாரியம் இவன்வலியை ஒருகணையினால் வாட்டுவேனென்று துரிதமாய்த் திரிபுரதகனராகிய சிவபிரான்பெயரால்விளங்கும் பாசுபதாஸ்திரத்தையெடுத்து தூபதீபமுதலிய வழிபாடுகளை விதிப்படிக்கு நிரப்பிவில்லிற்பூட்டி ஆகரணாந்தபரியந்தமிழுத்துப் பிரயோகித்தவுடன் அந்தப்படையானது வடவாமுகாக்கினியையும் காளகூடவிஷத்தையும் இடிமின்னல் காடாந்தகாரமாகிய விருள்சுழல்காற்று சூரியசந்திரர் யமன்கோரரூபத்தைப் படைத்திருக்கின்ற பூதகணங்கள் மேகசாலங்களையும் உண்டுபண்ணிச்சிரேஷ்டமாகிய பிரமாஸ்திரம், நாராயணாஸ்திரம், முத்தலைச்சூலமுதலிய படைகளைப்படைத்துத் தன்னைச்சூழ்ந்து போற்றிவரவும் சருவசங்காரகாலமிதுதானோவென்றுசகலபிராணிகளும்மருண்டு தியங்கவும் அண்டங்களதிர்ந்து தத்தளிக்கவும் கலகலலெனநகைத்து திசைகளதிர ஆர்ப்பரித்து அதிவேகமாய்வருவதை வச்சிரசரீரியாகியசூரபதுமன்பார்த்து இந்தமகிமையுள்ள படையானது மற்றவைகளைப்போலமார்பிற்றாக்கியவுடன் துகள்பட்டும்பொடிந்தும், எரிந்தும், பறந்துபோகப் பட்டதன்று தேவாதிதேவன் படையாதலால்வேறொருகாரணங்களினால்வெல்வதரிது அந்தச் சிறந்தகணையைக்கொண்டே தடைசெய்யவேண்டுமென நிதானித்துப் பாசுபதாஸ்திரத்தையெடுத்துச்சாத்திரப்படிக்குப் பூசாவிதிகளைநடத்தி வில்லிற் பூட்டிப்பிரயோகித்தவளவில் அதுவும் பற்பலபடைகளையுண்டுபண்ணி அளவற்றமகிமைகளைக் காட்டியெழுந்து மேலிட்டுவருகின்ற பரமன்படையுடனெதிர்த்துச்சராசரப்பிரபஞ்சங்களனைத்தும் அதலகுதலப்பட்டு வாடியொடுங்கும்படிக்கு அகோரயுத்தங்களைச்செய்துவருமுன்னிலையிற் பிரமன்முதலியதேவர்கள் மானிடர் பாதலவாசிகள் கரங்களைக்கூப்பிப் பத்திவிசுவாசங்களுடன் துதித்து ஓ படைகளுக் கரசாகவிருக்கின்ற பாசுபதங்களே எறும்புமுதல்யானையீறாகச் சொல்லாநின்ற சகலபிராணிகளும் வாடி பின்னப்படவொட்டாம லிரட்சிக்கவேண்டும் உங்களால்நேர்ந்திருக்கின்றவருத்தங்களுக்குத் தாபரிக்கமாட்டாமற் சோருகின்றது இதைத் திருவுளத்திற்கொண்டுகிருபையுற்று பாதுகாக்கவேண்டுமென்று பலவிதங்களிற் போற்றுவதைத்தெரிந்து மன்னுயிருக்கிரங்கி உடனேதங்கள் செய்கைகளை உள்ளடக்கிக்கொண்டு கோபந்தணிந்துவிடுத்தவர்களிடத்திற்போய்ச்சேர்ந்தது அப்போதுசூரபதுமன் வீரவாகுதேவனைப்பார்த்து நகைத்துஇவ்வளவோ உனக்கிருக்கின்ற வல்லபங்க ளின்னமுமேதேனு

முண்டோ இனிகணப்போதில் உன்பிராணனையொழிப்ப
தற்கையமில்லையாமென்று தன்கரத்தில்மேருவைப்போல
விளங்கியிருக்கின்ற வில்லைவளைத்து உக்கிரமாகிய பாண
கோடிகளை விண்மண்ணெங்குங்நிறையும்படிக்குக்கரவே
கமாய்பொழிந்தனன்.

அவைகள் அதிகஉற்பாதங்களைக்காட்டி வட்வையைப்
போற் சீறிக்கொண்டு மேலிட்டுவருவதை வெற்றிமாலைபு
ரளும் பாரித்தபுசங்களையுடைய வீரவாகுதேவர்பார்த்து
சீக்கிரத்திற் றமதுலைப்பற்றவில்லை வட்டாகாரமாய்வளைத்
து திவ்வியமாகியகணைகளைக் கார்கால வருஷத்தைப்போ
லச்சொரிந்து மேல்வருவதைக் கண்டதுண்டமாகவெட்
டியெறிந்தபோது சூரன்வடவையைப்போலக் கொதித்து
ப்பதினைந்து முத்தலைப்பாணங்களைப் பிரயோகித்துவீர
வாகுதேவர்கரத்திற் பற்றியிருக்கின்ற பாரித்தவில்லைக்க
ண்டித்தான் அப்போதுவீரனுக்கு அதிககோபம்பிரவே
சித்துத் துரிதமாய் அடிபரந்து றனிகுவிந்திருக்கின்ற
வேலொன்றையெடுத்துவீசினர், அதுவும் அதிகவுக்கிர
த்தைக்காட்டி அனலையிறைத்துச் சிடுசிடுத்தவொனிகளு
டன்வந்து அபரிமிதமாகிய வரங்களைப்பெற்று அகன்ற
மண்டலாதீஸ்வரனாகவிருக்கின்ற சூரபதுமன்மார்பிற்ரு
க்கிப் பொடிபட்டுதிர்ந்துபோயதுஉடனே சூரன்சீறிப்
பிரமன், விஷ்ணு, முதலானவர்கள் வலியைக் கணப்போ
திலழிக்கவல்ல பாரித்ததண்டாயுத மொன்றையெடுத்து
வெற்றிமாலைபுரளும் புயாசலங்களையுடைய வீரவாகு
தேவர்மீதிற்சுழற்றி யெறிந்தபோது ஆயிரம் பணமகுட
ங்களைப் பெற்றிருக்கின்ற சேஷனும் அஷ்டமாநாகங்க
ளும் ஏகஉருக்கொண்டு விஷங்களைக்கக்கிச்சீறி வந்ததை
ப்போலப் பொன்மணிகள் சத்திக்கஇறைந்து வருவதை
வீரவாகுகண்டு சீக்கிரத்திற் றன்னிடத்திலிருக்கின்றமந்
தரம்போன்ற தண்டாயுதத்தையெடுத்து சக்கிராகாரமா
கச் சுழற்றியெறிந்தார் அதுவும் வெகுமகிமைகளைக்காட்
டிவேகமாய்ப்போய் இராட்சதராசனேவியவயிரத்தண்டு
டன்போராடிமிருவகிக்கப்படாமற்பொடிபட்டுவிழுந்தது
பகைவன்தண்டமானது மேலிட்டு வீரவாகுவின் விசால
மாகியமார்பிற் கோடையிடியைப்போலப்பட்டுச் சரீரமு
ற்றும் கலக்கிப்பிளந்து உதிரமானது ஊற்றெடுத்தோட
வருந்தியபோது கோபாக்கினி மனதைவாட்ட விழிகளிற்
றீயைப்பெருக்கி மானம்பாதிக்கப் பெருமூச்செறிந்துமய
ங்கிச் சரீரமெங்கும் ரத்தந்தோயப் பெருங்காற்றிற்பட்டு
மறிந்தகற்பகத் தருவைப்போலத் தேவர்புலம்பியோடத்
தேரில்மெல்லச்சாய்ந்தனர், இவ்விதமாகப்போராடி வீர
வாகுவலிகுறைந்து செயலற்றிருந்த காலத்தில் விவேகசா
லியாகிய விசாலனென்னும்சாரதி சயித்திய உபசாரங்கள்
செய்யும்பொருட்டுத் தேரைஒருபாரிசத்திற்றுரத்திக்கொ
ண்டு போயினன், சூரபதுமனும் மனக்களிப்புடன் சனி
யைப்போலமடக்கிக் கொண்டு போராடியிருந்ததூதன் ச
ந்தேகமில்லாமல் மாண்டானென்றெண்ணி களித்திருக்கி
ன்ற பூதப்படைகளை வாட்டநினைந்து சூருவளிக்காற்றை
ப்போலத் தன்னிரதத்தைச் சுழற்றிக்கூர்மையுள்ளகொடி
யபாணங்களை அமோகமாகத்தன்வில்லிற்சந்தித்துப்பொ
ழிந்து சாடுமுன்னிலையிற் சூரியனைச்சூழ்ந்த பனிக்கூட்
டத்தைப்போலப் பூதப்படைகள் கலங்கிச்சிரமற்றும்,மூ
ளையிறைந்தும்,தோள்கள் சரிந்தும்,மார்புபிளந்தும், கால்
களொடிந்தும், மதிமயங்கிவிழுந்தும், மூர்ச்சித்தும், குப்
புறவிழுந்தும், சின்னபின்னப்பட்டும், செத்தும்இவ்வித
ங்களாக ரணபூமியிற் பட்டவர்கள் போகமற்றவரனைவரு
ம்பிராணபீதியினுலைந்து பலதிசையினுமோடியொளி
த்தனர்.

ஓ! சவுனகாதிரிஷிகளே? மேற்குறித்தபடிக்குஜயசாலிக
ளாகிய சேனைத்தலைவரும் புசபலபராக்கிரமத்துக் கொப்
பற்ற வீரவாகுதேவரும் சத்தசாகரங்களைப்போலப்பரந்
து வீறியிருந்த இரண்டாயிரவெள்ளம்பூதப்படைகளும்
சின்னபின்னப்பட்டுக் குன்றிப் பறந்ததைச்சண்முகப்பெ
ருமாள் பார்த்துச் சாரதியாகிய வாயுதேவனைநோக்கி நம
துதேரைத் துரிதமாய்ச் சூரன்முனையிற்கொண்டுபோகக்
கடவையென்னும் வாக்கியம்அமுதத்தைப்போலச்செவி
களில் நுழைந்தமாத்திரத்தில் இந்திரன்முதலாகியதேவ
ர்கள் களித்துத் தேகபரவசராய்ஆனந்தக்கூத்தாடிஜயமு
ண்டாகக்கடவதென்று வாழ்த்தினர்கள் அத்தருணத்தில்
வாயுதேவன் தன்துணைவருடன் புரவிகளையதட்டிநவரத்
தினமயமாகியதேரை மணிகள்சத்திக்க வாயுவேகத்தினு
ங் கடுகித்துரத்திக்கொண்டுபோய் ரணக்களத்தில்இறுமா
ந்து திரிந்துகொண்டிராநின்ற சூரபதுமனுக்கு நேராக நி
றுத்தினன், சவுனகாதிரிஷிகளே! எமதிறைவனாகியபாலசு
ப்பிரமணியதேவரைச் சூரன் தரிசித்தகாட்சியைச்சொல்
லக்கேட்பீராக, ஆயிரங்கோடிஞானசூரியர்கள்சேர்ந்தொ
ருவடிவைப்பெற்று உலகங்களிற் பரந்திருக்கின்றவிருட்
கூட்டங்க ளெல்லாவற்றையும் ஆத்துமகோடிக ளிடத்தி
ல் ஜனிக்கின்ற அஞ்ஞானமயக்க வாசனைகளையும்துரத்தி
விசாலமாகிய பரவெளியில் நின்றும் உயுத்தகளத்தி லெ
ழுந்தருளியதைப் போன்று விளங்குங்குமாரதேவர் சோ
திமயமாகிய வடிவைச்சூரன் தரிசித்தும்,செந்தாமரைப்பு
ஷ்பங்கள் பூத்திருப்பதற் கொப்பாகச்சொலித்துக்கொண்
டிருக்கும் சண்முகங்களின்பொலிவையும்செவ்வரிகளோ
டி விசாலமாகப் பரந்திருக்கும் பன்னிருவிழிகளின்சிறப்
பையும் துவாதச ஆதித்தருக்கொப்பாகத்திருச்செவிகளி
ற் பிரகாசித்திருக்கும் வயிரங்களினுற்சோடித்தசையும்ம
கரகுண்டலங்களின் விளக்கத்தையும் சிரோரத்தினங்களி
னுற் படைத்து தகத்தகாயமாக சொலித்திருக்கின்றஆறு
வயிரமுடிகளின் சுந்தரத்தையும் அர்த்தசந்திரனைப்போ
லத் துலங்கிக்கொண்டிருக்கின்ற ஆறுதிருநெற்றியின் கு
ளிர்ந்ததோற்றத்தையும்வயிரமலையையொப்பாகப்பரந்து
முப்புரிநூல் புரள முத்துமாலை மோகனமாலைகளசையத்
தோற்றுநின்றமார்பினதுமங்களகரத்தையும்பருத்தமணி
களினுற் செய்யப்பட்டுச்சூரியர்களுக் கொப்பாகத்துலங்கி
க்கொண்டிருக்கும் வாகுவலையங்களைத் தரித்துப்பருவதா
கிருதியாகத் தோற்றவிளங்கும் பன்னிருபுயாசலங்களின்
பொலிவையும் வயிரமோதிரங்களை தரித்திருக்கின்றவிர
ல்களின் சிங்காரத்தையும் கடககங்கணங்கள்பொருந்திஆ
சானுபாகுவாகக்காட்டும் பன்னிருதிருக்கரங்களின் தாஷ
டீகத்தையும் அவைகளிற் பற்றியிருக்கும்வெற்றி வேலா
திய படைகளின்வீரங்களையும் தண்டைசிலம்பு கொஞ்சு
ம் செந்தாமரைமலரைப்போலத் தோற்றநின்ற திருவடிக
ளின் மகத்துவங்களையும் எதிரில் நிஜதரிசனையாகக்காண
ப்பெற்றபடியால் அவுணருக் கரசனாகவிருக்கின்ற சூரப
துமன் பூர்வத்தில் அரியதவங்களைச் செய்து சிவநாதன் க
டாட்சத்தினுற் சிறந்தபேறுகளைப்பெற்று மன்னுயிரைப்
போல நாசமடையாமல் நீடித்திருக்கும் ஆயுளையும் வயி

ரத்தேகத்தையும்பெற்று விஜயனுப் ஆயிரத்தெட்டண்ட
ங்களினுந் தன்னரசைச்செலுத்தி நூற்றெட்டு யுகங்களாக
நீடித்திருந்ததைப் பார்க்குமிடத்தில் இக்காலத்தில்நேரு
க்குநேராய் சண்முகப்பெருமானைத் தரிசித்துஅம்முயற்சி
யினுல் எளிதிற்சாயுச்சியப்பதவியைப்பெற்று வாழ்வதற்
கெனத் தோற்றுகின்றது, இதுவுமல்லாமற் பரிசுத்தமன
தையுடைய ஞானவான்கள் கருத்துக்குமெட்டாதநின்மல
க்கடவுளாகிய சிவசுப்பிரமணியதேவருடையசூரியனொளி
யினு மேலிட்டுக்காட்டும் சுயஞ்சோதிப்படிவத்தைநேரிற்
கண்டு அதுபரியந்தஞ் செய்திருக்கின்றகொடிய வினைகளை
னைத்தையும் போக்கப்பெற்ற சிறப்பினுல் இனிச்சூரபது
மன் சமர்க்களத்திற் கொடியபோரைச்செய்துசெத்தாலெ
ன்ன அல்லது கிரமமாகக் காலம்நேர்ந்திறந்தாலென்னஇ
வற்றினு லவனுக்கொருகுறைவுமில்லை அவனைச்சீவன்மு
த்தர்களிற்சேர்த்துப் பேசவேண்டும் இதுவுமல்லாமற்சூ
ரன்கொடிய செய்கையை யுடையவனென்று வசனிப்பது
நியாயமன்று அதேனெனிற்சோடசகலைகளைப்பெற்றிருக்
கின்ற பூரணச்சந்திரோதயத்தினும் பதின்மடங்குவிளக்க
த்தைக்கிடைத்திருக்கும் சண்முகங்களைப்படைத்த குமா
ரதேவர் கிருபைகூர்ந்து தாமேயெழுந்தருள் காட்சிதந்த
மையால் இந்தச்சூரனைத் தவசிரேஷ்டர்களினு மேலாகக்
கொண்டாடவேண்டியதன்றியில் தருமமார்க்கங்களில்மே
ம்பட்டவனுகவும் நீதிமானுகவும் மனத்தூய்மையையுடை
யவனுகவும் புகழப்படுவான். இவையன்றியும்தவங்களிற்
சிறந்த இருஷிபுங்கவர்கள் ஞானவான்கள்சிறந்த தேவர்க
ள் முதலியபெரியோர்கள் தேடித்தேடி யின்னமுங்கண்ட
றியவொண்ணும லிருக்கின்ற மங்களகுண சம்பன்னராகி
ய சரவணபவனைச் சூரபதுமன் தன்னிருவிழிகளும்கண்
டுகளித்துவாழத் தரிசிக்கப்பெற்றுனெனச் சொல்லுவோ
மாகில் அவன்செய்திருக்கின்ற தவங்களின்முயற்சியைஎ
த்தகையராலுங் கணித்துப்பேசுவ தன்று இவனிடத்திற்
றமக்கிருக்கின்ற பரிபூரணகடாட்சத்தினுல் ரணக்களத்தி
லிவனையொருபொருளாகமதித்துச் சண்டைகொடுக்கவந்
தவனைப்போலச்சடுதியிலெழுந்தருளிச் சூரபதுமனுடை
ய இரண்டுவிழிகளினுலும் தரிசிக்கத்தக்கதாகதன்னரியதி
ருமேனியை எளிதிற்காட்டிக் கிருபாநோக்கத்தையும்பா
லித்தனனென்றுல் தேவதேவோத்தமனுகிய சரவணபவ
ன் திருவிளையாடல்களை யாவராலறிந்து போற்றக்கூடும்.
மனோவாக்குக்கெட்டாதஇத்தகைய திருக்கோலத்தைக்கா
ட்டித் தனக்கெதிரில் நவரத்தினமயமாகிய பாரித்த தேரி
னிடத்தில் ஆரோகணித் திருக்கின்ற பாலசுப்பிரமணிய
தேவரைத் தரிசித்தவுடன் சூரபதுமன் நிதானித்துசருவ
சங்காரமூர்த்தியாகிய பரமேசுரர் குமாரனுகுமிவ னென்
றெண்ணிக்கோபாக்கினிமனதை வருத்தக்கந்தசுவாமியை
ப்பார்த்து இதனைச்சொல்லுவான். ஓ! குமாரனே? உனக்
குதவியாகக் கூட்டிக்கொண்டு வந்த பூதவெள்ளங்களான
வை அக்கினிமுன்பட்ட பஞ்சுமலையைப்போலச் சமர்க்க
ளத்துக் கிளையாய்ப் பறந்துபோனபுவனங்களின்னதென
த் தோற்றவில்லைபடைத்தலைவர்களுங் கொடியபோரைச்
செய்து வாடினர், வில்லாண்மையிற் சிறந்திருந்தமற்றது
ணைவரும் என்னுடன்போர்செய்து சின்னபின்னப்பட்டு
நீங்கினர். மேலும் உன்சேனைகள் முழுமைக்குந்தலைவனு
ய் என்னிடத்துக்குத் தூதுவந்த தயிரிசாலியாகியவீராதி
வீரனும் தன்றுற்கூடியவனாயிற் பலவிதபோரைச்செய்
து கடையில் மனம்வருந்திமாண்டான், இவையனைத்தை
யும் உண்மையாகப் பார்த்திருக்கின்றனை இப்படிக்கிருக்
கபுறவணியிற்றப்பி மீந்திருக்கின்ற பாலனுகியநீயொருவ
னே ஆயிரத்தெட் டண்டங்களைவென்று சூரனென்னும்
பெயரைப்படைத்திருக்கின்ற என்னையொத்தவனுடன் ச
ண்டைகொடுத்து ஜயப்பிரதாபத்தைப் பெறவிருக்கின்று
ய், உன்கருத்தினிடத்திற் கொண்டிருக்குந்தீர்மானத்தை
ப்பார்க்குமிடத்தில் அதுவெகுநேத்தியாகவிருக்கின்றது.
இவையன்றியும் தேவாதிதேவனுய் சருவ சங்காரமூர்த்தி
யாய்ச் சிருஷ்டி திதி சங்காரம்திரோபவம்அநுக்கிரகமெ
னச் சொல்லாநின்ற பஞ்சகிருத்தியங்களையும்நடாத்திச் ச
ராசரப்பிரபஞ்சங்களை நடிப்பிக்கும்உன்பிதாவாகியபரம
சிவனும் மகாவிஷ்ணுவும்,மண்விண் பாதலமுதலியதலங்
களிற் றேற்றுநின்ற பிராணிகளைச் சிருஷ்டிக்குந்தொழி
லையுடைய பிரமனும்என்னுடன் போர்செய்யநினையாமலி
ருக்கும்போது நேற்றையதினம்பிறந்த பாலனுகிய நீயோ
சகலரையும்வென்ற ஜயசாலியாகிய என்னுடன் சண்டை
கொடுக்குந் திறமுடையவன் சிலதினத்துக்குமுன்னம் வ
லியற்ற கிரவுஞ்சபர்வதத்தையும் நான்கொடுத்தசெல்வங்
களையனுபவித்து மயங்கிக்காரியங்களைத் தீர்க்கமாயோசித்
து நடந்துகொள்ளத் தெரியாமல் வீணில்மாண்ட தாரு
கனும் உதிரமாம்சங்களைப் பொசித்த மதாங்காரத்தைப்
பெற்றுப் புத்தியீனராக விருந்தஅவன் படைத்தலைவர்க
ளைப்போலவும்நினைந்து சிறுபிள்ளைகள்விளையாட்டைக்கா
ட்டி என்னைவென்று ஜயப்பிரதாபத்துடன் போகலாமெ
ன்று துணிந்துவந்தனைபோற் காணுகின்றது, ஆயிரத்தெ
ட்டண்டங்களினும் கொண்டாடிப்போற்றும் கீர்த்திப்பி
ரதாபத்தைப் படைத்திருக்கின்ற நமது பெருமிதங்களை
யோசித்துப்பார்த்தவனல்லை சலனமற்றவயிரமேனிபடை
த்திருப்பதையும் தீர்க்காயசு பெற்றிருப்பதையும் புசபல
பராக்கிரம சம்பத்தையும் வீரத்தையும் அஷ்டதிசைகள்
முதலான அண்டங்களையும் வெற்றிகொண்டிருக்கின்ற ஜ
யப்பிரதாபத்தையும் சிங்கமுகாசுரனையொத்தசகோதரன்
உதவியையும் பாலபருவத்திற் சூரியனைச்சிறைசெய்தவீ
ராதிவீரனுகிய பானுகோபனையொத்த புத்திரர்கள் சம்ப
த்தையும் படைத்தலைவர்கள் சவுரியங்களையும் கணக்கிற
ந்தவெள்ளம் இராட்சதசேனைகளினது வலியையும் வர
ப்பிரசாதத்தினுற் பெற்றிருக்கின்ற ஆயுதங்களின் வீரத்
தையும் விசாரணைசெய்து தெரிந்துகொண்டு எதிரியையு
ம்தன்னையும் மதித்துப்பார்த்துச் சண்டையின்திறங்களை
நிதானித்து அதற்குவேண்டும் முயற்சிகளையுங்கிரமமாக
த்தேடிப் புறப்பட்டவனல்லை. குழந்தைப்பருவ மாதலா
ல்முன்னம் சிலரைவென்றதைப்போலச் சுலபமாய்நினைந்
துபால்லியசேஷ்டையினுல்இவ்வரியசண்டையைச் செய்
துமுடிக்கலாமெனக்கருதிவந்தனைபோற்காணுகின்றது.

மேலும்தன்வலியையும் எதிரியின்பலத்தையும் சீர்தூ
க்கிப்பார்த்துச் செல்காலம்-நிகழ்காலம்-வருகாலமென்னு
ம் முத்திறங்களையும் பரிசோதித்துத் தகுந்த புத்திமான்
களுடன்கலந்து மந்திராலோசனைகளைச்செய்துதகுதியாகி
ய காரியத்திற்றுணிவு கொண்டு வந்தவனுகக்காணவில்லை
போவோம் ஜயித்துவருவோ மென் றெுன்றைமாத்திரம்
உறுதியாகக்கொண்டு வெளிப்பட்டனைபோலும் தான் நி
னைந்துபோகின்ற பகைவனைமதித்துப்பார்க்கத் தேவையி
ல்லையோ ஐயையோ! உன்னைப்பார்த்தால் வெகுசுந்தரமா

கவிருக்கின்றது அதைக்குறித்துஎனக்கும் பச்சியாத்தாபமாய் மனந்துணிவுபெறவில்லை உன்தாய்தந்தையர் அனுமதியில் வந்தனையோ அல்லது திருட்டுப்பையலாகியஇந்திரனுதிய தேவர்கள்புகழ்ந்து பேசியதினுல் மகிழ்ந்துவந்துவிட்டையோ தெரியவில்லை எப்படியாவதிருக்கட்டும்எதிர்த்துவந்தவனைப் பாலகனென்றெண்ணப்போகாதாகையால் உன்னைப்பெரிதாக நம்பியிருக்கின்றஉந்திக்கமலவாசியாசிய பிரமதேவனும் சேஷசயனனுகிய மகாவிஷ்ணுவும் பொன்னுலகத்துக்கதிபனுகிய இந்திரனும்மற்றைத் திக்குப்பாலகரும் பரதவித்தலறவும் உனக்குத்தாயாகவிருக்கின்ற பருவதராஜகன்னிகை பார்ப்பதிவயிற்றைப்பிசைந்துகொண்டு கோடுகோடென்றழுதுவாடவும்கண்ணிமைகொட்டித் திறப்பதற்குமுன்னம் ஒப்பற்ற நமதுவில்லையில் நின்று வெளிப்படுகின்ற பாணகோடிகளினுல் உன்கருவத்தையும் பாலசேஷ்டைகளையும் வலியையும் அடக்கிவாட்டுகிறேனென்று சூரபதுமன் தன்பிரதாபங்களையும்வீரத்தன்மையையும் விஜயப்பெருக்குகளையும் விரித்துவிரித்துச் சொன்னதை அருவுருவாகவிளங்கும் குமாரதேவர்கேட்டுக்குஞ்சிரிப்புடன்இதனைப்பேசுவதாயினர்.

அண்டரண்டபுவனங்க ளனைத்தினையும்வென்றோம்மிகுத்தவலியுடையோம் சகலருங்கொண்டாடுங்கீர்த்தியைப் பெற்றனம் சிறந்த தேவாஸ்திரங்களைச் சம்பாதித்திருக்கின்றனம் அழிவற்றவயிரகாயத்தைப்படைத்திருக்கின்றனம்கணக்கிறந்தவெள்ளஞ்சேனைகளையுடையோம்யாவரும்நிகரில்லாமல்வென்றுசகலரையுமிதுவரையில் ஏவல்கொண்டிருக்கின்றனமென்கிற மமதையைக்கொள்ளவேண்டாம் இவையனைத்தையும்சிலபோதிலழித்துவிடவல்லோம்தேவதேவோத்தமனுகிய சிவபிரான்கடாட்சித்திருக்கின்ற வரத்தின்சிறப்புகளையிந்தச்சிறுவன்சண்டைகொடுத்துவெல்லவல்லனேவென்றுஅகங்கொள்ளவேண்டுவதில்லை இப்படிக்குநினைப்பதுவிவேகசாலிகளுக்கடுப்பதோ அஞ்ஞானகருவத்தை நீமுக்கியமாகக் கொண்டிருக்கின்றதாற் சில திஷ்டாந்தங்களைக்காட்டுவோம்அதினுல்தெரிந்துகொள்ளக்கடவாய்சராசரப்பிரபஞ்சங்களனைத்தையும் எமதிறைவனுகியசிவபிரான் நுதல்விழியிலுதிக்கின்றஒருபொறியினுல்தகிக்கப்பட்டழிவதைக் கேட்டதில்லையோ சுத்தவீரர்களாகவிருப்பவர்கள் காரணமாவது விவேகசம்பன்னனென்றும்பெரியோர்களென்றும் இளைஞனென்றும்பருத்தும்சிறுத்துமிருக்கின்றதேகத்தையுடையவர்களென்றும்குலத்திலுயர்ந்தவனென்றும்தாழ்ந்தவனென்றும் மிகுந்தவெற்றிபெற்றவனென்றும் தரித்திரனென்றும் யோசியாமல்எத்தகையனுயினும்சண்டையைவிரும்பிவருவானுயிற்சகலசேனைகளுடனும்போயெதிர்த்துப் போர்செய்வார் ஆதலால் நூற்றெட்டுயுகங்களாகச் சகலரையும் அலைத்துக் கொடுங்கோல்செலுத்தித்தயைதாட்சணியமில்லாமல் தகாதபணிவிடைகளைச் செய்யும்படிக்குவருத்திவந்த உன்சவுரியத்தையும் புயவலிமையையும்உன்விழிகளுக்குப் பாலகனுகத்தோற்றுகின்ற நாமேவில்வன்மையினுலடக்கிநாசஞ்செய்வோமென்று திருவுளம்பற்றியகாலத்திற்சூரபதுமனுக்குஅதிககோபம்பிரவேசித்துக் கொவ்வைக்கனியைப்போலவிழிகள்சிவந்து அக்கினிப்பொறிகள்சிதறத்தேகம்வெம்பிவியர்க்கச்சுவாலையெழுப் பெருமூச்செறிந்து பூர்வத்தில் வாமனத்திருக்கோலங்கொண்டுவந்தமகாவிஷ்ணுவிசுவரூபங்கொண்டுமண்விண்ணையளந்ததைப்போலப் பாரித்துநீண்டிருக்கும் வில்லையெடுத்துவளைத்தான் அதனைத் தேவாதிதேவனுகியகுமாரசுவாமியார்பார்த்துப்பிரமன், விஷ்ணு, முதலியதேவர்கள்ரிஷிகள்மகத்துக்கள்பற்பலவாத்தியங்களைமுழக்கித் துதித்துத்தொழும்படிக்குத் திருவாலவாயில்எமதுகர்த்தனுகிய சிவநாதன்ஆனந்தநடனஞ்செய்தகாலையில் மூதண்டகோளகையைமுட்டத்தூக்கியசிலம்பணிந்த அழகிய திருவடியையொத்த ஒப்பற்றதனுசைத்தமதுதிருக்கரத்திற்கொண்டுஅதிகவுக்கிரத்தைக்காட்டியெழுந்த காளியம்மனவள் தனக்கொருவரும்நிகரில்லையென வீறிவந்தகாலத்தில் அவள்கர்வபரிகாரமாகும்பொருட்டு நிர்த்தனஞ்செய்த பரமேசுரர்தூக்கிய பாதாரவிந்தத்துக்கு அண்டமுகடு இடம்பெறுத காரணத்தினுல்திருக்கரத்தைநீட்டித் தடுத்ததைப்போலவளைத்து வாசுகியைப்போல நீண்டிருக்கும் நாரியைமாட்டி சருவசங்காரகாலத்திற் பிரசண்டவாயுவினுல்மோதப்பட்ட ஆயிரகோடிஅண்டங்களும் ஏககாலத்தில்உடைந்தெழும் பேரொலியைப்போலக்குமுறி முழங்கும்படிக்குக்குணத்தொனிசெய்தனர், அதனைச்சூரன்கேட்டு வடவையைப்போலச்சீறிச் சத்தசாகரங்களும் அலைகளைமோதிக் கரையையுடைத்துஇரைச்சலிட்டுப்பெருகியதற்கொப்பாகத்தானும்நாணோசையைக்காட்டிக் கரவேகமாய்க் கொடியபாணங்களைச்சந்தித்துச் சோனைமாரியைப்போலச்சொரிந்துசிவசுப்பிரமணிய தேவரையும் வாயுதேவன்செலுத்தும் இரதத்தையும் உதயகிரியை பனிப்படலமூடியதைப்போல மறைத்துச் சிங்கத்தையொப்ப கர்ச்சித்தகாலையிற் குமாரதேவர் இவன்தனுர்வித்தை வெகுநேத்தியென்று நகைத்துக்கணக்கிறந்த பாணங்களைச்செலுத்தித் தீயையிறைத்துகுமுறிக்கொண்டு மேலிட்டுவருவதையெல்லாம் சின்னபின்னப்படவாட்டி அதப்படுத்தினர்.

உடனேசூரனுக்கு மிகுதியாகிய கோபாவேசமுண்டாய் விஷங்களைக் கக்கவல்ல தீட்சண்ணியமுள்ளபாணகோடிகளைஅபரிமிதமாகப்போக்கிக் கொக்கரித்தகாலத்திற்குமாரசுவாமியார் சிலமகிமையுள்ள சரங்களைக்கொண்டு பகைவன்பாணங்களின் வீறுப்பையடக்கி மேலும்சங்கையற்ற திவ்வியபாணங்களைத்தூண்டி சூரியசந்திரர்போவதற்கிடம்பெறுமல்மயங்கும்படிக்கு எங்கும்பாணமயமாகச் சூரனைமூடினவுடன் துரிதமாய்விட நாகங்களையொத்தகொடியசரங்களைச்செலுத்தி மேல்வருகின்றபடைகளைப்பங்கப்படுத்திப் பஞ்சேந்திரியச் சேட்டைகளின்கொடுமையையொழித்து மேம்பட்ட தவசிரேஷ்டர்கள் ஞானநாயகனுகிய பரம்பொருளைத் தரிசித்ததைப்போலத் தேவசேனுபதியாகிய பாலசுப்பிரமணியரைப்பார்த்துப்பற்களைக்கரகரெனக்கடித்து கொடியபாதகனுகியசூரன் துரிதமாய்க்கோடிகொடியபாணங்களைப்பூட்டித் தேவாதிதேவனுகியசிவகுமாரன்மேற்சொரிந்தான் அவைகளைஎண்ணிக்கைப்பட்ட பாணவருஷங்களினுல்விலக்கிமுன்னங் தாருகனைப்பிளந்த சத்தியையொத்த திவ்வியபாணங்களேழைவில்லிற்சந்தித்து வீரலட்சுமிவாசமாயிருக்கின்ற சூரன்பாரித்த புயாசலங்களுக்குக் குறிகொண்டுதூண்டியபோது அதிகவோசையைப்பெருக்கி அனலைவீசிவந்துதாக்கிச்சலனமற்ற காந்தமலையின்மேற்படும் சூரியகிரணங்கள் பிரயோசனப்படாமற்போவதைப்போலத் துளைத்துருவச்சத்தியற்று மதிர்துவிட்டது. இதைலோகநாயகனுகிய

சிவகுமாரன்கண்டு நல்லகாரியமெனநகைத்திருக்கும்போது சூரன்கோபித்துக் கணக்கற்றசரங்களைச் செலுத்திக்கொண்டுமேலிட்டுவருவதைச் சிவசுப்பிரமணியக்கடவுள் பார்த்துப்பலகணைகளைச்செலுத்தி அவைகளனைத்தையுங் கண்டித்துப்போட்டு ஆயிரம் அர்த்தசந்திரபாணங்களைக் கரவேகமாகப்போக்கிச் சூரன்கரத்திற்பிடிபட்டிருந்த வலியவில்லைப் பளபளென்று முறிந்துவிழும்படிக்குக் கண்டித்தனர், அப்போதிராஜாதிராஜன் மிகவுங்கோபித்துப் பூர்வத்திற் பிரமதேவன்கொடுத்திருக்கின்றஅயிற்படையையெடுத்துக் கரகளெனச்சுழற்றி வல்கொண்டுவீசினன், அதுவெளிப்பட்டவுடன் மிகுத்த தீட்சணியத்தைக்காட்டியெங்கும் அனலையிறைத்து ஆர்ப்பரித்து வரும்போது சரவணபவன்பதினாறுகோடியபாணங்களைக்கொண்டு அதனைக்கண்டித்துப்போட்டு பேலும் அமோகமாகியசரங்களைக் கோடைகால வருஷத்தைப்போலச்சொரிந்து மூடியபோதிற் சூரபதுமன் துரிதமாய் மற்றொருதனுசையெடுத்துவளைத்து நாணேற்றி அதிககொடுமைபெற்றிருக்கின்ற கணக்கிறந்த கணைகளைச்செலுத்தி மேலிட்டுவரும் பாணகோடிகளைப் பறக்கடித்துப்போட்டுமேலும் ஏழுதிவ்வியமாகிய சரங்களைச்சந்தித்துச் சரவணபவன் வலயபுசங்களுக் கிலக்காகப்பிரயோகித்துச்சிங்கத்தைப்போலக்கர்ச்சித்தனன், அப்படைகள் வெளிப்பட்டவுடன் பலவுற்பாதங்களைக்காட்டிக்கொண்டுவந்து சுயஞ்சோதிவடிவமாகிய பாலசுப்பிரமணியதேவர் தோள்களிற்றுருக்கித் தாபாக்கினியிற்பட்ட பூளைப்புஷ்பத்தைப்போல எரிந்தும்கரிந்தும் துகள்பட்டுப்போயிற்று.

அத்தருணத்திற் சூரனதுவில்வலிமை வெகுநேத்தியென்று முருகப்பெருமாள்சீறிப் பத்துப்பாணங்களினால் அவன்கரத்தில் விளங்குகின்ற மந்தரத்தையொத்த தனுசைக்கண்டித்து மேலும் ஆயிரங்கொடியபாணங்களைப்போக்கி அவனேறியிருக்கின்றதெய்வீகத்தேரைச்சிக்குப்படுத்தி அசையவொட்டாமற்றடுத்து அரசனுக்குதவியாகச் சூழ்ந்திருந்த பதினான்குநூறாயிரஞ் சேமத்தேர்களனைத்தினையும் பலகோடி கணைகளினாற் சிதைத்தெறிந்ததுமன்றியிற் பலபாணங்களைச்செலுத்துகின்ற கரவேகத்தைச் சூரன்கண்டு அனலைப்போல விழிகள்சிவந்து விழிகள் சுழலச்சர்ப்பத்தைப்போலச்சீறித்தான்அருமைபாகத்தேடிவைத்திருந்த முத்தலைச்சூலப் படையையெடுத்துலங்கி வீசியபோது வீறிவருகின்றபாணங்களைப் பறக்கடித்துப்புகைந்து தீயைவீசி யிரைந்துவரக்கண்ட பாலசுப்பிரமணியதேவர் நான்குதிட்சணியபாணங்களைப்போக்கி யிரண்டுதுண்டமாகவெட்டித்தள்ளி மேலும் ஏழுகணைகளைச்செலுத்திச் சூரபதுமன் வீற்றிருக்கின்ற இந்திரஞாலத்தேரின்மீதில் விளங்கியிருந்த முத்துக்குடையைக்கண்டித்துக் காற்றிற்பறக்கவிட்டும்மற்றொருதிவ்வியபாணத்தினால் அரசன்வீற்றிருக்கின்ற பீடத்துக்குப் பின்புறத்தில்நாட்டிச் சிரத்துக்குநேராகக் கவிந்திருக்கின்ற நவரத்தினமயமாகிய பூச்சக்கிரக்குடையையும் அறுத்தெறிந்தும்மீளவும் கணக்கிறந்த குரூரமாகியசரங்களைக்கரவேகமாகச்செலுத்திச் சிரோரத்தினங்களினாற் சோடித்துஅலங்கரித்திருந்த வாகுவலையங்களைப் பொடிபடுத்திச்சூரியனைப்போலவிளங்கிக்கொண்டிருந்தமகரகுண்டலத்தைப் பறக்கடித்து மார்பிற்புரண்டிருந்த முத்துமாலை மோகனமாலை மதாணிப்பதக்கங்களைத் துகள்படமோதிச் சந்திரனைப்போலவிளங்குகின்ற நெற்றியிற்கட்டியிருந்த வீரபட்டத்தையும் பொடிபடுத்தினர்.

வேதாகமம் உபநிஷத்துப் பிரமன்முதலிய மகத்துக்கள் இன்னமுந்தேடிக்காண்பரிய பெருமையையுடைய பாலசுப்பிரமணியக்கடவுள் இவ்விதமாகிய விநோதப்போரைச்செய்து சூரன்அணிந்திருந்த ஆபரணாதிகள் முழுமையும் பொடிப்பொடியாய்ப் பின்னப்பட்டுப் போம்படிக்குச் சாடிவரும்போது ஆயிரத்தெட்டண்டங்களினும்வணங்கிப்போற்றிப் புகழத்தக்க கீர்த்திப்பிரதாபத்தைப்பெற்றிருக்கின்ற சூரபதுமன் மதிமயங்கித் தனக்குச்சம்பவித்த மானபங்கத்தை நினைந்துநினைந்து தலையிரங்கி வருந்துகின்றதைச் சேனைத்தலைவர்கண்டு மனம்பொறாமல் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாகிய இராஜபரமேஸ்வரனைச் சற்றும்எண்ணிக்கையில்லாமல் அவமானப்படுத்தியபாலகனைக்கண்டதுண்டப்படக்கொன்று பழியைத்தீர்த்துக் கொள்ளுவோமென்று கோபித்தவர்களாய் அக்காலத்தில்நேர்ந்தஇரதகஜதுரகபதாதிகளைச்சேர்த்துக்கொண்டு ஏகமுகமாய்ச் சமுத்திரத்தைப்போலவிரைச்சலிட்டெதிரேறிப்போய்த் தங்கள்கரத்தில்விளங்கும் பாரித்தவிற்களைவளைத்து நாணேற்றி டங்காரசத்தங்களைக்காட்டி விஷத்தொகையலிட்டுக் கூர்மையாயிருக்கின்றகோரமாகிய பாணவிதங்களை அமோகமாய்ப்பூட்டிச் சோனைமாரியைப்போலச்சொரிந்தும், தண்டாயுதம், பிண்டிபாலம், முசலம், கப்பணம், சூலம், சக்கரம், கழுமுள், இத்தகையபடைகளைச்செலுத்திப் போராடவும் இராட்சதசேனைகள் அஸ்திரசஸ்திரவிதங்களை ஒன்றனந்தமாகச்செலுத்தவும், இவ்விதமாய்ச் சின்மயமூர்த்தியாகிய குமாரதேவனைப் பிரளயவெள்ளம் மேருகிரியைச் சூழ்ந்தலைப்பதைப்போல வளைந்துகொண்டு கொடியபோரைச்செய்துவரும் சதுரங்கசேனைகளின் பெருக்கையும் அவர்கள்கல்வித்திறங்களையும் திரிபுரதகனராகிய சிவகுமாரன்கண்டு அனைவரையும் ஒருமுனையிற் சங்கரித்தொழிக்கத்திருவுளத்தில்நினைந்தவராய்த் தமதுதிருக்கரங்களினொன்றிற் பிரகாசித்திருக்கின்ற சக்கரத்தைச்சுழற்றி உதயகிரியிலிருந்துசூரியனெழுந்ததைப்போலக் கடாவியபோது பேரொலியைக்காட்டித் தகத்தகாயமாய் சொலித்துக்கொண்டு சூரியன்அர்த்தராத்திரியிலுதித்து இருட்பெருக்கத்தைவிழுங்கிவீறியதைப்போலக்கறுத்ததேகத்தையுடைய விராட்சத சேனாசமுத்திரத்திற்பாய்ந்து எங்குந்தானாயுலாவி செம்பட்டமயிர்விளங்குஞ் சிரங்களைக்கண்டித்தும் மண்டையைப்பிளந்தும், கற்கம்பத்தையொப்பத்திரண்டு வல்பெற்றிருக்கின்ற புஜங்களையரிந்தும்விசாலமாயிரத்தினாபரணங்களை யணிந்திருந்தமார்பைச்சேதித்தும் வீரகண்டையணிந்த கால்களைவெட்டித்தள்ளியும் உரத்துப்பேசும் வாயைப்பிளந்தும் உருத்துப்பார்க்கும் விழிகளைக்கல்லியும்கோபித்துப் பெருமூச்செறியும் மூக்குகளைக்கிள்ளியெறிந்தும் வீரங்கள்பேசும் நாவையரிந்தும் பலகறையைப்போலப் பற்களுதிரும்படிக்குத்தாக்கியும் வீராவேசங்களினாற் றுடித்துக்கொண்டிருக்கும்மீசைகளைக்கொளுத்தியும் முகவாயைச்சிதைத்தும் வயிரகுண்டலங்கள் தரித்ததையும் செவிகளையறுத்தும் வீரபட்டங்களைத் துகள்படுத்தியும் இரத்தினகசிதமாகச் சொலித்திருக்கின்ற கிரீடங்களை நுறுக்கியும் படைகளைச்செலுத்த நீட்டுங்கரங்களைவெட்டியும்இராட்சதவீரர்பற்றியிருக்

கின்ற தனுசுகளைவெட்டியும் பாணங்களைமுறித்தும் மற்றஆயுதங்களைப் பொடிப்பொடியாக நாசப்படுத்தியும், யானை, புலி, கரடி, பன்றி, மானிடர் தேவர்கள், இருஷிகள், முதலாகவாரிவாரிப் பருத்தவாயிற்போட்டுவிழுங்கி நிறைத்துவைத்திருக்கின்ற தொம்பைகூண்டு வயிற்றைப்பீறி குடல்களைச் சர்ப்பங்களைப்போலப் புரளத்தள்ளியும் இவ்விதங்களிலிராட்சதப் படைகளைச் சின்னபின்னப்படவாட்டித் தேரணிகளிற்பாய்ந்து சொர்னமயமாகவிருக்கின்றவண்டில், அச்சு, மச்சு, குத்துக்கால், நவரத்தினமயமாகிய கொடுங்கை, கொடி, குடை, கொத்துமணிகள், முதலியவற்றைப் பலதிசையினும் பறக்கச்சாடியும் அவற்றிற்கட்டியிருந்த புரவிக்கூட்டங்களைக்கண்டதுண்டப்படத்தறித்தும் சாரதிகள் கழுத்தையரிந்துதள்ளியும் யானையணிகளிற்புகுந்து இருப்புலக்கைகளைப்பற்றிச்சுழற்றித்திரியும்துதிக்கைகளைப்பனைமறிவதைப்போலக்கண்டித்துத்தள்ளியும் நவரத்தினமுகபடாத்தைச் சிதைத்தும் மத்தகத்தைப்பிளந்து மூளைகளையிறைத்தும் நீண்டு தொங்கும் உதட்டைச்சரித்தும்இரத்தினமயமாகிய பூண்களைத்தரித்திருக்கின்ற பருத்தகோடுகளைப்பிறைக்கொப்பாகக்கண்டித்தெறிந்தும் பாகனைத்தள்ளியும் தலைவனைக்கொன்றும் உரலையொப்பவிருக்கும் கால்களைத்தறித்தும் கணீல்கணீலென மாறியொலிக்கும் மணிகளைப்பொடியாக்கியும் நீலகிரியைப்போலக் கதறிவிழும்படிக்கு நடுவதுபாதியில்வெட்டித்தள்ளியும் குதிரைப்பந்திகளிற்றாவிப் பொற்குச்சுகளினால் அலங்கரித்திருக்கின்ற பிடரிமயிரையுடைய கண்டத்தைவெட்டியும் செவிகளையரிந்தும் பொன்மயமாகவிளங்குஞ்சீனியைப்பொடிபடுத்தியும்வண்டையங்கள்பூண்டு அலைகளையொப்பத்தாவும் கால்களைக்கண்டித்தும்அவைகளின்மேல்நின்றுபோர்செய்யும் வீரரைத்தண்டித்தும் இவையன்றியில் இந்தச்சதுரங்கசேனைகளுக்குக் காவலாய்வந்திருக்கின்ற படைத்தலைவர்களைச்சூழ்ந்துகரங்களிற்கொண்ட பாரித்தவிற்களைமுறித்து அம்புக்கூடுகளை அதப்படுத்திப் போர்செய்யவேண்டுமெனநினைந்த நெஞ்சைப்பிளந்து பாணங்களைத்தொட்ட கரங்களைக்கண்டித்துக் கிரீடங்களைக்காற்றிற்பறக்கடித்து விருதுக்கொடிகளை யறுத்தெறிந்து நுரையைப்போலவெளுத்து அலைகளுக்கொப்பாக அசைந்திருந்தவெண்சாமரைகளைச்சிதைத்துப் பளபளத்துவிளங்கும் வீரபட்டமணிந்தநெற்றியைத்துளைத்தும் சித்திரமயமாயிருக்கின்ற அருகுகளையும் ஆலவட்டங்களையும் சிதறவடித்தும்அவர்களேறியிருக்கின்ற வாகனங்களை தும்சப்படுத்தியும் படபடத்தொனிகளுடன் வானத்தையளாவநிற்கின்ற துவசங்களைக்கண்டித்து முத்துகளினாலும் வெண்பட்டினாலும் நவரத்தினங்களினாலும் அலங்கரித்து நிழலைப்பரப்பியிருக்கின்றசந்திரவட்டக்குடைகளைக் கண்டித்து காற்றாடியைப்போல பறக்கச்சாடியும் மகரதோரணங்களை வானத்திற்செல்லமோதியும், ரணபேரி, ஜயபேரி, வெற்றிச்சங்கம், எக்காளை, சின்னம், குடமுழா, முதலியபோர்ப்பறைகளைப் பீறிப்பிளந்து அதலகுதலம்பண்ணியும்இவ்வித விசித்திரப்போரைச்செய்து குயவன்சக்கரத்தைப்போலக் கரகரெனச்சுழன்றுகொண்டு குமாரதேவர்செலுத்திய திகிரிப்படையானது ரணக்களமெங்குஞ்சூறாவளிக்காற்றினுங் கடுகித்திரிந்து கொடியபாதகனாகிய சூரபதுமன் ரதகஜதுரகபதாதிச் சேனைப்பெருக்கைச் சின்னப்படுத்தி வெளியிடமாக்கியது சவுனகாதிரிஷிகளே, அக்காலத்தில் சமர்க்களம்விளங்கிய சிறப்புகளிற் சிலவற்றைச்சொல்லக்கேட்பீராக, யானைக்கூட்டங்களிறந்து அணிபடவிழுந்துகிடப்பது கரையாகவும் அதன்மத்தியில்விளங்கும் பூமியானது ஓமகுண்டமாகவும் சிவந்தோடும்உதிரம்அக்கினிக்கொப்பாகவும் அதில்மிதக்கின்ற இராட்சதர்கரியகளேபரங்கள் புகையைப்போலக்காட்டவும் இரதங்கள் குதிரைகள் ஆயுதங்கள்முறிந்துகிடப்பதுசமித்துக்களாகவும், நிணங்கள்பெருத்திருப்பது நெய்யாகவும்மூளைமாம்சங்கள் அவிர்ப்பாகமாகவும்கொண்டு எமதுகர்த்தனாகிய குமாரசுவாமியார்செலுத்திய சக்கரப்படையானது யாகத்தலைவனாகநின்று வீரமாமகத்தைமுடித்ததுக்கொப்பாகரணக்களம் விளங்கியது.

இவையன்றியும்கொடியபோரைச்செய்த விராட்சதனை வாட்டி அவர்கள்மனதிற்கூறுகொண்டிருந்த மாயவஞ்சகங்களாகிய பேரிருளைப்போக்கி வீரசொர்க்கத்திற் குடியேற்றி அவர்களுதிரத்தில்முழுகிச் சிவந்துகாட்டுகின்ற பாலசுப்பிரமணியர்சக்கரமானதுஎப்படிக்குவிளங்கியதெனில், பிராதகாலத்தில் உதயகிரியினிடத்தில்ஏழுபச்சைக்குதிரைகளைப்பூண்டுஅருணன்செலுத்தும் ஒற்றைவண்டிலையுடைய தேரில்தோற்றியகாலையில் பகைத்தெதிர்ந்த அவுணரைவாட்டித்திலதப்பொட்டைப்போலவட்டாகாரமாய்விள்ங்கி உலகங்களிற்பரந்திருந்த விருளைவாட்டிப் புறப்படும் ஞானசூரியனைப்போல விளங்கியது இவையன்றியிற் பார்ப்பதியார் கோரியபடிக் கிடப்புறத்தைத் தந்த சிவகுமாரன் விடுத்தசக்கரமானதுசீறியிராட்சதசேனாசமுத்திரத்திற் புகுந்துகலக்கிய வீரபராக்கிரமத்தையும் ஜயத்தையும் மகாவிஷ்ணுகரத்தி லிருந்த படையரசாகிய சக்கராயுதமுங் கண்டு பிரமித்துப் புகழ்ந்துநின்றது இவ்விதவீரபராக்கிரமத்தைப் பெற்றிருக்கின்றசக்கரப்படையானது சமர்க்களத்திற் சத்தசாகரங்களும்பெருகிவந்ததைப்போல ஆர்ப்பரித்திருந்த நூறாயிரவெள்ளஞ் சதுரங்கசேனைகளையும் ஒருமுகூர்த்தகாலத்தில் வாட்டிவாட்டிக்கிடத்திமுடித்தது, அதையோசிக்குமிடத்திற்சண்முகப்பெருமாள்நாசமடையக்கடவீர்களென்று ஒருவார்த்தையினால் அழித்ததைப்போலக் காட்டியது சவுனகாதிரிஷிகளே, இவ்விதமாக குணநிதியாகியவெற்றி வேலாயுதக்கடவுள் செலுத்தியசக்கரப் படையானது விநாசகாலம்நேர்ந்த சூரபதுமன்சேனைகளனைத்தினையும் ரணக்களத்துக்குப்பலிகொடுத்து ஜயப்பிரதாபத்துடன் உலர்ந்தகாட்டினிடத்திற் பிரவேசித்துச் சாம்பலாக்கியடங்குந்தீயைப்போலத்தன்கொடுமையடங்கத்தணித்துத்திரும்பி வானகங்கையிற்படிந்துபவுத்திரமாய்க்குமாரதேவர் திருக்கரத்திற்பழையபடிக்குச் சேர்ந்திருந்தது, இனிப்போர்க்களச் சிங்காரங்களையுஞ் சொல்லுவோம் இராட்சதவீரர்கள் கரங்களிற்பற்றியிருந்த சந்திரவட்டக்குடைகள் காம்புகள்துணிந்து நிணச்சேற்றினிடத்தில் விழுந்துதோற்றுவதுஎப்படிக்குக்காட்டுவதெனில், பலவிதபுஷ்பசாதிகள்அலர்ந்துபரந்திருக்கின்ற தடாகத்திற் றோற்றும்வெண்டாமரைமலர்களைப்போலக்காட்டவும் பாலசுப்பிரமணியர் செலுத்தியசக்கரத்தினால்மாண்ட ரதகஜதுரகபதாதிகள் அசைவற்றுத்திரட்சியாகக்குவிந்து கிடப்பதைப் பார்க்குமிடத்திற்சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலத்திலிருக்கின்ற பருவதங்கள் குன்றுகள்திட்டைகள் முதலானவை திரண்டுவந்து அமர்க்

களமுற்றினும் பெருத்திருப்பதுக்கொத்தும்வானத்தையளாவக்குவிந்து விளங்கும் பிணமலைகளின்மேற்கொள்ளிவாய்ப்பேய்க்கூட்டங்கள் நிணமாப்சங்களைத்திருத்தியாகப்புசித்து உதிரத்தைக்குடித்து வெறிகொண்டு நகைத்துக்கூச்சலிட்டு ஆடிப்பாடித்திரிவதைப் பார்க்குமிடத்தில் மின்னிக்குமுறியிடித்துக் கர்ச்சிக்கு மேகங்களானவை வானத்தையளாவ நிற்கின்றமலைகளினிடத்திற் றங்கள்செய்கைகளைக்காட்டி யிருப்பதற் கொப்பாகவும் நீலகிரிகளைப்போல மதநீரைப்பெருக்கியிருந்த யானைகள்தத்தித் தாவும் புரவிகள் களேபரங்களைப்புரட்டிக்கொண்டு அலைகளைமோதியிரைந்து உதிரவெள்ளமோடுவதைப்பார்க்குமிடத்திற் செங்நாகமொன்று தன்பகைவனாகிய சந்திரனுக்கிடங்கொடுத்திருப்பதெனச் சீறி விசாலமாகியபடத்தை விரித்துக்கடலினிடத்திற் ருவியலைக்கவேண்டுமென் றெண்ணிக்கொடிய விஷங்களைக்கக்கி உதறிக்கொண்டுபூமியின்கண்ணோடுவதைப் போலக் காட்டவும்வானத்தையளாவுங் கரியதேகத்தைப் பெற்றிருக்கின்ற சில பைசாசங்கள் புதியவிருந்துண்ணப் போகுமுன்னிலையில் தேகங்களைச் சுத்திசெய்து கொள்ளும்பொருட்டுப் பிணமலைகளின்மீதேறிஅவைகளின்உச்சிவரையிற்றேக்கிட்டோடும்உதிரப்பிரவாகத்தில் விழுந்து அலைத்து முழுகுகின்றவேளையிற் பெருத்தெழுந்த திவலைகள் தேவலோகத்தில்வாசஞ்செய்கின்ற அரம்பாஸ்திரீகள் உடுத்திருக்கின்ற வஸ்திரங்களின்மீதிற் றெறித்தமாத்திரத்தில் மாதவிடா யிவர்களுக்கேதென்று கண்டவர்கள் நகைப்பரென நாணித்துரிதமாய் மேற்போர்வையினால் மறைத்துப்போகவும் சிவகுமாரன் விடுத்தசக்கராயுதமான துசிலராட்சதர்சிரங்களைக்கண்டித்த மாத்திரத்திற்கோணாத்தந்தங்கள்விளங்கவாயைஆவ்ஆவெனத்திறந்து கொண்டு பந்தைப்போலப்பறந்துஆர்ப்பரித்துவருகின்றதைச் சூரியன்கண்டு நம்மிடத்திற் பகைகொண்டிருப்பன இராகுகேதுக்களென்று இதுவரையிற் றெரிந்தவர்களாய் அவற்றின் கொடுமைக்கஞ்சிவாடுகின்றனம்அப்படிக்கிருக்க இக்காலத்தில்அளவற்றனவாகத்தோன்றுகின்றன, இவற்றின் வாயிற்பட்டுக் கிலேசிக்கநேர்ந்தது இதற்கென் செய்வோமெனக்கலங்கித் தேரைமுடுக்கிக்கொண்டோடவும்,விண்ணிடத்திற்பரவிப்பறந்திருந்த துவசபடாங்கள் வானத்தையளாவக்குவிந்திருக்கின்றமதயானைப்பிணப்போரின் மத்தியிலகப்பட்டுத் தலையை அசைத்திருப்பதைக்கண்ட தேவர்கள்நடுநடுங்கி யிராட்சதசேனைகள்முற்றும்மாண்டகாரணத்தினாற் சூரபதுமன்கட்டளையின்படிக்கு மேலைஅண்டங்களிலிருக்கின்ற கணக்கிறந்தகாக்காசுரர்கள் வெளிப்பட்டனர்.

சிலகாலத்துக்கு முன்னம் ஜயசாலியாய்வீறியிருந்த ஒருகாக்காசுரனால்மிகவும் அலைச்சற்பட்டு வாடினோம் இவர்களுக் கென்னசெய்வோமென்று திகைத்து யோசிக்கவும் அக்காலத்தில் ரணக்களமுற்றினும் கணக்கிறந்த பூதபைசாசங்கள் உதிரத்தைத் திருப்தியாகக்குடித்தவெறியினாற் கரங்களைக்கொட்டிக்கொண்டு பவனிவரவும்சங்கோபசங்கம் கவந்தங்கள் சமரபூமியெங்குங் கூத்தாடுவதையோசிக்குமிடத்தில் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாகிய சூரபதுமன் கட்டளையின்படிக்குச் சமர்க்களத்தில்மாண்டவிராட்சத வெள்ளங்களனைத்தும் உயிர்பெற் றெழுந்து கெலிப்புடன் சண்டைக்குக் கையறைவதைப்போல விளங்கியது சவுனகாதிரிஷிகளே, இவ்விதச்சிங்காரங்களைக்காட்டுகின்ற அமர்க்களத்திற் பாலசுப்பிரமணியர்விடுத்தபாணங்களினாற் பங்கப்பட்டுத் திகைத்திருந்த சூரபதுமன் அத்தருணத்தில் தன்படைத்தலைவர்கள் வீராவேசங்களுடன் சதுரங்கசேனைகளைக் கூட்டிக்கொண்டு மேல்நடந்து கொடியபோரைச் செய்திருந்தவர்கள்மேல்எமதுகந்தர்செலுத்திய சக்கரமானது சொலித்துக்கொண்டுவந்து சூருவளிக்காற்றைப்போலச் சுழன்றுசுழன்றுஎதிர்ந்த விராட்சதப்படைக ளனைத்தினையும் கண்டித்தவிதத்தை யறியாதவனாய்ச் சமுத்திரத்தைப்போலஆர்ப்பரித்திருந்த சயின்னியங்கள் மாண்டு களேபரக்குப்பல்கள் எங்கும் ஓங்கியிருப்பதைக் கண்ணாரக்கண்டு பிரமித்துதிகைத்துவாடி மதிமருண்டு கண்பஞ்சடையச்சோர்ந்து தனியனாய்நின்றவன்சற்றுநேரத்திற் புத்திக்குத்தெளிவுண்டாய்இதனைநினைப்பதாயினன், இதுவென்ன அதிசயம் பெரும்புறக்கடலுக்கொப்பாக இப்போது நமக்கெதிரிலிருந்த சேனைகளைப் பாலன் கரத்தில்விளங்கும்வேலாயுதத்தைச் செலுத்திவாட்டினானோ சருவசங்காரமூர்த்தியாகியசிவபிரான்பெயரால் விளங்கும்திவ்விய பாணத்தினால் மறைத்தானோமாளக்கடவீர்களென்றுஒருவசைமொழியைச்சொல்லிஅழித்தானோ இந்தரணக்கள முற்றினும்நிறைந்திருந்தசேனைகளையிந்தக்குழந்தை வேலன்எவ்விதத்திற் சங்கரித்தான்,எதிரில் நின்றுபார்த்திருந்த எனக்கொன்றுந் தோற்றவில்லை இதையோசிக்குமிடத்திற் புதுமையாகவே தோற்றுகின்றது, நாங்கள்கற்ற தனுர்வித்தையும்புசபல பராக்கிரமங்களும் வரப்பிரசாதமுயற்சிகளும் இந்தச் சிறுகுழந்தையின் முன்னம்அவலமாகப்போயின, இதென்னசூதோவஞ்சகமோ இந்திரசால மயேந்திரசாலப் பெருக்கோஇன்னதென்று என்மனதில் நிதானிக்கப்படவில்லையே யென்றுஐம்பொறிகளுங் கலங்கி மதிமருண்டுவாடி வருந்தினன் அகன்றமண்டலா தீஸ்வரனாகிய சூரபதுமன்அக்காலத்திற்பட்ட துன்பத்தைச்சொல்லிமுடிவதோ தேரைப் பறிகொடுத்துச் சிலையையிழந்து ஜயசாலியென் றெவ்விடங்களினும்கொண்டாடவிருந்தகீர்த்திப்பிரதாபங்களைப்போக்கியது மன்றியிற் சேனைப்பெருக்கையும் மாளக்கொடுத்துநவரத்தினமயமாக விளங்கும் கிரீடம்,குண்டலம்,வாகுவலையம், மதாணிப்பதக்கம், கடகமுதலிய ஆபரணங்கள் பின்னப்பட்டுப் பூச்சக்கிரக்குடையுந் துணிபட்டோடஅகன்றசாம்பிராச்சியச் செல்வப்பெருக்கைக் கொண்டிருந்தபூமண்டலத்தைப் பலகாலம் அனுபவித்து சடுதியிற்பறிகொடுத்துத் தியங்கும் மன்னனைப்போலவும் சிரோரத்தினத்தை யிழந்தநாகத்தை நிகர்த்தும் மங்கிலியத்தைப் போக்கிய கன்னிகையையொப்பாகவும் துதிக்கையையிழந்த மதயானையைநிகர்த்தும் ஒளியிழந்து வருந்தும் குருடனைப்போன்றும் தெப்பத்தில் நின்றுதவறி ஆழிநீரிலாழ்ந்தவனைப்போலவும் உண்ணாமல்உடுக்காமல்பந்துக்கள் சிநேகிதர் பரதேசிகள் சிவாலயகயிங்கரியம்நந்தவனம் தடாகமுதலிய சத்கருமங்களிற் செலவிடாமல்ஆழவெட்டித்தாழப்புதைத்துப் பணங்காத்திருந்தபூதத்தைப்போலப் பத்திரப்படுத்திவைத்திருந்த பதிதனானவன்தான்போற்றிவந்த செல்வத்தைத் திருடாமலும் பரமன்னராலுமிழந்து வாடுவதைப்போலவும் கடன்பட்டவன்நெஞ்சமலைவதையொப்பவும் பெண்களைப்பெற்றவனை நிகர்த்தும் மனதுக் கினியதுணைவனை யிழந்தவனைப்போன்றும் சூர

பதுமனுக்கொன்றுந்தோற்றுமல்வாடிப்பூமியாகியதேர்மீதிருந்தனன்.

அதன்பின்பு அகன்றமண்டலாதீஸ்வரனாக வாழ்ந்தவனாதலால் சூரனுக்குஅதிககோபம்பிறந்துஅரக்கைப்போலக் கண்கள் சிவந்துதீப்பொறிகள்சிதற மீசைதுடிக்கமார்பில் வியர்க்கக் கரங்களைப்பிசைந்துகொண்டு நல்லகாரியம் பற்கள்முழுதும்விழுந்தின்னமுமுளையாதபாலகன் வெற்றியும் என்சூரமும் வெகுநேர்த்தியாகவிருக்கின்றதென நகைத்து வடவைக்கனலைப்போலச்சிறிஇந்தநிமிஷத்திலிவனுணவத்தையடக்குகின்றேனெனத் துரிதமாய்ப் பாரித்தவில்லொன்றை யெடுத்துவளைத்துப்பிரமாஸ்திரத்தையெடுத்து உபசரித்துமந்திரபூர்வகமாகச் செலுத்தினன், அப்படையானது வானத்திலெழுந்து பலகோடி திவ்விய சரங்களைப்படைத்து அனலையிறைத்து திசைகளதிரஆர்ப்பரித்துச்சமீபித்தமாத்திரத்திற் சுயஞ்சோதிவடிவத்தைப்பெற்றிருக்கின்ற சிவகுமாரன் கரத்திற்சொலித்துக்கொண்டிருந்தவெற்றிவேலாயுதமானது சரோலென் றெழுந்து மீறிவருகின்றதேவப்படையைகவளீகரமாக விழுங்கிமீண்டு பழையபடிக்குத் தன்னிலையில்நின்றது அதைச்சூரன் கண்டு மனம்வாடிமானம்பாதிக்கக் கொதித்து மறுபடியும் நாராயணாஸ்திரத்தையெடுத்துப் பூசனைவழிபாடுகளை முடித்துக்கரவேகமாய்ப் பிரயோகித்த காலத்தில் அளவற்ற விஷ்ணுகளினுருவத்தைக்கொண்டு பலதேவாஸ்திரவிதங்களைப்படைத்துவடவாமுகாக்கினியைப்போலக்கொதித்து அதிவேகங்கொண்டு வரும்போதுவெற்றிவேலானதுபாய்ந்து அதையும்விழுங்கிமீண்டுகுமாரதேவர் கரத்தில்நின்றது, இந்தஉற்பாதங்களைக் கண்டசூரன் அதிசயித்து பிரமாஸ்திரம், நாராயணாஸ்திரம், இப்படிக்கொத்தசிறந்தபாணங்களைச்செலுத்தினேம்அவற்றினை வேற்படையுண்டு விளங்குகின்றது இதைப்பார்க்குமிடத்திற்மாயமாகவிருக்கின்றது நல்லகாரியம் இனிகாளகண்ட மூர்த்தியாகிய சிவபிரான்கடாட்சித்திருக்கின்ற பாசுபதாஸ்திரத்தைப் பிரயோகிப்பேனாயில் அதனையாவர்தடுக்கவல்லர் இந்தப்பாலகன் முதலானவர்களைவாட்டிப் பகைவரில்லாமல் ஜயப்பிரதாபத்தைத் தருமென்று மனஉறுதிகொண்டுஅப்படையையெடுத்துவிதிப்படிக்கு மானசபூசையினால்தூபதீபமுதலிய வழிபாடுகளைமுடித்து வில்லிற்சந்தித்துஆகாணாந்தபரியந்தமிழுத்துப் பிரயோகித்தனன், அந்தச்சிறந்தபடையானது வெளிப்பட்டவுடன் அளவற்றபிரமன் நாரணன் உருத்திரன்முதலியோர்படைகளை யுண்டுபண்ணிச்சூலம் சக்கரமுதலிய சிறந்தஆயுதங்களைப்பெருக்கி ஆலகாலவிஷமும் வடவாமுகாக்கினியும்கலந்துவீசுவதைப்போலச் சுவாலையைக்காட்டி அண்டங்களதிரச்சீறி அதிகமகிமைகளைஉண்டுபண்ணிக்கொண்டு வரும்போது அதனாலுண்டாகிய உற்பாதங்களுக்கஞ்சித்திசையானைகள் வீறிட்டு உதைத்துக்கொண்டு மரணமூர்ச்சையாகவிழவும்சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் கொதிப்பெடுத்துச்சுவறி அதிலடங்கியிருந்த வடவைக்கனலும்மேலிட்டுவரும் வெப்பத்துக்குச் சகிக்கமாட்டாமையால் எங்கேபோயொளிப்போமென்று வருந்தவும் பூமண்டலம் தத்தளித்துச் சேஷனும்நடுங்கி விஷங்களைக்கக்கவும் சத்தமேகங்களும் கற்பங்கலங்கி யிடிமின்னல்களைப்பெருக்கி ஓடவும் சூரியன்துடிதுடித்துக்களைக்கவும் மகம்மேரு முதலியகுலகிரிகள் நெக்குவிட்டசையவும் அண்டகோளகை வெடித்துக்காட்டவும் இலக்ஷர்பயப்பிராந்திகொண்டுவாடவும்சேனைத்தலைவர்கள் இதென்னஉற்பாதமென்றுகளைக்கவும் பூதப்படைகள் அம்மம்மமோசம்வந்தது வாருங்கோள் வாருங்கோளென்றொருவனாஒருவர் கூவிக்கொண்டோடவும் வானத்தில்வேடிக்கைபார்த்திருந்த தேவர்கள் இந்தப்பாணத்தைத் தடுப்பது மிகவுமரிதரிதுநமக்கென்னகேடு நேருமோவென்னும் பயத்தினால் மேலுலகங்களிற்போய்மறையவும் மண்விண்பாதலங்களில் வாசஞ்செய்கின்ற பிராணிகள் மிகவும்வருந்தி ஏங்கிக்களைக்கவும்இவ்விதஉற்பாதங்களைக்காட்டிப் பாசுபதம்வருகின்றமகிமையைச் சிவகுமாரன்கண்டு இதுநமதுபிதாவின் படையாகுமென நிதானித்தவராய்த் தமதுதிருக்கரத்தைநீட்டிக்கொடுத்தவன் எளிதில்வாங்குமாறுபோல ஏந்திமற்றப்படைகளுடன் தரித்திருந்தனர்.

இந்தஅதிசயத்தை மாஸ்பதந்த சூரபதுமன்கண்டு அதிகவிம்மிதனாய்நான்அருமையாகத்தேடிவைத்திருந்ததெய்வீகப்படையைச் செலுத்தினால் அதற்குமாறுதொடாமற் சுலபமாய்த் தன்வசப்படுத்திக்கொண்டு அஷ்டமூர்த்தமாகவிளங்குபவன் தானுமென்பதைக்காட்டினான்ஆதலால், இந்தப்பாலகனுடன் சண்டைகொடுப்பதற்கு என்னைத்தவிர மற்றயாவராலு முடிவதன்று மேலும்என்னுடன்போராடுவதற்கு இவனல்லதுவேறில்லை யிதற்குப்பிசகுமில்லை இதனாலிவனை எனக்குச் சமமாகச்சொல்லவேண்டும் வேறொருவனை எவ்விதங்களினுங் குறிக்கக்கூடாதுநல்லகாரியம் இந்தப்பாலகன் கரத்தில்விளங்கும் வெற்றிவேலாயுதத்தின் வலியையும் விற்றிறத்தையும்மற்ற விஜயங்களையும் பார்த்தேன் இனிசிவந்தஅதரத்தையுடைய பாலகன் செய்கையையறிவோமெனநினைந்து சூரபதுமனானவன் ஒருகாரியத்தையும் தொடங்காமல் மவுனியாய் அசைவற்றுநின்றனன், சவுனகாதிரிஷிகளே!என்னசொல்வேன் அகன்றமண்டலாதீஸ்வரனாகியசூரன்நிலையைச்சண்முகப்பெருமாள் கண்டவுடன்மனதிலிரக்கமுற்றுக்கிருபாநிதியாதலால் இதனைச்சொல்வதாயினர், ஓசக்கிரவர்த்திஇந்திரகுமாரன் சயந்தன் முதலாகியதேவர்களை யலைத்துப்பிடித்துவந்து அளவற்றகாலமாய்க்கொடியசிறையில் வைத்து வருத்துகின்றனையெனத்தெரிந்து அதை நிவாரணஞ்செய்யும்பொருட்டு நாமொருதூதனையனுப்பினேம் அவன்வந்துபேசியவார்த்தைகளைஉறுதியாகக்கொண்டு நடந்தவனுமல்லஅல்லதுதேவர்கள்சிறையையும்விடுதலைசெய்யாமற்போயினை இந்தகாரணத்தைக்குறித்தேதிருக்கயிலையைக்கடந்துவந்தேமாதலால் ஆதியில்உன்தம்பிதாருகனைப்பிளந்துகொன்றபடிக்குஇத்தினமேஉன்னையும்வெற்றிவேலினால்வாட்டநினைந்துஇவிடம்வந்தோமாயினும்உனக்குதவியாகச்சூழ்ந்துவந்தநூறாயிரவெள்ளம் இரதகஜதுரகபதாதிகளையும்பறிகொடுத்துஜயப்பிரதாபம்பெற்றிருந்த தனுசையுமிழந்த நீஅருமையாகத்தேடி வைத்திருந்ததெய்வப்படைகளும் அதப்பட்டுத் தேகமும்வருந்தி வறியனாய் நிற்கின்றனை புசபலபராக்கிரமசாலியாகிய தாருகனைவென்ற வேல்இதோவிருக்கின்றது உன்னைக்கொல்வது நமக்கொருபொருளன்று தருமமார்க்கப்படிக்கு நிராயுதனாகவிருக்கின்ற உன்னைவாட்டுவது நீதியல்லவென்று இதுபரியந்தம் தாழ்த்தோம் இனிபலபலபேசவேண்டுவதில்லை வெகுகாலங்களாக வைத்திருக்கின்ற தேவர்கள்சிறையை விடுதலைசெய்வையாகில் உன்பிராணனைவாங்காமல்இந்தச்

செல்வத்தை அநுபவித்திருக்கவிட்டுப்போவோம்அப்படிக்குச்செய்யச் சம்மதப்படாமற் போவையாகில் இப்போதே உன்னைக்கண்டித்துப்போட்டு தேவர்களைவிடுவித்துக் கொண்டுபோவோம் இனிஉன்னெண்ணத்தைத்துரிதமாகச்சொல்லக்கடவாயென்று வெவ்வேறுருவமாகவிளங்கிச் சராசரப்பிரபஞ்சங்களனைத்தினையும் நடிப்பித்துப்பாதுகாக்கத் திருவுளங்கொண்டகாரணத்தினுற்சண்முகங்களும் பன்னிருதிருக்கரங்களும்பெற்றுத் தோற்றியிருக்கின்ற குமாரதேவரானவர் மேற்குறித்தபடிக்குமனத்தூய்மையில்லாத சூரபதுமனைப்பார்த்துச்சொல்லியகாலத்தில் மாறுத்தரமொன்றுங் கொடாமல்இதனையெண்ணுவதாயினன்.

இந்தச்சிறுபிள்ளையிப்போதுகுறித்துக்காட்டியகாரணங்களை யோசிக்குமிடத்திற் சமுத்திரத்தைப்போல நம்மைச்சூழ்ந்துவந்த சேனைகளையும் படைவீரரையும்பாரித்த வில்லையும்சிறந்த தேவப்படைகளையுமிழந்துதெய்வீகமாகியதேரும் உதவியற்றிருக்கின்றேன் இதுதருணமென்றெண்ணி தேவர்கள்சிறையை விடுவித்துப்போட்டுச்சுகசீவியாய் அரசுரிமைகளைச்செய்து பிழைப்பாயென்று பேசத்துணிந்தான், அழிவற்றவயிரத்தேகம் நமக்குண்டாயிருப்பதையும் தீர்க்காயசுபெற்றிருப்பதையும் புசபலசவுரிய சம்பத்துகளையும் மாளாதசேனைகளின் பெருக்கைப் படைத்திருப்பதையும் பாலபருவத்தினுற் சற்றும் யோசியாமற் பேசியினன் பரிமள மிகுத்த கடப்பமாலையையணிந்திருக்கின்றபாலசுப்பிரமணியன்கோபித்துநின்று அளவற்றகாலம் கொடியபோரைச்செய்யவும் நான்வெறுங்கரத்துடனிருப்பினும் இவன்றந்தை சிவபிரான் எக்காலத்துமுனக் கழிவில்லையென் றருளியிருக்கின்றவரமுயற்சிபெற்றஎன்னைக்கொல்லமாட்டுவானேமேலும், பிரமன்விஷ்ணு இராஜராஜாக்கள்பெரியோர்கள் முதலியசகலரும்நிறைந்து புகழ்ந்துவாழ்த்தப் பட்டாபிஷேககாலத்திற் சூடியிருக்கின்ற வயிரமுடியும் பூச்சக்கிரக்குடையும் துணிபட்டுப்போனதை நினையாமல் பழிக்குட்பட்டு இப்போதேயெதிர்ந்து சண்டைகொடுப்பேனுயினும் எனக்கழிவில்லை, ஆனபோதிலும் இந்தப்பாலகனைவாட்டி ஜயப்பிரதாபத்தைப்பெறுவது மிகவுமரிது இதனல் உலகவாசிகள் இராசபரமேஸ்வரனுகவிருக்கப்பட்டநாம்பங்கப்பட்டுப் போர்செய்யத் துணிந்தானெனப்பேசும் பழிப்புமொழித்திரம் பூலோகமுள்ளளவும் நீடித்திருக்கும்இந்த அபவாதத்தை முதன்மையாகக்கருதி நீக்கிக்கொள்ளவேண்டும் மேலும் கிணற்றுநீர்பெருகியூற்றையுடைய கடல்நீரைமுடுக்கிக்கொண்டு போகவல்லதோ அதைப்போலவே யிந்தப்பாலகன் நாம்செலுத்தும் படைகளையும் சேனைப்பெருக்குகளையும் தொலைக்கமாட்டுவனல்லது அழிவற்ற நமதுதேகத்தை அசைக்கமாட்டுவானே என்னைப்பாலகன்வெல்வதும்அரிது நானும் ஒருபோதும் அவனைவெல்லவுமாட்டேன் இவ்வித சங்கட்டங்க ளிருக்கின்றபடியால் உலகஅபவாதத்துக்கஞ்சித் துரிதமாய் நமதுபட்டணத்துக்குப்போய்நவரத்தினமயமாகிய கிரீடமுதலாகிய இராஜசிறப்புகளைப் பெற்று வலியபடைகளையுந்தாங்கி இரதகஜதுரகபதாதிகளைத் திரட்சியாகக்கூட்டிக்கொண்டுவந்து நாளைக்கே இந்தபாலனைமடக்கிக்கொண்டுசண்டைகொடுத்துவென்று ஜயத்தோடு திரும்பக்கடவேன்இப்படிக்குச்செய்வதினல் ஒருபோது மிகழ்ச்சியன்று சூரனுகவிருப்பவன்நெருங்கிச் சண்டைகொடுக்கின்றகாலையில் ஒருவேளை யிளைத்தபோதினும் மறுவேளை சகலசவாட்சனைகளுடனும் வந்தெதிர்த்துப் பகைவரைச் சின்னபின்னப்பட்டழியவாட்டி வெற்றிபெறின் இவனிராஜதந்திரங்கள் நன்றாகத்தெரிந்தவனென்றுபலரும்புகழ்ந்துகொண்டாடவிருப்பான், மேலும் அரசர்களுக்குரிய நீதியாவது ஒருவனெதிர்த்து வந்தகாலத்திற் சாமபேத தானதண்டமென்னும் சதுர்விதஉபாயத்தினுல் வெல்லவேண்டும் அவ்வாறே காலமறிந்துதிரும்பி மறுபடியும் போரில் நேர்ந்து பகைவரைவெல்லவேண்டும் அவனே அஷ்டதிசையிலுள்ளோராற்புகழ்ந்து பேசப்பட்டவன் அந்தப்படிக்கு நானும்சம்மதித்துச் செய்யக்கடவேன் இதுவிவேகசம்பன்னருக்குத் தகுதியாகியகாரியமல்லது வேறல்லவென்று சூரபதுமன் பலதந்திரங்களைமதித்துத் துணிவுகொண்டவனுய்ச் சுக்கிராசாரி தனக்கனுக்கிரகித்திருக்கின்ற மாயமந்திரங்களினென்றை உச்சரித்துச் சடுதியில்மறைந்து வானவழிக்கொண்டுபோய்ச் சொர்னமயமாய் விளங்கிக்கொண்டிருக்கும் வீரமாமயேந்திரபுரமத்தியில் நவரத்தினகாந்திகளைவீசி வானத்தையளாவ விருக்கின்ற தன்னகரத்தைச்சேர்ந்தான்.

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே, சராசரப்பிரபஞ்சங்களனைத்தினும் எள்ளிலெண்ணெயைப்போலப்பரிபூரணமாகநிறைவெய்தி நடிப்பித்துவரும் சரவணப்பெருமாள சூரபதுமன் வஞ்சகநினைவைத் தெரிந்தகாலத்திற் றமதுதிருக்கரத்தில்விளங்கும் வெற்றிவேலாயுதத்தை விடுத்துப்பிளந்துகொல்லாமல் இன்னமுந் தன்குற்றங்களைத்தெரிந்து அதற்கடுத்த பரிகாரங்களைத் தேடிப்பிழைப்பானென்னுங் கிருபையினுல் க்ஷமித்திருந்தகாலையிற் சூரனுக்கடுத்த சம்பவங்களைத்தெரிந்தபிரமன், விஷ்ணு,இந்திரன்முதலிய தேவர்கள் மனவாட்டங்களையொழிந்துகளித்துத் தேகம்பூரிக்கத் துரிதமாய்ச் சிவகுமாரன்முன்னம்வந்து கரங்களைக்கூப்பித்தொழுது இதனைவிண்ணப்பஞ்செய்வதாயினர் காசிபன்புத்திரனுகிய சூரபதுமன்பிரமுகனுய் வெளிப்பட்டதுமுதல் இத்தினவரையிற்சென்றவிடங்கடோறும் வெற்றிபெற்று ஜயசாலியாய்க் களித்திருந்தனன், கர்த்தனே அவ்வாறேநினைந்து இக்காலத்திலுந் தேவரீருடன் கொடியபோரைச்செய்து பலவெள்ளஞ்சேனைகளையுமிழந்து மானபங்கப்பட்டு மதிகெட்டுப்புறந்தந்தோடினன், சூரனுடனெதிர்த்துஇவ்விதப்போரை நடாத்துவது தமக்கிதுவுமோர் திருவிளையாடலாகும்அல்லது சற்றுக்கோபங்கொண்டு அவனுவியைவாங்கத்திருவுளத்தில் நினைப்பீராயின் உயிர்பெற்று இந்தாணக்களத்தைநீங்கிப்போவானே வெற்றிவேலினுல் சூரனைநிமைப்போதிற்கண்டித்துப்போடவல்ல தேவரீர் அவனுடனெதிர்த்து வில்லைவளைத்துப் பாணங்களைச்செலுத்திப் போராடுவதைப் பார்க்குமிடத்தில் அவனிடத்திலிருக்கின்றபட்சத்தினுற் பிழைத்துப்போகட்டு மென்றெண்ணி அசாரிசமாயிருப்பதாகக் காணுகின்றது, ஓ விசாகப்பெருமாளே யிந்தப்பாதகனுல் மிகவும்வருந்தியிருக்கின்றனம்அடியவரிடத்திற் கிருபாநோக்கம்பாலித்துசுகப்படுத்தவேண்டுமென்று போற்றுகின்ற தேவர்கள்கோரிக்கைகளைக் கந்தசுவாமியார் திருச்செவிகளினேற்று நல்லகாரியம் சூரன் இன்னமொருதரம் நம்முடனெதிர்த்துப் போர்செய்யவிரும்பி வருவானுகில் உங்களிஷ்டப்படிக்குப் புத்திர

மித்திரகளத்திராதிகளுடன் நாசஞ்செய்வோம் இதைக்க
டைப்பிடியாக நம்பியிருப்பீரென்று திருவுளம்பற்றியரு
ளினர்.

இதுநிற்கச் சூரபதுமன் பாணங்களினாற்சின்னபின்ன
ப்பட்டுவருந்தி மரணமூர்ச்சையடைந்தும் களைத்தும் இ
ளைத்தும் ஓய்ந்தும்மறைந்தும் மற்றும் வெகுபாடுகளைப்
பட்டிருந்தஎண்மர்-இலக்ஷர்-படைத்தலைவர்களும், திசா
திசைகளில் ஓடியொளித்திருந்த பூதப்படைகளும்தெளி
வுண்டாய்ச் சூரன் சுப்பிரமணிய தேவருக்கஞ்சிப்புறந்
தந்துமறைந்தது தெரிந்தவுடன் மனமகிழ்ந்துசந்தோஷ
சாகரத்திலமுந்தி யேகமாய்ச்சேர்ந்து சேனைத்தலைவராகி
யவீரவாகுதேவருடன் வேகமாய்வந்து குமாரதேவரைச்
சூழ்ந்துகொண்டு வணங்கி ஜயஜயபோற்றியென வாழ்த்
தினவர்களாய்ச் சூரன்மேகத்தில் மறைந்தோடியதற்குச்
சொர்க்கமத்திய பாதலங்கள் திடுக்கிட்டு நடுங்கும்படிக்கு
ஜயப்பிரதாபங்களைக்கொண்டாடி நல்லகாரியம் போர்மு
கத்தில் நம்மைவாட்டி யலைத்தபாதகனை சூரன்நகரத்
தை முற்றுகைபோட்டுக்கொண்டு சக்கிரவாளகிரியைப்
போல வளைந்திருக்கும் பொன்மதிலையிடித்துப் பூமியில்
நிரவி நவரத்தினமயமாகிய பலநிலைகளைக்கொண்டு வான
த்தையளாவநிற்கின்ற கோபுரவாயில்களை அடியுடன்பறி
த்து சமுத்திரத்திற்றள்ளி மனவாட்டமொழிந்து களித்
துத்திரும்புவோம் வாருங்கோள் வாருங்கோளெனக்கூவி
வெற்றியாளராகிய பூதப்படைகள் அதிவேகமாய்நடந்து
மயேந்திரபுரியிலிருப்பவர்கள் நடுநடுங்கிமிரளும்படிக்கு
ஆர்ப்பரித்துக் கொண்டுவந்து கோட்டைமதிலைச் சுற்றிவ
ளைந்ததைப் பலவெள்ளம் வீராதிவீரர்களாகிய இராட்ச
தசேனைகள் சூழ்ந்துபோற்றக் கொத்தளங்களினிடத்தி
லிருந்து காத்துவரும் ரணரங்கசூரனாகிய அதிகோரனெ
ன்னும் படைத்தலைவன் கண்டவுடன்விழிகளிற் றீப்பொ
றிசிதறவுருத்து அக்கினியைப்போல மனம்வேக வுதட்
டைக்கடித்துப் பலிக்குழன்றுதிரியும் பூதர்களும் ஒப்ப
ற்ற இந்தப்பட்டணத்தைக் கண்கொண்டுபார்க்கவும்எளி
தாயிற்றோ நல்லகாரியமிவர்கள் கருவத்தையடக்கி வாட்
டுகிறேனெனக்கோபித்து மதயானைகளையொத்தவலிபெற்
றவர்களாயும் ஒன்றனந்தஞ் சிரங்களையும் கரங்களையும்
பெற்றவர்களாயும்-சிங்கம்-கரடி-புலி-யாளி-யானை- இத்த
கையமிருகமுகங்களைப் படைத்தவர்களாயும் வீரபராக்கி
ரமசாலிகளாய்-வில்-வாள்-தோமரம்-பிண்டி-பாலம்-கப்ப
ணம்-முசுண்டி-கொடியபாணங்கள்முதலிய ஆயுதசவரட்
சணைகளைப் பெற்றவர்களாயு மிராநின்ற நால்வகைச் சே
னாசமுத்திரங்களையுங் கூட்டிக்கொண்டு ரணபேரிஜயபே
ரி, வெற்றிச்சங்கம், தவுண்டி, மல்லரி, சல்லரி, தக்கைமு
தலிய பொற்பறைகள் அண்டங்களதிரமுழங்கிவர துவச
படாங்கள் வானத்தையளாவி படபடென்றதிரவும்வெண்
சாமரை ஆலவட்டமுதலிய ராஜசின்னங்களைப்பலகோடி
அவுணவீரர்கள் தாங்கிவரவும் இரதாரூடனாய்ச் சிங்கத்
தைப்போலகர்ச்சித்து அதட்டிக்கொண்டு எதிர்ந்தகாலத்
திற் பூதப்படைகளும் வீராவேசங்களுடன் கெக்கலிகொ
ட்டி மேலிட்டுவந்த தெப்படியிருந்ததெனில், காடாந்த
காரமாகிய விருட்கூட்டமும் அதை நாசப்படுத்தவல்ல
சூரியபகவான் கிரணசமோகங்களும், ஒன்றுக்கொன்று
பகைகொண்டுபோருக்கெதிர்ந்ததைப்போலக்காட்டியது.

உடனே பாதகராகிய இராட்சத சேனைகள்கைமிஞ்சி
விற்களைவளைத்துக் கொடியதீட்சணியமுள்ள பாணவரு
ஷங்களைப்பொழிந்தும், தோமரம், பரசு, சூலம், எஃக
ம், குருந்தடி, கவண்முதலியஆயுதங்களைஒன்றனந்தகோ
டிகளாகவீசி ஆர்ப்பரித்தகாலத்திற் ஜயசாலிகளாகிய சிவ
கணங்கள்பாரித்து வானையளாவநிற்கின்ற பருவதங்களை
ப்பிடுங்கிக் கிறுகிறெனச்சுழற்றிப்பந்தைப்போலக்கடாவி
யும் திசைகளைமூடக் கிளைகளைவிரித் திருக்கின்றபாரித்
தமரங்களை வேருடன்பிடுங்கிச் சுழற்றிமோதியும்தண்ட
ம் இருப்புலக்கை வாளஇவற்றைக்கொண்டு மோதியும்சி
லபூதர் வீராவேசங்களுடன் மதயானையைப்போல அதி
கோரன் சேனைவெள்ளங்களிற்பாய்ந்து ஒவ்வொருகரத்தி
ல் ஆயிரம்பதினாயிரம்மதயானைகளைவாரித்தோணிகள்து
றுங்கி விழமோதியும் பலஇரதங்களைத்தூக்கி பற்பலகு
திரைப்பந்திகள் நிலத்திலரைபட்டுப்போகச்சாடியும்கண
க்கிறந்தகுதிரைகளைத்தூக்கி அளவற்றசேனைகள் சின்ன
பின்னப்பட்டு மாளத்தாக்கியும் கழுத்துகளைமுறித்தும்க
ரங்களையொடித்தும் விலாக்களொடியக்குத்தியும் மார்பு
பிளக்கவரைந்தும் கால்களைத்தட்டியும் விழுந்துருள உ
தைத்தும்நிலத்தைக் கவ்விக்கொண்டிறக்கமோதியும் வா
னத்திற்பறக்களற்றியும் திசைகளில்வீசியும் சமுத்திரத்
திற்குமிழியிடவெறிந்தும், சுள்ளிகளைப்போலஒடித்தும்
கோபத்தினால் மேல்வீழ்ந்து ஊட்டியைக்கடித்துதிரத்
தைக்குடித்துமிடித்தும், குத்தியும், மோதியும், தட்டியு
ம், முட்டியும், மொத்தியும், பிசைந்தும், கசக்கியும், திட்
டியும், மந்தரம்போன்ற புயங்களைஒடித்தும், தலைகளை
நெரித்தும், மூளைகளைவாய்வழியாகக் கக்கநறுக்கியும், க
ண்மணிகளைப்பிடுங்கி நட்சத்திரவீதிகளிலெறிந்தும், வ
யிற்றைப்பீறிக் குடல்களைப்பிடுங்கி மாலையாகப்போட்டும்
வாரிநிலத்திலறைந்தும் வலியசால்களினாற் றுவைத்தும்,
சதைத்தும், இவ்விதங்களாகப் பூதப்படைகள் சிலவீரா
வேசங்கொண்டு சாடுமுன்னிலையில் இராட்சதர்களும் பி
ன்னிடையாமல் ரவுத்திராகாரமாக மண்டியெரிந்துமீசை
துடிக்க விழிகள்சிவந்து தீயைமிறைக்க புருவம்நெற்றியி
லேறப் பற்களைக்கடித்துச் சர்ப்பங்களைப்போலச்சீறி பா
ரித்தவிற்களைவளைத்துச் சாணையிட்டுக்கூர்மையாய் மின்
னலைப்போல தகத்தகாயமாய்ப் பிரகாசிக்கும் அலகையு
டையதாய்க் கழுகிறகுகள்சொருகிநீண்டிருக்கும் காம்பு
களையுடைய பாணகோடிகளையும், அர்த்தசந்திரக்கணைக
ளையும், சர்ப்பங்களைப்போலச்சீறி விஷங்களைக்கக்குஞ்சர
ங்களையும் அக்கினிகளை வீசித்தகிக்கவல்லகொடியபாண
ங்களையும் அமோகமாகத்தொடுத்துச்செலுத்தியும்ஈட்டி
களினாற் குத்தியும் பல்லயங்களினாலெற்றியும், வாளினா
ற்சின்னபின்னப்படத்தறித்தும். சக்கரம், சூலம், பிண்டி
பாலம், கப்பணம், முசலம், வேல், நாஞ்சில், முதலாகிய
ஆயுதவிதங்களைவீசிச் சிரங்களைக்கண்டித்தும் கரங்களை
த்துண்டித்தும், மார்பைத்திறந்தும் வயிற்றைப்பீறியும்,
இவ்விதங்களிற் சித்திரவதைகளைச்செய்து சாடும்போது
சிவகணங்கள் பின்னிடைவதைக்கண்டு அவர்களுக்குத்த
லைவராகவிருக்கின்ற வீராதிவீரர்கள் சருவசங்கார மூர்
த்தியைப்போலவுங் காலாந்தகனைப்போலவும், ஊழிக்கா
ற்றைநிகர்த்தும் சுழன்றுசுழன்று இராட்சதரைமடக்கிக்
கொண்டு தங்கள்கரங்களிற்பற்றிய நீண்டதனுசுகளை வட்
டாகாரமாகவளைத்துத் திவ்வியபாண சமோகங்களைச்

சொரிந்து கண்டங்கண்டமாய்த் துண்டந் துண்டமாய்க்
கால்-தலை-புயம்-வெவ்வேருகச் சின்னபின்னப்பட வாட்
டும் போது அக்கொடுமைக்குச் சகிக்க மாட்டாமல்
ரணக்களத்தில் மாண்டவர்கள்போக மற்றவிராட்சதர் பி
ரமித்து அம்மம்ம இவர்களைப் பார்க்குமிடத்திற் பை
சாசங்களைப் போலத் தோற்று கின்றனர், சந்துபொந்து
களினும் நுழைந்து நுழைந்து பிடுங்கிக் கவளீகரமாக
த் தின்கிறதாய்க் காணுகின்றது. இனிசற்றுநேரம் இவ்
விடத்தி லிருப்போமாகில் நம்மையுங்கொன்று வாயிற்
போட்டுக் கொள்ளுவார்கள் யமதருமனைஇந்தருபங்களா
க வந்ததையொப்பவிருக்கின்றது உயிரிருந்தால்உப்புமா
றியாவதுசீவனஞ்செய்யலாமென்று ஒருவருக்கு முன்ன
ம் ஒருவரோடித்திக்குதிபாந்திரங்களிற்சேர்ந்துமறைந்தி
ருந்தனர், அக்காலத்தில் ரணக்களமெங்கும் பலகவந்தங்
கள்கூத்தாடவும் உதிரவெள்ளமானதுஅலைகளைச்சுருட்டி
மோதிக்கொண்டோடவும் மூளைகள்சந்திரகாந்தப்பாறை
களைப்போலவிறைந்துகாட்டவும்பிணமலைகள்பெருத்தோ
ங்கவும், பூதபைசாசங்கள் காளிக்கூட்டங்கள்உதிரமாம்ச
ங்களைத்தெவிட்ட வுண்டவெறியினுற் சிவகுமாரனைப்புக
ழ்ந்து தித்தோமென்றுநடிக்கவும்நாய்நரிகள் இங்குமங்கு
ம் ஊளமிட்டோடவும் கழுகுபருந்து காக்கைகள் பசியற்
று வானவெல்லையிற் கூச்சலட்டுலாவவும் இவ்விதச் சிற
ப்புகளைக்கொண்டுதோற்றியது.

இவ்விதமாக ராட்சதசேனைகளும் நவரத்தினமயமாய்
க் கற்கரத்தொனிகளைச் செய்தோடிவந்த தோணிகளும்நீ
லகிரிகளைப்போலமும்மதங்களையும்பெருக்கியிருந்தயானை
ப்பெருக்கும் மல்லகதி மயூரகதிமுதலிய நடைகளைக்கற்
று கடலினுந்திசைகளினும் தாவவல்லகுதிரையணிகளும்
சின்னபின்னப்பட்டு நாசமடைந்ததைக் கொலைகளவாதிய
வஞ்சகங்கள் குடிகொண்டிருக்கும் மனதையுடைய அதி
கோரனென்னும் வீராதிவீரன்கண்டவுடன்ரவுத்திராகா
ரமாகக் கோபித்து வடவாமுகாக்கினிசீறி யெழுந்ததைப்
போல எழுவாயுதத்தைக் கரத்திற்கொண்டு சுழல்காற்றி
னுங் கடுகிச்சுழன்று பூதப்படைகளிற் புகுந்து கரகொன
ச்சுலவி ஒவ்வொருதாக்கினுல் அளவற்றபூதர்கள் தலைக
ள் நுறுங்கவும்கண்தெறிக்கவும் மார்புநெக்குவிடவும்கரங்
கள்தறிபடவும், கால்கள்முறிபடவும் கைகளிற்பற்றியஆயு
தங்கள் பொடிபடவும் சாடும்போது வீராவேசங்களுடன்
சண்டைகொடுத்து வீறியிருந்த சிவகணங்கள் அல்லோல
கல்லோலப்பட்டு பிரமித்துமதிமயங்கியிந்தக்கொடியபாத
கன் ஒரு எழுவாயுதத்தினுற் காலாந்தகனுக்குச் சமமாக
நம்மவனைநாசப்படுத்தி யுலவுகின்றனனென்றுபேசிக்கொ
ண்டு பயப்பிராந்தியினுல் எதிர்த்து நிற்கவுமஞ்சித்தூசிப்
படை முறிந்துபின்னிடுவதைக் குமாரதேவர்பணிவிடை
களுக்குப்பாத்திரராகவிருக்கின்றகணுதிபதிகளில்அமோ
க னென்பவன்கண்டு சருவசங்கார மூர்த்தியைப்போலப்
பொங்கி விழிகளிற்றீப்பொறிகள் குபீல்குபீலெனக்கொட்
டவுருத்துப் பிரசண்டமாருதத்துக்குச்சமமாக ரணக்கள
மெங்கும்உலாவிக்கொண்டிருக்கின்ற இராட்சதவீரன்மு
ன்னம்வந்து தன்கரத்திற்றுங்கியிருந்தமேருவுக் கொப்பா
கிய பாரித்தமலையை வேகமாய்வீசிக்கொக்கரித்தகாலத்தி
ல் அதுபேரோசையைக்காட்டிக் கிறுகிறெனச்சுழன்று வ
ருவதை அதிகோரன்கண்டு துரிதமாய்த் தன்காத்திற்பற்
றியிருந்த மந்தரத்தையொத்த எழுவாயுதத்தைக்கொண்
டோங்கி அடித்துப் பொடிப்பொடியாயுதிர்ந்துபோகச்சா
டிச் சிங்கத்தைப்போலக் கர்ச்சித்தபோது பகைவர்களாகி
யகடலை மந்தரகிரியைப்போலக் கலக்கவல்ல ஜயசாலியா
கிய பூதகணத்தலைவன் சிங்கத்துக்கொப்பாகச்சீறித்தாவி
க்கரத்தையோங்கி கோடையிடியினும் வலிதாய் அதிகோ
ரன்மார்பி லறைந்தான்அத்தாக்கினுல்மனங்கலங்கிஉளை
ப்பெடுத்து மிகவும் வருந்தியபோதினும் தயிரியத்தைவி
டாமற் காட்டழலைப்போலச்சீறி யிந்தநிமிஷத்திலிவன் பி
ராணனையமலோகங் குடியேற்றுவேனென்றுகோபித்தவ
னுய்த்தன்கரத்திற்கொண்டிருந்தமுசலத்தையிட்ம்வலமா
கச்சுழற்றி மலைவிழுந்ததைப்போலப் பகைவன்புசத்தின்
மேல்மோதினன், சவுனகாதிரிஷிகளே, அந்தப்பூதவீரன்
வலியை யென்னசொல்லுவேன்மேல்விழுந்த எழுவாயுத
மானதுகுன்றிக்குறைந்து துகள்பட்டுப் பறந்துபோயது.
அப்போதுஅமோகனுக்கு அதிககோபம்பிரவேசித்துகை
யைப்பிடித்த மாக்கிக்கொண்டு ஓங்கி யிராட்சதப்பாதகன்
சிரத்தில் ஒருகுத்துவிட்டான் அதினுல்மண்டை திறந்து
உதிரமும் மூளையுஞ்சிதற மேகத்தைப்போல இரைந்து
கொண்டு பூமியில்விழுந்து தட்சணத்தில்மாண்டனன்,இ
வ்விதமாய்க் கோபுரவாயிலைக்காவல் கொண்டிருந்தபடை
த்தலைவன் செத்ததைக்கண்டவுடன் பின்னிட்ட பூதப்ப
டைகள் அச்சமொழிந்து மனவுச்சாகங்களுடன்பெரும்பு
றக்கடலுடைந்து பெருகியதுபோல ஆர்ப்பரித்துஒருவர்
முன்னொருவராக வேகங்கொண்டுபோய்க் கோபுரவாயிலை
க்கிட்டி ஆயிரம்யோசனை வானத்திலுயர்ந்து விசாலமாய்
ப்பரந்து மேலேழுலகங்களைப்போல நவரத்தினமயமாகி
ய நிலைகளைக்கொண்டு பாதலவரையி லாழ்ந்திருந்தகோபு
ரத்தைவேருடன் பறித்துப் பந்தையொப்பக் கடலில்விட்
டெறிந்தகாலத்தில் முன்னம்வாயுதேவன் விசைகொண்டு
மகம்மேருவின் சிகரத்தைத் துண்டித்துத் தள்ளியதைப்
போன்றும் தேவேந்திரன்மலைகளின்சிறகைவச்சிராயுதத்
தினுல் அரிந்தமுன்னிலையில் மைநாகபருவதமானது பய
ந்தோடி யொளித்ததையொத்தும் கடல்நீரலைந்துசேறுடி
வானத்தோங்கவிழுந்த அதிற்சியினுற் பூமிகிடுகிடெனநடு
ங்கவும் ஆதிசேஷன் தத்தளித்துவாடவும்வீரமாமயேந்தி
ரபுரியிலிருந்த சிசுபாலாதிகளும் திடுக்கிட்டு மருண்டுவா
டி வருந்தினர், மேலும்அந்தகோபுரம்கடலில்விழுந்ததெ
ப்படிக்கிருந்ததெனில் திருப்பாற்கடலைக்கடையும்போது
மத்தாகநாட்டிய மந்தரகிரி கவிழ்ந்ததைப்போலக் காட்டி
யது, அக்காலத்திற் கடலினிடத்திருந்ததிமிதிமிங்கலகில
ங்களாதிய மச்சராசிகள் திகைத்து அத்தலத்தைநீங்கிச்ச
ரவணபவன் வில்லினின்றோடும் கணைகளைப்போலவிசை
கொண்டு தாவிப்போயது அந்தக்கோபுரம்பாதலவரையி
ல் அழுந்தியதைப்பார்க்குமிடத்திற் பூர்வத்திற்பிரமனைவ
ஞ்சித்து சதுர்வேதங்களையுந் திருடிக்கொண்டுபோய்க்கட
லில்மறைந்திருந்த சோமுகாசுரனை விஷ்ணுவானவர் மச்
சாவதாரங்கொண்டு அக்கள்ளனைப்பிடிக்கப் பாதல த்திற்
சென்றதைப்போலவிளங்கியது, அழற்கொழுந்தைப்போ
லஅடிபருத்து நுனிசிறுத்தோங்கியிருந்தகோபுரவாயிலி
ற் பதிந்திருக்கும் நவரத்தினங்களினுடைய காந்தியானது
வீசுவதைநிதானிக்குமிடத்திற் கருங்கடலினிடத் தடங்கி
யிருக்கின்ற வடவாமுகாக்கினியானது அழல்பரவி நீரிற்
உலாவுவதைப்போலக் காட்டவும் கடல்நீர்கொதிப்பெடுத்
து மேலோங்கிவிழுந் திவலைகளானவை சமுத்திரம்அன

லாயிற்றென்றெண்ணிதேவர்கள் பரிவாய்வானகங்கையையிறைத்து ஆற்றுமாறுபோலக்காட்டவும் செம்மணிகள் நாகரத்தினங்களின்கிரணங்கள் கடலெங்கும்பரந்திருப்பதைத்தாமரைக்காடென்றெண்ணி தேனையுண்ணவிருப்புற்றுவண்டினங்கள் பறந்துவந்து பார்த்துவெட்கித்திரும்பவும் அம்மணிகள் சொலித்திருப்பதை மாம்சங்களென நினைந்து காக்கைபருந்து கூளிகளாதியபறவைகள் களித்துண்ண விரங்கிப்பார்த்து இதுஅக்கினியென்றஞ்சி வருந்தி யிரைச்சலிட்டுச்சிறகுகளை விரைவாக வீசியோடவும் கோபுரம்விழுந்த அதிர்ச்சியைக்கேட்ட பாதலவாசிகளாகிய நாகங்கள்திடுக்கிட்டுஎக்காலத்தினு மில்லாதபேரிடிவிழவேண்டுங் காரணமென்னேவென்றேங்கித் தம்மினத்தவரைக்கூட்டிக்கொண்டு அப்புறப்பட்டுப்போகவும்கோபுரத்திற்பதிந்திருந்த நவமணிகளின் காந்தியானதுமேலிட்டு வீசுவதைக்கண்ட பேதமைப்பாலராகிய தேவகன்னியர்கள் ஐயையோ யிதுவரையிற்சமுத்திரமானதுநீரொன்றிருந்தனம் பூதர்களெறிந்த இந்தக்கோபுரம்தாக்கியமாத்திரத்தில் மார்புகிழிந்து உதிரம்பெருகுகின்றதாகக்காணுகின்றது இதற்கும்பிராணிகளைப்போல உடலுண்டோவென்று தம்மில்வசனித்து வேடிக்கைபார்க்கவும் இதுவுமல்லாமல் மதாங்காரகர்வத்தினால் வேதவொழுக்கங்களையும் உலகநடையும் நினைந்துநடந்துகொள்ளாமல்தினைவாட்டியலைத்துத் திரிகின்றவர்களுக்குத் தெய்வீகமாய்க் கேடுகாலம்சம்பவித்து மங்கி நாசப்படுவதைப்போல அந்தக் கோபுரநிலைகளிலிருந்து போராடிவந்த இராட்சதவீரர்கள்அத்துடன்கடலிற்படிந்து வெளிவரக்கூடாமையால்மூர்ச்சித்தினரி வெகுகாலங்களாகக்கொன்று பண்டிநிறையத்தின்றுவந்த மச்சராசிகளுக்கு ஆகாரமாய்மாண்டனர்.

இவ்விதமாக மகம்மேருவைப் போல வானத்தையளாவ ஓங்கியிருந்த கோபுரமானது அளவற்ற ராட்சதர்களுடன் வேகமாய் விழுந்தபடியால் மகரமச்சங்கள்திமிங்கிலமுதலிய சலசரங்கள் மலிந்திருக்குஞ்சமுத்திரஜலமானது பெருக்கெடுத்தோடி நகரத்துக்கரணாகவிருந்தமதிலைவளைந்து தெருக்களிற்பிரவேசித்துமாடமாளிகைகளையழித்து மதிலையிடித்து இரைந்துமேகங்கள் அந்நீரைவிரும்பிக் கவியும்படிக்குப் பெருகிய வெள்ளத்தைப்பார்க்குமிடத்தில் வெற்றிவேலாயுதக்கடவுளினது பூதப்படைகளைப்போலக்காட்டியது, இதுவுமல்லாமற் கருங்கடலெனப் பெயர்கொண்டநாம்வளைந்திருக்கின்றபூமண்டலத்திற்பெரியோர்கள் மகத்துக்கள் தெய்வபத்தி பூததயவுமுதலியநல்லொழுக்கங்களைப்பெற்ற புண்ணியசீலர்கள் வாசஞ்செய்யுமநகரங்கள் பட்டணங்கள் கிராமங்கள் சிற்றூர்கள் இப்படிக்குச் சொல்லும்படியாகியபதிகள்பலவுண்டு அவைகளின் வளங்களினும் சிறப்புகளினும் செல்வங்களினும்பதின்மடங்கு சிறந்ததாய்க்கொடியபாதகர் வாசஞ்செய்யும் இந்த மயேந்திரபுரியானது அகன்றசாம்பிராச்சியவைபவங்களையும் சொர்னமயமாய்நவரத்தினகாந்திகளை வீசியிருக்கும் மாடமாளிகை மண்டபமாதிய வளங்களையுங் கொண்டிருப்பதாகச் சகலரும் புகழ்கின்றனர், அந்த விநோதங்களை நாமும்பார்த்து நிச்சயிக்கவேண்டுமென்கின்ற களிப்பினாற்கடலானது பெருகிப்பட்டணவீதிகள்முதலான விடங்களிற்புகுந்துபுகுந்து சோதித்துத்திரிவதைப்போலவும்மேலும் நம்மிடத்திற் புத்திரபாவகமாக வாசஞ்செய்கின்றமச்சராசிகளை அநியாயமாக நாள்தோறும் பிடித்துத்தின்றுகொழுத்திருக்கின்ற பாதகராகிய இராட்சதர்கள்இதுபரியந்தம் எதிரின்றி வீறியிருந்தனர், இக்காலத்திற்பாலசுப்பிரமணியக்கடவுளினால் விநாசகாலம் நேர்ந்தபடியால்நாமும்ஒருவகைப் பார்ப்போமென்றெண்ணி மேலிட்டலைப்பதைப்போல வீதிகளிற்பாய்ந்து எதிர்ந்தவிராட்சதர்புத்திரமித்திரகளத்திராதிகளுடன் அலைத்துச் சின்னபின்னப்படச்சாடிவருத்தவும் இவ்விதமாகச் சமுத்திரங் கொதிப்பெடுத்துப் பொங்கியெழுந்தோடத்தக்கதாகநவரத்தினமயமாகிய கோபுரமானது கடலினிடத்தில் முழுகிப்போனகாலத்தில் அதைப்பற்றி வளைந்திருந்த பொன்மதில்எப்படிக்குக்காட்டுவதெனிற், புசபலபராக்கிரமசாலியாய்ச் சத்துருக்களுக்கு வயிரியாய் செங்கோன்மைமுறையே நடாத்திவாசஞ்செய்திருந்த அரசனிறந்தகாலத்திற் சகலவளங்களுமொடுங்கி அழகுகுலைந்து பார்க்கப்பயங்கரமாயிருக்கும் பட்டணத்தைப்போலவும் மங்கிலியமற்ற பெண்களையொத்தும் மூக்கில்லாத சுந்தரமுள்ளவனைப்போலவும்விளங்கியது.

இப்படிக்கழகழிந்து மழுங்கியிருக்கின்ற காலையிற்பூதப்படைகள் வீராவேசங்களுடன் பொங்கி வானத்தையளாவஓங்கியிருந்த வடபாரிசமதிலைத் தங்கள்வலியகால்களைக்கொண்டு உதைத்தகாலத்தில்ஊழிகாலத்தெழும்பிரசண்டமாருதமோதலிற்பட்டு அதப்படும்சக்கிரவாள பருவதத்தைப்போலக் கடைக்காலுடன்சாய்ந்துமுன்னம்விழுந்த கோபுரத்துடன் சமுத்திரத்திற் சேர்ந்ததுஅக்காலத்திற்கருங்கடல்பட்டவருத்தத்தை யின்னவிதமெனச் சொல்லிமுடியாது இப்படிக்குமதிலதப்படக்கண்ட பூதவீரர்கள் கெக்கலிகொட்டிக்கொண்டு செந்தாமரை வெண்டாமரை அல்லிமுதலிய புஷ்பசாதிகள்பெருத்து மதுரமாகியநீர்நிறைந்த தடாகத்திற் பலமதயானைகள் விழுந்துகலக்கியழிப்பதைப்போலப் பட்டணத்துக்குள்ளே பிரவேசித்து யுகமுடிவிற் கடல்களனைத்தும் பெருகி புவனசராசரங்களிற் பரவுந்தன்மையாய் விசாலமாய் நீண்டிருக்குந் தெருக்களிற்சென்று எதிர்ந்தவிராட்சதர்முதலானவர்களைக்குத்தியும், இடித்தும், உதைத்தும்,தட்டியும்,முட்டியும், இவ்விதத்தில் அல்லோலகல்லோலப்படச்சாடிப் பலநிலைகளைப்பெற்றதாய்ச் சொர்னத்தினாலும் நவரத்தினங்களினாலும் சந்திரகாந்தப்பாறைகளினாலும் பளிங்கினாலும் சித்திரவிசித்திரங்களாகச் சோடித்திருக்கின்ற மேடைகள்உப்பரிகைகள் மாளிகைகள்முதலியவைகளை ஒவ்வொரு கரத்தில் ஆயிரம்பதினாயிரக்கணக்கில்வாரியெறிந்தும்உதைத்துநிரவியும் கற்பகம் பாரிசாதம் மல்லிகைமுல்லை இருவாட்சிசண்பகமாதிய பரிமளமிகுத்தபுஷ்பசாதிகள்நிறைந்த நந்தனவனங்கள் காவுகள் சோலைகள்இவற்றைப்பிடுங்கிப்பிசைந்தூதியும் தடாகங்கள் குளங்களைத்திறந்துநீரைப்பெருக்கியும் சந்தனம் அகில் மந்தாரைபுன்னைமுதலிய தருக்கள் நிறைந்ததோப்புகளை முறித்துப் பட்டணமெங்கும் அதலகுதலப்படவீசியும் இப்படிக்குச் சாடுமுன்னிலையிற் பெருத்தெழுந்த துகளானது வானத்தெழுந்துசூரியமண்டலத்தை மறைத்திருளைக்காட்டவும்புரஜனங்கள் ஒருவர்மேலொருவர் விழுந்துபெண்டுபிள்ளைகளைக் கரங்களிற்பற்றியிழுத்துக்கொண்டு அப்புறப்பட்டோடி யொளிக்கவும் பட்டணமிப்பாடுபட்டதைப்பூதநாயகர்கள்கண்டுமனங்குளிர்ந்துகோபமாறிநாம்தகாதகாரியங்களைச்செய்திருக்கின்றனம்எமதுகர்த்தனாகியபாலசுப்பிரமணியதேவ

னைச்சூழ்ந்து வணங்கிப்போற்றியிருப்பதை மறந்து இந் தக்கொடும்பாதகர் வாசஞ்செய்யும் நகரத்தில்வந்திருப்ப து நம்போலிகளுக்கடாதெனத் தீர்மானித்துத் தங்களைப் போலவே கோபாவேசங்களைத்தணிந்துதிரும்பிய பூதப் படைகளைக்கூட்டிக்கொண்டு அந்தவெல்லையைத்தாண்டி ஜயவுற்சாகங்களுடன் கெக்கலிகொட்டிகொண்டுவந்துசிவ குமாரனைச்சூழ்ந்தனர், அவர்கள்செய்கைகளைத்தெரிந்து குமாரதேவர் கிருபாநோக்கம் பாலித்தவராய்ப் பிரமன், விஷ்ணு, இந்திரனுதியதேவர்கள் நெருங்கிவரவும் வீர வாகுதேவர் மற்றத்துணைவர் போற்றிப்போகவும் படை வீரர்கள்களித்துநடக்கவும் ஜயசாலிகளாகிய இரண்டாயி ரவெள்ளம் பூதசயின்னியங்களும் கடல்பெருகியதைப் போல இரைந்துவரவும் ஜயபேரிவெற்றிச்சங்கம்சின்னம் இத்தகைய மங்கலவாத்தியங்கள் தாம்தாமென்றதிரவும் ரணக்களத்தைக்கடந்துபோய் விசாலமாகச் சோடித்திரு க்கின்ற பாடிவீட்டைச்சேர்ந்து சேனைத்தலைவர் பூதப்ப டைகளுக்குத் தத்தமிடத்தைச் சேர்ந்து களித்திருக்கு ம்படிக்குச் செலவுகொடுத்தனுப்பிவிட்டு இந்திரனுதிய தேவர்களுந் துணைவருஞ்சூழ்ந்து போற்றிவரத் தமதா லயத்தில் விளக்கும் நவரத்தினமயமாகிய சபாமண்டபத் தைச் சேர்ந்து பிராவானவர் திருக்கயிலாயச் சபையில்வி ளங்கும் சிங்காதனத்திலெழுந் தருளியதைப்போலக் கு மாரதேவர் நவரத்தினமயமாகிய பீடத்தில்வீற்றிருந்தத ருணத்திற் பகற்போதுகழிந்து ஆயிரங்கிரணங்களையுஞ் சுருக்கிச் சூரியபகவான் மேற்றிசையிற்றோற்றும் அஸ்த மனகிரியிற்சேர்ந்துமறைந்தனர் அதெப்படிக்கிருந்ததெ னிற்கொடியசெய்கைகளைப் பெற்றிருந்த மகாபாதகராகி ய ஆயிரவெள்ளமிராட்சதரும் கடினசித்தத்தைவாய்ந்த படைத்தலைவரும் மாண்டகாலத்தில் அவர்கள்தேகத்தில் நமதுகிரணங்கள்பாய்ந்த காரணத்தினுல்ஆசுசப்பட்டது ஆதலால் ஸ்நானம்பண்ணிஇதனைப்போக்கிக்கொள்ளவே ண்டுமெனநினைந்துஏழுபுரவிகளைப்பூண்டுஒற்றைவண்டி லையுடைய தேரைத்துரத்திக் கொண்டுபோய்மேற்றிசைக் கடலில் முழுகியவனைப்போலக்காட்டியது.

இந்திரனுதிய தேவர்கள்குறைபாடுகளைத் தவிர்த்து ய தாப்பிரகாரம் பொன்னுலக வாழ்விலிருத்தஉத்தேசித்தி ருக்கின்ற குமாரசுவாமியார் சூரனைவென்று பாசறையிற் சேர்ந்தவனாயிற் சொன்னேம்இனி வீரமாமயேந்திரத்தி ல் இராஜாதிராஜன் போனபின்பு நடந்தசரித்திரங்களையு ங்கேட்பீராகவென்று சூதபுராணிகர் பேசுவதாயினர்,மே ற்குறித்தபடிக்குச் சூரபதுமன் யாவர்விழிகளுக்குந் தோ ற்ருமல் மறைந்துபோய் மயேந்திரபுரிமத்தியில் விளங்கு ம் தன்னகரத்தைச் சேர்ந்தவுடன் கோடிசூரியப் பிரகாச மாய்விளங்கிக்கொண்டிருக்கும்சபாமண்டபத்துக்குப்போ ய் மந்திரிகளுடன் கலந்துமந்திராலோசனையைச்செய்யாம ல் மனவாட்டத்துடன்பட்டபுதேவியாகியபதுமகோமளை வாசஞ்செய்யும் நவரத்தினமயமாகிய அந்தப்புரத்திற்செ ன்று பொன்மயமாய்ஆணிமுத்துகளினுற் சோடித்திருக் கின்ற படுக்கை அறையிற்சிரோரத்தினதீபங்கள் நாற்புற ங்களினும் விளங்கிக்கொண்டிருக்கவும் அளவற்ற பொற் பிரதமைகள் வெண்சாமரைகள் ஆலவட்டங்கள் வீசவும் வெள்ளிலைப்பாக்கு இவற்றை வேண்டும்போது கரங்களி ற்கொடுத்துவரவும் பனிநீர் தெளிக்கவும் பரிமளமிகுத்த புஷ்பமாலைகளைப் பொற்றட்டுகளில் நிறைத்துத்தாங்கிநி ற்கவும் சந்தனக்குழம்புகள் கஸ்தூரிஇவற்றைச் சொர்ன வட்டகைகளில் நிரப்பிஏந்தியிருக்கவும்வெண்பட்டினுலு ம் முத்துகளினுலும் அலங்கரித்திருக்கின்ற குடையைத் தாங்கி நிற்கவும் வஸ்திரத்தொங்கல்களைக்கொண்டுசிறுகா ற்றெழவீசவும் பணிதிகள் பொன்னுடைகளைத்தாங்கி யி ருக்கவும் இவ்வித வைபவங்களின் மத்தியில்இரத்தினக சிதமாயிருக்கின்ற பவளக்கால்கள் மரகதச்சட்டம் இவற் றினுற் செய்யப்பட்டு பட்டுக்கச்சையைப் பிகிந்துஇலவம் பஞ்சு-செம்பஞ்சு-வெண்பஞ்சு-மெல்லியமயிர் அன்னத்தி னிறகு இவற்றைச்சீர்படுத்தி வெவ்வேறுகச்சேர்த்த பஞ் சணைமெத்தையைப் பரப்பி அனிச்சமலர்முதலியமிருது வாகிய புஷ்பசாதிகளைக் காம்புமுதலியகுற்றங்களைப்போ க்கியவிதழ்களைத்தூவிபனியினும்வெளுத்தரவசல்லாவை விரித்துஅலங்கரித்து விளங்கும்அம்சதூளிகாசயனத்தின் மேல்பொத்தென விழுந்துதன்மனதுக்கினிய பதுமகோ மளையைக்கலந்து குலவிவார்த்தையாட மனமில்லாமலும் மற்றதேவியரைப்பார்க்கச் சகியாமலும் யாவருடனும்களி த்துப்பேச விரும்பாமலும்ஸ்நானஞ்செய்துநித்தியநைமி த்தியக்கடனைக்கழிக்க நினையாமலும் அறுசுவைகளினுற்ச மைத்திருக்கின்ற போசனத்தைக்கொள்ள விச்சையற்றவ னுய் உறக்கமற்றுப் பாம்பைப்போலப்புரண்டு சமர்க்கள த்திற் பாலசுந்தரரால்தான்மானபங்கப்பட்டதைநினைந்து நினைந்து மனம்வெந்துவாடி மேல்நடக்கவேண்டியபோரு க்குத்தக்க தந்திரங்களை ஆராய்ந்துதாமரையிலையிற்பட்ட நீர்த்துளியைப்போலமனம் நிலைபெருமல்அலைந்துகவலை கொண்டிருக்கின்ற காலையில் இச்சம்பவங்களைப்பார்த்து க் கொண்டிருந்ததூதர்கள்வேகமாயோடி வானத்தையளா வி நவரத்தினகாந்திகளை வீசிச்சொலித்துக் கொண்டிருக் கும் பானுகோபன்அரண்மனையைச்சேர்ந்து இராஜகுமா ரனைக் கண்டுபணிந்து வாய்புதைத்துக் கொண்டு அகன்ற மண்டலாதீஸ்வரனுகிய உன்தந்தை பலவெள்ளஞ்சேனை களுடன்சிங்காரவேலன்மீதிற் சண்டைக்குப்போய்க் கொ டியபோர்செய்து சதுரங்கப்படைகளையும்; மாளக்கொடுத் து கிரீடமுதலிய இராஜசின்னங்களை யிழந்து வலிகுன்றி யாதொருதுணையுமில்லாமல் மறைந்து ரணக்களத்தைவி ட்டுப் பட்டணத்தில்வந்து பள்ளியறையிற் சேர்ந்திருக்கி ன்றனனென சவிஸ்தாரமாக விண்ணப்பஞ்செய்யுமுன்னி லையில் தான்முதனுள் பட்டபங்கத்தையும் பகைவனைஜயி க்கத்தக்க தீர்மானங்களையும் ஆசாரியன்உபதேசித்த மந் திரத்தைப்போல எண்ணமிட்டிருந்த பானுகோபன் தூ தர்கள்பேசிய வாசகம்விஷத்தைப்போலச் செவிகளிற்பு குந்தவுடன் ஆறியிருக்கின்றதீயில்நெய்யைச்சொரிந்ததை ப்போலச் சற்றுத்தாபித்திருக்கு மனமானது துக்கசாக ரத்திலழுந்தி மானமென்னும் தீயானது வளைந்து கொளு த்திவாட்டச் சரீரம்புழுங்கிவெயர்க்கப் பெருமூச்செறிந் து எண்ணுதவை யெல்லாமெண்ணி வருந்திப்பிதாவைக் கண்டு தேறுதலைப்பேசிவரநினைந்து நவரத்தினகசிதமாக விராகின்ற பீடத்தைவிட்டெழுந்து துரிதமாகப்போய்ச் சூரன்வாசஞ்செய்கின்ற நகரைச்சேர்ந்து இரத்தினக்காந் திகளையடக்கிவிளங்கும் தங்கத்தகடுகளினுலும் பளிங்குப் பாறைகளினுலும் சுவர்ப்புறங்களைத்திருத்தித்தளவரிசை களைப்பரப்பிவிசாலமாகவிருக்கின்ற பள்ளியறையைச்சே ர்ந்து பற்பலயோசனைகளைநினைந்துநினைந்து படுக்கைபொ ருந்தாமற்புரண்டுபுரண்டு பள்ளியிலிருக்கின்றபிதாவைக்

கண்டு பணிந்தெழுந்து கரங்களைக்கூப்பிக்கொண்டு இதனைச்சொல்லுவதாயினன்.

ஐயனே கேட்டருள்க, தேவரீர்நேற்றையத்தினம்அடியேனைத்தருவித்து நமது பகைவரை போரில்வென்று வரும்படிக்குக் கட்டளையிட்டனுப்பி நீர் அவ்வாறே பலவெள்ளம் இரதகஜதுரகபதாதிகளுடன்போய்எதிரிகளைவளைத்துக்கொண்டு அகோரமாகிய போர்செய்து பூதப்படைகளையும் சேனைத்தலைவரையும் சின்னபின்னப்படச்சாடும்போது பாலசுப்பிரமணியனைத்தவிர மற்றவீரவாகுஅவன்துணைவர் வந்தெதிர்த்துப் போராடு முன்னிலையில் அதிககோபம்பிறந்து மோகனாஸ்திரத்தைச்செலுத்தி ஒருவரன்றியிற் சகலரையும் ரணக்களத்திற்கிடத்தி ஜயசாலியாகஇவ்விடத்திற்குவரவிருந்தபோது பாசறையிலிருந்த குமாரன் ஒருதிவ்வியபாணத்தைத் தூண்டினன்அதன்வலிக்கென் பாணந்தாபரிக்கமாட்டாமல் நடுநடுங்கித் தன்வீரமழிந்து அப்பிரயோசகமாகத் திரும்பிவிட்டது, உடனே பிரேதங்களைப்போல விழுந்து கிடந்தசகலரும் சீவந்தராய் வீராவேசங்களுடன் கெக்கலிகொட்டிக் கொண்டெழுந்த காலத்திற்றான் பாசுபதத்தைச் செலுத்தயத்தனப்படுவதைக்கண்டு அந்தப்படையை நானெடுத்துப்போகாத குறையினால்மறுதினம் சருவசாக்கிரதையுடனும்போய் வெற்றியடைந்து வரலாமெனக்கருதி இவ்விடம்வந்துவிட்டேன் ஆனால் இச்சம்பவங்களைத்தேவரீருடன்சொல்லுவதற்குமனங்கூசி மறுதினம்சிவகுமாரனையும் நவவீரர் இலக்ஷர் படைத்தலைவர்கள் பூதவெள்ளங்களனைவரையும் என்னிடத்திலிருக்கின்ற திவ்விய பாணங்களினாலும் மாயைப்பெருக்கினாலும் அதாஅதப்படுத்திப் பகைவர்பூண்டில்லாமற்களைந்தபின்பு அந்த விஜய வார்த்தையைத் தேவரீருக்குத் தெரிவிக்கும்படிக்கு நினைந்து அதற்குவேண்டும்யத்தனங்களை ஆராய்ந்துகொண்டு இராக்கலிமொழிந்து எப்போது பொழுதுவிடியப்போகிறதென்றுஎதிர்பார்த்திருந்து சூரியனுதயகாலத்தெழுந்து போர்க்கோலங்கொண்டு சகலாயுதபாணியாய்ப் பகைவரைவெற்றிபெற்று வருவதற்குப் பிரயாணப்பட்டு அரண்மனையைக்கடந்து வெளிவந்தகாலத்தில் அதற்குமுன்னமே தேவரீர்சாக்கிரதைப்பட்டு சதுரங்க சேனைவெள்ளங்கள்புடைபரந்துவர சமர்க்களத்தைநோக்கிப் போனதாகக்கேள்விப்பட்டுச்சிவபிரான் கடாட்ச வீட்சண்ணியத்தினாற்சலனமற்ற வச்சிரதேகத்தைப்பெற்று ஆயிரத்தெட்டண்டங்களுக்குஞ்சக்கிரவர்த்தியாகிய தேவரீர்நம்மேலெதிர்த்துவந்தவர்களை ஜயம்பெற்றுத் திரும்புவதற்குயாதொருஉதவிகளையும்வேண்டாத சூரனென்பதுஎனக்கு நன்றாகத் தெரிந்திருக்கின்றபடியால் திரும்பி அரண்மனையைச்சேர்ந்து ஆசோதைகொள்ளவிருந்தேன் தேவரீரிடத்தில்நேற்றையத்தினம் செலவுபெற்றுப்போன பின்பு இதுபரியந்தம் நடந்தவிர்த்தாந்த மிதுவாகும்அத்தனே அடியேன் சண்டையைக் குறித்துப்போய்மீண்ட காரணங்களைவிசாரியாமலும் மந்திரிபிரதானிகளுடன்கலந்துயோசியாமலும்என்னை யாவதுகூட்டிக்கொண்டு போகாமலும் எதையும்பாராட்டிப் பாராமலும் கணக்கிறந்த சேனைகளுடன்ரணக்களத்தைச்சேர்ந்து இத்தகைய மனவருத்தத்துடன்மீண்டீர்இக்காரணம் தம்மையொத்த சக்கிரவர்த்தியின் பெருமிதத்துக் கடுப்பதோ அளவற்ற வீராதிவீரர்களிருக்க அவர்களில்யாரையாவதனுப்பிப்பகைவரைவென்றுப்புகழோடிராமல்தாமே உயுத்தத்துக்குச்சென்ற படியால் நமக்குப்பயந்திருந்த தேவர்களுக்குக் களிப்பும்அவுணருக்குமனவருத்தமும் இந்திரனுக்குச் சந்தோஷமும் பெறச்செய்தீர் சிவபாலகனையும் பூதகணங்களையும் ஒருபொருளாக மதித்து இராஜாதிராஜனே தேவரீர்சண்டைக்குப்போவதுதம்மையொத்த வீரனுக்கடுப்பதோ ஆயிரத்தெட்டண்டங்களைவென்றபுஜபலபராக்கிரமங்களையும் சகலரும்பணிந்துபோற்றுங்கீர்த்திப் பிரதாபங்களைப் படைத்துச் சூரனெனப் பேர்பெற்றிருக்கின்ற நீர் அபலனானசிறுவனுடனெதிர்த்துப் போர்செய்து வென்றபோதினும் தமதுபுகழுக்கடாது யாவரும் சூரனாகவிருப்பவன் சுலபகாரியத்திற்பிரவேசிக்கலாகுமோ வென்றிகழ்ந்துபேசுவார்முடிந்துபோன காரியங்களைக் குறித்துப்பேசுவதிற்பயனில்லைஇனிநடந்துகொள்ள வேண்டுவதைக் குறித்துப்பரிசோதித்து ஒருகாரியத்தை நிதானிக்க வேண்டியிருப்பதால்அடியேன் தேவரீருக்குப் பிள்ளையாக விருந்தபோதினும் எனக்குத் தோற்றியதொன்றைச் சொல்லுகிறேன் அதைத் தடுத்துவிடாமல்அங்கீகரிக்க வேண்டும்அதாவது இவ்விரவுநீங்கியவுடன் நானேபோய்ப் பாலசுப்பிரமணியன்முதலாகியநமது பகைவரை மடக்கிக்கொண்டு சின்னபின்னப்பட வாட்டிவெற்றிகொண்டுவந்து தமது கோபதாபங்களை ஆற்றுவேன்அதற்குச் செலவுகொடுக்க வேண்டும்.

மேலும் யுத்தகளத்திற் பார்ப்பதிதனையனை யலைத்துத் துரத்துவதையும் அவனுக்குத் துணையாகவந்திருக்கின்ற நவவீரர்கள் இலக்ஷர் படைத்தலைவர்கள்பூதவெள்ளங்கள் தியங்கி அதாஅதப்படுவதையும் தூதர்கள்கண்டுவந்துதேவரீருக்கு விண்ணப்பஞ் செய்யக்கேட்டு மகிழ்ந்துஇவ்விடத்திலிருக்கும்படிக்கு வேண்டுகிறேன், இப்போதுநான் குறித்தபடிக்குக் கூரியவேலைத்தாங்கிய பாலசுப்பிரமணியன் முதலாகியசகலரையும் வெற்றிபெறுமற்போவேனாகில் இந்தப்பட்டணத்திற்றிரும்பிவரவிரும்பேன்மகதயிஸ்வரியச் செல்வங்களையும் வேண்டேன்அரசுரிமைகளையும் வெறுத்து மணிகள்சத்திக்கப்பாரித்திருக்கின்றவில்லையெறிந்துபோட்டு மரவுரியைத்தரித்துதண்டகமண்டலத்தைக் கரங்களிற்கொண்டு கானகத்தை நோக்கிப்போய்த் தவஞ்செய்யக்கடவேனென்று பற்பலவுறுதிகளைப்பானுகோபன் சொல்லுவதைச் சகலபுவனங்களுக்கும் இயமனைப்போல விருந்து கொடுமைசெய்துவரும்சூரபதுமன்செவிகளுக் கமுதமாகக் கேட்டவுடன்மனமகிழ்ந்து தேகம்பூரித்துப்புஜங்கள் விம்மிவாகுவலையங்கள் தெரித்துப்போக முகமலர்ச்சி கொண்டவனாய்ப் பள்ளியைவிட்டெழுந்துஎதிரில்கரங்களைக் கூப்பிநிற்கின்ற குமாரனைப்பரிவாகப்பார்த்து இதனைச்சொல்லுவான், அப்பனே யிதனைகவனித்துக்கேட்பையாக பிரமன்,விஷ்ணு, பரமசிவனெனப் புகழாநின்ற மும்மூர்த்திகளும், மண்விண்பாதலமுதலியதலங்களில்வாசஞ்செய்கின்ற வீராதிவீரர்களும்அஷ்டதிக்குப் பாலகர்களும் மற்றுமிருக்கின்ற அவுணர்இராக்கதர் பகைத்துவந்தெதிர்த்துப் போர்செய்யினும்அவர்களைவெல்வதைப்பெரிதாக நான்நினைக்கவில்லைபுசபலபராக்கிரமசாலியாகிய என்தம்பி தாருகனையும்கிரவுஞ்சனையும்பிளந்துகொன்ற பகைவன் வலியையழித்துஜயங்கொள்வதுமிகவுமரிதரிது பன்னிருபுயாசலங்களைப் படைத்திருக்கின்ற பாலசுப்பிரமணியனுடனெதிர்த்துப் போராட வல்லவர்கள் என்னைத்தவிர ஒருவரையுங்காணேன் அவனைச்சிறுவ

னென்றெண்ணவேண்டாம், மகாவிஷ்ணு, பிரமதேவன்,
இந்திரனாதியதேவர்கள் மற்றும் ஜயப்பிரதாபசாலிகளாக
விருக்கப்பட்ட வீராதிவீரர்களையும் அந்தச்சிறுவன்தீர
த்துக்கும் விற்சாதுரியத்துக்கும் கரவேகத்துக்கும் புயவ
ன்மைக்கும், எவ்விதத்திலும், ஒப்புச்சொல்லக்கூடாது,
ஆதலாற் கூரியவேலாயுதம் விளங்கும் கரதலத்தைப்பெ
ற்றிருக்கின்றதிண்ணியனை நானேயின்னமொருதரம்போ
ய்க் கடினமாகியசண்டைமுன்னிலையிலாவது மாயவித்தை
யினாலாவது கூடியவரையிற் போராடி ஜயங்கொள்ளக்கட
வேன். இவையன்றியில் இன்னமொரு அரிதானகாரியமி
ருக்கின்றது, அஃதென்னையெனின், முன்னம் இவ்விடம்
தூதாகவந்து நமதுபட்டணத்தைச் சின்னபின்னப்படச்
சாடி பலவீரனாசஞ்செய்துபோனபகைவன் இரண்டா
யிரவெள்ளம் பூதசேனைகளுக்கும் மற்றவீரர்களுக்குந்த
லைவனாக விருக்கின்றனன், இவனைச்சுலபமாக நினைக்கப்
போகாது வீராதிவீரன் ரணரங்கசூரனாகும் புயவன்மை
களுக் கொப்பற்றவன் சிங்கத்தையொத்த வலியுள்ளவன்
ஆதலாற் குமாரனே சூரியஉதயமானவுடன்சதுரங்க சே
னைகளையுங் கூட்டிக்கொண்டுபோய் அவனைத் தனிமையி
ற் சண்டைக்கழைத்து மடக்கிக்கொண்டு உன்னாற்கூடிய
வரையிற் படைவன்மையினாலும் வஞ்சகப்போரினாலும்
திகைக்கும்படிக்குச் சாடிக்கொல்வையாகில் அவனுடன்
சண்டைமுற்றியதென் றெண்ணுவேனென்று அவன்தன்
முன்காட்டிய சவுரியபராக்கிரமங்களையும் போர்செய்யும்
வல்லபங்களையும் விரித்துப்பேசி யிவன்உள்பங்கு பாலசு
ப்பிரமணியனை வாட்டித்துரத்துவது என்பங்காகும் ஆத
லால் தூதன்மேல் உன்முழுப்பார்வையைவைக்கக்கடவா
யென்று சொல்லிக்குமாரனேசாக்கிரதையாய்ப்போய்வெ
ற்றிபெற்று மீளக்கடவையென்று விடை கொடுத்தவுடன்
பானுகோபன் பிதாபோதித்தவைகளை உறுதியாக்க் கொ
ண்டு தேவரீர் திருவுளப்படிக்கு நிமைப்போதிற் றூதனை
யும்மற்றவீரரையும் பூதப்படைகளையும்முடித்துவருகின்
றனனென வணங்கிச்சொல்லி குமாரனிடத்திற்பரிவாய்
ஆசீர்வதித்தனுப்பிவிட்டுப் போருக்குப்போகவேண்டுமெ
ன்று அதற்கடுத்ததந்திரஉபாயங்களை ஆராய்ந்துபாதித்தி
ருந்த மனவருத்தங்களைப்போக்கிப் பழையபடிக்குச் சந்
தோஷித்தனுய்இராஜபோகங்களையனுபவித்திருந்தனன்

பிதாவின் வாக்கியங்களைச் சிரசாக வகித்துத் தி
ரும்பிய பானுகோபன் தன்னரண்மனைக்கருகில் வருகின்
ற காலையிற் சரீரமெங்கும் வியர்க்கப் பெருமூச்சுகளை வி
ட்டுக் கொண்டு பலதூதர்கள் ஓடோடியும் வந்து சூர கு
மாரன் பாதாரவிந்தங்களில் விழுந்து சேவித் தெழுந்து
வாம்புதைத்து நாக்குழற இச்சேதியைக் கேட்டருள்கவெ
னச்சொல்லுவதாயினர் அகன்றமண்டலாதீஸ்வரனாகிய ந
மதிறைவன் இப்பகல் உயுத்தத்துக்குப்போய்மீண்டபின்
பு பகைவனாகிய பாலசுப்பிரமணியனைச்சூழ்ந்திருந்த பூ
தப் படைகள் வீராவேசக்கனுடன் கொக்கரித்துக் கொ
ண்டு வந்து நம்முடைய நகரத்தின் வடபாரிசத்தில்வான
த்தையளாவ ஓங்கியிருந்த கோபுரவாயிலை முற்றுகைப்
போட்டு வெகுஆர்ப்பாடங்களைச் செய்தகாலத்தில்அவ்வா
யிற் காவல்கொண்டிருந்தஅதிகோரனென்னுஞ்சேனைத்த
லைவன் ரவுத்திராகாரமாகக்கோபித்து சதுரங்கப்படைக
ளைக் கூட்டிப்போய்ப்பகைவனாச் சின்னபின்னப்படச்சா
டுமுன்னிலையில் பூதவீரர் மும்மரமாய் இரதகஜதுரகப
தாதிகளையும் அதாஅதம்பண்ணிக்கொண்டு சேனைத்தலை
வனையும் கொடியபோரைச்செய்துவாட்டியுங் கோபந்த
ணியாமற் பலநிலைகளைக்கொண்டு நவரத்தினமயமாய்நிற்
கின்ற கோபுரத்தைக் கடைக்காலுடன்பறித்து பந்தைப்
போலச்சமுத்திரத்தில்வீசியெறிய சுழல்காற்றிலகப்பட்ட
துரும்பையொப்பக் கரகரெனச்சுழன்றுபோய்த் தலைகி
ழாய்க் கடல்நீரில்விழுந்து உருத்தெரியாமல் பாதலத்தி
லமுழுந்தியது. அதைக்கண்டவுடன் சிவகணங்கள்கரங்களை
க்கொட்டிக்கொண்டு சிருங்கநாதங்கள் அட்டகாசங்களைச்
செய்து வீரசிங்கங்களைப்போலச்சீறிச்சக்கிரவாளகிரிக்கு
ச்சமமாய்மேலோங்கி யிங்ஙனாவளைந்திருந்த பொன்மதி
லைக்கொம்மைகளுடன் கால்களைக்கொண்டுதைத்துப்பொ
டிப்பொடியாகத்தள்ளி நிலத்தில்நிரவினர். மேலும்பட்ட
ணத்திற்பிரவேசித்து வடபாரிசத்திற் சொர்னமயமாகிய
மாடமாளிகை மண்டபமுதலிய சிங்காரங்களைப்பெற்றிரு
ந்த பலவீதிகளையிடித்து தும்சப்படுத்திஅக்காலத்திலெ
திர்ந்த இராட்சதவீரர்களனைவரையும் காலதூதர்களைப்
போல வளைந்துகொண்டு சின்னபின்னப்படச்சாடி ஒருவ
ருமெதிர்ப்பவரினமையால் ஜயவுச்சாகங்களைப் பாடல்க
ளைப்பாடிக் கெலிப்புடன் திரும்பித்தங்கள்பாடிவீட்டை
ப்போய்ச்சேர்ந்தனர்.

இராஜகுமாரனே ஒருபரியாயமாக விந்தநகரத்திற்பா
தியிடிபட்டுக் குட்டிச்சுவர்களாக நிற்கின்றது. இதுவுமல்
லாமற் கோபுரத்தைப்பெயர்த்தெறிந்த அதிர்ச்சியினாற்க
டல்நீர் கொதிப்பெடுத்தெழுந்து இடிபட்டவாயிலின்மூ
லமாய் உள்ளேபிரவேசித்துப் புரசனங்களையும்நீண்டவீ
திகளையும் அலைத்தகொடுமைகளைச் சொல்லிமுடியாது
இச்சம்பவங்களனைத்தையும் நிசதரிசனையாகக்கண்டு வந்
தனம். இதுஉண்மையாகுமென்று நம்பிக்கையுள்ளதூத
ர்கள் விண்ணப்பஞ்செய்த காரணங்களைச் செவிகளில்நா
ராசங்களைக்காய்ச்சிச் சொருகியதைப்போலச் சுறுக்கிடக்
கேட்டமாத்திரத்தில் மனம்வருந்தி விழிகள்சிவந்து தீப்
பொறிகள்சிதறக் காலாந்தகனைப்போலக் கோபித்துப்பூத
ர்செய்கை வெகுநேத்திரநேத்தியென நகைத்துக் கரங்களை
க்கட்டிநிற்கின்ற பலதூதர்கள்மீதில் விழிகளைப்பரப்பி நீ
ங்கள்விரைவிற்போய் நமதுமரபுக்குரியதச்சனையிந்தநிமி
ஷத்திற் கொண்டுவரக்கடவீர்களெனக் கட்டளையிட்டமா
த்திரத்தில் வாயுவேகத்தினும் மனோவேகத்தினும்முடுகி
போடி அவுணர்தச்சனைக்கண்டு "இராஜபரமேஸ்வரனாகி
ய சூரபதுமன் குமாரன் பானுகோபமகாராஜன் உன்னை
யழைத்துக்கொண்டு வரச்சொன்னார். சீக்கிரத்திற்போக
க்கடவாயென்னுஞ் சொல்முடிவதன்முன்னம் வீரமாம
யேந்திரபுரியைச்சேர்ந்து இராஜபுத்திரனைக்கண்டுவணங்
கிப்போற்றி அடியேனைத்தருவித்தகாரியத்தைப்பணித்த
ருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தகாலத்தில் நம
துபட்டணத்தைச்சூழ்ந்திருந்த வடபாரிசமதிலையும்கோ
புரத்தையும் நகரத்தில் சிற்சிலவீதிகளையும் பாதகராகிய
பூதர்கள் அழித்தனரெனக் கேள்விப்பட்டனம் அவற்றி
னைப்பழையபடிக்கு விரைவிற்செய் தமைக்கக்கடவையெ
னக் கட்டளையிட்டமாத்திரத்திற் சிற்பியானவன் மகாபா
க்கியம் இதோமுடித்தேனெனச் செலவுபெற்று நடந்த
பின்பு வேகமுள்ள சிலதூதர்களைப்போக்கி வீரசிங்கத்து
க்குச் சமதையாய் ஒருவரும் நிகரற்ற புசபலபராக்கிரம
சாலியாகவிருக்கின்ற மாகாயனென்னும்சேனைத்தலைவனை

த்தருவித்து நீபதினுயிரவெள்ளம் இரதக்ஜதுரகபதாதிகளுடன் வடபாரிசத்தில்விளங்கும் கோபுரத்தைப்பத்திரமாகக்காவல்கொண்டிருக்கக் கடவாயென்று ஆக்கியாபித்து அவனுக்குவேண்டிய சிறப்புகளையுஞ்செய்தனுப்பினன். அதற்குமுன்சென்ற சிற்பியுந்தான்கற்றிருக்கின்றசாஸ்திரவிதிப்படிக்கு மனதில் நிச்சயித்தவனுப் உத்தரபாரிசத்திற் கிலப்பட்டிருந்தகோபுரம் மதில்வீதிகள் முதலியவற்றை முன்னினும் பதின்மடங்கு சிங்காரங்களைக்கொண்டிருப்பதாகச் சோடித்து முற்றியபின்பு கட்டளைப்படிக்குச் சகலமுமாயிற்றென் றிராஜகுமாரனுக்குத்தெரிவித்து விடைபெற்றுத் தன்பதியைச்சேர்ந்தனன். இராஜகுமாரன்பணிவிடையைப் பெற்றுப்போன மாகாயனென் னும் சேனைத்தலைவன் தன்வசத்திலிருக்கின்ற பதினுயிரவெள்ளம் இரதகஜதுரகபதாதிகள் கடல்பெருகியதைப்போல இரைச்சலிட்டுக்கொண்டு வரும்படியாக நடந்து புதிதாகச்சோடித்து முற்றியவடக்குக் கோபுரவாயில் முதல்நிலையில்வீற்றிருந்து சேனைகளை மதிற்பரப்புகளெங்கும் காவல்கொண்டிருக்கச்செய்து கண்ணிமையைப்போலத் தானும் இடைவிடாமற் சுற்றிப்பார்த்துபோற்றியிருந்தனன். சவுனகாதிரிஷிகளே, மேற்குறித்த காரியங்களனைத்தும் முடிந்தவுடன் இரவுநீங்கிஏழுபச்சைக்குதிரைகளைப்பூண்டு ஒற்றைவண்டிலையுடையதேரை அருணன்செலுத்திவர அதன்மீது சூரியபகவான் வீற்றிருந்து உதையகிரியில் முளைத்தகாலத்தில் அவரதுகிரணகாந்திகள் பட்டமாத்திரத்திற் கரியைப்பூசி யிருப்பதைப்போலப் புவனங்களெங்கும்பரந்திருந்த இருட்கூட்டமானதுகுன்றிக்குறைந்து அதப்பட்டுப்போயது அஃதெப்படிக்கிருந்ததெனில், ஒருவனுக்குத்தான் முற்பிறப்பிற்செய்திருந்த நல்வினைமுயர்ச்சியினுற் பேரறிவு தோற்றியவுடன் அஞ்ஞானவிருள் பறந்தோடுவதைப்போலக் காட்டியது சூரியபகவானுதயமான காட்சியைப்பார்க்குமிடத்திற் சிறந்தகற்பையுஞ் சுந்தரத்தையும் பெற்றிருக்கின்ற இரவென்னும் கன்னிகையிடத்திற் காமுற்று ஆலிங்கனஞ்செய்து களிக்கவேண்டுமென்கின்ற மனோஇஷ்டத்தைக்கொண்டு அதனைத்தொடர்ந்து சேரவெண்ணிப்புறப்பட்டவனைப்போல ஆயிரங்கிரணங்களைப்பரப்பி உலகங்களைவிளக்கிவெளிப்பட்டனன்.

## மூன்றுநாள்பானுகோபன்யுத்தப்படலம்.

இரவிவந்துற்றுழியெழுந்துசூர்மகன்
மரபுளிநாட்கடன்வழாமலாற்றியே
செருவினிலுடைந்திடுசிறுமைசிந்தியாப்
பொருவருமாயையைப்போற்றன்மேயினன்.

இவ்விதமாக இராக்காலமானதுகழிந்து அருணேதயமானவுடன் பானுகோபனெழுந்து விதிப்படிக்குக்காலைக்கடன்களை முடித்துக்கொண்டவனுப் முதல்நாள்பகைவரால் தான்பட்டஅவமானத்தை நினைந்து மனம்வருந்தியின்றையதினம் சிலதகுந்த உதவிகளைத்தேடிப்போகவேண்டுமென நிச்சயித்துப் பிதாமகளாகிய மாயையைவரும்படிக்குச் சிந்தித்துப்போற்றுமுன்னிலையிற் பாட்டியானவள் தட்சணத்திலெதிரிற்ருேற்றிப் பேரனுக்கு ஆசிகளைச்சொல்லி என்னைக்கோரியகாரணமென்ன துரிதமாய்ச்சொல்லக்கடவாயெனக் கேட்டவுடன் அவள்திருவடிகளிற்சேவித்தெழுந்து இதனைப்பேசுவான், அடிஆயா பாலசுப்பிரமணியனுக்கும் நமக்குஞ்சண்டைநேர்ந்தகாரணத்தினுல் முந்தையாநாள் காலையிற் சதுரங்க சேனைகளைக்கூட்டிக்கொண்டுபோய் அகோர உயுத்தங்களைச்செய்தேன். கடையிற் சண்முகன் தூதனுடன்சண்டைகொடுத்து அவன்வல்லபத்துக்குச் சகிக்கமாட்டாமல் வலிகுன்றிப்பங்கப்பட்டுத் திரும்பியகாரணத்தினுல் மானம்பாதிக்க மிகவும்வருந்துகின்றேன். சத்துருக்களுடன்கலந்து கொடியபோர்செய்து வருங்காலத்திற் புறந்தந்தோடி யவர்கள் பெறும் அபகீர்த்தியைப்படைத்துப் பழிக்குள்ளாய் வாடுகின்றேன். இதைவிட இனிநான்பெறவேண்டியநிந்தை வேறொன்றுமில்லை. இந்தவிகழ்ச்சியைச்சுமந்திருப்பதைப்பார்க்கினும் உயிரைவிட்டாலும், நன்றாகவிருக்கின்றதென மனவாட்டத்துடன் முறையிட்டுக்கொள்ளுகின்ற பேரனைப்பார்த்து அப்பாபௌத்திரனே, கெடுமதிகண்ணுக்குத்தோற்றுதென வழங்கிக்கொள்ளுகின்றனர் அக்காரணத்தினுல் இவ்வகைத்துயரங்கள்வந்து சம்பவித்தது அதென்னையெனில், தேவதேவோத்தமனுகியபரமசிவமளித்த அகண்டசாம்பிராச்சியச் செல்வங்களை யனுபவித்துக்கொண்டு உங்கள்குடைநிழலிற்பட்ட பூமியைப்பரிபாலனஞ்செய்து சுகத்தில்வாழ்ந்திராமல் வேதவொழுக்கங்களைமறந்து தீனராகவிருக்கின்ற தேவர்களையலைத்துத்தகாதஏவல்களைக்கொண்டு பொன்னுலகத்தையுஞ் சாம்பலாக்கிக் கடையில் கடினமாகியசிறையிலும் வைத்தீர்கள் இதுவுமல்லாமல் இந்திரனைக்காடேகதியாகத்துரத்தியும் சிவபிரானைக்கருதித் தவஞ்செய்யவல்ல ரிஷிகள்யோகிகள்செய்துவரும் விரதங்களைப் பங்கப்படுத்திவாட்டித்தீராதபழிபாதகங்களைத் தேடிக்கொண்டீர்கள் சிருஷ்டிதிதிசங்காரமென்னும் முத்தொழில்களை நடாத்திவரும்திரிமூர்த்திகளையும்பகைத்து விரோதங்களைச்சம்பாதித்துமகத்துக்களாகவிருப்பவர்கள் மனம்நொந்து வசைமொழிகளையாடவும்பெற்றீர்கள். இப்படிக்குச் சகலரும்உங்களிடத்தில் விரோதித்திருப்பாராகில் எவ்விதத்தில் நீங்கள் ஜயமுண்டாய்வாழ்வீர்கள் தருமமார்க்கங்களுக் கிழிவாகியகொடியசெய்கைகளையே முக்கியமாகவிரும்பி எக்காலத்திலும் மீறிநடத்திவந்தபடியால்பழிபாதகங்களுக்காளாய்ச் சகலசெல்வங்களையும் பறிகொடுத்து மங்கும்நாள்நேர்ந்துவிட்டது, அதற்குத்திருஷ்டாந்தமாக விதுபரியந்தம் எத்தகையரொனினுங் கண்ணெடுத்துப்பார்க்கப்பயங்கரப்பட்டிருந்த இந்தச்சிறந்தபட்டணத்தைப் பகைவர்முற்றுகைபோட்டுக்கொண்டுவாட்டிக் கடினமாகிய உயுத்தங்களைச்செய்ய அவர்களுக்குப்பின்னிடைந்து தோற்பையும் பெறலானீர்கள் அப்பாஉங்களைநிந்திக்கவேண்டுவதில்லை விதியின்முயற்சியை மதியினுல்வென்றவர்களொருவருமில்லை புத்திகருமத்தை யனுசரித்திருக்குமென்று பெரியோர்கள்சொல்லுகின்ற ஊழானது விநாசகாலத்துக்கடுத்த விபரீதபுத்திகளை உங்களுக்குக்கொடுத்து வருகின்றது, வீணுகப்பலபலசொல்லியாகவேண்டுவதில்லை ஈஸ்வரச்செயலின்படிக்கு நடக்கவேண்டியகாரணங்கள் முற்றுப்பெருவதற்குத் தடையிராது ஆகையால் என்னகாரியத்தைவிரும்பி என்னைவரவழைத்தாய்,கேட்டதைத்தருவேன் விரைவிற்சொல்லக்கடவையென்று மாயைபேசி

முடித்தவுடன் பானுகோபன் அவள்குறித்த நீதிகளையொன்றையும் யோசித்துப்பாராமல் மனக்களிப்புடனிதனைக்கேட்பதாயினன்.

முதல்நாளைய யுத்தமுனையில் என்னுடன்கொடியபோர்செய்து வெற்றிபெற்றுப்போயிருக்கின்ற வீரவாகுவையும் படைத்தலைவரையும் பூதவெள்ளங்களையும் இத்தினம் சின்னபின்னப்படச்சாடியழிக்க விரும்பியிருப்பதால் அவர்களைவென்று திரும்புகின்றதற்குத்தக்க திவ்வியபாணமொன்றைத்தயைசெய்யவேண்டும்பாட்டியெனக்கேட்டவளவில் அதற்கிசைந்து தன்சத்தியினல் ஒருமகிமையுள்ள அஸ்திரத்தையுண்டு பண்ணிக்கொடுத்துச் சொல்லுவாள் பேரப்பிள்ளாய்இந்தப்பாணத்தை மந்திரபூர்வகமாகச்செலுத்துவையால் வீரவாகுதேவர் முதலாகிய பகைவர்புத்தியைமயக்கி அறிவையழித்து பிரேதங்களைப்போல நிலத்திற்சாய்த்துச் சேர்த்துக்கட்டிக்கொண்டு நீகுறித்தவிடத்திற் பிரசண்டமாருதத்தினுங் கடுகிப்போய்ப்பத்திரப்படுத்திக் காத்திருக்கும் இதன்வல்லபமிதுவாகுமெனத்தெரிவித்து அதற்குரிய மந்திரத்தை விதிப்படிக்கு உபதேசித்து மறைந்தனள், இவ்வளவுமகிமையையுடையமோகனஸ்திரத்தைப் பெற்றவுடன் பானுகோபனுக்கு மனமகிழ்ச்சியுண்டாய்ப் பின்னிட்டானென்னும் பழிப்புதனக்கு நேர்ந்ததற்காகப் பாதித்துக்கொண்டிருந்த மனவாட்டத்தையொழிந்துசரீரம்பூரித்துப்புயங்களோங்கி வாகுவலையங்கள் தெறித்துப்போகத்தக்கதாகச்சந்தோஷசாகரப்பெருக்கில் முழுகினவனய் அந்தவிடத்தைக்கடந்து பொன்னினலும் மணிகளினலும் சோடித்து மிகுத்தபிரகாசங்களைவீசி விசாலமாய்க் கோடானகோடி யிராட்சதவீரர் காவல்கொண்டிருக்கும் ஆயுதச்சாலையிற்போய் வீரலட்சுமியைச்சேவித்துப்போற்றிக் கூரியஅலகையுடைய பாணங்கள்நிறைந்திருக்கின்ற புட்டிலைமுதுகிலிறுக்கி முத்தத்தாழ்வடம் வயிரப்பதக்கம் சரப்பளி மோகனமாலைகள்புரளும் அழகியமார்பில் அபேதவயிரக்கவசத்தைத்தரித்து கரசாடு அங்குலிப் புட்டில்களைமாட்டித் தங்கக்கட்டுகள்பூண் டிருகுதைகளினும் மணிகள்சத்திக்கும் பாரித்தவில்லைத் தொழுதெடுத்துத்தோளில்மாட்டி பாசுபதாஸ்திரம், நாராயணஸ்திரம், பிரமாஸ்திரம், வாயுவாஸ்திரம், குபேராஸ்திரம், வருணஸ்திரம், அக்கினியாஸ்திரம், சூரியாஸ்திரமுதலிய தேவர்கள் கொடுத்திருக்கின்ற திவ்வியப்படைகளையும், வேல், வாள், சக்கரம்,தண்டம், பிண்டிபாலம், தோமரம், கப்பணம், இவ்விதஆயுதங்களையும் சேகரித்துக்கொண்டு வெளிவந்துபட்டுவர்புகழ, கட்டியக்காரர் எச்சரிக்கைகள் சொல்லிப்போக, வெண்சாமரைகள்வீசத், தவளக்குடைகள்பிடிக்க, ஆலவட்டங்களசைக்க, விருதுக்கொடிகள் தூக்கப், புள்ளாங்குழல் சின்னங்களூத, அருகுதீவட்டிகள் காட்டிச்செல்ல,தேவகன்னியர்கள் மயிலையொப்ப நடித்துக், குயிலைநிகர்த்துப்பாடியும்வர, இவ்விதஇராஜவோலக்கங்களுடன் முகவாயிலினிடத்தில் வரும்போது மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர்க ளெதிர்கொண்டுவணங்கிப் பக்கங்களில்நிற்கின்றவேளையில் கரங்களைக்கட்டிக்கொண்டு காத்திருக்கும் தூதர்கள்மீதில் விழிகளைப்பரப்பி நீங்கள்துரிதமாகப் போய் நமதுசேனைகளைச்சேகரித்து வரக்கடவீர்களெனக் கட்டளையிட்டனுப்ப அளவற்ற தூதர்களோடினர், பின் புகாரியக்காரரையழைத்து நமதுதேரை அலங்கரித்துக் கொண்டு வாருங்கோளெனச்சொல்லிச் சபாமண்டபத்தில்வார்த்தையாடிக்கொண்டிருந்தான்

முன்னஞ்சென்றதூதர் அறிக்கையிட்டவுடன் அளவற்றவெள்ளம் இரதகஜதுரகபதாதிகள்திரண்டு தத்தமது தலைவர்களைச்சூழ்ந்து கொண்டு கடல்பெருக்கெடுத்தோடுவதைப்போல விரைச்சலிட்டு அதிகவுற்சாகங்களுடன் வந்துசேர்ந்தகாலத்தில் சாரதியானவன் பஞ்சலட்சணங்களைப்பெற்றிருக்கின்றபுரவிக்கூட்டங்களைப்பூட்டிநவரத்தினமயமாய் விளங்குகின்ற பாரித்ததேரைப் பட்டாடைகளினலும் குடைகொடிசாமணி முதலியவைகளைக்கொண்டு அலங்கரித்து கற்கரத்தொனிகளுடன் தூரத்திவந்து நிறுத்தியவளவிற் பானுகோபன் வெளிப்பட்டுவந்துஜயாவிஜயப்வாவெனப் பெரியோர்கள் வாழ்த்தெடுப்பப்பட்டுவர்புகழச் சிங்கமானது பருவதத்தின்மேல் தாவியதைப்போல உன்னதமுள்ள இரதத்திற்பாய்ந்து மண்டிபோட்டுட்கார்ந்துபாகனைக்குறித்து நமதிரதத்தை அதிவேகமாய் ரணக்களத்தைநோக்கிச் செலுத்தக்கடவையெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் வார்களையசைத்துச் சவுக்கைக் காட்டி மணிகள்சத்தித்து வண்டில்கள் கரகரென்றோட இராஜவீதிகளிற் செலுத்துகின்றவேளையிற் புரஜனங்கள் ஆலங்களைச் சுழற்றிச் சுபங்களைப் பாடவும் சிறந்த பெரியோர்கள் அறுகுஅட்சதைகளையிறைத்து ஜயமுண்டாகக்கடவதென்று வாழ்த்தவும் இந்தவேடிக்கைகளைப்பார்த்துக்கொண்டு இராஜகுமாரன்வருவதைக் கண்ட மாத்திரத்திற் பருவதாகிருதியாய் உன்னதமுள்ள பதினயிரவெள்ளம் தேரணிகளும் இருப்புலக்கைகள் எழுச்சங்கிலிகளை துதிக்கைகளிற் பற்றிக்கொண்டுமும் மதங்களையும்பெருக்கி வீறிட்டு நீலகிரிகளைப்போல விளங்கும் பதினயிரவெள்ளம் யானைக்கூட்டங்களும் சுழிசுத்தங்களைப் பெற்றதாய் நான்குபாதங்களினும் வண்டயங்கள் கலிக்கஅலைகளைப்போலத்தாவும் வேகமுள்ளபதினயிரவெள்ளம் புரவிப்பந்திகளும் விழிகள்சிவந்து காட்டவு மிடிகளைப்போல உரத்துப்பேசியும்பாரித்துக்கறுத்த தேகத்தைப்பெற்றுப் பரசு-பல்லயம்-எறிவேல்-வாள் கேடகம், தனுசுமுதலியபடைகளைத்தாங்கிப் பூமியதிரப் பாதங்களைப் பெயர்த்துவைக்கும் ஜயசாலிகளாகியஇருபதினயிர வெள்ளம் இராட்சதவீரர்களும் பிரளயகாலவெள்ளம்போல விரைச்சலிட்டுப் பரந்து பானுகோபனைச்சூழ்ந்துகொண்டு நடக்கும்போ துண்டாகிய தூளிபடலமானது மேகங்கள் ஜலத்தைக் கிரகிக்க வந்ததையொத்துச்சமுத்திரமெங்கும் பரவிச்சேறுக்கியும் சர்வசங்காரகாலத்திற் பிரசண்டவாயுவின் மோதலிற்பட்டுச்சத்தசாகங்களும் பெருகி எங்கும்பரந்ததைப்போல அஷ்டதிசைகளினும்மற்றபுவனங்க ளெங்கும்முடிமாறுபடச்செய்யவும்போகின்ற தருணத்தில் ரணபேரி, ஜயபேரி,எக்காளை, வெற்றிமுரசம், சங்கம்,சின்னம்,துத்தாரி-முதலியதோற்கருவி துளைக்கருவி கஞ்சக்கருவி நரம்புக்கருவிமிடற்றுக்கருவிகளெனச் சொல்லாநின்றபதினெண்வாத்தியங்களும்கணகணென முழங்குமோசையானதுஉலகங்களனைத்தும்செவிடுபட்டு மருளும்படிக்கெழுந்தது, அஃதெப்படிக் கிருந்ததென்றல், ஆயிரத்தெட்டண்டங்களுக்கும்,இராஜதானியாகவிருக்கின்ற இந்தவீரமாமயேந்திர புரியானதுவெகுகாலமாக அஷ்டலட்சுமிகளுங் குடிகொண்டுசகலசெல்வங்களையும் பெற்றுநன்குகவாழ்ந்தது,அப்படிப்பட்டநக

ரத்திற்கு இக்காலத்தில் அழிந்துபோகுங்காலம்சமீபித்தது சமீபித்ததென்னும் மனவருத்தத்தினாற் புலம்புகின்றதைப்போலக்காட்டியது.

இவையன்றியும்பாலாக்கள் ஈட்டிகள்தண்டுகள் வாட்கள் கேடகமுதலிய ஆயுதங்களைத் தாங்கிக்கொண்டுஇருபாரிசங்களினும் நெருங்கிப்போற்றிவருங் காவலரைமீறி அங்குசத்தினாற் குத்திவருத்தும் பாகன் குறிப்பின்வழியிற் போகாமல் தானிச்சைகொண்டிருக்கின்ற பெண்யானைகள் தாகசாந்திக்கு புனல்வேண்டிவாடுவதைக்கண்டமதயானைகள் விரிட்டுச்சென்று துதிக்கைகளை நீட்டி வானத்திற்பரவியிருக்கின்ற மேகங்களைவாரிப் பிழிந்து மதுரமாகிய நீர்ப்பெருக்கைக் கொடுத்துக்களிக்கவும் தத்தித்தாவிநடக்கும் வேகமுள்ளபுரவிகள் வானத்திற்றாவியும் வேகங்கொண்டுபோகும் சூரியனிரதத்திற்பாய்ந்தும்மலைகளினுச்சியில் மிதித்தும் பூவட்டமுற்றினும் வையாளிவந்தும் சமுத்திரத்தினிடங்களில் வட்டணைதிரிந்தும் பகைவராகிய பூதப்பெருக்கிற் றாவித்திரும்பிவரவும் தயை தாட்சணியமற்ற இராட்சதவீரர்கள் அதப்பட்டகாலையில்அவர்களுக்குரிய தேவிமார்மருண்டு திகைத்து இவ்விதமாகப் புலம்புவரெனக் காட்டுமாறுபோலத் தேரணிகள் கரகரென்றிரைச்சலிட்டோடவும் ஆலகாலவிஷம் பலவுருக்கொண்டு அழலை வீசித்திரிவதைப்போல மையினுங்கறுத்திருக்கின்ற தேகத்தையும் அந்திவானத்தைப்போலவிளங்கும் செம்பட்டமயிரையும்பெற்றவர்களாய்ச்சூரியனையொப்பச்சொலிக்கும்இரத்தினாபரணங்களைத் தரித்துப்பிறையைப்போல கோராத்தந்தங்கள் விளங்க அக்கினிக்கொப்பாகிய விழிகளைப்படைத்து தீக்கொழுந்தையொத்தசிகையைப்பெற்றுப்பருவதங்கள்கால்முளைத்தசைவதைப்போலப் பருத்ததேகத்தைப் படைத்தவர்களாய்ப் பளபளத்த அலகையுடைய வேல்வாளாயுதங்களைத்தாங்குங்கரங்களைப்பிசைந்துகொண்டு இடிகளைப்போலத்தட்டி முகங்களிற்கோபக்கனல் விளங்கவும்மேககற்சிதத்துக்குச்சமமாகவசனித்தும் நேற்றையதினம்இராஜாதி ராஜனுடன் வந்தகாலத்திற்புறந்தந்தோடி யவர்களைப்போலச்சண்டைகொடுக்கின்ற தருணத்திற்கலங்கிப்பின்னிடுவராயின்இந்தவாளுக்கிரையாக வெட்டியெறிவோமென்றுசபதங்களைப்பேசிக்கொண்டு இராட்சதவீரர்கள் நடக்கவும் இவையன்றியும் வானத்தையளாவிய தேரணிகளினுச்சியினும் யானைகளின் மீதினு மிராட்சதர் கரங்களினும் விளங்குகின்ற துவசபடங்கள்விண்ணுலகத்தைத்தாவுகிற்பதையோசிக்குமிடத்தில் அதுகளைக் கொடியென்று வசனிப்பதினாற்கற்பகத்தருக்களிற் படரத் தாவுவதைப்போலக் காட்டவும், இஃதன்றியும் விருதுக்கொடிகளும் சந்திரவட்டக்குடைகளும் ஆலவட்டங்களும்மகரதோரணங்களும்எங்கும்மூடியிருப்பதினாற்சூரியப் பிரகாசத்தையடக்கிக் காடாந்தகாரமாகிய விருளைச்செய்யமயங்கியும் படைவீரர் கரங்களிற்பற்றிய வாள் வேல்களினொளியினாலும் கிரீடங்களிற் பதிந்திருக்கின்ற சிரோரத்தினப் பிரகாசத்தினாலும்அவ்விருளை நீக்கிவரக் களித்துச்சென்றும் இவ்விதச்சிறப்புகளைப்பெற்ற சதுரங்க சேனைகள் வீராவேசங்களுடன் சூழ்ந்துவரப் பானுகோபன் பொன்மயமாயிருக்கின்ற பட்டணத்து வீதிகளைக்கடந்துசக்கிரவாளகிரியையொப்பாக மேலோங்கி வளர்ந்திருக்கின்ற கோட்டை மதிலுக்குறுப்பாய்நவரத்தினக் காந்தியைவீசிக்கொண்டிருக்குங்கோபுரவாயிலைத் தாண்டியவுடன் ஆயிரம் குதிரைமுகங்களைப் பெற்றுத் தூதர்களுக்குத் தலைவனாககரங்களைக்கட்டிக்கொண்டிராஜகுமாரன் கட்டளைக்கெதிர்பார்த்துநடக்கின்ற விவேகசாலியாகிய ஒருவனைப்பார்த்து நீதுரிதமாயோடிச் சிவகுமாரனிருக்கின்ற பாடிவீட்டைச்சேர்ந்து நமது நகரத்துக்குத் தூதாகவந்த ஜயசாலியாகிய வீரவாகுவைத் தேடிக்கண்டு இராஜபரமேஸ்வரனாகவிருக்கின்ற பிதாவின் கட்டளைப்படிக்கு இத்தினம்கொடியபோர்செய்து உன்னைரணக்களத்திற்கிடத்தி ஜயப்பிரதாபத்துடன்திரும்பும் படிக்கு கங்கணம்கட்டி வந்திருக்கின்றார் முன்சண்டைகளைப் போலச்சுலபமாக நினைந்துஅசாரிசமாக விராமல் சீக்கிரத்திற் போருக்குவரக்கடவாயென்று இராஜகுமாரன் சொல்லியனுப்பினாரென்று தெரிவித்துவரக்கடவாயெனக் கட்டளையிட்டவுடன் சேவித்துத்தேவரீர்பணித்தபடிக்கு முடித்துவரக் கடவேனெனச்செலவுபெற்றுக் கடலைப்போல இரைந்து நடக்கின்றசேனைகளைக் கடந்துபோய் ஏமகூடமென்னும் பெயரைப்பெற்றிருக்கின்றபாசறையைச் சேர்ந்து வெற்றிவேலாயுத மூர்த்திக் கிளவலாகிய வீரனைக்கண்டு இதனைச்சொல்லுகின்றனன்.

•பாலபருவதத்திற் சூரியனைப் பற்றிவந்து தளைசெய்த வீராதிவீரனாகிய பானுகோபமகாராசன் இத்தினம் உன்னுயிரை யமலோகங் குடியேற்றும் படிக்குப்பிரதிக்கினை பண்ணினவனாய்ச் சகலசேனைகளுடனுமிதோவந்து விட்டனர், இதனைஉனக்குத் தெரிவித்துத்துரிதமாய்ப்போருக்கு வரக்கடவாயெனச் சொல்லிவரும்படிக்கு அடியேனுக்குப் பணித்துத் தூண்டினர், ஆதலாற்புறவணியில்நில்லாமற் றுரிதமாகப்போருக்கு வருவாயென்று சொல்லியதைக் கேட்ட வீரவாகுதேவர் நகைத்து நல்லகாரியம் முந்தியநாளே சூரன் பிள்ளைபேர்விளங்காமற் செய்துபோடுவேன் பேடிகளைப்போலப் பயந்தோடிப் போனதால் இதுவரையில் உயிரைத்தரித்திருக்கின்றான், இதோஅவனுயிரை வீரசொர்க்கத்திற் சேர்க்கவருகின்றனன்இந்தச்செய்தியைஅவனுக்குச்சொல்லக்கடவாயெனக்கூறிபேசியதூதனைஅனுப்பிவிட்டு செயசாலிகளாகிய துணைவர்இலக்ஷர்சூழ்ந்து வரத்தக்கதாக நவரத்தினமயமாகிய சபாமண்டபத்தில் அரியணையில் வீற்றிருக்கின்ற பாலசுப்பிரமணியக் கடவுளைத் தரிசித்துச்சர்வசீவபரிபூரணராகியகந்தர்சந்நிதானத்தைச் சேர்ந்து மும்முறைவலம்வந்துதிருவடிகளிற் சேவித்துப்போற்றி கரங்களைக்கூப்பிநிற்கின்றபுசபலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர்கருத்தையும் நடந்தசெய்திகளையுந் திருவுளத் தறிந்துகொண்டு முதற்றினம் பயப்பிராந்தியினாற் புறந்தந்தோடிப்போன பானுகோபன் இறுமாப்புடன் உன்னைக்குறித் தேதோசிலசபதங்களைப்பேசி வருகின்றான், ஆதலால்அத்தினத்தைப்போலவே எண்மர், இலக்ஷர் படைத்தலைவர்களுடன்ஆயிரவெள்ளம் பூத சேனைகளைக் கூட்டிக்கொண்டுபோய்ப் பகைவனை வென்றுமீளக்கடவாய் பானுகோபன்செலுத்தும் படைகளனைத்துக்கும் மாறேவிந்தடுத்துமேலிடுகின்றகாலையில் ஒருகாலம் அந்தப்பாதகன் ஏதேனும் மாயவஞ்சகங்களைச் செய்வனாகில் நமது கரத்தில்விளங்கும்வெற்றி வேல்வந்து அவற்றைஅதப்படுத்தி உங்களுக்குயாதொரு துன்பங்களு மில்லாமற்பாதுகாத்துத் திரும்புமென்றுதிருவுளம் பற்றியபோது மகாபாக்கியமென்று வீரன்மீட்டும் வணங்கிப் பரிபூரண கடாட்சமும்விடையும் பெற்றுத்

திருப்பி ஆயுதசாலைக்குப்போய் சரத்தூணியை முதுகிலிறுக்கி வீரவில்லைத் தோளில்மாட்டித் தேவாஸ்திர முதலிய படைகளைச் சேகரித்துக்கொண்டுவந்து முகவாயில்ளிடத்தில்நிற்கின்ற உன்னதமுள்ளதேரில் ஆரோகணித்தகாலையில் துணைவர் இலக்ஷர் படைத்தலைவர்கள்சர்வாயுதபாணிகளாய்த் தமக்குரிய வாகனங்களில்வீற்றிருந்துதமிறைவனைச் சூழ்ந்தனர், அக்காலத்தில் நாறுயிரவெள்ளம் பூதப்படைகளும் மனவுற்சாகங்களுடன்குலகிரிகளைப்போல பாரித்திருக்கின்ற பருவதங்கள் தழைத்தோங்கிய விருட்சங்கள்-தண்டாயுதம்,தோமரம்,எழுகுலக்கைமுதலிய ஆயுதங்களைக்கரங்களிலேந்திப்பிரசண்டவாயுவைப்போல ஆரவாரித்துக்கொண்டு கோடையிடிகளுக்குச்சமமாக வசனித்துப்பெரும்புறக்கடலுக் கொப்பாக வந்து தங்கள்தங்கள் தலைவரைச்சேர்ந்தனர்.

அத்தருணத்தில் வானத்தில் வேடிக்கை பார்க்கவந்த தேவர்களின்றையதினம் ஜயம் நம்மவர்களுக் காகக்கடவதென்று ஆசிர்வதித்து கற்பகப்புஷ்பங்களை வாரிவாரியேராளமாகச் சொரிந்துகளிக்கவும் ரணபேரி-ஜயபேரி-வெற்றிச்சங்கமுதலிய பொற்பறைகள் அண்டகோளகை வெடித்ததைப்போலக் கணகணென்று முழங்கவும் இவ்வித ஆடம்பரங்களுடன் தம்பியர் முதலானவர்கள் சூழ்ந்துவர வீரவாகுதேவர் துரிதமாகநடந்துபானுகோபன்திரண்டவிராட்சத சேனைகளுடன் வந்திருக்கின்ற ரணக்களத்தை நெருங்கிய மாத்திரத்திற் பவுத்திரவான்களாகிய சிவகணங்களும் வஞ்சகமே குடிகொண்டிருக்கு மிராட்சதப்பாதகரும் வீராவேசங்களுடன் கொக்கரித்து நெருங்கிஉங்கள் பிராணனைவாங்குகிறேம் உங்களையமலோகங்குடியேற்றுகிறேமென்று சபதங்களைப்பேசிச் சண்டை கொடுக்க யத்தனித்ததருணத்தி லிருதிறத்துச் சேனைகளினும் கோடுகள்பறைகள் கணகணென முழங்கவும்வெற்றிமுரசங்கள் தாம்தாமென் றதிரவும் பொம்பொம்மென்று சங்கங்கள் பூரிக்கவும் இவ்விதவாத்தியங்கள்பெருத்தும்பேய்பூதம் டாகினிக்கூட்டங்கள் புதியவிருந்துகிடைக்கின்றதென்னுஞ் சந்தோஷத்தினாற் கூத்தாடித்திரியவும்கழுகு பருந்து காக்கை வானமெங்கும் பறந்துமூடவும் யமதூதர்கள் சமர்க்களமுற்றினுங் காத்திருக்கவும்இத்தகையபோராட்டத்தில் இராட்சதப்பாதகர் கைமிஞ்சி சிலர் பாரித்தவிற்களை வட்டாகாரமாக வளைத்து கொடுமையாகவும் கூர்மையுள்ளதாகவும் தீட்சணியத்தைக் கொண்டதாகவு மிராநின்ற பாணவருஷங்களைப்பொழிந்தும்சிலர்,வாள்,வேல், பிண்டிபாலம், கப்பணம், தண்டம்,எழு,மழு, நாஞ்சில், வச்சிராயுதம், சக்கரம்,சூலம்,இவற்றினைக்காவேகமாகச் செலுத்திச்சிங்கங்களைப் போலக்கர்ச்சித்தகாலையிற்பூதப்படைகள்கொதித்து வடவையினும் முடுகிக் கழுமுட்களைச்செலுத்தியும் முசலங்களை யெறிந்தும் இருப்புலக்கைகளைக் கொண்டு மோதியும்சக்கரங்களைச் சுழற்றிவீசியும் பருவதங்களைக் கடாவியும் மராமரங்களைக்கொண்டு சாடியு மிவ்விதமாகக்கொடிய போரைச்செய்துவரஇராட்சதவீரர்கள் ரவுத்திராகாரமாகமண்டியெரிந்து மின்னலைப்போலப் பிரகாசித்திருக்கின்ற பட்டாகத்திகளை யுதறிவீசி ஒவ்வொரு தாக்கலில் அளவற்ற சிரங்களைக்கண்டித்தும் தோள்களைச் சரித்து மார்பைப்பிளந்துகால்களைத்தறித்தும் சுரிகை ஈட்டிகளினாற் குடல்கள் வெளிப்பட்டிறையக் குத்தியும் வாள்களைக்கொண்டு கணக்கிறந்தபூதரைச் சின்னபின்னமாக வெட்டியும் இப்படிக்குச் சாடுமுன்னிலையில் பூதத்தலைவர்கள் காட்டழலைப் போலச்சீறிப்பாய்ந்து ஒவ்வொருவிசையில் ஆயிரம்பதினாயிரமிராட்சதர்களைச் சேர்த்தெடுத்துக் கசக்கி உதிரமோடப்பிழிந்தும் திசாதிசைகளிலெறிந்தும் கடல்களில்வீசியும் வானத்தெற்றியும் கன்னங்கலங்க மோதியும்ஒருகாலைமிதித்து மற்றக்காலைக்கரங்களிற் பற்றிப்பனைநாரைப்போலக் கிழித்தெறிந்தும் கழுத்தைமுறித்தும் கால்களினாற்சேர்த்துக்குயவன்மண்ணை மிதிப்பதைப்போலத்துவைத்தும் கற்கம்பங்களைப்போல உதைத்துருட்டியும்மராமரங்களைக்கொண்டு சின்னபின்னப்படச்சாடியும் தேர்களைவாரி யானையணிகளின்மீதுவீசியும்குதிரைகளைவாரிஇராட்சதர்மேலெறிந்து மிம்விதங்களாகசத்தசாகரங்களுமுழித்தியும்பகைத்துப் போராடுவதைப்போலப் பூதப்படைகளுமிராட்சதசேனைகளும் ஒருவரை யொருவர் வெல்லவேண்டுமென்கின்ற வீராவேசங்களுடன் கொடிய சண்டையைச்செய்துவருகின்ற தருணத்தில் இரத்தவெள்ளமானதுபெருக்கெடுத்து அலைகளைமோதி பூமியெங்கும்பரந்த காலத்திற் காக்கைகழுகு பருந்துமுதலிய பட்சிக்கூட்டங்கள்பிணமாம்சங்களையுண்டு அப்பிரவாகத்தில்முழுகிச்செவ்வானமிட்டதைப்போலச் சிறகுகளைப்புலர்த்திப் பறந்து வட்டமிட்டுலாவவுமிராட்சதவீரர்கள்செலுத்திய அஸ்திரசஸ்திரங்கள் அமோகமாகப்பெருத்து சாடுவதினாற்பூதப்படைகள் சிரங்களற்றும் தோள்களற்றும் மார்புகளிற்றும் கரங்களற்றும் சரீரமுற்றும் சல்லடைக்கண்களாகத்துளையுண்டும் களைத்துமிளைத்தும்பதைத்தும், உளைப்புண்டும், சோர்ந்தும்செத்தும் இவ்விதமாகப் பூதப்படைகளிற்சில ரழிந்தனர்.

சிவகணங்கள்வீறி மலைகள்விருட்சங்கள் படைகளைக் கொண்டு வாட்டியகாலத்தி லிராட்சதர்கள் அல்லோலகல்லோலப்பட்டு மண்டைதிறந்தும் மூளைகள் சிதறியும் விழிகள் தெறித்தும் கொடுமைபேசும் வாய்கள்பிளந்தும் பற்களுதிர்ந்தும் அந்திவானத்தையொத்த தலைகள்பறந்தும் வலியகழுத்துக ளொடிந்தும் புயமலைகள்சரிந்தும், கரங்கள்முறிந்தும், மார்புநெக்குவிட்டும் வயிறுகிழிந்து குடல்களிறைந்தும், துடைகள்தகர்ந்தும், கால்கள்தறிந்தும் சரீரமெங்கும் பத்தல்பத்தலாய்வெடித்தும், சக்கைசக்கையாக வெட்டுண்டும் சதைத்தும், சிதைத்தும், நிலத்திற் புதைத்தும், அலைந்தும், உலைந்தும், களைத்துமிளைத்தும், துடித்தும், பதைத்தும், சோர்ந்தும், மூர்ச்சித்தும், துகள்பட்டு மாண்டுமங்கியும், இவ்விதமாய்ப்பாடாதபாடுகளைப்பட்டு கணக்கிறந்த விராட்சதப்பாதகர் மாண்டனர், இப்படிக்கிருதிறத்துச் சேனைகளும்வருந்தியிளைத்துத் தவிக்கின்ற காலையிற் பாபமேயுருக்கொண்டிருப்பதைப்போலக் கரியதேகத்தைப் பெற்றவஞ்சகராகிய விராட்சத சேனைத் தலைவர்கள் ரவுத்திராகாரமாகக் கோபித்துத் தங்கள் சேனைக்கு முந்திவரும்போது சிவகாருண்ணியம் பத்திமான்மிய முதலிய நல்லொழுக்கங்களை வாய்ந்த பூதசேனைத் தலைவர்களும் சிவகணங்களைப் பின்தள்ளி முன்னணியில் வந்துநின்றுகீழ்ப்பாரிசத்துடன் மேல்பாரிசம், பகைத்ததைப்போலஅரியயுத்தங்களைத்தொடங்கு முன்னிலையிற் கணநாதர்கள் மேலிட்டுக் கொலைவஞ்சகங்கள் குடிகொண்டிருக்கும்மனதைப்பெற்ற விராட்சதத்தலைவரை மடக்கிக்கொண்டு கர

ங்களைத்தேய்த்து ஒவ்வொருதாக்கலினாற் கோடானகோடிதலைகள் பெருங்காற்றிற்பட்ட தெங்கின்கனிகளைப்போல உருளும்படிக்குத் தள்ளியும் அந்தக்களேபரங்கள்விழுந்த அதிர்ச்சியினாற் பிளந்தபூமியிற்காட்டும் வெடிப்புகளிற் கணக்கிறந்த விராட்சதவீரர்களை யுதைத்துத்தள்ளிப் பாதலத்திற்போகும்படிக்குப் பாதங்களினாற்றேய்த்தும் சூலபாணியைப்போல அவர்கள் தோலையுரித்து வீசியும் சிங்கத்தைப்போன்ற வலயமனதுகலங்கும்படிக்கிடித்தும் அரிதாய்த்தேடிய வாமுயற்சிகளை அப்பிரபோசனப்படுத்தியும் உருத்தோற்றமுமற்றேய்த்தும் வீரபத்திரதேவரைப்போல ரணபத்திரகாளிகண்டுகளிக்கவிருளையொத்த கரியமேனியைப் படைத்திருக்கின்றபூதநாயகர் ஜயசாலிகளாகிய விராட்சதத்தலைவரைச் சின்னபின்னப்படவாட்டிச்சிருங்கநாதங்கள் அட்டகாசங்களைச்செய்து வெற்றிச்சங்கங்களைப் பொம்பொம்மென்று முழக்கிக்கொண்டு தண்டாயுதங்களை யூன்றிநின்ற சிலபூதவீரர்கள் ஸ்ரீகண்ணபிரானைப்போலவிளங்கினர்.

இதுவுமல்லாமல் ஒருகற்பகாலத்தில் வீறியிருந்தஅவுணராசனைவாட்டி மமதையிற்பட்டு உலகங்களையலைத்துத் திரிந்தவராகத்தின் கோடுகளைப்பிடுங்கி அதன்கர்வத்தையடக்கிய வயிரவக்கடவுளைப்போலச் சிலபூதத்தலைவர்கள் மதயானைகள்துதிக்கைகளைப்பற்றிப் பிரமித்து வாடும்படிக்குச்சுழற்றி அவற்றின்கோடுகளையொடித்துஆயுதமாகக்கரங்களிற்றாங்கிச் சத்துருக்களைமடக்கிக்கொண்டுவாட்டியும் குமாரசுவாமியாருடன் யுத்தத்துக்கு நேர்ந்தகாலையிலிளைத்துப் பின்னிட்டுக் கிரவுஞ்சபருவதத்தில் மறைந்தும் வெளிப்பட்டும் அரியமாயைகளைக் காட்டிப் போர்செய்த தாருகனைப்போல யானைமுகங்களைப் படைத்திருந்தவிராட்சதவீரர்கள் பகைவருக்கஞ்சித் திரும்பிப் பூதவீரர்கரங்களிற் பற்றியிருந்த பருத்தமலைகளில்மறைந்து தருணம்பார்த்தெதிர்த்து அகோரவுயுத்தங்களைச்செய்யவும் இவையன்றியில் முன்னம் மகாவிஷ்ணுவுடன் போராடி வெற்றிகொண்டும்பிரமனைவளைத்துக்கொண்டு திகைக்கும்படிக்கும் சாடியவீராதிவீரராகிய சிலவிராட்சதத்தலைவர்கள் ஆதிகாலத்திற் சிவபிரான்படைத்த திகிரியினாற் சலந்தரனென்பவ னிருகூறாய் மாண்டதைப் போலப் படைத்தலைவர்கள் பிரயோகித்த சக்கரப்படையினால் தங்கள்உடல்களிருபிளவாகக் கண்டிக்கப்பட்டிறந்தும் முன்னம் உலகையலைத்திருந்த அந்தகாசுரனைச் சிவபிரான் சூலத்திற்குத்தித் தூக்கியதைப்போல ஒப்பற்ற வீரர்களாகிய சிலபூதவீரர்கள் பிரகாசம்பொருந்தியமுத்தலைச்சூலங்களைக்கொண்டிராக்ஷதவீரர்கள் வலியமார்பிலுருகப்பாய்ச்சிக் கரங்களிற்பற்றியுலாவவும் இவ்விதங்களிற் சண்டைநடந்து வருகின்றவேளையில் எண்மர் இலக்ஷர்களிற்சிலர் ரவுத்திராகாரமாகக்கோபித்துப் பானுகோபன் சேனைத்தலைவர்களிற் பலர்வீராவேசங்களுடன் செலுத்துகின்ற குரூரமாகிய பாணவருஷங்களானவை யெரிந்துபுகைந்து மேலிட்டுவருவதைத் திவ்வியபாணங்களைப்போக்கிக் கண்டதுண்டமாகவெட்டியெறிந்துமேலும்சுழல்காற்றைப்போலவும் திருப்பாற்கடலைக்கடைந்தமந்தரகிரிக்கொப்பாகவும் சுழன்றுசுழன்று அமோகமாகியசூரியகடுங்கணைகளைக் கரவேகமாகப்பிரயோகித்துக் கணக்கிறந்த விராட்சத சேனைகளைக்கலக்கி மாய்த்தும்மற்றொருபுறத்திற் பூதப்படைத்தலைவர்கள் வடவனலத்துக்கொப்பாகச்சீறிப் பட்சிக்கூட்டங்களி லிராஜாளி புகுந்ததைப்போலச் சத்துருக்களைமடக்கிக்கொண்டு அஸ்திரசஸ்திரங்களை அபரிமிதமாகப்போக்கிச்சின்னபின்னப்பட்டு மாளும்படிக்குப் போர்செய்யவும் இவ்விதமாகவீரவாகுதேவர் படைத்தலைவர்கள் நாலுமூலைகளினும் புகுந்து அகோர யுத்தங்களைச் செய்யுமுன்னிலையில் மாண்டவர்கள்போக மற்றவிராட்சதவெள்ளமானது திகைத்துவாடிப்பலகாயங்களுடன்வருந்தித் தாபரித்துநிற்கமாட்டாமையால் நீர்நிறைந்தகுடத்தினடியிற் றுவாரம்பட்டமாத்திரத்தில் துளிஜலமாவது நில்லாமற் போய்விடுவதுக்குச்சமமாய் ஒருவராவது ரணக்களத்தில்நில்லாமல்ஒருவருக்கொருவர் முந்தித்திரும்பித்திரும்பிப் பார்த்துக்கொண்டு புறங்கால் புட்டத்திற்றாக்க அதிவேகமாயோடி மலைச்சாரல்களினுங் குகைகளினும் வனாந்தரங்களினும் திக்குதி பாந்திரங்களினும் ஒளித்தும் மாறுருக்கொண்டு தேசாந்திரங்களிற்பறந்தும் போய்விட்டவுடன் எண்மர்இலக்ஷர்முதலியபடைத்தலைவர்களும்பூதவீரரும் பிரசண்டமாருதத்தைப்போலக் கண்டவிடமெங்குந் தாமாய்மனமகிழ்ச்சியுடன் வீறியிருக்கின்றகாலையில் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் இராஜாதிராஜனாகவிருக்கின்ற சூரன்பிள்ளைவீராதிவீரனாகிய பானுகோபன் தன்சதுரங்க சேனைகளும் அல்லோலகல்லோலப்பட்டு மங்கியதையும் படைத்தலைவர்கள் அபஜயத்தையும் பகைவர்கெலிப்பையுந்தெரிந்து விழிகளிற்றீப்பொறிகள்சிதறவும் புகையும் அனலும்பெருகப் பெருமூச்செறிந்து திசைகளதிரநகைத்துப் புருவம்நெற்றியிலேறக்கோபித்து வடவைக்கனலைப் போலப்பொங்கிச் சண்டைகொடுத்துப் பகைவரைவாட்ட நினைந்தவனாய்த் தேரைவேகமாய்க்கொண்டு போகும்படிக்குச் சாரதியையெச்சரித்துத் தங்கக்கட்டுகள்பூண்டிருகுதைகளினும் மணிகள்சத்திக்க வெற்றிமாலைதரித்திருக்கும் ஒப்பற்றபாரித்தவில்லையெடுத்து நாட்டிவட்டாகாரமாய் வளைத்து நாணேற்றி முடிவதன்முன்னம் பாகன்குதிரைகளைச்சவுக்கைக்காட்டி அதட்டிகற்கரத்தொனிகளெழ மனோவேகத்தினு மேலிட்டுச் செலுத்திக்கொண்டுபோய்ப்பூதவெள்ள முதலாகிய வீரர்களிருக்கின்ற யுத்தபூமியில்நிறுத்தினன், இந்தப்பிரகாரம் ஜயசாலியாகிய பானுகோபன் தன்படைகளின்மீதிற் சீறிவந்ததைப்பின்னணியிலிருந்த வீரவாகுதேவர் பார்த்தமாத்திரத்தில் இனிசும்மாவிருக்கலாகாது, பாதகன்நமதுசேனாசமுத்திரத்தைக்கலக்கி வாட்டுவதன்முன்னம்இராஜகுமாரன்கருவத்தையடக்கி யழிக்கவேண்டுமெனத்தீர்மானித்தவராய்த்தமது தேரைத் துரத்திவந்து துணைவர் இலக்ஷருக்குமுந்திப்பினாகத்துக்கொப்பாகிய பாரித்தவில்லைக்கரத்திற்கொண்டதைக்கண்ட பானுகோபன்விடநாகத்தைப்போலச்சீறிநேரேவந்தகப்பட்டுக்கொண்டான் இனியிவனைக் கதலமிதலவொட்டாமற்சாடிக் கொல்லவேண்டுமென்கின்றநினைவைக்கொண்டு கரத்திலிருந்தவில்லைக் குணத்தொனிகாட்டிய காலத்தில் அவ்வதிர்ச்சியினால் அண்டப்பித்திகை நெக்குவிட்டுத்திசைகள்நடுங்கித் தேவர்கள்திகைத்துச்சிரக்கம்பஞ்செய்தனர்.

உடனே வீரவாகுதேவர் கரத்திலேந்திய தனுசையிருகுதைகளு மொன்றுபடவளைத்து டங்காரசத்தத்தைக்காட்டினர், அவ்வோசைஅளவற்றவிடிக்கூட்டங்கள் ஏககாலத்தில் முழங்கியதைப்போலச் சத்திக்கச் சத்துருக்கள்

நடுநடுங்கிவாடி யிருந்தவிடங்களிற்சோர்ந்துவிட்டனர்பானுகோபன் செவிகளினும் விஷத்தைநிகர்த்துப்பாய்ந்தமாத்திரத்தில் வடவையைப்போற்சீறி அனலையிறைக்கவல்லசரங்கள் அர்த்தசந்திரபாணங்கள்முதலான அஸ்திரங்களைக் கோடானகோடி யாகத்தொடுத்துச்செலுத்த அவைமண்விண்திக்கு திபாந்திரங்களெங்கும் நெருங்கி மின்னலைப்பெருக்கி யிடிகளைமுழக்கித் தீயையிறைத்து அதிககொடுமைகளைக்காட்டி மேல்டுவதை வீரவாகுதேவர் கண்டவுடன் துரிதமாய்த் தமதுவில்லில் தீட்சணியமாகிய கணைகளைச்சந்தித்துமேகங்களும்நாணும்படிக்குச்சொரிந்தமாத்திரத்தில் இருவீரர்கள் படைகளுமொன்றுடனொன்றுமுட்டிச் சர்ப்பங்கள்சீறிச்சண்டைகொடுப்பதைப்போலக் குறுகுறென்றும் சடசடென்றும் ஆர்ப்பாட்டங்களைச் செய்துகொண்டு கறுத்த மேகமண்டலத்தைத் தாவியும் ஆகாயவீதிகளை மறைத்தும் தேவர்கள் நகரங்களைமூடியும் பிரமன்வாசஞ்செய்யும் மனோவதிப்பட்டணத்தினும் மகாவிஷ்ணுவீற்றிருக்கின்ற பாலாழியினும்நிறைந்து அவற்றுட்பட்ட பிராணிகளைவாட்டிஅனர்த்தப்படுத்தவும் இப்படிக்கு விற்பயிற்சியின்முயற்சியினல்பாணங்களை யிறைத்துவரு மிருவீரர்கள்தேர்களும் குலாலன் விசைகொண்டுதிருப்பிய சக்கரத்தைப்போன்றும்சுழல்காற்றையொத்தும் இடசாரிவலசாரியாய் கிறுகிறெனச்சுழன்று கணப்போதிற் சத்தசாகரவெல்லையினிடங்களிலோடியும் பொன்னுலகமுதலாகிய நாடுகளிலுலாவியும் சக்கிரவாளகிரியின்மீது வட்டம்வந்தும் அண்டமுகட்டைத்தாவியுமிப்படிக்குத்திரிந்து பொருகின்ற தருணத்தில் வானவெல்லையிலிருந்து வேடிக்கைபார்த்திருந்ததேவர்கள் அதிசயித்து இவ்வீரர்தேர்கள் மேகமண்டலத்தில்நுழைந்து திரிகின்றதோ வாயுமண்டலம் வருணமண்டலம் சூரியமண்டலம் சந்திரமண்டலம் நட்சத்திரமண்டலமித்தலங்களிற்சென்று திரிகின்றதோ வைகுந்தத்திற்பாய்ந்ததோபெரும்புறக்கடலிற்சென்றதோயாதுந்தோற்றவில்லை மேலும் எவ்விடங்களினும் தோற்றப்படுகின்றன இதற்கென்செய்வோம் ஒருகாலம் நாமிருக்கின்றவிடத்தில் வருமாயில் என்னபாடுபட்வருமோ பத்திரமாக முன்சாக்கிரதைப்பட்டு தப்பித்துக்கொள்ள வேண்டுமென்று ஒருவரைஒருவர்பார்த்துத் தியங்கிவசனிக்கவும்அக்காலத்தில் அவ்விருசூரர்களும் மேகங்களைப்போலவிளங்கவும் அவர்களேறியிருக்கின்ற விரதங்கள் மின்னலைப்போலப் பளிச்சுபளிச்சென்று அங்குமிங்குமாய்க் காட்டிமறையவும் அவர்கள்கரங்களில்நின்றும் வெளிப்படுகின்ற திவ்வியபாணங்களானவை சோனைத்துளிகளுக்கொப்பாக எங்குமூடவும் இவ்விருவீரர்கள் தேர்களைச்செலுத்திவருகின்ற சாரதிகள் ஒருவரையொருவர் அதட்டித்துனுவைகோலைவீசி யிடம்வலமாகச் சக்கிராகாரமாய்ச்சுழற்றவும் தேர்களிற்பூட்டியிருக்கின்ற புரவிப்பந்திகள்ஒன்றையொன்று பார்த்துச்சீறி யிடிகளஞ்சக்கனைத்து வாயுவேகத்தினும் மேலோட்டுப்பாயவும் இப்படிக்குத் தேரோடிவருவதினாலும் பாணங்கள் தீயைவீசி ஊறிக்கொண்டு நெருங்குவதினாலும் வானவெல்லையெங்குமிடமில்லாமல் நெருங்கி வேடிக்கைபார்த்திருந்த முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிர மிருஷிகளும் கின்னரர் கிம்புருடர் கருடகாந்தருவர்சித்தவித்தியாதரர்பன்னகர் நாகர் ஏகாதசருத்திரர் துவாதசாதித்தர்முதலாகிய சகலரும்மருண்டுஇனியிவ்விடத்திற்சற்றுநிற்போமாகில் நாம்படப்போகிறதுன்பத்தை யின்னவிதமெனச் சொல்லிமுடியாது, ஆகையால் சீக்கிரமாய்த் தப்பித்துக்கொண்டுபோகவேண்டுமென்று ஒருவருடனொருவர் கலந்துபேசி மேலுலகங்களிலோடி யொளித்தனர்.

இப்படிக்கு அரியயுத்தங்கள் நடந்துவரும்போது சயந்தன்முதலிய தேவரைச்சிறைசாய்த்துவந்து காவல்படுத்திய கடினசித்தமுடைய பானுகோபன் சிலகொடியபாணங்களைச்செலுத்தி வீரவாகுதேவர் சரீரம்தோற்றாமல் மறைத்தகாலையில் அந்தச்சரங்களிணைந்து புகைந்து அனலைவீசிக் கடுகிவந்து சுறுக்குச்சுறுக்கெனத்தைத்த முன்னிலையில் வீரவாகுவடவானலத்தைப்போலக் கொதித்து ஆயிரந்திவ்வியபாணங்களைச்செலுத்திப் பானுகோபனேறியிருக்கின்ற விரதத்தையும் புரவிகளையும் பாகனையுங் கண்டதுண்டமாக்க வுடனே சேமத்தேர்களிலொன்றிற்சிங்காசனைப்போலப்பாய்ந்து அதிவேகமாய் வில்லைவளைதுநாரியைமாட்டுமுன்னம் வீரவாகுதேவர்ஆயிரங்கூரிய பாணங்களைக் கரவேகமாகப் பிரயோகித்து வில்லைப்படாலுமெனக் கண்டித்துமேலும் சிலகுரூரமாகிய சரங்களைக் கொண்டுவலிய மார்பையும் சல்லடைக்கண்களைப்போலத் துளைத்த வளவில் உதிரமானது பிரவாகமா யோட வருந்தித் திகைப்பதைப் பூதப்படைகள்பார்த்து ஏ ஏயென்றிகழ்ந்து கரங்களைக்கொட்டி நகைத்துஏளனமாகப்பேசி ஆர்ப்பரிக்கின்ற ஓசையானது சுடச்சுடச் செவிகளிற்புகுந்தமாத்திரத்தில் மானம்பாதிக்கரவுத்திராகாரமாகக் கோபித்துத் தான்வருவதற்கு முன்னம் பிதாவானவன் தூதனைக்குறித்துச் சொல்லியிருந்த வசனங்களைநினைந்து இவன்எந்தப்பாணங்களினாலும் சளையப்பட்டவனன்று ஆதலால் தேவாஸ்திரங்களைச் செலுத்திவாட்டிஜயப்பிரதாபத்தைப் பெறக்கடவேனெனத்துணிவுகொண்டவனாய் தூணியிலிராநின்ற வருணாஸ்திரத்தையெடுத்து தூபதீபநைவேத்யமுதலிய உபசாரங்களைமானசபூசையினால் நிறைவேற்றி வில்லிற்பூட்டி நீபோய்ச் சத்தசாகரங்களைப்போல ஆரவாரித்திருக்கின்ற பூதப்படைகளையும்,இலக்ஷனையும், எண்மரையும், தூதனையும், நாசப்படுத்திச் சமுத்திரத்திற்சேர்த்து மீளக்கடவாயென்று மந்திரபூர்வகமாகப் பிரயோகித்தனன், அந்தப்பாணமானது வெளிப்பட்டவுடன் சருவசங்காரகாலத்திற்பரமசிவ கடாட்சப்படிக்கு உலகங்களையழிக்கச் சத்தசாகரங்களையும் உடைத்துக்கொண்டெழும் பெரும்புறக்கடலைப்போலஜலப்பெருக்கையுண்டுபண்ணி அலைகளைப்பெருக்கிஇடிகளையொத்ததிர்ந்து புரண்டு வேகமாய்வருவதைத் தேவர்கள்கண்டு நடுநடுங்கி இதென்ன உற்பாதமாகவிருக்கின்றது பாதகன்கற்றமாயையின்பெருக்கோ சிறந்தவிஞ்சையின் முயற்சியோ யாதோவென்றேங்கித் திகைத்துப் பார்த்திருக்கவும் பூதப்படைகள் கலங்கிவாடவும் இலட்சருந் துணைவருங் கரங்களைப் பிசைந்துகொண்டு என்னமாய்விளையுமோவென்று ஒருவர்முகங்களை யொருவர்பார்த்துப் பிரமித்தவராய் ஊமைகளைப்போலத் திகைத்துநிற்கவும் இப்படிக்குச் சகலரும்வாடுவதைத் தேவாதிதேவனாகியசிவகுமாரன் படைத்தலைவன்கண்டு பயப்படாதீர்களெனக் கையமைத்துப் பிரளயவெள்ளத்தைச் சுவற்றுந் தீட்சணியமுள்ள அக்கினியாஸ்திரத்தையெடுத்துப் பூசித்து வில்லிற்பூட்டி மந்திரபூர்வகமாகக்காதளவுமிழுத்துவிட்டமா

த்திரத்தில் அந்தத்திவ்வியபாணமானது வானத்திலெழுந்து பக்குபக்கெனநகைத்து கொண்டல்கொண்டலாய்ப்புகையைப்பெருக்கிச் சுவாலையைவீசி அனற்பொறிகளைக்கக்கிகொள்ளிகளைப்பெருக்கிச் சடசடென்னும்பேரொலியுடன் உலகங்களெங்கும் மூடிக்காட்டிய வெப்பத்தினல் மூதண்டகோளகைவெடித்து ஆகாயகங்கைவறண்டுமச்சராகிகள் துடிதுடித்துப் பதைபதைத்துவாடவும் அஷ்டகுலாசலங்கள்முதலியபருவதங்களனைத்தும்வெடித்துமங்கும்படிக்குவீறியெழுந்துஉலகங்களைமூடியிருந்தவெள்ளத்தை நிமைப்போதில்வறளவுண்டு பூமிபஞ்சயற்றுக்கோடைகாலத்தில்வெடிப்பதைப்போலப்பத்தல் பத்தலாய்ப்பாதலந்தோன்றப்பிளந்துஅவ்விடத்திலிருக்கின்ற சர்ப்பக்கூட்டங்களனைத்தும்சுவாலைக்காற்றுமல்வாடிச்சுருண்டுபதைபதைத்து அங்குமிங்குமோடியதுஇவ்விதமாய்வீரவாகுதேவர்செலுத்தியகனற்படையானதுபகைவன்விடுத்தகணையின்வல்லபங்களைகவளீகரஞ்செய்துகொண்டு மேலிட்டிராஜகுமாரனை வளைந்துகொள்ளக்கண்டு ரவுத்திராகாரமாகக்கோபித்துத்துரிதமாய்வாயுவாஸ்திரத்தையெடுத்துப்பூசித்துப்பிரயோசித்தான், அதுவில்லிலிருந்துவெளிப்பட்டவுடன் ஊழிகாலத்தில்மோதும் பிரசண்டவாயுவைப்பெருக்கிச்சுழற்காற்றைப்போல எங்கும்வீசிவரும்வேகத்தினற்சகலபிராணிகளுந் திடுக்கிட்டுவாடவும்அண்டப்பித்திகை கம்பிதப்படவும் இவ்விதமகிமைகளுடன்சீறிப்போய் அக்கினிப்படையின் வலியையடக்கிப்பூதப்படைகளின்மீது ஊங்காரித்து வருவதைவீரவாகுதேவர்கண்டுசீக்கிரமாய்நாகாஸ்திரத்தைப்பூசித்துவிதிப்படிக்குப்பிரயோகித்தவுடன் தேவர்கள் மயங்க உலகத்தைவிளக்குஞ் சூரியனுந்தியங்கி வாடத்தக்கதாக மேலிட்டுவிசாலமாகிய படங்களை விரித்துச் சூரியனைமறைத்துவிஷங்களைக்கக்க வல்லபலகோடி சர்ப்பங்களைஉண்டுபண்ணிஆலகாலவிஷமுமஞ்சச் சீறிவிண்மண்ணெங்கும் நிறைந்து சீறும்சுவாலையானது டைவைபெருகி உலகங்களை யழிப்பதைப்போலச் சிவராசிகளுக்குவருத்தங்களைக்காட்டிபிலத்துவரங்களை நிகர்த்து வாய்களைத்திறந்து கருமானுலைக்களத்து விளக்குந் துருத்திக்கொப்பாய் விஷச்சுவாலைபெருகப் புஸ்புஸ்ஸென்று பெருமூச்சுகளைவிட்டு வாயுவின்பெருக்கனைத்தையுங் கிரகித்துப்பகைவன்படையின்வலியையொடுக்கி மேலிட்டுவருவதைப் பானுகோபன்கண்டுதுரிதமாய் கருடாஸ்திரத்தையெடுத்து அபிமந்திரித்துகரவேகமாய்ப்பிரயோகித்தான் அந்தத்திவ்வியபாணமானதுவானத்திலெழும்பிச் சங்கோபசங்கம் கருடவுருக்கொண்டுவிசாலமாகிய சிவந்த சிறகைவிரித்துஆர்ப்பாட்டங்களைச்செய்து கொண்டுபோய்ச் சர்ப்பக்கூட்டங்களைமடக்கிக்கால்கலிலிருக்கின்ற கூரிய நகங்களினற் பிளந்துகொன்றும்மூக்கினற் கொத்திவாட்டியும்சிறகடியினல்மாய்த்தும்திசைகளெங்கு மிறைத்தும்இவ்விதமாகச் சாடுவதினலும் கிருஷ்ணகிருஷ்ணவென்னுங் கூந்தலினேசையைக்கேட்டும் நிழற்பரிசம் பட்டமாத்திரத்திற்களைத்தும்உளைத்துமிளைத்தும் மனமுளைத்து விஷங்களைக்கக்கிப்புரண்டுபுரண்டு மருண்டும்,சுருண்டும்,கருடனைக்கண்டபாம்பென்றும் உலகினர் பேசிக்கொள்ளுவதற்குத்திருஷ்டாந்தரமாய்நாகாஸ்திரம் வலிகுறைந்து பெட்டியிற்பட்ட பாம்பெனவழங்குவது மெய்ப்படும் படிக்குச்சர்ப்பங்களனைத்தையும்தன்னிடத்தொடுக்கிச் சுருங்கிவருந்திச்சூரியன்முன்பனிபோலக்குன்றிக்குறைந்து அதப்பட்டுப்போயது.

இவ்விதமாய் நாகாஸ்திரமானது ஒடுங்கக்கருடாஸ்திரம் மேலிட்டுவருவதை வீரவாகுதேவர்கண்டமாத்திரத்தில் அதிககோபங்கொண்டவராய் விருஷபாஸ்திரத்தைப்பூசித்துச் செலுத்தியவுடன் வலியகால்களையும்வச்சிரத்தையொத்துக்காட்டும் நீண்டகொம்புகளையும் பெற்றிருக்கின்ற பல்லாயிரகோடிவிருஷபங்களி னுருக்கொண்டுஉலகங்களெங்கும் நிறைந்து பெருமூச்சுகளைவிட்டு அண்டகோளகையும் அதிர்ந்து கிடுகிடாய்க்கும்படிக்குக் கர்ச்சித்துவண்டயங்கள் கலீல்கலீலெனச் சந்திக்கப்பாதங்களைப் பெயர்த்துவைத்து கிண்கிணிமாலைகள் கழுத்திற் சலசலென்றதிர முசுப்பானதுபருத்தோங்கி அசையபாரித்துத் திரண்டு கூர்மையாய் நீண்டிருக்கும் கொம்புகள்திசைகளைக்குத்திப்பிளந்தும்மலையினிடத்திருந்து அருவிபெருகுமாறுபோலச் சத்தமேகங்களின்வயிற்றைப்பீறிநீரைப்பெருக்கியும் கணப்போதில் ஆயிரக்காதவழிசெல்லும்சூரியன்தேரைவாட்டியும் விசாலமானபூமியை பாதங்களினலெற்றிப்பிளந்து அஷ்டதிசைகளைத்தாங்கி நிற்கும்அயிராவதமுதலிய யானைகளையிடித்துத்தள்ளியும்பூமிக்கச்சாணியாகப் பாதலவளையிற்போய் வானவளையி லுயர்ந்திராநின்றமகம்மேருபருவதத்தைக் குலுங்கத்தாக்கியும் அஷ்டகுலாசலங்களை நுறுக்கியும் மன்னுயிர்கலங்கிவாடும்படிக்குஎக்காளம் போட்டுக்கொண்டு கால்களினல்பூமியைப்பெயர்த்துச் சமுத்திரத்தைத் தூர்த்தும் வானத்தைமறைத்துஇமையா நாட்டமுடைய தேவர்கள் விழிகளைமூடியோடத் துரத்தியும்பெரும்புறக்கடலைக்கலக்கி அலைகளைமோதி ஓசைபெழாமல்அடக்கியும் இவையன்றியும்பாதலத்திலிருக்கின்ற சேஷனகிய சர்ப்பங்களிடிகளின் பெருக்கிற்பட்டு வாடுவதைப்போலத் திகைத்தேங்கும்படிக்குப்பூமியைக்கால்களினற் றுக்கியும் அண்டகோளகைநெக்குவிட்டதிரமுட்டியும் சொர்க்கமத்திய பாதலமெங்குங்கிடுகிடென நடுங்கக்கூந்தலிட்டும் வீறியெழுந்தஅப்படையின்சவுரியபராக்கிரமங்களைச் சவுனகாதிரிஷிகளே.விரித்துச்சொல்வதற்கு ஆயிர நாவைப்படைத்த சேடனலும்முடிவதன்றெனப்பேசுவோமாகில் ஒருவாயைப்பெற்றிருக்கும் என்னற்கூடுவதோ அதன்பெருமைகளைத் திருக்கயிலாயத்தைக் காவல்கொண்டிருக்கின்ற நந்திதேவரோதெரிவர்இத்தகைய மகிமைகளைப்பெற்ற விருஷபாஸ்திரமானதுவீதிக்கருடாஸ்திரத்தின் வல்லமையும் செய்கைகளையும்நிமைப்போதிலடக்கிக் கவளீகரமா யுட்கொண்டுகாலனைப்போலச் சீறிச்சத்துருவைச்சின்னபின்னப்படக் கண்டிப்பேனென்று உருத்துவருவதைப் பானுகோபன்கண்டு சீக்கிரமாய் காலாஸ்திரத்தையெடுத்து மந்திரபூர்வகமாய்வில்லிற்பூட்டிக் காவேகமாய்ப் பிரயோகித்தான் அந்தப்படை அதிகமகிமைகளைக் காட்டிஆர்ப்பாட்டங்களைச்செய்துகொண்டுவந்து நந்திப்படையுடனெதிர்த்து வலியற்றுமங்கிக் குறைந்து நாசப்பட்டுப்போயது விருஷபாஸ்திரம் முன்னினும் அதிகஉற்பாதங்களைக்காட்டிச் சமீபித்துவரும்போது பானுகோபன் அதன்வலியையும் வேகத்தையும் நிதானித்துக் கறகறெனப் பற்களைக்கடித்து உதட்டையதுக்கி விழிகளிற் றீப்பொறி சிதறக்கோபித்துத் துரிதமாய் பிரமாஸ்திரத்தையெடுத்துப்பூசித்து வில்லிற்பூட்டிஆகாரந்தபரியந்த மிழுத்துச்செலுத்திய காலத்தில் வானத்திற்

சென்று வடவைப்போற் சீறிக்கொக்கரித்துக் கலகலெனநகைத்து கணக்கிறந்த திவ்வியபாணகோடிகளைப்படைத்து அனலைவீசி பிரசண்டமாருதத்தைப் பெருக்கிஉலகங்களனைத்துந் திடுக்கிட்டு நடுக்கும்படிக்கு ஆர்ப்பாட்டங்களைச் செய்துகொண்டுவேகமாய்வந்துபரமசிவ வாகனமாகிய நந்திப்படையைக்கண்டவுடன் நடுநடுங்கிக் கரங்களைக்கூப்பிப் பாதகனாகிய விராட்சதகுமாரன்வசப்பட்டிருந்தபடியால் அவன்கோரிக்கையின்படிக்கு வந்தேன்தேவரீர்சிறப்போந்தகாரணந்தெரியமாட்டாதாதலால் அடியேன்மேற் கோபிக்கவேண்டாம் கோபிக்கவேண்டாமென்று பலவிதங்களிற் போற்றித்துதிப்பதற் கிரங்கிக்கடாட்சித்தமாத்திரத்திற் பிழைத்தோமென்றுபிரமன்படைவிட்டவனிடத்திற் சேர்ந்தது, வானத்தில்வேடிக்கைபார்த்திருந்ததேவர்களிதனைக்கண்டமாத்திரத்திற் கரங்களைக்கொட்டிஅண்டங்களதிரநகைத்து வெற்றிகொண்டாடினர்.

அக்காலத்திற்சூரன்பிள்ளை காலாந்தகனைப்போலக்கொதித்துத்தேவர்களைப்பார்த்து நல்லகாரியம் நல்லகாரியமென்க் கறுவித் தட்சணத்தில் நாராயணாஸ்திரத்தையெடுத்து சோடசவுபசாரங்களுடன் வழிபட்டுக் கரவேகமாய்ப்பிரயோகித்துச் சிருங்கநாதஞ்செய்தனன், அந்தத்தேவாஸ்திரம் வெளிப்பட்டவுடன் பஞ்சாயுதபாணிகளாக அளவற்ற விண்டுக்களி னுருக்களைக்காட்டி மாயைகளைவிரித்து எங்குமிருளின் பெருக்கத்தைமூடி அதிக உக்கிரத்துடன் சர்ப்பத்தைப்போலச்சீறிவந்து நந்தி மாப்படையுடனெதிர்த்துப் பின்னிடையாமல் அகோரமாகிய உயுத்தங்களைச்செய்வதையும் அவற்றின் கொடுமையினாற்சீவராசிகள் படுந்துன்பங்களையும் வீரவாகுதேவர் கண்டிரங்கிஅதிதீவிரமாய்முற்காலத்தில் விஷ்ணுவானவர்நாரசிங்கவடிவைக்கொண்டுஉலகங்கள் தத்தளிக்கச்சீறியகொடுமையையடக்கப்பரமசிவகடாட்சத்தினாற்சரபப்பட்சியாகஅவதரித்த வீரபத்திராஸ்திரத்தைக் கரத்திற்கொண்டு பூசித்துவணங்கிச்செலுத்தினர். அந்தத்திவ்வியாஸ்திரம் வானத்திலெழுந்துசீறிகணக்கிறந்தசரபசார்த்தூலஉருக்களைக்காட்டி வடவைக்கனலும் ஆலகாலமும் நடுங்கியஞ்சக்கொதித்து வேகமாய்வந்து நந்திப்படையுடன்போராடுகின்றநாராயணாஸ்திரத்தைமடக்கிக்கொண்டு ஆயிரங்கிரணங்களைவீசியெழுந்த சூரியனைக் கண்டசந்திரன் பிரகாசமடங்கிமங்கிப்போவதைப்போல தன்வல்லடங்கிப்படங்கச்சென்றது இவ்விதங்களாகத்தான்செலுத்தியதேவப்படைகளனைத்தும் பிரயோசனப்படாமற் பின்னிடுவதையும்பகைவன்படை வீறியிருப்பதையும் பானுகோபன்கண்டுதிடுக்கிட்டு இந்தத்திவ்வியபாணமானது மற்றெந்தப் படையாலழிபட்டுப்போமென்று யோசித்து நிமைப்போதிற்சராசரப்பிரபஞ்சங்களைவாட்டிச் சாம்பலாக்கவல்ல பாசுபதாஸ்திரத்தையெடுத்துத் திருமஞ்சன தூபதீபமுதலியசோடசவுபசாரங்களையும் மானசபூசையினால் முடித்துபத்தி பூர்வகமாகத் துதித்துவாழ்த்தி வில்லைற்பூட்டிவட்டாகாரமாகவளைய வலித்துப் பிரயோகித்தான் இப்படிக்குத் தமதுபிதாவானவர் கடாட்சித்திருந்தசிறந்தபாணத்தைப்பகைவன் செலுத்தியதை வீரவாகுதேவர்தெரிந்தமாத்திரத்தில் இதற்குவீரபத்திரப்படை நிருவகிக்கமாட்டாதென நிதானித்தவராய்த் துரிதமாய்த் தம்மிடத்திலிருக்கின்றபாசுபதத்தையெடுத்துமானசபூசையினால் வேண்டும்உபசாரங்களைக் குறைவற நிரப்பிவணங்கிப்போற்றிப்பகைவன்விடுத்தபாணத்தினால் உலகங்களுக்குயாதொருதுன்பங்களும்சம்பவித்து வாடாதபடிக்குப்பாதுகாத்திரட்சிப்பதுமல்லாமல் பகைவன் படையையும் மாற்றித் திரும்பும்படியாகக் கிருபைசெய்யவேண்டுமென்றிரந்து தனுசிற்பூட்டி மந்திரபூர்வகமாகச்செலுத்த அதுபலமகிமைகளுடன் வேகமாய்ப்போயெதிர்த்துஅவ்விருதெய்வீகப்படைகளும்சீறி லோகநாயகனாகிய உருத்திர வடிவங்களைக் காட்டி பிரசண்டமாருதத்தை ஒருபுறத்திலெழுப்பியும்உலகங்களை யழிக்கவல்ல வடவாமுகாக்கினியை ஒருபுறத்திற் காட்டியும் ஆலகாலவிஷத்தை ஒருபுறத்திற்பெருக்கியும் தாபாக்கினியையும் புகைப்படலங்களையும்ஒருபுறத்திலுண்டுபண்ணியும் ஞாளிவாகனங்களில் பவனிவரும் வயிரவர்களைச் சிருஷ்டித்தும், அளவிறந்தபத்திரகாளிகளைச் சிங்கவாகனங்களில் வரஉண்டுபண்ணியும்சூலங்களை கரத்திற்றாங்கி யிருக்கின்ற வீரபத்திரர்களை வெளியிட்டும் உக்கிரமான விழிகளையுடைய சிங்கவாகனங்களின்மீதுதுர்க்காதேவிகளை வரவழைத்தும் யாளிவாகனங்களின்மீதிற்சண்டிகளைத்தோற்றக் காட்டியும்பூதபைசாச டாகினிவருக்கங்களைக் கக்கியும் காடாந்தகாரமாகிய விருளைப் பெருக்கியும் சடசடத்த தொனிகளுடன் வீறும்அனலைக்காட்டியும் கொடியவிஷப்பற்களையுடைய சர்ப்பங்களைப் படைத்தும் யமன்,காலன், கிங்கிலியரைச்சிருஷ்டித்தும் சத்தசாகரப்பெருக்குகளைக்காட்டியும்,இடி,மின்னல், குமுறல்களைப்பெருக்கியும் அக்கினிமழையைப் பொழிந்தும் மேகசாலங்களைப் பெருக்கியும் மேருவாகிய குலகிரிகளையொத்தபருவதங்களை உண்டுபண்ணிப்பூமியைமறைத்தும் ஆயிரங்கிரணங்களைப்பரப்பிப் பிரளயவெள்ளத்தை வறளச்செய்யும் சூரியர்களைப்படைத்தும், யானை,புலி, சிங்கம்,கரடி,குதிரைமுகங்களை ஒன்றனந்தமாகப் பெற்றிருக்கின்ற அவுணர் இராக்ஷதரைப் படைத்தும் கோடானகோடி கரங்களும் ஒருமுகமும் அனந்தமுகங்களும்இருகரங்களும்பருத்த வயிறும்பிலத்தையொத்தவாயும் அக்கினிக்குச் சமானமாகிய சிவந்த விழிகளையும்செவ்வானத்தையொத்த சடைகளையும்பெற்று முத்தலைச்சூலங்களைக்கொண்ட சடாமுனிக்கூட்டங்களைப் படைத்தும்சிங்கமாகிய மிருகங்களினும் தேர்விமானங்களினும் ஆரோகணித்து வானவெல்லையெங்கும் பாய்ந்துசீறிஒப்பற்ற தேவாஸ்திரங்கள் அர்த்தசந்திர பாணங்கள் தோமரம், பிண்டிபாலம், கப்பணம், முசலம்,சக்கரம்,எழு,மழு, தண்டம், ஈட்டி,எறிவேல்,முசுண்டி,கவண்,நாஞ்சில்,இருப்புலக்கை முத்தலைச்சூலம், வச்சிராயுதம்,வேல், வாள், இவ்விதப்படைகளை ஒன்றனந்தகோடிகளாகச்செலுத்தியிருதிறச்சேனைகளையும் வாட்டும்படிக்கு வெவ்வேறுருக்களைத்தாங்கியிருக்கின்ற உருத்திரகணங்களைப்படைத்தும் பலபிரமாஸ்திரம்நாராயணாஸ்திரமுதலிய தேவப்படைகளைப்படைத்தும் சுந்தரமுள்ளஇந்திரதனுசுக்கள் அளவற்றதையுண்டுபண்ணியும் யமதண்டம் காலபாசங்களைப்பெருக்கியும் இவ்விதங்களாகிய பற்பலகாட்சிகளைக்காட்டிஅவ்விருபாசுபதங்களும் மண்விண் ணெவ்விடங்களினுமுலவிக்கறுத்த கடலினிடத்தும் பெரும்புற வெள்ளத்தினும் சக்கிரவாளகிரி மீதினும் அண்டப்பித்திகைச் சார்பினும்பாதலத்தினும் திசைகளினும்பரந்து அதிகவினோதங்களைச்செய்தும் அண்டத்துக் கப்புறங்களினோடிக் கொடியபோர்களை விளைத்தும் இவ்வுற்பாதங்களினாற் சத்த சாகரங்கள்

பெரும்புறக்கடல் சுவறி வெள்ளிடையாகக் காட்டவும்அ
வற்றிற் பட்டதிமிதிமிங்கலகிலங்கள் மகரமச்சங்கள்புழு
க்களைப்போலப் பதைபதைத்தும், துடிதுடித்தும்,நொடி
த்தும், சுளித்துமிளைத்தும், களைத்தும்,உளைத்தும்,படா
தபாடுகளைப் பெற்றுவாடவும்,ஆகாயகங்கையைப்பருகிபு
னற்பரிசமற்று வெளியாகக்காட்டியும்அண்டத்துக் கப்பு
றத்திற்பரவியிருந் த பெருவெள்ளஞ் சுவறிக்காட்டக் கிர
கித்தும் அப்படைகளின்வெப்பத்தினால்மகம்மேருவும்பி
ளந்தும்நட்சத்திரராசிகள் நெற்பொரியைப்போல்றையவு
ம்சூரியனிரதமும் சந்திரன்விமானமும்பங்கப்பட்டுஅவ
ர்களும்வருந்திவாடவும் திசையானைகள் தாபரிக்கப் படா
மையால்விறிட்டுக் கவிழவும் வடவைவெப்பமடங்கிப் ப
துங்கவும் கீழுலக வடுக்குகளும்மேலுலகவடுக்குகளும் கு
லைந்து மாறுபடவும்சராசரங்கள் திடுக்கிட்டுமெங்கவும் வா
னத்தில்வேடிக்கைபார்த்திருந்ததேவர்கள் இருஷிகள்முத
லானவர்கள்திகைத்துப் பதைத்துத்திசைகெட்டோடவும்
பூமண்டலத்தைத்தாங்கியிருந்தகூர்மமும்சேடனும்வாட
வும்சத்தமேகங்களும்பசையற்றுப்பஞ்சையொப்பக் காற்
றிற்பறக்கவும் !இவ்விதவுற்பாதங்கள்நேர்ந்தகாலையில்வை
குந்தத்திருநாட்டில் சிரோரத்தினங்கள்சொலித்திருக்கும்
ஆயிரம்பணுமகுடங்களைக்கவித்து அணையாகவிருக்கின்
றசேஷசயனத்திற்பள்ளிகொண்டிருக்கும் ஆதிமூலமாகி
யவிஷ்ணுவினதுஉபயசரணாரவிந்தங்களை வருடிக்கொண்
டிருந்தசெந்தாமரைப்புஷ்பவாசியாகிய ஸ்ரீமகாலட்சுமியு
ம்பூமிதேவியும்இதென்னஉற்பாதமாக விருக்கின்றதென்
றுலோகநாயகனைக் கட்டியணையவும் மனோவதிப்பட்டண
த்தில்நவரத்தினமயமாகியமண்டபத்தில்வீற்றிருந்து கல்
வித்திறங்களை ஆராய்ந்திருந்தவெண்டாமரைவாசியாகியச
ரஸ்வதியம்மைகலங்கிமருண்டோடி யிருஷிகளாதியாகிய
பெரியோர்கள்சூழச்சிங்காதனத்தில்வீற்றிருந்துவசனித்
துக்கொண்டிருந்த தனதுகணவன்பிரமதேவனைக்கட்டிய
ணைத்திருக்கவும்இரதிதேவியானவள்திசைத்தலைந்து கரு
ப்புவில்லையுடைய மன்மதனைத்தழுவிக்கொள்ளவும் இரு
ஷிபத்தினிகள்கலங்கித் தமதுகணவர்மேல்விழுந்து தழு
வியிருக்கவும்இவையனைத்துமிப்பாடுகள்படுமுன்னிலையி
ல்பூதப்படைகள்ஐம்புலன்களும்நிலைபிறழ்ந்து கைகால்க
ள்நடுங்கவிளைத்துச்சோரவும்இலக்ஷர் மதிமருண்டுவாட
வும்எண்மர் பயப்பிராந்தியினாற்றிகைத்து முன்னவனைச்
சூழ்ந்திருக்கவுமாயினர்,அத்தருணத்தில்ராட்சதப்பாதக
ரனைவருங்குலைகுலைத்துநடுநடுங்கிச்சின்னபின்னப்பட்டுச்
சோர்ந்திருந்தனர், பருவதாகிருதியாக வானத்தையளாவ
நின்றதேரணிகள் பொடிப்பொடியாய்க்குவியவும் மதயா
னைக்கூட்டங்கள் வெறியடக்கி வீறிட்டுமாளவும் தத்தித்
தாவும்புரவிப் பந்திகள் வாயுவைப்போலத் திசைகெட்
டோடி மாளவும் இப்படிக்குச் சதுரங்க சேனைகளையும்,
பறிகொடுத்துப் பானுகோபன் ஏகாங்கியாகநின்றனன்.

இதுவுமல்லாமல் மயேந்திரபுரியிலிருந்த இராட்சதர்
கள் பெண்டுபிள்ளைகளுடன் இக்கொடுமைகளுக்கஞ்சித்
திகைத்து மூலைகளினும் முடுக்குகளினும்பதுங்கிவாடவு
ம் பதினாலுலகங்களில் வாசஞ்செய்கின்ற பிராணிகளனை
த்தும் பயப்பிராந்திகொண்டு இதுதானே பிரளயகாலமெ
னத் துக்கசாகரத்திற்பட்டுச்சோரவும் அக்காலத்திலுண்
டாகிய பேரொலியினாலும் அதிர்ச்சியினாலும் தீப்படல
த்தினாலும் அண்டவடுக்குகள் குலைந்துதடுமாறவும் சூரி
யன்கதிதப்பியோடியலையவும் மயேந்திரபுரியென்னும் க
ன்னிக்குமங்கிலியத்தைப் போலவிளங்கும் சூரன்சபாம
ண்டபமெங்குமதிர்ந்தும் பிதிர்ந்தும் பொடிந்தும் உதிர்ந்
தும்விழுந்தும் இப்படிக்குப் பட்டபாட்டினால் அவ்வீட
த்திலநெருங்கியிருந்த மந்திரிபிரதானிகள்மன்னர்மண்ட
லீகர் படைத்தலைவர்பெரியோர்கள்முதலாகக்கலைந்துங்கு
லைந்தும் உலைந்தும் அலைந்தும்ஒடுங்கிஅல்லோலகல்லோ
லப்படுவதை இராஜாதிராஜனறிந்துஇதுவென்னபுதுமை
யாகவிருக்கின்றது சிக்கிரமாயோடிப் பார்த்து வாருங்கோ
ளென்று அளவற்றதூதர்களைத் துரத்தியகாலையில்அவர்
கள்வாயுவினுங் கடுகியோடிப்பார்க்குமிடத்தில் விழிகள்
தெறித்துக் கால்களொடிந்து கலங்கிவிழுந்தவர்கள்போக
த் தப்பினசிலர்பதுங்கித் தப்பித்துக்கொண்டு வாய்புலர
ப் பெருமூச்செறிந்துகொண்டு வேகமாகவந்து இராஜபர
மேஸ்வரனைவணங்கி நாவெழாமற்குளறி யிதனைவிண்ண
ப்பஞ்செய்வதாயினர். சுவாமிகேட்டருள்க தேவரீர்திருக்
குமாரன் தூதனைமடக்கிக்கொண்டு கொடியபாணங்களை
ச்செலுத்திப் போராடிமுடியாமல் தேவாஸ்திரங்களைப்ப
லவாகச்செலுத்தியும் பிரயோசனப்படாத காரணத்தினா
ல் அதிககோபங்கொண்டு படைகளுக் கரசாகவிருக்கின்ற
பாசுபதாஸ்திரத்தை வீரவாகுமுதலிய மாற்றலர்களை வா
ட்டும்படிக்குப் பிரயோகித்தனன், அதைக்கண்டதூதனு
ம் தன்னிடத்திலிருந்த பாசுபதத்தைச் செலுத்தியதால்
அவ்விருபாணங்களுஞ் சீறிதேவப்படைகள்உருக்களையு
ம் மற்றகொடுமைகளுள்ளவைகளனைத்தையும்பெருக்கிஉ
லகங்களைக்கலக்கி வாட்டுகின்றது இவ்விடத்தில்நேர்ந்தச
ம்பவங்கள் அதனால்விளைந்தன இவைகளையெல்லாம்திஷ்
டாந்தமாகக்கண்டு போனவர்களிற் பிராணன்தப்பிச் சில
ர்வந்தனமென்று சொல்லியதைச் சூரன்நிதானித்துப்பா
னுகோபன்பசுபதிபடையைச் செலுத்தியும் இன்னமும்
பகைவனாவென்றவனல்ல ஐயையோ, தூதன்தூதனென்
றிகழ்ந்துபேசினேம் உருவத்தினாலும் செய்கையினாலும்
பிரயோசனமொன்றையுங் காணவில்லை அவனவன் வலி
மையும் சூரத்தையும் நிதானித்தறிந்து அதற்கடுத்த மு
யற்சிகளைத்தேடிப்போர்செய்துவெல்வது வீரனாயிருப்ப
வனுக் கழகும் ஆண்மையுமாம் நமதுகுமாரன்செய்கை
யென்னமாய்முடியுமோவென்று சூரபதுமன் எண்ணமி
ட்டுக்கொண்டிருந்தனன்.

இவ்விதமாய் சராசரப்பிரபஞ்சங்களனைத்தும்திகைத்
துவாடும்படிக்குச் சருவசங்காரக்கடவுளானவ ரிரண்டுரு
வைக்கொண்டு திருவிளையாடல்களைச் செய்கின்றதைப்
போலப் பாசுபதங்கள்சீறி ஒன்றுக்கொன்று பின்னிடை
யாமற் சிலநேரம் வினோதப்போராக்காட்டியவுடன்தங்க
ளிடத்துண்டாகிய பாணகோடிகள்முதலியவற்றைத்திரு
ப்பிக்கொண்டு தங்கள்கொடுமையினால் மாறுபட்டஅண்
டங்கள்புவனங்கள் விண்மண் பாதலமாதியாகிய வஸ்துக்
களையதாப்பிரகாரம்நிலைபெறச்செய்து இராட்சதப்பாதக
ர் தவிரமற்றசீவராசிகளனைத்தையும்வாட்டமொழித்துஉ
யிர்பெற்று வீறிவிளங்கச்செய்து திரும்பித்தங்களைச் செ
லுத்திய வீரர்களிடத்திற் சேர்ந்ததுகள் விருஷபாஸ்திர
மும் வீரவாகுதேவனாக் கலந்திருந்தது இதனைக்கண்ட

தேவர்கள்சந்தோஷப்பெருக்கினற் கரங்களைத்தட்டிநகைதுப் பாசுபதத்தினற் பாதகன் ஜயம்பெருத காரணத்தினல்நாசகாலம் சமீபித்துவிட்டதென்பதற்கையமில்லைஇனி நமதுதுயரங்களைப்போக்கிச் சவுக்கியப்படும் ஹேதுவுண்டெனக் களித்திருக்கின்றகாலையிற்பானுகோபன்செலுத்தியபாணம் வியர்த்தமாகத்திரும்பிவிட்டவுடன் திகைத்துச் சமுத்திரத்தைப்போலச் சூழ்ந்திரைந்திருந்த இரதகஜதுரகபதாதிகளைக் காணுதவனுய்ஏங்கித் தனியனுகநிற்பவனிதனைச் சிந்திப்பதாயினன் கணப்போதிற்சராசரப் பிரபஞ்சங்களைத்தகித்துச் சாம்பலாக்கவல்ல பாசுபதாஸ்திரத்தைப்பிரயோகித்தனம் பகைவனைஜயங்கொள்ளாமல் அபலமாகத் திரும்பிவிட்டது, இனிசெலுத்துவதற்கு அதனிலுஞ்சிறந்த பாணமென்னவிருக்கின்றது, மேலும்பெருத்துவந்த சேனைவெள்ளங்க ளனைத்தையும்மாளக்கொடுத்து ஏகாங்கியாய்க் கூப்பிட்டகுரலுக்கேனென்பவ ரொருவரின்றிநின்றேன் பகைவரோ வீறியிருக்கின்றனர், இதற்கென்செய்வதென் றுவாடிவருந்தி இனிமாயைப்பெருக்கினலல்லது இந்தத்தூதனை ஜயிக்கவொண்ணுதென நிதானித்துத் துரிதமாய்ச் சுக்கிராசாரியன் தனக்குபதேசித்திருந்த மோகனமந்திரமொன்றை ஜபித்து அதன்முயற்சியினல் தன்தேகத்தைமறைத்து புகையுருக்கொண்டு வானத்திலெழும்பினன், அதைக்கண்ட பூதப்படைகள் முதற்றினத்தைப்போலவே இக்காலத்தினும்பயந்து பாதகன் மாயமாயோடிப்போயினன் போயினனென்று கரங்களைக்கொட்டிக் கொக்கரித்துச் சிருங்கநாதங்கள் அட்டகாசங்களைச்செய்து ஜயவுற்சாகங்களுட னிருக்கின்றபோது பகற்போதுகழிந்து சூரியன் மேற்புறக்கடலில் மறைந்தகாட்சி யெப்படிக்கிருந்ததெனில், பாதகன் சற்றுநேரத்தில் மோகனுஸ்திரத்தைச் செலுத்தவிருக்கின்றனன், அதன்மகிமையினல் நம்மவர்களனைவரும் மாண்டுபோகவரும்அந்தக்கோரத்தை யென்விழிகளைக்கொண்டு பார்க்கமாட்டேன் மேலும் நாமிருப்போமாகில் என்னசெய்வானேவென்கின்ற ஏக்கத்தினல் பிராணனைத் தப்பிப் பிழைக்கநினைந்து ஓடியொளித்தவனைப்போலத் தோற்றியது.

அத்தருணத்தில் வீரவாகுதேவர் தன்துணைவர் முதலாகிய பிரமுகாளைப்பார்த்து இன்றையதினமும் பாதகனிறந்தவனல்ல மாயையின்மூலமாய்த்தப்பித்துக்கொண்டோடினன். இனிநாம்செய்யவேண்டியதென்னென் றுவினவிய முன்னிலையிற்சேவித்துச் சமுத்திரத்தைப்போல இரைந்துவந்த நால்வகைச்சேனைசமுத்திரத்தையும் மாளக்கொடுத்து நிருவகிக்கப்படாமற்பேடியைப்போல முதுகுகாட்டிமறைந்தான் எதிர்ப்பவரொருவரையுங் காண்கிலோம் மேலும் சூரியபகவானும் அஸ்தமித்தனர், ஆதலாற் சேனைகளுடன் பாசறையைச்சேர்ந்து தேவாதிதேவனுகிய கந்தசுவாமியைத் தரிசித்து வணங்கியிருந்திரவுகழிந்தவுடன் நாளையத்தினம்காலமே உயுத்தகளத்தைச் சேர்ந்து மேல்நடக்கவேண்டியதை யோசிப்பதுதகுதியாகக் காணுகின்றது அப்பால்தேவரீர்சித்தப்படிக்கு நடக்கக்காத்திருக்கின்றனமென்று சொன்னதைக்கேட்டு நல்லகாரியம் அவ்வாறே நமதுகர்த்தனைச் சேவித்திருந்துவருவது காரியமெனச்சம்மதித்து பீட்சி பேரிகையை யறைவிக்கும்படிக்குக் கட்டளையிட்டனர் இந்தச்செய்திகளனைத்தையும் வானத்தில்மறைந்து பார்த்துக்கொண்டிருந்த பானுகோபன் இதனைநினைப்பதாயினன், பரமசிவத்தின் பரிபூரணகடாக்ஷத்தைப்பெற்று வீராதிவீரனுய் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனுகத் தன்னுணையைச் செலுத்தி அகன்ற மண்டலாதீஸ்வரனுக வாழுகின்றசூரபதுமன் பிள்ளையானவன் முதல்நாளைய யுத்தமுனையிற் புறந்தந்தோடினனென்கின்ற ஏளனச்சொல்லெங்கும்பரவி யிழிவாய்வசனித்துக்கொண் டிருக்கின்றனர், அதனுடன் இன்றையதினமும் பகைவருக்கஞ்சி மறைந்து போயினனென்னும் பழிப்புரையையும் பெறுவேனுகில் இனியென்னை யாவர்மதிக்கப்போகிருர்கள் பெண்களும் ஏளனமாகப் பேசிக்கொள்ளவரும் அகண்டசெல்வச்சம்பத்தைப்பெற்று ஜயசாலியாகவிருந்தவனெருகாலம் எதிர்த்துவந்த பகைவருடன்போராடி வெல்லத்திராணியில்லாமல் திரும்புவானுகில் அவன்சவுக்கியத்தைக் கோரியிருக்கப்பட்ட தாய்தந்தையர் பெண்சாதி புத்திரமித்திரர்கள்மதிப்பற்று அசட்டையாகப்பார்ப்பார் சுயஜனங்களே மாறுபடுவாரெனச் சொல்லுவோமாகில் அன்னியர்கள்அவமதித்திகழ்வதைப்பேசவும்வேண்டுமோ மேலுமித்தினமும் போரிலேளைத்துவந்தனனென்னும் செய்தியை யிராஜாதிராஜன் கேள்விப்படுவானுயின் ரவுத்திராகாரமாகக் கோபித்து யிப்படிப்பட்டபேதை யிந்தபட்டணத்திலிருப்பினும் நமக்குவசைநேருவதன்றியில் வீரராகவிருக்கப்பட்டவர்களுக் கிதொருகாரியமாக நேற்றுஅதிசூரனுகவிருந்த சூரகுமாரன் அபஜயப்பட்டு வந்தகாலத்தில் அரசன் அவனையென்னசெய்தானென் று மேல்நடக்கவிருக்கின்றபோரில் பிராணனுக்குத்துணிந்து போர்புரியாமல்உயிரைத்தப்பித்துக்கொண்டு திரியவரும் ஆதலால் பானுகோபனை யிந்தப்பட்டணத்தைவிட்டுதுரத்திவிடக்கடவீர்களெனக் கட்டளையிடவரும் இதுவுமல்லாமற் சூரியனைத்தளைசெய்த வீராதிவீரனென்றிதுவரையிற்சகலருநம்மைமதித்துவந்த கம்பீரத்துக்கும் அழிவுநேருவதல்லாமல் ஆயிரத்தெட்டண்டங்களினும் ஆக்கினைசக்கரத்தைச் செலுத்தி பலயுகங்களாக எதிரின்றிப் பரிபாலனஞ்செய்துவந்த பிதாவின் வெற்றிக்குமிழிவுநேரும் இவைநிற்க வீரனுகவிருப்பவன் எத்தகைய ஜயசாலிகளாகிய பகைவர்வந்தெதிர்த்தபோதினும் தீரனுய்ச் சேனைகளுக்குமுந்திநின்று தன்னுற்கூடியவரையில் அகோரமாகிய சண்டைசெய்துபகைவரைவென் றுவெற்றியாளனுய்ப் பலரும்போற்றத்தக்க கீர்த்தியைநாட்டவேண்டும் அல்லது சத்துருக்கள்முனையிற் பின்னடிவையாமற்பொருது வீரசொர்க்கத்தையாவது சேரவேண்டும் இவ்விரண்டிலொன்றைப் பெறுவது அரசர்களுக்கடுத்த நீதியாகவும் சாத்திரயுக்தமாகவு மிருக்கின்றது ஆதலால் முதல்நாளையைப்போலவே யின்றைக்கும்போர்செய்து வருந்தியிடைந்தானென்னும் பழிப்புரையைப்பெறுவது என்னைத்தவனுக்கடாது மேலும் வீரத்துக்கும் தகுந்ததன்று சாமபேததானதண்டமென்னும் சதுர்விததந்திரங்களினற் பகைவரைவென்று வெற்றிபெறுவதே அரசர்களுக்கடுத்த நீதியாகக் காணப்படுவதால் வஞ்சகப்போரைச்செய்தாவது தூதன்முதலியவர்களை ஜயங்கொண்டு பட்டணத்துக்குப் போவதுஅழகும் ஆண்மையுமாம் அச்செய்கையை யாவருமிகழாமல் அரசர்களுக்கடுத்த நால்வகை உபாயங்களினென்றினல் விஜயப்பிரதாபத்தைக் கொண்டா னிவனே சூரனென்று பலரும்புகழ்ந்து பேசிக்கொள்வார் அதனல்

முன்னம்பெற்றிருக்கின்ற அபவாதச்சொல்லும்நிவிர்த்தி
யாகிவிடும் நல்லதிக்கருமத்தை யுறுதியாகநினைந்து எதி
ரில்நின்றுமோகனப்படைகளைச்செலு த்திவெல்லத்துணி
வேனுகில் தூதன்அவ்வவைகளுக்கடுத்த மறுகணைகளை
ப்போக்கித் தடுத்துவாட்டுவான் ஆதலாற் சமர்க்களத்திற்
சின்னபின்னப்பட்டிறந்தான் முதுகுகாட்டியோடினனெ
ன்று வீரர்களாகவிருப்பவர் பழிப்புரையாடுவதினும் ம
றைவிடத்திருந்து திவ்வியபாணத்தைச் செலுத்தியாவ
து பகைவரை அசப்படுத்தி ஜயப்பிரதாபத்துடன்திரும்
பக்கடவேன்.

ஒருகாலம்மீட்டும் தேவாஸ்திரங்களைப் பிரயோகிப்பே
னுகிலும் பலபலவேடிக்கைப் போனாவிளைத்துதிரும்புவ
தல்லது அவற்றினுற்பிரயோசனத்தைக்கண்டிலேன் அல்
லதின்னமும் நம்மிடத்திலிருக்கின்றதிவ்வியபாணங்களை
ச்செலுத்திப் பார்ப்போமென்ருல் தூதன்அவற்றிற்குந்
தகுந்தபடைகளை மாறுதூண்டித்தடுப்பா னிதற்குச்சந்
தேகமில்லை உடனே நாமிவ்விடத்திலிருப்பது வெளிப்ப
டையாகத் தெரிந்துபோம் அக்காலத்திற் சத்துருக்கள்வி
ண்ணிடத்திலும்வந்து வளைத்துக்கொண்டு கொடியபோ
ரைச்செய்யுமுன்னிலையில் முன்னமே எதிரிபாணத்தினு
ல்வருந்தி வலியற்றுக் கைகால்களோய்ந்திருக்கின்ற என்
னுல் அவர்களுடனெதிர்த்து வாதாடமுடியாது மறைந்
தோடிப்போகவும்விடார்கள் ஆதலாற் பலபலவெண்ணி
யாவதென்னை அவர்கள்பாடிவீட்டுக்குத்திரும்புவதன்மு
ன்னம் பகைவரை நொடிப்போதில் வளைந்துகொண்டு ம
தியைமயக்கி யமகிங்கரரைப்போலப் புயங்களையிறுக்கக
ட்டி வருத்திக்கொல்லவல்ல மகிமையையுடைய மோகன
ப்படையை விரைவிற்செலுத்தி ஜயப்பிரதாபத்தைப்பெ
ற்று மீள்வதே இத்தருணத்துக்கடுத்தஉபாயமாகக்காணு
கின்றதெனத் துணிவுகொண்டவனுய்த் தான்வருமுன்னி
லையிற் பிதாமகளாகிய மாயை அனுக்கிரகஞ்செய்திருக்
கின்ற மோகனப்படையைத் தீவரமாகவெடுத்து அதற்கு
ரிய வழிபாடுகளைச்செய்துபோற்றிச் சொல்லுவான் ஓ!
மோகனுஸ்திரமே நீபோய்த் தூதன்முதலாகியவீரர்களை
யும் பூதவெள்ளத்தையும் மடக்கிக்கொண்டு மதியைமய
க்கிப் பிராணனையுண்டு சேர்த்துக் கட்டிக்கொண்டுபோய்
க் கடல்களினந்தத்திலிருக்கின்ற சுத்தோதகச்சமுத்திரத்
திற்சேர்த்து என்மனக்குறையை முடிப்பாயெனவேண்
டி வில்லிற்பூட்டி மந்திரபூர்வகமாகப்பிரயோகித்தான் அ
துவெளிப்பட்டவுடன் ஊழ்வினையானதுபைய நுழையு
மென்பதுபோலத் தன்செய்கைகள் யாவருக்குந்தோற்ரு
மற்படிக்கு வானத்தைக்கடந்து பூமியைச்சேர்ந்துசோட
சகலைகளையுடைய பூரண சந்திரோதயத்தைக்கண்ட கட
லைப்போல ஜயவுற்சாகங்களுடன் பாசறையைநோக்கித்
திரும்புகின்ற பூதப்படைகள் ஜயசாலிகளாகிய எண்மர்
இலக்ஷர் படைத்தலைவர் வெற்றிமாலைதரித்திருக்கின்றபு
சபலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர்முதலானவர்
களிருக்கின்றவிடங்களிற் புகையைப்போலப்பரவி விஷ
ப்பரிசம்பட்டுச் சோர்பவரைப்போல விழிகள்சொருகவி
ட்டு மதிமருண்டுகுரூரமாகிய ஆலகாலம்வெளிப்பட்டகா
லத்திற்சகலபிராணிகளும்மெய்மறந்து வாடினதுக்கொப்
பாகஅவர்களுணர்ச்சியைமாற்றியகாலையிற் பிரேதங்களை
யொத்துச் சகலரும் அரிக்கிடையாக விழுந்தார்கள் அத்
தருணத்தில் மாயைப்படை தன்செயலைக்காட்டிச் சற்று
மிரக்கமில்லாமல் வீரவாகுதேவர் முதலானவர்கள் உயி
ரையுண்டு தன்னைச்செலுத்திய இராஜகுமார னிஷ்டப்ப
டிக்குக் கடலிற்கொண்டுபோய்ச் சேர்க்கநினைந்து சருவ
சங்காரகாலத்திற்பெருகி உலகங்களைச் சிதைத்தழிக்கும்
பிரசண்டவாயுவி னுருப்பெற்று அண்டரண்ட புவனச
ராசரங்களைத் தகித்தழிக்கவல்ல வடவாமுகாக்கினிக்கொ
ப்பாகப்பரவி அலையோய்ந்த சத்தசாகரங்களுக்குச் சம
மாகப்பரந்து விழுந்துகிடக்கின்ற வீராதிவீரர்களாகிய
ஆயிரவெள்ளம் பூதப்படைகளையும் இலக்ஷர்படைத்த
லைவர்களையும் ஒப்பற்ற பராக்கிரமசாலியாகிய வீரவாகு
தேவரையுஞ்சேர்த்துப் பட்சிக்கூட்டங்களைப்பற்றி வே
டன் வலைப்பையி லடைப்பதுக்கொப்பாகப் பலவிதமா
க விறுக்கிக்கட்டி யெழுந்துவான வழிக்கொண்டுபானு
கோபன் மனதினுங்கடுகி அதிவேகமாகநடந்து லவணம்-
பால்-தயிர்-நெய்-கறுப்பஞ்சாறு மதுவெனசசொல்லநின்
றஆறுசமுத்திரங்களையும்நிமைப்போதிற் கடந்துசுத்தோ
தக சமுத்திரத்தைச் சேர்ந்து வீரவாகுதேவர் முதலாகி
ய படைவீரரையும் பூதவெள்ளத்தையும் அங்நீர்ப்பெரு
க்கிற் கொண்டுபோய்ப் பாதலத்திற்சேர்த்து அம்மாயப்ப
டையான்து நாலுமூலைகளினும்பத்திரமாய்காவல்கொண்
டிருந்தது இச்செய்கைகளனைத்தையும் வானத்திலிருந்த
பாதகனுகிய பானுகோபன் கண்டவுடன்மனவாட்டமொ
ழிந்து களித்தவனுய் நாம்செலுத்தியதிவ்வியப்படையான
து வீரவாகுமுதலாகியசகலரையும்தன்வயப்படுத்திக்கொ
ன்று கட்டிக்கொண்டுபோய்ச் சுத்தோதகக்கடலிற்சேர்த்த
து நாம்நினைந்துசெய்த உபாயம் வெகுநேத்தி நேத்தியெ
ன்று பதினுறுபற்களுந் தோற்றத்தக்கதாக நகைத்து சந்
தோஷசாகரத்திலமுழ்ந்திப் புயங்கள்பூரித்தோங்கத் துரித
மாய் அத்தலத்தைக்கடந்து வானவழிக்கொண்டுபோய் ந
வரத்தினமயமாகியமாடமாளிகைகள் கூடகோபுரங்கள்அ
ணியணியாக விளங்கிக்கொண்டிருக்கும் நீண்ட வீதிகளை
ப்படைத்து இராஜதானியாக விருக்கின்ற வீரமாமயேந்
திரபுரியிற் பிரவேசித்து ஆயிரத்தெட்டண்டங்களுக்கும்
அதிபனுய்க் கொடுங்கோல்செலுத்திவரும் சூரபதுமன்சி
ங்காதனத்தமர்ந்து மந்திரி பிரதானிகளாதியாகப்போற்றி
ச்சூழக் குமாரன் வரவுக்கெதிர்பார்த்துக்கவலையுற்றிருக்கி
ன்ற சபாமண்டபத்திற்சேர்ந்து பிதாவைக்கண்டு சேவித்
து அதிகவுற்சாகத்துட னிதனைச்சொல்லுகின்ருன்.

ஐயனே, யித்தினம்அடியேன் யுத்தகளத்திற் போனபி
ன்பு தேவரீர்கட்டளையின்படிக்குத் தூதனைமடக்கிக்கொ
ண்டு தேவாஸ்திரமுதலியபடைகளைக்கொண்டு பலவிதங்
களினும் போராடி முடியாமற்கடையில் பிதாமகள் கடா
ட்சித்திருந்த மோகனப்படையைச் செலுத்தியகாலத்திற்
பிதாவே அதன்பெருமையை யென்னசொல்லுவேன்தட்
சணத்தில் வீரவாகுஅவன் துணைவர்இலக்ஷர்படை வீர
ர்கள் ஆயிரம்வெள்ளம் பூதப்படைகளையும்மடக்கி அறி
வையழித்துக்கொன்று பலபாசங்களினுல் அவர்கள்தேக
ங்களனைத்தினையுங் கட்டிக்கொண்டுபோய்ச் சுத்தோதகக்
கடலிற்சேர்த்து விட்டதுஅப்பனே தூதன் மாண்டபோ
தேபோர்முற்றியதாகநினைக்கவேண்டும் இனிதேவரீர்மன
க்கோட்டமற்றுச்சவுக்கியமாய் அரசுசெலுத்திராஜபோ
கங்களைஅனுபவித்திருக்கக்கடவீர்இவ்விரவுகழிந்துநாளை
யப்பொழுது விடிந்தவுடன் சதுரங்கசேனைகளையுங்கூட்
டிக்கொண்டு நானேபோய்ச் சூருவளியைப்போலப்பாச

றையை வளைத்துக்கொண்டு பாலசுப்பிரமணியனையும் ம
ற்ற பூதவீரரையும் சின்னபின்னப்படவாட்டி ஜயசாலியா
ய்ப் பாசறையையிடித்து நிலத்தில் நிரவிப்போட்டவுடன்
அவனைநம்பி வந்திருக்கின்ற இந்திரன்,பிரமன், விஷ்ணு
முதலிய தேவர்களைப்பிடித்துவந்து உமது சந்நிதானத்தி
ல் விடக்கடவேன் இதிற்பிசகிராதென்று ஜேஷ்டபுத்திர
னுகிய பானுகோபன் சொன்னஜயவார்த்தைஅமுதத்தை
ப்போலச் செவிகளில் விழுந்த மாத்திரத்தில் வாடித்தி
கைத்திருந்த மனங்குளிர்ந்து சந்திரனையொப்ப முகாரவி
ந்தம்விளங்கவும், பருவதங்களுக் கொப்பாகப்புயங்கள் பூ
ரித்துவாகுவலயங்கள் தெறித்து நவரத்தினமயமாகியகட
கங்கள் வெடித்துதிர்ந்து சரீரம்புளகித்துமயிர்க்குச்செறி
ய மூன்றும்பிறையைப்போலக் கோரைத்தந்தங்கள்விளங்
கநகைமுகனுய்ச் சரேலென்றெழுந்து எதிரில்நிற்கின்றபா
னுகோபனையிருகரங்களை நீட்டிச் சேர்ந்துமுத்தாரங்கள்
மோகனமாலைகள் சிரோரத்தினமயமாகிய மதாணிப்பதக்
கங்கள் பொடிப்பொடியாயுதிர்ந்துபோகத் தக்கதாகவிசா
லமாகவிளங்கும் வயிரமார்பிலிறுக வணைத்துத் தழுவிக்
கொண்டவனுய்வெண்பட்டினுலும், முத்தின்சரங்களினு
லும், வயிரங்களினுலும், அலங்கரித்திராநின்ற பூச்சக்கி
ரக்கொடைகள் கவிந்திருக்கத்தக்கதாகப் பஞ்சணை மெத்
தையைப் பரப்பியிருக்கும் சிரோரத்தினமயமாகியசிங்கா
தனத்திற்சேர்ந்து பாலபருவத்தில் அன்பாய்விளையாடியி
ருந்ததைப்போலப் பக்கத்தி லிருத்தித்தழுவிதலைமயிரை
க்கோதி முதுகைத்தடவி முகத்தைப் பீதாம்பரத் தொங்
கலினுற்றுடைத்து முத்தமிட்டு உச்சியைமோந்து அப்ப
னேஐயனே பிள்ளைக்கலிதீர்க்கவந்தவதரித்த பெருமானே
உன்சூரத்தை நானென்னென்று கொண்டாடுவேன் பால
பருவத்தில்அரம்பை- ஊர்வசி- திலோத்தமை- மேனகை
யாதியகன்னியர்கள்நகர்ப்புறங்களினும் நின்றுசொர்னச்ச
ங்கிலிகளைப்பற்றிஅகன்றமண்டலாதீஸ்வரன் திருக்குமா
ரனேவீராதிவீரர்களை வெல்லவல்ல தீரனே மன்மதவடி
வைப்பெற்ற காளையே தாய்தந்தையர்செய்த தவப்பேற்றி
னுல் அவதரித்த கண்மணியே குலோத்தாரகஞ் செய்யத்
தோற்றிய வீரசிங்கமே உறங்குறங்கெனத் தாலாட்டியும்
ஜோ! ஜோ! வெனலாலிகளைப்பாடியும் இவ்விதஉபசாரங்
களுடன் உறக்குவித்து வருகின்றகாலையில் ஒருதினஞ்சூ
ரியன் கிரணகாந்தியின் பெருக்கானதுஉன்னரியதிருமுக
மண்டலத்திற் ருக்கிய மாத்திரத்திற்கோபித்துப்பாய்ந்து
ஒற்றைவண்டிலும் சத்தாவென்னும்பெயரையுடையஏழு
பச்சைக் குதிரைகளும் பூண்டுஅருணன்செலுத்தாநின்ற
இரதத்தின்பேரி லாரோகணித்து அரைக்கணத்துக்குள்
ளாகஆயிரக்காதவழிசெல்லும் சூரியனைப்பற்றிவந்துதொ
ட்டிற் காலிற்கட்டி உறங்கும்போது பிரமன்வேண்டஅவ
ன்பாணத்தைப் பெற்றுவிடுதலைசெய்தவீரனல்லவோ அ
தற்குரியநாமத்தைப் பெற்றிருக்கின்ற வீராதிவீரனேஅ
ன்றுமுதல் இன்றையவரையிற் சென்றசென்ற விடங்களி
ற் சத்துருக்களைப் புறங்கண்டுவெற்றிகொண்டல்லதுதிரு
ம்பினவனல்லவே யென்றுஅடிக்கடி கட்டிக்கொண்டுமுத்
தமிட்டுப் புத்திரசிகாமணியேகேட்பையாக.

பிதாவானவன் மனக்கோட்டமற்றுக்களித்துச்சவுக்கிய
த்தைப் பெற்றிருப்பதும்பலராலும்பூசிக்கப்பெறுவதும்
தான்செய்த தவமுயற்சியினுலுதித்த புத்திரன்தீரனுய்ம
ரபைவிளக்கி வருவதினுலல்லது வேறுமுண்டோ பன்றி
பலகுட்டிகளைப்பெற்றதினுற் பயனென்னை குஞ்சரமான
துஒருகுட்டியை யீனுமாயினும் அதிகபலப்பிராப்தியுண்
டு அவ்வாறே நீயெமதுகுடியிற்பிறந்து அவுணமரபைவி
ளக்கிய படியால்நானும் மனச்சஞ்சலங்களை யொழிந்த ச
லனமற்றுப்பலராலும் பூசிக்கும்படியாகியமேம்பாட்டை
ப்பெற்றுப் பற்பலவளங்களையும்புதிதாகஉன்புசபலபரா
க்கிரமத்தினுற் சம்பாதித்துக்கொண்டேன்இதுவுமல்லாம
ற் பலகாலம் அரியதவங்களைச் செய்ததற்கிரங்கிக் கொன்
றை அறுகுகங்கைபிறைவிளங்கும்சடாமண்டல தாரியாகி
ய சிவபிரான் இச்செல்வத்தைக் கடாட்சித்திருந்தனர், அ
துபொய்யாகும் அவ்வரசுரிமையையும் அகன்றசாம்பிரா
ச்சிய விபவங்களையும் அப்பனே யித்தினம் நீகொடுக்கப்
பெற்றேனெனப் பலபல நயமொழிகளைப்பேசி அப்போ
தணிந்திருந்த போரணிகளைமாற்றிச்சிரோரத்தினமயமா
கியகிரீடம் வாகுவலயம் மதாணிப்பதக்கம் முத்துமாலை
மோகனமாலை வயிரக்கடகம் பீதாம்பரமுதலியஆடைஆ
பரணவிதங்களைப் புதிதாகத் தருவித்துத் தன்கையினுல
ணிந்து அப்பனேயிப்போதுநீசொல்லியபடிக்குநாளையத்
தினம்சதுரங்கசேனைகளைக்கூட்டிக்கொண்டுபோய்சண்மு
கனைவென்றுகொடிய பூதரைக்கொன்று அவனைத் துணை
ப்பற்றிவந்திருக்கின்றஇந்திரன், பிரமன், விஷ்ணுவாதிய
தேவர்களைக் கட்டிக்கொண்டுவந்துஅரியசிறையிலிட்டு எ
ன்பகையை முடிப்பா யிப்போது மிகவும் வருந்திவாடி
யிருப்பதால் துரிதமாய் உன்னரண்மனையைச்சேர்ந்து ப
ரிசுத்தனுய்ச்சகலசவுக்கியங்களையும் அனுபவித்திளைப்பா
றக் கடவாயென விடைகொடுத்தபோது பிதாவேஉமதிஷ்
டப்படிக்குச் செய்யக்கடவேனெனப்பணிந்துவெளிவந்து
ஜயபேரிமங்கல முரசமுதலியவாத்தியங்கள்தாம்தாமென
முழங்கப் பட்டுவர் புகழ கட்டியக்காரர்எச்சரிக்கைசொல்
லிப்போக தவளக்குடைகள் பிடித்துவர வெண்சாமரைக
ள் ஆலவட்டங்க ளசைத்துவர அளவற்றஅருகுதீவட்டிக
ள் காட்டிவர இவ்விதராஜவைபவங்களுடன் அரண்மனை
யைச்சேர்ந்து கோடானகோடிசுந்தரவதிகளாகிய கன்னிய
ர்கள் முத்தாலம்மஞ்சள்நீர்ஐவகைச்சோற்றுவிளக்குகளா
தியாகப் பொற்றட்டுகளினேந்தித்திருஷ்டிபரிகாரமாகச்சு
ழற்றி நிற்கவும்பெரியோர்கள்அறுகுஅட்சதைகளையிறை
த்து ஜயாவிஜயபவாவெனவாழ்த்தவும் அரம்பையர்நடிக்
கவும் இவ்விதசம்பிரங்கள் மத்தியில் தன்மாளிகையிற்பி
ரவேசித்துப்பனிநீரில் ஸ்நானஞ்செய்து பவுத்திரனுய் நி
த்தியகடன்களை முடித்துக்கொண்டுதன்தேவிஉபசரித்து
ப் படைக்கஅறுவகைச் சுவைகளைவாய்ந்த போசனவிதங்
களையும் கச்சாயவகைகளையுந்திருப்தியாக உண்டுஸ்ரீகந்த
க்கலவையைப் பூசிப்புனுகுசவ்வாது சாத்திப்பரிமளமிகு
த்த கற்பகமலர்மாலைகளைச்சூடிக் கர்ப்பூர தாம்பூலஞ்செ
ய்துமுற்றியவுடன் சர்வாபரணபூஷிதைகளாகிய சுந்தரமு
ள்ளபலகன்னியர்கள் சயித்தியஉபசாரங்களைச்செய்யப் பு
ஷ்பவிதழ்களினுற் பாயல் பரப்பியிருக்கின்றஅம்ஸதூலி
காமஞ்சத்தின்மீது பள்ளிகொண்டு நித்திரைசெய்தனன்.

இவைநிற்க வீரவாகுதேவர் முதலானவர்களைமோகனு
ஸ்திரம் வளைத்துக்கொண்டுபோய்ச் சுத்தோதகசமுத்தி
ரத்திற் சேர்த்ததெனச்சொல்லி யிருக்கின்றனம்,அவர்கள்
பழையபடிக்கு பாலசுப்பிரமணியதேவர் கடாட்ச வீட்ச
ணியத்தினுல்உயிர்பெற்றெழுந்தவிதத்தையும்அதன்பின்
புநடந்தஅனர்த்தங்களையும் சவிஸ்தாரமாகப்பேசுவோம்

கேட்பீராகவென்று.சூதபுராணிகர்சொல்லத்தொடங்கின
ர்,யுத்தமுனையில்தாபரிக்கமாட்டாமல்மனவருத்தத்துடன்
வானத்திற்பாய்ந்துமறைந்திருந்தபானுகோபன்வஞ்சகமா
கச்செலுத்தியமாயைப்படைசெய்தகொடுமைகளனைத்தை
யும்வானத்தில் வேடிக்கைபார்த்திருந்த தேவர்கள் கண்டு
மனம்பதைபதைத்து உடல்நடுநடுங்கிப் பெருமூச்சுகளெ
றிந்து துக்கசாகரத்தில்முழுகி விழிகளிற்றுரைதாரையாக
ஜலம்பெருக்கெடுத்தோட வாய்விட்டுகோடுகோடெனப்பு
லம்பினவர்களாய்க் கரங்களைப்பிசைந்துகொண்டுநாவறள
முகப்பொலிவுகளற்றுப்பிளக்க மோதிக்கொண்டுசரீரமெ
ங்கும்வியர்க்கவாடிக்களைத்துஎக்காலத்தும்படாததுன்பங்
களைஅனுபவித்துக் குமாரதேவருக்கு இச்சம்பவங்களை
விண்ணப்பஞ்செய்வதாகத் திசைகெட்டோடினர், அவர்க
ளுக்குமுன்னதாய் நாரதர் மனோவேகத்தினு மேலிட்டுச்
சென்றுபாசறை விடுதியைச்சேர்ந்து நவரத்தின மயமாக
ச்சொலித்துக் கொண்டிருக்கும் சபாமண்டபத்தின் முக
ப்பிற்றோற்று நின்ற வயிரசிங்காதனத்திற் பிரமன், விஷ்
ணுவாதியானவர்கள் சூழவீற்றிருந்து அவர்களுடன்வார்
த்தையாடுகின்ற பாலசுப்பிரமணிய தேவனைத் தரிசித்து
வணங்கிப்போற்றிக் கரங்களைக்கூப்பிக்கொண்டு தேவேந்
திரன் மனம்புழுங்கிவாடி யேங்கத்தக்கதாக இதனைவிண்
ணப்பஞ்செய்வதாயினர்.

ஐயனே யித்தினச்சண்டையிற் பலவெள்ளமிராட்சத
சயின்னியங்களை மடியக்கொடுத்து பானுகோபனெனவன்
கொடியபோரைச் செய்து வீரவாகுதேவருக்குத் தோற்ற
வனாய்ஓடிப்போகின்றவனைப்போல மேகத்தில்மறைந்துச
டுதியிலொருமோகனப்படையைப்பிரயோகித்துவீரவாகு
முதலிய நவவீரர்கள் இலக்ஷர்படைவீரர்பூதவெள்ளமா
தியாகக் களைத்துஅறிவழிந்துவிழும்படிக்கு வாட்டிக்கொ
ன்று கட்டிக்கொண்டுபோய்ச் சுத்தோதக சமுத்திரத்தி
ற் சேர்க்கச்செய்தனனென்று சொல்லிவருகின்ற காலையி
ல் தேவர்கள் ஒருவர்பின்னொருவராக ஓடோடியும் வந்து
சிவகுமாரன் திவ்விய சரணாரவிந்தங்களிற்சேவித்துத்தா
ங்கள் கண்டசவிஸ்தாரங்களை அறிக்கையிட்டுமோசம்வந்
தது இதற்கென்னசெய்வோமென்று மிகவும் பரிபவப் ப
ட்டுத் துக்கிக்கின்றபோது சிவசுப்பிரமணியக்கடவுளுக்கு
த் திருவுளமிரங்கிப் பயப்படாதீர்கள் இந்தநிமிஷத்தில்ந
ம்மவர்களனைவரையும் சுகசீவிகளாகத் தரிவிக்கின்றனமெ
னக் கையமர்த்தித் துரிதமாய்த் தமது திருக்கரத்தில்விள
ங்குகின்ற வெற்றிவேலாயுதத்தைப் பார்த்துநீவேகமாய்ப்
போய் வானகங்கையைப்போலத் தெளிந்த நீர்ப்பெருக்கி
னையுடைய சுத்தோதக சமுத்திரத்தைச் சேர்ந்து அவ்வி
டத்திற்காவல்கொண்டிருக்கின்ற மோகனாஸ்திரத்தை அ
தம்பண்ணிக் கடலிற் படிந்திருக்கின்ற நமது வீரவாகுமு
தலிய படைத்தலைவர் பூதவெள்ளம்பெற்றிருக்கின்றமயக்
கத்தையொழித்து வேகமா யிவ்விடத்திற்கொண்டு வந்து
சேர்க்கக்கடவாயெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் மகா
பாக்கியமென் றெழுந்து குரூரமாகிய கிரணங்களைவீசும்
ஆயிரகோடி சூரியர்கள் ஏககாலத்திலுதித்ததைப்போல
ப் பிரகாசித்துஉலகங்களிற்பரந்துமூடியிருந்த இருட்பெ
ருக்கையோட்டிசொலித்துக்கொண்டுவிஷப்பற்களையுடை
ய சர்ப்பங்களையுண்டுபண்ணிச் சுவாலை மிகுத்திராநின்ற
ஆலகாலவிஷத்தைப்பெருக்கிக் கணக்கிறந்தகாலாந்தகனை
ப்படைத்து இடி-மின்னல்-குமுறல்களைக்காட்டும்மேகசா
லங்களை விதித்து நிமைப்போதிற் சராசரப் பிரபஞ்சங்க
ளை யழிக்கவல்ல பாசுபதமுதலிய திவ்விய பாணகோடிக
ளைவெளியிட்டு அனற்சமோகங்களைப் பெருக்கிக்கொண்
டு வரும்போது அந்தவெப்பத்தினால் மேகங்கள் வெந்து
மின்னல்களையும் இடிக் கூட்டங்களையுங்கக்கித்தகிக்கப்ப
ட்டுமங்கவும் தீவுதீபாந்திரங்கள் கெவிகள்குகைகள் மூலை
முடுக்குகளிலிருந்த இருளனைத்தும்அதப்பட்டும்சத்துரு
க்களாகிய அவுணர்கரியதேகங்களினொளிமாறிதேவர்களை
ப்போல விளங்கவும் பெரும்புறக்கடலைச் சூழ்ந்திருக்குந்
தலத்தை எக்காலத்தினும் மூடியிருக்கின்றஇருட்பிழம்ப
னைத்தும் நாசம்பட்டு மற்றவுலகங்களைப்போல வெள்ளி
டையாசத்தோற்றக்காட்டவும் அக்கினிதேவன் வெம்மை
யொழிந்து பரதவிக்கவும் வடவைக்கனல் கொதிப்படங்கி
யொளிக்கவும்அண்டச் சுவரைத்தாங்கி நின்றயானைகள் ம
தப்பெருக்கையடக்கிவீறிட்டுவாடவும் சத்தசாகரங்களுங்
கொதிப்பெடுத்து அலைகளோய்ந்துசுவறிக்காட்டவும்பூமி
க்கச்சாணியாகநிற்கின்றமகம்மேருபருவதம் கிடுகிடாய்த்
ததிரவும்ஆதிசேஷன்முதலிய அஷ்டமாநாகங்களுந்திடுக்
கிட்டுப்பதைத்துவிஷங்களைக்கக்கிச்சோரவும்ஒற்றைவண்
டிலையுடையதேரில்வருகின்ற சூரியன்பதைபதைத்து ம
றையவும்விமானத்தி லாரோகணித்துப்போகின்ற சந்திர
ன்தனதுசோடசகலைகளின்குளிர்ச்சியடங்கித் தீக்கொழுந்
தைப்போலவீசவும்இவ்விதஉற்பாதங்கள்தோன்ற வெற்
றிவேலாயுதமானதுவேகமாய்ப்போகின்றவேளையில்பாசு
பதாஸ்திரம்,நாராயணாஸ்திரம்,பிர்மாஸ்திரம்,அக்கினியா
ஸ்திரம்,வாயுவாஸ்திரம்,குபேராஸ்திரம்,வருணாஸ்திரம்,
இந்திராஸ்திரம்,காலாஸ்திரம்,கருடாஸ்திரம், நாகாஸ்திர
முதலாகியதேவப்படைகள்தம்மில்விரோதமின்றி ஏகமா
ய்ச்சேவித்துச் சூழ்ந்துபோற்றிவரவும்நடக்கின்ற வேற்ப
டையின்பிரகாசத்தைத்தரிசித்தமாத்திரத்தில் தேவர்கள்
மனவெழுச்சிபெற்றுச்சூரியஉதயத்தைக்கண்டதாமரைம
லர்களைப்போல முகாரவிந்தங்கள்பொலிவாகக்காட்டவுமி
ராட்சதர்முகங்கள் அல்லிமலர்களுக்குச்சமமாய் வாடிக்க
ளிப்பற்றுப்போகவும் அத்தினம்சிவகணங்களுடன் சண்
டைகொடுத்துப் புறங்காட்டியோடித்தமதுமனைகளிற்சே
ர்ந்தஅவுணவீரர்கள்நாளையத்தினம் அவசியம்பகைவர்கர
த்தில்மாள்வது நிச்சயமெனத் துணிவுகொண்டபடியால்
தம்மினத்தவருடன்கூடி யிஷ்டான்னபோசனங்களைச்
செய்து பஞ்சணைமெத்தையிற்றேவியரைக்கலந்து சரசச
ல்லாபங்களுட னின்புற்றிருந்தபின்பு நித்திரைசெய்பவர்
கள் வெற்றிவேலின் பிரகாசத்தைக்கண்டவுடன் சூரியஉ
தயமாயிற்று உயுத்தகளத்துக்குப்போக வேண்டுமென்கி
ன்ற ஆத்திரத்தினால் றமதுதேவியரைத் தழுவியிருந்தக
ரங்களைநீக்கிக்கொண்டோடிச்சேனைகளின்ஆரவாரங்களை
க்காணாததால் இதென்னஅதிசயமாகவிருக்கின்றதென்று
ஒன்றுந்தோற்றாமல் திகைத்துப்பார்க்கவும் தேவர்கள்ம
னச்சஞ்சலமற்று தமதுதேவியருடன் களித்துறக்கவும்
இவ்விதவினோதங்களைக் காட்டிப்போகின்றவெற்றிவேலா
னது முற்காலத்திற் றிரிபுராதிகளை யழிக்கச்செலுத்திய
நகைக்கனலைப்போல விரைந்தோடி அறுகடலையுங்கடந்
துதேவர்கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர்முதலாகக் க
ளிமிகுதியினால் கற்பகமலர்களை வாரிவாரி யிறைத்துப்
போற்றிவாழ்த்த சுத்தோதக்கடலினருகில்வருவதைமோ
கனப்படைகண்டமாத்திரத்திற் றிடுக்கிட்டுப் பதைபதை

த்துவாடிவருந்தி இனிசற்றுநிற்போமாகில் மோசம்வரு
மென்றெண்ணிச் சுப்பிரமணியர்சேனைகளைக் காவல்கொ
ண்டிருப்பதைவிட்டுப்பறந்தோடுமுன்னிலையில் தன்செய்
கையுமற்றுச் சின்னபின்னப்பட்டுமங்கியது அத்தருணத்
திற் கடற்சரசன் வெளிவந்து தேகமும் மனமும்நடுநடுங்
க வாய்புலர்ந்துஒடுங்கிக்கரங்களைக் கூப்பிக்கொண்டுகுமா
ரதேவர்செலுத்தியவேலாயுதத்துக்கெதிர்நோக்கிவந்து மு
ம்முறைவலம்வந்துசேவித்துநின்றுஇதனைவிண்ணப்பஞ்
செய்வதாயினன்.

படைகளுக்கரசே கேட்டருள்கபரமசிவகடாட்சத்தினு
ல் ஆயிரத்தெட்டண்டங்களையும் அகன்ற சாம்பிராச்சிய
ச் செல்வப்பெருக்கையும் பெற்றுக்கொடுங்கோல் செலு
த்திவாழுகின்ற சூரபதுமன் குமாரன்பானுகோபன் தன்
பாட்டியாகிய மாயைகொடுத்த மோகனஸ்திரத்தைப்பிர
யோகித்து வீரவாகுதேவர்.எண்மர்- இலக்ஷர் படைத்த
லைவர் பூதசேனைகளைமயக்கி யறிவையழித்துப் பிரேதங்க
ளாக்கிக் கட்டிக்கொண்டுவந்துஎன்னிடத்திற்சேர்க்கச்செ
ய்தான் அந்தக்கொடியபாணமும்நீங்காமல்வ்விடத்திற்கா
த்திருந்தது நம்மவர்களுக்குத் தேவாமுதத்தைப்போலத்
தேவரீர்வரவைக்கண்டவுடன் வெதும்பிக் கிடுகிடாய்த்து
ப் பயப்பிராந்திகொண்டோடி மாண்டது, வெற்றிமாலைபு
ரளும் புசங்களைப்படைத்திருக்கின்ற பானுகோபன் தூ
ண்டிய பாணத்தை வாட்டத்தக்கவலி அடியேனுக்கில்லா
தபடியாலும் மேலும் அவுணப்பாதகர்கட்டளைக்குட்பட்
டு வாடுகின்றதாலும் ஒருகாரியங்களையும் நினைக்காமல் ம
னவாட்டத்துடன்மிகவும் வருந்தினவனைக்கொடிய பாத
கனைவாட்டி எங்கள்மனக்குறைகளைத் தீர்க்கவந்தஇந்தவீ
ரர்கள் கர்த்தனனுக்கிரகத்தினுல் எப்போது சோபத்தை
யொழிந்துஉயிர்பெற்றெழப்போகிறார்களென்றும் சிவகு
மாரன் நினைமப்போதிற் சூரன்வம்சநாசமாய்க் கொல்லவ
ல்லவராயிருந்தும் யுத்தியஞ்செய்ய நினைந்துசேனைகளைக்
கூட்டிக்கொண்டு வந்ததுஇதுவுமொருதிருவிளையாடலெ
ன்றும் அத்தகைய பெருமையையுடையதேவாதிதேவன்
பாடிவீட்டிலிருந்து நவவீரர்கள்இலக்ஷர் முதலானவர்க
ளைச் சண்டைக்கனுப்பிச் சத்துருக்களினுல் மாளக்கொடு
ப்பதும் அவர்திருவுளத்துக்கேற்பதோவென்றும்எண்ண
மிட்டுக்கொண்டு சிவசுப்பிரமணியதேவர்கிருபையுற்றுஅ
சுரப்பெருக்கை அதப்படுத்தினுல் மனவாட்டமொழிந்து
சவுக்கியமா யிருக்கலாமெனநினைந்திருக்கின்ற பேதையே
ன் இத்தருணத்திற் செய்தபிழைகளொன்றுமிராது ஆத
லால்அடியேன்மீதிற் கோபங்கொள்ளாமற்க்ஷமிக்கவேண்
டுமெனப் பலவாகம்போற்றுகின்ற கடற்கிறைவனை வேற்
படையானதுகிருபையாகப்பார்த்துஉன்னிடத்தில்யாதொ
ரு குறைவுமில்லை யாதலாற் பயப்படவேண்டாமென் று
தரித்ததாய்ச் சொல்லித்துக்கொண்டு கடலினிடத்தில்உலா
விவந்தபோது மாயப்படையின் முயற்சியினுல்வாடிபிரே
தங்களைப்போலப்பாதலத்திற் பட்டிருந்த வீரவாகுதேவ
ர் முதலான சிவகணங்களுக்கு அறிவுதோன்றிச்சரீரம்அ
சைவுற்றுச் சுவாசமுண்டாய்க் கண்களைவிழித்துப்பார்த்
து நித்திரைதெளிந்தவர்களைப்போல்வும் பலகோடிசூரிய
ர் தோற்றம்போலவும் பாம்புகடித்து விஷந்தலைக்கேறிம
ரணக்களைபட்டிருந்தவர்கள் மகத்துக்கள்கிருபாநோக்கம்
பட்ட மாத்திரத்தில் அக்கொடுமைநீங்கிக்களித்தெழுபவ
ரையொத்தும் ஜயவுற்சாகங்களுடன் ஜயஜயபோற்றியென
ஆரவாரித்துக்கொண்டு வீரபராக்கிரம முள்ளஆண்சிங்க
ம்போன்ற வீரவாகுதேவரும் புயவலிக்கொப்பற்ற தம்பி
யரும் ஜயசாலிகளாகிய இலக்ஷரும்மதயானைகளை யொத்
த படைவீரர்களும் வல்லியிலுயர்ந்தபூதசேனைகளும்மிகு
த்தபத்தி விசுவாசங்களுடன் பாலசுப்பிரமணியக் கடவு
ளினதுபாதார விந்தங்களைச் சிந்தித்துப்போற்றிவீராவே
சங்களுடன் ஊங்காரித்துக்கொண்டு வெளிவந்தனர்.

சவுனகாதிரிஷிகளே, அக்காலத்தில் நேர்ந்தசந்தோஷப்
பெருக்கைச் சொல்லக்கேட்பீராக பானுகோபன்செய்தவ
ஞ்சகங்களனைத்தும்அதப்பட்டுப்போகவும்பாதகனைக்கண்
டபாவங்கள் முற்றும்அனலிற்பட்டபஞ்சைப்போலத்தகி
க்கப்பட்டொடுங்கி மெய்ஞ்ஞானம்விளங்கவும்வேதாகமங்
கள் களித்துச் சிவகுமாரன்புகழைப்பாடித் துதிக்கவும்பூ
மிதேவியானவள் தேகம்பூரித்து ஆனந்தமடையவும் தரு
மதேவதை மனவெழுச்சிபெற்றுக் கூத்தாடவும் புவனங்
களனைத்தினுமிராநின்றசீவராசிகள் சந்தோஷப்பெருக்கி
லாழ்ந்துஅண்டங்களதிர ஆர்ப்பரித்துஜயங்கொண்டாடவு
ம் இக்காட்சிகளைக்கண்டதேவர்கள் தேகபரவசத்தராய்ப்
பஞ்சதருக்களினது புஷ்பங்களை வாரிவாரிச்சொரிந்துவா
ழிவாழியென்று கொண்டாடவும்இருஷிக்கூட்டங்கள்மன
மகிழ்ந்து அட்சதைகளையிறைத்துஜயவிஜயபவாவென்று
ஆசிகளைச்சொல்லவும் தேவதுந்துமி முழங்கவும்தும்புரு
நாரதாதிகள் கந்தர்பெருமைகளை யாழினிடத்திற் பாடி
ப்போற்றவும்கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர் இசைக
ளைச் செவிகளுக்கமுதமாகச் சொரியவும் சூரியர்சந்திரர்
முதலானவர்களுக்கு ஆனந்தமுண்டாய் வாழ்த்தவும்இப்
படிக்குச் சகலமும் சந்தோஷசாகரத்தில் முழுகிக்களிக்
கின்ற தருணத்தில்தயாநிதியாய் அன்பருக்கெளியனுய்எ
ள்ளிலெண்ணெயைப்போலச்சருவாந்திரியாமியாகநின்று
எங்கும்விழிகளும் செவிகளையும் படைத்துச் சராசரப்பி
ரபஞ்சங்களைப் பாதுகாத்து நடிப்பிக்கும் குணக்கடலாகி
ய சிவசுப்பிரமணியதேவர் திருக்கரத்தில் விளங்குகின்ற
வெற்றிவேலானது கோடிசூரியப்பிரகாசமாக வானத்திலு
லாவியிருப்பதைவீரவாகுதேவர் முதலானவர்கள்தங்கள்
முகமும்மனமும் சூரியனைக்கண்ட தாமரைமலரைப்போ
ல விளங்கவும் விழிகளில்ஆனந்தவாரிசொரியவும் சரீரம்
புளகித்துமயிர்ச்செறிவெழவும் இவ்விதசந்தோஷப்பெ
ருக்கினுழ்ந்து தரிசித்தமாத்திரத்தில் தேகபரவசராய்ப்ப
லதரம்பணிந்து போற்றிக்கரங்களைச்சிரங்களிற்கூப்பியெ
திர்கொண்டு சூழ்ந்து பானுகோபன்மாயையிற்பட்டு புத்
திமயங்கி அத்தலத்திற்சேர்ந்த காரணத்தையும்நமதைய
னுகிய முருகப்பெருமாள் தெரிந்து இரக்கமுற்றுச்செலு
த்திய வேலாயுதத்தின் பெருமையினுல்பகைவர்வஞ்சகங்
களைக் கடந்துஉயிர்ப்பெற்றெழுந்தனமென்றும் ஆழ்ந்தக
ருத்தினுல் யூகித்தறிந்துகொண்டு ஞானவான்களிற் சிறந்
த பேரறிவைவாய்ந்த வீரவாகுதேவர் இதனைவிண்ணப்
பஞ்செய்வதாயினர்.

விழிகளுக்கெட்டாத சுயஞ்சோதிவடிவைக் காட்டியிரு
க்கின்ற பெருமையினுலும்சண்முகாரவிந்தங்களைப்படை
த்திருக்கின்ற சிறப்பினுலும் எமதுகர்த்தனுகிய சிவகுமா
ரனிடத்திருந் தெழுந்தருளியகாரணத்தினுலும்சத்தியெ
னப்பலரும் பாவினங்களினுற் புகழப்பெற்றமுயற்சியினு
லும் பாலசுப்பிரமணியருக் கொப்பாகத்தேவரீரைத் தரி
சித்து இக்காலத்தில்நேர்ந்த மாயைமுதலிய சகலதுன்பங்

களையும் போக்கிமனவெழுச்சிபெற்றுக் கிருதார்த்தராய்
வாழ்ந்தனம் பகைவனாகிய பானுகோபன்செலுத்திய மா
யைப்படையின் வலியினால் யாக்களெல்லோரு மறிவழிந்
து இந்தச்சாகரத்தின் அகட்டிற்போடப்பட்டியாதொருக
தியுங் காணுதிருந்த அடியோங்களை தேவாஸ்திரங்கள்மு
தலிய திவ்வியபாணங்களுக்குச் சக்கிரவர்த்தியாகவிருக்க
ப்பட்ட தேவரீரொழுந்தருளிப் பாதுகாத்தமுயற்சியினால்
உயிருண்டாய் மெய்ஞ்ஞானஉணர்வைப்பெற்றுக்கிருதா
ர்த்தராயினோம் இதுவுமல்லாமல் முன்னம்தாருகன்வஞ்
சகத்தினாற் கிரவுஞ்சகிரியின்மாயையிற்பட்டுமயங்கிச்சோ
ர்ந்துகிடந்த அன்றும்தேவரீரெழுந்தருளிஉணர்ச்சியைத்
தந்தாண்டீர் அவ்வாறேயித்தருணத்திலும்வந்து இறந்து
கிடந்தவர்களுக்குப் பிராணனளித்திரட்சித்தீர்இக்காரண
த்தினால் அடியோங்கள் நூதனமாய்த் தமதுகடாட்சத்தினா
ல் உற்பவித்தனம் இத்தன்மையாகச்செய்யாமற்செய்தஉ
தவிக்கு அடிகளுக்கு எங்களாற் கூடுங்கைமாறுவையகத்
தினும் வானகத்தினும்நினைக்கத்தக்கபொருளொன்றுண்
டோவென்று பேரறிவாளனாகிய வீரவாகுதேவர் பலபல
உபசாரங்களை விண்ணப்பஞ்செய்வதை வெற்றிவேல்கே
ட்டு நீங்களனைவரும் இராட்சதப்பாதகன் வஞ்சகத்திற்ப
ட்டு மாண்டசெய்தியைத் தேவாதிதேவனாகியசரவணபவ
ன்தெரிந்து அடியேனிடத்திற் கிருபைகூர்ந்து செலுத்தி
யதால் அக்கட்டளையைமுடிக்கவந்தனம்,நமது வரவைக்
கண்டவுடன் பானுகோபன் மோகனப்படை அதப்பட்டு
நீங்களு முயிர்பெற்றெழுந்தீர்கள் என்னாலாகு முயற்சிக
ளொன்றுமில்லை சகலமும் தேவதேவோத்தமனாகியசண்
முகப்பெருமாள்கடாட்சமாகும்ஆதலாற் காலதாமசஞ்செ
ய்யாமற் பூதப்படைகள் முதலானவர்களுடன் துரிதமாய்
முருகப்பெருமாள் சந்நிதானத்தைச்சேர்ந்துஅவன்திருவ
டிகளில் வணங்கிப் போற்றக்கடவாயெனக்கட்டளையிட்ட
வாறே தட்சணத்திற் சேவித்து விடைபெற்றுக்கொண்டு
பூரணச்சந்திரோதயத்தை யொப்ப விளங்குகின்ற முகம
ண்டலத்தைப் பெற்ற வீரவாகுதேவர். துணைவர்,இலக்ஷ
ர்,படைத்தலைவர், பூதசேனைகள்சூழ்ந்துவரப் பிரயாணப்
பட்டனர், அத்தருணத்தில் வெற்றிவேலாயுதமும்முந்தி
ப்போய்க் குமாரதேவருக்கு நடந்தசவிஸ்தாரங்களையறிக்
கையிட்டுப் பழையபடிக்குத் திருக்கரத்தில் விளங்கிநின்
றது.

---

## நகர்புகுபடலம்.

முன்னுறச்செவ்வேலேகமுவிருமுகத்துவள்ள
றன்னடிக்கமலமுன்னித்தரங்கநீருவரிவைப்பின்
மின்னெனக்கடிதுபோந்துவிறல்மிகுதடந்தோளண்ண
லென்னிலைத்திருவின்மேவுஞ்சூரன்மூதூரைக்கண்டான்

---

வாரீர் சவுனகாதிரிஷிகளே, இவ்விதமாகவெற்றிவேலா
யுதம் முந்திச்சென்றவுடன் வீரவாகுதேவர் முருகப்பெ
ருமாள்சரணாரவிந்தங்களை மனதிற்றியானித்துப்போற்றி
னவராய்த்துணைவர் இலக்ஷர்முதலிய பூதப்படைகளும்
பிரளயகாலத்திற் சத்தசாகரங்களும்ஒன்றுபட்டுப் பெரு
குவதைப்போல ஆரவாரித்துக்கொண்டுசூழ்ந்துவரவான
வழிக்கொண்டு வாயுவேகத்தினுங்கடுகிச்சத்தசாகரங்களை
யுங்கடந்துரணக்களத்துக்கு நேராகவந்திறங்கி அகன்றசா
ம்பிராச்சியச் செல்வப்பெருக்கை யனுபவித்துவரும்சூர
பதுமன் வாசமாயிருக்கின்ற மயேந்திரபுரியைக்கண்டமா
த்திரத்தில் அதிககோபம் பிரவேசித்து கறகறெனப் பற்
களைக்கடித்துக் கண்கள் சொவ்வைக்கனியினுஞ்சிவந்து
தீயையிறைக்கச் சுவாலையும்புகையும் கொண்டல் கொண்
டலாகப் பெருகப்பெருமூச்செறிந்துமார்பில்வியர்க்கமண்
டியெறிந்து மனம்பொறுமல் துணைவர் முதலானவர்களை
ப்பார்த்து இதனைச்சொல்லுவதாயினர்,வீராதிவீரர்களே
கேட்பீராக பாணங்களோடு பாணங்கள் ஆயுதங்களுடனா
யுதங்க ளுடுதாக்கவொருவரையொருவர் வெல்லவேண்டுமெ
ன்கின்ற வீராவேசங்களுடன் போராடுகின்ற சமர்க்களத்
திற் கொடியபோரைச்செய்ய வலியற்றவனாயோடி வானத்
தில்மறைந்து வஞ்சகத்தினால் நம்மனைவரையும் வென்று
போட்டோமென்னும் களிப்புடன் திரும்பிப் பட்டணத்
தைச்சேர்ந்து சகலசவுக்கியங்களையும் அனுபவித்துறங்கு
கின்ற பானுகோபனென்னுங் கள்ளனைமடக்கிக் கொண்டு
சாடிக்கொன்று என்கோபந்தணிந்த பின்பல்லது, எமது
கர்த்தனாகிய சிவசுப்பிரமணியதேவர் பாதகமலங்களைத்த
ரிசிக்கப்போக மனம்விரும்பவில்லை இந்தநிமிஷத்திற் சூ
ரன்பட்டணத்தை அதாஅதப்படுத்தி வாட்டுவோம்பகை
வனெதிர்த்து வருவானாகில் அவனைச்சின்னபின்னப்படக்
கண்டித்து வெற்றிபெறக்கடவேன் இப்போதுபேசிய சப
தப்படிக்கு முடிக்காமற்போவேனாகில் இந்தவுயிரைச்சும
ந்துவாழவறியேன் என்தாய் வயிற்றிற்பிறந்தவனுமல்லவொ
ப்பற்ற சிலையுடன் அக்கினிப்பிரவேசமாவேனென்று சே
னாபதியாகவிருக்கின்ற வீரவாகுதேவர்பேசியபிரதிக்கினை
களைத் துணைவர் முதலானவர்கள்கேட்டவுடன்மனவெழு
ச்சிபெற்றவர்களாய்இதனை விண்ணப்பஞ்செய்வதாயினர்.

ஐயனே பானுகோபன்செலுத்திய மோகனப்படைக்கு
ட்பட்டு மாய்ந்தெழுந்தனமென்னும் பழிப்புரையைச்சும
ந்து அதற்கொருநிவாரணங்களையுந்தேடாமற்பாசறையை
நோக்கித் திரும்புவது எக்காலத்தும்பலருமிகழ்ச்சியாகப்
பேசிக்கொள்ளவரும் ஆதலால்அந்தப் பாதகனைக்கொன்
று வெற்றிகொண்ட பின்பல்லது நமதுஇளையபெருமாள்
திருவடிகளைத் தரிசிக்கத்தகுமோதேவரீர்குறித்தகாரியம்
தகும்தகுமென்று சகலரும் மனமொருமித்துஒப்புக்கொ
ள்ள வீரவாகுதேவருக்கு அவர்களிடத்தில்மிகவும் கிரு
பையுண்டாய்உங்கள்மனவுறுதிக்குமெச்சினோம்ஆதலால்
நீந்தட்சணம்புசபலபராக்கிரமசாலிகளாகியபூதப்படைகளு
டன்போய்அஷ்டலட்சுமிகளும்குதிகொண்டு வீற்றிருக்கி
ன்ற மயேந்திரபுரியைச்சேர்ந்து அதனைப்பொடிப்பொடி
யாக விடித்துத்தள்ளிஅக்கினிதேவனுக் கிரையாக்கி அக்
காலத்திலெதிர்த்துவந்தஅவுணப்பாதகரனைவரையும்அத
ம்பண்ணிகடையிற்பானுகோபனை மடக்கிக்கொண்டுசித்தி
ரவதைபண்ணித் திரும்புவோம்வாருங்கோளென்றுவீர
ன்சொல்லியபோதுநல்லகாரியம்நல்லகாரியமென்று சகல
ருமுடன்பட்டுபூதசேனைகளுடன்ஆர்ப்பரித்துச்சிருங்கா
தங்கள்அட்டகாசங்களைச்செய்துகொண்டு நடந்துநிமைப்
போதில்சமுத்திரமத்தியில் விளங்கும்பட்டணத்துக்கோ
ட்டைமேற்குக்கோபுரவாயிலைச் சூழ்ந்து பிரசண்டவாயு
வைப்போலக்கொக்கரிக்கநித்திரைசெய்திருக்கின்றஇராட்
சதர் திடுக்கிட்டுக்கலங்கிக் கட்டிச்சுருட்டியெழுந்து யிதெ
ன்னஅனர்த்தமாகவிருக்கின்றது இராஜகுமாரன் போரி

ல் பூதவெள்ள முதலாக மாண்டுநாசமாய்ப் போனர்களெ
னக்கேள்விப்பட்டலம்இதோபட்டணத்தைவளைந்துகொ
ண்டு பிரளயகால விடிகளைப்போலக் கொக்கரிக்கின்றனர்,
பார்த்து வருவோமென்று வானத்தி லெழும்பிப் பெரும்
புறக்கடலைப்போலக்குமுறிக்கொண்டிருக்கும் பூதசேனை
களைக்கண்டவுடன் திகிற்பட்டுச் சிலர்மனம்வருந்தியேங்
கவும் சிலர்ஸ்நானஞ்செய்ததைப்போலத் தேகமெங்கும்
வியர்வைபெருத்தோடக்களைத்தும் சிலரித்தொனி சத்து
ருக்களினலுண்டாயதோ வெனக்கோபிக்கவும் சிலர்சண்
டைகிடைத்ததென்கின்ற களிப்பினற் புயங்கள்பூரிக்க நி
லத்தில்வந்தும் இப்பாடுகள்படுமுன்னிலையில் பொன்னு
ருளைகள்முதலிய வளங்களினற்சோடித்துப் பருவதாகி
ருதியாகவிருக்கின்ற தேரணிகளும்மும்மதங்களையும்பெ
ருக்கித் துதிக்கைகளிற் பற்றியிருக்கின்ற இருப்புலக்கை
களை மேகங்கள்பறந்தோடச்சுழற்றி வீறிட்டிருக்கும்நீல
கிரிலையயொத்த யானையணிகளும் அலைகளுக்கொப்பாகத்
தத்தித்தாவிப்பாயும் வேகமுள்ள புரவிப்பந்திகளும் பா
தகங்களே உருக்கொண்டிருப்பதையொத்த கரியதேகத்
தையுங் கொடியமனதையும்பெற்ற விராட்சதசேனைக
ளும் பலவெள்ளக்கணக்கில் மதிற்புறங்களினும் கொம்
மைகளினிடத்தும் பக்கங்களினும் நெருங்கிக்கண்ணிமை
யைப்போலக் காவல்கொண்டிருக்க அவர்களுக்கதிபனய்
ச் சூரனுக்குப்பின்பு மாயைக்கும் காசிபருக்குமுதித்தவ
னகவும் பலபுலிமுகங்களைப்பெற்று ஆலகாலத்தினுங் க
டினசித்தமுடையவனகவும் புசபலபராக்கிரமத்திலொப்
பற்றவனகவு மிராநின்ற வியாக்கிரமுகனென்னும் வீரா
திவீரனனவன் பலநிலைகளைப்பெற்று நவரத்தினமயமா
ய்விளங்கி எவ்விடங்களினும் காடைவிளக்குகள் பிரகாசி
க்கமயேந்திரபுரத்துக்கு மேற்புறத்தில் ஓங்கியிருக்கும்
கோபுரவாயிலின் முதற்பரப்பில் நவரத்தினமயமாகியசி
ங்காதனத்தில்வீற்றிருந்துஉதிரந்தோய்ந்துவிளங்கும்வே
லாயுதத்தைக் கரத்திற்கொண்டு இடைவிடாமற்போற்றி
வருவான்.

அவன்வலியெப்படிக்கொத்ததெனில் முன்னெருகால
ம் தன்னுளையைக்கடந்த இயமனைவாட்டி அவன்கரத்தி
லிருந்த சூலப்படையைப் பறித்துக்கொண்டும்வருணனை
ச்சாடிஅவனிடத்திருந்த பாசத்தைப்பிடுங்கினவனய் அ
வ்விருவரையும் பலகாலம் அரியசிறையில்வைத்த கொடி
யபாதகன் இப்படிப்பட்ட வீராதிவீரன் மேகங்களையுமி
டிகளையுங் கக்கிக்கொண்டோடத் தக்கதாகப் பூதவீரர்க
ள் கற்சித்துக்கொண்டு வீரவாகுதேவர் முதலாகியபடை
த்தலைவர்களுடன் தானிருக்கின்ற வாயிலைநெருங்கிவருவ
தைக்கண்டமாத்திரத்தில் விழிகளிற்றீயெழ வுருத்துச்ச
ர்ப்பத்தைப்போலச்சீறிச் சிங்காதனத்தைவிட்டெழுந்து
தன்சேனைகளைக்கூவித் துரிதமாகப்போய்ப் பகைவரை
வாட்டும்படிக்குக் கட்டளையிட்டு முந்தியனுப்பினவனய்
ப்பாரித்தவில்லையும் அம்புறுத்தூணியையும் வயிரத்த
ண்டம் வேல்-வாள்-முதலானபடைகளையுந்தாங்கித் தங்க
மயமாய் நவரத்தினகாந்திகளை வீசிக்கொண்டிருக்கும்தே
ரைக்கொண்டு வரச்சொல்லிஅதின்மேற்சிங்கத்தைநிகர்த்
துத்தாவியேறி மண்டிபோட்டு வீற்றிருந்து அதிவேகமா
ய்ப் புறவணியிற்போகின்றகாலையில் முன்சென்ற இரத
கஜதுரகபதாதிகள் கொக்கரித்துக்கொண்டுவருவதைப்பூ
தவீரர்கண்டமாத்திரத்தில் ரவுத்திராகாரமாகக் கோபித்
துச் சண்டைக்காரம்பித்தனர் அத்தருணத்தில் இராட்ச
தப்பாதகர்மிஞ்சிப்பாரித்தவிற்களைவளைத்துத் தீட்சணிய
மாகிய பாணங்களைச் செலுத்தியுங்கதை,தோமரம்,பிண்
டிபாலம்,முசலம்,கப்பணமுதலிய படைகளைவீசியு மிவ்
விதமாகப் போராடுகின்றபோது பூதப்படைகளும் சீறி
விருட்சங்களைக்கொண்டு மோதியும் மலைகளைவிட்டெறிந்
தும், எழுவாயுதம், மழுவாயுதம், சூலம், வளைதடி, இ
ருப்புலக்கைகளை அமோகமாகப் பிரயோகித்தும் இவ்வி
தமாகவிருதிறத்துச் சேனைகளும் பின்னிடையாமல் வட
வையும் ஆலகாலமு மெதிர்த்துப் போராடுவதற்கொப்பா
கவீராவேசங்களுடன்கொடியபோரைச்செய்துவரும்போ
திராட்சதசேனைகளில் தலைபிளந்தும் மூளைசிதறியும் க
ழுத்தொடிந்தும், பற்களுதிர்ந்தும் மார்புநெக்குவிட்டும்
துடைகள்முறிந்தும் ரணக்களமெங்கும்விழுந்து மாளவு
ம்தேர்களுருப்புகளனைத்தும்சின்னபின்னப்பட்டு நுறுங்
கவும் மதயானைகள் கண்டதுண்டப்பட்டுக் குவியவும்புர
விக்கூட்டங்கள் அதப்பட்டுருளவுமான காலத்தில் பூத
வெள்ளத்தினும் கழுத்தற்றும் மண்டைதிறந்தும் மார்பு
பிளந்தும் புயங்கள்சரிந்தும் கால்களொடிந்தும் பலகாய
ங்கள் பட்டுமிறந்தும் களைத்தும்வருந்தினர், அப்போது
உதிரமானதுபெருத்துப் பூரணப்பிரவாகமாயோடும்நதி
யைப்போல விரைச்சலிட்டுக்கொண்டுபெருகியது, இப்பி
ரகாரம் சிவகணங்கள் வாடுவதை எண்மர், இலக்ஷர்கண்
டமாத்திரத்தில் மனம்பொருமல்ரவுத்திராகாரமாய்மண்
டியெரிந்து முன்னணியில்வந்து தங்கள்கரங்களில் விளங்
கும்வீரவிற்களைவளைத்துநாரிகளைபிகிந்து விஷத்தையொ
த்த தீட்சணியமுள்ளபாணகோடிகளைச் சோனமாரிபோ
லப் பொழிவதினு லிராட்சதர்கள் சின்னபின்னப்பட்டுமா
ண்டவர்கள்போக மற்றையர் மரணபீதியினற்கலைந்து ப
லதிக்கினுமிறைந்தோடியொளித்தனர்.

இவ்வாறுதங்கள் தலைவர்கள் வெற்றிகொண்டகாலையி
ல்வாடியிருந்த பூதர்கள் மனவுற்சாகங்களுடன் மேலிட்
டுத் துரத்தித்துரத்திச் சதுரங்கசேனைகளையும் அதப்ப
டுத்தி அவ்வெல்லையில் நிருத்தனஞ்செய்யாநின்ற ரணப
த்திரகாளியுடன் மூளைச்சேற்றினிடத்தில் நடித்தார்கள்.
மேற்குறித்தபடிக்கு நால்வகைச்சயின்னியங்களும் தும்
சப்பட்டுமாண்டதைப் பார்த்தகாலத்தில் வியாக்கிரமமு
கன் வடவாமுகாக்கினியைப்போலப்பொங்கி நல்லகாரிய
ம் நாம்பார்த்திருக்க இப்படிக்கொத்த கொடுமைகளைச்
செய்த பூதரையும் மற்றபடைத்தலைவரையும் அதாஅத்
ப்படுத்திக் கோபமாறுவேனெனச் சபதங்களைப் பேசிக்
கொண்டு இயமனையொத்த கொடுமைபெற்றிருக்கின்றசூ
லாயுதமொன்றைக் கரத்திற்பற்றினவனய் மேலிட்டுவரு
ம்போது பலகோடிபூதர்கள்மடக்கிக்கொண்டுஎங்கேபோ
கின்றனை நில்லுநில்லென்றதட்டித் தங்கள்கரங்களிலிருந்
த பாரித்தமலைகளை றிவ்வுறிவ்வெனக் கடாவியும்திசைக
ளைமூடித் தழைத்திருக்கின்ற விருட்சங்களைப்பிடுங்கிச்
சாடியும் வாதாடும்போது அவுணவீரன்சீறித் தன்கரத்
திற்பற்றியிருந்த சூலத்தினற்றட்டியும் நுறுக்கியும் வெ
ட்டியும்பொடித்தும் இவ்விதமாகமேலிட்டுவெந்தவைகளை
பறக்கடித்து சகலரும் நடுங்கும்படிக்குச் சமுத்திரத்தை
ப்போல ஆர்ப்பரித்து மீறிவருகின்ற வியாக்கிரமமுகன்
வலியையும் சூரத்தையும் பூதத்தலைவனகிய சிங்கனென்
பவன்கண்டு இனிசும்மாவிருக்கலாகாதெனநினைந்து கூறி

யசூலமொன்றைக் கரத்திற்பற்றி மின்னலுக் கொப்பாக ப்பாய்ந்து மேகங்கள் திக்கிட்டோடக் கர்சித்துவடவை யைப்போற்சீறி அவுணப்பாதகனெதிரில் வருந்தருணத் தில் வியாக்கிரமமுகன்கொதித்துத் தன்கரத்தில்விளங்கு ம் சூலத்தினல் அவன்மார்பிற்றாரித் தருவக்குத்தின ன் அதனல்வருந்தியும் தீரனுப் மண்டிபெறிந்து தன்கர த்திலிருந்த முத்தலைப்படையினல் பகைவன்மார்புபிளக் கும்படிக்குப் பாய்ச்சியகாலத்தில் அவ்விருவீரர்தேகங்க ளினின்றும் உதயகிரியினிடத்திற் சூரியகிரணம் ப்ரவி யதையொப்ப உதிரப்பிரவாகமானது பீரிட்டோடத்தக்க தாக ஒருவர்மீதொருவர்சீறி வயிரங்களைப்பேசிச் சூலாயு தங்களைச் சுலவிக்கொண்டு சூருவளியைப்போல இடம் வலமாகத் திரிந்துதிரிந்து உறுப்புகளைக்குறிகொண்டுபா ய்ச்சியும் அதனைத்தட்டியும் அதட்டியும் மீளக்குத்தியும் இவ்விதமாகப் பின்னிடையாமல் பிரசண்டசண்டைசெ ய்து வரும்போது இருவீரர் கரங்களினும் பிடித்திருந்த சூலப்படைகள் முனைகள்மடங்கிப் பின்னப்பட்டபடியா ல் அவைகளையெறிந்துபோட்டு விழிகளில்அனற்பொறிக ள் சிதறக்கோபித்துக் கரங்களைப்பிசைந்துகொண்டுமல்ல யுத்தத்துக் காரம்பித்தவர்களாய்ப் பூமிபிளக்கும்படிக்கு ப்பாதங்களைப்பெயர்த்து முன்னடிவைத்து பின்னடிவா ங்கிப்பாய்ந்தும் புசங்களைத்தட்டியும் விழிகளிற்றீயெழ ஒருவரையொருவர் உருத்துப்பார்த்தும் வீரங்களைப்பே சியும் கரங்களைப்பிடித்தமாக்கிக்கொண்டு முகத்தினும்பு சத்தினும் மார்பினும் மற்றவுறுப்புகளினுங் குறிக்கொ ண்டு குத்துவார்கள் அதைத்தடுத்து மீளத்தாக்குவர்கற்க ம்பத்தையொப்ப வலியபுசங்களினலிடிப்பார்கள் கால்க ளைப்பின்னித்தட்டுவார்கள் உதிரம்பீரிட்டோடநெற்றியி னும் தலையினும் குட்டுவார்கள் கன்னம்பிளக்க அறைவா ர்கள் இடசாரிவலசாரியாய்த் திரிவார்கள்இவ்விதங்களில் மற்போர்செய்து வருங்காலத்திற் சிங்கன் தீரனைக் கோ டைபிடிகளைப்போலக் கரங்களினலும் புசங்களினலும் தாக்குகின்றதால்மயேந்திரபுரியின் மேற்புறக்கோபுரவா யிலைக்காவல்கொண்டிருந்த வியாக்கிரமுகன் வலிகுன்றிக் கைகால்சோர்ந்து இரத்தம்பெருக்கெடுத்தோடச் சோர்ந் துநிலத்தில்விழுந்தான், அத்தருணத்தில் பூதவீரனகிய சிங்கனென்பவனுக்கு அதிககோபம் பிரவேசித்தபடியா ல்வீரக்கழலணிந்த பாதத்தினல் உதைத்துருட்டினன்உ டனே மேகத்தைப்போலக் கதறிக்கொண்டுபிராணனைவி ட்டிறந்தான் இந்தவெற்றியை வானத்தில்வேடிக்கைபா ர்த்திருந்த தேவர்கள்கண்டு பூதப்படைத்தலைவன் சவுரி யத்துக்குக்கொண்டாடி கற்பகமலர்களை யிறைத்துச்செ ன்றவிடங்களி லெல்லாமிவ்விதமாகவேவெற்றிபெறக்கட வாயென வாழ்த்தினர்கள்.

சவுனகாதிரிஷிகளே சிங்கம்புலியைச் சுலபமாகவெல்வ து தருதியாதலால் வியாக்கிரமுகனைவாட்டியது மேலான தன்று சிங்கன் ஜயவுற்சாகத்துடன் திரும்பியதைக்கண் ட பூதவெள்ளமானது மனப்பூரிப்புடன் சிருங்கநாதங்க ள் அட்டகாசங்களைச்செய்து களியாடலைக்கொண்டாடி வானமதிர ஆர்ப்பரித்தவர்களாய்ப் பெரும்புறக்கடலைப் போல இரைச்சலிட்டுவந்த இராட்சதப்பாதகரும் அவர் களுக்குத் தலைவனைவனும் களத்திற்பட்டனர், இனித டையில்லாமற் கோபுரவாயிலை யிடித்துத்தள்ளிப் பட்ட ணத்திற்பிரவேசிப்போமென்று சகலரும்பேசிக்கொண்டு ஒருவருக்குமுன்னெருவராய் மேலிட்டுப்போய்ச் சக்கிர வாளகிரியைப்போலப் பாரித்து வளைந்திருக்கும் கோட் டைப்பொன்மதிலை வலியமாதங்களைக்கொண் டுதைத்து த்தள்ளி நிலத்திற்சிரவி அத்தலத்தில் வானத்தையளாவ நிற்கின்ற சித்திரக்கோபுரத்தை அடியுடன் பறித்தெடுத் துப் பந்தைப்போலக் கரத்திற்கொண்டு மயேந்திரபுரியி ன்மத்தியில்விழுந்து அல்லோலகல்லோலப்படும்படிக்கு வீசி ஆர்ப்பரித்தவேளையில் நடுக்கடலிற் கப்பல்கவிழ்ந் தமுன்னிலையில் அதிலுள்ளவர்கள் முழுகிப்போவதைப் போல அளவற்றஇராட்சதவீரர்கள் சின்னபின்னப்பட்டு மாண்டனர், உடனே மகாவிஷ்ணுவையும், வெல்லவல்ல பராக்கிரமசாலிகளாகிய பூதவீரர்கள் வீராவேசங்களுட ன் மயேந்திரபுரியின் வீதிகளிற்புகுந்து எதிர்ந்தசத்துரு க்களனைவரையும் கால்களினல்உதைத்தும்தேய்த்தும்அ தாஅதப்படுத்துவதைக்கண்ட தேவர்கள் இச்செய்கையி வர்களுக்குத்தகும் தகுமெனக் கரங்களைக்கொட்டிக் கொ ண்டாடிக்களிக்கப்பூதர்கள்சிலரேங்கிச்சாபானுக்கிரகசாம ர்த்தியமுள்ள தவச்சிரேஷ்டர்கள் கோபமுண்டாகியகால த்தில் ஒருசொல்லினல் எவ்வகைப்பட்டதையும் அழித் துப்போடுவார்களோ அதுபோலவானத்தையளாவிப்பல அடுக்குகளைப்பெற்றுச்சொர்ணமயமாய் நவரத்தினகாந்தி களை வீசிக்கொண்டிருக்கும் மாடமாளிகைகள் கூடகோ புரங்கள்சித்திரமண்டபங்கள்முதலானவைகளைஉதைத்து த்துகள்துகளாயுதிரும்படிக்கு நிலத்திற் றள்ளிவாட்டித் திரிகின்றகாலையில், எண்மர், இலக்ஷர், கோபமிகுதியின ல் வடவாமுகாக்கினியைப்போலச்சீறிபாரித்தவிற்களைவ ளைத்து அமோகமாகியதிவ்வியபாணங்களைச்செலுத்திஅ ணிபடநிறுத்தியிருக்கின்ற இரதபந்திகளையும் மும்மதங் களையும்பெருக்கி வீறிட்டிருக்கின்ற யானையணிகளையும் மேகங்கள்நடுங்கியோடும்படிக்குக் கனைக்கவல்ல புரவிப் பந்திகளையும் சேனைப்பெருக்கையும் உப்பரிகை அரண் மனைமுதலியவற்றையும் தும்சப்படுத்தித் தாமரைமலர் நிறைந்த தடாகத்தில் மதயானைகள்விழுந்து கலக்கியதுக் கொப்பாக அலைத்துலைவவும் புசபல்பராக்கிரம சாலி யாகிய வீரவாகுதேவர் நாரசிங்கமூர்த்திக்குச் சமமாய்க் கொதித்து பிநாகத்துக்கீடாகிய வில்லைவளைத்து நாணேற் றிஅண்டங்களதிரக் குணத்தொனிகொண்டு அக்கினியா ஸ்திரத்தைப்பூட்டி வழிபட்டுச்செலுத்தி உடனே வாயு வாஸ்திரத்தைத் தொடுத்துப்பூசித்து இந்தப்பட்டணத் தைக்கொளுத்தி நாசஞ்செய்துவரக்கடவீர்களெனவேண் டித்தூண்டியகாலத்தில்அந்தஇரண்டுதெய்வப்படைகளு ம் வெளிப்பட்டவுடன் சர்வசங்காரகாலத்தில் உலகங்கள னைத்தையும் சாம்பலாக்கவல்லபேருருவைக்கொண்டு ப ட்டணமுழுமையும் உலாவி யிராட்சதர் பெண்டுபிள்ளை களுடன் அலைச்சற்பட்டுத்திகைத்துவாடி நாசப்படத்தக் கதாகச்சுட்டுச் சத்துருக்களால் நம்மையென்னசெய்வார்க ள் ஜயசாலியாகிய வீரன்பாதுகாத் திரட்சிக்கும்படிக்கு இதோவிருக்கின்றனரெனத் துணிவுகொண்டு எவ்வளவு ம்அச்சமற்றதாய் நட்சத்திரங்கள் பொரியைப்போலஉதி ரும்படிக்குக் கனலைவீசிப் பிரசண்டவாயுவைப்பெருக் கி யிராஜதானியாகவிருக்கின்ற நகரமெங்கும் தகிக்கின்ற போது சிலவிடங்கள் உலர்ந்தகாட்டினிடத்தில் அக்கினி பற்றித் தகிக்கின்றதற்குச் சமமாகச்சடசடத்ததொனிக

ளுடன்எரியவும் சிலவிடங்கள் சாம்பலாகப்பறக்கவும்சில விடங்கள் துகள்பட்டுப்பயந்தோடுகின்ற விராட்சதர்மீது அனற்பொறிகளைப்போல விழுந்துசுடவும் சிலவிடங்கள் அண்டங்களதிர படபடென வெடிக்கவும் சிலவிடங்கள்கருகி உருக்குலைந்து பங்கப்படவும் சிலவிடங்கள் தகிக்கப்பட்டுப்பொரியவும் சிலவிடங்கள்புகைசூழ்ந்துசத்துருக்களைவளைந்து மூச்சாடவொட்டாமற் கொல்லவும் இவ்விதமாகப் பூருவத்திற் சிவபிரான் நகையழலினன்முப்புரந் தீப்பட்டெரிந்ததற்கொப்பாக ஆயிரத்தெட்டண்டங்களினுமிருக்கப்பட்டவர்க ளனைவரும் நடுங்கிப்பணிந்து போற்றத் தக்கதாகக் கொடுங்கோல் செலுத்திவரும் சூரபதுமன் வாழுகின்ற வீரமாமயேந்திரபுரியானது எவ்விடங்களினும் அக்கினிப்பிரவேசித்துச் சரிந்தும் பொரிந்தும்எரிந்தும்இடிந்தும், பொடிந்தும்,இவ்விதங்களிற்றுமசப்படத்தக்கதாக அக்கினிதேவனும் வாயுவும்சேர்ந்து வாட்டுகின்ற கொடுமையைக்கண்ட தூதர்கள் நடுநடுங்கிக் கைகால்களுதறலெடுக்க மனோவேகத்தினு மேலிட்டோடி நவரத்தினமயமாகச் சொலித்துக்கொண்டிருக்கும் சூரன்அரண்மனையைச்சேர்ந்துவிழிகளில்நீரைப்பெருக்கிப் புலம்பிக்கொண்டுபோய்ச்சூரபதுமனைக்கண்டு வணங்கிப் போற்றிகர்த்தனேஎன்னசொல்லுவோம் சூரியனைச்சிறைபடுத்திய வீராதிவீரனாகிய தேவரீர்குமாரன்மோகனப்படையைக்கொண்டுவாட்டிவீரவாகுதேவர்முதலியபடைத்தலைவரையும்பூதவெள்ளத்தையும்சுத்தோதகக்கடலிற்சேர்த்தவரையிற் றேவரீர்சித்தத்துக்குவிசிதமாகவிருக்கின்றது அதன்பின் புநடந்தசேதிகளையுங்கேட்டருள்க முற்குறித்தபடிக்குத் தூதன்முதலானவர்கள் அதப்பட்டுப்போனதைக்கண்டாரதன்வேகமாயோடிப் பாசறையிலிருக்கின்றபாலசுப்பிரமணியனுக்குத்தெரிவித்தவுடன் தன்கரத்திலிருந்தவெற்றிவேலைத்தூண்டினன்.

அப்படையானது அதிகமகிமைகளைக் காட்டிக்கொண்டுபோய்ச்சுத்தோதகக்கடலினருகில்வருவதன்முன்னம்மாயைப்படையானது நடுநடுங்கி வலிகுன்றி நாசப்பட்டது பின்புவேற்படை ஒருதரம் சமுத்திரத்தின்மீதில்உலவிவந்த மாத்திரத்திற் றூதன்முதலானபூதசேனைகளனைத்தும் மயக்கங்களொழிந்து பிராணனுண்டாய்த்தேவர்கள்களித்துக் கொண்டாடத் தக்கதாய்ச்சகலரும் வெளிவந்துவேற்படையைத் தரிசித்து வணங்கிப்பலவிதங்களிற்போற்றிய காலையில் அவர்களைத்துரிதமாக வரக்கடவீர்களெனக்கட்டளையிட்டுக் கோடிசூரியப்பிரகாசமாய் ஜொலித்துக்கொண்டு திரும்பிப்பழையபடிக்குப்பாலகன்கரத்தில்நின்றது உடனேவீரவாகு முதலாகியபடைவீரர்பூதவெள்ளங்களுடன் வானவழிக்கொண்டு வாயுவேகத்தினுங் கடுகிவந்துநமதுபட்டணத்தின் மேற்புறத்தில்விளங்கும்கோபுரவாயிலுக்கருகில் வீராவேசங்களுடன் கொக்கரித்துக்கொண்டு வருவதை அவ்வாயிலைக் காவல்கொண்டிருந்த வியாக்கிரமமுகன் கண்டு ரவுத்திராகாரமாகக் கோபித்து இரதகஜதுரகபதாதிகளையுங் கூட்டிக்கொண்டுபோயெதிர்த்து அகோர யுத்தங்களைச் செய்தபோது பகைவர்வீறிச் சதுரங்கசேனைகளையுங் கண்டதுண்டப்படக் கொன்று சேனைக்காவலனையும்மிமைப்போதில்ரணக்களத்துக்குப்பலிகொடுத்தார்கள். அந்தப்பூதவீரர்செய்த கொடுமைகளைச்சொல்லிமுடியாது, பின்புஜயசாலிகளாய் கைமிஞ்சிபொன்மயமாகவின்ற மதிலைஉதைத்திடித்துப் பூமியில்சிரவிப்பல நிலைகளைக்கொண்டு வானத்தையளாவநின்ற கோபுரத்தை வேருடன்பறித்துஇந்நகரமத்தியில்வீசினார்கள். அக்காலத்தில் விளைந்தஅனர்த்தங்களைச் சொல்லக்கூடுமோ! அப்போதுங் கோபந்தணியாமற் பூதர்சிலரோங்கிப் பட்டணத்திற் பிரவேசித்துக் கலக்கவும், ஒருபுறத்தில் படைத்தலைவர்கள் சின்னபின்னப்படச்சாடவும் இப்படிக்கு நடந்து வருகின்றவேளையிற் பாதகனாகியதூதன்மனம்பொறுமற் றன்வில்லில்அக்கினியாஸ்திரத்தையும் வாயுவின் படையையும் பூட்டிச்செலுத்தினன். அவ்விரண்டும்சற்றும்பயமில்லாததாய்ப் பட்டணமெங்கும்பரந்து பொன்மயமாகிய மாடமாளிகை கூடகோபுரமுதலானசிங்காரங்களனைத்தையும்கொளுத்திவாட்டுகின்றனநாங்களிருந்தவரையிற் பட்டணத்துமேற்பாரிசத்தில்ஆயிரயோசனைவரையில் தகிக்கப்பட்டது. இப்போதுஎன்னமாயிருக்கின்றதோ தெரியாது இவையனைத்தையும்கண்களாரக்கண்டுவந்தனம் சந்தேகம்வேண்டுவதில்லை ராஜாதிராஜனே! சற்று தாழ்ப்பீராகில்நகரமுழுதும்தீப்பட்டுப்போம்போலக் காணுகின்றதென்று விண்ணப்பஞ்செய்தனர்.

அவ்வார்த்தைகள்சூரபதுமன்செவிகளில் நாராசத்தைக் காய்ச்சிச்சொருகியதைப்போலக் கேட்டமாத்திரத்திற் கோபக்கனல்மூண்டு மனதைவருத்த விழிகள்சிவந்துஅக்கினியைக்கொட்டப் புருவம்நெற்றியிலேறத் தேகம்புழுங்கிவியர்க்கப் புகையும்அனலும் வீசுவதாகப் பெருமூச்செறிந்து நல்லகாரியம் நல்லகாரியமெனசசீறிப்பக்கத்திற் கரங்களைக்கட்டிக்கொண்டுகாத்திருக்கின்றதூதர்களைப்பார்த்து நீங்கள்துரிதமாய் வானத்திற்சென்றுஊழிகாலத்திற் பிரளயவெள்ளத்தைப்பெருக்கி உலகங்களை யழிக்கவல்ல மேகங்கள்உறங்குகின்றதலத்தைச்சேர்ந்துஇந்நிமிஷத்தி லழுத்துவரக்கடவீர்களெனக் கட்டளையிட்ட மாத்திரத்தில் தகும்தகுமெனச்சேவித்து வானவழிக்கொண்டுமனோவேகத்தினு மேலிட்டோடி ஊழிமேகங்கள்படுத்திருக்கும் அண்டப்பித்திகைச் சார்பைச்சேர்ந்துகோடையிடிகளைப்போலத் தமது கரங்களினாற்றட்டியெழுப்பிச் சூரன்உங்களைச்சீக்கிரமாக அழைத்துவரப்பணித்தனர். நடக்கக்கடவீர்களெனத் துரிதப்படும்போது என்ன தண்டனைகிடைக்குமோ வென்கின்ற பயத்தினால்சரீரங்கள் வியர்க்கப் பெருமூச்செறிந்துகொண்டு பறந்துவந்து மயேந்திரபுரியைச்சேர்ந்து இராஜப்பிரபுடீகனாகிய சூரபதுமனைக் கண்டு சேவித்துப்போற்றி நிற்கின்றமேகங்களைப்பார்த்து நீங்கள்தீவிரமாய்ச் சமுத்திரநீரை அபாரியாய்வாரிக்கொண்டு வந்துஇந்தப்பட்டணத்தைக் கொளுத்திவாட்டும்அக்கினிப்பெருக்கை யவித்துவரக் கடவீர்களென கட்டளையிட்டமாத்திரத்தில் மகாபாக்கியம் இதோ அந்தப்படிக்குச் செய்வோமென்று வானத்திற்சென்று மாபலியினிடத்திற் றானமேற்ற வாமனமூர்த்தியைப்போலப் புகைக்குநிகராய் வெளுத்து ஆகாயமுற்றினும்பரந்து சமுத்திரத்திலிரங்கிக் கருநீரைஏராளமாகவுண்டுகாளகூடத்தையொப்பக் கறுத்தெழுந்து பிராணிகளனைத்தும்திகைத்துவிழிகள்கூசி மயங்கத்தக்கதாக மின்னி அஷ்டகுலாசலங்களும் மேருவும்கலகலத்ததிரவும், பூமியைத்தாங்கும்ஆதிசேஷன் விஷங்களைக்கக்கிவாடவும், கர்சித்திடித்து வானமெங்கும்விரிந்து ஊழிமேகங்களானவை விண்ணையளாவலுங்கிவளைந்திருக்கும் மதில்சூழ்ந்தமயேந்திரபுரியைஅக்கினிதேவன் கொளுத்திவாட்டுகின்றகொடுமையையும்அவுணர்

கள்படுந் துன்பத்தையும் பாலசுப்பிரமணியதேவர்சேனைகளின் கோபாவேசங்களையும் பார்த்துநிதானித்துநல்லகாரியம் சூரன் கட்டளையின்படிக்கு மண்டியெரியும்வெப்பத்தைத்தணிப்போமாகிற்குமாரதேவர்படைவீரர்கள்கோபித்துக் கொல்வதற்குச் சந்தேகமில்லை அதற்கஞ்சி யித்தியையவிக்காமற் போவோமாயிற் சூரன்சீறித்தண்டித்துப் பாரவிலங்கைப்பூட்டிக் கொடியசிறையிலடைத்து வருத்துவான் இதற்கென்செய்வதெனக் கலங்கியோசித்துஅவுணராஜன் காவலிற்பட்டு அளவற்றகாலம் வாடுவதைப்பார்க்கினும் வெற்றிமாலைதரித்திருக்கின்ற வீரவாகுதேவர்கரத்தில்மாண்டால் இம்மைமறுமைக்குவேண்டுங்கீர்த்தியும் முத்தியும்பெற்றுவாழ்வோமெனத்துணிவுகொண்டியானைப்பிரமாணமாகிய துளிகளைச்சொரிந்து அமோகமாகவருஷிக்கின்றதுறுவாயிற் பட்டணத்தின்மேற்பாரிச வீதிகளைத்தகித்து விறியிருந்த அக்கினியின் வெப்பந்தணிந்து குளிர்ந்துகாட்டியது. இதைக்கண்ட வீரவாகுதேவர் சிறித்தியெழுநகைத்து நாமேவியஅக்கினியாஸ்திரத்தின் கொடுமையைமாற்றியவை மேகங்களோ! அல்லது பாதகராகியஅவுணர் மாயையோவென்று யோசிக்கின்ற தருணத்தில் நாரதர்வந்து வீராதிவீரனே? யிவை ஊழிமேகங்களாகும்சூரன்ஆக்கினைக்கஞ்சி வருஷிக்கின்றது, துரிதமாகவூழிக்கனற்படையைச் செலுத்திவாட்டக்கடவாயெனப்போதித்தமாத்திரத்தில் வீரன்மகிழ்ந்து தனக்கிருக்கின்றஜயங்களேயுங் கேட்டறிந்துகொண்டு அப்படையையெடுத்துப் பூசித்து மந்திரபூர்வகமாகவில்லிற்பூட்டிப்பிரயோகித்தனர்.

அந்தத்திவ்வியபாணம் விடுபட்டவுடன் வடவையைப்போல மண்டியெரிந்து சுவாலையைவீசி வானத்திற்பரவியிடிமின்னலைப்பெருக்கிச் சொரிகின்ற மேகங்களைவளைந்துகொண்டு அவற்றினிடத்திருக்கின்றநீர்ப்பசுமைமுற்றும் வறளத்தக்கதாகக்காய்ந்து வலியையொடுக்கித் திரும்பிவீரன்அம்புறுத்துணியிற் சேர்ந்தது. அத்தருணத்திற்பிரளயகாலத்திலெழுந் தார்ப்பரிக்கும் ஊழிமேகங்கள் சத்தசாகரங்களைப்போலக் கதறிக்கொண்டுநிலத்தில்விழுந்து சிவகடாட்சத்தினுல் அறிவுவிளங்கிச் சண்முகப்பெருமாள் திவ்வியநாமங்களை ஜபித்துப்பழையவல்லமையைப்பெற்றுப்பக்கத்திலிருக்கின்ற சமுத்திரத்திற்படிந் தொளித்தன. இக்காட்சியைப்பார்த்த பூதர்கள்சந்தோஷசாகரத்தில் முழுகினவர்களாய்த் துள்ளித்துள்ளி ஜயங்கொண்டாடினர். தேவர்கள்வீரவாகுமேல் கற்பகமலர்களையிறைத்துவாழ்த்தினர். தேவதுந்துமி முழங்கியது. இந்தச் சம்பவங்களனைத்தையுங் கண்டிருந்த தூதர்கள்மனம்பொறுமல்வேகமாயோடி அஷ்டலட்சுமிகளுங் குதிகொண்டிருக்கின்ற அரண்மனையைச்சேர்ந்து சூரபதுமனைக்கண்டு வணங்கி யிராஜாதிராஜனே? தேவரீர்கட்டளையின்படிக்குஊழிமேகங்கள் அமோகமாய் மழையைப்பெய்து அக்கினிப் பெருக்கைச் சுத்தமாயவித்துக் குளிரச்செய்தகாலையில் இவ்விடம்வந்து போனதூதன் கண்டவுடன் ஆலகாலத்தைப்போலச்சீறித் துரிதமாய் ஊழிக்கனற்படையைச்செலுத்தி நீவைவறளச்செய்ததுமன்றியிற்கொளுத்தியபோதுமேகங்கள் குன்றிக்குறைந்து விழுந்துபுரண்டு பயபீதியினுற் கடலில்மறைந்துபோயின இறைவனே! கனல்தணிந்ததெனக்களிக்கவேண்டுவதில்லை அதற்கெண்மடங்காகப்படைத்தலைவர் பூதவீரர்கள் சிலரோங்கிப்பட்டணத்தைநாசப்படுத்துகின்றனர். இதைமுக்கியமாகநினைந்து சிலயத்தனத்தைத் தேடாமற் போனுல்மோசம்நேரும்போற்காணுகின்றதெனவிண்ணப்பஞ்செய்தனர். உடனேசூரபதுமனுக்கு அதிககோபம்பிரவேசித்து விழிகள்சிவந்து அனற்பொறிசிதறவும், தேகமெங்கும்வியர்க்கவும், காலாந்தகனைப்போலச்சீறி நல்லகாரியம்பலிக்குமுன் றுதிரியும்அவலமாகியபூதங்களும் நமதுபட்டணத்தில் வருவதோ? சற்றும்பயமற்றுவருத்துகின்ற பகைவரையும் பாலகனையும்அதாஅதப்படுத்தி வெற்றிகொண்டு திரும்பக்கடவேன் துரிதமாகநமதுஇந்திரஞாலத்தேரைக்கொண்டுவரக்கடவீர்களெனக்காரியக்காரரைப் பார்த்துக் கட்டளையிட்டனன்.

## இரணியன்யுத்தப்படலம்.

ஒற்றரைநோக்கியேயுணர்வின்மன்னவன்  
சொற்றதுகேட்டலுந்துளங்கியேங்கினன்  
மற்றவனளித்திடுமதலைமாரிநாட்  
புற்றுறையரவெனப்புழுங்குநெஞ்சினன்.

ஓ! சவுனகாதிரிஷிகளே? சூரபதுமன் இவ்விதமாகப்பணித்தனத இரணியனென்னும் பிள்ளையறிந்தவுடன்மனம்நடுங்கிவருந்தி மாரிகாலத்திற்பாம்புகள் பயந்துபுற்றினிடத் தடங்குமாறுபோலக் களிப்பற்றுக்குன்றினன், அவன்குணதிசயங்களைச் சொல்லக்கேட்பீராக. சகல புவனங்களுக்கும் ஆதிநூலாக விருக்கின்றபெருமையைப் படைத்தவேதங்கள் ஆகமங்கள்புராணங்கள்சாத்திரங்கள் முதலியநூல்களைப் பூரணமாகவாசித்து அவற்றின் நிச்சயங்களைத்தெரிந்தும் பெரியோர்கள் மூலமாய் நீதிசாத்திரப்பிரகரணங்களை ஆதியோடந்தமாகக் கேள்விப்பட்டுநிச்சயவுணர்வைப்பெற்றவனுய்ச் சிறந்த தருமமார்க்கத்தை நித்தியமாகவெண்ணி அதனை அநுசரித்து அதற்கடுத்த நடைகொடி பாவனைகளிற் பிசகின்றிநடந்துவருங் குணசம்பன்னன் இவையன்றியும் தங்கள்முன்னேர்கள்நடவடிக்கைப்பிரகாரம் மாயவஞ்சகமுதலிய வற்றைக் கிரமமாகப்போதிக்கப்பெற்று கொடியபாதகராகிய அவுணருக்கடுத்த விற்பயிற்சிகளாதியான வல்லபங்களையும் பெற்றவனுக விருந்தபோதினும் தீயகருமங்களைச்செய்யச் சம்மதப்படாத சுகுணன் இத்தகைய நன்னெறிகளைப் படைத்தவனுயினும் எதிர்த்த சத்துருக்களெத்தகையரெனினும் நீதியாகிய சண்டையைச்செய்து வெல்லவல்ல புசபலபராக்கிரமசம்பன்னன் இப்படிக்கொத்த சகலமங்களகுணங்களையும் படைத்திருக்கின்ற இரணியன் தமக்கடங்காமல்பாதலத்தில்வீதியிருந்த அவுணவீரர்களின்மேற் கோபித்தெதிர்த்து அதாஅத்தப்படுத்தித் தன்வெற்றிக்கொடியைநாட்டி அவர்களை தன்வயப்படுத்திக்கொண்டு விஜயப்பிரதாபத்துடன் திரும்பியவீரன் இவனுக்குமுன்றுசிரங்களும் ஆறுகரங்களும் சொர்னப்படிவமாகிய திருமேனியுமுண்டு அக்காரணத்தினுல் இரணியனென்னும்பெயரைப்பெற்றவன் இத்தகைய பெருமைகளைப் படைத்திருக்கின்றவன் ஒருபாரிசத்திலிருந்து இராஜாதிராஜன் மனக்கருத்தைத் தெரிந்தவுடனெழுந்து சமீபத்திற்போய்ப்பிதாவின்பாதாரவிந்தங்களிற் சேவித்துக்கரங்களைக் கூப்பிநின்றவனுய் ஐயனே! ஏதோ அடியேனுக்குத்தோற்றிய மேம்பாட்டைத்

தாவல்ல கிரமங்களைவிண்ணப்பஞ்செய்வேனுயினும்கோ
பியாமல் அவற்றைக்கேட்டு நிதானித்து நடத்தக்கடவாய்
அதனால்நம்முடைய மரபும் அகன்றசாம்பிராச்சியச் செ
ல்வவளங்களுநீடித்து சவுக்கியத்திலிருக்கலாகும் அஃ
தென்னையெனில், அளவற்ற தவங்களைச்செய்துபொன்னு
லகவாழ்வையடைந்துபரமசிவத்தைவழிபட்டுப்பெரியோ
ர்கள் ஆசிர்வாதங்களைப்பெற்றும் நன்னெறிகளையனுசரித்
துச் சிவகாருண்ணியம்தனயதாட்சணியங்களையும்பேதை
மைத்தனத்தையுமுண்டாய் மேலும்நமக்கு தாயாதிகளா
கவுமிருக்கின்ற தேவர்களை யலைத்துப்பிடித்துவந்துகொடி
யசிறையில் வைத்திருப்பதினுற் பழிபாதகமும்தீராத வ
சையும்நேருவதன்றியில் நாம்பெறும் பலப்பிராப்தியை
ஒன்றுங்காணேன் சகலகாரண காரியங்களையும் உள்ளங்
கை நெல்லிக்கனியைப்போலத் தெரியவல்லஇராஜாதிரா
ஜனே! பின்னமுஞ்சொல்லக்கேளும் நமதுயிரும் செல்வ
ப்பெருக்கும் சத்தியமாப் ஒருகாலம் நாசப்படுமல்லது நீ
டித்திருப்பதன்று மேலும்சரபசார்த்தூலம்சிங்கம்புலிமு
தலிய சஞ்சரிக்கும் வனாந்திரத்தில்உழன்றலையும்துன்பங்
களைப்போக்கிச் சிறந்தபட்டணங்கள்நகரங்கள்நாடுகள்மு
தலியவைகள்நிறைந்திருக்கும் ஆயிரத்தெட்டண்டங்களு
க்குச் சக்கிரவர்த்தியாய்ச் சகலமுயற்சிகளையும்பெற்று அ
கன்றசாம்பிராச்சியங்களை யனுபவித்து ஜயசாலியாகவிரு
க்கின்ற இந்தசெல்வச்சம்பத்து யாவராற்கிடைத்துவாமு
கின்றனே, அக்காரணங்களையோசித்துப்பார்க்கக்கடவாய்.

இஃதன்றியும் மகாவிஷ்ணுவையொத்தவரை வெற்றி
கொண்டதும் பிரமனுதிய ரிஷிகள்நடுநடுங்கிக்கட்டளைப்ப
டிக்கு ஏவல்கள்செய்யப்பெற்றதும் சிறந்தவானவரையலை
த்துத் தகாத தொண்டுகளைச்செய்துவரும்படி வருத்துவ
தும் காளக்கண்டமூர்த்தியாகிய சிவபிரான் கடாட்சித்திருக்
கின்ற வரங்களின் முயற்சியினுலல்லது வேறுமுண்டோ
இதுவல்லாமல் மகாவிஷ்ணு பிரமதேவன் இந்திரன் தே
வர்கள் அவுணர் இராக்கதர் முதலாகியவீரர்கள்பகைத்து
மேலிட்டு வருவராகில் அவர்கள்மீது கோபித்துப்போரா
டிவென்றுபுறந்தந்தோடத்துரத்தி ஜயப்பிரதாபத்துடன்
மீள்வது எளிதாகும் ஒருவிதத்தி லதனைத் தகுதியாகவே
நினைக்கக்கூடும் தேவரீர் அரியதவங்களைச் செய்ததற்கிர
ங்கி அளவற்றபேறுகளைக் கடாட்சித்திரட்சித்த தயாநிதி
யாகிய பரமேஸ்வரன் நம்மிடத்துள்ள குறைபாடுகளைக்க
ண்டு இச்செல்வத்தை மாற்றிப்போடத் திருவுளங்கொள்
வராயில் வயிரத்தைநினையாமல்வணங்கிப் போற்றி அக்
குற்றங்களை நிவாரணஞ்செய்துகொண்டுஇந்தமகதயிஸ்வ
ரியத்தை நிலைபெறச்செய்துகொள்ளாமல்எதிர்த்துப்போ
ரைச்செய்யவும் யத்தனிக்கக்கூடுமோ, யாதொரு சிறிது
உதவியைச் செய்தவர்கள் மிகவும்வருந்த எதனையாவது
மனப்பூர்வகமாக முடிப்பராயின் அந்தகைய கொடியபா
தகருக்குளதிரிகள் முன்செய்திருக்கின்றநன்றியேமனதை
வருத்திக்கொன்றுவிடும் அத்தீயருக்கு வேறொருகூற்று
வனும் வேண்டுமோ கந்தசுவாமியைப்பெற்ற சிவபிரா
ன் கட்டளைகளை மனதில் வேற்றுமையாக நினைக்கத்
தக்க சிற்றுணர்ச்சியைப் பெற்றவர்க ளனைவரும் நாச
ப்பட்டுப் போனதல்லது தங்கள்வல்லபத்தினுற் ஜயப்பி
ரதாபத்தை யடைந்து பிழைத்திருக்கின்றனரென ஒரு
வரைக் காட்டவல்லோமோ கங்காசடாமண்டல தாரியா
கிய பரமன்கோபித்து மன்மதனை நுதல்விழிக் கனலினு
லெரித்ததும் திரிபுராதிகளைநகைத்துச்சாம்பலாக்கியதும்
அந்தகாசுரனைச் சூலத்திற்குத்தித்தூக்கிச் சுழற்றியதும்
மற்றுமித்தகைய தண்டனைகளளவற்றதுண்டபிதாவே அ
வற்றைத் தேவரீர் கேள்விப்பட்டதில்லையோ இஃதன்றி
யும் சிவவிரதங்களை செய்திருந்த மார்க்கண்டேயரை மதி
யாமற்சீறி மேலிட்டுவந்த இயமனையிறந்துருளத் திருவ
டிகளினுலுதைத்தகாரணத்தையும்கங்கையகந்தைகொண்
டுபெருகி யுலகங்களையழிக்கின்ற தருணத்தில் அவளாண
வத்தை யழிக்கத்திருவுளத்தெண்ணித் தமது திருச்சடை
நானியிற் சுவற்றியடங்கச்செய்ததையும், பிரமன், விஷ்
ணு, முதலியதேவர்கள் திகைத்துவருந்தியோடச் சீறியெ
ழுந்த ஆலகாலவிஷத்தையுண்டு உலகங்களைக் காத்த சரி
த்திரத்தையும் அறியமாட்டீரோ விஷ்ணுவானவர்நாரசி
ங்கஉருக்கொண்டு இரணியனைவாட்டித்தேவர்கள்முதலா
கத்திடுக்கிட்டுவாடக்கோபித்துச் சீறியபோது அடியவர்க
ள்முறைகளைத் திருச்செவிகளி னேற்றுத்தமதுருவகமா
கிய வீரபத்திரக்கடவுளைச் சரபப்பட்சியாக வரச்செய்து
அந்தநாரசிங்கத்தின் கர்வத்தையடக்கியதையும் சகலசா
ம்பிராச்சிய விபவங்களைத் தந்ததம்மைமதியாமற்செல்வ
ச்செருக்கிற்பட் டிகழ்ந்துசெய்த தக்கன்மதத்தை வீரப
த்திரக்கடவுளைக்கொண்டுவாட்டி அவனுக்குஆட்டுத்தலை
யைத் தந்தகாரணத்தையும்யாவருஞ்சொன்னதில்லையோ
உந்திக்கமலவாசியாகிய பிரமன், மதிப்பற்றிருந்த எது
வினுற் சிவபிரான் வயிரவனையேவி கூரியநகத்தினுல்
அவனைந்துசிரங்களி னொன்றைக்கிள்ளுவித்து மீட்டும்அ
வனுக்குணர்வைத்தந்து பாதுகாத்ததையும் அந்தக்கபா
லத்தில் விஷ்ணுமுதலிய தேவர்களுதிரங்களைக்கொண்டு
அவர்கள்மையலையொழித்த சரித்திரங்களைமறந்தீரோ.

முன்னொருகாலத்திலிருந்த தேவேந்திரன் அகந்தை
யைக்கொண்டகாலையில் வயிரவமூர்த்தியினுல் அவன்பு
யவன்மையைவாட்டி யடக்கியதையும் ஐவகை இராக்கத
ர்கள்வீறிகொடுமைசெய்தவேளையில்அவர்களைக்கொன்று
உலகஉபாதிகளைத் தவிர்த்தாண்டதையும்காகாசுரன்மன்
னுயிரைவருத்துவதற்கிரங்கி உதைத்துத்தள்ளித்தோலை
யுரித்துப்போர்த்ததையும் புலியதளை உடையாகத்தரித்தி
ருக்கின்ற காரணத்தையும் ஐயனே ஒருவரும் உமக்குப்
போதித்ததில்லையோ விஷ்ணுவின் அவதாரங்களாகியவ
னத்தின் கோரைத்தந்தங்களையும் ஆமையினோட்டையும்
பறித்துக் கருவபரிகாரமாகத் தரித்தவிதத்தையும் பிர
மன்முதலாகியதேவர்கள் சிரமாலையையும்எலும்புத்தாழ்
வடங்களையும் பூண்டிருக்கின்றதிறத்தையும்மதித்துப்பா
ர்த்ததில்லையோ தாருகாவனத்தில் வாசமாயிருந்த தபோ
நிதிகளாகிய ரிஷிகள்கண்ணன்மாயையிற்பட்டுச்சிவத்தை
ப்பரமெனநினையாமல்யாகங்கள்தவங்களைச்செய்வதேபே
ரின்பவீடெனச் சிலமோகனசாஸ்திரங்களை உண்டுபண்
ணி அதையனுசரித்துவரும் கருவபரிகாரமாக அவர்கள்
தவமுயற்சிகளையும் இருஷிபத்தினிகள் கற்பையும்அழித்
தகாலத்தில் அத்தவத்தர்சீறி மாரகயாகமொன்றைத்தொ
டங்கி அதன்மூலமாய் முயலகனையுண்டுபண்ணிச்சிவனை
க்கொல்லும் படிக்கேவியசமயத்தில் ஒல்லெனவாற்றிவா
டத்தள்ளிமிதித்து நடித்ததையையும்மற்றும் அந்தவி
ருஷிகள்செய்த வஞ்சகங்களை யடக்கியாண்டமகிமைகளை
யும் கியாபகங்கொள்ளவேண்டாமோ அன்றியும், தம்மை
வழிபட்டுக்கிடைத்த செல்வத்தை யனுபவித்துவருங்கரு

வத்தினால் விழிகள்மூடி அதைத்தந்தகடவுளைமதியாமற் சத்துருத்துவங்கொண்டபாபிகளை ஒப்புவமையற்ற சிவபிரான் தண்டஞ்செய்தகாரணங்கள் இன்னமும் அனந்தகோடிகளுண்டு அவைகளனைத்தையுந்தெரிவிக்கவேண்டுமாகில் அளவற்றயுகங்கள்செல்லும் மேலும் என்னுபசும் போதாது ஆதலால்தேவதேவோத்தமனைச் சருவசிவதயாபரமூர்த்தியாக விருக்கின்ற சிவபிரானை எக்காலத்தும் சிந்தித்துப்போற்றி அவன்பாதாரவிந்தங்களைத் தஞ்சமாகச்சிக்கெனப்பற்றிய புண்ணியவான்கள்இம்மைமறுமைச்செல்வங்களை யனுபவித்துக் களித்துவாழ்வார் இதற்குப்புறம்பாகியஅறிவீனர்க ளொருபோதும்பிழைக்கவகையற்றவராய்ச் சகலதுன்பங்களையும் அனுபவித்துவருந்தி கடையில் நரகவாதனையிற்பட்டு வாடிமீளவும், பிறந்துமிறந்தும், அலைவார்கள் ஐயனேயிப்போதுபேசியஉண்மைகளைவேதாகமமுதலிய நூல்களிற்சொல்லிவருகின்றதுஇவ்வாக்கியங்களைத் தத்துவப்பொருளாகமதிக்கவேண்டும் ஆதலால்தேவருமிவைகளையாராய்ந்து பாதகத்துக்கேதுவாகியமார்க்கங்களைவிட்டு மேற்குறித்த நிச்சயப்பொருள்களைக்கவனித்து அவற்றைக்கடைப்பிடியாக நம்பியனுசரிக்கவேண்டும் பிதாவேயின்னமொரு இரகசியத்தைச்சொல்லுவேன் கோபியாமற்கேட்டருள்க ஆதியில்தேவரீர்முடித்ததவஉறுதிக்குமெச்சி இந்தஅரசுரிமையையும்சம்பத்தையுங்கடாட்சித்தபரமன் திருவுளத்தில்நினைப்பாராயின் நிமைப்போதில்மாற்றவல்லன் அவனருளுருப்பெற்றெழுந்த குமாரசுவாமியுடன்பகைத்துச் சண்டைக்குப் போகநினைப்பது தகுதியோ ஐயனே தன்னினுமுயர்ந்தவர்களுடன் போர்செய்யத்தனித்தால்ஜயமுண்டாகுமென நினைக்கக்கூடுமோ இவையன்றியும்சிலகாலத்துக்குமுன்னம் பூதலமும் வானகமும் திசைகளும் சத்தசாகரங்களும் அதன்மத்தியிலடங்கிய தீவுகளும் மகம்மேருமுதலிய பருவதங்களும்மற்று மிராநின்றசமஸ்தமும்மாறுபட்டுப் பலபலவேடிக்கையார்த்தமாகக் காட்டியசெய்கைகளை யாமெல்லோருங்கண்டு இதென்னஉற்பாதமாயவித்தைகளாகவிருக்கின்றதென்றெண்ணி யாதுந்தோற்றாதுமயங்கினேம் அவையனைத்தும் ஆதிகர்த்தனாகிய சிவகுமாரன் திருவிளையாடலெனத் தெரிந்தமேலவர்கள்சொல்லக் கேள்விப்பட்டனம்.

அக்காலத்தில் இந்திரன்முதலாகிய தேவர்கள் மருண்டுஇச்செய்கைகளையாவர் நடாத்தினரெனத் திகைக்கின்ற காலையில் அவர்கள்விழிகளுக்குத்தோற்றவேற்றுருக்கொண்டு மேருகிரியின்மீதில்நின்றபோது முற்காட்டியமாறுபாடுகளனைத்தும் இந்தப்பாலகன்நடித்தலெனக் கோபித்துச்சூழ்ந்துகொண்டு போர்புரியத் தேவராசன்முதலாகியசகலரையும்மாய்த்துப்பின்பு பிரகஸ்பதிவேண்டுதலுக்கிரங்கி உயிர்பெற்றெழக்கடாட்சித்தனரெனச் சொல்லுகின்றனர், பின்புஅவர்கள் சந்தேகங்களொழிந்து மனஉறுதிகொள்வதாகவெண்ணிஆயிரங்கோடிஅண்டங்களும் அவற்றுளடங்கியிருக்கின்ற புவனங்கள் தேவர்கள் இருஷிகள் சராசரப்பிரபஞ்சங்கள் பற்பலவளங்கள் அவற்றிற்குக் காரணராக விளங்காநின்ற திரிமூர்த்தி சொரூபங்களாதிய சகலமுந்தன்வடிவிற்றோற்றக்கந்தன்விசுவரூபங்கொண்டிருளினனெனப் பெரியோர்கள்வழங்கிக் கொள்ளுகின்றனர் இஃதன்றியும் குடிலைமந்திரத்தின்பொருளை வினவிவிடைதர மயங்கிய பிரமனைக்குட்டிச் சிறையிலிட்டுத்தாமேசராசரங்களனைத்தையும் அளவற்றகாலஞ்சிருஷ்டித்துவருகையிற் சிவபிரான் வேண்டியபடிக்கு விடுதலைசெய்தனரெனச்சொல்லும் பெருமையையுடையசண்முகன்செய்கைகளைக் கேட்குந்தோறும் மனதில்அற்புதம்விளைகின்றது இவையன்றியும் முன்னமொருகற்பத்தில் விஷ்ணு வராகவுருக்கொண்டபோது கருவித்து உலகங்களனைத்தையுந் தன்கோட்டினுற் கல்லிப்பிராணிகளையலைத்துவருத்தும்போது பரமனருளின்படிக்குஅப்பன்றியின் கோதைத்தந்தங்களைக் கரங்களினாற்பற்றிப் பூமிவானமெங்குமிழுத்துக்கொண்டு திரிந்தகாலையில் வலிகுன்றி அகந்தையொழிந்துபோற்றி யிரக்கவிரங்கி அதன்கோடுகளினொன்றைப்பறித்துத் தமதுபிதாவாகியசிவநாதனணியக் கொடுத்தானென்றுங் கேள்விப்பட்டனன், இதனாற்றிரிபுரதகனர் குமாரன் யாவரினும் வலியனென்பதைச் சொல்லவும்வேண்டுமோ வாமனவதாரங்கொண்டகாலத்தில் மண்விண்ணையளந்தருளிய மகாவிஷ்ணு தூண்டியசக்கரத்தைக்கழுத்தணியாகத் தரித்திருந்த தாருகாசுரனையும்மாயையிற்சிறந்த கிரவுஞ்சனையும் வெற்றிவேலினாற்பிளந்து கொன்றது அதற்குச்சாட்சியல்லவோ சண்முகங்களைக் கொண்டிருக்கின்ற நிருமலக்கடவுளைச்சிவத்தின்விழிகளிலுதித்த பாலகனென்றிகழவேண்டாம் செய்கையினாற்சகலதேவருக்கும்மேலாக நினைக்கவேண்டும் இதற்குச்சிலதிஷ்டாந்தத்தைக்காட்டுவேன் சருவசங்காரகாலத்திற்பிறப்பிறப்பிலியாகிய உருத்திரமூர்த்தியினது நகையினின்றெழுந்தசிறுபொறியன்றோசராசரப்பிரபஞ்சங்களனைத்தையுந்தகித்துச் சாம்பலாக்கவல்லது இதுவுமல்லாமல் இந்திரன்பலவளங்களையும்போக்கி வாடுகின்றதுன்பத்தையும் சயந்தன்முதலானதேவர்கள் கொடியகாவலிற்பட்டுவாடுகின்றவருத்தங்களையும் சிருஷ்டிகர்த்தனாகியபிரமன்பெற்றுக் கிலேசிக்கின்ற விழியையும் சக்கரப்படையைப் பறிகொடுத்து வருந்தாநின்ற மகாவிஷ்ணுவினது வாட்டத்தையும்போக்கிப் பழையபடிக்குச் சலனமற்றுஅவ்வவர்களரசுரிமைகளையும் செல்வங்களையும் கடாட்சிக்கத் திருவுளங்கொண்டு திவ்வியமங்களசுரூபத்தைப்படைத்த பாலகனைப்போல உருக்கொண்டு சிவபிரானே சண்முகங்களைவகித்தவதரித்தனரெனப் புகழ்வதல்லது வேறொன்றைக்குறிக்கவும்போதுமோ கங்கைபுத்திரனென்றும்கார்த்திகைத்தெரிவையர் மைந்தனென்றும் செங்கண்மால்மருகனென்றும் தேவசேனாபதியென்றும்பிரமனாதியரானவர்களாலறியப்படாத சுயஞ்சோதிவடிவினனைப்பேசநினைப்பது பேதைமையாகும்அவன்குணாதிசயங்களை அவனேயறியப்படுவதன்றியில் ஒருவர்கருத்தினும் விழிகளினும் அடங்கப்பட்டவனோ இவைகளனைத்தும் நிற்க இப்பகல் பானுகோபன் வஞ்சித்தேவிய மோகனப்படையின்வல்லபத்தினால் வீரவாகுதேவர்முதலிய படைவீரனைமாய்த்துக் கடலினிட்டதைப் பன்னிருபுயாசலங்களைப் பெற்றிருக்கின்ற கர்த்தன்தெரிந்து அவர்களைஎழுப்பிக் கொண்டுவரும்படிக்குச்சுத்தோதகக்கடலின்மீதேவிய வேலாயுதத்தை இந்தபட்டணத்தினிடத்திற் செலுத்துவாராகில் இதுபரியந்தம் இப்பிராந்தியத்திலிருக்கின்ற நாமெல்லோரும்நாசமடையாமல் உயிர்பெற்றிருக்கக்கூடுமோ ஆதலால்ஜயசாலியாகிய உமதுதுணைவனையும் வஞ்சத்தினால்தேவர்முனிவரைவாட்டியிருந்த கிரவுஞ்சவரையையும் பிளந்ததுமன்றியில் இத்தினம்பானுகோபன்படைமுயற்சியி

னால்சுத்தோதகக்கடலிற்பட்டுச்சோர்ந்த வீரவாகுதேவர் முதலியசகலரையும் உயிர்பெறச்செய் திட்டுவந்தமகிமைகளைக் கண்டபோதே அந்தவொப்பற்ற வேலாயுதத்தைப் போற்றிக் குமாரதேவர் திருவடிகளிற்சேவித்து வாழ்த்திக்குறையிரந்துபினழைப்பதைமறந்து சத்துருவாகவெண்ணி சண்டைசெய்யப்போகத் துரிதப்படுவது மூடருக்கன்றியில் விவேகசாலிகளுக்கடுப்பதோ இதற்குத்திஷ்டாந்தமாகச் சிவகுமாரன் கட்டளையின்பிரகாரம்முன்னம்வந்ததூதன் பலவீரரைவென்று என்சகோதரனையுங்கொன்று அஷ்டலட்சுமிகளும் குதிகொண்டிருக்கும் செல்வவளங்களைப் பெற்றிருக்கின்ற இப்பட்டணத்தைத் தாறுமாறாகவழித்து யாவரையும் சட்டைபண்ணாமற் செயப்பிரதாபத்தைப்பெற்றுப்போயினன்.

இந்தக்காலத்திலும் முதல்நாள்பானுகோபன் சதுரங்கசேனைகளைக் கூட்டிக்கொண்டுபோய் அமர்செய்யுமுன்னிலையிற் படைகளனைத்தையும் சின்னபின்னப்படக்கண்டித்து அவனையும்பறக்கடித்தான் இப்பகல் என்தமையன்கணக்கிறந்த சயின்னியங்களுடன் போராடும்போதுஇரதகஜதுரகபதாதிகளையும் நாசப்படுத்திப்பானுகோபன் மதிமருண்டலையதிவ்வியபாணங்களைக்கொண்டு வாட்டாநிற்கஎதிரில்நின்றுசண்டைகொடுக்கவஞ்சிவிண்ணிடத்தில் மறைந்திருந்துமாயப்படையைச்செலுத்தி வீரவாகுதேவர்முதலானவர்களுணர்வை யழித்துக்கொன்று சுத்தோதகக்கடலிற் சேர்த்தகாலத்திற் சண்முகப்பெருமாள்செலுத்திய வேற்படையின் வல்லபத்தினால் உயிர்பெற்றுவந்து இந்தச்சிறந்தநகரையழிப்பானாயின் அவனைத்தூதனென்றிகழ்வது தகுதியோ மேலும் அந்தச்சூரனைவெல்லவல்லவர்கள் யாவரிருக்கின்றனர் இவையன்றியும் அரியதவங்களைச்செய்துபெற்ற தேவாஸ்திரங்களைத் தூண்டியகாலத்தில் அவைகளுக்கு மாறுசெலுத்தித்தடுத்தும் சத்தசாகரங்களின் கடையிற்கொண்டுபோய்வைத்திருந்தமோகனப்படையின் செயலற்று நாசப்படுமாயின் பேரறிவாளராகவிருப்பவர் அந்தவீரனுடன்சண்டையிலெதிர்ப்பார்களோ நினைக்கவும்போதுமோ இவ்விதமாகத் தூதுவந்தவொருவன் புசபலபராக்கிரமத்தினால் இந்தப்பட்டணமுமிதிலிருந்த அவுணவீரர்களும் அதப்பட்டதையுந் திஷ்டாந்தமாகக்கண்டனம், இதையோசிக்குமிடத்தில் ஆதியந்தமில்லாத பாலசுப்பிரமணியர் சற்றுகோபங்கொண்டு போர்செய்யவருவராகில் நிமைப்போதிற் சகலபுவனங்களுமழிந்துபோவதற் கையமுமுண்டோ பன்னிருபுயாசலங்களைப்படைத்தகர்த்தன் சண்டைகொடுக்குமுன்னிலையில் நாம்பெற்றிருக்கின்ற வரமுயற்சிகளும் தேவாஸ்திரச்செருக்கும் மாயையின்பெருக்கும் புசபலபராக்கிரமங்களும் சதுரங்கசேனைகளின் உதவிகளும் சூரமும்மற்றுமுண்டாகிய வன்மைகளும் இந்தச்சிறந்தபட்டணத்தின்வளங்களும் புத்திரமித்திரர்வலியும் சிவபிரான்நுதல்விழிக்கனலிற்பட்டழிந்த திரிபுரங்கள் அதில்வாசஞ்செய்திருந்தஅவுணவீரர்கள்நாசமடைந்ததைப்போல யாதொருபிரயோசனத்தையுந் தராமல் மங்கியழியாதோ இவையன்றியும் முன்னம் தூதனைச்செலுத்திப் பற்பலகாரணங்களைத் தெரிவித்து நமதுகருத்தையறிந்து தேவர்கள்சிறையை நீக்கிவிடாதகாரணத்தினால் இவ்விடமெழுந்தருளியும் தாமேசண்டைக்குவராமற் றூதனையும்படைகளையுஞ்செலுத்திய காரணங்களையோசிக்குமிடத்திற் சரவணபவன் நமதிடத் தின்னமுங்கிருபையை வைத்திருப்பதாகக்காணுகின்றது.

இத்தகையதயாநிதியாகிய குகன்மனதிலதிக கோபங்கொள்ளுவதன்முன்னம் தேவர்கள்சிறையைநீக்கித் துரிதமாய் நமதுசுற்றத்தினருடன்போய் அவன்திருவடிகளிற்சேவித்துக்கொடியவன் இதுபரியந்தம் செய்துவந்த குற்றங்களை மன்னித்தாளவேண்டுமெனப் போற்றுவையாகில்நாம்முடித்திருக்கின்றபலஅக்கிருத்தியங்களையும்பொறுத்துத் தேவரீருக்குவேண்டும் பலவரங்களையுந்தந்து தமதுசேனைகளுடன்திரும்பித் திருக்கயிலைக் கெழுந்தருளுவர் நாமெல்லோருஞ் சிலகாலம் உயிர்பெற்றுச் செல்வங்களை யனுபவித்திருக்கலாம் இவையனைத்தையும்யோசித்து மேல்நடக்கவிருக்கின்ற காரணங்களைத்துணிந்து சொன்னேன்அவைகளைக்கடைப்பிடியாகவெண்ணியனுசரித்துநடந்து கடைத்தேறுவாயெனக்குமாரனாகியஇரணியன்பரிவாய்ப் பரமசிவத்தின் குணாதிசயநிச்சயங்களையும் பாலசுப்பிரமணியக்கடவுளினது மகிமைகளையும் சூரத்தையும்விரித்துவிரித்துச் செவிகளிற் சுறுக்கிடச்சொன்ன பிரகரணங்களைச் சூரபதுமன் கேட்டவுடன் வாயினிடத்திற்றீயும் புகையுமெழ நகைத்துத் திசைகள்முதலாகக் கனல்பட்டு வேகக்கோபித்துத் தேகமுற்றினும் வியர்த்துப்புழுங்கப் பெருமூச்செரிந்து இதழ்துடிக்கப் பற்களைக்கடித்து கொவ்வைக்கனியைப்போல விழிகள்சிவந்து கனலையிறைக்க மனங்கொதித்துச் சரீரம் பதைபதைக்கப்பேரிடிக் கொப்பாகக்கரங்களைத்தட்டி இரணியனை உருத்துப்பார்த்து இதனைச்சொல்லுவான் கூரியவேலாயுதத்தைப்படைத்த குகனது சவுரியவன்மைகளையுந்தூதாகவந்த சத்துருவின் புசபலபராக்கிரமங்களையும்யான்நடந்துகொள்ள வேண்டிய காரணங்களையும்போதிக்கத்துணிந்தனை இந்தநீதிகளை உனக்கார் அனுக்கிரகித்தனர்அவர்களைக்கண்டால் இந்தநிமிஷத்திற் சிரச்சேதம்பண்ணி அவர்கள் குலநாசப்படவாட்டிவிடுவேன் யாரோ பயமுறுத்திச் சொன்னதுர்ப்போதனைகளை உறுதியாகநினைந்துஎன் வீரபராக்கிரமங்களையும் மற்றகாரணங்களையும்நீசற்றும் யோசித்துப் பார்த்தவனல்லை அவற்றிற் சிலவற்றைத்தெரிவிப்பேன் கேட்பையாக.சராசரப்பிரபஞ்சங்களைசிருஷ்டிக்கும் முதற்றொழிலைப் பெற்றிருக்கின்றபிரமன், தினந்தோறும் பிராதகாலத்தில்நமதரண்மனைக்குவந்துதிதிவாரம், கரணம்,யோகம்,நட்சத்திரம்,இவற்றின்காரியங்களை விளங்குகின்ற பஞ்சாங்கத்தைச் சமையங்கிடைக்கிறபரியந்தம்காத்திருந்து சொல்லிப்போவான் க்ஷீராப்தியினிடத்தில் வடவாலிலையிற்பள்ளிகொண்டிருக்கும்விஷ்ணுவானவன்என்தம்பி வீரத்துக்காற்றாமல் வலிகுறைந்துவாடிச்சகலரும் புகழாநின்ற சக்கரத்தையும் பறிகொடுத்தோடிப்போயினன், இந்திரன்சகலதேவர்களுடனும் சமுத்திரத்தி லுலாநின்ற மச்சவகைகளைப்பிடித்துவந்து நம்மவர்களனைவருக்கும் கொடுத்துக்கொண்டுஎன் பணிவிடைகளைச் சிரசாகவகித்துச்செய்துசெய்து வாடிப்பயந்தோடியொளித்தான்.

இப்படிக்குச் சகலரும்நம்மாணைக்குள் ளடங்கியிருக்கும்போது வெள்ளியங்கிரியிலெழுந்தருளிய காளகண்டமூர்த்தியானவர் நேற்றையதினம்பெற்ற சிறுபிள்ளையோசலனமற்ற நமது வீரத்தன்மையை யழிக்கவல்லவன்கேசவன் பிரமன், வாசவனாதியாகிய தேவர்களும் இவர்களன்றி

யிற் சகலபுவனங்களினும் வாசஞ்செய்திருக்கின்ற எத்தகையவீரர்களும் இவர்களனைவருக்கும் ஆதியாகச்சொல்ல நின்றதிரிநேத்திர தாரியாகிய பரமசிவனும்ஒன்றுபடத்திரண்டுஏககாலத்திற் சண்டைகொடுக்கவந்தநேருவராயினும் சற்றும்மமது முன்னிற்கவஞ்சிப் புறந்தந்தழிந்து போவதல்லது வெற்றிகொண்டொருகாலமும் மீளவறியார்கள் சற்றும்விவேகமில்லாத பிள்ளாய் நான்பெற்றிருக்கின்ற வரங்களின்முயற்சிகளுனக்குத்தெரியாததோகுமாரனே சூரத்தையும்புசபலபராக்கிரமத்தையும் வயிரத்தையும் மேம்பாட்டையும் மறந்து கீர்த்திபெற்ற குலமுறையைக்கொன்றாய் இராஜாங்கத்துக்கடுத்தமுயற்சிகளைச்செய்து பெறவல்லபுகழைமறந்து சத்துருக்கள் புயவலிமையை நினைந்து பயந்தவனுய்த்தகாதகாரணங்களை என்முன் பிதற்றினுய் இனியொருவார்த்தையையாவது மேற்குறித்த விஷயத்தைக்குறித்துச்சொல்லுவையாகிற் புத்திரனென்றும் இரக்கமில்லாமல் உன்னுயிரை யியமலோகங்குடியேற்றுவேனென்று வடவாமுகாக்கினியைப்போற்சீறினன், அதைஇரணியன்கண்டு நாம்போதித்த நன்மார்க்கங்களைக் கொடியமனதையுடைய பாதகன் முக்கியமாகநினைத்தவனல்ல ஆதலால் இனியிவனிறப்பது உண்மைமேலும் சமுத்திரஞ்சூழ்ந்திருக்கின்ற இந்த உலகத்தில்பிராரத்வ கருமவினை முயற்சியையாவர்வென்றனர், இவனுக்குவிநாசகாலம் நேர்ந்தபடியால் விபரீதபுத்தி விளக்குகின்றது, இனிபற்பலநன்மார்க்கங்களையும் நீதிகளையும் உறுதிகளையும் தெரிவிப்பதினுற் பிரயோசனமொன்றுமில்லை யென்று யோசித்துத் தந்தையே சர்வக்கியர் திரிகாலங்களுமுமக்குநன்ருகத்தெரியும் ஏதோசிலகாரியங்களைத்தெரிந்தவனைப்போலத் தமக்கிவ்விதங்களைச் சொன்னேன் சிறியனுதலால் அடியேன்பிழைகளைப்பொறுத்தருளவேண்டுமெனத் தேற்றிக்கோபத்தையாற்றி நல்லுணர்ச்சியற்ற பிதாவானவர்இறப்பதற்குமுன்னம் புசபலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவருடன் சண்டைகொடுத்திறப்பேனுயில்மோட்ச சாம்பிராச்சியத்தைப் பெற்றுவாழலாகுமெனத்துணிவுகொண்டவனுய்ச்சக்கிரவர்த்தியாகிய சூரபதுமன் பாதாரவிந்தங்களிற் சேவித்துப்போற்றிப்பிதாவே உமதுமனதைச் சோதிக்கவேண்டி இக்காரியங்களைவிரித்துப்பேசினேன் தேவரீர் திருவுளம்அவ்வண்ணம்திடப்பட்டிருக்குமாகில் இதோஇந்த நிமிஷத்திற்போய்உமதெண்ணப்படிக்குப் பாலசுப்பிரமணியனையும்தூதன்முதலானவர்களையும்இமைப்போதிற்சாடிஜயப்பிரதாபத்துடன் வரக்கடவேன்செலவுகொடுக்கவேண்டுமென்றுவேண்டுகின்ற குமாரனைத்தயையாகப்பார்த்தப்பனேமுன்னஞ்சத்துருக்களுக்கஞ்சிச்சமாதானப்படுவதற்குவேண்டும் பலஹேதுக்களைத் தெரிவித்தஉனக்கு இத்தனைசீக்கிரத்தில் அவர்கள்மீதுகோபம் பிரவேசிப்பதற்குக் காரண மென்னையெனக்கேட்கப் பிதாவேசூரனெனப்பெயர்படைத்திருக்கின்ற உமதுபிள்ளையாகிய நான்சத்துருக்களுக் கஞ்சுவேனென்றெண்ணவேண்டுவதில்லைமுன்சொல்லியதனைத்தும்வேடிக்கைபார்த்தமெனக் குறித்த இரணியனைக்கொண்டாடிப்புலிவயிற்றிற்பிறந்து பூனையாகுவையோவெனக்களித்தழைத்தணைத்துக்கொண்டு நீ சொன்னதனைத்துமுண்மையே சீக்கிரமாய் உன்சேனைகளுடன்போய்ச்சத்துருக்களை அதம்பண்ணிவரக் கடவையெனக் கட்டளையிட்டவுடன் விடைபெற்று வெளிவந்துவெண்சாமரை ஆலவட்டமுதலியஇராஜசின்னங்களைப் பலர் தாங்கிவரத்துரிதமாய்த்தன்னரண்மனையைச்சேர்ந்து ஆயுதசாலையில் நுழைந்து பொன்மலையாகிய மகாமேருவின்மீது சந்திரனது சோடசகலைகள் பரவிக் காட்டுவதைப்போல வயிரக்கவசத்தைச்சொன்னவடிவைப்பெற்ற மார்பினிடத்திருக்கித்திவ்விய பாணங்கள் நிறைந்திருக்கின்ற அம்புறாத்தூணியைமுதுகிற்கட்டியிரத்தினமயமாகிய புட்டில்களைவிரல்கடோறுமணிந்து பகைவருயிரையுண்ணும் இயமனையொத்த பாரித்தவில்லைத் தொழுதெடுத்து இடக்கரத்திற் பற்றித்தேவாஸ்திரங்களைவலக்கரத்திற்றாங்கிச் சிரோரத்தினமயமாகச் சோதித்திருக்கின்ற கிரீடத்தின்பேரில் தும்பைமாலையைச்சூடி மந்தரத்துக்குச் சமமாகியதண்டாயுதம்,வேல், சக்கரமுதலிய ஆயுதங்களை யெடுத்துக்கொண்டுவெளிவந்து ஆயிரஞ்சிங்கங்கள் பூண்டு நவரத்தினமயமாயோங்கிநிற்குமிரதத்தின்மேல் சிங்காசனம்போலத் தாவியேறிவீற்றிருந்த காலையில்தனக்குத் தோழராய்ப் பிராணபதமாகவிருக்கின்ற புசபலபராக்கிரம சாலிகளாகியஆயிரம் இராஜகுமாரர்கள்சர்வாயுதபாணிகளாய்த் தங்கள் தங்கள்வாகனங்களிலேறிவந்து சூழவும் வீராதிவீரராக விருக்கின்றஆயிரஞ் சேனைத்தலைவர்கள்பல புரவிகளைப்பூண்டிருக்கும் தேர்களிலேறிவில், வாள், வேல்,சக்கரம்,பிண்டிபாலம், முசலம், கப்பணமாதியாகிய ஆயுதங்களையுங்கொடியபாணவிதங்களையுந்தாங்கினவர்களாய்ச்சத்தசாகரங்களும்பெருக்கெடுத்ததைப்போலஆரவாரித்துக்கொண்டுபோர்க்கோலத்தைத்தரித்து அஸ்திர சஸ்திரங்களைஏராளமாகத்தாங்கி வீராவேசங்களுடன் சண்டைகிடைத்ததென்கின்ற உற்சாகங்களைப் பெற்றுவெளிப்பட்ட இரதகஜதுரகபதாதிகளைக் காவல்கொண்டுவந்துஇராஜகுமாரனைச்சுற்றிக்கொண்டனர்.

அவர்களின் தொகையைச் சொல்லக்கேட்பீராக எண்ணூறுவெள்ளம்தேர்கள்எண்ணூறுவெள்ளம், மதயானைகள் ஆயிரத்திருநூறுவெள்ளம், பஞ்ச கல்யாணிகளாகிய புரவிக்கூட்டங்கள் ஆயிரத்திருநூறுவெள்ளம்,ஜயசாலிகளாகிய இராட்சதப்படைகள் ஆகாலாயிரவெள்ளம், சதுரங்கசேனைகளுஞ்சுழல்காற்றைப்போல அதிவேகமாகநடக்கவும், ரணபேரி,ஜயபேரி,துந்துமி,முழவுவலம்புரிச் சங்கம், எக்காளை, துமிழ, தப்பட்டைமுதலிய பதினெண்வாத்தியங்களும் அண்டங்களதிர முழங்கிவரவும் துவசபடங்கள்வானத்தையளாவி யசையவும் வெண்பட்டுக்குடைகள் கவிந்திருளைச்செய்யவும் கழுகு,பருந்து,காக்கை,பந்தலைப்போல வட்டமிட்டுவிவரவும் இத்தியாதியவைபவங்களின் மத்தியில் சொர்ணச் சாயலையுடைய இராஜகுமாரன் அரசவீதிகளில்வரும்போது அவனுடைய மங்களகரமாகிய வடிவின்பெருக்கத்துக்கிச்சித்து மிருதுவாகியவல்லிசாதக் கொடியைப்போலத்துவளும் மெல்லியவிடையையும் செம்பஞ்சூட்டி மாந்தளிரையொத்த பாதங்களையும் முருக்கலரைப்பழித்துச்சிவந்த அதரத்தையும் பொன்னையொத்த தேமல்படர்ந்து பருத்துவிம்மித்ததும்பிப் பொற்கலசங்களைப்போலச் சுந்தரம்பெற்று ஆடவர்மனதைமயக்கிவாடச்செய்யும் கொங்கைகளைப்பெற்று இரதிதேவியினும் வடிவுள்ள மங்கையர் செவ்வரிபரந்துவேலையொப்பக் காதளவுமோடி மிரானின்றவிழிகளாகிய கணைகள் பாரித்தபுசங்களிற்பாய இமையாமல் பார்த்துக் களிக்கவும்பலகன்னியர்கள்முத்தாலங்களைச்சுழற்றிப்போகவும்

அக்காலத்தி லுண்டாகிய சுமையினல் பூமிதேவிநெளிந்து நெளிந்துவாடவும் சேடன்களைந்தேங்கவும் இத்தகைய சகலாடம்பரங்களுடனும் தருமமார்க்கங்களை யனுசரித்துவரும் இரணியன் மனவாட்டத்துடன்நகரைக்கடந்து சதுரங்கசேனைகள் ஆரவாரித்துவரத்தேவர்கள்திகைத்து நடுங்கச்சென்று கோபமேலிட்டுப்பூதவீரர்கள் கொக்கரித்திருக்கும் ரணக்களத்தைச்சேர்ந்து விண்ணவர்கள்முதலாகத் திடுக்கிட்டு மனம்வருந்தும்படிக்குச் சகலபுவனங்களினு மிராநின்ற பூதர்களனைவரும்சேர்ந்து நாசஞ்செய்வதைப்போலச் சிவகணங்கள்மீறி அதா அதப்படுத்துவதையிராஜகுமாரன் பார்த்துத் தியெழுநகைத்துத்தன்பட்டணம்பட்ட பாட்டைக்குறித்து ரவுத்திராகாரமாகக்கோபித்துப் பெருமூச்செறிந்து சரீரம்வெதும்பிவியர்க்கவிழிகளிற்றீப்பொறிசிதறத் தன்னைச்சூழ்ந்திருக்கின்றதோழரையும் சேனைத்தலைவனையும் பார்த்துஒவ்வொரு திசைக்காயிர வெள்ளமாகச் சதுரங்கசேனைகளையும் பிரித்துநீங்களும் நாற்கூறுகக் காவல்கொண்டு வலியிற்சிறந்த பூதப்படைகளையும் சேனைத்தலைவர்களையும்பிசகவொட்டாமல் மடக்கிக்கொண்டு கொடியபோரைச்செய்துவாட்டக்கடவீர்களெனக் கட்டளையிட்டமாத்திரத்தில் இதுதகுந்தகுமெனப் புகழ்ந்தவர்களாய் இராஜபுத்திரன்குறித்தபடிக்குநால்வகைச் சேனைகளையும் பிரித்து பத்மயூகம், சகடயூகம், கருடயூகம்,சரபயூகங்களாகவகுத்துஅவைகளின் மத்தியினும் புறம்பினும்முன்பின்னும் தனுர் பாணிகளாகக்காத்துபோர்ப்பறைகள்முழங்கப் பிரளய வெள்ளத்தையொப்பஆரவாரித்துப் போகின்றகாலையில் இராஜபுத்திரனுகிய இரணியன்இச்சேனைகளுக்குமுன்னணியிற்காலாந்தகனுக்கொப்பாக நடந்துவருகின்றசெய்கைகளனைத்தையும்வெற்றிவேலாயுதக்கடவுள் தூதனுகிய வீரவாகுதேவர்கண்டு இவ்விதக் கட்டுக்காவலுடன் சவுரியவானைப்போந்தவன் சூரபதுமன் பிள்ளைகளிலொருவனே அல்லதுசேனைத்தலைவனே இன்னனெனத் தோற்றவில்லையென்றையப்படுகின்றபோது நாரதமஹாரிஷிஎழுந்தருளி, வீராதிவீரனே இதோமுன்னணியைத் தழுவிக்காத்துவருகின்றவன் சூரன்பிள்ளையாகும் இவன்பெயர் இரணியனெனச்சொல்லுவார்கள்தகப்பன் கட்டளையின்படிக்குத்தன்தோழராகிய இராஜகுமாரர்கள் சேனைத்தலைவர்கள்சூழ்ந்துவரப்பிரளய வெள்ளத்தைப்போல நால்வகைச்சயின்னியங்களுடன் நமதுபடைகளைச்சின்னபின்னப்படவாட்டநினைந்துவீராவேசத்துடன் வருகின்றனன், ஆதலால்வருணாஸ்திரம் இந்திராஸ்திரம், குபேராஸ்திரம், இயமாஸ்திரம், இந்தத்திவ்வியபாணங்கள் நாற்புறங்களினும் பரவிவருகின்ற சேனைப்பெருக்கின்மீதிற்செலுத்திவிட்டு இரணியனைச்சுலபமாகளையகப்போகாது புசபலபராக்கிரம சம்பத்தையும் மாயைவல்லபங்களையும் தேவாஸ்திரமுயற்சிகளையும் பலவிதஜயங்களையும் பெற்றிருப்பவனாதலால் இவனை உம்மையல்லது மற்றொருவரால்வெல்லப்படாதுஇதையோசித்துத் தகுந்தசாக்கிரதையுடன் நீரேயெதிரிட்டுப்போராடிவெற்றிபெற வேண்டுமென்று தெரிவித்துநாரதர்வானநாட்டைநோக்கிப்போயினர்.

பின்பு வீரவாகுதேவர் இவைகளைநிதானித்துத்துணைவரையும், இலக்ஷர்,படைத்தலைவரையும்பார்த்துசூரன் நம்மை ஜயிக்கத்தக்கதாகப்போக்கிய இராஜகுமாரன்இராட்சதசேனைகளைநாற்கூறுக்கிப்போற்றிவருவதால்நீங்களும் பூதவெள்ளத்தைப் பிரித்துக்காவல்கொண்டுபோய்த்தனித்தனியே பகைவரைவளைந்துசாடக்கடவீரெனப்பணித்தபடிக்குச் சேனைகளைப் பகிர்ந்தணிவகுத்துச்சென்றனர், உடனேவீரவாகுதேவரும் உத்தசன்னத்தராய்இரணியனுக்கெதிரிற் போவதாயினர் அத்தருணத்தில்நாற்புறங்களினும் கடல்பெருகியதுக் கொப்பாக இராட்சதர் மேலிட்டுவரும்போது பூதர்களும் ரவுத்திராகாரமாகக்கோபித்து எதிர்ந்தமாத்திரத்திற் பகைவர் வீரா வேசங்களுடன் சபதங்களைப்பேசிப் புசங்களைத்தட்டிக்கொண்டு மழுவாயுதம், எழுவாயுதம், சக்கிராயுதம், நாஞ்சில்,தண்டம். வச்சிராயுதம், எழுசூலக்கைசூலம்,வேல்முதலியபடைகளை ஒன்றனந்தமாகச் செலுத்தவும்சிலர்பாரித்தவிற்களைவளைத்து அர்த்தசந்திரபாணம் விஷத்தொகையமிட்டிருக்கின்ற கொடியசரங்களைச் சோனைமழையைப்போலச்சொரிந்து சிருங்கநாதங்கள் அட்டகாசங்களைச்செய்துலாவும்போது சிவகணங்களும் சர்ப்பத்தைப்போலச்சீறி வானத்தையளாவித்திசைகளைமூடியிருக்கின்ற பாரித்தமரங்களைவேருடன் பறித்துக் கிறுகிறெனச்சுழற்றிச்சாடியும்வளைதடி கணிச்சி யிருப்புலக்கைகளை றிவ்வறிவ்வெனவீசியும்பருத்தமலைகளைப் பறித்துச்செலுத்தியும்கொக்கரித்துஅட்டகாசங்களைச்செய்தனர்.

அக்காலத்தில் இராட்சதப் பாதகர் தூண்டிய படைகளினல் தலையற்றும் கழுத்தொடிந்து கால்களோய்ந்தும், கணக்கிறந்த பூதர் மாண்டனர், சிவகணங்கள்பின்னிடையாமற் கடாவிய ஆயுதங்களினல் தலைபிளந்தும் மார்பு கிழிந்தும் புசங்கள் தறிந்தும் கால்களொடிந்தும் சிதைந்தும் அலைந்தும் கண்டதுண்டப் பட்டும் இவ்விதமாகப்பல வெள்ளம் ரதகஜதுரகபதாதிகள் மாண்டு உதிரவாரியில் அகப்பட்டோடியது, இவ்விதமாக விருதிறத்துப்படைகளும் அகோர யுத்தங்களைச்செய்யவும் எண்மர்,இலக்ஷர் படைத்தலைவரும் இராட்சதவீரர்களுமெதிர்த்து ஒருவரையொருவர்வெல்லவேண்டுமென்கின்ற வைராக்கியத்துடன்அஸ்திரசஸ்திரங்களையும்பருவதங்கள் விருட்சங்களை அமோகமாகச்செலுத்திக் கொடியபோரைச்செய்யவும்வீரவாகுதேவர்காலாந்தகனைப்போலச்சீறி,இரணியன்அணியை வளைந்து தமதொப்பற்றவில்லைத்தரும்தேவதைகளித்துநடிக்கவளைத்துநாணேற்றிச்சமுத்திரந்தத்தளிக்கவும் ஆதிசேஷன் பணமகுடங்கள் மடங்கிநெளிந்து வருந்தவும் திசையானைகள் மதச்சுவ டொழிந்து வீறிட்டுவாடவும் குணத்தொனி கொண்டு பதினுயிரந்திவ்வியபாணங்களை ஒருமுனையிற் பூட்டிக்காட்டினிடத்திற்கல்மழைபொழிவதுக்கொப்பாக ரதகஜதுரகபதாதிகளின்பெருக்கின்மீதுபிரயோகித்ததருணத்தில்அவைகளொன்றுடனென்று உராய்ந்துதீயையிறைத்துசர்ப்பங்களைப்போலச் சீறிவேகமாய்வந்துசாடியவளவில்தேரணிகள்சிதைந்து அச்சுமச்சு குத்துக்கால் கொடுங்கை பின்னப்பட்டிறையவும்யானைப் பந்திகள்கலங்கி மத்தகம்பிளந்தும் துதிக்கைதறிபட்டும் கோடுகள்முறிந்தும் பாகன்மாண்டு பங்கப்படவும் அலைகளைப்போலத்தாவிப்பாயும் புரவிக்கூட்டங்கள் கழுத்தற்றும்வண்டயங்கள்கலிக்கும் கால்களொடிந்தும்முகவணிகள்பறந்து சின்னபின்னப்பட்டுப்போகவும், இராட்சதப் படைகள் சிரம்-கரம்-உரம்கால் கண்டதுண்டப்பட்டுமாளவும், துவசங்களற்று வானத்திற்பறக்கவும் இவ்விதமாகத்தழைத்திராநின்ற தோப்பினிடத்திற் சூறைக்காற்று

நுழைந்து சாடும்போதுமுறிந்து திசைகளிலிறைந்து சாய்வதைப்போல வீரவாகுதேவர்செலுத்திய பாணகோடிகளினற் பெரும்புறக்கடலுக்கொப்பாகவிரைந்து பரந்திருந்த சதுரங்கவெள்ளங்களுங்கலைந்து சிதைந்து நாசப்பட்டதருணத்தில் வீரன்தூண்டியகணைகள் தேகமெங்கும் சல்லடைக்கண்களாகத்துளைக்க உதிரம்பீரிட்டுப் பாயும்படிக்கு யானைகள்மாண்டுகிடப்பதைப் பார்க்குமிடத்திற் பிரளயகாலத்தில் உலகங்களையழிக்கவெழும் வடவாமுகாக்கினியானது பிரசண்டவாயுவின் மோதலிற்பட்டுப்பலசிகைகளைப்பெருக்கிவருவதைப்போலக்காட்டவும் வீரன்செலுத்திய அர்த்தசந்திரபாணங்கள் மதயானைகளினது துதிக்கைகளைக்கண்டித்துத்தள்ளியதைப் பார்க்குமிடத்திற் பழையவயிரத்தைநினைந்து இராகுகேதுகளாதியசர்ப்பங்களைக்கண்டித்துக் கிடத்தியதுக்கிணையாகத் தோற்றவும் கொடியசரங்கள் வீறியோடிமுத்துகளிறையத்தக்கதாகக் குஞ்சரங்கள் மத்தகங்களைப்பிளப்பது எப்படிக்கிருந்ததெனில் முல்லைநிலத்தில் வாசஞ்செய்கின்ற கோபியர்கள் தயிரைக்கடையும்போது பதலைகளைச் சூழவிறையாநின்ற வெண்ணெய்ப்பெருக்கை யொப்பக்காட்டவுங்கடியபாணங்களோடி விருதுக்கொடிகளையும் துவசபடாங்களையும் தேர்களினிடத்தில்நாட்டிய டக்கையங்களையும் வெண்பட்டுக்குடைகள் முதலியவற்றை வெட்டிக்களமெங்குமிறைத்திருப்பதை யோசிக்குமிடத்தில் வானத்தினிடத்துலாவுஞ் சந்திரனமுகிச்சோடசகலைகளைவீசி விழுந்துகிடப்பதைப்போலத் தோற்றவுங்கூரியகணைகள் சீறித்தத்தித்தாவிப்பாயும் வேகமுள்ளகுதிரைப் பந்திகளைக்கண்டதுண்டப்படவாட்டிக் கிடத்தியதை நிதானிக்குமிடத்திற்றன் வேகத்துக்கிடைந்துசமுத்திரம் அலைகளைமோதாமலடங்கியதற்கு நிகர்த்துக்காட்டவும் பிறையையொப்பவிளங்கும் அர்த்தசந்திரபாணங்கள் மேலிட்டுப்பகைவர்வலியகரங்களைக் கண்டித்துத்தள்ளிய காரணமெப்படிக்கிருந்ததெனில், வெகுகாலமாகவருந்தி மனம்நொந்திருக்கின்ற சந்திரனிதுநல்ல தருணமென்றெண்ணித் தன்னினமாகிய பிறைகளைத்தூண்டிக் கேதுவாகிய சர்ப்பங்களை வெட்டிக்கிடத்தியதை யொப்பக் காட்டவும் இவ்விதங்களாகச்சதுரங்க சேனைகளும் சின்னபின்னப் பட்டழிந்தகாலையிற்பெருத்தெழுந்த உதிரவாரியானது திரைகளைமோதி யிரைந்தோடிக் கடலிற்பாய்வதைப் பார்க்குமிடத்திற் புசபலபராக்கிரமசாலிகளாக விருக்கின்ற வீராதிவீரர்கள் சத்துருக்கள்மீதிற்கோபித்துப் போவதற்கொப்பாகக்காட்டவும் இவ்விதச்சிறப்பைவாய்ந்த போர்க்களத்திற் பலகோடிகவந்தங்கள் நாடகரைப்போலநடிக்கவும் பூதபைசாசங்கள் காளிக்கூட்டங்கள் உதிரபானங்களைச்செய்து வெறிகொண்டு வீரன் புகழைப்பாடிக்கூத்தாடவும் நாய்நரிகள் நிணமாம்சங்களைப் பிடுங்கித்தின்று களித்துலாவவும் கழுகு-பருந்து-காக்கைகள் மூளைகளைவாரிவாரி விழுங்கி உதிரத்தில்முழுகி வானத்திற்பறந்துசிறகுகளைப்புலர்த்தி வட்டமிட்டுப்பறக்கவும் பிணமலைகளெவ்விடங்களினுங் குவிந்துவிளங்கியது

எத்தலங்களினும் பரந்துவந்தகரியதேகங்களையுடைய இராட்சதர்கள் நிமைப்போதிற் சின்னபின்னப்பட்டு மாண்டகாட்சி யெப்படிக்கிருந்ததெனிற், கருமானுலைக்களத்திற்பட்டமெழுகு கரைந்தோடுமாறுபோலத் தோற்றியது இவ்விதங்களாகத் தன்னுடன்தொடர்ந்துவந்த வீரர்களனைவரும் நாசப்பட்டுப்போனதை இரணியன்கண்டமாத்திரத்தில் மனம்பொறுமல் மானம்பாதிக்கச் சருவசங்காரமூர்த்தியைப்போலப்பொங்கித் தனதுகரத்தில்விளங்கும் பாரித்தவில்லையெடுத்துநாட்டி நாணேற்றித்திசைகளதிரக் குணத்தொனிகொண்டு ஆயிரங்குரூரமாகியபாணங்களைப்பூட்டிக் கரவேகமாகச்செலுத்திநிமைப்போதில் ஆயிரகோடிபூதரைக் கண்டதுண்டப்பட வெட்டித்தள்ளியபோது இக்கொடுமைக் காற்றுமல் மற்றவர்திடுக்கிட்டு மிகுத்தவருத்தங்களுடன் பூருவத்திற் றிருப்பாற்கடலினிடத்துதித்துவீறியெழுந்தஆலகாலவிஷத்தின்கொடுமைக்குப்பயந்தோடிய தேவர்களைப்போல நாலுமூலைகளினுமிறைந்துபோய்ப்பதுங்கினர், இந்தஅபஜயத்தைச்சேனைத்தலைவர்களிலொருவனுகியநீலனென்பவன் கண்டவுடன் வடவாமுகாக்கினியைப்போலக் கோபித்துத்தாவி இரணியனெதிரில்வந்து அண்டகோடிகளதிரக் கொக்கரித்த ஓசையைக்கேட்டவுடன் முன்னம்வாடியிருந்த தேவர்கள் மனவெழுச்சி பெற்றவர்களாய்வீராதிவீரன்வந்தெதிர்த்தனன், இனிநமதுபட்சத்தில்ஜயப்பிரதாப முண்டாகுமெனக் களித்தவர்களாய் ஜயம்ஜயமெனவாழ்த்தினர்.

இந்தவிதமாக விண்ணவர்உற்சாகப்படுவதையும்பகைவன்செருக்கையும் சூரன்பிள்ளை தெரிந்தவுடன் விடநாகத்தைப்போலச்சீறித் தானருமையாகத் தேடிவைத்திருக்கின்ற கூரியவேலாயுதமொன்றையெடுத்துக் குறிகொண்டு செலுத்தியகாலத்தில் அனலையிறைத்துக்கொண்டு வேகமாய்வந்து நீலன்மார்பிற்பாய்ந்து பிளந்து உதிரத்தைப் பெருக்கியபோதினும் அவ்வருத்தத்துக்குச் சற்றும்வாடாமல் மனதயிரியத்துடன் பக்கத்திற்றழைத்துநிற்கின்ற மாமரமொன்றை வேருடன்பறித்துக் கிறுகிறெனச்சுழற்றி ஓரடியில் இரணியனேறியிருந்த விரதத்தைக்குதிரைகள் சாரதியுடன் பொடிப்பொடியாய் மங்கும்படிக்குச் சாடியபோது சூரகுமாரன் சிங்காசனைப்போலப்பக்கத்தில்நிற்கின்றசேமத்தேர்களிலொன்றிற்பாய்ந்து மண்டிபோட்டுட்கார்ந்து தன்வில்லில்அமோகமாகியபாணகோடிகளைச்சந்தித்து ஊழிகாலமேகத்தைப்போலச் சொரியும்போது அவைகள் அனலையிறைத்துச்சீறிக் காற்றினுங்கடுகிவந்துபாய்ந்து சரீரத்தைச் சல்லடைக்கண்களாகத்துளைக்கச் சிங்கன்அக்காயத்தினற் சிறிதும் சஞ்சலப்படாமல் தீரனுப்பொன்மலையையொழிய மற்றகுலகிரிகளைப்பறித்து ஒன்றின்பின்னென்றாக இரணியன்மேல்வீசப்பிரசண்டமாருதத்தைப்பெருக்கி வருவதைக்கண்டுசீக்கிரமாய்க் கணக்கிறந்த திவ்வியபாணங்களைப்போக்கித்துகள்கண்டு சிருங்காதஞ்செய்ததைப் பூதத்தலைவன்கண்டு கோபதீபிதனுய் மிருகராசனைப்போலத்தாவி இரணியனேறியிருந்த தேரைச்செண்டைப்போலவெடுத்துச்சுழற்றித் தேவர்கள்மருண்டோடும்படிக்கு வானத்தில் வீசியகாலையிற் சூறுவளியிலகப்பட்ட சருகையொத்துக் கிறுகிறெனச்சுழன்றுகொண்டு வாயுமண்டலவரையிற்போய்த்திரும்பிவந்து பூமியில்விழுவதன்முன்னம் நிலத்திற்பாய்ந்து மற்றொருதேரிலேறப் போகின்ற சூரன்குமாரனை நீலன்நில்லென் றதட்டிப்பாய்ந்து வலியதன்கரத்தினல் பொன்மயமாகியமார்பிலறைந்தபோது அதற்குச்சிறிதும் பயப்படாமல் சீக்கிரமாய் நீலனைப்பிடித்துவானத்தில்வீசப்போய்மறிந்துவந்து பூமியைச்சேர்ந்தவுடன்கற்கம்பத்

ணையொத்த தனது வலியகாலினால் இரணியன்மார்பிலுதைத்து நிலத்திலுருட்டி யிடியைப்போல ஆர்ப்பரித்து நிணச்சேற்றில் மேகத்தைப்போலக் கதறிக்கொண்டு புரளுகின்ற இராஜகுமாரன்மீது இந்திரன்பருவதங்கள் சிறகுகளைக்கண்டிக்கத் தக்கதாக வீசியவச்சிராயுதத்தை நிகர்த்துப்பாய்ந்து அவன்சிரத்தினும் மார்பினும் தமதுபாதங்களினால் மிதித்துக் குயவன் மண்ணைமிதிப்பதையொப்பத்துவைக்கும் உறுத்துதலினாற் பூமிபிளந்து அவன் மார்புமுற்றிலும் நெக்குவிட்டு உதிரமானது ஊற்றெடுத்தோட நகசகபரியந்தம் நறுங்கி அரியதுக்கசாகரத்திலழுந்தித் தப்பித்துக்கொள்ளு மார்க்கமொன்றுந் தோற்றாமல் வலிகுறைந்து கோபமடங்கி யமபடாள்வசப்படும் இறுதிகாலம் நேர்ந்ததுஇதற்கென்னசெய்வதென்றுயோசித்து வஞ்சகத்தினா லிவனைத் தப்பித்துக்கொண்டு போகவேண்டுமெனத் தீர்மானித்தவனாய்த் தட்சணத்திற்சவுரவமென்னும் மாயமந்திரத்தைப் பத்தியாக ஜபித்துமுடிந்தவுடன் அதற்குரியதேவதை அவன்கருத்தின்படிக்கு இரணியனைப்போல வுருக்கொண்டு வானத்தையளாவவளர்ந்துநின்று பிறையையொப்பக் கோரைத்தந்தங்கள்விளங்க மேருவினும் பாரித்திராநின்ற தனுசையிடக்கரத்திற்பற்றி வலக்கரத்தில் மின்னலையொத்த அலகுகளையுடைய திவ்வியபாணகோடிகளைத்தாங்கிக்கொக்கரித்துஎன்னையொத்தவலியும் வீரமும்பெற்றவர்கள் யாவரிருக்கின்றனர்.

எத்தகையசூரர்களென்னுடனெதிர்த்தபோதினும் இந்தநிமிஷத்தில் அதாஅதப்படுத்துவேனென்று பற்பலசபதங்களையும் வீரங்களையும் பேசிக்கொண்டு சூறாவளிக்காற்றைப்போலச்சுழன்று சண்டைக்கெதிர்த்து மேலிட்டுவருவதை நீலன்கண்டு வடவையைப்போற்சீறி இரணியனை மிதித்திருந்த கால்களைப்பெயர்த்து எதிரிட்டுப்பாய்ந்து ரணக்களத்திற் செத்துக்கிடக்கின்ற இராட்சதவீரர் கரங்களிற்பற்றியிருந்த சொர்னமயமாகிய தண்டாயுதமொன்றைபறித்துச் சுழற்றிக்கொண்டு வானத்தில்நிற்கின்ற தேவர்கள் பகைவன்மாண்டான் மாண்டானென்று நீலனைக்கொண்டாடும்படிக்கு வீறிவந்த மாயப்படிவத்தின் சிரத்தின்மேல் மோதினன் சகலரும் பிரமிக்கும்படிக்கு அம்மாயவுருவானவன் வானத்திற்றோற்றி நல்லகாரியம் உன்பிராணனைச் சற்றுநேரத்தில்யமலோகங்குடியேற்றுவேனென்று வீரங்கள்பேசுவதை நீலன்கண்டுரவுத்திராகாரமாகக் கோபித்து கதையைச் சுழற்றிப்பாய்ந்து அத்தலத்திற்காணாமல்மயங்கி இதுவென்னபுதுமையாகவிருக்கின்றதென் றெண்ணுகின்றதருணத்தில் அத்தோற்றமானது பூமியினிடத்தார்ப்பரித் துலவுவதைப்பார்த்து இதுமாயையென நிதானித்தவனாய் வயிரங்கொண்டுநல்லகாரியம் எவ்விடத்திற்சென்றாலும் உன்னைவிடமாட்டேனென்றுசீறி நிலத்திற்பாய்ந்து நெருங்குவ தன்முன்னம் சண்டைசெய்வதைப்போற்காட்டிமீண்டும் வானத்தெழுந்து சூரனாயிருப்பையாகில் என்னுடன் சண்டைக்குவாடாவென் றதட்டுவான் அஷ்டதிக்குகளி லுலவுவான் பாதலத்திற்செல்லுவான் வானவெல்லையில்நிற்பான்தனுர்பாணியாய் எதிரில்வந்து வயிரங்களைப்பேசுவான் குதிரையின்மேலேறிநடத்தும் யானையின் பிடரியில்வருவான் தேரிற்றோற்றுவான் மலையினுச்சியிற்றோற்றி யிடியைப்போலார்ப்பான் சமுத்திரவெல்லையில்நின்று மேகங்களுக்குச் சமமாகக் குமுறிமின்னுவான் எமலோகத்திற்போகும் கணப்போதில் எதிரில்நின்றுசண்டைக்கழைக்கும்முன்னேவந்து இடியிடியென்பான் பக்கத்திற்காட்டி குத்துகுத்தென்பான் புறம்பிற்றோற்றித் தள்ளுதள்ளென்பான் இடசாரிவலசாரியாகச்சுழன்று பற்பலபடைகளைச்செலுத்திப் போர்செய்வான் இவ்விதமாகப் பொன்னினிடத்திச்சைகொண் டிருக்கின்ற வேசியர்மனதைப்போல நிலையில்லாமல் விண்மண் பாதலவரைப்புகளெங்கும்உலாவுகின்ற அவன்மாயப்படிவத்தின் செய்கைகளை யாவரால் விரித்துச்சொல்லக்கூடும்.

அத்தருணத்திற் புசபலபராக்கிரமசாலியாகிய நீலனும்அதுபோனபோனவிடங்களெங்கணும்தொடர்ந்துதொடர்ந்து கொடிய யுத்தங்களைச்செய்து அலைச்சற்பட்டு கைகால்களோய்ந்து வலிகுறைந்து அவன்மாயைச் சவுரியத்துக்குமெச்சிக் கடையில் வடவானலத்தைப்போலக் கோபித்து இனியென்செய்வோம் எவ்விதங்களினும்இத்தவிராட்சதப்பாதகனை ஜயிக்கப்படவில்லையென்று சற்றுநேரம்யோசித்து நிற்கின்றபோது ஒன்றாகநின்று போராடிய அவன்மாய உருவமானது பலரூபங்களைக்கொண்டு உலகமெங்கும் பரந்து ஆரவாரித்துப்போருக்கழைக்குங் காரணங்களைக்கண்டு நிதானித்து இதுதடையில்லாமல் மாயவித்தையாமென நிச்சயித்து வெட்கினவனாய் இதற்கடுத்த காரியமெதனை முடிப்போமென் றாராய்கின்றதருணத்தில் இந்தநீலனால் மார்புதலைநெக்குவிட்டு திரம் பெருக மிதிபட்டுச் சோர்ந்திருந்த இரணியனுக்குக்களைதெளிந்து சற்றுவலியுண்டாய் அச்சத்துடன் தலையைத் தூக்கித் தன்னிஷ்ட தேவதையின் செய்கைகளைப்பார்த்துக்களித்துத் துரிதமாய் ஒருதேரிலேறி மாயக்கோலத்துடன்கலந்து வில்லைவளைத்து கணக்கிறந்த பாணங்களைச்செலுத்தி நீலன் சரீரத்தைத் துளைக்கின்றபோதுதேகமெங்கும் புண்பட்டு உதிரம்பெருகி சூரியகிரணங்களைப் போலப் பாயுங்காலையில் வலிகுறைந்து மானம்பாதிக்கப் பற்பலபோர்களைச்செய்தும் பிரயோசனத்தைக்காணாமற் சலித்துத்திகைத்து நிற்கின்றதையும் இரணியன் மாயஉருவுடன்கலந்துநடத்தும்போரையும் புசபலபராக்கிரமங்களுக் கொப்பற்ற வீரவாகுதேவர் கண்டவுடன் மனம்பதைபதைக்கக் காளகூடத்தைப்போலச்சீறிப் பிரசண்ட வாயுவேகத்தினுமுந்தி அம்முனையில்வந்து தமதொப்பற்ற வில்லைவட்டாகாரமாகவளைத்து நாணேற்றி குணத்தொனிகொண்ட அதிர்ச்சியினாற் பஞ்சேந்திரியங்களின் நிலைதப்பிப் பிரமித்து இராட்சதவயிரிவந்தான் வந்தானென்று இரைச்சலிட்டுக்கொண்டு மற்றவிராட்சதர்களும் பலமூலைகளிலும் ஓடியொளித்தனர், அந்தச்சமயத்திற்சோதிமயமாகிய வெற்றிவேலாயுத மூர்த்தியினது பாதகமலங்களைச் சிந்தித்துப் போற்றித் துரிதமாய் ஞானப்படையையெடுத்து உபசரித்து தனுசிற்பூட்டிச் செலுத்தினர், அதுவெளிப்பட்டவுடன் பேரொளியைவிளக்கிக் கிரணங்களைப்பரப்பி அதிகமகிமைகளைக்காட்டி மேலிட்டு வரும்போது சூரியன்தோற்றத்துக் கெதிர்ப்பட்ட இருள்மங்கியடங்குமாறுபோலஇரணியனாலுண்டாயிருந்த மாயவித்தைகளனைத்தும் பறந்து தனியனாய் மனவாட்டத்துட னிருந்தபோதினுந் தயிரியத்தைவிடாமல் தன் வில்லில் ஆயிரங்கோடிபாணங்களைத்தொடுத்துச்செலுத்திக் கொக்கரித்தனன், அவைகளுமவெளிப்பட்டவுடன்

ஒன்றுடனென் றுராய்ந்துகனலையிறைத்து அளவற்றவுற் பாதங்களைக்காட்டி அதிவேகமாய்வந்து வீரவாகுதேவர் மார்பிற்றாக்கியவுடன் முனைகள்மழுங்கிப் பொடிபட்டுதிர்ந்தது அதனைக்கண்ட தேவர்கள் கரங்களைக்கொட்டிஇரணியனையிகழ்ந்து வீரனைப்புகழ்ந்து ஆர்ப்பரித்தனர்.

அக்காலையிற் பாலசுப்பிரமணியதேவர் சகோதரன்மண்டியெரிந்து நூறுதிவ்வியபாணங்களையெடுத்து வில்லிற்பூட்டிப் பிரயோகித்து இராஜகுமாரன்தேரில் நாட்டியிருந்த துவசத்தைக்கண்டித்துஅபேதவயிரக்கவசத்தையும்பொடிபடுத்தித் தனுசையுமிரண்டுதுண்டமாகவெட்டியெறிந்தகாலையில்இரணியன்மற்றொருதேரிலேறி வில்லையெடுத்தான்வீரன்ஆயிரம்பாணங்களைச்செலுத்திஅதனைக்கண்டித்துஅம்புறாத்தூணியையும் பொடிபடுத்தித்தேரையுங்குதிரைகளையுந்துகளாக்கியிராட்சதவீரன் சரீரத்தையுஞ்சல்லடைக்கண்களைப்போலத் துளைத்தபோது அக்காயங்களுக்குச்சற்றுவருந்திஅதருமல்பெதருமல் சஞ்சலப்படாமல் மற்றொருதேரிலேறினன் அதையுஞ்சில சூரியநாராசங்களைப்போக்கிப்பொடியாக்கினர், அக்காலத்தில்இராஜகுமாரனிளைத்துப்பிரமித்தபோதினும்வீரங்களைப்பேசிக்கொண்டு பக்கத்திலிருந்ததேர்களில்மாறிமாறியேறிவர அவைகளனைத்தையும்வீரன்கண்டதுண்டப்படவாட்டியபோது வேறுதேருதவியும் படைகளின்சகாயமும்காணுமல் இரணியனிதனை யோசிப்பதாயினன் இனிசண்டைகொடுக்க நினைப்பேனுகில் யமனையொத்த தூதன்கொல்லுவதற் கையமில்லை அத்துடன் போர்முடிவதுமில்லை பிதாமுதலானவர்களும் மாள்வது நிச்சயம் அவர்களுக்குத் திலதர்ப்பணக்கிரிகைகளைமுடிக்கவொருவரையுங்காணேன் இத்தகைய அபாயங்கள்நேராமல் சவுக்கியத்திலிருந்து வாழும்படிக்குப் பற்பலவுறுதிகளைச்சொன்னேன் கெடுமதிகண்ணுக்குத் தோற்றுதென்பதுபோல அவைகளைஅங்கீகரியாமலிகழ்ந்தனன் ஆதலாற் பிதாவுக்குமுன்னம்சாவது நன்மையாகவிருக்கின்றது அல்லதுஉயிர்பெற்றிருப்பேனுகில் இனிவிளையவிருக்கின்ற விசனத்தைச்சகித்து முடிவதன்று இவையன்றியுந் தேவர்முதலிய சகலரையும் நிமைப்போதிற் புறங்கண்டு அஷ்டதிசைகளையும்வென்று ஆயிரத்தெட்டண்டங்களையுந் தன்வயப்படுத்தி யிராஜாதிராசனுக விருக்கின்ற பிதாவானவர்இறந்தகாலத்தில் ஈமவிதிகளை முடிப்பதற்கு ஒருபுத்திரனுமில்லாவிடிற் சந்திரசூரியருள்ளவரையில் உலகங்களிற் றீராதபழிப்புரை நிலைபெற்றிருக்கும் அரியதவங்களைச்செய்து புத்திரனைப்பெற்றுச் சகலசிறப்புகளுடனும் சீராட்டிவளர்க்கின்றது தந்தையானவன் மாண்டகாலத்தில் அவ்வவர்கள் குலமுறைப்படிக்குத் தகனமுதலிய கிரிகைகளைச் செய்வதற்கன்றோ இவைநிற்கப்பின்னிடையாமற் சண்டைகொடுத்து இறப்பேனுயிற் பலராலுஞ் சுத்தவீரனெனக்கொண்டாடவும்வீரசொர்க்கத்தையும்பெறுவேன் அல்லது இந்தஉதிரமாம்சச்சுமை கொண்டிருக்கும் தேகத்தைத்தாங்கிப் பின்னிட்டு உயிரைத்தாங்கிநிற்பேனுகில் தீராதவசைநேருவதன்றியில் என்னுண்மைதிறத்துக் கிழிவுநேரும் இதைக்கருதிக் கீர்த்திப்பிரதாபத்தைத்தேட விரும்புவேனுகில் அகண்டமண்டலா தீஸ்வரனுய்ச் சூரனெனப் பலரும்போற்றவிருக்கின்ற பிதாவுக்குக் காலக்கடன்களை விதிப்படிக்குமுடிக்க ஒருவருமில்லையென்கின்ற அபகீர்த்திநேரும் நற்கதியுங் கிடையாமல் நரகயாதனையிற்பட்டு வாடவரும் ஆதலால் எனக்குஎவ்விதஅபவாதம் நேர்ந்தபோதினும் பெரிதன்று ஆயிரத்தெட்டண்டங்களைப் பலயுகங்களாகப் பாதுகாத்தாண்ட இராஜபரமேஸ்வரனுக்குப் பழிப்புரை கிடைக்கலாகாது இதைக்குறித்து என்பிராணனைத்தாங்கி மறைந்திருப்பது கடனுகுமெனத் தீர்மானித்தவனுய்த் துரிதமாகவானத்தெழும்பி மேகத்தில்மறைந்து மாயமந்திரமொன்றை ஜபித்து அதன் முயற்சியினுல் ஒருவருக்குந் தன்னுருத் தோற்றுமல் மீனுருப்பெற்றுக் கடலிற்பாய்ந்தொளித்து இனிபட்டணத்துக்குப் போகலாகாதுமேல்நடக்கும் காரியங்களைப் பார்த்திருந்து பிதாவானவர்மாண்ட காலத்தில் கருமக்கிரிகைகளைச் செய்கின்றவனாயில் இவ்விடத்திலிருப்பது தகுதியெனக் குறித்துக் கருநீரில்வாசமாயிருந்தான்.

அத்தருணத்தில் இரணியன்செய்த மாயைப்பெருக் கழிந்ததைப்போல இரவுநீங்கி வீரவாகுதேவரேவிய ஞானப்படைக்கொப்பாக ஒற்றைவண்டிலையும் ஏழுபச்சைக் குதிரைகளையும் பூண்டு அருணன்செலுத்தும் இரதத்தின்மீது சூரியபகவான்ஆயிரங்கிரணங்களைப்பரப்பி உதயகிரியி லெழுந்தருளியபோது சந்திரன்சூரபதுமன் குமாரனைப்போலச் சோடசகலைகளையும் சுருக்கிமேல்சமுத்திரமுகப்பிலிருக்கும் அஸ்தகிரியில் மறைந்தனன், பின்புவீரவாகுதேவர் இரணியன் சாகாமற்கடலிற்பதுங்கியதைக் கண்டு வெற்றிச்சங்கத்தையெடுத்து வாயில்வைத்துப்பொம்பொம்மெனமுழக்கினர். அவ்வோசையைக்கேட்ட பூதப்படைகள் மனவெழுச்சியுடன்ஜயங்கொண்டாடிஅண்டங்களதிரத் தக்கதாகஆர்ப்பரித்தனர், வானத்தில்நின்றதேவர்கள் சந்தோஷசாகரத்தில்முழுகிக் கற்பகமலர்களை வாரிவாரி வீரன்மேல் இறைத்து ஜயாவிஜயபவா வென்றாசிகளைச்சொல்லி வாழ்த்தினர் இதன்மத்தியில்எண்மர், இலக்ஷர், படைவீரர் வீராவேசங்கொண்டோடும்போதுசின்னபின்னப்பட்டு மாண்டவர்கள்போக நின்றவிராட்சதர்கள் பயப்பிராந்திகொண்டு திசைகெட் டோடிப்போயினர், இக்காரணங்க ளனைத்தையும் பார்த்திருந்ததூதர்கள்மனவாட்டத்துட னதிவேகமாயோடி இராஜாதிராஜனைக்கண்டுபணிந்து சுவாமிதேவரீர் கட்டளையின்படிக்குப் போன இரணியன் கொடியபோரைச் செய்து சகல சேனைகளையும் மாளக்கொடுத்தவனுய்ச் சத்துருக்களுக்குப் பயந்தொளிக்கவோ அல்லது சிலதந்திரங்களைச்செய்து அவர்களை வெல்லவோதெரியாதுஓடிச் சமுத்திரத்திற்பதுங்கினன்இதுதேவரீர் சித்தமறிகவென்று சொல்லியவிசேஷத்தைவிஷத்தைப்போலக்கேட்டுமோனமுங்கோபமும்மனதை வருத்தயாதொன்றும்பேசாமற்சரீரம்புழுங்கமனவருத்தத்துடனிருந்தனன்அத்தருணத்தில் அக்கினிமுகனென்னுங்குமாரன்பிதாவைக்காணும்பொருட்டுதன்னரண்மனையைக்கடந்து சூரனிருப்பிடத்தை நோக்கி வருவதாயினன்.

## அக்கினிமுகாசுரன்வதைப்படலம்.

எட்டாசையுளோர்களையெண்கரியைக்
கட்டாவுறுசில்கதிரைப்பரியைய
முட்டாவருதேரினைமுன்கொணரா
வட்டாடியதோர்வலிபெற்றுடையான்.

ஓ! சவுனகாதிரிஷிகளே? அந்த அக்கினிமுகன்பராக்கிரமச் செய்கைகளைச் சொல்லக்கேட்பீராக,பாலபருவத்தில் இராஜ குமாரர்களுடன்கூடி விளையாடித்திரிகின்ற காலையில் அஷ்டதிக்குப் பாலகரையும் அதனைத்தாங்கி வருகின்ற எண்கிரிகள்முதலிய பருவதங்களையும்திசையானைகளையும் பற்றிவந்து பந்தாகவிளையாடியும் காற்கழல்களாகக்கட்டியும் சூரியனேறி நடாத்தும் தேரைப்பிடித்துவந்து இராஜவீதிகளிற் சிறுதேருக்கிணையாகவிழுத்தும் சேஷசயனத்திற் பள்ளிகொண்டிருக்கும் மகாவிஷ்ணுவுக்கு வாகனமாகவிருக்கின்ற கருடனையும் பிரமதேவனாரோகணித்துவரும் அன்னப்பட்சியையும் பிடித்துவந்து ஒன்றுடனொன்றை சண்டைக்குவிட்டு கண்டுகளித்து விளையாடுந்தீரன் தனக்குமுன்னவனாகிய பானுகோபன்சூரியனைப் பற்றிச் சிறைசெய்ததைக் கேள்விப்பட்டு வானத்திற்பாய்ந்து சோடசகலைகளைவீசி விமானத்திற்செல்லுகின்ற சந்திரனைப் பிடித்துவந்து பலகாலம் அரியகாவலில் வைத்தசூரன் வஞ்சகமே உருக்கொண்டிருப்பதையொத்த கொடியமனதைப்பெற்றவன் வீராதிவீரர்களாகவிருக்கப்பட்டவர்க ளனைவரும்புகழ்ந்துகொண்டாட வல்லபுசபலபராக்கிரமங்களைக் கொண்டிருப்பவன் பஞ்சபூதங்களுக்கும் மேலானவலியைப்பெற்றவன் அரியதவங்களைச் செய்தும் வலிதினும்தேவர்கள் படைகளனைத்தையும்பெற்றிருக்கின்ற சம்பத்தையுடையவன் மாயைவஞ்சகம் சூது இவைகளுக்கு மாதுர்ஸ்தானமாக விருக்கும்கொடியவன் திசைகளையும் சிறந்ததேவர்கள்முதலிய பலசாலிகளைப் போர்முனையில் வெற்றிகொண்டிருக்கும் ஜயசாலியாகவிருப்பவன் பகைவர்செலுத்தும் தேவாஸ்திரங்களைமதியாமல் அதப்படுத்தியகீர்த்திப் பிரதாபத்தையுடையவன் பிராணிகளனைத்தையுங் காலாதிகளிற் கொண்டுபோக வல்லயமனுக்கும் ஓரியமனாகவிருக்கின்ற மகாபாதகன்முகத்திலெக்காலத்தினும் சுவாலைவீசிக்கொண்டிருக்குமதுவினால் அக்கினிமுகனென்னும் பெயரைப்படைத்திருப்பவன் மற்றும் இவன் சூரங்களும் வல்லபங்களும்கொடுமைகளும் அளவற்றதுண்டு அவற்றினைச்சொல்லிமுடிவதன்று இத்தகையமகாபாதகன் பிதாவாகிய சூரபதுமன் வாசஞ்செய்திருக்கின்ற நகரத்தைச்சேர்ந்து பிதாவைக்கண்டு வணங்கிப்போற்றி ஐயனே முகப்பொலிவற்று வாடிமனச் செருக்கொழிந்து துக்காக்கிராந்தனாகவிருக்க வந்தகாரணமென்னை எங்களையொத்த புத்திரசம்பத்தையுடையதேவரீருக்கு மிப்படிக்கும் நேருவதோ அதனைத் துரிதமாகச் சொல்லவேண்டுமென்று வருந்திக்கேட்கின்ற குமாரனைப்பார்த்து அதிகவிசனத்துடன் இதனைப்பேசுவதாயினன்.

புத்திரசிகாமணியே என் மனக்குறையை யென்னென்று வெளியிடவல்லேன் முன்னமிவ்விடம் அந்தக்கந்தன் தூதன்றூதுபேச வந்தபோது யென்னைமதியாமல்இகழ்ந்துபேசிய தன்றியில்பல வீராதிவீரர்களைக்கொன்று உன்தம்பியையும் வெட்டியெறிந்து ஆயிரத்தெட் டண்டங்களுக்கும் இராஜதானியாகவிருக்கும்பெருமையையுடைய இந்த நகரைப்பதங்குறையாக வழித்து புரசனங்களையலைத்துப்போனவன் மீட்டும் வந்துநமது பட்டணத்தை அலைத்து அக்கினிக் கிரையாக்கவெண்ணங்கொண்டு கொளுத்து வித்தான் அதையறிந்து பிரளயமேகங்களைத் தருவித்து மழைபெய்யக் கட்டளையிட்டு அந்தத்தீயை அவிப்பித்தேன், அதைக் கண்டவுடன்அப்பாதகன்ரவுத்திராகாரமாகக் கோபித்து வடவாக்கினியஸ்திரத்தைப்பிரயோகித்து மேகங்களை வாட்டியகாலத்தில்தாபரிக்கப்படாமையாற் கடலில் மறைந்தொளித்தான் இதையறிந்தவுடன்அவனைப் பட்டணத்தைக் கடக்கத்துரத்தி அதம்பண்ணிவருவதாக இரணியன் கேட்டுக்கொண்டபடிக்குப் பலவெள்ளம் இரதகஜதுரகபதாதிகளைக்கூட்டிப் போக்கினேன் தனக்குப்படைத் துணையாகவந்தஇராஜகுமாரர்கள்படைவீரர்கள் சேனைகளையும் பறிகொடுத்துச் சத்துருக்களுக்கஞ்சிப் புறந்தந்து சமுத்திரத்திலொளித்தானென்று தூதர்கள்தெரிவித்தனர். குமாரனோவெகுகாலமாகத் தேடிய கீர்த்திக் கழிவுவந்தது மேலும்மிகுந்தசிறப்பினைப் பெற்றிருக்கின்ற இந்தமரபுக்கும் நமதுமுன்னோர்களுக்கும்பழிப்புரை சம்பவித்தது இவனைச் சவுரியபராக்கிரமசாலியென்று நம்பிச்செலுத்தினேன், இந்த வுலகமுள்ளளவுந்தீராத வசையை நிலைபெறச்செய்தான், இதைநினைந்து நினைந்து மனந்தாபரியாமல் வருந்துகின்றனனென்று கொடுங்கோல் செலுத்தி வரும்பாதகன் சொல்லி முடிவதன்முன்னம் அக்கினிமுகனுக்கு கோபக்கனல் மனதில்மூளவிழிகள் சிவந்துதீப்பொறிகளை யிறைக்கவும் முகம்வெயர்க்கவும் புருவம் நெற்றியிலேறவும் தேகம்துடிக்கவும் வடவாமுகாக்கினியைப் போலக் கொதித்தவனாப்பிதாவே தேவரீர்பல அண்டங்களை வென்றுசகலரும்போற்றிப் பணிய அரசுசெலுத்தி வாழ்ந்திருக்கும் இத்தகைய செல்வப் பெருக்கைப் பெற்றிருக்கின்ற நீர்பதிதனாகியஒருதூதன் சவுரியங்களையும் புயவன்மைகளையும் நினைந்து நினைந்து வாடுவதோ தம்மையொத்த சூரன் அதைக்கருத்திற் கொள்ளத்தான்போதுமோ ஆதலாலிந்த நிமிஷத்திற்போய் அந்தத்தூதனையும் அவனுடன் வந்திருக்கின்றவீரர்கள் பூதப்படைகளையும் மடக்கிக்கொண்டுபெருங்காற்றினிடத் தகப்பட்ட சருகைப்போலச் சின்னபின்னப்படச்சாடிக்கொன்று ஜயப்பிரதாபத்துடன் வரக்கடவேன்தேவரீர் மனக்கவலையைப்போக்கிக் களித்திருப்பீர் மேலுமிந்த நிமிஷத்தில் அடியேனுக்குச்செலவுதாருமென்றுவேண்டுகின்ற குமாரனிடத்திற் பரிவாய் மார்பிலணைத்திறுகத் தழுவி ஐயனே நீசொல்லியபடிக்கு முடித்து என்மனதை வாட்டுகின்ற கிலேசத்தையும் வாட்டத்தையும் போக்கக்கடவாயென்று விடைதரச்சேவித்துப்பருவதா கிருதியாகிய புசங்களையும் காளமேகமும் கருங்கடலும்நாணத்தக்க கரியதேகத்தையும் படைத்த அக்கினிமுகன் அரண்மனையைக்கடந்து வெளிவந்துதன்மாளிகையைச்சேர்ந்துஆயுதச்சாலையில் நுழைந்து பருவதத்தின்பேரில்மேகங்கள் கவிந்திருப்பதைப் போல வயிர கவசத்தை மார்பிலிறு

க்கிக்கோதைகளை விரல்கள்தோறுமணிந்துதிவ்வியபாணங்கள் நிறைந்திருக்கின்ற புட்டிலை முதுகிற்கட்டிப்பிதாமகளாகிய மாயை கடாட்சித்திருக்கின்ற ஒப்பற்றவில்லை வணங்கி யிடதுகரத்திலெடுத்துவலதுகரத்தில்தேவப்படைகளைத்தாங்கி வேல் வாள்-தண்டம்-சக்கரம்-வச்சிராயுதமாதிய படைகளையும் சேகரித்துக்கொண்டு வீரபட்டத்தை நுதலிலணிந்து வெளிவந்து அஸ்திரசஸ்திரங்கள்நிறைந்து நவரத்தினமயமாய் வானத்தையளாவவோங்கிக் கணக்கிறந்த சிங்கங்களைப் பூட்டியிருக்கின்ற இரதத்தைத்தருவித்து மிருகராஜனைப்போலத் தாவியேறி வீற்றிருந்தகாலையில் சூரன்கட்டளைப்படிக்குப் பலதூதர்களோடிப் பகைவர்மீதெதிர்த்து யுத்தத்துக்குப் புறப்பட விருக்கின்றதை அறிக்கை யிட்டவுடன் சேனைத்தலைவர்களளித்தவர்களாய்ப் பிரயாணபேரிகையை அறைவித்த சத்தஞ்செவிகளில் நுழைந்தமாத்திரத்தில்ஆயிரவெள்ளம்தேராளிகளும் அத்தொகைமதயானைப்பெருக்குகளும் தத்தித்தாவி அலைகளைப்போலப் பாயவல்ல குதிரைப் பந்திகளிரண்டாயிர வெள்ளங்களும் சகலாயுத பாணிகளாய்ச்சூரர்களாகிய விராட்சதவீரர்கள் தொகையையாவராலும்யெண்ணிமுடிவதன்று.

இவ்விதமாகிய நால்வகைச்சேனைகளும் சத்தசாகரங்களுக்கொப்பாக இரைச்சலிட்டுவந்துசூழ அவர்களுக்குத்தலைவர்களாக விருக்கப்பட்டவர்கள்-வில்-வாள்- கேடகம்-முசலம்-கப்பணம்-பிண்டி-பாலம்- சக்கரம்-கணிச்சி முதலாகிய திவ்வியபாணவகைகளைத்தாங்கி வயிரகவசத்தைப் பூண்டு தும்பைமாலையைச்சூடி நவரத்தின மயமாகிய தேர்களில் ஆரோகணித்துப் போற்றி வடவாமுகாக்கினி பல உருக்களைப்பெற்றதைப்போல அதிக உக்கிரத்துடன் வந்து இராஜகுமாரனைச்சேவித்து நடக்கும்போதுஅக்கினிமுகனிவர்கள் மத்தியில் விளங்கி மானம்பாதிக்க ரவுத்திராகாரமாகக் கொதித்து பகைவரை நிமைப்போதில் நாசஞ்செய்வேனென்று வீரங்களைப்பேசிச் சேனைகளுக்கு முன்னணியில் தேரைத்துரத்திப்போவதாயினன், சவுனகாதிரிஷிகளே? இப்பிரகாரம் நடக்கின்றசயின்னியங்களின் சிறப்புகளிற் சிலவற்றைச் சொல்லக் கேட்பீராக, பலவளங்களையும் காமவின்பநலங்களையும்தரவல்லமனதுக் கினியகணவர் பலகாலம்நீங்கித் தூரதேசங்களிற் போயிருந்து வந்து சேர்ந்தவுடன் மனம்பூரித்து அன்பு விளங்க இரத்தினகடககங்கணங்களைத் தரித்திருக்கும் தேவியர் தமதுதேகம் புளகமெழப்பூரித்துக்காட்டும் அல்குலைப்போலப் பரந்திராநின்றநவரத்தினமயமாகிய மொட்டு முதலிய சிங்காரங்களைப்பெற்றிருக்கின்ற தேரணிகள் கற்கரத்தொனிகளைச் செய்தோடவும்இலக்குமிக்கொப்பாகிய வனப்பும் வாலிபநலத்தையும்பெற்று மனவெழுச்சிகொண்டிருக்குந் தருணமங்கையரா யிருப்பவர்கள் தமதிடத்தில் மிகுந்த கவலைகொண்டு வழிபடும்விருத்தர்கல்வியைவெறுத்து கற்பின்வரப்பைக்கடந்து வாலிபரைத்தேடிப்போவதற்கிணையாக அங்குசத்தினுற் கொத்தும்பாகன்குறிப்பின்வழிச்செல்லாமல்தன்மனம்போனவிதமாகப் போகும் மதயானைக்கூட்டங்கள் பருவதங்கள் கால்முளைத்து நடப்பதுக்கொப்பாக வீறிட்டுபிரசண்டவாயுவைநிகர்த்துக்கடுகிச்செல்லவும் நவரத்தினமயமாகிய பூஷணங்கள் பீதாம்பரவகைகள்திரவியமுதலியபொருள்களினிடத்திச்சைகொண்டிருக்கின்ற வேசியர்கள் அவற்றினைப்பெறும்பொருட்டுவாலபரைமருட்டிவயப்படுத்தவேலையொத்தவிழிகளைச்சுழற்றுமாறுபோலபஞ்சலட்சணங்களை யுடையபுரவிப்பந்திகள் வாயுவேகத்தினுமேலிட்டுப்பாய்ந்துபூவட்டமுற்றினும் பவனிவந்தும்திசைகளிற்சென்றும் விண்ணகத்திற்பறந்தும்வட்டணையுலவியும் அலைகளைப்போலடக்கவும்வஞ்சகங்குடிகொண்டிருக்கும்மனத்தராய்ச்சீவகாருண்ணியம் கிருபை யிரக்கமென்பதெவ்வளவுங்கிடையாமல் எத்தகையரும்மருளும்படிக்குநடைநொடிபாவனைகளைக்கற்றுக்காட்டுவதொருகுறிப்பாய்ப்பலவித்தைகளைச்செய்யவல்ல மாறுபட்டமனதைப்பெற்று அல்குலைவிற்றுண்ணும் வேசியருடைய வஞ்சகமனதைப்போலக்கறுத்துக் கடினசித்தமுடைய இராட்சதசேனைகள்வீரக்கழலணிந்த பாதங்களைப்பெயர்த்துவைக்குந்தோறும் பூமிநடுநடுங்கி வாடும்படிக்குக் கற்சித்துப்போகவும் விபசாரத்துவத்தை இச்சித்த மனதைப்பெற்றதூர்த்தமங்கையர் கணவரைவஞ்சித்துகளவுப்புணர்ச்சியைச்செய்துழலும் பழியுரையெங்கும் துரிதமாகப் பரவுவதைப்போலப் பரிமளமிகுத்த புஷ்பமாலைகளைத்தரித்திருக்கின்றபலகோடி யிராட்சதர்கள் முழக்கிவரும், ரணபேரி-ஜயபேரி-வெற்றிச்சங்கமாதிய வாத்தியங்களினொலியானது சகலபுவனங்களினும் பெருத்ததிரவும், அக்காலத்திற்பெருகியதுகள் பரந்துபடிந்து நவரத்தினமயமாகிய ஆபரணங்களைத் தரித்திராநின்ற தேககாந்தியின் பொலிவையழித்து இருண்டுமாசடையச்செய்வதால் பரதாரத்தை யிச்சித்துக் களவுப்புணர்ச்சிகளைச் செய்துழலும் மகாபாதகர்பலராலும் இகழத்தக்கதாகக்கொண்டிருக்கும் ஆசைப்பெருக்கைப்போலக்காட்டவும் மிகுத்தசுமையைச் சுமந்துசெல்லும் ஒட்டகங்களானவை பருத்தகழுத்தைநீட்டிப்பின்வாங்கி அசைந்துபோவதைப்பார்க்குமிடத்திற் காமுகராயிருப்பவர்கள் நேர்ந்தகாலத்திற் றமதுவயப்படுத்தும்பொருட்டு சகலஅலங்காரங்களையுஞ் செய்துகொண்டு அன்னங்களைப்போலசைந்தசைந்து கடைவாயிலினிடத்தில்வந்துநின்று மெல்லத் தமதுசந்திரனையொத்தமுகாரவிந்தத்தை வெளிப்படக்காட்டிக் கூரியவேலையொத்தவிழிகளைச்சுழற்றி மருட்டி உள்வாங்கியுலவும் பரத்தையரைப்போல விளங்கவும் வீறிட்டுச்செல்லும் மதயானைகளின் மீதினும் இரதங்களினிடங்களினும் நாட்டப்பட்டு வானையளாவி மாறிமாறி யசையும்கொடிச்சீலைகளை யோசிக்குமிடத்திற் றன்னிடத்திலிச்சைகொண்டுவந்த ஒரு புருடன் வசப்பட்டிருந்த வேசியானவள் அவனினுமேலிட்ட திரவியத்தைக்கொடுக்க வல்லவனைக் காணப்பெறின் அஞ்சாமல் அவனையும் வரவழைப்பதைப்போல விருக்கவும் சித்திரங்களெழுதி யிருக்கின்ற யானைகள்மத்தகங்கள் மீதிலணிந்திருக்கும் சிறந்த முகபடாங்கள் காற்றினசைவிற்பட்டு விலகியும்மீட்டும் பொருந்தியுமிருப்பதை நிதானிக்குமிடத்தில்மானையொத்த அழகியவிழிகளைவாய்ந்த விலைமாதர் காமுகராக விருக்கின்ற காளையர் தங்களிடத்திச்சைகொண்டு மயங்கிக்கிடக்கும்பொருட்டுதேமல்படர்ந்து சொர்னக்கலசங்களைப்போலத் தோற்றநின்ற கொங்கைகளின்மீதிற் போர்த்திருக்கின்ற வுத்தரியத்தை

மெல்லவிலகச்செய்து ஆடவர்பார்வைசென்றவுடன் மூடி
அவர்கள் பிராணனைத் தங்கள்வலையிலகப்படச் செய்வ
தையொப்பக்காட்டவும்காளையர் மனமருண்டு வாடச்செ
ய்யவல்லவேசியர் சேற்கெண்டையைப்போலப் புரட்டிவ
ரும் விழிகளுக்கொப்பாக ராட்சதர்கரங்களிற் பகைவர்பி
ராணனைவருத்தும் வேல்-தோமரம்-வில்-சூலம்- மழுவா
யுதம்-கதை-நாஞ்சில் முசலம்-சக்கரம்-இத்தகையபடைக
ள் சொலித்துக்கொண் டிருக்கவும் இவ்வித வேடிக்கைக
ளைக்காட்டி நடக்கின்றபோது பலகோடி யிராட்சதர்கள்
முழக்கிச்செல்லும் போர்ப்பறைகள் கணகணென்றதிரு
ம் ஓசையானது மேலிட்டு வருத்துவதினால் வானத்திற்ச
ஞ்சரிக்கின்ற மேகங்கள்திகைத்துச் சோர்ந்து தமதுநிலை
களிற் பிசகிப்பருவதாகிருதியாகியதேர்களின்மீது விழுந்
துகளைதெளிந்தவுடன் பக்கங்களிலிருக்கின்றமலைகளினி
டத்திலோடி யொளிக்கவும், இரதங்கள் கற்கரத்தொனிக
ளைச்செய்தோடும் வேகத்தினாலும் மதயானைகள் உரலை
யொத்த பாதங்களைப்பெயர்த்துவைக்கும் உறுதியினாலு
ம் புரவிக்கூட்டங்கள்குளம்புகளைப்பெயர்த்து பாய்ந்தோ
டுவதினாலும் ஜயசாலிகளாகிய இராட்சதப்படைகள் வீ
ராவேசங்களுடன்போகின்ற நடையினாலும் பூமிதுகள்ப
ட்டெழுந்த தூளிபடலமானது மேலோங்கி வானகங்கை
யிற்படிந்து சேறுக்கிச் சத்தசாகரங்களைத் தூர்த்துத் தி
டர்செய்து புவனங்களிற்பாய்ந்து சகலபிராணிகளையுந்தி
க்குமுக்காடவொட்டாமல் சுவாசங்களையடக்கி வருத்தியி
ரத்தினாபரணங்கள் காந்தியையும் ஆயுதங்களின் பிரகாச
ங்களையும் சூரியன்கிரணவொளியையும் மழுங்கச்செய்ய
வும் இராட்சதர் கரங்களிற்றூங்கிச்செல்லுந் துவசபட
ங்களும் மகரதோரணங்களாதியாக மேலோங்கி அடர்ந்
திருப்பதினா லிருள்மூடி அஷ்டதிசைகளையும் மயங்கச்
செய்யவுமாயினது.

இவ்விதஆடம்பரங்களுடன் நடக்கின்ற சேனாசமுத்தி
ரமத்தியிற் சோமகண்டன் சோமன் சூரியகாதகன் மேக
ன் பிங்கலன்முதலிய படைத்தலைவர்கள் காத்துச்செல்ல
அகண்டமண்டலாதீஸ்வரனாகிய சூரபதுமன் குமாரன்அ
ரிமுகனென்னும் வீராதிவீரன் தேரை முடுக்கிக்கொண்
டு முன்னணியில்நடந்து வீறியிருக்கின்ற பூதப்பெருக்கி
னணித்தாகவரும்போது சிவகணங்கள் கோபாக்கிராந்தர்
களாய்ப் பாரித்தோங்கி யிராநின்ற பருவதங்கள் திசைக
ளைமூடத்தழைத்திருக்கும் விருட்சங்கள் இருப்புலக்கை
வளைதடி தண்டாயுதமுதலியபடைகளைக் கரங்களிற்றூங்
கிக் காளகூடத்தைப்பார்க்கினும் கொதித்து எதிரேறிவ
ரும்போது இராட்சத சேனைகளும் கொக்கரித்துக்கொ
ண்டு முடுகிநெருங்கிய தருணத்தில் ரணபேரி-வெற்றிச்ச
ங்கம்-தவுண்டி-தக்கை - ஆதியபோர்ப்பறைகள் தாம்தா
மெனமுழங்கும் அதிர்ச்சியினால் நட்சத்திரங்கள் நிலைகு
லைந்து முத்துக்களை யொப்பப் பலபலென்றுதிர விருதி
றத்துப்படைகளும் வீராவேசங்களுடன் ஒருவரையொரு
வர்அதட்டிச் சண்டையைச்செய்யத்துவக்கு முன்னிலை
யில்நேர்ந்தபாரத்தைச் சுமக்கப்படாமையால் பூமிநெளி
த்து நடுநடுங்கிப்பிளந்தும் அண்டப்பித்திகை அதிர்ந்து
நெக்குவிடத்தக்கதாகக் கைகலந்தபோது இராட்சதர்கள்
கைமிஞ்சி-வேல்-சூலம்-தண்டாயுதம்-கணிச்சி-எழுவாயு
தமுதலியபடைகளை ஒன்றனந்தமாகக் கடாவியும் விற்க
ளைவட்டாகாரமாகவளைத்து டங்காரசத்தங்களைக்காட்டி
விஷத்துவையலிட் டிருக்கின்ற கொடியபாணவிதங்களை
ச்சந்தித்து அமோகமாகச்சொரிந்தும்இவ்விதங்களிற்சா
டுகின்றபோது கணக்கிறந்த பூதவீரர்கள், கால்களொடிந்
தும், கரங்கள்முறிந்தும், கழுத்துகளற்றும் பற்பலகாய
ங்கள்பட்டும் வருந்தியபோதினும் பின்னிடையாமற்கொ
தித்து மராமரங்களைக் கரகரெனச்சுழற்றி மாறியும் பரு
த்தமலைகளைக்கடாவியும் குன்றங்களையுருட்டியும்சூலம்,
எறிவேல்-கழுமுள்-வச்சிரம்-முசலம்-கணச்சி-இவைகளை
க்கொண்டுவாட்டியும் கற்கம்பங்களுக்குச் சமமாகப் பரு
த்திராநின்ற பாதங்களினாலுதைத்தும்பருவதங்களையொ
த்த புசங்களினாற்றூக்கியும் இப்படிக்குப் போராடுகின்ற
காலையிற் பகைவர் அல்லோலகல்லோலப்பட்டு தேரணி
கள்குலைந்து வண்டில்கள் துகள்பட்டும் அச்சுமுறிந்தும்
குத்துக்கால்கொடுங்கை பொடிப்பொடியாகப் பறக்கவும்
மதயானையணிகள் சின்னபின்னப்பட்டு இருப்புலக்கைக
ளைத் தாங்கியிருந்த துதிக்கைகளற்றும் உரலையொத்தகா
ல்களொடிந்தும் வயிரமுகபடாமணிந்த மத்தகம்பிளந்து
ம் மாறியொலிக்கும் மணிகள்தெறித்தும் பாகனுருண்டு
மங்கவும் தத்தித்தாவிப்பாயும் வேகமுள்ளபுரவிப்பந்திக
ள் பொன்வண்டையங்களணிந்த கால்களொடிந்தும் பின்
னிவிட்டிருக்கும் பிடரிமயிரைவாய்ந்த கழுத்துகளற்றும்
கல்லணை துகள்பட்டும் இருபாரிசங்களினுந் தொங்கவிட்
டிருந்தகவுரிகள் காற்றிற்பறந்து மாண்டும் இராட்சதவீ
ரர்கள்சிவந்தமயிரலையும் சிரங்கள் கண்டப்பட்டும் மண்
டைதிறந்து மூளைசிதறியும் கண்கள்பிதுங்கியும் மார்புபி
ளந்தும், வயிறுபீறுண்டு குடல்களிறைந்தும் கால்களொ
டிந்தும் இவ்வித சித்திரவதைபட்டு மாளவும் அக்காலத்
திற்பெருகிய உதிரப்பிரவாகமானது அலைகளைவீசியிரை
ந்து பூவட்டமெங்கணும் பரவிப் பிராணிகளை வருத்தவு
ம் கழுகு காக்கை பருந்து பிணங்களைப் பிடுங்கித்தின்று
களித்து வானத்தில் வட்டமிட்டுலாவவும் பூதபைசாசங்
கள் உதிரபானஞ்செய்தவெறியினால் தித்தோமெனநடிக்
கவும் கணக்கிறந்த கவந்தங்கள் ரணக்களவெல்லையெங்கு
ம் நிர்த்தனஞ்செய்யவும் இவ்விதமாகப் பூதப்படைகளு
ம் இராட்சதவெள்ளங்களும் கைகலந்துவீராவேசங்களு
டன் அகோர யுத்தங்களைச்செய்துவருகின்றதருணத்தி
ல் நந்தியெம்பெருமான் அம்சையி லவதரித்திருக்கின்ற
எண்மரும் இலக்ஷரும் வடவையைப்போலக் கோபித்த
வர்களாய்ப் பாரித்தவிற்கள் நாரிகளையிறுக்கி கொடியதீ
ட்சண்ணியமுள்ள அர்த்தசந்திரபாணங்கள் விஷமிட்ட
கணைகள் முதலானவற்றைச் சோனைமாரியைப்போலச்
சொரிந்து சாடுமுன்னிலையில் அவுணப்படைகள் தாபரி
க்கப்படாமையாற் சண்டைகொடுப்பதைமறந்து ஆயுத
ங்களைவிட்டெறிந்து திசைகெட்டோடி பலதிசையினும்
ஒளித்தனர்.

இப்படிக்குத் தன்சேனைகள் முதுகிட்டுப்போனதைஅ
ரிமுகன்கண்டமாத்திரத்திற் கோபதீபிதனாய்த் தன்னரு
கிலிருக்கின்ற புசபலபராக்கிரம சாலிகளாகிய சேனைத்த
லைவர்களிற் சிரேஷ்டரான மேகனென்பவன் கடினசித்த
முடைய சோமகாதகன் சோமனென்பவரைக்கூவி இந்த
நிமிஷத்தில் நீங்கள்போய் வீறியிருக்கின்ற பகைவர்கரு
வத்தையடக்கி வரக்கடவீர்களெனக் கட்டளையிட்டமாத்
திரத்தில் மகாபாக்கியமெனத்தொழுது தங்கள் தேர்களை
யதிவேகமாய்த் தூரத்திவந்து போர்முனையைக்கலந்து

ரவுத்திராகாரமாகக் கோபித்துஒப்பற்ற தங்கள்விற்களைவளைத்து நாணேற்றித் திசைகளதிரகுணத்தொனி செய்தவர்களாய்க்குரூரமாகிய பாணவருஷங்களைப் பொழிந்து மேலிட்டுவருவதை வீரகண்டாமணிகலிக்கும் பாதங்களையுடைய வீரமாபுரந்தரன்கண்டு பிரளயகால ருத்திரனைப்போலச்சீறி இடிகளுமஞ்சக் கொக்கரித்துத் தன்சேனைகளைப் பின்தள்ளி முன்வணியில்வந்துநின்றுதனுசைவளைத்துக்குரூரமாகிய பாணகோடிகளைத்தூவி யிராட்சதவீரர்களேறி யிருக்கின்றதேர்களைப் பொடிப்பொடியாகக்கண்டித்துஇந்தக்கண்டகனை யமலோகங் குடியேற்றிக் கொக்கரித்தான் அக்காலத்தில் மற்றச்சேனைத்தலைவர்களேகமாய்ச்சேர்ந்து சூரியனை மூடியபனிப்படலத்தைப் போல வளைத்துக்கொண்டு விற்களைவளைத்து அளவற்ற கொடியபாணங்களைச்செலுத்திச் சரீரமெங்கும் உதிரம் பீரிட்டோடச் சாடினார்கள் அதனால் மிகவும்நொந்தும்ரவுத்திராகாரமாகக்கோபித்துக் கணக்கிறந்த பாணங்களைப்பிரயோகித் திராட்சதத் தலைவர்களேறி யிருக்கின்ற விரதங்களைப்பொடிபடுத்தி கரத்திற்பற்றிய தனுசுக்களையும்கண்டித்து அவர்கள் தேகங்களைச் சல்லடைக்கண்களாகத்துளைத்தும் சக்கைச்சக்கையாகப் பேர்த்தெறிந்தும் சிலபாணங்கள் நெற்றியினும்மார்பினுந்துளைத் துருவியோடத் தாக்கியபோது யானையையொத்த வலியுடைய மேகனென்பவன்சீறி மந்தரகிரியையொத்த தண்டாயுதமொன்றைக் கரத்திற்கொண்டு கிறுகிறெனச்சுழற்றிப்பூதத்தலைவன் தேரின்மீதுதாக்கிய மாத்திரத்திற்புரவிகளும்பாகனும் சின்னபின்னப்பட்டுமாண்டனர், அக்காலத்தில்வீரமாபுரந்தரனுக்கு அதிககோபம்பிரவேசித்தபடியால் வடவாமுகாக்கினியைப்போற்சீறிக் கூரியவேலாயுத மொன்றையெடுத்து இதனால் நாசமடையக்கடவாயென்று கரவேகமாய்வீசியபோது அதிகவேகமாய்வந்து மார்பிற்றாரித்துருவி முதுகின்மூலமாயோடியது உடனே உதிரங்களைக்கக்கிக்கொண்டு மேகத்தைப்போலக்கதறிப் பூமியில்விழுந்து நிலங்குழிபடஉதைத்துக்கொண்டு மாண்டான், அதைக்கண்டவிராட்சதவீரர் அஞ்சி யிவன்முன் காலாந்தகனும் நிற்கமாட்டானென்றுதிகைத்து பின்னிட்டனர், இப்படிக்குத் தன்படைவீரர்கள் பின்னப்பட்டதை அக்கினிமுகன்தெரிந்து காளகூட விஷத்தைப்போல மண்டியெரிந்து தன்தேரைத் தூரத்திவந்து மேருவுக்குச்சமமாகிய தனுசையெடுத்துநாட்டி நாரியைப்பிகிந்துஅண்டகடாகமும் சத்துருக்கள்மனமும் திடுக்கிட்டு வாடும்படிக்கு நாணொலிகாட்டிப் பிறையைப்போலவளைந்த கூரியஅலகுகளைப்பெற்ற கொடியபாணங்களை சோனைமழையைப்போலச்சொரிந்து கெக்கலிகொட்டியிருக்கும் பூதப்படைகளைச் சின்னபின்னப்பட்டுப் பறக்கத்தக்கதாகச்சாடினன், அதனாற்றலையற்றும் மார்புபிளந்தும் கரங்களற்றும் கால்களொடிந்தும் கரங்களிற்பற்றியிருந்த ஆயுதங்கள்பொடிபட்டும் கண்டங்கண்டமாய் துண்டந்துண்டமாய் ரணக்களமெங்கணும் பிணக்காடாய்விழுந்தார்கள், அப்போதும் எரிமுகனுக்குக்கோபந்தணியாமல் அளவற்ற திவ்வியபாணங்களை அபாரியாய்ச்செலுத்திச் சேனைத்தலைவர்களேறியிருந்ததேர்கள் உருளைகள் அச்சுமச்சு குத்துக்கால் கொடுங்கைமுதலியவற்றை வெவ்வேறாக வெட்டிக் குவித்துக் குதிரைகளையும் சாரதிகளையும் கண்டதுண்டமாகவாட்டி மேலும் பலபாணங்களைப்போக்கி அவர்கள்தேகத்தில் ஊசிநாட்டவிடமில்லாமற் றுளைத்துததிக்குமுக்காடவொட்டாமற்சாடும்போது இக்கொடுமையைக்கண்டதேவர்கள் திகைத்து இன்றுடன்சண்டைமாண்டுபோம்போற் காணுகின்றதென்று மனங்கலங்கிவாடிவருந்தினர் அத்தருணத்திற்பெருத்த வுதிரப்பிரவாகமானது மேலிட்டு உலகங்கள் நடுநடுங்கிப்பிரமித்து வாடிவருந்தத்தக்கதாக அலைகளைமோதிஎங்கணும்பரந்தது

அக்காலத்திற் கணக்கிறந்தகவந்தங்கள்நாடகளைப்போலக் கூத்தாடவும் பூதபைசாச டாகினி காளிக்கூட்டங்கள் நிணமாம்சங்களைத் தெவிட்டவுண்டுஉதிரங்களைக்குடித்த வெறியினாற் பாடியாடவும் நாய்நரிகள் பிணங்களைப் பிடுங்கித்தின் றூளமிட்டுத்திரியவும் கழுகுபருந்து காக்கைகள் நிணங்களைத் தேக்கிடத்தின்று உதிரப்புனலிற் படிந்துகளித்து வானத்தில் வட்டமிட்டு தேர்களின்மீது நின்று சிறகுகளைப் புலர்த்தவும் இவ்விதமாகப் பூதசயின்னியங்களும் படைத்தலைவரும் பங்கப்பட்டு வருந்தித் திகைப்பதையும் சூரன்குமாரன் விஜயத்தையும் யமனையொத்த புசபல பராக்கிரமசாலியாகிய மகவானென்னுஞ்சூரன்கண்டவுடன் தியெழநகைத்து ஒருபாதகன் நம்மவனையெல்லாம் இப்பாடு படுத்துவனோவென்னும் மானம்பாதிக்கத் தேகம்புழுங்கி மயிர்க்கால்தோறும் அனல்வீசக் கொதித்துத் தன்தேரைத் தூரத்திவந்து பகைவன்முன்னம் நிறுத்தித் திருப்பாற் கடலைக்கடைந்த மத்தையொப்பத் தன்கரத்தில் விளங்கும் பாரித்த வில்லைவளைத்து நாணேற்றிப் பகைவர் மனந்திடுக்கிடத் தக்கதாக டங்காரசத்தத்தைக்காட்டி அதிகதீட்சணியமுள்ள திவ்விய பாணவகைகளைப் புற்றினிடத் திருந்து ஈசல்பெருகு மாறுபோலப்பொழிந்து காலாந்தகனைப்போலத் திரிவதை அக்கினிமுகன்பார்த்து மனம்பொறாமல் ரவுத்திராகாரமாகச்சீறி தன்வில்லிற் கொடியபாணகோடிகளைக்கரவேகமாகச் செலுத்தினன், அவைவெளிப்பட்டுப்புகையையும்அனலையும்வீசி சிடசிடத்த தொனிகளுடன்சீறிவரும்போது பூதத்தலைவன் துரிதமாய்த்தகுந்தமாறுகணைகளை வில்லிற்சந்தித்துத்தூண்டித்தும்சப்படுத்தி மேலும்அளவற்ற திவ்வியபாணங்களை யெரிமுகன்மீதிற் செலுத்திக் கொக்கரித்தனன் உடனே அக்கினிமுகன் அதற்கிரட்டித் தொகைகொண்ட கூரியசரங்களைப்போக்கித் துகள்கண்டான் இவ்விதமாக ஒருவர்மீதொருவரேவியசரவருஷங்களைத் தடுத்துத்தடுத்துப்போராடிவருகின்றகாலையில்சூரன் குமாரன் விற்சாதுரியவன்மையினாற் பலகணைகளைக்கொண்டுபூதத்தலைவனேறியிருந்ததேரைப்பொடிப்பொடியாக்கிக் குதிரைகள் சாரதியை நிலத்திலுருட்டிக் கரத்திற் பற்றியிருந்த வலியவில்லைக்கண்டித்து மேலும் நூறுகடிய சரங்களைப்போக்கி மகவான்மார்பைப் பிளந்து அவுணவீரர்புகழ்ந்துகொண்டாடவும் விண்மண்ணதிரவும் சிருங்கநாதஞ்செய்தனன், இவ்விதமாகப் பகைவன் விஜயப் பிரதாபத்துடன் வீறுப்படைந்திருப்பதையும் மகவான் வலிகுறைந்து மயங்கிநிற்பதையும் அவன்துணைவர்களெழுவருங் கண்டு வடவாமுகாக்கினியைப்போற்சீறி யிரதங்களைத்தூரத்திவந்து விற்களைவளைத்து அனற்சமோகங்களைவீசுங் கொடியபாணங்களைத் தூவி பலவசைகளைப்பேசி வீரங்களைக் காட்டிச்சூழ்ந்து போராடும்போதுஅவர்கள் விட்டசரங்களனைத்தையும் கொடியபாதகன் பொடிபடக்கண்டித்து மீட்டும் பலபடைகளைக் கடா

விப் பருவதாகிருதியாக வலிபெற்றிருக்கும் எழுவீரர் புயங்களைத்துளைத்த தருணத்தில் உதிரம்பெருக்கெடுத்தோடவருந்தியும்வீராதலாற்பின்னிடையாமல் மனவலிகொண்டு உலகமெங்கும் புகழவாழுகின்ற சூரன்குமாரன் முகத்துக்கிலக்காய் ஆயிரம்பாணங்களையும் மலைபையொத்த புசங்களைக்குறித்து ஆயிரங்கணைகளையும் மார்புக்குக்குறிகொண்டு ஆயிரநாராசங்களையும் அதிவேகமாய்ப் பிரயோகித்துத் துளைத்துஅவனேறியிருந்த நவரத்தினமயமாகிய தேரையும் சக்கைச்சக்கையாகப் பேர்த்தெறிந்துதிசைகளதிரக் கொக்கரித்துச் சிருங்கநாதஞ்செய்தனர்.

அக்காலத்தில் நேர்ந்தயாகங்களுக்குச் சற்றும் சஞ்சலப்படாமல் தீரனாய் பக்கத்தில் நிற்கின்றசேமத்தேரிற் பாய்ந்து மண்டிபோட்டுட்கார்ந்து எழுவரையுந்தீயெழப்பார்த்து ஒருதிவ்வியபாணத்தினால் ஏககாலத்திற்கண்டித்துஒருவரை யொருவர்பிரியாமல் யமலோகத்திற் சேர்ந்திருக்கச்செய்த பின்பு உங்கள் தமையனைத் தூதாகவந்து இராஜாதிராஜனை யிகழ்ந்துபேசி நகரையழித்து எனதுதுணைவனைக்கொன்றுமீண்ட பாதகனையுங் கொன்று வெற்றியுடன் மீளக்கடவேனெனப் பிரதிக்கினைசெய்து முடிவதன்முன்னம் குமாரதேவர் படைத்தலைவர்கள் தனித்தனியாய்க் குரூரமாகிய பாணங்களைப் பிரயோகித் திராட்சதப்பாதகனேறி யிருக்குந்தேரையும், பாகனையும் பூட்டியிருந்த சிங்கங்களையும் பொடியாகக்கண்டித்து அவன்தேகத்தையுமிடமில்லாமற் றுளைக்கவும், இராஜகுமாரன்சற்றுமிளையாமல் மனம்வருந்தாமல் அதறாமல் பெதறாமல் சஞ்சலப்படாமல் தீரனாய்த்துரிதப்பட்டு மற்றொருபாரித்ததேரிலேறி பாசுபதாஸ்திரத்தையெடுத்து விதிப்படிக்குச்சோடச வுபசாரங்களுடன் வழிபட்டுச் சத்துருக்களனைவரையும் நீறுசெய்து மீளக்கடவாயெனப்போற்றிவில்லிற்பூட்டிப்பிரயோகித்தான், அந்தப்படைக்கரசானதுவெளிப்பட்டவுடன் வடவாமுகாக்கினியைப்பெருக்கிக் காளகூடவிஷத்தைவீசி பிரமன், விஷ்ணு, திருநாமங்களைக்கொண்டிருக்கும் பாணங்களையும் மற்றதேவப் படைகளையும் உண்டுபண்ணி பிரசண்டமாருதத்தைவீசி அதிகமகிமையுடன் வருவதை எழுவருங்கண்டு இதுஅக்கினியாஸ்திரம்போற் காணுகின்றது இதற்குமாறு வருணாஸ்திரத்தைச் செலுத்தவேண்டு மென்று வருகிறபாணத்தின் பெருமையையும் மகிமையையுந் தெரியாமல் தாங்கள் குறித்தபடிக்கு வருணப்படையைச் செலுத்தினர், அதுவானத்தெழுந்து இடிமின்னலுடன் ஜலப்பிரளயமாகச் சொரிந்து மேலிட்டுச்சமீபித்தகாலையில் பாசுபதமானதுஅகஸ்தியர்கடலை ஆபோசனஞ்செய்ததைப்போல அதன்பெருக்கனைத்தையுங் கவளீகரம்பண்ணிச் சீறிவந்து எழுவர்சிரங்களையுங் கண்டித்து உயிரையுண்டு பிரேதங்களைப் பூமிக்குப் பொறையாகத் தள்ளிமீண்டது அவ்வீரர்பிராணன்யாதனாசரீரம் பெற்றுப்போய்த் திருக்கயிலாயத்தைச்சேர்ந்து பரமனைவழிபட்டிருந்தனர், இந்தவிஜயத்தைக்கண்ட அக்கினிமுகன் மனவுற்சாகத்துடன் புசங்கள்பூரித்து வானத்தையளாவக் கொக்கரித்துச் சிருங்கநாதஞ் செய்தனன், அத்தருணத்தில் நந்திகணத்தலைவர் எழுவருந்நிலத்தில் விழுந்துகிடைப்பதையும் பாதகன்வீறிநிற்பதையும் பூதப்படைகள் கண்டவுடன் வாயினும்வயிற்றினும் அறைந்துமுகத்தில்மோதிக்கிலேசித்துஇனிச்சற்றுநிற்போமாகில் வீணிலிறக்கவருமென்று பயந்து ஒருவர்பின்னொருவராகத் தலைவாறுகெட்டோடி யொளித்தனர்

அக்காலத்தில் விழிகளுக்கொப்பாக விருந்த துணைவர்கள் தோற்றுமல்மறைந்ததையும்இலக்ஷர்பட்டபாட்டையும் ஜயசாலிகளாகிய பூதப்படைகள் கலங்கி மங்கியோடியதையும் அவுணராசபுத்திரன் கெலிப்பையும் புசபலபராக்கிரமங்களுக்கு ஒருவரையும் ஒப்புவமைபேசக்கூடாத சூரனாகிய வீரவாகுதேவர் தெரிந்து மனவருத்தத்துடன் விழிகளில் நீரைப்பெருக்கித் துணைவருக்கடுத்த அபாயத்துக்கு வருந்தினவராய் உடனே அதிககோபம் பிரவேசித்துத்தீப்பொறிகள்சிதறஉருத்துப்பார்த்து ஓடுகின்ற சிவகணங்களை யதட்டிப் பயப்படவேண்டாம் நில்லும் நில்லுமென்று திருக்கரங்களைக்கொண் டமர்த்திப்பின்னணியி லிருந்தவர் கணப்போதிற் றேரைத்துரத்திவந்துஅக்கினிமுகனுக்கெதிரில்நிறுத்தியவளவிற்பகைவரைவென்றல்லதுதிரும்பாவென முறையிடுவதைப்போல வீரகண்டைகலிக்கும் பாதாரவிந்தங்களையுடைய வீரவாகுதேவரை ஆயிரத்தெட் டண்டங்களுக் கதிபனான சூரபதுமன்பிள்ளை அக்கினிமுகன்கண்டவுடன் விழிகளிற்றீப்பொறிசிதறவும் புருவம் நெற்றியிலேறவும் முகம்வியர்க்கவும்இதழ்துடிக்கவும் ரவுத்திராகாரமாகக் கோபித்து இதனைச்சொல்லுவதாயினன், பெரும்புறக்கடலைப்போல இரைந்திருந்தபூதரையும் உன்துணைவர் இலக்ஷர்படைத்தலைவர்களையும்நான் ஒருபொருளாக நினைந்தவனல்ல எதிர்த்தவர்களைவாட்டி உன்னைக்கட்டிக் கொண்டுபோகத் தேடித்திரிகின்ற நமதுமுன்னம் தற்செயலாய் உன்விதியானதுபிடரியைப் பிடித்துத்தள்ளிவந்து விட்டது அடாபயலே பிரமன், விஷ்ணு, முதலியதேவர் போற்றவாழுகின்ற என்பிதாவின் பெருமிதங்களையும் புயவன்மையையும் வரமுயற்சிகளையும் சற்றும்நினைந்து பாராமலும் நமதுவல்லபங்களை மதித்தறியாமலும் சக்கிரேஸ்வரனை அவமதித்து வீராதிவீரராக விருந்த படைத்தலைவர் சேனைகளைக்கொன்றாய் அரிதிற்பெற்ற என்துணைவனைமதியாமல்வெட்டியெறிந்து பட்டணத்தையும் நாசப்படுத்தி என்கண்ணிற்படாமலோடினை கடையில்உன்பிராணனுக்குயமனைப்போல விருக்கின்ற எவ்னெதிரில்வந் தகப்பட்டுக் கொண்டனை பிரமன் இன்றையதினம் இன்னான்கையில் மடிவாயென்று உன்தலையிலெழுதி வைத்திருப்பதைத்தெரியாமற்போயினை முன்னமெதிர்த்து வந்தவர்களுடன்பொருது வென்றனமென்று வீறியிருக்கின்றதைப்போலச் சுலபமாக என்னைநினைக்கவேண்டாம் நிமைப்போதிலுன்சிரத்தை யறுத்துச் சிகையைப்பற்றிக்கொண்டுபோய் அகண்ட மண்டலாதீஸ்வரனாகிய என்பிதாவின் பாதாரவிந்தங்களின் முன்னம் வைக்கின்றேன் அந்தப்படிக் குன்னை இந்தரணக்களத்துக்குப் பலிகொடாமற்போவேனாயில் முத்துமாலை மோகனமாலைகளைத் தாங்கித் தங்கக்கலசங்களைப்போன்ற தனபாரங்களையுடைய சுந்தரவதிகளாகிய கன்னியர்மையலிற் பட்டலைந்துழலும் பதிதனென்றெண்ணக்கடவாயெனக் கொடியசபதத்தைப்பேசிய எரிமுகனை எக்காலத்தினும் உலகர்புகழத்தக்க ஜயசாலியாகிய வீரவாகுதேவர்பார்த்துப் பொற்கடகமணிந்த திருக்கரத்தைத்தட்டி நகைத்து உன்சபதம் வெகுநேர்த்தியாகவிருக்கின்றது நீயும் வெகுசூரன் தான்பாலபருவத்திற்குரியனைப்பற்றிவந்து தளைசெய்த வீராதிவீரனாகியபானுகோ

பனும் இவ்வாறே பற்பல வீரங்களைப் பேசித் திரண்ட
சேனைகளுடன்இரண்டுதினம் வந்தெதிர்த்துப்படாதபாடு
கள் பட்டுச் சதுரங்கசேனைகளையும்பறிகொடுத்துபிராண
பீதியினல் மாயைவித்தைகளைச் செய்து பதுங்கியோடிப்
போயினன்.

அவனுக்கிளைய இரணியன் பேடியைப்போலப்பயந்து
மீனுருப்பெற்று கடலில்மறைந்தனன், அவனுக்கிளையநீ
யும் வீண்வீருப்புகளைப்பேசி வந்தாய்இனிஉயிர்பெற்று
மீண்டு உன்னகரைச்சேர்ந்து தாய் தந்தையரைக் காணப்
போகின்றனையோ என்னுடனெதிர்த்துப் போர்செய்தஅ
வுணவீரர்களில் ஒருவன் தப்பிப்பிழைத்துப்போய்ப்பெ
ண்டு பிள்ளைகள்முகத்தைப் பார்த்தவர்களுமுண்டோபா
னுகோபன் மாத்திரம் வஞ்சகத்தினற் பிழைத்துத்திரும்
பியிருக்கின்றனன், அவனுஞ் சற்றுநேரத்தில் என்கரத்
தினல் மாள்வன் அதற்குமுன் உன்னரிய பிராணனைப்
போக்கத் துரிதப்பட்டு வந்தாய் கிரமமான போரைச்செ
ய்யும் சுத்த வீரனுகவிருக்கின்றனையோ அலியையொப்ப
ப் புறந்தந்தோடிய இரணியனைப்போலச் சமுத்திரத்தி
ற் பதுங்க நினைந்திருக்கின்றனையோ இவ்விரண்டி லொன்
றைத்தீர்க்க மாயோசித்துத்துரிதமாகச்சொல்லக் கடவாய்
உன்னைப் பூமண்டலத்திலுள்ள சுத்தவீரர்கள் காக்கினு
ம் அவுணர் இராக்கதர் மரபினரனைவரும் போற்றினும்
அழிவில்லாத வரமுயற்சிகளைப் பெற்றிருக்கின்ற உன்ன
ப்பனே புத்திரவாஞ்சையினல் தன்படைக ளனைத்தையு
ஞ் சேர்த்துக்கொண்டுவந்துஆதரிக்கினும் இன்னமும்மே
லை அண்டங்களிலிருப்பவர்க ளனைவரும் ஏகமுகமாய் தி
ரண்டுவந்து பலப்படுத்தினும் சகலரையும்வென்று உன்
னையிந்த ரணக்களத்திற் பவனிவரும்பத்திரகாளிக்குப்ப
லிகொடுப்பேனென்று வீராதிவீரன் சொன்னமாத்திரத்
தில் அக்கினிமுகனுக்கு ரவுத்திராகாரமான கோபம்பிர
வேசித்துச் சிங்கத்துக் கொப்பாகக் கர்சித்து நல்லகாரிய
ம் உன்குண்டிதயிரியத்தை வாட்டுவேனெனச்சீறி ஒப்ப
ற்ற தன்வில்லை வட்டாகாரமாக வளைத்து நாணேற்றிக்கு
ணத்தொனி செய்தகாலத்தெழுந்த அதிர்ச்சியினற்சூரிய
சந்திரர்திடுக்கிட்டுத் தங்கள் கதிகள்தப்பி யோடவும் நட்
சத்திரராசிகள் நிலைகுலைந்துபூவட்டமெங்கணும்பலபலெ
ன்றுதிரவும் உலகங்களடுக்குகள் குலைந்து தத்தளிக்கவும்
வானத்தில் நின்று வேடிக்கை பார்த்திருந்த தேவர்களிந்
த வுற்பாதங்களைக்கண்டவுடன் நடுநடுங்கிஇப்படிக்குத்தா
றுமாறு படச்செய்த பாதகன் இவ்விடத்திலிருப்போமா
கில் நம்மையென்ன செய்வானேவென்னும் பயப்பிராந்தி
யினற்பறந்து மேலுலகங்களிற் போயொளித்தனர், அக்
காலத்திற் சண்முகதேவருக் கந்தரங்கபத்தனுக விருக்கி
ன்ற வீரவாகுதேவர்தமது கரத்திற்பினுகத்துக் கொப்பா
க விளங்குகின்ற பாரித்தவில்லைநாட்டி நாணேற்றி மெல்
லகுணத்தொனிகொண்ட தருணத்திலெழுந்த பேரொலி
யானது சருவசங்காரகாலத்தி லொலிக்கும் பேரிடிகளை
ப்போலச் செவிகளிற்கேட்டமாத்திரத்திற பிரமன் மதிம
யங்கிவாடவும் தேவர்கள் களைத்துச்சோரவும் மனஉறுதி
பெற்ற அவுணர் இராக்கதர் இதுதானேமுடிவுகாலமென்
றேங்கி யொடுங்கவும் அண்டங்கள்கலகலத்து மாறுபடவு
ம் பூமிதத்தளித்துக் கீழ்மேலாகவும் இப்பாடுபட்ட முன்
னிலையில் எரிமுகன் விடநாகத்தை யொப்பச்சீறிபதினே
ழு குரூரமாகிய சரங்களையெடுத்துச் சந்தித்துகண்டத்து
க்குக் குறிகொண்டு பிரயோகித்துக் கியாவுமெனச் சிருங்
கநாதஞ்செய்தபோது அவைகள் வெளிப்பட்டவுடன் சர்
ப்பங்களை யொப்பச் சீறி அனலையிறைத்து பிரசண்டவா
யுவினுங் கடுகிவரும் விநோதங்களைமுருகேசர் படைத்த
லைவனுகிய வீரவாகுதேவர் பார்த்துத் திருநகைகொண்டு
வேலை நிகர்த்த பிரகாசம்பொருந்திய அலகையுடையபதி
னன்கு திவ்வியபாணங்களைத் தமது தனுசிற் சந்தித்துப்
போக்கி மேலிட்டுவரும் பகைவன்கணைகளைக்கண்டதுண்
டப்பட வெட்டித்தள்ளி பிரளயமேகங்களைப்போலக் கற்
சித்ததை அனல் வீசும் எரிமுகன்கண்டுகோபாக்கிராந்த
னய் இருபது கூரியகணைகளைத்தூண்டியபோதுகீர்த்திப்
பிரதாப சாலியாகிய வீரன்வேகமாய் அத்தொகைக் கொ
டிய பாணங்களைத்தூண்டி மேகங்களைத்துரத்தும் பிரச
ண்ட வாயுவைப்போலப் பகைவன்படைகளைத் தடுத்தன
ன் அதைக்கண்ட சூரன்குமாரன் விஷம்பூசியஆயிரம்தீ
ட்சணியமுள்ள கணைகளைப்போக்கி நிணப்பசுமை யருத
வெற்றிவேலாயுதக்கடவுள் தூதன்பிறையையொத்த நெற்
றியிலழுத்தி யிராட்சதவீரர்புகழ வெற்றிச்சங்கை அண்
டங்களதிர பொம்பொம்மென் றூதினன்.

அக்காலத்தில் எத்தகையரும் புகழத்தக்க ஜயசாலியா
கிய வீரவாகுதேவருக்கு அதிககோபம் பிரவேசித்துக்கா
லாந்தகனைப் போலச்சீறிக்கூர்மையாக வடித்து விஷத்து
வைய லிட்டிருக்கின்ற குரூரமாகிய வயிரவாளிக ளாயிர
ங்களை ஒருதொடையிற் சந்தித்துப்போக்கிச்சூரபதுமன்
பிள்ளை ஏறியிருந்த தேரைப்பொடிப்பொடியாகக் கண்டி
த்து அதிற்பூண்டிருக்கின்ற சிங்கங்களை வெட்டிக் கிடத்
திப்பாகனையும் கொன்றுவாட்டி அவன்கரத்திற் பற்றியி
ருந்த வலியவில்லையும் படாலுமென இருதுண்டமாக்கிச்
சிருங்கநாதஞ்செய்தகாலத்தில் அக்கினிமுகன் நிலத்திற்
பாய்ந்து சிங்காசனைப்போல மற்றொருசேமத்தேரிற்பா
ய்ந்துமந்தரகிரிக்குச் சமமாகிய தண்டாயுதமொன்றையெ
டுத்து கிறுகிறெனச் சுழற்றியிதனல்நாசப்படக்கடவாயெ
ன்று மோதினன் அதுவிடுபட்டவுடன் மணிகள்சத்திக்க
ச்சந்திரன் மீதிற்பாயும் கேதுவைப்போல வேகமாய் வரு
வதை வீரன்கண்டு இரண்டுகொடிய சரங்களைப்போக்கி
க் கண்டித்து நிணச்சேறுடியிருக்கும் ரணக்களத்திற்றள்
ளிஅட்டகாசஞ்செய்தனர், அத்தருணத்தில் இராஜகுமா
ரன் மண்டியெரிந்து மற்றொருவலியவில்லையெடுத்து வட்
டாகாரமாகவளைத்துநாரியைபிகிந்துவாயுவாஸ்திரத்தைச்
சந்தித்துவிதிப்படிக்குவழிபட்டு மந்திரபூர்வகமாகச் செ
லுத்திவிட அதுபிரசண்ட மாருதத்தைப்போலஇரைந்து
கொண்டுவரும்போது வீரவாகுதேவரும் அந்தத்தெய்
வீகபாணத்தைப்பூசித்துப்போக்கித் தடுத்தகாலையில் அ
க்கினிமுகன்கோபித்து இயமாஸ்திரத்தைப்போற்றித்தூ
ண்டியபோது அதிகமகிமைகளைக்காட்டிவருவதைக்கண்
டவீரன் அந்தப்படையைமாறுசெலுத்திவென்றூர் உட
னே அக்கினிமுகன் சூரியாஸ்திரத்தை வணங்கிச்செலு
த்த அதிகப்பிரகாசத்தைக்காட்டித் தீயையிறைத்துச் சீ
றிவரும்போது வீரன் அந்தப்பாணத்தைக்கொண்டுதடு
த்து மேலும் விஷச்சுவாலையைக்கக்கும் கொடியபாணங்
கள் பலவற்றைப் பகைவன்மார்புக் கிலக்காகப் பிரயோ
கித்தபோது தீயையும் புகையையும்பெருக்கிச்சூறுவளி
யைப்போலச்சுழன்று வேகமாய்வந்துதாக்கி வயிர கவ
சத்தைப் பொடிபடுத்தி மார்பிற்றைத்துத் தடாரித்துரு

விப் போயது அதன் மூலமாக வுதிரம் பெருக்கெடுத்
தோடவருந்தித் திருப்பாற்கடல்மத்திக்கு முன்னிலையிற்
கவிழ்ந்த மந்தரகிரிக்குச் சமமாகக் கதறிக்கொண்டு தே
ரினிடத்திற் குப்புறவிழுந்து பிராணன்போவதும் வரு
வதுமாக அலைகின்றதைக்கண்ட யமபடாள்நெருங்கி அ
வன்முகத்தினின்றெழுந் தீப்படலத்துக்குப் பயந்தோடி
னர், இவ்விதமாக மரணமூர்ச்சைப்பட்டுக் கிடக்கின்றவ
ன் முகத்தில் வாயுவீசுவதினாற் சிலநேரத்திற்றேறிஉண
ர்ச்சிபெற்றகாலையில் மலைப்பாம்பைப்போலப் புரண்டுக
ண்களைவிழித்து மெல்லவெழுவதற்கும் சண்டைகொடுப்
பதற்கும் சத்தியில்லாதவனாய் வருந்திக்கிலேசித்து மா
னம்பாதிக்கவெந்து பெருமூச்செறிந்து இதனையோசிப்ப
தாயினன், வீரத்தையுங் குலவிருத்தியையும் நினைந்துத
லையைத்தூக்குவேனாகில் இதோஎதிரில் நிற்கின்ற இரா
ட்சதகுலாந்தகன் கோபாக்கினிக்கிரையாய் மாளவரும்இ
தற்கென்செய்வதென்று பலபல வெண்ணியெண்ணிக் க
டைசியில் ஒருகியாபகம்மனதிற்றோற்றி அதனைமுடிக்கத்
துணிவுகொண்டனன், அஃதென்னையெனில், தான்பால
பருவத்தில் விளையாடித்திரிகின்றகாலையில் ஒருதினம்வீ
ரமாமயேந்திரபுரியைக் காவல்கொண்டிருக்கும் பத்திர
காளி சன்னிதானத்தில் வழக்கப்படிக்குப்போய் வேடிக்
கையார்த்தமாக பலமலர்களைச்சாத்திப் பலிகொடுத்து வ
ழிபட்டுப்போற்றும் முன்னிலையில் அப்பூசனையை முக்
கியமாகத் திருவுளத்திற்கொண்டு வெளிவந்து காட்சிதந்
து குமாரனே நீசெய்த ஆராதனைவழிபாடுகளுக்குமிகவு
ங்களித்தனம் வேண்டியவரங்களைக்கேட்பையாகிற் றரு
வோமெனத் திருவுளம்பற்றியபோது லோகமாதாவே ஒ
ருகாலம் போர்முனையிற் சத்துருக்களுக்கிளைத்து வாட
வரும்போது தேவரீரெழுந்தருளிப் பாதுகாத் தாளவே
ண்டுமென விண்ணப்பஞ்செய்தபடிக்குக் கடாட்சித்துஆ
சீர்வதித்துப் பழையபடிக்குப் பொன்மயமாய் நவரத்தி
னகாந்திகளை வீசிக்கொண்டிருக்கும்திருவாலயத்திற்போ
யினள்.

அந்தத்தன்னிஷ்டதேவதையாகிய பத்திரகாளியம்மை
யை மனப்பூர்வகமாகச் சிந்தித்துப்போற்றி யித்தருணத்
திற் காக்கக்கடவையென வேண்டுவதைத்திருச்செவிகளி
னேற்றுப்பரிந்து துரிதமாய்ச் சிங்காதனத்தைவிட்டிறங்
கித் திருமாளிகையைவிட்டு வெளிவந்து சிங்கவாகனத்தி
லாரோகணித்து அனலைச்சொலித்திராநின்ற முத்தலைச்
சூலம்-பாசம்-வாள்முதலிய ஆயுதங்கள் திருக்கரங்களில்
விளங்கவும் சர்ப்பாபரணங்கள் சிரோரத்தினங்கள்சொ
லிக்க படங்களைத்தூக்கிக்காட்டவும் செம்பட்டாடையி
டையிலசையவும் செஞ்சந்தனக்கலவை தேகமெங்கணும
ணிந்து திசாதிசைகளிற் பரிமளிக்கவும் செக்கரஞ்சடை
யானது சூரியகிரணங்களுக் கொப்பாகத்துலங்கவும் வி
ழிகள்அரக்கையொப்பச் சிவந்துசுழலவும் பிரமனாதியதே
வர்கள் அதப்பட்டகாலத்திற் கிடைத்த சிரமாலைகள்கழு
த்தினிடத்திற்புரளவும் வயிரக்கடகங்கள்கலிக்கும் சத்து
ருக்கள் சிரங்களைக்கண்டித்துக் கண்டித்து நிணப்பிரகா
சமுற்ற வீரவாளைக் கரத்திற்கொண்டு யானை-புலி-கரடி-
முதலிய மிருகங்களைப்பல்தரஉண்டு உதிரச்சுவட்டுடனி
ருக்கின்ற கோரைத்தந்தங்கள் விளங்குங்கடைவாயிற்சோ
ரிபெருகிக் கொண்டிருக்க மகாவிஷ்ணு - பிரமன்முதலி
ய சிறந்ததேவர்களின் எலும்புமாலைகள் கலகலென்ற
சையவும் ஓங்காரித்துப் பூமண்டலவாசிகளும் விண்ணு
டரும்புகழ்ந்துபோற்றவும் அவள்வீரக்கோலத்தைக்கண்
ட இயமனும் கிடுகிடாய்த் தஞ்சவும் பூமிகிடுகிடெனநடு
ங்கவும் பலபூதபைசாசங்கள் குடை-ஆலவட்டம்-அருகு-
வெண்சாமரைகளசைத்துவீசவும்அங்கர்க்காவலைமறந்து
இராஜாதிராஜனாய் அகண்டயிஸ்பரிய சம்பன்னனா யிரா
நின்ற சூரபதுமன் பிள்ளைக்கெதிரிற்றோற்றி யிராஜகுமா
ரன்தற்காலத்திற்பட்டிருந்த துன்பத்துக்கிரங்கிக் குமார
னேபயப்படவேண்டாம் உனக்கிவ்விதக் கிலேசத்தைத்த
ந்த சத்துருக்களை அதம்பண்ணிமனவருத்தத்தை நீக்கு
வேனென்று பலஉறுதிகளைச்சொல்லி அபயாஸ்தமளி
த்துத் துரிதமாய்ச் சிங்கவாகனத்தை வீரவாகுதேவர்சே
னைகளின்பேரிற் றிருப்பிப் போர்த்தொழிலைச்செய்ய வு
த்தேசித்து ஒருவிசை ஓங்காரித்தவதிர்ச்சியினாற் பஞ்ச
பூதங்கள் நிலைபிசகித் தத்தளிக்கவும் சத்தசாகரங்களுங்
கொதிப்பெடுத்துக் கரைகளைக்கடந்து பெருகவும் பூதப்
படைகள் திகைத்துத் தேகமெங்கும் வியர்த்தபோதினு
ம் தயிரியத்தைவிடாமற் காளியுடனெதிர்த்தனர்.

இச்சம்பவங்களைப்பார்த்த தேவர்கள்மதிமருண்டுஇஃ
தென்னை உற்பாதமாகவிருக்கின்றது பாதகன் மாயவலி
யோ மெய்மைதானோ என்னமாய்முடியுமோவென்று ம
னவருத்தத்துடன் மேல்நடப்பதைப் பார்த்திருக்கின்றத
ருணத்திற் பத்திரகாளியுடன் வந்தபூதபைசாச டாகினி
க்கூட்டங்கள் சிலரோங்கிக் கொக்கரித்துக்கொண்டு பாரித்
திராநின்ற விருட்சங்களைப் பிடுங்கிச்சாடியும்வானத்தை
யளாவநின்ற பருவதங்களைப் பறித்துமோதியும் வேல்சூ
லம் இவற்றைக் கடாவியும் வாளைக்கொண்டு தாக்கியும்
பாரித்ததண்டாயுதங்களைக் கிறுகிறெனச் சுழற்றிமாறியு
ம் நீண்டவிற்களைவளைத்து கணக்கிறந்த கொடியபாணங்
களைச் சோனைமாரியினும் பெருகச்சொரிந்தும் அரிய
போரைச்செய்கின்றகாலையிற் பூதப்படைகளும் பின்னி
டையாமல் ரவுத்திராகாரமாகக்கோபித்து மாமரங்களை
ப் பறித்தெறிந்தும் குன்றங்களைப் பந்தையொப்பக் கடா
வியும் இருப்புலக்கைகளைச் சுலவிச்செலுத்தியும் தோம
ரம்-பிண்டிபாலம் - இவற்றைப்போக்கி ஆர்ப்பரிக்கின்ற
போது தன்சேனைகள் வாடுவதைக்கண்ட பத்திரகாளி வ
டவையைப்போல்சீறி கரங்களிலொன்றில் விளங்கும்மழு
ப்படையைச் சிவகணங்களனைத்தையும் நாசஞ்செய்யும்
பொருட்டுப் பிரயோகித்தபோது அதுவெளிப்பட்டவுட
ன் பக்குபக்குமென்றெரிந்து அனலையிறைத்துப்பலகோ
டி துர்க்கைகளைப்படைத்து எங்குந் தானாய்ப் பூதப்ப
டைகளை மடக்கிக்கொண்டு தாபரித்துநிற்கக் கூடாமை
யாய் வாட்டுகின்ற அனர்த்தத்தையும் பத்திரகாளியின்
செய்கைகளையும் ஜயசாலியாகிய வீரவாகுதேவர்கண்டுநி
தானித்து சற்றுதாழ்ப்போமாகில் இந்தச்சூலப்படை ந
மது சேனைகளனைத்தையும் இந்தநிமிஷத்தில்அதம்பண்
ணிப் போடுமெனத் தீர்மானித்தவராய்ப் பதினான்குதிவ்
வியசரங்களையெடுத்து வில்லிற்சந்தித்துக் கரவேகமாய்வி
ட்டபோது அவைகள் விஷங்களைக்கக்கி அதிகவுற்பாதங்
களைக்காட்டித் துரிதமாகப்பாய்ந்து முத்தலைப்படையை
க் கண்டதுண்டமாகவெட்டி நிலத்திற் றள்ளியோடியது,
இதனைக் காளியம்மன் தெரிந்தவுடன்ஆலகாலவிஷத்தை
ப்போலக் கொதித்து என்னைமதியாமலும்நான்செலுத்தி
ய சூலத்தைக் கண்டித்து மனவலிபெற்றுத் தீரனாய்த்

தனுர்ப்பாணியாகவெதிரில்நிற்கின்றனன், இவன்பிராண
னை யிந்தநிமிஷத்திற் பலிகொள்வேனென ஓங்காரித்துச்
சிங்கவாகனத்தைத் தன்சேனைகளுச்குமுன் செலுத்திவீ
ரவாகுதேவரை உருத்துப்பார்த்து நான்கடாவிய சூலத்
தைத் துகள்கண்டனை அத்தகைய மனவுறுதிபெற்றஉன்
னை யிந்தமழுப்படையினுல் வாட்டிப்பிராணனைப் பலி
கொள்வேன் முன்னையதைப்போல இதனைச் சுலபமாகத்
தடுப்பதரிதென்று காளியம்மை சொன்னபோது வீரவா
குதேவர் நகைத்து நீகுறித்தகாரியம் வெகுநேத்தியாகவி
ருக்கின்றது ஒன்றல்ல பலசூலங்களாதிய படைகளைவிடி
னும் அவைகளனைத்தினையும் நிமைப்போதில்வாட்டவல்
லேன் என்வலியும் வீரமும் உனக்குத்தோற்ருமல் உன்
வல்லபங்களைப் பேசினையென்று வீரன்மறுமொழியாடி
யபோது காளிக்கு அதிககோபம் பிரவேசித்து நல்லகாரி
யம் அதையுஞ் சற்றுநேரத்திற் காண்பேனெனச்சீறி ம
ற்றொருசூலத்தைச் சுழற்றி யெறிந்து கொக்கரித்தனள்,
அதுவெளிப்பட்டவுடன் அனலைவீசி சர்ப்பத்தைப்போ
ல உதறிக்கொண்டுவரும் உற்பாதங்களைக்கண்ட பூதப்ப
டைகள் மன நடுக்குற்றுத் தாபரித்து நிற்கப்படாமையா
ற்றிசைகெட்டோடினர், வானத்தில்நின்ற தேவர்களும் தி
கைத்து இதுதானே ஆலகாலவிஷமென்றேங்கி அத்தல
த்தைக்கடந்து மேலுலகங்களிலோடியொளித்தனர்,இரா
குகேதுவென்றெண்ணிச் சூரியர் சந்திரர் நடுநடுங்கிக் க
திதப்பிப்பறந்தனர், இப்பாடுபடுவதையும் வருகின்றப
டையின் செருக்கையும் வீரவாகுதேவர் தெரிந்து துரித
மாய் ஆயிரந் திவ்வியபாணங்களைப் பிரயோகித்துச் சூ
லத்தைத் துகள்பட வாட்டியதைப் பத்திரகாளி பார்த்த
வுடன் வடவையைப்போலப்பொங்கி யிவன் சிரத்தைவீ
ரவாளினுற் கண்டித்து உதிரபானஞ்செய்து பிராணனை
ப்பலிகொள்வேனென வுருத்து அதிசீக்கிரத்திற்சிங்கவா
கனத்தைவிட்டுநிலத்திற்குதி வீரவாளாயுதத்தையுருவிக்
கரத்திற்கொண்டு திருப்பாற்கடலினிடத் துதித்தெழுந்
த காளகூடவிஷத்தையொப்பக் கொக்கரித்து மின்னலு
க்குச் சமமாக இடம்வலமாகச் சுழற்றி வீரவாகுதேவர்
வீற்றிருக்கின்ற தேரிற்பாய்ந்துவரும்போது வீரன்யோ
சித்து இவள் பத்திரகாளியாகும் இவளுயிரைவாங்காமல்
ஆணவமலத்தைப் போக்குவது தகுதியாமென நிதானித்
தவராய் இடியைப்போலக் கர்ச்சித்து எட்டுக்கரங்களும்
இற்றுப்போயதெனச் சந்தேகிக்கத் தமதுஒப்பற்றகையி
னுற் சேர்த்துப்பிடித்து மற்றக்கரதலத்தினுல் பிரளயவி
டியையொப்பாக மார்பினிடத் தறைந்ததருணத்தில் அ
த்தாக்கலினுற் பொறிகலங்கிப் பிராணனூசலாட வருந்
திச்சோபித்து மரணமூர்ச்சை யடைந்து தேரில்விழுந்
தனள்.

அக்காலத்தில்மார்புபிளந்து உதிரம்பெருக்கெடுத்தோ
ட பத்திரகாளிபட்டபாட்டை யின்னவிதமெனச் சொல்
லிமுடிவதோ அவ்வதிர்ச்சியினுற் பூமிநெக்குவிட்டும் கு
லகிரிகள் துகள்பட்டும் அண்டப்பித்திகைவெடித்தும் இ
ப்பாடுபடுமுன்னிலையிற் பத்திரகாளியானவள் சகலரும்
புகழும்பெருமையும்மங்கி உதிரச்சேற்றிற் புரண்டுகிடந்
தவள் சற்றுநேரத்தில் ஐம்புலன்களும் ஒருவழியிற்சேர்
ந்து களைதெளிந்து கண்களைத்திறந்துப்பார்த்து தான்ப
ட்டகேட்டைத்தெரிந்து கரைகாணுத துக்கசாகரத்திலமு
ந்தி வீரத்துக்கொப்பற்ற கந்தசுவாமிதுணைவன் தன்மா
ர்பிலறைந்ததையும் அத்தாக்கலுக்குச் சகிக்கக்கூடாமல்
தன்வல்லபங்களும் சவுரியபராக்கிரமங்களும் அழிபட்டு
உதிரப்பெருக்கில்விழுந்து தேகமெங்கும் சிவந்துகாட்ட
நீடித்தறிவழிந்து சோர்ந்திருந்ததையும் எண்ணியெண்
ணி நாணமும் மானமும் மனதைவாட்டிப் பாதிக்கவாடி
இதனைநினைப்பதாயினள், சுயஞ்சோதிவடிவாய்ச் சராச
ரப்பிரபஞ்சங்களெங்கணும் பரிபூரணமாய்நிறைவெய்தி
சதுர்வேதங்களினுலுந் துதித்தற்கரிய மகத்துவங்களைப்
படைத்த சிவசுப்பிரமணியதேவர் பரிபூரணகடாட்ச வீ
ட்சணியத்தைப் படைத்திருக்கின்ற மகானுபாவனுடன்
விவேகசூன்னியளாய் போர்செய்யத் துணிவேனுகில்வெ
ற்றிபெற வல்லனே மதிமயங்கி யிந்தத்தகாத கோரிக்கை
க்குட்பட்டேனுயினுந் தயைசெய்து பிராணபிச்சைதந்த
னர் இவர்மனதிலிருக்கின்ற கோபத்தைத்தணியச்செய்ய
வேண்டுமென நிதானித்து மெல்லவெழுந்து தன்னையிக
ழ்ந்தவர் மார்பைக்கூரிய நகத்தினுற்பிளந்து உதிரவாரியு
டன் ஆவியைப் பலிகொள்ளத்தக்க சூரத்தன்மையைவா
ய்ந்த பத்திரகாளியானவள் தனக்கெதிரில் மண்டிபோட்
டுட்கார்ந்து டாரித்தவில்லைக் கரத்திற்பற்றி உருத்திருக்
கும்வீரனைக்கிருபையாகப்பார்த்து பலவிதங்களிற் புகழ்
ந்து வீராதிவீரனே கேட்பையாக பாலபருவத்தில் இந்
தஅக்கினிமுகன் பற்பலபலிகொடுத்துப் பூசித்ததற்கிரங்
கிக் கொடுத்திருந்த வரபாலனத்தைக்குறித்து அவன்கோ
ரிக்கையின்படிக்கிவ்விடம்வந்தேன் ஆனுல் உமதுவலியை
யும் வீரபராக்கிரமத்தையும் தெரியாதவளாய்ச் சண்டை
க்கெதிர்த்து இப்பாடுகளைப்பட் டிந்நிலையில்நின்றேன் எ
ன்சிறப்புகளும் கீர்த்திப்பிரதாபங்களையும் பலரும்பூசிக்
கப்பெற்ற பெருமிதங்களையும் பறிகொடுத்தேன் இனிஉ
மக்குவிஸ்தரித்துச் சொல்லவேண்டுவதில்லை செலவுகொ
டுப்பீராகில்என்னிருப்பிடத்தைப்போய்ச்சேருவேன் தா
மதஞ்செய்யாமல் அக்கினிமுகனை வெற்றிகொண்டு அவ
னுடன்வந்திருக்கின்ற வீரரனைவரையுங்கண்டித்துப் பா
னுகோபனையுங் கொல்லக்கடவாய் மேலும் தேவாதிதே
வனுகிய சண்முகப்பெருமாள் கிருபைக்குப் பாத்திரனு
ய்ப் பல்லூழிகாலம் சுகசீவியாய் புயவன்மைகளுக்கொப்
பற்றவனுய் வாழிவாழியென்று ஆசீர்வதித்துஇவையனை
த்தையும் கைகண்ட பலனுக்கடையிற் காண்பையென்
றுபேசி விடைபெற்றுச் சிங்கவாகனத்தி லாரோகணித்
துப் பூதபைசாசங்களாதியாகிய தன்சேனைகள் சூழ்ந்து
போற்றி வரத்தக்கதாகத் தனதாலயம்போய்ச் சேர்ந்தன
ள், தன்னிஷ்டதேவதை இவ்விதமாக இளைத்துச்சென்ற
தை அக்கினிமுகன் கண்டவுடன் இக்கள்வன் வலிவெகு
நேத்தியெனச்சீறி உறங்கியிருந்த வூழிகாலமேகங்களிடி
கள் குமுறலைக்காட்டிக் கிளம்பியதைப்போல ஆர்ப்பரித்
துத்துள்ளியெழுந்துமண்டிபோட்டுட்கார்ந்து இதனையோ
சிப்பதாயினன்.

சீவராசிகளனைத்தையும் உதிரம் கடைவாயின்மூலமா
கப்பெருகப் பலிகொண்டுண்டு வயிற்றைநிரப்பிப்பசிப்பி
ணியினுல் வாடித்திரிகின்ற காளியினது உதவியைக்கொ
ண்டோ இதுபரியந்தம் செய்துவந்தசண்டைகளில்வெற்
றிபெற்றேன் ஆயிரத்தெட்டண்டங்களை வெற்றிகொண்டு
சகலரும் வணங்கிப்போற்ற அரசுசெலுத்திவரும் சூரன்
பிள்ளையாகவிருக்கின்ற எனக்கொரு உதவியும் வேண்டு
மோ நமக்கடுத்தசோபந்திருகிறபரியந்தம் சூலம், வாள்,

தண்டம், மழுப்படையைக் கரதலத்திற்பற்றிப் பூதகைசாசங்கள்சூழ வீற்றிருக்கும் நீலியினதுவலியைத்தெரிவதாகச் சிலநேரம்போராடும்படிக்கு நினைந்தழைத்ததல்லது வேலாயுதன்சேனைகளை யிவள்வெல்வாளென் றெவ்வளவும் மதித்தவனல்ல சூரியகிரணங்களுக் காற்றுதடங்கும் பனியினால் ஏரி, குளம், மடு, நிறைவதுண்டோ அதைப்போலத் தேவர்களை யேவல்கொண்டு கீர்த்திபெற்ற நான் ஊர்கள்தோறும் பலிக்குழன்றுதிரியும் காளியைக்கொண்டோ இனிஜெயப்பிரதாபத்தைப்பெறவிருக்கின்றனன், என்துணைவனைக்கொன்ற தூதனுயிரைக்கணப்போதில் இயமனுக்குவிருந்திடுவேன் இதனை முடியாமுன்னம் பிதாவின்சன்னிதானத்திற்போவதில்லையென்று சபதம்பேசி தீரனுயிரின்றகாலையிற் பகைவருக்குப் பதுங்கியிருந்த இராட்சத சேனைகளனைத்தும் கடலையொப்பவிரைந்து கொக்கரித்துக்கொண்டுவந்து சூரகுமாரனைச்சூழ்ந்துகொண்டனர், அத்தருணத்தில் தன்தேரை மேல்நடத்திவல்லவில்லினிடத்தில் நூறுகோடிய சரங்களைச் சந்தித்துவீரவாகுவின்மேல் பிரயோகித்துச்சிருங்கநாதஞ்செய்ததைக் கண்டவுடன் கோபநகைகொண்டு உன்புயவன்மைவெகுநேர்த்தி முடிவுக்காலம் நேர்ந்தபடியால் வந்தனையெனச்சீறி தமதொப்பற்ற சிலையைவளைத்துபதித்துப்பத்துத் திவ்வியபாணங்களைத் தொடுத்து மீறிவருவதைக்கண்டித்தனர் உடனேசூரகுமாரன் நூறுநாராசங்களைப்போக்கி வீரவாகுதேவரேறியிருந்த பாரித்ததேரைப்பங்கப்படுத்திவெற்றிச்சங்கைப்பொம்பொம்மென் றூதினன், அப்போதுவீரனுக்குரவுத்திராகாரமாகிய கோபம்பிரவேசித்துக் காளத்தையொத்தபதினான்குகோடியசரங்களைச் செலுத்திச் சூரன்பிள்ளைகரத்தில்விளங்கும் வீரவில்லை யிருதுண்டமாகவெட்டி யெறிந்தனர்.

உடனே அப்பாதகனுக்குஅதிககோபம்பிரவேசித்துத் தேகம்அனல்பட்டெரிய பெருமூச்செறிந்து வேறொருதனுசையெடுத்து வளைத்து நெறநெறனப்பற்களைக்கடித்து இந்த நிமிஷத்தில்வனை அதம்பண்ணுவேனெனப்பொங்கிப் பரிமளமிகுத்த ஆயிரமிதழைவாய்ந்த பொற்றாமரைப்பீடத்தமர்ந்த பிரமன் படையையெடுத்துவந்தனை வழிபாடுகளைச்செய்து பகைவனை நாசஞ்செய்யவேண்டிப் பிரயோகித்தான் அந்தத்தெய்வீகப்படை வெளிப்பட்டவுடன் அளவிறந்த விஷச்சுவாலைகளைவீசும் பாணகோடிகளையும் தீயின்பெருக்கையும் மற்றுமிராநின்ற கொடுமைகளையும்படைத்து மேலிட்டுவரும்போது பிரமசரோருகமென்னுஞ் சிறந்தகணையை மாறேவித்தடுப்பதினாற்சிறப்பில்லையெனநினைந்து வீரபத்திராஸ்திரத்தை யெடுத்துவழிபாடுகளைநிரப்பி வில்லிற் றொடுத்துச்செலுத்தினர், அதுவெளிப்பட்டவுடன் வடவாமுகாக்கினியும் ஆலகாலவிஷமும் ஏகமாகப்பெருகியதைப்போலச் சொல்லப்படாத பலமகிமைகளைக் காட்டி மண்டியெரிந்துகொண்டு சமீபித்தமாத்திரத்தில் பிரமாஸ்திரம் நடுநடுங்கிப் பலருமிகழ நாணித்திரும்பிவிட்டது, உடனேவீரபத்திரப்படைசீறி வேகமாய்ப் பாய்ந்து அனலைவீசிக்கொண்டிருக்கும்சிரங்கள்பத்தையும் கண்டித்துப் பிராணனைக்கொண்டுவானத்தெழுந்து கங்கையில் முழுகித்திரும்பி வீரவாகுதேவர் முதுகில்விளங்கும் புட்டிலில் பழையபடிக்குச்சேர்ந்திருந்தது வானவெல்லையில் நின்று வேடிக்கை பார்த்திருந்த தேவர்கள் இந்தவிஜயத்தைக்கண்டவுடன் சந்தோஷசாகரத்திலமுழ்ந்திக் கற்பகமலரையிறைத்து ஐயனைவாழ்த்திப் போற்றி மகிழ்சிறந்திருந்தனர், இப்படிக்குச்சகலருங்களிக்கத்தக்கதாக அக்கினிமுகன் போர்க்களத்திற்பட்டத்தைத் தெரிந்த அவுணவீரர்கள் கடலுடைந்ததைப் போலப் புலம்பி மானமும் வீரமும்மனதைவாட்ட ரவுத்திரகாரமாகக் கோபித்து நல்லகாரியம்இந்த இழிவாகியதூசனுக்கு ஜபசாலிகளாகிய அவுணகுலத்திற் பிறந்தநாம் பின்னிடைவதோ சகலரு மேகமுகமாய்ச்சேர்ந்து வளைந்துகொண்டு சாடிப்பகையைத்தீர்த்துக்கொள்ள வேண்டுமென்று யோசித்து இருபத்திநாலாயிரம் படைத்தலைவர்களும் இரதகஜதுரக பதாதிகளும் கல்லென்னுமோசையெழ ஆர்ப்பரித்து சூரியனைமூடிய பனியைப்போல வீரவாகுதேவரை வளைத்துக்கொண்டுஅவ்வவர்களும்வீராவேசங்களுடன் பாரித்தவிற்களை வளைத்துக்கொடியபாணவிதங்களையும் சக்கரம்,பிண்டி,பாலம், தோமரம்,கப்பணம்,எழு, மழு,தண்டம்,வச்சிரம்,வேல், சூலமுதலிய படைகளையுஞ் சோனைப் பெய்யலையொப்பப் பலதிசைகளினும்சூழ்ந்தெரிகின்ற காலையில் வீரவாகுதேவர் காலாந்தகனை யொப்பச்சீறி விஷத்தைப்போன்ற நூறுகோடியபாணங்களைக்கடிதிற்றூண்டி அவர்கள் செலுத்தியஆயுதவகைகளைச் சின்னபின்னமாக்கித் தள்ளி மேலும்கணக்கிறந்த திவ்வியபாணங்களைச் செலுத்திவாட்டும்போது சிரங்கள் பட்டும் மண்டைதிறந்தும் மூளைசிதறியும் புசங்கள்சரிந்தும் மார்புபிளந்தும் வயிறுபீறுண்டு சர்ப்பங்களைப்போலக்குடல்களிறைந்தும் வீரகண்டையணிந்த பாதங்கள்கண்டிக்கப்பட்டும் இராட்சதர்மாண்டும் தேர்நிரைகள் பலஉறுப்புகளும் வெவ்வேறாகக் கண்டிக்கப்பட்டிறையவும் மதயானைகள்துதிக்கையற்றுக் கபோலம்பிளந்து உடல் கண்டதுண்டப் பட்டுதெந்தங்க ளிற்றுமாளவும் தத்தித்தாவும்குதிரைப் பந்திகள்சின்னபின்னப்பட் டிறையவும்இவ்விதமாகவீரவாகுதேவர் செலுத்திய பாணகோடிகளின் வல்லபத்தினால் படைத்தலைவர் சதுரங்க சேனைகள் மாண்டபோது தப்பிநின்றவர் தலைவிரிகோலமாய்ப் பறந்தோடுவதாயினர்,அக்காலத்திற்றோற்றியரணக்களச்சிங்காரங்களில் சிலவற்றைச் சொல்லக்கேட்பீராக.

கணக்கிறந்த சயின்னியங்கள் மாண்ட காரணத்தினால் அளவற்றகவந்தங்கள் குதித்தாடுவது எப்படிக்கிருக்கின்றதெனில் வீரவாகுதேவர்செய்தபோரின்சாமர்த்தியத்துக்கு மெச்சிக்களித்துநடிப்பதைப் போலவும், பருந்து, கழுகு, காக்கை, முதலியபட்சிகள்நிணமாம்சங்களைத்தெவிட்டவுண்டு வானத்தில் வட்டமிட்டுலவுவதைப் பார்க்குமிடத்தில் தங்கள் பசிப்பிணியைப்போக்கியகாரணத்தைமுக்கியமாக நினைந்து வீராதிவீரன்முதலிய பால சுப்பிரமணியதேவர் சேனைகள்மீதிற் சூரியகாந்திபட வொட்டாமல் வானத்திற் பச்சைப்பந்தலிட்டதைப் போலக்காட்டவும் இராட்சதர் மாண்டகாலத்திற் சிதறிக்கிடக்கின்ற நிணமும் மூளைகளும் சேற்றைப்போலப் பிசறித்தோற்றவும் உதிரமானது அலைகளைவீசி யிரைந்தோடுவதுமாரிகாலத்திற் பெருகும் ஆற்றின்பிரவாகத்தை யொத்தும் பற்பல சிரங்களைப் படைத்திருந்த இராட்சதர்க ளிறந்தகாலையிற் கோபமிகுதியினாற் பிறையையொத்த கோரைத்தந்தங்களைக்கடித்தவுறுதியினாற் கனற்பொறிகள்பெருத்துஇராட்சதர் தேகங்களைச் சேதித்துக்கிடக்கின்ற நிணமாம்சங்களைச் சுடுவதினால் கழுகுகாக்கை யாதியபிராணிகள் உரு

சிகரமாய்ப் புசிக்கப் பொரித்துங் கரித்தும் வைத்ததை
நிகர்த்தும் நெறித்த வுரோமங்களைப் பெற்றமதயானைகள்
வீரன்செலுத்தியவாளிகளினாற்பருத்ததலைகள்உரலையொ
த்த கால்கள் பனைக்கு நிகராயசைந்திருந்த துதிக்கைவால்
கண்டிக்கப்பட்டுப்போக முண்டமாய் இரத்தப்பிரவாகத்
தி லோடுவதைப் பார்க்குமிடத்தில் ஆமைகள்மிதந்துசெ
ல்வதைப்போலக் காட்டவும் கரியதேகத்தைப்பெற்ற இ
ராட்சதர் தேகமுற்றுஞ் சல்லடைக்கண்களாய்த்துளைபட்
டு உதிரம்பீரிட்டுப் பெருகி யோடுவதி லகப்பட்டுப்போ
வதைப் பார்க்குமிடத்திற் சமுத்திரமானது வடவாமுகா
க்கினியின் வெப்பத்தை யொடுக்கித் தன்னிடத்தில்வைத்
திருப்பதைப்போலக் காட்டவும் யானைகள்குதிரைகள்தே
கமெங்கணும் வீரவாகுபாணங்கள்தைத்த புண்ணினிடத்
தில் உதிரத்தைப்பெருக்குவதை யோசிக்குமிடத்தில் மா
ரிக்காலத்திற் பருவதங்களினிடத்தூற்றெடுத்துப் பாயும்
அருவிகளையொப்பக் காட்டவும் இராட்சதர்கரங்களிற் ப
ற்றியிருந்த வாள், வேல், சுரிகை, பாணமுதலியபடைகள்
உதிரப்பெருக்கிலகப்பட்டு அழுந்தியும் மிதந்தும் மீன்க
ளைப்போலப்பிறழ்ந்து கொண்டுபோய்ச் சமுத்திரத்திற்
பாய்ந்தபோது அதிலடங்கியிருந்த மச்சங்கள் தம்மின
மென்று எதிர்கொண்டுகுலவி அப்படைகள் தாக்கியமா
த்திரத்தில் பயந்தோடும் சந்திரவட்டக் குடைகள் காம்பு
கள் துண்டிக்கப்பட்டு இரத்தவாற்றில்மிதந்து போவதை
ப்பார்க்குமிடத்தில் அந்திப்போதில்விளங்கும் செவ்வான
த்திற் சந்திரன் றோற்றியதைநிகர்த்தும் இராட்சதர் தலை
கள் கரங்கள் கால்கள் துண்டிக்கப்பட் டிரைச்சலிட்டோடு
ம் உதிரப்பெருக்கில் அலைந்துபோவதைக்கண்ட பூதவீ
ரர்கள் பகைவர் வயிறுபீறுண்டு இறைந்துகிடக்கின்ற கு
டல்களை வலைகளாகப் பின்னிவீசி அவைகளைமச்சங்களை
ப்போல வாரிவாரிக்குவித்துக் களிக்கவும் நிணமாம்சங்க
ளைத் தெவிட்டவுண்டு உதிரபானஞ்செய்த வெறியினால்
நாய்க்கூட்டங்கள் ஊளமிட்டொரு பாரிசத்திற் றிரியவும்
பைசாசங்கள் பூதங்கள் கரங்களைக்கோத்துப் பம்பைசுற்
றிக்கொண்டொருபுறத்தில்விளையாடிநிற்கவும்காளிகள்வீ
ரன்புகழைப்பாடி ஒருபுறத்தில் நிர்த்தனம்செய்யவும் ர
ணக்களமுற்றினும் இந்தக்காட்சிகள் மலிந்து காட்டவும்
நவரத்தினமயமாகிய தேரணிகளின்மீது வந்து சண்டை
கொடுத்த அவுணவீரர்கள் வீரன்பாணங்கள்பட்டு மாண்
டகாலத்தில் அவர்கள்சிரங்களினும் சாரதிகள்முண்டங்க
ளினும் அதிற்பூட்டிய புரவிக்கூட்டங்கள் தேகத்தினும்
உதிரம்பெருகக் கிடப்பதைப் பார்த்தவர்கள் இந்தத்தேர்
களுக்குப் பிராண னுண்டோ இரத்தத்தைப் பெருக்கிப்
போகின்ற தெனப்பேசவும் கோபப்பெருக்கையுடையஅ
வுணரேறிவந்த தேர்களிற் பூட்டியிருந்த வலியசிங்கங்கள்
வெட்டுண்டு மாண்டுகால்களைப் பரப்பி உதிரவாரியில்மி
தந்துபோய்ச் சமுத்திரத்திற்சேர்ந்தமாத்திரத்தில்அதை
க்கண்ட தேரைகள் தம்மினமென்றுவளைந்து அவற்றிற்
கிரங்கிநிற்கவுமாயின.

இவ்வித சிங்காரங்களைப் பெற்றிருக்கின்ற ரணக்களத்
தில் தாபரித்து நிற்கப்பயந்தோடுகின்றஇராட்சதப்பாதக
ர் அவ்வெல்லை முற்றினும்மாண்டு விழுந்துகிடக்கின்ற க
ளேபரமலைகள் சிரக்குன்றங்களிற் கால்களிடறியிடறிப் ப
லதரம்விழுந்தெழுந்து களைத்துப் பலர்மாளவும் அத்தல
த்தி லிறைந்து கிடக்கின்ற வாள்,வேல்,சக்கரம்,சூலம்,மு
தலியபடைகள் ஓடுகின்ற இராட்சதர் கால்களிற்றைக்கஅ
தைப்பிடுங்கி யெறிந்தும் மீளப்பாய இவ்விதமாகச்சிலர்வ
ருந்தியலையவும் நிணச்சேற்றினிடத்தகப்பட்டுக் கால்களை
ப் பெயர்க்கமாட்டாமல் உதிரம்பெருக்கெடுத்தோடவிழு
ந்துபலர் மாளவும் சமுத்திரத்தைப்போலப் பெருகும்இ
ரத்தவெள்ளத்திற்சிலவிராட்சதர் நீந்தி அப்புறப்பட்டோ
டவும் சிலர் கைகால்களோய்ந்து அழுந்திமாளவும் சிலர்
அதிலகப்பட்டு அலைந்துதிரியவும் பயப்பிராந்திகொண்டு
பிரமித்தோடுகின்ற இராட்சதவீரர்களெதிரில் வீரவாகு
தேவர் உருவெளித் தோற்றங் காணப்பட்ட மாத்திரத்தி
ல் என்னசெய்வானோவென்னும் ஏக்கத்தினால் மனம் ப
தைபதைத்துப் பலர்மாளவும் ஓடுகின்றவிராட்சதப்பாத
கரைத்தொடர்ந்துபூதவீரர்கள்அதட்டுவதற்குப்பயந்துஅ
வர்கள் பாதங்களில் விழுந்து பிராணபிச்சை தரவேண்டு
மென்றிரந்து தப்பிப்போனவர்களும் கரங்களிற் பற்றியி
ருந்த படைகளையெறிந்துபோட்டு வெறுங்கையராய்ச்சில
ர்பறக்கவும் அப்படைகள் தாக்கிச்சிலர்மாண்டும் சிலர்மா
னம்பாதிக்கக் கரத்திற்பற்றிய ஆயுதங்களைச்சுழற்றியெதி
ர்த்துப் பூதவீரர்களால் மாண்டும் சிவகணங்களுக்குப் ப
யந்து தங்களிடத்திலிருந்த அஸ்திரசஸ்திரங்களையெறிந்
து அந்தலத்தில் விழுந்துகிடக்கின்ற ரணபேரி, மத்தள
ம், உடுக்கை, முதலியவாத்தியங்களைமுழக்கிப் பல்லைதிற
ந்துகொண்டு இயமனையும் வாட்டவல்லசிலராட்சதர் வீர
மற்றிருக்கவும் யானை-குதிரைமுகங்களைப்படைத்த விரக்
கமற்ற விராட்சதர்கள் பிராணனிடத்திருக்கின்ற விச்சை
யினால் வெட்கத்தையும் சூரத்தையும்மறந்து யானைகுதி
ரைகள் மாண்டுகுவிந்து கிடக்கின்ற பிணக்குவைகளிற் ப
துங்கித் தலைகளைமாத்திரம் அவைகளுடன் ஒன்றிக்காட்
டவிருக்கவும்சிலவிராட்சதர்களிறந்தும் வயிரத்தைவிடா
மல் நரிக்கூட்டங்களினுருப் பெற்றுவந்து மாண்டுகிடக்
கின்ற சிவகணங்களின் உடல்களின் மீதுபாய்ந்து கோப
த்தினாற் கூரியபற்களைக்கொண்டு பிடுங்கியிழுக்கின்றகரு
ணத்தில் அவ்வெல்லையிற் பெருத்துலாவுகின்ற நாய்க்கூ
ட்டங்கள்கண்டு குலைத்துக்கொண்டு துடரமனநடுங்கியோ
டவும் சிலர்வடவைக்கனலையும் அவிக்கவல்ல கோபாவே
சங்களையுடைய சில பூதர்களைக் கண்டமாத்திரத்தில்தாங்
கள் கற்றிருக்கின்ற மாயப்பெருக்கினால் நாயுருக்கொண்டு
திரிகின்றகாலத்தில் அவ்விடத்தில் நிணமாம்சங்களைத் தி
ன்று களித்திருக்கின்ற நாய்க்கூட்டங்கள் கோபித்து
மேல்வர நடுநடுங்கிப் பிணக்குப்பைகளிற்பதுங்கவும்கோ
பாவேசங்களுடன் திரிகின்ற பூதவீரர்களெதிர்ந்தகாலத்
திற் சிலர் தங்களுருவைமாற்ற வகையில்லாமல் தம்மவர்
பிணக்குவைகளிற் பதுங்கியிருக்கின்றகாலையில்தசைகளை
த்தின்றுலவும் நாய்க்கூட்டங்கள் தலைமூக்கு-காதுகளைக்க
டித்திழுக்கப் பகைவருக்குப்பயந்து சந்தடி பண்ணமற்
பொறுத்துக்கொண்டு வருந்தியிருக்கவும் சிலர்காயத்தினா
ற்றேகமுற்றினும் உதிரம்பெருகவருந்தியும் தமது பிரா
ணபதமாகிய தோழரைக்காணமற் றிரிந்துதிரிந்து வெட்
டுண்டு கிடக்கின்ற அவர்கள்சிரத்தைக்கண்டமாத்திரத்தி
ல்பெண்கள்புலம்புமாறுபோலப் பாடிப்பாடிக்கிலேசிக்க
வும் கோபப்பார்வையுடன் கெக்கலிகொட்டி உலவுகின்ற
பூதரைச் சிலராட்சதர் சடுதியிலெதிர்ந்தமாத்திரத்தில் தி
டுக்கிட்டு தேகமுற்றும் வியர்க்கவிழுந்து உதைத்துக்கொ
ண்டு மாளவும் சிலராட்சதர்மாண்டு யாதனாசரீரத்தைப்

பெற்று வானத்தில்நிற்பவர்கள்தம்முடனெதிர்த்துப்போராடிய பூதரிற் சிலரிறந்து எதிரில்வருவதைக் கண்டமாத்திரத்தில் மடியிற்கையைப் போட்டுக்கொண்டு எங்களவனைக் கொல்றபழியைத்தந்துபோகக் கடவாயெனவாதாடவும் பயப்பிராந்தியினுலோடுகின்ற சிலராட்சதர் தமக்கெதிரில் வருகின்ற பறவைகளைப்பார்த்து நீங்கள்போகுமார்க்கத்திற் பூதகணாநேருவீராகில் மாண்டவரல்லதுஉயிர்பெற்றிருக்கின்றவ ரொருவரும் இப்பாதையினில்லையெனச் சொல்லித் திருப்பிவிடக்கடவீர்களெனக் கரங்களைக் கூப்பித்தொழவும் இவ்வுலகத்திற்றமது கொழுனனிறந்தகாலத்தில் மேல்விழுந்து முகத்துடன் முகத்தைச் சேர்த்துக் கிலேசிக்கின்ற மங்கையரைப் போல பூதவீரரைநெருங்கிய சிலராட்சதரைக் கட்டிப்பிடித்து மூக்கைக்கடித்த தருணத்தில் வெட்கம் மனதைவாட்டிவருத்தவும் சிலராட்சதர்கள் யோசித்து இயமனைப்போலநிற்கின்ற இந்தத் தூதனுல் நம்மவர்களனைவரும் மாண்டுபோவதற்கையமில்லை ஆதலால் நமக்குக்கெடுதிநேராமற் றப்பிப்பிழைக்க வேண்டுமென்கின்ற தீர்மானங்கொண்டு உதிரவாற்றில்விழுந்து நீந்திப்போய்க் கடலைச்சேர்ந்து அதிலிருக்கின்றபருவதங்களிற் பதுங்கியிருக்கவும் சிலபதிதர் பூதரிடத்தகப்பட்டு மாளாமற் பிராணனைத்தப்பித்துக்கொண்டு சண்டைமுடிந்தவுடன் வெளிப்பட் டிறந்தவர்கள் தேகத்திற் பெருகும் உதிரத்தை வாரிவாரி மார்பினும் புசங்களினும் பூசிக்கொண்டு தாங்களும் சுத்தவீரராய்ப் போர்செய்தவரைப்போலப் பட்டணத்தைநோக்கி மீளவு மிவ்விதங்களாக வீரவாளிகளினுல் மாண்டவர்கள்போக மற்றவலிபெற்ற விராட்சதவீரரனைவரும் பிராணபீதியினுற் பயந்தோடி வருகின்றகாலையிற் கொடியசெய்கைகளைப்பெற்றிருக்கின்ற வீரமாமயேந்திரபுரியிலிருக்கின்ற ஜனங்கள் தங்கள்தங்களுக்கும் மனவருத்தம்நேர்ந்திருப்பதாற்கடலுடைந்து பெருகுமாறுபோலத் துக்கசாகரத்தி லழுந்தி ஓவென்னு மிரைச்சலுடன் புலம்புமோசை திசைகளனைத்தினும் பரவியது, அந்தக்காலத்தில் மேற்குறித்தபடிக்குக் காலாந்தகனைப்போலச் சமர்க்களத்தி னுலவிப்போரைமுடித்து நாரியையிறக்கி வில்லையூன்றிக்கொண்டுமனவெழுச்சியுடனிருக்கின்ற வீரவாகுதேவரிடத்துக்கு இராட்சதப்பாதகரால் வருந்தியிறைந்திருந்த இலக்ஷர் படைவீரர்பூதசயின்னியங்களனைத்தும் வந்துசேர்ந்த முன்னிலையில்அக்கினிமுகன்செலுத்திய பாணத்தினுல்மார்புபிளப்புண்டு உதிரம்பெருகக்களைத்திருந்த வீரமாபுரந்தரனென்னுந் துணைவன் களைதெளிந்தெழுந்துதமையனைவந்துகூடினன்.

இவ்விதமாகத் திருநீறுவிளங்கும் நெற்றியைப் படைத்திருக்கின்ற வீரவாகுதேவரைச் சூழ்ந்திருக்கின்றகாலையிற் புசபலபராக்கிரமசாலிகளாகிய மற்ற ஏழுசகோதரர்களையுங் காணுமையால் என்னவிளைந்ததோ வென்கின்ற மனவருத்தத்தினுற் படைவீரர்மீதில் விழிகளைப்பரப்பி இதனைச் சொல்வதாயினர், ஆண்டிறம்பெற்றசூரராகியநம்பிளையவரெழுவரும் கொடியபாதகனுகிய சூரகுமாரனுடன் அகோர யுத்தங்களைச்செய்துவருமுன்னிலையில் மாளப்பெற்றனரோ அல்லது மரணமூர்ச்சையுற்றுத்தெளிவுபெருமற் றுலைதூரத்திற்கிடக்கின்றனரோ, என்னுசைத் துணைவரெவ்விடத்திருக்கின்றனர், சொல்லக்கடவீர்களெனக் கேட்டவுடன் உக்கிரனென்னும்பூதவீரன் சேவித்துச்சுவாமி தேவரீர்துணைவர்களெழுவரையும் அக்கினிமுகன் தேவாஸ்திரத்தினுற் கையறுதியாகக்கொன்றனன், இதற்குத்தென்பாரிசத்தில் நூறுயோசனையளவையில்வானத்தையளாவித் திசைகளெங்குங் கிளைகளைப்பரப்பித்தழைத்திருக்கின்ற வடவாலவிருட்சமிருக்கின்றது அதனருகில்விழுந்து கிடக்கக்கண்டனன். இதிலெவ்வளவும்பிசகிராதென்று நிச்சயமாகச் சொன்னதைக்கேட்டவுடன் மனம்நடுக்குற்று சரீரம் பதைபதைக்கக் கிலேசித்துச் சற்றும் அவ்விடத்தில்நிற்க மனமில்லாமல் அத்தலத்தைக் காட்டென்று அவனைமுன்னடத்திச் சகலருஞ்சூழ்ந்துவரப்போய் ஆலினருகிற்சேர்ந்து களேபரப்பாயலின்மீதில் விழிகளில் அக்கினிசொலிக்கத்தக்கதாக மாண்டுகிடக்கின்ற துணைவரைக்கண்டவுடன் சகோதரசம்பந்தத்தினுல் மனம்வெந்து விழிகளில் உதிரப்பிரவாகம்பெருகப் பெருங்காற்றிற்பட்ட கற்பகத்தருவைப்போல அவர்கள்மேல்விழுந்து தனித்தனியே தழுவித்தழுவித் தம்பியர்பெயரைச்சொல்லி யழைத்து வாய்விட்டலறி நடுநடுங்கித்தேகமெங்கணும்வியர்க்கப் பிராணனுண்டோவில்லையோவெனச் சங்கைகொள்ளத்தக்கதாக மூர்ச்சையாய்விழுந்தனர் அப்போது இலக்ஷர்முதலாகிய வீரர்கள் மிகவும்வருந்திச் சிலசயித்திய உபசாரங்களைச்செய்யக் களைதெளிந்தெழுந்து இவ்விதங்களிற் பன்னிப்பன்னிப் புலம்புவதாயினர்

என்னுசைக்குரிய துணைவரோ! துணைவரோ! என்றுவலித்தழைத்தும் மேல்விழுந்துதழுவி முகத்துடன்முகத்தைச்சேர்த்து முத்தமிட்டு புழுதியைத்துடைத்து நமதிறைவனைத் தரிசிக்கப்போவோம் வாருங்கோள் வாருங்கோளெனக்கூவியும்கன்றைப்பறிகொடுத்தபசுவைப்போலக்கதறியும், ஐயையோ? யெங்கொளித்தீரெனக் கரங்களைவிரித்துப் பரதவித்தும் உங்கள்திருமுகமண்டலச்சுந்தரத்தைக்காணுமல் வெம்பிவாடுவேனேவென்றும் பாதகனுகிய என்னைச் சத்துருக்கள் நகரத்திற் றனிமையிற்காட்டிவிட்டு மனந்துணிந்து போகலாமோ? இது உங்களையொத்த அன்புள்ள தம்பியருக்கழகோவென்றும் வீராதிவீரராகவிருந்த உங்கள்உதவியைக்கொண்டுபகைவனை வெற்றிகொண்டு திரும்பவிருந்தேன் இனியென்னசெய்வேனென்றும் துணைவரோ? நானுங்களுக்கடாதவனே? அன்னியனே? என்னிடத்துயாதேனுஞ் சிறிதுகுறைகண்டு நீங்கிப்போகத் துணிந்தீரோவெனச்சோர்ந்தும் ஐயமாரே! கொடியகள்வனுகிய அக்கினிமுகனே உங்களைக்கொல்லவல்லனென்று கோபித்தும் தம்பிமார்களே? இவ்விதமாக நீங்களென்னிடத் திரக்கமில்லாமல் மனத்துணிவுகொண்டிறப்பீராகில் உங்களைப்பிராணபதமாக நம்பியிருந்த யானினியென்செய்யக்கடவேனென்று களைத்தும்சகலாயுதபாணிகளாய்ச் சக்கிரரட்சகரைப்போலப் போற்றியிருந்து ஜயங்களனைத்தையும் கிடைக்கச்செய்த புசபலபராக்கிரமசாலிகளாகிய உங்களைப்பறிகொடுத்துகல்நெஞ்சைப்பெற்ற யானுயிர்பெற்று ஆசையையுடையவரைப்போலப் புலம்புகின்றனனெனமுகத்திலறைந்துகொண்டும் ஐயையோவிதியே! உனக்கென்ன தீங்குகளைச்செய்தேன் இப்படிக்குந்துணிந்து செய்வையோவெனத் தூறியும் இத்தகைய அநியாயத்தைமுடிப்பது தகாதுதகாதெனக் கிலேசித்தும் இந்தக்கோரத்தைக்கண்டவுடன் ஓ! பிராணனே? நீங்கிப்போகாமல்நீடித்திருப்பையோவெனப்

பதைபதைத்தும் நற்குணநற்செய்கைகளைப் பெற்றிரு
க்கின்ற சிறந்தவருடன் சிலர்பிறக்கவும்போதுமோவென
த்தியங்கியும் நம்மனைவரையும் அடிமைகொண்ட சரவ
ணபவன் நான்மீண்டகாலத்திற் றம்பியெங்கேயெனக்கே
ட்பராயின் என்னசொல்வேனெனவாடியும் மூலகாரண
னாகிய சிவபிரான் கடாட்சத்தினாலுதித்த துணைவரிறக்க
க்கண்டும் வீரனைப்போலத் தனுர்ப்பாணியாகத் திரிவே
னாயின் அம்மம்ம! எனக்காரிணையிருக்கின்றனர். என்பு
யவன்மையும் வீரபராக்கிரமமும் வெகுநேத்தி நேத்
தியென்று திகைத்தும் சூரன் குலநாசப்படக் கருவறுக்
கினல்லது என்கோபக்கனல் தணிவதோவெனச் சீறியும்
வில்வல்மைகளுக்கொப்பற்ற வில்வித்தைகளைப் பூர்த்தி
யாகக்கற்றிருந்த துணைவர் மாளும்படிக்குப் பாதகனாகிய
அக்கினிமுகன் எந்தப்பாணத்தைச் செலுத்தினனோவெ
னவருந்தியும் அத்தகைய சிறந்தபடையை இந்தப்பாதக
னுக்குக் கடாட்சித்தவர்கள் யாவரோ தோற்றவில்லையே
யெனக் கண்கள்சிவந்தும் கொடியரிற்கொடியராகிய பாபி
கள் வேலாயுதக்கடவுளுக்கு அடியராக வல்லமோவென
வாடியும் அவுணக்கடலை அதாஅதப்படக்கண்டித்து வா
ட்டுவேனோ! இந்தவீரமாமயேந்திரபுரியை அக்கினிதே
வனுக் கிரையாகக்கொடுத்துச் சாம்பலாக்குவதோ! பாசுப
தாஸ்திரத்தைச் சூரன்மீதுசெலுத்தி வம்சநாசஞ்செய்வ
னோவெனக் கோபித்தும் வெற்றிவேலாயுதத்துக் கஞ்சித்
தாழ்க்கலாயிற்றேயெனச் சோர்ந்தும் இத்துயரத்திற்பட்
டு முடியவில்லையேயெனப் பரதவித்தும்கொடியபாதகனா
கிய யானினிச்செய்யவேண்டியதென்னை யெனத்திகைத்
தும் மனதுக்கினியதுணைவ ரெழுவரையும் ஏககாலத்தில்
மாளக்கொடுத்தமையாற் சகலசேனைகளையும்போக்கி யிற
ந்தஎரிமுகனல்லனோ ஜயப்பிரதாபத்தைப் படைத்தவ
னெனச் சோபித்தும் அடியேன் பெற்றிருக்கின்ற பேறு
களுக்கழிவுவந்ததேயென நாணியும் வலிதிற்பிராணனைப்
போக்காமல் தம்பியரிடத்திற் றயையுள்ளவனைப்போலப்
புலம்புகின்றேன், கடினசித்தம்பெற்ற தமையனெனத்து
க்கித்தும் கரத்திற் பற்றியிருக்கின்ற தனுசைப்பார்த்துப்
பற்களைக் கறகறெனக்கடித்தும் அபாயகாலங்களில்வந்து
தவவல்ல வெற்றிவேலாயுதத்தை யெதிர்பார்த்துவிழிகளி
ல் நீரைப்பெருக்கியும் பாசுபதமுதலிய படைகளின்மீது
கியாபகங்கொண்டு விழிகளில் அனற்பொறிசிதறப்பார்த்
தும் உடைவாளாயுதத்தின்மீது கரத்தைவைத்துச்சீறியு
ம் வீரத்தன்மையினாற் றான்பேசியசபதங்களையெண்ணி
யெண்ணிவாடியும் தனக்குநேர்ந்த தீராதபழிக்கு நாணி
யும் தீப்பொறிகள்சிதறப்பற்களைக்கடித்து உதட்டையது
க்கியும் இவ்விதமாக யாதொரு துணையுமற்ற வெளியரை
ப்போலத் துக்கசாகரத்தி லழுந்தியிதற்கடுத்த செய்கை
களை முடிப்பதற்கு ஒருதுணிவும் தோற்றாமற் சூறைக்
காற்றிற்பட்ட சருகையொப்பமனம்நிலைபெறாமற்றத்தளி
த்து தாமரையிலையிற்பட்ட நீரைநிகராய்க் கவலைகொண்
டு திகைத்திருந்த வீரவாகுதேவருக்குக் கடையிற்றுணை
வரை யெழுப்புவதாகத் தோற்றியவுடன் நல்லகாரியம்அ
க்கினிமுகன் பிரமன் விஷ்ணு மற்றதேவப்படைகளினால்
என் துணைவரைவாட்டி யிருக்கவேண்டும் இதற்குச் சந்
தேகமிராது அக்காலத்தில் அரியபிராணனை யமன்கொ
ண்டுபோயிருப்பனெனக் கொதித்துத் தேகத்தை வளர்க்
கும்பொருட்டு அவிகளையுண்ண விரும்பியுழலும் தேவர்
களைப்போலவும் அவுணரைநிகர்த்தும் மற்றபூமண்டலத்
தினர் பாதலவாசிகளுக்கொப்பாகவும் சுலபமாகநினைத்து
இயமனானவன் என்னையொத்தவன் சகோதரர்பிராணனை
க் கொண்டுபோகத் துணியவல்லனோ, பகைவனாகிய சூர
ன்பெற்றிருக்கின்ற வரமுயற்சிகளுக்கஞ்சிய போதினும்க
ளைக்கச்செய்துபோவதல்லது எத்தகையதேவர்படைகளு
ம் நெருங்கவஞ்சும் பெருமையைப்படைத்திருக்கின்ற ந
ம்மவரை எரிமுகன் கொன்றானென்று பேர்வைத்துஜன்
மவயிரியைப்போலக் காத்திருந்து மாய்த்தவன் மறலிய
ல்லது வேறுமுண்டோ.

ஞானநாயகனாய்ச் சிவபிரான் நுதல்விழிகளிற் சோதி
மயமாகத்தோற்றிப் பிரணவவாக்கியத்தி னுண்மைகளை
சொல்லவறியாத பிரமனைக் காவற்படுத்திச் சராசரப்பிர
பஞ்சங்களைப்படைத்து நிலைபெறச்செய்த தேவதேவோ
த்தமனாகிய குமாரதேவர் துணைவனென்பதைக் கூற்றுவ
னறியானோ அறுகாலங்களினும் திவ்வியமலர்களினாலரு
ச்சித்துப் பஞ்சாட்சரத்தை யிடைவிடாமலோதி ஆகம
விதிப்படிக்குச் சிவபூசனையை முடித்துவரும் மார்க்கண்
டேயர்மேற் கோபித்துப்போன காலத்திற் பத்தன்முறை
களைத் திருச்செவிகளினேற்றுப் பரமன்வெளிவந்து த
ன்னைநிலத்துடன் கவ்விக்கொண்டு மாளத்தக்கதாகத் தி
ருவடிகளைக்கொண்டுதைத்த குறிசற்றும் மறைந்ததில்லை
அதனைக்காலன்சுத்தமாய் மறந்துபோயினனோ பத்திவயி
ராக்கியம் ஒழுக்கங்களிற்சிறந்த விபுலனென்னும் பிராம
ணோத்தமன் சுகந்தபரிமளத்தைவீசித் தேனையிறைத்தி
ருந்த திவ்வியமலரொன்றுகிடைத்தமையால் அதனைச்சி
வபிரான் திருவடிகளில் அருச்சிக்கவிருப்புற்று வருந்தி
வானவழிக்கொண்டு திருக்கயிலாயத்துக்குப் போகுமுன்
னிலையில் சற்றும்யோசியாமல் அவன்பிராணனுக்குக்கே
டுநினைந்த தன்மந்திரியாகிய காலதூதனிடத்தி லதிகோ
பங்கொண்டு பரமனெழுந்தருளி கூறியசூலத்தினால் அ
வன்மார்பிற்குத்தித் தூக்கிச்சுழற்றப் பலகாலம் வாதை
ப்பட்டிருந்ததைத் தான்கண்டதில்லையோ, ஆலகாலவிஷ
த்தைப்பார்க்கினுங் கொடியசெய்கையையுடைய பிங்கல
னென்னும் வேடுவன் பிராரத்துவநல்வினைத்தொடர்பினா
ல் தான்திரிகின்றவனத்தி லொருபுலி துரத்திவந்தகாலை
யில் வில்வமரத்திலேறியிருந்து நித்திரைநேராமற்பொரு
ட்டு ஒருதினமுற்றும் ஊணுறக்கமற்று அத்தளிர்களைப்
பறித்துப்பறித்து அவ்விருட்சத்தினடியி னெழுந்தருளி
யபரமசிவக்கோலமாகிய சிவலிங்கத்தின்மீது விழத்தக்க
தாகப் போட்டுவந்த புண்ணியசீலனைத் தன்தூதர்கள் க
டிந்துபேசிப்பிடித்துக் கதைகளினால் மிகவுமோதி வருத்
தும்போது சிவபிரான் காக்கக்கடவனெனப் போற்றியத
ற்கிரங்கிக் காட்சிதந்து பயப்படவேண்டாமெனக் கைய
மர்த்திச்சிறிப் பார்த்தவுடன் கிடுகிடாய்த்து அத்தூதர்ப
றந்தோடிய காரணத்தைமறந்தானோ பூருவத்தில் இப்பூ
மண்டலத்தையாண்டு நன்னெறிகளிற்பிசகி நடந்துவந்த
பிங்கலனென்னும் அரசன் முடிவுகாலத்திற் சிவநாமங்க
ளைப்படைத்திருக்கின்ற பிள்ளைகள்பெயரைச் சொல்லிச்
சொல்லி யிவர்களைக் காக்கக்கடவையெனப் பலதரம்வே
ண்டிப் பிராணனையிழந்தகாலையில் யமபடாள்பற்றிவலிக்
க மிகவுங்கோபித்து இந்தகாலைக்கொண்டுதைத்து விடுவி
த்தது யானல்லனோ இதையும் சண்டன்மறந்தானோ இ
வையன்றியும் உலகங்கள் புகழத்தக்க காரியங்களை முடி

யாமல் கெடுமதியினால்அதிககடூரியாய்காரியகாரணங்களை மதித்துப்பாராமல் தவசிரேஷ்டனான குச்சகனைவருத்திய கொடுமையினாலும் மற்றும் சிலபுண்ணியசீலரை யவமதித்துக் கிலேசிக்கச்செய்த தன்மையினாலும் முன்னொருகாலம் சிவபிரான் கோபத்துக்காளாய்இந்தஜபங்களனைத்தினும் தன்னாணையைச்செலுத்திவரும் முதன்மையைப்போக்கிப் பலகாலம்வருந்திப்பயப்பிராந்திகொண்டிதான்பட்டபாடுகள் தருமனுக்குக் கியாபகமில்லையோ.

இதுவுமல்லாமல் பவத்திரமாக்கவல்ல திருநீற்றை நுதலிற்றரித்த புண்ணியவான்களையும் உருத்திராட்சத்தாழ்வடங்களைப் பூண்டிருக்கும் பத்தர்களையும் நிர்மலக்கடவுளாகிய சிவபிரான் பெயரைவிளக்கும் பஞ்சாட்சரத்தையும் சகஸ்திரதிருநாமங்களையும் பத்திவயிராக்கியத்துடன் ஓதவல்ல ஞானவான்களையும் அந்நாமங்களைத் தரித்திருக்கின்ற அன்பர்களையும் நெருங்குவதற்குக் குலைகுலைந்து நடுங்கியோடும் நமனானவன் சண்முகப்பெருமானுக்கு அந்தரங்கபத்தர்களாக விருக்கின்றவர்கள்பிராணனைவாட்டிக்கொண்டுபோகத்துணிந்தான், மும்மதங்களைப்பொழிகின்ற யானையானது சேற்றினிடத்தழுந்துமாயின் சிறுபட்சிகளும் அதனைவதைக்கவல்ல தன்றோவென்று இவ்விதங்களாகக் கோபித்த வீரவாகுதேவரெழுந்து தமது முதுகினிடத்திருக்கியிருந்த அம்புராத்தூயில் நின்றும் ஒருதிவ்விய பாணத்தைப்பிடுங்கி அதனலகின்மீதிற் றமதுநகத்தினால் இயமதருமராஜனுக்கு இவ்விதமாகத் திருமுகமெழுதுவதாயினர், வெற்றிவேலாயுதமூர்த்திக் கிளவலாகிய வீரவாகு வைவச்சுதபட்டணத்துக்கதிபனான செங்கோற்கடவுளுக் கிதனாலறிவிப்ப தென்னையெனில் மகாவீரதீரசூரசிகாமணிகளாகிய நமதுதுணைவரெழுவர்பிராணனையுங் கிரகித்துக்கொண்டுபோயினப்இதுஉன்னையொத்தவனுக்குத் தகுதியோ, ஆகலின்இந்தநிருபத்தைக்கண்டவுடன் அவர்கள் ஜீவான்மாவைத் துரிதமாக இவ்விடம்சேர்க்கக்கடவையெனமுடித்து கையொப்பமுமிட்டுத் தன்வில்லிற்பூட்டிக் குமாரதேவனைவாழ்த்தி யமபுரத்துக்குப்போய் அதிசீக்கிரமாயோடிவரும்படிக்குக் கட்டளையிட்டுப் பிரயோகித்தகாலத்தில் மனோவேகத்தினும் மேலிட்டுப்பறந்து சத்தசாகரங்களைக்கடந்துமானசோத்தரகிரிக்குத் தென்பாரிசத்திலிருக்கும்வைவசுதபட்டணத்தைச்சேர்ந்து நவரத்தினமயமாகிய சபாமண்டபத்தில் வயிரங்களினாற் சோதித்துவிளங்கும் சிங்காதனத்தினிடத்தமர்ந்து பலதிசைகளினு மிருந்துவந்து விண்ணப்பஞ்செய்கின்ற கிங்கரர் வாக்கியங்களைக்கேட்டுச் சித்திரகுத்தர் எதிரிலிருந்து கணக்குகளைப்பார்த்துச் சொல்லும் நியதிகளுக்குத்தக்க கட்டளைகளையிட்டுக்கொண்டிருக்கும் தருமனெதிரில் குறுகுறுத்தொனிகளுடன்போய்நின்றதைக் கண்டவுடன் அற்புதமடைந்தவனாய்த் துரிதப்பட்டுக் கரங்களினேந்தி வீரவாகுதேவர் முத்திரையைப்பார்த்துப் பத்திவிநயத்துடன் அதனிடத்திலெழுதி யிருந்தகாரியத்தை வாசித்தவுடன் மனம்நடுக்குற்றுச் சரீரம்வியர்க்கப்பயந்து சித்திரகுத்தனைக்கூவி விசாரணைசெய்துகொண்டு வீரவாகுதேவர்துணைவ ரிவ்விடம்வாராமையால் எங்ஙன மிருக்கின்றனரோவென்று போத வுணர்வினாலாராய்ந்து திருக்கயிலாயத்தி லிருப்பதாகத் தெரிந்தவுடன் சிங்காதனத்தைநீங்கிவெளிவந்துமகிஷவாகனத்திலேறிச் சூறைமாருதத்தைப்போலத்தூதர் தொடர்ந்துவரத்தக்கதாக மனோவேகத் தினுங்கடுகிச்சென்று வெள்ளியங்கிரியைச்சேர்ந்து பரிசோதித்துக் குளிர்ந்த நிழலைப்பரப்பிப் பரிமளித்திருக்கும் பூங்காவுகளினொன்றில் இராட்சதவீரரால்மாண்ட பூதத்தலைவர்கள் போற்றிச்சூழ்ந்திருக்கவும் விஞ்சையர் யாழ்களைமீட்டித் தேவகாந்தாரங்களைப் பாடிவருவதைச் சிரவணானந்தமாகக்கேட்டுக்கொண்டு களித்திருக்கின்ற எழுவரையுங் கண்டவுடன் மனமகிழ்ந்தவனாய்ச் சமீபத்திற்போய்ச் சேவித்து ஐயமாரே உமதொப்பற்ற தமையன்வாடிவருந்தித் துக்கசாகரத்திற்பட்டு உங்களைத்தேடியலைவதாக நீங்களிந்தவைபவங்களை யனுபவித்திருப்பதுதகுதியோ.

மேலும்என்பிராணனுக்குவந்திருக்கின்றது ஆகலாற் றுரிதமாய்பூதவீரருடன்தமையனிடத்துக்குவரவேண்டுமெனப்போற்றநல்லகாரியமென் றெழுமித்துச்சேனைத்தலைவருடன்அத்தலத்தைநீங்கி வீரமாமயேந்திரபுரத்துக்கருகிலிருக்கும்சமர்க்களத்தெல்லையைச்சேர்ந்துதங்கள்சரீரங்களிற் பொருந்தி நித்திரைதெளிந்தவர்களைப்போலவெழுந்தனர் இந்தச்சுபகரத்தைக்கண்டதேவர்கள்களித்துப் பஞ்சகற்பகமலர்களை வாரிவாரிச்சொரிந்துவாழ்த்திஜயங்களைக்கொண்டாடினர் தட்சணம்தம்பியரெழுவருமோடி தமையன்திருவடிகளிற்சேவித்தகாலத்தில் நீடூழிகாலம்தன்புகழை இவ்வுலகங்களில்நாட்டிய வீரவாகுதேவருக்கடுத்திருந்தசோபதாபங்களொழிந்து மனவெழுச்சிபெற்றுஆனந்தவாரியில்மூழ்கினவராய்ஆசானுபாகுவாகவிருக்கின்றஇருகரங்களினாலும்வாரியெடுத்துவிசாலமாகவிளங்கும் மார்பிலணைத்திறுகத்தழுவிமுகத்துடன்முகத்தைச்சேர்த்துமுத்தமிட்டுஉச்சியைமோந்துமுதுகைத்தடவிக்கொடுத்து இராகுவினால் மறைபட்டுவெளிவந்த பூரணச் சந்திரோதயத்தைப் போல முகமண்டலம் பிரகாசித்துக் காட்ட இனிமேல் திவ்வியபாணங்களினால்அவுணரை அதம்பண்ணுவதெனக்கொருபொருளோவென்றுவீரங்களைப் பேசிவருமுன்னிலையில்வீரமாபுரந்தரன்இலட்சர் படைத்தலைவர் பூதசயின்னியங்கள்களித்து மேகவரவைக்கண்ட மயிலினங்களைப்போல முகாரவிந்தங்கள் விளங்க மனக்கவலையைப்போக்கி அதிகமகிழ்ச்சி கொண்டிருந்தனர் கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? வீரவாகுதேவர் முதலானவர்கள் அக்காலத்திற் பெற்றசந்தோஷப்பெருக்கினை என்போலிகளாற் சொல்லிமுடிவதோ இப்படிக்குச் சகலரும் உல்லாசமாக விருக்கின்ற தருணத்தில் இதுநல்ல சமயமென்றெண்ணி யியமதருமராசன்இளையபெருமானுக்குச் சமீபத்தில் நெருங்கிச்சேவித்து மின்னலையொப்பவிளங்கும் அலகையுடைய வேலைத்தாங்கியவீராதிவீரனே அடியேன்மேற் கோபங்கொள்ள வேண்டாம் உமதுதுணைவர்கள் இந்தப்படைத்தலைவர்களுடன் திருக்கயிலைச் சாரலிற்சேர்ந்திருந்தனர். அதிகமனவாட்டந் தேவரீருக்கு நேர்ந்தபடியால்இக்காரணங்களைத்தீர்க்கமாயோசித்தவரல்ல சிவபிரான் கட்டளையின் படிக்கு நாயினேன் முடித்துவரும் செய்கைகளைச் சொல்லக்கேட்டருள்க.

எத்தகையராயினும் தமதுதிருமேனியிற் பரிசுத்தமாகிய விபூதியைப்பூசி உருத்திராட்சத் தாழ்வடங்களைத் தரித்துக் காஷாயத்தை உடுத்திருப்பராயில் அவர்களிடத்தில் நெருங்கவும்நினையேன் கடவுளராகக் கொண்டு பயபத்தியுடன்வழிபட்டுப்போவேன் அப்படிக்கிருக்கஉப்பற்ற

தேவரீர் தம்பியர் பிராணனையுங் கிரகித்துப்போகத்துணிவேனேபசியிருக்தகாலத்தில் அனலைவிழுங்கினைப்பவருமுண்டோ என்னிடத்தி லிக்குற்றத்தைச் சுமத்திக் கோபித்தேவிய பாணத்திற்குறித்த கட்டளையைக் கண்டவுடன் திகிற்பட்டு வெள்ளியங்கிரிக்கோடி பூதவீரர்சூழக் களித்திருந்த உமதுதுணைவனைக்கொண்டுவந்து சேர்த்தேன் ஐயனே அடியேனிடத்தில் யாதொருபழியுமில்லாமையாற்கோபத்தை க்ஷமித்தருள்கவென்று வேண்டுகின்ற நடுவனைப்பயப்படவேண்டாமெனத் தேற்றித் தம்பியர் எமதையன் பதத்திற் சேர்ந்திருப்பது தெரியாதலால் அவர்களிடத்திருந்த பரிவினால் பிரிவென்னும் அனல் மனதைக்கொளுத்திவாட்ட மயங்கி உனக்கிச்சேதியைத்தெரிவித்தோம் இதைக்குறித்து வருந்தவேண்டாம், மேலும் இத்தருணத்திற் செய்யாமற்செய்த உதவியை முடித்தீர், இதற்குக் கைமாறுண்டோவெனப் பலவுபசாரவார்த்தைகளாடிச் செலவுகொடுக்கஅந்தகன்வீரனைப்புகழ்ந்து தன் பரிவாரங்கள் சூழ்ந்துபோற்றத் தென்தேசத்தைச் சேர்ந்து சிவனடியரிடத்து நெருங்காமல் தன்தூதர்களுக்குப்புதிய கட்டளைகளைச் செய்து பழையபடிக்குத் தன்தொழிலை முடித்திருந்தனன், பகைவர்வரவுக் கெதிர்பார்த்திருக்கும் வீராதிவீரராகிய படைத்தலைவர்-பூதவீரர்-துணைவர்-பெரும்புறக்கடலைப்போலக் களித்துச் சூழ்ந்துபோற்ற ஒப்பற்ற பராக்கிரம சாலியாகிய வீரவாகுதேவர் மதயானையைப்போல அவர்கள்மத்தியில் ரணபூமியில் தனுர்ப்பாணியாக விளங்கினர், இச்சம்பவங்களனைத்தையும்பார்த்திருந்த தூதர்கள் அலறிப்புலம்பிவிழுந்து கெட்டோடிச் சபாமண்டபத்திற் சகலரும் புடைசூழச் சிங்காதனத்தில்வீற்றிருந்து அரசுசெலுத்திவரும் இராஜாதிராஜனைக்கண்டவுடன் விழிகளில் நீரைப்பெருக்கிவிழுந்து சேவித்துப் புலம்பிச் சுவாமி, தேவரீர் திருக்குமாரன்அக்கினிமுகன் அகோரயுத்தங்களைச் செய்து சதுரங்கசேனைகளையும் பறிகொடுத்துக் கடையிற்றூதன்செலுத்திய வீரபத்திராஸ்திரத்தினால் மடிந்தனன். இந்தக்கொடிய சம்பவத்தை விழிகளாரக்கண்டு வந்தனமெனப் பேசிய வாசகஞ் செவிகளிற் புகுவதன்முன்னம் புத்திரசோபம் மேலிட்டுப் பெருங்காற்றின் மோதலினாற் சாயும்பனையைப் போலச் சிங்காதனத்திலிருந்து சோர்ந்து குப்புறவிழுந்து களைத்து எக்காலங்களினும் பெறாத துக்கசாகரத்திலழுந்திப் புத்திரனை நினைந்துநினைந்து பிரலாபித்துப்புலம்பத்தொடங்கினன்.

என்சரீரத்துக்காதாரசத்தியாகவிருக்கின்றஉயிரே! சுற்றமே!கண்ணே!சிரோரத்தினமே!செல்லவமே!ஓ!அக்கினிமுகனே?என்னைப்புத்திரசோபத்திற்படுத்தியிவ்வாழ்வை வெறுத்து தெய்வபோகங்களையனுபவிக்க விரும்பிப்பொன்னாட்டைச் சேர்ந்தனையோ? ஒருதரம்உன்னழகிய திருமுகமண்டலத்தைக்காட்டிப் பவளத்தையொத்த வாயைத்திறந்து தேறுதலைசொல்லி எனக்குதவியாக வரமாட்டாயோ? புத்திரசிகாமணியே!யினி உயிர்வாழ்க்கையையொருபோதும் விரும்பேன். இதோஉன்னுடன் வருகின்றேன் வருகின்றேன் ஐயனே! பாதகனாகிய தூதன்முன்னமிவ்விடம் வந்தபோது உன்தம்பியாகிய வச்சிரவாகுவை வதைத்துக்கொன்ற சேதியைக் கேட்டவுடன் தீயிற்பட்ட புழுகைப்போல மனம்பதைபதைத்துவாடி வருந்தினை அத்துயரத்தை யின்றுடன் போக்கினையோ? வானநாட்டிற் சேர்ந்தவுடன் உன்னாசைத்தம்பியைக்கண்டுகளித்துக்கலகுவியிருக்கின்றனையோ குமாரனே? நம்மவனைக்கண்டமாத்திரத்திற் கிடுகிடாய்த்துப் பயந்தோடும் பதிதராகியதேவப்பயல்களனைவரும் நீபட்டபாட்டைக்கண்டுகளித்து மனவெழுச்சி பெற்றிருக்கவும் எக்காலத்தினும் மாறாததுக்கசாகரத்திற்பட்டுஎன்னைவாடவிட்டுப்போவதுஉன்னையொத்த வீராதிவீரனாகியபிள்ளைக்கடுக்குமோ! அல்லதழகோமகனே! நீ அபலனாய் ஈனத்தொழிலைச் செய்துழலும்தூதன்கையில் மாளக்கடவையென்று சிவபிரான் சபித்தனரோ! மகாவிஷ்ணு கொடுமைபேசினரோ? அல்லதுபிரமனேஉன்தலையிலெழுதினனோ?எனக்கொன்றுந்தோற்றவில்லை. ஓ! புத்திரரத்தினமே? நிணப்பசுமையறாமற் சொலித்திருக்கும் வெற்றிவேலாயுதத்துக் கென்னைக்காட்டிக் கொடுத்து அக்கொடுமையைப்பார்க்க மனமில்லாமற் றாதனால்மாண்டு முந்திப்போய்விடுவது நீதியோ பகைவனால் நீகளத்திற்பட்டனையென்னும் சேதிகேட்டவுடன் நீங்காமலிருக்கின்றஎன்பிராணன் இன்னமென்னதுக்கத்தையனுபவிக்க மாட்டாது, என்னாசையே! பஞ்சபூதமே! செல்வமே! உன்னை அரியதவங்களைச் செய்துபெற்றதமியேன் ஓவென்றலறவிட்டு இறந்ததைக்கண்டும்மகப்பேற்றைவிரும்பிச்சிலர் தவவிரதங்களைச் செய்யவுந் துணிவரோ! ஓ, குழந்தாய்! உன்னைமுற்றினும் நம்பியிருந்த என்னைப்பிரிந்துபோகின்றவன் எனக்கடுத்த புத்திமதிகளைச் சொல்லி நீங்கவொண்ணாதோ! குமாரனே? மிகவும்வருந்துகின்றேன், ஒருபோது பருவதாகிருதியாகவிளங்கும் உன்மார்பைத்தழுவி யென்களைதீரத்தக்க தாகவந்துபோகமாட்டாயோ! மனமில்லையோ? மதிமயங்கினையோ! என்செல்வமே! கண்ணினொளியே! என்னன்பே! பிரகாசம்பொருந்திய வேலைத்தரித்தகரதலங்களைப்பெற்றகாளையே? என்னரசே! என்னைப்பெற்றவனே? ஐயனே! உன்னிடத்தன்புள்ள பிதாவைமறந்தனை, மறந்தனை, என்வாழ்வயிற்றிற் றீயைக்கொட்டினை யென் றிவ்விதங்களாகப் பன்னிப்பன்னி புத்திரசோபத்திற்பட்டுப் புலம்புகின்ற தருணத்திற் சபையிலிருந்த பந்துவர்க்கங்கள் மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர் முதலானவர்கள் தத்தமக்கடுத்த சம்பவங்களைப்போல முகத்தினும் வாயினும்வயிற்றினும் அறைந்துகொண்டு விழிகளில் நீரைப்பெருக்கிக்கடலுடைந்ததைநிகர்த்துக் கதறினவிதங்களைச் சொல்லிமுடிவதோ,இப்பிரகாரம் அல்லோலகல்லோலப்படுகின்ற காலையில் அக்கினிமுகனைப்பெற்ற தாயாகிய பதுமகோமளை தன்குமாரனுக்கடுத்த சம்பவத்தைத் தெரிந்தவுடன் வயிற்றிலறைந்து துகில்சோரத் தீயிற்பட்ட அம்சத்தைப்போலச்சோர்ந்து நிலத்தில்விழுந்து மூர்ச்சித்தவளாய் அக்காலத்திற்சூழ்ந்திருந்த தோழியர்சிலதியர் பாங்கியர் அழுதுகொண்டு சயித்தியவுபசாரங்களைச் செய்யத் தேறியெழுந்துகூந்தல் விழுந்து புரளப் பரதவிக்கும்போது புரமாதரனைவரும் சேர்ந்து இழவுகொண்டாடினர். அக்காலையில் அந்நகரமெங்கணுஞ் சமுத்திர கோஷத்தினுமேலிடத்தக்கதாகப்புலம்புகின்ற சத்தமானது அஷ்டதிசையினும்பரந்து வானவெல்லையினுமொலித்தது.

## மூவாயிரர்வதைப்படலம்.

ஆயதோர்காலைமூவாயிரத்தொகை
மேயினமைந்தர்கள்வினவியீதெலாம்
மாயிருவிசும்பினையளாவுமன்னவன்
கோயிலையடைந்தனர்குழுவொடேகினர்.

---

வாரீர் சவுனகாதிரிஷிகளே? மேற்குறித்தபடிக்கு சூர
ன்முதலானவர்கள் வருந்துகின்றசேதியை மூவாயிரம்பி
ள்ளைகள் கேள்விப்பட்டவுடன் மானமுங் கோபமும் ம
னதைவாட்டக்கடுகிக் கோடிசூரியப்பிரகாசமாகச் சிரோ
ரத்தின காந்தியைவீசி வானத்தையளாவப் பரந்திருக்
கும் பிதாவினரண்மனையைச்சேர்ந்துதனக்கடுத்தபழியெ
ன்னும் சூருவளிக்காற்றுனது வளைந்துவளைந்துமோதப்
புத்திரசோபமாகிய துக்கசாகரஅலைபெருத்து மனமெ
ன்னுங்கரையைவாட்ட வீரத்தன்மையைப்போக்கிச்சோ
பித்துக் களைத்திரங்கிவாடி முகப்பொலிவற்று விழிகளி
ல் நீரைப்பெருக்கிக்கதறுகின்ற பிதாவைக்கண்டு வணங்
கி ஐயனே, குழந்தைவேலன் தூதனும் அவனுக்கிளைய
எண்மர் இலக்கர் படைவீரர் பூதப்பெருக்கும் ஏகமாய்
நெருங்கிப் போரைச்செய்யவிருக்கின்ற சமர்க்களத்திலெ
ரிமுகனைத் தனித்தனுப்பி இப்படிக்குவருந்துவதென்னை
அவன் அவ்வீரருடன் போராடவல்லனோ, சகலகலைகளை
யும் பூர்த்தியாகத்தெளிந்திருக்கின்ற சக்கிரேஸ்வரனே,
கேட்டருள்க. ஒருவன் சேனைப்பெருக்கையும் வலிபெற்
றதுணைவரையும் புத்திரரையும் அகண்டசாம்பிராச்சிய
செல்வங்களையும் புசபலபராக்கிரம சம்பத்தையும் பெ
ற்றிருப்பானுயினும் காலதேசவர்த்தமானங்களை ஆராய்
ந்து தகுதியாகிய முயற்சிகளைச்செய்துகொண்டு ஒருகாரி
யத்தைமுடிக்க யத்தனப்படாமற் போவானுயில்அபலனு
கிய ஒருவனல் பங்கப்பட்டு வலிகுறைந்து பழிக்காளாய்
வாடவருமென்று உலகினர்வழங்கிக்கொள்வார் மேலும்நீ
திநூலின் பிரகரணமுமதுவேயாகும் ஆதலால்இவற்றை
த்தீர்க்கமாயோசியாமற்போனீர். ஜயசாலிகளாகிய சத்து
ருக்கள் பெருக்கைமதித்துப்பாராமல் ஒருகுமாரனைத் த
னிமையிற்றூண்டி னீர்மேல்வரும் நன்குதீங்குகளைக் கவ
னியாமற்போனீர்மேலும் அவன் தேவரீர் கட்டளையின்
படிக்குப்போய்த் தன்னுற்கூடியவரையிற் போராடியிற
ந்து வீரசொர்க்கத்தைச்சேர்ந்தால் அதையொரு பொரு
ளாகவெண்ணிச் சூரனுகவிருக்கின்ற தாம்தெரியாதவர்க
ளைப்போலப் புத்திரசோபத்திலழுந்தி வாடுவதழகோ,
உம்மையொத்த தீரனுக்கடுக்குமோ, ஓ! இராஜபரமேஸ்
வரனே? அக்கினிமுகனெருவன்களத்திற்பட்டதைக்குறி
த்துதயிரியத்தையிழந்து கிலேசிக்கவேண்டாம் இதனைக
மக்கழிந்தோடிய தேவர்கள் தெரிவராயில் ஏளிதமாகும்
ஒருகுமாரன்போனதினு லொன்றும்முழுகிப் போகவில்
லை பற்பலவெற்றிகளைப்பெற்றிருக்கின்ற மூவாயிரவர் சு
கசீவிகளாக விருக்கின்றபோது உமக்கென்னகுறைநேர்ந்
துவிட்டது இதுவுமல்லாமல் எங்கள்துணைவனுன இர
ணியன் தவங்களைச்செய்துகொண்டு பதுங்கித் தருணம்
பார்த்திருக்கவும் சூரியனைத்தளைசெய்த வீராதிவீரனுகி
ய தமையன் க்ஷேமமாயிருக்கவும் ஒப்பற்ற பராக்கிரம
சாலியாகிய சிறியதந்தை சிங்கமுகாசுரன் வலியனுயிருக்
கவும் திண்ணியராகிய படைத்தலைவரிருக்கவும் சவுரியப
ரராகிய கணக்கிறந்தவெள்ளம் இராட்சத சேனைகளிருக்
கவும், இவையன்றித் தமதுகாவலிற்பட்ட மற்றையவண்
டங்களில் வீரசூரராகிய சதுரங்கசேனைகள் வீறியிருக்
கவும் உமக்கென்ன குறைபாடாயிற்று பகைவர்கள்வலிய
ராய்ச் சிலபிள்ளைகளையும் சயின்னியங்களையும் வாட்டிக்
கொன்றனரென்கின்ற தளர்ச்சியைக்கொண்டு வருந்தவே
ண்டுவதில்லை.

மேலும் சத்தசாகரங்களும் ஒருகாலம்வற்றிப்போமா
யினும் உமதுகட்டளையி னடங்கியிருக்கின்ற சதுரங்க
சேனைவெள்ளங்களுக்கழிவுண்டாவதோ, இதைக்குறித்து
ச் சந்தேகிக்கவும் வேண்டுமோ, இஃதன்றியும்தமதுபெ
ருமைகள் தமக்கேதோற்றுமல் மயங்குகின்றீர் ஊழிகா
லத்திலும் அழிவில்லாத வச்சிரதேகத்தைப்படைத்துத்
தீர்க்காயசைப்பெற்று ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் ச
க்கிரேஸ்வரனுய் அகண்டசாம்பிராச்சிய செல்வவளங்க
ளையனுபவித்திருக்கின்ற தேவரீ ரிப்படிக்குக் கவலைகொ
ண்டு வாடுவது உமதுபுயவன்மைக்கும் பெருமிதங்களுக்
குமடுப்பதோ, இதுவரையிற் பகைவர் தங்களாற்கூடிய
வரையிற் போராடிக்கொன்ற நால்வகைச்சேனைகளைப்பா
ர்க்குமிடத்திற் பாதலவரையினுழ்ந்து அண்டமுகட்டை
க்கிட்டிப் பூமிக்கச்சாணியாக விருக்கின்ற மகம்மேருவி
லொருதினைத்துணைகழிந்ததெனமதிக்கவேண்டும் மேலு
ம் ஆயிரத்தெட்டண்டங்களைவென்று சகலரும் வணங்கி
ப்போற்ற அரசுசெலுத்திவரும் தலைமையையும் வீரத்
தையும் புயவன்மையையும் சுலபகாரியத்தைப் பெரிதா
கவெண்ணி யிதுவரையிற்றேடிய ஜயங்களுடனமர்ந்து ர
ணக்களத்திற் பட்டவர்களை நினைந்து நினைந்து புறந்தந்
தோடியொளிக்குந் தேவப்பயல்களைப்போலக் கிலேசித்
துவாடுவதழகோ, தேவரீர் திருவுளத்திற் சற்றுக்கோப
ம்பிரவேசித்துக் கட்டளையிடுவீராகிற்றேவராஜனையும்வி
ஷ்ணு பிரமனையும் இயமனையும் அக்கினி வாயுமுதலாகி
ய சகலரையும் கணப்போதில் வலிதிற்பற்றிக்கட்டிக்கொ
ண்டுவந்து சன்னிதானத்தில்விடவல்லோம் இவையன்றி
யிற் பொன்னுலகையலைத் ததப்படுத்தவேண்டினும் மே
ருவைத்துகளாக்க நினைப்பினும் பூமண்டலத்தையெடுத்
துச் சமுத்திரத்திற் கரைக்கவிரும்பினும் சராசரப்பிரப
ஞ்சங்களைத் தகிக்கவல்ல வடவனலையவிக்கத்திருவுளத்தி
ற்கொள்ளுவீராயினும் தேவரீர்கருத்தின்படிக்குநிமைப்
போதில் முடிக்கக்காத்திருக்கின்றேம் இனிபன்னிப்பன்
னிச் சொல்லவேண்டுவதில்லை அடியோங்கள் மேற்கிரு
பையுற்றுச் செலவுகொடுப்பீராகில் சதுரங்கசேனைகளை
யுங் கூட்டிக்கொண்டுபோய் நிமைப்போதிற் பூதவெள்ள
த்தையும் எண்மர் இலக்கரையும் இவர்களுக்குத் தலை
மைபெற்றிருக்கின்றதூதனையும் பெருங்காற்றிற்பட்ட பூ
ளைப்புஷ்பத்தைப்போலச் சின்னபின்னப்படக் கண்டித்
து அவர்களைப் படைத்துணையாகக்கொண்டு மேலிட்டு
வந்த கந்தனையுங் கைப்பிடியாகப் பற்றிவந்து பிதாவின்
சன்னிதானத்தில் விடவல்லோமென்று இவ்வித தயிரிய
ங்களை வெகுவாகச் சொல்லிவரும் வாசகங்கள் களைபட்
டிருக்கின்ற ஒருவனுக்குத் தேவாமிர்தம் தேக்கிடவுண்
ணக்கிடைத்ததைப்போலச் செவிகளில் நுழைந்தவுடன்
மனதைவருத்தி யிருந்தகிலேசமொழிந்து முகமலர்ச்சி
பெறமகிழ்ந்து குமாரர்களேநீங்கள்குறித்தபடிக்குப்பகை

வனையதம்பண்ணி என்மனக்கருத்தின்வண்ண முடிக்கவேண்டுமெனச் சூரபதுமன்கட்டளையிட்டமாத்திரத்தில் மூவாயிரம்பிள்ளைகளும்ஜயவுற்சாகத்துடன்புயங்கள் பூரிக்கவும் பிதாவின் பாதாரவிந்தங்களிற் பணிந்து செலவுபெற்றுக்கொண்டு காளகூடவிஷத்தைப் போலச் சபையைக்கடந்து வெளிவந்து தங்களரண்மனைகளிற் சேர்ந்து விசாலமாயிருக்கின்ற ஆயுதசாலைகளிற்போய் வீரலட்சுமியைப்போற்றி வழிபட்டு வயிரக்கவசங்களையெடுத்து வச்சிரமலைக் கொப்பாகப் பாரித்துமுத்து மாலைமோகனமாலைகள் புரளவிருக்கின்ற மார்பிற்றரித்துப் பாரித்தவில்லைத்தோளில்மாட்டித் திவ்வியபாணங்க ளடங்கியிருக்கின்ற அம்புருத்தூணியை முதுகிலிறுக்கி கரசாடுமாட்டிவிரற்கோதைகளைப் பூட்டி வலக்கரத்திற்றேவாஸ்திரங்களைப்பற்றி வயிரமகுடம் வாகுவலையமுதலாகிய போர்க்கோலத்தைத்தாங்கி நுதலில்வீரபட்ட மணிந்து வெற்றிக்குரிய தும்பைமாலைகளைச்சூரியனைப்போலப் பிரகாசிக்கும்வயிரமுடிகளின்மீது சுற்றியிவ்விதப் போர்க்கோலத்தைச் செய்துகொண்டு வெளிவந்து பலகோடித்தூதரைப்பார்த்து நமதுசேனைகளை யிந்தநிமிஷத்திற்கொண்டு வரக்கடவீர்களென்று கட்டளையிட்டனுப்பி விட்டுஅஸ்திரசஸ்திரங்கள் நிறைந் திருக்கின்ற கணக்கிறந்த சேமத்தேர்களை சாக்கிரதைசெய்யப் பணித்தவர்களாய்ஆசாரவாயிலுக்கெதிரில் பருவதாகிருதியாய்ப் பலபுரவிகள்யாளிசிங்கம்புலிகளை அணியணியாகப் பூட்டிச்சொர்னமயமாயிரத்தினகாந்திகளைவீசிக் கொத்துமணிகள் கொடிகள்முதலிய சிங்காரங்களைப்பெற்று நிற்கின்ற சித்திரத்தேர்களிற்சிங்கங்களைப்போலப் பாய்ந்திருந்த காலையில்இராஜபுத்திரர்கள்பணிவிடையின்படிக்கு வாயுவேகத்தினு முந்திப்பறந்ததூதர்கள் அரிக்கையிட்டவுடன் சேனைக்காவலர் அதிகசந்தோஷத்துடன் சர்வாயுதபாணிகளாய் வள்ளுவனைக்கூவிப் படையெழுச்சியென்று பேரிகைகளை யறைவித்த சத்தத்தைக் கேட்டமாத்திரத்திற் சதுரங்கசேனைகளும் பெரும்புறக்கடலைப்போல ஆர்ப்பரித்துச் சேர்ந்துதத்தமதுதலைவனை வந்துகூடினர்.

அக்காலையில் ரணபேரி,ஜயபேரி,வெற்றிச்சங்கம், தவுண்டை, மல்லரி,சல்லரி ஆகுளி·சின்னம், எக்காளை,தப்பட்டை, முதலியபோர்ப்பறைகள் கோடைகால விடிகளுக் கொப்பாகக் கணகணென் றதிரத்தக்கதாகப் புறப்பட்ட சேனைகளின் பெருக்கை யென்னென்று சொல்லுவேன் பொன்மயமாகிய வண்டில் அச்சு, மச்சு, முதலிய சிறப்புகளைப்பெற்ற தேரணிகளையும்· சித்திரமுகபடாம் பிரகாசிக்கப் பிறையைநிகர்த்துக்காட்டும் கோடுகளில்வயிரப்பூண்கள் பிரகாசிக்கவிருப்புலக்கைகளைத் துதிக்கைகளினேந்தி நீலகிரியையொத்த பாரித்தவுடல்களுடன்மேகங்களுமஞ்சியோடவீறிட்டுப் போகும் யானைக்கூட்டங்களையும் இரத்தின வண்டயங்கள் கால்களிற் சத்திக்க அலைகளைப்போலப்பாயும் வேகமுள்ள புரவிப்பந்திகளையும்தனுசுதிவ்வியபாண வகைகள் வாள்,வேல், தண்டாயுதம், சூலம், சக்கரம், தோமரம், பிண்டிபாலம், முசலம் கப்பணமுதலிய பற்பல படைகளைத்தாங்கி வீராவேசங்களுடன் வடவையும் ஆலகாலமும்பலவுருக்கொண்டெழுவதைப்போலக் கொக்கரித்துச் சீறிவரும் இராட்சதப்படைவெள்ளங்களையும் பிரமனாலும் இவ்வளவெனக் கணிக்கப்படாதஇத்தகைய சதுரங்கசேனைகளும்வெளிப்பட்டகாலத்திற்பெருத்த பலவாத்தியங்களி னதிர்ச்சியும் இரதங்களோடும்சக்கரத்தொனியும் மதயானைகள் வீறிடுமொலியும் புரவிப்பந்திகளின் கனைப்பிரைசையும் இராட்சதவீரர் ஆரவாரங்களும் ஏகமாயோங்கி பிரளயகாலத்தைப்போல மண்விண்திசைக ளெங்கணும் செவிடுபடமுழங்கவும் வானத்தையளாவிச் செல்லும்இரதபந்திகளின்மீதுநாட்டியகொடிகளும் யானைகளின்மீது விளங்கும்சண்டாக்களும்இராட்சதவீரர் தாங்கிச்செல்லும் வெற்றித்துவசங்களும் வானவெல்லையை மூடிப் படபடென்றசையவும் அவுணவீரர்கள் சூடியிருக்கும் வெற்றிமாலைகளிற்பெருகுந் தேனையுண்டு வண்டினங்கள் ரீங்காரத்தொனிகளைச் செய்துலவவும் கழுகு,பருந்து, காக்கைமுதலிய பட்சிக்கூட்டங்கள் கூந்தலிட்டுக்கொண்டு பந்தலைப்போல வானத்தில் வட்டமிட்டுப்போகவும் பூதபைசாசங்க ளிரைகிடைக்குமென்கின்ற களிப்பினாற் குதித்துத்துள்ளிப் பாடியாடிபோர்க்களத்தைநோக்கி நடக்கவும் இவ்விதவேடிக்கைகளுடன் சதுரங்கசேனைகளும் போகும் வேகத்தினாலெழுந்த தூளிபடலமான தெப்படிக்குக் காட்டியதெனில் யானைகள் கரியைப்போன்றும் செம்பட்ட மயிரலையும்சிரங்களையுடைய இராட்சதர்தோற்றம் அனலையொத்தும் அதனிடத்தெழும்புகையை யொப்பக்காட்டிய துகட்சமோகமானது வானகமெங்கணும்பரந்து திசைகளைமூடிச்சமுத்திரங்களைச்சேருக்கிப் பிராணிகளை மயங்கச்செய்தது.

இவ்விட ஆடம்பரங்களுடன் பூவட்டமெங்கும்பரந்து தத்தளிக்கும்படிக்கும் நடக்கின்ற சயின்னியங்களின் பெருக்கை மூவாயிரம் இராஜகுமாரர்களுங்கண்டுமனவெழுச்சியுடன்போரைக் குறித்து மேலிட்டுவருவதை வானகத்தில் நின்றுவேடிக்கைபார்த்திருந்த தேவர்கள்தெரிந்தமாத்திரத்தில் திடுக்கிட்டு மனம்வருந்தி நடுங்கிவாடவும் சத்தமேகங்களும் தம்மினங்களுடன் பூமியில்நழுகி யோடுவதைப் போலக் கரியதேகங்களைவாய்ந்த இராட்சதப் படைகள் ரணக்களவெல்லைக்குச் சமீபத்தில் வருவதைப்பூதவீரர்கண்டவுடன் வடவாமுகாக்கினியைப் போலச்சீறிப்பாதகர் மேலும்மேலும் வருகின்றனர் இவர்கள் கொடுமையைபடக்க வேண்டுமென்று கெக்கலிகொட்டிமராமரங்கள் பருவதங்கள் மற்றப்படைகளைக் கொண்டு தாக்கிய காலையில் அவுணவீரரும் தீரராய்க் கொதித்து முட்டியபோது ரணபேரி, ஜயபேரி, தப்பட்டை, வெற்றிச்சங்கம் எக்காளைமுதலிய பறைகளைக் கணகணெனமுழக்கு மொலிபெருத்துச் சமுத்திரகோஷத்தை யடக்கித் தடாகத்தையொப்பச் செய்யவும் அண்டச்சுவர் நெக்குவிடவும்இவ்விதமாக விராட்சதப்பாதகர் மீறிப்பூதப்படைகளின்மீதிற் பாய்ந்து மின்னலைப்போலப் பளபளத்து விளங்கும் வாளாயுதங்களை விதிர்த்துவெட்டியும் கூரியவேல்களினாற் குத்தியும் பருத்த தண்டாயுதங்களைக் கரகரெனச் சுழற்றிமோதியும் தங்கக்கட்டுகள் பிகிந்திருக்கின்ற நீண்டவிற்களைவளைத்து நாணேற்றிக் குணத்தொனிகொண்டுவிஷத்தொவைய லிட்டிருக்கின்ற கொடிய பாணவருஷங்களைப் பொழிந்தும், கப்பணம், கழுமுள், பிண்டிபாலம்,சக்கரம், சூலமுதலிய படைகளை ஒன்றனந்தமாகக் கடாவியும் வாட்டும்போது பூதப்படைகள் பயப்படாமல் திடசித்தராய் வடவையைப்போற்பொங்கி வானத்தையளாவித்திசைகளைமூடத் தழைத்திருக்கின்ற மராமரங்களைச் சக்கிராகாரமாகச் சுழற்றிக் கைகொண்ட மட்டும்மோதியும்

பருத்தமலைகளைச்செண்டையொப்பக்கடாவியும் இருப்பு
லக்கைகளினாற் சாடியும்தண்டாயுதங்களைக்கொண்டுமோ
தியும் வளைதடிகளைவீசியும் இவ்விதமாக ஜயசாலிகளாகி
ய சிவகணங்கள் அதாஅதப்படுத்துகின்றவேளையில் அ
வுணப்படைகள் சின்னபின்னப்பட்டு ரணக்களமெங்கும்
விழுந்தபோது பெருகிய உதிரவெள்ளமானது ததும்பிக்
கொண்டோடிக் கடலிற்பாய்ந்து கருநீரைச்செந்நீராக்கவு
ம் அப்பிரவாகத்திற் காக்கை-கழுகு-பருந்துகள் முழுகிக்
களித்து வானத்திலெழுந்து சிறகுகளைப்புலர்த்தி வட்ட
மிடவும் பூதபைசாசங்கள்காளிக்கூட்டங்கள் பசிதணிந்து
கரங்களைக்கோத்துக்கொண்டு பம்பைசுற்றியும்வெறியாட
லைச்செய்தும் தித்தோமெனநடித்தும் வீரன் புகழைப்பா
டிக்கொண்டாடவும் பருவதாகிருதியாக நிற்கின்றதேரணி
கள்கிலப்பட்டு கல்லென்னும் ஆர்ப்புடன் குவியவும் மத
யானைகள் வீறடங்கிக் கண்டதுண்டப்பட்டுமாளவும் தத்
தித்தாவிப்பகைவர்மீதுபாயும் புரவிப்பந்திகள் உறுப்புக
ளனைத்தும் வெவ்வேறாகச் சிதைபட்டுமங்கவும் அக்கால
த்தில் அவுணர்பொங்கிவாட்டப் பூதவீரர்களிற் பலர்து
ம்சப்பட்டு மாண்டனர்.

இதைக்கண்ட மூவாயிர விராஜகுமாரர்களுக்கு மதிக
கோபம்பிறந்து சர்ப்பங்களைப்போலச்சீறி மந்தரத்துக்கி
ணையாகப் பாரித்திருக்கும் தனுசுகளை வட்டாகாரமாகவ
ளைத்து நாரியைமாட்டி யிதுதானோ யுகப்பிரளயத்தொலி
க்குமிடிப்பெருக்கென்று சகலரும் திகைத்துவாடும்படிக்
கு டங்காரசத்தத்தைக்காட்டி விஷத்தொவையலிட்டு நெ
ய்தடவி கூர்மையாய்மின்னலைப்போல விளங்கும் அலகு
களையுடைய கொடியபாணவருஷங்களைச்சொரிந்துசிருங்
காதங்களைச் செய்து வாட்டும்போது சின்ன பின்னப்ப
ட்டு மாண்டும் களைத்துமிளைத்தும் காயப்பட்டு மங்கினவ
ர்கள்போக மற்றப் பூதப்படைகள் திகைத்து எதிரில்நிற்
கப்பயந்து ஒருவருக்குமுன்னொருவராகத்திசைகெட்டோ
டியதைக்கண்ட தலைவர்கள் மானமுங்கோபமும் மனதை
வாட்டக் காளத்தைப்போலச்சீறித் தங்களிரதங்களைத் து
ரத்திவந்து இராஜகுமாரர்களைவளைந்துகொண்டு பருத்த
விற்களைக்கோலிக் கணக்கிறந்ததிவ்வியபாணங்களைச்சோ
னைப் பெய்யலையொப்பப் பொழிந்து பகைவரேறி யிருக்
கின்ற தேர்களைச் சின்னபின்னப்படத் துகள்கண்டு பாக
ரைவாட்டி புரவிகளைமாய்த்துக் கொக்கரித்தும் சிலவீரர்
வலியதண்டாயுதங்களைச் சுழற்றிமோதிக் குதிரைக்கூட்ட
ங்களைத் தலைமாடு கால்மாடாகச் சிதைத்துக் குவித்தும் சி
லர்கற்கம்பத்தை யொத்தகால்களினாலுதைத்துப்பாகன்நி
லத்திலுருளும்படிக்கு மதயானைப் பெருக்கைக் கதறிக்
கொண்டு விழத்தள்ளியும் சிலர் பகைவரேறி யிருக்கின்ற
விரதங்களைவாரி யெடுத்து பந்தையொப்ப வானத்திலுந்
திசைகளினும் வீசிக் கர்சிக்கவும் சில ரெழுவாயுதங்களை
விட்டு வலியமார்பைப்பிளந்தும் சிலர்வாளாயுதங்களைவீ
சிச் சத்துருக்கள் கரத்தில்விளங்கும் விற்களையிரண்டு து
ண்டமாக வெட்டித்தள்ளியும் சிலர்பற்பலபாரித்த மலைக
ளை யெறிந்து இராட்சதசேனைகளைச் சதைத்துக்கொன்று
ம் சிலர்வீராவேசங்களுடன்பாய்ந்து எதிரிகள் கரங்களி
ற் பிடிபட்டிருக்கின்ற தனுசுகளைப்பிடுங்கிச் சுள்ளிகளுக்
கொப்பாக முறித்து அவர்கள்முகத்திலெறிந்தும்இவ்வித
ங்களாக பூதநாயகர்கள் சண்டை கொடுக்கும் உற்பாதங்க
ளைத் தெரிந்த மூவாயிரவரும் அதிககோபங்கொண்டு கு
ரூரமாகிய பாணவருஷங்களைச் சொரிந்தமாத்திரத்தில்அ
வைகள் வெளிப்பட்டவுடன் தீயையிறைத்துபக்குபக்கெ
ன் றெரிந்து விடநாகங்களைப்போலச்சீறி வேகமாய்வந்து
கோடையிடிகளைப் போலத்தாக்கி வலிய மார்பைப்பிளந்
தும் புசங்களைத்துளைத்தும் கால்களை யாடவொட்டாமல்
வாட்டியும் இவ்விதமாகச் சாடும்போது தேகமெங்கும் பு
ண்பட்டுதிரம் பீறிட்டோடக்களைத்து மிளைத்தும் பிரமை
கொண்டும், மயங்கிநின்றுவிட்ட ஏதுவையும்சூரன்குமா
ரர்கள் ஜயவுற்சாகங்களையும் இலக்ஷர் கண்டமாத்திரத்
தில் ரவுத்திராகாரமாகக் கொதித்துப் பருவதா கிருதியா
கவிளங்கும் புயாசலங்களைப் பெற்றதன்மையனாகிய வீரவா
குதேவர் திருவடிகளிற் பணிந்துஇந்தப்போரை அடியோ
ங்களுக்குக் கட்டளையிடவேண்டுமெனப் போற்றப்பரிவா
ய் அவ்வாறே ஜயப்பிரதாபங்களுடன்மீளக்கடவீர்களென
த்திருவாய்மலர்ந்ததைக் கேட்டவுடன் புசங்கள்பூரித்து
வானையளாவக் களித்தவர்களாய்த் தங்களிரதங்களைத்தூர
த்திக்கொண்டு விஜயன்,ஜயன், இடபவன், கரன், வீரன்,
அதிகோரன், அசலன், அதிகுணன், வாமனன், அனந்த
ன் அகளங்கன், தாருகன், வருணன், கசி, தண்டகன்,மு
தலாகிய இலக்ஷர் பகைவர் முனையில்வந்து சேர்ந்துகுமா
ரதேவர் திவ்விய சரணாரவிந்தங்களைத் தியானித்துப்போ
ற்றித் தங்கக்கட்டுகள்பூண்டு இருகுதைகளினும்மணிகள்
தூக்கிப் பாரித்திராநின்ற தனுசுகளைவளைத்துநாணேற்றி
உலகங்கள்திடுக்கிட்டு வாடக்குணத்தொனிகொண்டுஊழி
காலமேகங்களைப் போலத் திவ்விய பாணவருஷங்களைப்
பொழிந்து கர்ச்சித்தமாத்திரத்தில் அவர்கள் கரவேகசா
வேகங்களை மூவாயிரவர்கண்டு விடநாகங்களைப்போலச்சீ
றி விற்களை யிறுக்கிக்கணக்கிறந்த குரூரமாகியநாராசங்க
ளைச் சொரிந்தகாலத்திலிருதிறவரும் தூண்டியகணைகளா
னவை மேகங்களொன்றுடனொன் றெதிர்த்துப் பொருவ
துக்கொப்பாகத் தீப்பொறிகளைச் சிதறியெதிர்ந்து முட்டி
யும் தட்டியும் சீறியும் உருத்தும் பொடித்துமிடித்தும்க
ட்டிப்புரண்டும் விழுந்தும் இவ்விதங்களாகச் சூரன்பிள்
ளைகள் செலுத்திய அஸ்திரங்களைஅவர்கள் கண்டிக்கவும்
இவர்கள்செலுத்தியபடைகளைச்சத்துருக்கள் துண்டித்து
தள்ளியும் இத்தகைய வேடிக்கைப்போரினைச் சிலநேரஞ்
செய்து வருங்காலையில் மூவாயிரவர் கைமிஞ்சிச் சிலகொ
டியகணைகளைப் பிரயோகித்து இலக்கரேறியிருந்த பருத்
த தேர்களனைத்தையும் பொடிபடுத்திக் கொக்கரித்தனர்.

அக்காலத்தில் இலக்ஷருக்கு அதிககோபம் பிரவேசித்
து வடவாமுகாக்கினியைப் போலச்சீறிஅமோகமாகியதி
வ்விய சரங்களைத் தூண்டி மூவாயிரவர்கரங்களிற் பிடிப
ட்டிருந்த தனுசுகளைக் கண்டித்துப்பாகன் புரவிகளுடன்
தேரையும் துகள்படுத்திச் சிருங்காதஞ்செய்தனர், அத
னால் மானம்பாதிக்கக் காட்டழலையொப்பக் கனன்றுபக்க
த்தில் வருகின்ற சேமத்தேர்களினிடத்திற்பாய்ந்துபுதிய
விற்களைத் தாங்கி விஷங்களைக் கக்கவல்ல கொடியநாராச
ங்களைப் பிரயோகித்து அட்டகாசஞ்செய்தகாலையில் அப்
படைகள் வெளிப்பட்டவுடன் மின்னியிடித்துக்கல்மழை
களைப் பொழிந்து அனற்பொறிகளைச்சிதறிக்கொண்டுவே
கமாய் வருவதை இலக்ஷர்கண்டு அதருமல்பெதருமல்தி
டசித்தாராய் அமோகமாகிய கணைகளைச்செலுத்திமேலிட்
டுவருகின்ற பகைவர்படைகளைப் பொடிபடுத்தி மேலுஞ்
சோனைமாரியைப்போலக் கணக்கிறந்த சிலீமுகங்களைக்

கடாவி மூவாயிரவருங் கைகாலாடவொட்டாமல்மூடித்துரிதமாய்த்தங்களுக் குதவியாகநிற்கின்ற தேரணிகளிற்ருவி யிருந்தபோது சூரபதுமன் பிள்ளைகள் வல்லியவிற்களைப் பறிகொடுத்துஏறியிருந்ததேர்களையுமிழந்து நிராத்துவமாகப் பொரும்வலியுங் குன்றித்தங்களுக்குதவியாகவந்த அளவற்ற சயின்னியங்களும் ரணக்களத்துக் கிரையாய்ப்புரளுவதையுங்கண்டு தயிரியமழிந்து மதிமயங்கிக்கோபக்கனலானது மனதையும் உடலையும் கொளுத்திவாட்டபிரமித்துநின்றனர், அவர்கள்நிலையைக்கண்டு தட்சணஞ் சிவகுமாரர்கள் கானகத்திற் றிரியும் மான்கூட்டங்களை வேடர்வலைகளைவீசி வளைத்துக்கொள்ளு மாறுபோலச்சூழ்ந்துகொண்டு கடூரமாகிய பாணவிதங்களைச்சொரிந்து வாட்டுமுன்னிலையில் தியாகிகளாக விருப்பவர் தரித்திரம் நேர்ந்தகாலத்திற் கொடுக்கவகையற்றுத் துக்கசாகரத்தில்முழுகி வாடுவதைப் போலத் திகைத்திருந்த மூவாயிரவரும் மானமுங் கோபமும்மனதைவாட்ட நாகங்களைப் போலச்சீறிச் சிலர்பக்கங்களில்வானத்தையளாவநிற்கின்றபருவதங்களையுங் குன்றுகளையும், வேருடன்பறித்து இலக்ஷர் மேல்வீசியும் சிலர்திசைகளைமூடித் தழைத்திருந்த பருத்தவிருட்சங்களை முறித்துச்சாடியும் சிலர் ரணக்களத்தில் மாண்டு கிடக்கின்ற யானைப்பிணங்களைவாரி வாரியெறிந்தகாலையில் அவ்வெல்லைமுற்றினும்தோற்றுமலோங்கி விழுவதைத் தேவர் கண்டு திகைத்துப் பாதகர்இனியென்ன அனர்த்தங்களைசெய்வரோவென்றேங்கினர்.

இந்தப்பிரகாரம் சூரன்பிள்ளைகள் செலுத்தியமலைகள் முதலியதுகளை இலக்ஷர்பலகணைகளைக்கொண்டு சின்னபின்னப்பட்டுப்போகக்கண்டித்துப்போட்டு மேலுங்கணக்கிறந்த திவ்வியபாணங்களைத் தூண்டிப் பகைவர்மார்புபுஜமுதலாகிய விடங்களைச்சல்லடைக் கண்களாகத்துளைத்துச் சூருவளிக்காற்றைப்போலச் சுழன்று சுழன்றுசாடும்போது தேகமெங்கும் சூரியகிரணங்களுக்குச் சமதையாக வுதிரம்பீரிட்டோடச் சிலர்களைத்தும் சிலர்மானமழிந்து புறந்தந்தும் சிலரிளைத்தும் வருந்துகின்றகாலையில் மற்றவீரர்களிற்சிலர் வடவையைப்போலப்பொங்கிப் பற்பலபடைகளைச்செலுத்தி பெரும்போர்களைச்செய்யவும் சிலர்குலகிரிகளையொத்தமலைகளைப் பறித்தெறிந்தும் சிலர்வீராவேசங்களுடன் பாய்ந்து இலக்ஷரேறியிருந்ததேர்களைச் செண்டைப்போலவெடுத்துச் சமுத்திரத்திலெறிந்து தேவர்களோவென் றலறியேங்கஆர்ப்பரித்தகாலையில் அத்தேர்களிலிருந்தவர்கள் சிங்கங்களைப்போல நிலத்திற்பாய்ந்து ரவுத்திராகாரமாகக் கோபித்துப் பாதகரையினிவிடலாகாதென்றெண்ணி விற்கள் நாரியைப்பிகிந்து கோடிபாண வருஷங்களைச்சொரிந்து மேலிட்டுவருவதை இராஜகுமாரர்கண்டு வடவையு மஞ்சச்சீறியிடிக்கொப்பாகக் கர்ச்சித்துத் தழைத்திருக்கின்ற தோப்பினிடத்திற் பெருங்காற்றுநுழைந்து கிளைகளைமுறிக்குமாறுபோல வீரவாகுதேவர் தம்பியர் கரங்களிற்பற்றிய விற்களைப்பறித்துத் துரும்புகளைப்போல முறித்து வீசியபோது சண்முகதேவர் படைத்தலைவர்சிறிப்பகைவர்தேகம் நகசகபரியந்தம் நுறுங்கி ஐம்புலன்களுங்கலங்க வலியகரங்களினல்மோதிச் சிருங்காநதஞ்செய்தபோது பகைவர்மிகவும்நொந்தும் வீரத்தைவிடாமல் தாங்களும்வலியகரங்களைப்பிடித்தமாக்கிக்கொண்டு இடிகளைப்போல எண்மர்மார்பினுஞ் சிரங்களினும் குத்தினர் இவ்விதமாக்க் கருங்கடலும் திருப்பாற்கடலும்பகைத்துத் திரைகளைவீசிக் குமுறிப் போராடுவதைப்போல இருதிறவரும்கொதித்து இடசாரிவலசாரிதிரிந்து மற்போரைச்செய்து வரும்போது கொடியபாதகனுகிய சூரன்பிள்ளைகளுக்கு ஜயசாலிகளாகிய வீரர்வலிகுறைந்து விஜயனையொழிய மற்றவர் தாபரித்தெதிர்ந்து போராடக் கூடாமையாற் பின்னிட்டனர், இப்படிக்கு வீராதிவீரர்களாகிய துணைவர்புறந்தந்ததையும் சத்துருக்கள் வீறுப்பையும் விஜயன்தெரிந்து வடவையைப்போலச்சீறி உலகமுள்ளளவும் பழிப்புரையைப்பெற்றுவிளக்கும் சூரன்பிள்ளைகளை யியமபுரத்திற் குடியேற்றுவேனென்று சபதம்பேசிச்சந்திரசடாதரக்கடவுளாகிய சிவபிரான் தனக்கனுக்கிரகித்திருந்த வல்லியதனுசையெடுத்து வழிபட்டு வட்டாகாரமாக வளைத்து அண்டங்களதிர குணத்தொனிகாட்டிப் பிரசண்டமாருதத்தைப்போல அப்பாதகரைவளைந்துகொண்டுகுரூரமாகிய பாணவருஷங்களைச்சொரிந்து கரங்களையறுத்தும் புயங்களைமுறித்தும் சிரங்களைக்கண்டித்தும் மார்பைக்கிழித்தும் வயிற்றைப்பீறியும் துடைகளை நுறுக்கியும் இவ்விதங்களாக ஒருதிண்ணியன்காட்டில்நுழைந்து பலவிருட்சங்கள் கிளைகளைவெட்டிக் குவிப்பதையொப்பச்சாடிக்கொல்லும்போது கண்டிக்கப்பட்டுபலதிசையினுமிறைந்துவிழுந்த உறுப்புகளனைத்தும் விரைவிற்சேர்ந்தொன்றுபட்டுப் பிராணனுண்டாயெழுந்து ஜயசாலியாகிய விஜயன்மேற்பருத்தமலைகளையும் விருட்சங்களையும் பறித்தெறிந்து கொடியபோரைச்செய்வதாயினர்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? இந்தவிராஜகுமாரர் பூருவத்தில் அளவற்றகாலம் அரியதவங்களைச்செய்து வருவதைப் பிரமன் திருவுளத்தில் மதித்துக்காட்சிதந்து உங்களுக்குவேண்டும் வரங்களைத்தருவோங் கேட்பீரெனத் திருவாய்மலர்ந்தகாலையில் இராஜகுமாரர்வணங்கிப்போற்றிக் கர்த்தனே யாங்களொருகாலம் சத்துக்களாற் பின்னப்பட்டிறக்கவரினும் பழையபடிக்குத் தேகமொன்றிஉயிர்பெற்றெழுந்து பகைவரைவெற்றிகொள்ளத்தக்க வரப்பிரசாதங்களைத் தரவேண்டுமென்றிரந்தனர் அவ்வாறே கடாட்சித்துப் பிரமன், தன்னகரைச்சேர்ந்தான், அந்தவரப்பேற்றினல் அவயவங்கள் பின்னப்பட்டபோதினும் தட்சணத்திற்கூடியெழுந்து பொருவதாயினர், இப்படிக்குக் கண்டிக்கப்பட்ட வுடல்கள்மீட்டுஞ்சேர்ந்த தெப்படிக்கிருந்ததெனிற் பெருங்காற்றினலறையுண்டுசிதறிய ஜலமானது உடனேகூடுமாறுபோலவுஞ்சூற்கொண்ட மேகசாலங்களிற்றோன்றும் மின்னலின்ஒளியினல்நீங்கிய விருள் உடனேபெருத்துக் காட்டுவதுக் கிணையாகவும் விளங்கியது மேற்குறித்தபடிக்கு விஜயன் செலுத்திய பாணங்களினற் பலதரம் பாதகர்கண்டிக்கப்பட்டபோதினும் மீளமீளச்சேர்ந் துயிர்பெற்றுச் சண்டைகொடுப்பதைப் பார்க்குமிடத்தில் இருஷிகளே, தவத்தினுஞ்சிறந்த பொருளொன்றுமில்லை இப்படிக்குமாண்ட இராஜகுமாரர்மீட்டு மெழுந்து அஸ்திரசஸ்திரவிதங்களை அமோகமாகச்செலுத்தி வாட்டுகின்றகாலையில் விஜயனுக்குக் கைகாலோய்ந்து பிரமித்து அற்புதங்கொண்டவனுய் யாதுந்தோற்றுமல்வருந்திக் கடையில் இதுதவத்தினலுண்டாகிய முயற்சியென நிதானித்துத் தீயும்புகையுமெழப்பெருமூச்செறிந்து விழிகளிலனற்பொறிகள்

சிதறவுருத்துப்பார்த்து இவர்கள்செய்கைவெகுநேத்தியா
கவிருக்கின்றதெனக கோபநகைகொண்டு இதனைநினைப்ப
தாயினன்.

பலதரம் கொடியபாணகோடிகளைப் போக்கிப்போக்கி
க் கண்டதுண்டப்பட வாட்டியபோதினும் மீட்டு முருப்
பெற்றெழுந்து போராடி வருகின்றனர், இதனை திஷ்டாந்
தமாகக்கண்டும் மேலு மேலுங் கரங்கள்வருந்த மனம்
வெம்பிக்களைக்கத் தக்கதாகச் சரங்களைச்செலுத்திக் கண்
டிப்பதினுற் பிரயோசனமென்னை இதனுற்சத்துராதிகளை
வரையறக் கொல்வதென்னுற் கூடாமையாகக்காணுகின்ற
து அவ்வாறேயிந்தப் பாதகர் பற்பகல்கணக்கிறந்தசிறந்த
பாணகோடிகளினுல் வருந்திச்சண்டை கொடுப்பினும்நம்
மையசைக்க வொண்ணுது தமையன்சன்னிதானத்திற் ப
கைவரை வெற்றிகொண்டு வருவதாகப்பேசிச் செலவுபெ
ற்றுவந்த யான் இராஜகுமாரரைக்கொல்லாமல்எந்தமுகத்
தைக்கொண்டு தனுர்ப்பாணியாய் அவர்முன்னம்போவே
ன் அல்லதுபகைவர் வரமுயற்சியை யுடையரென்றும்மா
யையிற் சிறந்தவரென்றும் புசபல பராக்கிரமசாலிக
ளென்றும் அவர்கள் மூவாயிரவர் நானொருவனென்செய்
வதென்றும் சொல்லுவேனுயினும் தோல்வியுற்றுத்திரு
ம்பினவனென்று நம்மவர்களிழுந்துபேசித்தமதுதிருக்கூ
ட்டத்திற் சேர்க்காமற் றுரத்தவரும்அப்படிக்குத் துணி
ந்துசெய்ய நினைப்பினும் இத்தலத்தைக்கடந்துபோகப்ப
கைவரும்விடமாட்டார்கள் இக்காரணகாரியங்களை யோசி
த்துப் பாராமலொன்றை முடிப்பதற்குப் பித்தனுய்மதிம
யங்கி யிருக்கவுமில்லை நல்லுணர்ச்சியைப் பெற்றவனுய்இ
ளைப்பின்றி வலியனுகவுந் தனுர்ப்பாணியாகவு மிருக்கின்
றனன், இப்பாதகரை வதைத்துக்கீர்த்தியைநாட்டினவனு
மல்ல இதனுற் றீராதவசைக்காளாயினேன் ஆதலால் யா
னிறப்பினும்பிராணனு னிருப்பினும் யாதொருபிரயோ
சனங்களையுங் கண்டிலன் நினைந்தகருமத்தை முடிக்காத
காரணத்தினுற் பிராணனுடன் திரிகின்றபிணத்துக் கொ
ப்பாக விருக்கின்றேனென்று இவ்விதங்களாக விஜயனெ
ன்னும் வீரன்இருதலைக்கொள்ளியினகப்பட்டஎறும்பை
ப்போலவும் தாமரையிலையிற்பட்ட நீர்த்திவலையை யொ
த்தும் நடுக்கடலிற்கப்பல்கவிழக் கரைகாணுமற் றிகைப்ப
வனை நிகர்த்தும் அளவுபடாத துக்கசாகரத்திற்பட்டு வா
டித்திகைத் தெண்ணமிடுகின்ற காலையில் நற்குணநற்செ
ய்கைகளையுடையவனுதலாற் றுயரவெல்லையைக் கடந்துபி
ழைப்பதற்கொரு தந்திரமுண்டெனத் துணிவு கொண்ட
வனுய் மனமகிழ்ச்சியுடன் சுயஞ்சோதிவடிவாகியசண்மு
கதேவர் திருவடிகளையல்லது இந்தத் தருணபேதகமாகி
ய காலத்தில் வேறொரு வுதவியைக் காணேன் இஃதுண்
மையெனத் தேறிக் கர்த்தன்பாததாமரைகளைப் பத்தி வி
னையங்களுடன் சிந்தித்துத் தேகபரவசனுய்விழிகளில்ஆ
னந்த வாரிபெருகத் தன்மனக்குறைகளை முறையிட்டுப்
போற்றுவதைப் பத்தர் நினைவின்படிக்குக் கடாட்சிக்கவ
ல்ல கிருபாநிதியாய்த் தீனசரண்ணியனுக வெழுந்தருளி
ய பாலசுப்பிரமணியக்கடவுள் திருவுளத்தறிந்து விஜயன்
விழிகளுக்கு மாத்திரந்தோற்றுவதாக வானத்திலெழுந்த
ருளியிதனை யருளிச்செய்வதாயினர்.

வீராதிவீரனே சத்துருக்களை வாட்ட நினைந்துபற்பல
பின்னப்படக் கண்டித்தும் மீட்டும் அவர்களொன்றுபட்
டெழுவதற்கடுத்த காரணங்களைத் தெரியாமல்மயங்கி வி
ஜயப்பிரதாபத்தைப் பெருமதைக் குறித்துவாடித் திகை
க்கின்றனைவீரனே இனியுனக்கு யாதொருகுறையுமில்லை
தேவாஸ்திரங்கள்முதலிய திவ்வியபாணங்களைக்கொண்டு
பற்பகல் போராடினும் இவர்கள் மாள்வதரிது இத்தகை
ய சிறந்தவர முயற்சிகளைப்பூர்வத்திற் பிரமனுற்பெற்றிரு
க்கின்றனரென அவ்வரலாற்றைப் பூர்த்தியாகத்தெருட்டி
ஆதியிற் பரமசிவகடாட்சத்தினுல் வெளிவந்து அகந்தை
கொண்டிருந்த பிரமன் நடுச்சிரத்தைக்கிள்ளிக் கபாலமா
கத்தாங்கிஅவனுதிரத்தைப்பலியேற்றுப்பிராணனைத்தந்
துஅவ்வாறே விஷ்ணுதேவர்கள்இருஷிகள்கருவபங்கப்ப
டுத்திஉலகைப்பாதுகாத்திருக்கின்ற அகோரவீரபத்திரக்
கடவுள்திருநாமத்தைக்கொண்டிருக்கும்சிறந்தபடைக்கர
சைப்படைத்துவிஜயனுக்குந்தந்து உலகங்களனைத்தினும்
வெற்றியைநாட்டி யிருக்கும்பகைவரை யிப்படையினுற்
கொன்று களிக்கக்கடவையெனத்திருவாய் மலர்ந்துதமதி
டத்துக்குப்போயினர், அக்காலத்தில்விஜயன்மனக்கவலை
யற்று திடசித்தனுய் முருகப்பெருமாள்வடிவைத்தியானி
த்துத்திக்குநோக்கி வணங்கிப் போற்றிக் கிருதார்த்தனுய்
அதிசீக்கிரத்தில் வீரபத்திராஸ்திரத்தைத் தொழுது வ
ழிபட்டுத் தனுசிற்பூட்டிப் பிரயோகிக்க யத்தனப்படுமு
ன்னிலையில் இவை யனைத்தையும் மூவாயிரவரிலொருவ
னுய் உன்மத்தனென்னும் பெயரைக் கொண்டிருப்பவன்
தெரிந்து இந்தத் திவ்வியபாணத்தினுல் நம்மனைவரையும்
ஏககாலத்தில் வாட்டநினைந்தனன் அதைத்தூண்டுவதன்
முன்னம் மாயப்படையைச் செலுத்தி யிவனுவியையுண்
ணவேண்டுமெனத் தீர்மானித்தவனுய்த் தட்சணத்தில்அ
ச்சரத்தை வழிப்பட்டுப்பிரயோகித்தனன், அதுவீறிக்கா
டாந்தகாரமாகிய விருளைப்பெருக்கி மேலிட்டு வருவதை
விஜயன்கண்டவுடன் பாதகன் வஞ்சகத்தைக்கருதினனெ
னக் கோபித்துவீரபத்திரப்படையைக் கரவேகமாகத்தூ
ண்டி ஆர்ப்பரித்தனன், அந்தத்திவ்வியாஸ்திரம்வெளிப்
பட்டவுடன்கோடிசூரியப் பிரகாசமாகச்சொலித்து விஷ
ங்களைக் கக்கிக்கொண்டு வந்தெதிர்த்துப் பகைவன்மோக
னப்படையையும்அதனுலுண்டாகிய மாயைப்பெருக்கை
யுங் கவளீகரஞ்செய்து வடவையைப்போலச்சீறி பலவுரு
க்கொண்டு மூவாயிரம் இராஜகுமாரர்களையும் மடக்கின
தாய்ச் சின்னபின்னப் படவாட்டிக்கொன்று வானகங்கை
யில்முழுகி வீரன்புட்டிலிற்சேர்ந்தது, இப்பிரகாரம்கண
ப்போதிற் பகைவரனைவரும் களத்திற்கிடப்பதைவிஜயன்
கண்டு குமாரசுவாமியை வாழ்த்தி ஜயவுற்சாகத்துடனிரு
ந்தனன் இச்சம்பவங்களனைத்தையும்பூதப்படைகள்தெரி
ந்தவுடன் பூரணச் சந்திரோதயத்தை யெதிர்ந்த கடலைப்
போலக் களியாடலைக் கொண்டோடிச் சந்தோஷசாகரத்
திலமுந்தினர், இக்காரணங்களைத் தப்பியிருந்த விராட்ச
தப்படைகள் பார்த்தவுடன் மருண்டுகிலேசித்து மோசம்
நேர்ந்தது இப்பிராந்தியத்தி லிருப்போமாகில் மாளவரு
மென்கின்ற பயப்பிராந்தியினுல் ஒருவருக்குமுன்னொரு
வராகத் தொலைதூரங்களினேடி மறைந்தனர், இந்தச்சந்
தோஷச்சேதியை வானத்தில் நின்றதேவர்கள் தெரிந்தும
னம்பூரித்துத் தேகபரவசராய்க் கற்பகமலர்களை யிறைத்
துவீரன் புகழைக் கொண்டாடிவாழ்த்தினர்.

இக்கொடுமையைத் தூதரறிந்து புலம்பிக்கொண்டாடி
யிராஜபரமேஸ்வரன் நகரத்தைச்சேர்ந்து சகலரும்புடை
சூழ்ந்துபோற்ற நவரத்தினமயமாகிய சபையில்விளங்கும்

சிங்காதனத்தில் இரத்தினமலையைப்போல வீற்றிருந்தர
சுசெலுத்தும் சூரபதுமனைத் தெரிசித்து பாதாரவிந்தங்
களில் வணங்கி விழிகளில்தாரைதாரையாக நீரைப்பெரு
க்கிக் கர்த்தனேதேவரீர்பிள்ளைகள் மூவாயிரவரும்அகோ
ரயுத்தங்களைச்செய்துபூதகை அதாஅதப்படுத்திப் படை
வீரரைக்கண்டித்து இலக்ஷரைவாட்டித் தூதன் துணைவ
ரெண்வரையும்சிக்குப்படுத்திவருமுன்னிலையில்அவர்களி
லொருவன் வலியனுய்ச் செலுத்திய ஒருபாணத்தினல்மூ
வாயிரவரும் ரணக்களத்துக்கிரையாயினர், இவையனைத்
தையும், கண்களாரக்கண்டுவந்தனமென்னும்வாசகம்முடி
வதன்முன்னம் புத்திரசோபக்கனல் உதரத்தைகொளுத்
தமருண்டு தியங்கி ஏங்கி சிங்காதனத்திலிருந்து நிலத்தி
ற்பொத்தென்று விழுந்துகளைத்து மூர்ச்சித்துக்கிடக்கும்
போது மந்திரிபிரதானிகள் மனவாட்டத்துடன் வேண்டி
ய சயித்தியவுபசாரங்களைச் செய்த வருமுன்னிலையிற் ச
ற்றுநேரத்தில் உணர்ச்சிபெற்றெழுந்து பூமிபிளக்கத்தக்
கதாகக் கரங்களினு லோங்கியறைந்துசபைமுற்றினுங்கட
கடெனப்புரண்டு புரண்டு மலையினிடத் திருந்து அருவி
பெருகுமாறுபோல விழிகளிற்றாரைதாரையாய் ஜலமொ
ழுகப்பழையதுயரத்துடன் புதியகிலேசத்திற் பட்டுக்கத
றிப் பலபலவிதங்களிற் பன்னிப்பன்னிப் புலம்பிச் சகிக்
கப்படாத துக்கசாகரத்தி லழுந்திப் பரதவிக்கின்ற காலை
யிற் சூரியபகவான் தன்கிரணகாந்தியை யடக்கி மேற்றி
சையைச்சேர்ந்து கடலில் முழுகிமறைந்தனர், அஃதியா
துபோலுமெனில், பிள்ளைகள் மாண்டசேதியைத் தெரிந்
தமாத்திரத்தில் சூரன் அரசுசெலுத்தி வருவதைமறந்து
சிங்காதனத்திலிருந்து தவறித் துக்கசாகரத்தி லழுந்திய
தையொப்பக் காட்டியது இந்தமரணச்சேதியானது அந்
தப்புரத்தி லெட்டிய மாத்திரத்தில் மூவாயிரர் தாயர்முக
த்தினும் வாயினும் வயிற்றினும் அறைந்துகொண்டுகூந்
தலைவிரித்துக்கோடுகோடெனப் புலம்பிஇழவுகொண்டா
டி மனவாட்டத்துடன் களைக்கப்பட்டணத்திலிருக்கின்ற
வர்கள் தத்தமக்கு நேர்ந்த நஷ்டங்களைநினைந்து நினைந்து
பிரலாபிக்குமோசையுங் கலந்துதிசைகளெங்கணும் பரந்
து பிரளயகாலத்தி லெழும் பேரொலியினுமேலிட்டுக் கு
முறியது.

---

## தருமகோபன்வதைப்படலம்.

முடிவுறுபுதல்வரைமுன்னிமுன்னியே
யிடரினையுழந்திடுமிறைவன்றன்முனம்
படையறுநல்லறப்பகைஞன்போந்திடா
வடிமுறைபணிந்துநின்றறைதன்மேயினன்.

---

சூதபுராணிகர், நைமி சாரண்ணிய வாசிகளுக்கு,
மேல் நடந்த சரித்திரங்களையுஞ் சொல்லுவார், முற்
குறித்த படிக்குச் சூரபதுமன் ரணக்களத்தில் மாண்ட
தன் பிள்ளைகள் சவுரியத்தையும் புயவன்மையையும் தீ
ரத்தையும் சுந்தரவடிவையும் கல்விப்பெருக்கையுமெடு
த்துப் பாடிப்பாடி துக்கிக்கின்ற காலையில் இராஜாதிரா
ஜனெதிரிற் றருமகோப னென்னும் பெரியமந்திரிவந்து
திருவடிகளிற் சேவித்துஇதனைப்போதிப்ப தாயினன்,ஆ
யிரத்தெட்டண்டங்களுக்கதிபனுய்த்தேவர் முதலானவர்க
ளுக் கிறைவனுய் நூற்றெட்டு யுகவரையி லெதிரின்றிஜய
ப்பிரதாபத்தைப் பெற்றிருக்கின்றஇராஜபரமேஸ்வரனு
கிய தேவரீர் திருவுளத்தில் இத்தகையசோபத்தைக்கொ
ண்டு வாடுவீராகில் இதனைச்சத்துருக்கள் தெரிந்தபோ
து மனவெழுச்சிபெற்றுக் கரங்களைக்கொட்டி நகைத்தே
சவரும் இவையன்றியும் ஜயசாலிகளாக விருக்கின்ற நம்
மவர்களும் அவமதித்துப் பேசவிடமுண்டாகும் மேலு
ம் புத்திரசோபத்தில் மனதைப் பூர்த்தியாகச் செலுத்தி
விட்டபடியால் அரசருக்குரிய நீதிகளைமுற்றினும் மறந்
தீர் அஃதென்னையெனில், வீரத்தன்மையை பூஷணமா
கக்கொண் டிருக்கின்ற சூரனுனவன் பகைவர்மேலிட்டு
ப்போராடுகின்ற ரணக்களத்திற்றன்பிதாவானவன்மாண்
டபோதினும் பிள்ளைகள்நெருங்கிய சுற்றத்தினர் பிராண
சிநேகிதராக விருப்பவர் பட்டபோதினும் அதையெவ்
வளவும் நினைந்து வருந்தாமல் மனவூக்கத்திலெவ்வளவுங்
குறைவின்றிப் பகைவரைவெற்றி கொள்ளவேண்டுவதற்
கானமுயற்சிகளைத்தேடிவெல்வர் இதுவுமல்லாமற் பகை
வரால் ரணக்களத்திலிறந்த நம்மவர்களுயிரைச் சற்றும
ஞ்சாமற் கிரகித்துக்கொண்டுபோன இயமனெங்கேபோ
கிறுன் பழையபடிக்குச் சிருஷ்டிக்கப் பிரமன்காத்திருக்
கின்றனன்.

இத்தகைய ரனைவரையும் ஏவல்கொண்டாளும் பெரு
மையைப் பெற்றிருக்கின்ற நாமும் சுகசீவிகளாய்வலிபெ
ற்றிருக்கின்றனம், இக்காரணங்களினுல் நமதுவெற்றிக்
கொருபோதும் குறைவுநேர்வதுமுண்டோ இவ்விதச் ச
ம்பத்துகளைப் பெற்றிருக்கின்றநாம் வருந்தவேண்டியகா
ரணமென்னை இவைநிற்கப் பரமசிவ கடாட்சத்தினுற் ச
லனமற்ற வயிரத்தேகத்தையும் அழிவற்ற ஆயுளையும்ம
கதயிஸ்வரியச் செல்வப்பெருக்கையும் புசபலபராக்கிரம
சம்பத்தையும் நிமைப்போதில் அண்டங்கள் முற்றினு
ம் உலவித்திரும்பவல்ல இந்திரஞாலத் தேரையும் உம
தரசை நீடித்துக்காக்கவல்ல ஆக்கினைசக்கரத்தையும் தே
வரீர் படைத்திருக்கின்றதால் எமதிறைவனேசிற்றறிவை
யுடைய பதிதரைப்போலப் புலம்பவேண்டியகாரணமெ
ன்னே இது உம்மையொத்த வீரனுக்குத்தகுமோ தேவ
ர்கள்சிறையை எக்காலத்தினும் விடுதலைசெய்வதில்லையெ
னக் கொண்டிருக்கின்ற வீரத்தையும் அவுணர்குலத்து
க்குரிய மேம்பாடாகிய மானத்தையும் சத்துருக்களைக்க
ண்டவிடத்தில் வாட்டநினைந்திருக்கின்ற வுறுதியையும்நி
லைபெறநாட்டாமல் இடைவிடாத துக்கசாகரத்திலழுந்தி
வாடுவது நம்போலிகளுக்குத் தகுவதோஎளியராகியதே
வர்கள்விருத்தர், கடகங்கணங்களைத் தரித்திருக்கின்றம
ங்கையர், டாலர், பெறத்தக்கதுயரம் அகண்டமண்டலாதீ
ஸ்வரனுகவிருக்கின்ற தேவரீருக்குத் தகாதென்று தரும
கோபன் பலவிதங்களிற் போதித்துத்தயிரியங்களைச்சொ
ல்லித் தேற்றியதருணத்தில் சூரபதுமன் புத்திரசோபத்
தைச்சற்றுநீங்கி வடவாமுகாக்கினியைப்போலச்சீறிப்பி
ராணிகளுயிரைக் கொண்டுபோகும் இயமனைப்போல நா
னேபோய்ப் பகைவர் கூட்டமுற்றினும் தும்சப்படவாட்
டி வீரசொர்க்கத்திற்சேர்ப்பேனென்றுகோபித்துஅவுண
ர்பெருமானெழுந்து பாதசாரியாக நடக்கும்போது பிர
தானமந்திரியாகிய தருமகோபன் துரிதமாக வெதிரிலோ
டி பாதங்களிற்சேவித்து இராஜாதிராஜனே கோபத்தை
த்தணிந்து இவ்விடத்திற்சற்றுநேரம்தரித்திருப்பீராகில்

இந்தத்தட்சணத்தில் அடியேன் சதுரங்கசேனைகளைக் கூட்டிக் கொண்டுபோய் வீறியிருக்கின்றபகைவரைமடக்கிக்கொண்டு அதாஅதப்படவாட்டி வீரகாளிக்கிரையாக ரணக்களத்திற்பலிகொடுத்து ஜயப்பிரதாபத்தைத்தேவரீருக்குத் தரக்காத்திருக்கிறேன் செலவுகொடுக்கவேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்தபோது கோபாவேசந்தணிந்துதிரும்பிச் சிங்காதனத்தில் வீற்றிருந்து தன்மனதுக்கேற்ற மந்திராலோசனைகளைச் சொல்லவல்ல தருமகோபனைப்பார்த்து நீசொல்லியபடிக்குப் பகைவரைக் கண்டதுண்டமாகச்சங்கரித்துக்கொன்று என்மனக்கிலேசத்தை நீக்கக்கடவையென விடைதரப்பெற்றுத் தருமகோபன்சபையைக்கடந்து தன்மாளிகையைச்சேர்ந்து ஆயுதச்சாலையிற்போய் வயிரக்கவசத்தையெடுத்துவிசாலமாகியமார்பிலணிந்து திவ்வியபர்ணங்கள் நிறைந்திருக்கின்ற அம்புறாத்தூணியை முதுகிலிறுக்கி விரல்கடோறுங் கோதைகளைமாட்டிப் பருவதாகிருதியாக விருக்கின்ற தனுசைக் கரத்திற்கொண்டு தும்பைமாலையை கிரீடத்தின்மீதுசுற்றி வெளிவந்தவுடன் பரிசனரைப்பார்த்துத் திசையானைகளினொன்றாகிய புண்டரீகத்தைக்கொண்டு வரும்படிக்குக் கட்டளையிட்டுப் பக்கங்களிற் காத்திருக்கின்றபலகோடி தூதர்மீது விழிகளைப்பரப்பி இந்தநிமிஷத்தில் நமது சதுரங்கசேனைகளையுந் தருவீரெனப்பணித்தகாலையில் காரியப்பெயர்களோடி காவல்படுத்தியிருக்கின்ற புண்டரீகமென்கின்ற திசைகளிற்றின்கால்களிற் பூட்டியிருந்த பாரவிலங்குகளைநீக்கி அடித்துத்துரத்திவந்து எதிரில்நிறுத்தினர், தன்மனக்கருத்தின்வண்ணஞ் செல்லவல்ல யானையின்பிடரியில் மேகத்தைப்போலத் தாவியேறி இந்திரன் இவனாகுமெனச் சங்கைகொள்ளும்படிக்குக் கம்பீரமாய் வீற்றிருந்தான்.

அத்தருணத்திலிவனுக்கிளைய மந்திரிகள் சருவாயுதபாணிகளாய்ப் பாரித்தவிற்களைக் கரத்திற்கொண்டு மற்றபடைகளையும் போரணியையுந்தாங்கி நவரத்தினமயமாகிய தேர்களின்மீதிலேறித் தமதுகாவலிலிருக்கின்ற சேனைகளையுங் கூட்டிக்கொண்டுவந்துசூழ்ந்தனர் இவர்களுடன் தன்னரண்மனையைத்தாண்டி நடக்கின்றபோது முன்னமோடியதூதர்கள் படையெழுச்சியெனத் தெரிவித்தவுடன் மனவுற்சாகத்துடன் படைத்தலைவர்கள் போரணிகளைத்தரித்துப் பருத்தவில், பாணம், சக்கரமுதலியபடைகளைப் பரித்தவர்களாய் வேல், வாள், வளைதடி, கப்பணம், இருப்புலக்கை, பாசமாதிய ஆயுதங்களைத்தாங்கிச் சட்டைகளையணிந்து வெளிவந்த இராட்சதசேனைகள் பாரித்தரதங்கள் மதயானைகள்அலைகளைப்போலத்தாவும் குதிரைகள் இவ்விதச் சதுரங்கசேனைகள் பலவெள்ளக்கணக்கிற் கடலையொப்பச் சேர்ந்ததைக்கூட்டிக்கொண்டு வேகமாய்வந்து மந்திரித்தலைவனைக்கண்டு வணங்கிப்போற்றி வரத்தக்கதாக நடக்கும்போது ரணபேரி, ஜயபேரி, வெற்றிச்சங்கம், சின்னம், கோடு, ஆகுளி, காளம், பறை, குடமுழா, சல்லரி, மல்லரிமுதலிய போர்ப்பறைகள் கணகணென்றதிரக் கோடாகோடி தீவர்த்திகள் காடைவிளக்கு மத்தாப்புகள் சூரியபிரகாசத்தினும்மேலிட்ட ஒளியைத்தரவும் துவசபடங்கள் வானத்தைமூடிப் படபடென்றசையவும் பூரணச்சந்திரனைப்போலக் கணக்கிறந்த முத்துகளினாற்சோடித்த தவளக்குடைகளைக் கவித்துப்போகவும் சயின்னியங்கள் நடையினா லுண்டாயெழுந்த தூளிபடலமானது அஷ்டதிசைகளினும்பரந்தலைக்கவும் பருவதாகிருதியாகியதேர்கள் கற்கரத்தொனிகளைச்செய்தோடவும் மதயானைகள்வீறிட்டுப் பகைவரைச்சீறிப் பிரசண்டமாருதத்தைப்போல வேகமாய் நடக்கவும் புரவிக் கூட்டங்களானவை நான்குபாதங்களினும் பூண்டிருக்கின்ற பொன்வண்டையங்கள்கலிக்க அலைகளுக்குச் சமமாகத்தாவி வானவெல்லையினும் திசைகளினும்சமுத்திரப்பெருக்கினும் பாய்ந்து இடிமுழக்கத்துக் கொப்பாகக் கனைத்தோடவும் பிறையையொத்த கோரைத் தந்தங்கள் விளங்க அரக்கினுஞ்சிவந்த முண்டைக்கண்களை உருட்டித் தீப்பொறிகள் சிதறப்பார்த்து பூமிநடுநடுங்கக்கால்களைப் பெயர்த்துவைத்து ஆலகாலத்தையொப்ப இராட்சதப்படைகள் வீராவேசங்களுடன் சிருங்கநாதம் அட்டகாசங்களைச் செய்துபோகவும் இவ்வித ஆடம்பரங்களுடன் எங்கும்பரவி நடக்கின்ற சதுரங்கசேனைகளின் மத்தியில் நீலகிரியையொத்த புண்டரீகமென்னும் யானையைச் செலுத்தி மகாபாதகனாகிய தருமகோமன் இராஜ வீதிகளைக் கடந்து ரணக்களத்தைநோக்கி வருவதைத் தேவர் பார்த்தமாத்திரத்தில்அம்மவோ அறத்தைக்கொன்றகொடியன் திசையானைகளில் முதன்மையாகவிருக்கின்றபுண்டரீகத்தின் பிடரியில் அளவற்றசேனைகள் சூழவருகின்றனன், மாயையிற்சிறந்தவன்வலியினொப்பற்றவன்பலரை வென்று கைதேர்ந்திருப்பவன் இத்தகையவீரனை வெல்லவல்லவர் யாவரிருக்கின்றனர், இதற் கென்செய்வோமென்றேக்கி வாடிக்கரங்களைப் பிசைந்துகொண்டு பிரமித்துப்பார்த்திருந்தனர், அப்பொழுதுசண்முகதேவர் சேனைத்தலைவர்பகைவர் வரவுக்கெதிர்பார்த்து வீரசிங்கத்தைப் போலவீறி மதயானைக்கிணையாக விருக்கின்ற ரணக்களத்தினருகில்வருவதைப் பூதவீரர்கண்டு வடவையைப்போற்சீறி வானத்தையளாவ நிற்கின்ற மலைகளையும் திசைகளைமூடத் தழைத்திருக்கின்ற விருட்சங்களையும்பறித்துக் கொண்டு இருப்புலக்கை-தண்டாயுதம்-வளைதடி- முதலியபடைகளைத்தாங்கித் தாவியிருக்கும் வீரத்தையும் படைவீரர் செருக்கையும் இலக்ஷர் வீறுப்பையும் எண்மர் சவுரியங்களையும் இவர்களுக்குத் தலைமைபூண்டிருக்கின்ற வீரவாகுதேவர் தனுர்ப்பாணியாய் முன்னணியைப்போற்றி வீரசிங்கத்தையொப்ப நிற்கின்ற உத்தண்டத்தையும் தருமகோபன் கண்டவுடன் மதிமயங்கி யின்றுடன் நமதுவாணாள் முடிவெய்துங்காலம் நேர்ந்ததாகவிருக்கின்றது பார்த்தபோதே மனம்நிலைபெற வில்லைநெருங்கிப் போரைத்துடங்குவோமாகில் என்னஅனர்த்தம் விளையுமோதெரியவில்லையென வருந்துகின்ற மனதுக்குச்சிலசமாதானங்களைச்சொல்லித் தேற்றுவதாயினன்.

ஓ! மனமே? பகைவர்வீறிப் பராக்கிரமசாலிகளாயெதிர்த்துச் சண்டைகொடுக்க நேர்ந்தகாலையில் ஊக்கமற்றுவருந்தி யேங்குவது தீராதவசையன்றோ இச்செய்கையைநமக்கஞ்சித் திரிகின்ற தேவர்சிறிது தெரிவராயிலிகழ்ந்து பேசிக்கைகொட்டி நகைப்பர் ஆதலாலெதிரேறி உருத்துச்சண்டைகொடுத்து வெற்றிகொள்வதே நன்காகக் காணுகின்றது நீயேன் வீணெண்ணங்களைக்கொண்டு வருந்துகின்றனை ஜயசாலிகளாகிய படைத்தலைவரும் வீரத்தன்மையைப் பெற்றிருக்கின்ற எண்ணிறந்த சேனைவெள்ளங்களும் நம்மைச்சூழ்ந்து வருகின்றனர் மேலும்நானோ தேவர் அவுணர் இராக்கதர் முதலாகியவீராதிவீரர்களை

வென்றுவெற்றிக்கொடியைநாட்டித்தருமத்தைத் தலையெடுக்கவொட்டாமற் கொன்று இவ்விதவெற்றிகளைப் பெற்றிருக்கின்றனன் மந்தரத்தையொப்பத் திரண்டோங்கியிருக்கின்ற வில்கரத்திலிருக்கின்றது தேவர்கள் படைகளையும் மற்றவலிய ஆயுதங்களையும் பெற்றிருக்கின்றனன்,சத்துருக்களை நிமைப்போதில் நாசஞ்செய்யவல்ல புண்டரீகம் நமக்கடிமையாகக் காத்திருக்கின்றது இவ்வளவு உதவிகளைப் பெற்றிருக்கின்ற நீபயங்கொள்ளவேண்டிய காரியமென்னை சிவச்செயற்படிக்கு முடிய விருக்கின்றதுசத்துருக்கள் நெருங்கியிருக்கின்ற போர்க்களத்தில்வந்து இனியிரங்கி வாடுவது தகாது பேடியருக்கடுத்தநடத்தையாகும் சண்டைக்கு நேர்ந்தகாலத்திற்பகைவரைவென்று ஜயப்பிரதாபத்தைப்பெறினும் புறந்தந்தோடினும் அல்லதுமாளவரினும் பின்னிடையாமற் சேனைகளுடன்பகைவர்மீதில் வீறிப்போவதே கடனல்லது தியங்கிவாடுகின்றதழகோ சமர்க்களத்தில் வீராவேசங்களுடனெதிர்த் திருக்கின்றஎதிரிகள் சவுரியத்தைக்கண்டு பயப்பிராந்திகொண்டு பலபலநினைந்துவாடுவது சுத்தவீரருக்கடுப்பதோ இரண்டிலொருகாரியம்முடிகிறத்துக்குச் சந்தேகமில்லையாதலால் இனியொருபோதுந் தளர்ச்சிகொள்ளேனென மனதைத் திடப்படுத்திக்கொண்டு சூரபதுமனுக்குப்பிரதானமந்திரியாக விருக்கின்ற தருமகோபன் ஜயவுற்சாகத்துடன் சேனைகளுக்கு மத்தியில்நடந்தனன், உடனேயிரவும்பகலு மெதிர்த்ததைப்போலக் கொடியமனதைப்படைத்த விராட்சதசேனைகளும் நல்லொழுக்கத்தைப்பெற்றிருக்கின்ற பூதப்படைகளுநெருங்கிக்காட்டழலும்வடவையயு மொப்பச்சீறிக் கடலுமஞ்சக் கொக்கரித்துச்சண்டைசெய்யத்தொடங்கினர்.

அக்காலத்திற் பூதவீரர்கைமிஞ்சித்தண்டங்களைக்கொண்டுமோதியும் மழுப்படைகளினல் வாட்டியும் பிரகாசம்பொருந்திய சக்கரம கணிச்சிகளைச்செலுத்திக் கலக்கியும் பருத்தமலைகளை யொன்றனந்தமாக வீசியும் தழைத்திருக்கின்ற மராமரங்களைக் கிறுகிறெனச்சுழற்றிக்கொண்டமட்டும் மோதியும் இவ்விதமாக நாலுமூலைகளினும் பரவிப்பகைவரைத் திக்குமுக்காடவொட்டாமல்சாடுகின்றகாலையில் இராட்சதப்பாதகரும் பின்னிடையாமல் ரவுத்திராகாரமாகக்கோபித்துப் பருத்து நீண்டு தங்கக்கட்டுகள்பிகிந்து மணிகள்சத்தித்துக் கொண்டிருக்கும் விற்களைவளைத்துத் திசைகளதிர டங்காரசத்தைக்காட்டி விஷத்தொவையலிட்டிருக்கின்ற கரமாகிய பாணகோடிகளைப்பிரயோகித்துக்கண்டித்தும் வேற்படைகளைவீசிஅதப்படுத்தியும் வாள்களைவீசிக்கண்டதுண்டப்பட வெட்டியும் நாஞ்சில்களைக்கடாவித் தும்சப்படுத்தியும் குன்றங்களை எறிந்தரைத்தும் கழுமுட்களினுற்குத்தியும் இவ்விதமாக அஸ்திரசஸ்திரங்களைச் சோனைப்பெய்யலைப்போலச்சொரிந்து பூதப்படைகளைச் சின்னபின்னப்படக்கலக்கினர். இவர்களிப்பிரகாரம் போராடி வருகின்றகாலையில் மந்திரிக்கூட்டங்களுடன் இலக்ஷர் எண்மருமெதிர்த்து வீரங்களைப்பேசித் தனுசுகளைவணக்கி ஒன்று-பத்து-நூறு-ஆயிரம்-கோடி-வெள்ளக்கணக்கிற் கொடியபாணங்களைக்கரவேகமாகப்போக்கி அகோரயுத்தங்களைச் செய்தும் அதிககோபத்தினுற்றேவாஸ்திரங்களைஒருவர்மீதொருவர் மந்திரபூர்வகமாகப் பிரயோகித்துக் கர்ச்சிக்கின்றகாலையில் அவ்வாளிகள் வெளிப்பட்டவுடன் அனலைப்பெருக்கி யிடிமின்னல்குமுறலைக்காட்டிப் பற்பலபாணவிதங்களைப்படைத்து உலகங்களெங்கணும் நிரப்பிச்சீறி ஒன்றையொன்று பகைத்து சொல்லப்படாத கொடியவாதாடுகின்றதாற் பிராணிகளனைத்தும் அதிககாயங்களைப்பட்டு வருந்தி எவ்விதத்திற் பிழைக்கப்போகின்றன மெங்கணும் மழைத்தூவலையொப்பப் பாணமயமாகக்காட்டுகின்றதெனவாடித்திகைத்துப் பயந்து சோரவும் இவ்விதமாகஇருதிறத்துச்சேனைகளுங் கைகலந்து போராடுகின்றகாலையில் அளவற்ற பூதப்படைகளும் இராட்சதப்பாதகரும் தலைகளற்றுந் தோள்களிற்றும் கரங்கள்துணிந்தும் மார்புகள்திறந்தும் வயிறுகிழிந்தும் துடைகள்முறிந்தும் சின்னபின்னப்பட்டழிந்தும் இவ்விதங்களாக அல்லோலகல்லோலப்படுகின்றகாலத்திற் செறுநர்பட்சத்தில் வந்துபோராடிய மதயானைகள்பாகனுடன் பங்கப்பட்டுச்சிந்தியும் தேரணிகள் பொடிப்பொடியாயிறைந்தும் புரவிக்கூட்டங்கள்-தலை-கால் - உடல்சேதிக்கப்பட்டு உருக்குலைந்த முன்னிலையில் ரணக்களவெல்லையெங்கும் பிணமலைகளோங்கியும்இரைந்து திரைகளைமோதிப்பெருகியரத்தப்பிரவாகமானது கடலைநிரப்பிக் கரைகளைக்கடந்துபூமண்டலமெங்கும் பிரளயவெள்ளத்தைப்போலப் பரந்தலைக்கவும்,கழுகு,காக்கை,பருந்துகள்நிணமாம்சங்களைத்திருப்தியாகப்பொசித்துவானத்தில்வட்டமிட்டுலவவும்பூதபைசாசங்கள் வெறிகொண்டுநடிக்கவும்பலகோடிகவந்தங்கள்கூத்தாடவும் இப்பாடுபடுகின்றகாலையிற்சிவகணங்கள் பகைவர்கொடுமையினுற் சிக்குப்பட்டுத்தியங்கிவாடுவதை இலக்ஷரிற்சிலர்கண்டுவிட நாகங்களைப்போலச்சீறி யெதிரேறிக் கணக்கிறந்த நாராசங்களைப் பொழிந்துலவுகின்றபோது மந்திரிகள் சிலரேங்கிக் கொடியபாணவகைகளினல் அவற்றினைக் கண்டித்ததுமல்லாமல் அவர்கள்சரீரங்களைச் சக்கைசக்கையாகப் பேர்த்தெறிந்து சாடும்போதுஇலக்ஷர் மிகவும்நொந்து வலிகுறைந்து தத்தளிப்பதையும் சத்துருக்கள் ஜயவுற்சாகங்களுடன் மேலிட்டுவருவதையும் புசபலபராக்கிரமசாலியாகிய வெய்யவனென்னுஞ்சூரன் கண்டுகனன்றுசீறியெதிர்ந்து இடிகளையொப்பக்கர்ச்சித்து மகிமையுள்ள வில்லைவளைத்து இராட்சதர்நடுநடுங்கியேங்கத்தக்கதாகக் குணத் தொனிகொண்டு அளவற்ற குரூரமாகிய சரங்களைப் பிரயோகித்துப் பகைவரைத் தலைவேறு; புசம்வேறு, கால்வேறு, இவ்விதங்களிற்கண்டித்தும் மார்பைப்பிளந்து சல்லடைக்கண்களைப்போலத் துளைத்தும் காலாந்தகனைப் போலவும் சூறைக்காற்றுனது தோப்பினிடத்திற் பிரவேசித்ததுக்குச் சமதையாக வாட்டும்போது மந்திரிக்கூட்டங்களனைத்தும் ரணக்களத்துக்கிரையாகமாண்டும் சமுத்திரத்தை நிகர்த்து யிரைந்திருந்த சேனைவெள்ளம் வறண்டு நிலத்திற்புரளவும் இவ்விதமாகத்தேவரை வாட்டிவந்தபாதகர் தாபரித்தெதிர்க்கவஞ்சி யிடைவதைப் பூதப்படைகள் கண்டு கெக்கலிகொட்டி மேலிட்டு கணக்கிறந்த பருத்தமலைகளைப் பறித்துவீசியும் மராமரங்களை வேருடன் பறித்துச்சுழற்றிச்சாடியும்அலைக்கின்ற காலையிற் சத்துருக்கள் வெதும்பிவிம்மி வலிகுறைந்து ஊக்கமற்று வடித்திறக்கிய அன்னப்பாண்டத்தில் வாய்வைத்து அச்சூட்டினல் வருந்தியோடும்பூனையைப்போலச் சின்னபின்னமாக நாலுமூலைகளினும்பறந்தோடினர்.

இந்தப் பிரகாரம் இராட்சதரனைவரும் பங்கப்பட்டுடைந்த காலையில் கணக்கிறந்த பூதர்கள்அவர்களைத் தொடர்ந்து வைதுருப்புறவிழுந்துருளும்படிக் குதைத்தும்பதினறு பற்களும் பலகறையைப்போல வுதிரத்தக்கதாகத்தாடையி லறைந்தும் செவிகளைப்பற்றியிழுத்துத் தூக்கியெறிந்தும் கால்களைத்தட்டியலைத்தனர், இப்படிக்குத் தம்மவர்கள் பட்டதுன்பங்களைச் சூரபதுமன் பெரியமந்திரியாகிய தருமகோபன் கண்டு மனம்பொறுமல்வடவாமுகாக்கினியைப் போலக் கொதித்துப் புண்ணையொப்பச்சிவந்து தீப்பொறிகளை யிறைக்கும்குழிந்த விழிகளையுடைய பூதர்மேற்சென்று வானத்தையளாவியமந்தரத்தையொத்த நீண்டவில்லை நாட்டி அண்டங்களதிரக் குணத்தொனிகொண்டு பிராணனைப் பலிகொள்ளவல்ல கொடிய பாணகோடிகளை அபரிமிதமாகச் சொரிந்தனன், அவைகள் அடர்ந்துபூதர்மேற் பாய்வதைப்பார்க்குமிடத்தில்இந்திரவாகனமாக விருக்கின்றமேகசாலங்கள்கருநீரையுண்டு கடலினிடத்திற் சொரிந்ததை நிகர்த்துக்காட்டியது,இவ்விதமாக விஷங்களைக் கக்கிக்கொண்டு சீறிவந்து தாக்கியபோது பூதப்படைகள் அதிககாயங்களைப்பட்டு நடுநடுங்கித் தேவராசன் வச்சிராயுதத்தினுற் சிறகுகளை யரிந்த காலையில் பருவதங்கள் பட்ட துன்பத்தைப்போல மங்கிவாடி வருந்துகின்றபோது இந்திரனேறிநடாத்தும் அயிராவதத்தை யொத்தவலியுடைய புண்டரீகமென்னும் திசைக்களிறுனது கோடையிடிகளைப்போலக் குமுறி வடவையையொப்பச்சீறி யியமபாசம்போன்ற துதிக்கையை நீட்டிக் கணக்கிறந்த பூதர்களைவாரிச் சமுத்திரத்திலெறிந்தும் திசைகளில்வீசியும் வானவெல்லையிற் கடாவியும் ஒவ்வொரு தாக்கலினுற் கோடானகோடி சிவகணங்களைக் கொன்று உரலையொப்பப் பருத்திருக்கின்ற கால்களைக் கொண்டு அளவிறந்த பூதரைநிலத்திற்றேய்த்தும் தங்கக்கட்டுகள் பூண்டுகூர்மையாய் பிறையைப்போல வளைந்திருக்கும்நாற்கோடுகளினுற் பலர்மார்புகள் பிளந்துருளும்படிக்குப் பாய்ந்தும் வால்வீசலினுற் பலரைச்சாடியும்வீறிடுமொலிப்பெருக்கத்துக்கஞ்சிச் சிலரை மூர்ச்சித்துவாடச்செய்தும் இவ்விதங்களிற் றருமகோபன் வாகனமாகிய புண்டரீகம் காய்ந்த புதர்களைவாட்டுங் காட்டழலைப்போலத் தும்சம்பண்ணுகின்றவேளையில்பூதப்படைகளும் பின்னிடையாமல் தீரத்துடன் காளக்கூடத்தைப்போலச்சீறிப் பருத்தமலைகளைக்கல்லி வீசியும்மராமரங்களைக் கொண்டுசாடியும் பலபடைகளையெறிந்தும் போராடுகின்றபோது சேனைக்காவலர்ரவுத்திராகாரமாகக் கொதித்துப் பாரித்த விற்களை வட்டமாகவிறுக்கித் திவ்வியபாணகோடிகளைப் பிரயோகித்துக் கொக்கரித்தனர், அவைகள் வெளிப்பட்டவுடன் ஒன்றனந்தமாகப்பெருகிக் கழனிகளில் நாற்றைநடவுசெய்தாற்போலத்தேகமுழுதும்தைத்தபோது வெளுத்த உடல்மாறி உதிரப்பெருக்கினுல்மூடப்பட்டுச் சிவந்து திரிவதைப்பார்க்குமிடத்திற் சர்ப்பக்கூட்டங்களினுற் கவ்வப்பட்டுப் பனிப்படலங்கள்மூடச் சந்திரன் நடப்பதைப்போலக் காட்டியது.

இவ்விதமாகப் புண்டரீகம் வருந்தியபோதினும் வலிகுறையாமல் மணிகள்கலிக்க அண்டகோளகைநெக்கு விட்டதைப்போலக் கர்ச்சித்துக் கொண்டு பனையையொத்த துதிக்கையினைச் சுலவிச்சாடும்போது அணிவகுப்பாகவெதிர்த்துவந்த பூதப்படைகள் சின்னபின்னப்பட்டுக் கலைந்தோடுவதை இந்திரனென்னும்வீரன் கண்டமாத்திரத்தில் விழிகளில் அனற்பொறிகள்சிதறப் பிரசண்டவாயுவைப்போல வெதிர்த்துப் பாரித்திருக்கின்றதனுசைவளைத்து குரூரமாகிய ஆயிரம்பாணங்களைத் தூண்டிவீறிவருகின்ற யானையின்மத்தகத்தைத் துளைத்துக் கோடையிடியைப்போலக் கர்ச்சித்தகாலையில் உதிரத்தைப்பெருக்கிக் கதறிக் களைத்து நிலத்தில்விழுந்துஒருமுகூர்த்தகாலம் சோபித்திருந்ததைத் தருமகோபன்கண்டு ரவுத்திராகாரமாகக்கோபித்துச் சாணையிட்டுக் கூர்மையாயிருக்கின்ற கொடியபாணங்களை மிகுதியாகச் செலுத்திப் பூதத்தலைவன் நெற்றியைப்பிளந்தனன், அந்தக்காயத்தின் மூலமாக வுதிரம்பிரவாகமாகப் பெருகியபடியாற்களைத்திளைத்துபிரமித்து நின்றனன், அக்காலையிற் பாதகனுகியதருமகோபன் சற்றுமிரக்கமற்றவனுய் இவனைக்கொல்வதற்கு இதுதருணமென நினைந்து எழுவாயுதமொன்றை யெடுத்துக்கிறுகிறெனச் சுழற்றி மார்புக்கிலக்காக வீசினன், அதுவெளிப்பட்டவுடன் தீயையிறைத்துக்கொண்டு சமீபிப்பதன்முன்னம் இந்திரனென்னும் வீரனுக்குத் தெளிவுண்டாயெழுந்து துரிதமாய்த் திவ்விய பாணமொன்றைத் தூண்டிமேலிட்டுச் சீறிவரும் முசலத்தைத் துகளாக்கித் தள்ளிமேலும் பாதகராகிய விராட்சதர் அலறிக்கொண்டோடக்கரவேகமாய்க் கணக்கிறந்த பாணவருஷங்களைப்பொழிந்து மந்திரித்தலைவனைத் தோற்றவொட்டாமல் மறைத்த காலத்திற் பாதகனும் கோடானகோடிக் கொடியபாண சமோகங்களைப்போக்கி வீறிவருகின்ற சரங்களைக்கண்டித்துதுமன்றியிற்பலகோடி கணைகளைப் பிரயோகித்தபோது அவைகள் காட்டழலைப்போல மண்டியெரிந்துவந்துதாக்குமுன்னிலையில் அவைகளைச்சட்டைபண்ணுமல் தட்டிப் போட்டுமீட்டும் பலகொடிய பாணங்களைச்செலுத்தித் தருமகோபன் மார்புக்கரணுக விருந்த வயிரக்கவசத்தைத் துகளாக்கிக் கொக்கரித்தமாத்திரத்தில் வடவையைப்போலச்சீறி மணிகள்சத்திக்கும்பருத்ததண்டாயுதமொன்றை யெடுத்துக் கரகமெனச்சுழற்றி யிதனுல் நாசமடையக்கடவையெனக் கடாவிய தருவாயிற் சக்கரத்தையொப்பவட்டணைவந்து வேகங்கொண்டுபோய் அசைவற்றமார்பிற்றுக்கியமாத்திரத்திற் பஞ்சேந்திரியங்களைகள்பிசகிஇந்திரனென்பவன்மரணமூர்ச்சையாயினன்.

இவ்விதமாக இலக்கர் எண்மர்படைவீரர்பூதசயின்னியங்கள் மங்கிபடங்கியதையும் பகைவன் வீராவேசத்துடன் ரணக்களமெங்கணு மெதிரின்றித் திரிவதையும் புண்டரீகம்ரோங்கிச்சாடுவதையும்புசபலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர் கண்டமாத்திரத்தில் மானமுங்கோபமும் மனதைவாட்ட ரவுத்திராகாரமாகக்கோபித்துத் தட்சணத்திற் றன்தேரைத்துரத்திவந்து பகைவன் முனையிற் சென்று மந்திரித்தலைவனைக்கட்டித் தருவேனெனத்தம்மவர்களுக்கு பலதயிரியங்களைச் சொல்லித்தேற்றி அவர்களுக்குமுன்னணியிற் சேர்ந்து பகைவனைநெருங்கியதைக் கண்டவிராட்சதர் இயமன் வந்துவிட்டான் வந்துவிட்டானென் றேடும்போது கொடியமனதைப் பெற்றபாதகன் வீரகண்டையணிந்தபாதங்களையுடைய வீரன்மீதிற்பொங்கி அக்கினிமழைதுளிப்பதுக்கொப்பாகவும் நட்சத்திரங்களுதிருமாறுபோலவும் விழிகளிற்றீப்பொறிகள்சிதறச்சீறிப்பார்த்து அடாபயலே நீயோ வலியனுய் என்னுடனெதிர்க்க வந்தாய் இராஜாதிராசன் கருத்தின் படிக்கு

உன்னைசின்னபின்னப்படவாட்டிப்போகத் தாம்பூலம்வாங்கி வந்திருக்கின்றதுதெரியாதோதப்பித்துக்கொண்டோடினாற் பிழைப்பை விதிவலிஎன்முன்னந் தள்ளிக்கொண்டு வந்துவிட்டது இனிபிசகவொட்டேன் இதோஉன்பிராணனைநிமைப்போதில் வாங்குவேனெனக்கர்ச்சித்துச்சொல்லிய வாசகத்தைச் சுயஞ்சோதிவடிவமாகிய பாலசுப்பிரமணியருக் கிளவல்கேட்டு நகைத்துவிவேகசூனியனேகேட்பையாக. உங்களவர்களில் ஜயசாலிகளாய்வீரத்தன்மைபெற்றிருந்த பலனைச்சின்னபின்னப்படவாட்டிஇந்தரணக்களத்திற் பலிகொடுத்து வெற்றிபெற்றிருக்கின்றனன், சுலபவலியுடைய வுனக்கிடைவனோ சிறியகழியானது அளவுபடாத ஜலப்பெருக்கையுடைய கடலைமீறிக்கடக்கவல்லதோ அவ்வாறே நிமைப்போதில் உன்னைஜயிக்கவல்லேன் நீ பெற்றிருக்கின்ற ஜயப்பிரதாபமும் வீரமும்புயவன்மையும் இன்றுடன் நாசமாகப்போக விருக்கின்றதைத் தெரியாமல் வீண்வார்த்தைகளையேன் பிதற்றுகின்றனை அதற்குமுன்னம் நீகற்றிருக்கின்ற வித்தைகளனைத்தையுங் காட்டக்கடவையென்று வீரவாகுதேவர்சொல்லி முடிவதன்முன்னம்தருமகோபன்வடவாமுகாக்கினியைப்போலச்சீறி வெற்றிமாலையினிடத்தில் மொய்த்திருந்தவண்டினங்கள் ரீங்காரத்தொனியைச்செய்து பறக்கத்துரிதமாய் தன்கரத்திலிருக்கின்ற பருத்தவில்லைப் புயவலிகொண்டு வளைத்துநாணேற்றி அயிராவதம் கர்ச்சித்ததைப்போலத் திசையெங்குமதிரக் குணத்தொனிகாட்டித் திசைக்களிற்றின் பிடரியில்மந்திரித் தலைவனிருப்பதெப்படிக்கிருந்ததெனில் வெள்ளியங்கிரியினிடத்திற்சூற்கொண்டமேகமானது இந்திர தனுசைக்கொண்டு கவிந்ததை யொப்பக்காட்டவும் மந்திரித்தலைவன் வீற்றிருந்த யானையின் தோற்றமானது சோடசகலைகளையுடைய சந்திரன்தேகத்திற்பாதியிராகுமூடியதை நிகர்த்தும் இவ்விதமாகவிளங்குங்காலையில் தருமகோபன் துரிதமாய்க்கணக்கிறந்தபாணகோடிகளைச் செலுத்தி வீரவாகுதேவர் தேகந்தோற்றுமல்மறைத்தான் அவைகள் வீரன்சரீரத்திற் றாக்கியவுடன் முனையொடிந்தும் மழுங்கியும்முறிந்தும் துகள்பட்டும்திசைகளிற்பறந்ததை யிரவலருக்கு இம்மியளவுங் கொடாமற் புதைத்து வைத்த திரவியத்தை யிழந்து திகைக்கின்றவனைப்போலமருண்டுபார்த்து மானம்பாதிக்கமண்டியெரிந்து சூரியவேலாயுத மொன்றையெடுத்து வீரவாகுதேவர் கண்டத்துக்குக் குறிபார்த்துவீசியகாலையில்அப்படைவீறிவருகின்ற உக்கிரத்தைக் கண்டவுடன் துரிதமாய்ச்சில கொடியகணைகளைப் பிரயோகித்தனர்.

அவைகள் வெளிப்பட்டவுடன் பிரசண்ட மாருதமும் வடவையும் ஒன்றுபட்டுக் கிளம்பியதைப்போலத் தீயையிறைத்து சர்ப்பங்களை யொப்பச்சீறி மேலிட்டுவரும்வேற்படையைப் பொடிப்பொடியாகக் கண்டித்துஅத்துடன் போகாமல் வலிகொண்டுபாய்ந்து தருமகோபன்மார்பி லணிந்திருந்த வயிரக்கவசத்தைப் பேதித்துத்தடாரித்துருவிப் புறப்பட்டுப்போயதுஅக்காயத்தின்மூலமாய் உதிரம் பெருக்கெடுத்தோட மதிமயங்கிவருந்தி அசைவற்றிருந்ததை அவனுக்கு வாகனமாக விருந்த புண்டரீகமென்னுந் திசைக்களிறானது தெரிந்தவுடன் ரவுத்திராகாரமாகக் கோபித்துத் திசைகளதிரக் கர்ச்சித்துப்பாய்ந்துவயிரத்தினையொத்த சூரியநான்கு தந்தங்களினால் வீரவாகுதேவரேறியிருந்ததேரைத்தாக்கியும் ரணக்களத்தில் விழுந்துகிடக்கின்ற பருத்த எழுவாயுதமொன்றைத் துதிக்கையிற்கொண்டு அண்டங்களதிரச்சக்கிராகாரமாகச்சுழற்றிமோதிதேரைநடத்தும்சாரதிதலையையுடைத்துபுரவிகளையுஞ் சின்னபின்னப்படச்சாடி வீறிட்டுலாவுவதைவீரவாகுதேவர் தமதுவிழிகளிற் றீப்பொறிகள்சிதறப்பார்த்து வடவானலத்தைப்போலப் பொங்கித்தேரைவிட்டு நிலத்திற்பாய்ந்து மேலேறிவந்த யானையின் துதிக்கையினை ஒருகரத்தினாலசையவொட்டாமற் பற்றி மற்றகரத்தை பிடித்தமாக்கிக்கொண்டு மதத்தைப்பெருக்கி யிருக்கின்ற மத்தகத்தினிடத்திற் கோடையிடியைப்போலத் தாக்கிப் பெருங்காற்றிற்பட்ட சருகைப்போலச்சுழற்றி மேலுலகத்திற்செல்லவீசினார், அத்துடன்போகின்ற தருமகோபன்திகைத்து வெகுகாலமாய்ச் சகல வெற்றிகளையுங்கிடைக்கச்செய்திருந்த களிற்றினை யிழக்குங்காலம் நேர்ந்ததென்று மனம் வருந்தி யானையுடன் திரும்பிவந்து பூமியில் விழுந்தவுடன் கிரீடம் துகள்பட்டு வாகுவலையங்கள் நுறுங்கித்தேகமும் நகசகபரியந்தம் அதிர்ந்து களைபட்டிருந்தனன், புண்டரீகமும் சரீரமுற்றுஞ் சிதைபட மரணமூர்ச்சையாகக் கிடந்தது அத்தருணத்தில் தருமகோபன் சிலநேரத்தில்மூர்ச்சைதெளிந்தெழுந்துதன்வாகனத்துக்குநேர்ந்தஅபாயத்தைப்பார்த்திரங்கி நல்லகாரியம் இப்படிக்குச் செய்தஇந்தப்பாதகனைச் சும்மாவிடமாட்டேன் பிராணனையுண்டுமனவருத்தமாறுவேனெனக் கோபித்து மந்தரத்தையொத்த தண்டாயுதமொன்றையெடுத்துக் கிறுகிறெனச்சுழற்றி இதனால் நாசமடையக் கடவையெனவீசினன், அப்படையானது வீறிமணிகள்கலிக்க இரைந்துகொண்டு சமீபித்தமாத்திரத்தில் வீரன் சிறித்துரும்பைப்போல ஒருகையினாற் றட்டிப்போட்டுச் சிருங்கநாதஞ் செய்தனர்,இந்தஜயத்தைப் பெரியமந்திரிகண்டு மானம்பாதிக்க ரவுத்திராகாரமாகக் கொதித்துத் தவமுன்னிலையிற் பெற்றிருக்கின்ற வச்சிராயுதத்தைக் கரத்திற்கொண்டு வீரவாகுதேவர் மார்புக்குநேராய் வீசினான் அதுவெளிப்பட்டவுடன்மின்னிப்புகைந்தெரிந்து அதிகமகிமைகளைக்காட்டியிரைந்துமேலிட்டுவருவதை வீரன்கண்டு நகைத்து தமதுதிருக்கரத்தினாற் பற்றி வலிகொண்டுபகைவன் மார்பில் மோதினர், அத்தாக்கலினாற் பெருங்காற்றி லறையுண்டு வேருடன்சாய்ந்த வடவாலவிருட்சத்தைப்போல ஓவென்னுமிரைச்சலுடன் நிலத்தில்விழுந்தபோது வீரவாகுதேவர்உருத்துத்தமது வலியகாலினாலுதைத்துருட்டியவேளையில்தலைபிளந்து உதிரங்களைக் கக்கிக்கொண்டு சூரபதுமன்மனதுக்கினிய பிரதமமந்திரியாகிய தருமகோபன் மாண்டனன், இச்சம்பவத்தைக்கண்ட விராட்சதர்கள் புலம்பிவாடி சற்றுதாழ்ப்போமாகில் மோசம் வருமெனனும் பயப்பிராந்தியினாற் பலதிசையினும்பறந்தொளித்தனர்.

அத்தருணத்தில் முனம் சோபித்துக்கிடந்த புண்டரீகமானது களைதெளிந்து கண்களைவிழித்துப்பார்த்துத்தருமகோபன் பட்டதையறிந்து தானதுவரையில்அவன்காவலிற்பட்டு வருந்தியிருந்த துக்கசாகரத்துக்குக்கரைகண்டதைப்போலக் களித்தெழுந்து வீரவாகுதேவரைநோக்கிப் பற்பலதுதிகளைப்பேசிக்கொண்டு துரிதமாகச்சமீபத்திற்போய் வணங்கிஎமதுகர்த்தனே அடியேன்மீது கோபங்கொள்ளவேண்டாம் கிருபையுற்று என்வரலாற்றைக் கேட்டருள்க. இதுபிசகாக விருக்கமாட்டாதுஇதனாற்றேவரீர் தீர்க்காயசாய்ச்சகலசவுக்கியங்களையும்ஜயப்பிரதாபங்

களையும் பெற்றுவாழ்ந்திருப்பீர் அதாவது என்பெயர்புண்டரீகமெனச்சொல்வர் பரமசிவகடாட்சத்தின் படிக்கு அஷ்டதிசைகளைத் தாங்கி யிருக்கின்ற அயிராவதமேமுதலிய யானைகளில் நானுமொருவனாகும் இந்தப்பாதகனாகிய தருமகோபன் பிரமுகனாய் எண்டிசைகளையும் ஜயங்கொள்ள நினைந்துவெளிப்பட்டகாலத்தில் என்னைப்பலவத்காரமாகப் பிடித்துத்தனக்குவாகனமாகவேறிச்சகலரையும் வென்றுதிரும்பித் தன்பட்டணஞ் சேர்ந்த தினமுதல் கால்களில் விலங்குபூண்டு சிறைச்சாலையி லடைபட்டுப் பலயுகங்களாக பெருமைகுன்றி மங்கிவாடியிருந்தேன் புத்தியீனனாகியமந்திரியிட்டபணிவிடைகளைச்சிரசிற்கொண்டு இதுபரியந்தம் அப்பாதகனுக்குவாகனமாகவுஞ்சுமந்துவருந்தியயான் ஒருகருமத்திற்றும்பேனாகில்தட்சணத்திற் பிராணனையுண்டு ரத்தமாம்சங்களை எவ்வலயுடன் தின்றுவிடுவதற் கையமில்லையிதற்கஞ்சி யாதொரு செயலுமற்றுவாடி என்னுணவமடங்கி யிருந்தனன்

முன்னொரு காலம் அஷ்டதிசையினும் வாசஞ்செய்திருந்த அரக்கர்தன்னையிகழ்ந்தனனென்று அவர்கள்மீதுகோபித்து என்னிடத்திற் சென்று அந்தவீரரனைவரையும்அதப்படுத்தி ஜயப்பிரதாபத்துடன் மீண்டனன் இவன்புயவன்மைகளையும்வெற்றிப்பாட்டையும் ஒருவிதமாகச்சொல்லி முடிவதோ இத்தகையமகாபாதகனைத்தேவரீரையன்றியில் ஒருவரால் கொல்லப்படுவதோ உலகங்களுக்காதாரசத்தியாக விருக்கின்ற மேம்பாட்டினையுடையதருமமென்பதைத் தலைகாட்டவொட்டாமல் நாசஞ்செய்து திரிந்த கொடியரிற் கொடியனை அமுதத்தையொத்த தேவரீரொழுந்தருளி வாட்டியதாற் றேவரனைவரும்இனி சுகசீவிகளாய் அல்லலற்றிருப்பார்கள் அடியேனும் கடியதுயரத்தைக்கடந்து பிழைக்கலாயினேன், இதையன்றியில் நீரெனக்கென்ன சிறந்த உதவிகளைச் செய்யப்போகிறீர் பஞ்சேந்திரியச் சேட்டைகளையடக்கிச் சிறந்தமுத்தியைப் பெற்ற மகத்துக்களை யொத்தானந்தவாரியில் முழுகிக்களித்தனன், முற்சனனத்திற் சிலபாதகங்களைச் செய்திருந்தபடியால் இத்தினவரையில் இராட்சதர்பட்டணத்தில்மறிபட்டிருந்தயான் முன்னமெத்தகையதவங்களைச்செய்தனனோ தெரியாது தேவரீரைநேரிற் றரிசிக்கப்பெற்றுக் காவலும் விண்டு கிருதார்த்தனானேன், ஓவீராதிவீரனே கட்டளையிடுவீராகிற் சிவபிரான் திருவுளங்கொண்டு அடியேனுக்குக் கடாட்சித்திருக்கின்ற திசையைத்தாங்கியிருக்கப்போவேனென்று போற்றிநிற்கின்ற புண்டரீகத்தின் முறைகளைக்கேட்டு வீரவாகுதேவர் தயைசெய்துஉன்னிருப்பிடத்தைச்சேர்ந்து களித்திருப்பையெனத் திருவாய்மலர்ந்தகாலையில் விடைபெற்று இராட்சதர்பயங்களை யொழிந்து பழையபடிக்குத் தன்தொழிலைச் செய்திருந்தது இச்செயங்களனைத்தினையுங் கண்டபூதவீரர்கள் மிகுத்தசந்தோஷப் பெருக்கினால் அண்டங்களதிரக் கொக்கரித்து வீரவாகுதேவர் வெற்றிப்பாடுகளைப் பலவிதமாகப் புகழ்ந்தனர் இச்சம்பவங்களனைத்தையும் திஷ்டாந்தமாகத் தெரிந்த தூதர்கள் மனவாட்டத்துடன் வாயுவேகத்தினும்மேலிட்டோடித்திருச்சபையைச்சேர்ந்துஇராஜாதிராஜனாகியசூரபதுமனைத் தரிசித்துத் திருவடிகளிற் பணிந்து அகண்டமண்டலாதீஸ்வரனே? கேட்டருள்க. தேவரீர்பெரியமந்திரியாகிய தருமகோபன் கணக்கிறந்தசயின்னியங்களைக்கூட்டிக்கொண்டுபோய்ச் சத்ராதிகளை வளைத்து அகோர யுத்தங்களைச் செய்து கடையிற்றாதனால் பலசேனைகளையும் பறிகொடுத்து மாண்டனன், புண்டரீகமும் படாதபாடுகளைப்பட்டு வீரனைப்போற்றித் தன்பதியைச்சேர்ந்தது இது நிச்சயமாகிய சேதியெனத் தூதர் விண்ணப்பஞ்செய்ததைக்கேட்டவுடன் தன்மனதுக்கிசைந்த மதியூகியாகிய தருமகோபனையிழந்த வருத்தமேலிட்டுவாட்டத் துக்கசாகரத்தி லழுந்திக்கிலேசித்துயாதுந்தோற்றுமற் சித்திரப்பாவையைப்போல அசைவற்றிருந்தனன்.

## பானுகோபன்வதைப்படலம்.

எள்ளல்செய்தெனைப்பற்றியேசிறையகத்திட்ட
கள்வனிப்பகன்முடிந்திடுமன்னதுகாண்பான்
பொள்ளெனப்படர்வேலெனப்புந்திகொண்டவன்போ
லொள்ளழற்கதிர்வீசியேயிரவிந்துதித்தான்.

கேட்டீர்களோ! சவுனகாதியிருஷிகளே? இப்படிக்குச் சூரபதுமன் திகைத்திருக்கின்ற காலையில்இரவுகழிந்து கீழ்த்திசையில்விளங்கும் உதயகிரியின் மீதிற் சூரியபகவான்தோற்றிய தெப்படிக்கிருந்ததெனிற் றன்னை மதியாமற்சிறைசெய்த கள்ளனாகியபானுகோபன் இத்தினமிறக்கவிருக்கின்றதால் மனவெழுச்சியுடன் அதைக்கண்டு களிக்க நினைந்துவெளிவந்தவனைப்போலத் தோற்ற ஆயிரங்கிரணங்களைப்பரப்பி யிருளைவாட்டி உலகங்களை விளக்கி ஒற்றைவண்டில் பூண்டு ஏழுபச்சைக் குதிரைகளிழுக்கும் தேரினிடத்திற் றேற்றினர், அக்காலத்தில்வேதவொழுக்கங்களைக் கொன்ற பாதகனாகிய சூரபதுமன்தனக்கடுத்த புத்திரசோபத்தினாலும் பெரியமந்திரியும் வலிபெற்றிருந்த சேனைத்தலைரும் மாண்ட விசனத்தினாலும்வாடியிருக்குங் காரணங்களைக் கொவ்வைக்கனியினும் சிவந்துகாட்டும் விழிகளைப்படைத்திருக்கின்ற தூதர்களிற்சிலர்பார்த்துத் துரிதமாயோடிப் பானுகோபன் வாசமாயிருக்கின்ற அரண்மனையைச்சேர்ந்து இராஜபுத்திரன்திருவடிகளிற் சேவித்து நேற்றையதினம் தேவரீர்போர்க்களத்தைச்சேர்ந்து தூதன்முதலானவர்களை மாயப்படையினால் வாட்டிக் கடலிற்சேர்த்து மீண்டபின்பு அதனைக்கண்டதேவர்கள் பறந்து பாலசுப்பிரமணியனுக்குத் தெரிவித்தமாத்திரத்திற் தமதுசாகையிலிருந்தபடியே திருக்கரத்தில் விளங்கும் வெற்றிவேலாயுதத்தைத் தூதன் முதலாகியவர்களைத் தருவிப்பதாகச் செலுத்தினன், அந்தச்சிறந்த படையானது வெளிப்பட்டவுடன் கோடிசூரியப் பிரகாசமாகச்சொலித்து வானவழிக்கொண்டுபோய் அறுகடல்களையுந் தாண்டிச் சுத்தோதக சமுத்திரத்தைச்சேரவருவதைக்கண்ட தமதுமாயப்படை நிருவகிக்கமாட்டாமற் புறந்தந்தழிந்தது உடனே பிரேதங்களாய்ப் பாதலத்திற் கிடந்த வீரவாகுமுதலானவர்கள் சீவந்தராய் மயக்கவாசனையைக்கடந்து களித்து வெளிவந்து வேலாயுதத்தைப் போற்றிச் சத்தசாகரங்களும் பெருகினாற்போல இரைந்து கெக்கலிகொட்டிக்கொண்டுவான மூலமாய் இவ்விடம் வந்துசேர்ந்தனர், வேலாயுதமும் திரும்பியதாப்பிரகாரம் குமரன்கரத்திற் சேர்ந்தது.

நமதுபட்டணத்துக் கருகில்வந்த பூதவீரர்கள்பிரசண்டமாருதத்தைப்போலவும் வடவாமுகாக்கினியை நிகர்த்

தும் வீராவேசங்களுடன்மேலிட்டு அவ்வாயிலைக் காவல் கொண்டிருந்த படைத்தலைவனையும் சேனைப்பெருக்கையும் பெருங்காற்றிற்பட்ட சருகைப்போலச்சாடித்தும்சப்ப டுத்திக் கோபுரத்தையும் பெயர்த்துக்கடலிற்றள்ளிமதிலையும் உதைத்திடித்து நிலத்திற்சேர்த்துப் பட்டணத்திற் பிரவேசித்துப் பிரசண்டமாருதத்தைப்போலநவரத்தினமயமாகச் சொலித்துக்கொண்டிருந்த வீதிகளனைத்தையும் அல்லோலகல்லோலப்பட வாட்டுவதைச்சக்கிரவர்த்தியறிந்து தன்னருகில்நின்ற யாளிமுகனை அக்கினிமுகனை மூவாயிரவனை பெரியமந்திரியாகிய தருமகோபனையும்அளவற்ற நாற்படைகளுடன் மாறிமாறிச் செலுத்தியகாலையில் அவர்கள் வடவையைப்போலச்சிதிப்போய்க் கொடியபோரைச் செய்துஒருவரன்றியிற் சகலரும்மாண்டனர், இரணியன்மாத்திரம் போருக்கஞ்சியோ மற்றெந்த காரணத்தை நினைந்தோதெரியாது மீனமாய்க் கருங்கடலிலடங்கி யிருக்கின்றனன், இவையனைத்தையும் இராஜாதி ராஜனறிந்து புத்திரசோபத்தி லமுந்திச்சகிக்கப்படாமையால் வாடித்துக்கசாகரத்தில் முழுகிக்கரைகாணுமல்வருந்தியாதுந்தோற்றுது பித்தனைப்போலத் திகைத்து மதிமயங்கி யிருக்கின்றனர், இப்பட்டணத்திற் பெரும்புறக்கடலைப்போல நிறைந்திருந்த சதுரங்கசேனைப்பெருக்கனைத்தும் வறண்டது இன்னமும் சத்துருக்கள்இவ்விடம் விட்டுப்போனவர்களுமல்ல ஆலகாலவிஷத்தினையொப்ப எதிர்த்தவர்க ளனைவரையும் வாட்டி யுலவுகின்றனர், இவையனைத்தும் உண்மையாகிய சேதியென்றுவிண்ணப்பஞ்செய்த காரணங்களனைத்தையும் மனவாட்டத்துடன் இராஜபுத்திரன் கேட்டு நமதுவெற்றியும் சூரமும் செல்வப்பெருக்கும் நசித்துப்போகுங் காலமும் நேர்ந்ததோ வென்றேங்கிக் கோபமும் மானமும் விசனமும் மாறிமாறித் தோற்றப்பட்டு மனதைவாட்டியலைக்க யாதுந்தோற்றுதவனுய்ப் பித்தனைப்போலச் சடுதியிற் சிங்காதனத்தை விட்டிறங்கிப் பொன்வரைக்குச் சமமாக விளங்குகின்றதனது மாளிகையைக்கடந்து பிதாவாசமாயிருக்கின்றநகரைச் சேர்ந்து கிலேசவாரியிற்பட்டலைகின்றமனத்தனுய்ச்சோர்ந்திருக்கின்ற தந்தையின் பாதங்களிற் பணிந்தெழுந்துகரங்களைக்கூப்பி நின்று மனப்பூருவகமாக அடியேன்சொல்லப்போகிற காரணங்களைக் காதுகொடுத்துக்கேட்டு தீர்க்காலோசனைகளைச் செய்து மேல்நடத்தவேண்டிய காரியங்களைக் கிரமமாக முடிப்பிராகில்நன்மையுண்டாகுமெனப் பேசத்தொடங்கினன்.

பிரமகளாகிய மாயைபடைத்தளித்த திவ்வியபாணத்தின் முயற்சியினுற் றூதனுகிய சத்துருக்களனைவரையும் மாய்த்தசுத்தோதக சமுத்திரத்திற்கொண்டுபோய்ச்சேர்க்கச் செய்தேன் அச்சேதியைத் தேவர்கள்மூலமாகத்தெரிந்த பாலசுப்பிரமணியதேவன் தமதுகரத்தில்விளங்கும் வெற்றிவேலினுற் றருவித்தனர், இத்தகையபெருமையைப் படைத்திருக்கின்ற வீரனைக்கனவிலும் வெல்வதரிது இதனைதிடமாக நம்பவேண்டும் இதுவுமல்லாமல் போருக்கெத்தனித்த இரண்டாவதுதினம் தேவரீர்சுதர்விற்பல வெள்ளஞ் சதுரங்கசேனைகளையுங் கூட்டிக்கொண்டுபோய் இரணகளத்திற் பாலசுப்பிரமணிய தேவருடனெதிர்த்துக் கொடியபோரைச்செய்து வலியும்படைகளின் சிறுமிழந்து வருந்திவரியனுய்த் தப்பித்துக்கொண்டிவ்விடம் வந்தபடியால் இதுவரையிலுயிர்பெற் றிருக்கின்றீர், ஐயனேயிதைத் திஷ்டாந்தமாகக் கண்டவுமக்கு நான்விசேஷித்துச்சொல்லவும் வேண்டுமோஅப்போரில் பரமசிவமளித்த சிறந்ததனுசைப் பறிகொடுத்ததுமன்றியில்வரமுயர்சிகளையிழந்து தோல்வியுற்று மானுபிமானமில்லாமற் றிரும்பினை மேலுமிருபாகிதியாகலாற் சுப்பிரமணிய தேவருன்னிடத்திற் கோபங்கொண்டவரல்ல சற்றுமனந்திரிபுகொள்ளுவாராகில் நாமல்லமற்றஅண்டபுவனசராசரங்களுந் தாபரித்து நிற்கப்படுவதோ பிரமனுடனுலகங்களனைத்தையுமுண்டு கருப்பத்தில்வைத்துக் காத்துமீட்டும் வெளியிட்டருளும் இரட்சகர்த்தனுகிய மகாவிஷ்ணு செலுத்திய சக்கரப்படையைக் கழுத்தணியாகத்தரித்தஜயசாலியாகிய சிறியதகப்பன் தாருகாசுரனையும்மாயைக் கரசனை கிரவுஞ்சனையும் வெற்றிவேலினுற்பிளந்துகொன்ற வீராதிவீரனை வலியினுல் வெல்லவல்லவர்கள்யாவரிருக்கின்றனர், பலவீனமாகவிருக்கின்ற சிறுமிருகங்களை யலைத்துத் திரிகின்றவர்கள் அவ்வாறே நினைந்துபுதையிற் படுத்திருக்கின்ற வேங்கையைச்சூழ்ந்து அதற்கினையான கதையைப்போல அளவற்றகாலமாய்த் தீனராகியதேவர்கள் முதலானவர்களைவாட்டி ஜயப்பிரதாபத்தைப் பெற்றிருந்த யாம்குமார சுவாமியைப்பகைத்துப் பழமையாகவிருந்த வலிகுறைந்து மங்குங்காலம் நேர்ந்ததுகுவளைகுருக்கத்தி கடப்பம் புஷ்பமாலையைத் தரித்துப் பரிமளித்திருந்த கலவைச்சாந்தங்களைப்பூசி பொற்பாடகந்தண்டை கொஞ்சும் பாதாரவிந்தங்களையுடைய பாலசுப்பிரமணியர் விஜயத்தைக் குறிக்கவேண்டுவதென்னை அவனுக்கிளவலாய்ச் சேனைத்தலைவனுய் வீரபராக்கிரமத்தைப் பெற்றிருக்கின்ற வீரவாகுவென்பவனை நம்மையொத்த சூரர்களால் வெற்றிகொள்வது மிகவும்அரிதாகவிருக்கின்றதுஇதனைப் பலவிதங்களிற் திஷ்டாந்தமாகக் கண்டிருக்கின்றனம் ஆகலால், அளவற்றகாலம்கழிவதாயினும் கூடுமானகாரியத்திற் பின்னிடையாமல் முயற்சிகொண்டு முடிப்பது விவேகசாலிகளுக் கழகும்ஆண்மையுமாம் தம்மால் முடிக்கவரிய ஒருகருமத்தைச்சரீரம் வருந்தி மனப்பிரயாசைகொண்டு எவ்விதத்திலாவதுநிறைவேற்றலாமென நினைப்பது புத்தியீனருக்கடுத்ததாகும் இதற்குத்திஷ்டாந்தமாகப் புசபலபராக்கிரமசாலிகளாகிய பலபிள்ளைகளை அநியாயமாகப்பறிகொடுத்தனை, சூரபதுமன் படைத்திருக்கின்ற சதுரங்கசேனை வெள்ளங்களுக்குக் கணக்கில்லையென்று உலகினர் புகழவிருந்த பெருமைகளைப்போக்கி மாளக்கொடுத்தது மன்றியில் மதியூகிகளாகிய தருமகோபன்முதலிய மந்திரிபிரதானிகள் வீராதிவீரராக விருந்த சேனைத்தலைவர்கள் மாமன் மைத்துனன் சேர்ந்தசுற்றத்தினர் சிநேகிதர் முதலானவர்களையு மிழந்துதேவரீரும் நானுமாத்திரம் தப்பியிருக்கின்றனமாயினும் நமது மரபைவேருடன் களையக்கூற்றுவன் காலங்கருதிப்பயமற்றுத்தொடர்ந்து திரிகின்றனன்.

இக்காரணகாரியங்களை யெவ்வளவும் மதித்துப்பாராமல் வலிபெற்றிருக்கின்ற கல்லையொருவன் கடிக்கநினைப்பதைப்போலப் பற்பலவெற்றிகளைக்காட்டி யிருக்கின்றஜயசாலிகளை வெல்வதா யின்னமொருகை பார்ப்போமென்கின்ற கவலையைஉறுதியாகக் கொண்டிருக்கின்றனைஐயனே சவுரியவான்களாய்ப் புயவலிக்கொப்பற்றவீராதிவீரர்கள் சண்டைகொடுக்க வந்தெதிர்த்தகாலத்தில் மனப்பூரிப்புடன் வீரசிக்கத்தைப் போல மேலிட் டதம்பண்ண வல்ல

சூரத்தன்மையைப் பெற்றிருக்கின்ற அடியேன் சத்துரு
க்களுடன் பொருவதற்கஞ்சி யித்திறங்களைக் காட்டுகின்ற
னனென்று எவ்வளவும் நினைக்கவேண்டாம் ஓ! இராஜா
திராஜனே தேவரீரின்னஞ் சிலகாலம் தீர்க்காயசாயிருந்
து தேகமும்மனமும் வருந்தி அரிதிற்றேடிய இச்செல்
வப்பெருக்கினை அநுபவித்து அவுணர்மரபு நீடித்திரு
க்கவேண்டுமென்கின்ற ஆசைதூண்டத் துணிந்து இவற்
றை விரித்துக்காட்டினேன் மேலும் பிதாவே இத்தருண
த்துக்கடுத்த உறுதியொன்றைச சொல்லுவேன், கோபி
யாமற் கேட்டருளி நடப்பிப்பையாகில் தேவரீரிதுபரிய
ந்தந்தேடி யிருக்கின்ற கீர்த்திக்கும் செல்வத்துக்கும் வி
ருத்தம்நேராமல் நீடித்திருக்கும் அஃதென்னையெனி
ல், நமக்கஞ்சிக் காட்டிய பணிவிடைகளைச்செய்து வாடி
யிருக்கின்ற தீனராகிய தேவர்கள் பலநாள்களாக அரிய
சிறையி லடைபட் டிருக்கின்ற காவலைப்போக்கித் துரத்
திவிடக் கடவீர் யிதைச் சரவணபவன் கேள்விப்படுவா
னுயில் நம்மிடத்திற் பகைத்துவந்த கோபந்தணிந்து இ
ன்னமும் வேண்டிய வரப்பேறுகளையும் செல்வமுயற்சி
களையுங் கடாட்சித்துச் சகலசேனைகளுடனும் திரும்பிதி
ருக்கயிலையைச் சேருவார், பின்பு ஊழியூழிகாலம் இச்
செல்வச் சம்பத்துக் கழிவில்லாமல் அனுபவித்து பழை
யபடியே வாழ்ந்திருப்பை அப்பாவோ அடியேன்சொல்லி
ய நீதிகளையிகழ்ந்துதள்ளிவிடவேண்டாம்இவைகளைதிரு
வுளத்திற்கொண்டுதீர்க்காலோசனைசெய்துமோசம்வராம
ல்நடப்பிக்கக்கேட்டுக்கொள்ளுகிறேனெனப் பற்பலவிதங்
களில்விரித்துக்காட்டியகுமாரன் வாசகங்களனைத்தையும்
கேட்டவுடன் தும்பைமாலைதரித்த கிரீடம்பொருந்தியமு
டியையசைத்துத் தோட்களுந்தொப்பையுங்குலுங்கநகை
த்து பெருமூச்செறிந்துஅப்பாநீபேசியமந்திராலோசனை
வெகுநேத்திநேத்தி யென்று இதனைச் சொல்லுவதாயின
ன், ஐயனேயென்னகாரியத்தை நினைந்து இவ்விதகாரண
ங்களை நமது முன்னந்துணிந்துகாட்டினை, நீ குறித்தபடி
க்கு இக்காலத்தில் பலஹீனனைப்போலச் சவுரியத்தைம
றந்துபொன்னுலகவாசிகள் வருந்திக்கிடக்கின்ற சிறையை
நீக்கிவிட நினைப்பேனாகில் இனிமேல் இராஜாதிராஜனெ
ன் றென்னையாவர்மதிப்பார் பேதைமைப்பாலராகிய மங்
கையரும் நம்மைச்சட்டைபண்ணாம லிகழ்ந்துபேசவரும்
மேலும்பகைவருக்கஞ்சித்தன்வசப்பட்டிருந்தவனாவிட்ட
னனென்றும் வசைமொழி உலகமுள்ளளவும்தீராமல்நிலை
பெற்றிருக்கும்.

இஃதன்றியும், கூன், குருடு, ஊமை அவையவங்களி
ல் நேர்ந்திருக்கின்ற குறைபாடுகள்சரீரத்துடன்போம்மா
னபங்கப்பட்டுப் பூர்வீகமாகப்பெற்றிருந்த கீர்த்தியும்வெ
ற்றியும் புயவன்மையும் மற்ற சிறப்புகளையும்போக்கி உ
யிரினிடத்திச்சைவைத்து இந்தப்பாழ்த்த உடலைப்போ
ற்றி உலகத்தின் கண்ணொருவனிருப்பானாயில்அவன்பெ
றும் வசையானது எழு பிறவிகளினும் தீராமல் நிலைபெ
ற்றிருப்பதற்கையமு முண்டோ குமாரனே மும்மூர்த்தி
களி லிருவராகவிருக்கின்ற மகாவிஷ்ணு, பிரமதேவனும்
மற்றதேவேந்திரன், அவுணவீரர் ஜயசாலிகளாகிய இரா
க்கதர் முதலாக நமதேவலைக்கடவாமற்போற்றிவர ஆயிர
த்தெட்டண்டங்களுக்கும் அதிபனாய் வெகுகாலம் வாழ்ந்
தேன் திரிமூர்த்திகளிற் றலைமைபெற்றிருக்கின்ற பரமே
ஸ்வர னிடத்தரிய வரப்பிரசாதங்களையும் வச்சிரதேகத்
தையும் எத்தகையராலும் ஜயிக்கப்படாத புயவன்மை
யையும் தீர்க்காயசையும் பெற்றிருக்கின்ற யான் அபலனா
ய் நமது வம்சப்பகைவராகியதேவர்கள்சிறையைவிடுதலை
செய்வதழகோ ஆண்மைக்கடுப்பதோஇவையன்றியும்பே
ரெழில் இளமை, ஆற்றல், பெறுதற்கரிய செல்வம், வீர
ம், ஆக்கை, பிரபலசாலிகளாகியசுற்றம்இத்தகையபொரு
ள்கள் நிலைபெற்றிருப்பதோ, சிறப்பாகச்சொல்லாநின்றகீ
ர்த்திபொன்று மாத்திரம் சலனமற்று நீடூழிகாலம் ஸ்தா
பிதமாக விளங்கும்இதைக்கருதிமேலிட்டு வந்திருக்கும்ப
கைவனைச் சட்டைபண்ணாமலெதிர்த்து அகோரயுத்தங்க
ளைச்செய்து வலிகுறைந் திறப்பேனாயினும் தேவர்கள்சி
றையைவிடுவதுண்டோ மேலும் ஜயசாலிகளாய்ப்பேரறி
வைப்பெற்றிருக்கின்றவர்கள் நடந்துகொள்ள வேண்டிய
நீதியாவது தமக்குநாசகாலம்நேரினும் அளவற்றமனவரு
த்தங்கள் கிடைக்குமாயினும் தாங்களருமையாகத் தேடி
யிருக்கின்ற பூஷணமாகியமானத்தையிழந்துபழிக்காளா
வரோ இரண்டுநாளைய இவ்வுலகவாழ்வைப்பெரிதாகவெ
ண்ணி சக்கிரேஸ்வரனாக விருக்கின்ற நான்கொண்ட பிடி
வாதத்தை விடமாட்டேன் இதுவரையிற் சென்றசென்ற
விடங்களிற் சகலவிதங்களிலும் ஜயப்பிரதாபங்களைப்பெ
ற்றுச் சூரனென்னும் நாமத்தைப்பெற்று விளங்குகின்ற
யான் பலரும்நிந்திக்க இன்னமொருவூழிகாலம் உயிருட
னிருப்பினும் அந்தியத்திலிறப்பதன்றியில் நீடித்திருக்கு
ந் திறமுண்டோ உலகங்களில் ஜனித்திருக்கின்றசீவராசி
கள் சிவபிரான் கட்டளையின்படிக்கு நன்குதீங்குகளை அ
னுபவித்து முற்றியபின்பு நசிப்ப துநிச்சயமெனப்பேசுவ
து பொய்மையோ அப்படிக்கிருக்க மின்னலைப்போலவு
ம் சகடக்காலையொத்தும் மாறிமாறித்தோற்றும் வாழ்வி
னை நிச்சயமாக நினைந்து தேவர்களுக்குப்பயந்து இந்தப்
பிராணனைச் சுமந்திருக்கமாட்டேன் விஷ்ணுவாதியானவ
ர்களைவென்று ஆயிரத்தெட் ண்டங்களினு மென்னாணை
யாக்கினையைச் செலுத்தியொருவரு மெதிரின்றிச்சக்கிரே
ஸ்வரனாய் அரசுசெலுத்திவந்தேன்குமாரனேபாலனுக்கு
ம் தூதனுக்கும் பூதங்களுக்குமஞ்சினைபோற்காணுகின்ற
து ஆதலாற் றுரிதமாய்உன்னரண்மனையைச்சேர்ந்துசொ
ஸ்தமாகச் சாப்பிட்டு சகலசெல்வங்களையும் அனுபவித்து
க்கொண்டு சப்பிரகூடமஞ்சத்திற் றேவியருடன்களித்து
றங்கி யிருக்கக்கடவை நித்தியமாகியவரத்தைப்பெற்ற நா
னெக்காலத்தினு மழிவதில்லை எதிரிகள் புசபலபராக்கிர
மங்களையும் பெருமிதங்களையும் எவ்வளவும்மதித்துமன
வருத்தப்படமாட்டேன் இச்செல்வத்தையுமொருபொரு
ளாக மதியேன்மனதுக்கினியபிள்ளைகள் மந்திரிமுதலான
வர்களைக் கொன்றசத்துருக்களை அதா அதப்படுத்தி வெ
ற்றிகொள்ள இதோபோருக்குப் போவேனென்று அதிக
கோபத்துடன் சூரபதுமன்சொல்லக்கேட்ட பானுகோப
ன் மனம்வருந்திஇனிபிழைக்குந்திறமில்லையாதலாற்பிதா
வுக்குப் பலதிஷ்டாந்தங்களைக்குறித்துக்காட்டியபோதினு
ம் அதனைஉண்மையாகக் கொண்டவனல்லன்விதிவலியை
வென்றவர்கள் யாவருமில்லை பிராரத்வவினைச் சம்பந்தங்
களுக்கடுத்த காரியங்கள்முடிய விருக்கின்றதென்று மன
தில் நிச்சயித்துஇதனைச் சொல்லுவான்.

அகண்டமண்டலாதீஸ்வரனாகிய பிதாவேதேவரீர் மகி
மைகளைச் சிறிதுமறியுந் திறனில்லாத நாயினேன்பேசிய
குற்றமாகிய வசனங்களைக் கொஞ்சமாவதுமனதிற்கொள்

ளாமற் பொறுத்தருளவேண்டும் அறிவு விளங்காதபாலர்
தியவசனங்களையாடினும் புத்திரவாஞ்சையினுற் பிதாவா
னவன் மழலைச்சொற்களாகப் பாவித்து விரும்பிக்கேட்ப
தல்லது கோபிப்பரோ அவ்வாறேநினைந்து அடியேனிடத்
தில் எத்தகையகுற்றங்களிருப்பினும்க்ஷமித்தருளவேண்
டும் இந்தநிமிஷத்திற்போய் நமதுபதியையலைத்திருக்கின்
ற பூதப்படைகள் தூதன்முதலானவர்களைக் கண்டதுண்
டப்படச்சாடிக்கொன்று உமது திருவுளமகிழும்படிக்குச்
செய்யக்கடவேன் செலவுகொடுத் தனுப்பவேண்டுமெனக்
கொடியபாதகனுகிய சூரபதுமன் பாதாரவிந்தங்களில் வ
ணங்கிக்கரங்களைக்கூப்பி நின்றிரந்தகாலையிற் பதுமகோ
மளைகணவன் கோபந்தணிந்து மனவெழுச்சியுடன்குமா
ரனே உன்மனம் சண்டைகொடுக்கப் போகத்துணிந்த
தோ நல்லகாரியம் இனிஎன் மனக்கவலைநீங்குங்காலம்நே
ர்ந்தது சத்துருக்களனைவரையும் ஜயங்கொள்வதாகச் சது
ரங்கசேனைகளையும் கூட்டிக்கொண்டு போகக்கடவையெ
னக் கட்டளையிட்டவுடன் செலவுபெற்று அளவற்றதுக்க
சாகரத்திற்பட்டு மனவருத்தத்துடன்தன்திருமாளிகையி
ற்போய் ஆயுதச்சாலையிற் பிரவேசித்துத் தேவர்கள்தனக்
குக் கடாட்சித்திருந்த திவ்வியபாணங்களைச்சேகரித்துவே
லையொத்த விழிகளையுடைய மங்கையர் கொங்கைகளழுந்
தும் விசாலமாகிய மார்பினிடத்தில்வயிரக்கவசத்தைப்பி
கிந்து விரற்கோதைகளைமாட்டி மேருவையொத்தலுப்பற்
ற வில்லைக்கரத்திற்கொண்டு திவ்வியபாணங்க ளடங்கியி
ருக்கின்ற அம்புருத்தூணியை முதுகிற்சேர்த்து வீரவா
ளாயுதத்தை மடியிற்செருகி வீரபட்டத்தினை நெற்றியிற்
கட்டி இவ்விதபோர்க்கோலத்தைத்தாங்கினவனுய்க்கடை
வாயிலினிடத்தில்வந்து பரிசனர் கொண்டுவந்து நிறுத்தி
ய சொர்னமயமாக விளங்குந்தேரின்மீதில் மேருவினிடத்
திற் சூற்கொண்ட மேகம்படிந்திருப்பதைப்போலத் தா
வியேறிமண்டிபோட்டுட்கார்ந்தான் இதற்குமுன்னம் தூ
தரோடி அறிக்கையிட்டபடிக்குக் கணக்கிறந்ததேர்கள்ம
தயானைகள் தத்தித்தாவும் புரவிக்கூட்டங்கள்சவுரியவான்
களாகிய இராட்சதர் சர்வாயுதபாணிகளாய்த்தங்களிறைவ
னைச்சேர்ந்து வந்து பெரும்புறக்கடல்பெருகி வருவதை
ப்போல இரைந்துவந்து கூடினர், அக்காலையில் ரணபே
ரி, ஜயபேரி, வெற்றிச்சங்கமுதலிய பல்லியங்கள் திசைக
ளதிர முழங்கவும் துவசங்கள் வானவழியை மறைத்துச்
சூரியனொளியை மாற்றவும் இவ்விதச் சேனைப்பெருக்கி
ன் மத்தியில் பானுகோபன் பிதாவினிடத்திருக்கும்அன்
புந்துக்கமும் மனதைவருத்தியலைக்க அரிதிற்பட்டணத்
தைக்கடந்து பகைவர் வடவையைப்போற்சீறி யெதிர்பா
ர்த்திருக்கும் ரணக்களவெல்லையைச்சேர்ந்துமூவாயிரந்த
ம்பியர் மற்றமந்திரிகள் முதலானவர்கள் மாண்டுகிடப்ப
தைப்பார்த்து மனம்வருந்திக் கிலேசித்து அவர்கள்வீரப
ராக்கிரமங்களை நினைந்து நினைந்துகளைத்துவரும்மனதை
த்தேற்றிப்பகைவர்மீதுஅதிககோபக்கொண்டவனுய்ஜயவு
ற்சாகங்களுடன் ஆர்ப்பரித்துநிற்கின்ற பூதப்படைகளையு
ம் படைத்தலைவரனைவரையும் துச்சம்பண்ணித் தூதனை
யும்கருவமடக்காமற் போவேனுகிற் பீதாம்பரத்தினைத் த
ரித்திருக்கின்ற நிதம்பத்தைப்படைத்து மயக்கும்வேசிய
ரிடத்திற் காமுற்றுஅவர்கள் பின்பற்றித்தொடர்ந்துதிரி
யும் பதிதன்பெறுங்கதியிற் சேருவேனென்று கொடியபி
ரதிக்கினையைச்செய்து நெருங்கிவருவதைப்பூதவீரர்கண்
டு வருகின்றவன் அவுணர் பெருமான் மூத்தபிள்ளையாக
வேண்டும் அல்லதுஇவ்விதவீருப்புடன் இராட்சதப்பா
தகர் வரமாட்டார்களெனப் பேசிக்கொண்டிருக்கின்ற கா
லையிற் சூரன்சேனைகள் பிரசண்ட மாருதத்தைப்போலக்
கெக்கலிகொட்டிக்கொண்டுபிறவாத்தியங்களுங்கணகணெ
ன்றதிரத் தூளிபடலமானது பெருகித்திசைகளையும் கட
ல்களையும் நிறைத்துப் பொன்னுட்டையும்மண்ணுலகமா
க்க மேலிட்டதைக்கண்ட பூதர்சண்டைகிடைத்ததென்கி
ன்ற சந்தோஷத்தினுல் பருவதாகிருதியாகிய புசங்களைத்
தட்டிப் பாய்ந்து பக்கங்களிலிருக்கின்ற பருத்தமலைகளை
ப் பறித்துப் பகைவர்மீது பந்தையொப்பக்கடாவியும் த
ழைத்திருக்கின்ற விருட்சங்களைப் பிடுங்கிக்கிறுகிறெனச்
சுழற்றிச் சாடியும், இருப்புலக்கை, வளைதடி, தண்டாயு
தமாதிய படைகளை யொன்றனந்தமாகச் செலுத்தியும் சி
ருங்கநாதங்களைச் செய்த காலையில் இராட்சதவீரரும்கா
ட்டமூலைப்போலக் கொதித்து எழுவாயுதம், மழுவாயுத
ம், பிண்டிபாலம், கப்பணம், முசலம், சக்கரம், சூலம்,க
ணிச்சி தோமரமுதலிய ஆயுதவிதங்களை ஒன்றனந்தமாக
ப் பகைவர்மீதில் வீசியும்நீண்டவிற்களைவளைத்துநாணே
ற்றி அமோகமாகிய கொடியபாணசமோகங்களைக் கார்கா
லமேகங்களுக்குமேலாகச்சொரிந்தும் வாளாயுதங்களைக்
கொண்டு வெட்டியும் ஈட்டிகளினுற் குத்தியும் இவ்விதங்
களாக விருதிறத்துச் சேனைகளுங் கைகலந்து ஒருவரை
யொருவர் வெற்றிகொள்ளவேண்டுமென்கின்ற வீராவேச
ங்களுடன் போராடுவதைப்பார்க்குமிடத்தில் காடாந்தகா
ரமாகிய விருட்பெருக்கும் பிரகாசம்பொருந்திய பகலும்
பகைத்துப் போராடுவதைப்போலக் காட்டியது.

இவ்விதமாகச் சண்டைகொடுக்கின்றபோது பூதர் செ
லுத்திய மலைகள்மராமரங்கள் வீறியிரைந்து வருவதைஇ
ராட்சதர்கண்டுரவுத்திராகாரமாகக் கோபித்துப்பலகணை
களினுற் கண்டித்துத் தள்ளி மேலும்கணக்கிறந்தநாராச
ங்களையும் ஆயுதங்களையும் கரவேகமாகச் செலுத்திய கா
லையில் அவைகள்ஒன்றுடனென்றுராய்ந்து தீயைப்பெரு
க்கிப் புகைகளைவீசி மேலிட்டுவரும்போது பூதவீரர்கள்
ரவுத்திராகாரமாகக் கோபித்துச்சீறி பருத்தமலைகளையெ
றிந்து துகள்கண்டும் சுள்ளிகளைப்போலப் பற்றிமுறித்து
ம் துகளெழப் பிசைந்தூதியும்கரங்களினுற்றட்டியும்மரா
மரங்களினுற்சாடியும் இவ்விதமாக வாட்டுமுன்னிலையிற்
செவ்வானத்தைப்போல விளங்கும் சிகையையுடையஅவு
ணச்சேனைகள் கலங்கித்தலைகளற்றும் மண்டைதிறந்தும்
மார்புபிளந்தும் நெற்றிவெடித்தும் புயங்கள் சரிந்தும்கர
ங்கள்முறிந்தும் வீரகண்டைதரித்த கால்களொடிந்தும்ர
ணக்களமுற்றினும் பிணப்போருகளாக விழுந்தபோதுஇ
ராட்சதரும் பின்னிடையாமற் சாடியதினுல் பூதர்களும்
சின்னபின்னப்பட்டுக் கண்டங்களற்றும் விழிகள்பிதுங்கி
யும் மூளைகளிறைந்தும் வயிறுபீறுண்டு சர்ப்பங்களைப்
போலக் குடல்களிறைந்தும் மலைகளைப்பற்றிய கரங்கள்க
ண்டிக்கப்பட்டு விழவும் பருத்தகால்கள் முறிந்தும்இப்ப
டிக்குப் பலர் மாண்டனர், பூதவீரர் மோதிய தாக்கலினு
ல் பகைவரேறிவந்த தேரணிகள் உருளை அச்சு, மச்சு,கு
த்துக்கால் கொடுங்கைகள் வெவ்வேருக நுறுங்கியும் நீல
கிரிகளையொத்த காத்திர தேகத்தைப்பெற்றமதயானைகள்
துதிக்கைகளற்று மத்தகம்பிளந்துகோடுகளிற்றுப்பாகனு
ருண்டுமாளவும் தத்தித்தாவி அலைகளைப்போலப் பாயும்

புரவிப்பந்திகள் பிடரிமயிரலையக் கழுத்தற்றும் கடிவாளம் பறந்தும் கல்லணை நுறுங்கியும் வண்டையங்கள் கலிக்கும் கால்களொடிந்து மங்கவும் இவ்விதமாக உபயசயின்னியங்களுங் களத்திற்பட்ட காலையிற்பெருகிய உதிரப்பிரவாகமானது ததும்பியிணைந்து அலைகளைவீசிப்பாய்ந்து கருங்கடலைச் செங்கீராக்கிமேலிட்டு பூமண்டலமெங்கணுமோடவும் நால்வகைச்சேனைகளும் பூதரும் பட்டபிணங்கள் பருத்தமலைகளைப் போலக் களமெங்குங்குவியவும் ஓரிகளின் கூக்குரலும் நாய்களின் குலைப்பினொலியும்பெருத்துக் காட்டவும்கழுகு, பருந்து, காக்கைகளின்பெருக்கும் மேலிட்டுலாவவும் கணக்கிறந்த கவந்தங்கள்எங்கணுங் கூத்தாடவும் இவ்விதமாக விருபடைகளு ம்மாளுமுன்னிலையில் இராட்சதசயின்னியங்கள் வடவையைப்போல மண்டியெரிந்து மேல்விழுந்து சாடுவதற்காற்றாமல் மிகவும்வருந்திப் பூதப்படைகளில் முன்னணிமுறிந்துவருவதைக்கண்ட புரவணியில் நின்றவீரர்கள் வடவைக்கனலையொப்ப மண்டியெரிந்து பிரளயகாலத்திற்சாகரங்கள்பெருகி உலகங்களை வளைவதைப்போல இராட்சதப்பாதகரைச் சூழ்ந்துகொண்டு பாரித்த பருவதங்களளவற்றதைப்பறித்தெறிந்துசாடியும் திசைகளைமூடியிருந்த விருட்சங்களை வேருடன் பிடுங்கிச் சக்கிராகாரமாகச்சுழற்றித் தும்சப்படமோதியும், ஆயுதவிதங்களினாற்கண்டித்தும் திருப்பாற்கடலைக் கலக்கியமந்தரத்தைப்போல விராட்சதசேனாசமுத்திரத்தை அலைக்கின்றபோது மிகுதியாகவிரிந்துபருத்த தேரணிகள் நுறுங்கியிறைந்தும் மும்மதக்களைப்பெருக்கி வீறிட்டுஇருப்புலக்கைகளைத் துதிக்கையிற் பற்றிப் பகவனைவாட்டியுலாவிய யானைக்கூட்டங்கள்கண்டதுண்டப்பட்டுமாண்டும்வானத்தினும் திசைகளினும்கடல்களினும்வாயுவைப்போலப் பாய்ந்துலவியபுரவிப்பந்திகள் சின்னபின்னப்பட்டுச்சிதையவும்ரவுத்திராகாரமாகக்கோபித்து அஸ்திரசஸ்திரங்களைச் சோனைப் பெய்யலையொப்பப் பொழிந்துலவியஅவுணப்படைகள்அதப்பட்டும் அரையுண்டும் பின்னப்பட்டுநாசமடையவும் இவ்விதமாகத் தன்சேனாசமுத்திரம் அல்லோலகல்லோலப்பட்டு மாண்டும் சிதறியுங்கலைந்தும்மறைவதையும்பூதப்படைகள் அதிகசெருக்குடன்வீறிமேலிட்டுஆரவாரங்களைச்செய்துலவுவதையும் ரணரங்கசூரனாகியபானுகோபன்கண்டுநீடூழிகாலமாய்ஜயப்பிரதாபத்தைப்பெற்றிருக்கின்றஅவுணரைக்குறியபாதங்களையுடைய அபலாரனபூதரிப்படிக்குச் சாடும்காலமும்நேர்ந்ததோஐயையோ இதற்கென்னசெய்வேனென்றேங்கிமானமுங்கோபமும்மனதைவாட்டியலைக்கரவுத்திராகாரமாகச் சீறிச்சொர்ணமயமாய்இரத்தினகாந்திகளைவீசிக்கொண்டிருக்கும்பாரித்ததன்தேரையதிவேகமாகத் துரத்திவந்து முன்னணியைச்சேர்ந்துமந்தரத்தையொத்த பருத்தவில்லைவளைத்து நாணேற்றிபிரசண்டவாயுவின் மோதலினாற் சத்தசாகரங்களும்பெருகிக் குமுறுமாறுபோல டங்காரசத்தத்தைக்காட்டி விஷத்தொவையலிட்டிருக்கின்ற கொடிய பாணகோடிகளைச் சோனைப்பெய்யலைப்போல எவ்விடங்களினுந்தூவிக்காலாந்தகனையொப்பச் சூரன்பிள்ளை செய்துவரும் சேவகத்திறத்தைப் பூதப்படைகள் தெரிந்தவுடன் வடவைக்கனலைப்போலப் பொங்கிக் கள்ளன்வந்தான்வந்தானென்றேசித் சத்துருக்கள் மனந்திடுக்கிட்டு வாடத்தக்கதாகச் சிருங்கநாதங்கள் அட்டகாசங்களைச்செய்து நாலுதிக்கினும் வளைத்துக்கொண்டு பருவதங்கள் குன்றங்கள் விருட்சங்கள் தண்டாயுதம். வளைதடி யிருப்புலக்கைமுதலியபடைகளை அமோகமாகத்தூண்டிப் பகைவன்செலுத்திய பாணவிதங்களைத் துகள்படுத்தி மேலிட்டுவருவதைப் பானுகோபன்கண்டவுடன் கோபதீபிதனாய் விஷச்சுவாலையை வீசித்தகிக்கவல்ல கொடிய சரவருஷங்களைக் கரவேகமாகத் தூண்டிப் பகைவர் செலுத்தியவைகளனைத்தையும் கண்டதுண்டப்படவெட்டித்தள்ளி மேலுங் கணக்கிறந்த திவ்வியபாணகோடிகளைப் பிரயோகித்ததருணத்தில் குறுகுறுத்த தொனிகளுடன் அனலையிறைத்துக் கடுகிவந்துபுற்றினிடத்திற் சர்ப்பங்கள் நுழையுமாறுபோலப் பூதர்சரீரங்களிற்றுக்கித் தடாரித் துருவிப் பாதிக்கும்போது பலகாயங்களினால் வருந்தி மனச்செருக்கற்று வலிகுறைந்து ஆதியில் அகஸ்தியர் தண்டத்தினாற் றெளைபட்ட கிரவுஞ்ச பருவதத்தைப்போலத் தேசமெங்கணுஞ் சல்லடைக்கண்களாக மோதப்பட்டு உதிரம் பீரிட்டோட நிற்பதைப் பார்க்குமிடத்திற் கன்னானுலையிற் காயப்பட்ட மூசையிலகப்பட்டுருகியிருந்த செம்பானது பலதிசையினும்ஓடுமாறுபோலக்காட்டியது.

இந்தவிசயத்தை முன்னம் கலைந்தோடிய இராட்சதப்பாதகர் தெரிந்தமாத்திரத்தில் மனக்கவலையற்றுவீராவேசங்களுடன் பலதிசையினுமிருந்து ஆரவாரங்களைச்செய்துவந்து தமதிறைவனாகிய பானுகோபனைச் சூழ்ந்தவர்களாய்த் தண்டாயுதம், கணிச்சி, தோமரம்,பிண்டிபாலம், எறியீட்டி, சக்கரம், வச்சிராயுதம், சூலமுதலியபடைகளையும் கொடிய பாணசமோகங்களையும் ஒன்றனந்தமாகப் பிரயோகித்து வாட்டும்போது அக்கொடுமைக்கஞ்சித் தாபரித்துநின்று போராட நிருவாகமற்றுச் சுப்பிரமணியதேவர் படைமுறிந்து பின்னிட்டதையும் பானுகோபன் சவுரியப்பெருக்கையும் இராட்சதப்படைகளின் ஜயவுச்சாகங்களையும் வீரவாகுதேவர்கண்டு விழிகளிற்றீப்பொறிகள் சிதறச்சீறித் துரிதமாகத்தமதுதேரை அந்தமுனையிற்றுரத்திவந்துநிறுத்தித் தேவாதிதேவனாகியசிவகுமாரன் திருவடிகளைச் சிந்தித்துப்போற்றி மேருவையொத்தபருத்ததனுசைவணங்கி நாரியைப்பிகிந்து இராட்சதப்பெருக்கானது திடுக்கிட்டுச்சோரும்படிக்குக் குணத்தொனிசெய்து மேலிடுவதைச் சூரபதுமன் சயின்னியங்கள் பார்த்தவுடன் காலாந்தகனைப்போலக் கொதித்து விற்களை வட்டாகாரமாக வளைத்து விஷத்தையொத்தகொடிய பாணங்களைச் சொரிந்தும், பிண்டிபாலம், முசலம், தோமரம், சக்கரம், கவண்முதலியபடைகளை அமோகமாகப் போக்கி அண்டங்களதிரக் கொக்கரித்தனர், அக்காலத்தில் வீரவாகுதேவரும் மேகத்தையொத்த தமதுவில்லிற் சரவருஷங்களைப்பெய்து பகைவர்விடுத்த அஸ்திரசஸ்திரவிதங்களை நடுவதிபாதியிற் கண்டித்து மீட்டும்காட்டழலைநிகர்த்த சிலீமுகங்களையுஞ் சங்கோபசங்கமாகத்தூண்டியகாலத்தில் அவைவெளிப்பட்டவுடன் தீயையும்புகையையும்பெருக்கி விஷச்சுவாலையைவீசி வேகமாயோடியிராட்சதப்படைகளின்மீது தாக்கியகாலத்திற்றலையற்றும், மார்பிற்றும், துடைமுறிந்தும், மறிந்தும், இரைந்துதும்சப்படவும் தேரணிகள் பலதுண்டங்களாகப் பிளந்திறையவும் மதயானைக்கூட்டங்கள் சதைசதையாகக் கண்டிக்கப்பட்டுச்சாகவும்அலைகளைப்போலத்தாவும் வேகமுள்ளபுரவிப்பந்திகள் சின்னபின்னப்படமங்கியும் அக்காலையிற்

பெருகிய உதிரப்பிரவாகத்தை பேசவும் மனம் நடுங்குகின்றது இப்படிக்கு வீரன் சினமிகுந்துவாட்டும்போதுமாண்டவர்களன்றியில் மற்றவிராட்சதர் திகைத்துமருண்டுபயபீதியினால் மானமழிந்துதிசைகெட்டோடினர்.

இவ்விதமாகத் தன்சேனைகள் சிந்தியதைப்பார்த்து பானுகோபன் மனம்வருந்தி பாகனைக்குறித்து இங்கநிமிஷத்தில் நமதுதேரைப் பகைவனெதிரிற்கொண்டு போனவையெனச் சொல்லிமுடிவதன் முன்னம்துரத்திவந்துசேர்த்து ஆர்ப்பரித்தபோது குதிரைகளுங் கனைத்துத் தாவுகின்றது, இதைக்கண்டவீரன் சாரதியைத்தேரை எச்சரிக்கையாய்க் குறிப்பின்வண்ணம் தூண்டக்கடவையெனக்கட்டளையிட்டுக் கொக்கரித்தமாத்திரத்திற்குதிரைகள் அனுமானித்து வீறியிருந்தது, அப்போது சூரியகாதகன் தன்வில்லினரியையிறுக்கி யிடக்கரத்திற்கொண்டு வலக்கரத்தில் திவ்வியபாணங்களைப் பற்றினவனுய்க் குமாரதேவர்சகோதானைத் தியெழவுருத்துப்பார்த்துஅடா தூதனே? சமுத்திரத்தைப்போல இரைந்து சூழ்ந்திருந்தநமதுசதுரங்கசேனைகளையும் முன்பின்பாராமற்கொன்றனை இனி நீ பிழைத்துப்போவதரிது உன்பிராணனை பதைபதைக்கவாட்டி யமலோகத்துக் கிந்தநிமிஷத்திற்சேர்ப்பேன் பதனமாயிருந்துசண்டைகொடுப்பையெனக் குறித்தவசனத்தை வீரவாகுதேவர்கேட்டு நகைத்து அடாபதிதனேஎன்வீண்வார்த்தையாடுகின்ரு யிறப்பவனையும் போருக்கஞ்சிப் புறந்தந்தோடுபவனையும் உன்னையொத்தவன் இக்களத்திற் படப்போகிற சின்னங்களையும் வானத்தில்நின்று பார்த்திருக்கின்ற தேவர்கள்கணித்துப் புகழவிருக்கின்றனர், ஆதலாற் றுரிதமாக வுன்னாற்கூடிய சண்டையைச்செய்யக் கடவையெனச்சொல்லியவார்த்தை நாராசங்களைப்போலச் செவிகளிற்பட்ட மாத்திரத்தில்வடவையைப்போலச்சீறித் தன்வில்லில் ஆயிரங்கூரிய சரங்களைச்சந்தித்து வீரவாகுதேவர்மார்புக் கிலக்காகத்தூண்டிக் கொக்கரித்தகாலையில் அவைவெளிப்பட்டபோது விஷச்சுவாலையைக்கக்கிக் காற்றினுங்கடுகிச்சென்றுவிசாலமாகியமார்பிற்றைத்துத் தடாரித்துருவி முதுகின்மூலமாயோடியது அக்காயத்தில் உதிரம்பீரிட்டோடவருந்திநல்லகாரியமெனத் திருமுடியையசைத்துக்காளகூடத்தைப்போலக் கொதித்துத்தேவர்கள் புகழத்தக்கதாகக் கற்சித்து கனன்றிருக்கின்ற திட்சண்ணியமுள்ள கொடியபாணவிதங்களைத் தேடியெடுத்து ஆயிரத்தையொரு கொடையாகத் தனுசிற்பூட்டி பருவதாகிருதியாகப் பருத்து வலிபெற்றிருக்கின்ற பானுகோபன் புயங்களுக்குக் குறிகொண்டு கரவேகமாகப்போக்கிச சிருங்கநாதஞ்செய்தமாத்திரத்தில் அப்படைகள் அதிசமகிமைகளைக்காட்டிச் சீறி வேகங்கொண்டுபோய்ச் சல்லடைக்கண்களாகத் துளைத்துருவி யோடியபோது உதிரமானது பெருக்கெடுத்தோடவாட்டும் உபத்திரவத்துக்குச் சற்றும்வருந்தாமல் தீரனுப்பொங்கித் தட்சணத்திற் கூர்மையுள்ள நூறு அர்த்தசந்திரபாணங்களைப்போக்கி வீரவாகுதேவர் கரத்திற்பிடிபட்டிருந்த வலியவில்லைப் படாலுமென இருகூறுகக்கண்டித்துத் தள்ளினன், இந்த அபஜயத்தைத் தெரிந்த தேவர்கள் உற்சாகமடங்கிமிகவும்வருந்தினர்.

அக்காலத்தில் வீரன் திடசித்தனுய்க்கூரியவேற்படையொன்றையெடுத்து வலிகொண்டு பாதகன்நெற்றியினிடத்தில் வீசியகாலையில் விஷச்சுவாலையை வீசிக்கொண்டுபாய்ந்து திலதப்பொட்டிட் டிருப்பதைப்போலத் தடாரித்துருவிச் செவ்வானம்நிலத்திலிறங்கியதுக்குச் சமமாக உதிரம்பெருகிப்பரவ அப்பாதகன் கணப்போது மதிமயங்கியாதொரு செய்கையுமற்று நின்றனன், அத்தருணத்தில் வீரவாகுதேவர் வேறொருவில்லையெடுத்து வளைத்து நாணேற்றித் துரிதமாய் வாயுவாஸ்திரத்தை யெடுத்துச்சந்தித்து மந்திரபூர்வகமாக விடுபட்டுச்செலுத்தியவுடன் பானுகோபன் சோபந்தெளிந்து வருகின்றபடையின் பெருமிதங்களைமதித்துத் தட்சணத்திற்றுனும் வாயுப்படையைப்போக்கி மறித்தனன், உடனேவீரன்சீறி அக்கினியாஸ்திரத்தைப் போற்றிவிட்ட காலத்தில் வானத்தெழுந்து பக்குபக்குமென்றெரிந்து கொடியசுவாலையை வீசிவரும்போது பானுகோபனும் தன்னிடத்தி லிருக்கின்ற அந்தத்தேவபாணத்தைப் பிரயோகித்துத் தடுத்தனன், அவைகளிரண்டும்சற்றுநேரம் போராடித்திரும்பிவிட்டது உடனே பானுகோபன் தெரிந்து சூரியாஸ்திரத்தைப் பூசித்துச் சத்துருவின் பிராணனையுண்டுவருகவெனக் கடாவினன், அதன்வுக்கிரத்தையும்வேகத்தையும்வீரவாகுதேவர்கண்டுதுரிதமாய்அந்தப்பாணத்தைக்கொண்டு தடுத்தனர், அப்போது பானுகோபன் வடவையைப் போலச்சீறிப் பிரமசரோருகப் படையையெடுத்துவிதிப்படிக்கு மந்திரபூர்வகமாகச் செலுத்தியபோது பற்பலதிவ்வியபாணங்களைப் படைத்துத்தீயையிறைத்துவானமெங்கணும் நிறைந்து குமுறிக்கொண்டுவருவதை வீரன்பார்த்து அந்தத்தேவப்படையைச் செலுத்தியபோது இரண்டு மொன்றுடனென் றுசீறிக் கொடியபோரைச்செய்து மீண்டது, அத்தருணத்தில் இராஜகுமாரனுக்குஅதிகோபம்பிறந்து இதனால் நாசமடையக் கடவையென்றுநாராயணாஸ்திரத்தைத்தொட்டு வழிபாடுகளை நிரப்பிப் போக்கியபோது அதிகமகிமைகளைக்காட்டித்தீயையிறைத்துமின்னியிடித்து வடவையைப்போலச்சீறி மேலிட்டுவருவதைச்சிவகுமாரன்பார்த்துத் துரிதமாய்க் கேசவன்படையையெடுத்துப் பூசித்துப்போக்கினர், அவ்விரண்டும்செய்த போரின்பெருக்கை இன்னவிதமெனச் சொல்லிமுடியாது கடையில் மின்னலைப்போல மறைந்துபோயது அதனைக் கண்டபானுகோபன் மனம்வருந்தி யாதுந்தோற்றுமல் இதனை நினைப்பதாயினன்.

நானருமையாகத்தேடிவைத்திருந்த தேவப்படைகளை விடவிடச் சற்றுமஞ்சாமல் மாறேவித்தடுத்துவிட்டனன் இனியென்ன செய்வேன் ஆதிதேவனுகிய பரமன்படை ஒன்றுமாத்திர மிருக்கின்றது அந்தத்தெய்வீகபாணத்தைப்பகைவனும்பெற்றுவைத்திருக்கின்றனன், இத்தருணத்திற் பாசுபதத்தைச்செலுத்துவேனுகிற் பகைவனும் அப்படையைத்தூண்டுவன் இதனால் உலகங்கள்வருந்தியலைவதன்றியிற் பலப்பிராப்தியைக் காணவில்லை, ஆதலால் இனிமாயைப்பெருக்கினால் இந்தவீரனைபிரமிக்கச்செய்து வெற்றிபெறவேண்டுமல்லது மற்றொருதந்திரமுங்கண்டிலேனென்று தீர்மானித்தவனுய்ச் சுக்கிராசிரியன் தனக்குப்போதித்திருந்த ஜகன்மோகனமென்னும் மந்திரத்தைத் துரிதமாகஜபித்து அதன்முயற்சியினால் தேருடன்மறைந்து யாவருக்குந்தோற்றுமற்சக்கிராகாரமாக நாலுமூலைகளினு முலவிக்கணக்கிறந்த கொடியபாணவகைகளைஒன்றின்பின்னென்றுகச் செலுத்தத்தொடங்கினன்,

அவைகள் கோடைகாலத்து மழைத்திவலைகளைப்போல
வீரவாகுதேவர்மீது பாய்ந்து மயிர்க்கால்கடோறும் பா
ய்ந்துருவி உதிரத்தைப்பெருக்கி வாட்டுவதைத் தேவர்க
ள்கண்டு வீரன்படுந்துன்பத்துக் கிரங்கிப் பாதகன்செய்
கின்ற வஞ்சகப்போருக்கஞ்சி நாமிவ்விடத்தி லிருப்போ
மாகில் நம்மையுமென்ன செய்வானோவென்னும் பயபீதி
யினால் அத்தலத்தினைக்கடந்து மேலுலகங்களி லோடிப்
பதுங்கிப் பார்த்திருந்தனர், பூதப்படைகளும் கைகாலா
டப்படாமல் சிக்குப்பட்டுப் பாதகன் தூவுகின்றவாளிக
ளினாற் கண்டதுண்டமாக வெட்டுண்டும் மாண்டும்சோர்
ந்தும் பலதிசையிலுமிறைந்தும் இவ்விதமாக ரணக்கள
த்திலொருவருந்தோன்றாமல் மறையவும் இலக்ஷர்எண்ம
ர்படைத்தலைவர் பலகாயங்களைப்பட்டு வருந்தித்திகைத்
துப் படாதபாடுகள்பட்டு நிற்கின்றபோது வீரவாகுதே
வருக் கதிககோபம்பிரவேசித்துக் கொடியதுன்மார்க்கனா
கிய பானுகோபன் முன்னமுமிவ்வாறே மாயையினாற் ற
ப்பித்துக்கொண்டோடிப் போயினான், இக்காலத்தினும்
அவ்வாறேயெண்ணி நம்மவனைமிகவும் வருத்துகின்றன
ன் இனியிவனைவைக்கலாகாது துரிதமாய்க்கொன்று ஜய
ப்பிரதாபத்துடன் பாலசுப்பிரமணியதேவர் பாதாரவிந்த
ங்களைச் சேவிக்கப்போவேனெனத் தீர்மானித்தவராய்ப்
பாதகன்மாயையின் பெருக்கை வாட்டக்கருதி ஞானப்ப
டையையெடுத்துப் பத்தி பூருவகமாகவழிபாடுகளைநிரப்
பி வில்லிற்பூட்டிப் பிரயோகித்தகாலையில் இருளைவாட்
டிப் பகலைவிளக்கும் சூரியனைப்போல சொலித்துச்சீறிப்
பாய்ந்து இராஜகுமாரன் செய்திருக்கின்ற மந்திரமுயற்
சிகளனைத்தினையும் அதப்படுத்தி வீறியமாத்திரத்தில்சூ
ரியனெதிரிற்பட்ட பனிப்படலத்தைப்போல பகைவன்
வஞ்சகங்களனைத்தும் பறந்துபழையபடிக்குவெள்ளிடை
யாகத் தோற்றியகாலத்திற் பானுகோபன் ரதாரூடனாய்
வானத்திற் காட்டியபோது தான்செய்த மாயையழிந்த
தையும் வீரவாகுதேவர் சாமர்த்தியங்களையும்பார்த்து ம
னம்நொந்து வருந்துவதைத் தேவர்களறிந்து மனவுற்சா
கங்களுடன் வீரன்தந்திரங்களைக் கொண்டாடிப்புகழ்ந்தி
ருந்தனர், அத்தருணத்தில் வீரவாகுதேவர் வானத்தில்
நிற்கின்றசூரகுமாரனை உருத்துப்பார்த்துஅடாகள்வனே
இனியெந்தமூலமாகத் தப்பிப்போவை இதோஉன்னரிய
பிராணனைவாங்கி வீரசொர்க்கத்திற் சேர்ப்பேனென்று
சீறிச்சாரதியையெச்சரித்தகாலத்திற் குதிரைகளையதட்டி
விண்ணிடத்திற்பகைவன்முன்னந் தேரைக்கொண்டுபோ
ய்நிறுத்தினன், அக்காலத்தில் வில்லையிறுக்கிச் சங்கோப
சங்கமாகச் சரவருஷங்களைப் பகைவன்மீதிற் சொரிகின்
றபோது பானுகோபனுந் தீரனாய்த் தன்காண்டீபத்திற்க
ணக்கிறந்த கொடியபாணங்களைசந்தித்துப் பொருகின்ற
காலையில் இவ்விருவீரரும் செலுத்துகின்ற பாணகோடி
களின் கொடுமைகளுக்காற்றாமற் றேவர்முதலானவர்கள்
திகைத்து மிகவும் வாடிப்பதுங்கினர்.

இவ்விதமாக வருணனும் அக்கினிதேவனும் பகைத்
துப் பொருவதைப்போல இருதிறவரும்போராடிவருகி
ன்றகாலத்தில் அவர்களேறியிருந்த தேர்கள்நொடிப்போ
தில் ஆயிரநூறுகோடிவிசைசக்கிராகாரமாகவட்டணையா
யிடசாரிவலசாரி வலசாரியிடசாரியாகத்திரிந்தும் அவ்வி
ருசூரரும் தூண்டுகின்ற சரமழைகள்பெருத்து அண்ட
ப்பித்திகைவரையில் நிறைந்துசூரியசந்திரர்கதிகளைமறை
த்து எவ்வுலகங்களி லிருப்பவர்களுக்கும் மிகுத்த து
ன்பத்தைச் செய்தும் ரணக்களத்தி லொதுங்கி யிருந்த
தேரணிகளைப் பொடிபடவாட்டியும் யானைப்பந்திகளை
க் கண்டதுண்டப்பட வெட்டிக்குவித்தும் குதிரைப்பெ
ருக்கைச் சிதைத்துக் கிடத்தியும் இராட்சதவீரரைமட
க்கிக்கொண்டு சின்னபின்னப்படக் கண்டித்துக் குவித்
தும் பூதவெள்ளத்தை யலைத்துச்சிரம், கரம், உரம், ப
தமுதலிய உறுப்புகளை வெவ்வேறாக வெட்டியெறிந்
தும் இப்பாடுகளை செய்யும்போது அவர்கள் தேர்களோ
டும் வேகத்தினால்முட்டியும் வானவெல்லை யெங்கணும்
பவனிவந்தும் கற்கரத்தொனிகளைச் செய்தோடும் வண்
டில்க ளிடிகளை யொப்பத்தாக்கியும் இடம்வலமாகச் சா
ரிவந்தும் விண்ணவர்திகைத்து மதிக்கும்படிக்கு க்ஷ
ணப்போதில் அஷ்டதிசைகளினும் பாய்ந்து மீண்டும்இ
ப்படிக் குலவுகின்றகாலையில் நெருங்கியபோது ஒருவரை
ஒருவர் சீறிப்பார்த்து நீயெவ்வளவு உன்சாமர்த்திய மெ
வ்வளவு உன்னைநொடிப்போதில் வாட்டி நிலத்திற்றள்ளு
வேனென்று வீரங்களைப்பேசியும் இகழ்ந்தும் வட
வாமுகாக்கினியும் ஆலகாலவிஷமும் சிறியதைப்போலக்
கோபித்தும் கொடியசபதங்களைப்பேசியும்விற்சாதுரியத்
தையும் கரவேகசரவேகத்தையும் சாகசங்களையும் நிதா
னித்துப் புகழ்ந்தும் விடநாகங்களைப்போலச்சீறியும் அ
ண்டங்களதிர நகைத்தும் கர்சித்தும் சிருங்கநாதங்களைச்
செய்தும் பருவதாகிருதியாகப் பருத்திருக்கும்புசங்களை
த்தட்டியும் மீசைகளைமுறுக்கியும் இச்சண்டைவெகுநே
த்தியாக விருக்கின்றதென்று களித்தும் அடிக்கடி ஜயத்
தைக் குறித்துவெற்றிச்சங்கங்களை பொம்பொம்மென்றூ
தியும் இடையிடையிற் சரமாரிகளைத்தூவியும்அவற்றுள்
நுழைந்து வெளிவந்துபோராடுகின்ற காலங்களிற்புரவிக
ள்அலைகளைப்போலப் பாய்ந்து ஒன்றையொன்று தீயெழ
வுருத்துச் சீறிப்பார்த்தும் செவிடுபடக்கனைத்தும் சிரங்க
ளில் மிதித்தும் கடித்தும் கால்களினாலெற்றியும் வாதா
டவும் சாரதிகள்சவுக்குகளை படாலுபடாலுமெனத்தாக்கி
ஒருவரையொருவர் வைதுபேசி அதட்டித்தேர்களைரதிக
ன்குறிப்பின் வண்ணந்தூண்டிக் கொக்கரித்துவரவும் இ
வ்விதங்களாகச் சிவகுமாரனும் அவுணர்பெருமான் மன
துக்கினிய புத்திரனும் எவ்விடங்களினுந்தாமாக வுலவிக்
கரவேகமாகச் சொரிகின்ற பாணகோடிகளடர்ந்துவிண்ம
ண்திசைகள் தீபாந்திரங்கள்முதலிய தலங்களெங்கும் நெ
ருங்கிப் பிராணிகளைவருத்தியும் அவைகளோடும் வேகத்
தினாலுராயுண்டுஆயிரங்கிரணங்களும் மழுங்கிச்சூரியன்
தன்வெப்பகாந்திக ளடங்கிக்குளிர்ந்த சந்திரனைப்போலக்
காட்டவும் சந்திரனும் சோடசகலைகளுந் தேய்பட்டு வட்
டாகாரமாகத் தோற்றவும் அவ்விருவீரர்விற்களில்நின்று
ம், புறப்படுகின்ற தேவாஸ்திரங்களின்கொடுமையும்,வே
கமும், உக்கிரமும்எப்படிக்குக் காட்டுவதெனில், வாயுவு
ருக்கதைப்போலவும் கூற்றுவன்உலகங்களின்மீதுபகை
த்தெழுவதுக் கொப்பாகவும் ஊழித்தீயானது வீறியெ
ழுமாறுபோலவும் ஆலகாலவிஷமும் வடவாமுகாக்கினி
யும் சிறியதன்மையாகவும் கொடிய இடிகள்பெருத் ததிர்
வதைநிகர்த்தும் திரிபுராதிகளைத் தகிக்கவெழுந்த பாண
மும் தீநகையையும்போன்றும் கிரவுஞ்சபருவதத்தையு
ம் தாருகனையும் பிளந்துதள்ளிய வெற்றி வேலாயுதத்தை
யொப்பவும்பலகொடுமைகளைக்காட்ட விளங்கியும் பாயும்

வேக்த்திறைற் பருவதங்களிற் றடாரித்துருவியும் மேகங்
களிற்ருக்கி நீர்ப்பசுமையைக்கிரகித்து கருக்கிச்சென்றும்
அண்டப்பித்திகையைப் பிளந்தப்புறத்திற் ரேற்றும்பெ
ருவெளியினிடமெங்கு முலவியும் சத்தசாகரங்களில் நி
றைந்து நீர்ப்பெருக்கைச்சுவற்றி அலைகளையடக்கியும் தி
சைகளைக்கடந்து பெரும்புறக்கடலையலைத்தும் சக்கிரவா
ளகிரியினிடத்துத் தாவியும் இருட்பூமியைத் தீயினல்வி
ளக்கியும் அண்டவாயில்களினுழைந்து மேலுலகங்களி
லோடியும் பிலத்துவாரங்களிற் புகுந்து பாதலவெல்லை
யெங்கணு முலவியும் இவ்விதமாகப்பாய்கின்றதிவ்வியபா
ணங்களின் வெப்பத்தினல் மேகங்கள் நீர்ப்பசுமையற்று
ப் பஞ்சைப்போலவெரிந்தும் அஷ்டதிசைகளைத்தாங்கினி
ன்றகரிகள்கரிகளாகமங்கியும் பூமிபடபடெனவெடித்துப்
பாதலந்தோன்றவுங் கடல்கள் வற்றிநிலமாகியமணற்ருட்
டினல் மகரமச்சங்கள்முதலிய சலசரங்கள் புழுகுகளைப்
போலப் பதைபதைத்துப் புரண்டுவாடவும் நட்சத்திரங்
கள் பொறிபட்டிறையவும் உலகங்களனைத்தும்கரிந்தும்பு
கைந்தும் எரிந்தும் சுருண்டும் படாதபாடுகள்படவும் இ
வ்விதங்களாக வீரவாகு தேவர் விட்ட பாணங்களைப்
பானுகோபன் அவற்றிற் கிரட்டிச் சரங்களைக்கொண்டுத
டுக்கவும் பகைவன் பிரையோகித்த சிலீமுகப்பெருக்கை
வீரன் பாணகோடிகளினல்வாட்டவும் இப்படிக்குவீரா
திவீரராகிய அவ்விருவரும் கொடிய சித்திரப்போரைச்
செய்துவருகின்றகாலையிற் பூமண்டலவெல்லையில்வாசஞ்
செய்பவரும் விண்ணகத்திற் சஞ்சரிப்பவரும்இவ்விருதி
றவர் செய்கைகளைப்பார்த்து அற்புதராய்இந்த சூரனைப்
போலச் சண்டைகொடுத்தவனைஇதற்குமுன்னம்பாவனை
யுங்கண்டிலம் கேட்டதுமிராது இக்காலத்தினுந்தெரிந்த
தில்லை இனிபிற்காலத்தினுங் கிடைக்கமாட்டாதுபுசபலப
ராக்கிரமசாலிகளாகிய இவர்கள்சவுரியத்துக்கிணை யெடுத்
துக்காட்ட யாவருமில்லையெனக் கொண்டாடினர்.

அக்காலையிற் பானுகோபன் கைமிஞ்சிநூறுயிரங் கொ
டியபாணங்களைச் செலுத்திப் பால சுப்பிரமணிய தேவர்
தூதன்கரத்திற் பிடிபட்டிருந்த தனுசைக் கண்டதுண்ட
மாக வெட்டியெறிந்து அண்டரண்டபுவனங்களும் நடுந
டுங்க ஆர்ப்பரித்தகாலையில் புசபலபராக்கிரமசாலியாகிய
வீரவாகுதேவர் ரவுத்திராகாரமாகக் கோபித்து வேறொ
ரு வில்லையெடுத்து வட்டாகாரமாகவளைத்து விஷத்தொ
வைய லிட்டுக்கூர்மையாயிராநின்ற ஆயிரந்திவ்வியபாண
ங்களைப் பிரயோகித்து இராஜகுமாரனேறியிருந்த இரத
த்தைச் சக்கைச்சக்கையாகப் பேர்த்தெறிந்துச் சிருங்கநா
தஞ்செய்தனர். அதனல்வடவையைப்போற்சீறி அந்தர
த்தில்நின்றவனுய் இருபத்தைந்து காளகூடத்தை யொத்
த சரங்களைத்தூண்டிப் பருவதாகிருதியாகப்பரந்திருக்கு
ம் வீரவாகுதேவர் மார்பைத்துளைத்துத் தோளைத்தட்டி
க் கொக்கரித்தனர், அக்காலத்தில் மிகவும்வருந்திமனம்பு
ழுங்கக் காலாந்தகனைப்போலச்சீறி விழிகளிற்றீப்பொறி
கள் சிதறவுருத்து வடவைத்தீயுமஞ்சுங்கடூரமாகியபதினா
ன்குபாணங்களைக் கரவேகமாகத்தூண்டி வரமுயற்சியிற்
றனக்கிணையற்ற சூரபதுமன் குமாரன்சிரத்திலணிந்திரு
ந்த நவரத்தினமாகச் சொலித்திருக்கும்கிரீடத்தைப்பொ
டியாக்கினர், அதனற் சிரோரத்தினத்தையிழந்த நாகத்
தைப்போல மானம்பாதிக்கவருந்தி ஆங்காரித்துஅதிவே
கமாய்ப் பதினான்கு சிலீமுகங்களைக்கொண்டு கற்கம்பத்
தையொத்த புயங்களைப்படைத்த வீரவாகுதேவர்மார்புக்
கரணகத் தரித்திருந்த அபேதவயிரக்கவசத்தைக் கண்டி
த்தெறிந்தனன். அக்காலத்தில் விஷப்பற்களைப்பெற்றிரு
க்கின்ற சர்ப்பாபரணராகிய சிவகுமாரன் இவன்வில்வன்
மை வெகுநேத்தியென நகைத்துபிறைவாளிகளேழையெ
டுத்து வில்லிற்சந்தித்து காளமேகத்தையொப்பப் பிரகா
சித்திருக்கும்தேகத்தையுடைய பாதகன்கரத்திற்பற்றியி
ருந்த தனுசை யிரண்டுதுண்டமாக வெட்டித்தள்ளினர்
அப்போது காலாந்தகனைப்போலச்சீறி முன்னம்பிரமதே
வன் தனக்களித்திருந்த மகிமையுள்ளவேலாயுதத்தையெ
டுத்துக் கிறுகிறெனச்சுழற்றித் தூதனைக்கொல்லக்கடவை
யென வேண்டிக்கடாவினன். அதுவெளிப்பட்டவுடன்அ
னற்பொறிகளை யிறைத்துக்கோடையிடிகளைப்பெருக்கிமி
ன்னலைவீசிஅனேகவுற்பாதங்களைக் காட்டிவருவதைவீர
ன்கண்டு வில்நாணியையிறுக்கி ஆயிரங்கரேமாகியதிவ்வி
யவாளிகளைஒன்றின்பின்னென்றுகச் செலுத்திவரும்போ
து அவைகளனைத்தினையும் பெருங்காற்றிற்பட்டபூளைப்பு
ஷ்பத்தைப்போல வாட்டிக்கொண்டு மேலிட்டுவருவதை
யும் அதன்மகிமைகளையும் மதித்து இப்படைசுலபமான
தன்றென்றெண்ணி சந்திரசடாதரக்கடவுளாகிய சிவபிரா
ன்தமக்கனுக்கிரகித்திருந்தவீரவாளாயுதத்தைஉறையிலி
ருந்தெடுத்து குமாரதேவர்திருவடிகளைத் தியானித்துப்
போற்றிசெய்து சமீபத்தில்வந்தவேலையிரண்டுதுண்டமா
கக்கண்டித்துத் தள்ளினர்.

அந்தவிஜயத்தைப் பார்த்திருந்த தேவர்கள் சந்தோஷ
சாகரத்தில்முழுகி வீரன் மேற்பஞ்சதாருக்கள் புஷ்பங்க
ளை அபாரியாகயிறைத்து வீரனென்பதுஉனக்கேதகுமெ
னக் கொண்டாடினர்கள், பகைவன் பட்சத்தராகிய இரா
ட்சதரேங்கி வாடித்திகைத்துநின்றனர். பின்பு வீரன் வா
ளாயுதத்தை உறையிலிட்டுத் தனுர்ப்பாணியாகநிற்பதை
யுந் தன்வேற்படையற்று விழுந்ததையும் மாயைவல்லப
முடைய சூரபதுமன் பிள்ளைகண்டு மனம்பதைபதைத்
துத் தீயெழவுருத்துப் பெருமூச்செறிந்தவனுய் இவன்ச
வுரியம் வெகுநேத்தியெனவியந்து துரிதமாய்வரப்பிரசா
தத்தினுற்ருன் பெற்றிருக்கின்ற வாளாயுதத்தை உறையி
ல்நின்றுருவிக கரத்திற்கொண்டு மின்னலைப்போல இட
ம்வலமாகவீசி வட்டணைவந்து முன்னடிவைத்துப் பின்
னடிவாங்கித் தாவி வீரங்கள்பேசி மேலிட்டுப்பாய்ந்து வ
ருவதை வீரவாகுதேவர் பார்த்தவுடன் துரிதமாய்த் தன்
வில்லில் அளவற்றபாணங்களைப்பூட்டிப் பிரயோகித்துப்
பாதகன் மலைபோன்ற மார்பைப் பத்தலாகப் பிளந்தனர்
அக்காயமூலமாக உதிரமானது பெருக்கெடுத்தோடுமுன்
னிலையில் அந்தப்பாணங்களைச் சட்டைபண்ணுமல்மார்பு
பிளந்த வருத்தத்துக்குமஞ்சாமல் மானம்பாதிக்கின்றதா
ல் ஒப்பற்றவாளாயுதத்தை விதிர்த்துப் பாய்ந்து வேதவி
தியிற் பிசகின்றி நடக்கவல்லபவுத்திரஉள்ளத்தைதப்படை
த்திருக்கின்ற வீரவாகுதேவர் கரத்தில் மேருவைப்போ
ல விளக்கும் பாரித்தவில்லை ஒருவீசலினு லிரண்டுதுண்
டமாகவெட்டிப் பின்னிடைந்து அடிபெயர்த்துலவுவதை
த் தேவர்கண்டு வீரனென்பது இவனுக்கேதகும் இவன்
மாண்டபின்பு போரென்பதிருக்க மாட்டாதென்று பேசி
க்கொண்டார்கள், அத்தருணத்திற்சர்வசங்காரமூர்த்தியா
கிய பிதாவைப்போல வீரன்சீறி வெற்றிபெற்ற தமதுவா
ளாயுதத்தைஉருவிக்கொண்டுசூறுவளிக்காற்றையொப்ப

வட்டணைவந்து எங்கேபோகிறாய் நில்லுநில்லெனப் பானுகோபனை வளைத்துக் கொண்டு வீரங்களைப்பேசும்போது அவனும் வீராவேசத்துடன் பிரசண்டவாயுவை யொப்பப்பாய்ந்து எதிரில்வந்தனன், இவ்விதமாகவிருவீரரும் கோபதீபிதராய் வாட்சண்டையை யமனையும் அக்கினியையும்போலச் செய்யத்தொடங்கி மாறிமாறிப் பாதங்களைப்பெயர்த்துவைத்து உறுப்புகளைக் குறிகொண்டு வெட்டுவர் அதனைவிலக்கி பின்னப்படுத்தும்படிக்கு நாடுவர் சந்துதெரியாமற் கரகலனச்சுற்றுவர்வட்டணைவருவர் இடசாரிவலசாரியாகத்திரிவர் இவ்விதங்களாகவிருதிறவரும் வாட்போரைச்செய்து வருமுன்னிலையிற் சூரன்பிள்ளை தான்கற்றிருக்கின்ற விஞ்சை வல்லபத்தினாற் றமக்கொப்பனையற்ற இளையபெருமாள்வீசிய வாளைத்தட்டிப்போட்டு ஓங்கிபுஜத்தின்மீது வெட்டினன். அதனால்அதிககாயப்பட்டு உதிரமானது ஆற்றெடுத்துப்பெருக விருந்தபோது பானுகோபன் களித்துபின்னிடைந்து அடிபெயர்த்துப்பாய்ந்து வருவதைத்தேவர்கண்டுபயந்து வீரவாகுதேவரிளைப்பரோ! என்னமோ? இதற்கென்செய்வதென்று சந்தேகித்து வாடுகின்றவேளையில் வீராதிவீரன் சண்முகதேவர் பாததாமரைகளைத் தியானித்துப் போற்றி மின்னலைப்போலப் பளபளத்துவிளங்கும் வெற்றிவாளாயுதத்தை வளையவளையச் சுழற்றிமுன்னடிவைத்துப்பின் பாய்ந்துதாவிப் பகைவனதுபருத்ததோட்களிலொன்றை வெட்டி நிலத்திற்றள்ளினர், அக்காலத்திற்பானுகோபன் வடவைக்கனலைப் போலச்சீறிப் பின்னிடையாமல் தீரனாய் வலக்கரத்துடன் விழுகின்ற வாளாயுதத்தை யிடதுகரத்தினாற் பிடுங்கிக்கொண்டுமீட்டும் போர்செய்வதாக உருத்து மேலிட்டுப்பாய்ந்து வருவதையும் அவன் தயிரியத்தையும் வீரவாகுபார்த்து மதித்தவராய்த் துரிதமாய்த்தன்வாளைவீசி மற்றகரத்தையும் துண்டித்தனர்.

இவ்விதமாக விரண்டுகரங்களு மிழந்தபடியால்வேறு சண்டைகொடுக்கவகையற்றவனாதலாற் பிதாமகளாகியமாயைகொடுத்திருக்கின்ற படையைப்பிரயோகிக்கநினைந்தான் அக்கருத்தை வீரவாகுதேவர் தெரிந்தவுடன் அதற்கிடங்கொடாமற் றுரிதமாய் வெற்றிவாளை ஒருவிசைவீசிவயிரமுடியில்லாமற் சிகையைவிரித்திருக்கும் சிரத்தைக்கண்டித்துத் தள்ளியபோது பூருவத்திற்வாயுமோதலினால் மேருபருவதச் சிகரமற்றுச் சமுத்திரத்தினிடத்தில்விழுந்ததைப்போலக் கோரத்தந்தங்கள்விளங்கும் தலையானது ஆர்ப்பரித்துக்கொண்டு ரணக்களத்திலோடும் உதிரவாரியிற் பேரோசையைக்காட்டிவிழுந்தது, உடனேதேகமும் நீலகிரியையொப்ப நிலம்பிளந்து குழிபடமறிந்தது அத்தருணத்தில் யமதருமராஜன் வீராதிவீரன்சேவகத்திறத்துக்குமெச்சிப் புகழ்ந்தவனாய்ப்பயமற்றுப்பானுகோபனுயிரைக்கொண்டு தென்னாட்டைச்சேர்ந்தனன். இந்த ஜயத்தைக்கண்ட முப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் இருடிகளும் கருடகாந்தருவர்சித்தவித்தியாதரர் பன்னகர் உவணராதியாக மனவெழுச்சியுடன் ஆனந்தவாரியிற்றிளைத்து வஸ்திரங்களை மேலெறிந்து கூத்தாடி இவ்விதக்களியாடல்களைச்செய்தவர்களாய்ச்சிவகுமாரனைப்பார்த்து வீராதிவீரனென்பது உமக்கேதகும் மேலும் இதுபரியந்தம்பெற்றிருந்த எங்கள் மனக்கவலை முற்றும் நீக்கினர் இனிகளித்திருக்கப்பெற்றனம் ஓ, வீரனே! யின்னமும் இதற்கு மேலாகியஜயப்பிரதாபங்களைப்பெற்று நீடூழிவாழிவாழியென்று அண்டங்களதிர ஆர்ப்பரித்து பஞ்சதருக்களின் புஷ்பங்களை யேராளமாகத்தளிரிலைகளுடன் பறித்துப்பறித்து இளையவர்மீது சொரிந்து சந்தோஷத்தைப்படைத்திருந்தனர். இவ்விதமாகதேவரினங்களும் மற்ற வுலகவாசிகளும் அப்போதடைந்தமகிழ்ச்சியை யின்னவிதமென்று என்போலிகளாற் சொல்லமுடிவதோ! இவைநிற்க இராட்சதராஜகுமாரனால்அவதிப் பட்டலைந்துவாடிப் பதுங்கியிருந்த பூதப்படைகள், எண்மர், இலக்ஷர், சேனைத்தலைவர்கள் தங்கள் பகைவன் தேகம்வெட்டுண்டு நிலத்தில் விழுந்ததைக்கண்டவுடன்ஒரு ஆவேசம்பிறந்து கொக்கரித்துத் துள்ளித்துள்ளிக் கூத்தாடிக் கரங்களைக்கொட்டி நகைத்து பற்பலவீரங்களைப்பேசி அகமுகமலர்ச்சியுடன் தங்கள் தலைவனைவாழ்த்தி ஜயஜயவெனப் போற்றினர், இந்தவெற்றியைக்கண்டசூரியன் தன்மனக்குறையையொழித்துச் சந்தோஷசாகரத்திலழுந்தி நடுக்கமொழிந்து தன்கதியிற்சென்றனன்.

ஓ! சவுனகாதிரிஷிகளே நான்விரித்துவிரித்துச்சொல்லவேண்டுவதில்லை இந்தச் சந்தோஷ வார்த்தையைக் கேள்விப்பட்ட மாத்திரத்தில் விண்மண் திசாதிசையேமுதலிய தலங்களில் வாசமாயிருக்கின்ற சகலரும் கலக்கமொழிந்து புதியவுயிரைப் பெற்றவரைப்போல வாழ்ந்தோம்வாழ்ந்தோமெனக் களித்திருந்தனர், இவ்விதமாகச்சகலரும் மனவெழுச்சி பெற்றுவீரனைப்போற்றிதேகபரவசத்தராயிருக்கின்ற காலையில்வீரவாகுதேவரும்மனமகிழ்ச்சியுடன் வானவெல்லையை நீங்கி யுத்தியக்களத்திற் சமுத்திரத்தை யொப்ப ஆரவாரங்களைச் செய்திருக்கின்ற சேனைகளின்மத்தியில் வந்திறங்கியபோது சந்திரனைக்கண்ட கடலைப்போலத் தம்பியர் இலக்ஷர் சேனைத்தலைவர் படைவீரர்சூழ்ந்துசேவித்துப்போற்றி நிற்பவரைக்கிருபையாகப்பார்த்து இதனைச்சொல்லுவார் மாயவல்லபத்தினால் நம்மையலைத்த பாதகனான பானுகோபனைக் கொன்றனம் பிடித்த சபதத்தையும் பகையையும்முடித்து மனவெழுச்சிபெற்றனம் ஆதலாலினிசற்றுந்தாழ்க்காமற் சகலரும் எமதுகர்த்தனாகிய சிவசுப்பிரமணியதேவர் சன்னிதானத்தைச்சேர்ந்து வணங்கிப்போற்றி யிந்தப்பாதகனூரினெல்லையி லிருபகற்றங்கியிருந்த தீங்குகளைப்போக்கிக்களித்திருப்போம்வாருமெனச்சொல்லிய சிறந்தவாக்கியத்தைக் கேட்டவுடன் களித்தவர்களாய் திரிநேத்திரதாரியாகிய சிவபிரான் பெற்றெடுத்த பால சுப்பிரமணியதேவர் திருவடித்தரிசனையை யிருதினம் கிடைக்காமல் வருந்துகின்றனம் தேவரீரருளிச்செய்தகாரணம் உத்தமமாகுமெனத்துணைவர்முதலாயினர்களித்துக்கூறியமாத்திரத்தில்ஜயபேரிவெற்றிச்சங்கம் சின்னமுதலிய மங்கலவாத்தியங்கள் கணகணென்று முழங்கப் பெரும்புறக் கடலெழுமாறுபோல பூதசயின்னியங்கள் ஜயஉற்சாகங்களுடன்ஆரவாரித்துத்தொடரதம்பியர் இலக்ஷர் படைத்தலைவர்மனவெழுச்சியுடன் சூழ்ந்துபோக புசபல பராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவர் அவர்கள் மத்தியிற் பூரணசந்திரனைப்போல முகமண்டலந்துலங்க ரதாரூடனாய் ரணக்களவெல்லையைக்கடந்துபோய் விசாலமாய் ஜலசமர்த்திபெற்றஅகழ்வளைந்து வானத்தையளாவிய பொன்மதிலின்மத்தியில் நவரத்தினமயமாக விளங்கும் பாசறையைச்சேர்ந்துதிருச்சபையிற் பிரமன், விஷ்ணு, தேவேந்திரன்முதலானவர்கள் சூழ்ந்துபோற்றச் சிரோரத்தினங்களினாற்

சோடித்திருக்கும் சிங்காதனத்திற் கோடிசூரியப்பிரகாசமாகவீற்றிருந்து வார்த்தையாடிக்கொண்டுவரும் சண்முகப்பெருமானை நேத்திரோற்சவமாகத் தரிசித்துவாழ்த்தி நெருங்கியவுடன் தேகபரவசத்தராய் மும்முறைவலம்வந்து திவ்விய சரணாரவிந்தங்களிற் பலதரம், சேவித்தெழுந்துகரங்களைக்கூப்பிக்கொண்டுபத்தி விநயத்துடன்போற்றிநிற்கின்ற தமது மனதுக்கினிய துணைவனைப்பரிவாகப்பார்த்து ஐயனே யிரண்டுதினங்களாக மிகவும்வருந்திச்சூரன்பிள்ளைமுதலாகிய அவுணவீரனைக்கொன்று உலகவுபாதியைத் தவிர்த்து நிலைபெறச்செய்தனை இதைக்குறித்து மிகவும் களித்தனமாதலால் உனக்குவேண்டிய வரங்களைத்தர விருப்புற்றனம், கேட்கக்கடவையெனத் திருவாய்மலர்ந்தகாலையில் வீரன்மீட்டும்வணங்கி வாயைப்பொத்திக் கர்த்தனே தேவரீர் பரிபூரணகடாட்ச வீட்சணியப்பேற்றினாலல்லது ஒருகாரியமும்முடிவதுண்டோ ஆகிலும் அடியேனுக்கொரு வரபாலனத்தைத் தரவேண்டும், அஃதென்னையெனிற் செல்வப்பெருக்கையுடையகுபேரன்வாழ்வைக்கனவிலு மதியேன் திரிலோகசக்கிரேஸ்வரனாகிய தேவேந்திரன் கஜேந்திரச் சம்பத்தையும் அரசுரிமையையும் ஒருபொருளாகநினையேன் சிருஷ்டிதிதிகர்த்தராகிய பிரமன், விஷ்ணு, பதவிகளையுஞ்சுலபமாகக்கருதுவேன் இவையனைத்துக்குங் காரணமாய் மேலாகிய பேரின்பவாரியை யுதவவல்ல மகிமையையுடையதேவரீர் பாதாரவிந்தங்களைப் பத்திபூர்வகமாக எக்காலத்தினும் வழிபட்டுப்போற்றும்சிறந்தவரத்தினைவிரும்பினேன் இஃது மோட்சசாம்பிராச்சியத்தைவேண்டித் தவங்களைச்செய்துவரும் மானுக்களுக்குங் கிடைப்பதரிதாதலாற் கிருபையுற்றுத்தயைசெய்ய வேண்டுமென் றிரக்கின்ற துணைவனிடத்திற் பரிவாய்ப்பரிபூரண கடாட்சத்தினைப் பாலித்துத் சிறந்தபத்தனே உன்மனக்கருத்தின்வண்ணம் தந்தனமென்ற வாக்கியத்தைச் செவிகளுக்கமுதமாகக் கேட்டுக்களித்திருக்கின்றகாலையில் மற்றத்தம்பியரும் இலக்ஷர்படைத்தலைவர் நெருங்கிப் பிரதட்சணம்வந்து பணிந்தெழுந்து நிற்கின்றவர்களிடத்திற் கிருபையுற்றுப் பற்பலபேறுகளைக்கடாட்சித்துத் தத்தமதிருப்பிடத்தைச்சேர்ந்திளைப்பாறிக் களித்திருக்கும்படிக்குக் கட்டளையிட்டமாத்திரத்தில் வீரவாகுதேவராதியர் கர்த்தனைவாழ்த்திச் செலவுபெற்றுப்போய் தமதிருப்பிடங்களிற் சவுக்கியமாகவிருந்தனர்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? இனிபுத்திரசோபத்தினாற் சூரபதுமன் வருந்தியதையும் மற்றகாரணங்களையுந் தெரிவிப்போமென்று சூதபுராணிகர் சொல்லுகின்றார், பானுகோபன் களத்திற்பட்டதைப் பார்த்திருந்த தூதர்கள் பிரமித்து இத்தகைய வீரபராக்கிரமசாலியைக்கொன்ற சயசாலிகள்நமதிறைவனையும் வாட்டுவதரிதோ இனியென்செய்வோம் நாமனைவரும் நாசப்படுங்காலம்குறுகியது இதற்குச்சந்தேகமில்லையெனப்புலம்பிக்கொண்டு வாயுவேகத்தினு மேலிட்டோடி எக்காலத்தினும்மங்கலவாத்தியங்கள்முழங்கி யிருப்பதொழிந்து கணவரைத்துணைவரைப்புத்திரரை மாமன்மைத்துனன் சுற்றமாயினர்மாண்டகாரணங்களினால் மங்கையர்சோர்ந்துபாட்டுப்பாடிப் புலம்புகின்ற வோசையானது மேலிட்டுப்பொலிவற்று விழிகளிற்பெருகும் நீரானது பெருத்தோடும் வீதிகளைக்கடந்து சூரன்வாசமாயிருக்கின்ற நகரியைச்சேர்ந்து சபாமண்டபத்தில் விளங்குஞ் சிங்காதனத்தின்மீதுகுமாரன்போயிருக்கின்ற காரியமென்னமாய் முடிந்ததோவென் றாசலாடும் மனதுடன் வருந்தி வீற்றிருக்கின்றகுரனைக்கண்டமாத்திரத்திற் கவலைமிகுத்துவிழிகளில் அருவிகளைப்போல நீரைப்பெருக்கிஅடியற்றபனைகளைப்போலப்பாதங்களில்விழுந்து விழிகளினும் வாயினும்வயிற்றினும் மோதிக்கொண்டு பேசுவதற்கு வாயெழாமற் சற்றுநேரம் குளறித் தேறியபின்பு இதனைவிண்ணப்பஞ்செய்வதாயினர், சுவாமிதேவரீர் பிரதமகுமாரனாகிய வீராதிவீரன் பலவெள்ளஞ் சேனைகளுடன்போய்த் தூதனுடனெதிர்த்துப் பெரும்போர்செய்த பிரஸ்தாபத்தைச்சொல்லிமுடிவதன்று ஐயனேகடையிற் றூதன்கரத்தில் விளங்கும் வீரவாளினாற் சிரமற்றுப் புயங்கள்வெட்டுண்டு ரணக்களத்தில் விழுந்துமாண்டனனென்று சவிஸ்தாரமாகச்சொன்ன விசேஷஞ் செவிகளிற்பட்டவுடன் இந்திரபோகச் செல்வத்திலழுந்தியிருந்த சூரபதுமன்றிடுக்கிட்டு ஓவென்றலறிப் புத்திரசோபமென்கின்ற வாயுமோதலிற்பட்டு மதிமருண்டு சிங்காதனத்தில்நின்றும் தவறி நிலத்தில்விழுந்து கடகடெனப்புரண்டுபெருமூச்செறிந்து தேகக்காந்தி விழிகளில் நீர்ப்பசுமையற்று உதிரம்பெருகவியர்த்து நடுநடுங்கிப் பிராணன் நிலைபெறுமலலைந்துமரணமூர்ச்சையாய் அசைவற்றுக் கிடந்தனன்.

சவுனகாதிரிஷிகளே! கடந்துளோர்களுங் கடப்பரோமக் கணமேற்காத? லெனச்சொல்லுவதற்குத்திஷ்டாந்தமாக அக்காலத்திற் சூரபதுமன் துக்கசாகரத்திலழுந்திவருந்தியகாரணங்களை இன்னவிதமெனச்சொல்லிமுடிவதோ சிவகடாட்சத்தினாற் றீர்க்காயசைப்பெற்றிராவிடில் மாளவும் வருமெனநினைக்கவேண்டும் அத்தருணத்தில் இராஜாதிராஜன்விழுந்துகிடக்கின்ற அலங்கோலத்தைச்சபையிலிருந்தவர்கள் விழிகளில் நீரைப்பெருக்கிப்பார்த்தவுடன் அரசன்மாண்டனனோவென்னும்சந்தேகத்துடன் வேண்டிய சயித்திய உபசாரங்களைச்செய்துவர வெகுநேரத்திற்குப்பின்பு கியாபகந்தோற்றி விழிகளைத்திறந்துபார்த்து மெல்லவெழுந்திருந்து இவ்விதங்களிற் பாடிப்பாடிப் புலம்புவதாயினன், ஓ! குமாரனே? மதக்களிற்றினையொத்த திண்ணியனே கொடியபாதகனாகிய என்னாவியேஎன் மனதுக்குத் தெவிட்டாத இன்பத்தைத்தரும் அமுதத்தைப்போன்ற புத்திரசிகாமணியே என்னப்பனே பத்துமாதஞ்சுமந்துபெற்றதாயையொப்ப என்னிடத்திற்பரிவாகவிருந்த கண்மணியே என்சவுக்கியங்களைக் கோரியிருக்கின்ற சுற்றத்தினு மன்புள்ளதீரனே எனக்குதவியாக விருக்கின்ற இருபுசங்களை நிகர்த்த சகோதரவாற்சல்லியத்தையுடைய காளையே என்மனதுக்கினிய தோழனாகவிருந்துநீதிகளைப்பேசிய கல்விபரனே காரணகாரியங்களை நிதானித்துச் சொல்லவல்ல மதியூகிமந்திரியைப் போன்றவனே மகதயிஸ்வரியச்செல்வத்தைப்பெற்றிருக்கின்ற என்வாழ்வே என்னரசே புத்திரக்களை தீர்த்தபெருமானே ஆயிரத்தெட்டண்டங்களுக்கு மதிபனாக விருக்கின்றஎனக்குபுத்திரனாகவிருந்தஉன்னையொத்தவீராதிவீரனைத்தாய்தந்தையற்ற ஒருவனுக்குப் புத்திரனாகிய தூதன்மனந்துணிந்துகொல்வானோ நீஇப்பாடுகள் படுவதற்கோ அரியதவவிரதங்களைச்செய்துபெற்றுஅருமையாகச்சீராட்டிவளர்த்தேன் மன்மதனையொத்த சுந்தரமும்வீரசிங்கத்தினுமேம்பட்ட வல்லபங்களையும் சூரத்தன்மையையும்கல்

வித்திறங்களும் சாஸ்திரசம்பத்தும்பெற்று வில்வித்தை முதலிய பராக்கிரமங்களில் மேம்பட்டவனுய்த்திக்குவிஜயஞ்செய்து அளவற்றகீர்த்திப்பாடுகளை எனக்குண்டாகச்செய்தனை பிள்ளைகளனைவரையுமிழந்து வருந்தியயான் உன்புசபலபராக்கிரமங்களின் பெருக்கைக்கண்டு மனவாட்டத்தைப்போக்கித் தேறி துணையாக வெண்ணி மனந்தாபரித்திருந்தேன் ஐயனே உன்னைநம்பியிருந்த வென்னைத் தனிமையில்விட்டு தயையற்று இந்தச்செல்வங்களை வெறுத்துப் பொன்னுலகவாழ்வை இச்சித்துப்போய்விடுவையாகில் இனிதமியேன் பிழைப்பதற்கொரு ஏதுவுமுண்டோ குமாரனே இனியாதொரு உதவிகளையுங்கண்டிலன் வேடன்வீசியவலையினிடத் தகப்பட்டுத்தியங்கும் மானைப்போல மதிமயங்கி வாடுகின்றனன், துரிதமாக ஓடிவந்து தயிரியங்களைச்சொல்லித் தேற்றலாகாதோ அப்பனே உன்னிடத்தில் எவ்வளவும் வஞ்சனையில்லை சத்துருக்கள் மேலிட்டதைத்தெரிந்து தேவர்களைப்படுத்தியிருக்கின்றசிறையை விட்டுவிட்டால் பிழைக்கலாமென்று பற்பலகாரணங்களை விரித்துவிரித்துக்காட்டினைஎன்னரசே அவைகளைஉறுதியாகநினையாமலிகழ்ந்து அரியநிதியைப்போன்ற உன்னையநியாயமாகப்பறிகொடுத்தேன் இனிஅதுகளைநினைந்துநினைந்து வாடுவதிற் பயனைக்காணேன் பேரறிவாளனே தன்னுல்வராதவினைகள் வேறுமுண்டோ காலதேசவர்த்தமானங்களைத் தீர்க்கமாகத் தெரியவல்ல மதியாளனே என்னைத்தடுத்துச் சத்துருக்கள்மீதிற் பகைத்துச் சண்டைகொடுப்பதினுல் வெற்றிபெறுவதரிது சமாதானப்படுவது உத்தமமென்றும் அதற்கடுத்த வல்ல நீதிகளையும் என்னிடத்திருக்கின்றதயையினுல்வெளிப்படச்சொன்னுய் இதைக்குறித்து உன்மனதிலென்ன நினைந்தனையோவறியேன் இவைகளைக்கொஞ்சம் யோசித்துநிறுத்தி நான்பகைவர்மீதுசண்டைகொடுக்கப்போகாமல் உன்னிடத்திற்கோபித்துப் பலவத்காரமாயனுப்பிச் சிரோரத்தினத்தையொத்த உன்னைப்பறிகொடுத்தேன் இக்காரணம் நேருவதற்கு உன்னிடத்தில் யாதொருகுறைவுமில்லை உன்னரியபிராணனுக்குநான் கூற்றுவனுகவிருந்தேன் பஞ்சதருக்களின்புஷ்பங்களைக்கொண்டுமுப்போதும்வழிபட்டிருந்த தேவர்கள் உன்னிடத்திருந்த பகையை இக்காலத்திற்றணிந்து களித்திருக்கின்றனரோ என்னுசைக்குமாரனே உன்னுணைக்கஞ்சி நிலைபெருமலுழன்றுதிரிந்த மகாவிஷ்ணுவானவர் நீயிறந்தசேதி தெரியுமாயின் மனமகிழ்ந்து சிதேவி, பூதேவி, பாதங்களைவருட சேஷசயனத்திற் கவலையற்றுபழையபடிக்கு நித்திரைசெய்யாளு அவுணராசகுலத்துக்கு நாயகமாகவிருந்தவனே உன்னையடுத்தவர்களுக்குச் சங்கநிதி, பதுமநிதி, சிந்தாமணி, கற்பகத்தருக்களைப்போல வெறுக்கக்கொடுத்துஅவர்களிஷ்டங்களை நிறைவேற்றிவந்த தயாநிதியே என்தெள்ளமுதமே என்செல்வமே கண்மணியே அப்பனேதணிமையிற்சென்றெவ்விடத்தி லிருக்கின்றனை அத்தலத்துக்குநான்வருவேனுயினும் உன்மதுரவசனங்களைக்கேட்கப்பெறுவனேபுசபலபராக்கிரமமும் வீரமும் மந்திராலோசனைகளுக்கொப்பற்ற திறமைசாலிகளாகியபுத்திரானைவரும் பகைவருடனெதிர்த்துச் சண்டைகொடுத்துமாண்டனர், அவர்கன்பிரிவென்னுந் துக்கசாகரத்திற்பட்டலைகின்ற எனக்குத்தேறுதலைசொல்லி யாற்றவொருவனையுங்காணேன்.

இத்தகுணத்திற் றயிரியம்பெறச்செய்யப் புத்திரசிகாமணியே வரவேண்டும் துரிதமா யென்கண்மணியே ஓடிவாஅப்படிக்கு வரமனதில்லையோ உன்னரியதந்தையாகியயான் இத்தகைய துக்கசாகரத்திலழுந்தி வாடுகின்றதை மறந்துபராமுகமாயிருந்து விடுவது உனக்கழகோ அப்பனே பாலபருவத்திற் கிரணகாந்தியானது உன்திருமுகத்திற்றுக்கிய காரணத்தினுற்சீறிச் சூரியனைச்சிறைபடுத்தியகாலத்திற் பிரமனுதியர்வேண்ட விடுதலைசெய்துகொண்டுபோன வசைபெற்று வாடி உனக்கஞ்சித்திரிந்தவன் இனிசந்தோஷசாகரத்திலழுந்திப் பயமற்றுவானத்திற்றிரியானே நமதுபகைவரிட்ட கட்டளைகளைச்செய்து தொண்டனுகவிருந் துழலுந்தூதனே உன்னையொத்த இராஜராஜபுத்திரனைக்கொல்வான் அதைக்கனவிலும் நினைக்கமாட்டேன் உன்துணைவரைப்பார்க்க விருப்புற்று இவ்விதமாயையைச்செய்துபோகக் கற்றனையாயினும் உன்னுவியையொத்த பிதாவைப்பிரியும் துணிபையுங் கற்கலாகுமோ புசபலபராக்கிரமசாலியாகிய உன்னையொத்த மைந்தனிறந்தனனென்னும் கொடியசேதியைக் கேட்டவுடன் இந்தபாழ்த்த உயிர்நீங்காமல் இன்னமும்வருந்தித் தாபரித்திருக்கின்றதே குமாரனே மனம்சோருகின்றது நிலைபெற்றிருக்கக்கூடவில்லை, முன்னம் பரமசிவத்தினிடத்தில் அரிய வரங்களைப் பெற்றகாலையில் பிள்ளைகளுமிறவாமற் சிரஞ்சீவிகளாக விருக்கக் கேட்டுக் கொள்ளாமற்போனேன் பலவிதத்திலும் வெற்றியையுங்கீர்த்தியையும் தரவல்ல பிள்ளையிறந்தவுடன் மாளாமல் வலியனுகவிருக்கின்றனன், பிராணனும் திடசித்தமாயிருக்கின்றது பலவத்காரமாகமாய்க்க நினைப்பேனுயினும்நாசமடையாதவரபாலனத்தைப் பெற்றிருக்கின்றேன், அது இக்காலத்திற் பிசகாய்நேர்ந்தது என்னுவியேதவப்பேறேகுலதெய்வமே குருவேமந்திரியே உன்னைச் சமருக்கனுப்பி மாளக்கொடுத்து இப்படிக்குப் பரதவிக்கவோ நானிவ்விடத்திலின்றுவிட்டேன் வருவேனுயில் உனக்கபாயம்நேரவறியாது காலாதிகளிற் பிராணிகளனைத்தையுங் கொண்டுபோகுந் தொழிலையுடைய இயமனுனவன் தூதனுக அவதரித்துவந்தானே தோற்றவில்லை அல்லது உன்வலியபிராணனைப்பாதகனுல் வாங்கப்படுவதோ ஐயனேதென்னுட்டைச்சேர்ந்தனையோ அல்லது மற்றெத்தலத்திலிருக்கின்றனையோ தெரிகிலேன் சகலமையும்போக்கித் தனிமையில் துயரத்திற்பட்டு வாடுகின்றனன், இதைத்தணிந்திருக்க ஒருவகையையுங்காணேன், அரசே ஆருயிரோ துரிதமாய் வாராயோ உன்மனதுக்கினிய தேவியர் உன்பிரிவைபறிந்தால் என்னபாடுபடுவார்களோ அவர்களைக்குறித்தாவது திரும்பாயோவென்று சூரன் இவ்விதங்களாகப்பன்னிப்பன்னிப் புலம்புகின்றபோது அரசன்படுந்துயரத்தையாற்ற நினைந்து சபையிலிருந்த அவுணவீரரிற்சிலரோடி ரணக்களத்திற் கண்டதுண்டமாக வெட்டுண்டுகிடக்கின்ற பானுகோபனுடைய தேகத்தையெடுத்துக்கொண்டு புலம்பிவந்து சூரபதுமன் முன்னம்வைத்தாவலித்தழுதனர்.

தேவனாவாட்டிச் சிறைபடுத்தியிருக்கின்ற இராஜபரமேஸ்வரன் துண்டங்களாகவிருக்கின்ற புத்திரன்தேகத்தைக்கண்டவுடன்கதறி மனங்கலங்கிச்சோபித்து மேல்விழுந்துகளைத்திருந்துசற்றுநேரத்திற்றெளிந்தெழுந்தவனுயக்கண்டிக்கப்பட் டிருக்கின்றசிரத்தைக்கரங்களினுலெ

திப் பீதாம்பரத்தொங்கலினுல் முகத்தைத்துடைத்துச்சிகையைக்கோதிஅதன்பொலிவைக்கண்டுகளிப்பான், முத்தமிடுவன்விழிகளிலொத்திக்கொள்வான் வலியற்றசர்ப்பத்தைப்போலப்பெருமூச்செறிவான்நிலத்தில்விழுந்து புரளுவான்அப்பனேசத்துருக்களிடத்திலிருக்கின்றகோபம்இன்னமும்உன்திருமுகமண்டலத்தில்மாறவில்லையேசிறந்தமானமும்வீரமும்வலியும்இனியுன்னுட னழிந்துபோய்விட்டதுஉன்னையொத்த சவுரியவான்களையாவரையுங் கண்டதுமில்லைகேட்டுமிரோன்மோசஞ் செய்தாயோவெனச்சோருவான் கரங்களினுென்றையெடுத்து விழிகளினிடத்தூற்றெடுத்துப்பாயும்உதிரப்பெருக்கினுற் கழுவிவானத்திலோடுஞ்சூரியனைப்பிடித்துவந்து தளைசெய்தகரகமலமிதுதானேவென்றரற்றுவான் வீரவாகுசெலுத்தியபாணங்களினுற்றுளைபட்டிருக்குந்தோட்களையும்மார்பையும்பார்த்து உலகங்களுள்ளளவும் நீங்காதபுகழைப்பெற்றசூரன்உன்னையல்லதுமற்றும் யாவரிருக்கின்றனரொனக்கதறுவான்,பூதபைசாசங்கள் கழுகு,காக்கை, பருந்துலாவித்திரியும்,போர்க்களத்திலுன்பொன்மேனியைக்கூறுபடவெட்டித்தள்ளிய பாதகனுகியதூதன்பிராணனை யுண்டாலல்லது என்மனத்துயர மாறுமோவெனச்சீறுவான்இந்தப்பட்டணத்துக்கு ஒற்றுகவந்தஒருதூதனுல்அளவற்றஜயங்களைப்பெற்றிருந்த என்மகன் மாண்டானென்றுசகலரும்பேசிக்கொள்ளுவராயின்ஆயிரத்தெட்டண்டங்களையும்நூற்றெட்டுயுகங்களாகப் பரிபாலித்துத்தேவராதியரையேவல்கொண்டுவாழ்ந்த என்னரசாட்சி வெகுநேத்திரேத்தியெனத்தன்னையிகழ்ந்து கொள்ளுவான் பின்னப்பட்டிருக்கின்ற குமாரன் சிரத்தையும் கரங்களையும் சேர்த்துப்பார்த்து விழிகளில் நீரைப்பெருக்கி மேல்விழுந்து புலம்புவான்தீயிற்பட்ட புழுகைப்போலப் பதைபதைத்துவாடும் பிராணனைக்குறித்து இன்னமும் என்கண்மணிசென்றவிடத்துக்குப் போகாமலிருக்கின்றையோவெனவாடுவான் வலையிற்பட்டுவாடும் மயிலைப்போலமருண்டுமருண்டுநாலுமூலைகளினும்விழிகளைச்சுற்றிப்பார்ப்பான் கரங்களைப்பிசைந்துகொண்டு இனியென்னசெய்வதென்று தியங்குவான், பரிவாய்ப்பிள்ளையைப் பார்த்தழுவான், சோர்ந்துகிடப்பான் கரங்களைவிரித்து இந்தஅனியாய மெங்கோனுமுண்டோசொல்லுங்கோளெனக் கேட்பான், என்னுசைக் கழிவுசெய்திறந்தாயோ மகனேயென்றுவாயிலறைந்துகொள்ளுவான் சரீரம்புழுங்கிவியர்க்க வருந்துவான் சமுத்திரத்தி னலைகளின்பெருக் கடங்கும்படிக்குப் பெருமூச்செறிவான் நிலத்தைக்கரங்களினுற் றுழாவிமோதுவான் இவ்விதங்களாக இராஜாதிராஜன் பட்டதுயரத்துக் களவுண்டோ இச்சேதியை அந்தப்புரத்தி லிருந்தமயிலையொத்தபதுமகோமளைகேட்டு வேடன் செலுத்திய பாணமபாயவாடும் மானைப்போலக் கதறிக்கூந்தலவிழ்ந்துநிலத்திற்புரளச் சரீரம் நடுநடுங்கி துக்கவெப்பத்தினுல் விழிகளில்உதிரமான தூற்றெடுத்தோடக் கோடுகோடெனப் புலம்பித்தாமரையிலையிற்பட்ட புனலையொப்ப மனம்நிலைபெருமற்கலங்கினவளாய் வலையிற்பட்ட மஞ்ஞையை நிகர்த்துவாடிப் பரதவித்துத் திகிற்பட்டுக் கட்டுக்காவலையுடையதன்னிருக்கையை நீங்கியிறந்த என்னுசைக்குமாரனைப்பார்த்துக்களைதீர்வனெனப் பிரலாபித்துக்கொண்டு சபையைநோக்கியோடினுள் இந்தத் துக்கவார்த்தையைக்கேட்ட புரஸ்திரீகள் பட்டணத்தில் வாசமாயிருந்தபெண்கள் அலறிநமதிறைவன் தேவிக்குச் சகிக்கப்படாததுக்கம் வந்து நேர்ந்தது வாருங்கோள் வாருங்கோளென்றுஎதிர்ந்தவரனைவரையும் கூவிக்கொண்டு கோவென்றழுதுவந்து பதுமகோமளையைச்சூழ்ந்து தேமல்பரந்து பொற்குடங்களையொத்த தனபாரங்களின்மீதடித்து மயிரை விரித்துப்பிடுங்கிஇழவுகொண்டாடினர், அவர்களுடன் லட்சுமிக்குச்சமதையாகிய சுந்தரமுள்ளபதுமகோமளை ஆஸ்தானமண்டபத்தைச்சேர்ந்து துண்டித்துக்கிடக்கின்றசீமந்தபுத்திரனைக்கண்டவுடன் மேல்விழுந்து மரணமூர்ச்சையாயினள் உடனேசேடியர் சிலதியர் பாங்கியர்மற்றகன்னியர்கள் ஆவலித்துஓவென்றலறிப் பற்பலசயித்திய உபசாரங்களைச் செய்துவருமுன்னிலையிற் பஞ்சேந்திரியங்களும் தத்தமதுநிலைகளிற்சேர மெல்லக்கண்களை விழித்துத்தள்ளாடியெழுந்து திகைத்து மதிமருண்டு இடியுண்ட சர்ப்பத்தைப்போலச் சோர்ந்துவிழுந்து புத்திரசோபத்தினுற் றரிக்கப்படாமல் கடகடெனப்புரண்டு கரங்களைவிரித்துப் பரதவித்த காரணங்களைக் கேட்பீராக.

ஓ என்மனதுக்கினியபிள்ளாய் குழந்தைப்பருவத்தில் உன்முகத்தில் ஆதவந்தாக்கிய காரணத்தினுற் சூரியனைப்பற்றிவந்து எனக்குக்காட்டித் தொட்டிலின்காலிற்கட்டிவைத்த வீரமெங்கொடுங்கியது என்கண்மணியே பிள்ளைக்கவலையை யொழித்தகருவூலமேசுழந்தாய்அந்தவிஜயத்தைக் கண்டுமகிழ்ந்தயான் உன்திருமேனி இவ்விதங்களாகக் கண்டிக்கப்படுமென்பதை யெவ்வளவும்நினைந்தவளல்ல கனவிலும்மதித்திலேன் இக்காலத்தில்எமனுக்கிரையாவையென்று எந்தச்சோதிஷருஞ் சொன்னதுமில்லைஎன்னப்பனே முன்னெருகாலம்பொன்னுலகத்துக்குப்போய்த் தீக்கிரையாக்கி நமதுசத்துருக்களாகியதேவரைப்பெண்டுபிள்ளைகளுடன் சிறைசாய்த்துவந்ததினம் உன்திருமுகப்பொலிவையும் பருவதாகிருதியாகவிருந்தபுசங்களின்சீரையும் மற்றத்திருக்கோலத்தையும் மனங்களிக்கக்கண்டு மகிழ்ந்த பாதகியாகியயான் அந்தக்கண்களினுல் இப்படிக்குப் பதங்கோலமாகக் கிடப்பதையும்பார்க்கப்பெறுவேனே உடனேபிராணனை விட்டுவிடாமல் துக்கசாகரத்திலமூழ்ந்திக் கலங்குகின்றனன், பூருவத்திற் றுமரைமலர்வாசியாகிய மகாலட்சுமி கரத்திற் பற்றியிருந்த பொற்கிளியைச் சம்பாதித்து வளர்க்கநினைந்து உன்னுடன்சொன்ன மாத்திரத்தில் தட்சணத்தில் வைகுந்தநகரிற்போய் யாதினையும் பேசாமற் பலவத்காரமாய்ப் பறித்துக்கொண்டுவந்து எனக்குக்கொடுத்ததீரனேஇன்றைக்கிவ்விதமாகநொந்துவருந்தும் உன்னுசைத்தாய்க்கு ஒரு தேறுதலையான வாசகத்தைச் சொல்லலாகாதோ மவுனமாயிருப்பதுஉன்னையொத்த புத்திரனுக்கழகோ இதுவுமொரு விளையாட்டோ ஐயையோ இந்தப்பாதகத்துக் கென்னசெய்வேனொன்றுந்தோற்றவில்லையே வயிறுபற்றிக் குடல்கலங்குகின்றதே அப்பனேநான்செய்த கொடுமையின் காரணத்தினுலோ வெகுகாலம்உங்களாற் படாதபாடுகளைப்பட்டுமனம்வருந்தியதேவர்கள் இருஷிக்கூட்டங்கள் சபித்தவலியினுலோ அல்லது தேவதேவோத்தமனுப் ஆதிமூலமாயிராநின்ற சிவபிரான்மற்ற பிரமன், விஷ்ணு, கோபித்தநிமித்தமோ மற்றும் எந்தவிதத்திலோ தெரிகிலேன்உன்னையிழந்து சோபக்கனலி லகப்பட்டு வாடுகின்றேன் பொன்னையொத்த பிரகாசத்தைப்படைத்த திருமேனியைப்பெற்றிருக்கின்ற கந்தசுவாமியை இந்தபட்டணத்துக் கனுப்பிக்

கொடியபோரையுண்டு பண்ணிச்சிறந்த தவங்களைச்செய்
துபெற்ற என்னுடைப்பிள்ளைகளனைவரையுங்கொல்லுவி
த்து மகத்தாகிய விசனத்தைத்தந்து நீயுமிறந்துபோம்
படிக்குக் கலகத்தை மூட்டியதேவர்கள் பெண்டுகள் முற்
றினும் என்னைப்போலவே பிள்ளைகளைப்பறிகொடுத்துப்
பரதவிக்கக்கடவர் என்பிரியமுள்ளமகனே உனக்குமுன்
னர் தெய்வலோகத்திற்போயிருக்க தம்பியராகிய வச்சிர
வாகுவும் வடவைக்கனலை யொப்பக்காந்தி கொண்டிருக்
கும் அக்கினிமுகன்புசபலபராக்கிரமசாலிகளாகிய மூவா
யிரர் மற்றசுற்றத்தினரும் உன்வரவையறிந்துதமையனெ
ன்னும் அன்பினுலெதிர்கொண்டு சூழ்ந் தழைத்துப்போ
யினரோ அப்பனே மன்மதனிலும் வனப்புள்ள உனது
வடிவமானது பின்னப்படவும் என்சரீரமும்மனதும் வா
டிவதங்கிப் பரதவிக்கத் துணிவுகொண்டு வானநாட்டை
ச்சேர்ந்தனை உன்னைத்தேடிப்போகாமல் இந்தமனம்வரு
ந்தியிருக்கின்றது குமாரனே உன்னிடத்திருக்கின்ற பட்
சமும் தேகசம்பந்தமும் வெகுநேத்தி நேத்தியெனக் கவ
லையுற்றும் அப்பனேபுஷ்பங்களினிடத்திற் பெருகும்தே
னைக்கிரகிக்கும்வண்டுக்கூட்டங்களைப்போல ரூபலாவண்
ணியமுள்ள தருண மங்கையருடைய நீலோற் பலத்தை
யொத்த விழிகளுக்கு விருந்தாகத்தோற்ற விருந்தஉனது
வடிவின் சீரையும் முகாரவிந்தத்தின்சுத்தரத்தையுங்கண்
டுகளித்திருக்கும் பேற்றையற்றேன் குமாரனே தேவாமு
தத்தையொத்த உன்னை இழந்தயான் இனியிவ்விடத்தி
லிருந்து இவ்வாழ்வை விரும்பேன்மேலும்உயிருடன் தி
ரியும் பிணத்தைப்போலாயினேன்புத்திரசிகாமணியேஎ
ன்பிரியமே என்னுவியே நமக்கஞ்சித்திரியும் தேவர்களு
க்கு மிகுத்த துன்பங்களைச்செய்யவேண்டாம் அதினுற்றீ
ங்குவிளையும் அரசுக்கு மழிவுநேரும் செல்வவளங்களுக்
குக் குறைபாடுண்டு இதுநல்லகாரியமல்ல வென்று பலத
ரம் சொன்னேன், அதனையெண்ணிப்பாராமல்ஐயனேஉ
ன்னை யிராஜாதிராஜன் தோற்றனன், இனிபுத்திரசோப
த்திற்பட்டிறவாமலுயிர்தரித்திருக்கவறியான் நிமைப்போ
தும் பிரிவின்றியிருந்தமன்னனுக்குத்துன்பம்நேருவதோ
தெய்வமே உனக்கும் எங்களிடத்திற் பகையுண்டோ மக
னே நானெப்படிதரித்திருப்பேன் வயிறுகுமுங்கிக்குடல்
சுருண்டு வருத்துகின்றதேயென்று இவ்விதங்களாகப்பன்
னிப்பன்னி திருத்தேவிபுலம்புகின்ற காலையில் சூரனும்
புத்திரசோபமேலிட் டலைப்பதாற் கதறிவாடினன்.

அப்பொழுது பானுகோபன் துணைவியரும் பந்துவர்க்
கங்களும் கன்றைப்பறிகொடுத்துவருந்தும்தலையீற்றுவை
ப்போலத் திகைத்துமதிமயங்கி விழுந்துபுரண்டுசோபித்
துப் படாதபாடுகளைப்பட்டுப்பரதவித்தனர், பட்டணமெ
ங்கும் பெருத்திருந்த மங்கலவாத்தியமுழக்கமும் களியா
டலுமற்று ஓ வெனப்புலம்பு மோசைபெருத்துத்திசைக
ளெங்குஞ் சென்றொலிக்க அத்தருணத்திற் பலருந்துக்கி
க்கின்ற முன்னிலையிற்பெருகிய கண்ணீரானதுஆற்றைப்
போலப் பெருகிச்சமுத்திரவுவர்ப்பைமாற்றிமேலிட்டோ
டியது சவுனகாதிரிஷிகளே, அந்தப்பட்டணம் பட்ட துக்
கவருத்தங்களை இன்னவிதமென்று என்னொருவாயினுற்
சொல்லமுடியாது வெகுகாலமாய் அகண்ட சாம்பிராச்சி
ய விபவத்திலழுந்தி கஜேந்திரபோகத்தை அனுபவித்து
ஒருவருமெதிரில்லாமற் ஜயசாலிகளாகவிருந்தவர்களுக்கு
மேகப்பரிச மில்லாமற் சடுதியிலிடித்ததைப்போலச்சொ
ல்லப்படாத அபாயம் நேருமாகில் அவர்களுக்குகிடைத்
ததுன்பத்தைக்கணித்துக்கூற முடிவதோ பின்புஇராஜா
திராஜனுகிய சூரபதுமன் சற்றுத்தேறிப் புலம்புவதை
யொழிந்துகற்புக்கரசியாகிய பதுமகோமளையை நெருங்கி
ப் பற்பல காரணங்களைப் போதித்து ஒருமைப்படுத்திப்
பெண்கள்கூட்டத்துடன் அந்தப்புரத்துக் கனுப்பிவிட்டு
மானமுங்கோபமும்மனதைவாட்டவடவைக்கனலைப்போ
லச்சீறிக் கண்களில்அனற்பொறிசிதறத் தீயும்புகையுமெ
ழப் பெருமூச்செறிந்து பக்கத்திலிருக்கின்ற சிலதானவ
ரைப் பார்த்துப் பகைவர்பெருக்கனைத்தையும் இத்தினம்
கண்டதுண்டப்படச் சங்கரித்துப் பெருகியோடும் உதிர
த்தைநெய்யாகச்சொரிந்து ஆபிசாரவேள்வியை முடித்து
இறந்துபோனபிள்ளைகள் முதலானவர்களை எழுப்பக்கட
வேன் அதுவரையிற்குமாரனுடலை எண்ணெக்கொப்பரை
யிற்சேர்த்துப் பதனப்படுத்தக்கடவீர்களெனக்கட்டளையி
ட்டனன், அதனைச்சபையிலிருந்தவர்க ளனைவருங்கேட்டு
இதுதகும்தகுமெனச் சூரபதுமன் மந்திராலோசனைக்கு
மெச்சிக்கொண்டாடி அரசன் பணித்தபடிக்குக் காரியப்
பேர்கள் அவ்வுடலைசேடமாகவிருக்கின்றவிடத்திற்சேர்த்
துக் கண்ணிமையைப்போல இடைவிடாமற்போற்றியிரு
ந்தனர், பின்புசூரனுக்குக்கோபம் மேலிட்டபடியால்இத
னைச்சொல்வதாயினன், பகைவர்பூண்டில்லாமல்என்னிள
வலாகிய சிங்கமுகனுக்கு உணவாகக்கொடுப்பேன்அவர்க
ள் சமாதானத்துக்குவரினும் சம்மதப்படமாட்டேனென
ப்பொங்கிக் கரங்களைக்கூப்பிக்கொண்டு காத்திருக்கும் ப
லதூதரைப்பார்த்துப் பூமண்டலவடபாரிசத்தில்விளங்கு
ம் ஆசுரமென்னும் பட்டணத்துக்கதிவேகமாயோடி அர
சுரிமைகளைச் செலுத்திவருகின்ற என்துணைவன்சிங்கமு
கனைக்கண்டு நாம்பணித்ததாகத்தெரிவித்து இந்தநிமித்தி
ற்றருவீரெனக்கட்டளையிட்டுத்துரத்தினன்.

## சிங்கமுகாசுரன்வதைப்படலம்.

**என்னலுமொற்றர்கேளாவிறைவனையிறைஞ்சியேகி
யுன்னுறுநினைப்பின்முந்தியுத்தரத்தளக்கர்நண்ணி
மன்னகர்புகுந்துஞெள்ளல்கடந்துமந்திரத்துட்புக்குச்
சென்னியாயிரங்கொண்டுள்ளசிங்கமாமுகவற்கண்டார்.**

வாரீர்சவுனகாதிமுனிவர்களே மேற்குறித்தபடிக்குச்சூ
ரபதுமன் கோபதீபிதனுய்ப்பணித்தவுடன்அரசனைவண
ங்கிச் சபையைக்கடந்து மனோவேகத்தினுமேலிட்டோடி
உத்தரபூமி எல்லையை வளைந்திருக்கும் சமுத்திரக்கரை
யைச் சேர்ந்து சக்கிரவாளகிரிக்குச் சமதையாகவளைந்து
பொன்மயமாய்க் கொம்மைகளாதிய உறுப்புகளைப்பெற்
றுப் பகைவரைவாட்டவல்லசித்திரப்பிரதமைகள் மலிந்
திராநின்ற மதிலுக்கணியாக நவரத்தின காந்திகளைவீசி
அண்டஅடுக்குகளைப்போலப் பலநிலைகளைப்பெற்று வா
னத்தையளாவநிற்கின்ற கோபுரவாயிலைக் கடந்து செல்வ
ப்பெருக்கைவாய்ந்து பலஅந்தஸ்துகளையுடையதாய்நவர
த்தினகாந்திகளைவீசிச் சித்திரவிசித்திரங்களாகவிருக்கின்
ற மாளிகைகள் உப்பரிகைகள் மேடைகள் மண்டபங்கள்
கூடங்களே முதலியவைகளிருமருங்கினும் அணிபடப்
பெருத்து விசாலமாய் நீண்டிருக்கும் இராஜவீதிகளையு
ம் குபேரனும் இச்சிக்கும்படிக்கு இரத்தினராசிகளையும்

பொற்குவைகளையும் பட்டுப்பட்டாடைகளையும் மற்றசிற
ந்தவஸ்துக்களையும் இராசிராசியாகக்குவித்து வணிகர்பெ
ருத்துக் கல்லென்னும் ஓசையறுதிருக்கும் அங்காடிவீதி
களையும் பிரமித்து மப்புரத்துக்கடந்து அரசன்மாளிகை
யைச்சேர்ந்து விசாலமாகப் பொற்சுவர்பரந்திருக்குமத்தி
யில்வயிரத்தினாலும்மரகதத்தினாலும்சித்திரித்திருக்கின்ற
பருத்ததூண்களை அணியணியாக நிறுத்திப்பவளப்போதி
கைகளும் பளிங்கினாற்பரப்பியஉத்திரங்களும்பரம்புகளு
ம்விளங்கப்பற்பலமணிகளினால் விழிகளுக்கலங்காரமாகச்
சோடித்திருக்கும் சபாமண்டபத்திற்போய் அவுணராசர்
போற்றமந்திரிபிரதானிக்ள்பக்கங்களிற்சூழ்ந்திருக்கச்சே
னைத்தலைவர்கள் வடவைக்கனலைப்போல வுருத்தபார்வை
யுடன்இராஜராஜன்பணிவிடைகளுக்கெதிர்பார்த்திருக்கப்
பெரியோர்கள்பந்துஜனங்கள்நெருங்கியிருக்கப்பட்டுவர்பு
கழவித்துவாம்ஸர்கள் பரவக்கட்டியக்காரர் எச்சரிக்கைக
ளைச்சொல்லிவர கங்கையினிடத்தெழும்அலைகளிற்காட்டு
ம்நுரைகளையொப்பவிளங்கும்வெண்சாமரைகளைப் பலர்
வீசவும் அருகு ஆலவட்டங்களையசைக்கவும் சந்திரர்க
விந்திருப்பதுக்குச் சமமாக வெண்பட்டினாலும் ஆணி
முத்துகளினாலும் சோடித்துவிளங்கும்பூச்சக்கிரக்குடை
கள்கவிந்திருக்கும் நீழலிற்சிரோரத்தினவகைகளினாற் சி
ற்பிவல்லபங்களைக்காட்டி யமைத்திருக்கும் சிங்காதனத்
தில் வீரசிங்கத்தைப்போல வீற்றிருந்து அரம்பை ஊர்
வசி, திலோத்தமை, மேனகையாதிய தேவகன்னியர்கள்ச
திமுறையோடித்தக் குயிலுநாணப்பாடியும் கருடகாந்த
ருவர் தெய்வயாழ்களைமீட்டி செவிகளுக்கினிமையாகச்ச
ங்கீதங்களைச்செய்திருக்கவும் இவர்கள்மீது விழிகளைப்ப
ரப்பித் திட்டவட்டங்களைக்கட்டளையிட்டுக்கொண்டு சிங்க
முகங்களாயிரம்விளங்கச் சூரியனைப்போல வயிரமுடிக
ள்துலங்க அரசுசெலுத்திவரும் சிங்கமுகாசுரனைத் தரி
சித்தவுடன்போற்றிக்கொண்டு சமீபத்திற்போய்ப்பாதார
விந்தங்களிற் சேவித்தெழுந்து கரங்களைக்கூப்பிவணங்கி
அடக்க வொடுக்கங்களுடன் பக்கங்களில் நிற்கின்ற வேக
முள்ள பூதர்மீது விழிகளைப்பரப்பிச் சரீரமுற்றும்வியர்
க்க வருந்திவேகமாய்வந்தகாரியமென்னை துரிதமாய்ச்சொ
ல்லக்கடவீர்களெனக்கேட்டவுடன்வாயைப்பொத்திக்கொ
ண்டுசுவாமிஅகண்டமண்டலாதீஸ்வரனாகியதமையன்தே
வரீரைவரும்படிக்குக்கியாபகங்கொண்டனர். துரிதமாயெ
ழுந்தருள வேண்டுமென்று சரவேகத்தினு மேலிட்டுச்
செல்லவல்ல தூதர்கள் சொன்னதைச் சிங்கமுகாசுரன்கே
ட்டுநல்லகாரியம் அவ்விடத்திலேதெனும் புதுமைநடந்த
துண்டோ அதனையும் சவிஸ்தாரமாகத் தெரிவிக்கக்கட
வீர்களெனப்பேசியபோது தூதர்வணங்கிக் கர்த்தனே தி
ருக்கயிலையைக்கடந்து பூலோகத்துக்குவந்து ஜயசாலியா
கிய தேவரீர் தம்பியையும் மாயைவல்லபங்களைப் பெற்
றிருந்த கிரவுஞ்சபருவதத்தையும் வெற்றிவேலினாற்பிள
ந்துகொன்ற பாலசுப்பிரமணியன், பிரமன், விஷ்ணுமுத
லியர் போற்றிவர இராஜபரமேஸ்வரன்வாசஞ்செய்திருக்
கின்ற மயேந்திரபுரியைச்சேர்ந்து பாசறைவிடுதிகளை உ
ண்டுபண்ணிக்கொண்டுஅதிலிருந்தனன், இந்தச்சேதியை
ச்சக்கிரவர்த்திதெரிந்து கோபங்கொண்டு கணக்கிறந்த ச
துரங்கசேனை வெள்ளங்களுடன் புத்திரவர்க்கங்களையும்
சேனைத்தலைவரையும் மந்திரிபிரதானிகளையும் மற்றுமி
ராநின்ற பிரமுகரையும் ஒருவர்பின்னொருவராகச்செலு
த்தினர், அவர்கள்போய் அகோர யுத்தங்களைச்செய்து
செய்து மாண்டதல்லது ஒருவராவதுதிரும்பிப்பட்டண
த்தைச்சேர்ந்ததைக்கண்டிலம் இவர்களில்விவேகசாலியா
கிய இரணியன்மாத்திரம் போரினைச்செய்திளைத்தோ ம
ற்றெதைக் கருதியோதெரியாது மச்சவுருக்கொண்டு கட
லிற்பாய்ந்து மறைந்தனன், இப்பகல்பானுகோபன்கணக்
கிறந்தபடைகளைக்கூட்டிக் கொண்டுபோய்க் கொடியபோ
ரைச்செய்து கடையில் தூதனால்வெட்டுண்டுமாண்டனன்
பெரிதாகிய இந்தநஷ்டத்தைக்குறித்துச் சக்கிரேஸ்வரன்
மிகவும்வருந்தி மனந்தேறி வடவாமுகாக்கினியைப்போ
லப்பொங்கித் தேவரீரைத்தருவிக்கும்படிக்கு அடியோங்
களுக்குக் கட்டளையிட்டனுப்பினர்.

இனிவிரித்துவிரித்துச்சொல்லவேண்டுவதில்லை எமது
சக்கிரவர்த்தியைத்தவிர பிரமுகராயிருப்பவர்கள் வீரமா
மயேந்திரத்தி லொருவருங்கிடையாது சேனைப்பெருக்கு
மொழிந்தது ஆதலாற் றாமதஞ்செய்யாமற் றுரிதமாயெ
ழுந்தருள வேண்டுமெனப் போற்றுகின்றகாலையில் இக்
காரணங்களனைத்தினையும்கேள்விப்பட்டவுடன்கோப மு
ம்மானமும் மனதைவருத்தியலைக்கத் துயரமேலிட்டுத்
தேகத்தைக்கொளுத்தப் பெருமூச்செறிந்துகொண்டு சிங்
காதனத்தைவிட்டெழுந்து மந்திரிபிரதானிகள் சேனைத்
தலைவர்கள் மன்னமண்டலீகர்போற்றிவர ஆஸ்தானமண்
டபக்கடைவாயிலினிடத்தில்வந்து கரங்களைக்கட்டிக்கொ
ண்டு காத்திருக்கின்ற தூதரைப்பார்த்து நீங்கள்துரிதமா
யோடி நமதுசேனைகளனைத்தையும் கொண்டுவந்து சேர்
க்கக்கடவீரென்று கட்டளையிட்டனன், அவர்களும்வண
ங்கிப்பறந்து பட்டணத்திலும் திக்குதீபாந்திரங்களினும்
புயங்கள் தினவுண்ணச்சண்டைகிடையாமல் மனவுற்சாக
மற்றிருக்கின்றசேனைகளுக்குப்பிராணனைக் கொண்டுபோ
கும் யமபடரைப்போலப் படையெழுச்சியென்று சிங்க
முகாசுரன் பணித்ததைத் தெரிவித்தமாத்திரத்தில் மன
வெழுச்சிபெற்றுப் புயங்கள்பூரித்து விம்மச்சகலாயுதபா
ணிகளாய்த்தங்கள்தலைவரைத்தழுவிபெரும்புறக்கடலைப்
போலச்சேர்ந்து ஆர்ப்பரித்துக்கொண்டுவந்து ஆசுரமெ
ன்னும் சிறந்தபட்டணத்தைச் சேருமுன்னிலையிற்சாரதி
யானவன் நவரத்தினமயமாய் அச்சு, மச்சு, முதலியசிங்கா
ரங்களைக்கொண்டுவிளங்கும்தேரை பற்பலகோடி சிங்கங்
கள், யானைகள், புலிகள், புரவிக்கூட்டங்கள்முதலியமிரு
கங்களையணியணியாகப் பூட்டிப் பூமிதத்தளிக்கும்படியா
கக்கற்கரத்தொனிசெய்தோடத் தூரத்திவந்து மாளிகைக்
கெதிரில்நிறுத்தியகாலையிற் சிங்கமுகாசுரன்ஆயுதச்சாலை
யிற்போய் வயிரக்கவசத்தைவரையையொத்த மார்பிலிறு
க்கிமூன்றாம்பிறைகளளவற்றவை ஏககாலத்திற் றோற்று
மாறுபோலவீரபட்டங்களைநெற்றியிற்றரித்துகரசாடுவிர
ற்கோதைகளைப்பூண்டு சூரியனைப்போல விளங்கிக்கொ
ண்டிருக்கும் ஆயிரகிரீடத்தினும் தும்பைமாலைகளைச்
சுற்றிஅட்சயத்தூணீரத்தை முதுகிலிறுக்கி மந்தரத்தை
நிகர்த்தபருத்தவில்லைத் தோளில்மாட்டித் தேவப் படை

களையும் மாயைக்குரிய கணைகளையும் சேகரித்துக்கொண்டு வீரகண்டைகளைப் பாதத்திற்கட்டி இவ்விதமோர்க்கோலத்தைப் பெற்றவனாய்வெளிவந்துமேருவையொப்ப நிற்கின்ற இரதத்தின்மேல் தாவியேறி வீற்றிருந்தகாலையில் மந்திரிபிரதானிகள் மன்னமண்டலீகர் படைத்தலைவர் பந்துவர்க்கங்களிற் சிறந்தவீரர்களாதியாகியபிரமுகாள்போரணிகளைத்தாங்கிச் சர்வாயுதபாணிகளாய்த்தங்கள் வாகனங்களிலேறிக்கொண்டு அரசனைச்சூழ்ந்துநடக்கின்றகாலையிற் சொர்னமயமாய்ப் பாரித்திருக்கின்ற தேரணிகள்கற்கரத்தொனிகளைச் செய்துகொண்டோடவும் மணிகளிருமருங்கினும் மாறியொலிக்கத்தக்கதாக நீலகிரிகள் கால்முளைத் தசைவதைப்போல யானைக்கூட்டங்கள்மும்மதங்களையும் பெருக்கிவீறிட்டு இருப்புலக்கைகளைத் துதிக்கைகளில்பற்றி மேகங்களும் நடுங்கிப்பறக்கச்சுழற்றிச்செல்லவும் பஞ்சலட்சணங்களையும் வாய்ந்து அலைகளைப்போலத்தாவும் வேகமுள்ளதாய் வானத்தினும் திசைகளினும் கடல்மீதினும்பாய்ந்து நிமைப்போதில் மீளவல்ல குதிரைப்பந்திகள் நடக்கவும் பாதங்களனைத்துஞ்சேர்ந்து உருவகப்பட்டுப் பரந்ததைப்போலக் கறுத்ததேகத்தையும் பற்பலபடைகளையும்பரித்து வீரங்களைப்பேசித் தத்தமதுதலைவரைவளைந்து வீராவேசங்களுடன் கால்பலங்கள் சாயவும் இத்தகையநாற்படைகளின் பெருக்கை இவ்வளவுவெள்ளமெனக்கணிக்க எத்தகையராலுங் கூடுவதோ இந்தச்சேனாசமுத்திரமத்தியிற் சிங்கமுகாசுரன் கெம்பீரமாகச்செல்கின்றபோது ரணபேரி, ஜயபேரி,வெற்றிச்சங்கம், குடமுழா, ஆகுளி, சின்னம், தப்பட்டை, துடுமு, எக்காளை, முதலிய, போர்ப்பறைகள் கணகணென்றுதிசைகள்செவிடுபடமுழங்கவும் துவசபடங்கள்வானத்தைமறைத்து இருளைப்பெருக்கிப் படபடத்தொனிகளைக்காட்டவும் அக்காலத்திலெழுந்த தூளிபடலத்தின் பெருக்கினைச்சொல்லி முடிவதோ. மேகசாலங்களெங்கணுமூடியதைப்போல மண்விண் ணெவ்விடங்களினும்படர்ந்துபிராணிகளை மயக்கவும் பூதபைசாசங்கள் கழுகுகாக்கைகள் புதியஇரைகிடைக்குமென்னுங்களிப்பினாலிரைச்சலிட்டுக்கொண்டு தொடரவும் இவ்விதஆடம்பரங்களுடன் வானவழிக்கொண்டுபோய் ஒருநாழிகையில் வீரமாமயேந்திரத்தைச் சேர்ந்தவுடன் சிங்கமுகாசுரன் தன்தேரைவிட்டிறங்கி மந்திரி பிரதானிகளாதிய வீரர்சூழ்ந்துவரப் பொலிவற்று ஓசையடங்கியிருக்கின்றமகாசபையிற்பிரவேசித்து அரியணையின்மீது கவலையிலழுந்தியமனத்தனாய் முகவாட்டத்துடன் வீற்றிருக்கின்ற தமையனைக்கண்டு பாதாரவிந்தங்களில்வணங்கிய தருவாயில்அவனுடன் ஆசானுபாகுவாக விருக்கின்ற நீண்டகரங்களினால் வாரியெடுத்து வயிரக்குன்றுக்குச் சமதையாக விளங்குகின்ற விசாலமாகியமார்பிலிறுகச் சேர்த்தணைத்து க்ஷேமங்களை விசாரித்தபோதுசிங்கமுகாசுரன்தமையனைப்பார்த்துத் தேவரீர் முகாரவிந்தம் வாட்டமுற்றுச்சஞ்சலசித்தனாயிருக்கவேண்டுங்காரண மென்னையெனப்பரிந்துவிசாரிக்கத் துணைவனைப்பக்கத்திலிருக்கின்ற சிங்காதனத்திலமர்த்தி என்மனதுக்கினிய சகோதரனே கேட்பையாகமுன்னம் நீமந்திராலோசனையைச்செய்வதைக்குறித்து இவ்விடம் வந்திருந்து போனபின்பு நமதுதுணைவன் தாருகாசுரனையும் கிரவுஞ்சபருவதத்தையும் வேலாயுதத்தினாற் பிளந்துகொன்ற பாலசுப்பிரமணியன் மேவிட்டுத் துணைவர்படைவீரர் பூதவெள்ளங்களுடன்கடலைக்கடந்து இந்தப்பட்டணத்துக் கருகில்வந்துபாசறைவிடுதியை உண்டுபண்ணிக்கொண்டு அதிற்சேர்ந்திருக்கின்ற சேதி தெரிந்தவுடன் நமதுபடைவீரர் பிள்ளைகள் மந்திரிபிரதானிகளைக் கணக்கிறந்தவெள்ளம் இரதகஜதுரகபதாதிகளைக்கூட்டிச் செலுத்தியபோது அவர்களனைவரையும் சின்னபின்னப்படவாட்டுவித்தனன், இரணியன்மாத்திரந்தப்பிசமுத்திரத்திலொளித்திருக்கின்றனன், இந்தமானக்குறைவும் விசனமும்மேலிட்டுவாட்டுவதினால் அக்குறைகளைப்போக்கிஜயப்பிரதாபத்தைப்பெறும்பொருட்டு உன்னைத்தருவித்தனன், இந்தச்சேதிகளையோசித்துத் துரிதமாய்ப் பகைவரைக் கடக்கவேண்டுமெனச் சூரன் பேசிய வாசகங்களைக்கேட்ட சிங்கமுகன் மனவருத்தத்துடன்தமையன் பாதாரவிந்தங்களில்மீட்டும் வணங்கி யிதனைச்சொல்லுவதாயினன்.

இராஜாதிராஜனேபுஜபலபராக்கிரமசாலிகளாகிய பிள்ளைகளையும் பூர்வீகமாகவிருந்த மதியூகிகளாகியமந்திரிபிரதானிகளையும் வலிக்கொப்பற்ற படைத்தலைவர் பந்துவர்க்கங்களையும் ஜபசாலிகளாகிய சேனைப்பெருக்கையும் வரையற மாளக்கொடுத்துத் தனியனாய்த் திகைத்திருக்கின்றனை தமையனே கெடுமதிகண்ணுக்குத் தோற்றுதகாரணத்தினால் இத்தகைய துன்பத்திற்கொண்டு வந்துவிட்டது ஆதியந்தமற்ற சுயஞ்சோதிக்கடவுளைமதியாமற் பாலன் பாலனென்றிகழ்கின்றனை நமதுமுன்னவர்கள் பலரும்மதிக்கவாழ்ந்த இந்தமரபுக்குத் தீங்குநேரிடுவதைச் சற்றும்யோசித்தவனல்லை முன்னம்மந்திராலோசனைகளைச்செய்தகாலையில் இத்தகையஅனர்த்தங்கள்விளையுமெனத்தெரிவித்தகாரணங்களை விடத்தைப்போல மதித்து நீக்கிவிட்டனைபிராரத்வவினையின் முயற்சிகளைக்கடந்த புத்திவான்களொருவருங்கிடையாது பரமசிவச்செயலினால்நேரத்தக்கநன்குதீங்குகள் யாவருக்குந் தோற்றுவதரிதுஆதலால் உன்னைவெறுத்தாவதென்னை இதுபரியந்தம் நடந்துபோனகாரணங்களை நினைந்துநினைந்து வாடுவதிற்பயனொன்றையுங்காணேன் இரைச்சலிட்டோடுகின்ற பெருவெள்ளத்தைச் சிறைபடுத்தக்கூடுவதோ அவ்வாறேலோகநாயகனாகிய சிவபிரான் அருட்டிறத்தையும் மீறவல்லமோ ஆதலாற்றேவரீர் கோரிக்கையின்படிக்கு இந்தநிமிஷத்திற்சேனைப் பெருக்குடன்போய்ச் சத்துருக்களை மடக்கிக்கொண்டு நான்செய்யப்போகிற சண்டையின் முயற்சிகளைத்தேவரீர் கேள்விப்படுந்தோறும் களிப்பீர் பூதப்படைகளையும் படைவீரரையும் வாரிவாரி வாயிற்போட்டு உதரவங்கிக் கிரையாகப் பசிதணியவல்லேன்அவர்களைஒருபொருளாக மதித்தவனன்று சிவசுப்பிரமணியதேவர் கோபித்தேவவிருக்கின்ற வெற்றிவேலாயுதத்துக்குத் தப்பிப்பிழைப்பேனாகில் இவ்விடம்வந்து உம்மைக்காணப்பெறுவேன் அல்லது ரணக்களத்துக்கிரையாவதுண்மையாகும் மேலும் இன்னமுமிருக்கின்ற கொஞ்சசேனைகளும் படைவீரரும் அவ்வாறே சந்தேகமில்லாமல்மாள்வர் இதைச்சந்தேகிக்க வேண்டுவதில்லை பின்புதேவரீர் திருவுளத்தில்நினைந்தபடிக்கு முடிக்கக்கடவீரென்றுபற்பலநிந்தைவார்த்தைகளைப் பேசிக்காட்டி அவ்விடத்தில் நிற்கமனமில்லாதவனாய்த்தமையனை வணங்கிச் செலவுபெற்றுச் சபையைக்கடந்து வெளிவந்து தன்பரிசனங்கள்சூழ்ந்துவரத்தனக்கேற்படுத்தி யிருக்கின்ற நவரத்தினமய

மாகிய மாளிகையைச்சேர்ந்து இராஜராஜன்கட்டளையின்
படிக்குத் தனக்காகச்சமைத்துவைத்திருக்கின்றஅன்னக்
குவைகளையும் யானை, புலி, கரடி, கடமை, மான்முதலி
யவூன்களை பதனறிந்து காரசாரங்களுடன்செய்துகுன்று
களைப்போலப்பதலைகளிற்சேர்த்திருப்பதையும் மலைகளை
ப்போலக் குவித்திருக்கின்ற கச்சாயவகைகளையும் பொரி
யல்கரியல் வறல் சுண்டல் விதங்களையுந்தூரிவாயிலடை
ப்பதைப்போல ஏராளமாக ஆயிரங்கரங்களினாலும்வாரி
வாரியுண்டு ஆயிரக்கணக்கிற் குடங்களில் நிரப்பிவைத்
திருக்கின்ற ஆவின்திரட்டுப்பால் தயிர்தேன்இவற்றினை
ப்பிலங்களில் ஜலமோடுவதைப்போல கடங்கடமாகவெடு
த்துவிட்டும் உதிரம் நிறைத்திருக்கின்ற பதலைகளையெடு
த்து தாகசாந்தியாகத் தேக்கிடக்குடித்தும்இவ்விதங்களி
ற்றிருத்தியாகப்பொசித்து முடிந்தவுடன் வாய்பூசிக்கை
கால்க ளைச் சுத்திசெய்துகொண்டவனுய்க் குன்றையொ
ப்பவிளங்குஞ் சிங்காதனத்தில்வீற்றிருந்து திசைதிசைக
ளிற்காதவழி மணத்தை வீசியிருக்கும் கலவைச்சாந்து
குடங்களை மார்பிற்சொரிந்து பூசிக்கொண்டு புனுகுசவ்
வாதுக் குழம்பையப்பித் தேன்களையிறைத்துப் பரிமளி
த்திருக்கின்ற மல்லிகை யிருவாட்சி சண்பகம் பாரிசாத
மலர்களினாற் சோடித்த பருத்ததண்டைமாலைகளை மார்
பிலுந்தோளிலும் சூடிக்கொண்டு கற்பூரதாம்பூலவிடை
யத்தைச்செய்துவிலையுயர்ந்த பீதாம்பரத்தையுடுத்துசூரி
ய கிரணங்களைப்போலச் சொலித்திருக்கும் சிரோரத்தி
னங்களினாற்சோடித்த பாரித்தவயிரமுடிகளை ஆயிரஞ்சி
ரங்களினுங் கவிழ்த்து நவரத்தினமயமாகச் செய்திருக்கு
ம்வாகுவலையங்களைமாட்டிப் பருத்தமுத்தாரங்கள் மோக
னமாலைகள் சரப்பளிபதக்கங்களைப் பரந்தமார்பினிறைய
ச்சாத்திச் செவிகளிற் சூரியனையொத்தமகரகுண்டலங்க
ளைத்தூக்கி ஆயிரம்வெள்ளியங்கிரியி னுச்சிகடோறும்பி
றைகளின்சமோகங்கள்தோற்றுமாறுபோலச் சிங்கமுகங்
கள்விளங்கும் நெற்றிகள்முற்றினும் முப்பட்டைகொண்
ட திருநீறுசாத்தித் திலதப்பொட்டுகளுமிட்டு முற்றியவு
டன் பரமசிவனைக்குறித்துத் தான்செய்த தவமுயற்சிக்கி
ரங்கிக் கடாட்சித்திருக்கின்ற பருத்ததண்டாயுதம் சூல
முதலிய படைகளைப்பரித்துத் தேவாஸ்திரவிதங்களைச்
சேகரித்துக்கொண்டு தாயாகியமாயை தனயசெய் திருக்கி
ன்றபாசத்தையுங் கரத்திற்றூங்கி மந்தரகிரிகளைப்போல
விளங்கும் பருத்ததனுசுகளைத் தோள்களில்மாட்டித் தி
வ்வியபாணங்களைக் கரங்களிற்கொண்டுஅம்புறாத்தூணி
ரத்தை முதுகிலிறுக்கி அபேதவயிரக் கவசத்தைமார்பி
ற்கட்டி இத்தகையபோர்க்கோலத்தைத் தரித்துக்கொண்
டவுடன் வெளிவந்து பத்துநூறுயிரம் பரிகள் யானைகள்
பூண்டு நவரத்தினமயமாய் சித்திரவிசித்திரங்களாக அச்
சு, மச்சு, கொடுங்கைமுதலியசிங்காரங்களைக்கொண்டு வா
னத்தையளாவ நிற்கின்ற தேரின்மீதுதாவியேறி வீற்றிரு
ந்தனன், அத்தருணத்தில் தன்மனதுக்கினிய மந்திரிபிர
தானிகள் சேனைத்தலைவர்கள் தங்கள்வாகனங்களி லேறிக்
கொண்டு வந்துசூழவும் அருகு ஆலவட்டம் வெண்சாம
ரைசின்னம், சந்திரவட்டக்குடைகளைப் பல்லாயிரம் அ
வுணவீரர்தாங்கித் தங்கள்பணிவிடைகளைச்செய்துபோக
வும் பட்டுவர்புகழவும் கட்டியக்காரர் எச்சரிக்கவும் மங்க
லவாத்தியங்கள்முழங்கவும் கொடிகுடைகள் மகரதோர
ணங்கள்நெருங்கவும் இவ்விதராசபரி வட்டணைகளுடன்
வெளிவந்த காலத்திற் பூரண சந்திரோதயத்தைக்கண்ட
கடலையொப்ப ரதகஜ சதுரங்கபதாதிகள் ஜயவுற்சாகங்க
ளுடன்ஆரவாரித்துக்கொண்டுவந்துசூழ்ந்தனர், சவுனகா
திரிஷிகளே, அந்தச்சதுரங்கசேனைகளின்தொகைப்பிரிவு
களைஇவ்வளவென்று ஒருவராலுங் கணிக்கப்படுவதன்று
அவ்வீரர்வலிகளிற்சிலசொல்லக்கேட்பீராக பொன்னுலக
வாசிகளாகியதேவர்கள் பெருமிதங்களும்வாழ்வும் பூமண்
டலத்தில்வாழும் அரசர்கள்சிறப்புகளும் வீரத்தன்மையு
ம்தானவர்கள் துன்பங்களையும்நீக்கித்தம் மினத்தவருக்கு
யாதொருகுறைவுமில்லாமல் அகண்டசாம்பிராச்சிய செ
ல்வங்களையநுபவித்துக்களித்திருக்கவைத்தஜயசாலிகளா
யும்கொலைகளவுகட்காமமென்பதை வேதங்களினொழுக்க
மாகக்கொண்டுநடத்தவல்லபாதகராகவும் பலவிருட்சங்க
ள்பெருத்தகானகத்தைத்தகிக்கத்தக்கதாபாக்கினியையொ
த்த செம்பட்ட மயிர்விளங்கும்காட்சியைப்பெற்றவர்களா
கவும் சிவகாருண்ணியம் தயைதாட்சண்ணிய மெவ்வளவு
ங் கிடையாத கொடியமனதைப் பெற்றவர்களாகவும் தெ
ய்வலோகம் பூமண்டலமுதலிய தலங்களிற் சுந்தரவதிக
ளாய்க் கற்புத்தன்மைபொருந்திய மங்கையர்மீது காமுற்
று அக்காரணத்தினல் மன்மதன்செலுத்தும் பஞ்சபுஷ்
பபாணங்களும் சுகந்தபரிமளங்கள் வீசும்மலர்மாலைகளு
ம் எக்காலத்தும் நீங்காதபுயாசலங்களைப் பெற்றவர்களா
கவும் பற்பல சண்டைகளைச்செய்து பருவதாகிருதியாக
விளங்கும் விசாலமாகிய மார்பினிடத்தல்லது மற்றதேக
வுறுப்புகளிற் காயப்படாமல் ஜயப்பிரதாபத்தைப்பெற்றி
ருக்கின்ற வீராதிவீரர்களாகவும் விண்மண்பாதலமெனச்
சொல்லாநின்ற திரிலோகங்களில் வாசஞ்செய்கின்ற சீவ
கோடிகளினதுபிராணனைப் பரமன்கட்டளைப்படிக்குக்கா
லாதிகளிற் கொண்டுபோகவல்ல யமனையொப்பப் பலவந்
தமாக மானிடர்மிருகங்கள்முதலிய ஜந்துக்களைவாரிவாரி
ப் பிலத்தையொத்தவாய்களிற்போட்டு இருகடையினும்
உதிரம்பீரிட்டோடுமென்று உதரவங்கிக்கினியாக உண்
டுகளிக்கும் பசிப்பிணியைப் படைத்தவர்களாகவும், வட
வைக்கனலைப்போலக் காந்திகொண்டிருக்கும் சிவந்தவி
ழிகளைப் படைத்தவர்களாகவும், அஷ்டதிசைகளே முத
லிய தலங்களிலிருப்பவரை வாட்டிக்கொண்ட வெற்றிக்கு
க் குறியாகக்காட்டிய வீரகண்டைகலிக்கும் பாதங்களைப்
பெற்றவர்களாயும், அண்டங்களாயினும் விழுங்கத்தக்க
விசாலமாகிய பேழ்வாயைப்படைத்தவர்களாகவும், போ
ரைவிரும்பியெதிர்ந்த வீரர்மார்பிற் கூரியமுனையைப்பெ
ற்ற வேலினாலுஞ் சூலத்தினாலும் குற்றித்தூக்கிப் பெரு
கும் உதிரங்களையும்நிணங்களையுந் தசைகளையும் ஏராள
மாகநிறைத்தும் நிரம்பாதபிலம்போன்ற வாயையும் கட
லையொப்பப் பருத்திருக்கும் வயிற்றையுங்கிடைத்தவர்க
ளாகவும்திசைக்களிறுகளின் துதிக்கைகளைச்சேர்த்துமுடி
ந்து செவிகளிற் குண்டலமாகவணிந்து மகிழுந் தீயமன
தைப்பெற்றவர்களாகவும் அஷ்டகுலாசலங்களைப் பெயர்
த்துப் பந்தாடும்புயவன்மையைப் படைத்தவர்களாயும்ச
த்தசாகரங்களின் ஜலத்தை ஒருகரத்தினேந்தியுண்டுந் த
ணியாததாகவிடாயைக் கிடைத்தவர்களாகவும் சொர்க்கம
த்தியபாதலவிடங்க ளெங்கணும் நொடிப்போதிற்சுற்றிவ
ரும் வேகத்தைப்படைத்தவர்களாகவும் செவ்வானத்தை
யொத்த மீசைதாடிகளைப் பெற்றவர்களாகவும்குலாசலங்
கள்கைகால்முளைத்துநடப்பதைப்போன்றகாத்திரமுள்ள

தேகத்தை யுடையவர்களாகவும் பிறையைப் பழித்துவி
ளங்குங்கோரைத் தந்தத்தைப்பெற்றவர்களாகவும்யாளிசி
ங்கம் புலியானை கரடிமான்முதலிய மிருகங்களையொத்த
முகங்களை வாய்ந்தவர்களாகவும் சிரமொன்று கரங்களன
ந்தமும் பலதலைகளிரண்டு புஜங்களைப்பெற்றவர்களாகவு
ம் பார்த்தவர்கள் கர்ப்பங்கலங்கிக்கரைக்கும் கோரரூபத்
தைப் பெற்றவர்களாகவும் தடுத்துப்பேசிற்றுயிரையும் வ
தைத்துண்ணுங் கோபாவேசங்களை யுடையவர்களாகவும்
தண்டாயுதம் மழுப்படை தட்டைமுசுண்டிவில்வாள்வே
ல் எழுமழு நாஞ்சில் காலபாசம்சூலம்சட்டி எறிவேல்கு
ந்தம் கப்பணம் முசலமாதிய பற்பலபடைகளைத்தாங்கின
வர்களாய் அண்டவடுக்குகளழிந்து குலைகுலைந்துவாடும்ப
டிக்கு ஆர்ப்பரிக்கவல்ல பருத்த குரலோசையை யுடைய
வர்களாகவும் இத்தகைய கொடியசெய்கைகளைப் படைத்
த வீராதிவீரராகிய அவுணவெள்ளங்களும் கோடைகா
லமேகங் கர்ச்சித்ததைப்போலவீரிட்டு இருப்புலக்கைக
ள்பருத்த சங்கிலிகளைத் துதிக்கையிற்பற்றித் திசைகளதி
ரச்சுழற்றி உரலையொத்த பாதங்களைப்பெயர்த்துவைக்கு
ந்தோறும் பூமிகுழிபட நடந்துபோகும் வலியயானைகளி
னது கன்னத்தினும் கபோலத்தினும் பீசத்தினும்நின்று
பெருகும் மும்மதங்களும்பாய்ந்து சுழலமிட்டுக்கொண்டு
தூசிப்படைக்கு முன்னேடவும் அலைகள்மிகுத்தசமுத்தி
ரத்திற்றோற்றும் வெளுத்தநுரைப்பெருக்கைப்போல வி
லாழியென்னும் வாய்நுரையைப் பெருக்கிப்பாயும் குதி
ரைப்பந்திகளானவை அனல்வடிவைப் பெற்றசிவந்தகுள
ப்படிகளைப் பெயர்த்துவைத்து மிதிக்குந்தோறும்முற்கு
தித்தமதவெள்ளம் விலாழிப் பெருக்கானது சேறுப்ப ப
தாதிகள் நடையிலழுந்திப் பருவதாகிருதியாய்ப்பாரித்தி
ருக்கும் ரதங்களிற்பூண்டு கர்க்கரத்தொனியைக் காட்டிச்
செல்லும் வண்டில்களோடியோடிப் பசையற்றுப் பொடி
யாய்த்துகள்பட் டெழுந்து திசைகளைமூடிப் பொன்னுல
கத்தைமண்ணுலகமாக்கவும்ரதசமோகங்களினிடங்கடோ
றும் நாட்டப்பட்டிருக்கின்ற துவசபடங்களின் முகப்பிற்
பதித்திருக்கின்ற வயிரச்சிகரங்களின்முனை உறுத்துவதி
னாற் காளமேகங்களினது கர்ப்பங்கள் தளைபட்டுஜலத்தை
ப் பெருக்குகின்றவேளையில் அவற்றினிடத்தசைகின்ற ப
ட்டுச்சீலைகளினுலடைபடவும் இவ்வித ஆடம்பரங்களுட
ன் சதுரங்கசயின்னியங்களும் நடக்குமுன்னிலையில் தத்
தித்தாவிப்பாயும் புரவிக்கூட்டங்களினுடைய கனைப்பி
னொலியும் தேர்களோடுங் கர்க்கரத்தொனியும்மதயானைக
ள் பிளிறொலியும் தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கரு
வி, மிடற்றுக்கருவி, கஞ்சக்கருவிகளினதுமுழக்கும் ஏக
மாய்ப் பேரொலியைக்காட்டுவ தெப்படிக்குத்தோற்றுவ
தெனில் அகண்டமண்டலாதீஸ்வரனாகிய சூரன்தம்பிசிங்
கமுகனிறக்கப் போகின்றனன், ஐயையோவென்றிரங்கிய
முமொலிக்கிணையாக விருந்தது.

அப்பொழுது பெருத்தெழுந்த தூளிபடலமும்வானத்
தையளாவ வோங்கியசையுந் துகிற்கொடிகளும் விழிகளை
மறைத்து செவிகளைப்பொத்தி நாசியைத்தூர்த்துமூச்சா
டவொட்டாமற் திகைக்கச்செய்வதினாற் சூரியபகவான்பய
ப்பிராந்திகொண்டு பகைவர்வானவெல்லையினுஞ் செல்ல
வொட்டார்களென நடுங்கிப் பாரிசமாய் இரதத்தைத்துர
த்திப்போயினன், இவ்விதவுற்பாதங்களைக் காட்டி நடக்கி
ன்றகாலையில் அவுணச்சேனைவெள்ளங்களுக் கதிபனாகிய
சிங்கனென்னும் பெயரைப்பெற்றவன் வீராதிவீரன்ரண
ரங்க சூரன் தேவர்முதலாயினரையும் வென்றதீரன் திக்
குவிஜயம்பெற்று எத்தகையரும் புகழ்ந்துபோற்றும்பிர
தாபத்தைப் பெற்றவனாய் தன்னரசனைப்போன்ற உருவ
த்தையும் புயவன்மையையும் படைத்த சவுரியபரனாகிய
அவுணவீரன் கணக்கிறந்ததேர்க்காரர்பலகோடியானைவீ
ரர் கணிதமற்ற குதிரைச்சேவகர் தொகைபடாத கால்பல
ங்கள் இவற்றினை அணிபட வகுத்துப் பலதிசையினும்
போற்றுதலைக் கிரமப்படிக்குநாட்டி காலாந்தகனைப்போ
லத் தானுந் தனுர்ப்பாணியாய் நீலகிரியையொத்தகாத்தி
ரமுள்ள மதயானையின்பிடரியி லாரோகணித்துத் தூசிப்
படையைக்காவல்கொண்டுபோகுமுன்னிலையில் அவனைச்
சூழ பலயானைகளின்மீதிற்பேரிகைகளைமுழக்கவும்புரவி
களின்பேரில் டங்காக்களைக் கொட்டியும் ஒட்டகங்களின்
மீது ரணபேரிசத்திக்கவும் சல்லரி மல்லரி-திமிலைதக்கை
ஆகுளிமுதலிய பல்லியங்கள் கடலைப்போல முழங்கிவர
வும் பூதபைசாசங்கள்-கழுகு-பருந்து-காக்கை-நாய்-நரிமு
தலிய ஜந்துக்கள் தங்களுக்குப்புதியவிருந்து கிடைக்கப்
போகுதென்னும் ஆவலினாலொன் றுடனொன் றுசீறியும்வா
துகொடுத்தும் பிணங்கியும் வானத்தினும் மண்ணிடத்தி
னும் கூக்குரலிட்டுச்சென்றது இரத்தினமயமாய்வானத்
தையளாவப்பாரித்திருக்கும் இரதபந்திகளைப்பருவதங்க
ளெனக்கருதி மேகசாலங்க ளிறங்கி யிடிமின்னலைப்பெரு
க்கி முழங்கியிருப்பது எப்படிக்கிருந்ததெனிற் றேருரு
ளைகள் கிரிச்சிட்டோடுவதைப் பார்த்துஇந்தசயின்னியக்
களிறக்கவிருக்கின்ற அபஜயத்தைநினைந்துநினைந்து துக்
கிக்கின்றனயோ அதற்கென்னசெய்வோமெனத் தாமும்
வருந்தி வினவித் தேற்றுவதற்கொப்பாகக்காட்டியதுஇத்
தகைய சிறப்புகளுடன் கடையுகவெள்ளத்தைப்போலநா
ற்படைகளும் போகின்றகாலத்திற் பகைவருக்குக்காலாந்
தகனையொத்த சிங்கமுகாசுரன்நடுநாயகமாகப்பலதிக்கினு
ம் விழிகளைப்பரப்பித் திட்டவட்டங்களைச் செய்துகொ
ண்டு வருவதைப் பிரமன்- விஷ்ணு-தேவராசனாதியர்கண்
டு சிங்கராசனையெதிர்ந்த யானைக்கூட்டங்களைப்போல நடு
நடுங்கித் தேகமுற்றும் வியர்க்கத்திகிற்கொண்டுவஸ்திரங்
கள் சோரப்பறந்து திருச்சபையைச்சேர்ந்து சிங்காதனத்
தில்வீற்றிருக்கின்ற வெற்றிவேலாயுதக் கடவுளைவணங்கி
ப்போற்றிக் கர்த்தனே சூரபதுமனுக்கிளைய சிங்கமுகாசு
ரனென்பவன் மேருமுடிகளைப்போன்ற ஆயிரஞ்சிரங்கள்
விளங்கவும் மந்தரத்துக்கொப்பாகிய இரண்டாயிரங்கரங்
களைப்படைத்து ஆயிரத்தெட்டண்டங்களையும் சுலபமா
க வெற்றிகொண்டு ஆயிரயோசனையுயர்ச்சியும் அதற்கடு
த்ததாத்திரதேகத்தையும்படைத்து மனதினுலளவிடப்ப
டாத மாயைப்பெருக்கைக்கற்றுத்திரிலோகங்களுக்குமழி
வுநேரினும் மாளாதவரமுயற்சிகளைப்பெற்றதீரன் இத்த
கையஜயசாலியான சிங்கமுகன் முன்னொருகாலம் அஷ்ட
திக்கஜங்கள் அஷ்டமாநாகங்கள் அஷ்டகுலாசலங்கள்கூர்
மம் இவைகள்போற்றுதலைநீக்கி சராசரப்பிரபஞ்சங்க ள
டங்கிய இந்தப்பூமண்டலத்தைத்தன்னொரு கரத்தினலே
ந்திய புசபலபராக்கிரமசம்பன்னன் சர்ப்பாபரண பூஷித
ராகிய சிவபிரான் இவன்முடித்த அரியதவத்திற்குமெச்சி
க்கடாட்சித்ததாய்க் கணக்கற்ற சத்துருக்களுயிரையுண்டு
அவர்களுதிரக்கறையும் நிணத்தின்பசுமையு மருமலரு
க்கின்ற முத்தலைச்சூலமொன்றைக் கரத்திற்றாங்கி யியம

னுக்குமொரு யமனையொப்பாயிருக்கும் பாதகன் அஷ்டதிசைகள்பூமண்டலம் சத்தபிலங்கள் பொன்னுலகம்அதின்மேற்பட்ட பதங்கள்முதலியவற்றை ஒருகரத்தினால்வாரியுண்டுமிழத்தக்க பெருமிதங்களைப்படைத்தவன் இவன் உருத்துப் பாதங்களைப்பெயர்த்துவைக்குந்தோறும் தராசுத்தட்டைப்போலநிற்கின்ற பூவட்டமானது அவ்வெல்லைதாழ்வு பட்டு மற்றையபுறங்களைச்சூழவிருந்த சமுத்திரமானது மேலோங்கி விண்ணகத்தினும் அலைகளைவீசும்படிக்கு மிதிக்கவல்ல திண்ணியன் தங்கக்கட்டுகள்பிகிந்து மணிகள் கலகலென்றொலிக்கும் பருத்ததண்டாயுதத்தைக்கரத்திற்பற்றிக் கிறுகிறெனச்சுழற்றி அண்டகடாகத்தினிடத்தில் மோதியகாலத்தில் அத்தாக்கலுக்குத் தாளமாட்டாமற் பொடிப்பொடியாக வுதிரக்கண்டு நகைத்து இதற்கு வலிபோதாதெனநினைந்து அதற்குமேருகிரியைமுட்டுக்கொடுத்த புயவன்மையைப்படைத்தவன் சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலவடபாரிசத்திற் சொர்னமயமாகியபருத்த மதில்வளைந்து வானத்தையளாவிநிற்குங் கோபுரங்கள் நவரத்தினமயமாகிய மாடமாளிகைகள் நெருங்கியிருக்கும் ஆசுரமென்னுஞ் சிறந்தபட்டணத்தில் வாசஞ்செய்பவன் கோபம்பிரவேசித்து வீசுவானாகில் உலகங்கள்வானத்தையு மொன்றுபடச் சேர்த்துக் கட்டவல்லமகிமையைப் படைத்திருக்கின்ற பாசமொன்றைத்தன்தாயினிடத்திற் பெற்றிருப்பவன்ஆயிரத்தெட்டண்டங்களுக்கும்அதிபனாய் புசபலபராக்கிரமசாலியாகச் சகலரும்வணங்கிப்போற்ற வாழ்ந்திருக்கின்றசூரபதுமனுக்கு நேரிளையவனாய் அவனிலும் பதின்மடங்கு வலியையும் வீரத்தையும் மாயவிஞ்சைகளையும் பெற்றிருக்கின்ற வீராதிவீரன் நம்மவரை எக்காலத்திலுங்கண்ணிற் காணாமலடித்து துரத்திவாட்டும் கொடியபாதகன் இத்தகைய சவுரியபரனாகிய சிங்கமுகாசுர னென்பவன் கணக்கிறந்த ரதகஜதுரகபதாதிகள் பெரும்புறக்கடலையொப்பச் சூழ்ந்துவரத்தக்கதாக மேலிட்டு தேவரீருடனெதிர்த்துச் சண்டைகொடுத்துவெற்றிபெறநினைந்து வடவையைப்போலச்சீறி யிதோவந்துவிட்டான் இவனைச் சுலபமாக நினைக்கப்போகாது கர்த்தனே அவனாணவத்தையடக்கிக் கொன்றுஎங்கள் மனக்கவலையையொழித் திரட்சிக்கவேண்டுமென் றிரந்துபோற்றுவதைச் சண்முகதேவர் திருச்செவிகளினேற்றுஅவர்களிடத்திற்பரிவாய் அவ்வாறே செய்யக்கடவோமெனக் கையமர்த்திப்பக்கத்திற்கைகட்டிநிற்கின்றவாயுதேவன்மீதுவிழிகளைப்பரப்பித் துரிதமாக நமதுதேரைக்கொண்டுவரக்கடவை யெனக்கட்டளையிட்டகாலையில் வலதுபுஜத்தைப்போல அருகில் வீரவாளைக்கரத்திற்கொண்டிருக்கும்ஜயசாலியாகிய வீரவாகுதேவர் பாலசுப்பிரமணியதேவர்பாதகமலங்களிற் சேவித்து ஒப்புவமையற்ற புசபலபராக்கிரமசாலிகளாய் வெற்றியைப் பெறவல்லதுணைவர் இலக்ஷர்படைவீரர் பூதசயின்னியங்களுடன் அடியேன்போய்க் கொடியபாதகனாய் மேலிட்டுவரும்பகைவனை வளைத்துக் கொண்டுஜாடி அவன்பிராணனையுண்டு இராட்சதவெள்ளங்களனைத்தையும் ரணபத்திரகாளிக்குப் பலிகொடுத்துத் தேவரீருக்கறிக்கைவிடக்கடவேன் இப்போனைஅடியேனுக்குக்கடாட்சித்து இவ்விடத்திற் சவுக்கியமாயிருக்க வேண்டுகின்றனன் கர்த்தனேயென்று பிரார்த்தித்து கேட்கும்துணைவன் திரமானவாக்கியங்களைத் திருவுள்மகிழக்கேட்டருளி சாவுக்குத்துணிந்துவருகின்ற சிங்கமுகன் போனைவிரும்பினை நல்லகாரியம் அவ்வாறேபோய் ஜயப்பிரதாபத்துடன் மீளக்கடவை இவ்விடத்திலிருக்கின்றபூதப்படைகளிற் பாதியைக்கூட்டிக்கொண்டு முன்னம்நடக்கக்கடவையெனப் பணித்தவுடன் வீரவாகுதேவருக்குஅதிகவுற்சாகமுண்டாய் வேலாயுதமூர்த்தியைவணங்கி விடைபெற்றுத் துணைவர் படைவீரர்நெருங்கிப்போற்றிவரத்திருச்சபையைக்கடந்து தன்னிருக்கையைச்சேர்ந்துபகைவர்மீது ஒவ்வொருதொடையில் கோடானகோடிதிவ்வியபாணங்களைச் சொரியத்தக்க பெருமையினால் கார்முகமெனப்பெயர்பெற்ற ஒப்பற்ற தனுசையெடுத்துத் தோளில்மாட்டி அட்சயத்தூணீரத்தை முதுகிலிறுக்கித் தேவாஸ்திரங்களைச் சேகரித்துக்கொண்டு விரற்கோதைகளைமாட்டி அபேதவயிரக்கவசத்தை மார்புக்கணியாகத் தரித்து வெற்றிக்குரிய தும்பைமாலையை மகுடத்திற்சுற்றி வெளிவந்து பருவதாகிருதியாகநிற்கின்ற பொற்றேரி லேறியகாலையில் எண்மர்-இலக்ஷர்-படைவீரர் சருவாயுதபாணிகளாய்ப் போர்க்கோலத்தைத் தாங்கி ரதாரூடராய்ப் பிரசண்டவாயுவைப்போல வீரவாகுதேவனைச்சூழ்ந்தனர்.

அக்காலத்தில் ஆயிரவெள்ளம் பூதவெள்ளங்களும் வீராவேசங்களுடன் பருத்துத்தழைத்திருக்கின்ற மாமரங்கள் வானத்தை யளாவிய பருவதங்கள்தோமரம்-பிண்டிபாலம்- கப்பணம்- இருப்புலக்கை- தண்டாயுத முதலிய படைகளைப்பரித்து இரைச்சலிட்டு வந்து இராட்சதகுலாந்தகனை வளைத்து ஜயசன்னாகங்களுடன் நடக்கின்றகாலையில் பலகோடிபூதர் வெற்றிமுரசம்-சங்கம்-பேரி-துடுமு- தப்பட்டையாதிய போர்ப்பறைகளை முழக்கிக்கொண்டு தன்னணியிற்போக இவர்கள் நடுப்பிரதேசத்திற் பிரளயகால ருத்திரனைப்போலத் தோற்றும் வீராதிவீரன் நாற்புரங்களினும்விழிகளைப்பரப்பிவருவதைச்சிங்கமுகாசுரனுடைய நாற்படைகளும் கண்டமாத்திரத்தில்ரவுத்திராகாரமாகக் கோபித்து நெருங்கினர், இவ்விருசேனாசமுத்திரங்களும் அடர்ந்து ஒருவரையொருவர் சீறிநின்றதெப்படியிருந்ததெனில்,பவுத்திரமாகிய சுத்தோதகப்பெருக்கையுடைய கங்கையும்லவணசமுத்திரமும் மேலிட்டுப் பெருகுவதைப்போலக்காட்டியதுஅப்போதுஉபயபாரிசங்களினும்-ரணபேரி-ஜயபேரி-குடமுழா-கொக்கரை கோடுவலம்புரிச்சங்கமாதியவாத்தியங்கள்திசைகளதிரக்கணகணென்று முழங்கவும்மயிற்பிஞ்சங்கள் ஆலவட்டங்கள் வெண்சாமரைகள் தேர்க்கொடிகளொன்றுட னொன்றுராய நெருங்கவும் வீரர் பாதங்களிற்கட்டிய ஜயகண்டாமணிகள்கலீல்கலீலெனச் சத்திக்கவும் தேர்களினிடங்களில்நாட்டியிருக்கின்ற கொடிகளும் வெற்றித்துவசங்களும் வானத்தையளாவிப் படபடத்த தொனிகளைக்காட்டியசையவும் ரதங்கள் கற்கரத்தொனிகளைக்காட்டியோடவும் மதயானைகள் வீறிட்டு இருப்புலக்கைகளைச் சுழற்றிமேலிடவும் குதிரைப்பந்திகள் கனைத்துப்பாயவும் படைவீரர்கள் வீராவேசங்களுடன் சிருங்கநாதங்கள் அட்டகாசங்களைச்செய்து மீறவும் இவ்வொலிகள் பெருத்துச் சத்தசாகரங்களைப்போலவும் மேககர்ச்சிதத்துக்கொப்பாகவும்அதிர்வதினாற் பிராணிகள் செவிடுபட்டுத்தியங்கி மயங்கிவாடினர், அத்தருணத்திற்கந்தச்சுவாமியார் சேனைகள்கைமிஞ்சி போர்த்தொழிலைச்செய்ய யத்தனித்தபோதுசிங்கமுகாசுரன்படைகள்சீறி தேராளிகள் யானைச்சேவகர் குதிரைவீரர் ஜயசாலிகளாகிய கால்பலங்கள்மேலிட்டுச் சிலர்

தண்டாயுதங்களைக் கிறுகிறெனச்சுழற்றி மோதியும் சிலர்கணிச்சிகளைவீசியும் சிலர்பிண்டி பாலங்களைச்செலுத்தவும் சிலர்தோமரங்களைவிட்டார்ப்பரிக்கவும் பலர்பாரித்த விற்களைவட்டாகாரமாகவளைத்து டங்கார சத்தத்தைக்காட்டி விஷத்தொவையலிட்டுக் கழுகிறகுகள் பூண்டகொடியபாணகோடிகளைச் சோனைப்பெய்யலைப்போலச்சொரிந்தும் இவ்விதமாகப் போராடுகின்றபோது பூதவீரரும் பின்னிடையாமல் ஆலகாலத்தையொப்பப் பொங்கிப்பருத்த கிளைகளையுடைய மராமரங்கள் வடவாலவிருட்சங்களை வேருடன்பறித்து மண்டலமாகச் சுழற்றிமோதியும், சிங்கம், புலி, கரடி, வாசஞ்செய்திருக்கின்ற பருவதங்களைச் செண்டைப்போலவெடுத்து வீசியும் தண்டங்களைக்கொண்டு தாக்கியும் எழுவாயுதங்களைச் செலுத்தியும்மழுக்களைக்கடாவியும் வளைதடிகளைப் பெருக்கியும் இவ்விதங்களாகச் சமுத்திரத்திற்பட்ட பலவளங்களையும் அலைகளினால் வீசுவதைப்போலப்பலதிசைகளினுமிருந்துசெலுத்தி ஆர்ப்பரித்தனர், அவைகள்மேலிட்டுத் தாக்குவதினால் இராட்சதர்களிற் பலர்வரமுயற்சிகள் மங்கிவலியற்றுக் கால்கள்முறிந்தும் தொடைகளொடிந்தும்மார்புபிளந்தும் வாகுவலையங்கள் தரித்திருக்கும் புசங்கள்சரிந்தும் நவரத்தினமயமாகியகிரீடங்களைத்தாங்கிய சிரங்களுருண்டும் களத்திற்பட்டனர், பூதப்படைகளிலும் சிலர்சின்னபின்னப்பட்டுமாண்டனர்.

அத்தருணத்தில் படைத்தலைவர்கள் ரவுத்திராகாரமாகக்கோபித்து வீராவேசத்துடன் அஸ்திரசஸ்திரவிதங்களை ஒன்றனந்தமாகச்செலுத்திப்போராடும்போதுஅந்திவானத்தைப்போல ரணக்களவெல்லையெங்கணும் உதிரப்பிரவாக மேலிட்டுப்பாய்ந்தும் பிணமலைகள்குவிந்தும் கண்டிக்கப்பட்டிறைந்திருந்த நிணமாம்சங்களைப் பூதபைசாசங்கள் கழுகுகாக்கைகள் நாய்நரிகள் வெறுக்கவுண்டு உதிரபானஞ்செய்து வெறிகொண்டு ஒன்றுடனொன்றுபகைத்துப்பொருதும்களியாடல்களைச்செய்துகொண்டானடித்தும் கூந்தலிட்டோடியும் வானத்தில் வட்டமிட்டுலவியும் இவ்விதமாகச் சமர்க்களம் விளங்குமுன்னிலையில் கற்கம்பத்தைப்பழித்த வலியபுசங்களைப்பெற்ற இராட்சதசேனைகளும் வலிக்கொப்பற்ற பூதகணங்களும்மானமுங்கோபமும்மனதைவருத்தச்சீறிச் சண்டைக்குநேர்ந்தகாலையில் அவுணப்பாதகர்கள் ரவுத்திராகாரமாக மண்டியெரிந்து விற்களைவளைத்துக் கணக்கிறந்த கொடியபாணங்களைச்சொரிந்து ஆயுதங்களினாற்கொண்டகொண்டமட்டும்சாடும்போதுசுப்பிரமணியருடைய தூசிப்படையானது எதிர்த்துநிற்கச்சவுரியமில்லாமல்முறிந்துபின்னிட்டது, இந்தஅபஜயத்தைச் சிங்கனென்னும்பூதத்தலைவன்கண்டமாத்திரத்திற்காளகூடத்தைப்போலக்கொதித்துப்பாரித்ததண்டாயுதமொன்றைக்கரத்திற்கொண்டுகிறுகிறெனச்சுழற்றிக் கறுத்ததேகத்தைப்படைத்த இராட்சதவீரர்கள் தலைகளுருளவும் மண்டைபிளக்கவும் புசங்கள்சரியவும் தலைகள்நுறுங்கவும்மோதி சூறாவளியைப்போலச்சுழன்றுசுழன்று முன்பின்பாராமற்கொண்டது கொண்டமட்டும் சாடும்போது அக்கொடுமைக்குத்தாபரித்து நிற்கப்படாமையால் இராட்சதசேனை தத்தளித்துத்தியங்குவதைச் சங்குசக்கரங்களைத்தாங்கியிருக்கும் தசமுகனென்னும் இராட்சதத்தலைவன்பார்த்துச் சிரத்தையசைத்து நல்லகாரியம் ஒருதேவப்பயலுக்கு வெற்றிபெற்ற நமதுசேனைகள்கலங்கி வாடுவதோவென்னுமானம்பாதிக்கப்பொங்கி புசங்களைத்தட்டி மீசைதுடிக்கச் சரீரம்வெயர்க்கச் சீறிப்பார்த்து எங்கேபோகிறாய் நில்லுநில்லென்றதட்டித் தங்கக்கட்டுகள்பிகிந்து மணிகள்சத்திக்கும் வில்லைமண்டலாகாரமாகவளைத்து நாரியைப்பிகிந்து திசைகளதிர குணத்தொனிகாட்டிப் பகைவன் முனையிற்பாய்ந்து கணக்கிறந்த கொடியபாணங்களைச் சோனைமாரியைப்போலச்சொரிந்து சிருங்கநாதஞ்செய்தனன், அவைகள்வரும்வேகத்தையும் குரூரத்தையும் சிங்கன்மதித்து மந்தரத்தையொத்த தண்டாயுதத்தினாற் கோட்டுப்புள்ளுகளையொப்பத் தட்டிப்போட்டு ஓரடியினால் அவன்மார்புக்கரணாகத் தரித்திருந்த வயிரக்கவசத்தைப் பொடிபடுத்தினான் அதனால் மானம்பாதிக்கச் சதமுகன் ரவுத்திராகாரமாகக்கோபித்துப் பாதகன் பிராணனையியமலோகத்துக்கனுப்புகிறேனெனச் சபதம்பேசி வலியகதாயுதத்தைக்கொண்டு கிறுகிறெனச்சுழற்றி வீசினான் அதுவருகின்றவேகத்தையும் கொடுமையையும் சிங்கன்பார்த்துநகைத்து மற்றொன்றையும் பிரயோகிக்கநினையாமல் அசட்டையாய் வீரசிங்கம்போல நிற்கின்றகாலையில்வயிரமலைக்கொப்பாகிய விசாலமான மார்பிற்றாக்கியவுடன்அப்படையின்வேகமாறி வலியற்றுப்பொடியாய்த்துகள்பட்டுப்பறந்துபோய்விட்டது.

இச்செய்கையை யிராட்சதப்பாதகன்தெரிந்து இவன் மிகவும் திண்ணியனாகக்காணுகின்றது ஆகிலுமென்னஇவன்பிராணனை நிமைப்போதில் வாங்குகிறேனெனக்கொதித்துக் கணிச்சியையெடுத்து அடாபயலே உன்னாற்கூடுமாகில் இந்தப்படையைக் காத்துக்கொள்ளக்கடவாயெனப்பேசி வலிகொண்டெறிந்தான் அதுகரத்தில் நின்றும் வெளிப்பட்டவுடன் விஷ்ணுமுதலிய பிரமுகாளும் என்னவிளையுமோவென்னும் மனவேக்கத்தினால் நடுநடுங்கித் திகைத்துப்பார்த்திருக்கஅக்கினிச் சுவாலையைவீசி பிரசண்டமாருதத்தைக் கலந்துவரும் விஷப்பெருக்கைப்போல ஆரவாரத்துடன் மேலிடும்போது வீராதிவீரன்சற்றும் பயப்படாமற் பாய்ந்தொடித்ததைக்கண்ட விராட்சதப்படைகள் பிரமித்து அம்மம்ம இந்தவீரன் வலியையென்னவென்று சொல்லக்கூடும் மந்தரத்தையொப்பஉரறிக்கொண்டுவந்த தண்டைநிமைப்போதிற் பொடிகண்டனன்மேலும் அதிகமகிமைகளைக்காட்டிவந்த குந்தத்தையும் நிலத்திற்சேர்த்தான் இவையன்றியும் சோனைப்பெய்யலைப்போலச் சரவருஷங்களைத் தூண்டிவந்தவில்லையுங்கண்டித்தனன் இந்தச்சூரன்செய்கைகளைப் பார்க்குமிடத்திற் பைசாசத்தைப்போலக் காணுகின்றது வீராதிவீரனாக விருக்கும் நம்மவனிப்பாடுபடுவானாகில் இவனால் நாமெல்லோரு மென்னவருத்தப்படுவமோதெரியாதென்றேங்கிவாடித்திகைத்திருந்தனர், அந்தக்ஷணமே பாதகனாகிய தசமுகன்மனம்பொறாமல் வடவைக்கனலைப்போலக்கோபித்து மற்றொருகணிச்சிப் படையையெடுத்துத் தன்வலிகொண்டு இதனால் நாசமடையக்கடவையென்றுருத்துவீசினான் அதுவும்ஆலத்தையொப்பவெரிந்துபுகைந்து பற்பலமகிமைகளைக்காட்டி அதிவேகமாய்மேலிட்டு வருவதைச் சிங்கன்கண்டு குறுநகைகொண்டு தன்னைச்சூழ்ந்திருக்கின்ற பூதப்படைகள் களித்துக்கொண்டாடும்படிக்குத் துரிதமாய்ச் சக்கரமொன்றையெடுத்துக் கரகரெனச்சுழற்றிக் கரவேகமாகச் செலுத்தியகாலையில்

சூரியமண்டலம்போல வட்டணைகொண்டுதீயையிறைத்
தெதிர்ந்துகணிச்சியைகண்டதுண்டமாக்கித்தள்ளிவிட்ட
து. இதைத்தசமுகப்பாதகன் தெரிந்தமாத்திரத்தில் ரவு
த்திராகாரமாகக்கொதித்து தட்சணத்தில் மற்றொருவலி
யகதையைச் சுழற்றிக்கடாவ அதுவும் வேகமாய்வந்து சி
ங்கன்விசாலமாகிய மார்பிற்கோடையிடியைப்போலத்தா
க்கிய அதிர்ச்சியினுல் மார்புபிளந்து உதிரப்பிரவாகமோ
டுவதினுல் இரத்தமழையைப்பொழியும் மேகத்துக்குச்ச
மமாக தேகமெங்கணும் சிவந்துகாட்டச்சற்றுநேரங்களை
பட்டிருந்து தேறினவனுய் மானம்மனதையலைத்து வாட்
டச்சிறிப் பருவதத்தினிடத்தருவியானது பெருகுமாறு
போலத் தன்னுடலில் உதிரமோடும் படிக்குப்பாய்ந்துத
ன்வலிகொண்டு தசமுகன் மார்பிலறைந்தான் அத்தாக்க
லுக்குத் தாளமாட்டாமல் எலும்புகளொடிந்து ஓவென்ற
ரற்றிக்கொண்டு உதிரம்பெருக்கெடுத்தோடப் பூமியில்
விழுந்து புரண்டுதைத்துக்கொண்டுமாண்டான் இவ்வித
மாகப் பத்துத்தலைகளைப்படைத்திருந்தபாதகன் களத்தி
றப்பட்டதையிராட்சதவீரர்தெரிந்தவுடன் தாபாக்கினியை
யொப்பப்பொங்கிப் போர்ப்பறைகள் கணகணென்றுசெ
விடுபடமுழங்க மேலிட்டுவந்து வீறியிருக்கின்ற பூதப்ப
டைகளின்மேற் கவிந்து கொடியபோரைச் செய்யும்போ
து இலக்ஷர்களில் அருக்கனென்னும் வீராதிவீரன்ருத்
திராகாரமாகக் கோபித்து உதட்டையதுக்கிமுன்னணியி
ல்வந்து வில்லைவளைத்து அவுணப்பெருக்கைப்பார்த்துச்
சிறியெங்கே போகிறீர்கள் நில்லுநில்லென்றதட்டிவந்தும
டக்கிக்கொண்டு திருப்பாற்கடலைக்கலக்கிய மந்தரகிரியை
ப்போல பாணவருஷங்களைப்பொழிந்துபாதகர்சிரங்களை
க்கண்டித்துக் குவித்தும் கைகால் மற்றவுறுப்புகள்சின்
னபின்னப்படவெட்டிப் பருவதங்களுக்கொப்பாகச் சேர்
த்தும் சித்திரவதைகளைச்செய்தும் வாட்டுக்கொடுமைக்
காற்றுமல் இராட்சதசேனைகளனைத்தும் அல்லோலகல்
லோலப்பட்டுப் பிராணபீதியினுற் பலதிசையினுமிறைந்
தோடியொளித்தனர்.

இந்தஅபஜயத்தைத் துன்முகனென்னும் அவுணவீர
ன்கண்டு தேனைமண்டலாகாரமாகத்திருப்பித் தன்சேனை
களைமடக்கிப் பயப்படவேண்டாம் பகைவருக்கு இயம
னையொத்த நான்வந்துவிட்டேன் நில்லுங்கோள் நில்லுங்
கோளெனப் பற்பலதயிரியவார்த்தைகளைச்சொல்லித் த
டுத்து மின்மினிப்பூச்சிகள் சூரியனைவெல்லுமோ அதை
ப்போலவே என்முனையில் பூதர்தாபரித்துநிற்பரோஅப
லராகிய பூதருக்கஞ்சி ஜயசாலிகளாகவிருக்கும் நீங்கள்பி
ன்னிடைவதோ இதோநொடிப்போதிற் பகைவரைநாச
ஞ்செய்வேன் போகாதீர்கள் போகாதீர்களெனத் தயிரிய
ங்களைக் குறித்துக்காட்டியபோதினும்நிற்க வஞ்சிப்பறந்
தனர்;இப்படிக்குத்தன்சொல்லையும்மீறிச் சேனைகளோடு
ம்போது துன்முகனுக்கு அதிககோபம்பிரவேசித்துப் ப
ற்றியெரிகின்றதீயில் நெய்யையூற்றியதைப்போலச்சீறி நீ
ண்டதன்வில்லை வட்டணையாகவளைத்து நாணேற்றி பூத
ப்படைகள் திடுக்கிட்டுக் கலங்கக்குணத்தொனிகாட்டிக்
கொடியபாணசமோகங்களை யொன்றனந்தமாகச் சொரிந்
துலவும்போது சிவகணங்களும் அஞ்சாமற்பருத்தவிரு
ட்சங்களைக்கொண்டு மோதியும் வானத்தையளாவ நிற்கி
ன்றபருவதங்களைபெறிந்தும்மற்றப்படைகளைச்செலுத்தி
யும்பகைவன்விட்ட பாணசமோகங்களைத்துத்துமூருக்கி
ச்சங்கையற் றுலவும்போது துன்முகப்பாதகன்யோசித்து
இவர்களை பாணமுயற்சியினுல் வெல்லப்படாதாகையால்
மாயைவல்லபத்தினுற் சாடிக்கொல்லக்கடவேனென நிச்
சயித்தவனுய் ஆசிரியன் தனக்குப்போதித்திருந்த சுந்தர
பதங்கமென்னும் மாயமந்திரத்தை விதிப்படிக்கு மன
ப்பூர்வகமாக வுச்சரித்து அதன்முயற்சியினுல் ஒவ்வொரு
பூதருக்கு நூறுநூறுருவாகத்தோற்றிப் பற்பலகொடிய
போர்களைச்செய்து திப்பிரமைகொண்டு படாதபாடுகளை
ப்பட்டு நாசப்படும்படிக்கு வாட்டுமுன்னிலையில் இக்கொ
டுமைகளனைத்தையும் கதிரவனென்னும் பூதத்தலைவன்
கண்டு மனம்வெந்து பெருமூச்செறிந்து இத்தக்கொடிய
பாதகன் காட்டிவருத்துகின்ற மாயையின் முயற்சியொடு
ங்குவதெவ்விதமென்றுலோசித்துத் துரிதமாய்ஞானப்ப
டையையெடுத்து வழிபட்டு வில்லிற்பூட்டிச் செலுத்திய
காலத்திற் கோடிசூரியப்பிரகாசத்தைக்காட்டி மாயைப்
பெருக்கனைத்தையும் நிமைப்போதிற் கவளீகரஞ்செய்து
பழையபடிக்கு வெள்ளிடையாக்கித் திரும்பிவிட்டகாலை
யில் துன்முகன் வஞ்சகமடங்கித் தனியனுய்நின்றவன் ந
ல்லகாரியம் நமதுமுயற்சிகளைக்கெடுத்த பாதகனைக்கொல்
லாமல் விடமாட்டேனெனச்சீறிச் சீக்கிரத்தில் வில்லைவ
ளைத்து விஷத்தொவைபலிட்டிருக்கின்ற கொடியபாணங்
களாயிரத்தைத் தேடியெடுத்துச் சந்தித்துப்போக்கிக் கி
யாவுமெனக்கொக்கரித்தனன்,அதைக்கண்டகதிரவன்கோ
பதீபிதனுய் மண்டியெரிந்து தன்வில்லைபிறுக்கிஅத்தொ
கைத்திவ்வியபாணங்களைக் கரவேகமாகத் துண்டிக்கண்
டித்து மேலும் ஏழுநாராசங்களைச்செலுத்திக்கொடியபா
தகன்கரத்திற்பிடிபட்டிருந்த வலியவில்லைஇரண்டுதுண்
டமாக்கிமீட்டு மொருபாணத்தினுற் பகைவன்மார்புக் கர
ணைகத்தரித்திருந்த வயிரக்கவசத்தையும் பொடிபடுத்தியு
ங் கோபந்தணியாமல் மறுபடியும் கணக்கிறந்தசரங்களை
ப்பிரயோகித்து அவன்சரீரமுற்றுஞ் சல்லடையைப்போ
லத்துளைபடத்தாக்கிய மாத்திரத்தில் அக்காயமூலமாகஉ
திரமிகுதியாகப்பெருகியதாலிளைத்துக்களைத்துச் சாவுக்
குச்சமமாகிய மூர்ச்சையடைந்து கிடந்தவன் சற்றுநேர
த்திற்றேறி பிரக்ஞையுண்டாயெழுந்து இனியிவனுடன்
சண்டைக்குநேருவோமாகில் பிராணசேதம் வருவதற்
கையமில்லை ஆகையால் ஓடிப்பிழைப்பதே யுறுதியென
நிச்சயித்தவனுப்த் தட்சணத்திலொரு மந்திரத்தைச்செ
பித்துத் தன்தேருடன்மறைந்துவானவழிக்கொண்டுபோ
யினன்.

அதைக்கண்ட பூதரிற்சிலர் அப்பாதகனுற்பட்டவருத்
தங்களைநினைந்து கோபதீபிதராய் வஞ்சகன் திருடனைப்
போல மாயைசெய்தோடினன் அவனைத்தொடர்ந்து பற்
றிக்கொல்லுவோம் வாருங்கோள் வாருங்கோளென்று த
ம்மினத்தவரைக் கூவுவதை வீராதிவீரனுகியசிங்கன்கே
ட்டு நகைத்தவனுய் அவர்களைப்பார்த்து போருக்கஞ்சிப்
பேடியைப்போலமறைந்தவனைத் தொடர்ந்துகொல்லயத்
தனிப்பது வீரருக்கடாது மேலும் கீர்த்திக்கும் விரோத
மாம் ரணக்களத்திலெதிர்த்துப்போராடுவதற்கஞ்சிமான
மிழந்துமுதுகுகாட்டித் திரும்பியவர்களையும் பயபீதியி
னுற் றஞ்சமெனப்பாதங்களிற் பணிந்தவர்களையும் சரீர
ம்நடுக்குற்று மனவாட்டத்துடன்கரங்களைக்கூட்பிப் பிரா
ணபிக்ஷையிரந்து நிற்பவரையும்வலியற்றுவிழுந்துபிண
ங்களிற்பதுங்கும் பதிதரையும் புற்களைவாயிற்கவ்விநிற்ப

வனையும் புற்றின்மீதேறி யிருப்பவனையும் கண்டபோதி
னும் சிவகாருண்ணியம் பூதத்தயவற்றுககொன்றவர்கள்எ
க்காலத்துந் தீராதபழியிற்பட்டுப் பலராலுமிகழப்படுவா
ர்ஆதலால்வீரத்துடனெதிர்த்தவனையன்றியில் மற்றவரு
டன்போர்செய்ய எப்போதும் நினைக்கவேண்டாம் நீதிநா
லுக்குமடாதென்று சொன்னமாத்திரத்தில் இதுதகுந் த
குமென்றெல்லோரும் ஒப்புக்கொண்டு வீரனைப்புகழ்ந்து
நின்றனர், இவ்விதமாகத் துன்முகன்பதுங்கியதை ராட்
சதர்கண்டுநடுநடுக்கித் திகிற்பட்டுப் பிராணபீதியினல்நா
லுமூலைகளினுங் கலைந்திறைவதை வீரபராக்கிரமசாலி
யாகிய சிங்காமுகாசுரன் தெரிந்தவுடன் வெகுநேத்திரே
த்தியெனக் கோபநகைகொண்டவனாய் இப்படிக்குநமதுச
யின்னியங்கள் பின்னப்பட்டுப்போகக்கண்டும்நாம்பின்ன
ணியிற் சும்மாவிருப்பதிற் பிரயோசனமென்னவென்றுக்
குரோஷத்துடன் பகைவர்மீதுசீறித் தன்தேரைத்துரத்
திவந்து தூசிமுனையில் நிறுத்திக் காலாந்தகனைப்போல
த் தோற்றுவதைப் பூதப்படைகள்கண்டு நல்லகாரியம்இ
வன் புசபலபராக்கிரமத்திற் சிறந்தவனெனச்சொல்லுகி
ன்றனர் அதையும் ஒருகை சண்டைகொடுத்தறிவோமெ
ன்னும் விருப்பினுற் கெக்கலிகொட்டிக்கொண்டு மேலிட்
டு வானத்தையளாவநின்ற பருவதங்களைப்பறித்துச் செ
ண்டையொப்பவீசியும் திசைகளிற் பரந்தோங்கியிருக்கு
ம் மராமரங்களை வேருடன்பிடுங்கிக் கரகரெனச்சுழற்றி
மோதியும் கணிச்சி, சூலம், தண்டாயுதம், எழு, மழு,
இருப்புலக்கை, வளைதடிமுதலிய படைகளை அபரிமித
மாகச்செலுத்தி ஆர்ப்பரிக்கின்ற காலையிற் சிங்கமுகாசுர
ன் பூதர்செய்யுங் கொடுமைகளை விழிகளிற்றீயெழப்பார்
த்து வடவையும் பிரசண்டவாயுவு மொருமித்தெழுவது
க்கொப்பாகப் பெருமூச்செறிந்தனன் அந்தவேகத்திற்பூ
தர்வீசிய விருட்சங்கள்படைகள் சுழற்காற்றிற்பட்ட சரு
கைப்போல அகப்பட்டுக்கொண்டு இங்குமங்கும்போவ
தும் வருவதுமாய்ப் பொடிந்தும் தீய்ந்தும் கரிந்தும்பஸ்
மீபடலமாகவெழுந்து வானநாடுகளிற்பரந்தும் பூமண்ட
லவெல்லைமுற்றுமிறைந்தும் படாதபாடுகள்பட்டன.

இதனைக்கண்டிருந்தபூதர் பிரமித்தவர்களாய் இஃதெ
ன்னபுதுமையாகவிருக்கின்றது நாம் ஏகமாய்ச்சேர்ந்து
ஒன்றனந்தமாகச்செலுத்திய கருவிகளனைத்தும் வீராதி
வீரன்மீதிற்பாயாமல் அவன்விடும் சுவாசத்திற்பட்டலை
ந்து மங்கிச் சாம்பலாயெழுந்தோடியது, இனியிதைவிட
நாம் செய்யவேண்டிய சண்டைகளென்ன விருக்கின்றது
அம்மம்ம இவன்வல்லபத்தை இவ்விதமெனச்சொல்லி
முடிவதோமேலும் இதுபரியந்தம் போர்முனையிலெதிர்
த்துவந்த சத்துருக்களில் இவனையொத்த புசபலபராக்கி
ரமசாலிகளைக் கண்டதில்லை மிகவும் வல்லமைசாலியாகக்
காணப்படுகின்றது அப்படிக்கிருந்தபோதினும் இவனை
ச்சும்மா விடலாகாதென நிச்சயித்தவர்களாய்ச் சர்ப்பங்க
ளைப்போலச் சீறிப்பாய்ந்து திசைகளில் நிற்கின்றகுலகி
ரிகளைப்பறித்தும் இருண்டுதழைத்தோங்கியிருக்கும் பா
ரித்த விருட்சங்களைக்கெல்லியும் மற்றசிறந்தபடைகளையு
ம் மேன்மேலும் அதிகவுக்கிரத்துடன் சூரபதுமன்து
ணைவன்மீது கரவேகமாகச்சொரிந்து சிருங்கநாதங்களைச்
செய்தனர், அவையனைத்தும் சிங்கமுகன் சுவாசவீசலில
கப்பட்டுக்கொண்டு அலைந்து கடையில் துகளாய் அஷ்ட
கோணங்களில்நிறைந்து மேலோங்கிச் சூரியசந்திரர்முத
லிய நவக்கிரகங்களின் கதிகளைமாற்றிக் கிரணகாந்தியை
யடக்கி யிருள்மூடியதால் இராக்காலமாயிற்றென்றெண்
ணி பட்சிக்கூட்டங்களனைத்தும் இரைச்சலடங்கித்தங்க
ள் கூடுகளிற்சேர்ந்திருந்தது, இந்தவுற்பாதத்தைக்கண்ட
மகத்துக்கள்பிரமகற்பம் நேர்ந்ததோவென்று அற்புதம
டைந்தனர், சூரியனானவன் தன்தேர்போவதற்கிடம்பெ
றுமற் கலங்கித்திகைத்து பிரமைகொண்டு நின்றுவிட்ட
னன், அக்காலத்தில் வானத்தில்நின்று வேடிக்கைபார்த்
திருந்தமுப்பத்துமுக்கோடி தேவர்களும் நாற்பத்தெண்
ணுயிரம்ரிஷிகளும் மற்றவானநாடராகிய கருடகாந்தரு
வர்சித்தவித்தியாதரர் பன்னகர்முதலானவர்களுந் திகை
த்து மனவருத்தங்களுட னிதனைச்சொல்லிக் கொள்ளுவ
தாயினர், இத்தினவரையில் இராட்சதப்பாதகரால்வாடி
யிருந்த நாமினிஅதிக வருத்தங்களைப்போக்கிச் சவுக்கிய
த்திலிருப்போமென்றிருந்தனம் இப்போது பூதப்படை
கள் வீசப்பட்டபருவதங்கள் விருட்சங்களெத்தலங்களி
னும் நெருங்கிவருத்துவதால் இவ்விடங்களினும் நிற்பத
ரிதாகவிருக்கின்றதென்றேங்கி ஒருவர் முன்னொருவராக
மேலுலகங்களிலோடிப்பதுங்கினர், மேலும் சிவகணங்க
ள்வீசிய மலைகளாதியவை பறந்துதாக்குவதினுற்காளமே
கங்களுடைய கர்ப்பங்கள்பேதிக்கப்பட்டு மின்னலிடிகளு
டன் ஜலத்தை உலகங்களெங்கணும் பெருக்கிக் கொண்
டோடியது, அப்பருவதங்களில் வாசமாயிருந்த சிங்கக்
கூட்டங்கள் திகைத்து வழுவியிரைச்சலிட்டுக் கொண்டு
எங்கும் பரந்ததைப்பார்க்குமிடத்திற் சிங்கமுகாசுரனைத்
தம்மினமென்றெண்ணிவந்து சூழ்ந்ததைப் போலக்காட்
டியது, யானைப்பெருக்கானது வீறிட்டுவிழுகின்றதெப்ப
டிக்கிருந்ததெனிற், சூரன்தம்பியானவன் தங்களுக்குவயி
ரியாகிய மிருகராசனென்றெண்ணிப் பயந்தோடுவதை
யொப்பத்தோற்றியது, இவையன்றியும் பூதர்வீசிய பரு
வதங்கள்போம்போ தொன்றுடனொன் றுராய்வதினுற்சி
தறும் அனற்பொறிகள் அபரிமிதமாய்ப் புவனங்களெங்
குமுதிர்வதினுல் அதிற்பட்டசீவராசிகள் தகிக்கப்பட்டு
பொரிந்தும் கரிந்தும் மங்கியது சிவகணங்கள்செலுத்திய
விருட்சங்கள் குன்றங்களாதியாகச் சிங்கமுகாசுரன்பேரி
ற்கவிந்ததையோசிக்குமிடத்தில் வெள்ளியங்கிரியினிடத்
தில் மேகசாலங்கள் பரவியதையொத்தது.

இவ்விதங்களாகத் தாமேவியவனைத்தும் பிரயோசன
ப்படாமல் பங்கப்பட்டழிந்துபோனதைக்கண்ட பூதப்ப
டைகள் கலங்கிவாடினர்கள் தேவர்கள்பட்ட வருத்தங்க
ளையின்னவிதமெனச்சொல்லிமுடியாதுஇப்படிக்குச்சகல
ரும் பிரமித்திருக்கின்றகாலையிற் சிங்கமுகாசுரன்பூதரை
ஒருபொருளாக மதியாதவனாய்த் தன்தேரைவிட்டுநிலத்
திற்குதித்துமன்னுயிரைவாட்டவெழுந்தஆலத்தைப்போ
லப்பாய்ந்து பல்லாயிரம்பூதரைவாரிச் சின்னபின்னப்ப
டப் பூமியிலறைந்தும் சிலரைச்சுழற்றிக்காற்றிற்பட்ட ச
ருகையொப்பவானத்தில் வட்டமிட்டுச்செல்லவீசியும் ப
லரை விஷ்ணு பிரமனுலகங்களில் அலறிக் கொண்
டுபோய் விழச்செலுத்தியும் கணக்கிறந்தவரைச்சத்தசா
கரங்களினும் பெரும்புறச்கடலினும் தவளைகளைப்போ
லமிதக்கும்படிக்குக் கடாவியும் சிலரைத்தூக்கித்தெங்கி
ன்கனியையொப்பச் சூரியனிரதத்தில் மோதியும் பல்லா
யிரவரைத் திசைகடோறுமிறைத்தும் சிலரை அலங்கோ
லப்படுத்தி நாவைக்கடித்து விழிகள்தெரித்துப் பற்களு

திர்ந்து மூளைகள்சிதற வலியகரங்களினாலறைந்தும் சிலரை அம்மனையைநிகராகச் சுலவியெற்றியும் சிலரைவாரித்தேகம்நுறுங்கிவிழ அண்டச்சுவரிற்றாக்கியும் பலரைப் பந்தைப்போலெறிந்தும் சிலரை யமதருமராஜன்வாசஞ் செய்யும் வைவசுதபட்டணத்திற் செல்லக்கடாவியும்சிலரைப் பொன்னாட்டிற்போக்கியும் பலரைவடவைக்கனலுக்கிரையாகப்போட்டும் சிலரை வாயுமண்டலத்திற்பட்டுச் சக்கிராகாரமாகச்சுழலவீசியும் சிலரைத்தீவுதீபாந்திரங்களில்வீசியும் சிலரை உலகங்களெங்கணும் பரப்பியும் இவ்விதமாகச் சிங்கமுகாசுரன்வீசிய பூதப்பெருக்கானது விண்மண்ணெங்கும்நெருங்கிப் பஞ்சபூதங்கள்பரிபூரணமாய்நிறைந்திருப்பதைப்போலத் தோற்றியது.

சவுனகாதிரிஷிகளே! இக்காரணத்தைக்கருதியோ மேலையோர்சிவகணங்களுக்குப் பூதங்களெனப் பேரிட்டழைக்கின்றனர் இவையன்றியும் அவுணராசன் காலாந்தகனாய் வலியபாதங்களைக்கொண்டு கணக்கிறந்தபூதரைத்தேய்த்துக்கொன்றும் பலரைவிரல்களினா லெற்றிமாய்த்தும் சிலரைமண்ணுடன்கலந்து போகமிதித்தும் பல்லோரை உதைத்துருட்டிவைத்தும் சிலரைப்பருத்த கரங்களினாற் பிசைந்தூதியும் பல்லாயிரவரைப் பனைநாரைப்போலக்கிழித்தெறிந்தும் பலரைக் கற்கம்பத்தை யொத்தபுயாசலங்களினாற்றாக்கிவாட்டியும் சிலரைப்பாயும் வேகத்தினால்மாய்த்தும் சிலரைஅதட்டிக்கொன்றும் சிலரைக் கோடையிடிகளையொத்த வார்த்தையுரப்பில் மாய்த்தும் பலரை உறும்பிக்கொன்றும் சிலரைவெறித்தபார்வைகளினால் மடித்தும் வலியகரங்களிரண்டாயிரங்களையும் வலையைப்போலநீட்டிச் சேர்த்துவாரிப் பலகோடிபூதரைப் பிலத்தையொத்த வாயிற்போட்டுமெல்லப் போதாமையால் உமிநீரைப்போல விழுங்கிவிழுங்கிப் பண்டிநிறைந்து பசிதணியாதகாரணத்தினால் மண்டியெரிந்துஎழுவாயுதத்தினாற் சிலரைவதைத்தும் மழுப்படையைக்கொண்டு பலரைமாய்த்தும் பலரைக்கொழுவினாலடக்கியும் சிலரை முத்தலைச்சூலத்தினாற்குத்திக் களத்திற் படுத்தியும்பலரைத்தண்டாயுதத்தினால் மோதிக்கொன்றும் சிலரைவில்லினாலடித்துத் துகள்படுத்தியும் சிலரைப்பாணங்களிற்கோத்து அருக்கடையாகத்தள்ளியும் பலரைமேல்வரும் மாமரங்களைப்பற்றிச் சுழற்றிமாறி வதைத்தும்பூமியிற்கிடத்தியும் இவ்விதங்களாகச் சூறைமாருதம்போலச் சுழன்றுசுழன்று சிங்கமுகாசுரன் சாடுவதைக்கண்டதேவர்கள் அவுணப்பாதகன் தேர்மீதிருக்கின்றனனோ விண்ணிடங்களி லுலாவுகின்றானோ திசைகளிற் போயினானோ பூவட்டவெல்லைமுற்றும் பவனிவருவானோ சத்தசாகரமீதில் உலவுகின்றானோ தாமரைமலர்வாசியாகிய பிரமன் பதத்திற்போயினானோ மகம்மேருப்புறத்திற் றிரிகின்றானோ சவுரியபரராகிய பூதசயின்னியங்கள்மேற்சீறிப்போராடியிருக்கின்றானோ யாதுந்தோற்றவில்லை எவ்வெவ்விடங்களினுந்தோற்றவுலவிச்சூறாவளியைப் போலத்திரிகின்றனன் இவன் வல்லபத்துக்கொருவரையும்ஒப்புச்சொல்லக்கூடாதென பிரமித்துப்புகழ்ந்தனர்

இவ்விதங்களாக வாட்டி வருமுன்னிலையில் பூதப்படைகள் அல்லோலகல்லோலப்பட்டுச் சிதைந்துசிரங்களற்றும் கரங்களற்றும்மார்புகிழிந்தும்வயிறுபீறுண்டுதகுடல்கள்சர்ப்பங்களைப்போல விறைந்தும் பற்களுதிர்ந்தும் துடைகள்முறிந்தும் வீரகண்டைகள் கலிக்கும் கால்கள்கண்டித்தும் சிதைந்தும் கண்டங்கண்டமாயிறைந்தும் சக்கைச்சக்கையாகப் பிளப்புண்டும் தவிடுபொடியாகநுறுங்கியும் சாம்பலாகமங்கியும் பூமியிற்கலந்தும்புதைந்தும்நாசிகள் சதைந்தும் செவிகள்தெறித்தும் மூளைசிதறியும் இவ்விதஅலங்கோலப்பட்டுத் துயரமேலிட்டுக்கணக்கிறந்தவர் களத்திற்பட்டனர் சவுனகாதிதவத்தரே, அத்தொகை யிவ்வளவெனச்சொல்லிமுடியாது, போர்க்களமுற்றினுங் கவந்தங்கள் நாடகரைப்போல நடித்துஉதிரப்பிரவாகமானது இரைச்சலிட்டுக்கொண்டோடிக் கருங்கடலைச் செங்கடலாக்கி மகரமச்சங்களுக்கு விருந்திட்டு மேலிட்டுப் பூமியெங்கும்பரந்தது, இப்பிரகாரம்சருவசங்காரகாலத்திற் றோற்றாநின்ற உருத்திரமூர்த்திவிழிகளில்நின்றெழும்அனற்பொறியொன்றின் தீட்சணியத்தினாற்சராசரப் பிரபஞ்சங்களனைத்தும் தகிக்கப்பட்டழிந்துமங்குவதைப்போல வீராதிவீரனாகிய சிங்கமுகாசுரனெங்கணுந்தானாகவுலவிப் பூதப்படைகளனைத்தையும் சின்னபின்னப்படவாட்டிக் கொல்லுகின்றகாலையில் தேவர்மருண்டு இந்தப்பாதகன் காலாந்தகனாய் வீராவேசங்கொண்டு போர்விளையாடலைச்செய்து உதிரவெள்ளத்திற்புரண்டோடக்கிடத்துவதை யோசிக்குமிடத்தில் பூதருக்குக்காலாதிகளிற் பிராணனைக்கொண்டுபோகும் இயமனைநிகராகக்காணுகிறது, ஆதலால் முன்னமே நம்மிடத்திற்பூரணகடாட்சமுள்ளவனாதலால் இந்த வீராவேசகாலத்தில் இவ்விடத்தில் நிற்போமாகிற் கூற்றுவனைப்போலநம்முயிரையுங் கொள்ளைகொண்டு பண்டி தெவிட்டவுண்டு களிகொண்டு செண்டுமுண்டாடி நம்முலகங்களெங்குமுலாவிமற்றையரையும் வாட்டாம லொழியான்துரிதமாய் வாருங்கோள் வாருங்கோளெனத் தம்மினத்தவரைக்கூவிக்கொண்டொருவனுக்கு முன்னொருவன்முந்தி பலதிசையினும்பறந்துபதுங்கினர் இப்படிக்குச்சகலரும் பயப்பிராந்திகொண்டுபோகும் படிக்கு வடவையைப்போலத்தன்மீதெதிர்த்து மரங்களையும்மலைகளையும் வீசிப்போராடிய பூதசயின்னியங்களனைத்தையும் சின்னபின்னப்படுத்திஜயசாலியாய்ப் பொன்மலைக்கொப்பாகநிற்கின்ற இரதத்திலேறி மண்டிபோட்டுட்காந்து பாரித்தவிற்களைக்கரங்களிற்பற்றியிருப்பதையும் தன்சேனைகள்பட்ட கொடுமையையும் கடல்வண்ணனாகிய தழற்கண்ணனென்னும்பூதத்தலைவன்கண்டு பதைபதைத்து மானமுங்கோபமும்மனதைவாட்ட வடவாமுகாக்கினியைப்போலச்சிறி விழிகளிற்றீப்பொறிகள் சிதற உருத்துத் துரிதமாய்ச்சிங்கமுகாசுரன் முன்னம்வந்துநின்று அடாஅவுணப்பாதகனே இவ்வாறுநம்மவரை மாய்த்தவுன்னுடன் கொடிய போரைச்செய்து நிணமாம்சங்களைத் தெவிட்டவுண்டுகண்டனாகவிக்கின்ற உன்னரியபிராணனை யியமலோகங்குடியேற்றவல்லேன் சண்டைக்குவாடா பயலேயெனப்பேசுவதைச் சிங்கமுகன்கேட்டுச் சீறிச்சற்றும்நமதாண்டிறத்தையும் வெற்றிப்பாடுகளையும் அதிகாரச்சிறப்புகளையும்புயவன்மைமுதலிய பிரபாவங்களையும் எண்ணிப்பாராமல்பயமற்றிப்படிக்குச் சொல்கின்றாய்பேசும் வல்லபத்துக்கொருவருமுனக்கொப்பில்லை உன்திறம் வெகுநேர்த்தியென்றுதேவர்க ளஞ்சிஒடும்படிக்குக் கோபநகைகொண்டனன்.

அப்போதுவெற்றிபரனுய்புயவன்மைக்கொப்பற்றபூத
த்தலைவனைதழற்கண்ணனென்னும்பெயரையுடையவீர
ன்உருத்திராகாரமாகச்சிறிஉன்னுணவத்தையிந்தநிமிஷ
த்தில் வாட்டிப்புத்திவரச்செய்வேன் அதையும்சற்றுநே
ரத்திற் காண்பையென வீரங்களைப்பேசி மின்னலுக்கொ
ப்பாகச்சொலித்துக்கொண்டிருக்கும் முத்தலைச்சூலமொ
ன்றையெடுத்துப் பகைவன்மார்புக் கிலக்காகக்கடாவிச்சி
ருங்கநாதஞ்செய்தனர் அப்படைவெளிப்பட்டவுடன் தீ
யையும்புகையையும் பெருக்கிக்கொண்டு பலமகிமைகளை
க்காட்டிவீறி மேலிட்டு யமாஸ்திரத்தைப்போல வேகமா
ய்வருவதைச்சூரன் தம்பிபார்த்து அதையொருபொரு
ளாய்மதியாமலும் மற்றென்றையேவித் தடுக்காமலும் ந
கைமுகனுய்ச் சும்மாவிருப்பதைக்கண்ட தேவர்கள் அற்
பசந்தோஷிக ளாதலால் மேல்நடப்பதைத் தெரியாமுன்
னம் பகைவன்தோற்ருன் தோற்ருன் இப்படையினுல்
மாள்வானென்று கரங்களைக்கொட்டி ஜயவுற்சாகங்களைக்
கொண்டாடினர் அக்காலத்தில் மீறிவந்த சூலப்படையா
னது வலியகுன்றிற்றைத்த சிறுமுள்ளையொத்து வயிரத்
தைநிகர்த்த விசாலமாகிய மார்பிற்ருக்கியவுடன் முனைம
ழுங்கித் துகள்பட்டுப்போயது, இதனைப் பூதவீரன்பார்
த்துமதித்து தவங்களைச்செய்து பெற்றவரங்களிவனுக்கு
க்கிடைத்ததே மேலானபேறென்று விம்மிதனுய்ச் சூர
னுதலால் உருத்திராகாரமாகப்பொங்கித் துரிதமாய்ப்ப
ருத்துநீண்டிருக்கும் வலியதண்டாயுதமொன்றையெடுத்
துமணிகள்கலிக்கக் கிறுகிறெனச்சுழற்றிக் கரவேகமாக
க்கடாவியவேளையில் வாயுவினுங்கடுகி யினைச்சலிட்டுக்
கொண்டுவந்து கோடையிடியைப்போலச் சாரதி மார்பி
ற்ருக்கிய மாத்திரத்திற்கதறி உதிரங்களைக்கக்கி நிலத்தி
ல்விழுந் துருண்டான் அப்போது சிங்கமுகாசுரன் உரு
த்திராகாரமாகக் கோபித்துத் தன்கரத்திற்கொண் டிருந்
தமந்தரத்தையொத்த தண்டாயுதத்தைச்சுழற்றி வீசிய
காலத்தில் பிரசண்டவாயுவைப்போ லினைந்து நிமைப்
போதில் வேகமாய்வந்து பூதத்தலைவன் வலியமார்பிற்ரு
க்கியகாலத்தில் மனங்கலங்கிக்கதறிவருந்திபருவதத்தினி
டத்தில்வச்சிராயுதந்தாக்கியதைப்போலப்பிளந்துபிராண
வாதையினுல் விழிகளிற் சுவாலைபெருக நாசியினிடத்து
ம் வாயின்மூலமாகவும் பிளப்புண்டமார்பின் வழியாக
வும் குன்றினின்ருெழுகும் அருவியைப்போல உதிரம்
பெருக்கெடுத்தோடச் சோபமுற்றபோதினும் வயிரத்
தைமறவாமல் விழிகளிற்றீப்பொறிகள் சிதற பிராணன்
போவதும் வருவதுமாயூசலாடப் பொறிகலங்கி அக்கினி
முகன் களைத்து செயலற்றுநின்றனன், அக்காலத்திற் சி
ங்கமுகன் மற்ருெருசாரதியை யமர்த்திக்கொண்டு கோபி
த்து மேலிட்டுவருவதைச் சுமாலியென்னும் வீரன் கண்
டு மானமுங் கோபமும் மனதைக் கொளுத்திவாட்டச் சீ
றிப்பாய்ந்து மேருவையொத்த பருத்தமலைபொன்றைஅ
டியுடன் பறித்துக் கரவேகமாய் பகைவன்மீதில்வீசிமேக
ங்களுமஞ்சக் கர்சித்தபோது அந்தப்பருவதம் பம்பரத்
துக்கொப்பாகக் கிறுகிறெனச்சுழன்று இனைந்து சமீபித்
தகாலத்திற் கரங்களினெென்றிற்பற்றி மீளவும்வலிகொண்
டுவீசியபோது அதிவேகமாய்த்திரும்பி விசாலமாகியமா
ர்பிற் பேரிடியைப்போல விழுந்த மாத்திரத்திற் சுமாலி
யென்பவன் மிகவும் வருந்திக் கோபதாபம் மனதைவாட்
ட உதிரத்தைக்கக்கி அசைவற்று நிலத்தில்விழுந்துகளை
த்தனன்.

இக்காரணத்தைத் தண்டியென்பவன் தெரிந்தவுடன்
காலாந்தகனுக் கிணையாக உருத்துத்தன்கரத்திற் கொண்
டிருந்த பருத்ததண்டாயுதத்தைக்கரகரெனச்சுழற்றிப்பா
ய்ந்து சிங்கமுகன்மார்பிற் ருக்கியகாலத்தில் வயிரமலையி
ற்பட்ட இருப்புலக்கையைப்போலப் பொடிப் பொடியா
யிறைந்தது இதைக்கண்டவுடன் மானம்பாதிக்க மண்டி
யெரிந்து தன்கரத்தை பிடித்தமாக்கிக்கொண்டு அவுணர்
பெருமான் மார்பிற்ருக்கிய காலையிற் சிங்கமுகன்சீறிக்கா
லினுலெடுத்து தேவர்களு மருண்டுவாடும்படிக்கு வான
த்தெறிந்து கர்ச்சித்தனன் தண்டியும் வேகமாய்அண்டக
டாகவரையிற்போய்த் திரும்புமுன்னிலையிற் பகைவனை
வாட்டவேண்டுமென்னுங் கருத்தனுய் அவுணப்பாதகன்
விசாலமாகிய தோள்களினிடத்திற் குதித்துத் தன்பருத்
தகால்களினுல் வலிதின்மிதித்துதைத்துப் பொன்மயமா
ய்ப் பலசிகரங்களைத்தாங்கி வானத்தையளாவ நிற்கின்ற
மேருகிரியினிடத்திற் றழைத்தகிளைகளைவாய்ந்த விருட்
சங்கள் மலிந்ததோப்புகடோறும் குரங்கினங்கள்பாய்ந்து
விளையாடுவதைப்போலப் பகைவன் இரண்டாயிரம்,புயா
சலங்களின் மூலமாகத்திரிந்து திரிந்துவலிகொண்டு மிதி
த்துமிதித்துக் கால்களோய்ந்து அவ்வுறுத்தலின் பரிசஞ்
சற்றுந்தோற்ருமற் றன்வீரத்தைச் செலுத்திவரும் சிங்
கமுகன் புயவலியைமதித்துப் பிரமித்தவனுய்க் கரங்கள்
தோறும் பாய்ந்தும் அவற்றிற்பற்றி யிருக்கின்றஆயுதவி
தங்களினிடத்துலவியும் நவரத்தினமயமாகப் பிரகாசித்
திருக்கின்ற பருத்தவயிரமுடிகள்தோறும் சஞ்சரித்தும்
விசாலமாய்ப் பரந்திருக்கும் செவிகளிடங்களில் நுழைந்
து நுழைந்து வெளிவந்தும் இவ்விதமாகப் பவனிவருவ
தைப் பார்க்குமிடத்தில் திவ்வியமலர்களைத்தருஞ்சோலை
களில் அழகிய சிறகுகளைவாய்ந்த வண்டினங்க தேனையு
ண்ண விருப்புற்று முற்றினும்உலவித்திரிவதைப்போல
க் காட்டியது, இவ்விதமாகப் பூதத்தலைவன் வலம்வரும்
காலத்தில் இன்னதெனத் தோற்ருமல் ஈயெனநினைந்துஒ
ருகரத்தினுற் றுடைத்துத் தள்ளிய காலையில் தண்டி யெ
ன்னும் வீரன்சரீரம் மிகவும்நொந்தவனுய் அம்மம்ம இ
னியிவ்விடத்தில் நிற்போமாகிற் பாதகன் தேய்த்துக்கொ
ல்லுவன் மேலுமிவனை அசைக்கிறதற்கு நம்மாலாவ
தொன்றுமில்லை வெற்றிவேற்படையல்லது மற்றெந்தவி
தங்களினுலும் சளையப்பட்டவனன்றென்றெண்ணிவலியு
ம் சூரமும் கோபமும் மானமுதலாகியதையிழந்து அப்
புறங்குதித்துப் பின்னிட்டனன், இந்தச் சம்பவங்களைக்க
ண்ட பூதப்படைகள் மனங்கலங்கி நமக்குத் தலைவனுய்ப்
புயவன்மைக்கொப்பற்றதண்டியென்னும்வீராதிவீரனை
யிப்பாடுகள்பட்டு பிரயோசனமற்றுவாடித்திரும்புவனுகி
ல் இனிநம்மாலாகவேண்டுவ தென்னையெனமயங்கி யாது
ந்தோற்ருமல் நிற்கவும் பயந்து ஒருவரும் ரணக்களத்தி
ற் றங்காமல் பலதிசைகளினு மிறைந்துமறைந்தனர்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? சிங்கமுகாசுரன்
வல்லபங்களைக் குறித்துப்பாக்குமிடத்தில் இவ்வுலகத்தி
ற் றவமென்னுமொருசிறந்த பொருளையல்லாமல் வேறு
மொருவலி யிருக்கின்றதெனச் சொல்லப்படுவதோமேற்
குறித்த படிக்குப் பூதப்படைகளனைத்தும் மாண்டும்புற
ந்தந்தோடியும் ரணக்களத்தி லொருவருமில்லாமற் பாழ்

பட்டகாரணங்களைஎண்மர், இலக்ஷர், கண்டுமனம்வருந்தினவர்களாய்ப் படைத் தலைவர்களுடன் உருத்திராகாரமாகக் கோபித்துத் தங்கள் தேரைத்துரத்திவந்துசிங்கமுகாசுரனை வளைந்துகொண்டு விழிகளிற்றீப்பொறிகள் சிதற வுருத்துத் தங்கள் கரங்களிலிருக்கின்ற விற்களைவளைத்து நாணேற்றி குணத்தொனிசெய்து கொடிய தீட்சண்ணியமுள்ள பாணகோடிகளைச் சோனைப்பெய்யலைப்போலப் பொழிந்தகாலத்தில் அவைகள் மண்விண்ணெங்கும் நெருக்கி அனலைவீசிக் கோடையிடிகளைப்போலச் சீறிக்கொண்டு வேகமாய்வந்து சிங்கமுகன் சரீரமுற்றும் தாக்கித்தாக்கிச் சற்றுங்காயப்படுத்தாமற் கொடுமையடங்கித் தக்கைகளைப்போல அவனைச் சுற்றிலும் பருவதங்களுக்குச் சமமாகக் குவிந்துவருவதைப்பார்த்துத் திப்பிரமைகொண்டவர்களா யிதைவிடநம்மாலாகும் போர்த்தொழிலென்ன விருக்கின்றது இதுபரியந்தம்பெற்றிருந்தநமது புயவன்மையும் வீரபராக்கிரமங்களையும் வெற்றிப்பாடுகளையு மிழந்தனமென்னும் லஜ்ஜையுடனிருக்கின்றகாலையிற்சிங்கமுகன் கோடையிடிகளைப்போலக்கர்சித்துப்பலவசைகளைப் பேசிக்கொண்டு தேரைவிட்டு நிலத்திற்குதித்துப்பாய்ந்து சிலவீரர்கள் தேர்களைச்சேர்த் தெடுத்துப் பந்துகளைப்போல வானத்தெறிந்தும் பலவீரர்தேர்களைக் கரங்களிற்பற்றித் தேங்காய்களையொப்பத்தட்டித்துகள்படக் குவித்தும் சிலசூரர் ரதங்களையெடுத்து உள்ளங்கையில் வைத்து நசுக்கிப்பொடித்தூதியும் ஒவ்வொருஉதையினாற் பற்பலதேர்களைப் பொடிப்பொடியாக்கியும்பலதேர்களை நுறுங்கியிறையக் கரங்களினால்மோதியும் சிலதேர்களை நிலத்திற் புதைத்தும்சிலதேர்களையெடுத்துஅம்மானையாடியு மிவ்விதமாகரணரங்கசூரனாகியசிங்கமுகன்ஜாடும்போது எண்மர், படாதபாடுகளைப்பட்டுவாகனங்களையுமிழந்து படைத்துணையாகவந்த வீரர்களையும்பறிகொடுத்து நின்றசிலசேனைகளையும் மாளக்கொடுத்துத்தூணீரங்களில் ஒருபாணமாவ தில்லாமலிழந்து வில்லைமாத்திரம் தாங்கிவலியும் வீரமுமற்று சண்டைமுனையில்நிற்கப்பயந்து பின்னிட்டனர்.

அத்தருணத்தில் ஜயவுற்சாகத்துடன் அவுணராசன்பழையபடிக்குத் தேரிற்பாய்ந்து மண்டிபோட்டிருந்துவிற்களைக் கரங்களிற் பற்றிக்கொன்று எதிர்ப்பவரொருவருமில்லாமையால் வீரசிங்கம்போலப் பார்த்திருக்கின்ற காலையில் இந்தச் சம்பவங்களனைத்தையும் மற்றொருதிசையிலிருந்த இராட்சதகுலாந்தகனாகிய வீரவாகுதேவர் பார்த்து மனவருத்தத்துடனிதனை நினைக்கின்றனர், இந்தச் சிங்கமுகாசுரன் செய்கைகளைப் பார்க்குமிடத்தில்மிகவும் அற்புதமாக விருக்கின்றது தமையனைப் பார்க்கினும்பதின்மடங்கு ஜயசாலியாகக்காட்டுகின்றனன்சிலபோதிற்காலாந்தகனைப்போலத் திரிந்து நமதுவெற்றிபெற்றசேனைகளிற் பாதிவரையிற் சின்னபின்னப்படக்கொன்றான்மற்றவர்கள் நிருவகிக்கப் படாமையால் பற்பலகாயங்களுடன் சிதறி யோடிமறைந்தனர், இவையன்றி ஜயசாலிகளாகிய நமதுதுணைவரும் இலக்ஷரு மிவனுடனெதிர்த்துக் கொடியபோரைச் செய்து செய்திளைத்துப் பங்கப்பட்டுத் திகைத்திருக்கின்றனர் இவையனைத்தையும்பார்க்குமிடத்தில் இத்தினமே நமதுசேனைக ளனைத்தும் நாசப்பட்டுப்போம்போலத்தோற்றுகின்றது எமதிறைவனாகிய சிவசுப்பிரமணியதேவரைநிறுத்தி வெற்றிபெற்று வரக்கடவேனென்று விண்ணப்பஞ்செய்துவந்தயான்இப்படிக்கசாரீசமாக விருப்பேனாகில் இதனால்வரும் அபகீர்த்தி யாரைச்சேரும் ஆதலாற்றாமசஞ்செய்யாமல் விரைவிற்போயெதிர்த்துக் கூடியவரையிலொருகைபார்ப்பதே காரியமெனத்துணிவுகொண்டுவடவானலைப்போலக்கோபித்துத்துரிதமாய்த்தன்தேரைத் துரத்திவந்துபகைவன்முன்னம்நிறுத்திப்பாரித்திராநின்ற தனுசைவளைத்து நாணேற்றிஅண்டபுவன சராசரங்கள் கிடுகிடென்றதிரக்குணத்தொனிகொண்டு வடித்துக்கூர்மையாய் விஷத்தொவையலிட்டிருக்கின்ற தீட்சணியமாகிய பாணசமோகங்களைச் சோனைமாரியைப்போல மேன்மேலும் தூண்டுகின்றகாலையில்எவ்விடங்களினும்பரந்து புகைந் தெரிந்துகொண்டு சர்ப்பங்களைப்போலச் சீறிப்பாயுந்தோறும் எதிர்த்துப் போராடுகின்ற இராட்சதவீரர் சிரங்களைக்கண்டித்தும் புயங்களைச் சரித்தும் கரங்களைமுறித்தும் மார்பைத்திறந்தும் வயிற்றைப்பீறியும் துடைகளையொடித்தும் கால்களைவெட்டியும் சல்லடையை யொப்பத்துளைத்தும் சின்னபின்னப்படச்சாடியும் கண்டதுண்டமாக்கித் தள்ளியும் மேலும்யானைகளைத் தலைவேறு மத்தகம்வேறு துதிக்கைவேறுகோடுகள்வேறு உரலையொத்தகால்கள்வேறு இவ்வாறு பின்னப்படுத்தி மாய்த்தும் தேரணிகளைச்சக்கைச் சக்கையாகப் பேர்த்தெறிந்தும் உறுப்புகளனைத்தையும் களமுற்றினு மிறையப்பொடித்தும் புரவிக்கூட்டங்களை அலைகளைப்போலப் பாயுங்கால்களைத்தட்டியும் சிரங்களை யுருட்டியும் மார்பைக்கீறியும் சதைசதையாகச் சேதித்தும்ரணக்களவெல்லையெங்கணு முருட்டியது.

சவுனகாதிரிஷிகளே! அந்தப்பாணகோடிசெய்த கொடுமையை யின்னவிதமெனச்சொல்லிமுடியாது அத்தருணத்தில் பிணமலைகளோங்கிப்பற்பலகவந்தங்கள்கூத்தாடவும் உதிரப்பிரவாகமேலிட்டு அலைகளைப்பெருக்கி பெங்கணும் பாய்ந்தோடியது பூதபைசாசங்கள் நிணமாம்சங்களைப்பண்டி நிறையத் தெவிட்டவுண்டு உதிரத்தைத் தேக்கிடக்குடித்துஜயன்புகழைப்பாடி வெறியாடலைச்செய்தது, கழுகு, பருந்து, காக்கைகள்மனமகிழப் பிணங்களைக்கொத்தித்தின்று வானத்திற் கூச்சலிட்டுலாவியதுநாய்நரிகள் களேபரங்களை யிங்குமங்கு மிழுத்துப் பிடுங்கித்தின்று ஊளமிட்டுக்கொண்டு ஒன்றுடனொன்று வாதாடிச் சமர்பூமியெங்கணுமுலாவியது இவ்வாறு வீராதிவீரன் வாளிகளினாற் கண்டதுண்டப்பட்டு மாண்டதுபோகநின்ற இராட்சதசயின்னியங்களை வீரவாகுதேவருக்குச் சகாயமாக வுதிரப்பெருக்கடித்துக் கொண்டுபோய்க்கடலிற்சேர்த்து மகரமச்சங்களுக்கு விருந்திட்டது இவையன்றியும், ரணபேரி, ஜயபேரி, வெற்றிச்சங்கமுதலியசத்தங்களும் கொடியபாதகராகிய அவுணவீரர்கரங்களிற்பற்றிய வில்லினின்றெழும் நாணொலியும் பிரளயவெள்ளத்தைப்போலச் சூழ்ந்திருந்தரதகஜதுரகபதாதிகளின் ஆரவாரங்களும் வரையறவடங்கி ரணபத்திரகாளியினுடையகூட்டங்களெங்கணு மலிந்துஆர்ப்பாட்டங்களைச்செய்யுமோசையும்பூதகணங்கள் பட்சிசாலங்களி னாரவாரமும் செந்நீர் சுழலமிட்டோடுமிரைச்சலும் சமர்க்களவெல்லைமுற்றினும் மலிந்திருந்தது, இஃதன்றியும் புசபலபராக்கிரம சாலியாகிய வீரவாகுதேவர் கரவேகமாகப் பிரயோகித்துவரும் பாணகோடிகள் சிடசிடத்த தொனிகளுடன் போகும்வேகத்தினால்அஷ்டகுலாசலங்களைத்துளைத்தோ

டியும் அவுணப்பாதகர் பற்றியிருந்த வாள்-வேல்-தண்ட
மாதிய படைகளை நுறுக்கித்தள்ளியும் வட்டாகாரமாகவி
ருந்த விற்களை யிருதுண்டமாக்கியும் நாரிகளைப்பட்டாலு
மென்றறுத்தும் ஒவ்வொரு பாச்சலில்ஆயிரம், பதினாயி
ரம், பகைவர் வலியமார்புகளைத் துளைத்துக் கொண்டோ
டியும் கொடியசிரங்களை ஏககாலத்திற்கண்டித்தும் தாவி
யும் இவ்விதங்களாகச் சத்துருக்களைத் துண்டித்தும் வே
கமடங்காமற் சத்தசாகரங்களையும் நீந்தி அஷ்டகுலாசல
ங்களைத் தாவி சக்கிரவாளகிரியைத்தடாரித்துப்போய்அ
ண்டப்பித்திகையையு முருவியோடுமாகில் வீரன் பாண
ங்களின் பெருமைகளையும் துரிதத்தையும் பேசிமுடிவ
தோ இவையன்றியும் நீர்க்காக்கைகள் உதிரப்பிரவாகத்
தில் முழுகி மாம்சகண்டங்களைக் கவ்வியெழுந்து சிரம
லைகளின்மீது நின்று சிறகுகளைப் புலர்த்தி மண்டைகள்
பிளந்து குவிந்திருக்கின்ற மூளைப்பெருக்கிற் புரண்டோ
டுவதைப் பார்க்குமிடத்திற் கொக்கினங்களென்னையப் ப
டத்தக்கதாக உலாவும் இவ்வாறு அதிசூரனாகிய வீரவா
குதேவர் காலாந்தகனைப் போர்களமுற்றினுந் தானுயுலா
விச் சின்னபின்னப்படக் கொன்றவேடிக்கையைச்சிங்கமு
காசுரன் பிள்ளைகள் வீராதிவீரராகிய நூற்றுவர்கண்டும
னம் புழுங்கி யுருத்திராகாரமாகக் கோபித்து விழிகளிற்
றீயெழவுருத்து நெறநெறெனப் பலதரம் பற்களைக்கடித்
து உதட்டையதுக்கி மீசைதுடித்துப்புருவம் நெற்றிலே
றக்கொதித்து நல்லகாரியம் கொஞ்சமாவது பயமில்லாம
ல் நாமெல்லோரும் பார்த்திருக்கச் சேனைகள்முற்றும் சி
ன்னபின்னப்பட்டுப்போகக் கொடியபோரைச்செய்து வ
ருந்துதனை வளைந்துகொண்டு கருவத்தையடக்கிஅதப்ப
டுத்தவேண்டுமென்று இராஜபுத்திரரனைவரும்ஒருமுனை
யிற்சேர்ந்துதேர்களைத்துரத்திவந்துவீரனைச்சூழ்ந்தவரா
ய்த் தனித்தனியே விற்களைவளைத்து விஷத்தொவையலி
ட்டிருக்கின்ற கொடியபாண வருஷங்களைப் பொழிந்துக
ர்ச்சித்தமுன்னிலையில் அவைகள் வெளிப்பட்டவுடன் தி
சைகளெங்கும் நிறைந்து அனலைப்பெருக்கிக் குறுகுறுத்
ததொனிகளுடன் பிரசண்ட மாருதத்தைப்போல மேலி
ட்டுவருவதை வீரவாகுதேவர்தெரிந்து துரிதமாய்அனந்
தகோடி சூரியகாராசங்களைச்செலுத்திக்கண்டித்துத்தே
வர்கள் புகழும்படிக் கார்ப்பரித்தனன் அதைக்கேட்டவு
டன் நாசகாலம்நெருங்கியிருக்கின்ற இராஜகுமாரர்கள்வ
டவைக்கனலைப்போலக் கோபித்து விஷத்தொவையலிட்
டுஅனலைவீசத்தக்க கொடியவாளிகள் கோடானகோடிக
ளைக் கரவேகமாகப் பிரயோகித்துச் சிருங்கநாதம் அட்ட
காசங்களைச்செய்தனர்.

அக்காலத்தில் வீரவாகுதேவருக்கு அதிககோபம் பி
ரவேசித்து காலாந்தகனைப்போலச்சீறிக் கணக்கிறந்த பா
ணவிதங்களினால் மேலிட்டுவருகின்றவைகளைத் தடுத்து
மீட்டும்அமோகமாகிய சரங்களைவிற்போக்கிப் பகைவரே
றியிருந்ததேர்களைச் சின்னபின்னப்படக்கண்டித்ததுமன்
றியிற் கரங்களிற் பற்றியிருந்த வலியதனுசுகளையும்பொ
டித்துத்தள்ளினர், அக்காலத்திற்சிங்கமுகன் பிள்ளைகள்
தேரில்நின்றுஇவனைவில்வன்மையினால் வெல்வதரிதாக
க் காணுகின்றதால் வாட்போரின்மூலமாய் மாய்த்து வெ
ந்றிபெறக் கடவோமெனநிச்சயித்தவர்களாய்மேலும்ஒரு
தந்திரத்தைமனதில்நினைந்திதனைச்சொல்லுவார்கள்ஓ வீ
ரனேஉன்சாகசங்களைப்பார்க்குமிடத்தில் விற்போரொன்
றைமாத்திரம் பூர்த்தியாகக்கறறவனாகக்காணுகின்றதுவா
ட்பயிற்சிகளேதேனுந் தெரிந்திருக்குமாகில் எங்களுடன்
அப்போரைச்செய்யலாம்எதோபார்ப்போமென் றுபுசங்க
ளைத்தட்டியிபமனுமஞ்சஅறைகூவிஆர்ப்பரித்துஅடிபெ
யர்த்துமாறிமாறிமண்டலத்துப்பாய்ந்துமேலிட்டு வருவதையு
ம் அவர்கள்பேசிய வாசகங்களையும்வீரன் தெரிந்தவுடன்
கோபநகைகொண்டவராய்லோகநாயகனாகியசிவபிரான் த
மக்கனுக்கிரகித்திருக்கின்றமின்னலையொப்பசொலித்திரு
க்கும் கூரியவாளாயுதத்தைஉருவி கரத்திற்கொண்டு சிங்
கராசனைப்போலத் தேரைவிட்டு நிலத்திற்பாய்ந்து முன்
னடிவைத்துப் பின்னடிவாங்கித்தாவி பகைவர்மீதுபோ
வதை தேவர்கள்கண்டு நடுநடுங்கிப்பயந்துவீரன்தனித்து
சசொல்லுகின்றனன், பாதகர் நூற்றுவரும்மடக்கிக்கொ
ண்டென்னசெய்வாரோவென்னும் ஏக்கத்தினாற்றேவாதி
தேவனைத் துதித்து நம்மவனுக்கு ஜயமுண்டாகக் கடவ
தென்று வாழ்த்திக்கவனமாகப் பார்த்திருந்தனர், இவ்வி
தமாக வீரவாகுதேவர் சீறிநெருங்குமுன்னிலையிற் சிங்க
முகன்பிள்ளைகள்களித்துப் பாதகல்பக்குவமாயகப்பட்டு
க்கொண்டான் நாமெல்லோருமெதிர்த்து வளைந்துகொ
ண்டு யிந்தநிமிஷத்தில் கண்டதுண்டமாகவெட்டித் தள்
ளிபகையைமுடித்துமனவெழுச்சிபெற் றிருக்கக்கடவோ
மென்னுங் கருத்தராய்த் தீரத்துடன் கூரியவாட்படைக
ளை யிடம்வலம் வலமிடமாகச்சுழற்றித் தனித்தனியேநா
லுமூலைகளினும் சூரியனைநேர்ந்த விருளைப்போலச்சூழ்
ந்தவராய்ப் பலசபதங்களைப்பேசி வீராதிவீரன் சிரத்து
க்கும் கண்டத்துக்கும்தோட்களுக்கும் மார்புக்கும்துடை
களுக்கும் குறித்துக்குறித்து வாளைக்கொண்டுவீசிவீசிவ
ட்டணைவரும்போது வீரவாகுதேவரும் சூறுவளிக்காற்
றையொப்ப விரைந்து சக்கிராகாரமாகவுலவிபகைவர்செ
லுத்தும்வாளின் தாக்கலைத்தட்டிக்கொண்டுலவும்போது
பாதகர்மனம்பொறுமல் கைமிஞ்சிநெருங்கிஉறுப்புகளை
நாடிநாடி ஓங்கிவெட்டுகின்றதருணத்தில் வயிரமலையிற்
பட்ட துரும்பைப்போலத் தெறித்துப்போவதல்லதுசற்
றுங்காயப்படுத்தாமலும் திருமேனிக்கு வாட்டம்வதக்க
மில்லாமலும் மனவெழுச்சியுடன் வாட்போருக்குரியசா
கசங்களைக்காட்டிப் போராடிவருவதை இராஜகுமாரர்க
ண்டு பிரமித்தவர்களாய் இதனாலுமிவனை வெற்றிகொள்
வதரிதாகக் காண்கின்றதால் அனைவரும் தீரத்துடன்மே
ல்விழுந்து கைகாலாடவொட்டாமற்கெட்டியாய்ப்பிடித்து
க்கசக்கிக்கொல்வதே காரியமெனநிதானித்து சடுதியிற்ச
கலரும்பாய்ந்து கரங்களினாற்சேர்த்துக்கட்டினர்.

சவுனகாதிரிஷிகளே அந்தவீரன் சவுரியபராக்கிரமங்
களையென்னசொல்லுவேன் பொரியாதஅண்டங்களைக்கா
த்திருந்த நாகத்தைப்போலப் பொங்கிச்சீறித் துமுறிவெ
ளிப்பட்டவராய்ச் சராசரப்பிரபஞ்சங்களைத்தகிக்கும் வ
டவனலைப்போல மின்னலையொப்பவிளங்கும் வீரவாளை
வீசிவீசிச் சிரங்கரம் உரம் இத்தகைய அவையவங்களை
க்குறித்துக்குறித்து வெட்டிவெட்டிக் கண்டங்கண்டமாக
த் துண்டந்துண்டமாக அந்தநூறு இராஜபுத்திரரையும்
வாட்டி வீரபத்திரகாளிக்குப் பலிகொடுத்து வீரசிங்கம்
போலத் திரிவதைத் தேவர்கள்கண்டு விம்மிதராய் அம்ம
ம்ம வீரன்செய்த வாட்பயிர்ச்சியை யென்னசொல்வோம்
வீராதிவீரனென்ப திவனுக்கேதகும் எவ்விதமாக இந்த
ப்பாதகரை நிமைப்போதில் மாய்த்தனன் வாளினாலோ

அல்லது மந்திரவலியினுலோ அல்லது வசைமொழியின்
கொடுமையினுலோ யாதுந்தோற்றவில்லையென் றதிசயித்
துப் பஞ்சதருக்களினது புஷ்பங்களையேராளமாகச்சொ
ரிந்து வாழிவாழியெனப்போற்றினர், இவ்விதமாகநூற்று
வரை வானநாட்டுக்கனுப்பி ஜயப்பிரதாபத்துடன் வீரன்
திரும்பிச் சொர்னமயமாக விளங்கிக்கொண்டிருக்குந் தம
துதேரிற்பாய்ந்து மண்டிபோட்டுட்காந்து வாளையுறையி
ற்சேர்த்து பொர்கட்டுகள்பிகிந்து இருகுதைகளினும் ம
ணிகள்தூக்கியிருக்கும் பருத்ததனுசைக்கரத்திற்கொண்
டிருந்தனன், அக்காலத்திற்றன்மனதுக்கினிய பிள்ளைகள
னைவரும் விழிகளுக்கு முன்னதாகக் களத்திற்பட்டதைச்
சிங்கமுகன்பார்த்தவுடன் திகிற்கொண்டு தேகம்நடுநடுக்
கப் புத்திரசோபமென்னுந் தீயானதுமீறித் தேகத்தையு
ம்மனதையும்வாட்ட அதன்வயப்பட்டவனுய்ச் சகிக்கப்
படாத துக்கசாகரத்திலழுந்திப் புத்திரரைநினைந்துவாடி
வருந்திக் கடையில் மானம்பாதித்துத்தூண்டிய வீரத்த
ன்மையினுலொருவகையாகத்தேறிச் சோபத்திலாழ்ந்தம
னதைக்குறித்து இதனைச்சொல்லுகின்றுன் ஓமனனே!ஏ
ன்துக்கிக்கின்றனை எத்தகையசுமைநேரினுந் தாங்குவதற்
குப் பலசிரங்களைப்பெற்றிருக்கின்றனன், பருவதாகிருதி
யாகத் திரண்டோங்கியிருக்கும் இரண்டாயிரம்புயங்களு
முண்டு ஆசானுபாகுவாக நீண்டிருக்கும் கரசமோகங்க
ளுமிருக்கின்றன, அபலனுகிய ஒருவன்கரத்தில்விளங்கு
ம்வாளினுல் பிள்ளைகளனைவருந் தென்புலத்தைச்சேர்ந்த
னரொன் றெண்ணமிட்டுவாடுவதென்னை முன்னமே சாவு
க்குத்துணிந்துவந்த நீயிக்காலத்தில்மயங்குவதழகோவெ
ன் றிவ்விதங்களாகப் பற்பலசமாதானங்களைப்பேசித் தி
டசித்தனுய்க் காளகூடத்தைப்போல மண்டியெரிந்துநல்
லகாரியம் பலருங்காண வென்னருமைப்பிள்ளைகளை யிங்
தபாழத்தவிழிகள் வருந்திப்பார்க்கச் சற்றும் பயமுமிரக்
கமுமில்லாமல் அமர்க்களத்துக்கிரைகொடுத்துயாவரையு
ம்மதியாமல் தீரனுகநிற்பானே இந்தஅபஜயத்தைவிடஎ
னக்குவேறுமொருவசையும்வேண்டுமோ இவையன்றியு
ம் சத்துருக்கள் நகைத்தேச வுடம்பெடுத்தேன் மிஞ்சிமா
ண்டவர்களைக்குறித்துப் பாராட்டிச் சும்மாவிருப்பதில்வ
ரும்பலன்யாது ஆதலாலினிமேல் சற்றுந்தாழ்க்காமற் ப
கைவர்கள் பூண்டெடன்பதில்லாமற் கணப்போதில் நாசஞ்
செய்வேன் மேலும் பூதகூட்டங்களையும் மற்றவீரரை
யும்வாரிவாரி வாயிற்போட்டுக் கடைவாயிலுதிரம்பெருக்
கெடுத்தோடக் கசகசென்று மென்றுதின்று உதிரபான
ஞ்செய்து களித்தாலல்லாமல் எனக்கடுத்திருக்கும் கோ
பமாறுவதோ பகைவனைச் சின்னபின்னப்படக்கண்டித்
து பிரகாசம்பொருந்திய வேலாயுதத்தைத் தாங்கியிருக்
கும் பாலசுப்பிரமணியனைச்சாடித் துரத்தித்தேவர்களெ
னச்சொல்லப்பட்டவர்களனைவரையு மித்தினமே வகைய
றநாசப்படுத்தித் திரிலோகங்களையும் அல்லோலகல்லோ
லப்படத்தக்கதாக யானேவெற்றிகொண்டுதிரும்பவல்லே
னெனச் சரீரம்புழுங்கிவியர்க்கக் கோபித்தவனுப்சாரதி
யையெச்சரித்து பிள்ளைகளைக்கொன்ற மகாபாதகன்முன்
னம் நமதுதேரைத்துரத்திக்கொண்டு போகக்கடவையெ
னக்கட்டளையிட்டபடிக்குக் குதிரைகளை அதட்டிச்செலுத்
திநெருங்கிவருவதை வீரவாகுதேவர்கண்டு கோபதீபித
னுய்த் தன்னிரதத்தைமுடுக்கியும் எதிரோறிமதயானையை
க்கண்டுவிடுபட்டுவரும்சிங்காசனைப்போல மேவிடுவதை
விழிகளிற்றீப்பொறிசிதறத்தக்கதாகச் சிங்கமுகன்பார்த்
து இதனைச்சொல்லுகின்றுன் உன்னை நிதானிக்குமிடத்
தில் ஆதியந்தமற்ற சிவகுமாரனுகக்காணவில்லை ஆதலா
ல் இலக்ஷரெனப்பேசுகின்றவர்களி லொருவனே எண்ம
ரிலொருவனே அல்லது நமதுசக்கிரவர்த்தி வாசஞ்செய்
யும் பட்டணத்துக்குவந்து சிலகொடுமைகளைச்செய்துதி
ரும்பியதூதனே இவர்களில் நீயாவன் துரிதமாகவெளி
யிடக்கடவாயெனப் பேசியகாலையில்வீரவாகுதேவர்நகை
த்து அவுணராசனே கேட்பையாக.

காளகண்டமூர்த்தியின் திருக்குமாரனுக்கடியனுகவிரு
ப்பேன்நேற்றையதினம் வீரமாமயேந்திரபுரிக்குத்தூதா
கவந்து சூரபதுமனுக்குவேண்டிய புத்திகளைத் தெரிவித்
துக் கேளாமற்போனபடியால் பல்லோருடன் நகரையும்
துகள்கண்டு வெற்றியுடன்மீண்டேன் இக்காலத்தினும்உ
ங்கள்பூண்டில்லாமல் வேரறக்களைந்துஜயப்பிரதாபத்தை
ப்பெற்றுப்போகக் காத்திருக்கின்றேன் என்பெயர் வீர
ரில்வீரனுகிய வீரவாகுதேவனெனச் சொல்லவினை மறு
மொழிகூற அது விஷத்தினுங் கடுமையாகச்செவிகளில்
நுழைந்தமாத்திரத்திற் காளகூடத்தைப்போலச்சீறியிடி
களுமஞ்ச இதனைச்சொல்லுகின்றுன்அபலராகிய சேனை
களைக்கொல்லவும் விற்பயிற்சிகளைப் பூர்த்தியாகக் கற்றறி
யாத சிறுவரைவெல்லவும் பட்டணத்தையழித்து அதில
டங்கியிருந்தினரைப் பெண்டுபிள்ளைகளுடன் வாட்டவு
மறிவாய் இவைகள்சூரனுகவிருப்பவனுக்கடுத்தவெற்றிப்
பாடோ, ஆண்மைக்கடுக்குமோ, என்விழிகள்காணச் சற்
றுமிரக்கமற்று நூறுபிள்ளைகளைக்கொன்ற உன்னுணவ
த்தைச் சற்றுநேரத்திலடக்கி உன்பிராணனையும் இயம
னுக்கு விருந்திட்டு உன்சரீரத்தை நாய்நரிகழுகுபருந்து
களுக்கிரைகொடுத்து மேலும் உன்னைச்செலுத்தியசிவகு
மாரன் வலியையுமடக்கி இப்படிக்கொத்த அனர்த்தங்க
ளை விளையும்படிக்குச் சூதுகளைச்செய்த தேவப்பயல்கள்
பெற்றிருக்கின்ற வீறுப்பையும்வாட்டி மீந்திருக்கின்றபூ
தப்படைகளனைத்தையும் என்புயவன்மையினுல் நிமைப்
போதிற்கலக்கி நாசஞ்செய்யும்படிக்குக் கங்கணங்கட்டிக்
கொண்டு வந்திருப்பதைத் தெரியாமல் தலைகீழாய்விழு
கின்றனை தேவர்சிறையைவிடுவித்துப் பழயபடிக்குச்சக
லசெல்வங்களையும் அனுபவித்திருப்பதாகப் பொன்னுல
கிற் குடியேற்றநினைந்து சேனைகளைக் கூட்டிக்கொண்டுவ
ந்த நீவிதிவசத்தினுல் என்னெதிரிலகப்பட்டுப் பிராண
னையிழந்துபோகுங்காலம் நெருங்கிவிட்டது இப்பலனைப்
பெறத்தான்வந்தனையோ வெகுநேத்தி யிவை யன்றியும்
மற்றபிரபஞ்சங்களிலிராநின்ற சீவராசிகள் காலாதிகளி
ல்மாண்டதுகள் ஒருகாலம் பரமசிவகடாட்சத்தினுல்மீட்
டும் உயிர்பெற்றெழுவதுமுண்டு என்கோபக்கனலுக்குட்
பட்டவர்கள் ஒருபோதும்பிழைக்கவறியார்கள்.

மேலும் காய்ந்தவிரும்புண்டநீர்மீட்டும் சிலமுயற்சிக
ளினுலுதிக்கலாகும் என்னுடன் பகைத்தவர்களுக்குஇய
மலோகங் காணியல்லது நிவாரணங்கிடையாது அடாபய
லே யினிநீபடப்போகிறகேட்டை உன்னுண்டவன் கேள்
விப்பட்டுக் கடகடென்றுருண்டு மனம்வாடிப்புலம்பி ய
லையச்செய்வேன் இப்போது நான்சொல்லிவந்த காரண
ங்களிற் சற்றும் பிசகிராது உன்னையும்என்னையும்வெறு
க்கவேண்டியதில்லை பிரமன் உன்தலையிலெழுதி யிருக்கி
ன்ற காலமுடிவானுல் யாரையும்நொந்துகொள்ளக்காரண

மென்னை யென்று பலபல நிந்தாஸ் துதிகளைச் சிங்கமுகன்பேசிவருவதை மனங்கொதிக்க வீரன்கேட்டு கோபநகைகொண்டு நல்லகாரியம் உன்சூரத்தன்மைகளைச்சற்று பார்க்கவிருப்புற்றனனென்று உருத்திராகாரமாகமண்டியெரிந்து தமதுகரத்தில் மந்தரத்தையொப்ப விளங்குகின்றதனுசை மண்டலாகாரமாக வளைத்துத்திசைகளதிர டங்காரசத்தத்தைக்காட்டிப் பதினெண்வகை திவ்வியபாணகோடிகளைச் சிங்கமுகன்மார்புக்குக் குறிகொண்டு செலுத்தியகாலையில் அவைவெளிப்பட்டவுடன் விஷச்சுவாலைகளைவீசிப் புகைந்தெரிந்து சிடசிடத்தொனிகளுடன் வாயுவேகத்தினுங்கடுகி பலமகிமைகளைக்காட்டிவந்து பாதகன் வயிரத்தையொத்த மார்பிற்றுக்கி முனைமழுங்கித்தெறித்தும் நுறுங்கியும் பொடிந்தும் பின்னப்பட்டுப்போயது, அத்தறுவாயிற் சிங்கமுகன் உருத்திராகாரமாகப்பொங்கித் தன்கரத்திற் பிடிபட்டிருந்த பாரித்ததண்டாயுதத்தைக் கரகரெனச்சுழற்றிவீசினன் அதுமணிகள் கலிக்க இரைச்சலிட்டு வேகமாய்வருவதைப் பாலசுப்பிரமணியர் தூதன்கண்டு துரிதமாய் நான்குதீட்சணியமுள்ளசிலீமுகங்களைத் தூண்டித் துகள்படக்கண்டித்து மேலுங் கரவேகமாய் ஆயிரம்கூரியவாளிகளைத் தேவனாவட்டியபாதகன் சிரங்களுக்கிலக்காகப் போக்கியகாலையில் அதிகவல்லபங்களைக் காட்டியோடிவந்துதாக்கிப்பிரயோசனப்படாம லழிந்துபோயது, இதனைக்கண்டஅவுணராசன் சர்ப்பத்தையொப்பச்சீறி யின்னமும் என்னெதிரிற்றூதன்சண்டைகொடுத்திருப்பதோ நல்லகாரியமெனக்கர்ச்சித்துத் தன்கரத்திலிருக்கும்காலன்படையையொத்த சூலப்படையை வலிகொண்டு பின்வாங்கிக்கடாவியபோது சருவசங்காரகாலத்தில் உலகங்களை யழிக்கவெழும்வடவைக்கனலைப்போல அனலைப்பெருக்கிக் குறுகுறுமென்னுமோசையுடன் வருவதின்வேகத்தையுங் கொடுமையையும்பார்த்துத் துரிதமாய்த் தன்வில்லில் தீட்சண்ணியமுள்ள ஆயிரங்கணைகளைப் பிரயோகித்தனர், அவைகளனைத்தையும் சூலமானது கவளீகரஞ்செய்து மேலிட்டிரைந்து வரும்போது மீட்டும் அத்தொகை சரங்களைப் போக்கினும் அவற்றினையும் பட்சணைசெய்துவீறித் தேவர்கள் திகைத்துவாடி பிரமித்துப்பார்த்திருக்க வீரனைத்தேடிப்பாய்வதை இலக்ஷர் பார்த்தவுடன் மனங்கலங்கி நடுநடுங்கியேங்கவும் துணைவரும் யென்னசெய்யுமோவெனப் பரதவித்துவாடவும் பூதப்படைகள்கலங்கிப்புலம்பிச்சோரவும் வானநாடர்வருந்தியிந்தச் சூலாயுதத்தை வீரனல் விலக்குவதரிதுபோற்காணுகின்றது இனியென்னசெய்வோமெனப் பெருமூச்செறிந்து கதறவும் இவ்விதமாகச் சகலரும்வருந்தவும் மாறேவியபாணங்க ளனைத்தையும் சாடிக்கொண்டு வேகமாய்ச்சமீபித்த சூலாயுதத்தை மனவுறுதிபெற்று எக்காலத்துந் தன்வலியிற்குறைபடாததீரராகிய வீரவாகுதேவர் பரமசிவந் தனக்குக்கடாட்சித்திருக்கின்ற வீரவாளையுருவிக்கொண்டு மின்னலைப்போலச் சுழற்றி ஒருவெட்டினு லிரண்டுதுண்டமாக்கித் தள்ளியபோது துணைவர்களித்தும் இலக்கர்மனவாட்டமொழிந்து சந்தோஷசாகரத்தில் முழுகி வீரன்புகழைப்பாடவும் சிவகணங்கள் சரீரம்பூரித்துக் கூத்தாடவும் பூருவத்திற் றிருப்பாற்கடலிலுதித்த விஷத்தினல் வருந்தியகாலையில் சிவபிரா னதனையுண்டி ரட்சித்தபோது பிராணிகளனைத்தும் சஞ்சலமற்று மனவெழுச்சிபெற்றதைப்போலத் தேவர்களனைவரும் மனவாட்டங்களையொழித்து ஆனந்தபரவசராய் ஆடிப்பாடி வீராதிவீரன் புசபலபராக்கிரமங்களை கற்பகமலர்களையிறைத்துவாழ்த்தவும் இவ்விதமாகச் சகலரும் களியாடல்களைக் கொண்டாடியிருக்கின்றபோது வீரவாகுதேவருக்கு அதிககோபம் பிரவேசித்து வடவனலையொப்பச்சீறியிந்தபாதகனுயிரை நிமைப்போதில் வாங்குகின்றேனென வுருத்து காலனைஉதைத்த காளகண்டமூர்த்தியினது படையையெடுத்து விதிப்படிக்குச் சோடசஉபசாரங்களையும்மான சபூசையினல்நிரப்பி மகாவிஷ்ணு பிரமன்முதலியதேவர்களாலும் கொல்லுதற்கரியபாதகன் பிராணனைவாங்கிஉலகவுபாதியைநீக்கவேண்டுமெனப் போற்றிவணங்கித் தனுசிற்பூட்டிச்செலுத்தினர்.

அந்தப்பாசுபதமானது வெளிப்பட்டவுடன் தேவாஸ்திரசமோகங்களையும் விஷப்பெருக்கையும் தீப்படலங்களையும் மற்றுமிராநின்ற கொடுமைகளனைத்தையும்படைத்துக்கொண்டு உலகங்களனைத்தும் நடுநடுங்கித்திகைத்துவாடும்படிக்கு அதிகஉற்பாதங்களுடன் மேலிட்டு வரும்போது இந்தச்சிவநாதன் படையோ நம்மைக்கொல்வதென்று அண்டங்களதிரக் கோபநகைகொண்டுதன்கரங்களினென்றில் விளங்குகின்ற பாசுபதத்தை வழிபட்டுவணங்கி வில்லிற்பூட்டிச்செலுத்தினன், அந்தத்திவ்வியாஸ்திரமும் அதிகமகிமைகளைக் காட்டிப்போய் வெகுகாலமாகப்பிரிந்திருந்த பிராணபதமாகிய சினேகிதர்களொருகாலம்சடுதியில் நேருவராயின் மனவெழுச்சியுடன் அவர்கள் விசாரித்துக் களிக்குமாறுபோல இரண்டுதேவப்படைகளும் சிலநேரம்கலந்து வேடிக்கையார்த்தங்களைக்காட்டி விட்டவர்களிடத்தில் மீண்டுவிட்டது இவ்விதமாகத் தான்தூண்டிய பாசுபதம் வியர்த்தமாய்த் திரும்பியகாலையில்ஜயசாலியாகியவீரவாகுதேவருக்குமானம்பாதிக்கவருந்திச்சூரபதுமன்துணைவனுக்கிணையாகப்பேசுவதற்கு இந்தப்பிரபஞ்சத்திலொருவரையுங்காணேன் புசபலபராக்கிரமங்களிற்சிறந்தவன்வலிக்கொப்பவன்எத்தகையரெதிர்ந்துபோராடினும் பின்னிடாமல் வெல்லவல்லசவுரியபரன் இயமனைப்போலத் தன்னுடனெதிர்த்தவர்கள்பிராணனைவாங்கத்தக்க வீராதிவீரன் கோடாகோடிகூற்றுவர் ஒருருக்கொண்டுவந்து போர்செய்யினும் புறங்கண்டு விஜயப்பிரதாபத்தைப் பெறவல்லவன் இவன் பெற்றிருக்கின்ற வரமுயற்சிகளைப் புகழக்கூடுவதோ இவன்வல்லபங்களைத்தான் நினைந்துமுடிவதோ இவன் படைத்திருக்கின்றவெற்றிப்பாடுகளி லெதனைப்பெரிதாகப்புகழவல்லேன் நான்செலுத்திய திவ்வியபாணங்கள் கோடையிடிகளைப் போலச் சென்று தாக்கியபோதினும் சற்றுவதுதேகத்திற் காயப்படுத்தியதில்லை தேவாஸ்திரங்களினுலும் பழிபடாத வயிரப்படிவத்தைப் பெற்றவன் இத்தகையபெருமிதங்களைப் படைத்திருக்கின்ற கொடியபாதகனை எமது பாலசுப்பிரமணியர் திருக்கரத்தில்விளங்கும் வெற்றிவேலினுலல்லது கொல்லப்படாது, இவ்விதவலிபெற்ற கொடியனைமாய்ப்ப தரிதாயினும் பிரபலமாகிய போரைச்செய்து இவனேறியிருக்கின்ற உன்னதமுள்ள விரதத்தையழித்து இவன்படைத்திருக்கின்ற பாணங்களைவாட்டி மிகுந்திருக்கின்ற சேனைகளையும் அதப்படுத்தி திகைக்கச்செய்யக்கடவேனெனத் தீர்மானித்தவராய்த்துரிதமாய்ப்பதினுன்குகரேமாகிய சரங்களையெடுத்துத் தமதொப்பற்ற

காண்டீபத்திற்பூட்டிச்செலுத்திச் சிங்கமுகன்தேரைநடா த்தும் சாரதிசிரத்தைக்கண்டித்து நிலத்திற்றள்ளிக்கர்ச்சி த்தகாலையில் அவுணராசனுக்கு அதிககோபம் பிறந்து வ லியதண்டாயுத மொன்றை யெடுத்துக்கரகொனச்சுழற்றி யிதனுல்நாசமடையக்கடவாயென வீசினன் அதுவெளிப் பட்டவுடன் கோடையிடிகளைப்போலக் குமுறிக்கொண் டு வேகமாய்வந்து இளையபெருமாள் மார்பிற்றுக்கியபோ து வலிகுன்றிச் சாளரவழிகடோறும் பாயும் சூரியகிர ணங்களைப்போலப் பொடிப்பொடியாய்ப் புகைப்படலத் துக் கொப்பாகப் பறந்துபோயது, அத்தருணத்தில்வீர வாகுதேவர் உருத்திராகாரமாக மண்டியெரிந்துவிழிகளி ற்றீப்பொறிகளிறைய வடவையைப்போலச்சிறிக் கரவே கமாய் ஆயிரந்திவ்வியபாணங்களைப்போக்கிப்பொன்மலே யையொப்பாகச் சிங்கமுகன் வீற்றிருந்ததேரைச் சக்கை சக்கையாகப் பெயர்த்தெறிந்தனர்.

அத்தருணத்தி லிதற்குமுன்னம் சிங்கமுகனுல் வருந் தியோடியொளித்திருந்த பூதரனைவரும் இதுதருணமெ னச்சேர்ந்து இந்தப்பாதகனைக்கொன்று கோபந்தணிந்து மனக்குறையைப் போக்குவோமென்று ஏகமுகமாய்ப்பா ய்ந்து வானத்தையளாவி நிற்கின்றபருத்தமலைகளை அபரி மிதமாகச்செலுத்தியும் திசைகளை மூடாநின்ற கிளைகளை வாய்ந்த வடவாலவிருட்சங்கள் மராமரங்களை வேருடன் பிடுங்கிக் கரகொனச்சுழற்றிக் கடாவியும், பிண்டிபாலம், முசலம், கப்பணம், தண்டாயுதம், இருப்புலக்கை, வளை தடி, முதலியபடைகளைக் கரவேகமாகத் தூண்டியுமிறந் து கிடக்கின்ற இராட்சதர் பற்றியிருந்த சக்கரப்படைக ளைச் சுழற்றிவீசியும் மனம்பொறுமல் சீசீயெனப்பேசியு ம் வசைகளைச் சொல்லியும் இவ்விதமாக அவுணராசனை ப் பலதிசையினும் சூழ்ந்துகொண்டு கெக்கலிகொட்டிப் போராடுகின்ற காலையிற் சிங்கமுகனுக்கு அதிககோபம் பிறந்து சருவசங்கார மூர்த்தியைப்போல மண்டியெரிந் து பக்கத்தில்நிற்கின்ற சேடித்தேரிற்பாய்ந்துமண்டிபோ ட் டுட்கார்ந்துகொண்டு ஆயிரங்கரங்களினும்பற்றியிருக் கின்ற விற்களைவலிகொண்டு மண்டலாகாரமாகவளைத்து நாணேற்றி அண்டவடுக்குகள்கலேந்து தமொறும்படிக்கு க்குணத்தொனிசெய்தனன், அதனைப்பார்க்குமிடத்தில்ப லசிகரங்களைப் படைத்திருக்கின்ற மேருகிரியினிடத்திற் காளமேகங்கள்படிந்து இடிமின்னலைப்பெருக்கி ஆர்ப்பா ட்டங்களைச் செய்வதுபோலக்காட்டியது, அந்தக்குணத் தொனியின் முழக்கமானது செவிகளிற் புகுந்தவுடன் பி ராணிகளனைத்துந் தியங்கித்தீயிற்பட்டபுழுக்களினையொ ப்பத் துடிதுடித்து வாடியதன்றியுஞ் சத்தசாகரங்களுங் கொதிப்பெடுத்தோங்கி வாயுமண்டலத்திற்பட்டு வருஷித் தைப்போலப் பூமண்டல மெங்குந் துளித்தது, அவ்வா றேசிங்கமுகன் செலுத்துகின்ற சரமாரியானது விஷத் தையும் தீயையு மிறைத்துக் கடுகிவந்து மேலிட்டிருக்கி ன்ற பூதப்படைகளைச் சூழ்ந்துகொண்டு சிரங்களைக்கண் டித்தும் மார்பைப்பிளந்தும், வயிற்றைப்பீறியும், துடை களைமுறித்தும், உடல்களைசின்னபின்னப்பட வாட்டியும் இவ்விதமாகச்சாடும்போது சமர்க்களவெல்லையெங்கணும் பிணமலைகளோங்கிப் பெருங்காற்றி லடிபட்டெழும்பூளை ப்புஷ்பத்தைப்போல மூளைகள்சிதறித் தோற்றவும்இரத் தப்பிரவாகமானது இரைச்சலிட்டுக்கொண்டோடியது, சி ங்கமுகன் ஆயிரங்கரங்களினின்றும் பெருகுகின்றபாண கோடிகளின் செய்கை ளெப்படிக்கிருந்ததெனில், திரு ப்பாற்கடலினிடத்திருந்து திரைகள்பெருகுந்தோறும் தி வலைக ளிறைவதைப்போலக்காட்டியது இப்படிக் கெழு கின்ற படைகள்வீறிப் பூவட்டவெல்லையெங்கணும் நிறை ந்துவானவழிகளைமூடி அஷ்டதிசைகளைமறைத்துதிசைக் கரிகளைக் கொளுத்திக் கரிகளாக்கிச் சமுத்திரநீரைச்சுவ ற்றியும் வேகமடக்காமல் இவ்வண்டத்தைக்கடந்து மேல் நின்று அண்டகோடிகளினும் பாயும் இவையன்றியுங்கு லகிரிகளைப் பொடிபடுத்தியும் பொன்மலையையுருக்கிக்கு ழப்பியும் பிரளயகாலத்துலங்கங்களை தகிக்கவல்ல தீச்சி கையைப் பெற்றிருக்கும் வடவையின் வெப்பத்தைமாற் றியது

சவுனகாதிதவத்தரே! அவன்செலுத்தும் வாளிகளினு ற் காயப்படாமலும் வருந்தாமலுந்தப்பியபிராணிகளொ ன்றுங்கிடையாதுமண்விண்ணெங்கும் பாணமயமாய்வெ ளியிடமற்று அடர்ந்தகாரணத்தினுற் பூமண்டலவாசிகள் வானநாடுகளினும் விண்ணவர் மண்ணுலகத்தினும் போ கவர ஒருஏணியையொப்பவும் விளங்கியது, இவையன்றி யும் பாணங்கள்போகும் வேகத்தினுல் ஒல்வொன்றுகண க்கிறந்த பூதர்சிரங்களைத்துளைத்துத் தடாரித் துருவுகின் றதைப் பார்க்குமிடத்தில் வேடர்மாம்சங்களைச் சுடுவதா கச்சலாகையிற் கோத்திருப்பதைப்போலக்காட்டவும்நன் னெறிகளைத்தெளிந்துநடந்துகொள்ளவறியாதமுடன்பெ ற்றிருக்கின்ற செல்வத்தினுற் றன்கிளைகளுக்குங் கேடுண் டா யழிவதுக்கொப்பாகச் சிங்கமுகன் செலுத்தியகணைக ள் தன்சேனைகளையும் சங்கரித்தோடும் வானவெல்லையை பாணகோடிக ளடைத்ததினுற் சூரியன் பின்னுமுன்னும் போகவகையற்று நின்ற விடத்திற்றிகைத்திருந்தனன், அ த்தருணத்திற் பெருத்தெழுந்த உதிரப்பிரவாகமானது வேகங்கொண்டு போர்க்களவெல்லைமுற்றினு மிறைந்துகி டக்கின்ற ரணபேரி முதலிய போர்ப்பறைகளையும் வாள் வேல்முதலாகிய படைக்கலங்களையுங் களேபரக்குவைக ளையும் புரட்டிக்கொண்டோடுவது சமுத்திரராசன்மீது பகைத்துச் செங்கடற்கிறைவன் படைப்பெருக்குகளுட னெதிர்த்துப் போர்செய்வதையொப்பக்கடுகிக் கடலிற்பா ய்ந்து கலக்கிச் செவ்வடிவாக்கித் தன்வயப்படுத்தியதைப் போலவிருந்தது, இவ்விதங்களாக அவுணருக்கரசன்செ ய்துவரும் போரின்பெருக்கத்தை ஜயசாலியாகிய வீரவா குதேவர்பார்த்துக் காலாந்தகனைப்போலச்சிறித் தன்கரத் தில் விளங்குகின்ற ஒப்பற்ற வில்லைவளைத்துநாணேற்றி அண்டபுவன சராசரங்களுந்திடுக்கிடக் குணத்தொனிகா ட்டியகாலையில் அவ்வோசைக்காற்றுமற் பஞ்சேந்திரியங் லைகள்கலக்குற்று கைகால்களுதறலெடுத்துத் தேரின்மே லிருந்த விராட்சதப்பிரமுகரும் யானையின்மேலிருந்தவு ரர்களும் புரவிகளின் மீதுவந்தஜயசாலிகளும்தீயையொ த்த சிகையைப் படைத்திருக்கின்ற வீராதிவீரராகிய கா ல்பலங்களும் விஷத்தொடக்கிற்பட்டுச் சோருகின்றவர்க ளைப்போலக் கால்மாடு தலைமாடாகவிழுந்து பங்கப்பட்டு த்தியங்குகின்றவேளையில் விஷத்தோவையலிட்டிருக்கின் ற கொடியபாணகோடிகளைத்தொடுத்துச்சோனமாரியை ப்போலக் கரவேகமாய்ப்பொழிந்து சிங்கமுகாசுரனுற்செ லுத்தப்பட்டு எவ்விடங்களினுமடர்ந்து வருத்தியிருந்த பாணப்பெருக்கனைத்தையும் துத்துமுருக்கி வெட்டவெ ளிசெய்தனர், அதெப்படி யிருந்ததெனில் பிரமனும்

அவன்பிள்ளைகளாகிய நவப்பிரமாக்களும்பலகாலங்களாக
ச்சிருஷ்டித்துவந்த சராசரப்பிரபஞ்சங்களைக் கடையுகத்
திற்பரவசிவம்தமதுநுதல்விழித்தீயினாற்சாம்பலாகச் செ
ய்ததைப்போலத் தோற்றியது.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? யிவ்விதமாகநொ
டிப்போதிற் சிங்கமுகன் பரப்பியிருந்த பாணகோடிகளனை
த்தையும் சின்னபின்னப்படச்சாடி மன்னுயிருக்கடுத்
திருந்த வருத்தங்க ளனைத்தையு மொழித்துமனவெழுச்
சிபெற்றிருக்கச்செய்தவீரன்விற்சாதுரியங்களையுங்கரவே
கத்தையுங் கண்டதேவர்கள் அற்புதத்தை யடைந்தவர்க
ளாய்ப் பிற்காலத்திற்பாலசுப்பிரமணியதேவர் அவுணவர்
க்கத்துடன் சூரபதுமனையும் நாசப்படுத்துங் காலையிற்று
ங்கள் பெறவிருக்கின்ற சந்தோஷப்பெருக்கினும் பதின்
மடங்குமனமகிழ்ந்து தேகம்பூரித்து வஸ்திரங்களையெறி
ந்து அண்டங்களதிர ஆரவாரித்துஜயவுற்சாகத்தைக்கொ
ண்டாடியதுமன்றி யிவ்விதமாகப் புகழ்வதாயினர், நேற்
றையத் தினம் வீரமாமயேந்திரபுரியை அலங்கோலப்ப
டச்சாடிய வீராதிவீரன் தூண்டிய படைகளின் வேகத்
தையும் கொடுமையையும் என்னசொல்லுவோம்சூரபது
மன் துணைவன்செலுத்திய சரங்களைமாத்திரம் வாட்டிய
தன்று அவன்பெற்றிருக்கின்ற ஜயப்பிரதாபத்தையும் கீ
ர்த்திப்பாடுகளையும் வளையறச்சுட்டுச் சாம்பலாகியதென
ஒருவருடனொருவர் மகிழ்ச்சியாகப் பேசிக்கொண்டு கூத்
தாடினவர்களாய்ப் பஞ்ச தருக்களினது புஷ்பங்களனைத்
தையும் தனழகளுடன் பறித்துப்பறித்து வீரவாகுதேவ
ர் மீதுகொட்டி ஜயாவிஜயபவாவென வாழ்த்தினர், இவ்
விதமாகத்தான் பிரயோகித்த பாணசமோகங்களையிளைய
பெருமாள் துகளாக்கியகாரணங்களையும்இந்தவெற்றியை
க்குறித்து விண்ணவர் கொண்டிருக்கிற விருப்பையும்சி
ங்கமுகாசுரன் பார்த்தமாத்திரத்தில் விழிகளிற் றீப்பொ
றிகள்சிதற வடவைக்கனலைப்போலவுருத்து அடாபயலே
உன்னிமித்தம் வில்லெடுத்தேன் அம்முயற்சி வீண்படா
மல் இந்தநிமித்தில் வல்பெற்றிருக்கின்ற உன்மார்பைப்
பிளந்து சிரத்தைக்கண்டித்துருட்டிச் சங்கையற்றுப் பா
ணங்களைச்செலுத்துங் கரத்தை வெட்டித்தள்ளிவீரகண்
டைகள்கலித்திருக்கும் கால்களைக் கண்டித்தும் பதட்ட
மாகப்பேசும் வாயைப்பிளந்து மூக்கையரிந்துகுண்டிதயி
ரித்தையுடைத்துப் பங்கப்படுத்துவேன் ஓ! அபலனே யி
துவுமல்லாமலென்வீரத்தன்மைக ளுனக்குத்தெரியாது
ஆயிரங்கரங்களினும் அத்தொகை தனுசுகளைப்பற்றி ம
ற்றஆயிரங்கரங்களினும் ஒவ்வொருதொடையில் சங்கோ
பசங்கக்கணக்கில் கொடியபாணங்களை அண்டரண்டபுவ
னசராசரங்க ளெக்கணுமூடி வாட்டச்செய்யும் தனுர்வித்
தை மந்திரத்தைப்பூர்த்தியாகச் சுக்கிராசிரியனிடத்திற்க
ற்றிருக்கின்றேன் அன்றியும் பலபலதேவாஸ்திரங்களையு
ம் பெற்றிருக்கின்றேன் கதாதண்டத்தை யெடுப்பேனாகி
ல் அண்டவடுக்குகள் குலைந்தும் மோதுங்காலத்திற் பூவ
ட்டமுற்றும் கோடைகால வெடிப்புகளைப்போலப் பிளந்
து மங்கும்படிக்குச் செய்யவும் வல்லேன் இன்னமும்அ
ளவற்ற வல்லபங்களுண்டு அவற்றைப்பதிதனாகிய உனக்
குச்சொல்லுந்தரமன்று அப்படிக்கொத்த வீராதிவீரனா
கிய நம்முடனிரண்டு கரங்களைப் பெற்றிருக்கின்ற அப
லனாகிய நீயோஎதிர்த்துச் சண்டைகொடுத்து நிருவகிக்க
விருக்கின்றனை வலியவில்லைத் தாங்கிய பதட்டமாகிய உ
ன்கையை முறித்துஉன்விழிகள்காண நாய்-நரி கழுகு-கா
க்கை-பிடிங்கித்தின்ன விந்தரணக்களத்திற்றள்ளக்கடவே
ன் இவையன்றியும் ஜகங்களெங்கணும் புகழவிருக்கின்ற
மயேந்திரபுரியி லிருக்கின்ற பலவளங்களும் தும்சப்பட
வழித்து அவுணப்படைகளைக் கலக்கியிராஜபரமேஸ்வர
ன் பிள்ளையைக்கொன்றது மன்றி மனம்பதைபதைக்க வி
ப்போதென்மன துக்கினிய புத்திரனையும்களத்திற்படுத்தி
யதனாற் பெற்றிருக்கின்ற வெற்றிப்பாடுக ளனைத்தையும்
கக்குவிப்பேன் இப்படிக்கு திடப்பட்டிருக்கின்ற உன்பி
ராணனையுண்டு புத்திரசோபந்தணிய விருக்கின்றேன்.

ஒருகாலம் பயபீதியினால் திரிலோகங்களினுமோடிமூ
லைகளி லொளிப்பினும் விடவறியேன் தொடர்ந்துகண்ட
துண்டமாக வெட்டியெறிவேனென்று இவ்விதங்களாகிய
சபதங்களையும் வீரங்களையுங்குறித்துக் காட்டியதைப் பு
சபலபராக்கிரம சாலியாகிய வீரவாகுதேவர்கேட்டுக்கோ
பநகை கொண்டவராய் ஓ! அவுணராசனே? வீண்வார்த்
தைகளைப் பேசுவதிற் பிரயோசனமில்லைமேற்குறித்த ப
ற்பல தீரங்களைப்பெற்றிருக்கின்ற வுன்னால் விடப்பட்ட
பாணகோடிக ளெத்தகையதாயினும் சின்னபின்னப்பட
க்கண்டித்து உன்சேனைகளையும் போர்க்களத்துக்கிரையா
க்கி வீராதிவீரனாகவிருக்கின்ற வுன்னையும் பின்னிடத்த
க்கதாகவாட்டித் தீரனாக வுலவப்போகின்ற என்விற்றிறத்
தைக்கண்டு பிரமித்துவாடப்போகின்றனை யெனப்பேசிய
வாக்கியங்களைச் சிங்கமுகன் கேட்டவுடன் வடவையைப்
போலப்பொங்கி விழிகளிற் றீப்பொறிகள்சிதற வுருத்து
ஆயிரம் தனுசுகளையும் ஏககாலத்தில் வளைத்துக்கொடிய
சரங்களைப் புற்றினிடத்திலிருந்துசிதலைகள்பெரும்போக்
கெடுக்குமாறுபோலச்சொரிந்துவருகின்றகாலையில்அவை
கள்வெளிப்பட்டகாலத்துண்டாகியகொடுமைகளையும்வே
கத்தையும் உற்பாதங்களையும் ஒருவகையாகப்பேசக்கூடு
வதோஇவ்விதமாகமேலிட்டுவருவதை வீரவாகுதேவர்க
ண்டு இயமனைப்போலவும்மேகத்துக்கொப்பாகவுந்தமது
கரத்தில் விளங்குகின்ற காண்டீபத்திற்பத்துநூறாயிரந்தி
வ்வியபாணங்களைச் சந்தித்துக்கரவேகமாகத்தூண்டியகா
லத்தில் விஷங்களைக் கக்கிக்கொண்டோடிப்பகைவன் செ
லுத்தியபாணங்களனைத்தினையும்நிமைப்போதில் நாசப்ப
டுத்திக்கொண்டுவீறிவரும்போதுசிங்கமுகன்கோபித்துப்
பத்துநூறாயிரம் கொடியசரங்களைக்கொண்டு அவைகளை
தும்சம்பண்ணிக்காலாந்தகனும் திடுக்கிட்டுவாடும்படிக்கு
க் கொதித்து ஆயிரகோடிவெவ்விதாகியவாளிகளைப்போ
க்கிக்கொக்கரித்தனன், அக்காலத்திலெமதிறைவனாகியபா
லசுப்பிரமணிய தேவர்சகோதரனும் அத்தொகை பாண
ங்களைச்செலுத்தி மேலிட்டுவரும் சரங்களைக்கண்டித்துக்
களத்திற் படுத்தினர், அதைக்கண்ட சிங்கமுகன்ரௌத்தி
ராகாரமாகக் கோபித்துக்கொடியதீட்சண்ணியமுள்ளஇர
ண்டாயிரம் சிலீமுகங்களைப்பிரயோகித்து வீராதிவீரன்
கரத்திற்பிடிபட்டிருந்தவலியவில்லைக்கண்டித்து மற்றொ
ருதனுசையெடுப்பதற்குமுன்னம் மேலும் நூறுதிவ்விய
பாணங்களைக்கரவேகமாகத்தூண்டிவிசாலமாகவிளங்கும்
மார்பைத்துளைத்தகாலையில் உதிரமானது பெருக்கெடுத்
தோடமிகவும்வருந்திவடவைக்கனலைப்போல மண்டியெ
ரிந்து மற்றொருபாரித்தவில்லையெடுத்துவளைத்துநாணே
ற்றிச் சூரியகிரணங்களையொத்ததீட்சணியமுள்ள நூறாயி
ரம்சரங்களை வேகமாகச் செலுத்தியபோது சிங்கமுகன்

கோபித்துஇறுதிகாலத்திற்பெய்யும்மேகங்களைப்போலச்
சரவருஷங்களைப்பொழிந்து அவைகளைத்துகள்கண்டுமே
லும் அத்தொகைப்பட்ட சூரியகணைகளைச் செலுத்திக்
கர்ச்சித்தான் அக்காலக்கில் வீரவாகுதேவருக்கு அதிக
கோபம்பிறந்து பலகோடி கடூரமாகிய பாணங்களினல்
அவற்றினைத் தும்சப்படுத்தி மேலும் கரவேகமாய் ஆயி
ரந்திவ்வியபாணங்களைப்போக்கி அவுணராசனேறியிருந்
த பாரித்ததேரைப் பொடிபடுத்திச் சிருங்காதஞ்செய்த
னர்.

உடனே சிங்கமுகன் மற்றொரு சேமத்தேரிற்பாய்ந்து
ருத்திராகாரமாகக்கோபித்து ஆயிரம்விற்களிலும் கணக்
கிறந்த சிலீமுகங்களைத்தொடுத்துச்செலுத்த உத்தேசித்
தமுன்னிலையில் வீராதிவீரன்சீறி பலகோடிப் புங்கவ
ங்களைப்போக்கிஆயிரம்நீண்டதனுசுகளையும்வெட்டியெ
றிந்து கற்கம்பத்தையொத்த புசங்களைத்தட்டி வெற்றிச்
சங்கத்தையெடுத்துப் பொம்பொம்மென்று முழக்கினர்,
கேட்டீர்களோ, சவுனகாதிரிஷிகளே, ஒருவராலும்அசை
க்கவொண்ணாத விற்களைப்பறிகொடுத்து மானபங்கப்பட்
டு அஷ்டதிசைகளையும் வெற்றிபெற்றுப் படைத்திருந்த
புகழையும்போக்கி யிராஜராஜனுகவிருந்த பெருமிதத்
தையுமிழந்து பற்களையும் சிரோரத்தினத்தையும் போக்
கியநாகத்தைப்போல உள்ளம்வெந்துமானம்மனதைவரு
த்திக்கொல்ல யாதுந்தோற்றுமற் பசபசென்று விழித்து
க்கொண்டிருப்பதைப் பூதப்படைகள்கண்டமாத்திரத்தி
ற்கரங்களைக்கொட்டிப் பற்பலவசைமொழிகளைப்பேசி ந
கைத்தனர், இஃதன்றியும் வானத்தில்நின்று வேடிக்கை
ப்பார்த்திருந்த தேவர்கள் மனக்களிப்புடன் அவுணராச
னைச் சுலபமாகநினைத்து இகழ்ச்சியாகப்பேசி வீரன்புக
ழைக்கொண்டாடினர், தருமதேவதையும் மனவெழுச்சி
பெற்று நான்குபாதங்களினும் ஆனந்தக்கூத்தாடியது ம
காவிஷ்ணுமுதலானவர்கள் வீரவாகுதேவர் சாமர்த்திய
த்துக்குமெச்சிச் சிரக்கம்பஞ்செய்து வாழ்த்தினர். இப்ப
டிக்குச் சகலருங்களியாடலைச்செய்து வருகின்றதருணத்
திற் சிங்கமுகனென்ன செய்வான் அதிகமனவருத்தப்பட்
டுத் தன்கரத்திற்பற்றியிருந்த வலியவிற்களிற்றதையும்
வீரவாகுதேவர் விற்சாதுரியத்தையும் விஷ்ணுமுதலான
வர்கள் களிப்பையும் பூதப்படைகள் கெலிப்பையும்கண்
டமாத்திரத்தில் வடவாமுகாக்கினியைப்போலக் கொதித்
து நமதுகரத்திலிருந்த விற்கள்வெட்டுண்டதைக்குறித்து
க்களிக்கின்ற விண்ணவர் சந்தோஷத்தையும் வாசவன்
செருக்கையும் பிரமன் திக்குப்பாலகர்கெலிப்பையும்பூத
ர்ஆணவத்தையும் தூதன்வெற்றிப்பாட்டையும் நிமைப்
போதிலடக்கித்துக்கசாகரத்திலழுந்திவாடச்செய்வேனெ
ன்று சிறித் துரிதமாய் தன்னைப் பெற்ற மாயைகடாக்ஷி
த்திருந்த கொடியபாசத்தையெடுத்துப் பூசித்துமேலிட்டு
ப்போராடிவருகின்ற பகைவரனைவரையும் ஒருமிக்கக்கட்
டிக்கொன்று வாரிக்கொண்டுபோய்ச்சத்தசாகரங்களுக்கு
ம் அப்புறத்தில்நிற்கின்ற உதையகிரியிற்சேர்த்துப்பதல
மாய்க் காவல்கொண்டிருக்கக்கடவாயெனவேண்டிவீசின
ன் அதுவெளிப்பட்டவுடன் சருவசங்காரகாலத்திற் பெ
ரும்புறக்கடலாதிய சாகரங்கள்பெருகி உலகங்களைமூடிக்
கொள்வதைப்போல விண்மண்ணெங்கும் நிறைந்து இரு
ட்பிழம்பைப்பெருக்கித் தீயையும் புகைப்படலத்தையும்
வீசிவிஷங்களைக்கக்கி பலவுற்பாதங்களைச்செய்துகொண்
டு மேலிட்டுவருவதைத் தேவர்கள்கண்டு பயப்பிராந்தியி
னும் சரீரமுற்றும்வியர்க்கக் கால்கள்தடுமாறநிற்கச்சகிக்க
மாட்டாமல் மேலுலகங்களிலோடவும் போர்க்களத்தில்
வீறியிருந்த பூதப்படைசள் இலக்ஷர், எண்மர்,படைவீ
ரர்நடுநடுங்கி வாடுகின்றகாலையில் வீராதிவீரனுகிபசிவகு
மாரன் இதுவுமொருமாயமென்றெண்ணித் துரிதமாய்ப்
பலபாணங்களைத்தூண்டி அதன்முயற்சிகளையடக்க உத்
தேசிக்கும்போது பாசமானது அதிவேகமாய்வந்து சிவசு
ப்பிரமணியதேவர் சேனைகளின் அறிவைமயக்கி காலபா
சத்தைப்போலச்சகலரையும் சேர்த்துக்கட்டியது.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? அதன்வல்லபத்
தை யென்னசொல்லுவேன் கடையுகப்பெருக்கையொப்
ப வமர்க்களமெங்கும் ஆரவாரித்துக்கொண்டு நிறைந்தி
ருந்த பூதவெள்ளத்தையும் இலக்ஷர் எண்மர்களையும்புச
பலபராக்கிரமசாலியாகிய வீரவாகுதேவரையும் நிமைப்
போதில்மயக்கிப் பிரேதங்களாக்கித்திரட்டிக்கொண்டுமே
லெழுந்து வானவழிக்கொண்டுமின்னலைப்போலவாயுவே
கத்தினுங்கடுகிச் சாகரங்களைக்கடந்து மேருகிரியையொ
ப்ப வானத்தையளாவி விஷ்ணு பள்ளிகொண்டிராநின்ற
க்ஷீராப்தியின்மத்தியில் நிற்கின்ற உதயகிரியைச்சேர்ந்து
அதன்சாரலில்வைத்துக் காவல்கொண்டிருந்தது, அக்கா
லத்தில் ரணக்களவெல்லைமுற்றினும்பரந்து அரியபோர்
த்தொழிலைச்செய்திருந்தவர்களி லொருவரையுங்காணும
ற்பாழ்பட்டிருப்பதைச்சிங்கமுகாசுரன்விழிகள் குளிரக்க
ண்டு தேகங்குலுங்க நகைத்துவடவையைப்போலவீறியி
ருந்தபகைவரனைவரையும் கணப்போதில் வாட்டிக்கொ
ண்டுபோய்விட்ட பாசத்தின்வல்லபத்தைமதித்து வெகு
நேத்தியெனப் புகழ்ந்து தன்சவுரியபராக்கிரமங்களுக்கு
ஒருவரும் நிகரில்லையென் றெண்ணினவனுய் சமர்க்கள
முற்றினுமுலவியாவரையுங் காணுமலிதனைச் சொல்லிக்
கொள்வதாயினன், பாலசுப்பிரமணியன் நமதுவெற்றிப்
பாடுகளைத் தெரிந்தவனுய் ஓடிப்போயிருக்கவேண்டும்இ
த்தலத்திற் காணவில்லை நான்சுற்றிவந்தவிடங்களிற் றட்
டுப்படாததால் எத்தலத்திலிருக்கின்றுனே தோற்றவில்
லைநம்மவர்பேரிற் பகைத்து வந்திருக்கின்றுனென்பதுமி
ரட்டுச்சொல்லோ மேலும் என்தமையனுடனெதிர்த்துப்
போராடி மிகவும் வருத்தினனெனப் பேசிக்கொண்டது
மாறுபாடாகக் காணுகின்றது யாரைப்பார்த்தாவது பால
சுப்பிரமணியனென்றெண்ணி மிரண்டுசொல்லிக்கொண்
டனரோ அல்லது பிள்ளையாண்டான் நாம்செய்த கொடி
யபோரைக்கண்டு ரணவீதியினல் உதைத்துக்கொண்டுமா
ண்டானே வென்றிவ்விதங்களாகச் சயவுற்சாகத்தினல்வ
சனித்து அண்டங்களதிர்ந்து தத்தளிக்கத்தக்கதாகஆர்ப்
பரித்தனன், அத்தருணத்தில் தூசிப்படையுடன் போயி
ருந்த தூதனொருவனேடிவந்துஅவுணர்பெருமானைவண
ங்கிப் போற்றி வாயைப்புதைத்துக்கொண்டு சுவாமிஆயி
ரவெள்ளம் பூதப்படைகளும் அதற்கடுத்த சேனைத்தலை
வரும் பிரமன், விஷ்ணு, இந்திரன்முதலியதேவர்கள் சூ
ழ்ந்துபோற்றப் பாசறைவிடுதியில் வெற்றிவேலாயுத னி
ருக்கின்றுன் இதனைக்கண்டு வந்தனனெனவிண்ணப்பஞ்
செய்ததைக்கேட்டு மூன்றும் பிறையையொப்ப விளங்கு
கின்ற கோரைத்தந்தங்கள் வெளிப்படையாகத் தோற்றந
கைத்து புற்றினிடத்தடங்கி யிருக்கின்ற சர்ப்பத்தின்குட்
டியைப் போல என்னுட னெதிர்த்துப் போராடுவதற்

கஞ்சிப் பாசறையிற்பதுங்கி யிருக்கிறவனைப்போலக் காணுகின்றது ஆகிலும்விடமாட்டேன் இதோநானே அவ்விடம்போய் முற்றுகைபோட்டுக்கொண்டு பாலனுடன்சகலரையும் வளைந்துசாடி யின்றுடன் போரைமுடித்துவிடுகிறேன் இதுஎந்நேரமுந் தலைநோவாயிருக்கின்றது தமையனும் மனவாட்டத்தினையொழிந்து சொஸ்தமாக விருப்பானெனப்பேசிக் காளகூடத்தைப்போலச்சீறிச் சகஸ்திரபொற்சிரங்களைப்பெற் றிருக்கின்ற மகம்மேருவானதுகால்முளைத்தசைவதுக்கொப்பாக அத்திசையைநோக்கி நடந்தனன், இவற்றையெல்லாந் திஷ்டாந்தமாகப்பார்த்திருந்த முப்பத்துமுக்கோடிதேவர்களும் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகளும் முகத்திலறைந்துகொண்டு நிற்கப்பயந்து பலதிசையினு மிறைந்தோடினர்.

அக்காலத்தில் வாயுதேவன் மனவருத்தத்துடன் தன்னடைக்குமேலிட்டுச்சென்று பாசறையைச்சேர்ந்துகிரவுஞ்சனைப்பிளந்த வெற்றிவேலாயுத மூர்த்தியினது பாதகமலங்களிற்பணிந்து பெருமூச்சுகளைவிட்டுக்கொண்டுதேவாதிதேவனே என்னாண்டவனேகேட்டருள்க, தேவரீர்கட்டளையின்படிக்கு வீரவாகுதேவர் தமதுதுணைவர் இலக்ஷர்படைத்தலைவர் பூதவீரருடன் ரணக்களத்தைச்சேர்ந்து கொடியபோரைச்செய்து இராட்சதசேனைகளையும் படைத்தலைவரையுங் கண்டித்துச் சிங்கமுகன்பிள்ளைகள் நூறுபேரையும்வாட்டி அவனையும் பற்பலசண்டைமுன்னிலையிற் றிகைக்கும்படிக்குச் சாடும்போது பிரமித்தவனாய்வடவையைப்போலக்கோபித்து மாயபாசத்தைப்போக்கினன் அந்தவஞ்சகத்தையறியாமல் நம்மவர்கள் சற்றுத்தாழ்த்தகாலத்தில் அந்தபாசம் வேகமாய்வந்துமதியைமயக்கி வீரவாகுதேவர் முதலான சகலரையும் வாட்டிச்சேர்த்துக் கட்டிக்கொண்டுபோய் உதையகிரியிற்சேர்த்தது சமர்க்களத்தில் நம்மவர்களொருவருமில்லாமையாற்சிங்கமுகன் ஜயசாலியாய் முற்றினுமுலவிப்பார்த்து இவ்விடம் வரும்படிக்கு யத்தனித்திருக்கின்றானெனச்சொல்லியசேதியைத் திருச்செவிகளிற்கேட்டவுடன்சிங்கமுகனெவ்விடத்திலிருக்கின்றனனென வினவியபோது வாயுதேவன்வணங்கிக் கர்த்தனே காலம்நேர்ந்தபடியால் ரதாரூடனாய்ச் சதுரங்கசேனைகளுஞ்சூழ்ந்துவர இத்தலத்தைக் குறித்துப்புறப்பட்டான் இதுவரையிற் சமீபத்தில்வந்திருப்பானெனச் சொல்லக்கேட்டு சண்முகப்பெருமாள் சிறுநகைகொண்டு சிங்காதனத்தைவிட்டிறங்கி யிரத்தினமயமாகிய பாதுகையினிடத்திற் றிருவடிகளைச்சேர்த்து வயிரத்தண்டைசலங்கை அரைக்கிண்கிணி வீரகண்டாமணிசத்திக்கத்தக்கதாக ஆசாரவாயில் முகப்பில் வருமுன்னிலையில் வாயுதேவன்நடத்திவந்துநிறுத்திய தேரின்மேற்சிவகுமாரர் ஆரோகணித்தனர். அதைக்கண்டதேவர்கள் மனமகிழ்ந்து ஜயவிஜயபவாவெனப் போற்றிவாழ்த்தினர்.

இந்தஒலக்கத்தைத் தரிசித்த இந்திரன் அதிகசந்தோஷத்துடன் வெண்சாமரையைவீசவும் தேவர்கள் ஆலவட்டங்களையசைக்கவும் சந்திரசூரியர் தவளவட்டக் குடைகளை யிருபாரிசங்களினுங்கவித்து நடக்கவும் இயமதருமராசன் உடைவாளாயுதத்தையேந்திச்செல்லவும் குபேரன்அடைப்பையைச்சுமந்துவரவும்சமுத்திரராசன் பொற்படிக்கத்தை கரத்திற்பற்றிப் பக்கத்தில் காத்திருக்கவும் இத்தகைய சிறப்புகளுடன் சண்முகப்பெருமாள்போரைவிரும்பி வெளிப்பட்டகாலையில் இச்சேதியைத்தெரிந்த ஆயிரவெள்ளம் பூதப்படைகளும் சகலாயுதபாணிகளாய்ச் சமுத்திரமுழக்கத்தினு மேலிடத்தக்கதாகச் சிருங்கநாதம் அட்டகாசங்களைச் செய்துகொண்டு தத்தமது தலைவர்களுடன்பாடி வீட்டைவிட்டு வெளிப்பட்டுவீரங்களைப்பேசிப் பாரித்தமலைகளைப்பறித்துந் தழைத்தோங்கியிருக்கும் மராமரங்களை வேருடன்பிடுங்கிக்கரங்களிற் பற்றிப் பெரும்புறக்கடலைப்போல ஆரவாரித்துக்கொண்டு கர்த்தனைச்சூழ்ந்துபோகவும் அத்தருணத்தில் கணக்கிறந்த பூதவீரர்கள் ரணபேரி, ஜயபேரி, வெற்றிச்சங்கம், குடமுழா, தப்பட்டை, சின்னம், காகளமாதிய போர்ப்பறைகளை திசைகள்செவிடுபட கணகணென முழக்கிப்போகவும் சிலபூதகணங்கள் ஐயன்புகழைப்படித்துப் புகழ்ந்துநடக்கவும் பலர்மயிர்ப் பிஞ்சம்கொடிமகரதோரணம் அனந்தம் நந்தித்துவசங்களைத்தாங்கி யிடிகளுமஞ்சவசனித்துப்போகவும் சிலகணநாதர்கள்முன்னணியில்மூவர்முதல்வன் வருகின்றனர், முக்கண்ணர்மனதுக்கினியகுமாரதேவரெழுந்தருளுகின்றனர்,அவுணகுலாந்தகன்வருகின்றனர், வெற்றிவேலாயுதத்தைத்தாங்கிய வீராதிவீரர்செல்கின்றனர், தேவர்களாலறிதற்கரிய சுயஞ்சோதிச்சொரூபிவருகின்றனர், தேவசேனாபதியெழுந்தருளுகின்றனர், தேவதேவோத்தமர் வருகின்றனர், சருவாந்தரியாமியாய்த் தீனசரண்ணியராக விருக்கும் பாலசுப்பிரமணியதேவர் வருகின்றனரென்று திருச்சின்னங்களில் முழக்கிப்போகவும் இவ்வித சம்பிரமங்களுடன் வீரபராக்கிரமசாலிகளாகிய பூதர்சூழ்ந்துநடக்கவிண்ணவர் ஜயம்ஜயமென்று வாழ்த்தெடுப்பக் கந்தசுவாமியார் பாசறையெல்லையைக்கடந்து ரணக்களத்தைநோக்கி வாயுவேகத்தினுங்கடுகிப் போகின்றபோது சிங்கமுகாசுரனும் கணக்கிறந்தவிராட்சதப்படைகள் சேனைத்தலைவர்களுடன் அதிகவுக்கிரத்துடனெதிரில் நேர்ந்தான் அக்காலத்திற் பருவதாகிருதியாகிய பாரித்ததேகத்தைப் பெற்றிருக்கின்றபூதப்படைகள்மனம்பொறாமல் வடவைக் கனலைப்போலச்சீறிப் பாரித்த பருவதங்களைவீசியும் தழைத்திருக்கின்ற விருட்சங்களைச்சுழற்றி மோதியும், எழுவாயுதத்தைப்போக்கியும் மழுப்படையைக் கடாவியும், பாசங்களைவீசியும் தண்டாயுதங்களைக் கிறுகிறெனச்சுழற்றிக் கடாவியும்,வச்சிராயுதங்களைவிட்டெறிந்தும்வேலாயுதங்களைப்பிரயோகித்தும் சக்கரங்களைக்கடாவியும், இவ்விதமாகப் படைகளை அமோகமாகச்செலுத்தி ஜயசாலிகளாகிய விராட்சதப்படைகளைத் தலைகளைக்கண்டித்தும் மண்டைகளைப்பிளந்தும் தோள்களைச்சரித்தும் தாள்களைவெட்டித்தள்ளியும், மார்பைப்பிளந்தும், இவ்வாறுவாட்டியும் பருவதாகிருதியாகவிளங்கும் பாரித்ததேர்களை அச்சுமச்சுகுத்துக்கால்கொடுங்கைமுதலியவுறுப்புகளைப்பேர்த்தெறிந் தடக்கியும் யானையணிகளைச் சின்னபின்னப்படவாட்டியுங்குதிரைப்பந்திகளைக் கண்டதுண்டப்பட ரணக்களத்திற் கிடத்தியும் போராடுமுன்னிலையில் இராட்சதவீரர்களும் பின்னிடையாமல் வடவைக்கனலுக்கொப்பாக மண்டியெரிந்துகுந்தம்-முசலம்-பிண்டிபாலம் - வேல்-எஃகாயுதம்-பாணமுதலிய படைவகைகளை ஒன்றனந்தமாகச்செலுத்திப் பூதப்படைகளை வாட்டும்போது தலைகள்-தோள்கள்-மார்பு-கால்கள் மற்றவுறுப்புகள் சின்னபின்னப்பட்டு மாண்டனர்.

இவ்விதமாக உபயசயினியங்களும் ஒருவரையொருவ
ர்வெல்லவேணுமென்கிற வீராவேசங்களுடன் அகோர
மாகியபோரைச்செய்துவருகின்றகாலையில் பூதவீரர்கள்ம
ராமரங்கள்முதலியஆயுதங்களைக்கொண்டுமுன்பின்பாரா
மற்சாடிவாட்டும்போது அவுணப்படைகளனைத்தும்ரண
க்களவெல்லைமுற்றினும் சிதைபட்டிறைந்துபிணமலைகள்
பெருத்து உதிரப்பிரவாகம்சுழலமிட்டோடத்தன்சேனை
கள்நாசப்படுவதைச் சிங்கமுகாசுரன்கண்டவுடன் மனம்
பதைபதைக்கக் கோபாக்கினிமேலிட்டு விழிகள்அரக்கை
ப்போலச்சிவந்து அனற்பொறிகளையிறைக்க வடவையை
ப்போலச்சீறிப் பகைவரனைவரையும் ஒருமிக்கவாரியுண்
ணப்பெறினல்லது என்கோபமுந் தாபமுந்தணியாதுஅ
ப்படிக்குச்செய்து முடித்தபின்பு பாலனை விசாரித்துக்
கொள்ளுவோமென் றெண்ணி ஆசாரியன் தனக்குப்போ
தித்திருந்த மாயமந்திர மொன்றை யுச்சரித்துப் பூமிவா
னம் திசைகள்நிறையத்தக்க கோரரூபத்தைத்தாங்கி ஆ
யிரஞ்சிரங்களிலும் விளங்குகின்ற வயிரமுடிகள் அண்
டமுகட்டையுராயவும் கரங்கள் அண்டப்பித்திகைவரை
யிலோடவும் பாதங்கள் பூமண்டலவெல்லைமுற்றினும் நி
றைந்துகாட்டவும் இத்தகைய மாயப்படிவத்தைக்கொண்
டு புவனங்களனைத்தும் நடுநடுங்கி வாடத்தக்கதாக ஆர்ப்
பரித்துக் கரங்களைவிரித்து மேலிட்டுச்சீறி வருகின்றசிங்
கமுகாசுரன்கோரரூபத்தைப்பார்த்தவுடன்மன் னுயிரனை
த்தையும்காலாதிகளில்வாட்டவல்ல இயமதருமராஜனும்
திகைத்துகைகாலுதறப்பிரமித்தசைவற்றிருக்கவும் சூரிய
ன்மயங்கித்திசைகெட்டோடவும்இந்திரன் தேகமுற்றினு
ம்வியர்த்து இப்பாதகன்என்னஅனர்த்தங்களைச்செய்யஇ
க்கோலங்கொண்டானோ வென்னும் ஏக்கத்தினால்வாடிவ
ருந்தவும் அக்கினிதேவன் பதைபதைத்துத் தன்வெப்ப
மடங்கிச் சோரவும் பிரமனாதிய தேவர்கள் மதிமருண்டு
தியங்கவும் இவ்விதமாகச் சகலரும் திப்பிரமைகொண்டு
பிரமித்துப் பார்த்திருக்கின்ற காலையிற் சிங்கமுகன்காலா
ந்தகனைப்போலச் சீறித் தன்னிரண்டாயிரம் கரங்களையு
ம் நீட்டிச் சத்தசாகரங்களைப்போல முழங்கிக்கொண் டி
ருக்கும் பூதப்படைகளைச் சேர்த்து வாரிவாரி பிலத்தை
யொப்ப விருக்கின்ற பேழ்வாய்களி னிடத்திற் போட்டு
மென்றுதின்னப் போதாமையால் கவளீகரமாகவிழுங்கத்
தலைப்பட்டான், அஃதெப்படிக்கிருந்ததெனில் சத்தமே
கங்களும்சீறிச்சமுத்திரத்தைமாறுகொண் டுண்பதுக்கொ
ப்பாகக் காட்டியது இந்தப்பிரகாரம் ஒவ்வொருகரங்களி
ல் ஆயிரகோடிசிவகணங்களைச் சேர்த்துவாரி ஒவ்வொரு
வாயிலிட்டு உட்கொள்வான் பூதர்கரங்களிற் பற்றியிருக்
கின்ற பலபடைகளையும் மச்சங்களாகவும் மலைகளைத் த
சைக்கொப்பாகவும் அவர்கள் சரீரங்களை அன்னத்தைப்
போலச் சேர்த்துண்பான் இவ்விதங்களாகக்கரங்களைச்சு
லவிச்சுலவிப்பிரளயகாலத்தில் மகாவிஷ்ணுவானவர் சக
ஸ்திரஉருவைக்கொண்டு ஆயிரகோடி அண்டங்களையுமு
ண்டுவயிற்றிலடக்கியதை யொப்பக்கண்டகனாகிய அவுண
ராசன்வாய்களில் ஆயிரவெள்ளம் பூதப்படைகளும்அட
ங்கி உதரகடாகத்திற் சேருமுன்னிலையில் யாதொரு சம்
பிரமகாலத்திற் பலதிசையினும் நின்று ஜனங்கள்பற்பல
மார்க்கங்களின் மூலமாகச் சாதாரணமாய்விசாலமாகியப
ட்டணத்திற் சேருமாறுபோல கண்டங்களின் மூலமாக
நடந்து பண்டிவயிற்றிற் சேரத்தொடங்கினர், இதுவுமல்
லாமற் சிவகணங்களைச் சிங்கமுகன் கரங்களினால்வாரிவா
ரி வாயிற்போட்டு விழுங்குவதைப் பார்க்குமிடத்தில் பூ
லோகவாசிகள் பற்பல பிலங்களின்மூலமாகப் பாதலத்தி
ற் சேர்வதைப்போலக் காட்டியது.

இப்படிக்குப் பாதகன் சிறியவயிற்றிற்போகின்ற பூதர்
கள் சுற்றுமுற்றும்பார்த்து இதுபூவுலகமாகக் காணப்ப
டவில்லை தெய்வலோகமுமன்று இராட்சதப்பாதகர்வாச
ஞ்செய்யும் புவனத்தைப்போலத் தோற்றப்படுகின்றதெ
னச் சங்கையற்றுப்போய்க்கர்ப்பத்திற் சேர்ந்து சவுக்கிய
மா யிருந்தனர், சிலபூதர்களைவாரிச் சிங்கமுகன் வாயிற்
போட்ட தருணத்தில் விசாலமாகியவிடத்தைப்பெற்றிரு
க்கும் நாசியின் மூலத்தையும் செவிகளின் மார்க்கங்களை
யும் ஆசனத்தையுங் கண்டமாத்திரத்தில் இவை பிலத்து
வாரங்களைப்போலக் காணுகின்றதெனமதித்துஅவற்றின்
மூலமாகவெளிவந்து தப்பித்துக்கொண்டு சிலபூதரோடி
யொளிக்கவும் சிலபூதர் விசாலமாகிய பாதகன்வாய்களிற்
பிரவேசித்துக் கண்டத்தைக்கடந்து நெஞ்சைத்தாண்டி
அடிவயிற்றிற்சேர்ந்து அங்குமிங்கு முலவினர், அதைப்
பார்க்குமிடத்தில் மண்ணுலகவாசிகள் வழுவிப் பாதலத்
தில் விழுந்ததைப்போல விளங்கியது இவையன்றியும்அ
வுணராசன் சுவாசத்தை யுட்கொள்ளும்போது வாய்களி
ன்மூலமாகப் போகின்றபூதர்கள் அதன்வசப்பட்டு நாபி
யினடியிற் போய்விழுந்தும் சுவாசம் வெளிவருந்தருண
த்தில் ஆயிரயோசனையுயரமுள்ள கண்டத்தின்சமீபத்தில்
வந்தும் இவ்விதமாகப் போவதும்வருவதுமாய்க் கணக்கி
றந்த பூதர்களலைந்துழலவும் ஆலத்தையொத்த கொடிய
பாதகன் வயிற்றிற்சென்ற சிலயாணுகிகளாகிய பூதர்கள்
அத்தலத்தைப்பார்த்தவுடன் களித்தவர்களாய் ஐம்புலச்
சேட்டையையடக்கி சிந்தையைச்சிவத்தின் பாதகமலங்க
ளிலிருத்தி அசைவற்று யோகசாதனைகளைச்செய்வதற்கு
இதுவாசயோக்கியமாகக் காணுகின்றதென மகிழவும்சில
வீராதிவீரர்களாகிய பூதர்கள் யாதொருதுன்பமுமில்லா
மற் சிங்கமுகன்கர்ப்பத்திற் பிரவேசித்தவுடன்உருக்கிரா
காரமாகக் கோபித்துத் தாங்கள் வெளிப்படும்பொருட்டு
க் கரங்களிற் பற்றியிருக்கின்ற படைகளினாற் பலவிடங்
களிற் குத்தியும், வெட்டியும், இடித்தும், அரிந்தும், பா
ய்ச்சியும், கீறியும், இவ்விதங்களாகத்தங்களாற் கூடியவ
ரையில் பின்னப்படமுயற்சி கொண்டும்அணுப்பிரமாண
மாவது அசைவுபெறாமல் வயிரபலத்தைப்போலக் காட்
ட மனம்வருந்திக் கைகாலோய்ந்து ஆயுதங்களும், முனை
கள் மழுங்கிப் பின்னப் பட்டு மேற்செய்வதற்கு யாதொ
ருகாரியங்களுந் தோற்றாமல் வாடிநிற்கவும் சிலபூதர் அ
வுணராசனாற் றாங்கள் ரணக்களத்திற் பட்டதுக்க வருத்
தங்களை யொழிந்து பயமற்றுப்படுத்து மிருந்தும் உறங்
கியும் சந்தோஷமாகவார்த்தையாடியும்தாங்கள்செய்தசே
வகங்களையும் பகைவர்பட்ட கேட்டையும் பேசிப்பேசிப்
பொழுதுபோக்கவும் சிலபூதர் மதிமயங்கி யிப்பாதகன்உ
தரகடாகத்திற்பட்டனம் வெளிவருவதற்கு யாதொரு கா
ரணங்களையுங் காணோம் இதற்கென்ன செய்யக்கடவதெ
ன்று தியங்கிப் பிரமைகொண்டு அங்குமிங்குமா யலையவு
ம் சிலபூதர் பெருமூச்சுகளைவிட்டு அப்பாகொடியபாதக
ராகிய இராட்சதவீரர்களால் மானபங்கப்பட்டுப் பற்பல
காயங்களைப்பெற்று வருந்துவதினும் இவ்விடத்திற் சற்
றுநேரம் கவலையற்றிருக்கக்கடவோமெனத் தம்மிற்பேசி

க்கொள்ளவும் சிலபூதர்கள் பகைவர்முன்ன மகப்பட்டுக்கொண்டு பட்டபாட்டையுங் கெட்டகேட்டையும் அக்காலத்திற் றாங்கள்செய்த சாகசங்களையும் தங்கள்மனதுக்கினிய தோழர்களுடன் முறையிட்டு ஆறியும் சிலர்கூட்டங் கூட்டமாகச்சேர்ந்து முற்காலங்களில்நடந்தகதைகளைச் சொல்லக்கேட்டுக் களித்திருக்கவும் சிலபூதவீரர்உதரவங்கிக்குச் சமீபித்தகாலத்தில் வருந்திஅம்மம்ம இந்தஅவுணப்பாதகன் செலுத்திய பாணங்களின்சுவாலை யித்தலத்தினும் நேர்ந்துவிட்டது இதற்கென்னசெய்வோம் இனியெய்விடத்தோடி யொளிப்போமென்றேங்கவும் சிலா விலா வெலும்புகளின் சந்துகளிற் சேர்ந்து சொஸ்தமாய் நித்திரைசெய்யவும்சிலபூதர்வங்கணமாகக்கரங்களைக்கோத்துக்கொண்டு உல்லாசமாய் உலாவிவரவும் சிலர்அவுணராசன் புசபலபராக்கிரமங்களையும் வெற்றிப்பாடுகளையும் பேசிக்கொண்டாடவும் இவ்விதங்களாக ஆயிரவெள்ளம்பூதப்படைகளும் அலைந்துவாடியும் அல்லலற்றிருந்தும்இத்தகையபாடுகள் படுவதாகச் சிங்கமுகன் தன்நீண்டகரங்களினாற்சேர்த்து வாரிவாரிவயிற்றி லடைத்தகாரணங்களை அனந்தம் வாய்களைப்பெற்று பலகாலஞ்சொன்னபோதினும் முடிவதன்று.

கேட்டீர்களோ! சவுனகாதி ரிஷிகளே? ரணக்களவெல்லை முற்றினும் ஆரவாரித்தடர்ந்திருந்தபூதப்படைகளொன்றொழியாமற் பூமண்டலத்துக்கொப்பாக விசாலமாகவிருக்கின்ற சிங்கமுகன் பாழ்வயிற்றிற்சேர்ந்ததைவிண்ணகத்தில் வேடிக்கைபார்த்திருந்த தேவர்கள்தெரிந்தவுடன் நடுநடுங்கி அற்புதசித்தராய் எண்ணிக்கை யற்ற ஜயசாலிகளாகிய சிவகணங்களை சிலபோதிற்றட்டாமற் கவளீகரம்பண்ணினான் இனிபூமண்டல வெல்லையி லடங்கியிருக்கும் பிராணிகளனைத்தையும் தொகையலுக்கொப்பாகநாவுகளிற்றடவிச் சப்புவன்போற் காணுகின்றது, அதன்பின்பு விண்ணினிடத்திருக்கின்றநம்மையும்பற்றிக்கொறிப்பதற்கையமில்லை பாதகன்கொண்டிருக்கிற கோலத்தைப் பார்க்கப் பயங்கரமாய் மனந்தத்தளிக்கின்றதெனச் சொல்லிக்கொண்டோடி அப்புறத்தண்டங்களிற் பதுங்கியிருந்தனர், இந்தஅதிசயத்தைப் பார்த்திருந்த தூதர்கள்மனமகிழ்ச்சியுடன் ஒருவருக்கு முன்னொருவராக மனோவேகத்தினுங் கடுகிநிமைப்போதில் வீரமாமயேந்திரபுரியைச்சேர்ந்து நவரத்தினமயமாக விளக்குகின்ற சபாமண்டபத்தி லெழுந்தருளிய சூரபதுமனைத் தரிசித்து வணங்கிப்போற்றிப் பயமற்று நகைமுகராய் நெருங்கிநின்று இதனைவிண்ணப்பம்செய்வதாயினர், ஐயனேதேவரீர் துணைவன்ரணக்களத்துக்குப் போயினபின்பு அகோரயுத்தங்களைச்செய்துசெய்து பகைவனை வகையறமடிப்பது காலதாமச மாவதென்றெண்ணி வடவனலைப்போலக் கோபித்து மாயபாசத்தைவீசிப் புசபலபராக்கிரமசாலியாகிய தூதனையும் இலக்ஷர் எண்மர் படைத்தலைவர்களுடன் பாதிபூதப்படைகளையும்வாட்டி ஒன்றொழியாமற்கட்டிஉதையகிரியிற்சேர்த்தபின்பு பாசறையிலிருந்தபாலகன்முதலானவர்களையும் மடக்கிக்கொண்டு சொல்லுகொல்லெனச்சாடநினைந்து நடக்குமுன்னிலையில்இச்சேதியைத்தெரிந்த பாலசுப்பிரமணியதேவன் வெற்றிவேலாயுதமுதலிய சர்வாயுதபாணியாய் மற்றப்பாதிபூதச்சேனைகளுடன் வேகமாய்வந்தெதிர்த்துக் கொடியபோர்செய்யுங்காலையில் சிங்கமுகாசுரனுக்கு அதிககோபம்பிறந்து மண்விண்திசாதிசைகளைமூடவல்ல தேகத்தைக்கொண்டுநீண்ட கரங்களை வலைகளைப்போலப் பரப்பிப்பரப்பிச்சேர்த்து வாரிவாரி மற்றபூதப்பெருக்கையும் சற்றுநேரத்தில் வாயிற்போட்டு விழுங்கிவிட்டான் இராஜாதிராஜனே அந்தவேடிக்கைகளைச் சொல்லிமுடியாது ரணக்களத்தினும் பாசறைவிடுதியினும் பூதர்பூண்டென்பதொன்றுங் கிடையாது முக்கியமாய்த்தூதனும்எண்மரும்இலக்ஷலரும்மாண்டு நாசமடைந்தனர்.

ஐயனே யிவையனைத்தையும் திஷ்டாந்தமாகக் கண்டு தேவரீருக் கறிக்கையிட ஓடிவந்தனம் இவற்றி னொன்றும் பிசகிருக்க மாட்டாது பாலசுப்பிரமணியன் மகாவிஷ்ணுமற்ற தேவர்கள் மாத்திரம் ஒருமூலையில் பூனைக்குட்டிகளைப்போல ஒடுங்கிநின்றனர் அவர்களையுமிதுவரையிற்சாடித்துரத்தி விடுவதற்கையமிராது அரசனே யினிவிசேஷித்துச் சொல்லவேண்டுவதில்லை ஒருநாழிகைப்போது கழிவதன்முன்னம்பகைவர் பூண்டென்ப தில்லாமல் வேரறக்களைந்துபோட்டு ஜயப்பிரதாபத்துடன் இவ்விடம்வந்து தேவரீரைக்கண்டு வார்த்தையாடுவானென்று சபையிலிருக்கின்றவர்க ளனைவரும் மனக்கவலையற்றுச்சந்தோஷசாகரத்தில் மூழ்கிக் களித்திருக்கும்படிக்குப் பேசிய சந்தோஷச்சேதியைச் சூரபதுமன் செவிகளும் மனமுங்குளிரக்கேட்ட மாத்திரத்தில்மனவெழுச்சியுடன்தேகபரவசனாய்ச் சிங்காதனத்தைவிட்டுக் குதித்து ஜயவார்த்தைகளைக் கொண்டுவந்ததூதர்களைக் கட்டியணைத்து பலதரம் அந்தச்சுபசேதிகளைச் சொல்லச்சொல்லி வெறுப்பில்லாமற் கேட்டுக்கேட்டுத்தேகம்பூரித்துப் புயாசலங்கள் வானத்தையளாவவோங்கி வாகுவலையங்கள் தெறித்திறையவும் கடககங்கணங்கள் வெடித்துவிழவும் அதிகசந்தோஷப்பெருகிற் பட்டவனாய் வேகமாகவந்த தூதர்களுக்கு பற்பலசயித்தியவுபசாரங்களைச் செய்வித்துதமது கரங்களினால் அவர்கள் அவர்கள் முகத்திற் பெருகுகின்ற வெயர்வையைத்துடைத்துப் பற்பலமுகஸ்துதிகளைப்பேசி யிந்தச்சிறப்புள்ளஅவுணர்குலம் வீறிவிளங்கும்படியாகிய ஜயவார்த்தைகளைக்கொண்டுவந்த ஓ! தூதர்களேஉங்களுக்குத்தக்க வெகுமதிக ளெதைத்தரினும்போதாதுசெய்யாமற்செய்த உதவியாக மனதிற்கொண்டனமென மகிழ்ச்சியாகப்பேசித் துரிதமாய்த் தன் மார்பிலணிந்திருந்த விலையுயர்ந்த பருத்த முத்துத்தாழ்வடங்கள் மோகனமாலைகள் சரப்பளிகளாதியானதைக் கழற்றிக் கழற்றிக்கொடுத்து மேலும் வெகுமதிகள் செய்வதற்குச்சபையில்வைத்திருந்த ஆபரணப்பேழைகளையுங் கொடுத்துச்சிறந்தபட்டுப்பீதாம்பரங்களை வீசியதன்றியும் அவர்கள்கேட்டகேட்டவஸ்துக்களை ஒன்றனந்தமாக வழங்கியித்தினமுதல் நீங்கள்யாதொருதொழில்களையுஞ் செய்யவேண்டிய நிமித்தமில்லை இதுவரையிற்கொடுத்துவந்தசம்பளத்துக்கு நூறுபங்கதிகமாகத்தரக் கட்டளையிட்டனம் அதைக்கொண்டு சுகசீவிகளாக வாழ்ந்திருக்கக்கடவீர்கள், இக்காலத்தில்மிகவும் அலுத்திருப்பதால் உங்கள்மனைக்குத் துரிதமாகப்போய் அன்னபானாதிகளைப்பொசித்துக் களித்திருப்பீர்களென்று தூதர்களுக்குச் செலவுகொடுத்தமாத்திரத்தில் அவர்களும் மனமகிழ்ந்தவர்களாய் இராஜாதிராஜனைப் பற்பலவிதங்களிற் றுதித்துப்போற்றி விடைபெற்றுப்போய் விட்டபின்பு சபையிற்காத்திருக்கின்ற சிலதூதரைப் பார்த்துப் பாலசுப்பிரமணியனுடன் நமதுதம்பி

சண்டைகொடுக்க விருந்ததால்அவனைப்பாலனென்றெண்ணப்போகாதுஇராட்சதசயின்னியங்களிற் குறைவுபட்டிருக்கும் அதற்குதவியாகப் பட்டணத்திலிருக்கின்றஇரதகஜதுரகபதாதிகளைத் துரிதமாகக் கொண்டுபோய் ரணக்களத்திற்சேர்த்துப் பகைவனைஅதப்படுத்திவரும்படிக்குச் சேனைத்தலைவருக்குத் தெரிவித்துப்படையெழுச்சியென்று பறைசாற்றுவிக்கும்படிக்குக் கட்டளையிட்டனன்.

அவர்களும்மனோவேகத்தினுங்கடிகிப்பறந்துசயின்னியங்களிருக்கின்ற விடத்தைச்சேர்ந்து சக்ரேஸ்வரன்உங்களையிந்த நிமிஷத்திற் பிரயாணப்பட்டுப் போர்க்களத்துக்குப்போய்ச் சிங்கமுகாசுரனுக்குதவியாக விருந்துஜயத்துடன் திரும்பக்கடவீர்களெனப் பணித்தனனெனப்பேசிமுடிவதன்முன்னம் யானைகளின்மேல் பேரிகைகளையேற்றி முழக்கிய ஓசைசெவிகளில் நுழைந்தமாத்திரத்தில் பட்டணத்திலிருந்த ரதகஜதுரக பதாதிகளனைத்தும் பலவெள்ளக்கணக்கில்சர்வாயுதபாணிகளாய்ப்போர்க்கோலத்தைத்தாங்கிப் பெரும்புறக்கடல்பெருகுமாறுபோலநடக்கின்றகாலையிற் சேனைக்காவலரும் வீராவேசங்களுடன் வயிரகவசங்களைத்தரித்து வீரபட்ட மணிந்து அம்புறுத்தூணியைமுதுகிலிறுக்கித் தங்கக்கட்டுகள்பூண்டிருக்கும் வலியவிற்களைக்கரங்களிற் கொண்டு வாள்-வேல்-சூலம்- தண்டமுதலான படைகளைப்பரித்து சொர்னமயமாகியதேர்களி லாரோகணித்துச் சதுரங்க சேனைகளையுங் காவல்கொண்டு போகுமுன்னிலையில்ரணபேரி, ஜயபேரி, வெற்றிச்சங்கமாதியாகிய போர்ப்பறைகள் கோடையிடிகளைப்போலக் கணகணெனமுழங்கவும்கொடிகுடைமகரதோரணம் மயிற்பிஞ்சம் ஆலவட்டங்களெவ்விடங்களினும்பரவிப்படபடத்த தொனிகளுட னசைந்துவரவும் இரதங்கள் கற்கரத்தொனிகளைச் செய்தோடும் அதிர்ச்சியும் மதயானைகள்வீறிடுமொலியும்புரவிக்கூட்டங்களினதுகனைப்பின்முழக்கமும்சூரர்களாகியராட்சதவீரர்சிருங்காதங்கள்அட்டகாசங்களைச்செய்துவீரகண்டைகள்கலிக்கநடக்கும்ஆரவாரங்களுஞ்சேர்ந்து பிரளயகாலத்தெழுஞ் சத்தத்தைப்போல ஒலிக்கவும்இவ்விதஆடம்பரங்களுடன்அதிவேகமாய்நீண்டவீதிகளைக்கடந்துகோபுரவாயிலைத்தாண்டிசிங்கமுகாசுரன்ஜயவுற்சாகத்துடனுலவுகின்றரணக்களத்தைச்சேர்ந்தனர், இவைநிற்கசேனைகளைப்போகும் படிக்குக்கட்டளையிட்டசூரபதுமன்தன்துணைவன்வெற்றிவேலாயுத மூர்த்தியுடனெதிர்த்துச்செய்யும்போரின் திறங்களையும்வீரத்தன்மைகளையுங்கண்டுகளிக்கும்படிக்கு விருப்புற்றவனுய்மனக்களிப்புடன்தட்சணத்திற் சிங்காதனத்தைவிட்டிறங்கிப்பரிசனர்ஆலவட்டங்களையும்வெண்சாமரைகளையும்தவளவட்டக்குடைகளையுந்தாங்கிப் பணிமாறிவரவும்வலம்புரிச்சங்கம்திருச்சின்னம் புள்ளாங்குழலூதிப்போகவும் அருகுதீவர்த்திகள்பிடிக்கவும்பட்டுவர் புகழவும்வித்துவஜனங்கள்பாமாலைகளைச்சாற்றவும்கட்டியக்காரர் பொற்பிரம்புகளைக்கரங்களிற்பற்றி யெச்சரிக்கைகளைச்சொல்லி முன்னணியிற் பராபரிசெய்துபோகவும் அரம்பை- ஊர்வசி- திலோத்தமை- மேனகையாதிய தேவகன்னியர் குயிலினங்களைப்போலப்பாடி மயிலினங்களையொப்ப பரதநாட்டியங்களைநடித்து எதிரில்நடக்கவும்இவ்வித கஜேந்திரவோலக்கத்துடன் அத்ததியிலிருந்த பிரமுகாள் பெரியோர்கள் சூழ்ந்துவரத் திருச்சபையைக்கடந்து முன்னணியில் நவரத்தினமயமாய்ப் பலநிலைகளைப்பெற்று மேருகிரியைப்போல நிற்கின்றகோபுரத்தின்மேலேறி சூரியனுதையகிரியில் முளைத்ததையொப்பமேனிலையைச்சேர்ந்து வெற்றிமாலைதரித்திருக்கின்றசிங்கமுகாசுரன் கொண்டிருக்கிற கோரரூபத்தையும் தன்னிஷ்டப்படிக்குப் பூதசயின்னியங்கள் முதலாகத் தன்துணைவன் கர்ப்பத்திலடங்கிச்சந்தடியற்றிருக்குங் காரணங்களையும்கண்களும் மனமுங்குளிரப்பார்த்து சீவராசிகளை யலைப்பதினுல் வெற்றிமுதலிய சகலநன்மைகளு முண்டென்றெண்ணிநடாத்த வடவைக்கனலைப்போலத்தோற்றியிருக்கின்ற சூரபதுமன் மனவுற்சாகத்துடன் ஆனந்தவாரியில்மூழ்கி பிறையைநிகர்த்த கோரைத்தந்தங்கள்விளங்க இடியின்முழக்கமு மஞ்சநகைத்துத் தம்பியின்செய்கைகளுக்குமெச்சி அவன்கீர்த்தியையும் சவுரியங்களையும்பக்கத்திலிருக்கின்றவர்களுடன் சொல்லிச்சொல்லி புகழ்ச்சியாகக்கொண்டாடிக் கொண்டிருந்தனன்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? யிவ்விதங்களாக சூரன் தேகபரவசனுகக்களித்து மேல்நடக்கும் காரணங்களைக் காணவிருக்கின்றகாலையிற் சமரவெல்லையில்நடந்தசேதிகளையும் கேட்பீராகவென்று சூதபுராணிகர் சொல்லத்தொடங்கினர், ரணக்களமுற்றினும் ஆரவாரித்திருந்த நூறுவெள்ளம் பூதப்படைகளையும் சிங்கமுகன்கரங்களைநீட்டி வாரிவாரி பேழ்வாயினிட்டுண்டகாரணங்களைச்சண்முகப்பெருமாள்கண்டவராய்ச் சருவசங்காரகாலத்திற் சராசரப்பிரபஞ்சங்களை நீறுசெய்து ஏகனுய் ஆனந்தநடனங்களைச் செய்திருக்கும் உருத்திரமூர்த்தியின்திருக்குமாரன் சத்துருக்களுடன் போர்த்தொழிலைச்செய்யுந் திருவிளையாடலைத் திருவுளங்கொண்டு செந்தாமரைமலர்களும் துவாதசாதித்தர்களும் அரியதவங்களைச்செய்தமுயற்சியினும் சிவகுமாரன் திருக்கோலத்திற்பட்டு விளங்குவதைப்போலச் சண்முகாரவிந்தங்களையும்பன்னிருபுயாசலங்களையும் படைத்திருக்கின்ற எமதுகர்த்தன் சாரதியாகிய வாயுதேவன்மீது திருவிழிகளைப் பரப்பி எச்சரித்தகாலத்தில் தசவாயுக்களுடன் துரிதப்பட்டுப் புரவிகளை அதட்டிப் பகைவன் போர்முனையில் இரதத்தைச்செலுத்தி வருகின்றகாலையிற் பூதனைச்சிறுவயிற்றிற் பரித்திருக்கும் சிங்கமுகன்படைவீரரும்நால்வகைச்சேனைகளுங் கண்டமாத்திரத்தில் நல்லகாரியம் எமதுசக்கிரவர்த்தியுட னிந்தப்பாலகனேபோயெதிர்ப்பவன் இவனைநாமேவாயிற்போட்டுக் கொள்ளுவோமென மதித்தவர்களாய் வடவாமுகாக்கினியைக் கோபித்தெழுந்த சமுக்திரத்தைப்போலச்சீறிச் சண்முகப்பெருமானை வளைந்துகொண்டு தாங்களரிதிற்பெற்றிருந்த தேவாஸ்திரங்கள் விஷத்தொவையலிட்டுக் கூர்மையாயிருக்கின்ற பாணங்கள்அனலையினைக்க வல்லகணைகள் யிடிகளைக்கக்குந்திவ்வியபாணங்களாதியவைகளைப்பாரித்தவிற்களிற்பூட்டிப்பிரயோகித்ததும் தண்டாயுதம், சூலம், வேல், தோமரம், பிண்டிபாலம், கப்பணம், முசுண்டியித்தகைய ஆயுதங்களையொன்றனந்தமாகக்கடாவியும், எறியீட்டிகளைவீசியும்இவ்விதமாக நாலுமூலைகளினுமிருந்து வாதாடும்போதுபாதகர்செலுத்திய அஸ்திரசஸ்திரங்கள் சோனைமாரியைப்போலப் பெருத்துவிட நாகங்களுக்கொப்பாகச்சீறி மண்விண்ணெங்கணுமூடி அளவற்ற உற்பாதங்களைக்காட்டி

மேலிட்டுவருவதை லோகநாயகன்கண்டுதிருநகைகொண்டு உலகங்களுக்குச்சாணியாகநிற்கின்ற மேருவுக்கொப்பாகிய தமதுகோதண்டத்தைநாட்டி நாணேறிட்டுச் சிறுகுணத்தொனிகொண்ட தருணத்திலுண்டாகிய பேரொலியினல் ஆயிரகோடிஅண்டங்களும்அல்லோலகல்லோலப்பட்டு நெக்குவிட்டும் அதைச்சூழவிருக்கின்ற ஜலப்பெருக்குட னென்றியிருக்கும் பித்திகைகள் நுறுக்கியும் அதைவளைந்திருக்கும் அனற்படிவவண்டங்கள் பொடிபட்டும்அதைப்போற்றியிருக்கும், வாயுவண்டம்தத்தளித்தும், அவற்றின்மேற்புறத்தில்விளக்கும் பரவெளியாகிய மூதண்டைகோளகை மங்கவும் இப்பிரகாரம் வீறியோங்கிய சத்தமானது சிங்கமுகாசுரனுக்குதவியாக வீராவேசங்களுட னெதிர்த்த இராட்சதசேனைகள் அவர்களைப்போற்றியிருந்தபடைத்தலைவர்கள் செவிகளில்நுழைந்தமாத்திரத்தில் திடுக்கிட்டுப் பஞ்சேந்திரியங்களைக்கலங்கிக் கரங்கள் நடுநடுங்கி அவற்றிற்பிடிபட்டிருந்தபடைகளைநழுகவிட்டு அதுநிலத்திற் சேருவதன்முன்னம் குப்புறமறிந்தனர், இவர்களிப்பாடுபடுமுன்னிலையில் வீறிட்டிருந்த மதயானைக்கூட்டங்கள்சிங்கர்ச்சனையைக்கேட்டதைப்போலவும் சொற்பனத்திற் கண்டதையொத்தும்கதறிக்கொண்டோடிவிழுந்தும் புரண்டும் தலைக்குத்தலிட்டு மங்கவும் தத்தித்தாவிப்பாய்ந்து பகைவர் சிரங்களிற் பாதங்களைவைக்கவல்ல வேகமுள்ள புரவிப்பந்திகள் கதறித்திகைத்து ரணக்களமெங்கணும் படுக்கிடையாகவிழுந்து சின்னபின்னப்படவும்கற்கரத்தொனியைக்காட்டியோடும் பொன்னுருளைகள்வாய்ந்த தேரணிகள் கீழ்மேலாய் ஒன்றின்மீதொன்றுதாக்கிப் பொடிப்பொடியாயுதிரவுமிவ்விதமாகச் சதுரங்கசேனைகளும் அலங்கோலமாய் விழுந்தது இந்தஉற்பாதங்களை ஜயசாலியாகிய சிங்கமுகாசுரன் கேட்டுப்பயந்து உடனே மனந்தேறிச் சிரக்கம்பஞ்செய்து இந்தக்குணத்தொனிக்காற்றுமற்பட்ட என்சேனைகளனைத்தும்படியிற்படிந்ததை திஷ்டாந்தமாகக் கண்டனன், இவ்விதஒலியையாவராலெழுப்பப்படும் ஆதலாலிந்த வீராதிவீரன் சிவகுமாரனுகவேண்டும்இந்தச்சிறுவன் வலியையோசிக்குமிடத்தில் நமது சகோதரன்தாருகனை வெற்றிவேலினுற் பிளந்தானென்பதுஉண்மையுண்மையென்று பிரமித்துப் பேசினவனுப் இத்தகைய வீரபராக்கிரமசாலியாகிய இச்சிறுவன்புயவன்மையை நாமே அடக்கவேண்டுமல்லது அபலராகிய விராட்சதப்படைகளினுலும் சேனைத்தலைவர்களினுலும் மாளுவதன்றென்றெண்ணி மனோவேகத்தினு மேலிட்டுச்செல்லவல்ல தன்தேரைமுடுக்கிக்கொண்டுவந்து அடியேனுக்கடிகளாகவிருக்கின்றவேலாயுதபாணியினெதிரில்நிறுத்தி உருத்துப்பார்த்து இதனைச்சொல்லுவான்.

திரிநேத்திரதாரியாகிய பரமசிவமருளியபிள்ளாய் நானென்றைக் குறித்துக்காட்டுவேன் கியாபகமாகக்கேட்கக்கடவை துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனஞ்செய்வது அகண்டமண்டலாதி பத்தியமாக வுலகங்களை ஆண்டுவரும் சக்கிரவர்த்திகளுக்கடுத்த நீதியும்முறைபுமாம் சாஸ்திரங்களிலும் இவ்வாறே முறையிடுகின்றது, ஆதலால்பூர்வீகமாய் அவுணர்குல பரம்பரையாகத்தாயாதிகளென் றெண்ணுமல் அலைத்துக்கொன்றும் இரக்கமில்லாமல் அவர்கள் செல்வவளங்களைக் கொள்ளைகொண்டு ஜபசாலிகளாய் விறியிருந்த பங்காளிகளாகிய தேவர்களை அவர்கள்முற்பகல் செய்தபடிக்குத்தண்டித்துபயமுண்டாகத்தக்கதாகச் சிறையில்வைத்தனம், அவர்களுக்குப் புத்திவந்தபின்பு விடுதலைசெய்யக் காத்திருக்கிறோம் மேலும் நாங்களெவ்விதங்களிலாவது வழக்கிட்டுவோதாடி ஒருமித்துப்போவோம் அப்படிக்கிருக்க நீயவர்களிலொருவனல்லன் மேலும் இதராமாய் நமக்கிருக்கின்ற பகைவர்களிற்சேர்ந்தவனுமன்று நீங்கள்பொதுநிலைமையாக விருக்கப்பட்டவர்கள்சிலகாலம் தேவர்கள்மீறி அவுணர்இராக்ஷதரைவாட்டி ஜயப்பிரதாபத்தைப் பெற்றிருப்பதுமுண்டுசிலகாலம்நாங்கள்அவர்களையடக்கி வெற்றிபராராயுலகையாள்வதுமுண்டு இச்செய்கைகள் சாதாரணமாகத் தொன்றுதொட்டு வழங்கிவருகின்றது இக்காரணங்களைச்சற்றும் யோசித்துப்பாராமல் அநியாயமாய் நீஎங்கள்மீதெதிர்த்துச்சண்டைக்குவரவேண்டிய நிமித்தமென்ன விருக்கின்றதென இவ்விதமாக பற்பலதிஷ்டாந்தங்களைப்பேசி வினவியபோது அவன்குறித்தவாக்கியங்களனைத்தையுந் திருச்செவிகளினேற்று அடியருக் கடியராகவிருக்கின்ற நம்போலிகளனைவருக்கும் நாயகத்தலைமைபூண்டபெரிவாய்அஞ்ஞான விருளைப்போக்கிப் பேரறிவைத்தந்து பாதுகாத்து மேலும் அரியபதவியில்நிலைபெறச்செய்யவல்ல பெருமைபொருந்திய பிரணவவடிவாகவிளங்கும் பாலசுப்பிரமணியதேவர் திருநகைகொண்டவராய் மறுமொழிகொடுப்பதாயினர், அவுணர்பெருமானே நீயிப்போது பேசியகாரணங்களையோசிக்குமிடத்தில் வெகுநேத்தியாகவிருக்கின்றது எமதுசெய்கைகளைச்சொல்லக் கேட்பையாகஇந்தப்பிரபஞ்சங்களனைத்தினும் வாசஞ்செய்கின்றதினைத் தருமசாத்திரத்திற்குறித்த நீதிகடாமல் வலுமையினுற்றுன்பஞ்செய்தலைக்கும் அகந்தையைப் பெற்றிருக்கின்ற கொடியபாதகரை ஆராய்ந்து அவர்கள்செய்கைகளுக்கடுத்த தண்டனைகளை முடித்தடக்கி மன்னுயிரை நிலைபெறநாட்டி அண்டங்களனைத்தையும் பாதுகாத்துவருமிறைமையைச்செலுத்திவருவோம் அக்காரணத்தினுல்நீங்கள் பரமசிவகடாட்சத்தினுற் பெற்றிருக்கின்ற வரமுயற்சிகளையும் செல்வசம்பத்தையும் புயவன்மையையும் நீடித்ததாக நினைந்திருக்கின்ற மதாகாரத்தினுல் முன்பின் யோசித்துப்பாராமல் தாயாதிகளென்றும் எளியரென்றும் சிவபிரானிடத்தில் மெய்ப்பத்தி மான்மியங்களைப் பெற்றவரென்றும் கொலைகளவு கட்காமமாதிய குற்றங்களுக்குப் பயந்தவரென்றும் சற்றுமிரக்கமில்லாமற் செய்யத்தகாத பணிவிடைகளைக்கொண்டு பலதுன்பங்களைச்செய்தலைத்து மானபங்கப்படுத்தவும் நினைந்ததுமல்லாமல் அவர்கள்வாசமாயிருந்தசிறப்புள்ள பொன்னுலகைக்கொளுத்தி நாசப்படுத்திப் பெண்டுபிள்ளைகளுடன் கட்டிவந்து அரியசிறையில் பலகாலம்வைத்தலைக்கின்றபகைவரைவாட்டி விண்ணவர்படுந்துன்பங்களைப்போக்கிப் பழையபடிக் கவர்கள் சுதந்தரமாகிய தெய்வலோகவாழ்வில்நிலைபெற ஸ்தாபிதஞ்செய்யும்பொருட்டு திருக்கயிலையைக்கடந்து பூலோகத்துக்கு வந்தனமாதலால் அக்கருத்தினிறைவேற்றும்பொருட்டு உத்தேசித்தபோதினும்தருமத்தைப்பாராட்டித் தூதின்மூலமாக இதுதகாது தேவர்களை விடுதலைசெய்து சுகசீவியாகவாழக்கடவையெனத்தெரிவித்ததை மறுத்தபடியாம் சண்டைகொடுத்து விடுதெலைசெய்யவினைந்துவந்தனன்றி உங்களிடத்திற்பகைகொள்வதற்கு மற்றொருகாரணமொன்றுமில்லை இக்காலத்திலு

ந்தேவர்களைவிடு வீராகில் இதுபரியந்தம் நீங்கள்செய்திருந்தகொடுமைகளைப் பாராட்டாமல் திரும்பிவிடக்கடவோமென்று எமதிறைவன் திருவுளம்பற்றியவாக்கியங்களைச்சிங்கமுகன்கேட்டவுடன் கோடையிடிகளைப்போலக்கரங்களைத்தட்டி அண்டங்களதிரதேகங்குலுங்கநகைத்து வடவைக்கனலுமஞ்சும்படிக்குக் கோபித்து சண்முகப்பெருமானைப்பார்த்து கெலிப்புடனிதனைச்சொல்லுவான்பாலகனே நீபேசியபடிக்கு நம்மனைவரையும் வென்றனை தேவர்கள்சிறையு மித்தினமேநீங்கி விண்ணுலகைச்சேர்ந்தனர், அவர்களை நீயும்விடுவித்தனை நாமும்வலியற்றவர்களானோம்உன்னெண்ணமும் செய்யுமுயற்சியும்வெகுநேத்திநேத்தி சூரத்துவமென்பது உன்னிடத்திற்றுன்விளங்குகின்றது இக்காரணங்களைச் சகலரும்உண்மையாகவேநம்புவர், இந்திரகுமாரனையும்மற்றவிண்ணவரையும் துக்கசாகரத்திலழுந்தப் பாரவிலங்குபூட்டிவைத்திருக்கின்றகாவலைநீக்குவதற்குச் சந்திரசடாமண்டல தாரிகிய பரமசிவத்தினு லிதுவரையில்முடியாதிருக்கின்றதெனச் சகலரும்வழங்கிக்கொள்ளுவராயின் பாலனாகியஉன்னொருவனால் நிறைவேற்றக்கூடுமோ.

மேலும்கண்ணுதற்கடவுள் நிருமித்து உனக்குதவியாகக் கொடுத்திருக்கின்ற வேலாயுதத்தின்வலியை யொருபிரயோசனமாகமதிக்கமாட்டேன் மன்னுயிரைக்கொண்டுபோகவல்ல யமனையொத்ததாருகவீரன் உன்னையெவ்வளவுஞ் சட்டைபண்ணமற் போர்செய்துவருமுன்னிலையில் அவனைவஞ்சனைசெய்துகொன்றனை அல்லது நீயவனைவெல்லுந்திறம் பெற்றனையோ அப்படியே பிராணனைத்தப்பித்துக்கொண் டோடிப்போயிருப்பையாகில் இன்னமுஞ்சிலகாலம் உயிர்பெற்றுவாழவிருப்பை அதைமறந்து இவ்விடத்தில் நீவந்ததையோசிக்குமிடத்தில் உன்செய்கையினால்முடிந்ததன்று எங்கள்நல்வினையும்உன்விதியும் பிடரியைப்பிடித்துத் தள்ளிக்கொண்டுவந்துவிட்டது கடப்பமாலையணிந்திருக்கின்ற பாலசுப்பிரமணியனேயிதனைக்கேட்பையாக சத்திவேலைத்தாங்கியிருக்கின்ற உன்சேவகத்திறங்களனைத்தினையும் பூர்த்தியாகத்தெரிந்துகொண்டனம் பருவதாகிருதியாகிய புஜங்களைப்பெற்றிருந்ததாருகனைப்போலவே யிளைப்பனென் றொருபோதும் நினைக்கவேண்டாம் இனித்துரிதமாய்ச் சண்டைசெய்ய எத்தனப்படக்கடவை மேலும் உனக்கும்பிராணபதமாய் வலதுபுயத்தைப்போல வுதவியாகவிருந்த வீரபராக்கிரமசாலியாகிய தூதனும் படைவீரரும் பாதிபூதவெள்ளங்களும் ஆயிரங்கிரணசமோகங்களைப் படைத்திருக்கின்ற சூரியனெழுந்தருளும் உதயகிரியிற் சேர்ந்திருக்கின்றனர், மற்றப்பாதிபூதப்படைகளும் அவர்களுக்குத்தலைமைபூண்டிருந்தவீரரும் உன்விழிகள்காணநமதுவயிற்றிற்பட்டு உதரவங்கிக்கிரையாய்மாண்டனர் இக்காலத்திற்சகலரையும் பறிகொடுத்து நீமாத்திரம்தனிமையில்நிற்கின்றாய் இக்காரணங்களனைத்தையுந் திஷ்டாந்தமாகப்பார்த்திருந்தும்இன்னமுஞ் சண்டைகொடுக்கவல்லேனென்றெண்ணித் துணிந்திருக்கின்ற உன்தயிரியத்துக்குமாத்திரம் மெச்சினேன் மகரந்தங்களை யிறைத்துத்தேனைத்துளித்திருக்கின்ற பஞ்சதருக்களினதுநிழலில்வாசஞ்செய்திருந்த இந்திரனையனாகிய சயந்தனதியாகிய தேவர்கள்சிறையைநீக்கியிரட்சிக்கவெண்ணங்கொண்டுவந்தநீயே மனதுக்கினிய துணைவரையும் வீரபராக்கிரம சாலிகளாகிய சேனைத்தலைவர்களையும் கணக்கிறந்த பூதசயின்னியங்களையும் விருதாவாய்ச் சிலபோதிலிழந்து தனிமையிலிருக்கின்றனை இவையல்லாமலும் வேறுமென்னபலப்பிராப்தியைப் பெறப்போகிறாய் நீசவுரியபாலனுதலாலித்தகைய அரியபேறுடையனாைப் இன்னமுஞ்சில சேதிகளைத்தெரிவிப்போம் அதைக்கேட்டு தீர்க்காலோசனைசெய்து பிழைக்கக்கடவாய், அஃதென்னையெனில் இதுபரியந்தம் என்னுடனெதிர்த்துப் போர்செய்தவர்கள் மாண்டதல்லது பிழைத்தவர்களுமுண்டோ அல்லது அவர்களைக்கணிக்கத்தான் முடியுமோ மேலும் பின்னப்பட்டுசகலசெல்வவளங்களையும் சேனைத்திறங்களையும் பறிகொடுத்துப் புறந்தந் தோடினவர்களையுமெண்ணி யெண்ணியாவதோ நீபாலகனுதலா லித்தகைய சயங்களைப்பெற்ற வீராதிவீரனென்று யாவராவதுசொல்லக் கேள்விப்பட்டது மில்லைபோற் காணுகின்றது வீணில்வருந்திச் சண்டையைக்குறித்து இவ்வளவுதூரம்வந்தனை இனிப்பலபலபேசியாவதென்னை தேவர்கள்சிறையை விடுதலை செய்வோமென்பதைக் கனவிலும் நினைக்கவேண்டாம் இக்காரணகாரியங்களைச் செவ்வையாய் நிதானித்துத் திரும்பிக் தாய்தந்தையருக்குப் பிள்ளையாய்ப் பிழைக்கக்கடவாய் இக்கிறங்களைமாறிமாறிச் சொல்லவேண்டுவதென்னையெனில் நம்மிடத்தில் அதிகபிரீதியுள்ள சிவபிரானுக்குப்பிள்ளையாதலாலும்சிறுபருவத்தைப்பெற்றிருப்பதாலும்தெரியாமையாயிந்தஅரியகாரியத்தை முடிக்கவந்தனைபென்னும்நீதியைப்பார்த்துப்பரிவாய்ச்சொன்னதல்லதுவேறல்லவென்றுசிங்கமுகன்பயமுறுத்திப்பேசிய வசனங்களனைத்தையும்பன்னிரு புயாசலங்களைப்படைத்திருக்கின்ற சரவணபவன் கேட்டவுடன் இவன்கொண்டிருக்கின்ற வுறுதி வெகுநேத்தியென நகைத்து நல்லகாரியம் அவுணராஜனே நமது குழந்தைப் பருவத்தின் திறங்களைச் சற்றுநேரத்திற் காட்டுவோமென்று தமதுகரத்தில்விளங்கும் பரமசிவமளித்த தெய்வீகமாகிய காண்டீபத்தில் ஒருவயிரவாளியை யெடுத்துப் பூட்டிப் பிரயோகித்தனர், அச்சிறந்தபாணமானது வெளிப்பட்டவுடன் அதிகமகிமைகளைக் காட்டி வேகமாயோடிவந்துவயிரமலையை யொத்தபாதகன்மார்பிற் றுக்கித்தடாரித் துருவித்துளைத்துமுதுகின்மூலமாயோடியது, இவ்விதமாக எமதையன்சரமானது அருவிகள் பெருகும் பருவதத்திற் பூழைகாட்டுமாறுபோலச்சிங்கமுகன் விசாலமானமார்பைப் பெருவாயிலைப்போலத்திறந்து வெளிப்பட்டகாலையில் அம்மூலமாய் அருவியையொப்பச் செந்நீர்பாய மிகவும்வருந்தித்திகைத்து நின்றனன், அந்தஜயத்தைக் கண்டதேவர்கள். சந்தோஷசாகரத்தி லழுந்தினவர்களாய்க் கரங்களைக்கொட்டிக்கொட்டித் தேகங்குலுங்கக் குலுங்கநகைத்தனர்.

இவ்விதமாக பிலத்துவாரத்தைப்போல வெளிப்படையாக மார்புபிளந்த மூலமாய்வெளிச்சந் தோற்றியபோது பாதகன் கர்ப்பத்திற் சஞ்சரித்திருந்த பூதப்படைகளனைத்தும் கார்காலத்திற் புற்றினிடத் தெழும் ஈசெல்களைப்போல அவ்வழியாக பலபலென வெளிவந்து கடலுமஞ்சவார்த்து ரணக்கள வெல்லைமுற்றும் பறைபபடிக்குப்பாவிவருவதைச்சிங்கமுகன் பார்த்தமாத்திரத்தில் மனம்வருந்தி நாகத்தைப்போலச்சீறி வலிய கரங்களைக்கொண்டு அத்துவாரத்தை மூடிக்கொண்டவனுப் தட்சணத்திலொருபாரித்த தண்டாயுதத்தையெடுத்து கிறுகிறெனச்சுழற்

நிக் கந்தசுவாமியின்மேல் வீசியபோது மணிகள்சத்திக்க அண்டங்கள் வெடித்ததுக்கொப்பாகஇரைக்சலிட்டுக்கொண்டு வாயுவேகத்தினுங்கடுகி மேலிட்டுவருவதைத் தமக்கொப்புவமைபற்ற கர்த்தன்கண்டு நான்குகூரிய சிலீமுகங்களைப் பிரயோகித்தனர், அவைகள்தீயையிறைத்துப் பிரசண்டவாயுவுக்குமேலான ஆரவாரங்களைக்காட்டிப்போய்த்தண்டைப் பொடிப்பொடியாக நுறுக்கியதுமன்றிவேகமாகப் பாய்ந்து சிங்கமுகன் நெற்றிகளிற்றாக்கி யுருவியோடியது அக்காயத்தின்மூலமாக வுதிரம் பெருக்கெடுத்தோட மனச்செருக்கற்று வலிகுன்றி உணர்வைவிளக்கும் அறிவுமயங்கிச் செங்கோலை நடாத்தும்நீதிபரனுகிய மன்னவன் அரசாட்சியைச் செலுத்துவதற்குச் சிலவிடையூறுநேர்ந்தவேளையில் வருந்தும் உலகத்தைப்போல வாடிப் பிரமித்துநின்றனன், அக்காலத்திற் கோட்டைவாயிலையொப்ப வெளிப்பட்டு உதிரத்தைப்பெருக்கி யிருந்த மார்பைமூடிய கரங்களானவைப் பரமசிவகடாட்சம்பெற்றகாலத்திற் றளையும் மாயைநீக்த்துச்சோர்ந்து தாழ்ந்தமுன்னிலையில் பஞ்சரத்திலடைபட்டிருந்த பறவைகள் அதைக்கடந்து பறப்பதைப்போல அத்துவாரமார்க்கமாய்ப் பூதவீரரனைவரும் வெளிவந்து அதிக கெலிப்புடன் சுப்பிரமணிய தேவனைச்சூழ்ந்து கொண்டு திசைகள்செவிடுபடத் தக்கதாக ஜயவுற்சாகங்களைக் கொண்டாடி ஆர்ப்பரித்தனர் சிங்கமுகனுதரவங்கியிற் பட்டுமாண்ட பூதரும் திசைகள் தோறுமெறியப்பட்டவர்களும் ரணக்களத்தில் மாய்ந்தவர்களும் மரணமூர்ச்சையடைந்து களைத்திருந்தவர்களும் சண்முகப்பெருமாள் கடாட்சவீட்சணியத்தின் மகிமையினுல் உயிர்பெற்றும் மூர்ச்சைதெளிந்தும் வலியராயுமெழுந்து கெக்கலிக்கொட்டிக்கொண்டுவந்து சரவணபவனைத் தரிசித்துப்போற்றிக் களித்திருக்குமுன்னிலையில் பாலசுப்பிரமணியதேவர் உதயகிரியினிடத்திருக்கின்ற தமதுதுணைவர் இலக்ஷர் படைவீரர் பூதசேனைகளையும் தருவிப்பதாகத் திருவுளத்தி லெண்ணித் தட்சணத்திற் றெய்வத் தன்மைபொருந்தியஒருசரத்தையெடுத்து வில்லிற்பூட்டி நம்மவர்களனைவரையுந்துரிதமாகக் கொண்டுவரக்கடவாயெனப் பணித்துச்செலுத்தியகாலத்திற் சூரியகாந்தியினுமேலான கிரணங்களைப்பரப்பி வாயுவேகத்தினுப் மனோவேகத்தினுமேலிட்டுச் சமுத்திரங்களைக்கடந்து சூரியபகவா னெழுந்தருளுஞ்சிறப்பினை வாய்ந்த பொன்னிறம்பெற்ற உதயகிரியைச்சேர்ந்து வீரவாகுதேவர் முதலானவர்களைச் சேர்த்துப் பந்தித்துவைத்திருந்த பாசப்பிணிப்பை நெருப்பிற்பட்ட பஞ்சைப் போலத் துகள்படவாட்டும்போது கந்தசுவாமியார்கிருபாகடாட்சப் பெருக்கினுல் நித்திரை தெளிந்தவர்களைப்போல வீரனுதியரெழுந்து அஞ்ஞானவிருளிற்பட்டலைந்திருந்த பிராணிகள் சிவகடாட்சத்தினுற் போதவுணர்வைப் பெற்றவுடன் களித்திருப்பவரைப்போல மனவெழுச்சி பெற்றவர்களாய்ப் பரமசிவன் மனதுக்கினிய திருக்குமாரன் திருநாமங்களைச்சிந்தித்துப்போற்றிஅத்திசையைநோக்கி தீர்க்கதண்டன்சமர்ப்பித்துச் சந்தோஷமிகுதியினுல் அண்டங்களதிர ஜயஜயவென ஆர்ப்பரித்துக்களித்தனர்.

இவ்விதமாகச் சகலரும் உயிர்பெற்றெழுந்த காலையில் சண்முகதேவர் செலுத்திய மகத்துவ முள்ள படையானது பிரமன்நிருமித்து சூரபதுமனுக்குக் கடாட்சித்திருக்கின்ற புஷ்பகவிமானத்தைப்போலஅகல நிகளமுள்ளதாகவிளங்கி வீரவாகுதேவர் படைவீரர் பூதசேனைகளனைவரையுந் தாங்கியெழுந்து வானவழிக்கொண்டு உதயகிரியைக் கடந்துசமுத்திரங்களைத்தாவி வாயுவேகத்தினுமேலிட்டு வந்து சமரவெல்லையிலெழுந்தருளியிருக்கின்ற சண்முகப்பெருமாள் சந்நிதானத்திலிறக்கிப் பழையபடிக்குத் தன்னுருக்கொண்டு அம்புறுத்தூணியி லடங்கியது, அப்போது இளையபெருமாள் இலக்ஷர்எண்மர்பூதவீரரனைவருங் கர்த்தனைத்தரிசித்தமாத்திரத்திற் பிறவி முதற்கொடிய வறுமையை அநுபவித்திருந்தவர்கள் பரமசிவகடாட்சத்தினுற் றிரண்டசெல்வப்பெருக்கைப்பெற்ற காலத்திற் பெற்ற பேரானந்தத்தைப்போல திருமுகமண்டலங்கள் தாமரை புஷ்பங்களை யொப்பவிளங்க மனங்களித்துத் தேகம்பூரிக்கத் திருவடிகளில் வணங்கி யெழுந்து வாயாரப்போற்றிக் கரங்களைக்கூப்பிநிற்கின்றவீரகண்டாமணிதரித்த வீரவாகுதேவரிடத்தில் எள்ளினெண்ணெயைப்போலவும் மணியினொளிக்கொப்பாகவும் சராசரப் பிரபஞ்சங்களனைத்தினும் பரிபூரணமாக விளங்கிநடிப்பிக்கும் பெருமையினைவாய்ந்த பாலசுப்பிரமணியக்கடவுள் கிருபாநோக்கம்பாலித்து இராட்சதப் பாதகன்வீசிய மாயவலைக்குள்ளாயறிவழிந்து மிகவும்வருந்தி உதயகிரியிற் சேர்ந்து வாடினீர்களோ வெனப்பரிவாய்த் திருவுளம்பற்றினர், அவ்வாக்கியங்களைச் செவிகளுக்கமுதாகக்கேட்டுச் சரீரம்பூரித்து விழிகளிலானந்தவாரிபெருக இதனைவிண்ணப்பஞ்செய்வதாயினர், கர்த்தனேதேவரீர்பரிபூரண கடாட்சம் அடியோங்க ளிடத்திற்பூர்த்தியாக விருக்கின்றகாலத்தில் நாங்கள் உணர்வழிந்து வாடினும்பிராணனைப்போக்கி நரகவேதனையிற் பட்டுவருந்தினும், வெவ்விய துக்கசாகரத்திற்பட்டு நிலைபெறுதலையினும்பற்பலபிறவிகளி லுதித்துச்சோரினும் பாசபந்தங்களிற் கட்டுண்டு கிலேசிக்கினும் அவைபனைத்தும் சூரியன்முன் பனியைப்போல நாசப்பட்டுப் பவுத்திரராய்த் தமக்கடித்தொண்டுகளைச் செய்திருப்பதற்குத் தாழ்வுண்டோவெனப்பலவாகத்துதிக்கின்ற காலையில்நான்குவேதங்களினுற் றேடிக்காணவொண்ணுத ஓங்காரப்பொருளாய்ப் பரவெளியில்நின்று ஆனந்தநடனங்களைச் செய்யவல்ல பகவான்அவர்களிடத்தன்பாய்ப் பேரருளைக்கடாட்சித்தனர்.

அத்தருணத்தில்அவ்விடத்திலிருந்த மகாவிஷ்ணு, பிரமதேவன், இந்திரன்முதலிய தேவர்களும்வீரவாகுதேவர்முதலானவர்களைச் சூழ்ந்துகொண்டு பற்பலமுகமன்களைச்சொல்லிப் புகழ்ந்து கர்த்தன் கடாட்ச வீட்சணியப்பெருமைகளுக் கதிசயித்துவாழ்த்தினர் இவ்விதமாகச்சகலரும் பேரானந்தவாரியில் மூழ்கியிருக்கின்ற காலையில் முன்னங் குமாரதேவர்காட்டிய நாணொலியின் சத்தத்துக்காற்றுமல் மரணமூர்ச்சையடைந்திருந்த இராட்சதப்பாதகரனைவரும் கர்த்தன் தமதன்பரிடத்திற் பாலித்த கிருபாநோக்கம் தங்கள்மீதினுந் தாக்கியமுயற்சியினுற் களைதெளிந்து உணர்ச்சிபெற்றெழுந்து பெரும்புறக்கடலைப்போல ஆர்ப்பரித்தெழுந்தவர்களாய் உருத்திராகாரமாகப்பொங்கி யிந்தப்பாலகன் குணத்தொனியினுல் வீராதிவீரர்களாகிய வெங்களை யிவ்வாறலைப்பதோவென்று மானம்மாதிக்க இராட்சதசேனைகளும் படைத்தலைவர்களும் வேகமாய் வடவைக்கனலைப்போலப்பொங்கி விழிகளிற் தீப்பொறிகள் சிதறக்கோபித்துப் புருவம்நெற்றியிலேறவும் தேகமுற்றும் வியர்த்து மீசைதுடிக்கவும்

விஷநாகங்களுக்கொப்பாகச்சீறிச்சத்தசாகரங்களும்பெருக்கெடுத்ததைப்போலப் பரந்து அண்டங்களனைத்தும்வெடித்ததற்கொப்பாக ஆர்ப்பரித்துச் சருவசங்காரகாலத்திற் சராசரப்பிரபஞ்சங்களனைத்தையுந் தமது நுதல்விழிக்கனலினாலொடுக்கி ஏகனாய்ப் பரவெளியில் நடித்துலவும் ஆதிதேவன் திருக்குமாரனை வளைந்துகொண்டு சூரியனை மூடியபனிப்படலத்தைப்போலக் கவிந்து பாரித்ததனுசுகளை வட்டாகாரமாக விறுக்கிச் சகலருந்திடுக்கிடத்தக்கதாக நாணொலிகொண்டு அர்த்தசந்திரபாணங்கள் விஷத்தோவையலிட்டிருக்கின்ற சிலீமுகங்கள் கொடியநாராசங்கள் அனலைவீசும் சரங்களைச் சோனைப்பெய்யலையொப்பப்பொழிந்தும் தண்டாயுதங்களைக்கொண்டுமோதியும்சக்கரங்களைக் கரகரெனச் சுழற்றிவீசியும் சூலங்களைக்கடாவியும் தோமரங்களையெறிந்தும் இவ்விதமாகக் கொடிய போராட்டங்களைச் செய்துவருவதைச் சிவபிரான்நெற்றிவிழிகளிற்றோற்றிய குமாரதேவர் கண்டு திருநகைகொண்டு தமது வில்லிற்கணக்கிறந்த திவ்வியபாணங்களைச்சந்தித்துப் பிரயோகித்தனர், அவற்றிற் சிலசரங்கள் அனற்படிவமாய்த் தீயையிறைத்தோடவும் சிலபாணங்கள் ஆலகாலவிஷத்தையொப்ப மண்டியெரிந்து தகித்தும்சிலசிலீமுகங்கள் காடாந்தகாரமாகமூடிப்பகைவரைத்திசைதெரியாமலலைத்தும் சிலவம்புகள்காலாந்தகரை நிகர்த்துச் சீறிப் பாய்ந்தும் சில நாராசங்கள் அனலைக்கக்கிக் கொடியசர்ப்பத்தைப்போல உரறிக்கொண்டுதாவவும் சிலபகழிகள்சூரியகிரணங்களுக்குச் சமமாக ஜ்வலித்து மேலிடவும் சில கணைகள் மின்னலைப்பரப்பிக் கொண்டோடவும்சிலவாளிகள் கோடையிடிகளைப்பெருக்கி யுலவவும் சிலபுங்கங்கள் பொன்னிறம்பெற்ற சக்கிரத்துக்குச் சமமாகச்சுழன்றுசுழன்று பலகொடுமைகளைக்காட்டவும் சிலஅஸ்திரங்கள்வச்சிராயுதங்களைப் போலத்தாக்கவும் சிலகோல்கள் இந்திரதனுசுக்கொப்பாக பற்பலபாணசமோகங்களைப் பெருக்கி அதாஅதஞ்செய்யவும் சிலவிசிகங்கள் சூலங்களுக்கொப்பாகத் தடாரித்துப் பாய்ந்தும் சில பிரசண்ட வாயுவைப் போல வேகங் கொண்டு பாயவும் சில சூருவளிக்காற்றுக்கொப்பாக வெதிர்ந்தவைகளனைத்தையும்புரட்டிக்கொண்டோடவும் சிலவாளாயுதங்களைப்போலச்சஞ்சரித்துத் திரியவும் சில பாரித்த தண்டாயுதங்களாய் வாட்டவும் சில வேலை நிகர்த்துத் தும்சஞ் செய்யவும் சில சிங்கம் புலியாதிய கொடிய மிருகங்களுக்கொப்பாகக் கர்ஜித்துக்கொன்றும் இப்படிக்குப் பரந்து அல்லோல கல்லோலப் படுத்தும் திவ்விய பாணகோடிகளிற் சில பாதகரை வாட்டி நன்னெறிகளைப் பெற்றிருக்கின்ற சிவகணங்களுக் கிடையூறுகளைச் செய்யாமற் றருமபரிபாலனஞ் செய்வதாற் சிருஷ்டிகர்த்தனாகிய பிரமனுக்கொப்பாகத் தோற்றவும் சில அண்ட புவன சராசரங்களுக்கு உபத்திரவமில்லாமற் பாதுகாத்துத்திரியுந் தன்மையினாற் றிதிகர்த்தனாகிய மகாவிஷ்ணுவைப்போலக் காட்டவும் சில மன்னுயிரைவாட்டி வருகின்ற கொடிய மகா பாதகராகிய அவுணர்இராக்கதராதியரைவரையற நாசஞ் செய்யுந் தன்மையினால் சருவசங்கார கிர்த்தியத்துக்குக்கர்த்தனாகிய உருத்திரமூர்த்திக்குச் சமமாக எத்தலங்களினுங் காட்டித்திரியவும் வாயுவேகத்தினுங் கடுகி உலகங்களெவ்விடங்களினுந் திரிந்து கொடியபார்வையைச்செலுத்தி மன்னுயிரைக்கொண்டு போகும் யமதருமராசனுக்கொப்பாக அவுணப்பாதகரை வாட்டியும் மனோவேகத்தினும்முந்திப்பாய்ந்தும் இவ்விதங்களாகக் கொடியவெப்பத்தினைவாய்ந்த வடவாமுகாக்கினியானது பற்பலவடிவுகொண்டெதிர்த்த போதினும் சீறி அவற்றின்கடுமையை மாற்றவல்ல மகிமையைப்படைத்த பாணகோடிகளின் சவுரியபராக்கிரமங்களைச் சொல்லி முடிவதோ.

சவுனகாதிரிஷிகளே குமாரதேவர் தமதொப்பற்றகாண்டீபத்தில் ஒருபாணத்தைப்பூட்டிப் பிரயோகித்த காலத்தில் வெளிப்பட்டவுடன்கோடியாகப்பெருத்தும்உடனே கோடாகோடியாகப் பரந்து பகைவரைவாட்டுமாயின் அவற்றின் கணிதம் யாவராற் பேசப்படும், இவையன்றியும் அப்படைகளோடும் வேகத்திற்பட்ட சத்தமேகங்களுடல் முற்றும்பீறுண்டு நீரைப்பெருக்கி யிடிமின்னல்களைக்கொட்டிப் பறக்கவும் ஏழுகடல்நீரைச்சுவற்றிக் கொதிப்படக்கியும் சூரியபகவானேறிப்போகும் இரதமானதுகரிந்துநடக்கக் கூடாமையால் கதிதப்பிமருளவும்வடவானலவெப்பமடக்கித் தத்தளிக்கவும் தேவர் நகரங்கள்பொடிபட்டும் பொன்னிறம்பெற்ற மேருகிரியானது நீரைப்போலவுருகிப்பாயவும் விசாலமாகியபூமண்டலமுற்றும் வெடித்துக்காட்டவும் குலாசலங்கள் நுறுங்கியிறைந்தும் இஃதன்றி ஞானநாயகனாகிய முருகப்பெருமாள்கரவேகமாகத் தூண்டும் சரவருஷங்கள் ஆயிரகோடிஅண்டநிரைகடோறு முருவியோடியும் வேகமடங்காமற் பாயுமெனச் சொல்லுவோமாகில் மேற்குறித்தபடிக்கு மகம்மேரு முதலியவற்றைநாசஞ்செய்ததெனப்பேசியதுஅவ்வாளிகளுக்கொருசிறப்போஇவ்விதமாகப்பாணவகைகளெங்கு மடர்ந்து அதாஅதப்படுத்திவருகின்றகாலையிற்சிங்கமுகாசுரனுக்குதவியாகவந்தஇராக்ஷதப்படைகள்வீறுப்படங்கித்தியங்கிக்கைகாலாடாமற்சிரங்களற்றும்தோள்கள்சரிந்தும் மார்புகிழிந்தும்தடைகள்முறிந்தும், கண்டதுண்டப்பட்டும், சல்லடைக்கண்களாகத் தொளையுண்டுமாளவும்,பருவதங்கள் கால்முளைத்தசைவதைப்போன்ற பருத்ததேகத்தைப்படைத்திருக்கின்ற மதயானைக்கூட்டங்கள்சின்னபின்னப்பட்டுக்களமெங்கனு மிறைந்தும்அலைகளைப்போலத்தாவிவாயுவினுங்கடுகிச்செல்லும்புரவிப்பந்திகள் பலதுண்டங்களாக வெட்டுண்டுமாளவும் வானத்தையளாவநின்றசொர்னமயமாகியதேர்நிரைகள்-வண்டில்-அச்சுமச்சு-குத்துக்கால்கொடுங்கைமுதலியஉறுப்புகள்சிதைபட்டு மங்கவும்இவ்விதமாகச்சதுரங்கசேனைப்பெருக்கானது அதப்பட்டு ஒன்றின் மீதொன்று விழுந்து கலந்து ரணபூமியெல்லையில் விழுந்து கிடப்ப தெப்படிக்கிருப்பதெனில், சருவசங்கார காலத்தில் ஜலப்பிரளய மோங்கி அண்டவணிகளைவாட்டி ஒன்றுபடுத்துவதற்கொப்பாக விருந்தது எமது கர்த்தன் செலுத்தும் வாளிகள் பாயுமிடங்கள் தோற்றுமற் றேவரும் மயங்கி அற்புதசித்தராய் பிரமித்துப் பார்த்துக் களைத்திருந்தனர், சவுனகாதிதவத்தரே! யிஃதொருவியப்போ ஒவ்வொருவாளிகள் அளவற்றசிரங்களைக் கண்டித்துக்கொண்டு அண்டநிரைகளனைத்தையுந் தாண்டிப் பெருவெளியிலிறைத்தும் பகைவர்களேபரங்களைவாரியோடி அண்டங்களில் நிரப்பி அவற்றினின்றுபாயும் ரத்தப்பெருக்கினால் உதிராண்டங்க ளாக்குவதல்லாமல் சரவணபவன்விடும் சிலீமுகங்கள் பாயுந்தோறும் அவுணப்பாதகரைச் சின்னபின்னமாகக்கண்டித்தும் யானைகளைத்துதிக்கைகால்களை வெட்டியெறிந்து முண்ட-

மாக்கியும் குதிரைகளைப் பின்னப்படுத்தியும் தேர்களைச் சக்கை சக்கையாகப் பேர்த்துக்குவித்தும் அவற்றினைப் புவனங்களெங்கனும் நிறைத்ததன்மையைப் பார்க்குமிடத்தில் மடைப்பள்ளியைப்போலக்காட்டவும் இவ்விதங்களாகக்கணைகள்வீறிச் சமுத்திரத்துக்கொப்பாக இரைச்சலிட்டு ரணக்களமெங்கும் பரந்திருந்த நால்வகைச்சேனைகளை அதப்படுத்தியகாரணங்களைப் பெரிதாகநினைக்கவேண்டுவதில்லை ஆயிரகோடி அண்டங்களினும் மன்னுயிரையலைத்து வாட்டியிருந்த கொடியபாதகரனைவரையும் வேரறக்களைந்தது இருஷிகளே? லோகநாயகன்படைகளின்மகத்துவங்களை என்னென்றுசொல்லுவேன் தம்மை மெய்ப்பத்தியினால் வழிபடுகின்றவர்களையும் வணங்கப்பெற்றவர்களையும் தமதுபெருமைகளைப் புகழத்தக்கமகத்துக்களையும் தமதுதிருவடிகளைத் தஞ்சமடைந்திருக்கின்ற அடியவரையும் தமது க்ஷேமங்களைக்கோரியிருக்கின்ற தேவரினங்களையும் யாதொருதீங்குகளையுஞ்செய்யாமற் குளிர்ந்ததடாகத்தில் நிற்பதைப்போலத் தண்மையைக்காட்டிப் பாதுகாத்தலவுகின்ற காரணத்தினால் தாமரைமலரையொப்ப அகமுகமலர்ச்சிகொண்டு கர்த்தன் குணாதிசயங்களை யெண்ணியெண்ணி அண்டங்களதிரப் போற்றிக்களித்தனர்.

அக்காலத்திற் சமரபூமிவிளங்கிய அலங்கோலத்தினையென்னசொல்வேன் பிணமலைகளெங்கு மேலோங்கிக்குவியவும் குறைத்தலைமுண்டங்கள் அனந்தகோடி கூத்தாடவும் உதிரப்பெருக்கானது சமுத்திரத்தைப்போலத் தேக்கிட்டுச் சுழித்துக்கொண்டோடவும் நிணங்கள் வெண்ணெயைப்போலக்குவிந்துகாட்டவும் மூளைகள்சேற்றுக்கொப்பாகவமுக்கவும் அவற்றினைவெறுக்கவுண்டு உதிரபானஞ்செய்த வெறியினால் பூதபைசாசங்களொருபுறத்தில் களியாடல்களைச்செய்யவும் ரணபத்திரகாளி தன்கூட்டத்துடன் பவனிவரவும் நாய்நரிகள் ஊளமிட்டுக்கொண்டு அங்குமிங்கு முலவிவாதாடி நிற்கவுங் கழுகு-பருந்து-காக்கையினங்களிரைந்து வானத்தில் வட்டமிட்டுலவவும் இவ்விதமாக ரதகஜதுரகபதாதிகளனைத்தும் ரணபூமிக்கிரையாய் மாண்டகாலத்தில் மண்விண்ணெங்கும்தேகத்தைப்பரப்பி வாதாடிப்பாலசுப்பிரமணியதேவர் தூண்டிய திவ்வியபாணகோடிகளினால் களைத்துநின்ற சிங்கமுகாசுரனுக்கு உணர்வுதோன்றி விழிகளைப்பரப்பிப்பார்த்துத் தனக்குதவியாகவந்த நாற்படைகளும் நாசப்பட்டொன்றேனுங் காணக்கிடையாமற்றிகைத்துப் பாலகன்சேவகத்திறத்தினால் வாட்டினனென்றறிந்து மானமுங்கோபமும் மனதைவாட்டத் தேகமெங்கும்வியர்க்க வடவைக்கனலைப்போலக்கொதித்து மந்தரத்துக்கொப்பாகிய ஆயிரந்தனுசுகளைப் பிகிந்து அகண்டமண்டலாதீஸ்வரனாகிய சூரபதுமனுக்கன்றிச் சிரங்களைவளையாத புசபலபராக்கிரமசாலியாகிய சிங்கமுகன் துரிதமாய்ப் பத்துநாறாயிரம் சுடுசரங்களையெடுத்துப்பூட்டிக் கரவேகமாய்க் குமாரதேவர்மீதினும் பூதவெள்ளங்களைக்குறித்தும் பிரயோகித்துச் சிங்கத்துக்கொப்பாக கர்ஜனைசெய்தவுடன் அப்படைகள் தீயையிறைத்து விஷங்களைக்கக்கிப்பற்பலகொடுமைகளைக்காட்டிவரும் வேகத்தை எமதுகர்த்தன்கண்டு திருநகைகொண்டு எத்தகையவாளிகளினாலுமசைக்கவொண்ணாத திவ்வியசரங்கள் ஆயிரத்தைச்செலுத்திச்சிறிக்கொண்டு மேலிட்டுவருகின்ற பகைவன் பாணகோடிகளைக் கண்டித்துத்தள்ளி மேலும் அத்தொகை வயிரவாளிகளைப்பிரயோகித்தனர், அவைவரும் மகிமைகளைச் சிங்கமுகன்கண்டு சர்ப்பத்தைப்போலச்சீறி ஓரிலக்ஷங்கடுமையுள்ள பாணங்களைப்போக்கியகாலையிற் புகைந்திரைந்து கனலைப்பெருக்கிவருவதைச் சிவகுமாரன் அத்தொகைச்சரங்களைக்கொண்டு கண்டித்துமீட்டும் ஆயிரம்அர்த்தசந்திரவாளிகளைப்போக்கினர் சிங்கமுகனும்பலபாணங்களினால் அவற்றினைமாற்றி அதிககோபங்கொண்டு தீட்சணியமுள்ள சகஸ்திரகணைகளைக் கரவேகமாகத் தூண்டிக் குமாரதேவர் தேரைநடாத்தும் வாயுதேவன் வலியமார்பைப்பிளந்து கர்ஜித்தனன், அக்காயத்தின்மூலமாய்உதிரம்பெருக்கெடுத்தோட வலிகுறைந்து மிகவும்வருந்திக் கைகால்களுதறலெடுக்க மனம்வருந்தியிருப்பதை எமது கர்த்தன்கண்டு துரிதமாய்த் தமதொப்பற்றவில்லில்நூறு பகழிகளைப்பூட்டிப் பிரயோகித்துச்சிங்கமுகன்தேரில்நாட்டி யானையுருக்கொண்டிருக்கும் வெற்றிக்கொடியைக்கராலுமெனவெட்டி நிலத்திற்றள்ளிப் பாகனைவாட்டித்தேரையும் சக்கைசக்கையாகப் பேர்த்தெறிந்தகாலையிற் சிங்கமுகனென்னசெய்வான் தன்மனதுக்கிசைந்த வாகனத்தைப்போக்கிச் சோடசகலைகளையிழந்த சந்திரனைப்போலபெருமிதங்களனைத்துங் குறைந்துமானம்பாதிப்பதினால்நிலத்திற்குதித்துத் திசைகள்முதலாக நடுங்கத்தக்கதாகக்கொக்கரித்துத்துரிதமாய்த் தன்விற்களையிறுக்கிக்கணக்கிறந்தபாணவிதங்களை ஒன்றனந்தமாகவருஷிக்கும்போது அவைகள்வெளிப்பட்டு மின்னல் இடிதீமுதலியகொடுமைகளைப்பெருக்கி அதிகமகிமைகளைக்காட்டி வீறிவருவதைவிழிகளுக்கமையாத சுயஞ்சோதிவடிவினைப்படைத்திருக்கின்ற குமாரதேவர்பார்த்துச் சிலகணைகளைச்செலுத்தி அவற்றினைமாற்றிச் சலனப்படாத திவ்வியபாணங்களாயிரத்தைத்தூண்டி பாதகனாகிய சிங்கமுகன்கரங்களிற்பற்றியிருக்கின்ற தனுசுகளையும் பொடிசெய்தமாத்திரத்தில் பகைவன் வெறுங்கரத்தனாய்த் திகைத்திருப்பதைமகாவிஷ்ணு பிரமதேவன் தேவர்கள்கண்டுஜயவுற்சாகங்களுடன் கரங்களைத் தூக்கிமிகழ்ச்சிக் குறிப்புவிளங்க ஆர்ப்பரித்தவர்களாய்க் கர்த்தன்பெருமைகளைக் கொண்டாடிப்போற்றினர்.

இவ்விதமாகச் சரமழைகளைப் பொழியவல்ல விற்களழிந்தபோது ஊழித்தீயினுமேலிட்டுப்பொங்கி வரப்பிரசாதத்தினாற்பெற்றிருந்த முத்தலைச்சூலமொன்றையெடுத்துச் சிவகுமாரன் மார்புக்குகுறிகொண்டு ஆலகாலவிஷத்தினைத் திருப்பாற்கடல்வெளியிட்டதைப்போலப் பின்வாங்கி யோங்கிவீசி கர்ஜித்தனன், அதுவருங்கொடுமையைத்தெரிந்து எமதிறைவன் பதினான்கு தீட்சணியமுள்ளசரங்களைப்போக்கித் துகள்படக்கண்டித்து மேலும் ஆயிரங்கூரிய நாராசங்களைச் சூரன்துணைவன்மீதிற் பிரயோகிந்தனர், அவைகளின் உற்பாதங்களைக்கண்டு துரிதமாய் மந்தரத்தையொத்ததண்டாயுதத்தைக்ரத்திற்கொண்டு மணிகளசையக்கிறுகிறெனச் சுழற்றிச் சமீபித்தமாத்திரத்தில்மோதிநறுங்கி நிலத்தில்விழத்தள்ளி அண்டங்கள்கிடுகிடாய்த்துநடுங்க ஆர்ப்பரித்துக்கொண்டுமேலேறிவருவதை பாலசுப்பிரமணியக்கடவுள்கண்டு ஏழுகொடியபாணங்களைப் பிரயோகித்துத் தண்டத்தைப்பற்றியிருந்தகரத்தைக்கண்டித்து பூமியிற்றள்ளினர், கேட்டீர்களோ, சவுனகாதிதவத்தரோ, சிங்கமுகன் ஆதியிற்பரம

சிவத்திறைற்பெற்றிருக்கின்றவரப்பிரசாதமுயற்சியினுல் த
ட்சணத்தில்மீட்டுமக்கரம் பழையபடிக்குக்கிளைத்து நில
த்திற்கிடக்கின்றதண்டத்தினையெடுத்துச் சூருவளியைப்
போலச்சுழற்றிக்கொக்கரித்துக்கொண்டு சிவகுமாரன்மே
ற்ருவிவீசினுன், அதனைத்தன்மேல்வந்தகேதுவைவாட்டு
ஞ் சூரியனுக் கொப்பாக ஆயிரஞ்சுடுசரங்களைக்கொண்டு
பொடிப்பொடியாகவாட்டிப் போக்கியபோது பாதகன்ம
ண்டியெரிந்து தான்முன்னம் இயமனுடன்போராடிப் பு
றங்கண்டுபறித்து வைத்திருந்த காலபாசத்தை யெடுத்து
இதனுலுன் வலியொடுங்கி மங்கக்கடவாயெனப்பேசிவீசி
யகாலத்திற் றிசைகளெங்கும்பரந்து பிரசண்ட மாருதத்
தைப்போல ஆரவாரங்களைக்காட்டிவரும் மகிமைகளைக்
குமாரதேவர் தெரிந்து ஆயிரங்கொடியகணைகளை வில்லி
ற்சந்தித்துப்போக்கித்தீயிற்பட்ட சருகைப்போலநீருக்
கினர், தன்பாசம்வலியற்று நாசப்பட்டதைக்குறித்துமிக
வும்மனம்வருந்தி மானமுங்கோபமும்மனதைவாட்டச்ச
ர்ப்பத்தைப்போலச்சீறி யிப்பாலகனைஎன்வலியகரங்களி
னுற் பற்றிப்பிசைந்துகொன்றுகாற்றிற்பறக்கவூதுவேனெ
னத்தீர்மானித்தவனுய் இரண்டாயிரங்கரங்களையுந்திசை
களைமூடப் பரப்பிக்கொண்டு பாய்ந்து மேல்வரும்போ
து அப்பாதகன்கருத்தை எமதையன்தெரிந்து சர்ப்பங்
களுக்கொப்பாக விஷங்களைக்கக்கவல்ல வேகமுள்ளசரங்
களிரண்டாயிரத்தைத் தனுசிற்பூட்டிக் கரவேகமாகப் பி
ரயோகித்து அவன்கரங்கள்முற்றினும்நிலத்தில்விழுந்து
துடிக்கும்படிக்கு வெட்டியெறிந்தகாலையிற் றவமகிமை
யினுற்செப்பிடு வித்தையைப்போல தட்சணத்திற்கரங்க
ள்முளைத்துச்சீறிக் கண்டிக்கப்பட் டிறைந்திருக்கின்ற த
ன்கைகளையெடுத்துக் கிறுகிறெனச்சுழற்றிக்கொண்டு அ
னற்படிவமாகவிருக்கின்ற சிவகுமாரன்மீதிற்ருவிப்போ
ம்போது லோகநாயகனுந் துரிதமாய் ஆயிரஞ்சுடுசரங்க
ளைப் பிரயோகித்துப் பாதகன்பெற்றிருக்கின்ற சிங்கமுக
ங்கள்விளங்கும் சிரசமோகங்களைக் கண்டித்துத் திசைக
ளெங்கு மிறையச்செய்தவராய் மேலுமிரண்டாயிரம்அர்
த்தசந்திரபாணங்களைப்போக்கி அவுணராஜன் கரங்கள
னைத்தையும்வெட்டி நிலத்திற்சேர்த்தனர் இவ்விதமாகச்
சிரங்களுங் கரங்களும்அற்று முண்டமாகச் சிங்கமுகன்
நிற்கின்றகோலத்தைத்தேவர்கள் கண்டவுடன்ஆனந்தவா
ரியில்மூழ்கிக் களிமிகுதியினுல் வடிவேலனைப்புகழ்ந்துக
ற்பகமலர்களையிறைத்துக்கொண்டாடினர், உடனேவிரத
பலத்தினுல் யதாப்பிரகாரக்குறைந்த வுறுப்புகளனைத்
துங்கிளைத்து முன்னினும் அதிகவுக்கிரத்துடன் ஊங்கா
ரித்துவீறிநிற்பதைத் தேவர்கள்முதலானவர்கள்கண்டு ம
னந்திடுக்கிட்டுத் தேகம்வியர்த்து நடுநடுங்கி யிவ்விடத்தி
ல் நிற்போமாகிற் பாதகனென்செய்வானேவென்னும் ஏ
க்கத்தினுற் பலதிசையினுமோடத்தொடங்கினர்.

இக்காரணங்களைத் தேவதேவோத்தமனுய் சுயஞ்சோ
திவடிவாகவிளங்கும் சரவணபவன்கண்டு பூர்வத்திலிவர்
கள் யாகங்களைச்செய்யுமுன்னிலையிற் சிரங்களைக்கண்டி
த்து அவிகொடுத்த முயற்சியினுல் நீங்கிய வுறுப்புகள்மீ
ளத்தோற்றுகின்றதென நிதானித்து அதற்கடுத்தகாரிய
த்தினை யோசிக்கின்றகாலையில் விண்ணவர்மனவருத்தத்
துடன் இப்பாதகனெவ்விதத்தில் மாள்வான் சிறந்ததவப்
பேறுகளைப்பெற்றிருப்பவனுதலால் இவனைக்கொல்வது
கடினமாகக் காணுகின்றதென்றுவாடிப் பார்த்திருக்கும்
போது சிங்கமுகாசுரன்விட நாகத்தைப்போலச்சீறிச்சிவ
சுப்பிரமணியதேவரைப்பார்த்துச் சொல்லுகின்றன் ஓகு
மூந்தாய் இவ்விதங்களாக அளவற்றகாலம் உன்சுடுசரங்க
ளைக்கொண்டு கண்டிப்பையாயினும் மீளமீளப்பெற்றுய
தாப்பிரகாரம் சண்டைகொடுக்குந் திறத்தைப்படைத்தி
ருக்கின்ற சூரனுகவிருக்கும் என்னுடன்போராடியிரண்
டுகரங்களைப் பெற்றிருக்கின்ற நீபற்பலபாணங்களைச்செ
லுத்திச் செலுத்திக் கைகால்களோய்ந்து இளைப்பதல்லா
மல் யாதொருபிரயோசனங்களையும் பெறவறியாய் அத்த
கைய அபலனுனபிள்ளாய் நீயோயெதிர்த்துச் சண்டை
கொடுக்கவல்லை நாங்கள் பூர்வத்தில் சிவபிரானைக்குறித்து
க் கடினதவங்களைச்செய்து பெற்றிருக்கின்ற சிறந்தபே
றுகளைக் கேட்டதில்லையோ உன்னப்பனையொத்தவன்நம
துமனவுறுதிக்குமெச்சிப் புகழ்ந்துபோன காரணங்களை
எவ்வளவுமெண்ணிப் பார்த்தவனல்லை சற்றும் காரண
காரியங்களைப் பகுத்தறியும் விவேகமின்னமும் விளங்காத
தபாலகனுதலாற் போராடியழித்துப்போகலாமெனநினை
ந்து சிலபூதரைக்கூட்டிக்கொண்டு துரிதமாகவந்துவிட்ட
னை பிள்ளைப்பருவத்தினுல் நீகொண்டிருக்கிற துணிவுஉ
ன்பிராணபரியந்தம்வந்து நேர்ந்துவிட்டது நீபலபுகங்க
ள்வருந்தித் தலைகீழாய்நின்று பொருத்தபோதினும்யான்
பின்னிடையப் பட்டவனன்று ஆதலால்நீஉத்தேசித்துவ
ந்திருக்கிறபடிக்குத் தேவர்சிறையை விடுவிப்பதுஉன்னு
லொருபோது முடியாது உன்னைப்பெற்றவனுலுமாவத
ன்று இந்தநிமிஷத்தி லுன்னைப்பற்றிக்கசக்கிவாயிற்போ
ட்டுக்கொள்ள வல்லேனுயினும் பிள்ளைகளைப்பெற்றவனு
தலாற் குழந்தைப்பருவத்தினுல்முன்பின்யோசித்துப்பா
ராமல் வந்துவிட்டனையென்றும் உன்பிதாவானவர் நம்மி
டத்திற் பரிபூரணகடாட்சம் வைத்திருப்பதாலும்மனம்
பொறுத்தேன் இதைக்கருதி யிந்தநிமிஷத்திற் பிராண
னைத் தப்பித்துக்கொண்டோடிப் போவையானுல் அரிதி
ற்பெற்ற உன்தாய்தந்தையருக்குப் பிள்ளையாயின்னஞ் சி
லபோது பிழைத்திருப்பாய் தெரியாமையினுல் நீசெய்தி
ருக்கின்றகுறைபாடுகளைமன்னித்து விட்டுவிடுவேனென்
று விவேகசூனியனுகிய சிங்கமுகாசுரன்பேசிய வாசகங்க
ளனைத்தையும் எமதிறைவன் திருச்செவிகளினேற்றுக்
குறுநகைகொண்டு அவுணராஜனே நீயென்னசெய்வாய்
நீஜனித்தகாலையில் விதித்தகாலங்கழிந்து உன்னரியபிரா
ணனைக்கொண்டுபோகப் பின்புறத்தில் இயமனுங்காத்து
த்திரிகின்றனன், விவேகமற்றவனே வீண்வார்த்தைகளை
யாடுவதிற் பயனென்னை யினியொருகணப்போதில் உன்
னுயிரைவாங்குகின்றேன் அதைநீயே காணவிருக்கின்ற
னையெனப் பிரமனைக்குட்டிச்சிறைபடுத்தி வேதப்பொரு
ளைவிளக்கிக் குருமுகூர்த்தமாகத்தோற்றிய குமரகுருப
ரன்பேசிமுடித்தவுடன் சிங்கமுகனுக்கு அதிககோபம்பி
றந்து விழிகளிற்றீப்பொறிகள்சிதற வடவானலத்தைப்
போலச்சீறிக் கோடையிடிகளைப்போலக் கொக்கரித்துப்
பாய்ந்து பாரிசங்களிற்பாரித்தோங்கி நிற்கின்ற இரண்
டாயிரம்பருவதங்களை அடியுடன்பெயர்த்துப் பந்துக்கொ
ப்பாகப் பாலசுப்பிரமணியதேவர்மேல்வீசினுன், அவை
கள்செய்துவந்த உற்பாதங்களைச்சொல்லிமுடியாது தட்
சணத்திலெமதிறைவன் நூறுதிவ்வியபாணங்களைச் செ
லுத்திப் பொடிப்பொடியாகக்கண்டித்தெறிந்து மேலும்
ஆயிரங்கடுங்கணைகளைப்போக்கிவயிரத்தையொத்தபகை

வன்மார்பைப்பிளந்தனர், அந்தக்காயத்தையெவ்வளவுஞ்
சட்டைபண்ணமற்பாய்ந்துகணக்கிறந்தபருவதங்களைப்ப
றிக்கத்தொடங்கினன், அதனைக் குமாரசுவாமியார்தெரிந்
து துரிதமாய் ஆயிரங்கடுங்கணைகளை வில்லிற்சந்தித்துப்
போக்கி ஆயிரஞ்சிரங்களையுங்கண்டித்து நிலத்திலுருட்
டினர், தட்சணத்திற்பழையபடிக்குத் தலைகள்கிளைத்துத்
தான்தொட்ட பருவதங்களனைத்தையும்எடுத்து எமதுக
ர்த்தன்மீதுவீசிப் பருத்தபுயாசலங்களைத்தட்டித் தேவர்
கள்சூரியனுதியர்குலைகுலைந்து நடுநடுங்கி வாடத்தக்கதா
கஆர்ப்பரித்தனன், அவற்றினை யிரண்டாயிரம் சுடுசரங்
களினுற்பொடிப்படுத்தி அவன்வலியதோள்களையும் அ
றுத்துத்தள்ளினர், அவைகள் நிலத்தில்விழுவதன்முன்ன
ம்பழையபடிக்குப்புசங்களனைத்தும்தோற்றியது.

கேட்டீர்களே! சவுனகாதிமுனிவர்களே? யிவர்கள்செய்த
தவங்களைப்போலமுடித்தவர்கள்யாவருமிரார்கள்மேலும்
தவங்களினுஞ்சிறந்தபொருள்உலகங்களிலொன்று மிரா
தாகையால்யாவரும் சிறந்தபேற்றினையே பெறவேண்டும்
இக்காட்சியைக்கண்டபாலசுப்பிரமணியதேவர்ஒருதிருவி
ளையாடலைச் செய்யத்திருவுளத்திற் கொண்டவராய்த் தம
துகாண்டீபத்திற் திவ்வியபாணகோடிகளைத்தூண்டிச் சி
ரங்களைக் கண்டித்துத்தள்ளியும், தோள்களை வெட்டியெ
றிந்தும், தாள்களைத்தறித்தும், இவ்வாறுசிங்கமுகனைக் க
ண்டதுண்டமாகச் சேதிக்குங் காலையிற் சிவபிரான்வரபா
லனத்தினுல் அவைகள்மீளமீளமுளைத்துவரவும்சிவகுமா
ரன் அவற்றினையும் ரணக்களத்தி லுருட்டவும் இவ்வித
மாகப் போராடும்போது சிரசமோகங்கள் பெருத்தெழு
ந்து திசைகளைநிறைத்தும் தெய்வலோகத்தைத் தூர்த்து
ம் பூமியெங்குங்குவிந்துச் சத்தசாகரவெல்லை முற்றினும்
அடர்ந்தும் பிறைகளையொத்த கோரைத்தந்தங்கள்விளங்
கக் கர்ஜித்துக்கொண்டும் உதட்டையதுக்கியும் பற்களைக்
கடித்தும் இப்பிரகாரம் பலவிதங்களாகப்போய்ப் பனங்
காய்களைப் போல விழுவதைத் தேவர்கள்கண்டுதிடுக்கிட்
டுமெதிமயங்கிப் பிராணபீதியினுற் கைகால்களுதறத்தங்க
ள் பதங்களில் நின்றும்வழுவிபூவட்டமுற்றினும் விழவு
ம் அச்சிரங்கள் ஒன்றின்மீதொன்றுசேரக்குவிவதைப்பா
ர்க்குமிடத்தில் விஞ்சையர்மகளீர் விளையாட விருக்கின்ற
செய்குன்றங்களை யொப்பக்காட்டவும் சிலதலைகள் சமர
வெல்லைமுற்றினுமுருண்டு பிலங்களைப்போல வாய்களை
த்திறந்திருப்பதைக்கண்ட பூதர்கள் வேடிக்கையாக அவு
ணப்பாதகர் மாண்டுகிடக்கின்ற களேபரங்களைக்கோடா
கோடிக் கணக்கில் வாரிவாரி அதிற்போட்டுப்போட்டுநிர
ம்பாமற் கைகாலோய்ந்துவாடிப் பிரமித்துப் பார்த்திருக்
கவும் சிலசிரங்கள் வாய்விண்டுகாட்டுவதை நிணமாம்சங்
களையுண்டு வெறிகொண்டுலாவுகின்ற பைசாசங்கள்பார்த்
து இதுநாம்வாசஞ்செய்வதற்குத்தகுந்த விடுதியென்றெ
ண்ணிக் கொழுத்தபிணவகைகளை யிழுத்துப்போய்ச்சே
ர்த்துக்கொண்டு உள்ளேபிரவேசித்தகாலையிற் கொடிறுக
ள்அசைகொண்டு பற்கள்கிட்டிமூடிக்கொண்டபோதுதக்
கன்செய்த யாகவெல்லையில் வந்திருந்தவர்கள் வீரபத்தி
ரக்கடவுள் முற்றுகைப்போட்டுச் சூழ்ந்தகாலத்திற்போ
கவிடமில்லாமல் அங்குமிங்குமாய் அலைந்ததைப்போல
அதனுட்பட்டுத் திரிந்து திரிந்துவாடிக் கடையில்மலைப்
பூழைகளுக் கொப்பாகத் தோற்றுகின்ற செவிகள்நாசிக
ள் மூலமாக முற்காலத்திற் கௌதமர்பத்தினியினிடத்தி
ன்புற்றுச் சோரத்துவமாய்ப் பர்னகசாலையிற்பிரவேசித்
துச் சிற்றின்பத்தை அனுபவிக்கின்ற வேளையில் முனிபு
ங்கவன் வரவைத்தெரிந்து திடுக்கிட்டுப்பயத்தினுற் சல
தாரைவழியாக வோடிப்போனதேவேந்திரனையொப்பஅ
த்தலத்தைக்கடந்துவெளிவந்து தப்பினேமென்னுங் களி
ப்புடன் சமீபத்தினும் நிற்கப்பயந்தோடவும், இவ்விதங்
களாக வீரக்கழலணிந்திருக்கின்ற பாதாரவிந்தங்களைப்ப
டைத்த பாலசுப்பிரமணியதேவர் தூண்டும்பாணகோடி
களானவைகண்டித்துக் கண்டித்துத் தள்ளுகின்ற சிரங்க
ள். தோள்கள் தாள்கள் மீளமீளமாறுமலுண்டாய் வீறிக்
காட்டுவதைத்தெரிந்து திருநகைகொண்டவராய் மற்றொ
ருதிருவிளையாடலைக்கருதிப் பலதிவ்வியபாணங்களைஒரு
தொடையிற் பிரயோகித்து ஒருசிரமும்இரண்டுகரங்களு
ம் நீங்கலாய் மற்றவைகளனைத்தையுங்கண்டித்துத்தள்ளி
யகாலையிற் பழையபடிக்கவைகள் அந்நிமிஷத்திற் ஞேற்
றுவதைப் பார்த்துப் பார்த்துக்களித்து இவ்விதமாகச்சி
லபோது விநோதப்போரைச்செய்து கடையிற்பிரமதேவ
ன்முதலிய தேவர்கள் கலங்கத்தக்கதாகச் சற்றுக்கோபித்
து உம்மென்று உக்கிரமாய் அதட்டியகாலையில்அவ்வதி
ர்ச்சிக்கஞ்சி வரப்பேற்றின்முயற்சியினுல் முளைத்துவந்த
வை மனிதர் அரவங்கண்டகாலத்தில் ஆமையானதுதன
து உறுப்புகளைஉள்ளடக்கிக்கொள்ளுமாறுபோலப் பழை
யபடிக்குத் தோற்றமல் ஒருசிரமும் இரண்டுகரங்களுட
னும் சிங்கமுகாசுரனிருந்தனன்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? யிவ்விதமாகக் கி
ரவுஞ்சனை வாட்டிய பாலசுப்பிரமணியக்கடவுள் ஊங்கா
ரித்த வலிக்கஞ்சிக் கண்டிக்கப்பட்ட அவையவங்கள்தோ
ற்றமல் அடங்கியகாரணத்தை அவுணராசன்கண்டு திடு
க்கிட்டுமிகவும் வருந்திச் சிறந்தமந்திரங்களைப்பெற்றுஅ
தனுற்பெறும்பேறுகளை அனுபவித்திருந்த ஒருவன்தெ
ய்வவல்லபத்தினுல் அதனையிகழ்ந்து சோருகின்றவனைப்
போலத் திகைத்துமனம்வருந்தி மானமுங்கோபமுந் தே
கத்தைவாட்டி யலைக்கத் துக்கசாகரத்தில் மூழ்கி யாதுந்
தோற்றமல் பிரமித்திருந்தனன், அவன்சோர்வைச்சண்
முகப்பெருமாள்கண்டிரங்கியிதனைச் சொல்லுவதாயினர்,
ஓ! அவுணர்பெருமானே? யிதனைக்கேட்பைபாகஅரியயா
கங்களைச்செய்து சிவபிரான் கடாட்ச வீட்சணியத்தினுல்
நீ! பெற்றிருந்த வரமுயற்சியில் நாம்பற்பலகாலம்கண்டி
த்துத்தள்ளிய சிரங்கரம்முளைத்து வந்ததைப்போல இக்
காலத்தி லெழாமலடங்கிய காரணமென்னேவருவிக்கபத்
தனப் படுகின்றனையோ அல்லது நீயிறந்தபின்பு தோற்ற
விருக்கின்றதோ சொல்லக்கடவாயென்று எமதிறைவன்
திருவாய்மலர்ந்த வாக்கியங்கள்சிங்கமுகன் செவிகளில்நா
ராசத்தைக்காய்ச்சி நுழைத்ததைப்போலச் சுறுக்கிடக் கே
ட்டமாத்திரத்தில்வடவைபைப்போலச்சீறி ஓ! பாலகனே
கரங்களையும் சிரங்களையுங்கண்டித்தனமென்று அகந்தை
கொள்ளவேண்டாம் என்வலியின்திறங்களும் வீரபராக்
கிரமமுயற்சிகளும் உனக்கெவ்வளவுந் தெரியாது மகா
விஷ்ணுமுதலிய தேவர்களறிவர் ஒருதலையையும் இரண்
டுகரங்களையும் பெற்றிருக்கின்ற நாம் அண்டபுவனசராச
ரங்களனைத்தையும் நிமைப்போதி லழிக்கவல்லோம் அ
தையும் நீயேகண்டு பிரமிக்கப் போகின்றனை அதற்குள்
ளே கர்விக்கவேண்டாமெனக் கொக்கரித்துப்பாய்ந்து மே
ருவையொத்த பருத்தமலையொன்றைப் பறித்துக் குமார

சுவாமியின்மேற் றுரிதமாய்வீசினன், அதுவரும் வேகத்
தை பிரமனுக்குப் பிரணவப்பொருளை விளக்கியகுமரகு
ருபரன் கண்டுதிருநகைகொண்டு அதிகதீட்சணியமுள்ள
பாணமொன்றையெடுத்து வில்லிற் சந்தித்துப் போக்கித்
துகள்படக்கண்டித்த காலையிற்சிங்கமுகனுக்குஅதிககோ
பம்பிறந்து தட்சணத்தில் நிலத்திற்கிடக்கின்றதன்கரத்தி
ற் பற்றியிருந்தபாரித்ததண்டாயுதத்தைப் பறித்துக்கொ
ண்டு ஓ! சிறுபிள்ளாய் வில்லைவளைத்துப்பாணங்களைத்தூ
ண்டுவதும் வேலாயுதத்தைப் பிரயோகிப்பதுங் கற்றதல்
லாமல் வேறொருசண்டைகளைச் செய்யத் தெரிந்தவனல்
லைபோற்காணுகின்றதென் றிகழ்ச்சியாகப்பேசி மூலகார
ணராகிய வேலாயுதர்மீது சுழற்றிவீசினன், அவன்மதியா
மற்பேசிய வாக்கியத்தைக்கேட்ட மாத்திரத்தில் சரவண
பவனுக்குச்சற்றுக் கோபமுண்டாய்த்தமது திருக்கரத்தி
ற் கோடிசூரியப்பிரகாசமாக ஜ்வலித்துக்கொண்டிருக்கி
ன்ற வெற்றிவேலாயுதத்தின்மீது விழிகளைப்பரப்பி வஞ்
சகனுயிரையுண்டுமீளக் கடவாயெனக் கட்டளையிட்டுச்செ
லுத்தியபோது அதிகவுக்கிரத்துடன்வெளிப்பட்டவுடன்
வடவையும் ஆலகாலமு மஞ்சத்தக்கதாகச் சீறிப்பாய்ந்து
பிரசண்ட மாருதத்தைப்போல இரைந்து மணிகள்கலிக்
கவேகமாய் மேலிட்டுவரும் தண்டாயுதத்தைச் சாம்பலா
க்கிப் பறக்கடித்துருத்து வயிரமலையினிடத்திற் பிரளய
காலத்தெழும் இடியானது விழுமாறுபோலச் சூரபதும
ன் தம்பியாகிய சிங்கமுகாசுரன் வலிபெற்றமார்பிற்ருக்கி
த் தடாரித்துருவிப் பிராணனை கிரகித்துக்கொண்டு உதி
ரமானதுபீரிட்டோட முதுகின்மூலமாக வெளிப்பட்டுப்
போயது, உடனே அவுணராசன்பிரளயமேகத்தைப்போ
ல ஓவென்னும் இரைச்சலைக்காட்டிக் கதறி உதிரம்பிரவா
கமாயோடப் பெருங்காற்றிற்பட்டுவேரற்றுவிழும்வடவா
லவிருட்சத்தைப்போல நிலம்பிளக்கத்தக்கதாகத்திடீலெ
ன்று விழுந்துபதைபதைத்து வலியும்வீரமு மொடுங்கி
ஆவியையிழந்து மாண்டனன்.

இவ்விதமாகச் சிங்கமுகாசுரனைப் பிளந்துதள்ளிய வெ
ற்றிவேலாயுதமானது துரிதமாய் வானத்தெழுந்துஆகாய
கங்கையிற்படிந்து பரிசுத்தமாய் தேவர்களிறைக்கின்றப
ஞ்சதருக்களினது புஷ்பமாரியில் மூழ்கிமகரந்தங்கள் ப
டிந்து கமமெனத் திசைத்திசைகளினும் பரிமளிக்கத்தக்
கதாக மீண்டுசங்கத்திற் றலைமையெய்திஇயலிசை நாடக
மென்னும் முத்தமிழைப்பரிபாலனஞ்செய்தருளியகுமா
ரதேவர் திருக்கரத்தில்ஜ்வலித்துக்கொண்டிருந்தது, இந்
தவெற்றியை மகாவிஷ்ணு, பிரமன், இந்திரன்முதலாகிய
தேவர்கள் கண்டவுடன் களிசிறந்து தேகபரவசராய்ஜயஜ
யவெனப் போற்றி ஆனந்தநடனங்களைச்செய்துருகன்பெ
ருமிதங்களைக் கொண்டாடி நகைமுகராய்ப் பஞ்சகற்பக
ப்புதியமலர்களை ஏராளமாகச்சேகரித்துத் திருவடிகளிற்
சொரிந்து அஷ்டாங்க பஞ்சாங்க திரியாங்க ஏகாங்கமாக
ப் பணிந்தெழுந்து பாலசுந்தரன் திருக்கோலத்தை விழி
கள் களிக்கத்தரிசித்துக் கரங்களைக்கூப்பி விம்மிதராய்நி
ன்கின்ற தேவர்கூட்டங்களின்மீது கிருபாநோக்கம் பாலி
த்து ஓ விண்ணவர்களே அவுணராஜனும் மற்ற சேனைய
ரும் மாண்டுபோய் விட்டார்கள் எதிர்ப்பவரொருவருமி
ல்லை மேலும் அந்திக்காலமும் நெருங்குகின்றதினுற்பாச
றைக்குப் போகவேண்டுமெனத் திருவாய் மலர்ந்தவுடன்
வீரவாகு தேவர் கட்டளையின்படிக்கு ஜயபேரி வெற்றிச்
சங்கம், எக்காளை, திநச்சின்னமாதியமங்கள வாத்தியங்க
ளைப்பலகோடி பூதவீரர்கள் முழக்கிவரச் சேனைகளைத்தி
ருப்பி இலக்ஷர், எண்மர், படைத்தலைவர்கள் நாற்புறங்க
ளினுங் காத்துச்செல்லுகின்ற காலையில் பிரமனுதிய தே
வர்கள் சூழ்ந்துபோற்றிவரக் குமாரதேவர் தமது திருத்
தேரினிடத்தில்ஞானசூரியனைப்போலநடுநாயகமாக விள
ங்கிச் சமர்க்களவெல்லையைக்கடந்து பொன்னுலகமும்நா
ணும்படிக்குச் சோடித்திருக்கின்ற பாசறையைச்சேர்ந்து
இரதத்தை விட்டிறங்கித் தமதாலயத்திற்போய் நவரத்தி
னமயமாகப் பரந்திருக்கும் சபாமண்டபமுகப்பிற் சிரோ
ரத்தின விதங்களினுற் சோடித்துவிளங்கும் சிங்காதனத்
திற் சிவபிரானைப்போல வீற்றிருந்தனர், மகாவிஷ்ணு,
பிரமன், இந்திரன், ஜயசாலியாகிய வீரவாகுதேவர்எண்
மர்இலக்ஷர்முதலாகிய பிரமுகாளும் தத்தமக்குரிய பீட
ங்களிற் சபைமுற்றினும் நெருங்கிக் களித்திருந்தார்கள்

அத்தருணத்தில் இந்திரன் மற்றதேவர்கள் கொண்ட
மகிழ்ச்சியின் பெருக்கை யின்னவிதமெனச்சொல்லிமுடி
யாது இவ்வித ஜயப்பிரதாபத்துடன் வெற்றிவேலாயுதக்
கடவுளானவர் தேவர்களனைவருடனும் பாசறையைச்சே
ர்ந்தபின்பு சிவகுமாரனுடன் வாதாடிக் கண்டதுண்டமா
கவெட்டுண்டு உதிரச்சேற்றில் விழுந்து நாய் நரி-கழுகு-
காக்கை முதலிய பறவைகள் பிடுங்கித்தின்னச் சிங்கமுக
ன்பட்டிறந்தகோலத்தைத் தெரிந்த விராட்சதத் தூதர்க
ள் வாயினும் வயிற்றினும் விழிகளினும் அறைந்துகொ
ண்டு கண்களில் நீரைப்பெருக்கிக் கோடுகோடெனப்புல
ம்பி வாயுவேகத்தினு மேலிட்டோடி வீரமாமயேந்திரபு
ரத்தைச் சேர்வதன்முன்னம் நவரத்தினமயமாகியகோபு
ரத்தின்மேல் நிலையில் வீற்றிருந்து தன்துணைவன்செய்கி
ன்ற போர்த்தொழிலைக் கண்டிருந்தவன் திடுக்கிட்டு வெ
குநேரமாகப் பகைவருடன் போராடிவந்த காரணத்தினு
ற் களைத்துவிழுந்தானே அல்லது மாண்டானே யாதுந்
தோற்றவில்லையேயென்று மதிமயங்கித்திகைத்து விழிக
ளைமூடாமல் பார்த்திருக்கின்ற வேளையில் தூதர்கள்அத்
தலத்தைச்சேர்ந்து சூரனைக்கண்டமாத்திரத்தில் அருவி
யைப்போல விழிகளில் நீரைப்பெருக்கி ஓவெனப் புலம்
பி அடியற்ற பனையைப்போலச் சக்கிரவர்த்தியினதுபாத
ங்களில் விழுந்துவாயெழாமற் சற்றுநேரங் குளறிக்கடை
யிலிதனை விண்ணப்பஞ்செய்வதாயினர், இராஜராஜப் பி
ரபுடகனே யென்ன சொல்லப்போகிறோம்தேவரீர்துணை
வன் ஜயசாலியாகிய சிங்கமுகாசுரன் பலவெள்ளம்இராட்
சதப்படைகளுடனும்போய்ச் சமர்க்களத்திலெதிர்த்த வீ
ரவாகுமுதலானவர்களைச் சின்னபின்னப்பட வாட்டிக் க
டையில் பாசத்தினுற்பிணித்துஉதையகிரியிற்சேர்த்தசே
தியைத்தெரிந்து பாலசுப்பிரமணியன்சிலபூதப்படைகளு
டன் வந்து போராடுகின்ற காலத்தில் உமதுசகோதரனுல்
அப்பாலகன் பட்டகேட்டைச்சொல்லி முடியாதுமற்றபூ
தர்களனைவரையும் வாரிவாரிவாயிற்போட்டு வயிற்றை நி
ரப்பியகாலையிற் சிவகுமாரன் பகைத்துத் தன்சேனைகளை
வெளிப்படுத்தி உதயகிரியிற் பட்டிருந்தவர்களையும் ஒரு
கணையைச் செலுத்தித் தருவித்துக்கொண்டு ஜயசாலியா
ய்ச் சிங்கமுகனை வளைத்துக்கொண்டு கொடியபோரைச்

செய்து கிரவுஞ்சவரையைப்பிளந்தவெற்றிவேலினற்கண்டதுண்டப்படவெட்டிக்கொன்று இராட்சதசேனைகளேயும் தும்சப்படுத்திப்போட்டவனுய் வெற்றியுடன் துணைவன் முதலானவர்கள் சூழ்ந்துபோற்றப் பாசறையைச்சேர்ந்து களித்திருக்கின்றனனெனச்சொல்லியசேதி செவிகளில் விஷத்தைப்போலநுழைந்தமாத்திரத்தில் மனந்திடுக்கிட்டுத் துயரவெப்பமானது தேகத்தைக்கொளுத்தப் புழுங்கி மயிர்க்கால்கள்தோறும் சுவாலைவீசித்தகிக்க விழிகளில் நீர்ப்பெருக்கற்றுஉதிரம்பாயவாய்புலர்ந்துசுவாசமெழுந்தோறும் புகைப்படலமும் வெப்பமுந்தோற்றச்சோர்ந்து பதைபதைத்துவருந்தி நோயிற்பட்டு வாடுகின்றவன் அதனைத்தணித்துக்கொள்ளும்பொருட்டு அக்கினியையுண்டதைப்போலக் களைத்துவிழுந்து கடகடெனப்புரண்டு நிலைதெரியாமல்வழுவிக் குண்டாகரணம்போட்டுருண்டுவந்து விழிகளில்நின்றும் பெருகியோடும்புனற்பெருக்கிற் புவனங்களனைத்தினும் கொண்டாடவல்லமகத்துவங்களைவாய்ந்த திருக்காஞ்சிப்பதியிலெழுந்தருளியிருக்கின்ற காமாட்சியம்மை ஆலயத்தில்நின்றுங் குளத்தினிடத்திற் கருமாறப்பாய்ச்சல் பாய்பவர்களைப்போல விழுந்து துக்கசாகரத்திலாழ்ந்து சத்தமேகங்களுமொருமைப்படக்கர்ஜிப்பதுக் கொப்பாகக்கதறிக் கரங்களைத்தட்டி நிலத்திலறைந்து திகைத்துமதிமயங்கிப் பழைமையாகப்பெற்றிருந்த வலியும் வீரமும் மானமும் மற்றுமுள்ள சிறப்புகளேயு மிழந்து விசனமென்னும் நீர்ச்சுழியிற்பட்டுத்தியங்கி யிவ்விதமாகப்பன்னிப்பன்னிப் புலம்புவதாயினன்.

ஓ! என்னையனே? என்னப்பனே என்னுசைத்துணைவனே தாருகாசுரனுக்குமூத்தகாளாய் ஓ! சிங்கமுகனே? தானவர் குலத்தைவிளக்கவந்தஅன்னையையும்பிதாவையையுமொத்தவனே தயையாயித்தினவரையில் என்னைப்பாதுகாத் திரட்சித்தகுமாரனேஉன்னையொத்த வீராதிவீரனையோ தூதரோடிவந்துமாண்டனனெனச்சொல்லுகின்றனர்ஆதியில்இந்திரனுதியதேவரனைவரையும்புறங்கண்டப்போர்முனையில்வென்றுதமியேனுக்கு வெற்றியைத்தந்தனைஅத்தகையஜயசாலியாகியநீயித்தினம்சமர்க்களத்திற்பாலகனுன்னைக்கொல்லவுமாயிற்றே நமக்குஞ்சிப்பணியும்இயமனும் உன்னரியபிராணனை பயமற்றுக்கொண்டு போகவு நேரிட்டதோ ஓதுணைவனே சண்டைகிடைத்ததெனக்கேட்பையாகில் தட்சணத்தில்மகிழ்ந்துபுயாசலங்கள்வானத்தையளாவப்பரித்துமேல்நடந்துவாட்டும் வீரபராக்கிரமசம்பன்னனேஉன்பிராணனையிழந்தாணக்களத்திற்பட்டனையென்னும்சேதியைப்பிரமன்-விஷ்ணு-இந்திரனுதியதேவர்கள்கேள்விப்படுவாராயின்பழையபடிக்குமனவெழுச்சிபெற்றுப்பயப்பிராந்தியற்றுச்சலனமின்றித்தமதுபதவிகளிற்சேர்ந்து சவுக்கியத்தைப்பெற்றுவாழ்ந்து தலைவைத்துப் படார்களோஎன்னுசைத்துணைவனேபொன்னைப்புவியை மங்கையரைப் புத்திரர்முதலிய சிறந்த பொருள்களை யிழந்தவன்ஒருகாலம்வேண்டினுல்அவைகளைச் சுலபமாகச் சம்பாதித்து மகிழலாகும்அப்பாதம்பி உன்னையொத்த தீரனை யிப்பிறப்பில் இன்னமொருதரம் கிடைத்து மகிழுங்காலமும் நேரப்பெறவல்லனே அய்யனேஅதற்கேதேனும் ஏதுவிருக்குமாகில்விரைவில்வந்து சொல்லிப்போகக்கடவை மேலும் சத்துருக்களென்னும் மதயானைக்கூட்டங்களுக்கு வீரபராக்கிரமத்தைப் படைத்திருக்கின்ற வலியசிங்கத்தையொத்த திண்ணியனேஓசிங்கமுகனே நீ வீரசொர்க்கத்திற்சேர்ந்தனையெனச்சொல்லுகின்றனர் அத்தலத்திற் போயிருக்கின்ற வெற்றிமாலைபுரளும் விசாலமாகிய மார்பைப்பெற்ற தாருகனையும்பானுகோபன் முதலிய புத்திரவருக்கங்களையும் மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர் மன்ன மண்டலீகர் பந்துக்கள் சினேகிதர்முதலானவர்களெதிர்கொள்ளக்கண்டு அவர்கள்போற்றிச் சூழக்களித்திருக்கின்றனையோ அந்தவாழ்விலழுந்தி யிருக்கின்ற நீயினியொருகாலிவ்விடம்வந்து என் துயரத்தை யாற்றுவது அரிதரிது ஓ துணைவனேஉன்னைப்பறிகொடுத்து யாதொருதுணையு மின்றிப் பரதவிக்கின்ற துன்பத்தைநீக்கித் தயிரியங்களைச்சொல்லித்தேற்றமனமிரங்காயோ உன்னைப்பிதாவைப்போலவும் பிள்ளையையொப்பவும் நம்பியிருக்கின்ற என்னைச்சுத்தமாய் மறந்து விடலாகுமோ ஓ தம்பிசிங்கமுகனேதிரிலோகங்களினும் புகழ்ந்து கொண்டாடத்தக்கதாக இதுபரியந்தம் என்னுடன் கலந்துவாழ்ந்திருந்த செஞ்சோற்றுக் கடனைக் கழித்துக் கீர்த்திபரனுய்மேலும் ஒருகர்ப்பத்தில் உற்பவித்தவர்கள் செய்யவல்ல கடனையும்முடித்துவிண்ணுட்டைச் சேர்ந்தனையோ பலஅண்டங்களினும் அடங்கியிருந்த பிராணிகளையலைத்து வெற்றிபரனுய்த் திரும்பிவரும் உன்சேவகத்திறங்களைக்கண்டு மகிழத்தக்க செல்வச்சம்பத்தினை யிப்பாதகன்பெறுமலடங்குங்காலமும்நேருவதோ அப்பாசிங்கமுகனே உன்னையென்னவிதமாய்நினைந்து வந்தனனெனக் கேட்பையாகில்என்மனதுக்கிசைந்ததுணைவனுகவும் ஆருயிராகவும் உணர்வாகவும் நெருங்கிய சுற்றமாகவும் அம்மையப்பனுகவும், எனக்குப்பிற்காலம்அரிதாகத்தேடியிருக்கின்ற ஆயிரத்தெட்டண்டங்களையும் பரிபாலனஞ்செய்யவல்ல சக்கிரவர்த்தியாகவும் சிவபிரானிரங்கிவந்து சகலசெல்வங்களையுந் தந்துபோகத் தக்கதாக யான்அருமையாக முடித்த தவங்களாகவும் மற்றுமிராநின்ற சகலவளங்களுக்குங்காரணம் உன்னையன்றி வேறில்லையெனநம்பி உன்னையேபிராணபதமாக வெண்ணியிருந்தேன் ஐயனே யிந்த உறுதிகளைச்சற்றும்நினையாமல் உன்னுசைத் தமையனைநீங்கியிந்த மகதயிஸ்வரியச் செல்வத்தை வெறுத்துத் தெய்வலோகபோகத்தினிடத் திச்சைகொண்டு தனித்துப்போய் அவ்வாழ்வைத்தனிமையிலனுபவிக்கவுங் கற்றனையோ ஓதுணைவனே நமது சகோதரன் தாருகனிறந்தசேதியைத் தெரிந்தமாத்திரத்தில் ஒருபுயத்தைப் போக்கினவனைப்போல வலிகுன்றி வாடிய யான் உன்வீரபராக்கிரமங்களைக்கண்டுதேரிக் களித்திருந்தனன், அத்தகைய நான் இவ்வித ஜயப்பிரதாபசாலியாகிய ஓ சிங்கமுகனே நீமாண்டனையென்னுஞ் சேதிதெரிந்த வுடன்மற்றையபுயமும் வலியும்வீரமும்மானமும்பிராணன்முதலிய சர்வவளங்களையும் போக்கினவனுய்பிரேதத்தினும் கடைப்பட்டுத் திகைக்கின்றேன், ஓ துணைவனே உனது திருமுகமண்டலப் பொலிவை இனிஎக்காலத்திற் காணப்பெறுவேன் என்னன்பே தோழனே தம்பியின்னமுமொருகாலம் நீவந்துஎன்னுடன் கலந்துபேசும் பாக்கியத்தையும் பெறவல்லனே உன்னையொத்ததீரனுகியகுமாரன் மாண்டனனென்னுஞ்சேதியைநம்மை அரிதிற் பெற்றதாயாகிய மாயைதெரிவளாயின் என்னபாடு படுவாளோ தமியேனைஎவ்விதங்களில் நிந்திப்பாளோயாதுந் தோற்றவில்லையே யென்று இவ்விதங்களாகத் தான்பெற்

நிருக்கின்ற அண்டங்களனைத்தும் செவிடுபடத்தக்கதாகக் கோவென்றரற்று மோசையைப் பலகாலம் வாடியிருந்த மகாவிஷ்ணுவும், பிரமனும்,இந்திரனும்மற்றவிண்ணவரும் செவிக்கமுதமாக மனங்குளிரக்கேட்டு இத்தினம் நமதுகுறைபாடுகளனைத்தும் நீங்கினமெனக் களித்துச்சந்தோஷமிகுதியினாற்கரங்களைக்கொட்டி அண்டங்கள்நடுங்க ஆர்ப்பரித்துத் தேகங்குலுங்க நகைத்தனர்.

கேட்டீர்களோ! சவுனகாதிதவத்தரோ? இவ்விதமாகஅரியதுக்கசாகரத்தி லழுந்திக்கோடுகோடெனப்புலம்புகின்ற இராஜாதிராஜனைத் தேற்றவல்லவ ரொருவரு மில்லாமையால் வெகுநேரம் வாடிவருந்தியசூரபதுமன்தானே ஒருவகையாக அச்சோபத்தையொழித்துச் சற்றுதெளிவுண்டா யெழுந்து மெல்லமெல்ல நடந்து சபாமண்டபத்தைச்சேர்ந்து சொர்னமயமாய்ச் சிரோரத்தினகாந்திகளை வீசிக்கொண்டிருக்கும் சிங்காதனத்தில் வீற்றிருந்து மானமுங் கோபமும் மனதைவாட்ட நல்லகாரியம் என்பிராணனையொத்த துணைவனைக்கொன்ற சிவகுமாரனுடன்நானேபோயெதிர்த்துச் சண்டை கொடுக்கின்றேன் என்று சோபமுற்றினும் நீங்கித் தேகம்புழுங்கி வடவைக்கனலையொப்பச் சீறினன், சவுனகாதிரிஷிகளே? அத்தருணத்தில் சூரனுக்குண்டான அகங்காரத்தை இன்னவிதமெனச் சொல்லிமுடிவதோ பின்பு சூரன்நடத்தியகாரணங்களைக் கேட்பீரென்று சூதபுராணிகர் பேசத்தொடங்கினர்.

## சூரபதுமன்வதைப்படலம்.

கொற்றவேற்படைபரித்திடுமாயிரகோடி
யொற்றர்தங்களைநோக்கியேசூரனாமுரவோன்
மற்றெனாட்சியாமண்டங்களெங்கணும்வைகிச்
சுற்றுதானையைத்தம்பினோகடிதெனச்சொன்னான்.

இவ்விதமாக ஆயிரத்தெட்டண்டங்களுக்கும்அதிபனாகிய சூரன்கோபங்கொண்டபோது கொவ்வைக்கனியைப்போல விழிகள்சிவந்து அனற்பொறிகள் சிதற ஆழித்தீயைப்போலச்சீறி விழிகளைப்பரப்பிப்பக்கத்திற்கரங்களைக்கூப்பிச் சருவாயுதபாணிகளாக நிற்கின்றவேகமுள்ள ஆயிரகோடி தூதரைப்பார்த்து நமதுகுடைநிழலிற்பட்டிருக்கின்ற அண்டங்கடோறும் வாசமாயிருக்கும்இரதகஜதுரக பதாதிகளையும் துரிதமாய் அழைத்துவாக் கடவீர்களென்று கட்டளையிட்ட மாத்திரத்தில்இராஜபரமேஸ்வரன் பாதாரவிந்தங்களிற் பணிந்துவெளிவந்து வாயுவேகத்தினுங் கடுகியோடிப் பொன்னையொப்பப் பிரகாசித்திருக்கும் அண்டங்களில் நுழைந்து அத்தலங்களில் வாசஞ்செய்திருக்கின்ற சேனாதிபதிகளைக்கண்டு அரசன்பணித்தகாரணங்களைத் தெரிவித்தவுடன் சண்டை கிடைத்ததென்கிற மனமகிழ்ச்சியினாற் பருவதாகிருதியாகிய புஜங்கள் பூரித்துவானையளாவத் தட்சணத்தில் யானைகளின்மேல் பிரயாணபேரிகைகளை யேற்றிமுழக்கிவைத்தவோசையானது செவிகளில் நுழைந்தவுடன் மனவெழுச்சிபெற்றவீராதிவீரராகிய கால்பலங்கள் சருவாயுதபாணிகளாய்ப் போர்க்கோலத்தைத் தாங்கியும்சொர்னமயமாகியதேர்க்காரரும் நீலகிரியையொத்த யானைச்சேவகரும்தத்தித்தாவும் குதிரைவீரரும்கூடிக் கணக்கிறந்த வெள்ளக்கணக்கில் வெளிப்பட்டகாலையில் அவர்களுக்குத்தலைவராகவிருக்கின்ற அவுணராஜர்கள் நீண்டவிற்களைத்தாங்கித் தவங்களைச்செய்து பெற்றிருக்கின்ற பற்பலதேவப்படைகள் நிறைந்திருக்கும் புட்டில்களை முதுகிலிறுக்கி தோமரம், பிண்டிபாலம், சூலம், வச்சிரம்,சக்கரமுதலியபடைகளைப்பரித்துவயிரக்கவசங்களைத்தரித்துவீரபட்டங்களையணிந்து வெற்றிமாலைகளை நவரத்தினமயமாக விளங்கும் கிரீடங்களிற் சூட்டிவீரகண்டைகளை வலியகால்களிலிறுக்கிச் சொர்னமயமாயோங்கி யிருக்கும் தேர்களில் ஆரோகணித்துத் தமது சேனைகளைப்போற்றி நடக்கின்ற காலையில் ரணபேரி, ஜயபேரி, வெற்றிச்சங்கம், எக்காளை சின்னம், தப்பட்டை, சல்லரிதிமிலை தக்கைமுதலிய போர்ப்பறைகள் கணகணெனமுழங்கவும் சந்திரவட்டக்குடைகள் வானத்தை மூடவும் துவசபடங்கள் மேலோங்கிப்படபடென் றசைந்து காட்டவும் இவ்வித ஆடம்பரங்களுடன் சென்று ஆதியி லேற்படுத்தி யிருக்கின்ற அண்டப் பித்திகை வாயில்களின் மூலமாக வெளிப்பட்டு வருவதைப் பார்க்குமிடத்தில் எப்படிக்கிருந்ததெனில் முன்னொருகாலம் பிரமனுறங்கி விழித்ததினப் பிரளயமுடிவிற்சராசரப்பிரபஞ்சங்களைப் படைத்து அகந்தையுற்ற காரணத்தினாற் சாமளமேக வண்ணராகிய ஸ்ரீமகாவிஷ்ணுபகைத்துப் பிரமன் கருவபரிகாரமாகும் பொருட்டுச் சீவராசிகளனைத்தையும் உண்டுமீட்டும் உந்திக்கமல மூலமாக வெளியிட்டதைப் போன்றும் சருவசங்காரகாலங் கழிந்தவுடன் தானேதானாக நின்ற தற்பரக்கடவுளாகியசிவபிரான் தம்மிடத்தடங்கிய அண்டாண்டபுவன சராசரங்களனைத்தையும் மீளவெளியிடத்திருவுளத் தெண்ணித்தமது திருவடிகளி னிடமாகப் பிருதிவு அப்பு-தேயு-வாயு- ஆகாயமென்னும் பஞ்சபூதங்களைப்படைத்து அவற்றின்சம்பந்தப்பட்ட எறும்புமுதல் யானையீறாகச்செல்லாநின்ற எண்பத்து நான்குலட்சம் சீவபேதங்களையும் அண்ட புவனங்கள் விதங்களையும் சிருஷ்டித்து வேதாகமதருமசாத்திரமாதிய கலைகளையும் வெளியிட்டதற் கொப்பாகவுந் தோற்றத் தக்கதாகச் சகல அண்டநிரைகளி னிடத்திருந்தும் ஜயசாலிகளாகிய இராட்சதவீரர்களும்மலைபோலத் தோற்றும் தேரணிகளும் நீலகிரியையொத்த மதயானைக்கூட்டங்களும் பகைவர் மீதுபாயும்வேகமும் சூரமுமுள்ள குதிரைப்பெருக்குகளும் கணக்கிறந்த காய்காற்றிசையினும் நின்று வீரமாமயேந்திர புரியை நெருங்கவரமுன்னிலையில் எழுந்த தூளிபடலப்பெருக்கினாலும் கொடுமையினாலும் ஆயிரகிரண சமோகங்களை விரித்துலகங்களை விளக்கிவரும் சூரியபகவான் தன்வெப்பமடங்கிக் காந்திமழுங்கியோடவும் அக்கினிதேவன்நடுநடுங்கிச்சுவாலைமங்கிப் பதுங்கவும் சதுரங்கபலன்களும் மண்விண்ணெங்கும் அடர்ந்துவரும் நெருக்கத்தினால் சருவசாதாரணமாயெங்குமுலாவிவரும் வாயுதேவன் சஞ்சரிக்கவிடங்கிடையாமற் சரீரம்வெம்பிப் புழுங்கி வியர்த்தலையவும் இதுவுமல்லாமல் அவுணப்பதாதிகள் ஆரவாரங்களும்தேர்கள்கற்காத்தொனியைச் செய்தோடும் அதிர்ச்சியும் மதயானைகள் வீறிடுமொலியும் புரவிப்பந்திகள் கனைப்பினோசையும் ஏகமாய்ப்பெருத்த உற்பாதங்களுக்குத் தாளமாட்டாமல் அகிலங்கள் கிடுகிடென் றசைந்து அதிற்பட்டவையனைத்தும் பட்டகேட்டைச் சொல்லிமுடிவதோ மேலும் இராட்சதர் கரியதேகத்தி னொளியின் பெருக்கினால்

வானக முதலியஅஷ்டதிசைகளினும்காடாந்தகாரமாகிய விருள்மூடிச் சீவராசிகளனைத்தும் விழிகள்மயங்கிக் குருடாயொப்ப அலையவும மண்மாரி பெய்வதற்குச் சமமாகப்பரவிய துகளானது சத்தசாகரங்களையும் தூர்த்ததால் அலைகளோய்ந்து பெருக்கடங்கவும் அக்காலத்திலுண்டாகிய ஆரவாரங்களினால் அண்டப்பித்திகை வெடித்துவிட்டுதிரவும் இவ்விதவுற்பாதங்கள் பெருகநாற்சேனைகளும்பிரளயப் பெருக்கினுமேலிட்டுவந்து கூடுகின்றதைத் தேவர்கள் கண்டமாத்திரத்திற் றேகங்கள்நடுநடுங்கி மனம் பதைத்து நிற்கவும்பயந்து ஓடியொளிக்கவும் இடங்கிடையாமற் றிகைத்துவாடினர்.

அக்காலத்தில் அவர்களுக்குத் தலைவனாகிய இந்திரன் இறந்தவர்களுக்கொப்பாக மதிமயங்கி ஸ்மரணையற்றுக்கலைத்து என்னவுற்பாதம் விளைய விருக்கின்றதோ வென்னும் ஏக்கத்தினால் பிரமித்துப் பார்த்திருந்தனன், உபேந்திரனும் பிரமதேவனும் மருண்டுஅம்மம்ம இதென்ன புதுமை நமதுப்படைப்பினு மேலிட்டுக்காட்டுகின்றதால் நமக்கென்னகேடு முடியவிருக்கின்றதோ வென்று சங்கையுற்றிருக்கவும் மண்ணின் றிசாதிசைகள் சாகரவெல்லைகள் அஷ்டகுலாசலங்கள்முதலிய பருவதப்பரப்புகள் வனங்கள் வனாந்தரங்கள் பாதலவிரிவுகள் மற்றுமிராநின்ற தலங்களெங்கணும் இராட்சதவெள்ளங்களும் ரதகஜதுரகங்களும் எள்ளிடவிடமில்லாமல் அடர்ந்து வெள்ளிடையின்றி வருகின்றபடைகள் மகாவிஷ்ணு வாசஞ்செய்யும் ஸ்ரீவைகுந்தநகரத்தினும் பிரமன்பதியாகிய மனோவதிமுற்றும் நாற்பத்தெண்ணாயிரம்இருஷிகள் வீற்றிருக்கின்ற பதங்களினும் முப்பத்துமுக்கோடி தேவர்களிருக்கும் நகரங்கள் இந்திரனுக்கு இராஜதானியாகவிளங்கும் பொன்னுலகமுற்றும் மற்றகின்னரர் கிம்புருடர்- கருடகாந்தருவர்-சித்தவித்தியாதரர்-பன்னகர்-உவணர்-நாகர்- ஏகாதசவுருத்திரர் துவாதசாதித்தர்கள் முதலானவர்கள்அமர்ந்திருக்கின்றபதங்களினும் சூரியர்சந்திரர்முதலிய நவக்கிரகங்களோடுங் கதிகளினும் சத்தபிலங்களினும் மற்றுமிராநின்ற விடங்களெங்கணும் அடர்ந்துபோவதற்கிடமின்றி நெக்கரித்துநின்றது, கேட்டீர்களோ, சவுனகாதிரிஷிகளே, மேற்குறித்த அண்டகோடிகளினின்றும் பெருகிவரும் சதுரங்கசேனைகளின் றூசிப்படைகள் நூறுகோடி யோசனைப்பரப்பில் அடர்ந்துவருகின்றதெனச் சொல்லுவோமாகிற் றுணையணிகளின் பெருக்கத்தையும் அவற்றின்பெருமிதங்களையும் எத்தகையராலுங் கணித்துப்பேசப்படுவதன்று மேலும் குறுகிய உயிர்வாழ்க்கையைப் பெற்றிருக்கின்ற சக்கிரவர்த்திகள் ராஜாராஜாக்கள் குறுமன்னர்காதியர் படைத்தசேனைகளின் பெருக்கத்தைப் போலச் சூரபதுமன் பெற்றிருக்கின்ற சதுரங்கவெள்ளங்களின் விரிவைக்கணித்துப் பேசுவதற்குச் சிற்றறிவையுடையரால் மதிக்கப்படுவதோ அல்லது கணிதசாத்திரப் பிரகரணங்களிற்குறித்திருக்கின்ற தொகைகளிற்படாதெனவெனச் சொல்லுவோமாயின் அச்சேனைகளின் பெருக்கத்தை விதானிக்கவும் போதுமோ உவமானக்குறிப்பினாலாவது பேசமுடிவதன்று முந்திப்பெருகிய தூசிப்படையானது வீரமகேந்திரபுரியெல்லை முற்றினும்நெருங்கி யிடமில்லாமல்செய்து இந்தவண்டத்தின் பரப்பெங்கும் [illegible] காரணத்தினால் அத்திலெழுந்த நால்வகைச்சயின்னியங்களின் பெருக்கை என்போலிகளாற்கணித்துக்காட்டமுடிவதோ.

இவ்வித உற்பாதங்களைக்காட்டிச்சேர்ந்து வருகின்றகாலையில் தூதர்கள வாயுவேகத்தினுங் கடுகியோடித் திருச்சபையைச்சேர்ந்து சூரபதுமன் பாதாரவிந்தங்களிற் பணிந்து இராஜாதிராஜனே தேவரீர் கட்டளையின்படிக்கு மேலண்டங்களிலிருந்து வருகின்ற சேனைகளின்பெருக்கானது இப்பட்டண நாற்பாங்கினும் இடமின்றித் தேங்குகின்றது மேலும் முன்னணிமுழுமையுஞ் சேர்வதற்கிடம்பெறாமல் வானவெல்லைமுற்றும் அடர்ந்துநிற்கின்றதென விண்ணப்பஞ்செய்தகாலையிற் சூரபதுமன்களித்து நல்லகாரியம் இனிதாமசப்படலாகாதென்றெண்ணிச சொர்ணமயமாய் இரத்தினகாந்தியை வீசிக்கொண்டிருக்கும் சிங்காதனத்தை விட்டிறங்கி வெளிவந்து தன்னரண்மனையைச்சேர்ந்து நீராடிப் பரிசுத்தனாய்க்காலைக்கடன்களைமுடித்துக்கொண்டுபிரகாசம்பொருந்தியநுதலிற்றிருநீறணிந்தவனாய்ப்போசனச்சாலைக்குப்போய்ப் பரிசனர் திரண்டுபரப்பியநவரத்தினமயமாகியபீடத்தில் வீற்றிருந்துவிசாலமாயிருக்கின்ற சொர்னக்கலத்தினுங் கிண்ணங்களினும் கைப்பு-தித்திப்பு-புளிப்பு-உவர்ப்பு-துவர்ப்பு கார்ப்பு-இவ்வித அறுவகைச்சுவைகளினாற்செய்யப்பட்டமெல்லல் தின்னல்-விழுங்கல்-நக்கல் பருகல் - என்னும் ஐவகையுண்டியைப்பாகமாகவும்சுவைமிகுதிபெறவும்போக்கியமுள்ளதாகவும் செய்திருக்கின்றஅன்னமுதலியபதார்த்தங்களைப்படைத்து உபசரித்தூட்டத் திருப்தியாகப்பொசித்தனன், இவ்விதமாகத் தின்றெழுந்துகைகால் சுத்திசெய்துகொண்டவனாய் மற்றொருமண்டபத்திற்பரப்பியிருந்தசிங்காதனத்தில் வீற்றிருந்து ஸ்ரீகந்தத்தேய்வையை தேகமெங்கும்பூசி புனுகுசவ்வாதுமுதலிய கலவைச்சாந்துகளையணிந்து திவ்வியசுகந்தங்களைவீசும் பாரிசாதமலர்களினாற் சோடித்திருக்கின்ற சரங்களைச்சிகையினும்மார்பினும்சாத்தி முன்னந்தரித்திருந்த வஸ்திராபரணங்களைமாற்றி விலையுயர்ந்த பொன்னுடையையுடுத்துச்சிரோரத்தினவகைகளினாற் சோடித்திராநின்ற வயிரமுடியைச்சூரியன் உதையகிரியிற் காட்டுமாறுபோலச் சிரத்திலணிந்து வாகுவலையங்களைப் புயங்களிற்சேர்த்து மற்றையஆபரணங்களை மனதுக்கிசைந்தபடிக்குத் தரித்துக்கொண்டு வெளிவந்து ஆயுதச்சாலையைச்சேர்ந்து வீரபட்டத்தை நெற்றியிற்றரித்து வெற்றிமாலையை மகுடத்திற்சுற்றி வயிரக்கவசத்தை அழகிய திருமார்பிற்சேர்த்து மந்தரத்தையொப்ப விளங்கும்வில்லைத் தொழுதெடுத்துத் தோளில்மாட்டி அட்சயத்தூணியை முதுகிலிருக்கி வீரவாளாயுதத்தை யிடையிற்செருகிப் பரமசிவமளித்த பாசுபதாஸ்திரம் மற்றதேவர்கள் தந்ததெய்வப்படைகளைப் பரித்து வெளிவந்தவனாய்ப் பக்கங்களிற் காத்திருக்கின்ற காரியப்பேரைக்குறித்துச் சகலாயுதங்களும்நிறைந்துஉறுதிபெற்றிருக்கின்ற ஆயிரகோடிசேமத்தேர்களை முஸ்திப்புசெய்யும்படிக்குக் கட்டளையிட்டபின்பு பரமன்படைத்துக் கொடுத்திருக்கின்ற கேடுபடாத இந்திரஞாலத்தேரையும் சிங்கவாகனத்தையும் முந்திக்கொண்டுபோகும்படிக்குப்பணித்து எதிரில்நிற்கின்றதேர்ப்பாகனைப்பார்த்துப் பலவிதசிறப்புகளைக் கொண்டிருக்கும் தமதுதேரைக்கொண்டு வரும்படிக்குத் திட்டஞ்செய்தமாத்திரத்தில் அவர்கள்சேர்த்தோடி நவரத்தினமயமாய் வானத்தி

னையளாவும் உன்னதமுள்ளதாய்ப் பொன்வண்டில்- அச்சு-மச்சு-குத்துக்கால்-கொடுங்கை குடைமுதலிய சிறப்புகளைப்பெற்றிருக்கின்ற பாரித்ததேரை அலங்கரித்துயானைகளுக்குவயிரியாய் மிருகங்களுக்கரசாகவிருக்கின்றவீரசிங்கங்களெழுபதினாயிரத்தையும் வேகமுள்ள எழுபதினாயிரம் புரவிக்கூட்டங்களையும் எழுபதினாயிரம் பூதவினங்களையும் எழுபதினாயிரம் புலிக்கூட்டங்களையும் சீர்படுத்தி அணியணியாகப்பூட்டி மற்றஅலங்காரங்களையும் சோடித்தனர்.

சவுனகாதிதவத்தரோ அந்தமகத்துவமுள்ள இரதத்தின்பெருமையையும் வரலாற்றையும் சொல்லக்கேட்பீராக, பூமண்டலத்தெல்லையினும் பரந்தவிடத்தைப்பெற்றதாய் ஊழிகாலத்தெழும் சத்தசாகரங்களினும்மேலிட்டுக்கற்கரத்தோனிகளைச்செய்தோட வல்லதாய்ப் பற்பலபுவனங்களைக்கொண்டிருக்கும் ஆயிரகோடி அண்டங்களையுந்தன்னிடத்திற்பரிக்கவல்ல வலியினைப்பெற்றதாய்ச் சிங்கத்துவசத்தைத் தாங்கியதாய்ச் சருவசங்காரகாலத்தெழும்பிரசண்டமாருதத்தினும் கடுகியோடும் வேகத்தைப்பெற்றதாய்த் தன்னிடத்திருக்கின்ற உருளைகள் கற்கரத்தோனியைச்செய்தோடு முன்னிலையில் எதிர்ப்பட்டபாரித்தபருவதங்களையும் பொடிபடுத்துந் திராணியுள்ளதாய்ச் சூரியன்வெப்பத்தையடக்கும் கொடிகுடைகளைப்பெற்றதாய்ச் சத்தசாகரங்களும் அதின்மத்தியிலிராநின்றதீவுகளும் அதைவளைந்திருக்கும் பெரும்புறக்கடலும் அதைச்சூழநிற்கும் சக்கிரவாளகிரியும் அணிபடவிளங்குவதைப்போலப் பொன்னினாலும் நவரத்தினவகைகளினாலும் சோடித்திராநின்ற சித்திரப்பாவைகள் டக்கையங்கள் மகரதோரணங்கள் மணிகள் விதங்களைப்படைத்துச் சொர்னப்பித்திகையைக் கொண்டுவிளங்கும் அண்டத்துக்கொப்பாகப் புடைபரந்திருக்கும் பெருமிதத்தைப்பெற்றதுதேவர்முதலிய சகலராலும்புகழ்ந்துபோற்றித்தொழும் சிறப்பினைப்படைத்துவாழும் சூரபதுமன் ஆதியிற்செய்தயாகத்தில் விழுந்திறந்து பரமசிவகடாட்சத்தினாலெழுந்தகாலத்தில் அவனுடன்வெளிவந்த மகிமையையுடையது மேலும் சமர்க்களத்தில் எதிர்த்தசத்துருக்கள் தமதுபடைப்பெருக்குடன் சின்னபின்னப்பட்டுப்புறந்தந்தோடச்சாடும் வெற்றிப்பாட்டைப் படைத்ததுபிரமனழியுங் கற்பாந்தத்தினும் நாசமடையாத நித்தியத்தைப்பெற்றது கணக்கிறந்த திவ்வியபாணங்களையும் ஆயுதவிதங்களையும்பரித்துத் தேவர்களுக்குள்ள சத்தியையுமுடையது முற்காலத்திற் சகலபேறுகளையுங் கடாட்சித்தசிவபிரான்நிருமித்துக்கொடுத்த இந்திரஞாலத்தேரையொத்தமகிமையைப்பெற்றதுமனத்தினால்அளந்துபுகழவொண்ணாத சுந்தரமிகுத்தது, இவ்விதமகிமைகளைப்படைத்திருக்கின்ற இரதத்தை அலங்கரித்துத் துரத்திவந்துஇராஜராஜேஸ்வரனாகிய சூரபதுமன்முன்னம்நிறுத்தியகாலத்திற் சிங்காசனைப்போலப்பாய்ந்து நடுப்பிரதேசத்தில்விளங்கும் உன்னதமுள்ள பீடத்தில் வீற்றிருந்தனன், அத்தருணத்தில் அவுணமுதியோர்கள் பலர்திரண்டு சக்ரேஸ்வரனை ஜயப்பிரதாபத்தைப்பெற்று வரக்கடவாயென்று பலவாழ்த்துகளைப்பேசி புஷ்பங்களை யிறைக்கவும் சுமங்கிலிமங்கையர்கள் பற்பல ஆலங்களைச்சுழற்றி நிற்கவம்பட்டுவர்புகழவும் வித்வஜனங்கள் பாமாலையைத்துதிக்கவும் புள்ளாங்குழல் திருச்சின்னம் வலம்புரிச்சங்கங்களைமுழக்கவும் இவ்விதசம்பிரமங்களை நடத்திவருகின்றகாலையில் சூரபதுமன்கட்டளையின்படிக்குப் பலசாரதிகள் கடிவாளக்கயிறுகளைக் கரங்களிற்பற்றிக்கொண்டு சவுக்கினைக்காட்டித் தேரைமுடுக்குகின்றகாலத்தில் ரணபேரி, ஜயபேரி, தப்பட்டை, துடுமு, சல்லரி, மல்லரி, எக்காளை, குடமுழவுமுதலிய பதினெண்வாத்தியங்களையும் கடையுகத்தெழும் சமுத்திரத்தினும் அதிகவோசையெழுத்தாம்தாமென முழக்கிப்போகவும் பலஅவுணவீரர்கள்வெண்சாமரை ஆலவட்டங்கள் அருகு பூச்சக்கிரக்குடைகள் துவசபடங்கள்முதலிய சின்னங்களைத்தாங்கி அசைத்துநடந்தனர், அஃதெப்படிக்கிருந்ததெனில் ஆயிரத்தெட்டண்டங்களையும் வெகுகாலமாய் அரசுசெலுத்திவரும் சூரன் ஆணையாக்கினைகளனைத்தும் மங்களகரமாகிய உருக்கொண்டு சூழ்ந்திருப்பதையொத்தது, தேர்வீரர்கள்குதிரைச்சேவகர் யானைச்சூரர்கள் பலநிறக்கவசங்களைத்தரித்துச் சருவாயுதபாணிகளாயிராநின்ற இராட்சதப்பிரமுகாளிருமருங்கினும்போற்றித்தொடரவும் இவ்விதஆடம்பரங்களுடன் நவரத்தினமயமாகிய மாடமாளிகைகள் உப்பரிகைகள் மண்டபங்கள் சித்திரக்கூடங்களாதியாக இருமருங்கினும் நெருங்கி விசாலமாய்நீண்டிருக்கின்ற இராஜவீதிகளைக்கடந்து மேருகிரிக்குச்சமமாக வானத்தையளாவிப் பலநிலைகளைப்பெற்றுச் சொர்னமயமாய் நவரத்தினக்காந்திகளைவீசியிருக்கும் வடபாரிசக்கோட்டை மதிலுக்கணியாக விளங்கும் கோபுரவாயிலைத்தாண்டி வெளிவந்த இராஜாதிராஜனைக் கண்டமாத்திரத்திற் பெரும்புறக்கடலைப்போல நெருங்கியிருந்தசயின்னியங்கள் சத்தசாகரங்களுங் கொதிப்பெடுத்தடங்கவும் அஷ்டதிசைகளும் செவிடுபட்டுச் சோரவும் வானாடுகள் திடுக்கிட்டஞ்சவும் நட்சத்திரங்கள் பலபலென்றுதிரவும் ஜயம்ஜயமென்றார்ப்பரித்துக் கடையுகத்திலெழும்வடவாமுகாக்கினிக்கொப்பாகவந்து சூழ்ந்துகொண்டனர்.

அப்பாதகர் சுமையைப்பரிக்கப்படாமையாற் பூமிதேவியானவள் தத்தளித்தேங்கவும் அதைத்தாங்கியிருக்கும் ஆதிசேஷன் விழிகள்பிதுங்கி ஆயிரம்பணாமகுடங்களினாலும் வலிகொண்டுதாங்கி நெளிந்து நெளிந்து வாடவுமாயிற்று, அத்தருணத்தில் பல்லாயிரகோடி யிராட்சதர்கள்யானைகளின்மீதினும் ஒட்டகங்களினிடத்தினும்புரவிகளின்மேலும்சகடங்களிலும் ரணபேரி,ஜயபேரி, பறை, குடமுழா, தட்டை,காகளம், சின்னம், எக்காளம், துந்துமி, தத்தாரி, முதலியபோர்ப்பறைகளை அண்டங்கள் திடுக்கிட்டுவாடும்படிக்கு முழக்கிப்போகவும் வீராதிவீரர்கள் கால்களிலணிந்திருக்கும் கண்டைகள் கலீன்கலீலெனச் சத்திக்குமோசையானது புவனங்களெங்கும் கடையுகவொலிக்கொப்பாக அதிரவும்இவ்விதஆடம்பரங்களுடன்நடக்கின்றசதுரங்கசேனைப் பெருக்கினிடத்திருந்தெழுந்த தூளிபடலமானது எப்படிக்குக்காட்டுவதெனில் கடையுகமுடிவிற் சத்தசாகரங்களையும்பருகிமேலெழும் வடவைக்கனலின்புகைப்படலத்தைப்போலத் தோற்றவும்இவையன்றியும்விண்ணகத்தும்மண்ணிடங்களினும் திசாதிசைகளினும் விசாலமாகப் பரந்திருக்கும் கடல்கடோறும்அடர்ந்துலவுவதைப்பார்க்குமிடத்திற் சோனைப்பருவத்திற்பின்பனித்தூவலுக்குச் சமமாகவிருந்தது. இவையன்றியும் இராஜமார்த்தாண்டனாகியசூரபதுமன் வாசஞ்செய்யும்

கெடிஸ்தலமாகிய வீரமாமயேந்திரபுரத்தின் வீதிகளில் அடர்ந்திருக்கும் நவரத்தினமயமாகிய மாடமாளிகைகள் கூடகோபுரங்கள்முதலிய தலங்களிற்பெருத்தெழும் அகிற்சந்தனாதி தூபங்கள் சுண்ணப்பொடிகளுடன்கலந்து போவ தெப்படிக்கிருக்கின்றதெனில் மேகசாலங்கள்சமுத்திரஜலத்தையுண்டு மின்னியெழுவதுக்கொப்பாக விளங்கவும் இவைநிற்கப் பருவதாகிருதியாக பாரித்ததேகத்தைப்படைத்து மும்மதங்களையும் அருவிகளைப்போலப் பெருக்கிச்செல்லும் யானைகளின்மீதினும் தேர்களின்சிகரங்களினும் இராட்சதவீரர்கரங்களினும் விளங்குகின்ற துவசபடாங்களசைவதை யோசிக்குமிடத்தில் மாரிக்காலத்திலிடைவிடாமற்சொரியும் திவலைகளினால் வருந்திப்பரந்தோடும் கொக்கினங்களைப்போலக்காட்டவும் அச்சேனைப்பெருக்கின்மத்தியில் கணக்கிறந்தசெம்பட்டுவெண்பட்டுக்குடைகள் காணப்படுவதைப் பார்க்கும்போது மண்ணிடம்போதாமல் விண்ணகத்தின் மார்க்கமாகச்செல்லும்பதாதிகளின்அடர்ப்பினாலும்துவசபடங்களின் பெருக்கினாலும் காடாந்தகாரமாகிய இருள்பெருத்து மூடியிருப்பதைச் சூரன்கண்டு தன்னாணையாக்கினையிலடக்கியிருக்கும் அண்டங்கடோறு மிராநின்ற சூரியசந்திரரைத்தருவித்து இருளைப்போக்கி வருவதாகநிறுத்தி யதைப்போலக்காட்டவும் இவ்வித அற்புதச்சிறப்புகளை விளைத்துச் சதுரங்க சேனைகளும் நெருங்கிப்பரந்து நடக்கும்போது புசபலபராக்கிரமசாலியாய் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபதியாய் வயிரதேகத்தைப் படைத்திருக்கின்ற சூரமகாராசன் சொர்னமயமா யிரத்தினகாந்திகளை வீசியிருக்கும் பாரித்ததெய்வீகத் தேரின்மீது நீலகிரியானது மேருவின்புறத்திற் றோற்றுமாறுபோலக் காட்ட நடுப்பிரதேசத்தில் நட்சத்திரக் கூட்டமத்தியிற் சோடசகலைகளைவாய்ந்தபூரணச்சந்திரோதயத்தைப்போலப் பலதிசையினும் விழிகளைப்பரப்பிச் சேனைகளின்வரிசைக்கிரமங்களைப் பார்வையிட்டுக்கொண்டு ரணக்களத்தைநோக்கிப்போகின்றகாலையில் தூசிப்படையானது சிவசுப்பிரமணியதேவர் வாசமாயிருக்கின்ற பாசறைவிடுதியைக் கீழ்மேலெங்கணும் வளைந்து கொண்ட போது கோடைகாலத்தில் மேகங்களானவை வானமெங்கணுமூடிப் பருத்ததிவலைகளை யிறைக்குமாறுபோலச் சூரன்முன்னணியில்வந்த நால்வகைச்சேனைகளும் சூழ்ந்தகாரணங்களைத் தேவர்கள் கண்டமாத்திரத்திற் றிடுக்கிட்டுஜையையோவிராட்சதப்பாதகர் நம்மவரனைவரையும் இவ்விதமாக மடக்கிக்கொண்டதைப் பார்க்குமிடத்தில் ஏதோசில கெடுதிக் கேதுவாகக் காணுகின்றதென்னும் பரிவினால்மனமிரங்கி விழிகளில் நீரைப்பெருக்கிப் புலம்புற்றுவாடித்திகைத்துப் பார்த்திருக்கவும் இச்சம்பவத்தைத்தெரிந்தஇந்திரன் பிரமித்துப்பாதக னென்னசெய்வாரோவென்னும் ஏக்கத்தினால்பதுங்க விடந்தேடவும் யுகாந்தமுடிவிற் சராசரப்பிரபஞ்சங்களைத் தகித்தொடுக்கவல்ல கொடுமையைப்படைத்திருக்கின்ற அக்கினிதேவனும் பிரசண்டவேகத்தைக்கொண்டிருக்கும் வாயுதேவனும் தங்கள்ஆற்றலடங்கிப் பதைபதைத்துத் தேகம்வெந்துவியர்த்தொடுங்கவும் சேனைத்தலைவர்கள் முற்பகல் சிங்கமுகனாற்பட்ட வருத்தங்களை நினைந்து நினைந்து இத்தருணத்திலென்னகெடுதிகள்நேரவிருக்கின்றதோவென்னும் பயப்பிராந்தியினால் தேகம் நடுக்குற்றுப் புழுங்கிவாடவும் பூதப்படைகள் ஆலகாலத்தைநேர்ந்த மன்னுயிரைப்போலப் பதைபதைத்து ஒருவர்முகங்களை யொருவர்பார்த்துக் கவலையிற்பட்டு மருண்டனர்.

சவுனகாதிரிஷிகளே? அத்தருணத்தில் சிவகணங்கள்பட்ட துக்கவருத்தங்களை யென்னென்றுசொல்லுவேன் தாபாக்கினியிற்பட்ட மிருகராசிகளைப்போல வுழன்றலைந்தனர், இவ்விதங்களாகச் சகலரும் தியங்கிமயங்கிமதிமருண்டு வாடுவதையும் புசபலபராக்கிரமசாலியாகிய சூரபதுமன் வரவையும் அவனுடன்செல்கின்ற சதுரங்க சேனைகளின் பெருக்கையும் மற்றகாரணங்க ளனைத்தையும், மகாவிஷ்ணு, பிரமன், திசைக்காவலர்முதலாயினர் தெரிந்து அதிகதுக்கசாகரத்திற்பட்டு வருந்தினவர்களாய் இனி தாழ்க்கலாகாதென்றெண்ணி அதிசீக்கிரத்திற்சண்முகப்பெருமாள் வீற்றிருக்கின்ற திருச்சபையைச்சேர்ந்து பெருமூச்சுகளைவீசித் தேகமுற்றும்வியர்க்கக் கர்த்தன்பாதாரவிந்தங்களிற் பணிந்தெழுந்தவர்களாய்க் கரங்களைக்கூப்பிக்கொண்டு இதனைவிண்ணப்பஞ்செய்வதாயினர், ஐயனே தேவரீர் சிங்கமுகனைவாட்டிய சேதியைக் கேட்டமாத்திரத்திற் சூரபதுமன் அதிகவீராவேசத்துடன் தன்குடை நிழலிற்பட்ட ஆயிரத்தெட்டண்டங்களினும் நெருங்கியிருந்த சதுரங்க சேனைப் பெருக்குகளையுந் தருவித்துக்கொண்டு அவர்களுடன்கலந்து தம்முடனெதிர்த்துப் போராடி வெற்றிபெற்றுப்போக நினைந்தவனாய் அதிகவுற்பாதங்கள் விளைப்பதாகப்பட்டணத்தைக்கடந்து வருகின்றனன், அதற்குமுன்னம் தூசிப்படையானது, நமதுபாசறைவிடுதியைச்சூழவளைந்து கொண்டனவென விண்ணப்பஞ்செய்த காரணங்களைத் திருச்செவிகளினேற்று சிறுநகைகொண்டு பன்னிருபுயாசலங்களைப்படைத்திருக்கின்ற எமதிறைவரானவர் தமதுபக்கத்திற் காத்திருக்கின்ற வாயுதேவன்மீதில் விழிகளைப்பரப்பியமாத்திரத்திற் கர்த்தன்திருவுளக்கருத்தைத் தெரிந்துகொண்டு துரிதமாகப்போய்த் தெய்வீகம்பொருந்தியதிருத்தேரை யலங்கரித்துப் புரவிகளையணிபடப்பூட்டித்தன்வருக்கத்தவருடன் உளுவுகோல்களைக் கரங்களிற் பற்றி வார்களைத்தாங்கி முன்னணியில் விளங்குகின்ற கீழ்த்தட்டில் வீற்றிருந்து கற்கரத்தொனிகளுடன் இரதத்தைத்துரத்திவந்துமுகவாயிலினிடத்தில்நிறுத்தி அறிக்கையிட்டமாத்திரத்திற்கடப்பமலர்மாலையையணிந்தகந்தசுவாமியார்சிரோரத்தினகாந்தியைவீசியிருக்கும் சிங்காதனத்தைவிட்டிறங்கிஎழுவாயுதம், வெற்றிவேலாயுதம், சூலம்,வச்சிராயுதம்மின்னலையொத்துவிளங்கும் வாளாயுதம்கேடயம், சக்கரம்,தண்டாயுதம்,தங்கக்கட்டுகள்பூண்டிருக்கும் வில், சரம், எறிவேல், இவ்விதச்சிறந்த படைகளைப்பன்னிருகரங்களிற்பரித்தனர், சவுனகாதிரிஷிகளே! தேவதேவோத்தமனாகிய சரவணபவன் திருக்குறிப்பின் வண்ணம் பணிவிடைகளைச் செய்யப்பெற்றதால் அவைகள் செய்தபாக்கியத்தை யின்னவிதமெனச் சொல்லிமுடிவதோ பின்பு பிரமன், விஷ்ணு, இந்திரன், முதலானவர்கள் சூழ்ந்துபோற்றச் சபாமண்டபத்தைக்கடந்து கோபுரவாயிலின்புறத்தில் வந்து சொர்னமயமாய் நிற்கின்ற தேரினிடத்திற் பாய்ந்து அரியணையில்வீற்றிருந்தகாட்சி எப்படிக்கிருந்ததெனிற் பூருவத்தில் துவாதசாதித்தர் மத்தியிற் சிவபிரான் தோற்றுநின்ற கோலத்துக்கொப்பாகக்காட்டியது.

அத்தருணத்தில் பராக்கிரம சாலியாகிய வீரவாகுதே
வர் மற்றதுணைவர் இலக்ஷர் படைத்தலைவர்களுஞ்சருவா
யுதபணிகளாய்த் தத்தமது வானங்களிற் சேர்ந்து கர்த்த
னைப் புடைசூழ்ந்துப் போற்றி நிற்குந்தருணத்தில் இவ்
வெழுச்சியைத்தெரிந்த இரண்டாயிரவெள்ளம் பூதப்ப
டைகளும் பிரளயகாலப் பெருக்கைப்போல இரைச்சலி
ட்டுக்கொண்டு வெளிவந்து திசைகளைத்தாவி யிருக்கின்ற
கிளைகளையுடைய மராமரங்கள் குலகிரிகளை யொத்தமலை
கள் இருப்புலக்கை வளைதடி, தண்டாயுதமுதலிய படை
களைத்தாங்கிக் குமாரதேவனைத்தொழுது பெரும்புறக்க
டலையொப்ப வளைந்து நடக்கின்ற காலையில்மகாவிஷ்ணு-
பிரமன்-இந்திரன்முதலானவர்கள் மனமகிச்சியுடன் தம
க்குரிய வாகனங்களிலேறி யிருமருங்கினுஞ்சூழ்ந்துபரிம
ளமிகுந்த பாரிசாதமலர்களைப் பாலசுப்பிரமணியர்மீ தி
றைத்து ஜயஜயவெனவாழ்த்தித் தொடர்ந்தனர், இவ்வித
ஆடம்பரங்களுடன் சருவசங்காரகாலத்திற் சராசரப்பிர
பஞ்சங்களனைத்தையும் தமது நுதல்விழிக்கனலில் மாற்
றவல்ல தமது தாதையைப்போலச்சத்தசாகரங்களும்பெ
ரும்புறக்கடலும் ஒன்றுபட்டுத் தேங்கிநிற்பதுக்கொப்பா
க எங்கணும் அடர்ந்து வீறியிருக்கும் இராட்சத சயி
ன்னியங்களின் மீதில் சண்முகதேவர் செல்லுகின்றகாலை
யிற் பூமண்டலம் வானவெல்லை திசாதிசைகளெங்குநெ
ருங்கி வீராவேசங்களுடன் ஆர்ப்பாட்டங்களைச்செய்துநி
ற்கின்ற அவுணப்பாதகர் நிலைகளையும் வீரத்தன்மைகளை
யும் கோரரூபங்களையும் மற்றகொடுமைகளையும் பூதப்ப
டைகள் கண்டமாத்திரத்தில்மனங்கலங்கி ஏங்கினவர்களா
ய்க் கூட்டங்கூட்டமாகச் சேர்ந்து இதனைப்பேசிக்கொள்
வதாயினர், உலகங்களைவாட்டிக்கொடுங்கோலினைச்செலு
த்திவரும் ஜயசாலியாகிய சூரபதுமன் பூருவத்திற் செய்
திருக்கின்ற தவங்களின் முயற்சியினாற் பெற்றிருக்கின்ற
ஆயிரத்தெட் டண்டங்களினு மிருந்த இராட்சதப்பாதக
ரனைவரும் திரண்டுவந்ததாகக் காண்கின்றதுஓரண்டத்தி
லிருப்பவர் இவ்விதமாக வானகம் வையகம் திசாதிசைக
ளெங்கணு நெருங்குவதரிதரிது மேலும் அவர்களிற்கண
க்கிறந்த வெள்ளம் மாண்டுபோயினர்.

மேலுமிந்த அவுணரைப் பார்க்குமிடத்தில் வரமுயற்
சிகளிற் சிறந்தவர்களாகவும் மாயவித்தைகளில்முக்கியரா
கவும் புசபல பராக்கிரம சம்பத்தைப் பெற்றவர்களாகவு
ம் பற்பலபோர்களைக் கடந்து கைகண்டவர்களாகவும்வலி
க்கொப்பற்றவராகவும் காண்கின்றனர், இதுவுமல்லாமற்
செம்பட்டமயிர் விளங்கும் அளவற்ற சிரங்களையும் பல
கரங்களையும் வலியகால்களையும் பெற்றுக் கோபமேகுடி
கொண்டிருக்கும் மனதையுடையவர்களாகவு மிருக்கின்ற
னர் இவர்கள்திறங்களையோசிக்குமிடத்தில் தெய்வலோக
வாசிகளாகிய விண்ணவர் புயவன்மையை யடக்கிச் சகல
செல்வங்களையும் பறித்துக்கொண்டு துக்கசாகரத்தி லழு
ந்திவாடப் பொருதுவென்ற சூரராகும்உலகங்களிற்சொ
ல்லாநின்ற கொடுமைகளனைத்துக்கும் வரம்பாகத்தோற்
றி மேகசாலங்கள் கடலிற்படிந்து நீரைப்பருகுமாறுபோ
லச் சீவராசிகளைக் கொன்றுதின்று உதிரபானஞ்செய்து
களிக்கும் கொடியசெய்கையை பெற்றவர்கள்சிருஷ்டிகர்த்
தராகிய பிரமதேவரொருகாலமெதிர்த்து வாதாடினும் பி
ன்னிடையாமற் பொருதுவெல்லுந் திறமுடையவர்கள் ய
மதருமராசன் அரசாட்சியைமாற்றி ஆயிரமிதழ்களை

யுடையபொற்றாமரைப் பீடத்தினராகிய பிரமதேவர்படை
ப்பையும் மாற்றும்வலி பெற்றவர்கள் பூமண்டலவெல்லை
யி லடங்கியிருக்கின்றமன்னுயிரனைத்தையும்கவளீகரமா
க விழுங்கியபோதினும் பசியடங்காத பருத்தபண்டியைப்ப
டைத்தவர்கள் அண்டவணிகளை அல்லோலகல்லோலப்ப
டுத்தும் வலியகரங்களைப் பெற்றவர்கள் உதிரத்தை யொ
ப்பச்சிவந்து எக்காலத்துந் தீப்பொறிகளையிறைத்துவரு
ம் சரிந்தகண்களைப் பெற்றவர்கள் மேலும் கடலைப்போ
ல விரிந்திருக்கும் பேழ்வாயையும் பெற்றவர்கள்சலனம
ற்ற ஜயப்பிரதாபங்களைக்கொண் டிருப்பவர்கள் கொலைக
ளவுகட்காமம்வஞ்சகமெனச் சொல்லும் பஞ்சமாபாதகங்
களுக்கு மாதுர்ஸ்தானமாக விருப்பவர் சூரியசந்திரர் த
ங்கள் கதியிற்போகுமுன்னிலையில் நடுநங்கி மெல்ல வுரா
ய்ந்துராய்ந்து போகத்தக்கதாய் வானத்தையளாவி நிற்கு
ஞ் சிரங்களைப்படைத்தவர்கள் சத்துருக்களெத்தகையரா
யினும் எதிர்த்தகாலத்தில் முன்வைத்தகாலைப் பின்வா
ங்காமற் சாடிக்கொல்லும் கொடுமையைப் படைத்தவர்க
ள் சூரன்குமாரன் அக்கினிமுகனைப்போலஎக்காலத்தினு
ம் சுவாலைவீசிக்கொண்டிருக்கும் பலமுகங்களைப் பெற்ற
வர்கள் இவ்வித பலகெடுதிகளை வாய்ந்திருக்கின்ற வீரப
ராக்கிரம சாலிகளாகிய அவுணர்களில் அளவற்றவர்தாரு
காசுரனைப்போல யானைமுகங்களைப் படைத்தவராகவும்ப
ற்பலர் வீரத்தன்மையைப்படைத்த புலிமுகங்களை வாய்
த்தவர்களாகவும் பலர் சிங்கமுகாசுரனைப்போலசிரங்களை
ப் படைத்தவர்களாகவும் விளங்குகின்றனர், இவர்கள் பு
சபலபராக்கிரமங்களை மதித்துப்பார்க்குமிடத்தில் மஹா
பலசாலிகளாகிய மதுகயிடவரையொப்பவும் சகலராலும்
புகழுங் கீர்த்திப்பிரதாபங்களைப் பெற்றிருந்த சுந்தோப
சுந்தரர்களுக்கொப்பாகவும் சிவபிரான்கோப வுருப்பெற்
றிருந்த வீரரில்வீரனாகியசலந்தரனைநிகர்த்தும்வலிக்கொ
ப்பற்ற மகிஷாசுரனுக்கிணையாகவும் விளங்குகின்றனர்.

அன்றியும் பாசுபதாஸ்திரத்தைப் படைத்திருக்கின்ற
வரனேகர் பிரமசரோருகத்தைப் பெற்றிருப்பவரனேகர்
பஞ்சாயுதபாணியாகியமகாவிஷ்ணுவினது திருநாமத்தை
க் கொண்டுவிளங்கும் தெய்வீகப்படையைப்பரித்தபாத
கர் பலர் வாயுவாஸ்திரம் வருணாஸ்திரம் அக்கினியாஸ்தி
ரம் மற்றைய திசைக்காவலர்முதலிய தேவர்கள் படைக
ளைப் படைத்திருப்பவர் பலர்இத்தகைய சிறந்தபாணங்க
ளைப் பெற்றிருக்கின்ற அவுணவீரரைக் கணக்கிறந்தவெ
ள்ளக் கணக்கிற்பட்டதாகச் சொல்லவேண்டுமல்லது மற்
றும்யாதொரு கணிதத்தினும்தொகைபடக்குறிப்பதரிதா
கும் இத்தகைய சூரர்களாகிய அவுணவீரரும் இரதபங்
திகளும் யானைக்கூட்டங்களும்- புரவியணிகளும் சேர்ந்
து மண்விண்திசைதீவுக ளெத்தலங்களினும் நெருங்கியி
டமில்லாமல் அந்தரத்தினும் அடர்ந்திருக்குமாயில் இவ
ர்களை நம்மாற்செய்யுந்தர மேதேனுமுண்டோஇத்தினவ
ரையில் இவ்வண்டத்திலிருந்த விராட்சதவீரர்களுடனெ
திர்த்துப் போராடிப்போராடிப் பலதரம் அடிபட்டு வா
டிவருந்தியிருக்கின்ற நாம் இக்காலத்தில்மேலண்டங்களி
னின்றும் பெருகிவருகின்ற பாதகரனைவரும் சேர்ந்து ஒ
ருமுகமாய்ச் சாடுவராயில்நம்மால்அவர்களுட னெதிர்க்
குந்தரமுண்டோமேலும் நாம்பிழைத்துப் போகும்ஏது
வாவதுண்டோ ஒருகாலம்அப்படிக்கு நினைப்போமாயின்
யு அஃதெப்படிக்கிருந்த தெனில் ஊழிகாலத்திற் பெருகு

கின்றசத்தசாகரங்களையும் அல்லோலகல்லோலப்படச்சடிக்கரைகளைக்கரைத்தொன்றுபடச்செய்யும் வேகமுள்ள ஆழிக்காற்றுனது ஆமணக்கினது கொல்லையிற்புகுந்தகாலத்தில் அவையெதிர்த்து நின்றாற்போலும், இவர்களில் ஒருசூரன் உரத்துப்பேசுவானாயின் நாமெல்லோரு மதிமருண்டுகைகாலொடிய வோடிப்பதுங்குவதற்கையமுமுண்டோ இருவீரர் சற்றேஉருத்துத் தாக்குவாரானல்நம்மவர்களிற் பிழைத்திருப்பவர்யாவரித்தகைய புசபலபராக்கிரமசாலிகளாகிய இவர்களனைவரும் ஏகமுகமாயெதிர்த்துச் சண்டைகொடுக்க நேர்வராயின் எதிரேறித்தடுக்குந் தயிரியம்பெற்றவர்கள் நம்மிலொருவரையுங்கண்டிலம் இக்காரணத்தினுல் வல்யினுக்கொப்பற்ற நமதுதலைவர்களும் மற்றவீரர்களும் ஒருகாலம் தீரத்துவத்தைக்கொண்டு எதிர்த்தபோதினும் கார்காலத்துமாரியைப்போல நெருங்கியிருக்கின்ற இராட்சதப்பாதகருடன் நிருவகித்துப் போராடுவது அரிதரிது அப்படிக்கிருப்பதால் அற்பமாகியமரங்களையும் மலைகளையும்கொண்டோ நாமிவ்வீரரை வெல்ல விருக்கின்றனம் மானத்தையெண்ணி நெருங்குவோமாயின் தட்சணத்தில் நமதுபிராணனை யிழக்கவரும் சதுரங்கசேனைகளும் உருத்துப் போராடுவராயின்யாமெல்லோரும் படாதபாடுகள்பட்டுச் சாம்பலாய் மங்குவதற்கையமுமுண்டோ சேனைத்தலைவர்கள் எண்மர், இலக்ஷர், பெருங்காற்றிற்பட்ட பூளைப்புட்பத்தைப்போலச் சின்னபின்னப் பட்டுப் பறக்கவரும் புசபலபராக்கிரமசாலியாகிய நமதிறைவன் வீரவாகுதேவர் மானம்பாதிக்கப் பின்னிடையாமற் சண்டைகொடுக்க நினைந்து போராடுவராயில் இது பரியந்தம் பெற்றிருக்கின்ற வெற்றிப்பாடுகளனைத்தையும் பறிகொடுத்துப் பங்கப்பட்டு மனம்வருந்துவார், இப்போது நாம்குறித்த வற்றில் எவ்வளவும் பிசகாது ஆதலால் வீராதிவீரராக விருக்கின்ற இவ்வசுரருடன் வெற்றிவேலாயுத மூர்த்தியல்லது எத்தகைய சூரர்களாலும் போராடக்கூடுமோ இவற்றை யோசித்துத் துரிதமாயோடியொளித்து இன்னமுஞ் சிலகாலம் பிழைத்திருக்க யத்தனப்படுவோமாயினும் பாதகர்விண்மண் திசைகளெங்கணும் எள்ளிடவிடமில்லாமல் அடர்ந்திருக்கின்றனர்.

மேலும் எக்காலத்துந் தீராதபழிச்சொற்களையும்பெறவிருப்போம் ஓ துணைவரோ யினியாதொரு எண்ணங்களையுங் கொள்ளாமல் தயிரியசாலிகளாய்க் கூடியவரையிற் சண்டைகொடுத் தொருகை பார்ப்பதே காரியமெனச்சகலரு மொருமித்தவர்களாய் மலைகள் விருட்சங்கள் மற்றப் படைகளைத் தாங்கித் தாங்களுமொரு வீரரைப்போலக் கெக்கலிகொட்டிக்கொண்டு சத்துருக்கள்மீதேறிநடந்தனர், அத்தருணத்தில் இவர்களுக்குத் தலைவராகவிருக்கின்ற வீரர்களும் இலக்ஷர், எண்மரும், வீரபராக்கிரம சாலியாகிய வீரவாகுதேவரும் தங்கள்இரதங்களைத்துரத்திவந்து சமீபித்தகாலையிற் கடையுகப் பெருக்கைப்போலச் சிருங்கநாதம் அட்டகாசங்களைச்செய்து கொண்டுவீறியிருக்கின்ற சூரபதுமன் சயின்னியங்களின்பரப்பையும்வீரத்தன்மைகளையும் மதித்து இகனைப்பேசிக் கொள்வதாயினர், இதுவரையினும் வந்தவந்தஇராட்சதப்பாதகரைப் பாலசுப்பிரமணியர் கடாட்சவீட்சணியத்தினுல் வாட்டிப் பெற்றிருக்கின்ற ஜயப்பிரதாபங்களையும்புயவலிமைகளையும் தயிரியத்தையுமிழந்து மனம்வருந்துங்காலமும் நேர்ந்ததோ இவர்கள் உக்கிரத்தைப் பார்க்குமிடத்திற் சற்றுப்பிதப்பைத் தனமுடையவராக விருப்பவரானல்உதைத்துக்கொண்டு மாண்டுபோவதற்குத் தடையிராதுஉருத்துப்போராடுமுன்னிலையில் உலகங்களென்ன பாடுபடுமோ வென்றுபிரமித்து நின்றனர், இவர்கள் செய்கைகளிப்படிக்கிருக்க இந்திரன் முதலாகிய தேவர்கள் அகிலவெல்லை முற்றினும் பெருத்தடர்ந்திருக்கின்ற இராட்சதப்படைகளின் மிகுதியையும் உத்தண்டங்களையும் பார்த்தவுடன் மனமுந்தேகமுந்திடுக்கிட்டு நடுநடுங்கப்பயந்துவண்டினங்கள் மொய்த்துப் பரிமளியாநின்ற திருத்துழாய் மாலைபுரளும் திருமுடியினையுடைய ஸ்ரீமகாவிஷ்ணுவை வணங்கி எமதிறைவனுகிய முருகப்பிரான்மீதுபகைத்து ஆயிரத்தெட்டண்டங்களினு மிராநின்ற இரதகஜதுரகபதாதிகளனைத்தும் போராட யத்தனித்திருக்கின்றதால்இவர்கள் பெருக்கைச் சண்டைமுனையில் வாதாடி செல்வதற்குப் பலயுகங்கள் செல்லும்போற் காண்கின்றது அப்படிக்கிருப்பதால் அவுணர்பெருமானுகியசூரபதுமனைவென்றிகொள்ளுங் காலமெப்போது நேரும் இராட்சதப்பாதகரென்னும் இராப்பொழுது கழிந்துதேவர்கள் சிறைநீங்கிமனவெழுச்சியும் முகமலர்ச்சியும் பெற்றுவாழும் முகாந்தரமு முண்டோ பொன்னுலகவாழ்வையும்கஜேந்திர சம்பத்தையும் பறிகொடுத்து நிலைபெறுமல் வாடிவருந்தும் மனவேக்கமும் தீருங்காலமும் நேராதோவெனப் பற்பலதுக்கவார்த்தைகளைச் சொல்லிச்சொல்லி முறையிட்டவர்களாய் ஓகர்த்தனே யிதற்கொருமுடிவைத் திருவுளம்பற்றவேண்டுமென்று பலவிதங்களில் முறையிட்டுப் போற்றுகின்ற காலையிற் சமுத்திர மத்தியில் விளங்கியிருந்த இலங்கைக்கதிபனுய்க் கொடுங்கோல்செலுத்தி வந்த இராவணனைக் குலநாசமடையக் கருவறுத்த இலட்சுமி மணவாளராகிய ஸ்ரீபரந்தாமன் விண்ணவர்படுந் துக்கவருத்தங்களுக் கிரங்கி இந்திரனைக் கிருபையாகப்பார்த்து ஓதேவராசனே பயங்கொள்ள வேண்டுவதில்லை தேவதேவோத்தமனுய் சுயஞ்சோதிவடிவாய் சருவஜீவதயாபரனுய் லோககாரணனுயெழுந்தருளியிருக்கின்ற அறுமுகவனுகிய குமாரதேவர்பெருமைகளையும் வீரபராக்கிரமவுத்தண்டங்களையும் எவ்வளவுந் தெரியாதவனைப் போலவாடுவதென்னை உனக்கு நேர்ந்திருக்கின்ற கிலேசத்தினுல் அவற்றினைச்சுத்தமாய் மறந்தனையாயினும்சிலவற்றைத் தெரிவிப்பேன் கேட்பையாக.

அக்குழந்தை வடிவேலன் காலமாகவும் விளங்குவான் அதைக்கடந்த பொருளாகவும் நிற்பான்சராசரப்பிரபஞ்சங்களைப் படைத்தும் அவற்றின் வினைகளுக்கடுத்த நன்குதீங்குகளை யூட்டி யாட்டியுறக்குங் காரண பூகமாகவுந் தோற்றுவான் அவற்றுட்படாமற் புறம்பிலு முலாவுவான் ரூபநாமக்கிரிகையாய் அண்டபுவனங்களையும்படைப்பான் அவற்றுட்படாமல் புளியினேட்டையொப்பவு முலவுவான் இராசத்தாமச சாத்துவிகமென்னும் முக்குணங்களாம் சிருஷ்டி திதிசங்காரந் திரோபவம் அனுக்கிரகமென்னும்பஞ்ச கிருத்தியங்களை நடாத்துங்காரணத்தினுல்உலகங்களையும் அவற்றுட்பட்டபிராணிகளையும்சிருஷ்டித்தும் ரட்சித்தும், சங்கரித்தும்,மயக்கியும், பேரானந்தசுகத்திலிருத்தியும் இவ்விததிருவிளையாடல்களைநடத்தியும் வருவான் தோற்றமொடுக்க மற்றவனுய்ச் சச்சிதானந்தச் சொரூபியாய்ப் பரவெளியிலும் நடித்திருப்பான்

மேலும் ஆயிரகோடி அண்டங்களின் தொகைப்படவும்
விளங்குவான்.அவற்றினைக்கடந்ததற்பரமூர்த்தியாகவுங்கா
ட்டுவோன் இவ்வித திருநடனங்களைச்செய்தும் அநாதியாக
விருந்து பிரமாதியனைவருக்கும் மூலகாரணக் கடவுளாக
த் தோற்றும் பரவஸ்துவானது சண்முகங்களையும் பன்
னிரு புயாசலங்களையுங் கொண்டெழுந்தருளியது, ஓதே
வராஜனே யிதற்குத் திஷ்டாந்தரமாகக்குன்றுகடோறும்
திருவிளையாடல்களைச் செய்துவருங் குமாரதேவர்முன்ன
ம் மகம்மேரு பருவதத்தின்மீது உங்களுக்கெதிரிற் பால
கனுகக்காட்டி நீங்கள் கொண்டிருந்த மருட்சியைப்போக்
கியிரட்சிக்கத் திருவுளத்தெண்ணிக் கிருபாநிதியாதலால்
அண்டரண்டபுவனங்களும் அவற்றுட்பொருந்தியிருக்கு
ம்யானைமுதல்எறும்பீருகச்செல்லும்எண்பத்துநான்குல
ட்சம் சீவபேதங்களும் அசைவற்றபொருள்க ளனைத்து
மாய்த் திரிமூர்த்திகள்முதலாகிய தேவர்களனைவரையுந்த
மதகத்திற்காட்டி விசுவரூபங்கொண்டுநின்ற கிருபாநிதி
யின் பெருமைகளைநிசதரிசனையாகக்கண்டும் விழிகளார
த்தரிசித்துப்பேரின்பவாரியிற்பட்டுக்களித்தஉன்னையொ
த்தவன் அவன்மாய்கைக்குள்ளாய அந்தத்திவ்வியமங்கள
குணதிசயங்களை மறந்தனையோ ஓ இந்திரனே யின்னமு
ம் அத்தேவாதிதேவன் பெருமைகளைக் கேட்பையாகஆ
யிரமிதழ்களையுடைய பொற்றாமரைப் பீடத்தினனை பி
ரமனுய் அண்டபுவன சராசரங்களைச் சிருஷ்டிப்பான் உ
லகரட்சகனுகிய என்னுருவைத்தாங்கி அவற்றினைப்போ
ஷித்துப் பாதுகாப்பான் பரமசிவமாய்நின்று அவைகள
னைத்தையும்ஒடுக்கிச் சிலபகல்சுகாதீத இன்பங்களைப்பெ
ற்றுக்களிக்க விருத்துவான் சகலர்க்கும் சண்முகப்பெரு
மாளாகிய ஒருருவினைப்பெற்றுத் தோற்றக்காட்டுவதெப்
படிக்கிருக்கின்ற தெனின்வெளிப்பட்டுமறையும் மின்ன
ற்கொடிக்கொப்பாகும் இத்தகைய குணதிசயங்களைப்ப
டைத்துச் சருவமுந்தாமாகவிளங்குந் தேவனை நாம்முற்
பகல்செய்த தவப்பேற்றின் முயற்சியினுற் ரோற்றமாகத்
தரிசித்துப்போற்றி வருகின்றனம், இந்தத்தேவன் சொ
ரூபத்தினை யிப்படித்தென ஆதிநூலாகிய வேதாகமங்க
ளினுலும் துதிக்கப்படாது ஆதலால் நாம்பிரமிக்கும்படி
க்குச் சத்தசாகரங்களைப்போலப் பரந்திரைந்தடர்ந்து ம
ண்விண்ணெங்கணும் சூழ்ந்திருக்கின்றபகைவன் சதுர
ங்கவெள்ளங்களின் தொகையனைத்தையும் ஏயென்றெலி
க்கு மோசைமுடிவதன்முன்னம் சருவசங்காரகிருத்திய
த்தைப்போல நாசஞ்செய்யவல்லர் தேவராசனே யிவரை
ப்பாலகனென்றொரு போதுமெண்ணலாகாது சிவபிரான்
நினைப்பிற்றோற்றிய அண்டங்களெவற்றினும் பொருந்தி
யிருக்கின்ற ஜீவராசிகளனைத்திற்கும் காரணபூதமாக வி
ளங்கி நடிப்பிக்கும் பெருமையைப்படைத்தவராகும் நம
துமுன்னவர்களுடன் செய்ததவப்பேற்றினுற்றிருக்கயிலை
யைக்கடந்து இவ்விடமெழுந்தருளி யிவ்விதத் திருவிளை
யாடலைக் காட்டுகின்றன ரல்லது நூற்றெட்டு யுகங்களாக
ச் சகலரையும்வென்று கொடுங்கோல்செலுத்திவரும் சூ
ரபதுமன்முதலாகிய பகைவரை நாசஞ்செய்யத் திருவுள்
த்திற் பூர்த்தியாகக் கொள்ளுவாராயின் நிமைப்போதிற்
சிறுநகையினுல் வாட்டவல்லான் கோபக்கனலினுல் அழி
க்கமாட்டுவோன் சொல்வன்மையினுல் அதப்படுத்தும்சாம
ர்த்தியத்தையும்பெற்றவன் மேலும் பாலபருவத்துக்குரி
யசிறுவிளையாடலினுற் சாம்பலாக்குந்திறமுடையவன்.

இத்தகைய மகிமைகளைப்படைத்த குருபரனை யிவ்வி
தச்சிறப்பைப்பெற்றிருக்கின்றவனெனச் சொல்லவொண
ணுது ஒப்பற்ற நிர்மலமூர்த்தியினது மங்களகரமாகிய கு
ணுதிசயங்களை யாவராலின்னவிதமென்றறிந்து துதிக்கப்
படும் இவ்விதப்பெருமிதங்களைப் படைத்திருக்கின்றதே
வாதிதேவன் மகத்துவங்களைத் துதிக்கவும்போதுமோஇ
வையன்றியும் வீரவாகுதேவர் முதலாகிய நவவீரர் இல
க்ஷர் ஜயசாலிகளாகிய பூதவீரரைப் படைத்துணையாகக்
கூட்டிக்கொண்டு வெற்றிவேலாயுதமாகிய ஆயுதங்களைத்
தாங்கிச் சூரபதுமனுடன்போராடி அவுணர்வம்சநாசப்
படக் கொல்லவெழுந்தருளியதை யோசிக்குமிடத்தில்இ
துவுமொருதிருவிளையாடலாகும் ஓதேவராசனே யினிப
ற்பலவாக விசேஷித்துச் சொல்லவேண்டுவதில்லை பாலசு
ப்பிரமணியதேவர் சற்றுநேரத்தில் அண்டங்கள்முற்றி
னு மிருந்துவந்து நெருங்கியிருக்கின்ற ஜயசாலிகளாகிய
அவுணவீரர்முதலிய நால்வகைச்சேனைகளையும் அதம்ப
ண்ணி திருக்கரத்தில் விளங்கும் வெற்றிவேலாயுதத்தினு
ல் அகண்டமண்டலாதீஸ்வரனுகவிருக்கின்ற சூரபதும
னையும்வாட்டி. உங்களனைவரையும் பாதுகாத்திரட்சிப்பா
ர்இக்காரணங்களைக்குறித்து நீஎவ்வளவும்சந்தேகிக்கவே
ண்டுவதில்லை இப்போது நான்சொல்லிய வுண்மைகளைச்
சிலபோதில் திஷ்டாந்தமாகக்கண்டுகளிப்பாயென்று சே
ஷசயனத்தி லறிதுயிலமர்ந்த மகாவிஷ்ணுவானவர்இவ்வி
தங்களிற்பலஉறுதிகளைக்காட்டி இந்திரனுக்கு உற்சாக
முண்டாகும்படிக்குச் செய்தவராய் யுகப்பிரளயத்தைப்
போல ஆர்ப்பரித்துக்கொண்டு பூமண்டலம் வானவெல்
லைமுற்றினும் அடர்ந்திருக்கின்ற சூரன்சதுரங்க சேனை
ப்பெருக்கைக் குமாரதேவர் தும்சப்படுத்தும் விநோதங்
களைக் காணவேண்டுமென்று நினைந்தவராய் இந்திரனுதி
யதேவர்களுடன்வந்து சரவணபவனைச்சூழ்ந்தனர், இவர்
கள்கருத்தை எமதிறைவன்தெரிந்து சிறுநகைகொண்ட
வராய்ச் சண்டைக்காயுத்தப்பட்டு வருகின்றகாலையில்வா
னகமும் வையகமுமொன்றுபட இராட்சதப்படைகள்வீ
ராவேசங்களுடன் கெரக்கரித்துக்கொண்டு மேலிட்டுச் ச
ண்டைசெய்யத் தொடங்குமுன்னிலையில் முன்னமோடி
ப்பதுங்கியிருந்த பூதப்படைகள் சிவகுமாரன்வரவைத்
தெரிந்தமாத்திரத்திற் பலதிசையினுமிருந்துவந்துசேர்ந்
து அதிககெலிப்புடன் பகைவருடன்சற்றுநேரம்போரா
டித் தாபரித்துநிற்கக்கூடாமையால் முறிந்து பழையப
டிக்குப் பறந்துமறைந்தனர், அதைச்சேனைத்தலைவர்கள்
கண்டவுடன் மானமும்கோபமும் மனதைவாட்ட வுருத்
திராகாரமாகச் சீறியிராட்சதவீரருடனெதிர்த்துச் சோ
னைமாரியைப்போல பாணவிதங்களைப் பிரயோகித்தும்
வேல்-சூலம்-கப்பணம்-எழு-மழு - நாஞ்சில்-பிண்டிபால
ம்-தண்டாயுதமுதலிய ஆயுதவிதங்களை ஒன்றனந்தமாக
ச்செலுத்தியும் அகோர யுத்தங்களைச்செய்து செய்துயா
தொருபிரயோசனத்தையும் பெருமல் சத்துருக்கள்பேர
ருக்கஞ்சி மானமழிந்து மதிகெட்டு வீரபராக்கிரமங்கள
னைத்தையும் பறிகொடுத்துப்பின்னிட்டனர்.

இதைக்கண்டமாத்திரத்தில் வீரர்களாகிய இலக்ஷரும்
எண்மரும், அதிகவுக்கிரத்துடன் வடவைக்கனலைப்போ
லமண்டியெரிந்து சகலரும் ஒருமுகமாய்க்கவிந்து பாரி
த்தவிற்களை வட்டாகாரமாய் வளைத்து விஷத்தொவைய
லிட்டிருக்கின்ற பாணங்கள் கொடியசிலீமுகங்கள் அதிக

திட்சணியமுள்ள படைகள் தீயையிறைக்கவல்ல நாராசங்கள் மற்றுமிராநின்ற பாணவிதங்களைக் கரவேகமாகச் சோனைப்பெய்யலைப்போலப் பொழிந்தும் வச்சிராயுதம், சூலம், வேல், சக்கரம், இருப்புலக்கைகள் வளைதடியித்தகைய திவ்விய ஆயுதவகைகளைக் கணக்கிறந்ததாகக்கொட்டியும் சொல்லுதற்கரிய கொடியசண்டைகளைக்கொடுத்து மனமுந் தேகமும் வருந்திப்பகைவரைச் சற்றும் அசைக்கக்கூடாமல் அவர்களாற்படாத பாடுகளைப்பட்டுத் தியங்கிமயங்கி மானபங்கப்பட்டு மதிகெட்டு வசைமொழிக்கஞ்சாமல் மடங்கிப்போயினர், கேட்டீர்களோ? சவுனகாதிரிஷிகளே, யிவ்விதமாகத் தமதுதம்பியரும் இலக்ஷர்முதலிய பூதப்படைகளும்போராடிப் புறந்தந்துபோன அபஜயங்களனைத்தினையும்வீரவாகுதேவர்தெரிந்தமாத்திரத்தில் தம்மவர்கள்பட்டவருத்தங்களுக்கிரங்கிக் கோபமேலிட்டு வடவாமுகாக்கினியைப்போலப்பொங்கிபகைவர்முனையிற்கலந்து தங்கக்கட்டுகள்பூண்டு இருகுதைகளினும் மணிகள்தொங்கவிட்டுக் கவித்திருக்கின்ற பாரித்த காண்டீபத்தைநாட்டி வளைத்துநாரியைப்பிகிந்து பகைவர் பிரமிக்கத்தக்கதாக டங்காரசத்தத்தைக்காட்டி வயிரவூசிகளைப்போலக் கூர்மையாய்ப் பிரகாசிக்கும் அலகையுடைய திவ்விய பாணகோடிகளைச் சந்தித்துக் கோடைகாலவருஷத்தினும் மேலிடத்தக்கதாகச் சரமாரியைச்சொரிந்துசொரிந்து அளவற்ற இராட்சதரைச் சிரங்களைக்கண்டித்துத் தள்ளியும் புசங்களை வெட்டியெறிந்தும் கரங்களைத்துண்டித்தும் வயிரகவசமணிந்திருக்கின்ற விசாலமாகிய மார்புகளைப்பிளந்தும் தடைகளைமுறித்தும் தேகங்களைச்சக்கைசக்கையாகப் பேர்த்தெறிந்தும் சல்லடைக்கண்களாகத் தொளைத்தும் சின்னபின்னப்பட வாட்டியும் சதைசதையாக அரிந்திறைத்தும் இவ்விதங்களாக அளவுபடாத விசாலமும் ஆழமுமுடைய ஆயிரகோடி சமுத்திரவெள்ளத்திலொரு மலைவிழுந்து கலக்குமாறுபோலச் சற்றுநேரம்சத்துருக்களுடனெதிர்த்துக் கூடியமட்டுஞ்சண்டைகொடுத்துக் கொடுத்துக் கைகால்களோய்ந்துவில்லுந்தளர்ந்தும் சேனைப்பெருக்கானது கிஞ்சித்தும் வற்றுதகாரணத்தைக்கண்டு பிரமித்தவராய்ப் பாதகரைவெல்ல நம்மால்முடிவதன்றென்றெண்ணி மனவாட்டத்துடன்திரும்பிப் பாலசுப்பிரமணியதேவ ரருகில்வந்து நின்றுவிட்டனர், அத்தருணத்திற் சூரபதுமன் சேனைத்தலைவர்கள் ஆலகாலவிஷத்தைப்போலச்சீறி நமக்காற்றுமற் பூதப்படைகளனைவரும் திசைகெட்டோடினர்,படைத்தலைவனும்பங்கப்பட்டுப்போனவிடமும் தெரியவில்லை மற்றவீரரும் பயப்பீதியினாற் பின்னிடைந்துபோயினர் இவ்விதமாக வீராதிவீரர்களாய் ஜயசாலிகளுமாகக்காண்கின்ற சகலரும் சின்னபின்னப்பட்டழிந்து போவாராயின் தண்டைசிலம்பு சத்திக்குஞ்சிறுகால்களைப்பெற்றிருக்கின்ற இந்தப்பாலகனே நம்முடனெதிர்க்க வல்லவனென்று ஏளனமாகப் பேசிக்கொண்டு மதச்செருக்கினாற் கணக்கிறந்த அவுணப்பாதகர் மேலிட்டுவந்து தண்டாயுதங்களைக் கிறுகிறெனச்சுழற்றிமோதியும் சக்கரங்களைக்கரகரெனச்சுலவிவிட்டும் சூலப்படைகளைக்குறித்துக்கடாவியும் பிண்டிபாலங்களைச் செலுத்தியும் இருப்புலக்கைகளை விட்டெறிந்தும் குந்தங்களைப்போக்கியும் நாஞ்சில்களையிறைத்தும் கப்பணங்களைப் பிரயோகித்தும் கவண்களில் பருத்தபருவதங்களைநிறுத்தி மண்டலாகாரமாகச் சுழற்றிவீசியும் இவ்வாறுபடைகள் விதங்களை அமோகமாகவீசியும் பருத்தவிற்களைவளைத்துநாணொலிகாட்டிக் கொடியசுடுசரங்களைச் சோனமாரியைப்போல இடைவிடாமலிறைத்தும் தேவாஸ்திரவிதங்களை மந்திரபூருவகமாகத் தூண்டியும் பாசங்களைவீசியும் மாயப்படைகளைச்செலுத்தியும் வீராவேசங்களினால் உலகங்களெங்கணுஞ் செவிடுபட ஆர்ப்பரித்துஞ் சிருங்கநாதங்கள் அட்டகாசங்களைச்செய்தும் இன்னமுமிராநின்ற பலகொடுமைகளையுங்காட்டி வாதாடுமுன்னிலையிற் றேவாதிதேவனாகிய குமாரதேவர் தமதுசயின்னியங்கள்முறிந்தோடியதையும் ஜயசாலியாகிய வீரவாகுதேவர் முதலாகியபடைத்தலைவர்கள் பகைவருடனெதிர்த்துப் போராடுங்கிரமத்றுத்திரும்பித் தம்மைச்சூழ்ந்துவாடி நிற்பதையும் சூரபதுமன் நால்வகைச்சேனைகளும் ஆலகாலவிஷமானது பெருகி உலகங்களனைத்தையும் வளைந்து கொண்டதைப்போல இரைச்சலிட்டுமேலேறிக் கொடியபோர்த்தொழிலை வெகுவெகு வேடிக்கையாகச்செய்து வீறிவரும் அதிசயங்களையுங்கண்டுதிரிநேத்திரதாரியாகிய தமதுபிதாவையொப்பச் சற்றுநகைத்து மகம்மேருவுக்குச் சமமாகவிளங்குகின்ற தமது பருத்தவில்லையெடுத்து நாட்டிவளைத்து நாணேற்றி நரம்பைத் தடவிக்கொடுத்து குணத்தொனி செய்தனர்.

அக்காலத்தெழுந்த பேரொலிக் காற்றுமல் வானத்தில்நின்று போர்வேடிக்கைகளைப் பார்த்திருந்த தேவரினங்கள்கின்னரர், கிம்புருடர், கருடகாந்தருவர்,மற்றஅந்தரவாசிகளனைவரும் இடிமுழக்கத்தைக்கேட்ட நாகங்களைப்போலத்திடுக்கிட்டுத் தேகங்கம்பிதப்பட்டு ஜலப்பிரவாகமாய் வியர்த்து மனவெழுச்சியற்றுத் தியங்கவும் புவனங்களிலிருக்கின்ற மன்னுயிரனைத்தும்பஞ்சேந்திரியநிலைகள்பிசகி விடமுண்டவர்களைப்போலச் சோர்ந்துகிடக்கவும் ஜயசாலிகளாய் வீறியிருந்த விராட்சதர்கள் செவிகளிற்பட்டமாத்திரத்திற் றிடுக்கிட்டு மனங்கலங்கி கரங்களிற்பற்றியிருந்த படைகளை நழுகவிட்டுக்களைத்துத் திப்பிரமைகொண்டவர்களாய் நிலைக்கண்பட்டுவெறித்துநிற்கவும் யானையணிகள் குலைகுலைந்து வீறிட்டு முற்காலத்தில் இந்திரன் வச்சிராயுதத்தினாற் சிறகரியுண்டுமறிந்தபருவதங்களைப்போல நிலத்தில்விழுந்துபுரளவும் தத்தித்தாவியிருந்த புரவிப்பந்திகளிடிகளையொப்பக்கனைத்துழன்றின்மீதொன்று விழுந்துஉதைத்துக்கொண்டுருளவும்வானத்தையளாவுகின்ற ரதசமோகங்கள் வட்டணையாகச்சுழன்றுசுழன்று ஒன்றுடனொன்றுதாக்கிச் சிதைபட்டுமங்கவும் இவ்விதமாக நால்வகைச்சேனைகளும் அல்லோலகல்லோலப்படுகின்றகாலையில் வேதங்களுக்காதியாகவிருக்கின்றசிறந்தகுடிலையின் நிச்சயங்களை அகஸ்தியருக்குக் குருமுகூர்த்தமாகநின்றுபோதித்த குமாரதேவர்உடனேகூர்மையாய்விஷங்களைக்கக்கி அதிகதிட்சணியமுள்ளபாணகோடிகளை ஊழிகாலத்தெழும் மேகங்கள்வருஷிப்பதைப்போல அமோகமாய்ப்பொழிகின்றபோது தீயையும் புகைப்படலங்களையும்வீசிச் சிடசிடென்றும் குறுகுறென்றும் இரைச்சலிட்டுக்கொண்டு மேலிட்டுச் சர்ப்பங்களைப்போலச்சீறி உருத்துப்பாய்ந்து பூமண்டலம் வானவெல்லை அஷ்டதிசைகள் மற்றபுவனங்களெங்கணும் நெருங்கி ஆரவாரித்திருந்த கணக்கிறந்த இராட்சதவெள்ளங்களையும் தேரணிகளையும் யானைக்கூட்டங்களையும்புரவிப்பெ

ருக்கையும் வளைந்துகொண்டு சத்தசாகரவெல்லையினும்
அவைகளினிடையிற்பட்டதீவுகளெங்கும் அடர்ந்திருக்கி
ன்றசேனைப்பெருக்கையும் சுற்றிச்சுற்றி வட்டணைவந்து
அதிவேகங்கொண்டு தாக்குகின்றகாலையில் படைத்தலை
வர்மீதினும் ஜயசாலியாகிய அவுணப்பிரமுகாள்மீதினும்
தேரணிகள் சிகரத்தினும் கவிந்திருக்கின்ற முத்தினங்க
ள் வெண்பட்டுசெம்பட்டு விதங்களினாற் சோடித்துக்கவி
த்திருந்த பலநிறக்குடைகளளவற்றதைக் கருலுமெனக்க
ண்டித்து மகம்மேருகிரியை வலம்வரும் சூரியசந்திரர்க
ளுக்கொப்பாகக் காற்றிற்பறக்கவீசியும் மதயானைகள்மீதி
னும் இராட்சதவீரர் கரங்களினும் தேர்ப்பரப்பி னிடங்
களினும் தோற்றுகின்ற வெற்றித்துவசங்கள்கொடிச்சீலை
களைவெட்டிச் சுழற்காற்றிற்பட்ட சரகுகளுக்கொப்பாக
இளைத்தும் வீராதிவீரர்களாய் பற்பலபோர்களிற் கைக
ண்டதீரராகவிருக்கின்ற கால்பலப்பெருக்கிற்புகுந்து சிவ
ந்தசிகையைவாய்ந்த சிரங்களைக்கண்டித்துப் பனங்காய்க
ளைப்போ லுருட்டியும் தோள்களைத் தறித்துத்தள்ளியும்
பெருவாயிலுக் கொப்பாக மார்பைப்பிளந்தும் வயிற்றை
ச்சரித்தும் வீரகண்டைகள்கலிக்கும் வலியகால்களைமுறி
த்துத்தள்ளியும் கண்டதுண்டமாகக் களத்திற்கிடத்தித்
தழைத்தோங்கிநிற்குந் தோப்பினிடத்திற் சூறாவளிபுகு
ந்ததைப்போலச் சின்னபின்னப்பட சாடியும் தேரணிக
ளிற்பாய்ந்து கற்கரத்தொனிகளைச் செய்தோடும் பொன்
வண்டிலையுருட்டி அச்சுகளைமுறித்து மச்சுகளைத்துகள்
படுத்திக் குத்துக்கால்களை நுறுக்கிப் பலகொத்துமணிக
ள் கலகலென்றசைய கொடுங்கைகளைச்சிதைத்துச் சொர்
ணகலசத்தை நிலத்தி லுருட்டிச் சிறகற்றபருவதங்களுக்
கொப்பாகக்குவித்துச் சாரதியைமாய்த்துப்பூட்டியிருந்த
புரவிப்பந்திகள் சிங்கநிரைகள் புலிக்கூட்டங்களைக் களத்
திற்கிடத்தி தேர்வீரரைவாட்டியும் மதயானைப்பெருக்கி
ற்றாவியிருபுறங்களினும் மாறியொலிக்கும்பருத்தமணிக
ளைக்கலகலென்றசைந்தோடத்தாக்கியும்நவரத்தினமயமா
கியசித்திரமுகபடாம் போர்த்திருக்கும் மத்தகத்தைச்ச
தைத்துமதவெள்ளத்திற்சேர்த்தும் இருப்புலக்கைகளைப்
பற்றிப்பனையையொத்தசையும்பருத்ததுதிக்கைகளைசர்ப்
பங்களைப்போலச்சமர்க்களமெங்கும்புரளத்தறித்துத்தள்
ளியும் நட்சத்திரராசிகளுக்கொப்பாகமுத்துகள்திசையெ
ங்குமிறையும்படிக்குத் தவளநிறம்பெற்ற வலியதந்தங்க
ளைப் பிளந்தும் சிறியவிழிகளைக் கல்லியெறிந்தும் மேகங்
களுமஞ்ச வீறிடுந்தொனியைப் பெற்ற பருத்தகழுத்தை
வெட்டியும் உரலைப்போன்ற பாரித்த கால்களைத்தறித்து
ம் அசைவுபெற்றிருக்கும் வால்களைத்துண்டித்தும் நீலகி
ரிக்கொப்பாக விளங்கும் கரியவுடலை யிருகூறாக்கிக் காள
மேகங்கள் வழுவியதுக்கொப்பாக வீறிட்டு விழத்தள்ளி
யும் சாத்திரவிலக்கணப் படிக்குப் பஞ்சலங்சணங்களுக்
குரிய சுழிசுத்தங்களிற் குறைவுபடாமல் அலைகளைப்போ
லத் தத்தித்தாவிப் பகைவர்மீதுபாயும் வேகமும் கோப
முமுடைய புரவிப்பந்திகளிற்கூடிப் பிடரிமயிரலையச் ச
த்துருக்கள் திடுக்கிடும் படிக்குக் கனைக்குங் குரலோசை
யை வாய்ந்த கழுத்தைத்தறித்துக் கடிவாளத்தைநுறுக்கி
நவரத்தின கசிதமாகவிருக்கின்ற சீனிகளைச் சிதைத்துச்
சாமரையையொத்தசையும் நீண்டவால்கள் காற்றிற்பறக்
கவெட்டியெறிந்து வண்டையங்கள் கல்கல்லுமெனக் கலி
க்கப்பாயும் கால்களை ஒருமுனையில் வெட்டிக் கடலினிட
த்தெழும் அலைகள் மறிவதைப்போலக் கிடத்தியும் அவ
ற்றின்மீதுருத்துநின்ற சேவகரைத்தேய்த்துவாட்டியும்இ
ப்படிக்குச் சதுரங்கசேனைகளைநாசஞ்செய்ததன்றியும்வீ
ராதிவீரர்களாய் புசபலபராக்கிரம சாலிகளாய் இயமனை
யும்பூசைகொள்ள வல்ல ஜயசாலிகளாகவிருக்கின்றபடை
த்தலைவர் சமோகங்களிற் பிரசண்டமாருதத்தைப்போல
நுழைந்து சிரத்திற் கவித்திருக்கின்ற வயிரமுடிகளைச் சி
தைத்து நவரத்தினங்களும் நட்சத்திர வினங்களைப்போ
ல எங்குமிறைந்து விளங்கக்காட்டி வீரபட்டத்தைத் து
கள்செய்து முத்தாரங்களைத்தாங்கிக் கல்லென் னுமோசை
யெழ வசனிக்கும் கழுத்தைக் கருலுமென்றறிந்துகொடு
மைகளைப்பேசும் வாயைப்பிளந்து பற்களையுதிர்த்துத் தீ
யெழவுருத்துப்பார்க்கும்கண்களைக்கல்லியெறிந்தும்மணி
களிட்டிழைத்திருக்கும் வாகுவலையங்களைப் பொடித்துப்
பருவதாகிருதியாக ஓங்கித்திரண்டுருண்டிருக்கும்தோள்
களைச்சரித்து வயிரக்கவசங்களைத்துகள்செய்துவிசாலமா
கிய மார்பைப்பிளந்து வில்லையும் பாணத்தையுங் கொண்
டிருக்கும் கரங்களையும் ஒருதாக்கலிற்கண்டித்துவீரகண்
டைகளையிறுக்கி விருஷபத்தைப்போலக் கம்பீரமாகநட
க்கும் கால்களைக்கண்டித்து முதுகிலிறுக்கியிருக்கும்அம்
புறாத்தூணியை அறுத்துத்தள்ளி பருத்திருக்கின்றசிறந்
தபடைகளைத் துகள்கண்டு வாட்டியதன்றி அவர்களேறி
யிருந்த வாகனங்களையும் பொடித்துப் புரவிகளை வெட்டி
ப் பாகனைக்கொன்று தும்சஞ்செய்யும் வேகமுள்ள குமா
ரதேவர்செலுத்தும் வாளிகளானவை ஒவ்வொன்று காற்
றினுங்கடுகிச்செல்லும் வேகத்தினால் அஷ்டகுலாசலங்க
ளையுருவித் திசையானைகளைத்தடாரித்துக்கொன்றும் வே
கமறாமல் அண்டகடாகவெளியினும் பாயுமெனச் சொல்
லுவோமாகில் சவுனகாதிரிஷிகளே! உதிரமாம்சச்சுமையி
னாற் பருத்திருக்கும் பகைதப்பிப்பிழைக்குந்தரமுமுண்
டோ.

இவையன்றியும் பாலசுப்பிரமணிய தேவர் தூண்டுங்
கொடியவாளிகளானவை அதிகவுயரத்தில் விளங்குகின்ற
தேவரினங்கள் வாசஞ்செய்திருக்கும் பொன்னுலகமேமு
தலிய பதங்களிற் சஞ்சரித்தும் பிரமன்பதியாகிய மனோ
வதிப் பட்டணத்தி லுலாவியும் விஷ்ணு வெழுந்தருளி
யிருக்கும் வைகுந்தநகரமெங்கும் மின்னலுக்கொப்பாகச்
சென்றும் அண்டவெல்லையிற்றிரிந்து தடாரித்துருவிமே
ல்நின்ற பரவெளியினுமோடிய தல்லாமல் திசைகளினு
ம் சத்தசாகரப்பரப்பினும் பெரும்புற வெல்லையினும் நி
றைந்து அதைச்சூழ்ந்திருக்கும் காடாந்தகாரமாகியஇரு
ட்பூமியில் அனலைவீசிப்பாய்ந்து கோடி சூரியப்பிரகாச
த்தைப்போல அதிகப்பிரகாசத்தினைக் காட்டியுலாவிப்பூ
மண்டலத்தை பிலவாயில்களுக் கொப்பாகப்பிளந்து அத
ன்மூலமாய்ச் சத்தபாதல முற்றினுந் துருவிப்பாய்ந்துஆ
திசேடனாதிய நாகர்கள் வாசஞ்செய்யுந் தலங்களினும்எள்
ளிடவிடமின்றி நெருங்கி யோடியது கேட்டீர்களோ! சவு
னகாதிதவத்தரே, அவற்றின் திறங்களையும் மகிமைகளை
யும் வீறாப்பையும் வெற்றிப்பாட்டினையும் என்னவென்
றுசொல்லிப் புகழப்போகின்றேன், இவ்விதங்களாகளத்
தலங்களினுங் குமாரதேவர்செலுத்திய தீட்சணியமுள்ள
பாணகோடிகள் அடர்ந்து பரந்தபோதினும் உலகங்களி
ற்பட்ட சகலபிராணிகளையும் அலைத்துக்கொன்றுவாட்டி
வரும்அவுணர்இராக்கதர்முதலிய கொடியசண்டாளரைச்

சின்னபின்னப்படக் கண்டித்து நாசப்படுத்துவ தன்றியும் மற்றதினராய் மெய்ப்பத்தியையடாத்தி வேதவொழுக்கங்களை யனுசரித்துவரும் முப்பத்துமுக்கோடிதேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் இருஷிகள் கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர்முதலிய வானநாட்டினரையும் பூமண்டலப்பரப்பிற்றங்கிய தருமசீலரையும் திக்குதிபாந்தர முற்றினு மிருப்பவரையும் நெருங்காமலும் யாதொரு துன்பங்களையும் செய்யாமலும் அவர்கள்வாழும் பதங்களைவருத்தாமலும் உலாவித்திரிந்தது இவையன்றியிற் சண்முகப்பெருமாள் வாளிகள்பாய்ந்து கண்டித்தெறிந்தஇராட்சதப்பாதகர் சிரசமோகங்கள் கோளைத்தந்தங்கள்விளங்கப் பந்துகளைப்போலவானத்திலெழுவதைப்பார்க்குமிடத்தில் அந்தரவீதியிலுலவிவரும் சூரியசந்திரரை இராகுகேது காலாதிகளிற் கவ்வவெழுவதுக்கொக்கும், இவையன்றியும் குமாரசுவாமியார் பிரயோகித்த சுடுசரங்கள் வேகங்கொண்டு பாயும்போ தெதிர்ப்பட்ட இராட்சதவீரர்கரங்களைக்கண்டித் தெறியுமுன்னிலையில் அவற்றுட் பிடிபட்டிருந்த வாள் வேலாதியபடைகளினாற் சிவகாருண்ணியமற்ற மனதைப் பெற்றிருக்கின்ற பாதகராகிய தம்மைப் போலவே தம்மினத்தவரை வெட்டித் தள்ளும் கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே சர்வமங்கள குணநிதியாகிய பாலசுப்பிரமணிய தேவர் செலுத்துகின்ற பாணங்கள் செய்த வேடிக்கைப்போரின்பெருக்கத்தையின்னவிதமென்று என்போலிகளாற் பேசப்படுவதோ.

இவ்விதமாகச் சரவருஷங்களைப் பொழிந்து பூமண்டலம் வானவெல்லை மற்றவிடங்களெங்கும் நெருங்கிவீற்றிருந்த இராட்சதவெள்ளப் பெருக்கையும் மற்றரதகஜதுரகபதாதிகளின் சமோகங்களையும் ஒன்றொழியாமற்சங்கரித்து ரணக்களமெங்கும் பிணராசிகளாகக்குவித்து உதிரப்பிரவாகம் பெருத்துக் கருங்கடலைமீறிச் செங்கடலைப்போல மண்ணுலகப் பரப்பெங்கும் அலைகளைவீசித் தேக்குவதாகச் சூரன்படைகளின் தோற்றங்காணாமல்வெள்ளிடமாக்கிய அதிசயத்தை விஷ்ணு, பிரமன்,இந்திரனாதியர்கண்டு அற்புதசித்தராய் அவுணவெள்ளப்பரப்பனைத்தும் நாசமடைந்தது, இதுவரையினும் பாதகர்கொடுமையிற்பட்டு வருந்திவாடிப் பதுங்கித்திரிந்தாம் இனிப்பயமற்று வருத்தங்களைப்போக்கிப் பழையபடிக்கு நமது பதவிகளிற் றங்கியிருக்கும் காலம் நேர்ந்ததென்னும் மனப்பூரிப்புடன் ஒருவரையொருவர்பார்த்துச் சந்தோஷவார்த்தைகளைப் பேசிக்கொண்டிருக்கின்ற காலையில் விண்ணிடங்களெங்கும் நிறைந்து சமரபூமியில் நடக்கின்ற விநோதங்களைப் பார்த்திருந்த தேவர்கள்இருஷிகள்சித்தவித்தியாதரர் கருடகாந்தருவர் முதலாயினர்பகைவர்சேனைப் பெருக்கானது இருளைப்போலமூடி வாதாடுவதைக் கண்டு வாடிநின்றவர்கள் வேலாயுதக் கடவுளானவர் பாணகோடிகளைப் பரப்பிக்கொன்ற விதமொன்றுந் தோற்றாமல் பிணமலைகள் வானத்தையளாவப் பெருத்திருப்பதை நோக்கி விம்மிதமடைந்து இக்காரணங்களைப் பார்க்குமிடத்தில் மிகவும் அற்புதமாகக் காணுகின்றதென்றுஜயன் பெருமைகளைக் கொண்டாடிச் சந்தோஷசாகரத்தில்மூழ்கினவர்களாய்க் கர்த்தன் பாததரிசனைக் கிடையூறாய்மூடியிருந்த இராட்சதப்பாதக ரொழிந்தபோதுவிழிகள்கண்டுகளிக்கப் பெற்றனமென்று மகிழ்ந்துபாரிசாதமலர்களையிறைத்துத் துதித்திருந்தனர். சூரபதுமன் படைகளின் போருக்கஞ்சித் திகைத்தொடுங்கி யிருந்த பூதவெள்ளங்களானவை பகைவர் சேனாசமுத்திரம் வறண்டுபோர்த்தொழி லற்றதைக்கண்ட மாத்திரத்திற் புஜங்களைத்தட்டிக்கொண்டு மனவருத்தங்களைப் போக்கிக் களிசிறந்தவர்களாய்ப் பலதிசையினும்நின்று பெருகிவரும்போதுநவவீரர்கள், இலக்ஷர் முதலாகிய படைத்தலைவர்களும்அதிக மகிழ்ச்சியுடன் தேகம்பூரிக்கத் தங்கள்சேனைகளைக் கலந்து வந்து குமாரசுவாமியைத் தரிசித்துப் போற்றிச் சூழ்ந்தனர்

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே! சூரபதுமன் கட்டளையின்படிக்கு மேலையண்டங்களிலிருந்துவந்து நெருங்கிய சதுரங்கசேனைகள் மண்விண்ணெங்கும் அடர்ந்திருந்த காரணத்தினால் அண்டவாயில்கள் முட்டப்பட்டு வெளிவரப்பெறாமற் றேங்கிநின்றநின்றவிடங்களிற் காலம்பார்த்திருந்த மற்றசதுரங்கசேனை வெள்ளங்களானவை முற்சென்ற சயின்னியங்கள்மாண்டுவாயில்வெளிப்படையாகக்காட்டக் களித்து வீராவேசங்களுடன் அண்டகோளகையின் மேற்புறத்திற் பெருகிக்கொண்டிருந்தமகாகங்கையானது கீழ்நோக்கி ஓடுமாறுபோலப் பிரசண்டவாயுவினு மேலிட்டொலித்துக் கொண்டு பலவண்டங்களினுமிருந்து புறப்பட்ட நால்வகைச்சேனைகளனைத்தும் பூமண்டலவரைப்பிற்சேர்ந்து முன்னினும் பதின்மடங்கதிக நெருக்கமாக எத்தலங்களினும் கொக்கரித்து சிருங்காதம் அட்டகாசங்களைச் செய்துகொண்டுகூடி எள்ளிடவிடமில்லாமற் பரந்த சேனைப்பெருக்கும் அவர்களுக்குத் தலைவர்களாக விருக்கின்ற வீரர்களும் அகண்டமண்டலாதீஸ்வரனாகிய சூரபதுமன்போர்க்கோலத்தைத்தாங்கியுத்தசன்னத்தனாய்ச் சொர்ணமயமாகிய தெய்வீகத்தேரிற்றோற்றுகின்றதைக்கண்ட மாத்திரத்திற் கரங்களைக்கூப்பி சத்தசாகரங்களும் ஏககாலத்தில் ஒலிப்பதைப்போலத் துதித்துப் போற்றினவர்களாய்த் தங்களுக்குமுன்வந்த சதுரங்கசேனைப் பெருக்கனைத்தும் மாண்டுபிணமலைகளாகக் குவிந்து உதிரப்பிரவாகத்திற் கலந்திரைந்துபுரண்டு அலைகளைவீசிப் பாயுங்கொடுமைகளைக்கண்டு தம்மவர்கள்பட்டதைக்குறித்து பரிபவப்பட்டவர்களாய் ஜயசாலிகளாகவிருக்கின்ற அவுணவீரர்பெருக்கைவாட்டிய பகைவன் ஜயத்தையும் வீறுப்பையும் நிமைப்போதி லடக்கிப்பற்றிப் பிசைந்து துகள்படக்காற்றிலூதி யிக்காலத்தி லுண்டாகிய கோபத்தைத்தணிய வல்லோம் மேலும்வீற்றிருக்கின்ற பூதவெள்ளங்களை வாரிவாரி வாயிற்போட்டு மென்றுதின்று உதிரபானஞ்செய்து தேகத்தைக்கொழுத்தும் வெம்மையையாற்றிஎமதிறைவன் மனக்கோட்டத்தைப்போக்கிக் களிக்கச்செய்வோம் ஜயசாலிகளாக விருக்கின்ற பூதகணத்தலைவரைப் பெருங்காற்றிற்பட்டபூளைப் புஷ்பத்தைப்போலத் திசாதிசைகளெங்குந் தூற்றுவோம்அரசனாணையைப் போற்றுவோமெனப் பற்பலசபதங்களைப்பேசி உருத்திராகாரமாகமண்டியெரிந்து தீரராய்மேல் நடந்து விஷ்ணு, பிரமன், இந்திரனாதிய தேவர்கள் போற்றிநிற்கவும் புசபலபராக்கிரமசாலியாகிய வீரவாகு தேவர் மற்றவீரர்கள்சூழ்ந்து காக்கவும் வெற்றிபரராகிய பூதசயின்னியங்கள் கெக்கலிகொட்டிக்கொண்டு அண்டங்களதிர ஆர்ப்பரித்துக் கடலைப்போலக்கர்த்தன் பெருமைகளைப்புகழ்ந்திருப்பதன்மத்தியிற் பிறப்பிறப்பிலியாய் சுயஞ்சோதி மயமாய்ச் சகலசீவதயாநிதியா யிருக்கின்ற சிவ

குமாரன் கோடிசூரியர்தோற்றம்போல விளங்கியிருப்பதைக்கண்டு கரங்களைக்கொட்டி நகைத்தவர்களாய்இதனைப்பேசிக்கொள்ளுவதாயினர், நமதுசக்ரேஸ்வரன்மீதுபகைத்துவந்திருக்கின்ற சத்துருவைப் பார்க்குமிடத்தில் அதிபாலகனாக விருக்கின்றனன் மேலும் இரதசமோகங்களையும் மதயானைப் பெருக்கையும் தத்தித்தாவும் புரவிப்பந்திகளையும் உடைத்தானவனல்ல சேனைப்பெருக்கோ பசிப்பிணியிற்பட்டுப் பலிக்குழன்றுவாடும் பைசாசங்கள்இத்தகைய அபலமாகிய சயின்னியங்களைப் படைத்திருக்கின்ற சிறுவனே நமதரசனுக்குப்பகைவனும்இவ்வண்டத்திலிருந்த பலவீராதிவீரரைவாட்டி ஜயசாலியாகவிருப்பவன் மேலும் மேலையண்டங்களினிருந்துவந்துநாம்வெளிப்படவிடமில்லாமல் இத்தலமெங்கும் நெருங்கி ஆண்டிறம்பெற்று மூடியிருந்த சதுரங்கசேனைப் பெருக்கனைத்தையும் சற்றுநேரத்தில் அதாஆதப்பட மாய்க்குந்திறமைபெற்றவன் இக்காரணங்களை யோசிக்குமிடத்தில்மிகவுமதிசயமாகவும் அநியாயமாகவுங்காட்டுகின்றது,ஆகலால் இந்தச்சிறுவன்மீதில் ஆயிரத்தெட் டண்டங்களுக்கும் சக்ரேஸ்வரனாக விருக்கின்ற சூரபதுமமகாராஜனெதிர்த்துச் சண்டைகொடுப்பதற் கிடங்கொடாமல் நாம்முந்திச்சென்று சிவகுமாரன் முதலியசகலரையும்சின்னபின்னப்படச்சாடிக் களத்திற்கிடத்திப் போரைவரையற முடித்தபின்பு ஜயப்பிரதாபத்துடன் நமதிறைவனைக்கண்டுகொள்ளவேண்டுமெனத் தீர்மானித்துக்கொண்டவர்களாய் முன்னணியில்நின்ற சேனைத்தலைவர்கள் புசபலபராக்கிரமசாலிகளாகிய நால்வகைச் சேனைப்பெருக்குடன்வடவாமுகாக்கினி விரியெழுவதைப் போலக் கோபாவேசங்களுடன் மேலிட்டுக் குமாரதேவரைச் சூரியனைமூடிய பனிப்படலத்துக்கொப்பாக வளைந்துகொண்டு உருத்திராகாரமாக மண்டியெரிந்து போர்த்தொழிலைச் செய்ய யத்தனித்ததை வானவெல்லையில் வேடிக்கைபார்த்திருந்த தேவர்கள் கண்டமாத்திரத்தில் திடுக்கிட்டுமனச்சோர்வுடன் இப்பாதகர்செய்கைகளைப் பார்க்குமிடத்திற் கொடியரிற்கொடியராகக் காணுகின்றது என்னமாய்முடியவிருக்கின்றோவெனத் திகைத்துக் குமரகுருபரனுக்கு ஜயமுண்டாகக் கடவதென்று வாழ்த்தியிருந்தனர் வீரருப்படைந்திருந்தபூதசயினியங்களும் மனச்செருக்கற்று கைகால்களோய்ந்து இக்கொடியரா லென்னபடுவமோவென்னும் பயப்பீதியினால் வருந்தியிருக்கின்றகாலையில்-நவவீரர்கள் இலக்ஷர்படைத்தலைவர்கள்-பகைவர்வெற்றிப்பாடுகளைமதித்துமேலிட்டுப்போவதற்கு முன்பின்யோசித்திருந்தனர், இந்திரன் மனச்செருக்கற்றுப் பகைவர் அபஜயங்களைப் பெறும்படிக்குக் கோரிக்கொண்டிருந்தனன்.

இவ்விதங்களாகச் சகலரும் கலங்கியிருக்குங் காரணங்களை எமதுகர்த்தன் தெரிந்து திருநகைகொண்டவராய்ச் சாரதியாகியவாயுதேவன் மீதில் விழிகளைப்பரப்பிச் சூரன்படைகள்மிகுத்துக்காட்டுந்தலங்கடோறும்நமதுதேரைவட்டாகாரமாகச் சுழற்றிவரக்கடவையெனத்திருவாய்மலர்ந்தனர், அவன்சாமர்த்தியத்தை யென்ன சொல்லுவேன் அவ்வாக்கியமுடிவதன்முன்னம் சிவகுமாரனைச்சேவித்துப் புரவிகளையெச்சரித்துச் சக்கிராகாரமாக இரதத்தைத் திருப்பித்திருப்பிப் பாதகர் அடர்ந்து வீறியிருக்கின்றவிடங்கள் முற்றினும்மின்னலைப்போலச் செலுத்துவதாயினன், சவுனகாதியிருஷிகளே, அந்தத்தெய்விகம்பொருந்தியஇரதத்தின் வேகத்தையும் மகிமைகளையும்புகழவும் போதுமோ கண்ணிமைகொட்டுவதன்முன்னம்பளிச்சுப் பளிச்செனத்தோற்றப் பூமண்டலமுற்றும் வட்டணை வந்தும் திசாதிசைகளுக்கப்புறமோடியும்வானவெல்லையை வலம்வந்துசத்தசாகரப்பரப்பினும் அவற்றினிடையிற்பட்டதீவுகளினும் மற்றதலங்களெங்கும் ககனச்சுழன்றுசுழன்று திரிவதாகவாயுதேவன்செலுத்தும் இரதத்தின்வேகத்தையிமையாநாட்டத்தைப்பெற்றிருக்கின்ற தேவர்களாலும்மதிக்கப்பட்டதன்று இவ்வாறுசுழற்காற்றைப்போலவட்டணைவருகின்றகாலையிற்குமாரதேவர் தமது சிறந்தவில்லிற்சர்ப்பங்களுக்கொப்பாக விஷங்களைக்கக்கிச் சீறவல்லதாய் அக்கினிச் சுவாலையைவீசத்தக்கதாய் வடவைக்கனலுக்கொப்பாக மண்டியெரியத்தக்கதாய்க்காளகூடத்தினும் அதிககொடுமையைப் படைத்திருக்கின்ற திவ்வியபாணகோடிகளை ஒவ்வொருதொடையில் ஆயிரகோடிகோடாகோடிக் கணக்கிற்சொரிகிறகாலையில் அவ்வாளிகள்வெளிப்படு முன்னிலையிலெரிந்து புகைந்து அதிக வுற்பாதங்களைக்காட்டிப் பிரசண்டவாயுவினுங்கடுகியிடிகளைப்போலமுழங்கிச் சூரபதுமன் நால்வகைச்சேனைப்பெருக்கிற்பாய்ந்து பாய்ந்து சாடுகின்றபோதுதலைகளற்று பந்துகளுக்கொப்பாகவும்பெருங்காற்றிற்பட்டதெங்கின் நெற்றுகளுக்குச்சமமாகவும் இவ்வண்டப்பரப்பெங்குஞ்சிதறி மற்றையஅண்டங்களினும் உருண்டும்மண்டைகள்பிளந்து வெண்சுதைக்கொப்பாக மூளைகள்தெறித்துக்குவிந்தும்மந்தரத்தையொத்த தோள்களற்றுப்புரண்டும் உதிரம் பீரிட்டுப்பாய விசாலமாகிய மார்புகள்பிளந்தும் வீரகண்டாமணிகலிக்கும் கால்கள்கண்டிக்கப்பட்டும் கண்டங்கண்டமாய்த் துண்டந்துண்டமாய் வெட்டுண்டுவிழுந்தும் இவ்விதமாகமாண்ட இராட்சதப்படைகள் களேபரங்கள்பருத்தமலைகளைப்போலக் குவிந்தசுமை மிகுதியைபொறுக்கமாட்டாமற்பூமிதேவியானவள் தத்தளித்துச்சோருமுன்னிலையில் அதனைத்தாங்கியிருந்த ஆதிசேஷன் ஆயிரம்பண மகுடங்களும் நெக்குவிட்டுக் கழுத்துகள்முறிந்து விழிகள்பிதுங்கி விஷங்களைக்கக்கிப்படாதபாடுகளைப்பட்டனன், அக்காலத்திற் பெருந்தெழுந்த வுதிரப்பிரவாகமானது பிரளயவெள்ளத்தினு மேலிட்டுச்சுழிந்து வானவரையில் அலைகளைமோதிக்கடல்மீறி மண்ணகமெங்கும் ஆர்ப்பரித்துக்கொண்டோடிப் பருத்தவரைகளினுச்சிவரையிற் றேக்கிட்டு இஃதொருசெங்கடலோவெனச் சங்கிக்கவிளங்கியது.

சவுனகாதிரிஷிகளே ஒருஅதிசயக்காட்சியைச் சொல்லக்கேட்பீராக, கொலைகளவுகட்காமம் பொய்முதலியதுஷ்கிருத்தியங்களையே முக்கியமாகநினைந்து தினந்தோறும் நடாத்திவரும் மகாபாதகருக்கு உலகங்களுக்குச்சாட்சிபூதமாகவிருக்கின்றவேதாகமபுராண தருமசாத்திரங்களில்விதித்தபடிக்கு அவ்வவர்செய்கைக்கடுத்த விபத்துகள் நேருமாயிற் றமதிடத்திற் பலநாட்களாகவாசமாயிருந்து உண்டுடுத்துச் சகலசெல்வங்களையும் ஒருமைப்படஅனு

பவித்துக்களித்திருந்த சினேகிதர் பந்துக்கள்முதலாகயா
தொருஉதவிகளையுஞ் செய்யாமற் றம்பகைவருடன் சே
ர்ந்துவருத்தவும்வரும் அவ்வாறே கரியநிறம்பெற்றிருந்த
இராட்சதவீரர் பலநாட்களாகப் போஷித்துப் பிரியமன
மில்லாமல்உடன்கொண்டுவந்த நாய்க்கூட்டங்களானவை
குமாரதேவர் வாளிகளினல் வெட்டுண்டு ரணக்களத்தி
ல்வீழ்ந்துகிடக்கின்ற தமதுதலைவர் தேகங்களைச்சற்றுமி
ரக்கமில்லாமற் குலைத்துக்கொண்டுபோய் மேல்விழுந்து
தலைமுதலிய உறுப்புகளைக்கவ்விக் கவ்விப்பிடுங்கித்தின்
று பெருகுமுதிரத்தைநக்கித்திரிகின்றது, இவையன்றியு
மின்னமுமொரு அற்புதத்தைத்தெரிந்து களிப்பீராக,
அஃதென்னையெனிற் சராசரப்பிரபஞ்சங்களெங்கும்பொ
ருந்தி உயிருக்குயிராக நின்றுநடிப்பித்து சாட்சிபூதமாக
வும்நின்று அவைகள்செய்யும் நன்குதீங்குகளைக்கண்டு க
ளித்துவரும் பெருமையையுடையபாலசுப்பிரமணியதே
வர் தமதுகாண்டீபத்திற் சந்தித்துப்பகைவர்மீதிற்கரவே
கமாகத்தூண்டுகின்ற பாணகோடிகள் பிறபடமுறப்பட்டு
க்காட்டி வருகின்றனவெனச் சொல்லுவோமாகில் அவர்
வீற்றிருந்துசெலுத்தும் தெய்வீகம்பொருந்திய விரதத்
தின்கடுமையை யிப்படித்தென்றுஎத்தகையராலுங்கணி
க்கப்படுவதோ மேலும் பரம்பொருளாகவிளங்குஞ் சிவ
குமாரன்கரத்திற் பிடிபட்டிருக்கின்ற பருத்தவில்லின்ம
கிமையையும் கரவேகத்தின்சுறுக்கையும் சரங்கள்பாயும்
உற்பாதங்களையும் அவைகள் அனலையிறைத்தோடிப் ப
கைவன் சதுரங்கவெள்ளங்களைக் கண்டிக்கும் கொடுமை
களையும் உக்கிரத்தையும் கற்கரத்தொனிகளைச்செய்தோ
டு மிரதத்தின்விரைவையும் சாரதியாக முற்றட்டில்நின்
றுசெலுத்தும் வாயுதேவன் கரங்களிற்பற்றியசைக்கும்பு
ரவிகளின் வார்களினசைவி னேசையும்படால்படாலெ
னத்தாக்கும் சவுக்கினதுமுழக்கத்தையும் அவன்மனவெ
ழுச்சியுடன் பகைவர் பாகனைச்சீறி உரப்பும் ஆரவாரங்
களையும்மற்ற வேடிக்கைப்போரின் திறங்களையும் வீர
வாகுதேவர் முதலிய துணைவர்களாதியாகக்கண்டு அற்பு
தசித்தராய் அக்காட்சிகளைக்கொண்டாடி மனவெழுச்சியு
டன்கர்த்தன்குணாதிசயங்களைப் புகழ்ந்துபோற்றினர், வா
னவெல்லையில்நின்று சமர்க்களத்தில் நடந்துவரும் சண்
டைவேடிக்கைகளைப் பார்த்திருந்ததேவர் கூட்டமானது
பிரமித்து அம்மம்ம இஃதென்ன அற்புதமாக விருக்கி
ன்றது எமதிறைவனுகிய சிவகுமாரன் காண்டீபத்தில் நி
ன்று வெளிப்படும் சரங்களின்விரைவைப் பார்க்குமிடத்
திற் கரவேகத்தையோ சரவேகத்தையோ வாயுவேகத்
தையோ மனோவேகத்தையோ எதனைமுந்திப் பேசலாகு
மென்று அற்புதத்தைக்கொண்டு புகழ்ந்தனர்.

இவையன்றியும் சிலசோத்தியங்களைத்தெரிந்து களிப்
பீராக சண்முகப்பெருமாள் கடுகியிறைக்கின்ற திவ்விய
சரங்களானவை விஷச்சுவாலைகளைவீசி உருத்துப்பாயுந்
தோறும் நேர்ந்தநேர்ந்த இராட்சதப்பாதகர் கரங்களைப்
படைகளுடன் கண்டித்துக்கொண்டு விண்ணகத்திற்பா
ய்வதைப் பார்க்குமிடத்திற் றமதுபகைவராகிய பலராகு
கள்தொடரச் சூரியர்கள்போவதையொப்பக் காட்டியது,
இவ்விதமாக அவுணப்படைகள் களத்திற்படு முன்னிலை
யிற் சரவணபவன் பாணகோடிகள்சீறி யானைக்கூட்டங்க
ளிற்புகுந்து சாடும்போது வலிய இருப்புலக்கைகள் சங்கி
லிகளைப்பற்றிப் பகைவரைவாட்டில் பனையைப்போலவி
ளங்கும் துதிக்கைகளைக்கண்டித்துச் சர்ப்பங்களைப்போல
ப்புரட்டியும் தொய்யலெழுதிச் சித்திரமுகபடாம்போர்த்
து மதநீரைப்பெருக்கியிருக்கும் மத்தகங்கள்பிளந்து மூ
ளைகள்கொட்டுண்டு சேருடவும் நட்சத்திரங்களுக்கொப்
பாக முத்துகள்பலபலென் றுதிரத்தக்கதாக நவரத்தின
மயமாகிய பூண்கள்பிகிந்து வலிபெற்றிருக்கும் தந்தங்க
ள்சிதைந்தும் வெட்டுண்டு பிறைகளைப்போலவிழவும்பே
ழ்வாயானது நீண்டவுதட்டுட னிருகூறுயிறையவும் நீல
கிரிக்கொப்பாகியதேகம்கண்டித்துக்குவியவும்உரலையொ
ப்பக்காட்டும் பருத்தகால்கள்நான்கும் ஒருகணையிற் றறி
பட்டுவிழவும் அசைவுகொண்டிருக்கும் வால்காற்றிற்பற
க்கவும் இதுவுமல்லாமற் கடலைப்போலத் தாவிப்பரந்தி
ருந்த புரவிப்பெருக்கில் நுழைந்துவாட்டும்போது கடி
வாளம் துகள்பட்டும், வலியகுரலோசையைப் பெற்றிரு
க்கின்ற கழுத்தற்றும் பற்களுதிர்ந்தும் அலைகளைப்போ
லத்தாவும் கால்கள்வண்டையங்கள்கலிக்கக்கண்டித்திறை
யவும் கவரிக்கொப்பாக அசைவுகொண்டிருக்கும் வால்க
ள்தறிபட்டுச் சுழன்றுமாளவும் இச்சயின்னியங்களைச் சூ
ழுநின்ற தோரணிகளிற்பாய்ந்து பூட்டியிருக்கின்ற புரவி
க்கூட்டங்களைவெட்டிச் சாரதியை நிலத்திற்கிடத்திரதிக
னை தும்சம்பண்ணிப் பொன்னுருளைகள்அச்சுமச்சுநவர
த்தினமயமாகக் கவிந்திருக்கின்ற மேலுறுப்புகள் குடை
கொடிசிகரங்களனைத்தும் பலபின்னங்களாகக் குவிந்தகா
லத்திற் சொர்னவண்டில்களை சக்கரங்களுக்கொப்பாகத்
தேக்கித் தோய்ந்திருக்கின்ற உதிரப்பெருக்கிற்படிந்தவி
ளங்குவது எப்படிக்கிருந்ததெனில் பொன்மயமாகியமே
ருகிரியை வலம்வரும்துவாதசாதித்தர்களும் தமதுரதங்க
ளினின்றும்வழுவி பூமண்டலத்திற் சஞ்சரிப்பதுக்கொ
ப்பாகக்காட்டியது.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? மேற்குறித்த வி
தங்களாகச் சொர்னமயமாய் பாரித்திருக்கின்ற ரதபந்தி
களும் மும்மதங்களையும்பெருக்கி வீறிட்டு நீலகிரிக்கொ
ப்பாகநின்ற யானைப்பெருக்கும்அலைகளைப்போலத்தாவி
க்கடலையொப்பப் பரந்திருந்தபுரவிக்கூட்டங்களும்குமா
ரதேவர் வாளிகளினுற் கண்டதுண்டமாகக் கண்டிக்கப்ப
ட்டு வீறுப்படங்கிக் குத்துயிருடன் ரணக்களத்தில்விழு
ந்துகிடக்கின்ற அவுணவீரர்மீதிற் சாய்ந்துகிடப்ப தெப்
படிக்கிருக்கின்றதெனில் தாங்கள்செய்துவந்த துஷ்கிரு
த்தியங்களுக்கடுத்த தண்டனைகளை முடிவுகாலத்திற்பெற்
று வருந்துவதற்கொக்கும் இவையன்றியிற் பாலசுப்பிர
மணியர் சிறிதுகோபங்கொண்டு கடையுகவெள்ளத்தினு
ம் அடர்ந்திருந்த ரதகஜதுரகபதாதிகளைச் சிலபோதிற்சி
ன்னபின்னப்படுத்திக்களத்திற் கிடத்தியதைக்கண்டவர்க
ள் பிரமித்தவர்களாய்ப் பெரும்புறக்கடலுக் கொப்பாகப்
பரந்திருந்த சத்துருக்களனைவரையும் அலைத்துவந்த சிங்
கமுகாசுரன்மாண்டனனென் றிருந்தோம் அவனுக்குமா
றுகக் காலாதிகளில் மன்னுயிரைக் கொண்டுபோகும் கா
லனைப்போல இராட்சதர் பங்குக்குச் சிவகுமாரன்தோற்
றினனென்று அற்புதமாக வசனித்துக்கொள்ளும் புகழ்
ச்சியைப்பெற்றனர், சவுனகாதி தவத்தரோ எமதிறைவனு
கிய குமாரசுவாமியார் கரவேகமாகச்செலுத்துகின்ற வா
ளிகள் தீயையிறைத்துக்கொண்டோடிச் சாடுமுன்னிலை
யிற் சருவாயுதபாணிகளாய் வீராவேசங்களுட னெருங்கி
யிருந்தபகைவர் கண்டதுண்டப்பட்டுப் புரளுவதைப்

பார்க்குமிடத்தில் கோடிகருடப்பட்சிகள்கோபமீறிகூரிய
நகங்களையுடைய பாதத்தினுலறைகின்றகாலேயிற்சற்பங்க
ளானவை பலபின்னப்பட்டுருளுவதுக் கொப்பாகவிளங்கி
யது, இவ்விதமாக அதாஅதப்படுத்துகின்ற பாணகோடி
களானவை முன்னணியில்வந்து கடற்கரையிற்சேர்ந்திரு
க்கின்ற நுண்மணலினுமேலிட்டடர்ந்திருந்த நால்வகைச்
சேனைகளையும் தடாரித்துருவிவாட்டி அவர்களடர்பினுல்
வரவிடமில்லாமற் பின்னணியிற் றேக்கியிருந்த சேனைப்
பெருக்கினும் மின்னற்படலத்தைப்போல நுழைந்து நு
ழைந்து சிரம் கரம் உரம் கால் மற்றஉறுப்புகளனைத்து
ம் சேதிக்கப்பட்டு மாளுவராயில் அவ்வாளிகள்லோகநா
யகனுகிய சிவபிரானேந்தி யிருக்கின்ற சூலாயுதமோ ய
மதருமராசன் கரத்தில்விளங்கும் கணிச்சியோமகாவிஷ்
ணுசெலுத்தும் சக்கரப்படையோ தேவேந்திரன்பரித்தி
ருக்கின்ற வச்சிராயுதமோ பிரளயகாலத்திற்பெருகும் பி
ரசண்டவாயுவின் மோதலிற்பட்டெழும் வடவாமுகாக்கி
னியோ அல்லது சத்திவடிவாக விளங்குகின்றவெற்றிவே
லாயுதமோ மேலும் இவற்றிற்குக்கடுமையுண்டோவென
ப்பலரும் பிரமித்துப்பேசிக்கொள்ளவும் அற்புதங்களைக்
காட்டிப்பாயும் குமாரதேவர் படைகளானவைகாருண்ட
மேகங்களைப்போலக் கரியதேகத்தைப் படைத்திருந்தஇ
ராட்சதப்பாதகர்செய்துவரும் மாயைத்திறங்களையும் ஜய
ப்பிரதாபத்தைப் பெறவேண்டுமென்கின்ற மனக்கருத்தி
னுற் சோனமாரியைப்போலச் சொரிகின்றகொடியபடை
களின் வகைகளையும் ஒன்றினையும் மிகுதியாகவிடாமல்
வாட்டி அவர்களையும் நெருப்பிற்பட்ட பஞ்சின்பெருக்
கைப்போலச்சாம்பலாக்கியது.

இவையன்றியும் திரிநேத்திரதாரியாகிய சிவகுமாரன்
தூண்டுகின்ற திவ்வியபாணகோடிகளானவைமீறி எங்கு
ம்அடர்ந்துவாதாடி யிருந்தபாதகர்மீது பாய்ந்து சிரங்க
ளைக்கண்டித்துக் கரங்களைத் துண்டித்துக் கால்களைக்கண்
டதுண்டமாக வெட்டியெறியுந்தோறும் அவர்கள்தேகமு
ற்றினுந் தரித்திருந்த பலவகை யிரத்தினங்களினுற்சோ
டித்திருந்த அணிகள் மின்னலையொப்பத் திசாதிசைகள்
பூமண்டலப்பரப்பிடங்களெங்கும் சொலித்துக்கொண்டு
விழுந்தது, இவையன்றியும் அப்பாணகோடிகள் பகைவ
ர்பெருக்கிற்பாய்ந்து கண்டிக்குமுன்னிலேயில் சிதைபடுந்
தேகங்கள்முன்னம் விஷ்ணுவானவர் வாமன வுருவங்கொ
ண்டுபோய் பலிச்சக்கிரவர்த்தியினிடத்தில் மூன்றடிம
ண்ணிரந்து தமதிரண்டு பாதங்களினுற் பூமண்டலம்வா
னவெல்லையை யளப்பதாகக்கொண்ட விசுவரூபத்தைப்
போலப்பிணமலைகள் விண்ணகவரையிலுயர்ந்து சூரியச
ந்திரர் சஞ்சரிக்கும் மார்க்கத்தையும் மறைத்தன, மேலு
ம்சிவகுமாரன் உருத்துச்செலுத்துகின்ற சரவருஷமான
து அவுணர்மீதுதாக்கிப் பிராணனைக் கொள்ளைகொண்டு
தேகங்களைவாரி வீசுவதினுற் சத்தசாகரங்களும் நிறைந்
து பெரும்புறக்கடலைத் தூர்த்துத் திடர்செய்ததுமன்றியு
ந்தேவரினங்கள் வாசஞ்செய்யும் வானநாடுகளெங்கணும்
பரந்துபோக வரவிடமில்லாமல் வாடவருத்தியது, இவ்
வாறுசரவணபவன் கடுங்கணைகள் ஒன்றனந்தமாகவளை
ந்துசாடும்போது ரணக்களத்திற் பல்லாயிரகோடி கவந்
தங்கள் நாடகரைப்போலநடித்ததெனச் சொல்லுவோமா
கில் அக்காலத்தில்மாண்ட நால்வகைச்சேனைகளின் விரி
வைக்கணித்து இவ்வளவென்று எத்தகையராலும் குறிக்
கப்படாது அத்தருணத்திற்பெருகிய ரத்தவெள்ளமான
து பூவட்டமெங்கணும் பரந்துதேங்கிப் பிலத்துவாரங்க
ளின் மூலமாயோடிச் சத்தபாதலவெல்லைமுற்றும் நிறை
ந்து அத்தலங்களில் வாசஞ்செய்திருக்கின்றநாசர்களைஅ
லைத்துப்பெருகிய வெள்ளமானதுமேலிட்டு மண்ணுலக
ங்களைமூடிப் பிரளயகாலத்தெழும் சத்தசாகரப்பெருக்
கைப்போலப்பொங்கிக் கடலினிடங்களிற் பரவித்தீவுக
ளைமூடித்திசைகளையும்மறைத்து மேலோங்கிநட்சத்திர
க்கூட்டங்கள் மச்சங்களாகவும்சூரியசந்திரர்செந்தாமரை
வெண்டமரை மலர்களைப்போன்றும் மின்னலிடிகுமுற
லைப்பெருக்கிச் சோனைமாரியைவீசும் மேகவினங்கள்கப்
பல்களைப்போலத் தோற்றவும் வானவெல்லையையளாவி
அலைகளைமோதும் உதிரவாரியானது செங்கடலைப்போ
லவிளங்கியது, இவையன்றியும் எறும்புமுதல் யானையீ
றுகச்சொல்லும் எண்பத்து நான்குலட்சம் சீவபேதங்க
ளைக்காலாதிகளிற் கொண்டுபோகும் தொழிலைப்படைத்
திருக்கின்ற யமதருமராசனும் அவன்மனதுக் கிசைந்
தமந்திரியாகியக லனும் இவர்கள்கட்டளைகளைச் செலுத்
தித்திரியும் கிங்கரர்கூட்டங்களும் ஓய்வின்றியிடைவிடா
மல் ரணக்களத்திற் குடியாகவிருந்து செம்படவன்வலே
யைவீசிமச்சராசிகளைவாரிச்செல்லுமாறுபோல அளவற்
றபாசங்களைக்கொண்டு சங்கையற்ற விராட்சதர்பிராண
ன்களைச்சேர்த்துக்கட்டி யிழுத்துப்போய்த்தென்புலத்தி
ற்சேர்த்துச்சேர்த்துக் கைகால்களோய்ந்து மனவூக்கமுந்
தளர்ந்து அலசியிப்பாதகர் பெருக்கெக்காலத்திலறு மெ
ன்றுவாடினர், இதுவுமல்லாமற்சுழலமிட்டுத்தேக்கிக்கொ
தித்துக் குமிழியைப்பெருக்கிப் பரவுகின்ற உதிரப்பிர
வாகத்தின்மீது மிதக்குகின்ற நிணச்சேற்றினிடத்தில் இ
ராட்சதர் கரியகளேபரங்கள் நவரத்தினமயமாகிய பதக்
கமுதலியவாபரணங்கள்விளங்கித் தெப்பமிட்டுநிற்பதை
ப்பார்க்குமிடத்தில் திருப்பாற்கடலின்மத்தியிற் சேஷச
யனத்தில் ஸ்ரீமஹாலட்சுமிதேவியைத் திருமார்பிற்சேர்
த்துக்கொண்டு அறிதுயிலமர்ந்திருக்கின்ற மகாவிஷ்ணு
வைப்போலத்தோற்றியது.

அக்காலத்திற் பகற்போதைவிளக்கி வானவெல்லையில்
ஒற்றைவண்டிலும்ஏழுபச்சைப் புரவிகளையும்பூண்டிரு
க்கின்றதேரில்சூரியன் ஆரோகணித்து அருணன்அதைக்
கணக்துக்காயிரங்காதவழியாகத்தூரத்திப் போகுமுன்னி
லையில்விண்ணகவரையிற்பெருகி அலைகளை மோதிக்கொ
ண்டிருக்கின்றஉதிரவாரியைநீந்திச்சண்முகப்பெருமாள்
செலுத்தும்சக்கரப்படையானதுபகைவர்கூட்டத்திற் பா
ய்ந்துதடாரித்தோடுவதைப்போலஇராட்சதவீரர்களத்தி
ற்பட்டோங்கிநிற்கின்றபிணமலைகளைத்தேருருளையானது
அறுத்தறுத்தோடஅரிதில்அவ்வெல்லையைக்கடந்தனன்,
இதுவுமல்லாமற்பருவதாகிருதியாகக்கரியமேனியைப்பெ
ற்றிருந்த இராட்சதவீரர்கள்வலியகண்டத்தைச்சிவகுமா
ரன்படைகள் கருலுமெனக்கண்டித் தோடுகின்றகாலேயி
ற்பீறிட் டெழுந்த வுதிரத்திவலைகளானவை வானவெல்லே
யில் நின்றுவேடிக்கை பார்த்திருக்கும் தேவர்கள்தேக
மெங்குந் தெறித்துப் பவுத்திரமாகிய காந்திமாறிச் சிவந்
துகாட்டுவது எப்படிக்கிருந்ததெனில் மனுவிக்கியானசா
த்திரத்திற் சொல்லுகின்ற நீதிப்படிக்குச் செங்கோலைச்
செலுத்தி மன்னுயிரைத் தன்னுயிருக்கொப்பாகப் பாது
காத்துப் பூமண்டலத்தைப் பரிபாலனஞ்செய்துவந்தசிபி

ச்சக்கிரவர்த்தியானவர் தன்மனவுறுதியைச் சோதிக்கவந் தடைக்கலமடைந்த புறாவின்நிமித்தம் தேகமெங்கும் உதிரம்பெருக் கெடுத்தோட வுடைவாளைக்கொண்டுசலனமற்று மாம்சத்தையரிந்தரிந்து துலைத்தட்டில் வைத்தபோது அவ்வரசன் மேனிவிளங்கியதைப்போல விருந்தது சவுனகாதி ரிஷிகளே மேற்குறித்தப் படிக்குச் சரவணபவன் செலுத்தும் வாளிகளின் கொடுமையினால் அண்டமெங்கணும் பெரும்புறக்கடலைப்போல ஆரவாரங்களைச் செய்து கொண்டு அடர்ந்திருந்த ரதகஜதுரகபதாதிக ளனைத்தும் சடுதியில்மாண்டதெப்படிக்குக் காட்டுவதெனில், ஊனாய் உயிராய் பஞ்சபூதவியாபாரத்துக் கதிபனாய்ச் சராசரப்பிரபஞ்சங்களி னிடத்திற் பரிபூரணமாகநின்று அவைகளைநடப்பிக்கும் பெருமையினையுடைய பரமசிவத்தின் திருநகையினின்றெழுந்த அனலின் வீக்கத்தினால் சருவசங்காரகாலத்தில் அண்டபுவனசராசரங்கள்தகிக்கப்பட்டு நீறாயழிந்ததைப்போலத் தோற்றியது.

இத்தன்மையாக மண்விண்ணெங்கும் நெருங்கியிருந் தகணக்கிறந்த இராட்சத வெள்ளங்கள் பெருங்காற்றின் மோதலிற்பட்ட பூளைப்புஷ்பத்துக்கொப்பாக மாண்டகாலத்தில் மற்றையவண்டங்களில் அடைபட்டிருந்த சயின்னியங்கள் பிரளயவெள்ளத்தினு மேலிட்டு இரைந்து வந்தெதிர்த்துப் பலவகை கொடிய அஸ்திர சஸ்திரங்களைச் சோனைமழையைப்போலச் சொரிந்து சொரிந்துவாதாடி வருகின்றதைச் சிவசுப்பிரமணியதேவர் கண்டுஅதிககோபங்கொண்டவராய்த் தீட்சண்ணியமுள்ள கொடியபாணகோடிகளை அமோகமாகப் பிரயோகித்துக் கண்டதுண்டமாகக் கண்டித்துவாட்டியபோதினும் மீட்டும்மீட்டும்மாரிகாலத்திற் புற்றினிடத்திருந்து பெரும்போக்கெழும் ஈசலினது பெருக்கினுமதிகரித்துப் பெருத்து வந்து வந்து போராடுவதை எமதுகர்த்தன்நிதானித்துஅதனைநிறுத்துவதாகத் திருவுளத்தி னெண்ணினவராய்த் தமது திருக்கரத்தில் விளங்கும் ஒப்பற்ற காண்டீபத்தில் நின்றெழும் சரமாரிப் பெருக்கினால் அண்டவாயில்களை அடைத்ததுமல்லாமல் தமதுவாளிகளினாற்கண்டிக்கப்பட்டரதகஜதுரகபதாதிகள்சின்னபின்னமாய் நிணமாம்சாதிகள்உதிரப்பிரவாகத்திற் கலந்துபோக விடமில்லாமல் அலைந்துதேக்குவதையும் பிணமலைகளாதியானவை யோங்கி விண்ணகவாயில் மூடநிற்பதையுந் தெரிந்து அவற்றினை மாற்றிச் சூரியசந்திரர்முதலிய நவக்கிரகங்கள் வானமூலமாகச்சென்று தமது பணிவிடைகளிற் குறைவுபடாமல் நடாத்திவரவும் பிராணிகளுக்குண்டாயிருக்கிற மனவருத்தங்களைப்போக்கிக் களித்திருக்கவும் நினைந்து கடையுகமுடிவில் நுதல்விழிக்கனலினால் சமஸ்தத்தையும் சாம்பலாக்கவல்ல தமதுதாதையைப்போலச் சிவசுப்பிரமணியக்கடவுளானவர் செந்தாமரைமலர்களுக் கொப்பாகவிளங்கும் திருவிழிகளினாற் சற்றுகோபங்கொண்டு பார்த்தகாலையில் வடவாமுகாக்கினியினும் மீறியெழுந்த தீப்படலமானது தாக்குவதினாற் சடசடத்த தொனிகளுடன்பிணமலைகள்முதலானவை தகிக்கப்பட்டுநீறாய் பூமியிலடங்கவும் உதிரவாரியானதுசுவறி மறைந்த காலையிற் சொர்க்கமத்திய பாதலமென்னும் திரிலோகங்களிற் பெருத்திருந்த புலால்நாற்றம்நீங்கிப் பழையபடிக்குச் சீவராசிகளனைத்தும் தாங்கள்பட்டிருந்த மனச்சஞ்சலங்களைப் போக்கிக் களித்துச் சிவகுமாரன் பெருமைகளைப்புகழ்ந்து வாழ்த்தின.

இத்தகைய அற்புதக்காட்சியைக் கண்ட மகாவிஷ்ணு, பிரமதேவன், இந்திரனாதியகடவுளர் விம்மிதராய் அதிகவுற்சாகத்துடன் குமாரதேவனைப் போற்றி அண்டங்களதிர ஜயவுற்சாகங்களைக் கொண்டாடினவர்களாய் நாம்பார்த்திருக்கக் கழுகுகாக்கை பருந்துமுதலிய பட்சிசாலங்கள் உலவும்படிக்குப் பெருத்திருந்த பிணமலைகளையும் பூவட்டமெங்கணும் அலைகளைமோதித் ததும்பிக் காட்டிய வுதிரப்பெருக்கையும் நிமைப்போதிற் கொளுத்திநீறாக்கி மறைத்த வடிவேலர் இதன்மத்தியில் நின்றசூரபதுமனை மாத்திரம் வாட்டாமல்விட்டதை யோசிக்குமிடத்தில் இதுவுமொரு திருவிளையாடலாகத் தோற்றுகின்றதென அதிசயமாகப்பேசிக்கொண்டு வாழ்த்தினர், அத்தருணத்தில் சற்றும் மனச்சஞ்சலமென்பதில்லாமற் சிவகுமாரன்முதலானவர்களை அதப்படுத்தி ஜயப்பிரதாபத்தைப் பெற்றுப்போக வந்திருக்கின்ற அவுணர்பெருமான் இந்தஅனர்த்தங்க ளனைத்தையுங்கண்டு மண்விண் ணெங்கும் அடர்ந்திருந்தநமது சேனாசமுத்திரங்களனைத்தையும்சற்றுநேரத்தில் நாசஞ்செய்து வெளிப்படையாக்கிய நமது பகைவனையும் அவனுக்குதவியாகச் சூழ்ந்திருக்கின்றதூதனாதியவீரர்களையும் அதாஅதப்படுத்தி இவர்கள் வெற்றியைக்கொண்டாடி வீறிக்களித்திருக்கின்ற இந்திரக்கள்வன்முதலிய தேவப்பயல்களையலைத்துச் சிறையிற் சேர்க்கும்படிக்கு இக்கருமத்தைத்தனியனாய் நானேமுடித்துமனவருத்தத்தைப் போக்குகின்றேனெனநினைந்துநிற்கக்கோபாக்கினியானது மேலிட்டுத்தேகத்தையும்மனதையும்வாட்டுவதினாற் கொவ்வைக்கனியினும் விழிகள் சிவந்து தீப்பொறிகளை யிறைக்கத் தக்கதாக வடவைக்கனலைப்போலச்சீறித் தன்தேரைத் துரத்திக்கொண்டு பூதவீரர்முதலானவர்கள்மேற் கவிந்துவரும்போது வாயுதேவனும் எச்சரிக்கையாய்த் தன்துணைவருடன் தெய்வீகம்பொருந்திய திருத்தேரைமுடுக்கி யெதிர்த்தபோதுசொர்ன மயமாகவிளங்கியிருக்கின்ற இரதத்தின்மத்தியிற்சரவணபவன்ஞானசூரியன் தோற்றத்தைப்போல விளங்கிக்கொண் டிருக்கும் திருமேனியினது வனப்பையும்சிரோரத்தினமயமாய் சொலித்திருக்கும் வயிரமுடிகள்கவிந்த சண்முகாரவிந்தங்களின் பொலிவையும் துவாதசாதித்தர்களுக் கொப்பாகவிளங்கியசைகின்ற பன்னிருமகரகுண்டலங்கள் துலங்கும் செவிகளின்கோலத்தையும் கிருபைக்கிருப்பிடமாகிய குளிர்ந்தபார்வையைப் பரப்பும் விழிகளின் குணாதிசயங்களையும் நவரத்தின மயமாகச் சோடித்திராநின்ற வாகுவலயங்களைச்சூடிப் பருவதாகிருதியாகத் திரண்டு காட்டும் புசங்களின் காட்சியையும் ஆசானுபாகுவாய் நீண்டிருக்கும் திருக்கரங்களின் பொலிவையும்அவற்றினிடத்தில் வெற்றிவேலாயுதமுதலிய படைகளின் விளக்கத்தையும் வீரபராக்கிரமவுத்தண்டத்தையும் மற்றுமிராநின்ற சிறப்புகளையும் இராஜாதிராஜன் எதிரில் நேராகத்தரிசித்தபோதினும் பிராரத்துவ வினையின் சம்பந்தப்பட்டவனாய் பூர்வத்திற் றக்கப்பிரஜாபாலகன் தனக்குச் சகலசெல்வவளங்களையுங் கடாட்சித்தபரமனை மதியாமலிகழ்ந்து சிவதண்டனைக்காளாய் மங்கியதைப்போலச்சூரபதுமன் பாலசுப்பிரமணியதேவனைப் பார்த்து இதனைச்சொல்லுகின்றான்.

நாம்பலநாட்கள் தேகமும் மனமும்வருந்திஅரியதவங்
களைச் செய்ததைக்குறித்துச் சந்திரசடாமண்டலதாரியா
கிய சிவபிரான்கொடுத்திருக்கின்ற வரங்களின் முயற்சி
யினுற் சலனமற்று இக்காயத்துடனெக்காலத்துமிருக்கவ
ல்லேன் மகாவிஷ்ணுமுதலிய தேவர்கள் கனவிலும் என்
னுடன் பகைக்கநினையார்கள், இஃதன்றியும் இதுவரையி
ல் நம்முடன்சண்டைகொடுத்தவர்கள் இறந்ததல்லது பி
ழைத்துத் திரும்பினவர்கள்யாவருமில்லை,அப்படிக்குமா
ண்டவர்களைக் கணித்துச் சொல்லவும்போதுமோ இவ்வி
தஜயப்பிரதாபங்களைப் பெற்றிருப்பது உனக்குத்தெரி
யாதோ கேள்விப்பட்டது மில்லையோ நாம்கட்டளையிட்டு
வந்த பணிவிடைகளைச் சிரசாகவகித்துச்செய்து வருந்தி
யோடியொளித்துக் கள்ளனைப்போலத்திரியும் இந்திரனு
தியதேவர்களேதோ சிலகாரணங்களைச்சொல்லியதைச் சி
றுபிள்ளையாதலால்மெய்ம்மையெனக்கருதி முன்பின்யோ
சித்துப்பாராமல் மேலிட்டுவந்து சேற்றினிடத்தகப்பட்டு
க்கொண்டு வெளிவ்ரவகையறியாமல் விழிக்கும் யானைக்
கன்றைப்போலத் திகைக்கின்றனை மேலும் பெரும்புறக்
கடலினுமேலிட்டடர்ந்திருந்த நால்வகைச்சேனைப்பெருக்
கனைத்தையும் சற்றுமிரக்கமற்றுக் கொன்றதுமன்றி யிர
ண்டுபுஜங்களைப்போல விருந்ததுணைவரையும் என்சவுரி
யபராக்கிரமங்களையும் மதித்துப்பாராமல் வேலினுலெறி
ந்தாய், இஃதன்றியும் நமதுமனம்வருந்தி வாடும்படிக்கு
ஜயசாலிகளாகியபிள்ளைகளையும் சேனைத்தலைவர்கள் மந்தி
ரிபிரதானிகள் வருக்கங்களைக்கொல்லுவித்தனை இக்கார
ணங்களை நினைக்கநினைக்கச் சோபமேலிடுகின்றபடியால்
என்கோபதாபங்கள் தணியும்பொருட்டு அதப்படுத்துவ
தன்றியில் அதிபாலகனென் றுன்னைவிடுவேனென் றெவ்
வளவும் நினைக்கவேண்டாம் புறந்தந்தோடியபோதினும்
பழிபாதகத்துக்கஞ்சாமற்றெடர்ந்து திகைக்கும்படிக்கு
ச்சாடுவதன்றியும் உனக்குப்படைத்துணையாகவந்து சூழ்
ந்திருக்கின்ற தூதன்முதலாகியவீரனா அதாஅதப்படுத்
திப் பூதனென்னும் பேரில்லாமல் உன்சயின்னியங்களைச்
சாம்பலாக்கி உனக்குமந்திராலோசனைக்கு வேண்டும்உத
விகளைச் செய்யத்தொடர்ந்திருக்கின்ற மகாவிஷ்ணுபிரம
ன்முதலாகிய தேவர்களைச் சின்னபின்னப்படவாட்டி யிக்
காலத்தில்எனக்கு நேர்ந்திருக்கின்ற கோபக்கனலைத்தணி
ப்பேனென்று தன்கிளைகளுடன் நாசப்படவிருக்கின்றசூ
ரபதுமன் பேசியவாசகங்களனைத்தையும் குமாரசுவாமி
யார் திருச்செவிகளிலேற்று நகைத்தவராய்க் கொடியசெ
ய்கைகளை நடாத்திவரும் கயவனே நீவியர்த்தமாகியவாக்
கியங்களை யாடினைஉன்கருத்தின்வண்ணம் முடிவதொன்
றேனுமில்லை யாதலால் வயிரமலைக்கொப்பாகிய உன்மா
ர்பைத்துளைக்கும் படிக்குநாம்செலுத்தவிருக்கின்ற கூரி
ய அலகைப்படைத்த பாணகோடிகளானவை உன் அகந்
தையையடக்கி மறுமொழி சொல்லுமென்று நிர்மலக்கட
வுளாகிய சிவகுமாரன் பாலசுப்பிரமணியதேவர்திருவாய்
மலர்ந்தகாரணங்களைக் கேட்டமாத்திரத்தில்அவுணர்பெ
ருமானுக் கதிககோபம் பிரவேசித்து வடவாக்கினியைப்
போலச்சீறி நல்லகாரியம் உன்வீருப்பையிந்தநிமிஷத்தி
லடக்கிப் புத்திபண்ணிவைக்கின்றேனென்றுருத்துத்தங்
கக்கட்டுகள்பூண்டு மேருவைப்போலவிளங்கும் பாரித்த
வில்லையெடுத்து நிறுத்திப் பகீரதன்பொருட்டுத் தெய்வ
லோகத்தி லிருந்திறங்கிய கங்கையைப்போலத் துலங்கும்
நாரியைமாட்டிக் குமுகுமென்னும் ஓசைவிளங்கவளைக்கி
ன்ற தருணத்தில் அச்செய்கையை வீரர்களாகியபூதவீர
ர்கண்டு பூர்வத்திற் றிருப்பாற்கடலினின்றெழுந்த காள
கூடவிஷத்தை யதன்காரணமின்னதெனத் தெரியாமல்வ
ளைந்துகொண்ட தேவர்களைப்போல வீரபராக்கிரமசாலி
யாகிய சூரபதுமனைச்சூழ்ந்தது, அது யெப்படிக்கிருந்த
தெனின், மும்மதங்களைப் பெருக்கி வீறியிருக்கின்றமத
யானையை வலியற்றவேடர் பலர்திரண்டுஅடலமாகியவலை
யை வீசிப்பிடிக்கநினைந்து வளைந்ததை யொப்பக்காட்டி
யது.

இவ்விதமாகக் கடலைப்போலச்சிவகணங்களும் அவர்க
ளுக்குத் தலைவரும் மேலிட்டு வீராவேசங்களுடன் வில்
லைவளைத்துக் கரமாகிய பாணகோடிகளைச் சோனைமாரி
யைப்போலச் சொரிந்தும் தண்டாயுதங்களைக்கிறுகிறென
ச்சுழற்றிமோதியும் வேலாயுதங்களைக் கடாவியும் சக்கர
ப்படைகளைச் செலுத்தியும் தோமரங்களையெறிந்தும் தி
சைகளைமூடத் தழைத்திருக்கின்ற மராமரங்களைப்பிடுங்
கி மண்விண்ணதிரச்சாடியும் பருத்தமலைகளைப்பறித்தெ
றிந்தும் இன்னமும் அவர்களாற் கூடியவரையில் அகோ
ர யுத்தங்களைச் செய்துவருவதைச் சூரமகாராஜன்கண்டு
நகைத்தவனாய் மந்தரகிரியையொப்பத் தன்கரத்தில்விள
ங்கும் பருத்தகாண்டீபத்திற் சங்கோப சங்கக்கணக்கிலு
மேலிட்ட சரவருஷங்களைப் பெருக்கித் தன்னைமூடவரு
கின்ற பகைவர்படைகளை நிமைப்போதிற் றுக்துமூருக
க்கண்டித்தழித்து மேலும்அமோகமாகியகடுங்கணைகளை
ச் சந்தித்துப்போக்கி வானத்தையளாவநிற்கின்ற அரக்கு
மலையை ஊழிக்காலத்தெழுந்தீயானது பற்றித்தகித்தழித்
ததைப்போலப் பூதப்படைகள் தலையற்றும் மண்டைதிற
ந்தும், கண்கள்பிதுங்கியும், பற்களுதிர்ந்தும் மார்புபத்த
லாய்ப்பிளந்தும், வயிறுபீறுண்டு, குடல்களிறைந்துசர்ப்
பங்களைப்போலப்புரண்டும் வீரகண்டைகலிக்கும்கால்க
ள்தறிபட்டு விழுந்தும் நறுங்கியும் சிதைந்துதுண்டந்து
ண்டமாய்க் கண்டங்கண்டமாயிறைந்தும்நிலத்துடனரை
பட்டும் துகளாய்மண்ணுடன் கலந்தும் இவ்விதங்களாகச்
சொல்லப்படாத சித்திரவதையில் மாண்டவர்கள்போகம
ற்றையர் திகைத்து யாதுந்தோற்றமற் பித்தனைப்போல
ப் பலதிசையினும் சிதறியோடியும் பயபீதியினுல் வேற்
றுருக்கொண்டு பறந்தும் சந்துபொந்துகளில்மறைந்தும்
இவ்விதங்களிற் பூதசயின்னியங்கள் அல்லோல கல்லோ
லப்பட்டு ரணக்களத்திலொருவருங்காணுமற்போய்விட்ட
அனர்த்தத்தைவீரவாகுதேவர்,எண்மர், இலக்ஷர் கண்டு
மிகவும் மனம்வருந்தி மானமுங்கோபமும்தேகத்தைச்சு
ட்டுக்கொளுத்தவூழிகாலத்தெழும் வடவைக்கனலினுமே
லிட்டு ஒருமுனையில் நாற்புறங்களினும் வளைந்துகொண்
டுவெற்றிமாலைசூடியிருக்கின்ற வலியவிற்களை யிருகுதை
களும் ஒன்றுபடவளைத்து மின்னலையொப்பப் பிரகாசிக்
கும் கூரிய அலகுகளைப் படைத்து அதிகதீட்சண்ணிய
முள்ள கொடியபாணவிதங்களைச் சந்தித்துக் கரவேகமா
ய்சொரிந்தும் முசலங்களையிறைத்தும் பிண்டிபாலங்களை
வீசியும் மற்றுமிராநின்றபடைகளனைத்தையும் அமோக
மாகத்தூண்டிச் சூரபதுமன் தோற்றங்காணுமல்மறைத்
தகாலையில் அவைவெளிப்பட்டவுடன் அக்கினிமழையை
ப்பெருக்கியும் விஷங்களைக்கக்கியும் கோடை யிடிகளைக்
கொட்டியும் குறுகுறெனச்சத்தித்தும் சடசடத்ததொனி

களைக்காட்டியும் விடநாகங்களைப்போலச் சீறியும் இவ்வி
தபற்பல உக்கிரங்களைக்காட்டி மேலிட்டுவருவதை அவு
ணர்பெருமான்கண்டு நகைமுகனுய் அவற்றினைமாறுன்
றேவித் தடுக்கவும் மதியாமல் வீரசிங்கம்போலப்பார்த்தி
ருக்கின்றகாலையில் வயிரமலையினிடத்தில்அபலமாகியவூ
சிகள்தைக்குமாறுபோலச் சலனமற்றதேகமெங்கணுந்தா
க்கித்தாக்கி முனைகளொடிந்தும் மழுங்கியும் சின்னபட்
டும் முறிந்தும் துகள்பட்டும்எரிபட்டும் இவ்விதங்களாக
ச் சிவகுமாரன் துணைவர்வீசிய அஸ்திரசஸ்திரங்களனை
த்தும் யாதொருதுன்பங்களையுஞ்செய்யாமல் அதப்பட்டு
மங்கியகாலத்திற் பகைவர்லொன்றுபட்டுவந்துவளைந்துசண்
டைகொடுக்கின்ற சூட்சியை சூரன்தெரிந்து நல்லகாரியம்
இவர்கள் கருவத்தையடக்குவேனெனநினைந்த மாத்திரத்
தில் அதிககோபம்பிரவேசித்துக் காட்டழலைப்போலச்சீ
றி ஒப்பற்றதன்காண்டீபத்தில்வெவ்வியபாணவிதங்களை
ப்பூட்டிச் சோனைமாரியினும் பதின்மடங்கதிகமா யிறை
த்துத்தெய் வீகம்பொருந்திய தன்தேனாச் சக்கிராகார
மாகச்சுழற்றிக்கொண்டுகோடாகோடி சுடுசரங்களை ஒவ்
வொருதொடையிற்றூண்டிஎதிரிகள்விடும் ஆயுதவிதங்க
ளனைத்தையும்துகள்படக்கண்டுஅவர்களேறியிருந்த பரு
த்ததேர்களைச்சக்கைச்சக்கையாகப்பேர்த்தெறிந்துபுரவிக
ளையும்பாகனையும் நிலத்திற்கிடத்திப்பகைவர்கரங்களிற்பி
டிபட்டிருந்த நீண்டவிற்களைக்கண்டித்தகாலையில்வீரவா
குதேவர் முதலிய ஜயசாலிகள்பலவருத்தங்களையடைந்த
போதினும் சுத்தவீரராதலால் மானமுங்கோபமும் மன
தைத்தூண்டநிலத்திற்பாய்ந்துநல்லகாரியம்இப்பாதகனை
ச்சும்மாய் விடலாகாது கூடியவரையிற்போராடிவெற்றியு
டன்மீளக்கடவோமெனத் துணிவுகொண்டவர்களாய் மீட்
டும் போர்செய்ய யத்தனப்படுவதன்முன்னம் பாதகன்க
ணக்கிறந்த தீட்சணியமுள்ள சிலீமுகங்களை அபரிமிதமா
கப் போக்கி வலியபுஜங்கள் விசாலமாகிய மார்புகள் முத
லிய வுறுக்களைச் சல்லடையைப்போலத் தொளைபடும்ப
டிக்குச் சாடும்போது பிரளயகாலத்தில் அனலைச்சொரியு
ம் மேகராசிகளுக் கொப்பாகத் தேகமுற்றினும் உதிரம்
ஊற்றெடுத்தோடப் பிரமித்து மதிமயங்கி யாதொருபோ
ரையுஞ்செய்ய நிருவாகமில்லாமற் கைகாலோய்ந்து நிற்க
வும்பயந்து எண்மரும், இலக்ஷரும், மானமிழந்து மதி
கெட்டுப் புறந்தந்தோடினர்.

இவ்விதமாகச் சூரன்கொடுமைக்காற்றுமல் தன்துணை
வர்களனைவரும் பறந்ததை ஜயசாலியாகிய வீரவாகு தே
வர்தெரிந்து மானமென்னும் பூஷணத்தைமுக்கியமாக நி
னைந்திருப்பவ ராதலால் உருத்திராகாரமாக மண்டியெரி
ந்து இராஜராஜப் பிரபுடீகனுகிய சூரபதுமன் வீற்றிருக்
கின்ற ஒப்பற்ற தேரின்மத்தியிற் பாய்ந்துசிவபிரான்கடா
ட்சித்திருக்கின்ற வாளாயுதத்தை உறையினிடத்திருந்து
ருவிக்கொண்டு அவுணர்பெருமான் கரத்தில் விளங்குகி
ன்ற மகிமையுள்ள காண்டீபத்தை அதிகவோசை யெழ
விருதுண்டமாகக்கண்டித்துக் கர்ச்சித்தனர், சவுனகாதிரி
ஷிகளே, அந்தவீரவாகுதேவர் சவுரியபராக்கிரமத்தையு
ப் மனவூக்கத்தையும் சாகசத்தையும்யென்னவெனச்சொ
ல்லுவேன் நாற்றெட்டியுகவரையில் யாவராலும் அசைக்
கவொண்ணுமல் பலவெற்றிகளைப்பெற்று மேருவையொ
ப்பக்காட்டும் தனுசை நிமைப்போதிற் றறித்துநிலத்திற்
கிடத்துவராயின் அவர்புயவன்மைக் கெவர்களை ஒப்பெடு
த்துப் பேசக்கூடும் இப்பிரகாரம் தன்வலியவில்லற்ற மு
ன்னிலையில் சூரமகாராசனுக் குண்டாகிய கோபதாபங்க
ளையும் பேசவொண்ணுது தாபாக்கினியைப் போல மண்
டியெரிந்து வச்சிரதேகத்தைப் பெற்றிருக்கின்ற பாதகன்
ஆசானுபாகுவாக நீண்டிருக்கும் தன்கரத்தையோங்கிவீ
ராதிவீரன் மார்பினிடத்தறைந்தனன் அக்கொடுமையை
யென்னசொல்வேன் அந்தநிமிஷத்தில் விசாலமாய் வலி
பெற்றிருந்த மார்பானது பத்தலாய்ப்பிளந்துமலையினிட
த்திருந்து பெருகும் அருவியைப்போலச் சோரியானது
ஊற்றெடுத்தோட வீரசிங்கத்தைப்போன்றகாளை பகை
வன்இரதத்தின் முன்தட்டினிடத்தில் அதிககளைபட்டுவி
ழுந்து ஸ்மரணையற்றுக் கைகாலசைவின்றிக் கிடந்தபோ
து அக்கோலத்தைத் தெரிந்த அவுணராசன் சற்றுத்தன்
கோபந்தணிந்தவனுய்த் தூதனைக்கொல்வது நம்மையொ
த்தசக்கிரவர்த்திக் கடாதென்றெண்ணித் துரிதமாயெடு
த்து வானத்தெறிந்தவேகத்தினுற் சக்கிராகாரமாகச் சுழ
ன்றுகொண்டு அண்டப்பித்திகைவரையிற்போய்மீளுமு
ன்னிலையில் வாயுவின்பரிசந் தேகமெங்கணுந்தாக்கத் தா
க்கக் களைதெளிந் துணர்ச்சிபெற்று நிலத்துக்குச் சமீபத்
தில் வந்தகாலத்திற் பாய்ந்துசூரனுடன்மறுபடியும்போ
ராடுவதினுற் பயனில்லை எமதிறைவன் திருக்கரத்தில் வி
ளங்கும் வெற்றிமேலினுலல்லது மற்றெவ்விதங்களினு மி
வனை அசைக்க வொண்ணுதென நிதானித்தவராய்விருஷ
பத்தைப்போல நடந்துபோய்ச் சுயஞ்சோதிமயமாகவிரு
க்கின்ற பாலசுப்பிரமணியர் பக்கலில்மனவெழுச்சியற்று
ச்சோர்வுடன்நின்றனர், இப்பிரகாரம் ஜயசாலியாகியவீ
ரவாகுதேவர் பின்னிட்டகாலையிற்சூரபதுமன்வெட்டுண்
டவில்லை மனவருத்தத்துடன் வீசிப்போட்டுத் தன்தேரி
ல் நாட்டி யிருக்கின்ற மற்றொரு சிறந்தவில்லை யெடுத்து
இடது கரத்திற்பற்றினன்.

ஓமகரிஷிகளே! அதன்மகிமைகளிற்சில சொல்லக்கே
ட்பீராக சூரியபகவான் தோற்றுநின்ற உதயகிரியையு
ம் மேற்குத்திசையில் விளங்கும் அஸ்தமானகிரியை
யும் போலப்பருத்துப் பொன்மயமாய் வானத்தையளாவ
நிற்கும் மேருவையொப்பநீண்டு பலதங்கக்கட்டுகள்பிகிந்
து மணிகள் கலிக்கத் தக்கதாய்ப் பலசிகரங்களைப் பெற்
றுத் தீனனாவாட்டிச் சிவகுமாரன் வெற்றிவேலினுற்பிள
ப்புண்ட கிரவுஞ்சபருவதத்தைப்போல நித்தமும் பிறரு
க்குத் துன்பங்களைச் செய்து முன்னுயிரைக்கொண்டுபோ
கும் இயமனை நிகர்த்துவிளங்குவதுஅத்தகையகொடுமை
யையுடைய தனுசை மண்டலாகாரமாக வளைத்துவயிரத்
தை நிகர்த்து மின்னிக்கொண்டிருக்கும் நாரியைமாட்டி
த் தடவிக்கொடுத்துப்பிரளயகாலத்திற் புனலும்தீயும்வா
யுவும் ஒன்றுபட வெழுந்து உலகங்களையலைத் தொலிக்கு
மாறுபோலச் சகலரும் திடுக்கிட்டேங்கி வருந்தும் படிக்
குக் குணத்தொனி காட்டியதைத் தம்மையடுத்திருக்கின்
ற தேவர்களின்னலைப்போக்கிப் பாதுகாத் திரட்சிக்கும்ப
டிக்குக் கங்கணங்கட்டி வந்திருக்கும் பாலசுப்பிரமணிய
க்கடவுள் தெரிந்து கற்பமுடிவிற் காளமேகவண்ணராகிய
ஸ்ரீமகாவிஷ்ணு பல்லாயிரகோடி யண்டங்களையு முண்டு
தமதுகருப்பத்திற் பரித்தகாலையினும் ஆயிரமிதழ்களையு
டைய பொற்றாமரைப் பீடத்தமர்ந்திருக்கும் பிரமதேவ
னுறங்குமிராப்போதினும் அவன்காலமுடிந்து மாளவரு
ம்போது சலனமற்று சாஸ்விதமாக நிலைபெற்றுஅண்ட

த்தின்கீழ்வாயிலாழ்ந்து மேற்புறத்தை யுருவஹங்கிலோ கநாயகனைப்பரித்து ஏங்கும் தனதொளியைப்பரப்பிவிள ங்காநின்ற பெருமிதத்தைப்படைத்த திருக்கயிலாய பரு வதத்தைப்போன்ற வலியவில்லைச் சிவகுமாரன் கரத்திற் கொண்டனர், அதன்மகத்துவத்தையும் சொல்லக்கேட்பீ ராக, சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் ஏகமாய்ப் பெருக்கெடுத் தெழுந்த பிரளயவெள்ளத்திறைற் சராசரப் பிரபஞ்சங்க ளழிகின்ற காலையில் மேருமுதலியகுலகிரிக ளும் மற்றைய பருவதங்களும் வானவெல்லையிற் பரவியி ருந்த மேகசாலங்களும் அந்தமண்டலத்துக்குமேற்பட்ட பொன்னுலக முதலாகிய வுலகங்களும் அவற்றினிடையி ல் வாசஞ்செய்கின்ற முப்பத்துமுக்கோடி தேவர்கள்நாற் பத்தெண்ணுயிர மிருஷிகள் கருடகாந்தருவர் சித்தவித்தி யாதரராதியாகத் தத்தமது வாசஸ்தலங்களை நீங்கி அரக ரவென்னும் பேரொலியைக்காட்டித் திருக்கயிலாயவரை ச் சாரலிற்சேர்ந்து சூழவிருந்து மனவுற்சாகங்களுடன் தேவதேவோத்தமனைப் போற்றிவரும் சிறந்த ஒலியைப் போல குமுகுமென்ன முழங்குந் தன்மையுடையதுஇவ் விதமகத்துவங்களையும் உன்னதத்தையும் பெற்றதெய்வீ கம்பொருந்திய வில்லை எமதிறைவனுகியசிவசுப்பிரமணி யக் கடவுள் மின்னலையொத்த நாரியைமாட்டித்தோள் வ லிகொண்டு மணிகள்கலகலெனச்சத்திக்கத்தக்கதாகவளை த்து மாட்டி யிடக்கரத்திற்பற்றிக்கொண்டு வலதுதிருக்க ரத்தினுற் றடவி தேவர் மக்கள் முதலிய எழுவகைப்பிற வி பேதங்களிற் ரூேற்றியிருக்கின்ற எறும்பு முதல்யானை யீறுகச் சொல்லும்பலவகை ஜீவராசிகளும்இடியேற்றின் கூட்டமாய் ஆர்ப்பரித்ததைப்போலக் குணத்தொனிகொ ண்டனர்.

அவ்வதிர்ச்சியானது செவிகளிற்பட்டமாத்திரத்திற் க லைவாகனத்திலேறி நடாத்தும் வீரகாளியானவள் திடுக்கி ட்டுமனம்வருந்தி வாடினளெனப் பேசுவோமாகில் மற்ற ப்பிராணிகளுக் குண்டாகிய இன்னலை யிவ்வித மென்று யாவராற் குறிக்கக்கூடும் இப்படிக்குச் சமஸ்தமும் நிலை குலைந்து தத்தளிக்கின்றகாலையிற் காலாந்தகனையொத்த கொடியசூரபதுமன் மனம்பொறுமல் கோபதீபிதனுய்க் ஙகமிஞ்சி யிருபத்துநூறுயிரம் தீட்சணியமுள்ளகணைக ளைத் தேடியெடுத்து வில்லிற்பூட்டி ஆகாணுந்தபரியந்த மிழுத்துப்பிரயோகித்தனன் உடனே அவைஒன்றனந்த மாகப்பெருகி மண்விண்ணெங்குமடர்ந்துசூரியசந்திரர்கா ந்தியையடக்கிச் சத்தசாகரங்களையடைத்துப் பூமண்டல முற்றும் தொளைத்துப் பாதலவாயிலோடிப் பஞ்சகற் பகச்சோலை தழைத்துக்குளிர்ந்த நிழலைப்பரப்பியிருக்கு ம் பொன்னுலக மாதிய விண்ணுடுகளை மறைத்து அதிக கொடுமைகளைக்காட்டி வாயுவேகத்தினு மேலிட்டுப்பாய் ந்தும் தாபாக்கினிக்கொப்பாகத் தீயைவீசிப்பரந்தும்கூர் த்தபார்வையையுடைய கூற்றுவனை நிகர்த்துப்பாய்ந்தும் திருப்பாற்கடலினுதித்த விஷத்தினும் அதிகசுவாலையை வீசியும் சரபப்பட்சியைப்போலப் பறந்துசாடியும் பற்ப லசிரங்களைக் கொண்டுருத்தும் தசதிசைகளிலுள்ள புவ னங்களிற் புகழ்ந்துவணங்க விருக்கின்ற சூரபதுமன்ஆக் கினைசக்கரத்துக் கொப்பாக உலவியும் கடியவேகத்தையு ம ஊக்கத்தையும் பெற்றுலவியும்உலகத்துக்கச்சாணியா க நிற்கின்ற மகம்மேருவைத் தொளைத்தோடியும் பாரிச ங்களிற் சூழவிருக்கின்ற மலைகளைப் பிளந்துதள்ளியும்அ ண்டவெல்லையைத் தூர்த்தும் இடியேற்றையொப்ப முழ ங்கிக் கொண்டோடியும் விஷப்பெருக்கைக் கக்கியும்பற்ப லசிரங்களுடன் பாய்ந்தும் சருப்பங்களைப்போலச் சீறியு ம் மற்றுமிராநின்ற கொடுமைக ளனைத்தையும் பெருக்கி யும் இவ்விதங்களாகப் பிறையையொத்த கோரைத் தந்த ங்களைப்படைத் திருக்கின்ற சூரபதுமன் செலுத்துகின்ற பாணகோடிகளானவை எத்தலங்களினும்நெருங்கிஅதிக வுற்பாதங்களைச் செய்துசாடும் அனர்த்தங்களைத் தேவர்க ள்கண்டு பிரமித்தவர்களாய்க் கரங்களைப் பிசைந்துகொ ண்டோடி ஸ்ரீமகாவிஷ்ணுவைக் கண்டு வணங்கிப் போற் றிஜயனே இக்காலத்திற்சூரனுல் நேர்ந்திருக்கின்றஅபாய த்தை நீங்கி நாங்கள்ஒளித்துப் பிழைக்கவோரிடமுமுண் டோ வினைவிற்காட்டியிரட்சிக்க வேண்டுமென்றுமுறை யிடுகின்ற விண்ணவர் நடுக்கங்களையும் மனக்கோட்டத் தையு மறிந்து அவர்களுக்கு கேசவன்சிலதேறுதலைகளை ச்சொல்லி யாற்றுவதன்முன்னம் பிரகாசம் பொருந்திய வேலாயுதத்தைப் படைத்த பாலசுப்பிரமணியக்கடவுளா னவர் தேவர்கள் முதலானோர்படும் வருத்தங்களைத் திரு வுளத்திற் றெரிந்து பிரளயகாலத்தெழுந் தலைக்கும் வட வைக்கனலை யவிக்கவல்ல பிரசண்டவாயுவையொத்ததனு சினிடத்தில் அதிகதீட்சணியமுள்ள வாளிகளைச்சந்தித்து ச் சோனைமாரியைப்போல அமோகமாகத்தூண்டிக் கொ டியபாதகன் முயற்சியினுல்எங்கும்நிறைந்திருக்கின்ற சர ப்பெருக்கனைத்தையும் சின்னபின்னப்படக் கண்டித்தும் துகள்படச்சாடியும் நுறுக்கியும் துண்டந்துண்டமாகவெ ட்டிக்குவித்தும் இவ்விதங்களில்ஒன்றொழியாமல் மாற்றி னர், இந்தவெற்றியைத் தெரிந்த தேவர்கள் சோபதாபங் களையொழித்து நீடித்திருந்த இரவொடுங்கிவிடிந்தகாலை யில் சூரியபகவான் உதயகிரியினிடத்தெழுந்த தோற்றத் தைக்கண்ட வுலகத்தைப்போல முகமலர்ச்சி கொண்டுஆ னந்தவாரியில் முழுகிக்களித்தனர்.

இவைக ளனைத்தையும் பார்த்த சூரபதுமன் வடவை யைப்போலச்சீறிநல்லகாரியம்தேவப்பயல்களும் நமதெ தெதிரில் நிற்கவும் தயிரியம்பெற்றனரோ இந்நிமிஷத் திற் பாலகனை அடக்கி இவர்கள் மனச்செருக்கைமாற்றிது க்கசாகரத்திலழுந்தச் செய்வேனென வயிரங்களைப் பேசி எமதிறைவனுக்குச் சமீபத்தில்,நெருக்கிவெற்றிபெற்றிரு க்கின்ற தீட்சணியமுள்ள சரவருஷங்களைத் தூண்டிக்கர் ச்சித்தபோது குமாரதேவர் அவற்றின்கொடுமைகளை ம தித்து நொடிப்பொழுதிற் பலகோடிதிவ்வியபாணங்களை த்தமது காண்டீபமூலமாகப்போக்கி அவுணர்பெருமான் தூண்டியபடைவிதங்களனைத்தையும் அக்கினிப்பொறிக ளையிறைத்துக்கொண்டுசிலத்தில்விழுவதாகச் சின்னபின் னப்படக்கண்டித்தனர். அக்காரணத்தைத்தருமமார்க்கத் துக்குக்கடைப்பட்டபாதகன்கண்டவுடன்மண்டியெறிந்து மீட்டும் கணக்கிறந்தகொடியசரங்களைக்கோடை வருஷத் துக்குமேலாகச்சிவபிரான்திருக்குமாரன்மீதிற் செலுத்தி னன், அவற்றின்கடுமையைக்கந்தசுவாமியார்நூறுமகிமை யுள்ள அர்த்தச்சந்திரபாணங்களினுல்அதப்படுத்திமேலு ம் எழுநூறுசிறந்த சிலீமுகங்களைத் தனுசிற்பூட்டிமாயை புத்திரன் மேற்செலுத்தினர், அவைகளின்வேகத்தையும் வீறுப்பையும் அவுணராசன்தெரிந்து அதற்கடுத்த தொ கைச்சரங்களைப்போக்கிவாட்டித்தட்சணத்தில் இரண்டா யிரம் தீட்சணியமுள்ளசிலீமுகங்களைக்குமாரதேவர் திரு

மேனிக்குக்குறிகொண்டு தூண்டிக்கியாவுமெனச் சிருங்க
நாதஞ்செய்தபொழுதுதட்சணம்எரிந்துபுகைந்து அதிக
வுக்கிரத்தைக்காட்டிமேலிட்டுவரும்போது அவ்வளவுசிற
ந்தபடைகளினல்மாற்றிமேலும் இரண்டாயிரம்பாணங்க
ளைச்சூரபதுமனைக்குறித்துப்பிரமனைவேதப்பொருளை வி
னவிச்சிறைசெய்துசிருஷ்டித்தொழிலைநடாத்தியகுமரன்
வீசியகாலையில்அவைகள் வெளிப்பட்டவுடன்தீயையும்பு
கைப்படலங்களையும் விஷச்சுவாலையையும்வீசிக்கொண்டு
வாயுவினுங்கடுகிமேலிட்டுவருவதைச்சூரன்கண்டு இரண்
டாயிரத்தொகை விஷத்தொவையலிட்டிருக்கின்ற சரங்க
ளைத்துரிதமாகத்தனுசிற்பூட்டிப்பிரயோகித்துச்சிவகுமா
ரன்படைகளைப்பங்கப்படுத்திஆதிசேஷன் வாசஞ்செய்தி
ருக்கும்பாதலப்பரப்பனைத்தும்கிடுகிடெனத்தத்தளிக்கத்
தக்கதாகஆர்ப்பரித்தவனுய்த் தட்சணத்தில் கணக்கிறந்த
கொடியகணைவிதங்களை மாறிமாறியிடைவிடாமற் சொரிய
த்தொடங்கினுன், அதுகளனைத்தினையும்பாலசுப்பிரமணி
யதேவர் தமதொப்பற்ற தனுசில்தீட்சணியமுள்ள கடுங்
கணைகளைப்போக்கி அதிகச்சுவாலையை வீசியெரிந்துவரு
ங்காட்டழலானது தன்னிடத்திற்பட்ட பொருளைச்சாம்
பலாக்கி வாட்டுவதைப்போலக்கண்ட துண்டமாகவெட்டி
த்தள்ளிமேலுங் கரவேகமாக அமோகமானசுடுசரஙகளை
ப்பிரயோகித்தனர்.

இவ்விதமாக எமதையனேவிய பாணகோடிகளைச்சூர
ன்தன்படைகளினல்மாற்றவும் அவுணராசன் தொடுத்து
வரும் சுடுசரங்களை லோகநாயகன்கண்டித்தும் இவ்விரு
வீரர்களும் பிரயோகிக்கின்றவாளிக ளொன்றுட னென்
றெதிர்த்து குறுகுறென்றும் சுருசுரென்றும் சிடசிடென்
றும் உரறிக்கொண்டு சீறி உலகமெங்கணும் பரந்தும்
முட்டியும் தட்டியும் புகைந்தும் எரிந்தும் வெட்டியும்நு
றுக்கியும் இவ்விதங்களிற்றறிபட்டு வானத்தையளாவக்கு
விந்ததுமன்றியும் அவைகள்கண்டிக்கப்பட்டபோது பெ
ருத்ததீப்படலமானதுமீறிபாணராசிகளிற்ருவிப் பரந்து
எரிந்தோங்கிய சுவாலையானது தாவிவாட்டுவதினல் பரு
வதங்கள் படபடெனவெடித்துப் பொடியவும் சத்தசாக
ரங்களின் சலப்பெருக்கானது கொதிப்பெடுத்துச்சுவறி
அவற்றுட்பட்ட திமிதிமிங்கில கிலங்களாதிய மச்சராசிக
ள்அச்சுடுகைக்காற்ருடல்வானவளாயிலெழுந்தெழுந்துவி
ழுந்தலையவும்விண்ணிடத்திற்பெருகும் கங்கைவெள்ளம்
குளகுளவெனப்பொங்கிமங்கவும்நட்சத்திரராசிகள்பொரி
ந்திறையவும் மேகசாலங்கள்நீர்ப்பசையற்றுச் சுருண்டு
ருளவும் மற்றவிண்மண் ணிடங்களிற்றங்கிய சமஸ்த
மும்அல்லோல கல்லோலப்பட்டுவருந்தியகொடுமைகளை
யின்னவிதமெனச்சொல்லக்கூடுவதோ இப்பிரகாரம்வெ
ற்றிமாலைபுரளும் புயாசலங்களைப்படைத்த வேலாயுதமூ
ர்த்தியும் ஜயசாலியாகிய சூரபதுமனும் வண்டில்களுட
ன்வண்டில்கள்தாக்கநெருங்கிக் கொடியபோர்த்தொழிலை
நடாத்திவரும், உத்தண்டங்களைக்கண்ட வீரலட்சுமி சந்
தோஷித்தவளாய் யாவரிடத்திற் சேருவோமெனச்சங்கை
யுற்றுநிற்கவும் வீரகாளியானவள் களித்து ஐயன்வில்வ
ன்மையையும்கரவேகசரவேகத்தின் முயற்சிகளையுங்கொ
ண்டாடிப் பரணிபாடிநடிக்கவும் இவ்விதஆடம்பரங்கள்
நடந்துவருகின்றவேலையிற் குமாரசுவாமியைச்சூழவிருந்
த ஸ்ரீமகாவிஷ்ணுபிரமன் இந்திரன் வீரவாகுதேவர் மு
தலானவர்களும் விண்ணகத்தில்நின்று சமரவெல்லேயில்
நடக்கின்ற அற்புதப்போர்த்தொழிலைப்பார்த்திருந்த தே
வர்கூட்டங்களும் இருஷிகளும் பாணகோடிகளெங்கணு
ம்பரந்து அதிககொடுமைகளைக்காட்டி உலாவுவதைக்க
ண்டனரல்லது அவற்றைத்தூண்டும் வீரபராக்கிரமசா
லிகளுடைய தேர்கள்போகுமிடங்களையறியாமல் திகைத்
து அம்மம்ம இதுவென்ன அற்புதக்காட்சியாக விருக்கி
ன்றதென்று புகழ்ந்திருந்தனர் இவ்விதங்களிற் பாணவ
ருஷங்களைப் பொழிந்துகொண்டுலாவிவருமுன்னிலையில்
முன்னம் நாரதருடைய யாககுண்டத்தெழுந்த வெள்ளா
ட்டுக்கடாவினைவாகனமாகக்கொண்டுநடாத்தும்பெருமை
பொருந்திய சரவணபவன்விடுத்த வாளிகளனைத்தையும்
சூரபதுமன் பலகோடிகடுங்கணைகளைச்செலுத்திச்சின்ன
பின்னப்பட்டுப்போகக் கண்டித்ததுமன்றியும்மேலும் சி
லகூரியவாளிகளைக் கரவேகமாகப்போக்கி முருகன்வீற்
றிருக்குஞ் சூருவளியையொப்ப வட்டணைவருகின்ற தி
ருத்தேரில்நாட்டியிருந்த வெற்றித்துவசத்தை வெட்டித்
தள்ளிக் கோடையிடியுமஞ்சக் கொக்கரித்து வெற்றிச்சங்
கத்தையெடுத்துப் பவளத்தையொப்பவிளங்கும் வாயினி
டத்தில்வைத்துத் தன்கீர்த்திப்பிரதாபங்கள் எத்தலங்க
ளினும்பரந்து விளங்குவதைப்போல ஓசையெழுந்துலக
ங்களில்நிறைந் தலைப்பதாகப் பொம்பொம்மெனமுழக்கி
னுன், சவுனகாதிரிஷிகளே யென்னசொல்வேன் அவ்வதி
ர்ச்சியானது ஒருமுகுர்த்தகாலம் உலகங்களெங்குஞ் செ
விடுபடச்சத்தித்தது இதுவுமல்லாமல் தட்சணத்திற் சங்
கோபசங்கமாகக் கொடியபாணங்களை வில்லிற்பூட்டிச்
சோனைமழையைப்போலச்சொரிந்து முருகப்பெருமாள்
தோற்றங்காணுமற் சகலரும்பிரமிக்கும்படிக்குமூடிச் சி
ருங்கநாதமுஞ்செய்தனன், அத்தருணத்திற் பாலசுப்பிர
மணியக்கடவுளுக்குச் சற்றேகோபம்பிரவேசித்துப்பகை
வனல்விடப்பட்டு மண்டியெரிந்து மூடியகணைகளனைத்
தையும் அமோகமாகிய பாணவருஷங்களினல் நிமைப்
போதில்மாற்றிமீட்டும் ஏழுகோடி தீட்சணியமுள்ள சிலீ
முகங்களையெடுத்து தனுசிற்பூட்டி ஆகரணுந்தபரியந்த
மிழுத்துக் கரவேகமாகப்பொழிய அவைஅதிகவுற்பாத
ங்களைக்காட்டித் தீயையிறைத்துக்கொண்டு வாயுவினுங்க
டுகியோடிவிழுந்து சூரபதுமனேறியிருந்த தெய்வீகத்
தேனைச்சக்கைசக்கையாகப் பேர்த்தெறிந்து அதிற்பூட்டி
யிருந்த பலகோடிவேகமுள்ள புரவிக்கூட்டங்களைச்சின்
னபின்னப்படக்கண்டித்து ரதிகன்மனக்கருத்தையறிந்து
செலுத்தவல்ல மதியூகியாகியபாகன் சிரத்தைக்கண்டித்
து நிலத்திலுருட்டி முகப்பில்நாட்டியிருந்த சிங்கக்கொ
டியையும்தறித்துக் கடலிற்சேர்த்தனர்.

கேட்டீர்களோ! சவுனகாதிமுனிவர்களே? இவ்விதமா
கச்சூரபதுமன் பங்கப்பட்டகுறைபாடுகளைத்தெரிந்தபூத
சேனுதிபதியாகியபானுகம்பன்அதிகமனவுற்சாகத்துடன்
புயங்கள்பூரித்து வானத்தையளாவ ஆனந்தபரவசனுய்க்
கர்த்தன்குணுதிசயங்களையும் வெற்றிப்பாட்டினையுங்கொ
ண்டாடிப்போற்றித்தேவர்கள்கரங்களைக்கொட்டி வாழ்த்
தெடுப்பத் தமதுசுந்தரமுள்ள ஆயிரந்திருவாய்கள்தோ
றும் தவளநிறம்பெற்றிருக்கின்ற வுன்னதமுள்ள சுரிமுக
ச்சங்கங்களைச்சேர்த்து உலகங்களனைத்தும் செவிடுபட்டு
த்திகைத்து மதிமருண்டுவாடிச்சோரும்படிக்குப்பேரொ
லியெழப் பொம்பொம்மென்றூதினன் அவ்வதிர்ச்சியா
னது அண்டங்களெங்கும்பரந்து அளவற்றயுகங்கள் சத்

தித்துக்கொண்டிருந்தது, இந்தவெற்றியைக்குறித்துசெந்தாமரைக்கண்ணராகிய மகாவிஷ்ணுமனமகிழ்ந்தவராய் பவளத்தைப்பழித்துவிளங்கும் சிவந்தஅகரத்திற் பாஞ்சசன்னியமென்னும் திருச்சங்கத்தைவைத்துப் பகைவர் மனமருண்டுவாடும்படிக்கு முழக்கினர் அப்பொழுதுஇந்திரனுக்குண்டாகிய சந்தோஷப்பெருக்கை யிவ்வண்ணமென்று என்போலிகளாற்சொல்லத்தரமோ மற்றதேவர்கள் நகைமுகராய் ஆனந்தக்கூத்தாடி ஐயன்பெருமைகளைக்கொண்டாடிப்போற்றி ஆதிதேவனுகிய பாலசுப்பிரமணியர் வீற்றிருக்கும் தெய்வீகம்பொருந்திய தேரின்மீது துவசபடமில்லாத காரணத்தினல் மிகவுமனம்வருந்திப்பக்கத்தில்நிற்கின்ற அக்கினிதேவனைப்பார்த்து ஒவீராதிவீரனே துரிதமாய் எமதிறைவன் இரதத்தினுச்சியில்வெற்றிக் கொடியாகநின்றசையவேண்டுமெனக் கேட்டுக்கொண்டகாலையில் தேகம்பூரித்தானந்தபரவசனுய் இப்பணிவிடையைச் சிரசாகவகித்துச் செய்யக்கடவேனென்று சம்மதித்துத் தட்சணத்தில் அழகியசிறகையும் சிவந்தகொண்டையையும் படைத்திருக்கின்ற கோழிக்கொடியுருக்கொண்டு தேவதேவோத்தமன் திருத்தேரினிடையில்நின்று அண்டங்களதிர்ந்து அவற்றுட்பட்டபிராணிகளனைத்தும் இடியுண்ட சர்ப்பங்களைப்போலத் தத்தளித்துவாடிச்சோரும்படிக்கு நீண்டகண்டத்தைத் தூக்கிச் சொக்காதாவென்னும் பேரோசையெழக்கூவினன், சவுனகாதிரிஷிகளே, அக்காட்சியெப்படிக்குத்தோற்றுவதெனில், உலகங்களைவருத்தியிருந்த அவுணரென்னு மிராக்காலங்கழிந்து மன்னுயிரனைத்தும் மனமகிழ்ச்சிபெற்றுக்களிக்கவல்ல விடியற்காலம்வரவிருக்கின்றதென்றுசகலருக்குந்தெரியக்காட்டுங்குறிப்பையொப்பத்தோற்றியது.

முன்னம்பானுகம்பன் முழக்கிய சங்கநாதத்துடன்அக்கினிதேவன் கூக்குரலிட்டதைக்கேட்ட சந்தோஷப்பெருக்கினல் ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் தேகபரவசராய்ச் சகலருந்திடுக்கிடும்படிக்குக் கியாவுமென்றுர்ப்பரிக்கவும்பிரமதேவன் கெக்கலிகொட்டவும் இந்திரன்துள்ளித்துள்ளிக்கவலையற்றுவாழ்ந்தோம் வாழ்ந்தோமென்னுக் களிப்பினுல்மகிழவும் சந்திரன் முகமலர்ச்சியுடன் குகன்புகழைப்போற்றவும் சூரியன்பயமற்றுவெற்றி நம்மதாயிற்றென்றேத்தவும் யமதருமராசன் தன்சேனைகளுடன்வீறிப்பேரொலியைக்காட்டவும் வாயுதேவன் திருத்தேரில்நின்றுபகைவரையிகழ்ந்துபேசவும்கடற்கிறைவன் மேலோங்கியோங்கி யேளனம்பேசவும் செல்வப்பெருக்கையுடைய சிவபிரான்தோழனுகிய குபேரன்கரங்களைக்கொட்டிக்களிக்கவும் மற்றதேவர்கள் இருஷிகள்கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர் பன்னகர் நாகர் உவணர்முதலிய மேலுலகவாசிகள சந்தோஷசாகரத்தில் முழுகிமெய்மறந்து வஸ்திரங்கள்சோரக்கிளம்பி விஜயப்பிரதாபங்களைக்கொண்டாடவும் இப்பிரகாரம் சகலரும்களியாடலைச்செய்து வருகின்றகாலையிற் பெருத்தோங்கிய பேரொலியானது அண்டகோளகைபரியந்தம்தழைத்துச் சூரபதுமன்செவிகளிற் புகுந்தமாத்திரத்தில் விஷத்துடக்கிற் பட்டவனைப்போலச் சஞ்சலசித்தனுய் மானம்பாதிக்கச்சிங்காராஜனுக் கொப்பாய்க்கர்ச்சித்து நல்லகாரியம் இந்தத்தேவப்பயல்கள்நமதுகட்டளைகளைச்செய்திளைத்து எதிரினும் நிற்கப்பயந்து பறவைகள் மிருகங்களையொப்பத் தமதுபதவிகளையிழந்து சரபசார்த்தூலங்கள் வாசஞ்செய்யும் ஆரணியங்கள்பருவதங்களினிடத்தோடியொளித்துத்திரிபவர் இக்காலத்திற் சற்றும்பயமற்று நேரில்இருந்து இப்படிக்கு மனவுறுதிபெற்று ஜயவுச்சாகங்களைக்கொண்டாடி கெலிப்புடனிருப்பாரோ இது அந்தக்குழந்தைவேலன் வலிகொண்டு நடத்துகின்றுர்களெனச்சீறிச் சிரத்தையசைத்துமூக்கினிடத்தில் விரலைவைத்து இக்காலத்தில் நமக்கடுத்த சிலஅபஜயத்தைக்குறித்து மனச்செருக்குடனிருக்கின்ற விஷ்ணு, பிரமன், இந்திரன்முதலாகிய தேவர்கள்கெலிப்பை முன்னமழித்துச் சின்னபின்னப்பட வாட்டியபின்பு இவர்களுக்குதவியாகவந்திருக்கும் பாலகனையுமடக்கிக் கொண்டு திகைக்கும்படிக்குச்சாடித் தூரத்தக்கடவேனெனத்தீர்மானித்தவனுய் ஆயிரத்தெட்டண்டங்களையும்வெறு தன்வயப்படுத்தி அரசுசெலுத்திவரும் சூரனுனவன் வடவாமுகாக்கினியைப்போலப்பொங்கி தட்சணத்தில்பக்கத்தில்நிற்கின்ற சேமத்தேர்களினுன்றிற் சிங்கத்தைப் போலப்பாய்ந்து மண்டிபோட்டிருந்து இதனையோசிப்பதாயினன்.

இச்சிறுவனுதவி இத்தலத்தினல்லது விண்ணிடத்திற்கிடையாதாகையால் வானவெல்லையில் வீற்றிருக்கின்ற தேவர்கள் கருவத்தை இந்தநிமிஷத்தில் மட்டடக்குவேன் ஓசாரதி,துரிதமாய்ச் சூரியன்செல்லும்வீதியில்நமது தேரைக்கொண்டுபோய் நிறுத்தக்கடவையெனக்கட்டளையிட்டகாலத்திற்பணிந்துகர்த்தனே யிதோநடத்துவேனென்று சவுக்கைக்காட்டிக் குதிரைகளையதட்டிப் பொன்மயமாய் நவரத்தினகாந்திகளைவீசி மேருவையொப்ப விருக்கின்ற தேரைமணிகள் கலகலெனச் சத்திக்கத்தக்கதாக வெழுப்பி வாயுமண்டலம் மேகமண்டலமுதலியவற்றைக்காற்றினுங்கடி கித்தாண்டி தேவர்களிருக்கின்ற விடத்திற்கொண்டுபோய்நிறுத்தினன், அத்தருணத்தில் மன்னுயிரைவாட்டும் இயமனையொத்த கொடியதனுசைவளைத்து நாணேற்றித் திசைகள்நடுங்கக் குணத்தொனிகாட்டிக் கூர்மையுள்ளதாய் விஷத்தோவையலிட்டிருக்கின்ற கடியகணைகளை அமோகமாகச்சந்தித்துச் சோனமாரியைப் போலச் சொரிகின்றகாலையில் தீயையும் புகையையும் விஷச்சுவாலையையும் வீசிக்கொண்டு வானவெல்லைமுற்றும் படர்ந்தடர்ந்து முகமலர்ச்சிபெற்றிருந்த விண்ணவர்சமோகத்திற் பாய்ந்துபாய்ந்து தேகமெங்குந்தொளைத்துச் சாடும்போது பலர்பங்கப்பட்டுப் பாணங்கள்சூழவளைந்திருப்பதினல் ஓடியொளிக்கவும்கூடாமற்றிகைத்து ஒருவர்மேலொருவர்விழுந்து வாடுகின்ற கொடுமைகளையும் சூரபதுமன் சூட்சியையும் சிவகுமாரன்தெரிந்தவராய்ரணக்களத்திலிருந்தபடிக்குத் துரிதமாய்த் தமதுசிறந்தகாண்டீபத்திற் கணக்கிறந்த நாராசங்களைச்சந்தித்துக் கரவேகமாகப்போக்கிப் பாதகனல் விடுபட்டலைத்திருந்த பாணப்பெருக்கனைத்தையும் நிமைப்போதிற் கண்டதுண்டமாகவெட்டி நிலத்திற்றள்ளியவுடன் பாகனை முன்தட்டிவிருக்கின்ற வாயுதேவன்மீது விழிகளைப்பரப்பி யிந்தநிமிஷத்தில் நமதிரதத்தை வானவெல்லையிற்றிரிகின்ற சூரபதுமன்முன்னங்கொண்டுபோகக்கடவையெனக் கட்டளையிட்டமாத்திரத்தில்வணங்கிப் புரவிகளையெச்சரித்து மண்ணுலகம் விண்ணுலகத்தைக்கண்டு வார்த்தையாடப்போவதென நினைக்கும்படிக்குத்துரத்தி மின்னலையொப்பச் சூரன்முன்னம் நிறுத்தினன், அத்தருணத்தில் தேவரினங்கள் படாதபாடுகளைப்பட்டுநிற்கவும்பயந்துபோகவும்

இடமில்லாமல் அங்குமிங்கும் அலைந்து மனவாட்டத்துடன் சிதறி அலைகின்றதைக் குமாரதேவர்கண்டிரங்கித் திருக்கரத்தைநீட்டி ஓதேவர்களே யினிபயங்கொள்ளவேண்டுவதில்லை மனச்சஞ்சலமற்றிருக்கக்கடவீர்கள் பாதகனையிதோவாட்டுகின்றனனெனத் தேறுதல்சொல்லி யமர்த்திக்கிருபாநோக்கம்பாலித்தகாலத்தில் தீனசரண்ணியர் வந்துவிட்டனர்உயிர்பெற்றுப்பிழைத்தோம்பிழைத்தோமென்று களித்தவர்களாய் ஓடுவதையொழிந்து தயிரியங்கொண்டுநின்றனர், இக்காரணங்களனைத்தையும் சூரபதுமன்தெரிந்தவுடன் உருத்திராகாரமாய் மண்டியெரிந்துமகாவிஷ்ணு பிரமதேவன்முதலிய பிரதமதேவதைகள்நமதுசவுரியத்துக்கஞ்சியிட்டபணிவிடைகளைச் செய்துவருகின்றனர் அப்படிக்கிருக்க ஒருபாலகனோ நமதெண்ணங்களைத் தடைசெய்து வெல்லவல்லவனென்று அவயங்காத்திராநின்ற சர்ப்பத்தைப்போலச்சீறித் தன்கரத்திற் பருவதாகிருதியாகவிளங்கும் வலியவில்லிற் கடுங்கணைகள் அளவற்றதைச் சந்தித்துப்போக்கிச் சரவணபவனைமூடிக் கியாவுமெனச் சிருங்காதஞ்செய்தனன்.

அவைவெளிப்பட்டவுடன் ஒன்றனந்தமாய் ஆலகாலவிஷத்துக்கொப்பாக எரிந்து புகைந்துகொண்டு கவிந்துவரும்போது எமதிறைவன் துரிதமாய்த் திவ்வியபாணகோடிகளைக்கொண்டு தத்துமூருக்கிச் சாடினதைச்சூரனறிந்து அதிககோபங்கொண்டு மீட்டும் கணக்கிறந்தசரமழைகளைத் தூண்டத்தூண்ட பாலசுப்பிரமணியக்கடவுளும் அவற்றிற்குத்தக்க சிலீமுகங்களைச்செலுத்திச்செலுத்திச் சின்னபின்னப்படக்கண்டித்து இவ்விதமாகவிருசூரர்களும்பின்னிடையாமல்திவ்வியபாணங்களைச்சோனைப்பெய்யலினுமேலிட்டிறைத்தும் ஒருவர்பிரயோகிக்கின்றசரங்களை யொருவர்மாற்றி வீரங்களைப்பேசியும் வெற்றிபெறவேண்டுமென்கிற வீராவேசத்தினால் கடூரமானயுத்தங்களைச் செய்துவருமுன்னிலையிற் பெருத்தெழுந்த அனற்பொறிகள்வீறித் திசாதிசைகளைக்கொளுத்திவாட்டவும் விண்ணுடுகள் கரிந்துபொலிவற்றுத்தோற்றவும் அச்சுடுகைக்காற்றுமல் தேவர்கள் இருஷிகளாதியானவர் நெளிந்துநெளிந்தேங்கவும் மற்றவைபட்ட துன்பத்தைச் சொல்லிமுடிவதோ இப்படிக்கு வாதாடுகின்றவர்கள்தேர்கள் மின்னலையொப்பப் பளிச்சுப்பளிச்செனக்காட்டிக் குலாலன் சக்கரத்தைப்போலத் திரிந்துங்காற்றுடிக்கொப்பாகக் கரகரெனச்சுழன்றும் சூறுவளிக்காற்றினுங்கடுகிவட்டணைவந்தும் இப்படிக்கு இடம்வலம் வலமிடமாகத்திரியும்போது வண்டில்களுடன் வண்டில்கள்தாக்கியும் புரவிகளொன்றையொன்றுசீறிக் கால்களினாலெற்றித் திசைகளதிரக்கனைக்கவும் பாகர்கள்சவுக்கைப் படால்படாலுமெனச்சாடி யிசழ்ந்துபேசி ஒருவர்மீதொருவர் தேர்களையோட்டி கெக்கலிகொட்டவும் இத்தருணங்களில்மத்திமத்தியில் ரதிகர்கள் கரவேகமாகத் திவ்வியசரமாரிகளைப்பொழிந்தும் அவற்றைவிலக்கியும் வாதாடிவருகின்றபோது அவ்விரதங்கள் கர்க்கரத்தொனிகளைச்செய்தும் கரகரென்றோடியும் சத்தசாகரங்களின் பரப்பிற்காட்டியும்பூவட்டமெங்கணுமுலாவியும் திசாதிசைகளிற்பாய்ந்தும்பெரும்புறக்கடலினிடத்திற்றாவியும் சக்கிரவாளகிரியின்மீதுவட்டணைவந்தும்புவனங்களிற்பவனிவந்தும்பிரமதேவன்வாசமாகவிருக்கின்ற மனோவதிப்பட்டணத்திற்றோற்றியும் துருவமண்டலத்திற் சஞ்சரித்தும் நிமைப்போதிற்றாமிருந்ததலத்திற் காட்டியும் மீட்டும் மின்னற்கொடியைப்போலத்தாவி அண்டப்பித்திகைச் சாரலில்விளங்கும்காடாந்தகாரமாகிய விருட்பூமியிற்றோற்றும் அண்டகடாகத்தினெல்லையினுலாவும்வானநாடுகளிற்பறந்தும்இவ்விதமாய்ஓடுகின்றகாலங்களிற்கரகரெனப்பாயுந்தேருருளைகளின்சத்தமாத்திரம்அடுத்தடுத்துக் காட்டுவதன்றிமற்றொருகாரணங்களுந்தெரியாதவதுவினாற்பிரமன்இந்திரன்முதலானவர்கள்மனமருண்டுதியங்கிச்சோர்ந்துகுமாரதேவர்தோற்றங்காணாமல்வருந்தவுஞ்சூரியசந்திராதியநவக்கிரகங்கள்தாங்கள்போகுமார்க்கங்காணாது மயங்கவும்மேலுலகவாசிகள்பிரமித்துச்சித்திரங்களைப்போ லசைவற்றுபார்த்திருக்கவும்பூமண்டலத்திலிருக்கும்பிராணிகள்தத்தளித்துவாடவும்இவ்வுற்பாதங்கள் பெருத்தகாலத்தில்நாகலோகவாசிகளிடியுண்டவர்களைப் போலக் கலங்கிவாடவும் இப்படிக்குசமஸ்தமும்அல்லோலகல்லோலப்படும் படிக்குஅகோரயுத்தங்களைச்செய்துல வும்ஜயவீரர்களேறியிருக்கின்றதெய்வீகத்தேர்கள்மணிகள்கலகலெனச்சத்திக்கத்தக்கதாகக் கடகடென்றோடும் வேகத்தினாலும் அதிர்ச்சியின் கொடுமைக்காற்றுமலும்பூமண்டலமானதுகீழ்மேலாகத்தத்தளித்துக்கிடுகிடென்றதிரவும்சத்தசாகரங்களும் குமுறிமுழங்கி அலைகளைப் பெருக்கியலையவும் மேருவாதிய குலகிரிகள் நடுநடுங்கிப்பிளந்தும் பிதிர்ந்துமங்கவும் அண்டப்பித்திகை நெக்குவிட்டுக் கலகலத்துத்தோற்றவும் நட்சத்திரராசிகள் பொரிந்தெங்கணுமிறையவும் சத்தமேகங்களானவை நீர்ப்பசுமையற்றுத் தங்கள்நிலைகளிற்பிசக பூவட்டமெங்கு மோடவும் இவ்விதமாகப் பாலசுப்பிரமணியக்கடவுள் வீற்றிருக்கின்ற ரதமும்அவுணர்பெருமா னேறியதேரும் அதிவேகங்கொண்டுசக்கிராகாரமாய் மூதண்டகோளகை முதலியதலங்களிற்சாரிகைதிரிந்து வருகின்றகாலையில் மஹாதீரனாகிய சூரமகாராஜன் தன்கைவல்லபத்தினாற் சருவசங்காரகாலத்தில் ஊழிமேகம்பரவிஅக்கினி மழையைப்பொழிந் துலகங்களைவாட்டுமாறுபோலச் சுயஞ்சோதிமயமாகிய குமாரதேவர் மீதிற் கொடியசரவருஷங்களைப் பொழிந்து மேலும் மத்திமத்தியில் அனந்தகோடிமழுப்படைவயிரவூசிகளைப்போல விளங்கும் முத்தலைச்சூலம் கப்பணம், பிண்டி பாலம், கவண், கொழுப்படை வச்சிராயுதம், வேற்படைஎழுவாயுத முதலிய ஆயுதங்களைக் கரவேகமாகத்தூண்டினன்.

சவுனகாதிரிஷிகளே! அவுணராஜன் கற்றிருக்கின்ற விஞ்சைகளின் முயற்சியையும் விற்சா துரியங்களையும் கரவேக சரவேகங்களையும் மற்றதிறங்களையும் சொல்லி முடிவதன்று, இவ்விதமாக ஆயிரத்தெட் டண்டங்களையும் வென்று தன்குடைநிழலிற்படுத்தி அகண்ட சக்கிராதிபதியாக அரசுசெலுத்திவரும் சூரபதுமன் கூற்றுவனுயிரையும் வாட்டவல்ல வேகமும் கொடுமையையும்படைத்திருக்கின்ற அஸ்திரசஸ்திர வகைகளை சக்கிராகாரமாகச் சுழன்றுசுழன்று செலுத்துந்தோறும்எமது கர்த்தனாகிய சிவசுப்பிரமணியதேவரும்அத்தலங்களெங்கணுந்தொடர்ந்து தொடர்ந்து ஆலகாலவிஷத்தினுங்கடுமையுள்ள சரமாரிகளைச் செலுத்திச் செலுத்திப் பகைவன் படைகளனைத்தையும் கண்டதுண்டப்பட வாட்டித் தத்து மூருக்கியதன்றித் தமது மகிமையினால் வயிரவூசிகளினும் கூரியஅலகையுடைய தீட்சணியமாகிய பதினான்கு அர்த்தசந்திரபாணங்களைக் காற்றினுங் கடுகத்தூண்டி அண்டரண்

ட புவனங்களெங்கும் புகழவல்ல சாஸ்விதமாகிய கீர்த்தி
யைப் படைத்திருக்கின்ற சூரன் ஆரோகணித்திருக்கும்
சொர்ணமயமாயிரத்தினகாந்திகளைவீசி மேருவுக்குச் சம
தையாகக் கலகலெனமணிகள் சத்திக்கவும் பூச்சக்கிரக்கு
டைகொடி முதலிய சிங்காரங்களைப் பெற்றிருக்கின்றதா
ய் மனோவேகத்தினுங்கடுகி ரதிகனுக்குவேண்டும்படைக
ளின் விதங்களைப் பரித்திருக்கும் மகிமையுள்ள விரதத்
தைப் பொடிப்பொடியாக துணித்துத்தள்ளிபூட்டியிருந்
த புரவிப்பந்திகளைக் கண்டித்து சாரதிசிரத்தைத் தறித்
தெறிந்தமாத்திரத்திற் சிரோரத்தினத்தைப் பறிகொடுத்
த நாகத்தைப்போலவாடி அழகுகுலைந்து கரத்திற்பற்றிய
வில்லுடன் வெளிவந்து நிலத்திற்பாய்ந்துதீரனாய் நின்று
நாரியையிறுக்கி விஷங்களைக்கக்கவல்ல கொடியவாளிகள
ளவற்றைச் சந்தித்துச் சோனைப்பெய்யலைப்போலப்புங்
கோபுங்கங்களாகத் தூண்டிக் காலாந்தகனையொப்பநேர்
ந்து சாடும்போது அவைமந்திரவல்லபங்களினால் ஒன்ற
னந்தமாகப் பெருகித் தீயையிறைத்துப் புகைப்படலங்க
ளை வீசிச்சுறுக்குசுறுக்கென்று தைக்குமுன்னிலையில் ஏ
ழைகளாகிய பூதப்படைகளென்னசெய்வார் பலபின்னங்
களைப்பட்டு வேறுகதிகாணமற்சிதறி அல்லோலகல்லோ
லப்படும்கொடுமைகளைவானத்தில்நின்றசிவகுமாரன்கண்
டுமனமிரங்கிநம்முன்னின்ற பாதகன்நிமைப்போதில் ம
ண்ணிடத்திற்சென்று சிவகணங்களை யலைக்கின்றனன், ந
ல்லகாரியம் வாயுதேவனே நமதுதேனாவினாவிற்சமரவெ
ல்லையிற் சேர்க்கக்கடவாயென்னும் வாக்கியமுடிவதன்மு
ன்னம் நிலத்திற்சூரனுக்கு நேராகக்கொண்டுபோய் நிறு
த்தினன், அவன்சாரத்தியத்திறங்களை என்போலிகளாற்
புகழத்தக்கதோ அத்தருணத்திற் நமதொப்புவமையற்ற
தனுசிற்பலகோடித் திவ்வியபாணவருஷங்களைச் சொரிந்
து பகைவன்தூண்டியலைக்கின்ற சரங்களின் கொடுமைக
ளை மாற்றியவுடன் சூரபதுமனுக்குஅதிககோபம்பிரவே
சித்து வடவானலத்துக்கொப்பாகச் சீறித் தட்சணத்தில்
அனந்தகோடி சுடுசரங்களையெடுத்துத்தனுசிற்பூட்டிக் க
ரவேகமாய்ச் சிவகுமாரன்மீதிற் செலுத்திக் கொக்கரித்த
னன்.

அவைகள்வரும்வேகத்தையும்தீட்சணியத்தையும்எம
தையன் மதித்துத் துரிதமாகப் பல குரூரமாகிய கணைக
ளைப்போக்கிக் கண்டித்ததுமன்றி மேலும்நூறுவடவைக்
கனலையொத்த கொடியசரங்களைக் காசிபன் மூத்தபிள்ளை
யாகிய சூரன்புஜங்களுக் கிலக்காகக்கடாவியபோதுபுகை
ந்தெரிந்து குறுகுறுத்ததொனிகளுடன் காற்றினுங்கடுகி
வந்து குறியிற்பிசகின்றி கோடையிடிகளையொப்பத் தாக்
கியமாத்திரத்தில் நவமணிகளுக்கு நாயகமாகிய சிரேஷ்ட
ம் பெற்றவயிரக்குன்றினிடத்தில் கல்மழை பெய்யுமாயி
ன் பலதிசையினு மிறைவதைப்போலத் துகளாய் நாற்றி
சையினும்பறந்தது. அச்செய்கையைப் புசபல பராக்கிர
மங்களுக் கொப்பற்றவனாகிய அவுணர்பெருமான் தெரிந்
தமாத்திரத்தில் திசைகளதிரக் கோபாவேசத்தினால்நகை
த்துதீயும் புகையும்வீசுவதாகப் பெருமூச்செறிந்து அர
க்கைப்போல விழிகள்சிவந்து அனற்பொறிகள் குபீல் கு
பீலென்றிறைபச சர்ப்பத்தையொப்பச்சீறி நல்லகாரியம்
இதுபரியந்தம் எத்தகையதேவர்களும் விழிகளைச்செலு
த்திப்பார்க்கவும் பயங்கரப்படவல்ல நமதுதோட்களில்இ
ந்தப்பாலகனோ கணைகளைச்செலுத்துவான் இந்நிமிஷத்
திலிவனாணவத்தை யடக்கித் துரத்தாவிடில் நான்சூரன
ல்லனெனச்சபதங்களைப்பேசி யிரண்டாயிரம்வயிரவாளி
களைக் தேடியெடுத்துக் கரவேகமாக எமதையன்புயாசல
ங்களைக்குறித்துப் பிரசண்டவாயுவினும் வேகமாய்ச் செ
லுத்திதேவர்களும் திடுக்கிட்டுவாடும்படிக்குச் சிருங்கநா
தஞ்செய்தனன், அக்கொடியசிலீமுகங்கள் விடநாகங்களு
க் கொப்பாகக் கனன்றுருத்துநெருங்கி ஞானவான்களாற்
றரிசித்துப் போற்றும் மகத்துவத்தை யுடைய பகவன்
றேளிற்பட்டவுடன் லோகநாயகனாகிய சிவபிரான் நுதல்
விழிக்கனலின் வெப்பத்தினாற் சாம்பலாகத் தகிக்கப்பட்
டழிந்த மன்மதனைப்போலக் கருகிவெந்து தூளிதமாய்த்
திசாதிசைகளிற் பறந்தது தட்சணத்தில்எமதையன் சில
கடுங்கணைகளை இராஜராஜன் மீதிற்செலுத்தும்போதுசூ
ரன் அவற்றினைக் கண்டித்து அமோகமாகிய திவ்வியவா
ளிகளை மழைத்துளிகளினு மதிகமாகப்பொழிந்து பூதப்
படைகளையும் படைத்தலைவனையும் மற்றவீரனையும் அ
ல்லோலகல்லோலப்படும்படிக்குக்கலக்கத்தொடங்கினன்.

இவ்விதமாக தேவகாதகன்மீறி வாட்டும் திறத்தைப்ப
ரவஸ்துவாக விளங்கும் சிவகுமாரன்கண்டு ஆயிரந்தீட்ச
ணியமுள்ள சரங்களைத் துரிதமாகத்தூண்டியபோதுவெ
ளிப்பட்டவுடன் ஒன்றனந்த கோடிகளாகப்பெருகிப்பாத
கன் கணைகளைக்கண்டதுண்டமாகத் தறித்துத் தள்ளியும்
வேகமடங்காமற் சீறிக்கொண்டோடிச சூரன்கரத்திற் பி
டிபட்டிருந்த வலியவில்லைப் படாலுமென வெட்டித்தள்
ளியோடியது, அதுநிலத்தில்விழுவதன்முன்னம்வேறொ
ரு நீண்டகாண்டீபத்தைத்தாங்கி நாணேற்றி அண்டங்க
ளதிரக் குணத்தொனிகொண்டு ஊழிமேகங்களும்உறக்க
நீங்கித்திடுக்கிட்டுக் கலங்கியோடக் கர்ச்சித்தவனைப் பல
கோடி அதிகதீட்சணியமுள்ள சரங்களை மண்விண்ணெ
ங்கு மூடச்சொரிந்து மாயவித்தையின்முயற்சியினாற் சடு
தியில் மின்னலுக்கொப்பாகவானத்திற்காட்டிப்பற்பலவி
த்தைகளைச்செய்து பூதனாவருத்துகின்றவன் சூதைச்சி
வகுமாரன் தெரிந்து துரிதமாய்த்தமது திருத்தேனை வி
ண்ணகத்திற் செலுத்தி வைத்துக்கொண்டுபோய்ப் பகை
வனை மிஞ்சவொட்டாமல் அவன்செய்யும் மாயப்போனை
வாட்டி ஒருநாழிபரியந்தம் அகோரயுத்தங்களைநடத்தும்
போது சூரன்தன்மாயைவல்லபத்தினால் அத்தலத்தில்ம
றைந்து செப்பிடு வித்தையாளனைப்போலப் போர்க்களத்
திற்றோற்றி தன்வில்லை மண்டலாகாரமாக வளைத்துவிஷ
ச்சுவாலையைவீசும் கடுங்கணைகளைத் தூவிப்பூதசயின்னி
யங்களை வளைத்து வளைத்துச் சின்னபின்னப் படச்சாடும்
போது சிவகுமாரன் தட்சணத்திற்றமது தேனை நிலத்தி
லிறக்கி அவுணராசன்முன்னம் நின்றுசரமாரிகளைப்பொ
ழிந்து தன்சேனைகளின்மீதுகவிந்து வருத்தும்அஸ்திரவ்
களனைத்தையும் கண்டதுண்டப்படுத்தி வாதுகொடுக்கும்
போது பகைவன் தன்னுருவை மறைத்துஅலைகளையுடை
ய கடலினெல்லையிற் றோற்றிச் சரவருடங்களைத்தூவிச்சி
வகணங்கள் முதலானவர்களைத் திகைக்கும்படிக்கு அலை
ப்பதைக் கந்தசுவாமிதெரிந்து அத்தலத்தைச்சேர்ந்து அ
வனேவுகின்ற படைகளை வாட்டிமீறிப் போராடிவருகின்
ற வேளையிற் சூரபதுமன் ஒருமந்திரத்தையுச்சரித்து ம
றைந்து சடுதியில் அண்டகடாக வெல்லையில் நின்றுகொ
டிய தீட்சணியமுள்ளபாணங்களை அமோகமாக விறைத்
துப் பூதப்பெருக்கைக் கண்டதுண்டப்படுத்தி வீறியிரு

ப்பதை எமதையன்கண்டு தாமும் அத்தலத்திற்போயத் திவ்வியபாணகோடிகளை யொன்றனந்தமாகப்போக்கிச்சிவகணங்களுக்கு வருத்தமில்லாமற் போற்றினவராய் மேலும் கணக்கிறந்த சிலீமுகங்களைக் கொண்டு தேவகாதகனைத் திக்குமுக் காடவொட்டாமற் பொருகின்ற சமயத்தில் அக்கினியைப்போல விளங்கும் வேலைத்தாங்கிய சூரமகாராசனுருவை மறைத்துச் சேஷனாதிய நாகர்கள்வாசஞ்செய்யும் பாதலத்திற் பிரவேசித்து அத்தலங்களிலிருக்கின்ற தீனரையலைக்க நேர்ந்தமுன்னிலையில் பன்னிருபுயாசலங்களையுடைய சரவணபவன் அவனைத்தொடர்ந்துபோய் அத்தலங்களில் நிறைந்தலைத்திருந்த பாணகோடிகளையடக்கிப் பகைவனைவளைந்து கடினமாகிய சண்டையைச் செய்து வரும்போது பாதகன்மறைந்துஉலகங்களுக் கச்சாணியாய்ச் சொர்னப்படிவங்கொண்டு ஆயிரக்கோடிமுடிகளைப் பெற்றிருக்கின்றமகம்மேருவினுச்சியிற்றோற்றி அத்தலத்தினுலவியிருந்த தேவர், கின்னரர், கிம்புருடர், முதலானவர்களையும் அதன்சாரலிற் றவங்களைச் செய்து வரும் ரிஷிகூட்டங்களையும் பலசரங்களினால் திகைக்கும் படிக்குச்சாடுகின்ற காலத்திற் சிவகுமாரனும் பொன்மலையைச்சேர்ந்து அத்தலத்திலிருப்பவரைப்பாதுகாத்து இராஜராஜனை மடக்கிக்கொண்டு திவ்வியபாணங்களைத்தூண்டியலைக்கின்ற முன்னிலையிற் சூரனுருக்கரந்துமின்னலையொப்பச்சுடுகியில் மகாவிஷ்ணுவுக் கிருப்பிட மாகியவைகுந்தநகரைச்சேர்ந்து சிறந்தபரமஞானிகளாகியசித்தமுத்தர்களைச் சிக்குப்படுத்தி வருத்துகின்ற காலையில் எமதையனும் சலியாமல் அத்தலத்தினும்போய்மாயைபுத்திரனுடனெதிர்த்து அவன்கொடுமைகளை யடக்கித் திகைக்கச்செய்தபோது சற்றுநேரம் தானும் பெரும்போர் செய்துசெய்து நிருவகிக்க மாட்டாமையால்மறைந்து அண்டகோளகைமேற்புறத்தி லிருக்கின்றவாயிலுக் கருகிற் போகுமுன்னிலையிற் சுயஞ்சோதி வடிவினனாகியபாலசுப்பிரமணியதேவரும் தொடர்ந்துகொடியபோரைச்செய்து சூரனேறியிருந்த நவரத்தினமயமாகிய இரதத்தைச் சக்கைச்சக்கையாகப் பேர்த்தெறிந்துகுதிரைகளையும்பாகனையும் அதம்பண்ணி விஜயலட்சுமியை மணந்து வீற்றிருக்கின்றபோது அவுணர்பெருமான் தன்வாகனத்தை யிழந்த காரணத்தினாற் காட்டழலைப் போலச்சீறி முன்னம்பரமசிவம்கடாட்சித்திருக்கின்ற இந்திரஞாலத்தேரை வரும்படிக்குச்சிந்தித்தனன் தட்சணத்தில் நவரத்தினமயமாய்ப் பலமணிகள் கலகலெனச் சத்திக்க வுத்தம அசுவப்பந்திகளைப்பூண்டு அண்டங்களதிரக் கற்கரத்தொனியைக் காட்டி கோடிசூரியர் தோற்றம்போலவிளங்கிப்பரந்தோங்கியிருக்கும் தெய்வத்தன்மை பொருந்தியவிரதமானது எதிரில்வந்து நின்றவுடன்சிங்காசனைப்போலத்தாவியேறிப் பீடத்தில்வீற்றிருந்தவனாய்த் தன்கரத்திற் பிடிபட்டிருந்ததனுசானது வட்டாகாரமாகவளைந்துமணிகள் கலிக்கத்தக்கதாகப் பலவித கொடியபாணசமோகங்களைச் சிவகுமாரன் மீதிற்போக்கிச் சொல்லப்படாதபோர்விளை யாடல்களைச்செய்து வருபவன் முன்னம் சரவணபவன்போராடும்போது அக்காலத்திற் புற்றினிடத்தில் நின்றும் ஈசெல் கூட்டங்கள் பெரும்போக்கெழுவதைப்போலவந்து போராடுகின்ற அவுணச்சயின்னியங்களை தும்சம்பண்ணிப்பண்ணி அவைகள்பெருகும் காரணத்தைத் தெரிந்து மேலும் மேலும்வரவொட்டாமல்பாணகோடிகளினால்அண்டவாயிலை அடைத்த தனுர்வித்தையின் வல்லபத்தைக்கண்டவுடன் கோபநகைகொண்டவனாய்நமதரசாட்சிவெகுநேத்திநேத்தி யெனச்சீறிச் சிவகுமாரன் அக்காலத்திற்றூண்டிவரும் சரமழைகளையும் பலபடையினால் வாட்டி அவர் தோற்றங் காணாமல் மூடிவருபவன் கரவேகசாமர்த்தியத்தினால் வயிரவூசிகளினும் முனையுள்ள தீட்சணியமாகியநாராசங்களளவற்றதைத்தூண்டி அண்டவாயிலை யடைத்திருந்த சரக்கூட்டைத்துகள்கண்டு வானத்திற்பறக்கச்சாடி பழையபடிக்கு வெள்ளிடையாக்கி அதன் மேற்புறத்தில்நெருங்கித்தேக்கிக் கருங்கடலைப்போலஆரவாரித்திருக்கும் ரதகஜதுரகபதாதிகளாகிய தன்சேனைப் பெருக்கைப்பார்த்துக் கரங்களைநீட்டியசைத்து வாருங்கோள்வாருங்கோளென்று புவனங்கள் கிடுகிடாய்த் தகிரும்படிக்குக் கூக்குரலிட்டழைத்துப் பருவதாகிருதியாகவிளங்கும் தன்புசங்களைத்தட்டி அண்டங்களதிரகர்ச்சித்தனன்.

இவ்விதமாகத் தமதிறைவன் துரிதப்படுவதைக்கண்டு இவ்வண்ட மேற்புறத்திற்றேக்கிட்டிருந்ததேர்த்தொகையும் யானைக்கூட்டமும் குதிரைப்பந்திகளும் கொடியபார்வையையுடைய அவுணப்படைகளும் எண்ணிக்கைப்படாத வெள்ளக்கணக்கிற்பெரும்புறக்கடலானது பெருகுமாறுபோல அத்தலத்திற்றோற்றுகின்ற பெருவாயிலைக் கடந்து ரணபேரி, ஜயபேரி, வெற்றிச்சங்கம், குடமுழவு தப்பட்டை, எக்காளைமுதலியவாத்தியங்களை முழக்கிக் கொண்டு அஸ்திரசஸ்திர விதங்களையும் தேவப்படைகளையும் பரித்தவர்களாய் விழிகள் அரக்கையொப்பச்சிவந்து தீப்பொறிகளைக் குபீல்குபீலெனக்கொட்டத்தக்கதாக அதிககோபாவேசங்களுடன் பருவதங்கள்கால்முளைத்தசைவதைப்போல அதிக ஆர்ப்பாட்டங்களைச் செய்து கொண்டு போர்சேர்ந்ததென்னுங் களிப்பினால் புயங்கள் பூரித்து வானத்தோங்கி வாகுவலையங்கள் தெறிக்க விண்ணிட மெங்குமூடிச் சிவகுமாரனைக் கண்டமாத்திரத்தில்வடவைக்கனலினு மேலிடச்சீறி நல்லகாரியம்இப்படிக்குநமதுவரவுக்குத்தடைசெய்துஇராஜாதிராசனைத் தனிமையில்மடக்கிக்கொண்டுவாதாடுகின்ற இச்சிறுவன்கருவத்தையும்ஆணவத்தையும்இந்தநிமிஷத்திலடக்கிஜயப்பிரதாபத்துடன் மீளக்கடவோமென்று பற்பலசபதங்களைப் பேசிமேலிட்டு ஆயிரங்கிரணங்களைவீசியுலகங்களைவிளக்கிவரும் சூரியபகவானைமூடியபனிப்படலத்தைப்போலக் குமாரதேவரை வளைந்துகொண்டு அகோரமாகிய யுத்தங்களைசெய்யத்தொடங்கிய காரணங்களை வானவெல்லையில்நின்று வேடிக்கைபார்த்திருந்த தேவர்கள் பிரமன், இந்திரனாதியர்கண்டு மனங்கலங்கி அம்மம்ம இக்காலத்தில்மூடிய சதுரங்கசேனைப்பெருக்கைப் பார்க்குமிடத்தில் சருவசங்காரகாலத்திற் சிவபிரான்கட்டளையின்படிக்குச் சராசரப்பிரபஞ்சங்க ளனைத்தையும் தகித்துவாட்டவெழுகின்ற வடவாமுகாக்கினியின் பெருக்கோ மேலையண்டங்களிற் பரந்திருக்கின்ற கங்கைகள்முற்றுமேகமாய்ப்பாயுந்தோற்றமோ திருப்பாற்கடலிலுதித்துப் பிராணிகளையலைத்த ஆலகாலவிஷமானது மீட்டுமெழுந்ததோபிரளயகாலத்தில்உலகங்களைநாசஞ்செய்யவல்ல ஊழிமேகங்களானவை பல்லாயிர வுருக்களைத்தாங்கி வந்தகாரணமோ இன்னதெனக்கணிக்கப்படவில்லை இதற்கென்னசெய்வோமென்று மிகவும் வாடிப்பார்க்கவும் பயந்து

நிற்கவுந்தாபரியாமல்கைகால்களுதறலெடுக்க நடுநடுங்கித் தமதுநிலைகளைவிட்டு திசைகெட்டுப் பலதிசையினும், ஓடியும், பதுங்கியும், ஏங்கியும், என்னவிளைய விருக்கின்றதோவென்னும் சஞ்சலசித்தராய் அல்லோலகல்லோலப்படுகின்றகாலையிற் பாதகனாகிய சூரன்படைத்திருந்த சேனைப்பெருக்கானது வீராவேசங்களுடன் வடவைக்கனலைப்போலச்சீறிக் கொக்கரித்து நீண்டவிற்களையிருகுதைகளு மொன்றுபடவளைத்து தேவாஸ்திரவிதங்கள் விஷத்தொவையலிட்டிருக்கின்ற கொடியசணைகள் விதைங்களையிறைக்கும் சரங்கள்அனலைக்கொட்டும் சிலீமுகங்கள் சர்ப்பங்களைப்போல வெற்றியுடன்மீளவல்ல பகழிகள்விதங்களனைத்தையும் சந்தித்துக் கார்காலத்திற் சத்தமேகங்களும் ஒன்றுபடக்கவிந்துபொழியுந் திவலைகளையொப்பக்கொட்டியும் மந்தரகிரிக்கொப்பாகவிளங்கும், தண்டாயுதம், முசலம், கப்பணம், பிண்டிபாலம், எறியீட்டி, சூலம், சக்கரம், எழு, மழு, கவண், வளைதடி யித்தகையஆயுதவிதங்களை ஒன்றனந்தமாகச்செலுத்தியும் மற்றும் பற்பலகொடிய போர்த்திறங்களைச்செய்து அண்டங்களதிர ஆர்ப்பரித்து வாதாடுவதையும் சேனைத்தலைவர்கள் வீராதிவீரராகவிருக்கின்ற அவுணராஜர்கள் மன்னமண்டலீகர் பலபோர்முன்னிலையிற் கைகண்டசூரர்கள் தங்கமயமாதிய தேவர்களைக் கற்கரத்தொனிகளைச்செய்துபோகத்தூரத்தித் தமதுநெடியவிற்களை மணிகள் கலிக்கவளைத்து அதிகதீட்சணியமுள்ள ஏவுகளை அமோகமாகச்செலுத்திச் சண்டைகொடுப்பதையும் அனற்படிவமாக விளங்குகின்ற சரவணபவன்தெரிந்து சகலனையும்ஒருமுனையிலொடுக்கத் திருவுளத்தெண்ணிக் கோபப்பார்வையைச்சிறிது பகைவர்கள் சேனைக்கூட்டங்களின்மீது நாட்டியமாத்திரத்திற்பெருகிய சுவாலையின் வெம்மையினாற் பஞ்சாக்கரமகத்துவங்களை மறந்து திருநீற்றின்பெருமையை யிகழ்ந்து பரமசிவகடாட்சத்தினாற் கிடைத்திருக்கின்றஅரியசெல்வப் பெருக்கனைத்தையும் பறிகொடுப்பவனாய் யானெனதென்னும் ஆணவத்தொடக்கிற்பட்டு நல்லுணர்வைப்போக்கி மயங்கியிருக்கின்ற சூரபதுமன்சதுரங்கசேனைப்பெருக்கனைத்தும் பக்கென்றெரிந்து மங்கிச்சாம்பலாயெழுந்ததுகள் படிந்தகாரணத்தினாற்சொர்ணமயமாகவிளங்கிக்கொண்டிருந்த அண்டச்சுவரானது தன்பிரகாசமழிந்து தூளிதப்படிவமாகக்காட்டியது.

இவ்விதமாக முன்னணியிற்பெருகிவந்த ரதகஜதுரகபதாதிகள்முற்றும் நாசமடைந்தகாலத்தில்மற்றையவண்டங்களிலிருந்து வெளிவந்த சயின்னியங்களிற் சிலவடவைக்கனலைப்போல ஆரவாரங்களைச்செய்துகொண்டுவந்து விண்மண் திசாதிசைகள் சாகரப்பரப்பெங்கும்நெருங்கிச் சிற்பரமூர்த்தியாகிய பாலசுப்பிரமணியக்கடவுளைச் சூழ்ந்துகொண்டு கொடியபாணவிதங்களையும் வலியஆயுதவகைகளையும் கோடைக்காலத் திவலைகளினும் கடுகிச்செலுத்தியும் மாயைப்பெருக்கைக்காட்டிமயக்கியும் இத்தகைய கடும்போர்செய்து அதிகஉற்சாகங்களுடன் சிருங்கநாதம் அட்டகாசங்களை முழக்கிவீறி யுலாவுவதைச்சுயஞ்சோதியாகிய சிவகுமாரன்கண்டுஅக்கினிச்சுவாலையெழப் பெருமூச்செறிந்து சற்றுநின்று ஊங்காரித்தனர்,அக்காலத்திற்றோற்றிய சுவாலையின்கொடுமையினால் வானத்தையளாவக் குவிந்திருந்த பூளைப்புஷ்பப்பெருக்கிற் றீச்சிகைதாக்குமாயின் வாடிச்சுருண்டுமங்கி நிலத்திற்சேருமாறுபோலத் தகிக்கப்பட்டு நீறாய்ப்பெருத்து உலகங்களனைத்தினும்நிறைந்து சிவகுமாரனையும்வளைந்துகொண்டகாட்சி பெப்படிக்கிருந்ததெனில் அதிகவீராவேசங்களுடன் ஆரவாரங்களைச்செய்துவந்த நால்வகைச்சேனைவெள்ளங்களானவைபோராடி வெற்றிகொள்ள நிருவகிக்கக்கூடாமையால் ஆருயிர்க்கோலங்கொண்டுமாயைப்பெருக்கினால்வெல்லக்கடவோமென நிதானித்துக் கவிந்ததுக்கொப்பாகக் காட்டியது, ஓமுனிவர்களேயிவ்விதமாகமுந்திவந்த கணக்கிறந்தவெள்ளஞ்சேனைப் பெருக்கனைத்தும்பலவகைப்போர்த்திறங்களைச்செய்து ஐயன்கோபித்துரப்பி ஓங்காரித்த ஓசையின் உற்பாதத்தினால் நீறாய்மாண்டகாலத்தில் வழிபெறாமல் மேலையண்டங்களில் அடைபட்டிருந்த ரதகஜதுரகபதாதிப்பெருக்கானது கடையுகவெள்ளத்தினுமேலிட்டு கியாவுமென்னும் ஓசையெழவீறிவந்துநெருங்கி நெடியவிற்களைவளைத்துக்கடியபாணவிதங்களைச் சோனாமாரியைப்போலச்சொரிந்தும் அமோகமாகிய கொடியஆயுதவகைகளை ஒன்றனந்தமாகக் கடாவியும் ஆக்கிரமித்துமேலிட்டுப் போராடுகின்றவுத்தண்டங்களையும் செருக்கையும் நீர்வளம் நிலவளம்குடிவளம் இத்தகைய செல்வச்சம்பத்தைப்பெற்ற தென்னாட்டிற் பலரும்புகழும்பெருமையினையுடைய மதுரைப்பதிக்கரசனாகவிருந்த மலயத்துவசபாண்டியன் அரிதிற்செய்துவந்ததவவிரதமுயற்சியினாற் பராசத்தியானவள் புத்திரியாய் மும்முலைத்தடாதகையென்னும் திருநாமத்தைக்கொண்டு ஜகமனைத்தையும் பரிபாலித்துத் திக்குவிஜயஞ்செய்து வருமுன்னிலையிற் றிருக்கயிலையைச் சேர்ந்தபோது சிவபிரான் திருநோக்கம்பட்டவுடன்ஒருஸ்தனமறையநாணினவளாய்ப் பரமன் கட்டளையின்படிக்குத்தன்பதியைச்சேர்ந்தகாலையிற் பரமேஸ்வரனெழுந்தருளித் திருக்கலியாணஞ்செய்து கொண்டவராய்ச் சோமசுந்தரபாண்டியனென்னும் பெயரைத்தாங்கி அரசுசெலுத்தி வருகின்றகாலத்தில் அவர்களுக்குப்புத்திரனா யவதரித்து உக்கிரபாண்டியனென்னும் பெயர்விளங்க இராஜாதிராசனாய்உலகங்களைப்போஷித்துவருமுன்னிலையிற்பிதாவினாற் கடாட்சிக்கப்பெற்றிருந்த வேலாயுதத்தினாற் றம்மையவமதித்துக்கடையுக வெள்ளத்தினுமேலிட்டுத் தென்மதுரைப்பதியையழிக்கவந்த கடற்கிறைவன்கருவத்தையடக்கியும் க்ஷாமகாலம்சேர்ந்து மன்னுயிர்வருந்துவதற்கிரங்கிநிதிக்குவையைப்பெற்று வரும்பொருட்டுச் சென்றகாலத்தில் அகந்தைகொண்டிருந்த மகம்மேருபருவதத்தைச்செண்டினால்வாட்டியும் தமது திருநாட்டினெல்லை முற்றினும் வருஷியாதநிமித்தம் மேகங்களைப் பற்றிவந்தபோது சீறியெதிர்த்ததேவேந்திரனை வளைதடியைவீசிப் புத்திபண்ணியும் இஃதன்றியும் இயலிசைநாடகமெனச் சொல்லாநின்ற முத்தமிழின் திறங்களை வளர்த்துவரும் சங்கத்துக்குத் தலைமையாகவிளங்கிச் சிவமகத்துவத்தை நிலைபெறநாட்டிச் சிறப்புடன்சைவசமையத்தை ஸ்தாபித்தும்இத்தகைய திருவிளையாடல்களை நடாத்திவரும் சிவசுப்பிரமணியதேவர் மேற்குறித்திருக்கின்ற அவுணப்படைகளின் காரணங்களைக்கண்டு இப்பெருக்குடன் போவதன்று ஆதலால் ஒருமுனையிற் சகலனையும்வாட்டி யொழிப்பதாகத் திருவுளத்தெண்ணினவராய்த் தமதுதிருக்கரங்களின்விளங்கிக்கொண்டிருக்கின்றவெற்றிப்படைகளாகிய கைவேல், கணிச்சி, சூலம், சக்கரம், தண்டம், இத்தகைய

சிறந்தஆயுதங்களின்மீது விழிகளைப்பரப்பிஜயப்பிரதாபத்தைப்பெற்றிருக்கின்ற நீங்கள்நாற்றிசையினும் விரைவிற்போய்ச் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் ஒன்றுபட்டுப்பெருகுமாறுபோலப்பரந்து சூழ்ந்துவாதாடிவரும்சூரன்சதுரங்கசேனை விரிவனத்தையும் தும்சப்படவாட்டிவருவதற்கிடம்பெறுமல் மேலே அண்டங்களிற் றேக்கிட்டிருக்கின்ற நால்வகைச்சயின்னிய வெள்ளங்களையும் பற்பலவுருக்கொண்டுவளைந்து சின்னபின்னப்படச்சாடியபின்பு நம்மிடத்துக்கு வரக்கடவீர்களெனக் கட்டளையிட்டுச் செலுத்தினர்.

நைமிசாரண்யவாசிகளே அந்தத்தெய்வீகம்பொருந்திய ஆயுதங்கள் வெளிப்பட்டவுடன் அனந்தகோடி படிவங்களைத்தாங்கி விஷச்சுவாலையைப்பெருக்கி தாபாக்கினியைவீசி யிடிகளைக்கக்கி அனற்பொறிகளை யிறைத்துக் கல்நெருப்பு மழைகளைப்பொழிந்து மற்றுமுள்ள கொடுமைகளெவற்றையும் காட்டிக்கொண்டு காளகூடத்தைப்போல மேலிட்டு எதிரிற்கொக்கரித்துப் பொருதிருந்த ரதகஜதுரகபதாதிகளின் விரிவனைத்தையும்நிமைப்போதிற் கண்டதுண்டப்படச் சங்கரித்துத் துகளாக்கிமேலிட்டு அவுணர்பெருமான் குடைநிழலிற்பட்ட ஆயிரத்தெட்டண்டங்களிலும் மின்னற்கொடியைப்போலச் சடுதியில்நுழைந்துநுழைந்து அத்தலங்களில்நெருங்கி யிருக்கின்ற ரதகஜதுரகபதாதி வெள்ளங்களனைத்தையும் அதாஅதப்படவாட்டிக்கொன்று சேனைத்தலைவர்களையும்மாய்த்துவிஜயப்பிரதாபத்துடன்திரும்பி வானகங்கையிற்படிந்து பவுத்திரமாய்க் குமாரதேவர் திருக்கரங்களிற் பழையபடிக்கு விளங்கியது, அக்கால்த்திற்பெருகிய ரத்தப்பிரவாகத்தையும் பிணமலைகளையும் கவந்தப்பரப்பையும் மற்றும் ரணக்களத்தில் நேர்ந்தகொடுமைகளையும் ஆயிரநாவைப்படைத்திருக்கின்ற ஆதிசேஷனுலும் கணித்துஒருவகையாகச்சொல்லிமுடிவதோ அல்லது சிருஷ்டிகர்த்தனுகிய பிரமனுலும் நினைந்தாவதன்று இவ்விதமாகச் சரவணபவன் தூண்டியபடைகள் வீறிப்போய்த் தன்சேனைகள்முற்றும் நாசப்படச்சாடிய வேடிக்கைகளைச் சூரபதுமன்கண்டமாத்திரத்தில் வடவைக்கனலும் ஆலகாலவிஷமும் பயங்கொளிக்கத்தக்கதாக மண்டியெரிந்து நல்லகாரியம் இப்பாடுபடுத்துகின்ற பாலகனை யினிச்சும்மாவிடமாட்டேன் கணப்போதிற்பெற்றவனுக்குப் பிள்ளையாகவொட்டாமல் சின்னபின்னப்படக் கொல்லக்கடவேனென்று ஆங்கரித்து முன்னந்தன்தவத்துக்கிரங்கிச் சிவநாதன்கடாட்சித்திருந்த தெய்வீகம்பொருந்தியசக்கரப்படையையெடுத்து விதிப்படிக்குச் சோடசவுபசாரங்களுடன் பூசித்துப்போற்றி கரகனெச்சுழற்றிச் சிவகுமாரனைக்கண்டித்து வருவதாகவேண்டி வேசமாய்ச்செலுத்தினன்.

அப்படை வெளிப்பட்டமாத்திரத்தில் தேவர்கள்முதலியசகலரும் விழிகள்கூசி மதிமருண்டு விஷமுண்டவரைப்போலக் களைக்கும்படிக்குச் சொலித்துக்கொண்டு கிறுகிறெனச்சுழன்று தீப்பொறிகளையிறைத்துப் பற்பல கொடிய ஆயுதவிதங்களைப்படைத்துச் சொல்லப்படாத வுற்பாதங்களையும்காட்டி பிரசண்டமாருதமும் பயங்கொளிக்கவேகங்கொண்டுசீறி நெருங்குமுன்னிலையிற் குமாரசுவாமியார்தமதுதிருக்கரங்களினென்றைநீட்டிவட்டாகாரமாய்ச் சூரியனுக்கொப்பாகச் சொலித்திருக்கும் சக்கரத்தைவாவாவென்றழைத்துப்பற்றிச் சலனமற்றுநகைமுகராயிருந்தனர், இப்படிக்குத்தான் அருமையாகக்கிடைத்திருந்த சக்கரம்முருகேசன் வசப்பட்டுப்போன அபஜயத்தைக்கண்ட சூரனென்னசெய்வான் செருக்கற்றுப்பெருமூச்செறிந்து மானமுங்கோபமும்மனதைப்பாதிக்நாகம்போலச்சீறியிந்தப்பாலகனை மாயையின்முயற்சியினுல் வெல்லக்கடவேனென நிதானித்தவனுய்ச்சிவபிரான்கடாட்சித்த இந்திரஞாலத்தேரிலிருந்தவன் சுக்கிராகிரியன் போதிக்கப்பெற்ற பிங்கலையென்னும் மந்திரத்தைச்செபித்து அதன்முயற்சியினுல் பற்பலவுருக்களைத்தாங்கி எங்குந்தானுக்காட்டிவிற்களைவளைத்துக் கடியபாணங்கள்கொடிய ஆயுதங்களைச் சோனைவருஷங்களுங் குறைபடச்சொரிந்து வீரங்களைப்பேசி சிங்கத்தைப்போலக் கற்சித்துச் சூருவளிக்காற்றைப்போலச் சுழன்றுசுழன்று பிரபலசண்டைசெய்துலாவுகின்றதைப் பாலசுப்பிரமணியதேவர் தெரிந்து பகைவன் மிரட்டிவருகின்றமாயை வெகுநேத்தியாகவிருக்கின்றதென நகைத்தவராய்த்துரிதமாய் ஞானப்படையையெடுத்துத் தமதுதனுசிற்சந்தித்துப் பாதகன்வஞ்சகங்களை நிமைப்போதிற் அதப்படுத்திவரக் கடவையெனப்பணித்துச் செலுத்தியவுடன் கடுகிச்சென்று வேதவொழுக்கங் களுக்குமாறுய் கொடுங்கோலைநடாத்திவரும் சூரமகாராசன் மாயைப்பெருக்கனைத்தையும் கவளீகரம்பண்ணிப் பகைவனையதாப்பிரகாரந் தனியனுகவிட்டுமீண்டு கர்த்தன் அம்புக்கூண்டிலடங்கியது, சவுனகாதிரிஷிகளே மேற்குறித்தபடிக்குத் தன்முயற்சிபின்னப்பட்டுப்போனகாலையில் மனந்தளர்ந்து வானத்தையளாவிநிற்கின்ற தேரிலிருந்தபடியே மேல்நடத்தவேண்டியதைக் குறித்துச்சற்றுநேரம் யோசித்திருந்தனன்.

இதனைக்கண்டதேவர்கள் அகமுகமலர்ச்சியுடன் சத்தசாகரங்களுமிரைந் தெழுந்ததைப்போல இளையோன்வீரப்புகழைப் பாடிக்கொண்டாடித்தேன்களைப்பெருக்கிப் பரிமளித்திருக்கும் பஞ்சகற்பக மலர்களைவாரிவாரிச்சிவகுமாரன்மீதிலிறைத்து ஜயம்ஜயமெனப்போற்றினர்,இப்படிக்குத் தன்பகைவர்வீறியிருப்பதையுந் தனக்கடுத்தகுறைபாடுகளையும்நினைந்துநினைந்துவெட்கிச்சடுதியிலொரு நினைவைக்கொண்டவனுய் மின்னலைப்போலத் தேருடன் மறைந்து அண்டகோளகைமேல் வாயிலினருகிற்றேற்றிக்கொக்கரித்துப் பயந்தோடாமற் சூரனுல் சண்டைக்குவரக்கடவையென அறைகூவிக் கோடையிடிகளுமஞ்சப் புசங்களைதட்டிக்கொண்டு மேலேஅண்டத்திற்பிரவேசித்து ஆர்ப்பாடங்களைச்செய்திருப்பதை எமதிறைவன் தெரிந்து துரிதமாய்த் தமதுதேரை அத்தலத்திற்கொண்டுபோய்கொடியபோரைச்செய்து சிக்குப்படுத்து முன்னிலையிற் சடுதியில்மறைந்து மற்றெருஅண்டத்திற்பாய்ந்தகாலையிற்சண்முகப்பெருமாளும் சலியாமற் சூரன்முன்னம்நேர்ந்து படைகளைக்கொண்டு திகைக்கும்படிக்குச்சாடும்போது பாதகன் அதனைக்கடந்து தன்காவலிற்பட்டமற்றையஅண்டங்கடோறும் பாயுந்தோறும் சரவணபவனும் பின்பற்றிப்போய் அகோரயுத்தங்களைச் செய்துசெய்து வருமுன்னிலையிற் சிவகுமாரன்தோற்றங்காணுதகாரணத்தினுற் பிரமன்இந்திரனுதியதேவர்கள்மனச்சோர்வுடன் பரிவாய்வளர்த்துவரும் நற்றுய்தந்தையைப்பிரிந்துவாடும் பிள்ளைகளைப்போலவருந்திப்பெருமூச்செறிந்து ஏக்கினவர்களாய் ஸ்ரீமகாலட்சுமி யெழுந்தருளாநின்றமார்பையுடைய ஸ்ரீவிஷ்ணுவைச்சேவித்துப் போற்றிக்

கர்த்தனே வீரவாளாயுதத்தைத்தாங்கியிருக்கும் மாயை புத்திரனுடன் தொடர்ந்து இவ்வண்டவெல்லைகடோறும் வாதாடியிருந்த வேலாயுதமூர்த்தியிதனைக்கடந்து மேலையவண்டங்களினும் பாதகனைவிடாமல் பின்பற்றிப்போயினர், பரமசிவகடாட்சத்தினாற் பெற்றிருக்கின்றவரமுயற்சிகொண்டுசூரன் சற்றும்இளைத்தவனாகக் காணவில்லை மேலும்சலனமற்றவயிரப்படிவத்தையும் மாளாதவயதையும்படைத்திருப்பவனாதலாலும் மாயைவஞ்சகமுதலிய பாதகங்கள் சேர்ந்திருப்பதற்கொப்பாகியகொடியமனதையுடைய தீயன் இத்தலத்தைக்கடந்து மறைவிடங்களிற் போகுங்காரணத்தை யோசிக்குமிடத்தில் ஏதோசில சூதுகளைநினைந்திருப்பவனைப்போலக் காட்டுகின்றது. பாலசுந்தரத்துக்கு அவுணர்பெற்றிருக்கின்ற மாயைப்பெருக்குகளொன்றுந் தெரியாது சூரன் இளைத்தவனைப்போலக்காட்டி யோடியதைக்கண்டு இவனைவெல்வதற்கிது தருணமெனநினைந்து எமதையனும் போர்த்தொழிலைச்செய்துகொண்டே தொடர்ந்துபோனவர் அவுணராசனைக்கண்டுவாதாடுகின்றனரோ அல்லது அவனைக்காணாமல் தேடுகின்றனரோ மற்றுமென்னகொடுமைகள் விளைகின்றதோ யாதுந்தோற்றவில்லை ஆகலின்அடியோங்கள் மனம் ஒருமைப்படாமல் சஞ்சலத்திற்பட்டு வாடிவருந்துகின்றனம் கண்காணாதவிடங்களிற் சற்றுமிரக்கமற்ற பாதகன் கொண்டுபோயினன், அத்தலங்களில்நடக்கும் விளைவின்னதெனத்தெரியாமல் ஏழைகளாகிய யாங்கள் பயப்பிராந்திகொண்டு திகைக்கின்றன மாதலால் ஒருவகைதேறுதலைகளைச்சொல்லிக் கிலேசத்தைப்போக்கி யாளவேண்டுமென்று போற்றுகின்ற பிரமனாதியர் முகவாட்டத்தையும்சோர்வையும் கேசவன்தெரிந்து நகைத்தவராய் மனதிலிரக்கமுற்று ஓதேவர்களே பயப்படவேண்டாம்யாதொருஎண்ணத்தையும் நினைந்துவருந்தவேண்டுவதில்லையென்று அபயாஸ்தமளித்துஇதனைத்திருவுளம் பற்றுவதாயினர்.

கொடியசெய்கைகளையுடைய சூரனாற் பலகாலம்பட்ட வருத்தங்களினால் அவன்சவுரியங்களையும் புயவன்மைகளையும் பெரிதாகமதித்துக் கலங்குகின்றீர்கள் அதனையினிவிட்டுவிடக் கடவீர்கள் இளையோனாகியசண்முகப்பெருமாள் புசபலபராக்கிரமத்திறங்களைத் திஷ்டாந்தரமாகப் பலவிசைகண்டிருந்தும் இப்படிக்குச்சங்கையுற்றுவாடுவதுஉங்களையொத்தவர்களுக் கடுப்பதோ வேதாகமங்களையோதிப்பரத்துவநிச்சயங்களைத் தெளிந்திருக்கும் மகத்துக்களாலும் அறியப்படாத பரவஸ்துவாய் சச்சிதானந்தசொரூபியாய் ஆதிமூலமாய் அண்டரண்டபுவன சராசரங்களுக்குக் காரணபூதமாய்ச் சுயஞ்சோதிவடிவைப்பெற்று தம்மைத்தொழும் பரமஞானிகளுக்கெல்லாம் காரணகர்த்தனாகவிருப்பவன் சரவணபவனென்றறியக் கடவீர்கள் பிறப்பிறப்பில்லாத தேவாதிதேவனாகிய சிவபிரானே பிள்ளைப்பருவத்தனாய்ச் சண்முகாரவிந்தங்கள் விளங்கக்காட்டுகின்றனனெனச் சொல்வதல்லது வேறுமுண்டோ வேலாயுதமூர்த்தியினது குணாதிசயங்களையும் மகிமைகளையும் கண்டறிந்தும் அவன்மாயைப்பெருக்கினாழ்ந்து உங்கள்மனந்தெளிவுபெறாமல் மயங்குகின்றீர் ஓதேவர்களே யினிசற்றும் ஐயப்படவேண்டுவதில்லைசூரபதுமனானவன் தன்வல்லபத்தினால் ஆயிரகோடி அண்டங்களெங்கும்போனபோதினும்நமதுகர்த்தன்தொடர்ந்துபோர்செய்துசெய்துவாட்டிச் சற்றுநேரத்தில் இவ்விடத்தில் அப்பாதகனைக்கலந்து வரவிருக்கின்றனர், இதனைஉள்ளங்கை நெல்லிக்கனியைப்போலக் காட்டுவோம் அக்காட்சியைக்கண்டு களிப்பீரென்று மகாவிஷ்ணுவானவர் சிவகுமாரன் மகிமைகளைவிரித்துப் போதித்தமாத்திரத்திற் பிரமனாதியதேவர்கள் மனச்சஞ்சலங்களை யொழிந்துஓகர்த்தனே பேரின்பஉணர்ச்சியைப் பெறாதகாரணத்தினால் மயங்கினோம் தேவரீர்வாக்கியங்களைச் செவிகளுக்கமுதமாகக்கேட்டு உண்மையைத்தெளிந்து கிருதார்த்தராயினோமென்று போற்றிக்களித்துப் பாலசுப்பிரமணியக்கடவுளினதுவரவுக்கெதிர்பார்த்திருந்தனர். இதுநிற்க சூரபதுமனானவன் மேற்குறித்தபடிக்கு ஆயிரகோடி அண்டங்கடோறும் மின்னலையொப்ப இந்திரஞாலத்தேரைச்செலுத்தி உலவுகின்றகாலங்களிற் குமாரனும்பின்பற்றிப்போய்வளைந்துகொண்டு பலமகிமையுள்ள பாணங்களைச்சோனைமழையினும் மேலிடச்சொரிந்து போராடுமுன்னிலையிற்பாதகனும் பின்னிடையாமல் அதிகதீட்சணியமுள்ள சரவருடங்களைப்பெருக்கித் தன்மேல்வரும்படைகளைக் கண்டித்து மேலுமேலும் அமோகமாகிய கொடியகணைகளைப்போக்கிக் கொக்கரிக்கவும் அவற்றினை முருகப்பெருமாள்மாற்றவும் இவ்விதமாகச் சூறைக்காற்றையொப்பத் தங்கள் தேர்களைத்திருப்பித்திருப்பி ஒருவரையொருவர்வெல்லவேண்டுமென்கிற வயிரங்களுடன்நெருங்கிச்சண்டைகொடுத்த வேடிக்கையையும் அவ்விருசூரர்கள் தீரத்தையும்கரவேகசரவேகத்தின் பெருக்கையும் தேர்களோடும் வேகத்தையும் ஒருநாவைப்படைத்திருக்கின்ற என்னாற் சொல்லிமுடிவதன்று அவர்கள்விடுத்த பாணகோடிகள் வெட்டுண்டு மகம்மேருவினுமேலிட்டுக் குவிந்ததெனப் பேசுவோமாகில் மற்றபோர்த்திறங்களையாவரால்கணிக்கக்கூடும் இவ்விதமாக அண்டநிலைகளெங்கணுந்திரிந்து வாதாடியசூரன் கடையிலிந்தப் பூமண்டலத்தைச்சூழ்ந்தசமுத்திரமத்தியிற் சொர்னமயமாக விளங்கிக்கொண்டிருக்கும் வீரமாமயேந்திரபுரியினெல்லையிற் றோற்றியகாலத்திற் சரீரத்தைப்பிரிவின்றிஉலவும் நிழலைப்போலக் கந்தசுவாமியும் அதிகஉக்கிரத்துடன் தொடர்ந்தபோதுஅத்தலத்திற்கூடியிருந்த ரதகஜதுரகபதாதிகளனைத்தும்வீராவேசங்களுடன் பெரும்புறக்கடல் பெருகுமாறுபோலமேலிட்டு நமதுசக்கிரவர்த்தியைவிடாமல் வாதாடிவருகின்ற இந்தப்பாலகன் ஆணவத்தையடக்குவோமென வடவைக்கனலைப்போலப்பொங்கித் தங்கள்கரங்களிற் பிடிபட்டிருந்த விற்களை யிருகுதைகளு மொன்றுபடவளைத்துத்தாங்களிதிற்றேடிவைத்திருக்கின்ற தேவப்படைகள் காளகூடவிஷத்துக்குச் சமமாகியசிலீமுகங்கள் வயிரவாளிகள்முதலிய அஸ்திரங்களைக் கோடைகாலமழைத்துளிகளைப்போல அதிகவேகமாகமேலிடச்சொரிந்தும்மந்தரகிரியையொப்பக்காட்டும் வலியதண்டாயுதம் சக்கரம்சூலம்பிண்டிபாலம் வச்சிராயுதம் கழுமுள் வேல்முதலிய ஆயுதங்களை ஒன்றனந்தமாகக் கரவேகங்கொண்டுகடாவியும் மாயவித்தைகளினால் பல கொடுமைகளைக்காட்டியும் இன்னமுஞ்சொல்லாநின்ற சித்திரப்போர்களைச் செய்துகொண்டுமனோவாக்குக்கெட்டாத மூலகாரணக்கடவுளாய் சுயஞ்சோதி மயமாயிராநின்ற சிவசுப்பிரமணியதேவனை வளைந்துகொண்ட காலையில் அப்பாதகர் மனவலியையும் புசபலபராக்கிரமத்திறங்களையும் எமதிறைவன் மதித்து

அவர்களனைவரையும் ஒருமுனையில்மடிக்கவெண்ணிச்சற்
றுகோபநகைகொண்டனர், அதனிடையிற்றோற்றிய தீப்
படலமானது மேல்ட்டுக்கொளுத்தமுப்புராதிகளைப்போ
லவெந்து நால்வகைச்சேனைவெள்ளங்களனைத்தும் சாம்ப
ல்மலைகளாகக்குவித்தது.

சவுனகாதிரிஷிகளே பிதாவானவர் செய்ததொழிலைப்பி
ள்ளைமுடிப்பது தகுதியாகவே காணப்படுகின்றது, இவ்
விதமாக திசாதிசைகளெங்கணும் நெருங்கி ஆர்ப்பாடங்
களைச்செய்துகொண்டு போராடியிருந்த நால்வகைச்சே
னைகளுஞ் சூரியன் முன்பட்ட பனிப்படலத்தைப்போல
நாசமடைந்து பெருத்தோங்கியிருக்கும் தூளிதமலைகளை
க்கண்ட தேவர்கள்மனவெழுச்சி பெற்றவர்களாய் அம்ம
ம்ம இத்தகைய பெருவெள்ளத்தை யாவரால்முடிக்கக்கூ
டுமென்று ஐயன்பெருமைகளைக்கொண்டாடிப் பஞ்சகற்
பகமலர்களை ஏராளமாக வாரிவாரிமுருகேசன்மீதிலிறை
த்து ஜயாவிஜய பவாவென வாழ்த்திப்போற்றிக் களித்தி
ருந்தனர், சவுனகாதிரிஷிகளே, யிந்தவண்டப்பரப்பெங்க
ணும்நெருக்கி ஆர்ப்பாட்டங்களைச்செய்திருந்த சதுரங்க
சேனைகளனைத்தும் குமாரதேவர் சீற்றவழலினாற் றகிக்க
ப்பட்டொழிந்தகாலத்திற் மானமுங்கோபமும் சொலிக்க
த்தக்கதாகச் சூரபதுமன்நின்றகாட்சி யெப்படிக்கிருந்த
தெனில் ஆதிகாலத்தில் ஒருகாரணநிமித்தியமாக அகஸ்
தியர் கருங்கடற்பெருக்கை உள்ளங்கையினேற்றுஆபோ
சனஞ்செய்தகாலையில் வடவையானது கொழுந்துவிட்டு
ச்சொலித்துக் காட்டியதையொத்தது, அக்காலத்திற் சிவ
குமாரன் நகையழலின் கொடுமையினாற் பிரளயவெள்ள
த்தைப்போலப் பெருத்தடர்ந்து வீறிநின்ற கணக்கிறந்த
வெள்ளம் மங்கியதையும் ஏவலுக்கு மொருவருமில்லாம
ல் தான்தனிமையில்நிற்பதையும் தனக்கடுத்தமானக் கு
றைச்சலையும் ஜயசாலிகளாகிய நவவீரர் இலக்ஷர்படைத்
தலைவர் பூதவெள்ளங்களுடன் தூதன்மனவெழுச்சிபெற்
றுக் கெலிப்புடன் கொக்கரித்திருக்கின்ற ஆரவாரங்களை
யும்தெரிந்து அதிகமனஸ்தாபத்துடன் அவுணர்பெருமா
ன் இதனைநினைப்பதாயினன், வீராதிவீரர்களாய் இருபு
சங்களையொப்பக்காத்திருந்ததுணைவர் சூரியனைத்தளைசெ
ய்யவல்ல சவுரியபரனாகிய பானுகோபன்முதலிய பிள்ளை
கள் மந்திராலோசனைகளுக்கு யோக்கியமாகிய மந்திரிபிர
தானிகள் பிராணபதமாகவிருந்த சிநேகிதர்நெருங்கியசு
ற்றத்தினர், சென்றவிடங்களில் வெற்றியுடன் திரும்பத்
தக்க புசபலபராக்கிரமசாலிகளாகிய சேனைத்தலைவர்கள்
மற்றுமிராநின்ற அவுணப்பிரபுடீகர்கள் இந்தவீரமாம
யேந்திரபுரிமுதலிய விடங்களில் வாசமாயிருந்த சயின்
னியங்கள்முற்றும் மாண்டதுமல்லாமல் என்னுணையிற்ப
ட்டிருக்கின்ற மற்றையவண்டங்களிலிருந்து பெருகியப
ல்லாயிரகோடிவெள்ளச் சேனைப்பெருக்கும் பன்னிருபு
யாசலங்களைப் படைத்திருக்கின்ற பாலகன்மகத்துவத்தி
னுல் நாசப்பட்டுப்போயது நானும் ஒன்றியாய்த் திகைத்
திருக்கின்றனன், இனியென்னால் முடிக்கவேண்டியகார
ணங்களொன்றையுங்காணேன் இதுபரியந்தம் நடத்திவந்
ததந்திரஉபாயங்களைவிட இனியென்னவிருக்கின்றதென்
று பற்பல எண்ணமிட்டவனுப் பெருமூச்செறிந்து யா
துந்தோற்றுமற் சிலநேரம் மயங்கியிருந்தவனுக்கு ஒரு
கியாபக முதித்தவுடன் சற்றுமனச்சஞ்சலத்தையொழித்
து தட்சணத்தில்மிகுத்த அன்புடன்தன்னை அரிதிற்பெ
ற்றநற்றாயாகியமாயையைமனப்பூருவகமாகநினைந்தனன்.

இப்படிக்குத் தன்ஜேஷ்டபுத்திரன் மனவருத்தத்துட
ன் கியாபகங்கொண்ட காரணத்தைச் சுமாலினியென்னு
ம்சிறந்த பருவதச்சாரலிலிருந்து பாமனைநோக்கி அரிய
தவங்களைச்செய்துவருபவள் தெரிந்தவுடன்அத்தலத்தை
க்கடந்து மனோவேகத்திலுங் கடுகிவந்து மின்னலைப்போ
லச் சூரன்முன்னங்தோற்றிச் சிவபிரான்கடாட்சித்த ஆ
யிரத்தெட்டண்டங்களுக் கதிபனாய்மகதயிஸ்வரியங்களை
யனுபவித்துவந்த புசபலபராக்கிரமசாலியாகிய குமார
னே சதுரங்கசேனைப்பெருக்கையும் படைவீரரையும்
துணைவர்புத்திரமித்திர களத்திராதிகள்மதியூகிமந்திரிக
ள் மற்றபரிசனர் இராஜசின்னங்களெவற்றையும்நீங்கி அ
திகமனக்கிலேசத்துடன் தனியனாய்நிற்கச் சம்பவித்தகா
ரணமென்னை யிக்காலத்தில் என்னைவரவழைத்தநிமித்த
ம்யாது அதனைவிளாவிற் சொல்லக்கடவாயெனக் கேட்ட
காலத்தில் துக்கவருத்தங்களுடனும் பட்சத்தினாலும் அ
ன்னையைப்பிரதட்சணம்வந்து சேவித்துக்கொண்டவனாய்
க் கரங்களைக்கூப்பிநின்று இதனைமுறையிடத்தொடங்கி
னன், ஓதாயே நூற்றெட்டியுகங்களாகச் சகலரும்போற்ற
வாழ்ந்திருந்த எனக்குஇக்காலத்திற் சம்பவித்தவருத்தங்
களை யென்னவென்றுசொல்லுவேன் சிவபிரான்நுதல்வி
ழியில் நேற்றையத்தினங்தோற்றிய பாலசுப்பிரமணியன்
நிர்நிமித்தியமாய் நம்மேற்பகைத்துத் திருக்கயிலையைக்க
டந்து சிலபூதவெள்ளங்களுடனும் சமுத்திரஞ்சூழ்ந்த
பூமண்டலத்திலிறங்கி வருபவன் வழியில்நேர்ந்த உன்னு
டைய குமாரனாகிய தாருகாசுரனையும் மாயைக்கரசனாகவி
ருந்த கிரவுஞ்சனையும் வெற்றிவேலினாற்பிளந்துகொன்று
அவனைப்போற்றியிருந்த மந்திரிபிரதானிகள் படைத்த
லைவர்கள்முதலிய சேனைப்பெருக்கையும் நாசப்படுத்தின
துமல்லாமல் தொலைதூரங்கடந்துவந்து சமுத்திரத்தை
த்தாண்டி யாவராலும் நோக்குதற்கரிய கட்டுக்காவலையு
டைய இந்தவீரமாமயேந்திரபுரிக்கருகில் பாசறைவிடுதி
உண்டுபண்ணிக்கொண்டு நமக்குப்பயந்தொளித்திருந்த
இந்திரனாதிய தேவர்களைசேர்த்துக்கொண்டு விஷ்ணுபிர
மன்போற்ற விருப்பதைத்தெரிந்து இத்தலத்தைக்கடந்
து போவதாகப் பயமுறுத்தும்படிக்கு ஜயசாலியாகிய உ
ன்பேரன் பானுகோபனைச் சிலசேனைகளுடன் செலுத்தி
னுல் சற்றுமிரக்கமில்லாமல் அவனையும் மற்றபிள்ளைகள்
மந்திரிபிரதானிகள் மன்னமண்டலீகர் சேனைத்தலைவர்க
ள்கணக்கிறந்தவெள்ளம் ரதகஜதுரகபதாதிகளையும் கொ
ன்று என்பிராணபதமாகவிருந்த சிங்கமுகாசுரனையும்
அவன்பிள்ளைகளாதியரையும் அதம்பண்ணியும்விடாமல்
என்னையும்மடக்கிக்கொண்டு அண்டநிரைகள்முற்றினுமி
ருந்த நமதுசயின்னியப் பெருக்கனைத்தையும் வாட்டித்
தொடர்ந்துபோராடி வருகின்றனன் தாயேசகலரையும்ப
றிகொடுத்து இராஜாதிராஜனாகவிருந்தயான் ஒன்றியாகநி
ற்கின்றனன், எனக்கடுத்திருக்கின்ற துக்கவருத்தங்களைச்
சொல்லி முடிவதன்று மேலும் எங்களுக்கேதெனும் கு
றைவுநேர்ந்து நினைந்தவுடன்வந்து அவற்றைப்போக்கிப்
பாதுகாப்பதாகமுன்னம்வாக்குதத்தஞ்செய்திருப்பதாலு
ம் புத்திரருக்கடுத்த இன்னலைத்தாய்தந்தையர்விலக்கியிர
ட்சிப்பதுகடமையாகவிருக்கின்றதினாலும்இவைகளனைத்
தையும் யோசித்துத் தாமரையிலையிற்பட்டநீர்த்துளியை

ப்போல மனந்தாபரியாமலலேகின்ற சஞ்சலங்களைப்போ க்கியாள்வதாகத் திருவுளத்திலிரக்கமுற்று அநியாயமாக மாண்டதம்பி பிள்ளைகள்மந்திரிபிரதானிகள் படைவீரர் மற்றசேனைப்பெருக்கனைத்தும் ஒருமுனையி லெழுவதற் கொருசூட்சியைத் தயைசெய்யவேண்டும் இதையன்றியி ல் மற்றொருவருத்தங்களைக் கொடுக்கவில்லை விரைவில்இ க்கோரிக்கையைக் கடாட்சிக்கக்கடவாயென மிகவும்வருந் திக்கேட்டுக்கொள்ளும் ஜேஷ்டபுத்திரன் கோரிக்கைகள ளைத்தையும் கவனித்துக்கேட்டு நகைத்தவளாய்இதனைப் போதிப்பதாயினள்.

ஐயனே-புசபலபராக்கிரமசாலிகளாகிய துணைவர்பிள் ளைகள் மாமன்மைத்துனன் சினேகிதர், பெரியோர்கள் ம ற்றுமுள்ளசுற்றத்தினர் வீராதிவீரராக விருந்தபடைத்த லைவர்கள் அவுணராஜர்கள் மனதினாலும் அளவிடப்படா தரகசஜதுரகபதாதிகள்முதலியராஜ சின்னங்களையுந்தோ ற்று ஏவற்பணிவிடைகளுக் கொருவருமில்லாமல்ராசரா சப் பிரபுடிகனாகவிருந்த உன்னையொத்தவன் இக்காலத் திற் றனித்திருக்கவும் பெறுவையோ இப்படிக்குச்சகல வளங்களையும் பறிகொடுத்தும் இன்னமும் தீனராய்த்தா யாதிகளாகவு மிருக்கின்றதேவர்கள் சிறையைவிடுதலைசெ ய்துபோட்டு மகதயிஸ்வரிய வைபவங்களை யனுபவித்து ச்சவுக்கியமாகவிருக்க நினையாமல் இப்பாடுகள்பட்டும் ச ண்முகப்பெருமானுடன் பகைத்துச்சண்டைசெய்யவேநி னைந்திருப்பதாகக் காண்கின்றது அப்படிக்குத்துணிவு கொள்ளுவையாயின் தற்காலத்திலிருக்கின்ற சம்பத்துக ளையும்போக்கிச் சிவபிரான் கடாட்சித்திருக்கின்ற வரப் பேறுகளையும் அரியவயிரதேகத்தையும் வலியபிராண னையு மிழக்கவரும் பன்னிருபுயாசலங்களைப்படைத்திரு க்கும்குகனது குணசியங்களைமதித்துப்பாராமல்பாலக ன் பாலகனெனப்பேசுகில்றனை இத்தகைய தண்டனைகளை ப்பெற்றும்இன்னமும்அவன்பெருமைகளுனக்குத் தோ ற்றவில்லையோ சுயஞ்சோதியாய் எள்ளினெண்ணெயைப் போல நிரஞ்சனமாய்விளங்கிச் சராசரப்பிரபஞ்சங்களை டிப்பித்துவரும்ஆதிதேவனேயித்தோற்றங்கொண் டெழு ந்தருளியிருக்கின்றனர்,சருவசிவதயாபரமூர்த்தியாதலால் உன்னிடத் திரக்கமுற்று இத்தகைதிருவிளையாடல்களை ச் செய்துவருவதல்லது சற்றுக்கோபங்கொண்டு தமதுதி ருக்கரத்தில் விளங்கும் வெற்றிவேலாயுதத்தைச் செலுத் துவராயில் நிமைப்போதில் இந்தவயிரதேகம்பிளப்புண் டு மாண்டு போவாய் வாழ்நாளை வியர்த்தமாகப்போக வு றுதிகொண்டு என்மொழியை மறுப்பையாயிற் றரிதமா ய்க் கெடுதிநேரும் மேலும் தலையிலெழுதியிருக்கின்ற லி பியின்காரணங்களை மாற்றினவர்க ளொருவருங் கிடையா து ஆதலால் இக்கருமங்களைத்திர்க்காலோசனையைச் செய் து நடந்துகொள்ளக்கடவா யிவைசிற்க உன்கருத்தின் ப டிக்கு இதுபரியந்தம் இறந்தவர்க ளனைவரையும் எழுப்ப வேண்டுவையாயில் சத்தசாகரங்களுக்குக்கடையிற் சொர் ணமயமாய் வானத்தையளாவவோங்கி வளர்ந்திருக்கும்சக் கிரவாளகிரியைச் சூழ்ந்த பெரும்புறக்கடலினருகிற்குளி ர்ந்த கிரணங்களை வீசுஞ்சஞ்சிவி விளங்கும் மந்தரகூட மென்றொரு பருவதமிருக்கின்றது அதனைத்தருவிப்பை யாயின் உன்னெண்ணங்கைகூடுமெனச் சொல்லிக்குமார னே பிரமன் நிர்னயப்படிக்குச் சகலமுமுடியவிருக்கின்ற து நானிருதாவாயெண்ணியாவதொரு கருமமு மில்லை யென்று பற்பல வுறுதிகளையெடுத்துக்காட்டியும் சூரன் கருத்து பேதியாத காரணத்தினால் அவனை வெறுத்துக் கொண்டு மறைந்துதன்னிருப்பிடத்தைச் சேர்ந்தனள்.அ தன்பின்பு நீலகிரியைப்போலப் பருத்த தேகத்தைக்கொ ண்டிருக்கிற அவுணர் பெருமான் மனச்சஞ்சலங்களைப் போக்கிப் புசங்கள்பூரித்து வானையளாவமகிழ்சிறந்தவனா ய் நற்றாய்வந்து போதித்துப்போனது நல்லவுபாயமாகவி ருக்கின்றதெனமதித்து ரணக்களத்திற் பட்டவரனைவரை யும் எழுப்புவதற்கு இதையன்றி வேறொருமார்க்க மில் லை யாதலாற் சஞ்சீவிமலையைக்கொண்டு வருவதற்கு யா வரைத் தூண்டுவோ மெனச் சற்றுநேரம் யோசித்தகால த்தி லொருவருமில்லாமையால் மாயையிற்சிறந்ததாய் ம னோ வேகத்தினும் வாயுவேகத்தினுங்கடுகிப்போய் வரவ ல்ல இந்திரஞாலத்தேரைப் போக்குவதாகத் துணிவுகொ ண்டவனாய் தட்சணத்தில் இரதத்தை விட்டிறங்கி வீரத் தன்மையும் வலியும்வேகமும்பலமகத்துவங்களையும் கொ ண்டிருக்கும் சிங்கவாகனத்தை நினைந்தனன்.

சூரன் கருத்தின்வண்ணம் அதிகஉக்கிரபார்வையுடன் பிடரிமயிரலைப் பகுவாயைத்திறந்து கொண்டு வயிரத் தையொத்த கூரிய நகங்களையுடைய மிருகராசன் நிமை ப்போதில் முன்னம்வந்து நின்றமாத்திரத்தில் அதன்பிட ரியில் ஆரோகணித்துப் பரமசிவகடாட்சத்தினாற்பெற்ற தெய்வீகம்பொருந்திய இரதத்தின்மீதில் விழிகளைப் பர ப்பி மனோவேகத்தினும் விரைந்துசென்று பெரும்புறக்க டலைச்சேர்ந்து அதனருகில் கண்டதுண்டப் பட்டிறந்தவ ர்கள் தேகத்தைப் பொருந்தச்செய்து உயிரைத்தந்தெழு ப்பவல்ல மகத்துவமுள்ள சஞ்சீவியைப் படைத்திருக்கி ன்ற மந்தரகூடமென்றொரு பருவதமிருக்கின்றது அத னையிந்த நிமிஷத்திற் பெயர்த்தெடுத்துக் கொண்டு வந்து சேர்க்கக்கடவையெனக்கட்டளையிட்டமாத்திரத்தில் இரா ஜபரமேஸ்வரன் கருத்தின்படிக்கு மின்னலைப்போல வெ ருந்து சடுதியிற் சத்தசாகரங்களைக்கடந்து அவற்றினிடை யிற் பட்டதீவுகளைத்தாண்டிச் சக்கிரவாளத்தை நீங்கிப்பு றம்பில் அகண்டாகாரமாய்ப் பரந்திருக்கின்ற பெரும்புற க்கடலினருகிற் சேர்ந்து வெகுகாலமாய்ச் சலனமற்று வா னத்தையளாவ நிற்கின்ற மந்தரகூடபருவதத்தை வேரு டன் கெல்லிதன்னிடத்திற்பரித்ததாய் மனோவேகத்தினு முந்தித்திரும்பி வீரமாமயேந்திர புரிக்கருகில்வருகின்ற காலையில் இந்திரஞாலத்தேர் கடுகும்வேகத்திற்பெருகும் வாயுவானது சஞ்சீவிப்பரிசைப்பட்டு முந்திரணக்களவெ ல்லை முற்றும் பரந்தமுயற்சியினால் அத்தினவாயிற் சி வசுப்பிரமண்ணியராலும் படைகளாலும் கண்டதுண்ட ப்பட்டு மாண்டுவிழுந்துகிடக்கின்ற சூரன்சதுரங்கசேனை களும் மற்றபிரமுகாளும் கடையுகத்தில் வடவைக்கனல் கருங்கடலை நீக்கிவீறியெழுந்துமன்னுயிரைவருத்தப்பெ ருகியதைப்போலக் கொக்கரித்துக்கொண்டு சிருங்காதங் கள் அட்டகாசங்களைச்செய்து பற்பல சபதங்களைப்பேசி ஒருமுனையில் குபீலென்றெழுந்த காலையில் மதயானைகள் பனையையொத்த துதிக்கைகளில் இருப்புலக்கைகளைப்ப ற்றி அண்டங்களதிர வீறிட்டுப்பகைவர் குலைநடுங்கிகுலை குலைந்தோட மும்மதங்களைப்பெருக்கிமேலிட்டவும்சாமரை களைப்போலப் பிடரிமயிருடன் வாலசைய நாலுகால்களி லும் வயிரவண்டயங்கள் கலிக்கவானத்தினும் பூவட்டமு ற்றினும் திசைகளினும் கடலினிடங்களினும்பாய்ந்துசத்

திருக்கள் சிரங்களில் மிதிக்கவல்ல புரவிப்பந்திகள் வீறியுலவவும் இரதங்களிற் பூட்டிவந்த சிங்கம், குஞ்சரம், புலி, கரடி, கண்டபேரண்டங்கள் பரிகளாதிய மிருகங்கள் பேரொலியைக்காட்டிப் பாயவும் இப்படிக்குச் சமஸ்தமுமெழுந்தகாலையில் அவுணப்படைகள் வீராவேசங்களுடன் முண்டைக்கண்கள் சிவந்து புகையையும் அனற்பொறிகளையு மிறைக்கக் காட்டழலைப்போலச்சீறித் தண்டாயுதம், வேல், சக்கரம், பிண்டிபாலம், இருப்புலக்கை,எழுமழு, கப்பணம், கவண், முசலம், கொழுப்படை முதலிய ஆயுதங்களைப்பற்றியும்இருகுதைகளினும்மணிகள்தூக்கித் தங்கக்கட்டுகள்பூண்டு பருத்து நீண்டிருக்கும்விற்களை வட்டாகாரமாகவளைத்துஇடதுகரத்திற்கொண்டுகொடியதீட்சணிய முள்ள தெய்வப்படைகள்தீட்சண்ணியமுள்ள நாராசங்களை வலக்கரங்களிற்பற்றிச் சந்தித்துக்கொண்டு பூதவெள்ளங்களின்மீது பாயவும், இவ்விதமாக அவயவங்கள் கண்டிக்கப்பட்டவர்களும் கையற்றவர்களும் கால்களொடிந்தவர்களும் மார்புபிளந்தவர்களும் வயிறுபீறுண்டவர்களும் சிவகுமாரன் நகையழலினும் விழிச்சுவாலையினும் தகிக்கப்பட்டுச் சாம்பல் மலைகளாகக் குவிந்து கிடந்தவர்களும் பழையபடிக்குத் தேகம் பூரித்து மிகவும் வலியராயெழுந்து அதிககெலிப்புடன் பூவட்டமுற்றினும் வானப்பரப்பெங்கணும் திசாதிசைகள் தீபாந்திரங்கள் சத்தசாகரப்பரப்புகள் பெரும்புறக்கடல் அதைச்சூழவிருக்கும் சக்கிரவாளவெல்லை அதனருகில் விளங்கும் காடாந்தகாரமாகிய இருட்பூமி அண்டப்பித்திகையோர் முதலிய தலங்கள் முற்றினும் அடர்ந்துமேலிட்டு அதல, விதல, சுதல, நிதல, தராதல, மகாதல, பாதல மென்னும் சத்தபிலங்களின் விரிவினும்பூலோக, புவலோக, சுவலோக, சனலோக, தபலோக, சத்தியலோக, மகாலோக மென்னும் எழுவகைப்பட்ட மேலுலகங்களின்பரப்பினும் நிறைந்து அண்டகோளகை மேற்புறத்திற் றேற்றும் வெள்ளிடைமுதலிய விடங்களில் எள்ளிட விடமில்லாமல் நெருங்கியபோதுபெருத்தவோசையைக் கடையுகத்தெழும் ஒலியெனச் சொல்லவுமுடியாது பிரசண்டமாருதவதிர்ச்சியைச் சுலபமாக மதிக்கவேண்டும் அதன் திறத்தை யின்னவித மென்று என்னூற்பேசப்படுவதன்று இப்படிக்குப் பெருத்திருக்கின்ற ரதகஜதுரகபதாதிகளின்சமோகத்திற் சிலர்கைமிஞ்சி மந்தாத்தை யொத்தகதை எழுப்படை, தோமரம், வச்சிரம்,முத்தலைச்சூலம், பரசு, பல்லயம், திகிரி, கழுமுள், பிண்டிபாலம், முசலம், கணிச்சி மழுப்படை, வேல், வாளாதியபடைகளைக் கரவேகமாகச் செலுத்தியும் பலர்பருத்தவிற்களை வளைத்துத்திவ்வியபாணங்கள் கொடியகணைகள் தீயை யிறைக்கும் சிலீமுகங்கள் விஷத்தை வையலிட்ட சரங்கள்முதலியஅஸ்திரங்களை அமோகமாகச் சேனைப்பெய்யலினு மேலிட்டு தூண்டிக் கொக்கரித்தனர்.

நீலகிரியையொத்தவுடல்களைப் பெற்றமதயானைகளின் மீதிலிருந்த வீரர்கள் கொடியபோர்விளையாடல்களைச்செய்து வரும்போது துதிக்கையிற்பற்றியிருந்த இருப்புலக்கைகள் சங்கிலிகளைச் சுழற்றிச்சாடவும் குதிரைச்சேவகர் அகோர யுத்தங்களைச் செய்து போராடவும் இவ்விதங்களாக இவ்வண்டத்தினும்மற்ற அண்டங்களினிடங்களினும் சூரன் கட்டளைக்குட்பட்டிருந்த சேனை சமுத்திரங்கள் செய்துவரும் போர்த்தொழிலின் பெருக்கையும்உத்தண்டங்களையும் இவ்வகைத்தென்று ஆதிசேஷனாலும்அளவிடப்படாது இவைநிற்கச் சஞ்சீவிக்காற்றுமெல்லவந்துதாக்கியமாத்திரத்தில் சின்னபின்னப்படப்பிளப்புண்டுநிலத்தில் விழுந்துகிடந்த சிங்கமுகாசுரன் அவையவங்க ளொன்றிப்பிராணனுண்டாய் வடவைக்கனலுந்திடுக்கிட்டஞ்சவும் மூதண்டகோளகை வெடித்ததோவென் றையுறவும் கொக்கரித்துக்கொண் டெழுந்து மூன்றும் பிறையைப்போல கோரைத்தந்தங்கள் விளங்க ஆயிரம் சிங்கமுகங்களுமசைய விழிகளிற் றீப்பொறிகள்சிதறநிற்கவும்ஆலகாலவிஷத்துக் கொப்பாகச்சீறிவீராதிவீரனாகிய பானுகோபனெழுந்து கொடியபாதகனாகிய தூதனெங்கே யெங்கே யென்று பலவீரங்களைப்பேசவும் காட்டழலையொப்பஎரிமுகனென்னும் சூரனெழுந்து சண்டையில்முயற்சிகொள்ளவும் வச்சிரவாகுவென்னுந் தீரன்குதித்தெழுந்து பகைவனைப் பார்க்கவும் மற்றமூவாயிரம்பிள்ளைகளும் விடநாகங்களுக் கொப்பாகத்துள்ளிநிற்கவும் பெரிய மந்திரியாகிய தருமகோபனெழுந்துதான்பட்ட துன்பத்தையெண்ணி மனங்கொதித் திருக்கவும்இவர்களன்றி மற்றமந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர்களாதிய பிரமுகாளும் உயிர்பெற்றெழுந்தனர் இவர்களிற்பலர் அதிகஉக்கிரமாகச்சிவகணங்களையும் அவர்களுக்குத்தலைவராகவிருக்கின்றவீரனையும்பார்த்துப் பேழ்வாய்களைத் திறந்து இடிக்கூட்டங்களுமஞ்ச ஆர்ப்பறித்துப் புசங்களைத்தட்டி வயிரங்களைப்பேசி முன்தங்களைமடக்கிக்கொண்டு சாடிக்கொன்ற பகைவனைத்தேடியும் இக்காலத்தில் நம்முடன்சண்டைகொடுக்க வருமவனைக் கசக்கிப்பிழிந்து உதிரத்தைக்குடித்துத்தாபந் தணிவோமென்று சவுரியங்களைப் பேசியும் சபதங்களை நாட்டியும் வெற்றிமாலைகளைச்சூடியும் இவ்வித ஆடம்பரங்களுடனுந் தமதிறைவனாகிய சூரபதுமனைச் சூழ்ந்துகொண்டு போர்த்தொழிலில் முயற்சிகொள்ளு முன்னிலையில் மாயைத்திறங்களினும் மற்றவல்லபங்களினும் சிறந்ததாகிச் சிவபிரான்படைத் தளித்த தெய்வீகம்பொருந்திய இந்திரஞாலத்தேரானது சஞ்சீவி யிருக்கின்ற பருவதத்தைத்தாங்கி அவுணர்பெருமான் முன்னம் வந்துமின்னலையொப்பநின்றது

சவுனகாதி யிருஷிகளே சூரபதுமன் தன்தேரைக்கண்டமாத்திரத்தில் அதனிடையிலிருக்கின்ற மருந்தின் மகிமையினாற் றன்சேனைகள் தம்பி பிள்ளைமுதலாகச் சீவந்தராயெழுந்தனரெனத்தெளிந்து மனமகிழ்ந்தவனாய்த்தேகம்பூரித்துப் புசங்களோங்கி வானத்தையளாவவும்மயிர்சிலிர்க்கவும்விழிகளில் ஆனந்தவாரிபெருகவும் மனதைவாட்டியிருந்த கிலேசத்தையும் வாட்டத்தையு மொழித்துத் திசைகளதிரக் கோபநகை கொண்டு தேவர்களைச்சிறிப்பார்த்து நல்லதுகெலிப்புடன் வீறியிருக்கின்றஉங்களாணவத்தைச் சற்றுநேரத்தி லடக்குகின்றனனெனச் சபதம்பேசி மனவெழுச்சியுடன் தாயைப் புகழ்ந்து சந்திரோதயத்தைப்போல முகாரவிந்தம்விளங்க இன்னமுமிராநின்றசந்தோஷப்பெருக்கனைத்தையும் ஏககாலத்திற்பெற்றவனாய் உண்பதற்கும் உடுப்பதற்கும் வகையற்று இரந்துவயிற்றைவளர்த்துத் திரிந்தகொடியவறுமை யாளனொருவனுக்குச்சிவபிரான் கடாட்சவீட்சணியமுயற்சியினால் கஜேந்திரச்சம்பத்துகளெவற்றையும் திரிலோகஅரசுரிமையையும் ஒருகணத்திற் பெறுவானாயின் அக்காலத்தவனடையும் பேரின்பத்தினும் பதின்மடங்கு மனவெழுச்சிபெற்

றுச் சிரோரத்தினங்களினுற் சோடித்திருக்கின்ற கிரீடத்
தைத் தாங்கிய சிரம்வானத்தையளாவப் புயங்கள் விம்மி
வாகுவலயங்கள் தெறித்து மணிகளிறைய மனங்குளிர்ந்
து தன்னையும்மறந்தகளிப்பைப்பெற்றனன், அத்தருண
த்தில் அவன்கொண்ட உற்சாகத்தையிவ்வகைத்தென்று
எத்தகையராலுஞ் சொல்லிமுடிவதன்று மேற்குறித்தப
டிக்கு வீரசூரபராக்கிரமசாலியாகிய சூரமகாராசன் சந்
தோஷசாகரத்தில் முழுகிஉழைத்துக்கொண்டிருக்கின்ற
காலையில் இக்காரணங்களனைத்தையும் திஷ்டாந்தமாகக்க
ண்டிருந்த தேவர்கள் திகைத்துமதிமயங்கிப் பிரமைகொ
ண்டு இமையாநாட்டங்கள் கூசிச்சொருகலிட யாதுந்தோ
ற்றுமல் இதனைப்பேசிக் கொள்ளுவதாயினர், இம்தென்ன
அற்புதக்காட்சியாக விருக்கின்றது வெள்ளிடையாகவிள
ங்கியஅண்டகோளமுற்றினும் சடுதியிற்சிறிதிடமுமில்லா
மல் மூடிக்கொண்டது சதுரங்கசேனைப் பெருக்கோ திரு
ப்பாற்கடலினுதித்த காளகூடவிஷம் பெருகிய தோற்ற
மோசருவசங்கார காலத்தெழும் பெரும்பிரளயவெள்ளப்
பெருக்கோ அல்லது கனவின்வீக்கமோயாதுந்தோற்றவி
ல்லை இப்படிக்கும் முடிக்கவல்லவர்யாவர் செப்பிடு வித்
தைபாகவும் இந்திரசாலமகேந்திரசால நடிப்பாகவும் கா
ணுகின்றது இதற்கென்னசெய்வோம் என்னவிளைய விரு
க்கின்றதோ வென்றேங்கி கிடுகிடெனத்தேகம் நடுக்குற்று
வியர்த்துத் தளர்ச்சிகொள்ளக் கைகால்களோய்ந்துசஞ்சல
சித்தராய்ப் பொன்னுலகமாதிய விண்ணுடுகளின் வாழ்வு
ம் சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலத்திற் பட்ட பதிகளின்
செல்வமும் பாதலவாசிகள் சம்பத்தும் இவை யன்றியும்
எவ்வெவ் வுலகங்களின் வளங்களும் இத்தினமுதற்சத்து
ருக்கள் பெற்று சாஸ்விதமாக அனுபவித்திருக்கத் தாரா
தத்தஞ்செய்து விட்டனமென நினைக்கவேண்டிய தல்லது
வேறென்னவிருக்கின்றது இதுபரியந்தம் நமது துக்கவரு
த்தங்களைப் போக்கிச் சவுக்கியப்படுவோமென்னுமிச்சை
கொஞ்சமிருந்தது அதையும் வரையறமறந்து விடுங்கால
ம் நேர்ந்ததுமன்றி அதிக வீராவேசங்களுடன் தோற்றிய
இந்த அவுணப்பாதகர் நம்மைப் பற்றிப்படாதபாடுகள்ப
டுத்திச் சித்திர வதை செய்வதற்கு முன்னம் தப்பித்துக்
கொண்டோடிப் பிழைப்பது உத்தமமெனத்தீர்மானித்த
வர்களாய்த் தாங்களேறிவந்த விமானங்களைமறந்து துணை
வர் சுற்றத்தினரையிழந்து பெண்டுபிள்ளைகளையும் நினை
யாமல் கரங்களிற்பற்றியிருந்த படைகளையும் நழுகவிட்
டு பின்திரும்பிப் பாராமற் றனித்தனியே புறங்கால்புட்ட
த்திற்றுக்க அதிவேகமாய் மேலுலகங்களை நோக்கியோட
வும் சிலதேவர்கள்பயமிகுதியினுற் கிளி, மயில், புறவு அ
ன்னம், நாகணவாய்ப்பட்சி, குயில், கோழி, ஆந்தை, காக்
கை, கழுகு, வண்டினங்கள்முதலிய பறவைகளி னுருக்
கொண்டு திசாதிசைகளிற் பறந்துபருவதங்கள் விருட்சங்
கள் வனங்கள் இத்தகையவிடங்களிலொளித்தனர், விண்
ணவர்பட்ட வருத்தங்களையும் சஞ்சலங்களையும் சொல்லி
முடிவதன்று.

இவ்விதமாகத்தேவரினங்கள்ஒருவராவதுநில்லாமற் ப
லதிசையினும்மறைந்துபோனதைக்கண்ட பூதத்தலைவர்க
ள் தியங்கிமதிமயங்கிப்பாலசுப்பிரமணியதேவர் உக்கிரப்
பார்வையினுற்சாம்பலாகமங்கியசயின்னியங்களும் இதற்
குமுன்னம்ரணக்களத்திற் கண்டதுண்டமாகவெட்டுண்டு
விழுந்துகிடந்தஇரதகஜதுரகபதாதிகளும்ஏதோஒருகார
ணத்தினுல்மின்னலைப்போலசடுதியிற்றோற்றி வடவைக்க
னலினும் கோபாவேசங்களுடன்வீறிவருகின்றனர்,இவ்வ
ற்புதங்களையோசிக்குமிடத்தில் இனிநாமிறப்பதற்குச்சந்
தேகமில்லை யிதற்கென்னவோமெனச்சோரவும்புசபல ப
ராக்கிரமசாலியாலியாகியவீரவாகுதேவரும் துணைவரும்
இலக்கரும்இத்திறங்களைக்கண்டமாத்திரத்தில் அற்புதம
டைந்துமனம்வருந்திக்கலங்கிமானம்பாதிப்பதினுல்அதிக
கோபமுங்கொண்டவர்களாய்க் கருமானுலையைப்போலத்
தீயும்புகைப் படலமும் பெருகப்பெருமூச்சுகளை விட்டுக்
கொண்டுயாதுந்தோற்றுமற்றிகைத்துநிற்கவும் பிரமன்வி
ஷ்ணுஇந்திரன்மனச்செருக்கற்று எமதிறைவன்பக்கத்தி
ல்நெருங்கினரெனப் பேசுவோமாகில் தீனராகிய பூதப்ப
டைகள்பட்ட துக்கவருத்தங்களையும்வாட்டத்தையும் சொ
ல்லவும்வேண்டுமோ உயிருடனிருக்கின்ற பிரேதங்களைப்
போலவும்சித்திரப்பிரதமைகளையொத்தும்யாதொருசெய
லுமற்றுநிலைக்கண்பட்டுதேவமருள்கொண்டவரை யொப்
பநின்றநின்றவிடங்களில்அசைவற்றிருந்தனர்,இவ்விதங்க
ளாகச்சகலரும்பரிபவப்பட்டுச்சோரு முன்னிலையில் இவ்
வுற்பாதவினைவைபாலசுப்பிரமணியர்திருவுளத்தில் மதித்
துநல்லகாரியம் சத்துருவாகியசூரன்தந்திரவுபாயவஞ்சக
ங்களும் இவனைப்பெற்றமாயைபோதித்துப்போனசூட்சி
யும்சஞ்சீவியினதுவல்லபமும்இதன்முயற்சியினுற்பிழை
த்தெழுந்து ஆரவாரித்திருக்கும் நாற்படைகளின்செருக்
கும் வெகுநேத்திநேத்தியெனக் கரங்களைத்தட்டி அன
ற்சுவாலை வீசநகைத்து இன்னமுமிவர்கள்செய்கையைய
றிவோமெனப்பார்த்திருந்தனர்.

சவுனகாதி யிருஷிகளே யிச்சரித்திரம்நிற்க சஞ்சீவியி
ன் மகிமையினுல் உயிர்பெற்றுக் களித்திருந்த சிங்கமு
காசுரன் பானுகோபனுதிய பிள்ளைகள் தருமகோபன்மு
தலியமந்திரி பிரதானிகள் சேனைத்தலைவர்கள் தமதிறை
வனுகிய சூரபதுமனைக்கண்டு வணங்கி மானமுங்கோப
மும் மனதைவாட்ட இதனைவிண்ணப்பஞ்செய்வதாயின
ர், அவுணர்குலோத்தாரகனே ஆயிரத்தெட்டண்டங்களு
க்கதிபனே ஜயலட்சுமியை மணந்திருக்கின்ற நீரனேயித
னைக்கேட்டருள்க சற்றுநேரம் தேவரீர் இவ்விடத்திலமர்
ந்து வேடிக்கைபார்த்திருந்து அடியேங்களுக்குச் செலவு
கொடுப்பீராகில் நம்மவரனைவரையும்மானமழிந்துமதிகெ
ட்டுச் சின்னபின்னப்படக் கண்டித்துக்கொன்ற பாலகனை
த்திசைதப்பியோடப் பறக்கடித்து நவவீரர்இலக்ஷர்முத
லியசூரரைக் கண்டதுண்டப்பட வெற்றிகொண்டுகளத்தி
ற்கிடத்தித் தொந்தியையுங்குறிய தாள்களையும் படைத்தி
ருக்கின்ற பூதவெள்ளங்களை அல்லோலகல்லோலப்படவ
தைத்தடக்கிவந்து தேவரீர்பாதாரவிந்தங்களிற் சேவிக்க
க்கடவோம் யாமெல்லோரும் ஒருமுனையிற்சென்றுசெய்
யும் போர்த்திறங்களைப்பார்த்து மதித்துக்கொண்டாடப்
போகிறீர் இந்தவரத்தைத் தயைசெய்ய வேண்டுமென்றி
ரக்கின்ற வீரபராக்கிரமசாலிகளாகிய துணைவன்பிள்ளை
களாதியர் வாக்கியங்களை அவுணர்பெருமான் செவிகளி
னேற்று மனவெழுச்சி பெற்றவனுய் ஜயசாலிகளே நீங்க
ள்குறித்தகாரியம் நன்றுக விருக்கின்றதினுல் அவ்வாறே
நடத்தி ஜன்மவயிரிகளாய்ப் பீடித்தலைத்திருக்கின்ற சிவ
குமாரனுதியபகைவரைத் தும்சப்படவாட்டி எனக்குவெ
ற்றியைத்தரக் கடவீர்களெனவிடைதந்தமாத்திரத்திலசு
ரனைப்பணிந்து பிரளயகாலத் தூழிமேகங்கள் பேரிடிக

ளைப்பெருக்கி யெழுமாறுபோல ஆர்ப்பரித்துத்தேவாஸ்திரவிதங்களையும் கொடியதீட்சணியமுள்ள பாணவகைகளையும் சேனைப்பெய்யலினும் பதின்மடங் கதிகமாகக்கரவேகங்கொண்டுசெலுத்தியும் வாள்பட்டாசுரிகையிவற்றினால்வெட்டியும் வேல்-சூலம்-கழுமுள்-ஈட்டிகளினாற்குத்தியும் தண்டாயுதம், இருப்புலக்கை, தோமரவகைகளினால்மோதியும்வளைதடி, சக்கரமாதியபடைகளை அமோகமாகவீசியும்மாயைத்திறங்களினாற்போராடியும் மேலுஞ்சொல்லொணாநின்ற பலகொடுமைகளைக்காட்டி வெற்றிவேலாயுதத்தைத்தாங்கி யிருக்கின்ற முருகப்பெருமானைவளைந்துகொண்டுஆயிரங்கிரணங்களைவீசியுலகைவிளக்கிவரும்சூரியனைமூடிய இருட்பெருக்கைப்போலவும் பனிப்படலத்தையொத்தும் அடர்ந்துபோர்த்தொழிலைச்செய்து வருங்காலையில் இக்கொடுமையினால் பூதவெள்ளங்களனைத்தும்பல அவதிகள்பட்டுச் சோரவும்வீரவாகுதேவர்முதலியபுஜபலபராக்கிரமசாலிகள் திகைத்து இத்தகைய சேனைப்பெருக்குடனெதிர்த்துப் போராடுவது நம்மாலாவதன்றுஅதிக வுத்தண்டத்துடன் வருகின்றசிங்கமுகனெதிரில்நிற்கவும்போதுமோ மற்றவீராதிவீரர்களுடன் வாதாடுவது நம்மையொத்தவர்களாற் கூடாதுகூடாதென்றுமனச்சோர்வுடன் திகைத்திருந்தனர்.

அத்தருணத்திலெமதிறைவனாகிய சரவணபவன்இராட்சதசேனைகள் வீராவேசங்களுடன் போராடுவதையும் சிங்கமுகன் பானுகோபன் முதலாகிய ஜயசாலிகள் கொடுமைகளையும் தமதுதுணைவர் படைவீரர் தியக்கத்தையும் பூதவெள்ளங்களின் சோர்வையும் விஷ்ணுவாதிய தேவர்மனவாட்டத்தையும் திருவுளத்தில்மதித்து இரக்கமும் கோபமும் மனதைவருத்த நல்லகாரியம் இப்பாதகர்பெருக்கை நிமைப்போதிலடக்கி நம்மவரைப் பாதுகாப்பேனெனத் தீர்மானித்தவுடன்சருவசங்காரகாலத்திலாயிரங்கோடி அண்டவடுக்குகளையும் அவற்றிற்பட்ட புவனங்களையும் சராசரப்பிரபஞ்சங்களனைத்தையும் நகையழலின்பெருக்கினாற்றகித்துச் சாம்பலாக்கித்தானேதானாய் ஆனந்தவிருத்தஞ்செய்யாநின்ற பெருமையினையுடைய சதாசிவமூர்த்தியின் அம்சையிற்றோற்றாநின்ற பாசுபதாஸ்திரத்தை யெடுத்துத் தூபதீப நைவேத்தியமுதலிய சோடசவுபசாரங்களையும் மானசபூசையினால்நிரப்பிவிதிப்படிக்கு வழிபாடுகளைமுடித்தபின்பு தமதொப்பற்ற தனுசிற்சந்தித்து சிங்கமுகன் பானுகோபனாதிய பிரமுகாளையும் வீராதிவீரராகிய சேனைத்தலைவர்களையும்சங்கையில்லாமற் பிரளயவெள்ளத்தினு மேலிட்டொலித்துவீறியிருக்கின்ற ரதகஜதுரகபதாதிவெள்ளப்பெருக்கையும்இந்நிமிஷத்தில் தும்சம்பண்ணியழித்துத் திரும்பக்கடவையெனவேண்டி தோள்புரள ஆகர்ணாந்தபரியந்தமிழுத்துக் கரவேகமாய்ப் பிரயோகித்தகாலையில்அந்தப்படைக்கரசானது வெளிப்பட்டவுடன்கோடிசூரியப்பிரகாசமாய்ப் பக்குபக்கென்றெரிந்து நாராயணாஸ்திரம்பிரமாஸ்திரம் மற்றதேவாஸ்திரங்கள் கொடியகணைகளின்விதங்கள் உருத்திரகோடிகள் விஷச்சுவாலைகள்பேரிடித்தொகை வடவைக்கனலின்கொடுமைகள் காளிகராளியென்னும் பத்களையுடைய சர்ப்பசமோகங்கள் சரபசார்த்தூலவினங்கள் மற்றுஞ்சொல்லாநின்ற வுற்பாதங்களையும்படைத்துத் தாபாக்கினியைவீசி எவ்விடங்களினுந் தனதுமயமாய்ப்பேரொளியைக்காட்டிச் சிறிமேலிட்டதாய் மண்விண்சாகரப்பரப்புகள் தீவுதீபாந்திரங்களில்நிறைந்து மூதண்டகோளகைவரையிலடர்ந்து ஊழித்தீயும் பிரசண்டமாருதமும் கலந்தெழுந்ததைப்போல ஆரவாரித்து வீரங்களையுங் கொடுமைகளைப் பேசிக்கொண்டு அதிகதீட்சணியமுள்ள அஸ்திரசஸ்திரவிதங்களை ஒன்றனந்தமாக மேகவருஷங்களினு மேலிடப்பொழிந்து கொடும்போர்களைச்செய்து பின்னிடையாமல் வீராவேசங்களுடன் காளகூடவிஷத்தைப்போல வாதாடிநிற்கின்ற சதுரங்கசேனாசமுத்திரத்தை யிமைகொட்டுவதற்குமுன்னே மடக்கிக்கொண்டு அதாஅதப்படச் சாடிக்கொன்றதாய்ச்சிங்கமுகாசுரன் சூரியகாதகனாதிய அவுணவீரரைத்தகித்துச் சாம்பலாக்கி இவ்விதமாக ஒருவரொழியாமல் வாட்டியதுமன்றி இந்திரஞாலத்தேரின்மீதில் விளங்கியிருந்தசஞ்சீவிமலையையும்பிளந்து இவ்விதமாய்ப் பகைத்தெதிர்த்திருந்தவர்களில் யாவரையும் மிகுதியாகவிடாமல் அடக்கிப்பின்பு வானவெல்லையிற்றாவி ஆகாயகங்கையிற்படிந்து பரிசுத்தமாய்த்திரும்பிய பாசுபதாஸ்திரமானது பாலசுப்பிரமணிய தேவரிடத்தில் யதாப்பிரகாரம்சேர்ந்திருந்தது.

சவுனகாதிகளே அந்தத்தெய்வீகப் படையினது மகத்துவங்களையும் வேகத்தையும் சாகசங்களையும்ஆயிரம்வாயைப்படைத்திருக்கின்றஆதிசேஷனாலும்பேசப்படாதெனின் ஒருநாவைக்கொண்ட என்னால் புகழப்போதுமோ அக்காலத்திற் சிவபிரான் திருநாமத்தைப்படைத் திருக்கின்ற ஒப்பற்றபடை ஆக்கிரமித்து மேற்குறித்தபடிக்கு கெக்கலிகொட்டி அவுணர்பெருமான்மகிழ்ந்துநோக்கப்பரமசிவகுமாரனுடன் உருத்திராகாரமாகிய போரைச்செய்து வீறிநின்ற சிங்கமுகன் பானுகோபன், எரிமுகன் வச்சிரவாகு, மூவாயிரர்முதலிய பிள்ளைகள் தருமகோபனாதிய மதியூகிமந்திரிகள் பிரதானிகள் மன்னமண்டலீகர் சேனைத்தலைவர்களுடன் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் உலகமுடிவிற் கலந்தெழுமாறுபோல அடர்ந்து பரந்திருந்த நால்வகைச்சேனைப்பெருக்கும் அருமையாகத்தருவித்த மந்தாகூடபருவதமும் நாசப்பட்டு எங்கும் வெள்ளிடையாகச் சகலஆடம்பரங்களும் அடங்கி நிர்ச்சந்ததியாக ரணக்களந்தோற்றுவதை ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாகிய சூரமகாராசன்கண்டமாத்திரத்திலென்னசெய்வான் திடுக்கிட்டுவாடிவலிகுன்றிமனச்செருக்கற்று மெய்மறந்து கிலேசித்தவனாய்ப் பெருமூச்செறிந்து மானமுங் கோபமும் மனதைக்கொளுத்திவாட்டயதாப்பிரகாரம் யாதொருதுணையு மற்றவனாய்த்தனிமையில்நின்றனன், இப்பிரகாரம் சகலவளங்களையும்பறிகொடுத்துக் கொடியபாதகனெண்ணமிட்டிருப்பதையும் சதுரங்கவெள்ளங்கள்முதலியவனைத்துங் கர்த்தன்கணைமுயற்சியினால் ஏககாலத்தில்அதப்பட்டு மங்கியதையும்வீரவாகுதேவர், எண்மர், இலக்ஷர், படைவீரர், பூதவெள்ளங்கள், மகாவிஷ்ணு, பிரமதேவன், இந்திரனாதிய தேவர்கள்மனமும் விழிகளுங் குளிரப்பார்த்தவுடன்தாங்கள்கொண்டிருந்த மிகுத்தவருத்தங்களையும் என்னமாய்முடியுமோவென்னும் சந்தேகத்தையும் போக்கினவர்களாய் இறந்துபிறந்தவர்களைப்போல மனமகிழ்ச்சியுடன்ஆடிப்பாடி ஐயன்குணாதிசயங்களின் காரணங்களைப்புகழ்ந்துகொண்டாடிநிற்கவும் அந்தரவாசிகள் ஆனந்தவாரியில்முழுகி உரோமங்கள்சிலிர்க்கத் தேகம்பூரித்துக் கற்பகமலர்களை வாரிவாரிச் சிவசுப்பிரமணியதேவர்மீதில்நிறைத்து அவு

ணகுலாந்தகனே வாழிவாழியெனப்போற்றிச் சந்தோஷ
ங்களைக்கொண்டாடினர், இப்படிக்குச் சிவகணங்களாதிய
ர்மனவெழுச்சிபெற்றிருக்கின்றகாலையில் மெய்வாய்கண்,
மூக்குச்செவியென்னும் பஞ்சேந்திரியவிஷயங்களின்வய
ப்பட்டுச் சத்தபரிசரூபரசகந்தமெனச் சொல்லாநின்றவி
ஷயாதிகளிலழுந்தி வாடச்செய்யவல்லஅஞ்ஞானவிருளை
க்கடந்து மேலாகியமோட்சசாம்பிராச்சியச் செல்வத்தை
ப்பெறவிருந்தவர் ஊழ்வினைத்தொடர்பினால்மீட்டும் பழ
யதசையிற் றள்ளுண்டுவாடுபவனைப்போலச் சூரமகாரா
சனுனவன்சஞ்சீவிமகிமையினாற்சகலரும் சீவந்தராகவெ
ழுந்தகாலத்திற்களித்தும் மீட்டும்மாண்டமுன்னிலையில்
மனம்வருந்திவாடிநின்ற அவுணர்பெருமான் அதிகதுக்க
சாகரத்தில்முழுகி நிலைபெருமல் அலைந்திருந்தவன் ஒரு
எண்ணம் சடுதியில் மனதிற்றோற்றியமாத்திரத்தில் வட
வாமுகாக்கினியும் ஆலகாலவிஷமுங்கலந்தெழுவதுக்கொ
ப்பாக வுருத்திராகாரமாகக்கோபித்து நல்லகாரியம் ஆயி
ரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனுய்த் தேவர்முதலிய
சகலரும்வணங்கிப்போற்ற சக்ரேஸ்வரனுய் வாழ்ந்திருந்
தநம்மையொத்தசூரனைத் தனியனுக்கிப் பெரும்புறக்க
டலையொப்பச் சூழ்ந்திநாந்திருந்த சதுரங்கசேனைப்பெ
ருக்கையும் துணைவர்புத்திரமித்திரர்முதலானவர்களையு
ம்நிமைப்போதில்வாட்டி வெற்றிகொண்டிருக்கின்றஇந்த
ப்பாலகனைவளைந்து அதிகவெலிப்புடனிருக்கும் பூதப்ப
டைகளாதிய வீரரைஅதாஅதம்பண்ணி நம்மைப்போல
வே ஒன்றியாக்கியபின்பு இவனுணவத்துக்குத் தக்கபுத்தி
யைப்பண்ணக்கடவேனெனத் தீர்மானித்தவனுப் பூரு
வத்தில் தான்பலகாலம்வருந்திச்செய்த வீரமாமகத்துக்
கிரங்கிச்சிவபிரான்காட்சிதந்து சகலபேறுகளையுங்கடாட்
சித்தபோது படைத்தளித்தமகிமையுள்ள இந்திரஞாலத்
தேரின்மீது விழிகளைப்பரப்பி யிதனைச்சொல்லுவதாயி
னன்.

குதலைச்சொல் மாருதசிறுவனைச்சூழ்ந்து வயிரத்தை
யொப்பவிளங்கும் கோரைத்தந்தங்களைவாய்ந்து கொக்க
ரித்திருக்கும் பூதவெள்ளங்களையும் அவர்களுக்குத்தலை
வனையும் இலக்ஷர், எண்மரையும் தனுர்ப்பாணியாகநிற்
கின்றதூதனையும் இந்தநிமிஷத்தில் உன்மாயைப்பெருக்
கினல்மயக்கிச்சேர்த்து வகையறவாரிக்கொண்டுபோய்அ
ண்டவெல்லையினுச்சியில்வைத்துநாம்மறு கட்டளையிடும்
பரியந்தம்காத்திருக்கக்கடவாயெனப்போதித்து விடைதந்
த மாத்திரத்தில் பூமண்டலப்பரப்பு முற்றும்விரிந்துகா
டாந்தகாரமாகிய இருளைமூடிப்பகைவர் மதியைமயக்கிப்
பிரேதங்களாகத்தள்ளி வீரவாகுதேவராதிய வீரரையும்
சிவகணங்களையும் தன்னிடத்திற்சேர்த்துக்கொண்டுமின்
னலைப்போலச் சரேலென வானத் தெழுந்து அண்டத்தி
னுச்சியிற் கொண்டுபோய் பாதகன் தனக்கு கட்டளையிட்
டிருக்கின்ற படிக்கு வைத்திருந்தது சவுனகாதி யிருஷிக
ளே அந்தத்தேரின் வல்லபத்தையும் பெருமைகளையும்
மாயைத்திறங்களையும் மற்றகாரணங்களையும்ஒருவகையா
கவும் சொல்லிமுடிவதன்று இவ்விதமாக நிமைப்போதி
ல் முடித்தவுடன் கடலைப்போலப் பரந்திருந்த சேனைப்
பெருக்கானது வற்றிப் பாலசுப்பிரமணிய தேவர் ஏகாங்
கியாக நிற்பதைஅவுணர் பெருமான்கண்டு மனவாட்டத்
தைப்போக்கி நகைமுகனுய்த் தேகங்குலுங்க நகைத்துத்
தனதிரதத்தின் வல்லபம்வெகு நேத்தியென்று கொண்
டாடி நிற்பதைப்பார்த்த தேவர்கள் திடுக்கிட்டு மனங்கல
ங்கி மறுபடியும் கொடியதுன்பப்பெருக்கிற்பட்டு யாதுந்
தோற்ருமல் வாடித்திகைத்துப் பார்த்திருந்தனர்,இந்தி
ரன் பதைத்துத் துடிதுடித்து மதிமருண்டுபட்டதுக்கவ
ருத்தங்களைப்பேசி முடிவதோ இப்படிக்குச்சகலரும் ம
திமயங்குகின்ற காரணங்களையும் சூரன்நடாத்திய மாறு
பாடுகளையும் துணைவர்பூதப்படைகளறிவையழித்து வா
ரிக்கொண்டுபோன இந்திரஞாலத்தேரின் வல்லபத்தையு
ம் தமக்கொப்புவமையற்று ஏகனுய்விளங்குகின்ற பாலசு
ப்பிரமணியதேவர் தெரிந்தமாத்திரத்திற் சற்றுகோபங்
கொண்டவராய் ஒருதிவ்வியபாணத்தை யெடுத்துத் தம
துதனுசிற்பூட்டி யிந்தநிமிஷத்தில் அண்டகோளகை மு
கப்பிற்போய் நமது சயின்னியங்கள்முதலானவரை வஞ்
சித்துக்கொண்டுபோய் வைத்திருக்கின்ற இந்திரஞாலத்
தேரைத்திருப்பி வரக்கடவையெனக் கட்டளையிட்டுமந்தி
ர பூர்வகமாய்த் தூண்டினர், அப்படை வெளிப்பட்டவு
டன் வெற்றிவேலாயுதத்தையொப்பச் சொலித்து மின்
னலைப்போலத் தாவிப் பிரசண்டமாருதத்தினும் வேக
ங்கொண்டு பலமகிமைகளைக் காட்டியோடிப் பூலோக பு
வலோக, சுவலோக, சனலோக, தபலோக, சத்தியலோக,
மகாலோகமென்னுப் மேலுலகங்க ளேழையுங்கடந்து ம
ற்றப்பதங்களையும் நிமைப்போதிற்றுண்டி மூதண்ட
கோளகை முகட்டைச்சேர்ந்து மாயைத்திறங்களிற் சிரே
ஷ்டமாக விருக்கின்ற இந்திரஞாலத்தின் வலியையடக்கி
மேகசாலங்களைப் பெருங்காற்றலைத்துப் பறக்கடிப்பதை
ப்போலத் தள்ளிவந்து வானவெல்லையைக் கடந்து வெ
ற்றிமாலைபுரளும் பன்னிருபுயாசலங்களைப் படைத்திரு
க்கின்ற சரவணபவன் சன்னிதானத்தில் இந்திரனுதிய
தேவர்களித்துத் துள்ளும்படிக்குச்சேர்த்துத் தன்னிருப்
பிடத்தைக்கலந்தது. எமதிறைவன்கிருபாநோக்கம்பட்ட
மாத்திரத்தில் மையலொழிந்து உணர்ச்சிபெற்றவர்களாய்
வீரவாகுதேவர் துணைவர், இலக்ஷர், படைத்தலைவர்,பூத
வெள்ளங்கள் சிங்கங்களைப்போலத் தேரைவிட்டுநிலத்திற்
பாய்ந்துதெவிட்டாதபேரின்பவாரிக்கிறைவனைத்தேவதே
வோத்தமனைச் சுயஞ்சோதி வடிவினனை மனமும் விழிக
ளும் திருப்தியடையும்படிக்குத் தரிசித்துக் களித்தவர்க
ளாய்த் திவ்வியசரணாரவிந்தங்களிற் பன்முறை பணிந்து
போற்றிப் பழையபடிக்கு வுற்சாகங்களுடன் சூழ்ந்திருந்
தனர், அக்காலத்தில் அண்டரண்டபுவன சராசரவுருவக
மாய் அவற்றுட்படாமற் புறம்பில்நின்றுசூத்திரதாரியை
யொப்ப நடிப்பித்து அவ்வவற்றிற்குரிய போகங்களையூட்
டி யாட்டியிவ்வித நாடகங்களைச் செய்துவரும் பெருமை
யினையுடைய முருகக்கடவுள் தமதெதிரில் வலியடங்கிநிற்
கின்ற அதிகசுந்தரமும் மோகனவித்தை முதலியவல்லப
ங்களையும் பெற்றிருக்கின்ற இந்திரஞாலத் தேரைப்பார்த்
துத் தேவராசனுதியர் மனமகிழ்ச்சிபெற்றுக் கொண்டாடு
ம் படிக்குத் திருவுளப்பற்றுவதாயினர்.

பூருவத்திற் சூரனரியமகத்தை முடித்த நிமித்தம் தே
வதேவோத்தமனுகிய சிவபிரான் கிருபையுற்றுப் பலவர
ங்களுடன் உன்னைப்படைத்தளித்தபோது இந்தச் செல்
வச்சம்பத்தை நூற்றெட்டியுகங்கள் சலனமற்றனுபவித்தி
ருப்பையெனநியமித்தவனைகாலம் முடிவெய்தியபடியா
ல் இத்தினம்மாளவிருக்கின்றனன்,இனிநீ அவன்கட்டளை
க்குட் பட்டிருக்கவேண்டுவதில்லை ஓ! சுந்தரமிகுத்தமாய

விரதமே நம்மிடத்திற்சேர்ந்திருக்கக் கடவாயெனத் திரு
வாய்மலர்ந்தனர், சவுனகாதியிருஷிகளே, அண்டரண்டபு
வனசராசரங்களினும் பரிபூரணமாக நிறைவெய்தித் தம
தாணையை செலுத்தி துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ்
செய்து பாதுகாத்தாளும் குணசம்பன்னராகிய வடிவே
லன் பணித்தவாக்கியங்களைக் கேட்டமாத்திரத்தில் அவு
ணர்பெருமா னிடத்துக்குப் போவதற்கஞ்சித் தன்வல்ல
பங்க ளனைத்தையுமொடுக்கிப் பயபத்தியுடன் பிறப்பிறப்
பற்றபரமன் திருக்குமாரன் ஆக்கியாபனப்படிக்குநின்று
விட்டது இப்பிரகாரம் அண்டமுகட்டைச் சேர்ந்திருந்த
இந்திரஞாலத் தேரைச் சிவசுப்பிரமணியக் கடவுளானவ
ர்ஒரு திவ்விய பாணத்தைக்கொண்டு நிமைப்போதிற்றரு
வித்தகாரணங்களையும் அருமையாகத்தேடித்தன்மனோபீ
ஷ்டப்படிக்குச் செல்லவல்லஇரதம் தன்னிடத்துக்குயதா
ப்பிரகாரம் வராமல் பகைவன் பட்சத்தில் நின்று விட்ட
தையும் வீராதிவீரனாகிய வீரவாகுதேவரும், எண்மர்,
இலக்ஷர், படைத்தலைவர்பூதசயின்னியங்களில்யாதொரு
துன்பமுமில்லாமல் பழையபடிக்கு முருகப்பெருமானை
ச்சூழ்ந்துகொண்டு மனவெழுச்சியுடன் கெக்கலிகொட்டி
ஜயவுற்சாகங்க ளுடன் வீறியிருப்பதையும் திஷ்டாந்தர
மாகத் தெரிந்த சூரபதுமனுக்கு அதிககோபம் பிரவேசி
த்ததால் வடவைக் கனலைப்போலச்சீறி மானமானதுமன
தைப்பீடித்துவாட்டத் தட்சணத்திற் பருத்து நீண்டுதங்
கக்கட்டுகள் பூண்டு இருகுதைகளினும் மணிகள் கலிக்கு
ம் ஒப்பற்ற வில்லொன்றையெடுத்துமின்னலையொத்தநா
ரியைப்பிகிந்து செய்த டங்காரவோசையினால் உலகங்கள்
பட்டபாட்டை யின்னவிதமெனச் சொல்லிமுடிவதோ வு
டனே தகத்தகாயமாகச் சொலித்துக்கொண் டிருக்கும் அ
லகை யுடைய அதிக தீட்சணியமுள்ள கடுங்கணைகளை
யும் விஷங்களைக்கக்கவல்ல கொடிய பாணகோடிகளையும்
சென்றவிடங்களில் வெற்றியுடன் மீளுந்திறம்பெற்ற சுடு
சரங்களையும் கோடாகோடிக்கணக்கில் ஒன்றின்பின் னொ
ன்றாகக் கரவேகமாய்ச் சோனைப்பெய்யலினுமேலிடத்தூ
ண்டி எமதையன் தோற்றங்காணாமல் மறைத்து அதிகவு
க்கிரத்துடன் கியாவுமெனச் சிருங்கநாதஞ் செய்தனன்அ
ந்தபடைகளின்வல்லபத்திறங்களையென்ன சொல்லுவேன்
மண்விண்ணெவ்விடங்களினும் அடர்ந்து புகையை வீசி
த்தீயைப்பெருக்கிக்குறுகுறென்றும்சிடசிடென்றும் குமு
றிக்கொண்டு மின்னற்கொடியைப்போலத்தாவி பேரிடிக
ளைப்பெருக்கி மேலிட்டு ஆலகாலத்தை யொப்பவரும்உற்
பாதங்களைக் கண்டவர்கள பாசுபதமோ நாராயணாஸ்திர
மோபிரமசாபமோஅல்லது மாயவித்தையின்வல்லபமோ
இவ்விபரீதம் விளைவதற்குக் காரணம்யாதோவென்று ச
ங்கையுற்று நடுநடுங்கி வாடும்போது இக்காரணங்களனை
த்தையும் பாலசுப்பிரமணியதேவர் தெரிந்தவராய் தட்ச
ணத்தில் தமதொப்பற்ற தனுசில்அதிக மகிமைகளைப் ப
டைத்திருக்கின்ற வெவ்வியபாணவிதங்களை அமோகமாக
மாறேவிப் பகைவன் வருந்தச் செலுத்திய படைகளின்
பெருக்கனைத்தையும் சுழற்காற்றிற்பட்ட சருகுகளைப்போ
லச் சின்னபின்னப்படப் பறக்கடித்தனர்.

அக்காலத்திற் பாதகன் காளகூடத்தைப் போலச்சீறிக்
கணக்கிறந்த சுடுசரங்களைக் கரவேகமாகப் பிரயோகித்து
ச் சிவகுமாரன் தேரைநடாத்தும் வாயுதேவன் சரீரத்தில்
ஊசிநாட்ட விடமில்லாமற் றுளைத்துவாட்டிய காலையில்
உதிரமானது பெருக்கெடுத்தோட மிகவும் நொந்து பஞ்
சேந்திரிய நிலைகள் பிசகித் தேகந் தளர்ச்சி கொண்டு கை
கால்க ளோய்ந்தமையாற் புரவிகளின் வார்களையசைத்து
த் தேரைச்செலுத்த நிருவகிக்கமாட்டாதவனாய்ச் சித்திர
ப் பிரதமையைப்போல அசைவற் றிருந்தனன் இவ்வித
மாகத் தன்சாரதிக்குநேர்ந்த அபாயத்தைச் சிங்காரவேல
ர் திருவுளத்தில் மதித்துப்பரிவாய் அவனிடத்திற் கிரு
பாநோக்கத்தைத் பாலித்தவராய் உடனே அதிககோபங்
கொண்டு தட்சணத்தில் திவ்யபாணங்களாயிரத்தை ஒப்
புவமையற்ற காண்டீபத்திற் பூட்டிச்செலுத்திக் கொடிய
மனதைப்பெற்ற சூரபதுமன்கரத்திற் றிருப்பாற்கடலைக்
கடைந்த மந்தரத்தையொப்பவிளங்கியிருந்த நீண்டதனு
சைத் தேவர்கள் துள்ளிக்கூத்தாடும்படிக்கு இருதுண்ட
மாகக்கணடித்தனர் தன்கரத்திலிருந்த பருத்தவில் தறிப
ட்டபோது அவுணர்பெருமானுக் கதிகவுக்கிரம் பிரவேசி
த்தகாரணத்தினால் நாகம்போலச்சீறிக் கொடிய நினைவை
க்கொண்டவனாய்த் தான்செய்த தவத்துக்கிரங்கிச்சிவநாத
ன் கடாட்சித்திருந்த முத்தலைச்சூலாயுதத்தையெடுத்துக
ரத்திற்கொண்டு வீரபராக்கிரமமுள்ள சிங்கவாகனத்தை
ப் பாலசுப்பிரமணியக்கடவுள் ஆரோகணித்திருக்கின்றசி
றந்தவிரதத்தினருகிற் றூண்டிவருமுன்னிலையில் அப்பா
தகன்மனதினும் கடுகிப்பாய்ந்து வயிரத்தினும் வலிபெற்
றுக் கூர்மையாயிராநின்ற நகங்களினால் சரவணபவன்வீ
ற்றிருக்கின் இரதத்திற் பூட்டிய வேகமுள்ளகுதிரைகள்
பதைபதைத்துத் தேகமுற்றும்உதிரப்பிரவாகமாயோட
அறைந்தும் கர்த்தனைச்சூழவிருந்த பூதாதியர்நடுநடுங்
கி வாடத்தக்கதாகக் கர்ச்சித்தும் பலகொடுமைகளைச்செய்
தும்உலவுகின்றகாலையில் அதன்பிடரியில்விளங்கும் சூர
ன் தனதுவலக்கரத்தில் நின்ற நீண்டசூலப்படையைப் பி
ன்வாங்கித் தன்வலிகொண்டு சிவகுமாரனைப் பின்னப்படு
த்துவதாகக்கடாவிக் கோடையிடிகளு மஞ்சக் கர்ச்சித்த
போது மின்னலை யொப்பப் பளபளெனப் பிரகாசித்துக்
கொண்டு வான வெல்லையிற்குவிக்குபீல்குபீலெனத் திப்
பொறிகளையிறைத்து இடிக்கூட்டங்களைப்பெருக்கிப்பற்
பல தேவாஸ்திரங்களைப் படைத்துக் கலகலென்னு மார
வாரங்களுடன் வீறிப் பூதகணப்பெருக்கை சிருஷ்டித்து
விஷச்சுவாலையைப் பெருக்கிக் காற்றினுங்கடுகிவருஞ்சூல
த்தின் கொடுமையைத் தெரிந்த தேவரினங்கள்திடுக்கிட்டு
மதிமருண்டு செயலற்றுப் பலதிசையினுமறையவும் உல
கங்களில் வாசமாயிருந்த பிராணிகளனைத்தும் திகில்கொ
ண்டு அல்லோலகல்லோலப்படவும் சுவாலையைவீசிக்கொ
ண்டு மேலிட்டுவரும் தெய்வீகப்படையின்மகிமைகளை எ
மதிறைவன் மதித்து ஆயிரகோடி சிறந்த பாணங்களைத்
தேடி யெடுத்து ஒருதொடையிற் பூட்டிக் கரவேகமாய்ப்
பிரயோகித்த முன்னிலையில் வடவையும்ஆலகாலமும்நல
ந்தெழுமாறுபோலத் தீயைவீசிஉறிக்கொண்டுவந்துநெ
ருங்கியமாத்திரத்திற் சூலமானது அதிக்கிரமித்து அவற்
றினைக் கவளீகரமாகவிழுங்கிச் சூரபதுமன் கோபக்கன
லினுமேலிடச்சீறிச் சமீபித்துவரும்போது ஞானநாயகனா
கிய பரமசிவமளித்த படையின்வீரத்தையும் வேகத்தை
யும் நிதானித்தவராய்த் தமதுகரத்திற் பிரகாசித்திருக்கு
ம் வெற்றிவேலாயுதத்தின்மீது விழிகளைப்பரப்பி யிந்தபி
ஷமித்திற்போய்ப் பகைவனேவியசூலத்தைப் பிடித்துவ
ரக்கடவையெனத் திருவாய்மலர்ந்தமாத்திரத்திற்சரேலெ

ன்றெழுந்து கோடிசூரியப்பிரகாசத்தைப் பரப்பினதாய் வடவைக்கனலினுங் கொடுமைகொண்டுவருகின்ற சூலத்தைக் கிட்டியமாத்திரத்திற் சொலித்துக்கொண்டிருக்கும் முத்தலைகளையும் சேர்த்துப் பற்றியிழுத்துக்கொண்டு பகைவன்றியங்கி வாடத்தக்கதாகத் தட்சணத்தில்மீண்டுஆதிசேஷன் ஆயிரம்பணாமகுடங்களினும் கவித்துப்போற்றியகாலையில் மகம்மேருவினது சொர்னமயமாகிய சிகரங்கள் மூன்றினைப்பறித்துக் கருங்கடலிற்சேர்த்தவாயுதேவனைப்போலவந்து குமாரசுவாமியார் திருக்கரத்திற் சூலப்படையைச் சேர்த்து யதாப்பிரகாரம் தன்னிலையில் நின்றது.

சவுனகாதி தவத்தரே பலதிவ்வியபாணங்களையும் சட்டைபண்ணாமல் மீறிவந்தசூலத்தை வெற்றி வேலைக்கொண்டு தருவித்துக்கரத்திற்கொண்ட மகிமையைக் கண்ட தேவர்கள் கரங்களைசிரங்களிற்கூப்பி ஓ தேவாதிதேவாபத்தவற்சலா அடியோங்கள்படுந் துக்கவருத்தங்களைத்திருவுளத்திற்கொண்டிரங்கி யிப்பாதகனைத் துரிதமாகக் கொன்று தீனரைப்பாதுகாத் திரட்சிக்கவேண்டுமென்றுபோற்றுகின்றபத்தர்கள் முறைகளைத்திருச்செவிகளினேற்று இரக்கமுற்றவராய்த் தட்சணத்தில் இரண்டாயிரம்சுடுசரங்களைத்தனுசிற்சந்தித்துப்போக்கிச்சூரபதுமனைத்தாங்கிக் கந்துபோட்டு அனர்த்தங்களைச்செய் துலவுகின்றசிங்கவாகனத்தின் சிரத்தைப் பத்தலாகப்பிளந்தகாலத்தில்உதிரமும் மூளையும்கலந்திறைய வானத்தெழுந்து அரற்றிக்கொண்டு நிலத்தில்விழுந்து பதைபதைத்துப் பிராணனைப்போக்கி மாண்டது, அத்தருணத்திற்சூரபதுமன் பூமியிற்பாய்ந்து வெகுகாலமாய்த் தன்மனோபீஷ்டப் படிக்குடத்திவந்த வாகனம் பட்டகேட்டைப்பார்த்து மனம் வருந்தினவனாய்த் தான்அருமையாக வைத்திருந்தசூலாயுதமானது பாலசுப்பிரமணியதேவர் வசப்பட்டுப்போனதையும் தனக்குவேறொருவுதவியுமில்லாமல்நிலத்தேரில் நிற்கும் மானக்குறைச்சலையும் நினைந்துநினைந்து வருந்தி ஊழிகாலத்தெழும் வடவைக்கனலினு மேலிடக் கொதித்து இதனை யெண்ணுவதாயினன், சிவபிரான்கடாட்சித் திருந்த பெருமைபொருந்திய இந்திரஞாலத்தேரையும்வலியிற்சிறந்த சூலத்தையும் தன்வயப்படுத்திக்கொண்டுவீரத்தன்மையைக்கொண்டிருந்த சிங்கத்தையும்வதைத்துஇந்தப்பாலகன்ஜயப்பிரதாபத்தைக்கிடைத்தவனைப் போல நினைந்துவிருப்பை யடைந்திருக்கின்றனன், இவனுணவத்தையடக்கி அதிகெலிப்புடன் கெக்கலிகொட்டிமதிப்பற்றிருக்கின்ற பூதவெள்ளங்களையும் நவவீரர் இலக்ஷர்முதலிய படைத்தலைவர்களையும் நிமைப்போதில் மாயவுருக்கொண்டுவிழுங்கிக் கோபதாபங்களைத் தணிந்துஜயப்பிரதாபத்துடன் மீளக்கடவனெனத் தீர்மானித்தவனாய்த் தனதாசிரியனாகிய சுக்கிரபகவான் போதித்திருந்த மோகனமந்திர மொன்றைவிதிப்படிக்குச்சரித்து அதன் முயற்சியினால் வலிக்கொப்பற்ற சக்கிரவாகப் புள்ளுருக்கொண்டு அலைகளைவீசிக் கல்லென்றொலிக்கும் கடலினு மேலிடமுழங்க வார்ப்பரித்து மகம்மேருபருவதமானதுசிறகுமுளைத்தெழுமாறுபோலப் பரந்திருக்கும் செட்டைகளைக்கொட்டியுலாவினன், அதெப்படிக்குக்காட்டியதெனில்உரலையொப்பத்திரண்டுகாட்டும் பாதங்களையுடைய மதயானைகளின்மத்தகங்களைக்கொத்தி உதிரத்துடன்மூளையைவெண்ணெயைநிகர்த்து வாரியுண்ணும் வீரபராக்கிரமமுள்ள சிங்கவாகனத்திலாரோகணித்துச் செம்பஞ்சுக்குழம்பின்காட்சியும் பத்தர்கள்அருச்சிக்கும் திவ்வியபரிமளமிகுத்த புஷ்பங்களின்மணமும் பெருத்திருக்கின்ற திருவடிகளையசைத்துலாவும் ரணபத்திரகாளியானவள் போர்க்களத்திற் கணக்கிறந்தவெள்ளம் சேனைப்பெருக்கானது கண்டதுண்டப்பட்டு உதிரம்பெருக்கெடுத்தோடக் கண்டுகளித்து நிர்த்தம்செய்கின்றபோது பற்பலபூதகணங்கள் பறைகளை யறைந்துலாவுமாறுபோல விளங்கியது.

இத்தகைய காத்திரதேகத்தையும் பரந்தசிறகையும்வயிரத்தையொத்த மூக்கையும் கூரியநகபந்திகளையும் வேகத்தையுங்கொண்ட சக்கிரவாகமானது தழைத்தஇறகையசைக்குந்தோறும் பெருகியவாயுவின்மோதலினாற் பூமண்டலமுற்றும் தத்தளித்துப் பிளக்கத்தக்கதாகவும் வானத்திற்சஞ்சரிக்குமுன்னிலையிற் சிறகின்பரப்பினாற்சூரியன்காந்தியையடக்கி உலகங்களெங்கும் காடாந்தகாரமாகிய இருள்பரந்து பிராணிகள் அல்லோலகல்லோலப்படவட்டமிட்டுத் திரிகின்றவன் சமுத்திரமுதலிய ஜலப்பெருக்கில் வாசஞ்செய்யும் மீனினங்களைப் பறவைக்கூட்டங்கள்பாய்ந்து கவ்வுமாறுபோல பூதசயின்னியங்கள் மத்தியிற்றாவிக் கூரியநகங்களினால் அளவற்றவரைச்சாடியும் பிளந்தும் விழிகளைப்பெயர்த்துச் சிரங்களைக்கிள்ளியும் வயிற்றைப்பீறியும் மார்புபத்தலாகப் பிளக்கத்தாக்கியும் திசாதிசைகளில்வீசியும் வயிரத்தையொத்தமூக்கினால் மண்டைகள்திறக்கக்குத்தியும்நாசிகளைக்கிள்ளியெறிந்து செவிகளைத்தறித்தும் சிறகின்மோதலினாற் பலரைப் பெருங்காற்றிற்பட்ட பெரியசோலைகளைப்போல நிலத்திற்படியத்தள்ளியும் உருட்டியும் நகசெகபரியந்தம் சின்னபின்னப்படச்சாடியும் வெற்றிவேலாயுதக் கடவுள் ஆரோகணித்திருக்கின்ற கொடிகுடைமுதலிய சிங்காரங்களைக்கொண்டிருக்கும்தேரைச்சூழவட்டணைவந்தும் புரவிகளைத்தாக்கியும் சாரதியாகவிருக்கின்ற வாயுதேவனைக்குப்புறவிழுந்து களைக்கமாறியும் குத்துக்கால்கொடுக்கைகள் கலகலென்றசையும்படிக்கு எற்றியும் திகைத்துப்பார்த்திருக்கின்ற சேனைவீரரை வாரிவாரிவிழுங்கியும்அவர்கள் கரங்களிற்பற்றியிருந்த பருத்தவிற்களைக்கறித்தெறிந்தும் ஆயுதவிதங்களைமுறித்தும் அம்புறாத்தூணிகளை அறுத்து நிலத்திற்றள்ளியும் தண்டாயுதம் சூலமாதியவற்றைமுறித்தும் துகள்செய்து பங்கப்படுத்தியும்ஒன்றுடனொன்றுதாக்கித் தீயெழச்சாடியும் அவர்களேறியிருக்கின்ற இரதங்களைப்பறக்கடித்தும் புரவிகளைக்கால்களறமொத்தியும் சாரதிகள் தலைகளறக்கிள்ளிக் கடல்களில்வீசியும் பூவட்டமெங்கணுமுருளவிறைத்தும் தேவர்களைக்கலக்கியும் பறக்கடித்தும் திகைக்கச்சாடியும் இவ்விதமாகச் சகலரும் பிரமித்துவாடத்தக்கதாகச் சூரபதுமன் சக்கிரவாகப் படிவங்கொண்டு காற்றாடியைப்போல வானவெல்லையிற் சுழன்று சுழன்று சாடும்போது மெய்ப்பத்தியினாற்றமது திருவடிகளுக் கன்புசெய்து துதிக்கவல்ல பத்தர்கள் ஜனன மரணதுக்கவருத்தங்களைப் போக்கிச் சகலசெல்வங்களையுங் கடாட்சித்துக் கடையில் மோட்சசாம்பிராச்சிய வாழ்வையும் தந்தாளுங் கிருபைக்கடலாகிய பாலசுப்பிர மணியதேவர் பிராணிகள்படும் உபத்திரவத்துக் கிரங்கி கோபநகைகொண்டு கரங்களைக் கொட்டி யிந்த அவுணராசன் கற்றிருக்கின்ற விஞ்சை வெகு நேத்தியெனச்சீறிப் பூமிக்கச் சாணியாக விருக்கி

ன்ற மகம்மேருவைப்போலப் பருத்து நிமிர்ந்திருக்கும்
தனுசை வட்டாகாரமாக வளைத்துப் பலகோடிச் சுடுச
ரங்களையும் விஷங்களைக் கக்கவல்ல சிலீமுகங்களையும்
பூட்டி விசாலமாகிய சிறகைவிரித்துப் பேரோசையெழ
க்கூந்தலிட்டு வருந்தித்திரிகின்ற அவுணராஜன்மீதிற்செ
லுத்தினர். அவைகள்விடுபட்டவுடன் அனலைப்பெருக்கி
ப் புகையைவீசிக் குமிறிக்கொண்டு மேல்வரும்போதுசி
றகடிமோதலினாலும் கூரியநகங்களினாலும் உறுதிபெற்
றுவிளங்கும் மூக்கினாலும்தட்டியும் முறித்தும் துகள்க
ண்டு வீராவேசத்துடன் வானமெங்கணு முலாவியும்ச
த்தசாகரப்பரப்பிற்சுற்றியும் பெரும்புறக்கடலிற்ருவியு
ம் இருட்பூமியிற்பறந்தும் வானநாடுகளிற்சுற்றியும் நாக
ர்கள் வாசஞ்செய்யும் பாதலவிடங்கடோறும் சஞ்சரித்
தும் மின்னலையொப்பச் சடுதிசடுதியிற்போர்க்களத்தில்
வளைந்துவளைந்து தீனராகிய பூதப்படைகளைச் சின்னபி
ன்னப்பட்டழிய மோதுமுன்னிலையிற் சருவாந்தரியாமி
யாகவிளங்கி அண்டரண்டபுவனசராசரங்களை நடிப்பித்
தாளும் பெருமையினையுடைய சிவகுமாரன் சூரன்செ
ய்கையை நிதானித்தவராய்ச் சகலவளங்களையும்போக்கி
ப்பட்சியுருக்கொண்டு திரிந்துபோராடுகின்றவனைநம்மை
யொத்தவன்தேரில்நின்றுவாட்டுவது நீதிக்கடாது மேலு
ம்பழிக்கிட மாகுமென்றெண்ணி தேவர்கள்மத்தியில்நிற்
கின்ற வெள்ளையானை வாகனனாகிய இந்திரன்மீது விழிக
ளைப்பரப்பியகாலையில் கர்த்தன் தன்னிடத்திற் பரிபூர
ணகடாட்சத்தினால் திருவுளத்தெண்ணியகுறிப்பைத்தெ
ரிந்து தட்சணத்தில் அழகியகண்கள்விளங்கும்பசியதோ
கையைவாய்ந்த பருத்தமயிலினுருவைக்கொண்டு மரகத
மலையானது சிறகுமுளைத் துலவுவதைப்போலப் பரந்தி
ருக்கின்ற செட்டைகளைக்கொட்டி உலகுக்கச்சாணியாக
நிற்கும் மேருகிரியும் சத்தகுலாசலங்களும்குலைகுலைந்து
திசைகள்தத்தளிக்கச் சத்தசாகரங்களும் அலைகளைமோ
திக்கலங்கிப்பெருக்கெடுத்தோடவும் விஷப்பற்களையுடை
யசர்ப்பகூட்டங்கள் பதைபதைத்து நாசமடையத்தக்க
தாகப்பறந்து வட்டணைதிரிந்து சரவணபவன் சன்னிதா
னத்தில்வந்துநின்று வணக்கிப்போற்றி அண்டங்களதிர
இதனைவிண்ணப்பஞ்செய்வதாயினன்.

தேவாதிதேவனே கேட்டருளும் மகாவிஷ்ணு, பிரம
னாதியகடவுளர் தமதுகட்டளைகளுக்கெதிர்பார்த்துத்தொ
ண்டுசெய்யக் காத்திருக்கும்போது அடிமையினிடத்திற்
பரிபூரணகடாட்சம் பாலித்துப் பணிவிடையினைத் தந்த
ருளியதாற் சகலசிறுமைகளையும்போக்கிப் பெறுதற்கரி
யமோட்சசாம்பிராச்சியப் பதவிக்குப்பாத்திரனானேன்உ
மதுசெந்தாமரைகளையொத்த திருவடிகளைத்தாங்கும்பே
ற்றைக்கிடைத்ததுமன்றியில் பாசபந்தங்களுக்குக்காரண
மாகிய இல்வாழ்க்கையினா லுண்டாகும்பாதகங்களையொ
ழித்துபவுத்திரனாயினேன், ஓ! கர்த்தனே? வெகுகாலமா
யத் தீனராகிய தேவர்கள்வருக்கங்களையலைத்துத் தகாத
பணிவிடைகளைக்கொண்டுவருவதுமன்றி அரியசிறைச்சா
லையினுமடைத்துப் பாரவிலங்குகளைப்பூட்டிவருத்திச்சக
லபுவனங்களினும் கொடுங்கோலைநடாத்திவருகின்ற சூர
பதுமன் வஞ்சகவினைவைக்கொண்டு பறவையினுருத்தா
ங்கிப் பறக்குமிடங்கடோறும் தேவரீரையேந்தி பவனிவ
ந்து கொடியபோரைச்செய்துவென்றுஜயப்பிரதாபத்தை
ப்பெறும்படிக்குச் செய்யவல்லேன் ஆதலாற் கிருபையு
ற்று விரைவில் திருத்தேரைவிட்டிறங்கி அடியேனைவாக
னமாக ஆரோகணிக்கத் தயைசெய்யவேண்டுமென்று ப
லவிதங்களிற்றுதித்து வேண்டுமுன்னிலையிற் சண்முகப்
பெருமாள் அவன்பத்திவிசுவாசங்களுக்கிரங்கிக் கிருபா
நோக்கம்பாலித்துத் துரிதமாய் நவரத்தினகாந்திகளை வீ
சிக்கொண்டிருக்குந் திருத்தேரைவிட்டிறங்கி விரிந்தகலா
பத்தைப்பரப்பி வீற்றிநிற்கின்ற மஞ்சைவாகனத்தின்மீதி
ற் றேவர்போற்ற கம்பீரமாகவீற்றிருந்து சூரபதுமன் ச
க்கிரவாகப்புள்ளுருக்கொண்டு விண்ணுலகத்தினுலாவுமி
டங்களிற்செலுத்தி யிறுதிக்காலத்தில் உலகங்களையழிக்க
வெழும் வடவைக்கனலின்பெருக்கை நசிக்கமோதும்பிர
சண்டமாருதத்தைப்போல அவுணர்பெருமானைவளைந்து
கொண்டு போர்த்தொழிலைச்செய்ய யத்தனித்தமுன்னி
லையில் இக்காரியங்களைத்தெரிந்த சூரன் உருக்கிராகார
மாகக்கோபித்து இந்தப்பாலகன் சூட்சிவெகுநேத்தியாக
விருக்கின்றதெனச்சீறி அலைகளைமோதும் கடலைப்போல
ஆர்ப்பாடங்களைச் செய்துகொண்டுதாவிப் பசியதோகை
யைவாய்ந்த இந்திரனைப்பகைத்துத்தன்கூரியநகங்களினா
ற்றசையைப்பிடுங்கி யெறிந்தும் பிச்சங்களைப்பறித்து வீ
சியும் வயிரத்தையொத்த மூக்கினாற் சிரமெங்கணும்உதி
ரம்பெருக்கெடுத்தோடக்கொத்தியும் உடல்முற்றும்பீறு
ண்டு செவ்வானத்தைப்போலத் தோற்றச்சாடியும் இவ்
விதமாகப் பலபின்னங்களைச்செய்து சுழற்காற்றினுமேலி
ட்டுத்திரிகின்றகாலையில் மயிலுருப்பெற்றிருக்கின்ற இந்
திரனும் அக்கொடுமைகளை யெவ்வளவுஞ் சட்டைபண்
ணமற் பசியசிறகைக்கொண்டு சூரன்திகைத்து வாடும்ப
டிக்குச்சாடியும் அவன்போகுங்கதிமாறித் திகைக்கும்ப
டிக்கறைந்தும் பசியகழுத்தைநீட்டி நீண்டமூக்கினால்மூ
ளைவெளிப்படும்படிக்குப் பாதகன்சிரத்திற் கொத்தியும்
வலியஇறகுகளை வாரிவாரித் திசைகளில்வீசியும் வளைந்
து கூர்மையாயிருக்கின்ற நகங்களினாலறைந்து உடலமு
ற்றும் புண்படவாட்டியும் பிரமிக்கும்படிக்கு உரப்பியு
ம் இவ்விதமாகத் தேவராஜன் மீறிவரும்போது சூரன்
அதிககோபங்கொண்டுநமக்கஞ்சியோடித்திருடனைப்போ
லப்பதுங்கித் திரிந்த இவன்கருவத்தைச் சற்றுநோத்தி
லடக்கவேண்டுமென்றுருத்து உக்கிராகாரனாய் மயில்வா
கனத்தைவிடாமற் சுழன்றுசுழன்று உடலிற்பொலிவாக
த்தழைத்திருக்கும் பசியபீலிகளைப்பறித்தும் கீறியும் ச
தைசதையாகப் பேர்த்தெறிந்தும் தலையைப்பிளந்துவிழி
களைப் பின்னப்படுத்தியும் கால்களையெற்றியும் சிறகடிகா
ற்றினாற் பின்னிடையும்படிக்கு மோதியும் இன்னமுஞ்
சொல்லப்படாத கொடுமைகளைச்செய்துகொண்டு சூரு
வளிக்காற்றினுங்கடுகி அனர்த்தங்களைச்செய்துவரும்உத்
தண்டங்களை எமதையன்தெரிந்து தன்வாகனத்துக்குநே
ர்ந்த துன்பத்துக்கிரங்கி ஆலகாலம் பெருகுமாறுதீயெழ
நகைத்து இந்தப்பாதகன்வலியை நிமைப்போதில் அடக்
குவனெனச்சீறித் தமதுகரத்திற் பினாகத்தைப்போல வி
ளங்கும் பருத்தவில்லைவளைத்து நாரியையிறுக்கிவயிரவூ
சிகளையொத்த பாணகோடிகளை அபரிமிதமாகச் செலுத்
தித் தலையைப்புண்படுத்தியும் விழிகளைமயக்கியும் சிறகு
களைச் சின்னபின்னப்படத் தறித்தெறிந்து தேகத்தில்ஊ
சிநாட்டவிடமில்லாமற்றுளைத்தும்சக்கைசக்கையாகப்பே
ர்த்தெறிந்தும் உதிரத்தைப்பெருக்கியும்சிறகுகளுக்குமா
ருகசரங்களையழுத்தியும் கால்களைமுறித்து இறகுகளை

யொடித்தும் இவ்விதமாக விஷத்தையொத்த கணைகளை
ப்பெருக்கிச் சாடும்போது சக்கிரவாகப்புள்ளினுருப்பெ
ற்றனர்த்தங்களைச்செய்தலவிய சூரன்பதைபதைத்து ந
டுநடுங்கி மிகவும்வருந்தியபோதினும் வீராதிவீரனுதலா
ற் சற்றுமிளையாமல்விட நாகத்தைப்போலச்சீறிவட்டமி
டுந்தோறும் விழிகளிற் குபீல்குபீலெனப் பெருக்குதிரு
க்கும்தீப்பொறிகளானவைசிதறி வானநாடுகளைக்கொளுத்
தியும் திசாதிசைகளைச்சுட்டுக் கரியாக்கியும் புவனங்களை
த்தகித்தும் பூமண்டலமெங்கணும் நெருப்புமழையைப்
போலப்பரந்து மன்னுயிர்களை அல்லோலகல்லோலப்ப
டவருத்தியும இத்தகைய அனர்த்தங்களைச் செய்துகொ
ண்டு காற்றுடியைப்போல நிலைபெறுமற் றிரிந்துதிரிந்து
வாட்டும்போது எமதையனும் தேவராஜனுருவமாகிய ம
ஞ்ஞைவாகனத்தை வாயுவேகத்தினுங் கடுகிநடாத்தி அ
வ்வவ்விடங்களிற்றொடர்ந்து அரத்தினுல் ராவப்பட்டுவி
ஷத்தொவையலிட்டுக் கூர்மையாகவிளங்கும் அலகையு
டைய சுடுசரங்களைச் சோனைப்பெய்யலினு மேலிடச்சொ
ரிந்துசொரிந்து தேவர்கள் துதித்துவாழ்த்த அகோரயுத்
தங்களைச்செய்து திகைக்கும்படிக்குச் சாடித்திரிகின்றகா
லையில் அவுணர்குலதிலகனுகிய சூரமஹாராசன் தான்
கொண்டகோலம்தோற்றுமற் சரங்களழுந்தி உதிரமான
து மிகுத்துப்பாய்வதினுல் வலிகுறைந்து தேகம்நடுங்கவ
ருந்தியபோதினும் மானமுங்கோபமும் மனதைப்பீடித்
தலைக்கக் காளகூடத்தைப்போலச்சீறி வெற்றிவேலாயுத
ப்பெருமாள் திருக்கரத்தில்விளங்கும் நெடியவில்லை நொ
டிப்போதிற் கடித்தொடிக்கநினைந்துகூரிய அலகைப்பெ
ற்றவாயைத்திறந்துகொண்டு அண்டங்களதிரச் சிறகைக்
கொட்டி அதிவேகமாய் மேலிட்டுவருகின்ற பாதகன்தீர்
மானத்தைச் சிவகுமாரன்தெரிந்து சமீபித்தமாத்திரத்தி
ரத்திற் செந்தாமரைமலரைப் பழிக்கும் அழகிய தி
ருக்கரங்களிலொன்றில் தகத்தகாயமாகவிளங்கும் வீரவா
ளாயுதத்தினை மின்னலைப்போல ஒருவிசை விதிர்த்தோங்
கிப் பகைவன்கொண்டிருக்கும் பறவையுருவானது இரு
கூறுய்விழத்தக்கதாகவீசினர்.

சவுனகாதிரிஷிகளே அழிவற்ற வயிரத்தேகம் பிளக்க
ப்பட்ட ஜயத்தைக்கண்டவிஷ்ணு பிரமனுதிய தேவர்கள்
களிமிகுதியினுற் றேகபரவசராய் விழிகளில் ஆனந்தநீர்
பெருகவும் மயிர்ச்செறிவெழவும் துள்ளித்துள்ளிக் கூத்
தாடிப் பாலசுப்பிரமணியதேவர் வீரத்தன்மையைக்கொ
ண்டாடிப் பரிமளமிகுத்த கற்பகமலர்களைச்சொரிந்து ஜ
யம் ஜயமெனவாழ்த்தினர், அக்காலத்தில் அவர்களடைந்
தமகிழ்ச்சியின் பெருக்கை இவ்விதமென்று யாவராலு
ஞ்சொல்லிமுடிவதன்று இவ்விதமாகத் தேவர்கள்களியா
டலைச்செய்து வீறியிருப்பதைச் சூரன்தெரிந்தமாத்திர
த்தில் நல்லகாரியம் இவர்களாணவத்தை நிமைப்போதி
ல் அழித்தபின்பு பாலகனையும் வாட்டவல்லேனெனத் து
ணிவுகொண்டவனுய்ப் பட்சியுருவைமாற்றித் தட்சணத்
தில் பூமண்டலமெங்கும் பரந்துவானவரையி லுயர்ந்து
காட்டும் மணல்மேட்டின்வடிவைக்காட்டி தேவரினங்கள்
நடுக்கிட்டு நடுநடுங்கும்படிக்குத் தூளியைப்பெருக்கிச்ச
த்தசாகரங்களையுந் தூர்த்து வானவழியையடைத்துச் சூ
ரியன்கதியைமாற்றி வாயுவின் பரிசந்தோற்றுமல் அம்ம
ண்டலத்தைநிறைத்துத் திசைகளைமூடித் திக்கஜங்கள்மக
த்துளையடைபட்டு வெறியடங்கிச் சோரவும் மண்ணுலக
வாசிகள் இஃதென்னபுதுமையாக விருக்கின்றதென் றுதி
கைத்து வாடவும் இப்படிக்கு மண்விண்ணெங்கும் அட
ர்ந்துநிற்கின்ற பாதகன் மாயவஞ்சகங்களைச் சிவகுமாரன்
மதித்து இஃதுசூரனுல் விளைந்ததெனத் தீர்மானித்தவ
ராய் அதிககோபங்கொண்டு தமதுதிருக்கரத்திற்பற்றியி
ருக்கின்ற வில்லையிறுக்கித் தெய்வீகம்பொருந்திய ஏழு
பாணங்களைச்சந்தித்து அவற்றிற்குரிய மந்திரங்களை யுச்
சரித்து இதனைக்கட்டளையிடுவதாயினர்.

ஓபடைகளே சாங்காலம்நேர்ந்தகாரணத்தினுற் றிருவி
ளக்கணையும்போது மிகுத்தபிரகாசத்தைக் காட்டுமாறு
போலப் பாதகன் அதிகவல்லமையைப் பெற்றவனுய்ப்
பூமண்டலம் வானகமுற்றும் நிறைந்த மணற்றிட்டை யு
ருக்கொண்டு பிரமிக்கும்படிக்கு நமதுமுன்னம் காட்டுகி
ன்றுனுதலால் நீங்கள் சத்தசாகரப்படிவத்தைத்தாங்கிப்
பெருகி அலைகளின்வலியினுல் நிமைப்போதி லதனைக்க
ரைத்து உருத்தோற்றுமலழித்துத்திரும்பக்கடவீர்களெ
னப்போதித்து எத்தகையருக்குந் தமதுபெருமைகளைக்
கணித்தறியவொண்ணுத மூலகாரணக்கடவுளாகிய சரவ
ணபவன் தூண்டியபோது அச்சிறந்தபாணங்கள் வெளி
ப்பட்டவுடன் பிரளயவெள்ளத்தினும் பதின்மடங்கதிகரி
த்துப்பாய்ந்து வானத்தையளாவத் திரைகளைமோதி அ
ண்டங்களதிரமுழங்கி வேகங்கொண்டுபாய்ந்து மண்வி
ண்ணெங்குமூடநின்ற மண்மேட்டைக்கல்லிக் கரைத்தத
ப்படுத்தி அதன்சுவடுகாணுமல் மாற்றியவுடன்சாகரவுரு
வைமறைத்துப் பழையகோலங்கொண்டு திரும்பிச் செரு
க்களத்திற் றிருவிளையாடல்களை நடாத்திநிற்கின்ற எமதி
றைவனைச்சேர்ந்து தமதிடத்தில்நின்றது அத்தருணத்தி
ற் கொடியமனதைப்பெற்ற சூரன்வடவையைப்போலப்
பொங்கித் தட்சணத்திற் சத்தசாகரங்களும் பெரும்புறக்
கடலும் பகைத்துப் பூமியையழிக்க நினைந்தெழுமாறு
போலப் பெருவெள்ளத் தோற்றங்கொண்டு மேருகிரியு
ச்சிவரையிற் றிரைகளைவீசிப்பரந்து சமஸ்தமும் திப்பிர
மைகொண்டு வாடியேங்கப் பேரொலியைச்செய்து தன்
விழிகள்காணப்பெருகிநிற்பதைச் சண்முகன்பார்த்துபா
தகன்மாயப்பெருக்கு வெகுநேத்தி நேத்தியெனத் திரு
நகைகொண்டு பளபளத்துக் கூரியஅலகைப்பெற்ற திவ்
வியபாணங்கள் நூற்றையெடுத்து தனுசிற்பூட்டிமந்திரத்
தையுச்சரித்து ஓபடைகளே நீங்கள் ஊழித்தீயின் தோ
ற்றமாகப்பரந்து பாதகனுலுண்டாய் உலகங்களைவருத்தி
வரும் ஜலத்தின் வீறுப்பையடக்கிச் சிறுதுளியுமில்லா
மற் பருகியழித்துத்திரும்பக்கடவீர்களெனத் தூண்டிய
மாத்திரத்திற்சிவகுமாரன்திருவுளப்படிக் கவ்வாளிகள்வ
டவைக்கனலினுருக்களைத்தாங்கிச் சிடசிடென்றும் படப
டென்றும் மிகுத்தவோசையெழ மண்டியெரிந்து பாய்ந்து
சூரன்கொண்டிருக்கின்ற ஜலப்பரப்பனைத்தையும்நிமை
ப்போதிற் கிரகித்துமீண்டது இதனைப்பாதகன் தெரிந்த
மாத்திரத்திற் கோபதீபிதனுய் ஊழித்தீயினுருக்கொண்
டு பூமிமுதல் அண்டகோளகைபரியந்தம் கொழுந்துவி
ட்டெரியச் சுவாலையைவீசிச் சராசரப்பிரபஞ்சங்க ளனை
த்தையும் கொளுத்தியும் சுட்டும் சாம்பலாக்கியும் கரித்
தும் எரித்தும் இப்பாடுகளைப்படுத்தும்போது பாலசுப்
பிரமணியதேவர் சூரன்வஞ்சகம் நன்றாகவிருக்கின்றதெ
ன் றுருத்து அதிகமகிமைகளைப்பெற்றிருக்கும் தீட்சணி
யமுள்ள சரங்களாயிரத்தைத் தனுசிற்றொடுத்து நீங்கள்

பிரசண்டமாருதப் படிவத்தைத்தாங்கி யேகமாய்ப்பாய்ந்
து கனற்பெருக்கனைத்தையும் இந்தநிமிஷத்தில் வாட்டிவ
ருவீரெனப் போக்கியகாலத்தில் வேகங்கொண்டு கடையு
கக்காற்றினு மேலிட்டு அண்டகடாக மதிர்ந்து குலகிரிக
ளுருண்டு மங்கவும் மற்றபுவனகோடிகள் அல்லோலகல்
லோலப்பட்டுத் தியங்கும்படிக்கு ஆர்ப்பரித்துத்தாவி வி
ண்மண்திசாதிசைகள் முதலியவிடங்களில் நிறைந்துசுட்
டுக்கொளுத்திவந்த தீயின்காரண மெவ்வளவுங்காணமல்
நிமைப்போதில் நாசஞ்செய்து பழையபடிக்குஉலகங்கள்
களித்திருக்க நிறுத்தி ஒன்ருய்ப்பலவாய்ப் பெருவெளி
யாய்உருவ நாமக்கிரியைகளற்றுப் பரவஸ்துவாகவிளங்கு
ம் பெருமையினையுடைய சண்முகப்பெருமாள் சன்னிதா
னத்திற் றிரும்பிவந்திருந்தது இவ்விதங்களாகத்தான்கொ
ள்ளும்படிவங்களனைத்தையும் வீறவொட்டாமலடக்கி வ
ருவதை நினைந்துநினைந்து மானமும்வயிரமும் மனதைச்
சுட்டலைக்க மண்டியெரிந்து உருத்திராகாரமாகக் கொதி
த்துத் தீயும் புகைப்படலமும் வீசத்தக்கதாகப் பெருமூ
ச்செறிந்துநல்லகாரியம் இச்சிறுவன் சாமர்த்தியங்களை ய
றிகின்றனனென்றுருத்து ஊழிகாலத்தெழுந்து சராசரப்
பிரபஞ்சங்களை வாட்ட வல்ல பிரசண்டமாருதப் படிவத்
தைத்தாங்கி ஓவென்னுமிறைச்சலைக்காட்டி வீறிமேலிட்
டு அண்டபுவனங்களினடுக்குகள்குலைந்துதத்தளிக்கமோ
தியும் திகைத்துநிற்கின்றபூதவெள்ளங்கள் குலைகுலைந்து
பதைபதைத்துக் கைகால்களொடிந்தலையத்தக்கதாகமாறி
யும்பேரொலியைச்செய்துதிசைகளனைத்தும்செவிடுபடக்
கலக்கியும் குலகிரிகள்சிறுதேர்களைப்போலுருளத்தள்ளி
யும் கடல்களைக்கலக்கியும் தேவர்கள்சின்னபின்னப்பட்டி
றையப்பார்த்தும்இவ்விதவுற்பாதங்களைக்காட்டிப் பாதக
ன்செய்துவருகின்ற அனர்த்தங்களை லோகநாயகன்கண்டு
கோபநகைகொண்டு மன்னுயிர்படும் துக்கவருத்தங்களை
யொழிப்பதாகத்திருவுளத்தில்மதித்தவராய்தட்சணத்திற்
குரூரமாகிய பதினுயிரம்திவ்வியபாணங்களை ஆய்ந்தெடுத்
துத் தமதொப்பற்ற தனுசிற்பூட்டிஅவற்றிற்குரியமந்திர
ங்களைப்பேசி யிதனைக் கட்டளையிடுவதாயினர், ஓபடைக
ளே நீங்கள் விசாலமாகிய படங்களை வாய்ந்த பல்லாயிர
கோடி நாகவினங்களி னுருவகங்களைக்கொண்டுதாவிப்பா
தகன் மாயவல்லபங்களனைத்தையும் நிமைப்போதி லழித்
து மீளக்கடவீர்களென் றேவியமாத்திரத்தில் அவைகள்
வீறிவானத்தெழுந்து பற்பலசிரங்களைக் கொண்டிருக்கு
ம் படங்களைவிரித்து விஷச்சுவாலைபெருக புஸ்புஸ்எனச்
சீறிமேலிட்டு எங்கணும்பரந்துஇயமனுக்குமொருயமனை
ப்போலச் சகலபிராணிகளையும் அலைத்துத்திரிகின்றசூர
பதுமன் கொண்டுதிரிகின்ற வாயுவின்பெருக்கத்தையுண்
டு பரிசமறச்செய்ததாய் வெற்றியுடன்பழையபடிக்குவே
லாயுத மூர்த்தியினதுசன்னிதானத்தைச்சேர்ந்திருந்தது.

கேட்டீர்களோ! சவுனகாதிமுனிவர்களே? மகாவீரதீர
ஞகிய இந்தச்சூரன் முடித்துலாவிய மாயவித்தைகளின்
பெருக்கத்தையும் கொடுமைகளையும் இன்னவிதமென்று
விரித்துச்சொல்லவும் போதுமோ அம்மம்ம அவன்சாம
ர்த்தியங்களுக்கு இவ்வுலகங்களில் ஒருவனையும் ஒப்புச்
சொல்லக் கூடாது இவ்விதமாகப் பற்பலவுருவங்களைத்
தாங்கி நான்குதினவரையில்ஊணுறக்கமற்றுஇரவுபகலா
கச்சொல்லப்படாத கொடுமைகளையும் அனர்த்தங்களையு
ஞ்செய்துகொண்டு சராசரப்பிரபஞ்சங்கள் தத்தளிக்கத்த
க்கதாக வருந்தித்தீனராகிய பூதப்பெருக்கைஅல்லோலக
ல்லோலப்படச்சிதறவடித்தும் படைத்தலைவராதியர்கலங்
கி ஏங்கச்சாடியும் விஷ்ணு பிரமன் முதலாயினரும் மதி
மருண்டு திகைக்கத்தக்கதாக அகோரயுத்தங்களைச் செய்
துசெய்து ஆயிரத்தெட் டண்டங்களினும் உலவியுலவிப
லமாயைகளைக்காட்டி வருபவன் நூதனமாகியகோரரூபங்
களைக்கொண்டு சிவகுமாரனையலைத்து வெல்லக்கருதிதன்
குலகுருவாகிய சுக்கிராசிரியன் முன்னம் போதித்திருந்த
சம்மோகனசித்தியென்னும் சிறந்தமந்திரத்தைவிதிப்படி
க்குச்சரித்து அதன்முயற்சியினற்சிருஷ்டிதிதிசங்காரமெ
ன்னும் முத்தொழிலை நடாத்திவரும் பிரமனுகவும், விஷ்
ணுவாகவும், உருத்திர மூர்த்தியாகவும், ஒருபாரிசத்திற்
றோற்றப்பட்டுத் தண்டாயுதத்தை வீசியும் சக்கரத்தைக்
கிறுகிறெனச் சுழற்றிப்போக்கியும்பாசுபதாஸ்திரத்தைச்
செலுத்தியும் மற்றுமிராகின்ற தீட்சணியமாகியஅஸ்திர
சஸ்திரவிதங்களைச் சோனைப்பெய்யலினு மேலிடச் சொ
ரிந்து அண்டங்களதிர வார்த்தும் தேவேந்திரனையொப்ப
விளங்கி அயிராவதத்தின் பிடரியில்வீற்றிருந்து வச்சிரா
யுதமாதிய படைகளைவீசி ஒருபுறத்திற் கொக்கரித்தும்மு
ப்பத்துமுக்கோடி தேவர்களைப்போல விமானங்களிற் கா
ட்டிப் பாலசுப்பிரமணியக் கடவுளைத்தீயெழப்பார்த்துஅ
வுணர் நமது தாயாதிகளாதலால்எங்களிற் சண்டைகொடு
த்து வாதாடியபோதினும் பிரத்தியாருக் கிடங்கொடுப்
போமோ வருத்தவும் பார்ப்போமோ உனக்கிவ்விடத்தெ
ன்னகாரியம் ஓடினுலுயிர்பெற்றுப் பிழைப்பையெனப்ப
லவசைமொழிகளைப்பேசிச் சுடுசரங்களாதிய படைகளைச்
சோனைமாரியைப்போலச்சொரிந்தார்த்தும் மற்றொருபு
றத்தில் இராக்ஷதர் உருவைப்பெற்று பிரளய வெள்ளத்
தைப்போலவளைந்து கொண்டு நம்மவரை அதாஅதப்படு
த்திய உன்னைச்சுலபமாக விடமாட்டோம் பாலனுகவிருந்
தபோதினும் இரங்கோம் எத்தலங்களி லோடியொளிப்
பினுந் தொடர்ந்துவாட்டுவோம் சிறைச்சாலையிலடைத்து
வருத்துவோமென வயிரங்களைப்பேசிச் சத்தி, சூலம்,பி
ண்டிபாலம், கப்பணம், கணிச்சி சக்கரம், தண்டாயுதம்
சூலம், குந்தம், வளைதடிமுதலியதிவ்வியபாணவிதங்களை
அமோகமாகச் செலுத்திப் போராடியும் ஒருபாரிசத்திற்
பலகோடி பூதங்களாக வந்து பருத்தபருவதங்களை வீசிக்
கர்ச்சித்தும் மற்றொருபுறத்தில் இயமனைப்போல நின்று
ஆவாவென வாயைத்திறந்து மேலிட்டும் ஒருபாரிசத்திற்
பேய்க் கூட்டங்களாகநின்றுவிழிகளானவைஅனலையொ
ப்பக்காந்தி வாய்களிற்றீப்பொறியை யிறைத்துச் சீறிவந்
தும் ஒருபுறத்திற் புகைப்படலமேலிடப்பிரளயத்தீக்கோ
லங்கொண்டு அதிகவோசையெழ மண்டியெரிந்துபூதரை
வாட்டியும் ஒருபுறத்திற் பிரசண்டமாருதமாகவுவென்னு
மிரைச்சலைக் காட்டிச்சகலரும் திடுக்கிட்டு வாடமோதியு
ம் சருவசங்காரகாலத்திற் சராசரப்பிரபஞ்சங்களையழிக்க
வெழும் பெருவெள்ளத்தைப்போலத்தாவிஅலைகளைமோ
திப் பூதப்படைகளை வாரியலைத்தும்ஒருபுறத்தில் ஆலகா
ல விஷத்தையொப்பக் கனன்று எதிர்ப்பட்ட வனைத்தை
யுங் கொளுத்தித்திரிந்தும் ஒருபாரிசத்தில் வடவைக்கன
லைப்போலப் பூதரைச்சுற்றித் தகித்து வீறியும்ஒருபுறத்தி
ல் காளமாநாகங்களினுருக்கொண்டு விஷச்சுவாலைகளைக்க
க்கிமேலிட்டுக் கடிந்துவருத்தியும்மற்றொருதிசையில்மே
கசாலங்களாய் மின்னலிடிகளைப்பெருக்கி அக்கினிமழை

கல்மழைகளைப்பொழிந்து சாடியும் ஒருபுறத்தில் காடாந்
தகாரமாகிய இருள்வடிவுகொண்டு பூதராதியரைத் திகை
க்கும்படிக்கு மூடியும்மற்றொருபாரிசத்தில்இடியேற்றை
ப்போல அண்டங்களதிரக்குமுறிக் கலக்கியும்ஒருபுறத்தி
ல் வரைகளாய் விழுந்துகொன்றும் ஒருபக்கத்தில்தன்னு
ருக்கொண்டுருத்துக் கொடியதீட்சணியமுள்ள பாணவித
ங்களை ஒன்றனந்தமாகச் செலுத்தியும் மற்றொருதிக்கில்
துவாதசாதித்தர் படிவங்கொண்டுஅதிகவெப்பமெழக் கா
ய்ந்துவதைத்தும் ஒருபாரிசத்திற் சதுரங்கசேனைகளி னு
ருக்கொண்டெதிர்த்து நம்மவரைக்கொன்ற பழியை வாங்
குவோம், குத்துவோம், வெட்டுவோம், கொல்லுவோம்,
உதிரத்தைக் குடிப்போமென்று பலகொடுமைகளைப் பே
சித்திரிந்தும் ஒருதிக்கில் அஷ்ட கஜங்களாய் மதங்களைப்
பெருக்கி வீறிட்டுத் துதிக்கைகளில் இருப்புலக்கைகளை
க் கொண்டு சுழற்றிச் சாடியும் ஒருபாரிசத்திற் சிங்காச
னைப்போலக் கர்ச்சித்தலைத்தும் ஒருபுறத்திற் சக்கிரவாக
ப்புள்ளினுருப்பெற்றுப் பெருங்காற்றெழச் சிறகைவீசி
ப் பூதரைச்சரகைப்போலப் பறக்கடித்தும்ஒருபாரிசத்தி
ல் யானைமுகத்தைப்படைத்த துணைவனாகிய தாருகாசுர
னைப்போல வடிவுகொண்டு அதிக வுக்கிரத்துடன் பாலக
னெங்கே யெங்கேயெனக்கொதித்துக்கொடியபாணசமோ
கங்களையும் கடியபடைவகைகளையும் கரவேகமாகத்தூண்
டி அகோர யுத்தங்களைச்செய்தும் மிருகராசனையொத்த
சிரசமோகங்களாயிரங்களையுடையசிங்கமுகாசுரனைப்போ
ல மற்றொருபுறத்திற் காணப்பட்டு விழிகளிற்றீப்பொறி
கள்சிதறப் பகுவாய்த் களைத்திறந்துபூதப்படைகளை வாரி
வாரிவாயிற்போட்டு விழுங்கியும் நெடியவிற்களையிறுக்கி
க் கடியசரவருஷங்களைத்தூவிக் கொடியபோரைமுடித்து
ம்ஆலம்விழுதுக்கிணையாகப் பரந்திருக்கும்நீண்டஇரண்
டாயிரங் கரங்களை வலைகளைப் போல வளைத்துப் பகைவ
ரைச் சேர்த்துமோதியும் வானத்தெறிந்தும் சின்னபின்ன
ப்படச்சாடித் திரிந்தும் மற்றையபுறங்களில் தன்பிள்ளை
களாகிய பானுகோபனைப்போலக் காட்டித் தூதனைத்தே
டித்திரிந்தும் சிவகணங்களையும் படைவீரரையும் சின்ன
பின்னப்படப் பொருதும் எரிமுகனுயுருக்கொண்டு வட
வைக்கனலினுமேலிட்ட உக்கிரத்துடன் அனர்த்தங்களை
ச்செய்து தீனரைச்சிதைத்தும் இரணியன்வச்சிரவாகு ம
ற்றமூவாயிரர் தோற்றமாகத் தோன்றிப் பலதிசையினும்
சூழ்ந்து சொல்லப்படாத சமர்த்தொழிலைச்செய்து சிவகு
மாரன் சேனைகளை அல்லோலகல்லோலப்பட அதாஹத
ம்பண்ணிக் காட்டுதீக் கொப்பாகத்திரிந்தும் தன்மனதுக்
கினிய பிரதமமந்திரி தருமகோபனை யொப்ப ஒருபக்கத்
தில் வாதாடியுலாவியும் திசாதிசைகள் முற்றினும் ஜயசா
லிகளாக விருந்தபடைத்தலைவர்கள்கோலமாகநின்றுநீண்
டதனுசைக் கோலிச்சரமாரியை யிறைத்தும்பருத்ததண்
டாயுதம், பிண்டி பாலம், முசலம், கப்பணம்,தோமரம்,
சக்கரம், சூலம், வளைதடி,ஈட்டி இத்தகையபடைகளை அ
மோகமாக வீசியும் மின்னலையொத்த வாளாயுதங்களையு
ம் பட்டாக்களையும் சுழற்றிப் பகைவரைக் கண்டதுண்ட
மாக வெட்டியும் சிதைத்தும் பலபின்னங்கள் படச்சாடி
யும் கோபமாருமற் சூறாவளிக் காற்றைப்போலத்திரிந்து
ம், சவுனகாதியிருஷிகளே, மேற்குறித்தபடிக்குப் பற்பல
தோற்றங்களாகக் காட்டிச் சூரபதுமன் எங்குந் தானுய்ச்
சிவசுப்பிரமணியதேவரை வளைந்து நெடுநேரம்போராடி
யும் பூதரையும் படைத்தலைவரையும் திகைக்கும் படிக்கு
வாட்டியும் உக்கிராகாரனுய்த் தன்னாற்கூடிய வஞ்சகங்க
ளையும் மாயைப் பெருக்கையும் காட்டிப்போராடி வருகி
ன்ற வேளையில் இவ்வுற்பாதங்களைக் கண்ட இந்திராதிய
தேவர்கள் மனநொந்துமயங்கித் திகைத்துத் தேகமுற்று
ம் வியர்க்க வாடிச்சோர்ந்துஇனிபிழைக்கும்வதுவைக்கா
ணோ மெனப்புலம்பி ஊழிகாலத்திற் பிராணிகளனைத்து
ம் ஜலப்பெருக்கிலாழ்ந்து தத்தளித்து வருந்துமாறுபோ
லப் படாதபாடுகளைப் பட்டுநிற்கவும் ஓடவுங்காலெழாம
ல் தளர்ச்சிகொண்டனர், அவர்கள்பட்டவருத்தங்களை யா
வராலுஞ் சொல்லிமுடிவதன்று.

இவ்விதங்களாகச் சூரபதுமன் மாயமந்திரத்தின் முய
ற்சியினுற் செய்து வருங்கொடுமைகளுக்கஞ்சித் தேவர்க
ள் படுமின்னல்களையும் பூதப்படைகள் துணைவராதியவீ
ரர்கள் தியக்கத்தையும் எமதுகர்த்தன் திருவுளத்தில்மதி
த்திரங்கினவராய்த் தமது திருக்கரத்திற்கொண்டிருக்கும்
பினுகத்தையொத்த தனுசையிறுக்கித் துரிதமாய்அதிகதீ
ட்சணியமுள்ள ஆயிரம் திவ்வியபாணங்களை யெடுத்துச்
சந்தித்து வேதத்தின்மூலத்தை யறியாதபிரமனைத் தளை
செய்து தேவர்கள் பந்தபாசங்களைநீக்கியாள்வதற்குக்குரு
முகுர்த்தமா யெழுந்தருளிய பாலசுப்பிரமணியதேவர்இ
தனைக் கட்டளையிடுவதாயினர், சத்துருக்களைத் தும்சப்ப
டுத்தவல்ல கணைகளிற் சிறந்தபடைகளே நீவிர்துரிதமாக
ப் போய்க் கொடியபாதகனுகிய சூரபதுமன்தன்மந்திரவ
ல்லபத்தினுற் பலவாகத்தோற்றி முடித்துவருகின்ற கொ
டுமைகளை நிமைப்போதிலடக்கி மாயைப்பெருக்கைவாட்
டித்திரும்பக்கடவீர்களெனப் போதித்து மந்திர பூருவக
மாகச் செலுத்தியகாலையிற் சவுனகாதிமுனிவர்களே, அவ
ற்றின் மகத்துவங்களையும் வீரத்தையும் மென்ன சொல்
வேன் ஒன்றனந்தகோடிகளாகப் பெருகி விஷச்சுவாலைக
ளையும் தீயையும்வீசிப் பிரசண்டமாருதத்தினுங்கடுகி வி
டநாகங்களைப்போலச்சீறிப்பாதகன்கொண்டிருக்கின்றமா
யாரூபங்க ளொவ்வொன்றுக்கும் எவ்வேழாகச் சூழ்ந்து
கொண்டு சின்னபின்னப்படக்கண்டித்துவிண்மண்பாதல
ம் திசாதிசைக ளெங்கணும்பரந்திருந்தமாயப்பெருக்கனை
த்தையுங் கவளீகரஞ்செய்து யதாப்பிரகாரம் சகலரையும்
நிலைபெறவிருத்திச் சூரபதுமன் திடுக்கிட்டுத்தியங்கிமன
ம்வருந்தி வாடத்தக்கதாகத் தனிமையில்விட்டுத் தங்களி
டத்துண்டாய் வீறிவாட்டியபடைகளனைத்தையும் சுருக்கி
க் கொண்டு சரேலெனத்திரும்பிப்பழையபடிக்குமுருகப்
பெருமாள் அட்சயத்தூணியிற் சேர்ந்திருந்தது, இச்செ
ய்கையைத் தெரிந்தவிண்ணவர் கர்த்தன்வீரபராக்கிரமங்
களையும் பெருமைகளையுந் துதித்துவேதவாக்கியங்களினு
ற் போற்ற இப்படிக்குச்சகல முயற்சிகளுமங்கி எண்ண
மிட்டுக்கொண்டு நிற்கின்றசூரமகாராசனைச் சிவகுமாரன்
பார்த்துப்பரிவாய்த் திருவுளம் பற்றுவதாயினர், அவுண
ர்பெருமானே கேட்பையாக காருண்டகரியமேக சமோக
ங்களினிடத்தெழுந்து சொலித்தடங்கும் மின்னற்கொடி
களைப்போல நமது முன்னம் பற்பல வுருவங்களைக் கொ
ண்டுவாதாடி வந்தவுன்முயற்சிகளனைத்தையும் நாமேவிய
பாணங்கள் நிமைப்போதில்நாசஞ்செய்ததைக்கண்டாய் நி
லைபெருத வஞ்சகப்போரைச் செய்துவெல்லநினைந்த பே
தாய் எக்காலத்துஞ் சலனமற்று நித்தியமாக விளங்கும்த
மனபேருருவைக் காட்டுவோம் தரிசிக்கக்கடவாய்யெனத்

திருவாய்மலர்ந்தருளிச் சத்தசாகரங்கள் பெரும்புறக்கடல் சூழ்ந்த பூமண்டலம் அதிற்பட்டதிசைகள்தீவுகள் விண்ணுடுகள் எறும்புமுதல் யானையீறுகச் சொல்லாநின்ற எண்பத்துநான்கு லட்சம்சீவபேதங்கள் முப்பத்து முக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் இருஷிகள் கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர் பன்னகர் உவுணர்கின்னரர் கிம்புருடர் ஏகாதசவுருத்திரர் துவாதசாதித்தர்சூரிய சந்திரர் முதலிய நவக்கிரகங்கள் ருதுக்கள் காலங்கள்முதலிய சமஸ்தமும் ஆதிதேவனாகிய சண்முகப்பெருமாள்திருமேனியி லமைந்ததல்லது வேறொன்றில்லையெனச்சகலரும் திஷ்டாந்தமாகத்தரிசித்துக் கிருதார்த்தராதற்பொருட்டுவிசுவரூபத்தைக் கொண்டருளினர்.

சவுனகாதி யிருஷிகளே, அவனருளின் முயற்சியினால் என்னாற் கூடியவரையில் அத்தோற்றத்தின் பெருமிதங்களைச் சொல்லக்கேட்டுக் கிருதார்த்தராகக்கடவீர், அஃதென்னையெனில் திருவடிகளி னுட்புறத்திற் சத்தகுலாசலங்களாதிய பருவதங்கள் தோற்றவும் புறவடியிற் சாகரவிதங்கள் காட்டவும்கூரியநகங்கள் வாய்ந்தவிரல்கள் முற்றினும் திதி வாரயோககரணங்கள் நட்சத்திரங்கள் கிரகங்கள் இடிக்கூட்டங்கள் தோற்றவும் பறட்டினிடத்தில் வருணராசன் சந்திரன் கரியமேனியைப்படைத்த நிருதிஅரக்கர் நிற்கவும் பாதங்களுக்குமேல்உருண்டுகாட்டும்கணைக்காலில் ஆரிடர்தோற்றவும் முழந்தாளில் விஞ்சையர்மற்றகடவுளர் காட்டவும் துடைகளி னிடத்தில் இந்திரன் அவன்பிள்ளை சயந்தன்நிற்கவும் இடையிற்காலன்தோற்றவும் அரைஸ்தானத்தில் அவுணகூட்டம் விளங்கவும் விலாவெலும்புகடோறும் சிறந்தகடவுளர் நிற்கவும் கோசத்தலத்தில் அசுவனி தேவதைகள் காட்டவும் வயிற்றினிடத்தில் நாகரினங்கள் விளங்கவும் நாபிமூலத்தில் மன்னுயிர்க ளடர்ந்திருக்கவும் மார்பகத்திற் கலைக்கியானங்க ளொலிக்கவும் முப்புரிநூலிற் சலனமற்றஞானம் சொலிக்கவும் உரோமங்களில் அளவற்ற அண்டகோடிகள் புல்முனையில் விளங்கும்பனித்திவலைகளைப்போல அணிபடத் தோற்றவும்திருக்கரங்களில்அகிலபோகங்கள் தோற்றவும் அழகியபுயாசலங்களிற் பிரமன்விஷ்ணுநிற்கவும்மிருது வாகியதளிர்களைப் பழித்துக்காட்டும்விரல்களில் இலக்குமி சரஸ்வதி முதலிய தேவமங்கையர் பிரதிபிம்பித்திருக்கவும் திருக்கழுத்தினிடத்தில் அக்கினிதேவன்தோற்றவும் வயிரத்தினும் சிறந்த சுந்தர முள்ள திருவாய்களிற் சதுர்வேதங்கள் ஆகமசாத்திரங்கள் அத்தேவன் மங்களகுணாதிசயங்களைத் துதித்து நிற்கவும் தந்தங்களினிடங்களில் அகரமுதலியஐம் பத்தோராட்சரங்களும்விளங்கவும் நாவினிடத்திற் சிவாகமபேதங்கள் பிரபலித்துத் தோற்றவும் சுந்தரமுள்ள அதரத்தில் மனுவிக்கியான சாஸ்திரம் முறையிடவும் நாசியினிடத்தில் வாயுதேவன் சஞ்சரித்திருக்கவும் சூரியசந்திரர்கள் விழிகளாகப்பிரகாசித்திருக்கவும் செவிகளிற்றிசைகள் விளங்கவும் நெற்றியிற் குடிலைப்பொருள் தோற்றவும் சிரத்தினிடத்திற்பரவெளி காட்டவும் இத்தகைய சிறப்புகள்வாய்ந்த தமது பழமையாக விருக்கின்ற திருக்கோலத்தைக்காட்டிநின்றகாலத்தில் ஆயிரங்கிரணகாந்திகளைப் பரப்பியுலாவுகின்ற கோடி சூரியருதித்துஓரிடத்திற்குலவுமாறுபோலமிகுந்தபிரகாசத்தையெறிந்து விளங்கும் திருமேனியின்பொலிவைச்சிறந்ததவங்களைச் செய்ததேவர்கள் தரிசித்தமாத்திரத்திற்றிடுக்கிட்டு மனம்நடுக்கி பிரமைகொண்டவர்களாய்ச் சித்திரப்பிரதமைகளைப்போலப் பார்த்திருக்கின்ற காலையிற் பத்தவற்சலனாகிய சிவசுப்பிரமணியக்கடவுள் விண்ணவர்சேர்வைத் திருவுளத்திற்கொண்டிரங்கிப் பேரொலியெழுப் பயப்படாதீர்கள் பயப்படாதீர்களெனத் திருக்கரத்தையமைத்துக் கிருபாநோக்கம் பாலித்தவுடன் களைபட்டிருந்தவர்களுக்குத் தேவாமுதங்கிடைத்ததைப்போல அவ்வருள்மொழியானது செவிகளிற்பட்டுத் தேகபரவசராய் மகிழ்ச்சியையடைந்து மனங்குளிர்ந்து போதவாரிவிழிகளிற்பெருக கரங்களைச் சிரங்களிற்கூப்பிஜயஜயவெனப் போற்றிப்பணிந்தவர்களாய்க் குளிர்ச்சிபெறச்சிறுதிவலைகளை வீசியெழும் மேகவரவைக்கண்டுகளிக்கும் மயிலினங்களைப்போல ஆனந்தக்களியாடல்களைச் செய்துகொண்டிருந்தனர்.

அத்தருணத்தில் ஆதிமத்தியாந்த ரகிதராகியசிவகுமாரன் சொரூபக்காட்சியைக் காளகூடவிஷத்தைபொத்த மனதைப்பெற்ற சூரபதுமன் கண்டவுடன் விம்மிதனாய்த்திகைத்து யாதொருசெய்கையுமற்றுத் தேவமருள் கொண்டவனைப்போலநின்றனன் அக்காலத்திற் பேரறிவாளராலுமறிந்து போற்றுதற்கரிய பெருமையையுடையசண்முகப்பெருமாள் அவனிடத்திரக்கமுற்றுச் சிறிதுஞானவுணர்ச்சியை அனுக்கிரகஞ்செய்தமாத்திரத்தில் நல்லறிவுதோற்றிய மகிமையினால் இவ்விதங்களில்நினைப்பதாயினன் பிரளயகாலவெள்ளத்தினு மேலிட்டு ஓவென்னு மிரைச்சலுடன் கொடியபோரைச் செய்திருந்த இரதகஜதுரகபதாதிகளின் பெருக்கை நிமைப்போதிலழித்துத் தேவர்கள் அவுணர் இராக்கதர்முதலிய சகலவீரரையும் வென்று திக்குவிஜயங்கொண்டு இராஜாதிராஜனாய்ச்சூரனெனப்பேர்பெற்றிருக்கின்ற என்னுடன் அகோர யுத்தங்களைச் செய்துசெய்துவிடாமல் அண்டகோடிகள்முற்றுமுலவி வாதாடியும் அத்தலங்களில்நெருங்கியிருந்த நமதுசயின்னியங்களை நகைபழலினாலும் உரப்பினாலும் உக்கிரப்பார்வையினாலும் ஏஎன்னும் முன்னம்தகித்துச் சாம்பலாக்கியதுமன்றி இதுபரியந்தம் போராடி வருகின்றதல்லாமல் எனக்குமேலிட்ட புசபலபராக்கிரமசாலியாகியதம்பி சிங்கமுகாசுரனையும் புத்திரமித்திரர் மந்திரிபிரதானிகள்முதலிய அவுணப்பூண்டில்லாமல்வேரறக்களைந்து நாசப்படுத்திப் பரமசிவம் கிருபையுற்றுத்தந்தசுந்தரமுள்ள இந்திரஞாலத்தேரையும் நம்மிடத்துக்குவராமற்றடுத்து நான்கொண்ட மாயப்படிவங்கள்முற்றினும் கொடிய சரங்களினால்மாற்றி அரிதிற்றேடிவைத்திருந்த தேவாஸ்திரங்களொன்றேனும் பிரயோசனப்படாமல் வாட்டியதுமன்றிச் சராசரப்பிரபஞ்சங்க ளடங்கியிருக்கின்ற அண்டநிரைகள் மயிர்க்கால்தோறும் அளவற்றுவிளங்கவும் தேவர்கள்மக்கள் நாகர்முதலியசமஸ்தமும் தமதுதிருமேனியிற் காணும்படிக்கு இத்தகையபேருருவைக்கொண் டென்முன்னம் நிற்கின்றனர் அழகியகலாபத்தை விரித்துலவும் மஞ்சைவாகனத்தின்மீது விளங்குகின்றகுமாரதேவரைப் பாலகன்பாலகனென்று இதுபரியந்தம்பேசியும் அவமதித்து மிருந்தேன் இத்தேவன்பெருமைகளை நிதானித்துத்தெரிந்து தகுதியாகியகாரியங்களில் முயற்சிகொள்ளாமற்போனேன் மகாவிஷ்ணு பிரமனாதியதேவர்களனைவருக்கும் மூலகாரணமாக விருக்கவல்லதேவன் இவனல்லதுவேறில்லை இதிலெவ்வளவும் பிசகிராதுஇதன்காரண

ங்களைப் பலவிசை நன்றாகத்தெரிந்திருக்கின்றேன் இவையன்றியும் முன்னந்தூதாகவந்த வீராதிவீரன்ஒப்புவமையற்ற இந்தச்சரவணபவன் குணாதிசயங்களை விரித்துக்காட்டியது மன்றிப்பற்றுகளற்ற பரம்பொருளே இக்கோலங்கொண்டெழுந்தருளினரெனப் பலவிதங்களிற் சுடச்சுடச்சொல்லினான், ஊழ்வினை முயற்சியினாற் செல்வச்செருக்கிற்பட்டு அவ்வாக்கியங்களை நிச்சயப்பொருளாக வெண்ணி நடந்துகொள்ள வகையற்றுச் சவுரியத்தையும்மானத்தையும் பெரிதாகமதித்து இப்படிக்குக்கெட்டேன்அவனருளின்திறத்தினாலும் சருவமங்கள குணாதிசயங்களின் காட்சியினாலும் இக்காலத்தில் தேவதேவோத்தம னிவனெனக் கண்டுகொண்டேன் வீரவாகுசொன்னகாரணங்களனைத்தும் உண்மையாகும் அதற்கு திஷ்டாந்தமாகப் பூருவத்தில் சிவபிரான் கடாட்சவீட்சண்ணியத்தினால் நான்படைத்தாண்டுவந்த ஆயிரத்தெட்டண்டங்களுடன் மற்றகாரணங்களையும் முத்திக்குரிய சண்முகப்பெருமாள் பாதாரவிந்தங்களிற் பெருத்திருக்கின்றஉரோமங்களில்ஒடுங்கி நிற்கக்கண்டேன்.

மேலும் தேவர்கள் முனிசிரோஷ்டர்கள் மற்றவையாவும் தமதகத்தில் விளங்கக்காட்டிய பகவன் விசுவரூபமுற்றும் செவ்வையாகக்காண்பதற்கு யாவரால்முடியும் சரீரமுற்றும் விழிகளைப்படைத்தவர்களுக்காயினும் இத்தரிசனையைப் பூர்த்தியாகத்தெரிந்து புகழ்வதற்கு அனந்தகோடி கற்பகாலம்செல்லும் தேசோமயமாகவிளங்குகின்ற இக்கர்த்தன் வகித்திருக்கின்றவடிவத்திற் றோற்றாநின்றபேரொலியின் சிறப்புகளையும் இளமைநலங்களையும் வடிவத்தின்சீரையும்மற்றமங்களகரமாகிய படிவத்தின்தோற்றமுதலிய காட்சிகளனைத்தையும் பெற்றவர்கள் வானநாடுகளிற் சிறந்திருக்கின்ற பிரதமதேவர்களினும் பூமண்டலவாசிகளிற் சக்கிரவர்த்திகளாக விருக்கப்பட்டவர்களினும் மற்றுமெத்தகையர்களினு மிருக்கமாட்டார்கள் இவ்வற்புததரிசனையை விழிகளையிமையாமல் பலதரம்பார்த்தபோதினும் மனதுக்கும் அமையாதனவாகவும் தெவிட்டாததெள்ளமுதின் பெருக்காகவுமிருக்கின்றதுதமக்கொப்புவமையற்ற மூலகாரணக்கடவுளாகிய இத்தேவன்இக்காலத்திற்றோற்றக்காட்டிய சிறந்தவுருவத்தின்காட்சியைத் தரிசிக்குமிடத்தில் மிகவும்அச்சங்கொள்வதல்லதுஇச்சோதியின்வீக்கத்தை தயிரியங்கொண்டுநின்று காணவல்ல தேவர்களொருவ ரிருக்கின்றனரோ தவங்களிற்சிறந்த விண்ணவர்களால் முடியாதெனில் மற்றயாவராற்கூடும்பலகாலம் அரியதவங்களைச்செய்து பரமசிவகடாட்சத்தினாற் பற்பலவரப்பேறுகளையும் அழிவற்ற வயிரப்படிவத்தையும் படைத்திருப்பவனாதலாற் சற்றுநிதானித்துத் தரிசிக்கப்பெற்றேன் மேலும் அதிகசுந்தரமுள்ளவனப்பெனச் சொல்லாநின்றஒருபொருளானது ஆயிரங்கோடியுருக்கொண்டு ஏககாலத்திற் றிரண்டொன்றி விளங்குவதாயினும் வெற்றிவேலாயுதமூர்த்தியினது பவுத்திரமாகிய பாதாரவிந்தங்களினழகுக் கெவ்வளவும்எவ்விதத்தினு மொப்புவமை சொல்லக்கூடுவதோ அப்படிக்கிருக்க இந்தஆதிகர்த்தன் சிறந்தவுருவங்க ளனைத்துக்கும் யாவரால் உவமானங்களை எடுத்துக்காட்டக்கூடும் எனக்குப் பிராணபதமாகவும் மனதுக்கினியனாகவும் ஞானபாதத்துக்குரியனாகவும் கல்விகேள்விகளிற்சிறந்தபேரறிவாளனாகவும் புசபலபராக்கிரமங்களுக் கொப்பற்றவனாகவு மிருந்தம்பிசிங்கமுகாசுரனும் புத்திரசிரோமணிகளாகவிருந்த பானுகோபனும் சாத்திரசம்பன்னனாகிய இரணியனும்என்னிடத்திற் பரிவாய் வெற்றிவேலாயுதத்தைத் திருக்கரத்திற்கொண்டிருக்கும் குமாரசுவாமியைப் பாலகன் பாலகனென்றிகழவேண்டாம் அவன் திறங்களும் மகத்துவங்களும் நம்போலிகளுக்குத் தெரிவதன்றுபிரமன், விஷ்ணுமுதலாகிய சிறந்ததேவர்களாலும் காணவொண்ணாதபரம்பொருளே யிக்கோலங்கொண் டெழுந்தருளியிருக்கின்றனர், இதற்கியாதொருசந்தேகமுமில்லையென்று பற்பலவிதங்களில் விரித்துக்காட்டி மனப்பூர்வகமாகப் போதித்தனர்.

அவர்கள்தெருட்டிய உண்மைகளையும் வேதநிச்சயமாகிய வாக்கியங்களையும் ஊழின்பாலனாய்ப் பரமசிவமனுக்கிரகித்திருந்தவரப்பேறுகளையும்சலனமற்ற வயிரப்படிவத்தையும் மற்றதம்பியர் பிள்ளைகள் சம்பத்தையும் பெரிதாகமதித்து இகழ்ச்சியாகப்பேசி மறுதலைசெய்தேன்அவையனைத்தும்இக்காலத்தில்உண்மையாகத்தெரிந்துகொண்டேன் ஆதிமூலத்தோற்றமாகியபாலசுப்பிரமணியதேவர் காட்டியிருக்கின்றதிருமேனியின் வனப்பனைத்தையும் பாதாதிகேசபரியந்தம் பற்பலவூழிகாலவரையில்வருந்திப் பார்த்தபோதினும் விழிகளுக்கமையாதனவாகவிருக்கின்றது மனதினால் நிச்சயம்படுத்துவோமெனினும் கருத்துக்கெட்டாததாகவே முடியும் இத்தகைய குணாதிசயச்சம்பத்தைப்பெற்ற குமரன் என்னையொருபொருளாக மதித்துச் சண்டைகொடுக்க நேர்ந்ததை யோசிக்குமிடத்தில் இதுவுமொரு திருவிளையாடலாகவும் அருட்டிறமாகவும் நினைக்கவேண்டுவதல்லது வேறுமுண்டோ இஃதன்றியும் இத்தரிசனையைக்கண்டபின்புமுன்னமெனக்குண்டாயிருந்த வுருத்திராகாரமாகிய கோபாவேசங்கள்முற்றினுமடங்கி வீரத்தன்மையுமொழிந்து போரினிடத்தினு மூக்கமற்றதுமன்றியுந் தேகம்குதுகுலித்துப் பரவசப்பட்டுஉரோமங்கள்சிலிர்த்துவிழிகளினும் பேரானந்தவாரிபெருக இத்தேவனிடத்தில் மெய்ப்பத்திவிளைந்து நாயினேனுக்குத் தேகமுமென்புங்குழைந்து உலையிற்பட்டமெழுகையொப்பக் கரைந்து அகந்தையனைத்தும்நாசப்பட்டுஅவனருளின் திறத்தினால் ஞானவுணர்ச்சிதோற்றியகாரணத்தினால் வலதுபாரிசத்திலிருக்கின்ற நேத்திரமும்புசமும் துடிக்கின்றது மேலும் அண்டரண்டபுவனகோடிகளிற் பட்டபொருள்களனைத்தும் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போல வெள்ளிடையாகக்காணப்பெற்றேன் ஆதியிற்சிவபிரானைக்குறித்து அடியேன்செய்திருக்கிற சிறந்ததவமுயற்சியினால் தேவாதிதேவன் மங்களகரமாகிய தோற்றத்தை யெதிர்க்காட்சியாகத் தரிசிக்கப்பெற்றேனாதலால் இச்சிறந்த வயிரயாக்கையைப் படைத்திருக்கின்றதற்குத் தக்க பேற்றினைக்கிடைப்பதாக இத்தேவனைப் பாதங்கள் வருந்தபலதரம் பிரதட்சணம்வந்தும் சிரமானது பூமியிற்படியச்சேவித்தும் ஆசானுபாகுவாக நீண்டிருக்கும்கரங்கள் பவுத்திரமாதற்பொருட்டுக் கூப்பித்தொழுதும் ஜனனதுக்கத்தை யொழிக்கவேண்டும் இதுபரியந்தம்செல்வச்செருக்கிற்பட்டுப் பழிபாதகங்களுக் கெவ்வளவுமஞ்சாமற் செய்துவந்த துஷ்கிருத்தியங்களினாற் சம்பவித்திருக்கின்ற மகாபாதகங்கள்நசித்துக்கிருதார்த்தனாதற்பொருட்டு இக்கடவுளினது குணாதிசயங்களை மனோவாக்குக்காய மொருமைப்படத்தக்கதாக வாயாரவாழ்த்தி நாவார

த்துதித்துப்பேரானந்தவாழ்வைப்பெற்றுத்தீயபுத்தியை
யொழித்து இக்கடவுளுக் கடிமைப்பட்டு நித்தியத்தைய
டைந்து இவனருளுக்குப் பாத்திரனாக என்மனம்விரும்
புகின்றதாயினும் மேற்குறித்த காரணங்களை விரைவில்
முடிப்பதற்கு அகந்தைக்குரிய மானபிமானமென்னும்
பாசபந்தமானது என்மனதைத்தடுத்துக் கெடுத்ததுஅப்
படிக்கிருந்தபோதினும் வம்சபரம்பரையாய்ப் பகைவரா
கவிருக்கின்ற தேவர்கள் சிறையைநீக்க யத்தனித்துப்பல
பூதர்படைவீரரைக் கூட்டிக்கொண் டிவ்விடம்வந்துகொ
டியபோரைச்செய்து என்வம்சநாசப்படவாட்டியஇத்தே
வனுருவைக்கண்டமாத்திரத்திற் கோபமுண்டாவது தகு
தியாகும் அப்படிக்கிருக்கத் தீரமாகவிருந்த என்மனம்
தீயிற்பட்ட வெண்ணெயைப்போலச் சகலஉற்சாகங்களு
மற்று உருகியுருகிக் கரைந்துகாட்டுமாயின் உணர்ச்சியும்
யாக்கையும்மற்றகருமங்களுமென்வசப்பட்டதெனச்சொ
ல்லக்கூடவில்லை தேன்களைதுளித்துத் மகரந்தங்களை யி
றைத்துப் பொன்னையொத்த விதழ்களைப்பரப்பிவண்டி
னங்கள் ரீங்காரத்தொனிகளைச் செய்து இடைவிடாமல்
மொய்த்திருக்கும் குளிர்ந்த கடப்பமலர்மாலை புரளும்வி
சாலமாகிய திருமார்பைப் படைத்திருக்கின்ற குமாரதே
வர் இக்காலவரையில் நீடித்த பற்பலபோரை நடாத்திப்
பிரியாதவராய்க் காட்சிதந்திருப்பதை யோசிக்குமிடத்தி
ல் இதுவுமொரு திருவிளையாடலாக நம்பவேண்டுவதல்
ல துவாட்டக்கருதுவாராயில் நிமைப்போதில் நாசஞ்செ
ய்யவல்லர் அதனைத்தடைசெய்வதற்கு யாவராலுமுடிவ
தன்று குற்றமற்றதேவர்களைநான் அநியாயமாகஅலைத்து
ச் சிறையிலும் வைத்திருப்பதாகவும் இதுதகாதகாரியம்
மிகவும் பொல்லாங்கெனப்பலருமிழந்தனர்.

அக்காரணத்தின் முபற்சியினற் சதுர்வேதங்களும்பிர
மனுகிய தேவர்களும் தேடிக்காண்பரிய தேவதேவோத்
தமன் இவ்விடம்வரவும் நிஜதரிசனையாகக்கண்டு மனமா
னந்தமடைந்து களிக்கப்பெற்றேன், ஆதலால் நான்முன்
செய்தநல்வினையின் மகத்துவத்தினுல் தீயகருமங்களை
வையும் நன்காகவேமுடிந்தது மேலும் மூலகாரணனாக
விருக்கின்ற இக்கடவுளுக்குப் பின்னிடையாமல் இத்தி
னவரையில் எதிர்த்துநின்று அரியபோர்களைச்செய்து வ
ருகின்ற யான்இனித் தினைப்போல மனந்தளர்ந்துவா
டுவதழகோ ஆண்மைக்கடுப்பதோ சூரியசந்திரர் பஞ்ச
பூதங்களுள்ள பரியந்தம் நிலைபெற்றுவிளங்கும் சிறந்தகீ
ர்த்திப்பிரதாபங்களைப்பெறவும் வீராதிவீரன் ரணரங்க
சூரனெனப் பலரும்புகழவிருக்கின்றேன், ஆகலால் இப்
புகழ்ப்படிவம் மண்ணுள்ளபரியந்தம் நீடித்திருக்கு மல்
லது அநித்தியமாகிய இவ்வுடலம் அழிவின்றிநிற்பதுண்
டோ இனிதேவர்கள் சிறையைநீக்கி யித்தேவனைவணங்
கி உதிரமாம்சச்சம்பந்தத்தினுற் றாலித்திருக்கின்ற இவ்
வுடலையும் வீரனாகவிருப்பவன் அணுப்பிரமாணமாக ம
திக்கத்தக்க உயிரையும் பெரிதாக நினைந்துபோற்றி எளி
யரைப்போலவணங்கி யிருப்பது என்னையொத்த சூரனு
க்கடுப்பதோ இத்தினவரையில் விஷ்ணு பிரமனுதிய தே
வர்களையும் வீரபராக்கிரமசாலிகளாகிய அவுணர் இராக்
கதர்முதலிய ஜயசாலிகளையும் வெற்றிகொண்டு சகலரும்
வணங்கிப்போற்ற அகண்டசாம்பிராச்சியச் செல்வவளங்
களையனுபவித்து ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் சக்கி
ரேஸ்வரனாய் நூற்றெட்டுயுகவரையில் எதிரின்றிஅரசாட்
சியைச்செய்து ஆயிரகோடி அண்டங்களினும் புகழும்ப
டிக்குப்பரந்துவிளங்கும் கீர்த்திப்பிரதாபத்தையும்வீரத்
தன்மையையும் அற்பவாழ்வை யிச்சிப்பேனுகில் வியர்த்
தமாகப்போக்கவரும் மிகவும்வருந்தித்தேடிய சூரத்துவ
மானது நிமைப்போதிலழிந்துபோகாதோவென் றிவ்வித
ங்களிற் பன்னிப்பன்னிச் சூரபதுமன் பேசிக்கொண் டி
ருக்கிறகாலையிற்சராசரப்பிரபஞ்சங்கள் அண்டநிரைகளா
திய சமஸ்தத்துக்கும் மூலகாரணனாக விருக்கின்ற குமா
ரசுவாமியாரானவர் மனதினுலும் விழிகளினுலும் கவனி
த்து நிதானிக்கப்படாமல் பேருருவைக்காட்டநின்ற விசு
வரூபக்காட்சியைச்சடுதியில்மறைத்துப்பசிய கலாபத்தை
வாய்ந்த மஞ்ஞைவாகனத்தில் முன்னமெழுந்தருளியிரு
ந்த சுந்தரமுள்ள வடிவைக்கொண்டவராய்ச் சூரபதும
னுக்குக் கடாட்சித்திருந்தபோதவுணர்வைமாற்றிப்பழை
யகியாபகத்தைத்தோற்றச்செய்தனர்.

சவுனகாதிரிஷிகளே பிருதிவு-அப்பு-தேயு-வாயு- ஆகா
யமெனச்சொல்லாநின்ற பஞ்சபூதச்செயற்கையிற்பட்டச
ராசரப்பிரபஞ்சங்களாய் அவைகள்கொண்டிருக்கின்ற ப
லவண்டநிரைகளின் றோற்றமாய் அவற்றுட்பட்ட பிரா
ணிகள்செய்துவரும்வினைப்போகங்களுக்கடுத்தநன்குதீங்
குகளை அனுபவிக்கச்செய்து இத்தகையதிருவிளையாடல்க
ளை நடத்தியும் அவற்றுட்படாமற்சிதாகாசவெளியில் நட
னஞ்செய்துஎவற்றினும்பரிபூரணமாகநிறைவெய்தித்தம
துமாயாவிலாசங்களைக் கண்டுகளிக்கும் பெருமையினையு
டையசிவபிரான்மனதுக்கினியகுமாரதேவர்சூரபதுமனுக்
குஞானவுணர்ச்சியைத்தந்துநீக்கியவுடன் பழையபடிக்கு
மானமுங்கோபமும்வீரமும்பெருத்தெழுந்துமனதைவா
ட்ட வுருத்து நின்றதைப்பார்க்குமிடத்தில் சோடசகலைக
ளையுடைய சந்திரபகவான் கீழ்த்திசையில் விளங்கும் உ
தயகிரியிற்றோற்றிய காலத்திற் பறந்தோடிய விருளின்
வீக்கமானது அத்தேவன் அஸ்தமித்தவுடன் மீட்டும் மு
ன்னினுமதிக கருமையைக் கொண்டு உலகங்களிற் பரந்
ததையொக்கும் இவ்விதமாக மனச்செருக்கைப்பெற்றசூ
ரன் அழகியசிரகினைவாய்ந்த மயில்வாகனத்தின்மீதில் வி
ளங்கும் பாலசுப்பிரமணியதேவர் தோற்றமானது விழிக
ளிற்பட்ட மாத்திரத்தில் உருத்திராகாரமாய்மண்டியெரி
ந்து போரைச்செய்ய விரும்பினவனுய் நமது வல்லபமும்
வீரபராக்கிரமமும் வெகுநேத்திநேத்தியெனத் தீயெழக்
கரங்களைப் பிசைந்து ஒன்றுடனென்றைக் கோடையிடி
களைப் போலத்தட்டி ஆதிசேஷன் பூமண்டலத்தைத் தா
ங்கமாட்டாமல் தத்தளிக்கத்தக்கதாகத் தேகங்குலுங்க ந
கைத்து இதனைப்பேசுவதாயினன், பாலவடிவைக்கொண்
டிருக்கின்ற இந்தக்கள்வன் நம்முடனெதிர்த்துச் சண்டை
கொடுக்க நிருவாகமில்லாதவனுய் மாயப்பெருக்கொன்றை
க்காட்டிச் சற்றுநேரம் தீரத்துவத்தைக்கொண்டிருக்கும்
நமதுமனதைப்பிரமிக்கும்படிக்குச்செய்தபோதினும்மற்
றினும் அதன்வசப்பட்டுப்போகாமல் நமக்கடுத்திருக்கின்
ற பேரறிவைக்கொண்டுவாட்டிப்பழையபடிக்குஅசைவற்
ற தீரத்தைப்பெற்றிருக்கின்றான், ஆதலால் நமக்கெவர்க
ளு மொப்பிரார்கள் எக்காலத்தினும் சலனமற்றவயிரப்ப
டிவத்தைப் பெற்ற வரப்பிரசாதத்தைப்பெற்றிருக்கின்ற
நாம் இப்பாலகன் மாயவஞ்சகத்துக்குட்பட்டுக் கருத்தழி
வதுண்டோ கிரவுஞ்சபருவதத்தைச் சூதினுற் பிளந்தழி
த்த வேலைத்தாங்கிய கரதலத்தைப் படைத்திருக்கின்ற

குமாரனுடன் கொடியபோரைச்செய்துசற்றுநேரத்தில்ஜ
யப்பிரதாபத்தைப் பெற்று மீளக்கடவேன் அக்கருத்தை
முடிப்பது பின்பாகட்டும் இல்லாதது பொல்லாததுகளை
ச்சொல்லிமுறையிட்டுக்கொண்டு இத்தகையசலகத்தைமூ
ட்டி வேடிக்கைபார்த்திருக்கின்ற பாதகராகிய தேவப்பய
ல்களனைவரையும் மடக்கிக்கொண்டு வாட்டிக் கொன்றுதி
ன்று உதிரப்பெருக்குடன் உயிரையுங்குடித்துக் காலத்தி
ல் நமக்குண்டாயிருக்கின்ற கோபதாபங்களிற் சிறித்தூறி
யபின்பு மற்றையகாரியங்களையும் நிமைப்போதில் முடித்
துக் களிக்கவல்லேனெனத் துணிவுகொண்டவனுய்ச் சூர
பதுமனனவன் பழையபடிக்குக் கொடியமாயமந்திரமொ
ன்றையுச்சரித்து அதன்முயற்சியினுற் சூரியனுளிமழு
ங்கி மன்னுயிரனைத்தும் திகைத்துவாடும்படிக்கு விண்ம
ண் திசாதிசைகளெங்கும் காடாந்தகாரமாய்மூடவல்ல இ
ருள்வடிவைத்தாங்கி அப்பெருக்கில்மறைந்துஅண்டகோ
டிகள் கிடுகிடென்றதிரக் கொக்கரித்த முன்னிலையில்அக்
கொடுமைக்காற்றுமல் பூருவத்திற் றிருப்பாற் கடலினிட
த்திற்றேற்றிய காளகூடவிஷமெழுந் தலைத்ததைப் போ
லப் பூமண்டலமுற்றும் கிடுகிடாய்த்து அஷ்டதிக்குகள
னைத்தும் தத்தளித்துவாட வீங்கிய இருட்பெருக்கானது
அண்டப்பித்திகை வரையில்நிமிர்ந்தடர்ந்துதிகைக்கச்செ
ய்த கரியலோகத்தின் பொலிவைக்கண்டதேவர்கள்திடுக்கி
ட்டுப் போதவுணர்வினுலும் விவேகத்தினுலும்இப்படிவ
ம் சூரன் மாயப்பெருக்கினு லுண்டாயதெனத் தெரிந்து
கொண்டு பாதகனென்ன செய்வானேவெனவருந்திமனச்
செருக்கற்றுத் திகைத்து மேல்நடப்பதைஉன்னிப்பார்த்
துக் கொண்டிருக்கும்போது அவுணர்பெருமான் அவ்வி
ருளின் வீக்கத்திற்றேன்றிக்கலந்து ஆயிரங்கொடி முடி
களை அணிபடப்படைத்திருக்கின்ற மகம்மேருபருவதத்
தினையொப்பப் பருத்தகாத்திரமுள்ளதேகத்தைக்கொண்
டு பலசிரங்கள் விளங்க அவைக்கிரட்டி கரசமோகங்கள்
பெருத்துக் காட்டத்தக்கதாகிய ஒருபேருருவைத் தாங்கி
வானத்தில்நிற்கின்ற விண்ணவர்கூட்டத்தைவாரிவாரிவா
யிற்போட்டுத் தின்னக்கருதினவனுய் வானவெல்லையில்நி
மிர்ந்து விழிகளிற்றீப்பொறிகள் சிதறவாய்களைத்திறந்து
கரங்களைப்பரப்பி மறைவிடமாய்வருவதைப் பேருணர்ச்
சியினுற் றெரிந்தவுடன் தீனராகிய தேவர்களென்னசெய்
வார் காலாதிகளிற் பிராணனைக்கொண்டுபோகும் கூற்று
வனை எதிர்ந்தமன்னுயிரைப்போல நடுநடுங்கிக் குலைகுலை
ந்து மதிமயங்கிப் பிரமித்தவர்களாய் நிற்கவும்பயந்துதலை
த்தலைச் சிதறியோடி ஞானநாயகனைக்குறித்துப்புலம்பிமு
றையிடுவ தாயினர்.

தீனராகிய தொண்டர்களுக்கடுத்த வினைகளைப்போக்கி
ப் பாதுகாத்தருளும் பொருட்டு விருதுக்கொடியை நாட்
டியிருக்கும் பத்தவற்சலனே ஓலம், பாசபந்தங்களைக் க
ளைந்து நன்னெறிகளை யனுஷ்டித்துவரும் மகத்துக்களுக்
கிருப்பிடமாகிய ஞானநாயகனே ஓலம், விண்ணுடுகளிற்
சிறந்திருக்கும் வானவருக்குத் தலைமை பெற்றிருக்கின்ற
தேவதேவோத்தமனே ஓலம், அஞ்ஞானவிருளைப் போக்
கிப் பேரானந்தத்தைப் பெறச்செய்யவல்ல பரஞ்சுடரின்
மூலமேஓலம், வேதாகமங்கள் முதலியவற்றினுலெண்ணி
யளவிடுதற் கரியகர்த்தனே ஓலம், சராசரப் பிரபஞ்சங்க
ளெவற்றையும் படைத்து அவைகளுக்குரியவினைப்போக
ங்களை யூட்டியாட்டும் பரவஸ்துவே ஓலம், தேவர்களிற்சி
ரேஷ்டமாக விளங்கும் திரிமூர்த்திகளில் முதன்மைபெற்
றிருக்கின்ற நுதல்விழியினைப்பெற்ற சிவபிரான்பெற்றரு
ளிய கடவுளே ஓலம், விண்ணவர்களுக்கதிபனுய்த் தேவ
சேனுபதியென்னுந் திருநாமத்தைப் பெற்றிருக்கின்ற வீ
ராதிவீரனே ஓலம், சத்துச்சித்தானந்தனே ஓலம், முப்
பத்தாறுதத்துவ பேதாபேதங்களாக விளங்கும் காண்பா
ன் காணப்படுபொருள்காட்சியின் உருவகமாகக்காட்டாகி
ன்ற விராட்சொரூபத்தை வகித்தாட்டுங்கடவுளே ஓலம்,
தமது வழியடிமைகளாக விருக்கின்ற தீனரைவாட்டியலை
க்கும் சத்துருக்களுக்கு இடியேற்றினையொப்பக்காட்டிஅ
தஞ்செய்யும் தீனசரண்ணியனே ஓலம், சத்திப்படிவமா
ய்அமைந்திருக்கும் வெற்றிவேலாயுதத்தைத் திருக்கரத்
திற்றுங்கியிருக்கின்ற நிர்மலக்கடவுளே ஓலம், தேவரீர்ம
கத்துவங்களையும் பெருமிதங்களையும் பாமாலைகளினுற்பு
கழவல்ல தொண்டருக்கெளிதில்காட்சிதரும்கர்த்தனே ஓ
லம். நவரத்தினமயமாகிய வாகுவலையங்கள் பிரகாசிக்கும்
பன்னிருபுயாசலங்களைப் படைத்த தேவனேஓலம். சிரு
ஷ்டி திதி சங்காரத்தொழிலை நடாத்திவரும் திரிமூர்த்தி
சொரூபக் காருண்ணியக்கடவுளே ஓலம்ஓலம். இத்தகை
யகோலங்களைத்தாங்கி உலகவியாபாரங்களை நடிப்பித்துவ
ரும் ஆதிமூலக்கடவுளே அடியோங்கள் துக்கவருத்தங்க
ளைத் திருச்செவிகளினேற்றுப் பாதுகாத்திரட்சிக்கவேண்
டும் காலதாமசஞ்செய்வீராகிற் சருவசங்காரகாலத்தைப்
போல நாசமடைவோம் ஓ! கர்த்தனே? கொடியசூரன்இ
தோகார்கால விருளைப்போல பரந்துமூடும் காளமேக
சமோகக் காட்சியைப் போல மாயையின் முயற்சியினுற்
காடாந்தகாரமாகிய விருளைப்பரப்பி கோரரூபத்தைத்தா
ங்கி அதனிடையில் மறைந்தோங்கித் தமது தொண்டரா
கிய அடியோங்களைப்பற்றி விழுங்கக்கருதிப் போந்தேன்
தப்பித்துக்கொண்டோடி யொளிக்கவும் வலியற்ற நாயி
னேங்கள் ஐயனே இனி யெவ்வாறு பிழைக்கப் போகின்
றேம் ஓ! கர்த்தனே? சிறிதுந்தாழ்க்காமற் பாதகன் பிரா
ணனைவாட்டி பத்தரிடத்திற் கிருபாநோக்கம்பாலித் தாள
க்கடவீர் வேறொருகதியையுங் காணேமென்றுஇவ்விதங்
களாகத் தேவர்கள் முறையிட்டுக்கொள்ளு முன்னிலையில்
அழகியகலாபத்தை வாய்ந்த மயிலினுருக்கொண்டுமுருக
ப்பெருமானைத்தாங்கியிருக்கின்ற இந்திரனும் கடவுளர்ப
டுந் துன்பத்துக்கிரங்கி ஓ! கர்த்தனே? கொடியரிற் கொடி
யனுகிய இந்தச்சூரபதுமன் செய்கைகள் திருவிழிகளிற்
காணப்படவில்லையோ இன்னமுஞ் சற்றுநேரம்பராமுக
மாக விருப்பீராகிற் கரவடமாகநின்றகள்வன் எளியராகி
ய நம்மவரை வாயிற்போட்டுக் கொள்ளுவதல்லாமற்பிரப
ஞ்சங்களனைத்தையும் நிமைப்போதிற் கவளீகரஞ்செய்து
போடுவதற்கையமில்லை மேலும் என்னென்ன அனர்த்த
ங்களைச்செய்வானே தோற்றவில்லை எமதுகுலதெய்வமே
கிருபையுற்று விரைவில் தேவகாதகனுகிய சூரபதுமனை
க்கொன்று மன்னுயிர்வருத்தங்களைநீக்கியாளவேண்டுமெ
ன்று பலவாகத்துதித்துவேண்டுவதையும்விண்ணவர்கோ
ரிக்கையையும் பாலசுப்பிரமணியக்கடவுள் திருச்செவிக
ளினேற்றுச் சூரன்கொண்ட மருட்படிவத்தையும் கொ
டியநினைவையும் மதித்துத் தீனசரண்ணியனுதலால் உல
கவுபத்திரவங்களைத்தவிர்த்து நிலைபெறச்செய்யச்சித்தமி
ரங்கினவராய்த் தட்சணத்திற் றமதுதிருக்கரங்களினென்
றில் தேசோமயமாகவிளங்கிக்கர்த்தன்கட்டளைகளுக் கெ

திர்பார்த்திருக்கும் சத்திவேலாயுதத்தின்மீது விழிகளைப் பரப்பி மாயவித்தைகளைச்செய்து தேவரைவருத்துகின்ற இந்தக்கொடிய பாதகனைவிடாமற் சரீரத்தை யிருகூறாகப்பிளந்தடக்கி நிமைப்போதில் மீளக்கடவாயெனப்பணித்து அளவற்றஅண்டகோடிகளைவென்றஜயப்பிரதாபத்தையும் பலராலும் புகழத்தக்க கீர்த்திப்பாடுகளையும் பெற்றிருக்கின்ற சூரமகாராஜன்மீதிற் செலுத்தியவுடன் கோடிசூரியப்பிரகாசத்தைப்பரப்பிப் பிரசண்டமாருதமுமஞ்சப்பாய்ந்து தாபாக்கினியைவீசி விஷங்களைப்பெருக்கிப்பலதேவாஸ்திரமுதலிய வுற்பாதங்களைப்படைத்துவிடாகத்தையொப்பச்சீறிச் சமீபித்தகாலையில் அவுணர்பெருமான்கொண்டிருந்த இருட்படிவப்பரப்பனைத்தும் சூரியன்முன்பனியைப்போலநீங்கியது.

இவ்விதமாகத் தானுண்டாக்கியமாயைமுற்றும் நாசப்பட்டதையும் பாலசுப்பிரமணியக்கடவுள் விடுத்த கூரியவேற்படை அதிகவீருப்புடன் நெருங்கிவருவதையுஞ்சூரன்பார்த்து நல்லகாரியம் சலனமற்ற வரப்பேறுகளைப் பெற்றிருக்கின்ற நம்மை யிப்படையினா லென்னசெய்யக்கூடுமென்றெண்ணிக் கோபநகை கொண்டு வடவைக்கனலுந் திடுக்கிட்டுவாடப் பொங்கியித்துணிபைக்கொண்டான், சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலத்தையும்அஷ்டதிசைகளையும் சத்தபாதலங்களையும் விண்ணுடுகளையும்பிரமன்முதலிய கடவுளரையும் மற்றசீவராசிகளனைத்தையும்முங்திவரையறக் கலக்கிக்கொன்ற பின்பு இந்தக்குமரனைவாட்டுவேனெனத் தீர்மானித்தவனாய் விசாலமாய் ஆழ்ந்திருக்கும் சமுத்திரமத்தியிற்பாய்ந்துமண்விண்திசாதிசைகளை மூடத்தக்கபருத்தமா விருட்சவுருக்கொண்டுநின்றனன்.

சவுனகாதிதவத்தரோ அத்தருவின்காட்சியிற் சிலவற்றைத் தெரிந்தமட்டுஞ் சொல்லக் கேட்பீராக வானவெல்லைவரையிலோங்கி அஷ்டதிசைகள் முற்றினும்பரந்து இருள் மூடத்தழைத்ததாய் அக்கினிக் கொழுந்தையொப்பச்சிவந்து மிருதுவாய் அசையுந் தளிர்களைப்பரப்பித் தீயினிடத்துண்டாய்ப் பரந்துகாட்டும் புகைப்படலத்துக்குச் சமமாகத் தழைகளைவிரித்து தங்கத்தினாற்செய்தமைத்ததுக்கொப்பாகக் காட்டும் புஷ்பக்கொத்துகளைத்தாங்கி மரகதத்தினும் பசுமைதங்கிய பருத்தகாய்கள்தொங்கச் செம்மணிகளுக்குச் சமமாகத்தோன்றும்கனிகளைப்பெருக்கிமேகசாலங்களை யொப்பப்பருத்து நெருங்கியிருக்கின்றகிளைகளைத் திசாதிசைகளில்நீட்டி அண்டகோளகைபரியந்தமுயர்ந்துபூமண்டல வெல்லைமுற்றினுமடர்ந்துமண்ணுலகைத்தாங்கிநிற்கும் ஆதிகூர்மம் வாசஞ்செய்திருக்கும்பாதலவரையில் வேர்களையோட்டிப் பச்செனத் தோற்றுவதாய் பதினாயிரயோசனை நிவப்பினைப்பெற்றுக் கோடாகோடிச் சினைகள் கொம்புகள் நெருங்கிப்பரந்திருப்பதால்சத்தசாகரங்கள் அவற்றுட்பட்டதீவுகள் பெரும்புறக்கடல் இருட்பூமி வானவெல்லைமுற்றினும் பூமண்டலப்பரப்பனைத்தினும் குளிர்ந்த நிழலைப்பெருக்கி யித்தகையசிறப்புகளைக் கொண்டுநின்ற மாவிருட்சத்தின் கொடுமையினாற்சோடசகலைகளைப் படைத்திருக்கின்ற சந்திரபிறையையுங்கங்காபவானியையும் மழுவையும் நகுவெண்டலையையுஞ்சர்ப்பம் கொன்றை வெள்ளெருக்கு சிரமாலிகைமுதலிய வளங்களைத்தரித்திருக்கும் சிவபிரான்அதிசயிக்கவும்அஷ்ட ஐஸ்வரியசெல்வவளங்களைப்பெற்றிருக்கின்றஅளகாபுரிக்கிறைவனாகிய குபேரனும்மும்மதங்களைப்பெருக்கிநீலகிரிகளுக் கொப்பாககாத்திர தேகத்தைப் பெற்றிருக்கின்ற திசைக்களிறுகளும் கடாவாகனத்தி லாரோகணித்துச்சகலபிராணிகளையுங் கொண்டுபோய் அவற்றின் வினைகளுக்கடுத்த தண்டனைகளைச் செய்துவரும் இயமதருமராஜனும் திடுக்கிட்டுவாடத் தக்கதாக மாவாய்நின்ற சூரபதுமன் மற்றொரு சூட்சியைநினைந்து கருடவாகனனாகியமகாவிஷ்ணுவும் அம்சத்தினேறிநடாத்தும்பிரமதேவனும்அவுணப்பாதகருக்கஞ்சிக் கரியகுயிலினுருப்பெற்றும் கவுதமர்பத்தினியின் நிமித்தம்கோழியாகவும் நித்தியப்பதவியைப் பெறும்பொருட்டு இக்காலத்தில் அழகியகலாபத்தைவாய்ந்த மயிலினுருப்பெற்று எமதிறைவனைத் தாங்கிவரும் பெருமையினைப்படைத்த தேவராசனும் போர்க்களத்தில் நிர்த்தனஞ்செய்திருக்கும் ரணபத்திரகாளியும்பாலசுப்பிரமணியதேவர் திருத்தேரி னுச்சியிற் கோழிக்கொடியாக அசைந்திருக்கின்ற அக்கினி தேவனும் திடுக்கிட்டஞ்சிநடுநடுங்கிச் சோரும்படிக்கு வளைந்தகழுத்தும் நீண்டமூக்கும் வெண்மையாய்த்தழைத்த சிறகுகளினால்மூடப்பட்ட காத்திர தேகத்தையும் நீண்டகால்களையும் படைத்த கொக்கினுருவைத்தாங்கி அவ்விருட்சத்தின்மத்தியி லோங்கியிருக்கும் கிளையில்நின்று வாயுதேவன்பிரமித்துவாடவும் ஆதிசேஷன்ஆயிரம்பணாமகுடங்களையும்கவிழ்த்துச்சோரவும்பேரறிவாளராகிய வசுக்களேங்கித்தாமரை மலர்களைப்பழித்துவிளங்கும் கரங்களைமறித்துத்தேம்பவும்சூரியன்திசைதப்பியோடவும் திக்குப்பாலகர்சரீர முற்றும் வியர்த்துமனம்புழுங்கித்தத்தளிக்கவும்சொர்ணகலசங்களையொப்பப்பூரித்துத்தங்கத்தைப்போலதேமல்பரந்து விம்மித்ததும்பிநீலமணியையொத்தகாம்புகள்நிமிர்ந்துகாட்டுந்தனங்களைத்தாங்கி மெல்லியவிடையைவாய்ந்தஅரம்பையர்முதலியர்அப்பட்சியின் கோரரூபத்தைப்பார்க்கப்பயந்து சேற்கண்டைகளைப்போலப்பிறழும்விழிகளைத்திருக்கரங்களினால்மூடிக் கவிழவும்இவ்விதக்கொடுமைகள்நேரும்படிக்கு கொக்கினுருப்பெற்றிருக்கின்றபாதகன் அத்திஅரசமரங்கள் வேருடன்பெயர்ந்துசாயவும் ஆல்வன்னிமராமரங்களாதிய விருட்சங்கள் தத்தமதிடங்களைநீங்கித்திசைகளிற்பறக்கவும் இறகைஅசைத்துஅதிகவீருப்புடன்தேன்களைத்துளித்து மகரந்தங்களையிறைத்துப்பரிமளிக்கும் கடப்பமலர் மாலையைத் தரித்திருக்கின்றமுருகப்பெருமாள் செலுத்திய வெற்றிவேலாயுதத்துக் கெதிரிற்பருத்தோங்கியமாவிருட்சமாகவும் நின்றுபருத்துநீண்டிருக்கும் கிளைகளையசைத்துவானநாடுகளைச்சிதைத்துத்திக்குப்பாலகர்வாசஞ்செய்யும் பதங்களை நுறுக்கியும் மேலும் தொண்ணூற்றொன்பது வயதினனாய்த் தேகத்தளர்ச்சியினாற் பாதமுதல் சிரசுபரியந்தம்நடுங்கத்தள்ளாடிநடக்கவும்விருத்தனைப்போலச்சலனமற்றமனதையும்வீரபராக்கிரமத்தையும்பெற்றிருக்கின்ற சூரபதுமன் தற்செயலாய் அசைவுகொண்டுவிசாலமாகப்பரந்திருக்கும்பூமண்டலத்தைத் தமது பணாமகுடங்களாயிரத்தினொன்றின்சுமையாகத்தாங்கிவரும்பெருமையினையுடையஆதிசேஷன்அப்பாரத்தைத்தாங்கமாட்டாமையால் நாக்களைநீட்டி விழிகள் பிதுங்கி மணிகளிறைய வாய்கள்தோறும் விஷங்களைக்கக்கி வாடவும் பூமண்டலமுற்றினும் பரந்திருக்கின்ற விருட்பெருக்கனைத்துமொன்றுபட்டு சூறாவளிக்கோலங்கொண்டு குலவித்திரிவதைப்போலக் காடாந்தகாரமாகத்தழைவுகொண்டு பிரசண்டமாருதத்தைப்பெருக்கி வட்டமிட்டசை

ந்து ஆயிரஞ்சொர்ணகலசங்களைக்கொண் டிருக்கும்மகம் மேருபருவதமானது ஊசலாடுமாறுபோலத் தான்துரிதமாகபாளவிருக்கின்றதைத் தெரியாதசூரன் மாவிருட்சத்தினடிமரத்தைச்சுழல அசைத்துவருங்காலத்தில் பருத்துநீண்டோடியிருக்கும் வேர்கள்கிளம்புவதினால் மண்ணுலகமெங்கும் கிடுகிடெனநடுங்கிப் படபடெனவெடித்திடித்து பிலத்திற்சரிந்தும்அவ்வதிர்ச்சியினாற்சத்தபாதலங்களும் அடுக்குகள்குலைந்து தாறுமாறாகப் பொடிபட்டுதிரவும் பூமியைத்தாங்கின்ற கூர்மமானதுஉறுப்புகளைவெளியிட்டுத்தியங்கவும் அஷ்டமாநாகங்கள் சகிக்கப்படாமையாற்புரண்டும் நெளிந்தும் படாதபாடுகளைப் படவும் திசைகளைத்தாங்கும் யானைகள் மதங்களைப்பெருக்கி வீறிட்டுக்களைக்கவும் சத்தசாகரங்களும் அலைகளை மிகுதியாகப்பெருக்கி ஓவெனக்குமுறித் தீவுகளைக்கரைத்தொன்றுபடச்செய்யவும் குலகிரிகள் செண்டுகளைப்போலத் துள்ளியெழவும் சக்கிரவாளகிரியானது நெக்குவிட்டுப்பங்கப்படவும் அண்டப்பித்திகைபாரிசங்கள் பிளந்து மங்கவும் எறும்புமுதல் யானையீறாகச்சொல்லாநின்றசீவகோடிகள் அல்லோலகல்லோலப்பட்டுத் தியங்கி மதிமயங்கி யிடியுண்டசர்ப்பங்களைப்போல நாசமடையவும் நட்சத்திரராசிகள் நிலைகுலைந்து பூமிப்பரப்பெங்கும் பலபலென்றுதிரவும் நவக்கிரகங்கள் பயமிகுதியினாற் றலைகவிழ்ந்துமறியவும் சூரியபகவானுரோகணித்துச்செல்லும்இரதத்திற்பூட்டியபுரவிகள் மிரண்டு அருணசாரத்தியத்துக்குட்படாமல் வேகமாய்மாறிப்பாயவும் சந்திரன்தானிருந்தவிமானத்தினின்றும் தவறிவிழுந்துதிகைத்துப் பார்க்கவும் முப்பத்துமுக்கோடிதேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம்ரிஷிகள் கின்னரர் கிம்புருடர் சித்தவித்தியாதரர் பன்னகர் உவணர்முதலிய வானநாடர்சொல்லப்படாத அனர்த்தங்களிற்பட்டுத்துக்கசாகரத்திலாழ்ந்து தத்தமது நிலைகளைப்பிரிந்து திருக்கயிலாயவரைமேருகிரிச்சாரல்கள் குகைகள்முதலிய மறைவிடங்களிற்சேர்ந் தொளிக்கவும் திரிலோகங்களுக்கும் இராஜதானியாய்ச் சலனமற்று நிற்கின்ற சொர்க்கலோகமானது பொடிபட்டும் அதன்மேற்புறத்தில் ரிஷிகள்வாசமாகிய சத்தியலோக மிடியுண்டும் விஷ்ணுவாசஞ்செய்யும் வைகுந்தநகரும் பிரமனுலகும் பார்க்கப்பதங்குறையாய் அழிந்துபோகவும், சவுனகாதிதவத்தரோ விரித்துவிரித்துச் சொல்லவேண்டுவதில்லை புவனசராசரங்கள் மூடாநின்ற அண்டகோளமானது நெக்குவிட்டுப் பற்பலபிளவாய்ச் சரியுமாயின் அதற்குட்பட்டிருக்கின்ற பொருள்களின்கேட்டைப்பேசி முடிவதோ.

இவ்விதமாக அண்டபுவனகோடிகளும் பிதிர்பட்டுச்சகலபிராணிகளும் திடுக்கிட்டு அதப்பட்டுமங்கும்படிக்குத் திரைகள்பெருத்த சாகரமத்தியில்மாமாகநின்றகொடியபாதனனசூரன்செய்துவரும் அனர்த்தங்களையும் சமஸ்தத்தையும் வாட்டவிருக்கின்ற அவன்மனக்கருத்தையும் தேவதேவோத்தமனாகிய சரவணபவன் செலுத்திய வெற்றிவேலாயுதமானது தெரிந்தவுடன் அதிககோபங்கொண்டதாய் ஆயிரகோடி அண்டங்களிற்பொருந்தியிருக்கும் அக்கினியும் அவற்றினைச்சூழவிருக்கும் பித்திகையைக்கலந்து தோற்றுந்தீயும் ஒன்றுபட்டோங்கி விரிந்தெழுமாறுபோல அனற்சுவாலையைவீசிவானத்தெழுந்துமகத்துக்களாகவிருப்பவர்களும் திடுக்கிட்டுவாடத்தக்கவெம்மையைக்காட்டி வடவையும் ஆலகாலமும்கலந்து தாவுவதுக்கொப்பாகச்சீறிப்பாய்ந்து அசைவற்றவயிரதேகத்தையுடையசூரபதுமனுயிரை வாட்டக்கோபித்தவெற்றிவேலானது சருவசங்காரகாலத்தில் ஆயிரகோடி அண்டங்களையும் அதிற்பட்டபுவன சராசரங்களனைத்தையும் நாசமடையச்செய்யவல்ல ருத்திரமூர்த்தியைப்போலவும் பூருவத்தில் பிரமவிஷ்ணுக்கள் யாம்யாம் மூலகாரணமாகவிளங்கும் பரப்பிரமமென்றும் நம்மைத்தவிர வேறில்லையென்றும் அகந்தைகொண்டு பிராணிகள் துக்கசாகரத்திலழுந்தி வாடத்தக்கதாக வெகுகாலம் அகோரயுத்தங்களைச்செய்து வரும்போது உலகவுபாதியையும் அவ்விருதிறவரும் பயந்துவாடவும் அவர்கள்மையலையொழித்தாளவுந் திருவுளத்திற்கொண்டு சிவபிரான் அவர்கள்மத்தியில் ஆதியந்தந்தோற்றப்படாத அனற்படிவமாய் அண்டகடாகத்தையும் உருவவெழுந்தஅக்கினிமலையின்காட்சியாகவும் அதிகவுக்கிரத்தைக்காட்டி மேலிட்ட அந்த வெற்றிவேலாயுதத்துக்குச் சபலசித்தராகிய தேவர்கள்படைகளிலெதனை நேராகச்சொல்லக்கூடும் சவுனகாதிரிஷிகளே பூதகிஸ்தன்னிய பானத்தை அவளுயிருடனுண்ட மாயவனும் தாமரைப்பீடத்தினனான பிரமதேவனும் பரத்துவநிச்சயத்தைக் குறித்துக்கொண்டிருந்த செருக்கைச்சோதனைசெய்தடக்கிய சிவபிரான் திருக்கரத்திற்றாங்கியிருக்கும் தெய்வீகம்பொருந்திய முத்தலைச்சூலத்தினைக்குறிப்பதல்லது வேறுமுண்டோ இத்தகைய மகத்துவமுள்ள வேலானது பூமண்டலவெல்லைமுற்றினும் சத்தசாகரபரப்பினும் பெரும்புறக்கடலினெல்லையினும் விண்ணுடுகளினும் வானத்தையளாவ நிற்கின்ற மேருவேமுதலிய குலகிரிகளினும் அஷ்டதிசைகளினும் அண்டமுகடுபரியந்தமும் அனற்கொழுந்துகளைக்கற்றைக்கற்றையாகவீசிக்கொண்டு அதனிடத்துண்டாகும் சுவாலையானது மண்ணுலகமுற்றினும் பரந்து அல்லோலகல்லோலப்படுத்தியும் சமுத்திரமுற்றினுந்தாக்கி நீர்ப்பசுமைபறவுண்டும்திசாதிசைகள் முற்றுமடர்ந்து கொளுத்தியும் விண்ணுடுகளிற்பாய்ந்துகரித்தும் வீறியவெப்பமானது ரிஷிகளேவிரித்துவிரித்துச் சொல்லவேண்டுவதில்லைசுயஞ்சோதிமயமாகிய பரமேஸ்வரன் வீற்றிருக்கின்ற திருக்கயிலையங்கிரியைத்தவிர மற்றகுலகிரிகளாதியதலங்களிற்பொரிந்துங்கரிந்தும் எரிந்தும் புகைந்து பஸ்மீபடலமாகவும் கொளுத்தப்பட்டதன்றியில்நிலைபெற்றிருந்த பொருளொன்றுண்டோ இவையன்றியும் அனலண்டத்தின்மீதினும் சுவாலையைவீசி அதன்கொடுமையை அடக்கியும் திருப்பாற்கடலினிடத்துதித்துப்பிராணிகளையலைத்தெழுந்தஆலகாலவிஷத்தையுண்டு கண்டத்தடக்கி யிரட்சித்தசிவநாதன்நுதல்விழித்தீயானது அவர்கரத்தில்விளங்கும் மழுவினைக்கலந்து வீறியதையொத்தும் பிரளயகாலந்தோங்கி எத்தகையபொருள்களாதியவற்றைத்தகிக்கவல்ல அக்கினிதேவன் தன்பிரபாவங்களனைத்தையும் ஏகமுகத்திற்சேர்த்தப் பூரணகலையுட னுருப்பெற்றுச்சீறித்தாவுவதுக்கொப்பாகவும் மண்டியெரிந்துவந்த வேற்படையானது ஆணவமலத்தொடக்கிற்பட்டுத் தன்னையும்பகைத்து வந்திருக்கின்றபடையின் சிறப்பையும்யோசியாமல்அஞ்ஞானத்தழுந்தி உலகங்களனைத்தையும் இடித்துநுறுக்கி அதாஹதப்படுத்தித் தும்சஞ்செய்ப யத்தனித்துச் சூரபதுமனானவன் விண்மண்திசாதிசைகளெங்கணு மூடத்தக்

கதாகத் தழைத்தோங்கிநிற்கும் மாவிருட்சத்தினடியிற் பாய்ந்து தடாரித்துருவி அண்டங்களதிருமோசையெழப்பிளந்திரு கூறாகத்தள்ளியது.

சவுனகாதிரிஷிகளே அந்தஅவுணராஜன் பெருமைகளையும் வீரத்தன்மையையும் மற்றகாரணங்களையும் என்னென்று சொல்லவல்லேன் மிகவும் அற்புதக்காட்சியாகும் மேற்குறித்தபடிக்கு வெற்றிவேலானதுதாக்கிப்பிளந்த மாத்திரத்தில் அண்டகூடபரியந்தந்தாவிச் சகலமுங்கலங்கியழிய அநியாயங்களைச்செய்துருத்து மாவுருக்கொண்டு நின்றவஞ்சகன் பேரொலியெழ அரற்றிக்கொண்டு பின்னப்பட்டு விழுந்தபோதினும் மாண்டவனல்லன் தான் முற்காலத்திற் காளகண்டமூர்த்தியைக்குறித்துச்செய்துமுடித்தவீரமாமகத்தினருமைக்குமெச்சிக் கொடுத்திருக்கின்றவரத்தின் பெருமிதத்தினாற் பிராணனைப் போக்காமல் மேலுஞ் சிலபோரைச்செய்யக் கருதினனெனில் அதிகமாட்சிமையினைப் பெற்றிருக்கின்ற தவத்தினையல்லது நீடித்தவஸ்துவேறொன்றிருக்கின்றதோ ரிஷிகளே பசிய விறகைவாய்ந்திருக்கின்ற கிளியின் மூக்கினைநிகர்த்துப்பருத்துவளைந்த முனையுடன் காட்டுகின்றஅழகியகாய்களை தொங்கவிட்டோங்கிநின்ற மாவுருவானது நிலைகுலைந்து வெட்டுண்டு சாய்ந்தமாத்திரத்தில் மனதில்நின்று காந்தியிருக்கும் கோபாக்கினியானது மேலிட்டுச் சொலிப்பதாகவிழிகளிற் றீப்பொறிகள்சிதறச் சீறிப்பழையதன் வயிரப்படிவத்தைக்கொண்டு சூரனானவன் வடவைக்கனலையொப்பமண்டியெரிந்து ஒருநினைவைக்கொண்டுதுரிதமாகவிடையிற் செருகியிருந்த உடைவாளாயுதத்தையுருவி வலக்கரத்திற் பற்றினவனாய்க்கொதித்துச் சண்டைசெய்வதையே முக்கியமாகநினைந்து அண்டபுவனசராசரங்களனைத்தும் திகைத்துமயங்கிப் படாதபாடுகள்பட்டுக்கொடியதுன்பங்களையனுபவித்துத் தத்தளிக்கும்படிக்கு ஆர்ப்பரித்து முன்னடிவைத்துப் பின்னடிவாங்கி மின்னலையொப்ப வாளாயுதத்தையிடம்வலம் வலமிடமாகச் சுழற்றிப்பாய்ந்துகெக்கலிகொட்டிக்கொண்டுகோடையிடிப்பெருக்கையொப்பக் கர்ச்சித்து அதிகதீரத்துடன் மேலிட்டுச்சர்ப்பத்தையொப்பச் சீறிவரும்போது வெற்றிவேலாயுதமானது உருத்திராகாரமாகக்கொதித்து வயிரப்படிவத்தைக் கொண்டிருக்கின்ற சூரபதுமன்வலியமார்பிற்பாய்ந்து தேகத்தை யிருகூறாகப்பிளந்து அலைகள் பெருக்கிருக்கின்ற கடற்கரையிற்றள்ளி ஜயப்பிரதாபத்தைப்பெற்றதாய் வேதங்கள் திசாதிசைகளெங்கும் செவிடுபடத்தக்கதாகத் துதித்துக்கொண்டாடும்படிக்கு வேற்படையானது கோடிசூரியப்பிரகாசமாய் சொலித்துக்கொண்டுவானவெல்லையிலெழுந்து இந்தப்பிரபலஜயத்தைக்கண்ட தேவர்கள் தேகம்பூரித்து ஆனந்தபரவசராய் வஸ்திரங்களைவானத்தெறிந்து கூத்தாடி ஜயஜயவெனப்போற்றிச் சொரிகின்ற தேன்களமுதபஞ்சதாருக்களின் மலர்மழைப்பெருக்கினிடையிற் றிளைத்துப்போய் அனற்படிவமாகக்கனன்றிருந்த வெம்மையையடக்கிப் பழையபடிக்குத் தனதருளுருவத்தைக்கொண்டு மதுரமிகுத்த அலைகளைவீசிப்பெருகிக்கொண்டிருக்கும் ஆகாயகங்கையிற் படிந்து பவுத்திரமாய்த்திரும்பித் தேவர்களின்னலைப்போக்கிப் பாதுகாத்தாளவெழுந்தருளியிருக்கின்றஎமதுகர்த்தன் செந்தாமரைமலரைப்பழித்து விளங்குந்திருக்கரத்தில் யதாப்பிரகாரம்சொலித்துக்கொண்டிருந்தது.

சவுனகாதிமுனிவர்களே மேற்குறித்தபடிக்கு ஒப்புவமைபற்ற கூரியவேலாயுதமானது வெற்றிகொண்டுமீண்டகாலையில் தற்பரமூர்த்தியாகிய பரமேஸ்வரன் அரிதிற்செய்துமுடித்த வீரமாமகத்துக்கிரங்கிக் காட்சிதந்து அனுக்கிரகித்துப்போன வரபாலனத்தின்முயற்சியினாற் சாவில்லாப்பேற்றினைப் பெற்றிருக்கும் சூரபதுமனானவன் இரண்டுகூறாகவெட்டுண்டு விழுந்த தன்னுடலைமீட்டும் அழகிய சூட்டினையும் சிவந்த இறகுதழைத்தபருத்த உடலினையும்கூரிய மூக்கினையும் வயிரவூசிகளையொத்த ஆரல்களினையும் சிவந்த விழிகளையும்பெற்ற சேவலாகவும் பசுமைதங்கி நீண்டகழுத்தினையும் வளைந்தமூக்கினையும் சிவந்தவிரத்தினங்களுக் கொப்பாகவிளங்கிக்கொண்டிருக்கும் வட்டமாகியகண்களையும் அழகிய சூட்டினையும் மரகதமலையைநிகர்த்த பருத்ததேகத்தையும் பீலிகள்விளங்கும் தழைத்தகலாபத்தினையும் நீண்டகால்களையும் கம்பீரநடையினையும்படைத்த மயிலாகவும் உருக்கொண்டுவீறி நவமணிகளினா லியற்றிய பருவதமொன்றும்பச்சைவரையொன்றும் இரண்டுகால்களையும் சிறகினையும்பெற்றுவந்தாற்போலக் காளமேகங்களுந் திகைத்தோடும்படிக்கு பேரோசையைக்காட்டி ஆர்ப்பரித்துக் கூவிக்கொண்டுபூமியினிடத்தினும் வானவெல்லையினும்பாய்ந்து மயிலுஞ் சேவலுமாய் அதிகவுக்கிரத்துடன் சண்டைகொடுக்கக்கருதி தேவசேனாபதியாகியபாலசுப்பிரமணியதேவரையெதிர்த்துவந்தனன், கேட்டீர்களோ ரிஷிகளே, பூருவத்திற்செய்திருந்த நல்வினைப்பிரயோசனமானது கர்த்தன்திருவடிகளுக் கடிமைப்படத் தக்கதாகப் பிடரியைப்பிடித்துத்தள்ளிக்கொண்டு வருவதைப்போல எக்காலத்தும்தனக்கொப்புவமையில்லாத வீரபராக்கிரம செல்வச்சம்பத்தைப்பெற்று மஞ்ஞையுருப்பெற்றிருக்கின்ற அவுணர்பெருமான் அதிகவயிரத்தைப்பெற்றிருக்கும் மனத்தனாய்த் தேவர்கள்மருண்டு பலதிசையினுமோடி யொளிக்கத்தக்கதாக வீராவேசத்துடன் அதிகஉற்பாதங்களைக்காட்டி ஞானநாயகனாகிய சிவகுமாரனெதிரில் வலியபாதங்களினால் பூமிதத்தளிக்கமிதித்துக் கூக்குரலிட்டுவந்தனன் இப்பிரகாரம் அறிவுவிளங்காதபட்சியின் வடிவுகொண்டு தமதுசன்னிதானத்தில்வந்த சக்கிரேஸ்வரனாகியசூரபதுமன் காரணங்களையும் அவனிருக்கின்ற கோலத்தையும் எமதிறைவன் கண்டமாத்திரத்தில் அதிகபிரியமு மிரக்கமுமுண்டாய்க் கிருபாநோக்கத்தைப் பூர்த்தியாகப்பாலித்தனர், அதன்முயற்சியினால் தட்சணத்திற் சத்துருத்துவத்தையும் கோபதாபங்களையும்நீங்கிச் சிவபிரானருட்டிறத்தைப்பெற்றிருக்கின்ற சிறந்தமேலையோர் திருநோக்கம்பட்டமாத்திரத்தில் அபலமாகிய கரியவிரும்பானது சிறந்ததங்கமாவதையொத்தும் எத்தகையரெனினும் பாபரகிதராய் ]நன்னெறிகளுக்குப் பாத்திரராமாறுபோலவும் சூரனல்லுணர்ச்சியைக்கிடைத்த மனத்தனாய்ப் பத்திவிசுவாசத்துடன் அடங்கி ஒடுங்கிச் சகலவீறுப்புகளையுமொழித்துக் குளிர்ந்த பார்வையைக்காட்டிநின்றனன்.

சவுனகாதிரிஷிகளே சொல்லப்படாதபிரமஹத்தியாதிமஹாபாதகங்களையும் மற்றுமிராநின்ற தீங்குகளனைத்தையுஞ் செய்துவரும் மகாகர்மிகளேஆயினும் பிராரத்வநல்வினையின் சம்பந்தத்தினால் சுயஞ்சோதிப்படிவத்தனாய்ப் பேரின்பவாரிக் கொருதெப்பமாய்த்தீனசரண்ணியனாய்ச்சராசரப்பிரபஞ்சங்களனைத்தினும் எள்ளினெண்ணெ

யைப்போலப் பரிபூரணமாக நிறைவெய்தி அவற்றின்வி னைப்போகங்களுக் கடுத்தகருமங்களையூட்டி யாட்டியுறக் குந் திருவிளையாடல்களை நடாத்திவரும் தேவதேவோத் தமனாகவும் விளங்குகின்ற குமாரதேவர் திருமுன்பு நே ரப் பெறுவராயிற் பரிசுத்தவான்களாய் மெய்ஞ்ஞானசம் பத்தைக்கிடைத்து மேலாகிய சாயுச்சிய பதவியைப்பெ ற்றுச் சாஸ்விதமாக வாழ்ந்திருப்பாரென்பதைச் சொல் லவும்வேண்டுமோ ஓ!முனிவர்களே!நூற்றெட்டியுகம்வரை யிற் கொடுங்கோலைச்செலுத்திச் சிவகாருண்ணியத்தையு ம் பரமசிவனிடத்தில் மெய்ப்பத்தியையும் சிறந்த தவவி ரதங்களையும் பெற்றிருந்த தேவர்களையும் பஞ்சேந்திரிய வாஞ்சையையொடுக்கி யானெனதென்னும் செருக்கற்று ப் பரத்துவ நிச்சயங்களைத்தெரிந்த மகத்துக்களையும்தவ ங்களிற்சிறந்த முனிபுங்கவர்களையும் தீனராகிய மானிட ர்முதலிய சீவகோடிகளையும் அலைத்து வருத்தியும் மே லும் சற்றும் மதிப்பற்றுப் பாலசுப்பிரமணியரைப் ப கைத்து ஆறுதினவரையில் மகாயுத்தங்களைச் செய்தி ருந்த மாயைபுத்திரனான சூரபதுமனுமல்லவோ அளவ ற்ற கிருபைப்பெருக்கைப்பெற்றுச் சாஸ்விதப்பேற்றை யடைந்து வாழவிருக்கின்றான், ஆகையால்அந்தப்பாலசு ப்பிரமணியக்கடவுளினது மகத்துவங்களையும்சர்வமங்கள குணசம்பத்துகளையும் என்போலிகளாற்கண்டறிந்துசொ ல்லக் கூடுவதோ இத்தகைய மகத்துவங்களைவாய்ந்த மு ருகன்பெருமிதங்களைக் கேட்கவிருப்புற்ற வுங்களையொத் த புண்ணியசீலர் இப்பிரபஞ்சங்களி லொருவரு மிருக்க மாட்டார்கள் அத்தேவன்சரித்திரங்களிற்றெரிந்தவனாயி ற் பேசிவந்த சிறந்தபலப்பிராப்தியினால் அடியேனும் கி ருதார்த்தனானேன், இதற்குக்காரணம் நீங்களாதலால் உ ம்மினும் நமக்கு நன்மையைச் செய்தவர்கள் யாவரெனப்பற் பல ஆனந்தபரவசமாகிய வார்த்தைகளையாடி அதிகமன வுற்சாகத்துடன் மற்றையசரித்திரங்களையுஞ்சொல்லுவா ர் மேற்குறித்தபடிக்கு மயிலானது மனவெழுச்சியுடன்ப வுத்திரப் பட்டிருந்ததட்சணத்திற்கார்த்திகேயன்திருநோ க்கம்பாய்ந்த விசேஷத்தினால்வீறுப்பனைத்துமடங்கிப்பே ருணர்வைப்பெற்றுப் பணிந்திருக்கும் கோழியின்மீதுவி ழிகளைப் பரப்பித்துரிதமாய் நீமது திருத்தேரின்மீதுது வசமாகநின்று கூவக்கடவையெனத் திருவாய்மலர்ந்த மு ன்னிலையில் இப்பணிவிடையைச்செய்வதற் கெத்தகைய நோன்பினைச் செய்தேனோ வெனக்களித்து அடியேனுக்கி து தகுந்தகுமெனச் சம்மதித்து விசாலமாகிய சிறகினைக் கொட்டிக்கொண்டு விண்ணிற்பறந்துஅறுப்பறுப்பாகஅ ரக்கினையும் முருக்கின் புஷ்பத்தினையும் பழித்துச்சிவந்த நிறத்தினைப்பெற்று விளங்கும் கொண்டை யினையுடைய சேவலானது பருத்தோங்கிப் படபடத்த தொனியைக்கா ட்டியசையும் வெற்றிக்கொடியினுருக்கொண்டு மனோவே கத்தினும் வாயுவேகத்தினுமேலிட்டுப் பாயவல்லதாய்வலி யினும் சகலசிறப்புகளினுஞ் சிறந்ததாய் நவரத்தின மய மாய் வானத்தையளாவப் பரந்தோங்கியிருக்கும்திருத்தே ரினுச்சியிற்போய்ப் பூமண்டலமும் அண்டகடாகமுமிடி பட்டுமங்கவும் பேரிடியானது கிடுகிடாய்த்துப் பறக்கவும் அக்கினிதேவனுந் திகைத்துவாடவும் அதிக வோசையெ முக்கூவிக்கொண்டு அத்தலத்தில் அசைவுகொண்டு பகை வர் வெருவத்தக்கதாக நின்றது. உடனே சுயஞ்சோதிமய மாகப் பிரகாசித்திருக்கும் அழகியதிருமேனியினைவாய்ந் த குமாரசுவாமியாரும் அனலையொப்பச்சொலித்திருக்கு ம் விழிகளைப்படைத்துத் தமதுகருத்தின் வண்ணம் செ ல்லும்படிக்கு வாகனமாகநின்ற தேவராஜனுருவகமாகிய மயிலின்பிடரியில் நின்றும்பாய்ந்து பேருணர்வைப்பெற் றுப் பயபத்தியுடன் ஒடுங்கிநிற்கின்ற சூரனுருவகித்திரு க்கும் கலாபமயில்வாகனத்தின்மீது வீற்றிருந்துநம்மைச் சுமந்துலவக்கடவா யெனத் திருவாய்மலர்ந்துபூவட்டமெ ங்கணும் வானவெல்லைமுற் றும் செலுத்துவதாயினர்.

சவுனகாதிதவத்தரோ அதன் பெருமிதங்களையும்வல்ல பத்தையும் என்னசொல்வேன் மேற்குறித்தபடிக்குமூரு கப்பெருமாள் ஆரோகணித்தவுடன் பசுமையாகத்தழை த்திருக்கும் செட்டையை அசைக்கஅதினாலுண்டாகும்பி ரசண்டவாயுவின் மோதலினால் விசாலமாய் ஆழ்ந்திருக் கும் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் அல்லோல கல்லோலப் படப்பெருத்த அலைகளைமோதிக் கனகளாக விளங்கும் தீவுகளைக்கரைத்து ஒன்றுபட்டுப்பெருகவும்பூ மிக்கச்சாணியாக நிற்கும் மகாமேருமுதலிய குலகிரிகளி டிபட்டு மங்கவும் பூமண்டலமுற்றும்பாதலந் தோற்றத்த க்கதாகப் பாளம் பாளமாக வெடித்துக்காட்டவும்அதிகஅ மூலினைக் கொண்டிருக்கும் வடவைக்கனலானது சகிக்கப் படாமையால் பதைபதைத்தொடுங்கவும்சூறைமாருதமு ம் துடிதுடித்துத் தன்வேகமாறிப்பதுங்கவும் அண்டப்பி த்திகை கிடுகிடென்றசையவும் மற்றைப்பொருள்களனைத் தும் படாதபாடுகள் பட்டுச்சோரவும்அழகியகலாபத்தை யசைத்து இடிகூட்டங்கள்சிதைந்து புரளும்படிக்குக்கி யாவுமெனக் கூந்தலிட்டுக்கொண்டு மயில்வாகனமானது பறந்தும் கருங்கடலை உடையாகக்கொண்டிருக்கும் பூம ண்டலத்தைச் சுமந்து வரும் ஆயிரம்பணமகுடங்களையு டைய ஆதிசேஷனும் இக்கொடுமைக் காற்றாமல் பதைப தைத்துப் புரளவும் மற்றைய அஷ்டமாநாகங்கள்முதலிய நாகராஜர்கள் பேரிடியின் முழக்கத்தைக்கேட்டதை பொ ப்பத் திடுக்கிட்டுத் தத்தளிக்கவும் ஸ்ரீதேவிபூதேவிக்குக்க ணவராக விருக்கின்ற ஸ்ரீமகாவிஷ்ணுவைத் தாங்கியிருக் கும் அநந்தனும் ஏங்கித்திகைத்து வாடவும்வானத்திற் ச ஞ்சரித்து சூரியசந்திராக் காலாதிகளில்மறைத்து உட ற்குறையுண்டிருக்கும் ராகுகேதுவென்னும் பாந்தள்களு ம்பிரமித்து கதிதப்பியோடவும் அம்மஞ்ஞை யூர்தியான து கம்பீரநடையைக்காட்டிச் சஞ்சரித்தும் இப்பிரகாரம் ஆதிகாலத்தில் மகாவிஷ்ணு வெளிப்பட்டவுடன்தமக்குறி யமித்திருக்கின்ற திதித்தொழிலை நிறை வேற்றும்பொரு ட்டு யத்தனப்படுமுன்னிலையில் அக்கருமம் முற்றுப்பெ றாமல் வருந்திச்சிருஷ்டியைநடாத்தும்படிக்குப் பிரமனை யும் மற்ற சராசரப்பிரஞ்சங்களையும் படைக்கும் கருத்து முற்றுப்பெறும் பொருட்டு ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் ப ற்பலயுகங்கள்மேக வடிவுகொண்டு திரிநேத்திரதாரியை வருந்திச்சுமந்து பத்திமான்மியத்தைசெலுத்தி வந்தனர், அதனைமேகவாகனக் கல்பமெனச் சொல்லப்படும் அதை ப்போலவும் வீராதிவீரர்களில் முதன்மையாகவசனிக்கு ம் சூரத்தைப்பெற்ற வெற்றிவேலாயுதத்தினைத் திருக்கர த்திற்றாங்கியிருக்கும் குமாரசுவாமியைச்சூருருவாகவிள ங்கும் பசியமயிலானது தன்முதுகிற்றாங்கியும் பறக்குமு ன்னிலையில் ஆயிரக்கிரணங்களைப்பரப்பி உலகங்களை வி ளக்கிவரும் அனந்தகோடி சூரியர்கள்திரண்டோ ருருக் கொண்டு மேகசஞ்சாரமறுதவிசாலமாகிய ஆகாயத்தினி

டத்திற் றிரிகின்றதைப்போல சருவமங்களகுண நிதியாக விருக்கின்ற வெற்றிவேலாயுதமூர்த்தியானவர்மரகதமணிக்கொப்பாகப் பிரகாசித்திருக்கும் பசியமேனியையுடைய மஞ்ஞைவாகனத்திடத்தமர்ந்து வானவெல்லைமுற்றும் பவனிவந்தும் திசாதிசைகளெங்கணும் உல்லாசமாக வுலாவினர்.

சவுனகாதிரிஷிகளே சத்தசாகரங்களும் ஏகோபித்துப் பெருகியகாலையில் வடவைக்கனலனைத்துந் திரண்டொரு வடிவுகொண்டு அவ்வெள்ளத்தின் மத்தியிற்குலவிக்காட்டுமாறுபோல அண்டபுவன நிரைகளெங்கணும் மயிலின் மீதுலாவிவந்த சத்திகரதலத்தனாகிய குமாரசுவாமியார்திரும்பிக் கொடுங்கோலைச் செலுத்தி யிருந்த சூரபதுமன் கெடிஸ்தலமாகிய வீரமாமயேந்திரபுரிக்கடுத்திருக்கின்ற சமர்க்களத்தினெல்லையிற் சேர்ந்தவுடன் எமதுசுவாமியாகிய சரவணபவன் அழகிய பீலிதழைத்தசையமஞ்ஞை வாகனமாகவும் சேவற்கொடியாகவும் முன்னமிருந்த தேவராஜன் அக்கினிதேவன்மீது விழிகளைப்பரப்பித் துரிதமாய் உங்கள் பழையகோலத்தைக் கொண்டு வரக்கடவீர்களெனத் திருவாய்மலர்ந்தவுடன் தட்சணத்தில் அவர்களும் தங்களுருவைத்தாங்கி அதிகமகிழ்ச்சியுடனோடிவந்து முருகன் திவ்வியசரணாரவிந்தங்களிற் பலதரம் தீர்க்கதண்டன் சமர்ப்பித்துக் கரங்களைக்கூப்பி நின்றுவேதவாக்கியங்களினால் அனேகவிதங்களிற் சிவகுமாரன்குணாதிசயங்களை யெடுத்துப்போற்றி உள்ளமுமென்புங்குழைந்து குழைந்து மெய்ப்பத்தி விளங்கிய காரணத்தினால் தேகபரவசராய் விழிகளில் ஆனந்த பாஷ்பங்களைப்பெருக்கிவார்த்தையாடுவ தனைத்தும் குளறிமயிர்ச்செறிவெழ அதிகசந்தோஷப் பெருக்கினாழ்ந்து தேனைக்கிரகிக்கவரும் வண்டினங்களைப் போலக் களித்திருந்தனர்.

இவ்விதமாக இந்திரனும் அக்கினியும் களியாடலைக் கொண்டாடு முன்னிலையிற் சோதிமயமாகப்பிரகாசித்திருக்கும் வெற்றிவேலாயுதக் கடவுளானவர் புசபலபராக்கிரமசாலியாய் ஆயிரத்தெட்டண்டங்களுக்குந்தலைமைபூண்டு சகலரையும்வென்று ஏவல்கொண்டு உலகங்களனைத்தினும் சூரன்சூரனென்று கொண்டாடிப்போற்றிவரும்செல்வச்சம்பத்தைப் பெற்று அகண்டசாம்பிராச்சியவளங்களை யனுபவித்திருந்த அவுணர் பெருமான் குலநாசமறவாட்டி அழகினுக்கிருப்பிடமாக விருக்கின்ற பசிய தோகையினைவாய்ந்த மயில்வாகனத் தாரோகணித்து மண்விண்ணெங்குந் திரிந்துதிரிந்து களித்தவராய் முன்போலப் போர்க்களத்திற் றோற்றியதைக் கண்டமாத்திரத்திற்சண்டையினிடத் தூக்கங்கொண்டு மானமுங்கோபமும் மனதைவாட்ட வடவைத்தீயை யொப்பப்பூவட்ட மெங்கணும்பரந் தெதிர்பார்த்திருந்த பூதகணவெள்ளங்களும்வீராதிவீரராக விருக்கின்றஎண்மரும், இலக்ஷரும், படைத்தலைவர் முதலானவர்களும் சலனமற்ற கீர்த்தியைஉலகங்களுள்ளவரையில் நிலைபெறநாட்டும் சவுரியபராக்கிரமவீரரில்வீரன் வீரவாகுதேவரும் தாயைப்பிரிந்த கன்றுகளைப்போல அதிகஆவலுடன் கடிதின்வந்துமும்முறைவலம் வந்து பலதரம் பணிந்து பேரோசையெழ ஜயஜயவெனத்துதித்துப் பாலசுப்பிரமணியக் கடவுளைச்சூழ்ந்து சோடசகலைகளையுடைய பூரணச்சந்திரோதயத்தைக்கண்ட கடலையொப்பவும் உதயகிரியில் முளைத்தசூரியபகவானைப் பார்த்தமாத்திரத்திற் சராசரப்பிரபஞ்சங்கள் அகமுகமலர்ச்சிபெற்று மகிழ்வதை நிகர்த்தும் ஆனந்தபரவசராயிருந்தனர், கேட்டீர்களே! சவுனகாதிரிஷிகளே? அக்காலத்தில் விண்ணவர் மண்ணவர் சிவகணங்க ளாதியர் கொண்டமகிழ்ச்சியின் பெருக்கத்தைப்பல நாக்களைப் படைத்த போதினும் விவரித்துச் சொல்லமுடிவதோ ஆகலால் அடியேனுக்கிருக்கின்ற அவாவினாற்கூடிய வரையிற் பேசினேனாக.

---

## தேவர்கள்போற்றுபடலம்.

நேரொருசிறிதுமில்லாநின்மலன்றனதுவேலாற்
சூருடல்பிளந்தியாணர்மஞ்ஞையிற்றோன்றுகாலைப்
பாருலகயின்றகண்ணன்பங்கயனமரர்கட்கோ
ராரமிர்தெய்திற்றென்னவன்னதுகண்டேயார்ந்தார்.

---

வாரீர் நைமிசாரணியவாசிகளே! முற்குறித்தபடிக்கு யாதொரு ஒப்புவமைகளுமின்றி விளங்குந்நிர்மலக்கடவுளாகிய சரவணபவன் தமதுதிருக்கரத்திற்கோடிசூரியப் பிரகாசமாகச் சொலித்துக்கொண்டிருந்த வெற்றி வேலாயுதத்தினால் ஆயிரத்தெட் டண்டங்களைவென்ற ஜயசாலியாகிய சூரபதுமன் வயிரதேகத்தைப் பிளந்துதள்ளியவுடன் பகைத்தெழுந்த அவன் கூறாகியஅழகியகலாபத்தைப்பரப்பியெழும் மரகதமலையை யொப்பக்காட்டும் மஞ்ஞையினிடத்திற் கிருபாநோக்கம்பாலித்து ஊர்தியாகக்கொண்டுலாவிவந்து ஞானசூரியனைப் போலச்சமரவெல்லையிற் குமாரதேவர் தோற்றப்பட்டவுடன் அக்கோலத்தினைத் தரிசித்தமாத்திரத்தில் மண்ணையுண்ட கண்ணனுக்கும்சகலராலும் மதித்தெண்ணிக்கைப் படவிருக்கின்றவிண்ணாடுகளினும் பூமண்டலப்பரப்பினும் பாதலவெல்லையேமுதலிய தலங்களெங்குமிராநின்ற சீவராசிகளைப்படைத்துவரும் சிறந்தசிருஷ்டித் தொழிலைப்பெற்றிருக்கின்ற பிரமதேவனுக்கும் மற்றைய தேவருக்கும் புதிய அமுதத்தைப்பெற்றுத் தெவிட்டவுண்டவர்களைப்போல மனமகிழ்ச்சிபெற்றவர்களாய்த் தேகபரவசப்பட்டுச்சத்தசாகரங்களுமொலித்தெழுமாறுபோல ஆனந்தக்கூத்தாடி விழிகளிற் போத நீரைப்பெருக்கி மயிர்ச்செறிவெழவிம்மிதராய்வேதவாக்கியங்களினாற் பாலசுப்பிரமணியதேவர் திருநாமங்களைத்துதித்து வீரபராக்கிரம ஜயப்பிரதாபத்தைக் கொண்டாடி ஐயன்கிருபைப் பெருக்கின் காரணங்களையும் மங்களகரமாகிய குணசம்பத்துகளையும் வாயாரவாழ்த்தி மனங்களிக்கச் சிந்தித்துப் பேரானந்தக் களியாடல்களைக் கொண்டாடி மகரந்தங்களையிறைத்துத் தேனைப்பெருக்கித் திசாதிசைகளிற் பரிமளித்திருக்கும்பஞ்சகற்பக மலர்களை வாரிவாரிச் சோனைப்பெய்யலையொப்பசுவாமியின்மீதிற்சொரிந்து ஜயஜயவெனப்போற்றிச் சரவணபவன்தமதிடத்திற் கடாட்சித்திருக்கின்ற அனுக்கிரகத்தின்பெருக்கை நினைந்துநினைந்து களிமிகுதியினாற் பேரானந்தவாரியிற் றிளைத்துத் தேகம் கம்பிதப்பட்டு மயிர்ச்செறிவெழச் சிரங்களிற் கரங்களைக்கூப்பிக்கொண்டு கோடிசூரியப் பிரகாசமாக விளங்கிக்கொண்டிருக்கும் வெற்றிவேலாயுதத்தினைத் திருக்கரத்திற்படைத்தருளிய பாலசுப்பிரமணியக்கடவுளைச் சூழ்ந்துகொண்டு அதிக உற்சாகங்களுடன் இவ்விதங்களில் போற்றுவதாயினர்அம்மையப்பனையொ

ப்பப் பாதுகாத்தாள வெழுந்த குலதெய்வமே ஓ தீனசரண்ணியக்கடவுளே மேகங்களானவை மின்னியிடித்துக் கவிந்து விசாலமாயாழ்ந்த ஜலசமர்த்திகொண்டிருக்கும் கருங்கடலினிராநின்ற நீரைக் கிரகித்தெழுமாறுபோலப்பிரளயவெள்ளத்தினு மேலிட்டு வீறிவந்தபகைவன் இரதகஜதுரக பதாதிகளின் வெள்ளப்பெருக்கை அதாஹதப்படுத்தி அவுணராசன் படைத்திருந்த சேனைகளனைத்தையும் நிமைப்போதில் வாட்டவல்ல சத்திப்படையைச் செலுத்தித் தீவராகிய நாயினேங்கள்முதலிய சகலரையும் தன்வயப்படுத்திக் கொடுங்கோல்செலுத்தவந்தசூரபதுமன் வம்சநாசமறக் கொன்றதன்று தேவரீருக்கு வழியடிமையாகவிருக்கின்ற யாங்கள் தொண்டுசெய்து வருவதற்குயாதொருகுறைவும் நேராமற்சலனமற்ற மனதைக்கொண்டு முடிக்கும்படிக்கு ஊழ்வினையின் கொடுமைகளைவேரறக்களைந்து கவலைமுற்றினும்போக்கியதாகினும் ஓபரம்பொருளே யித்தினமுதல்யாதொரு குறைவுமில்லாமல் வாழக்கடவோம் மேலும் உலகங்களிற் பிரமசிருஷ்டியிற்பட்டுச் சாதாரணமாக விருப்பதற்கு விருத்துவமாகியமாறுமுகங்களையுங்கோரரூபங்களையுங்கொண்டுதீனராகியதேவர்கள்மக்களைமடக்கிக்கொண்டுதலைகாட்டவொட்டாமற்சின்னபின்னப்படச்சாடியலைத்து நூற்றெட்டுயுகவரையில் ஏகசக்கிராதிபத்தியத்தைப் பெற்றுஆயிரத்தெட்டண்டங்களையாண்டுவந்தஅவுணப்பாதகர்தாங்கள்பெற்றிருந்த செல்வப்பெருக்கினால்முன்பின்யோசித்துப்பாராமல் இரக்கம்பூததயவுபச்சாத்தாபமுதலிய சீவகாருண்ணிய மென்பதெவ்வளவுமில்லாமல் தகாதபணி விடைகளைக்கொண்டு மிகவும்வருத்திய காரணங்களினால்மனச்செருக்கற்றுநன்னெறிகளை மரந்துபடாதபாடுகளைப்பட்டு வாடித்திகைத்தும் அச்சஞ்சலங்களுக் கொருதேறுதலைக்காணாமல் மதிமயங்கி பயபீதியினா லொளித்துத்திரிந்துநாட்களைக் கழித்திருந்த தொண்டர்களிடத்திற் கிருபையுற்றருளுந்தயாரசத்தைக்குறித்துத்தேவரீர் சண்முகாரவிந்தங்களைப்பெற்றவதரித்த தல்லதுவேறுமுண்டோஅப்பேற்றினால் வேதவொழுக்கங்களுக்கு விருத்துவமாய் நடாத்திவந்தஅவுணராசராற்பெற்றிருந்ததுன்பங்களனைத்தையுமொழிந்து தீராதபழிப்புரையையும்போக்கிக்கிருதார்த்தராயினேம் இதுவுமல்லாமல் ஆதிநூலாகவிளங்கும் வேதாகம வொழுக்கங்களையும் சிவபிரான் பூர்வீகமாகக் கட்டளையிட் டிருக்கின்ற செல்வவளங்களையும் நமக்கு உரியபதிகளில் நிலைபெற்றுவாழும் சம்பத்தையும் மற்றுமிராநின்றபாக்கியங்களனைத்தையும் இத்தினந்தேவரீர் புதிதாகக்காட்சிக்கப்பெற்ற தல்லது வேறுமுண்டோ எந்தாய் இனி யெமக்கொரு குறைவுமின்றி வாழக்கடவோம் மேலும் கொடியரிற் கொடியராகவிருந்துமன்னுயிரைப் பங்கப்படுத்திவந்த அவுணவீரர்உபத்திரவத்துக்கஞ்சிப் பழிபாதகங்களுக்குடன்பட்டு பணித்தவையனைத்தையும் சிரசாகவகித்துச்செய்துகொண்டுஉயிருடன்திரிகின்றபிரேதங்களைப்போல மனவாட்டத்துடன் சோர்ந்திருக்கச்செய்துவந்த எங்கள் பகைவரை வகையறக் கொன்றடக்கிக் கடாட்சித் தமையால் ஐயனே போனபிராணன் மீட்டும் வரப்பெற்று எக்காலத்திலும் பெறவறியாத மகிழ்ச்சியை ஒருங்கெய்தக்கிடைத்தனம், ஓ! கர்த்தனே? ஆக்குவோனும் ஆக்கிவைப்பவனும் அவற்றிற்குரிய வினைப்போகங்களையூட்டியாட்டியடக்குந் திருவிளையாடல்களைமுடித்துஅவ்வினைதங்களைக்கண்டு களித்திருப்பவனும் நன்னெறிகளைவிரும்பி யனுஷ்டித்துவரும் ஒருவன்பெறவேண்டும் சிவானுபவச்செல்வத்தைத் தரவல்ல சாயுச்சியபதவியும் மற்றுமிராநின்ற நன்னெறிகளனைத்தும் தேவரீர் கிருபைபெருக்கினாலும் குணநிசயங்களின் காரணத்தினாலும் தம்மையல்லதொன்றில்லையெனத் தெரிந்துகொண்டனம், அத்தகையபேற்றினை இக்காலத்திற்பெற்றவராதலால் இதுபரியந்தம் செய்துவந்த கொடியமகாபாதகங்கள் முற்றும் நீறாய் மங்கிப்போகப் பேரருளுக்குப்பாத்திரராய் மோட்சவீட்டை எளிதிற்பெறவல்லோம் லோகநாயகனே யிதுவரையினும் நம்மவருக்கடாத விடர்களைச்செய்துவந்த அவுணப்பாதகரனைவரையும் பொருதழிக்கும் ஏதுக்களைத்தேடி அடியோங்களைப் பாதுகாத்தாண்டபடியால்இனியெத்தகைய போகபாக்கியவளங்களையும் வேண்டோம் சிறந்தமோட்ச சாம்பிராச்சியச் செல்வத்தைத்தரவல்ல அடிகள் திருவடிகளுக்குத்தொண்டு பூண்டு வழிபடக்கடவோம் மேலும் இந்நாவினாலினி யாதொருதேவதைகளையும்புகழவறியோம் ஓசண்முகசுந்தரனே 'யிக்காலத்திலிரங்கி ஆண்டவாறே நாயினேங்களை வழியடிமைகொண்டு பின்னருங் கடைத்தேற்றவேண்டுமென்று தேவர்களனைவரும் ஒருமுகத்திற் றுதித்துப் பற்பலவிதங்களில் வேண்டுகின்றகாலையில் பத்தர்விண்ணப்பங்க ளனைத்தினையும் வெற்றிவேலாயுதமூர்த்தியானவர் திருச்செவிகளிற்கேட்டருளிப் பிரமன், விஷ்ணு, இந்திராதியர்மீது கிருபாநோக்கத்தைப்பரப்பி யினியாதுக்கும் அஞ்சாதீர்களென்றுதரித்தனர்.

---

## இரணியன்புலம்புறுபடலம்.

அதுநிகழ்ந்துழியகன்பதியவுணர்களொருசில்லோர்
கதுமெனச்சென்றுகாவலன்கந்தவேளுய்த்திட்ட
நுதிகொள்வேலினான்மாய்ந்தனனென்பதைநுவலுற்றார்
பதுமையம்மொழிகேட்டனடுணைவியர்பலரோடும்.

---

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? மேற்குறித்தபடிக்கு மகாவிஷ்ணு, பிரமதேவன், இந்திராதியர், சண்முகப்பெருமான் மகத்துவங்களையும் வீரபராக்கிரமமுதலியகாரணங்களையும் நினைந்துநினைந்துமனப்பூர்வகமாகவாழ்த்தியகாலையிற் புசபலபராக்கிரமத்துக் கொப்பற்றவீரவாகுதேவர் எண்மர், இலக்ஷர், படைத்தலைவர் வீராதிவீராகிய பூதவெள்ளங்கள் மனவுற்சாகங்களுடன் கந்தனைப் பலதரம்பணிந்து வாயாரப்போற்றி விழிகள்களிக்கத் தரிசித்துப் பூர்ணசந்திரோதயத்தைக் கண்டகடலையொப்பக் கல்லென்னும் ஓசையெழ ஜயங்களைக்கொண்டாடியிருக்கவும் வானத்தில் வேடிக்கைபார்த்திருந்த முப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம்ரிஷிகள் கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர்முதலாகியவானநாடர் சூரன்களத்திற்பட்டொடுங்கியசெய்திதெரிந்தமாத்திரத்தில் ஆனந்தக்கூத்தாடித் துள்ளித்துள்ளிக் காங்கேயன்பெருமிதங்களைக்கொண்டாடி அவர்கள் அக்காலத்திற்கொண்ட சந்தோஷப்பெருக்கை யின்னவிதமென்றுயாவராலும்சொல்லிமுடிவதன்று மற்றையபுவனங்களிலிராநின்றஆத்துமகோடிகளனைத்தும் தற்செயலாய்ப்பேரின்ப

மனதிலுதித்து மங்களகாமாகிய காரியங்களை முடித்துச் சொல்லப்படாத மகிழ்ச்சியிற்றிளைத்திருந்தனர், சூரியசந்திரர் திசைக்காவலர் தங்களைவாட்டியிருந்த துக்கவருத்தங்களையொழித்துச் சிவகுமாரனைத் துதித்திருந்தனர், மேலும் அண்டபுவனசராசரங்களனைத்தும் பேரானந்தக்களிப்பிற்பட்டு மெய்மறந்து வீற்றியிருந்ததெனில் மற்றவர்களி மிகுதியைப்பேசவும் வேண்டுமோ இப்பிரகாரம் சமஸ்தமும் மனம்பூரித்து விம்மிதப்பட் டிருக்கும்போது ரணக்களத்தில் அவுணர்பெருமான்பட்டதையும் மற்றகாரணங்களையுந் தெரிந்ததூதர்கள் விழிகளில் நீரைப் பெருக்கிக் கதறிக்கொண்டோடிப் பொலிவற்று மங்கலவாத்தியங்களுக்கு மாறாகப் பேரொலியெழ அழுகைக்குரல் மேலிட்டிருக்கும் வீரமாமயேந்திரபுரியின் நீண்டவீதிகளைக்கடந்து இராஜபரமேஸ்வரன் வாழ்ந்திருந்தநகரத்தைச்சேர்ந்து நவரத்தினமயமாய் வானையளாவிநிற்கும் அந்தப்புரத்தில் ஓவென்றழுதுகொண்டுபோய்ப் பட்டபுதேவியாகிய பதுமகோமளையின்பாதங்களில் அடியற்றபனைகளைப்போலவிழுந்து வாயினும் வயிற்றினுமறைந்துகொண்டு கைகால்நடுங்கவாய்குழறச் சொல்லுவதாயினர், ஓமாதாவே மோசம்நேர்ந்தது குறிப்பதற்கு நாவெழுவில்லை ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனாய்வயிரத்தேகத்தையும் தீர்க்காயசையும் மகதயிஸ்வரியச் செல்வத்தையும்பெற்று எங்களையொத்தவர்களுக்குக் கற்பகத்தருவைப்போலப் போஷித்துவந்த அவுணர்பெருமான் சூரமகாராஜன் பாலசுப்பிரமணியன்செலுத்திய வேலினாற்பிளப்புண்டு ரணக்களத்தில்விழுந்தனன், இனியிதற்கென்செய்வோமெனப் புலம்பும் சத்தமானது செவிகளில்விஷத்தைப்போலக் கேட்டமாத்திரத்தில்இணைபிரியாதஅன்றிற் பட்சியைப்போலப் பலகாலம் வங்கணமாகக் கூடிக்களித்திருந்தவளாதலால் இடியேற்றின் முழக்கத்தைக்கேட்ட நாகசர்ப்பத்தைப்போல பதைபதைத்துத் துடிதுடித்து மனஞ்சுழல விழிகள்சோர்ந்து கைகால்களோய்ந்து யாதொருசெயலுமற்று இலக்குமிக் கொப்பாகிய சுந்தரமுள்ள ராஜபத்தினி பதுமகோமளை பிராணனையிழந்து விண்ணாட்டைச்சேர்ந்தனள்

கேட்டீர்களோ! சவுனகாதிதவத்தரோ? மனப்பூர்வமாகியபட்சமுண்டாயிருக்குமாயின் இப்படிக்கல்லோநேரவேண்டும் மேலும் கற்புத்தன்மையென்பதை யிப்பதிவிரதையின் பட்சத்திற் பூர்த்தியாகக்கண்டனம், இதுநிற்க ஆயிரத்தெட்டண்டங்களுக் கதிபனாய்ச் சகலரும்போற்றிவணங்கத்தக்கதாக அரசுசெலுத்திவந்த சூரபதுமன்மணமுன்னிலையினும் காந்தருவவிவாகமூலமாகவும் சிறைசாய்த்துவந்தும் புஷ்பங்களினிடத்திற் றேனையுண்டுகளிக்கும் வண்டினங்களைப்போலச் சரசசல்லாபலீலைகளை யனுபவித்துக் களித்திருந்த மற்றையதேவியரும் இந்தக் கொடியசம்பவத்தைத் தெரிந்தமாத்திரத்திற் றீயிற்பட்டபுழுகையொப்பவும் பூளைப்புஷ்பத்தைநிகர்த்தும் திடுக்கிட்டுத் தாபரித்துநிற்கப்படாமையால் தேகமூசலாடக்கைகால்களுதறலெடுக்க வாய்புலரவிழுந்து முகப்பொலிவற்றுத் தாங்கள்வாழ்ந்த எதுக்களனைத்தையும் பன்னிப்பன்னிப்புலம்பி வாயினும் வயிற்றினும் மோதிக்கொண்டு பரிமளித்து விசாலமாய்நீண்டிருக்கும் கூந்தலவிழ்ந்துநிலத்திற்புரளத்தக்கதாகத் துக்கசாகரத்திலழுந்திக் கரைகாணாது சிலநேரம் சோபித்திருந்தவர்களாய்க் கடையில் இராஜாதிராஜனைப் பிரிந்திருக்க மனமில்லாமல் துணிவுகொண்டு சந்தனம்அகில்தேவதாராமுதலியசிறந்தகட்டைகளினாலுண்டாக்கிய அக்கினிகுண்டத்தில் விசுவகர்மன் குமாரத்தியாய்த் தங்களுக்கு மூத்தவளாய்ப் பூமிதேவியையொத்த பொறுமையும் குணசம்பத்தையுங் கற்புத்தன்மையையுமுடையபதுமகோமளையினது திருமேனியை முந்தித் தீயிலிட்டுத் தாங்களும்பாய்ந்து மேலாகியபதவியைச்சேர்ந்தனர், உடனேபானுகோபன் எரிமுகனாதியபுத்திரர்தேவியரும் மற்றையவீரர் பத்தினிமார்களுந் தாமரைத்தடாகத்தினிடத்திற்சேர்ந்த தமநினமாகிய சுரும்பினங்களைத்தேடிப் பெண்வண்டுகள்கலந்து களிக்குமாறுபோல வானத்தையளாவ எரிந்திருக்கின்ற தீயினிடத்தில்விழுந்து பரகதியைப்பெற்றுக் களித்தனர், மேற்குறித்தபடிக்குப் பதிவிரதாசிரோமணிகளாகவிருந்த அவுணராசபத்தினியரனைவரும் அகண்டயிஸ்வரியச்செல்வவளங்களைவெறுத்துத் தங்கள்மனதுக்கினியகணவனைப்பிரிந்திருக்க மனமில்லாமல் அவர்களை நினைந்து நினைந்து புலம்பினவர்களாய் அக்கினிக்கிரையாய்ப் போனமுன்னிலையில் அப்பட்டணமெப்படிக்குக் காட்டியதெனிற் செக்கர்நிறம்பெற்றுப் பரந்திருந்தமாலைப்போது நேர்ந்தபோது பெருத்துமூடிய காடாந்தகாரமாகிய விருளானது சந்திரன்றோற்றங்கண்டமாத்திரத்தில் மங்கியடங்குவதைப்போல ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் இராஜதானியாய்ப் பலவளங்களையும் மேன்மேலும் நிறைவெய்திக்கண்டவர் மனதையும் விழிகளையுங் கிரகிக்கவல்லமங்களகரமாய்க் கரியதேகத்தைப்பெற்ற அவுணப்பாதகருக் கிருப்பிடமாகவுமிருந்த வீரமாமயேந்திரபுரியிற் சூரபதுமனாணை ஆக்கினைக்குட்பட்டுக் குலவியிருந்த தயிரியலட்சுமி, தனலட்சுமி, மணிலட்சுமி, தானியலட்சுமி, புத்திரலட்சுமி. பந்துலட்சுமி, வாகனலட்சுமி, அடிமைலட்சுமியெனச் சொல்லாநின்ற அஷ்டலட்சுமி விலாசங்கள்முற்றினும் அப்பட்டணத்தைக்கடந்துதமது கருத்தின்படிக்குப்போயிற்று, இவ்விதமாக சூரன்முதலிய சமஸ்தரும் மங்கியகாலையில் முன்னம் பூதகணத்தலைவருக்கஞ்சியோடி மீனுருக்கொண்டு கடலினிடத்தில் மறைந்திருந்த சூரபதுமன் கடைப்பிள்ளை இரணியனென்பவன் அவுணர்பெருமானாகவிருந்த தன்பிதாவானவன் வெற்றிவேலினா லிருகூறாகப்பிளப்புண்டுமஞ்ஞைவாகனமாகவும்கோழிக்கொடியாகவும்நின்ற காரணங்களைப் பிரத்யக்ஷமாகத் தெரிந்தவுடன் திடுக்கிட்டுமதிமயங்கி மிகவும்வருந்திச்சோர்ந்து விழிகளில் நீரைப்பெருக்கிப் பெருமூச்செறிந்து அவன்பட்ட துக்கவருத்தங்களைச்சொல்லி முடிவதோ அதன்பின்பு மனந்தாபரியாதவனாய்வானமூலமாகவந்து பிதாவைக்குறித்துஇவ்விதங்களிற் புலம்புவதாயினன்.

அரியதவவிரதங்களைச்செய்த முயற்சியினால் அடியேனைப்பெற்றுச் சகலவைபவங்களுடனுஞ்சீராட்டித்தமது விசாலமாகிய மார்பினுந் தோள்களினுஞ்சேர்த்துப் பரிவாய்வளர்த்து வந்தபிதாவே ஆயிரத்தெட்டண்டங்களுக்கு மதிபனாய்ச் சகலரையும் ஏவல்கொண்டுஇராஜபரமேஸ்வரனாக வாழ்ந்திருந்த சூரனே புயவன்மைக்கொப்பற்றதீரனே பேரறிவைக் கிடையாதவனாகவிருந்தபோதினும்காரியாகாரியங்களை நிதானித்து இதுநன்காகுமென்று மேல்நடக்க விருக்கின்ற சிலகருமங்களைநாயினேன் விண்ணப்பஞ்செய்துகொண்டவைகளைச்சற்றும் ஆலோசித்து

ப்பார்த்து இதுநல்லகாரியமெனத் திருவுளத்தில் மதியா மலிகழ்ந்தீர் ஐயனே வலியபிராணனைப்பறிகொடுத்துமா ள்வதற்கோ சிவகுமாரனுடன் பகைத்துச் சண்டைகொடுக்கத் துணிவுகொண்டீர் ஒன்மனதுக்கினிய பிதாவே நவரத்தினமயமாய்ப் பரந்திருக்கும் சபாமண்டபத்தில்மன்னமண்டலீகர் சேனைத்தலைவர்கள் மந்திரிபிரதானிகள் புத்திரவர்க்கமுதலிய பெரியோர்கள் போற்றிச்சூழச் சிரோரத்தினமயமாகிய சிங்காதனத்தில் வீற்றிருந்துஅரசுசெலுத்திவரும் தேவரீர் திருக்கோலத்தைநாயினேன் இனியெக்காலத்தி லிந்தப்பாழ்ந்தகண்களினுற் றரிசித்துமகிழ்வேன் தேகத்தைப் பிரிவின்றித்தொடரும் சாயைபோலப் பிதாவைக்கலந்திருந்து கூடியமட்டும் போனாச்செய்து வழியையும் செஞ்சோற்றுக் கடனையுந்தீர்த்துக் கொள்ளாமல் என்னுயிரைப் பெரிதாக நினைந்தோடியொளித்தேன்,குலவண்மையைப்பிழைத்தேன் சவுரியத்தையுமறந்தேன் இவன்பிதாவினிடத் தன்புள்ளவனென்றுநம்மவர்களிகழ்ந்து வசைபேசிக்கொள்ளத் தக்கதாகொடியபாதகனும் அதிகஅன்புள்ளவனைப்போல மனவருத்தத்துடன் கிலேசிக்கின்றேன், மண்டலேஸ்வரனே நமதுசத்துருக்கள் வல்லபங்களையும் வீரத்தன்மைகளையும் பலவிதங்களிற்றெரிந்திருந்தும் போர்க்களத்தில் யாதொருஉதவியையுஞ் செய்யாமற் றேவரீரைத் தனிமையிற்கொடியசண்டைமுனையிற் காட்டிக்கொடுத்துவிட்டு மானபிமானமற்றவனுயொளித்த பதிதனென் றிகழ்ந்தென்முனம்வரச்சகியாம லெவ்விடத்திற்போ யிருக்கின்றீர் திருவாயைத்திறந் தோருத்தரவு சொல்லலாகாதோ ஒ! பிதாவே? புத்திரனாகவும் சவுரியபரனாகவுமிருந்தயான்தருணத்திற் கூற்றுவனையொப்பக் கடினசித்தனுய்நீக்கியபாதகனைக்கலந்துறவாடிக் குலவமனம்விரும்புவீரோ தேவரீர் வருந்திநோற்ற வீரமாமகத்துக்கிரங்கித் திரிநேத்திரதாரியாய் மழுக்கரதலத்தனாகிய சிவபிரான் கடாட்சித்திருந்த வரபாலனத்தின் நிச்சயத்தை ஒருபோதும் மறக்கவறியீர் அத்தகைய சிறந்தவாக்கியம் பொய்பட்டுப் போம்படிக்கு அடியேன் புத்திரனாகத் தேவரீர் திருவயிற்றிற்பிறந்தேன் மேலும் தமக்கொரு யமனாகவுந்தோன்றினேன் நீரின்மேற் குமிழியைப்போலவும் மின்னலைநிகர்த்தும் சடுதியிலழிந்துபோகும் இந்தநாற்றவுடலை நிலைப்பட்டதாக மதித்துக்கண்டவுடன் பலரும் வசைமொழிகளையாடிக் கரங்களைக்கொட்டி நகைக்கத்தக்கதாக உம்முடன் சொல்லாமற்போய்விட்ட நான்தேவரீர் மாண்டமுன்னிலையில் அதிகஆவலுடன்வந்து உனக்கடுத்த சம்பவங்களைநினைந்து நினைந்துருகுகின்றேன், இதனுல்மெய்ப்பத்தியையும் ஐயப்பிரதாபங்களையும் எடுத்துப் பேசும்போது நாயினேனை உலகர்முந்திப் பேசப்படுவேனே பிராணனைத்தினைத்துணையாக மதித்துப் பகைவரைவாட்டவல்ல புசபலபராக்கிரமசாலிகளாகப்புகழுகின்ற அவுணர்மரபிற்றோற்றிய வஞ்சகசிரேஷ்டனாகிய நீயேன் பிதாவானவர் மாண்டபின்பு மித்திரனைப்போலக் கிலேசித்துக்கொண்டு வரப்பெற்றேன் முன்வைத்தகாலைப் பின்னிடாமற் பகைவரை ஜயிக்கத்தக்க சாமர்த்திய பராராகிய தமக்குதவியற்ற கொடியனைப் பிள்ளையென வழங்கிக்கொள்வதைப்பார்க்குமிடத்திற் குலஅதமனாகவும் பூமிக்குச்சுமையாகவுந் தோற்றுகின்றதல்லது யாதொருபிரயோசனத்தையுங்காணேன் அவுணர்குலவாழ்வே என்னையனே புயவல்மைக் கொப்பற்றசூரனே சிருஷ்டிகர்த்தனாகிய பிரமதேவனும் இரட்சகர்த்தனாகிய மகாவிஷ்ணுவுந்திரிலோகசக்கிரேஸ்வரனாகவிருக்கின்ற இந்திரனும் மற்றையதேவர்களினங்களும் அவுணராசர் இராக்கதமன்னர் மற்றுமிராநின்ற ராசராசாக்களும் மகாசபையில் விளங்குகின்ற சிங்காதனத்திற் றேவரீரைத் தரிசித்தமாத்திரத்தில்ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனே எமதிறைவனே எவ்வெவர்களும் போற்றிவணங்கும் ஜயப்பிரதாபங்களைப்பெற்றிருக்கின்ற வீராதிவீரனேயென்று பலவாகப்புகழ்ந்தேற்றத்தக்கதாக அரசினைச்செலுத்தி அகண்டசாம்பிராஜ்ய செல்வவளங்களனைத்தினையும் அனுபவித்துவாழ்ந்திருந்த தம்மையொத்த பிரபுடிகரானவர் திரிபுரதகனராய்த் திருநீற்றினொளியராய்ச் சுயஞ்சோதிமயமாக விருக்கின்ற சிவபிரான் திருக்குமாரன் பாலசுப்பிரமணியக் கடவுளினது திருத்தேரில் வெற்றித்துவசமாகநின்று நாப்புலர்ந்து சரீரம்வருந்தி விலாவொடியக் கூவுகின்றனேயோ தமது குடைநிழலிற் பட்டிருந்த மன்னமண்டலீகர் புசபல பராக்கிரம சாலிகளாதிய பிரமுகாளனைவரும் தினந்தோறும் காலையில் வந்துவணங்கிப் போற்றி எழுமுன்னிலையில் நவரத்தின மயமாகிய கிரீடங்க ளுறுத்தியுறுத்திச் செந்தாமரை மலரையொப்பச் சிவந்து விளங்கும் பெருமிதங்களை வாய்ந்த திருவடிகளைப் படைத்திருந்த தேவரீர் அனற்படிவமாகத் தோற்றியிருக்கின்ற சரவணபவனை மயிலி னுருக்கொண்டு மிகவும் வருந்திக் கீழ்ப்படிந்து சுமந்திருக்கின்றனையோ இதுவுமொருநாளோ விதிவலியை மதியின் முயற்சியினுல்வென்றவர்க ளுலகங்களி லிருப்பரோ என்னையனே பின்னரிவ்வாறுநேருமென்று பற்பல திஷ்டாந்தங்களையும்அனுபவங்களையும்காட்டி மனம்வருந்தி விண்ணப்பஞ்செய்துகொண்டபோதினும்அவ்வாக்கியங்களைக்கிஞ்சித்தம்காதுகொடுத்துக்கேளாமற்போனீர் ஓராஜசக்கிரவர்த்தீ மாற்றானைப்போலவந்த பாலசுப்பிரமணிய தேவருடன்பகைத்துமஹாயுத்தங்களைச்செய்து கடையிற்றோற்ற காரணத்தினுல்மயில்வாகனமாகச்சுமந்திருக்கின்றனையோ என்னையனே சலனமற்றபெருவாழ்வையிழந்து வயிரதேகத்தை மாற்றி வேற்றுருவாகியபட்சியின் கோலத்தைப்பெற்றிருக்கின்றமையால் நீயிறந்தவனுமல்லை யாதலால் பழிபாதகங்களுக்கு உட்பட்டுமறைந்திருந்த அடியேன்கருத்தின்வண்ணம் வேதவிதியிற்சொல்லும் திலதர்ப்பணமுதலியபிதிர்கருமத்தையும் நடத்தும்பாக்கியத்தைப்பெறுமற்போனேன் அநியாயமாக விவ்வுடலைச்சுமந்து வசைமொழிக்காளானதன்றி யாதொரு பலப்பிராப்தியையும்பெறுமல் வியர்த்தனனேன் ஐயனே பிள்ளைமதிசூடிய சடாமண்டலதாரியாகிய சிவகுமாரன் கந்தசுவாமியைப் புள்ளிபட்டிருக்கும் தோகையைவாய்ந்த மயிலினுருப்பெற்றுப் பரித்திருக்கின்ற இக்காலத்தில் தேவரீர் கருத்துக்கு விருத்துவமாகிய நன்னெறிகளை அடியேன் பலவிதங்களிற்குறித்துக் காட்டியதையும் அதைத் தடுத்துதாம் பேசியவாசகங்களையும் பிதாவே மனதில் நினைந்துநினைந்து வருகின்றனேயோ அல்லது வேற்றுருப் பெற்றமையால் மறந்துவிட்டீரோ அவுணர்பெருவாழ்வே சருவசங்காரகாலத்தில்அண்டபுவன சராசரங்களனைத்தையும் வாட்டவல்ல வடவாமுகாக்கினியும் பயந்தடங்கத்தக்கதாகப் பொங்கியெழும்கோபாவேசமும் எத்தகையாரையும் சட்டைபண்ணுமல் வாட்

டங்கினிருக்கும் சவுரியபராக்கிரமங்களும்மனதிற்கூறு கொண்டிருந்த மானமென்னும் பூஷணமும் ஜயப்பிரதாபங்களும்அகமும் புசபலபராக்கிரமம்பத்தும் யாதொருபிரயோசனங்களையுந் தராமற்பறந்து விட்டதன்றிப் பகைவர் கைவசப்பட்டிருக்கின்ற தேவரீரிடத்திற் சிறிதுங் கண்டிலேன் அவற்றின்கொடுமைகளைத்தும் எவ்விடத்திலடங்கியது யாதுந்தோற்றுமல் மயங்குகின்ற அடியேனுக் கொருகாரணங்களையும் சொல்லலாகாதோ ஆதரிக்கவினையாயோ தேறுதலையாவது பேசாயோ என்மனதுக்கினியபிதாவேயென்று இவ்விதங்களில் இரணியன்பலபல துயரமொழிகளைப் பேசிப் பிரலாபித்துமனந்தளர்ச்சிகொண்டு பெருமூச் செறிந்து அருவிகளைப்போல விழிகளில் நீரைப்பெருக்கிக் கிலேசித்தவனுக்குச் சடுதியில்பயமுண்டாய் இவ்விடத்தில்நானிருப்பது பூதவீரருக்குச்சற்றுச் சாடை தெரியுமாயின் தட்சணத்திற் பாய்ந்துப் பற்றிப்பிசைந்து கொன்றுதின்று கோபந்தணிவார் இதற்குப் பிசகிராதென நினைந்து பிதாவைநீங்கிப்போக மனமில்லாமலருமையில் அத்தலத்தைக்கடந்து பழையபடிக்குச் சமுத்திரத்திற் பாய்ந்தொளித்தவன் மேல்நடத்தவேண்டிய காரியங்களை முடிக்கக்கருதித் துரிதமாய் மாயமந்திரமொன்றையுச்சரித்து அதன்முயற்சியினுல் உருக்கரந்து மறைவிடமாய்ச்சென்றுகுலக்குருவாகிய சுக்கிராசாரியனிடத்துக்குப்போய் அதிககிலேசத்துடன் வணங்கி விழிகளில் நீர்பெருகுவதாக ரணக்களத்தில் நடந்தகாரணங்களனைத்தையும் சவிஸ்தாரமாக விண்ணப்பஞ்செய்தவனுய் ஆசிரியனைக்கொண்டு சத்துருக்களுட னெதிர்த்துப் போர்முனையிற்பட்டபிதாக்களுக்கும் துணைவருக்கும்தீயிற்பாய்ந்த தாயார்முதலான தம்மினத்தவ ரனைவருக்கும் நடத்தவேண்டிய திலதர்ப்பணமாதியகடன்களை சாஸ்திரோக்தமாக முடித்துச் சகலகாரியங்களு முற்றியவுடன் குரவனிடத்திற்செலவுபெற்றுக்கொண்டுபோய்ச் செல்வமானதுமமதையிற்றள்ளித் துக்கத்துக் குவித்தாகவிருந்து அல்லலிற்றள்ளுவதால் அதைவிடப் பகைவேறென்றில்லையெனத் துணிவுகொண்டு அதனிடத் திச்சையில்லாமல் வெறுத்துத் தவவேடத்தைத்தாங்கி தேவதேவோத்தமனுகிய சிவபிரானைச்சித்தத்திருத்தி அரியவிரதங்களைமுடித்து நற்கதியைப்பெற்றுவாழ்வதாகத் தவங்களைச்செய்துகொண் டொரு பாரிசத்திலிருந்தனன்.

---

## மீட்சிப்படலம்.

மற்றதுகாலத்துமணிதூங்கியபசும்பொற்
பொற்றைபுரையும்பொறிமஞ்ஞைமீதுவைகும்
வெற்றிநெடுவேற்கைவிமலன்விறலோனைப்
பற்றினெடுநோக்கியினையபகர்கின்றுன்.

---

கேட்டீர்களோ! நைமிசாரண்யவாசிகளே? யிவ்வண்ணமாக சூரபதுமன்முதலானவீரரைவாட்டி வெற்றியாளனுய்ப் பிரமன்முதலிய தேவர்கள்போற்றிச் சூழத்தக்கதாக மரகதமலைக்கொப்பாகப் பாரித்ததேகத்தையும் பசியதோகையையும் வாய்ந்த மஞ்ஞைவாகனத்தின்மீது ஆரோகணித்திருக்கின்ற பாலசுப்பிரமணியதேவர் தமதருகில் உடைவாளாயுதத்தைக் கரத்திற் பற்றிக்கொண்டு நிற்கின்ற வீரவாகுதேவனைக் கிருபையாகப்பார்த்தருளி வீராதிவீரனே கொடுங்கோலைச்செலுத்திவந்த அகர்மத்தையினுலழிந்த பாதகனனசூரபதுமன் அருமையாகத் தேடிய செல்வத்தைப்போல நெடுநாட்களாகத் தளையிட்டு கடியசிறையில்வைத்து வருத்திவந் ததினுல்வாடி மனந் தளர்ந்திருக்கின்ற "சயந்தன்முதலிய தேவர்களைத் தருவிக்கக் கடவையெனத் திருவாய்மலர்ந்த மாத்திரத்தில் அதிக வுற்சாகத்துடன் கிரவுஞ்சவரையைப்பிளந்த வேற்றிவேலாயுத மூர்த்தியினது திவ்விபசாரணுரவிந்தங்களிற்பணிந்து சண்முகனே தேவரீர்கட்டளையின்படிக் கிந்தநிமிஷத்தி லழைத்துவரக் கடவனெனச் செலவுபெற்றுக்கொண்டு துணைவர் இலக்ஷராதியபிரமுகாள் சூழ்ந்துவரத்தக்கதாகச்சூரபதுமன் அரசுசெலுத்திவந்த கெடிஸ்தலமாகிய வீரமாமயேந்திரபுரிக்குள்ளே பிரவேசித்துப் பதனழிந்திருக்கின்ற பற்பலவீதிகளைக்கடந்து சயந்தனுதியவிண்ணவர் மனவருத்தத்துடனிருக்கின்ற சிறைச்சாலையைச்சேர்ந்து நெருங்கிவருமுன்னிலையில் வீரவாகுதேவர் நகைமுகராய்மனவெழுச்சியுடன் கம்பீரமாய் நடந்துவரும் காரணத்தையோசித்து நமக்குநல்லகாலம் நேர்ந்ததாகக் காணுகின்றதென்று சகலவருத்தங்களையுமொழித்து சந்தோஷசாகரத்தில் மூழ்கினவர்களாய்ப் பிரிந்ததாயைக்கண்ட கன்றுகளைப்போல ஆவலுடன்விரைந்தோடி பாதாரவிந்தங்களிற்பன்முறைபணிந்து சந்தோஷமிகுதியினுற் றேகம்பூரித்து விலங்குகள்தெறித்துப் போகத்தக்கதாக மகிழ்சிறந்தவர்களாய்க் கரங்களைக்கூப்பிக்கொண்டு ஓவீராதிவீரனே எங்கள்குலதெய்வமே பிராணன் நீங்கவிருக்கின்ற காலையிற் கிடைத்த அமுதத்தையொத்த தயாநிதியே பலயுகங்களாகப் பகைவர்கொடுமைக்கஞ்சிப் பூனைவாயிற்பட்ட கிள்ளைகளைப்போல அலைச்சறப்பட்டிருந்த அடியோங்கள் துக்கவருத்தங்களையொழித்துக் கொண்டுபோக வெழுந்தருளிற்றே இனியாதொரு துன்பங்களுமின்றிப் பிழைத்தோம் பிழைத்தோமென்று பலவிதங்களாகக் கடலினுேசையு மடங்கத்தக்கதாகப் போற்றிவருகின்றகாலையில் தேவதேவோத்தமனுகிய சரவணபவன் தம்பியானவர் அவர்களைப்பரிவாகப்பார்த்து அரியதவங்களைச்செய்து பொன்னுலகவாழ்வைப்பெற்றிருந்த தேவர்களே மனவருத்தங்களையொழித்து சந்தோஷமாகவிருக்கக்கடவீர்கள் நெடுங்காலமாய் உங்களையும் மற்றவிண்ணவர் மண்ணவராதியரையமனையொப்ப அலைத்திருந்த சூரபதுமனைத் துணைவர் புத்திரமித்திராதிய வீரரையும் கணக்கிறந்தவெள்ளம்இரதகஜதுரகபதாதிகளையும் வகையறப் பாலசுப்பிரமணியக்கடவுள் அதாஅதப்படுத்திபடக்கினர்.

இனிநீங்கள் யாதுக்கும் அஞ்சவேண்டுவதில்லை பிரயாணப்பட்டு வாருங்கோள் வாருங்கோளெனச்சொல்லிய சந்தோஷவார்த்தையானது செவிகளுக் கமுதமாகக்கேட்டவுடன் பொங்கியுடன்சாயுச்சியபதவியைச் சேர்ந்தவர்களைப்போலப் பேரானந்தவாரியில்மூழ்கிக் கர்த்தனையும்வீரனையும் பலவிதங்களிற்றுதித்து விழிகளிற்போதநீர்ததும்ப மயிர்சிலிர்த்து உடனே கால்களில்மாட்டியிருந்த பாரவிலங்குகளைக்கழற்றியெறிந்துபோட்டுத்தேவர்கள் அரம்பையர் சூழ்ந்துவரச் சயந்தராசன் வீரவாகுதேவருடன் அவுணராசன் பதியைக்கடந்து வெளிவந்து பெரும்புறக் கடலைப்போல ஆர்ப்பரித்திருக்கின்ற பூதப்படைகளாதிய

வீரர்கள் நெருங்கியிருக்கின்ற சமரவெல்லையிற் சேர்ந்து
அவர்கள் மத்தியிற் சுயஞ்சோதிமயமாய் மஞ்ஞைவாகன
த்தின்பிடரியில் விளங்கும் குமாரதேவனைவிழிகள்களிக்க
த் தரிசித்தமாத்திரத்தில் அகமுகமலர்ச்சியுடன் திருவடி
களில் மும்முறைவலம்வந்து சேவித்துக்கொண்டவர்களா
ய் வேதவாக்கியங்களினாற் சிவகுமாரன்திருநாமங்களையெ
டுத்தேற்றி வாழ்த்துகின்றகாலையில் சரவணபவன் அவர்
களிடத்திற் கிருபாநோக்கத்தைப்பரப்பிப் பேரருளைக் க
டாட்சித்துத் தேவர்களே நன்னெறிகளிற்பிசகிச் சகலரை
யும் அலைத்திருந்தபாதகன் நகரத்தில் பலகாலம் அரியசி
றையிற்பட்டு வருந்தியிருந்தீர்க ளினியாதொரு துன்பங்க
ளுமில்லாமற்பழையபடிக்குப்பொன்னுலகைச்சேர்ந்தும
கதயிஸ்வரியச் செல்வவளங்களை யனுபவித்துக்களித்திரு
க்கக் கடவீர்களெனத் திருவுளம்பற்றிய மாத்திரத்தில் வி
ண்ணவர்கொண்ட மகிழ்ச்சியை யிவ்விதமெனச்சொல்லி
முடிவதோ தட்சணத்திற்சகலரும் பாலசுப்பிரமணியதே
வர் திருவடிகளில் மீட்டும்பணிந்து இருமருங்கினும்துதி
த்திருக்கின்ற காலையில் சயந்தனனவன் நீருண்டகாளமே
கவரவை யெதிர்பார்த்திருக்கின்ற மயிலையொப்பப் புத்தி
ரவாஞ்சையுடன்நிற்கின்ற பிதாவாகியதேவேந்திரன் பாத
ங்களிற்பணிந்தபோது அதிக ஆவலுடன் வாரியெடுத்து
மார்பிலணைத்துத் துடையின்மேல் வைத்துக்கொண்டு உ
ச்சியைமோந்து முத்தமிட்டு முதுகைத் தடவிக்கொடுத்து
க் கிருபையாகப்பார்த்துப் பிள்ளையானவன் தன்னைநீங்கி
ப் பகைவன் பட்டணத்தி லரியசிறையிலிருந்தகாரணத்தி
னல்வாடிப் பொலிவற்றிருந்த முகமண்டலமான தசூரிய
னுதயத்தைக்கண்ட தாமரை மலரைப்போல விள
ங்கத்தக்கதாக மனம்பூரித்துக் களித்தவனைச் சொர்க்க
லோகவாழ்வைப் பெறவிருக்கின்ற சந்தோஷத்தினும்பதி
ன்மடங்கு மனவெழுச்சிபெற்றுப் பீதாம்பரத்தொங்கலி
னல் முகத்தைத்துடைத்துக் கொஞ்சிய வார்த்தைகளுட
னிதனைப்பேசுவதாயினன். என்மனதுக்கினிய புத்திரரத்
தினமே கண்மணியே பொன்னுலகுக்கரசே நாம் முனஞ்
செய்த வல்வினையின் கொடுமையினாற் பலயுகங்களாய்க்
கொடியபாதகனாகிய சூரன்பட்டணத்தி லடைபட்டுப் பா
ரவிலங்கைப்பூட்டி யிட்டதகாத பணிவிடைகளனைத்தை
யும் செய்துசெய்து மிகவும்வருந்தினையோ தேகமெலிந்தி
ளைத்தனையோ அக்காலத்தில் எண்ணுதெல்லா மெண்ணி
யெண்ணிக் கிலேசித்தனையோ அரிதிற்பெற்றெடுத்த பிரி
யமுள்ள உன்தாயைநினைந்து கனைத்தனையோவென்றுஅ
ன்பின் பெருக்கத்தினாற் பலவாகப்பேசினன்.

சவுனகாதியிருஷிகளே? அக்காலத்தில் இந்திரன் கொ
ண்ட சந்தோஷமிகுதியை யொருவராலும் சொல்லிமுடி
வதன்று இவ்விதமாகப் பிள்ளையுடன் குலவிக்கொண்டிரு
க்கின்றகாலையிற் சிறைவிடுபட்டுவந்த தேவர்கள் தமதிறை
வன் திருவடிகளில்வணங்கியகாலையிற் றனித்தனித் தழு
வி அவர்கள்பட்டிருந்த துக்கவருத்தங்களுக்கிரங்கிப்பரிவு
டன் விசாரணைசெய்து இனிநமக்கொரு துன்பங்களுமில்
லாமற் பதியைச்சேர்ந்து பழையபடிக்கு வாழ்வோமென்
று சிலதேறுதலைச்சொல்லி அவர்களுடன் இந்திரன்
களித்திருந்தான், இவ்விதங்களாகச் சகலரும் ஆனந்தவா
ரியிலழுந்து அகமுகமலர்ச்சியுட னிருக்குமுன்னிலையிற்
சமர்க்களத்தில் அவுணப்பாதகரால் மாண்டுபோனபூதப்
படைகள் முதலானவர்க ளுயிர்பெற்றுவருவதாகச் சிவகு
மாரன் திருவுளத்திற் சிந்தித்தமாத்திரத்தில் நித்திரைதெ
ளிந் தெழுபவரைப்போலச் சகலரும்வெளிவந்து பெரும்
புறக்கடல் பெருகியதைப்போல ஆர்ப்பரித்துக் கொண்டு
வந்து குமாரதேவர் பாதாரவிந்தங்களில்விழுந்து சேவித்
துக்களித்தவர்களாய்த் தங்களினத்துடன் கலந்திருந்தனர்
அக்காட்சி யெப்படிக்கிருந்ததெனில் விசாலமாய் ஆழ்ந்தி
ருக்கின்ற ஜலப்பெருக்கினைவாய்ந்த கடலினிடத்தில்மேக
சாலங்கள் மின்னியிடித்துப் படிந்ததைப்போலக்காட்டிய
து அதன்பின்புகிருபாநிதியாகிய சரவணபவன் தமதருகி
ல்நிற்கின்ற வருணராசன்மீது விழிகளைப் பரப்பிச் சூரப
துமனுக்கு வாசஸ்தலமாகவிருந்த வீரமாமயேந்திரபுரத்
தை வானத்தை யளாவநிற்கின்ற மதில் மாடமாளிகைகள்
சித்திரக்கூடங்கள் உப்பரிகைகள் மற்றவளங்களனைத்துட
னும் அழித்துப் பழையபடிக்குநீரிற்கரைத்து ஏகசமுத்
திரமாக்கக் கடவையெனத் திருவாய்மலர்ந்தவுடன் மகா
பாக்கியமென்று வணங்கி விடைபெற்றுப்போய் அலைக
ளை மேன்மேலும்பெருக்கி மயேந்திரபுரியைச் சூழ்ந்திரு
ந்தமதில் கொம்மைகள்-கோபுரவாயில்கள்-உப்பரிகைகள்-
மாளிகைகள் - சித்திரக்கூடங்கள் - அங்காடிவீதிகள் ரத
கஜதுரகபதாதிகளுக் கேற்படுத்தியிருந்த விடுதிகள் அவு
ணராஜன் வாசமாகவிருந்த நகரத்திலிருந்த மாடங்கள்அ
ரண்மனை ஆஸ்தானமண்டபமுதலிய வளங்க ளனைத்தை
யும் அலைத்துச்சாடித் தும்சம்பண்ணி மகாவிஷ்ணு பூமி
யையுண்டதைப்போலப் பாதலவரையிற் கெல்லித் தரை
ப்படுத்தி யாதொன்றுந்தோற்றுமல் அழித்தபின்பு அதி
லிருந்த அவுணர் பெண்டு பிள்ளைகளுடன் கடலிற்சேர்த்
துவிட்டவனுப்க் கர்த்தன் சன்னிதானத்துக்குவந்து தேவ
ரீர்கட்டளையின்படிக்கு நகரத்தைச்சிதைத்து ஜலத்திற் க
லந்து பழையபடிக்குச் சமமாக்கினனென விண்ணப்பஞ்
செய்தான், இச்சம்பவம் நேர்ந்ததைத்தெரிந்த பிரமன்-வி
ஷ்ணு-இந்திரனாகியர் மனமகிழ்ச்சியுடன் பாலசுப்பிரம
ணியனைவாழ்த்திக் கடற்கிறைவன் வல்லபத்துக்குக் கொ
ண்டாடியிருந்தனர்.

இப்படிக்குச் சகலமுமுற்றியவுடன் குமாரதேவர் மஞ்
ஞைவாகனரூடராய்த் தேவர்கள்சூழ்ந்துவர ரணக்களவெ
ல்லையைக்கடந்து வானவழிக்கொண்டு துணைவர் இலக்கரு
டன் போகுமுன்னிலையில் இரண்டாயிரம் பூதவெள்ளங்
களும் படைத்தலைவர்களும் ஜயஉற்சாகங்களுடன்ஜயபே
ரி ரணபேரிமுதலிய மங்கலவாத்தியங்களை அண்டங்கள
திர முழக்கிக்கொண்டு நடந்தகாலையில் அவ்வெல்லையை
யும் சமுத்திரராஜன் உருத்தெரியாமல் மாற்றிவிட்டதும
ன்றி அம்மார்க்கத்திற்சொர்னமயமாய் விளங்கிக்கொண்டி
ருந்த இலங்கையையும் மற்றப்புறங்களிற் போற்றுதலாக
நின்றவை யனைத்தையும் கரைத்துச் சமமாக்கினன் இந்த
வேடிக்கைகளைப் பார்த்துக்கொண்டு கடலைக்கடந்து கந்த
மாதனவரையைத்தாண்டித் தாம் முன்னமெழுந்தருளியி
ருந்த மகத்துவமுள்ள திருச்செந்திற்பதியைச் சேர்ந்தவு
டன் மரகதமலையைப்போலக்காட்டும் அழகியகலாபத்தை
வாய்ந்த மயில்வாகனத்தில்நின்றும் குமாரசுவாமியாரிறங்
கி விஷ்ணு பிரமனாதியர் ஜயஜயவெனப்போற்றி யிருபாரி
சங்களினும் சூழ்ந்துவரத்தக்கதாக நவரத்தினமயமாய்ப்
பரந்திருக்கும் சபாமண்டபத்திற்போய்ப் பொன்மலையை
யொப்ப விளங்கிக்கொண்டிருக்கும் சிங்காதனத்திலெழுந்
தருளிச் சராசரப்பிரபஞ்சங்களனைத்தையும் அல்லலின்

றிப் பாதுகாத்திரட்சிக்கும் அருட்பார்வையுடன் கொலு
விருந்தனர், மற்றையரும் தத்தமதுஸ்தானங்களில் கர்த்
தன்மீதுவிழிகளைச்செலுத்தி அகமுகமலர்ச்சியுடன் களித்
துச்சந்தோஷவார்த்தைகளையாடிக்கொண் டிருக்கிறகாலை
யில்அத்தினப்போதுகழிந்து சூரியபகவான்மேற்றிசைக்க
டலில்மூழ்கினன், அதெப்படிக்கிருந்ததெனில் ஒருகுடி
யிற்பிறந்த நமதுதாயாதிகளாகிய அவுணரனைவரும்மாண்
டனர், மேலும் நமதுகிரணங்கள் அவர்கள்களேபரங்களி
னும் ரக்தமாம்சப்பெருக்கினுந் தாக்கியது ஆதலால்அச்
சூதகத்தையும் ஆசூசத்தையும் ஏககாலத்தில் நீக்கிக்கொ
ள்ளும்பொருட்டு ஒற்றைவண்டிலையும் ஏழுபச்சைக்குதி
ரைகளையும் பூண்டு அருணன்சாரத்தியஞ்செய்யத் தே
ரைத்துரத்திக்கொண்டுபோய் நீரில் முழுகுகின்றவனைப்
போலக்காட்டியது, இப்பிரகாரம் ஆதித்தன் அஸ்தமித்த
வுடன் செவ்வானந்தோற்றியதைப் பார்க்குமிடத்திற் க
டையுகத்தில் உலகங்களனைத்தையும் வாட்டாநின்றவட
வாமுகாக்கினியானது அவுணவீரரனைவரும் வகையறமா
ண்டசேதியைத்தெரிந்தவுடன் மனமகிழ்ந்து இப்பாதகரு
க்கஞ்சிப் பலநாட்களாக நமதுவிருப்பனைத்துமடங்கி யி
ருந்தனம் இனி அல்லலற்றுத் தினத்தைக்கழிக்கலாகுமெ
ன்னும்மனவெழுச்சியினல் தேகம்பூரித்து நிவந்தகாலத்
தில் அதன்சுவாலைதாக்கியதை யொப்பச்சிவந்து விளங்
கியது.

அக்காலத்திற் பிரமன்-விஷ்ணு-இந்திரனுதியர் ஒருசி
னைவைக்கொண்டெழுந்து பாலசுப்பிரமணியக்கடவுளைவ
ணங்கிக் கர்த்தனே கொடியபாதகராகிய அவுணர்உபத்தி
ரவங்களிற் பலநாட்கள் மிகவும்வருந்தி நன்னெறிகளைம
றந்து பலதீக்குகளைத் தேடிக்கொண்டனம், இக்காலத்தி
ல் மனவருத்தங்களைப்போக்கியிரட்சித்தகடவுளுக்கு எங்
களாற்செய்யும் கைம்மாறுண்டோ ஆகிலும் சகலபாபங்க
ளையும்போக்கிக் கிருதார்த்தராதற்பொருட்டுத் தேவரீர்தி
ருவடிகளைப்பூசித்து வாழவிருப்புற்றதா லிந்தவரபாலன
த்தைத் தரவேண்டுமென் றிரக்கின்றதேவர்களிடத்திற் ப
ரிவாய் உங்கள்கருத்தின்வண்ணம் முடிக்கக்கடவீர்களெ
னத் திருவாய்மலர்ந்தமாத்திரத்திற் சந்தோஷசாகரத்தில்
முழுகினவர்களாய்ப் பலரைத்துரத்தித் திருமஞ்சனத்
தூபதீபநைவேத்திய புஷ்பமாதிய பூசாதிரவியங்களனை
த்தையுந் தருவித்துக்கொண்டு ஆதியில் எமதிறைவனுகி
ய சிவபிரான் பராசத்திக்குப்போதித்திருக்கின்ற ஆகம
சாத்திரப்பிரகரணப்படிக்குச் சரவணபவனைப் பரிசுத்த
மாகிய வானகங்கையின் தீர்த்தத்தினுல் முழுக்காட்டிப்ப
னியை யொப்பவிளங்கிக்கொண்டிருக்கும் மிருதுவாகியவ
ஸ்திரத்தினுலீரத்தைப்புலர்த்தி விலையுயர்ந்த பீதாம்பரத்
தையுடுத்தித் திருநீற்றுக்காப்பிட்டுத் திலதப்பொட்டுமிட்
டு திவ்வியசுகந்தங்களைவீசும் கலவைச்சாந்து புனுகு க
ஸ்தூரியைத்திமிர்ந்து சிரோரத்தினமயமாய்ச் சொலித்து
க்கொண்டிருக்கும் அழகியவயிரமுடியைச் சிரங்களிற்றரி
த்து வாகுவலயங்களைப் பருவதாகிருதியாக வோங்கியிரு
க்கும் புயங்களில்மாட்டி அர்த்தசந்திரனை யொப்பக்காட்
டும் திருநுதல்கடோறும் வீரபட்டங்களையிருக்கிப் பன்
னிருசூரியர் தோற்றம்போல மகரகுண்டலங்களைச் செவி
களிற்றொங்கவிட்டு முத்துமாலை-மோகனமாலை-சரப்பளி
பதக்கம்-முப்புரிநூல்விதங்களை விசாலமாகத்தோற்றும்
மார்பினிடத்திலணிந்து வயிரக்கங்கணங்களைக் கரங்களிற்
சேர்த்து விரல்கடோறும் மோதிரங்களைத்தரித்துப் பொ
ன்னரைநாண் அரைச்சலங்கைகளை யிடையிற்றரித்துபா
டகம்-சிலம்பு-தண்டையிவற்றினைத் திருவடிகளிற்சூடியி
வ்விதங்களாகச் சகலபணிகளையும் அலங்கரித்தவுடன்தே
ன்களூறுமல்பரிமளித்திருக்கின்ற பஞ்சகற்பகப்புதியமலர்
களினுற்றொடுத்திருக்கின்ற கொண்டைமாலைதண்டைமா
லைபாதிய சிங்காரங்களைச் சிரசுமுதல்பாதவரையிற் சாற்
றிமுற்றியவுடன் திரட்டுப்பால்-வடை-அதிரசம்-தோசை-
அப்பம்-சுண்டல்முதலிய பலகாரவகைகளையும், மா-வா
ழை-பலாவாதியகனிவகைகளையும்திரட்சியாகப் பொற்பள்
ளயங்களிற்சேர்த்துத்திருமுன்புவைத்து நிவேதித்தவுட
ன்சாம்பிராணிதூபம் கற்பூரநீராஞ்சனமுதலியசுடர்களை
க்காட்டி அருகுஆலவட்டம் மயிற்பிஞ்சமுதலிய சோடச
வுபசாரங்களையும் விதிப்படிக்கு முடித்தானபின்பு மன
மும் விழிகளுங்களிக்கத்தரிசித்துத் தேகபரவசராய் மெ
ய்ப்பத்தி விசுவாசத்துடன் விழிகளில் ஆனந்தவாரிபெ
ருக்கெடுத்தோட மும்முறைவலம்வந்து அஷ்டாங்க பஞ்
சாங்க-திரியாங்க-ஏகாங்கவிதங்களிற் றிருவடிகளிற்பணி
ந்து கிருதார்த்தராயெழுந்து கரங்களைக்கூப்பிக்கொண்டு
சன்னிதானத்துக் கெதிரில்நின்று சிவகுமாரன் திருநாம
ங்களை வேதவாக்கியங்களினுலெடுத்தேத்தி அவன்பெரு
மைகளையுங் குணதிசயங்களையும் பலவிதங்களிற்போற்
றிவருபவரிடத்தில் எமதிறைவன் அதிகபிரியத்துடன் கி
ருபாநோக்கத்தைப்பாலித்து ஓதேவர்களே யின்னமுமு
ங்களுக்கேதேனுங் குறைபாடுகளிருப்பினும் எத்தகைய
பேறுகள் வேண்டினும் உங்கள்மனேபீஷ்டங்களைச் சந்
தேகமில்லாமற்கேட்டுக் கொள்ளக்கடவீர்களெனத்திருவு
ளம்பற்றியபோது மனவெழுச்சியுடன் இதனைவிண்ணப்
பஞ்செய்வதாயினர்.

தேவதேவோத்தமனே கேட்டருள்க நூற்றெட்டுயுகவ
ரையில் ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனுச் சக
லரையும் தன்னுணைபாக்கினைக் குட்படுத்தித்தகாத ஏவ
ல்களைக்கொண் டிவருத்திக் கொடுங்கோலைச் செலுத்திவந்
த சூரபதுமனை வம்சநாசமறக்களைந்து அளவற்றகாலமா
யக் கொடியதுன்பங்களை யனுபவித்து மனம்வருந்தியிரு
ந்த எங்கள்குறைபாடுகளையொழித்து அல்லலற்று மனக்
களிப்புடனிருக்கத்தக்க பெருவாழ்வைத்தந்தீர் இத்தகை
யதேவரீர் திருவருளைப் பூர்த்தியாகக் கிடைத்திருக்கின்
ற அடிபோகங்களுக்கிதனிலும் வேறுமொரு பேறுமிரு
க்கின்றதோ ஆயினும் கர்த்தனேநாயினேங்கள் மனவிரு

ப்பத்தைச் சன்னிதானத்தில் விண்ணப்பஞ் செய்வதாவது இத்தேகம் நிற்கின்ற பரியந்தம்மெய்ப்பத்தியுடன்தேவரீர்திருவடிகளுக்கன்புசெலுத்தத்தக்கவரத்தினை வேண்டுகின்றனம் இப்பேற்றினைத்தந்தாள்கவென் றிரக்கின்ற தேவர்களிடத்திற்பரிவாய் உங்கள்மனோ பீஷ்டப்படிக்குக்கடாட்சித்தனமெனத் திருவாய்மலர்ந்தமாத்திரத்திற் றிரோமம்பூரித்து விழிகளில் ஆனந்தவாரிபெருகக் களித்தவர்களாய் மகாவிஷ்ணு-பிரமன்-இந்திரனுதிய தேவர்கள் மனப்பூர்வகமாய்க் கல்லென்னுமோசையெழ மண்ணவர் விண்ணவர்முதலிய சகலரும் புகழும் பெருமையினையுடைய கந்தசுவாமியைத் துதித்திருந்தனர், சவுனகாதியிருஷிகளே யிவ்விதமாகக் கடவுளர் இதுவனாயினும் பெருததிருவருளைப்பெற்று மனவெழுச்சியுடன் பொழுதுபோக்குமுன்னிலையில் உலகங்களில் வாசமாயிருக்கின்ற பிராணிகளைக் கொடியயமனைப்போல அலைத்துவருத்திவந்த கரியதேகத்தைப்பெற்ற அவுணப்பெருக்கைப்போலக் காடாந்தகாரமாகிய விருள்பரந்திருந்த அவ்விரவானது அவர்கள் நாசப்பட்டதைப்போலக் கழிந்து வானவெல்லைமுற்றினும் முத்துக்களையொப்பப் பரந்திருந்தநட்சத்திரராசிகள் மறைந்து மன்னுயிரனைத்தும் களித்தெழும்படிக்குக் கடையுகத்தில் அண்டபுவன சராசரங்களனைத்தினையு மெரித்தழிக்கவல்லஉருத்திரமூர்த்திக்கொப்பாக ஒற்றைவண்டிலையும் ஏழுபச்சைக் குதிரைகளையும் பூண்டு அருணன்நடாத்துந் தேரினிடத்தில் ஆரோகணித்துச் சூரியபகவான் கீழ்ப்பாரிசத்தில் விளங்கும் உதையகிரியிற் றேற்றினவராய்த் தமதுதிருத்தேனைநடக்கவொட்டாமல் மறித்துப் போராடிவரும் அவுணர் இராக்கதரைவாட்டித் துரத்தச்செலுத்தும் பிரகாசம்பொருந்திய கணைகளைப்போலக் கிரணங்களைவிரித்துச் சத்துருக்களையொப்பவீறி உலகங்களிலடர்ந்து மயக்கியிருந்த விருட்பெருக்கனைத்தையும் வாட்டி அவர்கள் சரீரங்களிலிருந்தொழுகித்தோய்ந்த உதிரத்தைப்போலச் சிவந்துமெல்லமெல்ல வான்வழிக்கொண்டு ஆயிரங்கிரணசமோகங்களைப்பூர்த்தியாகப் பரப்பிப்பிரபஞ்சங்களைவிளக்கிப்பிராணிகளனைத்தும் அகமுகமலர்ச்சி பெற்றோங்கத்தக்கதாகத் தன்கதியிற்சென்றனன், இவ்விதமாகப் பொழுதுவிடிந்தவுடன் திருச்செந்திற்பதியி லெழுந்தருளியிருக்கின்றகுமாரதேவர் தமதுபிதாவாகிய சிவபிரானைவழிபடுங்கருத்தினராய்த் தேவசிற்பியினல் பிராகார கோபுரமண்டபமுதலிய சிறப்புகளைக்கொண்டிருக்கும் ஆலயமொன்றைப்படைப்பித்துச் சுயஞ்சோதிமயமாக விளங்கும் இலிங்கத்தைச் சாஸ்திரோத்தமாகத் தாபித்துப் பஞ்சகவ்வியமுதலாகிய பூசாதிரவியங்களைத் தேவர்களைக்கொண்டு தருவித்துக் கங்காசலத்தினுற் திருமஞ்சனமாட்டியீரத்தைப்புலர்த்தித் திருநீறணிந்து விலையுயர்ந்தபீதாம்பரத்தையுடுத்து நவரத்தினபரணங்களைச்சூடிக் கற்பகமலர்மாலைகளைத்தரித்துச் சந்தனத்தேய்வை புனுகுசவ்வாதுமுதலியபரிமள திரவியங்களைப்பூசித் திரட்டுப்பால் பலகாரவகைகள் கனிவிதங்களைப் பொற்பள்ளயங்களிற் படைத்து நிவேதித்தபின்பு தூபதீபமுதலியசோடசஉபசாரங்களைச்செய்து மும்முறைவலம்வந்துபணிந்து வேதவாக்கியங்களினுற் பரமன்சகத்திரத் திருநாமங்களையெடுத்தோதி மனமும்விழிகளுங்களிக்கத் தரிசித்து வாழ்த்தினர், அக்காட்சியைத் தேவர்கள்மனமும் என்புங்குழையத்தக்கதாகக்கண்டுஆனந்தபரவசராய்ப் பரமனைப்போற்றிக்கிருதார்த்தராயிருந்தனர்.

---

ச-வது, உயுத்தகாண்டம்முற்றிற்று.

கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள் திருவடிவாழ்க.



சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

ஸ்ரீஞானசம்பந்ததீர்த்தசரணுயநமம்.

கச்சியப்ப சிவாசாரியசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

# ஸ்ரீகந்தபுராணவசனம்.

## ஐந்தாவது

## தேவகாண்டம்.

### திருப்பரங்குன்றுசேர்படலம்

இருப்பரங்குறைத்திடுமேஃகவேலுடைப்
பொருப்பரங்குணர்வுறப்புதல்விதன்மிசை
விருப்பரங்கமரிடைவிளங்கக்காட்டிய
திருப்பரங்குன்றமர்சேயைப்போற்றுவாம்.

இன்னபண்பினற்சிவனடிவழிபடலியற்றி
யங்கிலைக்களநீங்கியேயமரர்கண்முனிவர்
தன்னதானையந்தலைவர்கள்புடைதழீஇச்சாரப் [தன்
பொன்னின்மஞ்ஞையினெருத்தமேல் கொண்டனனன்புனி

வாரீர் சவுனகாதிரிஷிகளே மேற்குறித்தபடிக்கு ஆகம சாத்திரப்பிரகரணமாகச் சிவகுமாரன் பரமனைப் பூசித்துவழிபட்டவுடன் திருப்பரங்குன்றென்னும் ஸ்தலத்துக்குப் போவதாக நினைந்தவராய்த் தங்கமயமாய் நவரத்தினகாந்திகளை வீசிக்கொண்டிருக்கும் ஆலயத்தைக்கடந்து வெளிவந்து சொர்னமரகதமொருமித்தமைந்ததைப்போலப் புள்ளிபட்டிருக்கும் பசியகலாபத்தைவாய்ந்த மஞ்ஞைவாகனத்தி லெழுந்தருளிக் கர்த்தன்கட்டளையின்படிக்குத் தத்தமது வாகனங்களில்வீற்றிருந்து மகாவிஷ்ணு, பிரமன், இந்திரனதிய தேவர்கள் ரிஷிக்கூட்டங்கள் வீரவாகுதேவராதிய துணைவர்கள் இலக்ஷர் படைத்தலைவர் மனவெழுச்சியுடன் புடைபரந்து நெருங்கிவரத்தக்கதாகச்சரவணபவன் திருச்செந்திற்பதியைக்கடக்கு முன்னிலையில்சூரியனைப்போலப் பிரகாசித்திருந்தசிகரங்களாதியவளங்களைக்கொண்டிருந்த ஆலயமருங்கெங்கும் நெருங்கியிருந்த விரண்டாயிரம் பூதவெள்ளங்களும் ஜயஉற்சாகங்களுடன், ஜயபேரி, ரணபேரி, குடமுழா, சல்லரி, மல்லரி, திமிலை, தக்கை, மொந்தை, தவுண்டி, மத்தளம், தாளம், உடுக்கை, எக்காளம், சின்னமுதலிய, தோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி தங்களாகியபதினெண்மேளவாத்தியங்களையுந்திசைகளதிரத்தக்கதாக முழக்கிக்கொண்டுபெரும்புறக்கடலைப்போல ஆரவாரங்களைக்காட்டித்தமதுதலைவனைச்சேர்ந்து நடக்கும்போதெழுந்த தூளிபடலமானதுபெருத்துத் திசாதிசைகளைத் தூர்த்துச்சமுத்திரத்தைச்சேறுக்கியதன்றியிற் றெய்வலோகத்தினும்பரந்தது, இதையோசிக்குமிடத்தில்விவேகசூனியராகவிருக்கின்ற கீழ்மக்களாயினும் பேரறிவைப்பெற்றிருக்கின்றமகத்துக்களைச் சேரப்பெறுவராயின்பாபரகிதராய்நற்கதியைச்சேர்ந்துவாழ்வரென்பதுஉண்மையாதலாற் பத்திமான்மியங்களிற்சிரேஷ்டராகவிருக்கின்றசிவகணங்கள்பாதப்பரிசம் பட்டமாத்திரத்திற்பூமியும்பவுத்திரப்பட்டுப் பொன்னகரவாழ்வைப்பெறலாயிற்று, அக்காலத்தில்பலபூதர்கள்பலசிறப்பட்டுகளின

ற்செய்திருக்கின்ற கொடிகளைத்தாங்கிச் செல்வதைப்பார்
க்குமிடத்திற் சூரியசந்திரராகிய நவக்கிரகங்கள்மற்றைய
ராசிகள்முதலாகக்கர்த்தன் தரிசனத்துக்குவந்து காத்துப்
போவதையொத்தும் வெண்பட்டுக் கொடிகள் வானத்தை
யளாவப் படபடத்த தொனிகளுடன் அசைவதெப்படிக்
குக் காட்டியதெனில்· வானதேவதை சிவகுமாரன்மீதுதூ
சிபடியாமலசைப்பதையொத்தும் ரணபேரி, ஜயபேரி, மு
தலிய மங்கலவாத்தியங்களின் முழக்கத்தின் பேரொலியா
னது கோடையிடிகளைப்போல மண்விண்ணெங்கணும்கு
முறிக்காட்டவும் வெண்பட்டாடைகளினால் வட்டமாக்கி
முத்துச்சரங்கள் சுற்றினுமசைய நீண்ட பொற்காம்புகளி
னுச்சியி லசைந்துகொண்டுபோகும் கவிகைகளின் காட்சி
யானது விண்ணவர் தேவமுரசங்களைத்தாங்கிச் செல்வத
ற்கொத்தும் வானத்தைமுட்ட நிவந்தசைந்திருக்கின்ற து
வசபடங்களைப் பார்க்குமிடத்திற் சூரியன் வெப்பத்தினா
ற் கொதிப்பெடுத்து அலைகளைப்பெருக்கிச் சூடுகொண்டி
ருக்கும் வானகங்கையினது தீட்சணியத்தை விசிறியாற்
சேனைப்பெருக்கத்தின் மத்திமத்தியிற் பலவாத்தியங்கள்
முழங்குவதைப் பார்க்குமிடத்திற் பாலசுப்பிரமணியதே
வர் அவுணப்பாதகருக் கிடங்கொடுத்தனையெனக் கோபித்
துக் கடற்கிறைவனைத் தண்டித்தகாலத்திற் பயப்பிராந்தி
யினால் அலைகளைச்சுருக்கிக் குமுறிவருந்தியதைப்போன்
றும் இவ்விதசம்பிரமங்கள் மத்தியிற் சரவணபவனேறிந
டாத்தும் மயிலானது அண்டங்களதிரக் கூவுமொலியைப்
பாதலத்தில்வாசமாயிருந்து இப்பூமியைத்தாங்கிவரும்ஆ
யிரம்பணாமகுடத்தை யுடையசேடனாகிய நாகராஜன்கே
ட்டமாத்திரத்தில் திடுக்கிட்டுக் குலைகுலைந்து புரளும்அ
சைவை மயில்தெரிந்து துரிதமாய்க்கூரிய தன்மூக்கினால்
நிலத்தைக் குற்றிகுற்றிச் சோதித்து நடக்கவும் சிவகுமா
ரன் திருத்தேரினுச்சியிற் றுவசமாக நிற்கின்றசிவந்தகொ
ண்டையையுடைய சேவலானது கொடியபட்சியாதலால்
வானத்திற்செல்லும் மேகசாலங்களை வயிரத்தையொத்த
மூக்கினாற்கீறி ஜலத்தையுண்டு அவற்றினிடத்திற் றோற்
றுமிடிகளைப் பரல்களென்றெண்ணிக் கொத்திக்கொத்தி
யெறிந்தும் நட்சத்திரங்களைப் பொரிகளாக மதித்திறைத்
தும் இவ்விதச்சிறப்புகளுடன் போகுமுன்னிலையில்பூத
வெள்ளங்கள் அதிகஉற்சாகங்களுடன் நாற்புறங்களினும்
வடிவேலனைச் சூழ்ந்துவர மஞ்ஞைவாகனத்தைக் குமார
தேவர் நடத்திக்கொண்டு திருச்செந்திற்பதியி னெல்லை
யைக்கடந்து சரபசார்த்தூலங்கள் சஞ்சரிக்கத்தக்ககானக
வழிக்கொண்டு போகுமார்க்கத்திற் காட்டியவினோதங்க
ளைக்கேட்பீராக.

பூதவீரர்கள் கெலிப்புடன் அண்டங்களதிரவசனிக்கு
ம் பேரொலியைக் கேட்டமதயானைகள் தாங்களுண்டவி
ளாங்கனியினது பயனைக்கிரகித்துக்கொண்டு வெறுங்குடு
க்கையைத் தள்ளுமாறுபோலத் திடுக்கிட்டுப் பயந்துணர்
வற்று உதைத்துக்கொண்டு விழுந்துருளவும் உலகத்தில்
வாழும்பிராணிகள் தாங்கள்செய்த தீவினைகள் தங்களை
யேதொடர்ந்து வாட்டுமென வழங்குவதைப்போல வலியி
னாற் பசுக்களைக்கொன்றுதின்று சஞ்சரித்திருந்த புலிக்கூ
ட்டங்கள் விருஷபங்களின் தோலினாற் செய்யப்பட்டபே
ரிகைகளைப்பூதர் முழக்கும் சத்தத்துக்கஞ்சியோடி விழுந்
துருளவும் மதயானைகளின் மீதுபாய்ந்து மத்தகத்தைப்பி
ளந்து மூளையைத்தின்னும் வீரபராக்கிரமத்தைப்பெற்றி
ருக்கின்ற சிங்கங்களானவை யானைமுகத்தைப்படைத்தி
ருக்கின்ற ஜயசாலிகளாகிய பூதவீரர்கள் உலகங்கள்தத்த
ளித்துச் சோரும்படிக்குக் கர்ஜிக்கும் ஒலியானது செவிக
ளிற்பட்ட மாத்திரத்திற் றிருப்பாற்கடலிலுதித்துப் பிரா
ணிகளை யலைந்தெழுந்த ஆலகாலவிஷத்தையெதிர்ந்த தே
வர்கள் கிடுகிடாய்த்து நடுங்கியதைப்போலப் பயப்பிராந்
திகொண்டு உடலமுற்றும் வியர்க்கக்களைத்து விழவும்வீ
ராதிவீரராய்ச் செல்வச்சம்பத்து கிடைத்திருந்த ஜயசா
லிகளாகவிருந்தபோதினும் இடம்பொருளேவல் முதலிய
வுதவியற்று வலியுங்குறைவராகிற் காலதேச வர்த்தமான
த்தைப்பாராட்டிச் சூரத்துவத்தையும் பாராட்டாமல்மற
ந்துதங்களுக்கடாத தீயமார்க்கங்களை முக்கியமாகவெண்
ணித்தொடர்ந்து காலத்தைக்கழிப்பார் அதைப்போலப்ப
ருத்ததேகத்தையும் வலியதுதிக்கைகளையும் விழிகள்அர
க்கையொப்பச் சிவந்து கோபாவேசத்துடன் வீறியுலவும்
யாளிக்கூட்டங்களானவை மான்முகங்களைப் பெற்றிருக்கி
ன்ற பலசாலிகளாகிய பூதர்கள் ஆரவாரங்களின் பேரொ
லியைக் கேட்டமாத்திரத்தில் தேகமுற்றும் உதறலெடுத்
து மனங்கலங்கித் தாபரித்து நிற்கவும்அஞ்சி அபலமாகி
ய குரங்கினங்கள் வாசஞ்செய்திருக்கும் தோப்பினிடங்க
ளைச்சேர்ந்து பதுங்கவும் இவையன்றியும் வலிக்கொப்பற்
றஜயசாலிகளாகிய பூதப்படைகள் பாரித்தஅடிகளைநிலங்
குழிபடப் பெயர்த்துவைத்து நடக்கின்றகாலையில் அவ்வ
திர்ச்சியினால் மகாவிஷ்ணுவானவர் வாமனாவதாரங்கொ
ண்டகாலத்தில் அவர் பாதங்களினால் அளக்கப்பட்டுப்பிர
மகற்பத்திற் பிராணிகளனைத்தையும் பாதுகாக்குநிமித்த
ம்உண்ணப்பெற்றும் இத்தகையவசைகளைப் படைத்திரு
க்கின்ற பூமண்டலத்துக்காதாரசத்தியாகத் தாபித்திருக்கி
ன்ற அஷ்டகுலாசலங்களும் மற்றையபருவதங்களும் த
த்தளித்து நிலைகுலைந்தசையவும் சிவகணங்கள் சிருங்கநா
தம் அட்டகாசங்களைச்செய்து நடக்கும்போதெழுந்தசந்த
டிக்காற்றுமல் கொடியவிஷப்பற்களைப் படைத்திருக்கின்
ற நாகங்களும் வீரத்தன்மைபொருந்திய சிங்கக்குட்டிக
ளும் திகிற்பட்டுமயங்கித்தங்களிடங்களிற் போகப்பயந்து
குன்றுகளிடத்திற் றோற்றும் சிறுபூழைகளில் வருந்திநு
ழைந்தொடுங்கவும் சிங்கமுகங்களைப் பெற்றிருக்கின்றபூத
ர்கள்கனைப்பி னோசைக்கஞ்சிய மேகங்கள்நடுநடுங்கிமின்
னலைப்பெருக்கி யிடிகளைக்கக்கிக்கொண்டோடித் தவறிவி
ழுந்து பயபீதியினால் என்னநேருமோ வென்றஞ்சிஎழுந்
திருக்கவும் கூடாமையாற் புரண்டுபுரண்டு படாதபாடுக
ளைப்படவும் மலைச்சாரலை யடுத்திருக்கின்ற காட்டினிடங்
களிற்சஞ்சரித்திருக்கும் வேடர்கள் வட்டமாயிருக்கின்ற
பறைகளைப் பேரொலியெழவறைந்தும் கலகலென்னும்இ
சையெழ ஆர்ப்பரிக்கும் சத்தங்களைக் கேட்டமாத்திரத்தி
ற் காடுகளிற்படுத்திருந்த பறவைக்கூட்டங்களானவைதி
டுக்கிட்டுக் குலைகுலைந்து தங்கள்குட்டிகளைக் கவ்விக்கொ
ண்டு திசைகளிற்பறந்துபோகுமாறுபோலச் சிவந்தகொ
ண்டையையும் கூரியமூக்கையும் பருத்தவுடலையும்பெற்
றுத்துவசமாகநிற்கின்றசேவலின் கூக்குரலினோசையும்பு
ள்ளிபட்ட தோகையையும் அழகியகழுத்தினையும் நீண்
டகால்களையும் மரகதமலையையொத்த பாரித்ததேகத்தை
யும் படைத்துச்சிவகுமாரனுக்கு வாகனமாகவிருக்கின்ற
மயிலின்முழக்கமும் சேர்ந்தெழுந்த சத்தப்பெருக்கினைக்
கேட்டமாத்திரத்திற்பிராணிகளனைத்தும் திகைத்துச்சோ

ர்ந்து அல்லோலகல்லோலப்படவும் வேடமங்கையராதிப
ர் மனவெழுச்சியுடன் விளையாடித்திரியும் சோலைகளிற்
றொங்கவிட்டிருக்கும்ஊஞ்சல்களில் மரங்களசையத்தக்க
தாக வூசலாடுவதைப் பாலசுப்பிரமணியக்கடவுளினது தி
ருத்தேரினுச்சியில் நின்றொலிக்கும் சேவலினது ஆரவா
ரத்தைச்சோலைகளிற்றங்கி யலைத்திருந்த குரங்கினங்கள்
கேள்விப்பட்டமாத்திரத்தில் நடுநடுங்கித் திகைத்துக்கைக
ளைவிரித்துப் பற்களைத்திறந்து கீச்சுகீச்செனக் கூவி மிரள
மிரளவிழித்து ஒன்றில்நின்று மற்றொருகிளைகளிற்றாவிச்
சோலைகடோறு முலவியலையவும் அவ்வனங்களிற்றவங்க
ளைச்செய்துவரும் முனிபுங்கவர் பாராயணஞ்செய்யும்வே
தாகமங்களினொலியும் தேவரினங்கள் மனப்பூரிப்புடன்
முருகனைக்குறித்து ஜயாவிஜயபவாவென வாழ்த்திப்போ
ற்றும்சத்தமும்பூதர்கள் முழக்கிப்போகும் பல்லியங்களி
ன் அதிர்ச்சியும் சேனைகள்ஜயவுற்சாகங்களுடன் கெக்கலி
கொட்டிக்கொண்டு போகும்பேரொலியும் காரணகாரியங்
களிற்படாமற் புறம்பினுலாவிச் சராசரப்பிரபஞ்சங்களை
நடிப்பித்துவரும் சுயஞ்சோதிப்படிவத்தனாகிய சரவணப
வன்கொடியாகிய சேவலின்சத்தத்துக்கும் வாகனமாகவி
ருக்கின்ற பசியதோகையைவாய்ந்த மயிலின்முழக்கத்துக்
கும்பிற்பட்டடங்கியொடுங்கும்.

சவுனகாதிரிஷிகளே இவ்விதச்சிறப்புகள் மலிந்துகாட்
டும்படிக்கு ஜயசாலிகளாகிய பூதவெள்ளங்களும் நவவீர
ர் இலக்ஷர் சேனைத்தலைவர் விஷ்ணு பிரமனாதியர் சூழ்ந்
துவரத்தக்கதாகப் பாலசுப்பிரமணியக்கடவுளானவர்குறி
ஞ்சித் திணையைக்கடந்து தெய்வீகம்பொருந்திய மதுரை
ஸ்தலத்துக்கு மேற்பாரிசத்தில்விளங்கும் சிறந்ததிருப்ப
ரங்குன்றமென்னும் திவ்வியநகரத்தைச்சேர்ந்தகாலையில்
அத்தலத்திற்றவஞ்செய்திருந்த பராசரரிஷிபிள்ளைகள் அ
றுவரும் எதிர்கொண்டு சிவகுமாரனைச்சேவித்துப் பிரம
னாதியதேவர்களுட னிதனைவிண்ணப்பஞ் செய்வதாயின
ர், சண்முகனே யிவ்வரை வாசயோக்கியமாயும் பலவளங்
களையும் மகத்துவங்களையுங் கொண்டிருப்பதால்கிருபை
யுற்று இவ்விடத்திலெழுந்தருளினால் உத்தமமாக விருக்
கின்றதெனப் போற்றுகின்றசமயத்தில் அவர்களிடத்தி
ல் மிகுந்தபிரியத்துடன் கிருபாநோக்கத்தைப் பாலித்து
இதனைத்திருவுளம் பற்றுவதாயினர், நாம்இவ்வரையினி
டத்தில் வாசஞ்செய்ய நினைந்தபடிக்கு நீங்களும்வேண்டு
கின்றதால் நம்மெல்லோர்கருத்து மொருமித்தபடிக்குஉ
ங்கள் மனோபீஷ்டத்தை முடிக்கக்கடவோமெனச்சம்மதி
த்தவராய் மையைபொப்பக்கறுத்துப் பாரித்ததேகத்தை
யும் பிராணிகள் மையலிற்பட்டு வாடத்தக்க பிளிறொலி
யையும் உமிநீரைப்பெருக்கிப் பனையைப்போல நீண்ட
சையும் துதிக்கையையும் படைத்துக் கன்னமதம்கபோல
மதம் பீஜமதமென்னும் மும்மதங்களையும்பெருக்கி யிடி
கள்கன்றுகள்சூழ்ந்துவர யானைக்கூட்டங்கள் உலவிவரு
ம் சாரலையுடைய அவ்வரையின்மீதிற் பார்ப்பதிதிருக்கு
மாரனாகிய சிற்பரமூர்த்தியாகவிளங்கும் சரவணபவன்
மெல்லமெல்ல வெறியவேளையில் யுகமுடிவு நேர்ந்தபோ
து சத்தசாகரங்களும் ஏகமாய்ப்பெருகி வடபாரிசத்திற்
றோற்றுகின்ற மகம்மேருகிரியைவளைந் தொலிப்பதைப்
போலப் பூதர்சிவகுமாரனெழுந்தருளப்பெற்ற மகத்துவ
முள்ள அந்தத்திருப்பரங்குன்றத்தினடிவாரமெங்கணும்
பேரொலியைக்காட்டி நெருக்கித் தங்கியு மிடம்போதா
மல் அவ்வரையின் மேற்புறங்களினும்அடர்ந்திருக்கின்ற
காலத்திற் பாலசுப்பிரமணியதேவர் பக்கத்தில்நிற்கின்ற
தேவதச்சன்மீது விழிகளைப்பரப்பி ஓமயனே துரிதமாயி
தனுச்சியில் நமக்கும் மற்றதேவர்கள் முதலானவர்களுக்
கும் தகுந்தவிடுதிகள்முதலிய சிறப்புகளைக்கொண்டிருக்
கும் நகரமொன்றை நிர்மிக்கக்கடவையெனத் திருவாய்ம
லர்ந்தவுடன் மனம்பூரித்துக் கந்தனைவணங்கிச் செலவு
பெற்றுப்போய் அவ்வெல்லையைத்திருத்திச் சிற்பநூலின்
பிரகாரணப்படிக்கு நிதானித்துப்பருத்து உன்னதமுள்ள
மதிலையெழுப்பி பலநிலைகளையும் சிகரங்களையும் சித்திர
ப்பிரதமைகளையுங்கொண்டிருக்கின்றகோபுரவாயில்களை
நாற்புறங்களினுந்தூக்கி அம்மதிலைச்சூழவரச் சேனைத்
தலைவர்முதலிய வீரர்களுக்குத்தக்க மாளிகைகளை மன
ரஞ்சிதமாகப்படைத்து அதனுட்புறத்தில் மகாவிஷ்ணு
பிரமன் நவவீரர் இலக்ஷர்முதலானவர்கள் தங்கயோக்கி
யமாகிய அரண்மனைகள் மாடமாளிகைகள் மேடைகள்வி
தங்களைச்செய்தமைத்தபின்பு நடுப்பிரதேசத்தில் தேவா
திதேவனாகிய குமாரசுவாமியாரெழுந்தருளுவதற்குப்பா
த்திரமாகிய ஆலயமொன்றை நவரத்தினமயமாய் விளங்
கும்படிக்குத் தன்வல்லபத்தைக்கொண்டுமுடித்து விசா
லமாய்நீண்டிருக்கும் வீதிகளைநியமித்து அதன்மத்திமத்
தியில் தடாகங்கள் குளங்கள் சுனைகள் தழைத்தோங்கிக்
குளிர்ந்த நிழலைப்பரப்பும் சோலைகள்தோப்புகள்திவ்விய
பரிமளத்தைவீசும் மலர்கள்நிறைந்த பூங்காவுகள் நந்தவ
னங்களாதிய வளங்களைக்குறைவின்றிச் செய்துமுடித்தவ
னுப் வேண்டும்பண்டங்களையும் ஏராளமாகத் தகுந்தவி
டங்களிற் பண்டாரங்கள்தோறும் நிறைத்து இவ்விதமா
கச் சமஸ்தமும் முற்றியவுடன் சிற்பியானவன் மனமகிழ்
ச்சியுடன் செங்கல்வராயனைப்பணிந்து தேவரீர்கட்டளை
யின்படிக்கு நகரமாயிற்றென்று விண்ணப்பஞ்செய்தமா
த்திரத்தில் அவன்மீது கிருபாநோக்கத்தைப் பாலித்தவ
ராய் மகாவிஷ்ணு பிரமன்இந்திரன்முதலானவர்கள்தொ
டர்ந்துவர பட்டணத்திற்பிரவேசித்து அதன்சிறப்புகளை
மதித்து தேவசிற்பியின் வல்லபத்துக்கு மெச்சிக்கொண்
டாடிச் சித்திரவீதிகடோறும் சேனைத்தலைவரையிருக்கச்
செய்து தமக்கேற்படுத்தியிருக்கின்ற ஆலயத்தினருகிற்
சேர்ந்தவுடன் பசியகலாபத்தைவாய்ந்த மஞ்ஞைவாகன
த்தைவிட்டிறங்கிப் பிரமனாதியதேவர்கள் ஜயஜயவெனப்
போற்றிச் சூழ்ந்துவரத்தக்கதாக அவனுள்ளே பிரவேசி
த்துச் சொர்ணமயமாய் சொலித்துக்கொண்டிருக்கும்விசா
லமாகிய திருச்சபையைச்சேர்ந்து அதன்முகப்பிற்சிரோ
ரத்தினங்களினாற் சோடித்திருக்கின்ற சிங்காதனத்திற் கு
மாரதேவரொழுந்தருளியகாலையில் அவர்கட்டளையின்படி
க்குப் பிரமன் மகாவிஷ்ணு இந்திரனாதியதேவர்கள் தத்
தமக்குத் தகுதியாகிய பீடங்களிலிருந்தனர் புஜபலபரா
க்கிரமசாலியாகிய வீரவாகுதேவரும் எண்மரும்இலக்ஷ
ரும் குலகிரிகளையொத்த காத்திரதேகத்தைப்பெற்ற பூ
தத்தலைவர்களும் சிவகுமாரனைவணங்கித் தமதுபணிவி
டைகளைச்செய்துகொண்டு இருபாரிசங்களினும்போற்றி
வருமுன்னிலையிற் பராசரரிஷிபுத்திரர் அறுவரும்ஆகம
விதிப்படிக்குப் பத்திவயிராக்கியங்களுடன்பாலசுப்பிரம
ணியக்கடவுளினது திவ்வியசரணாரவிந்தங்களிற் பரிம
ளமிகுத்த திவ்வியமலர்களினால் அர்ச்சனை வழிபாடுகளை
க்குறைவறமுடித்துச் சேவலங்கொடியோனதுதிருக்கோ

லத்தை விழிகள்களிக்கத்தரிசித்து போதநீர்பெருக்கெடுத்தோடத் தேகம்பூரித்து மயிர்ச்செறிவெழத் தக்கதாகச் சிவகுமாரன் சகஸ்திரதிருநாமமந்திரங்களை வேதவாக்கியங்களினாற்றுதித்துக் கரங்களைக்கூப்பி யெதிரில்நிற்கின்ற இருஷிபுத்திரர் மெய்ப்பத்திக்கிரங்கிக் கிருபாநோக்கம்பாலித்தவராய்த் தாம்முனம்சரவணப்பொய்கையினிடத்திற் றிருவிளையாடல்களைச்செய் திருந்தபோது சந்திரசடாமண்டலதாரியாகிய பரமனெழுந்தருளித் திருக்கயிலைக்கழைத்துப் போம்போது அவ்வறுதவத்தருக்குங் கடாட்சித்துச்சென்ற அருட்டிறங்களைச் சருவபரிபூரணனாய் முற்றுமுணர்ந்த குமாரசுவாமியார்நினைந்து பராசகுலோத்தாரகஞ்செய்யத்தோற்றிய நிஷ்டாநுபரராய்த் தவங்களே உருவகித்திருப்பதையொப்பத்தோற்றும் இருஷிபுத்திரருக்கு ஞானயோகத்தைப்போதித் திரட்சிக்கும்படிக்குக் கிருபையுற்றுச் சின்மயமுத்திரைமுதலிய பிரகரணங்களைப் பஞ்சவுறுப்புகளினால் விளக்கி அசைவற்றுச் சித்தத்தைச் சிவத்தின்கண்ணிறுத்திக் காட்டினர் இவ்விதமாகச் சண்முகப்பெருமாள்போதித்தற்கரியயோகசாதனையைத் தெருட்டி வருமுன்னிலையில் முநிபுத்திரர்அறுவரும் பேரானந்தவாரியில் மூழ்கினவராய் அந்நிலையிற்றாங்களும் திடசித்தம்பெற்றுப்பஞ்சேந்திரியவிஷயங்களை நிக்கிரகித்து ஐம்புலச்சேட்டைகளையடக்கி மவுனிகளாயிருந்து ஞானயோகத்திறங்களைப் பூர்த்தியாகத் தெரிந்துகொண்டு சிவகுமாரனைவணங்கிப்போற்றி விசாகப்பெருமானேதேவரீர் கிருபையின்முயற்சியினாற்கிடைத்தற்கரிய பதத்தைப்பெற்றீடேறினோம் இனிஜீவன்முத்தராய் வாழக்கடவோமெனவாழ்த்தித் தவத்தர்களிற்சிரேஷ்டராயினர்.

சவுனகாதிரிஷிகளே யிதுபரியந்தம் ஒப்புவமையற்று மகதயிஸ்வரியச் செல்வச்சம்பத்தைப்பெற்றிருந்த வீரமாமயேந்திரபுரியைப் பாலசுப்பிரமணியதேவர் சேர்ந்து ஆயிரத்தெட்டண்டங்களுக் கதிபனாய்க் கொடுங்கோல்செலுத்திவந்த சூரபதுமனைத் துணைவர்புத்திரமித்திரர் சேனைத்தலைவர் கணக்கிறந்தவெள்ளம் ரதகஜதுரகபதாதிகளுடன் அழித்து அப்பதியைக்கடலுக் கிரையாக்கி ஜயவுற்சாகத்துடன் திரும்பிப் பூமண்டலத்தில்விளங்கும் தலங்களிற் சிரேஷ்டமாகவிருக்கும் திருப்பரங்குன்றமென்னும் தெய்வீகப்பதியைச் சேர்ந்தவரையிற்சொன்னோம் இனியாமெல்லோரும் கிருதார்த்தராதற்பொருட்டுக் குறைவற்றதவவிரதங்களைச்செய்த முயற்சியினால் இந்திரனானவன் புத்திரியாகப் பெற்றிருக்கும் தெய்வானையம்மனைச் சண்முகப்பெருமாளுக்குப் பாணிக்கிரகணஞ்செய்துக்கொடுத்த மகோற்சவச்சிறப்புகளின்சரித்திரங்களைப் பேசுவோமென்று சூதபுராணிகர் ஆரம்பித்தனர்.

## தெய்வயானையம்மை திருமணப்படலம்.

காய்ந்திடுதம்பகைகடந்துபொன்னகர்
வேந்தியன்முறையருள்வேற்கைவீரற்குக்
கூந்தலஞ்சிறுபுறக்குஞ்சரந்தனை
யீந்திடமகபதியிதயத்தெண்ணினன்.

வாரீர் நைமிசாரணிய வாசிகளே, மேற்குறித்தபடிக்கு நாற்றெட்டு யுகவரையிற் கொடுங்கோல்செலுத்திஜீவான்மாக்களை ஓரிடத்திற்றுபரித்து நிற்கவொட்டாமல் அலைத்துவந்த கொடியசெய்கையையுடைய சூரபதுமன் வம்சநாசமறக் கொன்று பொன்னுலகவாழ்வும் திரிலோகாதிபத்தியமும் பழையபடிக்குக் கிடைக்கச் செய்தருளும்தீனசரணியனாகிய வெற்றிவேலாயுதக் கடவுளுக்கு மேகத்தையொப்பக் கறுத்திருக்கும் அளகபாரத்தையும் இலக்ஷ மிக்குமேலாகிய சுந்தரத்தையும் படைத்திருக்கின்ற தன்புத்திரி தெய்வயானையம்மையைத் திருக்கல்யாணஞ்செய்துதர இந்திரன் விருப்புற்றவனாய் இந்தச் சுபவார்த்தையை மகாவிஷ்ணு பிரமன்முதலானவர்களுக்குத் தெரிவித்தமாத்திரத்தில் சந்தோஷசாகரத்தில் மூழ்கினவர்களாய்த் தேவராஜனே நீ நினைந்தகாரியம் மிகவும் நன்றாகவிருக்கின்றது குமாரதேவர் நம்மிடத்திற் பரிவாய்ச் செய்யாமற் செய்தவுதவிக்கு கைம்மாறு இதைத்தவிரவேறொன்றையுங்கண்டிலேம் மேலும்கருமணலை யொப்பவிளங்கும் கூந்தலைச்சீர்படுத்திப்பின்னலிட்டுச்சடைப்பில்லைமுதலிய அலங்காரங்களைப் பெற்று வனப்புக்கரசியாகவிருக்கும் அக்கன்னிகையும் சிவகுமாரனை வங்கணமாகக் கூடிப்பிரியாக் கிடையாய்க் களித்திருக்க வெண்ணி முன்னமே சரவணப் பொய்கைக் கரையினிடத்தில்அரிய தவவிரதங்களைச் செய்து பாலசுப்பிரமணியதேவரிடத்தில் வரபாலனத்தையும் பெற்றிருக்கின்றனள் அதன்பிரயோசனம் இக்காலத்தில் முடியவிருக்கின்றதெனமகிழ் சிறந்தவர்களாய்த் தேவேந்திரனைப்பார்த்துச் சேற்கெண்டையைப் போலப் பிறழ்ந்து காதளவுமோடிக் கறுத்திருக்கும் விழிகளைப்பெற்ற வுனது பெண்கொடியைக் கிரவுஞ்சபருவதத்தைப் பிளந்த வெற்றிவேலாயுதபாணிக்குத் துரிதமாய் வேதவிதிப்படிக்குத் திருமண முன்னிலையிற் றாராதத்தஞ் செய்யவேண்டும் முயற்சிகளை முடிக்கக் கடவையெனச்சொன்னவுடன் இந்திரனானவன்அதிகசந்தோஷத்துடன் பக்கத்தில் நிற்கின்றவேகமுள்ள தன்தூதனைப்பார்த்து மனோவேகத்தினுங் கடுகிப்போய் மகம்மேருபருவதத்தின் சாரலில் வாசஞ்செய்திருக்கின்ற நமதுபத்தினி இந்திராணியையும் சுபுத்திரியையும் இந்த நிமிஷத்தில் அழைத்துவரக் கடவையெனக் கட்டளையிட்டமாத்திரத்திற் றூதனும் மனப்பூரிப்புடன் இறைவனே யிதோகொண்டு வந்தனனெனப்பணிந் தோடி பொன்வரையைச் சேர்ந்து திரிலோகசக்கிரேஸ்வரன் மனைவியைக்கண்டுசேவித்தவனாய்த் தாயேதமது மனவிஷ்டப்படிக்குச் சகலகாரியங்களுங் கைகூடினஅவையாவையெனில்நமதுஜன்மவயிரிகளாய்த் தலைகாட்டவொட்டாமல் அலைச்சற்படுத்திவந்தகொடியபாதகன்சூரன் புத்திரமித்திரகளத்திராதிகளுடன் நாசப்பட்டான், உமதுமனதுக்கினிய திருக்குமாரன் சயந்தனும் தேவர்களும் குமாரதேவர்கடாட்சண்யத்தினால் வீரமாமயேந்திரபுரியிற் சிறைபட்டிருந்த காவல்நீங்கிப் பிதாவைச்சேர்ந்து களித்திருக்கின்றனன்.

இப்போது உபேந்திரர் பிரமன் முதலாகிய தேவர்களுடன் சிவசுப்பிரமணியக்கடவுள்பூலோகத்திற் சிரேஷ்டமாகப் புகழும் பெருமைபொருந்திய திருப்பரங்குன்ற மென்னுந் தெய்வீகத்தலத்தி லெழுந்தருளி மனவெழுச்சியுடன் வாசமாயிருக்கின்றனர் உமதுகணவனிந்த நிமிஷத்திற் றம்மையும் புத்திரியையும்தருவிக்கும்படிக்கிட்ட கட்டளையின்படிக்கு வந்தேன்,தீவிரமாய்ப் புறப்படுங்கோள் போவதற்கென்னும் சந்தோஷவார்த்தை செவிகளுக்க

முகமாகக் கேட்டமாத்திரத்திற்கம்புக்கரசியாகியஇந்திராணியானவள் அதுபரியந்தம்பீடித்து வாட்டியிருந்தமனக்கிலேசங்க ளனைத்துமொழிந்து கிடைத்தற்கரிய சந்தோஷப்பெருக்கி லழுந்தினவளாய்த் தங்களுக்குக் காவலாகப் போற்றியிருந்த அயிராவதத்தின்மீதிற் குமாரத்தியுடன் ஆரோகணித்து அக்காலத்திலிருந்த தேவரினங்களுடன் மகம்மேருச் சாரலைக் கடந்துவானவழிக்கொண்டுபோய்ப் பருவதங்களிற் சிறந்ததாய் மகத்துக்கள் தவசிரேஷ்டருக்கு வாசயோக்கிய மாகவுமிருக்கின்ற திருப்பரங்குன்றையடைந்து வெள்ளையானையை விட்டிறங்கி யானைக்கோடுகளைப்போல நிமிர்ந்து தங்கக்கலசங்களுக்கொப்பாக விளங்கிக்கொண்டிருக்கும் தனபாரங்களையுடைய குமாரத்தியுடன் தேவராஜன்வாசமாகவிருக்கின்ற வுப்பரிகையிற்போனகாலத்தில் மயேந்திரபுரியிலடைபட்டுப் பலநாட்களாக வருந்திவிடுபட்டு வந்திருக்கின்ற அரம்பையர் அதிகஆவலுடனெதிர்கொண்டு நமதிறைவியைக் கூடப்பெற்றதால் இனிசகல சவுக்கியங்களையுங் குறைவின்றிப் பழையபடிக்குப் பெற்றுவாழ்வோ மென்னுங்களிப்புடன் இந்திராணியினது பாதங்களில் தனித்தனிவணங்கி யெழுந்து கரங்களைக்கூப்பிக்கொண்டு பலவிதங்களிற் போற்றி வாழ்த்தி வானத்திற்பெருகும் மேகங்களின் வாய்களைக் திறந்து வெளியிடும் மின்னலின் பெருக்கைக்காணவெதிர்நோக்கியிருக்கும் மயிலினங்களைப்போலத் தங்க ளிறைவியின்மீதில் விழிகளைச் செலுத்திப் பேரானந்தத்தையடைந்துசூழ்ந்தகாலையில் இந்திராணியும் அவர்களிடத்தில் அதிகபிரியத்துடன் ஓ தேவகன்னியர்களே வெகுகாலம் கொடிய பாதகன் பட்டணத்தில அலைச்சற்பட்டிருந்தீர்களோ இக்காலத்தில் பாலசுப்பிரமணியக்கடவுளினது கடாட்சத்தினுல் நாமெல்லோரும் சகலதுக்கவருத்தங்களையும் போக்கி அல்லலற்றிருக்கும் பருவமும்நேர்ந்ததோ சிவபிரான் கட்டளையின்படிக்குச் சகல தண்டனைகளையும் அனுபவித்தோம் இனியதாப்பிரகாரம்நமதுபதவியைச்சேர்ந்துவாழ்வதற்கைய மில்லை பயப்படாதீர்களென்றுபலஆதரணைகளைச் சொல்லிக்கொண்டு மாளிகைக்குள்ளேபோய் ஓரிடத்திற்சேர்ந்து க்ஷேமலாபங்களை விசாரணைசெய்து கொண்டிருக்கு முன்னிலையில் ஒருவன் தரித்திரவானுய்உண்ண உடுக்கக்கிடையாமல் அல்லலிற்பட்டு வாடுகின்ற தருணத்தில் பரமன் கடாட்சத்தினுற் முன்முனந்தேடிவைத்திருந்த பொருள் தற்செயலாய்க் கிடைத்துக்களிப்பவனையொப்பச் சயந்தனுனவன் மாதாவின் வரவைத் தெரிந்து தாயைப்பிரிந்து கூடும்கன்றினும் அதிகஆவலுடன் நகைமுகனுய் ஓடோடியும் வருகின்றதிருக்குமாரனைப்பார்த்தவுடன் தேவாமுதங்கிடைத்தவளைப்போல மனம்பூரித்து வயிறுகுளிர்ந்து அதிகவுற்சாகத்துடனெழுந்து எதிரோடிஅழகிய கரங்களினுற் கட்டியணைத்து முத்தமிட்டு உச்சியைமோந்து தேகத்தைத் தடவிக் கொடுத்துத் தனது பட்டுத் தொங்கலினுல் முகத்தைத் துடைத்துக் கொங்கைகளிற் பால்பீரிட்டோடத்தக்கதாகத்தேகபரவசத்தளாய் என்னுசைக்குமாரனே கண்மணியே என்னன்பேசெல்வமே யெங்களைப்பிரிந்து தியங்கிப் பலநாட்கள் பாதகன் வசப்பட்டுக் கிலேசித்து என்னபாடுபட்டனையோஉன்னையொத்த ராஜபுத்திரனுக் கித்திங்குகளும் நேருவதோசிவன் செயலிப்படிக்கு மிருந்ததோ அப்பனே ஐயனே எனப்பரிந்து பேசிக்கொண்டுவருந்தருணத்திற்றாதனேடி இந்திரனுக்குப் புலோமிசை வரவைத் தெரிவித்த மாத்திரத்தில் ஆனந்தபரவசனுய்த் துரிதப்பட்டுவந்துதன்மனதுக்கினிய திருத்தேவியைக் கண்டவுடன் பசிப்பிணியினுல் யாதுங்கிடையாமற் சோபித்துவாடுகின்றவனுக்குத் தேடுதற்கரிய அமுதமானது எளிதிலுண்ணப்பெற்றுக் களைதெளிந்து மகிழ்பவனைப்போலவும் இன்பநலங்களை யனுபவித்துக் களித்தவனை நிகர்த்தும் தன்னையறியாதசந்தோஷப் பெருக்கினுழ்ந்து நெருங்கியவுடன்ஆலிங்கனஞ்செய்து விழிகள்களிக்கப் பார்த்துப் பெண்களரசே பொன்னுலகத்துக் கிறைவியே என்வாழ்வே நமதையன்கடாட்சவீட்சணிபத்தினுற் பகைவனையொழிந்து சவுக்கியத்திலிருக்குநாள் நேர்ந்தது, இனிமனச்சஞ்சலங்களைப்போக்கி மகிழ்ந்திருக்கக்கடவையெனப் பலபலசந்தோஷ வார்த்தைகளை யாடினன்.

சவுனகாதிரிஷிகளே, அக்காலத்தில்இந்திராணியும்,தேவராஜனும், சயந்தனும். மற்றதேவர்கள் அரம்பையர்கொண்ட சந்தோஷப் பெருக்கையிவ்விதமென்றுஒருவராலும் பேசிமுடிவதன்று சுகாதீதப் பேரின்பவாழ்வை யொருங்கெய்தப் பெற்றுக் களிப்பவரைப்போலத் தனித்தனியே க்ஷேமங்களைவிசாரணைசெய்துஒருவகையாய்ச்சந்தோஷவெறியைத் தெளிந்தகாலத்தில் தேவேந்திரன் மனவெழுச்சியுடன் அரியதவமுயற்சியினுற் பெண்ணுகக்கிடைத்திருக்கின்ற தெய்வயானையம்மனிடத்தில்மிகுந்தபட்சத்துடன் சிலபோது கொஞ்சிக்கொஞ்சிச் சுபகரமாய்வார்த்தையாடி யிருந்தபின்பு குமாரத்தியைச் சிவகுமாரனுக்குத்திருக்கலியாணஞ்செய்து கொடுக்க நினைந்திருப்பதைத் தன் தேவிக்குத் தெரிவித்தனன், அந்தச் சந்தோஷவார்த்தையைக் கேட்டவுடன் மனமகிழ்ந்து என்பிராண நாயகனே யிதுமிகவும் சுபகரமாக விருக்கின்ற படியால் காலதாமசஞ்செய்யாமல் விரைவில் முடிப்பதுஉத்தமமென வேண்டினள், உடனேதேவராஜன் அவர்களை அத்தலத்தில்நிறுத்திப்போயப் பிரமனுதிபதேவர்களைக் கலந்து தன்புத்திரியின் வரவைத்தெரிவித்தவனுப்த் தங்கக்கலசங்களையொப்பப் பூரித்துத் தேமல்பரந்திருக்கின்ற கொங்கைகளைப் படைத்திருக்கின்ற கன்னிகையைத் திருமண முன்னிலையிற் றத்தஞ்செய்ய விருக்கின்ற கருத்தைச்சரவணபவனுக்குத் தெரிவிக்க நினைந்தவனுப்ச் சகலருடனும் திருச்சபையைச்சேர்ந்து சிரோரத்தினங்களினுற் சோடித்திருக்கும் அரியணையிலெழுந்தருளி யிருக்கின்றஅறுமுகவனை விழிகள்களிக்கத் தரிசித்து அகமுகமலர்ச்சியுடன்சமீபித்தவனுப்ப் பரிமளமிகுந்த பாரிசாதமலர்களைக்கொண்டுதிருவடிகளில் அருச்சித்து மும்முறைவலம்வந்து தீர்க்கதண்டன்சமர்ப்பித் தெழுந்து கரங்களைக்கூப்பி விழிகளில் ஆனந்தவாரி பெருக்கெடுத்தோட மனப்பூரிப்புடன் இந்த விண்ணப்பத்தைச் செய்து கொள்ளுவதாயினன்.

அப்பனே நூற்றெட்டு யுகவரையில்கொடுங்கோலைச்செலுத்தித் தேவர்முநிவராதிய ரனைவர்களையும்அலைத்துஉலகங்களுக்கதிக உற்பாதங்களைச் செய்து கொண்டு ஒருவரையும் சட்டை பண்ணுமல் மகதயிஸ்வரிய செல்வவளங்களை யனுபவித்திருந்த சூரபதுமனைத்துணைவர்புத்திரமித்திரர்களுடன் வாட்டியதுமன்றியிற் கற்கம்பங்களை யொத்தபுஜங்களைப் பெற்று மன்னுயிரைவாட்டிவந்த அவுணப்பாதகர் பூண்டில்லாமல் வம்சநாசஞ்செய்து பலயுகங்களாக வீரமாமயேந்திரபுரியிலடைபட்டு வருந்தி யாதொ

ருகதியுங் காணுதவர்களாய் வாடியிருந்த அடியேன்குமா
ரனேயும் தேவர்பெண்டு பிள்ளேகளுடனும் விடுதலேசெய்
து சகலரையும் மனமகிழ்ச்சியுடனிருக்கக் கடாட்சித்தீர்
மேலும் முழுமையு மிழந்துபோன பொன்னுலகசாம்பி
ராச்சியத்தை நாயினேனுக்குத் தந்தீர்ஐயனே யித்தகைய
பேருதவிகளேச் செய்தாண்டகடவுளுக்கு அடியோங்களா
ல் முடிக்கவல்ல கைம்மாறுஇந்தவுலகங்களி லேதேனுமு
ண்டோ தமது திருவடிகளேப்பூசிக்க வகையறியாதயாகங்
ள் இப்படிக்கு நினேப்பது மிகவும் அபசாரமாக விருந்த
போதினும் புத்திரபாவகமாகத் திருவுளத்திற்கொண்டு அ
டியோங்கள் கோரிக்கைகளேத் திருச்செவிகளினேற்று அ
வ்வரத்தைத் தரவேண்டும் அஃதென்னேயெனில், எங்க
ள்முன்னவர்கள் செய்திருக்கின்ற தவங்களின்முயற்சியினு
லும்அடியேன் விரதபலத்தினுலும் புத்திரியாகப்படைத்
திருக்கின்ற கற்புக்கரசியாகிய தெய்வகுஞ்சரியைத் தேவ
ரீருக்குத் தத்தஞ்செய்து கொடுக்க விருப்புற்றேன் கிரு
பை யுற்று அக்கன்னிகையைத் திருக்கலியாணஞ் செய்
து வயிரஸ்தம்பத்தையொப்ப விளங்கும்தமதுதிருத்தோ
ள்கள் பூரிக்கத்தக்கதாக ஆலிங்கனஞ் செய்து நாயினேங்
கள் கிருதார்த்தரா யிவ்வரிய பிறவியிற்பெறவேண்டும் ப
லப்பிராப்தியைப்பெற்று வாழ்ந்து களிக்கும்படிக்குக் க
டாட்சிக்கக் கிருபைவைத்தாளும் கர்த்தனேயென்று பல
விதவுபசார வார்த்தைகளேப்பேசி யிரக்குமுன்னிலேயில்
தேவராஜன் பத்திக்கிரங்கிக்குமாரசுவாமியார் அவன்மீது
கடாட்சவீட்சணியத்தைப்பரப்பி ஓ இந்திரனே முன்ன
மே அப்பெண்கொடியானவள் திருக்கலியாணஞ் செய்யு
ம்பொருட்டு நம்மைக்குறித்துப் பலநாட்களரிய தவவிர
தங்களேச்செய்தனள், அதற்கிரங்கி அப்பேற்றினேக் கடா
ட்சித்திருக்கின்றனம் மேலும் இப்பொழுதும் நீயும்வரு
ந்திக்கேட்டுக் கொள்ளுகின்றனே ஆதலால் உங்களிருவர்
மனக்கருத்தின்படிக்கு நாளேக்கே திருமணவினேயை மு
டிக்கவிருப்புற்றனம், அதற்குவேண்டும் முயற்சிகளே வி
ரைவில்முடிக்கக் கடவையெனத் திருவாய்மலர்ந்தனர்.

அவ்வாக்கியத்தை யிந்திரன்கேட்டமாத்திரத்தில் மன
ம்பூரித்துத் தேகபரவசனுப் தன்னியனுனேன் மோட்ச
சாம்பிராச்சியத்தை யெளிதிற்பெற்றேனென்று மீட்டும்
ஐயன்திருவடிகளில் வணங்கிச் செலவுபெற்றுக் கொண்
டோடிப் பூதவீரர் காவல்கொண்டிருக்கும் கடைவாய்த
லினிடத்தில் நிற்கின்ற வேகமுள்ள தேவதூதனைப்பார்த்
து ஓ! சாரணர்களே நமது திருக்குமாரத்தியைத் தேவ
தேவோத்தமனுகிய பாலசுப்பிரமணிய சுவாமியாருக்கு
நாளேயத்தினம் பாணிக்கிரகணஞ் செய்து கொடுக்கவிரு
ப்பதால் நீங்கள் தீவிரமாகப்போய் திரிமூர்த்திகளில்முத
ன்மைபெற்றிருக்கின்ற சிவபிரான்வீற்றிருக்குந் திருக்க
யிலாயபருவதச்சாரலில் வாசஞ்செய்யும் பாக்கியத்தைப்
பெற்று இக்காலத்தில் பூமண்டலத்தை ஒருகுடைநீழலி
லாண்டுவரும் முசுகுந்தச்சக்கிரவர்த்திக்கும் மற்றவரசர்
கள் குறுநிலமன்னர் பிராமணசிரேஷ்டர் தவத்தர் பெரி
யோர்களாதியானவர்களுக்கும் விண்ணுடுகளில்வாசஞ்செ
ய்யாநின்ற தேவரினங்கள் திக்குப்பாலகர் சத்தரிஷிகள்மு
தலாகச் சொர்க்கமத்திய பாதலவெல்லேயில் வாசமாயிரு
க்கின்ற சகலருக்கும் நமதிறைவனுக்கு நாளேயதினம் நட
க்கவிருக்கின்ற திருக்கலியாணச்சம்பிரமத்தைத் தெரிவி
த்து அவர்களனேவரையும் பெண்டுபிள்ளேகள்முதலானவ
ர்களுடன் இக்குன்றினிடத்துக்குத் தீவிரமாய்வந்து சே
ரும்படிக்கு நாம்வேண்டிக்கொண்டதாகவும் சொல்லிப்
போட்டுத் துரிதமாய் வரக்கடவீர்களெனக் கட்டளேயிட்
டமாத்திரத்திற் நமதிறைவனேச் சேவித்துப் பணிவிடை
யின்படிக்கு முடித்துவரக்கடவோமென விண்ணப்பஞ்
செய்தவர்களாய்த் தட்சணத்தில் மனேவேகமும் வாயுக
தியும் பிற்பட்த்தக்கதாக வோடினர் இவர்கள்சென்றபின்
பு இந்திரன் தன்மரபுக்குரிய சிற்பியாகியமயனேத்தருவி
த்துப் பரிமளமிகுத்தகடப்பமலர்மாலேபுரளும் புயாசல
ங்களேயுடைய பாலசுப்பிரமணியதேவருக்கு நடக்கவிருக்
கின்ற மணத்துக்குத்தக்ககலியாணமண்டபம்இந்தமகோ
ற்சவத்தைத்தரிசிக்கவரும் விண்ணுட்டினர்பூமண்டலவா
சிகள் பாதலத்தினர்முதலானவர்கள் வீற்றிருக்கயோக்கிய
மாகியவிடங்கள் விடுதிகளாதியவற்றைச் சாத்திரவிதிப்ப
டிக்குப் பொன்னுலகமும் நாணும்படிக்குத் தீவரமாய்
முடிக்கக்கடவாயெனப் பேசியகாலத்தில் அதிகமகிழ்ச்சி
யையடைந்தவனுப் இந்தபணிவிடையைச்செய்தற்குஅடி
யேன்என்னதவஞ்செய்தேனேவென்றேத்தி யிந்தநிமிஷ
த்தில் தமதிஷ்டப்படிக்குச் செய்யக்கடவேனெனச் செல
வுபெற்றுப்போய் அவ்வரையின்பக்கத்தி லோரிடத்தைக்
குறித்து அவ்வெல்லேயைச்சூழவரப் பருத்தோங்கி யிரா
நின்றமதிலேயெழுப்பி நாற்புறங்களினும்விசித்திரமாகவி
ளங்கும்கோபுரவாயில்களேத்தூக்கி அதனுட்புறத்திற்கலி
யாணமகோற்சவத்தைத் தரிசிக்கவரத்தக்கவர்கள்மனவெ
ழுச்சியுடன் வாசஞ்செய்யும்படிக்கு மாடமாளிகைஉப்ப
ரிகைமேடைசாலேகள்முதலியவற்றை வரிசைப்படச்செய்
து விசாலமாய் நீண்டிருக்கும் வீதிகளேப்பிரித்து மத்தி
மத்தியிற் சித்திரகூடங்கள் பளிங்குமண்டபங்கள் சந்தி
ரகாந்தத்திண்ணேகளாதிய சிறப்புகளேப்படைத்துக் கலி
யாணத்துக்குவேண்டும் பதார்த்தங்களே வைக்கத்தக்க ப
ண்டாரங்கள் அறைகள்விதங்களே முடித்துத் தாமரைஅ
ல்லிமுதலிய புஷ்பங்கள் மலிந்திருக்கும் தடாகங்கள் சித்
திரக்குளங்கள் ஓடைகள் கேணிகளேயும் வானத்தையளா
வத் தழைத்தோங்கிக் குளிர்ந்தநிழலேப்பரப்பிக் கனிவ
கைகளேக்கொண்டிருக்கும் சோலேகள் தோப்புகள்திவ்வி
யபரிமளமிகுத்த பற்பலவிதபுஷ்பசாதிகள் மலிந்திருக்கு
ம் நந்தவனங்கள்பூங்காவுகள்முதலியவைகளேச்சிருஷ்டித்
துமுடிந்தவுடன் இவற்றிற்கு நடுப்பிரதேசத்தில் மணச்
சடங்கு முடித்தற்குக் கலியாணமண்டபத்தை விசாலமா
கப்படைத்து அதன்மத்தியில் நவரத்தினமயமாகிய சிங்
காதனமொன்றைச் சித்திரவிசித்திரங்களாகச்செய்து அ
தைச்சூழ மகாவிஷ்ணு, பிரமன், உருத்திரன்,இந்திரனு
தியதேவர்கள், முநிபுங்கவராதியர் களித்திருக்கத்தக்க பீ
டங்களே வரிசையாகப்பரப்பி முத்துமாலேகள் புஷ்பச்ச
ரங்கள் மயிற்பிஞ்சங்கள் வஸ்திரத்தொங்கல்கள் விதங்க
ளேப் பலநிறப்பட்டினுற் சோடித்திருக்கின்ற விதானங்க
ளினும் சொர்னமயமாகத்தோற்றும் மண்டபமேற்பரப்
புகள்முதலிய விடங்களிற்றொங்கவிட்டுப் பொற்பாவைக
ள்சித்திரப்பிரதமைகள் நிலேக்கண்ணுடி களிவற்றைச்சுவ
ற்புறங்களினும் பருத்தோங்கிநிற்கும் பலவிதத்தூண்க
டோறும் பதித்துஓமகுண்டம் அதைச்சூழவரவேதிகை
முதலிய கிரமங்கள் மற்றும் வேண்டுவனவனத்தையும்சீ
ர்பெறப்படைத்து இவ்விதமாகச் சகலமும் முடிந்தவுட
ன் மனச்செருக்குடன்மயனுனவன்வந்துதேவேந்திரனேக்

கண்டு ஆக்கியாபனப்படிக்குச் சகலவளங்களையும் பெற்றிருக்கின்ற கலியாணமண்டபம் மற்றவுபகரணங்கள் யாவுங் குறைவரச்செய்தாயிற்றென்று அறிக்கையிட்டமாத்திரத்தில் தீவரப்பட்டுவந்து அதின் சிறப்புகளைக்கண்டு அதிகசந்தோஷத்தைப்பெற்றவனுய்த் தேவதச்சன்கைத்தொழிலுக்கு மெச்சிக்கொண்டாடி தட்சணத்திற் சிலகாரியப்பேனாத் துரத்தி வானகங்கையைத் தருவித்தும் தருப்பை-மாவிலை-சமித்துமுதலிய ஓமதிரவியங்களை சேகரித்துக்கொண்டு வாழை-கமுகு-தெங்கின்குலைமுதலியசிறப்புகளை வேண்டுமிடங்களில் அணிபடநாட்டுவித்துவீதிகள்தோறும் பனிநீரையிறைத்துப் புழுதியையடக்கியும் கலியாணமுற்றமெங்கணும் சந்தனக்குழம்பினுல் மெழுகிட்டு அழகியகோலங்களையுமிடுவித்துப் பாலிகைகரமாதியதினுசுகளைத் தேடிவைத்துத் திருவிளக்குப்பலவிளக்குக் குடதீபமாதிய சோதிகளையேற்றிவைத்து இவ்விதமாகக்கலியாணச்சடங்குகளைமுடிப்பித்துக்கொண்டுதேவேந்திரன் சருவசாக்கிரதையுடனுந் திரிந்துதிரிந்து பார்த்துவருகின்றபோது மேல்நடந்தசேதிகளையும் சொல்லக்கேட்பீராக முன்னம்தூண்டிய தேவதூதர் விரைந்தோடிச் சிவசுப்பிரமணியதேவருக்கும் கற்புக்கரசியாகிய தெய்வயானையம்மைக்கும் திருக்கலியாணம் நாளைப்பொழுதில்நடக்கின்றதென்று வானநாடருக்கும் பூமண்டலவாசிகளுக்கும் பாதலத்தில் வாசமாயிருக்கும் நாகராசாக்களுக்கும் மற்றுமுண்டான சகலருக்கும் தெரிவித்தவர்களாய்ச் சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலத்தை ஒருகுடைநிழலிற்படுத்தி மன்னுயிரைத் தன்பிராணனைப்போலப்பாதுகாத்துச் செங்கோலைநடாத்தும் நீதிபரனுய் அந்தவிவாகமகோற்சவத்தைத் தரிசித்து வாழவேண்டுமென்னுமெண்ணங்கொண்டு பிரயாணப்பட்டுவருகின்ற முசுகுந்தச்சக்கிரவர்த்தியின் வரலாற்றைத்தெரிந்தவரையிற்சொல்லக்கேட்பீராகவென்று சூதபுராணிகர் மனவெழுச்சியுடன் நைமிசாரணியவாசிகளுக்கு வெளியிடுவதாயினர்.

அஃதென்னவெனில் ’கல்லென்னுமோசையைக்காட்டிப் பளிங்கையொப்பவெளுத்து மணிகளைவாரிக்கொண்டிழியும் அருவிகள்பெருக்குத் தாவள்ளியமாகப் பிரகாசத்தினைவீசி மகத்துக்களுக்கிருப்பிடமாக விருக்கின்றசிறப்பினைவாய்ந்த திருக்கயிலையங்கிரியின் சாரல்களிற்றழைத்தோங்கிக் குளிர்ந்தநிழலைப்பரப்பிப் புஷ்பக்கொத்துகளையுங் கனிவகைகளையும் பெருக்கித் தேன்களையும் பொன்னையொத்த மகரதந்தத்தையுமிறைத்துப் பரிமளத்தைவீசியிராநின்ற கொன்றை-வில்வம்-குருக்கத்தி - புன்னை-பாதிரி-பாரிசாதம்- அரிச்சந்தனமாதிய சிறந்ததருக்கள்மலிந்ததாயிருக்கின்ற நந்தவனங்கள் சோலைகள் காவுகளினென்றில் காளகண்டமூர்த்தியாகிய பரமசிவம் மனவெழுச்சியுடன் பார்ப்பதியாரைக் கைலாகுகொண் டழைத்துப்போய் அதன்வளங்களைச் சுற்றிப்பார்த்துக்கொண்டு வருமுன்னிலையில் எதிரில்நேர்ந்த திவ்வியபரிமள புஷ்பவகைகளைப்பறித்து மாலைதொடுத்துத் தமதுதிருத்தேவியினது கொண்டையிற்சூடியும்தண்டைமாலைகளைக்கட்டிமார்பிலணிந்து கரங்களிற்றரித்தும் புன்னையாதியமலர்களைப்பறித் தொருவர்மீதொருவ ரிறைத்துக்களித்தும் அச்சோலையிற்றோற்றும் சிங்காரங்களைப் பராசத்திக்குக்காட்டிநகைமுகராய்ச்சென்றும்கனிவிதங்களைக்கொய்துகொடுத்தும் பளிங்குப்பாறைகளினுற் செய்தமைத்தபடிகளுள்ள சித்திரக்குளத்திலாடியும் அதிற்பிரகாசித்திருக்கும் பொற்றாமரையாதிய புஷ்பங்களின் வனப்பைக்காட்டியும் அன்னங்கள்முதலிய பட்சிசாதிகளின் மிருதுவாகிய தொனிகளைக்கேட்டுமகிழ்ந்தும் இவ்விதமாகக் கரங்களைக்கோத்துக்கொண்டு வங்கணமாக வுலவிவருந்தருணத்தில் தங்களுக்கெதிரில் தளிர்களைவிரித்துக் கவிந்து பரிமளித்ததாய்க் குளிர்ந்தநிழலைப்பரப்பி நிற்கின்ற வில்வமரத்தினடியிற்சேர்ந்து சந்தோஷவார்த்தைகளையாடிக்கொண் டிருக்கின்றபோது பருத்துநீண்டிருக்கின்ற அதன்கிளைகளிற் பலமுசுக்கூட்டங்கள்களித்துக் குலவியிருக்கின்றவைகளினென்று முற்பவத்திற்செய்த நல்வினையின் பிரயோசனத்தினுல் வில்வப்பத்திரங்களைப்பறித்துப்பறித்துக் கீழ்ப்புறத்திலெழுந்தருளியிருக்கின்ற அம்மையப்பர் சிரங்களிலிடைவிடாமற்போட்டுக் கீச்சுக்கீச்செனக் கூவிப் பற்கள்விளங்கநகைத்துக் களித்துக்குதித்துப்பத்திரங்களை மேன்மேலுஞ்சொரிந்து வருகின்றகாலையில் தங்கள்களியாடலுக்கு விருத்துவமாகச்செய்துவரும் அதன்உபத்திரவத்துக்குப் பரமேஸ்வரிசகிக்கமாட்டாதவளாய் உருத்துப்பார்த்துக் கோபித்தகாலத்திற் றமதுதேவியின்கருத்தைச் சிவபிரான்தெரிந்து ஓநாயகி சினங்கொள்ளவேண்டாம் நம்மிடத்திற் பிரீதிபத்தியுடன் அருச்சனைவழிபாடுகளை நடாத்திவரும் முசுக்களுக்கரசின்மீது சீறுவார்களோ க்ஷமித்தருள்கவெனத் திருவாய்மலர்ந்தவுடன் கிருபைமேலிட்டு அருள்நோக்கைக்காட்டினள் உடனே ஞானநாயகனுகிய சிவக்கொழுந்துக்கு அதிகபட்சமுண்டாய் தங்களிருவர்மீது மனவெழுச்சியுடன் வில்வார்ச்சனைசெய்துவரும் முசுவின்மையலையொழித்துப் பேரறிவைவிளக்கிக்கிருபாநோக்கத்தையும்பாலித்தமாத்திரத்தில் அஞ்ஞானவிருளகன்று ஞானமுண்டாய்நடுங்கித் துரிதமாய் விருட்சத்தைவிட்டிறங்கி அதிகமனவருத்தத்துடன் தேகத்தையொடுக்கி அன்னையப்பரை வலம்வந்து மும்முறைவணங்கிநின்று கரங்களைக்கூப்பிக்கொண்டுஇதனைவிண்ணப்பஞ்செய்கின்றது.

ஓலோகநாயகனே, தீனசரண்ணியனே அடியவருக்கெளிவரும் பரமே நல்லுணர்ச்சியென்பது சற்றுமில்லாத மிருகசாதியிலுதித்துச் சத்கருமங்களைச்செய்ய வறியாத பாமரனுகிய அடியேன்முடித்த இக்குற்றங்களைத் திருவுளத்திற்கொள்ளாமல் தீனனிடத்தி லிரக்கமுற் றிரட்சிக்கவேண்டும் அல்லது மகாபாதகங்களுக்காளாய் ரவுரவாதிநரகக்கும்பியிற்பட்டு இதனிலு மிழிபிறப்பெய்தி வாடவரும் ஓதயாநிதியே சரணம் சரணமென்று மனக்கலக்கத்துடன் பற்பலவிதங்களிற்போற்றி வாடுகின்றமுன்னிலையிற் சிவபிரான் அதன்பத்திவினையங்களுக்குமெச்சி அதிகதயவுடையவராய் அந்தமுசுவைப் பிரியமாகப்பார்த்துநீ மனம்வருந்தவேண்டாம் கொடுமைசெய்யினன்றே பொறுமைகேட்டுக்கொள்ளவேண்டியது நமக்குவப்பாகவிருக்கின்ற பரிமளமிகுத்த வில்வதளங்களினுல் நம்மிருவரையும்சிறந்த அருச்சனைவழிபாடுகளைச்செய்தாய் இப்பேற்றினுற் பிராரத்வவினை முற்றினுமொழிந்து பரிசுத்தவானுய்ச் சமுத்திரஞ்சூழ்ந்திருக்கின்ற பூமண்டலமுழுமையும் ஏகச்சக்கிரத்தைச்செலுத்திச் செங்கோன்மைமுறையினுல் மன்னுயிரைக்காத்துவந்த மனுச்சக்கிரவர்த்திமரபில் அவதரித்துச் சக்ரேஸ்வரனுய்ச் சகலரும் வணங்கிப் போற்ற அகண்டயிஸ்வரியச் செல்வங்களை யனுபவித்து

மண்ணுலகமுற்றினும் ஒருகுடைநிழலிற்படுத்தியாளும்
பேற்றையும்பெற்ருய் இவையன்றியும் நம்மிடத்தில் மெ
ய்ப்பத்தியுண்டாய் வீறிவாழும் சம்பத்தையுந்தந்தனமெ
னத் திருவுளம்பற்றிய பேருளைக் கேட்டமாத்திரத்திற்
சோரனைகவிருப்பவன் சடுதியிற் காவலர்வசப்படுவனகிற்
றியங்கி மதிமயங்கிப் பிரமித்து மிரளமிரள விழிப்பதை
ப்போல மிகவும் மனம்வருந்தித் தேகமுற்றும் வியர்க்கந
டுடுங்கித் துக்கசாகரத்திலழுந்திச் சோர்ந்ததாய்ப் பெரு
ங்காற்றிற்பட்டுச்சாயுங் கற்பகத்தருவையொப்பச் சிவபி
ரான் பாதகமலங்களில்விழுந்து பலதரம்சேவித்துக் கர
ங்களைக்கூப்பிக்கொண்டு விழிகளில் நீரைப்பெருக்கிக்கை
கால்களுதறலெடுக்க வாய்புலர்ந்து நாத்தடுமாறிச் சொற்
களும் தவறத்தக்கதாய் இதனைமுறையிடுவதாயிற்று.

ஓவிஸ்வநாதனே, அன்பருக்கெளிவரும் குணக்குன்ற
மே, கிருபைக்கடலே, சச்சிதானந்தமூர்த்தியேயென்றுப
லவிதங்களிற்போற்றி ஐயனே, ஒப்பற்ற இந்தத்திருக்க
யி லாயத்தைச் சூழவிளங்கும் வனத்தில் வாசமாயிரு
க்கும் பேற்றைப்பெற்றும் உமாபரமேஸ்வர முகுர்த்த
மாகத்தோற்றுந் தேவரீர் மங்களக்கோலத்தை எக்காலத்
தும் விழிகள்மனமுங் களிக்கத்தக்கதாகத் தரிசித்துஜநந
மரண துக்கத்தைப்போக்கித் தமதுதிருவடிகளின் நீழ
லிற் சுகாதீதச்செல்வங்களை யனுபவித்துக் களிக்கவிருக்
கின்ற நாயினேன் இந்தச்சிறந்ததலத்தைநீங்கி அல்லலு
க்கிருப்பிடமாகும் பூமண்டலத்தில் அற்பவாழ்வையுடை
ய மானிடர்கர்ப்பசம்பவப்பட்டு வருந்தியோனித்தழும்பு
ண்டுதித்து அநித்தியமாகிய சிறுவாழ்வென்னும் கவலை
யிற்பட்டு அஞ்ஞானியாய் மதிமயங்கி ஆணவமலத்துக்கு
ள்ளாயுழலப் பெறுவேனயின் எமதிறைவனே யினிஎவ்
விதத்தில் அத்தொடக்கைக்கடந்து பிழைக்கவல்லேன்மீ
ட்டும் இச்சிறந்ததலத்தை எக்காலத்திற்சேர்ந்து களிக்க
ப்பெறுவேன் ஓபரமனே, இந்தஅபலச்செல்வத்தைவே
ண்டேன்வேண்டேன் தமதுதிருவடிச்சேவையையே யிச்
சித்திருக்கின்றனனென்று மிகவும்வருந்திக்குறையிரந்து
வாடுகின்ற முசுவினிடத்திற் பரிவாய் நம்மிடத்தில்உனக்
கிருக்கின்ற அன்புக்குமெச்சினேம் நமதுவாக்கியம்பொ
ய்படாதாகையாற் சிலகாலம் பூமண்டலத்திற் சக்கிரவர்த்
தியாய் நல்லறிவையும் நமதிடத்தன்பையும்பெற்று வாழ்
ந்திருந்தபின்பு யதாப்பிரகாரம் இந்தவெள்ளியங்கிரியை
ச்சேர்ந்து மகிழ்வை யினிமனச்சோர்வுடன்யாதினையும் நி
னைக்கவேண்டுவதில்லையெனத்தேற்றிப் பேருளைச்செய்
தகாலத்தில் உமாபரமேஸ்வரனா மீட்டும்வணங்கிமுசுவ
ரசானது இதனைவிண்ணப்பஞ்செய்கின்றது.

தேவதேவோத்தமனே தேவரீர் கட்டளையின் படிக்கு
ப்போய் வரக்கடவே னயினும் ஒருவரபாலனத்தைத்
தந்தருளவேண்டும் அஃதென்னை யெனில் நீரினிடத்திற்
றோற்றும் குமிழியைப்போலவும் மின்னலையொத்தும் நி
லைபெருமலிருக்கும் புலால்நாறுமுடலை மெய்மைப் பட்
டதாகக் கருதிப்போற்றிச் செல்வச்சம்பத்திலாழ்ந்து தா
ய்தந்தைய ரென்றும் புத்திரமித்திர களத்திராதிக ளென்
றும் பாசத்தழுந்தியானென தென்னும் மமதையிற்பட்டு
மதிமயங்கி அஞ்ஞானியாகாமற் படிக்கு இந்த முகத்துட
னுதித்துப் பழையஅறிவுடன் நன்னெறிகளை யனுஷ்டித்
து தேவரீரிடத்தில் மெய்ப்பத்தி விளங்கிக்கிருதார்த்தனு
கத்தக்கப் பேற்றினைத் தந்தாளவேண்டுமென்று போற்று
கின்ற முசுவினிடத்தில் அன்பால் உன்கோரிக்கையின் ப
டிக்குத் தந்தனமென்று திருவாய்மலரக்கேட்டவுடன் தே
கம்பூரித்துமனவெழுச்சியுடன்சங்கரனைப்பணிந்து விடை
பெற்றுத் திருக்கயிலாயச் சாரலில்விளங்குஞ்சோலையைக்
கடந்து சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலத்தில்வந்து சத்தி
யசந்தனுய் அரசுசெலுத்தி வந்தமனுச்சக்கிரவர்த்திமரபி
ல் ஜயசாலியாய் நன்னெறிகளை யனுசரித்துப்பூபாரத்தை
த் தவிர்த்தாண்டுவந்த திலீபனென்னும்சக்கிரவர்த்திக்கு
ம் சத்தரிஷிகளி லொருவராகிய விசுவாமித்திரர்வஞ்சகத்
தினல் அரசுரிமையை யிழந்துசகலசெல்வங்களையும் பறி
கொடுத்து வறியனுய்ப் பதியையும் நீங்கி நிறையொழுக்க
ங்களைமறந்து படாதபாடுகளைப் பட்டுப் பெண்டு பிள்ளை
யைத் துறந்து தகாத வீனத்தொழிலைச் செய்யவரினும்
சொன்னசொல்லை மருமல்பாதுகாத்துச் சத்தியவாசக அ
ரிச்சந்திர னென்னும்திருநாமத்தை உலகமுள்ளளவும் நி
லைபெறநாட்டிய சக்கிரவர்த்தியினது சகோதரியாகியமங்க
லவதியென்னும் பட்டபூதேவிக்கு நல்ல சுபமுகுர்த்தத்தி
ல் முசுமுகத்துடன் சுந்திரமுள்ளமானிடதேகத்தைப்பெ
ற்றுத் தோற்றிச்சகலசீர்சிறப்புகளுடனும் வளர்க்கப் பெ
ற்றுச் சாத்திரங்களெவற்றினும் சம்பன்னனுய் தனுர்வித்
தைமுதலிய ராசயோக்கியங்களைப் பூரணமாகக் கற்றுச்ச
த்துருக்களைவாட்டிச் சர்ஜனரைப்பரிந்துபோற்றித் தன்கு
டைநிழலிற்பட்ட பிராணிகளைத் தன்னுயிரினும்மேலாக
ப்போஷித்துப் பூமண்டலமுற்றினுக்கும் சக்கிரவர்த்தியா
ய்ஐம்பத்தாறுதேசத்து இராஜாக்களும்கப்பங்களைச் செ
லுத்திப் போற்றிவரத்தக்கதாக அரசுசெலுத்தித் தன்மா
துலனுகிய அரிச்சந்திரன் புத்திரியாய்க் கற்புக் கருந்ததி
யைப் போலவும் சுந்தரத்தில் இலட்சுமிக்குமேலாகவும் ச
கலசுபகுணங்களையும் பெற்றிருக்கும் விசித்திரவதியென்
னும் இராஜபுத்திரியைத் தேவப்பிராமணர் சாட்சியாய்ச்
சகலாடம்பரங்க ளுடனும் திருக்கல்யாணஞ் செய்துகொ
ண்டு முசுகுந்தச்சக்கிரவர்த்தியென்னும் திருநாமத்தைப்
பெற்றுநீர்வளம் நிலவளம் குடிவளமுதலிய சிறப்புகளை
யும் அஷ்டலட்சுமிகள் குதிகொண்டிருக்கும் செல்வங்க
ளையும் பெற்றுச் சிவாலயங்கள்மலிந்து தென்பிரதேசத்தி
ற் சகலரும் புகழவிளங்கும் கருவூரென்னும் சிறந்தபட்ட
ணத்தை யிராஜதானியாகக் கொண்டுவீற்றிருந்து பிராம
ணரைப் பூசித்தும் அதிதிகளைப் போஷித்தும் சோடசம
காதானங்களை மேகங்களைப் போலவும் கற்பகத்தருக்களை
யொப்பவும் வழங்கி ஆலயங்கடோறும் திருவிழா முதலி
ய சத்கருமங்களை நடாத்திவரும் சக்கிரேஸ்வரனனவன்ப
ரமசிவத்தின் கடாட்சத்தினும் கிடைத்தற்கரிய செல்வப்
பெருக்கைப்பெற்று ஆயிரத்தெட்டண்டங்களுக்கும்அதி
பனுய்த் தினராகிய தேவர்களைவாட்டித் தகாதவல்களை
க் கொண்டு மன்னுயிரையலைத்துக் கொடுங்கோல் செலுத்
திவரும் சூரபதுமன்ஆணை ஆக்கினைக்கடங்கி வாழ்ந்துவ
ருகின்றகாலையில் பரமசிவத்தின் நுதல்விழியிற் றிருவவ
தாரஞ்செய்த பாலசுப்பிரமணியதேவர் கொடியபாதகனு
கியசூரபதுமனை வம்சநாசப்படுத்திய சேனைகளைத் தெரிந்
துமுன்னம் இந்திரனுற்கண்டிக்கப்பட்ட சிறைகைப் பெறு
மாயின் மேருகிரிக் கெத்தகையசந்தோஷமுண்டாகுமோ
அதனிலும் பதின்மடங்குமனமகிழ்ந்துசகலதுன்பங்களை
யும் போக்கி ஜயசாலியாய் நவரத்தினமயமாகிய சபாமண்
டபத்தில் விளங்கும் அரியணையில் வீற்றிருந்து ஐம்பத்

தாறு தேசத்துராஜாக்களும் போற்றிவாழ்த்தவும்மந்திரி
பிரதானிகள் களித்துச்சூழவும் படைவீரர் வீரசிங்கங்க
ளைப்போலப் பரந்திருக்கும் பட்டுவர்புகழவும் கட்டியக்
காரர் எச்சரிக்கையைச் சொல்லிவரவும் கவிவாணர்பாவி
னங்களைச் சாற்றிநிற்கவும் வெண்பட்டினாலும் முத்துச்ச
ரங்களினாலும் அலங்கரித்திருக்கின்ற பூச்சக்கிரக் குடை
யானது நவரத்தின கசிதமாகிய கிரீடத்தின்மீதிற் சந்திர
னையொப்பக் கவிந்திருக்கவும் வெண்சாமரைகளையசைக்க
வும் அருகுகள் ஆலவட்டங்களைத்தாங்கிப் பணிமாறவும்
தேவகன்னியரை யொத்த சுந்தரவதிகளாகிய நாடகப்பெ
ண்கள் பரதநாட்டியங்களைச் செய்துவரவும் மற்றுமிராநி
ன்ற இராஜசின்னங்கள் பெருத்திருக்க இத்தகைய வைப
வங்களின் மத்தியில் இராஜவிசாரணைகளைச்செய்து செங்
கோன்முறையே நீதிகளைநடாத்திவருகின்றகாலையில்தேவ
ராஜன் தூண்டியதூதர்கள்ஆஸ்தானமண்டபத்தைச் சே
ர்ந்து செந்தாமரைமலர்களுக்குச் சமமாகிய திருவடிக
ளிற் பணிந்துபோற்றிச் சுவாமி தேவரீருக்குப் பிராணப
தமாகிய சிநேகிதன் இந்திரன்செலுத்திவந்த தூதராகும்
உமதுசுற்றத்தினருடன் மனமகிழ்ந்து செல்வம் நீடித்து
வாழ்விலிருத்தும் சுபகரமாகிய திருக்கலியாணமகோற்ச
வச்சேதியை அறிக்கையிடவந்தனம்.

அஃதென்னை யெனில் ஆயிரத்தெட்டண்டங்களுக்கதி
பனாய்ச் சகலரும்வணங்கியேத்தக் கொடுங்கோலைச் செலு
த்தித் தேவரைச்சிறை படுத்தி யிருந்த சூரபதுமனையும்
துணைவர் புத்திரமித்திர களத்திராதிகளையும் கணக்கிறந்
த வெள்ளம் ரதகஜதுரகபதாதிகளுடன் வகையறமாளும்
படிக்குப் பாலசுப்பிரமணியதேவர் சமர்செய்துவிஜயத்து
டன் தென்பூமியில் விளங்கும்திருப்பரங் குன்றமென்னு
ந் திவ்வியஸ்தலத்திற் பிரமன் விஷ்ணுஇந்திரன் முதலா
கிய தேவர்களுடன் வந்திருக்கின்றனர், இத்தகைய பெரு
தவியைச் செய்த சிவகுமாரன் சுந்திரவடிவுக்கும் மங்கள
குணாதிசயங்களுக்கும் இந்திரன் காமுற்றவனாய்த்தான்மு
டித்த அரியதவமுயற்சியினாற் பெற்றிருக்கின்ற புத்திரி
தெய்வயானை யம்மையைச் சரவணபவனுக்கு நாளையத்தி
னம் திருக்கலியாணஞ் செய்து கொடுக்கும்படிக்குப்பமித்
துச் சகலசாக்கிரதைகளும் நடந்துவருகின்றது, இந்தச்சு
பவார்த்தையைத் தேவரீருக்குத் தெரிவித்து வரும்படிக்
கெங்களைச் செலுத்தினர், கற்பனையற்ற கடவுளுக்குநடக்
கவிருக்கின்ற இந்த விவாகச்சம்பிரமத்தைத் தமதுபந்து
வர்க்கங்கள் சதுரங்க சேனைகளுடனும் வந்து தரிசித்துப்
போகவேண்டும் காலதாமசஞ்செய்யாமல் பிரயாணப்பட்
டு செல்வவளங்களில்மிகுத்து இயலிசை நாடகமென்னும்
முத்தமிழை வளர்த்துவரும் மதுரைமாநகருக்கடுத்து வி
ளங்கும் தெய்வீகம்பொருந்தியதிருப்பரங்குன்றத்துக்கெ
ழுந்தருள வேண்டுமெனத் தூதர்கள் மனவெழுச்சியுடன்
சொன்னகாலத்தில் முசுகுந்தச் சக்கிரவர்த்தியானவர் அச்
சுபமொழியைக் கேட்டமாத்திரத்தில் மனம்பூரித்துச் சந்
தோஷம்பெருத்து மீறுவதைப்போலத் தேகம் குதுகுலி
த்து மயிர்சிலிர்க்க விழிகளில்ஆனந்தவாரியைப்பெருக்கி
மனமகிழ்ச்சியுடன் சிங்காதனத்தை விட்டிறங்கி வாருங்
கோள் வாருங்கோளென்று தூதருக்கருகில்வந்துஆசானு
பாகுவாகத் தாழ்ந்திருக்கும் கரங்களை நீட்டிமார்பிற் சேர்
த்தணைத்துக் கொண்டவராய்ச் செவிக்களுக் கமுதமாகச்
சொரிந்த தேவாதிதேவன் திருக்கலியாணத் துடக்கத்தை
க்கெட்டுக் கிருதார்த்தனாகிய நான்உங்களுக்குத் தரவல்ல
பொருளென்னிடத்தென்ன விருக்கின்றது நமது சுற்றத்
தினு மினிய தூதர்களேஎங்கள்முன்னோர்கள் பலகாலமாக
த்தேடிப் பண்டாரங்களிற்சேர்த்து வைத்திருக்கும்திரவி
யங்கள் மணிகள் முதலானதைக் கொண்டுபோகச் சம்மத
மோ பூச்சக்கிரக்குடையைப்பெற்றுப்போகச்சம்மதமோ
வெண்சாமரை ஆலவட்டம்இவ்வித ராஜசின்னங்களைத்த
ருதுமோ பூர்வாபூர்வீகமாய் அரசுசெலுத்திவந்த பூமண்
டலமுற்றும் பெற்றுப் போகவிஷ்டமோவுங்கள் மனதில்
விரும்பியதைப் பயமற்றுத் தடையின்றி கேட்கக்கடவீர்
கள் இதோதரக் காத்திருக்கின்றேனென மனப்பூரிப்புட
ன் இன்னதைச் சொல்லுகின்றேமென்று யாதுந் தோற்
றுமற் பேசிய காலத்திற் றூதர்கள் அதிசயித்துச் சக்கிர
வர்த்தியினது உதாரத்துவத்தையும் செருக்கையும் தயா
ரசத்தையும் மதித்துக்கொண்டாடி யிராஜாதிராஜனே த
ம்மையொத்த பிரபுக்கள் சொல்லியசேதிகளை யறிக்கையி
ட்டுத்திரியும் ஈனத்தொழிலைப் பெற்றிருக்கின்றஅடியோ
ங்களுக்குத் தேவரீரிக்காலத்திற் கொடுக்க யத்தனித்திரு
க்கின்ற செல்வங்க ளெடுப்பதோ தமது பந்துவர்க்கங்களு
டன் பிரயாணப்பட்டுப்போய்த் தேவேந்திரனைக்கண்டுவா
ர்த்தையாடுவீராகில் இப்போது குறித்தவளங்களிற் பதி
ன்மடங்கு தயைசெய்ததாகும் சக்கிரவர்த்தியென்பதுஉம
க்கே தகும் நாங்கள்திரியாத விடமொன்றுமிராது இதுப
ரியந்தம் தம்மை யொத்த உதாரகாம்பீரியப் பிரபுக்களை
க் கண்டதில்லை. இராஜபரமேஸ்வரனே அஷ்டலட்சுமிக
ள் விலாசங்களை அனுபவித்துச் சகல சவுக்கியங்களையும்
பெற்று வாழும்படிக்கு எங்களிஷ்ட தேவதையைவேண்
டுகின்றன மெனப்பலவாகத் துதித்துக் கொண்டாடிச்செ
லவுபெற்றுக்கொண்டு அப்பதியைக்கடந்துசமுத்திரஞ்சூ
ழ்ந்த பூமண்டல முற்றினுந்திரிந்து குமாரசுவாமியார் ம
ணச்சேதியை யிராஜர்கள் குறுநிலமன்னர்,பிராமணசிரோ
ஷ்டர், ஞான யோகியர் பெரியோர்களுக்குத் தெரிவித்து
அஷ்டதிக்குப் பாலகருக்குத் தெருட்டி வானத்திற் சஞ்ச
ரித்துத் தினத்தை விளக்கிவரும் சூரியசந்திராதியநவக்
கிரகங்கள் முப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்
ணாயிரம் ரிஷிகள்கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர், ப
ன்னகர், உவணராதிய விண்ணாட்டினருக்குச் சொல்லின
வர்களாய்ப் பாதலத்தில் வாசமாயிருக்கின்ற ஆதிசேஷன்
முதலிய நாகராசாக்கள்உருத்திரகோடிகள் கூர்மாண்டே
யர் முதலாகியருக்கும் தெரிவித்துத் திருப்பரங் குன்றத்
தைச்சேர்ந்து இந்திரனுக் கறிக்கையிட்டிருந்தனர்.

சவுனகாதியிருஷிகளே தூதர்கள் பாலசுப்பிரமணியதே
வர் திருக்கலியாண மகோற்சவத்தை ஒருவரொழியாமற்
றேடித்தெரிவித்து மீண்டபின்பு அச்சம்பிரமங்களைத்தரி
சிக்கப்போகின்றவர்களில் முசுகுந்தச் சக்கிரவர்த்தியின்வ
ரவின் காரணங்களைச் சொல்லக்கேட்பீராக தேவதூதர்க
ளை யனுப்பிவிட்ட பின்பு தன்னகரத்தில் வாசமாயிருக்கி
ன்றவர்களையும் பந்துவர்க்கங்களையும் இரதகஜதுரகபதா
திகளாகிய சதுரங்கசேனைகளையும் சரவணப்பெருமாள்தி
ருக்கலியாணத்தைத் தரிசித்தீடேறும்படிக்கு முந்நடப்
பதாகப் பிரயாண பேரியையறைவிக்கும் படிக்குக் கட்ட
ளையிட்டமாத்திரத்திற் பூர்வத்தில் மதுரைப் பட்டணத்தி
ல் அரசுசெலுத்தியிருந்த மீனாட்சியம்மையைப் பரமசிவ
மெழுந்தருளிப் பாணிக்கிரகணஞ் செய்தகாலையில் அச்ச

ம்பிரமத்தைக் கண்டுகளிக்கும்படிக்குச்சகலரும்போவதா
கத் திரிலோகசக்கிரேஸ்வரனுகிய தேவேந்திரன்தன்வெள்
ளையானையின்மீது தேவமுரசை யேற்றித் திரிந்துதிரிந்து
பறைசாற்றியதைப்போல வள்ளுவன்பட்டயானையின்பி
டரியில் மங்கல முரசத்தைவைத்துச் சகலசெல்வவளங்க
ளுங் குடிகொண்டிருக்கும் கருவூர் வீதிகடோறு முலவி
அரசன் கட்டளையின்படிக்கு முழக்கியவோசைசெவிகளி
ற்பட்ட மாத்திரத்திற் புரஜனங்கள்அதிகவுற்சாகங்களுட
ன்பெண்டுபிள்ளைகள் சுற்றத்தினருடன் வெளிப்படவும்ந
வரத்தின மயமாகச் சொலித்துக் கொண்டு சொர்னப்படி
வமாய்ப் பருத்தோங்கி யிருக்கும் தேர்ப்பந்திகளும் சித்
திர முகப்படத்தைக்கவித்து மும்மதங்களையும் பெருக்கி
நீலகிரிகளைப் போன்ற காத்திர தேகத்தைக்கிடைத்த யா
னைக்கூட்டங்களும் மல்லகதிமயூரகதிகளையுடையதாய் அ
லைகளையொப்பப் பாயவல்ல புரவிப்பந்திகளும் சிவபத்தி
மான்மியங்களையும் வீரத்தன்மையையும் பற்பலபடைக
ளையும் பெற்றிருக்கின்ற சேனைப்பெருக்கும்தத்தமதுதலை
வர்களுடன் பிரயாணப்பட்டு மனவெழுச்சியுடன் சத்த
சாகரங்களும் பெரும்புறக்கடலை நோக்கிப் பெருகுவதை
ப்போலப் பேரொலியெழ ஆர்ப்பரித்துஇரண்டாயிரவெ
ள்ளம் பூதப் படைகள் இலக்ஷர், நவவீரர்கள், படைத்த
லைவர், பிரமன், விஷ்ணுவுடன் குமாரசுவாமியா ரெழுந்த
ருளி யிருக்கின்ற திருப்பரங்குன்றை நோக்கி நடக்கின்ற
போது நேர்ந்த அதிசயக்காட்சியையும் உவமானங்களையு
ம் பத்தியினதுகாரணங்களையும் சொல்லக்கேட்பீராக நீ
லகிரிகளைப்போலப் பருத்துயர்ந்தகாத்திர தேகத்தைப்ப
டைத்த மதயானைகள் துதிக்கைகளைநீட்டி வானத்திற் செ
ல்லும் மேகங்களைப்பற்றி நீரைக்கிரகித்துத் தாம்விருப்பு
ற்றிருக்கின்ற பிடிகள் வாயிற்சொரிந்து இடிகளைப்போல
வீறிட்டு நடப்பதைப் பார்க்குமிடத்தில் உலகமுண்டாகி
ய காலத்திற் றிசைகளைத்தாங்கும்படிக்குஅஷ்டகஜங்களை
யுண்டு பண்ணியிருப்பதால்அண்டப்பரப்பைப்பரிக்கவெ
ண்ணிப் பலகுஞ்சரங்களைப் பிரமன்படைத்ததை யொப்
பக் காட்டவும் சாமரையைநிகர்த்தசையும் வாலையும்மதர்
த்தபார்வையையும்பாலையொப்ப வெளுத்துவிளங்கும்செ
விகளையும் சுழிசுத்தமுதலிய வளங்களையிலட்சணப்படிக்
குத் தேகவுறுப்புகளைப் பெற்றிருக்கும்புரவிகள்பொன்வ
ண்டையங்கள் கலிக்கத்தக்கதாகத் திரைகளினுமேலிட்டுக்
கடல்களின் மீதிற்பாய்ந்து பூவட்டமெங்கணும் வையாளி
வந்தும் இவ்விதமாக நடித்துப்போகவும்உத்தமஅசுவங்க
ளை அணிபடப் பூண்டு பொன்னுருளைகள் அச்சுமச்சு கு
த்துக்க ால்நவரத்தினமயமாகிய கொடுங்கை டக்கையங்க
ள் கொத்துமணிகள் சந்திரவட்டக்குடை பொற்சிகரம்இ
வற்றினுற் சிங்காரித்து மகம்மேருவை யொப்பக்காட்டும்
இரதபந்திகள் கற்கரத்தொனியைக் காட்டி நிலம்குழிப
டப் பிளந்தோடவும் சிங்கத்தையொத்த வீரமும் மதயா
னையைப்போன்ற வலியும் விருஷபத்தை நிகர்த்தநடை
யையும் காத்திர தேகத்தையும்பெறறுத் திவ்வியபாணவி
தங்களையும் வலியபடைகளையும் கிடைத்தவர்களாய்ப் ப
கைவர்நேர்ந்தகாலத்தில் முன்னிட்டகாலைப்பின்வாங்காம
லெதிர்த்துப்போராடி வெற்றிபெறவல்ல ஜயசாலிகளாகி
கால்பலமானது வீறிப்போகவும் இவ்விதச்சிறப்புகளை
வாய்ந்த சதுரங்கசேனைகளுக்குந் தலைவராகவிருக்கின்ற
வீராதிவீரர்கள் நவரத்தினமயமாகிய கிரீடங்களைத்தாங்

கி வீரபட்டங்களை யணிந்து ஜயகண்டைகள் பாதங்களி
ல் கலீல்கலீலெனச் சத்திக்கப் பருத்தவிற்களைக் கரங்க
ளிற்பற்றிக் கொடியபாணங்கள்நிறைந்த அம்பறுத்தூணி
யைமுதுகிலிறுக்கிப் புலியுமஞ்சக் கர்ஜித்துச் சொர்னம
யமாகிய விரதங்களிலேறிப் பலதிசையினும்பார்வையை
ச்செலுத்திக்கொண்டு சேனைகளைப்போற்றிவரவும்வெண்
பட்டினுலும் முத்துச்சரங்களினுலும் அலங்கரித்திருக்
கின்ற தவளச்சத்திரக்குடைகளும் மேகங்களைப்போலப்
பரந்துபடபடத்த தொனிகளைக்காட்டி வானத்தையளாவி
யசைந்திருக்கின்ற கொடிகள் சித்திரங்களாகவமைந்திரா
நின்றமகரதோரணங்கள்பெருத்து மூடியிருப்பதினுலிரு
ள்மூடிக்காட்டவும்வீரபராக்கிரமசாலிகளாகியசூரர்கள்க
ரங்களிற்பற்றியிருக்கின்ற வாள், வேல், பளபளத்து விள
ங்கும் ஒளியும் நவரத்தினமயமாகச் சோடித்திருக்கும்ப
லவகைப் பணிகளில்நின்றும் சொலித்தெழும் பிரகாச
மும்பெருத்து இருளையொட்டி வரவும் ஜயபேரி, மங்கல
முரசம், வலம்புரிச்சங்கம், மத்தளம், குடமுழா, சின்ன
ம், எக்காளை, துத்தாரிமுதலிய பதினெண்வாத்தியங்களு
ம் திசைகளதிரமுழங்கிக் காட்டவும் இத்தகைய ஆடம்ப
ரங்களுடன் நடக்கின்றகாலையில் இராஜகுமாரர்களும்மற்
றஜயசாலிகளும் தத்தமது தேவியருடன் போவதைக்கு
றித்தும் மற்றஅதிசயங்களையும்சொல்லக்கேட்பீராககணீ
லெனக்கண்டைகள் கலிக்கப்பாதங்களைப் பெயர்த்துவை
த்து முதுகிற்படைகள்நிறைந்த புட்டிலையிறுக்கி இந்திர
சாபத்தையொத்த காண்டீபத்தைப் பருவதாகிருதியாக
த்தோற்றும் தோள்களில்மாட்டிச் சிறந்தபூஷணங்களைத்
தேகமுற்றுமணிந்து திவ்வியபரிமளங்களைவீசித் தேன்
களைத்துளித்திருக்கும் மல்லிகைமுல்லையிருவாட்சிசண்ப
கம் பாரிசாதமுதலிய திவ்வியமலர்களினுற் றொடுத்திருக்
கின்றபுஷ்பமாலைகளைக் கிரீடத்தினும் விசாலமாகியமார்
பினும்தரித்து முப்பத்திரண்டு விலட்சணங்களினுங் கு
றைவற்ற வடிவைத்தாங்கியகாளையரும் இலக்குமிக்குமே
லானசுந்தரமும் கறுத்து நீண்டிருக்கும்அளகபாரத்தை
யும் சந்திரனையொத்தமுகமண்டலத்தையும்வேலைப்போ
லவிளங்கிச் சேற்கண்டைக்குச் சமமாகப்பிறழ்ந்து காத
ளவுமோடிய விழிகளையும் தாமரைமலர்களைப்பழித்த கர
ங்களையும் தங்கக்கலசங்களைப்போலப் பூரித்துத் தேமல்
பரந்துததும்பி விளங்கியிருக்கும் கொங்கைகளைப்பெற்
றுச் சிலம்புதண்டைகொஞ்சும் பாதங்களைப்பெயர்த்து
அன்னங்களையொப்ப நடையையுடைய மனதுக்கினியதே
வியருடன் வங்கணமாகக் கைகோத்துக்கலந்துமன்மதனை
யும் இரதியையும்போலக் கம்பீரமாகப்போகவும் சிலரா
ஜகுமாரர் பொற்குமிழிகள் தோற்றக் கவிந்திருக்கும் கே
டகங்களை யிடதுகரத்திற்பற்றி வலக்கரத்தில் மின்னலை
யொத்தவாளைக்கொண்டு விதிர்த்து வயிரக்கவசங்கள்மார்
பிற்பிரகாசிக்கத்தக்கதாக அஷ்டதிசைகளினும் விழிகளை
ப்பரப்பி மதயானைகளைப்போல நடப்பதைப் பார்க்குமி
டத்தில் மறுவற்ற பூரணச்சந்திரனையொப்ப விளங்குகி
ன்ற முகமண்டலத்தைப்பெற்ற மங்கையரது செவ்வரிப
ரந்த விழிகளென்னும் வேல்பாய்ந்து கொல்லாமல்வருத்
துமென நினைந்து படைகளைத்தாங்கி எச்சரிக்கையாகப்
போவதையொப்பக்காட்டவும் அதிரூபலாவணியமுள்ள
சிலதருணமங்கையர்கள் சர்வாபரணபூஷிதைகளாய்ச்சே
டியர் பாங்கியர் சூழ்ந்துவர புஷ்பக்கொம்பைப்போல

அன்னங்களு மிடிகளும்வெட்கி நாணும்படிக்குநடக்கும்
போது பூமிதேவியானவள்தான்முன்னஞ்செய்தநல்வினை
யின் பிரயோசனத்தினுல் அப்பெண்கொடிகள் மெல்லிய
பாதங்கள் தன்மீதுபொருந்துவதினுல் தேகம்பூரித்துக் க
ளிக்கவும் பலசுந்தரவதிகளாகிய மங்கையர்கள் நட்சத்திர
ராசிகளைப்போலத் தங்கள் மனதுக்கிஷ்டமாகிய பாங்கிய
ர் சேடியர் சிலதியர் அடர்ந்து சுற்றிவரத்தக்கதாகப் பீதா
ம்பரங்களினுற் செய்திருக்கின்ற கச்சுகளிற் கட்டுண்டுயா
னைக்கோடுகளைப்போல நிமிர்ந்து பூரணகும்பத்தை யொ
ப்ப விம்மி முத்துமாலைகள் மோகனமாலைகளைத் தாங்கிப்
பொன்போன்ற தேமல்பாந்தசையும் கொங்கைகளின்பா
ரத்தைச் சுமக்கமாட்டாமையினுல் உடுக்கையைநிகர்த்துச்
சுருங்கி நுண்மையாகவிருக்கும் இடைமிகவும் வருந்தும்
படிக்கும் பூமிதேவியினது உடலானது புளகித்துக் களிக்
கத்தக்கதாகக் குமாரசுவாமியார் திருக்கலியாண மகோற்ச
வத்தை விழிகளும் மனமுங்களிக்கத்தரிசிக்கவேண்டுமெ
ன்னும் ஆவலுடன் மயிலைப்போலசைந்து குயிலையொப்
பக்கொஞ்சிப்பேசி அன்னத்தைப்போல மெல்ல மெல்லந
டந்து காமுகர்மனதையும் விழிகளையும் கலக்கிச்செல்லவு
ம் இத்தகைய சம்பிரமங்களுடன் போகு மார்க்கங்களில்
அடுத்தடுத்து மதுரமாகத் தெளிந்தோடும் நீர்ப்பெருக்
கையுடைய கால்வாய்களும் மடுக்களும் நீரோடைகளும்
குறுக்கில் நேர்ந்தமுன்னிலையிற் பொன்காய்த்த மரத்தை
ப்போலத் தேகமுற்றினும் நவரத்தினமயமாகியபணிகளை
யலங்கரித்துக்கொண்டு வேடிக்கைகளைப் பார்த்துப்போகி
ன்ற இரதிக்குச்சமமாகியவனப்புள்ளநாயகிகள்மானையொ
ப்ப மிரளமிரளவிழித்துக்கொண்டு அப்புறப்படுவதற்குக்
கூடாமையால் திகைத்திருக்கின்ற காலையில் விருஷபங்க
ள் நாணும்படிக்கு நடந்துவரும் மன்மதனையொத்த வடி
வுள்ள காளையரோடிவந்து மேகத்தினிடத்திற்காட்டும் மி
ன்னலைப்போலத் தழுவிக்கொண்டு நீர்ப்பெருக்கைக்கடக்
கக்கொண்டு போயினர்.

ஆதலாற் சவுனகாதியிருஷிகளே, பேரறிவைமாற்றிநன்
னெறிகளுக்கு விலக்காகவிருக்கின்ற சிற்றின்பத்தி லழுந்
திய வாலிபருக்குத் தாங்கள்கொண்டகாதல்கடலினும்பெ
ரிதன்றே, இஃதன்றியும் நவரத்தின மயமாகிய கிரீடங்
களைச்சூடி வாகுவலையங்களையணிந்து மகரகுண்டலங்கள்
செவிகளிற்பிரகாசிக்கமற்றப்பணிகளையும் விலையுயர்ந்தவ
ஸ்திரங்களையுந் தரித்திருக்கின்ற இராஜகுமாரர்கள்இலக்
குமியை யொத்த சுந்தரவதிகளாகிய தமது தேவியருடன்
பருவதாகிருதியாகக் காட்டும் யானையின் பிடரியிற்போவ
தைப் பார்க்குமிடத்தில் திரிலோகசக்கிரேஸ்வரனுகியதே
வேந்திரன் தன்பத்தினியாகவிருக்கின்ற இந்திராணிசமே
தனுய் அயிராவதத்தின்பிடரியில் ஆரோகணித்துப் பொ
ன்னுலகத்திற் பவனிவருவதைப் போலக்காட்டவும் சொ
ர்னமயமா யிராநின்ற வண்டில்கள் அச்சுமச்சுகளாதியசிங்
காரங்களைப் பெற்றதாய் கற்கரத்தொனிகளைச்செய்தோடு
ம் பாரித்த இரதங்களின்மீதில் வீரசிங்கத்தையொத்த பு
ஜபலபராக்கிரம சாலிகளாகிய காளையரும் கற்புக்கரசிளா
கவிருக்கின்ற தருணமங்கையருடன் வீற்றிருந்துபோவதை
யோசிக்குமிடத்திற் சூரியபகவான் சந்திரனைத்தழுவிஒற்
றைவண்டிலும் ஏழுபச்சைக் குதிரைகளையுமுடைய தே
ரினிடத்தி லமர்ந்துஉதையகிரியிற்காட்டிச்செல்வதுக்கொ
ப்பாக விளங்கவும் உலகங்களில் ஜனித்திருக்கும் பிராணி
களனைத்தையும் காலாதிகளிற் கொண்டுபோகவல்லஇயம
தருமராஜன்மீதுசெல்லுமாயிலும் பிராணனையலைத்துவா
ட்டத்தக்கதாய் மைதிமிர்ந்து செவ்வரிபரந்துவேலைப்போ
லக் காதளவும்பாய்ந்து சேற்கெண்டையையொப்பப்பிறழ்
ந்திருக்கும் அழகிய விழிகளையுடைய வாலிபப்பெண் ண
ரசிகள் பெண்யானைகளின்மீதிற் போதைக் குறிக்குமிடத்
தில் பெண்கள்நடைக்குத் தோற்றபடியால் மிகவும்நாணி
அவர்களைச் சுமந்துதிரிவதைநிகர்க்கவும் சொர்னக்கச்சினு
லிறுக்கித் தங்கக்கலசத்தைப் பழித்து முத்துமாலைகளைத்
தாங்கி யானைக்கோடுகளைவென் றேங்கியிருக்கும்கனதன
ங்களைவாய்ந்த சுந்தரப்பெண்கள் போகுமார்க்கத்தில்நேர்
ந்த மதயானைகள்முகத்தில் வீறியிருக்கும் தந்தங்களைக் க
ண்டமாத்திரத்திற் றிகைத்துத் தமது கணவனைத் தேடி
யோடுவதைபும்பார்க்குமிடத்தில்தாம்முற்பகல்செய்த வி
னை பிற்பகல்வந்து வருத்துமாறுபோலக்காட்டவும்சரிகை
யினுலும் பட்டுவகைகளினுலும் நவமணிகளினுலும்சோ
டித்திருக்கின்ற சீனிகள் முதுகில்விளங்கவும் சொர்னமய
மாகிய கடிவாளத்தைவாயிற்கவ்விப்பிடரிமயிரைப்பின்னி
க் குச்சுகள்தொங்க முகவணிகள் பிரகாசிக்கநான்குபாதங்
களினும் வண்டையங்கள் கலகலெனச் சத்திக்கத் தக்கதா
க வானத்தினும் திசைகளினும் பாய்ந்து சூஷாமரங்களைப்
போல வால்சுழல இருபாரிசங்களினும் சவுரிகள்தொங்கி
ட்டு அலைகளையொப்பப் பாதங்களைப் பெயர்த்து வைத்து
ப்போகும் புரவிகளின்மீதிற் சிலமாத ரேறிப்போவதைப்
பார்க்குமிடத்தில் திருப்பாற்கடலைக் கடையுமுன்னிலையி
ல் வெளுத்த நுரைகள்பெருக்கு அலைகளோங்கியகாலையி
ற் அதன்மத்தியிற் பலலட்சுமிகளெழுவதை நிகர்க்கவும்சி
லராஜபுத்திரிகள் முத்துச்சிவிகைகளிற்போவதைப் பார்க்
குமிடத்தில் மேகங்கள் மின்னலைப்பரப்பிஇந்திரதனுசை
ப்பரித்து விளங்குவதையொத்தும் சிலராஜபட்டபு தேவி
யர் பீதாம்பரங்களினுலும் முத்துகளினுலும் அலங்கரித்
திருக்கின்ற மூடுபல்லக்குகளினிடத்திற் போவதை நிதா
னிக்குமிடத்திற் சோடசகலைகளையுடைய சந்திரன்நட்சத்
திரங்கள் சூழ்ந்துவர மேகங்களில் மறைந்து நடப்பதை
யொத்தும் இவ்விதச்சிறப்புகளுடன் புரஜனங்கள்நெருங்
கிச் செல்லுகின்ற காலத்தில் வேலையொத்துக்காட்டும் வி
ழிகளைச்சுழற்றி மயக்கியும் பூரணச்சந்திரோதயம்போன்
ற முகாரவிந்தத்தைக்காட்டிப் பிரமிக்கச் செய்தும் இயம
னையொப்பவிளங்கும் கொங்கைகளைமூடித்திறந்துவெருட்
டியும் இவ்விதங்களிற் காமுகராகவிருக்கின்ற ஆடவரைத்
தங்கள் மையல்வலையிற்படுத்திப் பொருளைக்கிரகிக்கவல்ல
நிதம்பத்தைப் பெற்றுச் சுந்தரவதிகளாகவிருக்கும் கணி
கையரைக் கனவிலும் நினையாமற் பரமனையிருதயகமலத்
திலிருத்தித் தவங்களைச் செய்துவரும் இருஷிக்கூட்டங்க
ளும் சதுர்வேதபாராயணராகிய பிராமணசிரேஷ்டரும்கு
மாரதேவர் கலியாணச் சம்பிரமத்தைத் தரிசிக்கும்அவா
வினுல் நெருங்கிப்போகின்றமார்க்கத்திற்காமவின்பத்தை
த்தந்துமயக்கவல்லபரத்தையருங்கலந்துபோகுமுன்னிலை
யிற் செம்பஞ்சூட்டிய பாதங்களினுல் மிதியுண்டும் மூங்
கிலைப்பழித்து விளங்கித் திரண்டுகச்சியினுல் மூடப்பட்
டிருக்கும் தோள்களினுற்றுக்குண்டும்முத்தாரங்கள் சரப்
பளிகளைத் தாங்கிச்சொர்னக் கலசங்களைநிகர்த்தகொங்கை

யினாலிடியுண்டும் மனம் பதைபதைத்துவருந்தி நாணின
வர்களாய்ப் போகவிடம் பெறாமல் பக்கங்களி லொதுங்கி
யொதுங்கிடக்கவும் ஏதோசிலகுற்றங்களைப் பாராட்டிய
வூடலினால் தங்கள்தங்கள் மனதுக்கினிய கணவன்பேசும்
இங்கித வார்த்தைகளைக் காதுகொடுத்துக்கேட்க மனமில்
லாமற் கோபித்துப்போகின்ற தேவியினெதிரில் பாரித்த
யானைமதநீரைப் பெருக்கிப் பாகனைச்சட்டைபண்ணாமல்
வெறிகொண்டு வீறிட்டு வருவதைக் கண்டமாத்திரத்தில்
திடுக்கிட்டஞ்சித் தான்பெற்றிருந்த பிணக்கைமறந்தோடி
வந்து கொழுநனைத்தழுவிய காலத்திற்புஷ்பமாலைபுரளு
ம் புயாசலங்களையுடைய குமாரன்அக்கன்னிகையினிடத்
திற் பெற்றிருக்கின்ற காமவெறியினாற் கரங்களைக் கூப்பி
எதிரேறிவருகின்ற யானையை விலகிப் போம்படியாக வே
ண்டித்தொழுது நிற்கவும் மின்னலைப்போலக் காட்டியும்
காட்டாமையாகவும் தோற்றநின்ற மெல்லிய விடையையு
டைய தருண மங்கையர் மஞ்ஞையைப்போ லசைந்து ந
டக்கும்போது விம்மித்ததும்பி பாரித்தோங்கி யிருக்கும்
கொங்கைகளைச் சுமக்க மாட்டாமையால் அசைந்தசைந்து
வருந்துவதைப் பார்த்துத்தியங்கியிற்றுப்போம்போற் கா
ணுகின்றது.

அப்படிக்கு நேருமாயின்மன்மதனரசழிந்துபோகுமெ
ன வெண்ணித் துரிதமாய்த் தேவியரையணைத்துச்சிலரா
ஜகுமாரர் மெல்லமெல்லப்போகவும் மற்றொரு தருணம
ங்கையானவள் தன்கணவன்செய்த குறைபாடுகளையெண்
ணியெண்ணி மனமெரிவாள், மனதுக்கினியகணவன்றோ
ளைத் தேகபரவசமாகத்தழுவி யணையாமற் பிரிந்துபோவ
தினாற் காமக்கனலிற்பட்டுத் தியங்கித்திருமேனிமுற்றும்
வெதும்பி மெழுகைப்போல உருகுவாள், குமாரதேவருக்
கும் தெய்வயானையம்மைக்கும் நடக்கவிருக்கின்ற திருக்க
ல்யாணச் சம்பிரமத்தை நினைந்துமகிழ்வாள், இவ்விதமா
க மனம் நிலைபெறாமல் ஊசலையொப்பவளைந்து நடந்தா
ள். கேட்டீர்களோ சவுனகாதியிருஷிகளே மேற்குறித்தப
டிக்குக் குமாரதேவரை எக்காலமும்மனதிற் சிந்தித்துப்
போகின்ற ஜனங்களில் அம்முயற்சியினாற் கரங்கள்குறை
பட்டிருந்தவர்களுக்கு ஆசானுபாகுவாக முளைத்தும சப்
பாணிகளாக விருந்தவர்களுக்கு வலியகால்களுண்டாய்வி
ருஷபங்களைப்போல நடந்தும் பிறவிக்குருடருக்குச்செந்
தாமரைமலர்களைப் போலக் கண்கள்தோற்றிச் சமஸ்தத்
தையும் பார்த்துப் பிரமித்துத் துணையுதவியில்லாமல் ம
தயானைகளைப் போலச் சுற்றுமுற்றும்பார்த்துப் போகவு
ம் நடக்கச்சத்தியில்லாமற் கைலாகுகொடுக்கவந்தவர்களு
க்கு மிகுந்தவலிபெற்றுச் செல்லவும் ஊமர் கிள்ளைகளை
யொப்பக்கொஞ்சி வசனித்துத் தொடரவும் இத்தகைய ம
கத்துவங்கள் தோற்றியபடியால் எமதையனாகிய பாலசுப்
பிரமணிய தேவரிடத்தில் மெய்ப்பத்தியுடன்எத்தேச கா
லமும் மனதைச்செலுத்துவல்ல புண்ணியசிலருக்கு இத்
தகையபேறுகள் கிடைப்பதரியனவோ பிறவிக்கடலையொ
ழித்துப் பெறுதற்கரிய மேலானமோட்சசாம்பிராச்சியத்
தைப் பெற்றுச் சுகாதீதச்செல்வங்களை யனுபவித்து அவ
ன்பாதநீழலிற்றங்கி வாழ்வதற்கையமுமுண்டோ அவர்க
ளைச் சிவன் முத்தரெனப் புகழவேண்டும் இவையன்றியு
ம் விஷத்தோவையலிட்டிருக்கின்ற வேலையொப்பப்பாய்
ந்து காதளவுமோடிச் செவ்வரிபரந்து சேற்கண்டையைப்
போலப் பிறழ்ந்திருக்கும்விழிகளையுடைய தருணமங்கை
யொருத்தி நடக்கின்ற வேகத்தினாற் பையட்டை நழுவிப்
பூரணகும்பத்தை யொத்த கொங்கைகள்தோற்ற வெட்கி
த்துரிதமாய் மேற்போர்வையைமூடிமறைத்தகாலையில்அ
வளழகைப் பார்த்துப் பக்கத்தில்வருகின்ற விடைபுருஷ
னொருவன் அவற்றினைத்தரிசித்தவுடன் மயங்கித்தொடர்
ந்தனன்.

அதைப்பார்க்குமிடத்திற்பருத்தமுலைநெருக்கினும்போ
ர்வைதொங்கலினும் அகப்பட்டுத் திரும்பவகை யறியாம
லலைகின்ற அறிவை மீட்கவெண்ணி வருந்திப் போகின்ற
வனையொப்பக்காட்டவும் அம்மார்க்கத்திற்காணப்பட்டத
டாகங்கள் ஏரிகள் மடுக்களிற் புஷ்பித்திருக்கின்றதாமரை
மலர்களையும் அல்லி நீலோற்பலமுதலிய புஷ்பவகைகளை
யும் பறித்துக்கறுத்த அளகபாரத்தையுடைய தேவியருக்
குக்கொடுத்தும் கொண்டைகளிற்சூடியும் கரங்களைக்கோ
த்தும் உல்லாசமாய் நடப்ப தெப்படிக்கிருந்ததெனில்மங்
கையர் விழிகளுக்கும் மற்ற வுறுப்புகளுக்குந்தோற்ற தி
வைகளெனக் காட்டுமாறுபோலத் தோற்றவும்மயிலையொ
த்தசாயலையும் அன்னத்தினு மெல்லியநடையையு முடை
யஒப்பற்ற சுந்தரமுள்ளஒருபெண்கொடியினதுமேற்போ
ர்வையானது விலகி யானைக்கோடுகளையொத்தகொங்கைக
ள் வெளிப்படக்கண்ட காளையொருவன் மனச்செருக்கற்
றுச் சோர்ந்தவனாய் இக்கனதனங்களைத் தரிசித்தமாத்திர
த்தில் வலிபெற்றிருக்கின்ற என்சிந்தையை மாறுபடுத்தி
த் தன்வயப்படுத்திக் கொண்டதால்அதன்பரிசம்பட்டகா
லத்தி லென்னபாடுபட வருமோவென்று உயிர்பதைத்து
நிற்கவும் தெய்வலோகத்திலிருக்கின்ற கற்பகத்தருவின்மீ
துபடர்ந்தசையும் வல்லிசாதங்கொடியை யொத்த சுந்தர
வதியாகிய ஒருபெண் கொடியினிடத்திற் றான்பெற்றிருக்
கின்ற ஆசைப்பெருக்கிலாழ்ந்து இராப்பகலாய் வேண்டி
ய பணிவிடைகளைச்செய்தும் மனதுக்கினிய பண்டங்களை
த்தந்தும் அலைந்துவாடித்திரிந்த ஒருகாளையானவன் அவ
ளிடத்தில் யாதொரு பலப்பிராப்தியையும் பெறாதவனாய்
த்தியங்கி அவள்பின்றொடர்ந்துபோகுமார்க்கத்திற்பீதாம்
பரத்தினால் மூடியிருந்த மேற்போர்வையானது காற்றின்
வீசலினால் விலகி முத்தாரங்களையணிந்துபொன்போன்ற
தேமல்படர்ந்து பூரணகலசத்தினும் பூரித்தோங்கியிராநி
ன்ற கொங்கைகள் சிறிதுதோற்றிய மாத்திரத்திற் றேவா
முதத்தையுண்ணப் பெற்றவனைப் போலவும் அரியதனத்
தைக்கண்டவனை யொப்பவும் பலகாலம் வருந்திநோற்றத
வவிரதங்களுக் கடுத்த பேற்றை யடைந்தவனை நிகர்த்தும்
மனமகிழ்ந்து பேரானந்த வாரியில் முழுகி மனவெழுச்சி
யுடன் பின்பற்றிப்போகவும் ஒப்பற்ற வனப்புள்ளகருண
மங்கையொருத்தி மன்மதனையொத்தவடிவைப்பெற்றிருக்
கின்ற தன்கணவனைக்கலந்து சுரதலீலைகளைச்செய்து களி
த்திருந்த காலத்தில் அதரபானங்கொடுத்துக்குலவும்போ
து பட்டபற்குறியானதை யாவருக்குங் காட்டவொண்ணா
தென்கிற மானம்பாதித்த காரணத்தினாற் பவளத்தையும்
முருக்கின் மலரையும்பழித்துச் சிவந்து விளங்கும்உதட்
டைத் திறவாமலும் யாவருடனும்வார்த்தை யாடாமலும்
மவுனியைப்போல நடக்கின்ற காலையிற் பக்கத்திற்றொட
ர்ந்துவருகின்றகொழுநன்அக்குறிப்பைத்தெரிந்துஓ! பெ
ண்கள்சிகாமணியே? மன்மதராஜன் கட்டளையினாற்பெரு
கும் மதுரமாகிய அமுதவூறல் நிறைந்திருக்கின்ற செப்பி
னிடத்திற் குறியேதேனு முண்டோ அக்காரணத்தினால்

சற்றுவது திருவாயைத்திறந்துமனங்களிக்கவொருவார்த்தையையும் ஆடாமற்போகிறீரோவெனச் சக்கட்டம் பேசிய காலத்தில் மனதிலடக்கப்படாத மகிழ்ச்சியினாற் சக்கடக்கட நகைத்துக் காந்தனிடத்திற் பிணங்கி முந்திநடக்கவும் புணர்ப்பினிடத் தின்புற்று வேகமாய் நடக்கின்ற பெண்யானையின் பிடரியில் ஆரோகணித்துப்போகின்ற சுந்தரவதிகளாகிய பெண்கொடி பொருத்தி மதயானையொன்று அப்பிடியின்குறிப்பைத் தெரிந்துமேலிட்டுவரக் கண்டஞ்சித் திகைப்பதைப் பக்கத்திற்போகின்ற விராஜகுமாரன்கண்டு ஓ! பெண்கள்சிகாமணியே? ஏன்பயந்துவாடிவருந்துகின்றீர் பரந்துகாட்டும் நிதம்பமாகியதேரையும் கால்களாகிய புரவிகளையும் கொங்கைகளாகிய யானைகளையும் விழிகளாகிய படைகளையும்கொண்டு ஆடவர்பஞ்சப்பிராணனையும் வாட்டவல்ல நீர் ஒருமதயானைக் கஞ்சவேண்டுங்காரணமென்னோ வெனப் பரியாசங்களைச்செய்து களித்துச் செல்லவும் இவைபன்றியும் யானைகளின் பிடரியினும் தேர்களின்மீதினும் போகின்ற பாடகமகளிரும் நாடகப்பெண்களும் மனவெழுச்சியுடன் திருப்பாற்கடலினுதித்த அமுதமானது அலைகளைவீசி யெழுவதைப்போல எழிசைத் தந்திகள் பிகிந்திருக்கின்ற மகரயாழினைச் சுருதிகூட்டிக் கேட்பவர்செவிகளுக் கானந்தமடையும் படிக்குக் குயிலையொத்த சாரீரம்பெற்ற கண்டத்தொனியையெழுப்பிப்பரந்தும் நிழலுமொப்ப வொன்றும்படிக்குப் பாடியும் அபிநயங்களைக் காட்டிக் கல்லென்னுஞ் சத்தமெழு அன்னங்களைப்போல நடித்தும் மேற்குறித்தசம்பிரமங்கள் மத்திமத்தியில் நேத்திரோற்சவமாகக்காட்டிப்போகவும் இஃதன்றியு மின்னமுஞ்சில அதிசயக்காட்சியைச் சொல்லக்கேட்பீராக.

அணிபடச்செல்லுகின்ற மதயானைகள் பிடிகள் மத்தகங்களினும் முகத்தினிடத்தினுமெழுதியிரா நின்ற சிந்தூரத்தொய்யலும் போர்த்திருக்கின்ற பலநிறப்படாங்களும் தருணமங்கையரும் மன்மதனையொத்த வடிவுள்ள ஆடவரும் அணிந்திருக்கின்ற நவரத்தினமயமாகிய ஆபரணவிதங்களும் வெண் பட்டினாலும் முத்துக்கோவையினாலும் அலங்கரித்திருக்கின்ற சந்திரவட்டக் குடைகள் பற்பலநிறம்பெற்ற துவசபடாங்களுமெங்கணும் நிழலைப்பரப்பிக் கவிந்து விளங்குவதினாற் கடலைப்போல ஆரவாரித்துப் போகும் சேனைப்பெருக்கில் இரவும்பகலும் மாலைப்போதும் ஒன்றுபட்டுக் கலந்துபோவதையொத்துக்காட்டவும் யானைகுதிரை சகடங்களினிடத்தில் ஜயபேரிமங்கலமுரசம் டங்கா மத்தளம் திருச்சின்னம்துத்தாரி எக்காளைவலம்புரிச்சங்கம் புள்ளாங்குழல் ஜபகண்டை உடுக்கைதுரியம் கொக்கரை குடமுழா தக்கை சல்லரிமல்லரி பிரமதாளம் சங்கீதவாத்திய மெனச்சொல்லாநின்றதோற்கருவி, துளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருகி, மிடற்றுக்கருவி விதங்களாகிய பதினெண் வாத்தியங்களையும் சத்தசாகரங்களும் பெருகியதைப்போல பலதிசைகளெங்கணுஞ் செவிடுபடத்தக்கதாகத் தாம்தாமெனமுழக்கிவரவும் இத்தகையவோலக்கத்தின் மத்தியில் வேதாகமங்களைப் பூரணமாகவோதி யுணர்ந்தபண்டிதர் பிராமணசிரேஷ்டர்தவங்களிற் சிறந்தவிருஷிகள் மகத்துக்கள்பெரியோர்கள் தேவலோகவாசிகளாகிய கடவுளர் மனவெழுச்சியுடன் செங்கோலை நடாத்தி மன்னுயிரைத்தன்னுயிரைப்போலப் போற்றிவரும் முசுகுந்தச் சக்கிரவர்த்தியானவர் சுகசீவியாய்ச் சகல செல்வங்களையும் அனுபவித்து வாழும்படிக்குப் பலஆசிகளைச் சொல்லி அறுகு அட்சதைகளைத்தூவியும்கற்பகமலர்களை யிறைப்பதைப் பார்க்குமிடத்திற் காரியகாரணங்களுக்குப் புறம்பிலுலவியும் எள்ளினெண்ணெயைப்போல எங்கும் பரிபூரணமாக நிறைவெய்திச் சராசரப் பிரபஞ்சங்களை ஆட்டியூட்டி யுறக்கிவரும் சிவகுமாரன் திருமணச்சம்பிரமத்தைத் தாமும் தரிசித்துப் பேரின்ப சுகத்தைப்பெற்றுவாழு மிச்சைகொண்டு வானத்திற் சஞ்சரிக்கின்ற நட்சத்திர ராசிக ளிறங்குவதைப் போலக் காட்டியது.

சவுனகாதிபிருஷிகளே, மேற்குறித்த சம்பிரமங்கள்பெருத்தோங்கும் படிக்கு இராஜதானியாகவிருக்கின்றகருவூரில் வாசஞ்செய்யும் ஜனங்களும் அந்நகரைச்சூழ்ந்த நாடுகளிலிருப்பவரும் இரதகஜதுரகபதாதிப் பெருக்கும் ஜயவுற்சாகங்களுடன் மங்கலவாத்தியங்கள் சமுத்திரத்தைப் போலக் கோஷித்துவரப் பூமியெங்கும்பரந்து நெருங்கிப் போகு முன்னிலையில் முசுகுந்தச்சக்கிரவர்த்தியானவர் நவரத்தின மயமாய் வானத்தையளவாவிருக்கின்ற பாரித்த தேரினிடத்தில் ஆரோகணித்துப் பந்துவர்க்கங்கள் மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர் மன்னமண்டலீகர் தத்தமது வாகனங்களிலேறிச் சூழ்ந்துவரவும்பட்டுவர் புகழ்ந்து வித்துவான்கள் பாமாலைகளைச் சாற்றிப்போற்றிவரத்தக்கதாக இராஜவோலக்கங்களுடன் நாடுநகரங்கள்வனங்கள்வனந்திரங்கள் நதிகள் பருவதங்களாதியாகத்தாண்டிச்சூரியன் உச்சியில்நேர்ந்த மத்தியானகாலத்திற் பாலசுப்பிரமணிய தேவரெழுந்தருளியிருக்கும்திருப்பரங்குன்றத்தைச் சக்கிரவர்த்தியானவர் தன்சயின்னியங்களுடன் சேர்ந்தனர், இந்தக்கலியாணச் சம்பிரமத்தைத் தரிசித்துக் கிருதார்த்தராதற் பொருட்டுத் தேவரினங்களும் முனிவர் கூட்டங்களும் மற்றவிண்ணுடரும் ஐம்பத்தாறுதேசத்துமன்னரும் இராஜவோலக்கத்துடன் தத்தமது புத்திரமித்திர களத்திராதிகள் நால்வகைச்சேனைகளுடன் வந்துசேர்ந்தனர்.

இவ்விதமாகப் பூமண்டலத்திலிராநின்ற நால்வகைச்சயின்னியங்கள்மற்றபிராணிகளனைத்தும் ஒருமுகத்திற்கூடியவேளையில் மலைச்சாரலினும் அதன்மேனிலையினும்மற்றவிடங்களினும் எள்ளிடவிடமில்லாமல் நெருங்கி மனவெழுச்சியுடன் கலியாண மகோற்சவத்தை எதிர்பார்த்திருந்த காலத்தில் நேர்ந்தசில அதிசயக்காட்சியையும்சொல்லக்கேட்பீராக அந்தமலையைச்சூழவிருக்கின்ற பருத்தமராமரங்களினும் தேவதாரத்தினும்சந்தனத்தருக்களினும் இருப்புச்சங்கிலிகளினாற் பந்தித்திருக்கின்ற மதயானைகளினொன்று காமக்கவலையிற்பட்டுத் தன்பக்கத்தி லிருக்கின்ற பெண்யானைக்குப் பசியைத்தணிக்கநினைந்து நீண்டிருக்கின்றதுதிக்கையை நீட்டித் தெய்வலோகத்திற்றழைத்திருக்கின்ற பஞ்சகற்பகத்தருக்களினது கிளைகளை முறித்துக் கொடுத்தும் கூரியதந்தங்களினால் வானத்திற்சஞ்சரித்திருக்கின்ற மேகங்கள் வயிற்றைப்பீறி அதனிடத்திருக்கின்ற தண்ணீரைக் கிரகித்து வாயிற்சொரிந்து மகிழவும் சிலவலியயானைகள் அவ்வரையைச் சூழ்ந்திருக்கும்காட்டிற் சஞ்சரிக்கும் குஞ்சரங்கள் வீறிடுமொலியைக் கேட்டவுடன் சீறிக் கட்டுத்தறியைமுறித்துக் காலிற் பூட்டியிருக்கின்ற சங்கிலிகளுடன் உலவுவதைப் பார்க்கு மிடத்திற்

பூருவத்தில் தேவராஜன்வச்சிராயுதத்தினுற்சிறகுகளைவெட்டிய காலத்தில் தத்தமது நிலைகளில்விழுந்துகிடக்கின்ற பருவதங்கள் கால்கள்முளைத்தசையப் பெற்றதைப்போலக்காட்டவும் மற்றொருபாரிசத்திற்கட்டியிருந்த வெறிகொண்ட யானையொன்று தனக்கெதிரில் மேகங்கள்கவிந்துஇடித்து மின்னுகின்ற பருவதத்தைப்பார்த்து இது திசைக்களிறுகளி னென்றுகக் காணுகின்றதென் றெண்ணி மதங்களைப்பெருக்கிச் சீறி வீறிட்டோடவும் மற்றொரு பாரிசத்தில் இளமைதங்கிய பெண்யானையொன்றுகலவிக்குறிப்பைக் காட்டித் துதிக்கையையசைத்து இளைச்சலிட்டு நடப்பதைக்கண்ட மதயானைக்கூட்டங்கள் வெறி கொண்டு சங்கிலிகளை யறுத்தெறிந்தும் விருட்சங்களை வேறுடன்பறித்து வீசியுந் துதிக்கைகளைத்தூக்கிச் சுலவிப்பின்பற்றித் தொடர்ந்துபோவதைப் பார்க்குமிடத்தில் ஆதியிற்றிருப்பாற்கடலினுதித்த அமுதகலசத்தை ஜகன்மோகினியாகிய ஆதிமாயன்திருக்கரத்திலேந்தி மெல்லமெல்ல பாதங்களிற்றரித்த சிலம்புதண்டைகள் சத்திக்கத்தக்கதாக நடக்கும்போது அவள்ரூபலாவணியங்களைக் கண்டு காமுற்று மதவெறிகொண்டு கரியதேகத்தைவாய்ந்த அவுணர் இராக்கதர் சூழ்ந்து பற்களைத்திறந்து இங்கிதவார்த்தைகளைப் பேசி யின்பநலத்தைப் பெற்றுப்பிழைக்கவெண்ணிச் சூழ்ந்துபோனதைப்போலத் தோற்றவும் அம்மலையைச் சூழப் பெருகுகின்ற அருவிகளிற்பாயும் மதுரமுள்ளஜலப் பெருக்கினிடத்திற் போய்த் தாகசாந்தி செய்துகொள்ளவும் முழுகிக்களிக்கவும் விருப்புற்று விடுபட்டோடிவிழுந்து வானவளையில் நீரொழுந்து விழும்படிக்கலைத்து வயிரத்தையொத்த வலிபெற்றவெண்கோடுகள்மின்னலைப்போலக் காட்டவும் கபோலத்திலுங் கன்னத்தினும்பீஜத்தினும் மதநீரைப் பெருக்கி ஊழிகாலத்தெழும் பேரிடிக்கொப்பாக வீறிட்டு இந்திரதனுசுக்கிணையாகப் பலநிறம் பெற்றிருக்கின்ற முகபடாத்தைப் போர்த்துத்திரியும் யானைக்கூட்டங்கள் எப்படிக்குக் காட்டுவதெனில் மேகசாலங்கள் மின்னிக்குமுறி நீர்த்துளிகளை யிறைத்துப் போவதைப்போல விளங்கவும் ஒரு மதயானையானது பாகனைச் சீறி அதிகவீருப்புடன் நடக்குமுன்னிலையி லிடித்துமின்னிக் கவிந்திருந்த மேகத்தைப் பகைத்துக்கூரிய தந்தங்களினற் பாய்ந்தகாலையிற் பிரிட்டோடும் ஜலப்பெருக்கைத்துதிக்கையினு லுறுஞ்சித் திசைகளிற்செல்ல வீசுவதைப்பார்க்குமிடத்தில் முன்னொருகாலம்சிவபிரான்களிருகத் தோற்றிய திருவிளையாடல்ன்போது சத்தசாகரங்களின் நீர்ப் பெருக்னகக் கிரகித்துவீசி யுலவியதுக்கொத்தும்தேவதாரத் தருக்களிற் பிணித்திருக்கின்ற பாரித்த ஒருயானையானது பிடிகள்கன்றுகள் சுற்றினும்நிற்க மத்தியில்விளங்குவதைப் பார்க்குமிடத்திற்குன்றுகள்மத்தியில்நீலகிரியொன்று காட்டுமாறுபோல விதிக்கவும் அதிகவீருப்புடைய ஒருமதயானை யானது தன்பிடரியிலிருந்து பாகனுனவன் அங்குசத்தினுல் வல்கொண்டு கொத்தியபோதினும் அவன்குறிப்பின் வண்ணம்போகாமல் காட்டானையின் அரவத்தைத்தெரிந்து மீறி வாயுவினுங் கடுகியோடுவ தெப்படிக்கிருந்ததெனில் வஞ்சக வார்த்தைகளினுல் காமுகர் மதியைமயக்கிப் பொருளைக் கவருமெண்ணங்கொண்டிருக்கின்ற தாய்க்கிழவியானவள் சீறிச்சொல்லும் வசனத்தைக் காதுகொடுத்துக் கேளாமல் அதிகவடிவுள்ளஒருசுகசுக்காரனிடத்தில் மையல் கொண்டு போகும்வேசி மனதைப்போலத் தோற்றவும் இத்தகைய சிறப்புகளைப் பொருந்திய யானைகளின் கூட்டங்களைக் கணித்துமுடிவதோ.

இதுநிற்கச் சிவபிரான்கடாட்சத்தினுற் பெற்ற வரமுயற்சியினுல் ஆயிரத்தெட் டண்டங்களுக்கும் அதிபனுய்க் கொடுங்கோலைச்செலுத்திச்சகலசெல்வங்களையும் அனுபவித்து எத்தகையரும் வணங்கிப்போற்றவீறியிருந்தசூரபதுமன் ஒருகாலம்கோபித்துத் தசவாயுக்களையும்பிடித்துவந்து தளைபூட்டிக் காவலில்வைத்திருந்ததைப் போலச் சுழிசுத்தங்களையும் வேகத்தையுமுடைய புரவிக்கூட்டங்களை அணியணியாகத் தோப்புகள்தோறும் பந்தித்தும் வெற்றிவேலாயுதக் கடவுளினது திருக்கலியாணமகோற்சவத்தைக் கண்டுகளிக்க விருப்புற்று வானகத்திலிருக்கின்ற தேவர்நகரங்களும் அஷ்டதிக்குப்பாலகர்பதங்களும்பூமண்டலத்தி லிராநின்ற பதிகளும்சேர்ந்துவந்திருப்பதைப்போல மேககர்ச்சனையினும் பெருத்துக்காட்டும் கனைப்பையுடைய அசுவப்பந்திகளைப் பூண்டுகர்க்கரத் தொனிகளைக் காட்டியோடும் பொன்மயமாகிய தேர்க ளனந்தகோடி எம்மருங்கினும் அடர்ந்திருக்கவும் விஷத்தையொப்பக்கறுத்துப் பாலினும்வெளுத்து வேலுக்கொப்பாய்க்காதளவுமோடியிராநின்ற அழகியவிழிகளைப்படைத்த மாதரும்மன்மதனையொத்தவடிவும் புஜபலபராக்கிரமங்களையும் பெற்றிருக்கின்ற காளையரும் படைத்தலைவரும்வீராதிவீரர்களாய்ப் பலநிறைச்சட்டைகளை யணிந்து சருவாயுதபாணிகளாயிராநின்ற சேவகர்களும் புராஜனங்களாதியாக மனவெழுச்சியுடன் பலநிறப்பீதாம்பரவகைகளினுற்சோடித்து வரிசையாக நாட்டியிருக்கின்றகூடாரங்கள்தோறும் கிரமப்படிக்கு வாசஞ்செய்யவும்ஒருகாலம்தேவேந்திரன் தனக்கிடும் பொங்கல்பூசனையைமாற்றியகாரணத்தினுற் கோவலர்மீது பகைத்து வருந்தி வாடும்படிக்குச் சத்தமேகங்களைக்கொண்டு கல்மாரிபெய்வித்தகாலையில் அவர்கள்படுந் துன்பங்களுக்கிரங்கி ஸ்ரீகிருஷ்ணபகவான் கோவர்த்தனகிரியை யெடுத்துச் சுண்டுவிரலினுற்குடையாகத் தாங்கி யாதவர் பெண்டுபிள்ளைகள் பசுக்கூட்டங்கள் கன்றுகளையும் யாதொருதுன்பங்களுமில்லாமற் போற்றிக்காத்ததைப்போலப் பொன்னையொத்த தளிர்களைவிரித்துப் பலநிறக்காய்கனிகளைக்கொண்டுதழைத்துக்கவிந்திருக்கும் மா-பலா-தேவதாரமுதலியதருக்கள் அடர்ந்தோங்கி யிருக்கும் சோலைகளினிடங்கடோறும் சொர்னமயமாகியவிடுதிகளை ஏற்படுத்திக்கொண்டு இராஜகுமாரர்கள்தங்கள் பத்தினிமாருடன் களித்திருக்கவும் இவையன்றியும் சக்கிரவர்த்தியினதுநகரவாசிகளாய்அச்சேனைப்பெருக்குடன்வந்திருக்கின்ற வணிகர்முதலிய வியாபாரிகளும் சிவகுமாரன்வீற்றிருக்கின்ற தலத்திலிருக்கும் வர்த்தகரும் மனவெழுச்சியுடன் முத்து-பவளம்- வயிரம்;கோமேதகம்- புஷ்பராகம்-மரகதமணிவகைகளையும் பொன்-வெள்ளி-திரவியங்களையும் நவரத்தினங்களினுற் செய்யப்பட்டிருக்கின்றகிரீடம்-வாகுவலையம்- மகரகுண்டலம்-மதாணிப்பதக்கமுதலிய ஆபரணதிகளையும் பீதாம்பரம் சித்திரவிசித்திரமாகச் செய்திருக்கின்ற பட்டாடைகளையும் புனுகு சவ்வாது முதலியபரிமள மிகுத்த கலவைச்சாந்துகளையும் சுகந்தங்களைவீசும் திவ்வியபுஷ்பமாலைகளையும் மற்றுமிராநின்ற விலையுயர்ந்த புதியபண்டங்களனைத்தையும் மேடைகள்மீதினும் கூடாரங்களினும் திரள்திரளாகக்குவித்தும் பொற்பள்ளயங்களில் நிரப்பிவைத்தும் பரப்பியும்சிப்பம் சிப்

பங்களாக வடக்கியும் இரவலர் விருந்தினர், மனவெண்ணத்தை நிதானித்துத் தகுந்தபடிக்கு வழங்கிவரும் தியாகிகளைப்போலவிற்றிருந்து துலாக்கோல்களைக் கரங்களிற்டற்றி வேண்டிவருபவ ரிஷ்டப்படிக்குக் குறைவறப்பகர்ந்து குபேரன்பட்டணமும் நாணும்படிக் குவிந்திபிரிந்தெத்தலங்களினு மிருக்கவும் இவ்வித சம்பிரமங்கள் மலிந்திருக்கின்ற திருப்பரங்குன்றச்சாரல்கடோறும் அடர்ந்துநெருங்கிவருகின்ற ஸ்ரீபூமான்களும் மற்றையரும்வானத்திற்சஞ்சரிக்கும் மேகராசிகளினிடத்திருந்து மின்னற்கொடிகள் மெல்லநழுவிப்பூமியிற் சஞ்சரிப்பதைப்போலத் தாமேறிவந்த பிடிகள் அப் பாரிகள் சொர்ணமயமாகிய தேர்கள் விமானங்கள் முத்துச்சிவிகைகள் மூடுபல்லக்கு ச ன்புரவிகளாதிய வாகனங்களைவிட்டிறங்கிஅன்னங்களையும் மதயானைகளையும் விருஷபங்களையும்போல இரதியையும் மன்மதனையும்நிகர்த்து தம்பதிசமேதராய்க் கரங்களைக்கோத்துக்கொண்டு கேளிவிலாசமாய்ப்போய் அத்தலங்களிலிருக்கின்ற விநோதங்களைக்கண்டு மகிழ்ந்தும் குயில்கள் கானவசனித்தும் மயில்கள்வெட்கிப்புறகிடச் சாயலாகடந்தும் வானத்தையளாவவோங்கித் தழைத்துக்குளிர்ந்த நிழலைப்பரப்பியிருக்கின்றதோப்புகளினிடங்களிற்சென்று கனிவகைகளைப் பறித்தருந்தியும் மனரஞ்சிதமாகத்தோன்றுகின்றசோலைகள் நந்தவனங்கள்உத்தியானவனங்களிற்புகுந்து திவ்வியபரிமளங்களை வீசிப் பொன்னையொத்த மகரந்தங்களையுதிர்த்துத் தேன்களைச் சொரியும் திவ்வியசுகந்தமலர்களைப்பறித்துஒருவர்மீதொருவரிறைத்தும் மாலைகள்சேர்த்துக் கொண்டைகளிற்சூடியும் மார்பிலணிந்தும் கரங்களிற்றரித்து விளையாடியும் மதுரமிகுத்த குளிர்ச்சியாகிய புனலையுடைய சுனைகளினும் காட்டாறுகளினும் மடுக்களினுமிறங்கி நீராயினைத்தும் ஜலக்கிரீடைகளைச்செய்தும் மனவெழுச்சியுடன் வெளிவந்து கல்லென்னுமோசையெழ மாந்தர்கள்வசனிப்பதினும் பெருத்துக்காட்டும்அப்பருவதத்தி னெதிரொலியாகிய ஆரவாரங்களைக்கேட்டு விம்மிதராய் இதற்குப் பிராணனிருக்கின்றதோவென மகிழ்ந்து தாமும்மாறிமாறிக் கூவிக்களித்தும் தோகையைவிரித்து மயிலினங்கள் நிருத்தஞ்செய்வதைப் பார்த்து மகிழ்ந்தும் மற்றவேடிக்கைவிநோதங்களைநோக்கி மனவெழுச்சிபெற்றும், சவுனகாதிரிஷிகளே யிவ்விதங்களாக இலக்குமியையொத்தசுந்தரவதிகளாகிய இராஜபத்தினியர் சேடியர் பாங்கியர் சிலதியர் சூழ்ந்துவரத்தக்கதாக அன்னங்களையொப்ப மெல்லமெல்லச் செம்பஞ்சூட்டிய பாதகமலங்களைப்பெயர்த்துப் பூமிதேவி தேகம்பூரித்துக்களிக்க வுலவவும் மன்மதனினும்வடிவும் புஜபலபராக்கிரமங்களையும் கல்விச்சம்பத்தையும் நல்லொழுக்கங்களையும் பெற்றிருக்கின்ற வரசகுமாரர்கள் வரிவரியாகத் தங்கக்கட்டுசெள்பிகிந்து இருகுதிரைகளினும் மணிகள்சத்திக்க இந்திரதனுசைப்போலப்பாரித்து நீண்டிருக்கும் விற்களை மலைகள்போன்ற தோளில்மாட்டி மின்னலையொத்த அலகுகளையுடைய திவ்வியபாணவகைகளைச் சேர்த்திருக்கும்அம்பறாத்தூணியைமுதுகிலேற்றி வாள்-வேல்-கேடகம்-சக்கரம்-தண்டாயுதமாதிய படைகளைப்பரித்து வீரகண்டாமணி கழல்கலிலெனச் சத்திக்கத்தக்கதாகவும் முத்தாரங்கள்மோகனமாலைகள் விசாலமாகிய மார்பிற்புரளவும்பிறையைப்போல வீரபட்டம் நுதலில்விளங்கவும் தோழர்களுடன்கூடி உத்தியானவனங்களிற்சென்றுமகிழ்ந்தும் மலையருவிபெருகுவதைப்பார்த்து அதிசயித்தும்மதுரமிகுத்த நீர்நிறைந்திருக்கும் சுனைகளைக்கண்டு களித்தும் மதயானைகள்வீறிட்டுத் துதிக்கைகளைச்சுழற்றிச் சாடி ஒன்றுடனொன்றுபோராடும் தீரத்தைநோக்கியும் வீரசிங்கத்தைப்போன்றும் விருஷபத்துங்கொப்பாகவும் கம்பீரமாகத்திரிந்தும் இவ்விதமாகச் சகலரும் ஆனந்தவாரியிலழுந்தி வருகின்றபோது ஸ்திரீபூமான்கள் தரித்திருக்கின்ற புஷ்பமாலைகளிற்பெருகும் தேனையுண்டு களித்திருந்த வண்டுக்கூட்டங்கள்பறந்து சுனைகளில்விகசித்திருக்கும் தாமரை மலர்கள் அல்லிகளிலிறங்கிப் புதியமதுவையுண்டு அதனிடத்திருந்த தமதினங்களுடன் கலந்துகுலாவவும் சொர்ணமயமாகிய ரவிக்கையினாற் கட்டுண்டு தேமல்பரந்து விம்மியிருக்கின்ற தனபாரங்களையுடைய தருணமங்கையரும் மதனனைப்போன்ற சவுந்தரியம்பெற்ற காளையரும் மலைச்சாரலினிடங்களினெங்கணும்வேடிக்கைபார்த்துக் கொண்டு திரியும்போது தாக்குறசூரியனது கிரணவெப்பந்தணியும்பொருட்டுச் சுத்தோதகப்பெருக்கில்முழுகித் தாபங்களைத்தணிய நினைந்தவர்களாய்ப் பலவிதமலர்களலர்ந்து நேத்திரோற்சவமாகக்காட்டும் தடாகங்களின் கரைகளினிடங்களிற்சேர்ந்து மேகசாலங்கள் சஞ்சரிக்கும் வானநாடுகளில் வாசஞ்செய்திருந்த விஞ்சையர் இயக்கர் கின்னரர்முதலியரும் பூரணசந்திரோதயத்தைப்போலத் துலங்கிக்கொண்டிருக்கும் திருமுகமண்டலங்களைப்பெற் றிருக்கின்ற அவர்கள்தேவிமார்களும் திரண்டிறங்கியதற்கொப்பாக விசாலமாய்ப்பளிங்கையொப்பத்தெளிந்து மதுரமிகுத்த நீர்நிறைந்ததாய்ப் புஷ்பவகைகள் பெருத்து அன்னங்களாதிய பட்சிசாதிகள் சிரவணானந்தமாக வொலித்திராநின்ற தடாகங்கள் குளங்கள் மடுக்களிலிறங்கி மனவெழுச்சியுடன் முழுகி விளையாடுகின்றகாளையர் தத்தமதுதேவியருடன் செய்துவரும் நீராடலின் வேடிக்கைகளிற் சிலவற்றைச்சொல்லககேட்பீராக.

வயல்முதலிய வளங்களிற் குறைவின்றிச் செழித்திருக்கும் மருதநிலங்களில் வாசமாகவிருக்கின்ற சுந்தரவதிகளாகிய கடைச்சியர் செவ்வரிபரந்து விசாலமாய் காதளவுமோடியிருக்கும் விழிகளுக்கு உவமானமாகக் குறைவில்வெட்கிப் பழிக்குள்ளாய் வாடிவந்து அப்பேற்றைக் கிடைக்கவெண்ணித் தவங்களைச்செய்து மறைந்திருப்பதுபோலவிளங்குகின்ற குவளைமலர்களைக்கண்ட பேதைமைப்பாலராகிய சிலகன்னியர் அதிசயித்துஇஃதென்னை அலைகளைப்பெருக்கி யோங்கிருக்கின்ற தடாகங்களுக்கும் நம்மைப்போல கண்களுண்டோவெனத் தங்கள்கொழுநனைவினவியும் சிலகன்னியர் தங்கள்பக்கங்களிற்றோற்றுகின்ற தாமரை மலர்களை முகமண்டலங்களாகவும் பரவியிருக்கின்ற பாசியைக்கூந்தலாகவும் செங்காந்தள்மலரை அதரங்களாகவும் உலாவுகின்ற சங்கினங்கள் கழுத்துகளாகவும் அலைகளை வெண்பட்டாடைகளாகவும் அதனிடத்திற்றங்கிய பட்சிகளொலியை வார்த்தையாடுவதாகவும் மதித்துத் தம்மைச்சூழ்ந்திருக்கின்ற பெண்கள்முகத்தைப்பார்த்து அடிதோழி பாங்கி யிதுவென்னபுதுமையாகவிருக்கின்றது இத்தடாகமொருபெண்பாலாகக்காணவில்லை பற்பலவுருவங்களாகத் தோற்றுகின்றது, இதன் தமதுமனதுக்கினியகாரணம் உங்களுக்கேதேனுந் தெரியுமோசொல்லீரென

க்கேட்டும் மற்றொருபுறத்தில் மன்மதனையொத்த சுந்தர
முள்ள கணவனுடன்கூடிச் சந்தோஷமாய் மலர்களைப்ப
றித்துக் கிளிகளையொப்ப வசனித்து வங்கணமாய் விளை
யாடிக்கொண்டிருந்த ஒருநாயகியானவள் மங்களகரமாகி
ய தன்திருமேனி ஜலத்திற்றோற்றக்கண்டவுடன் திகைத்
துச் சர்ப்பத்தைப்போலச்சீறி என்னைவஞ்சித்து இவ்விட
த்திலொரு சோரநாயகியைக்கொண்டு வந்தொளித்துக் க
ளிக்கின்றீரென்று மனவருத்தத்துடன் கணவன்கரத்தை
விடுத்துக் கோபத்துடன் துரிதமாய்க் கரையைச்சேர்ந்து
பிணங்கிநிற்கவும் மற்றொருகாளையானவன் அதிகசந்தோ
ஷத்தையுடைய மனத்தனாய்ப் பளிங்கையொப்பத்துல்லி
யமாகவிருக்கின்ற நீரைவாய்நிறையக்கொண்டு கொப்பளி
த்துக் கொப்பளித்து எதிரில்நிற்கின்ற காதலியினது மு
காரவிந்தத்தி லுமிழ்கின்றகாலத்திற் சகிக்கமாட்டாமை
யாற் காதலனிடத்திற்பிணங்கி மனச்சோர்வுடன் புனலி
ன்முழுகித் தாமரைமலர்க்காட்டில் முகாரவிந்தத்தைமா
த்திரக்காட்டி யிருக்கின்றகாலையில் அவளிடத்திற் றூய்
கொண்டிருக்கின்ற மையலினால்மயங்கி அவள்முகத்தை
யுமொருகமலமாகவே நினைந்து ஐயையோ பெண்மனதுக்
கினிய தேவியைக் காணேன் என்ன செய்வேனெனப்
பதைபதைத்து மனவருத்தத்துடன் தேடித்தேடித்திரிந்
தலைவதற்கிரங்கி நகைத்தமாத்திரத்தில் மனம்பூரித்துத்
தழுவியெடுத்துக் குலாவியிருக்கவும் பசியமூங்கிலைப்பழி
த்த வனப்புடன்திரண்டு கச்சினால் மூடப்பட்டிருக்கின்ற
தோள்களையுடையஒருபெண்கொடியானவள் காமனையொ
த்த வடிவுள்ள தன்காந்தன்மீதிற் பரிவாய்த் திருக்கரங்க
ளைக்கொண்டு ஜலத்தைவாரிவாரி யிறைத்துப் பரிகாசங்
களைச் செய்திருப்பதைப் பார்க்குமிடத்தில் வேதாகமபு
ராணஹிதிகாசங்களில் தமக்குரிய கணவனைத்தொழுவத
ன்றி மங்கையருக்கு வேறுதெய்வமில்லையென முறையி
டுவதற் கிலக்கணமாகத் திருமஞ்சனமாட்டித் துதித்துவ
ழிபடுவதற்கொப்பாகக்காட்டவும், இத்தகையவேடிக்கை
களின் மத்தியில் தேவாமுதத்தினு மினிமையாகவசனிக்
கும் சுந்தரவதிகளாகிய இராஜகன்னியர்முதலிய மங்கை
யர்கிழுந்து எத்தலங்களினுந் திரிந்துதிரிந்து முழுகிக்க
ளித்து விளையாடிவரும்போது அப்பொய்கையிற்சஞ்சரி
த்திருந்தகெண்டைகள்வராலினங்கள் சேற்கெண்டைகள் வட்
டமாயிருக்கின்ற ஆமைகள் தவளைப்படிவம்பெற் றிருக்கி
ன்ற சங்கினங்கள் வெருவித் தாமரை மலர்கள் மலர்ந்தி
ருக்கும் நீரலைவழியாற் கரைகளைச்சேர வொதுங்குவதெ
ப்படிக்கிருக்கின்றதெனில் அம்மங்கையர் உறுப்புகளுக்
கிணையொவ்வாத காரணத்தினால் நாணிப்புறந்தந்து பது
ங்கப்போவதைப்போலத் தோற்றவும் ஸ்ரீமகாலட்சுமிக்
குச் சமமாகிய வடிவைப்பெற்றுச் சருவாபரணபூஷிதை
களாகவிருக்கின்றதருணமங்கையரும் கருப்புவில்லைத்தா
ங்கி விற்றிருக்கும் மன்மதனையொப்பக்காட்டும் வனப்
பையுடைய காளையரும் கூட்டுறவாய் மனப்பூரிப்புடன்
ஒருவர்மீதொருவர் நீரையிறைத்தும் விழுந்துகலக்கியும்
முழுகியும் பாய்ந்தும் இவ்விதங்களில் உல்லாசமாய்வி
ளையாடி வருமுன்னிலையில் அப்பொய்கையானது அல்
லோலகல்லோலப்பட்டு அலைகள் மீறிச்சிதறுந்திவலைகளா
லவை தாமரையினது பசியவிலைகடோறும் பரந்திருப்ப
தைப்பார்க்குமிடத்தில் வனப்புக்கொப்பற்ற ஸ்திரீபூமா
ன்களனைவரும் எக்காலத்தும் தன்னிடத்திற்சேர்ந்து களி
யாடலைச்செய்துவரும் பூரிப்பினால் பூந்தடாகமென்னும்
கன்னிகைக்குத் தேகபரவசமாய் மயிர்சிலிர்த்திருப்பதை
ப்போல விளங்கவும் விழிகளுக்குத் தோற்றுதற்கரியமெ
ல்லியரவைசல்லாக்களையுடுத்துப்புனலிற்பாய்ந்துவிளையா
டித் திரியுமுன்னிலையில் வஸ்திரம்நனைந்து நிதம்பஸ்தா
னம் வெளிப்படையாகத் தோற்றக்கண்டவுடன் சகிக்கக்
கூடாதநாணத்தைக் கொண்டவளாயெதிரில் நிற்கவெட்கி
க்கொழுனனைச்சேர்த்தணைத்துத் தனபாரங்கள் விசாலமா
கிய மார்பிலிறுகத்தழுவி ஸ்ரீமஹாலட்சுமியானவள் விஷ்
ணுவின் திருமார்பில் விளங்குவதற்கொப்பாக விருக்கவு
ம் பேதைமைப் பாலளாகிய ஒருபெண்கொடியானவள் த
ன்னுடன்கலந்து தடாகத்தில் விளையாடி யிருக்கின்றகட்
டழகுள்ள கணவனுடைய அதரம்வெளுத்திருப்பதைக்க
ண்ட மாத்திரத்திற்சீட நானருகிலிருக்கும்போது பவள
த்தையொத்த வனப்புள்ள உமது அதரத்திலெச்சிலிட்ட
சோரநாயகி யாவளெனக் கொதித்துப் பிணங்கிப் போயி
னள்.

சவுனகாதிமிருஷிகளே, யிவ்விதச்சரசகீர் விளையாடல்
களைச் செய்துவருகின்ற காலையில் கொவ்வைக்கனி அரக்
கு முருக்கமலர், இவற்றைப்பார்க்கினும் சிவந்து காட்டு
ம் அதரமானது வெளுத்துக் காட்ட மையையொப்பக் க
றுத்துப் பாலைநிகர்த்துவெளுத்து செவ்வரிபரந்துநீலோ
ற்பலத்தைப்போலப் பிரகாசிக்கின்ற விழிகள் அரக்கினு
மதிகமாகச் சிவக்கவும் கறுத்துநீண்டிருக்கும் அளகபார
க் கட்டவிழ்ந்து பரந்துபுரளவும் அதிற்செருகியிருந்த பு
தியமலர்களினிடத் தொழுகுந் தேனையுண்டுகளித்திருந்த
வண்டினங்கள் ரீங்காரத் தொனிகளைச்செய்து பலதிசை
யினும் பறக்கவும் இவ்விதக்காட்சியைப்பெறச்செய்தமை
யால் வல்லிசாதகக் கொடியைப் போன்ற சாயலையுடைய
அம்மங்கையருக்குத் தாங்கள் குளித்திருந்த தடாகமான
து சரசசல்லாபங்களினால் களிப்பைத்தர வல்லகணவனை
ப் போன்றும் கள்ளையொப்பவுங் காட்டியது, இஃதன்றி
யும் சர்ப்பத்தினது படத்தைநிகர்த்துத் தோற்றுகின்ற
அல்குலைவாய்ந்த தெரிவையர்திரண்டு ஜலக்கிரீடையாடுகி
ன்ற முன்னிலையில் அலைந்து தாவல்யமாசப் பெருத்த கு
மிழிகளைப் பார்க்குமிடத்திற் பொய்கையாகிய கன்னிகை
தன்னிடத்திற் குளிக்கின்ற மங்கையர்வனப்பின்பெருமித
ங்களை யிரண்டுவிழிகளினாற் பார்த்துக் கணிக்கப்படாதெ
ன்றெண்ணித் தேகமுற்றினும் பற்பலவிழிகளைப்பெற்று
இமையாற்கண்டு களிப்பதையொத்தும் வீராதிவீரர்களா
க விருக்கின்ற சுந்தரமுள்ள பாலகுமாரர்களுஞ்சவுந்தரிய
வதிகளாகிய மங்கையர்களும் புனல்விளையாடலைச்செய்து
பரிமளித்திருக்கின்ற ஜலத்தில் அவர்கள் பூசியிருந்தபொ
ன்பிரகாசம்பொருந்திய குங்குமக் குழம்பும்புனுகுசவ்வா
து கஸ்தூரிமுதலிய கலவைச்சாந்துகளுங் கரைந்து படிந்
து காட்டுவதைப் பார்க்குமிடத்தில் மின்னலுடன் கலந்த
மேகசாலங்களும் ஸ்ரீதேவியுடன் கூடியிருக்கின்றவிஷ்ணு
வைப்போலக் காட்டவும் அவர்கள்தேகங்களிற் பூசியிருந்
த சந்தனத் தேய்வையும் நாவச்சேறும் பொய்கையிற் ப
டிந்து அலைகள் பெருந்தோய்ந்துவதினால்திசைகளெங்கணு
ம் பரிமளங்களை வீசிப்பொன்னுலகவாசிகளாகிய தேவர்க
ள் நாசிகளினும் நுழைந்து சுகந்தங்களைக்காட்டிக் களிக்க
ச்செய்யவும் இவ்விதமாக மாரனையொத்த வடிவுள்ளஇரா
ஜகுமாரர்முதலிய ஆடவரும் இலக்குமிக் கொப்பாகிய

சுந்தரமுள்ள இராஜபத்நினிகளாகியமங்கையரும் வெறுக்கத் தடாகத்தில் முழுகிமனதுக்கினிய விளையாடல்களைச் செய்து முடிந்தவுடன், கரங்களைக்கோத்து மாரனும் இரதியும்போல வங்கணமாய் அன்னங்களையொப்பநடந்துவிசால்மாய்ப் பரந்திருக்கும் கரையின்மீதுவந்து பனியினும் வெளுத்தவஸ்திரங்களினுலீரத்தைப் புலர்த்திச் சொர்னகாந்தியைப்பரப்பி யிருக்கும்விலையுயர்ந்த பீதாம்பரமுதலிய பட்டாடைகளை யுடுத்து நவரத்நினமயமாக விளங்கியிருக்கும் ஆபரணங்களைத் தரித்துக் கூந்தலைபாற்றிமுடித்துக்கொண்ட வர்களாய்த் தங்கக்கலசத்தில் முத்தாரத்தைப் பதித்திருப்பதையொத்த தந்தபந்திகளைப்பெற்றதருணமங்கையரும் பொன்னையொப்ப விளங்கும் திருமேனியைப்படைத்த காளையரும் ஏகமாகத்திரண்டு மதயானையைப்போலக் கம்பீரமாய்ப்போகின்ற தந்தமதுநணவருடன் காமுற்றுத்தொடரும்பிடிகளுக்கொப்பாகத் துணைவியர்கலந்துவங்கணமாய்க் குலவிப் பலபரிகாசங்களையும் விநோதமாகிய வார்த்தைகளையும் பேசிநடந்துவானத்தையளாவ வோங்கித் திசைகளைமூடக் கிளைகளைப் பரப்பிப் பொன்போன்ற தளிர்களைப்பரப்பிக் குளிர்ந்த நிழலைக்காட்டிக் காய்கனிகள்மிகுந்துஅழகியபுஷ்பங்களைப்பெற்றெதிரிற் ரேற்றுகின்ற சோலைகளினும் தோப்புகளிடங்களினும் காவுகள்தோறும் சேர்ந்தகாலையில் அத்தலம் விளங்கிய காட்சியாவது அடர்ந்திருக்கின்ற தருக்களின் மீதில் மேகங்களானவை மின்னலைப்பெருக்கிக் கவிந்திருப்பதைப்பார்க்கு மிடத்திற் சொர்னகாந்தியை வீசியிருக்கும் விண்ணுட்டைப் போலவும் ஸ்திரீபுருடர் களித்துலாவுகின்றதுபோக பூமியிலிருக்கின்ற கற்பகச்சோலைகளில் தேவர்கள் தம்பதிச் சமேதராய்ச்சேர்ந் துல்லாசமாக வுலாவுவதற்கொக்கும் அக்காலத்தில்நேர்ந்த அதிசயக்காட்சிகளிற் சிலவற்றைச் சொல்லக்கேட்பீராக, அச்சோலையினிடத்திருக்கின்ற பலவகைத்தருக்கள் குலுங்கப் பூத்திருக்கின்ற சாயையானது அதனடியிற்பொருந்தியபளிங்குத்திண்ணைகளினிடத்திற் காட்டியிருப்பதை ஒரு பெண்கொடியானவள் கண்டமாத்திரத்தில் அதனை உண்மையாக நினைந்து தொடர்ந்து வருகின்ற தன்கணவனைக் கரங்களைக்கூப்பித் தொழுது இத்தடாகத்தி லலர்ந்திருக்கின்ற மலர்களைப் பறித்துத் தரவேண்டுமெனக் கெஞ்சிக்கெஞ்சி வேண்டிக் கடையில் அதனுண்மையைத்தெரிந்து நகைத்துப்போகவும் விருஷபத்தைப்போலப் பாதங்களி லிறுக்கியிருக்கும் வீரகண்டாமணி கலீல்கலீலென ச்சத்திக்க விறுமாந்து போகின்ற இராஜகுமாரனொருவன் பரிமளமிகுத்தகோங்குமலரைக் கரத்திற்கொண்டு மயிலைப்போலசைந்து அன்னத்தை யொப்பநடந்து போகின்ற நாயகியைப்பார்த்துப் பெண்களரசே பொன்கலசத்தைநிகர்த்த வுமதுகொங்கைகளுக் கொவ்வாத இம்மலரைவாங்கிக் கொள்ளக் கடவீரெனப் பேசியமாத்திரத்தில் அரக்கையொப்ப விழிகள்சிவந்து உமதுமனதிற் குடிகொண்டிருக்கும் சோரநாயகிமுலைகளுக் கொப்பென்றெண்ணியோ கரங்களினும்பறித்துபற்றி யிருக்கின்றீரெனச் சீறிநோக்கி மனச்சோர்வுடன் பிணங்கிவேகங்கொண்டு முந்திப்போகின்றனள்.

இருடிகளே, பின்னுமொரு அதிசயத்தைக் கேட்பீராக சோடசகலைகளைவாய்ந்த முழுமதியின் ரேற்றம்போல விளங்கிக் கொண் டிருக்கும் முகமண்டலத்தைப் பெற்றிருக்கின்ற மாதர்கள்திருநோக்கந்தாக்கிய மாத்திரத்தில்யாதொரு உபயோகமுமில்லாமல்வறிதாயுலர்ந்து விறகாய் நின்ற தருக்கள் தளிர்த்துப் பசியஇலைகளைவிரித்துப் பரிமளமிகுத்த மலர்களைப்பரப்பிக் குளிர்ந்தநிழலைக்காட்டுமாயின் இஷ்டலாபமாய் ஆடவரைக்கலந் தின்பத்தைக் தருமுன்னிலையிற் பெறுங்களிமிகுதியையாவராற்சொல்லி முடியும் அச்சோலையில் மாரனைப் போல வுலாவிவருகின்ற ஒருகோக்குமாரன் தனக்கெதிரில் நிறைய புஷ்பித் திருக்கும் முல்லைச்செடியைப் பார்த்து அதிசயித்தவனைவானத்தில் விளங்கிக்காட்டும் தாரகாகணங்கள் பூமண்டலத்திலிறங்கிஒருமுகமாய் இவ்விடத்திற் சேர்ந்திருப்பதோவெனக்களித்துப் பேசிப் பக்கத்தில்வருகின்ற வேலைப்பறிக்குக்காதளவு மோடிய விழிகளையுடைய பெண்கள் சிகாமணியின்மீது குளிர்ந்த பார்வையைச்செலுத்தி ஓ அன்னமே தேவரீர் தந்தபந்திகளுக்குத்தோற்றமுறைகளிவையாகுமெனச் சொல்லக்கேட்டுப் பற்கள் வெளிப்படையாகத் தோற்ற நகைத்துப்போகவும் சேற்கெண்டையைப்போலப் பிறழ்ந்து செவ்வரிபரந்து விளங்கும் விழிகளைப்படைத்த நாயகியானவள் திவ்விய பரிமளமிகுந்த புதியமலர்களைப் பறித்து தரும்படிக்குந்தன்கணவனைக்கேட்குமுன்னிலையில் பக்கத்தில்வரும் மற்றொருநாகரிகனது மேல் பரந்தகொங்கைகளினிடத்தில் விழிகளைச்செலுத்தி மயங்கினவனைத் தளிர் அரும்பு இலைகளுடன் கொய்து கொடுத்தமாத்திரத்தில் உமக்கு மையலைத் தந்தவள் கொண்டையிலிவற்றினைச் சூடிக்களியுமென்று சற்றும் மனம் பொருந்திச் சகிக்கப்படாதவளாயெறிந்து போட்டுமனம்வாடித்திகைத்திருக்கவும் மிகுந்த காமத்தைத் தந்திருக்கின்ற மற்றொருபெண்ணரசியி னிடத்தில் மனதைப் பூர்த்தியாகச் செலுத்தித் திகைத்திருக்கின்ற குமாரனொருவன்தன் னிழலைப்போலத் தொடர்ந்துவரும் தேவி விருப்பித்தேட்ட அலரிப்புஷ்பத்துக்குமாறாய் அதனிலைகளைக்கொய்தளித்த காலத்தில் மனவெறுப்புடன் தயைபற்றவ னிடத்திற் சேர்ந்திருப்பதைப் பார்க்கினும் இவ்விலையைத்தின்றுசா தலைமுக்கியமாக விருக்கின்றதெனக் கொதித்துப் பின்னிடவும் மற்றொரு சுந்தரமுள்ளபுருஷன் அதிகவிருப்புடன் திரிந்துவருகின்றகாலையில் பக்கத்தில் நேர்ந்த ஒப்புவமையற்ற வனப்புள்ள பெண்ணரசியைப்பார்த்து நகைமுகனுய் ஓ? கண்ணே இதோ எதிரில் நிற்கின்றதென்ன மரத்தைக்கண்டையோ அதிற்காய்த்திருக்கின்ற குரும்பையானது உமதழகிய கொங்கைகளுக் கொப்பாக விளங்குகின்றது, பக்கத்திலிருக்கின்ற விளநீரானது உமது காயினது குயங்களுக்குச் சமமாக விருக்கின்றது அவற்றின்கீழ்ப்புறத்திற் றொங்கியிருக்கின்ற பாளையைப் பார்க்குமிடத்தில் அவள்தாயினுடைய தொங்குமுலைக்குச் சமமாகவிருக்கின்றதெனக் காட்டிப் பரிகாசஞ்செய்ததைக்கேட்ட தேவியானவள் தேகங்குலுங்கக்குலுங்க நகைத்த முன்னிலையில் கணவனும் மனதிலடங்காத சந்தோஷத்துடன் கூடிப்போகவும் மற்றொரு வாலிபன் தழைத்திருக்கின்ற தெங்கினிடத்தில் விரிந்திருக்கின்றவிளம்பாளையொன்றைத்தாவிப்பறித்து வந்து தையலுக்குக் காட்டி ஓ பாவாய்? தமியேனுயிரே உமதுபணைத்தமுலையினிடத்திற் சேர்க்கவொண்ணாத முத்தாரமிதுவாகும் தயைசெய்துகொள்ளுமெனத் தந்துஇருவருங் களித்துப்போகவும்மற்றொருகாளையானவன் இரதியையொத்தவனப்புள்ள தேவியைமகிழச்செய்ய நினைந்து பெண்கள் சிகாமணியே பரிமளமிகுத்தவே

ங்கைமலரும் புன்னாகப் புஷ்பமுந் தேடிக்கொண்டு வந்தேன் அணிந்துகொள்ளக் கடவையெனச்சொன்னமாத்திரத்தில் முகம்புலர்ந்து மன்று உமக்குப்பலஸ்திரீகளுண்டோ மலர்விதங்களைக் குறிக்குங்காரணமென்னேவென்று தன்னுயிரை யொத்த கொழுநனைச்சீறிக் கிலேசித்துநடக்கவும் இலக்குமி இரதிக்குச்சமதையாகச் சொல்லத்தக்க பேரழகைவாய்ந்த விருதேவியரைப் பெற்றிருக்கின்றவிலட்சுமிவிலாசம் பொருந்திய ஒருவிடலை அவர்கள் மத்தியிற் குலவிக்கொண்டு போகுமுன்னிலையில்எதிரில் நேர்ந்த திவ்விய பரிமளமிகுந்த மலர்களைப்பறித்துக்கூரியவேலையொத்த விழிகளையுடைய அவ்விருவருக்குஞ்சமமாகக்கொடுத்த காலத்திற்பின்பெற்றவள் இதுபழுதுப்பூவென்றெறிந்தனள், அதைக்கண்ட முன்பெற்றுக்கொண்டவளும் அவ்வாறே வீசிப்போட்டு இருவரும் பிணங்கிப் போயினர்.

சவுனகாதி யிருஷிகளே, யிருபெண்டுகளைப்படைத்தவனுக்கு வேறுகூற்றுவனும் வேண்டுமோ இருதலைக் கொள்ளியிலகப்பட்ட எறும்பைப் போல அவளிடத்து மிவளிடத்தும் திரிந்துதிரிந்து பலசமாதானங்களைப்பேசி அலைந்து திரியவும் அம்பையொப்பக் காதளவுமோடி யிருக்கின்ற விழிகளைப்படைத்த பெண்கொடியொருத்தி மூவகைமலர்களைக் கறுத்துவிளங்கும் கொண்டையிற் செருகிக் களித்திருப்பதை விருஷபத்தையொத்த ஒருசெம்மல் கண்டு பூவையை யொப்பக் கொஞ்சிய மொழிகளையாடும் பாவாய் மெல்லிய உடையிடை அசைந்தசைந்து வருந்தும்படிக்கு கருமணலையொப்பப் பிரகாசிக்கும்அளகபாரத்தில் முப்பூவினைந்த வாறென்னே தயைசெய்து சொல்லக்கடவையென வேண்டிப் பின்பற்றிப்போயினன் இவ்விதங்களாக மதயானையையும் விருஷபங்களையும்போன்ற நடையையுடையஇராஜகுமாரர்முதலிய ஆடவர்களும் கோகிலங்கள் நாணும்படிக்கு வசனித்து மயிலையொப்பவசைந்து அன்னத்தினு மெல்லிய நடையையுடைய பருவமங்கையரும் ஏகமாய்த் திரண்டு தழைத்துக் குளிர்ந் திருக்கின்ற சோலைகளி னுலாவி வேடிக்கைகளைப் பார்த்து விநோதக்களையாடியும் பரிகாசங்களைப் பேசியும் திவ்விய சுகந்த மலர்களைப் பறித்துச் சரங்கள்சேர்த்துச்சூடியும் கொண்டைகளிலணிந்தும் செண்டுகள்செய்து ஒருவர்மீதொருவர் வீசியும் பிணங்கியும் மீட்டுமொருமித்துக்களித்தும் உலாவினவர்கள் திரும்பித் தத்தமது வீதிகளிற்சேர்ந்துமனமகிழ்ந்திருந்தகாலையில் ஒற்றையுருளையும் எழுபச்சைக்குதிரைகளையும் பூண்டு அருணன்செலுத்தும் இரதத்திலாரோகணித்துப் பகற்பொழுதைவிளக்கிவந்த சூரியபகவான் ஆயிரங் கிரணங்களைச்சுருக்கி மேற்றிசையில் விளங்கும் அஸ்தமன கிரியிற்சேர்ந்து மறைந்தனன், அக்காட்சியெப்படிக் கிருந்ததெனில் மலர்பொதுளிய பூங்காவுகளிற் சஞ்சரித்துஇராஜகுமாரர் முதலாயினர்தத்தமதுதேவியருடன் விநோதவிளையாடல்களைச் செய்துவந்தகோலத்தைக் கண்டிருந்தவன் தானும் தன்பத்தினியுடன்வங்கணமாய்க் குலவிக்களிக்கும் விருப்பத்தைக் கொண்டவனாய்த் துரிதப்பட்டு மேற்பாரிசத்திற் காட்டியசெவ்வானமாகிய பூஞ்சோலையிற் சேர்ந்தவனைப் போலத்தோற்றியது.

அத்தருணத்தில் பரந்தமாலையிருளையும் நட்சத்திரராசிகளையும்பார்க்குமிடத்தில்அந்திவண்ணனாகியசிவபிரான் கஜாசுரன்தோலைபுரித்து உதிரம்பெருகத்தோளிற் போர்த்ததைப்போலவிருளும்செவ்வானமும்விளங்கவும்தேவர்கள் மகிழ்ந்து பரமனைப்போற்றிச் சொரிந்த கற்பகமலர்களையொப்பத் தாரகாகணங்கள் தோற்றவும்உடனேசோடசகலைகளைப் பெருந்திச்சந்திரனெழுந்ததைக் குறிக்குமிடத்திற் சக்கரதரனாகிய ஸ்ரீமகாவிஷ்ணு முன்னொருகாலத்திருப்பாற்கடலைக் கடையுமுன்னிலையில் ஆமையாய்க் கவிழ்ந்த மந்தரகிரியைத்தாங்கியும் மற்றும்பல முயற்சிகளைச் செய்து அமுதத்தைத்தந்தனர், மீட்டும் அவருக்குச் சிறுமைகொடுக்கலாகாதென வெண்ணித் தேவர்கள் திரண்டிருந்த நிலவின்வீக்கமாகிய தயிர்க்கடலைமத்திக்குமுன்னிலையில்வெண்ணெய்திரண்டு மேலெழுந்ததைப்போல விளங்கினன், மேற்குறித்தபடிக்குப் பிரகாசிக்கும் சந்திரன் தோற்றத்தைக்கண்டமாத்திரத்திற் சரசசல்லாபங்களுடன் காம வின்பத்தையனுபவித்தவர்களினும்மிகுந்த சந்தோஷ சித்தராய் இராஜகுமாரர்களும்இராணியர்களும் தேகம்குளிரத் தேறலையுண்டுவிடாய்தணிய நினைத்தவர்களாய் ஆடவர்களும் பருவமங்கையர்களும்கூட்டங் கூட்டமாகச் சேர்ந்து குடங்குடமாய் மதுரமிகுத்தகள்ளைத்தருவித்துக்கொண்டு சொர்ணபாத்திரங்களிற் றேறலை நிரப்பிக் கமலங்களையொத்த கரங்களிற் பொற்கிண்ணங்களிற் கள்ளைப்பூரித்துக் கொண்டு பலநாள் சலத்தையிறைத்து வளர்த்ததெங்கின் பலனை அவற்றினிடத்துண்டாகும் இளநீர்க்காய்களின் மூலமாகப் பெறுமாறுபோல தத்தமது தேவியருண்ணக் கொடுத்துக் களிப்பையுண்டாக்கி அவர்கள் சிவந்த அதரத்திலூறுகின்ற தேறலையருந்த விருப்புற்று ஆலிங்கனஞ்செய்து சரசசல்லாபங்களினால் மனத்திருப்திபெற்றும் திருப்பாற்கடலினுதித்த தெளிந்த அமுதத்தினுமினிய வசனங்களைப்பேசும் சில இராஜகன்னியர் கள்ளை நிரப்பிக் கரங்களிற் றூக்கியிருக்கின்ற வெள்ளிக் கிண்ணங்களின் தோற்ற மெப்படிக்கிருக்கின்றதெனிற்சோடசகலைகளைவிரித்து இரவைவிளக்கி வானத்திற்சஞ்சரித்து வரும் சந்திரனைப் பார்த்துப் பொறுமையால்பூமியினிடத்திற் கணக்கிறந்த அம்புலிகளானவைமாறுகொண்டுதித்து விளங்குவதை யொப்பக்காட்டியது.

அக்காலத்தில்வண்டுக்குப் பாத்திரமாகவிருக்கின்றதேறலைமிகுதியாகக் குடித்த வொருமடமங்கை மயக்கமிகுத்த காரணத்தினால் விழிகள்சொருகவிட மதிமயங்கி பற்கள் வெளிப்படநகைத்து வானத்தில்விழிகளைச்செலுத்திஓ சந்திரனே பரிமளித்துச் சுவைமிகுத்த இந்த மதுவிலொரு துளியையுண்ணப் பெறுவையாயின் பலநாட்களாக உன்னிடத்திற் பிரிவின்றி விளங்கும் களங்கமனைத்தையும் போக்கி அதிககாந்தியைப் பெற்றுத்தேய்வில்லாமல்இனியெக்காலமும்இவ்வொளியைப்பெற்றிருப்பையாதலால் உன்னிடத்திற்பரிவாய்இந்த வுறுதியைச்சொன்னேன் தாமசஞ்செய்யாமல் துரிதமாயிறங்கிவா இறங்கிவாவெனக்கரங்களை நீட்டி யழைத்தும் மற்றொரு பெண்கொடியானவள் கள்ளினையுண்ட வெறியினால் வானத்தைப்பார்த்துஓ சந்திரபகவானே நான் தினந்தோறும் மனத்திருப்தியாக நுகர்ந்து வரும் நறவின்பெருமிதங்களைப் பார்த்துஅதிக விச்சைகொண்டவனாய் நாடோறும்வருந்தித்திரிகின்றனை ஒருகாலம் யாவராயினுங்காண்பாரென நாணுற்றிருக்கின்றாயோ தனிமையிலென்னுடன் வாயைத்திறந்து வெளிப்படையாகச் சொல்லலாகாதோயான் அதற்கடுத்ததந்திரங்

களைத் தேடேனே இதன் மகத்துவமும் பெருமையும்உனக்கெவ்வளவுந்தெரியாது அதனைச்சொல்லக் கேட்பையாக இத்தேறலிற் றிவலைப்பிரமாணங் கிடைத்துண்ணப்பெறுவையாகில் அதன்சம்பத்தினால் ஆயிரங்கிரணங்களைப் படைத்திருக்கின்ற சூரியனைப்பார்க்கினும் பிரகாசத்தைப்பெற்றுத் தேய்தலும் வளர்தலுமின்றி குறைவற்றபெருமையைப்பெற்றுவாழ்வை தினந்தோறுங்கண்டேங்குகின்றனையாதலால் உன்னிடத்தில்மிகுத்தபிரியமுண்டாயிது தருவேன் துரிதமா யிவ்விடத்தில்வரக்கடவையென்றழைத்தும் மற்றொருமடந்தையானவள் வெறிமிகுதியினால் விழிகள்சோர்ந்து மதிமருண்டு அம்மதுவில் தன்னிழலைப்பார்த்து என்னுடனுதித்தனை எனக்கடுத்த நன்மையை வேண்டாமலிருப்ப தென்னகாரணம் முன்பின்னிடைவிடாமற் றொடர்ந்து நாடோறுந் திரிகின்றாய் தேகபவுத்திரமாக்கி மனவெழுச்சியைத் தரவல்ல சிறந்த நறவைவலிதிற் கொடுப்பினும் உட்கொள்ள விரும்பாய்உன்வறுமைக்கென்னசெய்வேன் கொடியபாதகியென்றிகழ்ந்துபேசி மனம்வருந்தவும் மற்றொரு அரிவையானவள் தங்கவள்ளத்தில் மதுவைமுகந்துமுகந்து உண்டசோர்வினால் மயக்குற்றுத் தன்விழிகள் சிவந்திருப்பதையும் இதழ்வெளுத்துக் காட்டுவதையுந்தெரிந்துகொண்டவுடன் திகைத்து மதிமருண்டு என்னையறியாமற் கணவன்வஞ்சகப்புணர்ச்சியைச்செய்து போயினனோவெனச்சீறி நாலுமூலைகளினு மோடியோடித்தேடி யலைந்தும் இவையன்றியும் சர்வாங்க பூஷிதைகளாய் இரதிக்குமேலாகிய வனப்பைப்பெற்றிருக்கின்ற சிலபேதையர்கள் உல்லாசமாய் வார்த்தையாடிக்கொண்டு திருப்தியாய் மதுபானஞ்செய்து வாயைச்சப்பிக்கொண்டு இத்தேறலுக்குமுன் மேன்மையாகச்சொல்லும் தேவாமுதம் அப்பிரயோசனமாகக் காணுகின்றது, இதன்காரணங்களைத் தெரியாதவனொன் பெறுவானெனவெறுத்து அவ்வெறியினால் காமலாகிரிமேலிட்டுக்கணவனைத் தழுவிப் புணர்ந்தின் புறவேண்டுமென்கிற ஆசைப்பெருக்கினால் வருந்திச்சோர்ந்து சந்திரனதுகாந்தியைத்தழலாகப்பாவித்து வாடினர் இவ்விதக்களிப்பைத்தரும் கள்ளையுண்டதருணமங்கையர் வெளியிற் போயிருந்த கணவனை நினைந்து வாடியும் அவர்கள்வரவைக்கண்டவுடன் இதுபரியந்தம் எத்தலத்துக்குப்போயிருந்தீரென்று பிணங்கியும் கட்டியணைந்து சுரதலீலைகளைச்செய் தின்பமுற்றுக்களித்தும் கேட்பவர்கள் செவிகளுக்கமுததாரையைப்போலப் பாடி மகிழ்ந்தும் சிலர்பிணங்கியிருக்கின்றகாந்தனைச் சேவித்துப் பஞ்சணைமெத்தையிலின் புற்றிருக்கவேண்டியும் சிலகன்னியர் தங்கள் காதலன்விழிகளை மூடியோடிப் பக்கங்களிலொளித்தும் சிலமடந்தையர் தாங்களருந்துகின்ற மதுவைக்கிள்ளைகளுக்கருத்தியும் பூவைகளுக்குக் குடிப்பாட்டியும் வெறிமிகுதியினால் வண்டினங்களிறங்கி யுண்பதையறியாமல்தாமுங்குடித்தும் தம்மையடுத்த பாங்கியர்களுடன் கலந்துண்டுமகிழ்ந்தும் சிலமடமாதர்கள் மயக்கமிகுதியினால் நாணத்தைப்போக்கிப் பஹிரங்கமாகத் தள்ளாடித்திரிந்தும்இடையிலணிந்த பூந்துகிலானது நழுகிச்சோர்வதையறியாமற் சஞ்சரித்தும் தமக்குத் தாமேபேசி வாதுகொடுத்தும் நினைப்பதொன்று வசனிப்பதொன்றாய்ப் புத்திமயக்கிக் குதலைச்சொற்களால் வசனிப்பதால் குடியென வழங்கிக் கொள்ளவதற்குத் திஷ்டாந்தரமாய்க் கால்களிடறி விழுந்தும் தள்ளாடிநடந்தும் உணர்வழிந்துறங்கி வாய்களில் ஈக்கள்மொய்க்கப் பிரேதங்களைப்போல அசைவற்றிருந்தும் இவ்வாறு மானத்தையுமீனத்தையும்மறக்கச்செய்யுங்காரணத்தினால் இருஷிகளே கள்ளைவிடக் கருத்தையழிக்கவல்ல பொருள்வேறொன்றுங்காணேன் இப்படிக்குத் தம்பதிசமேதராய் மதுபானங்களைச்செய்து மத்தனைப்போல மயக்கி யிருந்தவர்கள் தெளிந்தவர்களாய்க் காமலாகிரிமேலிட்டு விரகாக்கினியானது தேகத்தைவருத்தப் புருஷர்களும் பூவையர்களும் புஷ்பசயனங்களிற் சேர்ந்துசரசசல்லாப லீலைகளைச்செய்து விளையாடியிருந்தனர்.

இதுநிற்க முசுகுந்தச் சக்கிரவர்த்தி முதலிய வரசர்கள் செய்கைகளையும் பாலசுப்பிரமணியக் கடவுளினது திருக்கலியாணச் சிறப்புகளையும் இனிகேட்பீரென்று சூதபுராணிகர் நைமிசாரணிய வாசிகளுக்குச்சொல்லத்தொடங்கினர், சூரியவேலைத்தாங்கிய முசுகுந்தச்சக்கிரவர்த்தி முதலாகிய அரசர்கள் திருப்பரங்குன்றத்தைச் சேர்ந்தவுடன் தமதுவாகனங்களை விட்டிறங்கிப் பொன்மயமாகியகொடிமுடிகள் பெருத்திருக்கின்ற அம்மலையின்மீதேறி அதன் மேற்புறத்திற் றெய்வத்தச்சனாற் செய்யப்பட்டு நவரத்தினகாந்திகளை வீசிக் கொண்டிருக்கும் நகரத்தின்வீதிகளிற் பிரவேசித்துப் பலசிறப்புகளையும் பார்த்து மனமகிழ்ந்தவர்களாய்த் திருக்கலியாணத்துக்கு வேண்டும்உபகரணங்களைச் சேகரித்தும் மற்ற காரியங்களையும் சருவசாக்கிரதை செய்துகொண்டு தேவேந்திர னிருக்கின்றமண்டபத்தைச்சேர்ந்துசக்கிரவர்த்திமுதலிய பிரமுகாள் விண்ணவர் தலைவன், பாதாரவிந்தங்களிற் சேவித்துக் கரங்களைக் கூப்பிக் கொண்டு நிற்கின்றவர்களிடத்திற் பரிவாய் க்ஷேமலாபங்களை விசாரணைசெய்து உங்களையொத்த புண்ணியவான்கள் மிகவும் வருந்தி வரத்தக்க பாக்கியத்தைப்பெற்றேனென்று பல வுபசாரவார்த்தைகளைப் பேசியவுடன் செலவுபெற்றுப் போய்ச் சிவகுமாரன்வீற்றிருக்கின்றமாளிகையைச் சேர்ந்துபணிந்து போற்றியிருக்கின்றகாலையில் அரைக்கணத்தில் ஆயிரக்காதவழியாகச் சென்று தினத்தைவிளக்கிவரும் சூரியன் சந்திரன்முதலிய நவக்கிரகங்கள் திக்குப்பாலகர் முப்பத்துமுக்கோடி தேவர்கள்நாற்பத்தெண்ணாயிர மிருஷிகள் கருடகாந்தருவர், சித்த வித்தியாதரர், பன்னகர், ஏகாதசருத்திரர், துவாதசாதித்தர், இராசிகள் காலங்கள் வேதங்கள், கலைகள், பாதலவாசிகளாகிய சேடனுதிய நாகராசாக்கள் மற்ற தீவுதீபாந்திரங்களிலிருப்பவர்க ளனைவரும் ஏகமாகத்திரண்டுசத்தசாகரங்களும் கடையுகத்தில் மேருவைச் சூழ்வதைப்போலச் சிவகுமாரன் திருக்கலியாணச் சம்பிரமத்தைத்தெரிசித்திடேறுங் களிப்பினராய் ஜயவுற்சாகங்களுடன் சமுத்திரம் போலக் கோஷித்து நாற்புறங்களினு மிருந்துவந்து திருப்பரங் குன்றத்தைச் சேர்ந்து மனப்பூரிப்புடனிருக்கின்றஇந்திரனைக்கண்ட மாத்திரத்தில் தேவர்களனைவரும் ஆவலுடன் திருவடிகளிற் பணிந்துபோற்றவும் இருஷிசிரேஷ்டர்கள் மனவெழுச்சியுடன் வேதவாக்கியங்களினாற் சகலதுன்பங்களையுமொழித்து கஜேந்திரச் சம்பத்தைப் பெற்று வாழக்கடவாயென்று பற்பல ஆசீர்வாதங்களைக்கூறவும்மற்ற ஆதிசேஷன் முதலாகிய பிரமுகாளைத்தழுவியும்முகமன் களைப்பேசியும்சுகசீவிகளாகவிருக்கக்கடவீர்க ளென வாழ்த்தியும் இவ்விதங்களாக அவரவர்களுக்குத் தக்க

விசாரணைகளைச் செய்துவருமுன்னிலையில்ஸ்ரீமகாலட்சுமி சரஸ்வதி தேவியுடன் அவ்விடம் சேர்ந்து களித்திருக்கும்போது சந்தோஷப்பெருக்கினுழ்ந்துவந்த அரம்பையரினங்கள் இராஜபத்தினிகள் வானரமகளிர் விஞ்சையமாதர்கள், நீரரமகளிர், திசையாளர் தேவியர், நாககன்னியர்இருஷிபத்தினியர் முதலியோர் அமோகமாகத் திரண்டுவந்து திரிலோக சக்கிரேஸ்வரன் தேவியாகிய இந்திராணிவாசஞ் செய்யும் தலத்தைச் சேர்ந்து வழிபட்டவர்களாய்த் தெய்வயானை யம்மையை விழிகள்களிக்கத்தக்கதாகக்கண்டு பதிவிருதா சிரோமணியே கேட்டருள்க ஆயிரத்தெட்டண்டங்களுக்கும் அதிபனைச் சகலரும் வணங்கிப்போற்றக் கொடுங்கோல் செலுத்தி மன்னுயிரையலைத்துவந்த பாதகனாகிய சூரபதுமனை நிமைப்போதில் வாட்டிய வெற்றிவேலாயுதக் கடவுளுக்குத் தேவியாக விருக்கின்றதால் எவ்வுலகங்களுக்கு மிறைவியாவாயெனச்சகலருங்கொண்டாடித் திருவடிகளில் வணங்கிப் போற்றினவர்களாய்மிகுத்தபத்தி விசுவாசங்களுடன் தெய்வயானை யம்மையைச் சூழ்ந்து கொண்டு இயற்கையாக விருக்கின்ற அழகுக்குச் செயற்கையினால் சிலகோலங்களை அலங்கரிக்கவிருப்புற்றுச் சூழ்ந்து சுபசோபனங்களைப்பாடி ஒப்பற்றவடிவுள்ளமன்மதனை நுதல்விழிக்கனலினால் தகித்தசிவபிரான் மனதுக்கினிய திருக்குமாரனைப் பாணிக்கிரகணஞ்செய்யுங் கருத்தளாய்ப் பலகாலம் அரியதவவிரதங்களைச் செய்துவந்த முன்னிலையிற் பரிமளமிகுத்து நீண்டிருக்கும் கூந்தல் சடைபெற்றிருப்பதைச் சுகந்தத்தயிலங்களைத்தடவி நகங்களினால் மெல்லமெல்லநீக்கிச்சீர்படுத்தியியற்கைபாகப்பரிமளித்திருக்கும் குழலில் நானச்சேறுசம்பங்கியெண்ணெய் பச்சைகர்ப்பூரம், புதியசாந்தமாதிய பரிமளதிரவியங்களைத் திமிர்ந்து வானகங்கையினாலும் பனிநீரைக் கொண்டும் திருமஞ்சனமாட்டி வைத்துவெளுத்திருக்கின்றபனிப்படலங்கள் சேர்ந்து சிறிவரும் சர்ப்பத்தைக்கவ்வுமாறுபோல வெள்ளைவஸ்திரத்தைக்கொண்டு துடைத்து ஈரத்தைப்போக்கிக் கோதிச்சிக்கறுத்தபின்புமிருதுவும் வனப்பும் காந்தியும்பெற்று மாந்தளிரையொப்பக் கூட்டுறவின் றிச் சிவந்திருக்கும் தெய்வீகம்பொருந்திய பீதாம்பர ஆடையை மெல்லிய இடையினிடத்துடுத்தி ஆயிரங்கிரணங்களைப் பரப்பி மாதந்தோறு மொவ்வொருவராய் உலகங்களை விளக்கிவரும் துவாதசாதித்தர்களும் ஏகமாய் வானத்தைக்கடந்து பூமண்டல வெல்லையினிடத்தில் வரக்கண்டஞ்சி யிளிருன் பெருக்கனைத்தும் திரண்டொரு மித்து வேறுசரணகதியாகிய தலத்தைக்காணமையால் இளையபெருமாள் பத்தினியாக விருக்கின்ற தேவ குஞ்சரியினது கூந்தலினிடத் தபயமடைந்ததைப்போலக் கறுத்துக் காட்டும் கூந்தலினிடத்திருக்கின்றவீரத்தை பரிமளமிகுத்த அகிற் கட்டைகளை மேன்மையாகச்சீவிச் சொர்னக்கும்மட்டியினிடத்திட் டெழுப்பிய நறும்புகையையூட்டியுலர்த்திய பின்பு தேவர்கள்முன்னோர்களுடன் செய்திருக்கின்ற தெய்வநாயகியார் அளகபாரத்தைத் தந்தச்சீப்பினாற் சிக்கறுத்து வாரிச்சீர்படுத்தியவுடன் தங்கத்தினா லமைந்திருக்கின்ற சிதேவிக்கோலத்தையும்,சிவகுமாரன்மீதுசினந்த காலத்தில் அவனனுக்காகத்தினாற் பேருணர்ச்சியைப்பெற்று வாகனமாகவிருக்கின்ற அழகியகலாபத்தையுடைய மஞ்ஞைக்கோலத்தையும் வலம்புரிச்சங்கின் படிவத்தையும் மகரமச்சத்தின் உருவத்தையும் தகுதியாகிய விடங்களில் தேவகன்னியர் மங்கலவாழ்த்துகளைச் சொல்லி அணிந்த வுடனிதழ்களை யுடைய கோங்குமலரினையும் வெட்சிப் புஷ்பத்தையும் மயிரைரோகை யெடுத்துச்சொருகிப் பருத்த மல்லிகை வகைகளினிதழ்களை அவற்றின்மத்தியி லமைத்துத்திவ்வியசுகந்தங்களை வீசும் புஷ்பவிதங்களினாற் சீர்பெறச் செய்திருக்கின்ற சரங்களைச்சூழ்வரவமைத்துத் தண்டைமாலைகளை அவற்றைவளையச் சாத்திய பின்பு பொற்சிமிளைப்போல வட்டமாய்க் காட்டும் கொண்டைபோட்டு மலர்களைக் கிள்ளியணிந்து சோடசகலைகளையுடைய பூரணச்சந்திர பிம்பத்தி னிடத்திற் களங்கந்தோற்றுவதை யொப்பக் கருமைதோற்றும் படிக்குவிழிகளின் இமைகளினும் புருவங்களிடங்களினும்மையைபிட்டு அர்த்த சந்திரனை நிகர்த்ததுதலினிடத்திற் சாந்துப்பொட்டுமிட்டு நறும் புகையை யூட்டிக் கமழ்ந்திருக்கும் மயிர்செறிந்த சிரத்தின் முற்புறத்தி லிருந்து அழகிப்நெற்றியிலிட்டிருக்கின்ற திலகத்துக்குச் சமீபத்திற் றெங்குவதாகத் தங்கத்தினாலும் வயிரங்களினாலும் முடித்திருக்கின்ற சுட்டியைத் தொங்கவிட்டனர், அதனைப்படி விளங்கியதெனிற் கேதுவான தமேகத்தினிடத்தினின் பிச்சந்திரனைக் கவ்வவருமுன்னிலையில் நாவைநீட்டிக் கக்கிபவிஷத்துளியை யொப்பத் தோற்றவும், இவையன்றியும்அழகிய சொர்ன வளையல்களைத் தரித்திருக்கின்ற தேவப்பெண்கள் பூரிப்போடு பொற்பேழைகளைத்திறந்து சிரோரத்தினங்களினால் செய்யப்பட்டிருக்கின்ற சடைப் பில்லைசந்திரபிறை சூரியபிறை அரசிலைத் தொங்கல் சடையணிவிதங்களை அளகபாரத்தைச் சூழ்வரத்தரித்து வயிரக்குழைகளைத் தொங்கட்டங்களுடன் செவிகளிற்பூட்டிச் சூழ்சங்கத்தை நிகர்த்த திருக்கழுத்தினிடத்தில் முத்தாரம்,சரப்பளி, மோகனமாலை, மதாணிப்பதக்கம்,நவரத்தினமயமாகச் சொலித்திருக்கும் காறைவிதங்களைத் தரித்துப் பசியமூங்கிலைப்பழித்துக் திரண்டு விளங்கும் தோள்களிற்புயவணிகளைச் சேர்த்து தாமரைமலரினு மெல்லிய கரங்களில் வயிரவளையல் கங்கண விதங்களைச்சாற்றி பவளத்துண்டுகளுக் கொப்பாக விளங்குகும் விரல்கடோறும் மோதிரங்களைத் தரித்துப் பொற்சன்னங்களைப் பரப்பியிருப்பதைப்போலத் தேமல்பரந்து தங்கக்கலசத்தைப்பழித்து வட்டமாய்ப் பூரித்துத் ததும்பி யிருக்கும் கொங்கைகளின்மீது பரிமளமிகுத்த கலவைச்சாந்துகளைப்பப்பிச்சிந்தூரத்தினாற் றொய்யலெழுதிச் சொர்னப் பட்டாடையினாற் செய்தமைத்திருக்கின்ற கச்சணிந்து பஞ்சகற்பக மலர்களினாலும் மருமருக்கொழுந்து இவற்றினாற் சோடித்திருக்கின்ற தண்டைமாலையைப் பலவணிகளுடன்சாத்தி விலையுயர்ந்த பீதாம்பர வுத்தரீயத்தினால் மறைத்து உடுக்கையைப்போலச் சிறுத்த விடையினிடத்திற் சற்று மிரக்கமற்றவர்களாய் இவ்விதப்பூணரச்சுமைகளைச் சேர்த்தபின்புயாழினைசையைப் பழித்துக் குயிலும் நாணும்படிக்குக்கொஞ்சிய மழலைவார்த்தைகளைப் பேசவல்ல தெய்வயானையம்மையினுடைய பாதார விந்தங்களிற் செம்பஞ்சுக் குழம்பைச் சாத்திச் சித்திரங்களை யெழுதிப் பொற்பாடகம், சதங்கை, தண்டை, யிவற்றைச்சூடிவிரல்கள்தோறும்மோதிரம் பீலிமுதலிய அலங்காரங்களைப்பூட்டியிவ்விதங்களிற் றெய்வகன்னியர் திரண்டுஅழகுக் கரசியாக விருக்கின்ற தெய்வநாயகி யாருக்குச் சிங்காரக் கிரமங்களைத்தேடித் தேடி மனப்பூர்வகமாகச்செய்துமுற்றியவுடன்நவரத்தின

மயமாகச் சோடித்திருக்கின்ற பீடத்தி லெழுந்தருளச்செய்து திருஷ்டிபரிகாரமாகும் பொருட்டுக் கறுப்பு-சிவப்பு-மஞ்சள்-பச்சை-வெள்ளைநிறம்பெற்ற அன்னத்தினாற் செய்யப்பட்ட ஐயவியைச்சுற்றி நாற்புறங்களினு மிறைத்து மஞ்சள்நீரைப் பொற்றட்டி லேந்தி ஆலஞ்சுழற்றியித்தகைய சடங்குகளை முடித்தவர்களாய்ப்பூரணச்சந்திரனைச் சூழவிருக்கின்ற நட்சத்திரங்களைப்போலக் கல்யாணப் பெண்ணை வளைந்துகொண்டு சுபசோபனங்களைப்பாடி மனவெழுச்சியுட னிருந்தனர்.

இவைநிற்கக் குவளைக்காட்டையொப்ப ஆயிரம் விழிகளைப் படைத்திருக்கின்ற தேவேந்திரன்செய்கைகளையினி சொல்லக் கேட்பீராக மேற்குறித்தபடிக்கு மணப்பந்தலில் வேண்டும் உபகரணங்கள்முதலாகச் சாக்கிரதைப் படுத்திவைத்தவுடன் தேவராஜன் பிரமனிருக்கின்றவிடத்துக்குப்போய் வணங்கிச் சுவாமி கலியாணமண்டபம்மற்றும்வேண்டுபவை யனைத்தும் சோடித்துமுடிந்தது தேவாகள் இருஷிகள் இராஜாக்கள் பாதலவாசிகளனைவரும் வந்துசேர்ந்திருக்கின்றனர், இனியெதிர்பார்க்கவேண்டுவதொன்று மில்லை ஆதலாற்கடப்பமலர்மாலைபுரளும் பன்னிருபுயாசலங்களையுடைய குமாரசுவாமியாருக்கு நமதுபுத்திரியை தாராதத்தஞ் செய்துகொடுக்க யோக்கியமாகியகாலத்தைஆராய்ந்து முகுர்த்தம் நடக்கவேண்டியநாழிகையையேற்படுத்த வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தகாலத்திற்பிரமன்நகைத்துச்சுயஞ்சோதிப்படிவத்தனாகியபாலசுப்பிரமணியக் கடவுளுக்குத் திருக்கல்யாணத்தை நடப்பிப்பதற்கு ஒருவேளையைக் குறிக்கவும் வேண்டுமோஎக்காலமும் நன்மையாகவே யிருக்குமாயினும் வேதவிதிப்படிக்கு ஆராயுமிடத்திற்பொருத்தநிமித்தங்களும்திதிவாரயோககரணமுதலிய சமஸ்தமும் இத்தினம்மிகவும் சுபகரமாகவிருக்கின்றது, துரிதமாய்நடப்பிக்கலாமெனச்சொல்லியபோது இந்திரன் மன மகிழ்ச்சியுடன் மகாவிஷ்ணுபிரமனைவணங்கி நாமெல்லோரும் திருச்சபைக்குப்போய் அரிதிற்பெற்ற பெண்கொடியைபாணிக்கிரகணஞ்செய்துகொடுப்பதற்கு இன்றைக்கே முகூர்த்தகாலம் நேமித்தபடியாற் கிருபையுற்றுக் கலியாணமண்டபத்துக் கெழுந்தருளவேண்டு மெனப் பாலசுப்பிரமணியதேவருக்கு விண்ணப்பஞ் செய்தழைத்துவரவேண்டுமாதலால்காலஅரணஞ்செய்யாமற் புறப்படச் சித்தமிரங்கக்கடவீர்களென்றிரப்பதற்குச் சம்மதித்தவர்களாய் மற்றதேவர்களுடன் இந்திரனைகலந்து சென்று நவரத்தினமயமாகச்சோடித்திருக்கும் சிங்காதனத்தில் வீற்றிருந்து முசுகுந்தச் சக்கிரவர்த்தி முதலிய சகலருஞ்சூழ்ந்துபோற்ற அவர்கள்மீது கிருபாநோக்கத்தைப் பாலித்திருக்கின்ற சரவணபவனைத்தரிசித்து ஆனந்த பரவசராய் மும்முறைவலம்வந்து பணிந்து கரங்களைக்கூப்பி நிற்பவர்களிற் பிரமனிதனைவிண்ணப்பஞ் செய்கின்றனன்.

கர்த்தனே தெய்வநாயகியைத் திருமண முன்னிலையில் தேவரீருக்குக் கொடுப்பதற்கு இப்பகல் சுபகரமாகவிருக்கின்றது மேலும் வரத்தக்கவர் சேர்ந்திருக்கின்றதுமல்லாமல் திருமணச்சடங்குக்கு வேண்டும் உபகரணங்கள்முதலாகச்சேகரித்து சாக்கிரதையாக விருக்கின்றமையால் தயைசெய்து மணப்பந்தலுக் கெழுந்தருளவேண்டுமெனப் போற்றுகின்றகாலையிற் சிவகுமாரன்நகைமுகராய்நல்லகாரியம் உங்கள்எண்ணப்படிக்கு நடத்தக்கடவீர்கள்இதோ நாமும் வருவோமெனத் திருவாய்மலர்ந்து துரிதமாய் அரியணையைவிட் டிறங்கி வீரவாகுதேவர் உடைவாளாயுதத்தைக் கரத்திற்கொண்டு எதிரில்நடக்கவும்எண்மர்- இலக்ஷர்-படைவீரர் இருபாரிசங்களினும்போற்றிவரவும் விஷ்ணுபிரமனாதியர் களித்துசூழயும்முகவாயிலினிடத்தெழுந்தருளி அத்தலத்திற்காத்திருக்கின்றஅழகியகலாப மஞ்ஞைவாகனத்தின்மீதி லாரோகணித்தகாலையில்விண்ணவரனைவரும் ஆனந்தபரவசராய்ப்பஞ்சதாருக்களினது புதியமலர்களைச்சொரிந்து பாதாரவிந்தங்களிற்பணிந்துவாழ்த்தத்தகாத விசாலமாய்நீண்டிருக்கின்ற வீதியில்நடக்கின்றகாலையில் ஆயிரங்கிரணங்களையுடைய சூரியனும்சோடசகலைகளைவாய்ந்த சந்திரதவளக்குடைகளைத் தாங்கவும் வாயுதேவன் வருணராசன் வெண்சாமரைகளைவீசவும் இயமதருமராசன் திசைக்காவலர் அருகுசந்திரவட்டம் சூரியவட்டப்பிறை புள்ளாங்குழலாதிய பதினெண்வாத்தியங்களையும் திசைகள்முற்றும் செவிடுபட்டு மயங்கத்தக்கதாகக் கணகணென்றறைந்துபோகவும் ஒப்பற்றவனப்பும் பெருமையும்படைத்துச் சர்வாபரண பூஷிதைகளாகவிருக்கின்ற அரம்பை-ஊர்வசி திலோத்தமை-மேனகையாதிய தெய்வபெண்கள் சொர்னவிமானங்களிலிருந்து செவ்வரிபரந்து வேலையொப்பக் காதளவுமோடியிராநின்றவிழிகளைக் காமுகருக்குவிஷத்தைப்போல மதியைமயக்கிக்கொல்லாமற்கொல்லும்படிக்கு சேற்கெண்டைபிறழ்வதற்கொப்பச்சுழற்றிவீணைகளின் தந்திகளைமுடுக்கி மிடற்றினோசையும் தந்தியினொலியும்ஒன்றுபட்டுக்கேட்பவர் செவிகளுக்க முததாரையைப்போல தேவகாந்தாரங்களைவாசித்துப்போகவும் விஞ்சையர்- கருடகாந்தருவர்- மகரயாழ்களைமீட்டிச்சிரவணானந்தமாகவும் அன்னங்களையொப்பப்பரதநாட்டியங்களைநடித்துவருவதற் கிசைவாகவும் பாடிப்போகவும் இவ்விதஆடம்பரங்களுடன் பெரும்புறக்கடல்பெருகுமாறுபோல எள்ளிடவிடமில்லாமல் அடர்ந்த பூதவெள்ளங்கள் நவவீரர்கள் இலக்ஷர்-தேவர்கள்-பிராமணர்-இருஷிகள்மன் னமண்டலீகர்-பாதலவாசிகளாதியாக நடக்குமுன்னிலையிற்கிரீடங்களுடன் கிரீடங்கள் புஜங்களுடன் புஜங்களுடுதாக்க தெருக்களெங்கணும் நிறைந்து முத்தங்கள் வானவெல்லைமுற்று மடர்ந்துபோவதாயினர்.

சவுனகாதிரிஷிகளே, மேற்குறித்தவை பவங்களுடன் விசாலமாகிய பலதெருக்களைக்கடந்து புரஜனங்கள்மனவெழுச்சியுடன் விழிகள்களிக்கத்தரிசித்து ஆனந்தவாரியில்மூழ்கத்தக்கதாக மெல்லமெல்லப்போய் தேவதச்சனைக்கொண்டுஇந்திரன் சீர்பெறச்செய்திருக்கின்ற கலியாணச்சாலை முகவாயிலுக்கருகில் வரும்போது ஆகமவிதிப்படிக்குப் பொற்குடங்களில் வானகங்கையைநிரப்பித்திருப்பையினிடத்திலிருத்திச் சடங்குகளைமுடித்துநவத்திருந்தபூரணகும்பங்களைத் தவத்தர் பிராமணசிரோஷ்டர் கரங்களினேந்திச் சண்முகப்பெருமாள் முன்னம் வேதங்களை ஓதிவந்து மந்திரங்களைஜபித்துப் பவுத்திரமாகிய தீர்த்தத்தைக் கர்த்தன்மீதிற் புரோஷ்டித்து வாழிவாழியென்று ஆசிகளைப்பேசிநிற்கவும் அரம்பையர் இருஷிபத்தினிகள் திரண்டு சாமரை நிறைகுடம் கண்ணடிமுதலிய எண்வகை ஆலங்களையும் மங்களகரமாகவேந்தி அணிபடநின்று சோபனங்களைப்பாடிச் சுழற்றித் தேவாதிதேவனைப்போற்றிச்சூழவும் நாககன்னியர் நீரமகளிர்

கற்பூரதீபமுதலியசோதிகளைப் பொற்றட்டுகளி லேந்திச் சுயஞ்சோதிப் படிவத்தனை பாலசுப்பிரமணியர் திருமுன்சேர்ந்து சுபங்களைப்பாடிக்காட்டவும் வெண்பட்டாடைத்தொங்கலை அசைத்துவரவும் தேவப்பிராமணர்வேதங்களையோதவும் இவ்விதச்சுபங்கள் பெருத்திருக்கின்ற காலையிற் கடலினிடத்திற் படிந்திருந்த மேகங்களெழுமாறுபோலத் திருமணக்கோல மமைந்திருக்கின்ற நமதுகர்த்தனைவர் மரகதமலையையொப்பப் பாரித்துப் புள்ளிபட்டிருக்கும் அழகியகலாபத்தைவாய்ந்த மயில்வாகனத்தைவிட்டிறங்கித் திருமணக்கோயிலினது முகவாயிலினிடத்தில்வந்தமாத்திரத்தில் தேவகன்னியர் மத்தியில் அழகுக்கரசியாகிய இந்திராணியானவள் கரங்களைக்கூப்பிக்கொண்டுமெல்ல நடந்துவந்து தன்கணவன் கட்டளையின்படிக்குப் பொற்பள்ளையத்திற் சரவணபவன் திருவடிகளைச்சேர்த்து ஆவின்புதியபாலினாற் கழுவி முன்றானையால் ஈரத்தைப்போக்கிச் சந்தனக்காப்பிட்டுத் திவ்வியசுகந்தங்களைவீசும் கற்பகமலர்களைச்சொரிந்து தூபதீபங்களைக்காட்டித் தேகபரவசத்தளாய் மகிழ்ந்துவணங்கிப் பல அரம்பாஸ்திரீகளுடன் அடுக்காலங்களையேந்தி எமதிறைவன் முன்னின்று மும்முறைசுழற்றி நாணத்துடன் மின்னற்கொடியைப்போலசைந்து தேவகன்னியருடன்தன்னிருப்பிடத்தைச்சேர்ந்தனள்.

இந்திராணி மெய்ப்பத்தியுடன் நடத்திப்போன வழிபாடுகளுக்குச் சிவகுமாரன்களித்துக் கிருபாநோக்கம்பாலித்தவராய்மகாவிஷ்ணு, பிரமன், கரங்களைப்பற்றிக்கொண்டு தேவர்முனிவர் சூழ்ந்துவர அவ்வாயிலைக்கடந்து நவரத்தினமயமாகிய பொன்னரிமாலைகளை அணிபடத்தூக்கித் தண்டைமாலைகளைத் தொங்கவிட்டுச் சித்திரவிசித்திரங்களாக வமைந்திருக்கும் பொற்பட்டாடைகளினால் மேற்பரப்புகள் சுவர்ப்புறங்களை அலங்கரித்து வாழைகளைநாட்டிப் பொற்பாவைகள் மற்றசிங்காரங்கள் மிகுத்துச் சிரோரத்தினதீபங்கள் பிரகாசித்துக்கொண்டிருக்கும் கலியாணமண்டபத்தினிடத்திற் சிவகுமாரன் சேர்ந்தவுடன் அதன்மத்தியிற் பருத்தமணிகளினாற் சோடித்திருக்கின்ற சிங்காதனத்தின்மீது பிரமன் விஷ்ணுமுதலாயினர், ஜயஜயவெனப்போற்றிக் களிக்கத்தக்கதாகவீற்றிருந்தகாலத்தில் சண்முகப்பெருமாள் கட்டளையின்படிக்குப் பக்கங்களிலிருக்கின்ற பீடங்களில் விஷ்ணு பிரமனுட்காரவும் மற்றவிடங்களிற் கிரமப்படிக்கு தேவர் ரிஷிகள் வீரவாகுதேவர், எண்மர், இலக்ஷர், பூதவீரர்கள் மனவெழுச்சியுடனிருந்தனர், அத்தருணத்தில் பூமண்டலமுற்றினும் ஒருகுடைநிழலிற்படுத்திச் செங்கோலைநடாத்தியாண்டுவரும் குணசம்பன்னனாகிய முசுகுந்தச்சக்கிரவர்த்தியும் ஐம்பத்தாறுதேசங்களைப் பரிபாலனஞ்செய்துவரும் அரசர்களும் மந்திரிபிரதானிகள் சூழ்ந்துவரக் கலியாணமண்டபத்தைச்சேர்ந்து அதிகவிசுவாசத்துடன் பாலசுப்பிரமணியக்கடவுளினது திருவடிகளிற் றனித்தனி வணங்கித் துதிப்பவர்க ளிடத்திற் பரிபூரண கடாட்சத்தைப் பாலித்துப்பணித்தபடிக்குத் தமக்கேற்படுத்தியபீடங்களில் மனமகிழ்ந்திருந்தனர், அப்பொழுது விசாலமாகச்செய்திருக்கின்ற மணச்சாலையினிடத் தெள்ளிடவிடமின்றி நெருங்கிச் சகலருஞ்சேர்ந்து சந்தோஷசாகரத்திற்படிந்து விழிகள்களிக்க ஆனந்தவாரியைப்பெருக்கிக் குமாரதேவர்மீதில் மனத்தையும் நாட்டங்களையும் வைத்திருக்கின்ற இத்தகைய மகோற்சவகாலத்தில்நடந்த அற்புதக்காட்சிகளையும் சொல்லக்கேட்பீராக.

அன்பருள்ளத்தைப்போலத்துல்லியமாகவிளங்கிக்கொண்டிருக்கும் பெருமையினையுடைய திருக்கயிலாயத்திலிருக்கின்ற சிறந்தநகரத்திற் சிரோரத்தினமயமாக வமைந்து விசாலமாக விராஜின்ற திருச்சபையின் முகப்பிலோங்கியிருக்கும் சிங்காதனத்திற் பராசத்தியுடன் வீற்றிருந்து சனகாதிகள்முதலிய மகத்துக்களுக்கு வேதநிச்சயங்களைப்போதித்துக்கொண்டு வருகின்ற ஞானநாயகன்தமது திருக்குமாரனுக்கு நடக்கவிருக்கின்ற திருக்கலியாணவைபவங்களைத் திருவுளத்திலறிந்து தாமும் அத்தலத்துக்கெழுந்தருளிப்பார்த்துப்போக விருப்புற்றவராய்இச்செய்தியைப் பார்ப்பதியாருக்குத் தெரிவித்தமாத்திரத்தில் மனப்பூரிப்புடன் கண்ணுதலைவணங்கி நாம்போயிருந்து நடப்பிப்பது உத்தமமாகவிருப்பதால் கிருபையுற்றுத் துரிதமாய்ப் பிரயாணப்பட வேண்டு மெனப் போற்றுவதற்குச் சம்மதித்தவராய்ச் சிங்காதனத்தைவிட்டிறங்கிவெளிவந்து சொர்னமயமாகிய விமானத்திலேறி யோகியர் தவத்தர் கணநாதராதியாக ஜயஜயபோற்றியென்று வாழ்த்தித்துதிக்கவும் சிவகணங்கள் முத்துக்குடைகள் ஆலவட்டம், வெண்சாமரை, அருகுசாந்தாற்றிமுதலிய சின்னங்களைக்கவித்துவரவும் தேவதுந்துமி, வலம்புரிச்சங்கம், திருச்சின்னமாதிய மங்கலவாத்தியங்கள் திசைகளெங்கும் அதிரமுழங்கவும் இத்தகைய திருவோலக்கத்துடன் வெள்ளியங்கிரியைக்கடந்து வானவழிக்கொண்டு திருப்பரங்குன்றத்துக்கு நேராகவருகின்றகாலையிலெழுந்த மங்கலவொலியைக்கேட்டுப் பாலசுப்பிரமணியர் மனப்பூரிப்புடன் பத்திபரவசராய்த் தட்சணத்திற் சிங்காதனத்தைவிட்டெழுந்தெதிர்கொண்டனர்,மற்றமகாவிஷ்ணு, பிரமன், இந்திரன், மற்றதேவர்கள், இருஷிகள், நவவீரர்,இலக்ஷர், கணநாதர், இராஜராஜர்களாதியாக ஆனந்தபரவசராய்த் தேகங்குதுகுலித்து மயிர்ச்செறிவெழவும் விழிகளில்போதநீரைப் பெருக்கிக்கடிதிற்போய் எமதுகர்த்தன்வந்தனர் தேவதேவோத்தமன்வந்தனர், ஜகதீஸ்வரன்வந்தனனெனக்கோஷித்துக் கூத்தாடினவர்களா யினியாமெல்லோரும் பரிசுத்தவான்களாய்ச் சிறந்தனமெனக்கரங்களைச்சிரங்களிற் கூப்பிக்கொண்டு வேதவாக்கியங்களினாற்பலவிதங்களிற் றுதித்தெதிர்நோக்கியிருக்கின்றகாலையிற்சிவபிரான்சமீபத்தில்வந்து பராசத்தியுடன் விமானத்தைவிட்டிறங்கியகாலத்தில் சண்முகப்பெருமாள் அதிகஆவலுடன் தாய்தந்தையர் திருவடிகளிற் சூரியன் தாமரைமலர்களைக் கூடுமாறுபோல வயிரமுடிகள் பொருந்தும்படிக்குவிழுந்து தீர்க்கதண்டன் சமர்ப்பித்தெழுந்து அழகிய பன்னிருகரங்களையுங் கூப்பிக்கொண்டு துதித்துநிற்கின்ற திருக்குமாரனிடத்திற் பரிபூரணகடாட்சத்தைச்செலுத்திக் கரங்களினாற் றழுவித் தனித்தனியே மார்பிற்சேர்த்தணைத்து முத்தமிட்டு உச்சியைமோந்து பெற்றபொழுதினும் பெருமகிழ்ச்சியையடைந்திருக்கின்ற தருணத்தில் மகாவிஷ்ணு, பிரமதேவன், இந்திரன்,முப்பத்துமுக்கோடிதேவர்கள் நாற்பத்தெண்ணாயிரம் ரிஷிகள் நவவீரர்கள் இலக்ஷர் பூதகணத்தலைவர்முதலாக அதிகசந்தோஷங்களுடன் சராசரப்பிரபஞ்சங்களனைத்தையு மீன்றருளிய உமாபரமேஸ்வரர் திருவடிகளில் மும்முறைவலம்

வந்துசேவித்துக் கரங்களைக்கூப்பினவர்களாய்க் கர்த்தனே நிரோகச்சாயைபோலச் சூழ்ந்தலைக்கும் வினைப்போகங்களை யனுபவித்தழலுகின்ற அடியோங்கள் அஞ்ஞானமயக்கத்தைப்போக்கி வாழ்வித்தீர் இதைப்பார்க்கினும் வேறுபேறுவேண்டுமோவென்று பலவிதங்களிற்பரமன் குணாதிசயப்பெருமையை யெடுத்துப் புகழ்கின்றபோது வடிவேலர் உயிருக்குயிராய் மனோவாக்குக்கெட்டாமல்நிருநடனங்களைச் செய்துவரும் பிதாவை அன்னையுடன்நவரத்தினமயமாகச் சோடித்திருக்கும் கலியாணமண்டபத்திலழைத்துக்கொண்டுபோயினர்.

அத்தருணத்திற் பரமன் திருவுளப்படிக்குவானத்திலிருந்து சூரியனிறங்கியதைப்போலத் தேஜோமயமா யொருசிறந்த விமானம்வந்து மத்தியிலிருந்தகாலையில் மயிலையொத்தசாயலையுடைய உமையவளுடன் வீற்றிருந்து குமாரதேவனைவரவழைத்துப் பரிந்தெடுத்து இருவர்மத்தியிலிருத்தித் தழுவியிருக்குங் கோலத்தைக்கண்ட பிரமன்வணங்கி யிதனைவிண்ணப்பஞ்செய்வதாயினன், பரமனே பலயுகங்களாக அடியோங்களை மானபங்கப்படுத்தி வருத்திய கொடுமைக்கிரங்கி பாலசுப்பிரமணியக் கடவுளைப்படைத்துப் பகைவனைவாட்டி யிரட்சிக்கும்படிக்குச்செலவுகொடுத் தனுப்பியவாறே வீரமாமயேந்திரபுரியைச்சேர்ந்து சூரபதுமன் வம்சநாசமாகக் கொன்றொழித்து நேற்றைத்தினம் சயந்தன்முதலியர்சிறையையுமீட்டு இத்தலத்திலெவந் திருக்கின்றவர், செய்யாமற் செய்தநன்றியைக்குறித்து அதற்குத்தக்க கைமாறுமுடிப்பதற்கொன்றுமில்லாமற் போனபோதினும் இக்காலத்தில் நாங்களடைந்திருக்கின்ற சந்தோஷத்தினால் அவுணர்குலகாலனாகிய பாலசுப்பிரமணியக்கடவுளுக்கு தேவேந்திரன் அரிதிற்பெற்றிருக்கின்ற தெய்வயானையம்மனை யித்தினம் திருமணமுன்னிலையில் தரயத்தனித்து அதற்கடுத்த சாவசாக்கிரதைகளையுமுடித்து இதோநிறைவேற்றியிருக்கின்ற சுபகாலத்திற் சருவசீவகாருணியாகிய பராசத்தி சமேதராய்த் தேவரீரெழுந்தருளியதாற்சிற்றறிவையுடைய எங்கள்செய்கைகள் சிறந்ததாயின, ஐயனே செலவுகொடுப்பீராகில் மற்றசடங்குகளையும்திருமுன்புமுடிக்கக்கடவோமென வேண்டுமுன்னிலையிற் சிவபிரான் நகைமுகராய்ப் பிரமனைப்பார்த்து இதனைத்திருவுளம்பற்றுவதாயினர்.

நீங்கள்யத்தனித்து நடத்தவிருக்கின்ற சுபகாரியம்நன்மையாக விருக்கின்றதால் இச்சம்பிரமத்தைப் பார்த்துப் போகப் பரிமளமிகுத்த புஷ்பங்களைத் தரித்திருக்கும்அளகபாரத்தையுடைய பருவதராசபுத்திரியுடன் இவ்விடம்வந்தனமாதலாற் காலதாமசஞ்செய்யாமல் முகூர்த்தத்தைச்செய்ய யத்தனப்படுமென்று திருவுளம்பற்றியமாத்திரத்திற் சந்தோஷத்தாழ்ந்து பிரமனும் விஷ்ணுவும்தேவேந்திரனைப்பார்த்துத் தேவராஜனே நீசெய்ததவமுயற்சிகளை யின்னவிதமெனச்சொல்லி முடிவதோ ஒன்றாகவிருக்கின்ற சங்கரன் உமாதேவியுடன்வந்துவிட்டனர், உன்பெண்ணைச்சரவணபவனுக்குத் தாராதத்தஞ்செய்துகொடுக்க நிச்சயித்தகாலமும் சமீபித்தது துரிதமாகப்போய்த் தெய்வயானையம்மையை அழைத்துவரக்கடவையெனக்கட்டளையிட்டவுடன் சந்தோஷசாகரத்திலழுந்தினவனாய் இதோ தருவித்தனனென் றோடித் தன்விடுதியைச்சேர்ந்து திருமகாலட்சுமி-சரஸ்வதி-இந்திராணி - தேவகன்னியர் முதலான சுந்தரவதிகள் சோபனங்களைப்பாடவும் மத்தியில்நடுநாயகமாக வீற்றிருக்கின்ற தன்பெண்ணைக் கிருபையாகப்பார்த்து என்னைப்பெற்றதாயே குலக்கொழுந்தே யாங்களீடேறவந்த தவமுந்தேவருக வருகவென்றழைத்தகாலையில் தெய்வகுஞ்சரியார் அதிகசந்தோஷத்துடன் நவரத்தினமயமாகிய பீடத்தைவிட்டெழுந்து பரல்கள்பரந்திருக்கும் மலையினிடத்திற் செந்தாமரைப் புஷ்பத்தினுமெல்லியதாய்ச் செம்பஞ்சூட்டிப் பிரகாசிக்கின்ற திருவடிகள்பொருந்தி நடக்கப்பொறுது பொறுமென்றரற்றுவதைப்போலத் திருவடிகளிற் றரித்திருக்கும்சிலம்பு புலம்பவும் தண்டைசதங்கை சத்திக்கவும் முத்தாரங்கள் மோகனமாலைகள் வயிரப்பதக்கங்களைத் தாங்கிப்பருத்து விம்மியோங்கியிருக்கின்ற கொங்கைச்சுமைக்கு உடுக்கையையொத்த மெல்லியவிடையானது சகிக்கமாட்டாது சகிக்கமாட்டாதென்று முறையிடுவதற்கொப்பாக அணையிற்றரித்திருக்கும் நவரத்தினமயமாகிய மேகலாபரணத்திற்நெருங்கவிட்டிருக்கும் பொற்கிண்கிணிகள் கலிக்கவும் அத்தருணத்திலிருந்த பெண்கொடிகளனைவரும் பின்பற்றிப்போற்றிவரவும் மெல்லமெல்லப் பாதங்களைப் பெயர்த்துவைத்து மிருதுவாகவிருக்கின்ற இலவம்பஞ்சைஆய்ந்து சீர்படுத்திப்பரப்பியிருக்கும் அணையிற்பொருந்துமாயினும்வருந்துந் திருவடிகளை நடந்தசெய்கை அருமையாகப்பேசுவது புதுமையன்று கோடிசூரியப்பிரகாசமாகச் சொலித்திருக்கும்வெற்றி வேலாயுதமூர்த்தியினது உபயசரணாரவிந்தங்களும் கொடியரிற்கொடியனாகவிருக்கின்றநாயினேன் அஞ்ஞானவிருள்மூடிக்கவலையுற்றிருக்கின்ற மனமாகிய வலியபாறையினிடத்திற்பொருந்திநடிக்குமாயின் சருவசீவதயாபரியாகவிருக்கின்ற எமதன்னை மலைப்புறத்தில் நடப்பதைச் சகசமாகவேயெண்ணக்கவேண்டும் இவ்விதமாக ஸ்ரீமஹாலட்சுமி சரஸ்வதிகரங்களை கைலாகுகொண்டு தேவகன்னியராதியாகச் ச[illegible]ங்களைப்பாட அயிராவதம்போற்றிவளர்த்த பெண்ணரசியானவள் மெல்லிய மாந்தளிர் நாணும்படிக்கு விளங்கியிருக்கும்சிறடிகளைப்பெயர்த்து மனமகிழ்ச்சியுடன்எதிரிலிருக்கின்ற பிதாவினருகில்வந்தமாத்திரத்தில் முகத்துடன் முகத்தைச்சேர்த்து முத்தமிட்டு உச்சிமோந்தவனாய் அதிககளிப்புடன் மணச்சாலையினிடத்துக் கழைத்துவந்தகாலையில் தேவர்கள் கற்பகமலர்களைச் சொரிந்துபோற்றிப்பணியவும் தவசிரேஷ்டர்கள் அட்சதைகளையிறைத்துத் தாயேவாழிவாழியென்று ஆசிகளைச்சொல்லிவணங்கவும் சபையிலிருக்கின்ற மற்றவர்களனைவரும் ஜயஜயவென்றேத்தித்தொழவும் இவ்விதக்களியாடல் நடந்துவரும்போது எதிரிலிருந்த அணையில்வீற்றிருக்கின்ற உலகமாதாவையும் ஆதிதேவனையும் தரிசித்தவுடன்தெய்வநாயகியானவள் அதிகபிரியத்துடன் அருகிற்போய்ப் பாதகமலங்களிற்பணிந்து மத்தியிற் சுயஞ்சோதிப்படிவத்தனாய்விளங்குகின்றவெற்றிவேலாயுதபாணியைப்பார்த்தவுடன் ஆபரணங்களைத் தாங்கிப் பொன்னையொத்ததேமல் பரந்திருக்கும் தனபாரங்களையுடைய பெண்ணரசியானவள் நாணந்தலைக்கொண்டு வெட்கி அன்னத்தையொப்பப்பக்கத்திலொதுங்கினள்.

அத்தருணத்திற் சிவபிரான்தம்மைவணங்கியமருகியினிடத்திற் பரிபூரணகடாட்சத்தைவைத்துக் கிருபாநோக்கத்தைப்பார்த்தவுடன்பரமசிவத்தையனைத்துக்குறை

வித்துக் கொங்கைத்தழும்பும் வளைத்தழும்பும்விளங்கச்செய்தபார்வதியாருந்தமதுதிருக்கரத்தைநீட்டி மருமகளைச்சேர்த்துமுதுகைத்தடவிக்கொடுத்தவளாய்ப் பக்கத்திலிருக்கின்ற தேவர்சேனாபதியாகிய திருக்குமாரனையுந்தேவராஜபுத்திரியையும் இருகாங்களினாலும் அணைத்துச்சென்று பொன்மயமாய் நவரத்தின காந்திகளை வீசிக்கொண்டு எதிரிலிருக்கும்பீடத்தில் இருவரையுமுட்காரவைத்து ஆசீர்வதித்துத் தமதிருப்பிடத்தைச் சேர்ந்தனள், சவுனகாதியிருஷிகளே கலியாணப்பெண்ணும் மாப்பிள்ளையும் ஒருமைப்பட வீற்றிருந்த காட்சியெப்படிக் கிருந்ததெனில் வீரக்கழலையணிந்த பாதாரவிந்தங்களையுடையசிவபிரான்பராசக்திசமேதனாயெழுந்தருளியதோற்றத்தையொப்பக் காட்டியது இவ்விதமாகப் பதிவிருதா சிரோமணியாகிய தெய்வநாயகியுடன் பாலசுப்பிரமணியக்கடவுள் அரியணையிற்காட்டிய கோலத்தைகஸ்ரீமகாவிஷ்ணுபிரமன் முதலிய சகலரும் தரிசித்தமாத்திரத்தில் ஆனந்தபரவசராய்வணங்கிப் பலவிதங்களிற் போற்றினர், அம்மையப்பரும் மனப்பூரிப்புடன் மங்கல ஆசிகளைக்கூறினர்,இந்திரன் அவர்கள் மணவணிக்கோலத்தை மனமும்விழிகளுங்களிக்கக்கண்டு புகழ்ந்துகரங்களைசிரத்திற்கூப்பித்தொழுது மதுரமாகிய தேனைசெவருக்க வண்டுகளிகரும வண்டினங்களைப்பார்க்கினும் அதிகமனவெழுச்சிபெற்றுஅவ்வாறேகளித்துப் பக்கத்தில்நிற்கின்ற தேவியைபெச்சரித்தவுடன் துரிதமாகப்போய்ப் பலதேவப்பெண்களுடன் திருமஞ்சனம் கற்பகமலர் தூபதீபமுதலாகிய வஸ்துக்களைப் பொற்பள்ளையங்களிலேந்தி நஞ்சமஞ்சுந்தோற்றங்களையுடைய இந்திராணியானவள் கலியாணப்பந்தலைச் சேர்ந்து கணவன் பக்கத்தில் நின்றனள்.

அக்காலத்திற் பிரமன்பணித்தபடிக்குத் தேவராசன்றன்தேவியுடன் பன்னிரு புயாசலங்களையுடைய குமாரதேவர் சந்நிதானத்திற்போய்வேதவிதிப்படிக்குப் பாதபூசையைசெய்ப யத்தனப்பட்டவனாய்ப் பொற்றட்டினிடத்தில் ஐயன்திருவடிகளைச் சேர்த்துத் தன்தேவியானவள் நாணமிகுதியினால் தலைபைக்கவிழ்ந்து தங்கக்கலசத்தில்நிரப்பியிருக்கும்மதுரமிகுத்தகங்காதீர்த்தத்தைமெல்லமெல்லச்சொரிந்துவரச் சுத்திசெய்து தன்மீதிருக்கின்ற உத்தரீயத்தினால் ஈரத்தைப்புலர்த்தி களபகஸ்தூரிக்குழம்பையப்பி பஞ்சதாருக்களினது புதியமலர்களைக்கொண் டர்ச்சித்து சாம்பிராணிதூபத்தைக்காட்டிக் கர்ப்பூர நீராஞ்சனங்கொடுத்துச் சோடசவுபசாரங்களுடன் பூசையைநிரப்பியவுடன் இந்திராணியானவள் பயபத்தியோடு திருப்பாதங்களில்அருச்சித் திருக்கின்ற நின்மலப் பொருள்களனைத்தையும் பலமாகவெடுத்துத்தங்கப்பாத்திரத்திற்சேகரித்துக்கொண்டுபோய் க்ஷேமமாயிருக்கின்றவிடத்திற்பதனப்படுத்திவந்து கணவன்பக்கலிற்சேர்ந்தவுடன் திரிலோக சக்கிரேஸ்வரனைப் பலநம்போற்றி வணங்கும் பெருமையினையுடைய தேவராஜன் மனப்பூரிப்புடன் பாலசுப்பிரமணியக்கடவுளினது திருக்கரங்களில் தெய்வநாயகியார்கடகக்கணங்களை யணிந்திருக்கும் அஸ்தங்களைச் சேர்த்து அருமையாகப் பெற்றிருக்கின்ற இந்தப்பெண்ணரசியைத் தமது திருத்தேவியாகக்கொடுத்தனன் அங்கீகரித் தன்பாயாண்டிரட்சிப்பது உமதுகடனெனவேண்டி இந்திராணிவிட்ட வானநதிப்புனலினால் தாராதத்தஞ்செய்து வணங்கினன்.

கேட்டீர்களோ! சவுனகாதிதவத்தரோ? இவ்வதிசயத்தையென்னசொல்லுவேன் மெய்ப்பத்தியுடன் தமதுதிருவடிக் கன்புசெய்பவராகவிருக்கின்ற புண்ணியசீலருக்கு இம்மைமறுமைச் செல்வங்களனைத்தையும் மேன்மேலும் கடாட்சித்துக் கடையிற் சாருபபதவியையுந் தந்தாளவல்ல சரவணபவன் தேவராஜனானவன் வேதமந்திரங்களை யோதித் தன்குமாரத்தியை தாரைவார்த்துக் கொடுக்க மனமகிழ்ச்சியுடனேற்றனனென்னில் அவன் திருவிளையாடலின் பெருமிதங்களை யாவராற்கணித்துப் புகழக்கூடும் உடனே பிரமதேவனெழுந்து மானசத்தினால் நியமித்த மங்கிலியத்தைதேவப்பிராமணர் ஆசிகளைச்சொல்லிவேதங்களை யோதத்தக்கதாகச் சிவசுப்பிரமணியக் கடவுளினது திருக்கரத்திற்கொடுத்தவுடன் அதன் சூத்திரங்களை யிருகரங்களினாற் பற்றிக்கலாகனென தேவதுந்துமிகள் முழங்கவும் வேதாகமங்கள் துதித்துவாழ்த்தவும் மாங்கிலியதாரணத்தை எமதன்னை திருக்கழுத்திற்றரித்துமுமமுடிபோட்டுத் திவ்விய மலர்மாலை பொன்றைத் திருந்தேவியின் சிரத்துக் கணிபாகத்தரித்தனர், அச்சுபகாலத்தில் தேவேந்திரன் தன்னிஷ்டசித்தியைப் பெற்றுக் களித்தவனாய்க் காரியப்போதைக்கூவி வாழை-பலா-மா வெனச் சொல்லும் முக்கனிகளையும் மற்றபழவிதங்களையும் மதுரமிகுத்த கருப்பஞ்சாறு-ஆவின்பால்-தேன்- கற்கண்டு இத்தகைய சிறந்தவஸ்துக்களை எதேஷ்டமாகத் தருவித்துத் தங்கப்பள்ளையங்களிலும் கிண்ணங்களிலும் நிரப்பிக்கொண்டுவந்து சண்முகப்பெருமாள் முன்னம்பரப்பியிவற்றினைப்புசித் தடிபேனை யிரட்சிக்க வேண்டுமென நிவேதித்தனன்.

இத்தகைய மகோற்சவகாலத்தில் வார்களினாலிறுக்கியிருக்கின்ற மங்கலபேரி-முரசம்-மத்தளம்-தடமுழா-சகடைகை-வலம்புரிச்சங்கப்புள்ளாங்குழல்-திருச்சின்னம்-பூரிஎக்காளை-துத்தாரி-ஜயகண்டைமுதலிய மங்களவாத்தியங்களைப் பல்லாயிரங் கணநாதர் அண்டங்களதிர்ந்துதிசைகளசெவிடுபடத்தக்கதாகத் தாம்தாமென்றுமுழக்கவும்வீரவாகுதேவர் எண்மர்-இலக்ஷர்-மனவெழுச்சியுடன் தங்கள் முன்னவன் திருவடிகளிற்பணிந்து கரங்களைக்கொட்டி ஜயஜயவெனப் போற்றவும் கணநாதர்கள் மனமும் விழிகளும்பூரித்துக் களிக்கத்தக்கதாக மணக்கோலத்தைத் தரிசித்து வணங்கிவாழ்த்தவும் ஸ்ரீமகாவிஷ்ணுபிரமன்இந்திரனாதிய திசைக்காவலர் சூரியசந்திரர்முதலிய நவக்கிரகங்கள முப்பத்துமுக்கோடி தேவர்கள்நாற்பத்தெண்ணாயிரமிருஷிகள் கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர்-பன்னகர்-நாகர்-ஏகாதசருத்திரர்-துவாதசாதித்தர்-மருத்துவர் முதலிய வானநாடரும் சதுர்வேத பாராயணராகிய பிராமணர் முசுகுந்தச் சக்கிரவர்த்தி ஐம்பத்தாறுதேசராஜாக்கள்குறுநிலமன்னர் மற்றைபூமண்டல வாசிகளும் ஆதிசேஷனாதிய அஷ்டமாநகர்முதலிய பாதலவாசிகளும் மற்றும் தீவுதீபாந்திரங்களிலிருந்து வந்திருக்கின்றசகலரும் தம்பதிசமேதராக வெழுந்தருளியிருக்கின்ற பாலசுப்பிரமணியர் மணக்கோலத்தை விழிகள்களிக்கத்தக்கதாகத் தரிசித்துச் சந்தோஷசாகரத்தில் முழுகினவர்களாய்இத்தினம் ஜன்மசாபல்லியராய் முத்திக்காளானோமென்று பலவிதங்களிற் றுதித்துச் சமுத்திரகோஷமுமஞ்சும்படிக்குமங்களத்தைக் கொண்டாடி வருமுன்னிலையிற் பிரமதேவன் தன்குமார வர்க்கங்களுடன் ஓமகுண்டத்தைச்சுற்றிலு

மிருந்து தருப்பைகளைப்பரப்பி அட்சதைகளாலிறைத்துப் புதியமலர்களினால் விநாயகர்முதலிய பிரதம தேவதைகளை வழிபட்டுப்பூரணகும்பம் குடவிளக்கு மற்றையவிதங்களையும் விதிப்படிக்குத் தாபித்துமுற்றியவுடன்மந்திரபூர்வகமாக ஓமகுண்டத்திலெழுப்பிச் சரவணபவனையும் தெய்வநாயகியம்மையையும்அதனருகிலெழுந்தருளச் செய்துசத்தவிருஷிகளாகியமகத்துக்கள்வேதப்பிராமணர்வேதசாகைகளை யோதிச் சமித்துகளைக்கிரமப்படிக்குப் போட்டு ஆவிநெய்யையூற்றி மத்திமத்தியிற்பொரிக்ஷீரத்தையிறைத்து நவக்கிரகஹோமம் மற்றுமிராகின்றகருமங்களை வேதவிதிப்படிக்குச் சரவணபவனைக்கொண்டு முடிப்பித்து பூர்ணாகுதியுங்கொடுத்தவுடன் அத்தீயினிடத்திருந்தெடுத்த பவுத்திரமாகியமையை மாப்பிள்ளையைக் கொண்டு கலியாணப்பெண்ணின் திருநுதலிலிடுவித்து அக்காலத்தில்நடத்தவேண்டிய சடங்குகளனைத்தையும்வரன்முறையாய்ச் செய்தாயினபின்பு கல்யாணமாப்பிள்ளைக்கு மகாவிஷ்ணு தோழனாகின்று கைலாகுகொடுத்துப்பீடத்தினின்றெழுப்பிய காலையில் ஸ்ரீமகாலட்சுமி-சரஸ்வதி- துர்க்கை-காளி-யித்தகைய சிறந்ததாய்மார்கள் தோழிப்பெண்களாகவிருந்து கலியாணப்பெண்ணைத்தழுவி யெடுத்தகாலத்தில் உலகநடவடிக்கைப்படிக்கு அறுமுகவன்கமலக்கண்ணன் கரத்தைப்பற்றி முன்னம்போகின்றபோது தெய்வயானை நாயகியாரும் கணவன்சுண்டுவிரலைத் தனது விரலிற் கோத்துக்கொண்டுஸ்ரீமகாலட்சுமிமுதலானவர்கள்சூழ்ந்துபோற்றி வரத்தக்கதாகப் பின்பற்றிநடந்து தீக்குண்டத்தை மும்முறைவலம்வந்து வடபாரிசத்திற்சேர்ந்தனர், பிரமன்சிரத்திற் றமதுதிருவடிகளைச்சூடி வேதப்பொருளை யனுக்கிரகித்த பாலசுப்பிரமணியர் தமதுமனைவிதிருப்பாதத்தைக் கரத்தினாற் பற்றியெடுத்து அம்மியின்மீதில்வைத்தவுடன் வெற்றிவேலினாற் சூரபதுமன்தோற்றமாகிய மாவிருட்சத்தை யிருகூறுகப்பிளந்துவாட்டிய முருகப்பெருமானுக்கும் அம்மைக்கும் வானத்தில் விளங்கும் வசிஷ்டர்பத்தினி பதிவிருதாசிரோமணியாகிய அருந்ததியைக் காட்டி இவ்விதமாகத் திரிமூர்த்திகள் அக்கினிதேவன் தவத்தர் தேவர்கள் வேதப்பிராமணர் மற்றும் சபையிலிருந்தவர்கள் சாட்சியாகத் திருக்கலியாணச்சம்பிரமங்களனைத்தும் கிரமமாகமுடிந்தவுடன்பாலசுப்பிரமணியக்கடவுள் திருத்தேவியுடன் அம்மையப்பராகிய உமாபரமேஸ்வரரை மும்முறைவலம்வந்து பத்திவினயத்துடன் சேவித்தகாலையில் பரமனும் பராபரையும் மனமகிழ்ந்து பற்பலஆசிகளைச்சொல்லி ஆவலுடன் வாரியெடுத்துத் தத்தமதுபக்கலிலிருத்திப் பரிபூரணகடாட்சத்தையுங் கிருபாநோக்கத்தையும் பாலித்தவர்களாய்த் தழுவி உச்சியைமோந்து முத்தமிட்டுமுதுகைத்தடவி அதிகபிரியத்துடன் இப்பேற்றினைக் கடாட்சிப்ப தாயினர், தம்பதிகளே யின்றுமுதல் நமக்கிருக்கின்ற முதன்மைகள் நீங்களிருவரும் பெற்றுச் சகலராலும்பூசித்து வணங்கும்வரத்தைத் தந்தனம் நீங்களிருவரும்மங்களகரமாய்வாழ்ந்திருப்பீர்களென்று வாழ்த்தினர்.

கேட்டீர்களோ சவுனகாதிமஹாருஷிகளே, மேற்குறித்தபடிக்குப் பருவதராஜபுத்திரியும் பரமேஸ்வரரும் மனப்பூருவமாய் பிள்ளைக்கும்மருகிக்கும் தலைமைப்பேற்றையனுக்கிரகித்த மேம்பாட்டைத் திருக்கலியாணப் பந்தலினிடத்திருந்த பிரமன் இந்திராதிய தேவர்கள் இருஷிகளும் தெரிந்தவுடன் அவர்கள் தேவியருடன் மனவுற்சாகமாய்க் கடப்பமலர்மாலையைத் தரிக்கும் கந்தசுவாமியைத் திருத்தேவியுடன் மும்முறைவலம்வந்து பாதாரவிந்தங்களிற்பணிந்து போற்றுமுன்னிலையிற் சபையினிடத்திருந்த மற்றையரனைவரும் சந்தோஷசாகரத்தில் மூழ்கினவர்களாய்ச் சண்முகப்பெருமானையும் தெய்வநாயகியாரையும் தங்களிஷ்டதேவதைகளாகக் கொண்டு முன்னினும் அதிகபிரீதிபத்தியுடன் கிரமப்படிக்குவந்தனைவழிபாடுகளைச்செய்து வருபவர்களிடத்திற் பிரியமாய்ச் சிவகுமாரன்தமதுபூரண கடாட்ச வீட்சணியங்களைப் பாலித்தனர், இவ்விதமாகத் தமதுதிருக்குமாரனுக்கு நடந்துவரும் சிறப்புகளைக்கண்டு மனமகிழ்ச்சியுடன்உமாபரமேஸ்வரர் அத்திருச்சபையினிடத்திருக்கின்ற சகலரிடத்தும் பரிபூரணகடாட்சத்தைப் பாலித்துத் தவிசைவிட்டெழுந்து உருத்திரகணங்கள் பூதவீரர்முதலாகச் சூழ்ந்து தந்தமது பணிவிடைகளைச் செய்து போற்றிவரத் தக்கதாக விமானத்திலெழுந்தருளி அத்தலத்தைக்கடந்து யதாப்பிரகாரந் திருக்கயிலாயத்தைச் சேர்ந்திருந்தனர் உமாபரமேஸ்வரர்சென்றதைத் திருமணச்சாலையி லிருந்தவர்களனைவருந்தெரிந்தமாத்திரத்தில் அற்புதசித்தராய் உயிருக்குயிராக விளங்கும் ஆதிதேவன் குணாதிசயங்களை நினைந்துநினைந்து பலவிதங்களிற் பரமன் பெருமைகளை வாயாரப் போற்றிச் சிறந்தவர்களாய் உலக மாதாபிதாவைப் பிரிந்த காரணத்தினால் நடுக்கடலில் விழுந்தவர்களைப்போல மனம்வருந்தி யவன்கடாட்சத்தினாற் கரையைக்கண்டுசேர்ந்து களிப்பவரையொப்ப நவரத்தினமயமாகிய சிங்காதனத்தில்வீற்றிருக்கின்ற குமாரதேவனைத் தெய்வயானைப்பிராட்டியாருடன் தரிசித்தமாத்திரத்தில் உமாபரமேஸ்வரர் கோலமாகத்தோற்ற ஆனந்தபரவசராய் மனக்கவலையைப்போக்கிச் சிவபிரான் அமர்ந்த பீடத்திற்காட்டும் சரவணபவன் சுயஞ்சோதிப்படிவத்தைக் காணுந்தோறும் மனதிற் பேரானந்த வெள்ள மூற்றெடுத்துப்பெருகி விழிகளிற்றாரை தாரையாக நீர்சொரியத் தேகங்குளிர்ந்து மயிர் சிலிர்த்துக் கிடையாதவின்ப நலத்தை யனுபவித்துச் சிவகுமாரன் திருவடிகளிற் பன்முறை பணிந்துதேகபரவசராய்க்கூத்தாடி வாயில் வந்தவந்தவிதங்களாக அவன் பெருமைகளைவழுத்தினர்.

சவுனகாதியிருஷிகளே அத்தருணத்திற் சபையிலிருந்தவரனைவருங்கொண்ட சந்தோஷப்பெருக்கை யின்னவிதமென்று ஆதிசேஷனாலும் சொல்லிமுடியாதென்று உடனே சண்முகப்பெருமான்தேவியுடன் அரியணையை விட்டிறங்கி மகாவிஷ்ணு பிரமதேவன் இந்திரன்முதலானவர்கள் சூழ்ந்துபோற்றிவரவும் திருச்சின்னம் புள்ளாங்குழலாதிய மங்கலவாத்தியங்கள் கர்ணாமிர்தமாக முழங்கவுங்கலியாணமண்டபத்தைக்கடந்து தமதுதிருக்கோயிலிற் பிரவேசித்துத் தம்மைநோக்கும் பிரமனாதியரிடத்திற்கிருபாநோக்கத்தைப் பாலித்துத் தத்தமது பதவிகளுக்குப்போவதாகச் செலவுகொடுத்தனுப்பிவிட்டுத்தன்பரிசனரைவாயில்கடோறுமிருந்து போற்றிவரக் கட்டளையிட்டவராய் அடியேனையீன்றெடுத்த அன்னையுடன் அந்தப்புரத்தைச் சேர்ந்து சராசரப்பிரபஞ்சங்கள் தழைத்தோங்கும் படிக்குப் பள்ளியறையிற் பஞ்சணைமெத்தைகளைப்பரப்பிமலர்ப்பாயலைவிரித்து மற்ற வைபவங்களுடனும் சோடித்திருக்கின்ற பொன்மஞ்சத்தி லெழுந்தருளித் தேவியுடனா

மூமாய்ச் சரசசல்லாபங்களைச் செய்து சுரதலீலைகளினால் அவளின்பநலங்களை யநுபவித்துக்களித்தவராய் வானகாட்டிற் சஞ்சரித்திருக்கும் வெள்ளையானை மேருச்சாரலிற் போற்றி வளர்த்த தெய்வயானையைவெற்றி வேலாயுத மூர்த்தியானவர் நாணமென்னுந் தளையினாற்கட்டிப் பன்னிய நறையிற்சேர்த்துச் சிரோரத்தினங்களினாற் செய்யப்பட்ட ஆபரணாதிகளைத் தாங்கியிருக்கும் கொங்கைகளாகியஅங்குசத்தை திருக்கரங்களினாற் பற்றியழுத்தி யருளென்னும் சங்கிலியைக் கொண்டு புயாசலங்களாகிய தறியிற்பிணித்ததைப்போலக் கட்டியணைத்துமுத்தமிட்டும்அதரபானஞ்செய்தும் குலவியும் தேவாமுதம் போன்ற மதுரமொழியையுடைய குமரியுங் குமாரதேவரும்இவ்விதமாகக்காமவின்பத்தையநுபவித்து அந்தப்புரத்திற் பிரியாவிடையா யிருக்கின்ற காலையில் முன்னம் பாலசுப்பிரமணியக் கடவுள் பணித்த படிக்கு ஸ்ரீமகாவிஷ்ணு பிரமனாதிய தேவர்கள்திருப்பரங்குன்றமென்னுந் தலத்தைநீங்கித்தமது தேவியருடன் வைகுந்தம் மனோவதிமுதலிய நகரங்களைச் சேர்ந்து கவலையற்றுப் பழையபடிக்கு மனவெழுச்சியுடனிருந்தனர் தேவேந்திரன் அதிகசந்தோஷத்துடன் முசுகுந்தச் சக்கிரவர்த்திமுதலியோர்களை யுபசரித்துத் தன்மாளிகைக் கழைத்துப்போய் அவர்களுக்குத் தக்கவிடுதிகளைக்கொடுத்துக் காமதேனுவைத் தருவித்து அறுசுவையுண்டி பலகாரவகைகள் கனிவருக்கங்கள் திரட்டுப் பால் இத்தகைய இஷ்டான்னபோசனங்களை திருப்தியாக வூட்டிச் சந்தனக்குழம்பு புனுகுசவ்வாது முதலிய கலவைச்சாந்துகளைப் பூசிப் பரிமளமிகுத்த பஞ்சதாருக்கள் மலர்மாலைகளைச்சாத்தித்தாம்பூலத்தைக்கொடுத்து முற்றியவுடன்நவரத்தினமயமாக விராகின்றகிரீடம்,வாகுவலயம் மகரகுண்டலம்,பதாணிப்பதக்கம்,முத்துமாலை, மோசனமாலையாதியபணிகளையும்விலையுயர்ந்த பீதாம்பரங்களையும்முத்துப்பல்லக்குசொர்னமயமாகவிளங்கும் அம்பாரிகளைத்தூக்கியிருக்கும் யானைகள் தேர்கள் பஞ்சகல்யாணிகளாகவிருக்கின்ற புரவிப்பந்திகள் தேவகணிகையர்கள்ஏராளமாகப்பொழியும் பசுக்கூட்டங்கள்முதலாகிய உலுப்பைகளை அபாரியாக வெகுமதிசெய்து உங்களுக்குஅதிகசிரமையைக் கொடுத்தேனென்று பலவிதவுபசாரவார்த்தைகளைச்சொல்லி அவ்வவர்கள் பட்டணத்துக்குப்போய் வரும்படி செலவுகொடுத்தமாத்திரத்தில் தேவராஜனைவணங்கிடம்மால் மோட்சவீட்டையெளிதிற்கிடைக்கப்பெற்றனமென வுத்தரவுகொடுத்து அதிகசந்தோஷத்துடன் நால்வகைச்சேனைகளும் கடல்பெருகுமாறுபோல விரைச்சென்றுப்போகவும் ரணபேரி, ஜயபேரி, வெற்றிச்சங்கமாதியபறைமுதல் மோவாத்தியங்களும் திசைகள்செவிடுபடத்தக்கதாக முழங்கவும் தங்களுக்குரிய வாகனத்திலாரோகணித்து மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர் சூழ்ந்துவரத் திருப்பரங்குன்றத்தைக்கடந்து நாடுநகரங்கள் வனங்கள், வனாந்திரங்கள்,மலைகள், நதிகள் முதலாகத்தாண்டி தத்தமது நகரங்களிற்சேர்ந்து மனவெழுச்சியுடன் சவுக்கியமாயிருந்தனர், மேற்குறித்தபடிக்கு வானாடர் பூலோகவாசிகள் பாதலத்திலவர் மற்றுந்திருக்கலியாணத்துக்குவந்திருந்த சகலரும் போயினபின்பு இந்திரன் தன்மனதுக்கினியதேவியாகிய இந்திராணியுடன்போகபோக்கியங்களையநுபவித்துத் திருக்குமாரனாகிய சயந்தனுடன் சவுக்கியமாய்ச் சிலதினம் அத்தலத்திற் பலசிதவர்கள் பணிவிடைகளைச்செய்துவர வாசமாகவிருந்தனன், ஓமஹாரிஷிகளே, யித்திருமணச் சரித்திரத்தைப்பத்தி பூர்வகமாய் மனதொருமித்துக்கேட்ட புண்ணியசீலர் பெறும்பேற்றை யாவராற்கணித்துக் கூறப்படும் இனி தேவராஜன் பொன்னுலகத்தைச்சேர்ந்து பழையபடிக்கு த்திரிலோகசக்கிரேஸ்வரனாய்வாழ்ந்தசரித்திரங்களைக் கேட்பீரென் றருதபுராணிகர் ஆரம்பித்தனர்.

## விண்குடியேற்றுபடலம்.

ஆனசிற்சிலவைகல்சென் றிடுதலுமணங்குந்

தானுமுற்றிடுமுறையுளையொருபகற்றணந்து

வானவர்க்கிறைவினைக்குறைநிரப்புதல்வலித்துக்

கோனகர்ப்பெரும்புதலினில்வந்தனன்குமரன்.

நைமிசாரண்ணியவாசிகளே, பாலசுப்பிரமணியக்கடவுள் தெய்வயானையம்மை யினிமைநலத்தை யநுபவித்து வருகின்ற நாள்களில் ஒருதினம் வெகுகாலமாய்ப்பதியையிழந்து யாதொருசவுக்கியங்களு மில்லாமல் வாடியிருக்கின்ற தேவேந்திரனைச் சீர்படுத்தவும் பழையபடிக்குப் பொன்னுலகத்துக்கதிபதியாகப் பட்டாபிஷேகத்தைச்செய்யவுந் திருவுளத்திலெண்ணி அக்கருத்தைத் தேவிக்குத் தெரிவித்துத் தம்பதிசமேதராய் அந்தப்புரத்தைக்கடந்து நவரத்தினமயமாய்ப் பரந்திருக்கும் சபாமண்டபத்தில்வருவதை வீரவாகுதேவர், எண்மர், இலக்ஷர், பூதத்தலைவர்கண்டவுடன் அருணோதயத்தைக்கண்ட வுலகைப்போலக் களித்துத் தாமரைமலர்களுக்கொப்பாக முகாரவிந்தங்கள் துலங்கத் துரிதமாகவெதிர்கொண்டு திருவடிகளிற்பணிந்து அண்டர்கள்திரப் போற்றுகின்றபோது இந்திரன் மனவுற்சாகத்துடன் விரைவில்வந்து கர்த்தன் திருவடிகளிற்சேவித்துக் கரங்களைக்கூப்பிநிற்கின்றவனிடத்திற் கிருபைகூர்ந்து தேவராஜனே யித்தினம் தெய்வலோகவாழ்வைப் பழையபடிக்குத்தருவோமெனச்சொல்லியவாக்கியம் செவிகளுக்கமுததாரையாக நுழைந்தமாத்திரத்திற் பேரானந்தத்தைப்பெற்று யாதும்பேசாமல் நகைமுகனாயிருந்தனன், அக்காலத்திலுண்டாகியபேரொலியானது எங்கனும்பரந்ததைக்கேட்ட பிரமேந்திராதி தேவர்கள் ரிஷிகள் வெற்றிவேலாயுதமூர்த்தி வெளிவந்தனர். வந்தனரென்று ஆனந்தபரவசராய்த் தங்களுக்குரிய வழிபாடுகளைச்செய்து கிருதார்த்தராதற்பொருட்டுத்துரிதமாய்த் தமதுபணிவிடைகளைநீங்கித் திருப்பரங்குன்றத்தினிடத்துக்குவந்து கிருபாநிதியாகிய சிவகுமாரன்பாதகமலங்களில் வணங்கிவழுத்தியபாலையில் அவர்கள்மீது விழிகளைப்பரப்பி யிந்ததேவராஜனுக்கு விண்ணாட்டைத்தரவிருக்கின்றதால் நீங்களனைவரும் வரக்கடவீர்களெனப்பேசிப் பக்கத்தில்நிற்கின்ற வாயுவையெச்சரித்து நமது தேரைத் துரிதமாய்க்கொண்டு வருவாயென்னும்வாக்கிய முடிவதன்முன்னம் மகாபாக்கியமென்றோடி வாகனச்சாலையைச்சேர்ந்து தங்கமயமாகிய தேரைவெளிப்படுத்தி பலவுத்தமஅசுவங்களைப்பூட்டி மற்றசிங்காரங்களைப் பூர்த்தியாகச் சோடித்தவுடன் தன்துணைவருடன் முதற்றட்டிலிருந்து வார்களைப்பற்றிச் சவுக்கையசைத்து மனோவேகத்தினும் கடுகித் தூண்டிவந்து முகவாயிலினிடத்தில்நிறுத்தினான்.

உடனே பாலசுப்பிரமணியக்கடவுள் திருச்சபையைக் கடந்து வெளிவந்து உமாபரமேஸ்வரனைப்போலத்தெய்வநாயகியுடன் திருத்தேரிலாரோகணித்த காட்சியைவிழிகள்களிக்கத்தரிசித்த தேவர்கள்மனப்பூரிப்புடன் கற்பகமலர்களை வாரிவாரிச் சோனைமழையைப்போலச் சொரிந்து அஷ்டதிசைகளும் திக்கிட்டதிரும்படிக்குக் கரங்களைக்கொட்டி ஜயஜயவென்றார்க்கவும் வீரவாகுதேவர் துணைவர் இலக்ஷர், படைத்தலைவர், பராசர்பிள்ளைகள் அறுவருடன் முத்துக்குடைகள் வெண்சாமரைகள் ஆலவட்டங்கள் அருகுகள் மயிற்பிச்சங்களாதிய பரிவட்டணைகளைத்தாங்கிச் சூழ்ந்தனர், இப்படிக்குச் சகலரும்நெருங்கியிருக்கின்றகாலையிற் சரவணபவன் கிருபாகடாட்சமும் அருள்நோக்கமும்பெற்று வாகனமாகவு மிருக்கின்ற சிறப்பையுடைய மஞ்ஞையானது தனதுபாதத்தையெடுத்துத் தேவர்சிரங்களில்வைத்து நடந்துவந்து கர்த்தன்திருமுன்னம்நின்றது, சவுனகாதிரிஷிகளே சூரபதுமன் ஆதியிற் செய்திருக்கின்ற அரியதவம் வீண்பட்டுப்போவதோ அதிகமேம்பாட்டையுடைய தேவர்களைச் சட்டைபண்ணுமல்வீறியிருக்கின்றது இதையன்றியுஞ் சிறந்தபொருளொன்றுமிராது பின்பு சண்முகதேவர் ஸ்ரீமகாவிஷ்ணு, பிரமன், முதலானவர்களைப்பார்த்து நீங்களனைவரும் வாகனங்களிலேறி நம்முடன் பொன்னகரத்துக்கு வரக்கடவீர்களெனத் திருவாய்மலர்ந்தவுடன் மனமகிழ்ந்தவர்களாய்ப்பிரமன் அன்னவாகனத்திலும் ஸ்ரீமகாவிஷ்ணுகருடன்மீதுமாரோகணித்துச் சிவசுப்பிரமணியருக்குச்சக்கரராட்சகராகஇருமருங்கினும் வரவும் வெள்ளியங்கிரியினிடத்திற்பெருகும் அருவியைப்போல மும்மதங்களையுமொழுக்கும் வெள்ளையானையின்மீது இந்திரன்வீற்றிருந்து நடக்கவும் மற்றதேவர்கள் முனிவர்கள் விமானங்களினும் இதரமாதிய வாகனங்களினும்போயினர், சயந்தன் இந்திராணிமுதலிய அரம்பையர் ரிஷிபத்தினிகள் பல்லக்கு அவுதாக்கள் புரவிகளினிடத்திற்சென்றனர். இவ்விதமாகச்சகலருந்தொடர்ந்துவரும்படிக்கு தெய்வலோகத்தைநோக்கி யறுமுகவன் பிரயாணப்பட்ட சேதியையிரண்டாயிரவெள்ளம் பூதப்படைகளும் தெரிந்தவுடன்அதிகசந்தோஷசித்தராய் வேலாயுதம் தண்டம், சூலம், கணிச்சி தோமரம், பிண்டிபாலம், சக்கரம், இருப்புலக்கைமுதலிய படைகளைப்பரித்துச் சருவசங்காரகாலத்திற் சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் பெருகுமாறுபோலவீராவேசங்களுடன் ஆரவாரங்களைச்செய்துகொண்டுபோம்போது பல்லாயிரம் பூதவீரர்கள் ஜயபேரி, மத்தளம், திருச்சின்னம், புள்ளாங்குழல், காகளம், வலம்புரிச்சங்கமாதியபதினெண்வாத்தியங்களையும் சகலபுவனங்களும் திடுக்கிடும்படிக்குக் கணகணெனமுழக்கிப்போகவும் பலர்வெற்றிக்கொடிகளைத்தாங்கிவரவும் இவ்விதஆடம்பரங்களுடன்திருப்பரங்குன்றவெல்லையைக்கடந்து வானவழிக்கொண்டு ஒருநாழிகைப்போதில் மாதலன்பதியாகிய பொன்னுலகைச்சேர்ந்து ஸ்ரீமகாவிஷ்ணு பிரமனுடன்வீதிகளிற்போகும்போது சூரபதுமன் திருக்குமாரன் பானுகோபன்முன்னம் அக்கினிதேவனுக்கிரைகொடுத்தகாலத்தில் சகலசிறப்புகளையும்போக்கிச் சிரழிந்து பார்க்கப்பதங்குறையாய்க்கருகிக் குட்டிச்சுவராகநிற்கின்ற கோலத்தையும்அதைக்கண்டவுடன் முகப்பொலிவற்ற இந்திரன் மனவாட்டத்தையும் தாமெழுந்தருளிய காரணத்தினால்அவற்றைவிலக்கியிருக்கின்ற கெலிப்பையும் நிதானித்திரக்கமுற்றவராய்ப் பழையபடிக்குத் தேவலோகத்தைச் சிர்படுத்தத்திருவுளத்திற்கொண்டு சிற்பநூலின் பிரகரணங்களைமுற்றுமுணர்ந்த மதியூகியாகிய மயனைப்பார்த்து வெகுகாலமாய்ப்பதியையிழந்து வாடியிருந்த துக்கவருத்தங்களைப்போக்கி மனச்சோர்வுடனிருக்கின்ற இந்தவிந்திரன் அதிகசந்தோஷத்துடன் கஜேந்திரபோகங்களையனுபவித்து மனவெழுச்சியுடன் அரசாட்சிசெய்திருக்கும்படியான சகலவளங்களையும் பெற்றிருக்கத் தக்கதாக விந்தப் பொன்னாட்டை முன்னினும் பதின்மடங்கதிக சிறப்புடன்விளங்க விரைவிற்செய்தமைக்கடவாயெனக் கட்டளையிட்டவுடன் ஐயனே பணிவிடையின்படிக்கு இதோநடத்திவருவேனென்று திருவடிகளிற் சேவித்துப்போய் நாற்புறங்களினும் சுற்றிப்பார்த்துச் சாத்திரவிதிப்படிக்கு அண்டமுகட்டைத் தாவப்பருத்து வளைந்திருக்கும் சத்தப்பிராகாரப் பொன்மதிலையெழுப்பி பலவுறுப்புகளைச் சீர்பெறப்படைத்துச் சத்தசாகரங்களினும் ஆழ்ந்து பரந்திருக்கும் அகழிகளைக்கல்லி அவற்றின் நாற்புறங்களினுந் தேவர்களுந்திகைத்துப் பார்க்கவல்ல பிரதமைகள்சித்திரங்கள்முதலான அழகைப்பெற்று ஏழுநிலைகளைவாய்ந்து நவரத்தினமயமாகி கோபுரங்களைத்தூக்கி அதனுட்புறத்திற்சக்கிரவாளகிரியும் பெரும்புறக்கடலும் நாணும்படிக்குப்பரந்து நீண்டு இருமருங்கினும் பலநிலைகளைப்பெற்றமேடைகள் சந்திரகாந்தமாளிகைகள் நவரத்தினமயமாகிய உப்பரிகைகள் நிலாமுற்றங்கள் சித்திரக்கூடங்கள் பளிங்குத்தெற்றிகள் விசித்திரங்களாக விருக்கின்ற மண்டபங்கள் சதுக்கங்கள் பலவோடைகள் தடாகங்கள் குளங்கள் பூங்காவுகள் உத்தியானவனங்கள் சோலைகள்தோப்புகள்முதலாகிய வளங்களைத் தகுதியாகப்படைத்தபின்பு சிருஷ்டிகர்த்தனாகிய பிரமனும் நாணும்படிக்குத் தான்கற்றிருக்கின்ற விஞ்சையின் வல்லபத்தினாலும் பேரறிவின் விசாலத்தினாலும் கட்டுக்காவலையுடையஅப்பட்டணத்தின்மத்தியில் நவரத்தினமயமாய்ப் பலஅடுக்குகளையுடையதாய் அதிகசிறப்புகளைக்கொண்டு விசாலமாயோங்கியிருக்கும் அரண்மனையொன்றைப்படைத்து ஸ்ரீமகாலட்சுமியும் காமுறும் ஜயகுன்றங்கள் செங்கழுநீர்ப்புஷ்பங்களலர்ந்திருக்கும் ஓடைகள்சித்திரக்குளங்கள் செந்தாமரை வெண்டாமரைஅல்லிமுதலிய திவ்வியமலர்களைவிகசித்திருக்கும் தடாகங்களாதிய வற்றையுண்டுபண்ணி விஸ்தீரணமாகியவிடத்தைப்பெற்றிருக்கும் சபாமண்டபம் அரங்குகள்முகவாயில்கள் சந்திரகாந்தத்திண்ணைகள் நாடகசாலைகள் விதங்களையமைத்தவுடன் தேவேந்திரன் அயிராணியுடன் வாசஞ்செய்யத்தக்க அந்தப்புரம் சண்முகதேவர் வீற்றிருக்க யோக்கியமாகியகோயில் ஸ்ரீமகாவிஷ்ணுபிரமன் வாசஞ்செய்வதற்கு உப்பரிகைகள் தேவர்களிருக்கத்தக்க விடுதிகள் ஸ்ரீமகாலட்சுமி சரஸ்வதிதேவி முதலிய தேவகன்னியருக்கு வாசயோக்கியமாகிய மாளிகைவகைகள் கற்பக்காவுகள் நீராடும்பொய்கைகளாதிய வளங்களனைத்தையும் நூன்முறைதெரிந்து சித்தர்கள்முத்தர்கள்வாசஞ்செய்யும் வைகுந்தத்தினும் மனோவதிப்பட்டணத்தினும் அளகையினும் சிறந்திருக்கின்றதெனக் கண்டவர்கள் புகழும்படிக்குப் பொன்னாட்டை யலங்கரித்தனன்.

சவுனகாதிரிஷிகளே, அஷ்டலட்சுமிகளுக்கிருப்பிடமாய்த் திரிலோகசக்கிரேஸ்வரனுக்கு இராஜதானியாக விருக்கின்ற அப்பட்டணத்தின்சிறப்புகளை என்போலிகளால் விரித்துச் சொல்லக்கூடுவதோ இவ்விதச்சிறப்புகளனைத்தையும்மனதினால்நிச்சயித்து அரைநாழிகைக்குள்ளாகச்சிருஷ்டித்த தீவரத்தைத்திருத்துழாய்மாலையைத் தரித்திருக்கும் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியும் நான்முகனும்கண்டவுடன் விம்மிதராய் உனக்குநிகராகப்படைக்கத்தக்கவர்களொருவருமில்லையென தேவதச்சனைப் புகழுமுன்னிலையில் இந்திரன் அந்தப்பட்டணத்தின் வளங்களைமதித்து பிரமித்தவனாய் சிற்பியைக்கட்டிக்கொண்டு சகலசிறப்புகளையும் மிகுதியாகக் கொடுத்தனன், பின்புசிற்பியானவன் துரிதமாய்ச் சண்முகப்பெருமாளிருக்கின்ற விடத்தைச் சேர்ந்து திருவடிகளில்வணங்கி நாதனே கட்டளையின்படிக்கு நகரமாயிற்றென்று விண்ணப்பஞ்செய்தனன், அவன்மீதுகிருபாநோக்கத்தைப் பாலித்தவராய்த் தம்மைச் சூழ்ந்திருக்கின்ற நவவீரர் இலக்ஷர் கணபதிகளுடன் குமாரதேவர்போய் தேவராஜனுக்கமைந்திருக்கின்றஅரண்மனைமுகவாயிலினருகிற் சேர்ந்தகாலத்தில் ஸ்ரீமகாவிஷ்ணு பிரமனாதியர் வாகனங்களைவிட்டிறங்கி ஜயஜயவென மங்களவாழ்த்தெடுக்கத்தக்கதாகத் தெய்வநாயகியாருடன் சொர்னமயமாகிய திருத்தேரைவிட்டிறங்கிச்சகலரும்போற்றிச் சூழ்ந்துவரத்தக்கதாகப் பாலசுப்பிரமணியதேவர் பிராட்டியாருடன் கோடிசூரியப்பிரகாசமாக விளங்கிக்கொண்டிருக்கும் சபாமண்டபத்திற் பிரவேசித்து முன்னவனாகிய சூரபதுமன் மயில்வாகனமாய்ச்சுமந்திருக்கும்பேற்றை யடைந்திருப்பதாற் சிங்கமுகாசுரனும்அச்சிறப்பைக்கொண்டு வாழவெண்ணிவந்து குமாரசுவாமியைத் தன்சிரத்திற்றாங்கவிருப்பதையொப்ப நாற்புறங்களினும் சிங்கமுகங்களையுடைய கால்கள்விளங்கும்படிக்குச்சிரோரத்தினமயமாகச் சொலித்துக்கொண்டிருக்கும்அரியணையிற் சிவகுமாரன் தெய்வநாயகியார் சமேதராய்வீற்றிருந்தகாலத்தில் ஸ்ரீமகாவிஷ்ணு-பிரமன்-தேவர்கள்-ரிஷிகள்முதலானவர்களனைவரும் சபைமுற்றும்நெருங்கிப் பாலசுப்பிரமணியனைப்புகழ்ந்திருந்தனர், இந்திராணியானவள் ஸ்ரீமகாலட்சுமி சரஸ்வதிமுதலாகிய பெருந்தேவியரை உபசரித்து அந்தப்புரத்துக்கழைத்துப்போய் அதிகமரியாதையுடன் அவர்களுக்குத்தக்க பீடங்களையிட்டுவித்து எழுந்தருளச்செய்து சுபகரமாகியவார்த்தைகளையாடிக்கொண்டிருந்தனள்.

திருச்சபையினிடத்துவிளங்கும் சிங்காதனத்திலமர்ந்த பாலசுப்பிரமணியதேவர் பிரமவிஷ்ணுக்களைபார்த்து இந்திரனானவன் திரிலோக சக்கிரேஸ்வரனாய் இப்பட்டணத்தி லிருந்து அரசுரிமைகளைச் செலுத்திச் சகலசவுக்கியங்களையும் அனுபவித்திருக்கும்படிக்கு இத்தினமேமகுடாபிஷேகத்தைச்செய்விக்கக் கடவீர்களெனத் திருவாய்மலர்ந்தனர், அந்தவிசேஷம்செவிகளிற்பட்டமாத்திரத்தில்மகாபாக்கியமென்றுபிரமன் பலதேவர்களைத்துரத்திகங்காசலம் ஆடைஆபரணாதிகள் கற்பகமலர்மாலைசந்தனக்குழம்பு வெண்சாமரைவாள்மகுடம் தவளசத்திரமுதலாகிய ராஜசின்னங்களனைத்தையுந் தருவித்துக்கொண்டவனாய்ச்சத்தமுனிவர்களும்வேதங்களையோதவும்தேவதுந்துமிமுழங்கவும்விண்ணவர்வாழ்த்தெடுக்கவும் அரம்பையர்பணிவிடைகளைச்செய்யவும்இத்தகையசிறப்புகள்நடந்துவருகின்றகாலையில் பொற்குடங்களில்நிரப்பியிருக்கின்ற வானகங்கையைக்கொண்டுமந்திர பூர்வகமாக ஸ்தானஞ்செய்வித்து பீதாம்பரத்தையுடுத்திச் சந்தனத்தேய்வை புனுகுசவ்வாது கஸ்தூரிமுதலிய கலவைச்சாந்தைப்பூசி நவரத்தினமயமாகியஆபரணங்களைப்பூட்டிக்கற்பகப் புஷ்பமாலைகளையணிந்துமற்றகோலங்களையும் சிர்பெறச்செய்வித்தவுடன்பிரமன் இந்திரன்கரத்தைப்பற்றி அழைத்துவந்துபருத்தமணிகளினாற்செய்தமைத்திருக்கின்றசிங்காதனத்திலேற்றித்தேவமுரசங்களாதியமங்கலவாத்தியங்கள்தாம்தாமென்று முழங்கவும்தேவரிஷிகள்வேதங்களையோதிஅட்சதைகளையும்புஷ்பங்களையுமிறைக்கவும் கண்ணன்கண்டுகளிக்கவும்மற்றையர்மனவெழுச்சிபெறவும்பிரமதேவன்வயிரமுடியைக் கரத்திலெடுத்துச்சிவசுப்பிரமணியதேவர் பரிபூரணகடாட்ச வீட்சணிபத்தினால் திரிலோகங்களுக்கும் சக்கிரேஸ்வரனாய் சகலரையும்போஷித்துஅரசுரிமைகளைச் செலுத்திச் சுகத்தில் வாழ்ந்திருக்கக்கடவாயென்று ஆசீர்வதித்துச் சிரத்திற்றரித்தனர், அக்காலத்தில் இந்திரன் பழையபடிக்கு அரியணையில்வீற்றிருந்தகோலத்தைக் கண்டமாத்திரத்தில் மனமகிழ்ச்சியுடன்தேவர்களனைவருமெழுந்து தங்களரசன் திருவடிகளிற் பணிந்து போற்றி நிற்கவும் சத்தவிருஷிகளாதிப தவத்தர் கற்பகமலர்களை யிறைத்து அகண்ட மண்டலாதிஸ்வரனே வாழிவாழியென வாழ்த்தவும் அரம்பை ஊர்வசி-திலோத்தமை மேனகைமுதலிய தெய்வப்பெண்கள்பரதநாட்டியங்களைச் செய்யவும் விஞ்சையர் கருடகாந்தருவர்மகரயாழ்களை மீட்டிச் சிரவணானந்தமாகத் தேவகானங்களைப்பாடவும் சங்கநிதி-பதுமநிதி-சிந்தாமணி-காமதேனு- உச்சயிச்சிரவ முதலாகியவளங்கள் பக்கங்களிற் பணிவிடைக்கெதிர்பார்த்துக் காத்திருக்கவும்யித்தகைய வைபவங்கள் நடந்துவருமுன்னிலையில் தேவேந்திரன் சிங்காதனத்தைவிட்டிறங்கித் தேவதேவோத்தமனாகிய பாலசுப்பிரமணியக்கடவுள் சந்நிதானத்திற்போய் மும்முறைவலம் வந்து தீர்க்கதண்டன் சமர்ப்பித்து கரங்களைக்கூப்பிப் போற்றினவனாய் இதனை விண்ணப்பஞ் செய்வதாயினன்.

திருமருகோனே பலயுகங்களாகப் பதியையிழந்து பெண்டுபிள்ளைகளைத்தோற்றுக் காடேகதியாகத்திரிந்தலைந்திருந்த அடியேனிடத்திற் பரிபூரணகடாட்சம்வைத்துத்திருமேனிவருந்த கொடியபோரைச் செய்து பகைவரைவாட்டிச்செல்வவளங்களிற்சிறந்ததுறக்கநாட்டைப் படைத்துக் கொடுத்துப் பழையபடிக் கரசாட்சியையுங்கடாட்சித்துச்சகலரும் புகழத்தக்க ஏற்றமும் மேப்பாட்டையும்பெறச்செய்தீர் மேலும் நாயினேனைத் தொண்டனுமாக்கிக்கொண்டீர் ஆகலாற் கிருதார்த்தனானேன் இதனினும் பெறவேண்டியபேறுக ளொன்றுமில்லையெனப் பலபலவிதங்களிற்றுதிக்கின்ற தேவேந்திரனிடத்திற் பரிவாய்க் கிருபாநோக்கத்தைப் பாலித்து இனிஎக்காலமும் மனமகிழ்ச்சியுடன் சகலரும்போற்றிவணங்கத் திரிலோகாதிபத்தியத்தைப் பெற்று கஜேந்திரச்சம்பத்தையனுபவித்துபெண்சாதிபிள்ளையுடன் சுகசீவியாயிருக்கக்கடவாயெனத் திருவுளம் பற்றினவராய்ச் சபையிலிருக்கின்ற பிரமன் விஷ்ணுமுதலானவர்கள்மீது விழிகளைப்பரப்பித் தங்கள்பதவிகளுக்குப்போய்ச் சலனமற்று வாழக்கடவீரெனச்சொல்லிச் செலவுகொடுத்தனுப்பிவிட்டபின்பு தமதுமாளிகையைச்சேர்ந்து குறியபாதங்களையுடையபூதவீரரைவாயில்

கடோறும் காவலுருசுதித் தெய்வநாயகியாருடன் லீலாவினோதங்களைச்செய்திருந்தனர் உடனே விஷ்ணு பிரமனுதியர் பொன்னுலகைக்கடந்துபோய்த்தங்கள்பதவிகளிற் சேர்ந்து தேவிமாருடன் அல்லலற்றுக் களித்திருக்கவும் தேவேந்திரனும் இந்திராணிசமேதனுய்ச் சுரதலீலைகளைச்செய்தும் திரிலோகாதிபதியாய்ச் சகலசெல்வங்களையும் அனுபவித்து சஞ்சலமற்றிருக்குமந்நிலையில் விண்ணவர்பொன்னுலகவாழ்வையல்லாமல் மற்றபுவனங்களினுள்ள வளங்களையும்பெற்றவர்களைப்போல மனவெழுச்சியுடன் தங்கள்தேவியருடன் தத்தமக்குரியதலங்களிற் சவுக்கியமாயிருந்தனர்.

---

## கந்தவெற்புறுபடலம்.

இப்படிசிலநாளேகவிதன்மிசைவைகலொன்றி
லொப்பருங்கந்தவெற்பிலுறைவதுகருதிச்செவ்வேள்
செப்புறழ்கொங்கையோடுஞ்சினகரந்தணந்துசெல்ல
வப்பரிசுணர்ந்துவேதாவாதியர்யாரும்போந்தார்.

---

வாசீர் சவுனகாதிரிஷிகளே, மேற்குறித்தபடிக்குச் சகலரும் அதிகமகிழ்ச்சியுடன் தமக்குரியஅரசுகளைச்செலுத்திச்சவுக்கியத்தி லிருக்கின்றகாலையில் ஒருநாள்வெற்றிவேலாயுதமூர்த்தியானவர் கந்தவெற்பைச்சேர்ந்திருக்கவதைத்திருவுளத்தில்நினைந்து அந்தப்புரத்தைவிட்டுவெளிவந்து திருச்சபையில்வீற்றிருந்தசேதியை ஸ்ரீமகாவிஷ்ணுபிரமனுதியர் போதவுணர்விற் தெரிந்தமாத்திரத்தில் பூவினிடத்திருக்கும் தேனையுண்டுகளிக்க வண்டினங்கள் பலதிசையினுமிருந்து பூஞ்சோலையைநோக்கிவருமாறுபோல அதிகஆவலுடன் தத்தமபதவிகளைநீங்கி தெய்வலோகத்தைச்சேர்ந்து குமாரதேவனைக்கண்டு வணங்கிப் போற்றுகின்றவரிடத்திற் பரிவாய் விசாரணைகளைச்செய்தபின்புஇதனைத்திருவுளம்பற்றுவதாயினர், நாம்சிலபோது கந்தமாதனத்தைச் சேர்ந்திருக்க நினைந்திருப்பதால்இன்றையதினம் பிரயாணப்படுவோம் நீங்களனைவரும் உங்கள்பதவிகளிற்போய்ச் சகலசெல்வவளங்களையும் அனுபவித்து சவுக்கியமாயிருப்பீர்களென்று அவர்களுக்குச் செலவுகொடுத்தனுப்பிவிட்டுத் தேவேந்திரனுக்கும் தன் கருத்தைத்தெரிவித்து நீயித்தலத்தில் வாசமாயிருந்து சகலரையும்போற்றி வாழக்கடவாயெனப்பணித்துவாயுவைப்பார்த்து விரைவில் நமதுதேரைக்கொண்டுவரக்கடவையெனக் கட்டளையிட்டமாத்திரத்தில்அதிவேகமாய்ப்போய் அலங்கரித்துப் புரவிகளைப்பூட்டிக் கற்கரத்தொனிகளெழத்துரத்திவந்து எதிரில்நிறுத்தினன், உடனேகுமாரதேவர் தெய்வநாயகியுடன் மாதுலனிடத்தில் அனுப்பிவித்துக்கொண்டு திருத்தேரிலேறியபோது சாரதியானவன் குதிரைகளையதட்டிச் செலுத்துகின்றகாலையில்வீரவாகுதேவர், துணைவர், இலக்கர், படைத்தலைவர், தங்கள்தங்கள் வாகனங்களின்மீதுசூழ்ந்துவரத்தக்கதாகவும் இரண்டாயிரவெள்ளம் பூதப்படைகளும் ஜயசன்னுகங்களுடன் ரணபேரி, ஜயபேரிமுதலிய வாத்தியங்களைமுழக்கிக்கொண்டு கல்லென்னுஞ் சத்தமெழச்சண்முகனைப்புகழ்ந்துவரவும் பொன்னாட்டைக்கடந்துதிருக்கயிலாயகிரியைச்சேர்ந்து அரண்மனைமுகவாயிலிற் றேரைவிட்டிறங்கித் திருத்தேவியாருடன் ஆலயத்துக்குள்ளேபோய்ப் பிதாவையும் தாயையுஞ்சேவித்துப்போற்றித் தாம்கந்தபருவதத்துக்குப்போக விருக்கின்ற சேதியைவிண்ணப்பஞ்செய்து உமாபரமேஸ்வரர் ஆசிர்வாதங்களையும் விடையையும்பெற்றுமீட்டுந் திருத்தேரிலாரோகணித்துத் தம்பியர் முதலானவர்கள் சூழ்ந்துவரச் சகலதிருவோலக்கங்களுடனும் வெள்ளியங்கிரியைக்கடந்து அதற்கடுத்திருக்கின்ற கந்தவெற்பினிடத்திற்சேர்ந்துவாகனத்தைவிட்டிறங்கி நவரத்தினமயமாக விளங்கியிருக்கும் ஆலயத்திற்பிரவேசித்துச் சபாமண்டபமுகப்பிற் சிரோரத்தினங்களினுலமைந்திருக்கின்ற சிங்காதனத்தில் தம்பதிசமேதராய்வீற்றிருந்தகாலையில் வீரவாகுதேவர்முதலான பிரமுகர்களுமுந்தைவடிவேலன் திருமுன்னம் பரப்பியிருக்கின்ற பீடங்களிலமர்ந்து பணிவிடைகளுக் கெதிர்பார்த்திருந்தனர், பூதகணங்களும் திசாதிசையிலும்பரந்து காவல்கொண்டமர்ந்தனர்.

---

துய்யதாமறைகளாலுந்துதித்திடற்கரியதான
செய்யவேளடிகள்வாழ்கசேவுமயிலும்வாழ்க
வெய்யசூர்மார்புகீண்டவேற்படைவாழ்கவன்னுன்
பொய்யில்சீரடியார்வாழ்கவாழ்கவிப்புவனமெல்லாம்.

---

## இந்திரபுரிப்படலம்.

காசினிவியத்தகுகந்தவெற்பிடைத்
தேசுடைமுருகவேள்சேர்ந்தசெய்கையைப்
பேசினனிங்கினிப்பிறங்குபொன்னகர்
வாசவனியற்கையுமற்றுங்கூறுவேன்.

---

சூதபுராணிகர் சவுனகாதிமுனிவர்களைப்பார்த்துஇதுவரையினும் பாலசுப்பிரமணியர் சகலபுவனங்களினும் புகழும் சிறப்பினைப்பெற்றிருக்கும் கந்தவெற்பைச்சேர்ந்திருந்தகாலையிற் கேட்டீர்கள்இனிபொன்னகரத்திலமர்ந்து திரிலோகசக்கிராதிபதியாய் அரசுசெலுத்திவரும்தேவேந்திரன்செய்கைகளையும் மற்றசரித்திரங்களையுஞ் சொல்லுவோமென்று சூதபுராணிகர் ஆரம்பித்தனர், அவுணர் பூண்டறக் களைகளைந்தெரிந்த வெற்றிவேலாயுதத்தைப்பரித்திருக்கும் பாலசுப்பிரமணியதேவர் பரிபூரணகடாட்சவீட்சணியத்தினுல் அரசுரிமையைப்பெற்று முப்பத்துமுக்கோடி தேவர்கள் சகலபணிவிடைகளையும்செய்து போற்றிவரவும் நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகள் மங்களஆசிகளைச்சொல்லித்துதித்து நெருங்கியிருக்கவும் கின்னரர் கிம்புருடர் சித்தர், வித்தியாதரர் மங்களங்களைப்பாடியேத்தவுஞ் சகலசாத்திரபண்டிதனுய்த் திரிகாலவர்த்தமானங்களை உள்ளங்கை நெல்லிக்கனியைப்போல தெரியவல்ல குணசம்பத்தைப்பெற்று குலகுருவாகவிருக்கின்ற பிரகஸ்பதிபகவான் அருகிலிருக்கின்ற ஆசனத்தில் வீற்றிருந்து மந்திராலோசனைகளைச் சொல்லிவரவும் அரம்பையூர்வசி, திலோத்தமை மேனகைமுதலாகிய சுந்தரவ

திகளாகியதேவகணிகையர் அபிநயங்களைக்காட்டிச்சதிமுறையிற் பாதங்களிற்கட்டியிருக்கின்ற சிலங்கைகள் கலகலெனச் சத்திக்கத்தக்கதாகப் பெயர்த்துப்பெயர்த்து வைத்து மயிலையொப்பப் பரதநாட்டியவியல்புப்படிக்கூடித்தும் குயில்கள்நாணும்படிக்குச் சிரவணானந்தமாகப்பாடவும் கருடகாந்தருவர் தேவயாழ்களைமீட்டி மதுரமாகிய கீர்த்தனங்களைவாசிக்கவும் பலதேவர்கள் பயபத்தியுடன் அருகிலிருந்து வெண்சாமரைகளை யசைக்கவும் அருகுகளைப்பிடிக்கவும் ஆலவட்டங்கள்வீசவும் கட்டியக்காரர் எச்சரிக்கைசொல்லவும் பட்டுவர்புகழவும் மற்றவிராஜ சிறப்புகளனைத்தும் குறைவறநடந்து வருகின்றவேளையில் தேவதுந்துமிமுதலிய வாத்தியங்கள் தாம்தாமெனமுழங்க நவரத்தினகசிதமாகவிளங்கும் காம்புகளினுச்சியில் வெண்பட்டினாலும் ஆணிமுத்துகளினாலும்சோடித்திருக்கின்ற பூச்சக்கிர தவளக்குடைகளை யிருபாரிசங்களினும் சந்திரசூரியரையொப்பக் கவிக்கவும் அவற்றின்கீழ்ப்புறத்தில் நவரத்தினமயமாகச்சோடித்து விளங்குகின்ற சிங்காதனத்திலெழுந்தருளி திரிலோகங்களினுந் தனது ஆணை ஆக்கினைகளைச்செலுத்திப் பாதுகாத் தரசுசெலுத்திவருகின்ற தேவேந்திரன் ஒருதினம் சடுதியில் மனதுக்கதிகசஞ்சலங்காட்டியபடியால் இதனைச்சிந்திப்பதாயினன், திரிபுவனசக்கிரேஸ்வரனாக வாழ்ந்திருக்கின்ற யான் சத்திராதிகளாய்த் தாயாதிகளாகவு மிருக்கின்ற சூரபதுமனுக் கடிமைப்பட்டு அவன்கட்டளைகளுக்கடங்கித் தகாதபலஹீனத்தொழில்களை வெகுகாலஞ்செய்து அளவற்றயுகங்களைக்கழித்தேன் இதன்மத்தியிற் பாதகராகிய அவுணரால் நேர்ந்ததுக்கவருத்தங்களையும் இடையூறுகளையுஞ்சொல்லி முடிவதோ பிள்ளையொருபக்கம் தேவியொருபக்கம் நானொருபக்கமாயிறைந்து பதுங்கிப்படாத துன்பங்களையனுபவித்தனம் அவற்றினையிக்காலத்தில்நினைப்பினும் மனம்நடுங்குகின்றது ஐயையோ இவ்விததுன்பங்களிற்பட்டவர்க ளொருவருமிருக்கமாட்டார்களெனப்பலபலவெண்ணியெண்ணி சஞ்சலசித்தனாய்த் தன்செல்வத்தைவெறுத்துக்கொண்டு இந்திராணியினதுபொற்கலசங்களையொத்த கொங்கைகளை யிறுகப்புல்லியணையும் சுகத்தைமறந்துகஜேந்திரச்செல்வவளங்களைச்சற்றும்மதியாமல் அரசுசெலுத்துவதையு மிகழ்ந்து எக்காலத்தும் சலனமில்லாமல் நன்னெறிகளை யடைவிக்கும் சிறந்ததவங்களைச்செய்து சிவபிரான் பரிபூரணகடாட்சத்தைப்பெற்று நித்தியமாகிய மோட்சசாம்பிராச்சியத்தையடைந்து பேரானந்தத்தை யனுபவித்திருப்பதேதவிர வேறுநன்மையொன்றுமில்லையெனமதித்து அவ்வாறே துறவாசிரமத்தையனுஷ்டித்து வனத்திற்போய்த் தவங்களைச்செய்யத் துணிவுகொண்டனன் இப்படிக்கு இந்திரன் உத்தேசித்திருக்கின்றதுணிவை ஆசிரியனாகவும் மந்திரியாகவும் புரோகிதனாகவும் தலைவனாகவுமிருந்து தேவர்கள் சவுக்கியங்களுக்குவேண்டும உதவிகளைத்தேடி யிரட்சித்துவரும் பிரகஸ்பதி தெரிந்தமாத்திரத்திற் றிடுக்கிட்டுமோசம் நேர்ந்தது இவன்கொண்டகருத்தின்படிக்கு வெளிப்படுவானாகில் தெய்வலோகத்துக் கரசனில்லாமல் தலைவிரிகோலமாய் அலைந்து பகைவருக்கிடமுண்டாகும் ஆதலால் இவிதாமசப்படாமல் இதற்கொரு நிவாரணத்தைத்தேடவேண்டுமெனக்கருதி ஒருதந்திரத்தை மனதிற்றீர்மானித்துக்கொண்டவராய்த் தேவேந்திரனுக்கருகில் நெருங்கி யிதனைபேசுவதாயினர்.

பருவதங்கள் சிறகைக்கண்டித்து உலகங்களை வருத்தமின்றிக் காத்துவரும் வச்சிரதானாகிய இந்திரனேகேட்பையாக சீவகாருண்ணியம் நடுவுநிலைமைசத்கருமங்களாதிய நன்னெறிகளெவ்வளவுமற்ற கொடியபாதகனாகவிருந்து கொடுங்கோல்செலுத்திவந்த சூரபதுமனாலடைந்ததுக்கவருத்தங்களையும் அபகீர்த்தியையும் பெரிதாகநினைந்து நூறுஅசுவமேதயாகங்களைக் குறைவறச்செய்து முடித்த பலப்பிராப்தியினாற் சிவபிரான் கடாட்சித்திருக்கின்ற சிறப்பையுடைய இவ்வரசுரிமையையும்திரிலோகச் சாம்பிராச்சியச் செல்வவளங்களையும்வெறுத்து ஏதோசிலவெண்ணங்களைக்கொண் டிருக்கின்றனைபோற் காணுகின்றது ஐயையோ உன்விவேகத்தை யென்னசொல்லுவேன் இத்தகைய பெருவாழ்வைநீக்கி யினிமேற்படமுக்கியமாகிய தவவிரதங்களைச்செய்து நீபெறவிருக்கின்ற பலப்பிராப்தியானது இன்னதெனத் தோற்றவில்லை வெய்யில்குளிர்-பனி-யிவற்றினாலும் பலபல இடையூறுகளினாலும் அலைச்சற்பட்டுத் தேகமும் மனமும்வருந்திச்சிறந்த நோன்புகளைச்செய்தவரன்றோ மேம்பாடாகப் புகழவல்ல இந்தமகதயிஸ்வரியங்களையும் கஜேந்திரவாழ்வின் சம்பத்தையும் பெற்றுக்களிப்பவர்கள் ஓபுரந்தரனே யிஃதுஉன்மட்டல்ல மதித்துப் பார்க்குமிடத்தில் இந்தத்திரிலோகங்களினும் சாதாரணமாக நடந்துவரும் இயற்கையாகும்பற்பலதுன்பங்களைச் சகித்து இடைவிடாது அரியதவங்களைச்செய்துவரும் பேற்றினைவாய்ந்த ரிஷிபுங்கவர்களினும் சிவபூசனைமுதலிய நற்கருமங்களை மனதொருமைப்படநடாத்திவந்த மகிமையினாற் பொன்னுலகவாழ்வைப் பெற்றுத் தேவரெனப் புகழக்களித்திருக்கின்ற சொர்க்கவாசிகளினும் சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலத்திலிருக்கின்ற புண்ணியசீலர்களினும் பாதலவெல்லையில்வாழும் ஆதிசேஷன்முதலியநாகராசாக்களினும் சிருஷ்டி திதிசங்காரமென்னும் முத்தொழில்களைநடாத்திவரும்மகிமையையுடையதிரிமூர்த்திகளினும் பொற்பிதிர்வைப்போல அழகிய தேமல்பரந்து தங்கக்கலசத்தையொப்பப் பூரித்து விம்மித் ததும்பி நீலரத்தினத்துண்டத்தினும் சுந்தரமுள்ள மணிக்காம்புகளைப் பெற்றிருக்கின்ற கொங்கைகளைப்படைத்து அதிகரூபலாவண்ணியங்களைப் பெற்றுக் கலாபமயிலையொத்த சாயலையும் அன்னத்தையொத்தமெல்லியநடையினையும் கிள்ளையையும் குயிலையும்யாழினோசையும்பழித்துத் தேவாமுதத்தைப்பார்க்கினும்மதுரமாகக்கொஞ்சி வார்த்தைபாடும் தருணமங்கையரைக்கலந்து பேரானந்தத்தைப்பெறச்செய்யவல்ல போகபோக்கிய வின்பாசத்தைக்கைத்து நீங்கியிருப்பவர்க ளொருவருண்டோ முற்பகல் மனமொருமித்துச்செய்த தீயகருமங்களுக்குத்தக்கத் தண்டனைகளைச் சிவபிரான் கட்டளையின்படிக்கனுபவித்துச் சூரியன்முன்பட்ட பனிப்படலத்தைப் போலக் கழித்துவிட்ட சம்பவங்களை யிகழ்ச்சியாகநினைந்து கவலையிற்பட்டுழலு மனத்தனாய் அரிதிற் கிடைத்திருக்கின்ற இந்தச்சிறந்த மகதயிஸ்வரியத்தை யூனமென்றெண்ணித்துறந்து வறியனாய்த் தனிமையிற் றவங்களைச்செய்துழலுங்காலத்தில் நீபெறவிருக்கின்ற துக்கவருத்தங்களுக்கொரு அளவையுமுண்டோ கோடைகாலத்திற் றேற்றுங்கானல்நீரைக்கடக்கவறியாது பயப்பிராந்திகொண்டு

வாடுகின்றவன் ஆழ்ந்தகடலினிடத்தில் விழுந்து நிலைபெ
ருதலைந்து வாடநினைக்கக்கூடுமோ ஊணுறக்கமற்றுபனி-
வெய்யில்-குளிர்,மழைமுதலிய கொடுமைகளிற் படச்சரீ
ரம்வாடவருந்திச் சத்த-பரிச- ரூப-ரச-கந்தமெனச்சொல்
லாநின்ற பஞ்சேந்திரியவிஷயங்களில் ஐப்புலன்கள்மீறிச்
செல்லவொட்டாமலடக்கி காம-குரோத-லோப-மோக-ம
த-மாற்சரியமென்னும் அறுவகைப்பகையினைப்போக்கிச்
சித்தத்தைச் சிவத்திற்கலந்து அரியயோகசாதனைகளைச்செ
ய்யவல்ல மகத்துக்கள் பெறும்பயனைத் திரிலோகாதிபத்தி
யத்தைபெற்றிருக்கும் சதமகனேநினைக்குமிடத்தில் போ
கமல்லதுவேறுமுண்டோ இவ்வாக்கியத்தைக்கடைப்பிடி
யாகநம்பக்கடவாய் இஃதன்றியும் பொறிபுலங்களையடக்
கி அவாவைப்போக்கிச் செய்கைகளழிந்து வினைக்கூடாகி
ய தேகவாசனையை நீக்கி நித்தியத்தைத்தரவல்ல பேரின்
பவீடொன்றிருக்கின்ற தென்றுஞ்சிலசபல சித்தர் சொல்
லுவதுமுண்டு அதனைக்கண்டவர்களைக் காட்டவல்லமோ
இம்மையில் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போலத் திஷ்
டாந்தமாய் அனுபவித்துக்களிக்கும் போகபோக்கியங்க
ளையே உண்மையாக உலகங்களிற் சாதாரணமாய்வசனித்
துக்கொள்ளவிருக்கின்றது ஆதலாற்பொய்மையாகிய கான
லை மதுரமிகுத்ததெளிவுள்ள நீரெனக்கருதி அதனிடத்தி
ச்சைகொண்டு கரத்திலகப்பட்டிருக்கின்றசிறந்த தேவா
முதத்தைக்கமரிற் கவிழ்த்துவிட்டு மோசம்போனவர்களை
யொத்துச்சிலர் நித்தியமெனச் சொல்லும் மோட்சவீட்
டைப்பெறநினைந்து இம்மையிற்கண்டபலனைக் கிடைத்தி
ருக்கின்ற பிரயோசனத்தைப் பலவத்காரமாயிழந்துபோ
கும்படிக்குச் சம்மதித்திருக்கின்ற வுன்னெண்ணம்வெகு
நேத்தியாக விருக்கின்றது ஓ தேவராஜனே தன்மனதுக்
கினியசுந்தரமுள்ளமங்கையரை அம்சதூளிகாசயனத்தி
ற் சரசசல்லாபங்களினாற் சுரதலீலைகளைச்செய்துபெறும்
பேரின்பமே மோட்சகாருண்ணியமாம் அவர்களுடன்கல
ந்து வாழ்வதேயில்வாழ்க்கையாம் நடைநொடிபாவனைக
ளிற் குறைவின்றிக் கற்புத்தன்மையைப் பெற்றிருக்கின்
ற கன்னிகையொருத்தி கிடைத்தலே செல்வங்களிற்சிறந்
ததாம் அத்தகைய தருண மங்கையர் தங்கக்கலசத்தை
யொத்த வனப்புள்ளகொங்கைகள் மார்பிலிறுகக்கட்டிய
ணைந்து இன்பநலத்தைப்பொருதவறுமையைவிடக் கொ
டிய தரித்திரம்வேறுமுண்டோ மறுவற்றசோடசகலைகளை
வாய்ந்தபூரணச் சந்திரோதயத்தைப் பழித்துவிளங்கும்
அழகியமுகாரவிந்தங்களைப் படைத்தமங்கையர் புணர்ச்
சியைச்சிலர் சிற்றின்பமெனப்பேசி யிகழ்கின்றனர், அதி
ன்சிறப்புத்தெரிந்தால் அதனைப் பேரின்பமாகவேயெண்
ணி நிமைப்போதும் பிரியாவிடராய்க் கூடியிருப்பார்மே
ற்குறித்த மேம்பட்டவின்பமானது பூருவத்திற்செய்தத
வப்பேற்றினாற்கிடைக்கவல்லதல்லது நினைந்தகாலத்திற்சு
லபமாகப்பெறவும் போகுமோ ஓ மேகவாகனனே அதன்
பெருமிதங்களை சவிஸ்தாரமாகக்கேட்க மனமிருக்குமாகி
ல் சொல்லக்கடவோமென்று தனக்கரணகவிருக்கின்றஆ
சிரியன்குறித்தவாக்கியங்களைச் செவிகளுக் கமுததாரை
யைப்போலக் கேட்டவுடன் வச்சிராயுதபாணியாகியஇந்தி
ரனுக்குச்சரீரம்பூரித்து நகைமுகனுய் ஓமக்கனலிற்பட்ட
வெண்ணெயைப்போல மனங்கரைந்துகாமக்கவலையில்மு
யற்சிகொண்டவனுய்க் குலக்குரவனைச் சேவித்துமனக்கவ
லையைப்போக்கி நற்காட்சியைப்பெறச்செய்ய தேவாமுத
த்தைப்போல அருகிலிடைவிடாமலிருக்கின்ற குருநாத
னேதேவரீர் கிருபையுற்று இப்பொழுது போதித்தமங்
கையர் சிறப்புகளையும் குணாதிசயங்களையும் பேரானந்த
த்தைத்தரும் காமவின்பநலத்தையும் அடியேனுக்கிதுப
ரியந்தம் தெருட்டாமலிருந்தகாரணமென்னேவெனத்தே
கமுற்றினும் விழிகளைப்படைத்திருக்கின்ற சிற்றறவையு
டைய மகவான் வினவியகாலத்தில் இவன்மனதிற்சொண்
டிருந்தகருத்தழிந்து மருண்டுமோகவாசனையி லகப்பட்டு
க்கொண்டானெனத் தெரிந்துகொண்டவனுய் வேதாகமபு
ராணசாத்திரவிதங்களைப் பூரணமாகவாசித்து அவற்றி
ன்நிச்சயங்களைத் தெரிந்திருக்கின்ற பண்டிதனாகியபிரகஸ்
பதிபகவான் திரிலோகசக்கிரேஸ்பரனைப்பார்த்து அரச
னேமோட்சவீட்டை எளிதிற்றரும் சிறப்பையுடையமங்
கையர் மகத்துவங்களையும் அவர்களாற்பெறவிருக்கின்ற
இன்பநலத்தையும் விளக்கும் மதனசாத்திரத்தின் நிச்சய
ப்பொருள்களை மேம்பட்டதாகச் சிந்தித்தறியும்ஆசைப்
பெருக்கில்லாதபருவத்தில் மேலையோராகவிருப்பவர்போ
திக்கமாட்டார்கள் அவ்வாறேஐயனே உமக்கித்தினவரை
யில் அனுக்கிரகஞ்செய்யாமற் ருழ்த்தனம்இதுதருணமா
கத்தெரிந்தபடியால் சந்திரனைக்குடையாகப் படைத்திரு
க்கின்ற மன்மதராஜனது சரித்திரமாகிய கடலைவிசாலமா
கியகூர்த்தபுத்தியினால் அளந்துபரிசோதித்து நிச்சயித்தி
ருக்கின்றஉண்மைகளின் பிரகரணங்களனைத்தையும் சொ
ல்லுவோம்பராமுகமில்லாமல் மனதையும் செவிகளையு
மொருமித்துக்கேட்பையாக ஆதியில் இந்நூலைத்திருக்க
யிலாயபருவதத்தைக்காவல்கொண்டிருக்கும் பெருமையி
னையுடைய நந்தியெம்பெருமான் கணக்கிறந்தவிரிவாயுண்
டுபண்ணியிருந்தனர், சிலகாலத்திற்குப் பின்புமேலையோ
ரால் நூற்றெட்டு சாகைகளாகக் குறுக்கினர், இக்காலத்தி
ல்தசபிரகரணங்களாக ஏற்படுத்தி யிருக்கின்றது பூர்வா
சிரியர்கள் இதற்குரிய சமைபங்கள் அறுவகைத்தாக
ப்பிரித்தனர், அவைகளில் அமுதத்தினு மினியஇன்பத்
தையனுபவிக்க விருக்கின்ற ஜீவான்மாக்களுக்கு இம்மை
யில் அளவுபடாத போகத்தைப்பெற்றுக் களித்தலேமுத்
தியெனப்பேசுகின்ற வுலோகாயுதமெனச் சொல்லாநின்ற
சமையத்துக்குரிய சரித்திரங்களை விசாரணைசெய்து அம்
மார்க்கத்தை யனுசரித்துச்சுகாதீதப் பேற்றையடைந்து
வாழ்பவரே புருஷராவார் அத்தகைய சிறந்தமுத்தியின்
இன்பநலங்களைத் தரவல்லவர் வேலையொத்த கூரியவிழி
களைப் படைத்திருக்கின்ற மங்கையராகும் அவர்களாற்
பெறுமின்ப சாதகங்களுக்கடுத்த கிரிகைகளையும்அவைக
ளைக்கருவியாகக்கொண்டு கிரீடிப்பதற்கடுத்த தன்மைகளை
யும் பெறவல்லஆடவர் செய்கைமுதலியவற்றைச் சாத்தி
ரோக்தமாக இனி உமக்குப்போதிக்கின்றேன், அஃதெ
ன்னையெனில் மக்களுக்கடுத்தசாதி இயற்கைஅங்கம்,குண
ம், சத்துவம், தேசவியல்பு, புணர்ச்சிப்பருவம், இத்தன்
மைகளைப் பாந்தமாகத்தேர்ந்து கருத்தினிடத்தில்அமை
யச்செய்துகொண்டு நடப்பதாம் மேற்குறித்தகாரணங்க
ள் மன்மதவேதத்திற்சொல்லும் சிறந்தபொருள்களின்
தொகையாகவிருக்கும்ஓ ஆயிரங்கண்ணனே இவைகளின்
வரன்முறையையினி விரித்துக்காட்டுவோம் பராமுகமி
ல்லாமற்கேட்டறிந்துகொள்ளக்கடவாய் மாந்தர்சாதிவிலட்
சணமாவன பத்மினி-சித்தினி-சங்கினி-அத்தினியென்னு
ம், நாற்கூருய்விளங்கும் அவற்றுள்ஆடவர் கணப்பிரிவுக

ளாவன முயல், விருஷபம், குதிரை,யெனப்படும், இவற்
றுள்முதற்குறித்திருக்கின்ற கணத்தின்குறியினளவையை
க் குறிக்குமிடத்தில் நான்குமுதல் ஆறங்குலமாம், இர
ண்டாவது கணத்துக்குஏழுமுதல் ஒன்பதங்குலம், மூன்
றுவது கணத்துக்கு பத்துமுதல் பன்னிரண்டங்குலமெ
னச்சொல்லுகின்றது இனிமங்கையர்களுக்குரிய கணப்பி
ரிவுகளைக் கேட்பையாக மான், பெண்குதிரை, பெண்யா
னையெனப்படும் இம்மூன்று மரபுக்குரிய குறியினுழப்பி
ரமாணமும் மேற்படி ஆடவருக்குச் சொல்லியிருக்கின்ற
கணிதங்களைக்கொண்டிருக்கும் இவற்றுள் ஆண்பெண்கு
றியினளவைப் பிரமாணம் சரிப்படச்சேர்ந்தின்பத்தைப்
பெறுவது இயற்கைபுணர்ச்சியெனப்படும் பேதித்திருப்
பவை மாறுபட்டகலவியாகமுடியும் கன்னியர் அங்கமாவ
னதேவர், மக்கள், நாகர், இயக்கர், காந்தருவர், பைசாச
ம், அசுரர், கார்த்தபம், எனப்படும், மேற்குறித்திருக்கி
ன்ற இனப்பிரிவுகளை நிதானித்தறிந்து வாத-பித்த-சிலே
த்துமமெனச் சொல்லாநின்ற மும்மைத்திறங்களுக்குரிய
குணம், குறி, பருவங்களையூகித்தறிந்துகொண்டபின்பு க
ன்னியரைப்புணர்வது இசைக்கலவியாம் இஃதன்றியும்,
உருவம், வண்ணம், செயற்கை, நாள்முதலியவற்றைச்சீர்
தூக்கிப் பார்த்துக்கன்னியர்மரபுமுதல் குணவரையில் க
வனித்துத் தெரிந்தணைவது சிறப்புக்கூடலெனப்படும்வா
னத்தில்நின்று மேகங்கள்ஏககாலத்திற் பெய்யுமாயினும்நி
லங்களின் குணத்தின்படிக்குமதுரம், உவர்ப்பாகநீர்திரு
ந்துமாறுபோலவே தேசங்கள்தோறுமுள்ளமங்கையரது-
நீதி, உள்ளம், செய்கையாதிய குணக்கிரமங்களைப்பகுத்த
றிந்தணைவதுதேசவியற்கைப்புணர்ச்சியெனப்படும்இவை
யன்றியும்பாலை, தருணை, இரவுளைவிருத்தை யென்னும்
பருவங்களுக்கடுத்த காலநியதிகளையும் சித்தவியல்பையு
ம் மகிழ்ச்சிக்கிரமங்களையும் பிரிந்தறிந்துகலத்தலே அங்க
மெனப்படும் மேற்குறித்திருக்கின்ற முக்குணங்களையும்
மும்மரபையும் நான்குசாதிகள்மற்ற எண்வகைச்சத்துவ
ங்களையும் பெற்றிருக்கின்ற கன்னியர்பருவங்களைநிதானி
த்துக் காலத்தைத்தெரிந்து சேர்தலே கீலபருவமெனப்
படும் பட்சங்கள்தோறும் தினவாரியாய் மங்கையர்தேகத்
திற் பொருந்தியிருக்கின்ற அமுதநிலை யிழிந்தும்ஏறியும்
வரும் அதுநின்றநிலையைப் பிசகறநாடி யிருவர்உடலும்
மனமுமொன்றுபட்டு மகிழக்கலத்தலே புணர்ச்சியிற்ற
லைமையாகப் பேசப்படும் அன்புள்ளவர் இல்லாதவர்குறி
யளவையொத்தவர் ஒவ்வாதவர்கூடாவொழுக்கமுடையவ
ர்இத்தகையகாரணங்களைப் பெற்றிருப்பவளைக் குணக்கு
றிகளினறப்பகுந்தறிந்து கொண்டபின்பு மங்கையளைத்த
ழுவி யின்பநலத்தைப்பெற்றனுபவித்தல் இந்நூலைப்பூர
ணமாகக் கற்றறிந்த மேலையோருக்கழகு மாண்மையுமாம்
ஓ சசிநாயகனே யிதுபரியந்தம் ஆடவர்பெண்களியற்கை
குணதிசயங்களைப் பகுத்ததாகும் இனிசுரதலீலைகளினல்
அவ்விருதிறவரும் கலந்தின்புறுதலும் அதற்குநடத்த
வேண்டும் முயற்சிகளாதியாகச் சொல்லுவோம் அவையா
வன ஆலிங்கனம், சும்பனம், நகக்குறி, பற்குறி, குட்டல்,
தட்டல், புள்ளொலி, கரணபேதமுதலிய செய்கைகளாம்
அவைகளைவிரித்துக்காட்டுவோம் இருவகைக்குறிகளில்ஒ
ன்றுக்கொன்றுஉயர்ந்தும், சமமாகவும், தாழ்ந்துமிருப்ப
து, உச்சம், சமம், நீச்சமெனப்படும், அவற்றினைக்குறித்
தறிந்து ஐவகைக்கரணங்கள் அவற்றினுட்பேதமாகியசத
ப்பிரகாரணங்களினாலும் அவைகளுக்குரியபுறத்தொழில்
களினாலும் களிப்பித்துமங்கையரைப் புணரக்கலந்தின்பு
றுதலே மதனசாத்திரோத்தப்புணர்ச்சியாம் இஃதன்றி
யும் பெண்கள் புருடனை மேலிட்டுக் கலத்தல் உபரிசு
ரதமெனப்படும் இதுவுமல்லாமல் எண்வகைஆலிங்கன
பேதமுண்டு அஃதாவன கற்பகத்தருவைச்சுற்றிப்படரு
ம்வல்லிசாதக்கொடியைப்போலவும் விருட்சத்தினிடத்தி
லேறுமாறுபோன்றும் எள்ளும் அரிசியுங்கலந்து காட்டு
வதுக்கொப்பாகவும் பாலும்நீரும்பொருந்தியிருப்பதைநி
கர்த்தும்துடைகளுடன் துடைகள்நெருக்குதலும் இருது
றிகள்சேர்ந்தொன்றவும் கொங்கைகள் மார்பிலழுந்தவும்
நெற்றியுடன் நெற்றிபொருந்தவும் கரங்களினல்தேகங்க
ளைக்கட்டித் தழுவிக்களித்தலாம் மேலும்எண்வகைச்சும்
பனங்களுண்டு அவற்றினைச்செய்யுந் தானங்களேதெனில்
நேத்திரஸ்தானம் கபோலஸ்தானம் கொங்கையினிடம்கா
ங்களின்மூலம் நிதம்பஸ்தானம், அதரஸ்தானம், உந்தியி
னிடம், எனப்படும்இவையன்றியும் நகக்குறியிடுமிடம்ப
தினொன்றுண்டுஅதுகளேதெனில், கைமூலம்,மார்பு,தோ
ள், பிடர், கழுத்து, விலாப்புறம், கபோலம், கொங்கை,
அல்குல், வாய், துடை, யித்தலங்களாம், மேலுந்தந்தக்கு
றி, ஐந்துண்டு, அவையாவன, மூடிகம், அனுச்சூனகம்,
பிரவாளமணிபந்து மணிவிந்துமாலை, கோரசாவிதம், எ
ன்பனவாம் இக்குறிகள் சும்பனத்துக்குரிய ஸ்தானங்களி
ல்மேல் அதரம்-நா-விழியிம்மூன்றிடங்கள் நீங்கலாகமற்
றையதலங்களில் அழுத்தவேண்டும் தாடனவகைஎட்டு
ண்டு அவையாவையெனில் கரங்களில்விளங்கும் விரலி
னைக்குவித்துத் தட்டல்குட்டல் அகங்கையினறட்டல்கர
த்தினைப் பிடித்தமாக்கிக்கொண்டு மெல்லமெல்லக்குத்தல்
ஆள்காட்டிவிரலினுலூன்றல் அவ்விரலினுலும் நடுவிரலி
னுலும் நெருக்கல் அவ்விரு விரல்களையு மடக்கிப்
பற்றுக் குறடுபோலப் பிடித்தல் ஆள்காட்டி விரலை
க்கொண்டு துழவலாம் இத்தொழில்களைச்செய்யுந் தான
ங்களாவனகொங்கைகளின்மத்தி-உச்சி-நெற்றி-கன்னம்-ச
கனம்-முதுகு-பிடர்-துடை-எனப்படும், இஃதன்றியும்மா
த்தனம் அறுவகைத்தாகும் அவையாவனகரிகரம்-காமா
யுதம், காமௌஷதம்மதனங்குசம்,மன்மதபதாகை,தோத்
திரம், என்பனவாம்இதுவுமல்லாமல் புள்ளொலிஏழுண்
டு அவைகளாவனமயில்· புறு,அன்னம், காடை, வண்டு,
குயில், கோழி,செம்போத்து, என்பனவாம் இவற்றுள்த
லைவன்சுரதலீலையின் பிரகரணப்படிக்கு இருதேகங்களு
மொன்றுபடக் கட்டியணையுங்காலத்திற் புணர்ச்சிக்களிப்
பினுற்றலைவியினது கண்டத்தினின்றெழும்ஒலியினைச்சீ
க்காரமெனச்சொல்லப்படும்மேற்குறித்த காரணங்களனை
த்துக்கும் ஆதாரசத்தியாக நின்று நடிப்பிக்கவல்ல பஞ்ச
கரணங்களுண்டு அவையாவனஉத்தானிகம் திரியக்குஆ
சிதகம், ஷிதகம், ஆன்மிலமெனப்படும் இவைகளின்பே
தங்களாவனகிராமியம், பவுத்திகம், நாகபாசம், நாகரீகம்,
இந்திராணிகம், கூனம்,இதமாயதம், ஊர்த்தம், சங்கிரா
ணிகம், மாண்டுகம், பாரிசம், பீடிதம், சூலம்,சுரும்பிதம்,
பதுமபீடம், பாற்சம்புடம், வெட்டிதம், விசம்பிதம்,உற்
புல்லம்,பிண்டிதம்·கடிபீடிதம்,பிரேதுகை,அனுபாதம், ப
ண்டதம்,கடகம்,அத்தம்,பதுமாசனம்,சமுர்த்தம்,நண்டக
ம்,அளிதம்,வேணுசாரிதம்,சமவேசனம், ஆடவம்,உத்தா
னசம்புடம்,பரிவத்தம், சங்காடகம்,தேனு,மற்கடம், ஐம்

பதம், சானுகூர்ப்பாந்துகிலம், பீனமாத்திரம், கூர்ப்ப
ன்னம், பீடிதொருகம்,பீதம், பீடிகை, விக்கிரமம்,எகோ
பூக்ஈம், இந்நாற்பத்தெட்டு மன்றியு மிராநின்ற பலகார
ணங்களினாலும் பரிமளமிகுத்த கூந்தலையுடைய மங்கை
யர் புளகிக்கு மாறுசுரதநூல் வல்லோர்கள் கிரீடிக்கு மு
றைக ளனைத்தும் சித்திரகரண மெனப்படும் மங்கை
யருடைய பாவமும்நிலையும் அவைகளின் திறங்களும்சே
ரும்பதக்கிரம மேம்பாட்டையும் சீர்தூக்கிப்பார்த்துவூகி
த்தறியவல்ல ஆடவராயினும் கம்புடைய மங்கையரன்றி
காமுகராவிருக்கின்ற பாலியமைபக்கும் வேலையொத்த
கூரியவிழிகளையுடைய பரத்தையர் காமக்கன்னியர் இத்
தகையர்களைப் புணர்தலும் கலவித்திறங்களைத் தேர்ந்தி
ன்புற்றுமகிழ்தலும் மதனசாஸ்திரத்தை வரையறக்கற்ற
றிந்த மேலையோர்கள் கடனாகும் இந்தவொப்பற்றநூலைவ
ரன்முறைப்படிக் காராய்ந்து சோதனைகளினாற் சங்கைய
றத்தெளிந்து தருணமங்கையரைத் தழுவவல்ல குணசம்
பன்னர்பெறநின்ற வின்பமுந்திலை ஒருவரால்கணித்து
ச்சொல்லவும்போது மோவென்று மேற்குறித்ததொகை
வகைவிரிவாக மதனசாத்திரமுறைக் கிரமங்களனைத்தை
யும் உள்ளங்கை நெல்லிக்கனியைப்போல மனதிலுணர்ந்
துகொள்ளும்படிக்கு பிரகஸ்பதிபகவான் போதித்தவுட
ன் தேவராஜன் அக்காரணகாரியங்களை நன்றாகத்தெரிந்
தவனாய் மங்கையரைச் சுரதலீலைகளினாற்றழுவி யின்பந
லத்தைப்பெற்றுக்களிக்கும் காமக்கவலையில் மனதைச்
செலுத்தியவுடன் சிங்காதனத்தைவிட்டு திடுக்கென்றெழு
ந்து ஆசிரியன் பாதாரவிந்தங்களிற்பணிந்துஎமதையனே
குருசுவாமியாரே அடியேனிடத்திற் கிருபையுற்றுத் தெ
ருட்டிய மதனசாத்திரப்பிரகரணங்களனைத்தையும் வே
தமொழிகளாகநிச்சயித்துக்கொண்டனன். இனிமற்றொரு
பொருளினிடத்தினு மிச்சைவைத்துவிரும்பேன் அளவு
படாத வின்பநலத்தைப்பெற்றுக் கிருதார்த்தனானேனெ
ன்று மனவெழுச்சியுடன் குரவனைமீட்டும்வணங்கிச் செ
லவுபெற்றுக் கொண்டவனாய்ப் பொன்னுலகாதிபத்தியத்
தைச் செங்கோன்மைமுறைப்படிக் கரசுசெலுத்திவருவ
தாகத் தன்திருக்குமாரனாகிய சயந்தமகாராஜனிடத்தொ
ப்பித்துப்போட்டுக் குளிர்ந்தசோடசகலைகளைவாய்ந்த சந்
திரபிம்பத்தையொப்பவிளங்கும்முகாரவிந்தத்தையுடை
ய இந்திராணிவாசஞ்செய்யும் அந்தப்புரத்தைச்சேர்ந்து
நினைத்தற்கரியபோகங்களை அவளிடத்திற்பெற்று மனங்
களித்து திருப்பாற்கடலினிடத்துதித்தஅமுதத்தையிது
பரியந்த மினிதென்றிருந்தேன், அதுஇக்காலத்தில்வியர்
த்தமாகக் காணுகின்றதெனவெறுத்துச் சர்வாபரணபூஷி
தையாகிய தேவியினது சிவந்தவிதழூறலாகிய அமுதமா
னது மிகவும் மதுரமாகவிருக்கின்றதெனக்களித்துண்பே
ன் வெள்ளியங்கிரியைப்போலத் தாவள்ளியமாகப்பருத்த
தேகத்தைப்பெற்று நவரத்தினமயமாகிய பூண்களணிந்
து கூர்மையாகவிருக்கின்ற நாற்கோடுகளினாற் சத்துருக்
களை யதம்பண்ணவல்ல வலிபெற்ற அயிராவதத்தைமற
ந்து முத்தாரங்கள்மோகனமாலைகள்புரளும் இந்திராணி
யினது பருத்தோங்கியிருக்கும் கொங்கைகளாகிய களிற்
றின்மீது இடைவிடாதபட்சத்துடன் ஆலிங்கனஞ்செய்
து தேகபரவசனாய்க்களித்தும் தேவர்கள்முதலிய சகல
ரையும் வெல்லத்தக்க வலிபெற்றிருந்த விருத்திராசுரன்
மீது சண்டைக்குச்சென்றகாலையில் ஆரோகணித்திருந்த
இந்திரபட்டத்துக்குரிய ரதத்தைத்துறந்து அதனினுஞ்
சிறந்ததாய் மின்னற்கொடியைப்போலத்தோற்றி மறைந்
ததையும் மெல்லியவிடையையுடைய இந்திராணியினது
அல்குற்றேரினிடத்தின்பமுற்றுப் பிரியாமல் வாசஞ்செ
ய்தின்புற்றும் கருங்கடல்சூழ்ந்த பூமண்டலமானது நடு
நடுங்கித் தத்தளிக்கத்தக்கதாகமுழங்கும்இடியைவெறுத்
துச் சத்துருக்கள் பிராணனைவாட்டியலைக்கும் கணையை
ப்போல ஆகாணுந்தபரியந்தமோடிச் சேற்கண்டைக்கொ
ப்பாகப் பிறழ்ந்திருக்கும் விழிகளைப்படைக்கதேவியின
து வல்லிசாதக்கொடியினும் சிறுத்தவிடையாகியமின்ன
ற்கொடியினிடத்தின்புற்றுக்கொண்டாடுவன் தவங்களிற்
சிறந்தததீசிமகாரிஷியினது முதுகுத் தண்டெலும்பினாற்
செய்யப்பட்டுப் பருவதங்கள் சிறகையரிந்து சத்துருக்க
ளுக்கு வயிரியாக விருக்கின்ற வச்சிராயுதத்தைக் காத்தி
ற்கொள்ளவெட்கி யெறிந்துபோட்டுக் கலாபமஞ்ஞையை
ப்பழித்த சாயலைவாய்ந்த புலோமிசையினது விழிகளாகி
ய வேற்படைக்காற்றாமற் சோர்ந்து பிராணனைப்பரித்து
க்குலவியும் காளமேகத்தினிடத்திற்காட்டும் இந்திரதனு
சைமறந்து இலக்ஷ்மியைப் போன்ற சுந்தரவதியாகிய
தேவியினது புருவமாகிய சிலைகளைமதித்துச்சகலவெற்றி
களையுந் தரவல்லதென் றெண்ணிப் புகழ்வான் தனக்குரி
யவாகனமாகிய மேகங்களைப்பழிகூறி யியற்கையாகப் பரி
மளித்துக் கற்பகமலர்களைச்சூடி யிருக்கும் இந்திராணி
யினது கரிய கூந்தலென்னும் புயல்கலவிப் போரிற்சோ
ர்ந்தலைவதைச் சேர்த்துக் கோதிவாரிமுடித்துப் பூச்சொ
ருகிக்களிப்பான் பஞ்சதாருக்களினிடத்திற் படர்ந்து து
வண்டசையும் வல்லிசாதகக்கொடியைக்கோபித்துக் கன
தைபொருந்திய கனதனங்களைத்தாங்கப் பொறாமல்வாடி
வருந்தும் இடையின் வருத்தத்துக்குச் சகிக்கமாட்டதவ
னாய்க் கிலேசித்துத்தழுவி மனச்செருக்கைப்பெற்றும் ப
ஞ்சணைமெத்தையினும் புஷ்பப்பாயலினும் அன்னத்தூ
விகளினாற் சோடித்த மெத்தைவிரித்திருக்கும் பொன்ம
ஞ்சத்தின்மீதினும் மதனநூல் விதிப்படிக்குச் சும்பன
ம்-தாடனம்-புட்குரலொலி-நகக்குறி ஆலிங்கனமுதலியலீ
லைகளைச் செய்து களித்துவருங்காலத்திற் கலைந்திறையும்
ஆபரணாதிகளைத் திருத்தியும் பூந்துகிலையுடுத்தும் அள
கத்தைமுடித்தும் புதியகற்பகமலர்களைச் சாத்தியும்அடி
க்கடி யிதழூறலமுதையருந்தி யிளைப்பாறியும் கறுத்தோ
டியிருக்கும் விழிகளுக்கஞ்சனமெழுதியும் அனிச்சமலரி
னு மெல்லியபாதங்களுக்குச் செம்பஞ்சுக்குழம்பினாற் சி

த்திரங்களெழுதியும் புதியபட்டாடைகளையுடுத்தும் மாற்றியும் மலர்களினுற்சோடித்த போர்வையைச் சாத்தியும் இவ்விதங்களாகத் தேவராஜன் சுந்தரவதியாகிய இந்திராணியினிடத்தில் முழுமனதைச் செலுத்தினவனுதலாற்கிடைத்தற்கரிய பரமபதம் சுலபமாகப்பெறவரினும்கைப்பாகவெண்ணத்தக்க கருத்தைக்கொண்டு மதனநூலிலக்கணங்களோடிக் காமவின்பநலங்களையே சிறந்ததாக மதித்துப் பலநாட்கள் இடைவிடாது இந்திராணியைக் கலந்தனுபவித்திருந்தனன் அத்தருணத்தில் மாறிமாறிமோதும் அலைகள்பெருத்த கடலினைப் போல ஆசைப்பெருக்கினுழ்ந்தணைந்துகளிக்கும் இன்பநூலைஇந்திரனுக்குப்போதித்து அவன்கொண்டிருந்த மனவுறுதியைக் கலக்கி மாறுபடச் செய்து மங்கையர்புணர்ச்சியிற் கவலைபெற நாட்டியனுப்பிவிட்டு மனவெழுச்சியுடனிருக்கின்ற பிரகஸ்பதிபகவான் அருகிலிருந்துபோதித்துவரும் நீதிகளின் உதவியைக்கொண்டு சயந்தன் இந்திரபட்டத்துக்குரிய வயிரமுடியைச்சுமந்து செங்கோலைத்தாங்கி முப்பத்து முக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணுயிர மிருஷிகள் கருடகாந்தருவர் சித்தவித்தியாதரர்முதலிய விண்ணுடர்இந்திரசபையில் நெருங்கிப்போற்றி வாழ்த்தத்தக்கதாகக் கோடிசூரியரொருமுனையிற்றோற்றுவதையொப்ப விளங்கிக்கொண்டிருக்கும் அரியணையில்வீற்றிருந்துதிரிலோகாதிபத்தியத்துக்குரிய அரசாட்சியைச் செலுத்திவந்த இந்திரன்குமாரனுகிய சயந்தனென்பவன் தன்னைச்சூழ்ந்திருக்கின்ற அகஸ்தியராதிமுனீஸ்வரர்களுக்கும் கின்னரகிம்புருடகருடகாந்தருவ சித்தவித்தியாதரர்களாகியமுப்பத்துமுக்கோடி தேவர்கூட்டங்களுக்கும் முன்னே எழுந்தருளியிருக்கின்ற தன்னுடைய ஆசாரியனுகிய பிரகஸ்பதிபகவானைப்பார்த்து நமஸ்காரஞ் செய்து எம்பெருமானே, விஷ்ணுப்பிரமேந்திராதி தேவர்களும்அளவில்லாததவசிரேஷ்டர்களும் மற்றையமுனிவர்களும் மிகுந்ததவவலிமை பொருந்தியுள்ளசூரபதுமனுல் கொடியதுன்பத்தையனுபவித்து, தங்களுக்குத் தொன்றுதொட்டு நீடித்துவந்துள்ள பெருமையுமிழந்துவருந்த வேண்டிய காரணமென்ன, அதனையடியேனுக்கு நன்முகத்தெரியச்சொல்லவேண்டும், எங்கள்குலகுருவாகிய பிரகஸ்பதி பகவானேயென்றுசொல்ல அதனைக்கேட்டபிரகஸ்பதிபகவான்சொல்லுகின்முர். ஏ! சயந்தமகாராஜனே? தேவர்களுக்கும் மேன்மையாகிய தவத்தையுடைய முனிவர்களுக்கும்கொடியவனுகிய சூரபதுமனுல் நேரிட்ட துன்பங்களெல்லாம் திரிபுரதகனராகிய பரமேஸ்வரனையொழித்துத் தக்ஷப்பிரஜாபதியானவன் செய்த யாகத்திற்போய் அவனுக்குச் சகாயஞ்செய்திருந்த தீமையினுலாக்கும் என்றுசொல்ல அதனைக்கேட்ட சயந்தனுனவன் இப்படிக்குப் பரமேஸ்வரனையன்றிச் செய்தயாகத்திற் சேர்ந்திருந்த தீமையினுல் இவ்விததுன்பங்களை யனுபவித்திருந்தார்களானுல் அந்தக்கொடிய செய்கையையுடையவனுகிய தக்ஷனுனவன்புராந்தகனுகிய பரமசிவனையொழித்துச்செய்தயாகத்தின் வரலாறும் அங்குநடந்த மற்றைய சமாச்சாரங்களையும் ஒன்றேனும் விடாமல் அடியேனுக்குத்திருவாய்மலர்ந்தருளவேண்டுமென்று சொல்ல, பிரகஸ்பதிபகவான்மிகுந்த சந்தோஷத்தையடைந்து சயந்தனைமிகுதியாக வாழ்த்தி அப்பாஇந்திரகுமாரனே மிகுந்த அகங்காரத்தினுல் பிரமபுத்திரனுகியதக்ஷனுனவன் செய்தயாகத்தின்வரலாறனைத்தும் எம்மாற்சொல்லக்கேட்கக் கடவையாக வென்று இனிய வசனங்களினுல் சயந்தமகாராஜனுக்குப் பிரகஸ்பதிபகவான் சொல்லத்தொடங்கினுரென்று சூதபுராணிகர் நைமிசாரணிய வாசிகளுக்குச் சொல்லத்தொடங்கினர்.

---

௫-வது, தேவகாண்டம்முற்றிற்று.

கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள் திருவடிவாழ்க.



உ

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

ஸ்ரீஞானசம்பந்ததீர்த்தசரணாயநமஃ.

கச்சியப்ப சிவாசாரியசுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய

# ஸ்ரீஸ்கந்தபுராணவசனம்.

## ஆறாவது

## தட்சகாண்டம்.

### உபதேசப்படலம்.

மாயையின்வலியோனாகிமான்முதலோரைவென்றே
யாயிரத்தோரெட்டண்டமரசுசெய்துகநூற்றெட்டுக்
காயமதழிவின்றாகிக்கடவுளர்க்கலக்கண்செய்த
தீயசூர்முதலைச்செற்றகுமரன்றாள்சென்னிவைப்பாம்.

உலகினுண்மேலதாகியோங்குபேரொளியாய்வான்மேற்
றலைமையதாகிவைகுஞ்சத்தியவுலகந்தன்னிற்
புலனுணர்முனிவர்தேவர்புதல்வர்கள்புடையிற்போற்ற
மலரயன்றனதுகோயின்மன்றில்வீற்றிருந்தானன்றே

---

சவுனகாதிரிஷிகளே கேட்பீராக, உலகங்களிற்சிறந்து கோடிசூரியப்பிரகாசமாக விளங்குஞ் சத்தியலோகத்தில் தவத்தர் தேவர்குமாரவருக்கங்கள்சூழப் பொன்மயமாக விளங்குஞ் சபாமண்டபத்தின்முகப்பி லிரத்தினமயமாயோங்கிய சிங்காதனத்தின்கண் பிரமன்வீற்றிருக்கின்றதறுவாயில் அவன்பிள்ளைகளி னொருவனான தக்கன்பிதாவைநோக்கித் திரிமூர்த்திகளினுயர்ந்து தேவாதிதேவனாய்ச் சகலமங்கள குணங்களுமுள்ளவனாய்வந்தனை யோக்கியனாய்விளக்கிப்பிறப்பிறப்பில்லானாய்ச் சராசரங்களனைத்தினும்பொருந்தி நடிப்பிக்கவல்ல மூலகாரணக்கடவுளைத்தெளிவிக்க வேண்டுமென் றுவினவ பிரமன் நகைத்து குமாரனே, விண்டுவும், யானும் பூர்வத்தில் அஞ்ஞானவலையிற்பட்டு நாம்நாம் பிரமமென்றகைந்தையுற்று வாதித்தது அதனைத்தாபிக்கும்பொருட்டு அளவற்றகாலம்பொருகின்ற காலத்தில் உலகவுபாதியினைநீக்கத் திருவுளங்கொண்டு அக்கினிவடிவாய் எமதுமத்தியிற் றோன்றிப்பரத்துவ நிச்சயத்தைத்தெளிவித்து அடியோங்கள் மையலையகற்றி இரட்சித்த பிதாவாகிய பரமசிவன் சகலருக்கும் ஆதியாயும், மூலகாரணனாயும், விளங்கப்பட்டவன். இதைத் திடமாகக்கொள்வாயென் றருளக்கேட்டதக்கன் மீட்டும் பிதாவைக்குறித்து நீர்போதித்த துண்மையேயாயினும், முதன்மையாகிய சிருஷ்டி-திதி-கிர்த்தியங்களை நடாத்திவருகின்ற நீங்கள் தாழக்கடைப்பட்ட தாமதகுணத்தினாற் சராசரப்பிரபஞ்சங்களனைத்தையும் அந்தியத்திற் சங்கரிக்குஞ் சிவன் உங்களுக்குக் கர்த்தனாகுங் காரணமென்னை இதையடியேனுக்குத் தெளிவிக்க வேண்டுமென்றுவினவ பிரமன் புன்முறுவல்பூத்து குமாரனேநீவேதசாஸ்திரங்களைப் பூர்ணமாகவாசித்தும் பரத்துவநிச்சயத்தையறியாமல்மயங்கினை அழித்தற்குரியதொழிலை நடாத்தும் பரமன்முதன்மையாகுந் தன்மையாதெனின், என்னையுங் கேசவன்றன்னையும் மற்றத்தேவருடன் எண்பத்துநான்குலட்சஞ் சீவபேதங்களையும் ஊழிகாலத்தினொடுக்குகின்றவன் அவனாபின் முதற்சிருஷ்டிப்பவனும் அவனேயல்லவோ, சர்வசங்காரகாலத்தி னொருவனாய்விளங்கி அண்டாண்ட பிரபஞ்சங்களையு மழித்துப்பின்பு பிதா

வாய்கின் றென்னைப்படைத்த பரமசிவத்தின் குணநிசயங்களை இவ்விதமென் றளவிடப்படுமோ. மேலும்விண்டுவையும் என்னையுந் தமதுபுயங்களிலுண்டாக்கி உலகங்களையளித்துக்காக்குந்தொழிலை அடியோங்களுக்குக்கட்டளையிட்டதன்றியும் உங்களிடத்துப் பிரியாவிடையாய் வாசஞ்செய்வோமென்றருளி அவ்வாறே எங்கள்மூலமாக எறும்புமுதல்யானையீறாகவிளங்கும் பிராணிகளைத்தோற்றுவித்துப் போஷிப்பன். அவ்வான்மாக்களிடத்தமர்ந்து ஆட்டுவதைப்போலவே எங்கள் மனதினும் அந்தரான்மாவாயிருந்து முறைவழுவின்றிப் பாதுகாத்துக்கண்ணினொளியாய் விளக்குவன். ஒருகாலம்யாம் அகந்தையுறுவோமாயினுந் தயைசெய்தருளி அவ்வாணவமலத்தை நீக்கிரட்சிக்குந் தயாநிதியாகிய சிவன் தாமுமொருகிர்த்தியத்தைச் செய்பவனையொத்து எங்களுடன்கலந்து திரிமூர்த்திகளினொருவனாயும் விளக்குவன், அவ்வாறே எள்ளினெண்ணெயைப் போன்றும் மணியினொளியை யொத்தும் புட்பத்தின் மணத்தையேய்ந்துஞ் சலாகையின் காந்தியை நிகர்த்தும் உலகங்க ளனைத்தி னுள்ளினும் புறம்பினு முலவுவன். இதன்றியும், ஆதியின் வேதாகமங்களை உண்டுபண்ணி எங்களுக்குப் போதித்தவனவனே, இஃது வேதநிச்சயமாம். இவ்விதமங்களகுணநிதியை அடியோங்களுடன் சமமாகப்பேசுவது அறிவின்மையாகும். எங்களினுலொருஅணுவுமசையவறியாது இதனைச் சுருதிகளின் துணிபாகக்கருதி யீடேறக்கடவாயென் றருளிய தந்தையைச் சேவித்துப் பரமசிவத்தினுல் நிர்மிக்கப்பட்ட வேதங்கள் பூதபேதப் பிராணிக ளனைத்தையும் பிரமமெனப் பேசுவதென்னை? இதனையுந்தெளிவித்துஅடியேன் மனக்கவலையை நீக்கவேண்டுமென்று தக்கன்கேட்க பிதாமக னருளிச்செய்வார். யாவராலும் அறியவொண்ணுத அக்கடவுளினது பெருமையினைக் கேட்பாயாக. பரமன் வெளியிட்ட வேதங்களின் துணிபாவன அழிவின்றி விளங்கும் மூலகாரணனுக் குனைத்த வுண்மையினை மற்றவருக்கும் உரியனவாகப் பேசுவது முகமனுகும், அவ்வாறே மற்றச்சீவராசிகளையும் அவற்றிற்குக் காரணமாகிய பஞ்சபூதங்களையுந்துதிக்கும். அதற்குச் சில திஷ்டாந்திரங்காட்டுவோம். பிராமணனை யாமெனத் துதிப்பாருமுளர். இதனுல் தெளியக்கடவாய். இதன்றியும்யாவராயினும் எவ்வெவனை எவ்விடையங்களில் துதிக்கினும் மூலகாரணனுன சிவனையேசேரும், அவ்வாறே வேதங்கள் துதிப்பதனைத்துஞ் சிவபிரானுக்கேற்கும் அதெப்படியெனில் நதிகளெவ்விடங்களி னுதிக்கினுங் கடையிற்சமுத்திரத்திற் சேருந்தன்மையனவாம். இனிப்பலபலவேண்டுவதில்லை. வேதங்களின் நிச்சயமாவது சிவன்சகலபுவனசராசரங்களையும் படைத்தும் இரட்சித்துஞ்சங்கரித்தும் மீளவுஞ் சிருட்டித்து அவைகளுக்குரிய வினைப்போகங்களையூட்டி நடிப்பிக்கவல்ல கடவுளாயும் ஆதியந்த மில்லாதவனுயும், அம்மையப்பனுயும், லோகநாயகனுயும், ரூபியாயும், அரூபியாயும், நின்மலனுயும், நிராமயனுயும், சுயம்பிரகாசனுயும், சகலாந்தரியாமியாயும். நித்தியத்தைப்பெற்றவனுயுஞ், சித்தனுயுஞ், சகலசிவ பரிபூரணனுயும், இராசத தாமத சாத்துவிதமென்னு முக்குணங்களைவகித்தவனுயும், விராட்சொரூபியாயும், ஏகனுயுஞ், சகலமங்களகுணதிசயனுயும், இருவர்தேடிக்காண்பரியவனுயும், பெண்ணுணலியென்றறியப் படாதவனுயுஞ், சீவராசிகளினெண்ணப் படிக்கு அருள்பவனுயு மிருப்பதன்றியும், எவ்வெவற்றிற்குங் காரணவஸ்துவாய் விளங்குவதைச் சகலருந்தேறச் சர்வசங்கார காலத்தில் தமதக்கினிவிழியினுன் யானுதியானவர் தகிக்கப்பட்டெழுந்ததூளிதத்தினையும் என்பினையும் அணிந்து தூலதிரேகராயிருக்கின்றவனையுந் தமதுசத்தியினுலடக்கிப் புறம்பினின்று யாவர்செய்கையினுமுட்படாமலிருப்பவனுயும், தமதுமகிமைகளிவ்விதமென் றென்போலிகளினுலுங் காணவரிய கடவுளாயுஞ் சர்வகாரணகர்த்தனுயுமிருப்பவன் சிவனேயெனவேதாகமங்கள்முறையிடுகின்றன.

இஃதன்றியும், அச்சுதனையும், மற்றப் பிரபஞ்சங்களையுஞ் சாம்பலாக்கித் தானேதானுய்நின்ற தற்பரமூர்த்தியாகிய அப்பரம சிவத்தின் பாதகமலங்களைத் தொழப்பெற்றவருக்கே முத்தியுண்டென்று சுருதிகள்கூறுமாயிற் பரத்துவமாவாரியாவர்? அப்பரமனருளில்லாமற் சீவகோடிகள் சனன மரண துக்கசாகரத்தைக் கடந்து மோட்சமெய்தப் பெறுமென்பது ரூபமில்லாத வானத்தின்றோலையுரித்து உடுத்தற்கொக்குமென்று வேதங்களே சொல்லுமாயின், வேறுசாட்சியும்வேண்டுமோ அவ்வேதங்கள் பரமசிவத்தைக் குறித்துப் புகழ்ந்ததுஅளவற்றதுண்டு அதை விரித்துச் சொல்ல என்னுல்முடிவதுமன்று நாளும் போதாது. குமாரனேஇவைகளைநீ முன்னமே தெளிந்தும்அவன்மாயையிற் பட்டு உழலுகின்றனை அதனை யொழிப்பதாக இன்னமுமோருறுதிசொல்லுவோம். சகலபுவனங்களுக்கும் ஆதிநூலாய் விளங்கும்வேதங்கள் சிவனைப்புகழ்ந்ததைப்போல ஒரு வாய்மையாவது என்னையும் விண்டுவையும் மற்றவனையுந் துதித்ததுண்டோ? அப்படிக்கு எங்களைக் குறித்துச் சொல்லியது முகமனுகுமென்று ஆகியந்தங்களில் விளக்குகின்றன. மேலும்அவ்வேதங்களில் ஒருபாகம் பரமசிவன் பெருமைகளையே ஓதும் மற்றப்பாகம் என்னையும் விண்டுவையும் மற்றதேவனையும் பலபொருள்களையும் பேசும். இதனைச் சோதிப்பையாயின்தெளிவுபெறக்காட்டும் சிவனைப்போலவே எங்களையும் பரத்துவமாகக் கருதிப்பூசிக்கின்ற துராத்துமாக்கள் எக்காலத்துமீளாதநரக யாதனையில் அழுந்திக் கடைத்தேற வறியாதுழல்வர். அக்கர்த்தனையும்எங்களையுஞ் சமமாகப் போற்றுவதினுல் நம்மையுந்துக்கசாகரத்திற் படுத்துவர் புலியதளுடையினனுன சிவனுக்குத்தொண்டு செய்யும் பத்தனை எங்களைப் பூசித்ததாகக் கருதிவேண்டும் வரங்களைத் தந்து மற்றையனைச் சத்துருக்களாகப் பாவிப்போம் எங்களைப்பரமசிவனுடைய மாயையிற்பட்டு அலையும்பிராணிகளென்று அவ்வேதங்களின் மந்திரங்களிற் சொல்லும். இதற்குக் காட்சியாவன யாங்களித் தொழிலினைப்பெறுவதாகக் காளகண்ட மூர்த்தியினுடைய பாதகமலங்களை யருச்சித்த சிவாலயங்கள் அளவற்றவையுண்டு. இதனுற் கண்டு கொள்ளக்கடவாயாக. அவன்அனுக்கிரகம் பெறுமல்முத்திபெற்றவ ரொருவருமில்லை. அவன் கிருபையினைப் பெறுமல் வாழ்ந்த தேவனைக்காட்டவல்லமோ. அவன் அருட்டிறத்தினைப் பெறுவானுயிற்கிடையாதபொருளுமில்லை குமாரனே சத்தியமாகச் சொல்லுவேன். அவனையன்றி வேறொரு கர்த்தனில்லை. ஆதலால்அவன்பாதகமலங்களிற் சரணமடைந்து வாழக்கடவாயென்று பிதாமகன் போதித்தான் அதனுல் தக்கன் ஐயம் நீங்கி முதன்மையாகிய மோட்சத்தினைப்பெற விரும்பாமல் ஊழின் பாலாய்த்தவ

த்தைச் செய்து சிவத்தி னனுக்கிரகத்தினால் விஷ்ணுவா
தியான தேவரனைவருக்கு முதன்மையெய்தக் கருதிப் பி
தாவைவணங்கி, தேவரீர் குறித்த பரமசிவத்தை மூலகா
ரண னென்றறிந்தனன். இனி அவனைநோக்கித்தவங்களை
ச் செய்து இஷ்டகாமியங்களைப் பெறுவேன். அதற்குத்த
குதியாகிய இடமொன்றைக்காட்டிச் செலவுதர வேண்டு
மெனக்கேட்க, தாம் ஆதியில் மனதினாற் சிருஷ்டித்த மா
னதவாவியின் பெருமைகளைத் தெருட்டிஅவ்விடஞ்சேர்ந்
து தவத்தைச் செய்யென்றோதிய பிதாவைச் சேவித்துப்
போய்ப் பரமசிவத்தின் கிருபைக்கடலைப்போலக் குளிர்ந்
த சலப்பெருக்கையும் பொற்றாமரைகளலர்ந்துவிசாலமா
ய் விளங்கும் மானதமடுவைக் கண்டு, அதன்கரையில் அ
மர்ந்து காற்றுமழை வெய்யில்பனி இவைகட்குவருந்தாம
ல் திரேக வாஞ்சையை நீக்கிப் பரமன் பாதகமலங்களை இ
தைய கமலத்தி னிறுத்திச் சுவாசத்தையடக்கிச்சுழிமுனை
யிற் செலுத்தி மூலாக்கினியை எழுப்பிப் பஞ்சேந்திரிய
விடையங்களை வாட்டிப் பத்தியென்னும் அபிஷேகமாட்
டி, வயிராக்கிய மென்னும் மலமாலைச்சூட்டி, அறிவென்னு
ந் தூபத்தைக்காட்டி, இவ்விதமானசபூசையினைச்செய்து
பரிசுத்தனாய்த் தன்மனதை யொருவழிப்படுத்தி வேதாங்
கத்திற்கும் அறிதற்கரிய கர்த்தன் திருநாமங்களைவிதிப்ப
டிக்குத் துதித்துப் பதினாயிரம் ஆண்டுகள அகோரதவத்
தினைச் செய்வதைப் பரமசிவன் திருவுளங்கொண்டு, பொ
ன்மலை வெள்ளிக் குன்றின்மீது விளங்குவதுபோலரிஷப
வாகனத்தில் உமையவள் சமேதனாய் எழுந்தருளக் கண்
டவுடன் ஆனந்தக்கூத்தாடி விழிகளிற்போதநீர்பெருகஇ
ருவர் தேடற்கரிய கர்த்தன் பாதாரவிந்தங்களிற்சேவித்து
வேத வாக்கியங்களினாற் றுதித்துக் கரங்களைச்சிரத்தின்க
ண் கூப்பிநிற்கின்ற தக்கனிடத்துக் கிருபாநோக்கம் பாலி
த்து, உன் தவத்தைமெச்சினோம். வேண்டும்வரங்களைக்கே
ளென்றருளப் பிறவித்துன்பத்தினை நீக்கும் மோட்சசாம்
பிராச்சியத்தை நினையாமல் ஊழ்வசத்தனாய் சுவாமி! திரி
லோகங்களினும் என்னாணைசெல்லவுந், தேவரீரைவந்திப்
ப்பவர் அனைவரும் என்னைப் பணிந்து போற்றவும், உம்
மையல்லது மற்றத்தேவதைகளை மனதினுங் கருதாமலு
ம், விண்டுவாதியானவர் அடியேன் கட்டளையில் அடங்கிந
டக்கவும். மனதுக்கினியபுத்திரரைப்பெறவும், அகண்டசா
ம்பிராச்சியச் செல்வங்களையடையவும், அழிவில்லாதநித்
தியத்தைக்கிடைத்து எக்காலமுங் களித்திருக்கவுங் கடா
ட்சிக்கவேண்டும், இஃதன்றியுஞ் சகலபுவனங்களையும் ஈ
ன்று உமதிடப்பாகத் தமர்ந்த பராசத்தி என்பெண்ணாக
வும் நீர்பிராமண வடிவாயெழுந்தருளித் திருக்கலியாண
ஞ் செய்யவும் வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்யமகி
ழ்ந்து உன்கருத்தின்படிக்குத்தந்தோம் ஆனால், உன்மன
ம் நமது மெய்ப்பத்தியில் திரியுமாயின் நமதுவரமுந் திரி
யுமென்றருளிச் சிதாகாசக் கனகசபையின்கண் நடிக்குங்
கர்த்தன் திருக்கயிலைக் கெழுந்தருளினர்.

பின்புதக்கன்மகிழ் சிறந்தவனாய்ப்பிதாவை நினைக்க, அ
தனைப் பிரமனறிந்து தக்கன்வருந்திநோற்றுப்பெற்றபே
று வெகுநேத்தியெனப் பெருமூச்செறிந்து, நமதுகுமார
ன் திரிபுராதிகளை நகைத்தெரித்த பரமனைக் கருதிப் பூசி
த்துச் சென்னசாகரத்தைக்கடந்து முத்தியினைப் பெறத்த
க்கதாகப் போதித்தனுப்பினோம், அதைமறந்துஅகந்தை
யினா லாணவமலத்துக் கேதுவான செல்வத்தைப்பெற்று
ன், ஐயோ? இனிச்செய்யவேண்டுவதென்னே? வேம்புக்கு
அமுதத்தை வார்க்கினும் அதன் கைப்பறுது போலாயி
ற்று. காளகண்டன் ஆதிதேவனென்றுணர்ந்தும் வருந்தி
நோற்றும், இவ்வுலகி னெக்காலமுந்தீராதபழிபாதகத்து
க்கேதுவான பேற்றைவேண்டினான். ஆகையாற் பிராரத்
தவினைக்கீடாகத் தொடர்ந்துவருந்துன்பத்தை மகத்துக்க
ளாலும் நீக்கவொண்ணாதென்பதை இதனளவிலுறுதியா
கக் கண்டேமென்று தழலிற்பட்ட மெழுகைப்போலமன
முருகிவருந்தி, குமாரன் பெற்றவரத்துக்கஞ்சித்துரிதமா
க அன்னவாகனாரூடனாய் வீறுப்படைந்து நிற்கின்றதக்க
னெதிரில் எழுந்தருளி ஆசீர்வதித்தான். அதையங்கீகரி
யாது பிதாமகனை நோக்கி, நாமிருக்க இவ்விடத்தில் யோ
க்கியமான நகரமொன்றை விதிப்பா யென்றவுடன். தன்
னகருக்கு மேலான சிறப்பினை வாய்ந்து பொன்னுலகமு
நாணும்படிக்கு வானத்தையளாவிய மதிலும்மேருவையொ
த்தகோபுரங்களும் பெரும்புறக்கடலை நிகர்த்துச் சூழ்ந்த
அகழியுஞ் சொர்னமயமா யிரத்தின காந்தியைவீசும் மா
டமாளிகை மண்டபமுதலிய சிறப்புக்கள் வாய்ந்தபட்டி
னத்தை நிருமித்துத் தக்கமாபுரியென்றுபெயரிட்டுக்குமா
ரனுக்கறிக்கையிட்டவுடன், தக்கன்அதிற்பிரவேசித்து அ
தின் சிறப்புக்களை நோக்கிக்களித்துப் பிதாவினது செய்
கைக்கு மெச்சினவனாய், உடனேதேவர்முதலானவரனைவ
ரும் வருவதாக நினைக்க அவ்வாறேசத்தசாகரங்களும் பெ
ருகினாற்போலச் சொர்க்க மத்திய பாதலத்தின்க ணிராநி
ன்ற சகலரும் வந்துவந்து நெருங்கிப் போற்றத்தவளக்கு
டை வெண்சாமரை முதலான ராசசின்னங்களைப் பலர்தா
ங்கிச் சூழ்ந்துவரச்சென்று, நவரத்தினமயமாய்ச்சொலித்
திருக்குஞ் சபாமண்டப முகப்பிற் சிரோரத்தினங்களினா
ல் அமைத்துவிளங்குஞ் சிங்காதனத்தி னமர்ந்து தோற்க
ருவி துளைக்கருவி நரம்புக்கருவி கஞ்சக்கருவி மிடற்றுக்
கருவியின் வகையாகிய பஞ்சவாத்தியங்களு முழங்கத்தே
வர் கற்பகமலர்களை யிறைத்துத் துதிக்கத் தபோதனர்வா
ழ்த்தத் தும்புருநாரதரியாழிசைக்க கருடகாந்தருவர் வீ
ணைகள்வாசிக்க அரம்பைமேனகையூர்வசிமுதலான தேவ
கன்னியர் சதிமுறையேபபிநயங்காட்டி நடிக்கக் கொலுவி
ருந்தான். அக்காலத்தில் இந்தச்சந்தோஷசெய்தியைச்சு
க்கிராசாரிராட்சதராசனுக்கறிவித்து இன்றுடனுன்கவலை
நீங்கி நன்கினைப்பெறுவை, அதென்னவென்றால் தக்கனி
ந்திரனுக் கரசனானான், அவனைக்கண்டு உறவாடிக் கலந்தி
ருப்பையாயின் உன்காரியங்கள் சிறப்பாகநடக்குமென்று
ன் அவ்வசனங்களை அவன்செவிக்கமுதமாகக்கேட்டுக்களி
த்துப் புயங்கள் பூரித்து வானையளாவச் சந்தோஷமேலிட்
டுப் பொங்குவதைப்போல நகைத்துச் சரீரம்புளகித்தும
யிர்ச்செறிவெய்த அவன்கொண்ட களிப்பை யின்னவகை
த்தென் றொருவராலுஞ் சொல்லிமுடியாது. உடனேமே
ருகிரிக் கருகினிருக்குந் தன்பதியைவிட்டு ரதாரூடனாய்ம
தயானையொத்த வலியுடைய ராட்சத சேனைகள் பந்துவ
ருக்கங்கள் சூழத் தக்கமாபுரிக்குவந்து தக்கனைக்கண்டு ந
ண்புகொண்டு துயரற்றிருந்தான், அத்தறுவாயில் இந்திர
ன் முதலாகிய திசைக்காவலருஞ் சூரியனாதிய நவக்கிரக
க்களும்வந்து நெருங்கிச் சேவித்துப்புகழ்ந்து புடையினி
ருந்தனர். அத்தினமுதற் சகலருந் துதிக்கப் பூச்சக்கிரக்
குடை நீழலினிருந்து தன்செங்கோலெங்குஞ் செல்லத்தி
ரிபுவன சக்கிரேஸ்பரனாக அரசுசெய்திருந்தான்.

கேட்டீர்களோ சவுனகாதிதவத்தரோ, சிலநாளைக்குப்பின்பு கற்புக்கருந்ததியையொத்தும் வனப்பினிலக்குமியிரதியைநிகர்த்தும் உடுக்கையைப் போன்ற யிடையினையும் அன்னம்போன்ற நடையினையும்மயிலையொத்த சாயலினையுங் குயிலைப்பழித்த வசனத்தினையும் பெற்று நற்குணநற்செய்கைகளை வாய்ந்தவளாய்ப் பிரமன்பாதத்தினுதித்த வேதவல்லி யென்னுங் கன்னிகையை மணந்து புவனங்களனைத்தினுக்கும் நாயகியாக இந்திராணி முதலிய தேவகன்னியர் வாழ்த்தி வணங்கி யிட்டஏவல்களைச்செய்ய வாழுகின்ற தறுவாயில், தக்கனவளிடத்திற் சேடன் சிரோரத்தினங்களை வெளியிட்டதை யொப்ப ஆயிரம்பிள்ளைகளைப்பெற்று, அவர்களுக்கு உபநயனமுதலான சடங்குகளை முடித்து, வேதசாஸ்திரங்களைப் போதித்துப் பருவகாலத்தில் மக்களைப்பார்த்து, நீங்கள்மானத மடுக்கரையிற் சென்று பரமசிவனைக்கருதிச் சிறந்ததவங்களைச்செய்து சீவகோடிகளைப்படைக்கும் பேற்றையடைந்து வரக்கடவீரென்றருள, அவர்பிதாவைவணங்கி விடை பெற்றுப் போய் மானததீர்த்தக்கரையிற் சிவத்தைத் தியானித் தரிய தவங்களைச்செய்துவரு முன்னிலையில், இதனைநாரதரறிந்து அவ்விடத்தினெழுந்தருளி அக்குமாரரைநோக்கி, நீவிர் துக்கசாகரத்தழுந்தி யித்தன்மைய அரியதவத்தை என்ன பேற்றைவிரும்பி செய்கின்றீர்களென்றுகேட்க, சுவாமி, பிரபஞ்சங்களைச் சிருட்டிக்கவேண்டிப் பிதாவினனுக்கிரகப்படிக்குப் பரமசிவத்தைக்கருதித் தவஞ்செய்கிறோமென்றார்கள். அதைக்கேட்ட நாரதர் கரங்களைப்புடைத்து நகைத்து, பிள்ளைகாள் இச்சிறந்த நோன்பைச் செய்கின்ற நீங்கள்பெறவிரும்பிய பேறிதுதானோ, வெகுநேத்தி ஒப்புவமையில்லாத கர்த்தனை வழிபட்டு மூவகைப்பாசத்தை நீக்கி மோட்சத்தைப்பெற விரும்பாது அஞ்ஞானத்துக்குக் காரணமாகிய படைப்பினிடத்து மனம்வைத்தீர், அரியதவங்களை முடிக்கின்றவன்பெற வேண்டுவதைக் கேட்பீராக. பிறப்புண்டானபோதே துக்கமுமுண்டு, அதனா லிறப்புண்டாகும், அதுவுங்களுக்கு நன்கினைத்தருமோ, நீங்கள் விருப்புற்ற படைப்பினை நடாத்தும் பிரமன் ஐந்துசிரங்களி னொன்றைப் பரமன் கட்டளைப்படிக் கரிந்ததையும் அதுகாரணத்தினால் நிலைபெற்றிருக்கின்ற பழியையும் நீங்கள் கேள்விப்பட்ட தில்லையோ, மேலுஞ் சராசரப் பிரபஞ்சங்களைச் சிருட்டிப்பதினாற்றானேபரமென் றகந்தையுற்று அளவற்றகாலம்விண்டுவுடனெதிர்த்துச் சண்டைகொடுக்க, உலகங்களுக் குண்டாகிய வுபாதியைநீக்கப் பரமன் றிருவுளங்கொண்டு அக்கினிவடிவாகி அவ்விருவர்மத்தியில்நிற்கவுந் தெளிவுபெறாமல்அன்னமுமேனமுமாய்த் தேடிக்காணாது அவனைவழிபட்டுக் கிருதார்த்தரான கதையினையுங் கேட்டதில்லையோ சிருட்டியினாற் பெறுவதுவீண்பெருமையல்லதுவேறொன்றுமில்லை. இதுநல்லதெனத்தாமே பொன்விலங்கைப் பூட்டிக்கொள்ளத்துணிவார்களோ, இன்பமெவ்வளவோ, அதற்கிரட்டித் துன்பமுடனே நேருமென்று சாஸ்திரங்களிற் சொல்லுவதை வாசித்ததில்லையோ, ஆதலாற் றத்துவஞான மெய்தற்குரிய நீங்கள்படைக்கத்தொடங்குவீராயிற் கொடியதுக்கசாகரத்தில் நிச்சயமாகவழுந்தி வருந்துவதன்றியும் ஆதியாகிய பரமனைமறந்து நாமேகர்த்தனென்றகங்கொண்டு தீவினைகளைச்செய்பவரும். இஃதன்றியும், மாயையிற்பட்டுப் பேருணர்வையிழப்பீர்கள், அரியவிரதங்களைச்செய்து மேலானமோட்சசாம்பிராச்சியத்தைப்பெற்றுக் கர்த்தனது பாதசேவையினைக்கிடைத்திருப்பவர் அனேகருண்டு, அதன்றியும்அப்பேற்றைவிரும்பி யுழன்றுகிடையாமல் வாடுகின்றவருமுண்டு, உலகவியல்புக ளின்னஞ்சிலவற்றை யறிவிப்பேன் அதென்னவென்றால், மாதா - பிதா குரு-தெய்வம்-பந்து-சினேகிதராதியர்களாகச் சிவனடியாரைநினைந்து அவர்பாதங்களையன்றிப் பற்றில்லாதவர்களாய்ச் சாத்விதகுணத்தைப்பெற்றவராய் நல்லொழுக்கங்களைவாய்ந்தவராய் யாதொருதுன்பநேர்ந்தகாலத்துந் தம்மைச்சரணடைந்தவரிடத்துப் பரிவாய் அவர்கிலேசத்தைநீக்கிப் பாதுகாக்கும் பேரறிவைப்பெற்றவராய்ப் பரமசிவனைப்பூசித்து எக்காலமுஞ் சுகத்திலிருப்பவராய் மகதயிஸ்வரியச் சிறப்பைக்கிடைத்தவராய்ச் சிலரிருப்பர், அவர்களே பரமனைக்காண்பவர். ஆதலான் நீங்களும் அவர்களைப்போலவே அவாவைநீக்கி நன்னெறிகளைப்போற்றி முத்தியைப்பெறக்கடவீர். அளவற்றசெல்வங்களைப்பெற்ற மதாங்காரத்தினால் நல்லொழுக்கத்தைநீத்த தக்கன்பணித்ததை மறந்திதனைக்கடைப்பிடியாகக்கொண் டுடேறுவீரென்று நாரதர்போதித்த நிலைமைகளைச் சாஸ்வதமோட்சத்தைப்பெறும் பாக்கியத்தைவாய்ந்த பிள்ளைகள் ஆலோசித்து, முனிபுங்கவர்அருளியமார்க்கம் பேரின்பத்துக்குரியதென்றுநிதானித்து. அவர்திருவடிகளிற் சேவித்துப்போற்றித் தேவரீர் திருவுளப்படிக்குச் செய்யக்கடவோம், அதற்கடுத்த கிரிகைகளையும்போதித்து இரட்சிக்கவேண்டுமென்றுஇரக்கின்றதக்கன்பிள்ளைகளிடத்து இரக்கமுற்று ஆசீர்வதித்துச் சிவபிரான் குணாதிசயங்களைப் பகுத்துக்காட்டிப் பதவியினைத்தருந் தவநிலைகளைத்தெருட்டி அவற்றிற்குரியநடைநொடி பாவனைகளை மந்திரபூர்வகமாகப் போதித்துப் பழையவெண்ணங்களைப்போக்கித் தேவாதிதேவனைச்சிந்தித்து அரியவிரதங்களைச்செய்து அவன்பாதகமலநீழலைச்சேருமினென்றருளி நாரதர் அந்தரகமனமாகச்சென்றதன்பின், அக்குமாரர் அவர்குறித்தவாறே பஞ்சேந்திரியவிடையங்களைநிக்கிரகித்துக் கேட்டல்சிந்தித்தல் தெளிதல்நிட்டைகூடியபின் மௌனிகளாய் அரியதவங்களைச்செய்து பரமசிவகடாட்சத்தினால் நித்தியபதவியினைப் பெற்றார்கள். இப்பால். தக்கன் தன்பிள்ளைகள்செய்திதெரியாமல் வருந்தி ஞானவுணர்ச்சியில் நாரதர்போதித்ததையும் அதனையுறுதியாகக்கொண்டு யோகசாதனைகளைச்செய்துமுத்திபெற்றதையும் அறிந்துவாடினவனாய்,மீட்டும்ஆயிரம்பிள்ளைகளைப்படைத்து அவர்களுக்குரிய கிரிகைகளைமுடித்து, வேதாகமங்களையுணர்த்தி, குமாரர்களே, நீங்கள்மானதவாவியைச்சேர்ந்து பரமசிவத்தைக்கருதித்தவங்களைச்செய்து சிருஷ்டிக்க வரங்களைப்பெற்று வருவீரென்றனுப்ப, அவர்கள்விடைபெற்றுப்போய் மானதக்கரையிற் பரமசிவத்தைநினைந்து அரியதவங்களைச்செய்வதானார்கள். இச்செயல்களை நாரதர்அறிந்துவந்துதக்கன்புத்திரரைநோக்கி, நீங்கள்யார் எப்பேற்றைவிரும்பி இத்தன்மையதவங்களைச்செய்கின்றீர்களென்றுவினவ, முனிவரைச்சேவித்துச் சுவாமி நாங்கள் தக்கன்பிள்ளைகள். அவரனுமதியின்பேரிற் பரமனைநோக்கித் தவங்களைச்செய்து சிருஷ்டிக்க வரம்பெற்றுப்போக வந்தனமென்றனர்.

அதனை நாரதர்கேட்டுநகைத்து, பிள்ளைகாள் தேவாதிதேவனைச் சிந்தித்து இவ்வரியதவங்களைச்செய்யத் தக்கவர்களாகிய நீங்கள் அவற்றிற்குத்தகுந்த பிரயோசனங்களை நினைந்தீரில்லை. நல்லொழுக்கத்துக்கு இழிவானபேற்றை யாவருமிச்சியார்கள், சிறந்ததவங்களைச்செய்து மக்களையுஞ் சம்பத்தையுமடைகின்றீர். அதனால் ஈஸ்வரமாயையினையுஞ் சனனதுக்கசாகரத்தையுங் கடக்கப் பெறுவீர்களோ, படைப்பிற்பெறும் பயனித்தியத்தைத் தரவறியாது. நீங்கள்கொண்டநிலை எத்தன்மைத்தெனின், மெய்ம்மாசுகழியத் திரிகின்றவன் தஞ்செயலாயொரு சுத்தோதகத்தடாகத்தைச் சேர்ந்தும்அதிற்படிந்து சுத்திசெய்துகொள்ளாமற் கடைப்பட்டசேற்றை வாரிப்பூசிக்கொண்டதன்மையாயிற்று. மேலும் நீங்கள்பெறவிருப்புற்றபடைப்பு நிலைபெறுவதோ, பிறப்பிறப்புச் சுகதுக்கம் பிராணிகளுக்கிடைவிடாது தொடர்ந்திருக்கும். இதனைநீங்கள்தீர்க்கமாயோசித்தீர்களில்லை. இதனாற் கொடியபிறவித்துன்பம் நீங்கவறியாது. ஞானமில்லார்சிந்தையுங் கன்னியரிடத்துக் காமுறுத புருடர்மனதுங் கல்வித்திறனில்லாதபாடலும் இவைபெறும் பிரயோசனத்தினும் நீங்கள்யாதினையடையப்போகிறீர். ஆதலாலுங்களுக்குப் போதித்தனுப்பியதக்கன் மூலகாரணனான பரமசிவனைவழிபட்டு எவர்களுக்குங் கிடையாத மகதயிஸ்வரியத்தைப்பெற்றும் இக்காலத்தில் அதைத்தந்த கடவுளினது பாததாமரைகளை நினையாது செல்வப்பெருக்கினாழ்ந்து மயங்கி யிறுமாந்து மேல்வருந் தண்டனைகளை எவ்வளவுங் கருதாதிருக்கின்றான். அவன்பிள்ளைகளாதலால் நீங்களும் அதனையேநிச்சயமாகக்கொண்டீர். விடையவாதனைகளைப்போக்கி மனத்தைத்தேற்றிச் சிவகதியிற்சேர்க்குஞ் சன்மார்க்கங்களைப்பிரித்துக்காட்டுங் குணாதிசயங்களைப்பெற்றவனையே ஞானதேசிகனென்னப்படும்.

இஃதன்றியும் முன்னமுங்கள் தமையன்மார் பிதாவாக்கியப்படிக்குப் பாட்டனான பிரமனைப்போலப் படைப்பைப்பெறவிரும்பி யித்தலத்தில் தவஞ்செய்திருந்தார்கள். அத்தருவாயில் நாமிவ்விடம்வந்து அவர்களஞ்ஞானவறிவைப்போக்கி மேலாகிய நெறிகளைத்தெருட்டிச் சாயுச்சியபதவியைப்பெறச்செய்தோம். இவைகளைநன்றாயோசித்துப் பிழைக்கு மார்க்கத்தைத் தேடிக்கொள்ளக்கடவீரெனச் சொல்லியநாரதர் பாதங்களில் அப்பிள்ளைகள்சேவித்துப்போற்றி, சுவாமி, விவேகமில்லாத நாங்களீடேறக் கிருபையுற்று ஞானாசாரியனா யெழுந்தருளினீர். ஆதலால், அடியோங்கள் முன்னவர்களுக்குப் போதித்தவாறே மேலானமோட்சம்பெறும் மார்க்கத்தையுணர்த்தி நாங்களுங் கிருதார்த்தராகத் தயைசெய்யவேண்டுமென் றிரக்குந் தக்கன்பிள்ளைகளைப்பார்த்திரங்கி, நற்குணங்களைப் பெற்ற புண்ணியவான்களே, உங்களிஷ்டப்படிக்கு அக்காட்சிகளைத்தெருட்டும் வகையினைப்போதித்துப்பஞ்சேந்திரியவிடையங்களிற்சிக்கி மதிமயங்கி யின்பதுன்பங்களின்மூழ்கி யுழன்றுபாதகங்களிற்பட்டலையாது நீக்குவேன். தேவதேவனான சிவபிரானது திருவடிகளைக் கருதிப் பூசிப்பவர்கள் நிலைமையாவன சரிதை கிரியையோகம்ஞானமெனப்படும்இவற்றுண் ஞானபாதத்தினுக்குரியவர்பெறுவதுமுத்தியெனப்படும் அதன்மகிமைகள் தேவருக்குந்தோற்றா சிவகடாட்சத்தினால் இருவினையொப்புமலபரிபாகநேர்ந்த மகத்துக்களுக்குக்கிடைக்கும். அதைப்பெற்றபுண்ணியவான்கள் கர்த்தனது நடனபாதத்தின்பசுகத்தைக்கிடைத்துப் பிறவிக்கடலைக்கடந்து பேசுதற்கரியமுத்தியையும்பெற் றெக்காலத்தும் ஆனந்தத்தினிருப்பார்கள். ஆதலால், நீங்களும் அம்மார்க்கத்தை அனுஷ்டித்து யோகசாதனையினால் வீடடைவீரென்றருளி, வேதாகமநிச்சயங்களை உபதேசித்து அவர்களையும் அந்நிலையிற்பொருத்தி நாரதர் தெய்வலோகமேபோனார். பின்பு அக்குமாரர்கள் ஏகமனதாய்ச் சித்தத்தைச் சிவத்தின்பாதகமலங்களில்நிறுத்தி அரியதவங்களைச்செய்து அவனருளினாற் சாயுச்சியபதவியைப்பெற்றுப் பாததாமரைநிழலின் வீற்றிருந்தார்கள்.

இக்காரியங்களைத் தக்கனுணர்ந்து வடவனலைப்போலக் கோபித்து, விழிகளில் அனற்பொறிகள்சிதற மனம்வேகச் சரீரம்வியர்க்கப் பெருமூச்செறியுந்தோறும் புகைப்படலமெழ, இக்கொடுமையினாற் சூரியசந்திரர்முதலான நவக்கிரகங்கள் நிலைபுரண்டோடச் சராசரப்பிரபஞ்சங்கள் மிகவும்வருந்தினபின்பு என்பிள்ளைகளை இவ்வாறுமோசஞ்செய்த நாரதனோரிடத்தி னிலையின்றிக் கலகங்களைவிளைத்துழன்று அலையக்கடவனெனச்சபித்து, இனிப்பெண்களைப்பெற்றுச் சிருஷ்டி மல்கச்செய்வது தகுதியென்றெண்ணி, இருபத்தாறு குமாரத்திகளைப்படைத்துப் பிருகு-மரீசி-புலத்தியன்-ஆங்கிரசு-புலகன்-வசிஷ்டன்-அத்திரிமுதலான தவத்தருக்களித்தான். இவர்களிற்சுபத்தி-புத்தி-சுரசை-திருதி-துட்டை-காயை-கீர்த்தி-சிரத்தை-இலச்சை-மேதா-கத்தி - சாந்தை-வபுவை இக்கன்னியரைத் தருமன் கலியாணஞ்செய்து பதினேழுபிள்ளைகளைப்பெற்றான். பிருகு கியாதியைமணந்து விதாதா தாதாவென்னுமைந்தரையும் இலக்குமியையுந்தந்து, அக்கன்னிகையைவிண்டுவுக்களித்து அதன்பின் தவத்தினின்றான். மரீசிசம்பூதியைக்கூடி நான்குபெண்களைப்பெற்றான், அவர்கள் மரபிற்பலருதித்தார்கள். புலத்தியன்நாரிசன்னதியைக்கலந்து அளவற்ற புத்திரரையீன்றான். ஆங்கிரசு-ஸ்மிருதியைப்புணர்ந்து அங்கிரன் பரதனென்னும் பிள்ளைகளையும் நான்குபெண்களையும்பெற்றான். இவர்களால் அளவற்ற விருடியருண்டானார்கள். புலகன் பரீதியைத்தழுவித் தேத்தாத்திரேயனைத்தந்தான். அவனிடத்திற் கும்பனுதித்தான். வசிட்டன் ஊற்சியைமணந்து ஏழுபிள்ளைகளையும் ஒருபெண்ணையுந்தந்தான். அத்திரி அனசூயையைப் பொருந்திச் சத்திநேத்திரன் திங்கள்சனி சங்கதாவளனென்னும் பிள்ளைகளைப்பெற்று, மேலும் இச்சுவாவென்பவளைமணந்து மூன்றுகுமாரரையும்பெற்றான். கிருதுகமையைத்தோய்ந்து மூன்றுபிள்ளைகளைப்பெற்றான். பிதாதா சுவதையைக்கூடி மேனை தரணியென்னும்பெண்களைப்பெற்றான். அவர்களின்மேனையை இமவான் திருக்கலியாணஞ்செய்தான். தரணியை மேருமணந்து மந்தரகிரியைப்பெற, அவன் அரியதவங்களைச்செய்து திரிநேத்திரதாரியான கர்த்தனனுக்கிரகத்தினால் திருக்கயிலாயம்போலப் பரமசிவன் வதியப்பெற்றனன். மேருபின்னும் வேலையென்பவளைப்பெற்றுச் சமுத்திரராசனுக்களிக்க, அவளிடத்துச் சரவணியென்பவளைத்தந்து பிராசீனருக்குத்தந்தான். அக்கன்னிக்குப் பத்துப்பிள்ளைகள்பிறந்தார்கள். இவ்விதமாகப் புத்திரபவுத்திரர்களுதிக்க, அவர்களாற்சிருட்டிவிர்த்தித்துவருங்காலத்தில், தக்கன்மீளவும் இருபத்தேழு பெண்களைப்பெற்று, அவர்கள்வனப்புக்குத்

தகுதியாயிருக்குஞ் சோடசகலைகளையுடைய சந்திரனுக்கு வதுவைசெய்துகொடுத்து மருமகனைநோக்கி, உன்றேவியர்அனைவரையும் அபேதமாகத் தழுவிக்களித் திருப்பாயெனச்சொல்லி அனுப்ப, அவ்வாறேதினமொரு கன்னியைக்கலந்து சஞ்சரிக்கின்ற தறுவாயில், கார்த்திகைரோகணி மற்றவர்களினும் ரூபவதிகளாதலான், அவரிடத்து அதிகமையல்கொண்டு இடைவிடாததழுவியும் மற்றையரைநினையாமலும் பாராமலுந்திரிய, அதைக்கண்ட அக்கன்னியர் மனம்பொறாமற் கோபித்துவந்து பிதாவைக்கண்டு விழிகளில் நீர்பெருகத்துக்கித்தத் தங்கள்கொழுனன்செய்கையைச்சொல்லி முறையிட்டார்கள்.

அச்சொற்கள் செவிகளின்விடத்தையொத்துப் புகுந்தமாத்திரத்தில், தக்கனுக்கு அதிககோபம்பிரவேசித்து விழிகள்சிவக்க மீசைதுடிக்கப் புருவநெற்றியிலேறச்சீறி நாங்கட்டளையிட்டதை யிகழ்ந்தகாரணத்தினாற் சந்திரன் தினமொருகலையாகக் குறைந்து மங்கிப்பலரும்இகழ வருந்தக்கடவனென்று சபித்தவுடன்அக்கொடுமைமேலிட்டொருவருக்குதவியற்ற செல்வத்தைப்பெற்றவன் புகழைப்போலச் சந்திரனது கலைகள் தினமொன்றாகப்பதினைந்துவரையிற்றேய்ந்து, இவன்தான் திங்களாகவேண்டுமென்றையுற்று அனைவருங்காணக் காந்திமழுங்கி ஒருகலைமாத்திரமிருக்கச் சந்திரன்வருந்தி வாடித்திகைத்துவெட்கி, இனியிதற்கென்னசெய்வோமென்றுஎண்ணுதமெண்ணி ஏங்கினவனாய்க்கடையில் தேவராசனிடத்துக்கோடி, ஓய் சிநேகிதனே, என்துயரத்தையென்னென்று முறையிடப்போகிறேன், ஊரினொருவனேதோழனென்று உலகோர்சொல்லிக்கொள்வதைக்கருதி உன்னையடைந்தேன், என்குறைகளைக்கேட்டு இவைகளுக்கொரு நிவாரணந்தேடி என்துயரத்தைத் தீர்க்கவேண்டும், அதாவது, ஏதோ தன்பெண்கள்சொல்லியதை முக்கியமாகநினைந்து சற்றும் இரக்கமில்லாமல் தக்கன்சொல்லிய சாபசம்பந்தத்தினால்என்கலைகள் அனைத்துமாறி ஒன்றுமாத்திரம் நிற்கின்றது அதுவும் இத்தினம்நீங்கும், அப்படிக்குநேருமாகில்,என்பேரும் பெருமையுங்குறைந்து சகலராலும்புகழுங் கீர்த்தியும்நசிக்க வசைபேசப்படும். அப்பால், நானிருந்து என்னபிரயோசனம். ஆதலால் இதற்கொரு மார்க்கத்தைக்காட்டி என்னைப்பாதுகாத்தல் உன்கடனென்றுவாடித்துக்கசாகரத்தில் அழுந்திச்சோருகின்ற சந்திரனைத்தேவேந்திரன்தழுவி, என்மனதுக்கினிய நண்பனே, பயப்படவேண்டாமென்று சிலதயிரியங்களைச்சொல்லித்தேற்றி அருகினிருத்திக்கொண்டு, சந்திரனே, கேட்பாயாக. முன்னொருகாலத்தில் எமதுகர்த்தனெழுந்தருளிய திருக்கயிலாயத்துக்கு நாமிருவருஞ்சென்றதறுவாயில் பயற்றுண்டைவாழைக்கனி மாங்கனி பலாக்கனி கரும்புமுதலியவற்றை விநாயக மூர்த்தி திருத்தியாகப் புசித்து வயிறுபருத்து ஊர்த்தசுவாசம்விட்டிருப்பதை நீகண்டுநகைத்தாய். அதைக்குறித்து அக்கடவுள்சிறி யுன்னையாவரும்பாராமலிகழ்ந்து நிந்திக்கும்படி சண்டாளத்துவம்அடையக்கடவதெனச்சபித்தார் அத்தினமுதலுன்சாயைதாக்குமாயிற் பாதகம்நேருமென்று சகலரும்வசைகூறி யுன்னைப்பாராம லிருப்பதைக்கண்டுவெட்கி நீமறைந்ததைப்பிரமனாதியர்அறிந்து கயிலைக்குச்சென்றுவிக்கினகர்த்தாவைப் பலதரம்வணங்கிப்போற்றி, ஒருவராலும் அறியப்படாத தேவரீர்பெருமைகளைச்சந்திரன்தேறாத காரணத்தினால் நீச்சத்துவம்பெற்றுப் பங்கப்பட்டொடுங்கி வருந்துகின்றான். அவனுதவி இவ்வுலகத்துக்குவேண்டும் ஆகலால், அடிகளிட்டசாபத்தின்திறத்தை வழுவின்றி வருடமொருதினம்பெறவும் மற்றைநாட்களில் கிரமப்படிக்கு அவன்தொழிலைநடாத்திவரவுங் கட்டளையிடவேண்டுமெனத்துதிப்பதற்கு இரக்கமுற்று பிரமனே உன்கோரிக்கையின்படிக்க அனுக்கிரகஞ் செய்தனமென்று திருவாய்மலர்ந்து பின்னும் அச்சாபத்தைப் பெறுங்காலமுநியமித்தார்.

அவ்வாறே ஆண்டுகடோறும் ஆவணிமாத பூர்வபக்ஷத் தமாவாசைசென்ற நான்காந்திதியில் உலகத்தார் உன்னைத்தெரிசித்தால்சண்டாளத்துவமும் மகாபாதகமு நேருமெனப்பயந்து பாராமல்இகழ்ந்து, உன்சாயல் பூவுலகத்திற் படிவதினால் உண்டாகுங்குற்றம் நிவாரணமாதற்பொருட்டு, விநாயகமூர்த்தியினைப் பூசித்து வருகின்றனர். அத்தினம்விநாயகர்சவுத்தியெனப்பிரசித்தப்பட்டிருக்கின்றது. அப்பழி நீடித்திருக்க, மேலும் ஒருதுறையைத் தக்கனாற்பெற்று உனது பெயரும்பிரகாசமும் மேம்பாடும் அடங்கினப் ஆகலால் துரிதமாகப் பிரமன்சன்னிதானத்துக்குப்போய் அவருடன் இக்காரணங்களை முறையிட்டுக் கொள்ளுவையாயின் குமாரனுக்குணர்த்தி யல்லது தாமாவது இக்கொடுமையை விலக்கி இரட்சிப்பாரென்று இந்திரன்சொல்ல சந்திரன் மகிழ்சிறந்து, தோழனே! நல்லமார்க்கத்தைக் காட்டினாய். அவ்வாறேசெய்யக்கடவனென்று அனுப்பிவித்துக் கொண்டு மனோவதிக்குப்போய்த் தேவர் தபோதனர் சூழ்ந்துபோற்ற ஆயிர மிதழ்விரிந்த பொற்றாமரைப் பீடத்தெழுந்தருளிய பிதாமகனைச்சேவித்து மாமனால் தனக்குநேர்ந்த இன்னலைவிண்ணப்பஞ்செய்து, தேவரீர் அடியேன் கிலேசத்தையும் இச்சாபசம்பந்தத்தினையும் நீக்கத் திருவுளங்கொண்டு உமது புத்திரனுக்குத் தெரியப்படச் சொல்லவேண்டுமென்றுஇரக்க, இக்கருமத்தைப் பிரமன் ஆலோசித்துச் சந்திரனைநோக்கிதக்கன் தன்மனப்படிக்கல்லது ஒருவர் சொல்லும் நற்காரியங்களை அங்கீகரிப்பவனல்லன், இஃதன்றியும் நமக்கடங்கி வார்த்தை யாடவுமாட்டான், தன்னையே பரத்துவமாக நினைந்து வீறாப்படைந்து, ஆதியில் நான்போதித்தபரமசிவத்தின் பெருமைகளைக் கருதித் தவஞ்செய்திந்த மகதைஸ்வரியத்தைப்பெற்று, அக்கடவுளையு மதியாமலுந் தனக்கு நேரும் இன்னலையுங்குறியாமலுந்தான்வணங்குந்தேவர் முதல் தன்னைப்பணியத் தன்னாணையை எங்குநடாத்தி வருபவன் நான் சொல்லினுங் கேளான். அக்கினி சொரூபியாகிய பரமசிவத்தினது சன்னிதானத்திற்சென்று பலவிதத்திற்போற்றி யாவரேனுந் தமக்குற்ற துன்பங்களை விண்ணப்பஞ்செய்து நிவாரணம்பெறலாம். தக்கன்முன்னின்றொருமொழியாவதுபேசப்படுமோ! இவன்துரிதமாக நாசமடைதற்பொருட்டு இக்கடினகுணம் நேர்ந்தது. இவனால் யாங்கள்பெற்ற பதவிகளையும் பெருமைகளையும்இழக்கும் ஏதுவு முண்டாம், இக்காரணத்தைக் கருதியோ பரமசிவம் இவனுக்கு இச்சிறந்த பேற்றைத்தந்தார், இவன்கொண்ட உறுதிஎத்தன்மைத்தெனின், பிறவிக்குருடனானவன் அறிவும் ஊன்றுகோலுந் துணையுமில்லாது உலகைவலம் வரத்துணிந்ததற் கொக்கும். மேலும்நானவனுக் கினிமைகூறினுங் கோபித்திகழ்வதன்றியும் உன்சாபமுந்தீரான். ஆதலால்வேறொரு எண்ணமும்வேண்டுவதில்லை. வேதமுடிவாய் என்போலிகளுக்கும் இறைவனாய்

ப்பத்தவற்சலனைப் எக்கும் பரிபூரணமாய் நிறைவெய்திநிற்கும் பரமேஸ்வரனைச் சரணடைந்து உன்மனக்கவலையினை முறையிடுவையாயின் பாதுகாத்து இரட்சிப்பார்இதுவுனக்குத் தோற்ற வில்லையோ? கலைகள் தேய்ந்ததைப் போலவே உன்விவேகமு மழுங்கியதோ? சிவபெருமான் குணாதிசயங்களை அறிந்திருந்தும் மயங்குகின்றனை. இருண்டவிடத்திற் சூரியப்பிரகாசத்தைச் செலுத்தச் சந்தேகிப்பார்களோ? நம்மையெல்லாம் பிள்ளைகளாகப்படைத்த கர்த்தனிடத்து அன்பில் லவரையும் அப்பேற்றைக்கிடைத்தும் நற்கருமங்களைமுடித்து அவன்திருப்பாத நீழலைச் சேராதவர்களையும் நம்போலிகள்கனவிலும் நினைக்கப்படுமோ? அதனாலுண்டாகும் நரகயாதனைகளைப் பேசவும்படுமோ? பத்திவயிராக்கியங்களைப் பெற்றுத்தம்மைத் துதிக்குந் தொண்டர்களைப்பரிந்து ரட்சிக்குங் காரணத்தினாலல்லவோ வெள்ளியங்கிரியிற் பரமசிவம் அருளுருப்பெற்றெழுந்தருளுவது இஃதன்றியுந் தமது திருவடிகளை நம்பினவர்களுக்கடுத்த துன்பங்களைக் கனலிற்பட்ட பஞ்சைப்போலநீக்கிச் செனனசாபல்லியமாக்கும் பொருட்டல்லவோ? நந்தித்துவசத்தினை நாட்டி யிருக்கின்றது. சந்திரனே? இதற்கொரு திஷ்டாந்திரங்காட்டுவோம்.

ஆதியில் தமது பாதகமலங்களைப் பத்தியுடன்அருச்சித்துச் சிக்கெனப்பற்றிய மார்க்கண்டன்மீது எதிர்த்த எமனையுதைத்து அவ்விருடிக்கு நித்தியத்தைக் கடாட்சித்தசரித்திரத்தை அறியோமோ திருப்பாற்கடலைக் கடையும்போது உண்டாகிய விடத்தைக்கண்டுநடுங்கினமெல்லோருஞ் சரண்புகப் பயப்படாதீர்களென்று ஆதரித்து அதனைக் கண்டத்தில் தரித்துக் காத்த தயாநிதியை மறக்கலாமோ.பராசத்தியினது அங்குலியினிடத்துதித்து உலகமெங்கும் அழித்துப் பெருகிய கங்கைக் காற்றுது யாமெல்லோரு முறையிட இரங்கிச் சடையிற்கரந்து நம்முடன்புவனங்களைக் காத்ததை நீயறியாயோ? சர்வமங்கள குணநிதியாகிய நமது கர்த்தன் றமதடியார்க ளிடத்திற் பெருகுங் கடாட்சத்தினைப் பேசப்படுமோ. அல்லது கணிக்கக்கூடுமோ. கருத்தினலாவது அறியலாமோ. ஓய் சந்திரனே? பரமன் திருவிளையாடல்களைக் கற்பகாலந் துதித்தாலும் முடியாது. ஆகலால் துரிதமாகத் திருக்கயிலைக்குச்சென்று தேவதேவன் பாதகமலங்களிற்சரணடைந்துஇக்கிலேசத்தினை நீக்கிக்கொள்ளக் கடவாயென்று பிரமனருளியதை உபதேசமாகக் கொண்டு அவன்பாதங்களிற் றொழுது அடியேன் ஈடேற மார்க்கத்தினைப் போதித்தீர். அவ்வாறேமுடித்து இப்பாதகத்தை நீக்குவனென விடைபெற்றுப் போய் ஞானநாயகனெழுந்தருளியகயிலைவரையைச்சேர்ந்து நந்திதேவரருள்பெற்று ஆலயத்திற்சென்று பரமனைக் கண்டுவிழிகளி லானந்தவாரி பெருக அட்டாங்கபஞ்சாங்கதிரியாங்க ஏகாங்கமாக வலம்வந்துசேவித்து உபநிடதவாக்கியங்களினாற் பலவாகப்போற்றிக் கரங்களைக் கூப்பிநிற்குஞ் சந்திரனைக் கிருபையாகப்பார்த்து, நீமிகவும் வருந்திவருங் காரணமென்னையென்று திருவாய்மலர, சத்துருவாகிய இருள்வளைந்துகொண்டதைப்போலக்கறுத்துருமாறிய சந்திரன் பரமசிவத்தைவணங்கிசுவாமி?கடினசித்தம்பெற்ற தக்கனிட்டசாப சம்பந்தத்தினாற்கலைகளனைத்துந் தேய்ந்து ஒன்றிருக்கின்றது. அதுவும் இன்றுடனீங்கும். ஆதலால் தினதயாபரனே? கிருபையுற்றிவ்வொரு கலைநிற்கவும் மற்றையவைகளுஞ் சேர்ந்துவிர்த்திக்கவுங் கடாட்சிக்கவேண்டும் தேவரீரையல்லதுவேறுகதிகாணது திருவடிகளில் தஞ்சமடைந்தேன் சுவாமியென முறையிட்டுக்கொள்ளுஞ் சந்திரனுக்கிரங்கிபயங்கொள்ளவேண்டாமென்று தேற்றினவராய் அவ்வொருகலையினையுந் தமது திருமுடியில் தரித்தவுடன் தக்கன்சாபம் நெருங்கப்பயந்தோடியது.

கேட்டீர்களோ! சவுனகாதியிருடிகளே? தேவர்களுக்குற்ற பல இன்னல்களையும் நீக்கிப் பாதுகாக்க வல்ல தேவதேவனுக்கு இதுவுமொரு கீர்த்திப்பாலதோ? தம்மையடுத்தவருக்கு உதவு முண்மையினைச் சகலருக்கும் அறிவிப்பதைபொத்து அக்கலை சடைமுடியின் விளங்கியது. பின்பு சந்திரனே? இஃது நமது சிரத்தின்கண் வதியப்பெற்ற மகிமையினுல் அழிவுபடாது இனிமற்றையவைகளுமாறியவாறே தினமொன்றாக உன்னைக்கூடுவதன்றியும்இவ்வாறே பட்சங்கடோறுந் தேய்ந்தும் நிறைவெய்தியும்விளங்குமென் றருள,சந்திரன் மனக்குறையினையகற்றி மகிழ்சிறந்து கர்த்தனைப்பலவாகத் துதித்துப்பன்முறைவணங்கி விடைபெற்றுப் போய் எதாப்பிரகாரந் தன்செய்கையினை நடாத்தினான் இச்செயலை விண்டுவாதிய தேவர்கண்டு தொண்ட னின்னலைத்திருவுளங்கொண்டு தக்கன்சாபமும் வழுவாமல் தமதுமகிமையினையுந் தெருட்டிய கர்த்தன் குணாதிசயங்களை யாவராலறியப்படு மென் றேத்தினார்கள். பின்பு இக்காரணத்தைத் தக்கனறிந்து கோபித்து, நானிட்டசாபத்தைச் சிவனே தடுக்கவல்லவனென்று நகைத்து பிரமன், விண்டு, முதலானவர் என் கட்டளையினைக் கடக்கவும் முன்னின்றொருகாரியத்தைக் குறிக்கவும் நடுங்குவார்கள் அப்படிக்கிருக்க தாய்தந்தையற்ற ஒருவனே நீக்குவான், நல்லகாரியம் தான் பரம்பொருளென்றும் பிரமனுதிபரை அளித்துப் பஞ்சகிர்த்தியங்களை நடாத்திச் சர்வபரிபூரணமா யிருப்போ மென்றுங் கெருவித்தானே? அல்லது நான்தன்னிடத்திச் செல்வத்தைப்பெற்றுந் தன்னைத்தொழ வில்லையென் றிக்கருமத்தை முடித்தானேயென்று பலநிந்தைகளைப்பேசுவதைத்தபோநிதியான புலகர்கேட்டு மனம்பொறுமல் ஒப்புவமையற்ற பரமேஸ்வரனை யிகழாதோ. இதனாற்சகலரும் உன்னைப் புகழார்கள். இஃதன்றியும்உன்செல்வமும்அழிவுபடுமென்று சொல்ல, தக்கன்நகைத்துத் தவமுயற்சியினா லுண்டாகியஇவ்வயிஸ்வரிய மொருபோது நீங்காது.இஃதொருதொழிலை முயன்றவனுக்கீந்த பரிசாகும் விண்டுவாதிய ரென்சொல்லை மறுக்க அஞ்சுவார்கள் என்சம்மதமில்லாம லிதனைச் செய்யத்தகுமோ? உன்விவேகத்திற்குமெச்சினேனென்று பழிப்புரைகூறிய பாதகனைப் புலகர்பார்த்து உன்னைச் சகலருமதிக்கினும் இவ்வகண்டசாம்பிராச்சியம் நிலைபெற்றிருக்கினும் அவற்றையருளிய பரமனை அவமதிப்பது தகுதியோ? ஒருநன்றிசெய்தவரை உயிருள்ளவரையினும் மறக்கலாகாதென்றதைக் தக்கன்கேட்டு நல்லகாரியம்.அந்தவரத்தை அனுபவிப்பதற்குமுன்மாற்றவும் முடிவினல்லது ஒருகாரணத்தை நடாத்தவும் அவனாற்கூடுமோ? ஆகலால், என்னை என்னசெய்யப்படுமெனம்பேசுந் தக்கனுக்குப் புலகர்சொல்லுவார். நீகூறியதனைத்தும் உண்மையாயினுஞ் சிவனையிகழ்ந்தவர்க ளொருபோதும்ஈடேற அறியார்கள், இதுவேதவாக்கியமாம். இதனைக்கடைப்பிடியாகப்பற்றி அவனைத்தூறுமல் இதுமுதற் பத்தியாக வழிபடக்கடவாய். தம்மைச்சரணடைந்தவரை ஆதரித்து அவர்க

ளின்னலைமாற்றி வேண்டும்வரங்களைத் தருவது பரமசிவனுக் கியற்கையாதலான், அதையறிந்து சந்திரனடுத்தான் அவனுக்கு நேர்ந்தசாபத்தைப் பக்குவமாகவிலக்கி, உன் வார்த்தையும் பொய்க்காமல் தேயவும் வளரவும் அளித்தனர். அதற்குச் சந்தோஷப் படாமற் கோபிக்கலாகுமோ? மேலும் அச்சந்திரன் ஆர்? உன்மருகனல்லவோ? இனிப் பரமசிவனும் உனக்குமருமகனாகஇருக்கின்றனர். இதனைத்தீர்க்கமாயோசித்து நடந்து கொள்ளுவையாயின், உன்கீர்த்தி நிலைபெற்றிருக்குமெனப் பலவாகக் கர்த்தன் பெருமைகளனைத்தையும் எடுத்துக்காட்ட தக்கன் கோபந்தணிந்து, தேவேந்திரனாதியர் போற்ற அரசுசெய்து வந்தான். கேட்டீர்களோ,நைமிசாரணியவாசிகளே! இனிப்பராசத்தி அவன்பெண்ணாக வருங் காரணத்தையுஞ் சொல்லுவோமென்று சூதபுராணிகர் ஆரம்பித்தனர்.

---

என்னவித்திறமொழிதலுஞ்சினமகன்றிமையோ
ரன்னமூர்தியோனியாவரும்புகழ்தரவனையான்
பன்னெடும்பகலரசின்வீற்றிருந்தனன்பனையாங்
கன்னிமற்றவன்மகன்மையாய்வருதல்கட்டுரைப்பாம்.

---

## உமைகயிலைநீங்குபடலம்.

---

கமலமூர்த்தியுங்கண்ணனுங்காண்கிலா
வமலமேனியையன்பினர்காணுற
நிமலமாகியநீள்கயிலாயமேல்
விமலநாயகன்வீற்றிருந்தானரோ.

---

இருவர் தேடற்கரிய சோதிமயமாகியபரமேஸ்வரன்அடியவர்தரிசித்து ஈடேறத்தக்கதால் நிர்மலமானதிருக்கயிலாயத்தின்கண் பிரமன்முதலானதேவர்கள்போற்றவீற்றிருந்ததருவாயில், இடப்பாகத்தமர்ந்தபராசத்தியானவள் ஒருநினைவு கொண்டெழுந்து தேவாதிதேவன் திருவடிகளிற் சேவித்து எனதுகர்த்தனே? உமதொப்பற்ற நிச்சயஞானத்தைப்போதிக்க வேண்டுமென்று வினவ, பரமனருளிச் செய்வதாயினர். பெண்ணே! கேட்பாயாக? உருவங் குணஞ் செய்கை முதலியவை யொன்றுமின்றி நிர்மலமாய்எங்கு நிறைவெய்திய பரப்பிரமமாகிய சிவமானது-பை முட்டை-நிலம்-வியர்வையென்னும் நால்வகைத்தோற்றம் தேவர்-மக்கள்-பைசாசு-நாகர்-விலங்கு-பறவை-செந்து என்னும் எழுவகைப்பிறப்பின் பிரிவாகிய எறும்புதலையானை யீறெனச்சொல்லும் எண்பத்து நான்கு நூறுயிர சிவபேதத்தினது விடையஞான மறைப்பைமாயையறிவினாலும், சொரூபஞானமறைப்பைக் கேட்டல் சிந்தித்தல் தெளிதல் நிஷ்டையாகிய பொருளினாலும், சத்திமூலமாக நீத்தற்பொருட்டு, தமது கருணையினின்றும்வகுத்ததும், அவளருளாற் கலைமகள்இலக்குமிஇச்சாசததிகிரியாசத்தி ஞானசத்திகளை வகுத்ததும், இதற்குக்காரணமாகிய பரமசிவமானது அருவுருவினைத்தாங்கியதும், அவரருளிச்செய்த வேதாகமம்-தருமசாஸ்திரம்-புராணம்-உபபுராணம்-சங்கிதை-ஸ்மிருதிகளாதிகளால் சரிதை- கிரிகை-யோக-ஞான-பாதங்கண்மூலமாக அதிகாரிகள் பிரயோசனங்களைபெற ரூபாரூபமாகிய சதாசிவவுருவாய் நின்றதும், ஞானேந்திரிய கன்மேந்திரியங்கள் பத்து, ஞானேந்திரிய கன்மேந்திரிய விடயங்கள் பத்து இவைஇருபதும் அசுத்தமென்றும் அந்தக்கரண சதுட்டயநான்காகிய மனம்-புத்தி-அகங்காரம்-சித்தம் சுத்தாசுத்தமென்றும், அவைகளுக்கு மேலாய்க் கேவலவுருவம்பெற்ற ஈஸ்வர தத்துவத்னதச் சுத்த மென்றும், ஆக இருபத்தைந்து தத்துவரூபமாக அவர்நிறைவெய்திய பெருமையையும் அவரருளாற் பிரணவமுதித்ததும், அதினின்றும் முத்தொழில்களை நடாத்துந் திரிமூர்த்திச் சொரூபமாய் அவதரித்த பேதங்களையும், இதுவல்லாமல் மாயா காரண மூலமாக முற்கூறிய முறையன்றி அசுத்ததத்துவ மிருபத்து நான்குங், காலம் - நியதி - கலைமுதலாகிய சுத்தாசுத்த தத்துவங்களேழும், சுத்தவித்தை, ஈஸ்வரம், சாதாக்கியம், சத்தி சிவம், ஐந்துங்கூடிய முப்பத்தாறு தத்துவங்களை வகுத்ததும் அவைகட்குக் காரணமாகிய சிருஷ்டி- திதி சங்காரம்-திரோபவம் - அனுக்கிரக மென்னும் பஞ்சகிர்த்தியங்களையுந் தமது கருணையினாற் படைத்ததும், திரிலோகங்களிற் சஞ்சரியாநின்ற மூவகை உயிர்த்தொகைகளைத் தொண்ணூற்றாறு தத்துவரூபமாக விரித்தும் இரட்சித்தும் மீட்டுந் தம்முளொடுக்கிய காரணன் தாமாயிருந்தும் மாயையாம்படாம் அறிவை மயக்கயாவரும் அக்காரணன் பரமசிவமென்றறியாமல் திரிமூர்த்திகளினொருவனாக மயங்கச் செய்தும் தாம் நிலைபெற நின்ற தமதியற்கைகளைத் தேவியுணரும் மார்க்கமாக வேதாகமவாய்மைகளினுன்மேற் சொல்லியவற்றைப்பரசிவப்பிரமமானது இருபத்தைந்துதத்துவரூபமாய்நின்றதெனவேதொகையும், அவனருளால் ஆதிசத்தியாயும் அவளாற்பஞ்சசத்திகளைத் தரும்பொருட்டு அருவுருவமாகிய சதாசிவமாய் முப்பத்தாறு தத்துவங்களாக நிறைவெய்தியதெனவேவகையும், அவனருளான ஈஸ்வரன் குடிலை திரிமூர்த்திகளான் வகுக்காநின்ற தொண்ணூற்றாறுவகைத் தத்துவங்களாகிய திரிபுவன ஆன்மாக்கள் தோன்றியவழியேஅடங்குதலெனவே விரியுமாக அருளிச்செய்தனர்

அதைக்கேட்ட சுந்தரியானவள் சுவாமி, தேவரீருக்கு உருவமில்லையென் றருளினீர். பின்பு பஞ்சமூர்த்திகளாகிய தோற்றங்களைக்காட்டிய காரணம்யாதென்றுவினவ, கந்தனைப்பெற்ற கர்த்தன் சொல்லுவார். எமக்கு எக்காலத்தும் உருவமில்லை. ஆயினும் முற்கூறிய பஞ்சமுகுர்த்தங்களும் நமதருளாற் பரசிவத்தில்தோன்றின அல்லது வேறில்லையென்று ஆதிதேவன் குறித்தவுடன் புவனங்களையீன்ற கன்னிகையானவள் அதனை யொருபிரயோசனமாக நினைந்து களித்தவளாய் அவ்வகையுருவனைத்தும் அருளினால் உதிக்கின்றதால் தேவரீர் அருள்எனதுருவென்பதை உண்மையாகக் கண்டனன். அவையனைத்தும் என்னிடத்தில் தோன்றினவென்று மகிழ்ந்த தருவாயில், யானையுரியினைப் போர்த்த கர்த்தன்பெண்ணே, உன்புகழைநமதுசன்னிதானத்திற் பெருமையாகவியந்து கூறினாய், மாசுற்றவுயிர்கடோறும் உலவி அவைகள் தெளிவுபெறச்செய்வதைநீங்குவோமாயின் அசைவற்றுச்சடமாயிருக்கும், ஆதலால், மற்றவைகள் அடையும் நிலைகளைப்பேசவும் வேண்டுமோ, மேலும் உன்னிடத்தும் யாம் பொருந்தாதகாலத்து உனதுயிரும் உணர்ச்சிபெறுதுஅதனைக்காட்டுவோம், குறிப்பாயறிந்து கொள்வாயென்றுபிரமனாதியான உயிர்களைப்படைக்குந் தொழிலைநீங்கினர்,

தேவாதிதேவனான பரமசிவச் செயலில்லாமையால் ஆவிகளனைத்துஞ் சடமாய் ஓவியம்போல உணர்வற்றுச் சூத்திரதாரியாக நின்றாட்டுவோன் அத்தொழிலைத் தவிர்த்தகாலத்து அவயவாதிகளினாற் சோடித்த பாவைகள்குலைந்துவீழுமாறுபோலக் கர்த்தன் தமதருட்டிறத்தினை நடாத்தலின்மையால், அளவற்றவுயிர்த்தொகையனைத்தும்மாய்ந்துபோயின, இச்செய்கையைப் பார்ப்பதியார்கண்டுநடுநடுங்கி யிரக்கமுற்றுப் பரமனைச்சேவித்து சகலாந்தரியாமியாய்த் தேவரீரிருப்பதையறியாதுபேசிய என்பொருட்டு உமது கிர்த்தியங்களைச் சர்வசங்காரகாலத்தைப்போலச் சராசரங்கள் அனைத்தும் இருட்பட்டழிய நீங்கினீர் அஃது தேவரீருக்கு நிமைப்போதாயினும் பிராணிகளுக்கு அளவற்ற யுகங்களாயின ஆதலால், அடியேன் பிழையினைப்பொறுத்தருளிப் பழையபடியே ஆத்தமகோடிகளை அளிக்கவேண்டுமென்று பலதரஞ்சேவித்துப்போற்றிநிற்க, கர்த்தன்திருவுளமிரங்கிச் சிருஷ்டிகர்த்தியாதற்பொருட்டுத் தமதருளைப்பெற்ற உருத்திரகோடி வருக்கத்தவர்களுக்கு முந்தி யுணர்வுண்டாக்க அவர்கள்படைப்பு மல்குவதாகப் பரமசிவத்தை அருச்சிக்கின்ற தறுவாயிற் கர்த்தன் தோற்றங்காணாதுவருந்திப் பூமியின்கண் அருச்சுனவட்டமாகிய திருவிடைமருதூரிற்சென்று வானத்திற்கதிரவனும் பூமியின்கண் சமுத்திரமுமின்றி யெங்குமிகுந்த இருள்மூடி விளங்குகின்றதால் இத்தினம் பரமசிவத்தைப் பூசிக்கக்கடவோமென்று எத்தனித்து திரிநேத்திரதாரியை இருபத்தைந்தெழுத் துருவமாகிய காயத்திரியினை யுச்சரித்து வேதாகமப்பிரகாரம் பூசைக்குரிய உபகரணங்களைஅமைத்து பிரமனும் விண்டுவும், இரவில் ஆராதித்தவாறே வழிபடக்கருதி, விபூதி உருத்திராக்ஷ வகைகளையணிந்து, முத்திக்குரிய பஞ்சாக்கரமாதியான மந்திரங்களைச்செபித்து கர்த்தனை ஆவாகனித்து, திருமஞ்சனதூபதீப வகைகளாகிய சோடசவுபசாரங்களை ஆகமவிதிப்படிக்குநடாத்தி, வில்வங், கொன்றை, அறுகு, முதலியபுட்பவகைகளினால் அருச்சித்து, நான்குசாமங்களினும் பரமன்திருமந்திரங்களை உச்சரித்துப்பூசித்து திரட்டுப்பால் பாற்சோறு சுண்டல்முக்கனி இவைகளைச் சாமங்கடோறும் நிவேதித்துப்போற்றிவருகின்றகாலத்தில், அப்பூசையைவிரும்பி உருத்திரகோடிகளுக்குப் பிரசன்னமாய் அவர்கள்கோரிக்கையை ஈடேற்றத்திருவுளங்கொண்டு, சகலசீவராசிகளையுஞ் சிருஷ்டிக்கக்கருதியவுடன், பிரமன்விண்டு தேவேந்திரன்மற்ற விண்ணவர் தபோதனர் நாகர் மானிடர் விலங்குகள்பறவைகள் ஆதியான சராசரங்கள் மையல்நீங்கி நித்திரைதெளிந்தவர்களைப்போலவே எழுந்தார்கள். சூரியசந்திரர்முதலான நவக்கிரகங்கள் அஷ்டதிக்குப்பாலகர் சேடனாதியர் தங்கள்தொழில்களில் முயற்சிகொண்டு நடாத்தினர். இவ்விதமாகப் பரமன் கட்டளைப்படிக்குச் சகலப்பிரபஞ்சங்களும் எதாப்பிரகாரம் நிலைபெற்றுவிளங்கின.

இக்காரணங்களைத்தேவர்கண்டவுடன் இவையனைத்தும் பரமனுடலாகுமென்று அவன்திறங்களைப்போற்றி வாழ்த்தினார்கள். அத்தறுவாயில் உருத்திரகணங்கள் கர்த்தன்பெருமைகளைக்கொண்டாடி யேத்தப்பரமசிவன் அவர்களுக்கு அருளிச்செய்வார் நீங்கள்பத்திபூர்வமாகப்பூசித்ததாற் சகலசீவராசிகளும் உயிர்பெற்றெழுந்தன. அப்பத்திமை நமக்கேற்றதால், உங்களுக்கு வேண்டியவரங்களைத்தர விருப்புற்றனமென்றருள, உருத்திரர்சேவித்து அடியோங்கள இஷ்டப்படிக்குச் சராசரங்களைப்படைத்தீர்யாங்கள் பூசித்தவாறே இரவில் தினந்தோறும் யாவராயினும் அருச்சிப்பாராயின், மாசிமாதபூர்வபட்ச சதுர்த்தசியில்விளங்குஞ் சிவராததிரிப் புண்ணியகாலப்பலனைத் தந்தருளவேண்டுமெனத்துதிக்க சிவபிரான்கிருபைகூர்ந்து, உங்களைப்போலவே நோற்றவர்களுக்கு அவ்வாறேதருவோமெனத் திருவாய்மலர்ந்தருளிக் கயிலையங்கிரிக்கெழுந்தருளினர். பின்பு உருத்திரகணங்கள் சிவத்தை வாழ்த்தி. அவர்கள்பதவிகளிற் சேர்ந்து, தங்கள்தொழிலைச்செலுத்தியிருந்தனர். இவ்விதமாகச் சகலமும்நிறைவெய்தியகாலத்தில் பிரமன்முதலான தேவர் வெள்ளியங்கிரிக்குப்போய்ப் பரமனைச்சேவித்து தேவரீர் அனுக்கிரகமில்லாது அறிவழிந்து நெடுங்காலஞ் சடமாய்ப்பவத்தினாழ்ந்தோம். அதற்கு நிவாரணங் கட்டளையிடவேண்டுமெனப்போற்ற சிவபிரானிரங்கி, நீங்கள் உணர்வழிந்து வேதவொழுக்கமாறி இருந்ததினால் அடைந்தபாதகம் உமையவளைச்சேரும். இதுமுதல்உங்கள்நெறிகளின் வழுவின்றி நடந்துகொள்ளக்கடவீரென்றருள, மகிழ்ந்து பரமனைவணங்கிவிண்டு பிரமனாதியர் தங்கள்பதவிகளிற்சேர்ந்தனர். அத்தறுவாயில் பராசத்தி சிவபிரானைத்தொழுது, சீவராசிகளுக்கடுத்தவினைகள் என்னைச்சேருங்காரணத்தை அருளவேண்டுமெனக்கேட்க, நீயுன்னைப்புகழ்ந்த எதுவினால் யாம்விகற்பித்து உயிர்களிடத்துலவாது நீங்கினம். ஆதலால் அவையுணர்வற்றுப் பின்பு நமதனுக்கிரகத்தினெழுந்ததால், அப்பாதகம் உன்னையணுகியது, மேலும் உன்னையல்லது அதனைப் பிராணிகள் தாங்கவறியுமோவென்று ஆதியில் தக்கனுக்களித்த வரபாலனத்தை நிறைவேற்றக்கருதிச் சொல்லியதைக்கேட்டு நடுங்கி அறிவில்லாதவள் பிழையினை மன்னித்து அப்பாதகம் நீங்குமாறுபோதிக்க வேண்டுமெனப்போற்ற, இரக்கமுற்றருளுவார் காளத்தையொப்பக்கறுத்து அமுதத்தினும்மதுரமாகிய சலசமர்த்திபெற்ற காளிந்திமடுவில்நீ பிரணவவடிவாகிய வலம்புரிச்சங்கின் படிவமாய்த் தவஞ்செய்யக்கடவை. சிலநாளையில் தக்கன் அவ்விடம்வந்துஉன்னையெடுக்கக் குழந்தையாகுவை அதைக்கண்டு அவன்மகிழ்ந்து தன்தேவியிடத்திற்கொடுக்க, அவள்மகண்மைகொண்டுவளர்த்துவருகையில் ஐந்தாண்டு கழியஉனக்கறிவுதோன்றி நம்மைக்கருதித் தவஞ்செய்ய, காட்சிதந்து மணந்து இவ்விடமழைத்து வருவோமென்றருள, சம்மதித்து விடைபெற்று மனவாட்டத்துடன் உலகஞ்செய்த தவத்தினாற் கடலைப்போலவிளங்குங் காளிந்திமடுக்கரையின்வந்துவேதமூலமான வலம்புரிவடிவுகொண்டு தாமரைப்பீடத்தமர்ந்து பஞ்சாக்கரத்தைச்செபித்து அளவற்றகாலந் தவஞ்செய்திருந்தாள். கேட்டீர்களோ சவுனகாதிதவத்தரே, இனிப்பராசத்தி தக்கனிடத்திற்சேருஞ்சரித்திரங்களைத்தெரிவிப்போமென்றுசூதபுராணிகர்சொல்வதாயினர்.

தெளிதருஞ்சிவமந்திரஞ்சிந்தனைசெய்தே
யளவில்பற்பகலன்னேரேற்றிருந்தனளவட்கண்
ளேமகிழ்ந்தெடுத்தேகுவானெங்குகாளிந்தி
நளிகொள்சிந்துவிற்றக்கனுற்றனவினிநவில்வாம்.

## காளிந்திப்படலம்.

நீளுந்தகைசேர்கிலமாமகடன்
கோளுந்தியபூங்குழல்வார்ந்தெனலாய்
நாளுந்தியவீநனுகிக்கரிதாங்
காளிந்தியெனுங்கடிமாநதியே.

அளவற்ற வளமைகளைப்பெற்ற பூமிதேவியினதுமலர் பொதுளிய அளகபாரத்தினையொத்துக் கமலமாதிய புஷ்பங்களலர்ந்துவிளங்குங் காளிந்தியென்றொரு மடுவுண்டு அதன்பொலிவாவன, தியாகிகளைப்போலஇரத்தினவகைகளையுஞ்சந்து அகில்பொற்சன்னங்களை அலைகளினுன் வமுங்குஞ் சலப்பெருக்கையுடையதாய் ஒப்பற்றுத்தோன் றும் அதைச்சமுத்திரமென்று ஐயுற்று மேகக்களிறங்கவுஞ் சங்கினங்கள் பால்பெருகியதைநிகர்த்து ஊர்ந்திருக்கரீர்கறுத்துக்காட்டுவதுகூிராப்தியில்விண்டு பள்ளிகொண்டதைப்போலவிளங்கும் முதலைமச்சங்கள் பொரவோங்கியசலம்பொன்னுலகத்திற்பாய்ந்து சிதறிச் சோனைமாரியையொத்துச் சலசலவென்று உதிர்ந்தும், மதுக்குடங்களுடைந்ததைப்போலத் தாமரைமுகைகள்அலர்ந்து பெருகுந்தேன் அம்மடுவைக் குறைவறநிரப்பியுஞ் செங்காலன்னமுதலானபட்சிகள் தொனித்தும் பராசத்திதன்னிடத்தின்வதியும் பேற்றையும்உடைய காளிந்திமடுவிற் புரசனங்கள் அனைவரும் மாசிமக ஸ்தானத்துக்குப்போவதைத்தக்கன்அறிந்து, நல்வினைப்பாலனுத் தானுஞ்செல்வதைக்கருதி முந்தித்தன்தேவியைப் பலகன்னியர்சூழவனுப்பி, தேவர்போற்றத் தவத்தர்வாழ்த்த யமுனைக்கு அருகிலிருக்குங் காளிந்திமடுவைச்சேர்ந்து அதில்மூழ்கிவரும் போது, பராபரா தாமரைமலரில் சங்குருப்பெற்று இருப்பதைக்கண்டு களித்துக் கரத்தினேந்தியவுடன் கோடிசூரியப்பிரகாசம்வாய்ந்த குழவியாய்த்தோற்றத் திரோகபரவசனுப் பிறைகங்கை கொன்றைசூடிய சிவபிரான் அனுக்கிரகப்படி பார்ப்பதியாரே நமக்குப்புத்திரியானளெனத்தெளிந்து, அமரர்கூட்டத்தை நீக்கித் தேவகன்னியர்வாழ்த்தக் கங்கையாடிவந்து, தருமசாஸ்திரங்களைக் கேட்டிருக்குந்தேவி சரங்களில் உலகமாதாவைக் கொடுக்க அவள்பரிந்துவாங்கிக் குழந்தையின்வடிவைக்கண்டவுடன் திரேகம்பூரித்துத்தழுவி முத்தமிட்டுக்கொங்கைகளிற்சுரந்த பாலையூட்டித் தேவகன்னியருடன் விரைந்துதன்மாளிகையைச்சேர்ந்தாள், தக்கனும் பலருஞ்சூழ்ந்துபோற்ற அரமனையைக்கலந்து எதாப்பிரகாரஞ் சபாமண்டபத்தில்வீற்றிருந்து அரசுசெலுத்துவதானுன்.

## உமைதவம்புரிபடலம்.

கொண்டுதனதில்லிற்குறுகியபின்வேதவல்லி
மண்டுபெருங்காதலொடுமகண்மையாவளர்த்தனளா
லண்டமளவில்லனவுமலகிலாவுயிர்த்தொகையும்
பண்டுதனதுந்தியினுற்படைத்தருளும்பராபரையை

கேட்டீரோ சவுனகாதிரிஷிகளே, சந்தோஷசாகரத்தில்திளைத்து அந்தப்புரத்திற் பிரவேசித்த வேதவல்லி அளவற்றஅண்டங்களுடன் உயிர்த்தொகைகளை ஆதியில்தமதுஉந்தியின்மூலமாகப்பெற்ற பராபரையைத் தன்பெண்ணுகப்பாவித்துச் சகலசிருடனும் போஷித்துவருங்காலத்தில் சந்திரனைப்போலத் தினமொரு மேனியாய்வளர்ந்துதவழ்ந்துதளர்நடைப்பருவந்தாண்டி ஞானம் அரும்பியதையொத்துப் பல்வரிசைகள்தோன்றி ஐந்தாண்டுநிறைவெய்தியபின், தமக்கொருபாகமான சிவனைச்சேரத்தவஞ்செய்யக்கருதி, தாய்தந்தையரைநோக்கி, நான்கங்கையையணிந்த கர்த்தனுக்கு உரியவளாகும் பேற்றையுடையவள். ஆதலால் அக்கடவுள் என்னைத்திருமணமுடிக்கத் தவஞ்செய்யவேண்டும். அதற்குத் தகுதியான இடமொன்றைஅமைத்துத் தரக்கடவீர்களென்றுகொஞ்சிச்சொல்லக்கேட்டதாய்தந்தையர்மகிழ்ந்து, தங்கள்அரண்மனைக்கருகில் இரத்தினமயமாகிய கன்னிகாமாடமொன்றைச்செய்வித்து திரிலோகங்களையுமீன்ற தாயானபார்ப்பதியைத் தங்கள் புத்திரியென்னும் பரிவினுற் பலதரம்உச்சியைமோந்துமுத்தமிட்டுத் தழுவிப் பெருமூச்செறிந்து அம்மா, உன்கருத்தின்படிக்குத் தவஞ்செய்யப் போகலாமென்று அளவற்ற பாங்கியர்தோழியர் சிலதிரைக்கூட்டியனுப்ப, ஈஸ்வரியும் அவர்களிடத்தில் விடைபெற்றுச்சென்ற தருவாயில், வேதவல்லி தன்கணவனைத்தொழுது, நமதுபுத்திரி அதிபாலையாயிருந்துஞ் சிவபிரானைககருதித் தவஞ்செய்யநினைந்த காரணமென்னென்றுவினவ, களாய்பெண்ணே, ஆதியில்யான் மானதமடுக்கரையிற்செய்ததவத்துக்கிரங்கி பரமசிவமெழுந்தருளி வேண்டியவரங்களைக்கொடுக்கப் பெற்றகாலத்தில்கர்த்தனே, தேவரீர் இடப்பாகத்தமர்ந்த உமையவள் அடியேன்பெண்ணுகவும், நீர்மருமகனுகப் பிராமணக்கோலமாய் எழுந்தருளித்திருக்கல்யாணஞ்செய்து கொண்டுபோகவும் வேண்டுமென்றுவிண்ணப்பஞ்செய்தேன். அவ்வாறே கடாட்சித்துத்திருக்கயிலைக்கெழுந்தருளினர். சிலநாள் கழிந்தபின்பு. தாம்அனுக்கிரகஞ்செய்தபடிக்கு ரிஷபவாகன மூர்த்தியான பரமன் உலகமாதாவை நமக்குப்புத்திரியாகும் பொருட்டுக்காளிந்திமடுவிற்செலுத்த யாஞ்செய்ததவமுயற்சியினுற்கிடையாதபாக்கியத்தைப்பெற்றேரும். ஆகலால்அவள் எக்காலத்தும் அறிவுடன்விளங்குகின்றனள். இஃதன்றியுஞ் சிலநாள்தவஞ்செய்து பரமசிவனுக்குப்பாரியாவள். இக்காரணத்தினுல் அவளைநமது பெண்ணெனச்சுலபமாக நினைக்கவேண்டாமென்றுசொல்ல, வேதவல்லி அற்புதத்தையடைந்து களித்திருந்தாள். இப்பால், ஈஸ்வரியாகியகன்னிகை தனக்கேற்பமைத்திய சாலையிற்சேர்ந்துதோழிகள்சூழ்ந்து பணிவிடைகளைச் செய்துபோற்ற வேதவிதிப்படிக்குப் பஞ்சாக்கரத்தை இடைவிடாதுசெபித்து பரமேஸ்வரனைக்கருதி அரியதவங்களைச்செய்துவ

ருகின்றதறுவாயில் ஃபதைபெதும்பைக்கு மேலானமங்
கைப்பருவம்நேர்ந்து பன்னிரண்டுவயதுபெற்றதருணத்
தில் அடியார்கள் கோரிக்கைகளை ஈடேறச்செய்யும் வண்
மையையுடையசிவபிரான்பார்ப்பதியினது தவவுறுதியை
ச்சோதிக்கக் கிருபையுற்று, திருக்கயிலையைநீங்கி விருத்
தப்பிராமணராய்த் தருப்பைமுடிந்து விளங்குந்திரிதண்
டத்தினைக் கரத்திற்பற்றி வேதங்கள் கிண்கிணியாகச் சூ
ழ்ந்திருக்கும் பாதகமலங்கள் கன்றப்பூலோகத்தார் ஈடே
றத்தள்ளாடிச்சென்று தக்கமாபுரத்தைச்சேர்ந்து லோக
நாயகிதவஞ்செய்யும்அரண்மனைமுகவாயில்வர, அவ்வி
டத்திற் காவல்கொண்டு நிற்கின்றபெண்கள் எதிர்கொண்
டுவணங்கிப்போற்று முன்னிலையில் அவர்களைக் கிரு
பையாகப்பார்த்தருளி ஓகன்னியரே என்வரவை உங்க
ளிறைவிக்கு அறிக்கையிடக்கடவீர்களென்று திருவாய்
மலர்ந்தவுடன் அவர்களிற் சிலரோடிப் பார்ப்பதி பாத
ங்களில்தொழுதுதாயே, ஒருவிருத்தப்பிராமணர்முகவா
யிலில் எழுந்தருளி தமதுவரவை உமக்கு அறிவிக்கச்
சொல்லினரென்றுவிண்ணப்பஞ்செய்ய, மகிழ்ந்து விரை
வில் அம்மாதவரை அழைத்து வருவீர்களென்று ஆக்கி
யாபித்தவுடன் தீவரமாகமீண்டு சுவாமீ, எமதிறைவிதே
வரீரைப்பார்க்கவிருப்புற்றிருக்கின்றாள். வாரும்வாருமெ
னச்சொல்லியவுடன் உள்ளேபிரவேசித்துத் தமதுதேவி
வீற்றிருக்குஞ் சாலையைச்சேருமுன்னிலையில் சிவபிரான்
திவ்வியமங்களவடிவுள்ளபிராமணனாகிவருவதைக் கண்ட
வுடன், மனங்களித்தவளாய்எதிர்கொண்டுஎமதிறைவருக்
குஅன்பரிவொன்றுபத்திவிசுவாசத்துடன்சேவித்து தம
துஇருப்பிடத்துக்குஅழைத்துப்போய்பொற்பீடத்தில்வீ
ற்றிருக்கச்செய்து,விதிப்படிக்குஅர்க்கியபாத்திய முதலா
ன உபசாரங்களை முடித்துக் கரங்களைக்கூப்பி நிற்கின்றக
ன்னிகையைக் கிருபையாகப்பார்த்தருளிபசியஞாயிறொத்
த வடிவினையுங்களங்கரகிதமாய் விளங்கும் பூர்ணசந்திர
னைப்பழித்த திருமுகமண்டலத்தையும் பெற்றபெண்ண
ரசே? நாமொரு பிரயோ சனத்தை இச்சித்து இவ்விடம்
வந்தோம், அதனைமறுதுதருவையாயிற்சொல்லுவோமெ
ன்று திருவாய் மலரக்கேட்ட பராபரை,என்னால்முடியுங்
கருமத்துக்குத் தடையிராது, அருளிச்செய்கவென்றலும்
புன்முறுவலுடன் உம்மைத்திருமணஞ்செய்ய விருப்புற்
றுவந்தோம். அதைத்தடைசெய்யாமல்இசையவேண்டுமெ
ன்று நயமொழிகளாற்சொன்னமாத்திரத்தில், செவிகளைப்
பொத்திப்பஞ்சாக் கரத்தைச்செபித்துச்சிந்தையும்,உடலு
ந்,திடுக்கிட்டு நடுங்கப்பெருமூச்செறிந்துகோபித்து. லோ
க நாயகனைக் கடிமணஞ் செய்யக் கருதித் தவஞ்செய்யும்
என்னை இச்சித்து இவ் வார்த்தைகளைப் பேசப் படு
மோ வென்று சீறிச் சொன்ன மாத்திரத்தில், கபட
ப்பிராமணர்நகைத்து, குறி குணஞ்செய்கை யற்றவனா
ய் மகத்துக்களுக்குங் காணப்படாத பரமசிவன் உன்னைம
ணஞ்செய்வது அரிது அரிது. ஏன்வீணாகத் தவத்தைச்
செய்துவருந்தித் திரேகமெலிய வயதை அவத்திற்கழிக்கி
ன்றாய். நான்கேட்டுக் கொண்டபடிக்குச் சம்மதிப்பையா
யின் இம்மையிற் பெறும்பயன் சித்திக்கும். ஏன்வீணெ
ண்ணங்கொண்டு வாடுகிறாய்என்று சொன்னதைக்கேட்டு
மனம்பதைக்க எமதிறைவி பிராமணனைப்பார்த்து, பரம
ன் எழுந்தருளிப் பாணிக்கிரகணஞ் செய்வதற்கான அரி
யவிரதங்களைச் செய்வேன் அதற்குக் கர்த்தனிரங்கிக்காட்
சிகொடுக்காமற் போவாராயின், வலிதிற்பிராணனை இழக்
க நிச்சயித்திருக்கின்றேன். இது சத்தியமாகும். நீர்பித்த
ராதலால், இவ்விதபாதகத்திற்கு ஏதுவானவாக்கியங்களை
ப் பேசிக்கொண் டிருக்கின்றீர். உம்மைப்பார்க்கச்சகிக்கப்
படவில்லை. புறம்பிற்போம்போமென்று கோபித்துச்சொ
ல்லி, விரைந்துசென்று பக்கத்திலோரிடத்தி லிருந்தாள்.
அம்மன்குறி குணங்களையும் புத்தியையுங்கண்ட பரமசி
வன்மகிழ்ந்து, அவ்விடத்திற் சூழ்ந்திருக்குந் தோழிகளு
க்குத் தோற்றாது தமது நிசதெரிசனத்தைக்காட்ட, அச்
சேவையைக்கண்ட பார்ப்பதியானவள் நடுநடுங்கி, விழிக
ளில் ஆனந்தவாரிபெருகத் திரேகம்பூரித்து, நமதிறைவ
னென்று அறியாது பிராமணனென்றெண்ணி இகழ்ந்துஇ
ழிவாக வசனித்தோ மென்னும் பயத்துடன் வலம்வந்து,
பாதார விந்தங்களிற் சேவித்து, அறிவின்மையால்தேவரீ
ர் மாயையைத் தெரியாமல் தூறினேன். உமது அனுக்கிர
க மிருக்குமாயின், சகலஉணர்ச்சிகளையும் பெற்றிருப்பே
ன். ஆதலால், அடியேன்செய்த பிழைகளைப்பொறுத்து ர
ட்சிக்க வேண்டுமென்று போற்றுந் தேவியைக்கிருபையா
கப் பார்த்தருளி, உனதுமனவுறுதிக்கும் அன்புக்கும்மெ
ச்சினோம், பயப்படவேண்டாமென்று ஆகரித்தகர்த்தனை
மீளவுஞ் சேவித்து, பத்திபுடன் சிவநாதன்பெருமைகளை
ப்போற்றி, விழிகள்இமையாது ஆனந்தவாரியில்திளைத்து
மனக்குழைந்து நிற்பதைத் தோழிகள்பார்த்து, இதுஎன்
ன அதிசயமாயிருக்கின்றது, ராசபுத்திரி நம்மைநோக்கா
ள். வசனித்தவளுமல்ல வந்தபிராமணன் மாயாவாதியை
ப்போற் காணுகின்றது. மேலும்பூர்வத்தில்நேசங்கொண்
டிருந்தவர்களை யொத்துத்தோன்று கின்றது. இனிஇதன்
காரணங்களை வெளிப்படையாகத் தெரிய இருக்கின்றோ
மெனச் சிலர்சங்கையுற்று நிற்கவும், அரசன்இச்செய்திக
ளை அறிவானாயின், என்ன தெண்டனை கிடைக்குமோவெ
ன்று சிலரேங்கவும், இவ்விதமாகக் கலங்குகின்ற தறுவா
யில், சிலசேடியர் அரண்மனையைநோக்கியோடித்தக்கனை
க் கண்டு சேவித்து சுவாமீ? உமதுபெண் தவஞ்செய்கின்
ற இடத்தில் ஒரு பிராமணன் வந்தான், அவனைக்கண்ட
வுடன் முன்னம்பழகினவளைப்போல அவன்மையலில்அ
கப்பட்டு எங்களைப்பாராள். தவஞ்செய்வதையும் மறந்து
திப்பிரமைகொண் டிருக்கின்றாள். இதுசெய்தி தேவரீர்
சித்தம் அறிகவென்று விண்ணப்பஞ் செய்ததைக்கேட்ட
தட்சப் பிரசாபாலகன்போதவுணர்வினற் பரமேஸ்வரன்
எழுந்தருளினரென் றறிந்து களித்துத்துள்ளிக்கூத்தாடி
என்புத்திரியை லோகநாயகனுக்குத் திருக்கலியாணஞ்செ
ய்து கொடுப்பேனென்று நிச்சயங்கொண்டான்.

---

## திருமணப்படலம்.

தொல்லையில்வதுவையந்தொழினடத்திடா
வொல்லுவதெற்றையென்றுளங்கொண்டாய்வுழி
நல்லனயாவுமங்காளினண்ணலு
மெல்லையிலுவகைமிக்கேம்பலெய்தினன்.

---

அதன் பின்பு திருமணஞ்செய்யக் காலம்பார்க்குமிடத்
தில் தன்பெண்ணுக்கும் பரமசிவத்துக்கும்பொருத்த மு
தலானவைகள் அனைத்தும் அத்தினமே சுபகரமாகக்கண்
டபடியாற் களித்து, அவ்வாறேமுடிக்க நினைந்தவனாய், அ

ம்மகோச்சவத்துக்குத் தேவர் ரிஷிகள் ஆதியானவர்கள்அ
தி சீக்கிரத்தில்வந்து சேரும்படிக்குச் சொல்லி வருவதா
கப் பலதூதரைத் துரத்தி தன்பட்டினத்தை அலங்கரிக்க
க் கட்டளையிட்டான். அவ்வாறே மாடமாளிகைகளைத் தி
ருத்தி, பனிநீரினல் தெருக்களில்துகளை யடக்கி, சந்தன
க்குழம்பினல் முற்றங்களை மெழுகிக்கோலமிட்டு, பூர்ண
கும்பங்கள் அமைத்து, மகரதோரணங்கள் கட்டி, கொடி
களை நாட்டி, கமுகுகதலிகளை எங்குமிறுத்தி, மற்றச் சி
றப்புக்களையும் அலங்கரித்து, மேலும்அரசன் வாசஞ்செ
ய்யும்அரண்மனையைமுன்னினும்பதின்மணங்கு அதிகசி
றப்புள்ளதாய்த் தெய்வலோகமும் நாணும்படிக்கு நவரத்
தின மயமாகச் சோடித்து விதானங்களைத் தூக்கி, மணப்
பந்தலுஞ்செய்து முடித்து அறிக்கையிட, தக்கன்மகிழ்சி
றந்து மின்னலையொத்த இடையையுடைய பார்ப்பதிகவ
ஞ்செய்யுங்கன்னிகாமாடத்திற்போய், பரமசிவத்தைத்தெ
ரிசித்துப் போற்றிவணங்கி, கரங்களைக்கூப்பி, தேவாதி
தேவா? தேவரீரைத்திருக்கலியாணஞ்செய்ய அடியேன்பு
த்திரி அரியதவங்களைச் செய்தாள். ஆதலால், கிருபையு
ற்றுக்கிரகத்துக்கு எழுந்தருளி, என்கன்னிகையைத் தத்
தஞ்செய்து கொடுக்கப் பெற்றுப்போக வேண்டு மென்று
துதிக்குந் தக்கனிடத்து அன்பாய்ச்சம்மதித்து, ஈஸ்வரியு
டன் தவச்சாலையைக்கடந்து, வீரவெண்டையமணிந்தபா
தாரவிந்தங்கள் சிவக்கநடந்து, தக்கன்மாளிகை முகவாயி
லுக் கருகில் வந்தவுடன், சுமங்கிலிகள் எண்வகை மங்கல
ஆலங்களையேந்தி எதிர்கொண்டு சுழற்றி மீண்டபின்பு,உ
ள்ளேபிரவேசித்து, கலியாண மண்டபத்தில் ரத்தினமய
மாய் விளங்குஞ் சிங்காதனத்தின் மீது எழுந்தருளினர்.

அக்காலத்திற் பார்ப்பதியை வேதவல்லிகண்டு, பரிவா
ய்வரவழைத்துத் தழுவி,முத்தமிட்டு,தன்னரண்மனைக்கு
அழைத்துப் போய்,பரிமளமிகுத்த தயிலத்தைத்திமிர்ந்
து,பின்னல்களை மெல்லெனச்சிக்கறுத்து,மங்கலவாழ்த்து
க்களைச் சொல்லி,பலகன்னியர்கள் நலங்கிட்டு கங்காசலங்
களினல் ஸ்தானஞ்செய்வித்து,பனிலைப்போன்ற வஸ்தி
ரத்தினல் ஈரத்தைப்புலர்த்தி, அகிற்சந்தனப்புகையையூ
ட்டி,விலையுயர்ந்தபீதாம்பரத்தையுடுத்திசிரோரத்தினபர
ணங்களைப் பூட்டி,தனங்களினிடத்தில் தொய்யல்கொட்டி
பிறையையொத்து விளங்கும் நுதலில்திலதந்தீட்டி, திவ்
வியபரிமளக் கலவைச்சாந்துகளையூட்டி, மணமிகுந்தபுஷ்
பமாலைகளைச் சூட்டி, திருவழகை ஆடியிற்காட்டி, தீட்
டிவீட்டி, சேடியர்களைக்கூட்டி போற்றுதனூட்டி, பெண்
கள் கிரீட்டியான அம்மனைப் பரமேட்டி யிடப்பாகத்திற்
கூட்டினர்கள். அந்தச்சுப ஓரையிற் பலமங்கலவாத்தியங்
களும், சமுத்திர கோஷடத்தினு மேலிட்டுத் தொனிக்க
வும், வேதவாக்கியங்களினல் ரிஷிபுங்கவர்கள் வாழ்த்தவு
ங் கர்பகம் மந்தாரந் தேவ தாரம் பாரிசாதமலர்களைத்தே
வர்வாரி இறைத்துத்துதிக்கவும், இம்மகோச்சவநடந்துவ
ருந்தருணத்தில், முன்னந்தூதர்களோடிச்சோபனஞ்சொ
ல்லக்கேட்ட விஷ்ணு பிரமனதியானவர்கள், புஷ்பத்தினி
டத்தில் தேனைக்கிரகிக்க வண்டு கூட்டங்கள் பலதிக்கினு
மிருந்து வந்து இசைகளாற் றுனித்து மொய்ப்பதைப்
போல, லோகநாயகனைச்சூழ்ந்து சேவித்துப்போற்றி நின்
றனர். அச்சமையத்தில் தும்புருநாரதர் யாழினிடத்துப்ப
ரமன் கீர்த்திகளைப்பாடவும், கருடகாந்தருவர்சித்தவித்தி
யாதரர் கின்னரர் வீணைகளைமீட்டித் தேவாதிதேவன்பெ
ருமைகளைக் காதுகளுக்கின்பமாகத் துதிக்கவும், இலக்கு
மிசரஸ்வதி தேவகன்னியர் லோகநாயகியைச்சூழ்ந்து கற்
பகமலர்களை றைத்து மங்கலவாழ்த்துக்களைப் பாடிக்க
ளித்திருக்கவும், இவ்விதமாகச் சகலரும் சந்தோஷசாகர
த்தில் மூழ்கிக்களித்திருக்கின்ற தறுவாயில், முகூர்த்தகா
லம் நேர்ந்தபடியால், பிரமன் முதலானவர்கள்சூழ வேத
ங்கள்முழங்க, தக்கனனவன் பரமேஸ்வரன் சன்னிதான
த்தில் வந்து, தேவியான வேதவல்லி பொற்கரகத்திற் கங்
காசலமேந்திவிட, சிவத்தின்பாதகமலங்களை விளக்கி, கற்
பகமலர்களினல் அருச்சித்து, தூபதீபங்கள் கொடுத்து,
தேவர் ரிஷிகளாதியானவர்கள் போற்ற கன்னிகா தானஞ்
செய்ப உத்தேசித்து, பரமேஸ்வரன் திருக்கரத்திற் பார்
ப்பதி கரகமலங்களைச் சேர்த்து தேவாதி தேவனே? அரு
மையாகவளர்த்த விக்கன்னிகையைத் தேவரீருக்குப் பாரி
யாகக் கொடுத்தோம். செல்வமாக வாழ்ந்திருப்பீர்களென்
று, தன்பத்தினி சலம்வார்க்க கண்ணன் பிரமன் முப்பத்
துமுக்கோடி தேவர்க்கள் நாற்பத் தெண்ணயிரம் ரிஷிக
ள் முதலானவர் துதிக்க, இலக்குமி கலைமகளாதியமங்கை
யர் மங்கலவாழ்த்தெடுப்ப, கன்னிகா தானஞ் செய்தான்.
அக்கலியாண மகோச்சவத்தை நேத்திரோச்சவமாகத்தெ
ரிசித்த விண்ணவர் மண்ணவர் நாகர், பூர்ண சந்திரோத
யம்கண்ட சமுத்திரத்தைப்போல, திசைகளெங்கும் செ
விடுபட உத்தரியங்களை வீசி, சுபங்களைக் கொண்டாடிப்
போற்றுந் தறுவாயில், ரூபநாமக்கிரிகையற்று,எள்ளுக்கு
ளெண்ணெயைப்போல, சராசரப்பிரபஞ்சங்க ளனைத்தி
னும் பொருந்தி, அவைகளின் வினைப்போகங்களை யூட்டி
நடிப்பிக்குங் காரணகர்த்தன், இவ்விதத் திருவிளையாடல்
களை முடித்தவுடன், சடுதியில் மின்னலையொத்து மறைந்
தார்.

அக்காலத்தில் உமையவள், தன்பக்கலின் வீற்றிருந்த
நாயகனைக் காணுமையால், அரியதவத்திற்பெற்ற செல்வ
த்தை இழந்தவர்களை நிகர்த்து, உற்சாகத்தை நீங்கிவருந்
தி, மணப்பீடத்தி னின்று மெழுந்து, லட்சுமிசரஸ்வதிஇ
ந்திராணி யாதியான கன்னியர் இருக்குமிடத்திற்சென்று
அக்கினியிற் பட்டு உருகிய தங்கத்தைப்போல, கரைந்து
கரைந்து ஏக்கமுற்று, பெருமூச்செறிந்து, மருண்டு, சோ
பித்து வாடி திரேகமெங்கும் முத்துக்களைப்போல வியர்க்க
வெதும்பி கணவன் திருக்கோலத்தை நினைந்து,விண்டுவா
தியானவர் நெருங்கிய இந்தமகாசபையில் வீற்றிருந்த கர்
த்தன் மறைந்ததாற்கள்வனே? அல்ல, திருக்கயிலையைக்க
டந்து பாதகமலங்கள்நோவ இவ்விடமெழுந்தருளி, அடி
யேனை ஒரு பொருளாக நினைந்துமணஞ்செய்த நாதனைக்
கள்ளனென் றெண்ணப்படுமோ! கொடியளாகிய யான்சரீ
ரம் வருந்திச் செய்ததவம் சிறிதென நினையாமற் பிதற்று
வ தடாதென்றும் பலபலவிதங்களாகப் பன்னிவருந்தும்
பார்ப்பதியைப் பரிமளபுஷ்பமணிந்த அளகத்தையுடைய
வேதவல்லி தழுவியணைத்து, தாயேவருந்தாதே. உன்க
ணவனைச்சேருகிறவரையில் தவத்தைச் செய்திருப்பாயெ
ன்று தேற்றும்போது, பக்கத்தில் நின்றபூமகள் நாமகளா
தியர் அம்மனைப்பார்த்து, லோகநாயகியேவாழி. சகலபுவ
ன சராசரங்களையும் உண்டுபண்ணுவீர். சமஸ்தமுமுமம
துசொரூபமாகும் கபடநாடக சூத்திராவதாரியாகிய உம
துகணவனெங்கும் போகார். அவருக்கொருமறைவுமுண்
டோ? தவத்தைத் தொடங்கக் கருதினையோ? உங்கள்திரு

விளையாடல்களை அளவிடப்படுமோ? முழுதினும்யாவராற் கண்டறியலாகும். மனதினால்தேடற்கரிய உமதுகணவனையும் உம்மையுந் தெரிசிக்கப்பெற்று, சகலவினைகளையும் போக்கினோம். சனனவாதையை ஒழிந்தோம். ஞானவாரியானது மனதிற்பெருகித் தேக்கக்கண்டோம். கிருதார்த்தரானோம். நாங்கள்செய்ததவம் கொஞ்சமல்ல வென்று கொண்டாடித் தேற்றினார்கள். அப்போதுபரமேஸ்வரிஅவர்களைக் கிருபையாகப்பார்த்து, மனக்கோட்டம்நீங்கி, தவஞ்செய்வதாக முன்னந் தாமிருந்த இடத்தைச் சேர்ந்தாள். இவைகள்அனைத்தையும் மகாவிஷ்ணு முதலானவர்கள்கண்டு, அற்புதமடைந்து, கர்த்தனெங்கேசென்றார்? இதுவுமொரு மாயாவிலாசமாகும் தமது நாயகிக்கொளித்த காரணமின்ன தென்று தோற்றவில்லை, சகலமும் பின்னாற் காணுவோமென்று இவ்விதமாக ஊகித்துமயங்கிமேகத்தில் மறைந்த சந்திரனையொத்து, மதிமருண்டு வருந்தினார்கள். இவைகளையெல்லாம் தக்கன்கண்டு, வடவானலத்தைப்போற் கோபித்துகண்களில் அக்கினிப்பொறிபறக்க பெருமூச்செறிந்து, பொற்கடகங்கள் தரித்தகரங்களைத் தட்டி, மூக்கின் மீது விரலைவைத்து நல்லகாரியம்நல்லகாரிய மென்று திரேகமெங்கும், அனலெழ நகைத்து நவரத்தினமயமான கிரீடந்தாங்கிய சிரத்தையசைத்து, மனவெழுச்சிபெற நாம்செய்தவிவாகம் வெகுநேத்தியென்று சபையாரைப்பார்த்துச் சொல்லுவான் வேண்டியவரங்களைச் சகலருக்கும்கொடுக்குந் திறம்பெற்றதான் என்பெண்ணைக்குறித்துவந் தவளைப்பாணிக்கிரகணஞ் செய்து கொள்ளவேண்டுமென்று இரந்தான், அதைநானறிந்து, வேதவிதிப்படிக்குத் தேவர்கள்சூழ அக்கினிசாட்சியாக, கன்னிகாதானஞ் செய்யப்பெற்றவன் சகலரும்நகைக்க நிரோதுவாக மறையக்காரணமென்ன நான்அருமையாகவளர்த்தபெண்ணைத் தேடிவருவானேன், பின்பு இப்பேர்க்கொத்ததகாத காரியத்தைமுடிக்க, என்னிடத்தேதேனும் குற்றங்கண்டானோ, இப்படிக்கு அனைவரையும் கலங்கச்செய்து, சகலபுவனங்களும் போற்றிவணங்கும் என்னையும் தீராதபழியில் மூழ்கச்செய்து முன்பின் கொஞ்சமாவது யோசியாமல் திருடனைப்போல மறைந்தான். தாய்தந்தைசுற்ற மொருவருமில்லாமற் சுடலையே இடமாகக்கொண்டுநடிக்கும்பித்தன், பிராமணனாகிவந்ததனால்,அம்மைய லொழிகின்றதோ, அவன்நடக்கைக ளனைத்தும் பொல்லாங்கென்பதை இத்தினந்திஷ்டாந்திரமாகக் கண்டோமென்று அக்கினியைப்போற் பொங்கி, விண்டுமுதலானவர்களை அனுப்பிவிட்டு, பரமன்செய்த ஏளிதத்தை எண்ணிஎண்ணி, மனதில் வன்மத்தைப்பெற்று, தன்அரசாட்சியைச்செலுத்திச் சகலரும்போற்றஇருந்தான்.

இப்பால் கலியாணமண்டபத்தைநீங்கிச்சென்ற பராபரைமுற்படிக்கு அரியதவங்களைச்செய்து வருகின்ற தருவாயில், ஒருசுபதினத்திற் சிவபிரான் தவவேடம்பூண்டு, சிரமாலையணிந்து, பவுத்திரமாகிய தூளிதம்திரேகமெங்கும்விளங்க, மார்பில்உருத்திராட்சதாழ்வடங்களும் முப்புரிநூலும் அசையபாதாரவிந்தங்களின் வேதநூபுரம் சத்திக்க, சிவந்தசடைகள் விரிந்துதோற்ற, வலக்கரத்திற் சூலந்தாங்கி, உமையவள் தவஞ்செய்யுமிடத்திற்கு வருவதை எமதிறைவிகண்டவுடன்திடுக்கிட்டெழுந்து, நமது கர்த்தனுக்கு அன்பொழுந்தருளினானென்னும் பத்திவிசுவாசத்துடன் எதிர்கொண்டு, சேவித்து உபசரித்தாள், அப்போது கர்த்தன் அவளன்புக்கிரங்கி, மான் மழுசூலம் அபயவரதம்விளங்கிய சதுர்புசங்களும் விளங்க, பராசத்திநீங்கிய பாகராய் ரிஷபவாகனத்தில்தோற்ற, லோகநாயகிதெரிசித்து, மனக்கோட்டம்நீங்கி, ஆனந்தவாரியில்திளைத்து அடியேனிடத்துக் கிருபையுற்றுக் கர்த்தனெழுந்தருளினானென்னும் மனச்செருக்குடன் பலதரஞ்சேவித்துப்போற்றி, பத்தவற்சலா, அடியருக்கெளிய தயாநிதியே, சிறியவளிடத்திருக்குங் குற்றங்களை மன்னித்துப் பாதுகாத்து ரட்சிப்பீரெனத்துதிக்குந் தேவியினிடத்துப் பரிவாய்த் தாமரைமலரைப் பழித்து விளங்குந் திருக்கரத்தைநீட்டி எடுத்து, சத்துருக்களைச்சாடும் வெற்றி பெற்றவிடையின்மீது தமதுவாமபாகத்தில்இருத்தி,கணநாதர்சூழ்ந்துபோற்ற,திருக்கயிலாயத்தையடைந்து,எதாப்பிரகாரம் தமதுஆலயத்தில் உமாமகேஸ்பர முகூர்த்தமாய்வீற்றிருந்தார். இக்காரணத்தைக்கண்ட தோழியர்நடுநடுங்கி திடுக்கிட்டோடி, சபாமண்டபத்தில் வீற்றிருக்குந் தக்கனைச்சேவித்து, சுவாமி, செக்கரஞ்சடையினனானபரமசிவன் தவக்கோலங்கொண்டெழுந்தருள,தேவரீர் புத்திரியானவள் கண்டவுடன் அவர்சூதை அறியாமல் தொண்டனென் றெண்ணிச் சமீபத்தில்வந்து சேவித்தவுடன், தமதுதிருக்கோலத்தைக் காட்டி, உமது கன்னிகையை ரிஷபவாகனத்தில் ஏற்றிக்கொண்டு, திருக்கயிலைக்குப்போய்விட்டார். இதுசெய்தி யென்று விண்ணப்பஞ்செய்த மாத்திரத்தில், ஆறிய அக்கினியி னிடத்து நெய்யை ஊற்றியதுபோலக் கோபித்து,விழிகளில்அனற்பொறிசிதறப் பெருமூச்செறிந்து. ஒன்றும்பேசாமலிருந்தான். அத்தருவாயில் நித்தியப்படிக்குத் தேவர்கள்வந்து சேவித்திருந்தபின்பு, அவர்களைப்பார்த்து, கேளும் விண்ணவரே! காளகண்டன் ஆதியில் வந்து நமதுபெண்ணை விவாகஞ்செய்துமறைந்தது உங்களுக்குத் தெரியுமே அந்தநிந்தையை எண்ணிஎண்ணி நான் வருந்தியிருக்க, அந்தக்கள்ளன் இத்தினங் கபாலிவேடந் தாங்கிவந்து, என்புத்திரியை மயக்கிக்கொண்டு போய்விட்டானும் இது எவர்களுக்காவது அடுக்குமோ? தாய்தந்தை சுற்றத்தார்மகிழ்ந்து,சகலசீர் சிறப்புக்களுடனும் அனுப்பக் கொண்டுபோகாமல் உலகவிரோதமான காரியத்தினை முடிக்கத்தகுமோ? இப்படிக்கும் ஆர்செய்வார்கள்? தான் சர்வபரிபூரணனா யிருந்தாலும், அடாதகருமத்தைச் செய்யத் தகுமோ? புகழ்பெற்ற நமது மரபுக்கொரு அழிவை உண்டாக்கினான் மேலும் என்ஆக்கினையைக் கடந்தான், சிவன் இரந்தானென்று சகலரும் பேசுவார்கள். அதனுடன் இம்மணத்திற்கரந்தானென்பது உலகமெங்கும் பரந்ததன்றியும் பழியும்பூண்டான் பித்தனுக்கொருகுணமும் வரன்முறைகளும்உண்டோவென்று இவ்விதமாகப் பலபலதூஷணைகளைச் சொல்லிச் செய்ந்நன்றிமறந்த சிறுவிதியானவன் சபையிலிருந்த தேவணாத்தங்கள் தங்கள் எதாஸ்தானத்துக்குப் போகச் செலவுகொடுத்து அனுப்பிவிட்டு, மனம்புழுங்க அத்தினமுதற் சிவனைநினையாமலும் மதியாமலும் ஐஸ்வரியகெருவத்திற்பட்டு, இறுமாந்திருந்தான், இவ்விதமாகச் சிலநாள் கழிந்துவர, இதனை மகாவிஷ்ணுவாதியானவர்களறிந்து கலங்கி, நடக்க வேண்டுவதை யோசிக்கின்றார்கள்.

## தக்கன்றிருக்கயிலைசெல்படலம்.

மெய்ம்மாதவத்தாற்றிருத்தக்குவிளங்குதக்க
னெம்மான்றனையெண்ணலனுவியிழப்பன்வல்லே
யம்மாவியாமுமவனேவலைபாற்றுகின்ரு
நம்மாருயிர்க்குமிறுவாய்நணுகுற்றபோலும்.

தக்கன் அரியதவத்தைச் செய்துபெற்ற மகதைஸ்வரியத்தைக் கிரமமாக அனுபவியாமலும் அச்செல்வத்தைக்கடாட்சித்த பரமசிவத்தை மதியாமலும் நிந்திப்பதால், துரிதமாக நாசமடைவான். இதுவல்லாமல், நமக்குஅதிபனுக வரங்களைப்பெற்ற இவன் ஏவலை மறுத்து, வேதவொழுக்கப்படிக்கு நடந்துகொள்ள யோசிப்போமாயின், நமது பதவிகளை மாற்றிப்போடுவான். அதற்குப்பயந்து அவனிஷ்டப்படிக்கு நடந்தால், பரமனுற் பதிகளை யிழப்பதன்றியும் பிராணனுக்கிறுதியும் நேருமென்றேங்கி,இனியென்செய்வோம். அதற்கொரு உபாயந் தேடவேண்டும் அதென்னவென்ருல், தாமசப்படாமல், நாமெல்லவரும் தக்கமாபுரத்திற்குப்போய், அகந்தையிற்பெரியவனுன தக்கன்மனதைத் தெருட்டி, திருக்கயிலையைச்சேர்ந்து,கர்த்தனைத் தெரிசித்து வருவதாகச் செய்தனமாயின் நிலைபெற்றிருப்பன். நமக்கொருதுன்பமும் நேரிடவரியாது. ஆதலால், துரிதமாக இதனைச்செய்து முடிக்கவேண்டு மென்று நிச்சயப்படுத்திக்கொண்டு, பிரமனுதியானதேவர் தக்கன்சபைக்குப் போய்க்கண்டு. அவரவர்செய்யும்வந்தனுதிகளைநடாத்தி வீற்றிருந்தபின்பு, பிதாமகன் குமாரனைப்பார்த்துச் சொல்லுவான் அரிதாகப் பெற்ற உன்புத்திரியையும் மருகனுன பரமசிவனையும் நினையாமலும் பாரமலும் இருக்கலாமோ? குற்றம்பார்க்கிற் சுற்றமில்லையென்பதனுல் வயிரத்தைவிட்டு, கோபமுள்ளஇடத்தில்தயையுமுண்டென்பதை யோசித்து நடந்துகொள்ளாவிட்டால்,உன்னிடத்து மிகுந்த நிந்தைசேரும். அதனைத்தீர்க்கமாயோசித்து வழிபடுவையாயின் மேலான கீர்த்தியைப் பெறுவாயென்று சொன்னதை ஆராய்ந்துநல்லகாரியம்நாம்செய்யவேண்டுவ தென்னவென்று கேட்குந் தக்கனைப்பிரமன்பார்த்து, நீவெள்ளியங் கிரிக்குப்போய், உன்மகளையும் மருமகனையும் கண்டு விசாரித்து வருவது உத்தம மென்று சொல்ல, அதற்குச்சம்மதித்து. பிதாவாதி யானவரை அவ்விடத்திலிருத்தி பரிசனங்கள்சூழ ரதாரூடனுய்த் திருக்கயிலையைச்சேர்ந்து, ஆலயத்திற்போகவரு முன்னிலையில்,அவ்விடத்தில் நந்திதேவர் ஆக்கினைப்படிக்குக் காவல் கொண்டிருக்கும் பூதகணங்கள்தடுத்தார்கள். அவர்களைக்கோபித்து, என்புத்திரியையும் மாப்பிள்ளையையும்கண்டு விசாரித்து, வார்த்தையாடிப் போகவந்தால் தடைசெய்யவேண்டுவதென்னவென்று சீறிய பாதகனைப் பூதகணங்கள் உக்கிரமாகப்பார்த்து, ஆதியிற் பரமசிவத்தைத் தேவசமுகத்தில் இகழ்ந்துபேசிய நீஅதைமறந்தும் அதற்கொருபரிகாரமும் செய்துகொள்ளாமலும், இவ்விடத்துக்கு எவ்விதமாகவருவாய் அடாமூடா, ஆதியிற் பரமசிவத்தினுல் தகிக்கப்பட்ட திரிபுராதிகள் இராக்கதராய்த் திரிலோகங்களுக்கும் அழிவுசெய்தனராயினும்,கர்த்தனிடத்து அன்புள்ளவராயிருந்தார்கள். அவர்கள் பத்திவிசுவாசங்களில் அனுப்பிரமாணமும் உன்னிடத்திற் கண்டதில்லை. இனிஎவ்விதமாக வாழ்ந்து ஈடேறுவாய். தேவர்களைக் கொல்ல எழுந்த விஷத்தைஉண்டு கறுத்த கண்டத்தைப் பெற்ற லோகநாயகன் அனுக்கிரகஞ் செய்யக் கிடைத்த செல்வப் பெருக்கை அனுபவித்தும் தேவதேவனென்று அறிந்தும், அஞ்ஞானத்தினுல் அவனைமறந்தாய். அவன் மாயையைக் கடந்தவரு முண்டோ? ஆதலால் நீயும்அதிலழுந்தினுய் அவன் பாதகமலங்களைக் கருதிப் பணியாத பாதகனைப் பார்க்கவும் படாது, சிவத்துரோகத்துக்கு ஏதுவாகிய நடத்தையுடைய உன்னை நெருங்கிப் பேசவும்போமோ? இதனுல் நேரும் பாதகங்களைத் தான் கணிக்கப்படுமோ? ஆதலால் பரமேஸ்வரன் சன்னிதானத்திற்சென்று, பக்தியுடன் போற்றிச் சேவிக்கவிருப்புறுவையாயின் இவ்விடத்திலிருக்கலாம். அல்லதுஉன்ஊனை நோக்கி நடந்துவிடலா மென்று சொன்ன வசகம் செவியில் நுழைந்தவுடன்.ஆறிய தணலினிடத்து நெய்யைஊற்றியதைப்போன்று தக்கன்பொங்கி, அளவற்ற பூதப்படைகள் காவல்கொண்டிருக்கும்வாயிலைக்கடக்க அஞ்சி,நிற்கவும் வெட்கித் திரும்புகின்றவன், பலியைத்தேடி உழன்றுதிரியும் பூதங்களே? கேட்பீராக. உங்களிறைவனையொருகாலத்தும் வணங்கேன். அவன்என் மருகனென்பதை மறந்தீர்களோ! விஷ்ணு பிரமனுதியானவர்கள் என்னேவலில் அடங்கி நடக்கின்ருர்கள். சகலபுவனங்களினும்தக்கப்பிரசா பாலகனென்று புகழுங்கீர்த்தி பெற்றேன். இன்றைக்குப் பித்தனுன ஒருவனை வணங்குவேனே? இதன்றியும்என்னைத்தடைசெய்யஉங்களுக்குத்தயிரியமுண்டோ? என் பெண்ணும் மருகனும்இட்ட ஏவலைப்போற்றும் உங்களை நோவவேண்டியதில்லை. எவ்வளவும் எண்ணிக்கையில்லாமல் இவ்வவமானத்தைச்செய்வித்த உங்கள்இறைவனை யாரும் தொழுது துதியாம லிகழும்படிக்குச் செய்விப்பேன். அதையுஞ் சிலகாலத்தில் அறியப் போகிறீர்களென்று பழவினைக்குட்பட்டவனுய், தன்பதிக்குவந்துபிரமனுதியானவரைப் பார்த்துச் சொல்லுவான் உங்கள் இஷ்டப்படிக்குக் கயிலைக்குப்போனேன். என்பெண் பித்தன் மையலிற் பட்டுதகப்பனென் றெண்ணிக்கை யில்லாமல் பாஷாண்டியுடன்கூடி வாய்தல் காக்கும் அவைதிகரான பூதர்களால் என்னைத்தடைசெய்வித்த தல்லாமலும்பங்கப்படுத்தி, மானக்குறைச்சலாகவும் பேசுவித்த தின்னமும் பலவுண்டு. ஐயோ. அவைகளைச்சொல்லவும் நாஎழவில்லை, நினைத்தாலும் நடுங்குகின்றது, இனிப்பலபலபேசியாவதென்ன? உங்கள் வார்த்தையைக்கேட்டு அவர்களிடத்துக்குப் போன என்னை நோவவேண்டுமென்று பெருமூச்செறிந்து ஓய்தேவரோ! என்னை மதியாத பித்தனையும் அவன் பாகத்தமர்ந்த கன்னிகையையும் இத்தினமுதல்நீங்கள்துதிக்கவுஞ் சேவிக்கவும் வேண்டுவதில்லை, இக்கட்டளையை மறுப்பீராயின், அந்நிமிஷத்தில் உங்கள் பிராணனைவாங்கிப்போடுவே னென்று வடவையைப்போற் கோபித்துச்சொன்ன தக்கனைத் தேவர்வணங்கி, உமதுஉத்திரவுக்குப் பிசகுண்டோ? அவ்வாறே செய்யக் கடவோ மென்று விடை பெற்று தங்கள் பதவிகளிற் போய்ச்சேர்ந்தார்கள்.

## பிரமயாகப்படலம்.

இப்படிப்பன்னுள்யாருமிவன்றனியாணைக்கஞ்சி
யப்பணியியற்றலோடுமம்புயமலர்மேலண்ணன்
முப்புரமுனிந்தசெஙகண்முதல்வனதருளாலாங்கோர்
செப்பரும்வேள்வியாற்றமுயன்றனன்சிந்தைசெய்தான்

அதன்பின்பு அளவற்றகாலம் தேவர் தக்கன் ஆணைக்கிக்கு அஞ்சி, அவன் கட்டளையிட்டபடி நடந்து வருகையில் திரிபுரதகனரான சிவத்தின் அனுக்கிரகப்படிக்குப்பிரமன் அரியயாகமொன்றை முடிகக விருப்புற்று, தக்கன் கட்டளையை நினைந்து நான்இறப்பதாயினும் பரமேஸ்வரனை அழைத்துவந்து, வேதவிதியின்படிக்கு அக்கிர பூசையினையும் அவிப்பாகத்தையும் அளிப்பதே காரியமென்று உறுதிகொண்டு. யாகத்திற்குவேண்டிய உபகரணங்கள் அனைத்தையும் சேகரித்து பிள்ளைகளை அழைப்பித்து நாம் செய்யும் யாகச்செய்தியை விண்டுவாதி யானவர்களுக்கு அறிவித்து வரக்கடவீர்களென்று ஆக்கியாபித்து திருக்கயில யத்துக்குப் போய், நந்திதேவர் அனுமதியிற்கர்த்தன் சன்னிதானத்திற்சென்று சேவித்துப்போற்றிநிற்கின்ற பிதாமகனைக் கிருபைபாகப் பார்த்தருளி, வந்தகாரியமென்னென்று கேட்க. சுவாமி? அடியேன்ஒருயாகத்தை நடாத்தநினைந்தேன். தேவரீர் எழுந்தருளி அதைப் பாதுகாத்து ரட்சிக்க வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, நகைத்து நல்லகாரியம், நமதுஉருவாகிய நந்திவருவான். போய்யாகத்தை நடத்தக்கடவாயென்றுஅனுக்கிரகஞ்செய்ய சேவித்து விடைபெற்றுக் கயிலையைநீங்கி தக்கமாபுரத்துக்குவந்து, பிள்ளையைக்கண்டு, நானொருவேள்வி செய்ய எத்தனப்படுவதால் உன்பந்து வர்க்கங்களுடன்வந்துநடப்பிக்க வேண்டுமென்று சொல்ல, நல்லகாரியம்,நீர்முந்திப்போய் எத்தனியும். நாமும்ரிஷிகள் கூட்டங்களுடனும் வருவோமென்று அனுப்ப, பிரமன் மனோவதியைச் சேர்ந்து இஷ்டசித்திகளைத் தரவல்ல க்ஷத்திரயாகத்தைத் தொடங்கினான். இச்செய்தி விஷ்ணு ஆதியானவர் அறிந்து தக்கனிடத்துக்குவந்து சேர்ந்தார்கள் பின்புபரமசிவத்துக்கு அவிப்பாகங் கொடாமல் யாகத்தை நிறைவேற்ற எண்ணங்கொண்ட சிறுவிதி யானவன் அவர்களுடன்கலந்து பிரமன் உலகத்திற் சேருமுன்னிலையில், இவர்கள்வரவை அறிந்த பிதாமகன் எதிர்கொண்டு மரியாதைகளைச்செய்து, யாகசாலைக்கு அழைத்துப்போய், தன்னருகிலிருக்கின்ற ஆசனத்தில் தக்கனை வீற்றிருக்கச்செய்து கேசவனாதியானவர்களுக்குத் தகுதியான இடங்களைக் காட்டியபின்பு வேதமுழங்கத் தானும்பீடத்திலிருந்து. யாகச்சடங்குகளை ஆரம்பித்து நடத்திவருகின்ற தறுவாயில், திருக்கயிலையில் அமர்ந்தபரமேஸ்வரன் நந்திதேவனைப்பார்த்தருளி, பிரமன்நடத்தும் வேள்விக்குப்போய், நமக்குரிய அவிப்பாகத்தைப் பெற்று வரக்கடவாயென்று அனுக்கிரகஞ்செய்ய, சேவித்து விடைபெற்று தமதுகாவலைநீங்கி, அளவற்றகணங்கள் சூழ்ந்துபோற்றித்தொடர,யாகசாலைக்கருகில் வருவதைப் பிரமன்அறிந்து, திக்கென்றெழுந்து எதிர்கொண்டு சேவித்து, அழைத்து வந்துஒருதிவ்விய பீடத்தி லிருக்கச் செய்து, மற்றக் கணாதிபதிகளையும் உபசரித்திருத்தி, யாகத்தைத் தொடர்ந்து நடத்தசெய்கின்றிகொன்ற தக்கன்விழிகளிற் கனற்பொறி சிதறப்பார்த்து, பித்தனுக்காளாய் வந்தவனோஇவனென்று நெருப்பெழநகைத்து, விண்டுவாதியானதேவர் ரிஷிகள்முதலாகக்கூடி நெருங்கியிருக்கின்ற இந்தமகாசபைமத்தியின் விடத்தையுண்டு சுடலையில் நிருத்தஞ்செய்யுங்கூத்தனுக்குஅடிமைப்பட்டபூதங்கள் வந்திருப்பதோ! வெகுநேத்தி. திரிபுரங்களைத்தகித்த அக்கினிவிழியைப்படைத்த சிவன்வாசஞ்செய்யுங்கயிலை வாயிலைக்காவலகொண்டிருக்கும் நந்தியும் மற்றக்கணங்களும் வரும்படிக்குச்சொன்னவர்கள்யாரென்று போதவுணர்விலறிந்து,பிதாவாகியபிரமனைச்சீறி, நான் அன்பாய்தளர்த்தபெண்ணை என்சம்மதமில்லாமலும் வேதவொழுக்கத்துக்கு இழிவாகவும் திருடனைப்போலக்கொண்டு போனபித்தனுக்கும் நமதுகட்டளையைமீறிச் சொன்னாப், அவனேதன்கடைவாயிலைப்போற்றும் ஒருவனை அனுப்பினான், ஆதலால், என்னெண்ணத்தையறிந்தும், எதிர்கொண்டுசேவித்து, உபசரித்துஅழைத்துவந்து, சபைக்குநாயகமாகவும்வைத்தாய், இதனைநீசெய்யத்தகுமோ! பிதாவானதாற்பிழைத்தாய், அல்லதுஉன்தலையை வெட்டிநிலத்தில் உருளச்செய்து போடுவேன் மேலும்இன்னமொன்று உனக்குச்சொல்லுவதாவது, சுடுகாடேஇடமாகப்பூதபசாசங்கள் சூழப்பிணங்களைச் சூலத்திற்கோங்கிநடிக்குஞ்சிவனுக்குப் பழையபடிக்கு அவிப்பாகங்கொடுக்கவேண்டுவதில்லை.

அதேனென்றால். எலும்பு சிரம் சர்ப்பமிவைகளை அணிந்து சுடலைச் சாம்பலைப் பூசிச் சுடுகாடே யிடமாகத் திரியும் பித்தன் வேத விதிப்படிக்குப் பவுத்திரமாக நடத்தும் யாகத்தில் அவிபெறத் தகுமோ, இதுவரையில் வேதவிதி யென்றுந் தகுதியை யோசித்துப் பாராமலும் சிறந்த அவிப்பாகத்தைஅவனுக்குத்தந்தார்கள்.அதையேபழமைபாராட்டத்தகுமோ? இன்றுமுதல்நாரணனைப் பரமாகக்கொண்டு, அக்கிரபூசைசெய்து, முதல்அவிப்பாகத்தையுங்கொடுத்து, மற்றவர்களுக்கும் வரன்முறைப்படிக்கு நடத்தக்கடவாய். தாமதகுணம்பெற்ற சிவன்மூலமென்றுசொல்லும் வேதவாக்கியங்களைப் பரிகரிப்பாய். இனிஇப்பிரகாரஞ் சகலருங்நடந்துகொள்ளப் படுமென்று பிரமனையும் சபையாரையும்நோக்கிச் சொல்லிய விசேஷத்தைநந்திகேஸ்வரர் கேட்டவுடன் இருசெவிகளையும்பொத்தி, பஞ்சாட்சரத்தைச்செபித்து, சிவநாமங்களைத்துதித்து, கர்த்தனே, இப்பாதகன்பிதற்றுந் தூஷணைகளையுங்கேட்கவோ! அடியேனைஏவினீரொன்று வருநதி, உடனே வடவானலத்தைப்போலச் சீறியதறுவாயில், அக்கொடுமைக்கஞ்சினவர்களாய்த் தேவரொடுங்கி வாடவும், அக்கினி மனம்வருந்தி ஓடவும், அண்டங்களனைத்தும் நடுநடுங்கிஆடவும், சீவராசிகள்தத்தளித்துச் சோரவும் புவனஅடுக்குகள் குலைந்துமாறவும், இந்தஉற்பாதத்தினைக்கண்ட விஷ்ணு பிரமன் திகிற்பட்டு,தக்கனுக்குப்பயந்து, இவன்பேசியதைத்தகாதென்றுசொல்லாமலிருந்தநயக்கென்ன தெண்டனை வருகின்றதோவென் றமுங்கினார்கள். அத்தறுவாயில் நந்திதேவர் கண்களில் அக்கினிப்பொறிசிதறத் தக்கனைப்பார்த்து, உமாபரமேஸ்வரனை இகழ்ந்த உன்வாயைத்துளைத்து நாவையரிந்து விடுவேன். ஆனால்கர்த்தன் அனுமதியில்லாதபடியால், மன்னித்தேன். இக்காரணத்தினால் நீபிழைத்திருக்கப்பெற்றாய்.இனிஒருகாலம்இகழ்வையாயின், உன்தலையைவெட்டித்தள்ளுவேனெனச்சொல்லி,இம்மகத்தில்முதல்அவிஎ

மதுகர்த்தனுக்கு இல்லையாயின், அவருக்குமேலானவர்கள்யாரிருக்கின்றார்கள், பரமசிவத்தின்கட்டளையில்அடங்கி நடக்கின்ற விஷ்ணுவை ஆதியாகநினைக்கின்றாய் ஆதலால் லோகநாயகனை பரமேஸ்வரனை நீக்கி யாகஞ்செய்கின்றவன்சிரமறக்கடவது. மேலும், எமது கர்த்தனைஇச்சபையில் நிந்தைகூறியபடியால், அவரருளினாற்பெற்ற செல்வப்பெருக்கனைத்தும் சிலதினத்தில் அழிந்துபோகக்கடவது, உன்மனேபீஷ்டப்படிக்குத்தந்ததயாநிதியை வசைபேசியஉன்தலையற்று, ஆட்டுத்தலையைப் பெறக்கடவாய். தேவாதிதேவனை நீபழித்து உதாசனிப்பதை மறுமல் விரும்பிக்கேட்கும் மனவுறுதியைப் பெற்ற இத்தேவர்கள்ஒருவிசை இறந்தும் பிறந்தும், பின்பு அளவற்ற காலம் சூரனென்னும் ராட்சதனால் வாதைப்பட்டுத் துக்கசாகரத்தி லழுந்தக்கடவதென்று கொடியசாபமிட்டு, சபையாரைச் சட்டைபண்ணுமலெழுந்து, கணங்கள்சூழக் கயிலைக்குப்போய், இச்செய்திகளைக் கர்த்தனுக்கு விண்ணப்பஞ்செய்து, கிழக்குக்கோபுரவாயிலில் தமதிறைமையைச்செலுத்தியிருந்தார், எமதுகர்த்தனை நந்திதேவர் போனபின்பு, சபையிலிருந்த விஷ்ணுமுதலானவர்கள் பயந்து, விபரீதம்விளைந்ததென்று வருந்தினர்கள். பிரமன்இச்சாபங்களைஎண்ணிஎண்ணி, ஏக்கமுற்று, பிள்ளையின்உத்தரவைக்கடக்கப்பயந்து வருந்தி, யாகத்தைமுடிக்கவும்அஞ்சி, நிறுத்திவிட்டான். இவைஅனைத்தையுங் கண்டதக்கனென்றும் பேசாமற்கறுவி, உள்ளே பயம்வருத்தவெளிக்குச் சந்தோஷித்தவனுய்ச் சபையைவிட்டு எழுந்து, தேவர்சூழ்ந்துபோற்றிவரத் தன்னகரத்தைஅடைந்தான். மற்றவிண்டுவாதியானவர்கள் நந்திதேவரிட்டசாபத்தை நினைந்து நினைந்து மனவாட்டத்துடன் தங்கள் பதவிகளிற் சேர்ந்திருந்தார்கள்.

---

## தக்கன்சாலைசெய்படலம்.

அன்றுமுன்னுகவேயளப்பில்காலமா
வொன்றுமவ்வேள்வியிலோம்புகின்றலர்
துன்றியமுனிவருஞ்சுரரும்பார்தனின்
முன்றிகழந்தணர்முதலினோர்களும்.

மேற்கூறிய பிரமயாகம் சிதைந்த நாள்முதல் தேவர் ரிஷிகள் பிராமணர் யாதொருவேள்வி விரதங்களைச் செய்யப்பயந்திருப்பதை ஊழ்வழிப்பட்ட தக்கன்அறிந்து, ஒருதினம் சபையில்வந்திருக்கும் விண்ணவராதியரைநோக்கி, வேதாகமங்களை வரையறக்கற்ற நீங்கள்வெகுகாலமாகயாகாதிகிருதுக்களை நடத்தாமலிருப்பதற்குக்காரணமென்னஎன்றுகேட்க, ஆதியிற் பிரமன்தொடங்கியமகத்திற் சிவனுக்கு அவிப்பாகங்கொடுத்து நிறைவேற்றுததினாலும், நந்திதேவரிட்டசாபத்தினாலும்பயந்து ஒருகருமத்தையும்செய்யாமலிருக்கின்றோமென்றுசொல்லக்கேட்டு நகைத்து, ஒருகாவலனை நந்தியிட்டசாபத்துக்குப்பயந்தோ? வேள்விகளைமறந்தீர்கள். நல்லகாரியம். முந்திநாம் ஒருமகத்தைச்செய்து முடிக்கின்றோம். அதன்பின்புநமதுகட்டளைப்படிக்குநீங்களும்நடத்துவீரெனக்கோபித்துச்சொன்னமாத்திரத்தில், ஐயனே, அப்படிக்கேசெய்துவருவோமென்று நடுங்கிச்சம்மதிக்க, அவர்களனைவரையும் போக்கச்செலவுகொடுத்தனுப்பிய சிலநாளைக்குப் பின்புபிராரத்தகர்மந்தூண்ட யாகத்தைச்செய்யநினைந்து, பிரமனுக்குச்சமதையாகச் சிருட்டிக்கவல்ல மயனை அழைப்பித்து, நாமொருயாகம்செய்யநினைந்ததால், அதற்குவரத்தக்கதேவர் ரிஷிகள் மண்ணவர் பாதலவாசிகளனைவரும்இருக்கச் சாலைகளும், அதற்குரியபண்டங்கள் வைக்குமிடங்களாதியாகவிசாலமாக வேதவிதிப்படிக்கு நிருமிக்கக்கட்டளையிட, அவன்சேவித்துப்போய், கங்கைக்கரையிற் கனகலமென்னும் பவுத்திரமாகிய இடத்தில் யாகசாலைசெய்ய உத்தேசித்து, ஆயிரயோசனை அகலநிகளமுள்ளதாக மதிலெழுப்பி, நான்குதிக்கினும்மகம்மேருவுக்குச்சமதையானகோபுரங்களை நிருமித்து அண்டச்சுவரைப்போன்றமதில்களினிடங்கடோறுங் கொத்தளங்கள்அமைத்து, மிகுந்தகாவலையுடைய ஒருகோட்டையாக்கி, அதனுட்புறங்களில்தேவகன்னியர் ரிஷிபத்தினியர் இருக்குமிடங்களும் அவர்கள்உல்லாசமாயுலாவுஞ் சோலைகளும் நந்தவனங்களும் நீராடயோக்கியமான தடாகங்களும் உண்டாக்கி, தபசிகள் பிராமணராதியர் இருக்குமிடங்களும் யாகத்துக்குவந்தவர்கள் இஷ்டமாகப் புசிப்பதற்கு வேண்டிய பதார்த்தங்கள்வைக்கும் அறைகளும் அளவற்றவர் பந்திநீர்ந்து புசிக்குஞ்சாலைகளும் தெய்வலோகமும் நாணும்படிக்கு உண்டுபண்ணி, விருந்தினருக்குதவியான தாம்பூலம்கலவைச்சாந்துகள் புஷ்பவகைகள் பனிநீர்முதலானவைவைக்கும்அறைகளும் பீதாம்பரவஸ்திராபரணங்கள்திரவியக்குவைகள் நவரத்தினராசிகள் ஆதியாகத்தானத்துக்குயோக்கியமானவைகளைச் சேர்க்குமிடங்களும் அமைத்து பிரமனுலகமோ என்றையுறத்தக்க வேள்விச்சாலைகள் விஸ்தீரணமாகச்செய்து, மத்தியில் நூறுயோசனைப்பிரமாணத்திலிடந்திருத்தி, ஓமமுடிக்கத்தக்க மூன்றுவித குண்டங்கள்வேதிகைகள்விதித்து, பலவகைச்சித்திரங்கள்நிறுவி, இவ்விதமாகச் சகலகருமங்களையுஞ்செய்து முடித்தவுடன் தக்கனைக்கண்டு, தேவரீர்ஆக்கியாபனப்படிக்கு யாகசாலை முடிந்ததென்று விண்ணப்பஞ்செய்ய, தக்கன்போய், அவைகளைக்கண்டு மகிழ்ந்து, சிற்பியைக்கொண்டாடி வேதவிதிப்படிக்கு வேள்வியைநடத்தநினைந்து அருகிலிருந்த ரிஷிகளைநோக்கி, யாகத்துக்குவேண்டுஞ் சமித்துத்தருப்பை மாவிலை புஷ்பபத்திரங்கள்பசுக்கள்முதலாகவேண்டும் உபகரணங்களைச் சேகரிக்கும்படிக்கு அனுப்பி, காமதேனு பஞ்சதருக்கள் சிந்தாமணி சங்கநிதிபதுமநிதிகளை வரவழைத்து, தான்நடத்தும் யாகத்துக்குவருகின்றவர்களுக்குவேண்டியதையுதவக் கட்டளையிட்டு, யாசகர்களுக்குவெறுக்கக்கொடுக்கச் சிலரைநேமித்து, சகலபண்டங்களையும் வரன்முறையாகத் தகுந்தஇடங்களிற்சேர்க்கச் சிலரையேவி, தனதுபந்துவர்க்கங்கள் முப்பதினயிரவரும் அவர்களுடன்வரத்தக்கவர்களும் தன்னுடன்பந்திபோசனமுதலானவைகளைக் கிரமமாகஉபசரிக்கப் பலருக்குங்கட்டளையிட்டு, மற்றவர்களுக்கும்வேண்டும் பண்டுபலாதிகளைக்குறைவறக்கொடுக்கச் சிலரைஏற்படுத்தி, இவைகளனைத்தும்நடந்துவருங்காலத்தில், சிவன்தவிரமற்றமகாவிஷ்ணுபிரமனுதியானவிண்ணவர்மண்ணவர் பாதலவாசிகள் அனைவரும் இந்தவேள்விக்குவரக்கடவதென்று அறிவித்து வருவீரெனப் பலகோடிதூதரைத் தூண்டியபின்பு வந்தபண்டங்களை அவ்வவ்விடங்களிற் சேர்த்துக்கொண்டு, பசுக்களை யூபஸ்தம்பங்களிற் பந்தித்து, அதற்குரி

யபூசைவிதிகளை வரன்முறைப்படிக்குத் தொடங்கி,நியமித்தமுகூர்த்தகாலத்திற்குண்டமண்டபவேதிகைகளையும் யாகோபகரணங்களையும் வேதவிதிப்படிக்குச் சுத்திசெய்து, துவாரபாலகராதியான தேவாங்கங்களைத் தத்தஸ்தானங்களில் ஆவாகனஞ்செய்து, அதற்குவேண்டிய தருப்பைமாவிலை வகைகளைக்கொண்டு தத்தாயித்தப்படுத்திவருங்காலையில், முன்னந்தக்கன் அனுமதியிற்சென்றதூதர்விரைந்தோடி, சத்தரிஷிகளாதியான தவத்தர் சூரியசந்திரர் திக்குப்பாலகர் முதலானவர்களுக்கு அறிவித்து, மனோவதிப்பட்டினத்துக்குப்போய், பிரமனைச்சேவித்து சுவாமி, உமதுபுத்திரரான தட்சப்பிரசாபதியாகஞ்செய்ய எத்தனித்திருக்கின்றார். அவர்செய்கின்ற யாகமாகிய அதற்குத் தேவரீரை வரச்சொன்னாரென்று விண்ணப்பஞ்செய்து, வைகுந்தத்தைச்சேர்ந்து,விஷ்ணுவைப்பணிந்து வேள்விக்குவரும்படிக்குத் தெரிவித்து தேவேந்திரன்முதலான விண்ணவர்களுக்கும் அறிவித்துமீண்டார்கள். அக்காலத்தில்விஷ்ணு சீதேவிபூதேவியுடன்,கருடன்மீதாரோகணித்துப் பாகவதர்சூழ்ந்துபோற்றப்புறப்பட்டதைப்பிரமன்அறிந்து கலைமகள் சமேதனாய் அன்னத்திலேறிப் பெரியோர்கள் புகழ்ந்துவரத்தன்னுலகத்தைக் கடந்துபோக, இந்திரன் அயிராணியுடன் அயிராவதத்திற்செல்ல, ஆசிரியனாகியபிரகஸ்பதிதேவர்களித்துவிமானத்திலேறித்தொடர்ந்துவர, அரம்பாஸ்திரீகள் தங்கள் இறைவியைக்கூடிநடக்க, சந்திரசூரியர்முதலிய நவக்கிரகங்கள் நெருங்கிப் பிரயாணப்பட்டுச்செல்ல,அவர்கள்தேவியராகிய தக்கன்பெண்கள் பிதாசெய்யும்யாகத்தைப்பார்க்க அதிகமகிழ்ச்சியுடன் தொடர்ந்துவர, அளகைக்கரசனாகுபேரன் தன்சுற்றத்தாருடன் விமானத்தில்வர. இவ்விதமாகச் சகலருஞ் சேருமுன்னிலையில், தக்கன் தன்மருகராகிய ரிஷிகளுடன் எதிர்கொண்டுதழுவி, க்ஷேமங்களைவினாவி, அழைத்துவந்து, விஷ்ணு பிரமன் இந்திரன் முதலானவர்களைத் தகுதியாகிய பீடங்களில்இருக்கச்செய்தான். இவர்களுடன் போந்தலட்சுமிசரஸ்வதி இந்திராணிஅரம்பையர் தன்பெண்கள்முதலானவர்களை வேதவல்லிஆதரித்துப் பீடங்களில்வீற்றிருக்கச்செய்தாள். இஃதன்றியும் பூமியின்கணிருக்கின்ற பிராமணர் தபசிகளாதியர் தக்கன் யாகத்தில்திருத்தியாகப் புசிக்கலாமென்னுங் களிப்புடன் சமுத்திரம்புரண்டதையொத்துஅடைந்தார்கள். ஆதிசேஷன் அஷ்டமாநாகங்கள் முதலானவர்கள் தங்களதேவியருடன் வந்துசேர்ந்தார்கள். இப்பிரகாரம் பொன்னுலகவாசிகள் பூமண்டலத்தார் பாதலவாசிகள்நெருங்கியிருக்க, தக்கன்மத்தியில்வீற்றிருந்தான். அக்காலத்தில் வாயுப்பெருக்கினாலோங்கிய சமுத்திரவொலியைப்போல வேதகோஷ்டமொலிக்க இவ்விதமகோச்சவகாலத்தில், அறிவிக்கப்போன தூதர்வந்து, தக்கன்பாதங்களிற்சேவித்து, தேவரீர் கட்டளைப்படிக்கு எங்குஞ்சொல்லிவந்தோமென்று விண்ணப்பஞ்செய்தவர்களைக் கிருபையாகப்பார்த்து, நீங்கள் அறிக்கையிட்ட இடங்களில்யாவராயினும் தடுத்துப்பேசியதுண்டோ, என்றுவினாவ, சுவாமி அகஸ்தியன்-சனகன்-அத்திரி-வசிஷ்டன்- பிருகு-ததீசி-துருவாசன்-பராசரன் இவர்கள் உம்முடையயாகத்தைஇகழ்ந்து, தாங்கள்வரச் சம்மதமில்லாமற் சொன்னார்கள். இவர்களன்றி மற்றவரனைவரும் சந்தோஷமாக ஒப்புக்கொண்டார்களென்று விண்ணப்பஞ்செய்யக்கேட்டு நகைத்து, ரிஷிகளில் இவர்கள் திரிநேத்திரதாரிக்கு உகந்தபத்தர்களோஎன்று கோபித்து, இவர்கள்வாராததினால் ஆகவேண்டுவ தென்னவென்றுஇகழ்ந்தான். அதைக் கேட்டதேவர் வாட்டமுற்றிருந்தார்கள்.

## ததீசிப்படலம்.

அன்னவேலையிலாரிடர்தம்மொடுந்
துன்னினாநெருதொல்லிறைக்காகவே
முன்னமாலமர்மூண்டெழுமற்றவன்
றன்னைவென்றததீசியென்பானரோ.

இவ்விதமாகச் சகலரும் நெருங்கியிருக்கின்ற தறுவாயில் பரமேஸ்வரன்மீது சமர்க்கெழுந்த விஷ்ணுவைவென்றததீசி மகாரிஷி மனம்பொறாமல் அளவற்ற சீஷர்சூழ யாகசாலையிற் பிரவேசித்து வருவதைத் தக்கன்கண்டு, இவன்சிவன் பட்சத்தானல்ல. நம்மாணைக்குப்பயந்துவந்தானென்று அவன்மீதிருந்த கோபந்தணிந்து,வாரும்வாருமென்று அருகிலிருந்த ஆசனத்திலிருக்கச்செய்தவுடன், ததீசிரிஷி தக்கனைப்பார்த்து, என்னைவரவழைத்தகாரியமென்ன, இவ்விடத்தில் நீநடத்துங் கிரிகையாது, உன்னெண்ணமென்னென்று வினாவ, கேளும் ரிஷியே,சிவன்தானேவந்து, என்பெண்ணைத் திருக்கலியாணஞ்செய்து, என்மனம்வருந்த, பெண்தியங்க, மறைந்துபோனது தெரியுமே, பின்பு மற்றொருதினம் என்னைஅறியாமலும் எனதுஅனுமதிபெறாமலும் அக்கன்னிகையைக்கூட்டிக்கொண்டு போய்விட்டான். அதையும் நினையாமல் அவர்களைப்பார்த்து வரலாமென்று கயிலைக்குப்போனேன். அப்போது மரியாதையில்லாமல் தயைதாட்சணியமற்று என்பெண்ணைத் தன்வசப்படுத்திக்கொண்டு, வாயில்காக்கும் பூதரால் தடைசெய்வித்து, அவமானப்படுத்தினான். என்பெண்ணைப்பற்றி அதையும் பொறுத்துக்கொண்டு, என்பதியைச் சேர்ந்தேன். அதன்பின்பாவது என்மனக்குறையைநீக்கினவனல்ல. பெண்ணாவதுவந்து விசாரித்தாளில்லை. அதென்னசெய்யும், போதனைக்குட்பட்டுதாய்தந்தையை நினையாமல் மறந்துவிட்டது. இப்பாற் சிலகாலத்திற்குப்பின்பு என்பிதாஒருயாகஞ்செய்யத்தொடங்கினார். அதிற்சிவனுக் கவிகொடுக்காமல் தடுத்தேன். அப்போது அவ்விடத்தில் வந்திருந்தநந்திகோபித்துச் சபித்துப்போயினான்.அதற்குப்பயந்து யாகத்தைப்பூர்த்திசெய்யாமல் நிறுத்திவிட்டார் அதுமுதல் எனதாக்கினைக்கும் நந்திசாபத்துக்கும் அஞ்சிவேள்வியென்பதை யாரும்நினைந்தவர்களல்ல. ஆதலால் சிவனுக்கு அவியில்லாமல்ஒருயாகத்தைமுடித்து அவ்வாறே இனிமேல்நடப்பிக்க எத்தனித்துச்செய்கின்றேன். விஷ்ணுபிரமனாதியானவர்கள்வந்திருக்கின்றார்கள் அதேகாரணமாக உங்களுக்குஞ்சொல்லி அனுப்பினேன் இதுசங்கதியென்று முடித்தவுடன் ததீசிரிஷி, இனிப்புண்ணியமடங்கப் பாபமேலிடுங்காலம்நேர்ந்தது. இக்கொடியவன் செய்கையும் கர்த்தன்செயலும் ஒத்திருக்கின்றதென்றெண்ணி நகைத்தார். அக்காலத்தில் ஊழிக்காற்றின்மீது சிறியெழுந்த வடவையைப்போலத் தக்கன் ததீசி ரிஷியைப்பார்த்துக் கோபித்து,என்மொழிகளைக்கேட் டிகழ்ந்து நகைத்த நீசிவனுக்கன்பனோவென்றுகேட்க, ததீசிசொல்லுவார்.

பிரமன் விஷ்ணுமுதலான அளவற்றசீவராசிகளை ஆதியிலுண்டாக்கிய பிதாவாய்ப் பின்பு ரட்சித்து மாற்றிஎங்குந்தானுய், ஏகனுய், உயிர்க்குயிராய்ப், பரப்பிரமமாய், விளங்கிய லோகநாயகனைநீக்கி யாகத்தைச்செய்யத்தொடக்கினுய் சகலவேள்விகளினும் தேவர்களுக்குக் கொடுக்கும் அவியைக்கொள்ளப்பட்டவனும், அதற்குக்காரணனுனஅக்கினிதேவனுக்கும் காரணகர்த்தனும் அவன்முதலியரைப் பாதுகாப்பவனும் சங்கரனென்று வேதாகமங்கள் முறையிடுகின்றன வேறுகடவுளருளராயின், காட்டக்கடவாய். பிரமன்விஷ்ணு அக்கினியாதியர் இச்செல்வத்திலிருக்கப் பூர்வத்தி லனுக்கிரகஞ்செய்தவனுய்ச் சகலருக்கும் மூலகாரணனுய்த் தனக்குமேலொருவருமில்லாதவனுய் இருப்பவன் எமதுகாளகண்டனல்லது, விண்ணவர்களில் யாவரிருக்கின்றுர்கள் தேவாதிதேவனுப் மகாதேவனுய்ச் சர்வக்கியனுய்த் திரிமூர்த்திநாயகனுய்ச் சோதியாய் ஆதிக்காதியாய் அந்தத்துக்கந்தமாய்ச் சர்வபரிபூரணனுய் இருப்பவன் சிவனென்று அவ்வேதங்களிற்சொல்லும், பிரமனுதியானவர்களுக்குப் பதியாகப்பட்டவல் சிவன், அவன் அசைவில்லாமலொன்றுமில்லையென்பது சுருதிகளின்துணிபாம் இவையனைத்தையும் கற்றுணர்ந்த நீமறக்கலாமோ, அநித்தியத்தை நித்தியமாகவெண்ணி, விறுதாவாக புத்திமயக்கி, தீராதமாபையிற்பட்டுக்கவலையுற்றுய். வேதவிதிக்கும்பிசகிநடப்பது பிதாவைநீக்கி மற்றொருவனைத் தேடுவதற்கொக்கும். ஆதலால். சகலதேவர்களுக்கும் ஆதியான கர்த்தனை இகழ்வது பேதமையல்லது பெருமிதத்துக்கடாது, தான்கெட ஒருவனும் இச்சிக்கமாட்டான். வேதாகமவொழுக்கத்துக்குப் புறம்பாய் யாகஞ்செய்பவன் உன்னையொருவனைக்கண்டோம் நீநினைந்தது தகுதியானதல்ல, ஆதலால், பூர்வப்படிக்கு ஆதிதேவனுன பரமசிவத்துக்குமுதல் அவிப்பாகத்தைக் கொடுத்துவேள்வியைமுடிப்பையாயின், இச்செல்வத்தை அனுபவித்து நீடித்திருப்பாயென்று தயையாய்த் ததீசிரிஷிசொன்னதைக்கேட்டு, நல்லகாரியம், சிவனுக்குரியபாகத்தை விஷ்ணுவுக்குத்தந்து யாகத்தை முடிக்கின்றேனென்றுதக்கன்மாறுத்தரங் கொடுத்தான். இவன்தகாதகாரியத்தைக்குறித்தானென்று ஆலோசித்து சகலராலும் பூசிதப் படுத்திப் புகழவல்ல சீரியனை நிந்தித்துப் பூரியனாவந்திப்பது உன்போலிகளுக்கு அடுக்குமோ? வீணுக உன்சுற்றத்தாரனைவருக்கும் முடிவை விளைக்கின்றுய். இதனைத்தீர்க்கமா யோசித்து நடந்துகொள்ளென்று சொல்ல, தக்கன் நகைத்துஉன்னுடைய உருத்திரனைப்போன்றவர் ஏகாதச ருண்டு, இவர்களல்லாமல் ஈசானமூர்த்தியுமுண்டு. அவர்களுக்காவது முதலவியைத்தந்து வேள்வியை நடத்துவேன். சிவனுக்குத் தரமாட்டேனென்றுசொல்ல, ததீசி நகைத்து புவனங்கள் அனைத்தையும் நாசப்படுத்தித் தம்மிலொடுக்கி மீளவும்பிதாவாய்உண்டுபண்ணிச் சகலருந் துதித்து வணங்க நிற்கின்ற உருத்திரமூர்த்திக்கு அவன் வடிவையும் பெயரையும், அவனனுக்கிரகத்தினுற் பெற்றவர்கள் சமமாவார்களோ, உருத்திரமூர்த்தி சர்வாந்தரியாமியா யிருந்து நடிப்பிப்பான். அவன் பாதபூசையைச் செய்தவர்கள் அவனுருவும்பெயரும் பெறுவார்கள். அத்தொகையை இவ்வளவென்று கணிக்கப்படுமோ அவர்களைக் கர்த்தவியமாகப்பேசவும்படுமோ? ஆனல் பிரமனுதியானவர் துதிக்கவிருப்பார்கள், சகல செல்வப்பெருக்கையும் அனுக்கிரகஞ் செய்த கர்த்தனிடத்தில்நேசமில்லாத காரணம் திரோபவ மென்பதைநீநினைந்தாய் இல்லையென்று தெளிவித்த ததீசியைத் தக்கன்பார்த்து, சிருஷ்டிதிதி செய்யும் பிரமன்விஷ்ணுவிருக்க கடைத்தொழிலாகிய சங்கார கிர்த்தியத்தை நடாத்தும் உருத்திரன் ஆதியாக விருக்கவேண்டுங் காரணமென்ன, என்றுகேட்கபிரமசிரத்தாழ்வடமணிந்தகர்த்தன்பாதகமலங்களைச்சிந்திக்கும் ஞானவானுன ததீசி மாறுத்தரஞ் சொல்லுவார். இருவரோ டொருவனுக நினைந்த உருத்திரமூர்த்தியை ஆதியென் றறியாதவனே! அவர் பெருமைகளைச் சொல்லக்கேட்பாயாக. ஆதியந்தமில்லாத எமதுகடவுளுக்கு ரூபநாமக்கிரிகைகளில்லை. இதனை வேதங்கள்சொல்லும். அஞ்ஞான இருளில்மூழ்கிய சீவராசிகள்வினையை நீக்கக் கிருபையுற்று, மேற்கூறிய முக்குணங்களையும் வகித்து ஆத்மாக்களுக்குப் பழைய உணர்வை விளக்கிபிரமனுதியானவரைச் சிருஷ்டித்து, அவர்களுக்குரியபணிவிடைகளைக் கட்டளையிட்டு சங்கார கிர்த்தியத்தைத் தாமேவகித்தார். அதேனென்றுல், கணக்கிறந்த சீவராசிகளை உண்டுபண்ண வல்ல பிதாவாகிய தமக்கல்லதுமற்றவர்களுக்குமுடியாது. ஆகையால் சர்வசங்கார கிர்த்தியத்தைத் தாமே வகித்தார். முன்னொருகாலம் தேவர்கர்த்தன்பாதகமலங்களிற் சேவித்து, இப்பணிவிடைகளை எங்களுக்குக் கட்டளையிட்டீர், இதற்கு நிவாரணம் எப்போதென்று கேட்க, உங்கள் ஆயுசு பரியந்தம் இக்கருமங்களை நடத்திப் பவுத்திரமான தூளிதமணிந்து பஞ்சாக்ஷரத்தைச்செபித்திருப்பீராயின் நன்மையை யடைந்து நம்மைச்சேருவீர்களென்று அனுக்கிரகஞ் செய்து அதுகாரணமாகச் சங்காரத்தொழிலைத் தாமேசெய்துவருவார். அவரை ஐந்தொழில்முதல்வனென்று வேதங்கள் சொல்வதுஉனக்குத்தெரியாதோ? இதுவல்லாமல், உருத்திரனென்னுந் திருநாமம் ஒப்பற்றபரமசிவனுக்கும் அவர்பிள்ளைகளுக்கும்அவர்பாதங்களைக் கருதும் உருத்திரகணங்களுக்கும்அவருருவந் தரித்தவர்களுக்கும் அக்கினிக்கும், சொல்லப்படும். துக்கசாகரத்தில் அழுந்தின சீவராசிகளைப் பாதுகாக்குந் தன்மையினுல், பராபரவஸ்துஉருத்திரமூர்த்தியென்னும் நாமம்பெற்றுர். இதற்கொருதிஷ்டாந்திரம் சொல்லுவோம்.

பூர்வத்திற்சிலரிஷிகள் கர்த்தவ்வியம் இவனவனென்று வாதாடிப் பிரமனைவினுவினுர்கள். அவர் கிருபைகூர்ந்து ரிஷிகளே? கேட்பீராக. எங்களைத் தேவரா வேதாகமங்களை விதித்துதகுந்ததொழில்களையுங்காட்டி சங்காரத்தொழில்தம்மதாக்கி, அனுக்கிரகத்தினுல்ஐந்தொழிலையும்நடாத்தி, பிறப்பிறப் புருவநாமச்செய்கைகள் இல்லாமல்அருவாய் உருவாய்ப் பூரணமாயிருப்பவன் சிவனென்றுஅறியக்கடவீர். இதனைவேதங்கள்சொல்லும்அவரது நிலையை நானும் விஷ்ணுவும் இன்னமுங்கண்டு அறியமாட்டாமல் உழலுகின்ருேம். இக்காரணங்களினுற் சிவனே பரத்துவமாகக் கொள்வீரென்று பிரமன் போதித்த மாத்திரத்தில் ரிஷிகள் மயக்கம்நீங்கி, நான்முகனைச் சேவித்துபிதாவாய் எங்களைப் படைத்தாய். இன்று குரவனுய் வஸ்து நிச்சயத்தைத் தெருட்டினுய். இதனுல், ஈடேறிக் கதிசேரப் பெற்ருேமென்று கொண்டாடும் ரிஷிகளைப்பார்த்து, இன்றுமுதல் பரமசிவன் பாதங்களைச் சிக்கெனப்பற்றிச் சிந்தித்துப் பூசித்து அருச்சித்து ஈடேறக் கடவீர்கள். விபூதிகண்டிகை பஞ்சாக்கரத்தைக் கனவிலும் மறக்க வேண்டா

ம். இச்செய்கையினற் சனன துக்கத்தைக்கடந்து கர்த்தன் பாதநீழலில் வாசமாயிருக்கப் பெறுவீர்களென்றுதெருட்டிச் செலவுகொடுத்தனுப்பினர். ஆகலால், எங்கள் ஈசனே பிரமம், மற்றத்தேவர் உயிர்த்தொகையாகும். இந்நிச்சயத்தை உன்னிடத்து அன்பாய் நீபிழைக்கும்படிக்குச் சொன்னேம். இவைபன்றியும், ஆதியில் உனதுபிதாவாகிய பிரமன் சிவபிரான் பெருமைகளை விரித்து உனக்குப்போதிக்க அறிந்தும், அரியதவங்களைச் செய்தும் அவர் கடாட்சத்தினல் இச்செல்வத்தைப் பெற்றும் சகலராலும் பூசிக்கவாழ்ந்தும் இருக்கின்ற உனக்கு நாசமடையக்காலம் நெருங்கிய படியால், அதனை மறந்தாய். இதுவல்லாமல் உன்பிதாவாகிய பிரமனும் விஷ்ணுவாதியர்உன்னைப்போலவே அவர் மாயையில் அழுந்தி மடிதற் கேதுவான உன்சபையில்வந்திருக்கின்றீர்கள் நீயும்உன்வருக்கத்தாரும் மற்றவர்களும்பிழைக்க நினைந்தீராயின் பரமேஸ்வரனுக்கு முதலவியைத் தந்துயாகத்தைமுடித்து கீர்த்தியை அடையக்கடவாயென்று பலவாகச்சொன்னர்.

## ததீசியுத்தரப்படலம்.

இந்தவண்ணமத்ததீசிமாமுனிவரனியம்பக்
கந்தமாமலர்க்கடவுள்சேய்நகைசெய்துகானிற்
சிந்துமென்பொடுசிரத்தொகைபணியுமோதேவர்
வெந்தசாம்பரும்பூசுமோபரனெனுமேலோன்.

இவ்விதமாகத் ததீசிரிஷி பரமசிவத்தினது ஒப்பற்றதுணதிசயங்களையும் பரத்துவநிருபணங்களிற் சிலவற்றையும் விவரித்து உரைத்தவைகளைக்கேட்டதக்கன்நகைத்து நீசொல்லிய மேலானபரம் ஊர்ப்புறம்புகளிலிருக்கும் மயானத்திற் கிடக்கின்ற எலும்பையும் சிரங்களையும் சாம்பலையும் அணியுமோ. புலால்நாறும் பிரேதத்தைவாங்கித் திரியுமோ, கழிந்தகேசத்தைமுப்புரிநூலாக அணியுமோ வராகத்தின்கோடும் ஆமையோடும் தரிக்குமோ, உலகமழிய உயிர்களைச்சங்கரிக்குமோ புலியதளுடுக்குமோ, யானைத்தோலைப்போர்க்குமோ, கொடியஅனல்மான் சூலமுமேந்திப் பிச்சைக்கெங்கும் உழலுமோ, பேயனைப்போல நிருத்தமும்செய்யுமோ, பூதங்களைப்படையாகக்கொண்டு உலவுமோ, காளமாநாகங்களைப் பூஷணமாகச்சூடுமோ, நகுவெண்டலையைச் சிரத்திலே தாங்குமோ, வேற்றுருக்கொள்ளுமோ, மாட்டின்மீதேறுமோ, ஆலத்தையுண்ணுமோ, பேய்கள்சூழச் சுடலையிலாடுமோ, ஒருத்தியைச் சடையிலும் மற்றொருத்தியை இடையிலும் இருத்துமோ பிள்ளைகளையும் பெறுமோ, தாமதகுணத்தைப்படைக்குமோ, இன்னம் அளவற்றதுர்க்குணங்களைப்பெறுமோ, இவ்விதச் செய்கைளினல் உங்கள்ஈசனெருவகைப்பட்டகுணமுள்ளவன் அல்லன். பரமாயிருப்பவன் பரிசுத்தனுப்த்தயாசீதியாய்ச் சகலமங்களகுணங்களையும் பெற்றிருக்க வேண்டும். இதனல் மூலமென்னும் பெயர்பெறலாம். இதற்குப்புறம்புபட்டவனுதலால், அவனுக்கிந்தச் சிறந்த யாகத்தில் அவிப்பாகம் தரமாட்டேன். மேலும், இனிஎக்காலமும் கடக்கவறியாது, இதனைஉறுதியாகக்கொள்ளக் கடவாயென்றுஅஞ்சாதுசொல்லியதக்கன்மனத்துணிபை அறிந்து, தபோநிதியாகிய ததீசிரிஷி எமதிறைவனை இவன்பழிகூறலாமோவென்று சீற்ற நகைகொண்டு, ஆலகாலத்தைப்போலச் சீறி கர்த்தன் உண்மைகளிற்சிறிதும்இவன் உணர்ந்தவன் அல்லன். இப்பாமரனுடன்வார்த்தையாடல் யோக்கியமல்ல, ஆயினும் பிரமன் விண்டுவாதியான தேவர் ரிஷிகள் முதலானவர்நெருங்கியிருக்கும் இச்சபையில் லோகநாயகனுன சிவபிரானைப் பழித்திகழ்ந்தபடியால் அவைகளின்காரணங்களைச் சகலரும் அறியத்தெருட்டுவது நமது கடனென்றெண்ணி, அடாதக்கா! இந்த மகாசபையில் எமதிறைவனுப் தேவாதிதேவனுப் லோகநாயகனுப் விளங்கும் பரமசிவத்தினிடத்திற் சிலகுற்றங்களைக் காட்டிப்பேசினுப். அவைகள்வந்தவிபரம்யாதுமறியாதவனைப்போல அயிஸ்வரிய கெருவத்தினல் மயங்கிய மூடனே கேளென்றுசொல்லுவார்.

சர்வாந்தரியாமியாய் அருளுருக்கொண்ட நிமலன் பஞ்சகிர்த்தியங்களில் ஒன்ருகிய அனுக்கிரகத்தினல் தேவர்களில் முதன்மையாகிய பிரமன் விஷ்ணுவைப் படைத்து, பிரமனிடத்திருந்து சராசரப் பிரபஞ்சத்தைஉண்டுபண்ணி விண்டுவினிடத்திற் பொருந்தி அவைகளைப்போஷித்து அவைகளுக்கு உரிய வினைப்போகங்களை யூட்டிநடப்பித்து, அவைகள் பெறும் பகவிகளிற் சேர்த்து இவ்விதமாகச் செனனமரண சாகரத்திற்பட்டு அலையுஞ் சீவகோடிகள் சிலகாலம் அல்லலற்றுச் சுகாதீத எல்லையைச் சேர்ந்து களித்திருக்கத் திருவுளங்கொண்டு உருத்திரஅம்சையைத்தாங்கி, அண்டரண்டபுவனசராசரங்களை அழித்தொடுக்கிப்பின்புசிருஷ்டிதிதி கர்த்தாவையொடுக்கி. ஏகனுப் நின்று, மீளவும் இப்பிரகாரமே உலகங்களையுண்டுபண்ணி தமதொப்பற்ற திருவிளையாடல்களை நடத்திவருவார். இந்தச் சர்வசங்காரங்கடோறும் மரித்துப் பிறக்குஞ்சிருஷ்டிதிதித் தலைவரைப் பரமமென் றெண்ணித் திரோபவத்தினுழ்ந்து பவத்திற்பட்டு உழலுமூடர்கள் சுருதி குருசுவானுபவங்களினலே தெளிதற்குக் காரணமாக மாயனென்புக்களையும் பிரமன்சிரங்களையும்மாலையாகவும்கேசங்களை உபவீதமாகவும் அணிவார். இவ்விருவர் செய்த தவமுயற்சியினல் சர்வசங்காரகாலத்தில் அவர்கள் களேபரங்களைச்சூலத்திலேந்தி நெற்றிவிழியினலேதகித்து, அந்நீற்றைப்பூதியாகவணிந்தார். கிருபாநிதி யாதலால் தம்மையடுத்த பிராணிகள் பாபரகிதராய் முக்திபெற்றுஉய்யும் பொருட்டு இவைபனைத்தையும் அணிந்ததேயல்லது இவைகளாலே தம்மைப் புகழும்படிக்கல்ல. அகந்தையிற்சிரேஷ்டனே, மற்றவையும் விபரமாக அறிவிப்போம்கேட்பாயாக. ஆதியில் இரணியாக்கனென்னும் அசுரன்பூமியைப்பாயாகச்சுருட்டி சீவராசிகள் வருந்தப்பாதலத்தில் மறைந்திருந்தான். அதைக்கண்ட தேவர்நடுங்கிவிஷ்ணுவைத்துதித்தார்கள் அவர்கள் கோரிக்கையின்படிக்கு மாதவன்வராகவுருவங்கொண்டு. பாதலத்திற்சென்று தனதுகூரிய தந்தங்களினுற்பாய்ந்து அவ்வசுரனைக் கொன்று, பூமியைபதாப்பிரகாரம் ஸ்தாபித்து, அச்செய்கையைப் பெரிதாகநினைந்தவனுப் தானே பரமெனமதித் தோங்காரித்து பூமியைத் தன்கூரியகோட்டினுற்கெல்லி உபத்திரவப்படுத்து கையினலே பிராணிகள்வாடிப்பரமசிவத்தைக்குறித்துமுறையிட்டார்கள். அத்தருவாயிற் சிவபிரான் எழுந்தருளி வராகத்தின் கோடுகளைப்பறித்தார். அதனல்விஷ்ணுதன் கெருவமடங்கிக் கர்த்தனைச் சரணடைந்து போற்றிசெய்ய

பொறுத்துத் திருக்கயிலைக் கெழுந்தருளி, அக்கோடுகளைச் சின்னமாக வணிந்தார். அவைபிறையைப்போல இப்போதுந் திருமார்பிற் பிரகாசித்திருக்கின்றன. இதுநிற்க, மற்றச் செய்கைகளையும் வேதபூர்வமாகச் சொல்லுவோம் கவனிப்பாய்க் கேட்பாயாக. முன்னொருகாலத்திலேதேவர்அசுரர் திரண்டு திருப்பாற்கடலைக்கடையும்போது மத்தாகநாட்டிய மந்தரகிரி தாழ்வதைக்கண்டு விஷ்ணுகூர்மமாய்த் தாங்கிநிற்க, மீளவுங்கடையுமுன்னிலையில் அமுதம் உதித்தது. அதனைத்தேவர்களும்இராக்கதரும் கண்டு எமதெமதெனப் பொருவதையும்பாராமல், தான்மந்தரத்தைத்தாங்கிய வலியைப் பெரிதாகஎண்ணி அகந்தையுற்றுசிரம் வானத்தைமுட்ட ஓங்கிப்பாய்ந்து, பூமிகத்தளிக்கக் கடலைக்கலக்குமுன்னிலையில் சகலரும்இவ்வுபாதிக்கஞ்சி எமதுகர்த்தனைத் துதித்தார்கள். அத்தறுவாயிற்பரமன் அவ்விடத்துக் கெழுந்தருளி. ஆமையினோட்டையும் பெருமிதத்தையும் ஏககாலத்திற் பறித்தபோது, விஷ்ணு சோர்ந்துநடுக்குற்றுப்போற்ற இரங்கிக்கிருபாநோக்கமளித்து அமுதத்தினைத்தேவருக்குப் பகிரக்கட்டளையிட்டு வெள்ளியங்கிரியைச் சேர்ந்தார். கர்த்தன் அனுக்கிரகப்படிக்கு மாயன் மோகினிவடிவெடுத்து, அரக்கரைவஞ்சித்து அடக்கி விண்ணவர்க்கு அமுதமீந்தான். அக்கமடத்தினோட்டையும் எமதுகர்த்தன்பன்றிக்கோடுகளுடன் தரித்தார். ஆமையோடு அணிந்த திருவிளையாடலிதுவாகும்.

இனிச்சிவபிரான் ஐயமேற்ற சரித்திரத்தைச் சொல்லுவோம். ஆதியிலே தாருகாவனத்து ரிஷிகள் கர்த்தன் மாயையிற் பட்டுமயங்கி பரமசிவத்தினிடத்து அன்பு செலுத்துவதிற் பிரயோசன மில்லையென்றும் யாகங்கள் செய்தலே மோட்சம்அடைதற்குக் காரணமென்றும் நினைந்து அவ்வாறே நடத்திவருகின்ற தறுவாயில். இவர்கள் செய்கைகளைக் கயிலாயபதி யறிந்து விஷ்ணுவைத்திருவுளத்திற் கருதினர். விஷ்ணுஅங்கிமிஷத்திற் சேஷசயனத்தை நீங்கி, வெள்ளியங்கிரியை அடைந்து, நந்திதேவர்அனுமதி பெற்று, கர்த்தன் சன்னிதானத்தைச்சேர்ந்து மும்முறை வணங்கிப்போற்றி நிற்க, சிவபிரான் தமதுஎண்ணத்தைக் குறித்துக் காட்டி சிங்காதனத்தை, நீங்கினவராய்விஷ்ணு கரத்தைப் பற்றிக்கொண்டு, வெள்ளியங் கிரியைக் கடந்து போய், கண்ணனைப் பார்த்து, பஞ்சசத்திகளில் ஒன்றாகிய உனதுருவைக் கொள் ளென்று திருவாய் மலர்ந்தருளினர். அவ்வாறே மாயன் கோடிசூரியப்பிரகாசமாக இலக்கணத்துக்குமேற்பட்ட வடிவுடன் மோகினிஉருவெடுத்து மாயைக்கரசியான பார்வதிகண்டாலும் மயங்கத் தக்க நடைகொடி பாவனையைப் பெற்றுநிற்க, தாமுஞ்சிறந்தபிச்சாடன வேடங்கொண்டார். அவ்வடிவின்சினைமோகினி கண்டு காமவிகாரத்தினாற் சோர்ந்துகர்த்தன் அனுக்கிரகத்தினால் உணர்வு பெற்றதனால், அன்றுமுதல்வைகுந்தவாசிக்கு மாலென்னுந் திருநாமமுண்டாயது. ஆதலாற்பரமன் திருவடிவின் சுந்தரத்தைபாவராலும் ஒப்பிட்டுப்புகழப்படுமோ, பின்பு பரமன் திருமால் தம்முடன்வர ரிஷிகளுக் கிருப்பிடமாய்த் தராதலம் புகழுஞ்சிறப்பையுடைய தாருகாவனத்தருகிற் பிரவேசித்து அவரைநோக்கி நம்மைமதியாமல் தவமே பெரிதென் றெண்ணி நோற்கின்ற ரிஷிகள்வாசஞ் செய்யுஞ்சோலைகடோறும் சென்று, மையலுண்டாக்கி, அவர்கள்கொண்ட விரதங்களை அழித்து, நம்மிடத்துக்கு வருகஎன் றனுக்கிரகஞ் செய்ய, அவ்வாறே மாயன் விடை பெற்றுப் போய், வேள்வியுந் தவமுமே மோட்சத்தைத் தருமென்றெண்ணி நடாத்தும் ரிஷிகள் வாசமாகிய இடங்களிற்சென்று, அளவற்றமன்மதர் ஏககாலத்திற் கரவேகமாய்ப் பிரயோகிக்கும் புஷ்பபாணங்களைப்போல, விழிமலர்களைச் சுழற்றிப்பார்த்து, புன்முறுவல் விளைத்து, செம்பஞ் சூட்டிய பாதங்களி லணிந்தசிலம்புகளும் கரங்களிலமைந்தவளையல்களும் கலிக்க, அன்னத்தைப்போல மெல்லெனநடந்து, கிளியை நிகர்த்துக் கொஞ்சி வசனித்துத் திரிவதை ரிஷிகள்கண்டவுடன்காமவிகாரந்தலைக்கொண்டு மதிமயங்கினவராய், விரதவுறுதிகளைமறந்து, வேள்விநிலைகள்கலைந்து, உடைசோர்ந்து, காமவெள்ளம் பெருகவருந்தி, யானையுண்டவிளாங்கனியைப்போல உள்ளுடைந்து, சிவகடாட்சத்தினால்வந்தமோகினியின் இலக்கணவடிவைப் பாதாதிகேசபரியந்தம் நோக்கிநோக்கி தவவொழுக்கத்தைமறந்து, சுடரைக்கண்டவிட்டிலைப்போலப் பலதிசையினின்றும் விரைந்துவந்துசூழ்ந்துகொண்டவராய், ஓபெண்கள்நாயகமே, பெண்கள்சிகாமணியே, உமதுதிருநாமம்யாது, நீர்இருக்கும்இடமேது, திருவாய்மலர்ந்தோதும். ஓபெண்ணரசே, நீர்வாசஞ்செய்வது பூலோகமோ, பொன்னகரோ பிரமனுலகோமன்மதன்பதியோ, வைகுந்தநாடோ, அல்லதுஅசுரரைவஞ்சித்தழித்துத்தேவர்களுக்கமுதம்பகிர்ந்தமோகினியோ, பெண்ணே, கண்ணே, உமதுபெருமைகளை யாவராற்புகழப்படும், எங்கள்தவப்பேற்றினால்இவ்விடமெழுந்தருளினீர். அடியோங்கள் பேரிற்கிருபைசெய்து உமதிணக்கத்தைக் கடாட்சிக்கவேண்டும், நீரிட்டபணிவிடைகளைச்செய்யக்காத்திருக்கின்றோம் நீர்விரும்பியஅனைத்தையும் இந்நிமிஷத்திலே தரவல்லோம்யாங்கள்காமநோயினாற்பிராணனையிழப்பதற்குமுன்னம், நீர்தயைசெய்து, அதற்குரிய இன்பரசத்தைக் கடாட்சித்துப் பாதுகாப்பதன்றியும், மன்மதபாணத்துக் கிரையாகாமலும் உமதுகடகங்கணங் களணிந்த திருக்கரத்தினாலே சற்றணைத்து ஆதரிக்கத்தயையில்லையோ, என்று வெளுக்கபற்களைத்திறந்து, கரங்களைநீட்டி பலபலவிதங்களாகக்கெஞ்சிக்கெஞ்சி இரந்து தொடர்ந்து அக்கினியிற்பட்ட காந்தண்மலரைபொத்து மெய்கருகி, விரகாக்கினியினால் இறந்தவர்களைப்போலவுஞ்சித்திரத்தையொத்தும் பொற்பாவையை நிகர்த்தும்அறிவழிந்து, பின்பற்றித்தொடர்ந்தும், நின்றும் விழுந்தும் இவ்விதங்களாக. அலைந்து உழன்றார்கள், இவ்விருடியர் இப்பாடுபட்டிருக்குந் தறுவாயில், இவர்கள்பத்தினிமார் வாசஞ்செய்யுமிடத்திற் பரமசிவன்செய்த திருவிளையாடல்களிற் சிலசொல்லுவோம்.

மோகினிவடிவுகொண்ட விண்டுவைத் தவத்தர் பக்கலுக்கேவியபின்பு எமதுகர்த்தன், சிவந்தசடைகள் அசைய, சர்வாங்கதூளிதராய், திருக்கரங்களிற் சூலமும் பாத்திரமுமேந்தி, வேதப்பாதுகைகளைக் கால்களிற்றொடுத்து, ரிஷிபத்தினிகள் வாசஞ்செய்யும் பர்னசாலைகளில் அவர்மனதுக்கினியசுந்தரமிகுந்தபுருடனாகிப்போய், பண்களுடன்சுருதிகளைப்பாடிக்கொண்டுஜபமேற்பவரைப்போலத்திரிகின்ற தறுவாயில், உயிருக்குயிராய்எங்கும்பரிபூரணமாய்நிறைந்தாட்டும் பரமசிவத்தின்கீதங்களினோசையைத்தவத்தர்தேவிமார்கேட்டவுடன்மனமுருகி, ஆரம்மா

நம்முடைய வீதிகளில் இப்படிக்கு அற்புதமாகப்பாடி
வருகின்றவர். அந்தப்புண்ணியவானைக்காண மனம்விரு
ம்புகின்றது வாரும்வாருமென்று ஒருவரையொருவர்கூ
விக்கூட்டங்கூட்டமாய் வீதிகளில்நெருங்கி,எமதுகர்த்த
னைத்தெரிசித்தவுடன் காமுற்று. மன்மதபாணங்கள்சாட
ப்பொறிகலங்கி, நாணமடமச்சவரம்புகளைக்கடந்து, மன
மருண்டு, காமலாகிரிகொண்டு சோர்ந்து கர்த்தனிடத்து
ஆசையென்னும் வலையிற்சிக்கிய அக்கன்னியர்செய்கைக
ளிற் சிலதுபேசுவோம், இத்தபசியினது கீதங்கள் செவி
களுக்கு அமுதமாகப் புகுந்தவுடன் திரேகபரவசமாய்க்
கொங்கைகள் விம்மிச் சரீரம்பூரித்து, அவயவங்களில்
அணிந்திருக்கும் ஆபரணதிகள் சிதறிப்போன இடந்தெ
ரியவில்லை, காமக்கவலையிற்பட்டு உழலுகின்றோம், இத
னால் இக்கோலம் அற்புதவடிவாய்க் காணுகின்றதென்று
சிலர்வசனித்துத் தொடரவும், இவ்வையருடைய செய்
கைகளை யோசிக்குமிடத்துப் பிச்சைவேண்டி இவ்விடம்
வந்தாரெனக் காணவில்லை. கன்னியரை மையல்பூட்டவந்
தவரைப்போலத் தோன்றுகின்றதென்று சிலபெண்கள்
பேசவும், இவருக்கானவுண்டியையும் உடையையும் தந்
துபஞ்சணைமெத்தையிற் சரசசல்லாபமா யிருந்துகளிக்
க இம்மங்கையர்களில் யாரும்நினைக்கவில்லையெனப் பல
ர்வருந்தவும், இத்தாருகாவனத்துக் கெழுந்தருளிய இவர்
மற்றொருபதிகளிற் சென்றவரல்லவரைப்போலத் தோற்
றுகின்றது, ஆகையால்நாம்முன்செய்ததவப்பயனாகும்,இ
தற்கையமில்லையென்று அளவற்றவர்புகழ்ந்துசெல்லவும்
இந்தயோகிக்குஆரிடத்தினும்விருப்பமில்லைபோலத்தோ
ற்றுவதாதலால், தொழுகின்றவரைப்போலக்கிட்டிஅணை
த்து இன்புறுவோமென்பார் சிலர்சிலர்தங்கவளையல்களு
டன் ஆடைசோரக் கரங்களைநெரித்து, அஞ்சினாணுற்று,
நடுத்தெருவிலிருப்பவரைவிட்டுநீங்க மனமெழாமற்றிகை
த்துநின்றார். சிலர்சொர்னத்தையொத்த சாயலையுடையதி
ரேகமெங்குங் காமன்கணைகள்பாய்ந்துஉயிரைவாட்டமயி
ர்க்கால்தோறுங் காமநீர்பாய்ந்துவருந்துவார், சிலர்பசு
பாசம்நீங்கிய தவத்தர்பெறும் பரமபதமிதுவென்று ஐ
யர்கோசத்தினிடத்து விருப்புற்றுப்பார்த்துகளிமிகுந்து
கரங்களிலணிந்த வளைகள்சோரப் பரிவாய்க்கும்பிடுவார்.
சிலர் கர்த்தனிடத்துற்ற ஆசையினால்வருந்தி, இல்லங்க
ளிற்சென்று பாலேடுடன் அன்னமும் கொண்டுவந்து. க
ரங்களினின்று கழலும் வளையல்களுடன் பாத்திரத்திலி
டுவார். சிலர்பரமசிவத்தைப்போலக் கோலங்கொண்டஇ
வர் இவ்வீதிகள்பவுத்திரமாக வரக்கண்டும், இடையில
ணிந்தவஸ்திரம் சோர்வதினால் நமக்கென்னகுறை, கண்க
ள்குளிரத்தெரிசித்தலே மேன்மையென்றுகளிப்பார். சி
லர்நாணமே முதலானவைகளை ஒழிந்தோம் தேவரீரிடத்
துற்றமையல் மனதைவாட்டுகின்றதால், நிறைவரம்பற்
றோம், காமக்கனல் தகிக்கின்றது, தேவரீர்சற்றுத் தயை
செய்து பிராணபிச்சை தரவேண்டுமென்று இரப்பார். சி
லர்ஐயருக் கையம்பகிரக் கரங்களிலேந்திவந்த அமுதுப
டிவிரகத்தீக்கொளுத்தவெந்து சாம்பலாகக்கண்டு, அவர்
திருமேனியிற் பூசிக்களிப்பார். சிலர், எங்கள்இச்சையை
த்தீர்த்து ஆளுமென்று அழகியப தகமலங்களிலே தொ
ழினும், சற்றுமிரங்கிக் கிருபைசெய்யாது விரைந்துசெல்
வதுஇவர்கருத்தாகக்காணுகின்றதால், ஐயமிடவேண்டா
மென்பார்சிலர், சூலமும் சடையும் நுதல்விழியும் செக்
கர்வடிவும் சர்வாங்கதூளிதமும் அணிந்திருப்பதினால்’
இவர் ஆலமுண்டு அடியவரையாண்ட சிவபிரானே யா
மென்பார். சிலர், இவ்வையர்குறியினின்று சிந்துந்திவலை
களினென்றல்லவோ, உலகங்களைப்படைக்கும் பிரமனு
னதென்றுபேசுவார். சிலர்அன்பாகச்சமைத்த அன்னத்
தைக்கரங்களிலேந்தி, காமவிகாரம் மதியைமயக்கத் தள்
ளாடிநடந்து ஒளிக்கொளியாக விளங்குங் கர்த்தன் உரு
வெளித்தோற்றத்துக்குப் பகிர்ந்துவாடுவார், சிலர்பரமன்
திருவழகைக்கண்டவுடன் ஆசைகொண்டு, உடைசோர
க்கண்டு, பெண்குறியை ஒருகரத்தினால்மூடி, மற்றொன்
றினால் விழிகளைப்புதைக்க அடங்காமையால் வெட்கிநிற்
பார். சிலர்நல்விருந்தாக வெழுந்தருளினீர், அமுதொத்
தபோசனமிடுவோம், அதையுண்டு கிருபையுற்று நிமை
ப்போதேனும் எங்களைத் தழுவிக்கலந்தகல்வது உம்மை
ப்போன்றவர்களுக்கு அழகென்பார். சிலர், சூலத்தையு
ம்பாத்திரத்தையும்ஏந்தி ஏன்வருந்திப் பாதங்கணோவத்
திரிகின்றீர். நம்முடையமாளிகையில்வந்திருந்து, பால்
நெய்முதலான அறுவகைச்சுவையுண்டியைப் புசித்து,
எங்களைக்கலந்தின்புற்று, சவுக்கியமாயிருக்கலாம் வாரு
மென்றுவேண்டித் தொடர்வார்.சிலர், தெரிசித்தகன்னி
யர் ஆடவர்காமுறுஞ் சுந்தரமுள்ள வடிவைப்பெற்ற நீர்
அற்பமானஓட்டையேந்தி, பிச்சைக்கு எங்குமுழல்வதெ
ன்ன அநியாயமென்பார். சிலர், தெய்வகடாட்சத்தினால்
இன்றும்மைக்கண்டவுடன் மனமுருகிக் கலைபிழந்துவரு
ந்துகின்றோம் இனியாவது தயவுசெய்து எங்களைத்தழு
விமுத்தமிட்டுப்போமென்று பெருமூச்செறிவார். சிலர்
ஓ! பெண்களே? தாமே இவ்விடந்தேடிவந்த இத்தவத்த
ர்மதவிரகநோயை யொழித்தல்லதுபோகார் ஏன்மேல்
விழுகிறீரென்பார். சிலர், எங்களை ராட்சதக்கன்னியரென்
றெண்ணியோ, நாங்கள்நிறையழிந்து தொடர்ந்து வேண்
டினாலும் இணங்கீர், இப்பாதகம் உம்மைவிடமாட்டாது,
வன்மத்தைவிட்டு மனையில்வந்துபோமென்பார் சிலர்,எ
ங்கள்கலையைத்தாரும், அல்லது கொண்டவிரகத்தைத்தீ
ரும், ஒன்றும்பேசாமற் கூடவாரும், உமதுகுறிப்பின்வ
ழியே சேருமென்று நெருங்கிக்கேட்பார், சிலர், இனியவ
சனங்களைப்பேசி எங்களைச்சேர்ந்து போமென்று கெஞ்
சிக்கெஞ்சி இரந்தாலும், ஆசைதீர அணையாதுசெல்கின்
றதாற் சங்கரனென்பது இவருக்கு அடுக்குமென்று தூ
றுவார். இத்தன்மையாய்ப் பலவாக ரிஷிபத்தினியர் வச
னித்து நெருங்கி, கலைகளும் சங்கங்களும் பூண்களும் நா
ணமும் அரியகற்புத் தன்மைகளும் நீங்கி, ஆசைவலையி
ற் சிக்கிவருந்தும். பிராணனைத்தாங்கி, விகாரத்தினாலே
ங்கிதொடர்ந்து வருந்தறுவாயில், எமதுகர்த்தன் அழகி
யபாதங்கள் சிவக்க அவ்வீதிகளிற் சிலதூரம் வீணைவா
சித்தும், சிலஇடங்களில் வேதங்களைப்பாடியும், சிலஇட
ங்களில் ஆகமத்தைவிரித்தும், சிலநேரந் தமதுமகிமைக
ளைக்காட்டியும், சிலஇடைஐயமேற்றும்,சிலஇடைத்தொ
ண்டரையொத்துத் தமதுபெருமைகளைத்துதித்தும் நடக்
குமுன்னிலையில், இலக்குமிக்குச் சமதையான ரூபலாவ
ண்ணியங்களைப்பெற்ற ரிஷிபத்தினிகள் பரமசிவன்பாத
ங்களிற்சொரிந்தமலர்களும் கழன்றிறைந்தவளைகளும் ப
லபூண்களும் மன்மதனேவிய பஞ்சபுஷ்ப பாணங்களும்
அவ்வீதிகளெங்கும் நிறைந்துவிளங்கின.

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே, பரமசிவம் கொண்டகோலத்தை விண்டுவாகிய மோகினிகண்டு, மையல்கொண்டுசோருவளாயின், தவத்தியர்செய்கைகளை இவ்விதமெனச்சொல்லமுடியுமோ, அக்காலையிற் சீதேவிக்குஇணையானவடிவுடைய தவப்பெண்களினது கற்பென்னுஞ் சமுத்திரமானது ஐயன் திருக்கோலமென்னும் மந்தரத்தினுற்கலக்கப்பட்டு நிறையழிந்தனராயினும்,விகற்பமின்றியொருமைப்பட இச்சித்தகன்னியர் காமியத்தைவிரும்பிப் போற்றியதால், அவர்கள் இஷ்டப்படிக்கு இந்திரசாலமென்னப் பற்பலவுருவம் அவர்கள்மனதில் திரோபவத்தினுல்தோற்ற அவைகளைக்காட்சியாக ஆசைதிரத்தழுவித் தங்களின்பம் நிறைவெய்தியதாக ஆனந்தத்தழுந்தியகாலையில்பிரசவவருத்தமின்றி தண்டுகமண்டலஞ்சடைமுடிமரவுரியுடன் நாற்பத்தெண்ணுயிரம் ரிஷிகளைப்பெற்றார்கள். சிவத்தின் திருவருளினுல் உதித்தவராதலாற் பரமன்பாதகமலங்களிலே தொழுதுபோற்றுந்தறுவாயில், கர்த்தன் கிருபையுற்று, நம்மைக்கருதி இவ்விடத்திலே தவங்களைச்செய்யக் கடவீர்களென்றுஅருளியவாறேவிருந்தார்கள். அதன்பின்புஅக்கன்னியர்களிப்பருமற் சமுத்திரத்தைப்போலத் தொடர்ந்துவர, கண்மலருடன் ஆயிரங்கமலங்களை அருச்சித்த விண்டுவுக்குத் திகிரியளித்த பரமன்ரிஷிகள் வாசஞ்செய்யுஞ் சாலைகளினிடத்தில் வருங்காலையில் மோகினியானவள், தவத்தர்கூட்டம் பின்பற்றிக்கெஞ்சி நடக்க, கர்த்தனைச்சந்தித்தாள். அதெப்படிக்கிருந்ததென்றுல், கங்கையையமுனைகலந்தகாட்சியைப்போன்றது. அக்காலையிற் கர்த்தன் தமதுஉருவைப்பாதகராகிய முனிவருக்குத் தோற்ருது வேற்றுருக்கொண்டு நிற்கின்றதறுவாயில், சிவகடாட்சத்தினுல் ரிஷிகள்மையல்தெளிந்து, தங்கள்தேவிமார் தமதுவடிவமாறி அலங்கோலமாய்ப் பரந்திருப்பதைக்கண்டு, இவர்களும்நம்மைப்போலவே இவனிடத்தின் மால்கொண்டு உடைவளைநாணமுதலானவைகளை நீத்தார்களென்றெண்ணி,மோகினியிடத்துற்ற கவலையிற்சிறிதுநீங்கி,தங்கள்பத்தினியருடைய ஈனநிலையைக்கருதி வருந்தி, திகைத்தேங்கி, மானம்பாதிக்கப் பெருமூச்செறிந்து, பிரேதங்களைப்போலநின்று, எண்ணுவார்கள். அழகிய நிதம்பத்தையுடைய இம்மோகினி நமதுதவத்தை அழித்தாள். அந்தப்பிச்சாண்டி நம்முடையதேவியர் கற்பைக்கெடுத்தான். ஐயையோ, காமஇன்னலிலே தள்ளுமென்பதைத் திஷ்டாந்திரமாகக் கண்டோம். இதென்னமாயமென்று ஆலோசித்துச் சொல்லுவார்கள்.

நமதுபத்தினியர் நிறையைக்கெடுத்தவன் கயிலைக்கிறையாகிய சிவனுகும். மோகினியாகவந்து நமது விரதவுறுதிகளைப் பங்கஞ்செய்தவன் உலகையுண்டகண்ணனுகும் இவன்பரமசிவன் புணர்ப்பினுல் இவ்விடம்வந்து, இதுவரையில் அரிதாகச்செய்துபெற்ற தவங்களைக் கொன்ருனுயினும், அதனைமீளவும் நோற்றுப்பெறலாகும் கபாலத்தையேந்தி ஐயமேற்பவனைப்போலச் சிவன்வந்து, தராதலமெங்கும் புகழ்பெற்ற இத்தாருகாவனத்திலிருக்கும் நமதுபத்தினியர் கற்பையழித்த வசைமொழி சூரியசந்திரரிருக்கின்றபரியந்தம் அழியாமல் நிலைபெற்றிருக்குமேஒ, ஒ! இதற்கென்செய்வோம், இச்செய்கைக்குக்காரணம் சிவனல்லது வேறில்லையென்று வடவைபைப்போற் கோபித்து, எதிரில்நிற்கின்ற தேவியரைச்சிறிப்பார்த்து,

பின்போகின்றீர், கற்பழிந்து உயிர்சுமப்பதிலும் இறத்தல்நன்காகும். இனியாவது உங்கள்இல்லங்களைச் சேருவீரென்றுஅதட்ட, அவர்கள்பயந்து கர்த்தன்வடிவைநினைந்துநினைந்துவாடி, அக்கிராரத்தைச்சேர்ந்தார்கள்,அத்தறுவாயிற் பரமசிவனும் விஷ்ணுவும் கொண்டகோலத்தைத்தெரிசிக்கவிருப்புற்றுப் பிரமனுதியதேவர்விண்ணிடத்தில்நெருங்கித்துதித்து வணங்கியிருக்கின்றகாலத்தில்சிற்றறிவையுடைய ரிஷிகள்கோபந்தணியாதவராய் நம்மைவஞ்சித்து மோசஞ்செய்த பாஷண்டியைக்கொன்று இந்தஅபவாதத்தைநீக்கிக்கொள்வது காரியமென்று ஆலோசித்தவராய், அதற்கடுத்த அபிசாரவேள்வியினைத்தொடங்கி வேம்புமுதலிய விஷச்சமித்துக்களாலும்,அவ்வெண்ணெயாதியநெய்களாலும் அதர்வணமந்திரபூர்வகமாகஈட்டிவருகின்றபோது,பார்க்கப்பயங்கரமானகோரரூபத்துடன் இடியஞ்சமுழங்கிப் பிறையைப்போலக் கூரியதாய் வளைந்தநகங்கள் பொருந்திய கைகளைவீசி அக்கினியையொத்து விழிகள் சுழலக்கோபித்து ஒருபுலியானது அத்தீயின்மத்தியி லெழுந்தவுடன், அதனையுபசரித்து, ஈசனைக்கொன்று வரக்கடவாயென்றேவினுர்கள். அவ்வேங்கையானது உதும்பிப்பாய்ந்து உலகம்நடுங்க, மேலிட்டுவர, அதைப்பரமன் பற்றியுரித்து அவ்வதளையிடையிலுடுத்தார். இச்செய்கையைத்தெரிந்து, ரிஷிகள்பொங்கிமீளவுஞ் சூலமொன்றை யுண்டுபண்ணித் தூண்டினுர்கள். அப்படையானது அக்கினியைக்கக்கி உலகமெங்கும் நடுக்கச் சுழன்றுவர, அதை எமதுகர்த்தன் பற்றி, நமக்காயுதமாக விளங்கக்கடவாயென்று கரத்திலேந்தினுர். பின்புமானென்றைச் சிருஷ்டித்தனுப்ப, அக்கலையானது ஆகாயத்திற்பாய்ந்து அண்டங்களதிரக்கூவிக் கூரியகொம்புகளை யசைத்துத் தாண்டிவருவதை லோகநாயகன்கண்டு, கிருபாநோக்கம் பாலித்தழைத்து இடைவிடாமல் நமது சிரவணனந்தமாகக்கூவி யிருப்பாயென்று இடக்கரத்திலே தாங்கினுர். பின்பு அளவற்ற காளமாநாகங்களையுண்டுபண்ணியனுப்ப, அவைகள்உலகமெங்கும்பரந்துவிஷங்களைக்கக்கிக்கொண்டு சீறிவருவதைப் பரமன்கண்டு முன்கருடனுக்கஞ்சி வந்தடைந்தசற்பங்களுடன் ஆபரணமாக அணிந்தார்,அதைமுனிவர்அறிந்துகோபித்து அளவற்ற பூதவெள்ளங்களைச் சிருட்டித்து சிவனைக் கொன்று வரும்படிக்குத் தூண்டினுர்கள். அக்கணங்கள் புவனங்களதிர ஆர்ப்பரித்து மேலிட்டு செல்வத்தைக் கண்டு, தம்மையடுத்தவர் தீங்குகளை யகற்றிரட்சிக்கவல்ல கர்த்தன் அவைகளைக் கிருபையாகவரவழைத்துதமதுசேனைகளாக்கிக் கொண்டார், அதன்பின்பு வேள்வியைமுடுக்கி, நகுவெண்டலை யொன்றை நிருமித்து பரமனை யுண்டு வரக்கடவாயென்று செலுத்தினுர்கள் அது வெளிப்பட்டவுடன் பகிரண்டங்களும் நடுநடுங்க நகைத்துப் புறப்பட்டு வருவதை நோக்கித்தமது திருக்கரத்தி னேந்திச் சிரத்தினின்று உனது பணிவிடையைச் செய்திருப்பாயென்றணிந்தார். இதையறிந்து ரிஷிகள் வடவையைப்போற்பொங்கி தாங்கள்கற்ற அகர்வணமந்திரங்கள் அனைத்தையும் ஒருவகைப்பட நிருமித்து எமதையனை நாசஞ் செய்யப் போக்கினுர்கள், அவையொரு துடியுருப்பெற்று, திசைகளெங்குஞ் செவிடு பட வொலித்து வருங்காலத்தில் அவ்வதிர்ச்சியினலே தெய்வலோகத்தர் பூமண்டலவாசிகள் ஐ ஆர்யன் அனுக்கிரகத்தினுல் இறவாமல் இடியுண்ட சற்பங்க

ளை யொத்தொடுங்கி வருந்தினார்கள். அப்படி மேலிட்டுவருவதைப் பரமன் பற்றி, நமது செவிக்கின்பமாகக்கறங்கியிசைகளைப்பாடி யிருப்பாயென்று திருக்கரத்திற்பற்றி நின்றார், பின்னும் அக்குண்டத்தில் முயலகனென்னும் அரக்கனை யுண்டுபண்ணி, வேள்வித்தீயையுங் கூட்டி, ஈசனை நாசஞ்செய்து வரக்கடவீரென் றேத்திவிடுப்ப வெளிப்பட்டவுடன் திரிலோகங்களும் கலங்கவிரைந்து ஆர்ப்பரித்து வரும்போது, திருக்கரத்தை நீட்டி அவ்வேள்வித்தீயை மழுவாக ஏந்தியும் முயலகனைத்தள்ளிப்பாதங்களின் மிதித்தும் நின்றார். இவைகளனைத்தையுந் தெரிசித்த தேவர் ஆனந்த பரவசராய்க் கர்த்தன் குணநிசயங்களைத் துதித்து வாழ்த்தினார்கள் இச்செய்கைகளை ரிஷிகளறிந்து ஐயையோ, எத்தனைபொருள்களைவிதித்தேவினாலும், அவைகள் சிவனைக்கொல்லாமல் அவனுக்கடங்கினவேயென்றுமிகவும்வருந்திப்பொறாமையினால்,சங்கரா!நீநாசமடையக்கடவையென்று அளவற்ற சாபங்களை யிட்டார்கள் அவை பரமனிடத்து நெருங்காமற் பிரசண்டவாயுவை நேர்ந்த தீயைப்போலவும் அனலிற்பட்ட பூளைப் புஷ்பத்தை நிகர்த்தும் அழிந்துபோயின. அதனைக்கண்டு தாங்கள் செய்த முயற்சிகளொன்றேனும் பிரயோசனப் படாததினால் வேறுசெயலற்று சோபமுற்று, நங்கம் பெற்று, நீங்காத பாபமும் பழியும்பூண்டு, பிணங்களைப் போலப் பூமிக்குச் சுமையாக நின்றார்கள்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே, அரியதவங்களைச் செய்தும் இருவினைகளைக் கூட்டிமுடிக்கும் இறைவனொருவனுண்டென் றுணராத விவேகசூனியர்களான இந்தரிஷிகள் அஞ்ஞானத்தை யென்னென்று சொல்லுவேன். இறுதியில்லாத பரம்பொருளை முடிக்க நினைந்து, வேள்வியில் அளவற்ற கொடுமைகளை யுண்டுபண்ணி யேவினார்கள். சபித்தார்கள், இவைகளால் அவரை யழிக்கப்படுமோ கெடுவான் கேடுநினைப்பானென்னும் வாக்கியத்துக் கிசைவாகத் தங்கள் பெருமிதங்கள் அனைத்தையும் இழந்து வசைபெற்றுத் தீனரானார்கள். அக்காலத்திற் கங்காசடாதரரான பரமன்தமது பாதத்தி லூன்றிய முயலகன் மெல்லமெல்ல எழும்பியசைய, அவன் அகங்காரத்தை யடக்கத் திருவுளங்கொண்டு, தமதானந்தநடனத்தைச்செய்வதாயினர் அவ்வதிர்ச்சியினாற் சகமனைத்தும் நடுக்குற அதிலடங்கிய ஜீவராசிகள்பயந்து திடுக்கும்றேங்குந் தறுவாயில், தாருகாவனரிஷிகளும் மடிந்தவரைப்போலத் திகைத்துநிலத்தில் மறிந்தகாலத்தில் அவ்வானந்த நடனத்தை விஷ்ணுபிரமன் தெரிசித்துக் களித்துச்செயசெயவெனப்போற்றிக் கரங்களைக் கூப்பித் தொழுதிருக்க, தேவேந்திரனாதியான தேவர் பணிகின்றவரையொத்து அடியற்ற பனையைப்போலச் சாய்ந்தார்கள். இவ்விதமாகச் சகலரும்மறிந்த செயலைக் கர்த்தன் திருவுளத் தறிந்து, நடனத்தைநீங்கிக் கிருபாநோக்கம் பாலிக்க இந்திரனாதியர் எதாப்பிரகாரமெழுந்து வாழ்த்தி நிற்கின்றதறுவாயில் தம்மைமதியாமல் அகந்தையுற்றுஅயர்ந்த ரிஷிகளிடத்து அன்பாய் அவர் மயக்கத்தைத் தவிர்த்தகாலத்தில் அவர்கள் நல்லுணர்வுதித்து மனங்குழைந்தவராய்க் கரங்களைக் கூப்பி கர்த்தனை அறிவில்லாமற் செய்தகொடுமைகளைப்பொறுத்துஆட்கொள்ள வேண்டு மென்று பாதகமலங்களிற் சேவித்துப்போற்ற அவர்களிடத்து அன்பாய் இன்றுமுதல் நமது பஞ்சாக்கரத்தைச் செபித்துத் தவத்தைச்செய்வீரென்று அவ்விடத்தி லிருந்தி விஷ்ணு பிரமனாதியானவர்களுக்கு விடையளித்து திருக்கயிலைக்கெழுந்தருளினார் செய்ந்நன்றிகொன்ற தக்கனை சிவன் புலியதள் ஆதியாயவைதரித்த விதமும் நிருத்தஞ் செய்த காரணமும் சொன்னோம், இனிமற்ற விபரமும் விரிப்போம், கேட்பாயாக.

பூர்வத்திற் கயாசுரனென்னும் ஓரவுணன் பிரமனைநோக்கி அரியதவங்களை முடித்ததறுவாயில் அவர் காக்ஷிகொடுத்து, நீவேண்டிய தியாதென்ன, சுவாமீ? வலியும்மாளாத செல்வமும் தரவேண்டுமென்று இரந்தான். அதற்குப் பிதாமகன் நகைத்து, நல்லகாரியம், உன்னிஷ்டப்படிக்குத் தந்தோம்,ஆனால் திரிநேத்திரதாரியுடன் எதிர்ப்பையாயின் இவ்வரமழியுமென்று தமதுலகமே சேர்ந்தார், பின்பு கயாசுரன் சிவனையொழிய மற்றவரைவென்று அரசுசெய்யக்கருதி, சதுரங்க சேனைகளுடனெழுந்து, திக்குவிஜயஞ் செய்து, தேவரைவென்று, பொன்னுலகத்தைமுற்றுகைபோட்டுக் கொண்டு இந்திரனுடனெதிர்த்து, அகோரயுத்தஞ் செய்து துரத்தி அயிராவதத்தின் வாலைப்பற்றிச் சுழற்றியெறிந்து,தேவர்நாட்டையழித்துராட்சதரைக்கொருவமடக்கி கடையில் தீனரான மானிடர் முனிவரைவளைந்து சாடியலைக்குங்காலத்தில், அவர்கள் அவனுபத்திரவத்தைச் சகிக்கமாட்டாமற்பரமசிவமெழுந்தருளியகாசியையடைந்தொளித்தார்கள், அப்போது ஆலகாலத்தைப்போலக் கயாசுரன் தங்களைத் தொடர்ந்துவருவதை யறிந்து, அந்நகர வாசிகளுடன் நடுங்கி விசுவநாதர் ஆலயத்தடைந்து, அடுத்தவரைப் பாதுகாத்து இரட்சிக்குந் தயாநிதியான கர்த்தன் பாதங்களில் விழுந்து, தேவாதி தேவா! யானையுருப்பெற்ற ராட்சதனொருவன் உலகங்களை யழித்து எங்களையுங் கொல்லவருகின்றான். தேவரீர் பாதாரவிந்தங்களிற் சரணடைந்தோம், ரட்சிபும்,ரட்சியும், வேறு கதியில்லை யென்று போற்றினார்கள். அத்தறுவாயில் கயாசுரன் மேகத்துக்கொப்பாகக் கெற்சித்துத் திருமணிகர்ணிகைவாயிலின்முன் வருவதைக்கண்டுசகலரும்பிராணபீதியினாற்சன்னிதியிலோடிக் கர்த்தனைத்தழுவிமுறையிட்டார்கள். கயாசுரன் அதையும் எண்ணாமல் இடியைப்போல ஆர்ப்பரித்துஉள்ளே வருமுன்னிலையில், விஷத்தையுண்டு தேவரையாண்ட கடவுள் கோபித்து சிரம்அண்டத்தையளாவத் திரேகம் திசைகளை மறைக்கப் பிரளயகால வுருத்திர வுக்கிரவடிவுகொண்டு, கோடி சூரியர் உதித்ததைப்போலத் திரேககாந்திவீச வெளிவந்தொருதரம்நகைத்தார். அவ்வதிர்ச்சியானது அண்டாண்டபுவன சராசரங்கள் அடுக்கழிந்து அலைந்தொடங்கச்செய்து இப்புவனங்களில் அளவற்ற யுகங்கள் மாறாமலிருக்க, அதனைக்கேட்ட பிரமனாதிய தேவர் திடுக்கிட்டு இதுயுகமுடிவோவென்றுஅயிர்த்தார்கள், பின்பு கர்த்தன் அவ்வுருவுடன் கயாசுரனெதிரில் வர, அதைஅப்பாதகன் கண்டு, சிவனென்று அறிந்தும் அகங்காரத்தினாற் பிரமன்வாக்கியத்தையும் மறந்து சண்டைக்காயுத்தப்பட, அவனைவடவைக்கனலும்அஞ்சவிழிகளிற் பொறிசிதறநோக்கி ஒருபாதத்தினா லுதைத்துகுப்புறவீழ்த்து அவன்சிரத்தை மற்றொருபாதத்தினால் மிதித்துக்கொண்டு கூரிய நகத்தினாற் பிடரியைக்கீறி அதனையுரித்து பார்ப்பதியும் வெருவப் போர்த்துக் கொண்டார். அவ்விரத்தவாடையி னொளியைக்கண்டவர் நடுக்குற்றுவிழிகள்கூசி ஒளியிழந்து வருந்துதலைக் கர்த்தன் அறிந்து கையமைத்து பழயபடியே பார்வையுண்டாகக் கடாட்சித்

து; அவர்கள்அச்சமொழியக் கயாசுரன் தோலைத் தோளி ற் சேர்த்துக்கொண்டு எதாப்பிரகாரம் ஆலயத்தில் எழுந் தருளினர். பின்புமயங்கி விழுந்த பரிசாரகர்முதலாயின ர் தெளிந்தெழுந்து, கயாசுரனெலும்பும் மாமிசமும்மலை போலக் குவிந்திருப்பதைக் கண்டு, நமது கர்த்தன் அழி த்தானெனக் களித்துசமுத்திரத்தையொக்கச்செயசெயவெ ன்ருர்த்து ஆனந்தக்கூத்தாடி, தேவாதிதேவன்,குணதிச யங்களைத்துதித்தார்கள். தேவரும் ரிஷிகளும்போற்றிவா ழ்த்தினர்கள், இவ்விதமாகச் சகலரும் பயமொழிந்து தங் கள் பதியையடைந்து இன்புற்றனர் அகந்தையிற் சிறந்த தக்கனே! எமது கர்த்தன் யானைபுரிபோர்த்த காரணமிது வாகும் இனிப்பிரமகபாலமேந்தியசரித்திரத்தைச்சொ ல்லுவாம்.

முன்னொரு காலத்தில் மகமேருச் சிகரத்தின்மீதுஎழு ந்தருளி யிருக்கின்ற பிரமன் விஷ்ணுவைத் தேவராஜனு தியான விண்ணவ ரடைந்து சேவித்து திரிமூர்த்திகளில் முதன்மையாய் ஆதியந்தமிதில்லாதபரம்பொருளாய்த்தே வராதியரைப் படைத்த கர்த்தனல் உயிர்களுக்குயிராயிரு க்கப்பட்ட பிரமமாவதியாது எங்கள் மயக்கந்திரப்போதிக் கவேண்டுமென்று வினவும்போது, சிவத்தின் மாயையில் அகப்பட்டவனுதலின் பிரமனுனவன் தேவரைப்பார்த்து, நான்தான்பிரமமெனச்சொல்ல பக்கத்திலிருந்ததிருமால் நகைத்து உன்னைப்படைத்தநானேமுதற்காரணனென்ரு ன். இவ்வாறிருவருக்கும்கலகம் நேர, அவர்கள் அளவற் ற யுகங்கள் தர்க்கித்து வயிரமுற்றச்சண்டைக்காயுத்தப்ப டுகையில்சதுர்வேதங்களுங் குடிலையும்வெவ்வேறுருத்தா ங்கி அவர்கள் முன்தோன்றி ஏன்வீண்வாது கொடுக்கின் றீர்கள். சகலருக்கும் தாய்தந்தையாய் எங்கும் பரிபூரண மாய் நிறைந்திருப்பவன்சிவன், அவனே பரமென்றுசொ ல்லின அவ்வாக்கியத்தையுங் கேளாமற் பொருகின்றவர் கெருவபங்கம் பண்ணத் திருவுளங் கொண்டு, சிவபிரான் அளவுபடாத சோதிவடிவாய். இருவருக்கும் மத்தியில் நி ன்ருர், இதுசிவச்செயலென்றுணராமல் அவன் மாயையி ற் பட்டுத் திரத்துவமாயிருக்கும்போது கர்த்தன்அச்சோ தி மத்தியில் உமாபரமேஸ்வர முகூர்த்தமாய்த் தோற்ற விஷ்ணு தெரிசித்துத் தெளிவுண்டாய்ப் பரமனைப்போற் றித் தொழுதான், பிரமன் திரோபவத்தினழுந்து உணர் ந்திலனுதலால் அவன் அகந்தையையும் தேவர்செருக்கை யும் வாட்டத் திருவுளங்கொண்டுசிவன்வயிரவமூர்த்தியை யுண்டுபண்ண, சிவந்து நீண்டசடைகளும் அக்கினியைப் போலக் கனலும் விழிகளும் சிரமாலையும்தமருகமும் சர்ப்பாபரணமும் திரோகமெங்குந் தூளிதமும் விளங்கக் கைகூப்பி நிற்கின்றவரைப் பார்த்து இப்பிரமன் நடுச்சிர ம் நம்மையிகழ்வதற்குக் காரணமாதலால் அதனைக்கிள்ளி க் கரத்திற்கொண்டு அவனுயிரைப் பாதுகாப்ப தன்றியுந் தேவர் ரிஷிகளாதியானவ ரிடங்கடோறுஞ் சென்று அவ ர்க ளுதிரத்தையும்பலியேந்தி உயிரைக்காத்து அகந்தை யையொழித்த பின்பு அண்டமுகட்டில்அமர்ந்துபிராணி களுக்குத் துன்பமின்றிக் காத்திருக்கக்கடவாயென்று அ ருள, அச்சோதியில் மறைந்தார். இக்காட்சிகளைத்தெரிசி த்த கண்ணன் பரமசிவத்தின் பெருமைகளைக் கொண்டா டித் தனதுலகத்தைச் சேர்ந்த காலத்தில்,வயிரவர்பரமன் கட்டளைப்படிக்குப் பிரமன் நடுத்தலையை அரிந்தமாத்தி ரத்தில் பிரமன் இரத்த முலகெக்கும் பெருத்தோடப் பி

ராணனிழந்து பூமியில்விழுந்தான். அத்தருவாயில் வயி ரவர் தமதுநெற்றிவிழியினுலுதிரவாரியை மாற்றிப் புவ னங்களை ரட்சித்துப் பிரமகனுக்கும் பிராணனைக் கடாட் சித்தவுடன் அவன்எழுந்து வயிரவர் பாதங்களிற் சேவி த்துப்போற்றி, பரமசிவத்துக் கிழைத்த பவத்துக்கீடாக இத் தெண்டனையையும் தீராத பழியையும் பெற்றேன், தேவரீர் அனுக்கிரகத்தினல் ஆணவ மடங்கி நல்லுணர் வையுங் கிடைத்தேன். அடியேன் காணுந்தோறும் அகந் தைக் குள்ளாகாமல் தெளியும் பொருட்டு இச்சிரத்தைச் சூலமேந்தியதைப் போலவே திருக்கரத்திற் கொண்டு ர ட்சிக்க வேண்டு மெனப் போற்றியதை அங்கீகரித்து, ம கமேருவை நீக்கிப் பரமசிவ கடாட்சப் படிக்குத் தமக்கு ப் படைத் துணையாக வந்த காலவேகன் - கனன்முகன் - சோமுகன் - ஆலகாலன் -அதிபெலன் - முதலான பூதர் சூழ்ந்துவர ரிஷிகள் தேவர் வாசந்தோறுஞ் சென்று, அவர்கள் உதிரப் பலி கொண்டு பிராணனையுங் காத்து ப்பவுத்திரமாக்கிய பின்பு கர்த்தன்மாயைக்கடக்க அறியா மல் மயங்கிய விண்டுவாழும் வைகுந்தத்தைநோக்கி நடக் கின்ற தருவாயிற் பூதப்படைகளினது முன்னணியான து அப்பதியில் நுழையவருவதைச் சங்குசக்கரந் தரித்து அளவற்ற சேனைகள்போற்ற முதல்வாயிலைக் காத்திருக்கி ன்ற படைத்தலைவன் கண்டு தடுத்தான், அப்போதுஇரு திறத்தவருக்கும் அகோரயுத்தம் மூண்டதருணத்தில்,வ யிரவர்வந்துசேர்ந்து, அக்காவலனைச் சூலத்திற்குற்றியே ந்தி ஆலயத்திற்பிரவேசிக்குமுன் நிலையில்சேஷசயனத்தி ற் பள்ளிகொண்டு ஸ்ரீதேவி பூதேவி யிருமருங்கினு மிரு ந்து பாதங்களைவருடக் களித்திருந்த விஷ்ணுவானவர் க ண்டு திக்கென்றெழுந்துஎதிர்கொண்டு சேவித்துப் போ ற்றி தேவரீர் வந்தகாரிய மென்னெனக் கேட்க,பலிக்குப் போந்தோம்உமதுஉதிரத்தைநெற்றியின்மூலமாகத்தாரு மென்றுதிருவாய்மலர்ந்தருள,திருமால்மகாபாக்கியமென் றிசைந்து, தமதுநுதலில் நகத்தினுற்குற்றி உதிரத்தைப் பெருக்க வயிரவர்கோடிவருஷகாலமேந்தியுங் கபாலம்பா தியும்நிறைந்ததில்லை. அத்த றுவாயில்மேகவண்ணன்கோ பமுற்றுவிழுந்தார். இதனைத்தேவியர்கண்டுநடுங்கி, சோ பித்து, வயிரவக்கடவுள் பாதகமலங்களிலேதாழ்ந்து புரு ஷபிச்சைதரவேண்டுமென்று முறையிட அவர்பயப்படா தீர்களென்றுகையமைத்துவிண்டுவுக்கு உயிரையளித்துந டக்கும்போது கண்ணன்பின்தொடர்ந்து, சுவாமி, தேவ ரீர்சூலத்தேற்ற துவாரபாலகனைத் தயைசெய்து விட்டுப் போகவேண்டுமென் றுவேண்ட, கிருபையுற்றுப் படைத் தலைவனையிறக்கி பிராணனையுங்கடாட்சித்து, வைகுந்தத் தைக்கடந்து லோகநாயகனுன பரமசிவத்தின் கட்டளைப் படிக்குஅண்டப்பித்திகைமுகட்டைச்சேர்ந்துபூதப்படை கள்சேவிக்க வீற்றிருந்து, புவனங்களனைத்தையும் அதில டங்கிய சீவகோடிகளுடன் பாதுகாத்து, அரசுசெலுத்தி யிருந்து சர்வசங்காரகாலத்திற் பரமசிவத்தின் அனுக்கிர கப்படிக்கு வேதஞளியின்மீதாரோகணித்து பிரமன்வி ஷ்ணுதேவேந்திரனுதியான விண்ணவரையும் மற்றச்சரா சரங்களையும் நுதல்விழித்தீயினுலே தகித்துலவுவார்,மே ற்கூறியபடிக்குக் கபாலமேந்தியகாரணம் முகுந்தன் வே தன்முதலானவர் அகந்தையைநீக்கி யீடேறக்கடாட்சித்த தல்லது வேறுகருதவேண்டாம் இதறிக இனிவேற்

றுருவெடுத்தகாரணத்தைக்கேளென்றுததீசிரிஷிதக்கனைப்பார்த்துச்சொல்வதாயினார்.

முன்னொருகாலத்திலே தேவராஜன்தான் திரிலோகங்களுக்கும் சக்கிரவர்த்தியென்றும் கொடியதயித்தியரை வென்றேமென்றும் தனக்கொருவரும் நிகரில்லையென்றும் மமதையிற்பட்டவனாய் அரசுசெலுத்தி வருகையில், ஒருதினம் பரமசிவனைக்கண்டு வரவேண்டுமென்கின்றகோரிக்கையுடன் அயிராவதத்தின்மீதேறி, விண்ணவர்சூழ்ந்துபோற்றிச்செல்லத் திருக்கயிலாயத்தைச் சேரவந்தான். அதைக்கர்த்தனறிந்து இந்திரன்கெருவத்தையடக்கிரட்சிக்கத் திருவுளங்கொண்டவராய்ப் பாரிடவேடந்தாங்கி ஆலயமுக வாயிலினிடத்தில்வந்து நின்றார். அப்போது பாகசாதனன் அவரைப்பார்த்து, இன்றைக்குத்தான் உம்மைஇவ்விடத்திற்கண்டோம், தாஷ்டீகமாய் நிற்கின்றீர், நீர்யார், கர்த்தனைச்சேவிக்கின்றதற்கு இதுகருணமோ சொல்லென்றுகேட்டான், அதற்குத்தேவாதிதேவன் மாறுரையாடாமல் உக்கிரமாய்ப்பார்த்துநிற்க, நம்மைச்சட்டைபண்ணாமலும் கேள்விக்கெதிருத்தரங் கொடாமலும் பராமுகமாயிருக்கின்ற இவனாணவத்தை அறிகிறேனென்று மேல்விளைவதைத் தெரியாதவனாய், இந்திரன் அதிககோபங்கொண்டு, யிரைந்து தன்கரத்தில்விளங்கும் வச்சிராயுதத்தைக் கிறுகிறெனச்சுழற்றி வீசினான். அந்தப் படைஅதிவேகமாகவந்து, அனலுருவமாகிய பரமசிவத்தின் திரேகத்திலேதாக்கிச் சாம்பலாய்ப் பறந்துபோயது, பின்புகர்த்தன் அவ்வடிவைமாற்றி, கணத்தரசாகி, விழிகளில் அக்கினிப்பொறிசிதற நாசியில் சுவாலையும்புகையுமெழப் பெருமூச்செறிந்து திரிபுராதிகளையெரித்தநகைவிளங்கத்தோற்றினார் அதைஇந்திரன்கண்டு, நடுநடுங்கி, திரேகமெங்கும் வியர்க்கக் கைகாலுதற வாய்புலர்ந்து குளறக் கரங்களைச்சிரத்திற்கூப்பி, தேவாதிதேவா, லோகநாயகா, இருவர்தேடற்கரிய சோதிமயமே, தேவரீர்பெருமைகளையும் குணாதிசயங்களையும் திருவிளையாடல்களையும் என்போன்ற மூடராலறியப்படுமோ, அஞ்ஞானசம்பவத்தினால் அடியேன்செய்த அபராதத்தைப்பொறுத்துரட்சிக்கவேண்டுமென்று பலவிதங்களாகப் போற்றிப்பணிய, பரமன் தேவராசனைப்பரிந்துநோக்கி, பயப்படவேண்டாமென்றுகையமைத்துஆயிரங்கிரணங்களையுடையசூரியன்நழுவியதைப்போலத் தமதுசீற்றத்தைச் சமுத்திரத்தினிடத்தில்வீசி, தேவேந்திரனுக்குப் படையும்விடையுங்கொடுத்தனுப்பித்தமதாலயத்தெழுந்தருளி, பார்வதிகளிக்க வீற்றிருந்தார். இந்திரனும்கெருவமடங்கிப் பிழைத்தோம் பிழைத்தோமென் றதிகபயங்கரத்துடன்பொன்னுலகையடைந்தான்.

இப்பாற் சமுத்திரத்திலெறிந்த கோபக்கனலானதுசிவகடாட்சவீட்சண்ணியத்தினால் ஒருபுத்திரனாய்விளையாடுவதைக் கடற்கிறைவன் அறிந்துமகிழ்ந்து, தானவேசனை நமக்கும்பிள்ளையாகக்கிடைத்தான், என்னைப்போலயாவர் தவஞ்செய்தார்கள், ஊழூழிகாலம் தீர்க்காயசாயிருக்கக்கடவதென்றுவாழ்த்தி, அலைகளினாலே தாலாட்டி, சகலசெல்வவுபசாரங்களுடன் போஷித்துவருங்காலங்களில், ஒருதினம் அக்குழந்தைபசியினால் வீரிட்டழ, அவ்வொலியினதிர்ச்சியினாலே திசைகளெங்குஞ் செவிடுபட்டுப் பிராணிகள்வருந்தினார்கள் அம்முழக்கினைப்பிரமன்கேட்டுஅதிசயமடைந்து, சமுத்திரராசனிடத்துக்குவர, அதைஅவன்அறிந்து எதிர்கொண்டு, சேவித்துடன்கொண்டுபோய், சிங்காதனத்திலெழுந்தருளச்செய்து பூசித்தபின்பு, சுவாமி, இதுஎன்குழந்தை, ஆசீர்வதியுமென்றுகொடுக்க, ஆசையாகக்கரத்திலேந்தி, மடியிலிருத்தி முத்தாடுமுன்னிலையில், அப்பாலன்கரத்தைநீட்டி பிரமன்நான்குதாடிகளையுஞ்சேர்த்துப்பற்றிவலிக்க, அவ்வுபாதியினால் எட்டுவிழிகளினும் முத்துக்களைப்போல் நீர்துளித்துச்சிவக்க வருந்தினவனாய், குழந்தையினைலலிதப்படுத்தி, மெல்லெனநீக்கிக்கொண்டு, சீக்கிரமாகக் கடற்கிறைவனிடத்திற்கொடுத்து, போதவுணர்வைப்பெருக்கியறிந்து, ஓ சமுத்திரராசனே, இந்தச்சிசுவைச் சுலபமாகநினைக்கவேண்டாம் எமதிறைவனாகியபரமசிவத்தின் சீற்றவுருவாகும், இக்குமரன்பலவானாய், ஒருவரையும்மதியாமல் தேவர்முதலானவரைவென்று, ராசராசனாகிச் சகலரும்போற்றத் தனக்கெதிரிகளொருவருமில்லாமல் அரசுசெலுத்துவான், இவனுக்குத்தேவர்வரமுயற்சிகள் வேண்டுவதில்லை, சிவனல்லது, மற்றொருவராலும் இவனைக்கொல்லப்படாது, இக்குழந்தைக்குத் திருநாமஞ்சலந்தரனென் றிடக்கடவாயென்றுசொல்லி, பிள்ளையைஆசீர்வதித்துச் செலவுபெற்றுக்கொண்டு, தன்பதியைச்சேர்ந்தான். பின்புஅந்தப்பிள்ளைதினமொருமேனியாகவளர்ந்து, காளைப்பருவத்தில்வில்வித்தைமுதலானவைகளைப் பூர்ணமாகக்கற்றுத்தீரனாய், பிதாவினிடத்தில் விடைபெற்றுக்கொண்டு, பூமியின்கண்வந்து, ராட்சதரைக்கலந்து, தேவேந்திரனாதியரைக் கெருவமடக்கி, திசைகளைவென்று, சகலலோகத்தாருந்தன்னேவலைச்சிரசாகவகித்துப்போற்றக் கொடுங்கோல்செலுத்தி, புசபெலபராக்கிரமத்தினால் அசுரர்களுக் கரசனாய், தன்குலக்கம்மியனைத்தருவித்து, பொன்னுலகமும்அளகையும் வைகுந்தமும் நாணும்படிக் கொருநகரைநிருமிக்கக்கட்டளையிட்டான். சிற்பியானவன் மகாபாக்கியமென்று வணங்கிப்போய், விசாலமாகிய ஓரிடத்தைக்குறித்து சத்தப்பிராகார மதிலையெழுப்பி, அண்டவடுக்குகளைப்போல நிலைகள்பொருந்திய கோபுரங்களைநிறுத்தி, மத்திகளிற் கடலென்னத்தக்கதாகப்பரந்தஅகழிகளைப்படைத்து, மாடமாளிகைகள் மண்டபங்கள் சித்திரகூடங்கள் இருமருங்கினும் நவரத்தினமயமாகப் பொன்னினாற்சோடித்துப் பிரகாசிக்க விசாலமாக நீண்டவீதிகள் அரசனிருக்கும் உப்பரிகை ஆஸ்தானமண்டபமுதலானவைகளைச்சாஸ்திரவிதிப்படிக்கு நிருமித்து, அப்பதிக்குச் சலந்தரபுரமென்று பெயருமிட்டு, அரசனுக்குஅறிக்கையிட்ட மாத்திரத்தில், அவ்வரசன் மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர் மன்னமண்டலீகர்சூழக் கோட்டையின்சீரையும் பட்டினத்தின் வகுப்பையுங்கண்டு களித்துதச்சனைக்கொண்டாடி, சபாமண்டபத்தில்வீற்றிருந்து, சகலரும்போற்ற அரசுசெய்து வருங்காலத்திற். காலநேமியென்னும் அவுணன் அரிதிற்பெற்றவளாய் இலக்குமியையொத்தவடிவும் வேலைப்போன்ற விழிகளுந் தங்கக்கலசத்தை நிகர்த்தகொங்கைகளும் மயிலைப்பழித்த சாயலும் அன்னத்தினை மெல்லியநடையுங் குயிலைத்துரத்துங்குரலுங் கிள்ளையையோட்டும் மதுரவசனமும்பெற்றுப் பிரவிடைநாயகியாயிருக்கின்ற பிருந்தையென்னுங் கன்னிகையின் செய்தியைஅறிந்து, தன்மனவிருப்பத்தைச்சொல்லியனுப்பி, பிதாவினிசைவின்பேரில் அக்கன்னியைத் திருக்கலியாணஞ்செய்துகொண்டு, காமனும் இரதியும்போலச் சரசசல்

லாபசுகலீலைகளையனுபவித்துவரு முன்னிலையில். இந்திரனுதியான தேவர்மகமேருச் சாரலிற்கூடியிருப்பதாகச் சிலதூதர்வந்து சொல்லக்கேட்டு, கோபதீபிதனுகிச் சதுரங்கசேனைகளுடன்வர, அதைத்தேவர்கள்அறிந்து, இவ்விடத்திலும்பாதகன்வந்துவிட்டான், இனியென்னசெய்வோம், எங்கொளிப்போமெனச் சிங்கத்தைக்கண்ட மிருகங்களைப்போலநடுநடுங்கி, வருந்தித்திகைத்து, ஒன்றுந்தோற்றுமற்கடையில்இத்தருணத்திற்பாதுகாக்கவேண்டுமென்று விண்டுவைப்போற்றித் தியானித்தார்கள்.

அவர்இவர்கள்முறையைத் திருச்செவியிலேற்றுக் கருடவாகனருடராய், அவ்விடத்தில்வந்து,சலந்தரனுடனெதிர்த்து, இருபதினுயிரதேவவருடம்அகோரயுத்தங்களைச்செய்துஞ்செயிக்கச் சக்தியில்லாமல், உன்னைப்போன்ற வீரன் திரிலோகங்களினுமில்லையென்று கொண்டாடி,சிநேகம்பண்ணிக்கொண்டு, தமதுலகத்தைச்சேர்ந்தார், அத்தறுவாயில் தேவேந்திரனுதியான விண்ணவரோடி, திருக்கயிலாயத்தையடைந்தொளித்தார்கள் சலந்தரன்இவர்களை அவ்விடங்களில்தேடிக்காணுமற் கோபித்தவனுய், வெள்ளியங்கிரியிற்சேர்ந்திருப்பார்கள்,அதையறிந்துகொண்டுபோய்ச் சாடுவோமென்று நிச்சயித்துதன்பதிக்குவந்து, சிலதூதரைத் தூண்டினன்,அவர்களதிவேகமாயோடி, இருக்கப்பார்த்துத் திரும்பிவந்து,ராசனைச்சேவித்து தேவரனைவருமிருக்கின்றசெய்தியை விண்ணப்பஞ்செய்தமாத்திரத்தில், சலந்தரன் வடவையைப்போற் சீற்றங்கொண்டு, தன்சேனைகள்அனைத்துமெழும்படிக்குக் கட்டளையிட்டு, தானுஞ்சர்வாயுதபாணியாய்ச்செல்ல, அதைத்தேவியாகியவிருந்தைஅறிந்துஓடிவந்துகணவனைமறித்துக்கொண்டு, பிராணநாயகா திருக்கயிலைக்குப்போகவேண்டாம், பரமசிவனுட னெதிர்த்தவர்களில்யாவர்பிழைத்தார்கள், பிராணஆனிவருமென்றுபலவிதங்களாலேதெருட்டவுங்கேளாமல் தூறிக்கொண்டு, ஊழ்வினை தூண்டரதாரூடனுகி, சமுத்திரம் புரண்டதற்கிணையாகநடக்குஞ்சேனையைக்கலந்து, கயிலையைக்கிட்டினன். அதைத்தேவர்கண்டு, பாதகன்இதோவந்துவிட்டானே, இனியென்னசெய்வோம், நாள்தோறும்இவனுபத்திரவம்பட்டுமுடியவில்லை, ஆதலாற்சலந்தரன்மாளும் ஏதுவைத் தேடவேண்டுமென்று ஆலோசித்து. கர்த்தனெழுந்தருளியகோயில்முகவாசலில் வீற்றிருந்துபோற்றும் நந்திதேவரைவணங்கித்துதித்து, தங்களுக்கடுத்ததுன்பத்தை விண்ணப்பஞ்செய்து, அவரனுமதியினற் சிவபிரான்சன்னிதானத்திற்சென்று, மும்முறைவணங்கிப்போற்றி, தேவாதிதேவா, பத்தவற்சலா, தயாநிதி, வருணராசன்குமாரன் சலந்தரனென்னும் பெயருடைய ராட்சதனெருவன் உலகங்களையலைத்து எங்களையும் சின்னபின்னப்படுத்தியகாரணத்தினற் பொன்னுலகவாழ்வைவெறுத்து, மேருவரையிலொளித்திருந்தோம், அச்செய்தியைத்தூதராலறிந்துதொடர்ந்தான், அவன்கொடுமைக்கஞ்சிக் கேசவனைத் தியானித்தோம், அவரெழுந்தருளிப்பொருது,செயிக்கக்கூடாமையாற்புகழ்ந்துபோயினர், அச்சமையத்திலே தப்பித்துக்கொண்டுஇவ்விடஞ்சேர்ந்தொளித்தோம்,அதையும்விசாரித்துச்சேனைகளுடன் இதோவந்துவிட்டான், ஆகையால் கிருபையுற்றுஎங்களேக்கமும் அவனாக்கமுந் தவிர்த்தாண்டுரட்சிக்கவேண்டுமென்று முறையிட்டார்கள். அதைக்கர்த்தன்திருச்செவியிலேற்று,இனிப்பயப்படவேண்டாமெனக்கையமைத்து,தமதுதிருவிளையாடலைநினைந்து, விருத்தசந்நியாசியாகி,குண்டிகையுங் குடையுந்தாங்கி, கோலூன்றித்தள்ளாடிக்கொண்டு, சலந்தரனெதிரில்வந்து, ஓ ராட்சதராசனே, நீயார்? எவ்விடமிருப்பது, யாதைத்தேடிஇத்தலத்தில்வந்தாய், சொல்லுமென்றுகேட்க, ஓபெரியவரோ, சமுத்திரராசபுத்திரன், என்பெயர்சலந்தரன், பகைவராகிய தேவரையும்அவர்களுக்கிடந்தந்தாதரிக்குஞ்சிவனையும்செயங்கொள்ளவந்தேனென்றமறுமொழிகொடுக்க,அவனைப்பார்த்து, இகழ்ச்சிக்குறிப்பாகநகைத்து,நாம்கர்த்தன்சன்னிதானத்திருந்து அவர்வல்லபங்களனைத்தினையும் அறிந்திருப்போம் பரமசிவத்துடன் போர்செய்வையாயின், இறந்துபோவாய், இன்னஞ்சிலகாலம்உயிருடனிருக்கமனதிருந்தால், திரும்பிப்போவதுநேத்திடென்றுசொன்னர். உடனேசலந்தரன்வடவாமுகாக்கினியைப்போலக்கோபித்து, திரேகமெங்கும் வியர்வையரும்பப் புருவம்நெற்றியிலேற மீசைதுடிக்க அக்கினியும் புகையும்பெருகப் பெருமூச்செறிந்து, நீர்என்னைச்சிறியவனுகநினைந்தீர்என்செயங்களையும் வன்மையையுஞ்சொல்லியாவதென்ன, சிலநேரம்நின்றெனது புசபலபராக்கிரமத்தைப்பாருமென்றுரையாட, அதைச்சிவபிரான்கேட்டு, நல்லகாரியம் உன்சவுரியத்தையும் வலியையும் அறியத்தான் வந்தோமென்று, தமதுபாதப்பெருவிரலினலே பூமியில் வட்டமாகக்கீறி,ஓசலந்தரனே உன்வல்லபத்தினல்இதோ கோடிசூரியப்பிரகாசமாய்விளங்குஞ் சக்கிராயுதத்தையெடுத்துச் சிரத்திலேதாங்கமாட்டுவையோ, என்றுகேட்க, அவன்நகைத்து, விருத்தரோ இந்திரன்முதலானதேவரை முதுகிடத்துரத்தினேன்,கங்கையைக்குளமாகவடைத்தேன், வடவைக்கனலைக்குளிரச்செய்தேன்,விஷ்ணுவைச்செயித்து அவரால்புகழப்பெற்றேன் அப்படிக்கொத்தவலிபெற்றஎனக்கிதனைத் தாங்குவதரிதோஇதோபாருமென்று ஊங்காரித்து, அச்சக்கரத்தைஒருகரத்தினலேந்தி மற்றக்கரத்தையுந்தாங்கித் தூக்கப்படாமையால் மார்பிலணைத்து, அரிதினெடுத்துச் சிரத்தில்வைத்தான் இதைக்கண்டதேவராதியானவர்கள், இவன்வலியேவலி,சூரனென்பது இவனுக்கேதகுமெனக்கொண்டாடினர்கள். அத்தறுவாயில் அத்திகிரிசலந்தரனுடலை இருகூறுகப்பிளந்துதள்ளியது.

அத்திரேகத்தினின்றும் உதிரமானதுஊற்றெடுத்தோடியெங்குமூட அதனையும் அவன்பின்வந்த சேனைகளையும்தமதுநுதல்விழித்தீயினலேமாற்றி பரமசிவன் பழையகோலங்கொண்டார்,அப்போது அச்சக்கரம்சோதிமயமாயெழுந்து, கர்த்தனிடத்திற்சேர்ந்தது. இக்காட்சிகளையெல்லாந்தெரிசித்ததேவேந்திரனுதியான விண்ணவர்பலதரந்தொழுதுபோற்றிசச்சிதானந்தமூர்த்தி பலகாலம்வருந்தியஎமதுகுறைகளைக்கணப்போதிலொழித் தாண்டீர் இனிப்பிழைத்தோமென்று ஆனந்தக்கூத்தாட அவர்களைக்கிருபையாகப்பார்த்து விடைகொடுத்தனுப்பிவிட்டு,பரமன்தமதாலயத்தைச்சேர்ந்தார். இப்பால்சலந்தரன் தேவியாகிய விருந்தையின் சவுந்தரியத்தைக்கண்டு ஆதியில் மையல்கொண்டிருந்தவிஷ்ணு, இதுதருணமென்றெண்ணி, கபடசந்நியாசிவேடந்தாங்கி,சலந்தரன்அரண்மனையில்வானத்தையளாவித்தழைத்திருண்டிருக்கின்றநந்தவனத்திலேஒருகுருக்கத்திநீழலில் தவத்தைச் செய்கின்றவனைப்போலவிருக்க, அக்கன்னிகையானவள், நமதுகணவ

னைக் கயிலைக்குப்போக வேண்டாமென்று தடுக்தும், நில்லாமற்போயினாரோ, செய்தியொன்றும், தெரியவில்லையே, என்னசெய்வேன்என்று வெதும்பி, வாடி, நிலைபெறாமல்இங்குமங்குமாய், இருதலைக்கொள்ளியில் அகப்பட்டஎறும்பையொக்கஅலைந்து,ஒன்றுந்தோற்றாமலும்அரண்மனையிலிருக்க மனம்தாபரியாமலும் பரிமளமிகுந்த பூஞ்சோலையினிடத்து வந்தாள்.அத்தருவாயில்கேசவனுக்கினைப்படிக்கு வைகுந்தவாயிலைப் போற்றுந் துவாரபாலகர் இருவர் புலிவடிவுகொண்டு சீறி அவளெதிரிற் பாய அவள் அதைக்கண்டு, இடியுண்ட சற்பத்தைப்போல, ஏங்கியோடி கபடசந்நியாசியைக்கண்டு அபயமென்றுநெருங்கினாள், அச்சந்நியாசிபயப்படாதேயென்றுகையமைத்து புலிகளையதட்டித்துரத்திவிட்டார்.அப்போது அவ்விருந்தைஅவனைப்பார்த்து இவர்மகத்துவாகக்காணுகின்றார்.இவரால்நமக்குவேண்டுஞ் செய்தியைத்தெரிந்துகொள்ளலாமென்றெண்ணி. என்னிஷ்டதேவதையைப்போலவும், பிதாவைப்போலவும் இத்தருணத்திலெழுந்தருளிய தபோநிதியே என்கணவன் பரமசிவத்தின் பேரிற் சண்டைக்குப்போயினார், இதுபரியந்தம் அவர்வரக்காணேன் செய்தியொன்றுந்தெரியஇல்லை,தேவரீருக்குச்சகலமும்தோற்றுமாதலால்அவர் இறந்ததும்உயிருடனிருப்பதும்அநுக்கிரகஞ்செய்யவேண்டுமென்றிரந்தாள்.அக்கபடசந்நியாசி நல்லகாரியம், சற்றிவ்விடத்திரும்; திஷ்டாந்திரமாகக் காட்டுவோமென்று, தமதெண்ணப்படிக்குஆதியிற்புலியாகவந்ததுவாரபாலகர்குரங்காகநிற்கக்குறித்து அவனைநோக்க, அவரோடிப்.பிளந்துகிடந்தசலந்தரனுடலைக் கொண்டு வந்து சேர்த்தார்கள், அப்போது அவள் இருகூறாயிருக்கின்ற கொழுனனைக் கண்டவுடன் பதைபதைத்துவிழுந்து புரண்டரற்றி, மரணமூர்ச்சை யாயினள். அக்காலத்தில் முன்னம் அவளிடத்தாசைபெற்றிருந்த சந்நியாசிஅவளை வாரி யெடுத்து, மார்பிலணைத்துக்கொண்டு சயித்திய வுபசாரங்களைச்செய்து தேற்றஅவள் தெளிந்தெழுந்து தபசியைச் சேவித்து, உம்மை யொத்த மகத்துவமுடையவர்களெங்குமிரார், அடியேன்பிராணனைக் காத்தாற்போலவே என்கணவன் திரேகத்தையும் பொருத்தி உயிருண்டாக்கிப் புருஷபிச்சை தரவேண்டுமென்று போற்றினாள்.

அத்தபசி நல்லதென்று, சலந்தரனுடலைச்சேர்த்து,அதில் தான்பிரவேசித்தெழ, அதைவிருந்தை கண்டமாத்திரத்தில் ஆனந்தவாரியில்மூழ்கி கொழுனனைச் சேவித்து, ஓ? பிராணநாயகனே, வந்தீரோ, உம்மைக்காணாது இதுவரையில் வருந்தினேனென்று தழுவி இருவருமாய் மாளிகையைச் சேர்ந்து, அறுசுவையுண்டியைப்புசித்தும் கலவைச்சாந் தணிந்தும் பரிமளமிகுந்த புஷ்பமாலைகளைச்சூடியும், பஞ்சணைமெத்தையிற் சரசசல்லாபங்களைச்செய்து இன்பமுற்றும், இவ்விதமாக அன்றுமுதல்அளவற்றகாலம் இடைவிடாமல் வசாகணமாகக் களித்திருந்தார்கள் அத்தருவாயில் ஒருதினம் அம்ச தூளிகாசயனத்தில் மெய்ம்மறந்து முகுந்தன் நித்திரைசெய்ய பரமசிவன்கட்டளைப்படிக்கு விஷ்ணுகோலந் தோற்றியது. அதைக்கண்ட விருந்தை நடுநடுங்கி, இவன்மாயனாகுமென்று நிதானித்து. நடந்தவிருத்தாந்தங்களைத்தன்னறிவினாலறிந்துகோபித்து, புலியாகவந்த உன்வாயில்காப்போர் உனக்குவயிரிகளாக அரக்கர்குலத் துதிக்கக்கடவர், நீயும்பூமியில் அரசர் குலத்தவதரித்து, என்னை வஞ்சித்தபடியே யுன்பத்தினியை அவ்வசுரர் மாயைசெய்துகொண்டுபோககுரங்கினங்களைச் சேர்த்துக்கொண்டு, வனங்கள்முதலிய இடங்கள்தோறும் அலைந்துழன்றுஉலகர் இகழ்ந்துபழி கூற இருக்கக் கடவையென்று கொடிய வசைசொல்லி, எரியை வளர்ப்பித்து அதில்விழுந்திறந்தாள். இவைகளனைத்தையுங்கண்டவிஷ்ணுஅவளிடத்துற்றஇச்சையினாலேங்கி,வாடி வருந்தி விருந்தையிறந்த சுடலைப்புழுதியில் விழுந்து புரண்டு பிரலாபித்திருந்தார் அதைப்பிரமனாதியாகியதேவர் அறிந்து, திருக்கயிலைக்கு விரைந்து சென்று கர்த்தன் பாதகமலங்களிற் சேவித்துப்போற்றி. விண்டுவுக் கடுத்த இன்னலை விண்ணப்பஞ்செய்தார்கள் அதைக்கேட்டு.பரமன் திருநகைகொண்டு, உமையவளைப் பார்க்க பராபரைகிருபையுற்று, ஒரு வித்தையுண்டாக்கித்தந்து இதனைக்கண்ணன் முன் நாட்டக்கடவீரென்று கொடுக்க, பிரமன்வணங்கி வாங்கிப்போய்,விருந்தையிறந்த மசானத்திற்சாம்பலைப்பூசி மயங்கியிருக்கின்ற கேசவனெதிரில் நாட்ட,அது துளசியாக முளைத்து உடனேதிவ்வியவடிவுடையபெண்ணுருப்பெற்று நிற்க அவளைத்தாமோதரன்கண்டு, விருந்தையினிடத்திற்பெற்ற மையலையொருத்து அவண்மீது மோகமாயினார் அதைக்கண்டதேவர் களித்து அவளை விண்டுவுக்கு மணஞ்செய்தார்கள்.பின்புமாயன்அப்பெண்ணைக்கூடி வைகுந்தமேபோய்ப் பிரியாவிடையாய் அநுபவித்திருந்த தன்றியும் சிரத்திலும் அணிந்தார். அதுமுதல் திருத்துழாய் விஷ்ணுவுக்கு உவப்பாயிற்று. அப்பால் விண்டுவானவர் சலந்தரனைப்பிளந்த சக்கரத்தைப்பெறக் கருதிப் பரமசிவத்தை யளவற்றகாலம் பூசித்துவருகையில், ஒருதினஞ்சகஸ்திரநாமார்ச்சனைக் கொருகமலங்குறைவுபடக்கண்டு, பணிவிடையிற் றவறுவாராமல் தன்கண்மலரையிடந்து சாத்திப் பூசிக்க, கர்த்தனிரங்கிக்காட்சிகொடுத்துகண்ணன்விரும்பியசக்கரத்தையுங்கடாட்சித்தார்,அன்றுமுதல் விண்டுவுக்குநேமியானென்னுமொருநாமம்விளங்கியது.

ஓ! தக்கனே? சங்கரன் வேற்றுருக்கொண்டவிபரமிதுவாகும் இனிஅவர் ரிஷபவாகனமேறிய காரணத்தையும் சொல்லுவோம் சதுர் யுகங்களும்இரண்டாயிரவிசை திரும்புமாயின் ஒருதினம்,அதுமுப்பது கூடியதுமாதம்,இவைபன்னிரண்டு சேர்ந்தது வருடம்,இதுநூறுநிறைந்தால், பிரமன் தனக்குப்பூரணாயுசாகி இறப்பான். அக்காலம் விண்டுவுக் கொருநாள், முன்குறித்தவாறேநூறுவருஷஞ் சென்றால்,அவரும்இறப்பார்,அண்டங்களிடியும்,சத்தசாகரங்களும் பெரும்புறக்கடலும் பிரசண்டவாயு மோதுதலினாலோங்கி யெங்கும்மூடிக்கொள்ளும், அக்காலத்திற்பரமசிவன் ஏகனாய்த் தமது அக்கினிவிழியினாற் சகலத்தையும்நீறாக்கி விளங்குகின்ற அவ்வீமத்திலே சத்திகண்டுகளிக்க ஆனந்த நிருத்தஞ்செய்வார். அத்தருவாயில்தருமதேவதை, நாம் இறவாமலிருக்கும் உபாயம் யாதென் றாலோசித்து, கங்கையைச் சடாமகுடத்தணிந்த பரமேஸ்வரனையடைவோ மேல் அப்பேற்றினைப் பெறலாமெனத்துணிபுகொண்டு ஏற்றினுருவாகி கர்த்தனெதிரில்நின்று, சுவாமி அடியேனைப் பாதுகாத்து வாகனமாகவூர்ந்து ரட்சிக்கவேண்டுமென்று பலவிதங்களாகப் போற்ற, பரமன் கிருபையுற்று அவ்வரத்தைத்தந்து, இனியுதிக்கின்றசதுர்யுகங்களிலே கிரேதாயுகத்தில்நான்குபாதங்களினும்திரேதாயுகத்தில் மூன்றுபாதங்களினும் துவாபரயுகத்தில் இ

ரண்டுபாதங்களினும் கலியுகத்தில் ஒருபாதத்தினும் பதக்கிரமமாகத் தருமத்தை நடத்தக்கடவாய். நம்மைத்தாங்கும் முயற்சியினுற் சகல சிறப்புக்களும் வல்லபமும் பெற்று, அடியார்களிற் சிறந்தவர்கள் பாதகங்களைநீக்கி, எக்காலத்தும் நமது வாகனமாக விளங்குவாய்.நாமுமுன்னைப் பிரியாவிடையாகக் கலந்திருப்போ மென்று அளவற்ற பேறுகளைஅளித்தார் இக்காரணத்தைக் கருதியல்லவோ திரிபுரதகனஞ் செய்தகாலத்து விண்டு விடபமாகிப்பரமசிவத்தைத தாங்கினுர். இது எருதேறிய சவிஸ்தாரமாகும். இதனுற் கர்த்தனுக்குக் குறைவுண்டோ, பேதாய்? இனி விஷமுண்ட கதையைக்கேள். ஆதியிலொருகாலந்தேவரும் அசுரரும் பகைத்தெதிர்த்து, அளவற்றயுகங்கள் அகோர யுத்தங்களைச் செய்து, இருதிறத்தவரினுமிகுதியாகமாண்டிளைத்த காரணத்தை யோசித்து, இனிஆயசைவிருத்திசெய்து கொண்டு நீடித்துச் சண்டைகொடுத்து,செயாபசெயத்தை அறியவேண்டுமென நிச்சயித்து பிரமனிடத்துக்குச் சென்று தங்கள்கருத்தை விண்ணப்பஞ்செய்து, சுவாமி!திருப்பாற்கடலைக்கடைந்து அமிர்தமுண்டாக்கித் தரவேண்டுமென்று போற்ற, நான்முகன் கேட்டு, நீங்கள் விரும்பியகாரியம்நம்மால்முடிவதன்று, விஷ்ணுவினுலாகுமெனச்சொல்லி,அவர்களைக்கூட்டிக்கொண்டுபோய், திருப்பாற்கடல் மத்தியிற் சேஷசயனத்தமர்ந்துயோகநித்திரைசெய்யும் விண்டுவைத் தெரிசித்து,அனந்தலெழுப்பிப்போற்ற, அதைத்திருமால் செவிகளிலேற்று திருக்கண்களை விழித்துப்பார்த்து, நீங்கள் வந்தகாரியம் யாதென்று திருவாய் மலர்ந்தருளினுர்.

அப்போது பிரமன் அஞ்சலிசெய்து தேவேந்திரனுதியானவர்கள் கோரிக்கைகளை விண்ணப்பஞ்செய்து, அதுமுடியு முபாயம் தேடவேண்டுமென்றுகோருவதைவிண்டு யோசித்து, அவர்களுடன்கலந்து, மந்தரகிரியைத் தருவித்து மத்தாகநாட்டி, வாசுகியைத் தாம்பாகப் பூட்டி. தேவரொருபுறமும் அசுரரொருபுறமுமாகத் திருப்பாற்கடலைக் குமுறக் கடைவித்தார். அத்தறுவாயில் அவ்வருத்தத்தைவாசுகி சகிக்கமாட்டாமல்விழிகள்பிதுங்க நாவை நீட்டி, இளைத்து, ஆயிரம் வாய்களினும் விஷங்களைக்கக்க அது அக்கடலிற்பரவி இரட்டித்து அபரிமிதமாயோங்கி சடசடத்த தொனிகளுடன் சுவாலையைவீசி, எதிர்த்தவர் முதலான சமஸ்தத்தையும் சாம்பலாகத் தகித்து வருவதை விண்ணவர் தானவர் ரிஷிக்கூட்டமுதலானவர் கண்டு நடுநடுங்கி நிற்கச் சக்தியில்லாமற் பலதிக்கினும்புறங்கால் புட்டத்திற்ருக்க வோடினுர்கள். அதை ஆமையுருக்கொண்டு மந்தரத்தை முதுகிலேதாங்கிநின்ற கண்ணன் அறிந்து, அபாயம் விளைந்தது. இனித் தாமசப்படலாகாதென்றெண்ணி, அதிதீவரமாகத் தமதுருவெடுத்துசங்கு சக்கரம் கதை கோதண்ட மாதியான படைகளைத்தாங்கி, மண்டி யெரிந்துபாயும் விடத்துக்குநேராக அதட்டிச்செல்ல,ஆலம்வெகுண்டுதாக்கியமாத்திரத்திற்பழையவயிரநிறமாறி, திரேகம் கரிகரிந்து, எதிரில் நிற்கப்பயந்து, பரமசிவ மெழுந்தருளிய திருக்கயிலையைநோக்கி, சசலருடனுமோடினுர்.

கேட்டீர்களோ சவுனகாதி ரிஷிகளே! இவர்களனைவரும் தேடிச்சென்றதரிதோ? பிள்ளைகள் தங்களுக்கிடறுற்றகாலத்திற் பிதாவையடைந்து முறையிட்டுக் கொள்ளாமல் யாவரிடத்திற் போவார்கள்? இவ்விதமாக அல்லோலகல்லோலப் பட்டு நெருங்கிய தேவராதியர் கர்த்தனெழுந்தருளி யிருக்கும் ஆலய முதல்வாயிலில் வீற்றிருந்து அரசுசெலுத்தும் எமது கர்த்தனுன நந்திதேவரைக்கண்டு வணங்கி, கரங்களைக்கூப்பி. தேவரீரைத்தெரிசித்த மாத்திரத்தில் எங்கள் மனத்துயர மொழிந்தோ மெனத் துதித்து. தாங்கள் வந்தகாரணத்தைவிண்ணப்பஞ்செய்ய அதை நந்திதேவர் கேட்டு, அவர்களை யாதரித்துஅவ்விடத்தில் நிறுத்தி, சிவபிரான் சன்னிதானத்திற்சேர்ந்து கேசவன் முதலானவர், வரவை விண்ணப்பஞ்செய்து. கர்த்தன் கட்டளை பெற்று வெளிவந்து, பிரமன்விஷ்ணுவைவிட, அவர்கள் சபையிற்போய் லோகநாயகனைத் தெரிசித்துப்பலதரம்பணிந்து, ஆனந்தக் கூத்தாடிப்போற்ற, அதைப்பரமன் பார்த்தருளி, ஓ? மாலே! உனது திரேகம் வேற்றுருவாய் வாட்டமுற்று வந்தகாரணமென்னென்று வினுவினுர். அப்போது கேசவன்நடந்தசவிஸ்தாரங்களைத் தெருட்டி சுவாமி!தேவரீரனுக்கிரகம் பெறுமல்இக்காரியத்தைத் துவக்கியபடியால்இக்கெடுதி நேர்ந்தது,அடைக்கலமடைந்தோம், கர்த்தனே? இதோஆலகாலவிஷம்மேலிட்டுத்துரத்திவருகின்றது! ஆதியிற்பலவிசை அடியோங்களைப் பாதுகாத்தாற்போலவே இக்கொடுமையையும்நீக்கி ரட்சிக்கவேண்டு மென்று போற்றினுர். அத்தருணத்தில் திருமலைப்புறத்திற் சூழ்ந்து நின்ற சுராசுரர்கள்அரகரவெனத் துதிக்கு மொலி சர்வந்தரியாமியாகிய பரமசிவத்தின் திருச்செவியிற்புக, அதைத்தாம் அறியாதவர்போல இதென்னகோஷ்டயென்றுவினுவ,சுவாமிவிஷத்துக்கஞ்சி எங்களைத் தொடர்ந்துவந்தவர்களதுமுழக்கமென்று மாயன் விண்ணப்பஞ் செய்யக் கேட்டருளி பரிவாய் நந்திதேவரைப்பார்த்து, அவர்களனைவரையும் அழைத்துவரக் கடவாயெனக் கட்டளையிட்டார்.

அவ்வாறே நந்திதேவர் சகலரையும் உள்ளே விட்டமாத்திரத்தில் அவர்கள்யாவரும் பரமன்திருவடிகளைத்தெரிசித்து, ஆடிப்பாடிச் சேவித்து பலபலவிதங்களாகத் துதித்து தங்கள் இன்னலைத்தீர்த்து ரட்சிக்கவேண்டு மென்று முறையிட்டார்கள் அப்போது பயப்படாதீர்களென்றுகையமைத்துக் கிருபாநிதியாகியகர்த்தன்இடப்பாகத்தில் வீற்றிருக்கும் மகேசுவரியைநோக்கி,இவர்கோரிக்கையைஈடேற்றுவது உனக்குச்சம்மதமோ எனக்கேட்க,சுந்தரி அஞ்சலித்து சுவாமி, சரணடைந்தவரைத் தற்காத்தல் கடனுதலால் திருவுளப்படிக்குக் கடாட்சிப்பது உத்தமமாகக் காணுகின்றதென்று சொல்ல, அவ்வாக்கியத்தைக்கேட்டு, புன்முறுவல் பூத்து, ஏவற் பணிவிடைகளைநடாத்திப் பக்கத்திற் காத்திருக்கின்ற ஆலாலசுந்தரனை யழைத்து, தேவர் நடுங்கவருகின்ற காளத்தைத்திரட்டி வரக்கடவா யென்று கட்டளையிட்டார். உடனே அவர் வணங்கிப்போய், உலகமெங்கும் பரந்தெரிகின்ற நஞ்சைஊங்காரித்தழைத்து சேர்த்துவந்துகர்த்தன்திருமுன்காட்டினுர் அப்போது கர்த்தன் அதனைத் திவலைப்பிரமாணமாக உள்ளங்கையிலேந்தி, விண்டுவாதியரை நோக்கி, இவ்வாலத்தைப்புசிக்கவோ, அல்லது தொலைதூரத்திற் போகவெறியவோ?உங்கள் சம்மதமென் னென்றுவினுவ, சகலரும் தொழுது தேவாதிதேவா, இக்கொடிய விஷம் தேவரீர்திருக்கரத்திலணுமாத்திரமா யடங்கியிருக்கின்றது, இதனைவிடுவீராயின் அண்டாண்ட புவன சராசரங்களை நிமைப்போதில் அழித்து விடும், இதுவல்லாமல் யாவராயினும் எக்கரு

மக்களைச் செய்தபோதினும் பிரதமத்திலுதிக்கின்ற பொருள்கள் அனைத்தும் தேவரீருக்குப் பிரீதியாதலால், அடியோங்கள் பிழைக்கும்பொருட்டுஇதனையுண்டருளவேண்டுமென்றிரக்க,பயப்படாதீர்களென்று கையமைத்துக்கரத்தில் விளங்கும் விஷத்தை யுட்கொண்டருள, விண்டுபிரமனுதியர் தொழுது, எங்களைப் பாதுகாத்ததற்கு இலக்கணமாக இக்கடுவைக்கண்டத்தில் நிறுத்த வேண்டு மென்று விண்ணப்பஞ்செய்ய, அவ்வாறே நிலைபெறச்செய்தார் அவ்விடமானது நீலமணியைப்போலப் பிரகாசித்திருப்பதால், அன்றுமுதற்சிவபிரானுக்குக் காளகண்டமூர்த்தியென்னுந் திருநாமம் விளங்கியது இதைக்கண்டகடவுளர் முதலாயினோர். இறந்துஉதித்தவர்களையொத்து, ஆனந்தக்கூத்தாடி ஐயன்பெருமைகளைப்பாடித் துதித்தார்கள். பின்பு சிவபிரான் கண்ணன் முதலானவர்கள்மீதுதிருக்கண்சாத்தி, நீங்கள்போய் மறுபடியும் திருப்பாற்கடலைக்கடைவீராயின், உங்களிஷ்டப் படிக்கு அமுதமாதியானவை உண்டாகுமென்று அனுக்கிரகஞ்செய்தனுப்ப, அவர்கள் சேவித்துவிடைபெற்றுச் சென்று பழயபடிக்குமத்திக்க,அமுதமும் மற்றவஸ்துக்களு முண்டாயின, அவைகளைக் கிரமப்படிக்குச் சகலரும் பெற்றுக்கொண்டுமகிழ்ந்தார்கள். விடமுண்டசரித்திரம் இதுவாகும், இனிக்கங்கையைத் தாங்கிய விபரத்தைக்கேளென்றுததீசிரிஷிசொல்லுவார்.

முன்னொருகாலத்திலே திருக்கயிலாயத்தில் விளங்கிய பூங்காவிற் பரமசிவமும் உமையவளும் வேடிக்கையார்த்தமாக எழுந்தருளியிருக்குந் தறுவாயிற் பார்ப்பதி திருவிளையாடலைக்கருதி, கர்த்தன் விழிகளைத்தனது திருக்கரங்களினலே புதைத்தாள். அக்காலத்தில்உலகங்களைவிளக்குகின்ற சூரிய சந்திரர்அக்கினி இவைகள்பரமன்கண்களினிளியாதலாற் பிரகாசியாமலடங்கின இத்திருவிளையாடல் நிமைப்போதாயினும் புவனங்களுக்களவற்றயுகங்களாக உயிர்கள்காடாந்தகாரமான இருளிற்பட்டு குருடாகி தடுமாறி அலைச்சற்பட்டன. அதைஎமதிறைவன்திருவுளத்தறிந்து அவைகளின் இடரை யொழித்தளிக்கத் திருவுளங் கொண்டுநெற்றிக்கண்ணைத் திறந்தார் அவ்வொளியினல் அண்டாண்டபுவனங்களில் மூடியிருந்த இருளும் சீவராசிகள் மயக்கமும்நீக்க பழையபடியேஆதித்தனும் சோமனும் அக்கினியும் விளங்கினர்கள் இச்செய்கைகளை லோகநாயகிகண்டு பயந்து மூடியகைகளை வாங்கும்போது, விரல்களினிடத்துப்பெருகும்வியர்வையையுதற, அவைகங்கைகளாகி சமுத்திரம்போலப் பெருகி, ஆயிரநூறுகோடி முகங்களாய் எங்கும்பரந்தொலித்து, உலகங்களை யழித்தோடின. அதைப்பிரமனுதியர்கண்டு, பயப்பிராந்திகொண்டு திருக்கயிலாயத்துக்கோடி நந்திதேவரனுமதியில் ஆலயத்திற்போய் கர்த்தனைக்கண்டு,சேவித்துப்போற்றி, தினதயாபர மூர்த்தி, தேவாதி தேவா, சுவாமி, இதோ மிகுந்த வெள்ள மானது கடையுக சமுத்திரத்தினுமேலிட்டு கல்லென்னுமொலியுடன் பெருகி புவன சராசரங்களையழிக்கத்தொடங்கியது. தேவரீர்சற்றுத்தாழ்க்கின் அனைத்தும் முடிவெய்தும், ஆதலாற் கிருபையுற்று ஆதியில்அழற்றெழுந்தவிடத்தையுண்டுபாதுகாத்தாற்போலவே இதையும்பரித்து,சகலரையும்ரட்சிக்கவேண்டுமென்றுவேண்ட பரமன்இரங்கி அவ்வெள்ளத்தைச் சடைகளில்விளங்கும் ஒருரோமத்திற் சுவறச்செய்தடக்கினர். இப்பெருமையைக்கண்டவிஷ்ணுபிரமன்இந்திரனுதியானதேவர்கர்த்தன்மகிமைகளைக்கொண்டாடித்தொழுது, சுவாமி! பார்ப்பதியார் திருக்கரத்திலுதித்துத் தேவரீர்முடியிலேதாங்கப்பெற்ற முயற்சியினல், அதுபவுத்திரமாகும், ஆதலால் அக்கங்கையிற் சிலஎங்களுலகங்களிற், பெருகக்கடாட்சிக்கவேண்டுமென் றிரந்தார்கள், அப்போது பரமசிவன் அன்பாய், அத்தீர்த்தத்திற் சிலதிவலைகளை அம்மூவர்கரங்களிலேதெளிக்க, அவர்கள்வணங்கியேந்தி, செலவுபெற்று, தங்களுலகமேசேர்ந்து, அத்தீர்த்தங்களைவிட்டார்கள். உடனே அவைகள்பரமபதத்தில் விரசாநதியென்றும் சத்தியலோகமாகியமனேவதியில்மானததீர்த்தமென்றும் இந்திரலோகத்தில் தேவகங்கையென்றும் ஆறுகிப்பெருகின. இவைகளில் பிரமலோகத்திலிருந்த கங்கையைப்பகீரதன் அரியதவத்தைச்செய்துபெற்று, பரமசிவத்தின் சடையின்மூலமாகப் பூமியிற்கொண்டுபோய், இறந்தசகராள்அஸ்தியின்மீதுபெருக்கினன் கங்கையினதுபரிசம் பட்டமாத்திரத்தில் அறுபதினுயிரம்இராசபுத்திரர்களும்நரகவாதனைபொழிந்து,மோட்சவீட்டில் நித்தியமாயிருக்கப்பெற்றார்கள். மற்றஇரண்டும் பொன்னுலகத்தினும், வைகுந்தத்தினும் விளங்குகின்றன. உலகவுபாதியைநீக்கும் பொருட்டுக் கர்த்தன்கங்கையைமுடியிலேதரித்தசரித்திரம்இதுவாகும், இனித்தமது கூறுகியபராசத்தியை வாமபாகத்தில் இருத்தியவரலாற்றைத் தக்கனேசொல்லக்கேட்பாயாக.

முன்னொருசர்வசங்கார முடிந்தபின்புசிவத்தினனுக்கிரகத்தினுல் உதித்தபிரமன் சீவராசிகளைப்படைக்க நினைந்து, சனகன் சனற்குமாரன் சனந்தரன் சனதரனென்னும் நான்குகுமாரர்களை நிருமித்தான். அவர்கள்பரமனைக்காணும் பேறிவைப்பெற்று, யோகிகளாயினர், இதனைக்கண்டு தன்படைப்புமல்காதகாரணத்தினுற் பிதாமகன்வருந்திபிள்ளைகளைக் கூட்டிக்கொண்டு வைகுந்தத்திற்போய், விஷ்ணுவைக்கண்டுசேவித்து, தன்மனக்குறையைவிண்ணப்பஞ்செய்து, இதற்கொருமார்க்கத்தைப் போதிக்கவேண்டுமென்றுபோற்ற விஷ்ணுவானவர் இக்கருமம்நம்மால்முடிவதன்றுசிவகடாட்சத்தினுலாகவேண்டுமெனக்கருதி, அவர்களுடன்திருக் கயிலாயத்திற்சென்று நந்திதேவரனுமதியிற் பரமனைத்தெரிசித்து, வணங்கிப்போற்றி, தேவாதிதேவா, பிரமசிருஷ்டிஒங்காமையால், அதை

த்தேவரீர்கடாட்சிக்கவேண்டுமென்று துதித்தார்கள் அப்போது சிவபிரான் அவர்களைமாய்த்து நீறுசெய்து,ஏகனுயிருக்கின்ற தமதுஇடதுபுஜத்தைநோக்க, உதித்தஉமையவளைக்கலந்து, விஷ்ணுபிரமன்சனகாதியர்களை உண்டாக்கினார், அவர்கள்கர்த்தனைப்பணிந்து துதிக்குமுன்னிலையிற்கர்த்தன்கண்ணன்மீது திருக்கண்சாத்தி, நமதனுக்கிரகமாகியசத்தியைக்கலந்த முறைமையினால் இனிபிரமசிருஷ்டி மல்குமென்றருளிச்செய்ய அவர்கள்களித்து ஈடேறினோமென்று ஆனந்தக்கூத்தாடி, அம்மையப்பனை வலம்வந்து,செலவுபெற்று. தங்கள்பதவிகளிற் சேர்ந்தார்கள், பின்புசிவகடாட்சத்தினாற் பிரமன்சராசரப் பிரபஞ்சங்களைப்படைத்தான்.சத்திசிவங்கலந்தமுயற்சியினால்,உலகத்தில் ஆண்பெண்ணினங்கள்சேர்ந்து இன்பமுற்றுப்பரவின. தோற்றமனைத்தும் சத்திமயமாகும், சிவமதனிற்பொருந்திநடிப்பிக்கும் அகந்தையிற்சிறந்ததக்கனே, பிரமசிருஷ்டிநீடத் தற்பரன் தமதருளாகியசத்தியைக்கலந்தகாரணம் இதுவாகும், பேதாய், பின்புகர்த்தன்பிள்ளைகளைப்பெற்றகாரணத்தைச்சொல்லக்கேட்பாயாக.

முன்னொருகாலத்திலே தேவராசன் விண்ணவரைக்கூட்டிக்கொண்டுபோய், ராட்சதர்களுடனெதிர்த்து. அகோரயுத்தங்களைச்செய்து சின்னபின்னப்படக்கொன்று, துரத்திவென்றுவிஞ்சையர்முதலானவர்வாழ்த்தெடுப்பச்செயசன்னாகத்துடன்மீண்டு, பொன்னுலகத்தைச்சேர்ந்து,களித்திருந்தான். இப்பால்ஓடிப்போனராட்சதராசன்வருந்தி, இனியென்னசெய்வோமென் றெண்ணாதெல்லா மெண்ணியெண்ணி, வாடி, பின்புசுக்கிராசாரியன் ஆசிரமத்திற்சென்று; இந்திரனுக்குத்தான்தோற்றதையும் தன்மரபிலேதேவரைவெல்லவல்ல சவுரியவான்களொருவருமில்லாமையையும் தனக்குநேர்ந்தவசையையும் முறையிட்டு, சுவாமி.இனிராட்சதமரபு நசித்துப்போகுமோ, வீறுமோ, தேவரீருக்குத்தெரியுமாதலால் திருவுளம்பற்றவேண்டும் இதுவல்லாமல் எங்கள்குலத்துக்காசிரியனாயிருக்கின்றநீர் இம்மரபுமல்கத் தக்கவுதவிசெய்வது உமதுகடமையாதலின் அடியேனுக்கொருதேறுதலைபோதிக்க வேண்டுமென்றிரக்க பார்க்கவன்சிலபோது ஆலோசித்து, ஓராசனே கிலேசிக்கவேண்டாம், இனிஉங்களுக்குச்சுபகரமுண்டாகவிருக்கின்றது, அதற்கடுத்த சிலமுயற்சிகளைச்செய்யவேண்டும், அவைகள் என்னவென்றால், பிரமகுமாரனான வசிட்டன் மரபிலுத்துவேதவிதிப்படிக்கு அரியதவங்களைச்செய்து முடித்து மோட்சவீட்டை விரும்பியோகத்திருக்கின்ற மாகதரிஷியினிடத்துக்கு உமதுகுலத்துதித்த சவுந்தரியமுள்ளகன்னிகையொருத்தியைத்தெருட்டியனுப்பி அவரைமயக்கிக்கலங்கச்செய்தால். அவளிடத்திற்கயமுகாசுரன்உதித்து, சிவத்தைக்கருதித் தவங்களைமுடித்து, வேண்டியவரங்களைப்பெற்று, தேவரைவென்று, உங்கள்குலத்துக்குச் சக்கிரவர்த்தியாயிருப்பானென்றுசொல்லினார், உடனேஅவ்விராட்சதராசன் அவரைவணங்கிவிடைபெற்று தன்னகரத்தைச்சேர்ந்து, இலக்கணவடிவையும் விவேகத்தையும்வாய்ந்தவிபுதையென்னுங்கன்னிகையைப்பார்த்து, ஓபெண்ணே! எங்களுக்குற்றஇடர்உன்னாலே தீரவேண்டுமென்று வருந்திச்சொல்ல அதைக்கேட்டராட்சதகன்னிகை அரசனைச்சேவித்து, சுவாமி தேவரீர்எங்களுக்குஇறைவனாயிருக்க, உம்முடைய வசனத்தைமறுப்பதுண்டோ, கட்டளைப்படிக்கு நடந்துகொள்ளுவேன் நினைந்தகாரியத்தைதிருவுளம்பற்றவேண்டுமென்று இசைந்தாள் அவ்வரசன் மனக்கிலேசமொழிந்தவனாய், நேற்றையதினந் தேவர்கள்மீறிநம்முடையவருக்கத்தவரையெல்லாம்மடித்துத்துரத்திச் செயத்துடன்மீண்டது உனக்கும்தெரிந்திருக்குமே, அவர்களைச்செயித்துப்பகையைத்தீர்த்துக்கொள்ளத்தக்கவர்கள்நம்மிலொருவரையுங்காணேன், இக்கருமம் உன்னால்முடியவேண்டும் அதற்கேதுவேதென்றால், மகமேருத்தென்பாரிசத்திலே தவஞ்செய்திருக்கும் மாகதரிஷியிடத்துக்கு நீபோய்அவரைமோகிக்கச்செய்து கூடுவையாயின், வலியுடைய பிள்ளையுண்டாய், தேவரனைவரையுஞ்செயித்து, நமதுகுலத்தையும் விர்த்தியடையச்செய்வானென்றுசொல்லவிபுதை சம்மதித்து, தேவரீரிஷ்டப்படிக்குப் பிள்ளையைப்பெறுவேன், கிலேசிக்கவேண்டாமென்று உறுதிபேசி, விடைபெற்றுச்சென்றாள். ராட்சதராசனும் அன்றேதேவர் அதப்பட்டுப்போனதாக மகிழ்ந்திருந்தான்.

இப்பால்விபுதையென்னுங் கன்னிகைமாகதரிஷிதவஞ்செய்யுமிடத்தைச்சேர்ந்து, அவர்தவநிலையுறுதியைக்கண்டு, இவரைமையல்மூட்டிக் கலந்தலெவ்விதம், சமுத்திரத்தைச் சுவறச்செய்யும்வடவைத்தீயைமேகங்கள்வருஷித்து அவிக்குமாயின், மன்மதபாணம் இவர்தவத்தையழித்து விரகமுண்டாக்கும். இதுவல்லாமல் வனப்பிலுயர்ந்தமேனகையேவந்து மயக்குவளாயினும், தவநிலையிற்பிசகமாட்டார். இந்தமகிமையைச்சற்றும்யோசியாமல்நமதுஅரசன்வேண்டியதுக்கிசைந்து, அப்பிரகாரஞ்செய்வேனெனத் துணிவுசொல்லி நாம்வந்தது வெகுநேத்தியென்றுவெறுத்துக்கொண்டு, இதைக்கருதி ஊருக்குத்திரும்புவோமாயினும் மீளவும் அரசன்அனுப்புவான், ஆதலால் இவரைச்சேருங்காலம் நேருகின்றபரியந்தம் தவத்தைச்செய்திருப்போமென்று நிச்சயித்து, தம்மைச்சரணடைந்தவரை ரட்சிக்கும்பெருமையினையுடையபரமசிவத்தைத்தியானித்து, மாகதரிஷிக்கெதிரில்தவஞ்செய்திருந்தாள் இப்படிக்குஅளவற்றகாலங் கழிந்ததறுவாயில், இக்கன்னிகைசெய்த தவமுயற்சியினாலும் தேவர்ஊழ்வினைச்சம்பந்தத்தினாலும் ஒருகுஞ்சரம்பிடியைக்கூடிக்களிப்பதை அந்தரிஷிகண்களை விழிக்கப்பார்த்தவுடன் வேதவொழுக்கத்தையும் நீதியையுந் தவமுயற்சியையும்மறந்து, இவ்விதப்புணர்ச்சியைக்கூடப் பெறுவேவாயின் நமதுபிராணன்நிற்குமெனவருந்தி, சிற்றின்பத்தினாலே தவமகிமையழிந்து பழிக்குள்ளாகவேண்டுமென்று யோசிப்பேமாயின், காமநோய்பிராணனைவாட்டுகின்றது, ஆதலால்உயிரிருந்தால்மீளவும் யோகசாதனையைப்பெற்றுக் கொள்ளலாமென்றுநிச்சயித்து, புணர்ச்சியைவிரும்பிவாடினார். அக்குறிப்பினைத்தவத்தில்நின்ற ராட்சதகன்னிகைஅறிந்து,நமதெண்ணம் ஈடேறுங்காலம்நேர்ந்ததென்று அளவற்றசந்தோஷமடைந்து.இதுநல்லதருணமென்றெழுந்துபோய், மாகதர்பாதங்களிற்சேவித்து, கரங்களைக்கூப்பிநின்றாள். அந்தரிஷிஅவள்வடிவையும் பாலபருவத்தையும் பார்த்து, மிகவும்மையல்கொண்டு, இவள்காந்தருவவிவாகத்திற்கூடுவாளாயின்,நமதுபிராணன் நிலைபெற்றிருக்குமென்றெண்ணி, அவளைப்பார்த்து,நீகன்னிகையோவென்றுகேட்க, அவள்முல்லையரும்பினையும் முத்துக்கோவையையும்போன்ற தந்தபந்திகள்விளங்கப் புன்முறுவல்பூத்து,

சுவாமி! ஆமென்றுகோகிலமும்நாணக்கொஞ்சிச்சொல்ல அதைவினவி, நல்லகாரியம், என்னிடத்தில என்னகோரிக்கையை விரும்பிவந்தீர், அதனைவிரைவிற்கேட்டுக்கொள்ளக்கடவீரென்றார். உடனே அவள்தவத்தரோ! உம்மைக்கலந்துஇன்புறவேண்டிவெகுகாலமாகத் தவஞ்செய்தேன், அப்பலன் இன்றைக்குக் கைகூடியது, இப்போதுஉம்மைஅணைந்தின்பமுற்றுக் களிக்கவந்தனனெனச்சொல்ல, அதைஅந்தமுனிவர்கேட்டு, அரியவமுதம்பெற்றவரைப்போலமகிழ்ந்து, என்தவமும் உன்விரதபலனும்இத்தருணத்தில் இருவரையுங்கூட்டின, ஆதலால்நீகாலதாமசஞ்செய்யாமற்பெண்யானையாக வரக்கடவாயென்றுவேண்டினர். அதற்குஅவள்சம்மதித்து, அவ்வாறே உருக்கொண்டு, காமவிளைவைக்காட்ட, அவரும்களிறுகவடிவெடுத்து, துதிக்கையைவானத்தில்நீட்டி, வீறிட்டுவந்து, புணர்ந்தார், அவர்களின்பமுற்றியகடையிற்பிறையைப்போன்றநாற்கோடுகள்விளங்க நீண்டதுதிக்கையும் பர்வதாகிருதியாகிய திரேகத்துடன்கரங்களில்வாளுங் கேடயமுங்கொண்டு, கயமுகாசுரன் உதையமாய்த்திசைகளிற்பாய்ந்து, அஷ்டகுலாசலங்கள் துகள்படப்பாதங்களைப் பெயர்த்து, அண்டங்கள்குலுங்கக்கொக்கரித்தான். அத்தறுவாயில்அக்கன்னிகைஉரோமங்கடோறும்பெருகியவியர்வையில் அளவற்றராட்சதர்ஆயுதபாணிகளாய்ப்பிறந்தார்கள். அவர்களுடன் கயமுகன்கூடி வடவாமுகாக்கினி பிரசண்டவாயுவுடன்கலந் தெழுந்தாற்போலச் சஞ்சரிப்பதைத்தாய்தந்தையர்கண்டுபயந்து பழையவுருப்பெற்றோடினர்கள். அப்போது மாகதரிஷி தமதுகாமவிகாரந் தெளிந்ததனால், அப்பெண்ணைக்கோபித்துப் பார்த்து, நீயார்வந்தகாரணமென்ன? ஒளியாமல் வெளியிடக்கடவாயென்றுஉருத்துவினவ, அவள்தன்வரலாற்றை விவரித்துச்சொல்லினள்.

உடனே அந்தரிஷி திகிற்பட்டு, ஐயையோ! தேவர்முதலானவர்களுக்கு மிகுந்ததுன்பத்தைவிளைத்தேனெனக்கிலேசித்துவாடி, ஒருவகையாகத்தேறி, ராட்சதராசனேக்கமும் உன்னெண்ணமும் ஏககாலத்தில்முடிந்தன, என்தவமும் தேவர்வாழ்வும்வகையறமடிந்தன, ஆகலால் நீஇவ்விடத்தில்நில்லாமற்போய்விடென்றுசொல்ல, அவள்ரிஷியைச்சேவித்து, தன்பதிக்குவந்து, அரசனுக்குஇச்செய்திகளைவிண்ணப்பஞ்செய்தாள். அந்தராசன்சூரியவுதையங்கண்ட கமலத்தைப்போல முகமலர்ந்து, மனவெழுச்சிபெற்றவனாய்அவளைக்கொண்டாடி விடைகொடுத்தான் இப்பால்மாகதரிஷி எதாப்பிரகாரந்தவநிலையைஅனுஷ்டித்திருந்தார். இவர்களுக்குஉதித்த கயமுகாசுரனாதியான பிள்ளைகள், பர்வதங்கள் கால்முளைத்து நடப்பதைப்போலவும் அஷ்டமாநாகங்களுக்கொப்பாகவும், பிராணிகளைவாட்டுங் கூற்றுவன் பலவுருக்கொண் டெழுந்ததைநிகர்க்கவும்ஊழித்தீயைப்போலவும், ஆலகாலவிஷத்துக்கிணையாகவும், எங்குமுலவி குலகிரிகளைஉதைத்து, துகள்படச்செய்வார்கள், பூமிபிளக்கநடப்பார்கள், சீவராசிகளைக்கொல்லனுலைபோன்ற வாய்களில் வாரிவாரியிட்டு, இருகடைவாயினும் உதிரம் ஊற்றெடுத்தோட மென்றுதின்பார்கள், சமுத்திரங்களைப் பானஞ்செய்வார்கள், சூரியசந்திரர்கதிகளைத் தடுப்பார்கள், ஆதிசேஷன்நெளிந்து வருந்தத்தாண்டுவார்கள். இவ்விதமாகக் கெசமுகாசுரன் துணைவருடன் எங்குமுலவி, பிராணிகளை அலைத்துத்தின்று, உதிரபானஞ்செய்து, ரிஷிகளைவாட்டி, வேதவொழுக்கங்களைக்கொன்று உலவுவதை ராட்சதராசன்அறிந்து, சுக்கிராசாரியனிடத்துக்குப்போய், இச்செய்திகளைவிண்ணப்பஞ்செய்து, சுவாமி! இவர்களையொருவழிப்படுத்திச் சத்துருக்களைச் செயங்கொள்வதாகக்கடாட்சிக்கவேண்டுமென்று போற்றினன். அதற்குப்பார்க்கவன்சம்மதித்து, அவனுக்குச் செலவுகொடுத் தனுப்பிவிட்டு, கெசமுகனிருக்குமிடத்தைச் சேர்ந்து. அவனைக்கண்டு ஆசீர்வதித்து, நான்உன்குலக்குரவனாகும். என்பெயர்சுக்கிராசாரியனென்பார்கள், உன்பாட்டனாகிய ராட்சதராசன் அனுப்பநீஇனி நடந்துகொள்ளவேண்டிய உறுதிகளைப் போதிக்கவந்தேனென்று சொல்ல அதைக்கேட்டு, கெசமுகன்சேவித்து, ஆசிரியனே, எங்களிஷ்டத்திருக்கின்ற பிரீதியினால் நன்மார்க்கங்களைத் தெருட்ட வெழுந்தருளினீர், இதைவிட நான்பெறவேண்டிய தென்னவிருக்கின்றதென்று உபசாரவார்த்தைகளைச் சொல்லிக்கொண்டிருக்குந் தறுவாயில், ராட்சதசேனைகள் நமதிறைவனாசிரியர் வந்தார் வந்தாரென்று இணைந்துதிரண்டுவந்துகூடிச் சேவித்துக்கொண்டார்கள்.

அவர்களையும் சுக்கிராசாரியன் வாழ்த்தி கெசமுகனைப்பார்த்து, நீ மேலான தவங்களைச் செய்தாயில்லை, லோகநாயகனான பரமசிவத்தைப் பூசித்து வேண்டும் வரங்களைப்பெற்றாயில்லை, சத்துருக்கள் மாயங்களையும் வஞ்சனைகளையும் மேம்பாடுகளையும் செருக்குக்களையும் விசாரித்தறிந்தாயில்லை, இவ்வுடலம் அநித்தியமென்பதையும் நினைந்தாயில்லை, அநியாயமாக உயிர்களைக்கொன்றுதின்று பலநாட்களை அவத்திற் கழித்தாய் பஞ்சேந்திரியங்களை நிக்கிரகித்துத் தவஞ் செய்துதிவ்விய பாணமுதலானவைகளைப்பெற்றுச் சத்துருக்களைச்செயிக்கவெண்ணினாயில்லை, இம்மையிற்கசேந்திரபோகங்களைஅனுபவித்துராசராசனாய் வாழ்ந்திருந்து மறுமைக்குஉறுதிகளைப்பெறநினையாவிடின், நீஇருந்தென்னபலனுண்டு, செல்வமும்வலியும்சீரும்ஆயுளும்வீடும்தவத்தினாலுண்டாகுமென்பதை இதுவரையில் நினையாமலிருந்த தென்ன! இவையனைத்தும், வாழுநாளின்காலமுடிவில் இயமன் வந்தழைக்கும்போது, கூடுமோ இத்திரேகமெடுப்பது அரிது, இதைநீடித்திருக்கவகை தேடிக்கொள்ளாமல் நாளை வியர்த்தமாகக்கழிப்பதிலென்னபலன் பெறுவாய். மந்திரதந்திரங்கள் தேவாஸ்திரங்களொன்றும்பெற்றாயில்லை, இச்செய்திகளை இந்திரன் அறிவானாயின், விண்ணவர்களைக் கூட்டிக்கொண்டு வந்து, உன்னுடனெதிர்த்து, அகோர யுத்தங்களைச் செய்துசாடுவன். அக்காலத்தில் மிருகங்கள்பட்சிகள்வலையில் அகப்பட்டுத்திகைப்பதைப்போல நீவாடவேண்டிவரும், ஆதலால் தேவாதிதேவனான பரமனைநோக்கித்தவங்களைச் செய்வையாயின்வேண்டியவரங்களையும்திவ்வியபாணங்களையும் பெறலாம், அவைகளினால் சத்ராதிகளைவென்றுசக்கிரேஸ்வரனாகவாழ்ந்திருக்கப் பெறுவையெனச் சுக்கிராசிரியன் பலவாகப்போதித்தார். அதைக்கேட்டகெசமுகன் குரவனைவணங்கி, சுவாமி? இதுவரையில்இக்கருமங்களை யாவரும் சொல்லவு மில்லை, எனக்கும் இவைகள் தோற்றாமற்போயின ஆதலால் தேவரீர்கிருபைகூர்ந்து அடியேன் தவஞ்செய்யும் மார்க்கத்தையனுக்கிரகஞ்செய்ய வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யவெள்ளிசந்தோஷித்துத். தவத்திற்குரியநடைநொடிபாவனைகளைத்தெருட்

டி அதற்குரியமந்திரங்களையும் உபதேசித்து மேருச்சமுலிற் போயிருந்து தவஞ்செய்யென்றனுப்பினர், தந்திரகான்சேவித்து, விடைசுபெற்றுச்சேனைகளுடன்சிலகாதவழி நடந்தான். அதைச்சுக்கிரன்கண்டுஇனிஇனிந்தகாரியத்தை முடித்துக்கொண்டு வருவானெனத் தயிரியமாகித்திரும்பி ராட்சதராசனுக்கு இச்செய்திகளைவிவரிக்க, அவன் ஆனந்தபரவசனாகி, சுவாமி இப்போதுதானெங்களைக் காத்தீரென்று துதித்துப் பலதரஞ்சேவிக்க, இனிஉங்கள்குலம் அபிவிர்த்தியாகுங் காலம்நேர்ந்த தன்றியும் சகலசவுக்கியங்களையும் பெற்றுப்பகைவரை வென்று வாழக்கடவாயென்று ஆசீர்வதித்து, தமது ஆசிரமத்தைச் சேர்ந்தார். இப்பாற்கயமுகன் குரவன் சொற்படிக்கு மகமேருவுக் கொரு பாரிசத்திற்போய், பரிசுத்தனாய்ப்பரமசிவத்தின்பாதாரவிந்தங்களைக் கருதி, ஆயிரவருஷஞ் சருகுபுசித்தும் ஆயிரம்வருஷஞ் சலமருந்தியும்ஆயிரம்வருஷம்அனலை விழுங்கியும் வெய்யில்மழைகுளிருக்குச் சளையாமலிருந்து, பின்புபிராணவாயுவை யெழுப்பி, மூலாக்கினியைமுடுக்கி மேல்விளங்குந் தத்துவஅமுதினைப் பருகி, இவ்விதமாக அகோரமான தவத்தைச் செய்துவந்தான். அதைத்தேவர்கண்டு, இத்தவமுடியுமாயின் நமக்குக் கெடுதிவருமென்று திகிற்பட்டோடி, இந்திரனைச் சேவித்து அறிக்கையிட்டார்கள். அதைக்கேட்டவுடன் மகவான் மனநடுங்கி, நமது வெற்றியும் செல்வமும் அடங்குங்காலம் நேர்ந்ததாகக்காணுகின்றது இதற்கென் செய்வோமென்று வாடிவருந்தி, பெருமூச்செறிந்து திகைத்தான்.

ஓ, சவுனகாதி ரிஷிகளே, அவன்பட்டபாட்டை யொருவகையாகச் சொல்லிமுடியாது. இப்பாற் கெசமுகாசுரனானவன், அதுவரையிற் பரமசிவமெழுந்தருளாத காரணத்தினால், வேள்விக்குண்டத்தி னாற்பாங்கினும்அனலையெழுப்பி, மத்தியில்நின்று, கர்த்தனை நினைந்து, பதினாயிரவருடம் அரியதவத்தைச் செய்கின்றகாலத்தில், அவ்வனலோங்கிப் பொன்னுலகம் அளகாபுரி முதலான பதிகளைத்தகிக்க, அவ்விடங்களில் வாசஞ்செய்பவருக் கடுத்த துன்பத்தைப் பேசிமுடியாது. அப்போதுஅந்தராட்சதகுமாரன் மனவுறுதிக்கிரங்கி, அக்கினிதேவன் வருத்தாமற்குளிர்ந்துகாட்டி, அவன் தேகத்தையும் வச்சிரகாயமாக்கினன், அதைக்கண்ட ராட்சதசேனைகள் களித்துத்தேவரை யிகழ்ந்தார்கள். பிரமனும் இத்தவத்தைமெச்சி, சிரக்கம்பஞ்செய்தான், அக்காலத்திற் பரமசிவம் இரங்கி, ரிஷபவாகனருடராய், கணங்கள்போற்ற வானத்திலேதோற்றியதைக் கயமுகன் தெரிசித்தெழுந்து, ஆனந்தக்கூத்தாடி, துதித்துப் பணிந்து, கரங்களைக்கூப்பி நின்றான். அப்போது அவன்மீது பரமசிவம் கிருபாநோக்கம் பாலித்து, இதுவரையில் அளவற்ற காலமாகத் தவநிலையினின்று வருந்தினாய், வேண்டியவரங்களைக் கேளென் றருளியவுடன் அவன்மீளவுஞ் சேவித்து, சுவாமீ, விண்டு பிரமன் இந்திரன் போருக் கென்னுட னெதிர்த்தாலும் அவர்கள் அபசெயப்படவும் தேவப்படைகளினால் அழிவில்லாமலும் விண்ணவர் மண்ணவர் பாதலவாசிகள் விலங்குபறவைமுதலானவைகளினால் அழிவற்றுஎக்காலத்தும் இறுதியில்லாமலும் என்னைப்போல வொருவன் அவதரித்துப்பொருதாலும் அவனாயுதத்திலே மாளாமலும்சகலரும் என்னாணை ஆக்கினையிலடங்கி வழிபடவும் என்னரசெங்குஞ் செல்லவும் திவ்வியபாணங்களையும் அனுக்கிரகஞ் செய்யவேண்டும், இதுவல்லாமல் எவ்விததந்திர வுபாயத்தினாலாவதுயானிறக்குங் காலம் நேருமாயினும் பிறவியில்லாமலுமது பாதாரவிந்த நீழலிற்சேர்ந்திருக்கவும் தயைசெய்யவேண்டுமென்று கேட்க, அந்தப்படிக்கு அனுக்கிரகஞ் செய்து பரமன் திருக்கயிலைக் கெழுந்தருளினர், பின்புகயமுகன் பிரபலவரங்களைப்பெற்ற களிப்பினாற்பரமனைப்போற்றி, சேனைகள்சூழ நடக்கும் வேகத்தையும் செயவுச்சாகத்தையும் இந்திரன் அறிந்து, கிலேசமுற்று, வருந்தினான் இச்செய்திகளைத் தெளிந்த சுக்கிராசிரியனானவன் ராட்சதராசனைக் கூட்டிக்கொண்டெதிர் சென்று, சுகசீவியாய்ச் செயசாலியா யிருப்பாயென் றாசீர்வதித்து, தங்கள்பதிகளிற் சேர்ந்தார்கள். பின்புகயமுகன் திக்குவிஜையஞ்செய்யநினைந்து, தேவேந்திரனாதியானவர்களை வென்று தன்வயப்படுத்திக் கொண்டு, பூமியின்கண் வந்து, ராட்சதசிற்பியை அழைப்பித்து, இந்தநாவலந் தீவின் தென்பிர தேசத்தில் தானிருக்க ஒருநகரமுண்டாக்கக் கட்டளையிட, அச்சிற்பி சேவித்துப்போய், விசாலமான இடத்திற் சொர்னமயமான மதிலும் பாதலவரையி லாழ்ந்து சலசமர்த்தியா யிருக்கும் அகழும்வானத்தை யளாவிப் பலநிலைகளைப் பெற்ற கோபுரங்களும் நவரத்தினமயமான மாடமாளிகைமண்டபமுதலானவைகளையும் சாஸ்திரப் படிக்குப் பொன்னுலகமும் நாணத்தக்கதாக நிருமித்துஅதற்கு மதங்கபுரமென்று பெயரிட்டு, அறிக்கையிட்டான்.

கயமுகன் சுபமுகூர்த்தத்திலே அதிற் பிரவேசித்து, சபாமண்டபத்திற் சென்று. நவரத்தினமயமாகிய சிங்காதனத்தில் வீற்றிருந்து, தினமும் பிராதக்காலத்திற்பிரமன் பஞ்சாங்கம் சொல்லிப் போகவும் இந்திரனாதியான தேவரும் காமதேனுவும் கற்பகத்தருக்களும் சங்கநிதி பதுமநிதி சிந்தாமணியும் அரம்பாஸ்திரீகளும் ஏவல்களைச்செய்து வணங்கவும் கொடுங்கோல் செலுத்தி, சுக்கிராசாரியும் ராட்சதராசனும் மந்திரிகளாகச் சூழ அரசுநடாத்திவருகின்ற காலங்களில் ஒருதினந் தன்னைப்பணிந்த தேவேந்திரன்முதலானவரை நோக்கி, இன்றுமுதல்நீங்கள் நம்முடையசபைக்குவரும்போதெல்லாம்சிரத்தில்மூன்று தரம் குட்டிக்கொண்டு கரங்களைமாறி இருசெவிகளையும் பற்றி மூவிசை இறங்கி யெழக்கடவீரெனக் கட்டளை யிட்டான் அவ்வாறே அவனாணைக்கஞ்சி நித்தியமும் நடந்துகொண்டு பழியுந்துயரமு மென்னுஞ்சமுத்திரத்தி லழுந்திவருந்திய தேவேந்திரனாதியர் இதனைப் பிரமன் விஷ்ணுவுக்கு முறையிட. அவர் இவரைத்தோற்றித். திருக்கயிலைக்கழைத்துப்போய், நந்திதேவரனுமதிபெற்று, ஆலயத்திற் சென்று, பரமசிவத்தை வணங்கிப்போற்றினர். அப்போது பரமசிவம்விஷ்ணுவைநோக்கி, விண்ணவர்வருந்திவந்த காரணமென்னவென்றுவினவ, அவர்சுவாமி? கயமுகனென்னும்அவுணராசன் தவமுயற்சியினால்இவர்களைமிகவும் வருத்தித் தகாத கருமங்களையுஞ் செய்யக் கட்டளையிட்டு அலைக்கின்றான், அவனையழிக்க எங்களுக்குச் சக்தியில்லை, இறைவனே! தேவரீர் கிருபைசெய்து அப்பாதகனைக் கொன்று எங்கள்துன்பத்தைநீக்கி ரட்சிக்கவேண்டுமென்று போற்றினர். பரமன் இறங்கி, நாம் ஒருபிள்ளையைப் படைத்தனுப்பி உங்களிஷ்டப்படிக்குச் செய்விப்போமென்று திருவுளம்பற்ற, அதைவிஷ்ணுமுதலானவர் கேட்டு அப்போதே சகலஇன்னல்களையும்போக்கினவர்களையொக்க ஆடிப்பாடி, பணிந்துவிடைபெற்று, தங்கள் பதவிகற்

சேர்ந்தார்கள், சிலகாலத்திற்குப்பின்பு கர்த்தன் தமதுவாமபாகத் தமர்ந்தபராசத்தியின் மீது திருக்கண்சாத்தி, நமதுநந்தவனத்தின் சிறப்புகளைப்பார்த்து வருவோமென்றழைத்துச்சென்றார். அச்சோலையானது தழைக்தோங்கி,நிழலைப்பரப்பிப்,பரிமளமிகுந்தபுஷ்பவருக்கங்களைச் சொரிந்து, கனிவகைகளையும் தாங்கிநிற்பது எப்படிக்கிருந்ததென்றால்! கர்த்தனிடத்து அன்புவிளங்கிய அடியார்கள் அருச்சனைசெய்வதுபோலவும் தேன்துளிப்பது ஆனந்தக்கண்ணீர் பெருகுவதுக்கிணையாகவும் இருந்தது. இச்சிறப்புகளையெல்லாம் பரமசிவன் தேவியுடன்பார்த்துக்கொண்டுபோய், அச்சோலைமத்தியிற் சொர்னமயமாய்ச்சித்திரங்களமைந்திராநின்ற மண்டபத்திற் பிரவேசித்தார். அக்காலத்தில் பார்ப்பதியார் அதினிடத்தடங்கிய வோவியங்களைநோக்குமுன்னிலையிற் பரமனருளின்படிக்கு முதலெழுத்தாகிய ஓங்காரமானது குஞ்சரமும் பிடியுமாகவுருக்கொண்டு புணரக்கண்டு, பரமசிவத்தைத்தொழுது, இதென்னகாரணமென்றுவினவ, பரமசிவம், பெண்ணே! உனதுநோக்கம்பட்ட முயற்சியினால் பீசாட்சரம்இவ்வுருவைப் பெற்றுப்புல்லியது. உன்பெருமைகள்நம்மாலல்லது வேதங்களினாலும் உணர்தற்கரியவாமென்றருளுமுன்னிலையில் அவ்விரண்டும் இன்பமுற்றிளதாப்பிரகாரஞ் சிறந்தகுடிலையிலடங்கின. உடனே நாற்கோடுகளும் நீண்டதுதிக்கையும் பருத்தவயிறும் குறியதாள்களும்பெற்று ஒருமைப்படச் சிந்திப்பவருணர்வாய்ப் பரிபூரணமாய் எங்கும்நிறைந்து சகலருந்தொழுது போற்றுமுயற்சிபெற்றுப்பரமசிவமேயென்னவிளங்கிவேதப்பொருளாய்த் தம்மைத்தொழும் அடியார்கள்வினைகளைப்போக்கிரட்சிக்குங் குணாதிசயங்களைப்பெற்ற பிள்ளையார் அவதரித்து, சிவசத்தியினது பாதகமலங்களிற்சேவித்து, கரங்களைக்கூப்பிநிற்க, அன்னையும்அத்தனும்ஆதரித்துத் தழுவி, முத்தமிட்டு, ஐயனே! யாவராயினும்முந்திஉன்னை நினைந்தொருகருமத்தைச்செய்வராயின் அவர்கள் மனோபீஷ்டங்கள் முற்றுப்பெறக் கடாட்சித்தும் மற்றையர்கள் முயற்சிகளைவிக்கினஞ்செய்தும் பிரமன்விண்டு தேவராதியானவர்களும் உன்னைத்தொழுதுபோற்ற நாயகமாய்விளங்கக்கடவாயென்றுவாழ்த்தி, குமாரனே? உலகங்களைஅலைத்துக் கொடுங்கோல்செலுத்துங் கயமுகாசுரனைச்சங்கரித்து முகுந்தன்முதலானவர் இடுக்கண்களைத்தவிர்த்துவருவாயெனப்பலவெள்ளம் பூதப்படைகளை உண்டாக்கித்தந்து, விக்கினகர்த்தனை ஆலயத்தில் அழைத்துவந்து,முதற்கோபுரவாய்தலில்வீற்றிருந்து இறைமைசெய்வாயென் றவ்விடத்திலிருத்தி, அந்தப்புரத்திற்சென்றார். பின்புவிநாயகமூர்த்தியானவர் நந்திதேவர் பிரமன்விஷ்ணுமுதலிய தேவர்வந்து சேவிக்கவும், பூதப்பிரமுகாள் சூழ்ந்து ஏவல்கேட்கவும், அமர்ந்தருளினர்.

இவ்விதமாகநடந்து வருகின்றதநுவாயில் ஒருதினங் கேசவன்பரமசிவத்தைத்தொழுதுபோகவிருப்புற்று,வெள்ளியங்கிரியையடைந்து, நந்திதேவரருள்பெற்று, உள்ளேபோய், கர்த்தனைச்சேவித்து, துதித்துநிற்க அவரைப்பரமசிவம் அருகிலிருத்தி, க்ஷேமங்களைவினவியபின்பு ஒருதிருவிளையாடலைநினைந்து, பரமேஸ்வரியை நோக்கி பெண்ணே? காமிருவேமும்பகடைசாலையாடுவோம் இதற்குப்பந்தயம் நீதோற்பையாயின் உனதுபணிகளையெல்லாம்எமக்குத்தருக,நீவென்றால் எமதணிகளாகிய சற்பம்பிறையாதியானவைகளைப்பெற்றுக்கொள்க,வென்று சொல்லி, தோற்புக்கெலிப்புக்கு விஷ்ணுவைச்சாட்சியாகவைத்துக்கொண்டு ஆடினர். அப்போது விண்டுபிரமனுக்கரியசிவம் ஏதுகாரணத்தினாலோ பராசத்திக்குத்தோற்றும் உமையவளைநோக்கி நகைத்து நீஎமக்குத்தோல்வியுற்றபடியால் உனதுஆபரணங்களைத்தருகவென்றுகேட்க, அம்மன்கர்த்தனுடன் வாதுகொடுக்க அஞ்சி, கரியவனைப்பார்த்து, நீர்இதற்குக்கரியாக இருந்தபடியால், யார்செயித்ததுசொல்லுமென்று கேட்கும்போது,மாயன்மேல்வருவதையோசியாமற்பரமசிவனேவென்றானெனக் குறித்தார். உடனேபராசத்திகோபம்அடைந்து, நல்லநியாயம்சொன்னீர். கர்த்தன் தான்அப்படிக்குப் பேசியபோதிலும்நீர்திஷ்டாந்திரமாகப் பார்த்திருந்தும் அஞ்சாமல் அபத்தமாடத்தகுமோ? உமதுதேகம்கறுத்ததாயினும் மனமுங்கரியாகலாமோ? இக்காரணத்தினாற்பாம்பாகக்கடவாயெனச்சபித்தாள். அவ்வுரைமாறுமுன், விஷ்ணு அவ்வடிவம் நேரக்கண்டுபயந்து, பரமனைச்சேவித்து, சுவாமி! தேவரீர்பட்சமாகப்பேசப்போய் இச்சம்பவம் நேர்ந்தது. இதற்குநிவாரணகாலம் அருளிச்செய்ய வேண்டுமென்றுபோற்ற, பரமன் அவரைநோக்கி,நம்மிடத்தன்பினால்மாறுகூறி இவ்வடிவுபெற்றனையாயினும் பயப்படவேண்டாம், தென்பிரதேசத்திற் பாலைவனமென்றொன்றுண்டு, அவ்விடத்திலொருவடவால விருக்ஷம்இருக்கின்றது, அதின் கண்தோற்றும் பொந்திற்சேர்ந்து தவஞ்செய்திருப்பையாயின், சிலதினத்தில் நமதுகுமாரனாகிய விநாயகன் கயமுகனைவென்று அம்மார்க்கத்தில்வரும்போது அவனைக் கண்டு தொழுவையாயின் இவ்வுருவமாறுமென்றருளிச்செய்தார். உடனேவிஷ்ணுசேவித்து, விடைபெற்றுஅவ்வனத்திற்போய், ஆதியில் நால்வருக்கு யோகாப்பியாசத்தைப்போதித்த சிவபிரானெழுந்தருளிய வடவிருட்சத்தைப்போலத்தழைத்து நிழலைப்பரப்பி ஏழுகாதவிஸ்தாரம் நாற்புறத்தினுங்கிளைகள்நீண்டு விஷ்ணுவைப்போல உயர்ந்து அளவற்றவிழுதுகள்தொங்கநிற்கும் ஒருவடவால விருட்சத்தில் விளங்கும் பொந்தில்தங்கித்தவஞ்செய்திருந்தார்.

இப்பாற்கயமுகாசுரனை லிடைவிடாதுதுன்பமனுபவிக்கின்ற தேவேந்திரனாதிய விண்ணவர்கள் விநாயகமூர்த்தி அவதரித்தசெய்தியையறிந்து, களித்து, திருக்கயிலாயத்தைச்சேர்ந்து, முதல்வாய்தலின்மீ தெழுந்தருளியவிக்கினகர்த்தாவைத்தெரிசித்து வணங்கிப் பலவாகப்போற்ற, அவரைவிநாயகமூர்த்தி கிருபையாகப்பார்த்தருளி, ஓதேவர்களே? உங்கள்முகங்கள்வாடியிருக்கவந்தகாரணமென்னையென்றுவினவ, அவர்கள் சுவாமி! கயமுகனென்னும் அவுணராசன் பரமசிவத்தினிடத்தில் அளவற்றவரங்களைப்பெற்று அடியோங்களை அலைத்துக் கொடுங்கோல் செலுத்தி இட்டஏவல்களைச்செய்து வருகையில்மேலும் பிரதிதினமுந்தன்னைக்காணவருமுன்னிலையிற்கன்னங்களிற்குட்டி இருசெவிகளையும்பற்றி மும்முறைவணங்கியெழும்படிக்கும்புதியகட்டளையொன்றையிட்டான், இப்புல்லியதொழிலைச்செலுத்திவருந்துகின்றநாங்களொருகாலம்இக்குறைகளைப்பரமசிவத்தின்சந்நிதானத்தில் முறையிட்டதற்குப் பரமசிவம் இரங்கித்தேவரீரைத்தந்துஅடியோங்கள்இன்னலைப்போக்குவதாகக்கடாட்சித் திருப்பதினால்எங்கள்வாட்டத்தையும்அவனேட்டத்தையுமொழித்

துப்பாதுகாத்து ரட்சிக்கவேண்டுமென்று பன்முறைப
ணிந்தேத்தி, மோதகம்சுண்டல் பழவருக்கங்களாதியானநி
வேதனங்களைப்படைத்து வேண்டினார்கள். விநாயகர்பரி
வாய், நீங்கள்பயப்படாதீர்களென்றுஆதரித்து, உடனேசி
ங்காதனத்தைவிட்டிறங்கி வெளிவந்து, அசலனென்னும்
பூதன்மீதாரோகணித்து, சிவகணங்கள்போற்றவும் பூத
வெள்ளங்கள் நெருங்கிவரவும், பலபூதர்பற்பலவாத்தியங்
களை மேகங்களைப்போலமுழக்கிப்போகவும் சிலபூதர்வெ
ண்சாமரைகளை வீசிப்பக்கங்களிற் சூழ்ந்துவரவும்சிலர்கு
டைகளைத்தாங்கிச் செல்லவும் இந்திரனாதியானதேவர்கற்
பகமலரைஇறைத்து இருமருங்கினும் புகழ்ந்துவரவும்,
கயமுகாசுரன் அரசுசெய்திருக்கும் மதங்கபுரத்திற்கருகி
ல்வந்தார். அதைத்தூதரறிந்தோடி ராட்சதராசனுக்குஅ
றிக்கையிட்டமாத்திரத்தில் அவன்வடவானலத்தைப்போ
ற்கோபித்துச் சர்வாயுதபாணியாய் இரத்தினமயமானதே
ரிலேறி, ராட்சதவெள்ளங்கள் செயவுச்சாகத்துடன்பலப
டைகளைத்தாங்கிக் கடல்பெருகியதைப்போல வந்துசூழ
ரணபேரி செயபேரிமுதலிய வாத்தியங்கள் அண்டமும
திரமுழங்கச்சென்று, கணபதிக்கெதிரில் நெருங்கினான்.
அப்போதுபூதப்படைகளும் அவுணவெள்ளங்களும்கோ
பதிபிதராய், வெய்யிலும்இருளும் நேர்ந்ததைப்பே லச்சீ
றி, பாணங்கள்ஆயுதவகைகள் பர்வதங்கள்முதலானவைக
ளை யொன்றனந்தமாக ஒருவர்மீதொருவர் பிரயோகித்து
சண்டைகொடுக்குமுன்னிலையில் ராட்சதரிற்பலர்மாளக்க
ண்டு மற்றவர்எதிர்த்துநிற்க நிருவாகமில்லாமற்பலதிசை
யினுமோடி ஒளித்தார்கள். அத்தருவாயில் பூதப்படைக
ள் செயவுச்சாகத்துடன் பயமற்றுமேலிட்டுவருவதையும்
தன்சேனைகள்முரிந்து இறைந்ததையும் கயமுகன்கண்டு,
காளத்தைப்போற்சீறி, தன்தேரைநடாத்தி, மீறிவரும்பூ
தப்படைகளின்மீது சரமாரிபொழிந்து, சல்லடைக்கண்க
ளாகத்துளைத்து அதஞ்செய்யபூதப்படைகள் எதிரில்நிற்
கச்சக்தியில்லாமற் பெருங்காற்றிற்பட்ட பூளைப்புஷ்பத்
தைப்போலப்பறந்தார்கள். அதைக்கண்டதேவர்வாடி? க
ர்த்தன்பாதங்களில்விழுந்து முறையிட விநாயர்கையமை
த்து அசலன்மீதாரோகணித்து முன்னணியில்வரும்போ
து அவரைக்கண்ட செசமுகன்தன்னருகிலிருந்த தூத
ரைப்பார்த்து, நம்முடன் போருக்கெதிர்த்த இவனாரென்
றுவினவ, அவர்கள்தொழுது, இவன்சிவகுமாரன், கணப
தியென்னும் நாமமுடையவனெனச்சொல்லி முடிவதன்
முன்னம் கண்கள்சிவக்கக்கோபித்து கர்த்தனுக்கெதிரிற்
போய், விழிகளிற்றீயெழநோக்கி, பற்களைக்கடித்து, உத
ட்டையதுக்கி, உன்தந்தைஎன்தவத்துக்கு இரங்கிக்கொடு
த்த வரமுயற்சிகளைநினையாமல் வீணாய்மடியவந்தாய், உ
ன்னப்பனைப்பற்றி இப்போது தயையாகச்சொல்லுகிறே
ன், உயிரினிடத்திச்சையிருந்தா லோடிப்பிழைக்கலாம்,
என்னுடனெதிர்க்க உனக்குவலிபோதாது, மேலும்நீசிறு
பிள்ளையாயிருக்கின்றாய், என்னுடன்பொருதவர் இறந்
தாரல்லது இன்னார்பிழைத்தாரென்று சொல்லமாட்டுவை
யோ! விண்ணவர்மண்ணவர் வலியினாலும் தேவர்படைக
ளினாலும் அழிவில்லாதவரம்பெற்றிருக்கின்றேன், இது
வல்லாமலும் பரமசிவம்அளித்தவை அளவற்றனஉண்
டு. இவைகளையோசியாமற் பாலனாதலால் தேவர்துன்பத்
தை நீக்குதற்குவந்தாய், ஆதலால்உன்னைவென்று அவர்
களையும் வென்று பசிக்குணவாகத்தின்பேன். இனிவல்ல
பமுடையவனாறாற் பாணங்களைத்தொடுப்பாயென்றுசொ
ல்லினான்.

அதைக்கேட்ட விநாயகர்நகைத்து, உனக்குஇச்செல்வ
ங்களை அருளியநமதுபிதாவானவர் உன்னைச்சங்கரித்துப்
பிராணிகளுககுக்கடுத்த இடரைநீக்கி இந்திரனுக்குத்தி
ரிலோகவாழ்வை அளித்துவரக்கட்டளையிட்டார், ஆதலா
ல்இன்னஞ்சிலகாலம் பிழைக்கஉனக்கு மனதிருந்தால்,
பொன்னுலகை இந்திரனைக்கொடுத்துப் பூவுலகைஅரசு
செய்திருப்பாய், அல்லதுஉன்பிராணனை எமலோகங்குடி
யேற்றுவேன். இதனையோசித்து உன்னெண்ணத்தைவி
ரைவிற்சொல்லென்று திருவுளம்பற்றினார். உடனேகயமு
கன் அக்கினியைப்போற்சீறி, மேருவுக்கொப்பாய்த்தங்க
க்கட்டுகள் பூண்டுமணிகளசையும் பாரித்தவில்லைவளைத்
து, அண்டங்களதிரக் குணத்தொனிசெய்து, அளவற்ற
கொடியபாணங்களைப் பிரயோகிக்க, அவைகளெரிந்து பு
கைந்துவருவதை விநாயகர்கண்டு, தமதுகரத்தில் விளங்
கும் எழுவாயுதத்தினாற் பொடிசெய்து, மேலும்அவன்க
ரத்திற்பற்றிய தனுசையுங்கண்டித்தார். அதனாற்பாதகன்
வெகுண்டு, மற்றொருசிலையையெடுத்து வளைப்பதற்கு மு
ன்னம்கணபதி தேவர்கள்கரங்களைப்புடைத்து நகைக்கஅ
தனையுந்துண்டிக்க, அவன் வலியதண்டமொன்றை எடுத்
துச்சுழற்றிவீச, அதையும்முறித்து அவன்மார்புபிளக்க
மோதினார். அதனாற்கயமுகன் சோபமுற்றுத் திகைத்து
நிற்பதைக்கண்ட ராட்சதசேனைகளும் படைத்தலைவரும்
திரண்டு, திவ்வியபாணங்கள்தண்டம் பிண்டிபாலம்எழு
மழுமுதலிய ஆயுதங்களைச் சோனைமாரியைப்போலச்செ
லுத்தி, சிங்காதங்கள்செய்தார்கள்; அப்போதுகணபதித
மது திருக்கரத்திலிருந்தபாசத்தைவீசி, மேலிட்டுவரும்
படைகளையும் ரதகெசதுரகபதாதிகளையும்கட்டி, உடனே
கணிச்சியைச்செலுத்தி சின்னபின்னப் படக்கண்டித்தார்.
அதைக்கயமுகன்கண்டு நடுங்கிவருந்தினான். அச்செயத்
தைப்பார்த்ததேவர் கர்த்தனைப்புகழ்ந்துகூத்தாடினார்கள்.
அப்போதுஅந்த ராட்சதன் சீற்றமுற்று, பாசுபதமுதலி
யதேவப்படைகளை ஒன்றின்பின்னொன்றாகப் பிரயோகிக்
க, அவைநெருங்கிஐயனது பாதகமலங்களிற்பணிந்திருப்
பதையறிந்து, கோபமும்மானமும் மனதைவாட்டஒன்று
ந்தோற்றாதுகலங்கியிருந்தான். அத்தருவாயில் ஐங்கரக்க
டவுள், நாம்ஏவியபாணங்கள் அவனைக்கொல்லாதகாரண
மென்னென்று சற்றுயோசித்து தமதுகோட்டியொன்றை
முறித்துச்செலுத்தினார். அதுவிரைந்துவந்து, கயமுகனை
யிருகூறாகப்பிளந்துதள்ளி, வானத்தெழுந்து, கங்கையி
ன்மூழ்கிவந்து, சிவகுமாரன்கரத்தில்நின்றது. அப்போ
துமேகங்கள் நழுவிவிழுந்ததைப்போலவும் சமுத்திரங்க
ரைகடந்து பெருகியதற்கிணையாகவும் உதிரவெள்ளமி
ரைந்துபெருகக்கயமுகன் தேரில்விழுந்தான்

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே! அவனுதிரம்பரந்
து தோய்ந்தஇடம்இக்காலத்தினுஞ் செங்காடெனப்பெய
ர்பெற்று விளங்குகின்றது, பின்புகயமுகன் சிவபிரானிட
த்திற்பெற்ற வரமுயற்சியினால் மண்விண்மூடத்தக்கபரு
த்தவடிவினையும் அக்கினியைப்போலச் சிவந்தகண்களையு
ம்பெற்ற பெருச்சாளியாகிச்சீறிப்பாய்ந்து வரும்போது
அசலன்தோளிலிருந்த கணபதியானவர்தாவி, அதன்மு
துகிலாரோகணித்து, நம்மைச்சுமந்து திரிவாயென்றுநட
த்தினார். அக்காலத்தில்இந்திரனாதியானதேவர், கயமுகப்

பாதகன்இறந்தான். இன்றுடன்நமது இடர்நீங்கிப்பிழைத்தோமெனக்களித்து, ஐயன்புகழைப்பாடிக்குதித்து, பஞ்சதாருக்கள் மலரைப்பொழிந்து, சிருஷ்டிதிதிசங்காரந் திரோபவமனுக்கிரகமென்னும் பஞ்சகிருத்தியங்களை நடாத்தவல்ல கர்த்தனே! அடியோங்கள் துன்பங்களைநீக்கி ரட்சிக்க இக்கோலங்கொண்டெழுந்தருளினீர், உம்மால் விதிக்கப்பட்டவேதங்கள் இன்னமுந்தேவரீர் பெருமைகளை அறிந்தனவல்லவாயின், எளியோங்களாற்புகழ்தற்கெளியனவோ? தாய்தந்தையாகிய கர்த்தனே! பிள்ளைகள்புகழ்தலைப்பரிவுடன் கேட்டருள்கவென்றேத்த, அதைவிநாயகர் இன்புறக்கேட்டு, அவர்களிடத்துக் கிருபாநோக்கம்பாலித்து, ராட்சதரால் இறந்தபூதப்படைகளைஎழுப்பினர். அவர்களும்பகவானைச்சேவித்துச்சூழ்ந்தார்கள். இச்செய்திகளைமந்திரியாகவிருந்த ராட்சதராசன் அறிந்து, சுக்கிராசாரியனைவணங்கிப் புலம்பி, பறவையுருக்கொண்டு போய், மகமேருச்சாரலிலொளித்திருந்தான். சுக்கிரனும் அவ்வாறேசென்று தன்பதியைச்சேர்ந்தான். அத்தறுவாயில் பூதப்படைகள் செல்ப்புடன் மதங்கபுரத்திற்போய், படையெடுத்த ராட்சதரைக்கொன்று, பட்டினத்தையும் அழித்துத்திரும்பிவந்து சூழ்ந்தகாலத்திற் செயபேரிவெற்றிச்சங்கங்கள்முழக்க. விநாயகமூர்த்தி அவ்விடத்தைக் கடந்து, பிரமன்முதலானதேவர்சூழ்ந்துபோற்றிவரச்சேங்காட்டுக்கொரு பாரிசத்திலே தாண்டவேஸ்வரனாகியதமதுதாதையை ஸ்தாபித்துப்பூசித்தார். அத்தலம்கணபதீச்சுரமென் றிக்காலத்தினும் விளங்குகின்றது. பின்பு செந்தாமரைக்கண்ணன் பாம்பாய்த் தவஞ்செய்திருக்கின்ற பாலைவனத்தின் மார்க்கமாகவிநாயகர்வந்தார். அதையறிந்து விஷ்ணுவானவர் அவரைஎதிர்கொண்டு தொழுதவுடன் பராசத்திசாபம்நீங்கித் தமதுவடிவைப்பெற்று, மீளவுஞ்சேவித்துப்போற்றி, ஓங்காரப்பொருளே! தேவரீரைத்தெரிசித்தவுடன் பழியுடலைநீங்கி ஈடேறினேன், ஆதலால்அடியேன் தேவரீரைப்பூசித்து வழிபடவேண்டுமென்றிரப்ப. அவர்இரங்கி அவ்வாறேமுடிக்கக்கடவாயென்றருளினர். உடனேதிருமால் அருச்சனைக்குவேண்டுந் திரவியங்களைச்சேகரித்து, கங்கையினால் அபிஷேகஞ்செய்வித்து, கற்பகமலர்களினாலருச்சித்து, மோதகம் பயறுதிரட்டுப்பால் கனிவர்க்கங்களை நிவேதித்தபின்பு தூபதீபங்கள்முதலான சோடசவுபசாரங்களைச் செய்து, கரங்களைக்கூப்பிநின்று, சுவாமீ! இந்த பாத்ரபதசுத்தசவுதியில் யான்பூசித்தபடிக்குச்சகலரும் ஆராதிக்கவும்அவர்வினைகளைநீக்கிச் சகலசம்பத்துக்களையும் கடாட்சித்து மோட்சவீட்டையும் தருவதாக வரமருளவேண்டுமென்றுபோற்றினர். அவ்வாறேவிநாயகமூர்த்தி தந்தருளியபின்பு ஆகுவாகனததில் ஆரோகணித்து, பிரமனாதியான தேவர் துதித்துவரப்பூதப்படைகள் களித்துச்சூழத் திருக்கயிலையைச்சேர்ந்து, பிதாவைச்சேவித்து, பழையபடியே தமதிருக்கையிலெழுந்தருளினர். அக்காலத்தில் விஷ்ணுமுதலானவர் பரமசிவத்தை வணங்கிப்போற்றி, மீண்டு விநாயகரைத்தொழுது, எங்களிடையூறைத்தீர்த்துப்பாதுகாத்தீர். இதற்குக்கைம்மாறுசெய்ய அடியேங்களாற் கூடாமையால்நேற்றையவரையிற் கயமுகாசுரனுக்குச்செய்தபணிவிடைகளைத்தேவரீருக்குநடாத்த விருப்புற்றனம். அவைகளை அங்கீகரித்து ரட்சிக்கவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய, அவர் மகிழ்ந்தருளினர். அக்காலத்தில் தேவர் மும்முறைகுட்டிக்கொண்டு, செவிகளைப்பற்றி பாதங்களைச்சேர்த்துதாழ்ந்தெழுந்து, போற்றிசெய்து, கர்த்தனே? இவ்வாறு உலகத்தார்பூசித்து நடந்துகொள்ளவும் அருளிச்செய்வாயென்று கேட்டுக்கொண்டபடிக்குத் தந்தருளிவிடைதரப்பெற்று, தங்கள்பதவிகளிற்சேர்ந்து, சுகத்திலிருந்தார்கள் மதாங்காரச்சம்பத்தையுடையதக்கனே! பரமசிவம் புத்திரனைத்தந்தகாரணம் இதுவாகும். இனிக்கர்த்தனுக்கடுத்த குணத்தைக்கேட்பாயாக.

நற்குணங்களையுடைய யோகிகளாலும் அறிதற்கறியசிற்குணனாய் சின்னமயனாய் நிராமயமாய்ப் பராபரமாய்விளங்கும் பரமசிவத்தின் காரணங்களைச் சொல்லமுடியுமோ! ஆயினும்சிலவற்றைத்தெரிவிப்போம். பரமேஸ்வரன் தாம் இவ்வுலகத்தைப் படைத்தகாலத்திற் சீவராசிகளினது பாசபந்தங்களைநீக்கி ரட்சிக்கக் கிருபையுற்று. பிரமன் விஷ்ணுவுக்குச்சிருஷ்டி திதியென்னுந் தொழில்களைக்காட்டி, அவைகளுக்குரிய குணங்களையுங்கடாட்சித்து, சங்காரகிருத்தியததைமுடிக்க உக்கிரமில்லாது கூடாதாகையால் தாமதகுணத்தைவகித்து, அத்தொழிலைத் தாம்நடத்திவருவார், இதன்பிரிவுகளைப்பாந்தமாக வேதங்கள் விளக்குகின்றன கர்த்தன் தமோகுணத்தனாயின், சனகாதியருக்குச் சரிதை-கிரியை-யோகம்-ஞானமென்னும் அருநெறிகளின் பயன்களைப்போதிக்கவல்ல சாந்தகுணசத்துவமெப்படிக்குக்கூடும்! சுருதிகள் ஆதிமூலமெனத்துதிக்குமோ! அஞ்ஞானவான்களுக் கிந்தரகசியங்களைப்போதிக்கமுடியுமோ? பரமசிவம் முடிவில்இறுதிசெய்தபண்பினால் தமோகுணனென்றுகுறிக்கப்பட்டதல்லது வேறல்ல இதைப்போலவேசிருஷ்டிதிதிகிருத்தியங்களைநடத்துகின்றவர்களுக்குள்ள ராசதசாத்விதகுணங்களுஞ் செயற்கையல்லது இயற்கையாகச்சொல்லப்படுமோ? முக்குணங்களையும் உண்டாக்கியவன் பரமசிவனென்றுவேதங்கள் முறையிடுகின்றன. யோகிகளாலும் அவன்செயல்அறியப்படாது. பிரமன்விஷ்ணுவாதியானவரிடத் தமர்ந்துதமதுமகிமைகளொன்றும் அவர்களுக்குத்தோற்றுமல் அந்தரான்மாவாய் விளங்கிச்சகலகருமங்களையும் நடப்பிக்குங் கர்த்தன் ஒருகுணச்சார்பினிற்பவனோ? சிவன்கடையிற்பிராணிகள்இளைப்பாற லயப்படுத்துந் தன்மையைக்கருதி அஞ்ஞானவான்கள் தாமதனெனச் சொல்வதல்லதுவேறல்லவென்று ததீசிரிஷிபலதிஷ்டாந்திரங்களைக்காட்டி, மேற்கூறியவிபரங்களைச் சொல்லவும் தக்கனானவன் மின்னலையொத்த வாழ்வின்மயங்கி, அவைகள்உண்மையென்றெண்ணாமல் ஆணவத்தழுந்தி, ஓய்முனியே! கேளும் பலவாகச்சொல்வதிற் பயனில்லை, கயிலைவாசியாகியவுமது கடவுள் ஆதியேயாயினும், அவனுக்குஅவிகொடுக்கமாட்டேன், ஏன்வீண்வார்த்தையாடுகின்றாய். நானெண்ணியபடியே முடிப்பேன், போமென்றுசொல்ல, அவ்விருடிக்கு அதிககோபமுண்டாயது, அக்கொடுமையினால் வடவைகுளிர்ந்தும் மேருமுதலான குலகிரிகள் கம்பிதப்பட்டுஞ் சத்தசாகரங்களுஞ் சுவறியும் அண்டங்கள்குலுங்கியுந் தேவர்நடுநடுங்கியும் உலகங்கள் தத்தளித்தலைந்துவருந்துவதைத்ததீசிகண்டு, இப்பாதகன்பொருட்டு இப்படிக்குஉலகங்கள் வாதைப்படலாமோவென்று சீற்றற்றைத்தணித்தெழுந்து, தக்கனைப்பார்த்து, லோகநாயகன்வேதநாயகன் போதநாயகன் நீதநாயகனான பரமசிவத்தையி

கழ்ந்துசெய்யும் உன் வேள்வியழிவதோடு அபவாதத்துக்கஞ்சாமலும் உண்மையைக்கண்டித்துப்பேசாமலும் மிரளவிழித்துக்கொண்டு இவ்விடத்திலிருக்கின்ற தேவர் சின்னபின்னப்பட்டுமாளக்கடவரென்றுசபித்துயாகத்தைவளர்க்கின்ற பிராமணரைநோக்கி, உங்கள் குலவண்மையையும் வேதவொழுக்கத்தையும்மறந்துஇக்கருமத்துக்குடன்பட்டதால் பூமியில்ருபிறப்பாள ராகப் பிறந்து அலைந்துசுருதிகள் துதிக்கும் பரமசிவத்தையும் அவனடியாரையும் விபூதி ருத்திராட்ச பஞ்சாட்சரத்தையும் நிந்தித்துப் பாசத்தழுந்தி வேதவிதிப்படிக்குப்பிசகினவராய்க் கதிபெறுதுழலக்கடவீரெனப் பலவசைகளைப் பேசி, அளவற்றதவத்தர் இருமருங்கினுஞ்சூழ்ந்துவரத்தமதாசிர்மத்தைச் சேர்ந்தார். அக்காலத்தில்அவருடன் தக்கன்மகிமைகளும் தவமுயற்சியும் இலக்குமிவிலாசமும்வன்மையும் மனச்செருக்கும் போய்விட்டன.

கேட்டீர்களோ நைமிசாரணியவாசிகளே, இவ்விதமாகக் கொடுமைபேசித் ததீசிசென்றதறுவாயில்தக்கன் துவசமற்றது. வானத்திற் சஞ்சரிக்கின்ற கழுகு காக்கைகள் யாகத்தம்பத்தி னிடத்தி லிறங்கிக்கூவின, அத்தலத்திலிருந்தவர் மனந்திடுக்கிட்டன. அவன் தேவியாகிய வேதவல்லி மங்கிலியம் அற்றது, இவ்வாறு அளவற்ற துர்நிமித்தியங்கள் விளைந்தன. இவைகளைத்தக்கன்கண்டுஞ்சற்றும்யோசியாமலும்மனஞ்சலியாமலும் எச்சனுகிய யாககுருவுந் தானுமாக வேள்வித்தொடக்கத்திற்செய்யுந் தானுதி கிரிகைகளைநடாத்தி, விஷ்ணுவாதியதேவர்களைச் வேதவிதிப்படிக்குத் தத்தஸ்தானங்களில் ஆவாகனஞ்செய்து பூசித்து, சோடசவுபசாரங்களையுந் தானங்களையும் வரன்முறையாகநடத்தி, அமுதத்துக்கொப்பான அன்னமும் பதார்த்தவகைகளும், மதுரமிகுந்த பருப்பும், புத்துருக்குநெய்யும், பால்-தயிர்-சிற்றுண்டி, கனிவருக்கங்களும், பனிநீர் மான்மதச்சாந்தம், கற்பூரக்கலவை, திவ்வியபரிமளமிகுந்த புட்பமாலிகைகளும், வாசந்திமிர்ந்த அடைக்காய்முதலியவைகளைக் காமதேனுபற்பலகுவைகளாக நிரப்பியிருப்பதை ஆகுதிகளுக்கு ஆராதனைசெய்யத்துவக்கி, பிராமணரை யொருபுறத்தினும் மற்றவரை யொருபாரிசத்தினும் போசனச்சாலைகளில்விட்டு பரிமாறுகின்ற உண்டிகளின்சிறப்புக்கண்டு ஆராமைமேலிட்டுத் தன்னைப்புகழ்ந்து சமுத்திரம்போல ஆர்ப்பரித்து வந்தவர்களை முகமலர்ந்து உபசரித்து, வரவழைத்துப் பந்திதிருத்தி, பொற்பள்ளயங்களைப் பரப்பி, போசனங்களைப்படைத்து,பந்துக்களைப்போலப் பரிவாய்வேண்டியதைப்பரிமாறச்செய்தான். அப்போது பசிநீரவுண்டும் மதுரமாயிருப்பதால் இன்னம்படையென்பார்சிலர், இந்தத்திவ்வியபோசனத்தை மிகுதியாகப் புசிக்கப் பிரமனைநோக்கித் தவஞ்செய்து பசியுண்டாக்கிக் கொள்ளாமற்போனேமென்பார்சிலர், இப்புசிப்பைக்கொள்வதற்கு ஆயிரம்பதினாயிரம்வாயும்வயிறு முள்ளவர்களுக்கும் அமையாதென்பார் சிலர், அதுவும்போதாதென்று வாதரவோர்சிலர், இவ்வன்ன முதலானவைகளைக் காமதேனு அளித்ததென்பார்சிலர், இனியெக்காலத்தில்இக்கச்சாயவகைகள் அகப்படப்போகிறது, திருத்தியாகச்சாப்பிடுமென்பார்சிலர், தக்கன் யாகம்சிதையுமென்பார்கள், அப்படிக்கு நேருமாயினும் இதுசரீரத்துக்கு உறுதியாயிருக்கும் குறைவில்லாமல் உண்பீரென்பார்சிலர்,இந்தப் புசிப்பைவிடவும் போகவில்லை, வயிறுங்கொள்ளவில்லை, இப்படிக்கெங்கும் பார்த்ததுமில்லை, இதன்பிரயோசனத்தினால் இனிபிறப்பில்லையென்பார்சிலர், இத்திவ்விய போசனத்தைப்படைத்த காமதேனுவைப்பிடித்துக்கட்டி நம்முடைய தேசத்துக்குக் கொண்டுபோவோமாயின்வேண்டும்போதெல்லாம் திருத்திசெய்து வருமென்பார்சிலர், பெண்டுபிள்ளைகள் சுற்றம்பெருக இவ்விதமகதயிஸ்பரியத்தைப்பெற்ற தக்கனைப்போலத் தவஞ்செய்தவர்கள் யாவரிருக்கிறாரென்று சொல்வார்சிலர்,திருத்தியாகப்புசித்துவிட்டோம், எழுந்திருக்கப்படவில்லை, என்னசெய்வோமென்பார்சிலர், அமுதமொத்த இப்புசிப்பையுண்ணப் பிள்ளைகள் அண்ணன் தம்பி சுற்றத்தாரை அழைத்துவராமற்போனேமென்பார்சிலர் ஆனாலென்ன! விரைந்துசென்று கூட்டிவரலாமென்பார்சிலர் இப்பிரகாரஞ்சமுத்திரம் இரைவதைப்போலப் பேசிக்கொண்டுசாப்பிடுகின்ற பிராமணர்முதலானவர் தாம்போதும்போதுமென்னுமட்டும் தக்கன் மருகராகிய விருடியர்இருந்துபரிமாறத் திருத்தியாகஉண்டு தள்ளாடிக் கைலாகுகொடுக்கஎழுந்து, பற்பலர் கங்காசலம்விடச் சுத்திசெய்துகொண்டு உடனே மற்றொருமண்டபத்திற்சேர்ந்து பொன்ஆசனங்களிலிருந்து சந்தனக்கலவை பனிநீர் புட்பமாலைதாம்பூலங்கொடுக்கப்பெற்று, பின்பு பொன்னுலகமேபிறங்கினாற்போலச் சிறந்துவிளங்குந் தானமண்டபத்தில்புகுந்தார்கள். அத்தறுவாயில் தக்கன் அனுமதியில்அவ்விடத்திலிருந்த இருடியர் ஆடை-ஆபரணம்-பொன்-நவரத்தினம்-கறவல்-குடை-பாதுகை-குண்டிகை-முதலான சோடசமகாதானங்களைக் கரங்கள்சிவக்க வேண்டியமட்டும்இடைவிடாமற்கொடுத்தார்கள். அவைகளைச் சிலர் பதனப்படுத்தித்திரும்பிநுழைவார் சிலர்எடுப்பித்துக்கொண்டுநடப்பார்.சிலர்சுமக்கமாட்டாமல் அங்குமிங்கு மலைவார். இப்படி இவர்களாலுண்டாகிய இரைச்சலும் அரம்பையர் நடிக்கும் ஓசையும் வேதவல்லிபெண்கள் இந்திராணிதெய்வகன்னியர் முதலானசுமங்கலியர் மங்கலங்களைப்பாடும் ஒலியும் இவைபோலும் பிரசத்தமும் ஒன்றுசேர்தலால் சத்தசாகரங்களும் அவ்விடத்திற்பெருகியலைவதைப்போலப்பேரொலியுண்டாயது.

## வேள்விப்படலம்.

இகந்தசிர்பெறுமிப்பெருஞ்சாலேயி
லகந்தைமிக்கவயன்பெருங்காதலன்
மகம்புரிந்ததுமற்றதுசிந்திடப்
புகுந்தவாறும்பொருக்கெனக்கூறுகேன்.

இவ்விதமாகக் காலங்களை அனுசரித்துத் தானுதிக்கிரியைகளைக் காரியப்பேரொருபுறத்தில் நடத்திவர தக்கன் முற்கூறிய ஆசிரியனைக்கொண்டு வேதவிதியிற்சிவத்தின் பாகமான பிரதானமந்திரங்களைநீக்கி, விஷ்ணுவுக் குரிய வாக்கியங்களை அவைகளுக்குப்பிரதியாகவோதிமகத்தை வளர்க்கக் கட்டளையிட்டான். அப்பிரகாரம் அவ்வாசிரியன் தீக்கடைக்கோலினால் அக்கினியை யுண்டுபண்ணி யாகுண்டத்தில் அமைத்து, தருப்பைசமித்துமுதலான

ஓமத்திரவியங்களினுல்அக்கினிதேவனே அருச்சித்து, அதில் தேவருக்குரிய கூருன மந்திராகுதிகளேயும் வெவ்வேருகக்கொடுத்து, விஷ்ணுவாதியரை மந்திரபூர்வமாகக் கூவி, அவிகளேக்கொள்வீரென்று உபசரித்தான், அது தேவாமுதத்தினுஞ் சிறந்ததாயினும், பிரதமதேவனேநீக்கிய அருவருப்பானது அவரவர் மனத்தின்கண்பொருந்தி அலேப்பதினுல், நஞ்சாகக்காட்டியது.

இப்பிரகாரம் யாகத்தைநடத்துந்தக்கன்செல்வச்செருக்கினேயும் வீருப்பையும் நாரதர்அறிந்து, திருக்கயிலேக்குப்போய், நந்திதேவராவணங்கிச் செலவுபெற்று, ஆலயத்திற் பிரவேசித்து, கர்த்தனேத்தொழுது போற்றிநிற்க. அவராக்கர்த்தன் கிருபையாகப் பார்த்தருளி, உலகத்தின்கண் ஏதேனும் புதுமைகளுண்டோ, வந்தகாரியம்யாதென்றுவினுவ, அவர்சுவாமீ, கங்கைக்கரையில் விஷ்ணுபிரமனுதியரை வரவழைத்துக்கொண்டு லோகநாயகனுனதேவரீரை இகழ்ந்து புத்தியில்லாத தக்கன்வேள்வியை நடத்துகின்ருன். இதுதான் அதிசயமென்று விண்ணப்பஞ்செய்தார். அதைக்கேட்டவுடன் இடப்பாகத்தமர்ந்தபராபரை மனம்பூரித்து, அதனேக்கண்டுவர விருப்புற்றுஎழுந்து, பகவனேவணங்கி, என்பிதாசெய்கின்ற யாகத்தைப்பார்த்துவர விடைதந்தருளுமென்றுகேட்க,பரமன் நல்லகாரியம் உன்னேயெவ்வளவும் நினேயாமல்மற்றத்தேவர்ரிஷிகளுக்குக்கொடுத்தபெண்களே அழைப்பித்துக்கொண்டு மாயாபாசத்தினமுழ்ந்திஅகந்தைகொண்டு அவன்செய்யும் வேள்வியினிடத்திற்கும் நீபோகலாகாதென்றுதிருவுளம்பற்ற பார்ப்பதி கரங்களேக்கூப்பி சுவாமி? தெரியாமையினுல் அவன்செய்தபிழையனேத்தையும் அடியேனேக்குறித்துப் பொறுத்தருளி விடைதரவேண்டுமெனக்கெஞ்ச, பகவன்பரிவாய்ப்போய்வருகவென்று செலவுகொடுத்தருளினர்.கௌரிஅதைப்பெற்று. சிரோரத்தினங்களினுலும் தங்கத்தினுலும் அமைத்த விமானத்தினெழுந்தருளி, சுமாலி மாலினியென்னுந் தோழிப்பெண்கள் குடைகளேத் தாங்கிவரவும் பிங்கலே சுமனேயாதியர் கவரிஆலவட்டம், அடப்பை, மயிற்பிஞ்சமுதலானபரிவட்டணேகளேயேந்திச்செல்லவும், கமலினி,அனிந்திதையென்னும்பாக்கியர் புட்பமாலேகளேக்கொண்டுசெல்லவும்சிலகன்னியர்நடித்துப்போகவும்,சிலர்பார்ப்பதிபுகழைப்பாடித்தொடரவும், சிலர்-குயில்-கிளி-பூவை-அன்னமாதிய பறவைகளேக்கரங்களிலேந்திநடக்கவும், அமச்சுரிமைசெலுத்துஞ்சோமந்தியிடபத்திலேறிக் கரத்தின்வாளேக்கொண்டுபோற்றிவரவும் பலபூதர்பதினெண் மேளவாத்தியங்களேமுழக்கவும், பராபரை அனுக்கிரகம்பெற்றபன்னிருகோடிகுறட்படைஞர் வாள்பலகை கேடையம் பிண்டி பாலம்முசலம் கப்பணம் தோமாமுதலிய ஆயுதங்களேத்தாங்கிஇருமருங்கினும் அணிவகுப்பாகச் சமுத்திரம்போலப்புரண்டுபோகவும் இவ்விதஆடம்பரங்களுடன் சென்று, பிதாவான தக்கன்வேள்விச்சாலே முகவாயிலேக்கிட்டி,விமானத்தினின்று மிறங்கி உள்ளேபிரவேசித்தாள். அதைப் பாதகனுனவன்கண்டு கோபித்து தாய்தந்தையில்லாதபித்தனுக்குரிய நீமற்றப்பெண்களேப்போல இந்தயாகத்துக்குவரவேண்டியதென்னே! இக்காரியத்தைக்குறித்து உனக்குச்சொல்லியனுப்பியதுண்டோ! நான்வெள்ளிமலேக்குவந்தகாலத்தில் மாமனென்றெண்ணுமல் அவமானஞ்செய்வித்தவன் தேவியென்று உன்னேஅன்றே மறந்துவிட்டேன் அப்படியிருக்க நீவருவதற்குங்காரணமுண்டோ இவ்விடத்தில்நில்லாமல் சீக்கிரமாகத்திரும்பிஉன்னிடத்திற்குப்போய்விடென்று சீறிச்சொல்லினுன். அதைக்கேட்டு, பராபரைமனம்வாடினவளாய் தந்தையைநோக்கி, என்துணேவியருக்கும் அவர்கள்துணேவருக்கும் நாடோறும்அளவற்ற சிறப்புகளேச்செய்து வருகின்ருய், எங்களேமாத்திரம் எவ்வளவும் நினேந்தாயில்லே, நீசெய்யும்வேள்வியைக்கேள்விப்பட்டு, பேதமில்லாமல்நானேவந்தாலும் சீறித்தடுக்கின்ருய், இதுநன்மையாமோ, இதனுல் தீங்குவிளேயுமென்பதையெண்ணினுயில்லே, ஆதலால் உன்கருத்தினேத் தீர்க்கமாகச்சொல்லிவிடுவாயென்ன, உடனேதக்கன்நகைத்து, முக்குணத்திற்கடைப்பட்டசங்காரத்தொழிலேவகித்துப் பேய்களுடன்கூடிச் சுடலேயில்நடிக்கும்பித்தனுடன் நீயும்பேயாகிஎன்னேமதியாமல் அகந்தைகொண்டபடியால் உன்னேத்தள்ளிவைத்தேன். உன்பின்பிறந்தபெண்களும் மருகரும் என்னிடத்தில் அன்புள்ளவர்களாதலால் அவர்களுக்குவேண்டிய சிறப்புகளே நடத்துகின்றனன், அவிகளுந்தருவேன், விஷ்ணுபிரமனுதியதேவர் என்னேப்புகழ்ந்துவரச் சிவனும் நீயும் இகழுந்தன்மையினுல்உங்களிடத்தெனக்குஅன்பில்லே, இம்மகத்தில் உன்கணவனுக்கு அவிப்பாகமுங்கொடேன்,போபோவென்றுசொன்னமாத்திரத்தில்பராசத்திக்குக்கோபம்பிரவேசிக்க, உடனே அக்கினிசம்பந்தப்பட்ட வாயுவைப்போலப் பெருமூச்சுண்டாகியது

அப்போது அண்டங்கள்குலுங்கின. அவைகளிலடங்கிய சராசரங்கள் திடுக்கிட்டுச்சோர்ந்தன, பூமிகம்பிதப்பட்டது, சத்தசாகரங்களும் கொதிப்பெடுத்துக் குறைந்தன, அக்கினியும் வடவைத்தீயும் அவற்றின்வெப்பந்தணிந்தன, விஷ்ணுவும் பிரமனும் தேவரும் திசைக்கரிகளாதியரும்நடுங்கி வாடித்திகைத்து ஏங்கினுர்கள் ஆதலால், அம்மன்கோபத்தி னுக்கிரம் இத்தன்மையதென்று யாவராற்சொல்லப்படும். உலகமிப்பாடுபடுவதைஉணர்ந்த விமலேயென்னுந் தோழியானவள் பார்ப்பதி பாதாரவிந்தங்களிற்பணிந்து, உலகங்களேயீன்ற தாயாகிய நீரேஇவ்விதமாகக்கோபங்கொள்வீராயின்அவைகளி லடங்கியிராநின்ற சீவராசிகளென்படாது, அஞ்ஞானவானுன தக்கனுெருவன்செய்யும் அபராதத்தின்பொருட்டு உமக்குவிளேந்த சீற்றமின்னுஞ் சற்றுவீறுமாயின் நிமைப்போதிற் சகலமும் நாசமடைவதற் கையமில்லாதபடியாற் சீவகோடிகள்படுந்துயரத்துக் கிரக்கமுற்றுச் சாந்தமடைகவென்றுவேண்டினுள். உடனே கௌரிகொதித்தாறியசலம்போலச் சகித்தவளாய் தக்கனேப்பார்த்து, நீயென்னேயிகழ்ந்ததை யொருபொருட்டாகநான்மனங்கொள்ளவில்லே சர்வாந்தரியாமியாய்விளங்கும் எமதுகர்த்தனேக்குறித்துப்பேசிய கொடியசொற்கள் என்செவிகளில் விஷத்தைபொப்பப்புகுந்தன. நீஇப்போது பழுதுபேசிய பரமசிவன் நிர்க்குணத்தைவகித்ததன்மையினுற் சராசரப்பிரபஞ்சங்களினிடத்துலவி நடிப்பன ஒருவகைச்சார்புள்ளவனேயென்றெண்ணப்படுமோ, சர்வசங்காரத்தொழிலே நடாத்தவகித்த தருமகுணத்தைநினேந்தாய், அதுவும் நீடித்திருக்குமோ! சீவராசிகள்பிறந்தும் இறந்தும் எப்போதும் வருந்துவதைக்கருதிக் கிருபையுற்றுப் பலபலகற்பகாலஞ் சுகத்திலிருத்தியகாரணமல்லவோ! சிருஷ்டிதிதியைப்போல அத்தொழிலே மற்றத்தேவரால் நடத்தப்படு

மோ! இப்பிரகாரம் பிராணிகளையொடுக்கிமீளவும் படைத்துத் தமதுதிருவிளையாடலை நடத்திவருவார், இதுவல்லாமல் வேதாகமங்களைத் திருவாய்மலர்ந்து அவைகளாற்றுதிக்குங் காரணகர்த்தனைத் தம்மை உணரவல்ல பரிசுத்தவான்களுக்கு ஞானம்போதித்தாளுங்கிருபாநிதியைத் தமகுணனென்னப்படுமோ, ஆதலால் அவர் அனைவருக்கும் இறைவராகும், அக்கடவுளுக்குமுதல் அவிப்பாகத்தைக் கொடாமல் இகழ்ந்தாய், பஞ்சாக்கரத்தை யோதப்பட்டவர்களுக்கு முத்தியை யெளிதின் அருளும்பரனை நிந்தித்தாய், இவ்வபராதம் யாவராலேதுடைக்கப்படும், பேதாய்! இனிஎவ்விதமாகக் கடத்தேறுவாய். பிரமனும் விஷ்ணுவும்தேடிக்காண்பரிய நாதனைக் கர்த்தவ்வியமாகக்கொள்ளாமல் திரோபவத்திலுழ்ந்து, நீக்கினவர்க ளனைவருக்கும் தண்டமுண்டென்று வேதங்கள்முறையிடுகின்றன. அம்முறையே பரமசிவனைவிலக்கி யாகத்தைநடாத்தும் உனக்கும்தகுதியாகியதண்டம் விரைவினுண்டாகக்கடவதென்று கொடியசாபத்தையிட்டு, உடனேவிமானத்தில் ஆரோகணித்து பாங்கியர் சேடியர் சிலதியர் பூதப்படைகளாதியர்சூழ்ந்து போற்றிவரத் தக்கன்பரமனைநிந்தித்துப்பேசிய வசனங்களையெண்ணியெண்ணிமனம்வேகவிரைவிலே திருக்கயிலையையடைந்து கர்த்தனைச்சேவித்து, சுவாமி? தக்கன் அடியேனை வெறுத்ததல்லாமலும் தேவரீரைப்பலவாக நிந்தித்துப்பேசினன். ஆதலால் அவன்செய்யும் வேள்வியை பழிக்கத் திருவுளங்கொள்ளவேண்டுமென்றுவேண்டினள். அதைக்கிருபைக்கடலாகியபரமன்கேட்டு நகைத்திருந்தார். அதைக்கண்டு பார்ப்பதி சேவித்து, அடிகளுக்கு வெறுப்பும்விருப்பும் இல்லையாயினும் அடியேன்விண்ணப்பத்தை அங்கீகரித்து அம்மகம்சிதைவுபடக் கடாட்சிக்கவென்றுபோற்றினள்.

---

## வீரப்த்திரப்படலம்.

அந்தவெல்லையெமையாளுடையவண்ணலகிலவ்
தந்தமங்கைதனதன்பினைவியந்துதளருஞ்
சிந்தைகொண்டசெயன்முற்றியிடுமாறுசிறிதே
புந்தியுள்ளுறநினைந்தனனினைந்தபொழுதே.

---

அப்பொழுது எமதுகர்த்தன் பரமேஸ்வரியின் அன்புக்கிரங்கி, அவளெண்ணப்படி முடிக்கத் திருவுளங்கொண்டமாத்திரத்தில், நுதல்விழியில் அகோரவீரபத்திரதேவர் உதையமாய், மகமேருவின் கொடுமுடிகள் மின்னற்கொடியைத்தாங்கி விளங்குவதுபோலப் பிறைகளிலங்கிய கிரீடங்கள் அமைந்த ஆயிரஞ்சிரங்கள் அண்டத்தைமுட்டவும் சூரியன் அனந்தவுருக்கொண்டு ஏககாலத்தில் எழுந்ததற்கொப்பாகச் சிரோரத்தினமயமாகிய மகரகுண்டலங்கள் இரண்டாயிரஞ் செவிகளிலும் வில்வீசித்தொங்கவும் வடவைகுளிரத்தக்கஅனலையிறைக்குநெற்றிவிழிகள் ஆயிரஞ்சொலிக்கவும் அவைகளில்வீசும் அக்கினிக்கொழுந்தினுல் அண்டங்கள் கரியவும் பிரசண்டவாயுவம்அக்கினியும்திடுக்கிட எழுஞ்சுவாசத்தினிடத்துண்டாகிய கனல் அண்டகோளகைக்கு அப்புறத்திலேதாவவும் பிள்ளைப்பிறையைப் பதித்ததற் கொப்பாகக்கூரிய கோரைத்தந்தங்கள் தோற்றவும், வார்த்தையுரப்பினுல்பிராணிகள் வெருக்கொள்ளவும், சாகரங்கள்கலங்கிக் கறங்கெனச் சுழலவும், பணமகுடம் பொருந்திய சற்பகங்கணங்கள் விளங்கிய இரண்டாயிரங் கரங்களிலே குந்தம் வாள் பலகை-வேல்-தோமரம்-பிண்டி-பாலம் - எழு - குலிசம் - சூலம் - வில் - சரம் - தண்டம் - வச்சிர முதலான படைகள் மின்னலைப்போலப் பிரகாசிக்கவும் பிரமன் விஷ்ணுவினது சிரமாலையும் என்புத்தாழ்வடங்களும் ஆமையோடும்பன்றிக்கோடும்விசாலமாகியமார்பினிடத்தில் விளங்கும் முப்புரிநூலுடன் அசைந்து சாட்டவும் ரத்தினுபரணங்கள் சற்பக்கலன்களுடன் தேகமெங்குஞ் சொலிக்கவும்பாதாரவிந்தங்களிலே தண்டை-வீரகண்டைகள் சப்திக்கவும்பாதுகைதரித்து இவ்விதக்கோலத்துடன் பரமனைத்தொழுதுநின்றார். அந்தருவாயில் உமையவளது கோபக்கனலின்கண் பத்திரகாளிவெளிவந்து திவ்வியபரிமளமலர்சூடிய அளகங்களோங்கிவிளங்கும் ஆயிரஞ்சிரங்களும் கட்ககோதண்ட வீரவாளாதியான படைகள் தரித்த இரண்டாயிரங்கைகளும் நவரத்தினமயமாகிய பணிகளும் அரவபூஷணங்களும் அசையவீரபத்திரர் மருங்கினின்றுள்.

அவ்விருவர் காட்சியைச் சிவபிரான் உமையவளுடன் கண்டு கிருபாநோக்கம் பாலித்தகாலத்தில், அவர்கள்கர்த்தனையும் பிராட்டியாரையும் மும்முறைவலம்வந்து,வணங்கிக்கரங்களைக்கூப்பிநின்று, சுவாமி! தேவர்கெருவபங்கம் பண்ணவோ! அவுணரைக்கொல்லவோ? எமனைவாட்டவோ? விஷ்ணுபிரமரைக்கட்டிவரவோ! சமுத்திரஞ்சூழ்ந்த உலகைவிழுங்கவோ! ஏதுகாரியத்துக்காக அடியோங்களைப்படைத்தீர், அதனைக்கட்டளை யிடவேண்டுமென்று கேட்டார்கள். அப்போதுபரமன் அவர்களைநோக்கி, நம்மையன்றித் தக்கனென்பவன் வேள்விநடாத்துஞ் சாலையையடைந்து அவிப்பாகத்தைக்கொடுத்தால் வாங்கிவருவீர், தடுப்பானயின் அவன்சிரத்தைக்கண்டித்து அவனுக்கு உதவியாய்ச்சூழ்ந்த தேவராதியானவரை அதப்படுத்தி யாகத்தையும் அழித்து மீளக்கடவீர், அத்தருவாயில் நாமும் அவ்விடத்தில் எழுந்தருளுவோ மென்றருளிச்செய்து, உடனேவியர்வையினும் மயிர்க்கால்களினும்அளவற்றபூதங்களையும் காளிகளையும் படைத்தார் அவர்கள் யாளிசிங்கம் கரடியானைபுலியாதிய கொடியமிருகங்களின் முகம் ஒன்றுபத்து ஐம்பது நூறு ஆயிரம்-பதினுயிரம் விளங்க அதற்கிரட்டி கரங்கள் பலவாயுதங்களைக்கொண்டு அக்குமாலை சற்பாபரணங்களுடன் பிரகாசிக்கப்பாதங்களில் வீரவெண்டையம் சிலம்புகலிக்கப் பசியினுல்வருந்தி ஒருநொடியில் உலகங்கள்அனைத்தையும் அழிக்கும் வலிபெற்றுச்சூழ்ந்த பூதவெள்ளங்கள் காளிக்கூட்டங்களின் சவுரியவன்மைகளை யொருவகையாகச் சொல்லமுடியாது, அத்தருவாயில் பானுகம்பனுதியான பூதர்கள்ரணபேரி செயபேரிகுடமுழாமுதலான வாத்தியங்களைமுழக்கவும் குடைகள் ஆலவட்டங்கள் வெண்சாமரைகளாதிய வகைகளைத்தாங்கவும்நவரத்தினமயமாகியரதத்திற்காளியுடன் வீரபத்திரதேவர் ஆரோகணித்து நடந்து, சத்தசாகரங்களும் பெருகியதைப்போலப்பரவிச்செல்கின்ற சேனைகளின் ஆரவாரத்தினுல் எவ்வண்டமுடைந்ததோவென்று தேவராதியர் ஏங்கவும் அக்காலத்திலெழுந்த பூமிகளினும் சமுத்திரங்கள் திடராகவும் இவ்விதவுற்பாதங்க

ள் விளையஅதிசிக்கிரமாகவந்து, தக்கன்யாகசாலையைச்சூழ்ந்துகொண்டு, பூதத்தலைவரைநோக்கி, இதன்வாய்தலினிடங்களினும் புறத்தினும் வானவெல்லையினும் நீவிர் காவல்கொண்டு ஒருவரையும் விடாது போற்றக்கடவீரென்று ஏவினர். அவ்வாறேபூதத்தலைவர் அவ்விடங்களைச் சேர்ந்து, அத்தலங்களில்நின்ற காவலரைக்கொன்றுதின்று ஆர்ப்பரித்து, வளைந்திருந்தனர்

## யாகசங்காரப்படலம்.



ஆர்த்தலுமிறைவிதன்னோ டாண்டகைவீரன்வாசத்,
தார்த்தொகைதூக்கும்யாகசாலைபுக்கலோடுந்,தீர்த்தனை
த்தலைவிதன்னைத்திசைமுகன்முதலோர்யாரும்,பார்த்தன
ருளந்துண்ணென்றுபதைபதைத்தச்சங்கொண்டார்.

இவ்வாறு காவற்படுத்தினபின்பு பத்திரகாளியுடன்வீரபத்திரக்கடவுள் ஆர்ப்பரித்து, யாகசாலையிற்சென்று தோரணங்கள்கட்டி யூபஸ்தம்பம் நாட்டியிருக்கும்ஓமகுண்டத்துக்கு அருகில் வருவதைப்பிரமன் முகுந்தனுதியர்கண்டு திடுக்கிட்டுநடுங்கி, சிங்கத்தைநேர்ந்தமான்கூட்டம்போலவும் இடியுண்டசர்ப்பங்களையொக்கவும், வலியொடுங்கி, நகைமுகங்கள் புலர்ந்தவர்களாய், ஒருவரையொருவர்பார்த்து, பரமசிவனும் உமையவளுமாகவந்தாற்போற்காணுகின்றதென்பார் அவர்கோபக் கனலினிடத்துஉண்டானவரென்பார்சிலர், இவர்கள் உக்கிரம் அளவிடப்படாதென்பார்சிலர், நமதுபிராணனுக்குஇறுதிக்காலம் நேர்ந்ததென்பார்சிலர், தக்கனுக்கு இன்றுடன் முடிவுகாலஞ்சம்பவித்ததென்பார்சிலர், விதியாவரால் வெல்லப்படுமென்பார்சிலர், கர்த்தனைமதியாமல் இந்தயாகத்தையேன் துடங்கினனென்பார்சிலர், நம்மைநம்பி யிதனைத்தொடங்கினன்பேயனென்பார்சிலர், தேவரனைவருக்கும் ஒருகாலத்திற் சாவுண்டாயதென்பார்சிலர், பார்வதிவலியினின்வந்தகாலத்தும் வெறுத்தபடியால். இப்படிக்கு நேர்ந்ததென்பார்சிலர், பூதகணங்கள் காளிக்கூட்டங்களெங்கும் வளைந்துகொண்டார்கள். ஓடவும்ஒளிக்கவும் இடமில்லையென்பார்சிலர், இனியென்னசெய்வோமென்று அக்கினியிற்பட்டதளிரைப்போலவாடுவார்சிலர். இப்பிரகாரம் வேள்விக்களம் அல்லோலகல்லோலப்படுந்தறுவாயில் வீரபத்திரதேவர் சிறிச்சங்கநாதஞ்செய்தார், அவ்வொலியினல் அண்டகடாகங்கள் கம்பிதப்படமேருவாதியான குலகிரிகள்சலிக்கப்பிரமன் முதலானவர்களேங்கிவாடினர்கள், அக்காலத்தில் வீரன்தீக்குண்டத்துக்கணித்தாக நெருங்கியதைச்சீலமற்ற தக்கன்கண்டு, துளங்கிவருந்திபூதாகாளிக்கூட்டங்கள் சுற்றிக்கொண்டு யாகசாலையினையழிப்பதையும்தேவர்களாதியர் படுந்துன்பத்தினையும் அறிந்து, மிகவும்நடுக்குற்று, பின்புதயிரியங்கொண்டு, தானுமொருசூரனைப்போல வீரபத்திரரைப்பார்த்து, நீயாவன்! இவ்விடம்வருங்காரணம் யாதென்றுவினவ, வீரன்நகைத்து, யான்சங்கரன் குமாரனுகும், அவர்கட்டளையின்படிக்கு நீசெய்யும்வேள்வியில் அவிப்பாகத்தினை வாங்கிப்போகவந்தேன் தாமதஞ்செய்யாமல், தரக்கடவாயென்றுகேட்க, சிவனுக்கு இவ்விடத்தில் அவிப்பாகங் கிடைக்கமாட்டாதென்று தக்கன்மறுத்தான். அத்தறுவாயில்நான்குவேதங்களும்குடிலையும்தோன்றி, தக்கனே! கேட்பாயாக, எம்மைப்படைத்தவனும் இதுபரியந்தம் நாங்கள்துதித்தறியாதவனும் உயிர்கட்கு முதல்வனும் எங்கும்பரிபூரணனும் விளங்கும் பரமசிவன் அல்லது இந்தயாகத்துக்குகர்த்தனுகின்றவர்யாவர்! வீண்வார்த்தையாடாமற் பரமனுக்குரிய முதற்பாகத்தைக் கொடுத்து ஈடேறக்கடவாயென்று அளவற்ற நீதிகளைப்போதித்தும் அவன்சம்மதப்படாத காரணத்தையறிந்து, உன்விதிப்படிக்கு, அனுபவிப்பாயென்று வெறுத்து, தங்கள் நிலைகளிற்சேர்ந்தன. அதைக்கண்டவீரபத்திரர் மீளவுஞ்சிறுவிதியைநோக்கி. சுருதிகளும் அவைகளுக்குக்காரணமாகிய குடிலையும்கூறியவாக்கியங்களைத் தெளிந்தாயல்லவோ? இனியாவதுஎமதுகர்த்தன் பாகத்தைத்தரவல்லையோவென்றுகேட்க, தக்கன் சுடலையினிடத்திற் சத்தியுடன் கூத்தாடித்திரியுஞ்சங்கரனுக்கு ஒருபோதுந்தரேனென்று மறுத்தான்.

அப்போது வீரபத்திரதேவர் பக்கத்திலிருந்தவிஷ்ணு பிரமனைக்குறித்து, இவன்பரமனுக்கு அவிகொடாமல்இடக்குப்பேசுவது தகுதியோ! உங்களுக்கும் சம்மதமோவென்றுவினவ, அவ்விருவரும்ஊழின்பாலராய்க்கேளாதவரைப்போல ஒன்றுஞ்சொல்லாமல் ஊமைகளையொத்திருந்தனர் இதனைக்கண்டு, வீரன்கோபித்து, கண்களிலேதீயெழச்சீறி, இவர்கள்மனவலி வெகுநேத்தியென்று தீயெழநகைத்து, பற்களைக்கடித்து, காத்திலிராகின்றகதையைக் கிறுகிறெனச்சுழற்றி, கேசவன்மார்பினிடத்துமோதுதலினல் அவன்மூர்ச்சையாகி விழச்செய்து. பிதாமகன் சிரங்களிற்குட்டி, அவன் இரத்தம்பெருகச்சேவிக்கின்றவனைப்போலக் குப்புறவிழப்புரிந்து, பின்புகலைமகள்நாசியினையும் குயங்களையும்கொய்து, பக்கங்களிற்சூழவிருந்த தேவரைச்சாடும்போது கரங்களிழந்தும் பாதங்களற்றும் சிரங்களுடைந்தும் மார்பகங்கள் பிளந்தும் இவ்வாறு அலைந்துமாண்டவர்போக மற்றவரோடிப்பலதிசையினுமொளிக்கச் சந்திரனையுகைத்துத்தள்ளி, பாதத்தினலேதேய்த்து, சூரியனைப்பல்லுதிரத்தாடையிலறைந்து,சனியைக்கண்ணைப்பிடுங்கி, அதைக்கண்டோடுகின்ற எமனைச்சிரமற்றுவிழ வாளினலேதறித்து குயிலாகிப்பறந்த இந்திரனைத்தெண்டித்து, அக்கினிதேவன் கரங்களைமுறித்து நாக்களைக்கொய்து, அவன்தேவி மூக்கினைக்கிள்ளிபெறிந்து, நிருதியைத் தண்டினல்மாய்த்து, உருத்திரகணங்கள்பயந்து பாதகமலங்களின்விழுந்துதுதிக்கக் கருணைசெய்து, ஓடிப்போகும்படிக்கு விழியினற்குறித்து, வருணனை எழுவாயுதத்தின்மாய்த்து, வாயுவைவாளிற்கண்டித்து குபேரனைச்சூலத்தினற்கொன்று,நடுநடுங்கிப்போற்றுகின்ற ஈசானமூர்த்தியைவைதுஇகழ்ந்து, உருத்திரரைக்கலந்திருக்கக்கட்டளையிட்டு, யாகதேவதை மான்வடிவுகொண்டு பறக்கக்கண்டு, ஒருபாணத்தினல் வாட்டி, பயந்தோடுகிற எச்சனுகிய யாககுருவைக்கண்டித்து, அதிகவுக்கிரத்துடன் மேவிட்டுவந்தார். அதைத்தக்கன்கண்டுவாடி, இவ்வேள்வியிப்படிக்கழிய நான்காண்பதோ! ஆதியில்பிதாவாகிய பிரமன்சொற்படிக்கு அரியதவங்களைச்செய்து இத்திருவைப்பெற்றேன், இதனைக்கடாட்சித்தகர்த்தனைநினையாமலும்போற்றுமலும் மகதயிஸ்வரியத்தினுழ்ந்து மயங்கிமருகனென்றும் மற்றையரினெருவனென்றும் கருதிமதியாதுமிகவும்இகழ்ந்தேன், முற்காலத்திலே

தந்தைநடாத்தியமகத்தில் அவிகொடாமற்றடுத்தேன், இ
வ்வேள்வியினைத் தொடங்குமுன்னிலையில் தந்தையைப்
போலப்பரிவாய்ப்படித்துப்படித்து பலவிதத்திற் போதி
த்த ததிசிவாக்கியங்களை யோசித்தறியாமல் தடுத்ததல்லா
மல் அவரையுந்தூறினேன்! வலியவந்த பராசத்தியைப்
பெண்ணென் றெண்ணிச்சீறி மனநோவப்பேசித்தராத்தி
யதன்றியும் பரமசிவத்தைப் பலபலநிந்தைகளைப்பேசியி
கழ்ந்தேன், இப்படிக்கு நேருமென்பதைச் சற்றுமெண்
ணினேனில்லை, அவையனைத்துநிற்க, இவ்வீரன்வந்து
அவியினைத்தாருமென்று கேட்டபோதாவது சம்மதித்து
க்கொடுத்து அனுப்பாமற்போனேன் வேதங்களுங்குடிலை
யும் எதிரில்நின்று பாத்துவ நிச்சயங்களைத் தெருட்டிய
வாக்கியங்களைச்சற்றும் நினைத்துப்பாராமல் மறுத்தேன்,
நாசகாலம் நேர்ந்தபடியால் இவ்விபரீதபுத்திவிளைந்தது,
அரசனயிருப்பவன் உலகவிடுக்கண்களைநீக்கிப் பாதுகாப்
பது தகுதியாகும், அதற்குவிருத்தமாக இக்காலத்தில்வி
ண்ணவர்தபோதனர் பிராமணர்முதலானவருக்கு உயிரை
க்கொண்டுபோகும் எமனுனேன்! பாழ்மனம் ஊழின்பா
லாயிற்றென்று எண்ணியெண்ணிவாடினவனாய், மடிகின்
ற காலம்நேர்ந்ததறுவாயில் இவைகளைநினைத்தாவதென்
ன! இனிநடந்துகொள்ளவேண்டுவதை, முயற்சிசெய்வது
உறுதியெனக்கருதி, வீரபத்திரர்கோபித்து நிற்பதையும்
காளிசீறித்திரிவதையும், பூதப்படைகள் காளிக்கூட்டங்க
ளெவ்விடத்தினும் அதப்படுத்திப் பரந்திரும்பதையும்பா
ர்க்குமிடத்தில் ஓடிப்பிழைக்கிறதும் அரிதாகக்காணுகின்
றது, பழிக்கஞ்சாது தேவரைப்போல மாறுருக்கொண்டு
போய்விடநினைத்தாலும் பிழைப்பதைக்காணேன், ஆத
லால் தயிரியம்விடாதிருப்பதே காரியமெனத்துணிவுகொ
ண்டவனாய். கேடயமும் வாளையும் கரத்திற்பற்றி, கொக்
கரித்து எதிரில்வந்தான், அதைவீரன்கண்டு, வடவை
யைப்போற்கொதித்து, பரமசிவத்தை யிகழ்ந்துஅவியை
க்கொடாததற்கிது தண்டமெனவுருத்து, மின்னலையொத்
துவிளங்கும் வாளினால் அப்பாதகன் சிரத்தைக்கண்டித்
துத்தள்ளினர். அதனை யொருபூதமெடுத்துவிழுங்கியது.

இக்காரணத்தைக்கண்ட தேவியாகிய வேதவல்லியும்
பெண்களும் மார்பினறைந்துகொண்டு பிரலாபித்து இரங்
கிக்கூந்தல் நிலத்திற்புரளவருகின்றதைப் பத்திரகாளி
பார்த்து, தக்கன்மனைவியினது சிகையையறிந்து, மற்றவ
ர்களைக்கண்டித்து. வீரபத்திரதேவருடன்கலந்து, ஊழி
க்காற்றும் வடவையும் பெருகியதற்கிணையாகக்கொக்கரி
த்து, இருடியர்விண்ணவர்முதலானவரைச் சின்னபின்ன
ப்படுத்தி, யுலவினாள். அப்போது புறம்பிற்சூழ்ந்திருந்த
பூதப்படைகள் மதிலையழித்து ஆர்ப்பரித்துக்கொண்டுஉ
ள்ளேபிரவேசித்துக் காளிக்கூட்டங்களுடன் கலந்துவரு
வதைத்தப்பியிருக்கின்ற வானவராதியர் கண்டோடஅவ
ர்களைத் தொடர்ந்து கண்டதுண்டமாக வெட்டினர்க
ள் அதைக்கண்ட புரோகிதர் பிராமணர்நடுங்கியும்வாடி
யும் தியங்கியும் மயங்கியும் மூர்ச்சித்தும் கோவணமவிழ்
ந்து புரளவோடியும் பிணமலைகளிலொத்தும் இவ்விதபா
டுபட்டார்கள் அப்போதுஅவர்கள்தவிர மற்றையரைப்பூ
தர்பற்றித் தோளைமுறித்தும் கால்களைவெட்டியும் மார்
பைப்பிளந்தும் தலையையுடைத்தும் பற்களையுதிர்த்தும்
நாவையரிந்தும் கண்களைப்பெயர்த்தும் மூக்கைக்கிள்ளி
யும் கரங்களைக்கண்டித்தும் வயிற்றைப்பீறியும் இவ்வித

ங்களாகச் சின்னபின்னப்படுத்திப் புசித்து, உதிரபான
ஞ்செய்து, சிலரைப்பிளந்தும் சிலரைத்திசைகளினும்வா
னத்துமெறிந்தும் சிலரையுதைத்து உருட்டியும்சிலரைச்
சிதையத்துவைத்தும் வாட்டினர், இதுவல்லாமற்பலரை
ப்பிடித்துப் பாத்திரங்களினுடைக்கி. நெய்யையூற்றிமகத்
தீயிற்பொரித்து இனிமையாகத்தின்பார்கள், பலர்குடர்க
ளையும்பிடுங்கிஅவர்மார்பிற்றரித்துநகைத்துமகிழ்வார்கள்,
பரமசிவத்தைப் புகழ்வார்கள் பலரைப் பாறையினிட்ட
ரைப்பார்கள், பலரைச்சின்னபின்னமாகவரிந்து கழுகுக்
கும் காக்கைக்கும் பருந்துக்கும் நாய்நரிக்குமெறிவார்கள்,
யாககுண்டத்தைச்சுற்றினும் நிரைத்துவைத்திருக்கும்நெ
ய்க்குடங்களை யெடுத்துத்தேக்கிடக்குடிப்பார்கள். தயிர்ப்
பதலைகளைவிழுங்கி யேப்பமிடுவார்கள், பால்மிடாக்களை
ருசிபார்ப்பார்கள், தேவருக்குவைத்திருக்கின்ற அவிகளை
ப்புசிப்பார்கள். வேள்வித்தீயைக் கரங்களினாற் பிசைந்
து அவிப்பார்கள், சாலையறைகளின் கதவங்களைமுத்திரி
த்து நெருப்பையிடுவார்கள், அவைகளிலிருக்கும்பண்ட
ங்கள் மனிதர்சாம்பலாகக்கண்டு மகிழ்வார்கள், கலசகும்
பங்களையெடுத்து அம்மானையாடிச் செண்டைப்போலவெ
றிவார்கள், யாகத்தம்பத்திற்பிணித்திருக்கின்றபசுக்களைய
விழ்த்துக்கங்கையிற்செல்லவீசுவார்கள், தேவர்முதலான
வரேறிவந்தவிமானங்களையும், இரதங்களையுங்,கொளுத்து
வார்கள் அவர்களேந்தியபடைகளை முறிப்பார்கள், கலன்
களைக்கரித்துத் துகள்செய்வார்கள். வேதிகைகளையுதைத்
துக் குண்டத்திலேதள்ளுவார்கள் தோரணங்களை யறுத்
துக் காற்றிற்செல்ல வூதுவார்கள், துவசங்களையொடித்து
த் தள்ளுவார்கள் தக்கன் மருகனைப் பற்றிச் சொல்லப் ப
டாத செய்கைகளை முடிப்பார்கள், இடியைப்போல மார்
பில்அறைந்தும் குத்தியும் வருத்துவார்கள். உண்ட அவி
களைக் கக்கும்படிக்கு முதுகினிடிப்பார்கள். சிலதேவரை
வாளினாற் சேதித்தும் சிலர்தலைகள் மொட்டையாக மயி
ரைப்பிடுங்கியும் சிலரைப்பந்தலுக்கு நிறுத்திய கால்களி
ற்கட்டியும் சிலரை வறுத்துக் கொறித்தும் இவ்விதமா
கத் தாமரைத்தடாகத்தில் மதயானைபுகுந்தாற்போல வே
ள்விச்சாலையைக் கலக்குவார்கள் அப்போது வெட்டெ
ன்றும் பிளவென்றுங் சுட்டென்றுங் கொல்லென்றும் கு
த்தென்றும் உரியென்றும் கட்டென்றும் பிடியென்றும்
உதையென்றும், இவ்விதவொலிதிசையெங்கும்பரவ யாக
வெல்லை பட்டபாட்டை மூர்ச்சைதெளிந்தெழுந்தவிண்டு
கண்டு, நான்தலைவனாகவிருந்துஇம்மகத்தைக்காத்ததுவெ
குநேத்தியென்று மானம்பாதிக்கக் கருடனைநினைந்துவர
வழைப்பது தாமதப்படுமென்று, தன்கோபத்தை யவ்வு
ருப்படுத்தி அதன்மீதாரோகணித்துபஞ்சாயுதபாணியா
ய்ப் பூதப்படைகளின்மீதெதிர்த்து, கடலுடைந்ததுபோ
ல பாஞ்சசன்னியத்தைமுழக்கி சாரங்கமென்னும்வில்லை
வளைத்து,அளவற்ற திவ்வியசரமாரிகளைத்தூவிவந்தான்.

அதைச் சிவகணங்களும் காளிக்கூட்டங்களும்கண்டு,
முன்னெமது கர்த்தன் தண்டத்தின்மோதலினாற்பட்டவ
ன் வெட்கமில்லாமல் மீளவும் போர்செய்ய வந்தானென்
றிகழ்ந்து, கரங்களைப்புடைத்து நகைத்துசீறி, மேலிட்டு
வருகின்ற பாணங்களைப்பற்றி, முறித்தும்பொடித்தும்த
ட்டியும் அழித்தும் சண்டைகொடுத்தார்கள் அதைவீரப
த்திரமூர்த்திகண்டு புன்முறுவல்கொண்டு வருகையிற்ப
ரமசிவகடாட்சத்தினால் நவரத்தினமயமான தேரொன்று

எதிரில்வந்துநின்றது அத்தருவாயில் அவசமாறியெழுந்த பிரமன் இ.துநல்ல தருணமெனக்கருதி. அத்தேரிற்பாய்ந்து, சாரதியிருக்குமிடத்தில் அமர்ந்து, குதிரைகளின் வார்களையும் உளுவுகோலையும் கரங்களிற்கொண்டு நடத்தி. சிவகுமாரனெதிரில் நிறுத்தி வீராதிவீரா, கர்த்தன்-இதோரதமனுப்பினர். சத்ராதிகளைச்செயிக்கத் தேவியுடன் இதன்மீ தெழுந்தருள வேண்டு மெனப் போற்றினன். அப்போது வீரபத்திரர் அவனிடததிருந்த கோபஞ்சற்றுத் தணிந்து, திருத்தேவியுடன் அத்தேரிலேறியருள, பிரமன் சுவாமி, அடியேன் வெல்லவத்தைப் பாருமென்று வாயுவேகத்தினுமேலாக அதைச் செலுத்தி கேசவனுக்கெதிரில் நிறுத்தினன். அத்தறுவாயிற் கண்ணன்வீரனைநோக்கி, சிவனைநிந்தித்த தக்கனைத்தெண்டிப்பதல்லது வேள்விச் சம்பிரமத்தைப்பார்க்க வந்ததேவராதியரை நீதியில்லாமற் கொல்லத்தகுமோ வென்று வினவ,வீரன் நீகுறித்த துண்மையாயினும் பரமனையன்றி மகத்தைமுடிக்கின்றவ ரிடத்திருந்தவர்களுக்கு வேதங்களிற் சொல்லுகின்ற சிஷ்டையின் படிக்குச் செய்தோம். இதன்றியும் நமதெதிரில் நிற்கின்ற உன்னையும் வாட்டுவோமென்றார். உடனே மாயவன்கோபித்து, தன்வில்லை வளைத்து, பாணவருஷத்தைப் பெய்து, வீரபத்திரனையும் பூதப் படைகளையுமறைக்க, வீரன்காளியைநோக்கி நகைத்து தமதுசிலையைக்கோலி சத்தசாகரங்களும் கொதித்தடங்கவும் அண்டங்கள்நெக்குவிடவும்அவைகளிலடங்கிய சீவராசிகள் செவிடுபட்டு இத்தினந்தானோ யுகமுடிவென்று மயங்கவும் குணத்தொனி செய்து, குரூரமான கோல்களைத் தொட்டு தம்மீதெழுந்த சிலீமுகங்களைக்கண்டித்து தாமோதரனைமூடினர். அவையனைத்தையும் மாயவன் கொடியபாணங்களினல் விலக்கிமேலும் ஆயிரங் கணைகளைத் தமதுதோள்களைக்குறித்தேவ, அவைகளைவீரன் துகள்கண்டு ஒருதிவ்வியபாணத்தைத் தூண்டி விண்டுநெற்றியைப்பிளந்து அவன் நடுநடுங்கி உதிரததைக் கக்கிக்கொண்டுமூர்ச்சித்துக்கிடக்கிறவளையில் வில்லை யூன்றிப் பார்த்திருந்தார். அவன்சற்றுநேரத்திலேதெளிந்துமீளவும் அளவற்றகணைகளைச் செலுத்த வீரபத்திரர்அவைகளைத்துகள்கண்டுமாறுசரங்களைப் பிரயோகித்தார்.

இவ்விதமாக மாறிமாறி அவ்வீரர் செய்த போரின்பெருக்கம் யாவராற் றுதிக்கப்படும் பின்பு சிவகுமாரன்சீறி, பாசுபதத்தைத் தூண்டி கரியவன் மார்பைப்பிளக்க அவன்மயங்கி யிருந்து தெளிந்தான். உடனே வில்லைஎடு சண்டைகொடுவென்று வீரன் அதட்ட, கரியவன் கொதித்து, தேவபாணங்களை யொன்றின்பின் னென்றை விட்டான். வீரபத்திரர் அவைகளுக்கு மாறேவித்தடுத்து பின்பு மற்றொருசரத்தினற் கண்ணன்கரத்தின் மேருவைப்போல விளக்குஞ் சாரங்கத்தைவெட்டித் தள்ளி மேலுமிரண்டு நாராசங்களினல் அவனேறியிருந்த கருடன் சிறகுகளையரிய அவன் மாயனுதலால்அளவற்றவிண்டுக்கோலங்கொண்டு தாக்கினன். அதைவீரன்கண்டு, நுதல் விழியினல் அத்தோற்றங்களைப் பொடிபடுத்த விஷ்ணுவானவன் இனி யென்ன செய்வோமென் றெண்ணுதுமெண்ணிகடையிற் பரமனை யரிச்சித்துப் பெற்றசக்கரத்தைப் பிரயோகித்தான். அதைவீரன்பற்றிவிழுங்கி, பின்பு அவன் சுழற்றி பெறிந்த தண்டையும் தமதுகெதையினற்பொடிபடுத்தினர். அதைக்கண்ட கண்ணன் தன்னிடத்தில் வேறுபடைகளில்லாமையால் வாளினையுங் கேடையத்தையுமெடுத்துப்பாய்ந்து வரும்போது வீரபத்திரர்ஓங்காரிக்க, அவ்வதிர்ச்சியினல் மயங்கிஅசைவற்றுவாளைப்பிடித்தபடியே நின்றனன். அத்தறுவாயில் யாதினைநினைந்தோவீரபத்திரதேவர் அதிகவுக்கிரத்தை அடையும் முன்னிலையிற்சிவகடாட்சத்தினற் கோபிக்க வேண்டாம்கோபிக்கவேண்டாமென்று வானத்தினின்றொரு வாக்கியம் உண்டாயது,அதைவீரன் கேட்டுச்சீற்றந்தணிந்து. இதென்னகாரணமென்று பார்த்திருக்கையில், இதுதருணமென் றெண்ணிப்பாகனுகவிருந்த பிரமன் சேவித்து, வேதவாக்கியத்துக்குப் பிசகாக யாகஞ்செய்தபாதகன் தந்தஅவியினைப்புசித்த அடியேன் பிழையினைப் பொறுத்தருள்கவென்று திருவடிகளில்விழ, அவனிடத்திற் கிருபையுற்று பயப்படவேண்டாமென் றுதரித்தார்.

அத்தறுவாயில்இது சமையமெனக்கருதி மகாவிஷ்ணு வீரபத்திரக் கடவுளைப்புகழ்ந்து, பாரித்து நிகரற்றிருக்கும் என் வில்லைக்கண்டித்ததல்லாமலும் செலுத்தியதிவ்விய சரங்களைப் பொடிபடுத்தி எதிர்த்தவரைச் சங்கரிக்குஞ் சக்கரத்தினையும் விழுங்கி மூவரினொருதலைமைபூண்டஎன்னையும் செயித்ததால், ஓய் வீரனே, உமது பெருமைகள் யாவராற் புகழப்படும், அழுக்காறுடைய தக்கன் வேள்வியின் அவியையிச்சித்து விவேகசூனியனுய்த் தேவரீருடனும் எதிர்க்கவந்தேன். அதற்குரியதண்டனையும்பெற்றேன். ஞானவான்கள் பரமசிவனைமதியாதவ ரிடத்தினும்நிற்பரோ, மேலும் ஆதிகர்த்தனைத் தொழாதவருக்குரிம் தண்டம்எங்களுக்கும் நடத்தியதனுல் உமக்குக் குறைவில்லை, இச்சம்பவத்தினை நாங்களே தேடிக் கொண்டோம், ஓ? வீராதிவீரனே, வார்த்தையுரப்பினல்உலகையழிக்கவல்ல தேவரீர் பாணங்களைச் செலுத்திய இதுவுமொரு திருவிளையாடலாமெனப் பலவாகத்துதித்து, அடியேன் பிழைக்கடுத்த சிஷ்டைமுன்னமே பெற்றுக் கொண்டதால் இனிப்பாதுகாத்தருள்கவென்று வேண்ட,வீரபத்திரதேவர் மகிழ்ந்தருளினர். அத்தறுவாயிற் சிவபிரான் பராசத்தி சமேதராய் ரிஷபவாகனத்தில் ஆரோகணித்து, நந்திதேவர் போற்றிவரச் சிவகணங்கள்கொடிகுடை ஆலவட்டம்வெண்சாமரையினைத்தாங்கியும் தேவதுந்துமியை முழக்கியும் கர்த்தன் பெருமைகளைப் பாடியும்சூழ்ந்து நடக்க வேளவிச்சாலையினிடத் தெழுந்தருள அதைக்கண்டவீரபத்திரர் பத்திவினயங்களுடன் தொழுதுநின்றார், அத்தறுவாயில் விஷ்ணு பிரமன் பிரிந்த பிதாவைஎதிர்ந்தவரையொக்கப் பரிவுடன் போற்றுமுன்னிலையிற் கர்த்தனிடப்பாகத்தின் வீற்றிருக்கும் பிராட்டியானவள் வேள்விக்களத்திலே தக்கனதியர் சின்னபின்னப்படக் கண்டிக்கப் பட்டு உருளுவதையும் மகமழிந்தபாட்டையும்கண்டு உலகமாதா வாதலாற் கோபந்தணிந்து, பரிவாய்க் கர்த்தனைநோக்கி, சுவாமிஇவ்வேள்வியும் இதனிடத்தில்வந்திருந்த தேவராதியரும் அடியேன் பொருட்டுஅழிந்தாரெனவுலகத்தோர் வசனிப்பர், என்கோரிக்கையின்படி வீரனைக்கொண்டு தக்கனதியரைச் சங்கரிப்பித்ததனல்தேவரீரை மதியாதகாரணத்திற்குரிய தண்டனையைப் பெற்றார்கள். இப்போதும் அடியேன் பொருட்டு இவரையெழுப்பத்திருவுளங்கொள்ள வேண்டுமெனத்துதிக்கஉன்னிரக்கம்வெ

குரேத்தியென்று பரமன் நகைத்து பக்கத்தில் நிற்கின்ற வீரபத்திரரைப்பார்த்துஉன்னால் றந்தவரைமீளவும் எழுப்பக்கடவாயென் றனுக்கிரகஞ்செய்தார். அவ்வாறே வீரன்பரமன் பாதங்களைச்சிந்தித்து, இவ்விடத்தின்மடிந்தவர்களனைவரும் உயிர்பெற்றெழுவீரென்றவுடன் உறங்கினவர் விழித்ததைப்போலத் தேவர் தபோதனர் பிராமணர் முதலாயினோர் எழுந்து, பரமனைக் கண்டு, தங்களுக்குக் கிடைத்த பழிபாதகங்களை முறையிட்டு, வாடி,கர்த்தனே ரட்சிக்கவென்றுபோற்ற, பரமன்அவர்களையுமாதரித்தருளினர். அக்காலத்திற் கேசவனாதியர் சேவித்து, சுவாமி? தேவரீரை வஞ்சித்துத் தக்கன்செய்தவேள்வியில்வந்துஅவியுண்டபாதகர் எதிரினெழுந்தருளத் திருவுளங்கொண்டீர். பிதாவல்லது பிள்ளைகளைப் பாதுகாக்க வல்லவர்யாவர்' மேலும் தக்கனுக்கினைக்கஞ்சி நன்னெறியைக்கடந்த அடியோங்களை ரட்சித்த கடவுளுக்கு யாங்கள்செய்யுங் கைம்மாறுமுண்டோ, இவ்வீரனாலேதண்டித்தகாரணத்தினால் எங்கள்தேகம் பவுத்திரமாயிற்று. இதுவல்லாமல் ஆதியில் உலகங்களையழிக்க வெழுந்த விஷத்தை உண்டதும், கங்கையைத்தரித்ததும் அடியோங்கள் பொருட்டல்லவோ? தொண்டர்செய்தபிழைகள் பல வுண்டாயினும் அவைகளைப் பொறுத்தல்அடிகள் கடமையாகுமென்றுபல பலவிதங்களிற் றுதிக்க அவரைப்பகவான் கையமைத்து, கோபந்தணிந்தோம். இனிப்பயம்வேண்டுவதில்லை யென்றருள ஆனந்தவாரியிலே திளைத்துக் களித்துக்கூத்தாடியேத்தினார்கள்.

அப்போது அக்கூட்டத்திலே தக்கனைக் காணாததாற் பிரமன் பரமனைச்சேவித்து கர்த்தனே, யாங்கள்நரகவாதனையிற்படாமல் அருளியதைப் போலவே என்குமாரனையும் வரவழைத்து ரட்சிக்க வேண்டுமென்று பாதாரவிந்தங்களில் விழுந்திரக்க, உமாபதி கிருபை கூர்ந்தவராய், வீரன்மீது திருக்கண்சாத்தினர். அக்குறிப்பினைவீரன்உணர்ந்து பானுகம்பனால் அவ்வுடலைத்தருவித்து, அவிக்குக் கண்டித்திருந்த ஆட்டின்தலையை அதிற்பொருத்திஎழக்கடவாயென்றவுடன் பரமசிவத்தையிகழ்ந்தவர் இப்படிக்காவரெனச் சகலருக்கும் உணர்த்துவதுபோலத் தக்கன் தலையையசைத்துக்கொண்டெழுந்து,அருகில்நிற்கின்றவீரபத்திர தேவரைக்கண்டு ஒடுங்கி, நாணித்தலையிறங்கி வணங்கி, வானத்தினிற்கும் பரமனையும்நோக்கி, நடுநடுங்கி வாடினான். அதைப்பார்த்தருளி, பத்தவற்சலரான கடவுள், தக்கா, பயங்கொள்ளவேண்டா மெனக் கிருபாநோக்கம்பாலிக்க, தக்கன்கவலை நீங்கி, மும்முறைவலம்வந்து பலதரம்வணங்கி, ஓ! தீனதயாநிதியே? லோகநாயகனே? அடியவர்க்கெளிய பரமே? தேவரீரனுக்கிரகஞ்செய்த செல்வப் பெருக்கினாழ்ந்து மதிமயங்கியான்செய்தபிழைகள் அளவற்றன உண்டு, நினைந்தாலும்மனம் நடுக்குகின்றது,அவைகளைப் பொறுத்தருளியதாற் கிருதார்த்த னானேன். அஞ்ஞானவானாகிய அடியேன்விஷ்ணு பிரமனைத் துணையாகக்கொண்டு தமதுமாயை வயத்தனாய் இச்சம்பவத்தினைப் பெற்றேனென வழுத்தினான். தம்மைவணங்கியவீரனை உமையவள்வாழ்த்தி, காளிமுதுகைத்தடவிஆதரித்து, அவர்களுக்குவேண்டிய பேறுகளையளித்தாள் அக்காலத்திற் கர்த்தன் தமதுகுணாதிசயங்களைப் புகழ்ந்து போற்றி, நின்ற கேசவன்நான்முகன். மற்றதேவராதியரிடத்துக் கிருபாநோக்கம்பாலித்து, நம்மையன்றி இந்த வேள்வியினை நடாத்திய காரணத்தினால் வேதவிதிப்படிக்கு இத்தண்டம் நேர்ந்தது. இதனால் நாணிவருந்த வேண்டாமென்று அவர்களைத் தங்கள் பதிகளுக்குப்போகஅருளிச்செய்து. வீரபத்திரர்காளிசேனைவெள்ளங்கள் கணநாதர்சூழ்ந்துபோற்றிச் செயபேரி வெற்றிச்சங்கங்களைமுழக்கிநடக்க விடையின்மீது திருத்தேவியுடன் வெள்ளியங்கிரிக் கெழுந்தருளி, வீரபத்திரா அண்டத்தினெல்லையிலிருந்துசகலபுவனங்களையும் பாதுகாத்து அரசுரிமையினைச்செலுத்திவரக் கட்டளையிட்டார் அப்போது வீரன்காளியுடன் தாய்தந்தையரைச் சேவித்து,விடைபெற்று,தமதிடத்தைச்சேர்ந்து, பூதகணங்கள்போற்றவிருந்தார். பானுகம்பன் முதலான பூதகணத்தலைவர் கர்த்தனை வணங்கி, தத்தமிடங்களையடைந்தார்கள்,

---

## அடிமுடிதேடுபடலம்.

இங்கிருநிற்கமுன்னிறைவன்வந்துழி
யங்குறநின்றதோரமரர்தங்களுட்
செங்கமலத்துறைதேவன்றக்கனுந்
துங்கமின்மைந்தனைநோக்கிச்சொல்லுவான்.

---

கேட்டீர்களோ சவுனகாதி ரிஷிகளே! சிவபிரான் மறைந்தபின்பு விஷ்ணுவாதியானதேவர் தவத்தர் முதலானவர்கள் தங்கள் பதவிகளிற் சேர்ந்தார்கள். இவ்வாறு சகலரும் நீங்கிய தருவாயிற் பிரமன் மனம்பொருமற்குமாரனை தக்கனைநோக்கி, நீவருந்திநோற்றுப் பெற்ற செல்வத்தை அகந்தையினாற் பறிகொடுத்ததன்றியும் உலகமுள்ளளவும் தீராதபழியினையும் வேற்றுருவினையும் அடைந்தாய், மேலும் இறத்தலில்லாததேவர் ரிஷிகளாதியருக்குயமனாய் அப்பெருமையினை மாற்றினாய், தக்கனென்றெவ்வுலகங்களினும் போற்றும் ஏற்றத்தையும் இழந்தாய், உன்குறிப்பின்வண்ணமல்லது பெரியோர்கள் சொல்லிய நீதிகளைமறந்து அவர்மனநோகவும் பேசினாய், வேதாகம முதலிய சாஸ்திரங்களைப் பூர்த்தியாகவாசித்தறிந்தும் அவற்றிற்குக்காரணராகியசிவத்தின்பெருமைகளையுணர்ந்தும் அவர்மாயையிற்பட்டு அவரையிகழ்ந்து இப்பேற்றையடைந்தாய் அவர்செயலைக்கடந்தவ ரிவ்வுலகின்கணொருவரும் கிடையாது, முன்னொருகாலத்திலே கண்ணனும் யானும் அஞ்ஞானத்தழுந்தினவர்களாய், நாம்நாம் பரமென்றகந்தைகொண்டு, அளவற்றகாலம்வாதுகொடுக்கின்றதருவாயில் இத்தினத்தைப்போலவே பரமசிவமெழுந்தருளி விலக்கி எங்கள் மையலைநீக்கிரட்சித்தார் ஆதலாற் பிதாவையொத்த பரிவையுடையகர்த்தனை வழிபட்டுத் தவங்களைச்செய்வையாயின், பாபத்தைப்போக்கி பரிசுத்தனாக்கி இம்மைமறுமையின்பங்களையுங்கடாட்சிப்பார், இதனைக்கடைப்பிடியாக நம்பி ஈடேறக்கடவாயென்றுபலதிறங்களைக்காட்டிப்போதிக்க தக்கன்பிதாவின் வாக்கியங்களைக்கேட்டு ஒருமைப்பட்டவனாய்; உங்களிருவருக்கும் ஆதியிலுண்டாகிய மயக்கத்தினையும் கர்த்தனெழுந்தருளித் தடுத்தாண்ட சரித்திரங்களையும் அருளிச்செய்யவேண்டுமென்றுகேட்டான் அப்போதுபிரமன் குமாரனே? நீவினாவியதற்குமகிழ்ந்தோமென்று அக்கடவுளினதுபாததாமரை

களைக்கருதிச்சொல்வதாயினர். இரேதாயுகமுதற்சதுர்யுகங்களும்ஆயிரம்விசைதிரும்புமாகில்எனக்கொருபகலாம்அவ்விரவில் யான் துஞ்சும்போது சத்தசாகரங்களும் பெருகி உலகங்களைமூடித் தேவர் மனிதர் சூரியன்சந்திரன்முதலான சராசரப்பிரபஞ்சங்களை அழிக்கும். அப்போதுவிஷ்ணுவானவர் பாலனாய், வடபத்திரசாயியாய், பரமசிவத்தின்பாதகமலங்களைச்சிந்தித்து, யோகநித்திரைகொண்டிருந்து, அவ்விரவுகழிந்து விடிந்தபின்பு மார்க்கண்டர் ஜனகராதியமகத்துக்கள்தம்மைநினைந்துதுதிக்க அறிதுயிலுணர்ந்தெழுந்து, பூமியைநிலைபெறச்செய்யநாடி, பாதலத்திற்கிடப்பதைத்தெரிந்து, வராகவுருவெடுத்துப்பாய்ந்து, வைரம்போன்றகோட்டிற் பூமியைத்தாங்கிவந்துபழையபடிக்குநிலைபெறச்செய்தார். அப்போதுநான்விழித்து,சிருஷ்டியினைச்சிந்திக்க துவாதசஆதித்தருதிக்க, அவரதுகாந்தி தீட்சண்யத்தினாற் பிரளயநீர்வற்ற. பூமிவெளிகண்டு எதாப்பிரகாரம் தோற்றியது. அதைக்கண்டதாமோதரன், இஃதுதம்மாலாயதென அகந்தைகொண்டு, திருப்பாற்கடலிற் சயனித்திருந்தார்.

அத்தருவாயில் நான்சகலபுவனங்களையும் பூர்வப்படி நிருமித்து, தேவரினங்கள்மானிடர்மிருகங்கள்பறவைமுதலிய சராசரங்களையும் உண்டுபண்ணி, பூவுலகம்பொன்னுலகமாதிய பதங்களினை நிருமித்து இந்திரனைத்தெய்வலோகத்துக் கரசனாக்கி திசைக்காவலரைநிலைபெறச்செய்து, சந்திரசூரியராதியநவக்கிரகங்களை எதாப்பிரகாரம் அமைத்து, இவைகளனைத்தும் நம்மாலாயது,நாம் உறங்கும்போது சகலமுமழியும். விழித்துநினைத்த காலத்திற் பழையபடிக்குண்டாகும், ஆகலால்நம்மையன்றிக் கர்த்தன்வேறில்லையெனத் துணிபுகொண் டிருமாந்து,என்னாலாயவைகளனைத்தினையும் பார்வையிட்டுவருகின்றதருவாயில், என்னைப்போலவே அகந்தையுற்றுத் திருப்பாற்கடலிற் பள்ளிகொண்டிருக்கும் விஷ்ணுவைக்கண்டு இலக்குமிக்கிடமாகியமார்பினிடத்தறைந்தெழுப்பி, நீயாவனென்றுகேட்டேன். அவர்நகைத்து, உன்பிதாவல்லவோ? இதனைமறந்தையோவென்றனர். அதைநான்கேட்டு, புன்சிரிப்புக்கொண்டு, இன்னமும்நித்திரைமயக்கந்தெளியவில்லையோ! உன்னுந்திக்கமலத்தில்வந்ததனாற் பிதாவெனக்கருதினையோ! தீக்கடைக்கோலினிடத்து அக்கினியுதித்ததனால் அப்பசையற்ற விறகுஅச்சிறந்ததேவதைக்குத்தாயெனப்படுமோ? அல்லது தந்தையெனவும் நினைக்கலாகுமோ இதன்றியும் முன்னம் பிருகுரிஷிசாபசம்பந்தத்தினாலே தூணில் நரசிங்கமாகத் தோன்றினை அது உனக்குப்பிதாவாகுமோ! மேலும் நீபத்துச்சனனமெடுத்தபோது அவைகளைப்படைத்த என்கரங்கள் கறுத்ததைப்பொன்றுகாட்ட, கண்ணன்கோபித்து, கரங்களைத்தட்டி,பிரமனே! முன்னம்பரமசிவம்உன்சிரங்களிளொன்றைக்கிள்ளியதைஇன்னமும் உண்டாக்கிக்கொள்ள வகையறியாத நீநம்மைச் சிருஷ்டித்தேனென்பதுநன்றாயிருக்கின்றது, உனக்குத் தாய்தந்தை குருதெய்வம் நாமாகும், நமதுமாயைவயத்தனாய் இதனைப்பேசுகின்றனைநாமல்லது சராசரப்பிரபஞ்சங்களில்லை, எண்ணுவிப்போனும் எண்ணுவோனும் நான், கண்ணுதற்கடவுளும் நான், அவனிடத்தமர்ந்த சத்தியும்நான், பஞ்சபூதிகளும்நான் புலன்களும்நான், நாராயணனும்நான், ஆதியும்நான், உருவும்நான், அருவும்நான், சோதியும் இருளும்நான், பரப்பிரமமும்நான், ஆதலாலென்னையல்லதொருபொருளுமிராதென்றுசொல்லினர். அதைக்கேட்டு, நாமிருவருமிவ்வாறுவாதுகொடுப்பதிற் பிரயோசனமின்மையாற் சமர்த்தலையினெதிர்த்துப் பொருதுவென்றவர் பரமென்றுநான்சொல்லினேன். விஷ்ணுவும்சம்மதப்பட்டு, சார்ங்கமென்னும் வில்லையேந்தி,அளவற்றதிவ்வியபாணங்களைப் பிரயோகிக்க, நான்தருப்பைகளை மந்திரித்து, மாறுபடைகளையுண்டுபண்ணிவிட்டுத்தடைசெய்யக்கண்டு, சீறிச்சக்கரத்தையேவினர் அப்போதுநான்பிரமாஸ்திரத்தைப்பிரயோகிக்க,அவையிரண்டும் சிலகாலம்போர்செய்து திரும்பின, பின்புவிஷ்ணுவானவர் தாம் முன்னம்பரமசிவத்தினிடத்திற்பெற்ற பாசுபதத்தினைப் பூசித்துவிட,நான்கர்த்தனிடத்திற்கிடைத்திருந்த அப்பாணத்தினையெடுத்துப் பூசித்து,வணங்கியுபசரித்தெய்தேன். அவையிரண்டும்அக்கினியைக்கக்கிப் புகையைவீசிப் பலதிவ்வியபாணவகைகளை யுண்டுபண்ணிப்பொருது எங்குமுலவுகின்றதருவாயில் அவைகளிலுண்டாகியசுவாலையினால் உலகங்கள்அழிவடையவும் தேவர்களிற் பலரிறக்கவும் சிலர்திருக்கைலாயவாயிலினிடத்தில் முறையிட்டுக்கொள்ளவோடவும் மேகங்கள் கரிந்துருளவும் சமுத்திரசலஞ்சுவறவும் இவ்விதமாகச் சகலமும்வாதைப்பட்டன.

அப்பொழுது பரமசிவகடாட்சத்தினால் நாரதர்வந்து என்னையும் விஷ்ணுவையும்பார்த்து, உங்களிற்பரத்துவத்தைவகித்து வீண்வாதுகொடுக்கின்றீர். அவ்வாக்கியம் உங்களுக்கடாது மேலும் தகுதியாகிய பாணங்களைச் செலுத்தாமல் மேலானபாசுபதத்தையெய்தீர்கள்,அதனாற்சராசரப்பிரபஞ்சங்கள் அலைகின்றன, அப்படையினையளித்தஆதிதேவனை. மறக்கலாமோ! ஆதலால்இனிசண்டையினைநிறுத்தக்கடவீர், அல்லதுயின்னமும் சிலகாலஞ் சண்டைகொடுத்திருப்பீராயின் ஆதியந்தமில்லாத கர்த்தன்சோதிவடிவாய் இருவர்மத்தியிற்றோன்றுவர். அதனால் துன்பம்நேருமெனச்சொல்லிப்போயினர். அவ்வாக்கியங்களை நாங்கள்நினைந்து பாராமற் பின்னுங்கோபமேலிட்டு வெகுகாலங்கொடியபோரினைச்செய்துவருகையிற் சீவராசிகள்வருந்திச்சிவபிரானைக்குறித்துமுறையோமுறையோவென்றலற. கர்த்தனிரங்கி, சிறியவனாயொப்பநாங்கள் உலகங்களலையப் பொருவதைவிலக்கி, ஆணவமலத்தைநீக்கிரட்சிக்கத் திருவுளங்கொண்டவராய், எங்கள்மத்தியில் அக்கினிமலையாகத்தோற்றி, நாங்கள் ஏவியபடைகளையுட்கொண்டு அளவுபடாமல்நின்றார். அதைக்கண்டு விஷ்ணுவும்நானும் பிரமித்துத்தியங்குந்தருவாயில், வானத்தினின்றொருவாக்கானது, ஓ!விவேகமில்லாதவரோ? உங்கள்வலியினைத் திரிபுரதகனரோகாண்பார், ஆதலால்இச்சோதியின் அடியினையும் முடியினையும்கண்டவரோபெரியரென்றுஎழுந்தது. அதையாங்கள்கேட்டு, கோபந்தணிந்தும் அகந்தையினைவிடாமல் இவ்வொலியுண்டாகுங்காரணம்யாதென்றாலோசித்து. நாரதர்வாக்கியத்தைநினைந்து நம்மின்மேலானவனைக் காட்டவித்தோற்றமுண்டாயது. ஆதலால் இதன் ஆதியந்தத்தினைக்கண்டவரே பரமெனநிச்சயித்தனம், அஃதெத்தன்மைத்தெனின், தவழுங்குழந்தை வானத்திற்செல்லுஞ் சூரியனைப்பற்றச் சிந்தித்தற் கொக்கும் பின்புவிஷ்ணுவயிரத்தினையொத்த குளம்புகள்

பொருந்திய குறியகால்களையும் பிறையினைநிகர்த்தகோடு
களையும் ஆயிரயோசனைபரப்புள்ள பாரித்ததேகத்தினை
யும் வாய்த்தவராகவுருக்கொண்டு, புவியினைக்கல்லி, அச்
சோதியினடியைக்காணச்சென்றார். யானும்பொற்பிரகா
சம்பொருந்திய சிறகுகளையுடைய அன்னவடிவெடுத்து,
அதன்முடியினைக்காண வானத்திற்பறந்து, அளவற்ற பு
வனங்களைக்கடந்தும் அதுமுற்படியே தோற்றக்கண்டே
ன். பன்றியாய்ப் பாதலத்தைத்துருவிச்சென்ற கேசவனு
ம் அவ்வாறேகண்டு, கோடுகள்தேய்ந்துவாடி யிளைத்தபி
ன்பு அகந்தைநீங்கி, பழையஅறிவுதித்து,தேடும் ஆசை
யையொழித்து, புவியின்மீது வருவதற்குச் சத்தியில்லா
மையாற் பரமசிவத்தின் பெருமைகளைப்போற்றி,யாவரு
ம்அறிதற்கரியதேவரீர் பாதாரவிந்தங்களிற் சரணடைந்
துஅவைகளையருச்சிக்க விருப்புற்றதால் உமதுமகிமைக
ளையறியாமற்செய்த பிழைகளைப்பொறுத்து இக்காலத்தி
ற்காத்தருளவேண்டுமென்று பலவாகத்துதித்து,கர்த்தன
னுக்கிரகத்தினலே வலிபெற்றெழுந்து, புவியிலோங்கி நி
ற்குஞ்சோதிக்கருகில் வந்துவணங்கி வழிபட்டிருந்தார்.
யானும் நெடுங்காலம்பறந்துதேடி அதன்முடிகாணமல்வ
ருந்தி முற்குறித்தசபதத்தினைநினைந்து, விண்டுஇதனடி
யைக்கண்டு வருவானுயின் நமக்குத்தோல்விநேருமேயெ
ன்னும் மானத்தினல்வருந்தி எவ்வளவுகாலமாயினும் இ
தைக்கண்டல்லது மீளேனென்று பறந்துபறந்து இளைத்
து வலியொடுங்கி, சிறகுகளுதிர்ந்தசைவற்றுக் கால்களோ
ய்ந்து. கண்கள்சுழன்று, பிராணன் தத்தளித்து வாடி
னேன்.

அப்போது தெய்வச்செயலால் அச்சுடரினின்றுஞ் சி
லசித்தர்வெளிவந்து, பிரமாணத்தடங்காதபரஞ்சோதியி
னது முடியைக்காண்பேனென்று அகந்தையுற்றெழுந்த
இப்பறவை தன்சிறகுகளும் வலியும்ஒழிந்து அறிவில்லா
மற்றேடிவருகின்றது, இதுஇன்னஞ் சிலகாலம்பறக்குமா
யின், உயிரிழந்துபோம். இச்சோதி சிவச்செயலென்றறி
யாமற் பாதலத்தைப்பிளந்து போனவிண்டுவும் இதனடி
யினைக்காணது இளைத்து, சிவனைத்துதித்து, வலிபெற்று
பூமியின்வந்து, போற்றிநிற்கின்றான், இவ்வன்னத்துக்கு
ம்அவர்அனுக்கிரகமுண்டாயிற் கடத்தேறுமென்று மீள
வும் அச்சோதியின்மறைந்தனர். இவ்வாக்கியங்களைக்கே
ட்டவுடன் நான் என்மையலொழிந்து, கர்த்தனைத்துதித்
து, புவியினிறங்கி, விண்டுவைக்கலந்து, நாமிருவரும்அ
கந்தையினல் நாரதர்சொன்னதைக்கேளாமலும் இச்சோ
திவடிவானது பரமன்செயலென்றறியாமலும் அளவற்ற
காலந்தேடிவருந்திக் கடையிற் சிவகடாட்சத்தினலுணர்
ச்சிபெற்றுக் கிருதார்த்தரா யிவ்விடஞ்சேர்ந்தோம், ஆம
லாற் பரமனைவழிபட்டுத்தெரிசித்து ஈடேறக்கடவோமெ
ன்றுகூறி, அவர்சம்மதத்தைக்கொண்டு, ஒருலிங்கத்தை
யவ்விடத்திலேதாபித்து, சோடசவுபசாரங்களுடன்அரு
ச்சனையினை வேதவிதிப்படிக்குச்செய்து, போற்றினேன்.
அத்தறுவாயிற் பரமசிவம் அச்சோதியினின்றும் வெளி
வந்து, உமாபரமேஸ்வர முகூர்த்தமாய்க்காட்சிகொடுக்க
நாங்கள்கர்த்தன் பாதகமலங்களிலேதொழுது. சுருதிகள்
துதித்தறியாததேவரீர்பெருமைகள் எங்களாலளக்கப்படு
மோ? உமதுமாயையிற்பட்டுமயங்கிப்பொருதளங்கள்மத்
தியிற்சோதிமயமாய் எழுந்தருளிப் பேறிவைத்தந்தா
ண்டீர், உமதுஅனுக்கிரகத்தினல் உம்மையறியவல்லபே
தையேம் இழைத்தபிழையினைப் பொறுத்தருளவேண்டு
ம், பிள்ளைகள்செய்ததீங்கினைப்பெற்றவர்கள் இஷ்டமாக
ப்பார்த்திருப்பது முறைமையல்லவோவென்றுபலவிதங்
களாகத்துதித்தோம் பரமனிரங்கி நீங்கள்செய்தகுற்றத்
தையெண்ணிவருந்தவேண்டாம், உங்கள்பூசைக்குமகிழ்
ந்து உங்கள்பதவிகளையும்தந்தோம், இன்னமும்விரும்பி
யவரங்களைத் தருவோமென்றருளியபோது நாங்கள்மீள
வும்வணங்கி அடிகள்திருவடிகளைமறவாதபேற்றைத்தரு
கவென்றிரக்கக்கடாட்சித்து, மீளவும்அச்சோதிப்பிழம்பி
ல்மறைந்தார், பின்புஅவ்வனல்வடிவமாறி, ஒருமலையுருக்
கொண்டு, சகலருங்கண்டுதொழநின்றது. யாங்கள்தாபித்
த சிவக்குறியினை அவ்விரவில்வழிபட்டு எங்களுலகங்க
ளைச்சேர்ந்தோம் அதுசிவன்ராத்திரியெனச் சொல்லப்ப
டும். அவ்விரதத்தினை அளவற்றவர்செய்து இம்மைமறு
மைப்போகங்களைப் பெற்றுவருகின்றனர். ஆதலால்அவ
ர்குணதிசயங்களைப்போற்றிப் பூசியாதவரல்லது பேதை
யர் உலகின்கண்யாவரிருக்கின்றார்கள், அவரருளிருந்த
தால்மையல்நீங்கி அறிவுவிளங்கப்பெற்றாய். தாய்தந்தை
குருதெய்வமுதலாயினோர் அவராகநினைந்து தவஞ்செய்
து பேரின்பத்தைப் பெறக்கடவா யென்று தட்சனுக்குப்
போதித்துப் பிரமன் தன்பதியைச்சேர்ந்தான்.

## தக்கன் சிவபூசைசெய்படலம்.

மருமலரயனிவைவகுப்பநாடியே
புரிகுவனஃதெனப்புகன்றுதாதைதாள்
பரிவொடுசிறுவிதிபணிந்துகாசியாந்
திருநகரதனிடைச்சேறன்மேயினன்.

அதன்பின்பு தக்கன்பிதாவானவர் அருளிச்செய்தபடி
யேதவஞ்செய்யக்கருதி, காசித்தலத்தைச்சேர்ந்து, கங்கை
க்கரையில் ஆலயமொன்றுண்டாக்கி, உருவாய்அருவாய்
அருவுருவாய் அமலமாய்ப்பரப்பிரமசொரூபியாகிய சிவ
லிங்கத்தைத்தாபித்து, வேதாகமவிதிப்படிக்கு ஆயிரவ
ருடம் அருச்சித்து, பின்புகர்த்தன்இரங்கி வெள்விடை
யின்மீது பார்வதிசமேதராயெழுந்தருளக்கண்டு, மும்மு
றைவணங்கித்துதித்து, சுவாமி; பேதையேன் செல்வப்
பெருங்கினழ்ந்து தேவரீரைவெறுத்து அளவற்றபாதகங்
களைத்தேடிக்கொண்டேன் அவைகளைநீக்கி உமதுஅடிய
ரிற்சேர்த்துக்கொள்ளவேண்டுமென்றுபோற்றஅவ்வாறே
சிவபிரான் கணத்தலைமையளித்து மறைந்தார். கர்த்தன
னுக்கிரகத்தினலே தக்கன்புனிதனுகியும் நந்திதேவர்சா
பத்துக் கழிவில்லாமல் ஆட்டுத்தலையினையும் பெற்றான்.
அந்தத்தக்கன்யாகத்திற்சேர்ந்திருந்த விஷ்ணுப்பிரமேந்
திராதியருக்கு நல்லறிவுபிறந்து தங்களுக்கு வசதியாயுள்
ள இடங்களில் பரமேஸ்வரனைப் பிரதிஷ்டைபண்ணி,பூ
சித்து வீரபத்திரராலும் சிவகணங்களாலும் உண்டாகிய
துன்பங்களையொழித்து வேண்டியபேறுகளைப்பெற்றுத்
தங்களுலகத்திற்குப்போனர்கள். மற்றவர்களும் சிவபெ
ருமானுடைய திருவருளினல் உயிர்பெற்றெழுந்து தங்க
ள்தங்களிடத்திற்குப்போனர்கள். அப்பா இந்திரன்குமா
ரனுகிய சயந்தமகாராஜனே கொடியவனுகியதட்சனுடை

யயாகத்திற்சேர்ந்திருந்ததனுலேதான் இவர்களெல்லாரும் சூரபதுமனுகியரால் துன்பமனுபவிக்கவேண்டிவந்ததென்று தேவகுருவாகிய பிரகஸ்பதிபகவான்சொல்ல அதனைக்கேட்டசயந்தன் தான் கொண்டிருந்த சந்தேகத்தையொழித்து அவ்விண்ணுலகத்தையரசியற்றிவரும்போது ஆசிரியன்போதனைக்குட்பட்டு அந்தப்புரத்தைச்சேர்ந்து சுரதலீலைகளைச்செய்து களித்திருந்த தேவேந்திரன் ஒரு பரியாயமாகப் போகத்தினிடத்திற் றிருப்திபெற்றவனுய் அரிதில் அந்தப்புரத்தைக்கடந்து வெளிவந்து திரிலோக சாம்பிராச்சியச் சின்னங்களைப் பல்லாயிரதேவர்கள் சூழ்ந்துசெய்துவரத்தக்கதாக வீரசிங்கத்தைப்போலக் கம்பீரமாய்ச் சித்திரவிசித்திரங்களாகச் சோடித்திருக்கின்ற மகாசபையினிடத்தில்வந்து குலகுருவை மும்முறைவலம்வந்து சேவித்துக் கரங்களைக்கூப்பிநின்றவனுய் இதனைவிண்ணப்பஞ்செய்வதாயினன், ஆசிரியனே அடியேனிடத்திற்கிருபையுற்றுப்போதித்த பேரின்பத்துக்குரிய காரணங்களைத் திஷ்டாந்தமாக அனுபவித்துமனமுந்தேகமுமொன்றுபடப் பேரின்பவாரியிற்றிளைத்து மகிழ்ந்திருந்தேன், இதைத்தவிர வேறெருமோட்சசாதக முண்டெனப்பேசுவது பேதைமைப்பாலதன்றி விவேகசம்பன்னருக்கடாதென மன்மதசாத்திரத்தின்பெருமைகளையும் அதினுற்கிடைத்தசுரதவின்பநலங்களையுமேமுக்கியமாகப் பேசிக்கொண்டு பழையபடிக்கு இந்திரசபையில்விளங்கும் சிங்காதனத்தில்வீற்றிருந்து இருஷிகளாதியர் மங்களாசீர்வாதங்களைச்செய்துபோற்றிவரவுந் தேவர்கள்வணங்கவும் அரசுசெலுத்திக்கொண்டிருந்தனன்.

---

## முசுகுந்தன்கந்தவிரதப்படலம்.

உரைசெறிமகவான்செம்மலும்பரிலிருப்பவிம்பர்
முரசெறிதானைவேந்தன்முசுகுந்தனென்னும்வள்ளல்
விரைசெறிநீபத்தண்டார்வேலவன்விரதம்போற்றி
திரைசெறிகடற்பாராண்டசெயன்முறைவிளம்பலுற்ரும்.

---

வாரீர் நைமிசாரணியவாசிகளே யிவ்விதமாகப்பாலசுப்பிரமணியக்கடவுளினது கடாட்சவீட்சணியத்தினுல்திரிலோகாதிபத்தியத்துக்குரிய பட்டாபிஷேகத்தைப்பெற்றுக்கொண்ட இந்திரன் தெய்வலோகத்தில்விளங்கும் மகாசபையிற் சிரோரத்தினமயமாகிய சிங்காதனத்தின்கண் வீற்றிருந்து அரசுரிமைகளைநடாத்திவருகின்றகாலத்திற் கடல்சூழ்ந்த பூவட்டத்தை ஒற்றைக்குடை நிழலிற்படுத்திரணபேரி ஜயபேரி வெற்றிச்சங்கமுழக்கமருத பராக்கிரமசாலிகளாகிய ரதகஜதுரகபதாதியென்னும் நால்வகைச்சேனைப்பெருக்கைப்படைத்துச் சத்துருக்களுக்குப்பேரிடிபோல விருக்கின்ற முசுகுந்தச்சக்கிரவர்த்தியானவன் பரிமளமிகுத்த கடப்பமலர்மாலைபுரளும் பன்னிருபுயாசலங்களையுடைய பாலசுப்பிரமணியதேவருக்குரிய சிறந்தவிரதங்களை யனுஷ்டித்து மிகுத்தபத்தி வயிராக்கியங்களுடன் அதற்கடுத்த பூசனைவழிபாடுகளிற் குறைவின்றி, சகலசம்பிரமங்களுடன் நடாத்திவரு முன்னிலையில் தன்னரசாட்சிக்குட்பட்ட நாடுநகரங்களில் வாசமாயிருக்கின்ற சகலரையும் அவ்விரதங்களைச்செய்துவரக்கட்டளையிட்டு அவர்களுக்குவேண்டும் செல்வங்களையுந்தந்து அலைகளைமோதிச்சுருட்டும்சமுத்திரத்தைஆடையாகத்தரித்திருக்கும் பூமண்டலமுற்றினும் செங்கோல் முறையே ஆக்கினைகளைச்செலுத்தி ஆண்டுவரும் பதக்கிரமங்களையும் நீதியையும் மற்றுமுள்ள சத்கருமங்களையும்எம்மால் விரித்துச்சொல்லக்கேளுங்களென்று சூதபுராணிகர்சொல்லுவதாயினர், ஏமஹரிஷிகளே, முசுகுந்தச்சக்கிரவர்த்தியானவன் தன்னதிகாரத்திலடங்கியிருக்கின்ற பிராணிகளுக்கு யாதோரிடையூறுகளும் நேராமல் தன்பிராணனைப்போலப் பாதுகாத்திரட்சித்துவரும் நீதியினுலும்வேதப்பிராமணர் ஆகமவிதிப்படிக்கு யாகாதிகளை நடாத்திவரும் மேம்பாட்டினுலும் தன்கணவனைத்தெய்வமாகப் பாவித்துப் பூசித்துவரும் மங்கையர் கற்புத்தன்மையினுலும் மாதந்தோறும் மும்மாரிகுறைவறப் பெய்கின்றதால் குடிவளம்வயல்வளம் நீர்வளமிகுத்துச் சகலசம்பத்துகளும் பெருத்துப் பயிர்தழைத்தோங்கிக் குவிக்கின்றபண்டங்களில் ஆறிலொருகடமையைக்கொண்டு அவற்றினுல் நந்தவனங்கள் - சோலைகள்-குளங்கள்-தடாகங்கள்-தண்ணீர்ப்பந்தல் அன்னசாலைகள் - ஆதுலருக்கிருப்பிடமுதலிய வுபசாரங்களைச்செய்வித்துப் பலதேவாலயங்களைக்கட்டிவைத்து லோகநாயகனுகிய சிவக்கொழுந்தைத்தாபித்து அவற்றிற்குவேண்டும் உபகரணங்களைவரன்முறையேநிரப்பி நித்தியக்கட்டளைப்பஞ்சபருவம் பிரமோச்சவகாலங்களில் தேவர்களும் நாணும்படிக்குச் சகலவுபசாரங்களுடன் முடிப்பித்துத் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனங்களைச்செய்துதருமமானது நான்குபாதங்களினும் நடக்கத்தக்கதாகச்செங்கோன்மைப்படிக்குஅரசுரிமைகளைநடாத்திமனவெழுச்சியுடனிருக்கின்ற நாட்களிலொருதினம் மாடமாளிகைகூடகோபுரங்களாதியசிறப்புகளைக்கொண்டு குபேரன்பதத்தினும் சிறந்திருக்கும்பட்டணத்தைக்கடந்து ரதாரூடனுப் மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர் முதலானவர்கள் சூழ்ந்துபோற்ற வெற்றிபராகிய சேனைவெள்ளமானது ஆரவாரித்துத்தொடரவும் பதினெண்வாத்தியங்களும் திசைகளதிரத்தக்கதாகத் தாம்தாமெனமுழங்கவும் மற்றவிராஜவோலக்கத்துடன் வனத்திற்சென்று தவசிரேஷ்டராகிய வசிஷ்டர்வாசஞ்செய்திருக்கும் பர்னகசாலையைச்சேர்ந்து தேரைவிட்டிறங்கி மிகுந்தபயபத்தி விசுவாசங்களுடன் மும்முறைவலம்வந்துபணிந்தெழுந்து கரங்களைக்கூப்பிக்கொண்டுபோற்றி யிதனை விண்ணப்பஞ்செய்வதாயினன், ஓதபோநிதியேகேட்டருள்க. தேவதேவோத்தமனுகியகந்தசுவாமியாருக்குரிய விரதமான்மியங்களனைத்தையும் முறைப்படிக்குஅடியேனிடத்திற்கிருபையுற்றுப் போதிக்கவேண்டுமென்றுபல விதங்களில் வேண்டுகின்ற முசுகுந்தச்சக்கிரவர்த்தியினது கோரிக்கையைக்கேட்டமாத்திரத்தில் உளமுந்தேகமும்பூரித்து மயிர்சிலிர்க்கவிழிகளில் ஆனந்தவாரியைப்பெருக்கி அரசனைத் தர்ப்பாசனத்திலிருக்கச்செய்துமங்களாசீர்வாதங்களைச்செய்து மன்னர்மன்னனே உன்மனேபீஷ்டப்படிக்குச் சரவணபவனைப்பூசித்து வழிபடும்விரதங்களனைத்தையும் சாங்கோபாங்கமாகப்போதிக்கின்றனம், ஒருமைப்பட்டமனதுடன்பத்தியாய்க் கேட்கக்கடவையென்றருளிச் செய்வதாயினர், அதிகமேம்பாட்டையுடைய வாரங்களேழினுஞ் சிறந்தோங்கியிருக்கும் சுக்கிரவாரத்திற் பொன்னுலகத்தைத்திருத்தி இந்திரனுக்குப் பட்டா

பிஷேகஞ்செய்தருளியபாலசுப்பிரமணியதேவருக்குச்செய்யவல்லவிரதமொன்றுண்டு அதனை ஆகமமுறைப்படிக்குவழுவின்றிமுடித்த புண்ணியவான்கள் மனோபீஷ்டங்களைக் கந்தசுவாமியார்தந்தருளி இம்மையில் அனுபவிக்கத்தக்க போகபோக்கியங்களைப்பெறச்செய்து கற்புக்கரசியாகிய பத்தினியையும் சுபுத்திரர்முதலிய வளங்களனைத்தினையும் கடாட்சித்து மறுமையில் மோட்சசாம்பிராச்சியத்தையும்பெற்று வாழச்செய்வர், அதற்குத்திஷ்டாந்தமாக முன்னோர்கள்செய்திருக்கின்ற சரித்திரங்களைச்சொல்லக்கேட்பையாக, பூருவத்திற்சூரியன்மரபிற்றோற்றி வந்தபூமண்டலத்தை ஒருகுடைநிழலிற் பரிபாலனஞ்செய்துவந்த பகீரதமகாராஜனைப்பகைத்து நிகரற்ற புஜபலபராக்கிரமசாலியாகியகோரனென்னும்அவுணராஜன்பலவத்காரமாய்அவன்ராஜ்ஜியமுற்றினும்அபகரித்துக்கொண்டமுன்னிலையிற்பதியையும்செல்வவளங்களையுமிழந்து தீனனாய்மனைவியையும்பிள்ளைகளையும் அழைத்துக்கொண்டுகானகத்திலோடி அன்னபானாதிகள்கிடையாமல் அலைந்து திரிந்து கடையில் புகலொன்னுந் தவசிரேஷ்டனைத்தரிசித்துப்பயபத்திவிசுவாசத்துடன்பாதாரவிந்தங்களிற்றீர்க்கதண்டன்செய்து கரங்களைக்கூப்பிக்கொண்டு பலவாகப்புகழ்ந்துபோற்றித்தனக்குச்சம்பவித்திருக்கின்றகுறைபாடுகளைமுற்றும் விண்ணப்பஞ்செய்துசுவாமிகள் இதற்கொருமார்க்கத்தைக்காட்டியாளக்கடவீரெனப்பரிபவப்பட்டுவேண்டுமுன்னிலையில் பார்க்கவனென்னும் ஆசிரியனானவன் அரசன்முறைகளைத்திருச்செவிகளினேற்று மனமிரங்கியிதனைப்போதிப்பதாயினர்மன்னவரோறே பயப்படவேண்டாம்வெற்றிவேலாயுதபாணியாகிய கந்தசுவாமியாருக்குப்பிரியமாகவிருக்கின்றசுக்கிரவார விரதத்தைச்சாத்திரோத்தமாய் பத்திவயிராக்கியத்துடன் மூன்றுவருஷகாலம்செய்துமுடிப்பையாகில் உன்வளங்களைப்பறித்துக்கொண்டுஅலைத்துத்துரத்தியமூர்க்கனாகியஅவுணராசன்மாண்டுபோவதற்கையமில்லை.பின்புபழையபடிக்குப்பூமண்டலமுழுமையும்பரிபாலனஞ் செய்துசகலசெல்வங்களையும் மேன்மேலும் அனுபவித்துச் சவுக்கியத்திலிருப்பையென்று அனுக்கிரகஞ் செய்தவாக்கியங்களைச் செவிகளுக்கமுத தாரையைப்போலக் கேட்டு மனமுந் தேகமுங் குளிர்ந்தவனாய் அடியேனிஷ்ட தெய்வத்தைப் போலவெழுந்தருளியிருக்கின்ற தவசிரேஷ்டரே நல்ல மார்க்கத்தைக் காட்டினீர் கட்டளையின் படிக்குச் செய்யக்கடவேனெனச் சம்மதித்து அவரைவேண்டிப் புரோகிதனாகவைத்துக்கொண்டு அடுத்த வியாழத்தினம் பிராதகாலத் தெழுந்து சுத்தோதகத்தில் முழுகிக் காலைக்கடன்களைமுடித்துக்கொண்டு தானுந்தேவியுமாய் ஒருபோது பகற்காலத்திற் கிடைத்த உண்டியையுண்டு சத்காலட் சேபங்களைச் செய்து போதுபோன பின்பு உறக்கத்தை நீக்கிப் பாலசுப்பிரமணிய தேவரைத் தியானித்து அவருக்குரியசகஸ்திர நாமங்களை யோதியோதி யிரவைக் கழித்து மறுதினம் சுக்கிரவாரம் விடியற்காலத்தெழுந்து முற்படிக்குநித்திய கருமங்களை முடித்துக் கொண்டவனாய்த் தருப்பைகளைத் தேடிக்கொய்து வந்துசேர்த்த பாயலினிடத்திற் சுப்பிரமணியக் கடவுளினது கோலத்தைத் தாபித்து ஆகமவிதிப்படிக்குத் திருமஞ்சனமாட்டி மலராடையைச்சாத்திப் புனுகுசவ்வாது கஸ்தூரியினாற் செய்த கலவைச்சாந்தைப் பூசிக் கனிவகைகளைப் படைத்துத்தூபதீபங்களைச் சுற்றி மற்ற சோடசவுபசாரங்களையும் கிரமமாகச் செய்துமுடித்தபின்பு உபவாசமாயிருந்து கந்தமூர்த்தியினது சரித்திரங்களைக் கேட்டுஇரவுமுற்றும் துயிலொழிந்து மறுநாள் உதையகாலத்தில் நீரிற்படிந்து முருகனைப்போற்றி வணங்கியபின்பு பாரணைசெய்து அப்பகல்விழிகளைமூடாமல் குகனை வழிபட்டும் இவ்விதமாக ஆசிரியன் பணித்தபடிக்கு மூன்றுவருஷவரையில் விரதபங்கமில்லாமல் நடாத்தி முற்றியகாலத்தில்சண்முகப்பெருமாள்அவன்பூசனைக்கிரமங்களுக் கிரங்கிக் கிருபாநோக்கத்தைப் பாலித்தமாத்திரத்தில் திருக்கரத்திற்கோடிசூரியப்பிரகாசமாகச்சொலித்துக் கொண்டிருந்த வெற்றிவேலாயுதமானதுசரேலென்றெழுந்து அதிகவொளியைக்காட்டிச் சூரியப்பிரகாசத்தைமாற்றி மனோவேகத்தினுங்கடுகிவந்து கொடிய பாதகனாகிய பகைவன் மார்பைப்பிளந்து உயிரையுண்டு நிலத்திற்கிடத்திக் கந்தமூர்த்தியிடத்திற் சேர்ந்தது இதனைப்பகீரதன்தெரிந்தவுடன் வேலாயுதத்தைப் போற்றிச் சரவணபவனைத்தியானித்துப் பலதரம் நிலத்தில்விழுந்து சேவித்து அவன்குணாதிசயங்களைக் கொண்டாடினவனாய்ப் புரோகிதனாக விருந்த பார்க்கவன் திருவடிகளில்வணங்கிசுவாமிகளே தேவரீர்கருணாகடாட்சத்தினால் சகல துன்பங்களையும்போக்கிப் பழைய வாழ்வைக் கிடைக்கப்பெற்றேனென்று பற்பல வுபசாரங்களைப்பேசி அவர் ஆசிகளையும் விடையையும்பெற்றுத் தன்பட்டணத்தைச் சேர்ந்து யதாப்பிரகாரம் அரசுரிமைகளைச்செய்துசெழித்திருந்து பின்பு அந்தியத்திற் கிடைத்தற்கரியசாயுச்சியப் பதவிக்குப் பாத்திரனாய்ச்சுகாதீதச்செல்வத்தையனுபவித்திருந்தான்.

அதுபோல கநத சுவாமிக்கு கந்த விரத மின்னமொன் றுண்டு அதனையும் சொல்லக்கேட்பையாக ஸ்ரீமகாவிஷ்ணுவினது உந்திக்கமலத்தி லுதித்திருக்கின்ற பிரமபுத்திரனாகிய நாரதமஹாரிஷியானவர் சிறந்தவிரதங்களைச்செய்து சத்தரிஷிகளில் முதன்மையாகப் புகழத் தக்க பேற்றையும் மேம்பாட்டையுங் கிடைக்கவெண்ணி வேதாகம சாத்திரங்களை சம்பூரணமாக ஓதியுணர்ந்தஅவ்விருடியானவர் பார்ப்பதியார்மூத்த பிள்ளையாகிய விநாயகமூர்த்தியைத் திருமஞ்சனமுதலிய சோடசவுபசாரங்களினால் ஆராதித்துஅத்தேவனைத் தரிசிக்கப் பெற்றவனாய்ப் பாதார விந்தங்களிற்றெழுதேத்திக்கஜாநநனேசகலராலும்புகழ விருக்கின்ற சப்தமுனிவர்களில் முதன்மைப்பேற்றைக்கிடைத்து வாழத்தக்க சிறப்பைத் தரவல்ல விரதமொன்றினை அடியேனுக்குப் போதிக்க வேண்டுமென்று பலவாகப்போற்றுதல் செய்வனதக் கமலக்கண்ணன் மருகன்கேட்டருளிக் கிருபையாகப் பார்த்து உன் மனோபீஷ்டப்படிக்குக் கிடைக்கச்செய்யத்தக்க நோன்பிருக்கின்றது அஃதென்னையெனில் எனதிளையோனாகிய சண்முகப்பெருமாளுக்கு விருப்பமாகிய கார்த்திகைமாதத்தில்வருங்கார்த்திகை விரதத்தை யனுசரித்து ஆகமவிதிப்படிக்குப் பன்னிருவருடம் திடசித்தனாய் முடிப்பாயாகில்உன்னெண்ணங் கைகூடுமென் றனுக்கிரகித்தகாலையில் கர்த்தனே கட்டளையின்படிக்குச் செய்யக்கடவே னெனப்பணிந்து விடைபெற்று நாரதமுனிவர் பூமண்டலவெல்லையில் வந்து ஒரு சிறந்ததலத்தைச்சேர்ந்து பரணியினன்று பிராதகாலத்தெழுந்து நித்தியகருமங்களை முடித்துக்கொண்டு பரிசுத்தனாய் ஒருபோதுண்டு சிவகுமாரன் கதைகளைப்பாராயணஞ்செய்து அத்தினம்கழிந்து விடிந்த கார்த்திகைநா

ளுதையத்தில் பவுத்திரமாகியகங்கையில்முழுகி வெள்ளாடையையுடுத்துச் சித்தசங்கற்பத்தைக் கவனித்து வெற்றிவேலாயுத மூர்த்தியினது பூசனைவழிபாடுகளைச் செய்யத் தொடங்கி ஐம்புல விஷயங்களையடக்கி ஆசிரியன்திருவடிகளை மனப்பூருவகமாகச் சிந்தித்து வந்தனாதிகளைமுடித்த பின்பு தருப்பாசனத்தில் பாலசுப்பிரமணியதேவர்வடிவினைஸ்தாபித்துக் கங்காசலத்தினால் திருமஞ்சன மாட்டிப் பட்டாடையையுடுத்துப் பரிமள மிகுத்த திவ்விய புஷ்பமாலைகளைச் சூடிச் சந்தனக் கலவையைப்பூசிக் தூபதீப நைவேத்திய முதலிய சோடச வுபசாரங்களையுங்கிரமப்படிக்கு முடித்தவராய்க் குமாரசேதவர் திருவிளையாடல்களடங்கி யிருக்கும் புராண காலட்சேபஞ் செய்து மனமுருகி உள்ளங்கை தீர்த்தத்தைப் புசித்து இவ்விதமாகப்பகற்போதைக் கழித்து இரவுநேர்ந்தகாலத்தில் தருப்பையைப்பரப்பி அதனிடத்திருந்து புஷ்பக்கொம்பையொத்தசாயலையுடைய மங்கையரைக் கனவிலும் நினையாமல் இயமனைப்போலமதித்துச் சிவகுமாரன்பாதாரவிந்தங்களை இருதயகமலத்திருத்தித் தியானித்து உறக்கமின்றிக் கழித்து அடுத்தவுரோகணித் தினங்காலைப் புனலாடி நியதிகளைச் செய்து கொண்டு கருத்தனைப்பூசித்துத்தண்டைசதங்கையணிந்திருக்கும் திருவடிகளில் வணங்கிப்போற்றி அக்காலத்திற் சேர்ந்திருக்கின்ற தவ சிரேஷ்டர்களைக் கடவுளாகப் பாவித்துச் சமபந்தியிலிருத்திப் பாரணைசெய்து அப்பகலுறங்கினால் ஒருகாரணமு மில்லாமல் வேதபாராயணராகிய பிராமணோத்தமர் நூறு பேரைக் கொன்றமகாபாதகம் நேருமாதலால் மிகுத்தபயத்துடன் சகலகலைகளினும் வல்லவனாகிய நாரதமுனியானவர் நிமையைக் கொட்டாமல் சாக்கிரதையாய் விழித்திருந்து புராணங்களை வாசித்துப் புண்ணியபதமாகிய கேள்விகளை வினவியும் இவ்விதமாகச்சூரியன் மேற்பாரிசத்தில் மறைகின்றபரியந்தம் காலத்தைக் கழித்துச் சந்தியா னுஷ்டானங்களை முடித்துப் பாலசுப்பிரமணிய தேவருக்கு மற்ற பூசைகளையும் நிரப்பினர், இவ்வாறுநாரதர் நடாத்திய பூசாவிதிகளின் கிரமங்களைச் சண்முகப் பெருமாளே யறிவரல்லது ஒருவரால் புகழ்ந்து முடிவதன்று மேற்குறித்த படிக்கு யாதொருகுறைபாடு மில்லாமல் பன்னிரண்டுவருடவரையில் பத்தி வயிராக்கியத்துடன் செய்து வருமுன்னிலையில் சரவணபவன் காட்சிதந்து பரிபூரண கடாட்சத்தைப் பாலித்தவாறே சத்தமுனிவர்களினும்முந்திப்பேசிக்கொண்டாடத் தக்க மேலானபதத்தைப்பெற்று இதுபரியந்தம் சகலராலும் பூசிக்க வாழுகின்றனன், இவை யன்றியும் அந்தமகத்துவமுள்ள விரதத்தைச் சதுர்வேதபண்டிதனாகவிருக்கின்ற பிராமணனொருவன் ஆகமவிதிப்படிக்குப் பூசனைவழிபாடுகளிற் சற்றுந் தாழ்வுநேராமல் வயிராக்கியங்கொண்டு பலநாட்கள்முடித்துவருகின்ற காலையில் பாலசுப்பிரமணியர் கிருபாகடாட்சவீட்சண்ணியத்தினால் அப்பிறவியையொழித்துச் சூரியன் மரபில் மனுச்சக்கிரவர்த்தியாய் அவதரித்துக் கடல்சூழ்ந்த பூமண்டலமுழுதும்ஒருகுடை நிழல்லாளப்பெற்றுச் சகல சவுக்கியங்களையும் அனுபவித்துத் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ்செய்து அரசருக்குரிய நீதிகளையும் மற்ற கிரமங்களையும் ஏற்பாடுபண்ணித் தன்பெயரால்மனுவிக்கியானசாத்திரமெனப் புகழ்ந்து சகல மதத்தினரும் அபேதமாயனுசரித்து நடந்துகொள்ள நாட்டி அளவற்றகாலம்செங்கோன்முறையை நடாத்தியிருந்து கடையிற் கயிலையங்கிரியைக் காணியாகப்பெற்றுச் சுகாதீதச்செல்வங்களை யனுபவித்து வருகின்றனன், மற்றொருபிராமணோத்தமன் அந்தச் சிறந்த நோன்பை சாத்திரோத்தமாகப் பலகாலஞ்செய்து சிவகுமாரன்திருவருளின்படிக்குத் தன்மனதிற் சிந்தித்தவாறே திரிசங்குமகாராஜனாகத் தோற்றிச் சகலகலைவல்லவனாய்ப் பகைவருக்கு வயிரியாக விருந்துபுலியும் பசுவும்ஒருதடாகத்தில் நீரருந்தும்படிக்குச் செங்கோன்மை முறைப்படிக்கு அரசாட்சியைச்செலுத்திசொல்லுதற்கரியபோகபோக்கியங்களை யனுபவித்துச் சத்திய வாசக அரிச்சந்திரனெனஎக்காலத்தினுங் கொண்டாடவல்ல கீர்த்திபரனாய்ஒப்பற்ற பராக்கிரமசாலியாய்ஜீவகாருண்ணியத்தைமுக்கியமாக வகித்துவரும் மேம்பாட்டையுடைய பிள்ளையைப் பெற்றுப்பூமண்டலத்துக்குச்சக்கிரவர்த்தியாக மகுடாபிஷேகத்தைச் செய்துவிட்டு மோட்சவீட்டைப்பெற்றுச் சவுக்கியமாக விருக்கின்றனன், இதுவுமல்லாமல் மற்றொரு மன்னனும் வேடனும் இவ்விரதத்தைமுறையே பலகாலம் செய்துவந்த சிறப்பினால் சரவணபவன் அனுக்கிரகப்படிக்கு அவ்வுடல்களையொழித்துபுசபலபராக்கிரமசாலிகளாகிய அந்திமான் சந்திமானென்னு மிராஜகுமாரர்களாக ஜனித்துப் பிரமுகராய்க் கடல்சூழ்ந்த பூமண்டலமுற்றினும்ஆக்கினைசக்கிரத்தைச் செலுத்தித் துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்து தருமசீலரெனப்பலராலும் புகழவாழ்ந்திருந்தனர், அவர்களுக்குமோட்ச சாம்பிராச்சியங் கிடைத்த தென்பதைச் சொல்லவும்வேண்டுமோ மன்னர் பெருமானே முற்குறித்தபடிக்குக் கார்த்திகைத்திருநட்சத்திரத்தில் இந்தமகிமையுள்ள நோன்பை பயபத்தி வயிராக்கியங்களுடன்கிரமமாய்நடாத்தி யிம்மைமறுமைச்செல்வவளங்களையும் திரிலோகங்களினுமிராநின்றபொருள்களை மனோபீஷ்டப்படிக்குப்பெற்றுச்சவுக்கியப்பட்டபுண்ணியசீலரைக்கணக்கிட்டுப்பிரமனாலும்சொல்லிமுடிவதோ

இஃதன்றியும் ஒப்பற்ற மற்றொரு விரதமிருக்கின்றதுஅதனையும் வரன்முறைப்படிக்குக்கேட்பையாக பூருவத்தில் முப்பத்துமுக்கோடிதேவர்களும் நாற்பத்தெண்ணாயிர மிருஷிகளும் மற்றவிண்ணவரும் பகைவராலும் இன்னமுமிருக்கின்ற விடையூறுகளினாலும் தங்களுக்குச்சம்பவித்திருக்கின்ற துக்கவருத்தங்களைநிவாரணஞ்செய்துகொண்டு சலனமற்றிருக்கும்படியாக நினைவுகொண்டவர்களாய்ச் சகலரும்சேர்ந்து மனோவதிப்பட்டணத்துக்குப்போய்த் தவசிரேஷ்டர் கூடியிருக்கும் சபையில் நவரத்தினமயமாகிய சிங்காதனத்தில் வீற்றிருந்து வார்த்தையாடிக்கொண்டிருந்த பிரமதேவரைத் தரிசித்துத் திருவடிகளில் வணங்கிக்கரங்களைக் கூப்பிநின்று பலவிதங்களிற் போற்றியபின்பு தங்கள் மனக்குறைகளைமுறையிட்டவர்களாய்க் கர்த்தனேயிதற்கொருநிவாரணத்தைப்போதித்தாளவேண்டுமென்றிரந்த காலையில் தாமரைமலர்வாசியாகிய பிரமன் அவர்களிடத்திற் பரிவாய்ப்பயப்படாதீர்களெனக் கையமர்த்தி ஆதரித்துச் சற்றுநேரம் யோசித்து ஓ! தேவர்களே உங்கள் சஞ்சலங்களைப்போக்கிச் சவுக்கியப்படச் செய்யவல்ல கந்தசஷ்டி விரதமொன்றுண்டுஅதனைநீங்களனைவரும் பத்திபூருவகமாகத் தொடங்கி முடிப்பிராகில் நினைந்த சித்திகளனைத்தையும் பெற்றுவாழ்வீர்களெனப்பேசி அதற்குரிய விதிகளையும் தெருட்டிச்செலவுகொடுக்கப் பெற்றவர்களாய் வெளிவந்து ஒரு பவுத்திரமாகிய

தலத்தைச்சேர்ந்து பூசாவிதிகளுக்குவேண்டும் வஸ்துக்க
ளை ஏராளமாகச் சேகரித்துக் கொண்டவுடன் அற்பசியா
த சுக்கிலபட்சத்திற் பிரதமைதொடங்கிச் சஷ்டிவரையில்
கணிதப்பட்ட அறுதினங்களினும் கொடிய பாதகனாகிய
தாருகாசுரனையும் மாயையிற் சிறந்தகிரவுஞ்ச பருவதத்
தையும் ஒருமுனையில் வெற்றிவேலாற் பிளந்துவாட்டிய
பாலசுப்பிரமணியக் கடவுளை ஆராதிக்க யத்தனப்பட்டவ
ர்களாய் முதற்றினந்தொட்டுப் பிராதகாலத்தெழுந்துகங்
காஸ்நானஞ்செய்துபவுத்திரமாகியபட்டாடைகளையுடுத்து
மேற்போர்வைசாத்திச் சந்தியானுஷ்டானஜபதபங்கள்மு
தலிய நித்தியகருமங்களை முடித்துக்கொண்டபின்புபூரண
கலசத்தைச் சுத்திசெய்து கங்காசலத்தை நிரப்பி கந்தஅ
ட்சதைகளைச் சேர்த்து மாவிலைக்கொத்தை அதனிடத்தி
ற்பொருத்தித் தருப்பையை வரன்முறைப்படிக்குமுடிந்
து சாத்தி வேதங்களை யோதித் தருப்பாசனத்தில் வைத்
து மந்திரபூருவகமாகக் குமாரதேவனை அதனிடத்தாவா
கனஞ்செய்து ஆகமவிதிப்படிக்குத் திருமஞ்சன தூபதீப
முதலிய சோடசவுபசாரங்களினாற் பூசனை வழிபாடுகளை
ப் பகற்போதிற்சோர்வும் இரவில்நித்திரையையும்போக்கி
அறுகாலங் களினும் குறைவற நிரப்பிக் கற்கண்டு சேர்
த்துத் தேன் தினைமாவினாற் சமைத்த வுருண்டை பாற்
சோறு அதிரசம் சுண்டல்முதலிய பலகாரவகைகளையும்
மா-பலா-வாழை யாதிய கனிவிதங்களையும்கருப்பஞ்சாறு
மற்றுமிராநின்ற சிறந்த வஸ்துக்களைக் காலங்கள் தோறு
ம் நிவேதித்துக் கற்பூரதாம்பூலம் சந்தனத்தேய்வை புஷ்
பாரங்கள்மிகுதியாகச் சமர்ப்பித்து இவ்விதங்களிற்றிருப்
திசெய்தபின்பு தேவதேவோத்தமனாகிய சரவணபவன்தி
ருச்சரித்திரங்களைக் கேள்விப்பட்டுமனமகிழ்ந்து ஒருகை
நீர்த்தமருந்தி உபவாசமாகவிருந்துஇவ்வாறுசஷ்டித்தின
ங்களைக்கழித்து ஏழாநாள் காலையிலெழுந்து பரிசுத்தரா
ய் முருகப்பெருமானுக்கு மனமகிழும்படிக்குப்பூசைக்கி
ரமங்களிற் சற்றும் பிசகில்லாமற் செய்து முற்றியவுடன்
நேர்ந்த அதிதிகளைப்பூசித்து அவர்களுடன் கலந்து பார
ணையுண்டும் இவ்விதங்களாக வருஷந்தோறும்நடாத்திவ
ருகின்ற காலத்திற் கந்த சுவாமியாருக்கு மிகவும்உவப்பா
ய்க் கடாட்சித்தபடிக்கு அவுணர் வலிதிற்பற்றிக்கொண்ட
தங்கள் பதவிகளையும் மற்றசிறப்புகளனைத்தையும் பெற்
று மனவெழுச்சியுடன் இதுபரியந்தம் அனுபவித்துவரு
கின்றனர் இதுவுமல்லாமல்நோன்புகளில் விசேஷமாகவி
ருக்கின்ற இந்தவிரதத்தை மனப்பூருவகமாகவிதிப்படிக்
குநிரப்பிக்கர்த்தன் கிருபாநோக்கத்தைப்பெற்று இம்மை
மறுமைச் செல்வவளங்களை யனுபவித்துக்கடையில்மோ
ட்சசாம்பிராச்சியத்தைப் பெற்றவர்களை யெண்ணிமுடிவ
தன்று இவ்விரதத்தைச் செய்யநினைந்த புண்ணியவான்க
ளும் மனோபீஷ்டங்களைக் குறை வின்றி யனுபவித்தற்
கைய மில்லை யென்று கந்த விரத மான்மியங்களைச் சாங்
கோ பாங்கமாக வசிஷ்டர் போதித்த சரித்திரங்களை
மனமொருமித்துக் கேட்ட முசுகுந்தச் சக்கிரவர்த்தி
யானவர் தேகமும் மனமும்பூரித்து விழிகளில் ஆ
னந்தவாரி பெருக்கெடுத் தோட இதனை விண்ணப்பஞ்
செய்வதாயினர், எமதுகுலக்குரவனே தேவரீர் அடியே
னிடத்திற் பரிபூரணகடாட்சத்தினால் நன்னெறிகளைத்தர
வல்ல சிறந்தவிரதங்களையனுக்கிரகித்தீர் இவற்றினைக்கே
ட்டுக் கிருதார்த்தனானேன் சுவாமிகள் நியமப் படிக்கு
மேற்குறித்தநோன்புகளைப் பக்குவமாகச் செய்யக்கடவே
னென்று ஆசிரியனை வணங்கிப்போற்றி பலஆசிகளும்
விடையும்பெற்று ரதாரூடனாய் மந்திரிபிரதானிகள்சதுர
ங்க சேனைகள்சூழ்ந்துவர வனத்தைக்கடந்து ஒப்புவமை
யற்ற தன்பட்டணத்தைச்சேர்ந்து செங்கோன்மைமுறை
யேமன்னுயிரைப்பாதுகாத்து விரதகாலம்நேர்ந்தபோது
பாலசுப்பிரமணியர்நோன்புகளைத்தொடங்கிஆகமவிதிப்ப
டிக்குத் தகுந்தபுரோகிதனை யேற்படுத்திக் கொண்டுஅறு
தினங்களினும் பத்திபரவசத்தனாய்ப் பூசாவிதிகளிற் கு
றைவில்லாமல்முடித்து வேதப்பிராமணர் ஆதுலர்முத
லானவர்களுக்குத் திரவியம் வஸ்திராபரணங்கள்கறவைப்
பசுக்கள் விளைபுலங்கள் கன்னிகாதானமுதலியசோடசம
காதானங்களையும் வெறுக்கக்கொடுத்துச் சுற்றத்தினர்வி
ருந்தாளிகளுடனுண்டுமனமகிழ்ந்துவருபவன் தன்குடை
நிழலிற்பட்ட தேசாதேசங்களிலிருப்பவர்களனைவரும் இ
ந்தவிரதத்தை அன்புடன்செய்து வருவதாகக்கட்டளையி
ட்டு விருத்திசெய்வித்து வருகின்றநாள்களிற்றமக்குவிரு
த்துவமாகநடந்து கொள்பவனைத் தெரிந்தமாத்திரத்திற்
சதுரங்க சேனைகளுடன் போனபோனவிடங்களெங்கும்
அவர்களையடக்கி வெற்றிக்கொடியைநாட்டிதன்னாணை யா
க்கினைகளைச் சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலமுற்றினும்ந
டாத்தி அரசுசெய்துவருகின்றகாலத்தில் சூரனென்னும்
அவுணராஜன்கணக்கிறந்த ரதகஜதுரகபதாதிகளைக்கூட்
டிக்கொண்டுபோய்ப் பொன்னுலகத்தைவளைந்து முற்று
கைபோட்டு அனர்த்தங்களைச்செய்வதை இந்திரன்தெரி
ந்துஅதிகவுக்கிரத்துடன்வடவானலத்தைப்போலச்சீறியு
த்தசன்னத்தனாய்வச்சிராயுதம் இந்திரதனுசுதேவப்படை
கள்முதலிய ஆயுதங்களைப்பரித்து அயிராவதத்தின்பேரி
ல் ஆரோணித்து தேவசேனைகளைச் சேர்த்துக்கொண்டு
போயெதிர்த்துச் சிலபோது கொடியயுத்தங்களைச்செய்து
வருகையில் அவுணவீரர் அதிக்கிரமித்துக்கொடியபாண
ங்களினாலும் தண்டாயுதம்பிண்டிபாலம், கப்பணம், சக்
கரம், எறிவேல், சூலம், கழுமுள்முதலிய ஆயுதங்களைக்
கொண்டும் அதாஅதப்படுத்துமுன்னிலையில் விண்ணவ
ர்தாபரித்துநின்று போராடக்கூடாமையால் பலபங்கப்ப
ட்டுத் திசைகெட்டோடி யொளித்தனர், அத்தருணத்தில்
தேவராஜன்மானமுங்கோபமும் மனதைவாட்டச் சர்ப்ப
த்தைப்போலச்சீறித் தனுசைவளைத்து அதிகதீட்சணிய
முள்ளபாணங்கள் தேவாஸ்திரங்களைக்கொண்டு சாடியும்
வச்சிராயுதத்தினால் சின்னபின்னப்படவாட்டியும் காலா
ந்தகனைப்போலத்திரிகின்றகாலையில் வெள்ளையானையும்அ
திகதீரத்துடன்பருத்ததுதிக்கையினாலும் கால்களினாலு
ம்கூரியகோடுகளினாலும்மாய்க்கின்றமுன்னிலையில் பகை
வன்சேனாசமுத்திரம் அல்லோலகல்லோலப்பட்டுப் பொ
ன்மயமாகிய தேர்கள்சிதைந்தும் நீலகிரிகளையொப்பப்பா
ரித்ததேகங்களையுடையமதயானைகளுருண்டும் தத்தித்தா
வும் வேகமுள்ள புரவிப்பந்திகள்பறந்தும் வீராவேசங்க
ளுடன் சனியனைப்போலப்போராடியிருந்த அவுணப்பெ
ருக்குவறண்டும் இப்பாடுபடுமுன்னிலையில் வலாசுரன்
மிகுந்தகோபங்கொண்டு மண்டியெரிந்து தேனைத்துரத்
திவந்து திரிலோகச்சக்கிரேஸ்வரனைவளைந்து தனுசைவ
ளைத்துத் திசைகளதிரக் குணத்தொனிகாட்டிக் கொடிய
தீட்சணியமுள்ள பாணவிதங்களைச் சோனைமழையைப்
போலப்பொழிந்துதிகைக்கும்படிக்குப் பொருகின்றதால்

அயிராவதம் தேகமுற்றும்துளையுண்டு உதிரம்பெருக்கெடுத்தோட மதிமயங்கியேங்கவும் அதன்மீதிருந்த இந்திரன் அதிககாயப்பட்டுப் படைகளனைத்தையுமிழந்து தனியனாய்நிற்பவன் இனியென்னசெய்வோம் நம்முடன் வந்தவர்களொருவரும் நில்லாமல் மறைந்தனர்எனக்கும்கைகால்களோய்ந்து களைமேலிடுகின்றதென்று பலபலவிதமாக வெண்ணி வேறுகதிகாணுதவனாய்த் திகைப்பவனுக்குத் தெய்வகடாட்சத்தினு லொருநினைவுதோன்றிச் சற்றுத்தைரியங்கொண்டு பக்கத்தில்நிற்கின்ற தூதனொருவனைப் பார்த்து நீவாயுவேகத்தினுங் கடுகியோடிப் பூமண்டலத்தைப் பரிபாலனஞ்செய்துவரும் முசுகுந்த சக்கிரவர்த்தியைக்கண்டு நான்பகைவன்கையிலகப்பட்டுக்கொண்டு வாடுகின்றக்ஷேமங்களைத்தெரிவித்து இத்தருணத்திற் றயைசெய்து சேனைகளுடன் இவ்விடம்வந்து உதவிசெய்யவேண்டுமென்றும் சற்றுதாழ்ப்பீராகில் தெய்வலோகமும்நானும் சத்துருக்கள்வசப்பட்டு வருந்தவரும் இதனைச்செய்யாமற்செய்த வுதவியாகயோசித்துத் துரிதமாய்வரும்படிக் குடன்படுத்திச் சீக்கிரமாய் அழைத்துவரக்கட்டளையிட்டவுடன்வணங்கி, காற்றினும்விரைந்துபறந்து மண்ணுலகத்தைச்சேர்ந்து சக்கிரவர்த்தியைத் தரிசித்துப்பணிந்துபோற்றி விண்ணுட்டிற்சம்பவித்த காரணங்களைச் சவிஸ்தாரமாகவிண்ணப்பஞ்செய்தவனாய்ஓசக்கிரவர்த்தீ! தேவராஜன் உமதுவரவுக் கெதிர்பார்த்திருக்கின்றனன், காலஹரணஞ்செய்யாமல்இந்தநிமிஷத்திற் பிரயாணப்படவேண்டுமெனப்பேசிய தூதன்வார்த்தைகளைக் கேட்டமாத்தில் நல்லகாரியம் இதோவந்துவிட்டேன் இச்சேதியைமுந்திப்போய் உன்னிறைவனுக் கறிக்கையிடக்கடவாயென்று அனுப்பிவிட்டுப் பட்டத்தானையின்பேரில் பிரயாணபேரிகையையேற்றிப் பறைசாற்றுவித்தவோசை செவிகளிற்பட்டவுடன் நால்வகைச் சயின்னியங்களும் சர்வாயுதபாணிகளாய் ஆலகாலவிஷப் பெருக்கைப்போல வீராவேசங்களுடன் தங்கள்தலைவரைக்கலந்துவந்துகூடியவுடன்முசுகுந்தன்சொர்னமயமாகிய விரதத்தில் ஆரோகணித்துரணபேரி, ஜயபேரி, வெற்றிச்சங்கம், ஆகுளி, துத்தாரி, எக்காளை, வீரகண்டைமுதலிய பொற்பறைகள் கணகணென்று முழங்கிவரத்தக்கதாக நடுநாயகமாய்விளங்கி அதிவேகங்கொண்டு விண்ணுட்டை நோக்கிப்போய் ஜயசாலியாய்ச் சூரியசந்திர ரிந்தப்பூமண்டலமுள்ளபரியந்தம் கீர்த்திப்பிரதாபத்தை நாட்டியிருக்கின்ற முசுகுந்தச்சக்கிரவர்த்தியானவர் கவலைப்பட்டமனத்தனாய்ச் சத்துருகையிலகப்பட்டுக்கொண்டிருக்கின்ற இந்திரனைக்கண்டுசேவித்து அவன்குறைபாடுகளைவினவிப் பயப்படவேண்டாமென்று பற்பலதயிரியங்களைச்சொல்லித்தேற்றினவனாய் அத்தருணத்தில்நேர்ந்த தேவசேனைக்கதிபனாய் தன்னுடன்வந்த ரதகஜதுரகபதாதிகளையுங்கூட்டிக்கொண்டுமான் கூட்டங்கள்மேல் சிங்கராஜன்தாவுமாறுபோலக் கொடிய அவுணப்படைகளின்மீது கவிந்து சேனைகள்வீராவேசங்களுடன் அஸ்திரசஸ்திரங்களை அமோகமாகப் பொழிந்து பலதிசையினுஞ்சூழ்ந்து போராடவும் தாமும்மந்தரத்தையொப்பப் பாரித்திருக்கும் தனுசைவளைத்து அண்டமுமதிரும்படிக்குக் குணத்தொனிசெய்து சங்கோபசங்கமாகிய கொடியபாணவருஷங்களைப் பெருக்கி அதாஹதப்படுத்துமுன்னிலையில் ஜயசாலிகளாய்ப் போராடியிருந்த அவுணப்பாதகர்முனையழிந்து சிரங்காற்றும்மகுடம் பரந்தும் கழுத்திற்றும் வாகுவலையங்கள் கவிந்திருக்கும் புயங்கள்சரிந்தும் வலியகவசங்கள்மூடிய விசாலமாகியமார்புகளபிளந்தும் வயிறுபீறுண்டு சர்ப்பங்களைப்போலக்குடல்களிறையவும் வீரகண்டாமணிகலிக்கும் கால்களொடிந்தும் தேகமுற்றினும் சல்லடைக்கண்களாகத் துளையுண்டும் சின்னபின்னப்படவெட்டுண்டும் களைத்தும் இளைத்தும் இவ்விதங்களாக அவுணப்படைகள் மாளவும் பருவதாகிருதியாகக் கொடிகுடைகள்கொடுங்கை முதலிய அலங்காரக்களைக்கொண்டிருந்த தேரணிகள் பொடிப்பொடியாயுதிர்ந்தும் மதயானைகள், துதிக்கை, மத்தகம், கோடுகள், பருத்தபாதங்கள் வெட்டுண்டு களமெங்கணும் குவியவும் அலைகளைப்போலத்தாவும் கதியைவாய்ந்த புரவிப்பந்திகள் பலபங்கப்பட்டுமாளவும் இவ்விதமாக நால்வகைச்சேனைகளும் அதப்பட்டகாலையில் அலைகளைப்பெருக்கியெழுந்த உதிரப்பிரவாகமானது பொன்னுலக மெங்கும் பரந்து செவ்வானத்தைப்போலக்காட்டச்செய்து மேலிட்டுயிர்த்தமழையைப்போல பூமண்டலமுற்றினும் பொழியத்தலைப்பட்டது.

அக்காலத்தில் முசுகுந்தச்சக்கிரவர்த்திசெய்த போராட்டத்தை ஒருவாயினுற்சொல்லிமுடிவதோ இவ்விதமாகச்சிதைத்து அவுணக்கடலைவறளச் செய்தகாலத்தில் தேவேந்திரனுக்கு மனவுற்சாகத்துடன் வீராவேசம்பிறந்து சக்கிரவர்த்தி யுதவியைக் கொண்டு வெள்ளியங்கிரியைப் போலக்காட்டும்பாரித்ததேகத்தையுடைய ஐராவதத்தைத்தூண்டி வலாசுரனைச் சட்டைபண்ணுமலெதிர்த்துச்சிலபகல் அகோரமாகியசண்டைகளைச்செய்து பகைவனால் மிகவும் வருந்தியபோதினும் அதிக்கிரமித்துத் தன்கரத்திற் பிடிபட்டிருக்கும் ஒப்பற்றவச்சிராயுதத்தைஓங்கிப்பகைவன்மார்புக்குக்குறிகொண்டு வலிதிற்கடாவினன், அப்படையானது ஆலகாலத்தை யொப்பச்சீறி பலமகிமைகளைக்காட்டி அதிவேகமாய்ப்போய்ச் சத்துருக்கள்வயிரமலைக்கொப்பாகிய மார்பிற்பாய்ந்து தடாரித்துருவி உதிரத்தைப்பெருக்கி உயிரையுமுண்டு வெளிப்பட்டு வானகங்கையில்முழுகித் தேவராஜன்கரத்தில்நின்றது, ஓ தவத்தரோ வலாசுரனை மிகவும்வருந்திக்கொன்றகாரணத்தினால் அன்றுமுதல்இந்திரனுக்கு வலாரியென்னும்சிறப்புப்பெயர் பலராலும்கொண்டாடும்படிக்கு விளங்குகின்றதுஇத்தகைய ஜயப்பிரதாபத்தைப்பெற்று மனமகிழ்ச்சியுடனிருக்கின்றதேவேந்திரன் கடிதில்வந்து முசுகுந்தச்சக்கிரவர்த்தியை விசாலமாகியமார்பிற் சேர்த்தணைத்துச் சிலமுகஸ்துதிகளைப்பேசிக் கரத்தைப்பற்றி அழைத்துக்கொண்டு இந்திரபுரிபட்டணவீதிகளைக்கடந்துசிரோரத்தினமயமாய் ஜ்வலித்துக்கொண்டிருக்கும் தன்னரண்மனையைச் சேர்ந்து பொன்மயமாகப் பரந்திருக்கும் சபாமண்டபத்தில் முழுமணிகளினுல் சோடித்திருக்கின்ற சிங்காதனத்தில் வீற்றிருந்துசக்கிரவர்த்தியைத்தன்னருகில்வைத்துக்கொண்டவனாய் மனவெழுச்சியுட னிதனைச் சொல்லுவதாயினன்.

ஓவேந்தர்பெருமானே, பலநாளாக எனக்கு ஜன்மவயிரிகளாய் இடைவிடாதலைத்திருந்த அவுணர்பூண்டைவேரறக்களைந்து மனச்சஞ்சலங்களைமாற்றித் திரிலோகாதிபத்தியமாகிய இந்தஅரசாட்சியைப் புதிதாகத் தந்ததுமன்றிச் சிறந்தபுகழும்வெற்றியும்பலராலும்மதிக்கவல்ல மேம்பாட்டையும்பெறச்செய்த என்பிராணபதமான தோழ

னே, உன்னையன்றி நெருங்கியசுற்றமும் உதவியும்சம்பத்துகளும் வேறொன்றுண்டோவென்று பற்பலவுபசாரவார்த்தைகளைப் பேசியமுன்னிலையில் சபையில் நெருங்கியிருந்ததேவர்கள் கற்பகமலர்களையிறைத்து அகண்டமண்டலாதீஸ்வரனே வாழிவாழியென்றேத்தெடுக்கவும் முனிவர்கள் அட்சதைகளையிறைத்து மங்களாசீர்வாதங்களைச் செய்யவும் அரம்பையூர்வசி திலோத்தமையாதியதேவகணிகையர் பரதநாட்டியங்களைச்செய்யவும் இத்தகையவேடிக்கைகளைச் சிலநேரம்பார்த்திருந்து சிங்காதனத்தைவிட்டிறங்கித் தோழனைக்கைலாகுகொண்டுமேருவோவென்றையப்படத்தக்க பொன்மாளிகையினிடத்திற் சேர்ந்து தேவகங்கையைத்தருவித்துத்தானஞ்செய்வித்துப் புதிய பீதாம்பரத்தை யுடுக்கச்செய்து சிரோரத்தினங்க ளிட்டிழைத்திருக்கும் கிரீடம் வாகுவலயம் மகரகுண்டலம், முத்துமாலை, மோகனமாலை,மதாணிப்பதக்கம்,வீரகண்டை முதலிய பூஷணங்களையணியச்செய்து திவ்வியசுகந்தங்களைவீசும் கலவைச்சாந்தும் பஞ்சதாருக்களின்புதியமலர் மாலைகளைத் தன்கரத்தினாற்சாத்திமுடிந்தவுடன் பொற்பீடத்திலிருக்கச்செய்து துரிதமாய்த்தானும் நீரில் முழுகிப் பரிசுத்தனாய்ச் சக்கிரவர்த்தியைக் கூட்டிக்கொண்டு பூசையறைக்குப்போய் ஒருபுறத்திலிருக்கச்செய்தபின்பு ஆதியில்உபேந்திரர் ஆராதித்துவைத்திருந்து தனக்கனுக்கிரகித்த உமாபரமேஸ்வரரைத்தேவகங்கையினாற்றிருமஞ்சனமாட்டிப் பீதாம்பரத்தையுடுத்துச் சிரோரத்தினமயமாகிய ஆபரணாதிகளைப் பூட்டி ஸ்ரீகந்தக்கலவை புனுகு சவ்வாது கற்பகமலர்மாலைகளினால் அலங்கரித்துத்தூபதீபநைவேத்தியமுதலிய சோடசவுபசாரங்களைச்செய்துகரங்களைக்கூப்பி யெதிரில்நின்று வேதவாக்கியங்களினால்துதித்து வருகின்றகாலையில் திருக்கயிலாயத்தில் திருத்தேவியுடன் குமாரதேவர் நடுப்பிரதேசத்தில்விளங்க வீற்றிருக்குங்கோலமாய் முசுகுந்தச்சக்கிரவர்த்தியினது விழிகளுக்குக்காட்டத் தரிசித்தவுடன் பழையஅன்புபெருத்துத் தேகங்குதுகுலித்து விழிகளிற்போதநீர்பெருகமனமுருகி ஆனந்தபரவசனாய் யாதுந்தோற்றாமலிருந்து சற்றுநேரத்திற்றெளிந்தவனாய்ச் சந்தோஷப்பெருக்கிலாழ்ந்து கூத்தாடியும் பன்முறைபணிந்தும் ஐயன்பெருமைகளையெடுத்தேத்தியும் வயிரமுடி திருப்பாதங்களிற்படத் தீர்க்கதண்டஞ்சமர்ப்பித்தும் என்பு முள்ளமுங் குழைந்து குழைந்து துள்ளியும் பரமன்புகழ்த்திறங்களைப்பாடியும் சகஸ்திரத்திருநாமங்களை ஸ்மரித்தும் ஜயஜயபோற்றியெனக் கரங்களைக்கொட்டியும் சொல்லுதற்கரிய பேரானந்தவெள்ளத்திலழுந்தியும் சிந்திப்பதொன்று வார்த்தையாடுவதொன்றாய் மொழிகுழறியும் உடல்முற்றினும் உரோமங்கள் சிலிர்த்தும் முன்வெள்ளியங்கிரியி னிடத்திற் றிருநேத்திரதாரியினது திருக்கோலத்தைச்சலியாமற்கண்டுகண்டு மனத்தின்கண்களி மிகுதியைக்கொண்டிருந்தயான் மானிடப்பிறவியில் ஜனித்தகாரணத்தினால் மயங்கிமறந்தானேயென்றும் இடைவிடாமற் சிறந்த பொருளொன்றை முக்கியமாகப்போற்றிக்களிக்க விருந்தவன் சோபித்து நித்திரையிற் பட்டுறங்கியதைப்போலப் பூருவக்கியானந்தோற்றுமாறுமுசுமுகத்தைப்பெற்றிருந்த போதினும் சக்கிரவர்த்தியானவன் மயக்குற்று தேவாதிதேவனைப் பார்த்து இவ்விதங்களிற்றுதிப்பதாயினன்.

பரப்பிரமசொரூபராகவிளங்கும் கர்த்தனேபோற்றி திரிமூர்த்திகளே முதலிய சகலருக்கும் மூலகாரணக்கடவுளாகவிருக்கின்ற பரமேபோற்றி லோகநாயகியாகியபராசத்தியை வாமபாகத்திற் படைத்து அச்சந்நிதி மகிமையினாற் சராசரப்பிரபஞ்சங்களை விருத்தியடையச்செய்துவரும் தயாநிதியேபோற்றிச் சுயஞ்சோதிமயமாகக்காட்டுமிறைவனேபோற்றி காளகண்டமூர்த்தியேபோற்றி ஸ்ரீமகாவிஷ்ணுவினது கோலமாகிய விருஷபவாகனத்திலேறி நடாத்தும் முதற்காரணக்கடவுளேபோற்றி யானெனதென்னும் மதாங்காரச்செருக்கிற்பட்டுத் தம்மைமதியாமற்றொடங்கிய தக்கன்மகத்தைபங்கப்படுத்திவைத்த தேவாதிதேவனே போற்றி ஸ்ரீமகாவிஷ்ணுபிரமன்உருத்திரனாகிய மூலஜோதியேபோற்றி அடியருக்கெளிவரும் தீனசரண்ணியனேபோற்றி எம்மையொத்தவழித்தொண்டர்களுக்கு நாதனாகவிருந்து தடுத்தாண்டிரட்சிக்கும் பத்தவற்சலனே போற்றி களங்கரகிதமாகிய தங்கமேபோற்றி மணிகளிற் சிறந்த சிரோரத்தினமே போற்றி சிவபெருமானே போற்றி அடியேனை பொருபொருளாய் ஆளவிருக்கின்ற ஆண்டவனே போற்றி சோமசூரியாக்கினியைத் திரிநேத்திரங்களாகக் கொண்டிருக்கும் நாதனேபோற்றி காளிகராளி மாதங்கியென்னும் விஷப்பற்களைப்படைத்திருக்கின்ற நாகாபரணனேபோற்றிஜன்மசாபல்லிய மாக்கும் பெருமையையுடைய திருநீற்றைத் திருமேனிமுற்றினுமணிந்திருக்கின்ற ஆதிதேவனேபோற்றி கன்னமதம் கபோலமதம்பீஜமதமெனச் சொல்லாநின்ற மும்மதங்களைப் பெருக்கிஅண்டங்களதிர வீறிட்டுவந்த யானையைத்தள்ளியதனையுரித்துப்போர்த்துப்பிராணிகளைக் கலங்காமலாண்ட கிருபாநிதியேபோற்றி மகாபிரளயகாலத்திற் காலருத்திரமூர்த்தியாகத் தோன்றிச் சருவசங்காரஞ்செய்து சவுக்கியத்திலிருத்திய தயாநிதியேபோற்றி பரம்பொருளே போற்றி பிறப்பிறப் பிலியாய்ச் சலனமற்று எக்காலத்தும் விளங்கும்பெருமையினையுடையதாணுவேபோற்றி முதன்மையாகப் புகழாநின்றபொருள்களனைத்திற்கும் மூலமாகக்காட்டு மதீதப் பொருளேபோற்றி எறும்புமுதல் யானையீறுகச்சொல்லும் எண்பத்து நான்கு லட்சம் சீவபேதங்களினிடத்தும் அந்தரான்மாவாகப் பொருந்தி ஆட்டியூட்டி யுறக்கிவரும் காரணகாரணனே போற்றிவேதாகமமுதலிய சாத்திரங்களின் முடிவில்நின்று நிருததஞ்செய்யும் அண்ணலேபோற்றி அடியேனையொருபொருளாக மதித்தாண்டுபூலோகத்திற்சக்கிரவர்த்தியாக நிறுத்திச் சகலசெல்வவளங்களையும்அனுபவிக்கத்தந்து பலராலும் புகழத்தக்க மேம்பாட்டை கிடைக்கச் செய்த தயாநிதியே போற்றி தேவரீர் திருவடியைத் தரிசிக்கக்காட்டிப் பழையஉணர்ச்சியைத்தந்து பாதுகாத்த நித்தனே போற்றி யிவ்வுலகங்களில் வாசஞ்செய்யும் பிராணிகளில் எத்தகையராயினும் அவ்வவர்கள் வழிபடும் அந்தந்தத் தேவதைகளாக விளங்கி அவர்கள்மனோபீஷ்டங்களை கடாட்சித்தாளும் பரமேஸ்வரனே போற்றி மெய்ப்பக்தியினால் தேவரீரை ஆராதித்துத்தரிசிக்கப்பெற்ற புண்ணியவான்களுக்குத் தேவபோக போக்கியங்களை யனுபவிக்கச்செய்து கடையில் மோட்சசாம்பிராச்சியத்தையுந் தயைசெய்தாளும் அடிகளேபோற்றி சிருஷ்டிகர்த்தனாக விருக்கின்ற பிரமதேவர் திதித்தொழிலைநடாத்திவரும்மகாவிஷ்ணு ஸம்ஹாரத்தொழில் செய்யும் உருத்திரமூர்த்தி முதலிய

தேவர்கள் தத்தமக்குக் கடாட்சித் திருக்கின்ற பதங்களை நீடூழிகாலம் நிலைபெற்றுளத் தந்தாண்டருளும் தற்பரமூர்த்தியே என்று மனவுறுதியுடன் போற்றிவழிபடும்பொருட்டு வேதாகமங்களை யுண்டுபண்ணி அவற்றினைஅன்புடன்பதக்கிரமமாய்ப் பாராயணஞ்செய்துவரும்மேன்மை பெற்றவர்களுக்கு தேவப்பதங்களைத் தகுதியாக அனுக்கிரகஞ்செய்துவரும் சர்வக்கியனேபோற்றி தேவரினங்களனைவருஞ் சூழ்ந்து துதிக்கக்கல்லாலின்நீழலிற்குருமூர்த்தமாக வெழுந்தருளி வேதங் களைக் கனகண்டசனகாதிகள் நால்வருக்கும் ஞானயோக சாதனங்களைக்காட்டாமற் கடாட்சித்த சோதியேபோற்றி முப்பத்தாறு தத்துவங்களுக்கு மேலாகவிளங்கி நடிக்குஞ்சிற்பரமூர்த்தியே போற்றிபோற்றி அடியேன் பிழைகளைப் பொறுத்தாளவேண்டு மென்றுஇவ்வாறு ஒருமைப்பட்ட மனதுடன் முசுகுந்தச்சக்கிரவர்த்தி எத்தெடுக்குந் தோத்திரங்களை எமதுமஹாதேவன் திருச்செவிகளினேற்று மனமகிழ்ந்து பரிபூரணகடாட்சத்தைப் பாலித்தவராய் சக்கிரவர்த்தியின் மீது திருநோக்கத்தைச் செலுத்தித் தேவராஜனுக்குத்தோற்றுமலிதனை அனுக்கிரகஞ்செய்வதாயினர்.

ஓ, சக்கிரவர்த்தி உன் மெய்ப்பத்தி மான்மியங்களுக்கு மகிழ்ந்தனமாதலாற் சக்கரதாராகிய ஸ்ரீமகாவிஷ்ணுவின் திருவவதாரமாகிய உபேந்திரர் பலகாலம் அரிய தவவிரதங்களைச் செய்துவந்த முயற்சியினாற் பெற்றுப்பத்திவயிராக்கியங்களுடன் ஆகமவிதியிற் சற்றுந் தாழ்வில்லாமல் மனவெழுச்சியுடன் நம்மைவெகுகாலம் ஆராதித்திருந்தவர் ஒருபோது சிலகாரணத்தினால்தேவேந்திரனிடத்தில் ஒப்பித்துப் போயினர், இவனும் நமது மனதுக்குவப்பாகிய பூசனைவழிபாடுகளைச் செய்து பலநாட்களாக வைத்திருக்கின்றனன், உன்னிடத்தில்நமக்குஇரக்கமுண்டானதால் நீ நம்மைப் பூலோகத்துக்குக் கொண்டுபோய்ஸ்தாபித்துப் பூசிக்கக் கடவாயென்றனுக்கிரகஞ் செய்யக் கேட்டமுசுகுந்தனுக்கு மனம்பூரித்து அதிக சந்தோஷத்தைப்பெற்றவனாய் தேவரீருக்குக் திருவுளமிவ்வண்ணமாகில் அடியேன்சகல வினைகளையும் போக்கிக் கிருதார்த்தனாய்ப் பிழைத்தேன் பிழைத்தேனென்று கரங்களைக்கூப்பிக் கொண்டு பரமனைத் துதித்திருந்தனன், இதன்மத்தியி லிந்திரன் சாத்திரோக்தமாய்ப் பூசனைவழிபாடுகளைப் பூர்த்தியாகச்செய்தவனாய் முத்தீயையு மெழுப்பி ஓமவிதிகளையும் வரன்முறைப்படிக்கு முடித்துக் கர்த்தனைப் புகழ்ந்துகொண்டு அத்தலத்தைக்கடந்து மற்றொரு சொர்ணமயமாகிய சாலையைச்சேர்ந்து காமதேனுவைக்கொண்டு ஜயசாலியாகிய முசுகுந்தச் சக்கிரவர்த்திக்கு அறுசுவையுண்டி விதங்களைத் தேவாமுதத்துக்குமேலான திருப்திபெறச் சமபந்தியில் வைத்துக்கொண்டுசாப்பிடச்செய்து அவருடன்வந்திருக்கின்ற மந்திரி பிரதானிகள்சேனைத்தலைவர் நால்வகைச் சயின்னியங்களுக்கும் அவ்வவர்கள் மனக்கருத்தின்படிக்குக் கச்சாயவகைகள் முதலாகியதுடன் விருந்திட்டானவுடன் அவர்களுக்குத்தக்க வெகுமதிகளையுங் கொடுத்துச் சந்தனதாம்பூலவகைகளினாற்றிருப்திசெய்து சக்கிரவர்த்தியையும் மற்றொரு சபாமண்டபத்தினிடத்தழைத்துப்போய் பொற்பீடத்தி லிருத்தித் திருத்தித் திவ்விய பரிமளமிடித்த கலவைச் சாந்துகளைப்பூசிக் கற்பகமலர்மாலைகளைச் சாத்திக்கற்பூர தாம்பூலத்தையும் சிரோரத்தினமயமாகிய கிரீடம் வாகுவலயமுதலிய பணிகளையும் பீதாம்பரவகைகளை முதலிய விலையுயர்ந்த வஸ்துக்களைத் தன்கருத்தின்படித் தந்து தான் அருமையாகத் தேடிவைத்திருந்த தேவர்படைகளையும் மந்திரபூர்வகமாக தத்தஞ்செய்து இவ்விதமாகச் சகலவுபசாரங்களையும் முடித்த காலத்தில் தேவேந்திரனுக்குக் கிடைத்திருக்கின்ற சந்தோஷப்பெருக்கினால் சக்கிரவர்த்தியைத் தயையாகப்பார்த்து என்மனதுக்கினியதோழனே நமக்குச் சம்பவித்த அபாயகாலத்திற் செய்த வுதவிக்குக்கைம்மாறுண்டோஆகிலும் உமக்குஎன்னாலாகவேண்டியபிரயோசன மிருக்குமாகில் சங்கைப் படாமற் கேட்கக்கடவாய் இதோதரக்காத்திருக்கிறேனென்று இந்திரன்பேசிமுடித்தமாத்திரத்தில் நாம்நினைந்திருக்கின்றபடிக்குப் பெற்றுக்கொள்வதற்கு இது நல்லதருணமாகவிருக்கின்றதெனநினைந்துதேவராஜனைக்குறித்து முசுகுந்தச் சக்கிரவர்த்தி யிதனைக் கேட்டுக்கொள்வதாயினன்.

பிரமன்விஷ்ணு முதலியசகலராலுங்கண்டறியவொண்ணாத சுயஞ்சோதிப் படிவத்தனாய்ச் சோமசூரியாக்கினைகளைத் திரிநேத்திரங்களாகப் படைத்தவராய் ஜகமனைத்துக்கும் மூலகாரணத் தலைமைபெற்று மன்னுயிரைத் தந்தபராசத்தியை வாமபாகத்தில் வைத்துபலநாடகங்களைக்காட்டிச் சுகாதீதவெல்லையில் நடிக்கும் நிர்மலக்கடவுளாகவிருக்கின்ற நமதிறைவனை தேவர்கள் பூசித்துவரும் சிவபிரானைத் தயைசெய்து மெய்யன்புடன் கொடுப்பீராகில் மனவெழுச்சியுடன் பூலோகத்துக்குக் கொண்டுபோய் என்பட்டணத்திற் ருபித்துச் சகலசிறப்புகளுடன் பூசனை வழிபாடுகளைச் செய்து கிருதார்த்தனாய் இம்மைமறுமைச் செல்வங்களை ஒருங்கெய்தப்பெற்று வாழக்கடவேன் இப்பேற்றையன்றி வேறொன்றைவிரும்பே னென்றுவிண்ணப்பஞ் செய்தகாரணங்களை தேவேந்திரன்கேட்டவுடன்திடுக்கிட்டு மனம்வருந்தி ஒருவகையாகத் தேற்றிக்கொண்டு என்னன்புள்ள சிநேகிதனே யித்தேவன் வரலாற்றைச் சொல்லக்கேட்பையாக பிரமனை உந்திக்கமலத்திற்படைத்துஉலகங்களை பரிபாலனஞ்செய்து வரும்மகாவிஷ்ணுவானவர் சிலதினங்களுக்கு முன்னம்தமக்கு புத்திரசம்பத்தில்லாத காரணத்தினால் அண்டரண்ட புவனசராசரங்களுக்கும் அம்மையப்பனாக விருந்து நடிப்பிக்கும்சிவபிரான் பாதகமலங்களையே தஞ்சமாக நினைந்துமிகவும் வருந்திஅளவற்றகாலம் தவங்களைச்செய்து வருகின்றகாலையில்அவர்பத்திமை வழிபாட்டுக்கிரங்கி பரமேஸ்வரரானவர் கவுரியுடன் விருஷபவாகனத்தி லாரோகணித்துக் கணதிபதிகள் குடை,கொடி, வெண்சாமரை,அருகு, ஆலவட்டம்,திருச்சின்னம், புள்ளாங்குழல்முதலியபணிவிடைகளைச்செய்துவரத் தக்கதாகத் திருக்கயிலையைக்கடந்து, சகலாடம்பரங்களுடன் கண்ணனுக்குக்காட்சிதந்தகாலத்தில்பல்லாயிரபூமியையுண்டகேசவன் திடுக்கிட்டெழுந்து பயபத்திவிசுவாசங்களுடனெதிர் கொண்டு போற்றிநிலத்தில் விழுந்து தீர்க்கதண்டன் சமர்ப்பித்துக் கரங்களைக்கூப்பித் துதித்து நிற்கின்ற விஷ்ணுவினிடத்திற்பரிவாய்உமாபரமேஸ்வரர் கிருபாநோக்கத்தைப் பாலித்து நெடும்பகல்வருந்தி விரதங்களைச்செய்து மிகவும்வாடினை அவற்றினையங்கீகரித்தனம் ஆதலால் உனக்குவேண்டும் வரங்களைப்பெற்றுக் கொண்டு பதியைச்சேர்ந்து சவுக்கியமாயிருக்கக் கடவாயெனத் திருவுளம்பற்றியகாலையில் மகாவிஷ்ணு வந்தித்து சங்கரனே திரிமூர்த்திகளி லொருவனாக விருக்கின்ற

சிறப்பையும் அந்தமில்லாத ஆயுளையும் சலனமற்ற பிராணனையும் செல்வங்களுக் கரசியாக ஸ்ரீமகாலட்சுமியுடன் கலந்து சகலபோக போக்கியங்களையும்அனுபவித்துக்களித்துவாழுஞ் செல்வசம்பத்தையுந் தந்தாண்டீர்எமதிறைவனே யித்தகைய வளங்களைப் பெற்றிருந்தபோதினும் தன்மரபை விளக்குஞ் சுபுத்திரரில்லாத குறைபாட்டினால் மனம்வருந்திக் கிலேசத்திற் பட்டுவாடுகின்றனுதலாற்செல்வங்களுக்கு முதன்மையாகவிருக்கின்ற அப்பேற்றைக் கடாட்சித்து முற்றினும் மனவெழுச்சி பெற்றிருக்கத் தக்கவரத்தைத் தந்தாளவேண்டுமென்று கோவர்த்தன கிரியைக்குடையாகத்தாங்கிக் கோவலர் பெண்டுபிள்ளைகளுடன் பசுக்கூட்டங்களைத் தேவராஜன் கட்டளையின் படிக்கு மேகங்கள் வருஷிக்கும் கன்மாரியிற்பட்டு வருந்தாமற்பாதுகாத்த கண்ணபிரான் முறையிட்டுக் கொண்டமனுவைத் திருச்செவிகளினேற்று இரக்கமுண்டாய் உன்கோரிக்கையின் படிக்குத் தருவோமென்று ஆதரணைசொல்லி வனப்பில மிகுத்த சுந்தரவடிவும் தீர்க்காயசையும் பொருந்திய ஒருகுமாரனைப் பெற்றுக் களித்துவாழும்படிக்கு அனுக்கிரகஞ் செய்தனமெனச் சகலதேவர்களுக்கும்மூலகாரணனாக விருக்கின்ற சிவபிரான் திருவாய்மலர்ந்தவாக்கியங்களைக் கேட்டமாத்திரத்தில் லட்சுமி காந்தருக்குத் திருமேனிபூரித்து மயிர்சிலிர்த்து விழிகளில் ஆனந்தவாரிபெருக்கெடுத் தோடத்தக்கதாக ஆனந்தபரவசராய்மதிமயங்கிப் பிராரத்வவினையின் முயற்சியினால்சிவாராதனைமாத்திரம் பலவிதங்களிற் றுதித்துவணங்கிவாழ்த்துகின்றகாலையில் நேர்ந்த அபாயத்தை மஹாருஷிகளே கேட்பீராக.

ஸ்ரீமகாவிஷ்ணுவின துவிவேகத்தையென்னசொல்லுவேன்வாமபாகத்தில்மரகதநிறம்பெற்று பிரியாமற்பொருந்தி விளங்குகின்ற ஜகன்மாதாவாகிய பராபரையை நினையாமலும்திருவடிகளிற் சேவியாமலும் தோத்திரங்களைச் சொல்லாமலும் பத்திமைவழிபாடுகளின் திறங்களை யெவ்வளவுங் காட்டாமல் சுத்தமாய் மறந்து விட்டனன். முறையினால் தனக்கிளையவளென் றெண்ணிப் பராமுகமாயிருந்தனனோ மூலமும் நடுவும் ஈறுமில்லாதபரமனுக்கு நம்மைப்போலவே யிவளுமொருசத்தியாகவிருப்பவளென்று அசட்டைசெய்தனனோ மலையிறைவன் புத்திரியென்று மதிப்பற்றனனோமாயன்கருத்தின்னதெனத்தோற்றவில்லை முற்பவத்திற் செய்த வினைக்கீடாய் உமையவளிடத்திற்சற்றும் அன்பைச்செலுத்தாமல்உன்மத்தனாய்ப் பரமனைவழிபட்டு நின்றனன், பராசத்தியையன்றிப்பரமனைத் தொழுது அவனொருவனுக் கடிமைப்படும் இத்தகைய சிறந்தபேற்றினை ஐம்புலன்களைவென்று அவாவையடக்கிப் பரிசுத்தமனதைக கிடைத்து உடலழிய வரினும்திரசித்தனாய் மூலாதாரத்தில் விழிகளைச் செலுத்திச் சிவத்தைக் கண்டுகளித்து எமதிறைவனையன்றியிதரதெய்வங்களைக் கருத்தினும் நினையாமல் அவனுக்கே வழிபாடுகளைச் செய்துவரும் குணசம்பன்னனாய்அக்காரணத்தைக் குறித்துப் பரமனருளிய மூன்றும்பாதத்தைப்பெற்றிருக்கின்ற பிருங்கிமஹாரிஷிக்கல்லது அண்டரண்டபுவனசராசரங்களையு மீன்றுங் கன்னிகையாக விளங்கும் எம்பெருமாட்டியை நீக்கிக்கர்த்தனைக்கண்டுகளிக்குந்திறம்மற்றொருவருக்குக் கிடைக்க வல்லதோ அக்காலத்தில் இந்தவிகழ்ச்சியைத் தெரிந்த லோகநாயகிக்குச்சற்றுமனங்கறுத்துச் சக்கிரதாரனாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவை உருத்துப்பார்த்து இக்காலத்தில் நம்மை அவமதித்தகாரணத்தினால் எமதிறைவனிடத்தன்புள்ளவனாயினும் அரியதவவிரதங்களைச் செய்த முயற்சியினால் நீ பெறவிருக்கின்ற புத்திரன் என் பிராணநாயகன் அனல் விழித்தீயிற்பட்டுச் சாம்பலாய்ப் பறந்துபோகக் கடவனென்று நினைத்தற்கரியகடின சாபத்தையிட்டு ஆதிதேவனைப்பார்த்து இதனை விண்ணப்பஞ் செய்வதாயினள்.

ஓகர்த்தனே ஆதிமூலமாக விளங்கும் பரப்பிரமம் யானன்றிவேறில்லை யென்றகங்கொண்டிறுமாந் திருக்கின்ற பேதையாயும் உலகங்களிலிருக்கின்ற தீனராகிய பிராணிகளை மாயவலையிற்படுத்தி யலைத்துத்திரியும் வஞ்சகனுக்கெதிரில் ஞானவான்களாய் நல்லுணர்ச்சியையும்சீவகாருண்ணியங்களையும் மெய்ப்பத்தி மான்மியங்களையும் பெற்றிருக்கின்ற புண்ணியசீலருக்கன்றிக் காட்சிதராத தேவரீரெழுந்தருளுவ தழகோ உடலினிடத்திற் பொருந்தி யிருக்கின்ற வுயிரில் அந்தரான்மாவாகக் காட்டி நடிப்பிக்கும் பரம்பொருளே வாரும்வாருமென்றுகர்த்தனைப்பார்ப்பதியம்மன் பலவத்காரமாய் அழைத்துப்போவதைமகாவிஷ்ணுகண்டவுடன் திடுக்கிட்டுப் பராபரையாடிய வாக்கியங்களை யெண்ணி யெண்ணி மனம்நடுங்கித் திகைத்துயாதுந்தோற்றுமற் றடுமாறிச் சரீரமுற்றினும் வியர்த்துதொலைதூரத்தி லிருந்து விலையுயர்ந்த பலசரக்குகளை யேற்றிக் கொண்டுவந்த கப்பலானது கடற்கரையைச்சேருகின்றகாலையில் தற்செயலாய்க் கவிழ்ந்து அதிற்பட்டதளங்களனைத்தையு மிழந்து மதிமயங்கிச் சோரும் வணிகனைப்போல மிகவும் வருந்தி அம்மையை வழிபடாத காரணத்தினால் இத்தகைய விடையூறு நேர்ந்ததெனத் தெளிந்தவனாய்த் தட்சணத்தில் நம்மையனாகிய சிவபிரானையும் லோகநாயகியையும் குமாரசுவாமியையும் பாவனை உருப்படச் செய்துசொர்னபீடத்தி லிருத்திநீராடிப் பரிசுத்தனாய்ஆகம விதிப்படிக்குத் திருமஞ்சனதூபதீப நைவேத்திய முதலிய பூசாதிரவியங்களைக்கொண்டு அருச்சனை ஆராதனைகளைப் பத்திவயிராக்கியத்துடன் முடித்துச்சோடசவுபசாரங்களையும் வரன்முறையே நடாத்தி வேதவாக்கியங்களினால் அந்தமுக்தேவதைகளினது பெருமைகளை வாயாரவாழ்த்தித் தீர்க்கதண்டன் சமர்ப்பித்தவனாய்அன்றுதொட்டு மெய்ப்பத்தியுடன் மனவுறுதிகொண்டு வருந்தி யிவ்விதமாகப் பல்லாயிரகோடிவருஷகாலம் பணிவிடைகளிற்குறைபாடில்லாமல் விரதத்தைச்செய்துவருகின்றகாலையில்விஷ்ணுகொண்டிருக்கின்றதிடசித்தத்தையும்பத்திவயிராக்கியத்திறங்களையும்மனவாட்டத்தையும்பலகாலம்அரியவிரதத்தை யனுஷ்டித்துவரும்வருத்த ஏக்கங்களையும் தெரிந்தரிஷிபுங்கவர்கள் தேகம்புழுங்கியிதனைப் பேசிக்கொள்வதாயினர், மூவரிலொருவராகவிருக்கின்றஇந்தகேசவமூர்த்திசெய்துவரும் முக்கியமாகியதபவுறுதிக்கிரங்கியின்னமும்பரமசிவம்வெளிப்படாதகாரணத்தினால்இனிமேற்படயாவர்விரதங்களைச்செய்யநினைப்பார்கள்இதுமிகவும்புதுமையாகவிருக்கின்றதென்று மனவாட்டத்துடனிருக்கவும் ஸ்ரீமகாவிஷ்ணுவானவர்தான்உத்தேசித்துமுடித்துவரும்பூசனைகளிற்சற்றும்பிசகில்லாமல் நடாத்திவருகின்றகாலத்தில்தேவதேவோத்தமனாய்லோகநாயகமாகவிருக்கின்ற சிவபிரான்மனமிரங்கி யிச்சம்பவங்களைத் திருத்தேவிக்கறிவித்து ஒருமைப்படுத்திப்பராசத்திசமேதனாய் விருஷபவ கனத்தில் ஆரோகணித்துப் பல்லாயிரங்

கோடி கணநாதர்கள்சூழ்ந்து பணிவிடைகளைச்செய்து ஜயஜயவெனப்போற்றிவரத்தக்கதாக வெள்ளியங்கிரியைக்கடந்து வானவழிக்கொண்டு வருந்திருக்கோலத்தைக்கரியவன் தரிசித்தமாத்திரத்தில் மனக்கவலையைநீங்கிக் களிசிறந்து விழிகளில் ஆனந்தவாரிபெருக்கெடுத்தோடத்தக்கதாகத் தேகபரவசராய் எதிர்கொண்டோடி முந்திப் பார்ப்பதியார் திருவடிகளில் மும்முறைவலம்வந்து பணிந்தபின்பு எமதிறைவன் திவ்வியசரணாரவிந்தங்களினும்கிரமப்படிக்குத் தீர்க்கதண்டன்சமர்ப்பித்து உமாபரமேஸ்வரர் கீர்த்திப்பிரதாபங்களை வேதவாக்கியங்களினால் பலவாகவழுத்திக் கரங்களைக்கூப்பிநிற்கின்ற விஷ்ணுவினிடத்திற் கிருபாநோக்கத்தைப் பாலித்து ஆதரித்தவராய்த் தேவியின்மீது விழிகளைச்செலுத்திப் பெண்ணரசியே உன்சகோதரனிடத்திற் றயைசெய்து அனுக்கிரகஞ்செய்யக்கடவையெனத் திருவுளம்பற்றியபோது பார்ப்பதிதேவியும் மனமிரங்கி விஷ்ணுவைப்பார்த்துஇதனைச்சொல்லுவதாயினள்.

நமதிறைவன் கடாட்சித்திருக்கின்றபேற்றிற்கும் நாம் கோபித்துப்பேசிய வசைமொழிக்கும் எவ்வளவும் பிசகுவரவறியாது இதனையெத்தகையராலுந் தடுப்பதரிதுஆதலால் அவ்வாறே எமதுநாயகன் கடாட்சவீட்சண்ணியப்படிக்குப் பெறவிருக்கின்ற உமது பிள்ளையானவன் ஒருதினம் நாதன்னுதல் விழித்தீயிற்பட்டு சாம்பலாயிறந்துஜயசாலியாயிருந்தமேம்பாடுகளனைத்தையுமிழந்தபோதினும் பரமன் திருவுளமுயற்சியினாற் பழையபடிக்குத் தோற்றித் தீர்க்காயசாய் எக்காலத்தினும் சலனமற்றுச்சகலலோகங்களையும் தன்வல்லபத்தினால் வெற்றிகொண்டு ஜயசாலியாயிருக்கக்கடவனென்று பராசத்தி சாபவிமோசனஞ்செய்தவுடன் பரமசிவமும் அவ்வாறேமுற்றுப்பெறக்கடவதென்று ஆசீர்வதித்துத் திருத்தேவியுடன்மறைந்து வெள்ளியங்கிரியிற்சேர்ந்தனர்,அம்மையப்பர்இவ்வாறருளிச்செய்துபோனவுடன் மகாவிஷ்ணுவும் மனவெழுச்சிபெற்று அத்திசையைநோக்கித் தொழுதேத்தித்தவநிலையைநீங்கித் தான்பூசித்துவந்த முத்தேவதைகளையுமெடுத்துக்கொண்டு வைகுந்தநகரைச்சேர்ந்து தன்பட்டணத்தில்வாசமாயிருக்கின்றகாலையில் நல்லசுபமுகூர்த்தத்தில் பரமனருளுருப்பெற் றெழுந்தைப்போலக் காருண்டநீலமேகத்தையொப்பப் பிரகாசிக்கும் சுந்தரமுள்ளதேகத்தைப்பெற்று ஸ்ரீமகாவிஷ்ணுவினது மனத்தின்மூலமாய் மன்மதகுமாரனுதித்துக் காளைப்பருவத்தனாய்வனப்புகளனைத்துந்திரண்டோ ருருப்பெற்றெழுந்ததைப்போன்ற மங்களகரமாகியவடிவைக்கொண்டு குலவுகின்றகாலையில் பிதாவானவர் பிள்ளையின்தேககாந்தியையும் குணாதிசயங்களையுங்கண்டுகளித்து மடியில்வைத்துக்கொண்டு முத்தமிட்டுச் சீராட்டியவுடன் அவன்வல்லமைக்குத்தக்கபல சிறப்புகளைப் படைத்தளித்தனர், உடனே தீரனாய்ச்சுரும்பினங்களை நாரியாகக்கொண்டிருக்கும் கருப்புவில்லையும் அரவிந்தம்-அசோகம்-சூதம்-முல்லை-குவளையென்னும் பஞ்சபுஷ்பபாணங்களையும் கரங்களிற்கொண்டுகுளிர்ந்த சோடசகலைகளையுடைய சந்திரனைக்குடையாகவும் கிளிகள்பூண்ட தென்றற்றேரையும் அலைகளைஆரவாரித்துமோதும் சமுத்திரத்தைப்பேரியாகவும் அதிரூபலாவண்ணியமுள்ள பெண்படைகளையும் சிரவணானந்தமாகக்கூவும் குயிலாகியகாளத்தையும் மேகத்தினிடத்திற் றோற்றிமறையும் மின்னற்கொடியையும்தாழைமடல்உடைவாளையும்பெற்றுத் திரிலோகங்களினுஞ் சஞ்சரித்துத் தருணமங்கையரையும் காளையரையும்மயக்கிக் காமக்கவலையிற்பட்டுக் களித்துழலும்படிக்குத் தன்வயப்படுத்திச் சகலரையும்வென்று எத்தலங்களினும்வெற்றிக்கொடியைநாட்டிச் சகலரும் பூசிதையாகக்கொண்டாடும்படிக்குசுந்தரவதியாகிய இரதியென்னுங் கன்னிகையை மணந்து அவளை எக்காலத்தினும்பிரியாமல் வங்கணமாகக்குலவி காமவின்பங்களை அனுபவித்து ஒருவருமெதிரில்லாமல் வீற்றிருக்கின்றகாலையிற் பராசத்தியைப்பிரிந்து வடவாலவிருட்சநிழலிலமர்ந்து சனகாதியருக்கு ஞானயோகசாதனையைத் தெருட்டியிருக்கின்ற சிவபிரான் மனவுறுதியையழித்துப் பராபரையைச்சேர்ந்து திருக்குமாரனைத் தந்து சூரபதுமன்முதலாகிய அவுணரைவாட்டித் தாங்கள்சவுக்கியமடையும்பொருட்டு பிரமனாதியதேவர்கள் போதனைக்குட்பட்டவனாய்ச் சற்றும்எண்ணிக்கையில்லாமற் சுயஞ்சோதிப்படிவத்தனான சிவபிரான் தேகத்தினிடத்திற்பஞ்சபுஷ்பபாணங்களையும் ஒருதொடையிற்சந்தித்தேவியகாலத்திற் சங்கரன்கோபித்துப்பார்த்த நுதல்விழிக்கனலினாற்றகிக்கப்பட்டுச் சாம்பலாய்மங்கியபின்புஇரதிதேவிகோரிக்கையின்படிக்குப் பரமனனுக்கிரகத்தினால் அருவுருப்பெற்றெழுந்து பழையபடிக்குச் சகலவளங்களையும்பெற்றுத் திரிலோகாதிபத்தியத்தைப் பரிபாலனஞ்செய்திருந்தனன்,ஜகன்மாதாவாகவிருக்கின்ற பருவதராஜபுத்திரியினது வாக்கியம் பொய்படுவதோ அல்லது எத்தகையராலும் விலக்கவும்போதுமோ இச்சரித்திரம்நிற்க மகாவிஷ்ணுவானவர் அதிகபிரியத்துடன் வழிபாடுகளைச்செய்துவரும் பரமனையும் பார்ப்பதியாரையும் குமரனையும்உடன்கொண்டு திருப்பாற்கடலைச்சேர்ந்து அத்தேவதைகளைவிசாலமாகிய தமதுமார்பகமே பீடமாக வெழுந்தருளச்செய்து சேஷசயனத்திற் பள்ளிகொண்டு அளவற்றகாலம்அறிதுயிலமர்ந்துபோற்றிவருங்காலையில் மாறிமாறியெழும் சுவாசத்தினசைவினாலும் ஆதிசேஷனிடத் துண்டாகும் பெருமூச்சினசைவினாலும் மதுரமாகிய திருப்பாற்கடலினிடத்துண்டாகும் அலைகளின்மோதலின் அசைவினாலும் அளவற்றதிருவிளையாடல்களைச் செய்யவல்ல மூவரும் உஞ்சலாடிக்களித்திருந்தனர்.

அத்தருணத்தில் தேவர்கள் பங்குக்கு இயமனைப்போல அவுணர்மரபில் வாற்சல்லியென்னுஞ் சூரனொருவன் அவதரித்துப் பிரமுகனாய்ச் சிவபிரானைநோக்கிப் பலகாலம் சொல்லுதற்கரிய கடினமாகியதவங்களைச்செய்து அவரனுக்கிரகத்தினால் வில் வாள் தேர்பாணங்களாதிய செல்வவளங்களைப்பெற்றுவந்து தன்வம்சத்துக்குரியசிற்பியினால் சொர்ணமயமா யிரத்தினகாந்திகளை வீசிக்கொண்டிருக்கும் கோட்டை-கொம்மை-அகழ்- கோபுரவாயில்கள்-மாடமாளிகை-மண்டபமாதிய சிங்காரங்களைக் கொண்டு பொன்னுலகமும் நாணும்படிக்குப் பட்டணமொன்றைச்செய்வித்து அதனிடத்தமர்ந்துஅவுணருக்குச்சக்கிரவர்த்தியாய்ப் பலவெள்ளம் ரதகஜதுரகபதாதிகளைச்சேர்த்துக்கொண்டு திக்குவிஜயஞ்செய்ய நினைந்து பிரயாணபேரிகையையறைவித்து ரதாரூடனாய் நால்வகைச்சேனாசமுத்திரங்களுடன்போய் அஷ்டதிசையிலிருப்பவர்களனைவரையும் நிமைப்போதில்வென்று தன்வயப்படுத்தி ஒருவருமெதிரில்லாமற் கொடுங்கோல்செய்து வருபவன்வின்

ணுங்களிலிருப்பவரையும் வெற்றிகொள்ளக்கருதிச் சதுர
ங்கவெள்ளங்களுடன் வானத்திற்சென்று பொன்னுலகத்
தை வளைந்துகொண்டகாலையில் நானும் வீராவேசத்துட
ன் தேவப்படைகளைச்சேர்த்துப்போய்ப் பலபகல் கொடு
ம்போரைச் செய்துவருமுன்னிலையிற் பாதகன்மேலிட்டு
நமதுசேனைகளைச் சின்னபின்னப்படவாட்டி என்னையும்
பிரமிக்கும்படிக்குச்சாடித் துரத்திவிட்டு ஜயசாலியாய்த்
தெய்வலோகத்தைத் தன்வசப்படுத்திக்கொண்டுதிரிலோ
காதிபத்திபத்தை ஒருங்கெய்த அனுபவித்துவருங்கால
த்தில் பதியையும் செல்வவளங்களையும்பறிகொடுத்துநிற்
கநிழலில்லாமலலைந்து வேறொருவுதவியையுங்காணாததா
ல்வாடிவருந்துகின்ற தேவர்களைக் கூட்டிக்கொண்டுபோ
ய்த் திருப்பாற்கடலைச்சேர்ந்து சகத்திரப் பணாமகுடங்க
ளையுடைய பாம்பணையிற் றுயிலமர்ந்திருக்கும் ஆதிகே
சவமூர்த்தியை வணங்கிப்போற்றி யெனக்குச் சம்பவித்த
அபாயத்தையும் மானக்குறைச்சலையும் சாங்கோபாங்க
மாக விண்ணப்பஞ்செய்து கர்த்தனே அவுணப்பாதகனா
ல் மிகவும்நொந்து துக்கசாகரத்திலழுந்திக் கரைகாணாத
லைகின்றனமாதலால் தேவரீர் அடியோங்கள்மேல் கிரு
பையுற்று அப்பாதகனை அதாஹதப்படுத்தி விண்ணாட்
டின்அரசுரிமையைத் தயைசெய்யவேண்டுமென்றுமிகவு
ம் வருந்திப்போற்றுமுன்னிலையில் தேவர்களும் பரிபவ
த்துடன் லோகரட்சகனே யிக்காலத்திற் பராமுகமாயிரா
மல் சீக்கிரத்தில் பகைவனைவாட்டிப் பாதுகாத்தாள்வது
தமதுகடனென்றுபலவிதங்களில்முறையிடுவதனைத்தை
யுந் திருச்செவிகளினேற்று மனமிரங்கிச் சேஷசயனத்
தைவிட்டெழுந்து செந்தாமரைமலரைப் பழித்துவிளங்
குந் திருக்கரத்தைநீட்டி பயப்படாதீர்கள் உங்களுக்குஇ
த்தகையமனவருத்தங்களையும் தீங்குகளையுஞ்செய்த கொ
டியபாதகனுயிரையுண்டு சஞ்சலமற்று சவுக்கியத்திலிரு
க்கச்செய்வோமென்று பற்பலதயிரியங்களைச்சொல்லி ஆ
தரித்தவுடன் கற்பமுடிவில் சகலாண்டங்களனைத்தையுந்
தன்திருவயிற்றினிடத்திருத்தி வடபத்திரசாயியா யுற
ங்கியபின்பு வெளியிட்டாண்ட திருத்துழாய்மாலை பரிம
ளித்துப்புரளுந் திருமார்பையுடைய ஸ்ரீமகாவிஷ்ணுவா
னவர் அடியேனிடத்திற் பரிபூரணகடாட்சத்தையும் நம்
பிக்கையையும்வைத்து ஓதேவராஜனே நமதுமார்பகத்தி
ல் மனோரஞ்சிதமாக வெழுந்தருளிய சங்கரனையும்பரா
சத்தியையும் திருக்குமாரனையும் பாரும் இந்தமூவரையு
ம் ஆதிமுதலிதுபரியந்தம் பத்திபூர்வகமாக வழிபட்டெ
ன்குறைகளனைத்துமொழிந்து கிருதார்த்தனானேன் ஆகி
லும் நீபலவிதங்களினும் பகைவராகிய அவுணர்இராக்க
தரால் துன்பங்களையனுபவித்து வாடுவதற்காக நமக்குமி
கவு மிரக்கமுண்டாகியதால் தாய்தந்தையரையொத்தஇம்
மூவரையும்தருகிறேன் பயபத்திவிசுவாசங்களுடன் ஆக
மவிதிப்படிக்குப் பூசனைவழிபாடுகளிற் குறைவறச்செய்
து வருவையாகிற் சகல துன்பங்களுமொழிந்து ஜயசாலி
யாய்ச் சலனமற்ற செல்வப்பெருக்கை யனுபவித்து சவுக்
கியத்திலிருப்பையெனத் திருவாய்மலர்ந்து உடனேஅதி
கபிரியத்துடன் ஸ்ரீமகாலட்சுமிக் கிருப்பிடமாகிய மார்பி
னிடத்திற் பொற்பீடத்தமர்ந்தசைந்திருக்கும் தேவதைக
ளை மெல்லவெடுத்து நீட்டியகாலையில் மனப்பூரிப்புடனி
ருகரங்களினாலுமேந்தி என்முன்னோர்களும் நானும்மு
டித்திருக்கின்ற தவப்பேற்றினால் சிரத்திற்றாங்கி ஆனந்
தபரவசத்தனாகி யிருக்கின்றகாலையில் ஸ்ரீமகாவிஷ்ணுவா
னவர் கருடனைநினைந்து தருவித்துக்கொண்டு அதன்பிட
ரியில் ஆரோகணித்து வில்-வாள்-சக்கரமுதலிய பஞ்சாயு
தபாணியாய் நம்மவர்களுடன் திருப்பாற் கடலைக்கடந்து
கடல்சூழ்ந்திருக்கும் பூமண்டலத்தைச் சேர்ந்து பவுத்தி
ரமாகிய நாவலந்தீவிற்போய் தேவதேவோத்தமனாகிய சி
வபிரான் ஆனந்தநடனங்களைச்செய்துவரும் தில்லையம்ப
லத்தைத்தரிசித்துக் கனகசபைக்குமுன்னம்விழுந்துதீர்க்
கதண்டன் சமர்ப்பித்துத் தேகபரவசனாய் மனமொருமி
த்துவிழிகளில் ஆனந்தவாரி பெருக்கெடுத்தோடச்சிந்தை
யானது உயிருக்குயிராய்விளங்கும் சிவபூரண வெள்ளையி
லழுந்தி யிவ்விதமாகச்சோர்ந்து நான்குமாதம் அசைவற்
று ஆதிமத்தியாந்தமற்ற ஹரன்பாதநிழலிலடங்கிச்சிவா
னந்தசெல்வத்தை யனுபவித்திருந்து சிவபிரான் கட்ட
ளையின்படிக்குத் துரியாதீதத்தைக்கடந்து பரவெளியிற்
களித்திருந்த உயிரானதுமீண்டு சாக்கிரத்திசையிற் சேர்
ந்தகாலையில் கருவிகரணாதிகளுக்குக் காரணமாகவிருக்கி
ன்ற உணர்ச்சிமுதலாகிய தத்துவங்கள் தத்தமதுஸ்தான
ங்களிற்சேர்ந்தமுன்னிலையில் நித்திரை தெளிந்தவர்களை
ப்போல ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் உணர்ச்சிபெற்றெழுந்
து செந்தாமரைமலரினும் சுந்தரமாகவிளங்கும் சிவநாத
ன்திருவடிகளிற் பன்முறைபணிந்து வேதவாக்கியங்களி
னாற்போற்றினவராய் ஆலயத்தைவிட்டுவெளிவந்துதேவ
சேனைகளுடன்போய்ப் பூமண்டலமுற்றினும்வானநாடுக
ளினும் ஏகசக்கிரத்தைச் செலுத்திக் கொடுங்கோன்மு
றையே அரசுநடாத்திவரும் கொடியபாதகனாகிய வாற்க
லியென்னும் அவுணராஜனைவளைந்துகொண்டு கொடியயு
த்தங்களைச்செய்து சதுரங்கசேனைகளுடன் அவனையுங்
கொன்று தென்னாட்டைச்சேர்ந்து விஜயப்பிரதாபத்துட
ன்திரும்பும் ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் அடியேனையுந் தே
வர்களையுங் கிருபையாகப்பார்த்து இனி யாதொருகுறை
வுமில்லாமல் உங்கள்பதங்களிற்சேர்ந்து சகலசவுக்கியங்க
ளையும் அனுபவித்து மனவெழுச்சியுடனிருக்கக்கடவீர்
களெனத் திருவாய்மலர்ந்து விடைகொடுத்துமறைந்து ப
ழையபடிக்குத் திருப்பாற்கடலைச் சேர்ந்து சேஷசயனத்
தி லறிதுயிலமர்ந்திருந்தனர்.

பின்பு நான்தேவர்கள்கூட்டங்களுடனிந்தபொன்னாட்
டையடைந்தவுடன் கேசவன்மார்பகமே தொட்டிலாகவா
சஞ்செய்திருந்த விந்தமூவரையும் அதிகபிரியத்துடன்சா
த்திரோத்தமாய் ஆராதனைவழிபாடுகளைச்செய்துவருகின்
றனன், இந்தமுத்தேவருமெனக்குக்கிடைத்தகாரணமிது
வாகும் என்மனதுக்கினியதோழனே ஒப்புவமையற்ற இ
வர்களைப் பூசிக்கும்படிக்குக் கொண்டுபோக விரும்பினை
யாதலால் துணிந்துகேட்டனை மெத்தநல்லகாரியம் உன்
னெண்ணப்படிக்குத் தருவது என்னிச்சையென்று ஸ்ரீம
காவிஷ்ணுவினது அனுக்கிரகத்தைப்பெற்று வருவையா
கில் தடையில்லாமற் கொண்டுபோகலாமென்று பிரியம
னமில்லாமல் முகப்போதரவாய் ஒருமார்க்கத்தைக் காட்
டியபோது முசுகுந்தச்சக்கிரவர்த்தியானவர் தேவராஜன்
கருத்தைத்தெரிந்துகொண்டு நல்லகாரியம் அவ்வாறேபெ
ற்றுவருவேனென்று தேவேந்திரனிடத்திற் செலவுபெற்
றுப்போய்த் திருப்பாற்கடலிற்பள்ளிகொண்டிருக்கும் வி
ஷ்ணுவைத்தரிசித்துத் திருவடிகளில் வணங்கிப்போற்றி
க் கரங்களைக்கூப்பினவனாய் உமாபரமேஸ்வரகுமார மு

கூர்த்தமாக வெழுந்தருளியிருக்கும் தெய்வங்களைக் கொண்டுபோய்ப் பூசிக்கும்படிக்குத் தான் இந்திரனைக்கேட்டதையும் அவர்சொன்ன மறுதலையையும் சவிஸ்தாரமாகவிண்ணப்பஞ்செய்து கர்த்தனே சேவரீர்கிருபையுற்று இவ்வரபாலனத்தைத் தந்தாளக்கடவீரென்றிரந்தகாலையில் அரசன்பத்திமைக்குஇரங்கி நீபரிவாய்க் கேட்டுக்கொள்ளுகிறபடியால் நமதுபிராணபதமாகவிருக்கின்ற கடவுளரைக்கொடுத்தனம் இப்பிரகாரம்நாம்கட்டளையிட்டதை இந்திரனுக்குத்தெரிவித்துப் பூமண்டலத்திற் கொண்டுபோய்ப் பூசிக்கக்கடவாயெனத் திருவுளம்பற்றியவுடன்மனமகிழ்ச்சியாய்ப் பகவானைத் தொழுதேத்தி விடைபெற்றுத்திரும்பிபொன்னுலகைச்சேர்ந்துஇந்திரனுக்குக் கண்ணபிரான் சம்மதத்தைத்தெரிவித்தவுடன் மனந்தளர்ந்து மிகவும் வருந்திவாடிக்கிலேசித்தவனாய் அத்தினந்தன்னையீன்றருளிய தாயைநீங்கும் இளங்கன்றைப்போல மிகவும் பரிபவப்பட்டு இனிதடைசெய்வது தகாதனவென்று மாறுபாடுசெய்து கொடுத்துஇராஜாதிராஜனை யனுப்பிடவேண்டுமெனத் தந்திரயுத்திகளை நிதானித்தவனாய் உடனே தோழனைப்பார்த்து நல்லகாரியம் அவ்வாறேதருகின்றேனென்று உபசாரவார்த்தைகளைச் சொல்லியிருத்தித் தேவதச்சனைத் தருவித்துஅந்தரங்கமான விடத்துக்கழைத்துப்போய் முத்தேவர் உருவங்களைச் சரியாகச்செய்வித்துச் சகலஅலங்காரங்களையுஞ் சோடித்துப்பொற்பீடத்திலிருத்தி மெல்லவேந்திச் சக்கிரவர்த்தியிருக்குமிடத்திற்சென்று துணைவனே பத்தியுடனிவர்களை யேந்திக்கொள்ளக்கடவாயெனக் கள்ளஉபசாரங்களைச் செய்யும்போதுவஞ்சகமாகக் காண்கிறதெனச் சந்தேகித்து இருகரங்களையும நீட்டியேந்திக்குமாரன் திருத்தேவியுடன்வீதிவிடங்கப்பெருமாளெழுந்தருளிற்றோவென்னும் ஆவலுடன் போற்றுமுன்னிலையில் ஆதியிற்றனக் கருளியவாறேயாதொருகடாட்சவாக்கியத்தையும் கொடாதகாரணத்தினால்சங்கையுற்றுத் திரிலோகச்சக்கிரேஸ்வரனே யித்தோற்றங்கள் தேவரீர்பூசிக்கக்கண்ட தேவதைகளன்று மனதொருமித்து அவர்களைக்கடாட்சித்தனுப்ப வேண்டுமென்றுகேட்டவுடன் மீட்டும்அவ்வாறேஅஞ்சுதரம் மாறிமாறிச்செய்தமைத்துத் தந்தபோதினும் முசுகுந்தச்சக்கிரவர்த்தி மறுத்தமையால் இனிதாமதப்படுத்தலாகாதென்றெண்ணி ஸ்ரீமகாவிஷ்ணு மார்பகமென்னும் பொன்னூசலாடலைமனதுக்கின்பமாகக்கொண்டு தேவியுங்குமாரனுந் தாமுமாகக் களித்திருந்த எமதிறைவனை மனவருத்தத்துடனேந்திவந்து சக்கிரவர்த்திக்குக் காட்டியிவர்தானோ வென்றுவினவியபோது சிவபிரான்கிருபையுற்று இந்திரனுக்குத்தோற்றாமல் முசுகுந்தன்மீதுகிருபாநோக்கத்தைப் பாலித்துஉன்னிடத்துக்குவந்து வந்தோம்இனிநிமைப்போதுந் தாழ்க்காமல் நம்மைபூமண்டலத்துக்குக்கொண்டுபோய் மனமகிழ்ச்சியுடன் பூசிக்கக்கடவையெனச் சருவசங்காரமூர்த்தியாகிய சிவநாதன்கட்டளையிட்டமாத்திரத்திற் பேரானந்தவின்பசாகரத்தில் மூழ்கினவனாய்ப் பணிந்துபோற்றித் தேவராஜனைப்பார்த்து ஸ்ரீமகாவிஷ்ணு மார்பிடங்கொண்டிருந்தவரிவர்தான் திரிலோகசக்கிரேஸ்வரனே தயைசெய்து இத்தேவனைத்தரவேண்டுமெனத் திருவடிகளிற் பணிந்தகாலையில் முசுகுந்தன் அன்புக்கிரங்கி ஓதுணைவனே நான்முன்னங்கொடுத்த ஆறுதேவதைகளுடனிவரையுஞ்சகலவளங்களையுங் கொண்டிருக்கும் பூமண்டலத்திற்கொண்டுபோய் மகத்துவமுள்ளகமலாலய முதலியதலங்களிற் றாபித்துப் பத்திபூர்வகமாகப்பூசனைவழிபாடுகளிற் குறைவின்றி நடப்பித்துவரக்கடவையெனப்பேசி முசுகுந்தன்கரத்திற் கொடுத்துப்பலவுபசாரவார்த்தைகளைப்பேசிச் செலவுதந்தனன்.

அத்தருணத்திற் றேவதேவோத்தமனைச் சிரத்திலேந்தி மனப்பூரிப்புடன் அனுப்பிவைத்துக்கொண்டு தன்பரிவாரங்களுடன் ஜயசாலியாய்பொன்னகரைக்கடந்து மங்கலவாத்தியங்கள் முழங்கப்பூமண்டலத்திலிறங்கிச் செல்வவளங்கள் மிகுத்துத்தென்பிரதேசத்தில் லோகப்பிரசித்தமாகப்புகழும் மகத்துவமும்சிவபிரான் மனமகிழ்ந்துவீற்றிருக்கும் பெருமையையுமுடைய திருவாரூரென்னும் சிறந்தபதியில் வானத்தையளாவியமதில் கோபுரவாயில்கள் மண்டபமுதலியஅலங்காரங்கள் பெருத்திருக்கும்ஆலயத்திற் பிரவேசித்து ஆகமவிதிப்படிக்குத் தேசிகரால்சகலசடங்குகளையும் முடிப்பித்து மங்கலவாத்தியங்கள்முழங்கப்பிராமணர் வேதங்களையோத இவ்விதமகோற்சவங்களை நடப்பித்தபின்புபரிமளமிகுத்த திருத்துழாய்மாலையின் மணமருத திருத்தோள்களையுடைய ஸ்ரீமகாவிஷ்ணு மார்பகத்திலெழுந்தருளியிருந்த சிவபிரானைச் சொர்ணமயமாகவிளங்குகின்ற சிங்காதனத்தினிடத்திற் றாபித்துத் திருமஞ்சனதூபதீப நைவேத்தியமுதலிய சோடசவுபசாரங்களினாற் பூசனைவழிபாடுகளைக் குறைவறநடப்பித்துச் சோடசமகாதானங்களைவழங்கி தேவர்களும் பிரமித்துப்புகழும்படிக்கு அதிகசிறப்புடன் திருவிழாவைச்செய்வித்து மனமகிழ்ச்சியுடன் பரமனைப்பன்முறைபணிந்து போற்றி விழிகள்களிக்கத்தரிசித்து இவ்விதமாகவேண்டும் சிறப்புகளனைத்தையம் முடித்தபின்பு தேவராஜன்படைத்துக் கொடுத்தமற்றதேவர் அறுவரையும் நாகபட்டணம் திருநள்ளாறு, திருக்காறாயல், திருக்கோளிலியூர், திருவான்மியூர், வேதாரணியம், இந்தச்சிறந்ததலங்களில் வேதவிதிப்படிக்குச் சகலவுபசாரங்களையுஞ் செய்வித்து எழுந்தருளச்செய்து அருச்சனைவழிபாடுகளிற் குறைவற நடத்திவைத்து ஆனந்தபரவசத்தனாய்த் தீர்க்கதண்டஞ்சமர்ப்பித்து விழிகள்களிக்கத்தரிசித்து வாயாரவாழ்த்தி மனம்பூரித்தவனாய் ஆகமசாத்திரோத்தமாய்த் திருவிழா முதலிய சிறப்புகளனைத்தையும் நடாத்தி அவ்வாறேவருஷந்தோறுங் குறைவறமுற்றுப்பெறும்பொருட்டு மானியங்கள் ரொக்கங்கள்முதலியவற்றை திட்டவட்டங்கள்செய்து மேற்குறித்தபடிக்கு தாம்தெய்வலோகத்திலிருந்து கொண்டுவந்த தேவதைகளைஸ்தாபித்தபின்பு மனவெழுச்சியுடன் மந்திரிபிரதானிகள் சேனைத்தலைவர்கள்நால்வகைச்சயின்னியங்கள்சூழ்ந்து மங்கலவாத்தியங்கள் திசைகளதிர முழங்கிவரப்போய்த்தனக்கு இராஜதானியாகவிருக்கின்ற கருவூரென்னும் வளமிகுத்த பட்டணத்தைச் சேர்ந்து சகலசம்பிரமங்களுடனும் அரண்மனையிற் பிரவேசித்து நவரத்தினமயமாகிய சபாமண்டபத்தில் விளங்கும் அரியணையில்வீற்றிருந்து செங்கோன்முறையேஅரசுரிமைகளைச்செலுத்தி அளவற்றகாலம் துஷ்டநிக்கிரகசிஷ்டபரிபாலனங்களைச்செய்து வாழ்ந்திருந்து மன்னுயிரைத் தன்பிராணனைப்போலவெண்ணி யாதொருகுறைபாடுமில்லாமற் களித்திருக்கத்தக்கதாகப் பாதுகாத்துவருகின்றதருணத்திற் பரமசிவகடாட்சத்தைநினைந்து பழையபடிக்குத் திருக்கைலையைச் சேரவிருப்புற்றவனாய்த்

தன்குமாரனுக்குப் பட்டாபிஷேகத்தைச்சகலாடம்பரககளுடனும் தரிசித்துமந்திரிபிரதானிகளைப் புத்திரனருகிலருந்து நீதிகளைத்தெருட்டி உலகபாலனத்தைச்செய்வித்து வருவதாகப்பலநன்மொழிகளைப்பேசி யாவரிடத்திலும் செலவுபெற்றுக்கொண்டு இல்லறத்தைத்துறந்து தவவேடம்பூண்டு கானகத்திற்போய் அரியதவங்களைச்செய்தவனும் பெறுதற்கரியசிவபதவியைச்சேர்ந்து யாதாப்பிரகாரம் ஞானநாயகனாகியசிவபிரானை எத்தேசகாலமும்தரிசித்துவணங்கிப்போற்றிச் சுகாதீதசெல்வத்தை யனுபவித்திருந்தனன், ஆதலாற்சவுனகாதிமுனிவர்களே சிருஷ்டிகர்த்தனாகவிருக்கின்ற பிரமதேவனாலறியப்படாதவேதங்களின் மூலத்தைத்தெரிந்த பாலசுப்பிரமணியதேவருக்குரிய விரதங்களை எத்தகையராயினும் பத்திவயிராக்கியங்களுடன் பூசித்துவழிபடப்பெறுவராயின் அவனருளின்முயற்சியினால் இம்மையிற்பெறத்தக்கசகல செல்வவளங்களையும்பெற்று உலகமெங்கும் போற்றவாழ்ந்து மறுமையினும் தெய்வவிமானத்தேறி விண்ணவர்போற்றிப் பேரின்ப வீட்டையடைத்து கண்ணுதலின்திருவடி நிழலிலிருப்பார்.

---

## வள்ளிநாயகியார்திருமணப்படலம்.

வெள்ளியங்கிரியினோர்சார்விளங்கியகந்தவெற்பி
னள்ளுறுநகரந்தன்னினங்கையோடினிதுமேவு
மள்ளிலைவேற்கைநம்பியம்புவியெயினர்போற்றும்
வள்ளியைவதுவைசெய்தமரபினைவழாதுசொல்வாம்.

---

சூதபுராணிகர் மற்றசரித்திரங்களையுஞ் சொல்லுவதாயினர், ஓ! நைமிசாரணியவாசிகளே முற்குறித்திருக்கிறபடிக்கு வெள்ளியங்கிரிக்கொரு பாரிசமாய்ப்பலவுன்னதமானமுடிகளுடனேங்கியிருக்கின்ற கந்தமாதனபருவதத்தினிடத்திற் பொன்மயமாகிய மாடமாளிகைகள்முதலிய சிறப்புகளைப் பெற்றிருக்கும்நகரத்திற் றெய்வநாயகியாருடன்கலந்து இன்பநலங்களையனுபவித்திருந்த குமாரதேவர் கருங்கடல்சூழ்ந்திருக்கும் பூமியின்கண் வேடர்போற்றவளரும் வள்ளியம்மையைத்திருக்கலியாணஞ்செய்து உபயநாச்சியாருடனும் வங்கணமாகக்குலவியிருந்த கதாபிரசங்கங்களையுக்கேட்பிராக. பிரமன்படைத்தஇவ்வண்டத்துக்கு ஆவியைப்போலவளமைகளனைத்தையும்பெற்றுச் சிவபிரான்மனதுக்கினிமையாக வெழுந்தருளவல்ல சிறப்பினையுடைய தேவாலயங்கள்தம்மிடத்து மூழ்கினவர்களை முத்தியிற்சேர்க்கும் மகத்துவங்களைப்பெற்றிருக்கும் நதிகள்மற்றுமிராகின்ற செல்வச்சம்பத்துகளையுங் குறைவறப்படைத்திருக்கின்றதொண்டைநாட்டினிடத்திற்சுனைகள் காவுகள் சோலைகள்தினைப்புனங்களாதியவனங்கள் மிகுத்துச்செழித்திருக்கும் மேற்பாடியென்னும் பதியொன்றுண்டு அதற்கருகில்வானத்தையளாவப்பருத்தோங்கிய பருவதமொன்றிருக்கின்றது அதன்பெருமிதங்களிற் சிலவற்றைச் சொல்லக்கேட்பீராக பூருவத்தில்விஜயம்பொருந்திக் கீர்த்திக்கொப்பற்றிருந்த மாபலிச்சக்கிரவர்த்தியினிடத்தில் மூன்றடிமண்ணிரந்துமண்ணையும் விண்ணையுமளந்தருளிய ஸ்ரீமகாவிஷ்ணுகொண்டவிசுவரூபத்துக்கொப்பாக மேலோங்கியும்இஃதன்றியும் சிரோரத்தினங்கள் வாய்ந்தநாகங்கள் படங்களைவிரித்தாடியுலவுவதினாலும்இளஞ்சந்திரன் நெருங்கிப்போவதினாலும் தவளநிறம்பெற்ற அருவிகள்பிரபலமாய்ப்பெருகுவதினாலும் ஆத்தி, குரவு, கொன்றை, கூவிளம், இத்தருக்கள்நிறையப்பூத்துமலர்களையிறைத்து வருந்தன்மையினாலும் மானினங்கள் பெருத்து கூரியகோடுகளையுடைய மதயானைகள்வீறிட்டுலவுங்காரணத்தினாலும் அவ்வரையைப் பார்க்குமிடத்தில் முப்பத்துமுக்கோடிதேவர்களும் நாற்பத்தெண்ணாயிரமிருஷிகளும் மிகுந்தபயபத்தியுடன் தொழுதுபோற்றும் பெருமையையுடைய உமாமகேஸ்வரராகிய சிவபிரானை நிகர்த்துக்காட்டவும் பவுத்திரமாகியவானகங்கையினின்றுபெருகும் அருவிநீர்த்தாரைகளும் காருண்டநீலமேகங்கள் கவிந்தடர்ந்திருப்பதைப்பார்க்குமிடத்தில் மான்தோலினையும் முப்புரிநூலினையுங்கொண்டிருக்கும் மார்பையுடைய சதுர்முகப்பிரமனைப்போலக்காட்டவும் குமாரசுவாமியார் குறமங்கையினிடத்திச்சைகொண்டு சில திருவிளையாடல்களைச்செய் தமரவிருக்கின்றதைத் தெரிந்து தரிசித்தீடேறுமாசைதூண்ட அலைகள்பெருத்தவானகங்கையிற்றோய்ந்து பரிசுத்தமாயிருக்கவெண்ணிச் செல்வதையொப்பவந்தும் தேன்களைச் சொரிந்தும்மகரந்தங்களையிறைத்துப் பரிமளித்திருக்கும் குளிர்ந்தமலர்மாலையை யணியும்புயாசலங்களையுடைய சிவசுப்பிரமணியதேவர் சிலகாலங்காளப்பருவத்தைமேற்கொண்டு நடனங்களைக்காட்டி மனவெழுச்சியுடனுலவும்படிக்குக் கற்புக்கரசியாகிய வள்ளிநாயகியாரைத் தன்னிடத்திற்படைத்திருக்கும் மகத்துவத்தைப்பெற்றுஅப்பேற்றினால் வள்ளிமலையெனப்பலரும் புகழத்தக்க சிறப்புப்பெயரைக்கொண்டிருக்கும் அப்பருவதத்தின்மேன்மைகளை எத்தகையராலுங் கணித்துப்பேசுவதன்று.

இவையன்றியும் சிலசிறப்புகளைத் தெரிவிப்போம்சிவந்துகாட்டும் குன்றிமணிகளும் அச்சாரலினிடத்து முளைத்து மேலோங்கிஅதிகவோசையைக்காட்டி. அசைந்திருக்கும் மூங்கில்களொன்றுடனொன்று தாக்கியும்உராய்ந்து வெடித்துதிர்ந்துபுரளும் பருத்தமுத்துகளும் காளிகராளியென்னும் விஷப்பற்களையுடைய சர்ப்பக்கூட்டங்களுமிழந்துவரும் சிரோரத்தினங்களும் வரைமுற்றினுமடர்ந்து கிரணங்களைப்பரப்பிவிளங்குவதெப்படிக்கிருக்கின்றதெனில் நட்சத்திரக்கூட்டங்களானவை ஆயிரங்கிரணங்களைப்பரப்பியெழுந்த சூரியனதுவெம்மைக்காற்றாது நிலைகுலைந்துவிழுந்து கிடக்குமாறுபோலப் பிரகாசித்துக் காட்டவும் செழிப்பாகப்படர்ந்திருக்கின்ற முல்லைக்கொடிகளினிடத்தில் மலர்கள்மலிந்திருப்பதினாலும் பருத்த

மூங்கில் தீப்பட்டிறைக்கும் முத்துகளினுலும் தழைத்
தோங்கிக்குளிர்ந்தநிழலைப்பரப்பியிருக்கும் சோலைகளினி
டத்திற் தேன்களைச்சொரியும் பூங்கொத்துக ளணிபடத்
தொங்கும் சிறப்பினுலும் சோடசகலைகளையுடைய சந்திர
னும் தாரகாகணங்களும் ஒன்றுபட்டுதிர்த்ததை யொப்ப
விளங்கவும் வண்டினங்கள் ரீங்காரத்தொனிகளைச் செய்
துவந்திறங்கி யுண்ணும்படிக்கு மதுரமிகுத்ததேன்களைச்
சொரியும் நீலோற்பலம், செந்தாமரை, வெண்டாமரை,
அல்லியாதிய புஷ்பவகைகளைவிரித்துப் பரிமளங்களை வீ
சிஆழ்ந்து மதுரஜலப்பெருக்கையுடைய சுனைகள் அச்சா
ரலெனெல்லை முற்றுந் தோற்றுவதைப் பார்க்குமிடத்தில்
யாவராலுங் கண்டறியவொண்ணுத மகிமையையுடையக
ந்தசுவாமியார் வேடமங்கையைக் குறித்து அத்தலத்தில்
மாயவுருக்கொண்டு பற்பல திருவிளையாடல்களைக்காட்ட
விருக்கின்றமையால் அக்காட்சிகளைத்தரிசித்துக் களிக்கு
ம்பொருட்டு அப்பருவதமானது பலவிழிகளைக்கொண்டு
முன்னெச்சரிக்கைப்பட்டிருப்பதற் கொத்தும்வானத்தை
யளாவ வோங்கி யிருக்கும் வள்ளிமலையின்மேற்புறத்திற்
பரந்தசுனைகள் ஜலநிறைவு பெற்றிருப்பதைக் குறிக்குமி
டத்தில் சூரியசந்திரர்முதலிய தேவர்கள் சரவணபவன்ந
டாத்தவிருக்கின்ற வேடிக்கையார்த்தங்களையும்திருக்கோ
லப்பொலிவையுங் கண்டுகளிப்பதாக மண்மடந்தையான
வள் பற்பல கண்ணுடிகளைப் பரப்பிவைத்ததைப்போல
விளங்கவும் பிரகாசம்பொருந்திய தளிர்களையுடைய வே
ங்கைமரத்திற் கிளைத்திருக்கின்ற கிளைகளினிடத் தாலவி
அசோகு விருட்சத்திற்குவி விளாமரங்களிற்பாய்ந்து வி
ளையாடித்திரியும் குரங்கினங்களை வலிபெற்றமந்திரிகளா
னவைசிறிஉருத்தகாலத்திற்பயந்துமீள்வதையோசிக்குமி
டத்தில் பதிதனைகவிருப்பவனைச் சிறந்த தியாகிகளாகவெ
ண்ணித் தரித்திரராக விருப்பவர்கள் சேர்ந்து அகமுகப்
பொலிவற்றுப் பதங்களைக்காட்டி யிருகரங்களைநீட்டித்த
னக்கடுத்திருக்கின்ற வறுமைகளையுந் துக்கவருத்தங்களை
யும் மனக்கலக்கத்துடன்சொல்லி யிரந்தகாலத்தில் அன்
பாய்வரவழையாமல் மனம்வருந்தித் தேகங்குன்றி வாடு
ம்படிக்கிகழ்ந்துவசையடப்பேசி வேட்டைநாயைப்போல
மேல்விழுந்து துரத்துமுன்னிலையில்அந்தயாசகர்மனவா
ட்டத்துடன் திரும்புமாறுகாட்டவும் செங்காந்தள் மிகு
தியாய்ப் புஷ்பங்களைவிரித்துப் பிரகாசித்திருக்கும் குளி
ர்ந்தசோலைகளில் மனவெழுச்சியுடன் புள்ளிபட்டிருக்கு
ம் கலாபத்தைவிரித்த மயிலினங்கள்நடித்துத்திரிவதை
ப்பார்க்குமிடததில் அச்சாரலிற் பருத்தோங்கியிருக்கும்
மூங்கில்கள் காற்றினுலசைவுகொண்டு ஒன்றுடனென்று
ராய்ந்திறைக்கும்அனற்பொறிகள் சிதறிவிழுந்து சருகுக
ளிற்பற்றிப் புகைந்திருப்பதுக்கொந்தும் காமத்திற்பட்ட
லையும் மனத்தராகிய காளையர்தங்கள் குலமகளிரையெதிர்
த்தவுடன் பகற்போதென்றும் பாராமல் அவர்கள்கரங்க
ளைப்பற்றியணைத்துஇன்சொற்களைப்பேசி யில்லங்களுக்கி
ற் கொண்டுபோகும் கருத்தையறிந்து பிறர் தூறுதலுக்க
ஞ்சிச் சிலபாகாங்குகளைக் காட்டிவிலக்கு மாறுபோலப்ப
ருவதத்தின்மேற் பரப்பித்தழைத்தோங்கியிருக்கும்குளி
ர்ந்த சோலைகளிலிராகின்ற வேங்கைமரங்கள் பசியவிலைக
ள் தழைந்து நீண்டிருக்கும் கிளைகளைப் பரப்பி வா
னத்திற் செல்லும் சூரியனது கிரணங்களானவை த
டாகங்களிற் புஷ்பித்திருக்கும் தாமரை மலர்களிற்

பாய்ந்து களிக்க விருப்பதைத் தடைசெய்து கவிந்தி
ருக்கவும் காமவெறிகொண்டு மும்மதங்களையும்பெருக்கி
வரையின்மீதில் இடிகளைப்போல வீறிட்டுலவும்யானையி
ன்முழக்கத்தை அதனடிவாரங்களிலிருக்கும் கெவிகளிற்
படுத்திருந்த வீரசிங்கங்கள் கேட்டமாத்திரத்திற்சீறிப்பா
ய்ந்து உதும்பிநாற்றிசையினும்விழிகளைப்பரப்பி நாடுவ
தைப்பார்க்குமிடத்திற் பிரகலாதாழ்வான் எங்கும்பரிபூ
ரணமாக நிறைவெய்தியிருக்கும் ஸ்ரீமந்நாராயணனே பர
மெனப்பேசிய வாசகத்தைச் செவிகளிற்கேட்டமாத்திரத்
தில் வடவையைப்போலக்கொதித்து இரணியன்கரத்தை
யோங்கி யெங்குமிருப்பவன் இதிலுமிருப்பானேவென்று
தனக்கெதிரில் நிற்கின்ற தூணினிடத்தறைந்தகாலையில்
அதுவெடித்து அதனிடத்தெழுந்துருத்து அவுணராஜ
னைப்பிளந்துகொன்ற நாரசிங்கமூர்த்தியின் கற்சிதத்தை
யொப்பக்காட்டவும் வள்ளிமலைச்சாரலில் வாசஞ்செய்தி
ருக்கின்றவேடர்கள் காலங்கருதிக் குருஞ்சித்திணைப்பறை
யைமுழக்கி அக்குறிப்பினுல் வானத்தில்மேகங்கள் பரவி
மழைபெய்யவிருக்கின்ற பிரயோசனத்தைப் பலருக்குந்
தெரிவிப்பவர்களைப்போலச் சந்திரன் சோடசகலைகளைவி
ரித்து அமுததாரையைப்பெருக்கி வருவதைக்கண்ட எ
ண்காற்புள்ளானது தழைத்திருக்கின்ற சிறகையசைத்துச்
சந்தோஷமாய்க் கூவுங்குரலோசையினுற் றெரியக்காட்டி
யவுடன் மலைப்பாம்புகளிடைவிடாமற் சத்தித்திரைதேடி
த்திரியவும் விசாலமாகியவிண்ணகத்தில் அதிர்ச்சிகாட்ட
வும் மதயானைகள்வீறிட்டுக்காமமிகுதியினுற் பிடிகளைத்த
ழுவித்திரியவும் வீரசிங்கங்கள்கற்சித்து உதும்பியுலவவு
ம் இத்தகையபற்பலவளங்கள் பெருத்திருக்கின்றவள்ளிம
லைக்கருகில் வேடர்சிரட்டியாய்வாசஞ்செய்யு மொருசிற்று
ரானது சண்முகப்பெருமாள் பிற்காலத்திற் றன்னிடத்தி
ற்சேர்ந்து திருவிளையாடலைச்செய்வதற்கு விருப்புற்றுப்
பொன்னகரமானது அரியதவங்களைமுடித்து இறங்கிவந்
திருப்பதையொப்பச்சிறந்ததாய் யாதொருகுறைவுமில்லா
மல் கண்டவர்கள் விழிகளுக்கணியாகச்செழித்திருக்கும்
அந்தக்குறிச்சியில் வாசஞ்செய்யும் கிராதர்களனைவருக்கு
ம் இராஜனுய் அவர்களைப்போற்றிச் சிவகுமாரன்திருநா
மங்களிலொன்ருகிய குமரனென்னும் பெயரைப்படைத்
திருப்பவனொருவனுண்டு அவன்தன்துணைவியுடன் சுப்
பிரமணியக்கடவுளைக்குறித்து அளவற்றகாலம் செய்துவ
ந்த விரதபலத்தினுற் சிலபிள்ளைகளைப்பெற்றுப்புத்திரியி
ல்லாமையால் அந்தப்பாக்கியத்தையும் கிடைத்துக்களிக்க
விருப்புற்றவனுய்த் தங்கள்குலதேவதையாயிருக்கின்ற சு
ப்பிரமணியக்கடவுளுக்குப் பூசனைவழிபாடுகளைச்செய்து
ம் திருவிழாவைச்சம்பிரமாகநடாத்தியும் வெறியாடல்க
ளைமுடித்தும் இவ்விதங்களாகப் பத்திவயிராக்கியத்துட
ன் தேன்-தினைமா-கனிவகைகள்-பாற்சோறுமுதலிய நை
வேத்தியங்களைத் திருப்தியாகப்படைத்துத் தன்பந்துவர்
க்கங்களுக்கு விருந்திட்டுச்சகலசிறப்புகளுடன்கோடித்து
வருகின்றகாலங்களில் நேர்ந்தசம்பவங்களையுஞ் சொல்லக்
கேட்பீராக.

மேற்குறித்திருக்கின்ற மலைச்சாரலினருகிற் றழைத்
தோங்கியிருக்கும் சோலையின்கண் சிவமுனியென்னுந்த
வசிரேஷ்டர் பர்ணசாலைசெய்துகொண்டு அதில்வீற்றிரு
ந்து பஞ்சேந்திரியச் சேட்டைகளைவென்று விஷயவாஞ்
சைகளையடக்கிச் சித்தத்தைச்சிவத்தின் பாதாரவிந்தங்க

ளிலிருத்தி மனதைஒருவழிப்படநிறுத்தி அரியதவங்களைச்செய்து பிரமன்விஷ்ணுதேடிக்காண்பரிய சிவநாதனுக்குரிய சைவவிரதத்தைக்குறைவறப்போற்றி வருகின்றகாலையில் பருத்துச்சுழன்றுநோக்கும் விழிகளையும்சிறுத்த தலையையும் நெறித்தசையும் நீண்டகாதுகளையும் மெல்லியதாய்க்குறுகியிருக்கும் கால்களையும்புள்ளிபட்டுப் பொன்னையொப்பச் சுந்தரமாகவிளங்கும் தேகத்தையும்மயிர்ச்செறிவையும் சிறுகுளம்புகளையும் பெற்றிருக்கின்றபெண்மானென்று கண்டவர்கள் பிரமித்துநோக்கும்படிக்கு வந்து தவச்சாலைக்கெதிரிற்பாய்ந்தும் புற்களைமேய்ந்து உலவியிருக்கின்றகாலையில் சிவமுனியானவர் வெற்றிவேலாயுதக்கடவுளினது திருவருளினூற்றேற்றிய பொன்மயமாகிய பெட்டைமானைப்பார்த்தவுடன் ரூபலாவண்ணியங்களைப் பெற்றிருக்கின்ற தருணமங்கையைநேர்ந்தகாமுகனைப்போல மதிமயங்கிப்பிரமித்துக் காமக்கவலையிற்பட்டுவாடும் மனத்தனுய்ச்சொர்னச்சாயையுடைய பிணையினிடத்தில் மையலுற்று அதிகபிரமைகொண்டு தவத்தினிடத்திற் பொருந்தியிருந்த மனவுறுதியழிந்து ஊமத்தங்காயைத்தின் றவனைப்போல உன்மத்தனுய்ச்சர்ப்பபடத்தைப்பழித்தநிதம்பத்தைக் கொண்டிருக்கின்ற அரம்பாஸ்திரீகளிடத்திற்றேவர்கள் புணர்ச்சிப்பயனைப் பெறுமாறுபோலக் காட்சியினுல்இன்பநலத்தையடைநதுநினைத்தற்கரிதாய்த் தன்னைவருத்தியிருந்த விகாரத்தையொழித்து மெய்ப்புணர்ச்சியை அனுபவித்ததாகக்களித்து உடனேபுனலிற்படிந்து பரிசுத்தனுய்ப்பழையபடிக்குச் சிவபிரானைக்குறித்துத்தவஞ்செய்திருந்தனன், அந்தச்சிவயோகியினதுதிருஷ்டிசம்பந்தத்தினுற் பெண்மானுடையவுதரத்தில் ஞானவான்களுக்கன்றி வெளிப்படாத ஸ்ரீமகாவிஷ்ணுபெற்றகன்னிகை அத்தலத்துக்கருகிற் றவஞ்செய்திருந்தவள் கிரவுஞ்சவரையைப்பிளந்த வெற்றிவேலைத்தாங்கிய சிவசுப்பிரமணியதேவர் கட்டளையின்படிக்கு மால்மருகனிடத்திற் காமுற்றிருக்கும்மாலுக்கினியமகளானவள் அத்தருணத்தைத்தெரிந்து சொர்னச்சாயலையுடைய பெண்மான் வயிற்றிற் பிரவேசித்திருந்தனள்பின்பு அந்தமானனது அத்தலத்தைக்கடந்து புனமெங்கணுமுலவியும் பசியபுற்களைமேய்ந்து சுனைநீரையுண்டு வெய்யிலுக்குத்தோப்பினிடங்களிற்றங்கியும் வள்ளிமலையின்மேலேறி அவ்விடத்தில்வளர்ந்திருக்கும் தினைப்புனங்களைத்தாண்டி வேடமங்கையர் செவ்வரிபரந்த விழிகளைப்போலப்பாய்ந்து வள்ளிக்கொடிகள் நாட்டியிருக்கும் கொல்லையிற்போய்ச் சுப்பிரமணியதேவர் மனதுக்கினிய லோகநாயகியைச்சுமந்திருக்கும் பெண்மானுக்குப் பூரணகருப்பமாய்த் தள்ளாடித்திரிந்து பிரசவகாலம்நேர்ந்ததால் வயிறுளைப்பெடுத்துவருந்தி கதறி வேடப்பெண்கள் சில்லாக்கோலினுல் வள்ளிக்கிழங்கைக்கல்லி யெடுத்திருக்கும் குழிகளினென்றில்வள்ளிநாயகியையீன்றது.

சவுனகாதிமுனிவர்களே யிப்புதுமையென்னசொல்லுவேன் தலையணி, காதணி, முத்தாரம், மோகனமாலை. கடகங்கள், பாதசரம், சிலம்பு, இத்தகைய பூஷணங்களைத்திறந்து வள்ளித்தழைப்பாயல்ல் அவ்விலைகள்தேகமெங்கணு மூடத்தக்கதாக வுணர்ச்சியற்றுஒப்புவமையில்லாதளமதிறைவியானவள்மானினிடமாகத்திருவவதாரஞ்செய்தனள், இதுவுமொருதிருவிளையாடலாகநினைப்பதன்றிவேறுமுண்டோ அந்தப்பெண்மான் சற்றுநேரத்திலிளைப்பாறி மெல்லவெழுந்து இரத்தினவளையல்களைத்தரிக்குங் கரகமலங்களையுடைய பெண்குழந்தையைப்பார்த்துஇது நம்மினமன்று வேற்றுருவாகக் காணுகின்றதென்றெண்ணி மருண்டு பயந்தோடிப் போயினது இப்படிக்குத்தாயாகச்சுமந்துபெற்ற மான் தனித்துவிட்டு நீங்கிபகாலையில் ஒப்பற்ற தலைவியானவள ஏகாங்கியாய்ப் பசியினுல்வருந்திக் கைகால்களையுதறிக் கின்னரிப்பட்சியினோசையோ மகரயாழினெலியோ பிரமன்நாவிலெழுந்தருளியிருக்கும் சரஸ்வதிதேவியினது இன்னிசையின் பெருக்கோவெனக் கேட்டவர்கள் சந்தேகிக்கும்படிக்கு காவுகாவென்றழத்தொடங்கினள், அத்தருணத்தில் பாலசுப்பிரமணியதேவர் அருட்டிறத்தின்முயற்சியினுல் வேடர்களுக்கரசன் தன்தேவியுடன் தம்மினத்தவர்பலர்சூழ்ந்துவரத்தக்கதாக தினைப்புனங்களைப் பார்த்துப்போக நினைந்து அத்தலத்தில்வரும்போது அம்மையெழுந்தருளியிருக்கின்ற கொல்லையில்நுழைந்து குழந்தை யழுகையினேசையைச் செவிகளுக்கினிமையாகக்கேட்டவுடன்தேவியுங்கானுமாய் அதிசயித்து இத்தகையமதுரமாகியகுரலோசையிவ்விடத்திலுண்டாகுங் காரணமேதோவென்றுதிகைத்துத் துரிதமாய்நடந்து அழிபட்டிருக்கும் வள்ளிக்குழிகளினென்றிலிருக்கின்ற தூண்டாவிளக்கம்போன்ற கரியகூந்தலையுடையபெண்ணரசியைப் பார்த்தமாத்திரத்தில், வேடராஜனுக்குத் தேகபரவசமாய்ப்பிரமித்துகரங்களைக்கொண்டு மெல்லவெடுத்துப் பின்பற்றிவருகின்ற துணைவியைக்கூவி பெண்கள்சிகாமணிகிடைத்தனள், என்தாய் எளிதிலகப்பட்டனள், வாவாவென்றழைத்து நெருங்கியவுடன் தேவிகரத்திற்கொடுத்துச் சந்தேஷசித்தனுப் புஜத்தில்மாட்டியிருந்த வில்லையெறிந்துபோட்டுத் துள்ளித்துள்ளிப்பாய்ந்தும் பிழைத்தோம்பிழைத்தோமென்று அங்குமிங்குமாயோடியும் கூக்குரலிட்டும்ஆனந்தவெள்ளத்திலழுந்திக் களித்தும் பற்கள்வெளிப்படநகைத்தும் இனி எனக்கிணையாவரிருக்கின்றனரெனப் பருத்திருக்கின்றபுஜங்களைத்தட்டியும் முற்பிறப்பிற் பெரியோர்களுடன் நானென்னதவங்களை முடித்தேனே யாதுந் தோற்றவில்லையென்று பலவிசைபேசியும் விழிகளில்ஆனந்தவாரியைப்பெருக்கித் தேகம்பூரித்து மயிர்சிலிர்க்க தனக்குக்கிடைத்தபேற்றை யெண்ணி யெண்ணிப்பொங்கியும் இவ்விதங்களாக வேடர்பெருமான்கொண்ட மகிழ்ச்சியின் பெருமை யாவராற்சொல்லிமுடியும்.

இத்தகையகளியாடல் நடந்துவருகின்றகாலையில்வேடர்களுக்கரசியானவள் தன்கணவனிடத்திலிருந்தபெண்ணமுதைத் தன்கரங்களி லேந்தியவுடன் பிரசவகாலத்திலுண்டாகும் வருத்தமுமிளைப்பும்மற்றகுறிகுணங்களுங்காட்டப் பிள்ளையைப்பெற்றகாலத்தினும் அதிகமனமகிழ்ச்சியைப்பெற்றுத் தேகம்பசித்துக் கொங்கைகள் பூரித்துச்சொரிகின்ற பாலமுதத்தை தெவிட்டக் கொடுத்து முதுகைத்தடவி முத்தமிட்டு உச்சியைமோந்துதழுவி யிவ்விதங்களிற் சீராட்டும் கொடிச்சிக்கு அக்காலத்திற்கிடைத்த மகிழ்ச்சிக்கோ ரளவுண்டோ உடனேவேடராஜன்வீசிப்போட்டவில்லையெடுத்துக் கரத்திற்பற்றிக்கொண்டு தினைப்புனங்களையும் வள்ளிக்கொல்லைகளையுந் தேவிபுத்திரியுடன் நிமைப்போதிற்கடந்து தன்பதியாகிய சீறூரைச்சேர்ந்து விடுதியிற்போனவுடன் தேவாமுதத்துக் கொப்பாகிய மகளைப்பெற்றபடியால் அதிகமனவெழுச்சியை

க்கொண்டு களித்தவனுப்வல்யகால்களையும் வெள்ளியங்
கிரிக்குச் சமதையாகவிளங்கும் தேகத்தையும்படைத்தி
ருக்கும் நந்திவாகனத்திலேறிநடாத்தும் சிவபிரான்வருக்
கமா நுதல்விழியிலவதரிக்குங் குமாரதேவர்திருவடிகளை
வழிபட்டு வேடர்கள்திரண்டு குறிஞ்சிப்பறையாகிய தொ
ண்டகத்தைத் திசைகளதிர முழக்கிவரச் சந்தோஷமிகு
தியினால் ஆண்பெண்வேற்றுமையின்றிக் கரங்களைக்கோ
த்துக்கொண்டு குலாசாரப்படிக்குக் கூத்தாடும் சம்பிரம
ங்களைச்செய்வித்தும் பின்பு தேவராட்டியமுதலிய வன
தேவதைகளுக்கு பலிகொடுக்கயத்தனித்துபூசனைவழிபா
டுகளை முடிப்பித்து ஆட்டுகளின்முகத்தைக்கழுவிப் பச்
சரிசிமஞ்சளை யரைத்துப்பூசி வளைந்தகொம்புகளில் புஷ்
பமாலைசூடிச் சந்நிதிமுன்னிடத்தி வாளினாற்கண்டித்து
ம் கோழிகளைச்சுற்றிவிட்டும் இவ்விதபூசனைகள் முற்றிய
வுடன் வெற்றிவேலாயுதபாணிக்குரிய சிறப்புகளைக்கோடி
த்துத் தேவமருள்கொண் டிருக்கிறவன் வேலைக்கரத்திற்
றூக்கி முன்செல்லவும் மற்றையர் ஆவேசங்களுடன்குறி
கள்சொல்லிக்கூத்தாடும் உற்சவங்களைமுடித்து இவ்வித
ங்களிற் சகலசிறப்புகளையும்செய்வித்து வேடருடன் அர
சன்களித்துத் தம்மினத்தவருக்கு விருந்திட்டு சுபங்களை
க்கொண்டாடிவருகையில் அருந்ததியையொத்த கற்புத்
தன்மைபொருந்திய வேடராஜன் தேவியானவள் அரிதிற்
கிடைத்த பெண்குழந்தையை முழுக்காட்டி நெற்றியில்
திருநீறணிந்து நீலப்பொட்டுமிட்டு என்தாய்அலசினளெ
னப் பரிவாய்யானைத்தந்தங்களி னூற்கால்கள் சட்டங்களை
ச்செய்து புலிகரடிநகங்களை அதனிடைகளில் வரிசைப்ப
டப்பதித்து முத்துக்கோவைகள் பலகறைத் தாழ்வடங்க
ள் சிரோரத்தினமாலைகளை நாற்புறங்களினுந்தொங்கவிட்
டு பொன்னையொப்பவிளங்கும் கண்களையுடைய மயிலின
து தோகைகளினால் அலங்காரமாகச்சோடித்திருக்குந்தி
ணையைமுற்றினும் சூழ்வரக்காட்டிப் புலித்தோலைப்பாய
லாகவிரித்திருக்கும் பூந்தொட்டிலினிடத்திற்சேர்த்துமெ
ல்லவசைத்து என்கண்மணியே பெண்கலிதீர்க்கவந்தபெ
ருமாட்டியே குலதெய்வமே என்னைப்பெற்றதாயேஉறங்
குறங்கெனத்தாலாட்டியும் வேடர்மரபுக்குரிய பாட்டுக
ளைச் சொல்லியும் லோகநாயகியை நித்திரைசெய்வித்தன
ள், சவுனகாதியிருஷிகளே அந்தவேடர் பெருமான்தேவி
யினது பாக்கியத்தை என்னவெனச்சொல்லுவேன் தேவ
தேவோத்தமனாகிய பாலசுப்பிரமணியக்கடவுளுக்கு மன
துக்கினிய தேவியாகவிருக்கின்ற லோகநாயகியைப் புத்தி
ரிபாவமாகக்கொண்டு அன்புடன்கரங்களிலேந்தியும் மா
ர்பிலணைத்தும் அமுதத்தைக்கொடுத்தும் தோளிலேந்தி
யும் அவன்பெருமைகளைக்கொண்டாடிலாலிகளைப்பாடி
யும் இவ்விதங்களிற்சகலசீருடனும் போற்றப்பெற்றமை
யால் அந்தவேடச்சிக்குக்கிடைக்கவிருக்கின்றபேற்றையா
வராற்கணித்துப் பேசக்கூடும் அத்தருணத்தில் தங்களி
றைவனுக்குப் பெண்ணரசிகிடைத்தன ளென்னுஞ்சேதி
முற்றினும்பரவக்கேட்டவுடன் பற்களுதிர்ந்து உதடுதொ
ங்கி நாத்தளர்ந்து தலைநடுக் குற்றுமயிர் நரையைப்போ
லவெளுத்து புருவஞ்சரிந்து முகந்திரைந்து சதைகரைந்
து தோல்தொங்கியாட முதுகுவளைந்து கோலையூன்றித்த
ள்ளாடிநடக்கும்பருவமுடையநாற்றெட்டுவயதுசென்றகி
ழவேடுவச்சிகள் கூட்டங்கூட்டமாய்வந்துசூழ்ந்துபெண்
குழந்தையைப்பார்த்து மனமகிழ்ச்சியுடன்தளர்ந்தவசன
ங்களினால் இதனைச்சொல்வதாயினர்,

இப்புத்திரியினது லட்சணங்களைப் பார்க்குமிடத்தில்
அற்புதமாகவிருக்கின்றது தேவஅம்சையைக் காட்டுகின்
றதால் நம்மனைவருக்குமிறைவியாவாள் சகலசவுக்கியங்க
ளையும் அனுபவித்து மனவெழுச்சியுட னிருப்பாள் இத
ற்கையமில்லை யெனப்பேசிக் குழந்தைதாடைகளை யிருக
ரங்களினாலுந்தடவிக்கொடுத்துதிருஷ்டிபரிகாரமாகத்தங்
கள் கன்னங்களில் விரல்களை நெட்டமிட்டுத் தீர்க்காயசா
ய் எத்தேசகாலமும் சுமங்கலியாய் கைகால்களுக்கு நோ
யில்லாமற் குறைவற்றசெல்வியாய் வாழக்கடவளெனப்ப
லஆசீர்வாதங்களைச்சொல்லித் தொட்டிலிற்கிடத்தி வேட
ராஜன் மனைவியைப்போற்றித்தாயேயிந்தக்குழந்தையை
வள்ளிப்பாத்தியிற்கண்டெடுத்து வந்தபடியா லிவளைவள்
ளியென்றழைபுங்கோளென்று காரணப்பெயராயிட்டுஅ
க்காலத்தில்சேர்ந்தவேடமங்கைய ரனைவரும்சேர்த்து வா
ழ்த்தெடுத்துச் சுபங்களைகொண்டாடினர். அத்திருநா
மத்தைக் கேட்டவுடன் வேடராஜனும்அரசியும்மனச்செ
ருக்குடன் அதிகசந்தோஷத்தைப்பெற்றவர்களாய் வந்தவ
ர்களுக்குத் தேன்-தினைமாவு-பண்டு-பலாதிகள்முதலியஉ
ணவைத்தந்து பலவுபசாரங்களைச்செய்துகளியாடல்களை
க்கொண்டாடினவர்களாய்உலகமாதாவைவேடருக்கதிபன்
தன்பெண்ணாகவெண்ணி மிகுந்தபிரியத்துடன் எத்தேச
காலத்திலும் அருகிலிருந்துபாராட்டி வருகின்றமுன்னி
லையில்குறிஞ்சிநிலத்துக்குஅதிதேவதையாகவிருக்கும்சுப்
பிரமணியதேவருக்குத்தேவியாகவிருக்கின்றவள்மலைகள்
சூழ்ந்தகுறிஞ்சிநிலத்துக்கதிபனாகவிருக்கின்ற வேடராஜ
ன்மகளாய்த்தன்பிதாவானவர்முன்னம்ஆயர்பாடியில்வாச
மாயிருந்ததைப்போலப்புற்களினாற்செய்திருக்கும் சிறுகு
டிசையிற்சேர்ந்துவளர்வதாயினள். இவ்விதமாகத்திரிமூர்
த்திகளுமொருமூர்த்தியாகவிளங்கும்ஸ்ரீமகாவிஷ்ணுபெற்
றருளிய தவவமுதத்தைத் தேவதேவோத்தமன்திருத்தே
வியை மிருகங்கள் வாசஞ்செய்யும் கானகத்திலிருக்கின்ற
வேடர் தமதுரிமைமகளாகக்கொண்டு போற்றிவருகின்ற
தால் அவர்கள் முன்னோருடன் செய்திருக்கின்ற தவவிர
தங்களை யாவரா லளந்துசொல்லக்கூடும் பின்பு எமதன்
னையானவள் பருவக்கிரமமாய் சப்பாணிகொட்டியும் தவ
ழ்ந்தும் தளர்நடைகொண்டும் தோழிகளுடன்கலந்துவே
ங்கைமரங்கள் தழைத்துக்குளிர்ந்த நிழலைப்பரப்பியிருக்
கும் முத்தங்களினுலவிவிளையாடியும் முச்சிலில் மணிக
ளைவாரிக்கொழித்தும் முத்துகளினாற் சிற்றில்செய்தும்நி
லாச்சோறுசமைத்தும் மணிகளைக்கொண்டு அம்மானை
யாடியும் சிறுதேருருட்டியும் அம்புலியைக்கூவியும்புஷ்
பங்களைப்பறித்துச் செண்டுகள்தொடுத்துப் பந்தாடியும்
மாலைகள்செய்துசூடியும் இவ்விதவினோதத் திருவிளையா
டல்களைநடத்திப் பூர்வக்கியானஞ் சற்றுமில்லாதவளாய்
த் தாய்ப்பலவிதவுபசாரங்களைச்செய்துவரும்படிக்கு வள
ர்கலைச்சந்திரனைப்போலத் தினமொருமேனியாய்வளர்ந்து
குமரன் புயாசலங்களைத்தழுவுவதற்கு இந்தப்பருவந்தகு
ம்தகுமெனக் கொண்டாடும்படிக்குத் தேமல்பரந்துதென்
னங்குரும்பைப்போலக்காட்டுங் கொங்கைகள் வெளிப்ப
டையாகக்காட்ட இராஜபுத்திரிக்குப் பன்னிரண்டுவயதுநி
றைந்து பாலகுமாரத்தியாகக்காணும் தருணத்தைத்தாய்

தந்தையர்தெரிந்து களித்தவர்களாய்த் தங்கள் குலமுறையைப் பாராட்டிமான்வயிற்றுதித்த வள்ளிநாயகியாரை நீண்டகதிர்களைவிரித்துப் பசுமையாகவிருக்கும் தினைப்புனத்திற்கிளிகளாதிய பறவைகளிறங்கிக் கதிர்களைக்கவரவொட்டாமற் போற்றியிருக்கும்படிவைக்கநினைந்து நீண்டவில்லையும் மின்னலையொப்பவிளங்கும் கூரியஅலகையுடைய பாணங்களையும் இடைவிடாமற் கரங்களிற்கொண்டிருக்கும் வேடராஜன்கோடிசூரியப்பிரகாசம் பொருந்திய வெற்றிவேலாயுதமூர்த்தி மனதுக்கினியதிருத்தேவியாகிய தெள்ளமுதைக்கூட்டிக்கொண்டுபோய்க் கொல்லைக்குமத்தியிற் பருத்தமரங்களைநாட்டித் தழைகளையும் கொம்புகளையும்பரப்பிப் போட்டிருக்கின்ற பரணினிடத்திலேற்றித்தாயே பக்கங்களிலிருக்கின்ற புனங்களில் வேடகன்னியர் பாதுகாத்துவருவதைப்போல விந்தக்கவணைக்கரத்திற்கொண்டு மணிகளைவைத்தெறிந்து பட்சிகளைத்துரத்திக்காவல்செய்து வரக்கடவாயென்ச் சொல்லிவைத்தனன் அதைப்பார்க்கு மிடத்திற் கிடைத்தற்கரிய சிரோரத்தினத்தைக் காட்டிற்சஞ்சரிக்கும் பறவைகள்எளிதிற்கண்டெடுத்துவந்துக் குஞ்சுகள்அதன்பிரகாசத்தைக்கண்டு களித்திருக்கும்படிக்குப் புல்லியகூடுகளிற் பொருத்திவைப்பதைப்போலவிருந்தது.

கேட்டீர்களோ! சவுனகாதியிருஷிகளே? பிதாவின் கட்டளையின்படிக்கு வள்ளிநாயகியாரும் அதிகசந்தோஷத்துடன் மற்றவேடர்பாவையாருடன் நீண்டிருக்கும் யானைத்தந்தங்களைக் கால்களாகச்சேர்த்து வயிரப்பழுதுகள் மாட்டியிருக்கின்ற ஏணியின்மூலமாகத் திருவடிகளை மெல்லமெல்லவைத்தேறி வீற்றிருந்து பெண்கள்சிகாமணியானவள் கணவனைக்கரத்திற்கொண்டு நீலோற்பலத்தைப்பழித்து சேற்கண்டையைப்போலப்பிறழும் விழிகளைத் தினைப்புனமுற்றினுஞ்சுழற்றிப்பார்த்துக் காவல்கொண்டிருக்குமுன்னிலையில் நேர்ந்தசம்பவங்களையுஞ் சொல்லக்கேட்பீராக கதிர்கள்முற்றும் பருவமாதலாற்பலதிசையினுமிருந்து பசியசிறகையுடையகிள்ளைகள்-அன்றிப்பட்சிகள்-மாடப்புருக்கள்முதலியபட்சிசாலங்களும், மான்-பன்றி-கடமையாதியமிருகங்களும் வள்ளிமலையைச் சூழ்வரத்தழைத்தோங்கி விளைந்திருக்கும் தினைப்புனங்களில் உணவைவிரும்பிப் புறநிலங்களிலிருப்பவையனைத்தும்திரட்சியாகவந்து சேர்ந்ததுஅவற்றின்பெருக்கத்தை யாவவராலுங் கணித்துப்பேசக்கூடுவதோ அக்காலத்திற்கட்டுக்கள்பூண்டு நீண்டிருக்கும்விற்களைக்கரங்களிற் பற்றியிருக்கும் வேடர்களிட்ட பரணிடத்தில் எம்பெருமாட்டியாகிய வள்ளியம்மையானவள் கவணிற்கட்டியிருக்குங் கயிற்றினொன்றை விரலில்முடிந்துகொண்டு கதிர்கள்மலிந்து ஜொவென்னும்இரைச்சலைக்காட்டி அசைந்திருக்கும் தினைப்புனத்தினருகில் மான்மரைமுதலிய மிருகங்கள் நெருங்கவொட்டாமலும் கிள்ளைகளாதிய பரவைக்கூட்டங்களிறங்கவொட்டாமலும் கூகாவெனக் கூவிக்கறுத்துவேலையொப்பக்காதளவுமோடிமைதிமிர்ந்து விளங்கும்நேத்திரங்களைவாய்ந்த வள்ளியம்மையானவள் நவமணியினங்களைக் கற்களுக்குமாருகச்சேர்த்துக்கொண்டு கவணிடத்திட்டுக் கிறுகிறெனச்சுழற்றி வீசியோட்டியவிதங்களை அடியேன் கிருதார்த்தனுதற்பொருட்டு விரித்துச்சொல்லக்கேட்பீராக.

செந்தாமரைமலரைப்பழித்துவிளங்கும் அழகியதிருக்கரங்களிற்பற்றியகவணை ஒவ்வொருதரம்சுழற்றிப் பூவைகளை மாடப்புருக்கள் ஆலோலமெனக்கூவி மணிகளைக்கடாவியோட்டியும் அழகியகலாபத்தையுடைய மயில்காள் மதுரமாகிய வார்த்தைகளைக்கொஞ்சும்பசியகிளிகாள், ஆலோலமென்றதட்டியும் செவிகளுக்கினிமைபெறக்கூவும் கரியகுயில்காள், ஆலோலமெனத்துரத்தியும் சிவந்தகொண்டையைத்பெற்றிருக்கின்ற சேவல்காள்; ஆலோலமெனப்பேசியும் நீண்டகொம்புகளையுடைய மான்காள். பருத்ததேகத்தைப்பெற்ற கடமைகாள், கூரியதந்தங்களைப்படைத்தபன்றிகாள் ஆலோலமென்றுருத்துக் கற்களைக்கடாவித்துரத்தியும் இவ்விதங்களாகப் பட்சிக்கூட்டங்களையும் மிருகப்பெருக்கையும் அடிக்கடிகவணைச்சுழற்றிப்பட்டால்படாதுமென மணிகளைவீசித்திசைகெட்டோடப் பறக்கடித்து வள்ளிநாயகியார் தினைப்புனத்தை ஏமாறுமற் காவல்புரிந்து பிதாவானவன் வேளைவேளைக்குக்கொண்டுவந்து கொடுக்கும்தேன்தினைமா கச்சாயவகைகள் பண்டுபலாதிகளைத் திருப்தியாகவுண்டு மனவெழுச்சியுடனிருக்கின்றகாலையில்பாலசுப்பிரமணியதேவர்முன்னம்அவளுக்கனுக்கிரகித்திருக்கின்றபடிக்குக் காட்சிதந்து ஆண்டிரட்சிக்கும்படிக்குத் திருவுளத்திற்கொண்டவராய்க் கந்தமாதனவரையில் தெய்வயானையம்மையுடன் குலவியிருந்தவர் அத்தலத்தினும் முன்போலவேகாட்டி வெளிப்பட்டுத்தனியனுய்வந்து மூங்கிலடவிநெருங்கி யொலித்திருக்கும்சாரலையுடைய திருத்தணிகைவரையைச்சேர்ந்து காலம்பார்த்திருக்கும்போது இசைநூலைப்பூரணமாகத்தேர்ந்து அதன்மதுரத்தைத் துணிப்பாகக்கிரகித்துமனவெழுச்சியுடன் சரிகமபதநிசவென்னு மிசைக்கிரமப்படிக்குயாழினைமீட்டிச் சிவபிரான்புகழ்த்திறங்களைப்பாடிப் பேரானந்தத்தையனுபவித்து உலகமெங்கணுமுலவிவரும் தவசிரேஷ்டராகிய நாரதரிஷி தெய்வலோகத்தைக்கடந்து கருங்கடல்சூழ்ந்த பூமண்டலத்தில்வந்து மகத்துவமுள்ளசிறந்த நதிகளிருக்குமிடமெங்கணுந் தேடிப்போய்ஸ்நானம்பண்ணிப் பரமேஸ்வரர் பார்ப்பதியாருடன்களித்தெழுந்தருளியிருக்கின்ற தெய்வீகத்தலங்களிற் போய்ப்பாடியாடிப் புகழ்ந்துபோற்றித்தரிசித்து ஆனந்தபரவசனுய்ப்பூவலம்வருமுன்னிலையில் வளங்களனைத்தும் பெருத்தோங்கிச்சோலைகள் சுனைகள்மலிந்து மங்களகரமாகவிருக்கும் வள்ளிமலைக்கருகில் வருகின்றசமயத்தில் நீண்டகதிர்களைவிரித்து இரைச்சலிட்டுஎங்கணும்பரந்திருக்கும் தினைப்புனங்களினொன்றில் பரணினிடத்திருந்து கவணைக்கரத்திற்றுங்கி ஆயாலோட்டிக்காத்திருக்கின்ற வேடராஜபுத்திரியைத் தரிசித்தமாத்திரத்தில் உள்ளமுமென்புமுருகத்தக்கதாகப் பத்திவிளங்கி மனப்பூரிப்புடன்கரங்களைக்கூப்பித்தொழுது அற்புதத்தையடைந்தவனுய் எமதன்னையினது மங்களகரமாகிய ரூபலாவண்ணியத்தின் பெருமையையும் குணதிசயங்களையும் மனதினுலளவிட்டும்புகழ்ந்னைப்பினுமுடிவதோ இத்தகைய எம்பிராட்டியானவள்முற்பிறப்பில் எமதிறைவனுகிய பாலசுப்பிரமணியதேவருக்குபாரியாதற்பொருட்டு அரியதவங்களைச்செய்து அவனருளையும் பெற்றிருப்பதால் இந்தமாதாவினது பெருமிதங்களைச் சிவகுமாரனுக்குத் தெரிவித்துக் கவலையிற்படுத்திக் கூட்டுறவாக்குவது என்போல்களுக்குமுரும்தவமுமாமெனநினைந்து வள்ளிநாயகியாரை மெய்ப்பத்தியு

டன் போற்றிவாழ்த்தி அத்தலத்தைக்கடந்து விரைந்து
போய் ஒருமு ர்த்தகாலத்திற்றினந்தோறும் மூன்றுசெ
ங்கழுநீர்மலர்களைத்தரும் பெருமையினையுடைய சரவண
ப்பொய்கைவிளங்கும் திருத்தணிகாசலத்தின்மீதிற்சேர்ந்
து அத்தலத்திலிருக்கும் திருவாலயத்தினெழுந்தருளியி
ருக்கின்ற பன்னிருபுயாசலங்களைப்படைத்த கந்தசுவாமி
யைவிழிகள்களிக்கக்கண்டு சன்னிதானத்தைச்சேர்ந்துமு
ம்முறைவலம்வந்து தீர்க்கதண்டன் சமர்ப்பித்தெழுந்து
வேதவாக்கியங்களினாற்றுதித்துப் பேரானந்தவாரியில்மூ
ழ்கிக்களித்தவராய்இதனைவிண்ணப்பஞ் செய்வதாயினர்.

குமாரக்கடவுளே யிதற்குச்சமீபத்தி லொருமலையிருக்
கின்றது அதன்சாரலில்விளங்கும் வனத்திற்சிவமுனியெ
ன்னுந் தவசிரேஷ்டர் மவுனவிரதத்தைப்பூண்டு யோக
சாதனையைச் செய்திருக்கின்றபோது பெட்டைமானென்
று அதிகவடிவுட னெதிரினுலவக்கண்டு காமாந்தகாரனா
ய்க்களித்துப்பார்க்க அவர்நோக்கம்பட்டமாத்திரத்தில் க
ருக்கொண்டு சிலதினங்களுக்குப்பின்பு பெண்குழந்தை
யைப்பெற்றுத் தன்னினமில்லாதபடியால் மானுனதுசிசு
வைத்தனிமையில்விட்டோடிப்போயினது உடனேவேட
ராஜனெடுத்து வளர்த்துப்போற்ற வள்ளியம்மையென்னு
ம் திருநாமத்தைக்கொண்டுபன்னிரண்டுவயது பாலகுமா
ரத்தியாய் வள்ளிமலைப்பக்கங்களிலிருக்கும் தினைப்புனத்
தைக் காவல்கொண்டு பரணிலிருக்கக்கண்டுவந்தேன், கா
ங்கேயனே அந்தமாதாவின் சுந்தரவடிவின்பெருக்கையும்
குணாதிசயங்களையும் மற்றசிறப்புகளையும் பார்க்குமிடத்
திற்செந்தாமரைமலர்வாசியாகிய ஸ்ரீமகாலட்சுமிக்குமேற்
பட்டவனப்பைப் பெற்றிருப்பதாகக் காணுகின்றது இப்
போது நான்விண்ணப்பஞ்செய்தகாரணத்திற்சற்றும்பிச
கிராது யதார்த்தமாகநம்பத்தக்கது, தேவரீரெழுந்தருளி
திஷ்டாந்திரமாகக்கண்டு களிக்கலாகும் மேலும் உலோக
நாயகியாகிய அப்பெண்ணமுதானவள்முதல்ஸ்ரீபகவானா
கியமகாவிஷ்ணுவினிடத்துற்பத்தியாய்தேவரீரதுதேசோ
மயமாகிய கோலத்தினிடத்திற்காமுற்றுப் பன்னிருபுயா
சலங்களையும் சொர்னக்கலசத்தை யொப்பவிளங்கும்தன
பாரங்களொன்றுபடத்தழுவி யின்புறும்படிக்குநினைந்து
அளவற்றகாலம் கடினமாகிய தவவிரதங்களைச்செய்திரு
ந்தகாலையில் அப்பொழுது தாமெழுந்தருளிக்கடாட்சித்
தவாறே யிக்காலத்தினுந் திருவுளத்திரங்கித் தடுத்தாண்
டிரட்சிக்கவேண்டுமென்று நாரதரிஷியானவர்பரிவாய்வே
ண்டுகின்றதைப் பாலசுப்பிரமணியதேவர் நகைமுகராகக்
கேட்டருளித் தவசிரேஷ்டனே நம்மிடத்திற் பிரிதிபத்
தியுடன்தெரிவித்த சந்தோஷவார்த்தைகளுக்கு மகிழ்ந்த
னம்மேலும்நன்மையாகவும் நடத்தவேண்டிய காரணமா
கவுமிருப்பதால் உன்மனவிருப்பத்தின்படி அத்தலத்தை
ச்சேர்ந்து வள்ளியைவசப்படுத்திக்கொண்டுவரக் கடவோ
மெனத்திருவாய்மலர்ந்தவராய்நாரதரிஷிக்குச்செலவுகொ
டுத்தனுப்பிவிட்டு அக்கன்னிகையினிடத்தில்மையல்கொ
ண்டு காமக்கவலையிற்பட்டு மனமுருகிச்சற்றுந்தாழ்க்கச்
சம்மதமில்லாமல் வில்லையும்அம்பையும் இடைவிடாமற்
கரங்களிற்கொண்டு வேட்டையாடித்திரியும் வேடராஜபு
த்திரியானவள் பிழைத்தற்பொருட்டுத் திருவுளமிரங்கிச்
சுயஞ்சோதிமயமாகிய தமதற்புதக்கோலத்தைமறைத்துக்
காமக்குரோதலோபமத மாற்சரியமென்னும் கவலையிற்ப
ட்டுப் பஞ்சேந்திரியச்சேட்டையின் வயத்தராய்மயங்கியு

முழுவதும் மானிடவேடத்தைத்தாங்கிவேதங்கள்பூசித்துக்கா
ண்பரியதிருவடிகளிற் கலீல்கலீலெனச் சத்திக்கும் வீரக
ண்டாமணியைக்கட்டிச் சல்லடத்தைத் தரித்துக் கச்சை
யைச்சுந்தரமுள்ளவிடையினிடத்திறுக்கிப் பரிமளமிகுத்
தபுஷ்பமாலையைத் தோள்களினிடத்திற் புரளும்படிக்கு
ச்சூடி நீண்டதனுசையும் கணைகளையுங் கரங்களிற்கொ
ண்டு காளமேகத்தையொப்பக் கறுத்திருக்கும் சிகையை
ச்சேர்த்துக் கொண்டையாகமுடிந்து அதனைச்சூழ்வரப்
பலகறைத்தாழ்வடத்தைச்சுற்றித் திருப்பாதங்களிற் செ
ருப்பணிந்து இவ்விதமாக வேடக்கோலத்தைப்பெற்றவ
ராய்க் கிளியையொப்ப ஹிங்கிதவார்த்தைகளையாடும் வே
டமங்கையினிடத்துண்டாயிருக்கின்றமோகமானதுநிறை
யையழித்து மனதைப்பிடித்துத்தள்ள அதன்வயப்பட்டு
எமதிறைவனாகிய சிவசுப்பிரமணியதேவர்திருத்தணிகை
வெற்பைக்கடந்து செந்தாமரைமலரைப்பழித்து விளங்கு
ம்அழகியதிருவடிகள் பரல்கள்பரந்த பூமியிற்பதிந்து க
ன்றிச்சிவந்து காட்டும்படிக்கு வழியைத்தாண்டி வள்ளிம
லைக்குச் சமீபத்தில்வந்து மண்டலமெங்கணும்புகழும்பெ
ருமையினையுடைய அப்பருவதத்தின்மேல் மெல்லமெல்
லவேறிக்கதிர்கள்மலிந்து கண்டவர்கள் விழிகளுக்கலங்கா
ரமாக ஓசையைக்காட்டி அசைந்திருக்கும் தினைப்புனத்
திற்காட்டும் பரணின்மீதில்நின்று கவணினிடத்தில்மணி
களைவைத்து கரத்திற்கொண்டு வேலையொப்பக்காதளவு
மோடி செவ்வரிபரந்து சேற்கண்டையைப்போலப் பிற
ழ்ந்திருக்கும் விழிகளை நாலுமூலைகளினும்பரப்பிக் கிள்
ளையாதியபட்சிக்கூட்டங்களையும் மான்மரைமுதலியமிரு
கங்களையும் நெருங்கவொட்டாமல் அதட்டிவீசிப்பாதுகா
த்திருக்கும் செல்வத்தைஎம்பெருமாட்டியைத்தெள்ளமு
தைலோககாரணியைத்தன்மனதுக்கினிய திருத்தேவியை
ஒருவன் வறுமையுற்றகாலத்திற் றுன்முன்னம்வைத்துக்
காணாதிருந்த பழம்பொருள்கிடைத்துக் களிப்பவனைப்
போல விழிகள்களிக்கும்படிக்கெதிர்ந்து குடத்தில்நின்
றொழுகுவதைநிகர்த்துத் தேனைப்பெருக்கிப்பொற்சன்ன
ங்களுக்குச் சமமாய் மகரந்தங்களைப் பொருந்திச் சகத்
திரவிதழ்களைவிரித்தலரும் பொற்றாமரைப் பீடத்தளாகி
ய ஸ்ரீமகாலட்சுமியைப்போலத்தழைத்தோங்கிக் குளிர்ந்
த ழலைப்பரப்பியிருக்கும் சோலைகள் காவுகள்தோப்புக
ள்பலவகைப்புட்பங்களைவிரித்து மதுரமிகுத்தநீர்நிறைந்
திருக்கும் சுனைகள்மடுக்கள்ஓடைகள்மிகுதியாய்வளங்கள்
பெருத்திருக்கும்வள்ளிவனமேற்புறத்திருந்து பிதாவின்
வாக்கியப்படிக்கு வேறொருஞாபகமில்லாமல்நோக்கிச் சி
த்தத்தைப்புறம்பிற் செலுத்தாமல் ஏகமனதாய்ப்பயிரை
ப்போற்றிவரும் மேகத்தையொத்தகறுத்தகூந்தலையும்மி
ன்னலைப்பழித்துவிளங்கும் அழகியதிருமேனியையும் ம
ற்றகுணசம்பத்துகளையும் பெற்றிருக்கின்ற வேடர்பெரு
மான் தவக்கொழுந்தைக் கடப்பமலர்மாலை மணம்நீங்கா
தபன்னிருபுயாசலங்களையுடைய பாலசுப்பிரமணியக்கட
வுள்நெருங்கி எதிர்க்காட்சியாகக் கண்டவுடன் அனலிற்ப
ட்ட மெழுகைப்போல மனங்கரைந்து விரகாக்கினிமேலி
ட்டு உள்ளத்தையும் உடலையும் தகித்துவாட்டச் சோர்ந்
து வெம்பித் தாபரித்திருக்கக் கூடாமையால் தினைப்புன
த்தின் மத்தியிலிருக்கும் பரணுக்கருகில் மெல்லமெல்ல
நெருங்கி அம்மைமீதில்விழிகளைச்செலுத்திப்பற்கள்விள
ங்கநகைமுகராய்க் கூரியவேலைப்போலவிளங்கிக்காதளவு

மோடிச்செவ்வரிபரந்துமைதிமிர்ந்துபாலையொப்பவெளுத்து விஷத்தினுக்கறுத்துமாரன் பார்வையைப்பழித்தநேத்திரங்களைப் படைத்திருக்கும் பெண்கள்சிகாமணியேமனமிரங்கினான்சொல்லவிருக்கின்றநீதிகளைக்கேட்பையாக.

உமது சுந்தரவடிவையும் நிலையையுங்கண்ட மாத்திரத்தில் நமக்கு மனந்தாளவில்லை செல்வப் பெருக்கையுடைய பொன்னகரத்தினும் சமுத்திரஞ்சூழ்ந்த பூமண்டலப்பரப்பினும் ஆதிசேஷனை யொத்தவன் வாழும்பாதலத்தினும் அதிக சுந்தரவதிகளாகிய பெண்களனைவருக்கும் நாயகமாகப் புகழவல்ல சர்வமங்களரூபலாவண்ணியமுள்ள உம்மையொத்தவரைக் கண்டபேரண்டம்சரபசார்த்தூலம், சிங்கம், புலி, யானைமுதலிய, கொடியமிருகங்கள்சஞ்சரிக்கின்ற இந்தமலையின்மீதிற் றழைத்துக்கதிர்களை விரித்திருக்கும் தினைப்பனத்தைக்காக்கும் படிக்கு யாதொருஉதவியு மில்லாமல் தனிமையில் வைத்துப்போன வேடருக்குச் சிருஷ்டிகர்த்தனாகிய பிரமன் உமது நாணயத்தையும் பெருமைகளையும் பகுத்தறிந்து அதற் கடுத்த காரணங்களை நடத்தத்தக்க விவேகத்தையும் பரிவையுங் கிடைக்கச்செய்தவனல்லன் ஐயையோ விதைப்பார்க்குமிடத்தில் நீதியுமன்று அவலமாகவு மிருக்கின்றது அதுநிற்ககறுத்து நீண்டிருக்கும் கூந்தலைவாய்ந்தபெண்ணரசியேதொலைதூரத்தி லிருந்து வந்தயான் உமதுமங்களகரமாகிய தோற்றத்தைஎதிர்ப்பட்ட மாத்திரத்தில் இத்தலத்தைக் கடந்தப்புறம்போகச் சம்மதமில்லாமல் மதிமயங்கி வருந்துகின்ற நமது மனங்களிக்கத் தக்கதாகப் பவளத்தையொத்த வாயைத்திறந்து அருள் நோக்கத்தைச் செலுத்திஉமதுமங்களகரமாகிய பெயரைச்சொல்லும் அதற்குச் சம்மதமில்லாவிடில் நீர்வாசஞ்செய்யும் சிறந்தபதி யின்னதெனப் பேசும் அதுவும்சம்மதமில்லாமற் போமாயின்ஒப்பற்றதமது சிறூருக்குப் போகும் மார்க்கத்தை யாவதுதயைசெய்து கோவையைப்பழித்து விளங்கும் திருவாயை விண்டு செவிகளுக்கமுததாரையாகப் பூரிக்கவேண்டும் ஓபெண்கள்நாயகமே என்கேள்விகளைக் காதுகொடுத்து வினவிமறுமொழி யாடமனமிரங்கீராயின் யானென்னசெய்வேன் இவைநிற்க என்மனமும் தேகமும் பூரித்துகளிக்கும் படிக்கு நகைமுகத்தை யாயினுங் காட்டவொண்ணாதோ அல்லது சேற்கெண்டையைப் போலப் பிறழும் திருநோக்கத்தைக் குளிர்ச்சியாகச் செலுத்தவேண்டும் உமது தரிசனையைப்பெற்ற மாத்திரத்தில் மனநிலைகலங்கிப்பொறிகள்மயங்கிக் காமக்கவலையிற் பட்டுழலும் தமியேன்களித்துப்பிழைக்கும் மார்க்கமொன்றைக் காட்டாமற் சற்றும்என்னிடத் தன்பைச் செலுத்தாமலும் இரக்கமற்று இவ்வாறேயிருப்பையாகில் சத்தியமாகச்சொல்வேன் எக்காலத்தினுந்தீராத பழிபாதகம் உம்மைச் சேருவதற்கையமில்லை பராமுகமாயிராமற் றுரிதமா யிதற்கொரு வகைதேட வேண்டுமென்று உலையிற்பட்டமெழுகைப்போல மனங்கரைந்து வேடப்பாவையின் மேற்கொண்ட மையல் வலையிலகப்பட்டுக்கொண்டு திகைப்பவனையொப்பப் பற்களைக்காட்டி முகமலர்ச்சியுடன் வருந்திக் கெஞ்சிக் கெஞ்சிக் கரங்களைநீட்டிநீட்டிக் குறையிரந்து நின்றனன்.

கேட்டீர்களோ சவுனகாதிதவத்தரோ, அக்காலத்திற் பாலசுப்பிரமணியக் கடவுள் நடித்த திருவிளையாடல்களைப் பார்க்குமிடத்தில் சோடசகலைகளையுடைய சந்திரன்விளக்கமானது அலைகள் மிகுத்த நீர்ப்பெருக்குதோற்றும்போது கலங்கிக்காட்டுமாறுபோலவிளங்குகின்றதுஇவ்விதமாகக் குமாரதேவர் ஆதிகேசவன் திருக்குமரி யெதிரில்நின்று இங்கித வார்த்தைகளைப் பேசி மையற் பெருக்கைக்காட்டிப் பலபலவழக்குகளைக்குறித்து வாதாடிக்கொண்டிருக்கின்ற காலையில் வள்ளியம்மைக்குத் தினந்தோறுங்காலங்களில் உணவுகொண்டுவந்து கொடுத்துப்போகும்வழக்கப்படிக்கு வேடராஜன் தன்பரிசனர் பன்றி மான்- கரடி- யானைமுதலிய மிருகங்கள்பட்சிசாலங்கள்பயந்தோடியொளிப்பதாகக் கொம்புகளையூதியும் பறைகளைகணகணென்றறைந்து கூக்குரலிட்டும் தொடர்ந்து வரத்தக்கதாகத்தன் சிறூரைக்கடந்து தினைப்புனத்தை நோக்கிவருவதைக் குமாரசுவாமியார் தெரிந்தவுடன் அவர்களுக்குத்தமது நிஜதரிசனையைக்காட்டாமல் மறைத்து வேதங்கள்வேராகவும் சிவாகமங்கள் அடித்துண்டமாகவும் தருமசாத்திரம் கலைக்கியானங்களாதியாகக் கிளைகள்-இலைகள்-தளிர்-மலர்-பிஞ்சு-காய்-கனியாகவும் இத்தகையசிறப்புகளைப் பெற்றிருக்கும் வேங்கைமரக்கோலங்கொண்டு குளிர்ந்த நிழலைப் பரப்பிக் கந்தமூர்த்தி நின்றபோது வேடராஜனும் அதிக சந்தோஷத்துடன் தீவரமாய்தன்புத்திரி காவல்கொண்டிருக்கும் கொல்லையைச் சேர்ந்து தன்குலம் நீடூழிகாலம்புகழ்பெற்றோங்கும் படிக்கு எழுந்தருளியிருக்கும் பதிவிருதாசிரோமணியைக்கண்டு தாயேமிகவும்பசித்திருக்கின்றனையோ வெனப் பாராட்டித் தான்பதம்படுத்திக்கொண்டுவந்த வள்ளிக்கிழங்கு தினைமாதேன்திரட்டுப்பால் மதுரமிகுத்த பழவகைகளாதியான தின்பண்டங்களைக்கொடுத்துத் தினைப்புனத்தைப் பதலமாகப் போற்றி யிருக்கும்படிக்குச் சொல்லித்திரும்புமுன்னிலையில் பக்கத்திற்றழைத்தோங்கி நிற்கும் வேங்கையைக்கண்டவுடன் அதிசயித்திருக்கின்ற காலையில் அவனுடன்வந்தகொலைத்தொழிலையுடைய கடினசித்தராகிய வேடரும் பார்த்துப் பிரமித்தவர்களாய் இதுபரியந்தம் நாம்வரப்போக விருக்கின்றனம் இந்தமரத்தைக் கண்டதுகிடையாது நூதனமாகக் காட்டுகின்றதால் இதனாற் சிலதீங்குகள் நேரும்போலக்காணுகின்றது, ஆதலாற் சூரியகிரணங்களை யடக்கித் தழைத்திருக்கும் வேங்கைமரத்தையிந்த நிமிஷத்தில் முறித்தெறிவோம் வேருடன் பறித்துத்தள்ளுவோம் கோடாலியினாற் கரணையாடுவோம் துரிதமாய் எதைக்கொண்டாவதுஅதப்படுத்திப்போவது உத்தம மென்று பலபலவிதங்களாகப் பேசி மேலிடும் தியரைவிலக்கிஅரசன்தன்குமாரத்தியினது முகத்தைப்பார்த்து அம்மணீ பரிமளமிகுத்தபுஷ்பங்களை விரித்து வேங்கைமரமொன்றுபுதிதாய்இதோகாணுகின்றது இதுவருங் காரணமென்னேஉண்மையாகச்சொல்லக்கடவாயெனக்கேட்ட மாத்திரத்தில் அம்மைபயந்து அப்பனே யிந்தமரம்வந்த ஹேது எனக்கொன்றுந்தெரியாது மாயமாக விருக்கின்றது நேற்றைத்தினமில்லாதது அதிசயமாகத்தோற்ற விருக்கின்றதெனத் திருமேனியும் மனமும நடுங்கும்படிக்கு இதுதவிர எனக்குயாதுந்தெரியாதெனப் பேசியதைக்கேட்டுப்பிதாவானவன்பரிவாய்தாயே அச்சப்படவேண்டாம் நீதனிமையாக இவ்விடத்திலிருக்கிற படியால் அழகாய்ப் பூத்திருக்கும் வேங்கைமரமானது உனக்குமலர்களைப் பறித்துக் களித்துக்காலங்கழிக்க வுபயோகமாகவிருக்கும் ஆதலால் பயமில்லை கிளிகள் முதலான ஜந்துக்களைக் கிட்டவொட்டாமல் கியாபகமாய்

ப் பார்த்திருமெனக் கட்டளையிட்டுவேடர்களுடன் திரும்பித் தன்குறிச்சியைச் சேர்ந்திருந்தனன்.

இவ்விதமாக அவர்கள் மறைந்தவுடன் கொல்லைக்கருகில் வேங்கையுருக்கொண்டு நின்றசுப்பிரமணிய தேவர் அக்கோலத்தைமாற்றிப் பழையபடிக்குமன்மதனிலும் அதிகசுந்தரமுள்ள மானிடவடிவைத்தாங்கி வேடராஜபுத்திரிக்கெதிரில்நின்று காமக்கவலையிலகப்பட்டுவாடுகின்றவனைப்போலப் பலநடனங்களைக்காட்டி நகைமுகராய்க்கரியவளகபாரத்தையுடைய வள்ளிநாயகியாருக்குச் சமீபத்திற்போய் அவளிடத்திருக்கும் கிருபைப் பெருக்கினாலிதனைச் சொல்வதாயினர்;கோங்கரும்பையொப்பக்குவிந்துபொற்குடத்தைப்பழித்து விம்மிதந்ததும்பித் தேமல் பரந்திருக்கும் ஸ்தனபாரங்களைப் பெற்றிருக்கின்ற குறப்பாவாய் தயைசெய்து கேட்பையாக, உன்மங்களகரமாகிய வடிவின்பொலிவையும் குணாதிசயங்களையுங் கேள்விப்பட்டுவெகுதூரத்திலிருந்து மிகவும்வருந்தி உன்னைநாடி யிவ்விடம்வந்தேன் இனித்தேவரீர் செந்தாமரைமலரையொத்ததிருவடிகளல்லதுவேறுகதியில்லை எக்காலத்திலும்உம்மைப்பிரியவறியேன்சற்றுமிடைவிடாமற் கலந்து குலவியிருக்கவிரும்பினேன் மாவடுவைப்போலப் பரந்தோடியிருக்கும் விழிகளையுடைய பெண்ணமுதமே தீனனாகியயான்தம்மைவிட்டுப்போகவுந் துணியேனே அப்படிக்குச் செய்ய யத்தனப்படினும் மனமொருமித்துநிற்குமோ உடலைப்பிரிந்து உயிர்தாபரித்திருக்கவல்லதோ இக்காரணங்களைவிரித்துவிரித்துப்பேசவும்வேண்டுமோ மின்னலையொப்பக் காட்டிமறையும் மெல்லிய விடையையுடைய பேதாய் மைதீர்ந்து வேலைப்போலக்காட்டும் தேவரீர் கூரியகண்களின் சுழல்வலையிற்பட்டு வாடித்திகைக்கின்ற அடியேனுக்கு கிருபாநோக்கக்கடையையாவது காட்டாமல்தாழ்க்கலாமோ இதையன்றிப்பிழைக்குமார்க்கம்வேறுண்டோ இந்த அபாயகாலத்திற் சற்றுத்தயைசெய்து தமதுதிருக்கரத்திலணைந்து ஊசலாடுமிவ்வுயிரைக் காக்கக்கடவாய் நறுக்களடர்ந்திருக்கும்மலைச்சாரலில்வாழும் வேடமின்னே நீர்களித்து நீராடயோக்கியமாகிய சுனையாய் மணவெழுச்சிபெறக் கொங்கைகளினிடத்திற்பூசும் பரிமளமிருத்தசாந்தமாய்க்கறுத்து நீண்டிருக்குங் கொண்டையினிடத்திற் சொருகவல்லசுகந்தங்களை வீசும்புதியமலராயுருப்பெற்று தம்மைச்சேர்ந்து மகிழ்ச்சி பெற்றிருக்கும் பாக்கியத்தைப் பெறுமற்போனேன்விரகாக்கினிமேலிட்டுத்தேகத்தையும் மனதையும் சுட்டுக்கொளுத்துவதினால் மிகவும் வாடுகின்றேன், தமதுகிருபைக்குப்பாத்திரமாதற்பொருட்டுஇனிசெய்யவேண்டுங் கருமமென்னேயாதுந்தோற்றவில்லை அதைக்காட்டுவீராகில் மனோபீஷ்டப்படிக்கு நடத்தக்காத்திருக்கின்றனன், ஓ பெண்கள்சிகாமணியே இதுவென்ன வநியாயம் சிங்கசார்த்தூலங்களாகிய கொடியஜந்துக்கள் சஞ்சரிக்குமிந்த ஆரண்ணியத்தில் அபலமாகியதினைப்புனத்தைப் போற்றிவருவது தம்மையொத்தபெண்கள்சிகாமணிக்கடாது அடாது, மிகவும்ஹீனமாகக்காணுகின்றதுஎன்கண்ணே, ஆவியே, கிருபையுற்றுப்பின்பற்றிவருவீராகில் கஜேந்திரச்சம்பத்தையுடைய பொன்னுலகவாழ்வைப்பெற்றிருக்கும் அரம்பாஸ்திரீகளனைவரும்வணங்கி வேண்டியதொண்டுகளைச்செய்து போற்றிவரவும்தெய்வபோகமுற்றினும் தாமே அனுபவித்துக் களித்திருக்க வைப்பேன் இஃதன்றியும்தேவரீர்மனதில்விருப்புற்றவைகளைத் திருவாயைத்திறந்து சொல்லுவீராகில் எத்தகையதாயினும் அவற்றையிந்நிமித்திற் றேடித்தரவல்லேனென்று இவ்விதங்களிற் பற்பலஇனியசொற்களைப்பேசிக் காமலாகிரியினாலுண்டாகும் வருத்தங்களைக்காட்டிக்கரங்களை நீட்டிப் பற்களைத்திறந்து நகைமுகனாய்க்கெஞ்சிநிற்கின்ற காலையில் வேடராஜபுத்திரியானவள்அவ்வாக்கியங்களனைத்தையுங்கேட்டுக் குறிப்பாய் குமாரசுவாமியார் மனக்கருத்தை நிதானித்தறிந்துகொண்டு இவர்வடிவின் பெருக்குங் குணாதிசயங்களும் கொஞ்சிப்பேசும்வார்த்தைகளின்குளிர்ச்சியும் வெகுமேன்மையாக விருக்கின்றதென்று மனதிலெண்ணி நாணமிகுதியினாற்றலையையிறங்கி யிவ்விதமறுமொழிகளைப்பேசுவாயினள்.

நானிழிகுலமாகிய வேடர்பாவையாகும் உம்மிடவடிவின்சீரையும் நடைநொடிபாவனைகளையும்பார்க்குமிடத்தில் இராஜகுமாரனாகவும் புவனங்களனைத்தையும்பாதுகாத்திரட்சிக்கும் முதல்வனாகவுங் காணுகின்றது, அத்தகைய சிறப்பினைப் பெற்றிருக்கின்றதேவரீர்ஹீனனாகியஎன்னைத்தழுவநினைந்துதகாதனவாகியவார்த்தைகளைத்தயிரியமாய்ப் பயமற்றுப்பேசுவது பழியல்லது நன்மார்க்கத்துக் கடுப்பதோ கதிர்களைவிரித்துச் செழித்திருக்கின்ற தினைப்புனத்தைப் போற்றி மிகவும்அருசியாயிருக்கின்றகுறப்பெண்ணினிடத்தில் உலகங்களைப் பரிபாலனஞ்செய்யவல்ல தம்மையொத்தஇறைவன் உளமயங்கிக் கருத்தழிந்துபித்தனையொப்பப்பேசிக் கலவியையிச்சித்துவழக்காடுவதுநியாயமல்ல வீரத்தன்மைபொருந்திய புலியானதுபசிப்பிணியினால் வாடுமாயினும்அற்பமாகியபுல்லைத்தின்னநினைப்பதுண்டோவெனவள்ளிநாயகியார் இவ்விதங்களாகப்பற்பலநீதிமார்க்கங்களை விரித்துக்காட்டிமறுதலைபேசியகாலத்தில் எமதன்னைமனம் திடுக்கிட்டுப்பயங்கொள்ளும்படிக்குவேடர்திரண்டுகுறிஞ்சிப்பறைகளையும் பம்பையாகிய வாத்தியங்களையும்முழக்கிக்கொண்டு சூழ்ந்துவரும்படிக்குஅரசன் தன்பதியைக்கடந்து வருகின்றஆடம்பரங்களைத் தெரிந்தமாத்திரத்தில் வள்ளியம்மைதேகமுற்றும்வியர்க்க நடுநடுங்கிமனம் நிலைபெறுமல் வருந்திக்கரங்களைப்பிசைந்து கொண்டு எமதுநாயகன் திருமுகமண்டலத்தைப் பார்த்து ஐயனேகொலைத்தொழிலையே முக்கியமாகவெண்ணி நடாத்தும் தீயசெய்கைகளை யுடைய வேடர் மிகவும் கொடியர் முன்பின்யோசிக்கும் தாட்சணியமென்பது அவர்களிடத்திற்கிடையாது ஆதலாற்சற்றும்தாழ்க்காமற்றுரிதமாய் இத்தலத்தைநீங்கியோடித் தப்பிப்பிழையும் இது தருணபேதம் போம்போமென்று பரிவாய்ப்பேசிய அன்பின்காரணங்களைத்தெரிந்தவுடன்முருகனுக்குமனம் பூரித்து பெண்ணரசியே பயப்படவேண்டாம் உமதெண்ணப்படிக்குச் செய்வோமெனச் சொல்லித்தேசாதேசங்களெங்கணும் புகழ்ந்துபோற்றத்தக்க சைவசமயத்தை யனுசரித்துநடந்துகொள்ளவல்லவிருத்தசன்னியாசிவேடங்கொண்டு அதிகஆரவாரங்களைக்காட்டி அதட்டிஉருட்டி கெக்கலிகொட்டி மிருகங்களை துரத்திக்கொண்டுவருகின்றவேடர்களெதிரிற்போய் ராஜனைக்கண்டு பரிபூரணகடாட்சத்தைப்பாலித்துக்கரத்திற்பற்றியிருந்தபையிலிருக்கும்திருநீற்றையிருவிரல்களினாலெடுத்துச் சிவநாதனேயிரட்சிக்கக்கடவனெனக்கொடுத்துஓவேடர்பெருமானேசென்றசென்றவிடங்களில் சகலவெற்றிகளையும்பெற்று ஜயசாலியாய்ச்செல்வச்சம்பத்தையனுபவித்து நீடூழிகாலம்வாழக்கட

வாயெனபற்பலவாழ்த்துகளைச்சொல்லி ஆசிர்வதித்தபோது வேடர்பெருமான் தன்கரத்திற்கொடுத்தவிபூதியை நெற்றியிற்சாத்தித் துரிதமாய்த் தன்முடிகந்தமூர்த்தி பாத கமலங்களிற் படும்படிக்குத் தீர்க்கதண்டன்சமர்ப்பித்துச் சுவாமிகள் வயதுமுதிர்ந்த விருத்தராய் காடுசூழ்ந்த இந்தபருவதத்தைத்தேடிவந்தது நானும் எங்கள்முன்னவர்களும் செய்ததவமாகும் ஆதலால்தேவரீருக்குவிருப்பமாகியவஸ்துக்களேதேனுமிருக்குமாயின் தயைசெய்துசொல்லவேண்டும் இந்தநிமிஷத்திற் றருவித்துக்கொடுப்பேனெனப் போற்றுமுன்னிலையிற் சரவணபவன் அவனிடத்திற்பரிவாய் வேடர்மரபிற்சிறந்த மஹாராஜனேகேட்பீராக வயதுமுதிர்ந்துசரீரம்தளர்ந்து வந்தவிடத்தைத்தேடியிருக்கும் பருவமுடைய எனக்கு நீயென்னகொடுக்கப் போகிறாய் நமக்கொன்றுந்தேவையில்லை அப்பா நமதுவரவின் காரணத்தைக்கேட்பையாக.

இந்தவள்ளிவனாயிலுதித்து உங்களனைவருக்கும் பிரியமாக விருக்கின்ற குமரியைக்கலந்து இக்காலத்தில் நேர்ந்திருக்கின்ற மனமருட்சி நீங்கத்தக்கதாகஎக்காலமும்அதிற்படிந்துஇன்பக்களிப்பை யனுபவித்துச் சவுக்கியமாக விருக்கவிருப்பமுற்றுநெடுந்தூரத்தினின்றுவருந்திவேகமாய்வந்தனம்அப்பேறுநமக்குக்கிடைக்குமாயின் அதுவே நீஎமக்குச்செய்யவேண்டும்உபகாரம்உன்னையொத்தவனுக்குவேறுமொருபொருளைத்தரவேண்டுமோவென்று தவத்திற்சிறந்த முதியராகவந்தமுருகன் சிலேடையாகச்சொன்னவிசேஷத்தைவேடராஜன் உண்மையாகக்கேட்டவுடன்நல்லகாரியம்தேவரீர்கோரிக்கையின்படிக்குஅந்தக்குமரிதீர்த்தத்தில் முழுகி உம்முடையவிஷ்டசித்தியைமுடித்துக்கொண்டு என்பெண் தனித்திருக்கின்றனள், பெரியவரே அவளுக்குத்துணையாகவும் அடிக்கடிக்குவந்துவிசாரணைசெய்து போகவேண்டுமெனப்போற்றுவதற்கிரங்கியதுமிகவும் அழகாயிருக்கின்றது அவ்வாறேசெய்யக்காத்திருக்கின்றனனெனச் சம்மதித்துக்கொண்டனர், அரசனும் அதிகசந்தோஷத்துடன் குமாரத்தியிருக்கின்றகொல்லையைச்சேர்ந்து தினைமாகிழங்கு தேன்கனிவகைகளாதியாகவேண்டுபவையனைத்தையும்வழக்கப்படிக்குக்கொடுத்துத் தாயே யிந்தப்பெரியவர்குமரிதீர்த்தமாடவந்திருக்கின்றனர் உனக்கும்சகாயமாகவிருப்பரெனத் தெரிவித்து அவர்களிருவரையும்அத்தலத்தில்நிறுத்திப்போட்டு வீரகண்டாமணிகலிக்கும்பாதங்களையுடைய மறவர்பெருமான் தன்பரிசனருடன்திரும்பிப் பதியைச்சேர்ந்தனன், அவர்கள்மறைந்தவுடன்முதியர் வள்ளியம்மையைப்பார்த்துப்பெண்கள்சிகாமணியே என்னசெய்வேன்பசிப்பிணிபாதிக்கின்றது தாபரித்துநிற்கக்கூடவில்லை களைத்துவருகின்றது எதனையாவதுகிஞ்சித்து சாப்பிடாவிடில் மோசம் வரும்போற்காணுகின்றதெனப் பரிபவப்படுவதைக் கண்டவுடன் எமதன்னைக்குமிகவுமிரக்கமுண்டாய் பெரியவரேபயப்படவேண்டாமென் றுதரித்துத் தினைமாதேன்கனிகளைநீட்டியபோது கபடசன்னியாசியானவர் ஆவலுடன்கரங்களையேற்றுவாங்கிக்கொண்டு துரிதமாயுண்டுஅப்பாபசிதணிந்ததாயினும் வெய்யிலில்நடந்துவந்த வேஷ்டையினாலும் உதரவங்கிப்பெருக்கினால் நெஞ்சுலர்ந்திருந்தபோதுமாவைமிகுதியாகத்தின்றதினாலும் கண்டத்திலடைத்துக்கொண்டு வருந்துகின்றனன், நீர்விடாய்ப்பட்டு மூர்ச்சிக்கவருகின்றது இதற்கென்னசெய்வேனெனமிரளமிரளவிழிப்பதை வேடர்பாவையறிந்தவுடன் ஓதவசிரேஷ்டரே காலதாமசஞ்செய்யாமல் இந்தமலையைத்தாண்டியிதற்கடுத்துக்காட்டும் ஏழுகுன்றுகளைக்கடந்து போவீராகில் மதுரமிகுத்தநீர்ப்பெருக்கையுடைய ஒருசுனையிருக்கின்றது திருப்தியாய்வேண்டியமட்டுஞ் சாப்பிட்டுவருவீரெனச் சொல்லியபோது தனுர்ப்பாணிகளாகிய வேடர்பெருமான்மனதுக்கினியபெண்ணே தாகத்தினாற்சோபிக்கின்றதுமல்லாமற் றள்ளாதகிழவனாகவிருக்கின்றநான் பருவதங்களின்மத்தியிலுள்ளவழியை எப்படிக்கண்டுபிடிக்கப்போகின்றேன் மேலும் முன்பின்இவ்விடம் வந்திருந்துபழகினவனுமல்லஆதலால்பாதங்கள் வருந்துமென்று தாழ்க்காமற் றுரிதமாய் என்னுடன்வந்து சுனைநீரைக்காட்டித் திரும்பிவிடுமென்று சண்முகங்களைமறைத்து விருத்த வேடத்தைத்தாங்கி எதிரில்பாசாங்குகளைக்காட்டி நிற்கின்றகள்வன்சொல்வதை வள்ளியம்மையதார்த்தமாக நம்பியிரங்கினவளாய்ப் பரணைவிட்டிறங்கிச்சுவாமி வாரும் வாருமென்றுதான்முன்னதாகவழிகாட்டியழைத்துப்போய்க் குன்றுகளனைத்தையுங்கடந்துகுளிர்ந்தஜலப்பெருக்கையுடைய சுனையைக்காட்டியபோது விடாய்த்தவனைப்போல விருகரங்களினாலும் புனலைவாரிவாரிக்குடித்துஅகமுகமலர்ச்சியுடன்தேவியைக்கிருபையாகப்பார்த்து இதனைச்சொல்லுவதாயினர்.

ஓபெண்கள்சிகாமணியேஉதரத்தைக்கொளுத்திப்பிராணனைவருத்திச் சரீரத்தைச்சோரச்செய்து பாதித்திருந்தபசிப்பிணியைத்தவிர்த்துத் தாகசாந்திக்குச் சுத்தோதகத்தையுங்காட்டி நீர்விடாயைத்தணித்தீர் இத்தகையபேருதவிகளைச்செய்தபோதினும் இன்னமும் நமதுமனத்தளர்ச்சிநீங்கவில்லை மேகத்தைநிகர்த்த கரியகூந்தலையுடையமின்னேஎன்னுயிரேஅடியேன்கொண்டிருக்கும் மோகக்கவலையையும் தணியச்செய்து ஆதரிப்பீராகில் நமக்குச்சம்பவித்திருக்கும் குறைபாடுகளனைத்தும் முற்றுப்பெற்றதாகக்களிப்போமென்று சலனமற்றவிருத்தசன்னியாசிமிகவும்வருந்தி மதிமயங்கியிருகரங்களையுஞ்சேரக் கும்பிட்டுக் குறையிரந்து எதிரில்நிற்கின்றகாலையில் சுகந்தபரிமளங்களைவீசும்சிறந்தமலர்களையணிந்திருக்கும் அளகபாரத்தையுடைய நங்கைநகைத்துப் பெருமூச்செறிந்துநடுநடுங்கிச்சீறி மாறுத்தரங்கொடுப்பதாயினள் நற்கதியிற்சேர்க்கவல்ல சிறந்ததவவேடத்தைப்பூண்டிருக்கின்ற முதியரே மதிமருண்டு தகாதவார்த்தைகளைப்பேசினீர் ஐயரே உமதுகுணதிசயங்களையோசிக்குமிடத்தில் எப்படிக்கிருக்கின்றதெனில் சகலருக்கும் மதுரமிகுத்த பாலைப்போலக்காட்டிச் சாப்பிட்டகாலத்தில் அவர்களுயிரைவாட்டும்விஷத்தினும்கொடுமையாகத் தோற்றுகின்றது பட்சிகள்மிருகங்கள்சேரவொட்டாமல் தினைப்புனத்தைக் காவல்கொண்டிருந்தஎன்னைக் குற்றமற்றதவங்களைப்பெற்றமுதியரைப்போலவந்து ஏதோசிற்சிலவிரக்கமொழிகளைக்கூறிவஞ்சித்து நெடுந்தூரங்கொண்டுவந்து நம்மைஆலிங்கனஞ்செய்ய விருப்புற்றுநினைத்தற்கரிய தகாதகாரணங்களைக்குறித்துக்கெஞ்சிக் கரங்களைக்கூப்பிஎதிரில்மறித்துநிற்பது உம்மையொத்ததவத்தருக்கு நீதியோஉம்முடையமாறுபட்டசெய்கைகளிற் சிறிதேனும் நம்மவராகிய

வேடருக்குத் தெரியுமாயின் நம்மிருவருக்கும் துரிதமாய்க் கொடியதீங்குசள்நேருவதற் கையமில்லைசங்கைப்போல வெளுத்தசிகையையுடையமுதியரோ யிவ்வனயில் நன்னெறிகளையனுசரித்துவந்த உம்மிடத்திற்சற்றும் நல்லுணர்ச்சியைக்காணேன் நீர்விருத்தனுகக் காலத்தைக்கழித்தீர் இதனுற்பிரையோசனமொன்றுமில்லை இழிகுலத்திற்பிறந்த என்னிடத்திச்சைகொண்டு பயித்தியங்கொண்டவனைப்போலவாயில்வந்தவைகளைப் பிதற்றுகின்றீர் இதைப்பார்க்குமிடத்தில் வில்வேடர்மரபுக்குத் தீராதபழியொன்றைநாட்ட யத்தனித்திருப்பதாகக் காணுகின்றது நான்காவல்கொண்டிருந்த தினைப்புனத்தினிடத்தி லொருவருமில்லாமையால் மிருகங்கள் பட்சிக்கூட்டங்களனைத்தும்சேர்ந்து முதிர்ந்தகதிர்களனைத்தையும் கறித்துக்கொண்டுபோவதன்றிப் பயிரையும் சின்னபின்னப்படஅழித்துப்போடும் என்பிதாஅதைப்பார்ப்பராகில் கோபித்துக்கொள்ளுவர் ஆதலால்பேச்சுக்கற்றகிழத்தவத்தரோநீர் சற்றும் இவ்விடத்தில்நில்லாமல் நடந்துவிடும் நடந்துவிடும் அல்லது வந்தகதியைப்பட்டுக்கொள்ளும் சற்றுந்தாழ்க்காமல் நான்வினைவிற்போய்க் கொல்லையைச்சேருவேனென்று தூறிக்கொண்டு வள்ளிநாயகியார் வேகமாய்நடக்கும்போது பாலசுப்பிரமணியக்கடவுள் இலக்குமியையொத்தபெண்கொடியின் மனவுறுதிக்குமெச்சித் திகைத்தவராய் இனியென்னசெய்வோமெனச் சற்றுயோசித்து ஒருநினைவுகொண்டு ஒப்புவமையற்றமுன்னவனுகியவிநாயகமூர்த்தியைக்குறித்து மீறிப்போகின்றஇக்கன்னிகையினெதிரிலெழுந்தருளித் தடைசெய்யவேண்டுமெனப்போற்றுகின்றகாலையில் தம்பியினிடத்திற்பரிவாய் அவர்கோரிக்கையின்படிக்கு பருத்ததேகத்தைப்பெற்ற மதயானையின்கோலங்கொண்டு கடலைப்போலிரைந்து திசைகளதிரவீறிட்டுப்பருத்துநீண்டிருக்கும் துதிக்கையைநீட்டிமரங்களை வேருடன்பறித்து வழியையடைத்து அதிகவுற்பாதத்தைக்காட்டி வள்ளிநாயகியாருக் கெதிரில்வருவதைக்கண்டவுடன் என்னசெய்வேன் மனம்கலங்கி நடுநடுங்கித் தேகமுற்றும்வியர்க்க மதிமருண்டு யாதொருவுதவியையுங்காணுதபடியால் சரேலெனத்திரும்பி கைகாலுதறலெடுக்கத்தக்கதாக வேகமாயோடிவந்து தவவேடத்தைக்கொண்டிருக்கும் குமாரதேவர்பக்கலிற்சேர்ந்துசுவாமியிதோ மதயானைதுரத்திவருகின்றது அதன்வசப்பட்டு மாண்டுபோகாதபடிக்கு இத்தருணத்தில்அடியாளிடத்திரக்கமுற்று அதைத்துரத்திக்காக்கக்கடவீர்நீர்குறித்தபடிக்கெல்லாம் சம்மதப்படுவேன்படுவேனென்று பின்புறத்தில்வந்துமுறுகைத்தழுவிக் கட்டியணைத்திருந்தனள்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? இந்தத்திருவிளையாடல்களை என்னசொல்வேன் முன்னந்தெய்வயானையைமணந்து மருப்பையொத்த ஸ்தனபாரங்கள் அழகியதிருமார்பிற் றிளைக்கும்படிக்குத்தழுவி யின்புற்றிருந்தவர் இப்பொழுது பிடிநடையைவாய்ந்த குறப்பாவையினது சொர்னகலசங்களைப்போன்ற கொங்கைகள் முதுகினிடத்திற்ருக்கியபோது வயிரத்தம்பத்துக்கொப்பாகநின்ற பாலசுப்பிரமணியதேவருக்குத்தேகம்பூரித்து உள்ளங்குளிர்ந்து திருமுகமண்டலத்தைச்சற்றுத்திருப்பிப் பெண்கள்சிகாமணியே பயப்படவேண்டாம் யானையைத்துரத்திவிடுவோம் மனச்சஞ்சலமற்றிருக்கக்கடவாயென்று பற்பலவார்த்தைகளைச்சொல்லி ஆதரித்துத் தந்திமுகத்தெந்தையைத்தியானித்து வந்தனைகளைச்செய்துவழுத்தித் தேவரீர்தயைசெய்தெழுந்தருளிய காரணத்தினுல்மனதைப்பிடித்தலைத்திருந்தகவலையைப்போக்கினேன் மங்கையும்என்னிஷ்டப்படிக்குச் சம்மதப்பட்டுச்சேர்ந்தனள்,எமதிறைவனே யதாஸ்தானத்துக்குத் திரும்பக்கடவீரென் றிரந்தகாலையில் விநாயகமூர்த்தியுந் தம்பியினிடத்திற் றயைசெய்துமறைந்தனர், பின்புசரவணபவன் வள்ளியம்மையைத்தழுவிக்கொண்டுபோய் ஒருபூங்காவைச்சேர்ந்து உளமுந்தேகமும்பூரித்துக் களிக்கத்தக்கதாகக் கலந்தின்புற்றுமனமகிழ்ந்தவராய் அவளிடத்திற் கிருபையுற்றுச்சடுதியில்மறைந்து வயிரமுடிகள் கவித்திருக்கும் சண்முகங்கள்பூர்னச்சந்திரோதயங்களைப்போலப் பிரகாசிக்கவும் துவாதசாதித்தனையொப்பப் பன்னிருமகரகுண்டலங்கள் செவிகளினிலங்கவும் நவரத்தினமயமாகிய வாகுவலையங்களைப்பூட்டியிருக்கும் பன்னிருபுயாசலங்கள் கம்பீரமாகக்காட்டவும் முப்புரிநூல்புரளும் விசாலமாகியமார்பையும்தண்டைசிலம்புதரித்துக்கொஞ்சும்திருவடிகள் தாமரைமலர்களையொப்பக்காட்டவும் வெற்றிவேல்-தனுசு- சக்கரம்-கதைமுதலிய படைகள்விளங்கும் கரதலங்களைக்கொண்டு பொன்னையொத்த கண்களையுடைய கலாபத்தைவிரித்துநடிக்கும் மயில்வாகனத்தின்மீதி லெழுந்தருளிக்குறமகள் நேத்திரோற்சவமாகத் தரிசித்துக்களிக்கும்படிக்குப் பாலசுப்பிரமணியதேவர் காட்சிதந்தனர், இத்தகையமங்களகரமாகிய திருக்கோலத்துடன் வேலாயுதமூர்த்தியானவர்எதிரில்நிற்குங் காட்சியைவள்ளியம்மை தரிசித்தவுடன் விழிகளில் ஆனந்தவாரிபெருகத் தேகம்பூரித்துமனமகிழ்ச்சியுடன் மும்முறைவலம்வந்துபலதரந்திருவடிகளிற்பணிந்து கரங்களைக்கூப்பிக்கொண்டு மெய்ப்பத்திவிசுவாசத்துடன் விசாகப்பெருமாளினுடைய பெருமைகளையுங்குணதிசயங்களையுமெடுத்துப்போற்றிப்போதவாரியிலழுந்தி உடல்முற்றும் கம்பிதப்படக்கூத்தாடிப்பெறுதற்கரிய சுகத்தைப்பெற்றவளாய் இந்தப்பிரகாரம் விண்ணப்பஞ்செய்யத்தொடங்கினள்.

சுயஞ்சோதிமயமாய்ச் சர்வந்தரியாமியாய்க் கோடிசூரியப்பிரகாசம்பொருந்திய வெற்றிவேலைத்தாங்கியிருக்கும் எமதிறைவனே யிக்காட்சியைமுன்னமேகாட்டி நாயினேனைத்தொண்டுகொண்டு உமதிஷ்டப்படிக்கு போகபோக்கியங்களை யனுபவித்துக் களியாமல் இதுபரியந்தம் பலநடனங்களைக்காட்டிவீண்காலத்தைக்கழிக்குங் காரணமென்னே பேதமைப்பாலளாகிய யான்பெண்மதியினுல் தமதுபெருமைகளைக்கண்டறியாமல் பலகுறைபாடுகளைச்செய்தேன், அவைகளனைத்தையும் திருவுளத்திற்பாராட்டாமல் க்ஷமித்திரட்சிப்பது தமதுபாரமாகும் இன்றுமுதல்நாயினேனைவழியடிமையிற்சேர்த்துஆட்கொள்ளவேண்மென்று திருமேனிநடுநடுங்க பலவிதங்களிற்போற்றுமுன்னிலையில் குமாரதேவர்பரிவாய் அவளிடத்திற்கடாட்சவீட்சணியத்தைச்செலுத்திப் பெண்ணரசியே நீமுன்னம்என்னன்னைசகோதரரும் எனதுமாதுலருமாகிய ஸ்ரீமகாவிஷ்ணுவுக்குமகளாய் நம்மைச்சேர்ந்துகளிக்கும் விருப்பத்தைக்கொண்டு அளவற்றகாலம் கடினமாகியதவங்களைச்செய்தபோது நாமெழுந்தருளிக் கடாட்சித்தபடிக்கு இத்திருவவதாரத்தில் உமக்குஅனுக்கிரகஞ்செய்யவந்தனம் மேலும்நம்மைக்குறித்துப்பேசிய வாசகங்களனைத்தையும் தோத்திரங்களாகக்கொண்டனம் மனம்வருந்தா

மற்சந்தோஷித்திருக்கக்கடவாயென் றுதரித்துத்தழுவிப்
பரிபூரணகடாட்சத்தைப்பாலித்து வேடர்பாவாய் நீயிவ்
விடம்வந்து பொழுதாயிற்று தினைப்புனத்தைக் காக்கும்
படிக்கு முன்னேபோகக்கடவாய் நாமும்பின்பற்றி வரு
வோமெனத் திருவாய்மலர்ந்தமாத்திரத்தில் வள்ளிநாயகி
யாருக்கு அதிகமகிழ்ச்சியுண்டாய் மீட்டும் திருவடிகளிற்
சேவித்து விடைபெற்று மனமும்விழிகளும் கணவனிட
த்திற்கிடக்கஅரிதிற்போய்த் தினைப்புனத்தைச்சேர்ந்துப
ழையபடிக்குப்பரணிமேலேறிக் கவணைத்திருக்கரத்திற்கொ
ண்டுபட்சிகள்மிருகங்கள்மாறியோடத்தக்கதாக ஆயாலோ
ட்டியிருந்தனள், அத்தருணத்தில் அடுத்தகொல்லையிற்
போற்றியிருந்த பாங்கியானவள் சிலசந்தேகப்பட்டுத்தலை
வியிடத்துக்கு மெல்லவந்துசேவித்துச் சிலபோது வார்த்
தையாடிக்கொண்டிருந்துமனமும்தோற்றமும் நடைநொ
டிபாவனைகளும்பேச்சும்கருத்தும்மற்றகாரணங்களனைத்
தும் வேறுபட்டுக்காட்டுவதைக் குறிப்பாய்த்தெரிந்து அ
தற்கடுத்த விளைவையும் நிதானித்து பாங்கியானவள்தலை
வியைப்பார்த்து இதனைவினவுவதாயினள், தாயேயித்தி
னைப்புனப்பட்சிகளினாலும் மிருகங்களினாலும் அழிந்து
போகும்படிக்குவிட்டுத்தனிமையில்நீயெவ்விடத்திற்போ
யினீர் சொல்லுமெனக்கேட்டபோதுதலைவிமிகவும்நாணி
னவளாய் அடிதோழி வெப்பத்தினாற் சகிக்கப்படாமற்சு
னையிற்படிந்து நீராடிவரப்போயிருந்தனனென மாறுத்த
ரந்தந்தபோது தோழிநகைத்து நல்லகாரியம் நீர்பேசிய
து வெகுநேத்தியாகவிருக்கின்றது மையிட்டுக்கறுத்துக்
காதளவுமோடியிருக்கும் விழிகள்சிவக்கவும் கொவ்வைக்
கனியினும் பிரகாசித்திருந்த அதரம் வெளுத்துக்காட்ட
வும் சரீரம்வாட்டமுற்றுவியர்க்கவும் சொர்னக்கலசத்தை
யொத்தகொங்கைகள் பசலைமூடி விம்மவும் கரங்களிற்ப
தியப்பூட்டியிருந்தவளையல்கள் தளர்ந்துகலிக்கவும் இத்த
கையமாறுபாடுகளைத் தரவல்லசுனை எத்தலத்திலிருக்கி
ன்றது காட்டக்கடவாயென வினவியபோது பாங்கியைக்
கோபித்துப்பார்த்துஎன்பிராணபதமாகியதோழியென்று
ன்னைநினைத்துநம்பி நானிவ்விடத்திலிருக்கும்போது மெ
ல்லவந்து என்னிடத்திலேதோசிலகுற்றங்களைக்கற்பிக்க
வெண்ணினை யிதைப்பார்க்குமிடத்தில் மிகவுங்கடினசித்
தமுடையவளாகக்காணுகின்றது சற்றுமிரக்கமற்றுஇப்ப
டிக்குப்பேசுவையோவெனப்பிணங்கி இவ்விதங்களாகத்த
லைவியும்பாங்கியும் வாதாடிக்கொண்டிருப்பதைமுன்னம்
வேங்கைமரமாகநின்றசிவசுப்பிரமணியதேவர்கண்டு இது
நல்லதருணமென் றெண்ணி ஒருதிருவிளையாடலைச்செய்
யஉத்தேசித்துத் துரிதமாய்ச் சல்லடத்தையுடுத்துத்தட்
டியைக்கட்டிச் சிகையைக்கோதிமுடிந்து அதைச்சூழ்வர
மயிற்பீலியைச்செருகிப் பலகறைத்தாழ்வடத்தைச்சுற்றி
அடிகளில் மிதியடிகளைச்சேர்த்து வில்லைவளைத்து நாரி
யைமாட்டியிடக்கரத்திற்கொண்டு வலக்கரத்தில் பாணத்
தைப்பற்றிக் குறியாகப்பூட்டி அரையிற்குறியவாளொன்
றைச் சொருகினவராய் வேட்டையாடி வருகின்றவனைப்
போலப் பலதிசையினும் விழிகளைச்செலுத்திப்பார்த்து
அதட்டிக்கொண்டு பாதங்கள்சிவக்க வேகமாய்வந்துகாந்
தள்புட்பத்தினுஞ்சிவந்து மிருதுவாகக்காட்டும் கரகமல
ங்களைப்படைத்திருக்கும்பெண்களே நான்செலுத்தியபா
ணத்தில் தேகமுற்றுங்காயப்பட்டு உதிரம்பெருகப்பேழ்
வாயைத்திறந்து இடியைப்போலவீறிட்டு ஓய்ந்தநடையு
டனெருயானையானது இப்பிராந்தியத்தில் வரக்கண்டீர்க
ளோசடைதான்தெரியுமோ ஒளித்துவைத்தீர்களோ துர
த்திவிட்டீர்களோவென்று பற்பலகேள்விகளைவினவிப்பா
லசுப்பிரமணியக்கடவுள்நிற்பதைப் பாங்கிகண்டுமாறுரை
யாடுவதாயினள்.

உம்மையொத்த புஜபலபராக்கிரமச்சம்பத்தையுடைய
வீரர்களுக்கு உமதுசூரத்தன்மைகளையும் ஜயப்பிரதாப
ங்களையுஞ்சொல்லுவீராகில் அவர்களால்மதித்துப் புகழ
த்தகும் புல்லியதினைப்புனத்தைக்காத்துவரும் பேதைய
ராகியமங்கையரிடத்திற் சவுரியவார்த்தைகளையாடி யாவ
தென்னையென்றுமறுமொழிகூறினவளாய் மேலும் ஐயா
வேட்டையாடிவரும் நிலைமைகளையும் தினைப்புனத்தைக்
காத்திருக்கும்தலைவியின்நாட்டத்தையும் குறிகுணங்களை
யும்மதித்துஇப்போதுபேசியதனைத்தும்உண்மையே மா
றுபட்டுக்காட்டுகின்றதுஇவ்விருவர்நடத்தையையும்யோ
சித்துப்பார்க்குமிடத்திற்றழைகளைத் தேகமுற்றினும் மூ
டிவஞ்சகக்குரலைக்காட்டிப்பறவைகளைப்பிடிக்கும் வேடர்
நிலைமையாகக்காணுகின்றதுஇவர்கள்கொண்டிருக்கும்மை
யலின்குறிப்பைவிழிகளே காட்டுகின்றதெனத் தீர்மானித்
தவளாய் இனியிவ்விடத்திலிருக்கலாகாதென் றெண்ணிப்
பாங்கியானவள் துரிதமாய்அடுத்தகொல்லையைச்சேர்ந்திரு
ந்தனள்,யானையையெய்தேனென்று வீரம்பேசிவந்தசேவ
கன்தானும் பின்பற்றிப்போய்மேகத்தைப்போலக்கரியகூ
ந்தலையுடையபெண்ணேஎன்கோரிக்கையைக் கேட்டருள்
கவெனச்சொல்வதாயினர், தமியேனுக்குறுதியாகியசுற்ற
மும்நீங்களே,பிராணபதமானசிநேகிதரும்நீங்களே, என்
னுடலும்உயிருமாகவிருக்கின்ற உங்களிருவருக்கும் வே
ண்டியபொருள்களெத்தகைத்தாயினும்இந்தநிமிஷத்திற்
றருவித்துக்கொடுக்கக்காத்திருக்கின்றனன்நீங்கள்காட்டிய
பணிவிடைகளிற்குறைபாடில்லாமற்செய்யவல்லேன் கோ
பங்கொள்ளாமற்சற்றுநீ அனுக்கிரகஞ் செய்யவேண்டுமெ
ன்று அழகியமயில்வாகனன்மொழிந்தவசனங்களின்குறிப்
பைத் தோழிதெரிந்துகொண்டவளாய் ஐயனேஉமதெண்
ணமிதுவோசிறந்த எங்கள்குலத்துக்குப் பூமியுள்ளபரியந்
தம் தீராதபழிப்புரையைநாட்டவந்தீராயினும்இதுவாகிய
மரபிலவதரித்திருக்கின்ற மறவர்பாவையைஉம்மையொ
த்த கன்னியவான் விரும்புவதழகோ இதுதகாதனவாத
லால் மறந்துவிடுமென்று மறுமொழியாடிய தோழியைப்
பார்த்து எனதுநெடியமாமனாராகிய ஸ்ரீமகாவிஷ்ணுபெற்
ற அமுதத்தை வேடர்வருந்திப்பெற்ற தவக்கொழுந்தை
பெண்கள்நாயகத்தை எனக்குக் காதலைத்தந்து நல்லருள்
செய்த காரிகையைக் குறப்பேதையெனப் பேசுவதே பே
தமையாமெனக்குறித்த இனியவாசகங்களைக்கேட்ட பாங்
கியானவள் யாதுந்தோற்றாமல் மயங்கி ஐயனே சற்றுநேர
த்தில் வேடர்திரட்சியா யிவ்விடம்வருவர் அவர்கள் மிகவு
ங்கொடியர் சிலசந்தேகங்களைக்காண்பராயின்முன்பின்பா
ராமல் பழிபாதகங்களுக்கும் அஞ்சாமற்கொலைசெய்வதற்
கையமில்லை நீரிவ்விடத்திலிருப்பதைத் திஷ்டாந்தமாகப்
பார்ப்பராயின் எங்கள்பிராணனுக்கானிவரும் உம்மையு
மென்னசெய்வரோதெரியாது மேலும் நீரிவ்விடத்திலிரு
ப்பதினாலாவதொன்றுமில்லை ஆதலால்வீண்வாதே நாடு
கின்றீரெனப் பற்பலநீதிகளைச்சொல்லித் துரிதமாயித்தல
த்தைக் கடந்துபோய்வாருமென்று பயமுறுத்தியகாலத்தி
ற் சரவணபவன்நகைத்து நல்லகாரியம் செவ்வரிபரந்து

விசாலமாய்க் காதளவும்மோடியிருக்கும் விழிகளையுடைய பெண்ணே உமதிறைவியுடன் என்னைக் கூட்டுறவு செய்யாமற்போவையாகில் ஏட்டினிடத் தவள்வடிவையெழுதி மடலேறி உங்களூர்வீதிகளிலோட்டத் துணிந்திருக்கின்றனன், அக்காலத்திற் சகலரும்பகிரங்கமாய்த் தெரிந்துகொள்வர் இதையோசித்து என்மனக்கருத்தை முடியாமற் றடைசெய்வையாகில் நான்குறித்தபடிக்கு நாளைக்கேமுடிக்கக்கடவேன் இதைச்சத்தியமாகநம்பக்கடவையென்றுதேவதேவோத்தமனாக விருக்கின்ற பாலசுப்பிரமணியக்கடவுள் பேசியதைப் பாங்கிகேட்டவுடன் இதுவென்னஅநியாயமாகவிருக்கின்றதென்று பயப்பிராந்திகொண்டவளாய்ச் சுவாமி நீர்பனைமடலேறுவது நீதியன்று மேலும் நிராதவசையாகும் ஆதலாற்கோபியாமற் சற்றுமனமிரங்கி அதோகாணுகின்ற மாதவிச்சோலையிற்போய் மறைந்திருப்பீராகில் எங்கள்காதல்மங்கையைஅத்தலத்துக்கழைத்துவருவேனென்று உடன்படிக்கைசொல்லி அனுப்பிவிட்டு அடுத்தபுனத்தைக் காவல்கொண்டிருக்கின்ற தலைவியினிடத்துக்குப்போகுமுன்னிலையில் எமதிறைவனும்மனமகிழ்ச்சியுடன்நடந்து மேகங்கள் சஞ்சரிக்கும் உன்னதமுள்ள மாதவிச்சூழலைச்சேர்ந்து மனவெழுச்சியுடனிவர்கள்வரவுக் கெதிர்பார்த்திருந்தனர், பாங்கியும்தலைவியைக்கலந்து திருவடிகளிற்பணிந்து வேலைத்தாங்கிய குமரனுக்கடுத்திருக்கின்ற காதல்மிகுதியையும் அதற்கிசையாமற்போனால் வரும் அவதூறுகளையும் விவரித்துச்சொல்லி மனதைத் தேற்றி ஒருமைப்படுத்தினவளாய்த் தலைவியைத் தினைப்புனத்தைக்கடக்க மெல்லக்கொண்டுபோய் மயிலினங்கள் களித்தாடும் குளிர்ந்தமாதவிப்பொங்கரில் நுழைந்து களிமிகுதியையுடையபாவாய் இவ்வரையைச் சூழ்வரவிருக்கும் பரிமளமிகுந்த மலர்களைப்பறித்துவந்து மாலைதொடுத்து உமதுகொண்டையிலணிவேன் அதைத்தேடிவருகின்றபரியந்தம் இவ்விடத்தில் வேடிக்கைபார்த்துக்கொண்டிருமென்று தோழியானவள்குறிப்பாய்த்தெரிவித்துப்போனவுடன் வள்ளிநாயகியுங் கந்தனைநினைத்து மனமுருகிச் சுற்றிலும் விழிகளைப் பரப்பிப் பார்த்திருக்கின்றகாலையில் அளவிறந்தமகிழ்ச்சியுடன் சண்முகப்பெருமாள் பழையகோலங்கொண்டு எதிரில்வந்துநின்றபோது வேலைப்போன்றவிழிகளையுடைய வள்ளிநாயகியார் எமதிறைவன்பாதகமலங்களிற் சேவித்தமாத்திரத்திற் கேசவன்மருகன்திருக்கரங்களைநீட்டி வாரியெடுத்தணைத்து ஒருவிருட்சத்தினடியிற்சேர்ந்து அவளின்பநலங்களை யனுபவித்துஇருவரும் தேகபரவசராய்க் களித்திருக்கின்றகாலையில் தேவியைப்பார்த்து உன்பிதாவாகிய அரசன்வேடருடன் வரும்போது உன்னைக்காணாதவர்களாய்த் தேடவரும் ஆதலாற் பாங்கியுடன் விரைவிற்போய்த் தினைப்புனத்தைக் காவல் கொண்டிருக்கக்கடவாய் நாமும் நாளையத்தினம் இவ்விடம்வருவோமென் றனுக்கிரகஞ்செய்து மறைந்தனர்.

அக்காலத்தில் வள்ளியம்மை யெமதிறைவன்றோற்றங் காணாமையால் மிகவும்வருந்தி மாதவிப் பொதும்பரைக்கடந்துவரும்போது பாங்கியுமெதிர்சென்று இருவருங்கலந்து தான்பறித்துவந்த காந்தட்புட்பங்களைக் காட்டிக்கொண்டையிற்சூடிக் குலவிப் பேசிக்கொண்டழைத்துப்போம்போது வள்ளியம்மையுந் தன்மனதுக்கிசைந்தவாறே நடந்துகொள்ளவல்ல தோழியுடன் தினைப்புனத்தைச்சேர்ந்து கிளிகள்முதலாகிய பட்சிகளை யோட்டிக்காத்திருந்த வேளையில் எமதன்னையானவள் கணவனைப்பிரிந்தகாரணத்தினால் மனவாட்டத்துடன் தன்தொழிலைச் செய்துவருமுன்னிலையில் தினைக்கதிர்முற்றிவிளைந்ததை அத்தருணத்தில்வந்த வேடராஜன்முதலானவர்கள் தெரிந்து குறிச்சியிலிருப்பவ ரனைவருந் திரண்டுவரும்படிக்குப் பணித்துத் தன்பெண்ணாகிய குறிஞ்சிநிலத் திறைவியைப் பார்த்துத் தினைக்கதிர்களை அறுத்தெடுப்படிசெய்யுங் காலம்நேர்ந்தது வேங்கைப்புஷ்பங்கள் மலர்ந்ததினால் அக்குறியையுங்காட்டுகின்றதால் தாயே யிதுபரியந்தம் பனி வெய்யில் குளிர்முதலிய சிறுமையிற்பட்டு அடவியிலிருக்கின்ற விப்புனத்தில்வீற்றிருந்து மிகவும்வருந்தினை யினி யுன் சிறுகுடிலைச்சேர்ந்து சகலசவுக்கியங்களையும் அனுபவித்துமனவெழுச்சியுடனிருக்கக்கடவாயெனப் பிதாமுதலானவர்கள் பரிவாய்ச்சொன்ன வாசகங்களைக்கேட்டவுடன்வேலாயுதமானது பாய்ந்து புண்பட்டிருப்பதில் எரி நுழைந்தாற்போலத்திடுக்கிட்டு மனம்வருந்தித் திகைத்துக் கணவனைக்காணப் பெறாதகாரணத்தினால் ஊசலாடியமனத்தளாய்த் தினைப் புனத்தைக்கடந்து தோழியுந்தானுமாய்ப் போகுமார்க்கத்தி லெதிர்ந்தமான்-மரை-மயில்-குயில்-வேங்கையாதியவற்றைக் கரங்களைக்கூப்பித்தொழுது இதுபரியந்தம் எங்களுக்குத் துணையாகவிருந்தபறவைகாள் மிருகங்காள்எமதிறைவன்வந்து எங்களைத்தேடுவராயின் நாங்கள் பதிக்குப்போனசேதியைத் தயைசெய்து மறவாமற் றெரிவிக்கக்கடவீர்களெனவேண்டிக் காலெழாமல் மனத்தளர்ச்சியுடன் கொழுநனைநீங்கித் தனியளாய்த் தன்மனையைச்சேர்ந்தபோது குறிகுணங்கள் வேறுபட்டுப் பழையபடிக்குச் சேடியருடன்கலந்து கொஞ்சிப்பேச மனமில்லாமலும் அவர்களைப்பிரியமாய்ப்பார்த்து க்ஷேமங்களைவினவாமலும் அம்மானை சிறுவீடுமுதலான விளையாடல்களைச் செய்யச்சகியாமலும் அதிகவாட்டத்துடன் மனவருந்தப்பட்டிருக்குங்காலையில் குலக்கொழுந்தாகிய வள்ளிநாயகியார்வந்த சேதியைத்தெரிந்த அன்னையும் வளர்த்ததாயும் ஓடிவந்து ஆவலுடன் கட்டியணைத்து மடியில்வைத்துக்கொண்டுமுத்தமிட்டு உச்சியைமோந்துதலையைக்கோதி எங்களைப்பெற்றதாயே பலநாட்களாகக் கொல்லையிற்பட்சிகளைக்காத்து மிகவும்வருந்தினை வெய்யில் பனியின்கொடுமையினால்தேகத்தின் காந்திமாறித் தளர்ச்சிகொண்டீரோவெனப் பலவிதங்களிற் பாராட்டி வினவுவதைக் காதுகொடுத்துக்கேட்டு அகமுகமலர்ச்சியுடன் பழையபடிக்குக்குலவிக் கோகிலத்தைப்போலக் கொஞ்சிப்பேசாமல் தலையைக் கவிழ்ந்து துக்கசாகரத்திலழுந்தி யிருப்பதைக்கண்டவுடன்திகைத்துத் தாயே உன்னழகியதிருமேனி வேறுபட்டுக்காட்டவும் யாதொருவார்த்தையையும் களித்துப்பேசாமலும் மதிமயக்கங்கொண்டிருக்கின்றனை யித்தகையகுற்றம்நேரிடுவதற்குக்காரணமென்னோ அதைமறையாமற்சொல்லடிதாயேயெனப் பயமுறுத்திக் கேட்டும்கோபித்தும் தங்களாற்கூடியவரையிற்பார்த்து எதனையும் வெளியிடாத காரணத்தினால் பயப்பிராந்திகொண்டு இதுவென்னஅநியாயமாகவிருக்கின்றது மகள் அதிககவலையிற் பட்டிருக்கின்றவளைப் போலக் காட்டுகின்றதெனத் துரிதமாய் ஒருஅறையிற்சேர்த்துக் காவற்படுத்திப் போற்றிவரும்போது சித்திரப்பிரதமையைப்போன்ற வடிவையும் சாயையுமுடைய வள்ளியம்மன் வெற்றிவேலாயுதமூர்த்தியைக்கலந்தின்புற்றிருந்தவள் அவரைக்கண்டு வார்த்தையாடிச் செலவுபெற்று

வாராமற்சடுதியில்பிரியவந்தகாரணத்தினுல்மனம்வெந்து சரீரம்கன்றித் தீயிற்பட்ட தளிரைப் போலப் பிராணனுண்டோ வில்லையோவெனச் சங்கைகொள்ளும்படிக்குச்சேர்ந்து பிரக்ஞைதப்பிவிழுந்தனள், இச்சம்பவத்தைக்கண்ட செவிலித்தாய் முதலாகிய வேடப்பெண்களோடிவந்து அதிககிலேசத்துடன் வாரியெடுத்து மார்புடனணைத்துமடியிற்சேர்த்துச் சகலருஞ் சூழ்ந்துகொண்டு துக்கசாகரத்திலழுந்தினவர்களாய் வள்ளியம்மன் திருமேனியுறுப்புகளைக் குறிப்பாகப்பார்த்து அழகியதிருமேனிதுவண்டு காந்தி மங்கிக்காட்டுவதையும் கரங்கள்மெலிந்து அழுத்தமாகவிருந்த தங்கவளையல்கள் தளர்ந்துகழல்வதையும் வேலையொப்பக்காதளவுமோடி செவ்வரி பரந்திருக்கும்விழிகளில் நீர்பெருகுவதையும் குறிகுணங்கள்முதலிய காரணங்கள் வேறுபட்டுக்காட்டுவதையும் நரம்புகள் பசலைகொண்டு பூரித்திருப்பதையும் கொங்கைகளில் நகக்குறிபட்டுப்பூரித்துவிம்மித் ததும்பியிருப்பதையும் நிதானித்துப்பார்த்தவுடன் சூர்ப்பகையாகிய வேலாயுதன்தொட்டதையறியாமல் தனைச்சொல்வதாயினர்,

மலையின்மீதிருக்கும் தினைப்புனத்தைத்தனிமையிற்காவல்கொண்டிருந்தகாலையில் இந்தப் பெண்ணரசியை வள்ளிமலைச்சாரலிலிருக்கும் தேவதை சோங்கிற்றோ யாதுந் தோற்றவில்லை இப்படிக்கொத்தகளை பட்டுக் கண்களைத்திறவாமற்கிடப்பதென்னையெனப்பலரும் பற்பலவிதங்களைப்பேசித் திகைத்திருக்கின்றகாலையில் தந்தையாகிய வேடர்பெருமானும் மற்றசுற்றத்தாரும் இதைக்கேள்விப்பட்டவுடன் ஏகமாய்த் திரண்டுவந்து சூழ்ந்துகொண்டு வள்ளிநாயகியார் ஸ்திதியைப்பார்த்துக் கிலேசித்தவர்களாய்த் தட்சணத்திற் றங்கள்குலதேவதையாகிய குறமூதாட்டியையும் முருகனையும் வரன்முறைப்படிக்குக் கோடித்துப் பூசனைவழிபாடுகளைச் செய்து பணிந்து போற்றியவுடன் வடிவேலனை ஸ்தாபித்துப் பத்திரபுஷ்பங்களைச்சாத்தித்துபதீபங்களைக்கொடுத்துப் பாற்சோறு தினைமாவிளக்குப்பண்டுபலாதிகளைத் திரட்சியாகப்படைத்து வேடரனைவரும் தீர்க்கதண்டன்செய்தவுடன் ஆவேசங்களுண்டாய் வெறியாடல்களைச் செய்துவரும்போது முருகன் மருள் பிடித்திருக்கின்ற ஒருவன்மேல் சுப்பிரமணியர்வந்தகாலையில் அவன் முருகாமுருகாவெனக் கூவிக்கூத்தாடுமுன்னிலையில் வேடரிற்சில முதியர் சமீபத்திற்போய்த் தூபங்களைக்காட்டிக் கரங்களைக்கூப்பிக்கொண்டு எங்கள் குலதெய்வமேமுருகப்பிரானே வெற்றிவேலனேபோற்றிபோற்றிதேவரீர் திருவுளமிரங்கி இந்தக் கன்னிகைக்குச் சம்பவித்திருக்குங் குற்றத்தை யின்னதெனத்திருவாய்மலர்ந்து அதற்குநிவாரணத்தையுங் கடாட்சிக்கவேண்டுமெனப் போற்றுகின்றகாலத்தில் முருகன்மருள்பிடித்தவன் அதட்டிஅடாபயலே உண்மையாகிய சம்பவத்தைத் தெரியாமல்மயங்குகின்றீர் இதுமற்றொன்றுமல்ல வேடராஜபுத்திரியானவள் தினைப்புனத்திற் றனிமையிற்காவல்கொண்டிருந்தகாலத்தில் அவளுடையசுந்தரவடிவத்திற் கிச்சித்து நாமேவலிதிற்றொட்டனம் எமதுள்ளமகிழும்படிக்குச் சகல ஆடம்பரங்களுடனும் பூசையைச்செய்து அவளையும்நமதுவெறியாடலுக்குள்ளாக்குவீராகில் இப்போது கண்டிருக்கும் மயக்கமும் மற்றகுறைபாடுகளும் நிவர்த்தியாய்முன்னினும் பதின்மடங்கு சவுக்கியப்பட்டு மனவெழுச்சியுடனிருப்பளெனக் குறிப்புவினையாகச்சொல்லி முடித்தவுடன் குமாரதேவருடையவாக்கியம் வள்ளிநாயகியார் செவிகளில் அமுததாரையைப்போல நுழைந்தமாத்திரத்தில் களைதெளிந்து கண்களைவிழித்து மெல்லவெழுந்து யதாப்பிரகாரம் தாய்தந்தையருடன்வார்த்தையாடிச் சந்தோஷசாகரத்திலழுந்திக்களித்திருந்தனள்.

இந்தச் சுகுணத்தைக்கண்டமாத்திரத்தில் செவிலித்தாயானவள் மனமகிழ்ச்சியுடன் முருகனை நினைந்து ஐயனே தேவரீர்திருவுளமகிழும்படிக்குத் திருவிழாமுதலிய சிறப்புகளைச்செய்வோம் இவளைப் பாதுகாத்திரட்சிப்பது உமது பாரமெனப்போற்றி பிரார்த்தனைசெய்து மஞ்சள்வஸ்திரத்துண்டில் செந்நெல்லைச் சேர்த்துமுடிந்து வள்ளியம்மை திருக்கரத்திற்கட்டினள். இவ்விதமாய்எமதன்னை வேடர் சிற்றில்லத்திலிருக்க வேடராஜனும் முருகனுக்கு உற்சவாதிகளை நடப்பிக்கவேண்டிய யத்தனங்களிற்சருவசாக்கிரதையாய் முடித்துக் கதிர்கள்முற்றிச் சாய்ந்தபடியால் வேடரனைவரும் தங்கள் தேவியருடன்கலந்துபோய் அரிந்து ஒப்படிசெய்து அரசனுக்குரிய கடமையைக்கொடுத்து யாசகருக்குவெறுக்கத்தந்து மிகுதியையில்லங்களிற்சேர்த்துக்கொண்டு பந்துவர்க்கங்கள் சிநேகிதர் அதிதிகளுடன் சாப்பிட்டுச் சவுக்கியமாகவிருந்தனர், இதன்மத்தியில் வள்ளிவரையினிடத்தில் வள்ளிநாயகியாரைத் தழுவிக் களவுப்புணர்ச்சியைச் செய்திருந்த குமாரசுவாமியார்மறுதினம் வழக்கப்படிக்கு மாறுவேடத்தைத் தாங்கிக் கம்பீரமாய்வந்து திருத்தேவியைக்காணமல்தினைப்புனத்தையரிந்திருப்பதைத் தெரிந்தவுடன் மனங்கலங்கிமதிமயங்கிப்பிரமைகொண்டவரைப்போலப் புலம்பி வரைமுற்றினுந் திரிந்தலைந்து யாதுந்தோற்றமல் திகைத்துவானத்திற்செல்லும் மேகங்களைப்பார்த்து இந்தத்தினைப்புனத்திற்காவல்கொண்டிருந்த என்மனதுக்கினிய பெண்கொடியானவள் போனவிடந் தெரியுமோவென்று வினவியும் தாங்கள் உல்லாசமாய்க் காமபோகங்களையனுபவித்துக் களித்திருந்தசோலைகள் மாதவிப்பொங்கரினிடங்களிற்போய் அத்தலங்களில் மனவெழுச்சியுடன் கலாபத்தை விரித்தாடும் மயிலினங்களைக் கூவி நான் பிராணனைக் கிரகித்துக்கொண்டு மறைந்தநாயகியினது செய்தி தெரியுமாயின்மறையாமல் வெளியிடக்கடவீரென்று கெஞ்சியும்ஓ தினைப்புனமே உன்னிடத்திற் பலநாட்களாக வாசமாய்இப்பரணிடத்திலிருந்த வேடமங்கை எத்தலத்தைநோக்கிச்சென்றனள், சந்தேகமில்லாமல் உனக்குத்தெரியுமே மறையாமற்பேசுவாயென்றிரந்தும் அழகியசிறகைவாய்ந்த பூவைகாள்என்னுன்மாவையொத்த வள்ளியின்காரணம் ஏதேனும்தெரியுமாகில் சொல்லக்கடவையெனக் கரங்களைக்கூப்பியும் பசியகிள்ளைகாள்பெண்ணரசியைக் கண்டீர்களோவென்று வினவியும்வீறிட்டுச்செல்லும்மதயானையைப்பார்த்துப் பொற்பாவையையொத்த மின்னைப்பார்த்ததுண்டோவெனக்கேட்டும் மான்கூட்டங்களின்மீது விழிகளைப்பரப்பி உங்களினத்திலுதித்த மங்கையேதேனும் இக்கூட்டத்திற்சேர்ந்திருக்கின்றனளோ உரைப்பீர்களெனவினவியும் தோப்புகளினிடங்களினுலவித் தென்றற்காற்றுத்தாக்குவதினால் மிகவும்வாடியித்தலத்தி லிருக்கின்றனளோவெனவுரையாடியும் மலைகளினிடங்களினுலவி அருவிப்பெருக்கைக்கேட்டு ஏதோசிலஅரவங்காட்டுகின்றதால் அப்பெண்கொடியைக்குறித்துச்சந்தேகிக்கவேண்டிக்காட்டுவது அதன்காரணத்தைச்சொல்லெனஅவ்வொ

லியைக்கேட்டும் தாம்தாகசாந்திசெய்தசுனையைப்பார்த்து முன்னம் இவ்விடம் நம்முடன்வந்தநாயகியைப்பார்த்திருப்பீரோ பின்பேதேனும் இவ்விடத்தில்வந்து இதன்மூலமாய்ப்போகக் கண்டதுண்டோவெனப்பேசியும் இவ்விதங்களில்வனாகள் குன்றுகள் காடுகள் மற்றுமிராகின்றவிடங்களெங்குஞ்சுற்றிச்சுற்றி வினவிவினவிக்கூவிக்கூவி அலைச்சற்பட்டு இளைத்துவாடி மனவூக்கமற்று நெஞ்சுலர்ந்து காமக்கவலையுற்று பெருமூச்செறிந்து நடுநடுங்கித்தியங்கி வள்ளியம்மை அடிச்சுவட்டை நாடித்திரிந்துகுறமகளைஎங்குந்தேடியும் அலைந்தனர்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே, யிக்காரணங்களை யோசிக்குமிடத்தில் தேவதேவோத்தமனாகிய குமாரதேவருக்கு இதுவுமொரு திருவிளையாடலாகக்காணுகின்றதல்லது வேறுமுண்டோ மேற்குறித்தபடிக்குத் தனக்கின்பத்தைத் தந்தவள்ளியம்மையைத்தேடுகின்றவனைப்போலப் பகற்போதைக்கழித்து முன்னிரவிலும்கொல்லைத்தினைப்புனமெங்கணுஞ் சுழன்றுசுழன்று கடையில்அர்த்தராத திரிவேளையில் மெல்லமெல்லவேடர்சீறூரிற்புகுந்து குலஹீனராகிய குறவர்பெருமான் வாசஞ்செய்யும் குடிசைக்கருகிற்போய்ப் பதுங்கிநின்று கரத்தைத்தட்டிச்சில சைகைசெய்தனர், இச்சம்பவம்நேருமென்று முன்னமே தெரிந்து மனக்கவலையினால் நித்திரைகொள்ளாமற்படுத்துப் புரண்டுகொண்டிருந்த பாங்கியானவள்இந்தஅரவம்தெரிந்தவுடன் மெல்லவெழுந்து வெளிவந்து சுப்பிரமணியதேவரைத் தரிசித்தவளாய்த் திருவடிகளில்வணங்கி தேவரீர்இராக்காலத்தில் இவ்விடம்வருவதுதகாது நீங்களிருவருங்கலந்தின்புறுவதற்குத் தகுந்தவிடமுமில்லை அப்படிக்குநேரினும்பின்பு எங்கள்பெண்கொடியானவள் பிரிந்திருக்கத்தரியாள் இவ்விதசங்கடங்க ளிருக்கிறபடியால் வள்ளிநாயகியை உமதிடத்துக்குக்கொண்டுபோய் உமதிஷ்டப்படிக்குக் குலவியிருப்பது தகுதியாகக்காணுகின்றதெனச் சம்மதப்படுத்திச் சிவகுமாரனை அவ்விடத்தில் நிறுத்தித்திரும்பி குடிசையில்நுழைந்து வள்ளிநாயகியார்பள்ளிகொண்டிருக்கும் இடத்தைச்சேர்ந்துசெவிகளுடன்வாயைப்புதைத்துத்தாயே உமதுமனதுக்கினியகொழுனன்பிரிவினால்மிகவும்வருந்திமனந்தாபரியாமல் உம்மைக்கரவடமாய்த்தன்சாகைக்குக்கொண்டுபோம்படிக்குத் துணிவுகொண்டு கடைவாயிலின்புறத்தில்வந்திருக்கின்றனர், துரிதமாய்ப்புறப்படக்கடவாயென்றுமெதுவாய்ச்சொல்லிய வாசகங்களைக்கேட்டமாத்திரத்தில்மனங்குளிர்ந்து தேகம்பூரிக்கக் களித்தவளாய் இதுமிகவும் நன்மையாகவிருக்கின்றது அவ்வாறேசெய்வேனென ஒருமித்துத் தாய்தந்தையர்மெய்மறந்து தூங்குவதையும் மற்றசுற்றத்தார்கைகால்போனதுதெரியாமல்சோர்ந்துறங்குவதையும் சாடைகளினாலறிந்துதிடசித்தளாய் விழிகளைமூடாமற் காத்திருக்கும் வேட்டைநாய்கள் அப்போதுதான்சற்றுக்கண்களைமூடியதையும் தெரிந்துகொண்டு அண்டைஅயலார் சந்தடியில்லாமையையுங்கண்டு ஊரெங்கணும் ஓய்ந்திருப்பதையும் மதித்துக்கொடியபேய்களுறங்கும்நடுச்சாமத்திற்பாங்கியானவள் கரத்தைப்பற்றி அரவந்தோற்றாமல் மெல்லக்கூட்டிவந்து நடையைச்சேர்ந்தவுடன் தாழ்ப்பாள்சத்தந்தெரியாமல்விலக்கிக் கதவைஒருக்களிப்பாய்த்திறந்து வள்ளியம்மையை வெளியிற்கொண்டுவந்து சேர்த்தகாலையில் வேடராஜபுத்திரியானவள் ஆவலுடன் எமதிறைவனைஎதிர்கொண்டு வணங்கிச் சிறுதொழில்களைச்செய்துவரும் குறவர்குறிச்சியில்நாயினேன்பொருட்டுச்செந்தாமரைமலர்களையொப்ப மெத்தெனவிளங்கும் பாதங்கள்கன்றிவருந்தும்படிக்குஇராத்திரிக்காலத்தில் யாதொரு துணையுமில்லாமல் தேவரீர்வருவதோஇக்குற்றத்தைக்ஷமிக்கவேண்டுமெனப்பரிபவப்பட்டுகரங்களை கூப்பித்தொழுது தவக்கொழுந்தாகிய தேவிநிற்கும்போது தோழியானவள் சுப்பிரமணியக்கடவுளைப்பார்த்து வில்லையுங்கணைகளையும் இடைவிடாமற் கரங்களிற்பற்றிக்கொண்டு கொலைக்கஞ்சாமற் றீயதொழில்களையே முக்கியமாகக்கருதிச் செய்துவரும் கடினசித்தராகியவேடர் இக்காரணங்களைக்காண்பராயிற் கெடுதிநேருவதற்கையமில்லை யிதைக்குறித்துக் காலதாமதஞ்செய்யாமல் இந்தநிமிஷத்திற்றமது சிறந்தபதிக்குக்கொண்டுபோய் இவளைப்பாதுகாத்திரட்சிப்பது தேவரீருக்குப்பாரம்இப்பெண்கொடியைஅருமையாய்ச்சீராட்டி வளர்த்தனம் இக்காலத்தில் உமதடைக்கலமாகத்தந்தனனென முத்துக்கோவையையொத்ததந்தபந்திகளையுடைய தலைவிகரங்களை முருகப்பெருமாள்கையில்வைத்துக் கரங்களைக்கூப்பித்தொழுது போற்றியகாலையில் கடப்பமலர்மாலைபுரளும் பன்னிருபுயாசலங்களையுடையகந்தர் அவளிடத்திற் பரிபூரணகடாட்சத்தைவைத்துக் கிருபையாகப்பார்த்து ஓபெண்ணே நீநம்மிடத்திற்பரிவாய்ச்செய்தகருணையை ஒருபோதும் மறக்கமாட்டோமெனத்திருவாய்மலர்ந்தபோது மைதிமிர்ந்த விழிகளையுடையபாங்கியானவள் வள்ளிநாயகியாரைச்சேவித்துத் தழுவித்தாயே தேவதேவோத்தமனைக் கணவனாகப்பெற்றவுமக்குயாதொருகுறைவுமில்லை அவர்மனக்கருத்தின்படிக்குநடந்துகொள்ளக்கடவை துரிதமாய்த் தலைவனைப் பிரியாமல் கூடப்போய் வாருமென்று ஐயனுடன்கூட்டித்தலைவிசெலவுகொடுக்கப்பெற்றுத்திரும்பி விழலினாற் சோடித்திருக்கும் சிறுகுடிலில்நுழைந்து சந்தடியில்லாமல் மெதுவாய்க்கபாடபந்தனம்செய்துகொண்டு தன்படுக்கையைச்சேர்ந்துநித்திரைசெய்திருந்தனள்.

அவள்மீண்டபின்பு அன்னநடையைவாய்ந்த தேவியுடன் வெற்றிவேலாயுதமூர்த்தியானவர் பாதிராத்திரியிற் காவலனைத்தையுங்கடந்து வேடர்சேரியைத்தாண்டி காமன்பாணங்களாகியமுல்லை, அசோகு, நீலம், அல்லி,மா·புன்னை, குருக்கத்தி, கோங்கு சண்பகமுதலாகிய தருக்கள் தழைத்துப்புஷ்பங்களைவிரித்துப் பரிமளித்துத் தேன்க

ளைததுளித்துச் சுனைகள்மிகுத்து இருண்டிருக்கும் சோ
லையிற்சேர்ந்து திருத்தேவியுடன்கந்தர்குலவிக்களித்து வ
ருமுன்னிலையில் இராத்திரிநீங்கி விடியற்காலமானதால்
வேடராஜன்மனைவியானவள் திடுக்கிட்டவளைப்போலவெ
ழுந்தபோது பக்கத்திற் படுத்திருந்தகடககங்கணங்களைய
ணிந்திருக்கும் புத்திரியைக்காணாமையால் வீட்டிலிருக்கி
ன்ற அறைகள் முத்தம் தாழ்வாரமெங்கனுந்தேடிப்பார்
த்துக் காணமல் தோழியைக்கண்டு வள்ளியம்மையெங்
கேகாண்கிலனென்று வினவியகாலத்தில் தாயேமுன்சாம
த்தில் அவளும்நானுமாய்த் தேவரீர்பக்கத்திற்படுத்து நி
த்திரைசெய்ததுண்டு அதன்பின்பு எனக்கொன்றுந்தெரி
யாதெனமாறுத்தரம்கொடுத்தவுடன் தாயானவள்அனலி
ற்பட்டமயிலைப்போலப் பதைபதைத்துக்கிலேசித்தோடி
க்கணவனைக்கண்டு என்பிராணநாயகாஎன்னசொல்வேன்
நமதுபெண்ணரசியைக் காணேம் இதற்கென்னசெய்வே
னென்று புலம்புவதைக்கண்டு மறவர்பெருமான்மதிமய
ங்கி உடனேகோபம்பிரவேசித்து வடவாமுகாக்கினியை
ப்போலச்சீறி யிந்தச்சேரியில் நாட்டியிருக்கும் காவலைக்
கடந்துநம்மனைக்காவலைச் சட்டைபண்ணமல் மிகுந்த த
யிரியமாய்ப்பெண்கொடியைக்கொண்டு போனகள்வன்யா
வன் அவனையிந்தநிமிஷத்திற் பற்றிவந்து தகுந்ததண்ட
னையைச்செய்வேனெனச்சீறி உடனேசல்லடத்தைமாட்டி
த்தட்டியையிடையிலிறுக்கி வாளாயுதத்தைஅரையிற்செ
ருகிவில்லையும் பாணங்களையுங் கரங்களிற்பற்றிக்கொண்
டுஅதிதீவரமாய்க்குமரியைத்திருடிப்போனதிருடன்அடி
ச்சுவட்டைநாடி அந்தமார்க்கத்தைக்கண்டுஅதிகவீராவே
சத்துடன் வில்லியர்பெருமான்நடக்கும் சேதியைத்தெரி
ந்தவுடன் கட்டுக்காவலையுடைய இந்தவூரில் அர்த்தராத்
திரியில்வந்துவள்ளியம்மையைக்கொள்ளைகொண்டு மாய
மாய்ப்போன சோரனைச்சும்மாவிடலாகாதுதொடர்ந்துபி
டித்துக்கட்டுவோம் குத்துவோம் சிறையிலடைப்போமெ
ன்று பற்பலவீரங்களைப்பேசித்தட்டி சல்லடத்தைக்கட்
டிவில், பாணம், வாள், வளைதடி, சில்லாக்கோல் முதலா
கிய படைகளைப்பரித்து புத்தசன்னத்தராய்ச் சேரியிலி
ருக்கின்ற வீரரனைவரும் ஏகமுகமாய்த்திரண்டு பிரசண்
டவாயுவினுங் கடுகிப்போய்த் தமதிறைவனைக்கலந்து ப
றைகளைமுழக்கியும் கொம்புகளையூதியும் நடக்கின்றவர்
அம்மார்க்கத்திற் பாதச்சுவடுகளைக் குறித்துப்பார்த்துப்
பலதிசையினுமோடியும் சிலர்தோப்புகளிற் புகுந்தாரா
ய்ந்தும் பலர்தினைப்புனங்கள் பரந்திருந்த எல்லையெங்க
ணும்பார்த்தும் மற்றவிடங்களிற் பற்பலவேடர்புகுந்துச
ந்துபொந்து மூலைமுடுக்குகளெங்கணும்நுழைந்துநுழை
ந்து தேடிவரும் ஆரவாரங்களை அதற்கடுத்தசோலையினி
டத்திற் பாலசுப்பிரமணியதேவருடன்கொஞ்சிவார்த்தை
யாடிக்கொண்டிருந்த வள்ளிநாயகியார்தெரிந்தமாத்திரத்
தில் திடுக்கிட்டுத் திருமேனி நடுநடுங்கி வியர்க்க மிகவும்
பயந்தவளாய்ச்சண்முகதேவர்பாதாரவிந்தங்களில் விழுந்
து சேவித்து மனவருத்தத்துடன் இதனைவிண்ணப்பஞ்
செய்வதாயினள்.

ஓஎன்பிராணநாயகா கேட்டீரோ அதோவொலிக்கின்
றஆரவாரங்களை மோசம்வந்தது அடியேனைக்காணாத கா
ரணத்தினால் என்பிதாவும் மற்றவேடருங் கோபதீபிதர்க
ளாய் வில்-வாள்-குந்தம்-எழு-மழு-பிண்டிபாலம், கப்ப
ணம்முதலாகிய பாணவிதங்களைத்தாங்கித் திசாதிசைக
ளெங்கணுந்தேடிக்கொண்டுவந்து இதோவிந்தச்சோலையி
ன்பக்கத்தில்நெருங்கிவிட்டனர், அவர்கள்கொடுமையையு
ம்கடினசித்தத்தையும் பலநாள்கண்டுபழகினவளாதலால்
அடியேன்மனம்பதைபதைத்து நடுங்கி வாடுகின்றது இ
னிமேல்நாம்செய்வதொன்றும் தோற்றவில்லை வேடர்மிக
வும்பொல்லாதபாபிகள் என்னசெய்வரோஇதற்கடுத்தமு
யற்சிகளைவிரைவில்நினைந்துவேண்டிய சாக்கிரதையுடனி
ருக்கவேண்டும் கர்த்தனேயென்று பரிபவப்பட்டுப்போற்
றுகின்ற திருத்தேவியிடத்திற் கருணைகூர்ந்து உன்பத்
திமைக்குக்களித்தனம் நீயொன்றுக்கும அஞ்சிப்பயப்ப
டவேண்டுவதில்லை வருத்தமின்றி மனவெழுச்சியுடனிரு
க்கக்கடவாய் நீடூழிகாலம் வாழிவாழியென் றுஅதரித்துப்
பெண்கள்சிகாமணியே யிதனைக்கேட்பையாக மாயையில்
வல்ல கிரவுஞ்சபருவதத்தையும் ஜயசாலியாக வாழ்ந்திரு
ந்ததாருகாசுரனையும் ஒருமுனையிற்பிளந்து கொன்ற வெ
ற்றிவேலாயுதமுதலிய சிறந்தபடைகளிருக்கின்றனநும்ம
வர்கள் பகைத்துப்போர்செய்ய வருவராயின்நிமைப்போ
தில் வாட்டவல்லோம் இந்தவேடிக்கைகளைப் பார்த்துக்
கொண்டு நமதுபின்புறத்தி லிருக்கக்கடவாயென்றருளிய
வாக்கியங்களைக் குறமகள்கேட்டவுடன் மனமகிழ்ச்சியாய்
ச்சுப்பிரமணியதேவருக்குப் பின்போயிருந்தனள்.

அத்தருணத்தில் வேடர் ஆர்ப்பாட்டங்களைச்செய்து
கொண்டு அதட்டியுருட்டிப்பற்பலவசைமொழிகளைப்பே
சிக் கந்தர்திருத்தேவியுட னிருக்கின்றசோலையிற் சிலர்நு
ழைந்து உற்றுப்பார்த்துக் கள்வன் அகப்பட்டான் வா
ருங்கோள் வாருங்கோளென்றுகூவிக் கிராதகத்தொழிலை
யுடைய குறவரனைவரும் ஏகமாய்க்கூடிச் சோலையைவ
ளைந்து முற்றுகைபோட்டுக்கொண்டு உருத்திராகாரமாக
க்கொதித்திருக்குமுன்னிலையிற் பின்னணியில்வந்த எயி
னர்பெருமான் இச்சேதியைத்தெரிந்தவுடன் காளகூடத்
தினும் கோபித்தவனுப்த்தன்சேனைகளுக்கு முன்னணியி
ல்முந்தி நமதுபெண்ணை அபகரித்துக் கொண்டுவந்தகள்
வன் இத்தகையபெருஞ்சேனையின் வரவைக்கண்டும் சற்
றும் அச்சமில்லாமல் மனவெழுச்சியுடன் அசைவற்றிரு
க்கின்றதன்றி நமதுவலியையும் வீரத்தன்மையும் ஜயப்
பிரதாபங்களையும் அசட்டைசெய்திருக்கின்றனன்,இவன்
புயவன்மையைத் தீப்பட்டெரிந்து சாம்பலாகும்காட்டை
ப்போல இந்தநிமிஷத்தில்வாட்டுவோமெனப்பொங்கி கு
றிஞ்சிக்கிறைவனும் மற்றப்பாதகரும் சமுத்திரப்பெருக்

கைப்போல ஆர்ப்பரித்து வில்லைவளைத்து ஆயிரங்கிரணசமோகங்களையுடைய சூரியனைமேகங்கள்கவியுமாறுபோலநாலுதிசையினுஞ் சூழ்ந்து சரவருஷங்களைப்பொழிந்துவாதாடுமுன்னிலையில் அவ்வாளிகள்மேலிட்டுச் சிடசிடென்றும குறுகுறென்றும் சடசடென்றும் இரைந்துகொண்டு அதிவேகமாய்வந்து பத்தர் அருச்சனைசெய்யும்மலர்களைப்போலக் கிருபைக்கடலாகிய குமாரதேவர் திருமேனியெங்கும்தைத்துத்தைத்துப் பலபலவென்றுசுற்றிலுமிறைந்தன இக்கொடுமையைத் தேவியார் கண்டமாத்திரத்திற் பதைபதைத்து விழிகளில்நீரைப்பெருக்கிக்கிலேசித்தவளாய் இதனைவிண்ணப்பஞ்செய்கின்றனள்.

கடினசித்தமுடைய சத்துருக்கள் கூரியபாணகோடிகளை அமோகமாகச் செலுத்துகின்றனர், அவைவீறிவந்து தமதுமங்களகரமாகிய வடிவிற்முக்கியாதொருதீங்குகளைச்செய்யாமற் போனபோதினும்அதனைப்பார்க்கமனந்தபரிக்கவில்லை யாதலால் உமதடியாளிடத்திற் கிருபையுற்று வெற்றிவேலாயுதத்தை யிந்தநிமிஷத்திற்செலுத்திக்கொடியபாதகரனைவரையும் ஏககாலத்திற்கொன்று என்மனக்கவலையைத் தீர்க்கவேண்டும் வீரபராக்கிரமசம்பத்தையுடைய சிங்கராஜன்பாய்ந்து கொல்லாமற் சும்மாப்படுத்திருக்குமாயின்மான், மரை, யானை, பன்றி, கரடியித்தகைய மிருகங்கள்நெருங்கிக் காதைப்பற்றி யாட்டிப்பரியாசஞ்செய்யாதோ ஆதலாற் சற்றுந்தாழ்க்காமல்எம்மவர்களென்னும் இரக்கத்தையொழிந்து கண்டதுண்டமாக்கி நிலத்திற்றள்ளுமென்று வள்ளிநாயகியார், அதிகபிரியத்துடன் பேசியபோது நல்லகாரியம் உம்முடையவிஷ்டப்படிக்கு நடக்கப்போகின்றது அதையும் சற்றுநோக்திற்பார்ப்பையெனத் திருவுளம்பற்றினவராய்த்தமதுவெற்றிக்கொடியைநினைந்தனர், அக்காலத்திற் சிவந்தகொண்டையையுடையசேவலானது கந்தர்குறிப்பின்படிக்கு விசாலமாய்த் தழைத்திருக்கும் சிறகைவிரித்தசைத்து வானவழிக்கொண்டு பறந்துவந்து சிவகுமாரன் சன்னிதானத்தில்நின்று கழுத்தைநீட்டிப்பேரொலியெழ ஒருவிசைகூவிற்று அந்தமுழக்கமானது பிரளயகாலத்தெழும் பேரிடியினும்மேலிட்டுப் பகைவர்செவிகளிற் கேட்டமாத்திரத்தில் விஷப்பரிசம்பட்டவர்களைப்போல வேடராஜன் தன்பிள்ளைகள் பந்துவர்க்கங்கள் கொடியமனதையுடைய சேனைகளுடன் பிரசண்டமாருதமோதலிலகப்பட்டவிருட்சங்களைப்போலப் பொறிகள்கலங்கிப் புலன்களொடுங்கிக் கைகால்கள் தளர்ந்து ஒருவர்மீதொருவர் விழுந்துமாண்டனர், இவர்கள்போராடுமுன்னிலையிற் செங்கல்வராயனிடத்திற்பரிவாய்அதம்பண்ணிப்போடும்படிக்குவேண்டியஎன்தாய் அவர்களிடத்தில்வளர்ந்து சகலவுபசாரங்களையும்பெற்று மனவெழுச்சியுடன் குலவியிருந்தவளாதலால் இவ்விதமாகப் பிதாவும் சகோதரர்எழுவரும் மாமன்மைத்துனன் உறவாகவிருந்தவர் முற்றும்ஒருமுனையிற்செத்த கொடுமையைக் கண்ணாரக்கண்டமாத்திரத்தில் திடுக்கிட்டு மனம்பதைபதைத்துத் திருமேனிநடுக்கமெடுக்க விழிகளில்நீரைத்தாரைதாரையாகப் பெருக்கிக்கதறி எண்ணாததெல்லாமெண்ணியெண்ணிச் சோருகின்றபோது இக்காரணங்கள்யாதுந்தெரியாதவரைப்போலத்தமதுதிருத்தேவி யன்பைச்சோதிக்கும்பொருட்டுமனக்கலக்கமற்று முருகப்பெருமாள் அச்சோலையைக்கடந்து சிந்தையில் அருள்வெள்ளமானது பெருக்கெடுத்தலைக்கக்கம்பீரமாய்நடந்துபோம்போது தேவியும் நிழலையொப்பப்பின்பற்றிச்சென்றனள் இச்சம்பவங்களனைத்தையும்போதவுணர்விற்றெரிந்த நாரதபகவான் மிகவும்சிந்தாக்கிராந்தராய் மனோவேகத்தினுமுந்தி யெதிரில்வந்து சுப்பிரமணியர் திருக்கோலத்தைக் தரிசித்து மனமகிழ்ச்சியுடன் அம்மையப்பர் திருவடிகளில்வணங்கி ஜயஜயபோற்றியென்று வாழ்த்தினவராய்க் கார்த்திகேயனே அடியேன்தம்மைக்கண்டு நீங்கிபபின்பு நடந்தசேதிகளைத் திருவுளம் பற்றக்கடவீரெனவேண்டுவதற்கிரங்கி நாரதரைப் பரிவாகப்பார்த்துத் தாம்திருத்தணிகை வரையைக்கடந்து வள்ளியம்மையைக்கண்டு தன்வயப்படுத்திய காரணத்தினா லெதிர்த்துவந்த வேடராஜன் வம்சநாசமறக் களப்படுத்தியவரையிற் சவிஸ்தாரமாகத் திருவாய்மலர்ந்த சம்பவங்களைக்கேட்ட நாரதர் மனவிரக்கத்துடன் கண்ணபிரான் திருமருகனை வந்தித்துச் சுவாமிகள்சொல்லிய காரணங்கள் வெகுநேத்தியாக விருக்கின்றன. தேவரீர் திருவிளையாடலுக்கொரு எல்லைகிடையாதாயினும் இந்த அநியாயமெங்கேனுமுண்டோ தம்மைக் குறித்துப் பற்பல தவவிரதங்களைச்செய்து வருந்தி நோற்ற சிறப்பினாற் கிடைத்தற்கரியவிஷ்ணுவின் திருக்குமாரத்தியை பெண்ணாகப் படைத்துச் சீராட்டிப் பாராட்டிப்போற்றி அரிதில்வளர்த்துப் பரிபக்குவப்படுத்திப்போற்றிவந்த பிதாவையையும் துணைவரையும் மற்றசுற்றத்தினராதியரைக் கோபித்துக்கொன்றபோதினும் சற்றும் தயைதாட்சண்ணியமில்லாமலும் அதற்கொரு நிவாரணத்தைக்காட்டாமலும்இதுபரியந்தம் அவர்கள்கிரகத்தில் உண்டுடுத்து வளர்ந்தபதிவிரதாசிரோமணியானவள் மனங்கலங்கி வாடிவருந்தும்படிக்கு இட்டுக்கொண்டுபோவது அழகோ உலகநடைக்கடுப்பதோ மூடராகவிருக்கும் வேடருக்குத் தேவரீர்மகிமைகள்தெரியுமாயின் இப்பெண்கொடியைத் தத்தஞ்செய்து அதிகமரியாதையுடன் பூசித்தனுப்புவதற்குத் தடையுண்டோகள்ளவேடத்தைத்தாங்கிப்பரிந்து வளர்த்தபெண்ணையுந் திருடிக்கொண்டுபோனால் சும்மாவிட்டுவிடுவார்களோ காங்கேயனே, தேவியின்மனவருத்தந்தீர்ந்து களித்திருக்கத்தக்கதாக அவர்களிடத்திற்கிஞ்சித்துத் தயைசெய்துகிருபாநோக்கம் பாலிக்கவேண்டுமென்று பலவாகப்போற்றுகின்ற மஹரிஷியைப் பரிவாகப்பார்த்தருளி நல்லகாரியம் உமதிஷ்டப்படிக் காகட்டுமெனத் திருவாய்மலர்ந்துதிரும்பித் தேவியும் இருஷியும் பின்பற்றிவரச்சோலை

யினிடத்திற்சென்று தமதிடத்தில் மெய்ப்பத்தியும் அன்
பும் மற்றகளிப்பையும் பூரணமாகப்பெற்றிருக்கின்ற வ
ள்ளியம்மை முகாரவிந்தத்தைப்பார்த்து நம்மிடத்தில் அ
பலமாகியபோதைச்செய்து மாண்டு நிலத்தில்விழுந்துகிட
க்கும் உன்சுற்றத்தின ரனைவரையும் எழுப்பக்கடவாயெ
ன அம்மையார் பெருமைகள் பலருக்குந்தெரிவதாகத் தி
ருவுளப்பற்றியமாத்திரத்தில் ஆனந்தபரவசத்தளாய் மகா
பாக்கியமென்று காமாக்ஷியின்சுபுத்திரரைச்சேவித்து அ
வர்திருவடிகளை மனதிற்றியானித்துப் பத்திபரவசத்தளா
ய் அரியபிராணனையிழந்து தேகம்புழுதியிற்பட நிலப்பா
யலில் அலங்கோலமாய் விழுந்துகிடக்கின்ற என்னுசைப்
பி தாவே சீராட்டிவளர்த்ததுணைவரோ அருமையாகப்போ
ற்றிவந்த சுற்றத்தாரோ நீங்களனைவருங் கமலக்கண்ணன்ம
ருகன் கட்டளையின்படிக்கு எழுந்திருந்துகுலவி என்மன
க்கவலையைத் தீர்க்கக்கடவீரென்று பவளவாய்திறந்துஒரு
திருவாய்மொழியைப் பேசியமாத்திரத்தில்உறங்கியிருந்த
வர்உணர்ச்சிபெற் றெழுமாறுபோலப் பழையபடிபிராண
னையடைந்து துள்ளிக் கொக்கரித்து வேடராஜனுதியர் எ
ழுந்ததருணத்தில் சிவகுமாரன் அக்காலத்திற்கொண்டிரு
ந்த கோலத்தைமறைத்துக் கிருபாசமுத்திரம்பெருகும் ச
ண்முகாரவிந்தங்களையும் பொன்வரையைப்பழித்தோங்கி
யிருக்கும் பன்னிருபுயாசலங்களையும் வெற்றிவேல்சக்கர
ம் தனுசுமுதலியபடைகள் கரங்கள்தோறும் துவாதசாதி
த்தரைப்போல விளங்கவும் இத்தகையதமதுதிருவடிவை
த்தாங்கி எதிரில்நின்றகாலத்தில் அந்தஅற்புதக்காட்சியை
அனைவருந் தரிசித்தமாத்திரத்திற் றிடுக்கிட்டுத்தேகம்நடு
க்கமெய்திப் பயப்பிராந்திகொண்டு அடியற்ற பனைகளைப்
போல நிலத்தில்விழுந்து பன்முறைவணங்கிவாயில்வந்த
வந்தவிதங்களிற் போற்றிசெய்து விழிகளில் ஆனந்தவாரி
யைப்பெருக்கித் தேகம்குதகுலித்து மயிர்ச்செறிவெழஅ
ளவுபடாத பேரானந்தத்தையடைந்தவர்களாய்க் கரங்களை
க் கூப்பிக்கொண்டு இதனை விண்ணப்பஞ் செய்வதாயி
னர்.

ஓ எமதுகுலதெய்வமே கொலைத் தொழிலையே முக்கிய
யமாகவிரும்பி நடாத்திவரும் இழிகுலராகிய அடியோங்க
ள் வம்சபரம்பரையாக அடிமைகொண்டு யாதொருதீங்கு
களும் நேராமல் எங்கள் சேரியைப்பாதுகாத்த அந்நிலத்
துக்கு ஆதிதேவதையாகவுமிருக்கின்ற தேவரீரோநாயினே
ங்கள் முன்னவருடன்செய்ததவமுயற்சியினுற் பெற்றுப்
போற்றிவளர்த்திருந்த பெண்கொடியை அரையிருளில்கு
றிச்சியிற்புகுந்துசோரத்துவமாய்க் கவர்ந்துகொண்டுபோ
யப் பலரும்புகழவிருந்த இந்தக்குலவரம்பைபழித்து உ
லகமுள்ளளவுந் தீராதபழிப்புரையொன்றைப்பிரசித்தமா
க ஸ்தாபித்தீர் பத்துமாதஞ்சுமந்து வருந்திப்பெற்றுஅரு
மையாகவளர்த்தெடுத்த நற்றாயானவள் பாதுகாப்பதற்கு
ப்பதிலாய் வயிரங்கொண்டு விஷத்தையூட்டுவளாயின் அ
தைக்கண்டு தடைசெய்பவல்லவர்களொருவருண்டோ இக்
காரணந் தேவரீர் திருவுளத்துக்குப் பளிங்குபோலத்தோ
ற்றுமாயின் தமதுவழியடியர் செய்யவேண்டுவதென்னை
இதுநிற்க எங்கள்குலக்கொடியினிடத்தில் மையல்கொண்
டு நாயினேங்களுக்குத்தெரியாமற் சேரியிலிருக்கும்பெரு
ங்காவலைக்கடந்து பலவத்காரமாய்த் தனிமையில்வ்விடங்
கொண்டுவந்து விட்டீராதலால் எமதிறைவனேகிருபையு
ற்று கன்னிகையுடன் எங்களுநாச்சேர்ந்து அக்கினி, ஆ
தித்தன், கடவுளர், பந்துக்கள்சாட்சியாய்த் திருக்கலியாண
ஞ்செய்து கொண்டு எங்கள் மரபுக்கடுத்தசீர்சிறப்புகளு
டன் நாங்களனைவரும் சந்தோஷத்துடன் அனுப்பிவைக்
கும்படிக்குத் தாராளமாய்த் திருத்தேவியை உம்முடைய
ஊருக்கழைத்துப் போகலாமென்று விண்ணப்பஞ்செய்த
மாத்திரத்தில் மாதுலன் அவன்வர்க்கத்தவர் கோரிக்கையி
ன்படிக்கிசைந்து அவ்வாறே நடப்பிக்கின்றனமெனத் தி
ருவாய்மலர்ந்தவராய் வள்ளிநாயகியார் தொடர்ந்துவர நா
ரதபகவானுந் தழைத்தோங்கிக் குளிர்ந்த நிழலைப் பரப்
பியிருக்கும் மலர்க்காவைநீங்கிப் பாதகமலங்கள்கன்றிவ
ருந்தும்படிக்கு நடந்துவள்ளிவரைக்கருகி லிருக்கின்றசி
ற்றூரிற்பிரவேசித்தனர், வேடராஜன் மற்றவருடன்மன
மகிழ்ந்து ஆனந்தபரவசத்தராய்ச் சூழ்ந்துவந்துதங்கள்
சேரியைச்சேர்ந்தவுடன் தம்மினத்தவரைப்பார்த்துச் சங்
கரன்குமாரராயும் நமதுகுலதெய்வமாயு மிந்தநிலத்தைப்
பாதுகாத்துவரும் சுப்பிரமணியக்கடவுளே வலியவந்துந
மதுமாதைத்திருடிப்போயினன், இப்போது அடியேன்
கோரிக்கையின்படிக்குத் திருமணமுன்னிலையில் வள்ளி
யாரைப்பெற்றுப்போகச் சம்மதித்துவந்தானென்றுபலரு
மறியத்தெரிவித்தனன்.

அக்காலத்தில் முன்னம்பொங்கிக் கொண்டிருந்தகோப
மும். நாணமுமடங்கிமகிழ்ச்சிமிகுதியினுல்தேகம் சிலிர்த்
துமயிர்பொடிப்பச் சந்தோஷசாகரத்திலமூழ்ந்தி யிப்படிக்
கோவிருந்தது நமதையன்திருவிளையாடலென்று கூத்தா
டுகின்றபோது வேடராஜன் குறிச்சியிற் றலைமைபெற்றி
ருக்கின்ற விசாலமாகியதன்னில்லத்திற் சரவணபவனை யு
ம் பரிமளமிகுந்த புஷ்பங்களைச்சூடியிருக்கும் அளகபார
த்தையுடைய வள்ளியம்மையையும்பணைகள்முழங்க பம்
பையதிர இத்தகையவைபவங்களுடன் அழைத்துப்போ
ய்க் குலமுறைமுறைப்படிக்கு மஞ்சள்நீர் ஆலம் மற்றசட
ங்குகளைத் தன்தேவிநடத்தி வணங்கிப்போகப் பொற்பிர
காசமாகவிளங்கும் வேங்கைத்தளிர்களினுற் சோடித்தபா
யலின்பேரி லெழுந்தருளச்செய்து நாரதருக்கும் தர்ப்பா
சனத்தைக்கொடுத்து முற்றியபின்பு கலியாணகாரியங்களி
ற் சருவசாக்கிரதைசெய்தும் இந்த மங்களவார்த்தையைப்
பக்கங்களிலிருக்கின்றதன்பந்துக்களுக்குத் தூதின்மூலமா
கச் சொல்லியனுப்பியும் திரிகின்றதருணத்தில்வேலாயுத
மூர்த்தியானவர் தமதருகில் வீற்றிருக்கின்ற தேவியின்மீ
து கிருபாநோக்கத்தைப் பாலித்தமாத்திரத்திற் பழையவ
டிவும் குறமகளீர் அலங்கரித்திருந்தசிங்காரங்களுமாறிஆ
திமகாவிஷ்ணு புத்திரியாகவிருந்த தெய்வப்படிவத்துட
ன் நவரத்தினமயமாகிய சர்வாபரணபூஷிதையாய்க்கண்ட
வர்கள் விழிகளுக்குக் களிப்பைத்தரும் சிறந்தகோலத்து
டனிருப்பதைக் கவலைமுற்றுமொழிந்து மனவெழுச்சியு
டனிருக்குந்தந்தையும் தாயும் செவிலியும் தோழிமுதலா
னபந்துவர்க்கங்கள் தெரிந்தமாத்திரத்தில் புஷ்பத்திற்

பெருகும்தேனைக்கிரகிக்கவரும்வண்டினங்களைப்போலப் பலதிசையினு மிருந்துவந்து பெண்ணரசியினது காட்சியைத்தரிசித்து அற்புதமடைந்து இந்தத் தேவியானவள் குலஹீனராகிய நம்மனையிற்சேர்ந்து குலவிருந்ததை யோசிக்குமிடத்தில் நமதுமுன்னவருடன் செய்திருக்கின்ற தவப்பேருகும் மற்றென்றையுங் குறிக்கப்படவில்லையென்று தமதிறைவன் பாக்கியத்துக்குக்கொண்டாடியிருந்தனர், வேடராஜனும் அதிகசந்தோஷத்துடன்தங்களினத்திற் கலியாணமுடிக்கும்போது செய்துவரும் கிரமப்படிக்கு முருகனுக்குப் பூசைகளைநடத்தித் தழைகளினற் பந்தலிட்டுப் புஷ்பக்கொத்துகளையும் தளிர்களையும்மத்திமத்தியிற்றூக்கி முடிந்தவுடன் பாணத்தைநாட்டி அக்கினியை வளர்த்துக் கலியாண நிமித்தம் முகூர்த்தம் பார்த்து அக்கினியை முன்னிட்டு நல்ல மூல் அடியைக்காக்கும் மத்தியானகாலம் நேர்ந்தபோது வேடர்குரவைகளைப்பாடி மலர்களையிறைத்துக் கூத்தாடத்தக்கதாகத் தானரிதிற்பெற்ற பெண்ணரசியின் திருக்கரத்தைக் குமாரதேவர் அஸ்தத்தில்வைத்து எங்கள்தவக்கொழுந்தைச் சூரியநாராயணன்சாட்சியாய் மனப்பூர்வமாகத்தத்தஞ்செய்துவிட்டேன் கமலாசனியின்திருமருகனே, தேவரீர்பணிவிடைக்கு ஒப்புக்கொள்ளுமென்று தன்தேவிவிடும் கரகநீரைவிட்டுப்போற்றினன் பின்புநாரதபகவானுனவர் சிவகுமாரன்கட்டளையைப்பெற்றுக்கொண்டு ஓமக்கனலைவளர்த்திச் சமித்துக்களையும் ஆவினெய் பால்பொரிமுதலிய திரவியங்களினுல் நவக்கிரகவோமத்தைநடத்திப் பூரணுகுதிகொடுத்துப் பெண்ணையும் பிள்ளையையும் தீவலஞ்செய்வித்து அருந்ததியைக்காட்டிவேதவிதிப்படிக்குச் சகலசடங்குகளுமுடித்தகாலத்தில் ஸ்ரீமகாவிஷ்ணு பிரமன் உருத்திரன் முப்பத்துமுக்கோடி தேவர்கள் நாற்பத்தெண்ணுயிரம்ரிஷிகள்கருடகாந்தருவர்சித்தவித்தியாதரர் ஏகாதசருத்திரர் துவாதசாதித்தர்முதலியானேவரும் சூழ்ந்து ஜயஜயவெனப்போற்றிவரவும் பூதகணங்கள் மங்கலவாத்தியங்களை முழக்கித்தொடரவும் இத்தகையவுலக்கத்தின்மத்தியில் பருவதராஜபுத்திரி சமேதராய் விருஷபவாகனத்திலாரோகணித்துத் தேவதேவோத்தமனுகிய சிவபிரான் வானவெல்லையி லெழுந்தருளித் தமதுதிருக்குமாரன் குறமகளைப் பாணிக்கிரகணஞ்செய்யும் சம்பிரமங்களைப்பார்த்துத் தம்பதிசமேதராய்க்களித்துப்பலஆசிர்வாதங்களைச்செய்துவருமுன்னிலையில்ஸ்ரீமகாவிஷ்ணுபிரமருத்திரேந்திராதியான விண்ணவர் கற்பகமலர்களை வாரிவாரிச்சொரிந்து பாலசுப்பிரமணியக்கடவுளைவாழ்த்தி அஞ்சலியஸ்தராய்ஜயஜயவெனப்போற்றினர் இக்காட்சியைச் சரவணபவன் தரிசித்தமாத்திரத்தில் சந்தோஷசாகரத்தில் முழுகினவராய்த் தாய்தந்தையர் மாமன்மாமியைவந்தித்துவாழ்த்தி மற்றையரிடத்திற்கிருபாநோக்கம்பாலித்தனர். அதன்பின்பு சிவபெருமான் தம்முடன்வந்த திருக்கூட்டத்துடன்திரும்பி வெள்ளியங்கிரியைச்சேர்ந்து களித்திருந்தனர், நாரதபகவானும் மணப்பந்தலில் நடத்தவேண்டிய சடங்குகளனைத்தையும் நிறைவேற்றியபின்பு வெற்றிவேலாயுத மூர்த்தியைவள்ளிநாயகியாருடன் வணங்கித்துதித்து வரும்போது திருமால்மருகன் திருத்தேவியுடனிருக்கின்ற மணக்கோலத்தை வேடராஜன்கண்டுகளித்து இந்தவிழிகளைப் பெற்றதற்குக் கிடைக்கவேண்டும் பலப்பிராப்தியை யித்தினமடைந்தேனென்று கரங்களைக்கொட்டிக்கொண்டு ஆனந்தக்கூத்தாடினன்,மற்றசுற்றத்தினரும் தேகபரவசராய் முருகன்வெறியாடல்களைக்கொண்டாடித் தீர்க்கதண்டன்சமர்ப்பித்துக் களித்தனர்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? அக்காலத்தில்வேடர்பெருமானுக்கடுத்த சந்தோஷப்பெருக்கை யாவரால் சொல்லிமுடியும் பின்பு சுகந்தமலர்களையும்மெல்லியதளிர்களையும் கொண்டைநிறையச்சூடி உடுக்கையையொத்த சிறுத்தவிடையைப்பெற்றுப் புஷ்பக்கொம்பைப்போலவுலவிக்கலியாணவாசலில் வந்திருக்கும்வேடமாதர்களித்துக் குலதெய்வமாகிய மருகனும் பெண்ணரசியும்இத்தினத்தைப்போல நாடோறும் மணக்கோலமாகவே யிணைபிரியாமல் மங்களமாக வாழ்ந்திருக்கக்கடவதென்று மனப்பூர்வமாகஏத்தி வாசமிகுத்தவேங்கைமலர்கதம்பப்பொடியையிறைத்துக் களியாடலைக்கொண்டாடினர், மேற்குறித்தபடிக்குச் சிசுபாலாதிகள்முதலிய வேடர்மனமகிழ்ச்சியுடனிருக்கின்றகாலையில் பாலசுப்பிரமணியதேவர்ஆசனத்தைவிட்டெழுந்து வேடராஜனைக்கிருபையாகப்பார்த்து இந்தப்பெண்ணரசியுடன் திருத்தணிகைவரையிற்சேர்ந்திருப்போமென்று திருவுளம்பற்றியபோது கந்தனே தேவரீர்மனதுக்கினியபடிக்குச் செய்யலாமெனச்சம்மதித்தனன், தாயானவள் பாங்கிசெவிலியுடன் வள்ளிநாயகியாரைப்பார்த்து எமதன்னையே பலநாள்பழகியிருந்த நீ யிக்காலத்தில்நீங்கிக் கணவனுடன்போகத் துணிந்தனையோவென்று அதிகஆவலுடன் தனித்தனித்தழுவிச் சுகசீவியாய் வாழிவாழியென்று ஆசீர்வதித்தகாலத்தில் வள்ளியம்மையும் அவர்களைப்பரிவாகவுபசரித்து வெற்றிவேலாயுதக்கடவுளுடன்போகப்பிரயாணப்பட்டபோது பிதாவானவன் தன்னிடத்திலிருக்கின்ற சிறந்தபொருள்களை பெண்ணுக்குச்சீதனமாகக்கொடுத்துத்தொடர பாலசுப்பிரமணியதேவர் கலியாணவாயிலைநீங்கி வெளிவந்து மாமனையழைத்துத் தேவர்களுங்கொண்டாடத்தக்கதாகஇந்தச்சேரிக் கதிபனுகவிருந்து சகலசம்பத்தையும் அனுபவித்துப் புத்திரமித்திரகளத்திர பரம்பரையாய் வாழ்ந்திருக்கக்கடவாயென்றனுக்கிரகஞ்செய்து அவனையும் மற்ற வேடரையும்நிறுத்தி வளமையிற்சிறந்த வள்ளிவரையைக் கடந்து மகத்துக்களுக்கு வாசயோக்கியமாகியதிருத்தணிகைவரையைச்சேர்ந்து தெய்வதச்சனுற் சோடித்திருக்கின்ற நகரிற்போய்ச் சபாமண்டபத்தில்விளங்கும் சிங்காதனத்தில் பொன்னையொப்பவிளங்கும் தேமல்பரந்ததனபாரங்களையுடையதேவியுடன் உலகங்களனைத்தும் பிழை

த்தற்பொருட்டுக் கிருபாநோக்கத்தைப்பரப்பி வீற்றிருந்தனர்.

அக்காலத்தில் வள்ளிநாயகியார் காதலனைச்சேவித்துப் பிராணவல்லபா இந்தமலையைப்பார்க்குமிடத்தில் அதிக மேம்பாட்டைக்கொண் டிருக்கின்றது ஆதலால்இதன்மகத்துவங்களைத் தமதடியாளீடேறும்பொருட்டு வெளிப்படையாகத் திருவுளம்பற்றவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்தவளிடத்திற் பரிவாய் ஓபெண்ணே யிந்தவரையையென்னவென்று மதித்திருக்கின்றாய் பரமசிவகடாட்சத்தினால் உலகங்களுண்டாகியபோது நிர்மிக்கப்பட்டதிஃதன்றியும் இப்பருவதத்தின் மகத்துவங்களைக் கேட்பையாக ஆயிரத்தெட்டண்டங்களுக்கு மதிபனாய்நூற்றெட்டுயுகங்கள் தேவர்முதலாகிய சகலரையும் அலைத்துக் கொடுங்கோல்செலுத்திப் பிராணிகளுக் கெமனைப்போல வீற்றிருந்த சூரபதுமனாதிய அவுணப்பாதகருடன் கொடியயுத்தஞ் செய்துகொன்ற சோபதாபங்களை இதன் பெருமைகளை நிதானித்து இவ்விடத்தெழுந்தருளித் தணிந்து மனவெழுச்சியுட னிருந்தனம் மேலும் இக்காலத்தினும் கொடியதொழிலைச் செய்துழலும் வேடருடன் போராடிவருந்தியகளையையும் இந்தத்தெய்வீகம்பொருந்தியவரையைநெருங்கிய வுடனொழித்து சவுக்கியமாக விருக்கின்றனம், அக்காரணங்களினால் செருத்தணியென்னுமொருசிறப்புப் பெயரையுங்கிடைத்திருக்கின்றது இதுவுமல்லாமல்இன்னமும் சிலமகத்துவங்களுண்டுஅவற்றின்சம்பவங்களையுந்தெரிவிப்போம்முல்லையரும்புகளைப் பழித்துவிளங்குந்தந்தபந்திகளையுடையஉமையவள்வளைத்தழும்பையும்முலைத்தழும்பையும்பெற்றுக்களித்திருக்கும்மூலகாரணக்கடவுளாகியசிவபிரான்மனவெழுச்சியுடன்சதாகாலமும்வீற்றிருக்கத்தக்கநிவளங்களையும்க்ஷேத்திரவிசேஷங்களாதியசிறப்புகளையுங்கொண்டிருக்கும்திருக்காஞ்சிமாநகரவெல்லையில்விளங்கும்பெருமையினால்இப்பருவதத்தின்பவுத்திரத்தையும்மகத்துவங்களையும்சிருஷ்டிகர்த்தனாய்சதுர்வேதபண்டிதனாகவிருக்கின்றபிரமதேவராலுங்கணித்துச்சொல்லக்கூடுவதோசுகந்தபரிமளங்களை வீசித்தேனைச்சொரிந்திருக்கும்புஷ்பவகைகளிற்றாமரைமலரைச்சிறப்பாகப் புகழுமாறுபோலவும் தன்னிடத்தில் மூழ்கினரைப் பாபரகிதராக்கி முத்தியிற்சேர்க்கவல்லபல சிறந்தநதிகளினும் காசியிற்பெருகும் கங்கையைவிசேஷமாகக் கொண்டாடுவதை யொப்பவும் சமுத்திரஞ் சூழ்ந்திருக்கின்ற பூமண்டலத்திற் சிறந்திருக்குந்தலங்களில்முதன்மை பெற்று விளங்கும் திருக்காஞ்சிப்பதிக்கு நிகராகவும்இருஷிகள் ஞானவான்கள் வாசயோக்கியமாக விருக்கின்ற தெய்வீகம் பொருந்திய பருவதங்களில் இந்தத்திருத்தணிகை வரையானது அதிகமேம்பாட்டைப் பெற்றிருப்பது இவ்விதசுகுணங்களை மிகுதியாகப் படைத்திருக்கின்ற பருவதத்தினிடத்தில் நமக்கிருக்கின்ற பிரீதியினால் பிரியாமல் இவ்விடத்தில் வீற்றிருந்து கோடுகளைமுழக்கியும் புள்ளாங்குழலூதியும் தந்திரியை வாசித்தும்ஏழிசையையுடைய மகரயாழைமீட்டியும் மனவெழுச்சியுடன்பாடியும் சிறுபல்லியங்களைக் கொட்டியும் பற்பல திருவிளையாடல்களைச் செய்தும் நம்மிடத்தில் மெய்ப்பத்தியுடைய அன்பர்கள் தரிசித்துக்களிக்கும்படியாக ஆனந்தநடனங்களைச்செய்தும் வருகின்றனம், பெண்ணரசியேயிதற்குச் சிலதிருஷ்டாந்தத்தைச் சொல்லுவோம் கேட்பையாக்.

காளகண்டமூர்த்தியாகியபரமேஸ்வரருக்குமந்தரகிரியும் மேருபருவதமும் வாசஞ்செய்ய யோக்கியமாக விருந்தபோதினும் அன்பருள்ளத்தைப்போலப் பவுத்திரமாகவிருக்கின்ற திருக்கயிலாயத்தில் மனவிருப்பமாய்ப்பருவதராஜ புத்திரியுடன் எத்தேசகாலமும்வீற்றிருப்பதையொப்ப இந்தப்பூவட்டத்திற் பற்பலமலைக ளிருந்தபோதினும் இந்தப்பருவதத்தினிடத்தில்நமக்கு அதிகப்பிரியமுண்டு அதற்குச்சாட்சி உனக்கு வேறொன்றைச் சொல்லுவதில்லை நமக்கிருப்பிடமாகிய குன்றுகளனந்தமுண்டு அவற்றின் மேலான இத்தலத்தில் மனவிருப்பத்துடன்நமதுபூரணகலையைக்கொண்டு வாசஞ் செய்வோம் இம்மூலமாய் இதன் மகத்துவங்களைத் தெரிந்துகொள்ளக்கடவாய் இதுவுமல்லாமல் திரிலோகசக்கிரேஸ்வரனாகிய தேவேந்திரன் இதன்மகத்துவத்தைத் தெரிந்து மனோபீஷ்டத்தைப்பெற்றுப்போகவிருப்புற்றுப்பொன்னுலகத்தி லிருக்கின்றகுவளைச்செடிகளில்மூன்றினை யிந்தப்பவுத்திரமாகிய சரவணப்பொய்கையில் ஸ்தாபிதஞ்செய்து அதனிடத்திற்புஷ்பிக்கும் மலர்களைக்கொண்டு பலதினம்நம்மை அருச்சித்து இஷ்டசித்தியைப்பெற்றுப் போயினன், மூழ்கினர் பிணிகள் பாதகங்களனைத்தையும் தீயிற்பட்டபஞ்சைப்போலப் போக்கிப்பரிசுத்தவான்களாகச்செய்யவல்லசிறப்பினைவாய்ந்த இந்தச்சரவணப் பொய்கையினிடத்தில் இந்திரனால் ஸ்தாபித்திருக்கின்ற குவளைச்செடிகள் இக்காலத்தினும்அருணோதயப் போதினும் மத்தியான காலத்தினும் செவ்வானமு மிருளுங்கலந்துவிளக்கும்அந்திப்போதினும் நமதுதிருவடிகளிற் சாத்தும்படிக்கு மூன்றுமலர்களைக் கொடுத்துக்கொண்டு வருகின்றது பிரளயகாலத்திற் சத்தசாகரங்களும்பெருகி உலகங்களை மூடியபோதினும் சிருஷ்டி குலைந்துபிரசண்டவாயுவின் மோதலினாலும் ஊழிவெள்ளப் பெருக்கினாலும் குலகிரிகள் அண்டரண்டபுவனசராசரங்களனைத்தும் அதப்பட்டழியும்சருவசங்காரகாலத்தினும் தெய்வீகம்பொருந்திய இந்தப் பருவதத்துக்கு யாதொருதுன்பமுமில்லாமல் விளங்கும்அவ்வாறேயிந்தச் சரவணப்பொய்கையும் புனல்நிறைந்ததாய்ப் பரிமளமிகுத்தகுவளைமலர்களைமுக்காலங்களினும் உதவிக்கொண்டிருக்கும் மாவடுவைப்போல விசாலமாய் செவ்வரிபரந்து காதளவுமோடி யிருக்கின்ற விழிகளையுடைய வள்ளிநாயகியே யிவ்வரையின் மகத்துவங்களை நாமல்லதுசிருஷ்

டிகர்த்தனாலுங் கண்டறியவொண்ணாது இஃதன்றியும் பூ
மண்டலத்தி லிருக்கின்றவர்களில் எத்தகையராயினும் இ
ந்தத்தெய்வீகம்பொருந்திய பருவதத்தைத்தூரத்திலிருந்
து தரிசித்து வணங்கப்பெறுவராயில் அறிந்தும் அறியாம
லும் எழுபிறவிகளினும் செய்திருக்கின்ற பாதகங்களனை
த்தும் நெருப்பிற்பட்ட பஞ்சைப்போல நசிக்கப்பட்டுச்ச
கல துன்பங்களையும் போக்கிப் பரிசுத்தராய்ச் சவுக்கியத்
திலிருப்பார் இவ்வரையினிடத்தில் ஒருதினமாவதுவந்தி
ருந்து சரவணப்பொய்கையிற்படிந்து பவுத்திரராய் துதி
த்துக்கொண்டு நமதாலயத்தைச் சேர்ந்துவிதிப்படிக்குமு
ம்முறைவலம்வந்து சன்னிதானத்திற் போய் அருச்சனை
வழிபாடுகளைச்செய்வித்து நமதுதிருவடிகளில் வணங்கிப்
போற்றி நெய்விளக்குகளிட்டுக் கூடியவரையில் யாசகருக்
குக் கொடுத்துத் தன்விடுதியைச்சேர்ந்து அதிதிகளுடனு
ண்டுகளிக்கின்ற புண்ணியசீலர் தங்கள் கோரிக்கையின்ப
டிக்குச் சகலவளங்களையும் பெற்றுக்கற்புக்கரசியாகியபெ
ண்சாதியுடன் இல்லறத்தை யோம்பிச் சுபுத்திரரைப்பெ
ற்றுச் சாதுசங்கமாதிய நன்னெறிகளைக் கடைப்பிடியாக
வெண்ணி நடாத்தி யிவ்விதங்களில்இம்மைப்போகங்களை
யனுபவித்தபின்பு மறுமையினும் தேவபோகங்களிற் றி
ருப்திபெற்றவர்களாய்க் கடையில் ஸ்வரூப சாக்ஷாத்கார
த்தைக் காணியாகப் பெற்றுவாழ்வர், ஐந்துதினவரையில்
இதன்கண்வாசமாய்ப்பொய்கையில்முழுகிப் புதியவஸ்தி
ரங்களை யுடுத்துநமது திருவடிகளையே தஞ்சமாக வெண்
ணித் தியானித்து ஆலயத்தைச்சேர்ந்து அவ்விடத்தில் ந
டத்தவேண்டிய முறைகளைக் கிரமப்படிக்குமுடித்து நம்
மைத்தரிசித்து வழிபட்டுவரும் சிறந்த தவத்தினர், இஷ்
டசித்திகளைப்பெற்று அஷ்டஅயிஸ்வரியக்கள் பெண்டுபி
ள்ளைகள் பந்துக்கள் சிநேகிதருடன்மனவெழுச்சிபெறஅ
னுபவித்துச்சகலராலும் புகழவாழ்ந்தபின்புசாஸ்விதமா
கிய பரமபதியிலிருப்பார்.

ஓ பெண்ணே தவங்களிற் சிறந்த தேவர்களாயினும்மு
னிபுங்கவராயினும் மற்றும் நன்னெறிகளையனுசரித்துவ
ரும் யாவராயினும் இந்தமகிமையுள்ள மலையைத் தரிசிக்
கப்பெறுமற்போவராயின் கல்விருக்ஷமுதலிய தாபரங்க
ளினும் கடைப்பட்ட தசையை யனுபவிப்பதற்குச்சந்தே
கமில்லை தாங்கள்முடித்திருக்கின்றபிராரத்வ வினைப்போ
கங்களை நீக்கிக்கொள்ளத்தக்க ருக்ஷமத்தைத் தெரியா
மல் தேகம்வருந்தியலைந்து அன்னபானாதிகளுக்குச் சிறு
மைப்பட்டுவாடிப் பூவலம் வந்தபோதினும் அப்பாபத்
தொடக்கைப்போக்கவல்லரோ பிரமகத்தியாதி மகாபாதக
ங்களைச்செய்தவராயினும் கொலைகளவாதிய குற்றங்களை
யேமுக்கியமாகவெண்ணித்தினந்தோறும் முடித்தவராயி
னும் பவுத்திரமாகிய திருத்தணிகை வெற்பைச் சேர்ந்து
மெய்ப்பத்தியுடன் நம்மைப் பூசனைவழிபாடுகளைச் செய்
வராயின்காட்டமுலிற்பட்ட சருகைபொப்பவல்வினைகளை
ப்போக்கிச் சிரேஷ்டராய் ஸ்ரீமகாவிஷ்ணுபிரமதேவர்கள்
பதங்களில் மேலானவராக விருப்பர் தவங்களிற்சிறந்தவ
ராகவும் புகழவேண்டும் இப்படிக்கிருக்கச் சதாகாலமும்
ஒப்பற்ற திருத்தணிகைப் பதியில்வாசமாயிருந்து பத்தி
வயிராக்கியவகளுடன் நம்மைவழிபட்டுச் சோடசம்காதா
னங்களி னென்மேறனும் மனப்பூர்வகமாகப் பாத்திரமறிந்
து அகமுகமலர்ச்சியுடன் களித்துக்கொடுப்பராயின் ஒன்
றனந்தமாகப் பலித்துப் பிற்காலங்களிற் குபேரசம்பத்
தை யனுபவித்து வாழ்வர், பற்பல மகாபாதகங்களைச் செ
ய்தவராயினும்அவைகளின்கொடுமைகளனைத்தும் தினே
தினே குறைபட்டு அமரபட்சத்துச் சந்திரன் கலைகளைப்
போலத்தேய்ந்து பரிசுத்தவான்களாய் உலகர்புகழவாழ்வ
ர், வள்ளிநாயகியே மேற்குறித்ததன்றியும் இந்தத்திருத்த
ணிகைவரையின் மகத்துவங்களளவற்றதுண்டுஅவைகளை
விவரித்துச் சொல்ல வேண்டுமாயின் பலகாலஞ் செல்லு
மென்று குமாரதேவர் போதித்தமகிமைகளைப் பத்தியுட
ன் கேட்டதேவியானவள் திருவடிகளிற் பணிந்து மகிழ்ந
னே பூமண்டலத்தில தாமெழுந்தருளியிருக்கின்றஅனந்
தபருவதங்களில் முக்கியமாக விருக்கின்ற திருத்தணிகை
வரையின் வரலாற்றையும் மகத்துவங்களையும்உள்ளங்கை
நெல்லிக்கனியைப் போலத்தெளிவுண்டாகும்படிக்குஅடி
யாளிடத்திற் கிருபையுற்று அனுக்கிரகஞ் செய்தமையா
ல் அவற்றினைக்கேட்ட மகத்துவத்தினால் நாயினேன் கிரு
தார்த்தளாயினேனென்று போற்றினள்.

வெற்றிவேலாயுதக்கடவுளும்மைதிமிர்ந்துகாதளவுமோ
டிய விழிகளையுடைய திருத்தேவியும் பின்புஅந்தமலையி
னெருபாரிசத்திற் பிரமன் விஷ்ணுமுதலாகியவுருவநான்
கும் விந்துமுதலாகிய அருவநான்கும் உருவருவமாகிய
வொன்றும் ஆகநவவுருவங்களுமொன்றாகிய சதாசிவப்பி
ரமலிங்கத்தை ஸ்தாபித்து ஆகமவிதிப்படிக்குச்சோட
சவுபசாரங்களுடன்பூசனைவழிபாடுகளை நிரப்பிக்களித்து
இஷ்டசித்திகளைப் பெற்றவர்களாய் அன்றுமுதல்மனவா
க்குக் காயமொருமித்துக் கண்ணுதற்பிரானைத் திரிகாலங்
களினும் மெய்ப்பத்தியுடன் வழிபட்டிருக்கின்றகாலையில்
ஒருதினம் தெய்வ விமானத்தைத் தருவித்து வள்ளிநாய
கியுடன் சிவசுப்பிரமணியக்கடவுள் அதனிடத்தி லெழுந்
தருளித்திருத்தணிகை வரைபைக்கடந்துபோய்த் திருக்க
யிலாயத்துக் கொருபுறத்திலிருக்கின்ற கந்த மாதனத்தை
ச்சேர்ந்து நவரத்தினக் காந்திகளை வீசிக்கொண்டிருக்கும்
விமானத்தைவிட்டிறங்கிக் கணக்கிறந்த பூதவீரர் காவல்
கொண்டிருக்கும் திருமாளிகையிற் பிரவேசித்துத் தேவ
ராஜ புத்திரியாகிய தெய்வயானையம்மை யெழுந்தருளிய
சொர்னமயமாகிய அந்தப்புரத்தில் வள்ளிமணாளனை வ
ரும்போது வேதங்கள் தேடிக்காண்பரிய மகத்துவங்களை
யுடைய கணவன் வரவைக் கேள்விப்பட்ட மாத்திரத்தில்
தேவராஜ புத்திரிக்குஅதிகசந்தோஷமுண்டாய் ஆவலுட

னெதிர்கொண்டோடிக் கணவன் திருவடிகளிற்பணிந்தகாலத்திற் கந்தர்பரிபூரணகடாட்சத்துடன் திருக்கரங்களைநீட்டி யெடுத்துப்பூரண கலசங்களையொத்த கொங்கைகள் மார்பிலிறுகத்தழுவித் தாம் சிலபகல் பிரிந்து பூமியிற் றிருடனங்களைச் செய்து திரும்பியவரையிலிருந்ததளர்ச்சிகளனைத்தையும் போக்கினர்.

அத்தருணத்தில் வள்ளியம்மையும் தன்முன்னவள்பாதகமலங்களிற்பணிந்த காலையில்பிரிந்தகன்றைக்கண்டஆவைப்போலப் பரிவாயெடுத்து ஆசையுடனணைத்து இவ்விடத்திற் றனிமையிலிருப்பவளுக்குறொருபாங்கிகிடைத்தது மிகவும் அழகாயிருக்கின்றதென வாழ்த்தினள் பின்பு சூரன்வம்சமென்னுங் கருங்கடலைக்குடித்துத் தேவர்களைக் காத்தவெற்றிவேலாயுத மூர்த்தியானவர் உபயநாச்சியார்களையும் அணைத்து அந்தப்புரத்துக்குக் கொண்டுபோய்ப் பொன்மயமாகவிளங்கும் பரந்த கூடத்தில் நவரத்தினங்களினற் சோடித்திருக்கின்ற சிங்காதனத்தில் திருப்பாற்கடலில் ஸ்ரீதேவிபூதேவி யிருமருங்கினும் வீற்றிருக்குமத்தியில் சேஷசயனத்தி லமர்ந்தருளும் ஸ்ரீமகாவிஷ்ணுவைப்போலக் களித்திருந்து அவர்களுடன் வார்த்தையாடிக்கொண் டிருக்கின்றகாலையில் இடப்புறத்திலமர்ந்திருக்கும் தெய்வநாயகியானவள் வெற்றிவேலாயுதக்கடவுள்திருமுகமண்டலத்தைப் பார்த்து எமதிறைவனேதேவரீர்வலப்புறத்தி லிருக்கும் கன்னிகையின் வரலாற்றைத் திருவுளம்பற்ற வேண்டுமெனப் போற்றுமுன்னிலையில்சுப்பிரமணியர் கிருபையுற்றுக்கிள்ளைபையொப்பவசனிக்கும்சிவந்தவாயையுடைய குறப்பாவையினதுசரித்திரத்தை அயிராவதம்போற்றி வளர்த்த தெய்வயானைக்குச்சொல்லுவதாயினர்.

பெண்கள்சிகாமணியே உங்களிருவர்காரணங்களைக்கேட்பையாகவாமனவதாரமெடுத்துஉலகையளந்தருளியஸ்ரீமகாவிஷ்ணுவினிடத்தில் நீங்களவதரித்துஎமதுதிருப்புயங்களைத் தழுவிக்களிக்க விச்சித்துப் பன்னிரண்டுவயதளவும் சரவணப்பொய்கைக்கருகிலிருந்து அரியதவங்களைச் செய்து வருமுன்னிலையில்உங்கள்பத்திவயிராக்கியங்களுக்கிரங்கிக்காட்சிதந்துஉங்கள்கருத்தின்வண்ண மாகின்றது அதுபரியந்தம் பொன்னுலகத்தினும் பூமண்டலத்தினும் அவதரித்திருப்பீர்களெனயாம்பணித்தவாறேமூத்தவளாகியதேவேந்திரனுக்குப்புத்திரியாகவளர்ந்திருந்தனை நாம்சூரசங்காரஞ்செய்து திரும்பியகாலையில்உன்பிதாவானவன் அதிகபிரியத்துடன் பாணிக்கிரகணஞ்செய்துகொடுக்கப்பெற்று மனவெழுச்சியுடனிருந்தனம், அர்த்தசந்திரனையொத்தநுதலையுடையஉன்தங்கையாகியஇப்பெண்கொடியானவள் எமதுகட்டளையின்படிக்கு அக்கினிப்பிரவேசமாய்ச் சுந்தரமிகுந்தபழையஉடலைப்போக்கியாதனுதேகத்தைக்கொண்டு கருங்கடல்வளைந்திருக்கும்பூமண்டலவளையிற்சிரேஷ்டமாக விளங்கும் தொண்டைமண்டலத்தினெல்லையிலிருக்கும் வள்ளிமலைக் கருகிற் றழைத்தோங்கிக் குளிர்ந்த நிழலைப் பரப்புகின்ற வானத்திற் சேர்ந்து காலங்கருதித் தவவிரதங்களைச் செய்திருக்கின்றகாலையில் அப்பருவதச்சாரலிலமர்ந்து பஞ்சேந்திரியச் சேட்டைகளைவென்று சித்தந்தைச் சிவத்திற்சேர்த்து யோக சாதனையை முடித்துவரும் மகத்துவாகிய சிவமுனிவனுக்கெதிரில்தெய்வகடாட்சத்தினல் பொன்னையொப்பவிளக்கும் அழகியதேகத்தைவாய்ந்த மான்பிணையொன்று சடுதியிற்றூேற்றப்பட்டுக் கந்துபோட்டுலவிவருவதைத் தவத்தர்கண்டவுடன் காமவிகாரமேலிட்டு அதிகஆவலுடன்பார்த்த காரணத்தினல் பெண்மான்கருக்கொண்டது. அந்தச்சம்பவத்தைப் பக்கத்திற்றவஞ்செய்திருந்த இவள்தெரிந்துமனமகிழ்ச்சியுடன் அதன்கருப்பையிற் பிரவேசித்து வளர்ந்துவருகின்றகாலையில் பிரசவகாலம்சம்பவித்தபோது வேடர்கல்லிய வள்ளிக்குழியில் ஈன்றதாய் உற்றுப்பார்த்துத் தன்னினமாகத்தோன்றுமையால்பயந்தோடிப்போயினது, பின்புகுழந்தையானது பசியினல்வருந்திக் காவுகாவுமென்றழுதிருக்கும்போது அதனருகில்விளக்கும் குறிச்சியில்வாசஞ்செய்யும் வேடர்களுக்கரசனும் அவன்பத்தினியும் அக்கொல்லைக்குவந்தபோது கேட்டவர்களாய் அற்புதமடைந்தோடிவந்து பெண்குழந்தையைக்கண்டவுடன் வேடுவச்சிஅதிகஆவலுடன் வாரியெடுத்து முத்தமிட்டு மார்புடன்சேர்த்தகாலத்திற் சிவபிரான்கடாட்சத்தினற் கொங்கைகளிற்சுரந்தொழுகும் அமுதத்தைக்கொடுத்துத் தன்சிறுகுடிசையிற்சேர்ந்து பெற்றதினும் பதின்மடங்குபிரியத்துடன்வளர்த்து அக்குலத்தில்முதியவராகவிருப்பவர்கள் குறித்தபடிக்குவள்ளியென்னும் பெயரையிட்டுச் சகலசிறப்புடன் புத்திரியாகப் போற்றிவருங்காலத்தில் இவளுக்குப் பதினோராண்டும்பத்துமாதமுங்நிறைந்து மங்கைப்பருவமானபோதுகுலமுறைப்படிக்குத் தினைப்புனத்தைக்காக்கவைத்தனர். அத்தருணத்தில் நாம்அத்தலத்தைச்சேர்ந்துகாமவேட்கையைச்சொல்லியும் அகன்றும் இவளமையலிற்பட்டுவருந்தியும் அக்குறைமுற்றுப்பெறவாழ்த்தியும் இத்தகைய பற்பலமாயவித்தைகளைக்காட்டிக் களவுப்புணர்ச்சியை யனுபவித்துக் கடையிலிவளிடத்தில் நல்லருளைச்செய்து பிதாவின்சம்மதத்தின்மேல் திருக்கலியாணமுடித்துக்கொண்டு சிலபகல் திருத்தணிகைமலையில் வாசமாகவிருந்து இப்பொழுதிவ்விடத்துக் கழைத்துவந்தனமென்று வள்ளிநாயகியார்திருவவதாரவிர்த்தாந்தங்களைத்தெய்வநாயகிகேட்டவுடன் மனமகிழ்ச்சிகொண்டுநாயகனே பூர்வத்தில்ஸ்ரீவிஷ்ணுபகவானிடத்தில் அவதரித்தவிவளும் நானும்நெடுநாளாய்ப்பிரிந்ததை யிக்காலத்திற்கிருபையுற்றுப்பழையபடிக்குக் கூட்டிவைத்த தேவரீர்கடாட்சத்துக்கு அடியோங்களாற்செய்யுங் கைம்மாறுண்டோ தமதுதிருவிளையாடல்கள் யாவரால்கண்டு புகழப்படுமென்றுபுகழ்ந்தனள் இவ்விதமாகச் சிவகுமாரன் அருளியவாக்கியங்களையும் தேவராஜபுத்திரிவசனத்தையுங்கேட்ட வள்ளியம்மை மனமகிழ்ந்தவளாய்த் தாயேமுன்னம் தேவரீருக்குத் தங்கையாகும் அவ்வாறே இக்காலத்தினு மிளையவளானேன் இம்முயற்சியினல் சகலசிறப்புகளையும் பெறவிருக்கின்றேன் இனிதமதடியாிற்கூட்டி யிரட்சிக்கவேண்டுமெனப்போற்றித் தமக்கை திருவடிகளில் வணங்கினள், தெய்வநாயகியாரும் அதிகபிரியத்துடன் வாரியெடுத்தணைத்து

முதுகைத்தடவிக்கொடுத்து நமதுகாதலன் கடாட்சவீட்சணியத்தினால்மீண்டும் உன்னைத்தங்கையாகப்பெற்றதுமன்றி எமதிறைவன் அருளையுங்கிடைக்கப்பெற்றேன் இனியரிதில் வேண்டும்பொருளொன்றுமில்லை மனோபீஷ்டங்களனைத்தையும் ஒருங்கெய்தப்பெற்றுக் கிருதார்த்தியாயினேனென்று இவ்விதங்களிற் றன்பேற்றைக்குறித்துப்பலவிதங்களிற்கொண்டாடினள்.

ஓ சவுனகாதிமிருஷிகளே, மேற்குறித்தபடிக்குப்பலநாட்களாகப்பிரிந்திருந்த தங்கைதமக்கைகளிருவரும் சரவணபவன் திருவுளப்படிக்குச்சேர்ந்தமுன்னிலையில் அன்றுதொட்டு தெய்வயானையும் வள்ளிநாயகியும் அபேதமாயிணைபிரியாமல் கொண்டானைவழிபட்டுக்கொண்டு மனவெழுச்சியுடன் சிந்தையும்செய்கையும்போலவும் உயிரும்உடலுமொப்பவும் மலரும்மணமும் நிகர்த்தும்நீரும் பாலும்போன்றும் மணியும ஒளியுமொத்தும் ஒருமைப்பட்ட மனத்தினராய்க்கங்கையும் யமுனையும்கடலிற்சேர்ந்து குலவுமாறுபோலவும் சோடசகலைகளையுடையசந்திரன் ஆயிரங்கிரணசமோகங்களையுடைய சூரியனைக்கூடியதுக்கொப்பாகவும் பரமன்றுதல்விழிகளினுதித்துச் சரவணப்பொய்கையிற் றிருவிளையாடல்களைச் செய்திருந்த பாலசுப்பிரமணியதேவரைப் பிரிவின்றிப் போகபோக்கியங்களையனுபவித்துக் களித்திருக்கவும் வெற்றிவேலாயுதமூர்த்தியும் உபயநாச்சியாரிடத்தினும் ஏகபட்சமாய்அவர்களிடத்தில் இன்பநலங்களை யனுபவித்துக்கொண்டுசிரேஷ்டமாகச்சொல்லுங் கந்தமாதனத்தினிடத்திற் சொர்ன்னமயமாய்ச்சிரோரத்தினக்காந்திகளைவீசிவானவரையிலுயர்ந்து பூவட்டப்பரப்பைப்போல விசாலமாயிருக்கும் திருமாளிகையிலமர்ந்து மன்னுயிர்களினிடத்தில் பரிபூரணகடாட்ச வீட்சணியத்தைப்பரப்பித் தம்மைவழிபடும் அடியர் இஷ்டசித்திகளைக்கொடுத்துக்கொண்டு வருகின்றனர் இவ்விதமாகச்சரவணபவனும் திருத்தேவிமாருமிருக்குங்காட்சியெப்படிக்கிருந்ததெனில், கிரவுஞ்சபருவதத்தைச் சத்தியினாற்பிளந்துவாட்டிய குமாரதேவரொப்பற்ற கற்பகத்தருவாகவும் அதனிடந்தோன்றியிருக்கும் வல்லிசாதனக்கொடியினும்சிறந்து தெய்வநாயகியாரும்வள்ளியம்மையும் ஞானம்யோகமென்னுமிருகொடிகளும் தாவுமாறுஇருமருங்கினும் விளங்கவும் இவையன்றி உமையவளையிடப்பாகத்திற் கொண்டிருக்கும் சிவபிரான்திருநுதலிலிருக்கின்ற திரிநேத்திரங்களைப்போலத் தேவராஜபுத்திரியும் வேடப்பாவையும் உபயபாரிசங்களினும்பொருந்தியிருக்கும் சன்னிதிமகிமையினால் உலகவாசிகளனைவரும் பாபரகிதராய்நன்னெறிகளையனுசரித்து இம்மைப் போகங்களைப்பெற்றுவாழ்ந்து கடையிற் கிடைத்தற்கரிய மோட்சவீட்டையும்பெற்றுப் பேரானந்தசுகத்தை யனுபவித்திருக்கவும் இத்தகையகாட்சிகளைக்காட்டி. ஒப்பற்ற பாலசுப்பிரமணிய தேவரானவர் தேவியருக்கருள்புரிந்திருந்தனர், அத்தருணத்தில் சேவற்கொடியசையும்திருத்தேரும் நவரத்தினங்களின் காந்திகளை ஏககாலத்தில்வீசுவதைப்போலப் புள்ளிபட்ட பசியதோகையைவாய்ந்த மஞ்ஞைவாகனமும் பூருவத்தில்நாரதமுனிவர்செய்த யாகத்திற்றோன்றித் தமக்குவாகனமாகவிருக்கின்றதகரும் வெற்றிவேலாதியாகிய படைகளும்திருவாயில்முதலிய தலங்களிலமர்ந்து சண்முகப்பெருமான் கட்டளையின்படிக்குப் பணிவிடைகளைச் செய்திருந்தனவென முடித்த சூதபுராணிகர் நைமிசாரணியவாசிகளைப்பார்த்து ஓ மஹருஷிகளே. சிவபிரான்நெற்றிவிழிகளிற்றோற்றிய பாலசுப்பிரமணியக்கடவுளினது திருவிளையாடல்களிற் சிலவற்றைநம்மாற்கூடியவரையிற் சொல்லினம் ஸ்காந்தபுராணவரலாற்றைப் போதிக்கவேண்டுமென்று மனதொருமித்துக் கேட்டவுங்களால் மேற்குறித்திருக்கின்ற ஆறுகாண்டங்களின் சரித்திரங்களையும் வரன்முறையாகவோதும் புண்ணிய பலப்பிராப்த்தியைப்பெற்றுக் கிருதார்த்தனுமாயினேன் மெய்ப்பத்தியுடன் ஏகமனதாய்ச்சிவசுப்பிரமணியக்கடவுளினது உபயசரணாரவிந்தங்களையும் சிந்தித்துக்கொண்டு அவன்பெருமைகளை விளக்கும் கதாப்பிரசங்கத்தைச் சம்பூரணமாகக்கேள்விப்பட்டவுங்கள் பெருமைகளையும்பேறுகளையும் நல்லொழுக்கங்களையும் நீதிகளையும் ஒருவாயினாற்சொல்லிமுடிவதோ இந்தப்பூமண்டலத்தை ஒருதலைச்சுமைபாகத்தாங்கியிருக்கும் ஆதிசேஷனாலும் அரிதற்கரிதென்று மனப்பூரிப்புடன் பேசுகின்றசூதபுராணிகரைச் சவுனகாதியர்கள் வணங்கிவாழ்த்தினவர்களாய்ச் சுவாமிதேவரீர் அடியோங்கள்செய்த தவமுயற்சினால் இவ்விடத்திலெழுந்தருளி அஞ்ஞானவான்களாகிய அடியோங்களிடத்திற் கிருபையுற்றுச்சைவபுராணங்கள்பத்தினும் முதன்மையாகவிளங்கும் ஸ்காந்தமென்னுங்கடலை எளிதில்ஞானமுண்டாகும்படிக்குத் தெருட்டினீர், சரவணபவன்திருவிளையாடலின் சரித்திரமுதலாகிய சிவகதைகளைக்கேட்டுக்களித்ததுமன்றி மோட்சவீட்டுக்குப்பாத்திரருமாயினோம் மேலும் இந்தஅரியமானிடதேகமெடுத்தற்குப் பெறவேண்டும் பலப்பிராப்த்திகளனைத்தையும் ஒருங்கெய்தக்கிடைத்து வாழ்ந்தோம் பலமுனிவர்களினும் சிரேஷ்டராய்ச்சிவநாதன் பாதநீழலில்வீற்றிருந்து மனக்கவலைகளைப்போக்கிச் சுகாதீதச்செல்வத்தை யனுபவிப்பதற்கையமில்லை யித்தகைய மேம்பாட்டைக் கிடைக்கச்செய்த தேவரீருக்கு நாயினேங்களால்முடிக்குங் கைம்மாறேதேனுமுண்டோவென்று பலபலவிதங்களிற்போற்றினர்.

இவைநிற்க இனிக்குமரகோட்டத்தடிகள் கட்டளையின்படிக்கு இந்தக்கந்தபுராணத்தைப்பாடி முற்றுப்பெற்றகாலத்திற் கச்சியப்பகுருக்கள் வாழ்த்தெடுத்ததையும் சொல்லுவோம் சிவசுப்பிரமணியதேவர் அழகியபுயாசலங்கள்வாழ்க, சோடசகலைகளையுடைய பூரணச்சந்திரோதயத்தையொப்பத் துலங்குகின்ற சண்முகாரவிந்தங்கள்வாழ்க, பொற்சிலம்புதண்டை சதங்கைகொஞ்சுந்திருவடிகள்வாழ்க, மாய்கையில்வல்லகிரவுஞ்சனையும் வீராதிவீரனை தாருகாசுரனையும் ஏககாலத்திற்பிளந்துகொன்றவெற்றிவேலாயுதம்வாழ்க, மற்றப்படைகளும்வாழ்க,சிவந்தகொண்டையையுடைய சேவற்கொடிவாழ்க, சரவணபவனேறிநடாத்தும் பசியகலாபத்தையுடைய மஞ்ஞைவாகனம்வாழ்க, தேவராஜபுத்திரியாகிய தெய்வநாயகியார்வாழ்க, ஒப்புவமையற்றவள்ளியம்மைவாழ்க, சிவகுமாரனிடத்திற் பரிவாய்த்தொண்டுசெய்துவரும் அடியரனைவரும்வாழ்கவென்றேத்தினவராய் அடியேனிடத்திற் கிருபையுற்று பிறந்துமிறந்துமலைகின்ற ஜனனதுக்கசாகரத்திற்பட்டலையாமலும் தீயநடைகளினின்றும் விலக்கிஞானமார்க்கத்திற்குப் பாத்திரமாக்கவல்ல தேஜோன்மயமாகியதரிசனையைக்கடாட்சித்துக் கடைப்பட்டநாயினேனையும் தமதடியர்கூட்டத்திற்சேர்த்துப்பிராரத்வகர்மவினைகளையொ

ழிந்து தடுத்தாட்கொண்ட பன்னிருபுயாசலங்களையுடைய சிவசுப்பிரமணியதேவர் திருவடிகளிற் பத்தியுடன்வணங்கி வாழ்த்தியமுயற்சி கொண்டு வெற்றிவேலாயுதபாணியாகிய சரவணபவன்சரித்திரங்களை அடியேனாசைப்பெருக்கினாற் கூடியவரையிற்சொன்னதாகும் இதிலடங்கிய தமிழ்ப்பாவினவசனங்களில் வழுவியிருக்குமாயினும் கலைகளனைத்தினையும் பூரணமாகக்கற்றுணர்ந்த புலவோர்களாகவிருப்பவர்கள் அவற்றில்விளங்கும் கடவுளினது மேம்பாட்டைக்கருதிப் பாலிற்கலந்தஜலமும் பயன்பெறுவகைப்போல அங்கீகரித்துக்கொள்வர் சராசரப்பிரபஞ்சங்களையீன்று முப்பத்திரண்டறங்களை வளர்த்துப்பாதுகாத்துவரும் ஜகன்மாதாவாகிய உமையவள் மனமுருகி அன்பாகச்செய்த பூசனையை மகிழ்ந்தாட்கொண்ட தேவதேவோத்தமனாகிய பரமசிவன் பூலோகத்திலிராநின்ற பிராணிகள்இல்லறவாழ்க்கையை முக்கியமாகக்கொண்டபோதினும் யானெனதென்னும் செருக்கிற்பட்டுஇறுமாந்திருப்பவர் தங்களாற்கூடியமட்டும் செய்துவரும் வழிபாடுகளைச்சிறந்ததாகத் திருவுளத்திலேற்றிரட்சிக்குங்காரணத்தினால் இயலிசைநாடகமென்னும் முத்தமிழைவளர்த்து மெய்யறிவையும்பெற்றிருந்த நற்கீரதேவர்முதலிய சிறந்தபுலவோர்களாற் புகழ்ந்துசாற்றியபாமாலைகளைத் திருச்செவிகளுக்கமுதமாகக்கேட்டுக் களிக்குங்குமாரதேவருக்கு அடியேன் புன்சொற்றொடையலினிடத்தினும்அன்பாய் ஒப்புக்கொள்வர், அடியேனைத்தடுத்தாட்கொள்ளும் நாயகமாய்சூரபதுமன்முதலாகிய அவுணப்பாதகர்கொடுமைகளைநீக்கித் தேவர்களைப்பாதுகாத்து விண்குடியேற்றிய நாயகமாய்உலகையளந்தருளிய நெடுமால்புத்திரியாகிய தெய்வநாயகிக்கும் பற்பலதிருவிளையாடல்களைக்காட்டி வேடகன்னிகையாகிய வள்ளியம்மைக்கு நாயகமாய் வெற்றிவேலாயுதத்துக்குநாயகமாயிராநின்ற சிவசுப்பிரமணியதேவர்கதைகளைவிரிக்கும் இப்புராணத்தைப்பூமண்டலவாசிகளனைவரும் காவியங்களனைத்தினும் நாயகமாகக்கொள்ளக்கடவர், குறைவற்ற கிருபாநிதியாகியகுமாரசுவாமியார் மகத்துவங்களைத்தெருட்டும் சரித்திரங்களைச்சகலருங்கேட்டு மனமகிழ்ந்து இம்மைமறுமைப்போகங்களை எளிதிற்பெற்றுவாழும்படிக்குப் பிரசங்கித்தபுண்ணியசீலரும் இப்புராணவரலாற்றையாராய்ந்து ஆனந்தபரவசராய்க்களித்த குணசம்பன்னரும் வழுவின்றிவாசித்து அதன்பயன்களைத்தெரிந்து மனப்பூரிப்புடனிருக்கின்ற மகத்துக்களும்இக்காதையை வரன்முறையாகக்கற்று முத்திபெறநினைந்த ஞானவான்களும் பத்திபாவசரா

ய்மனமுருகிக் கேட்கப்பெற்ற மேன்மக்களும்பூமியின்கணிருக்கின்றபரியந்தம் இலக்குமியையொத்தவனப்பும்அருந்ததியைநிகர்த்த கற்பும்மண்மகளைப்போன்ற பொறுமையும் மற்றமேம்பாடுகளனைத்தையும்பெற்றிருக்கின்றநற்குணநற்செய்கைகளையுடைய கன்னிகையைமணந்தின்புற்று நன்னெறிகளையனுசரித்துவரும் குணசம்பன்னராகிய புத்திரரைப்பெற்றுத் தனதான்னியமுதலிய அஷ்டஅயிஷ்வரியங்களையும் மனவெழுச்சிபெற அனுபவித்திருந்தபின்பு அந்தியகாலத்தில் பரமபதசாம்பிராச்சியத்தைப்பெற்றுஎந்நாளும் பகவான்பாதநீழலிற் குடியாய்வாழ்ந்திருப்பர். அண்டாண்டபுவனங்களாய் மற்றப்பொருள்களனைத்துமாய் உயிருக்குயிராய்க் காரணபூதராய்ப்பிறவுள்ளனவுமாகி அவற்றிற்குக்காட்சியாய் அளவுபடாமல் விளங்கும் தேவதேவோத்தமன் பாதகமலங்களிலிடைவிடாது பத்தியுடன்போற்றி அடைக்கலம்புகக்கடவேன், சராசரப்பிரபஞ்சங்களும் நாசப்பட்டுமங்கும் பிரளயகாலத்தினும் சலனமற்றுச்சகலவளங்களையுங்கொண்டுவிளங்கும் சிறப்பையுடைய திருக்காஞ்சிப்பதியில் நடுநாயகமாய்ப்பருத்தோங்கிய பிராகாரத்தையும் பலநிலைகளைப்பெற்றிருக்கின்ற கோபுரவாயில்களையும் மண்டபங்களாதிப சிறப்புகளைக்கொண்டு முத்தழல்சொலித்திருக்கும் யாகசாலைகள் கற்பகிரகம் மற்றும்வேண்டுவனவனைத்தும் பெருத்துத்தெய்வீகமாய் உண்டாயிருக்கின்ற திருக்குமரகோட்டத்தில் தெய்வநாயகி வள்ளியம்மையிருமருங்கினும் வீற்றிருக்கத்தக்கதாகப் புவனங்கள்செழித்து விருத்தியடையும்பொருட்டு எழுந்தருளியசுப்பிரமணியதேவர்திருவடிகளில்வணங்கிப்போற்றினம், ஆயிரத்தெட்டண்டங்களை நூற்றெட்டுயுகவரையிற் கொடுங்கோல்செலுத்தி யாண்டதேவர்முதலிய சகலரையும்வென்று பிராணிகளையலைத்திருந்தசூரபதுமனாதிய அவுணக்கலைவற்றச்செய்து வெற்றிகொண்டிருக்கும் வேலாயுதத்தைத்தாங்கியிருக்கும் சரவணபவன்புராணத்தைப் பத்தியுடன் தினந்தோறும் வாசித்துவரும் புண்ணியவான்கள் இம்மையில் கஜேந்திரபோகங்களையனுபவித்து மறுமையில் சிவசாரூபப்பதவிற்சேர்ந்து மனமகிழ்ச்சியுடன்வாழ்வர், இந்தப்புராணத்தைத்துவக்குமுன்னிலையிற் போற்றியபடிக்குக் குறைவறமுற்றுப்பெற்றகாலத்திலும் ஐங்கரங்களையும் யானைமுகத்தையும் பருத்தவயிற்றையும் தண்டைசதங்கை கொஞ்சும்பாதாரவிந்தங்களையுமுடைய விகடசக்கிரவிநாயகமூர்த்தியை மீட்டும்வழிபட்டுப்போற்றினம். சுபம். சுபம்.

திருச்சிற்றம்பலம்.

---

சூ-வது, தட்சகாண்டம்முற்றிற்று.

---

கச்சியப்பசிவாசாரிய சுவாமிகள் திருவடிவாழ்க.

உ

சிவமயம்.

வேலுமயிலுந்துணை.

ஸ்ரீஞாநசம்பந்ததீர்த்தசரணாயநமஃ.

காஞ்சிபுரம்

கோனேரியப்பமுதலியார் அருளிச்செய்த

# ஸ்ரீஸ்கந்தபுராணம்.

ஏழாவது

## உபதேசகாண்டவசனம்.

## சூராதிகளொடுக்கப்படலம்.

விநாயகர்துதி.

குழவிவெண்பிறைமிலைச்சியோற்குணித்தமாதவத்தி
னிழைதடம்புனலருவிதாழிமையமீன்றெடுத்த
மழைமதர்த்தகண்மரகதப்பசுங்கொடிபயந்த
தழைமடற்செவித்தந்திபொற்சரணமேசரணம்.

உள்ளமோர்ந்தனர்கேட்டுளிபெம்முறை
யொருங்குணர்ந்தொருங்காகப்
பள்ளவார்மடைப்புனலெனத்தொகுத்தனை
யாமதன்பயன்றுய்த்தேம்
வெள்ளெயிற்றுவெஞ்சூரனைமுதலியோர்
விளிந்தபின்னவராவி
கொள்ளைவேற்படையொடுக்கியதன்மையைக்
கூறுதியெமக்கென்றார்.

பரமபதியாகிய பரமேஸ்வரனைத்திரிகாலங்களிலும்இடைவிடாமல்பூசிக்கும் தவப்பேற்றினைவாய்ந்த நைமிசாரணியமுனிவர்கள் தபோநிதியாகிய சூதபுராணிகரைப் பார்த்து விண்ணப்பஞ்செய்கின்றார்கள் தவப்பெருங்கடலாகிய சூதபுராணிகரே? சிவகுமாரராகிய குமாரக்கடவுளின் திவ்யசரித்திரங்களையெல்லாம் பள்ளத்தைநாடிச்செல்லும்ஜலத்தைப்போல எங்களுக்குத்தெளிவுபெறச்சொல்லியருளினீர் அதனாலடையவேண்டுவதாகிய சாம்பிராஜ்யத்தை மிகுதியாகப்பெற்றோம் இனிவெள்ளியதந்தபந்திகளையுடைய கொடியவர்களாகிய சூரபதுமன், சிங்கமுகாசுரன், தாருகாசுரன்முதலானவர்கள் சுப்பிரமணியக்கடவுளா லேவப்பட்ட வெற்றிவேலாயுதத்தினால் மடிந்தபின்பு அவர்களுயிரை அவ்வேலாயுதமானது ஒடுக்கிக்கொண்ட திவ்வியசரித்திரங்களையும் அடியேங்களுக்குத் திருவுளம்பற்ற வேண்டுமென்றுசொல்ல, அதனைப்பழவினையாகியபகைக்கூறும்பைப்பற்றறவென்றவராகிய சூதபுராணிகர்கேட்டு, தம்முடையபின்னலாகிய அழகியசடைமுடியையசைத்து மிகுந்தபேரானந்தத்தையடைந்து நைமிசாரணியவாசிகளைப்பார்த்து, ஓ! சவுனகாதிரிஷிகளே? அந்தச்சரித்திரத்தினையும் வரன்முறையாகச்சொல்லுகிறோம்கவனித்துக்கேட்பீர்களாகவென்றுசூதமுனிவர்சொல்லத்தொடங்கினார்.

முன்னமொருகாலத்தில் பொன்னைப்போலும்பிரகாசிக்கின்ற கடப்பமலர்மாலையைத்தரித்தஎம்பெருமானாகிய குமாரக்கடவுள் கீதங்களைப்பாடுகின்றவண்டுகள் நீங்காத கற்பகச்சோலைகளால் சூழப்பட்ட கந்தமாதனபருவதத்தினின்றும் புறப்பட்டு மரகதரத்தினத்தைப்போலும்பசியகலாபத்தையுடைய மயிலின்மீது ஆரோகணித்துக்

கொண்டு சர்வலோகங்களிலும் திருவிளையாடல்செய்யும்படி எழுந்தருளியகாலத்தில் பர்வதராஜபுத்திரி யாராகிய உமாதேவியாருடன் பரமேஸ்வரன் மிகுந்தவிருப்பத்தோடும் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீகயிலையங்கிரியைச்சேர்ந்து மயில்வாகனத்தினின்றும் கீழேயிறங்கி சிறியதண்டைகளணியப்பட்ட இரண்டுதிருவடிகளும் வருந்தமெல்லெனநடந்த பொழுதுவெற்றிபொருந்திய கோழிக்கொடியும் மயில்வாகனமும் கைலையங்கிரியின் சாரலிலிருக்க, குமாரக்கடவுளானவர் கூட்டமாகிய பேரொளியைவீசுகின்ற கைலாயகிரியிற்சென்று பன்னிரண்டுதிருக்கரங்களையும் அஞ்சலியஸ்தராகக் கூப்பித்தொழுது, சமுத்திரத்திற்றோன்றியவிஷத்தைப் பிரமவிஷ்ணுவாதி தேவர்களுக்கு ஓர் துன்பமுமுண்டாகாவண்ணம் தம்முடையகண்டத்திற்றரித்தருளிய காளகண்டராகியும், நெற்றிக்கண்ணையுடைய பரமேஸ்வரராகியும், தம்மையடைந்த சிவஞானிகளின் பிறவியாகிய தீமையையொழித்து மெய்ஞ்ஞானாநந்தமாகிய வமுதத்தையூட்டும் நாதராகியும், வெண்மைநிறம்பொருந்திய இளஞ்சந்திரனைச்சடைமுடியின்மீது தரித்தருளிய ஜகதீஸ்வரராகியும் தாருகாக்ஷன், கமலாக்ஷன், வித்வன்மாலியென்னும் பெயரைவாய்ந்தஇராக்ஷதர்களின் திரிபுரங்களையும் நகைத்தெரித்தருளிய புண்ணியமூர்த்தியாகியுமுள்ள பரமேஸ்வரனைத்தரிசித்துப் பேராநந்தமுற்றவராய்ப் பின்னும் மரகதக்கொம்பைப்போலவிளங்கும் உமாதேவியாரையும் சேவித்துப் பெருமகிழ்ச்சியடைந்துநிற்க. வீரகண்டையும் தண்டையுமணிந்த அழகியதிருவடிகளையுடைய குமாரராகிய சுப்பிரமணியக்கடவுளைப்பார்த்துத் திருவுள்ளமுவந்து தேவநாயகனாகியும் முதற்பெருங்கடவுளாகியுமுள்ள சிவபெருமான் ஆநந்தநிருத்தஞ்செய்தருள அந்நடனதரிசனத்தைக் குமாரக்கடவுள் தங்கண்களாரக்கண்டு புளகாங்கிதங்கொண்டு பரவசமடைந்திருந்தனர் அப்போது வெள்ளியதிரைக்கரங்களினால் கரையினைமோதுகின்ற திருப்பாற்கடலின்மத்தியில் படப்பொறியினையுடைய சேஷசயனத்தில் அறிதுயிலமர்ந்த பசியதுளபமாலையுங் கவுத்துவமணிமாலையுந்தரித்து விளங்காநின்ற ஸ்ரீமகாவிஷ்ணுவானவர், மகம்மேருவினிடத்தில் கருமைநிறம்பொருந்தியமேகமானது செந்தாமரைமலர்களைப் பூத்துக்கொண்டு வருவதுபோல, நீண்டசிறையினையுடைய கருடவாகனத்தின்மேலாரோகணித்துக்கொண்டு எழுந்தருளிவர அவ்வாறுவிஷ்ணுவானவர்சென்ற திசையைநோக்கி அன்னவாகனத்தின்மீது பிரமதேவனும், பஞ்சகற்பகவிருக்ஷத்தின் நீழலில்வாசஞ்செய்யும் தேவேந்திரன்முதலிய தேவர்களெல்லாரும் தம்மைச்சூழ்ந்துவர, திரிபுரதகனராகிய சிவபெருமான்எழுந்தருளியிருக்கும் கைலையங்கிரியைச்சேர்ந்து அதன்சாரலினொருபுறத்தில் தங்கள்வாகனமாகிய கருடனையும், அன்னத்தையும் விட்டிறங்கிமகாபிரளயகாலத்திலும் அழியாதமேன்மைபொருந்திய பொற்சிகரங்களையுடைய ஸ்ரீமகாகயிலாசத்தில் எழுந்தருளியிருக்கும்பரமேசுவரன்செய்தருளுகின்ற திருநடனத்தைத் தரிசிக்கச்சென்றவர்கள் அஞ்சலியாகக்கூப்பிய கையையுடையவர்களும்நடுங்கிய சரீரமுள்ளவர்களும் அருவியாற்றைப்போலக்கசிந்தொழுகும் ஆநந்தக்கண்ணீருடையவர்களும் மிகுந்தபேரன்பினையுடையவர்களுமாகச் சென்றபோது, உயர்வாகிய நவரத்தினங்களால் பதிக்கப்பட்ட முதற்கோபுரவாயிலினிடத்தில் எழுந்தருளியிருக்கும் ஞானமூர்த்தியாகிய திருநந்திதேவர் தமதுதிருக்கரத்திலுள்ள பிரம்பினாலடிக்கப்பட்ட சுவடானது தங்கள்முடிகளில் படும்படிக்குநெருங்கிய நெருக்கத்தினால் ஒருவாறு உள்ளேசென்று நம்பெருமான்செய்தருளுகின்ற திருநடனத்தைத்தரிசித்துத்தொழுது ஒருபுறமாகநின்று, வேதங்கள்கோஷிக்கும் ஒலியானது எட்டுத்திசைகளையுங்கடந்து அப்பாற்செல்லவும், விஷ்ணு, பிரமன் இந்திரன்முதலிய தேவர்கள்செய்யும் தோத்திரவொலியானது, பிரமாண்டகோளகைக்கப்புறத்திற்செல்லவும், ஆநந்தத்தாண்டவஞ்செய்தருளுகின்ற தமதுதிருவடிகளிலணிந்த வேதமாகியசிலம்பினொலியானது, பாசபந்தங்களிலழுந்திக்கிடக்கும் ஆன்மகோடிகளுக்கு இனியதிருவருள்பாலித்து அவர்கள்கொண்டிருந்த அஞ்ஞானமாகிய துன்பங்களையொழிக்கவும், ஞானபூரணர்களாயுள்ள சிவகணங்கள் தோத்திரஞ்செய்யும், அரகரா, என்னும்பேரோசையானது பூலோகமெங்குந்நிறையவும், தேவதுந்துமிகளும், சிறுபேரிகைகளும், பல துவாரங்களோடு பருக்காங்கற்கள் பொருந்தியதுமாகிய பாண்டிலென்னும் வாத்தியத்தை யடிப்பதனாலுண்டாகும் பேரொலியுடன் திமிலைமுதலாகியவாத்தியங்களொலிக்கவும், தம்முடையஜடாமகுடத்தில் தரித்திருக்கும் கங்காநதியானதுததும்பவும், தேவர்கூட்டங்கள் பக்கங்களிற்சூழவும், திருநந்திதேவர் தமதுதிருக்கரத்திலுள்ள பொற்பிரம்பினால் மோதுகின்றஅடியினால் தேவர்களுடைய முடியிலணிந்திருக்கும் நவரத்தினங்களும் தெறித்தோடவும், பனியாகிய மேற்போர்வையைத்தரித்துள்ள இமயபர்வதராஜன்செய்த தவத்தினால் புத்திரியாகப்பெற்றெடுத்த பசுமையாகிய திருமேனியையுடைய பார்வதிதேவியார்கனிந்த திருவுள்ளத்துடன் ஒத்துகின்றதாமரைமலர்போன்ற திருக்கரத்திலிருக்கும் தாளத்தினின்றுமுண்டாகும் தாளவொத்தின்படியே சீர்களதோறுமுண்டாகும்பாட்டினோசையானது தம்முடையதிருச்செவியில்பொருந்தவும், திருநடனஞ்செய்தருளுகின்ற சிவபெருமானது திருக்கூத்தினைத் தேவர்களுடன்தொழுது, குழைந்தவுள்ளத்தையுடையவர்களும், குமிழ்விட்டுப்பாயும் ஆநந்தக்கண்ணீருடையவர்களும், மனங்குழைக்கபேரன்பினையுடையவர்களுமாய்த் தங்கள்தங்கள்சிரத்தில் குவித்துவைத்த கைகளைவாங்காமற் படிக்குமிகுந்த விருப்பத்துடனெதிர்நின்று பரவசமடைந்து தேகம்புளகாங்கிதங்கொண்டு மனங்கசிந்து, மின்னலைப்போலும்விளங்காநின்ற சிவந்தசடைமுடியினையுடைய பரமசிவன்செய்தருளுகின்ற திருநடனத்தை மிகுந்தசந்தோஷத்துடன் தரிசித்துநின்றார்கள்.

கேட்டீர்களோ சவுனகாதிமுனிவர்களே? இவ்விதமாகப் பிரமவிஷ்ணுக்கள் பரமசிவன்செய்தருளுகின்ற திருநடனத்தைத்தரிசித்து, சந்தோஷித்திருக்குங்காலத்தில், பேரொளியைவீசுகின்ற ஸ்ரீகைலையங்கிரிச்சாரலில் நம்பெருமானாகிய குமாரக்கடவுளின், த்வஜமாகிய சேவலும், வாகனமாகியமயிலும், மிகுந்தகளிப்புடன் வசித்திருந்தன. அப்போது, சூரன், பதுமன், சிங்கமுகன், வெள்ளியபற்களையுடைய கொடியவனாகிய தாருகன், என்றுசொல்லப்பட்ட நான்குபூதகணத்தலைவர்களும் அழகியபுள்ளிகளையுடைய மயிலுக்குச்சமீபத்தில்வந்து அம்மயிலைப்பார்த்து, ஓ! மயிலே? சிவகுமாரனாகிய சுப்பிரமணியக்கடவுளி

ன் கிண்கிணியணிந்த திருவடித்தாமரைகளைத்தாங்கும் பெருஞ்செல்வத்தைப்பெற்ற உன்னுடையவல்லமையின் றிறத்தை ஒருவரால்எடுத்துச்சொல்லுந் தகுதியையுடையதோ! இதுபோலவே ஜயப்பிரதாபத்தையுடைய கொடியாகிய சேவலின்பராக்கிரமத்தைஎடுத்துச்சொல்லத்தக்கவர்கள் உலகத்தில்யாரிருக்கின்றார்கள் பதுமாசனனாகிய பிரமதேவனாலும் உம்முடையதிருவடிகளைப் போற்றுதற்கு எளிதல்லவே அப்படிக்கிருக்க இவைகளையறிந்துமறியாதவர்கள்போல மிகுந்தபலத்துக்குத்தாங்களே சொந்தமானவர்களென்று வலியசிறையினையுடைய கருடராஜனும் அன்னமும் தங்கள்கருத்தில்நினைத்து உங்களைக்கொஞ்சமேனும் மதியாது அவமதித்திருக்கின்றன. அதனைநீங்களின்னமு மறியவில்லையோ, அவ்வாறவமதித்திருப்பதுமல்லாமல் உங்களுடன் சண்டைசெய்யவருமானால் நாங்கள்நால்வரும் கோபாவேசங்கொண்டு யுத்தசன்னுத்தராய் உங்களுக்குத்துணையாகநிற்போமென்று பூதகணத்தலைவர்கள் சொன்னவார்த்தைகள் தங்கள்காதுகளில்புகுந்தவுடன் மயிலானது கண்களில்நெருப்புப்பொறிபறக்கும்படி சிறையையடித்துக்கொண்டெழுந்தது. உடனேசேவலும்பெருங்கோபத்துடன்சீறிச்சிறையானது தன்னடிதொடப்போர்க்கப் போர்செய்யத்துணிந்தெழுந்தது அதனைக்கண்டபூதகணங்களும்கண்களில்வடவாமுகாக்கினியானதுதோன்றும்படிக்குக்கோபித்தெழுந்தன இவ்வாறு மிகுந்தகோபாவேசத்தையுடையவைகளாய்த்தமக்கெதிரில் போர்செய்யவருவதைக் கருடன்பார்த்து உலகத்தின்மேலோங்கி மோதுகின்ற அலைகளையுடைய ஜலப்பிரளயத்தை வற்றச்செய்கின்ற வலியசிறையினையடித்துக் கொண்டுஆரவாரித்தது. உடனேபிரமதேவன் வாகனமாகிய அன்னமும்எதிர்நோக்கிச்சென்று மிகுந்தகோபாவேசத்துடன் தனக்குள்போர்விளையும்படியான பேரோசையைக்காட்டி யுக்கிரத்துடன்எதிர்சென்றது.

இவ்விதமாக மயிலும், சேவலும், கருடனும், அன்னமுமாகிய விவைகள் போர்க்கோலங்கொண்டு எதிர்த்து ஒன்றுடனொன்று அதட்டியும் அந்த அதட்டுதலையொத்த கோபத்தினையுடையனவாய்க்கண்களில்நெருப்புப்பொறிசிந்தும்படிக்கெதிரொதிராகவிழித்தும், ஒன்றை மற்றொன்றுகடித்தும் கீழேதள்ளிமிதித்தும், அலைகளையுடையசமுத்திரஜலமானது மேலெழும்படிக்குச் சிறைகளால்சுழலச்செய்தும், மகம்மேருமுதலாகிய பெரிய பருவதங்களின் சிகரங்கள்நடுங்கி யதிர்ந்துதிரும்படிக்குக்கொழித்தும். அப்போர்க்களத்திலுண்டாகிய துகளெழுந்துபரவி அஷ்டதிசைகளையு மூடிக்கொண்டு அங்கிருக்கின்ற திக்குப்பாலகர்களின் மனங்கள் கலங்கவுமாயின. இவ்வாறு இவைகள் ஒன்றுடனொன்றுபோர்க்கோலங்கொண்டு செய்கின்ற யுத்தத்தைக்கண்டு, பெரும்பயங்கொண்டு சூரியனொளித்தனன். பொன்னுலகவாசிகளாயுள்ள முப்பத்துமுக்கோடிதேவர்களும் துன்பக்கடலின்மூழ்கினவர்களாய்த் தங்களுலகத்தைவிட்டு அப்புறங்குடியோடிப்போகும்படிக்கு நினைத்தார்கள். இடிக்குலங்கள்பெருங்குமுறலுட னதிர்ந்து பொடிப்பொடியாகச்சிந்தின. அண்டமுகட்டை யளாவிய அநேகமாயிரங் கொடுமுடிகளையுடையமகம்மேருவானது அஷ்டதிசைகளும் அதிரும்படியாக வராநின்ற பிரசண்டமாருதமோ வென்றுமயங்கினது.

கேட்டீர்களோ! நைமிசாரணிய வாசிகளே? இவ்விதமாகப்பெரும்போர்நடக்குங்காலத்தில் பூதகணத்தலைவர்களாகியநால்வருந்தங்கள் தங்கள் பற்களையதுக்கிக்கொண்டுகோபமுடையவர்களாய்ப் பலம்பொருந்திய சிறையினையுடைட கருடராஜனுடனெதிர்த்துப் போர்செய்தார்கள்.மயிலானது கருடனுடைய கால்களையுந்தலையினையுந் துண்டு துண்டாகக்கடித்துப் பெருமுழக்க முண்டாகும்படிக்குத் தன்சிறையினா லதன்பிடரியில் மோதியடித்தது. நம்பெருமானாகிய குமாரக் கடவுளின் துவசமாகிய கோழியானது பிரமதேவனேறிநடத்துகின்ற விசாலமாகிய சிறையினையுடைய அன்னத்தினுடனெதிர்த்துப்போர்செய்ததிறத்தை ஆயிரம்நாவைப்படைத்த ஆதிசேஷனாலும் இன்னதன்மையதென் றெடுத்துச்சொல்லக்கூடுமோ? கூர்மையாகிய தன்காலடிச்சுவட்டினால் அன்னத்தினுடைய மார்பானது பிளந்தபிளப்பினிடத்தில் உதிரங்கொப்பளித் தெழக்கண்டுசுவர்க்கலோகத்தி லுள்ளவர்களும் நடுநடுங்கும்படிவெற்றிபொருந்தியதன் சிறைறையடித்துக் கொண்டது.இவ்விதமாகப் பெரும்போர்நடந்துகொண்டிருக்கையில், மயிலினிடத்தில் சண்டைசெய்துகொண்டிருந்த கருடனானதுசண்டையையிழந்து தன்சிறையை யுதறிக்கொண்டுஆகாயத்தில் பறந்துவிட அன்னப்பட்சியுமந்தக்கருடனுக்குப்பின்னே பறந்தோடினது.அதனைக்கண்டகணத்தலைவர்கதாயுதமெடுத்துத் துரத்திக்கொண்டுசெல்ல, அழகியகலாபத்தையுடைய மயிலும்சேவலும் அவைகள்போனவழியே தொடர்ந்தனஅவ்வாறு அவைகள்செல்லுகின்ற பெருந்திசைகளும்அண்டங்களுமதிர்ந்து அவ்விடங்களிலிருக்கும் உயிர்களெல்லாஞ் சிதைந்துகலங்க அன்னமானது பிரமதேவனுலகிற்சென்று ஒளித்துக்கொண்டது. அதுபோலவே வெற்றிபொருந்திய கருடனும் மிகவும்வருந்தி நடுக்கத்துட னோடி ஸ்ரீமகாவிஷ்ணுவினுடைய வைகுந்தத்திலொளித்துக்கொண்டது. இவ்விரண்டுமிவ்வாறுஓடியொளித்துக்கொண்டதைக்கண்டமயிலானது அந்தமட்டில்விட்டுவிடாமல்மிகுந்தகோபாவேசத்துடன் அதனடியைப்பிடித்துத்தொடர்ந்துஆயிரமிதழ்களையுடையபதுமபீடத்தில்எழுந்தருளியிருக்கும்பிரமதேவனுலகத்திற்போய் ஒருகணப்போதி லங்கிருக்குமுயிர்களையெல்லாங்கொன்று மகாவிஷ்ணுவினுலகத்திற்சென்று ஓடியொளித்துக்கொண்டிருந்தகருடனுயிரைக் கொன்றதுமல்லாமல் அவ்வைகுந்தநாட்டையும் பொடிப்பொடியாகச்சிதைத்துத் தும்சம் பண்ணி யவ்விடத்தினின்றும் நீங்கிப் பிரமதேவனுலகிற்சென்று அவ்வுலகத்தையுமழிக்கக் கோழிக்கொடியானதுகோபித்து அவ்விடத்திலிருக்கும் உடல்களையெல்லாங் கொறித்துவிட்டது. இப்படியிருக்க நெருப்புப்பொறிகளைக்கக்குகின்றகண்களையும், வெண்மைநிறம்பொருந்திய பற்களையுமுடைய நான்குபூதகணத்தலைவர்களும் கோபித்து அவ்விடங்களெங்கும் தங்கள்கோபாவேசத்தைக்காட்டிக் கொடியபோரைச்செய்கின்ற ஆரவாரத்தினால்தேவர்கள்பெரும்பயங்கொண்டு மனங்கலங்கி யினியெப்படிக்குடியிருப்பதென்று துயரத்துடனிரங்கிப்பயந்து ஸ்ரீகாளகண்டராகிய பரமேசுவரன் றிருநடனஞ்செய் தருளுகின்ற கைலையங்கிரியைச்சேர்ந்தார்கள். இவ்வாறுதேவர்கள் திருக்கயிலையைச்சேர்ந்தபொழுது கொடியயுத்தத்தைவிளைத்தமயிலும், நான்குபூதகணத்தலைவர்களும் சேவலும் அவ்விடத்திற்சேர்ந்து ஒருபுறத்திலிருக்க, இங்கிரு

ந்துபோன தேவர்கள் பொற்சிகரங்களையுடையகோபுரவாயிலைச்சேர்ந்து தங்களுக்குநேரிட்ட துன்பங்களை யாருடன்சொல்லிக் கொள்ளுவோமெனவருந்தித் தங்களுக்குளெண்ணமிட்டுக்கொண்டிருக்கும்போது, நான்குவேதங்களிலும் ஆராய்ந்தெடுக்கப்பட்ட வுண்மைப்பொருளாகிய பரமசிவனுடைய திருநடனத்தைத் துதிசெய்து அழகியதாமரைமலர்போன்ற திருவடிகளைவணங்கித்திரும்பிவருகின்றபொழுது அங்குவருத்தப்பட்டுக்கொண்டிருந்த தேவர்கள் விஷ்ணுவைக்கண்டுவணங்கித் தங்களுக்குநேரிட்ட துன்பங்களை யிரந்துசொல்லத் தொடங்கினார்கள்.

ஓர்காலத்துங் கெடாதமுதல்வனே, திருநாபிக்கமலத்திற்றோன்றிய பிரமனைக்கொண்டு சர்வலோகங்களையுஞ்சிருஷ்டித்தபுண்ணியமூர்த்தியே, தேவரீர் தீனராகிய எங்களுயிரைக்காவாவிட்டால் மற்றியாவர்காக்கத்தக்கவர்கள், க்ஷீராப்தியின்மத்தியில்அறிதுயிலமர்ந்தருளும்துளபமாலையைத்தரித்த திருமுடியினையுடைய பெருமானே, பூர்வத்தில் கஜேந்திரனென்னு மொருயானையானது ஆதிமூலமேயென்றோலமிட்டழைக்கச்சென்றோடி நீங்காதவதன்றுன்பத்தையொழித்துக் காத்தருளியவீரனே, கோவர்த்தனகிரியைக் குடையாகக்கொண்டு பசுக்கூட்டமுதலானவைகளைக்காத்தருளிய இறைவனே, உலகத்தையோரடியாகவளந்தநின்ற கருணாநிதியே, நெருப்புப்பொறியைக்கக்கும் சக்கராயுதத்தைத் தரித்ததிருக்கரங்களையுடையகடவுளே, ஐயோ, தேவருலகம் அழிந்துவிட்டது, தீனர்களாகிய எங்களைக்காப்பவர்கள் தேவரீரையன்றிவேறொருவருங்கிடையாது. பசியகலாபத்தினையுடைய மயிலின்சிறையினால் அஷ்டலட்சுமிகளும்வசிக்கப்பெற்றதேவரீருடைய பதவியாகிய வைகுந்தமும் அழிந்துவிட்டது பிரமதேவன் வாழ்ந்துகொண்டிருக்கும் சத்தியலோகமும் தூளிப்படலமாய்ப்போய்விட்டது. இனித்தேவர்கள்கதியோவெனில், சக்ரவாளகிரிக்கப்புறத்திலோ, அல்லது பிரமாண்டகோளகைக் கப்புறத்திலோ, எங்குவருத்தப்பட்டுக்கொண் டிருக்கின்றார்களோ வொன்றுந்தெரியவில்லை. பரந்தஇதழினையுடைய தாமரைமலரில் வசிக்கும் பிரமதேவனுக்குரிய வாகனமாகிய அன்னப்பட்சியுஞ்சிதைந்தொழிந்தது ஓ தாமரைமலர்போலுந் திருக்கண்களையுடைய பெருமானே சமுத்திரத்தையொத்த கருத்த திருமேனியையுடைய கண்ணனே, தேவரீர்ஏறிச்செலுத்தும் வாகனமாகிய கருடனும் ஒழிந்து விட்டது. கொடியவர்களாகிய பூதகணத்தலைவர்கள் நால்வரும் உண்ணத்தொடங்குவாராகில் இந்தவுலகமெல்லாமவர்களிலொருவர் வயிற்றிற்குப் போதுமோ? அவர்கள் செய்யுங் கொடியசெய்கைகள் நினைப்பினிடத்திலடங்குமோ? அடியேங்கள் வசிக்குமிடத்தையெல்லாம் தேவரீருடைய கிருபாநோக்கஞ் சிறிதுண்டாயிருக்குமானால் இப்போதே யதனைத்தடையில்லாமற் பெறுவோமென்றுஇவ்விதமாகத் தேவர்கள் முறையிட்டு நிற்பதைக்கண்டுமேகம்போலுங்கறுத்ததிருமேனியையுடைய விஷ்ணுவும், தாமரைமலரில் வசிக்கும் பிரமதேவனுஞ்சென்று ஒளிபொருந்திய வெற்றிவேலாயுதமேந்திய பன்னிரண்டு திருக்கரங்களையுடைய குமாரக்கடவுள் எழுந்தருளியிருக்குமிடத்திற்சேர்ந்துதரிசித்துக்கண் களிப்படைந்து கடல்வண்ணனாகிய திருமாலானவர் ஒருபுறத்தில் நிற்கப்பதுமாசனனாகிய பிரமதேவன் தேவருலகங்களிலுள்ளவர்கள் பட்டபெருங்கேட்டையெல்லாம், அஞ்சலிபஸ்தனாய் இரண்டுகரங்களையுஞ்சிரத்தின்மீதுகுவித்து ஓ, இமயபர்வதராஜபுத்திரியாராகிய உமாதேவியார்க்குரிய புத்திரரத்னமே, பகைவர்களாகி யானைக்கூட்டங்களைவேரறத்தொலைத்துவாட்டும் இராஜசிங்கமே, தேவர்களடைந்திருந்த பெருந்துன்பங்களையொழித்து அவர்களுலகங்களைக் காத்திரட்சித்தருளிய புண்ணியமூர்த்தியே மணம்பொருந்திய கடப்பமலர்மாலையைத்தரித்த கருணையங்கடலே அவுணர்போரினைக் கடந்தவீரமுள்ளவரே கலாபத்தையுடைய மயில்வாகனத்தின்மீதெழுந்தருளுகின்றகிருபாநிதியே அழகியவேலாயுதத்தைத்தரித்த கடவுளே எம்பெருந்தெய்வமே, தேவர்களுக்குத் தலைவனாகிய இந்திரனுக்கு அருமையாகக்கிடைத்த வருட்செல்வமே, ஒன்றுக்கும்பற்றாதவனாகிய அடியேனையு மோர்பொருட்படுத்திப் பிரணவமந்திரத்தினுண்மைப்பொருளை யெடுத்துபதேசித்தருளிய புண்ணியசொரூபியே, இருக்கு-எசுர்-சாமம் - அதர்வணமென்னும் நான்குவேதங்களின்முடியினின்று மோர்காலத்தும்விட்டு நீங்காத வெம்பெருமானே, சர்வலோகநாயகனே, ஒருவரும் தனக்கொப்பில்லாதஏகனே, சதுர்வேதசொரூபியே, நாவைப் புரட்டியுச்சரிக்கப்படாத வேதாந்தமே, பிரணவமந்திரத்தி னுண்மைப்பொருளே, பூதமுதல் நாதமீறாகச்சொல்லப் பட்ட முப்பத்தாறுதத்துவங்களையுங்கடந்ததீதப்பட்ட முதல்வனே, வேதசிவாகமங்களின் உண்மைப்பொருளை யுணர்ந்த சைவசித்தாந்திகள் தாங்களடைய வேண்டுவதாகிய சிவசாயுச்சியத்திற்குத் துறையாயுள்ளவரே, கிருபாசமுத்திரமே, மிகுந்த அலைகள்பொருந்திய கங்காநதியில் மெய்ஞ்ஞானமே திருவுருவமாகப் படைத்த சரவணமென்னு மோர்வகைத்தருப்பையின்மீதுகிருபையோடுமெழுந்தருளிய தெய்வசிகாமணியே, தண்டையையணிந்த திருவடிகளையுடையபெருமானே, ஆறுதிருமுகங்களையுடைய வருட்குன்றமே, யமனா லேவப்பட்ட பாசத்தையறுக்கும்படியான சடாக்ஷரமந்திரத்தைக்கொண்டு அடியேங்கள் போற்றுதற் கெளியகடவுளே, அம்மந்திரத்தைப் போற்றாதவர்களாகிய வன்னெஞ்சர்களுக் கருமையானவரே, புராதனப் பொருளே ஐம்புலன்களையும் வென்ற முனிசிரேஷ்டர்களா லிழைக்கப்பட்ட முப்புரிநூலை யணிந்த அழகிய மார்பகத்தை யுடைய பெருமானே யென்றுபலவிதமாத்தோத்திரஞ்செய்து இதனைவிண்ணப்பஞ் செய்யத்தொடங்கினான்.

ஓ, குமாரக்கடவுளே? நெருப்புப்பொறிபறக்கும்கோபக்கண்களையுடைய நான்குபூதகணத்தலைவர்களும், தேவரீருடைய கொடியாகியகோழியும், வாகனமாகியமயிலுஞ்சென்று அன்னத்துடனும் கருடனுடனும் பெரும்போர்செய்ய அவ்வன்னமுங் கருடனும், போர்செய்வதற்குச் சக்தியில்லாமல் புறங்கொடுத்து ஆகாயத்திற்பறந்தோடிப்போ யொளிக்கவும்விடாமற் பின்றொடர்ந்து அடியேனுலகமாகிய சத்தியலோகத்தை யழித்து வாகனமாகிய அன்னத்தையுங்கொன்று அங்குநின்றும் வைகுந்தத்தையடைந்து அவ்வுலகத்தையுமழித்துக் கருடராஜனையும்எலும்புகளுடையும்படிக்கு நன்றாகப்புடைத்து தேவலோகத்திற்சென்று அங்குமவ்வாறேயதம்பண்ணிப்போயின. எம்பெருமானே அவ்வனர்த்தத்தினா லநேகந்தேவர்களுயிரிழந்தார்கள், தப்பிப்பிழைத்தவர்களோவென்றால், மக

மேருவினிடத்திற்போய்ப் பதுங்கி யிருக்கின்றார்கள். அக்கொடியவிபரீதத்தை அடியேனே வகுத்துச்சொல்லத்தக்கவன் ஓ! கடப்பமலர்மாலையைத்தரித்த கருணாநிதியே? அப்படிப்பிழைத்தோடிப்போன தேவர்களிற்சிலரிதோ இங்குவந்தடைபட்டிருக்கின்றார்களென்று பிரமதேவன்சொல்லியவார்த்தைகளையெல்லாம் நம்பெருமானாகிய சுப்பிரமணியக்கடவுள் செவிகொடுத்துக்கேட்டருளி யந்தப்பூதகணத்தலைவர் நால்வரையுமிங்கழைத்துக் கொண்டு வாருங்கோளென்று கட்டளையிட்டருள, அவ்வாறேயங்கிருந்தகணத்தவர்க ளதிசீக்கிரத்திலோடி யழைத்தமாத்திரத்தில் கொடியசெய்கையைச்செய்த சூரன்முதலானவர்கள் சுப்பிரமணியக்கடவுளினிடத்தில் வந்துசேர்ந்துநாவும்வாயும்வறளவும், குறுகியகால்கள் நடுங்கவும், நீங்காதவல்லபமொழிந்து உயிர்நடுங்கிப் பெரும்பயங்கொண்டு கோபாக்கினியானது பொருந்தியகண்களானது பால்போல்வெளுக்கவும்வந்துதம்முடைய இரண்டுதிருவடிகளிலும் அடியற்றமரம்போலவிழுந்து பணிந்தார்கள் அவர்களையொப்பற்ற வேலாயுதமேந்திய நம்பெருமான்பார்த்தருளி. ஓ! பூதகணங்களே? நீங்கள்பிரமனுலகையும் விஷ்ணுவினுலகையுமழித்தீர்கள் அல்லாமலும் நீங்காதபெருஞ்செல்வத்தையுடைய தேவலோகத்தையு மழித்தீர்களாகையா லினிநீங்கள் சமுத்திரஞ்சூழ்ந்த பூவுலகத்திலே போய்க் கொடியபாவமுள்ள அசுரகுலத்திற்பிறந்து இந்தத்தேவர்களுக்குப் பலவிதமாகத்துன்பஞ்செய்யக்கடவீர்கள் அக்காரணத்தினால் முடிவில்நம்முடையவெற்றிவேலினாலிறந்து கதியடையக்கடவீர்களென்று குமாரக்கடவுள் றிய கொடியசாபத்தை யந்தநான்குபூதகணத்தவர்களுங்கேட்டுத் திருவடிகளில் சாஷ்டாங்கமாகவிழுந்துசேவித்தெழுந்து எம்பெருமானே கொடியபாவிகளாகிய நாங்கள்அசுரகுலத்திற்பிறந்திருந்தாலும் தேவரீரிடத்தில்நீங்காத அன்புபொருந்தியமனத்தை யெங்களுக்கனுக்கிரகஞ்செய்யவேண்டும் இதுவுமல்லாமல் வேறொருவரமுமிருக்கின்றது அதாவது நாங்கள்பிறக்குங்குலத்திற்செய்யுந்தவத்தால், வேலாயுதத்தினாலிறக்கும்போதுமயிலுருவங்கொண்டுதிருவடியைத்தாங்கவும், கொடியாகவுமிருக்கவேண்டிய இரண்டுவரங்களையும் எங்களுக்குக் கிருபைசெய்ய வேண்டுமென்று, சூரனும், பதுமனென்பவனும், சந்தோஷத்துடன் பெற்றுக்கொண்டு மிகுந்ததவத்தினால் நால்வரும்,மாயையின்வயிற்றில்வந்துபொருந்தினர்கள்நீங்காதவல்லமையொழிந்துவருந்தியகருடனும், அன்னமும் தூளாயழிந்தொழிந்த தேவருலகமும், பன்னிரண்டு திருப்புயங்களையுடைய நம்பெருமான் திருவாக்கின்விசேஷத்தினால் பழையபடியே நிலைபெற்றிருந்தன. மேலும் தம்மைச் சரணாகதியாகச்சேர்ந்த பிரம்ம விஷ்ணுக்களுக்கு நம்பெருமானாகிய சுப்பிரமணியக்கடவுள் விடைகொடுத்தருளி மயில்வாகனத்தின் மேலாரோகணித்துக்கொண்டுகந்தமாதனபர்வதத்திற்கெழுந்தருளினர். எக்காலத்திலும் இளையவன்சொல்லைக்கடவாத சூரனானவன் தன்னுடைய தம்பியாகிய பதுமனுடன் மாயையின் வயிற்றில் ஒருஉருவமாகச் சூரபதுமனென்னும் பெயரோடுபிறந்தான். மற்றஇருவர்களில் சிங்கமுகனென்றொருவனும், தாருகனென்றொருவனுமாக அவ்வசுரர்குலத்தில் சூரபதுமனுக்குப்பின்பு அம்மாயையின் வயிற்றிற்பிறந்தார்கள். பின்பு இவர்கள் சுப்பிரமணியக் கடவுளினுடைய வெற்றிவேலினால் சுவாமிகளின் சந்நிதானத்தில் காவலாகவிருக்குங் கணநாதர்களுடன் இருவர்கலந்துபோனார்கள். சூரபதுமனேவெனில் உயிரிழந்து, கோழிக்கொடியும், மயில்வாகனமுமாகிய பேற்றைப்பெற்றான், ஓ!சவுனகாதிரிஷிகளே? இதுதானுக்கும்சூரன்வந்தவரலாறு இதுபூர்வத்திலேயே நடந்ததென்று சூதபுராணிகர்சொல்ல அதனை நைமிசாரணிய வாசிகள்கேட்டுத் துதிசெய்து மிகுந்தசந்தோஷ சித்தர்களாய்விண்ணப்பஞ்செய்யத்தொடங்கினார்கள்.

ஓ! எங்கள்குலதெய்வம்போல எழுந்தருளியசூதபுராணிகரே? சூரன்முதலானவர்கள் பிறந்தவரலாறின்னவிதமென்று தேவரீர் திருவாய்மலர்ந்தருள நாங்கள் நன்றாகக்கேட்டுணர்ந்தோம். இனிபவர்கள் மடிந்தொழிந்த காலத்தில் கொடியவளாகியஅசமுகியும் அவளைப்பெற்ற தாயாகிய மாயையுமாகிய இவர்கள்போனகதியையடியேங்களுக் குரைத்தருளவேண்டுமென்று சொல்ல அதனைக்கேட்ட தவசிரேஷ்டராகிய சூதமுனிவர், ஐம்புலன்களையுமறவேயொழித்த சவுனகாதிரிஷிகளே? அதனையும் சொல்லுகிறோம் நன்றாய்க்கவனித்துக் கேளுங்களென்று சொல்லுகின்றார். கிண்கிணியுந் தண்டையுமணிந்த திருவடித்தாமரைகளையுடைய சுப்பிரமணியக்கடவுளுடன் முன்னாள் போர்செய்தயுத்தகளத்தில் மணம்வீசுகின்ற அளகபாரத்தையுடைய மாயையானவள் தன்பௌத்திரனாகிய பானுகோபனுக்கு ஒருரகசியஞ்சொல்லி மறைந்துபோயித் தன்மகளாகிய அசமுகியினிடத்திற்சேர்ந்து அவளைநோக்கிஅம்மாமகளே? உன்னுடன்பிறந்த புத்திரர்களுக்கெல்லாம் இதுவரையில்கிடைத்ததுபோல இனிவென்றி கிடையாது, ஒப்பில்லாத சுப்பிரமணியக்கடவுளுடையவேலாயுதத்தினால் இறந்துபோவார்கள் அந்தக்காரியம்சம்பவிக்கிறவரையிலும்நீயிங்கேயிரு நானேமந்தரகிரியினிடத்திற்போய்ச் சேருகிறேன், நீ யிங்கேயிருந்தால் தீயநெறியை யுடையவர்களிறக்கின்ற வகையெல்லாமறிவை. நான்மந்தரகிரியைச் சேர்ந்திருந்தபின்பு ஸ்ரீசயிலத்துக்குவருகிறேன்,இந்தப்போரி லிவர்களிறப்பதை யறிந்து பின்பு இங்கேயிராமல்வந்துவிடு வருத்தப்படவேண்டாம். நீயிவ்விடம்விட்டுவரும்போது மற்றெங்கும் போகாமல் ஸ்ரீசயிலத்தைக் குறித்துவந்து சேரென்றுசொல்லி அந்தரவாசிகளாகிய தேவர்களெல்லாம் நகைசெய்யும்படி மாயையானவள் அவ்விடம் விட்டு நீங்கிப் போய்விட்டாள்.

பின்புசண்டை செய்தற்கேதுவான அவுணர்குலமுழுவதும்கொடியபோர்க்களத்தில்வேலாயுதத்தினால்போர்செய்தலொழியும்படியுயிரிழந்தார்கள்பின்புமாயை யென்பவளைப் பெற்ற அசுரேந்திரனும்,பொன்னுலகத்துத்தேவர்களைச்சிறையிட்டுவைத்தசூரன்பிள்ளையாகியஇரணியனும், பாதாளத்திற்போய்ச் சேர்ந்தார்கள். உருகிய செம்பைப்போலத் தெளிந்தகண்களை யுடைய அசமுகியானவ ளழுதுகொண்டு ஓடி மலையினிடத்தி லிடிவிழுவதுபோலத் தன்முலையினிடத்தில் மோதியடித்துக் கொள்ளுவாள், மயங்கிவிழுவாள். ஏங்குவாள். பிலம்போன்ற பெரியவாயைத் திறந்து அண்டமுகடு மதிரும்படி சூரன்முதலானவர்களின் பெயரையெடுத்துச் சொல்லியழுது கூவுவாள்பின்புறத்தில் யார்வந்துதன்னைக்கொல்லுகிறார்களோவென்று பார்த்துக் கொண்டோடுவாள். சூலபாணியாகியபரமசிவன்

கொடுத்தவரம் இன்றளவுதானோவென்றுசொல்லுவாள் உலைக்களத்திற் பொருந்தியுருகுமெழுகைப்போல வுருகித்தன் தாயாகிய மாயையிருக்கும் ஸ்ரீசயிலத்தைநோக்கி யழுதுசெல்லுகின்றவளைக்கண்டு அழியாதநம்முடையபெரியகுலமெல்லாம் முடிந்ததென்று அறிந்தெதிர்சென்று மாயையானவள் பூமியில் விழவும் சோகமேலிட்டலைப்ப அசமுகியுமவளடியில்விழுந்தாள். இவ்வாறுசோகத்துக்கு இருவரும் ஒருதன்மையர்களா யுலகமெல்லா மதிரும்படி யொருவரையொருவர் கட்டிக்கொண்டழுதுஐயோ? விண்ணுலகத்திலிருக்குந் தேவர்கள்சூரனேவிய ஏவலைச்சிரத்திலேற்றுக் கொண்டு செய்யும்உடலலைப்பு நீக்கினார்களே, கந்தருவர்-யக்ஷர்- சித்தர்-வித்தியாதரரென்னு மிவர்கள் திராதநுக்கந்தீர்ந்தார்களே, இந்திராணியானவள்தன்மார்பினைத்தொட்டு மாங்கிலியத்தைத்தடவிப்பார்த்துநகைத்து முன்னிருந்ததுயரம் நீங்கினளே, இந்திரன்முதலாகியதேவர்கள் நாள்தோறு மீன்சுமந்து நடந்துவந்ததினாலுண்டாயிருந்த கால்தழும்பும், சூரன் முதலானவர்களின் பாதங்களைவருடினதாலுண்டா யிருந்த கைத்தழும்புமின்று தீர்ந்தார்களே, பரமசிவனிடத்தில்வரம்பெற்றுக்கொண்டு ஒப்பில்லாதவெண்குடை நிழல்எங்கும்பரவச்செய்து பொதுநீக்கிப் பலவண்டங்களையும் புவனங்களையும் இனிதாக ஆண்டுகொண்டிருந்த அசுரர் குலம்போர்க்களத்தில் மாண்டுபோனதினா லினிக்கற்பகவிருக்ஷத்தையிழந்துவிட்ட இந்திரனுக்காக யுத்தகளத்தி லுன்னுடன் போர்செய்து புறந்தந்து போரையிழந்துபோன அரசர்களினிமுகமலர்ந்து தங்கள் தங்களரசினைச்செய்வார்களே, சிங்கமுகாசுர னெடுத்துச்சொல்லியஆலோசனையைக்கேளாமல், ஆயிரத்தெட்டண்டங்களில்செலுத்தியசெங்கோலைத்தீயிற்போட்டுவிட்டனையே, பரமேசுவரன் அருளிச் செய்தபெரியவரங்களையும், மிகுந்தபராக்கிரமத்தையுமிழந்துவிட்டாயே, உங்களைப்போலச் சகோதரர்களிரண்டுடலுக்குஓருயிராய்ப்பிறப்பவர்களுண்டோ, ஆ? கெட்டேன், பரந்தகற்பகவிருக்ஷத்தி னிழலிலிருக்குந்தேவேந்திரனுடைய அரசினையபகரித்துக் கொண்ட வுக்கிரமாகிய வேலாயுதத்தையுடைய சூரனே, எக்காலத்துமொழியாதபெருஞ்செல்வங்களும், திரிமூர்த்திகளுக்குஞ் சலியாதபராக்கிரமமும், எந்நாளுமழியாவண்ணம் பெற்றவரங்களும், அழிந்தனையே. இதுவுமல்லாமலுன்னுடையச்சவுந்தரியமுமழிந்துபோய்விட்டதே, சுழிகளையுடையகங்காநதியைச்சடையிலொளித்தருளிய பரமசிவனுடையபுத்திரன் இந்தச்சுப்பிரமணியனென்று சொன்னசொல்லைக்கேளாமற்போயினையே, நீயிறந்தபின்பும்பழியுள்ள இந்தவுயிரைச் சுமந்துகொண்டிருக்கின்றேன் உன்னுடன்பிறந்த தன்மைமிகவும் நன்றாயிருக்கின்றதென்று இவ்வாறழுகின்ற அசமுகியினுடைய இரண்டுகண்களிலு மிருந்து குமிழியிட்டுக்கொண்டொழுகுகின்ற நீரைத்தன்னிரண்டு கைகளாலுந்துடைத்து நீமனமயக்கத்தையொழியென்று மாயையானவள் தன்மகளருகிருந்து சோபத்தைத்தீர்ப்பவளாய், மகளே? உன்பெரியதமையன்,சுப்பிரமணியக்கடவுளுக்குவாகனமாகிய மயிலும் கொடியாகிய சேவலுமான பெறுதற்கரிய பெரும்பேற்றை யினிது பெற்றுவிளங்கினன். அன்னவாகனத்தி லேறிச்செலுத்தும் பிரமதேவனும். மகாவிஷ்ணுவும், இவனடியைத்தொழும்படியானபேற்றைமுன்செய்த தவத்தினால் பெற்றுக்கொண்டான். இனியிதற்கு மேலான பதவியுண்டோ? சுப்பிரமணியருடைய அழகிய திருவடிகளில் பொருந்துந்துகள் படும்படியாகப்பெற்றான். அஃதெந்தத்தவமோ வென்றுவண்டுகளிசைபாடிக்கொண்டிருக்கின்ற பூங்கொத்துகளையணிந்த அளகபாரத்தையுடைய தாயாகிய மாயையானவள் அவள்முகத்தைப்பார்த்துச் சொல்லினள். இவ்வாறுதன் தாய் சொன்னதின்மேல் சேற்கண்டைபோலுங் கண்களையுடைய அசமுகியானவள்தான் கொண்டிருந்த மனத்துயரம்சிறிது நீங்கிச் சொல்லத் தொடங்கினாள்

ஓ! என்னையருமையாகப்பெற்றெடுத்ததாயாகியமாயையே? என் தமையனாகிய சூரபதுமனானவன் பகைவருதிரந்தோயும்படியான புகர்முகத்தையுடைய வேலாயுதத்தினால் தன்பலமிழந்து ஜயம்பொருந்திய மயிலுஞ்சேவலுமாயினனென்றுசொல்லினை பின்புதாருகாசுரனும், சிங்கமுகாசுரனும் போனதிசைதெரிந்திலேன் அவர்கள். சூலாயுதமேந்திய நமனுடையபாசத்திலகப்பட்டுக்கொண்டார்களோ அதனையும் எனக்குத்தெரியச்சொல்லவேண்டுமென்றுகேட்க, மாயையானவள், அந்தச்சரித்திரமுழுவதுமென்னறிவினாலுணர்ந்து சொல்லுகிறேன் தெரிந்துகொள்ளென்றுசொல்லி, அவர்கள்ஸ்ரீகைலாயத்திலிருக்கும் கணங்களோடும் வாழ்கின்றார்களென்ன, அதைக்கேட்டஅசமுகியானவள் தீமைகளையேசெய்துகொண் டிருந்தவர்கள்பெறுதற்கரிய பேறுபெற்ற தென்னகாரணமோ, அதனையுஞ்சொல்லவேண்டுமென்ன இவளைப்பெற்றதாயாகியமாயையானவள் தன்மகளாகிய அசமுகிக்குத்தானறிந்தமுறைகளைச்சொல்லுகின்றாள். சென்றநெடுங்காலத்துக்குமுன்னே ஒலிக்கின்ற சமுத்திரங்களின் மத்திகளிலிரா நின்ற நவதீவுகளில் சாகத்தீவென்றொரு தீவுண்டு. அதிலுண்டாகியழியாத செங்கோல்செலுத்தி யொருகுடைநிழலிலுயிர்களைக்காத்த அரசர்க்கரசன், பொன்னால்செய்யப்பட்டுவிளங்குகின்ற வீரகண்டையைத்தரித்த பாதங்களையுடைய பிரபாகரனென்றொரு மன்னவனிருந்தான் அவ்வரசனுக்கு உயிரையொத்தவளாகிய மனைவியொருத்தியிருந்தாள் அவள்இல்வாழ்க்கைக்குப் பழுதுவராமல் பாதுகாப்பவள், மணிவடமாகிய மேகலாபரணந்தரித்துக்கொண்டிருக்கும், சுகுமாரியென்னும் பெயர்பூண்டவள் மிகுந்தசவுந்தரியமுடையவள். சப்திக்கின்றவீரகண்டையைத்தரித்த காலினையுடைய அரசனாகிய தன்கணவன் சொல்லுமுறைக்கு மாறுபடாதவள். மேலும் அருந்ததியைப்போலும் பதிவிரதைத்தன்மையிலிருக்கும்படி சிந்தித்துக்கொண்டிருக்கும் அறிவினையுடையவள். இத்தன்மையினையுடைய அரசனும்மனைவியுமாகிய இவர்கள் அளவிறந்தநெடுங்கால மரசுசெய்துகொண்டிருக்க இவ்விருவர்களுஞ்செய்ததபோபலத்தினா லினிதாகச் சந்தோஷித்தெடுக்கவும், உச்சிமோந்து முத்தமிடவும் மதுரமான குதலைச்சொல்லையுடைய நான்குபுத்திரர்கள்பிறந்தார்கள். இந்தப்புத்திரர்களுக்குச் செங்கோல்செலுத்து மவ்வரசனானவன், சூரனென்றும்,பதுமனென்றுமிருவர்க்குப்பெயர்கூறி மற்றஇருவருக்கும், வீரகண்டையைத்தரித்தசிங்கனென்றும், தாருகனென்றும், தன்குலத்தில்வந்த முன்னோர்கள்பெயரைததான்பெற்றெடுத்தபிள்ளைகளுக்குவைத்துப்பின்புபொன்னாலாகிய வீரகண்டையையணிந்த இவர்களுக்குள்முன் பிறந்தசூரனுக்குத் தன்னரசாட்சியைக்கொடுத்துச் சிங்காதனத்திலிருத்தித் தான்அரியதவஞ்

செய்யவனத்திற்குச்சென்றான். அதன்பின்பு சூரனவன்ஒருகுடைநிழலிலுலகத்தைக்காத்து உலகங்களுக்கெல்லாம் நன்மையைத்தந்து தருமம்வழுவாமல் செங்கோல் செலுத்தி யிவ்வுலகத்தையினிதாகக்காக்குநாளில், தென்னாட்டிலிருக்கும் அகஸ்தியமுனிவர், கமண்டலமேந்திய கையினையுடையவரும் விரும்புகின்ற சிறியகுடையினையுடையவருமாய், சதுர்வேதங்களு மோர்தவசிவடிவங் கொண்டுவந்ததைப்போலத் தன்னிடத்தில்வருவதை இராஜநீதியுடனுயிர்களைப்பாதுகாக்குஞ் சூரனறிந்து எதிர்சென்றுபணிந்து அரியதவமே,அருந்தவத்தோர்க்குங்கிடைப்பதற்கரிய அமுதமே, வேதமே, தங்கள்கிருபைக்குரியவர்களாகிய நாங்கள்பெற்றசெல்வமே,பூரணஞானமுள்ள சாஸ்திரக்கடலே தேவரீரெழுந்தருளப்பெற்றேன்,தேவரீர்திருவடிகளைச்சமுத்திரத்தின்மத்தியிலிருக்குமிந்தத்தீவுந்தீண்டும்படிக்குப் பூர்வத்திலென்னதவஞ்செய்ததோ,என்றிவ்விதவுபசாரவார்த்தைகளைச்சொல்லித் தமிழ்வளம் பொருந்திய பொதியமலையிலெழுந்தருளியிருக்கும், அகஸ்தியமுனிவனைத்தன்கோயிலுக்கழைத்துக்கொண்டுபோய், நவரத்தினகசிதமாகிய சிங்காதனத்திலெழுந்தருளப்பண்ணித்துதித்துச் செய்யவேண்டிய வுபசாரங்களையெல்லாம் தன்தம்பியருடன்செய்யத் தமிழுக்கிறைவராகியஅகஸ்தியமுனிவர் தம்முடையதிருவுள்ளத்தி லதிகசந்தோஷவெள்ளமதிகரிக்க அவர்களைமகிழ்ந்துநோக்கி நமக்குச் சமீபத்திலிருங்கோளென்றுசொல்ல, அவர்களுமவ்வாறே தொழுதிருந்தபோது அவர்களுக்குச் சொல்லத்தொடங்கினர்.

பரிசுத்தம்பொருந்திய வெண்கொற்றக் குடையினீழலி லிவ்வுலகத்தைநல்லவுள்ளத்தோடு பரிபாலித்துவரும் குற்றமற்ற சத்துவகுணமுடையவர்களே? உங்களைக்காணவேண்டுமென்கிறவிருப்பத்துடனிங்குவந்தோமாகிலும்நாமுங்களுக்குச்சொல்லவேண்டுவதாகியபொருளொன்றிருக்கின்றது. அதனைச்சொல்லுகிறோம் கேளுங்கள்.அந்தப்பொருளை அறிவினலுசித்தசுத்தமுடையவர்களுக்கறிவிக்கலாமேயன்றி யறிவில்சிறியவர்களாயிருப்பவர்களுள்ளத்தி லெழுதிவைக்கத்தக்கதல்ல. இன்னுமதன் பெருமையைச் சொல்லுமிடத்தில் மாட்சிமைபொருந்திய மந்திரங்களினு முபநிடதத்துச்சியிலுமிருப்பது. மேலும் அந்தப்பொருளை யாவராலுமறிவிக்கப்படாது. கண்களால்காணப்படுகின்றவை யாவும் கண்பார்வைக் கெட்டாமல் மனதினுற் காண்பதும், எண்ணுகின்றபுலன்களும், ஆகாயவெளிபோற்காண்பதும், மேலென்று சொல்லப்பட்ட மேலானபொருள்களெவைக்கு மேலானதாகக்காணப்படுவது மந்தப்பொருளேயன்றி வேறொரு பொருளிருக்கின்றதென்றியாவர்சொல்வார்கள். அப்பொருளேசுப்பிரமணியக்கடவுள். அவர் ஆறுதிருமுகங்களுள்ளவர். தீவினைகளையெல்லாம் பொருதுவென்றுள்ள பன்னிரண்டுபுசங்களையுடையவர். விடியற்காலத்துதிக்கும் ஆயிரஞ்சூரியர்களைப்போல விளங்குவதாய்ப் பகைவருமிரங் தோயும்படியான வெற்றிவேலாயுதமொன்றினைத் தமது திருக்கரத்தில்வைத்துக்கொண்டிருப்பவர். தெய்வத்தன்மை பொருந்திய வொருமயிலானது அவருடையதிருவடியைத்தாங்கும். அந்தமயிலின்பெருமையை யாவராலெவிட்டுரைக்கத்தக்கவர்கள். இதுவுமல்லாமல் உலகத்தையெல்லாங் கொறித்துவிடத்தக்க கோழிக்கொடியுமொன்றுடையவர்.அந்தக்காழியின்வல்லபத்தை யாவர்சொல்லத்தக்கவர்கள். அப்படிப்பட்ட சுப்பிரமணியக்கடவுளுடைய திருவடித்தாமரையிற்படிந்த துகளை யொப்பில்லாத பரமசிவனுடைய புஜங்களும், பார்வதிதேவியாருடைய திருத்தனபாரமும் சிறிதுகாலம்பொருந்திவாழ்ந்தன. பெருமைபொருந்திய மயில்வாகனமும், அந்தத்திருவடியை யிடைவிடாமல் தாங்கிக்கொண்டிருந்ததென்றால் அதன்பெருமையை யாதென்றுசொல்வோம் இன்னமும், சிருஷ்டி, திதி, சங்காரமென்னு முத்தொழில்களையுமுறையே நடத்துகின்றவர்களாகிய பிரமன், விஷ்ணு, உருத்திரனென்னுமூவர்களுக்கும், மற்றத்தேவர்களுக்கும், ஐம்புலநுகர்ச்சியை யொழித்த முனிவர்களுக்கும், நீங்காதவெண்குணமுடைய அருட்கடலாகிய சுப்பிரமணியக்கடவுளைத் தங்கள்தங்களுள்ளத்தி லமைத்தாலல்லதுஒருகாரியமுமுடியாது. இப்போது நாம்சொல்லியவைகளை யுங்களுள்ளத்தில் வைத்துக்கொண்டு நம்மிறைவனுகிய சுப்பிரமணியக்கடவுளுடைய திருவடித்தாமரைமலர்களை நாள்தோறும் துதிசெய்யுங்களென்று மிகுந்ததவசிரேஷ்டராகிய அகஸ்தியமுனிவர் சந்தோஷத்துடன்சொல்லி யாசீர்வதித்துஅந்தச்சாகத்தீவினைவிட்டுப் புறப்பட்டு அப்பால்போய்விட்டார்.

இவ்வாறு அகஸ்தியமுனிவர்தங்களைவிட்டுநீங்கிப்போனபின்பு சூரன், பதுமன்என்னு மவ்விருவரும்,நம்பெருமானுக்கு மயில்வாகனமும், சேவற்கொடியும் ஆகவேண்டுமென்று தங்கள்மனத்தி லெண்ணங்கொண்டார்கள். இதுநிற்க திரணவிந்துவென்னுமொருமுனிவர் சமுத்திரஞ்சூழ்ந்தசாகத்தீவிலிருக்குமவர்களுக்கெதிர்ச்செல்ல அதையறிந்தசிங்கமுகன்,தாருகனென்னுமிருவர்களு மெதிர்கொண்டுவணக்கியுருகியசிந்தையுடையவர்களாய்த்தங்கள் கண்களினின்று மானந்தபாஷ்பம்பொழியும்படியாகச் சேவித்துநிறைந்தமகிழ்ச்சியானதுமேலுமேலும்பெருகத்தங்களரண்மனைக் கழைத்துக்கொண்டுபோய் நவரத்தினங்கள்பதித்த சிங்காசனத்திலெழுந்தருளச்செய்து, செய்யவேண்டிய வுபசாரங்களையெல்லாஞ்செய்துஐயரே? தேவரீருடைய திருவடிகளை யின்றுவணங்கும்படிநாங்கள்முன்செய்ததவம்யாதோ. உலகங்களையெல்லாம் காத்திருந்தோமானாலும், மறுபிறப்பைத்தருவதாகிய தீவினையை யின்றுதானெழித்தோமென்றுசொல்லிச் சந்தோஷித்தார்கள் அவர்களவ்வாறுசொன்னபோது திரணவிந்துமுனிவர் அந்தவசுரிருவர்களுக்கு மாசீர்வாதஞ்செய்துகையமைத்து ஒருகுடைநிழலினு லுலகத்துயிர்களுக்கெல்லா மின்பஞ்செய்ததன்றி மனுவிக்கியானேஸ்வர சாஸ்திரமுறைமைப்படித் தருமநெறியையும் விருத்திசெய்தீர்கள் உங்களுக்கு நாம்சொல்லுவதொன்றிருக்கின்றது. அதனையுங்கள்கருத்தில் நன்றாகத்தெரிந்துகொள்ளுங்கள். அதாவது இவ்வுலகத்துயிர்களை யிரட்சிக்கும்படி அரியாரகளுக்கு ஒருபுத்திரன் தோன்றினன். அவனேசந்திரனைத்தரித்த ஜடாமகுடத்தையுடைய பரமசிவனையும், மணம்பொருந்திய துளபமாலையைத்தரித்த மகாவிஷ்ணுவையும்நீக்கியுயிர்களைரட்சிக்கத்தக்கவன். அக்கடவுளைநிச்செலுத்துகின்ற மதம்பொருந்திய பெரியயானையானது உலகமுழுமையுமழிந்துபோம்படி யொலித்து அண்டத்தையு மேல்கீழாகப் புரட்டிச் சப்தசமுத்திரங்களு மொன்றாக ஊழிவெள்ளம் பெருகிவரும்போ தெதிர்சென்று தன் றுதிக்கையினு லங்கீனரயெல்லா முறிங் துயிர்களைக்கா

க்கும். இதுவல்லாம லன்னமுமோரிரகசியப் பொருளிருக்கின்றது. அஃதென்னவெனில், மரகதமலையைப்போலு முருவத்தையுடையவள்,சூலாயுதத்தைத்தாங்கிக்கொண்டு, மகமேருவையு முலகத்தையுங்காப்பவள். கேடயமும், வாளும்கையிலேந்திக்கொண்டு உயிர்கள்தோறுமமைந்திருந் தொருமுறைகாப்பவள். கங்காநதியைத்தரித்த திருமுடியினையுடைய பரமசிவத்துடன் நிருத்தஞ்செய்தவள். மேன்மையைக்குறிக்குமிடத்துப் பெரியோர்களாயிருப்பவர்களவளையன்றி வேறொருவரையுஞ்சொல்லார்கள். அத்தன்மையுள்ள காளிகாதேவியின் திருவடித்தாமரைகளைத்தாங்கும் வாகனமாகியசிங்கத்துக்கு நான்குபாதங்களாயிருக்கும்படி நான்குவேதங்களுந் தவஞ்செய்து பெற்றுக்கொண்டன. அந்தநான்குபாதங்களிடத்துங் கூர்மையுள்ள நகங்களாயிருக்கும்படி சந்திரன் தவஞ்செய்து பெற்றது. அச்சிங்கமோ, ஊழிக்காலத்தில்வடவாமுகாக்கினிகொதித்துவந்தாலு மெதிர்செல்றதனையும் வாயில் போட்டுக்கொள்ளும். ஓ! அரசர்களே? உங்களுக்குவேண்டியகதியாவது இந்தவாகனத்தேவர்களுக்கு முறைமைப்படிபூசனைசெய்து போர்முகத்தில் பகையைவென்றுபின்புஇந்தப்புன்பிறவியைத்தீர்த்துக் கொள்வதாகும் இவ்வாறுபோதிக்குங்கடமையெமக்கு வேண்டியதென்றுசொல்லித் திரணவிந்துமுனிவொழுந்தருளிப்போயினர்.பின்புஅந்தநால்வரும்யோசித்துப் புத்திரர்களிடத்தில் பூமிபாரத்தைக்கொடுத்துவிட்டுத் தவஞ்செய்யக்கருதி மனைவாழ்க்கையைநீங்கிப்போய்-மயில்-சேவல்-சிங்கம் - யானையிவைகளைத் தனித்தனி யொவ்வொருவரும் தியானித்துக்கொண்டு அவைகளின்பதவியைப் பெற்றுக்கொள்ள நினைந்து, மேகங்கள்தவழுகின்ற ஸ்ரீசயிலவனத்தில் பஞ்சாக்கினிமத்தியில்நின்று சூரியகிரணம்-மழை-பனித்துளி-நஞ்சுஇவைகளெதிர்ந்தாலு மந்நிலையினிற்பதல்லது கொஞ்சமுமஞ்சாதவர்களாய்த் தவஞ்செய்துகொண்டிருந்தார்கள்.

இவ்விதமாகத் தவஞ்செய்துகொண் டிருக்கும்போது பிரமவிஷ்ணுமுதலாகிய தேவர்களொன்றாகக்கூடிச் சென்றதுமல்லாமல் சுப்பிரமணியக்கடவுள், மகாகாளி, அரிகரபுத்திரன், இவர்களும்ஸ்ரீகயிலாசத்தில் பரமசிவன்செய்தருளுகின்ற திருநடனத்தைத்தரிசிக்கும்படிக்குத்தங்கள்தங்கள்வாகனங்களை யந்தக்கயிலையங்கிரிச்சாரலில்விட்டுநீங்கிச்சென்றார்கள். அப்போது அச்சாரலிலிருந்தகருடனும், அன்னமும் எதிரிற்கண்ட கலாபத்தையுடையமயிலினிடத்திற்போய்ச் சொல்லுகின்றன. சாகத்தீவிலிருக்குமரசர்கள் நால்வருங்கூடி மயிலுஞ்சேவலும், காளிவாகனமாகியசிங்கமும், சாத்தன்வாகனமாகிய யானையுமாக வேண்டுமென்று பஞ்சாக்கினிமத்தியினின்று நாற்பதினாயிரம் வருடமாகத் தவஞ்செய்கின்றார்கள். அருமையாகப்பெற்றிருக்கு முங்கள்பதவிகளை யிழக்குங்காலம் நேரிட்டன. இன்றோநாளையோ உங்கள்பதத்திற்குவருவார்கள். அஞ்சத்தக்கதாகியவெள்ளம் வருவதற்குமுன்னமேயன்றோ அணைகட்டவேண்டும், ஆகையினால்நீங்கள்சாக்கிரதையா யிருங்களென்றுசொல்லிக் கருடனு மன்னமும் போய்விட்டது. உடனே, மயில்முதலாகியவாகனங்களொன்றாகச்சேர்ந்து பெருங்கோபங்கொண்டு ஒருநாழிகைக்குள்ளாக அவர்கள்தவஞ்செய்யுமிடத்திற்சென்று நெருப்புப்பொறிசிந்தும்படியாக அவ்வனத்தையெல்லாமழித்துத்தவஞ்செய்கின்றவர்களைக்கண்டு நீங்கள்பஞ்சாக்கினிமத்தியில் தவஞ்செய்யுங்காரண மென்னவென் றதட்ட அச்சொற்கள்தவஞ்செய்கின்றவர்கள்காதில்நுழையவும் மிகுந்தளக்கங்கொண்டுமனம்நடுங்கித்தாங்கள்தியானித்துக்கொண்டிருக்குமுறைமையைச்சொல்ல, அதைக்கேட்டமயில்முதலாகியநான்கும், மிகுந்ததவஞ்செய்கின்ற அரசர்களைநோக்கிக்கோபித்து நீங்கள்நால்வருமெங்கள் பதவிகளைவிரும்பினீர்களாகையால், பெரியபூதகணங்களுடன் சேர்ந்திருக்கக் கடவீர்களென்று சாபங்கூறி மயில்முதலாகிய நான்குந்திரும்பிவந்து கைலையினிடத்திருக்கப்பூதகணங்களாயிருக்கிற அரசர்கள்நால்வரும் அக்கயிலையிலிருந்து மயில்முதலானவைகளைக்கண்டு வணங்கி அடியேங்கள்விரும்பியதவம்எங்களுக்குக்கிடைக்குமாவென்றிரக்கவதனைக்கேட்ட மயில்முதலாகிய நான்கும்மனமிரங்கி நீங்களிந்தக்கயிலையிலிருக்குங் கணங்களுட னநேகநாளிருந்தால் நீங்கள்கருதியதவப்பயனை யடைவீர்களென்றுசொல்ல உடனே யந்தக்கணங்கள் கைலையங்கிரியிற் சேர்ந்திருந்து பின்புகருடனும், அன்னமும், நம்முடையதவத்தை யிழக்கும்படி செய்தனவென்னும் பகையைத் தங்கள் சிந்தையில்வைத்துக்கொண்டு மிகுந்தகோபாவேசராய் மயிலுங்கருடனும் போர்செய்யமூட்டிவிட்டார்கள்.

இதுநிற்க பரமசிவன் செய்தருளுகின்றதிருநடனதரிசனஞ்செய்யப்போயிருந்த விஷ்ணுமுதலானவர்க ளப்பொழுது தங்கள்தங்கள் பதவிகளிற்போய்ச்சேர்ந்தார்கள். அதன்பின்புஅந்தநான்குகணத்தவர்களும் ஊழ்வினைத்தொடர்பினால் சுப்பிரமணியக்கடவுள் கட்டளையின்படி சமுத்திரஞ்சூழ்ந்தவுலகத்தில் அசுரர்குலத்திற்பிறந்தார்களென்று மாயையானவள் தன்மகளாகிய அசமுகிக்குச்சொல்ல, அதனைக்கேட்டஅசமுகியானவள். அந்தக்காரணத்தினாலசுரர்களாகப்பிறந்தார்களானால் தேவர்களுக்குத் தீங்குசெய்துவருத்தியகாரணம் யாதோ அதனையுஞ்சொல்லென்ன மாயையானவள்மீட்டுஞ்சொல்லத்தொடங்கினாள்.

கேளாய்! மகளேஅசமுகி? பூர்வத்தில்ஸ்ரீகயிலாயத்திலிருக்கும் பூதகணங்களுடன் இந்நால்வருங் கணங்களாயிருந்தபோது கரேமாகிய கொடியகோபத்தையுடையஅசுரரும், தேவரும், போர்க்களத்தில் யுத்தஞ்செய்தபோது அந்தயுத்தத்தில் அசுரர்களுக்குத் தேவர்கள் தோற்றோடிப் போனார்கள் அவ்வாறுதோற்றோடிய தேவர்கள் எங்களைக்காக்கவேண்டுமென்றுஇவர்களைச்சரணாகதியாகவந்தடைய அந்நாளில்தேவர்களுக்கு உதவிசெய்யவேண்டி யிந்நிலவுலகத்தில்வந்து இங்கிருக்கும்பூதர்களுடன்சேர்ந்து பெருமபோர்செய்யச்சென்று கோபித்தெழுகின்றஅசுரர் சேனையைக்கொன்று தேவர்களுக்குப்பேருதவிசெய்து இந்திரனைத் தேவலோகத்தில் குடியிருத்தினவர்களாய்ப் பின்பு சிறப்புப்பொருந்திய திருக்கயிலைக்குச்சென்றார்கள். அதற்குமேல் கலவைச்சாந்தணிந்த வல்யபுசங்களையுடைய அசுரேந்திரனானவன் மனவருத்தத்துடன் தனித்து வந்து வேண்டியவர்களுக்கு வேண்டியபடியே கிருபைசெய்தருளும் சர்வலோகநாயகனாகியபரமசிவனைத்துதித்துஎம்மையனே? எங்கள்குறையொன்றிருக்கின்றது அதனைக் கேட்டருளவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யத் தொடங்கினான். ஓ! கிருபைக்கடலே? சுவாமிகளுடைய ஆக்கினையினால் விளங்குகின்ற நாலுபூதர்களும்,அடியேனுடையஅசுரசேனைகளைக்கொன்றுபின்புஇங்குவந்துசேர்ந்தார்களென்

றுசொல்ல அதனைக்கேட்டருளிய பரமசிவன் அந்தக்குமறத்தைத் திருவுள்ளத்திற்கொண்டு மிகுந்தகோபங்கொண்டவரா யவர்களைப்பார்த்து ஓ! பூதகணங்களே? இங்குவாருங்கள். நீங்கள்நால்வரும் நம்முடையஆக்கினையை மதிக்காமல்நீங்கித்தேவர்களுக்குஉதவிசெய்துஅசுரர்களைக்கொன்றீர்களாதலால் வாளாயுதத்தைப்போலுங் கொடியதந்தபந்திகளையுடைய அசுரர்குலத்திற்பிறந்து கற்பகவிருட்சங்களையுடைய பொன்னாட்டிலிருக்குந் தேவர்களுக்குத் துன்பஞ்செய்து விசாலமாகிய பூலோகத்தில்சஞ்சரிக்கக்கடவீர்களென்று சாபமிட்டருள, இவர்கள்பரமசிவனுடையசாபத்தினால் தேவர்களுக்குக் கொடியகோபத்துடன் மிகுந்ததுன்பத்தைச்செய்தார்கள். அவ்வாறவர்க ளந்நாள்முதல் செய்த்துன்ப மிப்போதுநீக்கிவிட்டன இத்தன்மையனவாக விங்கேகிடந்தன.

இதற்குமுன்னாளில் தவஞ்செய்தசாகத்தீவுஅரசர்களைத்தவத்தினின்றுமழித்ததையொளிபொருந்திய வீரக்கழலையுடைய சுப்பிரமணியக்கடவுள்பார்த்து மிகுந்தகோபங்கொண்டுதமதுகொடியாகியசேவலையும்,மேகம்போலும் நீண்டகலாபத்தையுடையமயிலையும்பார்த்துநீங்கள் போய்க்கோபித்துமுடிவில்லாத தவமுயற்சியையொழித்தீர்கள்அதனால்கொடியபாவத்தை யடைந்தீர்களென்று திருவுளத்திற்கோபங்கொண்டருளித்தமது மயில்வாகனத்தைப்பார்த்துஇன்றுமுதல்இனிநீநம்மைத்தாங்கவேண்டுவதில்லையென்றுசொல்லிச்சேவலைநோக்கிநீகொடியாயிருப்பதும் வேண்டியதில்லையென்று இவ்விரண்டினையுங்குறித்துச்சொன்னவார்த்தையைக் கேட்டவளவில், சேவலும்,மயிலும்வெற்றிபொருந்தியவேலாயுதத்தையுடைய சுப்பிரமணியக்கடவுளைப்பணிந்து இந்தவிதமாகவிண்ணப்பஞ்செய்கின்றன எம்பெருமானே? இன்றுவரையிலும் சுவாமிகளுடைய திருவடிகளுக்குத் திருத்தொண்டுசெய்துகொண்டிருந்தோம் இனிஎந்நாள்தேவரீருடைய திருவடிகளைச் சேருவதென்று மனதிலறியோம் வெற்றிபொருந்திய வேலாயுதத்தைத்தாங்கிய குமாரக்கடவுளே? தீனர்களாகிய அடியேங்களினிச் செய்யவேண்டுவது யாதோ அதனைத்திருவுளம்பற்ற வேண்டுமென்று வணங்கிநிற்க, சுப்பிரமணியக்கடவுளவர்களைப்பார்த்துநீங்கள் ஸ்ரீகாஞ்சிபுரத்திற்சென்று அங்கிருக்குமலையின்மீதிருந்து நம்மைத்தியானித்துக்கொண்டு தவஞ்செய்யுங்கள் அவ்வாறுசெய்தால் தஞ்சமாகநம்முடைய திருவடியைத்தருகின்றோமென்று அருள்செய்ய அவ்வாறே யவ்விரண்டுஞ்சென்று சுப்பிரமணியக்கடவுளுடைய அழகிய சிலம்பணிந்த திருவடிகளைத்தியானித்துக்கொண்டிருந்துஅவர்திருவடிகளைச்சேர்ந்தன.இதுநிற்க, சூரனும்பதுமனுஞ்செய்ததவத்தினால்மயிலுஞ்சேவலுமாயினார்கள். கொலைத்தொழிலையுடைய சிங்கமுகனும், அவனுக்குத்தம்பியாகிய தாருகனும் தாங்கள்நினைத்தகாரியத்தை முடிப்பதற்கெண்ணினவர்களாய், ஸ்ரீகயிலையங்கிரியிலிருக்கும் திருநந்திதேவரிடத்திற்சேர்ந்து எம்பெருமானே தேவரீருடைய திருவடித்தாமரைகளையடைந்த நாங்கள், காளிகாதேவியின் வாகனமாகியசிங்கமாகவும், சாத்தாவின் வாகனமாகிய வெள்ளையானையாகவுமிருக்கவேண்டுமென்று அநேககாலம் அருமையாகிய தவத்தைச்செய்துகொண்டிருந்தோம். தீனர்களாகியநாங்கள்செய்ததவமானது அப்பிரயோசனமாகாவண்ணம் கிருபைசெய்து அந்தவரத்தையடியேங்களுக்கு அருள்செய்யவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்ய அதனைக்கேட்ட அருளாளராகிய திருநந்திதேவர் மிகுந்தசந்தோஷித்தராய் அவ்விருவரின்முகங்களைப்பார்த்து ஓ! தவசிகளே? அந்தக்காளிகாதேவிக்கும், சாத்தாவுக்கு மிப்போதிருக்கின்ற வாகனங்களுக்கு மோக்ஷங்கொடுக்குமளவும் நீங்கள் நம்மிடத்திலேயே யிருங்களென்றுசொல்ல அந்தவார்த்தையைக்கேட்ட அவ்விருவரும் மனதொருமித்து மகிழ்ந்திருந்தார்களென்று மாயையானவள்சொல்ல, அதைக்கேட்டஅசமுகியானவள் தன்தாயைப்பார்த்து அந்தவாகனங்கள் திருநந்திதேவரால் மோக்ஷமடைந்தவகையைச் சொல்லவேண்டுமென்னதாயாகிய மாயையான்வள்சொல்லத்தொடங்கினாள்.

ஸ்ரீகயிலையங்கிரியினுச்சியில் எழுந்தருளியிருக்கும்பரமசிவன் முன்னொருகாலத்தில் தமதுதேவியாராகிய உமாதேவியாரிடத்திலிருக்கும் துர்க்கையையும், துளபமாலையைத்தரித்த மகாவிஷ்ணுவினிடத்திலிருக்கும் சாத்தனையும்வரவழைக்கவந்த அவ்விருவர்களும்சிவபெருமான்திருவடிகளைத்துதித்து எம்பெருமானே அடியேங்களுக்குச் சிறந்தவாகனங்களைத்தந்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, பரமசிவன் திருநந்திதேவனை யழைப்பித்து நீயிவர்களுக்கு வாகனங்களைக் கொடுப்பாயாகவென் றருளிச்செய்ய, உடனே திருநந்திதேவர் அக்கயிலாயகிரிச்சாரலில் இடைவிடாமல் சஞ்சரித்துக்கொண்டிருந்த ஒருசிங்கத்தையும், மதம்பொருந்திய ஒருயானையையும்,இவர்களுக்கு வாகனமாகக்கொடுத்தவளவில்அவ்விரண்டுமிகுந்ததுன்பங்கொண்டுஎம்பெருமானே? நாங்களிந்தக்கயிலையிலிருந்துதேவரீருடையதிருவடியையடைய அருமையாகியதவத்தைச்செய்தோம்அப்படியிருக்கமத்தியிலிவ்வாறுநேரிட்டகாரணம்யாதென்றுகேட்க, அதற்குத்திருநந்திதேவர் அவைகளைப்பார்த்துநெடுங்காலம் நீங்களிவர்களுக்குவாகனமாய்ச்சஞ்சரித்துக்கொண்டிருந்தால்காலஞ்சென்றபின் உங்களுக்குக்கதிகொடுக்கின்றோம் நீங்கள் போங்களென்று சொன்னபின்புதுர்க்கைக்கும்,சாத்தாவுக்குமவைகள்வாகனங்களாயிருந்துஅதன்பின்புதிருநந்திதேவரால் மோக்ஷமடைந்தன.அப்பால்துர்க்கையுஞ்சாத்தாவும்திருநந்திதேவரிடத்தில்வந்துநாங்க ளிப்போதுவாகனமில்லாதவர்களாயிருக்கின்றோமென்றுசொல்ல,அதனைக்கேட்டதிருநந்திதேவர் தம்முடையதிருவுள்ளத்தி லாலோசித்து இந்தஇருவரையு மவர்களுக்கு வாகனமாகக் கொடுத்தருளினாரென்று மாயையானவள்தன்மகளாகியஅசமுகிக்குச்சொன்னதாக, சூதபுராணிகர் நைமிசாரணியமுனிவர்களுக்குச்சொல்லியருளினர்.

---

## அசமுகிவரலாற்றுப்படலம்.

ஈதுகேட்டுநின்றசமுகிபின்னருமினிநீ
தாதுவார்குழலன்னையென்னிலைசொலத்தகுமென்
றேதவாதுவன்கேண்மதியென்றனளுரைப்பாள்
சீதவார்பெருங்கடலகத்துளதொருதீவு.

பதினெண்புராணங்களையுங் குற்றமறத் தெளிந்துணர்ந்தவராகிய சூதபுராணிகர் மிகுந்தவிசுவாசத்தோடும் சூராதிகளொடுக்கவரலாற்றைச்சொல்ல அதைக்கேட்ட நைமிசாரணியவாசிகள்சேவித்தெழுந்துநின்றுபின்னர்நடந்த சரித்திரங்களையும்எங்களுக்குச்சொல்லியருளவேண்டுமென்று பிரார்த்திக்கத்தவச்சிரேஷ்டராகியசூதமுனிவர்சொல்லத்தொடங்கினர்.

கேட்டீர்களோ சவுனகாதிரிஷிகளே? இவ்விதமாக மாயைசொன்னதைக்கேட்ட அசமுகியானவள் பின்னும் மாயையைப்பார்த்து, என்னன்னையே? என் தமையன்மார்களாகிய சூராதிகளின் பூர்வவிருத்தாந்தத்தைச் சொல்லத்தெரிந்துகொண்டேன். இனிஎன்னுடைய பூர்வநிலையையும் சொல்லவேண்டுமென்ன அதனைக்கேட்ட மாயையானவள் அசமுகியைப்பார்த்து அம்மாமகளே? உன்பூர்வவரலாற்றையும் சொல்லுகிறேன் கவனித்துக்கேட்பாயாகவென்றுசொல்லத்தொடங்கினள். சப்தசமுத்திரங்களின்மத்தியிலிருக்கும் தீவுகளில் கோமேதகத்தீவென்றொரு தீவுண்டு. அந்தத்தீவில் நான்குவேதங்களையுமுணர்ந்த வசிட்டனென்றொரு பிராமணனிருந்தான் அவன் ஒப்பில்லாத பெருங்கற்பினையுடைய சுவேதையென்பவளைக் கலியாணஞ்செய்து இல்லறதருமத்தில் வழுவாது வாழ்ந்துகொண்டிருக்குநாளில் அவ்விருவருஞ்செய்த பெருந்தவத்தினால் சித்திரரேகையென்றொரு பெண்பிறந்தாள் அப்பெண்ணானவள் சௌந்தரியமெல்லாந்திரண்டு ஒருவடிவங்கொண்டதையொத்தவள் அவளுடையவாய்மொழியாகியகுதலைச்சொல்லைக்கேட்டாலும் உலர்ந்தமரங்களுந்தழைத்துஅரும்புவிடும் பொன்னினாற்செய்யப்பட்ட அழகியசிலம்பானது தழைத்தலைசையாக மெல்லெனவொலிக்கும் தளர்நடைபயின்று தன்னைத் தவஞ்செய்துபெற்றதாயானவள்கண்களித்திருக்கும்படிவளர்ந்து ஏழுவயதடைந்தகாலத்தில்அக்கோமேதகத் தீவிற்குச் சமீபத்தில் பூச்சக்கிரமென்று சொல்லப்பட்ட ஒருநகரமுண்டு அந்நகரத்தினிடத்தில்பிராமணகுலசிரேஷ்டனாகியஅரிசன்மனென்பவனுக்குப் புண்டரீகசன்மனென்றொரு புத்திரன் பிறந்து நல்லொழுக்கமுள்ளவனாய் வளர்ந்து அந்தந்தக் காலங்களிற் செய்யவேண்டுவதாகிய உபநயனாதி கர்மங்களைச் செய்யப்பெற்று நான்கு வேதங்களையும் குற்றமறக் கற்றுவளர்ந்து அந்தச் சித்திரரேகை யென்பவளை விவாகஞ்செய்து அழைத்துக் கொண்டுபோய்த்தன் வீட்டைச்சேர்ந்தான், அதுமுதல் அச்சித்திரரேகையானவள் அழகெல்லாம் ஒருங்குசேரும்படி வளர்கின்றவளாயினள் ஓ! சவுனகாதிரிஷிகளே? எப்படிவளர்கின்றாளென்றால்அவளுடையகண்களானவை கொடுமைபொருந்திய விஷத்தையும், அமுதத்தையுமெடுத்துக்குழைத்து ஒன்றுபடச்சேர்த்து இருக்கவைத்ததென்று சொல்லும்படி மருட்சியையுடையனவாயும், அரிபரந்தவைகளாயும், குழையளவுஞ் செல்வனவாகியும், கருமைநிறமுள்ளவைகளாகியும், வெண்மைநிறமுள்ளவைகளாகியுமிருக்கும் அவளுடைய கூந்தலோவென்றால், நிறைந்தஇருட்கூட்டமானது ஒழுங்குபட்டுநின்றதோ, கருப்பம்நிறைந்தமேகத்தின் கருங்கொழுந்து ஓரிடத்தில் தளிர்த்ததோ, அஞ்சனமானது மயிராகவிழுதுவிட்டுநின்றதோ, இன்னவிதமென்றெவ்வாறுமதிக்கக்கூடும். சிந்துரப்பொட்டணிந்த நெற்றியானது ஒருகலையுடன்முளைத்த பிறையானது முத்துடன்முற்றியபின்பு இருளையிரண்டுவடிம்பாகக் கீழேவைத்து அதற்கடுத்த மேற்புறத்தில் அப்பிறையைவைத் திருப்பதுபோலக் கருமைநிறம்பொருந்திய புருவத்தோடு விளங்கும். காட்டிற்சஞ்சரிக்கும் பசுமைநிறம்பொருந்திய மயிற்கூட்டங்கள்கூடி, அவளுடைய சாயலைக்கண்டுமயங்கிக்கொண்டிருக்கும். அவளுடைய குதலைச்சொல்லோவெனில், தழைகள்பொருந்திய மாங்கிளைகளிடத்திலிருந்துகூவுகின்ற குயிலினதுகுரலோசையைத் தேவாமிர்தத்துடன்சேர்த்ததற்கொப்பாகும். அந்தப்பெண்ணின்தந்தவரிசைகள் வெண்மைநிறம்பொருந்திய பூரணசந்திரனைப்பிதிர்ந்துமுறைமுறையாகத்திருத்தியழுத்திவைத்தவைகளோ, தேவாமிர்தத்தை முல்லையரும்புவடிவாகச்செய்து அதனிடத்துமுதிர்ந்த வெண்ணிலாவைப்பொருத்திவைத்தவைகளோ வொன்றுந்தெரியவில்லை. வட்டமாகிய பொற்சுருளோலை விளங்கிக்கொண்டிருக்கும் வள்ளைத்தண்டையொத்த காதுகள் முன்னாளிறந்துபோன மன்மதனுக்கு உயிர்கொடுத்தனவாகும். தோள்களோவெனில், சகரர்களால் தோண்டப்பட்ட சமுத்திரஞ்சூழ்ந்த பூலோகத்திலிருக்கும் உயிர்களைச்சூறைகொண்டுண்ணும்படி யியமன்கையினால் திருத்தஞ்செய்துவைத்த குறியேயாகும். இலவம்பூவில் பவளக்கொத்தைவைத்து முருக்கமலரிலிருக்குஞ் செம்மைநிறத்தைவழித்துக்கலந்து விழிப்பழத்தில்கொடுத்ததென்று சொல்லலாய்ப் பாற்கடலிலுண்டாகியவமுதமூறும்படியான சிவந்தவிதழையுடையவள். மங்கைப்பருவத்தி லுண்டாவதாய்க் கண்கறுத்துக்கிடைத்தற்கரிய வமுதத்தை யுள்ளேநிறையக்கொண்டு, தென்னங்குரும்பையினையொத்து மேற்புறத்தில் தேமல்பரந்து மிகவுஞ்சுருங்கிய விடையானது தாங்கமாட்டாதென் றிரங்காமல் இருபுறத்துமொளிநிறைந்து காமுகரைவருத்துந்தன்மையினையுடைய விரண்டுதனங்களையுடையவள். அவளுடையஇடையானது மெல்லியகலையானது சுருங்கஅந்தக்கலையுடன்கூடிப் பார்வைக்குத்தெரியுமியல்பில்லாமையைப்பெற்று உலகங்களையெல்லாமயக்கிய மன்மதனிறந்தபின்னெடுத்தஅருவமென்று சொல்லலாகியும், அவனுயிராமென்று சொல்லும்படியும் விளங்கும். அரும்பையொத்தநனத்தினிடத்தில்விருப்பம்வைத்துள்ளஆடவர்களின்விருப்பமானது எவ்வளவுவிசாலித்திருக்குமோஅவ்வளவுவிரிவையுடையதாயும், அவர்களுள்ளத்தைப்போலவு மகன்றிருக்கின்ற நிதம்பத்தையுடையவள். குளிர்ச்சிபொருந்தியஇவளுடையபாதமாகியசெந்தாமரைமலரானதுசிலம்பாகியசூரியகிரணத்தால்கருகித்தன்னொளிகெடாமல் அந்தச்சூரியனுக்குத் தன்னொளியாகியசெந்நிறத்தைத்தந்ததென்று சொன்னால் அப்பாதத்தின்சிறப்பைச்சொல்லக்கூடுமோ. சந்தனத்தையுடைய பொதியமென்னும்

பெண்ணனவள் கருவுயிர்த்தீனத்தவழ்ந்துசென்ற தென்றலாகியகுழந்தையின் தளர்நடையேயாகும். அல்லாமலும் காமுகரைமயக்கச்செய்கின்ற அவளுடையநடைக்குவமையானது பெட்டையானையின்நடையேயல்லது வேறேயெதைத்தானுவமைசொல்லக்கூடும்.

கேட்டீர்களோ! சவுனகாதிரிஷிகளே? இத்தன்மையான அழகுபொருந்திய சித்திரரேகையென்பவளைப் புண்டரீகசன்மனென்னும் பிராமணன் விவாகஞ்செய்துகொண்டபின்பு தன்னுயிர்க்குயிர்போலத் தழுவிவாழ்ந்திருந்தான். அப்பிராமணனே எப்படிப்பட்டவனென்றால் இவ்வுலகங்களையுண்டுமீட்டும் உமிழ்ந்தும் அளந்தவருமாகிய நாராணமூர்த்தியின் திருவடிகளைத்துதிசெய்து தவமுயற்சியினடப்பவனும் தருமநெறியில்வழுவாதவனும், உலகநடைக்கு விரோதமில்லாமல்லத்துநடப்பவனும் துளபமணிந்தமார்பினையுடையவனும், சுருங்கியவுத்தரீயத்தையுடையவனும், தாமரைமணியையணிந்தவனும், அத்தாமரைமலரில்வீற்றிருக்கும் இலக்ஷுமியின் கேள்வனாகிய நாராயணமூர்த்தியைத் தன்னுள்ளத்தில் தியானித்துத்துதிக்கும் வைணவசமயத்தில் தலைமைபெற்றவனுமாயிருப்பவன். இப்படிப்பட்டபெருந்தன்மையையுடைய புண்டரீகசன்மனென்னும்பிராமணன், சித்திரரேகையை புணர்ந்துநீங்காத காமக்கடலில் மூழ்கினவனாயிருந்தான். மாறுகிய மனத்தையுடைய அந்தச்சித்திரரேகையானவள் சிலநாளிவனுடனின்பங்கொண்டிருந்தாள். இவ்வாறு வாழ்ந்துகொண்டிருக்கு நாளிலிந்தப்பிராமணனுக்கு வறுமைக்காலம்வர, அவ்வறுமையைக்கண் டிரக்கங்கொண்டு துளபமாலிகாபரணராகிய ஸ்ரீமகாவிஷ்ணுவானவர் சிந்தாமணியைக்கொடுக்க வச்சிந்தாமணியானது மிகுந்த திரவியத்தைத்தரப்பெற்றுக் தன்னிடத்தில் கல்விகற்றுக்கொண்டிருந்த பலசீஷர்களுக்குக்கொடுத்துச் சிறப்பாகவிருக்குநாளில் இவன்மனைவியாகிய சித்திரரேகையானவள் தன்வீட்டிலிருந்து இல்வாழ்க்கைக்குரிய கற்புநிலையையிழந்து அவனுடையசீஷர்களைவிரும்பிப் புணர்ந்து குறிப்புவேறாகியொருவழிப்பட்ட மனமில்லாமல் காமமதிகரிக்கத்துன்பமுறுவாள் வாளாயுதம்போன்றகண்களால் காமுகருயிர்கெடும்படி மயக்குவாள். அவ்வாறுமயக்கித்தனக்குள்ளதிகரிக்கின்ற காமநோய்நீங்கும்படி அவர்களுடன்சேர்வாள். ஒருநாளில் ஒருநாழிகைப்பொழுதாகிலும் ஆடவரைப்புணராதிராள். மன்மதலீலாவினோதங்களைவிரும்புவதொன்றேயல்லாமல் மற்றொன்றையும் வேண்டுமிடத்தும்விரும்பாள். சமுத்திரஞ்சூழ்ந்த வுலகத்திலுள்ள பலஆடவர்களும் ஓரிமைப்போதும்விடாது புணருவாராகி லப்போதந்தச்சித்திரரேகையானவள் தனக்குப்பொருந்திய கலவியினல் மனமகிழ்ந்து தேகமருவருத்துக் காமவெள்ளத்தைப் பெருகச்செய்வாள். கரையால்கட்டப்பட்டிருந்த நீர்வெள்ளமானது அக்கரையிடியும்படி

யிடித்துப் பலகால்களாகச் செல்லுதல்போல இவளுடையவாள்போன்றகண்களும், மனமும், ஆடவரிடத்துப்பலவழியாகத்தொடரும் இப்படிப்பட்ட காமவிகாரத்தையுடைய சித்திரரேகையை அந்தப்பூச்சக்கிரமென்னும் நகரத்தில் வாசஞ்செய்யும் ஆடவர்களில் விரும்பிப் புணர்ந்தவர்கள் வீடுகளிழந்தார்கள் மிகுந்ததிரவியங்களை யிழந்தார்கள். மயக்கிநினைவிழந்தார்கள் மனமிழந்தார்கள். தங்கள்தங்கள் நிலைமையினையுமிழந்தார்கள். இவ்வாறிழந்ததன்றியிவர்கள்யாவரு மெலும்புமேலெழுந்துதோன்றும்படியானசரீரத்தையுடையவர்களாயிளைத்தார்கள்.

கேட்டீர்களோசவுனகாதிரிஷிகளே? அவளிவ்வாறுபலரையும் புணர்ந்துகொண்டிருக்கும்போது அந்தப்புண்டரீகசன்மனென்னும்வைஷ்ணவப்பிராமணனிடத்தில், மனத்தில்மிகுந்தநேசமும்தம்முடைய சிஷ்யவர்க்கங்களுந்தொடர்ந்துவரப் பரிசுத்தம் பொருந்திய துருவாசமுனிவரெழுந்தருளிவர, அதைக்கண்ட அந்த வைஷ்ணவப்பிராமணசிரேஷ்டனெதிர்கொண்டு மனங்கசிந்து, ஐம்புலன்களையும்வென்ற மகாதபோதனரே? தேவரீரிங்கெழுந்தருளுதற்கு அடியேன்பூர்வத்தி லென்னதவஞ்செய்தேனே, வென்று உண்மைபாகிய தவசிரேஷ்டரைத்தொழுது சுவாமிகளே? தேவரீர்திருவடிகளைச்சாத்தியதால் ஏழையேன் சிறுகுடிலெத்தவஞ் செய்ததோ! அடியேன்செய்ததவமானது இப்போதுதான்சிறப்பையடைந்ததென் றிவ்வாறு அம்முனிவருடைய புகழை யன்புடனெடுத்தேத்தித்தன்மாளிகைக்குள்ளழைத்துக்கொண்டுபோய் அவருடனொரு மண்டபத்தைச்சேர்ந்து அவருக்குஆசனங்கொடுத்தெழுந்தருளப்பண்ணிப் பின்பருச்சனைசெய்து சேவித்துநின்றுசுவாமிகளின்றைக்கிங்கே திருவமுது செய்தருள வேண்டுமென்று பிரார்த்தித்துக் தன்மனைக்குட்போய்மனைவியைப்பார்த்து அடிபெண்ணே? இம்முனிவருக்குத் திருவமுது சமைக்கவேண்டுமென்று சொல்ல, அவளுமவ்வாறே சமைத்துத்தெரிவிக்க, அவளைப்பார்த்துஇச்சமையலை அம்முனிவருக்குக் கொண்டுபோய்ப் படைக்கக் கடவாயாகவென்று கட்டளையிட, அக்கட்டளையைப்பெற்றுத் திருவமுதெடுத்துக் கொண்டு போய் மறப்பில்லாதயோக நித்திரைசெய்தருளுநின்ற அம்முனிவரைப்பார்த்து விரும்பிய காமக்கலவிசெப்பத் தன்மனதிலெண்ணங்கொண்டு மேல்விழுந்து அம்முனிவருடைய தோளைத்தழுவினள். உடனேதேவர்களுந் துதிசெய்யத்தக்கதவத்தினையுடைய அம்முனிவர் நித்திரைதெளிந்து பார்த்தவளவில் பயந்தோடினவளாய் நாலுதெருவுங் கூடுமிடத்திலிருக்கும் ஓராலமரத்தின் சமீபத்திலிருக்குஞ் செம்மறியாட்டுக் கூட்டத்தொளித்துக்கொள்ள, உடனே. துருவாசமுனிவர் பெருங்கோபங்கொண்டு தம்முடையசிஷனைப்பார்த்து அவளைத்தேடென்றுசொல்ல, அந்தச்சீஷன் அதிகவிரைவாக சென்றுதேடியும் அவளையவ்விடத்திற் காணமல்திரும்பிச்

வந்து துருவாசமுனிவருடன்சொல்லஅதைக்கேட்டமுனி
சிரேஷ்டர் தம்முள்ளத்தில் இல்லறக்கிரமம வழுவிக்கற்பு
நிலேயழிந்தபாவியானவள் நாலு சதுக்கங்கூடியதெருவிலி
ருக்கும் ஆலமரத்தடியில் நித்திரைசெய்யும்ஆட்டுமந்தை
யிலொளித்துக்கொண்டிருக்கிருளென் றறிந்துகொண்டுப
ழுதில்லாத இல்லறவியல்பினின்றும் வழுவிவேசையனா
ப்போலத்திருந்து பலரையும்புணர்ந்திருந்தஅவளேக்கொ
ண்டுபோ யுயர்ந்தஅந்த ஆலமரத்தினுச்சியிலேற்றியுன்த
வப்பெருமையையாவரு மறியும்படிசெய்வாயாகவென்று
துருவாசமுனிவர் கட்டளேயிட, சீஷனனவனக்கட்டளே
யைச்சிரசாக வகித்துக்கொண்டுபோய்வேறுபட்டசிந்தை
யையுடைய அவளேப்பிடித்துஉயர்ந்தஆலமரத்தினுச்சியி
லேற்றினன். அவளோ வடகாற்றடிப்பதனல்மெல்லியகி
ளேகளாடுந்தோறுஞ் சுழன்று அலறுவாள். அந்தக்கொம்
பைப் பிடித்துக்கொண்டு குலுங்குவாள். இறங்கவேண்டு
மென்று தன்மனதில்நினேப்பாள். இவ்வாறு துன்பப்பட்
டுக்கொண்டிருக்கு மந்தச்சித்திரரேகையை யந்நகரத்திலி
ருக்கும் ஆடவர்களும், மாதர்களும்பார்த்துஆகாயவரைக்
குமளாவிய விந்தமரத்தி னுச்சியிலிவளெவ்வா றேறினள்.
தவசிரேஷ்டராகியதுருவாசமுனிவருடையசாபமொழியா
னது மிகவுங்கொடிய தென்ருர்கள். அப்போது அவளுக்
குயிர்போன்றவனுகிய அந்தப்பிராமண னவளுக்குச்சம்ப
வித்ததையறிந்து அவளேவிட்டுப்பிரிந்திருக்கமாட்டாதவ
னுய் மிகுந்தகிருபைபொருந்திய துருவாசமுனிவரைக் க
ண்டுதுதித்து அடியற்று விழுந்த மரம்போலவீழ்ந்து ப
ணிந்து, எம்மையனே? தேவரீருடைய திருவருளில்லா
மையா லென்மனேவியானவள் உலகத்தாரெல்லாரும் பழி
சொல்லும்படி யிருக்கிருள். ஆகையாலந்த ஆலமரத்தை
விட்டிறங்குவதற்குத் தேவரீர்கட்டளேயிட்டருளவேண்டு
மென்று பிரார்த்தித்த பிராமணனேநோக்கி யில்லறதரும
த்தை யிழந்தவளுடைய புல்லியவொழுக்கத்திற்குச் சம்
மதித்திருக்கும் நீசனே? அவள் தனத்தை யிவ்வுலகத்தி
லெல்லார்க்குங் கொடுத்தாள். இப்படிப்பட்டவளே யக்கி
னிதேவன் முன்பாக உனக்கென்றுகொடுத்தார்கள் அப்ப
டியிருக்க அவள்தன்னுடைய இன்பம்பிறருக்குப்பயன்ப
டச்சமைந்திருக்கிருளன்றி யுன்னேயொருபொழுதும் நி
னேப்பவளல்லளென்று சொல்ல, சுவாமிகளே? அவளெப்
படிப்பட்ட குற்றஞ்செய்திருந்தாலுந் தேவரீர் திருவுள்ள
த்திற்கொள்ளாமல் ஆலமரத்தைவிட்டு அவளிறங்கக்கட
வதென்ருெருவார்த்தைசொல்லவேண்டுமென்றுவேண்டி
க்கொண்டான் அதைக்கண்டதுருவாசமுனிவர்புண்டரீக
சன்மனேப் பார்த்து உன்மனேவியானவள் பதிவிரததரு
மத்தில் வழுவுதலில்லாதவளாயிருந்தாளானல்நீசொல்லு
ஞ்சொற்படி யுயர்ந்தஅந்தஆலமரத்தினின்று மிறங்குவா
ள் ஆதலால்நீபோய்ச் சூரியமண்டலத்தை யளாவியஅந்
தமரக்கிளேயிலிருந்து இறங்கும்படி சொல்லென்று சொ
ல்ல, அவனுமவர்சொன்னபடியே சென்றுஆலமரத்தின
ருகில்நின்றுகொண்டு என்மனேவியே வரக்கடவை யென்
றுசொல்ல அவள்நாலடியிறங்கி யிவ்விடத்திலிருந்திறங்க
க்கூடாமையா யிருக்கின்றதென்ருள். அந்தவார்த்தையை
க்கேட்டவுடனிவளப்பினல் குந்திக்குந்தித் துருவாசரிடத்
தற்கோடி, சுவாமி? என்மனேவியானவள் நாலடிக்கிளேயி
றங்கி யானைமுதலாகக்கொண்ட மபக்கத்தின லதன்கீ
ழிறங்கமாட்டாமலிருக்கின்ருள் இனியாதுசெய்வதோ, அ
னுக்கிரகஞ்செய்ய வேண்டுமென்று சொல்ல, அதைக்கே
ட்டதுருவாசமுனிவர், அப்படியானலவளேப்புணர்ந்த ஆ
டவர்களெல்லாரும் அந்த ஆலமரத்தடியில் வந்து இறங்
கென்று சொல்வார்களாகிலிறங்குவாளென்று சொல்ல,உ
டனே யவளிடத்து மையல்கொண்டிருந்து மயங்கிப்புண
ர்ந்தவர்களேயெல்லா மழைத்துக்கொண்டுவர, அவர்கள்வ
ந்து பெண்ணேயிறங்கென்ருர்கள். அப்போதுபாதிமரத்
திலிறங்கி யவ்விடம்விட்டிப்புறமிறங்கக் டாம லங்கிரு
க்குங்கிளேயைப் பற்றிக்கொண்டிருக்கக்கண்டு மீட்டும் து
ருவாசரிடத்துக் கோடிநின்றுநாணத்தினல் சொல்லுகின்
ருன். சுவாமிகளே? தேவரீர் இவ்வாறு வேடிக்கைசெய்வ
துயாதுகாரணமோதெரியவில்லே, இனியவளிடத்தில்கடா
க்ஷம்வைத்தருளவேண்டு மென்று பிரார்த்திக்க, அதைக்
கேட்டமுனிவர்உன்னுடைய சீஷர்களெல்லா மழைக்தா
லிறங்குவாள் போவென்றுசொல்ல, உடனேயந்தச்சீஷரு
ந்தானுமாக அந்தமரத்தின்கீழ்ப் போயிருந்து சீஷர்களே
நோக்கித்தன்மனேவியை யழைக்கச் சொன்னன்பின்பு அ
வர்கள்நின்று அழைத்தவளவில் அந்தஆலமரத்தினடிக்க
வட்டில்வந்திருந்தாள். அதைப்பார்த்த அவள்புருஷன்த
ன்குடுமியலேயவும் தரித்திருக்குந்தாமரைப் பூமாலே புர
ண்டுபரண்டலேயவும் பெருந்துன்பத்தோடு மிரைக்க வி
ரைக்கவோடிமீட்டுந்துருவாசமுனிவரிடத்திற்சேர்ந்து ஐய
ரே? என்மனேவியானவள் இருபிரிவாயிருக்கிறகப்புவரை
க்குமிரங்கினள் இவளேமுழுது மிறங்கும்படிகட்டளேயிட்
டருளவேண்டு மென்று அந்தப்பிராமணன்வேண்ட, அ
தைக்கேட்டுத்துருவாசமுனிவர்சொல்லுகின்ருர்.

ஓ! பிராமணு? உன்மனேவியைப்புணர்ந்தவர்களின்பெ
யரையெல்லாஞ் சொல்லிச்சொல்லித் தெரிவித்தாலிறங்கு
வாளென்று துருவாசமுனிவர்சொல்ல மீட்டுமந்தப் பிரா
மணன் ஆலமரத்தின்கீழ்ப்போய், அடிபெண்ணே? உன்
னேப்புணர்ந்தவர்கள் பெயர்களேயெல்லாஞ்சொன்னல் இ
ந்தக்கிளேயைவிட்டு அடிமூட்டிலிறங்குவையென்று சொ
ல்ல அவளிந்தவார்த்தையைக் கேட்டவுடனே அந்தந்த
சோரபுருஷரையெல்லாந் தன்மனத்திலெண்ணித் தனி
த்தனியவர்கள்பெயரைக்கூறினள் அவ்வாறுகூறியபின்பு
அந்தக்கிளேயைவிட்டிறங்கியதிற் சேர்ந்தகீழ்க்கவட்டில்வ
ந்திருந்தாள். அதையவள் கணவன்கண்டு துருவாசரிடத்
திற்போய், அருந்தவக்கடலே சரணஞ்சரணம் என்மனே

வியானவளெவ்விதத்திலு மிறங்கமாட்டாதவளாயிருக்கின்றாளாதலால் இனித்தத்துவாதீதமாகிய சிவத்தினுண்மைநிலையையாராய்ந்தறிந்த தேவரீரவ்விடத்திற்குவந்தாலந்தக்கிளையைவிட்டிறங்குவாளென்றுசொல்ல, அந்தவைணவப்பிராமணன்வார்த்தையைக்கேட்டதுருவாசமுனிவர்புன்னகைகொண்டவராய் அவனுரையைநோக்கிமனமிளகித் தம்முடைய சிஷர்களோடு மந்தவாலமரத்தருகிற்சேர்ந்து அவளைவேதவிதிப்படி விவாகஞ்செய்துகொண்டபுருஷனாகிய புண்டரீகசன்மன் முகத்தைப்பார்த்து ஓ! பிராமணா? உன்செய்கையானது தாழ்ந்தவொழுக்கத்திற் சிறந்தது. வாள்போன்றகண்ணேயுடைய இவள்வேசையென்பதையுணர்ந்தும் மிகுந்த ஆசையினாலிவளைப்புணர்ந்திருந்தாய் அதனாலுன்னுடைய குற்றமில்லாத தவத்தின்பெருமைகுறைந்தது, இவளித்தன்மையளா யிருப்பதைக்கண்டும் வேறொருபெண்ணைவிவாகஞ்செய்துகொள்ளாமலிருந்தாய். இவளிதுவரையில்செய்த பாதகங்களில் பாதியுன்னைச்சேர்ந்தன ஆகையால் நீயும்திரிபுரதகனராயுள்ளபரமேசுவரன் திருவடிகளைச்சேரமாட்டாயென்றுதுருவாசமுனிவர்சொல்லியவார்த்தையைப் புண்டரீகனென்பவன் தன்னறிவில்யோசித்துவேறொருவார்த்தையுஞ்சொல்லாமல் ஓ முனிவரே? நீர்சமயவிரோதத்தையுட்கொண்டெனக்கிந்தசாபங்கூறினீரென்றுசொல்ல. அதைக்கேட்டதுருவாசமுனிவருக்குக் கோபமூண்டு மனதிலதிகதுயரமுண்டாக அவனைப் பார்த்து அடாதியானபங்கனே? உன்பெயர் யோனிமனத்தினனென்று வழங்கக் கடவதென்றுபின்னுஞ் சபித்துநீ புன்மைத்தன்மையுள்ள புறச்சமயத்திலிருந்து; எலும்புமாலையும் எருக்கம்பூ மாலையுமணிந்தஎம்பெருமான் திருவடியை யன்பு கொண்டுபெருகின்றவனல்லை. ஆன்மாக்களுடைய பாசபந்தங்களை யறவேயொழிக்கத் தக்கதாகிய விபூதியினையும் விரும்பு கின்றனையல்லை. அந்தப்புன்புறச் சமயத்தனாகியே போகக்கடவை போகக்கடவையென்று சபித்து அவனருகிலிருக்குஞ் சிஷரைப்பார்த்துப் பெருங்கோபங்கொண்டு ஓ! சிஷர்களே? மயங்குகின்றவுங்கள் மனவேறுபாட்டைநீக்கி வேதமோதுஞ்சிந்தையராகியகுருவின்பத்தினியைவிரும்பினீர்களாகையால் உங்கள்பத்தினிமார்களும் வேசையராவார்களென்று சொல்லிக் கண்களில் நெருப்புப்பொறிபறக்கத்தக்க கோபமுடையவரா யவர்களுக்கநேகசாபவசனங்கூறி, அப்போதுமனம்வருந்திக்கொண் டிருக்கிறவள் தொத்திக்கொண்டிருக்கு மாலமரத்தைப்பார்க்க அவள்நீண்டகூந்தலானது மேனிமுழுதுங்கவியவும், அந்தப்பெரியமரத்தைச் சார்ந்திருக்கிற மார்பினிடத்திலுதிரம்பொங்கவும், சோர்ந்து ஆலமரத்தைத் தொத்திக்கொண்டிருக்க அவளைப்பார்த்து துருவாசமுனிவர் சொல்லுகின்றார். பலரும்விரும்பத்தக்க குவிந்தமுலையினையுடைய சித்திரரேகையே? நீயிங்கேம்மேல்விழுந்து நமதுமேனியைத்தீண்டினமையால் கொடியஅசுரர்குலத்திற் பிறந்து நீங்காதகாமவிகாரம்பெற்றிருப்பை ஆட்டின்கூட்டத்துளொளித்திருந்தனையாதலால், உன்முகமாத்திரம்ஆட்டின்முகமாகும். அந்தஅசுரகுலத்திற்பிறந்தும்பலபேரைப்புணருங்காமம் ஒருக்காலுமொழியாதிருப்பையென்றுசொல்லியிம்மரத்தைவிட்டிறங்கிப்போவென்று சொல்லவும் பழிநேரிடச்செய்தஅந்தப்பாதகியானவள்மரத்தைவிட்டிறங்கித் துருவாசமுனிவர் திருவடியையடைந்து என்னையனே? தேவரீர் இப்போதுஎன்னையும், என்கணவனையும், அவருடைய சிஷர்களையுஞ்சபித்து நிந்தைசெய்தீரானாலும் உம்மிடத்தில் சிந்தையைவைத்த நான்இனிஎந்த ஆதாரவைக்கொண்டுதேறுவேன். இத்தனைபாடுபட்டுமெளியவளாகியநான்தேவரீர் திருவடிகளைப் பரிசிக்கும்படித்திருவருள்செய்ய வில்லையென்று ஆசையுடன் அவளிரந்ததனால். துருவாசமுனிவர் அவளைப்பார்த்துச் சொல்லுகின்றார்

நுண்ணிய இடையினையுடைய சித்திரரேகையே? ஒருவர்செய்த பாதகமெல்லா மவர்களேபகுத்துச் சொன்னால் தொலைந்துபோமென்று ஆயிரம்பணாமுடிகளையுடையஆதிசேடனால் சுமக்கப்பட்ட இந்நிலவுலகத்தில் சொல்லப்படுகிறபழமொழியை நீயறிவையே, ஆதலாலுன்பாவமெல்லாம்நீங்கிப் போய்விட்டது. இனிநீ பெண்ணுருவங்கொண்டு அசுரர்குலத்தி லிருக்குநாளில் காமவிருப்பத்தினாலுன்கண்ணினுக்கின்பமாயிருப்பவர்களைக்கைக்கொண்டு உன்னழகியதனங்களால் தழுவிப்புணர்குவை அப்படியிருக்குங்காலத்தில் நாமங்குவருவோம். நீஅங்கேநம்மைக்கண்டுதொடர்ந்து புணர்ந்து உன்காமவிருப்ப மொழிந்து அந்தக்குலத்திற்குப் பொருந்திய இரண்டு புத்திரர்களைப்பெறுவாய். அன்றியும் பெருமைபொருந்திய சிவகணங்களுடன் சேர்ந்த அரகாபுத்திரனைக்காக்கும் மாகாளர்கையினால், மூக்கும், முலையும், கையுமிழந்துவிழுந்து துன்பப்பட்டுழுவையென்றுஞ்சபித்து, அம்மாகாளர்தொடுவதினால் அன்றுவரையில்செய்த பாவமெல்லாம் நீங்கிநல்லுணர்ச்சியையடைந்து நீர்வளம்பொருந்திய சுனைகளையுடைய ஸ்ரீசைலத்தைச்சேர்ந்து நீக்குதற்கரிதான தவஞ்செய்துகொண்டிருப்பாயாக வென்று கட்டளையிட்டருளினார். அடிமகளே, அசமுகி? அத்துருவாசமுனிவராலனுப்பப்பட்டவள் நீதானாகும். அப்படிப்பட்ட தன்மையையுடைய நீஎன்னருந்தவப்புத்திரியாகப் பிறந்தனை. அந்தத்துருவாசமுனிவர் கூறியசாபமும் விமோசன மாயினது ஆகலாலிதுமுதல்பாவத்தினின்றும் நீங்கித்தவஞ்செய்யவிரும்புவாயாக வென்றுமாயையானவள் தன்மகளாகிய அசமுகிக்குச்சொன்னதாகச் சூதபுராணிகர், நைமிசாரணியமுனிவர்களுக்குச்சொல்லியருளினார்.

---

## மாயைவரலாற்றுப்படலம்.

என்றுரைத்துணர்த்துமாயைதன்முகமினிதுநோக்கி
வன்புறமுருட்டுக்கொங்கையசமுகிமறித்துங்கேட்கு
நின்றவென்னியற்கையெல்லாநிகழ்த்தினை நிகழ்த்தாநின்ற
உன்றனதியற்கையெல்லாம்புலப்படவுரைத்தியென்றாள்.

---

இவ்விதமாகச்சூதபுராணிகர், நைமிசாரணியவாசிகளைப்பார்த்து, அசமுகியின்பூர்வவரலாற்றைச் சொல்லக்கேட்டுச்சேவித்தெழுந்தஓ!தவப்பெருங்கடலே? அசமுகியானவள் அசுரர்குலத்தில்வந்த சரித்திரத்தைத் தேவரீர் சொல்லக்கேட்டு நன்றாகத்தெளிந்தோம் பின்னர்நடந்தசரித்திரங்களையும் சொல்லவேண்டுமென் றுசொல்ல சூதபுராணிகர்சொல்லத்தொடங்கினர். இவ்வாறு அசமுகியானவள்தன்வரலாற்றைச் சொல்லித்தெரிவித்ததாயாகிய மாயையின்முகத்தைப் பார்த்துச் சொல்லுகிறாள். அன்னையே? என்னுடைய முற்பிறப்பின்செய்கையை யெல்லாம் நன்றாகச்சொல்லினை. இனி உன்னுடைய பூர்வஜனனத்தின்செயற்கைகளையும் தெரியச் சொல்லவேண்டு மென்று சொல்லமாயையானவள் சொல்லுகிறாள்.

பூர்வகாலத்தில், காசிபரிஷிக்கு நானொருபத்தினியாகி இல்லற நடத்திக்கொண்டிருந்து அவருக்குப் பலகோடி புத்திரர்களைப்பெற்றேன். அந்தப் புத்திரர்களெல்லாம் தேவர்களோடு போர் செய்து அவர்கள் கையிலுள்ள ஆயுதங்களா லுயிர்விட் டிறந்தார்கள், அந்தப் போர் முகத்தில் இறந்துபோன புத்திரர்க ளிடத்தில்சித்தத்தைச் செலுத்தித் துன்பத்திற் கிடனாகிப் பலநாளிரங்கியழுது, கற்பகவிருக்ஷத்தின்கீழிருக்கும் இந்திரன் முதலாகிய சத்துருக்களைவெல்லும்படியாகநினைத்து, இம்மலையில்வந்து உயர்ந்திருக்கின்ற இதனுச்சியிலேறிவிழுந்து உயிர்விட்டேன். பின்பு அசுரேந்திரனுக்குப் புத்திரியாகப்பிறந்துமாயையென்னும் பெயருள்ளவளாய், காசிபரிஷிக்குப்பத்தினியாகி உங்களையெல்லாம்பெற்றுப் பகைகொண்டிருந்த தேவர்களுடைய பொன்னுலகத்தையெல்லாம்மீளாத சிறையிலிருக்கவைத்து என்மனத்திற்கொண்டிருந்த துயரந்தீர்ந்தேன். என்பிள்ளைகள்நால்வரும்யாவர்க்கும்பெறுதற்கரிய பேறுபெற்றார்கள்.வள்ளைத்தண்டையொத்த நீண்டகாதினையுடைய அசமுகியே? நானுமிந்தப்பெரியமலையினிடத்தில் வந்தேன். இங்கிருந்துநல்லதவஞ்செய்து கைலையங்கிரியைச்சேர்ந்து மேல்வருநாளில் உமாதேவியார் திருவடிகளைச்சேர்வேன் இனிநீ பெறுங்கதியுமின்னதென் றுஇப்போதேசொல்லுகிறேன்.

அஃதென்னவென்றால், நீயும் அந்தப்பெரியகைலையங்கிரியைச்சேர்வாயென் றுசொல்ல, அதைக்கோபாக்கினியுடன்தோன்றிய அசமுகியானவள்கேட்டு பெருமகிழ்ச்சியடைந்து, மாயையைப்பார்த்து அன்னையே? உன்னைப்பிரிந்தபின்பு காசிபரிஷியானவர் எவ்வாறுதனித்திருந்தனரோ, அதனையுஞ்சொல்லவேண்டுமென் றுசொல்ல மாயையானவள் சொல்லுகின்றாள், வளைத்தவில்லிற்பூட்டிய பாணவருஷங்களை மன்மதன்பொழிவதனால் தனியாயிருந்துவருந்தி வாடைவீசுவதினால் வெதும்புகின்றவனும் சந்திரன் வடவாமுகாக்கினியைப்போலத் தீயைவீசுதலால் பதைப்பவனும், தென்றிசையிலிருந்துவருந் தென்றலைநோக்கி மெழுகுபோல மனமுருகுகின்றவனுமாய்க்காசிபரிஷிவருத்தப்பட்டுக்கொண் டிருக்க அந்தநிலையைப் பிரமதேவனறிந்துவந்து காசிபரிஷியைப்பார்த்துத் தபசிகளுக்குள் மேலானதவமுள்ளவனே? கரும்புவில்லிலிருந்து வருகின்ற பஞ்சபாணங்களுக்குக் குறியாயிருந்து துன்பத்துளழுந்தினாய் இதுஉனக்குத் தகுதியல்லவென் று பலஇனியவசனங்களைச்சொல்லி யிடைநீக்கிமனத்துன்பக்கையாற்றினான். பின்புகாசிபரிஷியுந் துயரநீங்கிப்புலத்தியரிஷியின்புத்திரியை விவாகஞ்செய்துகொண்டு மிகுந்ததுயரத்துக் கேதுவாயிருந்த விரகாக்கினியை யொழித்திருந்தாரென்று தாயாகிய மாயைசொன்னதை அசமுகிகேட்டுஅதிசயமடைந்தவளாய்மாயையைப்பார்த்துத் தாயே, இவைகளையெல்லாம் நீயறியப்பெற்றதற்குக் காரணமென்னமோ அதைச்சொல்லவேண்டுமென் று வேண்ட, மாயையானவள். பொருந்துதற்கரிய தவத்துடன்தோன்றிய சுக்கிரபகவான்சொல்ல இந்தநிலைமைகளையெல்லாமறிந்தேன். இதுவுமல்லாமல் திரிகாலங்களையு மறிவேனென் றுசொல்ல, இவையனைத்தும் நன்றாகக்கேட்டுணர்ந்த அசமுகியானவள் பின்பு மாயையினுடைய பாதங்களைவணங்கித் துதித்துக் குற்றங்களெல்லா மொழியப்பெற்ற நல்லதவமுயற்சியைப் பெற்றவளாய் மாயையுடனிருந்து தவஞ்செய்து தேவர்கூட்டங்களெல்லாஞ் சூழ்ந்து சேவித்திருக்கும் ஸ்ரீகைலாயத்தைச் சேர்ந்தாளென் றுஇங்குநடந்த சரித்திரங்களின் தன்மைகளையெல்லா மெடுத்துக்காட்டி மலர்ச்சோலைகள்சூழ்ந்த நைமிசாரணியமுனிவர்களுக்குச் சூதபுராணிகர்சொல்ல அவர்கள் பெருமகிழ்வடைந்து சடைமுடியசைத்து மிகுந்த பேரானந்தங் கொண்டார்கள்.

---

## சிவமுனிமுதலாயினோர்வரலாற்றுப்படலம்

செய்யநாண்மலர்த்தாமரைச்செங்கணன்
வையமேழ்தொழவாமனனாகியே
யுய்திறந்தந்துபேந்திரனென்னவே
பொய்யில்கேள்வியனோடும்பொருந்தினன்.

இவ்விதமாகச்சொல்லிய சூதபுராணிகர் சவுனகாதிரிஷிகளைப் பார்த்துப் பின்னுஞ் சொல்லுகின்றார். கேளுங்கள் முனிவர்களே! செவ்வியதாமரைக் கண்களையுடையவராகிய விஷ்ணுவானவர் உலகமெல்லாம் போற்றத்தக்க மகிமையுடன் வாமனவதாரங்கொண் டருளிய காலத்தில் அவருக்கு உபேந்திரர்என்னும் பெயருண்டாயிற்று. அதாவது இந்திரனுக்குத்தம்பிஎன்பதேயாம்.அப்படி உபேந்திராவதாரஞ்செய்தபோது பொய்தீர்ந்தகேள்விகளையுடைய ஆசாரியனிடஞ்சார்ந்து நல்லகேள்விகளைக்கேட்டு, அக்கேள்வியின்பயனையடைந்து வருவாராயினர். இப்படிநடைபெற்றுவருங்காலத்தில் ஓர்நாள் துளவமாலையணிந்த அவ்வுபேந்திரமூர்த்தியானவர் தனது அவதாரத்துக்கு அதிஷ்டானப் பொருளாகிய கௌத்துவாபரணமணிந்த நாராயணமூர்த்தியை வணங்குதற்குத் திருவைகுந்தம்என்னும்அவருடையலோகத்துக்குப்போயினர்- அந்தசமயத்தில் கண்ணுவர்என்னுஞ்சிவயோகியானவர்அவ்விடம்விஷ்ணுவை ஆசீர்வதித் தருளும்பொருட்டு வந்தனர். அப்போது மூலமூர்த்தியாகிய விஷ்ணுபகவானும், அவருடைய சக்தியாகிய ஸ்ரீமஹாலட்சுமியும், அவருடைய அவதாரமூர்த்தியாகிய உபேந்திரரும் அம்முனிவரைக்கண்டு எழுந்து வணங்காமலும்,வந்தவரைஉபசரியாமலும்,அவரோடொன்றும்பேசாமலும்தங்கள்செல்வங்களையேபெரிதாகமதித்து இறுமாந்திருந்தார்கள்.இவ்வதிசயத்தைக்கண்ட முனிவர் கோபத்தீயெழச் சிரித்து அவர்களைப் பார்த்துச் சொல்லுகின்றார். ஓபேதைகளே? நெற்றியிலே கண்ணையுடையவரும், உமாஸஹாயருமாகிய சிவபெருமானுக்கு நான்வழித்தொண்ட னென்று நீங்கள்அறிவீர்கள் அப்படியறிந்திருந்தும், என்னை அவமதித்தீர்களாகையால், நீங்கள் சிவனையேபரிபவித்தவரானீர்கள். ஆகையால் உங்களுக்குத்தக்க தண்டம் விதிக்கவேண்டியிருக்கின்றது. உங்களுக்குண்டாயிருக்கிற செல்வங்களெல்லாம் எப்படியுண்டாயின சிவபூசையின்பலத்தால் யாவுங்கிடைத்திருப்பதைச் செல்வச்செருக்கால்மறந்தீர்களாகையால், இதோ சாபங்கொடுக்கின்றேன் பிடியுங்களென்று முதல்விஷ்ணுவைப்பார்த்து நீபூமியில் பலஜன்மங்களெடுத்துழன்று ஊமரைப்போற் பேதையாய்த் திரியக்கடவாயென்றும், ஸ்ரீமஹாலட்சுமியைப் பார்த்து நீயும் என்னை அவமதித்தாயாகையால் உன்னுடைய தேககாந்தியும், சுபங்களுமொழிந்து கொடியபாலைநிலத்தில் பெண்மானாகப்பிறந்து அலையக்கடவாயென்றும், உபேந்திரனைப் பார்த்து நீயாவரும்பழிக்கத்தக்க வேடுவனாகப்பிறந்து காட்டிலுழன்று நீர்மூடராய்த் திரியக்கடவா யென்றும் முறைபேமூவருக்குஞ்சாபமிட்டருளித்திரும்பித்தம்முடைய ஆசிரமம்போய்ச்சேர்ந்தார்.

இவ்வாறு சாபத்தால்கட்டுண்ட மூவரும்முனிவர்சொற்படியேஎய்தப் பெற்று வருந்தினர்கள், இவர்களில், விஷ்ணுவானவர் கமலையென்னும் பேருடைய தன்னுடைய மனைவியானவள் முன்னோர்காலத்தில் தானிறக்கக் கண்டு தன்னைப்பிழைப் பூட்டவேண்டிச் சிவனைஅர்ச்சித்து அவரிடம்பதிபிக்ஷையடைந்த காரணத்தால் கமலாலயம் என்னும்பேரைவகித்திருக்கும் உத்தம க்ஷேத்திரத்தை யடைந்து திரிகரணங்களாலும் வழிபட்டுச்சிவசிந்தனை நீங்காமல்தவமியற்றினர். அப்போதுசிவபெருமான் அவருடைய அன்புக்கு எளியராகி வெளிப்பட்டுத் தரிசனந்தந்தனர். அவ்வற்புததரிசனத்தைக்கண்டுமகிழ்ந்து சங்கமேந்தியகையையுடைய விஷ்ணுவானவர்அவரைக்கண்டமாத்திரத்தில் அடியற்றபனைபோலப் பூமியில்வீழ்ந்துவணங்கிநெஞ்சநெக்குருகக்கண்களில் நீர்ததும்பநின்று இரண்டுகரங்களையுஞ் சிரமேற்குவித்துக்கொண்டு தோத்திரஞ்செய்தனர். அதனால்ஸந்துஷ்டியடைந்து சந்திரசூடராய் விளங்குஞ் சிவபெருமான் அவருக்கு இன்பத்தைவிளைத்து, உன்மனத்திற் கொண்டகவலையாது? நீநமக்குமகிழ்ச்சியுண்டாக எம்மைப்பூசித்தாயாகையால், நீவேட்டனவெல்லாந்தருவோம், கேளென்று திருவுளம்பற்றினர். கன்னிபாகனாகிய சிவனுடைய குளிர்ந்தவசனத்தைக்கேட்டு மகிழ்ந்துபீதாம்பரதாரியாகியவிஷ்ணுவானவர் சொல்லுகின்றார்.

ஓபரமதயாளுவே! கண்ணுவமுனிவரைநானும், என்னுடையதேவியும், என்னுடைய அமிசமாகிய உபேந்திரனுமாகியமூவரும் அவர்ஓர்நாள் என்னுடையபதியையடைந்தபோது சற்காரஞ்செய்யாமல் எங்களறியாமையால்வாளாவிருந்துவிட்டோம், அதற்காக அவர்கோபித்து எங்களுக்குக் கொடியசாபங்களைத் தந்துபோயினர். கொஞ்சமேனும் இரக்கமின்றி அந்தமுனிவர்கோபித்து இந்தப் பூமியில் எண்ணிறந்தபிறவியெடுத்து நீயுழலக்கடவாயென்று என்னைப்பார்த்துச்சபித்தனர். என்னுடையதேவியைப்பார்த்து வெப்பத்தைத்தரும் பாலைநிலத்தில் மானாகப்பிறந்துழல்வாயென்று சபித்தனர்.உபேந்திரனைப்பார்த்துஈனத்தொழிலையுடையவேடுவனாகப்பிறந்துழல்வாயென்றுசபித்தனர். இக்கொடியசாபங்கள் எங்களைத்தொடாதவழி அருள்புரியவேண்டும் எம்மடிகளேயென்றுபலவாறுதுதித்துவிண்ணப்பஞ்செய்து நின்றகாலையில் ஆதிநாதனாகிய சிவபெருமான் அவைகளைக்கேட்டறிந்து உள்ளங்கரைந்து அவர்களுக்கு அருள்செய்வாராயினர்.எங்ஙனமெனின் உடனே கண்ணுவமுனிவரை அங்கழைத்து இந்தவிஷ்ணுவுக்குநீகொடுத்த ஜன்மங்கள் பலவற்றைமாற்றி ஒருஜன்மமாக்கி விடுவாயென்றனர். அந்தச்சிவாஜ்ஞையைச் சிரசாகவகித்து அம்முனிவ ரப்படியேயாகுகவென்றுசெப்பலும், சங்கபாணியாகிய விஷ்ணுவானவர் ஓர்காட்டில் சிவமுனிவர்என்னும் பேர்தாங்கி ஊமராய்ப்பிறந்தனர். அந்தக்காட்டிலேதானே உபேந்திரரானவர் வேடுவனாகப்பிறந்து அலைந்தார். தாமரைப்பூவிலுறையுநங்கையானவள் அவ்வனத்திற்றானே பெண்மானாகப் பிறந்து மருண்டு திரிந்தனள். இப்படிமூவருஞ்சாபத்தான் மொத்துண்டு எண்ணிறந்தகால முழன்றுகொண்டிருக்கையில் மிகுந்த சீலத்தையுடைய சிவமுனிவருக்கெதிராக ஓர்நாள் அங்கு சஞ்சரித் திருந்த பெண்மானானது நேர்பட அந்தமானைச் சிவமுனிவர் ஆசையோடுபார்த்தனர். அப்படியேஅந்தமானும் அம்முனிவரைஆசையுடன்பார்த்தது இரண்டுபார்வையுமொத்தமை

யால் மானுக்கு அப்போதே கர்ப்பமுண்டாயிற்று இவ்வாறு கர்ப்பத்தையடைந்த மானனது யதேச்சையாய்த் திரிந்து சூன்முதிர்ந்துவருகையில் ஓர்நாள் வேடர்கள்கிழங்குகளைத்தோண்டியெடுக்கு மோர்பள்ளத்தில் பிரஸவித்துவிட்டது. பிரசவித்தவுடன் கீழேவீழ்ந்த கன்றைப்பார்த்தது அதுதன்னினமாகக் காணப்படாமையால், இதுயாதோவென்று மருண்டு அதை அவ்விடத்திலேதானே விட்டுத் தான்போய்விட்டது. பின்புஉபேந்திரனாகியவேடன்வில்லெடுத்து வேட்டையாடி மலைச்சாரலிலுள்ள தன்னுடைய குடிசையையடைந்து அதற்குஸமீபத்தில் வள்ளிக்கிழங்குகளைத் தோண்டி யெடுத்துக்கொண்டதனாலுண்டாகிய வோர்பள்ளத்தில் ஓர்தெய்வப் பெண்குழந்தை யிருக்கக்கண்டு அதிசயித்து, அதையெடுத்துக் கொண்டு இதுயாருடைய குழந்தையோ? எந்தத்தெய்வமகளிர் இங்கே இதைப் பெற்றுவிட்டுப் போனார்களோ? ஸ்ரீமஹாலட்சுமியே இங்குதிருக்கின்றாளோ? என்று பலவாறு சிந்தித்துத் தன்னுடைய இருக்கையிற் கொண்டுபோய் மயிலைப்போலுஞ் சாயலும், குயிலைப்போலும் இனியகுதலைமொழியும்பெற்று வளர்ந்துவரும்அக்குழந்தைக்கு வள்ளியென்னும் பேரிட்டுத் தன்னினத்தவர் கொண்டாடிக் களிகூரமகிழ்ந்திருந்தனன்.

இவ்வாறு அந்தவள்ளியென்னும்பெயரையுடையகுழந்தையை வேடுவர்களெல்லாம் தங்கள்கண்ணைக் கொண்டுபசரித்து வளர்த்துக்கொண்டுவருகையில், மேல்நடந்த விருத்தாந்தத்தைச்சொல்லுகிறேன் கேளுங்களென்றுநைமிசவனமுனிவர்களைப்பார்த்துச்சூதர்சொல்லுகின்றார்.

ஓ முனிவர்களே! எமதன்னையாகிய வள்ளியம்மையார் ஓராண்டு, ஈராண்டு, மூவாண்டாக வளர்ந்து பன்னிரண்டுவயசுஅடைந்தபோது வேடுவர்கள் அவளைத்தினைப்புனங்காக்கும்படி வைத்திருந்தார்கள். அப்போது நாரதபகவானால் ஸ்ரீகுமாரக்கடவுள் அம்மையினது நிலையையறிந்து அவர்பால்வேடுவக்கோலத்துடன் சென்றுதம்மைக்கூடி இன்புறக் கேட்டனர். அதற்கவரிசையாமையால், அவர்பால்கெஞ்சி இரந்துநின்றனர். அப்போதுவேடுவர்கள்வரக்கண்டு வேங்கைமரமாயினர். பின்னொரு தடவையும் அவர்கள்வரவையறிந்து ஓர்தவவேதியர் கோலங்கொண்டணுகினர். இவ்வாறுதிருவிளையாடல் புரிந்து, அம்மையார்தம்பால்இரங்கியருளக்கேட்டும்அவரிசையாமையால்தமது முன்னவராகியவிநாயகக்கடவுளைத்தமக்குஉதவிசெய்யும்படி வேண்டினர் அப்படியேஅவர்அப்போதுஒர்மதயானையாகத் தோன்றி அம்மையார்முன்வந்து பயமுறுத்தினர். அதனால் அம்மையார்பயந்து ஸ்வாமியை அடைக்கலம்புகுந்துஅவர்வேண்டுகோளுக்கிசைந்து அணுகலும் அம்மையைக்கூடி எமது பெருமான்இன்புற்றனர் இதனை அம்மையினதுதாய்தந்தைகளறிந்து எங்கள்குலக்கொடியை நாங்கள் தத்தஞ் செய்யப்பெற்று எழுந்தருளவேண்டும் என்று ஸ்வாமியைவணங்கிக் கேட்டார்கள். அதற்கிசைந்துஅப்படியேஎங்கள்தாயைஸ்வாமிதிருமணஞ்செய்து கொண்டனர் இத்திருக்கல்யாண மகிமையை முன்னொருதடவையில் உங்களுக்குயாம் விரிவாக எடுத்துச் சொல்லியிருக்கின்றோமாகையால், இனிஇத்திருமணத்தின் பிரயோசனத்தைச் சொல்லுகிறோம் கேளுங்கள். உலகமாதாவாகிய வள்ளிநாயகியாரைச் சிவமுனியாகியவிஷ்ணுபகவானும், பெண்மானாகிய ஸ்ரீமஹாலட்சுமியும் பெற்றதனாலும், வேடுவனாகிய உபேந்திரர்எடுத்து வளர்த்ததனாலும், அவ்வெம்பிராட்டியை எமதுகந்தவேள் மணந்ததனாலும், மேலேசொன்ன மூவர்களுக்குஞ் சாபங்கணீங்கிப் பழமையாகிய தத்தந்தெய்வ வடிவங்களையடைந்து இன்புற்றார்களென்று சூதமுனிவர் சௌநகாதிகள்மகிழும்படிச் சொல்லிமுடித்தனர். சுபம்!சுபம்!!

திருச்சிற்றம்பலம்.

---

எ-வது, உபதேசகாண்டத்தில்

சிவமுனிவர்முதலியோர்வரலாற்றுப்படலம்-முற்றிற்று.

---

## ஸ்ரீகந்தபுராணவசனம் முற்றுப்பெற்றது.

சிவசுப்பிரமணியக்கடவுள் திருவடிகளேசரணம்.

கச்சியப்பசிவாசாரியசுவாமிகள்திருவடிவாழ்க.

